# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A Comprehensive Etymological Dictionary of the Tamil Language

Vol 1 - Part 1

மொழிஞாயிறு

ஞா. தேவநேயப் பாவாணர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்

அகர முதலித் திட்ட இயக்கக வெளியீடு

1985

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## முதன்மடலம் - முதற்பகுதி

## அ

மொழிஞாயிறு

ஞா. தேவநேயப் பாவாணர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்காக அச்சிட்டது



தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
சென்னை.

மொழிஞாயிறு

# ஞா. தேவநேயப் பாவாணர்



தோற்றம்: 7-2-1902 மறைவு: 16-1-1981

கோடி கொடுத்தாலும் கொள்கைவிடாக் கூர்வேழம்
நாடி தளர்ந்துவிழி மூடியபின் மூவாண்டு
ஓடி யுருண்டாலும் ஒண்டமிழர் உள்ளத்தே
தேடாத் திருவாய்த் திகழ்கின்றார் பாவாணர்

அமுதாம் தமிழுக்கு ஆயிரம் அணிபூட்டி
இமையா மல்நோக்கி யின்புற்றுச் சாய்ந்திட்டார்
அமிழ்தாம் தமிழுண்டு சாவாரோ மண்ணுலகில்
தமிழ்த்தாய் மடியில் தவழ்கின்றார் பாவாணர்

# உள்ளடக்கம்

# வண்ணப்படங்களின் பட்டியல்

,, (பாலவரை)
,, (மணியவரை)
,, (வாளவரை)
,, (விரலவரை)

அவுரி (மீன்) ...
அவுரி (விரால்மீன்)
அவுளிமீன்
அழவணம்

அழுங்கு ...
அள்ளாத்தி (மீன்)
அறக்குளாமீன்
அறுக்கிளாமீன்

அறுகு (அரிசிப்புல்) ...
,, (ஆற்றறுகு)
,, (உப்பறுகு)
,, (கூந்தலறுகு)
,, (கொடியறுகு)
,, (சிற்றறுகு)

அறுகு (பாளையறுகு) ...
,, (புல்லறுகு)
,, (பூனைப்புல்)
,, (பேரறுகு)
,, (மத்தாங்காய்ப்புல்)
,, (யானையறுகு)
,, (வெள்ளறுகு)

அறுபுள்ளிவண்டு ...
அறுவாள் (பன்னறுவாள்)
அறுவாள் (பாளையறுவாள்)

# Foreword

Tamil is one of the oldest living languages of the World. It is the most accomplished member of the over 30 known Dravidian Languages. It is now an accepted fact that the word *Dravida* is a sanskritization of earlier Pali and Prakrit form of Tamil viz., *damilo, damila* and *davida.* It has been noted in the latest edition of Encyclopaedia Britannica that "there is actually a very notable and active purifying movement" in Tamil and it is no exaggeration to say that the late lamented Savants *Maraimalai Adigal* and *Devaneya Pavanar* are the twentieth century captains of this essential and edifying campaign.

R. C. Trench in his elegant lectures on the study of words observed Language is fossil poetry and fossil history as well. Language is the amber in which a thousand precious and subtle thoughts have been safely embedded and preserved. Far beyond all written records in a language, the language itself stretches back and offers itself for our investigation. Language is never false, never deceives us. In the study of the origin and linguistic changes of a particular word, great care is required. It is a field full of contradictions such that Dr. Johnson himself was "ill-equipped by any previous studies for tracing the past history of words and he erred often and signally."

No matter, in Prof. *Pavanar*, we have indeed been very lucky. An erudite scholar and etymologist of great repute and who was an unflappable discoverer of roots of words, Pavanar has done a signal service to all philologists and especially to etymologists of the world. His monumental work has proved to the world that Tamil has an antiquity lost in the prehistoric past and is of a purity and constancy that makes it understood by the laity, as easily now as it was two thousand years ago. Dr. Caldwell commented, "the speech of the very lowest classes of the Tamil in retired country districts accords to a considerable extent with the classical dialect in dispensing with Sanskrit derivates." How important his work will prove to our own Tamil Speaking World, I shall let posterity decide.

The presentation is methodical and comprehensive, nay, this is indeed a model for others to emulate. I am certain that the dream of Pavanar will come true. Tamil Scholars and Research Workers with us today will, I hope, continue this labour of love. The Government of Tamil Nadu take pride in presenting this great work to the World on the occasion of the 75th Birth Anniversary of our Mentor *Perarignar Anna*.

Minister for Education,
Government of Tamil Nadu,
**MADRAS - 600 009.**
9 - 10 - 1984

C. Aranganayagam

# முன்னுரை
*(Introduction)*

## 1. சொற்பிறப்பியல் அகரமுதலி இயல்வரையறை
(Definition of an Etymological Dictionary)

*ஒரு மொழியிலுள்ள சொற்களையெல்லாம் திருந்திய வடிவில் தொகுத்து, அவற்றின் முதலெழுத்துகள் நெடுங்கணக்கு அல்லது குறுங்கணக்கு முறையில் அமைய அச் சொற்களை வரிசைப்படுத்தி, ஒவ்வொரு சொற்கும் அடிப்படைப் பொருளையும் வழிநிலைப் பொருள் களையும் ஏரணத்திற்குப் பொருந்த வரலாற்றுமுறையிற் குறித்து, இலக்கிய மிருப்பின் இருவகை வழக்கினின்றும், அஃதின்றேல் உலகவழக்கினின்றும், அப் பொருள்கட்குச் சான்றாக மேற்கோள்கள் எடுத்துக்காட்டி, இறுதியில் அவ்வச் சொல்லின் வேரொடு கூடிய வரலாற்றை வரைந்து இனச்சொற்களையும் காட்டுவது, முழுநிறைவான சொற் பிறப்பியல் அகரமுதலியாம்.*

*ஆயின், ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலிகளெல்லாம், பெரும்பாலும் அடிப்படைப் பொருளைமட்டும் விளக்கி, பொதுவாக இனச்சொற்களை மூலத்தொடு காட்டுவதுடன் நின்றுவிடுகின்றன.*

*சொற்பிறப்பியலைமட்டும் விளக்குவதே சொற்பிறப்பியல் அகரமுதலியின் கடமை என்பது மேலையர் கருத்து.*

*சொல் வரலாற்றை விரிவாக வரையாமைக்கு, தமிழ்போல் மேலைமொழிகள் இடந்தராமையே கரணியம்.*

## 2. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் அடிப்படைக் கொள்கைகள்
(The Fundamental Principles governing the Tamil Etymological Dictionary)

### i. தமிழ் தென்னாட்டுப் பழங்குடி மொழி

*பண்டை யிலக்கியத்திற் சொல்லப்பட்டுள்ள கால வேறுபாடுகளும், நில வேறு பாடுகளும், விளைபொருள் வகைகளும், தொழிற் பாகுபாடும் தென்னாட்டிற்குரியன வாகவே யிருப்பதும், தமிழ் தென்மொழியென்று பெயர்பெற்றிருப்பதும், இதற்குச் சான்றாம்.*

### ii. தமிழ் குமரிநாட்டு மொழி

*"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்*
*குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள*
*வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு*
*தென்றிசை யாண்ட தென்னவன் வாழி"*

*என்னும் சிலப்பதிகார அடிகள் (11 : 19 - 22) இதற்குச் சான்றாம்.*

### iii. தமிழ் திரவிடத் தாய்மொழி

*திரவிடச் சொற்களெல்லாம் தமிழ்ச்சொற்களின் திரிபாயிருப்பதே, இதற்குப் போதிய சான்றாம்.*

iv. தமிழ் ஆரியத்திற்கு முந்திய மொழி.

"Does there not seem to be reason for regarding the Dravidian family of languages, not only as a link of connection between the Indo-European and Scythian groups, but—in some particulars, especially in relation to the pronouns — as the best surviving representative of a period in the history of human speech older than the Indo-European stage, older than the Scythian and older than the separation of the one from the other." [1]

"Nevertheless, I regard the comparison of words, when carefully and cautiously conducted, as an important help to the determination of lingual affinities; and it will be found I think, that the following vocabularies bear independent testimony, in their own degree, to the same result at which we arrived by grammatical comparison — viz., that the Dravidian idioms exhibit traces of an ancient, deep-seated connection with Prae-Sanskrit,—the assumed archaic mother-tongue of the Indo-European family." [2]

v. தமிழ் ஆரியத்திற்கு மூலமொழி

"I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate, and intermediate demonstratives and interrogatives. In no other language or family of languages in the world shall we find its equal, or even its second. In addition to which, the circumstance that the demonstrative vowels are not only used in these languages with an invariable and exact discrimination of meaning which is not found in the Indo-European tongues (with the solitary and partial exception of the New Persian), but are also associated with a corresponding interrogative vowel of which the Indo—Europen tongues are totally ignorant, tends to confirm the supposition which I have already expressed, that the Dravidian family has retained some Prae-Sanskrit elements of immense antiquity; and in particular, that its demonstratives, instead of being borrowed from Sanskrit, represent those old Japhetic bases from which the demonstratives of Sanskrit itself, as well as of various other members of the Indo - European family, were derived." [3]

"I subjoin here a few illustrations of what I mean by primitive underived Indo-Europeanisms discoverable in the Dravidian languages.

1. The use of *n*, as in Greek, to prevent *hiatus*.
2. The existence of gender in the pronouns of the third person and in verbs, and in particular the existence of a neuter gender.
3. The use of *d* or *t* as the sign of the neuter singular of demonstrative pronouns or pronouns of the third person.
4. The existence of a neuter plural, as in Latin, in short *a*.
5. The formation of the remote demonstrative from a base in *a*, the proximate from the base in *i*.
6. The formation of most preterites, as in Persian, by the addition of *d*.
7. The formation of some preterites, by the reduplication of a portion of the root.
8. The formation of a considerable number of verbal nouns by lengthening the vowel of the verbal root." [4]

---

[1] Caldwell's Comparative Grammar of the Dravidian Family of Languages, Preface to the Second Edition, p. x.

[2] *Ibid.*, p. 565

[3] *Ibid.*, pp. 421 - 2.

[4] *Ibid.*, p. 73.

### vi. தமிழ் சொல்வளம் மிக்க தற்சார்பு மொழி

"The orientalists who supposed the Dravidian languages to be derived from Sanskrit were not aware of the existence of uncultivated languages of the Dravidian family, in which Sanskrit words are not at all, or but very rarely, employed; and they were also not aware that some of the Dravidian languages which make use of Sanskrit derivatives, are able to dispense with those derivatives altogether, such derivatives being considered rather as luxuries or articles of finery than as necessaries. It is true it would now be difficult for Telugu to dispense with its Sanskrit: more so for Canarese; and most of all for Malayalam :- those languages having borrowed from Sanskrit so largely, and being of all habituated to look up to it for help, that it would be scarcely possible for them now to assert their independence. Tamil, however, the most highly cultivated *ab intra* of all Dravidian idioms, can dispense with its Sanskrit altogether, if need be, and not only stand alone, but flourish without its aid." [1]

"Another evidence consists in the extraordinary copiousness of the Tamil vocabulary, and the number and variety of the grammatical forms of Shen-Tamil. The Shen-Tamil grammar is a crowded museum of obsolete forms, cast-off inflexions, and curious anomalies...... Nothing strikes a Tamil scholar more, on examining the dictionaries of the other Dravidian dialects, than the paucity of their lists of synonyms in comparison with those of Tamil. The Tamil vocabulary contains not only those words which may be regarded as appropriate to the language, inasmuch as they are used by Tamil alone, but also those which may be considered as the property of Telugu, Canarese, etc. Thus, the word used for 'house' in ordinary Tamil is *vīḍu*; but the vocabulary contains also, and occassionally uses, the word appropriate to Telugu, *il* (Tel. *illu*), and the distinctive Canarese word, *manei* (Can. *mane*); besides another synonym, *kuḍi*, which it has in common with Sanskrit and the whole of the Finnish languages." [2]

### vii. தமிழ் உலக முதன்மொழி

"It is a different question whether some of the Dravidian forms and roots may not have formed a portion of the linguistic inheritance, which appears to have descended to the earliest Dravidians from the fathers of the human race." [3]

பி.தி. (P.T.) சீநிவாசையங்கார் எழுதிய 'Stone Age in India' என்னும் நூலும், வி. ஆர். (V. R.) இராமச்சந்திர தீட்சிதர் எழுதிய 'Origin and Spread of the Tamils', 'Pre-Historic South India' என்னும் நூல்களும், தமிழ் உலக முதன்மொழி என்பதற்குச் சான்று பகரும்.

தமிழின் ஒலிச்சின்மை யெளிமையும் இயற்கையான சொல்லமைதி சொற்றொடரமைதிகளும், அதன் உலக முதன்மைக்குப் போதிய சான்றாம்.

### viii. தமிழ் வேர்ப்பொருள் காட்டும் மொழி

சமற்கிருதத்திற்போல் தமிழில் இடுகுறிச்சொல் என்பதில்லை. திரவிடமொழிச் சொற்கட்கெல்லாம் தமிழ்த்துணைகொண்டே வேர்காணல் இயலும்.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" (தொல். சொல். பெய. 1),
"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" (தொல். சொல். உரி. 96).

---

[1] *Ibid.*, p. 45.

[2] *Ibid.*, p. 82.

[3] *Ibid.*, Preface to the Second Edition, p. xi.

"பொருட்குத் திரிபிலை யுணர்த்த வல்லின்" (தொல். சொல். உரி. 94)

"பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்" (தொல். சொல். உரி. 1).

**ix. தமிழ் உயர்தனிச் செம்மொழி**

தமிழ் வரலாற்றிற் கெட்டாத தொன்மையில் தோன்றிய உலக முதன்மொழி யாயினும், கொடுமையையும் கொச்சையையும் நீக்கி, நெடுகலுஞ் செம்மையை உயிர் நாடியாகப் போற்றி வந்ததினாலேயே, இயற்கையாகவும் செயற்கையாகவும் நேர்ந்த எத்தனையோ பெருங் கேடுகட்கெல்லாந் தப்பி "என்றுமுள தென்றமிழ்" என்று கம்பர் பாடியவண்ணம் இன்றுவரை முந்துநிலை தாங்கி வந்திருக்கின்றது. இதனாலேயே அதன் சொற்கட்கெல்லாம் இன்றும் வேர்காண இயல்கின்றது.

"செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"

என்று தொல்காப்பியச் சிறப்புப் பாயிரமுங் கூறுதல் காண்க.

ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ஆங்கிலம், இன்று ஆங்கிலர்க்கும் விளங்குவதில்லை. ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்னுங் குறளும், ஈராயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முற்பட்ட

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே"

என்னும் தொல்காப்பிய நூற்பாவும், இன்றும் கல்லாருட்பட எல்லார்க்கும் பொருள் விளங்க நிற்கின்றன.

தமிழ் வாழவேண்டுமெனில், இந் நிலைமையே இனியும் தொடர்தல் வேண்டும்.

தமிழியல்பை யுணராத சில போலித் தமிழ்ப்புலவர், ஆராய்ச்சியின் பெயரால், கழி பொருள்போன்ற இழிவழக்கையும் தொகுத்து நூலாக்கிக் காலத்தை வீணாகக் கழிப்பர்.

"வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான"

என்று தொல்காப்பியம் (மர. 93) கூறுவதை நோக்குதல் வேண்டும்.

**x. தமிழ் தூய மரபுமொழி**

செம்மை போன்றே தூய்மையும் தமிழின் இன்றியமையாப் பண்பாம்.

"எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே" (நன். 388).

சிலர்,

"குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிள்ளையைத் தத்தை யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி யென்றலும்
முடிய வந்த அவ்வழக் குண்மையின்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே"

என்னும் தொல்காப்பிய மரபியல் (69) நூற்பாவைப் பிறழவுணர்ந்து,

> ''பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே'' (நன். 462)

என்று எல்லா அயற்சொற்களையும் அமைப்பர். கடுவன், கோட்டான், தத்தை, பூசை, சேவல், ஏனம், கண்டி என்னும் எழு சொல்லுந் தூய தென்சொல் என்பதை அவர் அறிந்திலர்.

தமிழில் ஏதேனும் ஒரு பொருள்பற்றி ஒரு புதுச்சொல் தோன்றின், அது தமிழ் மரபிற்கு ஒத்ததாகவே இருத்தல் வேண்டும்.

> ''மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்'' (தொல். சொல். மர. 92),
>
> ''நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
> கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
> இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
> திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்' (தொல். சொல். மர. 90).

**xi. தமிழ் ஒப்புயர்வில்லாத் தனிமொழி**

உலக முதன்மை, செம்மை, தூய்மை, தாய்மை, பகுத்தறி வடிப்படையிற் பொருள்களைப் பகுத்து மெய்ப்பொருளியல்பில் இலக்கணக் குறியீடுகள் கொண்டமை, செய்யுள் வடிவில் இலக்கியம் அமைந்தமை, பொருளிலக்கண முடைமை, இசை நாடகத்தொடு சேர்ந்து மும்மைப்பட்டமை, உலகில் தலைசிறந்த இன்னிசைக் கருவிகளைத் தோற்றி, நளிகடல் செல்லும் நாவாய் புனைந்து நானிலஞ் சுற்றி வடவை கண்டு, எழுகோட் பெயரால் எழுநாட்கிழமை வகுத்து ஏனைநாடெல்லாம் வழங்க வைத்து, முக்கரணமுங் கடந்த முதல்வனைக் கடவுள் என்னும் பெயராற் குறித்து, நாகரிகத்தினும் பண்பாட்டைச் சிறப்பாகப் போற்றி அறம் பொருளின்பம் வீடென்னும் நாற்பொருட் பேற்றை வாழ்க்கைக் குறிக்கோளாக்கிய மக்கள் மொழியாயிருத்தல் முதலிய சிறப்புகளால், தமிழை ஈடிணையில் லாத் தனிமொழியெனல் உண்மை நவிற்சியேயன்றி உயர்வுநவிற்சியன்று. தமிழ் என்னும் பெயரும் அதன் தனிச்சிறப்புப் பற்றியதே. தமி = தனி, 'ழ்' ஈறு.

> ''ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
> ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் — ஆங்கவற்றுள்
> மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
> தன்னே ரிலாத தமிழ்''

என்னும் பழம்பாட்டையுங் காண்க.

## 3. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் மூலவாய்கள் (Sources of the Tamil Etymological Dictionary)

### i. சொல்லியல்

**1. அகராதிகள்**

இன்றுள்ள ஏறத்தாழ இருபது தமிழ் அகரமுதலிகளுள், இச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிக்குப் பெரிதும் பயன்படுவது 'சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி'யே (Lexicon). அது பல்வேறு வகையில் குறைபாடுள்ளதாயினும், மூவர்முதற் பதினைவர்வரை பல்வேறு தொகையினர் பல்வேறு காலப் பகுதிகளில் அமர்ந்து, இருவகை வழக்கினின்றும் இருபத்தாறாண்டாக இடைவிடாது தொகுத்த பல்லாயிரக் கணக்கான சொற்களும், அவற்றின் பெரும்பாற் பொருள்களும், அவற்றிற்குரிய மேற்கோள்களும், அம் மேற்கோள் களின் இடங்களும், ஏற்கெனவே குறிக்கப்பட்டிருப்பது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிப் பணியாளராகிய எமக்குக் காலவகையிலும் உழைப்புவகையிலும் மறக் கொணா மாபேருதியமாகும்.

சென்னைப் பல்கலைக்கழக அகராதிக்கு அடுத்தபடியாகப் பயன்படுவது, சாம்பசிவம் பிள்ளை தமிழ்-ஆங்கில அகரமுதலியாகும். மருத்துவத் துறையில் அது நல்கும் அறிவு மதிப்பிடுந் தரத்ததன்று. அடுத்தது மதுரைத் தமிழ்ச்சங்க அகரமுதலி யாகும்.

**2. புதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும்**

இவை பல்துறைப்பட்டன. அவற்றுள், உரைவேந்தர் ஒளவை சு. துரைசாமிப் பிள்ளை எழுதிய 'சேரமன்னர் வரலாறு', பேரா. கோ. தங்கவேலனார் எழுதிய 'இந்திய-தமிழ்நில வரலாறுகள்', பேரா. ம. வி. இராசேந்திரனார் எழுதிய 'நம்நாட்டுப் பாம்புகள்', நுண் கலைச் செல்வர் அ. இராகவனார் எழுதிய 'கப்பற்கலை', 'நம்நாட்டு அணிகலன்கள்', தமிழறிஞர் மு. அருணாசலனார் எழுதிய 9 முதல் 16ஆம் நூற்றாண்டுவரையுள்ள 'தமிழிலக்கிய வரலாறுகள்', திரு. பி. எல். சாமி எழுதிய 'சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்', 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்', 'சங்க இலக்கியத்தில் பறவையின விளக்கம்', 'சங்க இலக்கியத்தில் மணிகள், ஆடையணிகலன்கள்', சிற்பக் கலைமணி வை. கணபதிக் கம்மியர் (ஸ்தபதி) எழுதிய 'சிற்பச் செந்நூல்' என்பன சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன.

**3. உலகவழக்குச் சொற்கள்**

**ii. சொற்பிறப்பியல்**

க. ***மொழிநூல்:*** கால்டுவெலார் 'திரவிட மொழிகளின் ஒப்பியல் இலக்கணம்' (ஆங்கிலம்).

உ. ***திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி:*** பரோ எமனோவர் (Burrow and Emeneau) தொகுத்த திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி (ஆங்கிலம்).

ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலிகள்: Chambers's Etymological Dictionary of the English Language, Skeat's Etymological Dictionary of the English Language, Klein's Comprehensive Etymological Dictionary of the English Language, Weekley's Etymological Dictionary of Modern English, The Oxford Dictionary of English Etymology ஆகியவை.

**குறிப்பு:** யாழ்ப்பாண ஞானப்பிரகாச அடிகளின் 'சொற்பிறப்பு-ஒப்பியல் தமிழ் அகராதி' முதன்மடலத்தில் ஒரு சில பகுதிகளொடு நின்றுவிட்டமையாலும், அதிற் கையாளப்பட்ட நெறிமுறைகள் பெரிதும் வேறுபட்டுள்ளமையாலும், அது **'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி'**க்குப் பயன்படவில்லை.

ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அயன்மொழிக் குரியனவாயினும், அதிற் கையாளப்பட்டுள்ள நெறிமுறைகள், **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**க்குப் பெரிதும் உதவின. இங்ஙனமே, யோசேப்பு ஆங்கசு (Joseph Angus) எழுதின 'Hand-book of the English Tongue', ரிச்சர்டு மாரிசு (Richard Morris) எழுதின 'Historical Outlines of English Accidence' முதலிய ஆங்கில இலக்கண நூல்களும் ஓரளவு பயன்பட்டன. பரோ எமனோவர் சொற்பிறப்பியல் அகரமுதலியும் (1961) திரவிட மொழிகள்பற்றியதேனும், 4572 சொற்களே கொண்டுள்ளமையாலும், வேருந் திரிவுங் காட்டாது பெரும்பாலும் ஒப்பியல் அகரமுதலியாகவே (Comparative Dictionary) இருப்பதனாலும், பல சொற்கட்கு இனச்சொல் (cognates) காட்டற்கன்றி வேறெதற்கும் பயன்படவில்லை.

ஒரு சில கூட்டுச்சொற்களைத் தவறாகவும் அவ்வகரமுதலி பிரித்துள்ளது.

எ-டு: தகப்பன் – தகு + அப்பன்.

தம் + அப்பன் – தமப்பன் → தகப்பன் என்பதே உண்மையான வரலாறு.

வரலாற்றிற் கெட்டாத தொல்பழங்காலத்துத் தோன்றிய உலக முதன்மொழியாகிய குமரிநிலத் தமிழின் சொற்பிறப்பியலை, உழைப்பொடும் பொறுமையொடும் தறுகண்மை யொடும் மெய்யறியவாவொடுங்கூடி நீண்டு ஆழ்ந்து நுணுகிய ஆராய்ச்சியாலன்றிப் பெருந் தமிழ்ப்புலவரும் அறியவொண்ணா நிலையில், வரலாறறியாது சமற்கிருத அடிப் படையில் தமிழாய்ந்த மேலையரிடம் எதிர்பார்ப்பது, இயற்கைக்கு முற்றும் மாறானதே. ஆதலால், பரோ எமனோவர் அகரமுதலிக் குறைபாட்டினால் அவர்க்கு எள்ளளவும் இழுக்கின்று.

**பிற கருவிநூல்கள்**

(1) *குண்டர்ட்டு மலையாள-ஆங்கில அகரமுதலி* (A Malayalam and English Dictionary by H. Gundert).

(2) *மலையாளப் பழஞ்சொல் (2000).*

(3) *கிற்றல் கன்னட - ஆங்கில அகரமுதலி* [Kittel's Kannada - English Dictionary (in 4 Volumes)—Revised and enlarged edition].

(4) A Telugu Verbal Bases by Bhadriraju Krishnamurti.

(5) A Sanskrit English Dictionary by M. Monier Williams.

(6) Grierson's Linguistic Survey of India.

**வரலாறு**

I. P. T. *சீநிவாச ஐயங்கார்*
   (1) Stone Age in India.
   (2) History of the Tamils.

II. V. R. *இராமச்சந்திர தீட்சிதர்*
   (1) Origin and spread of the Tamils.
   (2) Pre-Historic South India.

## 4. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் சிறப்பியல்புகள்
## (The Special features of the Tamil Etymological Dictionary)

**1. அகரமுதலிவகை**

***செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி***, எல்லார்க்கும் பயன்படும் பொதுவகை யான சொற்பொரு ளகரமுதலியும் (General-purpose Dictionary), ஆராய்ச்சியாளர்க்கே பயன் படும் சொற்பிறப்பியல் அகரமுதலியும் (Etymological Dictionary) இணைந்த பேரகரமுதலி (Comprehensive Dictionary) ஆகும்.

**2. அமைப்பு**

செந்தமிழ்ச் சொல்வளத்தை யறிதற்பொருட்டும், தனித்தமிழாளர்க்குப் பயன்படும் பொருட்டும், தமிழ்ச்சொற்களும் அயற்சொற்களும் முதன்முறையாகப் பிரிக்கப் பட்டுள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் பன்னிரு மடலங்களுள் முதலொன்பதும் தமிழ்ச்சொற்கட்கும், பத்தாவது மட்டும் தமிழும் திரவிடமுமல்லாத அயற்சொற்கட்கும் பொருள் கூறும்.

கூட்டுச்சொல்லின் நிலைச்சொல் தமிழாயின் தமிழ்ச்சொன் மடலங்களிலும், அயற் சொல்லாயின் அயற்சொன் மடலத்திலும் இடம்பெறும்.

அகத்தியம் என்பதுபோன்ற தமிழுக்கு இன்றியமையாத சொல்லாயின், தமிழ்ச் சொன் மடலத்திலேயே இடம்பெறும். இது விலக்கென அறிக.

**எழுத்துப் பெயர்ப்பு**

தமிழொலியை ஒட்டியே எழுத்துப்பெயர்ப்பு அமைந்துள்ளது.

எ-டு: சங்கு - šaṅgu, பாம்பு - pāmbu.

**3. சொல்**

சொற்களெல்லாம் திருந்திய வடிவிலேயே காட்டப்பட்டுள்ளன.

| எ-டு : திருந்தா வடிவம் | திருந்திய வடிவம் |
|---|---|
| அரிவாள்மணைப்பூண்டு | அரிவாள்முனைப்பூண்டு |
| சாயங்காலம் | சாயுங்காலம் |
| மணத்தக்காளி | மணித்தக்காளி |
| வெட்டரிவாள் | வெட்டறுவாள் |

இதுவரை பிற அகரமுதலிகளில் இடம் பெறாத பல உலகவழக்குச் சொற்கள் இதில் இடம்பெற்றுள்ளன.

எ-டு: அரணை (எகிர்), அரைத்தவளை, அறுவாள், ஒடியல், . கவைமகன், காம்பு-தல், குடட்டி, சூவை, தக்கட்டி, நக்களி-த்தல், நரிகுளிப்பாட்டி, நனையாநரி, பொண்டான், மோள், வெங்கழி.

நா. கதிரைவேற்பிள்ளை அகரமுதலியிலுள்ள ஆகண கைக்கிளை (சாதாரண காந்தாரம்), ஆகணதாரம் (கைசிகி நிஷாதம்) என்னுஞ் சொற்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியில் இடம்பெறவில்லை.

முதல் எண் மடலங்களிலும் விடுபட்டுப்போன சொற்களெல்லாம் ஒன்பதாம் மடலத்தில் இடம்பெறும்.

**4. பொருள்**

எத்துறையிலும், பிற்கால வினைகள் பேரறிஞராற் செய்யப்படின், முற்கால வினைகளினுஞ் சிறந்தனவாகவே யிருக்கும். இப் பொது வியற்கைப்படி அகரமுதலிகளும், பிற்காலத்தன முற்காலத்தனவற்றினும் பொருள்களை மிகுதியாகவும் சிறப்பாகவும் விளக்கிக் காட்டும். இதனால் முற்காலத்தனவற்றிற்கு ஓர் இழுக்குமில்லை.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி (Lexicon) அதற்கு முந்தைய சொற்களஞ்சியங்களினும் அகரமுதலிகளினும் மிக விரிவானதென்று காட்டுதற்கு, அதன் பதிப்பாசிரியர், **தாரம், வரி** என்னும் இரு சொற்பொருள்களை, திவாகரம், பிங்கலந்தை, நிகண்டு, சூடாமணி, அகராதி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, கயாதரம், பல்பொருட் சூளாமணி, பொதிகை நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, நாமதீப நிகண்டு, வேதகிரியார் நிகண்டு, நாநார்த்த தீபிகை என்னுஞ் சொற்களஞ்சியங்களினின்றும், அகராதி மோனைக் ககராதி யெதுகை, சதுரகராதி, பெபிரிசியசு (Fabricius) அகராதி, இராட்டிலர் (Rottler) அகராதி, யாழ்ப்பாண அகராதி, ஒருசொற் பலபொருள் விளக்கம், போப்பு (Pope) செறிவடக்கத் (Compendious) தமிழாங்கில (Tamil-English) அகராதி, வின்சிலோ (Winslow) அகராதி, ஓர் இலக்கியத் (Classical) தமிழாங்கில (Tamil and English) அகராதி, தமிழ்ப் பையடக்க (pocket) அகராதி, தரங்கம்பாடி (Tranquebar) அகராதி, நா. கதிரைவேற்பிள்ளை அகராதி, சங்க அகராதி, இலக்கியச் சொல்லகராதி, தமிழகராதி (Tamil Lexicon) என்னும் அகரமுதலிகளினின்றும், காலவரிசைப்படி எடுத்துக்காட்டியுள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியிலும் 'வரி' என்னுஞ் சொல்லிற்குரிய பொருள்களுள் வளைவு, வளைகோடு, சுற்று என்பன விடப்பட்டுள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியிற் பொருள்பற்றி ;யேற்பட்டுள்ள திருத் தங்கள் பின்வருமாறு பலவகைப்படும் :

க. முன் குறிக்கப்படாத பொருள்(கள்) குறிக்கப்படுதல்.

எ-டு : **சுவரொட்டி** 1. எறிந்தாற் சுவரிற் சில நொடி நேரம் ஒட்டிக்கொள்ளும் ஒரு வகைப் புறா.
2. சுவரில் ஒட்டும் விளம்பரத் தாள் (wall-poster).

உ. தவறான பொருள் திருத்தப்படுதல்.

எ-டு :

| சொல் | தவற்றுப்பொருள் | திருத்தப்பொருள் |
|---|---|---|
| குறவை | வரால் | வரால் வடிவான சிறுமீன் |
| கேருதல் | கோழி கத்துதல் | கோழி முட்டையிடக் கத்துதல். |
| கசகரணம்போடுதல் | யானை காதாட்டுதல் | யானை மல்லாப்பாண்டி யடித்தல். |
| அளைமறிபாப்பு | பாட்டின் ஈற்றினின்ற சொல் இடையிலும் முதலிலுஞ் சென்று பொருள் கொள்ளப் படும் முறை. | நாலாமடி முதலடியாகவும், மூன்றாமடி இரண்டாமடியாகவும், இரண்டாமடி மூன்றாமடியாகவும், முதலாமடி நாலாமடியாகவும், இங்ஙனம் பாட்டின் அடிகள் தலைகீழாக மாறிப் பொருள் கொள்ளப்படுதல். |

ஈ. பொருள்களெல்லாம் இயற்கையொட்டிய ஏரண முறைப்படி குறிக்கப்படுதல்.

**பள்ளி** என்னுஞ் சொல்லின் முதற்பொருள் 'படுக்கை', இறுதிப்பொருள் 'இடம்'. தொல்காப்பியத்திற் பள்ளியென்னுஞ் சொல் இடப்பொருளில் ஆளப்பட்டுள்ளமை யால் அதுவே முதற்பொருளென்று கொண்டனர் சென்னை யகராதி தொகுத்தோர். இது சொல்லாராய்ச்சி யின்மையால் நேர்ந்த விளைவு.

ச. பொருள்களெல்லாம் தமிழ்ச்சொல்லாலேயே குறிக்கப்படுதல்.

தமிழ்ச்சொல் வழக்கற்றதாயின், வழக்கிலுள்ள நேர் அயற்சொல் அடுத்துப் பிறைக் கோட்டுள் (bracket) குறிக்கப்பட்டிருக்கும்.

ரு. இனப்பொருட் பெயர்களும் வகைப்பொருட் பெயர்களும் ஒருங்கே குறிக்கப்படுதல்.

எல்லாச் சொற்களும் முதலெழுத்தின் நெடுங்கணக்கு வரிசைப்படி அமைக்கப்பட்டிருப் பினும், பிறந்தையின் (genus) இனங்களும் (species), இனத்தின் வகைகளும் (varieties), இவை போன்ற பிறபொருட் பிரிவுகளும் கிளைகளும் வேறுபாடுகளும் பகுப்புகளும், அவ்வவற்றின் பொதுப்பொருள் அல்லது தலைமைப் பொருளின் கீழேயே ஒருங்கே ஏதேனும் ஒரு வரிசையாகக் குறிக்கப்பட்டுப் பொருள் கூறப்பட்டுள்ளன அல்லது விளக்கப்பட்டுள்ளன.

*அவரை* என்னுஞ் சொல்லின்கீழ், ஆட்டுக்கொம்பவரை, ஆரால்மீனவரை, ஆனைக்கா தவரை முதலிய வகைப்பெயர்களும்; கொத்தவரை, சுடலையவரை, தம்பட்டவரை முதலிய இனப்பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன.

இவ்வமைப்பு, ஒரு பொருளின் வகைகளையெல்லாம் ஒருங்கே எளிதாய்க் கண்டுகொள் வதற்கு ஏற்றதாகும். அல்லாக்கால், ஒன்றன் வகைகளையெல்லாம் அறிதற்கு எல்லா மடலங்களையும் புரட்டவேண்டியிருக்கும். இது எளிதில் ஆவதன்று.

ஆ

இம் முறை ஏற்கெனவே **வின்சிலோ** தமிழ்-ஆங்கிலம்-தமிழ் அகரமுதலியிற் கையாளப் பட்டது. ஆயினும், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி அதைப் பின்பற்ற வில்லை.

ஒரு பொருளின் வகைகளை யெல்லாம் ஓரிடத்திற் குறித்துப் பொருள் கூறியிருப்பினும், அகரமுதலியின் பயன்பாட்டைப் பெருக்குதற்பொருட்டு, அவ் வகைகள் வண்ணமாலை வரிசைப்படி ஆங்காங்கே தனித்தனியாகவுங் குறிக்கப்பட்டு அவற்றின் பொதுப்பொருட்கு மாட்டெறியப்பட்டுள்ளன.

எடுத்துக்காட்டாக, **அவரை** என்னும் உருப்படியில் அதன் வகைகளெல்லாம் ஒருங்கே கூறப்பட்டு, அவற்றுள் ஒன்றான **ஆட்டுக்கொம்பவரை** என்பது, வண்ணமாலை வரிசைப் படி அதற்குரிய இடத்திலும் குறிக்கப்பட்டு, **அவரை** பார்க்க என்று மாட்டெறியப் பட்டுள்ளமையும் காண்க.

**v. மூலம்**

தென்சொல்லெல்லாம் தென்சொல்லென்றே இவ் வகரமுதலியிற் காட்டப் பட்டுள்ளன. இதுவரை வடசொல்லென்று மயங்கியவையெல்லாம், வேருந் திரிவும் வரலாறும் காட்டி விளக்கப்பட்டுள்ளன.

உலகில் முதன்முறையாக வரலாற்றடிப்படையிலும் மொழிநூ லடிப்படையிலும் வெளிவரும் அகரமுதலி இதுவே. தமிழ் திரவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமுமாத லால், இனச்சொற்கள் (cognates) திரவிட மொழிகளிலிருந்தும் ஆரிய மொழிகளிலிருந்தும் காட்டப்பட்டுள்ளன.

தென்சொல்லை வடசொல்லென்று காட்டுதற்குக் கட்டப்பட்டுள்ள கட்டுக்கதை களும், அறிவியல்முறையில் மறுக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, **உருத்திராக்கம்** என்னும் சொல்லைக் காண்க.

தென்சொல் திரிந்து வடசொல்லாவதற்கும், அதன்பின் அதை வடசொல்லே யென்று வலித்தற்கும், அதை இயற்கைக்கு மாறாகப் பகுத்துப் பொருந்தப் பொய்த்தலாகவும் பொருந்தாப் பொய்த்தலாகவும் வேர்ப்பொருளை வேறுபடுத்திக் கூறற்கும், ஐஞ்சொற்களை இங்குக் காட்டுவோம்.

**(1) இடைகழி**

இடை + கழி – இடைகழி = வீட்டிடையிற் கழிந்து செல்லும் இடம்.

இடைகழி → இடேழி → இரேழி → ரேழி.

இடைகழி → டேகழி → தேகளி > **வ.** தேகலீ.

தேகலீதீபநியாயம் = இடைகழியில் வைத்த விளக்கு இரு புறமும் ஒளிவீசுவது போல, ஒரு பொருள் இடையில் நின்று ஈரிடத்தும் பயின்றுவரும் நெறி.

**(2) உவணம்**

'உ' உயரத்தைக் குறிக்குஞ் சுட்டெழுத்து. உகப்பு (உயர்வு), உச்சி, உத்தரம், உம்பர் (மேல், மேலுலகம், தேவர்), உயர், ஊர்தல் (ஏறுதல்), உறி, உன்னு முதலிய சொற்களை நோக்குக.

உம் → உவ் → உவண் = மேலிடம். உவண் → உவணை = தேவருலகம். உவண் → உவணம் = உயர்ச்சி, உயரப் பறக்கும் பருந்து, கலுழன், கருடன், கழுகு. 'உயரவுயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா? (கருடனாகுமா?)' என்பது பழமொழி. உவணம் → உவணன் = கருடன் (திவா.).

உவணம் → சுவணம் = கருடன், கழுகு. உ → சு.

**ஒ.நோ:** உலவு → சுலவு, உருள் → சுருள், உழல் → சுழல், உதை → சுதை (உதைக்குங்கறவை).

சுவணம் > **Skt.** ஸுபர்ண.

வடசொல் வடிவிற்கு வடமொழியாளர் கூறும் பொருட்கரணியம்:- ஸு = நல்ல, அழகிய. பர்ண = இலைபோன்ற சிறகு. ஸுபர்ண = அழகிய சிறகுடைய பறவை, கருடன், கழுகு.

(3) *செவந்தி*

செம் → செவ் + அந்தி – செவ்வந்தி = செவ்வான மாலை. அவ் வேளையில் மலரும் பூ. செவ்வந்தி → செவந்தி.

**க.** சேவந்தி; **தெ.** சேமந்தி → சாமந்தி → ஜாமந்தி. சேவந்தி > **வ.** ஸேவதீ.

(4) பள்ளி

பள் → பள்ளம். பள் → பள்ளை = குள்ளம். பள்ளையன் = குள்ளன். பள்ளையாடு = குள்ளமான ஆட்டுவகை. பள்ளையம் = தட்டையான உண்கலம். பள் → பள்ளி = நிற்பதினும் இருப்பதினும் தாழ்மட்டமான படுக்கைநிலை, படுக்கை, படுக்கைவிரிப்பு, படுக்கும் இடம், படுக்கும் அறை, அறை, படுக்கும் வீடு, வீடு, தெய்வ வீடாகிய கோயில், தெய்வத் தன்மையுள்ள துறவியர் மடம், பல வீடுகள் சேர்ந்த ஊர், கோயிலுள்ள ஊர், மடத்தில் அல்லது கோயிலில் நடைபெறும் கல்விச்சாலை.

**க.** பள்ளி > **வ.** பல்லீ = சிற்றூர், காடுவாழ் குலத்தார் குடியிருப்பு, குடிசை, வீடு.

வடமொழியில் இச் சொல்லிற்கு வேரில்லை. 'பல்லீ' என்பதிற் 'பல்' என்னும் முன்னசையைப் பிரித்து, செல் (to go) என்று பொருள் கூறுவர்.

(5) வடவை

வடவனல் = வடதிசை நெருப்பு. **ஒ.நோ. L.** *aurora borealis* = northern light.

வடம் → வடந்தை = வடதிசையிலுள்ளது, வடகாற்று, வடவனல். வடம் → வடவை = வடவனல்.

ஊழியிறுதியில் உலகையழிப்பது வடவைத்தீ யென்று கருதினதினால், அதை 'உத்தர மடங்கல்' என்றனர் முன்னோர். உத்தரம் = வடக்கு. மடங்கல் = கூற்றுவன்.

வடவை என்பது வடமொழியில் வடவா என்று திரியும். அவ் வடிவுச் சொல்லிற்கு அம் மொழியிற் பெண்குதிரை என்பது பொருள். அதனால் அச் சொல்லிற்குப் பெண் குதிரை வடிவான தீயென்று பொருள்கூறி, அதை வடசொல்லாகக் காட்டுவர். தென்சொல் வடிவினின்று வேறுபடுத்தற்கு முகம், அக்கினி என்னும் சொற்களைச் சேர்த்து, வடவாமுக, வடவாமுகாக்கினி என்றும் வழங்குவர். இனி, வகரத்தைப் பகரமாக்கி படபா (baḍabā), படபாமுக, படபாமுகாக்கினி என்றும் வழங்குவர்.

இத்தகைய மாற்றங்களும் ஏமாற்றங்களும் வெள்ளிடைமலைபோல் விளங்கினும், தமிழின் தொன்மை முன்மை தாய்மை தலைமைகளை அறியாமையால், மேலையரும் இன்றும் உண்மையறியாதவரா யிருக்கின்றனர்.

இவ் வகரமுதலியின் இறுதிமடலம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளை யெல்லாம் விளக்கிக் காட்டுவது. அது தமிழின் தோற்ற வளர்ச்சி யாக்க முறைகளைத் தெரிவிப்பதுடன், இக்கால அறிவியற் கம்மியக் குறியீடுகளையெல்லாம் மொழிபெயர்த்தற் கேற்ற புதுச்சொற் புனையவும் துணைசெய்யும். ஆதலால், அது இவ் வகரமுதலிச் சிறப்பிற்கு முடிமணி போன்றதாம்.

## 5. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் அமைப்பொழுங்கு
### (The Arrangement and Order of the Tamil Etymological Dictionary)

**முதன் மடலம்**

முதற்பகுதி — அ
2ஆம் பகுதி — ஆ
3ஆம் பகுதி — இ, ஈ
4ஆம் பகுதி — உ, ஊ
5ஆம் பகுதி — எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ

**2ஆம் மடலம்**

முதற்பகுதி — க, கா
2ஆம் பகுதி — கி, கீ, கு, கூ
3ஆம் பகுதி — கெ, கே, கை, கொ, கோ, கௌ

**3ஆம் மடலம்**

முதற்பகுதி — ச, சா
2ஆம் பகுதி — சி, சீ, சு, சூ
3ஆம் பகுதி — செ, சே, சை, சொ, சோ, சௌ, ஞ, ஞா, ஞி, ஞெ, ஞே, ஞை, ஞொ

**4ஆம் மடலம்**

முதற்பகுதி — த, தா
2ஆம் பகுதி — தி, தீ, து, தூ
3ஆம் பகுதி — தெ, தே, தை, தொ, தோ, தௌ

**5ஆம் மடலம்**

முதற்பகுதி — ந, நா
2ஆம் பகுதி — நி, நீ
3ஆம் பகுதி — நு, நூ, நெ, நே, நை, நொ, நோ, நௌ

**6ஆம் மடலம்**

முதற்பகுதி — ப, பா
2ஆம் பகுதி — பி, பீ, பு, பூ
3ஆம் பகுதி — பெ, பே, பை, பொ, போ, பௌ

**7ஆம் மடலம்**

முதற்பகுதி — ம, மா
2ஆம் பகுதி — மி, மீ, மு, மூ
3ஆம் பகுதி — மெ, மே, மை, மொ, மோ, மௌ

**8ஆம் மடலம்**

முதற்பகுதி — வ, வா
2ஆம் பகுதி — வி, வீ
3ஆம் பகுதி — வெ, வே, வை, வௌ

**9ஆம் மடலம்**

பிற்சேர்ப்பு (Supplement)

**10ஆம் மடலம்**

அயற்சொற்கள் (Non-Dravidian Foreign words)
முதற்பகுதி — இந்திய மொழிகள்
2ஆம் பகுதி — மேலை மொழிகள்

**11ஆம் மடலம்**

தமிழகரமுதலி வரலாறு (History of Tamil Lexicography)

**12ஆம் மடலம்**

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள்
(Principles of Tamil Etymology)

# எழுத்துப்பெயர்ப்பு அட்டவணை
## (Transliteration Table)

### 1. உயிர் (Vowels)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ | — *a* | உ | — *u* | ஐ | — *ai* |
| ஆ | — *ā* | ஊ | — *ū* | ஒ | — *o* |
| இ | — *i* | எ | — *e* | ஓ | — *ō* |
| ஈ | — *ī* | ஏ | — *ē* | ஔ | — *au* |

### 2. ஆய்தம் (The soft gutteral)

ஃ — *k̲*

### 3. மெய் (Consonants)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க் | — *k* | ண் | — *ṇ* | ர் | — *r* |
| ,, (*sing. ml.* & *fl.*) | — *g* | த் | — *t* | ல் | — *l* |
| ங் | — *ṅ* | ,, (*sing. ml.* & *fl.*) | — *d* | வ் | — *v* |
| ச் | — *š* | ந் | — *n* | ழ் | — *ḻ* |
| ,, (*d.*) | — *cc* | ப் | — *p* | ள் | — *ḷ* |
| ஞ் | — *ñ* | ம் | — *m* | ற் | — *ṟ* |
| ட் | — *ḍ* | ய் | — *y* | ன் | — *ṉ* |
| ,, (*d.*) | — *ṭṭ* | | | | |

sing. — singular. ml. — medial. **fl.** — final. d. — double.

சொல்லிடையிலும் கடையிலும் வரும் தனிக் ககரத்தை ஆய்தம்போ லொலிப்பது பிற்கால வழக்காகத் தோன்றுகின்றது.

ற்ற என்னும் இரட்டை றகரம் ṟṟ என்று வரிவடிவில் குறிக்கப்படினும், ஒலிவடிவில் 't' ஒத்தொலிக்கும்.

தமிழ் வல்லினமெய்கள் வடமொழி அல்லது ஆரிய வல்லினமெய்களினும் மெலியவை. ஆதலால், சொல்லிடையிலுங் கடையிலும் வரும் ஒற்றை வடமொழி (ஆரிய) வல்லின மெய்கள், ஒலிமுறைப்படி, தமிழில் இரட்டை வல்லினமெய்களாக **எழுதப்படும்.**

எ-டு: வ. kāka — **த.** காக்க
,, pāpa — ,, பாப்ப
**E.** teak — தேக்கு
,, peking — பீக்கிங்
,, pope — போப்பு
,, paper — பேப்பர்

இவ் வியல்பினாலேயே, தமிழில் மெல்லினமெய் யடுத்த வல்லினமெய் எடுப்பொலியாய் (voiced) ஒலிக்கும்.

எ-டு: தெங்கு — teṅgu  பந்து — pandu
பஞ்சு — paññju  செம்பு — šembu

இவற்றை teṅku, pancu, pantu, cempu என்று ஆங்கிலத்தில் எழுதுவது தவறாம்.

nka, nca, ṇṭa, nta, mpa என்னும் இணைமெய்யொலிகள் தமிழில் இல்லை.

டகரம் இயல்பாகவே தனித்த நிலையிலும் எடுப்பொலியாய் ஒலிக்கும். படம் என்னுஞ் சொல்லை paṭam என்றும், வண்டு என்னும் சொல்லை vaṇṭu என்றும் எழுதுவது தவறாம்.

நகரம் னகரமெய் யடுத்து வரும்போது, candle என்னும் ஆங்கிலச் சொல்லிலுள்ள 'd' ஒத்தொலிக்கும்.

## வினைச்சொற்களின் புடைபெயர்ச்சி வாய்பாடு
## (Table of Classification of Verbs according to their conjugation)

### I. செயப்படுபொருள் குன்றிய வினை (Intransitive verb)

| எண் | முதனிலை | இ. கா. | நி. கா. | எ. கா. |
|---|---|---|---|---|
| 1. | அழு | அழுதான் | அழுகின்றான் | அழுவான் |
| 2. | விழு | விழுந்தான் | விழுகின்றான் | விழுவான் |
| 3. | நட | நடந்தான் | நடக்கின்றான் | நடப்பான் |
| 4. | சிரி | சிரித்தான் | சிரிக்கின்றான் | சிரிப்பான் |
| 5. | ஓடு | ஓடினான் | ஓடுகின்றான் | ஓடுவான் |
| 6. | ஆ | ஆயினான்<br>ஆனான் | ஆகின்றான் | ஆவான் |
| 7. | ஆகு | ஆகினான் | ஆகுகின்றான் | ஆகுவான் |
| 8. | போ | போயினான்<br>போனான்<br>போந்தான் | போகின்றான் | போவான் |
| 9. | போகு | போகினான் | போகுகின்றான் | போகுவான் |
| 10. | போது | போதினான் | போதுகின்றான் | போதுவான் |
| 11. | கோண் | கோணினான் | கோணுகின்றான் | கோணுவான் |
| 12. | மாண் | மாண்டான் | மாண்கின்றான்<br>மாணுகின்றான் | மாண்பான்<br>மாணுவான் |
| 13. | செல் | சென்றான் | செல்கின்றான்<br>செல்லுகின்றான் | செல்வான்<br>செல்லுவான் |
| 14. | நில் | நின்றான் | நிற்கின்றான் | நிற்பான் |
| 15. | துள் | துள்ளினான் | துள்ளுகின்றான் | துள்ளுவான் |
| 16. | மாள் | மாண்டான் | மாள்கின்றான்<br>மாளுகின்றான் | மாள்வான்<br>மாளுவான் |
| 17. | நோ | நொந்தான் | நோகின்றான் | நோவான் |
| 18. | வா | வந்தான் | வருகின்றான் | வருவான் |
| 19. | சா | செத்தான்<br>(சத்தான்) | சாகின்றான் | சாவான் |
| 20. | படு | பட்டான் | படுகின்றான் | படுவான் |
| 21. | புகு | புகுந்தான்<br>புக்கான் | புகுகின்றான் | புகுவான் |
| 22. | நகு | நகைத்தான்<br>நக்கான் | நகுகின்றான் | நகுவான் |

## II. செயப்படுபொருள் குன்றாவினை (Transitive verb)

| எண் | முதனிலை | இ.கா. | நி.கா. | எ.கா. |
|---|---|---|---|---|
| 1. | செய் | செய்தான் | செய்கின்றான் | செய்வான் |
| 2. | அறி | அறிந்தான் | அறிகின்றான் | அறிவான் |
| 3. | அள | அளந்தான் | அளக்கின்றான் | அளப்பான் |
| 4. | கொடு | கொடுத்தான் | கொடுக்கின்றான் | கொடுப்பான் |
| 5. | வாங்கு | வாங்கினான் | வாங்குகின்றான் | வாங்குவான் |
| 6. | அள் | அள்ளினான் | அள்கின்றான்<br>அள்ளுகின்றான் | அள்வான்<br>அள்ளுவான் |
| 7. | கொல் | கொன்றான் | கொல்கின்றான்<br>கொல்லுகின்றான் | கொல்வான்<br>கொல்லுவான் |
| 8. | சொல் | சொல்லினான்<br>சொன்னான்<br>சொற்றான் | சொல்கின்றான்<br>சொல்லுகின்றான் | சொல்வான்<br>சொல்லுவான் |
| 9. | கல் | கற்றான் | கற்கின்றான் | கற்பான் |
| 10. | ஆள் | ஆண்டான் | ஆள்கின்றான்<br>ஆளுகின்றான் | ஆள்வான்<br>ஆளுவான் |
| 11. | கேள் | கேட்டான் | கேட்கின்றான் | கேட்பான் |
| 12. | எண் | எண்ணினான் | எண்ணுகின்றான் | எண்ணுவான் |
| 13. | உண் | உண்டான் | உண்கின்றான்<br>உண்ணுகின்றான் | உண்பான்<br>உண்ணுவான் |
| 14. | தின் | தின்றான் | தின்கின்றான்<br>தின்னுகின்றான் | தின்பான்<br>தின்னுவான் |
| 15. | தா | தந்தான் | தருகின்றான் | தருவான் |
| 16. | காண் | கண்டான் | காண்கின்றான்<br>காணுகின்றான் | காண்பான்<br>காணுவான் |
| 17. | தொடு | தொட்டான் | தொடுகின்றான் | தொடுவான் |
| 18. | விடு | விடுத்தான்<br>விட்டான் | விடுக்கின்றான்<br>விடுகின்றான் | விடுப்பான்<br>விடுவான் |
| 19. | போடு | போட்டான் | போடுகின்றான் | போடுவான் |

## III. பொதுவினை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | திற | திறந்தது | திறக்கின்றது | திறக்கும் (செ.கு.வி.) |
| | ,, | திறந்தான் | திறக்கின்றான் | திறப்பான் (செ.குன்றாவி.) |
| 2. | வெளு | வெளுத்தது | வெளுக்கின்றது | வெளுக்கும் (செ.கு.வி.) |
| | ,, | வெளுத்தான் | வெளுக்கின்றான் | வெளுப்பான் (செ.குன்றாவி.) |

## IV. பிறவினை (Causative verb)

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | செய்-செய்வி | செய்வித்தான் | செய்விக்கின்றான் | செய்விப்பான் |
| 2. | நட-நடத்து | நடத்தினான் | நடத்துகின்றான் | நடத்துவான் |

# உருப்படி அமைப்பொழுங்கு
## (The Order in the Arrangement of an Article)

**I. பெயர்ச்சொல் (Noun)**

1. தலைப்புச்சொல் — The head word
2. எழுத்துப்பெயர்ப்பு — The transliteration
3. இலக்கணச் சொல்வகை — The word-class
4. வேற்றுமைப்பாட்டுவகை — The Mode of Declension

   (1) இயல்பு
   எ-டு : மணி — மணியை, மலை — மலையை.

   (2) சாரியைப் பேறு
   எ-டு : மரம் — மரத்தை, அவை — அவற்றை.

   (3) 4 ஆம் வே. சாரியைப் பேறும் ஏனை வே. இயல்பும்.
   எ-டு: நாண் — நாணுக்கு, நாணிற்கு.
   மான் — மானுக்கு, மானிற்கு.

   (4) 4 ஆம் வே. இயல்பும் சாரியைப் பேறும் ஏனை வே. இயல்பும்.
   எ-டு : ஊர் — ஊர்க்கு, ஊருக்கு.
   அவன் — அவற்கு, அவனுக்கு.

   (5) குற்றியலுகர டறமெய் யிரட்டல்
   எ-டு : நாடு — நாட்டை, கிணறு — கிணற்றை.

   (6) தனிக்குறிலடுத்த மெய்யீ றிரட்டல்
   எ-டு : கண் — கண்ணை, சொல் — சொல்லை.

   (7) அடி குறுகலும் மெய்யீ றிரட்டலும் 4ஆம் வேற்றுமையில் மெய்யீ றிரட்டாது சாரியைப் பேறும்.
   எ-டு: நாம் — நம் — நம்மை — நமக்கு.
   தான் — தன் — தன்னை — தனக்கு.

5. இயல்வரையறை [The Definition]
6. பொருளும் விளக்க மேற்கோளும் [The Meaning(s) and Illustrative Quotations]

   (1) தனிச்சொல் [Simple word]
   (2) கூட்டுச்சொல் [Compound word(s)]
   (3) கூட்டுத் திரிசொல் [Parasyntheton(s)]
   (4) மரபுவழக்கு [Idiomatic Expression(s)]
   அ. தனிச்சொல் [Simple word]
   ஆ. இணைமொழி [Words in Pairs]
   இ. தொடர்மொழி [Phrase(s)]
   ஈ. பழமொழி [Proverb(s)]

7. இனச்சொல் [The Cognates]

   (1) திரவிடம் [Dravidian]
   (2) ஆரியம் [Aryan]

8. இனமும் வகையும் [Species and Varieties]
9. மூலமும் வரலாறும் [The Origin and Derivation]
10. பிழைதிருத்தம் [Correction of errors found in other Dictionaries]
11. சிறப்புக் குறிப்பு [Special Notes]

## II. வினைச்சொல் (Verb)

1. தலைப்புச்சொல் [The head word]
2. எழுத்துப்பெயர்ப்பு [The transliteration]
3. சொல்வகை [The word-class]
4. புடைபெயர்ச்சி [The Mode of Conjugation]
5. இயல்வரையறை [The Definition]
6. பொருளும் விளக்க மேற்கோளும் [The Meaning(s) and Illustrative Quotations]
   (1) தனிச்சொல் [Simple word]
   (2) கூட்டுச்சொல் [Compound word(s)]
   (3) கூட்டுத் திரிசொல் [Parasyntheton(s)]
   (4) மரபுவழக்கு [Idiomatic Expression(s)]
      அ. தனிச்சொல் [Simple word]
         (அ) பெயரெச்சம் [Adjective]
         (ஆ) வினையெச்சம் [Adverb]
         (இ) வினைமுற்று [Finite verb]
         (ஈ) தொழிற்பெயர் [Verbal noun]
         (உ) வினையாலணையும் பெயர் [Participial noun]
         (ஊ) தொழிலாகுபெயர்
      ஆ. இணைமொழி [Words in pairs]
      இ. தொடர்மொழி [Phrase(s)]
      ஈ. பழமொழி [Proverb(s)]
7. இனச்சொல் [The Cognates]
   (1) திரவிடம் [Dravidian]
   (2) ஆரியம் [Aryan]
8. மூலமும் வரலாறும் [The Origin and Derivation]
9. பிழைதிருத்தம் [Correction of errors found in other Dictionaries]
10. சிறப்புக் குறிப்பு [Special Notes]

## III. இடைச்சொல் (Indeclinables)

1. தலைப்புச்சொல் [The head word]
2. எழுத்துப்பெயர்ப்பு [The transliteration]
3. சொல்வகை [The word-class]
4. இயல்வரையறை [The Definition]
5. பொருளும் விளக்க மேற்கோளும் [The Meaning(s) and Illustrative Quotations]
   (1) தனிச்சொல் [Simple word]
   (2) கூட்டுச்சொல் [Compound Word(s)]
6. மரபு வழக்கு [Idiomatic Expression(s)]
   (அ) தனிச் சொல் [Simple word]
   (ஆ) இணைமொழி [Words in Pairs]
   (இ) தொடர்மொழி [Phrase(s)]
   (ஈ) பழமொழி [Proverb(s)]
7. இனச்சொல் [The Cognates]
   (1) திரவிடம் [Dravidian]
   (2) ஆரியம் [Aryan]
8. மூலமும் வரலாறும் [The Origin and Derivation]
9. பிழைதிருத்தம் [Correction of errors found in other Dictionaries]
10. சிறப்புக் குறிப்பு [Special Notes]

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி அமைப்புத் திட்டம்

*[Plan of the Tamil Etymological Dictionary]*

உலகவழக்கு, இலக்கியவழக்கு என்னும் இருவகை வழக்கிலுமுள்ள எல்லாத் தொழிலும், கலையும் அறிவியலும்பற்றிய எல்லாச் சொற்களும், இயன்றவரை இவ் வகர முதலியிற் சேர்க்கப்பட்டுள்ளன. திருமுகம், திருமந்திரவோலை, ஆவணம், கல்வெட்டு, நாட்குறிப்பு, பற்றுமுறி, எழுதப்பட்டனவும் எழுதப்படாதனவுமான நாட்டுப்புறப் பாடல், கதை, விடுகதை, தனிப்பாடல் ஆகிய யாவும் இலக்கியத்துள் அடங்கும்.

பண்டைப் புலவர், அரசர், அமைச்சர், படைத்தலைவர், முனிவர் முதலிய பெருமக்கள் பெயர்களும், மதுரை திருவரங்கம் முதலிய சிறந்த நகரப் பெயர்களும், குமரி குடமலை முதலிய மலைத்தொடர்ப் பெயர்களும், பறம்பு பழனி முதலிய குன்றப் பெயர்களும், பஃறுளி குமரி முதலிய ஆற்றுப் பெயர்களும், பெயர்பெற்ற பறந்தலைப் பெயர்களும், இலக்கியப் புகழ்பெற்ற பிற இடப்பெயர்களும் இவ் வகரமுதலியில் இடம் பெற்றுள்ளன.

பொதுவாக, அரசர் பெயரெல்லாம் ஒருமையீற்றிலும், புலவர் பெயரெல்லாம் உயர்வுப்பன்மை யீற்றிலும் குறிக்கப்பெற்றுள்ளன.

தனிச்சொல், கூட்டுச்சொல், தொடர்ச்சொல் ஆகிய மூவகைச் சொற்களும், நெடுங்கணக்கு என்னும் வண்ணமாலை (Alphabetical) யொழுங்குப்படி உயிர், ஆய்தம், மெய், உயிர்மெய் என்ற வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

மெய்யொடு உயிர் கூடியே உயிர்மெய் தோன்றுதலால், ஒவ்வொரு மெய்யும் அதன் உயிர்மெய்கட்கு முன்னரே வைக்கப்பட்டுள்ளது.

ஆய்தமும் மெய்யும் தமிழிற் சொன்முதல் வாராமையால், அவற்றின் வரிசையிடம் சொல்லிடை கடையே பற்றியது என்பது சொல்லாமலே அறியப்படும்.

இனி, ஆய்தமும் வல்லின மெய்யும் புணர்ச்சியீறாக வன்றி இயல்பீறாக வாரா என்பதையும் அறிதல் வேண்டும்.

தமிழின் சொல்வளத்தை உலகிற்குக் காட்டற்பொருட்டும், தனித்தமிழிற் பேசவும் எழுதவும் விரும்புவார்க்குப் பயன்படற்பொருட்டும், தமிழ்ச்சொற்களும் அயற்சொற்களும் முதன்முறையாக இவ் வகரமுதலியிற் பிரிக்கப்பட்டுள்ளன. தமிழ்ச்சொற்கள் முதல் ஒன்பது மடலமாகவும், அயற்சொற்கள் தனியாகப் பத்தாம் மடலமாகவும் வெளியிடப்படவுள்ளன.

ஏதேனும் ஓர் அயற்சொல் தமிழ்ச்சொற் றொகுதியில் இடம்பெறுமாயின் அதற்கொரு சிறப்புக் கரணியம் (காரணம்) இருக்கவேண்டுமென்பது, சொல்லாமலே சொல்லைப் பார்த்தவுடன் விளங்கும்.

எ-டு: அகத்தியன், சாமிநாதையர், கால்டுவெல், போப்பு, சீவகசிந்தாமணி, மேருமந்தரபுராணம்.

தமிழ்ச்சொற்றொகுதியில் அயற்சொற்கள் வருமிடமெல்லாம், அவை அயற்சொல் லென்பது மொழிப்பெயருடன் குறிக்கப்பட்டுள்ளன.

உருப்படிகளின் (Articles) தலைப்புச் சொற்களெல்லாம், மொழிவாரியாக, உயிர், ஆய்தம், மெய்வரிசைப்பட்ட உயிர்மெய் என்னும் முறையில் தனித்தனி வண்ணமாலை வரிசையில் (Alphabetical order) அமைக்கப்பட்டுள்ளன. ஆகவே, தமிழ்ச்சொற்கள் போன்றே, அயற்சொற்களும் வெவ்வேறு வண்ணமாலை வரிசையில் அமைந்திருக்கும்.

இருபிறப்பிகளான (Hybrids) கூட்டுச்சொற்களெல்லாம், நிலைச்சொல்லின் மொழிப் படி, தமிழ்ச்சொற் றொகுதியிலோ அயற்சொற் றொகுதியிலோ சேர்க்கப்பட்டிருக்கும். வருஞ்சொல்லின் மொழியும் அவ்வவ்விடத்திலேயே குறிக்கப்பட்டிருக்கும்.

தமிழ்ச்சொல்லென்றோ அயற்சொல்லென்றோ திட்டமாகத் தெரியாத ஐயுறவுச் சொற்களெல்லாம், அயற்சொன் மடல இறுதியில் தனிப்பகுதியாகக் குறிக்கப்படும்.

பொருளால் ஆரியமும் சொல்லால் தமிழுமான பொருட்டொகைப் பெயர்கள் தமிழ்ச் சொற் றொகுதியிலும் குறிக்கப்படும். ஆயின், தொகையுறுப்புகள் வடசொற் றொகுதியில் மட்டும் கூறப்படும்.

எ-டு: நான்மறை = ஆரிய மறைநூல் நான்கு.
சதுர்வேதம் = இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் ஆரிய நால்வேதம்.

சில பொருட்டொகைகள் இருமொழியிலும் வழங்கினும், தொகையுறுப்புகள் தமிழில் மட்டும் கூறப்படும்.

எ-டு: ஐம்பொறி – மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புல வுறுப்புகள்.
பஞ்சேந்திரியம் – ஐம்பொறி

### உருப்படி அமைப்பொழுங்கு
### (Order in the arrangement of an article)

உருப்படிகள், மொத்தத்தில்,

| | | | |
|---|---|---|---|
| (1) | தலைப்புச்சொல் | — | Head word |
| (2) | எழுத்துப்பெயர்ப்பு | — | Transliteration |
| (3) | இலக்கணச் சொல்வகை | — | Word-class |
| (4) | புடைபெயர்ச்சி | — | Conjugation |
| (5) | இயல்வரையறை | — | Definition |
| (6) | பொருட்பாடு | — | Meanings in Tamil and in English |
| (7) | மேற்கோள் | — | Quotation |
| (8) | மரபுவழக்கு | — | Idioms |
| (8) | இனச்சொல் | — | Cognates |
| (10) | இனமும் வகையும் | — | Species and Varieties |
| (11) | மூலமும் வரலாறும் | — | Origin and Derivation |
| (12) | பிழைதிருத்தம் | — | Correction of Errors |
| (13) | சிறப்புக் குறிப்பு | — | Special Remarks |

என்னும் பதின்மூன்று உறுப்புகளைக் கொண்டுள்ளன. இவை யெல்லாவற்றையும் எல்லா வுருப்படிகளும் பெறா. பலவற்றில் ஒன்றும் பலவுங் குறைந்திருக்கும்.

புடைபெயர்ச்சி என்பது வினைக்கும், இனமும் வகையும் என்பது பெயருக்குமே, தனிச் சிறப்பாக வுரியனவாகும்.

## 1. தலைப்புச்சொல்

### (i) தமிழ்ச்சொல்

வழாநிலையும் வழுவமைதியுமான பெயர் வினை யிடை யென்னும் இலக்கணவகைச் செந்தமிழ்ச்சொற்களே, இவ் வகரமுதலியில் இடம்பெற்றுள்ளன. இப்ப (இப்போது), சாவல் (சேவல்), பொட்டை (பெட்டை), ரெண்டு (இரண்டு). வேங்கு (வாங்கு) என்பன போன்ற வழூஉச் சொற்களும், கொச்சைவழக்கும் இதில் விலக்கப்பட்டுள்ளன. ஆச்சு, கண்ணாலம் என்பன போன்ற கொச்சைவடிவுகள் செந்தமிழ் உரைநடைக்கு ஏலாவேனும் சில தனிப்பாடல்களிலும், பனுவல்களிலும் வந்துள்ளமைபற்றி, இதில் இடம்பெற்றுள்ளன.

போலி, இலக்கணப்போலி, மரூஉ, குறுக்கம் முதலிய திரிபுவகைகள், நல்லிசைப் புலவராலும் இலக்கண நூலாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டனவாயின், செந்தமிழின் பாற்படும்.

சொற்கள், தனிநிலையும் தொடர்நிலையும்பற்றி, (1) தனிச்சொல், (2) கூட்டுச் சொல், (3) தொடர்ச்சொல் என மூவகைப்படும்.

தனிச்சொல், (1) பகாச்சொல், (2) பகுசொல் என இருவகைப்படும்.

எ-டு: பகாச்சொல் — அ, கிண் (ஒலிக்குறிப்பு), வா, வெள்.
பகுசொல் — அன் (ஆ. பா. ஈறு), அந்த, மகன், கல்வி, கழகம், ஆன்றோர்.

தெலுங்கு கன்னடம் முதலிய திரவிட மொழிகளினின்று வந்து தமிழில் வழங்கும் திசைச்சொற்கள், தமிழ்ச்சொற்கள்போன்றே தனிச்சொற்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

எ-டு: சமாளிசு (க.) — த. சமாளி.

இவ்விரு வழிச்சொற்களின் கொச்சைவடிவங்களெல்லாம் விலக்கப்பட்டுள்ளன.

எ-டு:

| திருந்திய வடிவம் | கொச்சை வடிவம் |
| --- | --- |
| அவர்கள் | அவங்க, அவக, அவுக, அவிக |
| சேவல் | சாவல் |
| பெட்டைச்சி | பொட்டச்சி |
| வாங்கு | வேங்கு |

திருந்திய வடிவுள்ள எல்லாத் தனிச்சொற்களும் மொழியுறுப்பாதலின், இலக்கண நூல்களில் அவையல்கிளவியென விலக்கப்பட்ட அமங்கலச் சொற்களும் இடக்கர்ச் சொற்களும், எல்லா அகரமுதலிகளிலும் இடம்பெறும். ஆயினும், இடக்கரான வசவுச் சொற்களும் தொடர்ச்சொற்களும் இடம்பெறா.

விலக்கப்பட்ட சொற்களுட் சில, அவற்றின் வழுநிலையைக் காட்டுதற்பொருட்டு, எடுத்துச் சொல்லியே விலக்கப்பட்டுள்ளன.

எ-டு: சுழியம் — சுசியம், சுய்யம் என்பன கொச்சை.
தவளை — தவக்களை என்பது கொச்சை.
புதல்வர் — மகன்கள் என்பது கொச்சை; ஆண்மக்கள் என்று சொல்லலாம்.
புதல்வியர் — மகள்கள் என்பது கொச்சை; பெண்மக்கள் என்று சொல்லலாம்.

**கூட்டுச்சொல்**[1]

இருசொற் புணர்ப்பான கூட்டுச்சொல் பின்வருமாறு எண்வகைப்படும் :

எ-டு : (1) பெயரும் பெயரும் — கல்விச்சாலை, போக்குவரத்து
(2) வினையும் பெயரும் — அணிகலம், செய்வினை
(3) அடையும் பெயரும் — நன்செய், பெருந்திணை
(4) பெயரும் வினையும் — கண்ணோடு, குலைவெடி
(5) வினையும் வினையும் — எழுந்திரு, கண்டுபிடி
(6) அடையும் வினையும் — உட்கொள், முன்னேறு
(7) இரட்டைக் கிளவி — அருவரு, சலசல
(8) இணைச்சொல் — காய்கறி, சின்னபின்னம்

**தொடர்ச்சொல் :** முச்சொற்றொடரும் மேற்பட்ட சொற்றொடரும் தொடர்ச்சொல்லாகும்.

எ-டு : செங்கால்நாரை, அடித்துப்பிடுங்கும் சுத்தியல், அடையடுத்த ஆகுபெயர், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

தலைப்புச்சொல் பெரும்பான்மை தனிச்சொல்லாயும், சிறுபான்மை கூட்டுச்சொல்லாயும், மிகச் சிறுபான்மை தொடர்ச்சொல்லாயு மிருக்கும்.

இனி, ஒருபொருட்சொல், பலபொருட்சொல் எனவும் தலைப்புச்சொல் இருவகைப்படும். பலபொருட்சொல் மீண்டும், ஒருவேர்ப் பலபொருட்சொல், பலவேர்ப் பலபொருட்சொல் என இருவகைப்படும்.

**கால்** என்னும் சொல், தாங்குவது அல்லது நீண்டது என்னும் அடிப்படைக் கருத்தைக் கொண்டு தூண், அடி, காற்பங்கு, கட்டம், ஓடுநீர்நிலை, காற்று, காலம், தோட்டம், வாணம் (கடைகால்), முகவைக்கலம், கொடிவழி முதலிய பல பொருள்களைக் குறிப்பதனால், ஒருவேர்ப் பலபொருட்சொல்லாகும்.

---

[1]கூட்டுச்சொல் (பாவாணர் தந்திருந்த மற்றொரு பட்டியல்)

**கூட்டுச்சொல்** (Compound word)

இருசொற் புணர்ப்பான கூட்டுச்சொல் பின்வருமாறு எழுவகையில் நிகழும்.

க. இருபெயரொட்டு — எ-டு : ஆசிரியப்பா, காரிப்புள், பள்ளிக்கூடம்.
உ. அடையடுத்த சொல் — எ-டு : பொற்கொல்லன், வெற்றிலை.
ங. வினைமுதல்வினை — எ-டு : பொழுதடைவு, வாயூறு.
ச. தொகைச்சொல் — எ-டு : அறிமுகம், செந்தாமரை.
ரு. எச்சத்தொடர் — எ-டு : பெயரெச்சத் தொடர் — இறந்தகாலம் (தெரிநிலை), பெரியப்பன் (குறிப்பு).
வினையெச்சத் தொடர் — அட்டிப்பேறு (தெரிநிலை), இன்றியமையாமை (குறிப்பு).

சு. மரபிணைமொழி

எ-டு : எதிர்பொருள் மரபிணைமொழி — ஏற்றிழிவு.
இனப்பொருள் மரபிணைமொழி — காய்கறி, தாய்தந்தை.
மீமிசைப்பொருள் மரபிணைமொழி — சீர்சிறப்பு, பொய்புரட்டு.

எ. அடுக்குத்தொடர்

எ-டு : படிப்படி, மேன்மேல், மினுக்குமினுக்கு.

இடைச்சொற்றொடரும் உரிச்சொற்றொடரும் முற்கூறியவற்றுள் அடங்கும்.

*மணி* என்னும் சொல், முன் என்னும் வேரிற் பிறந்து சிறியதைக் குறிப்பதும், மள் என்னும் வேரிற் பிறந்து வட்டமானதையும் உருண்டையானதையுங் குறிப்பதும், மண்ணு என்னும் மூலத்திற் பிறந்து ஒளியுள்ளதைக் குறிப்பதும், மல் என்னும் வேரிற் பிறந்து கரியதைக் குறிப்பதும் ஆன பல்வேர்ப் பலபொருட் சொல்லாகும்.

பலபொருளொருசொல் என்னும் பல்பொருள், மூலம் வேறுபட்ட பொருள்தொறும் வேறு சொல்லாகவே குறிக்கப்பட்டுள்ளது. அப் பொருள்களின் கால அல்லது ஏரண முறைப்படி, அவற்றின் சொற்கள் எண்ணிடப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| *மணி*[1] = | சிறியது | எ-டு: மணிக்காடை, மணிக்குடல். |
| *மணி*[2] = | வட்டமானது | எ-டு: மணியோசை, நாழிமணி. |
| | உருண்டது, குண்டு | எ-டு: மணிவலை, குன்றிமணி. |
| | உருண்டுதிரண்டது | எ-டு: நென்மணி, மணிச்சம்பா. |
| *மணி*[3] = | கரியது | எ-டு: மணிமிடற்றோன். |
| | நீலமானது | எ-டு: மணிவண்ணன், மணிமலர். |
| *மணி*[4] = | ஒளிபெறக் கழுவியது | எ-டு: மணிமாலை. |
| | அழகானது | எ-டு: மணிவாசல். |

வினைச்சொற்களெல்லாம் ஏவலொருமை வடிவிலேயே குறிக்கப்பட்டுள்ளன. தல் (த்தல்) ஈற்றுத் தொழிற்பெயர் வடிவிற் குறிப்பது, இலக்கண அறிவில்லாதவர்க்குச் சற்று மயக்கந்தர இடமாயிருத்தலால், அவை இடைவைப்புக் குறியிட்டுப் பிரி-தல்(-த்தல்) எனப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.

சில வினைமுதனிலைகளின் இயல்பான மெய்யீற்று வடிவம், முக்காலப் புடைபெயர்ச்சியிலும் வழக்கற்று, உகரமேற்ற வடிவிலேயே வழங்குகின்றது. அதுவுங் குறிக்கப்பட்டுள்ளது.

| எ-டு: வழக்கற்றது | வழக்குற்றது |
|---|---|
| அள் | அள்ளு |
| எண் | எண்ணு |

தலைப்புச்சொல்லின்கீழ், அதனொடு தொடர்புள்ள கூட்டுச்சொல்லுக்கும், கூட்டுத் திரிசொல்லுக்கும், தொடர்ச்சொல்லுக்கும், திரிசொல்லுக்கும், பொருள் கூறப்பட்டுள்ளன. இங்ஙனமே,

ஓர் உறுப்பின் பெயரின்கீழ், அதன் வினைகளெல்லாம் வண்ணமாலை வரிசையிற் கூறப்பட்டுள்ளன.

தலைப்பச் சொல்லெல்லாம் 12 புள்ளி தடித்த எழுத்திலும், அதன் கீழ்ப்பட்ட சார்புச் சொல்லெல்லாம் 10 புள்ளி தடித்த எழுத்திலும் குறிக்கப்பட்டுள்ளன.

| எ-டு: | | |
|---|---|---|
| தலைப்புச்சொல் | — | **கடை** |
| கூட்டுச்சொல் | — | **கடைக்கண்** |
| கூட்டுத் திரிசொல் | — | **கடைக்கணித்தல்** |
| தொடர்ச்சொல் | — | **கடைக்கண் சாத்துதல்** |
| திரிசொல் | — | **கடைசி** |

தலைப்புச்சொல் — **கண்**
**கண்கசங்குதல்**
**கண்கலங்குதல்**
**கண்சிவத்தல்**
**கண்சோர்தல்**
**கண்திறத்தல்**
**கண்துடித்தல்**
**கண்துடைத்தல்**

இங்ஙனமே ஏனை வினைகளும்.

எல்லா வினைச்சொல்லினின்றும் பலவீற்று வினைப்பெயர்கள் அமையுமேனும், சிறப்புப்பொருளுள்ளவையே இவ் வகரமுதலியிற் குறித்து விளக்கப்பட்டுள்ளன.

எ-டு : **வினை** **வினைப்பெயர்கள்**
நட நடக்கை, நடத்தை, நடப்பு, நடை.

கொச்சையும் வழுவுமான கூட்டுச்சொற்களும் தொடர்ச்சொற்களும், அத்தகைய தனிச்சொல்போன்றே திருந்திய வடிவிலேயே குறிக்கப்பட்டுள்ளன.

எ-டு :

| **கொச்சை** | **திருத்தம்** |
|---|---|
| பிடிச்சுராவி | பிடித்தராவி |
| மண த்தக்காளி | மணித்தக்காளி |
| **வழு நிலை** | **வழா நிலை** |
| அரிவாள்மணைப்பூண்டு | அரிவாள்முனைப்பூண்டு |
| வெட்டரிவாள் | வெட்டறுவாள் |

வழூச்சொற்கள் வழுவா யிருப்பதொடு பொருளையும் மாற்றிவிடுகின்றன. ஆதலால், அவற்றை அறவே அகற்றுதல் வேண்டும்.

எ-டு :

| **வழாச்சொல்** | **வழுச்சொல்** |
|---|---|
| அருகண்மை (மிக நெருக்கம்) | அருகாமை (நெருங்காமை) |
| முடக்கொற்றான் (முடங்கொன்றான்) | முடக்கற்றான் (முடக்கு அற்றான்) |

பெண்சாதி என்னும் சொல்லும், இதுபோன்ற பிறவும் பிற்கால இலக்கியத்தில் இடம்பெற்றிருப்பினும், இருபிறப்பியும் (hybrid) இழிவழக்கும் (slang) வேண்டாதனவு மாதலால், எடுத்துக்காட்டி விலக்கப்பட்டுள்ளன.

தமிழினின்று வடமொழிக்குச் சென்று வடசொற் போன்றோ இருமொழிப் பொதுச் சொற்போன்றோ வழங்கும் நூற்றுக்கணக்கான சொற்களெல்லாம், தமிழ்ச்சொல்லென்று விரிவாகவும் தெளிவாகவும் விளக்கப்பட்டுள்ளன.

எடுத்துக்காட்டாக, அம்பலம், அரங்கம், உருத்திராக்கம், உருவம், உலகம், ஐயன், கடுகு, குடி, குமரன், சங்கு, சமயம், சிவன், சுக்கு, தானம், தெய்வம், நகரம், நாடகம், நாழிகை, படி, பள்ளி, மந்திரம், மாலை, முகம், யாத்திரை, வட்டம் என்னும் சொற்களைப் பார்க்க.

**'கள்'** என்னும் பன்மையீறு பெயர்ச்சொற்களோடு புணரும் புணர்ச்சி, இதுவரை எவ் விலக்கண நூலிலுஞ் சொல்லப்படவில்லை. தமிழில் அஃறிணைப் பன்மையீறு இன்றியமையாததன்றாதலால், பண்டை யிலக்கியத்தி லெல்லாம் பால்பகா வஃறிணைப் பெயரே பயின்று வந்திருக்கின்றது. ஆகவே, இலக்கிய வாயிலாகவும் 'கள்' என்னும் பன்மையீற்றுப் புணர்ச்சிநெறியை அறிதற்கில்லை.

மெய்யீற்றுப் பெயர்களும் வன்றொடர்க் குற்றியலுகரமல்லாத பிறவுயிரீற்றுப் பெயர்களும், கள்ளீற்றொடு புணரும் புணர்ச்சிபற்றிக் கருத்துவேறுபாடோ இடர்ப்பாடோ ஒன்றுமில்லை. வன்றொடர்க் குற்றியலுகரவீறு ஒன்றுபற்றியே, புலவரிடைக் கருத்துவேறுபாடு இருந்துவருகிறது. அதுவும் அண்மையிற் சற்று வலுத்துள்ளது.

வன்றொடர்க் குற்றியலுகர வீற்றுப் பெயர்கள், **தத்த** (கட்டு), **தனத்த** (கருத்து), **தனாத்த** (குடாப்பு), **தாத்த** (பாட்டு), **தானாத்த** (பாராட்டு) முதலியனவாகப் பல்வேறு வண்ண வாய்பாட்டுச் சொற்களாயிருக்கும். அவற்றுள், **தனத்த** வாய்பாட்டுச் சொற்களான எழுத்து, உறுப்பு என்பன சிறந்த உரையாசிரியராலும் சிறந்த புலவராலும் வலிமிகுத்தே கள்ளீற்றொடு புணர்க்கப்பட்டுள.

எ-டு: ***யாப்பருங்கல விரிவுரையாளர் (விருத்தியுரைகாரர்),***

'இனி விசிர்திரக்கா என்பது..............................அவ் வெழுத்துக்களை ஒழுங்குங் கண்ணறையும் படாமே நிறுவி, ஓரெழுத்துக்கு ஓரடியாகவானும் ஒரு சீராகவானு முற்றுப்பெறப் பாடுவது' (யாப். ஒழி. 2, உரை).

*பரிமேலழகர்,*

'எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன' (குறள். 1, உரை).

***நச்சினார்க்கினியர்,***

'இனி எழுத்துக்களது பெயரும் முறையுந் தொகையும் இச் சூத்திரத்தாற் பெற்றாம்' (தொல். எழுத்து. நூன். 1, உரை).

*பேராசிரியர்,*

'எழுத்துக்க ளியற்றப்பட்டு எழுத்ததிகாரத்தின் வேறுபட்ட தொகையும்' (தொல். பொருள். செய். 2, உரை),

'மாத்திரை முதலியவற்றை உறுப்புக்களான் இத்துணை மாத்திரை கொண்டது செய்யுளென்றானும்' (தொல். பொருள். செய். 35, உரை).

***சிவஞானமுனிவர்,***

'அகரம் உயிரெழுத்துக்களிலுங் கலந்து நிற்குமாறு அறிக' (நன். எழுத்து. 18, விளக்கம்).

இங்ஙனம் வன்றொடர்க் குற்றியலுகர வீற்றுப் பெயர்ச்சொற்களுள் ஒரு வடிவப் புணர்ச்சியைக் கண்டமட்டில், ஏனை வடிவப் புணர்ச்சிகட்கும் இதுவே நெறியென்று கருதி, வன்றொடர்க் குற்றியலுகரவீற்றுப் பெயர்ச்சொல் எல்லாம் வலிமிக்கே கள்ளீற்றொடு புணருமென்று ஒரு நெறியீடிட்டு, அதனைக் கடைப்பிடித்து வந்தனர் பெரும்பால் தமிழ்ப் பண்டிதர்.

ஆயின், இன்று, ஒருசார் பெரும்புலவரும் பொருள்மயக்கமும் இன்னாவொலியும் கரணியமாகக் காட்டி, வலிமிகு புணர்ச்சியைக் கண்டித்து இயல்புபுணர்ச்சியையே கடைப்பிடித்து வருகின்றனர்.

**நீட்டுகள்** என்னும் இயல்புபுணர்ச்சியும், நீட்டோலைகள் என்றும் நீட்டித்தரும் கள் என்றும் பொருள்படுமாதலால், பொருள்மயக்கம் என்பது சிறந்த கரணியமாகாது. ஆயின், இன்னாவொலி யென்னும் கரணியம் ஏற்கத் தக்கதே. ஆதலால், பெரும்புலவரான முன்னோரையும் பின்னோரையும் ஒருங்கே தழுவி, இருசாரார்க்கும் பொதுவான உறழ்வுப் புணர்ச்சியை நெறியிடுவது சாலத் தகுந்ததாம்.

'வன்றொடர்க் குற்றுக ரப்பெயர் பன்மைக்
கள்ளொடு புணரின் வன்மையோ டுறழும்'

என்பது உரைநூற்பா. இங்ஙனம் பல உறழ்வுப் புணர்ச்சிகள் தொல்காப்பியத்திலும் நன்னூலிலும் குறிக்கப்பட்டிருப்பது, புலவர் அனைவரும் அறிந்ததே.

'கள்' என்னும் பன்மையீறு அஃறிணைக்குச் சிறப்பாகவுரியது. அதற்கு வேறு பொருளின்மையால், அஃறிணைப் பன்மைப்பெயர் எதுவும் இங்குப் பொருள்கூற எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஆயின், அவ் வீறு பன்மையும் உயர்வுங் குறித்து உயர்திணையில் அருகி வழங்குவதால், அத்தகையன மட்டும் இங்குக் கொள்ளப்படும்.

எ-டு: மக்கள், அவர்கள், அடிகள், குருக்கள்.

வினைச்சொற்களின் முதனிலையென்னும் மூலமெல்லாம் ஏவலொருமை வடிவிலேயே காட்டப்பட்டுள்ளன.

எ-டு: இரு, எழு, நில், நட.

புடைபெயர்ச்சியில் உருமாறும் வினைகளாயின், அவ் வுருமாற்றம் முதனிலையடுத்துப் பிறைக்கோட்டுள் குறிக்கப்பட்டுள்ளது.

எ-டு: வா (வரு), தா (தரு).

வினைச்சொற்களின் பொருள்களைக் காட்டும் மேற்கோள் எடுத்துக்காட்டுகளெல்லாம், பெரும்பாலும் முக்கால முற்றுவடிவில் அல்லது எச்சவடிவில் இருப்பதினாலும், ஏவல் வடிவில் எல்லாப் பொருள்களுந் தோன்றாமையாலும், வினைச்சொற்களெல்லாம் முதற்கண் முதனிலையும் ஈறும் பிரிக்கப்பட்ட தொழிற்பெயர் வடிவிலேயே காட்டப் பட்டுள்ளன. எல்லாத் தொழிற்பெயர்கட்கும் பொதுவான 'தல்', 'கை' என்னும் ஈரீறுகளுள் முன்னதே பெருவழக்காதலால், அதுவே இங்குக் கையாளப்பட்டுள்ளது.

எ-டு: உழு-தல், நட-த்தல்

சில வினைமுதனிலைகளின் மெய்யீறு புடைபெயர்ச்சியில் புணர்ச்சியால் திரிவதால், அத் திரிவுவடிவும் பக்கத்திற் காட்டப்பட்டுள்ளது.

எ-டு: நில்-தல் (நிற்றல்), கேள்-தல் (கேட்டல்)

சில வினைமுதனிலைகள் புடைபெயர்ச்சியில் உகரச்சாரியை பெறுகின்றன. அச் சாரியை வினைமுதலை யடுத்துப் பிறைக்கோட்டுள் காட்டப்பட்டுள்ளது.

எ-டு: சொல்(லு)-தல், கொள்(ளு)-தல்.

சில வினைமுதனிலைகள் உகரச்சாரியை பெற்றும் பெறாதும் புடைபெயர்கின்றன. அவற்றின் இருநிலைமையும் அடுத்தடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

எ-டு: உண்(ணு)-தல், உண்டல்.

செய்யுட்குச் சிறப்பாகவுரிய தொழிற்பெயர் வடிவங்கள் இங்குக் கொள்ளப்பட்டில.

எ-டு: சொற்றல், கோடல்.

வினைகளின் புடைபெயர்ச்சி வாய்பாடுகளெல்லாம், ஒரு தனிப்பட்டியலிற் குறிக்கப் பட்டுள்ளன.

தொழிற்பெயர், ஏவல், முற்று, எச்சம், வினையாலணையும் பெயர் வடிவங்கள் எல்லா வினைகட்கும் உண்டேனும், முற்றல்லாத வடிவங்கள் ஏதேனும் சிறப்புப் பொருள் கொண்டவிடத்தே இங்குக் கூறப்பட்டுள்ளன.

எ-டு: தொழிற்பெயர் — இருக்கை, காட்சி, வழக்கம், கொள்வனை.
ஏவல் — போ (தொலைந்து).
பார் (உன்னை என்ன செய்கிறேன்).
பெயரெச்சம் — வழுத்த.
வினையெச்சம் — வந்து, திரும்ப.
வினையாலணையும் பெயர் — கண்டவன்.

## ii. அயற்சொல்

மூவேந்தராட்சி முற்றும் நீங்கியபின், இடைக்காலத்தில் தமிழ்மக்கட்குப் பொதுவாகத் தாய்மொழி யுணர்ச்சியே இல்லாது போய்விட்டதனால், அடுத்தடுத்து வந்த அயன்மொழிச் சொற்களையெல்லாம் தேவையின்றி ஆண்டுவந்திருக்கின்றனர். அதனால் அளவிற்கு மிஞ்சி அயற்சொற் களைகள் புகுந்து, தமிழ்ப்பயிர் தழைத்தோங்கி வளராவாறு தடுத்து வருகின்றன.

அயன்மொழிச் சொற்களுள், சிறப்பாக வடமொழி ஆங்கிலம் ஆகிய இருமொழிச் சொற்களே தமிழுக்குப் பெருங்கேடு விளைத்து வருகின்றன. வடசொற்கள் வலிந்து புகுத்தப்பட்டவை; ஆங்கிலச் சொற்களோ வலியப் புகுத்திக்கொண்டவை. முன்னதற்கு வடமொழி தேவமொழியென்னும் ஏமாற்றும், பின்னதற்கு ஆங்கிலம் அறிவியன்மொழியும், உலகமொழியும், ஒருகால ஆட்சி மொழியுமாகும் என்னும் உண்மையும் துணைநிற்கின்றன.

அயன்மொழிச் சொற்களை வேண்டாது வழங்குவதினால் தமிழ்ச்சொற்கள் வழக்கு வீழ்ந்து நாளடைவில் இறந்துபடுவதுடன், புதுச்சொல் புனையும் ஆற்றலும் அவாவும் தமிழர்க்கு அற்றுப்போகின்றன. அதோடு, வழக்கிறவாத பல அடிப்படைத் தமிழ்ச் சொற்களும் அயற்சொற்களாக மாறிவிடுகின்றன.

பேசுவதே மொழியென்றும், கருத்தைத் தெரிவிக்கக் கருவியாயிருப்பதே மொழியின் பயனென்றும், கடன்சொற்களாலேயே மொழி வளருமென்றும்,

> ''பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே''

என்றும், சிறந்த அறிவும் பரந்த நோக்கும் உள்ளவர்போற் சிலர் நடித்துத் தம் புல்லறிவைப் புலப்படுத்துவர். இக் காலத்தில் நாட்டுப்புறக் கல்லா மக்களும் 'ஐயா' என்னும் தமிழ்ச் சொல்லைப் புறக்கணித்து, 'சார்' என்னும் ஆங்கிலச் சொல்லையே ஆண்டுவருகின்றனர். அதனால், அச் சொல்லையும் அகரமுதலியிற் சேர்க்கவேண்டுமென்று தமிழ்ப் பகைவரும் கூறத் துணியார். ஆகவே, ஆழ வழக்கூன்றியனவும் தமிழுக்குத் தேவையானவுமான அயன் மொழிச் சொற்களே இங்குச் சேர்க்கப்பெற்றுள்ளன. அவற்றை மெள்ளமெள்ள ஒவ்வொன்றாக உதறிவிட்டு, பழந்தமிழ்ச் சொல்லையோ புதுப்புனைவுச் சொல்லையோ நாளடைவில் ஆளவேண்டும் என்னுங் கருத்தையே, தமிழர் உள்ளத்திற் பதித்தல் வேண்டும்.

அயற்சொற்கள் எம்மொழியின வாயினும், சொல்வகையும் பொருளும் மட்டுமே குறிக்கப்பட்டுள்ளன; தமிழ்ச்சொற்போல் விரிவான விளக்கம் பெற்றில.

நாத் திருகிகளும் அலகுடைப்பான்களுமாகிய ஜஹத, ஜஹல்லக்ஷணை, ரக்திஷ்டீவி, சந்நிபாத ஜ்வரம் என்பனபோன்ற சமற்கிருதச் சொற்களும் இஷுராக்கு, இஸ்திக்பார் என்பனபோன்ற அரபிச் சொற்களும், டயல், டெலிபோன் என்பனபோன்ற ஆங்கிலச் சொற்களும் இதில் இடம்பெற்றில.

அத்தம், சங்கம் என்பனபோன்ற சமற்கிருதப் பலபொரு ளொருசொற்கள், தமிழ்ச் சொற்கள்போன்றே பல சொற்களாகப் பிரித்துப் பொருள் கூறப்பட்டுள்ளன.

அர்த்தம், அருத்தம்; தர்மம், தருமம் என இருவேறு வடிவில் வழங்கும் வடசொற்கள், உகரம் இடைச்செருகிய வடிவிலேயே குறிக்கப்படும்.

பத்மம், வக்ரம் என்பன, பதுமம், வக்கிரம் என்னும் முழுத் தற்பவ வடிவிலேயே குறிக்கப்பட்டுள்ளன. இங்ஙனமே இவைபோன்ற பிறவும்.

சக்ரம், ரக்தம் என்பன, சக்கரம், அரத்தம் என்னும் தமிழ்ச்சொல்லின் திரிபாகக் காட்டப்பட்டுள்ளன. இங்ஙனமே இவைபோன்றே பிறவும்.

அயற்சொற்கள் எம்மொழிச் சொல்லாயினும், அவற்றின் சிறப்பெழுத்துகளெல்லாம் "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்னும் தொல்காப்பிய நெறியின் விரிவாட்சி முறையில், இயன்ற அளவு நெருங்கிய தமிழெழுத்துக ளாலேயே குறிக்கப்பட்டுள்ளன.

ஆய்தவெழுத்தின் துணைகொண்டு அயலெழுத்துகளைக் குறிக்கவியலாதென்பது, 'அஃகேனம்' என்னும் உருப்படியில் விரிவாக விளக்கப்பட்டது.

## 2. எழுத்துப்பெயர்ப்பு

எல்லாத் தமிழெழுத்துகளும், வேறுபாட்டுக் குறிகளைத் துணைக்கொண்டு ஆங்கில வெழுத்திற் பெயர்க்கப்பட்டுள்ளன. எழுத்துப்பெயர்ப்பு அட்டவணையைப் பார்க்க.

தமிழிலுள்ள க, ச, ட, த, ப வடமொழியிலும் ஆங்கிலத்திலுமுள்ள *k, c, ṭ, t, p* அல்ல. ஒவ்வொரு வகையிலும் ஒரு தமிழ் வல்லெழுத்து இரட்டித்தால்தான், ஒரு வட மொழி யாங்கில வல்லெழுத்திற்கு ஒப்பாகும்.

எ-டு : வடமொழி — *kāka* — தமிழ் — காக்க
ஆங்கிலம் — *making* — தமிழ் — மேக்கிங்

இங்ஙனமே ஏனை வல்லினமும், தமிழ்ச் சகரத்திற்கு நேர் வடமொழி ஶ அல்லது ஆங்கில *š* என்னும் எழுத்தே. இருசகரம் ஒன்றாயிணைந்தால்தான் '*c*' ஒத்தொலிக்கும். தமிழ் றகரம் இரண்டில் ஆங்கில '*t*' ஒத்தொலித்தலை நோக்குக. இதனால், தமிழில் *ng, nj, ṇḍ, nd, mb, ṉṟ* என்ற மெலிவலியிணை யொலிகளேயன்றி, *nk, nc, ṇṭ, nt, mp* என்ற மெலிவலியிணை யொலிகள் இல்லை; தமிழினின்று மிகப் பிந்தித் திரிந்த திரவிட மொழி களில்தாம் இவை உள்ளன.

ஆதலால், க, ச, ட, த, ப என்பன முறையே *ḳ, š, ḍ, t, p* என்றே வரி பெயர்க்கப்பட்டுள.

## 3. இலக்கணச் சொல்வகை

பெயர்ச்சொற்களெல்லாம் பெ. (n.) என்றும், வினைச்சொற்களெல்லாம் வி. (v.) என்றும், இடைச்சொற்கள் பொதுவாக இடை. (ind.) என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

உரிச்சொல் என்பது, இலக்கணவகைச் சொல்லன்மையானும், ஏனை முச்சொல்லாகவு மிருத்தலானும், அவ்வச் சொல்லிற்கேற்பப் பெயரென்றோ வினையென்றோ இடை யென்றோ குறிக்கப்பட்டுள்ளது.

சுட்டுப்பெயர்கள் சு. பெ. (demons. pron.) என்றும், வினாப்பெயர்கள் வி. பெ. (inter. pron.) என்றும், தன்மைப் பெயர்கள் த. பெ. (pers. pron.) என்றும், முன்னிலைப் பெயர்கள் மு. பெ. (pers. pron.) என்றும், தொழிற்பெயர்கள் தொ.பெ. (vbl. n.) என்றும், பண்புப்பெயர்கள் பண். பெ. (abst. n.) என்றும், வினையாலணையும் பெயர்கள் வினையா. பெ. (parti. n.) என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

ஒரு சொல் கூட்டுச்சொல்லாகவோ தொடர்ச்சொல்லாகவோ இருந்து பெயர்ச் சொல்லில் முடியின், பெயர்ச்சொல் (n.) என்றே குறிக்கப்பட்டுள்ளது.

வினைச்சொல் செயப்படுபொருள் குன்றிய வினையாயின் செ. கு. வி. (v.i.) என்றும், செயப்படுபொருள் குன்றா வினையாயின் செ. குன்றாவி. (v.t.) என்றும் பிறவினையாயின் பி. வி. (v. caus.) என்றும், செயப்பாட்டு வினையாயின் செயப்.வி. (pass. vo.) என்றும், எதிர்மறை வினையாயின் எ. ம. வி. (neg.v.) என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

இடைச்சொல் முன்னொட்டாயின் 'pref.' என்றும் பின்னொட்டாயின் 'suff' என்றும், ஈறாயின் 'end.' என்றும், இடைநிலையாயின் 'part.' என்றும், சொற்சாரியையாயின் 'eu. part.' என்றும், எழுத்துச் சாரியையாயின் 'en. part.' என்றும், உணர்ச்சிக் குறிப்புச் சொல்லாயின் 'int.' என்றும் ஆங்கிலத்தில் குறிக்கப்பட்டுள்ளது.

## 4. புடைபெயர்ச்சி

செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை, இவ்விரண்டிற்கும் பொதுவான வினை, பிறவினை ஆகிய நால்வகையாகப் பகுத்து எல்லா வினைகட்கும் முக்காலப் புடைபெயர்ச்சி வாய்பாடுகள் முதன்முறையாகவும் முழு நிறைவாகவும் வகுக்கப்பட்டுள்ளன. அவற்றைப் புடைபெயர்ச்சி வாய்பாட்டு அட்டவணையில் காண்க.

புடைபெயர்ச்சி வாய்பாடெல்லாம், ஆண்பால் இறந்தகால வினைமுற்று வடிவிலேயே வகுக்கப்பட்டுள்ளன (ஐம்பாலும் படர்க்கைக்கே உரியனவாதலால், படர்க்கை ஆண்பால் என்றோ ஆண்பாற் படர்க்கை யென்றோ குறிக்கத் தேவையில்லை).

புடைபெயர்ச்சியில் முதனிலை வடிவு மாறும் வினைகளும், ஒரு காலத்திலோ இரு காலத்திலோ பல்வகையில் புடைபெயரும் வினைகளும், வாய்பாட்டொழுங்கிற்குட் கொண்டுவரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு வினைச்சொற்கும், இலக்கணச் சொல்வகைக்குப்பின், புடைபெயர்ச்சி வாய்பாட்டெண் குறிக்கப்பட்டுள்ளது.

## 5. இயல்வரையறை

பொருள்களின் இயல்பும் வினைகளின் நிகழ்முறையும், இயன்றவரை நிறைவாக வண்ணிக்கப்பட்டுள்ளன.

**அக்கம்**[2], நேபாளத்தில் விளைவதும் வெண்மை கருமை செம்மை பொன்மை குரால் (brown) என்னும் நிறங்களால் ஐவகைப்பட்டதும், ஒன்றுமுதல் பதினாறுவரை முண் முகங்களைக் கொண்டதும், மருத்துவ ஆற்றல் மிகுந்ததாகக் கருதப்படுவதும், குமரி நாட்டுக் காலந்தொட்டுச் சிவநெறித் தமிழரால் அணியப்பட்டு வருவதும், ஆரியர் வந்தபின் உருத்திராக்கம் (ருத்ராக்ஷ) என்று சொல்லப்படுவதுமான காய்மணி.

**நடத்தல்**, மக்களும் பறவைகளும் இரு காலையும் மாறிமாறி முன்புறம் தூக்கி வைத்து இடம்பெயர்தல். இங்ஙனமே விலங்குகளும் நாற்காலால் இடம்பெயர்தல்.

வினைகளின் இயல்வரையறையெல்லாம், 'தல்' வீற்றுத் தொழிற்பெயர் வடிவிலேயே கூறப்பட்டுள்ளன.

## 6. பொருட்பாடு
## (Meanings)

எல்லாச் சொற்கும் எல்லாப் பொருளும் இயன்றவரை கூறப்பட்டுள்ளன. சொற்களின் அல்லது பொருள்களின் வழக்குவகையும் ஆங்காங்கு குறிக்கப்பட்டுள்ளது. உலக வழக்கு, இலக்கிய (செய்யுள்) வழக்கு, பழைய வழக்கு, இடைக்கால வழக்கு, இக்கால வழக்கு, இடவழக்கு, குலவழக்கு, வகுப்பு வழக்கு, அயல்வழக்கு, பெருவழக்கு, அருகிய வழக்கு, இழிவழக்கு, கொச்சை வழக்கு என வழக்குகள் பல்வேறு வகைய.

சொற்பொருள்களின் காலமுறைப்பட்ட ஒழுங்கை இலக்கியத்தினின்று அறிய முடியாதாகையால், ஏரண முறைப்பட்ட ஒழுங்கே இங்குக் கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. அது பெரும்பாலும் இயற்கையொழுங்கை ஒத்திருக்கும்.

ஒரு சொல் பெயராகவும் வினையாகவும் ஆண்டு நடத்தப்படின், இருவகை யாட்சியும் வெவ்வேறு உருப்படிகளாக விருக்கும். ஒரே சொல் வினையல்லாத வேறு பல்வகை யிலக்கணச் சொல்லாக ஆளப்படின், ஒரே உருப்படியில் சொல்வகைதொறும் பொருள்கள் வெவ்வேறாக எண்ணிட்டுக் கூறப்பட்டிருக்கும்.

ஒரே வினைச்சொல் செயப்படுபொருள் குன்றியவினையாகவும் குன்றாவினையாகவும் இருப்பின், அவற்றின் பொருள்கள் இருவேறு வரிசையாகக் கூறப்பட்டிருக்கும். இருவகை வினைகளிலும் எது முந்தியதென்னும் யாப்புறவில்லை. பெருவழக்கானது முந்திக் கூறப்பட்டிருக்கும்.

பல சொற்கட்கு அல்லது சொல்வடிவுகட்குப் பொருள் ஒன்றாயிருப்பின், இடத்தை மீத்தற்பொருட்டு, முந்திப்பொருள் கூறப்பட்ட அல்லது பெருவழக்கான சொல்லைப் பார்த்துப் பொருளறிந்து கொள்ளுமாறு, இன்ன சொல்லைப் பார்க்க என்று ஒரு வியங்கோள் இடப்பட்டிருக்கும். அச் சொல் எண் கொண்டதாயின், அவ் வெண்ணும் அச் சொல்லுடன் குறிக்கப்பட்டிருக்கும்.

எ-டு : ***அக்கிணி — அக்குணி*** பார்க்க.

சிலவிடங்களில், சொற்பொருளின் மிகுவிளக்கத்திற்காகவும் இத்தகைய மாட்டெறிவுக் குறிப்பு (cross reference) இருக்கும்.

எ-டு: ***அக்காள் — அக்கா*** பார்க்க.

ஒரு கூட்டுச்சொற் குறுக்கத்தின் பொருளுக்கும், அதன் நிறைவடிவுச் சொல்லைப் பார்க்கச் சொல்லியிருக்கும்.

எ-டு : ***அக்காளி — அக்காளிப்பிரசாதம்*** பார்க்க.

ஒரு சொல்லின் ஒரு பகுதி பின்னர் ஓரிடத்தில் விளக்கப்படுமாயின், அவ்விடத்தைப் பார்க்கும்படியும் வியங்கோள் இடப்பட்டிருக்கும்.

எ-டு : **அஃகான்,** 'அ' என்னும் எழுத்து.
**கான்**³ பார்க்க.

ஒரு பொருட்டொகையின் ஒரு கூறுமட்டும் தனித்துக் கூறப்படினும், அத் தொகை முழுதுங் கூறப்படும் இடமும் மாட்டெறிவாற் குறிக்கப்படும்.

எ-டு: குன்றக்கூறல் = பொருள் விளங்காவாறு குறைந்த அளவில் கூறுதல்; எழுவகை மதங்களுள் ஒன்று. **எழுமதம்** பார்க்க.

ஒருபொருட் பலசொற்களுள் ஒன்றற்கு ஆங்கிலம், இலத்தீன் போன்ற மேலையாரிய நேர்ச்சொல் குறிக்கப்படல் வேண்டுமாயின், அது அவற்றுட் பெருவழக்கான சொல்லையடுத்தே குறிக்கப்பட்டிருக்கும்.

எ-டு : வடவை — **L.** *aurora borealis.*

இருதிணைக்கும் இருபாற்கும் பொதுவான ஒருமைச் சொற்களின் பொருள், உயர்திணை யிருபாற்குமோ இருதிணை யொருமைப்பால் மூன்றற்குமோ பொருந்துமாறு, ஈறு பிரித்துக் கூறப்பட்டுள்ளது.

எ-டு : பொறியிலி = அறிவில்லாதவ-ன்-ள்.
கண்ணறை = கண்ணில்லாத-வன்-வள்-து.

எல்லாத் தலைப்புச்சொற்கட்கும் அதன்கீழ் வரும் சார்புச்சொற்கட்கும், தமிழ் முன்னும் ஆங்கிலம் பின்னுமாக இருமொழியிலும் பொருள் கூறப்பட்டுள்ளது.

ஒரு சொல்லிற்குக் கூறப்படும் பொருள், தமிழ் மரபிலும் ஆரிய மரபிலும் வேறுபடுமாயின், தமிழமரபே தழுவப்பட்டுள்ளது.

எ-டு : ஆனைந்து — பால், தயிர், மோர், வெண்ணெய், நெய்.

மோரும் வெண்ணெயும் நீக்கி, மூத்திரமும் சாணமும் சேர்ப்பது ஆரிய மரபு.

எல்லாத் தமிழ்ச்சொற்கும் இயன்றவரை தமிழ்ச்சொல் வாயிலாகவே பொருள் கூறப்பட்டுள்ளது.

எ-டு : நாமகள் = கலைமகள், கல்வித்தேவி.

## 7. மேற்கோள்

மூவகைச் சொற்கட்கும் கூறப்படும் பொருள்களை, ஆட்சி வாயிலாக உறுதிப் படுத்தும் பொருட்டும், மிகத் தெளிவாக விளக்குதற் பொருட்டும், நல்லிசைப் புலவர் செய்யுள்களினின்றும், ஆன்றோரால் ஒப்புக்கொள்ளப்பட்ட அளவை நூல்களினின்றும், மேற்கோள்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

ஒவ்வோ ரிலக்கிய மேற்கோளிலும், அதிகாரமும் இயலும் அல்லது காண்டமும் படலமும் அல்லது இவைபோன்ற பிறவும் சொற்குறுக்கங்களாலும், நூற்பகவுஞ் செய்யுளும் அல்லது பக்கமும் வரியும் எண்ணாலும் குறிக்கப்பட்டுள்ளன.

செய்யுள் மேற்கோளில்லாவிடத்து, கல்வெட்டுக் கூற்றுகளும் உலகவழக்குக் கூற்றுகளும் உரைநடை வடிவிற் காட்டப்பட்டுள்ளன.

இருவகை வழக்கிலும் மேற்கோளில்லா அருஞ்சொற்கட்கு, அகரமுதலிகளும், 'நிகண்டு' என்னும் உரிச்சொற் றொகுதிகளுமே சான்றாகக் குறிக்கப்பட்டுள்ளன.

எ-டு : (சங்.அக.), (திவா.).

மேற்கோள் காட்டப்படும் வகைகளெல்லாம் ஒரு தனி அட்டவணையிற் குறிக்கப்பட்டுள்ளன.

மேற்கோள் எடுத்தாளப்பட்ட எல்லா நூல்களின் பெயரும், அவற்றின் ஆசிரியர் பெயரும், பிற விளத்தங்களும் ஒரு நீண்ட பட்டியிற் குறிக்கப்பட்டுள்ளன.

## 8. மரபுவழக்கு

ஒவ்வோரிடத்திலோ நாடு முழுவதுமோ, சில பெயர்ச்சொற்களும் வினைச் சொற்களும், ஒவ்வொரு சிறப்பான பொருளில் தொன்றுதொட்டு வழங்கிவருகின்றன. அத்தகைய மரபுவழக்கு, தனிச்சொல், இணைச்சொல் (words in pairs), கூட்டுச்சொல், தொடர்ச்சொல் என்னும் நால்வகையாக இருக்கும்.

எ-டு : **பழியாய்** = குறும்புத்தனமாக.

இவன் பிள்ளைகளை யெல்லாம் பழியாய் அறைந்துவிடுகிறான் (நெல்லை).

**கண்ணீருங்கம்பலையும்** = கண்ணீர் வடித்தலும் உரத்த குரலில் அழுதலும். கண்ணகி நெடுஞ்செழியனிடம் கண்ணீரும் கம்பலையுமாய் வந்து நின்றாள் (நெல்லை).

**கொடித்தட்டல்** = நல்லபாம்பு கடித்தல் (நெல்லை).

**கட்டைதட்டல்** = விரியன்பாம்பு கடித்தல் (நெல்லை).

**ஆயிரங்காலத்துப்பயிர்** = வாழ்நாள் முழுவதும் தொடரும் மணமக்கள் உறவு.

## 9. இனச்சொல்

தமிழும் தெலுங்கு கன்னடம் முதலிய திரவிட மொழிகளும் ஓரினம் என்பது, இன்று உலகறிந்த வுண்மை. ஆயின், தமிழம் அல்லது தென்மொழி (தமிழும் திரவிடமும்) ஆரியத் தொடு தொடர்புடைய தென்பது, இன்னும் உலக அறிஞரால் ஒப்புக்கொள்ளப்படவில்லை. கால்டுவெலார் தமிழத்தைத் தவறாகச் சித்தியமொழிக் குடும்பத்திற்கு இனமாகக் கூறினார். அத் தவற்றை இன்று ஆராய்ச்சியாளர் கண்டுகொண்டனர். ஆயின், தமிழத்திற்கும் ஆரியத்திற்குமுள்ள உறவை உலகு இன்னும் அறியவில்லை. உண்மையில், இந்தோ–ஆரியம் என்னும் மொழித்தொடர், தமிழொடு தொடங்கிச் சமற்கிருதத்தில் முடிவதாகும். இவ் வுண்மை உலகமெங்கும் பரவுங்காலம் அண்மையதென்னும் நம்பிக்கையினால், இங்குத் திரவிடச் சொற்கள் மட்டுமன்றி, ஆரியச் சொற்களும் இனச்சொற்களாகக் காட்டப்படும்.

எ-டு: **திரவிடம்** (தமிழ்) – மக = பிள்ளை, மகன், மகள், இளமை. க. மக.
மக → மகவு = குழந்தை, மகன், குரங்குக்குட்டி. க. மகவு.
மக → மகன் = புதல்வன், ஆண்பிள்ளை. க. மகன்.
மக → மகள் = புதல்வி, பெண். ம. மகள். க. மகள்.

**ஆரியம்**

E. *Mac.* A Gaelic word signifying son, and prefixed to many surnames, as Mac Donald, MacGrigor, & c. It is synonymous with son in names of Teutonic origin...... It is allied to Goth. *magus*, a son, fem. *magaths* (G. *magd*, a maid). (The Imperial Dictionary, Vol. III, p. 91).

## 10. இனமும் வகையும்

சில அல்லது பல பொருள்கள் ஒரே இனத்தைச் சேர்ந்தவை. ஓரினத்திற்குள்ளேயே சில பல வேறுபாடுகள் உண்டு. அவை வகைகள் எனப்படும்.

இனத்திற்கு மேற்பட்ட பேரினமு முண்டு. அதைக் குலம் எனலாம்.

எ-டு: அவரையும் மொச்சையும் ஓரினம். அதனால் அவை, முறையே, வீட்டவரை யென்றும் காட்டவரை யென்றும் சொல்லப்படும்.

இனி, சுடலையவரை, கொத்தவரை (சீனியவரை), தம்பட்டவரை முதலியன அவரையொடு கூடி ஒரு பேரினத்தைச் சேர்ந்தனவாகும்.

## 11. மூலமும் வரலாறும்

இயன்றவரை எல்லாச் சொற்கட்கும் வேரும் வரலாறும் கூறுவதே, இவ் வகரமுதலியின் தனிச் சிறப்பாகும்.

எ-டு: புடலை (புடலங்காய்)
புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளையுள்ள நிலைத்திணை வகைகள்.

"புறக்கா ழனவே புல்லென மொழிப" (தொல். பொருள். மர. 86). அறுகுபோன்ற சிறுவகையும் மூங்கில்போன்ற பெருவகையும் புல் என்னும் இனத்தைச் சேர்ந்தவையே.
புல்லாங்குழல் = மூங்கிற்குழல்.
புல் → புள் → புழல். புள் → புழை → பூழை = துளை, துளைப்பொருள்.
புழல் → புடல் = உட்டுளையுள்ள காய். ழ → ட, போலித்திரிபு.
**ஒ. நோ:** குழல் → குடல்.

வாழை, கத்தரி முதலிய பிற கெட்டிக் காய்களுடன் ஒப்புநோக்கின் புடலின் உட்டுளைத் தன்மை விளங்கித் தோன்றும்.

புடல் → புடலை. புடலை + காய் – புடலங்காய். வ. பட்டோலிக்கா.

இச் சொல் வரலாற்றினால், புடலங்காய் என்பது தென்சொல் என்றும் பட்டோலிக்கா என்னும் வடசொல் அதன் திரிபென்றும் தெளிவாகத் தோன்றும். ஆயின், வடமொழியாளர், பட்டோலிக்கா என்னும் வடசொல்லினின்று புடலங்காய் என்னும் தென்சொல் திரிந்துள்ளதாகத் துணிச்சலுடன் கூறுவர்.

இது சொற்பிறப்பியல் அகரமுதலியாதலின், வடசொல்லென ஆரியர் மயக்குவனவும் அதை நம்பித் தமிழர் மயங்குவனவுமான நூற்றுக்கணக்கான சொற்கள், தென்சொற்களே யென ஐயந்திரிபற விளக்கப்பட்டுள்ளன. உண்மையறிந்து கடைப்பிடிக்க.

## 12. பிழைதிருத்தம்

ஏனைய அகரமுதலிகளிலெல்லாம், சிறப்பாகச் சென்னைப் பல்கலைக்கழக அகராதியில் உள்ள சொல்வழு, பொருள்வழு, மூலவழு, சொற்பிரிப்பு வழு, இலக்கணவழு முதலிய எல்லா வழுக்களும், இவ் வகரமுதலியில் இயன்றவரை திருத்தப்பட்டுள்ளன. இவற்றிற்கு எடுத்துக்காட்டாகக் கீழ்க்குறித்த சொற்களைப் பார்க்க :

சொல்வழு — அரிவாள்முனைப்பூண்டு, வெட்டறுவாள்.
பொருள்வழு — கசகரணம் போடுதல், தசகூலி.
மூலவழு — சாயுங்காலம், வடவை.
சொற்பிரிப்பு வழு — உவமை, முகம்.
இலக்கணவழு — அக்கடாவெனல், அளைமறிபாப்பு.

## 13. சிறப்புக் குறிப்பு

சில சொற்களையும் பொருள்களையும் செய்திகளையும்பற்றிச் சிறப்பாகச் சில கருத்துகள் அல்லது உண்மைகள் குறிக்கப்படும்.

ஆறு, ஐந்திரம் முதலிய சொற்களைப் பார்க்க.

ஞா. தேவநேயப் பாவாணர்

# பதிப்புரை

தமிழகம் ஆவலுடன் எதிர்நோக்கியிருந்த **மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரின்** செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் முதன்மடல முதற்பகுதி பேரறிஞர் அண்ணா பவள ஆண்டு நினைவாக வெளியிடப்பெறுகின்றது. முதன் மடல முதற் பகுதியையும் முன்னுரைப் பகுதியையும் எழுதிமுடித்து, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டில் ஆய்வுரையாற்றிய மகிழ்ச்சித் திளைப்பின் நிறைவில் 16—1—1981-ல் இயற்கையெய்திய முதுபேராசான் அகரமுதலி வெளியீடுவரையாவது வாழ்ந்திருந்து கண்குளிரக் கண்டு களிகூரும் வாய்ப்பைப் பெறாது கழிந்தமை கழிவிரக்கத்திற்குரியது.

நுண்மாண் நுழைபுலமும், பன்மாண் மொழித்திறனும், அஃகியகன்ற ஆய்வு நுட்பமும் கொண்ட பாவாணப் பெருந்தகை தொடங்கிய பணி முற்றுப்பெறு முன்னரே திடுமென மறைந்தமை தமிழுலகிற்குப் பேரிழப்பானதோடு அகரமுதலிப்பணிக்கு அதிர்ச்சியளித்தது. அவர் எழுதிமுடித்த அகரமுதலிப் பகுதியை அச்சேற்றும் வகையில் அணியப்படுத்துவதும் அரும்பாடாய் இருந்தது. பாவாணர் அகரமுதலியை அச்சேற்றும்போது கவனித்துச் செய்யவேண்டிய பணிகளாக அவ்வப்போது கூறியிருந்தவை யனைத்தும் மிகுந்த கவனத் துடன் நிறைவேற்றப்பட்டுள்ளன. வண்ணப்படங்கள், மேற்கோள்நூற் பட்டியல், மொழிகளின் பெயர்ப்பட்டியல் ஆகியவை அவர் மறைவுக்குப்பின் திரட்டப்பட்டவை. ஏனைத் திரவிட மொழிகளின் பலுக்கத்தை ஒலிப்பு மாறாமல் குறித்துக்காட்ட ஆங்கில எழுத்துகளுக்கு ஒலிப்பு வேறுபாட்டுக் குறிகள் (Diacritical marks) சேர்ப்பதுபோல், தமிழ் எழுத்துகளுக்கும் ஒலிப்பு வேறுபாட்டுக் குறிகள் சேர்க்கப்பட்டுள்ளன.

பதின்மூன்றாம் மடலத்தில் சேர்ப்பதாக இருந்த முன்னுரை, மேற்கோள்நூற் பட்டியல் ஆகியவற்றை முதன் மடலத்திலேயே சேர்த்து, இனிப் பன்னிரு மடலங்களாக அகரமுதலியை வெளியிட்டாற் போதும் என்று பாவாணர் முடிவெடுத்ததால், முன்னுரையை அவரே எழுதி முடித்திருந்தார். அச்சேற்றுமுன் முன்னுரைப் பகுதியை மேலும் விரிவுபடுத்த வேண்டும் என்று கூறியிருந்தார். அவர் மறைவுக்குப்பின் அவர் எழுதிய முன்னுரையை உள்ளவாறே பதிப்பித்து, மேலும் சேர்த்து விரிவுபடுத்தவேண்டும் என்று அவர் கூறியிருந்த வற்றில் குறிப்பிடத்தக்கவை சேர்க்கப்பட்டுள்ளன.

## அகரமுதலித் திட்டத்தின் தோற்றம்

வளர்ந்துவரும் அறிவியலுக்கு ஈடுகட்டும் முறையிலும் செந்தமிழில் இலக்கண இலக்கிய மரபுகளைப் பேணிக்காக்கும்வகையிலும் சிறந்த அகரமுதலி உருவாக்கப்பட வேண்டும். இது தமிழ்மக்களின் நெடுங்கால அவா. 1936-ல் சென்னைப் பல்கலைக் கழகத்தின் அகரமுதலி ஏழு மடலங்களாக (ஆறு மடலங்களும் ஒரு பின்னிணைப்பும்) வெளிவந்தது. அதற்குப்பின், கடந்த அரை நூற்றாண்டுக் காலமாகத் தமிழில் சொல்லாட்சிகளும், இலக்கியங்களும், கலைச்சொற்களும் பெருகி வளர்ந்தபோதிலும், அவையனைத்தையும் அடக்கிய புதிய அகரமுதலி உருவாக்கப்படவில்லை. உலக மொழிகள் சிலவற்றில் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. தமிழிலும் சொற் பிறப்பியல் அகரமுதலி வெளிவருவது மொழிவளர்ச்சிக்கு இன்றியமையாதது. ஆயின், சொற்பிறப்பியல் ஆராய்ச்சியில் பெரும் புலமை சான்றவரே அப் பணியைச் செய்ய வியலும். சொற்பிறப்பு ஆராய்ச்சியில் தலைசிறந்த அறிஞரைத் தலைவராகக்கொண்டு சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தை உருவாக்க அரசு நினைத்தது.

கடந்த ஈராயிரம் யாண்டு இலக்கிய வரலாற்றில் எவரும் தொடவியலாத சொற் பிறப்பு ஆராய்ச்சியில் வாகைசூடியவர் பாவாணர். அரை நூற்றாண்டுக் காலம் அயராது சொல்லாராய்ச்சி செய்து, சொற்பிறப்புக் காண்பதில் ஒப்புயர்வற்ற செந்தமிழ் ஞாயிறாய்ச் சுடரொளி வீசி, தன்னிகரற்றுத் தண்டமிழ்ப் புலமைவாய்ந்த பெருமகனாரின் தனித்தன்மை வாய்ந்த கண்டுபிடிப்புகளுக்கு நூல்வடிவம் தரவும், அவருடைய ஆய்வுகளில் ஈடுபாடு கொண்ட தமிழ்மக்களின் வேணவாவை ஏற்கவும் தமிழக அரசு முன்வந்தது. உயர்தனிச் செம்மொழியாம் தமிழ்மொழியின் தனித்தன்மையும் தமிழர் பண்பாடும் துலக்கம் பெறவும், அவர் கொள்கையைப் பின்பற்றி உருவாகும் சொற்பிறப்பு அகரமுதலியில் பிற கொள்கை களின் தலையீட்டைத் தவிர்க்கவும் பாவாணர்க்குத் தனித்த துறை ஏற்படுத்தித் தர அரசு விரும்பியது. அதன்படி, 1974ஆம் ஆண்டு மே மாதம் 8ஆம் நாள் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரை இயக்குநராகக் கொண்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் (Directorate of Tamil Etymological Dictionary Project) தமிழக அரசின் கல்வித் துறையின் தனித்த துறையாகத் தோற்றுவிக்கப்பட்டது.

தளர்ந்த முதுமையினாலும், ஐயப்பாடான சொற்களுக்கு ஆழ்ந்தாய்ந்து விளக்கம் காணும் இயல்பினாலும், தம் இறுதிக்காலம்வரை ஏறத்தாழ ஏழாண்டுப் பணிக்காலத்தில் அகர ஓரெழுத்தில் தொடங்கும் 6500 சொற்களுக்கு மட்டும் சொற்பொருள் விளக்கம் எழுதினார்கள். 1470 தட்டச்சுப் பக்கங்கள்கொண்ட இப் பகுதி, முதன் மடலத்தின் முதற்பகுதியாகத் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின்வழி அச்சிட்டு வெளியிடப் பெறுகிறது.

## பாவாணரின் வாழ்வும் பணியும்

மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் 1902ஆம் ஆண்டு பெப்ருவரி 7ஆம் நாள் திருநெல்வேலி மாவட்டம் சங்கரன்கோயில் என்னும் ஊருக்கு அருகிலுள்ள பெரும் புத்தூரில் பிறந்தார். தந்தையார் பெயர் ஞானமுத்து; தாயார் பெயர் பரிபூரணம்.

இவர் இளமையில் பாளையங்கோட்டைப் பள்ளியில் பயின்றார். பள்ளியில் படிக்கும் நாளிலேயே தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமையாளராக விளங்கினார். பள்ளிப் பருவத் திலேயே பாடல் புனையும் பாங்குடையவராக இருந்ததால் **கவிவாணன்** என்னும் பட்டத்தைத் தமிழாசிரியர் சூட்டினார்.

பாவாணருடைய இயற்பெயர் தேவநேயன். தமிழாசிரியர் அளித்த சிறப்புப் பெயரைத் தம் இயற்பெயரோடு சேர்த்து ஞா. தேவநேயப் பாவாணர் என்று தம் பெயரை அமைத்துக்கொண்டார்; பரந்த நூலறிவோடு நுண்ணறிவும் கொண்டவராக இலங்கினார்; இலக்கிய இலக்கணப் புலமையிலும், எழுத்திலும், பேச்சிலும் வல்லவராய் விளங்கினார். தமிழ்மொழியிலேயே மூன்று நிறுவனங்களில் பட்டங்களைப் பெற்ற பெருமை இவருக்கு உண்டு. தம் பெயருக்கு முன்னால் மதுரைப் பண்டிதன், நெல்லைப் புலவன், சென்னைப் புலவ (வித்துவான்) கலைத்தலைவன் என்று சேர்த்துக்கொள்வது இவருடைய வழக்கம்.

பல்வேறு உயர்நிலைப்பள்ளிகளில் தமிழாசிரியராகவும், சேலம் நகராட்சிக் கல்லூரியில் துறைத்தலைவராகவும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் திரவிட மொழியியல் வாசகராகவும் பணியாற்றிப் பெயரும் புகழும் பெற்றவர். முப்பதுக்கு மேற்பட்ட செந் தமிழ் நூல்களை ஆக்கித்தந்த இப் பெருமகனாரால் தமிழ் நலமுற்றது, வளம்பெற்றது. தமிழ்த்தாய் அணி பெற்றாள்; மொழிநூல் விழிபெற்றது.

பாவாணர் என்றால் **தண்டமிழ் ஏறு தனித்தமிழ் ஆறு** என்று கூறப்படுவது மட்டு மன்றி, **பாவாணர் வீட்டுப் படிக்கட்டும் பைந்தமிழ் பேசும்** என்னும் புதுமொழி பழமொழியாய் மாறியிருப்பதையும் காண்கிறோம். மறைமலையடிகள் வித்திட்டுச் செடி யாக்கிய தனித்தமிழை, வேர்வீழ்த்து விழுதூன்றி நின்று நிலைத்து நிழல்தரும் ஆலமரமாக வளரச் செய்தவர் பாவாணர்.

அரசும்[1], ஆன்ற பெருஞ் சான்றோரும்[2], அருந்தமிழ் மன்றங்களும்[3], பாவாணரைத் தம் உள்ளக்கோயிலில் உருச் சமைத்துக்கொண்ட தமிழன்பர்களும், பைந்தமிழ்ப் பாவலரும்[4] பாவாணர்க்கு வழங்கிய பாராட்டுகளும் பட்டயங்களும் பணமுடிப்புகளும், **கண்ணான** அறிஞரை அவர் வாழுங்காலத்திலேயே மதித்துப் போற்றிய மாட்சிக்குக் கட்டியங்கூறி நலம் செய்கின்றன.

தமிழ்ப்புலமையில் கற்றோரறியா அறிவினராகவும் கற்றோர்க்குத் தாம்வரம்பாகிய தலைமையராகவும் விளங்கிய பாவாணர், எந்நாளும் எளிய வாழ்வும் உயரிய நோக்கமும் கொண்டவராக வாழ்ந்தார். அவருடைய பரந்திடங் கொடுக்கும் விசும்புதோய் உள்ளமும், மொழிநலனை விழிநலம்போற் காக்கும் மனத்திட்பமும் மதிநுட்பமும் சொல்லாராய்ச்சியில் நடுநிலை பிறழா வழிநடை வகுத்தன. மறைமலையடிகளை எத்துணைப் பாராட்டினாரோ அத்துணை பி. தி. சீனிவாச ஐயங்காரையும், வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதரையும் பாராட்டினார். தாம் நடுநின்று கண்ட உண்மைகளை அஞ்சாது எடுத்துரைக்கும் ஆற்றல் அவருக்கே அமைந்த தனியாண்மை யாகும். **உண்மை என்றும் வெல்லும்** என்னும் நம்பிக்கையே தமக்குத் துணிவைத் தந்ததாக அவர் கூறுவார்.

பாவாணருடைய ஆய்வுகளை, **உலகின் முதன்மொழித் தோற்றம், சொற்பிறப்புக் காணும் வழிமுறை, தனித்தமிழ்** என்னும் முப்பெருந் தலைப்புகளில் சுருக்கமாக அடக்கலாம். உலகில் முதன்மொழி தோன்றியதற்கான அடிப்படைகளை மேனாட்டு அறிஞர்கள் பல்வகையில் ஆய்ந்திருப்பினும், அ, இ, உ என்னும் முச்சுட்டுகளே ஞால முதன்மொழி தோன்ற வழிவகுத்தன என்னும் சுட்டடிக் கொள்கையை (Deictic Theory) முதன்முதல் பாவாணர் கண்டறிந்தார்; சுட்டு விளக்கம், முதல் தாய்மொழி, ஒப்பியன் மொழிநூல், வேர்ச்சொற் கட்டுரைகள் ஆகியவற்றில் இதனைத் தெளிவாக விளக்கியிருக்கிறார். உகரச் சுட்டிலிருந்தே பெரும்பான்மைச் சொற்கள் பிறந்திருப்பதை அவருடைய ஆய்வு காட்டு

---

[1] (அ) **1960ஆம் ஆண்டு ஆட்சிச்சொற்கள் வடித்துத் தந்தமைக்காகத் தமிழக ஆளுநரால் பாவாணர்க்குச் செப்புப்பட்டயம் வழங்கப்பட்டது.**

(ஆ) **1978ஆம் ஆண்டு தமிழக அரசு திருவள்ளுவர் திருநாளன்று பாவாணர்க்குச் 'செந்தமிழ்ச் செல்வர்' என்னும் பட்டமும் கேடயமும் பொற்பதக்கமும் வழங்கிச் சிறப்பித்தது.**

[2] (அ) **1957ஆம் ஆண்டு சேலம் தமிழ்ப் பேரவையினர் தந்தை பெரியார் தலைமையில் 'திரவிட மொழிநூல் ஞாயிறு' என்னும் பட்டம் பொறித்த வெள்ளிப்பட்டயம் வழங்கினர்.**

(ஆ) "But for his (Pavanar's) researches in philology, the purity and antiquity of Tamil might have remained a myth" — The Cultural Heritage of India, Vol. V, p. 621. Edt: by Dr. Sunit Kumar Chatterji, 1978.

(இ) "It is my humble opinion that in the study of Tamil words Mr. Devaneyan stands Pre-eminent and has few rivals."

—Maraimalai Adigal, 1949.

[3] (அ) **1970ஆம் ஆண்டு மொழியாராய்ச்சித் தொண்டினைப் பாராட்டி, சை. சி. நூற்பதிப்புக் கழகம் பாவாணர்க்கு வெள்ளிப்பட்டயம் வழங்கியது.**

(ஆ) **1971ஆம் ஆண்டு தவத்திரு குன்றக்குடி அடிகளார் நடத்திய பறம்புமலைப் பாரி விழாவில் பாவாணர்க்குச் 'செந்தமிழ் ஞாயிறு' என்னும் பட்டம் வழங்கப்பட்டது.**

[4] (அ) **"தொல்காப்பியருக்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக்கொள்வதற்காகச் செய்த ஒட்டு மொத்தமான முயற்சிக்குப் பாவாணர் என்று பெயரிடலாம்."**

— பாவலரேறு பெருஞ்சித்திரனார்.

(ஆ) **"பாவாணர் தமிழின் ஆண்மை வடிவம்"**

—பாவலர் சுரதா.

(இ) **"வடமொழியும் இந்தியும் மற்றும் வடக்கிற்**
**படுமொழிகள் என்ற பலவும் — தடவியே**
**அந்தமிழே ஆதி யெனுந்தேவ நேயர்தாம்**
**எந்தமிழர் எல்லார்க்கும் வேந்து."**

—பாவேந்தர்.

கிறது. ஞால முதன்மொழி[1] தமிழ் என்பதும் அது தோன்றிய இடம் குமரிக்கண்டம் என்பதும் அவர் கொள்கை.

## ஞால முதன்மொழி

உலகில் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மொழிகள் பேசப்படினும் நூற்றுக்கு 95 மேனியரால் பேசப்படுபவை ஒரு நூற்றுக்கும் குறைவானவையே.

எசுகிமோ மொழியில் தன்னலமற்ற பொதுத்தொண்டு செய்வதற்குத் **தனக்கில்லா** செய்தல் என்று கூறுகிறார்களாம். இது நல்ல தமிழ்ச்சொற்றொடராகத் தெரிகின்றது. அவாய்த் தீவு மக்கள் மழலையைத் தாலாட்டும் துணியை ***ஏணை*** என்றே வழங்குகின்றனர். மங்கோலிய மொழியின் சொற்கள் திரவிடமொழிகளுடன் தொன்முது தொடர்புடையவை என்று செக்கோசுலோவேகிய நாட்டு மொழியியல் பேராசிரியர் செரசுலோவ் வசெக்கு[2] கூறியிருக்கிறார். இந்தைரோப்பிய மொழிகளின் தொடரமைப்பு, திரவிட மொழிகளைப் போன்று ஒரு காலத்தில் செயப்படுபொருளையடுத்து வரும் வினைமுற்று OVP (Object-Verb-Pattern) அமைப்பில் இருந்ததாகப் பேராசிரியர் இலேமென் குறிப்பிட்டிருக்கிறார்.[3]

ஆப்பிரிக்க மொழிகளில் தமிழ்ச்சொற்கள் பல காணப்படுவதாகச் செனகல் நாட்டுத் தலைவர் செங்கோர் தெரிவித்திருக்கிறார். தமிழிலுள்ள இல், அல் என்னும் எதிர்மறை முன்னொட்டுகள் இந்தைரோப்பிய மொழிகளிலும் உள்ளவாறே வழங்குகின்றன. (எ-டு : il+legal–illegal, ul+happy–unhappy.) தமிழிலும் முன்னொட்டுகளாக அமைந்த 250 சொல்லாட்சிகளைப் பாவாணர் எடுத்துக்காட்டி முன்னொட்டு மொழியியல்பு (prefixed languages) தமிழுக்கும் உண்டு என வகுத்துக் காட்டியிருக்கிறார். ஆப்பிரிக்க மொழிகள் சிலவற்றில் தமிழிலுள்ள நான்கன் உருபு 'கு' முன்னொட்டாக வருகிறது. குஅரி—அவர் களுக்கு எனப் பொருள்படுகிறது. இம் முன்னொட்டே கு - து - டு எனத் திரிபடைந்து ஆங்கிலத்திலும் 'to' என வழங்குகிறது. இன்னோரன்ன சான்றுகள் பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கைக்குச் சான்றாகின்றன.

ஆதலின், உலக மொழிக் குடும்பங்களைப் பத்தாக வகுத்தும் திரவிட மொழிகளை வழங்கும் இடவகையான் மூன்றாகப் பகுத்தும் பேசுவோர் எண்ணிக்கையுட்படச் சுருங்கிய பட்டியல் சேர்க்கப்பட்டுள்ளது.

## சொற்பிறப்புக் காணும் திறன்

அணுவைப் பிளக்க முடியாது என்று ஒருகாலத்தில் கருதினர். மேனாட்டறிஞர் ஐன்சுடீன் அணுவைப் பிளக்க முடியும் என்று நிறுவினார். சொற்களெல்லாம் இடுகுறிகளே; அவையனைத்துக்கும் வேர்மூலம் காண வியலாது என்று அண்மைக்காலம்வரை கருதி

---

[1] குமரிக்கண்டத் தமிழ் வடக்கே சென்று திரவிடமாய்த் திரிந்தது. வடகோடித் திரவிடம் நாளடைவில் பிராகிருதமாய் மாறியது. வேத காலத்தில், விந்தியமலைக்கு வடக்கில் பைசாசம், சூரசேனம், மாகதம் என்று மூன்று பிராகிருதங்களும், அதற்குத் தெற்கில் தமிழ், ஆந்திரம் (தெலுங்கு), கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்னும் ஐந்து திரவிடங்களும் (பஞ்சதிராவிடம்) வழங்கிவந்தன. பிற்காலத்தில், ஐந்து திரவிடங் களுள் மகாராட்டிரம் ஒரு பிராகிருதமாகக் கொள்ளப்பட்டது. மாகதத்தின் பிற்காலத் திரிபு பாலி. பிராகிருதம் என்னுஞ் சொல் தமிழில் பாகதம் எனத் திரியும்.

வேத ஆரியம் வழக்கற்றுப் போனபின், அதனொடு ஐம்பிராகிருதங்களையும் கலந்து சமற்கிருதம் என்னும் இலக்கிய மொழியை அமைத்தனர். பிராகிருதம் முந்திச் செய்யப்பட்டது; சமற்கிருதம் நன்றாய்ச் செய்யப்பட்டது. ஆகவே, சமற்கிருதத்திற்கு முந்தியது பிராகிருதம்; பிராகிருதத்திற்கு முந்தியது திரவிடம்; திரவிடத்திற்கு முந்தியது தமிழ் (செ. அக. சீர். பக். 32).

[2] பேராசிரியர் செரசுலோவ் வசெக்கு 2-3-1978-ல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய உரை.

[3] "Linguistic Typology"—lecture by Dr. Winfred Lehmann, Director, Linguistic Research Centre, University of Texas, U.S.A.

யிருந்தனர். சொல்லைப் பிளந்து வேர்மூலம் காண முடியும் என்று மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் நிறுவிக் காட்டியிருக்கிறார். தம் புலமைவளத்தின் வெளிப் பாடாக மொழிநூலறிவைத் தமிழுலகிற்கு நல்கிய பெருமை இவரையே சாரும்.

சொற்பிறப்புக் காண மேனாட்டு அறிஞர்கள் கையாண்ட முறைகளினும் வேறாகப் புதிய இருநெறிகளைப் பாவாணர் கண்டறிந்தார். அவை வேருக்கு வேர் காணும் **வேர்மூலச் சொற்பிறப்பு,** பொருட்பாட்டு அடிப்படையிலான **வடிவமீட்டமைப்புச் சொற்பிறப்பு** எனப் பெயரிடப்பட்டுள்ளன.

'அகவிலையேறிவிட்டது' என்னும் தொடரில் 'அதிகவிலை' என்பது ''அகவிலை' எனத் திரிந்ததாக ஏனைப் பேராசிரியர்கள் சொன்மூலம் காட்டியபோது, அஃகவிலை → அகவிலை (அஃகம் = தவசம்) எனத் திரிந்ததாகமீட்டமைத்து மூலம் காட்டினார் பாவாணர். இது வடிவமீட்டமைப்புச் சொற்பிறப்பு. வேந்தன் = வெம்மையாக ஆட்சி செலுத்துபவன் எனப் பிறர் பொருள் கூறியபோது, அது தவறெனமறுத்து, வேய்ந்தோன் → வேந்தன் (வேய்ந்தோன் = முடியணிந்தவன்) என உண்மைமூலம் காட்டினார். இது வேர்மூலச் சொற்பிறப்பு. பாவாணர்க்கிருந்த உள்ளுணர்வும் இயற்கையறிவும் இவ்வாறு நுணுகி நுணுகி ஆராயும் வினைத்திட்பத்தை நல்கின. இது அவர்க்குக் கருவில் அமைந்த திரு. அதனாற்றான் தாமே இப் பணியை முன்னின்று முடிக்கப் பெரிதும் விழைந்தார்.

சொல்வளம் மிக்க தொன்மொழியாதலின் வேற்றுச் சொற்களைத் தமிழில் ஆள வேண்டுவதில்லை என்பதில் கொள்கைவிடாக் கூர்வேழமாகப் பாவாணர் இருந்தார். தமிழில் கலந்துள்ள அனைத்துச் சொற்களுக்கும் தமிழ்ச்சொற்களை எளிதில் படைத்துத் தந்திருக்கிறார்.

'குடிமதிப்பு'க் (Census) கணக்கெடுப்பின்போது நம் வீட்டிற்கு வரும் விருந்தினர் நண்பர்கள் ஆகியோரின் பெயர்களைக் குடும்ப உறுப்பினராகச் சேர்த்துக்கொள்வது இல்லை. இதுபோன்றே தமிழில் பல்வேறு கால இடைவெளிகளில் ஊடாடிய வேற்று மொழிச் சொற்களைத் தமிழில் தம் சொற்களாக ஏற்றுக்கொள்ளலாகாது. நண்பர்கள் நண்பர்களாகவே இருப்பர்; குடும்ப உறுப்பினர் ஆகார். அயற்சொற்கள் அயற்சொற் களாகவே இருக்கும்; தன் சொற்களாகா. ஆதலின் தனித்தமிழே தமிழ். தமிழ் தவிர வேறு எம் மொழியிலும் வேற்றுச் சொற்களை விலக்க முடியாது; தமிழ் ஒன்றில்தான் முடியும். இப் பேரகரமுதலியிலும் 'அயற்சொற்களுக்குத் தனிமடலம் ஒதுக்கப்பட்டுள்ளது' என்று பாவாணர் கூறினார். தமிழ்மொழிக்கு இருக்கும் தன்னேரிலாத சொல்வளச் சிறப்பை உலகிற்குக் காட்டுவதே இவரின் தலையாய நோக்கம்.

தம் ஆய்வுமுடிவாக, உலகமொழிக் குடும்பங்களில் இந்தைரோப்பிய மொழிகள் தமிழுக்கு மிக நெருக்கமாக இருப்பதைக் கண்டறிந்தார். தம் சீரிய தமிழ்ப்பணிக்கு உற்றுழி உதவிய தமிழன்பர்களுக்கும் தமிழ் மன்றங்களுக்கும் சிறப்பாக அரசுக்கும் பாவாணர் நெஞ்சுகந்த நன்றியுடையவராக இருந்தார்.

## பதிப்புப் பணி

அகரமுதலிகள் எவையாயினும் அவற்றிற்குப் பதிப்புக் குழு ஒன்று தனியாக அமைப்ப துண்டு. பாவாணர்க்குப் பின் பொறுப்பு இயக்குநராகப் பணியேற்ற யான், இதனை நன்கு பதிப்பிக்கத் தக்க உதவியாளரை நாடவேண்டியிருந்தது. இந் நிலையில் அகரமுதலி தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனவழி வெளியிட ஏற்பாடு செய்யப்பட்டது, பதிப்புப் பணிக்கு உற்ற உதவியாக அமைந்தது. தமிழில் உயர்ந்த தரமான நூல்களைப் பதிப்பித்துப் பட்டறிவு வாய்ந்தவர்களின் உதவி இதற்குக் கிடைத்தது. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் படி - பதிப்பாசிரியர் புலவர் அ. நக்கீரன், புலவர் கா. பெ. ஞானசம்பந்தன், புலவர் நா. மு. மாணிக்கம் ஆகியோர் இப் பணி செம்மையாக நிறைவுறப் பெரிதும்

**உதவினர்.** இந்த அகரமுதலியின் பல்வேறு தலைமையான நோக்கங்களுள், பிற அகரமுதலிகளிலுள்ள பிழைகளைத் திருத்துவதும் ஒன்று என்று பாவாணர் குறிப்பிட்டிருக்கிறார். ஆதலின், மூலநூல்களிலிருந்து மேற்கோள் காட்டும்போது பிற அகரமுதலிகளிலுள்ள எழுத்துப் பிழைகள் இந்த அகரமுதலியிலும் இடம்பெறா வண்ணம் மிகுந்த கவனத்துடன் அவற்றை ஒப்புநோக்கித் திருத்தமாகப் பதிப்பிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டுப் பாட நூல்களெல்லாம் சீர்திருத்த எழுத்துகளில் அச்சிடப்படுவதால் வருங்காலத் தலைமுறையினர்க்காக உருவாகும் இந்த அகரமுதலியும் சீர்திருத்த எழுத்துகளிலேயே அச்சிடப்பட வேண்டும் என்பதையும், வன்றொடர்க் குற்றுகரவீற்றுப் பெயர்ச் சொற்களுடன் பன்மைகுறித்த 'கள்' ஈறு சேர்க்கும்போது வல்லெழுத்து மிகாத சொற் புணர்ப்பே பின்பற்றப்பட வேண்டுமென்பதையும் பாவாணர் கனிவுடன் ஏற்றுக் கொண்டார்.

சொற்களுக்குச் செந்தமிழ் வடிவம் காட்டுதலானும், சொற்பிறப்புக் கூறுதலானும், தமிழுலகில் வழங்கும் இந்தச் சொல் இடம்பெறவில்லை என்று சுட்டிக்காட்ட முடியாத வகையில் அனைத்துச் சொற்களையும் முயன்று திரட்டித் தருதலானும், படவிளக்கம் சேர்த்தலானும், அரைக் கலைக்களஞ்சிய அமைப்புக்கொண்டிருத்தலானும், பொதுமக்கள் முதல் ஆராய்ச்சியாளர்வரை பயன்கொள நிற்றலானும் இதற்குச் செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் பொதுப் பயன்பாட்டுப் படவிளக்க இருமொழிப் பேரகரமுதலி (Comprehensive General Purpose Bilingual Illustrated Etymological Dictionary of the Tamil Language) எனப் பெயரிடப் பொருந்துவதாயினும், பரோ எமனோவர் அகரமுதலி **D.E.D.** — தி.சொ.பி. (திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி) எனக் குறிக்கப்படுவதுபோல், சுருக்கமாக, செ.சொ.பி. (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி) — T.E.D. (Tamil Etymological Dictionary) என்றே இது பொதுவாக வழங்கப்படும்.

ஆங்கிலத்தில் எட்டிலக்கம் சொற்களுள்ளன. சென்னை அகரமுதலியில் ஓரிலக்கம் சொற்களே யுள்ளன. ஆங்கிலத்திற் கிணையாகத் தமிழ் வளர்ந்தோங்க வேண்டுமாயின் மேலும் மூன்றிலக்கம் சொற்களைத் தொகுக்க வேண்டும். அறிவியல் - தொழில்நுட்பம் போன்ற துறைகளில் மேலும் நான்கிலக்கம் சொற்களைப் படைக்க வேண்டும். ஆதலின், நாட்டுப்புறச் சொல்லாட்சிகள் ஓரிலக்கம்; கல்வெட்டு ஓலைச்சுவடி ஆகியவற்றில் ஓரிலக்கம்; நாட்டு மருத்துவம், நிலைத்திணைப் பெயர்கள் ஆகியவற்றில் ஓரிலக்கம் ஆக மூன்றிலக்கம் சொற்களைப் புதிதாகத் தொகுக்கும் பணி நிகழவேண்டும்.

தமிழக அரசின் தனி மகவாய்ப் பிறந்து, கல்வித்துறை பாலூட்ட, தமிழ்ப் பல்கலைக்கழகம் சீராட்ட, சான்றோர் அரவணைக்க, தமிழ்வளர்ச்சி - பண்பாட்டுத் துறையின் மடியில் தவழ்ந்து தளர்நடை பயிலும் இத் துறைப் பணிகள் வளர்ந்து பெருக வள்ளன்மை சுரந்து வண்டமிழ்க்கு வாழ்வளிக்கும் **புரட்சித் தலைவர், பொன்மனச் செம்மல், மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்களுக்கு என்றென்றும் நன்றிக் கடப்பாடுடையேம்.

அயலவர்க்குப் பயன்படும்வகையில் ஆங்கில அணிந்துரை வழங்கிய கல்வியமைச்சர் மாண்புமிகு **செ. அரங்கநாயகம்** அவர்களுக்கும், விரைந்தூக்கி உடன்துணைநின்ற **தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளருக்கும்**, இப் பேரகரமுதலி வெளிவர ஆவனசெய்த **தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தார்க்கும்**, நன்முறையில் அச்சிட்டுத் தந்த **செயமாலிகா அச்சகத்தார்க்கும்**, பல்லாற்றானும் ஒத்துழைப்பு நல்கிய **துறைப் பணியாளர்க்கும்** எம் நன்றியுரித்து.

சீர்த்தபுகழ்ப் பாவாணர் சேர்த்தளித்த செல்வத்தை
ஆர்த்தசொல் லாராய்ச்சி யாரமுதைக் — கூர்த்தாய்ந்து
வற்றா வளமென்ன வாரி வழங்கிடுவம்
கற்றோர் உவப்பக் கனிந்து.

சென்னை,
தி.பி. உகூயரு மடங்கல் (ஆவணி) ௰௬
**(1-9-1984)**

**இரா. மதிவாணன்**
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு),
செ. சொ. பி. அகரமுதலித் திட்ட இயக்ககம்.

# சொற்பிறப்பியல் அகரமுதலி வரலாறு

மொழிவளர்ச்சியை அளந்துகாட்டும் அளவுகோலாக அகரமுதலி அமைகிறது.

ஒரு மொழியில் வெளிவந்துள்ள அகரமுதலிகள், அம் மொழி எந்தெந்தத் துறையில் சொல்வளம் பெற்றிருக்கிறது; இன்னும் எந்தெந்தத் துறையில் சொல்வளம் பெறவில்லை என்பதைக் காட்டிவிடும்.

ஆங்கிலமொழி எட்டு இலக்கம் சொற்களைப் பெற்றிருப்பதால் அம் மொழியில் பல்வேறு துறைதழுவிய பல்வகை அகரமுதலிகள் பெருகியுள்ளன.

சொல்லிற்குப் பொருள்கூறும் முயற்சியே முதன்முதல் அகரமுதலி தோன்றுதற்குக் காரணம்.

கி.மு. 700 அளவில் மெசபொதேமியாவில் சில அக்கேடியச் சொற்களுக்குப் பொருள் சுட்டிய எழுத்துச்சான்று கிடைத்திருப்பதாகவும், அதுவே உலக முதல் அகராதிக்கு வித்து எனவும் கூறுகின்றனர். அதற்குச் சமகாலத்திய தொல்காப்பியத்தில் உரிச்சொற் பகுதி அப் பொருள் சுட்டியதே என்பது போதரும்.

கி.பி. 1225-ல் 'Dictionarius' என்னும் சொல்லை இங்கிலாந்தைச் சேர்ந்த 'சோன்னசு தி கலந்தியா' (Joannes de Galendia) என்பவர் இலத்தீனச் சொல்வரிசையைக் குறிக்கப் பயன் படுத்தினார்.

இலத்தீனச் சொன்மூலத்திலிருந்து தோன்றிய 'Dictionary' என்பது கருவிநூல் என்னும் பொருளில் வழங்கியது. கிரேக்கச் சொன்மூலத்திலிருந்து பிறந்த 'Lexicon' என்பது சொற்புத்தகம் (Word Book) என்னும் பொருளில் வழங்கியது. நாளடைவில் இரண்டு சொற்களும் அகரமுதலியையே குறிக்கத் தொடங்கின.

அகரமுதலி வகைகளுள் சொற்பிறப்பியல் அகரமுதலி, சிறப்பு அகரமுதலி (Specialised Dictionary) வகையைச் சார்ந்தது. சொற்பிறப்பியல் அகரமுதலியை ஆங்கிலத்தில் 'Etymological Dictionary' என்பர். 'Etymos' என்பது 'உண்மை' என்று பொருள்படும் கிரேக்கச் சொல். 'Etymology' என்னுஞ் சொல் 'சொல்லின் உண்மையான வரலாற்றைக் கூறுதல்' என்று பொருள் தருகிறது.

ஒரு சொல்லுக்கு மூலங்காட்டி, அச் சொல் பிறந்து வளர்ந்த வரலாற்றை விளக்குவது சொற்பிறப்பியல் அகரமுதலியின் நோக்கம்.

சொல்லின் வேரும் வரலாறும் (Origin and derivation) காண முடியாதவிடத்து மூலம் மட்டும் காட்டி அமைவர். காலத்தால் முந்திய சொல்வடிவத்தை மூலமாகக் காட்டினால் போதும் என்று ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர் சி. தி. ஆனியன் கருதுகிறார்.

மற்றொரு ஆங்கில அகரமுதலித் தொகுப்பாளரான வெபுத்தர் (Webster) என்பவர், ஒரு சொல்லின் மிகப் பழைய வடிவத்தின் விரிவான பொருள்வளர்ச்சி வரலாறு சொல்வதே 'சொற்பிறப்பியல்' என்கிறார்.

வேரும் வரலாறும் ஆராய்ந்து வெளிப்படுத்துவதே மெய்ம்மையான சொற்பிறப்பியல் அகரமுதலி. தமிழைப் போன்ற ஒட்டுநிலை (agglutinative) மொழியில் வேரும் வரலாறும்

காண இயலும். மேலையாரிய மொழிகள் உட்பிணைப்பு (inflexional) மொழிகளாயிருப்பதால் அவற்றில் வேரும் வரலாறும் காண்பது அரிது. ஆதலால், மேலைநாட்டு வண்ணனை மொழியியலார் சொல்லின் பழைய வடிவம் அல்லது கிட்டியமட்டில் மூலவடிவம் காண்பதே சொற்பிறப்பியல் என்கின்றனர்.

தொல்காப்பியர் "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" என்கிறார். காலப் போக்கில் திரிபடைந்த சொற்களில் வேரும் வரலாறும் மறைந்திருக்கும்; மேலோட்டமாகப் பார்ப்பவர்களுக்கு வெளிப்படத் தெரியாது என்பதை "மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்றும் தொல்காப்பியர் உரியியலில் குறிப்பிட்டிருக்கிறார். எனவே, உரிச்சொற்களின் மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா எனப் பொருள் கொள்வதே பொருந்தும்.

மேனாட்டார் நோக்கிலும் நம் நோக்கிலும் காணப்படும் வரையறைக்கேற்பச் சொற்பிறப்பியல் அகரமுதலி இருவகைப்படும் :

1. வேரும் வரலாறும் காட்டும் சொற்பிறப்பியல் அகரமுதலி (Etymological Dictionary on Genealogical Basis).
2. மூலச்சொற் காட்டும் இனச்சொல் ஒப்பீட்டுச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Etymological Dictionary on Comparative and Historical Basis).

இதுவரை உலக மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அனைத்தும் இரண்டாம்வகையைச் சார்ந்தவை. மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் திட்டமிட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி முதல்வகையைச் சார்ந்தது. இம் முதல்வகை அகரமுதலியில் இரண்டாம்வகை அகரமுதலியிலுள்ள இனச்சொல் ஒப்பீட்டுக்கூறும், ஏரணநெறிப்பட்ட வரலாற்றடிப்படைச் சொல்லொழுங்கும்கூட இடம்பெறும்.

சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு முதலில் வேண்டப்படுவது சொற்பிறப்பியல் நெறிமுறைகள். ஆங்கில மொழிக்கு முதன்முதல் சொற்பிறப்பியல் அகரமுதலியை நேரிய முறையில் தொகுத்தளித்த கீற்று (W. W. Skeat) என்பவர், சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர் கவனிக்கவேண்டிய நெறிமுறைகளைப் (Canons for Etymology) பின்வருமாறு கூறுகிறார் :

**சொற்பிறப்பியல் நெறிமுறைகள்**

1. காலத்தால் முந்திய பயன்படுத்தம்நோக்கிச் சொல்லின் தொல்வடிவத்தை முடிவுசெய்யவேண்டும்.
2. வரலாற்றடிப்படையிலும் நிலவியல் அடிப்படையிலும் ஒரு மொழியில் புகுந்துள்ள கடன்சொற்களைக் கண்டறியவேண்டும்.
3. குறைந்த அசைகளையுடைய சொல்லை, அதே சொல்லின் மிக்க அசைகளையுடைய வடிவத்திற்கு மூலமாகக் கொள்க. (மரூஉமொழி, திரிபுபோன்ற சொற்சுருக்கங்கள் அல்லாதவிடத்து.)
4. ஒலிப்பியல் நெறியீடுகளைக் (Phonetic Laws) கவனிக்க.
5. ஒரே அளவான அசைகளையுடைய இருசொற்களுள் காலத்தால் முந்திய சொல்லை மூலமாகக் கொள்க.
6. ஆங்கிலத்தில் வல்வினைகளை (strong verbs) மூலமாகக் கொள்க.
7. ஒரு சொல்லின் ஆய்வுக்கு முழுவடிவை எடுத்துக்கொள்க; சொல்லின் ஒரு பகுதியை ஆய்வுக்குக் கொள்ளற்க.

8. சொல்லின் வடிவ ஒற்றுமை அல்லது மேம்போக்கான பொருளொப்புமை கருதி இரு மொழிகளிலுள்ள சொற்களை (ஒலிப்பியல் நெறியீடு வேறுபடும் நிலையில்) ஒப்புமையுடையனவாகக் கொள்ளற்க.

9. இனச்சொற்கள் (Cognates) வடிவில் அல்லது ஒலிப்பில் முழுதும் ஒத்திருக்க வேண்டியதில்லை. ஒலிப்பியல் நெறியீடுகளுக்குப் புறம்பாக இருமொழிகளிலும் இருசொற்கள் ஒத்திருப்பின் (ஒலிப்பிலும் பொருளிலும்) ஒரு மொழி மற்றொரு மொழியிடமிருந்து அச் சொல்லைக் கடன்பெற்றிருக்கிறது என்று நம்பலாம்.

10. ஒரு சொல்லுக்கு இனச்சொற்களைக் கூறமுடியாதவிடத்து அச் சொல்லை விளக்கிக் கூறும் முயற்சி மேற்கொள்ளலாகாது.

மேற்கண்ட பத்தும் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புக்குரிய பத்துக் கட்டளைகள் எனலாம். கீற்று ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியை ஒரு மடலமாக வெளியிட்டார். ஆங்கிலச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளை (Principles of English Etymology) அழகுற ஆய்ந்து வெளியிட்டார்.

சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர் தம் முயற்சியில் புரைபடுதலும் உண்டு. சொல்லின் மூலங்காண முற்பட்டுச் சொல்லின் உண்மைப்பொரு ளுணராமல் ஏதோ ஒன்றைச் சொல்லிவிடுவாரும் உளர்; உண்மைப்பொரு ளுணர்வாரும் உளர். அதனடிப் படையில் சொற்பிறப்பியலை எண்வகையாகப் பிரிப்பர். அவற்றுடன் மேலும் இரு வகைகளை (9, 10) மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் புதிதாகக் கண்டறிந்தார்.

| | | |
|---|---|---|
| 1. | உன்னிப்புச் சொற்பிறப்பு (Guessing Etymology) | — அணில் (அழகு, வரி) |
| 2. | அறிவாகுலச் சொற்பிறப்பு (Pedantic Etymology) | — மண் (மணப்பது) |
| 3. | அடிப்படைச் சொற்பிறப்பு (Popular Etymology) | — நூல் (நூற்கப்படுவது, இழுக்கப் படுவது) |
| 4. | குறிக்கோட் சொற்பிறப்பு (Tendentious Etymology) | — 'ஐயன்' என்னும் தமிழ்ச்சொல்லை வேண்டுமென்றே 'ஆர்ய' என்னும்வட சொல்லிலிருந்து வந்ததாகக் கூறுவது. |
| 5. | வழூஉப் பகுப்புச் சொற்பிறப்பு (Malanalytical Etymology) | — சாப்பாடு (சாதற்கேதுவானது) |
| 6. | நகையாட்டுச் சொற்பிறப்பு (Playful Etymology) | — தோசை [தோ (இரண்டு) + சொய்ங்] |
| 7. | ஒலிவொப்புமைச் சொற்பிறப்பு (Sound Etymology) | — பாராளுமன்றம் (Parliament) [ஒலிப் பில் ஒத்திருத்தல்] |
| 8. | பொருந்தப் புகல்வுச் சொற்பிறப்பு (Plausible Etymology) (உண்மையானது போலப் பொருத்திக் கூறுதல்) | — ஒப்பாரி (ஒப்ப ஆரித்தல் அல்லது ஓவெனப் பாரித்தல்) |
| 9. | வேர்மூலச் சொற்பிறப்பு (Root tracing Etymology) | — புல் → புள் → புழல் → புடல் → புடலை → புடலங்காய் (புழல் = துளையுள்ளது). |
| 10. | வடிவமீட்டமைப்புச் சொற்பிறப்பு (Reconstructed Etymology) | — அங்காடி — அம்மு (விற்றல்) + கடை (இடம்). அம்முகடை → அங்கடை → அங்கடி → அங்காடி. |

**சொற்பிறப்பியல் அகரமுதலியின் தனிக் கூறுகள்**

1. சொற்பிறப்பியல் அகரமுதலி ஏனை அகரமுதலிகளைப்போ லன்றிச் சொல்லுக்கு மூலமும் கூறும்.
2. சொற்பிறப்பியல் அகரமுதலியில் இனச்சொற்கள் தவறாது காட்டப்படும்.
3. சொற்பிறப்பியல் நெறியீடுகளைத் தழுவிச் சொல்லின் மூலம் அமைந்திருக்கும்.
4. தெளிவான மூலம் உறுதிப்படாதபோது ஓரளவுக்குச் சரியெனப்பட்ட மூலம் ஒருகா. (ஒருகால்) என்னும் முன்னடையோடு குறிப்பிடப்படும்.
5. தெரியாத மூலமாயின் மூலம் தெரியவில்லை எனச் சுட்டப்படும்.
6. சொல்லின் இலக்கணவகை அல்லது பொருள்விளக்கம் வேறாக அல்லது மாறாகக் கூறப்படவேண்டிவரின் அதுவும் மரபு தழுவியதாக இருக்கும்.
7. ஒருமொழிச் சொற்பிறப்பியல் அகரமுதலியாயின் அவ்வச் சொல்லுக்கு மூலம் அச் சொல்விளக்கத் தொடக்கத்தில் அல்லது இறுதியில் குறிக்கப்படும். இன மொழிகளுள் பன்மொழிச் சொற்பிறப்பியல் அகரமுதலியாயின் ஒவ்வோர் அடிச்சொல்லையும் தலைப்புச் சொல்லாகக்கொண்டு அச் சொல்லுக்கு இனமான இனமொழிச் சொல்லும் பொருளும் குறிக்கப்படும். பரோ எமனோவரின் திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி இதற்குச் சான்றாகும்.
8. சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர் அம் மொழியின் சொற்பிறப்பியல் நெறிமுறை (Principles of Etymology), ஒலிப்பியல் நெறியீடு (Phonetic Law), காலப்போக்கில் சொல்லின் பொருட்பாட்டு மாற்றம் (Semantic change) ஆகியவற்றைத் தெளிவாக வரையறுக்க வேண்டும்.

**உலகமொழிகளில் தோன்றியுள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள்**

உலகமொழிகள் பலவற்றுள் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் உருவாக்கப் பட்டுள்ளன. கி.பி. 1662-ல் கெர்கார்டு சோகன்னசு வொசியசு (Gerhard Johannes Vossius) என்பவர் வெளியிட்ட இலத்தீனச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Etymologicum Linguae Latinae) உலகில் வெளிவந்த முதல் சொற்பிறப்பியல் அகரமுதலியாகக் கருதப்படுகிறது.

1671-ல் தீபன் கின்னர் (Stephen Skinner) என்பவர் இலத்தீன் மொழியில் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியை (Etymologicon Linguae Anglicane) வெளியிட்டார்.

1743-ல் பிரான்சிசு சூனியசு (Francis Junius) என்பவர் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகர முதலி யொன்றை (Etymologicum Anglicanum) வெளியிட்டார். இந் நூலைச் சாமுவேல் சான்சன் தம் புகழ்பெற்ற ஆங்கில அகரமுதலியை உருவாக்கச் சிறந்த கருவிநூலாகக் கொண்டிருந்தார்.

1803-ல் சான் சன்னிசன் (John Jannieson) என்பவர் காத்தியமொழிக்கு (Scottish Language) ஒரு சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கினார்.

1840-ல் கிரிம் (Grimm) என்பவர் செருமானியமொழிக்கு ஒரு சொற்பிறப்பியல் அகர முதலி (German Etymological Study) உருவாக்கினார். இவர் அம் மொழிக்கு வடித்துத் தந்த சொற்பிறப்பியல் நெறியீடுகள் 'கிரிம் நெறியீடு' (Grimm's Law) என வழங்கப்படுகிறது.

1879-ல் ஆங்கிலத்தில் இன்றும் சிறந்த சொற்பிறப்பியல் அகரமுதலியாக விளங்கும் 'Scientific Etymological Dictionary of the English Language' என்னும் அகரமுதலியைக் கீற்றுப் (W.W. Skeat) பெருமகனார் வெளியிட்டார். இந்த அகரமுதலி ஒரு மடலமாக வெளிவந்தது.

ஆயின், ஆங்கில மொழியின் சொற்பிறப்பியல் நெறிமுறைகளை (Principles of English Etymology) இரண்டு மடலங்களாக இவர் 1892-ல் வெளியிட்டார். சொல்லின் காலவரையறை சொற்பிறப்புக்குப் பெரிதும் உதவும் என்றார்.[1]

இவை இரண்டுமட்டுமன்றிப் பின்வரும் மூன்று நூல்களையும் அடுத்தடுத்து இவரே தொகுத்தளித்தார் :

1. *1895*-ல் வெளிவந்த 'Primer of English Etymology'.
2. *1897*-ல் வெளிவந்த 'Concise Etymological Dictionary of the English Language'.
3. *1912*-ல் வெளிவந்த 'Science of English Etymology'.

சொற்பிறப்பியல் அகரமுதலித் துறையில் பெரிதுழைத்து அரிய தொகுப்புகளை வழங்கிய பெருமை சீற்று ஒருவரையே சாரும்.

*1931*-ல் இரால்பு லில்லி தர்னர் (Ralph Lilley Turner) என்பவர் நேப்பாள மொழிக்கு ஒரு சொற்பிறப்பியல் அகரமுதலி (Comparative and Etymological Dictionary of the Nepali Language) தொகுத்தளித்தார்.

*1938*-ல் யாழ்ப்பாணத்திலிருந்த தவத்திரு ஞானப்பிரகாச அடிகளார் தமிழ்மொழிக்கு **சொற்பிறப்பு ஒப்பியல் அகராதி**யைத் தாமே முயன்று அரும்பாடாற்றி இயன்றவரை தொகுத்தளித்தார்.

*1946*-ல் குல்கர்னி என்பவர் மராத்திச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Marathi Etymological Dictionary) தொகுத்து வெளியிட்டார். இதில் மேலையாரிய மொழிகளி லிருந்தும் இனச்சொல் காட்டியுள்ளார்.

*1961*-ல் பரோ எமனோவரின் திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Dravidian Etymological Dictionary) வெளிவந்தது.

*1966*-ல் ஆங்கில அகரமுதலி வெளியீட்டில் பெரும்புகழ்பெற்ற எருதந்துறை அகரமுதலிக் (Oxford Dictionary) குழுவினர் சி. தி. ஆனியன் (C. T. Onion) என்னும் அறிஞர் தலைமையில் ஒரு வல்லுநர் குழு அமர்த்தி, ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Oxford Dictionary of English Etymology) வெளியிட்டனர். ஆங்கிலத்தில் இவர்களைப் போன்றே சேம்பர்சு அகரமுதலிக் குழுவினரும் ஒரு சொற்பிறப்பியல் அகரமுதலி வெளியிட்டுள்ளனர். கிளெயின் (Klein), வீக்லி (Weakley) ஆகியோரின் சொற்பிறப்பியல் அகரமுதலிகளும் ஆங்கில மொழிக்கு எழில் சேர்க்கின்றன.

*1970*-ல் வால்தர் வோன் வார்த்பர்க்கு (Walter Von Wartburg) என்பவர் பிரெஞ்சு மொழிக்கு ஒரு சொற்பிறப்பியல் அகரமுதலியை (Franzosisches Etymologisches) தொகுத் தளித்துள்ளார்.

*1978*-ல் சக்கரதர ராவ் என்பவர் வால்தேர் நகரிலுள்ள ஆந்திரப் பல்கலைக்கழக வாயிலாகத் தெலுங்குச் சொற்பிறப்பியல் அகரமுதலி பன்மடலங்களுள் முதன்மடலத் தொகுப்பை வெளியிட்டார். இதுவரை எட்டு மடலங்களுள் மூன்று வெளிவந்துள்ளன.

உலகில் இதுகாறும் வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகளுள், செருமானியம், ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள் தரமானவையாகவும் புகழ்பெற்றவையாகவும் உள்ளன.

---

[1] Hence we learn the very necessary lesson that etymology requires scientific treatment and does not consist in giving indolent credence to silly guesses and we atonce establish the value of chronology as a helpful guide to truth.

—W. W. Skeat — Principles of English Etymology, p. 6.

**தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் — அதற்கான முயற்சிகள்**

தமிழ் உள்ளிட்ட திரவிட மொழிகளுக்கு ஒரு சொற்பிறப்பியல் அகரமுதலி வேண்டும் என்று 1856ஆம் ஆண்டிலேயே கால்டுவெல் வலியுறுத்தினார்.

யாழ்ப்பாணத்துப் பெருந்தகை தவத்திரு ஞானப்பிரகாசர், 1938-ல் தமிழ்ச் சொற் பிறப்பியல் அகரமுதலியின் முதல் ஆறு சிறுபகுதிகளை ('அ' முதல் 'உருள்' வரை 364 பக்கங்கள்) வெளியிட்டார். ஒவ்வொன்றும் 1000 பக்கம் கொண்ட இரண்டு மடலங்களாக (20 உட்பகுதிகள்) வெளியிடத் திட்டமிட்டிருந்தார். அது 'A Comparative and Etymological Lexicon of the Tamil Language' என்று வழங்கப்பட்டது.

இவர்தம் நுண்மாண் நுழைபுலத்தாலும் பல்லாண்டு செய்த ஆராய்ச்சியின் விளைவாலும் இந்தைரோப்பிய மொழிகளுக்குத் தமிழே மூலம் என்று கண்டறிந்தார். செருமானிய மொழிக்குக் கிரிம் என்பவரும், ஆங்கிலத்துக்குக் கீற்று என்பவரும் சொற் பிறப்பியல் நெறியீடுகளை அமைத்ததுபோல இவரும் திரவிடச் சொற்பிறப்பியல் நெறியீடு களை (Laws of Dravidian Etymology) அமைத்தார்; ஒலிப்பு நெறிமுறைகளையும் (Phonetic Sound Laws) வகுத்தார்.

மொழியாராய்ச்சிக்கு வழக்கிலுள்ள சொல்லாட்சிகளை விடுத்து இலக்கியச் சொல் லாட்சிகளை மட்டும் கொள்ளலாகாது என்றும், இந்தைரோப்பிய மொழியினர் ஒலிப் பொப்புமை மட்டும் கருதாமல் சொல்லின் வேரும் வரலாறுமாத விரிந்த அடிப்படை உண்மைகளை ஆராய வேண்டும் என்றும் அவர் வலியுறுத்தினார்.

மேலும் ஞானப்பிரகாச அடிகளார், " 'Father, Mother' என்னும் ஆங்கிலச் சொற்களை அதே ஒலிப்பு ஒப்புமையுடைய இலத்தீன கிரேக்க சமற்கிருதச் சொற்களோடு ஒப்பிடும் சொல்லாராய்ச்சியாளர், மேனாட்டுக் குழந்தைகள் அப்பாவைப் 'பப்பா' என்றும் அம்மாவை 'மம்மி' என்றும் அழைக்கும் சொல்வடிவங்கள் தமிழோடு நெருங்கியிருப்பதை ஏன் காண மறந்துவிட்டனர்" என்று வினவுகிறார்.

மாக்சு முல்லரின் பொன்மொழியை 'Sound Etymology has nothing to do with sounds' — எடுத்துக்காட்டி ஒலிப்பு மற்றும் பொருளொப்புமை மட்டும் கருதாது வேர்ச்சொல் இயைபு எம் மொழியில் அமைந்துள்ளது என்று காணவேண்டும் எனத் தெளிவு கொளுத்து கிறார்.

சமற்கிருதவாணர் 'மாத்ரு' (தாய்) என்பது (மா = அளத்தல், வீட்டை மேற்பார்வை செய்தல்) 'மா' என்னும் வேரிலிருந்து பிறந்ததாகக் கூறுவதும், 'பித்ரு' (தந்தை) பாதுகாப்பவன் என்று பொருள்படுவதாகக் கூறுவதும் பொருத்தமற்றவை என்கிறார். 'அம்மா, அப்பா' என்பவையே அவற்றுக்கு மூலம் என்று காட்டுகிறார். அவருடைய முயற்சி முற்றும் நிறைவுறு முன்பே அவர் இயற்கையெய்தியது தமிழின் தவக்குறைவே எனலாம்.

இங்கிலாந்தில் சமற்கிருதப் பேராசிரியராகவுள்ள பரோவும், அமெரிக்கக் கலிபோர்னி யாவில் சமற்கிருதப் பேராசிரியராகவுள்ள எமனோவும் ஐம்பதாண்டுகளாகத் திரவிட மொழிகளை ஆராய்ந்து சொற்றொகுத்து 1982ஆம் ஆண்டில் திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் திருந்திய பதிப்பை (Dravidian Etymological Dictionary—Revised) வெளி யிட்டனர். இதில் 5569 சொற்களுள்ளன. இது இன்றைய திரவிடமொழி யாய்வாளர்க்குக் கருவிநூலாகப் பயன்பட்டு வருகிறது.

1959-ல் சென்னைப் பல்கலைக்கழகம் திரவிடமொழிச் சொற்களை ஒப்பீட்டு முறையில் தொகுத்துத் திரவிட மொழிகளின் ஒப்பீட்டுச் சொல் அகரவரிசை (The Dravidian Comparative Vocabulary) வெளியிட்டுள்ளது. இஃது சொற்பிறப்பியல் அகரமுதலி யன்றெனினும், இனச்சொல் ஒப்பீட்டுச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் ஒரு கூறாதலின், இதனையும் இவண் குறிப்பிட நேர்ந்தது.

தமிழில், இதுவரை நிகண்டுகளும் அகராதிகளும், வெளிவந்தனவும் வெளிவரா தனவுமாக 300-க்குமேல் இருப்பினும் தரமான சொற்பிறப்பியல் அகரமுதலி தமிழுக்கு இல்லாமலிருப்பது ஒரு பெருங்குறையாக இருந்தது. இக் குறையை நிறைவாக்கும்வகையில் 1974ஆம் ஆண்டு மேத் திங்களில் தமிழக அரசு **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம்** (Tamil Etymological Dictionary Project) ஒன்றை உருவாக்கியது.

**சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு இன்றியமையாது வேண்டப்படுவன**

அகரமுதலி தொகுக்கும் பணி எளிதன்று. அயராது உழைக்கவேண்டிய அகரமுதலித் தொகுப்பாளரை, 'அப்பாவி உழைப்பாளர்' என்று சான்சன் பெருமகனார்[1] ஒரு முறை குறிப்பிட்டார். அகரமுதலித் தொகுப்பாளர் அப்பாவித்தனமாக உழைப்பவராக இருக்கலாம். ஆயின், தம் அறியாமையை வெளிக்காட்டுபவராக இருத்தலாகாது. ஒருவர் எல்லாவற்றையும்பற்றிய அறிவு நிரம்பியவராக இருத்தலியலாது. அக் குறையைப் போக்கு வதற்காகத்தான் உலகில் எங்கு நோக்கினும், அகரமுதலித் தொகுப்புப் பணி ஒரு குழுவின் கூட்டுப்பணியாக அமைக்கப்படுகிறது.

சொற்பிறப்பியல் அகரமுதலி ஒரு சிறப்புவகை அகரமுதலியாதலின், இதன் தொகுப் பாளர், தலைவர் ஆகியோர் தாய்மொழியில் நிகரற்ற புலமையாளராக இருத்தல் வேண்டும். ஆங்கிலம் உள்ளிட்ட பன்மொழியறிவும், மொழிநூற்புலமையும், நடுநிலையோடு ஆயும் நோக்கும் நிரம்பியவராய் இருத்தல் வேண்டும்.

''சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பவர், எத்துணைப் பெரும்புலவரேனும் மொழியாராய்ச்சித் துறையில் நடுவுநிலைமை, அஞ்சாமை, தன்னலமின்மை, மெய்யறியவா என்னும் நாற்பண்பும் இல்லாதவர் வேர்ச்சொற்களைத் தொகுப்பது, குருடன் கண் மருத்துவமும், செவிடன் இசையாராய்ச்சியும், சப்பாணி தாண்டவப் பயிற்சியும் செய்வ தொத்ததே. 'கல்வி வேறு; ஆராய்ச்சி வேறு' '' என்று மொழிநூல் மூதறிஞர் பாவாணர் கூறுகின்றார்.

எனவே, சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புக்கு இன்றியமையாத **முதல் தேவை**, அத் துறையில் ஆர்வமும் புலமையும் நெடுங்கால ஆராய்ச்சிப் பட்டறிவும் கொண்ட அறிஞர் குழுவே.

**இரண்டாவது தேவை**, அக் குழுச் செயற்படவேண்டிய தெளிவான திட்டம். தெளி வான முன்னோக்கத் திட்டமில்லாததால் எத்துணையோ அகரமுதலித் திட்டங்கள் அரை குறையாக, அல்லது முழுமையாக வெளிவரினும் நிறைவில்லாதனவாக அமைந்து விடுகின்றன.

இலத்தீன் மொழிக்குச் சொற்களஞ்சியம் (Thesaurus) தொகுத்த ஐந்து குழுவினர் 100 ஆண்டுகள் உழைத்து மூன்றில் இருபங்குப் பணியைத்தான் முடித்தனர்.

யாழ்ப்பாணம் தவத்திரு ஞானப்பிரகாசர் தமக்குப்பின் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப் பணி தொடர ஒரு திட்டமும் செய்யாததால் அவர் மறைவுக்குப்பின் அப் பணி நின்றுவிட்டது.

ஒழுங்கான திட்டத்தின்கீழ் முழுமையாகவும் நிறைவாகவும் வெளிவந்த முதல் அகரமுதலி எருதந்துறை ஆங்கிலப் பேரகரமுதலி (Oxford Dictionary)தான் என்பர். இதில் 400 அறிஞர்கள் 70 ஆண்டுகள் பணியாற்றினர். அவர்கள் தொகுத்த 5 இலக்கம் சொற் களுடன் அகரமுதலி 13 மடலங்களாக வெளிவந்தது. நாட்டுப்புற மக்களிடை வழங்கும் அனைத்துச் சொற்களையும் தொகுக்க ஏடேறாச் சொற்குழு (U.W.C. — Unregistered Words Committee) ஒன்றை அமைத்தனர்.

---

[1] 'Lexicographer is an harmless drudge'—Johnson

பூனாவில் தொகுக்கப்பட்டுவரும் வரலாற்றடிப்படையிலான சமற்கிருதப் பேரகர முதலி 36 ஆண்டுகளாகச் செயற்பட்டுவருகிறது.

திட்டத்தின் தனிக் கூறுகளான பண ஒதுக்கம், தொகுப்பாளர் உழைப்பு, செயற்பாட்டு வகைமை ஆகியவை செம்மையாக அமைந்தால் திட்டம் திட்டமிட்டபடி நிறைவுறும்.

**மூன்றாவது தேவை**, அகரமுதலித் தொகுப்பாளர்களின் களப்பணித் (field work) திறன். மொழி வழங்கும் எல்லாவிடங்களுக்கும் நேரிற் சென்று சொற்றொகுத்தல் களப்பணி எனப் படும். அவ்விடத்திற்குச் சென்றால்தான் அச் சொல் எப் பொருளில் வழங்குகிறது என்பதை வரையறுக்க முடியும்.

வெபுத்தர் (Webster) ஆங்கில அகரமுதலித் தொகுப்பாளர் ஆங்கிலமொழி பேசப் படும் 46 நாடுகளுக்கும் நேரிற் சென்று சொற்றொகுத்தனர்.

தரமான ஆங்கில அகரமுதலி தொகுப்பதில் ஆங்கிலேயரிடை ஒருகாலத்தில் ஒரு பெரும் போட்டி நிலவியது. அதனை 'அகராதிப் போர்' (War of Dictionaries) என்றழைத்தனர்.

**சங்க அகராதி**யில் 'தசகூலி' என்னுஞ் சொல்லுக்கு, 'பயிரிடுந் தொழிலிற் கொடுக்கும் பத்துவகைக் கூலி' என்று பொருள் உள்ளதை நோக்கிச் சென்னைப் பல்கலைக்கழக அகராதித் தொகுப்பாளரும் அச் சொல்லுக்கு அதே பொருளைக் குறித்தனர்; அச் சொல் எந்த வட்டாரத்தில் வழங்கும் வழக்கு என்று குறிப்பிடவில்லை.

நெல்லையில் வழங்கும் அச் சொல், 'தச்சக்கூலி' என்பதன் இடைக்குறை என்று பாவாணர் தெளிவுபடுத்துகிறார்; 'இந்த ஆண்டு விளைச்சல் தசக்கூலிக்கும் கட்டவில்லை' என்னும் உழவர் வழக்கை எடுத்துக் காட்டுகிறார். நேரிற் சென்று களப்பணி செய்தா லொழியச் சொற்களின் செவ்விய பொருளுணர முடியாது என்பதற்கு இஃதொரு சான்றாகும்.

அகரமுதலித் தொகுப்புக்கு **நான்காவது தேவை**, பன்மொழிப்புலமை நிறைந்த தொகுப்பாளர் குழு. சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புக்கு இது மிகவும் தேவை.

தெலுங்குச் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர் எச்சரிக்கை என்னுஞ் சொல்லுக்கு 'எழுச்சி + அறிக்கை' என்பதை மூலமாகக் காட்டியிருப்பது வேடிக்கையாக இருக்கிறது.

'எச்சரிக்கை' என்னுஞ் சொல்லின் மூலம் காண — அதன் கன்னட வடிவம் என்ன என்று காண — அவர்கள் மறந்துவிட்டனர். கன்னடத்தில் இச் சொல் 'எழுதருவிகெ = எழுந்த நிலை' என்றுள்ளது. இதன் பொருள் விழித்த நிலை என்பதாகும்.

தமிழில் இதன் மூலம் 'எழுதருகை' என்றிருந்திருத்தல் வேண்டும்.

'எச்சரிக்கை' என்பதன் மூலம் 'எழுதருகை' (விழிப்புநிலை) என்பதே. இனமொழிப் புலமை நிரம்பாவிடின் அல்லது இனமொழிப் புலமையாளரின் துணை கொள்ளாவிடின் உண்மையான சொற்பிறப்புக் காண்டல் அருமை என்பதற்கு மற்றொரு சொல்லையும் சான்றாகக் காட்டலாம்.

'அங்காடி' என்னும் தமிழ்ச்சொல் திரவிட மொழிகள் அனைத்திலும் வழங்குகிறது. தமிழில் முதன்முதல் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்த தவத்திரு ஞானப்பிரகாசர், 'அங்கு' (வளைதல்) என்னும் வேரிலிருந்து இச் சொல் தோன்றியதாகக் கூறினார்.

மலையாள அகரமுதலித் தொகுப்பில் ஈடுபட்ட சூரநாடு குஞ்ஞன்பிள்ளை (அங்கம் = உடம்பு, ஆடுதல் = கூடுதல்) அங்காடி = உடம்புகள் கூடும் இடம் எனப் பொருள் கொண்டார்.

திரவிட மொழிகளில் பல்லாண்டுகள் ஆராய்ச்சி செய்துவந்த பாவாணர் ஒருவரே தம் நுண்மாண் நுழைபுலத்தால் 'அம்மு' (விற்றல்) என்னும் தெலுங்குச் சொல்லே (குமரி நாட்டுத் தமிழ்ச்சொல்) 'அங்காடி' என்பதன் மூலம் எனக் கண்டறிந்தார்.

ஆதலால், சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புக்குப் பன்மொழிப் புலமை, அடிப்படைத் திறன்களில் ஒன்று என அறியலாம்.

தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு **ஐந்தாவது தேவை**, தக்க கருவிநூல்கள்.

சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு **ஆறாவது தேவை**, சொற்பிறப்பியல் நெறிமுறைகள் (Principles of Etymology).

சொற்பிறப்பியல் அகரமுதலிக் குழு களப்பணி, ஆயத்தப்பணி ஆகிய இருபணிகளும் முடிந்தவுடன் பதிப்புப் பணியை மேற்கொள்ளுமுன், சொற்பிறப்பியல் நெறிமுறைகளை முழுமையாக வகுக்கவேண்டும். ஒவ்வொரு சொல்லுக்கும் வேரும் வரலாறும் கண்டு வரைந்த முறை சரியா என்று சொற்பிறப்பியல் நெறிமுறைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்த பிறகே பதிப்புப் பணியை மேற்கொள்ளவேண்டும்.

ஒலிப்பு நெறியீடுகள் (Phonetic Laws) முதற்பகுதியாகவும், அந் நூலில் சொற்பிறப்பியல் நெறிமுறை இரண்டாம் பகுதியாகவும், பொருட்பாட்டுப் புடைபெயர்ச்சி (Semantic changes) மூன்றாம் பகுதியாகவும் இடம்பெற வேண்டும்.[1]

சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு **ஏழாவது தேவை**, சொற்பலுக்க (Pronunciation) வரையறை. தமிழைக் கற்க விரும்பும் வேற்றுமொழியாளர்க்கு ஒலிப்புச் சிக்கல் தோன்றாதபடி ஒவ்வொரு தமிழ்ச்சொல்லுக்கும் ஒலிப்பு, ஆங்கிலத்தில் சாய்ப்பு எழுத்து களில் தரப்படுகிறது. எனினும், ஒரே தமிழ்ச்சொல் ஒலிப்பு வேறுபாட்டில் பொருள் வேறு படும் நிலையில் இரு சொற்களாகக் காட்டப்படவேண்டியுள்ளது.

எ.கா:

| | | |
|---|---|---|
| 1. தொகைச்சொல்லில் 'க'கர ஒலிப்பு வேறுபாடு | செங்கோல் (*šeṅgōl*) | நேர்மையான ஆட்சியின் அடையாளமான கோல் |
| | செங்கோல் (*šeṅ-kōl*) | சிவப்பு நிறமுள்ள கோல் |
| 2. இனமெல்லெழுத்தடுத்த 'ச'கர ஒலிப்பு வேறுபாடு | மஞ்சள் (*mañjaḷ*) | 'ja' ஒலிப்பு |
| | அரசஞ்சண்முகன் (*Arašañ-caṇmugaṉ*) | 'c' ஒலிப்பு |

எனவே, தனிச்சொற்களிலும் கூட்டுச்சொற்களிலும் ஒலிப்பு வரையறை தெளிவாக்கப் பட வேண்டும்.

சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு **எட்டாவது தேவை**, மூலம் காண்பதிலும் மூலச் சொல்லின் வடிவமீட்டமைப்பிலும் மரபு பிறழாத நடுவுநிலைமையும் புலமை நுட்பமும்.

---

[1] அகராதி தொகுப்போர் சொல்லை மூவகை நிலைகளில் நோக்குவர். அவை:

1. Phonological aspect (word form) — சொல்வடிவம் (ஒலிப்பு)
2. Grammatical aspect (word) — சொல் (இலக்கணவகை)
3. Lexical aspect (lexeme) — சொல்லின் பொருட்பாட்டுநிலை.

— Mathews, 1974, Morphology, Cambridge.

தமிழும் தமிழினச் சொற்களும் சொல்லீற்றில் வல்லின மெய்யீறு கொள்ளாதவை. இது தமிழ்மரபு. இஃதறியாமல் வடிவமீட்டமைப்பின்போது வேர்ச்சொல்லுக்கோ வடிவ மீட்டமைப்புச் சொல்லுக்கோ வல்லின மெய்யீறு காட்டுதல் மரபுக்கு முரணாகும். அஃது எக்காலும் உண்மையாகாது.

தவத்திரு ஞானப்பிரகாசர் 'அஃகுதல்' என்னுஞ் சொல்லிற்கு 'அஃக்' என மெய்யீற்று மூலங்காட்டுதலும், பரோ எமனோவர் 'தந்தை' என்னும் தமிழ்ச்சொல்லுக்கு இனமான பிற திரவிட இனச்சொற்களை யெல்லாம் ஒப்பிட்டு நோக்கித் தெலுங்கர் 'தந்தை'யைத் 'தன்றி' என்பதால் அனைவர்க்கும் பொதுவான மூலமாகத் 'தண்ட்' அல்லது 'தன்ற்' எனக் காட்டுவதும் தமிழ்ச் சொற்பிறப்பியல் பொறுத்தவரை எவ்வகையிலும் பொருந்தாது. முன் + உ – முந்து, பின் + உ – பிந்து என்றாற்போல் தன் + ஐ – தந்தை ஆகியது. (ஒ.நோ : நும் + ஐ – நுந்தை).

வண்ணனை மொழிநூலார் (Descriptive Linguists) தமிழ்போன்ற தொன் மொழியையும் நேற்றுப் பிறந்த கோண்டு மொழியையும் சமமாக மதித்து, அனைத்து மொழிக்கும் தாயான மொழிக்கு 'முந்துதிரவிடம்' (Proto-Dravidian) எனப் பெயரிட்டு, மூலங்காணும் முயற்சியி லீடுபட்டிருப்பது நன்றன்று.

நீலகிரி மலையிலுள்ள பழங்குடிகளில் ஒரு சாராரான இருளர் 'லைக்கார், றாஅங்கிவா' என்று பேசுவதைக் கேட்கும் வண்ணனை மொழிநூலார், 'லைக்கார்' என்பது 'அழைக் கிறார்' என்பதன் திரிபு என்பதையும், 'றாஅங்கிவா' என்பது 'இறங்கிவா' என்பதன் திரிபு என்பதையும் உணராமல், (லை = கூப்பிடு, றா = வா) 'லை', 'றா' என்பனவற்றையே அச் சொற்களின் முதனிலைகளாகக் கொள்ள முன்வருகின்றனர்.

ஓர் இனமொழியை அதற்குக் காலத்தால் முந்திய தாய்மொழியோடு இணைத்துப் பார்த்துச் சொல் திரிந்த வடிவத்தை உணரும் வரலாற்று அறிவை வண்ணனை மொழிநூல் வழங்குவதில்லை.

வரலாறு மற்றும் ஒப்பீட்டு மொழிநூல் கற்றார் அன்றி வண்ணனை மொழிநூலறிவு மட்டும் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புக்கு அத்துணை உதவாது என்று பாவாணர் கூறுவார்.

சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளரின் பணி, வேரும் வரலாறும் (Origin and derivation) காண்பதோடு முடிவடைவதில்லை.

ஆயிரம் ஆண்டுக்கு ஒருமுறை ஒவ்வொரு மொழியிலும் ஐந்திலொரு பங்குச் சொற்கள் வழக்கொழிந்துவிடுகின்றன வாதலின், அவ்வாறு வழக்கொழிந்த சொற்களை மீட்டமைத்து, அச் சொற்கள் பிற இனமொழிகளில் எவ்வாறு திரிபுற்று வழங்குகின்றன என்று நாட்டுவதன் வாயிலாக மூலமொழியின் தொன்மையும் தாய்மையும் தலைமையும் நிறுவப்படுவதில்தான் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளரின் திறமை அடங்கியிருக்கிறது.

தெலுங்கில் 'நூன' என்னுஞ் சொல் எண்ணெய் (எள் + நெய்) எனப் பொருள்படு கிறது. 'நூ' என்னுந் தமிழ்ச்சொல்லுக்கு 'எள்' என்று பொருள். நூ + நெய் (எள் + நெய்) என்னுந் தமிழ்ச்சொல்லே தெலுங்கில் 'நூன' எனத் திரிந்துள்ளது. வழக்கொழிந்த 'நூநெய்' என்னுந் தமிழ்ச்சொல் தமிழ் அகரமுதலியில் இடம்பெற்றாலொழியத் திரவிட மொழிகளுக்குத் தமிழே தாய் என்பதை எங்ஙனம் நிறுவ இயலும் ?

தெலுங்கில் 'வல்லகாடு' என்னுஞ் சொல் இடுகாட்டைக் குறிக்கிறது. கன்னடத்தில் இது 'பெள்காடு' என வழங்குகிறது. பழந்தமிழில் இதன் வடிவம் 'வெள்காடு' (ஆள் இயங்காக் காடு, இடுகாடு) என மீட்டமைத்தல் இன்றியமையாததன்றோ ? இங்ஙனம் மறைந்துபோன தமிழ்ச்சொற்கள் ஆயிரக்கணக்கில் உள்ளன. இவற்றை அகழ்ந்தெடுக்கும் முயற்சியில் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர் ஈடுபடவேண்டும்.

சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்பாளர்க்குள்ள கடமை பெரிது. உள்ள சொற்களுக்கு மூலங் காணல், புதிய சொற்களைத் தொகுத்தல், கலைச்சொற்களைப் படைத்தல், மறைந்துபோன சொற்களை வடிவமீட்டமைத்தல் ஆகிய நான்கும் பாங்குறச் செயப்படின் அகரமுதலி சிறந்ததாக அமையும்.

ஒரு சொல்லுக்குப் பல வேர்களோ சொற்பிறப்புகளோ காட்டப்படும்போது அவற்றுள் ஒன்றே சரியானதாக இருக்க முடியும். சரியான சொற்பிறப்பை வரையறுப்பதில் தொகுப்பாளரின் தனித்திறமை யடங்கியிருக்கிறது.

**மொழிவளர்ச்சிக்கும் ஆய்வுக்கும் எவ்வகையில் துணை ?**

போர்வீரனுக்குச் செவ்விய படைக்கலங்கள் வெற்றிக்குத் துணைபுரிவதுபோலப் பல்வேறு துறைகளில் அறிவை வளர்த்துக்கொள்ள விழையும் அம் மொழியினர்க்கும் அம் மொழியில் அவ்வத்துறை தொடர்பான கலைச்சொற்கள் பெரிதும் துணைநிற்கும். தக்க சொல்வளம் தாய்மொழியில் கிட்டாதவிடத்து வேற்றுமொழியையே தம் அறிவு வளர்ச்சிக்குத் துணைகொள்ள நேரும்; தாய்மொழியின்பால் பற்றுக் குறைபடும். நல்ல அகரமுதலி மக்களைச் செவ்விய மொழிப்பாங்குடையவராக மாற்றும்.[1]

தாய்மொழியே கல்வி வாயிலாக அமையும்நிலையில் தாய்மொழியின் வெற்றிக்கும் பற்றுக்கும், தாய்மொழியில் ஊற்றாய்ப் பெருகும் சொல்வளம் மிகவும் இன்றியமையாதது. அத்தகு சொல்வளக் களஞ்சியமாக அகரமுதலிகள் விளங்கும்.

மேலும், புதிய சொற்கள் வேண்டுமிடத்து வேரும் மூலமும் காட்டிப் பல்லாயிரம் புத்தம் புதிய படைப்புச் சொற்களை உருவாக்கச் சொற்பிறப்பியல் அகரமுதலி வழி காட்டும். ஆதலால், மொழிவளர்ச்சிக்கு ஏனை அகரமுதலிகளைவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியே ஆணிவேராக அமைகிறது.

செருமானிய மொழிக்குக் கிரிம் என்பவர் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கித் தந்ததன் விளைவாகச் செருமானிய மொழியின் இலக்கிய வரலாறு எழுத அது மிகவும் பயன் பட்டதாகக் கூறுகின்றனர்.

சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்குவதன் வாயிலாக அம் மொழியின் சொற்பிறப்பியல் நெறிகளை அறியலாம்; ஒரு மொழியின் முன்மை, தொன்மை, தாய்மை, தலைமை ஆகியவற்றையும் அறியலாம். எவ்வெம் மொழியிலிருந்து சொற்கள் எவ்வெம் மொழிக்குச் சென்றுள்ளன என்னும் உண்மைகளையும், எக் காலகட்டத்தில் இம் மாறுதல்கள் தோன்றின, ஏன் தோன்றின என்னும் வரலாற்றுப் பின்னணிகளையும் அறியலாம். இதனாற்றான் சோவியத்துநாட்டு வரலாற்றாசிரியர் கோந்தரதோவ் என்பவர், 'மொழி யாய்வாளர்தாம் வரலாற்றாசிரியர்க்கு நிறைந்த செய்திகளைச் சொல்ல முடியும்' என்கிறார்.

அகரமுதலியைச் சொல்லின் பொருளறிய மட்டும் பயன்படுத்துகிறோம். அச் சொல்லின் மூலமென்ன என்று அறிவது மொழியின் பயன்பாட்டுநிலையில் நோக்கு வார்க்குத் தேவையற்றது எனச் சிலர் கூறலாம். சொல்லின் மூலமறிந்து பேசுவோர் பொருளாழத்துடன் எழுதவும் இயலும் என்பதை அவர் அறியார் என்க.

சொற்பிறப்பியல் நெறிமுறைகளைப் பின்பற்றிப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் மறைந்துபோன தமிழ்ச்சொற்களையும், பிறமொழிகளில், திரிந்தும் திரியாமலும் வழங்கித் தமிழில் வழக்கற்றுப்போன சொற்களையும் வடிவமீட்டமைத்து முந்துதிரவிடச் சொற்கள் காட்டப்பட்டுள்ளன. இம் முயற்சி, இற்றை உலகின் பல்வேறு தொன்முதுமொழிகளின்

---

[1] 'Dictionary might bring people closer to the perfect language' — Encyclopaedia Brittanica.

எழுத்துச் சான்றுகளோடு ஒப்பிட்டு, அறப் பழங்காலத்தில் அவற்றுக்கும் தமிழுக்கு மிடையிலான கொள்கொடைகளை நிறுவத் துணைசெய்யும்.

எ-டு : (1) ஆன் = அவ்விடம்
ஈன் = இவ்விடம்
ஊன் = முன்னிடம், நீ.
} பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் மறைந்துபோன தமிழ்ச்சொற்கள்.

(2) அம்முதல் = விற்றல்.
கம்மவார் = உழவர்.
(கமக்காரன் – உழவன், யாழ்ப்பாண வழக்கு).
} தமிழில் வழக்கற்றுத் தெலுங்கில் வழங்கிவரும் பழந்தமிழ்ச் சொற்கள்.

(3) இயா (இஆ) = தந்தை.
(இயவுள் = கடவுள், தலைவன், தந்தை. இயவு (இயா) → இயவுள்.
ஒ.நோ: நிலவு → நிலா.
} பஞ்சாபி மொழியில் வழங்கிவரும் தமிழ்ச் சொல்.

(4) இறைய = தந்தை.
புல(ம்) = கண்.
இளையரு = இளைஞர்
} ஆத்திரேலியப் பழங்குடிகளின் மொழியில் வழங்கிவரும் தமிழ்ச்சொற்கள்.

சொல்லின் மூலமறிந்து பொருளுணர்ந்து பேசப்படும் சொற்கள் காலப்போக்கில் திரிபடைவதில்லை.

ஆங்கிலம் உள்ளிட்ட மேலைநாட்டு மொழிகளிலுள்ள சொற்பிறப்பியல் அகரமுதலி களில் சொன்மூலம் காட்டுவார்களேயன்றி அச் சொன்மூலத்திற்கும் மூலச்சொல் காட்டும் வழக்கமில்லை. 'kind, king' என்னும் சொற்களுக்கு 'kin' (family, related by blood) என்பது மூலமாகக் காட்டப்படுகிறது. ஆயின், 'kin' எப்படிப் பிறந்தது, அதன் வேர்ச்சொல் என்ன என்பதை ஆராயும் முயற்சியில் மேனாட்டு வல்லுநர் இன்றுகாறும் இறங்கவில்லை. அம் மொழிகளும் அத்தகு ஆய்வுக்கு இடந்தரா. ஆயின், இத் துறையில் முயன்று முழுமையான வெற்றிபெற்றவர் பாவாணர் ஒருவரே. ஒளிர், ஒளி என்பவற்றுக்கு 'ஒள்' என்பதே வேர்ச் சொல் எனக் கூறும் பாவாணர், உல் (வெப்பம்) → உள் → ஒள் எனத் திரிந்ததாக வேர்ச் சொல்லுக்கும் வேர்ச்சொல் காட்டுகிறார். தமிழிலுள்ள ஆணிவேர்ச்சொற்களே உலகத் தொன்மொழிகளிலும் ஆணிவேர்ச்சொற்களாக இருக்கின்றன என்பது பாவாணரின் கொள்கை.

எ-டு : குல் → குலம் (குடும்பம்). குல் → குன் → **Goth.** kun → **OS.** kunni → **OE.** cynn → **E.** kin (family).

வேர்ச்சொல்லுக்கும் வேர்ச்சொல் கண்டுபிடித்து, எல்லாச் சொற்களுக்கும் அடிவேர்ச் சொற்களைக் (விதைச்சொல் — seed word, முளைச்சொல் — sprout word) கண்டு, ஆணி வேர்ச்சொல், பக்கவேர்ச்சொல், சல்லிவேர்ச்சொல் என வகைப்படுத்திய பாவாணரின் கொள்கைப்படி இந்த அகரமுதலி வெளிவருவது சொற்பிறப்பு ஆராய்ச்சியில் ஒரு வழி காட்டியாக அமையும்.

ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் 'glad, glitter, gleam' என்னும் சொற் களுக்கு 'gl' என்பது வேர்ச்சொல்லாகலாம் என உன்னிப்பாக உய்த்துணர்ந்தாலும், இலக்கணவகையில் அதைத் தனித்த வேராகக் காட்ட அம் மொழியில் சான்றில்லை.

ஆனால், தமிழில் 'ஒளிர், ஒளி' போன்ற வினைகளுக்கு 'ஒள்' என்னும் வேர்மூலம் காட்ட முடிகிறது. அதனாற்றான் உலக மொழிகளுள் தமிழில் செவ்விய முழுமையான சொற்பிறப்பியல் அகரமுதலி வெளிவர வாய்ப்புள்ளது.

ஒரு நாட்டின் வரலாற்றைப்போல் சொல்லின் வரலாறும் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். அதுமட்டுமன்றி இஃதோர் **அறிவியற் கலை**யாகவே வளர்ந்துள்ளது.[1]

கால்டுவெலாரின் திரவிட ஒப்பிலக்கண மொழிநூல் திரவிடமொழிகள் சித்திய மொழிகளுடன் உலகளாவிய தொடர்புகொண்டிருப்பதை வெளிப்படுத்தியது. பேராசிரியர்கள் பரோ எமனோவர் வெளியிட்ட திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Dravidian Etymological Dictionary), பின்னிசு அறிஞர்கள் சிந்துவெளிமொழி திரவிட மொழி என்பதைக் கண்டறியத் துணைபுரிந்தது. அதுமட்டுமன்றிச் சப்பானியமொழி தமிழோடு நெருங்கிய தொடர்புள்ளது என்று கண்டறியவும் அது பெரிதும் உதவியதாகச் சப்பானிய மொழிநூலறிஞர் ஓனோ தெரிவித்திருக்கிறார்.

சொற்பிறப்பியல் அகரமுதலி என்பது தெளிவாக வேர்மூலம் காணக்கூடிய அடிப்படைச் சொற்கள் அனைத்தையும் தொகுத்துத் தருவது என்று உலகனைத்திலுமுள்ள மொழிகளில் ஒரு மரபாகக் கொள்ளப்பட்டு வருகிறது. ஆங்கில மொழியில் ஐந்து பேர் தனித் தனி தொகுத்த ஐந்து சொற்பிறப்பியல் அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. ஆங்கில மொழியில் எட்டு இலக்கம் சொற்கள் இருந்தாலும், வேரும் வரலாறும் விளக்கிக்கூறத் தகுந்த 14,286 சொற்களைமட்டும் கொண்ட ஒரே மடலமாக (S.E.D.E.L.) அது வெளிவந்துள்ளது. தமிழில் மட்டும் அவ்வாறு ஒரே மடலமாக வெளியிட்டால் போதுமா? என்னும் வினாக் குறித்துப் பாவாணரை அணுகியபோது அவர் பின்வருமாறு மறுமொழி அளித்தார் :

1) அடிப்படைச் சொற்களுக்குத்தாம் வேரும் வரலாறும் தேவைப்படுகிறது என்பது உண்மையே. ஆயின், மொழிவளர்ச்சியில் ஒன்றுக்கும் மேற்பட்ட கூட்டுச்சொற்கள் மரூஉச்சொல்லாகி ஒரே சொல்லாகக் குறுகுவதும், நாளடைவில் ஒரே வினையடியிலிருந்து பல்வேறுவகைத் தனிச்சொற்களும் கூட்டுச்சொற்களும் உருவாவதும் இயல்பு. தமிழ் மொழியிலுள்ள ஒரு கூட்டுச்சொல் வேற்றுமொழியில் தனிச்சொல்லாகத் திரிபுற்று வழங்குவதுபோன்ற பல்வேறு கூட்டுச்சொல் நிலைகளைத் தனிச்சொற்களைமட்டும் கொண்ட அகரமுதலியில் விளக்கி உரைக்க முடியாது.

2) கொச்சைச் சொற்களும், கொடுந்தமிழ்ச் சொற்களும் உலகவழக்கில் தனிச் சொல்லாகவும் கூட்டுச்சொல்லாகவும் பெருக வழங்குவதால் அவற்றின் செந்தமிழ் வடிவம் காட்டினாலன்றி, அச் சொற்களின் சொற்பிறப்பையும் எந்த மூலச் சொல்லிலிருந்து அது திரிந்துள்ளது என்ற விளக்கத்தையும் கண்டறிய முடியாது. ஆதலின், அனைத்துச் சொற்களையும் சொற்பிறப்பியல் அகரமுதலியில் சேர்க்கவேண்டியிருக்கிறது.

3) ஆங்கிலம் போன்ற மேனாட்டு மொழிகளில் 100-க்கு 90 பங்கு கடன்சொற்கள் உள்ளன. அத்தகு மொழிகளில் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பது என்பது எளிதான வேலை. ஏனெனில், இந்த ஆங்கிலச்சொல் கிரேக்கச்சொல்லிலிருந்து வந்தது; மற்றொரு ஆங்கிலச்சொல் இலத்தீன்மொழியிலிருந்து வந்தது என்று எளிதாகச் சொன் மூலம் காட்டிவிடலாம். இப்படிச் சொன்மூலம் காட்டுவதையே சொற்பிறப்பியல் அகர முதலி என்று மேனாட்டார் நினைத்துக்கொண்டிருக்கின்றனர். இந்த அகரமுதலியில் சொன்மூலம் காட்டுவதோடு சொற்களின் வேர்மூலமும் காட்டுதலால், வேர்ச்சொல்லுக்கும் வேர்ச்சொல் காணவேண்டியிருக்கிறது. ஆதலால், தமிழுக்குச் சொற்பிறப்பியல் உருவாக்கு கின்ற பணி மிகக் கடுமையானது. இத்துணைக் கடும்பணியை மேற்கொண்டபின் அனைத்துச் சொற்களுக்கும் வேர் காணும் முயற்சியில் ஈடுபட்டால்தான் இவ் வாராய்ச்சிப் பணியின் பயன் தமிழ்ச்சொற் களஞ்சியம் முழுவதும் அடக்கியதாக இருக்கும்.

---

[1] The methods now adopted have so entirely changed the aspect of the subject, that what used to be a matter of guess-work or arbitrary suggestion has been largely reduced to law and order. Etymology depends no longer upon barefaced and irresponsible assertion, but has been raised to the dignity of a science.

— Rev. Walter W. Skeat (Sc. Ety., p. 1.)

4) தமிழ் ஞால முதன்மொழி, திரவிடத்திற்குத் தாய், ஆரியத்திற்கு மூலம் என்னும் பாவாணர் கொள்கைப்படி இவ் வகரமுதலி தொகுக்கப்பட்டுள்ளதால் கூட்டுச்சொற்கள், மரபுவினைகள் ஆகிய அனைத்துக்குமே சொற்பிறப்புக் காணுதல் இன்றியமையாதது. சான்றாக, காற்றுக்குத் தடுப்பாக வைக்கப்படும் தடுக்கு, தமிழில் 'வளிமறை' எனப்படுகிறது. இந்தக் கூட்டுச்சொல் தென்னமெரிக்கநாட்டுப் பழங்குடிகளான இன்காக் களின் மொழியில் வளிமறை என்று உள்ளவாறே வழங்குகிறது. எனவே, எந்தக் கூட்டுச் சொல்லையும் விடாமல் சொற்பிறப்பியல் அகரமுதலியில் சேர்த்து வேர்மூலம் காட்டினால் தான் உலகமொழிகளில் தமிழ்ச்சொற்கள் கலந்திருப்பதை எளிதாகக் கண்டறியமுடியும். கூட்டுச்சொல்லாயினும், தனிச்சொல்லாயினும் அவற்றின் செவ்விய வடிவமும் முந்துதமிழ் வடிவமும் காட்டாவிடின், சொல் தோன்றி வளரும் நெறிமுறைகள் புலப்படாமல் போய் விடும் என்பதாலும், உலகமொழிகளுக்கும் தமிழ்மொழிக்கும் உள்ள தொடர்புகளை நிலை நாட்டவேண்டியிருத்தலாலும், பன்மடலங்களைக்கொண்ட பேரகரமுதலியாகத் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைத் தொகுப்பது இன்றியமையாதது.

**சொற்பிறப்பியலில் பாவாணர் கொள்கை**

உலக முதன்மொழியிலிருந்து பல்வேறு மொழிக்குடும்பங்கள் கிளைத்து வளர்ந்த வரலாற்றை அறியவும் இந்த அகரமுதலி பெரிதும் உதவுதலான், நாட்டு ஒருமைப்பாடேயன்றி உலக ஒருமைப்பாட்டுக்கும் வித்தூன்றுவதாக அமையும் சிறப்புடையது. உலக மக்களனை வரும் ஒரு கொடிவழியினர் என்னும் மாஃசு முல்லர் கொள்கையை இது நிலைநாட்டும். இத்தகு நோக்குடனும் நெறிமுறைகளுடனும் உலகில் இதுவரை எந்தச் சொற்பிறப்பியல் அகரமுதலியும் தொகுக்கப்படவில்லை. இவ் வுண்மையைக் கீழ்வரும் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புத் தொடர்பான மேனாட்டறிஞர் கொள்கைகளுக்கும் பாவாணர் கொள்கைகளுக்கும் இடையிலான நோக்கம் மற்றும் செயற்பாட்டுவகை வேறுபாடுகளால் நன்கு நுனித்தறிய வியலும்.

| | பாவாணர் கொள்கை | | மேனாட்டார் கொள்கை |
|---|---|---|---|
| 1. | சொன்மூலம் மட்டுமன்றி வேருக்கு வேர்மூலம் காண்பது. | 1. | சொன்மூலம் மட்டும் காண்பது. |
| 2. | பொருட்பாடும் (semantics) சொல்லின் ஏரண முறைப்பட்ட அடிவரவும் நோக்கி முந்துதமிழ (திரவிட) வடிவங் களை மீட்டமைப்பது. | 2. | சொல்லின் ஒலியனியலை (phonology) மட்டும் நோக்கி முந்துதிரவிடத்தை மீட்டமைப்பது. |
| 3. | தொல்வரவு நோக்கி எந்தெந்த மொழி யிலிருந்து எந்தெந்த மொழி பிறந்தது என்று கணித்து அதற்கான நெறி முறைகளை வரையறுப்பது. | 3. | மொழிகளின் பிறப்பையும் நெறிமுறை களையும் கணித்து வரையறுப்பதில்லை. |
| 4. | தமிழ் திரவிடத்திற்குத் தாய், ஆரியத் திற்கு மூலம், ஞாலத் தொன்மொழி என்பது. | 4. | அக் கருத்துகள் இல்லை. |
| 5. | பல மொழிகளிலோ பல குடும்ப மொழி களிலோ ஒன்றுபோலவே காணப்படும் சொல்லைக் குறிப்பிட்ட மூல மொழிக் குரிய சொல் என்று வரையறுப்பது. சான்றாக 'அம்மா, அப்பா' என்னும் மூலச்சொல் உலகின் பல மொழிக் குடும்பங்களிலும் உருத்திரிந்தும் திரியாமலும் வழங்கினும் அவை முந்து தமிழிலிருந்தே தோன்றியவை என வரையறுப்பது. | 5. | அங்ஙனம் வரையறுப்பதில்லை. |

6. மாந்த இனம் ஓரிடத்திலிருந்தே உலக முழுதும் பரவியதால் ஒரே மூல மொழியி லிருந்து உலகமொழிகள் பலவாகப் பிரிந்தன என்பதற்கான உரிய சான்று களைத் திரட்டுதல்.

6. அக் கருத்து இல்லை. அங்கங்கு நிலவும் மொழிகளை உள்ளவாறே பதிவு செய்வது நோக்கம்.

7. சொற்பிறப்பைச் சொற்றிரிபு பொருள் திரிபுகளின் வாயிலாக ஏரண நெறிதழுவி வரலாற்றுவழி நெடுநோக்குடன் தக்க சான்றுகளுடன் கணித்து வரையறுப்பது. சான்று கிட்டாதவற்றுக்கு மரபுநோக்கி வடிவமீட்டமைப்பது.

எ-டு : புத்தகம் என்னும் சொல் முந்து தமிழில் பொத்தகம் என்றே வழங்கி யிருக்கவேண்டும் என்று பாவாணர் உன்னித்துக் கணித்தார். கணித்த பிறகு அச் சொல் தெலுங்கு கன்னடமொழியில் பொத்தகம் என்னும் வடிவில் ஏற் கெனவே இருப்பதைக் கண்டு தம் கொள்கை சரியானது என்று பாவாணர் உரங்கொண்டார்.

7. ஒலியன் வடிவை (சொற்றிரிபு) மட்டும் உன்னித்துக் கணிப்பது. எழுத்துச் சான்றுகள், பேச்சுவழக்குச் சான்றுகள் கிடைத்தாலன்றி மரபும் இலக்கணக் கட்டும் நுனித்துக்காட்டி எடுத்துக் காட்டில்லாவற்றுக்கு மரபுநோக்கி வடிவமீட்டமைப்பதில்லை.

8. ஒரு சொல் எம் மொழிக்குரியது என்பதை வேர்மூலச் சொற்பிறப்பு மூலம் எளிதில் தாமே கண்டறிவது.

8. பிற நூல்களில் கூறப்பட்டிருந்தா லொழியத் தாமே வரையறுக்கத் துணி யாமை.

**ஒரு சொல் எம் மொழிக்குரியது?**

இருவேறு குடும்பமொழிகளில் ஒரு சொல் ஒலிப்பிலும் பொருளிலும் ஒத்து வழங்கு மாயின், அது இன்ன குடும்பத்தைச் சார்ந்தது என்று வரையறுத்தற்கான வழிமுறைகள் விரிவானவை எனினும் விரிவஞ்சிச் சில சான்றாகக் கீழே காட்டப்படுகின்றன :

1. அச் சொல்லின் வேர்மூலமும் அதனடியாகப் பிறந்த பல்வகைப் பெயர் வினை வடிவுகளும் வினைத்திரிபுகளும் ஏதேனும் ஒரு மொழியில்தான் விரிவாக வழங்கி யிருக்கமுடியும். அதுவே அச் சொல்லுக்கு மூலமொழி. அச் சொல்லைக் கடன் கொண்ட மொழியில் அச் சொல்லின் அனைத்து வடிவங்களுக்கான ஆட்சியிருக்க வியலாது.

2. ஒரு சொல் எந்த மூலமொழிக்குரியதோ அம் மொழிக் குடும்பமொழிகள் பெரும் பாலானவற்றில் அச் சொல் இனச்சொல்லாக ஆட்சி பெற்றிருக்கும். கடன் கொண்ட மொழியின் இனமொழிகளனைத்திலும் அதன் இனச்சொற்கள் இரா.

3. ஒரு சொல்லின் சரியான ஒலிப்பு வடிவம் அதன் மூலமொழியில் செம்மையாகவும் அக் குடும்பமொழிகளில் ஓரளவுக்குச் செம்மையாகவும் இருக்கும்; கடன் கொண்ட மொழியில் அதன் ஒலிப்பு வடிவம் உருமாறும் வாய்ப்பு மிகுந்திருக்கும். உருமாறும் ஒலிப்புமுறை, கடன்கொண்ட மொழிக்கே உரிய பலுக்குமுறையைத் தன்வண்ண மாக்கிக்கொள்ளும்.

4. ஒரு மொழியின் நெடுங்கணக்கில் என்றுமில்லாத எழுத்தொலிப்புள்ள சொல் கடன்சொல்லாகக் கருதப்படும்.

5. ஒரு நாட்டில் இல்லாத இயற்கைப் பொருள்களின் பெயர்கள் வேற்றுமொழியில் பெறும் ஒலிப்பு வடிவில் அவை கடன்சொற்கள் என்பதைச் சொல்லால் காட்டத் தவறினும் பொருளால் காட்டிவிடும்.

6. ஒரு சொல் வேர்மூலச் சொற்பிறப்பாலும் வடிவமீட்டமைப்புச் சொற்பிறப்பாலும் மூலங்கண்டறியப்படாததாயின் அது கடன்சொல்லே.

7. ஓரினத்தாரின் வழிவழி வந்த வரலாற்றுப் பண்பாட்டு மரபுகளுக்கொவ்வாத பொருளுடையதாயின் அச் சொல் கடன்சொல்லே.

8. கூட்டுச்சொற்களில் துணைவினையாக வருபவை தாய்மொழிச் சொல்லே யாதலின் செய்தற்பொருளுடைய துணைவினை மிகுதியாகப் பயின்று வரும் பல்வேறு முதற்சொற்கள் அம் மொழிக்கு அயற்சொற்களாக இருக்கும் வாய்ப்புள்ளது. கூட்டுச்சொல்லில் முதற்சொல் பொருள் விளங்கா அயன் மொழிச் சொல்லாய் வரும்போது வினைப்படுத்தற்காகச் 'செய்'யென்னேவல் துணைவினை சேரும். ஆதலின், அத்தகு கூட்டுச்சொல்லின் முதற்சொல் கடன் சொல்லே.

9. எம் மொழியிலும் வினைச்சொற்கள் பெரும்பாலும் கடன் கொள்ளப்படுவ தில்லை. இரு வேற்றுக் குடும்பமொழிகள் பெயர்ச்சொற்கள் ஒத்திருந்து ஏதேனும் ஒரு மொழியில் அதன் தனிச்சொல் வினைவடிவம் காணப்படுமாயின், வினைவடிவம் காணப்படும் மொழிக்கே அச் சொல் உரியது.

10. இருவேறு குடும்பமொழிகளில் வினைச்சொல் ஒத்திருப்பின், அவ் வினைச் சொல்லின் வேர்வழி வளர்ந்த சொல்லாட்சிகள் ஏரணமுறை தழுவிய சொற் பிறப்புக்கு எம் மொழியில் இடந்தருகிறதோ அம் மொழிக்கே அச் சொல் உரியது.

### ஒரு மொழி எக் குடும்பத்தைச் சார்ந்தது ?

ஒரு மொழி எக் குடும்பத்தைச் சார்ந்தது என்பதைக் கண்டறியப் பின்பற்றப்படும் நெறிமுறைகளுள் சில இவண் சான்றாகக் காட்டப்படுகின்றன.

1. ஒரு மூலத் தாய்மொழியிலிருந்து பல மொழிகள் கிளைத்துப் பிரியும்போது அங்ஙனம் பிரிந்துசெல்லும் மொழியில் காலப்போக்கில் உரு மாறியும் உரு மாறாமலும் உடன்செல்லும் சொற்கள் **உடன்கொண்ட சொல்வளம்** எனப்படும். பிரிந்துசென்று தனி நிலை பெற்ற பின்னர்ப் பிறமொழித் தாக்கத்தால் கொள்கொடை ஊடாட்டம் பெற்ற சொற்கள் **கடன்கொண்ட சொல்வளம்** எனப்படும். நெட்டிடையிட்ட ஆயிரமாண்டு களாகப் பிறமொழித் தாக்கமின்றி உடன்கொண்ட சொல்வளமே 80%-க்கும்மேல் காக்கப் பட்டு வரும் மொழிகள் உலக முதல் தாய்மொழியுடன் ஒப்புநோக்கும் தகுதியுடையன; சொற்பிறப்பு நெறிமுறை காணவும் பெரிதும் துணைபுரிவன.

2. உடன்கொண்ட சொல்வளம் 50%-க்குக் குறைவாகவோ, கடன்கொண்ட சொல் வளம் 50%-க்கு அதிகமாகவோ உள்ள மொழிகள் அவ்வாறு திரிந்த அண்டை மொழிகளுடன் கூடி வேற்றுக் குடும்பமொழி யாகிவிடும். உலக மொழிக்குடும்பங்கள் அனைத்திலும் அவற்றின் அடிப்படைச் சொற்களுள் உடன்கொண்ட சொல்வளம் வேர்ச் சொல் அளவிலாவது நிலைபேறு பெற்றிருப்பது உறுதி. எனவே, வேர்ச்சொல்லை அடிப்படையாகக்கொண்ட சொற்பிறப்பியல் ஆய்வு, உலக முதன்மொழிக்கும் இன்றைய உலகமொழிகளுக்கும் உடன்கொண்ட சொல்வளத்தா லான உறவுமுறைகளை உறுதிப் படுத்தவல்லதாதலின், உடன்கொண்ட சொல்வளத்திற்குரிய அடிப்படைச்சொற்களை அனைத்துலக மொழிகளிலிருந்தும் பிரித்தெடுத்து வகைப்படுத்தியபிறகு கடன்கொண்ட சொற்களை மட்டும் கணித்தால் எந்தெந்த நூற்றாண்டுகளில் எந்தெந்தச் சொல் எவ்வெம் மொழிக்குச் சென்றது என்பதை நுனித்தறிந்து நுட்பமாக வரையறுக்கலாம்.

3. காலந்தோறும் நிகழ்ந்த மக்களின் இடப்பெயர்ச்சிகள் மொழித்திரிபுக்கும் மொழிக்கலப்புக்கும் வழிவகுத்துள்ளன. கலப்பில் உருவாகித் தனிநிலை பெற்ற ஒரு மொழி காலச்சக்கரத்தின் ஓட்டத்தால் பழையமொழி யாகிவிடலாம். அதனால், அம் முதுமொழி புதுமொழிகளுக்குத் தாயாகிவிடாது. கலப்புமொழி காலத்தால் பழையதாயினும் செவிலித்

தாயாகும் வளர்ப்பு மொழியே யன்றி, உடன்கொண்ட மூலச் சொல்வளம் ஈனும் நற்றாய் மொழி யாகாது.

பாவாணரின் வேர்ச்சொல்லாராய்ச்சி, குறிப்பாகத் தமிழைக் குறிக்கொண்டதாயினும் சிறப்பாக உலகமொழிகளிலுள்ள உடன்கொண்ட சொல்வளத்தைப் பிரித்தறியவும் நெறி கண்டது.

4. இற்றைநிலையில் நாளுக்குநாள் திரிபுற்றுச்செல்லும் குக்குல மொழிகள் எம்மொழியினுள்ளும் அடக்கவியலாதபடி மட்டற்றவகைகளில் கட்டற்றுக் கிளைக்கின்றன. பன்மொழி மோதலில் துண்டாடிச் சிதறிய சில்லறை மொழிகளை ஓரினப்படுத்துவது உடைந்த சட்டியை ஒட்டிப்பார்க்கும் முயற்சிபோன்றது எனச் சிலர் கருதினும், சொற் பிறப்பியலில் வடிவமீட்டமைப்பு வரலாற்று மீட்டமைப்புக்கே வழிவகுத்தலின் அம் முயற்சி வீணானதன்று என்பார் பாவாணர். கலப்பினத்தைச் சார்ந்த ஒரு மொழி ஒரு குடும்பத்தைச் சார்ந்திருக்கவேண்டும் என எதிர்பார்க்கவியலாது; பல குடும்பங்களையும் சார்ந்திருக்கலாம்.

5. ஆதலால் ஒரு மொழியில் எத்துணை மொழிகளின் தாக்கம் எந்தெந்த அளவீட்டு விழுக்காட்டில் (%) உள்ளது எனத் தெரிந்து வகைப்படுத்திய பின், அதிக விழுக்காட்டு ஒப்புமைக்குரிய முன்மொழியைச் சார்ந்த மொழியாகவே அதனைக் கணிக்கவேண்டும் எனப் பலரும் கருதுவர். அக் கருதுகோள் இடம்பெயராத மக்களின் மொழிக்கு ஒக்கும். இடம் பெயர்ந்த சிறுபான்மை மக்களின் முன்மொழி அல்லது தாய்மொழி குடியேறிய சூழலில் ஒரு விழுக்காடுகூட எச்சமின்றி மறைந்துவிடக்கூடும். அந் நிலையில் அம் மக்கள் இனத்தால் வேற்றவராகவும் மொழியால் குடியேறிய நிலத்துக்கும் மொழிக்கும் உரியவராகவும் மாறி விடுவர். அவர்கள் அங்குள்ள மக்களொடு நெருங்கி ஊடாடாத வகையில் பிரித்து வைக்கப் படின் அங்குள்ள மொழியில் ஒரு கிளைமொழியை உருவாக்கிவிடுவர். ஆகவே, அடிப்படைப் பெயர்ச்சொல் வினைச்சொல் லாட்சிகள் இனச்சொற்கள் ஒன்றுபடும் மொழிக்குடும்பத் தொடு அவ் வியல்புள்ள மொழி சேரும். ஆயின், அம் மொழியினர் அனைவரும் அக் குடும்பத்தைச் சார்ந்த மரபினர் என்று வரையறுக்க வியலாது.

6. ஒரு மொழியின் கண்டறியத்தக்க தொடக்க காலத்திலேயே அதற்குக் கிளை மொழி வழக்குகள் இல்லையாயின் அது ஒரு கலப்புமொழி அன்று; கலப்பில் பிறந்த புது மொழி என அறியலாம்.

7. கலப்பில் பிறந்த புதுமொழியாளரின் சொற்பலுக்கம் எம்மொழிக்குரியதோ அம் மக்கள் அம் மொழியினத்தராவர். அவர் பேசும் பெரும்பான்மைச் சொற்கள் எம்மொழிக் குரியனவோ அம் மொழிக்குரியவராக அவர்களைக் கருத வியலாது.

8. ஒரு மொழியின் வேற்றுமை உருபுகள், எதிர்மறை இடைநிலைகள், மூவிடப் பெயர்கள், எண்ணுப்பெயர்கள், கால இடைநிலைகள், முன்னொட்டுகள், வியப்பிடைச் சொற்கள், அடிப்படை வினைச்சொற்கள் ஆகியவை எம் மொழியொடு மிகுதொடர்பு உள்ளனவோ அம் மொழிக்கே அவை இனமானவையாகக் கருதப்படும்.

9. உடன்கொண்ட சொல்வளம் இல்லாத மொழி உலகில் ஒன்றுகூட இருத்த லியலாது. பெயர், வினை, இடை ஆகிய முச்சொல் வகைகளும் அவற்றின் வேர்நிலைகளும் உடன்கொண்ட சொல்வளம் ஒரு மொழியில் ஊடாடியிருப்பதைக் காட்டும். ஊடாடிய அடிப்படைச் சொற்களின் காலக் கணிப்பிற்கேற்ப அவ்வம் மொழி அதற்கு முந்தைய மொழியிலிருந்து அல்லது மூலத் தாய்மொழியிலிருந்து பிரிந்த காலத்தைக் கணிக்கலாம்.

10. சொற்கள் மட்டுமன்றி, தொகை தொடரமைப்புகள், பேச்சுவழக்கிலுள்ள விட்டிசை ஒலிப்பழுத்தங்கள் (pause and intonations), தொல்பழங்கால நாகரிகப் பண் பாட்டுப் படிநிலைகளைக் காட்டும் தொடராட்சிகள் ஆகியவை ஒரு மொழி எம் மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது என்று காட்டிவிடும்.

சொற்பிறப்பியல் அகரமுதலி மேற்கண்ட ஆய்வுகளுக்கு ஊற்றிடமாகவும், புதிய கண்டுபிடிப்புகளின் நிலைக்களமாகவும், வளரும் அறிவுக்குக் கொள்கலமாகவும் விளங்கும்.

ஏ

லைப்புச்சொற்களின் சரியான பலுக்கம் ஆங்கிலத்தில் தர
ப் பெயர்ப்பன்று; ஒலிபெயர்ப்பு. தமிழ்ச்சொற்களின் வேரும் வ
பிறப்புப் பகுதி முழுவதும் தமிழிலேயே எழுதப்படுவதால், த
ாழியாளர்க்கும் உதவும்வகையில் கூட்டுச்சொல்லின் செ
ச் சொல்லிலும் காட்டப்படுகிறது.

னைச்சொற்களின் முக்காலப் புடைபெயர்ச்சி ஒலிபெயர்ப்பினு
ர்க்குறுக்கத்தின் முன் எண்ணிட்டுக் காட்டப்பட்டுள்ளது. அ
ச்சொல்லின் புடைபெயர்ச்சி வாய்பாட்டுப் பட்டியலில் எ
று காட்டப்பட்டுள்ளது. புதிதாகத் தமிழ் கற்றுக்கொள்பவர்க
யன்படுத்தி எந்தெந்தச் சொல் முக்காலங்களில் எவ்வாறு
ிந்துகொள்ளலாம்.

**றுவ.** என்னும் பெயர்க்குறுக்கத்தின்கீழ்த் தரப்பட்டுள்ள
றுபட்டு வரும் மறுவடிவங்கள் என்பதைக் குறிக்கும்.

றிப்பிட்ட சொல் அகரமுதலியில் இல்லையெனில் அது விடுபட்ட
டலத்தில் குறிக்கப்படும். வேரும் வரலாறும் வரையாமல் விடுப
ர்ச்சொற்களை நிறுவுவதற்கு மேலும் சில சான்றுகளை எதிர்
ள்ளன. செடி கொடி முதலிய நிலைத்திணைப் பெயர்கள், சி
கள் ஆகியவற்றுக்கு இவ்வாறு வேர்மூலம் காட்டாமல் பாவாண
**அடவியில்திருடி** என்னுஞ் சொல் கள்ளிச்செடியைக் குறிக்கு
மருத்துவர்களை அணுகித்தான் தெரிந்துகொள்ள முடிகிறது. 'க
ன்' என்பதன் பெண்பாலாக இருந்தும் இது காட்டில் இருக்கும்
நடி' எனக் குழூஉக்குறி யானதை உய்த்துணர்ந்து சொல்லவல்ல
பிலேயே இவற்றிற்கு வேரும் வரலாறும் வரைய இயலாது. ப
ற்கண்டு உரையாடி அரிய செய்திகளைத் தொகுக்கவேண்டியிருத்
விட்டுவைப்பது தவறன்று என்று பாவாணர் கூறியிருக்கி
ாட்டப்படாத சொற்களுக்கு அவற்றின் வேர்மூலமும், பிற
பொருள்களும், மேற்கோள்களும், இனச்சொற்களும் 9ஆம்
.

ளின் பலுக்கம்

டுப்பு ஒலிகள் (Voiced stops) : குறில் அல்லது நெடிலைச்
உயிர்மெய்யெழுத்தும் மூன்றாம் உயிர்மெய்யெழுத்தும் எ
ம்.

ா-டு) நாடு *nāḍu*
பட்கு *paḍagu*

ரெழுத்துச் சொற்களில் இரண்டாவது எழுத்தாக வரும் க, ட,
துகளும் எடுப்பொலிகளாகும். எல்லாத் தமிழ்ச்சொற்களிலும்
(voiceless) ஒலிக்கும்.

எ-டு) கட, புகை, பாதி, தபு.

ில் இனமெல்லொற்றுகள் வரின் அடுத்துவரும் வல்லெழுத்து
டயின ஒற்றடுத்துவரும் வல்லெழுத்துகளும் எடுப்பொலியாகும்.

எ-டு) பங்கு, நல்கு, அடர்பு.

ட்டுச்சொற்களில் விட்டிசை இருப்பின் அவை தனித்தனி ப
ும். விட்டிசைத்தலைப் பக்கிசைத்தல் என்பார் சேனாவரையர்

எ-டு) சுடுசொல், அடுகளிறு, இடுகடை, மரங்கொல்தச்சர்.

சால்லின் இலக்கணவகைப் புடைபெயர்ச்சி: வினைச்சொற்
பயரும்போது அவ் வினைச்சொல் குறிலடுத்த ணகர ளகர மெ
ற்று இரட்டித்தே புடைபெயரும்.

எ-டு) எண் — எண்ணு, எண்ணினான், எண்ணுகின்றான், எ
எள் — எள்ளு, எள்ளினான், எள்ளுகின்றான், எள்ளுவா

ரட்டித்து உகர ஈறு பெறுதலைக் காட்டுவதற்காகத் தலை
று மெய் இரட்டித்து உகரம் சேர்ந்த (உயிர்மெய்) மிகை ஈறுபெ
டித்துவந்த உகரம் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து, பிறைக்கு
. ஏவல்வினையில் எண், எண்ணு என்னும் இருவகை வடிவ
காட்டும்.

(10) வேரும் வரலாறும்: இந்த அகரமுதலியில் தமிழ்ச்சொற்கள் என்று கொள்ளப் பட்டவை தனித்தமிழ்ச் சொற்கள்.

முதற்சொல் தமிழ்ச்சொல்லாகவும் இரண்டாஞ் சொல் வேற்றுமொழிச் சொல் லாகவும் அமைந்த கூட்டுச்சொல்லும் வழக்குநோக்கிச் சேர்க்கப்பட்டுள்ளது என்பது முன்னரே விளக்கப்பட்டது. இவையும் முழுமையான தமிழாக்கம் பெற்றுப் படைப்புச் சொற்களாகச் சேர்க்கப்படுகின்றன. தமிழ்ச்சொற்களுக்கு வேரும் வரலாறும் சிறிய வட்டெழுத்தில் (Tamil script type) தரப்பட்டுள்ளன.

(எ-டு) [அவிர் → அவுரி. அவிர்தல் = நிறத்தால் விளங்குதல்.]

வேர்ச்சொல்லின் திரிவு அல்லது வளர்ச்சி அம்புக் குறியிட்டுக் காட்டப்படும். சொல்லின் பொருளுக்குச் சமக்குறியிட்டுக் காட்டப்படும். வேற்றினமொழிச் சொற்களைக் குறிக்க ஆங்கில எழுத்துகள் ஆளப்படும்.

தமிழ்ச்சொற்கள் திரிந்து பிறமொழிக்குச் சென்றதாயின் > இடமுறைத் திரிவுக் கோடும், வேற்றின மொழிகளிலிருந்து சொற்கள் தமிழில் கலந்ததாயின் < வலமுறைத் திரிவுக்கோடும் ஆளப்படும்.

(11) பொருள் எண்: ஒரு தலைப்புச்சொல்லிற்குப் பல பொருள் எண்ணிட்டுக் காட்டப்பட்டிருக்கும். அத் தலைப்புச்சொல் குறிப்பிட்ட பொருளில் எவ்வாறு ஆளப்படு கிறது என்பதைக் காட்ட வேரும் வரலாறும் பகுதியில் அத் தலைப்புச்சொல்லின் பக்கத்தில் பொருள் எண்ணும் தரப்பட்டுள்ளது. சான்றாக, **நகர்** என்னும் சொல்லுக்கு வெண்மை என்பது மூன்றாவது பொருளாக இருப்பின், **நகர்** 3 என்னும் பொருள் எண்ணில் அப் பொருளில் அச் சொல்லாட்சிக்குரிய வேர்ச்சொல் வளர்ச்சி காட்டப்பட்டிருக்கும்.

(12) இனச்சொற்கள்: தலைப்புச்சொற்களுக்கும் சார்புசொற்களுக்கும் இன மொழிகளிலிருந்தும் ஏனை உலகமொழிகளிலிருந்தும் இனச்சொற்களும் இணைச்சொற் களும் காட்டப்படும். திருந்திய திரவிட மொழிகளிலிருந்தும் திருந்தாத் திரவிடமொழிகளி லிருந்தும் பொருத்தமான இனச்சொற்கள் காட்டப்படும். அவற்றின் திருத்தமான ஒலிப்பைச் சரியாகக் காட்டுவதற்காக ஆங்கில எழுத்துகளைப் பயன்படுத்தாமல் தமிழ் எழுத்துகளிலேயே தக்க மாற்றம் செய்து, திரவிட மொழிகளுக்கு ஒலிப்புக் குறியீட்டு எழுத்துகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழ் எழுத்துகளிலேயே உலகமொழிச் சொற் களில் ஒலிப்புகளை வடித்துக்காட்ட இம் முறை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| ka<br>க | kha<br>க | ga<br>க | gha<br>க | ஸ<br>சூ |
| ca<br>ச | cha<br>ச | ja<br>ச | jha<br>ச | ஷ<br>ழ |
| ṭa<br>ட | ṭha<br>ட | ḍa<br>ட | ḍha<br>ட | ஹ<br>க |
| ta<br>த | tha<br>த | da<br>த | dha<br>த | f<br>வு |
| pa<br>ப | pha<br>ப | ba<br>ப | bha<br>ப | z<br>ழ |

(எ-டு) தெ. இச்சுட (iccuṭa) = தருதல், ஈதல்.
க. காலு (hālu) = பால்

வடமொழி தவிர்ந்த வடஇந்திய மொழிகள் பல இந்தைரோப்பிய மொழியினத்தைச் சார்ந்தவையாகக் கருதப்படினும் அவற்றிலிருந்து காட்டப்படும் இனச் சொற்கள் ஐயமறத் தமிழ் வேரிலிருந்தே பிறந்தன என்பது தெளிவாக இருக்கும் இடங்களில் வடஇந்திய மொழிச்சொற்க்ள் ஆங்கில எழுத்துகளில் ஒலிபெயர்க்கப்படாமல் தமிழ் எழுத்துகளிலேயே ஒலிபெயர்க்கப்பட்டிருக்கும். தரப்படும் பொருள்விளக்கத்திற் கேற்பத் திரவிடமல்லாத ஏனை உலகமொழிச் சொற்களின் பலுக்கமும் ஏனை மொழிகளின் பெயர்க் குறுக்கங்களும் கூடத் தமிழிலேயே தரப்பட்டுள்ளன.

(13) நிறுத்த எண்: வேரும் வரலாறும் பகுதி பகர அடைப்புக்குறியிட்டுக் காட்டப் படும். சொல்லுக்குப் பொருள் தரும்போது முதலில் தமிழ்ப்பொருளும் இரண்டாவதாக ஆங்கிலப் பொருளும் தரப்படும். தலைப்புச்சொல்வேர்ப்பொருள் அல்லது ஏரணமுறைப்படி இயைந்த பொருள்களைக் குறிக்கும்போது ஒரே தலைப்பாகவும், தொடர்பற்ற வெவ்வேறு பொருள்களைக் குறிக்குங்கால் வெவ்வேறு தனித் தலைப்புச்சொற்களாகவும் காட்டப்படும். அப்பொழுது அச் சொற்களின் கோடியில் மேற்பாதியில் [1], [2], [3] என்று நிறுத்த எண்ணிட்டுக் காட்டப்படும். சான்றாக, **அஞ்சல்** என்னும் தலைப்புச்சொல் மூவேறுபட்ட பொருள்களைக் குறிக்குங்கால் **அஞ்சல்**[1], **அஞ்சல்**[2], **அஞ்சல்**[3] என்று மூன்று தலைப்புச்சொற்களாகக் காட்டப் படும்.

ஆங்கில ஒலிபெயர்ப்பில் தொழிற்பெயர் ஈற்றின் பலுக்கம் தராமல் ஏவல்வினை வடிவின் பலுக்கமே தரப்படும். சான்றாக, **அடி-த்தல்**; ***adi-***. என்று காட்டப்படும். வினைச் சொற்கள் செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை என்று காட்டப்படுவதுடன் அவற்றின் வினை புடைபெயர்ச்சி வகைகள் வரிசை எண்ணிட்டுக் காட்டப்படும். சான்றாக, 4 செ.கு.வி. (v.i), 7 செ.குன்றாவி. (v.t.) என்று காட்டப்படும். சில கூட்டுவினைச் சொற்றொடர்களும், மரபுவினைச் சொற்றொடர்களும் அவற்றின் ஈற்றுச்சொல் குன்றாவினையாக இருந்தாலும் கூட்டுச் செயப்படுபொருளில் செயப்படு பொருள் குன்றியவினையாகக் கருதப்படுவதுண்டு. அத்தகைய இடங்களில் அதனை (4) செ.குன்றாவி. என வரிசை எண்ணுக்குப் பிறைக்கோடிட்டால் அவ் வினைவகைமையின் எதிரான செ.கு.வி. வகைமையில் அதே வரிசை எண்ணுக்குரிய புடைபெயர்ச்சியை ஏற்கும்.

(14) தமிழில் புதுக்கப்படும் படைப்புச்சொற்களுக்கு † இக் குறியிட்டுக் காட்டுவ தோடு படைத்தவர் பெயரும் குறிப்பிடப்படும்.

(எ-டு) † **அகரமுதலி** — படைத். பாவாணர்.

(15) உலகமொழிகளும் அவற்றின் உட்கிளைமொழிகளும் மூவாயிரத்துக்குமே லுள்ளன எனக் கூறப்படினும் தனிநிலை மொழிகளாக அறியப்பட்டவை சற்றொப்ப 600 மொழிகளே. உலக மொழிக்குடும்பங்கள் ஒன்பதாகவும் எக் குடும்பத்திலும் சேராத தனிநிலை மொழிகள் பத்தாம் பிரிவாகவும் வகுக்கப்பட்டுள்ளன. திரவிட மொழிக்குடும்பம் முதலாவதாகவும் அதனொடு நேரே அடுத்தடுத்த உறவுமுறை கருதி ஏனைக் குடும்பமொழி களும் எண்ணுமுறை பெற்றுள்ளன. சற்றொப்ப 600 உலக மொழிகளின் பெயர்கள் குறுக்க விளக்கத்தில் தலைப்புக் கோடியில் நிறுத்த எண்ணுடன் குறிக்கப்பட்டுள்ளன. **ஒலாப்பு**[5] என்பது ஐந்தாம் மொழிக் குடும்பமாகிய ஆப்பிரிக்க மொழிக்குடும்பத்தைச் சார்ந்த மொழி களில் ஒலாப்பு (Wolof) மொழியும் ஒன்று என்னும் குறிப்பினது. எக் குடும்பத்தைச் சார்ந்தது என்று கண்டறியப்படாத தனிநிலை மொழிகளுள் திரவிடக் குடும்பத்தைச் சார்ந்ததாக அறியப்படுமாயின் அம் மொழியின் தலைப்புக் கோடியில் நிறுத்த எண்ணின்மேல் திரவிட மொழிக்குரிய எண் ஒன்று (10)[1] எனக் குறிக்கப்படும். இத்தகைய குறியீடு ஏனைக் குடும்ப மொழிகளுக்கும் ஒக்கும்.

(16) வடிவமீட்டமைத்த முந்துதமிழச் (முந்துதிரவிடம் — proto Dravidian) சொற் களுக்கு உடுக் குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

(எ-டு) ***அரசியம்**

# உலக மொழிக்குடும்பங்கள்

## 1. திரவிடக் குடும்பம்

தென்னிந்தியாவில் முழுமையாகவும், வடஇந்தியா, பாகித்தானம், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய இடங்களில் ஆங்காங்கும் வழங்கப்படுகிறது.

***பேசுவோர் தொகை:*** *சற்றொப்ப 15 கோடி.*

## 2. இந்தைரோப்பிய மொழிக்குடும்பம்

ஐரோப்பா, தென்மேற்கு ஆசியா, ஐரோப்பிய குடியேற்றங்களுக்குள்ளான ஆத்திரேலியா, நியூசிலாந்து, தாசுமேனியா, தென்னாப்பிரிக்கா, இந்தியா, தென்கிழக்கு ஆசியா, பசுபிக்குத் தீவுகள் ஆகிய இடங்களில் வழக்கூன்றியதும் உலக மொத்த மக்கள் தொகையில் சற்றொப்பச் சரிபாதி மக்க்ள்தொகையினரால் பேசப்படுவதும் ஆகிய பெரு மொழிக் குடும்பம்.

***பேசுவோர் தொகை:*** *187.5 கோடி*

## 3. சப்பானிய-கொரியன் குடும்பம்

சப்பான் நாட்டில் சப்பானிய மொழி வழங்கிவருகிறது. கொரியாவிலும், சீனம், சப்பான், உருசியாவின் சில பகுதிகளிலும் கொரிய மொழி வழங்கிவருகிறது. இம் மொழிகள் திரவிடச் சார்புடையவை என்பதற்கான ஆய்வுப்பணி அரும்பியுள்ளது.

***பேசுவோர் தொகை:*** *1. சப்பானியம் — 10 கோடி.*

*2. கொரியன் — வடகொரியாவிலும் தென்கொரியாவிலும் 5 கோடி.*

## 4. மலேயப் பாலினேசியன் அல்லது ஆத்திரேலிய ஆசியக் குடும்பம்

மலேயா, கிழக்கிந்தியத் தீவுகள், பிலிப்பைன்சு, மடகாசுகர், நியூசிலாந்து, சமோவா, அவாய், தாகித்தி தீவுகள், பசுபிக் தீவுகள் ஆகிய இடங்களில் வழங்கும் மொழிகள் இக் குடும்பத்தைச் சார்ந்தவை.

***பேசுவோர் தொகை:*** *17.5 கோடி.*

## 5. ஆப்பிரிக்க நீக்கிரோக் குடும்பம்

சகாராவின் தெற்கிலும் எதியோப்பியாவின் மேற்கிலும் உள்ள பகுதிகள், ஆப்பிரிக்கா ஆகிய இடங்களில் இக் குடும்பமொழிகள் வழங்கிவருகின்றன.

***பேசுவோர் தொகை:*** *21.1 கோடி.*

## 6. ஊரல் அல்தாயிக் குடும்பம்

பின்லாந்து, கரேலியா, எசுதோனியா, வடக்கு நார்வே, சுவீடன், அங்கேரி, கிழக்கு ஐரோப்பா, உருசியா, துருக்கி, சோவியத்து ஆசியா, மங்கோலியா, சீன துருக்கித்தானம், மஞ்சுகுவோ ஆகிய இடங்களில் இக் குடும்பமொழிகள் வழங்கிவருகின்றன.

***பேசுவோர் தொகை:*** *10 கோடி.*

## 7. அமெரிக்க இந்தியக் குடும்பம்

அமெரிக்கப் பழங்குடியினரின் மொழிகள் ஆயிரத்துக்கும் மேற்பட்டவை. அமெரிக்க ஒன்றிய நாடுகளிலும் கனடாவிலும் நூற்றுக்கு மேற்பட்ட மொழிகளும், மெக்சிகோ

நடுவண் அமெரிக்காவில் முந்நூற்றுக்கு மேற்பட்ட மொழிகளும், தென்அமெரிக்காவில் சற்றொப்ப ஆயிரம் மொழிகளும் பேசப்படுகின்றன. அவற்றுள் பெரும்பாலானவை சில ஆயிரம் பேரால் மட்டும் பேசப்படுபவை.

வட அமெரிக்காவில் உள்ள எசுகிமோக்கள், அலங்கோன்குவியன்கள், இரோக்கு வாய்கள், உத்தே அச்தெக்குகள், நடுவண் அமெரிக்காவில் உள்ள மாயர்கள், மிச்தெக்குகள், சப்போதெக்குகள், தென்அமெரிக்காவிலுள்ள அரவர்க்குகள், அரவ்கானியன்கள், காரிபுகள், சிப்சாக்கள், குவெக்சுவாக்கள், துப்பிகுவாரானிகள் ஆகியோரின் மொழிகள் குறிப்பிடத் தக்கன.

*பேசுவோர் தொகை :* 2 கோடி.

## 8. ஆப்பிரிக்க ஆசியன் அல்லது செமித்திய எமித்திக் குடும்பம்

அரேபியா, ஈராக்கு, பாலத்தீனம், சிரியா ஆகிய நாடுகளிலும், வடக்கு ஆப்பிரிக்காவிலுள்ள எகிப்து, லிபியா, அல்சீரியா, தூனிசியா, மொராக்கோ, எத்தியோப்பியா, எரித்திரியா, சோமாலிலாந்து, சான்சிபார், மடகாசுகர் ஆகிய பகுதிகளிலும் இக் குடும்ப மொழிகள் வழங்கிவருகின்றன.

*பேசுவோர் தொகை :* 17.5 கோடி.

## 9. சீனத் திபெத்தியக் குடும்பம்

சீனா, பர்மா, இந்தியா, நேப்பாளம் ஆகிய இடங்களில் இம் மொழி வழங்கிவருகிறது. உலக மொழிகளில் ஒரே இனத்தாரால் பெருவாரியாகப் பேசப்படும் மொழி இஃதொன்றே.

*பேசுவோர் தொகை :* 90 கோடி.

## 10. தனிநிலை மொழிகள்

வெள்ளையினத்தார்க்குரியதென்று கருதப்படும் வடக்குச் சப்பானில் பேசப்படும் ஐனு மொழி, வடகிழக்குச் சைபீரியாவில் பேசப்படும் ஐப்பர்போரியன்மொழி, உருசியநாட்டுக் காக்கேசியமொழிகள், தென்கிழக்கு ஆசியாவில் வழங்கும் மாண்குமேர், அன்னாமி, முண்டா மொழிகள், ஆத்திரேலியா மற்றும் நியூகினியாவில் வழங்கும் பழங்குடி மொழிகள், இசுபெயின் நாட்டின் வடகிழக்கிலும் பிரஞ்சு நாட்டின் தென்மேற்கிலும் வழங்கும் பாசுக்கு மொழி ஆகியவை தனிநிலை மொழிகளாகக் கருதப்பட்டன. இவற்றுள் பாசுக்கும் ஆத்திரேலியப் பழங்குடி மொழிகளும் திரவிடச் சார்பினவாக அறியப்பட்டுள்ளன.

# திரவிட மொழிகள்

| வரிசை எண் (1) | மொழி (2) | | பேசப்படும் மாநிலம் (3) | பேசுவோர் எண்ணிக்கை 1961-ல் (4) | 1971-ல் (5) |
|---|---|---|---|---|---|
| | தென்திரவிடம் (South Dravidian Group) | | | | |
| 1. | தமிழ் | Tamil | தமிழ்நாடு, கருநாடகம், கேரளம் | 30,465,442 | 37,690,106 |
| 2. | மலையாளம் | Malayalam | கேரளம், தமிழ்நாடு, கருநாடகம் | 16,994,919 | 21,938,760 |
| 3. | கன்னடம் | Kannada | கருநாடகம், தமிழ்நாடு, மராட்டியம் | 17,305,629 | 21,710,649 |
| 4. | தெலுங்கு | Telugu | ஆந்திரம், தமிழ்நாடு, கருநாடகம் | 37,642,439 | 44,756,923 |
| 5. | இருளம் | Irula/Irulinga | தமிழ்நாடு | 4,124 | 5,300 |
| 6. | எருகலர் | Yerukala / Yerkula | ஆந்திரம் | 73,975 | 67,552 |
| 7. | எரவம் | Yerava | கருநாடகம் | 14,927 | 10,867 |
| 8. | குடகு | Coorgi / Kudagu | கருநாடகம் | 79,172 | 72,085 |
| 9. | குரும்பர் | Kurumba / Kurumbar | கருநாடகம், தமிழ்நாடு, மராட்டியம் | 8,798 | 7,903 |
| 10. | குறவர் | Korava | கருநாடகம், ஆந்திரம் | 5,792 | ... |
| 11. | கைக்கடி | Kaikadi | மராட்டியம் | 8,456 | 11,846 |
| 12. | கொரகர் | Koraga | கருநாடகம் | 192 | ... |
| $ 13. | கொரச்சர் | Koracha | கருநாடகம் | 3,467 | ... |
| 14. | கோதம் | Kota | தமிழ்நாடு | 862 | ... |
| $ 15. | சதப்பு | Jatapu | ஆந்திரம் | 19,467 | ... |
| 16. | துடவம் | Toda | தமிழ்நாடு | 765 | ... |
| 17. | துளுவம் | Tulu | கருநாடகம், கேரளம் | 934,849 | 1,158,419 |
| 18. | படகம் | Badaga | தமிழ்நாடு | 85,463 | 104,919 |
| ★19. | பெலாரி | Belari | ... | ... | ... |
| $ 20. | வடாரி | Vadari | மராட்டியம், கருநாடகம், ஆந்திரம் | 20,654 | 35,900 |

| வரிசை எண் (1) | மொழி (2) | | பேசப்படும் மாநிலம் (3) | பேசுவோர் எண்ணிக்கை | |
|---|---|---|---|---|---|
| | | | | 1961-ல் (4) | 1971-ல் (5) |
| | **நடுவண் திரவிடம்** (Central Dravidian Group) | | | | |
| 21. | கோண்டி | Gondi | மத்தியப்பிரதேசம் மராட்டியம் ஒரிசா | 1,383,321 | 1,688,284 |
| $ 22. | கந்தம் | Khond / Kondh | ஒரிசா ஆந்திரம் | 168,027 | 196,316 |
| $ 23. | கிசன் | Kisan | ஒரிசா அசாம் | 50,378 | 73,847 |
| 24. | கூய் | Kui | ஒரிசா | 310,907 | 351,017 |
| 25. | குவி | Kuvi | | | |
| 26. | கொண்டா | Konda | ஒரிசா மத்தியப்பிரதேசம் | 12,298 | 33,720 |
| 27. | கொலாமி -நாய்கி | Kolami Naiki | மராட்டியம், மேற்கு வங்காளம் | 46,065 | 66,868 |
| $ 28. | கோயா | Koya | ஆந்திரம், ஒரிசா | 140,776 | 211,877 |
| $ 29. | துருவா | Dhurwa | மத்தியப்பிரதேசம் | 24,641 | 29,376 |
| $ 30. | தோர்லி | Dorli | மத்தியப்பிரதேசம் | 35,455 | 24,320 |
| $ 31. | மரியா | Maria | மராட்டியம் மத்தியப்பிரதேசம் அசாம் | 65,371 | 78,495 |
| 32. | பர்சி | Parji | ஒரிசா | 84,607 | 73,912 |
| $ 33. | பர்சி-கோண்டி | Parsi-Gondi | மத்தியப்பிரதேசம் | 14,990 | 15,463 |
| 34. | பெங்கோ | Pengo | ஒரிசா | 1,254 | ... |
| ★ 35. | மண்டா | Manda | ... | ... | ... |
| | **வட திரவிடம்** (North Dravidian Group) | | | | |
| 36. | குருக்கம் (ஒராவான்) | Kurukh (Oraon) | பீகார் மேற்கு வங்காளம் | 1,132,931 | 1,235,665 |
| $ 37. | தங்கரி | Dhangri | மத்தியப்பிரதேசம் மேற்கு வங்காளம் உத்திரப்பிரதேசம் | 4,377 | 5,492 |
| $ 38. | நகேசியம் | Nagesia | மேற்கு வங்காளம் | 1,484 | ... |
| 39. | மாலத்தம் | Malto (Rajmahal) | பீகார் | 88,645 | ... |
| 40. | பிராகுவி | Brahui | பாகித்தானம் | 48,589 (1901, குடி மதிப்பின்படி) | |

$ இக் குறி இடப்பட்டவை இந்தியக் குடிமதிப்பு (Census) அறிக்கையில் திரவிடமொழிகளாகக் குறிக்கப்பட்டவை. ஒரிருவர் முதல் சின்னூற்றுவர் வரைப்பட்ட மிகச் சிறுபான்மையர் பேசும் பல்வேறு திரவிடக் குக்கிளைகளடங்க இந்தியக் குடிமதிப்புக் கணக்கில் தரப்பட்டுள்ள 101 திரவிடக் கிளை மொழிகளும் இவண் கொள்ளப்பட்டில.

★ தி.சொ.பி. (D.E.D.) அகரமுதலியில் திரவிடமொழிகளாகக் குறிக்கப்பட்டவை.

க. அக்குடிசு; து. அக்கரு.

அஃகு cf. *acus*, needle, pin. **L.**, fr. **I.-E.** base *ak-*, 'sharp pointed', whence also *ācer*, 'sharp', see *acrid* and cp. the first element in *aciform.*

**E.** *acute*, **L.** *acūtus*, 'sharp', lit. 'sharpened', p.p. of *acuere*, 'to sharpen', which is rel. to *acus*, 'needle' (K.C.E.D.E.L.).

*[உல் → உல்லாடி = மெல்லிய ஆள் (யாழ். அக.). உல்லி = ஒல்லி (யாழ்.அக.). உல் → ஒல் → ஒல்கு. ஒல்குதல் = சுருங்குதல். ஒல்கு → அல்கு. அல்குதல் = சுருங்குதல். அல்கு → அலகு = கூர்மை. அல்கு → அஃகு.]*

லகர ளகர மெய்கள் சிலவிடத்து ஆய்தமாக மாறுகின்றன. ஒ.நோ: ஒல்கு (பின்வாங்கு) → ஒஃகு. இள் → இள → இளகு. இள் → எள் → எள்கு → எஃகு. வெள் (விரும்பு) → வெள்கு → வெஃகு. வெஃகுதல் = பிறர்பொருளை விரும்புதல்.

அஃகு[2] *akku*, பெ. (n.) ஊறுநீர் (திவா.); oozing water.

*[அஃகம் = ஊறல், நீருற்று (பிங்.). அஃகு → அஃகம். அஃகுதல் = நீருறுதல். 'அஃகு' ஊறு நீரைக் குறிப்பின் முதனிலைத் தொழிலாகு பெயராம். ஊற்றுச் சுருங்கியும் ஒடுங்கியும் ஒழுகுவதால் அஃகு எனப்பட்டது.]*

அஃகு[3] *akku*, பெ. (n.) தகுதி (சம்.அக.); fitness. இது அக்கு என்னும் உருதுச் சொல்லாகவும் இருக்கலாம்.

**U.** hagg = உரிமை; claim, right.

அஃகுல்லி *akkulli*, பெ. (n.) உக்காரி **யென்னும் சிற்றுண்டி** (பிங்.); a steamed meal-cake. ஒ.நோ : **Skt.** šaṣkulī.

**அஃகுவஃகெனல்** *akku-v-akkenal*, தொ.பெ. (vbl.n.) **ஆடு மேய்க்கும் இடையன், 'அஃ (கு)' என்னும் ஒலியைத் திரும்பத் திரும்ப ஒலித்தல்;** uttering the sound *ak(ku)* now and then as a shepherd, while grazing a flock of sheep or goats, to control their movements. ''அஃகுவஃகென்று திரியும் இடைமகனே'' (பெருந்தொ. 1423).

ஆடுமேய்க்கும் இடையன், வழிவிலகி அல்லது எல்லை கடந்து செல்லும் ஆடுகளை, அஃகுவஃகென்று அதட்டித் திருப்புவது வழக்கம்.

*['அஃ' என்பது, மந்தையைவிட்டுத் தனித்துச் செல்லும் ஆட்டை இடையன் அதட்டும் ஒலி. ஆய்தமும் வல்லின மெய்யும் தமிழிற் சொல்லீறாகாமையின், உகரம் பெற்று ஈறாகும். அந் நெறிப்படி, 'அஃ' என்பது, உயிரேறும் இனமெய்யாகிய ககரத்துடன் கூடி உகரம் பெற்று, 'அஃகு' என்றாயிற்று. 'அஃ' என்பது தனித்தும் இரட்டியும் நிகழும். 'அஃகுவஃகு' என்பது பன்மை குறித்த அடுக்குத்தொடர்.]*

அஃகுவஃகெனல் 'ஓயாது அலைதற் குறிப்பு; expr. of restless wandering' என்று சென்னை அகரமுதலி (பிற்சேர்ப்பு) பொருள் குறித்திருப்பது பொருத்தமாய்த் தோன்றவில்லை.

அஃகு அஃகு என்னும் அடுக்குத்தொடர் அஃகஃகு என்று புணர்வதே நெறியாயினும், அஃகு என்பது பொருளுணர்த்தாத ஒலிக் குறிப்புச் சொல்லேயாதலின், ஒருவகை விலக்காக உடம்படுமெய் இடையிட்டுப் புணர்ந்ததெனக் கொள்ளல்வேண்டும். '' உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும் '' (நன். 164) என நூற்பா யாத்த ஆசிரியரே, அந் நெறிக்கு விலக்காக, '' ஆறனொருமைக் கதுவும் ஆதுவும்'' (நன். 300) என்று புணர்த்துள்ளமை காண்க. இனி, அஃவஃகு என்றிருப்பினும், மெய்யீற் றுடம்படுமெய்யாயமையும்.

அஃகுள் *akkuḷ*, பெ. (n.) **அக்குள்** பார்க்க; see *akkuḷ*.

அஃகேனம் *akkēṉam*, பெ. (n.) **மெல்லிய ககரமும் சார்பெழுத்து மூன்றனுள் ஒன்றுமான ஆய்தவெழுத்து;** the letter '*ak*'(ஃ). ''அஃகேன மாய்தம்'' (யா. கா. 4, உரை).

*['அ' முற்சாரியை; 'ஃ' ஆய்தவெழுத்து; 'ஏனம்' பிற்சாரியை. 'க்' ஆய்தவெழுத்தை உயிரெழுத்தோடு இணைக்கும் மெய்.]*

மெய்யெழுத்துகளெல்லாம் உயிரெழுத்தின் உதவியின்றித் தமித்து ஒலியாதவையாதலின், உலகவழக்கில் இகரச்சாரியையை முன்னும் (எ-டு : இக்), செய்யுள் அல்லது இலக்கண வழக்கில் அகரச் சாரியையைப் பின்னும் (எ-டு : க் + அ – க), பெற்றே இயங்க அல்லது ஒலிக்க இயலும். ஆய்தம் உயிரேறா மெய்வகையான சார்பெழுத்தாதலின், அது தனித்தொலிக்கும்போது அதற்கு முன்னும் பின்னும் சாரியை வேண்டும்.

இங்ஙனம் இருதலைச் சாரியை பெறும் ஆய்தத்திற்கு, ஏனச்சாரியை தனிச்சிறப்பாக உரியதாகும்.

அஃகேனம் என்பது, கொச்சை வழக்கில் அஃகேனா என்றும் அஃகன்னா என்றும் சிதைந்து வழங்கும்.

அஃகேனம், ககரமெய்யின் நுணுக்கமாத லின் **ஆய்தம்** என்றும், பின்வரும் வல்லின மெய்யை மெலித்தலின் **நலிபு** என்றும், மூன்று புள்ளிகளாற் குறிக்கப்படுதலின் **முப்புள்ளி** யென்றும், உயிரும் மெய்யுமல்லாது தனித்து நிற்றலின் **தனிநிலை** யென்றும் பெயர்பெறும்.

அஃகேனம் ககரத்திற்கு இனமானதென் பது, அதன் ஒலியினாலும், அதை ஏனச் சாரியையோ டிணைக்கும் ககரமெய்யினா லும், நெடுங்கணக்கிலும் குறுங்கணக்கிலும் அது உயிருக்கும் மெய்க்கும் இடையிற் ககரத்தை யடுத்து அதற்குமுன் வைக்கப் படுவதனாலும், பண்டை நெடுங்கணக்கு ஓலைச்சுவடிகளில் க—ஃ என்று குறிக்கப் பட்டு வந்ததனாலும் அறியப்படும்.

தென்னிந்திய அல்லது திரவிட மொழிக் குடும்ப ஒப்பியல் இலக்கண நூலாசிரியரான **கால்டுவெலா**ரும் அதை 'The guttural' என்று குறித்திருப்பது கவனிக்கத்தக்கது. மிடற் றொலி யெழுத்தென்பது ககரமே.

''அஃகேன மாய்தந் தனிநிலை புள்ளி
ஒற்றிப் பால வைந்தும் இதற்கே''

என்று இருக்க வேண்டிய அவிநய நூற்பா வில் அஃகேனத்தை 'அக்கேன' மென்று யாப் பருங்கல (உறுப்பு. 2, பக். 28) விரிவுரை (விருத்தி)யில் தவறாக அச்சிட்டுள்ளதைப் பின்னர், **பிழையும் திருத்தமும்** என்னும் பகுதியின் முதற் பக்கத்தில் (i) பக்கவெண் வரியெண் குறிப்பிட்டு 'அஃகேனம்' எனத் திருத்தம் காட்டியுள்ளனர். இதனைப் பாரா மல் சென்னை அகரமுதலியில் 'அக்கேனம்' என்று குறித்துப் பக்கவெண்ணும் காட்டி யிருப்பது தவறு.

அஃகேனத்தைப் பின்பற்றியதே வட மொழி 'விசர்க்கம்' (visarga). அதன் ஒலி யொப்புமையையும், அதனையும் புள்ளி வடிவிலேயே ஒரு புள்ளி குறைத்து இரு புள்ளி வடிவாக எழுதுதலையும், வடமொழி வண்ண மாலையிலும் அதை உயிருக்கும் மெய்க்கும் இடையிற் ககரத்தை யடுத்து அதற்குமுன் வைத்திருத்தலையும் நோக்குக.

கால்டுவெலார் ஆழ்ந்தகன்ற நடுநிலை யாராய்ச்சியாளரேனும், தமிழரின் முன் னோர் மேலையாசியாவினின்று வந்தவர் என்னுங் கொள்கை கொண்டிருந்ததனா லும், அவர் காலத்தில் தொல்காப்பியமும் பதினெண்மேற்கணக்கும் சிலப்பதிகாரமும் தலைமைத் தமிழ்ப் புலவர்க்குந் தெரியாது மறைந்து கிடந்தமையாலும், அவர்க்கு வழி காட்டத்தக்க தமிழறிஞர் ஒருவரு மின்மை யாலும், தமிழ இனம் சிறிதும் விழிப்பின்றி எல்லா வகையிலும் ஆரிய அடிமைத்தனத்தில் மூழ்கிக் கிடந்தமையாலும், ஆரியத்திற்கு முற்பட்ட பண்டைத் தமிழிலக்கியம் முற்றும் அழியுண்டபின் இந்திய நாகரிக இலக்கியம் முழுதும் சமற்கிருதத்திலுண்மையாலும், வட மொழி வண்ணமாலை தமிழெழுத்துகளுட் பெரும்பாலானவற்றைத் தன்னுட் கொண்டு, மிக விரிவடைந்து, எழுத்துகளின் முறை, பிறப்பு, மாத்திரை முதலியவற்றிலும் உயிர் மெய்யமைப்பிலும் தமிழ் நெடுங்கணக்கை யும், வடமொழி யிலக்கணம் புணர்ச்சி, சொல் லமைப்பு, வேற்றுமை, தொகை முதலிய வற்றில் தமிழிலக்கணத்தையும் ஒத்திருப் பதனாலும், தமிழ் நெடுங்கணக்கும் எண் வேற்றுமை யமைப்பும் வடமொழியைத் தழுவின என்று தவறாக முடிபுகொள்ள நேர்ந்தது.

இலக்கண விலக்கியங்களில் மட்டுமன்றி மொழியமைப்பிலேயே தமிழ் முந்தியதும் மூலமானதுமாதலால், தமிழ் அஃகேனமே வடமொழி விசர்க்கமென்பதில் எட்டுணை யும் இழுக்கில்லையென அறிக.

இனி, இக்காலத்துப் புலவர் சிலர், தமிழின் தொன்மை முன்மை மென்மைத் தன்மை களைச் சற்றும் நோக்காது, புள்ளித் தொகை வேறுபாட்டாலும் இட வேறுபாட்டாலும் எழுத்து வேறுபாடுணர்த்தப்படும் சில அரபி யெழுத்துகளைக் கண்டு மயங்கி, அஃகேனத் தையும் அதுபற்றிய நூற்பாக்களையும் பிறழ வுணர்ந்து, தமிழ் எழுத்துகளால் எல்லா மொழி யொலிகளையுங் குறிக்கவியலு மென் றும், ஏனை மொழிகளின் சிறப்பெழுத்து களை யெல்லாம் குறித்தற்கே அஃகேனம் தோன்றிற்றென்றும் கூறி, ஃப—F என்றும் ஃச—Z என்றும் எழுதிக் காட்டுவர்.

தமிழ் உலக முதன்மொழியாதலால் அக் கால மக்கள் வாயில் தோன்றிய முப்பான் எளிய வொலிகளையே தமிழ் வண்ணமாலை கொண்டதென்றும், தமிழ் வரிவடிவுகள் தமிழ் ஒலிகளையே குறிக்க ஏற்பட்டவை யென்றும், பிற்கால மொழிகளின் வல்லொலி களையும் தமிழ் வரிவடிவுகள் குறிக்குமெனின், தமிழ் பிற்கால மொழிகட்கும் பிற்பட்ட தாகக் கருதப்படுமென்றும், எழுத்தென்பது உண்மையில் எழுத்தொலியே யென்றும், எழுதப்படுதலால் அஃது எழுத்தெனப்பட்ட தென்றும், ஆய்தத்தொடு பகரஞ் சேரின் ஆய்தமும் பகரமுமேயன்றி வேற்றொலி யொன்றும் தோன்றாதென்றும், வேண்டிய வாறெல்லாம் ஒலிகளை மாற்றும் மந்திர வாற்றல் ஆய்தத்திற்கில்லை யென்றும்,

''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''
(தொல். சொல். எச்ச. 5)

என்பதை யொட்டி,

''அயன்மொழிக் கிளவி அயலெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''

என்றே கொள்ளல் வேண்டுமென்றும்,

''அயன்மொழிக் கிளவி அயலெழுத்
தெல்லாம்
ஆய்தந் துணைக்கொண் டெழுதல்
வேண்டும்''

என்று தொல்காப்பியர் கூறாமையின், அவர் கூற்றிற்கு மாறானதைக் கொள்ளல் கூடா தென்றும், ஒவ்வொரு பெருமொழிக்குஞ் சில சிறப்பெழுத்துகளுண்டென்றும், எம்மொழிக் கும் ஏனைமொழிச் சிறப்பெழுத்துகளை யெல்லாங் குறிக்கும் வரிவடிவில்லையென்றும், ஏனைமொழிச் சிறப்பெழுத்துகளையெல்லாங் கொள்ளின் எம்மொழியும் தன் இயல்பிழந்து வேறொரு மொழியாய் மாறிவிடுமென்றும், உலக முதன் மென்மொழியாகிய தமிழிற் கி.பி. இருபதாம் நூற்றாண்டுத் திரிமொழி களின் வல்லொலி யெழுத்துகளைப் புகுத்து தல் மென்பட்டொடு வன்கம்பளியை இணைத்தல் போல்வதென்றும் அறிந்து, அயன்மொழிச் சிறப்பெழுத்தைக் கலவாது, தமிழை என்றும் தமிழாகவே போற்றிக் காத்தல் வேண்டும்.

**அஃதான்று** *akdāṉṟu*, கு.வி.எ. (adv.) *அதுவன்றி*; besides. ''அனைத்தனைத் தவ்வயின் அடைத் தோன் அஃதான்று, முன்னோன் காண்க'' (திருவாச. 3 : 28).

[அ:து + அன்று – அ:தன்று → அ:தான்று.]

அதுவுமல்லாது 'besides' என்று பொருள் படும் 'அஃதன்று' என்னுந் தொடர், செய் யுளில் 'அஃதான்று' என நீளும்.

இந் நீட்டம் பொருட்டெளிவும் இன் னிசையும் நோக்கியதாகும். அன்று என்னும் சொல் முற்று, எச்சம் ஆகிய இரண்டிற்கும் பொதுவாம். அஃதன்று என இருப்பின், அன்று என்பது முற்றெனத் தோன்றி முன் வந்த கூற்றை மறுக்கவுஞ் செய்யும். ஆத லால், அதன் எச்சத் தன்மையை யுணர்த்த நீட்டம் வேண்டியதாகும். அதனால் இசை யினிமையும் மிகுகின்றது.

இம் முறையை யொட்டியே, 'அதன்று' என்னும் தொடரும் செய்யுளில் 'அதான்று' என நீளவும் 'அதாஅன்று' என அளபெடுக்க வும் செய்யும்.

அது என்னுஞ் சொல்லே அஃது என்று திரிந்திருப்பதனால், அது + அன்று – அதன்று → அதான்று → அஃதான்று எனினும், அஃது + அன்று – அஃதன்று → அஃதான்று எனினும் இரண்டும் ஒன்றே.

**அஃது** *akdu*, சு.பெ. (demons. pron.) *அது*; that, it. ''மறத்திற்கும் அஃதே துணை'' (குறள், 76).

[அ (சேய்மைச் சுட்டெழுத்து) → அல் → அது → அத்து → அ:து. ஒ.நோ: பல் → பது → பத்து → ப:து.]

அஃது என்னும் ஆய்தம் இடையிட்ட வடிவு இலக்கிய வழக்கிற்கே யுரியது; அதிலும் பெரும்பாலும் எழுவாயாகவே வழங்கும். அதனையடுத்து வருவது உயிர்முதற் சொல்லா யிருத்தல் வேண்டும்.

எ-டு: அஃதாவது, அஃதில்லை, அஃதொட் டம்.

அல், அத்து[4] பார்க்க; see *al, attu*[4].

**அஃதே**[1] *akdē*, சு.பெ. (demons. pron.) *அதுவே*; that very thing, the same as that, the self-same thing, only that.

[அ:து+ஏ (தேற்றம், வரையறை, தனிநிலை ஆகிய பொருளுணர்த்தும் இடைச்சொல்.)]

**அஃதே**[2] *akdē*, சு.பெ. (demons. pron.) *அதுவா?* Is it that?

*[அ:து + ஏ (வினாவிடைச்சொல்.)]*

**அஃதே**[3] *akdē*, இடை. (ind.) ***நீ சொல்வது சரிதான், அது உண்மையே, அப்படியே ஆகட்டும், ஆம்;*** Indeed, it is so, yes.

ம. அதே; க. அல்து; தெ. அல்னு.

*[அ:து + ஏ (உடன்பாட்டுப்பொருள் அல்லது ஒத்துக்கொள்வுப் பொருள்படும் இடைச் சொல்.)]*

அஃதே எனினும் அதே எனினும் ஒக்கும். முன்னது இலக்கிய வழக்கு; பின்னது உலக வழக்கு. ஆம் என்று பொருள்படும் அதே என்னும் உடன்பாட்டுப்பொருளிடைச் சொல், இற்றைச் சோழ பாண்டி யெல்லை களில் வழங்காவிடினும், பழஞ் சேரநாடாகிய மலையாள நாட்டில் வழங்கிவருகின்றது.

'அஃதே, அவர் (தொல்காப்பியர்) சார் பெழுத்தென மூன்றே கொண்டாராலோ வெனின்; அஃதே, நன்று சொன்னாய்! ஒழிந்தவை எப்பாற்படு மென்றார்க்கு மூன்றாவதோர் பகுதி சொல்லலாவ தின்மை யானும், முதலெழுத்தாந் தன்மை அவற்றிற் கின்மையானும், சார்பிற் றோன்றுதலானும், இப் பத்தும் சார்பாகவே கொள்ளவேண்டு மென்பது. அஃதே அமைக' (நன். 59, மயிலை. உரை).

இதில் வந்துள்ள 'அஃதே' மூன்றனுள், முதலிரண்டும் 'அஃதொக்கும்', 'நீ கூறியது அமையும்' என்றும், இறுதியது 'அப்படியே ஆகுக' என்றும் பொருள்படும் குறிப்பிடைச் சொற்களாகும்.

**அஃதே**[4] *akdē*, இடை. (ind.) ***அப்படியா?*** Indeed? Really? Is it so? ''அஃதே யடிகளு முளரோ'' (சீவக. 1884).

*[அ:து = அப்படி. 'ஏ' வினாவிடைச் சொல்.]*

'அஃதே' என்பது அதுவா என்று பொருள் படின் வினாவேற்ற சுட்டுப் பெயராம்.

**அஃதை** *akdai*, பெ. (n.) ***சோழனொருவன் மகள் பெயர்;*** name of a daughter of a *Cōḷa* king. ''அங்கலுழ் மாமை யஃதை தந்தை'' (அகநா. **96 : 12**).

அகுதை என்று பாட வேறுபாடுமுண்டு. அச் சொல்லையே புலவர் அஃதை என்று திரித்திருக்கவுங்கூடும். **அகுதை**[1] பார்க்க; see ***agudai***[1].

**'அஃதை என்பது அஃதி, அகுதி எனவுந் திரிந்து திக்கற்றவன், திக்கற்றவள், திக்கற்றது என உயர்திணை யாணொருமை பெண்ணொருமை அஃறிணை யொருமை யிலும் விரவிநிற்பதோர் பொதுச்சொல்' என்று, இராமானுசக் கவிராயர் ''ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்'' என்னும் நன்னூல் நூற்பாவிற்கு (421) வரைந்த உரையுள் உரைத்தமைக்கு, ''ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி'' என்னும் தொல்காப்பிய நூற்பா (எச்ச. 65) உரையில், '' 'அஃதை தந்தை...சோழர்' என்புழிச் சோழ ரெல்லாரும் அஃதைக்குத் தந்தையாம் முறை யராய் நிற்றலின், 'தந்தை' என்னும் ஒருமை சோழர் என்னும் பன்மையோடு தனித்தனி சென்று கூடுதலின் வழுவிற்றேனும், ஈற்றுப் பன்மைபற்றி வழுவமைத்தார்'' என்று நச்சி னார்க்கினியர் கூறியது ஏதுவாயிருக்கலாம். எங்ஙனமிருப்பினும், அஃதை அல்லது அகுதை யென்னுஞ் சொல்லிற்குத் திக்கற்ற - வன்-வள்-து என்னும் பொருளில்லை. கவிராயர் அச் சொல்லை அகதி யென்னும் வடசொல் லோடு தொடர்புபடுத்திக்கொண்டதாகத் தெரிகின்றது. அதனால், **தமிழ்ச்சொல் லகராதி** கவிராயர் கூற்றையே மேற்கோ ளாகக் காட்டி, அஃதி, அஃதை என்னும் இரு சொல்லும் 'அகதி' என்பதன் மரூஉ என்று வெளிப்படையாகவுங் கூற நேர்ந்துள்ளது.

'அகதி' என்பது கதியற்ற ஒருவனையும் ஒருத்தியையும் ஒன்றையும் குறிக்கும் வட சொல். கடைக்கழகக் காலத் தமிழ்மக்கள் பெயர்கள், பெரும்பாலும் தனித்தமிழ்ச் சொற்களாகவே யிருந்தன. வளவன் என்று குடிப்பெயர் பெற்ற சோழனொருவன் மகள், ஊழ்வலியாற் புகலிலியாக நேர்ந்ததென்று கொள்ளினும், களைகணிலிகட் கெல்லாம் பொதுவான அகதி என்னும் வடசொல் தமிழ வேந்த னொருவன் மகளுக்கு இயற்பெயரா யிருந்த தென்பது உத்திக்கும் இயற்கைக்கும் ஒரு சிறிதும் பொருந்தாது. இனி, ஒலியொப் புமை நோக்கினும், மூவெழுத்துள் ஒன்றே ஒத்துள்ளது. ஆதலால், அவ்விரு சொல்லை யும் இணைப்பது பல்வே றறியாமையின் விளைவேயாம்.

**அஃறிணை** *akṟiṇai*, பெ. (n.) ***உயிருள்ளன வும் உயிரில்லனவு மாகிய பகுத்தறிவில்லாத் தாழ்வகுப்புப் பொருள் தொகுதி;*** inferior class of beings and irrational things both animate and inanimate.

"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனார் அவரல பிறவே"
(தொல். சொல். கிளவி. 1).

"மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயி ருள்ளவும் இல்லவும் அஃறிணை"
(நன். 261).

*[அல் = உயர்திணை யல்லாது தாழ்ந்த. திணை = வகுப்பு. அல் + திணை – அ:றிணை. நிலைச்சொல் லகர மெய்யீறு வருஞ்சொல் தகரமுதலொடு புணர்ந்து ஆய்தமாகத் திரிந்தது.]*

"குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே"

என்பது நன்னூல் நூற்பா (228). இஃது, அல்வழியில் தனிக்குறிலை யடுத்த லகரமெய் தகரத்தொடு புணரின் றகரமாகத் திரிவதும், அஃதல்லாது ஆய்தமாகத் திரிவதும், அவ் விரண்டுமாக உறழ்வதும், ஆக முந்நிலை யடையும் என்று கூறுகின்றது. இது தொன்று தொட்டு வரும் இலக்கிய வழக்கைத் தழுவியதே யன்றிப் புதிய நெறியீடன்று.

எ-டு :
நல் + திணை – நற்றிணை – றகரத் திரிபு
அல் + திணை – அஃறிணை }
பல் + துளி – பஃறுளி } ஆய்தத் திரிபு
சில் + தாழிசை – சிஃறாழிசை }
கல் + தீது = கற்றீது, கஃறீது – உறழ்ச்சி

தமிழிலக்கண முதனூலாசிரியன், பேருலகி லுள்ள எல்லாப் பொருள்களையும் பகுத்தறி வடிப்படையில் உயர்திணை (உயர்வகுப்பு), அஃறிணை (தாழ்வகுப்பு) என இரு பெரு வகுப்பாக வகுத்து, கடவுளும் மாந்தரும் இன்ப வுலகடையும் மாந்தரான தேவரும் துன்பவுலகடையும் மாந்தரான நரகரும் ஆன, பகுத்தறிவுள்ள உயிர்களெல்லாம் உயர் திணையென்றும், அவ் வறிவில்லா உயிருள் ளனவும் இல்லனவுமான பொருள்களெல்லாம் அஃறிணையென்றும் வேறுபடுத்தி, அவ் வேறுபாட்டைப் பேச்சுவழக்கிலும் நிலை நிறுத்திவிட்டான். **உயர்திணை** பார்க்க; see *uyartiṇai*.

**அஃறிணைச்சொல்** *akṟiṇai-c-col*, பெ. (n.) ***அஃறிணைபற்றிய அல்லது குறித்த சொல்;*** word or term relating to the class of irrational things.

எ-டு : மாடு, மரம், கல், நிலம், வந்தது, உள்ளது.

**அக்கக்காய்** *akkakkāy*, கு.வி.எ. (adv.) **துண்டு துண்டாக** (உ.வ.); asunder (com.u.). **அக்கு**[6] பார்க்க; see *akku*[6].

து. அக்கக்க

*[அகு → அக்கு = துண்டு. 'அக்கக்கு' அடுக்குத் தொடர். 'ஆய்' கு.வி.எ. ஈறு.]*

**அக்கச்சி** *akkacci*, பெ. (n.) 1. ***மூத்த உடன் பிறந்தாள்;*** elder sister. 2. ***அக்கை முறை யினள்;*** elder cousin-sister related either by blood or marriage. 3. ***மதிப்புரவுபற்றி அக்கச்சி என்று விளிக்கப்படும் மூத்த பெண்;*** any senior girl or woman addressed *akkacci*, out of courtesy. **அக்கை** பார்க்க; see *akkai*. 'அக்கச்சி யுடமை அரிசி, தங்கச்சி யுடமை தவிடா ?' (பழ.).

*[அக்கை + அச்சி (தாய்) – அக்கைச்சி → அக்கச்சி. அக்கை தாய் போன்றவளாதலால் அச்சியெனப்பட்டாள்.]*

**அக்கசாலை** *akka-šālai*, பெ. (n.) 1. ***பொன், வெள்ளி முதலிய கனியவேலை செய்யுமிடம்*** (சிலப். 16 : 126, அடியார்க். உரை); metal works. 2. ***தங்கசாலை*** (வின்.); mint.

*[அலங்குதல் = ஒளிசெய்தல் (பிங்.). அலங்கு → அலக்கு → அலக்கம் = ஒளி. ஒ.நோ: இலங்கு → இலக்கு → இலக்கம் = ஒளி. அலக்கம் → அக்கம் = ஒளியுள்ள பொன், பொன் போன்ற பிற கனியம். ஒ.நோ: அரத்தம் = சிவப்பு. அரத்தம் → அத்தம் = சிவப்பு.]*

பண்டைத் தமிழகமான குமரி நாட்டில் முதன்முதற் பொன்னே கிடைத்தமையால், பொன்னின் பெயரே பின்னர்க் கனியப் பொதுப்பெய ராயிற்று. எ-டு : வெண் பொன் = வெள்ளி, செம்பொன் = செம்பு, கரும்பொன் = இரும்பு.

"தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று" என்னும் குறளடியில் (931) பொன் என்னும் பெயர் அடையடுக்காதே இரும்பைக் குறித்தல் காண்க.

அக்கசாலை என்னும் கூட்டுச்சொல் வட மொழியில் இல்லை. அக்கம் என்னும் சொல்லிற்கு 'அர்க்க' (arka) என்னும் வட சொல்லை மூலமாகக் காட்டியுள்ளது, **சென்னை அகரமுதலி**.

'அர்க்க' என்னும் வடசொல்லிற்கு ஒளிக் கதிர், ஒளிவீச்சு, கதிரவன், பன்னிரண்டு,

செம்பு, மதச்சடங்கு, புகழ்ச்சி, பாட்டு, பாடகன், அண்ணன், உணவு என்னும் பொருள்களைக் கூறி, அச் சொல் ஒளிர் தலையும் போற்றுதலையும் குறிக்கும் 'அர்ச்' (arc) என்னும் மூலத்தினின்று தோன்றியதாகக் குறித்துள்ளது, **மானியர் வில்லியம்சு சமற்கிருத - ஆங்கில அகரமுதலி.**

'அர்க்க' என்னும் வடசொற்குச் செம்பு என்னும் பொருளிருக்குமாயின் அச் சொல் 'அரக்கம்' என்னும் தென்சொல்லினின்றே திரிந்திருத்தல்வேண்டும்.

அரக்கு = சிவப்பு, செம்மெழுகு, செவ் வைப்புநஞ்சு. அரக்காம்பல் = செவ்வாம்பல் அரக்கு → அரக்கம் = சிவப்பு, அரத்தம், அவலரக்கு.

அரக்கம் > **Skt.** arka = செம்பு.

நெருப்பிற்கு அல்லது அதன் குணமாகிய ஒளிக்கு வெண்மை, செம்மை, பொன்மை என்னும் முந்நிறமிருப்பதால், நெருப்பைக் குறிக்க, **உல்** என்னும் வேர், அல் → அர் என்றும், இல் → இர் என்றும், எல் → எர் என்றும் திரிந்து வெவ்வேறு சொற்களைப் பிறப்பிக்கும்.

இது **உல்** என்னும் உருப்படியில் விளக்கப் படும்.

கனியங்களெல்லாவற்றுள்ளும் ஒளிமிக்கது பொன் என்பது கண்கூடு. பொன் என்னும் பெயரும், ''சுடச்சுடரும் பொன்போல்'' என்னும் குறட் சொற்றொடரும் (267) அதனை நினைவுறுத்தும்.

**அக்கசாலையர்** *akka-šālaiyar*, பெ. (n.) *தட்டார்* (பிங்.); goldsmiths, jewellers.

**க.** அக்கசால, அக்கசாலிக; **தெ.** அக்கசால, அகசாலி; **து.** அக்கசாலெ; **மரா.** அகஸ்ளீ.

**அக்கட**[1] *akkaḍa*, இடை. (int.) **ஒரு வியப்புக் குறிப்பு**; an exclamation of wonder. ''அக்கட விராவணற் கமைந்த வாற்றலே'' (கம்பரா. யுத்த. இராவணன் மந்திரப். 32).

**ம.** அக்கடா (விளி. இ.); **க.** அக்கட, அக்கடக் கட (அ.தொ.). அக்கச – வியப்பு, துயரம், வெறுப்பு, அழுக்காறு முதலியன உணர்த்தும் இடைச்சொல்; **தெ.** அக்கட, அக்கடக்கட (அ.தொ.), அக்கசமு (வியப்பிடைச்சொல்).

[அக்கை = தாய். அக்கை → அக்க (விளி). **'அட'** ஒரு பொது விளிச்சொல் அல்லது வியப்பு, துயரம் முதலியன உணர்த்தும் இடைச்சொல். அக்க + அட – அக்கட.]

சிறுபிள்ளைகள், பெரியதொன்றைக் கண்டு வியக்கும்போதும், அழகியதொன்றைக் கண்டு மகிழும்போதும், தீயதொன்றை அல்லது காணாததொன்றைக் கண்டு அஞ்சும் போதும், நோய்நிலையில் அல்லது துன்ப நிலையில் வருந்தும்போதும், தாயை அல்லது தந்தையை ஒருமுறையும் பன்முறையும் விளிப்பதும், நோவுறும்போது அவ் விளிப் பெயரைப் பன்முறை சொல்லிப் புலம்புவதும் இயல்பே. முதற்காலத்திற் சிறுபிள்ளை களாற் சொல்லப்பட்ட அவ் விளிப்பெயர்கள் பின்னர் வளர்ச்சிநிலையிலும் வழங்கியத னால் நாளடைவிற் பல்வேறு குறிப்பிடைச் சொற்களாக மொழிவழக்கில் நிலைத்து விட்டன.

ஐயன், அக்கை, அத்தன், அப்பன், அம்மை, அன்னை முதலிய தாய் தந்தை முறைப் பெயர்களின்கீழ், அவ்வப் பெயரினின்று திரிந்துள்ள குறிப்பிடைச் சொற்களைக் காண்க.

அக்கட என்னுஞ் சொல் வேறு உணர்ச்சி களையும் உணர்த்தக்கூடிய குறிப்பிடைச் சொல்லே.

**அக்கட**[2] *a-k-kaḍa*, கு.வி.எ. (adv.) **அவ்விடம், அங்கு, அப் பக்கம்**; there, thither, that side. ''அக்கட போவெனும்'' (தனிப்பா. தி. 2, பக். 3).

[அ = அந்த. கடை = பக்கம். அக்கடை → தெ. அக்கட.]

அக்கடை பார்க்க; see *a-k-kaḍai*.

இது தமிழ்த்திரிபான கொடுந்தமிழ்ச் சொல்லேயன்றி, தெலுங்கினின்று வந்த திசைச்சொல் லன்று.

**அக்கடாவெனல்** *akkaḍā-v-enal*, பெ. (n.) **நெடு வழி வந்த அல்லது வருந்தி யுழைத்த இளைப் புக் களைப்புத் தீர, நிழலில் ஓய்ந்திருத்தற் குறிப்பு**; expr. of repose in a shady spot, after a long tedious journey or arduous labour.

**தெ.** அக்கடா

[அக்கை = தாய். அக்கை → அக்க (விளி). 'அடா' ஒரு விளியிடைச்சொல். அக்க + அடா – அக்கடா.]

நெடுவழிப்போக்கரும் கடுவுழைப்பாளரும் இடையிலும் கடையிலும் இளைப்பாறும் போது, 'அக்கடா' என்று சொல்லி அமர்வது வழக்கம்.

இனி, குடும்பத் தொல்லையால் நெடுநாள் இடர்ப்பட்ட நிலைமையினின்று நீங்கி அமைதியுறுவதும், அக்கடாவென்றிருத்தல் எனப்படும்.

'இதுவரை எத்தனையோ ஆண்டு உங்க ளாலே படாத பாடெல்லாம் பட்டேன். இனி, உங்களைவிட்டுப் பிரிந்து அக்கடா வென் றிருக்கப்போகிறேன்' என்பது ஓர் உலகவழக்குத் தாய் கூற்று.

அக்கடா என்பது, ஓர் ஒய்வுக்குறிப்பு விளிப்பெயரேயன்றி ஒலிக்குறிப்பன்று.

அக்கட என்னும் வியப்புக்குறிப்புச் சொல் லிற்கு உரைத்த விளக்கத்தை, ஏற்குமளவு இதற்குங் கொள்க.

**அக்கடி** *akkaḍi*, பெ. (n.) 1. *மரக்கலம் கடுங் காற்றால் கயிற்றடியுண்டு அங்குமிங்கும் அலைதல்;* difficulty or trouble experienced in a voyage by a ship which is being tossed about in a storm and battered by its ropes. 2. *ஏதம், துன்பம்;* peril, distress (R.). எனக்கு அக்கடியா யிருக்கிறது (உ.வ.).

**ம.** அக்கடி, அக்கிடி, அக்கிளிப்பு;
**க.** அக்கடிதக்கடி.

[அக்கம் = கயிறு. அடி = அடிப்பு. அக்க + அடி – அக்கடி.]

**அக்கடை**[1] *a-k-kaḍai*, பெ. (n.) அப் பக்கம்; that side.

[அ + கடை – அக்கடை.]

**அக்கடை**[2] *a-k-kaḍai*, கு.வி.எ. (adv.) அங்கே; there.

**தெ.** அக்கட

[அ + கடை – அக்கடை.]

**அக்கணம்** *akkaṇam*, பெ. (n.) *வெண்காரம்;* borax (W.).

**அக்கணா** *akkaṇā*, பெ. (n.) *தான்றி;* belleric myrobalan, *Terminalia belerica.*

**மறுவ.** அக்கத்தான், அக்கந்தம், அக்கம், அக்காடுதி, அக்காத்தான், அக்காந்தி.

**அக்கத்தான்** *akkattāṉ*, பெ. (n.) *அக்கணா* பார்க்க; see *akkaṇā.*

**அக்கதேவி** *akkadēvi*, பெ. (n.) *சோனைப்புல்* (மலை.); species of grass.

**அக்கந்தம்** *akkandam*, பெ. (n.) *அக்கணா* பார்க்க; see *akkaṇā.*

**அக்கந்து** *akkandu*, பெ. (n.) *போரடிக்குங் களத்திற் பொலி தூற்றுகையில், மணிக்குவிய லுக்கு அப்பாற்போய் விழுந்துகிடக்கும் பதர்த் திரள்* (யாழ்ப்.); the chaff which separates in the process of threshing and forms a sort of ridge all around the threshing floor (J.).

**அக்கப்பறை** *akka-p-paṟai*, பெ. (n.) *அலைகை* (சம்.அக.); wandering about.

[**ஒருகா.** கடுங்காற்றிலகப்பட்ட மரக்கலக் கயிறும் பாயும் அலசடிப்படுவதுபோல், துன் புற்று அங்குமிங்கும் அலைகை. அக்கம் = கயிறு. பற → பறை = பறத்தல், காற்றிற் பறத்தல்.]

**அக்கப்பாடு** *akka-p-pāḍu*, பெ. (n.) 1. *மரக் கலச் சேதம்;* disaster at sea, shipwreck (வின்.). 2. *கப்பற் சரக்கிழப்பு;* loss of cargo (W.).

[2. **ஒருகா.** அக்கம் = கூலச்சரக்கு; பாடு = கெடுகை.]

**அக்கப்போர்** *akka-p-pōr*, பெ. (n.) 1. *கலகம்* (கொ.வ.); affray, scuffle (colloq.). 2. *தொந் தரவு, தொல்லை* (கொ.வ.); worry, trouble (colloq.).

**ம.** அக்கப்போரு

[**ஒருகா.** அக்கு = துண்டு, சிறியது. அக்கு + போர் – அக்குப்போர் = சிறுபோர், கலகம், தொந்தரவு. அக்குப்போர் → அக்கப்போர். இனி, அக்கு → அக்கம் + போர் – அக்கப்போர் என்றுமாம். அக்கக்காய் (துண்டுதுண்டாக), அக்குணிப் பிள்ளை (சிறுபிள்ளை) என்னும் வழக்குகளை நோக்குக.]

**அக்கம்**[1] *akkam*, பெ. (n.) *தவசம்;* cereal. அஃகம்[1] பார்க்க; see *aḵkam*[1]. 'அக்கவிலை யறியாதவன் துக்க மறியான்' (பழ.).

**க., து.** அக்கி.

[அ:கம் → அக்கம்.]

அக்கம் என்பது அகம் என்றும் தொகும்.

**அக்கம்**[2] *akkam*, பெ. (n.) *வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, குரால்* (கபிலம் - brown) *என்னும் நிறங்களால் ஐவகைப்பட்டதும், ஒன்று முதல் பதினாறுவரை முண்முனை களைக் கொண்டதும், ஒருவகைச் சிறப்பான*

*மருத்துவ ஆற்றல் கொண்டதாகக் கருதப் படுவதும், குமரிநாட்டுக் காலந்தொட்டுச் சிவ நெறித் தமிழரால் அணியப்பட்டுவருவதும், பனிமலையடிவார நேபாள நாட்டில் இயற்கை யாக விளைவதும், அக்கமணி என்று பெயர் வழங்கியதும், ஆரியர் தென்னாடு வந்தபின் உருத்திராக்கம் (ருத்ராக்ஷ) எனப் பெயர் மாறி யதுமான காய்மணி;* Rudrākṣa bead, a Nepalese product, of five different colours, having one to sixteen pointed projections over the surface, considered to possess some rare medical properties, and customarily worn by the Tamilian Saivites from Lemurian or pre-historic times. ''தலையெலும் பப்புக் கொக்கிற கக்கம்'' (திருப்பு. 475). அக்கு[1] பார்க்க; see *akku*[1].

[அள் = கூர்மை (திவா.). அள் → அள்கு → அஃகு. ஒ.நோ: வெள் → வெள்கு → வெஃகு = விரும்பு, மிக விரும்பு, பிறர் பொருளை விரும்பு. அஃகு → அக்கு = கூர்மை, முனை, முண் முனை, முண்முனையுள்ள அக்கமணி. ''உருப்பு லக்கை யணிந்தவர்'' (திருவானைக். கோச் செங். 4). அக்கு → அக்கம் = பெரிய அக்க மணி, 'அம்' பெருமைப்பொருட் பின்னொட்டு. ஒ.நோ: விளக்கு → (கலங்கரை) விளக்கம்.]

கடவுண்மணி, சிவமணி, தெய்வமணி, நாயகமணி, கண்மணி, கண்டம், கண்டி, கண்டிகை, முண்மணி என்பன அக்கமணி யின் மறுபெயர்கள். இவற்றுள் முதல் நான் கொழிந்த ஏனைய வெல்லாம், அக்கு அல்லது அக்கம் என்னும் பெயரைப் போன்று, கூர் முனைகளைக் கொண்டதென்றே பொருள் படுவன. முண்மணி என்பது வெளிப்படை.

கடவுளையே ஒருசார் தமிழர் சிவன் என்னும் பெயரால் வழிபடுவதால், 'கடவுண் மணி' முதலிய நாற்பெயரும் ஒருபொருட் சொற்களே.

கடவுள்மணி, முள்மணி என்பன கட வுண்மணி, முண்மணி என்று புணர்ந்தது போன்றே, கள்மணி என்பதும் கண்மணி யென்று புணரும். குள் → கள் = முள். கள் → கள்ளி = முள்ளுள்ள செடி. ஒ.நோ: முள் → முள்ளி, (நீர்)முள்ளி. குள் → குளவி = கொட் டும் முள்ளுள்ளது. குள்ளுதல் = கிள்ளுதல் (நெல்லை). குள் → கிள் → கிள்ளி → கிளி = கூரிய மூக்கினாற் கிள்ளுவது.

கள் → கண்டு = கண்டங்கத்தரி (முட் கத்தரி). கண்டு → கண்டம் = கள்ளி, கண்டங் கத்தரி, எழுத்தாணி. கண்டு → கண்டல் = முள்ளி, நீர்முள்ளி, தாழை. கண்டு → கண் டகம் = முள், நீர்முள்ளி, வாள். கண்டல் → கண்டலம் = முள்ளி. கண்டகம் → கண்டகி = முள்ளுள்ள தாழை, இலந்தை, மூங்கில், முதுகெலும்பு. கண்டு → கண்டி = முனைக ளுள்ள உருத்திராக்கம். கண்டி → கண்டிகை = உருத்திராக்கமாலை.

ஆரியப் பூசாரியர், இருபெருந் தூய தமிழ மதங்களாகிய சிவனியத்தையும் (சைவத்தை யும்) மாலியத்தையும் (வைணவத்தையும்) ஆரியப்படுத்தும் வகையில், தமிழரின் முத் தொழிற் கடவுளை மூவேறு ஒருதொழில் திருமேனிகளாகப் பகுத்து, முத்திருமேனிக் (திரிமூர்த்தி) கொள்கையைப் புதிதாக வகுத்து, படைப்பிற்கு வேதத்திற் சொல்லப் படாத பிரமா (Brahma) என்னும் ஒரு தெய் வத்தைப் படைத்து, காப்பிற்கு விஷ்ணு என்னும் வேதக் கதிரவத் தெய்வத்தை விண்டு என்னும் திருமாலொடும், அழிப்பிற்கு உருத்திரன் (ருத்ர - Rudra) என்னும் வேதக் காற்றுத் தெய்வத்தைச் சிவனொடும் இணைத்து, கண்மணி என்னுங் கூட்டுச் சொல்லைக் கண் + மணி என்று தவறாகப் பிரித்து, அக்கம் என்னும் தென்சொல்லை அக்ஷ என்று திரித்து அதற்குக் கண் என்று வடமொழிவழிப் பொருளூட்டி, சிவமணி என்பதை யொப்ப ருத்ராக்ஷ என்னும் பெயரைப் புணர்த்து, அது உருத்திரன் (ருத்ர) என்னும் சிவன் கண்ணினின்று தோன்றியதால் அப் பெயர் பெற்றதென்று கூறி, அதற்குச் சான்றுபோல் முப்புர எரிப்பு (திரிபுர தகனம்) என்னுங் கதையுங் கட்டி, ஆராய்ச்சியில்லார்க்குத் தெரியா வாறு உண்மையை முற்றும் மறைத்து விட்டனர்.

இற்றைத் தமிழர்க்குப் பொதுவாக மதத் துறையிற் பகுத்தறி வின்மையால், கண் மணி யென்பது சிவன் கண்ணினின்று தோன்றிய மணியே யென்றும், அக்கம் என்பது அக்ஷ என்னும் வடசொற் றிரிபே யென்றும், ஆரியப் புராணப் புரட்டை யெல்லாம் முழுவுண்மை யென்றும், அதை ஆராய்தல் இறைவனுக்கு மாறான அறங் கடை (பாவம்) என்றும் நம்பிக்கொண் டிருக்கின்றனர்.

ஆரியவேதக் காற்றுத் தெய்வமாகிய உருத்திரனுக்கும் சிவனுக்கும் யாதொரு

தொடர்புமில்லை. மங்கலம் என்று பொருள் படும் சிவ என்னும் ஆரிய அடைமொழி இந்திரன், அக்கினி, உருத்திரன் என்னும் ஆரியவேத முச்சிறு தெய்வங்கட்கும் பொதுவாக வழங்கப்பட்டுள்ளது. அதற்குச் சிவந்தவன் என்று பொருள்படும் சிவன் என்னும் செந்தமிழ்ப் பெயர்ச்சொல்லொடு எள்ளளவுந் தொடர்பில்லை. அந்தி வண்ணன், அழல்வண்ணன், செம்மேனியன், மாணிக்கக்கூத்தன் முதலிய சிவன்பெயர்களை நோக்குக.

உருத்திரன் என்னும் ஆரியத் தெய்வ இயல் விளக்கமும், அவனுக்கும் சிவனுக்கு முள்ள மாபெரு வேறுபாடும், முப்புர எரிப்புக் கதையின் முழுப்புரட்டும், உருத்தி ராக்கம் என்னுஞ் சொல்லின்கீழ்க் கூறப் படும்.

சிவநெறி குமரிநாட்டிலேயே தோன்றி வளர்ச்சியடைந்துவிட்ட தூய தமிழ மத மாதலாலும், அக்கமணி மேனாடுகளில் விளையாமையாலும், கிரேக்கத்திற்கு இன மான ஒரு மொழியைப் பேசிக்கொண்டிருந்த மேலையாசிய ஆரிய வகுப்பார் இந்தியா விற்குட் புகு முன்னரே, தமிழர் இந்தியா முழுதும் பரவி வடஇந்தியத் தமிழர் முன்பு திரவிடராயும் பின்பு பிராகிருதராயும் மாறிய தனாலும், அக்கமணியைச் சிவனியர் குமரி நாட்டுக் காலந்தொட்டு அணிந்துவந்தத னாலும், அம் மணிக்கு அப் பெயரே உலக வழக்கில் வழங்கியதனாலும், தமிழ் முறைப் படி முண்மணி என்பதே அப் பெயர்ப் பொருளாம்.

**அக்கம்**[3] *akkam,* பெ. (n.) $\frac{1}{12}$ காசு மதிப்புள்ள ஒரு பழைய சிறு காசு (S.I.I. ii,123); an ancient coin, $\frac{1}{12}$th value of the *kāšu.*

*[அஃகுதல் = சுருங்குதல், சிறுத்தல். அஃகு → அஃகம் = சிறு காசு. அஃகம் → அக்கம். தவசத்தைக் குறிக்கும் அஃகம் என்னும் சொல்லும் அக்கம் என்று திரிந்திருத்தலை நோக்குக.]*

ஒளி, ஒளிக்கதிர், கதிரவன், செம்பு என்று பொருள்படும் அர்க்க (arka) என்னும் வட சொல்லை, இதற்கு மூலமாகக் காட்டுவது பொருந்தாது.

**அக்கம்**[4] *akkam,* பெ. (n.) ***அக்கணா*** பார்க்க; see *akkaṇā.*

**அக்கம்**[5] *akkam,* பெ. (n.) *கயிறு* (சூடா.); rope, cord. *அக்கடி* பார்க்க; see *akkaḍi.*

தெ. உக்கமு; க. அக்க; துட. ஒக்ம்; பட. ஒக்த்; து. உக்கி; பர். உட்க், உத்க்.

*[ஒருகா. அல்லுதல் = முடைதல், பின்னுதல், பின்னிக்கொள்ளுதல். அள்ளுதல் = செறிதல். அள்ளல் = நெருக்கம். அள் = செறிவு, பற்றிரும்பு. அள் → அள்கு → அட்கு → அக்கு. அக்கம் = செறிக்கும் அல்லது சேர்த்துக்கட்டுங் கயிறு.]*

**அக்கம்**[6] *akkam,* பெ. (n.) 1. **பொன்**; gold. 2. **பொன், வெள்ளி முதலிய கனியம்**; metal.

தெ. அக்க; க. அக; பிராகி. அக்கோ.

*[அலக்கம் → அக்கம் = ஒளியுள்ள பொன், பொன்போன்ற பிற கனியம்.]*

**அக்கம்காரை** *akkamkārai,* பெ. (n.) **ஒருவகைக் கடல்மீன்**; a kind of sea-fish, *Chorinemus moadetta* (queen-fish).

**அக்கம்பக்கம்** *akkam-pakkam,* பெ. (n.) ***அண்டையயல்***; this side and that side, in the neighbourhood, all around. 'பகலில் அக்கம்பக்கம் பார்த்துப் பேசு' (பழ.). பக்கம் பார்க்க; see *pakkam.*

*[அடு → அடுக்கு → அடுக்கம் = பக்கம், அண்மை.* **ஒ.நோ:** **ம.** *அடுக்கல் = பக்கம். அடுக்கம் → அக்கம். 'அக்கம்பக்கம்' எதுகை மரபிணைச்சொல். எதுகை நோக்கி அடுக்கம் அக்கம் எனத் தொக்கது எனினுமாம்.]*

**அக்கம்பாரை (தோல்பாரை)** *akkampārai,* பெ. (n.) *ஒருவகைக் கடல்மீன்*; a kind of sea-fish, *Chorinemus spp.*

**அக்கமணி** *akka-maṇi,* பெ. (n.) *சிவமணி (உருத்திராக்கம்)*; rudrākṣa bead. "பொறியர வக்க மணித்தொடை பூண்டு" (திருக்காளத். பு. 5 : 27).

*[அக்கம் + மணி. உருண்டையா யிருப்பத னாலும் மணிபோல் அணியப்படுவதனாலும் அக்குக்காய் மணியெனப்பட்டது.]*

**அக்கமாலை** *akka-mālai,* பெ. (n.) 1. **சிவமணி (உருத்திராக்க) மாலை**; string of rudrākṣa beads. "புகலுறு மக்க மாலை புனைகுவோர்" (பிரபோத. 18 : 3). 2. **மன்றாட்டு (செப) மாலை**; rosary. "புத்தக மக்க மாலை...... பொருந்து கையாள்" (திருவாலவா. கடவுள்வா. 20).

*[அக்கம் + மாலை.]*

***மாலை*** பார்க்க; see *mālai.*

**அக்கரகாரம்** *akkara-kāram,* பெ. (n.) ஒரு மருந்துவேர்; pellitory root, *Pyrethri radix.*

> ''அக்கர காரம் அதன்பேர் உரைத்தக்கால்
> உக்கிரகா லத்தோடம் ஒடுங்காண்—முக்கியமாய்க்
> கொண்டாற் சலமுறும் கொம்பனையே தாகசுரம்
> கண்டாற் பயந்தோடுங் காண்''
> (பதார்த்த. 1025).

U. akkarkarhā.

[ஒருகா. அக்கரம் + காரம்.]

அக்கரகாரம்பற்றிச் சாம்பசிவம்பிள்ளை அகரமுதலி கூறுவது:

அக்கரகாரம் வடஆப்பிரிக்கா தேசத்தில் விளையும் ஒருவகைப் பூமரம். அக்கரகார வேர் (ஒரு) மருந்துவேர். இது முக்கியமாய் வடஆப்பிரிக்காக் கண்டத்திலிருந்து பம்பாய் வழியாகக் கொண்டுவரப்படும். எல்லாக் கடைகளிலும் காணலாம். இது துண்டு துண்டாகவும், மேற்புறம் மங்கல் நிறமாகவும், உள்ளே வெண்மையாகவும் இருக்கும். இதை மெல்லுவதனால், வாய்க்கு அழற்சியையும் நாக்கிலும் உதட்டிலும் விருவிருப்பையுங் கொடுக்கும். பல்வலிக்கு மெல்லுவதுண்டு. கருக்கிட்டுக் (கஷாயமிட்டுக்) குடிக்க ஊதை (வாத) நோய் குணப்படும்.

**அக்கரம்**[1] *akkaram,* பெ. (n.) வெள்ளெருக்கு (மலை.); white madar.

[அக்கு = வெள்ளை. அக்கு → அக்கரம். இனி, எல் = வெள்ளை, கரம் = நஞ்சு; எல்கரம் → அல்கரம் → அஃகரம் → அக்கரம் என்றுமாம்.]

**மறுவ.** அக்கரம்மா

**அக்கரம்**[2] *akkaram,* பெ. (n.) மாமரம் (மலை.); mango tree. அக்காரம்[2] பார்க்க; see *akkāram*[2].

[அக்காரம் = சருக்கரை, சருக்கரைபோல் இனிக்கும் மாங்கனி, அக் கனி தரும் மரம். அக்காரம் = மாமரம் (மூ.அ.). அக்காரம் → அக்கரம்.]

சருக்கரைக்குட்டி என்று ஒருவகை மாங்கனி பெயர் பெற்றிருப்பது கவனிக்கத்தக்கது.

**அக்கரம்**[3] *akkaram,* பெ. (n.) ஒருவகை மருந்து வேர் (மூ.அ.); pellitory root. அக்கரகாரம் பார்க்க; see *akkara-kāram.*

**தெ.** அக்கர; **க.** அக்கல; **ம.** அக்கரம் கொல்லி.

**அக்கரம்**[4] *akkaram,* பெ. (n.) 1. வாய்நோய் வகை; thrush, aphthae, parasitic stomatitis. ''அக்கரங்கள் தீர்க்கும்'' (பதார்த்த. 325). 2. கழிச்சல் (பேதி) வகை; a form of diarrhoea. ''சொல்லவே யக்கரத்தின் தன்மை பாரு'' (சிகிச்சா. பக். 747).

**ம.** அக்கரம்; **க.** அக்ர; **து.** அக்ர, அத்ரோ; **தெ.** அக்கரமு.

**அக்கரம்மா** *akkarammā,* பெ. (n.) வெள்ளெருக்கு; white madar, *Calotropis gigantea* (albiflora) (சா.அக.). அக்கரம்[1] பார்க்க; see *akkaram*[1].

**அக்கரன்** *akkaraṉ,* பெ. (n.) அக்கரன், கொம்பன், படுவன் என்னும் மூவகைக் கக்கற் கழிச்சல்களுள் (வாந்திபேதிகளுள்) ஒன்று. இது கொப்பூழின்கீழ்ச் சார்ந்து, சூட்டுக் கழிச்சல் (உஷ்ணபேதி) போலும், செரியா மாந்தம் போலும் வெண்மையாகவும் சோறு சோறாகவும் கழிச்சல் கண்டு, குடலிரைச்சல், குமட்டல், நெஞ்சுக் குத்தல், நாவறட்சி, தாகம், கிடைபொருந்தாமை, வியர்வை, வலி, உடல் குளிரல் முதலிய குணங்களைக் காட்டும்; one of the three kinds of cholera contemplated in the Tamil Medical Science. It is marked by an acute catarrhal inflammation of the mucous membrane of the stomach and the intestines, enteric pain, thirst, perspiration, parched tongue, restlessness, rumbling noise in the stomach, nausea, chest pain, presence of partially digested food in the faeces, cold skin etc. The other two kinds are *kombaṉ* and *paḍuvaṉ* (சா.அக.).

**அக்கரிவாள்** *akkarivāḷ,* பெ. (n.) அக்கறுவாள் பார்க்க; see *akkaṟuvāḷ.*

**அக்கரை** *a-k-karai,* பெ. (n.) 1. ஆற்றின் அல்லது கால்வாயின் எதிர்க்கரையான மறு கரை; the opposite bank of a river or canal. 'இக்கரை மாட்டுக்கு அக்கரை பச்சை' (பழ.). 'அக்கரைப் பாகலுக்கு இக்கரைக் கொழு கொம்பா?' (பழ.). 2. கடலின் அப்பாற்பட்ட மறுகரை; the opposite shore of a sea or ocean. ''அளக்க ரக்கரை காண்பான்'' (கந்தரந். 10).

**ம.** அக்கர; **க.** அத்தல் கரெ, அத்த கரெ, அத்கட கரெ; **தெ.** அவ்வல கர; **குட.** அப்பர கரெ; **து.** ஆடெ கரெ; **பிரா.** ஓ கர்ரக்.

[அ (சேய்மைச் சுட்டு) = அந்த. அ + கரை – அக்கரை.]

**அக்கரைச்சீமை** *a-k-karai-c-cīmai,* பெ. (n.) **கடலுக்கு அக்கரையிலுள்ள நாடு;** country on the opposite shore.

[அ + கரை + சீமை. **Skt.** sīmā (எல்லை, நாடு) > த. சீமை.]

அக்கரை நாடு என்றே வழங்கலாம்.

**அக்கரைப்பச்சை** *a-k-karai-p-paccai,* பெ. (n.) **ஆற்றின் ஒரு கரையினின்று பார்க்கும் மாட்டிற்கு அல்லது மாந்தனுக்கு, எதிர்க்கரை பசேர் என்று தோன்றும் பொய்த்தோற்றம்;** illusion that causes a person on one bank believe that the vegetation on the other bank is greener or more fertile. அது உனக்கு அக்கரைப் பச்சையாயிருக்கிறது (உ.வ.).

[அ + கரை. பசு → பச்சு → பச்சை.]

**அக்கரைப்படுத்து-தல்** *a-k-karai-p-paḍuttu-,* 2 பி. வி. (v. caus.) **ஆளையேனும் சரக்கையேனும் பரிசலில் அல்லது படகிலேற்றி ஆற்றைக் கடப்பித்தல்;** to ferry over a river passengers or cargo in boat or coracle.

[அ + கரை + படுத்து. படு (த.வி.) → படுத்து (பி.வி.). 'து' பி.வி. ஈறு.]

**அக்கரையர்** *a-k-karaiyar,* பெ. (n.) **மேலுலக வாணர் (பரலோகவாசிகள்);** heavenly beings, as inhabiting the regions beyond the ocean of worldly life. 'அக்கரையராய்.........நித்ய ஸூரிகளில் ஒருவர் வந்தவதரித்தார்' (உபதேச ரத். அவதா. பக். 1).

[அ + கரை + அர் (பலர்பாலீறு).]

இவ்வுலக வாழ்க்கை ஒரு கடல் கடத்தலைப் போன்றிருத்தலால், இதைக் கடந்து விண்ணுலகை யடைந்தவர் அக்கரையர் எனப் பட்டனர்.

**அக்கரையான்** *a-k-karaiyāṉ,* பெ. (n.) **கடலுக்கு அக்கரையிலுள்ள நாட்டான்;** one who lives on the farther shore.

[அ + கரை + ஆன் (ஆண்பாலீறு).]

**அக்கரைவைப்பகம்** *a-k-karai-vaippagam,* பெ. (n.) **ஒரு வைப்பகத்தின் பெயர்** (இக்.வ.); Overseas Bank (Mod.).

[அ + கரை + வைப்பு + அகம். வை → வைப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அக்கலாட்டி** *akkalāṭṭi,* பெ. (n.) **காசுக்கட்டி;** black catechu, *Catechu nigrum* (சா.அக.).

**அக்கவடம்** *akka-vaḍam,* பெ. (n.) **அக்கமாலை;** string of rudrākṣa beads. **வடம்** பார்க்க; see *vaḍam.*

[அக்கம் + வடம்.]

**அக்கவாலதி** *akkavāladi,* பெ. (n.) **நெருஞ்சில்** (சா.அக.); cow's thorn, a small prostrate herb, *Tribulus terrestris.*

[ஒருகா. அக்கம் + வாலதி = வால்போல் நீண்ட முனைகளையும் அக்கமணி (உருத்திராக்கம்) போல உருண்ட வடிவினையுமுடைய முள்வகை. த. வால் → வாலம் > **Skt.** vāladi.]

**அக்கழலை** *akkaḻalai,* பெ. (n.) **அக்கழற்சி** பார்க்க; see *akkaḻaṟci.*

[அக்கு = எலும்பு. அழல் → அழலை = அழற்சி. 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அக்கழற்சி** *akkaḻaṟci,* பெ. (n.) **எலும்புக்கு உண்டாகும் அழற்சி;** inflammation of bone, *Osteitis* (சா.அக.).

[அக்கு = எலும்பு. அழல் → அழற்சி (தொ.பெ.). 'சி' தொ.பெ. ஈறு.]

**அக்கழிவு** *akkaḻivu,* பெ. (n.) **எலும்பிற்கு ஏற்படும் அழிவு;** death or decay of bone, *Osteolysis* or *Osteonecrosis* (சா.அக.).

[அக்கு+அழிவு. அழி → அழிவு (தொ.பெ.). 'வு' தொ.பெ. ஈறு.]

**அக்களவு** *akkaḷavu,* பெ. (n.) 1. **எலும்பின் அளவு;** the size of a bone. 2. **பூநீர்;** a liquid salt said to be obtained from the soil of fuller's earth during the dewy season. (Several versions are told about the method of collecting this. For details see under *pūnīr* (சா.அக.).

[அக்கு + அளவு. அள → அளவு (தொ.பெ., பண்.பெ.). 'வு' தொ.பெ. அல்லது பண்.பெ.ஈறு.]

**அக்களிப்பு** *akkaḷippu,* பெ. (n.) **மனமகிழ்ச்சி;** exultation. ''சக்களத்திகள் அக்களிப்பொடு கெக்கலிப்பட'' (ச. ச. ச. கீர்த். 186). **அகக்களிப்பு** பார்க்க; see *aga-k-kaḷippu.*

[அகம் = மனம். களிப்பு = மகிழ்ச்சி. அகம் + களிப்பு – அகக்களிப்பு → அக்களிப்பு (மரூஉ).]

**அக்கறக்கி** *akkaṟakki,* பெ. (n.) **செந்தினை;** red millet, *Setaria italica* (சா.அக.).

**அக்கறந்தான்** *akkaṟandāṉ,* பெ. (n.) **கடுக்காய்;** chebulic myrobalan (T.C.M. ii, 2, 429). **ஒ.நோ:** அக்காத்தான்.

**அக்கறுவாள்** *akkaṟuvāḷ*, பெ. (n.) ***சப்பாத்துக் கள்ளியையும் முட்செடிகளையும் வெட்ட உதவும் அறுவாள் வகை;*** bill-hook for lopping thorns and prickly pear.

*[அக்கு = முள், முட்செடி. அறுவாள் (வினைத் தொகை) = வெட்டுக்கத்தி. ஒ.நோ: அக்கக்காய் = துண்டுதுண்டாக. அகைதல் = ஒடிதல். அகைத்தல் = முறித்தல், அறுத்தல்.]*

அரிதல் = சிறு கத்தியால் அல்லது அரிவாள் மணை யலகால், காய்கறி முதலிய மெல்லிய வற்றைச் சிறுசிறு துண்டுகளாக மென்மை யாய் நறுக்குதல். அறுத்தல் = பெரியவற்றை யும் வன்மையான வற்றையும், இரண் டாகவோ பல பெருந்துண்டுகளாகவோ, சிறு கத்தியாலும் பெருவாளாலும் முன்னும் பின்னும் வன்மையாய் இழுத்தராவியும் கத்தரித்தும் வெட்டியும் துணித்தல். ஆதலால், அரிவாள் வேறு; அறுவாள் வேறு. ஆகவே, அக்கறுவாளை அக்கரிவாள் என்பது தவறாம்.

**அக்கறை** *akkaṟai*, பெ. (n.) *1.* ***பற்று, ஊக்கம், கவனம், கருத்து, கவலை;*** interest, concern, care. அவனுக்குப் படிப்பில் அக்கறையில்லை (உ.வ.). 2. ***தேவை;*** need, necessity. தேர்வில் தேறித் தகுதித்தாள் பெற்று வேலைதேடுவது யாருக்கு அக்கறை? உனக்கா எனக்கா? (உ.வ). 'அவரவர் அக்கறைக்கு அவரவர் பாடுபடுவார்' (பழ.).

**தெ.** அக்கற; **க.** அக்கறெ; **து.** அக்கரெ; **U.** akhass.

*[ஒருகா. அகக்குறை என்பது அக்கறை என்று திரிந்திருக்கலாம். குறை = தேவை அல்லது இன்மையுணர்ச்சி. அகக்குறை = ஒன்றின்மை யால் அதைப் பெறுதற்கேற்ற முயற்சியை அல்லது விருப்பத்தை யுண்டுபண்ணும் மனக்குறை.]*

அக்கறை யென்னுஞ் சொல்லில் உள்ளது வல்லின றகரம். "உம்ப ரக்கரையா யனுப்ப" என்னும் பாடலில் (தனிப்பா. தி. *1*, பக். *374*) இடையின ரகரம் வந்திருப்பது, ஏட்டுப் பிழையாயிருத்தல் வேண்டும்.

**அக்கறைப்படு-தல்** *akkaṟai-p-paḍu-*, *20* செ. கு.வி. (v.i.) ***பற்றுவைத்தல், ஊக்கங் கொள்ளு தல்;*** to become interested. நீ அக்கறைப் பட்டால் அஃது உனக்குக் கிடைக்கும்.

*[அக்கறை + படு. படுதல் = கொள்ளுதல்.]*

**அக்கன்**[1] *akkaṉ*, பெ. (n.) ***அக்கை;*** elder sister. 'நாம் கொடுத்தனவும் அக்கன் கொடுத் தனவும்' (S.I.I. ii, 2). *அக்கை பார்க்க;* see *akkai*.

**ம.** அக்கன்; **க.** அக்கன், அக்கனு; **தெ.** அக்க; **கோத.** அக்ன்; **துட.** ஒக்ன்.

*[அக்கை → அக்கன். இது அம்மை → அம்மன் என்னுந் திரிபை ஒத்தமைந்தது.]*

இங்ஙனம் அன்னீறு பெற்ற பெண்பாற் பெயர்கள் ஆண்மறத்தன்மையை உணர்த்தும். எ-டு: மாரியம்மை → மாரியம்மன்.

**அக்கன்**[2] *akkaṉ*, பெ. (n.) ***அக்குமணியை அல் லது மாலையை அணிந்தவன்;*** wearer of rudrākṣa beads.

*[அக்கு = சிவமணி. அக்கு → அக்கன். 'அன்' ஆண்பாலீறு.]*

**அக்கன்**[3] *akkaṉ*, பெ. (n.) ***நாய்*** (சூடா.); dog.

*[அக்கு = எலும்பு. அக்கு → அக்கன் = எலும்பை விருப்பமாய்க் கடிக்கும் நாய்.]*

இதுபற்றிய பழமொழிகள் வருமாறு:

'எலும்பு கடிக்கிற நாய்க்குப் பருப்புஞ் சோறும் ஏன்?', 'எலும்பு கடிக்கிற நாய் இரும்பைக் கடிக்குமா?', 'கடிக்க வந்த நாய்க்கு எலும்பைப் போட்டாற்போல்'; 'If you beat a dog with a bone it won't howl'.

வெறிநாயையும், எண்காற் காட்டுப்பன்றி யையும், ஒருவகைச் செடியையும், ஓர் அரசனையும் குறிக்கும் 'அலர்க்க' (alarka) என்னும் வடசொல்லிற்கு 'அக்கன்' என்னும் தென்சொல்லோடு தொடர்பில்லை.

**அக்கனக்காய்** *akkaṉa-k-kāy*, பெ. (n.) ***பூவந்திக் கொட்டை;*** soapnut, *Sapindus emarginatus* (சா.அக.).

*[அக்கனம் + காய்.]*

**அக்கா** *akkā*, பெ. (n.) *1.* ***தாய்;*** mother. 2. ***மூத்த உடன்பிறந்தாள்;*** elder sister. 3. ***அரத்தக் கலப்புள்ள உறவினர்க்குள் அக்கைமுறைப்பட்டவள்;*** elder cousin-sister. 4. ***மணவுறவால் அக்கைமுறைப்பட்டவள்;*** an older woman who has acquired the relationship of a cousin through marriage. 5. ***மதிப் புரவால் அக்கா என்று விளிக்கப்படும் அல்லது சொல்லப்படும் உறவல்லா மூத்த பெண்;*** any unrelated elderly woman addressed or spoken of as *akkā* out of courtesy. 6. ***திருமகளுக்கு அக்கையாகச் சொல்லப்படும் மூதேவி;*** Goddess of misfortune said to be the elder sister of

*Tirumagaḷ* (Lakṣmi), the Goddess of wealth. 7. *அக்கை என்பதன் விளிவடிவம்;* vocative of *akkai*.

**ம., தெ., க.** அக்க; **து.** அக்க, அக்கெ; **குட.** அக்கெ; **கோத.** அக்ன்; **தோட.** ஒக்ன், ஒக்கொக்; **கோண்.** அக்கா, தக்கா; **கொலா.** அக்காபாயீ.

[அம்ம → அவ்வ → அக்க → அக்கா (விளி). அம்மை → அவ்வை → அக்கை → அக்கா (விளி). **ஒ.நோ :** செம் → செம்மை → செவ்வை, செம் → செவ் → செவ → செவப்பு → செகப்பு, செவ → சிவ → சிவப்பு → சிகப்பு, செவ் → செவ்வல் → செக்கல் (செந்நிறம்) → செக்கர் = சிவப்பு. ம → வ → க, போலித்திரிபு அல்லது ஒலித்திரிபு.]

அக்கா என்னுஞ் சொல்லின் திரிந்த வடிவங்கள், வடதிரவிட மொழிகளிற் பாட்டனையுங் குறிக்கும்.

எ-டு:

| மொழி | சொல் வடிவம் | குறிக்கும் இனமுறை |
|---|---|---|
| கோண்டி | அக்கோ | தாய்ப்பாட்டன் |
| கூய் | அக்கெ | பாட்டன், முன்னோன் |
| குவி | அக்கு | பாட்டன் |
| பர்சி(பர்ஜி) | அக்க | தாய்ப்பாட்டன் |

பெற்றோர் (இருமுதுகுரவர்) என்னும் முறையில் தாயுந் தந்தையும் சமமானவராதலால், தாய்ப் பெயர் முதலில் தந்தையைக் குறித்து, பின்னர்த் தாய்க்குத் தாயாகிய பாட்டியைப் போன்றே தந்தைக்குத் தந்தையாகிய பாட்டனையுங் குறித்ததென்க.

**சித்திய (Scythian) இனச்சொற்கள்**

1. *அக்கையைக் குறிப்பவை :*
   **துங்.** ஒக்கி, அக்கின்; **மங்.** அச்சர்; **திபெ.** அச்செ; **துரு.** எதெ; **மார்.** அக்கை; **உகி.** இத்தென்.
2. *அண்ணனைக் குறிப்பவை :*
   **மங்.** அக்க; **துங்.** அக்கி; **உய்.** அச்ச.
3. *பாட்டியைக் குறிப்பது :*
   **இலாப்.** அக்கெ.
4. *தங்கையைக் குறிப்பது :*
   **ஆசு.துரு.** அக்க.
5. *கிழவனைக் குறிப்பவை:*
   **ஆசித்.** இக்கி; **பின்.** உக்கொ; **அங்.** அத்.

அக்கா (அக்க) என்னுஞ் சொல் முதன் முதல் தாயையே குறித்து, பின்பு தாய் போன்ற மூத்த உடன்பிறந்தாளுக்கு வழங்கி வருகின்றது. இன்றும் தமிழருள் ஒரு சிலர் தம் தாயை அக்கா என்றே விளிப்பதுங் குறிப்பதும் வழக்கம். தாயைக் குறிக்கும் அச்சி என்னும் சொல்லும், இன்று சில வகுப்பாரிடை, சிறப்பாகத் தாழ்த்தப் பட்டோரிடை, அக்கைக்கு வழங்கி வருகின்றது. பெற்றோர்க்குப் பின் மூத்த மகனும் மூத்த மகளுமே குடும்பப் பொறுப் பாளிகளும் நடத்தாளிகளுமாதலால், 'தந்தைக்குப் பின் தமையன், தாய்க்குப் பின் தமக்கை' என்னும் மரபுச் சொலவடையும் உள்ளது. ஐயன் என்னுஞ் சொல் தனித்த நிலையில் தந்தையைக் குறிப்பது போன்றே, அக்கை யென்னுஞ் சொல்லும் தனித்த நிலையில் முதற்காலத்தில் தாயைக் குறித் திருத்தல்வேண்டும்.

ஆண்பாலில் அக்கைக்குச் சமமானவன் அண்ணன்.

சிறுமியை, சிறப்பாகத் தங்கையை, ஆர்வம் பற்றித் தாய் என விளிப்பதும் குறிப்பதும் இன்றும் வழக்கம்.

இளையவரைத் தம்பி தங்கையென்றும், மூத்தவரை அண்ணன் அக்கையென்றும், முதியவரைப் பாட்டன் பாட்டியென்றும் விளிப்பதும் குறிப்பதும் திருந்திய மக்கட் பண்பாதலால், பாட்டன் முறைப்பெயர் கிழவனைக் குறிப்பதும் இயற்கையின்பாற் பட்டதே. மொழி வேற்றுமையால் முறைப் பெயர்களின் பால் வேறுபடுவதும் உலகப் பொதுவியல்பே.

**ஆரிய இனச்சொற்கள்**

**இலத்.** அக்கா (தாய்); *Acca Larentia*, mother of the lares. **வ.** அக்கா (தாய்); **பிராகி.** அக்கா; **மரா.** அக்கா.

அக்கா என்று பொதுப்பட வருமிடமெல்லாம், மூத்த உடன்பிறந்தாளையே குறிக்கும்.

பிராகிருதமும் மராத்தியும் உண்மையில் ஆரிய மல்லவேனும், ஆரியத்தன்மை யடைந்துள்ளமையால் ஆரியமெனப்பட்டன.

'*akka*. f. (voc. akka, Pan.) a mother (used contemptuously); N. of a woman; (supposed to be a term of foreign origin; cf. L. *Acca*)' என்று, *மானியர் வில்லியம்சு சமற்கிருத - ஆங்கில அகரமுதலி* (பக். 2) குறித்திருப்பது கவனிக்கத்தக்கது.

தாயைக் குறிக்கும் அவ்வை என்னும் சொல் மூத்த உடன்பிறந்தாளையும் பாட்டியையும் குறிப்பது போன்றே, அக்கை என்னும் சொல்லும் அவ்விரு முறையையுங் குறிக்கின்ற தென்க. எ-டு : தவ்வை (தம் + அவ்வை) = தமக்கை. அவ்வை = பாட்டி.

இக்கி, உக்கொ, அக் என்னும் சித்தியச் சொற்கள் முதியோனைக் குறித்தலால், முதுமையுணர்த்தும் 'அக்' என்னும் மூலத்தி னின்று அக்கா என்னுஞ் சொல் தோன்றி யிருக்கலாமென்று **கால்டுவெலார்** கருதினார். ஆயின், அக்கா என்னும் சொல்லுணர்த்தும் பொருள்கட் கெல்லாம் அடிப்படையானது அம்மை யென்னும் தாய்முறைப் பொருளே யென்பதும், மகர வொலியே வகரவொலி வாயிலாகக் ககர வொலியாக மாறியிருத்தல் கூடுமென்பதும், மேற்காட்டிய சொற்களா லும் ஏதுக்களாலும் விளக்கமாதல் காண்க.

முதற்காலத்தில், அக்க என்னும் அகரவீற்று வடிவே இயல்பான வடிவா யிருந்திருத்தல் வேண்டும். செந்தமிழ் என்னும் பண்பட்ட நிலையில் அகரவீறு ஐகார வீறாக்கப்பட்டு அக்கை என்றானதாகத் தெரிகின்றது. அதன்பின், அக்கை என்பதே எழுவாயும், அக்க, அக்கா என்னும் இரண்டும் விளிவேற் றுமையும் ஆயின.

எ-டு : அக்கை வந்தாள்; அக்க! வா; அக்கா! போ.

பிற்காலத்தில், கொச்சை வழக்கில், நெடிலீற்று விளிவடிவே எழுவாயுமாயிற்று.

எ-டு : அக்கா வந்தாள்.

ஒ.நோ :

| எழுவாய் (செந்நிலை) | விளி | எழுவாய் (கொச்சை) |
|---|---|---|
| அம்மை | அம்ம, அம்மா | அம்மா |
| அப்பன் | அப்ப, அப்பா | அப்பா |
| ஐயன் | ஐய, ஐயா | ஐயா |

இங்ஙனம் விளிவடிவே எழுவாயுமானதால், அக்கை தங்கச்சிமார் (தங்கைமார்) என்னும் மரபிணைச்சொல் 'அக்கா தங்கச்சிமார்' என்றே கொடுந்தமிழ் என்னும் கொச்சை யுலகவழக்கில் வழங்கிவருகின்றது. இது செந் தமிழ் என்னும் உயர்ந்தோர் உலக வழக்கி னின்று வேறுபட்ட தென்பதை அறிதல் வேண்டும்.

**அக்காக்காய்** *a-k-kākkāy*, பெ. (n.) **பெண்டிர் சிறுபிள்ளைகட்குத் தலைவாரிச் சடைபின்னும் போது, அப் பிள்ளைகள் திமிறாது அமைதியா யிருத்தற்பொருட்டு, அவர்களின் கவனத்தை யீர்க்க, அருகிலுள்ள காக்கையை வந்து பின்னச் சொல்வதுபோல் நடிக்கும் நடிப்பில் அதை விளிக்கும் விளிப்பு;** a playful invitation by a child's mother or nurse addressed to an imaginary or real crow to come and braid the child's hair along with her, the purpose being to divert the attention of the child and make it stay quiet without moving its head.

"பின்னை மணாளனைப் பேரில் கிடந்தானை
முன்னை யமரர் முதல்தனி வித்தினை
என்னையும் எங்கள் குடிமுழு தாட்கொண்ட
மன்னன்னை வந்து குழல்வாராய் அக்காக்காய்!
மாதவன் தன்குழல் வாரா யக்காக்காய்!"
(திவ். பெரியாழ். 2.5 : 1).

"பிண்டத் திரளையும் பேய்க்கிட்ட
நீர்ச்சோறும்
உண்டற்கு வேண்டிநீ ஓடித் திரியாதே
அண்டத் தமரர் பெருமான் அழகமர்
வண்டொத் திருண்ட குழல்வாராய்
அக்காக்காய்!
மாயவன் தன்குழல் வாரா யக்காக்காய்!"
(திவ். பெரியாழ். 2.5 : 7).

*[அ + காக்காய். காக்கை(எழு.) → காக்காய் (விளி). ஐ → ஆய், விளித்திரிபு. அகர முன் னொட்டுப் பலுக்கெளிமையும் ஒலிப்பினிமையும் பற்றியது. பலுக்கு (தென்சொல்) = உச்சரிப்பு (வடசொல்).]*

பெரியாழ்வார் திருமொழி 2ஆம் பத்து 5ஆம் திருமொழிப்பொருள் தலைப்பு, 'கண்ணன் குழல்வாரக் காக்கையை வாவெனல்' என் றிருத்தலையும், அத் திருமொழியின் முதல் 9 பாவிசையும் "குழல்வாராய் அக்காக்காய்" என்று முடிதலையும், இறுதிப் பாவிசையில் "குழல்வார வாவென்ற ஆய்ச்சி சொல்" என்று குறித்திருத்தலையும், அடுத்த திரு மொழிப்பொருள் தலைப்பு, 'காக்கையைக் கண்ணனுக்குக் கோல் கொண்டுவர விளம் புதல்' என்றிருத்தலையும் நோக்குக.

காகங்கள், ஏதேனும் இரை கிடைக்கு மென்று, அடிக்கடி வீட்டுக் கூரைகளில் வந்தமர்ந்து, 'கா கா' எனக் கரையும். சிறு பிள்ளைகட்குப் பறவைகள்மீது விருப்ப முண்டாதலால், அவர்கட்குத் தலைவாரும் போது அவர் அசையாது அமைதியாயிருத்தற் பொருட்டு, தாய்மார் அல்லது செவிலியர்

காக்கையைத் தம் பிள்ளைகட்குத் தலைவார அழைப்பதுபோல் விளித்து, அப் பிள்ளைகளின் மனநிலைக் கேற்றவாறு சில செய்திகளைச் சொல்வது வழக்கம்.

பெரியாழ்வார் திருமொழி கண்ணன் புகழ்ப் பாடலாதலால், பெரும்பாலும் கண்ணன் செயல்களும் திருவிளையாடல்களும் தெய்வத் தன்மையுமே திருமொழிச் செய்திகளாயமைந்தன.

**அக்காக்குருவி** *akkā-k-kuruvi*, பெ. (n.) ***அக்கா என்னும் ஒலி தோன்றக் கத்தித் திரியும் குருவி வகை***; koel, a bird that keeps crying *akkā*, *Eudynamis honorata*.

*[அக்கா + குருவி. 'அக்கா' ஒலிக்குறிப்பு.]*

**அக்காகலம்** *akkākalam*, பெ. (n.) ***அகில்*** (பரி.அக.), ***அகில்மரம்***; eaglewood (சா.அக.).

**அக்காடச்செல்லிகண்டன்** *akkāḍa-c-celli-kaṇḍaṉ*, பெ. (n.) 1. ***தாவிச் செல்லும் அணிற்பிள்ளை***; a species of rodents with long bushy tails living in trees and distinguished by their capacity to leap long distances. 2. ***பறக்கும் அணில்***; flying squirrel, *Petaurista philippensis*. அக்காடச்செல்லிகண்டன் மர அணிலில் ஒரு வகை போலும் (சா.அக.).



பறக்கும் அணில்

**அக்காடி** *akkāḍi*, பெ. (n.) ***அக்கை யென்னும் முறைப்பெயரின் விளிவடிவம்***; voc. of *akkai*.

*[அக்கை→ அக்கா (விளி)+அடி (விளியசை).]*

அக்காடி (அண்மை விளி), அக்காடீ (சேய்மை விளி). இது அருமைபற்றியதாகக் கருதப்படினும், தாழ்ந்தோர் வழக்காம். ●

**அக்காடிதம்** *akkāḍidam*, பெ. (n.) 1. ***ஒரு வகைச் செய்ந்நஞ்சு*** (கௌரி பாடாணம்); a kind of arsenic preparation (?). 2. ***ஒரு வகைப் பறங்கி வைப்புநஞ்சு*** (பாடாணம்); a kind of arsenic processed by the Chinese (?) (சா.அக.).

இருபொருளும் வினாக் குறியிடப்பட்டிருப்பதால் ஐயுறவுப் பொருள் என்பது அறியப்படும்.

**அக்காடிப்பயறு** *akkāḍi-p-payaṟu*, பெ. (n.) ***மொச்சைக்காய்***; black-seeded dolichos, *Lablab vulgaris* (சா.அக.).

**அக்காடீ** *akkāḍī*, இடை. (int.) ***இரங்கல், அச்சம், நோவு முதலியவற்றை யுணர்த்தும் குறிப்புச் சொல்***; an exclamation of grief, pain, fear etc.

*[அக்கை → அக்கா (விளி) + அடீ (விளியசை). அடா (ஆ.பா.) – அடீ→ அடி (பெ.பா.).]*

அக்கா என்பது விளிப்பெயராயினும், உணர்ச்சிக் குறிப்பானமையின் இடைச்சொல்லாயிற்று. அக்காடீ ஆத்தாடீ என்பது மரபிணைக் கூட்டுச்சொல். இது இலக்கியத் திற்கும் உயர்ந்தோர்க்கும் ஏலாத ஒருவகை இழிவழக்காம்.

அக்காடீ ஆத்தாடீ என்று அலறிக்கொண்டு ஓடிவந்தாள் (உ.வ.).

அக்காடி என்னும் சொல் குறிப்புச்சொல்லான வகையை அக்கட[2] என்னுஞ் சொல்லின் கீழ்க் காண்க.

ஆழ்ந்த உணர்ச்சி நேரங்களில், பிள்ளைப் பருவங் கடந்த ஆண்மக்கள் தந்தையையும் பெண்மக்கள் தாயையும் விளிப்பதே இயல்பாதலால், ஆத்தாடி என்பது பெண்பாற் கூற்றாம். சிற்றிளம்பருவத்தில் இருபாற் பிள்ளைகளும் தாயொடும் தமக்கையொடும் நெருங்கிப் பழகுவதால், அக்கட என்பது இருபாற் பொதுவானது, மேற்கூறிய நெறிமுறைக்கு விலக்கென்க.

அக்காடீ என்பது, அக்காடி என்பதன் நீட்டமான சேய்மை விளி.

**அக்காடுதி** *akkāḍudi*, பெ. (n.) ***தான்றி*** (மலை.); belleric myrobalan (சா.அக.).

**அக்காணி** *akkāṇi*, பெ. (n.) ***பூதவுடம்பு***; gross mortal body. "கயிற்றும் அக்காணி கழித்து" (திவ். பெரியாழ். 5.2 : 3).

*[ஒருகா. அச்சாணி → அக்காணி. அச்சு = உடம்பு. ஆணி = அடிமூலம். அக்காணி = பிறவிக்கு அடிக்களமாயிருப்பது.]*

**அக்காத்தான்** *akkāttāṉ*, பெ. (n.) ***தான்றி*** (மலை.); belleric myrobalan.

**அக்காத்தை** *akkāttai,* பெ. (n.) அக்கை, மூத்த உடன்பிறந்தாள் (இ.வ.); elder sister (Loc.).

*[அக்கா+ஆத்தை – அக்காத்தை.]*

அக்கா என்னும் தனிச்சொல்லே மூத்த உடன்பிறந்தாளைக் குறிக்கப் போதியதாம். அக்கையின் தாய்த்தன்மையை உணர்த்தற்கு ஆத்தை என்னும் தாய்ப்பெயர் சேர்ந்து அக்காத்தை என்னும் கூட்டுச்சொல் தோன்றிற்று. இது அண்ணனை அண்ணாச்சி யென்பது போன்றது.

தாய்க்குப்பின் தமக்கை என்னும் கருத்துப் பற்றி, ஆத்தை என்னும் சொல் கண்ணியம் அல்லது அருமை குறித்த பின்னொட்டாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

**அக்காதேவி** *akka-dēvi,* பெ. (n.) வறுமைத் தெய்வமும் திருமகளின் அக்கையாகச் சொல்லப்படுபவளுமான மூதேவி (சங்.அக.); Goddess of poverty, represented as the elder sister of *Tirumagaḷ* (Lakṣmi), in mythology.

ம. அக்காள்

*[அக்கா = திருமகளின் அக்கை. தேவன் (ஆ.பா.) – தேவி (பெ.பா.).]*

மூதேவி திருப்பாற்கடலில் திருமகளுக்கு முந்தித் தோன்றினாள் என்பது ஆரியத் தொன்மம் (புராணம்).

**அக்காந்தி** *akkāndi,* பெ. (n.) தான்றி (பரி. அக.); belleric myrobalan.

அக்கந்தம், அக்காந்தி, அக்காத்தான், அங்காத்தான் என்பன, ஒரே பெயரின் பல்வேறு வடிவங்களாகத் தோன்றுகின்றன.

**அக்காரக்காரம்** *akkāra-k-kāram,* பெ. (n.) ஒரு மருந்துச் சரக்கு; a drug.

**அக்காரடலை** *akkāraḍalai,* பெ. (n.) சருக்கரை சேர்த்துச் சமைத்த சோறு; rice boiled with sugar. "ஆம்பா லக்கா ரடலை யண்ப னீரு றமிர்தம்" (சீவக. 928).

ம. அக்காரடல

*[சருக்காரம் → சக்காரம் → அக்காரம் = சருக்கரை. அடேதல் = சமைத்தல். அடு → அடல் → அடலை = சோறு. அக்காரம் + அடலை – அக்காரடலை.]*

**அக்காரடியல்** *akkāraḍiyal,* பெ. (n.) சருக்கரைப் பொங்கல் (M.E.R. 582 of 1920); rice boiled in milk with ghee and sugar.

*[அக்காரம் = சருக்கரை. அடேதல் → அடுசல் → அடிசல் → அடியல் (தெ். ஆகு.). அக்காரம் + அடியல் – அக்காரவடியல் → அக்காரடியல். அகரம் இடையில் தொக்கது.]*

**அக்காரநீர்** *akkāra-nīr,* பெ. (n.) பதநீர் (நாஞ்.); sweet toddy.

ம. அக்கானி

*[அக்காரம் = சருக்கரை. அக்காரநீர் = சருக்கரைபோல் இனிக்கும் அல்லது சருக்கரை போன்ற கருப்புக்கட்டி காய்ச்சப்படும் பதநீர்.]*

அக்காரநீர் என்பது, இன்று கொச்சை வழக்கில் அக்கானி என்று வழங்குகின்றது.

பதநீர் என்பது பாண்டிநாட்டு வழக்கு; தெளிவு என்பது சோழநாட்டு வழக்கு; பனஞ்சாறு என்பது சென்னை வழக்கு.

**அக்காரம்**[1] *akkāram,* பெ. (n.) 1. சருக்கரை; sugar. "அக்கார மன்னா ரவர்க்கு" (நாலடி. 374). "ஆடையுஞ் சருக்கரையும் அக்கார மாகும்" (பிங். 10 : 5). 2. கரும்பு (மூ.அ.); sugar-cane.

முந்து. சருக்காரம்

*[சருக்காரம் = வட்டம். சருக்கரம் → சருக்கரை = முதற்கண் வட்ட வடிவாக அல்லது உருண்டை வடிவாகக் காய்ச்சப்பட்ட வெல்லக் கட்டி. சருக்கரம் → சருக்காரம் → சர்க்காரம் → சக்காரம் → அக்காரம்.]*

சருக்கரை பிற்காலத்திற் பல்வேறு வடிவில் வார்க்கப்பட்டது; பல்வேறு வகையிற் சீர் திருத்தப்பட்டது. அயிர், கண்டு, கற்கண்டு முதலியன திருத்திய வகைகளாம்.

பதநீர் அக்காரநீர் எனப்படுவதாலும், பனைமரம், முழுகிப்போன பழம் பாண்டி நாட்டுக் குறிஞ்சி நிலத்தும் முல்லை நிலத்தும் இயற்கைக் கருப்பொருளா யிருந்ததனாலும், கரும்பு, நாகநாடெனப்படும் கீழைக்கரைத் தீவுகளினின்று சேரவேந்த னொருவனாற் கொண்டுவரப்பட்டமையாலும், இன்றும் பனங்கருப்புக்கட்டி வட்டவடிவமாக அல்லது அரையுருண்டை வடிவமாக வார்க்கப்பட்டு வட்டெனப்படுவதாலும், சருக்கரையென்னும் பெயர் முதற்காலத்திற் கருப்புக்கட்டியையே குறித்திருக்கலாம்.

**அக்காரம்**[2] *akkāram,* பெ. (n.) மாமரம் (மூ.அ.); mango tree.

*[அக்காரம் = சருக்கரைபோல் இனிக்கும் மாங்கனி அல்லது மாங்கனி வகைகளுள் ஒன்று, அக் கனிமரம். கனியைக் குறிப்பின் பண்பாகு பெயரும், மரத்தைக் குறிப்பின் சினையாகு பெயரும் இருமடியாகுபெயரும் ஆகும்.]*

இன்றும், சருக்கரைக்குட்டி என்று ஒரு வகை மாங்கனி பெயர் பெற்றிருப்பது கவனிக்கத்தக்கது.

மாவை ஒன்றாகக் கொண்ட முக்கனி யென்னும் தமிழ்நாட்டு வழக்கு, வரலாற்றிற் கெட்டாத் தொன்றுதொட்டது.

**அக்காரம்**[3] *akkāram*, பெ. (n.) **ஆடை**; cloth, clothes. "ஆடையுஞ் சருக்கரையும் அக்கார மாகும்" (பிங். 10 : 5).

**தெ.** அங்கி; **க.** அங்கரேக்கு.

*[சருக்காரம் = வட்டம். சருக்காரம் → சக் காரம் → அக்காரம் = வட்டம், சுற்று, உடம்பைச் சுற்றியுடுக்கப்படும் ஆடை. சுற்றுதல் = உடுத்தல். "கூறை யரைச்சுற்றி வாழினும்" (நாலடி. 281). "சுற்ற லுடேத்தல்" (பிங். 6 : 184). ஒ.நோ: வட்டம் = ஆடை. "வாலிழை வட்டமும்" (பெருங். உஞ்சைக். 42:208). பரிவட்டம் = ஆடை. "ஈறில் விதத்துப் பரிவட்ட மூழி னிரைத்தே" (பெரியபு. ஏயர்கோ. 36). வட்டத் தலைப்பாகை, வட்டத் தாறு முதலிய வழக்குகளையும் நோக்குக.]*

**அக்காரவடிசில்** *akkāra-v-adisil*, பெ. (n.) **சருக்கரைப் பொங்கல் வகை**; rice boiled in milk and ghee with sugar. "அக்கார வடிசில் சொன்னேன்" (திவ். நாய்ச். 9 : 6).

*[அக்காரம் = சருக்கரை. அடுதல் → அடுசல் → அடிசில் (தொ.ஆகு.) = அடப்பட்ட சோறு. அடுதல் = சமைத்தல்.]*

**அக்காரை** *akkārai*, பெ. (n.) **இனிப்புச் சிற்றுண்டி** வகை: a kind of sweet cake. 'அக்காரையாக அடப்பட்டதுமாம்' (சீவக. 928, நச். உரை).

*[அக்காரம் = சருக்கரை, இனிப்பு. அக்காரம் → அக்காரை = இனிப்புச் சிற்றுண்டி.]*

**அக்காள்** *akkāḷ*, பெ. (n.) 1. **மூத்த உடன் பிறந்தாள்** (உ.வ.); elder sister. 2. **அரத்த வுறவுள்ள அக்கை முறையினள்**; elder cousin-sister. 3. **மணக்கலப்பால் ஏற்பட்ட அக்கை முறையினள்**; a senior girl or woman who has become a cousin-sister through marriage alliance. 'அக்காளைப் பழித்துத் தங்கை அலவை (அபசாரி) ஆனாள்' (பழ.). அக்கா பார்க்க; see **akkā**.

சில முறைப்பெயர்களின் விளிவடிவங்கள், கொச்சை வழக்கில் எழுவாயாக வழங்கி வருகின்றன. அவற்றுட் பெரும்பாலன பாலீறும் பெற்றுள்ளன. இது இருமடி வழுவாம்.

எ-டு :

| எழுவாய் | விளி யெழுவாய் | பாலீறு பெற்ற விளியெழுவாய் |
|---|---|---|
| அம்மை | அம்மா | அம்மாள் |
| அக்கை | அக்கா | அக்காள் |
| ஆத்தை | ஆத்தா | ஆத்தாள் |
| ஆய் | ஆயா | ஆயாள் |
| தங்கை | தங்கா(ய்) | தங்காள் |
| அப்பன் | அப்பா | அப்பார் |
| ஐயன் | ஐயா | ஐயார் |
| அண்ணன் | அண்ணா | அண்ணார் |

பாலீறு பெற்றும் பெறாதும் வரும் விளியெழுவாய்ப் பெயர்கள் பழமொழி களிலும் தனிப்பாடல்களிலும் இடம்பெற் றிருப்பினும், வழுவமைதி பெறா வழுவே யாம்.

**அக்காளன்** *akkāḷan*, பெ. (n.) **ஒருவகைக் காட்டுப்புல்** (மலை.); species of wild grass.

**அக்காளி** *akkāḷi*, பெ. (n.) **அக்காளிப்பிரசாதம்** பார்க்க; see *akkāḷi-p-pirašādam*.

**அக்காளிப்பிரசாதம்** *akkāḷi-p-pirašādam*, பெ. (n.) **கோயிலில் தெய்வத்திற்குப் படைக்கப் படும் திருச்சோற்று வகை** (S.I.I. iv, 83); a kind of food offering in temples.

*[ஒருகா. அங்காளி → அக்காளி.* **Skt.** prasāda > **த.** *பிரசாதம்.]*

ஸாத என்பது மேலை யாரியமொழி யொன்றிலு மில்லாத வடநாட்டுச் சொல். சோறு என்னும் சொல்லே சோறு → சோது → சாது → ஸாத என்று திரிந்திருக்கலாம். ஏனெனின், ப்ரஸாத என்னும் முன்னொட்டுப் பெற்ற சொல்லன்றி, ஸாத என்னும் தனிச் சொல் வடமொழி வழக்கிலில்லை. தமிழில் மட்டும் 'சாதம்' என்று சோறுகுறித்து வழங்கிவருகின்றது.

மாணிக்கவாசகர், சோறு என்னுஞ் சொல்லைப் "பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்" என்னும் திருவாசக அடியில் (15 : 7) பேரின்பப் பேறு அல்லது அறப்பயன் மிக்க திருவினை என்னும் பொருளில் ஆண் டிருப்பதுபோல், 'சாதம்' என்னும் சொல்லும் திருக்கோயில் அல்லது மதத்தொடர்பாகச் சிறப்புப் பொருளில் ஆளப்பட்டு வந்திருக் கின்றது. **அக்காளிமண்டை** பார்க்க; see *akkāḷi-maṇḍai*.

**அக்காளிமண்டை** *akkāḷi-maṇḍai*, பெ. (n.) ***மொந்தையாகப் படைக்கப்படும் திருக்கோயில் திருச்சோறு*** (S.I.I. iv, 77); big balls of food offered to idols in temples.

[ஒருகா. அங்காளி → அக்காளி. மொத்தை → மொந்தை → மண்டை. இனி, மொண்டை (மொந்தை) → மண்டை, மண்டையளவான சோறு என்றுமாம்.]

முதற்காலத்தில் அக்காளிமண்டையென்று வழங்கிய முழுத் தூய தமிழ் வழக்கே, ஆரியப் பூசாரியர் தென்னாடு வந்தபின் அக்காளிப் பிரசாதம் என இருபிறப்பியாக (hybrid) மாற்றப்பட்டிருக்கலாம்.

**அக்கானி** *akkāṇi*, பெ. (n.) ***அக்காரநீர்*** பார்க்க; see *akkāra-nīr*.

**அக்கி**[1] *akki*, பெ. (n.) ***ஒருவகைப் பூச்சி*** (வின்.); an insect.

**அக்கி**[2] *akki*, பெ. (n.) ***கற்றாழை*** (சித்.அக.); aloe.

[ஒருகா. அங்கனி (கற்றாழை) → அங்கி → அக்கி.]

**அக்கி**[3] *akki*, பெ. (n.) ***சூட்டினால் (உடலின் மிகு வெப்பத்தால்) சிறுசிறு கொப்புளப் படலமாகத் தோன்றும் தோல்நோய்;*** herpes.

ம. அக்கி, அக்கிக்கரப்பன்; தெ. அக்கி; பிராகி. அத்தி.

[உல் → உல → உலர், உலை. உல் → உள் → ஒள் → ஒளி → ஒளிர் → ஒளிறு. உள் → அள் → (அழு) → அழல். அழு → அகு → அகை. அகைதல் = எரிதல். "அகையெரி யானாது" (கலித். 139 : 26). அகு → அக்கு → அக்கி = தீ, சூடு, சூட்டுக்கரப்பன்.]

அக்நி என்னும் வடசொல்லை மூலமாகக் கொள்வர் ஒரு சாரார். அதுவுந் தென்சொற் றிரிபே யென்பதை அவர் அறியார்.

உள் → உண் → உண. உணத்தல் = காய்தல். உண → உணங்கு. உணங்குதல் = காய்தல். உண் → உண்ணம் > **Skt.** uṣṇa. உள் → அள் → (அழு) → அழல் → அழன் → அழனம் = தீ (பிங்.), வெம்மை (பிங்.). அழன் → அழனி → (அகனி) > **Skt.** agni; **L.** *ignis*.

ழ → க, போலித்திரிபு. ஒ.நோ: மழ(வு) → மக(வு), தொழு(தி) → தொகு(தி), முழை → முகை, குழை → குகை.

தளதள → தழதழ → தகதக. தகதக்வெனல் = மின்னுதல், ஒளிர்தல். தக → தகம் = எரிவு, சூடு. தகம் → தங்கம் = ஒளிரும் மாழை. தக → திக → திகழ் → திங்கள். தக → தகை = வெப்பம், நீர்வேட்கை. தகம் → தாகம் = நீர் வேட்கை. தக > **Skt.** dah.

**அக்கிக்காய்ச்சல்** *akki-k-kāyccal*, பெ. (n.) 1. ***உடம்பில் அக்கியை எழுப்பும் ஒருவகைக் காய்ச்சல்;*** a fever accompanied by herpes, herpetic fever. 2. ***உடம்பிற் சிறு குருக்களை யெழுப்பும் ஒருவகைக் காய்ச்சல்;*** an eruptive fever, the eruption which characterises such fever, *Exanthema*. 3. ***குழந்தைகளுக்கு அக்கியை யெழுப்பும் தணிமுறைக் காய்ச்சல்;*** remittent fever in children followed by a rash, *Exanthema subitum* (சா.அக.).

[அக்கி + காய்ச்சல். காய் → காய்ச்சல் (தொ.ஆகு.). 'சல்' தொ.பெ. ஈறு.]

**அக்கிக்கொடி** *akki-k-koḍi*, பெ. (n.) ***ஒருவகைக் கொடி;*** a creeper, twin-leaved mountain ebony (சா.அக.).

**அக்கிடம்** *akkiḍam*, பெ. (n.) 1. ***வசம்பு;*** sweet flag, *Acorus calamus*. 2. ***கற்றாழை;*** Indian aloe, *Aloe vera* (officinalis) (சா.அக.).

**அக்கிப்படுவன்** *akki-p-paḍuvaṉ*, பெ. (n.) ***குளிர் காய்ச்சல் கண்டு உடம்பிற் சில பாகங்களிற் சதை வீங்கிச் சிவந்து வலியுண்டாகி, தினவும் எரிச்சலும் கூடிய குருக்களை யெழுப்பி, சில நாளுக்குள் குணமடையும் ஒரு தோல்நோய்;*** a contagious skin disease appearing with eruptions on certain parts of the body, *Idiopathic erysipelas*.

[படுதல் = தோன்றுதல், பருத்தல். படு → படுவன்.]

**அக்கிப்படை** *akki-p-paḍai*, பெ. (n.) ***உடம்பில் அக்கியைப்போ லெழும்பும் ஒருவகைப் படை;*** a variety of skin eruption characterised by small vesicles in clusters of the nature of herpes, *Herpes farinosus*.

[படுதல் = பரத்தல். படு → படை. 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அக்கிப்பீச்சல்** *akki-p-pīccal*, தொ.பெ. (vbl.n.) 1. ***அக்கி யெழும்பல்;*** formation of grouped vesicles on an inflamed skin in any part of the body, *Herpes*. 2. ***பல்லி எச்சம் (மூத்திரம்) உடம்பிற்படுவதால் அக்கியைப்போற் சிறுசிறு***

கொப்புளங்கள் தோன்றுதல்; formation of a group of small ulcers on the surface of the skin, as a result of blistering caused by the urine of lizards (சா.அக.).

[பீச்சு → பீச்சல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அக்கிப்புடை** *akki-p-puḍai*, பெ. (n.) அம்மைக் கொப்புளங்கள் போன்ற குருக்கள் உடம்பின் மேல் திரட்சியாகத் தோன்றுவதால் உண் டாகும் சிவந்த வீக்கம்; a swelling on a reddish base caused by the eruption of vesicles and papulae in groups on the surface of the skin, *Herpes zoster* (சா.அக.).

[புடைத்தல் = வீங்குதல். புடை (முத.தொ. ஆகு.)]

**அக்கிப்பூடு** *akki-p-pūḍu*, பெ. (n.) கொடிமாமரம்; a species of spreading mango tree (சா.அக.).

[பூணுதல் = பொருந்துதல், நெருங்கிச் சேர்தல். பூண் → பூண்டு → பூடு = நிலத்தோ டொட்டிப் படர்ந்து கிடக்கும் நிலைத்திணை வகை. நிலத்தின்கீழ்ப் பற்கள் இறுகப் பொருந்தி விளையும் உள்ளி வகை.]

**அக்கிமகாரம்** *akkimakāram*, பெ. (n.) அக்கர காரம் பார்க்க; see *akkara-kāram*.

**அக்கிமச்சா** *akkimaccā*, பெ. (n.) அமுக்கிரா இலை (பரி.அக.); leaf of Indian winter cherry (செ.அக.)—அமுக்கிறா இலை; the leaf of the plant horse-root, *Withania somnifera* (சா.அக.).

**அக்கியம்[1]** *akkiyam*, பெ. (n.) (கணி.) பகல் 15 முழுத்தங்களுள் (முகூர்த்தங்களுள்) பதி னான்காவது (விதான. குணா. 73, உரை); (Astrol.) the 14th of 15 divisions of a day.

**அக்கியம்[2]** *akkiyam*, பெ. (n.) 1. ஈயமணல்; lead ore. 2. துத்தநாக மணல்; zinc ore (சா.அக.).

**அக்கியெழுது-தல்** *akki-y-eḻudu-*, 5 செ.கு.வி. (v.i.) அக்கிப் படலத்திற்கு மருந்தாக, அதன் மேற் செங்காவிக் குழம்பினால் மடங்கல் (சிங்கம்) அல்லது நாய் உருவம் வரைதல்; to paint the figure of a lion or dog with red ochre on the herpes sore, as a cure.

ம. அக்கியெழுத்து

மருத்துவர் பலரிருப்பினும், பொற் கொல்லர் அல்லது குயவரைக்கொண்டு அக்கி யெழுதுவிப்பதே வழக்கம்.

**அக்கிராந்தம்** *akkirāndam*, பெ. (n.) 1. சேம்பு (பச்.மூ.); Indian kales (செ.அக.). 2. சோம்பு; aniseed, seeds of the plant, *Pimpinella anisum* (சா.அக.).

**அக்கிலாங்கொடி** *akkil-āṅ-koḍi*, பெ. (n.) கருப்பு நாகதாளி; black and few-spined prickly pear, *Opuntia nigricans*.

[அக்கு = முள். அக்கில் + ஆம் + கொடி. 'இல்' சிறுமைப்பொருட் பின்னொட்டு. 'ஆம்' புணர்ச்சிச் சாரியை.]

**அக்கிலிப்பிக்கிலி** *akkili-p-pikkili*, பெ. (n.) 1. குழப்பம்; confusion. 2. மனக்குழப்பம் (இ.வ.); confusion of mind (Loc.).

தெ. அக்கிலி

[பிக்கு = 1. சிக்கு (வின்.) (தெ. பிக்கு). 2. குழப்பம் (வின்.) (தெ. பிக்கு). அக்கல் பிக்கல் என்னும் இணைச்சொல் அக்கிலிப் பிக்கிலி என்று திரிந்திருக்கலாம்.]

**அக்கிலு** *akkilu*, பெ. (n.) நெருஞ்சில் (மூ.அ.); tribulus plant.

[அஃகுதல் = கூராதல். அஃகு → அக்கு → அக்கில் → அக்கிலு.]

**அக்கிள்** *akkiḷ*, பெ. (n.) அக்குள் பார்க்க; see *akkuḷ*.

**அக்கினி** *akkiṉi*, பெ. (n.) நெருஞ்சில் (மலை.); tribulus plant.

[அஃகு = கூர்மை. அஃகு → அக்கு → அக்கில் → அக்கிலி → அக்கினி.]

**அக்கு[1]** *akku*, பெ. (n.) 1. எருத்துத் திமில் (பிங்.); ox's hump. 2. சிவமணி (உருத்தி ராக்க மணி); rudrākṣa bead. "அக்கை யணிந்தவர்" (திருவானைக். கோச்செங். 4). 3. அகில் (மலை.); eaglewood. 4. உகா (L.); sand-paper tree.

[அஃகுதல் = சுருங்குதல், குவிதல், கூராதல், நுண்ணிதாதல். அஃகு → அக்கு. எருத்துத் திமில் குவிந்தது. சிவமணி, மத்தங்காய் (ஊமத்தங் காய்) போலும் பலாக்காய் போலும் முட்போன்ற முனைகளையுடையது. அக்கு = கூரிய முனை. ஒ.நோ: முள்மணி → முண்மணி = சிவமணி. கள் (முள்) மணி → கண்மணி = சிவமணி. கள் → கள்ளி = முட்செடி. ஒ.நோ: முள் → முள்ளி = முட்செடி.]

*ak*, to be sharp, to pierce. **Gk.** *ak-ros*, pointed. *ak-onē*, whetstone. *ak-me*, edge.

**L.** *ac-us*, needle. *ac-uere*, to sharpen. *ac-iēs*, edge. *acumen*, anything sharp. **AS.** *ecg*, edge. **E.** *acute*, sharp, pointed. f. **L.** *acutus*, p.p. of *acuere*. **Fr.** *aigu*, acute.

அக்கு என்பதே முதன்முதல் தோன்றிய இயற்கையான பெயர். அது 'அம்' என்னும் பெருமைப்பொருட் பின்னொட்டுப் பெற்று அக்கம் என்றானது. **ஒ.நோ:** முத்து → முத்தம் (பருமுத்து). அக்கம் = பருஞ் சிவமணி.

ஆரியப் பூசாரியர் அக்கம் என்பதைச் சமற்கிருதத்தில் அக்ஷ என்று திரித்து, அதற்குக் கண் என்று வடமொழிப் பொருள்கொண்டு, ஆரிய உருத்திரனைத் (Rudra) தமிழ்ச் சிவனாக்கி, சிவமணியை உருத்திராக்கம் (ருத்ராக்ஷ) என்றனர். அக்காலத்தில் மொழி நூல் வளர்ச்சி பெறாமையாலும், ஆரிய மொழி தேவமொழியென நம்பப்பட்டமையாலும், தமிழர் அதை எதிர்த்திலர்.

வேத ஆரியர் இந்தியாவிற்குட் புகு முன்னரே, அவர் முன்னோர் மேலையாசியாவில் ஒரு தனி வகுப்பினராகத் தோன்று முன்னரே, வடதிரவிடரான பிராகிருதர் ஐரோப்பா சென்று ஆரியராக மாறு முன்னரே, மாந்தன் பிறந்தகமான குமரிநாட்டுத் தமிழருள் ஒரு சாராரான சிவனியர் குறிஞ்சி நிலமான நேபாளநாட்டு அக்குமணியை யணிந்து அதைச் சிவமணியாக்கினர்.

இன்னும் இதன் விளக்கமும், 'ருத்ராக்ஷ' என்னும் வடசொல்லையே தென்சொல்லின் மூலமாகக் காட்டுவதற்கு ஆரியர் புனைந்த கதையின் புரட்டும், 'உருத்திராக்கம்' என்னுஞ் சொல்லின்கீழ்க் காண்க.

அகில் ஒருவகை முண்மரத்தின் வயிரம். "கள்ளி வயிற்றி னகில்பிறக்கும்" (நான்மணிக். 6).

உகா இலை சிறு முட்படலம்போற் சுரசுரப்பானது.

**அக்கு**[2] *akku*, பெ. (n.) எட்டி (மலை.); strychnine.

**அக்கு**[3] *akku*, பெ. (n.) **முள்**; thorn, anything sharp or pointed.

*[அள் = கூர்மை. அள் → அள்கு → அ:கு → அக்கு.]*

**அக்கு**[4] *akku*, பெ. (n.) 1. **வெள்ளை** (திவ். பெரியாழ். 1.7 : 3, வியா.); whiteness. 2. **எலும்பு**; bone. "அக்கும் புலியி னதளுமுடையார்" (திவ். பெரியதி. 9.6 : 1). 3. **சங்கு**; chank. 4. **சங்குமணி**; chank bead or ring. "அக்கின் னகையிவள்" (திருக்கோ. 376).

*[எல் = ஒளி, வெள்ளை. ஒருகா. எல் → அல் → அல்கு → அ:கு → அக்கு என்று திரிந்திருக்கலாம். அக்கு = வெள்ளை, வெள்ளையான எலும்பு, வெண்சங்கு.]*

எலும்பு வெண்ணிறமானது. அதனாலேயே எலும்பெனப்பட்டது. எலும்புபோற் சங்கு வெண்ணிறமானது. சங்கினாற் செய்யப்பட்ட மணியும் சங்கெனப்பட்டது; கருவியாகுபெயர். இனி, இயற்கையான சங்கு முண்முனைகளை யுடைமையால் அக்கெனப் பட்டது என்றுமாம்.

**அக்கு**[5] *akku*, பெ. (n.) பலகறை (சங்.அக.); cowry.

*[அக்கு = வெள்ளை, வெள்ளையான பலகறை.]*

பறையலகு → பலகறை (ஒருவகை முறை மாற்று). ஒரு சொல்லின் எழுத்துகள் அல்லது ஒரு கூட்டுச்சொல்லின் சொற்கள் முன்பின்னாக முறை மாறுவது முறைமாற்று. விசிறி → சிவிறி என்பது எழுத்து முறை மாற்று; இல்முன் → முன்றில் என்பது சொன் முறைமாற்று. பறையலகு (பறை அலகு) என்பது பலகறை என்று மாறியபோது, பகரமும் அகரமும் முன்போன்றே நிற்க, 'றை' 'லகு' என்னும் அசைகளே முறைமாறியிருப்பதால், இதை இடையிட்ட அசைமாற்று என்றே கூறல்வேண்டும். "பறையல கனைய வெண்பல்" (சீவக. 2773).

ஓரத்திற் கூரிய முனைவரிசையுள்ள சில பறவை யலகுபோலிருப்பதால், 'கவடி' பறை யலகு எனப் பெயர் பெற்றது போலும்! இது உவமையாகுபெயர்.

**அக்கு**[6] *akku*, பெ. (n.) **துண்டு**; piece. அக்கக் காய் = துண்டுதுண்டாக.

*[அகைத்தல் = அறுத்தல். "அகைத்தகைத் திவேர்" (சீவக. 2766). அகு → அகை. ஒ.நோ: பகு → பகை. அகு → அக்கு = துண்டு.]*

**அக்கு**[7] *akku*, இடை. (part.) **ஒரு சொல்லாக்க ஈறு**; a formative particle.

எ-டு: கதக்கு, சளக்கு, படக்கு, மடக்கு.

கதக்குக் கதக்கென்று வெட்டினான், சளக்குச் சளக்கென்று துப்பினான், படக்குப்

படக்கென்று கண் துடிக்கிறது, மடக்கு மடக்கென்று (செம்புநீர்) முழுவதையும் குடித்து விட்டான். இவை உலகவழக்கு. கத + அக்கு, சள + அக்கு, பட + அக்கு, மட + அக்கு என்று பிரியும்.

''இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்படப் பிறவும்,
அன்ன என்ப சாரியை மொழியே''
(தொல். எழுத்து. புண. 17)

என்று சாரியை நூற்பா யாத்த தொல் காப்பியரே,

''எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதிமெய் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகர முற்றத் தோன்றாது''
(தொல். எழுத்து. புண. 26)

என்று அக்குச் சாரியைக்கு வரையறவும் வகுத்தார்.

அதனால் 'குன்றக்கூகை, மன்றப் பெண்ணை, ஈமக்குடம், அரசக்கன்னி, தமிழக் கூத்து' என்று இளம்பூரணரும்;

'குன்றக்கூகை, மன்றப்பெண்ணை, ஈமக் குடம், கம்மக்குடம், தமிழக்கூத்து' என்று நச்சினார்க்கினியரும் எடுத்துக்காட்டினர்.

இனி, ''வல்லெழுத்து வருவழி'' என்று தொல்காப்பியர் குறித்தது குன்றக்கூறலா யிருத்தல் கண்டு,

'' 'முற்ற' என்றதனால், வன்கணமன்றி மற்றக் கணங்கட்கும் கொள்க. தமிழநூல், தமிழயாப்பு, தமிழவரையர் என வரும்'' என்று இளம்பூரணரும்;

'' 'முற்ற' என்பதனால், வன்கணமன்றி ஏனையவற்றிற்கும் இவ் விதி கொள்க. தமிழ நூல், தமிழயாழ், தமிழவரையர் என வரும். இன்னும் இதனானே தமக்கேற்ற இயைபு வல்லெழுத்துக் கொடுத்து முடித்துக் கொள்க'' என்று நச்சினார்க்கினியரும் குறை நிறைத்துக் கூறியுள்ளனர். ஆயினும், தொல் காப்பியரும் அவர்வழிச் செல்லும் உரை யாசிரியர்களும் குறித்த அக்குச் சாரியையை மட்டும் எவ்வகையிலும் எவ்வெடுத்துக் காட்டிலுங் காண்பதற்கில்லை. ஏனெனின், அக்குச் சாரியை யென்றே ஒரு சாரியை தமிழில் இல்லவேயில்லை யென்பதே உண்மை யான நிலை.

குன்றம், கூகை என்னும் இரு சொல்லும் புணருமிடத்து, நிலைச்சொல் ஈறுகெட்டு வருஞ்சொல் முதன்மெய் மிக்குக் குன்றக்கூகை யெனப் புணர்வதே, முறைமையும் இயற்கையு மாகும். இங்ஙனமே, மன்றம் + பெண்ணை, ஈமம் + குடம், கம்மம் + குடம், அரசன் + கன்னி, தமிழன் + கூத்து என்பனவும். அரசன், தமிழன் என்பன இங்கு அரசக் குடும்பத்தை அல்லது கொடிவழியையும் தமிழ இனத்தையும் குறிப்பன என்றறிதல் வேண்டும்.

தமிழநூல், தமிழயாப்பு, தமிழயாழ், தமிழ வரையர் என்பன, வருஞ்சொல் முதலில் வல்லெழுத்தின்மையால் வந்தவெழுத்து மிகாது புணர்ந்தன.

இனி, குன்றக்கூகை, மன்றப்பெண்ணை, ஈமக்குடம், கம்மக்குடம், அரசக்கன்னி, தமிழ யாழ் என்னும் புணர்சொற்களில், குன்று, மன்று, ஈம், கம், அரசு, தமிழ் என்பவற்றையே நிலைச்சொல்லாகக் கொள்ளினும், அவை அகரச் சாரியை ஏற்று, வந்த எழுத்து மிக்கும் மிகாதும் புணர்ந்தன எனக் கொள்வதல்லது, தொல்காப்பியர் கூறியவாறு, அக்குச் சாரியை பெற்று அகரமொழிந்தவை கெட்டுப் புணர்ந்தன எனக் கொள்வது, உத்திக்கும் இயற்கைக்கும் பொருந்தாது.

குன்றக்கூகை என்பதில் அக்குச் சாரியை வந்ததெனக் கொள்ளின், குன்றச்சோலை என்பதில் அச்சுச் சாரியையும், குன்றத்தேக்கு என்பதில் அத்துச் சாரியையும், குன்றப் பாவை என்பதில் அப்புச் சாரியையும் வந்தன வெனக் கொள்ளல் வேண்டும். அங்ஙனங் கொள்ளலாகாமை காண்க.

வடக்கு, கிழக்கு என்பனவோவெனின், அவை மேற்கு (மேல்+கு), தெற்கு (தென்+கு) என்பன போலக் குவ்வுருபு பெற்ற தனிச் சொற்களே யென்பதறிக. வடம் + கு — வடக்கு. கீழ்+கு — கீழ்க்கு → கிழக்கு.

''செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை''

என்னுங் குறளை (488) நோக்குக.

'அக்கு' என்றொரு சாரியை உண்மையாக விருப்பின், பட்டினத்துப்பிள்ளையார், மழை யத்துப்போகருது என்று தொடர்ச்சொல்லி லும், நகரத்தான், புறத்தான் என்று தனிச் சொல்லிலும், அத்துச் சாரியை வருதல் போல, அக்குச் சாரியையும் ஏதேனுமொரு சொல்லில் அல்லது சொற்றொடரில் வருதல் வேண்டும். அங்ஙனம் வருதல் எங்கும் இல்லை. ஆகவே,

''மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்''
(நன். 219),

''ஈமும்
கம்மும் உருமும் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே''
(நன். 223),

''தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே''
(நன். 225)

என்னும் நன்னூல் நூற்பாக்களின்படியே, மேற்காட்டிய குன்றக்கூகை முதலிய புணர்ச் சொற்கள் அக்குச் சாரியை யென்றொரு சாரியை பெறாது, நிலைச்சொல் வீறு கெட்டும், அகரச் சாரியை பெற்றும், வருஞ் சொல் முதன்மெய் மிக்கும் மிகாதும், உயிர் வரின் உடம்படுமெய் பெற்றும் புணர்ந்தன வென்று கொள்க.

இனி,
''அன்ஆன் இன்அல் அற்றிற் றத்தம்
தம்நம் நும்ஏ அஉ ஐகுன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே''

என்னும் (நன். 244) நூற்பாவில் அக்குச் சாரியை கொள்ளப்படாமையையும், மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர்களால் ஆய்வு செய்யப்பட்ட **தமிழ்ச்சொல் லகராதி** இக் கொள்கைக்கு உடன்பட்டிருத்தலையும் நோக்குக.

ஆகவே, அக்குச் சாரியை என்பது ஒரு சிலரின் திரிபுணர்ச்சியே யாதலால், இவ் வகர முதலியிற் கொள்ளப்படவில்லையென அறிக.

**அக்குக்கணம்** *akku - k - kaṇam*, பெ. (n.) 1. **எலும்பைப்பற்றிய ஒரு கணநோய்.** இது பொதுவாகக் குழந்தைகட்கு ஏற்படும். இதனால் எலும்பிற் குள்ளிருக்கும் மூளைத் தாது தாக்கப்பட்டு அழிவுறும்; a disease, chiefly in infants, affecting the bones in the system and in which the cells of the bone-marrow disappears, *Osteotabes*. 2. **குழந்தை கட்கு உச்சிக்குழி மூடாமல் எலும்புகளைத் தாக்கி, அதனால் அவை மெதுவாகி வளைந்தும் கோணலாகியும் காணுவதோடு, நரம்புநோய், காய்ச்சல், வலிப்பு, சதைவலி முதலிய குணங் களைக் காட்டும் நோய்;** a constitutional disease in children, marked by bending and distortion of the bones, delayed closure of the fontanels, and degeneration of the liver and the spleen. There are often nervous affections, feverishness, convulsions, pain in the muscles etc., a kind of rickets (சா.அக.).

[அக்கு = எலும்பு. கணம் = கணை.]

**அக்குக்கழலை** *akku - k - kaḻalai*, பெ. (n.) 1. **எலும்பின்மே லுண்டாகும் கழலைக் கட்டி;** a hard tumour developing on a bone, *Osteoma*. 2. **எலும்பின் கழலைக் கட்டி;** tumour of a bone, *Osteoncus* (சா.அக.).

[அக்கு = எலும்பு. கழல் → கழலை = நெகிழ்ந் தசையுங் கட்டி.]

**அக்குக்குறுக்கம்** *akku-k-kuṟukkam*, பெ. (n.) **எலும்பு சிறிதாகல்;** diminution of a bone, retarded ossification (சா.அக.).

[அக்கு = எலும்பு. குறு → குறுகு → குறுக்கு → குறுக்கம். 'அம்' தொ.பெ. ஈறு.]

**அக்குக்குறுக்கி** *akku-k-kuṟukki*, பெ. (n.) **எலும்பைச் சிறியதாக்கும் நோய்;** a disease causing diminution in the size of a bone, rickets, atrophy of the bone, *Osteonabrosis*.

[அக்கு = எலும்பு. குறு → குறுகு → குறுக்கு → குறுக்கி. 'இ' வி.முத. ஈறு.]

**அக்குச்சரி** *akku-c-cari*, பெ. (n.) **சங்குவளையல்;** shell-bracelet. ''கைச்செறி யக்குச்சரி'' (தக்க யாகப். 100).

[அக்கு = வெண்சங்கு. சுரி → சரி = வளை, வளையல்.]

**அக்குச்சுருக்கம்** *akku-c-curukkam*, பெ. (n.) **அக்குக்குறுக்கம்** பார்க்க; see *akku-k-kuṟukkam*.

**அக்குணி** *akkuṇi*, பெ. (n.) **சிறிதளவு;** small quantity, trifle. எனக்கு அக்குணி கொடுத் தான் (உ.வ.).

[அக்கு = அறுப்பு, வெட்டு. அக்குண்ணுதல் = அறுக்கப்படுதல். 'உண்' ஒரு செயப்பாட்டுப் பொருள் துணைவினை. அக்குண்ணி → அக்குணி = அறுக்கப்பட்ட சிறு துண்டு. 'இ' செயப். வி.முத. ஈறு.]

**அக்குணிப்பிள்ளை** *akkuṇi-p-piḷḷai*, பெ. (n.) 1. **சிறுகுழந்தை;** child congenitally small. 2. **நாடிக் குற்றத்தினால் (தோஷத்தினால்) அல்லது காரணந் தெரியாது இளைத்துச் சிற் றளவாகவுள்ள குழந்தை;** child abnormally small due to bad humours of the system or to emaciation with no obvious cause, *Marasmus infantalis* (சா.அக.).

[புள் → பிள் → பிள்ளை.]

அக்குணி பார்க்க; see *akkuṇi*.

**அக்குருக்கி** *akkurukki*, பெ. (n.) **எலும்புருக்கி என்னும் நோய்**; consumption (W.)— a disease causing necrosis or degeneration of the bone, *Osteonecrosis* (சா.அக.).

[அக்கு + உருக்கி. அக்கு = எலும்பு. உருகு (த.வி.) → உருக்கு (பி.வி.) → உருக்கி. 'இ' வி.முத. ஈறு.]

**அக்குல்லி** *akkulli*, பெ. (n.) 1. அஃகுல்லி பார்க்க; see *akkulli*. 2. **ஒருவகைச் சிற்றுண்டி** (சங்.அக.); a kind of confectionary. 3. பிட்டு (மூ.அ.); a kind of steamed meal cake. ஒ.நோ: **Skt.** Šaṣkulī

[அ:குல்லி → அக்குல்லி.]

**அக்குல்லு** *akkullu*, பெ. (n.) **நெல்வகை** (நெல்விடு.); a kind of paddy.

தெ. அக்குல்லு

**அக்குவடம்** *akku-vaḍam*, பெ. (n.) **சங்கு மணி வடம்**; string of shell beads for the neck or waist. ''அக்கு வடமுடுத்து'' (திவ். பெரியாழ். 1.7 : 2).

[அக்கு = வெண்சங்கு. வள் → வட்டு → வட்டம் → வடம். உருண்டு திரண்ட கயிறு அல்லது தொடரி (சங்கிலி).]

**அக்குவலி** *akku-vali*, பெ. (n.) **எலும்புநோவு**; pain in a bone or in the bones, *Ostealgia* or *Ostalgia* (சா.அக.).

**அக்குவா** *akkuvā*, பெ. (n.) **சிற்றுண்டிவகை**; cake, sweet cake (சா.அக.).

**அக்குள்** *akkuḷ*, பெ. (n.) **விலாக்குழி, கமுக்கூடு**; armpit.

ம. அக்குளம்; க. கங்குழு, கங்குள், கவுங்குள்; தெ. சங்க, கௌங்குலி; து. கங்களு.

[ஒருகா. அக்கு (அக்கம்) = பக்கம். உள் = உள்ளிடம். ஒ.நோ: பக்கம் = சிறகு.]

அக்கிள் என்பது கொச்சை வடிவு.

**அக்குள் கட்டி** *akkuḷ-kaṭṭi*, பெ. (n.) **அக்குளில் நிலப்பூசணிக் கிழங்களவு பருமனுங் கெட்டியுமாய் எழும்பும் கட்டி**; inflammatory swelling of a lymphatic gland of the size of white yam under the armpit, *Bubo* (சா.அக.).

**அக்குள் படை** *akkuḷ-paḍai*, பெ. (n.) **அக்குளில் தோன்றும் படை**; ringworm of the axilla (armpit), *Tinea axillaris* (சா.அக.).

**அக்குள்பாய்ச்சு-தல்** *akkuḷ-pāyccu-*, 5 செ.கு.வி. (v. i.) 1. **விளையாட்டாகப் பிறர் கமுக்கூட்டுள் கைவிட்டு மெல்லச் சொறிந்து கூச்சமுண்டாக்குதல்**; to tickle a person's armpit for fun. 2. **காமக் குறிப்பொடு ஒரு பெண்ணின் கமுக்கூட்டுள் கைவிடுதல் அல்லது கூச்சமுண்டாக்குதல்**; to touch or tickle a female person's armpit as an amorous gesture.

ம. கிக்கிளி, கிக்கிளியிடல்; க. அக்களு; தெ. கிதகித பெட்டு.

[பாய் (த.வி.) → பாய்ச்சு (பி.வி.). 'சு' பி.வி. ஈறு.]

அக்குள் பார்க்க; see *akkuḷ*.

**அக்குள் மயிர்** *akkuḷ-mayir*, பெ. (n.) **கமுக்கூட்டு மயிர்**; the hairs in the armpit (axilla), *Glandebalae* (சா.அக.).

[மை = கருப்பு. மை → மயி → மயிர் = கரிய முடி.]

அக்குள் பார்க்க; see *akkuḷ*.

**அக்குளு-த்தல்** *akkuḷu-*, 4 செ.கு.வி. (v.i.) **அக்குளிற் கூச்சமுண்டாக்குதல்**; to tickle the armpit. '' அக்குளுத்துப் புல்லலு மாற்றேன் '' (கலித். 94 : 20).

[அக்குள் (பெ.) → அக்குளு (வி.).]

**அக்குளு** *akkuḷu*, பெ. (n.) **அக்குள் கூச்சம்** (கலித். 94 : 20, உரை); tickling sensation in the armpit.

[அக்குள் → அக்குளு (முத.தொ.பெ.) = அக்குளுப்பு.]

**அக்குளுக்காட்டு-தல்** *akkuḷu-k-kāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **அக்குளிற் கூச்சமுண்டாக்குதல் (கிச்சுக்கிச்சு மூட்டுதல்)** (கலித். 94 : 20, உரை); to tickle the armpit.

[அக்குள் → அக்குளு. காண் (த.வி.) → காட்டு (பி.வி.). காண் + து – காட்டு. காட்டுதல் = காண்பித்தல், தோற்றுதல், உண்டாக்குதல்.]

**அக்கேனம்** *akkēṉam*, பெ. (n.) **அஃகேனம்** பார்க்க; see *akkēṉam*.

**அக்கை** *akkai*, பெ. (n.) 1. **அன்னை**; mother. 2. **உடன்பிறந்த மூத்தாள்**; elder sister. 3. **அரத்த வுறவுற்ற அக்கை முறையாள்**; cousin-sister.

4. **திருமணவுறவாலான அக்கை முறையாள்**; a senior girl or woman who has become a cousin-sister through marriage alliance. 5. **மதிப்பினால் அல்லது அன்பினால் அக்கா என்று விளிக்கப்படும் அல்லது சொல்லப்படும் உறவல்லாத மூத்த பெண்**; an unrelated senior girl or woman addressed or spoken of as *akkā* by courtesy or love.

*[ அம்மை → அவ்வை → அக்கை. ]*

செந்தமிழ் நடையில் அல்லது இலக்கண முறையில் எழுவாயாக வழங்கக்கூடிய வடிவம், அக்கை என்பதே. அக்கா என்பது கொச்சை; அக்காள் என்பது கொச்சையும் வழுவுங் கலந்தது.

இருளர் பேச்சில் தாயைக் குறிக்கும் அக்வெ என்னுஞ் சொல், அக்கவ்வை (அக்கை + அவ்வை) என்னும் இணைச்சொல்லின் திரிபா யிருக்கலாம். இது, சில வகுப்பார் தந்தையை அப்பச்சி என்று வழங்குவது போன்றது.

அக்கை யென்னும் திரவிடச்சொல் சித்திய மொழிகளிற் பெருவழக்காக வழங்கினும், அது திரவிடச் சொல்லேயன்றிச் சித்தியச் சொல்லாகாது. அக்கை யென்பதன் இனச் சொல் சித்திய மொழிகளில் தங்கையையும் குறித்தலால், அது முதுமையை யுணர்த்தும் 'அக்' என்னும் மூலத்தினின்று தோன்றிய தென்பதும் பொருந்தாது.

மேலும், உலக முதல் உயர்தனிச் செம் மொழியாயிருப்பதும், சொல்வளம் மிக்க தென்று கால்டுவெலாராற் பாராட்டப் பெற்றதுமான தமிழ், அக்கையைக் குறிக்கச் சொல்லின்றிச் சித்தியமொழிக் குடும்பத்தி னின்று கடன்கொண்ட தென்பது, உத்திக்குப் பொருந்துவதன்று.

பொதுவாக, அன்னைமுறைப் பெயர்களே அக்கைக்கும் வழங்கிவருகின்றன. அவ்வை, அக்கை, அத்தி, அச்சி என்னும் நாற்பெயரும் தாய்க்கும் மூத்த உடன்பிறந்தாட்கும் பொதுவாயிருத்தலையும், அவை தாயையே முந்திக் குறித்தலையும் நோக்குக.

வகரம் ககரமாகத் திரிவது பன்மொழிப் பொதுவியல்பு.

எ-டு: சிவப்பு → சிகப்பு. E. ward → guard.

செவ்வல் என்பது செக்கல் என்று திரிந்திருத் தலால், அவ்வை என்பதே அக்கையென்று திரிந்திருத்தல் வேண்டும்.

அவ்வை யென்னுஞ் சொன்மூலத்தை, அச் சொல் லுருப்படியிற் காண்க.

"Can. and Tel. *akka*, elder sister; Tam. *akkei*, *akkā*, and *akkāḷ*; Marāṭhi *akkā*. In Sans. *akkā* signifies a mother; and an improbable Sans. derivation has been attributed to it by native scholars. I believe this word to be one of those which the Sans. has borrowed from the indigenous Dravidian tongues; and this supposition is confirmed by its extensive use in the Scythian group. The Sans. signification of this word, a mother, differs, it is true, from the ordinary Dravidian meaning, an elder sister; but mother is one of its meanings in poetical Tamil, and a comparison of its significations in various languages shows that it was originally used to denote any elderly female relation, and that the meaning of the ultimate base was probably 'old'. The following are Scythian instances of the use of this root with the meaning of elder sister, precisely as in the Dravidian languages: Tungusian *oki* or *akin;* Mongolian *achan*; Tibetan *achche*; a dialect of the Turkish *ege;* Mordvin *aky;* other Ugrian idioms *iggen*. The Lappish *akke* signifies both wife and grandmother. The Mongol *aka*, Tungusian *aki*, and the Uigur *acha,* signify an elder brother; whilst the signification of old man is conveyed by the Ostiak *iki,* the Finnish *ukko,* and the Hungarian *agg*. Even in the Ku. a Dravidian dialect, *akke* means grandfather. The ultimate base of all these words is probably *ak*, old. On the other hand, *akka*, in Osmanli Turkish, means a younger sister; and the same meaning appears in several related idioms. It may, therefore, be considered possible that *akka* meant originally sister; and then elder sister or younger sister, by secondary or restricted usage. The derivation of *akka,* from a root signifying old, would appear to be the more probable one." (C.G.D.F.L.— pp. 611-12).

**அக்கைச்சி** *akkaicci*, பெ. (n.) **மூத்த உடன் பிறந்தாள்**; elder sister.

ம. அக்கச்சி

*[அக்கை + அச்சி – அக்கையச்சி → அக்கைச்சி. அச்சி = தாய்.]*

அக்கை தாய் போன்றவளாதலால், அச்சி என்பது மதிப்பும் அன்பும்பற்றிப் பின்னொட்டாகச் சேர்க்கப்பட்டது.

அக்கை என்பது தாயைக் குறிக்குமாயின், அக்கைச்சி அல்லது அக்கச்சி என்பது அம்மாச்சி என்பது போன்று பாட்டியைக் குறிக்கும்.

அக்கச்சி பார்க்க; see *akkacci.*

**அக்கோ** *akkō,* இடை. (int.) வியப்பு, இரக்கம், துயரம் முதலியவற்றை யுணர்த்தும் குறிப்பு; an exclamation of wonder, pity, grief etc.

[அக்கை → அக்கோ (விளி). அக்கை என்பது முதற்காலத்தில் தாயைக் குறித்ததனால், அதன் விளிவடிவம் வியப்பு, இரக்கம் முதலியவற்றை யுணர்த்தும் குறிப்பிடைச் சொல்லாயிற்று. ஒ.நோ: அம்மை → அம்மோ, அன்னை → அன்னோ.]

**அக்கோலம்** *akkōlam,* பெ. (n.) 1. தேற்றாங் கொட்டை; clearing nut, so called from its power of purifying muddy water. 2. தேற்றா மரம்; clearing nut tree, *Strychnos pototorium* (சா.அக.).

[ஒருகா. அம் + கோலம் – அங்கோலம் → அக்கோலம்.]

**அகக்கடவுள்** *aga-k-kaḍavuḷ,* பெ.(n.) 1. ஆதனுக் குள்ளிருக்குங் கடவுள்; God, as immanent in the individual soul (W.). 2. வழிபடுதெய்வம்; tutelary deity, the deity which a man worships as his own God or the God of his family or caste. 3. ஆதன் (ஆன்மா); soul.

[அகம் + கடவுள். கட → கடவுள். 'உள்' தொ.பெ. ஈறு. முக்கரணங்களையுங் கடந்து நிற்பவர் கடவுள்.]

**அகக்கடுப்பு** *aga-k-kaḍuppu,* பெ. (n.) 1. உள் வலி, வயிற்றுக்கடுப்புப்போல் உடம்பின் உள் ளுறுப்புகளுள் உண்டாகும் வலி; irritation in the internal organs of the body. 2. குடல் வலி; colic pain due to irritation in the intestines. 3. மனக்கடுப்பு, வெகுளி; anger, indignation (சா.அக.).

[அகம் + கடுப்பு. கடுத்தல் = மிகுதல், கடுமை யாதல், நோதல். கடு → கடுப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அகக்கண்** *aga-k-kaṇ,* பெ. (n.) 1. உட்கண்; inner vision. 2. அறிவம் (ஞானம்); wisdom. 3. மனம்; mind. 4. எலும்பின் உட்டுளை; a cavity in a bone. 5. புண்புரை; an abnormal infiltration of ulceration, *sinus* (சா.அக.).

**அகக்கணு** *aga-k-kaṇu,* பெ. (n.) 1. மரங்களி லுண்டாகும் உட்கணு; inner tuberosity (W.). 2. எலும்பின் உட்புறந் தோன்றும் கணு; any protuberance on the inner side of a bone, inner or internal tuberosity (சா.அக.).

[அகம் + கணு. கண்ணுதல் = பொருந்துதல். கண் → கணு = பொருத்து, பொருத்தில் தோன் றும் புடைப்பு.]

**அகக்கரணம்** *aga-k-karaṇam,* பெ. (n.) 1. மதி (புத்தி), உள்ளம் (சித்தம்), மனம், நானுணர்வு (அகங்காரம்) என்னும் உட்புலன்கள் அல்லது அறிவுப் புலன்கள் நான்கனுள் ஒன்று; one of the four internal intellectual faculties viz., intellect, determinative power, mind and ego. 2. மனம்; mind. ''சமமகக் கரண தண்டம்'' (கைவல். தத். 2).

[அகம் = உள். கரணம் = கருவி.]

கரணம் பார்க்க; see *karaṇam.*

**அகக்கருவி** *aga-k-karuvi,* பெ. (n.) (இலக்.) சொற்புணர்ச்சிக்கு முதற்படிக் கருவியாக உதவும் எழுத்திலக்கண நூற்பாத் தொகுதி; (Gram.) the versified orthographical rules bearing instrumental relationship of the first degree, to those directly dealing with combination of letters, as components of words.

'இக் கூறிய இலக்கணங்கள் கருவியுஞ் செய்கையுமென இருவகைய. அவற்றுட் கருவி, புறப்புறக்கருவியும் புறக்கருவியும் அகப்புறக் கருவியும் அகக்கருவியுமென நால்வகைத்து. நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக்கருவி; மொழிமரபு புறக்கருவி; புணரியல் அகப் புறக்கருவி; ''எகர ஒகரம் பெயர்க்கீ றாகா'' (தொல். எழுத்து. 272) என்றாற் போல்வன அகக்கருவி' (தொல். எழுத்து. நூன். 1, நச். உரை).

[அகம் + கருவி. அகம் = உள், உள்நெருக்கம், பிறவற்றினும் நெருங்கிய தொடர்பு, முதற்றர உறவு. கரு → கருவி (தொ.ஆகு.).]

கருவி பார்க்க; see *karuvi.*

**அகக்களிப்பு** *aga-k-kaḷippu,* பெ. (n.) மன மகிழ்ச்சி; exultation, elation of spirits.

**அகக்காட்சி** *aga-k-kāṭci,* பெ. (n.) இயற்கைக் காட்சி கம்மியனின் உள்ளத்தில் தோற்றுவிக்கும்

வடிவம்; the image produced by nature in the mind of a sculptor. 'சிற்ப வடிவங்கள் இயற்கை உடற்கூறுகளைக் கொண்டிருப்பி னும், அவற்றின் புறத்தோற்றத்தை அகக் காட்சியைக் கொண்டே அமைப்பது முதற் படியாகும்' (சி. செ. பக். 118, பத்தி 4).

**அகக்காழ்** *aga-k-kāḻ*, பெ. (n.) *1.* **மரத்தின் உள் வயிரம்**; core of a tree, as the hardest part. "அகக்கா ழனவே மரமென மொழிப" (தொல். பொருள். மர. 86). *2.* **ஆண்மரம்** (பிங்.); male tree. *3.* வயிரக்கல்; diamond, a substance of impenetrable hardness, adamant (சா.அக.).

*[அகம் + காழ். காழ்த்தல் = மிகுதல், அளவு கடத்தல், முற்றுதல், வயிரங்கொள்ளுதல். காழ் (முத.தொ.ஆகு.) = வயிரம்.]*

**அகக்குறி** *aga-k-kuṟi*, பெ. (n.) *1.* உட்குறி. **அதாவது, நோயினால் உடம்பினுட் காணுங்குறி**; internal symptom of a disease. *2.* **காமவின்பக் குறி**; symptom of sexual pleasure (சா.அக.).

**அகக்கூத்து** *aga-k-kūttu*, பெ. (n.) **உண்மை (சத்துவம்), ஒண்மை (இராசதம்), இருண்மை (தாமதம்) என்னும் முக்குணத் தொடர்பான நடிப்பு அல்லது கூத்து**; exposition, by gesture and dancing of the three fundamental qualities. "குணத்தின் வழியதகக் கூத்தெனப் படுமே" (குணநூல்), "அகத்தெழு சுவையா னகமெனப் படுமே" (சயந்தம்)—(சிலப். 3 : 12, அடியார்க். உரை).

**அகக்கூத்துக்கை** *aga-k-kūttu-k-kai*, பெ. (n.) (நடம்) **அகக்கூத்திற்குரிய எழிற்கை, தொழிற்கை, பொருட்கை என்னும் மூவகைக் கைந் நளிநயங்கள்**;(Dan.) three hand-poses, viz., graceful pose, imitative pose and meaningful pose pertaining to expositional dance.

'எழிற்கையுந் தொழிற்கையு மென்றது: எழிற்கை - அழகுபெறக் காட்டுங்கை. தொழிற்கை - தொழில்பெறக் காட்டுங்கை. உம்மையாற் பொருட்கையும் கூறப்பட்டது. பொருட்கை - பொருளுறக் காட்டுங்கை. என்னை ?

"அவைதாம்,
எழிற்கை யழகே தொழிற்கை தொழிலே
பொருட்கை கவியிற் பொருளா கும்மே"

என்றாராகலின். கொண்ட வகையறிந்து : கொண்ட வகையறிதலாவது, பிண்டியும் பிணையலும் புறக்கூத்துக்குரிய கையென்றும், எழிற்கையும் தொழிற்கையும் அகக்கூத்துக் குரிய கையென்றும் அறிதல்' (சிலப். 3:18-19, அடியார்க். உரை).

*[அகம் + கூத்து + கை. இம் முச்சொற்களும் தனித்தனி வருமிடத்துக் காண்க.]*

**அகக்கொதிப்பு** *aga-k-kodippu*, பெ. (n.) *1.* **உடம்பினுள் உண்டாகும் கடுப்பு**; irritation of the internal organs of the body. *2.* வெட்டை; venereal heat in the system (சா.அக.).

*[அகம் + கொதிப்பு. கொதி → கொதிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]*

**அகக்கொல்லி** *aga-k-kolli*, பெ. (n.) **தில்லைமரம்**; a tree, the milky juice of which is said to be used as a beverage by the *Śiddhars* for promoting longevity, tiger's milk-spurge, *Excoecaria agallocha* (சா.அக.).

**அகக்கோளாளர்** *aga-k-kōḷāḷar*, பெ. (n.) **அகம்படிப் பெண்டுகள்**; maid-servants, as in a temple. "காஞ்சுகி முதியரு மகக்கோ ளாள ரொடு" (பெருங். உஞ்சைக். 47 : 167-8).

*[அகம் = உள், உள்ளிடம், மனை, கோயில். கோள் = கொள்ளுதல். ஆள் → ஆளர் = ஆள்கள். 'அர்' ப.பா. ஈறு. அகக்கோளாளர் = கோயிற்பணிக்குக் கொள்ளப்பட்ட பெண்டிர்.]*

பண்டைக்காலத்தில், பத்தி மேலீட்டினால் கோயிற் பணிக்கென்று பெற்றோரால் ஒதுக்கப்பட்டவரும், தாமே அப் பணிக்குத் தம்மைத் தத்தஞ் செய்துகொண்டவரும், விலைக்குக் கொள்ளப்பட்டவரும், வழக்கமாகப் பணிசெய்துவருபவருமாக, கோயிற் பணிப்பெண்டிர் நால்வகையர்.

**அகங்கரி-த்தல்** *agaṅgari-*, 4 செ.கு.வி. (v.i.) **செருக்குதல்**; to be self-conceited. "தம்மு னடிவீழ்ந் தகங்க ரித்தான்" (பாரத. பதினே. 162).

*[அகம் = **மனம்**. கருமை = பெருமை, வலிமை, கொடுமை. கரு → கரி. கரித்தல் = மிகுதல், வலுத்தல், அடுத்தல், உறுத்துதல், காரமாதல்.]*

**அகம்**[1] பார்க்க; see *agam*[1].

உப்புக் கரித்தல் என்னும் உலக வழக்கில் 'கரித்தல்' மிகுதற் பொருளையும், "செங்குட்டுவன் சினஞ்செருக்கி" (சிலப். 29, உரைப்பாட்டுமடை) என்னுஞ் செய்யுள் வழக்கில் 'செருக்குதல்' மிகுத்தற் பொருளையும் உணர்த்துதலால், செருக்குதற் கருத்திற்கு மிகுதற் கருத்தே அடிப்படையென்பது உணரப்படும். கரித்தல் என்னும் வினை வடமொழியி லில்லை.

**அகங்கரிப்பு** *agaṅgarippu*, பெ. (n.) **செருக்கு**; arrogance, haughtiness. "அகங்கரிப்பு வரி லெவர்க்கு மறங்கெடுக்கும்" (பிரபோத. 7 : 25).

*[அகம் = மனம். கரி → கரிப்பு (தொ.பெ.)= மிகவு, கடுப்பு, செருக்கு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அகங்காரம்** *agaṅgāram*, பெ. (n.) *1.* **சினம்**; anger. *2.* **செருக்கு**; conceit, arrogance, haughtiness.

*[அகம் = மனம். கரி → காரம் = மிகவு, வலிமை, கடுப்பு, செருக்கு. 'காரம்' முதனிலை திரிந்து ஈறு பெற்ற தொழிற்பெயர். ஒ.நோ : கடி → கரி → காரம். அதிகரி → அதிகாரம், இளக்கரி → இளக்காரம்.]*

மனஞ் செருக்குதல் அல்லது மனச்செருக்கு என்பதே தமிழ் அகங்காரச் சொற்பொரு ளென்றும், நானுணர்வு அல்லது தற்பற்று என்பதை அடிப்பொருளாகவும் செருக்கு என் பதை வழிப்பொருளாகவும் கொண்டதே சமற்கிருத 'அஹம்கார'ச் சொல்லென்றும் வேறுபாடறிதல் வேண்டும். '*Aham-kāra* = conception of one's individuality, self consciousness, the making of self, thinking of self, egotism, pride, haughtiness; (in Sāṅkhya phil.) third of the eight producers or sources of Creation, viz., the conceit or conception of individuality, individualization' (M.S.E.D.).

தமிழ்க் கூட்டுச்சொல்லின் நிலைச்சொல் (அகம்) மனத்தைக் குறிப்பது; வருஞ்சொல் (காரம்) மிகுதலைக் குறிக்கும் 'கரி' என்னும் வினைமுதனிலை கொண்டது; சமற்கிருதக் கூட்டுச்சொல்லின் நிலைச்சொல் 'நான்' என்று பொருள்படுவது; வருஞ்சொல் (கார) செய்தலைக் குறிக்கும் 'க்ரு' என்னும் வினை முதனிலை கொண்டது. இதனால், தமிழ் அகங்காரச் சொல்லும் சமற்கிருத அஹங் காரச் சொல்லும் பெரும்பாலும் ஒலியொத் திருப்பினும், வெவ்வேறு வகையில் அமைந் தவை யென்பதும், முன்னது பின்னதன் வழிய தன்றென்பதும் அறியப்படும்.

மனச்செருக்கு என்னும் தென்சொல், மனக் களிப்பு, அகங்காரம் என்னும் இருபொருள் படுவதும், இங்குக் கவனிக்கத்தக்கது.

இன்னும் இதன் விரிவை **அகம்**[1] என்னுஞ் சொல்லின்கீழ்க் காண்க.

**அகங்கார முதற்கரு** *agaṅgāra-mudaṟ-karu*, பெ. (n.) *1. பிறவிக்கு மூலமாகிய கரு*; the operating or the first cause of transmigration. *2.* **தலை**; head, which is supposed to be the seat of egotism (சா.அக.).

**அகங்காரி** *agaṅgāri*, பெ. (*n.*) *1.* **கடுமனத்தன், சினத்தன்**; person of violent temper. *2.* **செருக் கன், செருக்கி**; proud, conceited person. "என்போற் பகர்வா ரிலையென் றெண்ணகங் காரி" (முல்லையந். 62).

**த.** அகங்காரி > **Skt.** ahaṃ-kārin.

*[அகங்காரம் → அகங்காரி. 'இ' உடைமை யுணர்த்தும் வி.முத. ஈறு.]*

*அகங்காரம்* பார்க்க; see *agaṅgāram*.

**அகங்காழ்** *agaṅ-kāḻ*, பெ. (n.) **உள்வயிரம்**; inside hard core of trees in the class of exogens.

*[அகக்காழ் → அகங்காழ்.]*

*அகக்காழ்* பார்க்க; see ***aga-k-kāḻ***.

**அகங்கை** *agaṅgai*, பெ. (n.) *1.* ***கையின் உட் புறம்***; inner surface of hand. *2.* ***விரல்க ளல்லாத கையின் உட்புறம்***; palm of hand. *3.* ***உள்ளங்கை, கையின் உட்புற நடுப்பகுதி***; central part of palm.

**ம.** அகங்கை; **தெ.** அறசேயி, அரசெய்யி; **க., து., குட., கோத.** அங்கை; **மா.** அத்தெ; **கொலா.** ஆரன்செயி.

*[அகம் (உள்) + கை.]*

**அகச்சந்தானம்** *aga-c-candāṉam*, பெ. (n.) (சிவ.) ***சிவக்கொண்முடிபுகளை (சைவ சித்தாந்தக் கொள்கைகளை) வெள்ளிமலைக் கொடிவழி யில் (கைலாய பரம்பரையில்) கற்பித்து வந்த வரும், நந்திதேவர், சனற்குமாரர், சத்திய ஞான தரிசனிகள், பரஞ்சோதி முனிவர் என்று பெயர் பெற்றவர்களுமான நான்கு திருக் குரவர்***; (Śaiva.) The succession of four divine preceptors who handed down the Śaiva Siddhānta canons. Their names are Nandidēvar, Śaṉaṟkumārar, Śattiyagnāṉa dariśaṉigaḷ, and Parañjōdi Muṉivar.

*[அகம் = உள், உள்ளானது, நெருங்கியது, தற்கிழமையானது, தன்னைச் சேர்ந்தது, தன் கொள்கையானது, தன் கொள்கையைச் சேர்ந்தது.]*

**Skt.** santāna > **த.** சந்தானம்.

**அகச்சமயம்** *aga-c-camayam*, பெ. (n.) (சிவ.) ***கன்னிலைக்கொள்கைச் சிவனியம் (பாடாண வாத சைவம்), வேற்றுமைக்கொள்கைச் சிவ***

**னியம் (பேதவாத சைவம்), சிவசமக்கொள்கைச் சிவனியம் (சிவசமவாத சைவம்), சிவக்கலப்புச் சிவனியம் (சிவசங்கிராந்தவாத சைவம்), இறை வேறுபடாமைக் கொள்கைச் சிவனியம் (ஈசுவர விவகாரவாத சைவம்), சிவனோ டிரண்டன்மைச் சிவனியம் (சிவாத்துவித சைவம்) என்னும் சிவனிய அறுவகை உட்பிரிவுகள்;** (Šaiva.) religious sects six in number intimately related to the Šaiva Siddhānta.

''அகச்சமயத் தொளியாய்'' (சிவப்பிர. 7).

*[அகம் = தன் கொள்கையைச் சேர்ந்தது. சமை → சமையம் → சமயம்.]*

**சமயம்** பார்க்க; see *šamayam.*

**அகச்சாதி** *aga-c-cādi*, பெ. (n.) (*இசை.*) **பண்ணியல் வகையுள் ஒன்று;** (Mus.) a group of melody-types. 'ஆசானுக்கு அகச்சாதி காந்தாரம்' (சிலப். *13 : 112*, அடியார்க். உரை).

*[அகம் = தனக்கு இனமானது.* **Skt.** jāti > *த. சாதி = குலம், இனம், வகுப்பு, பிரிவு.]*

**அகச்சுட்டு** *aga-c-cuttu*, பெ. (n.) **சேய்மை, அண்மை, முன்மை ஆகிய மூவிடங்களையும் சுட்டும் சொற்களின் முதலில் சொல்லுறுப்பாக வரும் ஆ, ஈ, ஊ அல்லது அ, இ, உ என்னும் மூவுயிரெழுத்துகள்;** demonstrative vowels ā, ī, ū or a, i, u forming initial parts of the remote proximate and frontal demonstrative words. e.g., ஆங்கு, ஈங்கு, ஊங்கு; அவன், இவன், உவன்.

*[அகம் + சுட்டு. அகம் = உள்.]*

**சுட்டு** பார்க்க; see *šuttu.*

முன்மை என்பது சேய்மைக்கும் அண்மைக்கும் இடையிலிருப்பதால், அதை இடைமைச் சுட்டென வழங்குவர். ஆயின், இடைமையென்பது திட்டவட்டமாக ஓர் இடத்தைச் சுட்டாமையாலும், ஊகார உகரங்கள் முன்னிடத்தையும் முன்னிலைப் பொருளையுமே சுட்டுவதாலும், அவற்றை முன்மைச் சுட்டென வழங்குவதே பொருத்தமாம்.

**அகச்சுவை** *aga-c-cuvai*, பெ. (n.) (நடம்) **உண்மை (சத்துவம்), ஒண்மை (இராசதம்), இருண்மை (தாமதம்) என்னும் முக்குணத்தாலர்ன அகநெறிக்கு (அகமார்க்கத்திற்கு) உரிய உணர்ச்சி அல்லது மனச்சுவை;** (Dan.) emotions caused by the three fundamental qualities of man, viz., *uṇmai* (sattva), *oṇmai* (rajas) and *iruṇmai* (tamas), lit. truthfulness, brilliancy and darkness respectively.

அகச்சுவையாவன : இராசதம், தாமதம், சாத்துவிகமென்பன. ''குணத்தின் வழியதகக் கூத்தெனப் படுமே'' என்றார் குணநூலுடையார்; ''அகத்தெழு சுவையா னகமெனப் படுமே'' என்றார் சயந்தநூலுடையாருமெனக் கொள்க (சிலப். *3 : 12*, அடியார்க். உரை).

*[அகம் = உள், மனம். சுவை = மனச்சுவை, உணர்ச்சி.]*

முக்குணத்தைத் தேவிகம் (divinity), மாந்திகம் (humanity), பேயிகம் (devilishness) என்று குறிப்பின் மிகப் பொருத்தமாயிருக்கும்.

**அகச்சூடு** *aga-c-cūḍu*, பெ. (n.) 1. **உட்சூடு, அதாவது உடம்பி னுள்வெப்பம்;** internal heat, bodily heat. 2. **கணைச்சூடு;** heat arising from a wasting disease in the system (சா.அக.).

*[அகம் = உள், உடம்பின் உள். சுடு → சூடு (முத.தி.தொ.பெ.).]*

**அகச்சூலி** *aga-c-cūli*, பெ. (n.) 1. **ஆசுபத்திரா மரம்** (சித்.அக.); the tree known as *āšupattirā maram* (செ.அக.). 2. **சிறிய சூலிமரம்;** toon tree, *Cedrela toona* (சா.அக.).

**அகச்செய்கை** *aga-c-ceygai*, பெ. (n.) (இலக்.) **சொற்புணர்ச்சியை நேரடியாகக் கூறும் எழுத்திலக்கண நூற்பாத் தொகுதி;** (Gram.) the versified orthographical rules actually dealing with combination of letters, as components of words.

'இக்கூறிய இலக்கணங்கள் கருவியும் செய்கையுமென இருவகைய...... இனிச் செய்கையும் புறப்புறச் செய்கையும் புறச்செய்கையும் அகப்புறச் செய்கையும் அகச்செய்கையுமென நால்வகைத்து. ''எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே'' (எழுத்து. 140) என்றாற் போல்வன புறப்புறச் செய்கை; ''லனவென வரூஉம் புள்ளி முன்னர்'' (எழுத்து. 149) என்றாற் போல்வன புறச்செய்கை; ''உகரமொடு புணரும் புள்ளி யிறுதி'' (எழுத்து. 163) என்றாற் போல்வன அகப்புறச் செய்கை; தொகைமரபு முதலிய ஓத்தினுள் இன்ன ஈறு இன்னவாறு முடியுமெனச் செய்கை கூறுவனவெல்லாம் அகச் செய்கை' (தொல். எழுத்து. நூன். 1, நச். உரை).

*[அகம் = உள், நெருக்கவுறவு. செய் → செய்கை (தொ.பெ.). 'கை' தொ.பெ. ஈறு.]*

**அகச்சோலை** *aga-c-cōlai,* பெ. (n.) **இன்பக் கா (உய்யான வனம்);** pleasure garden. 'கற்பக விருட்சமுள, இவளது அகச்சோலையில்' (தக்கயாகப். 66, உரை).

[அகம் = மனம், மனவின்பம்.]

**சோலை** பார்க்க; see *šōlai.*

**அகசம்** *agašam,* பெ. (n.) 1. **எலுமிச்சை** (மறை.அக.); sour lime, *Citrus medica.* 2. **அகத்தி** (சித்.அக.); West Indian pea-tree (செ.அக.) — Agastia's plant, *Coronilla grandiflora* alias *Agati grandiflora* alias *Sesbania grandiflora* (சா.அக.). **ஒ.நோ:** அச்சம்.

[2. அகத்தி → அகசி → அகசம்.]

**அகசம்பங்கி** *aga-šambangi,* பெ. (n.) **பெரிய சம்பங்கிமரம்;** a very large tree that bears yellow flowers—tulip tree, Indian magdolina, *Michelia champaca* (சா.அக.).

**அகசரிப்பு** *aga-šarippu,* பெ. (n.) **ஒரு பொருளின் சுற்றெல்லையிலுள்ள பகுதி அப் பொருளின் நடுவத்தை (மையத்தை) நோக்கி நெருங்கும் ஆற்றல் (சக்தி)** (இக்.வ.); centripetal force (Mod.).

[அகம் = உள், நடு, நடுவம். சரிதல் = சாய்தல், இயங்குதல். சரி → சரிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அகசி** *agaši,* பெ. (n.) 1. **அகசம் 2** பார்க்க; see *agašam 2.* 2. **சீமையகத்தி;** West Indian sesbane, *Cassia alata.* 3. **அலிசி;** linseed plant, *Linum usitatissimum* (சா.அக.).

[அகத்தி → அகசி.]

**அகசுகம்** *aga-šugam,* பெ. (n.) 1. **மனநலம்;** mental health. 2. **தன்னை அடைந்தவர்க்கு நலந்தரும் ஆற்றல் வாய்ந்த அரசமரம்;** a tree possessing healing powers and giving health to those who go under it—peepul tree, *Ficus religiosa* (சா.அக.).

[அகம் = மனம். **Skt.** šukha > **த.** சுகம் = **இன்பம், நலம்.**]

**அகஞ்சுரிப்படுத்து - தல்** *agañjuri-p-paḍuttu-,* 2 பி.வி. (v.caus.) 1. **மனத்தைத் தேற்றுதல்;** to compose, console, as the mind. 'எனக்கோடு கிற தசையை உங்களுக்குச் சொல்லி அகஞ் சுரிப்படுத்தித் தரிக்கைக்கு' (ஈடு, 8.2 : 2). 2. **குறையச் செய்தல்;** (ஈடு, 4.7 : 9); to cause to diminish, lessen.

[1. அகம் சரிப்படுத்து → அகஞ்சுரிப்படுத்து. அகம் = மனம். சரி = சமம், நேர், செவ்வை, திருத்தம். சரிப்படுத்துதல் = சரியாக்குதல், திருத்துதல், தேற்றுதல். 2. அகம் = **உள்.** சுரிதல் = சுருங்குதல், குறைதல், உள்ளொடுங்குதல். சுரி (முத.தொ.ஆகு.) = சுருக்கம், குறைவு. சுரிப்படுத்துதல் = குறையச் செய்தல். 'படு' துணைவினை. படு (த.வி.) → படுத்து (பி.வி.).]

**அகஞ்செவி** *agañ-cevi,* பெ. (n.) **உட்செவி;** auricular cavity. 'அகஞ்செவி நிரம்பும்படி ஆரவாரித்தன' (முல்லைப். 89, நச். உரை).

[அகம் + செவி. அகம் = உள். செவி = காது.]

**அகட்டு-தல்** *agaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **அகல வைத்தல்;** to open wide. ''அண்ணாந்து காலை யகட்டி நடந்து'' (பஞ்ச. திருமுக. 876).

**ம.** அகற்றுக, அகத்துக; **க.** அகலிசு; **தெ.** அகலிம்பு.

[அகல் (த.வி.) → அகற்று (பி.வி.) → அகட்டு.]

**அகட்டுத்தே** *agaṭṭu-t-tē,* பெ. (n.) **பெருவயிற்றுத் தெய்வம், பிள்ளையார்;** Gaṇēša, the pot-bellied God.

[அகடு = வயிறு. தே = தெய்வம். பல்பருத்தவனைப் பல்லன் என்பது போல், அகடு பருத்த தெய்வத்தை அகட்டுத்தே என்றனர்.]

**தே** பார்க்க; see *tē.*

**அகடு**[1] *agaḍu,* பெ. (n.) 1. **உள், உட்புறம்;** interior. ''செழுந்தோட் டகட்டி னடைகிடக்கும்'' (கூர்மபு. தக்கன்வே. 57). 2. **வயிறு;** belly. ''அகடாரார்'' (குறள், 936). 3. **நடு;** middle. ''மதியகடுதோய்'' (தாயு. சச்சி. 6). 4. **நடுவுநிலைமை;** impartiality. ''அகடுற யார் மாட்டும் நில்லாது செல்வம்'' (நாலடி. 2).

[அகு → அகள் (அகழ்) → அகண் → அகடு = **உள், உட்புறம்,** நடு, நடுநிலை, **உடம்பின் உள்ளும் நடுவும் உள்ள வயிறு.**]

**அகடு**[2] *agaḍu,* பெ. (n.) முகடு (சம்.அக.கை.); top, ridge, as of roof.

[முகம் (மூக்கு) → முகடு = மூக்குப் போன்ற வீட்டின் மேற்பகுதி. முகடு → (உகடு) → அகடு. இனி, அகைத்தல் = உயர்த்துதல். அகைப்பு = எழுச்சி. அகை → அகடு = வீட்டின் உயர்ச்சியான அல்லது எழுச்சியான பகுதி என்றுமாம்].

**அகடு**[3] *agaḍu,* பெ. (n.) **பொல்லாங்கு** (வின்.); wickedness.

க., தெ. அகடு.

*[அகழ்தல் = தோண்டுதல், துளைத்தல், பிடுங்குதல். துளைத்தல் = வருத்துதல். பிடுங்குதல் = வருத்துதல், தொந்தரவு கொடுத்தல். அகழ் → அகடு.]*

**அகடுசெய்-தல்** *agaḍu-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) **துன்புறுத்துதல்** (வின்.); to tease, vex.

**அகடூரி** *agaḍūri,* பெ. (n.) பாம்பு (சிந்தா.நி.); snake.

*[அகடு = வயிறு. ஊர் → ஊரி. 'இ' வி.முத. ஈறு. ஊர்தல் = ஒட்டி நகர்ந்து செல்லுதல். அகடூரி = காலின்றி வயிற்றுப்புறத்தால் நகர்ந்து செல்வது.]*

**அகண்** *agaṇ,* பெ. (n.) **அண்மை** (சம்.அக.); nearness.

*[ஒருகா. அகம் + அண் – அகவண் → அகண்.]*

**அகண்டகம்** *agaṇḍagam,* பெ. (n.) 1. **முள்ளில்லாத செடி அல்லது காய்;** a thornless plant or fruit. 2. **முள்ளந்தண்டில்லாதது;** invertebrate (சா.அக.).

ம., க. அகண்டக; **Skt.** akaṇṭaka.

*['அ' எதிர்மறை முன்னொட்டு. குள் → கள் → கண்டு → கண்டம் → கண்டகம் = முள்.]*

**அகண்டகாவேரி** *agaṇḍa-kāvēri,* பெ. (n.) **ஈரோட்டிற்கும் (ஈரோடைக்கும்) திருச்சிராப்பள்ளிக்கும் இடையில், இரண்டாகப் பிரியாது ஓடும் காவேரியாறு;** the undivided *Kāvēri* river, between Erode and its point of bifurcation close to Thiruchirāppaḷḷi.

*['அ' எதிர்மறை முன்னொட்டு. கண்டம் = துண்டம், பிரிவு, பெருநிலப்பகுதி. அகண்டம் = பகுக்கப்படாதது. காவிரி → காவேரி.]*

கொள்ளிடம், காவிரி என இரண்டாகப் பிரியாத நிலையிலுள்ள காவிரி அகண்ட காவேரி.

**அகண்டதீவம்** *agaṇḍa-tīvam,* பெ. (n.) **நந்தா விளக்கு;** lamp that burns perpetually, used in worship in temples.

*[அகண்டம் = பகுக்கப்படாதது. தீய் → தீய்வு → தீவு → தீவம் = விளக்கு.]*

காலத்தாற் பகுக்கப்படாது என்றும் எரியும் தீவம் அகண்டதீவம். **Skt.** akhaṇḍa dīpa.

இனி, அகன்ற வட்டவடிவமான அகல்விளக்கு எனப் பொருள் கொள்ளின், 'அகண்ட' என்பது 'அகன்ற' என்பதன் திரிபாகும்.

**அகண்டபூண்டு** *agaṇḍa-pūṇḍu,* பெ. (n.) 1. **பிரமிப்பூடு;** a plant used in medicines, *Gratiola monieri.* 2. **வல்லாரை;** Indian penny wort, *Hydrocotyle asiatica.* 3. **வென்னர் (சித்தர்) உண்ணும் ஒரு கற்ப மூலிகை;** a drug taken by *Siddhas* for rejuvenescence (சா.அக).

பூண்டு பார்க்க; see *pūṇḍu.*

**அகண்டம்**[1] *agaṇḍam,* பெ. (n.) 1. **பகுக்கப்படாதது;** that which is indivisible. "அகண்டமா யமர்ந்த தன்றே" (கோயிற்பு. பதஞ். 65). 2. **நிறைவு;** perfection. "அகண்டவறிவு" (ஞானவா. உபசாந். 34). 3. **முழுதும், எல்லாம்** (சூடா.); the whole. 4. **நந்தா விளக்கு;** perpetually burning lamp.

**Skt.** akhaṇḍa

*[அல் → 'அ' எதிர்மறை முன்னொட்டு. கள் → கண்டு → கண்டம் = துண்டம். ஒ.நோ: துள் → துண்டு → துண்டம். பல கண்டமாகப் பகுக்கப்படாது ஒரே முழுமையாக இருப்பது அகண்டம்.]*

**அகண்டம்**[2] *agaṇḍam,* பெ. (n.) **அகன்ற வட்டவடிவமான தகழி (அகல்) விளக்கு;** a round shaped oil burning open lamp.

*[அகல் → அகன்றம் → அகண்டம்.]*

**அகண்டம்**[3] *agaṇḍam,* பெ. (n.) **மூளை;** brain, medullary substance (சா.அக.).

**அகண்டமெழுகு** *agaṇḍa-meḻugu,* பெ. (n.) **மூளையினின்று செய்யும் ஒருவகை மெழுகு;** a kind of paste prepared from the human brain (சா.அக.).

மெழுகு பார்க்க; see *meḻugu.*

**அகண்டவடிவம்** *agaṇḍa-vaḍivam,* பெ. (n.) **பகுக்கப்படாத வடிவம், கடவுள்;** indivisible form, as of the Absolute. "அகண்ட வடிவப் பரம்பொருளாம்" (ஞானவா. பிரகலா. 9).

**அகண்டவரை** *agaṇḍa-varai,* பெ. (n.) (ஓகம்) **ஓக அறு நிலைக்களங்களுள் ஒன்றான புருவிடை (ஆக்ஞை);** (Yoga) a psychic centre situated in the cerebral region—Medulla oblongata, which is the upper enlarged end of the spinal cord reachable only through yoga.

"அறிவான வையாவே கும்ப மேறி
அகண்டவரை அகண்டவரை காணு வாயே"
(இராமதேவர்)—(சா.அக.).

*[அகண்டம் = மூளை. வரை = எல்லை யளவு.]*

புருவிடை என்பது, இரு புருவத்திற்கும் நடுவே ஈரிதழ்த்தாமரை வடிவில் ஓகியராற் காணப்படும் நரம்புச் சக்கரம்; a cakra in the body, described as a two-petalled lotus situated between the two eyebrows, one of the six dynamic Tattvic centres which are nerve plexuses.

**அகண்டவறை** *agaṇḍa-v-aṟai*, பெ. (n.) **மூளை யின் கண்ணறை**; cells of the brain (சா.அக.).

*[அகண்டம் + அறை.]*

**அகண்டவாய்** *agaṇḍa-vāy*, பெ. (n.) **விரிவான வாய்**; wide or large mouth (சா.அக.).

*[அகல் → அகன்ற (இ.கா.பெ.எ.) → அகண்ட.]*

**அகண்டவிளக்கு** *agaṇḍa-viḷakku*, பெ. (n.) **நந்தா விளக்கு**; perpetually burning lamp.

*[விளங்கு → விளக்கு (பி.வி., முத.தொ.ஆகு.]*

**அகண்டதீவம்** பார்க்க; see *agaṇḍa-tīvam.*

**அகண்ட வீணை** *agaṇḍa-viṇai*, பெ. (n.) **பொருத்தின்றிக் குடமும் (பத்தரும்) கோடும் (தண்டும்) ஒரே நெடும் பலாக்கட்டையிற் செதுக்கப்பட்ட வீணை**; a lute whose whole body is made from a single block of jack-wood.

*['அ' எதிர்மறை முன்னொட்டு. கண்ட = துண்டான, பகுக்கப்பட்ட. அகண்ட = பகுக்கப் படாத, பொருத்தில்லாத. விண்ணெனல் = விண் விண் என நரம்பு தெறித்தல். விண் → வீணை.]*

**அகண்டன்** *agaṇḍaṉ*, பெ. (n.) கடவுள்; God, as the undivided One (W.).

**Skt.** akhaṇḍa

*['அ' எதிர்மறை முன்னொட்டு. கண்டு → கண்டம் → கண்டன் = துண்டானவன். அகண்டன் = பல உறுப்புகளாக அல்லது மெய்ப் பொருள்களாகப் பகுக்கப்படாதவன், முழுமுதற் கடவுள்.]*

ஆவி வடிவில் எங்கும் நிறைந்து உயிர்க்குள் உயிராகவும் அணுவிற்குள் அணுவாகவும் நுண்ணிதிற் கலந்து, எல்லாம் வல்லனாகவும் எல்லாம் அறிந்தவனாகவும் என்றும் உள்ளவனாகவும் இருக்கும் தன்னந்தனி முதல் இறைவனை எவ்வகையிலும் பகுக்கப்படாதவனென்றே கொண்டு, கடவுள் (எல்லாங் கடந்தவன்) என்றனர் முன்னைத் தமிழர்.

அக் கடவுளையே, ஒருசார் தமிழர் சிவன் என்னும் பெயரில் தொன்றுதொட்டு வழிபட்டு வருகின்றனர்.

ஆதலால் சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை எனச் சுத்த மாயையில் தோன்றும் ஐந்து தத்துவங்களாகச் சிவனைப் பகுப்பது, சிவனியத்தைப் புதிதாய்த் தழுவிய ஆரியர், அம் மதத்தை ஆரிய நெறியாகக் காட்டுதற்குப் புகுத்திய கொள்கையேயன்றி, குமரிநாட்டு முன்னைத் தமிழர் கொண்டதன்று.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு" (குறள், 1),

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு" (குறள், 27)

என்று, தமிழ்மறையும் ஆரியர் கொள்ளும் போலிச் சிவமெய்ப் பொருள்களை விலக்கிக் கூறுதல் காண்க.

ஆகவே, அகண்டன் என்னும் கொள்கையும் சொல்லும் தமிழரனவே யென்று தெளிக.

**அகண்டி** *agaṇḍi*, பெ. (n.) **இசைக்கருவி வகை** (இராட்.); a musical instrument (R.).

**அகண்டிதம்** *agaṇḍidam*, பெ. (n.) **துண்டிக்கப் படாதது**; that which is undivided or indivisible.

**Skt.** akhaṇḍita

*['அ' எதிர்மறை முன்னொட்டு. கண்டு = துண்டு. கண்டு → கண்டி. கண்டித்தல் = துண்டித்தல். கண்டி → கண்டிதம் = துண்டிப்பு. 'இதம்' தொ.பெ. ஈறு. அகண்டிதம் = துண்டிக்கப் படாதது.]*

'அ' என்னும் எதிர்மறை முன்னொட்டும் 'கண்டு' என்னும் சொல்லும் 'இதம்' என்னும் ஈறும் தமிழே யாதலால், 'அகண்டிதம்' என்னும் சொல்லும் தமிழெனக் கொள்ளப் பட்டது.

**அகண்டிதன்** *agaṇḍidaṉ*, பெ. (n.) **கடவுள்**; God, as an undivided whole. "அகண்டித னகம்பன்" (மதுரைப் பதிற்றுப். 70).

**Skt.** akhaṇḍita

*[அகண்டிதம் → அகண்டிதன் = துண்டிக்கப் படாதவன், பகுக்கப்படாதவன்.]*

**அகண்டிதம்** பார்க்க; see *agaṇḍidam.*

முந்தின சொற்குக் கூறிய சிறப்புக் குறிப்பையே இதற்குங் கொள்க.

**அகண்ணியம்** *agaṇṇiyam,* பெ. (n.) அவ மதிப்பு; dishonour, disgrace. அங்கே போவது உனக்கு அகண்ணியம் (உ.வ.).

**Skt.** agaṇya

[*'அ' எதிர்மறை முன்னொட்டு. கண்ணுதல் = கருதுதல், மதித்தல். கண் → கண்ணியம் = மதிப்பு. 'இயம்' தொ.பெ. ஈறு. அகண்ணியம் = மதிப்பின்மை, அவமதிப்பு.*]

**அகணி**[1] *agaṇi,* பெ. (n.) *1.* **உள், உட்புறம்;** inside, interior. 'கடுக்காயில் அகணி நஞ்சு, சுக்கிற் புறணி நஞ்சு' (பழ.). *2.* **மரப்பட்டையின் உட்பக்கத்து நார்;** fibre in the inner side of the bark of a tree (சா.அக.). *3.* **மருதநிலம்** (சூடா.); agricultural tract of land. *4.* **நெல் வயல்;** paddyfield. "அகணி யின்கரை புரளு மெங்கணும்" (அரிசமய. குலசே. 8). *5.* **தென்னை பனைகளின் உள்மட்டை மேல் நார்;** upper rind of the stem of the coconut and palmyra frond.

[*அகம் = உள், உட்புறம், நாட்டின் உட்பட்ட மருதநிலம், மருதநில வயல்.*]

"புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்
புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடுகளங் கடுக்கும் அகநாட் டையே"
(புறநா. 28 : 11-14).

**அகணி**[2] *agaṇi,* பெ. (n) **நம்பிக்கைக்குரிய நட்பினர்;** confidant. "அகணியாகிய........... சகுனி" (பெருங். மகத. 26 : 29-30).

[*அகம் = உள்ளம். அகம் → அகன் → அகண் → அகணி = உள்ளம் ஒன்றிய உண்மை நட்பு, நண்பன்.*]

**அகணி**[3] *agaṇi,* பெ. (n.) **கடுக்காய்** (சித்.அக.); gall-nut, *Terminalia chebula.*

**அகணிக்கடுக்காய்** *agaṇi-k-kaḍu-k-kāy,* பெ. (n.) *1.* **உட்சதைப்பற்றுள்ள கடுக்காய்;** a gall-nut with thick fleshy portion surrounding the seed inside. *2.* **முற்றிய கடுக்காய்;** a fully developed or ripe gall-nut (சா.அக.).

[*அகம் → அகன் → அகண் → அகணி = உள், உட்சதைப்பற்று.*]

**அகணிதம்** *agaṇidam,* பெ. (n.) **கணிக்கப்படாதது;** that which is beyond computation.

ம. அகணித; க. அகண்ய; **Skt.** agaṇita.

[*'அ' எதிர்மறை முன்னொட்டு. கணி → கணிதம் = கணிக்கப்பட்டது. அகணிதம் = கணிக்கப்படாதது. 'இதம்' தொ.பெ. ஈறு.*]

**கணித்தல்** பார்க்க; see *kaṇittal.*

**அகணிப்பாய்** *agaṇi-p-pāy,* பெ. (n.) **அகணிப் பிளாச்சினாற் பின்னிய மூங்கிற்பாய்;** bamboo mat plaited with thick splits.

[*அகம் → அகன் → அகண் → அகணி.* ஒருகா. *அகப் பகுதியொடு சேர்ந்த தடித்த மூங்கிற் பிளாச்சு.*]

பாய் பார்க்க; see *pāy.*

**அகணியகில்** *agaṇi-y-agil,* பெ. (n.) **அகில் மரத்தின் உட்பாகம்;** that portion which is inside the agilwood tree (சா.அக.).

**அகணிக்கடுக்காய், அகில்** பார்க்க; see *agaṇi-k-kaḍu-k-kāy, agil.*

**அகத்தடிமை** *agatt(u)-aḍimai,* பெ.(n.) **அணுக்கத் தொண்டு;** services of a devoted servant or follower. "அகத்தடிமை செய்யு மந்தணன்" (தேவா. 7.9 : 6).

ம. அகத்தோன்; **தெ.** அடியடு, அடிய.

**அகத்தடியாள்** *agatt(u)-aḍiyāḷ,* பெ. (n.) **வீட்டு வேலைக்காரி;** maid-servant of a house. "அகத் தடியாள் மெய்நோவ" (தனிப்பா. தி. 1, பக். 279).

ம. அடியாட்டி

**அகத்தமிழ்** *aga-t-tamiḻ,* பெ. (n.) **அகத்திணை பற்றிய தமிழிலக்கியம்;** Tamil literature dealing with love.

**அகத்தன்** *agattaṉ,* பெ. (n.) **இடத்தினன்;** one who is in a place. "ஆதவ னெழுகிரி யகத்த ராக்கினான்" (கந்தபு. யுத்த. சிங்க. 328).

**அகத்தான்** *agattāṉ,* பெ. (n.) *1.* **உள்ளிடத் திருப்பவன்** (இறை. 59, உரை); one who is in. *2.* **இல்வாழ்வான்;** householder. "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கி" (நாலடி. 31).

ம. அகத்தான்

**அகத்தி** *agatti,* பெ. (n.) **மக்கட்குக் கீரையும் மாட்டிற்குத் தழையுணவும் உதவுவதும், பெரும் பாலும் கொடிக்காலிலும் மிளகாய்த் தோட்டத் திலும் பயிரிடப்படுவதுமான சிறு மரவகை;** West Indian pea-tree, s. tr., *Sesbania grandiflora,* whose leaves are edible and also used as cattle food.

''நல்லகத்தி வேரதனை நாடுங்கால் மேக
மெனுஞ்
சொல்லகலுந் தாகமறுந் தோகையே —
மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகனத்தி
மையெரிவும் போமென் றறி'' [னுள்ளெரிவு
(பதார்த்த. 475).

**அகத்தியினங்கள்** - *species of sesban*

சாழையகத்தி, ஒரு பழமரம்; a fruit tree.

சிற்றகத்தி, ஒரு சிறு மருந்துமரம்; a small tree used for medicine.

சீமையகத்தி, ஒரு செடிவகை; large-leafed eglandular senna, *Cassia alata* (L.).

செவ்வகத்தி, ஒரு செம்மலர்ச் சிறுமரம்; a small tree with red flowers.

**ம.** அகத்தி; **க., து.** அகசெ; **தெ.** அகிசெ; **த.** அகத்தி > **Skt.** agasti.

*[அகம் → அகத்தி. அகம் = உள். கொடிக் கால், மிளகாய்த் தோட்டம் முதலிய பிற செடி கொடித் தோட்டங்களினுள்ளே பயிரிடப்படுவ தால், அகத்தியெனப் பெயர்பெற்றது போலும்.]*

**பேயகத்தி, சீமையகத்தி** பார்க்க; see *pēy-agatti, šimai-y-agatti.*

''அகத்தி ஆயிரங் காய்த்தாலும் புறத்தி புறத்தியே' என்பது, மருமகளுக்கும் அகத்தி மரத்திற்கும் பொதுவான இரட்டுறற் பழ மொழி. அகத்திமரம் தோட்டத்திற்குள் ளிருந்து கொத்துக்கொத்தாக ஆயிரக்கணக் காய்க் காய்த்தாலும், அதன் காய்கள் ஒன்றிற் கும் பயன்படா. அதனால் மிளகாய்ச்செடியும் வெள்ளிலைக் கொடியும்போற் சிறப்பாகக் கருதப்படா. அதுபோன்று, வேற்றகத்தி லிருந்து வீட்டிற்கு வந்த மருமகள் எத்தனை பிள்ளை பெற்றாலும், மகளைப்போல் அன் பாக மாமியாரால் நடத்தப்படுவதில்லை என்பது, பழமொழிக் கருத்து.

**அகத்திக்கறுப்பு** *agatti-k-kaṟuppu*, பெ. (n.) **சில சிற்றூர்த் தெய்வங்கட்குச் சாத்தும் ஆடை வகை** (தஞ்சை); a kind of garment put on certain village deities (Tj.).

**அகத்திக்கீரை** *agatti-k-kīrai*, பெ. (n.) **இலைக் கறிக்கு உதவும் அகத்தித் தழை;** sesban leaves used as edible greens.

**அகத்திடு-தல்** *agattiḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) *1.* **கையால் உள்ளணைத்தல்** (திவா.); to fold in the arms; embrace. *2.* **செருகுதல்;** to insert (W.). *3.* **உள்ளிடுதல்** (கலித். 4, உரை); to enclose, enfold.

**அகத்திப்பழுப்பு** *agatti-p-paḻuppu*, பெ. (n.) **அகத்திக்கறுப்பு** பார்க்க; see *agatti-k-kaṟuppu.*

**அகத்திணை** *aga-t-tiṇai*, பெ. (n.) **கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்னும் ஏழு பிரிவுகளாக வகுக்கப்பட்டுள்ள காதலின்ப வொழுக்கம்;** love, as a mental experience of lovers or conjugated couple classified into seven forms according to ecology and stress of passion.

''கைக்கிளை முதலாப் பெருந்திணை
யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை யென்ப''
(தொல். பொருள். அகத். 1).

*[அகம் + திணை.]*

**அகத்திணைப்புறம்** *aga-t-tiṇai-p-puṟam*, பெ. (n.) **அகத்திணைக்குப் புறம்பான கைக்கிளை, பெருந்திணை என்னும் இருதிணைகள்** (தொல். பொருள். அகத். 54, நச். உரை); the two forms of undesirable love, viz., unreciprocated love, and love by force, as opposed to reciprocal love.

*[அகம் + திணை + புறம்.]*

**அகத்தியம்** *agattiyam*, பெ. (n.) **தோரா. கி.மு. 12ஆம் நூற்றாண்டில், அகத்திய முனிவரால் இயற்றப்பட்டதாகக் கருதப்படும் மாபிண்டம் என்னும் முத்தமிழிலக்கணச் சார்பு நூல்;** a poetic work of grammar by sage Agastya, dealing with the three conventional classes of Tamil literature, and based upon earlier Tamil treatises, ascribed to circa 12th century B.C.

**அகத்தியர்** *agattiyar*, பெ. (n.) **அகத்தியன்** பார்க்க; see *agattiyaṉ.*

**அகத்தியர் குழம்பு** *agattiyar-kuḻambu*, பெ. (n.) **பெருங்காயம், இந்துப்பு, இதள் (ரசம்), வெண் காரம், மனோசிலை, அரிதாரம், நேர்வாளம், ஓமம், கருஞ்சீரகம் என்னுஞ் சரக்குகளைச் சேர்த்து அகத்தியர் செய்ததாகச் சொல்லப் படும் பெயர்பெற்ற நலக்கழிச்சல் மருந்து;** a famous cathartic medicinal compound, ascribed to Agastya, the ingredients being asafœtida, rock salt, mercury, borax, realgar, yellow orpiment, true croton, bishop's weed and black cumin.

*[***Skt.*** Agastya > ***த.*** அகத்தியன், அகத்தியர்.]*

**அகத்தியர் தேவாரத்திரட்டு** *agattiyar-tēvāra-t-tiraṭṭu*, பெ. (n.) ***அகத்தியர்பெயரால்வழங்கும் 25 தேவாரப் பதிகத் தொகுதி;*** a collection of 25 hymns from the *Tēvāram*, erroneously attributed to sage Agastya.

*[அகத்தியர் + தேவாரம் + திரட்டு.]*

**அகத்தியன், அகத்தியனார்** *agattiyaṉ, agattiyaṉār*, பெ. (n.) *1.* ***சில வேத மந்திரங்களின் ஆசிரியரும், தென்னாட்டில் ஒரு பிராமணக் குடியேற்றத்தை நிறுவியவரும், ஒரு முத்தமிழ்ச் சார்புநூலும் சில மருத்துவநூலும் இயற்றிய வரும் தோரா. கி.மு. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவருமான ஓர் ஆரியச் சான்றோர்;*** an Aryan sage, author of several Vedic hymns, said to have founded a Brāhmin colony in South India, written some books on medicine, and composed a Tamil grammar. *2.* ***அகத்திய நாண்மீன்;*** the star Canopus, of which Agastya is the regent. 'அகத்தியனென்னு மீன் உயர்ந்த தன்னிடத்தைக் கடந்து மிதுனத் தைப் பொருந்த' (பரிபா. 11 : 11, உரை).

[**Skt.** ga = *செல்.* *'அ' எதிர்மறை முன் னொட்டு.* **Skt.** aga = *அசையாதது, மலை.* **Skt.** as = *எறி. அகஸ்திய* (Agastya) = *மலையை எறிந்தவன் அல்லது அடக்கியவன்.]*

ஆரியர் இந்தியாவிற்குட் புகுந்தபின், சில நூற்றாண்டுகளாக விந்த(விந்திய) மலையைக் கடந்து தெற்கே வர இயலவில்லை. முதன் முதலாக அதைக் கடந்தவர் அகத்தியர். அதனால், அவருக்கு விந்தமலையை வென்ற வர் என்றும், விந்தமலையின் செருக்கை அடக்கியவரென்றும் புகழ்ச்சி எழுந்தது. இக் காலத்தும், எவரெசிற்று (Everest) முடியேறிய வரை அக் குவட்டை வென்றவர் (conqueror of the Everest) என்று கூறுதல் காண்க.

விந்தமலையை அடக்கியதனால் அகத்தியர் அப் பெயர் பெற்றார் என்னும் வடநூலார் கூற்று, பொருத்தமுடையதாய்த் தோன்ற வில்லை. ஏனெனின், விந்தமலையைக் கடக்கு முன்னரும் அவருக்கு அப்பெயர் இருந்ததாகத் தெரிகின்றது.

அகத்தியன் என்னும் பெயரை யொத்த *Augustus, Augustinus, Augustanus, Augustulus* முதலிய இலத்தீன் பெயர்களும், Augusti என்னும் செருமானியப் பெயரும், Augustine என்னும் ஆங்கிலப் பெயரும் மேலைநாடு களில் மக்கள் இயற்பெயர்களாகத் தொன்று தொட்டு வழங்கிவந்திருக்கின்றன. அவற்றிற் கெல்லாம் மூலமாகத் தோன்றும் *augustus* என்னும் இலத்தீன் சொல்லிற்கு, consecrated (திருப்படையல் செய்யப்பட்ட), venerable (வணங்கப்படத்தக்க) என்று பொருள் சொல்லப்படுகின்றது.

இலத்தீனை யடுத்து வழங்கும் கிரேக்கத் திற்கு இனமான ஒரு மொழியைத் தாய்மொழி யாகக் கொண்ட ஓர் இனத்தாரின் வழிவந்த வேத ஆரியக் குரவர் ஒருவர்க்கு அம் மேலைப் பெயர் இடப்பட்டதென்று கொள்வது, இயற்கைக்கு முற்றும் ஒத்ததே. ஆகவே, அகத்தியன் என்னும் ஆரியச் சொல்லிற்கு, வணங்கப்படத்தக்கவன் என்று பொருள் கூறுவதே பொருத்தமாம்.

இலக்கண நூல் முதற்கண் இயற்றமிழ்க்கே தோன்றியிருத்தல்கூடும். அதுவும் எழுத் திலக்கணம், சொல்லிலக்கணம், சொற்றொட ரிலக்கணம், செய்யுளிலக்கணம், பொரு ளிலக்கணம் என்னும் ஐந்நிலைப்பட்டிருத்தல் வேண்டும். அதன்பின் இசையிலக்கணமும் நாடகவிலக்கணமும் முன்பின்னாக நெடுங் காலங் கடந்து தோன்றியிருக்கும். இறுதியில் இயல் இசை நாடகம் என்னும் மூன்றன் இலக் கணமும் ஒரே தொகுதியாகச் சேர்க்கப்பட் டிருக்கும். இத்தகைய முத்தமிழ் இலக்கண நூலொன்றை, தமிழனே, எத்துணைப் பேரறிஞனாயினும், தனிப்பட ஒரேயடியில் தோற்றியிருத்தல் இம்மியும் இயலாது. அங்ஙனமிருப்பவும், ஓர் ஆரியன் வடநாட்டி னின்று வந்தவுடன் முத்தமிழ் இலக்கண முதனூலை இயற்றினான் என்றல், 'நரிமா அரிமாக் குருளை யீன்றது' என்பது போன்ற செய்தியே.

அகத்தியன் என்னும் சொல் ஆரியமாயினும், அகத்தியத்தின் பெருமையும் தமிழியன்மை யும் நோக்கி, இங்குத் தமிழ்ச் சொற்றொகுதி யொடு சேர்க்கப்பட்டது.

**அகத்தியான்பள்ளி** *agattiyāṉ-paḷḷi*, பெ. (n.) ***திருமறைக்காட்டிற்கு அருகிலுள்ள ஒரு திருநகர்*** (தேவா. 2.212); a shrine near *Tirumaṟaikkāḍu* (Vēdāraṇiyam).

*[அகத்தியன் → அகத்தியான். பள்ளி = தவ நிலையம்.]*

**அகத்தீசரறுகு** *agattīšar-aṟugu*, பெ. (n.) ***சிற்றறுகு*** (இராட்.); species of grass, short in stature like Agastya (R.).



அக்காக்குருவி



அக்காடச்செல்லிகண்டன்

## அகத்தி



சிற்றகத்தி



சீமையகத்தி



பேரகத்தி

[Skt. agastya + īša – அகஸ்தீச > த. அகத்தீசன் → அகத்தீசர். வ. ஈசன் = கடவுள், தேவன், தெய்வத்தன்மையுள்ளவன். அகத்தியர் குள்ளராயிருந்ததனால், அவரைப்போல் உரு விற் சிறிதான சிற்றறுகு அகத்தீசரறுகு எனப் பெயர்பெற்றது.]

**அகத்தீசுரப்புல்** *agattīšura-p-pul,* பெ. (n.) *அகத்தீசரறுகு* பார்க்க; see *agattīšar-aṟugu.*

[Skt. agastya + īšvara + த. புல் – அகஸ்தீச் வரப்புல் → அகத்தீசுவரப்புல் → அகத்தீசுரப்புல்.]

**அகத்திடு** *agattīḍu,* பெ. (n.) 1. *எண்ணம்;* thought, idea. ''அகத்திடு முற்றும் பிரணவ மாகப் பிறங்கி'' (கச்சி. வண்டு. 352). 2. *கையால் உள்ளணைக்கை* (அகநா. 26 : 17, உரை); embrace.

[அகத்து + இடு – அகத்திடு. இடு → ஈடு.]

**அகத்துரைப்போன்** *agatt(u)-uraippōṉ,* பெ. (n.) 1. *மனச்சான்று;* the inner voice, the voice of conscience (இராட்.). 2. *கடவுள்;* God.

[அகத்து + உரைப்போன். அகம் = மனம்.]

**அகத்துழிஞை** *agatt(u)-uḻiñai,* பெ. (n.) (இலக்.) *முற்றுகையிடப்பட்ட கோட்டையிலுள்ள அகத் தாரை, முற்றுகையிட்ட புறத்தார் வெல்லும் புறத்துறை* (பு.வெ. 6 : 22); (Gram.) theme of the victory of the besiegers over the besieged.

[அகத்து + உழிஞை.]

உழிஞை பார்க்க; see *uḻiñai.*

**அகத்துழிஞையான்** *agatt(u)-uḻiñaiyāṉ,* பெ. (n.) (இலக்.) *முற்றுகையிடப்பட்டோன், புறத் துழிஞையானுக்கு எதிரி* (மதுரைக். 741-3, நச். உரை); (Gram.) one within a besieged fort, the besieged, opp. to the besieger.

[அகத்துழிஞையான் = அகத்தோன்.]

**அகத்துறுப்பு** *agatt(u)-uṟuppu,* பெ.(n.) 1. *அன்பு, அருள், இரக்கம் முதலிய மனப்பண்பு;* qualities of the heart, as love, grace, mercy. ''அகத் துறுப் பன்பி லவர்க்கு'' (குறள், 79). 2. *உடலின் உள்ளுறுப்பு;* internal organs of the body.

[அகத்து + உறுப்பு.]

**அகத்தை** *agattai,* பெ. (n.) *தாய்;* mother.

**அகத்தொண்டன்** *aga-t-toṇḍaṉ,* பெ. (n.) *வீட்டு வேலைக்காரன்;* domestic servant. 'ஒருவர் மனையிற் பணிசெய்யும் அகத்தொண்டர்க் குளதாகிய உரிமை' (சி.போ.பா. 8:1, பக்.429).

[அகம் + தொண்டன். அகம் = வீடு.]

**அகத்தோன்** *agattōṉ,* பெ. (n.) *அகத்துழிஞை யான்* பார்க்க; see *agatt(u)-uḻiñaiyāṉ.*

**அகதேசி** *aga-dēši,* பெ. (n.) *உள்நாட்டு இரப் போன், பரதேசி என்பதற்கு எதிர்;* native mendicant, dist. f. *paradēši.*

[அகம் + தேசி.]

அகதேசி பரதேசி என்னும் மரபிணைமொழி எதுகை நோக்கி 'அரதேசி பரதேசி' என்று தவறாக உலகவழக்கில் வழங்கிவருகிறது.

**அகநகர்** *aga-nagar,* பெ. (n.) 1. *கோட்டைக் குள் அடங்கிய நகரப்பகுதி* (சிலப். 14 : 69, அடியார்க். உரை); interior of a fortified town. 2. *உவளகம் (அந்தப்புரம்);* women's appartments in a palace. ''அகநகர் கைவிட்டு'' (மணிமே. 23 : 57).

[அகம் + நகர். அகம் = உள்.]

**அகநகை** *aga-nagai,* பெ. (n.) *இகழ்ச்சிநகை* (சிலப். 16 : 164, அடியார்க். உரை); derisive laughter.

[அகம் + நகை.]

**அகநகை-த்தல்** *aga-nagai-,* 4 செ.குன்றாவி. (v.t.) *இகழ்ச்சியாகச் சிரித்தல்;* to laugh in derision. ''அகநகைத் துரைத்து'' (சிலப். 16 : 164).

**அகநாடகம்** *aga-nāḍagam,* பெ. (n.) *மனத்தி லுள்ள காதலைப் புலப்படுத்தும் நளிநயங்க ளோடு கூடிய நடம்* (சிலப். 3 : 14, அடியார்க். உரை); dance accompanied by gestures expressing love.

[அகம் + நாடகம்.]

**அகநாடகவுரு** *aga-nāḍaga-v-uru,* பெ. (n.) *அக நாடகத்திற்குரிய பாடல்கள்* (சிலப். 3 : 14, அரும். உரை); various kinds of musical compositions used in performing dances expressing love.

[அகம் + நாடகம் + உரு.]

**அகநாடு** *aga-nāḍu,* பெ. (n.) 1. *உள் நாடு;* interior of a territory. ''அகநாடு புக்கு'' (மதுரைக். 149). 2. *மருதநிலம்;* agricultural tract.

''புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்
புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடுகளங் கடுக்கும் அகநாட் டையே''
(புறநா. 28 : 11-14).

[அகம் + நாடு.]

**அகநாழிகை** *aga-nāḻigai,* பெ. (n.) தெய்வப் படிமை யிருக்கும் கருவறை, உண்ணாழிகை; sanctuary of a South Indian (Hindu) temple. 'அகநாழிகைப் பணிசெய்வார்' (T.A.S. i, 6).

ம. அகநாழிக

[அகம் + நாழிகை.]

நாழிகை பார்க்க; see *nāḻigai.*

**அகநானூறு** *agā-nāṉūṟu,* பெ. (n.) கடைக் கழகக்காலப் புலவர் ஏறத்தாழ நூற்றறு பதின்மர் அகப்பொருள்பற்றிப் பாடியனவும், உருத்திரசன்மரால் தொகுக்கப்பட்டனவுமான நானூறு அகவற்பாத் திரட்டு; An anthology of 400 love-lyrics in *agaval* metre by about 160 poets of the period of the 3rd Tamil Academy, compiled by *Uruttiraśaṉmaṉ.*

[அகம் + நானூறு.]

**அகநிலை** *aga-nilai,* பெ. (n.) 1. உள்ளிடம்; inside (W.). 2. மனத்துள் ளிருக்குங் கடவுள் (இராட்.); God as residing in one's mind (R.). 3. நகர்; town. "அரைசுமேம் படீஇய வக நிலை" (சிலப். 5 : 161). 4. குல(சாதி)ப் பெரும் பண்வகை நான்கனுள் ஒன்று; one of the four primary melody-types.

[அகம் + நிலை.]

**அகநிலைக்குறிஞ்சி** *aga-nilai-k-kuṟiñji,* பெ. (n.) குறிஞ்சிப் பண்ணின் ஒருவகை; a primary melody-type, a variety of *kuṟiñji.*

"தென்னுறு பாலை குறிஞ்சியே மருதஞ்
செவ்வழி யென்னுநா னிலத்திற்
பின்னகம் புறமே யருகியல் மற்றைப்
பெருகிய லுறழவெண் ணிரண்டாய்"
(கந்தபு. அசுர. சூரன்அரசிருக். 23).

[அகம் + நிலை + குறிஞ்சி.]

**அகநிலைக் கொச்சகம்** *aga-nilai-k-koccagam,* பெ. (n.) (யாப்.) கொச்சகக் கலிப்பாவின் வகை (கலித். 119, உரை); (Pros.) variety of *koccagakkali* metre.

[அகநிலை + கொச்சகம்.]

**அகநிலைச் செய்யுட்டாழிசை** *aga-nilai-c-ceyyuṭ-ṭāḻiśai,* பெ. (n.) கடவுளை வண்ணித்துப் புகழா ததும், அகப்பொருள்பற்றிய ஒத்தாழிசைக் கலிப்பாவிற் குரியதுமான செய்யுளுறுப்பு; *tāḻiśai,* which does not deal with the greatness of God, being a member of an *ottāḻiśaikkali* verse which deals only with an amatory theme.

[அகநிலை + செய்யுள் + தாழிசை.]

'வண்ணித்துப்புகழ்தலின் வண்ணக மெனப் படும். என்னை? தரவினானே தெய்வத்தினை முன்னிலையாகத் தந்து நிறீஇப் பின்னரத் தெய்வத்தினைத் தாழிசையானே வண்ணித் துப் புகழ்தலின், அப் பெயர் பெற்றதாகலின். ஒழிந்த உறுப்பான் வண்ணிப்பினுஞ் சிறந்த உறுப்பு இதுவென்க' (தொல்.பொருள்.செய். 140, பேரா. உரை).

**அகநிலைச் செவ்வழி** *aga-nilai-c-cevvaḻi,* பெ. (n.) செவ்வழிப் பண்ணின் ஒருவகை; a primary melody-type, a variety of *śevvaḻi.*

[அகநிலை + செவ்வழி.]

செவ்வழி பார்க்க; see *śevvaḻi.*

**அகநிலைப் பசாசம்** *aga-nilai-p-paśāśam,* பெ. (n.) (நடம்) சுட்டுவிரல் நுனியிற் பெரு விரல் அகப்பட மற்ற மூன்றும் பொலிந்து நிற்கும் கைச் சைகை (சிலப். 3:18, அடியார்க். உரை); (Dan.) hand-gesture in which the thumb and forefinger are joined and the other three fingers extended.

[அகநிலை + பசாசம்.]

**அகநிலைப்பாலை** *aga-nilai-p-pālai,* பெ. (n.) (இசை) பாலைப் பண்ணின் ஒருவகை (கந்தபு. அசுர. சூரன்அரசிருக். 23); (Mus.) a primary melody-type, a variety of *pālai.*

[அகநிலை + பாலை.]

**அகநிலைமருதம்** *aga-nilai-marudam,* பெ. (n.) (இசை) மருதப் பண்ணின் ஒருவகை; (Mus.) a primary melody-type, a variety of *marudam.* "அகநிலை மருதமும் புறநிலை மருதமும்" (சிலப். 8 : 39).

**அகநிலையொத்தாழிசை** *aga-nilai-y-ottāḻiśai,* பெ. (n.) (யாப்.) 1. கலிப்பா வகை (பாப்பா. 91); (Pros.) a kind of *kali* verse. 2. கலிப்பா வுறுப்பு வகை (தொல். பொருள். செய். 138, பேரா. உரை); an element of *kali* verse.

[அகநிலை + ஒத்தாழிசை.]

**அகப்பக்கம்** *aga-p-pakkam,* பெ. (n.) (ஏர.) 1. மனவியல் அல்லது சமயச் சார்பான உண் மையைப்பற்றிய உய்த்துணர்வு; (Log.) inference formed on mental or religious truths. 2. உட்பக்கம்; inside.

[அகம் + பக்கம்.]

**அகப்பகை** *aga-p-pagai,* பெ. (n.) உட்பகை; ஒரு குடும்பம், இனம், வகுப்பு, அமைப்பகம்,

நிறுவனம், நாடு முதலியவற்றுள் ஒன்றற்குள்ளேயே தோன்றி, ஒற்றுமையைக் குலைத்துப் பகைவர்க்குக் காட்டிக்கொடுக்கும் பகை, புறப்பகைக்கு எதிர்; enmity within a family group of relatives, community, class, organization, establishment or country, leading to disunity and destruction.

''புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப''
(நீதிநெறி. 55).

ம. அகப்பக

[அகம் + பகை.]

**அகப்பட்டி** *aga-p-paṭṭi,* பெ. (n.) *அகக் கட்டுப்பாடு இல்லாதவன்-ள்*; an irresponsible person. ''அகப்பட்டி யாவாரைக் காணின்'' (குறள், 1074).

[அகம் + பட்டி.]

**அகப்படச் சூத்திரி-த்தல்** *aga-p-paḍa-c-cūttiri-,* 4 செ.கு.வி. (v.i.) *பொருள் புலப்படாவாறு உள்ளடங்க நூற்பா இயற்றுதல்*; to versify grammatical rules rendering the meaning obscure. 'குறித்த பொருள் விளங்காமையின் அகப்படச் சூத்திரியாராகலானும்' (தொல். சொல். கிளவி. 35, சேனா. உரை).

[**Skt.** sūtra > த. சூத்திரம் → சூத்திரி. அகப்பட + சூத்திரி.]

**அகப்படு-தல்** *aga-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. *உட்படுதல், உள்ளடங்குதல்*; to be included. ''சத்தவிருடிக் கணமகப்பட...... முனித்தலை வரும்'' (உத்தரரா. வரையெடு. 69). 2. *குறைதல்*; to be diminished, shortened. (தொல். பொருள். செய். 134, பேரா. உரை). 3. *சிக்கிக் கொள்ளுதல்*; to be entangled. மான் வலைக்குள் அகப்பட்டுக்கொண்டது (உ.வ.). 'அகப்பட்டுக் கொள்வேன் என்றா கள்வன் களவெடுக்கிறது' (பழ.). 4. *பிடிபடுதல்*; to be caught. ''கொண்டல் வண்ண னகப்படா னெவர்க்கும்'' (பாரத. கிருட். 174). வேட்டைக்குப் போனால் முயல் அகப்படுமா? (உ.வ.). 5. *வசப்படுதல்*; to be brought under one's influence, to become subordinate. ஊரெல்லாம் அவனுக்கு அகப்பட்டிருக்கிறது (உ.வ.). 6. *கிடைத்தல்*; to be obtained. ''யாழுடை யார்மணங் காணணங் காய்வந் தகப்பட்டதே'' (திருக்கோ. 7). 'அகப்பட்டதைச் சுருட்டடா கம்பளியப்பா' (பழ.).

ம. அகப்பெடுக; க., தெ. அகபடு.

**அகப்படுத்து-தல்** *aga-p-paḍuttu-,* 2 பி.வி. (v. caus.) 1. *சிக்கவைத்தல்*; to entrap. ''பரதவர் வலையி னகப்படுத் தரிய'' (பாரத. குரு. 105). 2. *பிடித்தல்*; to catch hold of. ''மற்றவன் பெருமுரண் முருக்கிக் கைய கப்படுத் துய்ப்பனால்'' (கந்தபு. மகேந். வச்சிர. 6).

**அகப்படை** *aga-p-paḍai,* பெ. (n.) *நம்பகமான அணுக்கத்தொண்டர்*; trustworthy attendants. 'அகப்படை யென்று மிடுக்கரா யிருப்பாரை' (ஈடு, 10 : 1, பிர.).

[அகம் + படை.]

**அகப்பணி** *aga-p-paṇi,* பெ. (n.) 1. *மறைமுகமான தொண்டு*; confidential service. ''அங்கு அகப்பணி செய்வர் விண்ணோர்'' (திவ். திருவாய். 10.2 ; 6). 2. *வீட்டுவேலை*; domestic work.

[அகம் + பணி.]

**அகப்பத்தியம்** *aga-p-pattiyam,* பெ. (n.) 1. *மருந்து உண்ணுங்காலத்து உட்கொள்ளும் வரம்பிட்ட உணவு, புறப்பத்தியம் அல்லது மறு பத்தியம் என்பதற்கு எதிர்*; diet or regimen observed during the course of taking medicine. 2. *மருத்துவக் காலத்திற் புணர்ச்சியின்பந் தவிர்கை*; abstention from sexual intercourse, while under medical treatment.

[அகம் + பத்தியம்.]

பத்தியம் பார்க்க; see *pattiyam.*

**அகப்பரம்** *aga-p-param,* பெ. (n.) *திண்ணை*; pial, a raised platform under the varandah used for sitting.

[ஒருகா. அகம் = வீடு. புறம் = வெளி. அகப்புறம் → அகப்பரம் = வீட்டு வெளித் திண்ணை. இனி, அகம் = உள்; பரம் = மேல், மேலிடம், மேடு, திண்ணை; அகப்பரம் = உள் திண்ணை என்றுமாம்.]

**அகப்பரிவாரம்** *aga-p-parivāram,* பெ. (n.) 1. *வீட்டு வேலைக்காரர்* (சீவக. 292, நச். உரை); domestic servants. 2. *அரண்மனைப் பணியாளர்*; (M.E.R. 146 of 1925); attendants of a royal household.

ம. அகப்பரிவாரம்

[அகம் + பரிவாரம்.]

பரிவாரம் பார்க்க; see *parivāram.*

**அகப்பற்று** *aga-p-paṟṟu,* பெ. (n.) *1. தன் உடம் பின்மீதுள்ள பற்றெண்ணம், புறப்பற்று என் பதற்கு எதிர்* (குறள், 345, பரிமே. உரை); attachment to self, self-love, opp. to *puṟap-paṟṟu.* "போமே யகப்பற்றென் றுந்திபற" (அவிரோ. 14). *2. சிற்றூர்ப் பங்காளிகள் அவ்வப்போது பகிர்ந்து பயன்படுத்தும் ஊர் நிலம்* (R.T.). land divided and given to the share-holders of a village periodically for use but held in common. *3. தொடக்கந்தொட்டுக் குளப்பாசனமுள்ள நிலம்* (நெல்லை); land which has been irrigated by a tank since the very beginning (Tn.).

ம. அகப்பற்று

[அகம் + பற்று.]

**அகப்பா** *agappā,* பெ. (n.) *1. கோட்டை மதில்;* fortified wall, wall of a fort or fortress. "அகப்பா எறிந்த அருந்திறல்" (சிலப். 28 : 144). *2. மதிலுண்மேடை* (பிங்.); mound within inner fortifications. *3. அகழி* (பிங்.); ditch around a fort.

ம. அகப்ப

[உகப்பு → அகப்பு → அகப்பா.]

அகப்பு[3] பார்க்க; see *agappu*[3].

**அகப்பாட்டு** *aga-p-pāṭṭu,* பெ. (n.) *1. அகப் பொருட் செய்யுள், புறப்பாட்டு என்பதற்கு எதிர்;* love-poem, opp. to *puṟappāṭṭu.* *2. அகநானூறு* (கலித். 37, நச். உரை); an anthology of love-lyrics.

[அகம் + பாட்டு.]

அகநானூறு பார்க்க; see *aga-nāṉūṟu.*

**அகப்பாட்டுவண்ணம்** *aga-p-pāṭṭu-vaṇṇam,* பெ. (n.) (யாப்.) *செய்யுளின் இறுதியடி, முடிப் பெழுத்தோ சொல்லோ இன்றி, இடையடி போல் தோன்றும் அமைப்பு அல்லது ஓசை வகை;* (Pros.) poem or verse so constructed, that the last line looks like any of the previous lines and not appearing to give a finish to the poetic piece.

"அகப்பாட்டு வண்ணம்,
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே"
(தொல். பொருள். செய். 222).

எ-டு : "உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்"
(ஐங்குறு. 21).

[அகம் + பாட்டு + வண்ணம்.]

**அகப்பாட்டுறுப்பு**[1] *aga-p-pāṭṭ(u)-uṟuppu,* பெ. (n.) *அகப்பொருளின் அல்லது அகத் திணையின் பன்னிரு கூறு;* the twelve members of *agapporuḷ* or *agattiṇai :*

1. இயல் பகத்திணை —method of defining a thing or showing its nature, quality, etc.
2. வகை யகத்திணை —amplification or detailing at large what has been said briefly.
3. பொது வகத்திணை —the rule for summing up or recapitulating.
4. சிறப் பகத்திணை —the rule for discriminating or explaining the difference between things.
5. உவம வகத்திணை —the rule for illustrating a subject by metaphors, comparisons, etc.
6. புறநிலை யகத்திணை —the rule for exemplifying a subject through examples.
7. எதிர்நிலை யகத்திணை —the rule for elucidating a point through its opposite.
8. காரண (அ) கருவி யகத்திணை —revealing the condition or quality of a thing by its origin.
9. காரிய வகத்திணை —proving a thing by its effects.
10. காரக வகத்திணை —the rule for relating an action, event, etc., to which belong the following :
    (1) செய்பவன் - who. (2) செய்தொழில் - what. (3) கருவிகள் - by what helps. (4) பயன் - why. (5) இடம் அல்லது நிலம் - where. (6) காலம் - when. (7) திறன் - in what manner or how.
11. முன்னவை யகத்திணை —the rule for foretelling events from signs.
12. பின்னவை யகத்திணை —the rule for foretelling the consequences of any action (p.)—(W.).

"அகத்திணை யியல்பே யறைபடும் வகையே
பொதுச்சிறப் புவமை புறநிலை யெதிர் நிலை
கருவி காரியங் காரக முன்னவை
பின்னவை யெனவாம் பிரிவீ ராறே"
(தொன். வி. பொருள். 2 : 2).

''அவற்றுள்,
இயல்புரைத் தொப்ப வியம்புத லியல்பே''
(ஷ 3).

''தொகைவிரித் துரைத்தல் சொற்பொருள்
வகையே'' (ஷ 4).

''பொதுவெனப் பலவை யடக்கு மொன்றே
சிறப்பென வொன்றி னடங்கும் பலவே''
(ஷ 5).

''உவமை யெனப்பிறி தொப்ப
வுரைத்தலே'' (ஷ 6).

''புறநிலை யொப்பிழி வாக்கமென
மூன்றே'' (ஷ 7).

''குறித்தவை காட்ட மறுத்தவை காட்டி
யெதிரில் விளக்க லெதிர்நிலை யென்ப''
(ஷ 8).

''காரண நான்குங் காரிய நான்கும்
விரித்துத் தன்பொருள் விளக்க லுரித்தே''
(ஷ 9).

''காரக மென்ப கருத்தா கருமங்
கருவி கருத்திடங் காலந் திறனேழே''
(ஷ 10).

''முன்னவை பின்னவை முன்பின் னடந்தன
பன்னித் தன்பொருள் பயன்படப்
பகர்தலே'' (ஷ 11).

இந் நூற்பாக்கள், வீரமாமுனிவரின் சொந்தக் கூற்றுகளே யன்றித் தொல்காப்பியத்தையோ வேறு முன்னூலையோ தழுவியனவல்ல.

இவை கூறும் பாகுபாடு அகப்பாட்டுறுப்பென வின்சிலோ அகரமுதலியிற் கூறப்பட்டிருப்பதால், இவற்றை இங்கு மேற்கோளாகக் காட்டலாயிற்று.

'காரணம்' என்பது 'கரணம்' என்பதன் நீட்டம். 'காரியம்' என்பது 'இயம்' என்னும் திரிப்பீறு பெற்ற அதன் திரிசொல்.

'காரகம்' என்பதைக் 'கருமகம்' என்று தமிழிற் குறிக்கலாம்.

'காரணம்', 'காரியம்' என்னும் சொற்களை முறையே, 'கரணியம்', 'கருமியம்' என்றுங் குறிக்கலாம்.

இதன் விளக்கத்தைக் ***கரணம்*** என்னும் உருப்படியிற் காண்க.

**அகப்பாட்டுறுப்பு**[2] *aga-p-pāṭṭ(u)-uṟuppu*, பெ. (n.) (யாப்.) **அகப்பொருட் செய்யுளின் திணை, கை கோள், கூற்று, கேட்போர், இடம், காலம், பயன், முன்னம், மெய்ப்பாடு, எச்சம், பொருள் வகை, துறை என்னும் பன்னிரண்டு உறுப்புகள்;** (Pros.) elements of a love-poem, 12 in number.

''திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் பயனே முன்னம்
மெய்ப்பா டெச்சம் பொருள்வகை
துறையென்
றப்பா லாறிரண் டகப்பாட் டுறுப்பே''
(நம்பியகப். 211).

*[அகம் + பாட்டு + உறுப்பு.]*

**அகப்பாட்டெல்லை** *aga-p-pāṭṭ(u)-ellai*, பெ. (n.) **குறித்த வரம்பைத் தன்னகத் தடக்கிக்கொள்ளும் எல்லை** (தொல். பாயி. இளம். உரை); confining limit or boundary.

*[அகப்படு → அகப்பாடு + எல்லை.]*

**அகப்பாடு** *aga-p-pāḍu*, பெ. (n.) *1.* **அகப்படுதல்;** being caught or obtained. *2.* **உண்ணிகழ்ச்சி;** internal occurrence. *3.* **நெருங்கியிருக்கை;** being close. ''அகப்பாட் டண்மையன்'' (பெருங். மகத. 18 : 20). *4.* **புதுக் கண்டுபிடிப்பு** (புதுவை); discovery (Poṇḍ.).

*[அகப்படு → அகப்பாடு.]*

**அகப்பு**[1] *agappu*, பெ. (n.) **ஆழம்** (வின்.); depth.

*[அகழ்தல் = தோண்டுதல். அகழ் → அகழ்ப்பு → அகப்பு = தோண்டப்பட்ட அல்லது தோண்டப் படும் ஆழம்.]*

*அகழ்ப்பு* பார்க்க; see *agaḻppu.*

**அகப்பு**[2] *agappu*, பெ. (n.) ***மரப்பிளப்பிற் செலுத்தும் மரத்துண்டு,*** **ஆப்பு** (இ.வ.); wedge (Loc.).

*[அகைத்தல் = அடித்தல், செலுத்துதல். அகை → அகைப்பு → அகப்பு = அடித்துச் செலுத்தப்படும் ஆப்பு.]*

**அகப்பு**[3] *agappu*, பெ. (n.) ***எழுச்சி*** (சம்.அக.); height.

*[உகத்தல் = உயர்தல். உக → உகப்பு = உயர்ச்சி. ''உகப்பே உயர்தல்'' (தொல். சொல். உரி. 8). உகப்பு → அகப்பு. உ → அ சொல்லாக்கத் திரிபு. ஒ.நோ : உகை(த்தல்) → அகை(த்தல்).]*

**அகப்புலி** *aga-p-puli*, பெ. (n.) ***பொருள்கள், சொத்து*** (கரு.அக.); things, property.

*[பொலிதல் = செழித்தல், மிகுதல். அகப் பொலி → அகப்புலி.]*

**அகப்புறக்கருவி** *aga-p-puṟa-k-karuvi,* பெ. (n.) (இலக்.) **எழுத்திலக்கணங்களை அறிவதற்கு மிகத் துணையான புணரியல் என்னும் நூற் பகுதி**; (Gram.) a sub-division of grammar, viz., *puṇariyal,* very helpful for the understanding of Tamil Orthography.

[அகம் + புறம் + கருவி.]

**அகப்புறக் கைக்கிளை** *aga-p-puṟa-k-kaikkiḷai,* பெ. (n.) **அன்பினைந்திணை என்னும் இரு தலைக் காதற்குப் புறமான ஒருதலைக் காதல்**; unreciprocated love, as outside the sphere of reciprocal love.

[அகம் + புறம் + கைக்கிளை.]

மக்கள் விருப்பத்தைக் கவனியாது பெற்றோரால் முடித்து வைக்கப்படும் திருமணங்களுள், மணமகன் மணமகள் என்னும் இருவருள் ஒருவர் மட்டும் காதலித்து, இன்னொருவர் கட்மைக்காக இணங்கியிருப்பதே, ஒருதலைக் காமம் என்னும் கைக்கிளையாகும்.

''காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை யெய்தி
நன்மையுந் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே''
(தொல். பொருள். அகத். 50)

என்பது, நூற்பாவிற் குறித்துள்ளவாறு, சொல்லளவான காமக் குறிப்பேயன்றிக் கூட்டத்தொடு கூடிய ஒழுக்கமோ மண வாழ்க்கையோ அன்று.

ஆகவே, கைக்கிளைக் குறிப்பு, கைக்கிளை யொழுக்கம் அல்லது கூட்டம் எனக் கைக் கிளை இருதிறத்தது என அறிக.

இங்ஙனமே, பெருந்திணைக்குறிப்பு, பெருந் திணையொழுக்கம் எனப் பெருந்திணையும் இருதிறத்ததாம். அது பெருந்திணையிற் கூறப்படும்.

**அகப்புறச்சமயம்** *aga-p-puṟa-c-camayam,* பெ. (n.) (சிவ.) **சிவமதத்திற்கு மிக நெருக்க மல்லாத ஆதனம்பியம் (பாசுபதம்), மாநோன் பம் (மாவிரதம்), மண்டையம் (காபாலம்), இடவியம் (வாமம்), நாமுருவம் (வைரவம்), ஒன்றியக்கோட் சிவனியம் (ஐக்கவாத சைவம்) என்னும் அறுவகைக் கிளைநெறிகள்**; (Śaiva.) six religious sects not intimately related to orthodox Śaivism.

[அகப்புறம் + சமயம்.]

**அகப்புறத்தலைவன்** *aga-p-puṟa-t-talaivaṉ,* பெ. (n.) (இலக்.) **கைக்கிளை, பெருந்திணை யொழுக்கங்களுக்குரிய தலைவன்** (கலித். 108, நச். உரை); (Gram.) lover whose love is unreciprocated or improper if not criminal.

[அகப்புறம் + தலைவன்.]

**அகப்புறத்திணை** *aga-p-puṟa-t-tiṇai,* பெ. (n.) **அகப்பொருட்டிணை ஏழனுள், அகனைந் திணைக்குப் புறம்பான கைக்கிளை, பெருந் திணைகள்** (யாப். வி. பக். 528); the two forms of love *kaikkiḷai* and *perundiṇai* out of seven, as outside the sphere of *agaṉaindiṇai.*

[அகப்புறம் + திணை.]

அகப்பொருட்குப் புறம்பான புறப்பொருட் டிணை ஏழிருப்பதால், அகப்பொருட்குள் ளேயே சற்றுப் புறம்பானது அகப்புறம் எனப் பட்டது. இங்ஙனம் புறப்பொருட்குள்ளும் சற்றுப் புறம்பானது புறப்புறம் எனப்படும்.

**அகப்புறப்பாட்டு** *aga-p-puṟa-p-pāṭṭu,* பெ. (n.) **கைக்கிளை, பெருந்திணைகளுக்குரிய செய்யுள்**; poem describing love which is unreciprocated or improper if not criminal. ''அகப்புறப் பாட்டு மிகப்பில வவையே'' (நம்பியகப். 250).

[அகப்புறம் + பாட்டு.]

**அகப்புறப்பெருந்திணை** *aga-p-puṟa-p-perun-diṇai,* பெ. (n.) **இருதலைக் காமமென்னும் அகனைந்திணைக்குப் புறமாகிய பொருந்தாக் காமம்** (நம்பியகப். 243); improper or criminal love, as outside the sphere of mutual love.

[அகப்புறம் + பெருந்திணை.]

**அகப்புறப்பொருள்** *aga-p-puṟa-p-poruḷ,* பெ. (n.) **அகப்புறத்திணைகட்குரிய ஒருதலைக் காமமும் பொருந்தாக் காமமும்**; themes relating to unreciprocated and improper or criminal love.

[அகப்புறம் + பொருள்.]

**அகப்புறம்** *aga-p-puṟam,* பெ. (n.) 1. **ஒன்றோடு தொடர்புகொண்டு அதற்குச் சற்றுப் புறம் பானது**; that which is related to, but is not of the essence. 2. **அகத்திணைப்புறம்** பார்க்க; see *aga-t-tiṇai-p-puṟam.*

[அகம் + புறம்.]

**அகப்புறமுழவு** *aga-p-puṟa-muḻavu,* பெ. (n.) **தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலிய இடை நிலைத் தோற்கருவிகள்** (சிலப். 3 : 27, அடி யார்க். உரை); drums of the medium grade, like *taṉṉumai, takkai* and *taguṇiccam*, etc., used as accompaniment to music and dancing.

'அகமுழவாவன: முன்சொன்ன உத்தமமான மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழா வெனவிவை.

அகப்புற முழவாவன : முன்சொன்ன மத்திம மான தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலாயின.

புறமுழவாவன : முன்சொன்ன ' அதமக் கருவியான கணப்பறை முதலாயின.

புறப்புற முழவாவன: முற்கூறப்படாத நெய் தற்பறை முதலாயின' என்று அடியார்க்கு நல்லார் (சிலப். 3 : 27, உரை) கூறியிருப்ப தால், அகம் அகப்புறம் புறம் என்று வகுத்த மூவகை முழவுகளும், முறையே, முதல் இடை கடைப்பட்ட மங்கல முழவுகள் என்பதும், புறப்புறம் என்று இழித் தொதுக்கியவை அமங்கலப் பறைகள் என்பதும் உய்த்துணரப்படும்.

**அகப்பூ** *aga-p-pū,* பெ. (n.) **நெஞ்சத்தாமரை;** heart-lotus, used fig. ''அகப்பூ மலைந்து'' (சீவக. 1662).

ம. அகமலர்

[அகம் + பூ.]

**அகப்பூசை** *aga-p-pūšai,* பெ. (n.) *மன வழி பாடு;* worshipping in mind, meditation.

[அகம் + பூசை.]

**அகப்பேய்ச்சித்தர்** *aga-p-pēy-c-cittar,* பெ. (n.) **அடிக்கடி தம் மனத்தை 'அகப்பேய்' என்று விளித்துப் பனுவல் பாடிய ஒரு வென்னர் (சித்தர்);** name of a *Siddha*, author of a poem in which the mind is addressed as 'mind-devil' in every stanza.

[அகம் + பேய் + சித்தர்.]

**அகப்பை** *agappai,* பெ. (n.) **சோறு, குழம்பு, காய்கறி முதலிய சமைத்த உணவுப் பொருள் களை முகந்து பரிமாற உதவும் நீண்ட பிடியுள்ள சிரட்டை அல்லது சிறுகலம்** (சூடா.); ladle, large spoon with a long handle, usu. of coconut shell. 'அகப்பை அறுசுவை யறியுமா?' (பழ). 'அகப்பை குறைந்தால் கொழுப்பெல்லாம் அடங்கும்' (பழ). 'அகப்பை பிடித்தவன் தன் னவனானால் அடிப்பந்தியில் இருந்தா லென்ன? கடைப்பந்தியில் இருந்தாலென்ன?' (பழ.).

ம. அகப்பான்; க. அகபெ; தெ. அகப; து. கூபெ.

[அகழ்தல் = தோண்டுதல், முகத்தல். அகழ் → அகழ்ப்பு → அகழ்ப்பை → அகப்பை. ஒ.நோ : கேழ்ப்பு → கேழ்ப்பை → கேப்பை. சமைத்த உணவு வகைகளைக் கலத்திலிருந்து அகழ்ந்து (தோண்டி அல்லது முகந்து) எடுத்தற்குச் சிரட்டையாலும் மரப்பிடியாலும் செய்யப்பட்ட கருவி அகப்பை.]

**அகப்பைக்கணை** *agappai-k-kaṇai,* பெ. (n.) *அகப்பைக் காம்பு;* handle of ladle.

[அகப்பை + கணை.]

**அகப்பைக்கின்னரி** *agappai-k-kiṉṉari,* பெ. (n.) **அகப்பை வடிவில் செய்த விளையாட்டு நரம்பிசைக் கருவி;** stringed toy musical instrument shaped like a coconut-shell ladle.

[அகப்பை + கின்னரி.]

கின்னரி பார்க்க; see *kiṉṉari.*

**அகப்பைக்குறி** *agappai-k-kuṟi,* பெ. (n.) 1. *அகப்பை யளவு* (ஈடு, 1.4 : 6, அரும்.); measure of quantity, a coconut-shell ladle can hold. 2. **நெற்குவியலின்மேல் இடும் சாணிப் பாற் குறி;** marks of cow-dung solution poured from a ladle on heaps of paddy. 'கண்ணாரக் கண்டதற்கு ஏன் அகப்பைக் குறி?' (பழ.). 3. **அகப்பை விழும் நிலையைக்கொண்டு குறி பார்த்தல்** (வின்.); prognostication by observing the lying position and direction of a ladle let fall perpendicularly, practised by women.

[அகப்பை + குறி.]

குறி பார்க்க; see *kuṟi.*

**அகப்பைக்கூடு** *agappai-k-kūḍu,* பெ. (n.) *அகப்பைசெருகி;* rack for ladles.

[அகப்பை + கூடு.]

**அகப்பைசெருகி** *agappai-šerugi,* பெ. (n.) **அகப்பைகள் செருகி வைக்கும் சட்டம்;** perforated frame for holding ladles, the handles being inserted into the perforations.

**அகப்பைசொருகி** *agappai-šorugi,* பெ. (n.) அகப்பைசெருகி பார்க்க; see *agappai-šerugi.*

**அகப்பையடி** *agappai-y-aḍi*, பெ. (n.) 1. *அகப்பையினா லடிக்கும் அடி*; a blow dealt with a ladle. 2. *பட்டினி*; starvation. 3. *அகப்பையின் அடிப்பகுதி*; the bottom of a ladle.

[அகப்பை + அடி.]

**அகப்பையடிபடு-தல்** *agappai-y-aḍi-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. *அகப்பையினா லடிபடு தல்*; to be beaten with a ladle. 2. *பட்டினி போடப்படுதல்*; to be starved.

[அகப்பை + அடி + படு.]

**அகப்பையைச் சுருங்கப்பிடி-த்தல்** *agappaiyai-c-curuṅga-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *பிள்ளை கட்குத் தண்டனையாகச் சாப்பாட்டைக் குறைத்தல்*; to decrease the quantity of food given, as a punishment, to children.

[அகப்பை + ஐ + சுருங்க + பிடி.]

**அகப்பொருட்கைக்கிளை** *aga-p-poruṭ-kaikkiḷai*, பெ. (n.) *காமம் நுகர்தற்குரிய கன்னித் தலைமகளின் காதற் குறிப்பை அறியும் வரை, தலைமகன் அவளைச் சாராதுநின்று தன் நெஞ்சொடு கூறல்* (நம்பியகப். 28); theme in which a lover is talking to his own mind, while awaiting indications from his sweet heart of her love in response to his.

[அகம் + பொருள் + கைக்கிளை.]

**அகப்பொருட்கோவை** *aga-p-poruṭ-kōvai*, பெ. (n.) *களவில் தொடங்கிக் கற்பில் முடியும் அகப்பொருட்டலைவன் தலைவியரின் காதல் வாழ்க்கையை, நானூற்றிற்குக் குறையாத கட்டளைக்கலித்துறையில் கோவைபடக் கூறும் பனுவல் வகை*; division of poem, in not less than 400 *kaṭṭaḷaikkalitturai* verses which treats of the continuous life of lovers, beginning with clandestine union and culminating in married and domestic life. "ஆறிரண் டுறுப்பும் ஊறின்றி விளங்கக் கூறுவ தகப்பொருட் கோவை யாகும்" (இலக். வி. 816).

[அகம் + பொருள் + கோவை.]

**அகப்பொருட்டலைவன்** *aga-p-poruṭ-ṭalaivaṉ*, பெ. (n.) *அகப்பொருட் செய்யுளில் வரும் காதலன்*; hero of a love-poem.

[அகம் + பொருள் + தலைவன்.]

**அகப்பொருட்டலைவி** *aga-p-poruṭ-ṭalaivi*, பெ. (n.) *அகப்பொருட் செய்யுளில் வரும் காதலி*; heroine of a love-poem.

[அகம் + பொருள் + தலைவி.]

**அகப்பொருட்டுறை** *aga-p-poruṭ-ṭuṟai*, பெ. (n.) *அகப்பொருள்பற்றிய பொருட்கூறு*; a theme of love-poetry.

[அகம் + பொருள் + துறை.]

**அகப்பொருட்பெருந்திணை** *aga-p-poruṭ-perun-diṇai*, பெ. (n.) *இருதலைக் காமத் தலைவனுந் தலைவியும் இன்பம் நுகர்ந்துவருங்கால், இடைக்காலத்தில் ஏற்பட்ட சில இன்ப நுகர்ச்சித் தடைகளை எடுத்துக்கூறுவது*; narration of obstacles encountered in the love-life of genuine lovers.

"அகன்றுழிக் கலங்கலும் புகன்றமடற் கூற்றும்
குறியிடை யீடுந் தெளிவிடை விலங்கலும்
வெறிகோள் வகையும் விழைந்துடன் போக்கும்
பூப்பிய லுரைத்தலும் பொய்ச்சூ ளுரையும்
தீர்ப்பி லூடலும் போக்கழுங் கியல்பும்
பாசறைப் புலம்பலும் பருவமாறு படுதலும்
வன்புறை யெதிர்ந்து மொழிதலும் அன்புறு
மனைவியுந் தானும் வனமடைந்து நோற்றலும்
பிறவும் அகப்பொருட் பெருந்திணைக் குரிய"
(நம்பியகப். 243).

[அகம் + பொருள் + பெருந்திணை.]

**அகப்பொருள்** *aga-p-poruḷ*, பெ. (n.) 1. *நாற் பொருள்களுள் ஒன்றான இன்பம்*; pleasure, as one of the four objectives of life. 2. *காம வின்பம்*; sexual pleasure. 'நீ புறப்பொருளை விரும்பி அகப்பொருளைக் கைவிட்டதிலே' (கலித். 15, நச். உரை). 3. *அகத்திணை யென்னும் இன்பவொழுக்கங் கூறும் இலக்கண நூல்*; a grammar of love-theme. எ-டு: இறையனா ரகப் பொருள், நம்பியகப்பொருள். 4. *இன்ப வொழுக்கங் கூறும் நூற்றொகுதி*; love-literature. 5. *அகத்திணையாகிய பொருள்*; love-theme. "புலவோ ராய்ந்த வருந்தமி ழகப் பொருள்" (நம்பியகப். 1). 6. *உட்பொருள்*; inner meaning. "நான்மறை யகப்பொருள் புறப்பொரு ளறிவார்" (கம்பரா. யுத்த. இரணிய. 32). 7. *வீட்டிலுள்ள பொருள்*;

household effects. "அகப்பொரு டமக்கருளு வார்க்கஃது நல்கி - யுகப்புறு பரத்தையர்கள்" (தணிகைப்பு. திருநகரப். 78).

ம. அகப்பொருள்

[அகம் + பொருள்.]

**அகப்பொருள் விளக்கம்** *aga-p-poruḷ-viḷakkam*, பெ. (n.) **ஓர் அகத்திணை நூல்**; name of a grammar of love-poetry. **நம்பியகப்பொருள் விளக்கம்** *பார்க்க*; see *nambi-y-aga-p-poruḷ-viḷakkam.*

[அகம் + பொருள் + விளக்கம்.]

**அகம்**[1] *agam*, பெ. (n.) *1.* **உள்ளிடம், புறம் என்பதற்கு எதிர்**; inside, opp. to *puṟam*. "அகம்புற நிறைந்த சோதியாய்" (தாயு. சிவன்செ. 4). *2.* **உள்ளடங்குகை**; being subordinate. "அகப்பட்டி யாவாரைக் காணின்" (குறள், 1074). *3.* **உடம்பினகத்துள்ள மனம்**; mind. "அகமலர்ந் தீவார்" (பதினொ. திருவிடை. மும். 7). 'அகம் அங்கே ஆக்கை இங்கே' (பழ.). 'அகம் ஏறச் சுகம் ஏறும்' (பழ.). 'அகம் மலிந்தால் அஞ்சும் மலியும், அகம் குறைந்தால் அஞ்சும் குறையும்' (பழ.). *4.* **நெஞ்சம்**; heart. *5.* **ஆதன் (ஆன்மா)**; soul. "அதுவதுதா னென்னு மகம்" (சி.போ.சிற். 3.6). *6.* **மார்பு**; chest. "புல்லக மகன்றது" (சிலப். 30 : 16). *7.* **அகப்பொருள் என்னும் காதல்**; love-theme. *8.* **எழுவகைப்பட்ட அகத்திணை**; love, as a mental experience of lovers, of seven forms. *9.* **காதலால் விளையும் காம வின்பம்**; sexual pleasure. 'யாண்டும் உள்ளத் துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின், அதனை அகம் என்றார்' (தொல். பொருள். அகத். 1, நச். உரை). *10.* **அகப் பொருள்பற்றிய அகநானூறு என்னும் அகவற்றொகை**; an anthology of 400 love-lyrics. "அகம்புறமென் றித்திறத்த வெட்டுத் தொகை" (தனிப்பாட்டு). *11.* **வதியும் உள்ளிடங் கொண்ட வீடு** (பிங்.); house. *12.* **ஒரு நிலப்பகுதியின் உள்ளிடமான மருதநிலம்**; agricultural tract. "ஆலைக் கரும்பி னகநா டணைந்தான்" (சீவக. 1613). *13.* **இடம்** (திவா.); place. *14.* **எங்கும் பரந்துள்ள இடமாகிய விசும்பு** (தைலவ. பாயி. 22); sky, space. —, இடை. (ind.) *1.* **இடவேற்றுமை யுருபு களுள் ஒன்று**; a loc. ending. "உள்அகம் புறம் இல் இடப்பொரு ளுருபே" (நன். 302). *2.* **ஓர் இடப்பெயரீறு**; a suff. of place names. எ-டு: கானகம், தமிழகம். *3.* **ஒரு பொருட்பெயரீறு**; a suff. forming names of objects. எ-டு: கேடகம், பாடகம். *4.* **ஒரு தொழிற்பெயரீறு**; a verbal noun suff. எ-டு: நம்பகம், நாடகம். *5.* **ஒரு பண்புப்பெயரீறு**; an abstract noun suff. எ-டு: காழகம் (கருமை).

ம. அகம்; க. அகெ.

[அகழ்தல் = தோண்டுதல். அகைதல் = ஒடிதல். அகைத்தல் = அறுத்தல். ஒருகா. அகு → அகம் = உட்டுளை, உள், குடி, வீடு. ஒ.நோ: புரை = துளை, வீடு. E. hold = small mean dingy abode. ஒ.நோ: இகுதல் = தாழ்தல். இகுத்தல் = தாழ்த்தல். இகுப்பம் = தாழ்வு. இகு → இகழ் → இகழ்த்தல் = தாழ்த்தல், தாழ்வாகக் கருதுதல்.]

**அகம்**[2] *agam*, பெ. (n.) **தவசம், கூலம்**; cereals, grain. "அகமது குறைவி லாதாய்" (நல். பாரத. ஆதி. வியாசருற். 8).

[அஃகம் → அக்கம் → அகம்.]

**அகம்**[3] *agam*, பெ. (n.) **வெள்வேல்** (மலை.); panicled babul.

[அக்கு = கூர்மை, முள். அக்கு → அகு → அகம்.]

**அகம்படி** *agambaḍi*, பெ. (n.) *1.* **உள்ளிடம்**; inside. "திருவயிற்றி னகம்படியில் வைத்து" (திவ். பெரியதி. 11.6 : 8). *2.* **மனம்**; mind. "அகம்படிக்கோயி லானை" (தேவா. 5.91 : 1). ம. அகம்படி. *3.* **திருக்கோயிலில் அல்லது அரண்மனையிற் செய்யும் அகத்தொண்டு**; service in a sanctuary or inner appartments of a palace. 'அகம்படிப் பெண்டுகள்' (I.M.P. Tp. 274.). *4.* **அடியார்**; devotees (ஈடு, 5.8 : 2).

[அகம்பு = உள். அகம்பு + அடி – அகம்படி, புறம்படி என்பதற்கு எதிர்.]

**அகம்படித்தொண்டு** *agambaḍi-t-toṇḍu*, பெ. (n.) **அணுக்கத்தொண்டு**; service, as in a sanctuary. "கோயிலுள்ளா லகம்படித் தொண்டு செய் வார்" (பெரியபு. தில்லை. 4).

[அகம்பு + அடி + தொண்டு.]

'அகம்படிமை' என்றும் வழங்கும்.

**அகம்படிப்பெண்டுகள்** *agambaḍi-p-peṇḍugaḷ*, பெ. (n.) **கோயிலகப் பணிப்பெண்கள், அகக் கோளாளர்** (தக்கயாகப். 95, உரை); maid-servants in a temple.

[அகம்பு + அடி + பெண்டுகள்.]

**அகம்படிமுதலிகள்** *agambaḍi - mudaligaḷ*, பெ. (n.) **திருக்கோயிற் பணியாளர்** (I.M.P. Cg. 919); male-servants in a temple.

ம. அகம்படி

*[அகம்பு + அடி + முதலிகள்.]*

**அகம்படிமை** *agambaḍimai*, பெ. (n.) **அகம்படித் தொண்டு** பார்க்க; see *agambaḍi-t-toṇḍu*. "அகம்படிமைத் திறலினர்" (கோயிற்பு. பாயி. 13).

*[அகம்பு + அடிமை.]*

**அகம்படியர்** *agambaḍiyar* பெ. (n.) 1. **வீட்டு வேலை செய்வோர்**; domestic servants. 'அவ்வவர்க்குரிய அகம்படியர்' (திவ். திருப்பா. 4:72, வியா.). 2. **தஞ்சை, மதுரை மாவட்டங் களில் முன்பு குறுநில மன்னர் அரண்மனை களிற் பணிசெய்து, இன்று உழவுத்தொழில் செய்துவரும் ஒரு குலத்தார்**; name of a caste of agriculturists in Thanjāvūr and Madurai districts, who originally were doing service in the palace of ancient chieftains.

ம. அகம்படிக்காரன்

*[அகம்பு + அடியர்.]*

**அகம்படியார்** *agambaḍiyār*, பெ. (n.) **திருக் கோயில்களிலும் அரண்மனைகளிலும் அகத் தொண்டு செய்வார்**; those who do service in a sanctuary or inner appartments of a palace.

*[அகம்பு + அடியார்.]*

**அகம்பாடு** *agambāḍu*, பெ. (n.) **உள்ளீடான மெய்ப்பொருள்**; essential truth. "விச்சையி னகம்பா டுணர்ந்தறிவு முற்றுபய னுற்றவரை யொத்தாள்" (கம்பரா. பால. கோலங். 39).

*[அகம்படு → அகம்பாடு.]*

**அகம்பு** *agambu*, பெ. (n.) **உள்; புறம்பு என்ப தற்கு எதிர்**; inside; opp. to *puṟambu*.

ம. அகமே

*[அகம் → அகம்பு.]*

**அகமகன்** *agamagaṉ*, பெ. (n.) **கடைக்கழகக் காலத்திற்குப்பின் தமிழ்நாட்டிற் புகுத்தப் பட்டதும், சிவனின் மூத்த மகனாகச் சொல்லப் படுவதும், காப்புத் தெய்வமாகக் கருதப்படு வதும், பெரும்பாலும் வீடுதொறும் வழிபடப் படுவதுமான ஆனைமுகப் பிள்ளையார்த் தெய்வம்** (சம்.அக.); elephant-headed God Gaṇēśa, the eldest son of Śiva, commonly worshipped in Hindu homes.

**அகமகிழ்ச்சி** *aga-magiḻcci*, பெ. (n.) **மனக்களிப்பு** (பிரபோத. 27 : 33); joy, inward happiness.

*[அகம் + மகிழ்ச்சி.]*

**அகமடல்** *aga-maḍal*, பெ. (n.) **பாளை**; spathe. "அகமடல் வதிந்த வன்புபுரி பேடை" (பெருங். மகத. 4 : 47).

*[அகம் + மடல்.]*

**அகமணைத்தட்டு** *aga-maṇai-t-taṭṭu*, பெ. (n.) **வண்டியி னுறுப்புவகை**; a part in the frame-work of a cart. "புறமணைப் பலகையு மகமணைத் தட்டும்" (பெருங். உஞ்சைக். 58 : 50).

*[அகமணை + தட்டு.]*

**அகமரி-த்தல்** *aga-mari-*, 4 செ.கு.வி. (v.i.) **கருப்பையில் இறத்தல்** (சீவரட். 207); to die in the womb.

*[த. மடி > Skt. mari (mru). அகம் + மரி – அகமரி.]*

**அகமலர்ச்சி** *aga-malarcci*, பெ. (n.) **மனமகிழ்ச்சி** (திவா.); joy, happiness, as blossoming of the mind.

*[அகம் + மலர்ச்சி.]*

**அகமலர்ச்சியணி** *aga-malarcci-y-aṇi*, பெ. (n.) **ஒரு பொருளின் உயர்வுதாழ்வுகளை இன் னொரு பொருளின் உயர்வுதாழ்வுகளோடு ஒப்பு நோக்குவதனாற் புலப்படுத்தும் பொருளணி வகை** (அணியி. 69); figure of speech in which the excellences and defects of one object are brought out, through a comparison with the same qualities in another object.

அகமலர்ச்சியணி — ஒரலங்காரம்; அஃது, ஒன்றின் குணத்தான் மற்றொன்றின் குண மும், ஒன்றின் குற்றத்தான் மற்றொன்றின் குற்றமும், ஒன்றின் குணத்தான் மற்றொன் றின் குற்றமும், ஒன்றின் குற்றத்தான் மற்றொன்றின் குணமும் வருணிக்கப்படுவது. இதனை வடநூலார் 'உல்லாசாலங்காரம்' என்பர் (குவ. 69) — (சங்.அக.).

*[அகமலர்ச்சி + அணி.]*

**அகமாட்சி** *aga-māṭci*, பெ. (n.) **இல்லறத்திற் குரிய நற்குண நற்செய்கைகள்** (உபதேசகா. சூராதி. 77); good qualities and deeds befitting an ideal family life.

*[அகம் + மாட்சி. அகம் = வீடு, இல்லறம்.]*

**அகமிசைக்கிவர் - தல்** *aga - mišaikk(u) - ivar-*, 2 செ.கு.வி. (v.i.) ***கோட்டை மதிலின்மேல் ஏறி நின்று போர்புரிதல்***; to fight on the ramparts. "அகமிசைக் கிவர்ந்தோன் பக்கமும்" (தொல். பொருள். புறத். *13*).

"மதின்மிசைக் கிவர்ந்தோன் பக்கமும்" என்றும், "மதின்மிசைக் கிவர்ந்த மேலோர் பக்கமும்" என்றும், இரு பாட வேறுபாடு முண்டு.

*[அகமிசைக்கு + இவர்.]*

**அகமுகம்** *aga-mugam*, பெ. (n.) ***உள்முகம்***; the state of being turned inward.

*[அகம் + முகம்.]*

**அகமுகமா(கு)-தல்** *aga-mugam-ā-*, *6* செ.கு.வி. (v.i.) ***உள்நோக்குதல்***; to be turned or pointed inward. "அகமுகமாந் தொடர்பால்" (ஞானவா. சுரகு. *12*).

*[அகமுகம் + ஆ(கு).]*

**அகமுடையாள்** *agam-uḍaiyāḷ*, பெ. (n.) ***மனைவி, அகமுடையான் என்பதன் பெண்பால்***; wife, fem. of *agamuḍaiyāṉ*.

**ம.** அகத்தாள்

*[அகம் + உடையாள்.]*

**அகமுடையான்** *agam-uḍaiyāṉ*, பெ. (n.) *1.* ***கணவன்***; husband, as master of the house. *2.* ***வீட்டுக்காரன்***; householder. *3.* ***அகம்படியக் குலத்தான்*** (I.M.P. Tj. 1033); person of the Agambaḍiyar caste.

**ம.** அகத்தான்

*[அகம் + உடையான்.]*

**அகமுழவு** *aga-muḻavu*, பெ. (n.) ***மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழா என்னும் உயர்நிலைத் தோற் கருவிகள்*** (சிலப். *3 : 27*, அடியார்க். உரை); high quality drums, viz., *mattaḷam*, *šalligai*, *iḍakkai*, *karaḍigai*, *pērigai*, *paḍagam* and *kuḍamuḻā*.

**அகமெய்ப்பாடு** *aga-mey-p-pāḍu*, பெ. (n.) ***காதலால் உடம்பின் புறத்துத் தோன்றும் விளர்ப்பு, பசப்பு, மெலிவு, விதிர்ப்பு முதலிய முப்பத்திரு வகைப்பட்ட உணர்ச்சி வெளிப்பாடு***; physical manifestation of emotions, such as paleness, sallowness, feebleness, trembling, thirty-two in number, due to love-sickness.

***மெய்ப்பாடு*** பார்க்க; see *mey-p-pāḍu*.

"அகமெய்ப் பாடே யறையுங் காலை.... எண்ணாற் றுறையு மென்மனார் புலவர்" (அகத்திய நூற்பா, குமாரசுவாமிப் புலவர், தமிழ்ப் புலவர் சரித்திரம், பக். 5).

*[அகம் + மெய்ப்பாடு. மெய்ப்படு → மெய்ப்பாடு (தொ.பெ.). படுதல் = தோன்றுதல்.]*

**அகமொடுக்கு** *agam-oḍukku*, பெ. (n.) ***கொள் கொம்பு*** (சம்.அக.); pole for a creeper.

*[அகம் + ஒடுக்கு.]*

**அகரசீர்மை** *agara-širmai*, பெ. (n.) ***ஆரியப் பார்ப்பனச் சேரி (அக்கிரகாரம்)*** (M.E R. 389 of 1916); Brāhmin quarters.

*[அகரம் + சீர்மை.* **Skt.** sīmā > **த.** *சீமை → சீர்மை.]*

மூவேந்தரும் பிராமணர் என்னும் ஆரியப் பார்ப்பனர்க்கு மருதநிலத்துக் குடியேற்றங் களைத் தானமாக அளித்துவந்தனர். அவை பொதுவாகச் 'சதுர்வேதி மங்கலம்' எனப் பெயர் பெற்றன.

நாளடைவில், பிராமணர் தமிழர் குடி யிருப்பை யொட்டியும் வாழத் தொடங்கினர். ஊர்க்கோடியில் தனிக் கூட்டமாக வாழ்ந்த தனால், அவர் குடியிருப்பு அக்கிராகரம் எனப் பட்டது.

**Skt.** agra = நுனி; **GK.** *acros*, topmost, outermost; **E.** *acro*, highest, topmost, terminal, tipped with; at the point or extremity of. அக்ர + அகரம் – அக்ராகரம். ஊர்க்கோடியி லிருந்ததனாலும், மருதநிலக் குடியிருப்பாத லாலும், ஆரியப் பார்ப்பனச்சேரி அக்ராகரம் எனப்பட்டதென்பது பொருத்தமே.

ஆயின், அக்ராகரம் (agrā-kara) என்னாது அக்ரஹார (agra-hāra) என்பதே, தொன்று தொட்ட பிராமண வழக்காயிருந்து வருகின்றது.

எனினும், "அகர மாயிரம் அந்தணர்க் கீயிலென்" என்னும் திருமந்திர (1860) வடி யிலும், அதுபோன்ற பிறவிடத்தும், அகரம் என்னும் சொல் மருதநிலத்தூரைக் குறிக்கும் தென்சொல்லாகவே கொள்ளப்படும்.

**அகரப்பற்று** *agara-p-paṟṟu*, பெ. (n.) ***பிராமண ருக்குத் தானஞ் செய்யப்பட்ட நிலம்*** (M.E.R. 556 of 1919); land gifted to Brāhmins.

*[அகரம் + பற்று.]*

**அகரம்**[1] *agaram*, பெ. (n.) ***'அ' என்னும் தமிழ் வண்ணமாலை முதலெழுத்து;*** the letter 'a' with which the Tamil alphabet begins. ''அகர முதல் னகர இறுவாய்'' (தொல். எழுத்து. நூன். 1). 'கரம்' குறிற் சாரியை.

**அகரம்**[2] *agaram*, பெ. (n.) 1. ***மெய்யெழுத்துச் சாரியை;*** particle employed to enunciate consonants. 2. ***மெய்யெழுத்திற்கும் உயிர் மெய்க்கும் பொதுவான சாரியை;*** enunciative particle common to consonants and vowel-consonants (or syllabic consonants).

''மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த''
(தொல். எழுத்து. மொழி. 49).

''இஇடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே''
(தொல். எழுத்து. புள்ளி. 31).

மகரத் தொடர்மொழி என்பதில் 'மகரம்' என்னுஞ் சொல் (ம் + அகரம்) மகர மெய்யைக் குறித்தலையும், ரகரம் நிற்றல் என்பதில் 'ரகரம்' என்னுஞ்சொல் ரகர மெய்க்கும் ரகர உயிர்மெய்கட்கும் பொதுவாக நிற்றலையும் நோக்குக.

**அகரம்**[3] *agaram*, பெ. (n.) 1. ***மருதநிலத்தூர்;*** town in an agricultural tract. 2. ***ஊர்*** (பிங்.); town.

*[அகம் → அகர் → அகரம் = அகநாடென்னும் மருதநிலத்தூர், நகரம்.]*

*Cf.* **L.** *ager*, field; **GK.** *agros*; **Skt.** *ajra;* **OE.** *aecer;* **OHG.** *ackar*; **ON.** *akr*; **Goth.** *akrs;* **E.** *acre*.

***அகநாடு*** பார்க்க; see *aga-nāḍu*.

**அகரம்**[4] *agaram*, பெ. (n.) ***இதள் (பாதரசம்)*** (வின்.); mercury.

**அகரம்**[5] *agaram*, பெ. (n.) ***தேர்*** (மலை.); chariot, temple car.

†**அகரமுதலி** *agara-mudali*, பெ. (n.) ***அகரத்தில் தொடங்கி, ஒரு மொழியின் எல்லாச் சொற் களையும், அல்லது பெரும்பாற் சொற்களையும் வண்ணமாலை வரிசைப்படுத்திப் பொருள் கூறும் சொற்பொத்தகம்;*** Dictionary giving all the words of a language or a majority of them with their meanings and arranged alphabetically beginning with 'a'.

*[அகரம் + முதலி. படைத். பாவாணர்.]*

***அகராதி*** பார்க்க; see *agarādi*.

**அகரமேற்று-தல்** *agaram-ēṟṟu-*, 2 பி.வி. (v.caus.) ***பிராமணரை மருதநிலத்தூரிற் குடியேற்றுதல்;*** to establish a Brāhmin colony in an agricultural tract. ''அகரமேற்றி நன்றிகொ டேவதான நல்கி'' (திருவாலவா. 48 : 22).

*[அகரம் + ஏற்று.]*

**அகராதி** *agarādi*, பெ. (n.) ***ஒரு மொழியிலுள்ள சொற்களையெல்லாம் அல்லது அவற்றின் பெரும்பகுதியை, வண்ணமாலை வரிசைப்படி யமைத்துப் பொருள்கூறும் சொற்பொத்தகம்;*** Dictionary, a book containing the words of a language alphabetically arranged together with their meanings.

*[அகர முதற்சொல்லை அல்லது சொற்களை முதலிற்கொண்டுள்ளமையால் சொற்பொத்தகம் அகராதி யெனப்பட்டது. அகரம் + ஆதி – அகராதி.]*

தொடக்கத்தில், தமிழிலக்கியத்திலுள்ள அருஞ்சொற்களின் பட்டிகளே, செய்யுள் நடையிற் பொருள்கூறி, **உரிச்சொல்** என்றும் **உரிச்சொற்றொகுதி** என்றும் பெயர்பெற்று வழங்கிவந்தன. பின்னர், அவை 'நிகண்டு' என்னும் வடசொற் பெயரால் வழங்கத் தலைப்பட்டன.

1594-ல் முதன்முதலாக, ***சிதம்பர ரேவண சித்தர்*** என்பவர் தம் நிகண்டை வண்ண மாலை வரிசைப்படுத்தி அதற்கு ***அகராதி நிகண்டு*** எனப் பெயரிட்டார்.

18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ***வீரமா முனிவர்*** (Father Beschi) முதன்முதலாகச் செய்யுள் நடையை விட்டுவிட்டு மேலை நாட்டு முறையைக் கையாண்டு, பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நால் வகைத் தலைப்பிற் சொற்களைத் தொகுத்து, ***சதுரகராதி*** என்று பெயரிட்டார்.

அதன்பின், 1779-ல் ***பெப்பிரசியசு*** (Fabricius), ***பிரேய்த்தாப்து*** (Breithaupt) என்னும் இரு செருமானிய லுத்தரன் விடையூழியர் (Missionaries), ***தமிழும் இங்கிலேசுமா யிருக்கிற அகராதி*** என்னும் பெயரில் ஒரு தமிழாங்கில அகரமுதலி வெளியிட்டனர்.

பின்னர் 'அகராதி' என்னும் பெயர் பெரு வழக்காயிற்று.

பதினெண்கீழ்க்கணக்கில் ஒரு நூல் *ஏலாதி* யெனப் பெயர் பெற்றிருப்பினும்ஆதிஎன்னும் சொல் தூய தென்சொல்லாகத் தோன்றாமை யால், இன்று அகராதி அகரமுதலி யெனப்படு கின்றது.

அகராதிக்கலை *agarādi-k-kalai*, பெ. (n.) **அகர முதலித் தொகுப்புக்கலை**; lexicography.

[அகராதி + கலை.]

அகராதிநிகண்டு *agarādi-nigaṇḍu*, பெ. (n.) **சிதம்பர ரேவண சித்தர் 1594-ல் வண்ணமாலை வரிசைப்படி தொகுத்த செய்யுள்நடைச் சொற் களஞ்சியம்;** name of a thesaurus in verse, as giving the words in alphabetical order, by Šidambara Rēvaṇa Šittar, A.D. 1594.

அகராதிபடித்தவன் *agarādi-paḍittavaṉ*, பெ.(n.) 1. **அதிகங் கற்றவன்;** a very learned person. 'அகராதி படித்தவன் அஞ்சிப் பேசுவானா?' (பழ.). 2. **சொன்ன கருத்தை மாற்றுபவன், சொற்பொருள் திரிப்பவன்;** punster, quibbler. அவன் பெரிய அகராதி படித்தவன்; அவனொடு பேசாதே (உ.வ.). 'அகராதி படித்தவனுக்கு எதிராகப் பேசாதே' (பழ.). 'அகராதி படித்துவிட்டால் அடக்கமின்றிப் பேசுவதா?' (பழ.).

அகராதிமுறை *agarādi-muṟai*, பெ. (n.) **வண்ண மாலை வரிசை**; alphabetical order.

அகராதியொழுங்கு *agarādi-y-oḻuṅgu*, பெ. (n.) **அகராதிமுறை** பார்க்க; see *agarādi-muṟai*.

[அகராதி + ஒழுங்கு.]

அகராதிவரிசை *agarādi-varišai*, பெ. (n.) **அகராதிமுறை** பார்க்க; see *agarādi-muṟai*.

அகராது *agarādu*, பெ. (n.) **கொன்றை** (வை.மூ.); Indian laburnum.

அகல்[லு]-தல் *agal-*, 13 செ.கு.வி. (v.i.) 1. **விரி வடைதல்;** to widen, spread, extend. ''விலங் ககன்ற வியன்மார்ப'' (புறநா. 3:16). 2. **ஆக்க முறுதல், பெருகுதல், வளர்ச்சியடைதல்;** to prosper, increase, develop, grow, progress. ''அழுக்கற் றகன்றாரு மில்லை'' (குறள், 170). 3. **நீங்குதல்;** to leave, vanish. ''பாயிரு ளகல'' (புறநா. 25 : 1). 4. **பிரிதல்;** to separate, part. ''அகன்றபூங் கொடியை'' (பாரத. குரு. 79). 5. **கடத்தல்** (திவா.); to pass beyond, cross, leap over. 6. **நைந்து கிழிதல்;** to be worn out, to be torn. வேட்டி அகன்றுபோயிற்று (வின்.).

ம. அகலுக; க. அகல்; தெ. அகலு.

அகல் *agal*, பெ. (n.) 1. **விரிவு;** wideness. 2. **பரப்பு;** extent of space, expanse. 3. **அல்குல்** (பிங்.); the part immediately above pudendum muliebre. 4. **வாயகன்றகலமான சட்டி;** earthen pot, having a wide mouth. ''காரகற் கூவியர்'' (பெரும்பாண். 377). 5. **விளக்குத் தகழி;** hollow earthen vessel for lamp. ''திருவிளக்குத் திரியிட்டங் ககல்பரப்பி'' (பெரியபு. கலிய.15). 6. **ஓர் அளவு;** (தொல். எழுத்து. தொகை. 28, உரை); a measure of capacity. 7. **உள்ளூர்** (பொதி.நி.); inland town or village. 8. **ஊரின் உட்புறம்** (பொதி.நி.); the interior or inner part of a town or village. 9. **நாடு** (பொதி.நி.); country, province. 10. **பெருமரம்** (வின்.); tooth-leaved tree of Heaven, *Ailanthus excelsa*. 11. **வெள்வேல்** (சங்.அக.); panicled babul.

ம. அகல் (தகழி); க. அகல்; து. அகொலி; கட. அகலெ.

அகல்வட்டம் *agal-vaṭṭam*, பெ. (n.) **கதிரவனை அல்லது திங்களைச் சுற்றிப் போட்டிருக்கும் பெருங்கோட்டை;** large halo around the Sun or Moon. 'அகல்வட்டம் பகல் மழை' (பழ.).

அகல்வு *agalvu*, பெ. (n.) 1. **அகலம்;** extent, expanse. ''ஒருநிரல் செல்லு முள்ளகல் வுடைத் தாய்'' (பெருங். உஞ்சைக். 49:59). 2. **அடர்த்தி யின்மை;** sparseness. ''பைத்த நிலத்தி னகன்ற பயி ரகல்வி னீங்கப் பதித்து'' (தணிகைப்பு. திருநாட்டுப். 93). 3. **நீங்குகை;** removal. ''அமிழ்தம் வவ்வி யகல்வுழி'' (காஞ்சிப்பு. முத்தீ. 10).

அகல்வோர் *agalvōr*, பெ. (n.) 1. **விலகியிருப் பவர்;** those who live or remain apart. 2. **தீண்டாதார்** (வின்.); outcastes, untouchables.

அகலக்கட்டை *agala-k-kaṭṭai*, பெ. (n.) **அகலக் குறைவுள்ளது, பொதுவாக அகலக் குறை வுள்ள துணி;** that which lacks width, ordinarily applied to cloth.

[அகலம் + கட்டை.]

அகலக்கால்வை-த்தல் *agala-k-kāl-vai-*, 4 செ.கு.வி. (v.i.) **செலவு, வினைமுயற்சி முதலியவற்றில் அளவுகடந்து போதல்;** to go beyond limits, as in enterprise, spending, etc. 'அகலக்கால் வைக்காதே' (பழ.).

[அகலம் + கால் + வை.]

**அகலத்தேடு-தல்** *agala-t-tēḍu-*, 5 செ.கு.வி. (v.i.) ***நீங்க வகைபார்த்தல்;*** to seek escape. ''அவன்றான் அகலத் தேடிலும்'' (திவ். திருவாய். பன்னீ.). —, 5 செ.குன்றாவி. (v.t.) ***விரிவாகத் தேடிப்பார்த்தல்;*** to search extensively.

**அகலநில்-தல்** *agala-nil-*, 14 செ.கு.வி. (v.i.) ***ஒதுங்கி நில், விலகி நில்;*** to stand aloof, to stand afar. 'அகல இருந்தால் பகையும் உறவாம்' (பழ.). 'அகல இருந்தால் புகல உறவு' (பழ.).

**அகலப்பா** *agala-p-pā*, பெ. (n.) ***தனிநிலைச் செய்யுளாகவோ தொடர்நிலைச் செய்யுளாகவோ பரந்த பனுவல்;*** voluminous work of poetry, epic poem. ''ஈங்ககலப் பாக்க ளிரண் டாகும்'' (வெண்பாப். செய். 5).

[அகலம் + பா.]

**அகலம்**[1] *agalam*, பெ. (n.) 1. *பரப்பு;* extent, expanse. ''சென்னி யகல முப்பா னிராயிர மாம்'' (கந்தபு. அசுர. அண்ட. 29). 'அகல உழுகிறதைவிட ஆழ உழுகிறது மேல்' (பழ.). 2. ***குறுக்களவு;*** width. ஆடையினகலம் மூன்று முழம் (உ.வ.). 3. ***பெருமை;*** greatness. ''நின் தோற்றமு மகலமு நீரினுள'' (பரிபா. 4 : 30). 4. ***ஞாலம்*** (அக.நி.); Earth. 5. ***வானம்*** (பிங்.); sky, atmosphere. 6. ***உழாது விடப்பட்ட நிலம், தரவை நிலம்;*** uncultivated land. 7. ***மார்பு;*** breast, chest. ''மலைப்பரு மகலம்'' (புறநா. 78 : 4). 8. ***அகலப்பா;*** voluminous poetic work, extensive poem. ''ஆசு மதுரஞ் சித்திர மகலம்'' (இலக். வி. 763). 9. ***அகலவுரை;*** elaborate commentary. 'பொழிப்பு அகலம் நுட்பம் நூலெச்சம் என்னும் உரை' (இறை. 1, உரை). 10. ***விரிவாகச் சொல்கை;*** elaboration. ''உரைத்தனை சுருக்கி யாங்கள் நன்றித னகலங் கேட்க'' (கந்தபு. பாயிரப். 81). 11. ***இடம்*** (பொதி.நி.); place. 12. ***வாய்;*** mouth. ''குளத்தனைய தூம்பி னகலங்கள்'' (நான்மணிக். 73).

ம. அகலம்; க. அகல.

[அகல் + அம்.]

**அகலம்**[2] *agalam*, பெ. (n.) 1. ***வேப்பலகு*** (வை.மூ.); leaf of margosa. ஒ.நோ: அலகு. 2. ***யானைத்திப்பிலி;*** elephant pepper. ஒ.நோ: அலகம்.

[ஒருகா. அலகு → அலகம் → அகலம்.]

**அகலர்** *agalar*, பெ. (ந.) ***கீழ்மக்கள்;*** low-born persons, outcastes (W.).

**அகலவாய்ச்சி** *agala-vāycci*, பெ. (n.) ***மரத்தை அல்லது பலகையைச் செதுக்கும் தச்சுக்கருவி வகை;*** howel, copper's tool for smoothing work, adze.

**அகலவுரை** *agala-v-urai*, பெ. (n.) ***விரிவான வுரை*** (இறை. 1, உரை); elaborate commentary.

[அகலம் + உரை.]

**அகலவுழு-தல்** *agala-v-uḻu-*, 1 செ.கு.வி. (v.i.) ***மேலாக உழுதல்;*** to plough shallowly.

**அகலறை** *agal-aṟai*, பெ. (n.) 1. ***பாசறை;*** military camp. ''மாக்க ணகலறை யதிர்வன முழங்க'' (பட்டினப். 237). 2. ***மலைப்பக்கம்*** (பட்டினப். 237, நச். உரை); slope of a hill, hillside.

[அகல் + அறை.]

**அகலன்** *agalaṉ*, பெ. (n.) 1. ***பருத்தவன்;*** stout man. 2. ***தீண்டாதவன்*** (சம்.அக.); member of the untouchable class.

[அகல் + அன்.]

**அகலி-த்தல்** *agali-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ***விரிவுறுதல்;*** to broaden out, extend, widen. 2. ***பெருகுதல்;*** to enlarge. ''அகலி யாவினை யல்லல் போயறும்'' (தேவா. 2.161 : 1).

[அகல் → அகலி.]

ம. அகலிக்குக; க. அகலிசு; தெ. அகலின்சு.

**அகலிடம்** *agal-iḍam*, பெ. (n.) ***அகன்ற இடமாகிய ஞாலம்;*** Earth, as a wide place. ''அகலிட நீரேற்றான்'' (தேவா. 3.324 : 9).

[அகல் + இடம்.]

**அகலிய** *agali-y-a*, பெ.எ. (adj.) ***அகன்ற, அகலமான;*** broad, wide.

**அகலியம்** *agali-y-am*, பெ. (n.) ***கிளைகளுடன் அகன்று வளரும் மரம்*** (பிங்.); tree, as broadening out with branches.

[அகல் → அகலி → அகலியம்.]

**அகலுள்** *agal-uḷ*, பெ. (n.) 1. ***அகலம்*** (திவா.); width. 2. ***பெருமை*** (திவா.); greatness. 3. ***அகன்ற தெரு*** (சிலப். 1 : 47, அடியார்க். உரை); broad street. 4. ***ஊர்*** (திவா.); town, village. 5. ***நாடு*** (திவா.); country. 6. ***ஞாலம்*** (ஆ.நி.); Earth.

[அகல் + உள்.]

**அகவடி** *aga-v-aḍi*, பெ. (n.) **உள்ளங்கால்**; sole of foot. "அகவடி யங்கை" (திருவிளை. உக்கிரபா. 41).

[அகம் + அடி.]

**அகவயிரம்** *aga-vayiram*, பெ. (n.) **அகக்காழ்** (இராட்.); hard core of a tree (R.).

[அகம் + வயிரம்.]

**அகவர்**[1] *agavar*, பெ. (n.) **நாட்டில் வாழ்வார்** (பொருந. 220); inhabitants of a country.

**அகவர்**[2] *agavar*, பெ. (n.) **வைகறையிற் பாடி அரசனைத் துயிலெழுப்பும் பாணர்**; bards who rouse the king from sleep with songs in the early morning. "நாளீண்டிய நல்லகவர்" (மதுரைக். 223).

**அகவல்** *agaval*, பெ. (n.) 1. **மயிற்குரல்** (பிங்.); the call or cry of a peacock. 2. **அழைக்கை** (பிங்.); calling, addressing. 3. **பாடல்** (குறுந். 298); singing. 4. **நடஞ்செய்தல்** (பிங்.); dancing. 5. **எடுத்தலோசை** (பிங்.); high tone, acute accent. 6. **அகவற்பாவிற்குரிய ஓசை** (யா.கா. 21); rhythm peculiar to *agaval* metre. 7. **ஆசிரியப்பா**; one of the four chief kinds of metre in Tamil prosody. "அகவல் என்ப தாசிரி யம்மே" (தொல். பொருள். செய். 80).

ம. அகவல்

**அகவலன்** *agavalaṉ*, பெ. (n.) **பாணன்**; bard of the Pāṇar caste who sings on the battle-field. "களம் வாழ்த்து மகவலன்" (பதிற்றுப். 43). 'அகவலன் பண்பாட அதுகேட்டுப் பெண் பாட' (பழ.).

[அகவல் + அன்.]

**அகவலியற்சீர்** *agaval-iyaṟ-cir*, பெ. (n.) **பெரும் பாலும் ஆசிரியப்பாவிற்குரிய ஈரிய லசைச் சீர்கள்**; metrical feet of two *iyal* syllables each chiefly found in *āśiriyappā*.

[அகவல் + இயற்சீர்.]

இயலசை மயக்கத்தால் ஏற்பட்ட தேமா (நேர்நேர் – –), புளிமா (நிரைநேர் ⏑⏑ –), கருவிளம் (நிரைநிரை ⏑⏑ ⏑⏑), கூவிளம் (நேர்நிரை – ⏑⏑) ஆகிய நான்கும் இயல்பான ஆசிரிய வியற்சீர்கள்.

"இயலசை மயக்கம் இயற்சீர்" (தொல். பொருள். செய். 13).

இனி, உரியசையுடன் நேர் என்னும் இயலசை மயங்குவதால் ஏற்படும் நேர்புநேர் (சேற்றுக்கால், வேணுக்கோல்), நிரைபுநேர் (களிற்றுத்தாள், முழவுத்தோள்) என்னும் இருசீரும், ஆசிரிய வியற்சீரின்பாற்படும்.

"நேரவண் நிற்பின் இயற்சீர்ப் பால"
(தொல். பொருள். செய். 15, பேரா. உரை).

இங்ஙனமே, இயலசையுடன் உரியசை மயங்குவதால் ஏற்படும் நேர்நேர்பு (போரேறு), நேர்நிரைபு (பூமருது), நிரைநேர்பு (கடியாறு), நிரைநிரைபு (மழகளிறு) என்னும் நாற்சீரும், கூவிளம் (பாதிரி), கருவிளம் (கணவிரி) என்பனபோல ஆசிரிய வியற் சீராகக் கொள்ளப்படும்.

"இயலசை யீற்றுமு னுரியசை வரினே
நிரையசை யியல வாகு மென்ப"
(தொல். பொருள். செய். 16, பேரா. உரை).

**அகவலுரிச்சீர்** *agaval-uri-c-cir*, பெ. (n.) **உரியசை மயக்கத்தாலும், உரியசையுடன் இயலசை விரவுவதாலும், ஏற்படும் ஈரசை ஆசிரியவுரிச்சீர்கள்**; bisyllabic metrical feet, in which, either both the syllables are *uri* or the succeeding one is *iyal*.

[அகவல் + உரிச்சீர்.]

உரியசை மயக்கமான நேர்புநேர்பு (வீடு பேறு), நிரைபுநேர்பு (வரகுசோறு), நிரைபு நிரைபு (முடவுமருது), நேர்புநிரைபு (பாறு குருகு) என்னும் நான்கும் இயல்பான ஆசிரிய வுரிச்சீர்கள்.

"உரியசை மயக்கம் ஆசிரிய வுரிச்சீர்"
(தொல். பொருள். செய். 13, பேரா. உரை).

உரியசையும் இயலசையுங் கலந்த நேர்பு நிரை (நீடுகொடி, நாணுத்தளை), நிரைபு நிரை (குளிறுபுலி, விரவுக்கொடி) என்னும் இரண்டும் ஆசிரிய வுரிச்சீரின்பாற்படுவன.

"முன்னிரை யுறினும் அன்ன வாகும்"
(தொல். பொருள். செய். 14, பேரா. உரை).

இற்றை யிலக்கண நூல்கட்கெல்லாம் தொல்காப்பியம் மூலமாதலின், அதனொடு முரண்படும் கூற்றுகள் பெரும்பாலுங் கொள்ளத்தக்கன வல்ல.

உரிச்சீர் என்பது, முற்கால முறைப்படி உரியசைச் சீரையோ, பிற்கால முறைப்படி மூவசைச் சீரையோ குறித்தல் வேண்டும்.

பிற்கால இலக்கண நூல்களுட் சிறந்த யாப்பருங்கலத்திலும்,

> "ஈரசை கூடிய சீரியற் சீரவை
> யீரிரண் டென்ப வியல்புணர்ந் தோரே"

(11) என, ஈரசைச் சீரை இயற்சீரென்றே குறித்துள்ளார் ஆசிரியர். அந் நூலின் உரையாசிரியரே,

"'கூடிய' என்ற மிகையால் இயற்சீரை ஆசிரிய வுரிச்சீர் என்று வழங்குவாரும் உளர்; என்னை?

"இயற்சீ ரெல்லாம் ஆசிரிய வுரிச்சீர்" என்றார் காக்கைபாடினியார்" என்று, வேண்டாது மிகைபடக் கூறியுள்ளார்.

யாப்பருங்கலக் காரிகை 10-ல் "ஒண்சீ ரகவ லுரிச்சீர்" என்னும் ஈற்றடித் தொடரும் "ஒண்சீ ரகவ லியற்சீர்" என்றே ஒருகால் இருந்திருக்கலாம். அதனால், தளையோ ஓசையோ சிறிதுங் கெடவில்லை.

ஆகவே, இயற்சீர் நான்கையும் அகவலுரிச்சீர் என்று அகரமுதலிகள் கூறுவது பொருந்தாது.

**அகவலோசை** *agaval-ōšai*, பெ. (n.) **ஆசிரியப் பாவிற்குரிய ஓசை**; rhythm peculiar to *agaval* metre.

> "இயற்சீர்த் தாகியும் அயற்சீர் விரவியும்
> தன்றளை தழுவியும் பிறதளை தட்டும்
> அகவ லோசைய தாசிரி யம்மே"
> (மயேச்சுரம்).

ஏந்திசை யகவலும், தூங்கிசை யகவலும், ஒழுகிசை யகவலுமென, அகவலோசை மூன்று வகைப்படும்.

> "நேர்நே ரியற்றளை யான்வரு மகவலும்
> நிரைநிரை யியற்றளை யான்வரு மகவலும்
> ஆயிரு தளையுமொத் தாகிய வகவலும்
> ஏந்தல் தூங்கல் ஒழுகல் என்றிவை
> யாய்ந்த நிரனிறை யாகு மென்ப"
> (இலக். வி. 732, உரை).

*[அகவல் + ஓசை.]*

**அகவற்சீர்** *agavar̠-cīr*, பெ. (n.) **ஆசிரியப்பாவிற் குரிய இயற்சீர்கள்**; metrical feet of two syllables each, chiefly found in *āširiyappā*.

*[அகவல் + சீர்.]*

**அகவற்சுரிதகம்** *agavar̠-curidagam*, பெ. (n.) **ஆசிரியப்பா வடிவான கலிப்பாவின் இறுதி யுறுப்பு**; last member of certain kinds of *kali* verse. **ஆசிரியச் சுரிதகம்** பார்க்க; see *āširiya-c-curidagam*.

*[அகவல் + சுரிதகம்.]*

**அகவற்பா** *agavar̠-pā*, பெ. (n.) **அகவலோசை யுடைய ஆசிரியப்பா**; one of four kinds of verse, having *agaval* rhythm.

*[அகவல் + பா.]*

**அகவற்றாழிசை** *agavar̠-r̠āḻišai*, பெ. (n.) **அளவொத்த மூவடி கொண்ட ஆசிரியப்பாவின் வகை**; variety of *agaval* verse containing three lines of equal length.

> "மூன்றடி யொத்த முடிவின வாய்விடின்
> ஆன்ற வகவற் றாழிசை யாமே"
> (யாப். வி. 75).

*[அகவல் + தாழிசை.]*

**அகவற்றுள்ளல்** *agavar̠-r̠uḷḷal*, பெ. (n.) **வெண்டளையுங் கலித்தளையுங் கலந்துவரும் துள்ளலோசை**; a rhythm in *kali* metre.

> "வெண்டளை தன்றளை யென்றிரண் டியையின்
> ஒன்றிய வகவற் றுள்ளலென் றோதுப"
> (யா.கா. 21, உரை).

*[அகவல் + துள்ளல்.]*

**அகவற்றுறை** *agavar̠-r̠ur̠ai*, பெ. (n.) **நான்கடி கொண்டு ஈற்றயலடி குறைந்தும், ஈற்றயலடி குறைந்து இடைமடக்காயும், இடையிடை குறைந்தும், இடையிடை குறைந்து இடைமடக் காயும் வரும் ஆசிரியப்பாவினம்**; variety of *agaval* verse of four lines, in which the middle lines may differ in length from the first or last line.

> "கடையத னயலடி கடைதபு நடையவும்
> நடுவடி மடக்காய் நான்கடி யாகி
> யிடையிடை குறைநவு மகவற் றுறையே"
> (யாப். வி. 76).

*[அகவல் + துறை.]*

**அகவற்றூங்கல்** *agavar̠-r̠ūṅgal*, பெ. (n.) **ஒன்றாத வஞ்சித்தளையான் வரும் தூங்கலோசை** (யா. கா. 21, உரை); a rhythm in *vañji* metre.

*[அகவல் + தூங்கல்.]*

**அகவன்மகள்** *agavan̠-magaḷ*, பெ. (n.) **பாண் மகள்**; female bard of the Pāṉar caste. "வெண் கடைச் சிறுகோ லகவன் மகளிர்" (குறுந். 298).

**அகவன்மண்டிலம்** *agavan̠-maṇḍilam*, பெ. (n.) **அளவொத்த கழிநெடிலடி நான்குகொண்ட ஆசிரிய மண்டிலம் என்னும் ஆசிரியப்**

*பாவினம்*; stanza of four lines of equal length, each line containing not less than six feet.

"கழிநெடி லடிநான் கொத்திறின் விருத்தமஃ
தழியா மரபின தகவ லாகும்"
(யாப். வி. 77).

துறை, தாழிசை, மண்டிலம் என்னும் மூன்றும் தூய தமிழ் யாப்புவகைகள். மண்டிலம் என்பது எல்லா வடியும் அளவொத்து வரும் செய்யுள். நிலைமண்டில வாசிரியப்பா, அடிமறிமண்டில வாசிரியப்பா என்பவற்றை நோக்குக.

நாற்பாவிற்குமுரிய மண்டிலம் என்னும் இனம், அளவொத்த அடிகளாலேயே அமைதல் காண்க.

மண்டிலம் என்பது வட்டம். வட்டம் என்னும் சொல் முழுமையை அல்லது நிறைவைக் குறிக்குமாதலால், எல்லா வடிகளும் நிரம்பி வரும் பாவினம், மண்டிலம் எனப்பட்டது. வடமொழியாளர் வட்டம் என்னும் தென் சொல்லை 'வ்ருத்த' எனத் திரித்தனர். ஒ.நோ: த. நடம் → நட்டம் > பிராகி. நட்ட > Skt. nirtta. இங்ஙனமே, வட்டம் என்னும் சொல்லும் திரிக்கப்பட்டது. த. வட்டம் > பிராகி. வட்ட > Skt. virtta.

'மண்டிலம்' என்னும் சொல் வட்டம் என்னும்பொருளதாதலால், மண்டிலயாப்பை 'வ்ருத்த யாப்பு' என்றனர் தமிழ்நாட்டு வடமொழியாளர். வடமொழி (வேதமொழியும் சமற்கிருதமும்) தேவமொழியென நம்பப்பட்டதனாலும், இற்றை மொழியாராய்ச்சி முற்காலத் தின்மையாலும், மண்டிலத்திற்கு 'விருத்தம்' என்னும் வடசொற் பெயரைத் தமிழர் ஏற்றுக்கொண்டு வழங்கிவந்திருக்கின்றனர்.

மூவடியாலும் நாலடியாலும் வரும் வெளி மண்டிலம் தவிர, மற்ற முப்பா மண்டிலங்களும் நாலடியாலேயே அமையும். வடமொழியிற் பொதுவாக விருத்தம் எனப்படும் யாப்புவகை ஈரடியே கொண்டது. இது வேத யாப்பிற்குப் பிற்பட்டதாதலால், தமிழையே பின்பற்றியதாகும்.

மண்டிலம் (மண்டலம்), தாண்டகம் என்னும் சொற்களும், அவை குறிக்கும் யாப்பு வகைகளும், தூய தமிழேயென்பது, அச்சொற்களின்கீழ் ஐயந்திரிபற விளக்கப்படும்.

விருத்தம் என்று சொல்லப்படும் தமிழ் யாப்புவகைகள் அனைத்தையும் இனி மண்டிலம் என்றே வழங்கல் வேண்டும்.

**அகவாட்டி** *aga-v-āṭṭi*, பெ. (n.) *மனைவி* (வின்.); wife.

[அகம் + ஆட்டி – அகவாட்டி. அகம் = வீடு. ஆள் → ஆளன் → ஆட்டி (பெ.பா. ஈறு.)]

**அகவாய்** *aga-vāy*, பெ. (n.) 1. *உள்ளிடம்*; interior, inside. 'அகவாயிற் பெருச்சாளி' (திவ். திருமாலை. 7, வியா.). 2. *மனம்* (சம். அக.கை.); mind. 3. *கதவுநிலை*; door-frame. 'திருக்கற்றளிப் பலகைப் படையும் பஞ்சரமும் அகவாயுஞ் செய்தான்' (Pudu. Insc. 635).

[அகம் + வாய்.]

**அகவாய்க்கோடு** *aga-vāy-k-kōḍu*, பெ. (n.) *வண்டியின் நெடுஞ்சட்டம்*; long bar of the body of a cart. "அகவாய்க் கோடும் புறவாய்ப் பூணும்" (பெருங். உஞ்சைக். 58 : 48).

[அகம் + வாய் + கோடு.]

**அகவாயில்** *aga-vāyil*, பெ. (n.) *மனம்*; mind. "அகவாயி லெண்ணத்தின் ஏற்ற மறிந்து" (குருபரம். 258).

[அகம் + வாயில்.]

**அகவிதழ்** *aga-v-idaḻ*, பெ. (n.) *உள்ளிதழ்*; inner petal of a flower. "அம்மல ரகவிதழ்" (கலித். 77 : 7).

[அகம் + இதழ்.]

**அகவிரல்** *aga-viral*, பெ. (n.) *விரலின் உட்புறம்*; inner side of a finger. 'வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலுங் கரணஞ் செய்து' (சீவக. 657, நச். உரை).

[அகம் + விரல்.]

**அகவிருள்** *aga-v-iruḷ*, பெ. (n.) *அறியாமையாகிய மனவிருள்*; spiritual ignorance, as inner darkness. "அகவிருட் பானு" (திருவேங். சத. தனியன்).

[அகம் + இருள்.]

**அகவிலை**[1] *aga-v-ilai*, பெ. (n.) *உள்ளிதழ்*; inner petal of a flower. "அகவிலை யாம்பல்" (தேவா. 4.55 : 8).

[அகம் + இலை.]

**அகவிலை**[2] *aga-vilai*, பெ. (n.) *தவசவிலை*; cost of foodgrains. "நெல்லு மகவிலை குறைந்து" (திருநெல். பு. நெல்லு. 4). 'அகவிலை யறியாதவன் துக்கம் அறியான்' (பழ.). 'அகவிலை

ஏறினால் அவளுக்கென்ன, அகமுடையான் இருக்கிறான் தேடிப்போட' (பழ.). 'அகவிலை தெரியாது அவள் பேச்சுப் புரியாது' (பழ.). 'அகவிலையால் திண்டாடும்போது வைர அட்டிகை கேட்டாளாம்' (பழ.).

[அ.:கம் → அகம் + விலை.]

**அகவு-தல்** *agavu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **மயில் அகவுதல்**; to call or cry, as a peacock. ''பல் பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ'' (திரு முருகு. 122). 2. பாடுதல்; to sing. ''அகவலன் பெறுக மாவே'' (பதிற்றுப். 43 : 28). 3. **நடஞ் செய்தல்** (பிங்.); to dance, as a peacock. 4. **நெடுமையாதல்** (ஈடு, 6.2 : 9); to become long, lengthen out. —, 5 செ.குன்றாவி. (v.t.) **அழைத்தல்** (பிங்.); to call, summon.

**Skt. ā-hvē**

**அகவு** *agavu*, பெ. (n.) *அமுக்கிரா* (மூ.அ.); species of withania.

**அகவுயிர்** *aga-v-uyir*, பெ. (n.) **உடம்பினுள் உள்ள உயிர்**; in-dwelling soul. ''என தகவுயிர்க் கமுதே யென்னும்'' (திவ். திருவாய். 2.4 : 6).

[அகம் + உயிர்.]

**அகவேளை** *aga-vēḷai*, பெ. (n.) 1. **நண்பகல்**; midday. 2. **நள்ளிரவு**; midnight.

[அகம் + வேளை.]

**அகவை** *agavai*, பெ. (n.) 1. **உள்ளிடம்**; inside. ''ஆய கானத் தகவையுள்'' (உபதேசகா. சிவவி. 143). 2. **உட்பட்ட** பருவம்; age within a certain milit. ''ஈராறாண் டகவையாள்'' (சிலப். மங்கல. 24). 3. **ஆண்டுப்பருவம்**; age. **உன்** அகவை என்ன? (உ.வ.). —, இடை. (ind.) **இடவேற்றுமை** யுருபு; a loc. ending. ''ஆடித் திங்க ளகவையின்'' (சிலப். உரை பெறுகட். 3).

**அகழ்-தல்** *agal-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. **தோண்டுதல்**; to dig out, excavate. ''அகழ் வாரைத் தாங்கும் நிலம்போல'' (குறள், 151). 2. **பிடுங்குதல்**; to pluck out, as an eye. ''தனது கண் ணகழ்ந்து'' (திருக்காளத். பு. 6 : 36). 3. **அடியோடு களைதல், மூலத்தோடு நீக்குதல்**; to uproot. ''அகழ்தரு பாவத் தினராய்'' (சூத. சிவ. 13 : 31).

ம. அகழுக; க. அகழ்; துட. அட்; கோத. அவ்; கொலா. அகுல்.

**அகழ்** *agal*, பெ. (n.) 1. **அகழி**; moat. ''வையையு மொருபுறத் தகழாம்'' (திருவிளை. திரு நகரப். 17). 2. **குளம், நீர்த்தேக்கம்**; tank, reservoir. ''நீர்நசைஇக் குழித் தவகழ்'' (பெரும்பாண். 108).

ம. அகழி; க. அகழ்; து. அகள்.

**அகழ்த்துவங்கொள்-தல்** *agalttuvaṅ-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) **கடைகாலெடுத்தல் (வாணந் தோண்டுதல்)**; to dig out for laying foundation. ''தேவர் தங்கட் கோய்வுறு கோயி லகத்துவங் கொள்க'' (விதான. நல்வினை. 12).

[அகழ் → அகழ்த்துவம் + கொள்.]

மேற்கோளில், அகழ்த்துவம் என்பது அகத் துவம் எனத் தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது. அத் தவற்று வடிவத்தைச் சரியானதாகக் கொண்டு, ''கர்ப்பக்கிரகத் தன்மை, வீட்டுத் தன்மை'' என மதுரைத் தமிழ்ச்சங்க அகர முதலி பொருள் கூறியுள்ளது.

**அகழ்ப்பு** *agalppu*, பெ. (n.) **ஆழம்** (வின்.); depth.

இச் சொல் தவறாக அகப்பு எனச் சென்னை அகரமுதலியிற் குறிக்கப்பட்டுள்ளது.

**அகழான்** *agaḻāṉ*, பெ. (n.) **வளை தோண்டும் வயலெலி அல்லது காட்டெலி**; field rat or wild rat.

[அகழ் → அகழான்.]

**அகழெலி** பார்க்க; see *agal-eli*.

**அகழானெடு-த்தல்** *agaḻāṉ-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) **வளை தோண்டுதல்** (வின்.); to make holes in the earth; to burrow, as rats.

[அகழான் + எடு.]

**அகழி**[1] *agaḻi*, பெ. (n.) 1. **கோட்டையைச் சூழ்ந்துள்ள நீர்க்கிடங்கு**; ditch surrounding a fortification, moat. ''அகழிசூழ் போகி'' (சிலப். 13 : 183). 'அகழிவாய் முதலைபோல் வாயைப் பிளக்கிறான்' (பழ.). 'அகழியிலே விழுந்த முதலைக்கு அதுவே வைகுந்தம்' (பழ.). 2. **கிடங்கு**; pit, depression. ''பாருடைத்த குண்டகழி'' (புறநா. 14 : 5).

க. அகழு; தெ. அகட்த.

[அகழ் → அகழி.]

**அகழி**[2] *agaḻi*, பெ. (n.) **வாயகன்ற கலம்**; pot with a wide mouth. ''ஓரகழி பெய்ததற்பின்'' (தைலவ. தைல. 94.).

[அகல் → அகலி → அகழி.]

**அகழிதிருத்து-தல்** *agaḻi-tiruttu-*, 5 செ.கு.வி. (v.i.) ***பயிரிடுதற்காகச் சிறிய பள்ளங்களைத் தூர்த்துச் சமமாக்குதல்***; to fill up small pits and level the ground for cultivation. 'புன்செய்த் திடல் கல்லி அகழி திருத்தி' (S.I.I. v, 216).

**அகழு** *agaḻu*, பெ. (n.) ***பெருமரம்*** (அக.நி.); tooth-leaved tree of Heaven.

**அகழெலி** *agaḻ-eli*, பெ. (n.) ***வளை தோண்டும் எலி*** (பிங்.); field rat, *Millardia meltada.*

*[அகழ் + எலி.]*

**அகளங்கம்** *agaḷaṅgam*, பெ. (n.) *1.* ***மாசின்மை***; blemishlessness. ''அகளங்க வுருவுடைய னாகலின்'' (செங்கழு. விநா. பிள். அம். 2). *2.* ***ஒரு கனிய நஞ்சு*** (சீதாங்க பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

*[அ+களங்கம். 'அ' எதிர்மறை முன்னொட்டு.]*

***களங்கம்*** பார்க்க; see *kaḷaṅgam.*

**அகளங்கன்** *agaḷaṅgaṉ*, பெ. (n.) *1.* ***மாசிலாதவன்***; one free from impurity. ''அகளங்க னனகன்'' (நல். பாரத. ஆரணிய. கௌசிக. 77). *2.* ***புத்தன்*** (திவா.); the Buddha.

*[அ + களங்கன்.]*

**அகளம்** *agaḷam*, பெ. (n.) *1.* ***சாடி*** (பிங்.); jar. *2.* ***மிடா*** (திவா.); large earthen pot. *3.* ***நீர்ச்சால்***; bucket. ''அகளத் தன்ன நிறைசுனை'' (மலைபடு. 104). *4.* ***யாழின் பத்தர்***; head of the lute, being shaped like a bowl, resonator.

*[அகல் + அம் – அகலம் → அகளம்.]*

**அகளுதி** *agaḷudi*, பெ. (n.) ***வேம்பு*** (பச்.மூ.); margosa tree.

**அகற்சி** *agaṟci*, பெ. (n.) *1.* ***அகலம்***; breadth. ''அன்ன மாபெருங் கயிலையி னகற்சியும் நிவப்பும்'' (உபதேசகா. கைலை. 14). *2.* பிரிவு; separation. ''அயலோ ராயினு மகற்சி மேற்றே'' (தொல். பொருள். அகத். 38). *3.* ***துறவறம்***; ascetic life. ''அருளொடு புணர்ந்த வகற்சி யானும்'' (தொல். பொருள். புறத். 21).

ம. அகல்ச (பிரிவு); க. அகலிகெ (பிரிவு); தெ. அகலுட (பிரிவு).

**அகற்றம்** *agaṟṟam*, பெ. (n.) *பரப்பு*; width, expanse. ''எயில தகற்றமும்'' (பெருங். மகத. 14 : 25).

***[அகல் → அகற்று → அகற்றம்.]***

**அகற்றல்** *agaṟṟal*, தொ.பெ. (vbl.n.) ***மந்திர வலிமையால் ஒருவரை ஓரிடத்தினின்று நீங்கச் செய்தல்*** (திருக்காளத். பு. 33 : 23); causing a person to quit his place through magic.

*[அகல் → அகற்று → அகற்றல்.]*

**அகற்று-தல்** *agaṟṟu-*, 2 பி.வி. (v. caus.) *1.* ***விரிவுபடுத்துதல்***; to widen, broaden, extend. ''களிறுசென்று களனகற்றவும்'' (புறநா. 26 : 3). *2.* ***பெருகச்செய்தல்***; to increase. ''மடங்கொன் றறிவகற்றுங் கல்வி'' (நீதிநெறி. 3). *3.* ***நீக்குதல்***; to remove. ''இன்பம் பெருக்கி யிருள கற்றி'' (திருவாச. 47 : 11).

ம. அகற்றுக; க. அகலிசு; தெ. அகலின்சு (விரிவுபடுத்துதல்).

*[அகல் (த.வி.) → அகற்று (பி.வி.).]*

**அகறல்** *agaṟal*, பெ. (n.) *1.* ***அகலம்*** (சூடா.); width, extension. *2.* ***கடத்தல்***; passing beyond. ''அடர்மலர்க் காற்குங் கட்கு மகறலால்'' (இரகு. மாலை. 35). *3.* ***நீங்கல்***; separation, removal. ''அகறலினாற் பிறருடல் போற் றன்னுடலந் தனினு முறுதிதரு மபிமான மின்மையே யாகி'' (வேதா. சூ. 459).

*[அகல் + தல் – அகறல்.]*

**அகன்**[1] *agaṉ*, பெ. (n.) *1.* ***உள்***; inside. *2.* ***மனம்***; mind. *3.* ***காதல்***; love.

*[அகம் → அகன் (போலி).]*

**அகன்**[2] *agaṉ*, பெ. (n.) ***கணவன்*** (மலை.); husband.

**அகன்**[3] *agaṉ*, பெ.எ. (adj.) ***அகன்ற***; broad. ''சிலம்பாற் றகன்றலை'' (சிலப். 11 : 108), ''அகன்பணை'' (திருக்கோ. 11), ''அகன் மணி'' (திவா.).

*[அகல் → அகன்.]*

**அகன்றிசைப்பு** *agaṉṟ(u)-iśaippu*, பெ. (n.) ***செய்யுளில் உரைநடை கலக்கும் யாப்புக் குற்றம்***; defect in poetical composition caused by the introduction of prose in verse.

''கானக நாடன் கருங்கோன் பெருமலைமே
லானை கிடந்தாற்போ லாய பெருங்கற்க
டாமே கிடந்தன கொல்லோ வவையேற்றிப்
பெற்றிப் பிறக்கி வைத்தா ருளர்கொல்லோ''

'இது முன் செய்யுளாய் வந்து இறுதி பரவிக் கட்டுரையாய் வந்தமையால், அகன்றிசைப் பென்னுங் குற்றமாயிற்று' (யாப். வி. 95, உரை, பக். 404).

[அகன்று + இசைப்பு.]

யாப்பு முறையினின்று அகன்று இசைப்பது அகன்றிசைப்பு எனப்பட்டது.

**அகன்றில்** *agaṉṟil*, பெ. (n.) **ஆண் அன்றில்**; male Greek-partridge. "குறுங்கான் அகன்றில்" (ஐங்குறு. 381, பா.வே.).

[மகன்றில் → அகன்றில்.]

**மகன்றில்** பார்க்க; see *magaṉṟil*.

**அகனம்** *agaṉam*, பெ. (n.) **வேங்கைமரம்** (பச்.மூ.); Indian kino tree. ஒ.நோ: அசனம்.

**அகனாதி** *agaṉādi*, பெ. (n.) 1. **கொடுவேலி** (சித்.அக.); Ceylon leadwort. 2. **இதள்** (வை.மூ.); quick silver. ஒ.நோ: அசுனாதி.

**அகனைந்திணை** *agaṉ-aindiṇai*, பெ. (n.) **குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைக்குமுரிய இருதலைக் காதல்**; the five forms of reciprocated love related to the five natural regions of the Tamil country.

"மக்கள் நுதலிய அகனைந் திணையும்"
(தொல். பொருள். அகத். 54).

[அகம் → அகன் + ஐந்திணை.]

**அகாந்தம்** *agāndam*, பெ. (n.) **தான்றி** (பச்.மூ.); belleric myrobalan.

[அக்கந்தம் → அகாந்தம்.]

**அக்கந்தம்** பார்க்க; see *akkandam*.

**அகாமம்** *agāmam*, பெ. (n.) **காமமின்மை**; absence of desire or lust.

[அ + காமம். 'அ' எதிர்மறை முன்னொட்டு.]

**காமம்** பார்க்க; see *kāmam*.

**அகாமவினை** *agāma-viṉai*, பெ. (n.) **அறியாது அல்லது விருப்பவுணர்ச்சியின்றிச் செய்யுஞ் செயல்**; unintentional action. "கிருகபதி யகாம வினையினுக்குப் பரிகாரம் பகர்ந்திடுவர்" (சிவதரு. பரிகார. 2).

[அ + காமம் + வினை.]

**அகாரம்** *agāram*, இடை. (part.) (இலக்.) **அகரம் என்னும் மெய்யெழுத்துச் சாரியையின் நூற்பா நீட்டம்**; (Gram.) medial lengthening of the enunciative particle *agaram* used to designate consonants.

'கரம்' என்பது 'அ' என்னும் எழுத்தின் சாரியை. அகரம் = அ.

'அ' என்பதும் 'அகரம்' என்பதும் மெய் யெழுத்தின் சாரியை.

க = க், ககரம் = க்,

'கரம்' என்பது குறிற்கே யுரிய சாரியை யாதலின், 'அகாரம்' என்றோ 'ககாரம்' என்றோ உரைநடையிற் குறித்தல் வழுவாம்.

"ரகார ழகாரம் குற்றொற் றாகா" (தொல். எழுத்து. மொழி. 16) என்பது செய்யுள் வடிவான நூற்பாவாதலின், 'அகரம்' என்பது 'அகாரம்' என இன்னோசையும் இசைநிறை வும்பற்றி நீண்டொலித்தது. இதை இயல் பென்று கொள்வது தவறாகும்.

வடமொழியிலக்கணம் தமிழிலக்கணத்திற் குப் பிந்தியதும் அதைத் தழுவியது மாதலின், தமிழ்முறை யறியாது நெடிற்குரிய 'கார'ச் சாரியையையும் குறிற்கேற்றிக்கொண்டது. இதையறியாத பிற்காலத் தமிழிலக்கண நூலாசிரியரும் வடநூல் முறையைப் பின் பற்றுவ ராயினர்.

**கரம், காரம், கான்** பார்க்க; see *karam, kāram, kāṉ*.

**அகாரவுப்பு** *agāra-v-uppu*, பெ. (n.) **கல்லுப்பு** (வை.மூ.); rock-salt.

[அ+காரம் + உப்பு – அகாரவுப்பு. 'அ' எதிர்மறை முன்னொட்டு.]

**அகாலச்சாவு** *agāla-c-cāvu*, பெ. (n.) **இளமை அல்லது மூப்பிற்கு முந்திய சாவு**; premature or early death.

[அ + காலம் + சாவு.]

**அகாலப் பிள்ளைப்பேறு** *agāla-p-piḷḷai-p-pēṟu*, பெ. (n.) **உரிய காலத்திற்குமுன் பிள்ளை பெறுகை**; premature delivery of child.

[அ + காலம் + பிள்ளை + பேறு.]

**அகாலப்பேறுகாலம்** *agāla-p-pēṟu-kālam*, பெ. (n.) **அகாலப் பிள்ளைப்பேறு** பார்க்க; see *agāla-p-piḷḷai-p-pēṟu*.

[அ + காலம் + பேறு + காலம்.]

**அகாலம்** *agālam*, பெ. (n.) 1. **தகாத அல்லது உரிய காலமல்லாத காலம்**; inauspicious or inopportune time. "அகாலத்தி லுன்னுடை யுடலைவிட நினைப்பதென்" (ஞானவா. பிரகலாத. 61). 2. **பஞ்ச காலம்** (வின்.); times of scarcity.

[அ + காலம். 'அ' எதிர்மறை முன்னொட்டு.]

**காலம்** பார்க்க; see *kālam*.

**அகாலவுண்டி** *agāla-v-uṇḍi,* பெ. (n.) *காலந் தவறி யுண்ணும் உணவு;* untimely meal.

[*அ + காலம் + உண்டி.*]

**அகாலவுணவு** *agāla-v-uṇavu,* பெ. (n.) *அகால வுண்டி* பார்க்க; see *agāla-v-uṇḍi.*

[*அ + காலம் + உணவு.*]

**அகி[1]** *agi,* பெ. (n.) இரும்பு (பிங்.); iron.

**அகி[2]** *agi,* பெ. (n.) *மாதர் அணியும் ஒலிக்குங் காற்சிலம்பு* (பொதி.நி.); anklets worn by women that produce a tinkling sound while walking.

**அகிர்** *agir,* பெ. (n.) *தலைப் பொடுகுவகை* (இராட்.); a kind of scurf, dandruff (R.). **ஒ.நோ:** *அசறு.*

**அகில்** *agil,* பெ. (n.) 1. ஒருவகை *நறுமண மரம்;* eagle-wood, *Aquilaria agallocha.* 2. *அகில் மரத்தின் அடியிலும் கிளைகளிலுமிருந்தும் பெறப்படும் நறும்பிசின்;* a fragrant resin called *agar* obtained from the trunk and branches of eagle-wood.


அகில்

**ம., க., து.** அகில்; **தெ.** அகரு; **பர்.** அகலு.

**Heb.** *aghalim;* **L.** *aquilla;* **Port.** *aguila;* **Sp.** *aguila;* **Gk.** *agallochon;* **E.** eagle-wood, *agila, agalloch;* **Skt.** agaru; **Pkt.** agaluya, agara.

[*"கள்ளி வயிற்றி னகில்பிறக்கும்" என்று நான்மணிக்கடிகை (6) கூறுவதால், அகின்மரம் ஒருவகை முண்மரமா யிருக்கலாம். கள் = முள். கள் → கள்ளி = முட்செடி, முண்மரம்.*

*அக்கு = அகில். அஃகு = நுண்மை, கூர்மை. அஃகு → அக்கு → அக்கில் → அகில்.* **ஒ.நோ:** *முள் = நுண்மை, கூர்மை.*]

"யானைவெண் கோடும் அகிலின் குப்பையும்" (சிலப். 25 : 37) குன்றக்குறவர் சேரன் செங்குட்டுவனுக்குக் காணிக்கையாகப் படைத்ததனாலும், "குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரம்" (சிலப். 10 : 106) என்பதற்கு, அருஞ்சொல்லுரை யாசிரியர் 'தாரம்-சந்தனம் அகில் முதலாயின' என்று உரை வரைந்திருப்பதனாலும், தமிழகத்திலும்; "குணதிசை மருங்கிற் காரகி றுறந்து" (சிலப். 4 : 36) என்பதற்கு, 'கீழ்த்திசையிடத்து உண்டான அகில் முதலியவற்றாற் புகைக்கும் புகையைத் துறந்து' என்றும், "வங்க வீட்டத்துத் தொண்டியோ ரிட்ட வகிலும்" என்பதற்கு, 'குணதிசைக்கண் தொண்டி யென்னும் பதியிலுள்ள அரசரால் வங்கத் திரளோடு திறையிடப்பட்ட அகிலும்' என்றும், அடியார்க்குநல்லார் உரை வரைந்திருப்பதனாலும் கீழைநாடுகளிலும் இயற்கையாக அகில் விளைந்தமை அறியப்படும்.

**அகில்வகை** *agil-vagai,* பெ. (n.) *அருமணவன், தக்கோலி, கிடாரவன், காரகில் முதலிய அகில் வகைகள்;* different varieties of eagle-wood, the chief of them being *arumaṇavaṉ, takkōli, kiḍāravaṉ, and kāragil.* 'அருமணவன், தக்கோலி, கிடாரவன், காரகிலென்று சொல்லப்பட்ட பலவகைத்தாய தொகுதியும்' (சிலப். 14 : 108, அடியார்க். உரை).

'அருமணம்' என்பது கீழைக்கடல் தீவுகளுள் ஒன்று. அங்கிருந்து வந்தது அருமணவன்.

'கிடாரவன்' என்பது கடாரத்தினின்று வந்ததுபோலும்! 'கடாரம்' என்பது காழகம் (Burma) அல்லது சுமதுரை (Sumatra).

"புகைக்கினுங் காரகில் பொல்லாங்கு கமழாது" என்று நறுந்தொகை (26) பாடுவதால், காரகில் தலைசிறந்ததா யிருந்திருக்கலாம்.

**அகில்விறகு** *agil-viṟagu,* பெ. (n.) *பண்டைநாட் செல்வமகளிர் கூதிர்காலத்தில் குளிர்காய நெருப்பெரிக்கும் அகிற்கட்டை;* blocks of eagle-wood used in olden days by women of noble families as fuel for kindling fire, to warm themselves during winter.

"முகிறோய் மாடத் தகிறரு விறகின்
மடவரன் மகளிர் தடவுநெருப் பமர்ந்து
நறுஞ்சாந் தகலத்து நம்பியர் தம்மொடு
குறுங்க ணடைக்குங் கூதிர்க் காலையும்"
(சிலப். 14 : 98-101).

**அகிலங்கட்டை** *agilaṅ-kaṭṭai,* பெ. (n.) *அகிற் கட்டை* பார்க்க; see *agiṟ-kaṭṭai.*

[*அகில் + அம் + கட்டை.*]

**அகிலுறுப்பு** *agil-uṟuppu,* பெ. (n.) *ஒரு கலவைப் புகைப்பொருளின் ஆறுறுப்புகளுள் ஒன்றான அகில்;* eagle-wood as one of the six ingredients of a mixed fragrant fumigant.

[*அகில் + உறுப்பு.*]

அயிர், தேன், பிசின், பச்சிலை, சந்தனம், அகில் என்பன அவ் வாறுறுப்புகள். The six ingredients are sugar-candy, honey, resin, patchouli, sandal and eagle-wood. "நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை ஆர மகிலு றுப்போ டாறு" (சிலப். 5 : 14, அடியார்க். உரை).

இவற்றுள் அயிரும் அகிலும் முதன்மை யானவை. அவ் விரண்டினாலுமே ஒரு புகைக் கலவை அமைந்திருக்கலாம்.

"குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குணதிசை மருங்கிற் காரகி றுறந்து"
(சிலப். 4 : 35-6),

"இருங்கா ழகிலொடு வெள்ளயிர் புகைப்ப"
(நெடுநல். 56).

**அகிற்கட்டை** *agir̤-kaṭṭai*, பெ. (n.) **அகில்மரக் கட்டை**; block of eagle-wood.

*[அகில் + கட்டை.]*

**மறுவ.** அகிலங்கட்டை, அகிற்குறடு.

**அகிற்குடம்** *agir̤-kuḍam*, பெ. (n.) **அகில் புகைக்குங் கலம்**; vessel meant for burning agar incense. "அகிற்குடம் பரப்பி" (சீவக. 2391).

*[அகில் + குடம்.]*

**அகிற்குறடு** *agir̤-kur̤aḍu*, பெ. (n.) *1.* **அகிற் கட்டையால் செய்யப்பட்ட பாதக்குறடு**; slipper made of eagle-wood. *2.* **அகிற்கட்டை** பார்க்க; see *agir̤-kaṭṭai.*

*[அகில் + குறடு.]*

**அகிற்கூட்டு** *agir̤-kūṭṭu*, பெ. (n.) **அகில், கற்பூரம், காசுக்கட்டி, தேன், ஏலம் முதலியன சேர்ந்த நறுமணக் கலவை**; a fragrant mixture of agar, camphor, catechu, honey, cardamom and other spices.

*[அகில் + கூட்டு.]*

"உந்துசந் தனங்கர்ப் பூர முடனெரி காசு செந்தே
னந்தவே லங்க ளென்ப வகிற்கூட்டு"

(சூடா. 12 : 36) என்பதில், அகில் விட்டுப் போயிருத்தல் வேண்டும்; அல்லது சந்தனத்தை அகிலாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

**அகிற்சாந்தம்** *agir̤-cāndam*, பெ. (n.) **காரகிற் கட்டையை நீர் தோய்த்து உரசியமைத்த சந்தனம் போன்ற தேய்வை அல்லது திண் குழம்பு**; eagle-wood made into paste. "காழகிற் சாந்தம்" (சிலப். 13 : 115).

*[அகில் + சாந்தம்.]*

**மறுவ.** அகினெய்

**அகிற்புகை** *agir̤-pugai*, பெ. (n.) **அகிற் கட்டையை யெரிப்பதால் எழும் நறும்புகை**; fragrant fumes of burning eagle-wood.

*[அகில் + புகை.]*

**அகினெய்** *agiṉey*, பெ. (n.) **அகிற்சாந்தம்** பார்க்க; see *agir̤-cāndam.*

*[அகில் + நெய்.]*

**அகீர்த்தி** *agirtti*, பெ. (n.) **கீர்த்தியின்மை, அவமானம்**; ill-fame, disgrace.

*[அ + கீர்த்தி. 'அ' எதிர்மறை முன்னொட்டு.]*

**கீர்த்தி** பார்க்க; see *kirtti.*

**அகுட்டம்** *aguṭṭam*, பெ. (n.) **மிளகு** (வின்.); black pepper.

**அகுடம்** *aguḍam*, பெ. (n.) **கடுகுரோகிணி** (மலை.); black hellebore.

**அகுணியகில்** *aguṇi-y-agil*, பெ. (n.) **செம்பில்** (L.); cup-calyxed white cedar.

**அகுதை**[1] *agudai*, பெ. (n.) **சோழனொருவன் மகள்**; name of the daughter of a *Cōḻa* king.

**அஃதை** பார்க்க; see *akdai.*

**அகுதை**[2] *agudai*, பெ. (n.) **ஒரு கொடையாளி**; a philanthropist. "மணநாறு மார்பின் மறப்போ ரகுதை" (புறநா. 347 : 5). இவன் பெயர் அஃதை என்றும் எழுதப்படும்.

**அகும்பை** *agumbai*, பெ. (n.) **கவிழ்தும்பை** (மலை.); species of *Trichodesma.*

**அகுல்** *agul*, பெ. (n.) **அடுப்பு**; oven.

*[ஒருகா. அழல் → அகல் → அகுல்.]*

**அகுலாதிகம்** *agulādigam*, பெ. (n.) **கரிசலாங் கண்ணி** (சித்.அக.); a medicinal plant, usually found in marshy places.

**அகுலி** *aguli*, பெ. (n.) **நறுவிலி** (மலை.); sebestan species and its varieties. **நறுவிலி** பார்க்க; see *nar̤uvili.*

Note : The correct spelling is நறுவிழி, but colloquially it is நறுவிலி. பின் வருவன நறுவிலியின் வகைகள் (The following are the different species) :

சிறு நறுவிலி — *Cordia myxa.*
பெரு நறுவிலி — a variety bearing large fruits-*Cordia obliqua.*
நாய் நறுவிலி — *Cordia monoica.*
பொன் நறுவிலி — *Cordia sebestena* (speciosa).
நாறு நறுவிலி — *Eugenia jambolana (caryophyllifolia).*
அச்சி நறுவிலி — *Cordia sebestena.*

**அகுலோதிகம்** *agulōdigam*, பெ. (n.) **கருங் கொடுவேலி** (சித்.அக.); a black variety of Ceylon leadwort.

**அகுவைக்கட்டி** *aguvai-k-katti*, பெ. (n.) **அரையாப்பு** (சங்.அக.); venereal tumour in the groin.

**அகுளுதி** *aguḷudi*, பெ. (n.) **வேப்பமரம்**; margosa tree, *Azadirachta indica.*

**அகுளூதி** *aguḷūdi*, பெ. (n.) **அகுளுதி** பார்க்க; see *aguḷudi.*

**அகுளை** *aguḷai*, பெ. (n.) **கல்லடிச் சேம்பு** (சித்.அக.); an inferior variety of *sĕmbu.*

**அகுன்றி** *aguṉṟi*, பெ. (n.) **இசைக்கருவிவகை** (அக.நி.); a kind of musical instrument.

**அகை¹-தல்** *agai-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **தளிர்த்தல்**; to sprout. ''கொய்குழை யகைகாஞ்சி'' (கலித். 74 : 5). 2. **செழித்தல்**; to thrive, flourish, grow well, as vegetation. ''கயமகைய வயனிறைக்கும்'' (மதுரைக். 92). 3. **மலர்தல்**; to blossom, to expand. ''அகைமத்தத் தளிவர்க்கத் தளகக்கொத் தினரே'' (தக்கயாகப். 98).

**ம.** அக; **க.** அகெ; **தெ., கூ.** ஆகு; **து.** அத்தெ; **குட.** அகெ; **கோண்.** ஆதீ; **கொலா.** எத்; **குரு.** அகரார்ன.

[உல் → உல்லரி = தளிர். உல் → உல → உலவை = பசுந்தழை. உல் → உள் → உழு → உகு → உகை → அகை. **ஒ.நோ:** நுல் → நுள் → நுழு → நுழை → நுழாய் = இளம்பாக்கு. நுழு → நுகு → நுகும்பு = பனங்குருத்து. முல் → முள் → முழு → முகு → முகை = அரும்பு.]

**அகை²-தல்** *agai-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **எரிதல்**; to burn. ''அகையெரி யானாது'' (கலித். 139 : 26). 2. **வருந்துதல்**; to suffer. ''அகையே லமர்தோழி'' (சீவக. 1524).

[அழல் → அழு → அகு → அகை. அழல் = நெருப்பு.]

**அகை³-தல்** *agai-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **ஒடிதல்**; to be broken, crumpled. ''அகைந்த வித்துணை மலரெனக் கருளுதியென்றாள்'' (பாரத. புட்பயாத். 40). 2. **காலந்தாழ்த்தல்**; to delay. ''அகையா தெனதாவி தழைக்குமென'' (சீவக. 1379).

[அக்கு → அகு → அகை. அக்கு = துண்டு. அகை = துண்டாதல், ஒடிதல், காலந்தாழ்த்தல்.]

**அகை⁴-தல்** *agai-*, 2 செ.கு.வி. (v.i.) **செல்லுதல்**; to go forth, proceed.

[உகை → அகை.]

**அகை¹-த்தல்** *agai-*, 2 பொ.வி. (com. v.) *1.* **தளிர்த்தல், கிளைத்தல்**; to sprout. ''குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த'' (புறநா. 159 : 9). 2. **மலர்த்துதல்**; to spread or expand by force. அகைத்தல் - வலிய மலர்த்தலுமாம் (தக்கயாகப். 98).

[உகு → உகை → அகை. அகை = தளிர்த்தல்.]

**அகை²-த்தல்** *agai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **வருத்துதல், துன்புறுத்துதல்** (சூடா.); to trouble, oppress.

[அழல் → அழு → அகு → அகை. அழல் = மனம் எரிதல், வருந்துதல்.]

**அகை³-த்தல்** *agai-*, 2 செ.கு.வி. (v.i.) **விட்டு விட்டுச் செல்லுதல்** (தொல். பொருள். செய். 229, பேரா. உரை); to quit, desert, leave behind. —, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஒடித்தல், முறித்தல்**; to break. ''உம்பலகைத்த வொண்முறி யாவும்'' (மலைபடு. 429). 2. **அடித்தல்** (பிங்.); to beat. 3. **அறுத்தல்**; to cut into pieces. ''மயிருக்கொன் றாகவாங்கி யகைத்தகைத் திடுவர்'' (சீவக. 2766).

[அக்கு → அகு → அகை. அக்கு = துண்டு. அகைத்தல் = துண்டாக்குதல், ஒடித்தல், முறித்தல், அறுத்தல்.]

**அகை⁴-த்தல்** *agai-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **செலுத்துதல்** (சூடா.); to drive, cause to go, send forth. 2. **இழுத்தல்** (பொதி.நி.); to draw towards.

[உகைதல் = செல்லுதல். உகைத்தல் = செலுத்துதல். உகை → அகை.]

*ag* (*ak*), to drive, urge, conduct.

**Gk.** *agein*, ago; **L.** *ag-ere*, to drive; **Icel.** *ak-a* (pt. t. *ōk*), to drive; **Skt.** *aj*, to drive— (S.E.D.E.L.).

மேலையாரியச் சொற்களின் மெய், தமிழை யொத்து மிடற்றொலியாய் (guttural) இருப்பதும் சமற்கிருதத்தில் அஃது அண்ணவொலியாய்த் (palatal) திரிந்திருப்பதும் கவனிக்கத் தக்கது. ககரச் சொல்லே மூல அல்லது திருந்திய வடிவம்.

**அகை[5]-த்தல்** *agai-*, 2 செ.கு.வி. (v.i.) எழுதல் (சூடா.); to rise. —, 4 செ.குன்றாவி. (v.t.) **உயர்த்துதல்** (சூடா.); to raise.

[உக → உகை → அகை. உகத்தல் = உயர்தல்.]

**அகைப்பு[1]** *agaippu*, பெ. (n.) வருத்தம், முயற்சி, மனத்திட்பம், அதன் விளைவு; suffering, effort, result of effort, effect of will. "அண்டந் திருமா லகைப்பு" (திவ். இயற். 4 : 37).

[அழு → அழல் = நெருப்பு, எரிவு. அழலுதல் = எரிதல், பொறாமை கொள்ளுதல். அழு → அழுங்கு. அழுங்குதல் = வருந்துதல், துன்புறுதல். அழுங்கு → அழுக்கு = பொறாமை. அழு → அகு → அகை. அகைதல் = எரிதல்.]

**அகைப்பு[2]** *agaippu*, பெ. (n.) இடையிடை விட்டு விட்டுச் செல்லுகை; movements with breaks for stopping. "அகைப்பு வண்ணம்" (தொல். பொருள். செய். 221).

[உகை → அகை → அகைப்பு.]

**அகைப்பு[3]** *agaippu*, பெ. (n.) 1. எழுச்சி; rising, elevation. 2. மதிப்பு; esteem. "அகைப்பில் மனிசரை" (திவ். இயற். 4 : 38).

[உகத்தல் = உயர்தல். உக → உகை. உகைத்தல் = எழுதல், உயரக் குதித்தல், எழும்புதல். உகை → அகை.]

**அகைப்புவண்ணம்** *agaippu-vaṇṇam*, பெ. (n.) (யாப்.) ஒருவழி நெடிலும் ஒருவழிக் குறிலும் பயின்று விட்டு விட்டுச் செல்லும் ஓசைவகை; (Pros.) rhythm produced by varying groups of syllables, alternating between long and short. "அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்" (தொல். பொருள். செய். 221).

[அக்கு = துண்டு, கூறு. அக்கு → அகு → அகை. அகைத்தல் = கூறுபடுத்துதல், அறுத்தல், அறுத்தறுத்து அல்லது விட்டு விட்டுச் செல்லுதல். அகை = கூறுபாடு.]

**அகைமம்** *agaimam*, பெ. (n.) 1. புல்லுருவி (பச்.மூ); honey-suckle, mistletoe. 2. கருந்தாளி மரம் (சித்.அக.); a tree, *Diospyros ebenum*.

**அகையாறு** *agai-y-āṟu*, பெ. (n.) கிளையாறு; river branch. 'இவ்வூர் அகையாறும் ஆக இறையிலி' (S.I.I. ii, 56).

[அகை + ஆறு.]

**அகைவாய்க்கால்** *agai-vāykkāl*, பெ. (n.) கிளை வாய்க்கால் (S.I.I. iii, 171); subsidiary canal.

[அகை + வாய்க்கால். அகை = கிளை.]

**அகோரி** *agōri*, பெ. (n.) மோதிரக்கண்ணிச்செடி; species of *Hugonia* (L.).

**அகோரை** *agōrai*, பெ. (n.) இரண்டரை நாழிகைக் கால அளவு (வின்.); hour, a measure of time.

**அகோவனம்** *agōvaṉam*, பெ. (n.) தரிசு; waste land. 'இத்தேவர் பழந்தேவதானத்தில்அகோவனமாகக் கிடந்த திடலை' (S.I.I. vii, 309).

**அங்கங்கு** *aṅgaṅgu*, சு.வி.எ. (demons. adv.) அந்தந்த இடத்தில்; here and there, at different places. 'அங்கங்கு குறுணி அளந்துகொட்டிக் கிடக்கிறது' (பழ.).

[அங்கு + அங்கு.]

**அங்கங்கே** *aṅgaṅgē*, சு.வி.எ. (demons. adv.) அங்கங்கு பார்க்க; see *aṅgaṅgu*. "அங்கங்கே கலைகள் தேறும் அறிவன்போல் இயங்கும்" (திருவிளை. தருமிக்கு. 19).

[அங்கு + அங்கு + ஏ.]

**அங்கடத்தன்** *aṅgaḍattaṉ*, பெ. (n.) பாசிப்பயறு; green gram, *Phaseolus mungo* (சா.அக.).

**அங்கடியிங்கடி** *aṅgaḍi-y-iṅgaḍi*, சு.வி.எ. (demons. adv.) அங்குமிங்கும் (நாஞ்.); here and there (Nāñ.). அங்கிடியிங்கிடி (கொ.வ.).

[அங்கு + இடை + இங்கு + இடை.]

**அங்கண்[1]** *aṅgaṇ*, சு.வி.எ. (demons. adv.) அவ்விடம்; there. "அங்க ணுற்றிலர்" (கந்தபு. சூரன்தண்டஞ். 29).

[அங்கு + அண்.]

**அங்கண்[2]** *aṅgaṇ*, பெ. (n.) 1. அழகிய கண்; beautiful eye. 2. கண்ணோட்டம்; kindness, favouritism. "அங்க ணுடைய னவன்" (கலித். 37 : 22).

[அம் + கண் — அங்கண். அம் = அழகிய, பொருந்திய, அன்பான.]



அச்சாணி



வயலெலி



காட்டெலி



அச்சிருங்கி



அச்சுப்பலகை

**அங்கண்**[3] *angaṇ*, பெ. (n.) **அழகிய இடம்**; beautiful spot. ''அங்கண் விசும்பி னகனிலா'' (நாலடி. 151).

*[அம் + கண் – அங்கண். அம் = அழகிய, கண் = இடம்.]*

**அங்கண்ணன்** *angaṇṇaṉ*, பெ. (n.) 1. **அழகிய கண்ணுடையவன்**; one with beautiful eyes. 2. **மிகுந்த ஆர்வமுள்ளவன்**; one who is very affectionate. ''அங்கண்ண னுண்டவென் னாருயிர்க் கோதிது'' (திவ். திருவாய். 9.6 : 6). 3. **சிவன்**; Šiva.

*[அம் + கண் + அன் – அங்கண்ணன்.]*

**அங்கணம்**[1] *anganam*, பெ. (n.) 1. **சாய்கடை (சலதாரை)**; drain, ditch, sewer. ''ஊரங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால்'' (நாலடி. 175). 2. **சாய்கடை யொட்டிய உள்முற்றம்**; inner courtyard in a house. 3. **சேறு** (பிங்.); mud. 4. **கட்டடப் பிரிவு** (இராட்.); division of a building chamber, room (R.). 5. **இரு தூண்களுக் கிடைப்பட்ட இடம்** (இராட்.); space between two pillars (R.). க. அங்கண. 6. **நான்கு தூண்களுக்கிடைப்பட்ட இடம்** (C.G.); space enclosed by four pillars. 7. **மனைக்குரிய 72 சதுர அடி நிலப்பரப்பளவு** (C.G.); superficial measure for house sites, about 12 ft. long by 6 ft. broad. தெ. அங்கணமு. 8. **இடம்** (திருநூற். 18, உரை); space, place. ம. அங்கணம்.

**ம.** அங்கணம்; **க., து., வ., பிராகி., மரா.** அங்கண; **தெ.** அங்கணமு; **குவி.** அங்கணி; **பா.** அங்கணம்; **குச்.** ஆங்குணம்; **இந்.** அங்கண், ஆங்கண்.

*[வங்கு → அங்கு. அங்குதல் = சாய்தல், வளைதல். அங்கு + அணம் – அங்கணம். கழிநீர் செல்லும் சாய்கடை, வாட்டஞ்சாய்வாயிருப்பதால் அங்கணம் எனப்பட்டது.]*

**அங்கணம்**[2] *anganam*, பெ. (n.) 1. **கடுக்காய்** (வை.மூ.); chebulic myrobalan. 2. **வெள்ளெருக்கு**; white madar, l. sh., *Calotropis gigantea-albiflora.*

**அங்கணம்**[3] *anganam*, பெ.(n.) **ஒரு கனியநஞ்சு** (மிருத பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

**மறுவ.** அங்கவன்

**அங்கணன்** *anganaṉ*, பெ. (n.) 1. **கண்ணழகன்**; one who has beautiful eyes. ''அங்கணனுக் குரியார்'' (கம்பரா. பால. கடிமண. 96). 2. **அருளாளன், அருட்பார்வையன்**; one who has gracious eyes. ''அழக னங்கணன்'' (கம்பரா. அயோத். சித்திர. 1). 3. **சிவன்**; Šiva, as gracious-eyed. ''அங்கணனே யருளாய்'' (தேவா. 7.25 : 4).

**அங்கணாளன்** *anganāḷaṉ*, பெ. (n.) 1. **கண்ணோட்ட முடையவன்**; gracious person, as one who looks with favour. ''அறனறிந் தொழுகு மங்கணாளனை'' (கலித். 144 : 70). 2. **சிவபெருமான்**; Lord Šiva. ''கைக்கொண்ட அங்கணாளன் றிருவுருவம்'' (காஞ்சிப்பு. சிவபுண். 33).

*[அங்கண் + ஆளன் – அங்கணாளன்.]*

**அங்கணி**[1] *angani*, பெ. (n.) **சிவை (மலைமகள்)** (சங்.அக.); *Malaimagaḷ* (Pārvati), as gracious-eyed.

**அங்கணி**[2] *angani*, பெ. (n.) **கற்றாழை** (மலை.); aloe.

**Skt.** angaṇā

**அங்கணிதம்பூண்டு** *anganidam-pūṇḍu*, பெ. (n.) **பருத்தி**; cotton plant, *Gossypium arboreum* (சா.அக.).

**அங்கணேல்-தல்** *angaṇ-ēl-*, (9) செ.கு.வி. (v.i.) **துயிலுணர்தல் (தூக்கத்தினின்று விழித்தல்)**; to awake. ''தேவியை......... அங்க ணேற்றபிற் காணாது'' (பெருங். வத்தவ. 7 : 92).

*[அங்கண் + ஏல் – அங்கணேல்.]*

**அங்கத்தவர்** *angattavar*, பெ. (n.) **அவ்விடத்திலுள்ளவர்**; the inhabitants of that place as opposed to 'this place'. அங்கத்தவரானால் என்ன, இங்கத்தவரானால் என்ன? (உ.வ.).

*[அங்கு + அத்து + அவர்.]*

**அங்கத்து** *angattu*, பெ.எ. (adj.) **அவ்விடத்து**; of that place.

*[அங்கு + அத்து. 'அத்து' இடப்பொருட் சாரியை.]*

**அங்கதச்செய்யுள்** *angada-c-ceyyuḷ*, பெ. (n.) **வசைப்பாட்டு, அங்கதப்பாட்டு**; satire, lampoon.

''வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர்''
(தொல். பொருள். செய். 125).

*[அங்கதம் + செய்யுள்.]*

**அங்கதப்பாட்டு** *aṅgada-p-pāṭṭu,* பெ. (n.) **அங்கதச் செய்யுள்** பார்க்க; see *aṅgada-c-ceyyuḷ.* "அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்" (தொல். பொருள். செய். 152).

*[அங்கதம் + பாட்டு.]*

**அங்கதம்**[1] *aṅgadam,* பெ. (n.) *1.* **வசை, பழிப்பு;** abuse. 'அங்கத மென்பது வசை' (தொல். பொருள். செய். 124, பேரா. உரை). *2.* **அங்கதச் செய்யுள்** பார்க்க; see *aṅgada-c-ceyyuḷ.* *3.* **பொய்** (அக.நி.); falsehood.

"அங்கதந் தானே அரில்தபத் தெரியின்
செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே"
(தொல். பொருள். செய். 120).

"செம்பொரு ளாயின் வசையெனப் படுமே"
(தொல். பொருள். செய். 121).

"மொழிகரந்து சொலினது பழிகரப் பாகும்"
(தொல். பொருள். செய். 122).

**அங்கதம்**[2] *aṅgadam,* பெ. (n.) **தோட்கடகம், வாகுவளையம்;** bracelet worn on the upper arm.

"புயவரை மிசை ............. அங்கதம்"
(திருவிளை. மாணிக். 12).

**ம.** அங்கதம்; **க., வ.** அங்கத; **தெ.** அங்கதமு.

*[அங்குதல் = வளைதல். அங்கு → அங்கதம் = வளையல், கடகம்.]*

**அங்கதம்**[3] *aṅgadam,* பெ. (n.) *1.* **யானையின் உணவு;** food of elephants. "போந்த பிடியினமு மங்கதங் கிட்டாம லறமெலிந்து" (பஞ்ச. திருமுக. 158).

**அங்கதம்**[4] *aṅgadam,* பெ. (n.) *1.* **மார்பு** (அக. நி.); breast. *2.* **(மார்பினால் ஊர்ந்து செல்லும்) பாம்பு;** snake. "அங்கத மொக்குஞ் சில" (இரகு. யாகப். 71).

**அங்கதர்** *aṅgadar,* பெ. (n.) **வசைகூறுவோர்;** those who use abusive language, revilers. "பொலா வங்கதர்க் கெளியே னலேன்" (தேவா. 3.297:10).

**அங்கப்பால்** *aṅga-p-pāl,* பெ. (n.) **தாய்ப்பால் (முலைப்பால்);** mother's milk. "அங்கப்பா லுண்ணாமல் தேகம் உதித்தீரோ" (பெண் மதி மாலை, 30).

**அங்கபடி** *aṅga-paḍi,* பெ. (n.) **ஏறுமிதி, அடிதாங்கி;** stirrup (W.). 'அங்கவடி' என்றும் கூறப்படும்.

**க.** அங்கவடி; **தெ.** அங்கவணெ; **து.** அங்கோலெ.

**அங்கபறைநாதி** *aṅga-paṟai-nādi,* பெ. (n.) **இலவங்கப்பட்டை;** cinnamon bark, *Cinnamomum zeylanicum* (சா.அக.).

**அங்கபாதி** *aṅga-pādi,* பெ. (n.) **முடக்கொற்றான்;** balloon-vine, s. cl., *Cardiospermum halicacabum* (சா.அக.).

**அங்கம்**[1] *aṅgam,* பெ. (n.) **கொன்றை** (பச்.மூ.); Indian laburnum.

**அங்கம்**[2] *aṅgam,* பெ. (n.) **வரிவகை** (T.A.S. iii, 266); a petty cess.

**அங்கம்**[3] *aṅgam,* பெ. (n.) **கட்டில்;** couch, bedstead, cot. "அணையங்க மீதே" (திருப்பு.128).

**அங்கம்**[4] *aṅgam,* பெ. (n.) **வெட்டுகை** (பொதி.நி.); cutting, chopping.

**அங்கம்**[5] *aṅgam,* பெ. (n.) *1.* **பாடலிபுத்திரத் திற்குக் கிழக்கில் உள்ள ஒரு பழைய நாடு;** an ancient country which lay east of Pāṭaliputra, modern Patna. "அங்கநா டிதுவும்" (கம்பரா. பால. தாடகை. 2). *2.* **அந் நாட்டு மொழி** (திவா.); language of that country.

சிவபெருமானால் எரிக்கப்பட்ட காமனின் உடம்பு (அங்கம்) வீழ்ந்த இடத்தைத் தன்னுட் கொண்டதனால், அங்கநாடெனப்பட்ட தென்பது, பிற்காலக் கட்டுக்கதையாகும்.

**அங்கம்**[6] *aṅgam,* பெ. (n.) **கோளக நஞ்சு** (பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

**அங்கம்மா** *aṅgammā,* பெ. (n.) **அங்காளம்மை, காளியின் ஒரு வடிவம்;** name of a form of *Kāḷi.*

**ம.** அங்கம்ம; **க., தெ.** அங்கம்மா, அங்களம்ம.

*[அம் + காளி + அம்மை — அங்காளியம்மை → அங்காளியம்மா → அங்காளம்மா → அங்கம்மா.]*

**அங்கமண்** *aṅga-maṇ,* பெ. (n.) **அழமண்;** fuller's earth (சா.அக.).

**அங்கமணி** *aṅga-maṇi,* பெ. (n.) **மணப்பெண் கணவன் வீட்டிற்குத் தன்னுடன் கொண்டு செல்லும் சீர்வரிசை;** dowry in the form of jewels, clothes, furniture, vessels, etc., which a married girl takes with her to her new home. "இதுக்கு அங்கமணி செய்யலாவதே" (திவ். திருமாலை, 37, வியா.).

**க.** அங்கமணி

**அங்கமணிக்கூடை** *aṅga-maṇi-k-kūḍai*, பெ. (n.) **மணப்பெண்ணிற்குக் கூடையில் வைத்துக் கொடுக்கும் வரிசை** (இராட்.); a basket of presents to a bride (R.).

*[அங்கமணி + கூடை.]*

**அங்கமணிப்பணம்** *aṅga-maṇi-p-paṇam*, பெ. (n.) **சீர்வரிசைப் பணம்** (S.I.I. vi, 152); dowry money.

*[அங்கமணி + பணம்.]*

**அங்கயற்கண்ணி** *aṅgayaṟ-kaṇṇi*, பெ. (n.) **மதுரையிற் கோயில்கொண்டிருக்கும் மீனக் கண்ணி (மீனாட்சி)யம்மை**; *Mīnākṣi*, Goddess of the Madurai temple. "அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவாய்" (தேவா. 3.378 : 1).

*[அம் + கயல் + கண்ணி.]*

**அங்கர்** *aṅgar*, பெ. (n.) **அங்கநாட்டார்**; inhabitants of Aṅgadēša. "அங்கர் மாகத ராரியர்" (திருவிளை. திருமண. 74).

**அங்கர்கோமான்** *aṅgar-kōmāṉ*, பெ. (n.) **அங்க நாட்டரசனான கன்னன்** (சூடா.); Karṇa, king of Aṅgadēša.

**அங்கரமாதி** *aṅgaramādi*, பெ. (n.) **ஒருவகைச் செய்நஞ்சு (கௌரி பாடாணம்)** (இராட்.); a processed arsenic (R.).

**அங்கரமோதகி** *aṅgara-mōdagi*, பெ. (n.) **கரு நாரத்தை** (சித்.அக.); a species of *nārattai*.

**அங்கரவல்லி** *aṅgaravalli*, பெ. (n.) **பெருங் குறிஞ்சா** (சித்.அக.); a species of scammony swallow-wort.

**அங்கராயர்** *aṅgarāyar*, பெ. (n.) **கள்ளர்குலப் பட்டப்பெயர்களுள் ஒன்று** (கள்ளர் சரித். பக். 145); a title of Kaḷḷars.

**அங்கலாப்பு** *angalāppu*, பெ. (n.) **அங்கலாய்ப்பு** பார்க்க; see *angalāyppu*.

**அங்கலாய்-த்தல்** *aṅgalāy-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **துயருறுதல்**; to lament, grieve, sorrow. "அங்கலாய்ப் பாளே" (இராமநா. ஆரணிய. பக். 187). 2. **பொறாமை கொள்ளுதல்**; to be envious, jealous. 'ஆடுமறித்தவன் செய் விளையுமா, அங்கலாய்த்தவன் செய் விளை யுமா?' (பழ.). —, 4 செ.குன்றாவி. (v.t.) **வெஃகுதல் (இச்சித்தல்)**; to covet (W.).

*[அகம் + கலாய் – அங்கலாய். அகம் = மனம். கலாய்த்தல் = கலகித்தல், கலங்குதல்.]*

**அங்கலாய்ப்பு** *aṅgalāyppu*, பெ. (n.) 1. **கலக்கம்**; disquiet, mental worry. 2. **அருவருப்புக் கொள்கை**; becoming disgusted. 3. **பேராவல்** (யாழ்.அக.); yearning. 4. **பேராசை** (சங்.அக.); greed.

**ம.** அங்கலாய்க்க; **க., து.** அங்கலாப்பு; **தெ.** அங்கலார்ச்சு.

*[அகம் + கலாய் – அகங்கலாய் → அங்கலாய். அகம் = மனம். கலாய்த்தல் = கலகித்தல், கலங்குதல்.]*

**அங்கலி** *aṅgali*, பெ. (n.) **கொங்கை** (சித்.அக.); breast.

**அங்கவடி** *aṅgavaḍi*, பெ. (n.) 1. **அங்கபடி** பார்க்க; see *aṅga-paḍi*. 2. **பாலூட்டியின் காதிலுள்ள அங்கவடி போன்ற சிற்றெலும்பு**; stirrup-bone.

**அங்கவம்** *aṅgavam*, பெ. (n.) **பழவற்றல்**; dried fruit (சா.அக.).

**அங்கவன்** *aṅgavaṉ*, பெ. (n.) **ஒரு கனிய நஞ்சு** (வை.மு.); a mineral poison.

**மறுவ.** அங்கணன்

**அங்கனம்**[1] *aṅgaṉam*, வி.எ. (adv.) **அப்படி, அங்ஙன்**; so, in that manner, thus.

*[ஆங்கனம் → அங்கனம்.]*

**அங்கனம்**[2] *aṅgaṉam*, பெ. (n.) **அங்கணம்**[2] பார்க்க; see *aṅgaṇam*[2].

**அங்கனி** *aṅgaṉi*, பெ. (n.) **கற்றாழை** (மலை.); aloe. **அங்கணி**[2] பார்க்க; see *aṅgaṇi*[2].

**Skt.** aṅganā

**அங்கா-த்தல்** *aṅgā-*, 3 செ.கு.வி. (v.i.) **வாய் திறத்தல்**; to open the mouth. "அஆ ஆயிரண் டங்காந் தியலும்" (தொல். எழுத்து. பிறப். 3).

**து.** அங்காவுனி; **குட.** அங்காவ்; **கூ.** அங் கலங்க; **குவி.** அங்கலசலி; **பர்.** அஙால்ப்; **மா.** அங்கலெ; **கொலா.** அங்கசி; **குரு.** அங்கல்; **கோண்.** அங்ஙல்; **மண்.** அங்லா; **மங்.** அங்கை.

*[ஆ → அங்கா. 'ஆ' வாய்திறத்தல் ஒலிக் குறிப்பு.]*

**அங்கா** *aṅgā*, பெ. (n.) 1. **வாய்திறப்பு**; opening the mouth. "அங்கா முயற்சி" (நன். 86). 2. **கொட்டாவி**; yawn.

**அங்காடி** *aṅgāḍi*, பெ. (n.) 1. **கடை, கடைத் தெரு**; bazaar, bazaar street. "அரசுவிழை திருவி னங்காடி வீதியும்" (சிலப். 14 : 179).

2. **நாட்சந்தை**; daily market. 'அங்காடி மேயும் பழங்கன்று ஏறாதலும் உண்டு' (பழ.). 'அங்காடி விலையால் எங்கோடிப் போனாளோ!' (பழ.). 'அங்காடி விலையை (கூடையை) அதிர அடிக்காதே' (பழ.). 'அங்காடிக்காரியைச் சங்கீதம் பாடச் சொன்னால் வெங்காயம் கறிவேப்பிலை என்பாள்' (பழ.).

**ம.** அங்ஙாடி; **க., தெ., கோத.** அங்காடி; **து., இரு.** அங்கடி, அங்காடி; **துட.** ஒதொடி; **கொலா.** அங்கடி; **நா.** அங்காறி; **பர்.** அங்கொட்; **சிங்.** அங்கணிய.

*[அம்முதல் (**தெ.**) = விற்றல். கடை = இடம். கடை → கடி → காடி என்று திரிந்திருக்கலாம். அம் + காடி – அங்காடி.]*

பண்டைத் தமிழக மாநகர்களில், சிறப்பாக வேந்தர் தலைநகர்களில், நாள்தொறும் பகலிலும் மாலையிலும் பல பண்டங்களும் விற்கும் அங்காடிச் சந்தைகள் நடைபெற்று வந்திருக்கின்றன. பகற்சந்தை 'நாளங்காடி' யென்றும், மாலைச் சந்தை 'அல்லங்காடி' யென்றும் பெயர் பெற்றிருந்திருக்கின்றன.

''நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியில்'' (சிலப். 5 : 63).

'அல்லங்காடியு முண்டாதலின், இதனை நாளங்காடி யென்றார்'(அடியார்க். உரை).

''அல்லங் காடி யழிதரு கம்பலை'' (மதுரைக். 544).

'நாளங்காடி அல்லங்காடி யாகிய இரண்டு கூற்றையுடைத் தென்றார்' (மதுரைக். 365, நச். உரை).

'அம்முதல்' என்னும் வினைச்சொல் இற்றைத் தமிழகத்தில் வழங்காவிடினும், குமரிநாட்டில் வழங்கியிருத்தல் வேண்டும்.

அம்முதல் = பொருந்துதல், ஒத்தல், ஒத்த மதிப்புள்ள பொருளுக்கு மாறுதல்.

**அங்காடிக்கூலி** *aṅgāḍi-k-kūli*, பெ. (n.) **கடை வரி** (I.M.P. Tj. 119); tax collected from stalls put up in the bazaar.

*[அங்காடி + கூலி.]*

**அங்காடிகூறு-தல்** *aṅgāḍi-kūṟu-*, 5 செ.கு.வி. (v.i.) **பண்டங்களை விற்குமாறு பெயர் சொல்லிக் கூவுதல்** (இராட்.); to cry out the names of goods for sale in order to attract buyers (R.).

**அங்காடிப்பண்டம்** *aṅgāḍi-p-paṇḍam*, பெ. (n.) 1. **கடைச்சரக்கு**; article sold in the market. 2. **கடையில் வாங்கக்கூடிய சரக்கு**; article available in the market. 'அங்காடிப் பண்டங் கிடீர் எனக்கரிதாயிற்று' (திவ். திருநெடுந். 16, வியா.). 3. **எளிதாய்ப் பெறக்கூடியது**; that which is easily obtained.

*[அங்காடி + பண்டம்.]*

**அங்காடிப்பாட்டம்** *aṅgāḍi-p-pāṭṭam*, பெ. (n.) (கல்.) **ஒரு பழைய கடை வரி**; (Insc.) an ancient tax on stalls put up in the bazaar.

*[அங்காடி + பாட்டம்.]*

**அங்காடிபாரி-த்தல்** *aṅgāḍi-pāri-*, 4 செ.கு.வி. (v.i.) **மனவரசாளுதல் (மனோராஜ்யம் பண்ணுதல்), வானக்கோட்டை கட்டுதல்**; to build castles in the air.

**அங்காத்தான்** *aṅgāttāṉ*, பெ. (n.) **தான்றி** (பச்.மூ.); belleric myrobalan.

**அக்காந்தி** பார்க்க; see *akkāndi*.

**அங்காப்பு** *aṅgāppu*, பெ. (n.) 1. **வாய்திறக்கை**; opening the mouth. ''முயற்சியுள் அஆ அங்காப் புடைய'' (நன். 76). 2. **நீர்வேட்கை**; thirst. ''அங்காப் பொழிய வருணனுக்கு'' (அழகர் கலம். 68).

*[ஆ → அங்கா → அங்காப்பு.]*

**அங்காரி** *aṅgāri*, பெ. (n.) **வெண்காரம்** (மூ.அ.); borax.

**அங்காலே** *aṅgālē*, சு.வி.எ. (demons. adv.) **அங்கே** (யாழ்ப்.); there (J.). அங்காலே இங்காலே அலையாதே (இ.வ.).

*[அங்கு + ஆல் + ஏ.]*

**அங்காளகை** *aṅgāḷagai*, பெ. (n.) **கரும்பு** (பச்.மூ.); sugar-cane.

*[அம் + காளகை. காளம் → காளகம் → காளகை. காளம் = கருமை.]*

**அங்காளதேவி** *aṅgāḷa-dēvi*, பெ. (n.) **அங்காளம்மை**; a Goddess. ''அங்காள தேவியெனை யாண்டுகொண்ட சோதி'' (பஞ்ச. திருமுக. 670).

*[அங்காளி + தேவி – அங்காளிதேவி → அங்காளதேவி.]*

**அங்காளம்மை** *aṅgāḷammai*, பெ. (n.) **அங்காளம்மைத் தெய்வம்**; a Goddess. 'அங்கா

ளம்மைத் தெய்வம் அகப்பைக்கூர் வழியாய் வரும்' (பழ.).

[அங்காளி + அம்மை – அங்காளியம்மை → அங்காளம்மை.]

தெ. அங்காளம்ம

பெண்தெய்வப் பெயர்கட்குமுன், அழகை உணர்த்தும், 'அம்' என்னும் முன்னொட்டுச் சேர்ப்பது மரபு.

ஒ.நோ : அம் + கயற்கண்ணி – அங்கயற் கண்ணி.

இம் முறையில், காளி அங்காளியெனப்பட்டாள். காளி தூய தமிழ்த் தெய்வம் என்பதும், காளி என்னும் பெயர் தூய தமிழ்ச்சொல் என்பதும் 'காளி' என்னும் உருப்படியில் விரிவாக விளக்கப்படும்.

**அங்காளி** *angāli*, பெ. (n.) **பாலைநிலத் தெய்வமாகிய காளி**; Goddess *Kāli*, a female deity.

[அம் + காளி – அங்காளி.]

**அங்கிங்கு** *angingu*, கு.வி.எ. (adv.) **அங்கே அல்லது இங்கே**; here or there. "அங்கிங்கெனாதபடி" (தாயு. கடவுள். 1).

[அங்கு + இங்கு.]

**அங்கிட்டு** *angiṭṭu*, கு.வி.எ. (adv.) 1. **அவ்விடம், அவ்விடத்தில்**; there, yonder. 'அங்கிட்டுப் பிறந்து' (ஈடு, 6.8 : 11). 2. **அப்பால்**; away. அங்கிட்டுப்போ (உ.வ.).

ம. அங்னோட்டு

[அங்கு + இட்டு.]

**அங்கிட்டு இங்கிட்டு (அங்கிட்டிங்கிட்டு)** *angiṭṭu-ingiṭṭu (angiṭṭingiṭṭu)*, கு.வி.எ. (adv.) **அந்தப் பக்கம் அல்லது இந்தப் பக்கம்**; this side or that side. என் மகன் என்னை அங்கிட்டிங்கிட்டுப் போகவிடமாட்டான் (உ.வ.).

**அங்கிடியிங்கிடி** *angiḍi-y-ingiḍi*, கு.வி.எ. (adv.) அங்கடியிங்கடி பார்க்க; see *angaḍi-y-ingaḍi*.

**அங்கிடுதத்தி** *angiḍu-tatti*, பெ. (n.) **நிலைகெட்டவன்** (யாழ்.அக.); a person of vagrant habits. 2. **அடிக்கடி கட்சி மாறுபவன்**; one who frequently changes his party, turn-coat.

[அங்கு + இடு + தத்தி.]

**அங்கிடுதிருப்பி** *angiḍu-tiruppi*, பெ. (n.) **குறளை கூறுபவ-ன்-ள்**; tale-bearer. 'அங்கிடுதிருப்பி எங்கடி போனாய், சின்னண்ணன் செத்த இழவுக்குப் போனேன்' (பழ.).

[அங்கு + இடு + திருப்பி.]

**அங்கிடுதுடுப்பன்** *angiḍu-tuḍuppaṉ*, பெ. (n.) **குறளை கூறுவோன்** (இராட்.); tale-bearer. 2. **அடிக்கடி கட்சி மாறுவோன்** (வின்.); one who frequently changes his party, turn-coat (W.). 3. **நாடோடி** (வின்.); vagrant (W.).

**அங்கிடுதொடுப்பி** *angiḍu-toḍuppi*, பெ. (n.) **குறளை கூறுவோன்**; slanderer, tale-bearer. 'அங்கிடுதொடுப்பிக்கு அங்கிரண்டு குட்டு, இங்கிரண்டு சொட்டு' (பழ.).

**அங்கு** *angu*, சு.வி.எ. (demons. adv.) **அவ்விடம், அவ்விடத்தில், அவ்விடத்திற்கு**; there, thither. 'அங்கும் இருப்பான் இங்கும் இருப்பான், ஆக்கின சோற்றுக்குப் பங்கும் இருப்பான்' (பழ.). 'அங்கும் தம்பி இங்கும் தம்பி அகப்பட்டுக் கொண்டான் தும்மட்டிப் பட்டன்' (பழ.).

[ஆங்கு → அங்கு.]

**அங்குசம்** *anguśam*, பெ. (n.) 1. **யானைத் துறட்டி**; elephant goad. "அங்குசம் கடாவ ஒருகை" (திருமுருகு. 110), "பகழியங் குசமும்" (கந்தபு. உற்பத். விடைபெ. 37). 2. **வாழை** (மலை.); plantain.

ம. அங்குசம்; க. அங்குச; தெ. அங்குசமு, அங்குசம்; Skt. ankuśa.

[அங்குதல் = வளைதல். அங்கு → அங்குசம்.]

'அங்குசம்' என்னும் சொல் பண்டை யிலக்கிய வழக்கில் இடம்பெறுவதாலும், தமிழ் வேரினின்று பிறந்திருத்தலாலும், அங்கதம் (வளையல், கொடுவாய்) என்னுஞ் சொல்லைப் பெரிதும் ஒத்திருத்தலாலும், வாழையென்னும் பொருளுடைமையாலும், 'வி'கரம் சேர்ந்து 'கொள்' என்னும் கூலத்தைக் குறித்தலாலும், இங்குத் தென்சொல்லாகக் கொள்ளப்பட்டது.

வாழை குலை தள்ளியபின், சிறப்பாகப் பூ விரியுமுன், அங்குசம் போன்ற தோற்றங் கொள்ளுதலால் அங்குசம் என்னும் உவமையாகுபெயர் பெற்றதுபோலும்!

**அங்குசவி** *anguśavi*, பெ. (n.) **கொள்** (வின்.); horse gram.

[அங்குசம் → அங்குசவி.]

கொள்ளுக்காய் வளைந்து அங்குசத்தை ஒரு புடை யொத்திருப்பது கவனிக்கத் தக்கது. **காணம், கொள்** என்னும் பெருவழக்கான பெயர்களும், இப் பொருட்காரணம் பற்றி யனவே. அப் பெயர்களைக் காண்க.

**அங்குசோலி** *aṅgušōli*, பெ. (n.) *அறுகம்புல்* (மூ.அ.); harialli grass, *Cynodon dactylon.*

**அங்குத்தி** *aṅgutti*, பெ. (n.) *அங்குற்றி* பார்க்க; see *aṅguṟṟi.*

**அங்குத்தை** *aṅguttai*, பெ. (n.) 1. *அவ்விடம்*; that place. 'அங்குத்தை வார்த்தையை இங்கே சொல்லி' (ஈடு). 2. *தேவீர், பெரும்பாலும் சிவ மடங்களில் வழங்குவதும் 'தாங்கள்' என்னுஞ் சொல்லினும் உயர்வு மிக்கதுமான ஒரு முன் னிலைச்சொல்*; 'your worthiness', 'your holiness' a term of highest respect, used in the second person singular chiefly in Šaiva *mutts.*

*அங்குற்றி* பார்க்க; see *aṅguṟṟi.*

**அங்குமிங்கும்** *aṅgum-iṅgum*, வி.எ. (adv.) *அவ் விடத்தும் இவ்விடத்தும்*; here and there. அங்கு மிங்கும் திரிகிறான் (உ.வ.).

*[அங்கும் + இங்கும்.]*

**அங்குமிங்கும்பாடி** *aṅgum-iṅgum-pāḍi*, பெ. (n.) 1. *ஒரு கட்சியை வெளிப்படையாகவும் மற் றொரு கட்சியை மறைவாகவும் சேர்ந்தவன்* (வின்.); one who is an overt member of one party while being a secret member of another (W.). 2. *மாறுபட்ட இருவேறு கட்சிகளைச் சேர்ந்தவனாக நடிப்பவன் அல்லது ஏமாற்று பவன்*; double crosser, double-dealer. 3. *நம்பத் தகாதவன்*; unreliable person.

*[அங்கும் + இங்கும் + பாடி.]*

**அங்குரம்** *aṅguram*, பெ. (n.) குப்பைமேனி (வின்.); Indian acalypha.

**அங்குள்** *aṅguḷ*, பெ. (n.) *குறட்டைப்பழம், சவுரிப்பழம்* (வை.மூ.); bitter snake-gourd.

**அங்குற்றி** *aṅguṟṟi*, பெ. (n.) *திருமடத் தம்பி ரான்கள் போலும் உயர்ந்தோரை நோக்கி வழங்கும் முன்னிலை உயர்வுச் சொல்*; a term of highest respect, meaning 'your worthiness' or 'your holiness', used in addressing religious dignitaries like heads of *mutts.*

*[அங்கு + உறு + இ – அங்குற்றி. அங்கு + உறு + ஐ – அங்குற்றை.]*

**மறுவ.** அங்குத்தி, அங்கத்தி, அங்குற்றை, அங்குத்தை.

அவ்விடத்திருந்தாய் (வினையாலணையும் பெயர்) என்பது சொற்பொருள்; கண்ணியம் மிக்க அல்லது தெய்வத்தன்மையுள்ள தாங்கள் என்பது கருத்துப் பொருள்.

'இ', 'ஐ' முன்னிலை யொருமை யீறுகள்.

றகர வடிவுச் சொற்கள் திருந்தினவும், தகர வடிவுச் சொற்கள் அவற்றின் திரிபுகளும் ஆகும்.

நீர், நீங்கள், தாங்கள், அங்குற்றி (அங் குற்றை) என்பன, முறையே ஒன்றினொன்று உயர்ந்த முன்னிலைப் பெயர்கள்.

**அங்குற்றை** *aṅguṟṟai*, பெ. (n.) *அங்குற்றி* பார்க்க; see *aṅguṟṟi.*

**அங்கூதியிங்கூதி** *aṅgūdi-y-iṅgūdi*, பெ. (n.) *கோட்சொல்லி*; tale-bearer, back-biter. 'அங்கூதி இங்கூதி அடுப்பூதி' (பழ.).

*[அங்கு + ஊதி + இங்கு + ஊதி.]*

**அங்கே** *aṅgē*, வி.எ. (adv.) *அவ்விடத்தில்*; there. 'அங்கே கண்டான் இங்கே செய்கிறான்' (பழ.). 'அங்கேண்டி மகளே கஞ்சிக்கு அழுகிறாய், இங்கே வாடி காற்றாய்ப் பறக்கலாம்' (பழ.).

*[அங்கு + ஏ.]*

**அங்கேக்கு** *aṅgēkku*, வி.எ. (adv.) *அவ்விடத் திற்கு* (ஆம்); thither (Ām).

**அங்கேயிங்கே** *aṅgē-y-iṅgē*, வி.எ. (adv.) 1. *அந்தப் பக்கம் அல்லது இந்தப் பக்கம்*; this side or that side. அங்கேயிங்கே பார்க்கக் கூடாது (உ.வ.). 2. *அங்குமிங்கும்*; here and there. அங்கே யிங்கே போகக் கூடாது (உ.வ.).

*[அங்கே + இங்கே.]*

**அங்கை** *aṅgai*, பெ. (n.) *உள்ளங்கை*; palm of hand. "அக்கேபோ லங்கை யொழிய விரலமுகி" (நாலடி. 123).

*[அகம் + கை – அங்கை (மருஉப் புணர்ச்சி).]*

**அங்கையில் வட்டா-தல்** *aṅgaiyil-vaṭṭā-*, 6 செ.கு.வி. (v.i.) *அடைதற்கு மிக எளிதாக அண்மையிலிருத்தல்*; to be at hand; to be within one's reach. "அங்கையில் வட்டா மிவளெனக் கருதுகின் றாயே" (திவ். பெரிய தி. 10.9 : 3).

**அங்கொன்றிங்கொன்றாக** *angonr(u)-ingonrāga*, வி.எ. (adv.) *நீண்ட இடையிட்டு*; sparsely, at distant intervals. அங்கொன்றிங்கொன்றாக நட்டிருக்கின்றான் (உ.வ.).

*[அங்கு + ஒன்று + இங்கு + ஒன்று + ஆக.]*

**அங்கோடிங்கோடு** *angōḍ(u)-ingōḍu*, வி.எ. (adv.) *அங்குமிங்கும்* (ஈடு, *1.4 : 9*); here and there.

*[அங்கோடு + இங்கோடு.]*

**அங்ஙன்**[1] *annan*, வி.எ. (adv.) *அங்கனம்*[1] பார்க்க; see *anganam*[1].

**அங்ஙன்**[2] *annan*, வி.எ. (adv.) *அவ்விடம்*; there. "நம்மொடு மங்ஙன் குலாவினான்" (திருக் காளத். பு. *16 : 16*).

*[அங்ஙனம் → அங்ஙன்.]*

**அங்ஙனம்** *annanam*, வி.எ. (adv.) *1. அவ்விடம்*; there, in that place. *2. அவ்வகை, அப்படி*; in that manner.

*[அங்கனம் → அங்ஙனம்.]*

**அங்ஙனே** *annanē*, வி.எ. (adv.) *1. அவ்விடம்*; there, in that place. "அன்பருக் கங்ஙனே யமிர்தசஞ் சீவிபோல் வந்து" (தாயு. சுக. 4). *2. அவ்வகை, அப்படி*; in that manner. "அங்ஙனே வடமொழியில் வசனங்கள் சிறிது புகல்வேன்" (தாயு. சித்தர். 10).

*[அங்ஙன் + ஏ.]*

**அங்ஙனேயிங்ஙனே** *annanē-y-innanē*, வி.எ. (adv.) *அங்கேயிங்கே*; here and there.

**அஙினே** *aninē*, வி.எ. (adv.) *அங்கே*; there. அஙினே போய்ப் பார் (இ.வ.).

**அஙினேயிஙினே** *aninē-y-ininē*, வி.எ. (adv.) *அங்கேயிங்கே*; here and there. அஙினே யிஙினே கிடக்கிறதை யெல்லாம் பொறுக்கு (இ.வ.).

**அச்சக்கொடை** *acca-k-koḍai*, பெ. (n.) *அச்சத் தாற் கொடுக்குங் கொடை* (சுக்கிர நீதி, 145); gift made out of fear of something or somebody.

*[அச்சம் + கொடை.]*

**அச்சகம்**[1] *accagam*, பெ. (n.) *1. நீர்முள்ளி* (மலை.); species of Hygrophila (Lex.); a thorny plant, nail-dye—*Barleria longifolia* alias *Suellia longifolia* (சா.அக.). *2. ஈரவுள்ளி*; onion, *Allium leepa*.

**அச்சகம்**[2] *accagam*, பெ. (n.) *அச்சடிக்கும் இடம்*; printing press.

*[அச்சு + அகம்.]*

**அச்சங்கரணை** *accangaraṇai*, பெ. (n.) (மருத்.) *முட்செடி வகை*; (Medl.) a kind of thorny plant. *அச்சாணிக்கொடி* பார்க்க; see *accāṇi-k-koḍi*.

**அச்சங்கொடி** *accangoḍi*, பெ. (n.) *ஒருவகைக் கொடி*; a kind of creeping plant, climbing Indian linden, *Grewia heterotricha* (சா.அக.).

**அச்சச்சுவை** *acca-c-cuvai*, பெ. (n.) *அகச்சுவை எட்டனுள் ஒன்றான அச்சம்*; sentiment of fear or terror.

"அணங்கே விலங்கே கள்வர்தம்
இறையெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே"
(தொல். பொருள். மெய்ப். 8).

*[அச்சம் + சுவை.]*

**அச்சடல செயநீர்** *accaḍala-šeya-nir*, பெ. (n.) *வேகாதுப்பு செயநீர், மாந்த உடலினின்று சித்தர்கள் மட்டுமே அறிந்த ஒரு கமுக்க முறை யில் செய்யப்பட்ட ஓர் அனைத்துக் கரைப்பான் நீர்மம்*; a liquid preparation from the human body made by a secret process known only to Siddhās. It is a universal solvent (சா.அக.).

**அச்சடி** *accaḍi*, பெ. (n.) *அச்சடிச்சீலை* பார்க்க; see *accaḍi-c-cilai*. "நினைத்தால் எடுப்பார் கள் நெருஞ்சிப்பூ அச்சடியை" (நா.பா.).

*[அச்சு + அடி.]*

**அச்சடி-த்தல்** *accaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. உருக்கெழுத்தைப் பதித்தல்*; to print, as a book. *2. முத்திரையைப் பதித்தல்*; to stamp, impress pattern.

ம. அச்சடி

*[அச்சு + அடி.]*

**அச்சடிச்சீலை** *accaḍi-c-cilai*, பெ. (n.) *சித்திர வண்ணம் அல்லது ஓவிய வுருவம் பதிக்கப்பட்ட ஆடை*; chintz.

ம. அச்சன் சேல

*[அச்சு + அடி + சீலை.]*

**அச்சடிச்சேலை** *accaḍi-c-cēlai*, பெ. (n.) *அச்சடிச்சீலை* பார்க்க; see *accaḍi-c-cilai*.

*[அச்சு + அடி + சேலை.]*

**அச்சடியன்** *accaḍiyan*, பெ. (n.) அச்சடிச்சீலை (செ.அக.). — சாயப்புடைவை வகை (யாழ். அக.); a kind of chintz for saree.

[அச்சு + அடி + அன்.]

**அச்சடியோலை** *accaḍi-y-ōlai*, பெ. (n.) முத்திரையிடப்பட்ட ஓலை; stamped *ōlai* (palm leaf prepared for writting).

ம. அச்சடியோல

[அச்சு + அடி + ஓலை.]

**அச்சடுக்கி** *acc(u)-aḍukki*, பெ. (n.) அச்சுக்கோப்பாளன்; compositor.

[அச்சு + அடுக்கு + இ (ஒருமையீறு).]

**அச்சடுக்கு-தல்** *acc(u)-aḍukku-*, 5 செ.கு.வி. (v.i.) உருக்கெழுத்தைச் சொல்லாகக் கோத்தல்; to compose, set up type to form words.

[அச்சு + அடுக்கு.]

**அச்சடை** *accaḍai*, பெ. (n.) கீழ்காய்நெல்லி; a small medicinal plant, *Phyllanthus niruri.* ''மிரியல் வழுதுணை மூலமா லூர மச்சடை'' (தைலவ. தைல. 4).

**அச்சடையாளம்** *acc(u)-aḍaiyāḷam*, பெ. (n.) 1. அடிமை யென்பதைக் காட்டுஞ் சூட்டுக் குறி (கிறித்.வ.); marks branded on the body of a slave. 2. முத்திரை யச்சுருவம்; stamped impression. 3. உறுப்பொப்புமை; resemblance, as in bodily features.

[அச்சு + அடையாளம்.]

**அச்சத்தி** *accatti*, பெ. (n.) கத்தரி (மூ.அ.); brinjal.

**அச்சத்திரி** *accattiri*, பெ. (n.) கத்தரி (சித்.அக.); brinjal.

**அச்சதறி** *acca-taṟi*, பெ. (n.) ஒரு பழைய வரி (S.I.I. i, 91); an ancient tax.

**அச்சம்**[1] *accam*, பெ. (n.) அகத்தி (திவா.); West-Indian pea-tree, *Sesbania grandiflora.*

**அச்சம்**[2] *accam*, பெ. (n.) சன்னம்; thinness. இந்தத் தகடு அச்சமாயிருக்கிறது (உ.வ.).

**அச்சம்**[3] *accam*, பெ. (n.) வெரு (பயம்); fear, dread, terror. 'அச்சம் அற்றவன் அம்பலம் ஏறுவான்' (பழ.), 'அச்சம் ஆண்மை குலைக்கும்' (பழ.).

ம. அச்சம்; க. அஞ்சிகெ.

**அச்சம்பேரளம்** *accam-pēraḷam*, பெ. (n.) சிகப்பு அடுக்கலரி அல்லது இரட்டைச் சிகப்பலரி; South sea rose, *Nerium odorum* (சா.அக.).

**அச்சமம்** *accamam*, பெ. (n.) முயிற்றுப்புல் (மலை.); species of grass.

**அச்சமரம்** *acca-maram*, பெ. (n.) நான்முகப் புல்லுருவி; a plant-parasite, *Saccharum spontaneum* (சா.அக.).

**அச்சமாடல்** *accam-āḍal*, பெ. (n.) பிறர்க்கு அச்சமுண்டாகப் பேசுதல்; talk meant for frightening others, intimidating talk. ''அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்'' (நன். 31).

[அச்சம் + ஆடல். ஆடல்=பேசுதல்.]

**அச்சமாமுகம்** *accamāmugam*, பெ. (n.) புல்லுருவி; honeysuckle, mistletoe, *Loranthus elasticus* (சா.அக.).

**அச்சமாயிதம்** *accamāyidam*, பெ. (n.) செங் கழற்சிக் கொடி; a red species of creeper, *Molucca bean, Caesalpinia bonducella* (சா.அக.).

**அச்சயில்கரணை** *accayil-karaṇai*, பெ. (n.) ஒரு முட்கொடி; axil-spined jack. அச்சாணிக்கொடி பார்க்க; see *accāṇi-k-kōḍi.*

**அச்சரக்காய்ச்சல்** *accara-k-kāyccal*, பெ. (n.) அச்சர நோயுடன் வருங் காய்ச்சல் (வின்.); fever accompanying thrush, *Febris aphthosa.*

[அச்சரம் + காய்ச்சல்.]

**அச்சரம்** *accaram*, பெ. (n.) பெரும்பான்மை பிள்ளைப் பருவத்திலும் சிறுபான்மை இளவட்டப் பருவத்திலும் வாயில் அல்லது நாவில் சிறுசிறு கொப்புளங்களாக எழும் நோய்; thrush, aphthae, *Parasitic stomatitis.*

ம. அக்கரம்; க., து. அக்ர; தெ. அட்சரமு.

[அக்கரம் → அச்சரம்.]

**அச்சரிபுச்சரி** *accari-puccari*, பெ. (n.) 1. தினவெடுக்கை; itching sensation. 2. தொந்தரவு; annoyance, vexation, worry. அச்சரிபுச்சரியாயிருக்கிறது (உ.வ.).

**அச்சல்** *accal*, பெ. (n.) ஒரு பாட்டம் மழை; a shower of rain.

[ஒருகா. அஞ்சல் → அச்சல்.]

**அச்சலச்சலாய்** *accal-accal-āy*, வி.எ. (adv.) பாட்டம் பாட்டமாய்; shower after shower. அச்சலச்சலாய் மழைபெய்கிறது (உ.வ.).

நளி (கார்த்திகை) மாத மழை அச்சலச் சலாய்ப் பெய்யும் (உ.வ.).

*[அச்சல்+அச்சல்+ஆய்.]*

**அச்சலத்தி** *accalatti,* பெ. (n.) **சலிப்பு**; tediousness, weariness. ஒரே பாட்டைத் திரும்பத் திரும்ப கேட்கிறது எனக்கு அச்சலத்தியா யிருக்கிறது (உ.வ.).

**அச்சலத்தி புச்சலத்தி** *accalatti-puccalatti,* பெ. (n.) **சலிப்புணர்ச்சியின் மிகுதியைக் குறிக்கும் அச்சலத்தி என்னுஞ் சொல்லின் எதுகை யிரட்டிப்பு**; a duplication of the second syllable of *accalatti* expressing intensity of the feeling of tediousness or disgust.

ஒ.நோ: அச்சரிபுச்சரி

**அச்சவபிநயம்** *acca-v-abinayam,* பெ. (n.) **ஒருவரின் அச்சவுணர்ச்சியைக் காட்டும் மெய்ப்பாடுகளைத் தோற்றுவிக்கும் உடம்பு அல்லது உறுப்புச் செய்கையான நளிநயம்**; artistic gesticulation or theatrical action which expresses the sentiment of fear.

> ''அச்ச வவிநயம் ஆயுங் காலை
> யொடுங்கிய வுடம்பு நடுங்கிய நிலையும்
> அலங்கிய கண்ணுங் கலங்கிய வுளனுங்
> கரந்துவர லுடைமையுங் கையெதிர் மறுத்தலும்
> பரந்த நோக்கமு மிசைபண் பினவே''
> (சிலப். 3 : 13, அடியார்க். உரை).

*[அச்சம் + அபிநயம்.* **Skt.** abhi-naya > *த. அவிநயம்.]*

அவிநயத்தைத் தமிழில் நளிநயம் என்னலாம்.

**அச்சவுபதை** *acca-v-upadai,* பெ. (n.) **அரசன் தான் தெரிந்தெடுத்த ஒருவரை அமைச்சராகவோ வேறு உயரதிகாரியாகவோ அமர்த்து முன், அவர்க்கு உயிரச்ச முண்டுபண்ணும் ஒரு சூழ்நிலையைத் தோற்றுவித்து, அதன் வாயிலாக அவரின் மறத்தையும் உண்மைத் திறத்தையும் தேர்தல்**; King's clandestine test of a candidate's ability and honesty by exposing him to situations which call for display of courage amidst fear of death before appointing him minister or as any other high authority of State.

''அச்சவுபதையாவது, (அரசன்) ஒரு நிமித்தத்தின்மேலிட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவனில்லின்கண் அழைப்பித்து, 'இவர் அறைபோவான் எண்ணற்குக் குழீஇயினா ரென்று தான் காவல் செய்து, ஒருவனால் இவ் வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம் முற்படச் செய்து நமக்கினிய அரசனொருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கு மியைந்தது; நின் கருத்தென்னை?' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். (இதில்) திரிபிலனாயவழி எதிர்காலத்துந் திரிபிலனெனக் கருத்தளவையால் தெளியப்படுமென்பதாம்'' (குறள், 501, பரிமே. உரை).

அரசன், அறம் பொருள் இன்பம் உயிரச்சம் என்னும் நான்கு தெளிவகைகளால் அமைச்சனையும் ஏனை யுயரதிகாரிகளையும் தேர்ந்தெடுப்பது, அவரை யமர்த்து முன்பேயன்றி அமர்த்தின பின்பன்று.

திருவள்ளுவர், வலியறிதல் காலமறிதல் இடனறிதல் என்பவற்றிற்குப் பின்னும், தெரிந்து வினையாடல் என்பதற்கு முன்னும், தெரிந்துதெளிதல் என்னும் அதிகாரத்தை வைத்திருத்தலாலும்;

> ''தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
> தீரா இடும்பை தரும்'' (508),
> ''தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
> தேறுக தேறும் பொருள்'' (509),
> ''தேரான் தெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவும்
> தீரா இடும்பை தரும்'' (510)

என்று அவரே கூறுதலாலும்; எந்தப் பதவிக்கும் ஒருவரை அமர்த்துமுன் னன்றிப் பின் ஆராய்ந்து திறந்தெரிவது இயற்கை யன்மையாலும்; அரசியல் முறை முற்றத் துறைபோய திருவள்ளுவர் மறந்தும் அங்ஙனம் கூறாராதலாலும்;

'ஓரமைச்சனால் ஏனையோரை அவனில்லின் கண் அழைப்பித்து ........ சொல்லுவித்தல்' என்று பரிமேலழகரும், 'Test of Minister's or Officer's honesty' என்று ஓர் அகரமுதலியும் உரைத்திருப்பது பொருந்தாது.

இனி, நால்வகைத் தேர்திறம்பற்றிய ''அறம்பொரு ளின்பம்'' என்னும் குறள், வடநூற் பொருண்மையை உட்கொண்டு திருவள்ளுவர் ஓதியதாகப் பரிமேலழகர் குறித்திருப்பதும் தவறென்பது 'நாற்பொருள்' என்னும் உருப்படியில் விளக்கப்பெறும்.

அச்சவுபதை (இ.பி.). த. அச்சம் + **Skt.** upa-dhā = தேர்திறம் அல்லது தெளிவகை.

**அச்சழிவு** *acc(u)-aḻivu*, பெ. (n.) **முத்திரை தேய்ந்த பணம்** (பணவிடு. 142); defaced coin, coin worn-out by use.

[அச்சு + அழிவு.]

**அச்சறுக்கை** *accaṟukkai*, பெ. (n.) **அச்சத்தை நீக்குதல்**; removal of fear.

[அச்சம் + அறுக்கை.]

**அச்சறை** *acc(u)-aṟai*, பெ. (n.) **அச்செழுத்துகளைப் போட்டுவைக்கும் அறைகளையுடைய தட்டம்**; case (printing).

[அச்சு + அறை.]

**அச்சறைத்தட்டம்** *accaṟai-t-taṭṭam*, பெ. (n.) **அச்சறை** பார்க்க; see *acc(u)-aṟai*.

[அச்சு + அறை + தட்டம்.]

**அச்சறைத்தட்டு** *accaṟai-t-taṭṭu*, பெ. (n.) **அச்சறை** பார்க்க; see *acc(u)-aṟai*.

[அச்சு + அறை + தட்டு.]

**அச்சறைதாங்கி** *accaṟai-tāṅgi*, பெ. (n.) **அச்சறைத் தட்டுகளைச் செருகிவைக்கும் நிலைச்சட்டம்**; stand (printing). 'அச்சுத் தட்டுத் தாங்கி' என்றும் குறிக்கப்பெறும்.

[அச்சு + அறை + தாங்கி.]

**அச்சன்**[1] *accaṉ*, பெ. (n.) 1. **தந்தை**; father. 'குடநாட்டார் தந்தையை அச்சனென்றும்... வழங்குப' (தொல். சொல். எச். 4, நச். உரை). 2. கடவுள்; God. ''அச்ச னின்றனைத் தும் விளைத் தாலென'' (தணிகைப்பு. பிரமன் சிருட்டி. 23).

**ம.** அச்சன்; **க.** அச்ச, அச்ச; **து., குட.** அச்செ; **கோத.** அச்; **குரு.** அச்சோச்; **பிராகி.** அச்ச.

[**த.** அத்தன் (தந்தை) → அச்சன். **ஒ.நோ:** பித்தன் → பிச்சன்.]

'அச்சன்' என்னும் தூய தென்சொற்கு, 'ஆர்ய' என்னும் வடசொல்லொடு எவ்வகைத் தொடர்புமில்லை. துளுவச் சொல்லின் திரிபே பிராகிருதச் சொல்லும்.

கடவுள் எல்லாவுயிர்கட்கும் தந்தை போலுதலால் அச்சன் எனப்பட்டார்.

**அச்சன்**[2] *accaṉ*, பெ. (n.) **அழிஞ்சில்**; ancola fruit plant, *Alangium lamarckii*.

**அச்சன்முள்(ளு)** *accaṉ-muḷ(ḷu)*, பெ. (n.) **அச்சாணிக்கொடியில் காணப்படும் முள்(ளு)**; thorn of the plant *accāṇi-k-koḍi*.

**அச்சனம்**[1] *accaṉam*, பெ. (n.) **நெய்வார் கருவி வகை**; a weaver's implement. 'நூல் புடைவை யாய்த் திரிதற்கு அச்சனம் முதலாயின சாதனம்' (நீலகேசி, 421, உரை).

**அச்சனம்**[2] *accaṉam*, பெ. (n.) **வெள்ளைப் பூண்டு** (பரி.அக.); garlic.

**அச்சாணி** *acc(u)-āṇi*, பெ. (n.) 1. **கடையாணி**; linch pin. ''தேர்க் கச்சாணி யன்னார்'' (குறள், 667). 'அச்சாணி இல்லாத் தேர் முச்சாணும் ஓடாது' (பழ.). 2. **நிலவேம்பு** (சித்.அக.); French chiretta. 3. **கருப்பு வேம்பு** (சா.அக.); black neem, *Garuga pinnata*. 4. **உத்தாமணி**; hedge cotton, *Daemia extensa*.

**ம.** அச்சாணி (கடையாணி)

[அச்சு + ஆணி.]

**அச்சாணிக்கொடி** *accāṇi-k-koḍi*, பெ. (n.) ஒரு **முட்கொடி, அச்சயில்கரணை**; also *accayil karaṇai*, axle-spined jack, *Cudrania javanensis*.

**மறுவ.** அச்சங்கரணை, அச்சயில்கரணை, அச்சாணிமுள்.

**அச்சாணிமுள்(ளு)** *accāṇi-muḷ(ḷu)*, பெ. (n.) **அச்சாணிக்கொடி** பார்க்க; see *accāṇi-k-koḍi*.

**அச்சாணிமூலி** *accāṇi-mūli*, பெ. (n.) **வேலிப் பருத்தி** (மலை.); a hedge-twiner.

[அச்சாணி + மூலி.]

**அச்சாப்பொங்கா** *accā-p-poṅgā*, பெ. (n.) **அச்சோப் பெண்காள்** பார்க்க; see *accō-p-peṇgāḷ*.

**அச்சான்** *accāṉ*, பெ. (n.) **அச்சிலுண்டாகும் உருவம்**; cast taken from a mould.

[அச்சு + ஆன் (ஒன்றன்பாலீறு).]

**அச்சான்கொடி** *accāṉ-koḍi*, பெ. (n.) **அச்சங்கொடி** பார்க்க; see *accaṅgoḍi*.

**அச்சி**[1] *acci*, பெ. (n.) 1. **தாய்**; mother. 2. **அக்கை** (பள்.); elder sister. 3. **நாயர்குலப் பெண்**; a Nāyar woman. —, இடை. (part.) **ஒரு பெண்பாலீறு**; a fem. suff.

**ம., க.** அச்சி

[அச்சன் (ஆ.பா.) – அச்சி (பெ.பா.). எ-டு : மருத்துவச்சி, வேட்டுவச்சி.]

**அச்சி**[2] *acci*, பெ. (n.) **அகத்தி** (இராசவைத்.). West - Indian pea-tree. 2. **பாலையுடைச்சி**; tender wild jack, *Pajanelia sheedii*. 3. **பூதப்பூ** (பூதபுட்பம்); Indian trumpet flower, *Oroxylum indicum* (சா.அக.).

**அச்சி**[3] *acci,* பெ. (n.) *சுமதுரைத் தீவின் வட மேலை நாடு;* Achen or Acheen, the N.W. division of Sumatra (சா.அக.). 'அச்சியிலே போனாலும் அகப்பை அரைக்காசு' (பழ.).—(தண்டலை. *99*). 'அச்சியிலும் பிச்சைக்காரன் உண்டு' (பழ.). 'அச்சி என்றால் உச்சி குளிருமா, அழுவணம் என்றால் கை சிவக்குமா?' (பழ.).

**தெ.** அச்சி

**அச்சிக்கிச்சிலி** *acci-k-kiccili,* பெ. (n.) *அச்சி நாட்டுக் கிச்சிலிப் பழம்;* a kind of orange grown in Acheen (N.W. of Sumatra) (சா.அக.).

*[அச்சி + கிச்சிலி.]*

**அச்சிக்குதிரை** *acci-k-kudirai,* பெ. (n.) *அச்சி நாட்டு மட்டக்குதிரை* (இராட்.); Achin pony (R.).

*[அச்சி + குதிரை.]*

**அச்சிடு-தல்** *acc(u)-iḍu-,* 7 செ.குன்றாவி. (v.t.) *பொத்தகம் முதலியவற்றிற்கு உருக்கெழுத்துப் பதித்தல்;* to print, as a book.

*[அச்சு + இடு.]*

**அச்சித்தினை** *acci-t-tiṉai,* பெ. (n.) *அச்சி நாட்டினின்று கொண்டுவந்து விளைக்கப்பட்ட தினைவகை;* variety of Italian millet, *Setaria italica,* as from Achin. *2. ஒருவகைப் புல்;* a kind of grass.

*[அச்சி + தினை.]*

**அச்சிநடை** *acci-naḍai,* பெ. (n.) *அச்சிக் குதிரையின் நடைவேகம்;* amble of the Achin pony.

**அச்சிநறுவிலி** *acci-naṟuvili,* பெ. (n.) *சிவப்புப் பூப்பூக்கும் ஒருவகை மரம்.* அச்சிநாட்டினின்று கொண்டுவந்து மைசூரில் பயிராக்கப்பட்டது. அதன் பட்டை நாரினால் கயிறு திரிக்கப்படும்; scarlet long-flowered sebasten, *Cordia sebastena,* a tree peculiar to Achin, brought and naturalised in Mysore. Ropes are made from the fibre of its bark.

**அச்சிப்பாக்கு** *acci-p-pākku,* பெ. (n.) *அச்சிநாட்டினின்று இறக்குமதியான பாக்கு;* arecanut imported from Achin.

*[அச்சி + பாக்கு.]*

**அச்சிமட்டம்** *acci-maṭṭam,* பெ. (n.) *அச்சிநாட்டு மட்டக்குதிரை;* Achin pony.

**ம.** அச்சிமட்டம்

**அச்சியர்** *acciyar,* பெ. (n.) *சமணத் துறவினியர்;* Jain women ascetics. "அங்கபூ வாதி நூலு ளச்சியர்க் குரிய வோதி" (மேருமந். *619*).

**அச்சியில்கரணை** *acciyil-karaṇai,* பெ. (n.) *அச்சாணிக்கொடி* பார்க்க; see *accāṇi-k-koḍi.*

**அச்சிரம்** *acciram,* பெ. (n.) *முன்பனிக் காலம்;* early dewy season. "அரிதில் தோன்றும் அச்சிரக் காலையும்" (சிலப். *14 : 105*).

[**த.** *அல் = இரவு.* **Skt.** sisira = *பனிக்காலம். அல் + சிசிரம் — அற்சிசிரம் → அச்சிரம் = முன்னிரவிற் பனி பெய்யுங் காலம்.]*

*அல் என்பது, அல்லங்காடி என்பதிற் போன்று இங்கு மாலையை அல்லது முன்னிரவைக் குறித்தது.*

*அச்சிரம் என்பது தென்சொல்லும் வடசொல்லும் கலந்த இருபிறப்பி* (hybrid).]

**அச்சிருங்கி** *accirungi,* பெ. (n.) *ஆடுதின்னாப் பாலை:* worm-killer, *Aristolochia bracteata.*

**அச்சிவெல்லம்** *acci-vellam,* பெ. (n.) *அச்சிநாட்டினின்று முற்காலத்தில் இறக்குமதியான ஒருவகை வெல்லம்;* a kind of jaggery formerly imported from Achin.

**அச்சிறுபாக்கம்** *acc(u)-iṟu-pākkam,* பெ. (n.) *ஒரு சிவநகர்;* a Śiva shrine. "அச்சிறு பாக்கத் தணைந்தார்" (பெரியபு. திருஞா. *1132*).

*[அச்சு + இறு + பாக்கம்.]*

**அச்சினி** *acciṉi,* பெ. (n.) *எட்டாம் மாதம்* (சித்.அக); eighth month.

**அச்சீடு** *acciḍu,* பெ. (n.) *அச்சிடுகை;* printing.

*[அச்சு+இடு. இடு→ஈடு.]*

**அச்சு**[1] *accu,* பெ. (n.) *1. கட்டளைக் கருவி;* mould. அச்சிலே வார்த்த உருவம் (உ.வ.). *2. கம்பியச்சு;* wire-mould. "கம்பி வாங்கு மச்சென லாயதால்" (இரகு. திக்கு. *189*). *3. உருக்கெழுத்து;* printing type. *4. குத்தும் முத்திரை;* stamp. *5. சரியொப்பு;* exact likeness. "கடைமாந்த ரச்சாய்" (சேதுபு. வேதா. *16*.). *6. அடையாளம்;* sign, mark, print, stamp. "பவளத் திருமார்பிலச்சிட்டவர்க்கு" (ஏகாம். உலா, *211*). *7. அச்சுக்கட்டு;* weaver's reed instrument for pressing down the threads of the woof. *8. பண்ணை;* comb-like frame in a loom through which the warp threads are passed and by which they are pressed or battened together.

**ம., க., தெ.** அச்சு; **து.** அச்சி.

[அட்டுதல் = வார்த்தல், உருக்கி வார்த்தல். அட்டு → அச்சு = வார்ப்புக் கருவி. அச்சிலே வார்த்த உருவங்களெல்லாம் வார்ப்பு அல்லது வார்ப்படம் என்று சொல்லப்படுவதைநோக்குக.]

**அச்சு**[2] *accu*, பெ. (n.) 1. சக்கரங் கோத்த மரம்; axle. ''பீலிபெய் சாகாடும் அச்சிறும்'' (குறள், 475). 'அச்சில்லாத் தேர் ஓடவும் அகமுடையான் இல்லாதவள் பிள்ளை பெறவும் கூடுமா?' (பழ.). 2. அச்சுருவாணி (பிங்.); axle-bolt. 3. திரிகை யச்சு; central pin of a mill-stone. 4. தாங்கல், நிலைக்களம்; support, basis. ''செந்நாப் போதார் புனற்கூடற் கச்சு'' (திருவள்ளுவமா. 21). 5. வலிமை; strength. ''வேந்தடர்த்த வச்சு'' (சீவக. 2777). 6. மூல வுருவம்; original form. ''சுரர்களாய்த் துய்ப்ப ரென்னிற் சொன்னவச் சழியும்'' (சி.சி. 2 : 42). 7. உடம்பு; body. ''அச்செடுத்திடு முயிர்கள்'' (கந்தபு. மகேந். சூரன்அமைச். 137.). 8. செய் வரம்பு, அச்சுக் கட்டின நிலம்; ridge in a field.

ம., க., தெ., து. அச்சு; **Skt.** akṣa.

**OE.** aex, eax; **ME.** ax, axel; **ON.** oxul; **E.** axle.

**அச்சு**[3] *accu*, பெ. (n.) ஊழி (வின்.); epoch, yuga (W.).

**அச்சுக்கட்டி** *accu-k-kaṭṭi*, பெ. (n.) 1. ஆடையிற் சாய அச்சுவேலை செய்வோன் (சிலப். 5 : 17, அரும்.); one who folds and ties cloth in dyeing, where by any desired figure is printed. 2. நாட்டு அறுவை மருத்துவன் (இ.வ.); Indian country surgeon (Loc.). 3. நெசவுத் தொழிலுக்குரிய அச்சுக்கட்டு செய்பவன்; weaver's reed maker.

[அச்சு + கட்டி.]

**அச்சுக்கட்டு-தல்** *accu-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ஓவியம் வரையுமுன் ஈனை வரைந்து கொள்ளுதல்; to draw the out line of a picture. 2. நன்செய் புன்செய் வரம்பு கட்டுதல்; to form a ridge around a field.

[அச்சு + கட்டு.]

**அச்சுக்கட்டு** *accu-k-kaṭṭu*, பெ. (n.) 1. அச்சடித் தற்குச் சேலையை மடிக்கை; folding of cloth in dyeing whereby the desired figure is printed. 2. நெய்வார் கருவிவகை; weaver's reed. 3. வரம்பு கட்டிய செய் (இரா.பி.); field with ridges, lands divided into beds to admit and retain water for the cultivation of paddy (R.F.).

க., தெ. அச்சுக்கட்டு

[அச்சு + கட்டு.]

**அச்சுக்கட்டை** *accu-k-kaṭṭai*, பெ. (n.) அச்சு மரம் பார்க்க; see *accu-maram*.

[அச்சு + கட்டை.]

**அச்சுக்கம்பி** *accu-k-kambi*, பெ. (n.) குண்டுக் குழாயில் (gun) மருந்திடிக்கும் இருப்புக் கருவி; iron ramrod.

[அச்சு + கம்பி.]

**அச்சுக்கம்பு** *accu-k-kambu*, பெ. (n.) குண்டுக் குழாயில் மருந்திடிக்கும் மரத் தடி; wooden ramrod.

ம. அச்சுக்கோல்

[அச்சு + கம்பு.]

**அச்சுக்கரு** *accu-k-karu*, பெ. (n.) வார்ப்படம் வார்க்கும் அச்சு; matrix.

[அச்சு + கரு.]

**அச்சுக்கலை** *accu-k-kalai*, பெ. (n.) அச்சுத் தொழிற் கலை; art of printing.

[அச்சு + கலை.]

**அச்சுக்கலைஞர்** *accu-k-kalaiñar*, பெ. (n.) அச்சுத்தொழிலில் வல்லுநர்; one skilled in the art of printing.

[அச்சு + கலைஞர்.]

**அச்சுக்கூடம்** *accu-k-kūḍam*, பெ. (n.) அச்சடிக்கும் சாலை, அச்சகம்; printing house.

ம. அச்சுக்கூடம்; க. அச்சுகூட; தெ. அச்சு கூடமு.

[அச்சு + கூடம்.]

**அச்சுக்கோ-த்தல்** *accu-k-kō-*, 4 செ.குன்றாவி. (v.t.) உருக்கெழுத்தைச் சொல்லாக அடுக்குதல்; to set up type to form words, compose.

[அச்சு + கோ.]

**அச்சுக்கோப்பாளன்** *accu-k-kōppāḷaṉ*, பெ. (n.) அச்சடுக்கி, கோப்பாளன்; compositor.

[அச்சு + கோப்பு + ஆளன்.]

**அச்சுக்கோப்புப் பொறி** *accu-k-kōppu-p-poṟi*, பெ. (n.) அச்செழுத்துகளைக் கோக்க உதவும் பொறி; type composing machine.

[அச்சு + கோப்பு + பொறி.]

**அச்சுத்தகடு** *accu-t-tagaḍu*, பெ. (n.) பாள அச்சுத் தகடு, நெகிழ்வற்ற உருச்சட்டம்; stereo plate.

[அச்சு + தகடு.]

**அச்சுத்தட்டுத்தாங்கி** *accu-t-taṭṭu-t-tāṅgi*, பெ. (n.) அச்சறைதாங்கி பார்க்க; see *accaṟai-tāṅgi*.

[அச்சு + தட்டு + தாங்கி.]

**அச்சுத்தடி** *accu-t-taḍi*, பெ. (n.) நெம்புதடி (புதுவை); lever in mechanics (Poṇḍ.).

[அச்சு + தடி.]

**அச்சுத்தாலி** *accu-t-tāli*, பெ. (n.) காசுமாலை (திவ். திருப்பா. 7, வியா.); necklace of gold coins or other stamped pieces.

[அச்சு + தாலி.]

**அச்சுத்திரட்டு-தல்** *accu-t-tiraṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) பழுதுற்ற வண்டியச்சினை உருப்படுத்து தல்; to repair a worn-out axle by welding with iron and turning on a lathe.

[அச்சு + திரட்டு.]

**அச்சுத்திருத்து-தல்** *accu-t-tiruttu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. நன்செய் நேர்த்தி செய்தல்; to arrange plots in a field in suitable order. 2. அச்சுத் தாள்களைத் திருத்துதல்; to correct the printed proofs.

[அச்சு + திருத்து.]

**அச்சுத்துணி** *accu-t-tuṇi*, பெ. (n.) அச்சிடப் பட்ட துணி; printed textile.

[அச்சு + துணி.]

**அச்சுத்துளையீடு** *accu-t-tuḷaiyīḍu*, பெ. (n.) அச்சுத்துளையிடுதல்; making holes with a punch.

[அச்சு + துளையீடு.]

**அச்சுப்படி** *accu-p-paḍi*, பெ. (n.) அச்சிட்டதன் ஒரு படி; printed copy.

[அச்சு + படி.]

**அச்சுப்படிமை** *accu-p-paḍimai*, பெ. (n.) அச்சிட உதவும் படக்கட்டை; printing block.

[அச்சு + படிமை.]

**அச்சுப்படிவம்** *accu-p-paḍivam*, பெ. (n.) அச்சிடப்பட்ட படிவம்; printed forms.

[அச்சு + படிவம்.]

**அச்சுப்பலகை** *accu-p-palagai*, பெ. (n.) நெசவுக் கருவிகளுள் ஒன்று (வின்.); weaver's bar (W.).

[அச்சு + பலகை.]

**அச்சுப்பிழை** *accu-p-piḻai*, பெ. (n.) அச்சில் நேர்ந்த பிழை; typographical mistake, printer's devil.

[அச்சு + பிழை.]

**அச்சுப்பூட்டியிழு-த்தல்** *accu-p-pūṭṭi-y-iḻu-*, 4 செ.கு.வி. (v.i.) தறியூடு நூலைச் செலுத்து தல் (வின்.); to pass the thread through the loom (W.).

[அச்சு + பூட்டி + இழு.]

**அச்சுப்பூட்டி விளையாடு-தல்** *accu-p-pūṭṭi-viḷai-yāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) பந்து, புளியங் கொட்டை முதலியன கொண்டு விளையாடுதல் (இராட்.); to play with balls, tamarind seeds, etc. (R.).

[அச்சு + பூட்டி + விளையாடு.]

**அச்சுப்பொறி** *accu-p-poṟi*, பெ. (n.) அச்சிடும் பொறி, அச்சு எந்திரம்; printing machine.

[அச்சு + பொறி.]

**அச்சுப்போடு-தல்** *accu-p-pōḍu-*, 19 செ.குன்றா வி. (v.t.) அச்சடித்தல்; to print.

[அச்சு + போடு.]

**அச்சுமட்டம்** *accu-maṭṭam*, பெ. (n.) அச்சி மட்டம் பார்க்க; see *acci-maṭṭam*. "கட்டுப் படாத தந்த அச்சுமட்டம்" (மது. வா. ஞா. கோ. 97).

**அச்சுமரம்** *accu-maram*, பெ. (n.) வண்டியில் உருள்கோத்த மரம்; axle-tree. 'அச்சுமரத்தின் மேலே......நெடுகக்கிடக்கின்ற பருமரங்களை' (பெரும்பாண். 48, நச்.உரை).

க. அச்சுமர

**அச்சுமூசை** *accu-mūšai*, பெ. (n.) அச்செழுத் தின் அச்சுரு; type mould.

**அச்சுமை** *accu-mai*, பெ. (n.) அச்சிட உதவும் மை; printing ink.

**அச்சுரு** *acc(u)-uru*, பெ. (n.) உரு அச்சு, கட்டளைச் சட்டம்; mould, matrix.

[அச்சு + உரு.]

**அச்சுருளி** *acc(u)-uruḷi*, பெ. (n.) அச்சுப்பொறி உருளை; cylinder used in printing machine.

[அச்சு + உருளி.]

**அச்சுலக்கை** *acc(u)-ulakkai*, பெ. (n.) **துலாவைத் தாங்குங் கட்டை**; axle of a well-sweep.

[அச்சு + உலக்கை.]

**அச்சுவரி** *accu-vari*, பெ. (n.) **பழைய வரிவகை** (I.M.P. Tn. 104); an ancient tax.

ம. அச்சு வரி

[அச்சு + வரி.]

**அச்சு வார்ப்படச்சாலை** *accu-vārppaḍa-c-cālai*, பெ. (n.) **அச்செழுத்துகளை வார்க்கும் வார்ப் படப் பட்டறை**; type foundry.

[அச்சு + வார்ப்படம் + சாலை.]

**அச்சுவார்ப்படம்** *accu-vārppaḍam*, பெ. (n.) **மாழையை (உலோகத்தை) உருக்கி அச் செழுத்துகளாக வார்த்தல்**; type founding.

[அச்சு + வார்ப்படம்.]

**அச்சுவிழுது** *accu-viḻudu*, பெ. (n.) **கைத்தறி நெசவிற் பயன்படும் ஒருவகை நூல், தலை நூல்**; a kind of thread used in handloom weaving.

**அச்சுறு-தல்** *accuṟu-*, 20 செ.கு.வி. (v.i.) **அச்ச மடைதல்**; to fear, dread. ''அச்சுறு கின்றதென் னாவ தாகுமால்'' (கந்தபு. யுத்த. தரும கோ. *19*).

[அச்சம் + உறு — அச்சுறு.]

**அச்சுறுக்கை** *accuṟukkai*, பெ. (n.) **அச்ச முண்டாக்குகை**; threat, intimidation.

[அச்சம் + உறுக்கை. உறுக்கை = உண் டாக்குதல்.]

இச் சொல் சில அகரமுதலிகளில் 'அச் சறுக்கை' என்று தவறாகக் குறிக்கப் பட்டுள்ளது.

**அச்சுறுகொழுந்தொடர்** *acc(u)-uṟu-koḻun-toḍar*, பெ. (n.) **மதயானை விசையாதபடி, மரங்களி விரும்பைத் தைத்த தொடரியை அதன் கழுத்தில் மாலைபோல் இட்டு மரத்திற் கட்டும் தடுப்பு**; iron chain put round the neck of a must elephant like a garland and fastened to a tree. ''அச்சுறு கொழுந்தொடர் யாப் பழித்து'' (சீவக. *1836*).

[அச்சு + உறு + கொழுந்தொடர்.]

**அச்சுறுத்து-தல்** *accuṟuttu-*, 2 பி.வி. (v. caus.) **அச்சமுண்டாக்குதல்**; to frighten, threaten, intimidate. ''அஞ்சியச் சுறுத்தலும்'' (தொல். பொருள். களு. *24*).

ம. அஞ்சுக; க., தெ. அஞ்சு.

[அங்குதல் = வளைதல். அங்கு → அஞ்சு. அஞ்சுதல் = வளைதல், வணங்குதல், வெருவு தல். ங்க → ஞ்ச.

ஒ.நோ: பொங்குதல் = செழித்தல். பொங்கு→ பொஞ்சு. பொஞ்சுதல் = செழித்தல்.

இங்கே → இஞ்சே (கீழை நெல்லை வட்டாரக் கொச்சை வழக்கு). cf. **E.** *bank*, galley-rower's bench; **OHG.** *bank*; **F.** *banc*; **OS.** *banc*; **OE.** *benc*; **E.** *bench*. nk-nch.]

வணங்கு என்னும் சொல்லின் அடிப்படைப் பொருள் வளை என்பதே. வணங்கத்தக்கவர் தேவராயினும் மக்களாயினும் அஞ்சத்தக்கவ ராகவே யிருப்பர்.

**அச்செழுத்தலகு** *acceḻutt(u)-alagu*, பெ. (n.) **அச்செழுத்துகளின் புள்ளி அளவு**. 1 புள்ளி 1/72 அல்லது 0.01383 விரலம்; unit of measurement for type bodies.

[அச்செழுத்து + அலகு.]

**அச்செழுத்து** *acc(u)-eḻuttu*, பெ. (n.) **அச்சடித்த எழுத்து**; printed letter or script.

[அச்சு + எழுத்து.]

**அச்சென** *accena*, வி.எ. (adv.) **விரைவாக**; quickly, swiftly. ''அச்செனத் தணந்தேகி'' (கந்தபு. மகேந். நகர்புகு. *97*).

**அச்சேறு-தல்** *acc(u)-ēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) **அச்சடிக்கப்படுதல்**; to be printed.

[அச்சு + ஏறு.]

**அச்சை** *accai*, பெ. (n.) **அச்சத்தால் வரும் நோய்**; a disease arising from fear (சா.அக.).

**அச்சொடுபுரி-தல்** *accoḍu-puri-*, 2 செ.குன்றாவி. (v.t.) **மூலவடிவாகச் செய்தல், சரியொப்பாகச் செய்தல்**; to make similar to the original.

**அச்சோ** *accō*, இடை. (int.) 1. **ஓர் இரக்கச் சொல்**; an exclamation of pity. ''அச்சோ எனப் பல் இமையோரை யீண்டு சிறைவைத்த பாவம்'' (கந்தபு. அவைபுகு. *43*). 2. **ஒரு வியப்புமொழி**; an exclamation of wonder. ''அச்சோ ஒருவ ரழகியவா'' (திவ்.பெரியதி. *9.2 : 1*).

**அச்சோப்பருவம்** *accō-p-paruvam*, பெ. (n.) 1. **தாய் குழந்தையை அணைக்க 'அச்சோ அச்சோ' என்று கூறி அழைக்கும் பருவம்**; childhood, as the age when the mother seeks

her child's embrace, saying *accō accō*. "ஆரத் தழுவாய்வந் தச்சோ அச்சோ" (திவ். பெரியாழ். 1.8 : 6).

[அச்சோ + பருவம்.]

**அச்சோப்பெண்கள்** *accō-p-peṇgaḷ*, பெ. (n.) விளக்கைச் சுற்றிவந்தவாறு கைகொட்டிப் பாடிக்கொண்டு மகளிர் ஆடும் ஆட்டம் (பிராம.); dance of women round a lamp singing and clapping hands (Brāh.).

[அச்சோ + பெண்கள்.]

**அசக்கு-தல்** *aśakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. அசைத்தல்; to shake. "அகடசக் கரவின் மணியா" (கந்தபு. பாயிரம், 1).

[அசங்கு (த.வி.) → அசக்கு (பி.வி.). *aśakku* causative of *aśaṅgu*.]

அசக்கு – cf. **E.** shake, **ME.** schaken, shaken. fr. **OE.** *scacan*, 'to shake, to move, quickly, flee, depart' rel. to **ON.** and **Swed.** *skaka*, **Dan.** *skage*, 'to shift, turn, reel'. **F.** *secourer*, to shake—(K.C.E.D.E.L.).

**அசகங்கை** *aśagaṅgai*, பெ. (n.) தில்லைப்பால்; the milky juice of the tree called tiger's milk spurge, *Excoecaria agallocha* (சா.அக.).

**அசங்கு-தல்** *aśaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) அசைதல்; to stir, move, shake. "சங்கர நான்முகர் கைத்தலம் விண்ட சங்கிட" (கம்பரா. யுத்த. இராவணன் வதை. 28).

ம. அசங்குக; க. அசி; தெ. அசியாடு; குருக். அசர்னா.

[அல் → அலு → அலுங்கு → அலங்கு → அசங்கு.]

**அசட்டன்** *aśaṭṭaṉ*, பெ. (n.) 1. குற்றமுள்ளவன்; delinquent, offender, culprit, criminal. 2. கீழ்மகன்; low, mean person. "கள்வ ராயுழ லசட்டர்க ளைவரை" (கம்பரா. பால. திருவவ. 76).

**அசட்டாட்டம்** *aśaṭṭāṭṭam*, பெ. (n.) புறக்கணிப்பு (இராட்.); disregard, contempt (R.).

[அசடு + ஆட்டம்.]

**அசட்டாளம்** *aśaṭṭāḷam*, பெ. (n.) 1. பாண்டலழுக்கு; filthiness. 2. ஒழுங்கின்மை; disorder, confusion, muddle.

க. அசட்டாள; தெ. அசட்டாளுவு.

**அசட்டுச்சிரிப்பு** *aśaṭṭu-c-cirippu*, பெ. (n.) மடத்தனமான சிரிப்பு; foolish laughter.

[அசடு + சிரிப்பு.]

**அசட்டுப்பிசட்டெனல்** *aśaṭṭu-p-piśaṭṭ(u)-eṉal*, பெ. (n.) பேதைத்தனமாய் நடந்துகொள்கை; behaving foolishly, stupidly.

ம., மரா. அசகட விசகட.

['அசடு' என்னும் சொல்லின் எதுகை யிரட்டிப்பு.]

**அசட்டுவிழி** *aśaṭṭu-viḻi*, பெ. (n.) 1. மனக்களங்கத்தை வெளிப்படுத்தும் பார்வை; tell-tale look. 2. அறியாமையை வெளிப்படுத்தும் பார்வை; ignorant look. அசட்டுவிழி விழிக்கிறான் பார் (உ.வ.).

[அசடு + விழி.]

**அசடன்** *aśaḍaṉ*, பெ. (n.) 1. மடையன், மூடன்; fool, stupid, silly man. "அசட னறிவிலி" (திருப்பு. 1241). 2. கீழ்மகன்; low mean person. "அசடர் பெரியோ ராவரோ" (குமரேச. சத. 15).

ம. அசடன்; க. அசட.

**அசடு** *aśaḍu*, பெ. (n.) 1. புண்ணின் பொருக்கு; an incrusted substance formed over a sore in healing, scab. 2. மாழை (உலோகம்) முதலிய வற்றிலிருந்து பெயரும் பொருக்கு; small splinter of a surface as of a plate of metal, the scum or extraneous matter in metals thrown off in the process of melting. 3. குற்றம், பழுது; fault, defect, blemish. "அறிவுளோர் தமக்கும் யாதோ ரசடது வருமே யாகில்" (விவேகசிந். 64). 4. அறிவு மழுக்கம்; stupidity. 5. அறிவு மழுங்கி; stupid man, fool. அந்த அசடு எங்கே? (உ.வ.). 6. அறியாமை; ignorance.

ம., க. அசடு.

[அயறு → அசறு → அசடு. அயறு = புண் வழலை.]

**ஒ.நோ:** *Scab*, dry rough incrustation formed over sore in healing, cicatrice; mange, itch or similar skin-disease; kind of fungous plant-disease; mean dirty fellow (Arch.); (trade unionism) workman who refuses to join strike or union or takes striker's place, black-leg—(C.O.D.).

**அசடுதட்டு-தல்** *aśaḍu-taṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. அறியாமை புலப்படுதல்; ignorance or folly

becoming evident. 2. *பொலிவழிதல்;* to lose beauty, brightness, as a town. அந்த ஊர் அசடுதட்டியிருக்கிறது (உ.வ.).

**அசடுவழி-தல்** *aśaḍu-vaḻi-*, 2 செ.கு.வி. (v.i.) *அறியாமை பெருகி வெளிப்படுதல்;* to display gross ignorance. அவனிடத்தில் அசடுவழி கிறது (உ.வ.).

**அசடெழும்பல்** *aśaḍ(u) - eḻumbal*, தொ.பெ. (vbl.n.) *சிம்பெழும்பல்*; membranous separation of bone or other tissues from the living structure, as in dry necrosis, etc., exfoliation (சா.அக.).

[அசடு + எழும்பல்.]

**அசதி**[1] *aśadi*, பெ. (n.) 1. *களைப்பு;* tiredness, fatigue, weariness. 2. *தூக்க மயக்கம்;* drowsiness. 3. *சோர்வு;* langour, depression of spirits. 4. *வலுவின்மை;* weakness. 5. *மறதி;* forgetfulness. 6. *ஔவையாரால் அசதிக் கோவை பாடப்பெற்றவன்;* name of a shepherd, said to be the hero of *Avvaiyār's Aśadi-k-kōvai*, as having forgotten his name when he was asked.

ம. அசதி; தெ. அசது.

[அயர் → அயர்தி → அசர்தி → அசதி.]

**அசதி**[2] *aśadi*, பெ. (n.) *சடுதி* (வின்.); suddenness (W.).

**அசதிக்கோவை** *aśadi-k-kōvai*, பெ. (n.) *ஔவை யாரால் அசதி என்பவன்மேற் பாடப்பட்டதும் இறந்துபட்டதுமான ஒரு கோவைப் பனுவல்;* name of a love-poem in praise of *Aśadi*, attributed to *Avvaiyār* and now not extant.

[அசதி + கோவை.]

**அசதிநோய்** *aśadi-nōy*, பெ. (n.) *நரம்புத் தளர்ச்சியால் ஏற்படும் நோய்;* a disease resulting from nervous exhaustion, neurasthenia (சா.அக.).

**அசப்பு**[1] *aśappu*, பெ. (n.) *அசதி*[2] பார்க்க; see *aśadi*[2].

**அசப்பு**[2] *aśappu*, பெ. (n.) *கவனமின்மை;* inattentiveness, absence of mind. "ஒருவ ரசப்பிலே யென்னை யழைத்த போது" (அருட்பா, 6, பிள்ளைப்பெரு. 53).

ம. அயர்ப்பு.

[அயர் → அயர்ப்பு → அசர்ப்பு → அசப்பு.]

**அசம்** *aśam*, பெ. (n.) 1. *அத்தி* (சா.அக.); fig tree. 2. *சந்தனம்* (மலை.); sandal. 3. *வெங் காயம்* (மூ.அ.); onion. 4. *மூவாட்டை நெல்* (வின்.); three-year-old paddy. 5. *நெற்குவை* (தைலவ. தைல. 47); heap of paddy.

[ $l$. அதம் = அத்தி. அதம் → அசம்.]

**அசம்பி** *aśambi*, பெ. (n.) *அசம்பை* பார்க்க; see *aśambai*.

**அசம்பை** *aśambai*, பெ. (n.) *வழிப்போக்கர் தோட்பை* (வின்.); traveller's bag hung on the shoulder.

ம. பயிம்ப; க. கசும்பெ; தெ. அசிமி; து. பசும்பெ; பய்ம்பெ.

[அசம் + பை.]

**அசர்-தல்** *aśar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. *களைப்பாற் சோர்வடைதல்;* to become weary or worn-out with fatigue. 2. *ஆழ்ந்த தூக்கத்தில் உணர் விழத்தல்;* to lose sensation during deep sleep. அசர்ந்து தூங்கிவிட்டேன் (உ.வ.). 3. *வியப் பால் மயங்குதல்;* to become astonished or amazed. அந்தச் சிறுமியின் நடனத்தைக் கண்டு அவையோ ரெல்லாரும் அசர்ந்து போயினர் (உ.வ.).

ம. அயர்க்க; க. அசுர்; தெ. அசுருசுரு; து. அசுரு.

[அயர் → அசர்.]

**அசர்** *aśar*, பெ. (n.) *தலைப்பொடுகு* (வை.மூ.); dandruff, scurf.

[அசறு → அசர்.]

**அசரக்கம்** *aśarakkam*, பெ. (n.) *கசகசா;* poppy seed or white poppy, *Papaver somniferum* (சா.அக.).

**அசரப்போடு-தல்** *aśara-p-pōḍu-*, 19 செ. குன்றாவி. (v.t.) *காலந்தாழ்த்தி வைத்தல்* (உ.வ.); to shelve, defer consideration of, allow to lie over (com.u.).

தெ. அசரவேயு.

[அசர + போடு. அயர → அசர.]

**அசரை** *aśarai*, பெ. (n.) *ஒருவகைக் கடல்மீன்;* a kind of sea-fish, *Lepidoc ephalichthyus*.

**அசல்**[1] *aśal*, பெ. (n.) 1. *அண்டை, பக்கம்;* neighbourhood, vicinity. 2. *அண்டைவீட் டான்-ர்;* next-door neighbour or neighbours.

'அசல் வாழ்ந்தால் ஐந்துநாள் பட்டினி கிடப் பாள்' (பழ.). 'அசல்வீட்டு விளக்கை மூச்சு விட்டு அணைப்பாள்' (பழ.). 3. *வேற்றூரது, வெளிநாட்டது, உறவல்லாதது* (அக.நி.); that which is foreign, strange.

*[அயல் → அசல்.]*

**அசல்**[2] *ašal*, பெ. (n.) *அசவல் பார்க்க*; see *ašaval.*

**அசல்பிளந்தேறிடு-தல்** *ašal-piḷand(u) - ēṟiḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) *'வீடுபேற்றின் பின் ஒருவர் தம் நல்வினைகளை நண்பரிடத்தும் தீவினைகளைப் பகைவரிடத்துஞ் சேர்ப்பிக்கை'* (அஷ்டாதச. அர்ச்சி. பிர. 1); to transfer one's merits to friends and sins to enemies on one's attaining final bliss.

*[அசல் + பிளந்து + ஏறு + இடு.]*

**அசல்விட்டுக்கிட-த்தல்** *ašal-viṭṭu-k-kiḍa-*, 3 செ.கு.வி. (v.i.) *சூழ்ந்துள்ள நிலங்கள் அறு வடையான பின்னும், அறுவடையாகாதிருத்தல்* (நாஞ்.); to remain unharvested while the surrounding fields have been harvested (Nāñ.).

*[அசல் + விடு + கிட.]*

**அசல்விடு-தல்** *ašal-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *அசல்விட்டுக்கிட-த்தல் பார்க்க*; see *asal-viṭṭu-k-kiḍa-.*

*[அசல் + விடு.]*

**அசலகத்தான்** *ašal-agattān*, பெ. (n.) *அடுத்த வீட்டுக்காரன்* (இராட்.); neighbour (R.).

*[அசல் + அகத்தான்.]*

**அசலகம்** *ašal-agam*, பெ. (n.) *அடுத்த வீடு* (திவ். பெரியாழ். 2.9 : 6); neighbouring house, next door.

ம. அசலாத்து

*[அயலகம் → அசலகம்.]*

**அசலர்** *ašalar*, பெ. (n.) *அயலார்*; neighbours, strangers. "அசலருஞ் செச்செச் செச்செ யென" (திருப்பு. 459).

**அசலார்** *ašalār*, பெ. (n.) *பிறர்* (உ.வ.); others. 'அசலார் உடைமைக்குப் பேயாய்ப் பறக் கிறது' (பழ.).

**அசலிடு-தல்** *ašal-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *எல்லை கடத்தல்;* to pass beyond the limits; to overstep. 'பிராதிகூல்யம் அசலிட்டுத் தன் னளவும் வருமென்று' (திவ். பெருமாள். 3 : 1, அவ.).

**அசலை** *ašalai*, பெ. (n.) *மீன்வகை*; a kind of fish. "நெற்றிலி யசலை மசறி" (குருகூர்ப். 20).

*[அயிலை → அயலை → அசலை.]*

**அசவல்** *ašaval*, பெ. (n.) *கொசுகு* (சூடா.); gnat, mosquito.

**அசறு** *ašaṟu*, பெ. (n.) 1. *சேறு* (பிங்.); mud, mire. 2. *தலைப்பொடுகு* (உ.வ.); dandruff, scurf. 3. *புண்ணின் பொருக்கு*; scab. 'ஆறின புண்ணினும் அசறு நிற்கும்' (பழ.)—(சா.அக.). 4. *புண்ணிலுள்ள அழுக்கு;* impure matter in an ulcer or sore. 5. *ஆடுகளுக்குண்டாகுஞ் சொறிநோய்;* scab in sheep and goats. 6. *செடிப்பூச்சி வகை*; minute insect that sticks on leaves and injures plants. 7. *ஒருவகை வண்டு;* a kind of beetle (சா.அக.). 8. *புழு;* worm (சா.அக.).

*[அயறு → அசறு.]*

**அசறுக்கம்** *ašaṟukkam*, பெ. (n.) *கருஞ்சிவப்பு நிறம்*; dark-red colour (W.).

**அசறுப்புழுநோய்** *ašaṟu-p-puḻu-nōy*, பெ. (n.) *உடம்பினுள் சிறு பூச்சிகளினாலேற்படும் நோய் கள்*; diseases arising from the action of microbes in the system (சா.அக.).

*[அசறு + புழு + நோய்.]*

**அசறுபாய்-தல்** *ašaṟu-pāy-*, 2 செ.கு.வி. (v.i.) *அசும்பொழுகுதல்* (திவ். பெரியாழ். 5.4 : 8, வியா.); to trickle.

**அசறுபிடி-த்தல்** *ašaṟu-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *செடியில் அல்லது பழத்தில் பூச்சி பிடித்தல்;* sticking of small insects to fruits or herbs. 2. *புண்ணின்மேல் பக்கு உண்டாதல்*; the formation of scab on a sore while it is healing (சா.அக.).

**அசன்றிகா** *ašanṟigā*, பெ. (n.) *தைவேளை* (மலை.); species of cleome.

**அசனப்பூடு** *ašana-p-pūḍu*, பெ. (n.) *வெள்ளைப் பூடு* (சித்.அக.); garlic.

*[அசனம் + பூடு.]*

**அசனம்** *ašanam*, பெ. (n.) 1. *பகுதி* (பிங்.); portion. 2. *அளவு (பிங்.)*; measure.

**அசனவு** *aśanavu,* பெ. (n.) *இலையத்தி* (பரி.அக.); a kind of country fig.

**அசா** *aśā,* பெ. (n.) 1. *தளர்ச்சி*; languor, faintness. "அசாஅத்தா னுற்ற வருத்தம்" (நாலடி. 201). 2. **துன்பம்**; distress. "அரிவை புலம்பசா விடவே" (குறுந். 338).

[அயா → அசா.]

**அசாகசம்** *aśāgaśam,* பெ. (n.) *பொய்* (யாழ்ப்.); lie (J.).

**அசாகம்** *aśāgam,* பெ. (n.) *அரசு, அரசமரம்* (பரி.அக.); pipal tree.

**அசாகரம்** *aśāgaram,* பெ. (n.) *கரிசாலை* (சா.அக.); eclipse plant, *Eclipta prostrata.*

**அசாகை** *aśāgai,* பெ. (n.) 1. *களி* (சங்.அக.); a paste of flour. 2. *புற்கை, ஒருவகைக் கஞ்சி*; a kind of porridge of rice or other grains. 3. *சாகாமை*; the condition or nature of being immortal (சா.அக.).

**அசாணிமூலி** *aśāṇi-mūli,* பெ. (n.) *அச்சாணி மூலி* பார்க்க; see *accāṇi-mūli.*

**அசாவிடு-தல்** *aśā-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **இளைப்பாறுதல்**; to rest. "இரைதேர்ந் துண் டசா விடூஉம் புள்ளினம்" (கலித். 132 : 3).

[அயாவிடு → அசாவிடு.]

**அசாவு-தல்** *aśāvu-,* 5 செ.கு.வி. (v.i.) *தளர்தல்*; to be discouraged, to lose heart, to droop, languish, grow slack. "அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்" (குறள், 611).

[அயாவுறு → அசாவுறு → அசாவு.]

**அசாவுறு-தல்** *aśā-v-uṟu-,* 20 செ.கு.வி. (v.i.) *தளர்தல்*; to be discouraged. "அசாவுறு செருவில்வென் றாடல்கொள் வதற்கு" (கந்தபு. யுத்த. முதனாட். 383).

[அயா + உறு – அயாவுறு → அசாவுறு.]

**அசிர்-த்தல்** *aśir-,* 4 செ.குன்றாவி. (v.t.) **ஐயுறுதல்**; to doubt. 'தாய்வழியை நினைத்து அசிர்த்தாரிறே' (ஈடு, 6.7 : 1).

[அயிர் → அசிர்.]

**அசீர்** *aśīr,* பெ. (n.) *தட்டுமுட்டு* (யாழ்ப்.); domestic utensils (J.).

**அசுகி** *aśugi,* பெ. (n.) கடுகு (பரி.அக.); mustard.

**அசுகுணி** *aśuguṇi,* பெ. (n.) *செடிப்பூச்சி வகை* (வின்.); a small insect breeding and feeding on






அசுகுணி

plants. 2. *காதில் வரும் கரப்பான்* (வின்.); a kind of eruption, chiefly about the ears.

[அசுவுணி → அசுகுணி.]

*அசுவுணி* பார்க்க; see *aśuvuṇi.*

**அசுணம்** *aśuṇam,* பெ. (n.) **இன்னிசை நுண் ணுணர்ச்சி யுள்ளதும், இன்சுவை யூனுடைய தும்,** *பிடிப்பவர் புதர்மறைவில் நின்று முன்பு இனிய யாழிசையால் மயக்கிப் பின்பு திடு மெனக் கடும்பறையை முழக்குவதால் அதனைப் பொறுக்கமாட்டாது இறந்து படுவதும், வேறுவகையிற் பிடித்தற்கரியதும், பண்டைத் தமிழகத்திலேயே (குமரிநாட் டிலேயே) இறந்துபட்டதாகக் கருதப்படுவது மான ஒரு விலங்கினம்*; an extinct animal of ancient Tamil Nadu, reputed to have been a table delicacy and believed to have been so susceptible to harmony that when it was fascinated by melodious notes of music, a sudden loud beat of a drum caused its instantaneous death.

"அசுணங் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமுந் துன்பமு முடைத்தே" (நற்.304).

"இன்ன ளிக்குரல் கேட்ட வசுணமா
அன்ன ளாய்மகிழ் வெய்துவித் தாளரோ"
(சீவக. 1402).

"இசைகொள் சீறியா ழின்னிசை கேட்ட
அசுண நன்மா வந்நிலைக் கண்ணே
பறையொலி கேட்டுத்தன் படிமறந்
ததுபோல்"
(பெருங். உஞ்சைக். 47 : 241-3).

அசுணம் என்பது ஒரு பறவையினம் என்று கூறும் அறிஞரும் உளர். ஆயின், அசுணமா என்றே யன்றி அசுணப்புள் அல்லது அசுணப் பறவை என்று வழக்கின்மையானும், பண்டை யுரையாசிரிய ரெல்லாரும் விலங்

கென்றே யுரைத்தமையானும், அங்ஙனமே இங்குங் கொள்ளப்பட்டது.

**'அசுணமா**-கேகயப்புள், இசையறி பறவை; a species of bird (which is) charmed by music and is said to die while under the charm' என்பது சாம்பசிவம்பிள்ளை தமிழ்-ஆங்கில அகரமுதலி (பக். 72).

**அசுணமா** *aśuṇa-mā*, பெ. (n.) **அசுணம்**; an extinct animal. "அசுணமா முடியுமா போலே" (ஸ்ரீவசன. 41). 'அசுணமாச் செவிப்பறை அடுத்தது போலும்' (பழ.).

**அசுணம்** பார்க்க; see *aśuṇam*.

**அசுதி** *aśudi*, பெ. (n.) 1. **அண்டி வழியாகப் பெருங்குடற்குள் நீர் அல்லது கிசம்** (gas) **செலுத்துகை** (புதுவை); enema (Poṇḍ.). 2. **அதைச் செலுத்தும் பீச்சாங்குழல்** (புதுவை); clyster pipe (Poṇḍ.).

**அசுப்பு** *aśuppu*, பெ. (n.) 1. **திடுநிலை**; suddenness, quickness. அசுப்பிலே சாகிறது (இராட்.). 2. **கவனமின்மை** (புதுவை); inattentiveness, absence of mind (Poṇḍ.). 3. **உளவறிகை** (சங்.அக.); spying.

[அயர்ப்பு → அசர்ப்பு → அசப்பு → அசுப்பு.]

**அசும்பு-தல்** *aśumbu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **ஒழுகுதல்**; to flow. "அசும்பு பொன்வரை" (சீவக. 533). 2. **பரவுதல்**; to spread, be diffused. "அவிரொளி யசும்ப" (காஞ்சிப்பு. பன்னிரு. 164). 3. **வழுக்குதல்**; to be slippery. "சோலைத்தே னொழுகிநின் றசும்புயர் சந்தனத் தொகுதிக் குன்றம்" (சீவக. 3063).

[அள் → அய் → அயிம்பு → அசிம்பு → அசும்பு.]

**அசும்பு** *aśumbu*, பெ. (n.) 1. **வீசுகை** (பொதி.நி.); scattering, throwing. 2. **ஒளிர்வு, காந்தி** (பொதி.நி.); lustre. 3. **ஊற்று** (பிங்.); spring. 4. **கிணறு** (திவா.); well. 5. **நீர்ப்பொசிவு**; ooze, exudation. "அசும்பிவர் சாரல்" (சீவக. 522). 6. **சேறு** (பிங்.); soft mud. "தாழ்கண் ணசும்பின்" (மணிமே. 8 : 6). 7. **உளைநிலம்** (திவா.); miry place. 8. **வழுக்குநிலம்**; slippery ground. 9. **சிறுதிவலை**; minute drop of water. "மழைதூங் கசும்பினிற் றுன்னி" (திருக்கோ. 149). 10. **பற்று**; adherence, connection. "அசும்பறத் துடைத்தும்" (ஞானா. 41). 11. **வறுமை**; want, poverty. 12. **குற்றம்**; blemish, fault. "அசும்பற வகன்ற ஞானத் துறவனே" (சேதுபு. சங்கர. 92).

[அள் → அய் → அயிம்பு → அசிம்பு → அசும்பு.]

**அசும்புசெய்-தல்** *aśumbu-śey-*, 1 செ.கு.வி. (v.i.) **ஒளிர்தல்**; to shine, emit light. "ஆய பொதியில் வளைபொன்னா லசும்பு செய்து" (திருவிளை. உலவா. 17).

**அசுமாற்றம்** *aśu-māṟṟam*, பெ. (n.) 1. **குறிப்பு, சாடை** (யாழ்ப்.); hint, slight indication, gesture. 2. **அயிர்ப்பு** (யாழ்ப்.); doubt, suspicion (J.).

**அசுர்** *aśur*, பெ. (n.) **ஆரியர்க்குப் பகைவரான ஒரு வகுப்பார்**; an anti-Aryan race of people said to be demons in Purāṇās. "அசுரைச் செற்ற......மாதவன்" (திவ். இயற். திருவிருத். 67).

[அசுரர் → அசுர்.]

**அசுரகுரு** *aśuraguru*, பெ. (n.) **அசுரர் குரவனான வெள்ளி**; Veḷḷi, the preceptor of the Asurās.

**அசுரசந்தி** *aśura-śandi*, பெ. (n.) **அந்தி நேரம்**; evening twilight.

**அசுரநாள்** *aśura-nāḷ*, பெ. (n.) **19ஆம் நாண்மீனான மூலம்** (பிங்.); Mūlam the 19th lunar asterism.

**அசுரம்** *aśuram*, பெ. (n.) **கொல்லேறு கோடல், திரிபன்றி யெய்தல், கன வில் நாணேற்றல் முதலிய மறவினைகளும் அருவினைகளுஞ் செய்து ஒரு பெண்ணை மணத்தல்**; acquirement of a bride by the successful performance of some valiant deed enjoined by her father, such as seizing of a wild bull, shooting down of a whirling target in the shape of a boar, bending of a heavy bow and fastening its string, etc.

மன்றல் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன.

அவற்றுள்........அசுரமாவது: கொல்லேறு கோடல், திரிபன்றி யெய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்.

"முகையவிழ் கோதையை முள்ளெயிற் றரிவையைத்
தகைநலங் கருதுந் தருக்கினி ருளரெனின்
இவையிவை செய்தாற் கெளியண்மற் றிவளெனத்

தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித்
தன்னவை யாற்றிய வளவையில்
தொன்னிலை யசுரந் துணிந்த வாறே''
(தொல். பொருள். கள. 1, நச். உரை).

''கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்'' (கலித். 103)

என்னும் பண்டைத் தமிழாயர் மரபின்படி, கண்ணபிரானார் எழுவிடை தழுவி நப்பின்னையை மணந்தார்.

கதிரவக் குலமாகிய சோழர்குடியின் வடநாட்டுக் கிளையைச் சேர்ந்த இரகுராமனார், கன வில் நாணேற்றிச் சீதையை மணந்தார்.

திங்கட்குலமாகிய பாண்டியர் குடியின் வடநாட்டுக் கிளையைச் சேர்ந்த அருச்சுனன், திரிபன்றி யொத்த சுழல்மீனை யெய்து திரௌபதியை மணந்தான்.

அசுரம் என்பது, தலைமகட்குப் பொன் பூட்டிச் சுற்றத்தார்க்கு வேண்டுவன கொடுத்துக் கொள்ளும் மணவகை என்று, சென்னை அகரமுதலிப் பின்னிணைப்புக் கூறுவது மறச்செயல் ஒன்றையுங் குறியாவிடினும், பெருவழக்கான தமிழ் மரபிற்கு ஒத்ததாகவே யிருத்தல் காண்க.

**அசுரமணம்** *aśura - maṇam*, பெ. (n.) *அசுரம் பார்க்க*; see ***aśuram***.

**அசுரமந்திரி** *aśura-mandiri*, பெ. (n.) ***அசுரரின் மந்திரியான வெள்ளி*** (திவா.); Veḷḷi, as minister of the Asurās.

**அசுரமருத்துவம்** (அசுரவைத்தியம்) *aśura-maruttuvam*, பெ. (n.) ***அறுவை மருத்துவம்***; surgery (W.).

''மீன்தேர் கொட்பிற் பனிக்கயம் மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசேர் உடம்பினர்'' (பதிற். 42 : 2-5),

''ஆரார் தலைவணங்கார் ஆரார்தாம் கையெடார்
ஆரார்தாம் சத்திரத்தி லாறாதார் —சீராரும்
தென்புலியூர் மேவுஞ் சிவனருள்சே ரம்பட்டத்
தம்பிடிகான் வாசலிலே தான்''
(தனிப். தி. 1, பக். 138),

''உடலிடைத் தோன்றிற் றொன்றை யறுத்ததன் உதிர மூற்றிச்
சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினால் துயரம் தீர்வர்''
(கம்ப. யுத்த. கும்ப. 146),

''......கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து''
(நீதிநெறி. 56)

என்பவற்றால், அசுர மருத்துவம் என்னும் அறுவை மருத்துவம் தமிழ் மருத்துவமே யென்பது பெறப்படும்.

**அசுரமாயம்** *aśura-māyam*, பெ. (n.) ***பேய் பூதங்களைக் கொண்டு செய்யும் மாயவினை***; a kind of magic, performed with the aid of evil spirits — demoniacal magic.

**அரசுமெய்ப்பாடு** (அசுர சத்துவம்) *aśura-mey-p-pāḍu*, பெ. (n.) ***மகளிர்க்குரிய பத்து மெய்ப் பாடுகளுள் (சத்துவங்களுள்) ஒன்று*** (கொக். கோ.); a characteristic of women, one of the ten external signs of erotic emotion.

**அசுரர்** *aśurar*, பெ. (n.) ***ஆரியர்க்கும் தேவர்க்கும் பகைவராகவும், பதினெண் கணத்துள் ஒரு கணமாகவும் சொல்லப்படும் ஓர் உயர்திணை வகுப்பார்***; a rational class of beings said to be inimical to the Aryan race and gods, and constituting one of the eighteen classes of celestial hosts.

*[சுரர் = தேவர். சுரர் × அசுரர் = தேவரல்லாதார், தேவர்க்குப் பகைவர். 'அ' அன்மை மறுதலைப் பொருள் முன்னொட்டு.]*

ஆரியப் புராணங்களில் அசுரர் என்று பொதுவாகச் சொல்லப்படுபவரின் வரலாற்றையும் இயல்பையுங் கூர்ந்து நோக்குங்கால், அவர் ஆரியர்க்கு மாறாயிருந்த தமிழ வேந்தரும் மன்னரு மென்றே கருத இடந்தரு கின்றது. அசுரனும், திருமாலின் ஐந்தாம் தோற்றரவான மாணி (பிரமச்சாரி) யுருவால் அழிக்கப்பட்டவனுமான ***மகாபலிச் சக்கர வர்த்தி*** உண்மையில், **மாவலி** என்ற பெயர் கொண்டவனும், செங்கோலனும், மாபெருங் கொடைவள்ளலுமான ஒரு சேரவேந்தனே.

சோ வென்னும் அரணிருந்த சோணித புரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசனும், கண்ணபிரானான திராவிட மன்னனுடன் போர் புரிந்து தோற்றவனுமான, **வாணாசுரன்** என்பவன் **மாவலி** வேந்தனின் மைந்தனே.

*மணிமேகலை* காலத்துக் **கிள்ளிவளவன்** என்னும் சோழ வேந்தனின் கோப்பெருந் தேவியாயிருந்த ***சீர்த்தி*** என்னும் கோமகள், ***மாவலி*** வழிவந்தவளே.

எருமையூர் அரையம் (மைசூர் ராஜ்யம்), கருநூல் மாவட்டம், வடார்க்காடு மாவட்டம் ஆகியவற்றின் பகுதிகளைக் கொண்ட வாண கோப்பாடியை, இடைக்காலத்திற் பன்னூற் றாண்டாகச் சீருஞ் சிறப்புமாக ஆண்டுவந்த **வாணகோவரையர்** என்னும் சிற்றரசக் குடியினர் **வாணன்** கொடிவழியினரே.

அசுர மணம், அசுர மருத்துவம், அசுர வினை முதலிய வழக்காறுகள், தமிழ நாகரிகத் திற்கும் வாழ்க்கை நெறிக்குமே பொருந்து வனவாயிருக்கின்றன.

அசுரன் என்னும் சொல்லைப்பற்றிப் பேரா. (P. S.) **சுப்பிரமணிய சாத்திரியார்** தம் **வடமொழி நூல் வரலாறு** என்னும் பொத்த கத்தில் வரைந்திருப்பது வருமாறு:

"செண்ட் அவெஸ்தாவில் கடவுள் ***அஹுர மஸ்தா, மஸ்தா, அஹுர*** என்ற சொற்களால் வழங்கப்படுகின்றார். ஆங்குள்ள ***மஸ்தா*** என்ற சொல்லும் வடமொழி **மஹித** என்ற சொல்லும் ஒருபொருட் கிளவியாயிருத்தல் கூடும். அவ்வாறே ***அஹுர, அஸுர*** என்ற சொற்களும் ஆகும். ஆங்கு **அஹுர** என்பது விசேஷணச் சொல்லாகவும் ***மஸ்தா*** என்பது விசேஷியச் சொல்லாகவும் இருக்கலாம். ருக் வேதத்திலும் **அஸுர** என்ற சொல் விசேஷண மாகவே வழங்கப்பட்டுள்ளது. அன்றியும் கடவுளுக்குப் பகையினத்தாராகத் **தேவர்** செண்ட் அவெஸ்தாவிற் கூறப்பட்டனர். ஆதலின் **அஸுரர், தேவர்** இச்சொற்களுடைய பொருளின் வரலாறு நன்கு ஆராய்தற்கு உரியது."

"***அஸுர:*** என்ற சொல் பலமுள்ளவன் என்ற பொருளோடு அக்கினி, இந்திரன், வருணன், ஸோமன், வஸுக்கள், மித்திரா வருணர், வாயு, ருத்திரன், பர்ஜந்யன், ஸவிதா, மருத்துக்கள் முதலியோர்க்கு அடை மொழியாக வழங்கப்பட்டது. சிலவிடத்து அச் சொல்லே **பலத்தைக் கொடுப்பவன்** என்ற பொருளையுங் கொண்டது. அஸுரரான தேவர்களுக்கும் மேலானவன் என்ற வழக்கு உளது. தேவரல்லாதார்க்கும் அஃது அடை மொழியாய் வழங்கப்பட்டுள்ளது. தேவரல் லாதார் என்பது தேவரைப் போன்றவரும் தேவரிடத்தினின்று வேறுபட்டவருமான **விருத்திரர்** முதலியோரைக் குறிக்கும். சில விடத்து விசேஷியச் சொல்லின்றி விசேஷணச் சொல்லாகிய ***அஸுர:*** என்பது மாத்திரம் ருக்வேதத்திலும், ***அஹுர:*** என்பது மாத்திரம் செண்ட் அவெஸ்தாவிலும் வழங்கப்பட்டன. ருக் வேதத்தின் பிற்பகுதியில் அஸுர: என்ற சொல் விசேஷியமின்றி வழங்கப்படின், அஃது அதேவரையுங் குறிக்குமென்றும் பத்தாம் மண்டிலம் 124ஆம் ஸூக்தத்திலுள்ள அஸுர: என்ற சொற்கு அவ்வாறே பொருள் கொள்ள இடன் இருக்கின்றது என்றும், **மாக்டானல்** கூறுகின்றார். அந்த ஸூக்தத்தில் 'அஸுர ரான பிதரர்க்கு' என்றும், 'அவர் மாயை யின்றி அஸுரர் ஆயினர்' என்றும் பொருட் கொண்ட இரு தொடர்களில் அச் சொல் காணப்படுகின்றது. இரண்டாவது தொடரில் **அவர்** என்பது அக்கினி, ஸோமன், வருணன் இவரைக் குறிக்கின்றமையால், அச் சொற்குப் பலமுள்ளவன் என்றே அங்குப் பொருளாகக் கொள்ளலாம் எனத் தோற்றுகின்றது. ஆகலின் ருக்வேத ஸம்ஹிதை முழுமையிலும் **அஸுர** என்ற சொற்குப் பலமுள்ளவன், பலத்தையளிப்பவன், உயிருள்ளவன், உயிரை யளிப்பவன் முதலிய பொருளில் ஒன்றைக் கொளல் தகும். அச் சொல் அக்கினி முதலிய தேவதைகட்கு அடைமொழியே எனக் கொளலுந் தகும்" (வ.நூ.வ. பக். 43-46).

**அதர்வவேதம்—நான்காம் வேதம்—காலம்**

"*அஸுர:* என்ற சொல் ருக்வேத ஸம் ஹிதையில் **பலமுடையவன், உயிர்கொடுப் போன்** என்ற பொருளில் வழங்கப்பட்டது. தேவர்களுக்குப் பகைவன் என்ற பொருளில் அங்குக் கூறப்படவில்லை. ஈண்டுச் சில விடத்துப் பலமுடையவன், உயிர்கொடுப் போன் என்ற பொருளிலும், சிலவிடத்துத் தேவர்க்குப் பகையினன் என்ற பொருளிலும் அச் சொல் வழங்கப்பட்டுள்ளது. முற்கூறிய பொருளைக் கொண்ட அஸுர: என்ற சொல்லைக் கொண்ட மந்திரங்கள் பழையன எனவும், பிற்கூறிய பொருளைக் கொண்ட அச் சொல்லைக் கொண்ட மந்திரங்கள் பிற்காலத் தன எனவும் கொள்ளல் தகும். பிற்கூறிய பொருளிலேயே அச் சொல் அதர்வ வேதத்தில் வழங்கப்பட்டது என **மாக்டானல்** கூறுவது ஆராய்தற்குரியது. ருக்வேதத்தில் அச் சொல் பலமுடையோன், உயிர்கொடுப்போன் என்ற பொருளிலே பத்து மண்டலத்துள்ளும்

வழங்கப்பட்டதாகக் கொள்ளல் கூடும் என முன்னரே கூறப்பட்டது'' (ஷெ.பக். 105-6).

**அசுரவியம்** (அசுரவாத்தியம்) *aśura-v-iyam*, பெ. (n.) ***முரசு முதலிய இசைக்கருவிகள்*** (நாஞ்.); musical instruments like drum, etc. (Nāñ.).

**அசுரவினை** (அசுரகிருத்தியம்) *aśura - viṉai*, பெ. (n.) ***அசுரர் செய்தற்குரிய அருஞ்செயல்;*** marvellous work, Herculean labour, as of Asurās.

**அசுரற்றடிந்தோன்** *aśuraṟṟaḍindōṉ*, பெ. (n.) ***சூரபதுமன் என்னும் அசுரனைக் கொன்றவனாகச் சொல்லப்படும் முருகன்*** (கந்தபுராணம்); Muruga, as the slayer of the Asurā called Sūrapadmā (Skanda purāna).

*[அசுரன் + தடிந்தோன். தடிதல் = கொல்லுதல்.]*

**அசுரன்** *aśuraṉ*, பெ. (n.) *1. அசுர வகுப்பினருள் ஒருவன்*; one of the class of Asurās. *2. **நவச்சாரம்;*** hydrochlorate of ammonia — Sal ammoniac (சா.அக.). *3. இராகு*; Rāhu, the ascending node of the moon. *4. கேது*; Kētu, the descending node of the moon. ''தகைபெறு பூத சம்போ தனனென்று மசுரனென்றும்'' (மச்சபு. புவநகோச. 27).

**அசுவணி** *aśuvaṇi*, பெ. (n.) ***சொறி*** (இ.வ.); eczema (Loc.).

**அசுவு** *aśuvu*, பெ. (n.) *அசுவுணி* பார்க்க; see *aśuvuṇi*.

**அசுவுணி** *aśuvuṇi*, பெ. (n.) ***செடிப்பூச்சி வகை;*** a destructive insect. *அசுகுணி* பார்க்க; see *aśuguṇi*.

**அசுழம்** *aśuḻam*, பெ. (n.) ***நாய்***; dog. ''கருதசுழ மாமிந்த மட்டைதனை யாள'' (திருப்பு. 140).

தெ. அசுர

**அசுனாதி** *aśuṉādi*, பெ. (n.) ***இதள்*** (வை.மூ.); mercury.

**ஒ.நோ :** அகனாதி

**அசை-தல்** *aśai-*, 2 செ.கு.வி. (v.i.) *1. **அலுங்குதல்***; to shake slightly. ஓர் இலைகூட அசையவில்லை (உ.வ.). 'அசைந்து தின்கிறது மாடு, அசையாமல் தின்கிறது வீடு' (பழ.). *2. **நுடங்குதல், துவளுதல்***; to be flexible. ''அசையியற் குண்டாண்டோர் ஏஎர்'' (குறள், 1098). *3. **தள்ளாடுதல்***; to totter, stagger. ''வெங்கழுத் தசைய நின்று சுமந்தி ளைத்தனர்'' (பாரத. முதற்போ. 36). *4. **இயங்குதல்;*** to move, stir. 'அவனன்றி யோரணுவும் அசையாது' (பழ.). *5. **ஆடுதல், கூத்தாடுதல்*** (பிங்.); to dance. *6. **மெல்லச் செல்லுதல்***; to walk or ride slowly. *7. **புடைபெயர்தல், செல்லுதல், விட்டுப்போதல்***; to go away, depart. ''அசைந்திடா தொழிகவென'' (ஞானவா. சிகித். 70). *8. **உலாவுதல்***; to move along, as wind. ''தென்றியா யசைந்து மெல்லச் சினகரம் புகுது மெல்லை'' (கந்தபு. உற்பத். திருவவ. 11). *9. **கைகாலோய்தல், உடம்பு தளர்தல்***; to become weary, exhausted, weak, infirm as a limb of the body, to become worn-out with fatigue. ''நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி'' (சிறுபாண். 32). *10. **உளைதல், நோதல்;*** to ache, as an exhausted limb of the body. *11. **நீர்வேட்கையால் இளைத்தல், விடாய்த்தல்***; to suffer from thirst. ''உண்ணு நீர்வேட் டசைந்தே னெனவுரைப்ப'' (சீவக. 1592). *12. **கலங்குதல், தடுமாறுதல்***; to be perplexed, disconcerted. ''மடங்கலின் றோற்ற நோக்கி யந்தகனசைந்து நின்றான்'' (கந்தபு. யுத்த. சிங்க. 310). *13. **நீங்குதல், குறைதல்***; to be removed, to diminish. ''அசையாது நிற்கும் பழி'' (ஆசாரக். 74). *14. **இளைப்பாறுதல்***; to rest. ''புன்மேய்ந் தசைஇ'' (பு.வெ. 1 : 11), ''கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ'' (புறநா. 141 : 3). *15. **இராத் தங்குதல்***; to stay for the night. ''கல்லென் சீறூ ரெல்லியி னசைஇ'' (அகநா. 63). *16. **தங்கியிருத்தல்***; to lodge, to stay. ''தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள் ஆவி னன்குடி யசைதலு முரியன்'' (திருமுருகு. 175-6). *17. **திரிதல், பலவிடந் தங்குதல்;*** to wander, sojourn. ''அங்கண் அசைந்திடு தன்மை யுன்னி யருள்செய்'' (கந்தபு. உற்பத். தேவகிரி. 10). *18. **இருத்தல், கிடத்தல்***; to be or lie in a place. ''குறங்கின் மிசை யசைஇய தொருகை'' (திருமுருகு. 109). *19. **சோம்புதல்***; to be idle, inactive, indolent. ''இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்'' (குறள், 1040). *20. **அஞ்சுதல்*** (சங்.அக.); to fear, to be afraid of.

ம. அயவு; க. அசி; தெ. அசியாடு; து. அசலெ; குரு. அசர்னா.

*[அல் → அலை → அசை.]*

**அசை-த்தல்** *aśai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **அலுங்குதல்**; to shake slightly. ''ஆடி யாடி யசைந்தசைந் திட்டு'' (திவ். பெரியாழ். திரு. 137). 2. **ஆட்டுதல்;** to shake violently. ''நந்திபிரான் றிருப்பிரம்பை யசைத்தருள'' (காஞ்சிப்பு. மணிகண். 34). 3. **இயக்குதல்;** to move, stir. 4. **வீசுதல்;** to fan. ''ஆலவட்ட மசைத்தனர்'' (கந்தபு. உற்பத். திருக்கைலா. 21). 5. **கட்டுதல்**; to tie, bind, fasten. ''புலித் தோலை யரைக்கசைத்து'' (தேவா. 7.24 : 1). 6. **வருத்துதல்;** to afflict, persecute. ''நாய் நாவி னல்லெழி லசைஇ'' (சிறுபாண். 17). 7. **தட்டுதல்**; to knock at. ''கதவஞ்சேர்ந் தசைத்தகை'' (கலித். 68). 8. **சார்த்துதல்;** to join with. ''அசைநிலைக் கிளவி யாகி வருநவும்'' (தொல். சொல். இடை. 2). 9. **ஓசையெடுத்தல்**; to raise the pitch. 10. **ஒற்றறுத்தல்**; to set to time-measure. ''அசைவிளங்கும் பாடலொடு'' (பு.வெ. 7 : 18). 11. **சொல்லுதல்**; to say. ''சேடனாயிர நாவி னாலு மசைக்கினும்'' (குற்றா. தல. திருக் குற்றா. 70).

*[அல் → அலை → அசை.]*

சங்க அகராதியில், அசைத்தல் என்னும் சொல்லிற்கு இறுமாப்பு என்றொரு பொருள் குறிக்கப்பட்டுள்ளது, அத்துணைப் பொருத்த மாகத் தோன்றவில்லை.

**அசை** *aśai*, பெ. (n.) 1. **அசைகை அல்லது அசைக்கை**; shaking. 2. **அசைச்சொல்;** expletive. அசைச்சொல் பார்க்க; see *aśai-c-col*. 3. **நேர், நிரை, நேர்பு, நிரைபு என நால் வகைப்படும் செய்யுளுறுப்பு**; metrical syllable, of which there are four kinds, viz., *nēr*, *nirai*, *nērbu*, and *niraibu*. ''மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ'' (தொல். பொருள். செய். 1). ''அசைத்திசை கோடலி னசையே'' (இலக். வி. 711). 4. (இசை) **தாளத்தில் ஒரு மாத்திரைக் காலம்;** (Mus.) variety of duration of time-measure consisting of one *mattirai*. 'கொட்டு மசையும்......அசை ஒரு மாத்திரை; அதற்கு வடிவு, எ. ......அசையாவது தாக்கி யெழுதல்' (சிலப். 3 : 16, அடியார்க். உரை). 5. **ஆடுமாடுகள் உட்கொண்ட இரையை மீட்டும் மெல்லுகை;** cud. ''அருந்தும் பசும்புல் லுணாத்தெவிட்டி யசைவிட் டுறங்குங்கன்று'' (கூர்மபு. கண்ணனவ. 83). 6. **சுவடித் தூக்கு;** sling for carrying or preserving *ōlā* books. 7. **குற்றம்** (சம்.அக.கை.); fault, blemish. 8. **உடல்** (மனையடி. 9); body, trunk.

**அசைகம்பு** *aśai-kambu*, பெ. (n.) **ஒன்பதடி நீள முள்ளதும் வண்ணம் பூசியதும் சலங்கை கட்டியதுமான பரவர் மணக்கோல்;** nine-foot painted rod with tinkling bells, used in Parava weddings.

**அசைகொம்பு** *aśai-kombu*, பெ. (n.) **கட்டு கொம்பு**; splint.

**அசைச்சீர்** *aśai-c-cir*, பெ. (n.) (யாப்.) **பெரும் பாலும் வெண்பாவின் ஈற்றிலும் சிறுபான்மை பிற பாக்களிலும் வரும் ஓரசைச்சீர்**; (Pros.) foot of one metrical syllable occurring usually at the end of a *Veṇbā* and occasionally in other metres.

*[அசை + சீர்.]*

அசைச்சீர் வாய்பாடு பார்க்க; see *aśai-c-cir-vāypāḍu*.

**அசைச்சீர் வாய்பாடு** *aśai-c-cir-vāypāḍu*, பெ. (n.) **நேரசைக்கு 'நாள்' என்றும், நிரையசைக்கு 'மலர்' என்றும் இருவகை ஓரசைச் சீர்க்குக் கொள்ளப்படும் எடுத்துக்காட்டு வடிவங்கள்**; the two formulas, viz., *nāḷ* and *malar*, representing a metrical monosyllabic foot of one vowel and two vowels respectively. ''அசைச்சீர்க் குதாரண நாண்மலரே'' (யா.கா. 7).

*[அசை + சீர் + வாய்பாடு.]*

**அசைச்சொல்** *aśai-c-col*, பெ. (n.) **முன்னிலை யசைச்சொல் என்றும், மூவிடப் பொது அசைச் சொல் என்றும், ஈற்றசை யென்றும், உரை யசை யென்றும், வியங்கோ ளசைச்சொல் என்றும், பிரிவி லசைநிலை யென்றும்; பெரும் பாலும் பெயர்நிலையைச் சார்ந்தும், சிறு பான்மை அவற்றைச் சாராதும், ஒரோவழி யிரட்டியும்; உருத்திரிந்தும், பொருளிறந்தும், பொருள்மறைந்தும், பொருள் குன்றியும், பொருள் நிறைந்தும்; குறிப்பாகவும் வெளிப் படையாகவும்; இருவகை வழக்கிலும் தொன்று தொட்டு வழங்கிவரும் இடைச்சொல் வகை**; expletive particles and various kinds of indeclinable words.

*[அசை + சொல்.]*

**அசைத்தொழில்** *aśai-t-toḻil*, பெ. (n.) **தாக்கி யெழுதல்** (சிலப். 3 : 16, அடியார்க். உரை); raising the hand immediately after striking.

*[அசை + தொழில்.]*

**அசைந்தாடு-தல்** *aṡaind(u)-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) **கூத்தாடுதல்** (இராட்.); to dance (R.).

*[அசைந்து + ஆடு.]*

**அசைந்தாடுசீலை** *aṡaind(u)-āḍu-ṡīlai*, பெ. (n.) **தொட்டிற்சீலை** (இராட்.); cradle improvised out of cloth (R.).

*[அசைந்து + ஆடு + சீலை.]*

**அசைநிலை** *aṡai-nilai*, பெ. (n.) **அசைச்சொல்** பார்க்க; see *aṡai-c-col.* ''அசைநிலைக் கிளவி யாகி வருநவும்'' (தொல். சொல். இடை. 2).

**அசைநிலையளபெடை** *aṡai-nilai-y-aḷabeḍai*, பெ. (n.) **அசைகோடற்பொருட்டுக் கொண்ட அளபெடை**; lengthening of sound for the sake of metre. எ-டு: 'செறாஅஅய் வாழிய நெஞ்சு' (பிர. விவே. 5, உரை).

*[அசைநிலை + அளபெடை.]*

**அசைப்பு** *aṡaippu*, பெ. (n.) 1. **அசைக்கை**; shaking. ''மலர்க்கை யசைப்பின்'' (காஞ்சிப்பு. பரசிரா. 11). 'அசைப்புக்கு ஆயிரம் பொன் வாங்குகிறது' (பழ.). 2. **சொல்** (திவா.); speech. 3. **சொல்லுகை**; speaking. 4. **இறுமாப்பு** (யாழ்ப்.); arrogance (J.).

**அசைபறி-தல்** *aṡai-paṟi-*, 2 செ.கு.வி. (v.i.) **அசைபோடுதல்** (இராட்.); to chew the cud (R.).

*[அசை + பறி.]*

**அசைபோடாமை** *aṡai-pōḍāmai*, பெ. (n.) **மாடுகளுக்கு வரும் ஒரு நோய்**; a disease in cattle, marked by loss of ability to chew the cud (சா.அக.).

**அசைபோடு-தல்** *aṡai-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **ஆடுமாடுகள் தாம் உட்கொண்ட இரையை இரைப்பையின் முதலறையிலிருந்து வாய்க்குக் கொண்டுவந்து ஒய்வாக மெல்லுதல்**; to bring back the cud from the first chamber of the stomach into mouth and chew at leisure, as ruminating animals.

ம. அயிவிறக்குக, அகவிறக்குக; க. அகி; து. அக்கியுனி; துட. அக்ச்.

**அசைமீட்டு-தல்** *aṡai-mīṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **அசைபோடும் விலங்குகள் தாம் உண்ட இரையை மீட்டும் மென்று இரைப்பையினுட் செலுத்துதல்** (சங்.அக.); to chew the cud and pass it on to the second chamber of the stomach, as ruminating animals.

**அசையடி** *aṡai-y-aḍi*, பெ. (n.) **ஒருவகைக் கலிப்பாவின் உறுப்பான அம்போதரங்கம்**; one of the component parts of a variety of *kalippā* metre. ''நீர்த்திரை போன்ம் மரபொன்று நேரடி முச்சீர் குறள்நடுவே மடுப்பின்......அது அம்போ தரங்க வொத் தாழிசை'' (யா.கா. 30), ''அசையடி முன்ன ரராகம் வந்து'' (யா.கா. 31).

*[அசை + அடி.]*

**அசையந்தாதி** *aṡai-y-andādi*, பெ. (n.) **செய்யுளில் ஓரடியி னீற்றசை அடுத்த அடிக்கு முதலசையாக வருந்தொடை** (தொல். பொருள். செய். 99, பேரா. உரை); metrical composition in which the same syllable ends one line and begins the succeeding of a stanza. எ-டு:

''குன்றகச் சாரற் குதித்தன கோண்மா
மாவென மதர்த்தன கொடிச்சி வான்கண்''

என்பது அசையந்தாதி. 'அந்தாதி' வட சொல். அதை, தமிழில் ஈறுதொடங்கி அல்லது இறுதிமுதலி என்னலாம்.

*[அசை + அந்தாதி.]*

**அசையாக்கட்டை** *aṡaiyā-k-kaṭṭai*, பெ. (n.) **ஒருவகைச் செடி**; a kind of plant.

**அசையாத்துரையார்** *aṡaiyā-t-turaiyār*, பெ. (n.) **கள்ளர்குலப் பட்டப்பெயர்களு ளொன்று** (கள்ளர் சரித். பக். 145); a title of Kaḷḷars.

**அசையாநிலை** *aṡaiyā-nilai*, பெ. (n.) **சில நோய்களில் உடம்பும் உள்ளமும் ஒருங்கே அசையாது நிற்கும் நிலை**; a fixed and motionless state of both body and mind in certain diseases (சா.அக.).

**அசையாப்பொருள்** *aṡaiyā-p-poruḷ*, பெ. (n.) **இயங்குதிணை என்பதற்கு எதிரான நிலைத் திணை**; category of immovables, opp. to *aṡaiyum poruḷ*.

*[அசையாத → அசையா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + பொருள்.]*

**அசையாமணி** *aṡaiyā-maṇi*, பெ. (n.) **குடிகளின் பெருந்துன்பவேளைகளிலன்றி வேறு சமையங்களில் அசைக்கப்படாத, அரண்மனைவாயில் ஆராய்ச்சி மணி**; bell attached to the royal palace to apprise the sovereign of any calamity, as being seldom rung.

*[அசையாத → அசையா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + மணி.]*

**அசையாமை** *aśaiyāmai*, பெ. (n.) ***அசையாத் தன்மை***; immovability. ''விஞ்சு மசைவசை யாமை யிரண்டு மொன்றாய்'' (ஞானவா. சிகித். *160*).

**அசையாவிணைப்பு** *aśaiyā-v-iṇaippu*, பெ. (n.) ***அசைவில்லாத பொருத்து***; immovable articulation or joint with no intervening tissue between the bones, as the bones of the pelvis (சா.அக.).

*[அசையாத → அசையா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + இணைப்பு.]*

**அசையிடு-தல்** *aśai-y-iḍu-*, *20* செ.கு.வி. (v.i.) *அசைபோடுதல்*; to chew the cud (W.).

*[அசை + இடு.]*

**அசையியல்** *aśai-y-iyal*, பெ. (n.) ***நுடங்கிய இயல் புடைய பெண்***; slender woman. ''அசையியற் குண்டாண்டோ ரேஎர்'' (குறள், *1098*).

*[அசை + இயல்.]*

**அசையு** *aśaiyu*, பெ. (n.) *அமுக்கிரா* (மலை.); species of withania.

**அசையும்பொருள்** *aśaiyum - poruḷ*, பெ. (n.) ***நிலைத்திணை என்பதற்கு எதிரான இயங்கு திணை***; category of movables, opp. to *aśaiyāpporuḷ*.

**அசைவாடு-தல்** *aśaiv(u)-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* ***அசைதல்***; to shake, move, stir. *2.* ***மேலுலாவிச் செல்லுதல்;*** to hover over, move or stir, as wind on the surface of water (W.).

*[அசைவு + ஆடு.]*

**அசைவிடு-தல்** *aśai-viḍu-*, *20* செ.கு.வி. (v.i.) *1.* ***அசைபோடுதல்***; to chew the cud. ''அசை விட் டுறங்குங் கன்று'' (கூர்மபு. கண்ணனவ. *83*). *2.* ***இளைப்பாறுதல்*** (பரிபா. *6 : 2*); to rest.

**அசைவின்மை** *aśaiv(u)-iṉmai*, பெ. (n.) *1.* ***அசைவிலாமை***; cessation of motion. *2.* ***சோகம்***; temporary partial or complete suspension of the function of respiration and circulation. *3.* ***பித்தத்தினால் உடம்பு மயக்கங்கொண்டிருப்பதுபோல் அசைவற்றுக் கிடத்தல்***; senseless and motionless condition of the body due to bilious causes (சா.அக.). *4.* ***முயற்சி***; effort, enterprise. ''ஆகூழாற் றோன்று மசைவின்மை'' (குறள், *371*).

*[அசைவு + இன்மை.]*

**அசைவு** *aśaivu*, பெ. (n.) *1.* ***அசைகை, ஆட்டம்***; shaking, moving about, swinging. ''தூணமொத் தசைவற நின்றான்'' (காஞ்சிப்பு. சார்ந்தா. *13*). *2.* ***உண்கை***; eating. ''நஞ்சினை யசைவு செய்தவன்'' (தேவா. *3.111 : 3*). 'அசைவிருந்தால் விட்டுப் போகமாட்டான்' (பழ.). *3.* ***அதிர்ச்சி***; vibration. *4.* ***புடைபெயர்ச்சி***; movement (சங்.அக.). *5.* ***இளைப்பு, தளர்வு, சோர்வு***; weariness, faintness, exhaustion. ''நாட்டிடை நெறியசைவு தீரவிருந்து'' (சீவக. *1185*). *6.* ***சோம்பல்***; laziness, sloth. ''ஆகூழாற் றோன்றும் அசைவின்மை'' (குறள், *371*). *7.* ***பாடற்குற்றம்***; a flaw in singing. ''நாசி காகுளி பேசுறு குற்ற மசைவொடு மாற்றி'' (கல்லா. *22*). *8.* ***தப்பு***; slip, failure. ''அசைவில ரெழுந்து''(மதுரைக். *650*). *9.* ***நிலை தவறுகை***; to swerve from principle or path of virtue. ''ஓரசை விலாதவ னறைந்தனன்'' (பாரத.கிருட். *138*). *10.* ***முன்னிலைமை கெட்டு வருந்துதல்***; suffering caused by loss of position. ''இளிவே யிழவே யசைவே'' (தொல். பொருள். மெய்ப். *5*). *11.* ***வருத்தம்***; suffering. ''என்னுழை யசைவின் றையனைத் தம்மின்'' (சீவக. *1814*). *12..* ***மனக்கலக்கம்***; perturbation, agitation of mind. ''அசைவிலாடவன் றன்னை'' (கந்தபு. அசுர. சூரன் தண்டஞ். *28*). *13.* ***பின்னிடுதல்***; to fall back, retreat. ''அசைவி லூக்கத்து நசைபிறக் கொழிய'' (சிலப். *5 : 95*). *14.* ***தோல்வி***; defeat. ''அசைவில படையருள் புரிதரு மவன்'' (தேவா. *1.20 : 6*). *15.* ***முடிவு***; end (சம்.அக. கை.). *16.* ***அசையுமிடங்கள், அதாவது மூட்டுகள்***; joints (சா.அக.).

**அசைவுசெய்-தல்** *aśaivu-śey-*, 1 செ.குன்றாவி. (v.t.) ***உண்ணுதல்***; to eat. ''நஞ்சினை யசைவு செய்தவன்'' (தேவா. *3.111 : 3*).

ம. அசிக்க; க., தெ. அசன.

*[அலகசைத்து உண்பதால், உண்ணுதல் அசைவுசெய்தல் எனப்பட்டது.]*

**அசைவுதீர்-தல்** *aśaivu-tīr-*, 2 செ.கு.வி. (v.i.) ***இளைப்பாறுதல்***; to take rest.

**அசைவுபோடு-தல்** *aśaivu-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) ***அசையிடுதல்***; to chew the cud.

**அசைவெட்டு-தல்** *aśai-veṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) ***அசைபோடுதல்***; to chew the cud (W.).

ம. அசவெட்டுக, அயவெட்டுக.

**அசோகம்** *aśōgam*, பெ. (n.) 1. *ஒருவகை மரம், பிண்டி*; a sacred tree. "பொழிபெயல் வண்மையான் அசோகந்தண் காவினுள்" (கலித். 57 : 12). "பூமலி அசோகின் புனை நிழல் அமர்ந்த நான்முகற் றொழுதுநன் கியம்புவன் எழுத்தே" (நன். 56). 2. *வாழை*; plantain (W.).

**அசோண்டி** *aśōṇḍi*, பெ. (n.) *அசோணம்* பார்க்க; see *aśōṇam.*

**அசோணம்** *aśōṇam*, பெ. (n.) 1. *வாழை*; plantain (சா.அக.). 2. *குறட்டை*; bitter snake-gourd (மலை.).

**அசோதம்** *aśōdam*, பெ. (n.) 1. *அவுரி* (பரி.அக.); indigo (genus) indigofera. 2. *வெள்ளிலோத்திரம்*; lodhra.

**அசோனம்** *aśōṇam*, பெ. (n.) *அசோணம்* பார்க்க; see *aśōṇam.*

[அசோணம் → அசோனம்.]

**அஞ்சக்கரம்** *añjakkaram*, பெ. (n.) *சிவ வழிபாட்டில் ஓதுவதும், சிவாயநம அல்லது நமசிவா(வ)ய என்னும் ஐந்தெழுத்துக்கொண்டதுமான, திருவைந்தெழுத்தென்னும் சிவ வணக்க மந்திரம்*; the five-lettered mantra, viz., *śi vā ya na ma* or *na ma śi(ci) vā(va) ya*, uttered in the worship of Śiva (சா.அக.). "அஞ்சக் கரத்தின் அரும்பொருள்" (விநா. அகவல்).

[த. அஞ்சு + அக்கரம் – அஞ்சக்கரம் (இ.பி.). Skt. akṣara > த. அக்கரம்.]

**அஞ்சடுக்குமல்லிகை** *añj(u)-aḍukku-malligai*, பெ. (n.) *ஐந்தடுக்கு இதழுள்ள மல்லிகைப் பூவகை*; jasmine flower with five rows of petals (சா.அக.).

[ஐந்து → அஞ்சு + அடுக்கு + மல்லிகை.]

**அஞ்சடுக்குமூலி** *añj(u)-aḍukku-mūli*, பெ. (n.) *கருவூமத்தம் பூ*; black dhatura flower (சா.அக.).

[ஐந்து → அஞ்சு + அடுக்கு + மூலி.]

**அஞ்சணங்கம்** *añj(u)-aṇaṅgam*, பெ. (n.) *எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்தமிழிலக்கணம்* (யாழ்ப்.); the five divisions of Tamil grammar, viz., orthography, accidence, science or subject-matter, prosody and rhetoric.

[அணங்குதல் = ஒலித்தல். அணங்கு = எழுத்து. அணங்கு → அணங்கம் = இலக்கணம் (சிந்தா.நி.). இனி, அணங்கு = அழகு (பிங்.).

அணங்கு → அணங்கம் = மொழியின் அழகை அல்லது ஒழுங்கை விளக்கும் இலக்கணம் என்றுமாம்.]

ஒ.நோ. **Gk.** *gramma*, thing written, letter of alphabet; *grammetikē*, art of letters.

**Gk.** *grammatikē;* **L.** *grammatica*; **OF.** *gramaire*; **ME.** *grammar*; **E.** *grammar*, "Art and science dealing with a language's inflexions or other means of showing relation between words as used in speech or writing, and its phonetic system (usu. divided into phonology, accidence and syntax.)"—(C.O.D.).

**அஞ்சணங்கியம்** *añj(u)-aṇaṅgiyam*, பெ. (n.) *ஐந்திலக்கணத்திற்கும் எடுத்துக்காட்டான ஐவகையிலக்கியம்*; the theoretical divisions of classics illustrating the five divisions of grammar.

[அஞ்சு + அணங்கியம். ஐந்து → அஞ்சு. அணங்கம் → அணங்கியம் = இலக்கணத்தைத் தழுவிய இலக்கியம்.]

**அஞ்சத்தம்** *añjattam*, பெ. (n.) *சுக்கு*; dry ginger (சா.அக.).

**அஞ்சதி** *añjadi*, பெ. (n.) *காற்று*; wind (சா.அக.).

தெ. அஞ்சதி

**அஞ்சநாலா** *añjanālā*, பெ. (n.) 1. *கருங் காக்கணம்*; blue-flowered mussell-shell creeper, *Clitoria ternatea* (சா.அக.). 2. *கருங்குவளை, நீலோற்பலம்*; blue water-lily, *Pontederia* (சா.அக.).

**அஞ்சப்படு-தல்** *añja-p-paḍu-*, செயப். வி. (pass. v.) *மதிக்கப்படுதல்*; to be respected, esteemed. "அலரேந்தி அஞ்சலிசெய் தஞ்சப் படுவான்" (சீவக. 1610).

**அஞ்சமிருகல்** *añjamirugal*, பெ. (n.) *சிற்றரத்தை*; Chinese galangal, *Alpinia officinarum* (சா.அக.).

**அஞ்சராகம்** *añjarāgam*, பெ. (n.) *மஞ்சள்*; turmeric (சா.அக.).

**அஞ்சல்**[1] *añjal*, பெ. (n.) *சாலைக் கடத்தத்தில்* (road transport) *குறிக்கப்பட்ட இடந்தொறும் வண்டிக்காளை அல்லது சுமையாள் மாற்றப்படும் ஏற்பாடு*; relay. "ஓலைபிடித் தஞ்சலிலே யோடி" (பணவிடு. 281). 2. *வழிப்போக்கில்*

தங்கும் இடம்; resting place on a journey. 3. மடல், கடித அஞ்சல்; letter-post.

ம., து. அஞ்சல்; க., தெ. அஞ்செ; மரா. அஞ்சீ; **Gk.** *aggelos*, a messenger; **LL.** *angelus;* **OE.** engel; **E.** *angel*, a divine messenger.

[ஒருகா. அச்சல் → அஞ்சல்.]

அச்சலச்சலாய் மழை பெய்கிறது = பாட்டம் பாட்டமாய் மழை பெய்கிறது; It rains repeatedly or successively shower after shower.

பாட்டம் — a batch of clouds. நளி (கார்த்திகை) மாதத்திற் பாட்டம் பாட்டமாய் முகிற்கூட்டம் வந்து மழை பொழிவது மரபு. அஞ்சல் ஒருவகையில் பகுதிபகுதியாய் வரும் முகிற் கூட்டத்தை ஒத்திருத்தலால், அப் பெயர் பெற்றதுபோலும்.

**அஞ்சல்**[2] *añjal*, பெ. (n.) 1. **தோல்வி** (பிங்.); defeat. 2. **சோம்பல்** (திவா.); laziness, sloth.

**அஞ்சல்**[3] *añjal*, பெ. (n.) **மனோசிலை**; realgar, a mineral poison, *Arsenicum bisulphuretum* (சா.அக.).

**அஞ்சல் எடுத்தல்** *añjal-eḍuttal*, பெ. (n.) *அஞ்சற்பெட்டியில் சேர்ந்த மடல்களை எடுத்தல்*; letter-box clearance.

**அஞ்சல் ஏவம்** *añjal-ēvam*, பெ. (n.) *அஞ்சலகப் பணமதிப்புத் தாள்*; postal-order.

**அஞ்சல்செய்தல்** *añjal - šeydal*, பெ. (n.) 1. *அஞ்சற்பெட்டியில் மடலைப் போடுதல்*; to post a letter. 2. *வானொலி, தொலைக்காட்சி நிலையங்களிலிருந்து பெறும் நிகழ்ச்சிகளை மறு ஒலி/ஒளி பரப்புதல்*; relaying the broadcast or transmission received from other Radio and T.V. stations.

**அஞ்சல்தா-தல்** (தருதல்) *añjal-tā-*, 18 செ.கு.வி. (v.i.) *அடைக்கலந்தருதல்*; to give or assure protection, as saying 'Fear not'. "அடைக் கலங்கொண் டஞ்சல்தந்து" (தேசிகப். 3 : 9).

**அஞ்சல்துறை** *añjal-turai*, பெ. (n.) *அஞ்சல் தொடர்பான பணிகளில் ஈடுபட்டுள்ள துறை*; postal department.

**அஞ்சல்நாடி** *añjal-nāḍi*, பெ. (n.) *விட்டு விட்டு அல்லது இடைவிட்டு அடிக்கும் நாடி*; intermittent pulse (சா.அக.).

**அஞ்சல்நிலையம்** *añjal - nilaiyam*, பெ. (n.) 1. *அஞ்சற் பணியாற்றும் அலுவலகம்*; post-office. 2. *வானொலி/தொலைக்காட்சி ஒலி/ஒளி பரப்புகளைப் பெற்று மறு ஒலி/ஒளி பரப்புச்செய்யும் நிலையம்*; a relay station for Radio and Television transmissions.

**அஞ்சல்பரப்பு-தல்** *añjal - parappu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *மறு ஒலி / ஒளி பரப்புதல்*; relaying the broadcast or transmission received from other Radio and Television stations.

**அஞ்சல்மடல்** *añjal-maḍal*, பெ. (n.) *அஞ்சல்வழி அனுப்பப்படும் மடல் (கடிதம்)*; a letter by post.

**அஞ்சல்மாடு** *añjal-māḍu*, பெ. (n.) *அஞ்சல் வண்டிக்குக் கட்டப்படும் காளை*; relay of bullocks, as in journey by stage.

**அஞ்சல்வண்டி** *añjal-vaṇḍi*, பெ. (n.) *அஞ்சலிற்குப் பயன்படுத்தப்படும் வண்டி (தபால் வண்டி)*; stage-coach.

**அஞ்சல்வண்டிக்காளை** *añjal - vaṇḍi - k - kāḷai*, பெ. (n.) அஞ்சல்மாடு பார்க்க; see *añjal-māḍu*.

**அஞ்சல்வழங்கு - தல்** *añjal - vaḻaṅgu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *அஞ்சலில் வந்த மடல்களை உரியவர்களுக்குக் கொண்டுபோய்க் கொடுத்தல்*; delivery of letters from the post-office.

**அஞ்சல்வழிக்கல்வி** *añjal-vaḻi-k-kalvi*, பெ. (n.) *அஞ்சல்வழிப் பாடங்களை அனுப்பிக் கற்பிக்கும் கல்விமுறை*; education system by sending lessons by post, postal tuition.

[அஞ்சல் + வழி + கல்வி.]

**அஞ்சல்விடை** *añjal-viḍai*, பெ. (n.) *மறுமொழி விடுக்க உதவும் இரட்டை அஞ்சலட்டை*; reply card.

**அஞ்சலகம்** *añjal-agam*, பெ. (n.) *அஞ்சல் நிலையம்*; post-office.

[அஞ்சல் + அகம்.]

**அஞ்சலகர்** *añjalagar*, பெ. (n.) *அஞ்சல் நிலைய அதிகாரி*; postmaster.

**அஞ்சலட்டை** *añjal-aṭṭai*, பெ. (n.) *மடலட்டை*; post-card.

[அஞ்சல் + அட்டை.]

**அஞ்சலம்** *añjalam*, பெ. (n.) 1. **சீலையின் ஓரம்**; edge of a cloth (சா.அக.). 2. **வாளுறை**; sheath of a sword (சங்.அக.).

ம. அஞ்சலம்; க. அஞ்சல; தெ. அஞ்சலமு.

**அஞ்சலர்** *añjalar*, பெ. (n.) **பகைவர்**; enemies. ''அஞ்சலர் தனிப்போ ரேறே'' (நல். பாரத. ஆரணிய. மார்க். 245).

**அஞ்சலளி-த்தல்** *añjal-aḷi-*, 4 செ.குன்றாவி. (v.i.) **அஞ்சல்தா-தல்** பார்க்க; see *añjal-tā-*.

*[அஞ்சல் + அளி.]*

**அஞ்சலா** *añjalā*, பெ. (n.) *1.* **காமமுள்ள**; lustful (சா.அக.). *2.* **வலுவுள்ள**; strong (சா.அக.).

**அஞ்சலாதிறை** *añjalādiṟai*, பெ. (n.) **ஒரு மூலிகை (சீவக மூலி)**; a kind of drug, Indian coccinia, *Cephalandra indica* (சா.அக.).

**அஞ்சலி**[1] *añjali*, பெ. (n.) *1.* **ஆடுதின்னாப் பாலை** (சங்.அக.); a worm-killer, *Aristolochia bracteata*. *2.* **காட்டுப் பலா (காட்டுப் பிலவு)**; jungle jack, *Artocarpus hirsuta*. *3.* **தாழை**; fragrant screw pine, *Pandanus odoratissimus* (சா.அக.). *4.* **மாவிலிங்க மரம்**; lingam tree, *Crataeva religiosa* (சங்.அக.). *5.* **வறட்சுண்டி**; floating sensitive-plant, *Mimosa triquetra* (W.). *6.* **சங்கங் குப்பி**; smooth volkameria (W.). *7.* **வண்டுகொல்லி**; cassia alata (alasa) (சா.அக.).

**தெ.** அஞ்சலிக

**அஞ்சலி**[2] *añjali*, பெ. (n.) *1.* **வௌவால்வகை**; a kind of bat (R.). *2.* **வண்டுவகை**; a kind of beetle (சிந்தா.நி. 64.).

**அஞ்சலி**[3] *añjali*, பெ. (n.) **நான்கு பலம்**; a measure of weight = 4 palams. ''கழலடி யஞ்சலி யைந்து'' (தைலவ. தைல. 54).

**ம.** அஞ்சான்; **க.** அஞ்ஜலி.

**அஞ்சலி**[4] *añjali*, பெ. (n.) **ஒருவகை அம்பு**; a kind of arrow. ''அஞ்சலி யஞ்சுகோடி தொடுத்திக லரக்க னெய்தான்'' (கம்பரா. யுத்த. நாகபா. 113).

**ம.** அஞ்சலிகம்

**அஞ்சலி**[5] *añjali*, பெ. (n.) **வணக்கம், வணங்குதல்**; worship.

*[அங்கு → அஞ்சு → அஞ்சலி. அங்குதல் = வளைதல், வணங்குதல்.]*

**அஞ்சலிக்கை** *añjali-k-kai*, பெ. (n.) (நடம்) **பதாகை என்னும் இணைக்கை வகை**; (Dan.) gesture with both hands joined in *padāgai* pose.

'அஞ்சலி யென்ப தறிவுறக் கிளப்பின்
எஞ்ச லின்றி இருகையும் பதாகையாய்
வந்தகம் பொருந்து மாட்சித் தென்றனர்
அந்தமில் காட்சி யறிந்திசி னோரே'
(சிலப். 3 : 18, அடியார்க். உரை).



அஞ்சலிக்கை

*[அஞ்சலி + கை. அஞ்சு → அஞ்சல் → அஞ்சலி.]*

**அஞ்சலி காரிகை** *añjali-kārigai*, பெ. (n.) *1.* **ஒரு பூண்டுவகை** (சங்.அக.); a kind of herb or shrub. *2.* **தொட்டாற் சுருங்கி**; the sensitive plant, *Mimosa pudica*.

**ம., தெ.** அஞ்சலிகாரிக; **க.** அஞ்சலிகாரிகெ.

**அஞ்சலிகை** *añjaligai*, பெ. (n.) **வௌவால் வகை**; a kind of bat (R.).

**அஞ்சலிப்பாலை** *añjali-p-pālai*, பெ. (n.) **ஆடு தின்னாப் பாலை** பார்க்க; see *āḍu-tiṉṉā-p-pālai*.

**அஞ்சலி முத்திரை** *añjali-muttirai*, பெ. (n.) **அஞ்சலி செய்யும் கைக்குறி**; hand-pose in worship. 'அஞ்சலி வணக்கம் ஆருக்கும் நன்மை' (பழ.).

**அஞ்சலினவர்** *añjaliṉavar*, பெ. (n.) **பாஞ்சராத் திரிகள் என்னும் மாலிய (வைணவ) வகுப்பினர்**; Vaiṣṇavās of the Pāñcarātra sect. ''அஞ்சலினவர் புகழண்ணல்'' (கந்தபு. திருவவ. 62).

*[**வ.** பஞ்சம் = ஐந்து; ராத்ரி = இரவு. பாஞ்சராத்திரம் (பாஞ்சராத்ர) = ஐயிரவிற் சொல்லப் பட்ட மாலியத் தொழுமறை (ஆகமம்). பாஞ்சராத்திரத்தைக் கடைப்பிடிக்கும் மாலியர் பாஞ்சராத்திரிகள் அல்லது பாஞ்சராத்திரிகர் எனப்பட்டனர். இப் பெயரின் தமிழ் மொழி பெயர்ப்பு 'அஞ்சலினவர்'.*

*அஞ்சு = ஐந்து. அல் = இரவு. அஞ்சு + அல் + இன் + அவர் – அஞ்சலினவர் (பாஞ்சராத்திரிகள்). 'இன்' சாரியை. 'அவர்' ப.பா. ஈறு.]*

அஞ்சலுறை *añjal-uṟai*, பெ. (n.) மடலை (கடிதம்) உள்ளே வைத்து ஒட்டி அஞ்சலில் அனுப்ப உதவும் மேலுறை; postal envelope.

[அஞ்சல் + உறை.]

அஞ்சலொட்டகம் *añjal-oṭṭagam*, பெ. (n.) அஞ்சல் சுமந்து செல்லும் ஒட்டகம்; camel carrying mail bags (R.).

[அஞ்சல் + ஒட்டகம்.]

அஞ்சவத்தை *añj(u)-avattai*, பெ. (n.) (மெய்ப்.) ஆதனின் (ஆன்மாவின்) ஐந்நிலை; அவை நனவு (சாக்கிரம்), கனவு (சொப்பனம்), துயில் (சுழுத்தி), உறக்கம் (நாலாவான் - துரியம்), பேருறக்கம் (நாலாவான்கடப்பு - துரியாதீதம்) என்பன; (Phil.) conditions of the soul, five in number, viz., wakefulness, dream, sound sleep, deep sleep and the transcendent state of deep sleep. ''ஆன்மாத் தங்கிய வஞ்சவத்தை'' (சிவப்பிர. 51).

[த. அஞ்சு. **Skt.** avasthā > த. அவத்தை = நிலை. அஞ்சவத்தை (இ.பி.).]

அஞ்சற்கட்டு *añjaṟ-kaṭṭu*, பெ. (n.) அஞ்சற்பை பார்க்க; see *añjaṟ-pai*.

[அஞ்சல் + கட்டு.]

அஞ்சற்கடிதம் *añjaṟ-kaḍidam*, பெ. (n.) மடல்; letter by post. அஞ்சல் மடல் பார்க்க; see *añjal-maḍal*.

[அஞ்சல் + கடிதம்.]

அஞ்சற்காரன் *añjaṟ-kāraṉ*, பெ. (n.) அஞ்சற் கடிதம், கட்டு முதலியன கொண்டுவந்து கொடுப் பவன்; a post or courier, post-runner, post-man.

ம. அஞ்சல்காரன்; க. அஞ்செகார; தெ. அஞ்செகாடு.

[அஞ்சல் + காரன்.]

அஞ்சற்குழற்சி *añjaṟ-kuḻaṟci*, பெ. (n.) 32 வகைச் செயற்கை நஞ்சுகளுள் ஒன்று (குங்கும பாடாணம்); one of the 32 kinds of processed arsenic preparations (சா.அக.).

அஞ்சற்குளச்சி *añjaṟ-kuḷacci*, பெ. (n.) அஞ்சற் குழற்சி பார்க்க; see *añjaṟ-kuḻaṟci*.

அஞ்சற்சான்று *añjaṟ-cāṉṟu*, பெ. (n.) அஞ்சல் வழி மடல் அனுப்பியதற்கான சான்று; certificate of posting.

[அஞ்சல் + சான்று.]

அஞ்சற்பணவிடை *añjaṟ-paṇa-viḍai*, பெ. (n.) அஞ்சல்வழிப் பணம் அனுப்புதல்; money-order, sending money by post.

[அஞ்சல் + பணம் + விடை. விடு → விடை.]

அஞ்சற்பணவிடைத்தாள் *añjaṟ-paṇa-viḍai-t-tāḷ*, பெ. (n.) அஞ்சல்வழிப் பணம் அனுப்புதற் குரிய படிவம்; money-order form.

[அஞ்சல் + பணம் + விடை + தாள்.]

அஞ்சற்பற்றுச்சீட்டு *añjaṟ-paṟṟu-c-cīṭṭu*, பெ.(n.) அஞ்சல்வழிப் பணம் அனுப்பியதற்கான பற்றுச்சீட்டு; money-order receipt.

[அஞ்சல் + பற்று + சீட்டு.]

அஞ்சற்பிரிப்பு *añjaṟ-pirippu*, பெ. (n.) மடல்கள் சென்று சேரவேண்டிய இடங்களுக்கு ஏற்பப் பிரித்து ஒழுங்குபடுத்தப்படுதல்; sorting of the letters.

[அஞ்சல் + பிரிப்பு.]

அஞ்சற்பெட்டி *añjaṟ-peṭṭi*, பெ. (n.) அஞ்சல் போடும் பெட்டி; post-box.

[அஞ்சல் + பெட்டி.]




அஞ்சற்பெட்டி

அஞ்சற்பை *añjaṟ-pai*, பெ. (n.) மடல்களை இட்டுக் கட்டும் பை; postal bag.

[அஞ்சல் + பை.]

அஞ்சற்றலை *añjaṟṟalai*, பெ. (n.) மடல்களுக்கு ஒட்டப்படும் அஞ்சல் வில்லை; postal stamp.

[அஞ்சல் + தலை.]

**அஞ்சறைப்பெட்டி** *añj(u)-aṟai-p-peṭṭi*, பெ. (n.) *மஞ்சள், மிளகு முதலிய கறிச்சரக்குகள் வைப்பதற்குரிய ஐந்தறையுள்ள மரப்பெட்டி*; a spice-box made of wood with five compartments.

*[ஐந்து → அஞ்சு + அறை + பெட்டி.]*



அஞ்சறைப் பெட்டி

அஞ்சலப்பெட்டி, அஞ்சனப்பெட்டி, அஞ்சாரப்பெட்டி யென்னும் வடிவங்கள் கொச்சையாதலின் கொள்ளத்தக்கனவல்ல.

**அஞ்சனம்** *añjaṉam*, பெ. (n.) *தெய்வப் படிமையை மந்திரங் கூறி நீராட்டுகை*; a ceremonial bath given to the idol of the deity. *மஞ்சனம்* பார்க்க; see *mañjaṉam*.

**அஞ்சாங்காய்ச்சலுப்பு** *añjāṅ-kāyccal-uppu*, பெ. (n.) *தமிழ் (சித்த) மருத்துவ முறைப்படி ஐந்துதரங் காய்ச்சித் துப்புரவு செய்த ஒருவகை வெடியுப்பு*; a kind of salt, boiled and purified five times according to the special process laid down in Tamil (Siddhās) medical science.

*[ஐந்தாம் → அஞ்சாம் + காய்ச்சல் + உப்பு.]*

**அஞ்சாங்குலத்தான்** *añjāṅ-kulattāṉ*, பெ. (n.) *நால் வரணத்திற்கும் அப்பாற்பட்ட ஐந்தாங் குலத்தான் (பஞ்சமன்) எனப்பட்டவன்*; one belonging to the 5th caste.

*[ஐந்தாம் → அஞ்சாம்+ குலத்தான் – அஞ்சாங் குலத்தான்.]*

**அஞ்சாச்சிறப்பு** *añjā-c-ciṟappu*, பெ. (n.) *வாகைத் திணை வேறுபாடுகளுள் ஒன்றான 'சான்றோர் பக்கம்'*; theme describing the nobility of great men. 'சான்றோர் பக்க' மாவது, பகைவர்கண்ணுந் தன்பாலார் கண்ணு மொப்புமையாகப் பாசறையுள்ளாச் சால்புடைமை கூறுதல். 'அஞ்சாச் சிறப்பென் பதுமது' (வீரசோ. பொருட். 19, உரை).

*[அஞ்சாத → அஞ்சா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + சிறப்பு.]*

**அஞ்சாணிமூலி** *añjāṇi-mūli*, பெ. (n.) *அச்சாணிமூலி* பார்க்க; see *accāṇi-mūli*.

**அஞ்சாப்பட்டயம்** *añjā-p-paṭṭayam*, பெ. (n.) 1. *பகைவனுக்குத் தப்பிப் புகலடைந்தவனுக்கு அரசன் தரும் அடைக்கலப் பட்டயம்* (யாழ்ப்.); writ of authority granting refuge or protection. 2. *குற்றத்தாலிழந்த வுரிமைகளை மீளப் பெறுவதற்கு அரசன் அளிக்கும் குடியுரிமைப் பட்டயம்* (யாழ்ப்.); royal certificate, formerly inscribed on metal, clearing a person from a charge of guilt and re-establishing his or her rights as a citizen. 3. *பிறர் கொடுமை செய்யாவாறு அரசன் அளிக்கும் காப்புறுதிப் பட்டயம்* (யாழ்ப்.); writ of authority as security against oppression and ill-treatment by others (J.).

*[அஞ்சாத → அஞ்சா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + பட்டயம்.)*

**அஞ்சாமை** *añjāmai*, பெ. (n.) *அரசன் வினை செய்ய அச்சமுறாமை*; fearlessness, as a kingly character.

''அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு''
(குறள், 382).

**அஞ்சாலி** *añj(u)-āli*, பெ. (n.) *பழைய வரிவகை* (T.A.S. v, 218); an ancient petty cess.

*[ஒருகா. அஞ்சு + ஆலி. ஐந்து → அஞ்சு. அகல் = ஒரு முகத்தல் அளவு. அகல் → ஆல் → ஆலி = அகலளவு நெல். அஞ்சாலி = ஐந்தகல் நெல்.]*

**அஞ்சாலிகள்** *añjāligaḷ*, பெ. (n.) *நில வருமானத்தில் ஐந்திலொரு பங்கை மட்டும் வைத்துக் கொண்டு நான்கு பங்கை அரசனுக்குக் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்ட உழுகுடிகள்* (இராட்.); cultivators who were entitled to only one-fifth of the produce of their cultivation, the remainder being compulsorily paid to the king (R.).

*[ஒருகா. ஐந்திலொன்று சாலி = நில வருமானத்தில் அல்லது விளைச்சலில் ஐந்திலொரு பங்கை யுடையவன். சாலுதல் = பொருந்துதல், உடைமை கொள்ளுதல். சால் → சாலி = உடைய - வன் - வள் - து.]*

**அஞ்சாலியிடையர்** *añjāli-y-iḍaiyar*, பெ. (n.) *மணமான பெண்கள் மங்கல அணியாக ஐந்தாலியணியும் இடையர் வகுப்பார்* (வின்.);

herdsmen of a particular sub-caste whose women wear *tāli*, with five jewels.

ம. அஞ்சாலி இடையர்

[ஐ = ஐந்து. ஐ + தாலி + இடையர் – ஐந்தாலியிடையர் → அஞ்சாலியிடையர்.]

அஞ்சாவிரா *añjāvirā*, பெ. (n.) கருங்குமிழ்; heart-leaved bell vervein, *Gmelina arborea* (சா.அக.).

அஞ்சானனம் *añjāṉaṉam*, பெ. (n.) அஞ்சா முகம்; lion, as a fearless animal, fearless face.

அஞ்சானனன் *añj(u)-āṉaṉaṉ*, பெ. (n.) ஐந்து முகமுள்ள சிவன்; Śiva, as having five faces.

[ஐந்து → அஞ்சு. **Skt.** ānana > த. ஆனனம் = முகம். ஆனனம் → ஆனனன் = முகன். அஞ்சு + ஆனனன் – அஞ்சானனன்.]

அஞ்சி[1] *añji*, பெ. (n.) கடையெழு வள்ளல்களுள் ஒருவனான அதியமான் (அதிகமான்) அஞ்சி (புறநா. 91 : 4); *Adiyamāṉ Añji*, a munificent chief of the Sangam age.

ம. அஞ்சி

[ஒருகா. அச்சன் → அச்சி → அஞ்சி.]

அஞ்சி[2] *añji*, பெ. (n.) அஞ்சல்; letter by post. அஞ்சியில் பணம் வந்தது (உ.வ.).

க. அஞ்செ; தெ. அஞ்சிய; து. அஞ்சல்; மரா. அஞ்சீ.

அஞ்சி[3] *añji*, பெ. (n.) அஞ்சுபவன்; coward. 'அஞ்சி அஞ்சி வாழ்வதைவிட அஞ்சாமற் சாவதே மேல்', 'அஞ்சி ஆண்மை செய்ய வேணும்', 'அஞ்சினவனைக் குஞ்சும் விரட்டும்' (பழ.).

க. அஞ்சுகுளி

அஞ்சிக்கை *añjikkai*, பெ. (n.) அச்சம்; fear.

ம. அஞ்சல்; க. அஞ்சிகெ; தெ. அஞ்சிக, அச்சிகமு; து. அஞ்சிகெ; துட. ஒசிக்; கோத., கொலா. அஞ்சல்க்; கூ. அசு; குவி. அச்சலி; பிரா. கீசிங்.

அஞ்சிகம் *añjigam*, பெ. (n.) கண்; eye.

''பொய்த்தொரு அஞ்சிகத்தி லிட்டு நன்றாய்ப் பொருந்தியே நீபார்க்கில் திறக்கும் தூசு'' (கருவூ. குருநூல்).

தெ. அஞ்சிகமு

அஞ்சிமூலம் *añji-mūlam*, பெ. (n.) பழைய வரி வகை (T.A.S. iii, 216); an ancient tax.

[ஒருகா. அஞ்சுமூலம்.]

அஞ்சிலேபிஞ்சிலே *añjilē-piñjilē*, கு.வி.எ. (adv.) இளம்பருவத்தில்; in the young age. அஞ்சிலே பிஞ்சிலே அடித்து வளர்க்க வேண்டும் (உ.வ.). 'அஞ்சிலே பிஞ்சிலே கொஞ்சாமல் அறுபதிற்குமேல் கொஞ்சினானாம்', 'அஞ்சிலே பழுத்து ஆறிலே விழுந்தான்', 'அஞ்சிலே வளையாதது ஐம்பதிலே வளையுமா?' (பழ.).

[அஞ்சு = ஐந்து அகவை. பிஞ்சு = இளங்காய். இரு சொல்லும் இளமை குறித்து ஒரு பொருளில் வந்த மரபு இணைமொழி (idiomatic pair of words).]

அஞ்சினான் புகலிடம் *añjiṉāṉ-pugal-iḍam*, பெ. (n.) பகைவருக்கஞ்சினார் அடைக்கலம் புகுமிடம்; refuge for the terrified, asylum for the timid (T.A.S. iv, 98).

[அஞ்சினான் + புகல் + இடம்.]

அஞ்சினி *añjiṉi*, பெ. (n.) 1. ஐந்தாம் மாதம்; fifth month. 2. ஐந்து மாதச் சூலி (கருப்பிணி); a woman with five months of pregnancy.

[அஞ்சு + இனி (பெ.பா. ஈறு) – அஞ்சினி. ஒ.நோ: பாடி → பாடினி.]

அஞ்சு[1] *añju*, பெ. (n.) 1. ஐந்து; five. ''அஞ்சு வைகலில் வகன்கிரி நண்ணி'' (கந்தபு. தக்ஷ. வள்ளி. 225). அஞ்சுவிரலும்பட அடித்தான் (உ.வ.). 'அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை', 'அஞ்சுபுலன் அடங்கினால் அகிலமும் அடங்கும்', 'அஞ்சாவது பெண் கெஞ்சினாலும் கிடையாது', 'அஞ்சு காசுக்குக் குதிரையும் வேண்டும், அது ஆற்றைக் கடக்கப் பாயவும் வேண்டும்' (பழ.). 2. கவறாட்டத்தில் வழங்கும் ஒரு குழூஉக்குறி; a cant used in dice-play. ''அஞ்சென்பர்'' (கந்தபு. தக்ஷ. கயமுகனுற். 167).

ம. அஞ்சு; க. அய்து; தெ., கொலா., குருக்., குரும். ஐது; து. ஐநு; குட. அஞ்சி; கோத. அஞ்ச்; துட. உச்; கூ. சிங்கி; கோண்டு. ஐயன், ஐகு, சையுங், பையுங்; பர். சேந்து, சேவிர் (ஐவர்); நா. ஐது, சேகுர் (ஐவர்).

[ஐந்து → அஞ்சு.]

அஞ்சு[2] *añju*, பெ. (n.) அச்சம்; fear, terror. ''அஞ்சுவரத் தகுந'' (புறநா. 41).

**அஞ்சு-தல்** *añju-*, 5 செ.கு.வி., 5 செ.குன்றாவி. (v.i. & v.t.) 1. ***வெருவுதல்*** (பயப்படுதல்); to fear, dread. "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை" (குறள், 428). 2. ***மதித்தல்***; to respect, venerate. 3. ***வணங்குதல்***; to worship.

ம. அஞ்சுக; க., தெ. அஞ்சு; து. அஞ்சுனி; பட. அஞ்சினெ; கொலா., கொண்., கோத. அஞ்த்; துட. ஒச்; கூ. அச; பிரா. ஹீசிங்; குவி. அச்சலி, அச்சரி, அச்சி.

*[அங்கு → அஞ்சு. அங்குதல் → அஞ்சுதல் = வளைதல், வணங்குதல், வெருவுதல். ங்கு → ஞ்சு.]*

**அஞ்சுகம்** *añjugam*, பெ. (n.) ***கிளி*** (சிந்தா.நி.); parrot.

*[த. அம் (அழகிய) +* **Skt.** *suka > த. சுகம் = கிளி. அஞ்சுகம் (இ.பி.).]*

**அஞ்சுகொம்பு** *añju-kombu*, பெ. (n.) ***ஐம்பொறி***; the five sensory organs.

"கப்பான அஞ்சுகொம்பில் மனந்தான்
சென்று
கலக்கத்தில் விழுகாதே கருத்தூன் றிப்பார்"
(கொங்க. வாத காவியம்) — (சா.அக.).

**அஞ்சுங்குளிர்-தல்** *añjuṅ-kuḷir-*, 2 செ.கு.வி.(v.i.) ***ஐம்பொறியும் இன்பமடைதல்***; to be in ecstasy, as having all the five senses participate in the joy. 'அகங்குளிர்ந்தால் அஞ்சுங்குளிரும்'(பழ.).

*[அஞ்சு = ஐம்பொறி (தொகைக்குறிப்பு). குளிர்தல் = இன்பந் தருதல், இன்புறுதல். வெப்பநாட்டில் தட்பம் இன்பம் தருவதால், குளிர்ச்சி இன்பத்தைக் குறித்தது.]*

**அஞ்சு சுண்ணாம்புக்குகை** *añju-šuṇṇāmbu-k-kugai*, பெ.(n.) ***ஐந்துவகைச் சுண்ணாம்பினாற் செய்த குகை***; அதாவது, கடல் நுரை, கல்லுப்பு, வெடியுப்பு, சீனக்காரம், சூடன் ஆகிய இவ்வைந்து சரக்குகளைத் தனித்தனியாக ஊதிச் சேர்த்து அரைத்து மூசை செய்து, அதற்குள் வேதைக்குண்டான உலோகங்களை அல்லது உபரசச் சத்துகளை வைத்து உருக்குங் குகை.

"வாதமஞ்சி யிதைக்கண்டால் வாயைப்
பொத்தும்
வாதிக்கு மிதைவிட்டால் சுண்ணாம்
பில்லை
போதவஞ்சு குகைக்குள்ளே சூதம் நீறும்
பொன்னீறும் வெள்ளிமுதல் போக்கு நீறும்
நாதமஞ்சும் உபரசங்க ளெல்லாம் நீறும்
நாதவிந்து முதல்நீறும் நாட்டில் காணே"
(கொங்க. வாத காவியம்).

A crucible made of five kinds of calcium compounds after grinding them into a paste. These compounds are derived by burning each of the following five substances into ash, viz., sea-froth, rock-salt, nitre, alum and camphor. The crucible thus prepared is capable of enduring extreme heat, even under a severe and scorching test, and this is made clear from the above stanza quoted from the Konganava's work on alchemy (சா.அக.).

*[ஐந்து + சுண்ணாம்பு + குகை. ஐந்து → அஞ்சு.]*

**அஞ்சுநீர்** *añju-nīr*, பெ. (n.) 1. ***சரக்குகளைக் கட்டப் பயன்படுத்தும் ஐந்துவகை மருந்து நீர்***; five kinds of liquid extracts used in medicine or in alchemy for consolidating drugs or metals that cannot stand the test of fire. 2. ***ஐந்து வகைச் சரக்குகளைக் கொண்டு உருவாக்கும் ஒருவகைச் செயநீர்***; a liquid medicine prepared from a mixture of five drugs (சா.அக.).

செயனீர் (செயல்நீர்) என்பது செயநீர் எனத் தவறாகக் குறிக்கப்பட்டது போலும்.

**அஞ்சுநீறு** *añju-nīṟu*, பெ. (n.) 1. ***ஐந்துவகைச் சுண்ணம்***; five kinds of calcined calcium compounds. 2. ***ஐம்மாழைச் சுண்ணம்*** (பஞ்சலோக பற்பம்); a calcined product of five metals.

**அஞ்சுப்பு** *añj(u)-uppu*, பெ. (n.) ஐந்துப்பு பார்க்க; see *aind(u)-uppu*.

*[ஐந்துப்பு → அஞ்சுப்பு.]*

**அஞ்சுபஞ்சலத்தார்** *añju-pañjalattār*, பெ. (n.) ***தச்சர், கம்மியர் (கற்றச்சர்), கொல்லர், கன்னார், தட்டார் என்னும் ஐவகைக் கொல்லர் அல்லது கம்மாளர்*** (I.M.P. Cg. 371); the five artisan classes.

*[அஞ்சு கம்மாளர் → பஞ்ச கம்மாளர் → பஞ்ச கம்மாளம் → பஞ்ச கம்மாளத்தார் → பஞ்சாளத் தார் → பஞ்சலத்தார்.]*

பஞ்சலத்தார் என்பது, அஞ்சு என்னும் பொருள் மறைந்து ஒரே குலப்பெயர்போல் வழங்கத் தலைப்பட்டபின், அஞ்சு என்னும் சொல்லை மிகைபடக் கூறலாக முற்சேர்க்க வேண்டியதாயிற்று. பஞ்ச என்னும் வட சொல் நிலைமொழியும், சிதைவு நிலையில் அஞ்சு என்னும் பொருள் மறைய ஓரளவு துணைசெய்தது.

பஞ்ச கம்மாளர் என்பது இருபிறப்பி (hybrid). அரைஞாண் (நாண்) என்பது, வருஞ் சொற்பொருள் மறைந்தபின் அரைஞாண் கொடி எனப் பின்மிக்கது போல், பஞ்சலத் தார் என்பது நிலைச்சொற்பொருள் மறைந்த பின் அஞ்சு பஞ்சலத்தார் என முன்மிக்கது.

**அஞ்சுபதம்** *añju-padam*, பெ. (n.) ***சிவ வழிபாட்டு மந்திரமாகிய சிவாயநம என்னும் திரு வைந்தெழுத்து***; the five-lettered mantra *ši vā ya na ma,* uttered in the worship of Šiva. "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" (தேவா. 7.83 : 1).

பதினெட்டாம்நாட் பெருக்கு என்பது பதினெட்டாம்பெருக்கு என இடைத் தொக்கது போன்று, அஞ்செழுத்துப் பதம் என்பது அஞ்சுபதம் என இடைத்தொக்கது.

[*த. ஐந்து → அஞ்சு* + Skt. pada > *த. பதம். அஞ்சுபதம் (இ.பி.).*]

**அஞ்சுபயம்** *añju-payam,* பெ. (n.) *ஐந்து பயம் பார்க்க;* see *aindu-payam.*

**அஞ்சுமணிப்பூ,** *añju-maṇi-p-pū*, பெ. (n.) ***சாயுங் காலம் 5 மணிக்குப் பூக்கும் அந்திமந்தாரை***; a flower that opens out its petals at 5 p.m.

[*ஐந்து → அஞ்சு + மணி + பூ.*]

**அஞ்சுமுத்திரைத்தகடு** *añju - muttirai-t-tagaḍu,* பெ. (n.) ***ஐந்து முத்திரைத் தகடு*** பார்க்க; see *aindu-muttirai-t-tagaḍu.*

[*ஐந்து → அஞ்சு + முத்திரை + தகடு.*]

**அஞ்சுமுத்துத்தாவடம்** *añju-muttu-t-tāvaḍam,* பெ. (n.) ***ஐந்து முத்துவடங்கள் சேர்ந்த கழுத் தணி***; a necklace of five strings of pearls. 'அஞ்சு முத்துத் தாவட மொன்றா யிருக்கு மது' (திவ். பெரியதிரு. *1.1 : 5*, அரும்.).

[*ஐந்து → அஞ்சு + முத்து + தாழ்வடம் → தாவடம். வடம் = திரண்ட கொடி அல்லது கோவை.*]

**அஞ்சுமேனிதிரமம்** *añju-mēṉi-tiramam,* பெ. (n.) *ஒரு பழங்காசு* (M.E.R. 322 of 1923); an ancient coin.

[*ஒருகா. திரம் (திடம், உறுதி) → திரமம்.*]

**அஞ்சுருக்காணியுப்பு** *añjurukkāṇi-y-uppu,* பெ. (n.) *முடியண்ட படருப்பு*; a kind of salt extracted from the human skull by a special process known only to Siddhās, and used in alchemy (சா.அக.).

[*ஒருகா. அஞ்சு + உருக்கு + ஆணி + உப்பு.*]

**அஞ்சுருவாணி**[1] *añj(u)-uruvāṇi,* பெ. (n.) ***தேரின் ஐந்து தட்டையும் ஊடுருவிச் செல்லும் நடு அச்சாணி***; centre-bolt binding together the five tiers of a temple car. "தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே தன்னிலசை யாது நிற்கும்" (தாயு. மௌன. 9). 'அஞ்சுரு ஆணியில்லாத் தேர் அசைவதரிது' (பழ.).

[*அஞ்சு + உருவு + ஆணி. அஞ்சு = ஐந்து தட்டு (தொகைக்குறிப்பு).*]

**அஞ்சுருவாணி**[2] *añjuruvāṇi,* பெ. (n.) 1. ***துருசு***; copper acetate. 2. ***பூநீறு***; an efflorescent salt collected in the soil of fuller's earth (சா.அக.).

**அஞ்சுருவாணி**[3] *añjuruvāṇi,* பெ. (n.) (மெய்ப்.) ***மூல நிலைக்களத்தினின்று (மூலாதாரத்தி னின்று) புருவ நடுவிலுள்ள ஈரிதழி (ஆக்ஞை) வரைக்கும் கத்தரி மாறலாகப் பாயும் பான் (தச) நாடி***; (Phil.) the ten vital airs, said to operate in the human body, controlling or regulating the functions of different organs from the sacral region upto the centre of the cerebral region, and supposed to cross mutually at 5 different centres in the human system, intersecting like the two blades in a pair of scissors (சா.அக).

[*அஞ்சு + உருவு + ஆணி.*]

**அஞ்சுருவாணிப்பூட்டு** *añjuruvāṇi-p-pūṭṭu,* பெ. (n.) ***துருசுச் செம்பு***; copper extracted from copper sulphate or copper acetate (சா.அக.).

[*அஞ்சுருவாணி + பூட்டு.*]

**அஞ்சுருவாணிமூலம்** *añjuruvāṇi-mūlam,* பெ. (n.) ***எல்லாவகை மருந்தையும் நீறாக்குந் தன்மை யுடைய முப்பு***; an old name for the supposed Universal Solvent, as well as for a medicine for all kinds of diseases (சா.அக.).

**அஞ்சுருவாணியுப்பு** *añjuruvāṇi-y-uppu,* பெ. (n.) 1. ***கல்லுப்பு***; salt precipitated at the bottom of the sea. 2. ***பூநீறு***; an efflorescent salt found in the soil of fuller's earth (சா.அக.).

**அஞ்சுவண்ணத்தி** *añju - vaṇṇatti,* பெ. (n.) ***ஐந்துநிறங் கலந்த ஐம்புள் நஞ்சு (பஞ்சபட்சி பாடாணம்)***; a kind of poison emitting five colours.

**அஞ்சுவண்ணம்** *añju-vaṇṇam,* பெ. (n.) ***ஒருசார் வணிகர் குழு*** (T.A.S. ii, 69); a trade guild.

**அஞ்சுவரணத்தான்** (வரணத்தோன்) *añju-vara-ṇattāṉ* (varaṇattōṉ), பெ. (n.) **துத்தநாகம்** (இராட்.); zinc (R.).

*[ஐந்து வரணம் → ஐந்து வரணத்தான் → அஞ்சு வரணத்தான். வரணத்தான் → வரணத்தோன்.]*

**அஞ்சுவன்னம்** *añju-vaṉṉam*, பெ. (n.) **அஞ்சுவண்ணம்** பார்க்க; see *añju-vaṇṇam*. ''அயன் மிகு தானைய ரஞ்சுவன் னத்தவர்'' (களவியற். பக். 93).

*[அஞ்சுவண்ணம் → அஞ்சுவன்னம்.]*

**அஞ்சுவனத்தார்** *añju-vaṉattār*, பெ. (n.) **தறிநெய்யும் முகம்மதியருள் ஒரு பிரிவார்** (இராட்.); a sect of Muhammadan weavers (R.).

**அஞ்சுவிரலி** *añju-virali*, பெ. (n.) **ஐவிரலி** பார்க்க; see *ai-virali*.

**அஞ்சூகம்** *añjūgam*, பெ. (n.) *சிவப்பு அறைக்கீரை*; a red variety of garden greens, *Amaranthus gangeticus* (சா.அக.).

**அஞ்செடுப்பு** *añj(u)-eḍuppu*, பெ. (n.) **பூப்படைந்த பெண் குளித்த நாளில் தன் எதிர்காலப் பிள்ளைப்பேற்றிற் கறிகுறியாக, நிலத்திற் கீறிய ஐஞ்சதுரத்தினின்று பொருள்களைத் தன் மடியில் எடுத்துவைக்குஞ் சடங்கு** (இ.வ.); ceremony performed by a girl, on the day she bathes after attaining puberty, by placing in her lap articles from five squares marked on the ground, thus indicating her future role as mother of children (Loc.).

*[அஞ்சு = ஐந்து பொருள் அல்லது பாவை (தொகைக்குறிப்பு). எடுப்பு = மடியிலெடுத்து வைப்பு.]*

**அஞ்செண்ணெய்த்தயிலம்** *añj(u)-eṇṇey-t-tayilam*, பெ. (n.) **ஐந்தெண்ணெய்த்தயிலம்** பார்க்க; see *aind(u)-eṇṇey-t-tayilam*.

*[அஞ்சு + எண்ணெய் (எள் + நெய்) + தயிலம். **Skt.** tila (எள்) → தைல > த. தயிலம்.]*

**அஞ்செருப்புடம்** *añj(u)-eru-p-puḍam*, பெ. (n.) **ஐந்து வறட்டியைக் கொண்டு போடும் புடம்**; a fire raised with five dry cow-dung cakes, used for calcination (சா.அக.).

*[அஞ்சு + எரு + புடம்.]*

**அஞ்செலி** *añjeli*, பெ. (n.) 1. **காட்டுப்பலா**; jungle jack, *Artocarpus hirsuta* (சா.அக.). 2. **ஆடுதின்னாப்பாலை** (சித்.அக.); worm-killer. 3. **தாழை** (பச்.மூ.); fragrant screw pine (செ.அக.).

**அஞ்செவி** *añjevi* (am-ševi), பெ. (n.) **உட்காது**; cavity of the ear. ''அஞ்செவி நிறைய வாலின'' (முல்லைப். 89).

*[அகம் = உள். அகம் + செவி – அகஞ்செவி → அஞ்செவி. ஒ.நோ: அகங்கை → அங்கை.]*

**அஞ்செழுத்து** *añj(u)-eḻuttu*, பெ. (n.) **சி வா ய ந ம அல்லது ந ம சி வா ய என்னும் ஐந்தெழுத்துக் கொண்ட திருவைந்தெழுத்து என்னும் சிவ வழிபாட்டு மந்திரம்**; the five-lettered mantra, viz., *na ma ši vā ya* or *ši vā ya na ma*, uttered in the worship of Šiva. ''அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க'' (சி.சி. சுபக். 9 : 8). 'அஞ்செழுத்தும் பாவனையும் அப்பனைப் போல் (அவனைப்போல்) இருக்கிறது' (பழ.).

இவ் வைந்தெழுத்துள், 'சி' சிவத்தையும், 'வ' அருளையும், 'ய' ஆதனையும் (ஆன்மாவையும்), 'ந' மறைப்பாற்றலையும் (திரோதான சக்தியையும்), 'ம' ஆணவக் குற்றத்தையும் குறிக்கும் (சிவப்பிர. 97, உரை).

*[அஞ்சு + எழுத்து.]*

**அஞ்சைக்களம்** *añjai-k-kaḷam*, பெ. (n.) **மேல்கரைக் கொடுங்கோளூரிலுள்ள சிவன்கோயில்**; Šiva temple at *Koḍuṅgōḷūr*, the modern Cranganore, on the West coast. ''கடலங் கரைமேன் மகோதை..................அஞ்சைக்களத் தப்பனே'' (தேவா. 7.4 : 1).

மறுவ. திருவஞ்சைக்களம்

**அஞ்சோளம்** *añjōḷam*, பெ. (n.) எருக்கு; giant swallow-wort, sun plant, *Calotropis gigantea* (சா.அக.).

**அஞ்ஞலம்** *aññalam*, பெ. (n.) **கொசு**; mosquito (சா.அக.). **அஞல்** பார்க்க; see *añal*.

**அஞ்ஞலாத்தி** *aññalātti*, பெ. (n.) **நோய் கொண்டவள்**; a sickly woman (சா.அக.).

**அஞ்ஞாழிக்கால்** *aññāḻi-k-kāl*, பெ. (n.) **ஐந்து நாழி கொண்ட மரக்கால்** வகை (S.I.I. iii, 241); a grain measure of five *nāḻis*.

ம. அஞ்ஞாழி

*[ஐ + நாழி + கால் – ஐந்நாழிக்கால் → அஞ்ஞாழிக்கால். கால் = மரக்கால்.]*

**அஞ்ஞான்று** *aññāṉṟu*, கு.வி.எ. (adv.) 1. **அப்போது**; on that occasion, at that time.

''அஞ்ஞான் றாடலை வெஃகி'' (கந்தபு. தக்ஷ. காளிந்திப். 15). 2. *அந்த நாளில்*; on that day.

ம. அன்னு; க. அந்து; து. ஆனி; தெ. நாடு; கோண். ஆண்டி; கூ. அண்டி.

*[அ + ஞான்று.]*

**அஞ்ஞை**[1] *aññai*, பெ. (n.) *அன்னை*; mother. ''அஞ்ஞைநீ யேங்கி யழலென்று'' (சிலப். 9 : 24).

தெ. அன்னு; பிராகி. அன்னி.

*[அம்மை → அன்னை → அஞ்ஞை.]*

**அஞ்ஞை**[2] *aññai*, பெ. (n.) *அழகு* (பொதி.நி.); beauty.

*[அம் = அழகு. அம் → அம்மை = அழகு. அம்மை → அஞ்ஞை.]*

**அஞர்**[1]**-தல்** *añar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. *தளர்தல்*; to become weary, to faint. 2. *சோம்புதல்* (திவா.); to be lazy, slothful.

*[அயர் → அஞர். அயர்தல் = தளர்தல், வருந்துதல்.]*

**அஞர்**[2] *añar*, பெ. (n.) 1. *நோய்* (திவா.); disease. 2. *துன்பம்*; distress, calamity. ''பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கி'' (புறநா. 247 : 6). 3. *வழிநடந்த வருத்தம்*; fatigue. ''ஆர வுண்டு பேரஞர் போக்கி'' (பொருந. 88). 4. *அச்சம்* (திவா.); fear. 5. *வழுக்குநிலம்* (திவா.); slippery ground.

*[அயர் → அஞர் = தளர்ச்சி, நோய், துன்பம், அச்சம்.]*

**அஞராட்டி** *añarāṭṭi*, பெ. (n.) *நோயுள்ளவள்*; sickly woman. ''அழிவுடை யுள்ளத் தாரஞராட்டி'' (சிலப். 13 : 80).

**அஞல்** *añal*, பெ. (n.) *கொசுகு* (சிந்தா.நி.); a species of gnat.

*[அள் = கூர்மை. அள் → அய் → அயல் → அஞல் = கூரிய உறிஞ்சியாற் குருதியை உறிஞ்சுவது.]*

**அஞலம்**[1] *añalam*, பெ. (n.) 1. *கொசு*; mosquito. 2. *நுளம்பு* (திவா.); a species of gnat.

*[அஞல் → அஞலம். 'அம்' பெருமைப்பொருட் பின்னொட்டு.]*

அஞல் பார்க்க; see *añal*.

**அஞலம்**[2] *añalam*, பெ. (n.) *ஐவிரை* (*பஞ்சவாசம்*) (பொதி.நி.); the five aromatics.

*[ஒருகா. ஐ + நலம் – ஐந்நலம் → ஐஞ்ஞலம் → அஞலம். நலம் = நறுமை (வாசனை).*

*கை (விரல் தொகை) = ஐந்து. வறட்டி முதலிய பொருள்களை விற்கும்போது, ஒவ்வோர் ஐந்தையும் ஒவ்வொரு கை என்று சொல்வது வழக்கம். கை → ஐ → ஐது → ஐந்து → அஞ்சு.]*

"In some languages the word used to signify five properly means a hand, or is derived from a word which has that meaning, —the number of fingers on each hand being five. In Lepsius's opinion, the word for ten, which is used in all the Indo-European dialects, had its origin in the Maeso-Gothic *tai-hun*, two hands. Applying this principle to the Dravidian languages, *ei*, five, might be presumed to be derived from *kei*, Tam. a hand, by the process of the softening away of the initial consonant."—(C.C.G.D.L., pp. 338-39).

In many languages the word for 'five' is identical with or similar to the word for 'hand'; 'ten' is frequently 'two hands' or 'pair of hands' or 'the upper part'; 'twenty' is in some languages called 'all digits', 'hands and feet', 'the whole man' or something of the sort. There are also expressions for the numbers from six to nine which are clearly based on finger counting, since they say for 'six' something like 'one on the left hand', for 'nine' perhaps 'one short of two hands'.—The Origin and Derivation of Language, pp. 183-4.

**அட்டக்கரி** *aṭṭa-k-kari*, பெ. (n.) *மிகக் கருப்பு, மிகக் கருப்பானது*; jet black, that which is jet black.

ம. அட்டக்கரி

*[ஒருகா. அண்டம் (அண்டங்காக்கை) போன்ற கருப்பு என்றிருக்கலாம். ஒ.நோ : நண்டுவாய்க்காலி → நட்டுவாய்க்காலி.]*

**அட்டக்கருப்பு** *aṭṭa-k-karuppu*, பெ. (n.) *மிகக் கருப்பு, மிக்க கருப்பு*; jet black.

'கறுப்பு' என்னும் வடிவம் சினத்தைக் குறிக்குஞ் சொல்லாதலால், கருநிறத்தைக் குறிக்குஞ் சொல்லைக் 'கருப்பு' என்றே சொல்லவும் எழுதவும் வேண்டும்.

''கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள'' என்று தொல்காப்பியம் (சொல். உரி. 75) கூறுதல் காண்க.

**அட்டக்காய்** *aṭṭa-k-kāy*, பெ. (n.) **சாதிக்காய்**; nutmeg, *Myristica fragrans* (சா.அக.).

**அட்டகசம்** *aṭṭakašam*, பெ. (n.) **ஆடாதோடை**; Malabar nut tree, justicewort, *Adhatoda vasica* (சா.அக.).

**அட்டகணி** *aṭṭakaṇi*, பெ. (n.) **அட்டகசம்** பார்க்க; see *aṭṭakašam*.

**அட்டகத்தாதி** *aṭṭagattādi*, பெ. (n.) **சிவப்புச் சர்க்கரைவள்ளி**; red sweet potato, panicled batatas, *Ipomaea digitata* alias *Convolvulus batatas* (சா.அக.).

**அட்டகம்** *aṭṭagam*, பெ. (n.) **வசம்பு** (மலை.); sweet flag.

**அட்டங்கால்** *aṭṭaṅgāl*, பெ. (n.) **அட்டணைக் கால்** பார்க்க; see *aṭṭaṇai-k-kāl*.

**அட்டணங்கால்** *aṭṭaṇaṅgāl*, பெ. (n.) **அட்டணைக்கால்** பார்க்க; see *aṭṭaṇai-k-kāl*.

**அட்டணை** *aṭṭaṇai*, கு.வி.எ. (adv.) **குறுக்கே** (வின்.); across.

*[அட்டம் + அணை.]*

**அட்டணைக்கால்** *aṭṭaṇai-k-kāl*, பெ. (n.) 1. **உட்கார்கையிற் கால்மேல் காலாகக் குறுக் காக மடக்கிவைக்குங் கால்**; folded legs in sitting cross-legged. 2. **கால்மேல் குறுக்காக இடுங் கால்**; one leg placed over the other in sitting, cross-legged.

*[அட்டம்+அணை+கால். அட்டம்=குறுக்கு. அணை = அணைக்கை, தழுவுகை, சேர்க்கை.]*

து. அட்டகாரு

**அட்டணைக்கால் போட்டிரு-த்தல்** *aṭṭaṇai-k-kāl-pōṭṭiru-*, 3 செ.கு.வி. (v.i.), **நாற்காலி போன்ற இருக்கைகளில் கால்மேல் காலிட்டு அமர்ந்திருத்தல்**; to sit cross-legged, especially on a raised seat like a stool, chair or bench.

*[அட்டம் = குறுக்கு. அணை = அணைக்கை, தழுவுகை, சேர்க்கை. அட்டம் +அணை – அட்டணை.]*


அட்டணைக்கால் போட்டிருத்தல்

**அட்டதிசம்** *aṭṭadišam*, பெ. (n.) எருக்கு (மலை.); madar, *Calotropis gigantea*.

**அட்டதிசை** *aṭṭadišai*, பெ. (n.) **அட்டதிசம்** பார்க்க; see *aṭṭadišam* (சா.அக.).

**அட்டதீரசம்** *aṭṭadīrašam*, பெ. (n.) **இரும்பு அரப்பொடி** (பரி.அக.); iron filings.

**அட்டதேறல்** *aṭṭa-tēṟal*, பெ. (n.) **காய்ச்சிய மது**; distilled arrack. "அட்ட தேறலு மடாதமை தேறலும்" (கந்தபு. மகேந். நகர்புகு. 60).

*[அடு → அட்ட = காய்ச்சிய. தேறு → தேறல் = தெளிவு, தெளிந்த மது, மது.]*

**அட்டநேமிநாதர்** *aṭṭanēminādar*, பெ. (n.) (சமணம்) **பொன்னெயில் வட்டத்திருக்கும் சமணப் பெரியோர்** (தக்கயாகப். 373, உரை); (Jain.) the sages in the *samavacaraṇam*.

**அட்டப்பல்லக்கு** *aṭṭa-p-pallakku*, பெ. (n.) **குறுக்காகக் கொண்டுபோகும்படி யமைக்கப் பட்டதும், மிகப் பெரியோர்க்கே பயன்படுத்தப் படுவதுமான சிவிகை வகை**; palanquin with curved roof having poles fixed at right angles to its body, so that it can be carried from the sides, used only for the most eminent persons.

*[அட்டம் + பல்லக்கு.]*

**அட்டம்**[1] *aṭṭam*, பெ. (n.) 1. **அருகு**; nearness. "அடர்க்கு நாய்க ளட்டமாக விட்டு" (பெரியபு. கண்ணப். 76). 2. **பக்கம்**; side. 'இரண்டட்டத்திலும் மரகதகிரியைக் கடைந்து மடுத்தாற்போல்' (அஷ்டாதச. அர்ச்சி. பிர. 3). 3. **குறுக்கு**; opposition, cross direction. மாட்டுக்கு அட்டத்திலே போகாதே (உ.வ.). 4. **மாறு, பகை**; hostility, enmity. "அட்டமாக வழுதிமேலமர்க்கெழுந்த தொக்குமே" (திருவிளை. கடல்சுவற. 9).

*[அடு→அட்டம். அடுத்தல்=பக்கஞ்செல்லுதல். அடுத்தற் கருத்தினின்று குறுகுதல், எதிர்த்தல் முதலிய கருத்துகள் தோன்றின.]*

**அட்டம்**[2] *aṭṭam*, பெ. (n.) 1. **மேல்வாய்**; palate. "அட்டத்திற் கட்டி" (திருமந். 799). 2. **அட்டாலை**; watch-tower on a fort (நாநார்த்த.). 3. **மேல்வீடு**; apartment on flat roof (சங்.அக.). 4. **மேல்மாடி**; upper storey. "அட்டமிடுந் துவசமும்" (இராமநா. பாலகா. 17). 5. **அரச மனை** (சங்.அக.); king's apartment.

ம. அட்டம்; க., து. அட்ட; தெ. அட்டமு; கோத. அட்த்; துட. ஒட்մு; பிராகி. அட்டோ.

*[எட்டம் → அட்டம். எட்டம் = உயரம்.]*

த. அட்டம் > **Skt.** aṭṭa.

**அட்டம்**[3] *aṭṭam*, பெ. (n.) சாதிக்காய் (மலை.); nutmeg.

**அட்டம்**[4] *aṭṭam*, பெ. (n.) வட்டம் (இராட்.); circle (R.).

[வட்டம் → அட்டம்.]

**அட்டம்**[5] *aṭṭam*, பெ. (n.) சோறு, உணவு; boiled rice, food.

ம. அட்டம்; க. அட்ட; தெ. அட்டமு.

[அடுதல் = சமைத்தல். அடு → அட்டம்.]

அடு²-தல் பார்க்க; see *aḍu*²-.

**அட்டம்பக்கம்** *aṭṭam-pakkam*, பெ. (n.) அடுத்த பக்கம் (யாழ்ப்.); adjoining side (J.).

**அட்டம்பாரி-த்தல்** *aṭṭam-pāri-*, 4 செ.கு.வி. (v.i.) 1. பக்கஞ்சார்ந்து செல்லுதல் (யாழ்ப்.); to walk by the side, walk abreast. 2. பக்க வாட்டில் அகலித்தல், பருத்தல் (யாழ்ப்.); to grow in bulk as a tree, an animal (J.).

ம. அட்டம்; தெ. அட்டமு; க. அட்ட.

[அடு → அட்டம். அடுத்தல் = பக்கஞ்செல்லுதல், அடுத்தற் கருத்தினின்று குறுகுதல், எதிர்த்தல் முதலிய கருத்துகள் தோன்றின.]

**அட்டமிடு-தல்** *aṭṭam-iḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) சுற்றுதல் (இராட்.); to turn, to move round (R.).

க. அடன; தெ. அடனமு.

[வட்டம் → அட்டம்.]

**அட்டமுகடு** *aṭṭa-mugaḍu*, பெ. (n.) உச்சி (யாழ்ப்.); top (J.).

**அட்டர்** *aṭṭar*, பெ. (n.) அட்டம்³ பார்க்க; see *aṭṭam*³.

[அட்டம் → அட்டர்.]

**அட்டரக்கு** *aṭṭarakku*, பெ. (n.) உருக்கிய மெழுகு அல்லது அரக்கு; melted wax or lac. "அட்டரக் கனைய செவ்வா யணிநலங் கருகி" (சீவக. 468).

[அடுதல் = காய்ச்சுதல், உருக்குதல். அட்ட + அரக்கு – அட்டரக்கு.]

**அட்டரித்தான்** *aṭṭarittāṉ*, பெ. (n.) கோவைக் கொடி; a creeper, Indian caper, *Bryonia grandis* (சா.அக.).

**அட்டலங்காய் புட்டலங்காய்** *aṭṭalaṅgāy-puṭṭa-laṅgāy*, பெ. (n.) தாய் அல்லது செவிலித்தாய், சிறுபிள்ளையின் கால்களை நீட்டிவைத்து, அவற்றைக் கணுக்கால்மேல் வலக்கையால் இடசாரியாகவும் வலசாரியாகவும் தடவிக் கொடுத்துக்கொண்டு, 'அட்டலங்காய் புட்டலங் காய்' என்று தொடங்கும் மரபுச்சொற்றொடர் களைச் சொல்லி, இறுதியில் தானே தன் வினா விற்கு விடை சொல்லும்போது பிள்ளையைச் சுட்டிக்காட்டும் விளையாட்டுக் காலப்போக்கு; a playful pastime for a child in which the mother or the foster-mother recites some traditional nursery rhymes beginning with the words *aṭṭalaṅgāy puṭṭalaṅgāy* while she keeps stroking the ankles of the child's outstretched legs with her right hand and finally points out towards the child answering the question she has posed in the rhymes.

மரபுச் சொற்றொடர்கள்

'அட்டலங்காய் புட்டலங்காய் அடுக்கடுக்
காய் மாதுளங்காய்
பச்சரிசி குத்திப் பரணமேலே வச்சிருக்கு
மாங்கா யுடைத்து மடிமேலே வச்சிருக்கு
தேங்கா யுடைத்துத் திண்ணையிலே
வச்சிருக்கு
எந்தப் பூனை தின்றது? (வினா)
இந்தப் பூனை தின்றது! (விடை)'

**அட்டலி** *aṭṭali*, பெ. (n.) மரவகை; a kind of tree, *Jatropha glauca* (Nels.).

**அட்டவண்ணைத்திருக்கை** *aṭṭavaṇṇai-t-tirukkai*, பெ. (n.) நெடுக்களவு 3 அடியும் குறுக்களவு 6 அடியுமுள்ள பெருந் திருக்கை மீன்; sting-ray, reddish brown fish, 6 feet across and 3 feet long, *Pteroplatea micrura*.

[ஒருகா. அட்டம் + வண்ணை + திருக்கை.]

**அட்டவணை** *aṭṭavaṇai*, பெ. (n.) 1. பொருட் பட்டி, பொருட்குறிப்பேடு, பதிவேடு, பேரேடு; index, ledger, register, catalogue. "அட்ட வணை யிட்டதுபோ லத்தனையுந் தானிருந்து" (பணவிடு. 30). 2. பதிவுபெற்ற பதவியாளர் என்பதைக் குறிக்கப் பதவிப் பெயருக்குமுன் சேர்க்கும் முன்னொட்டு. எ-டு: அட்டவணை அரசிறையாளர் (தாசில்தார்); prefix to an official designation to imply that the person holding the office is duly registered or gazetted as in *aṭṭavaṇai-t-tahsildār* (R.F.).

க. அட்டவணெ; து. அட்டணெ; மரா. அடவண.

இச் சொல் மராட்டியச் சொல்லாயினும், ஐந்திரவிடம் (பஞ்ச திரவிடம்) என்னும் பண்டை முறைப்படி இங்குத் தமிழ்ச் சொல்லாகத் தழுவப்பட்டது.

அட்டவணைக்கணக்கன் *aṭṭavaṇai-k-kaṇakkaṉ*, பெ. (n.) **பேரேடெழுதுங் கணக்கன்** (W.); accountant, ledger-keeper.

*[அட்டவணை + கணக்கன்.]*

அட்டவணைக்காரன் *aṭṭavaṇai-k-kāraṉ*, பெ. (n.) *அட்டவணைக் கணக்கன்* பார்க்க; see *aṭṭavaṇai-k-kaṇakkaṉ*.

அட்டவணைச்சாலை *aṭṭavaṇai-c-cālai*, பெ. (n.) **கணக்குவேலை பார்க்குமிடம்** (இராட்.); counting house, office of accountants (R.).

*[அட்டவணை + சாலை.]*

அட்டவணைப்பிள்ளை *aṭṭavaṇai - p - piḷḷai*, பெ. (n.) *அட்டவணைக்கணக்கன்* பார்க்க; see *aṭṭavaṇai-k-kaṇakkaṉ*.

*[அட்டவணை + பிள்ளை.]*

பண்டை நாளிற் கணக்குவேலை பார்ப் பவர் பெரும்பாலும் வெள்ளாளர் என்னும் வேளாளராக இருந்ததனால், கணக்க வேலைக்காரர் தமக்குரிய குலப்பட்டத்துடன் கணக்கப்பிள்ளை யெனப்பட்டனர்.

அட்டனம் *aṭṭaṉam*, பெ. (n.) *1.* **வட்ட வடிவ மாகிய பரிசை**; round shield. *2.* **சக்கரப் படை** (சிந்தா. நி.); discus.

**Skt.** aṭṭana

*[வட்டம் → வட்டனம் → அட்டனம்.]*

அட்டாங்கால் போடு-தல் *aṭṭāṅgāl-pōḍu-*, 20 செ. கு.வி. (v.i.) **மீன்வலை சுருட்டும்போது அல்லது மீன் பிடிக்கும்போது மீன வர்கள் சிறிதே உட்கார முயன்றாற்போல் முன் கால் அகற்றி அசைந்த வாறு நடத்தல்** (மீனவ.); to step out and walk as fishermen do with knees bent almost in a sitting posture while handling their nets (Fisher.).


அட்டாங்கால் போடுதல்

*[ஒருகா. அகட்டாங்கால் போடுதல் → அட்டாங் கால் போடுதல்.]*

அட்டாரி *aṭṭāri*, பெ. (n.) *அட்டாலி* பார்க்க (கோவை); see *aṭṭāli*.

*[அட்டாலி → அட்டாரி.]*

அட்டாலகம் *aṭṭālagam*, பெ. (n.) *1.* **கோட்டை மதின்மேலுள்ள காவற்கூடம்**; watch-tower on a fort. 'அட்டாலகமும் மதிற்பொறியு முதலா யின' (குறள், 744, மணக். உரை). *2.* **மேல்வீடு** (சங்.அக.); apartment on flat roof.

ம. அட்டாலகம்; க. அட்டாளக; தெ. அட்டாலகமு.

*[த. அட்டாலகம் > **Skt.** aṭṭālaka.]*

அட்டாலம் *aṭṭālam*, பெ. (n.) *அட்டாலை* பார்க்க; see *aṭṭālai*.

அட்டாலி *aṭṭāli*, பெ. (n.) **மாடிவீடு** (கோவை); house with an upper floor (Cm.).

அட்டாலிகை *aṭṭāligai*, பெ. (n.) *1.* **மேல்வீடு** (சங்.அக.); apartment on an upper storey. *2.* **அரசர் மனை**; royal palace.

க. அட்டாள; தெ. அட்டாலிக.

*[அட்டாலை → அட்டாலம் → அட்டாலி → அட்டாலிகை. 'கை' சிறுமைப்பொருட் பின் னொட்டு (aug. suff.). அட்டாலிகை > **Skt.** aṭṭālikā.]*

அட்டாலை *aṭṭālai*, பெ. (n.) *1.* **மேல்வீடு** (வின்.); apartment on an upper storey. *2.* **கோட்டை மதின்மேற் காவற்கோபுரம்**; watch-tower on a fort. ''கீழ்பா லிஞ்சி யணைய வட்டாலை கட்டு'' (திருவாலவா. 26 : 10). *3.* **தோட்டம், புன்செய், ஆட்டுப்பட்டி, சிற்றூர் முதலியவற்றின் காவற்பரண்** (யாழ்ப்.); raised covered platform from which one keeps watch on a garden, a field, a sheep-fold, a village, etc. *4.* **அரசர் மனை** (சங்.அக.); royal residence. ''கதன வாயிலுங் கட்டுமட் டாலையும்'' (கம்பரா. யுத்த. முதற்போர். 32). *5.* **காப்பு** (சம். அக. கை.); protection. *6.* **மரவகை** (இராட்.); a species of tree (R.).

ம. அட்டாலம்; க. அட்டாள; தெ. அட்டடி.

*[அட்டாலை > **Skt.** aṭṭāla. எட்டம் → அட்டம். எட்டம் = உயரம். அட்டம் + ஆலை – அட்டாலை.]*

அட்டாலைச்செட்டி *aṭṭālai-c-ceṭṭi*, பெ. (n.) **பழைய காசு (நாணய) வகை** (சரவண. பண விடு. 59); an ancient coin.

[அட்டாலை + செட்டி. அட்டாலைச் செட்டியென்னுங் காசு, ஒரு மாடமாளிகையில் வாழ்ந்த பெருவணிகச் செட்டியின் மாழையினாலோ (உலோகத்தினாலோ) பொருளுதவியினாலோ மாராயம் பெற்ற நெடுமொழியினாலோ அச்சு அடிக்கப்பட்டதாக இருக்கலாம்.]

**அட்டாலைச்சேவகன்** *aṭṭālai-c-cēvagaṉ*, பெ. (n.) கோட்டை மதிற் காவற்கோபுரத்திலிருந்து காவல் புரியும் பொருநன் (போர் மறவன்); soldier keeping guard on the watch-tower of a fort. "சந்திர சேகரனை யட்டாலைச் சேவகனை" (சொக்க. உலா, 276).

**Skt.** sēvaka > **த.** சேவகன்.

[அட்டாலை + சேவகன்.]

**அட்டாலைமண்டபம்** *aṭṭālai-maṇḍabam*, பெ. (n.) மேல்வீடாகக் கட்டப்பட்ட மண்டபம்; big hall forming the upper storey of a mansion. "கீட்டிசை மருங்கோ ரட்டாலை மண்டபஞ் செய்யென வதுகேட் டெழுந்தரசன்" (திருவிளை. யானை. 23).

**அட்டாளகம்** *aṭṭāḷagam*, பெ. (n.) மேல்மாடி (புதுவை); upper storey (Poṇḍ.).

[அட்டாலகம் → அட்டாளகம்.]

**அட்டாளிகை** *aṭṭāḷigai*, பெ. (n.) அட்டாளகம் பார்க்க; see *aṭṭāḷagam.*

**அட்டாளை** *aṭṭāḷai*, பெ. (n.) 1. அட்டாளகம் பார்க்க; see *aṭṭāḷagam.* 2. காவற்பரண் (யாழ்ப்.); covered platform used for watching a garden (J.).

[எட்டம் = உயரம். எட்டம் → அட்டம் = உயரமான கட்டடம். அட்டம் + ஆலை (சாலை) – அட்டாலை → அட்டாலம் → அட்டாலி → அட்டாலிகை.

அட்டாலம் → அட்டாலகம். அட்டாலி → அட்டாரி. அட்டாலம் → அட்டாளம் → அட்டாளகம். அட்டாலை → அட்டாளை. அட்டாலை மரம் காவற்பரணாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

காவற் கோபுரமும் காவற் பரணும் காவற்குப் பயன்பட்டதனால், அட்டாலைச் சொல்லிற்குக் காப்புப்பொருள் தோன்றியிருத்தல் வேண்டும்.]

**அட்டாளைப்பெட்டி** *aṭṭāḷai-p-peṭṭi*, பெ. (n.) தட்டுகள் உள்ள பேழை (இ.வ.); case with shelves (Loc.).

[அட்டாளை + பெட்டி.]

**அட்டி**[1] *aṭṭi*, பெ. (n.) 1. செஞ்சந்தனம் (மூ.அ.); red sandalwood, m. tr., *Pterocarpus santalinus.* 2. சந்தனம் (மூ.அ.); sandal. 3. இலுப்பை (மூ.அ.); South Indian mahua (L.), long-leaved bassia, *Bassia longifolia* (சா.அக.). 4. எட்டி (மூ.அ.); strychnine, *Nux vomica.* 5. குன்றி வேர்; Indian liquorice root, *Abrus precatorius* (சா.அக.). 6. பருப்பு; kernel of shelled seeds (சா.அக.).

**அட்டி**[2] *aṭṭi*, பெ. (n.) முன்னங்கால்களில் கழற்காயளவு உருண்டை கட்டுங் குதிரை நோய் (அசுவசா. பக். 112); disease of horses which forms as a ball-like growth as big as bonduc-nuts, on the forelegs.

**அட்டி**[3] *aṭṭi*, பெ. (n.) 1. தாழ்ப்பு (தாமதம்); procrastination, delay. "அட்டிசெய நினையாதீர்" (அருட்பா, 6, திருவருட்பேறு, 2). 2. தடை; hindrance, obstacle. கேட்டவுடன் அட்டி சொல்லாமற் பணத்தைக் கொடுத்து விட்டான் (உ.வ.).

ம. அட்டிமறிக்குக; க., தெ. அட்டி; து. அட்டி.

[அட்டம் = குறுக்கு. அட்டம் → அட்டி = தடை, காலத்தாழ்ப்பு.]

**அட்டி**[4] *aṭṭi*, பெ. (n.) 1. கப்பலின் பின்பக்கம் (இராட்.); stern of a ship (R.). 2. மரப் பறையின் (பீப்பாவின்) மேல்புறம் அல்லது அடி; head or bottom of a cask.

[ஒருகா. அண்டி (அடி) → அட்டி.]

**அட்டிகம்** *aṭṭigam*, பெ. (n.) சாதிக்காய் (மலை.); nutmeg, *Myristica fragrans.*

**அட்டிகை** *aṭṭigai*, பெ. (n.) கழுத்தை யொட்டியிருக்கும் பொன் அல்லது முத்து அணிவகை; closely fitting necklace of gold wires or of precious stones. 'அட்டிகைக்கு ஆசைவைத்து எருமைச் சங்கிலியைக் கட்டிக்கொண்டாளாம்' (பழ.).

ம., தெ. அட்டிக; க., கூ. அட்டிகெ.

[ஒட்டு → அட்டு → அட்டி → அட்டிகை.]

**அட்டிப்பேறு** *aṭṭi-p-pēṟu*, பெ. (n.) செப்புப் பட்டயத்துடன் நீர்வார்த்துக் கொடுக்கப்பட்ட மரபுரிமைத் தானம் (வெட்.); gift, hereditary possessions and rights bestowed on a person by a copper-plate charter (Insc.).

ம. அட்டிப்பேர், அட்டிப்பேறு.

*[அட்டுதல் = வார்த்தல். பெறு → பேறு = பெறுகை. அட்டிப்பேறு = உறுதிப்பொருட்டு நீர்வார்த்துக் கொடுக்கப்பெற்ற பேறு.]*

**அட்டிமை** *aṭṭimai*, பெ. (n.) 1. ***சீரகம்*** (மூ.அ.); cumin seed. 2. ***கருஞ்சீரகம்*** (சா.அக.); black cumin, *Nigella sativa* (சா.அக.). 3. **ஓமம்** (வின்.); bishop's weed (W.), *Sison ammi* (சா.அக.).

**அட்டியல்** *aṭṭiyal*, பெ. (n.) 1. அடுக்குக்கலம் (இ.வ.); a set of vessels of cylindrical shape fitting one within the other (Loc.). 2. அட்டிகை பார்க்க; see *aṭṭigai*.

**அட்டில்** *aṭṭil*, பெ. (n.) 1. ***மடைப்பள்ளி, சமையலறை***; kitchen. "புனிற்றுநாய் குரைக் கும் புல்லெ னட்டில்" (சிறுபாண். 132). 2. **வேள்விக் கூடம்**; place for performing sacrificial ceremonies. "அட்டின் மறையோ ராக்கிய வாவுதி" (சிலப். 10 : 143).

*[அடு + இல் – அட்டில்.]*

**அட்டிற்சாலை** *aṭṭiṟ-cālai*, பெ. (n.) ***சமைய லறை***; kitchen. "அட்டிற் சாலையு மருந்துநர் சாலையும்" (மணிமே. 20 : 7).

*[அட்டில் + சாலை.]*

**அட்டிற்பேறு** *aṭṭiṟ-pēṟu*, பெ. (n.) ***கோயிற் பணியாளர்க்குத் திருப்படையற்சோறு வழங்கு வதற்காக நிறுவிய அறக்கொடை***; an endowment for the distribution of food to the servants of a temple (M.E.R. 448 of 1928-9).

*[அட்டில் + பேறு.]*

**அட்டினம்** *aiṭṭṉam*, பெ. (n.) ***சீரகம்*** (பரி.அக.); cumin seed, *Cuminum cyminum*.

**அட்டு**[1]**-தல்** *aṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) ***வடிதல்***; to be discharged, as pus; to flow, as honey. "சீயட்டு முயவுநோய்" (சீவக. 2798). —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***வார்த்தல்***; to pour, as water or oil. "யாப்பினு ளட்டிய நீர்" (குறள், 1093). 2. ***நீர்வார்த்துத் தானஞ் செய்தல்***; to make gifts by pouring water on the right hand of the donee. 3. ***நீர்வார்த்தாற் போற் கொண்டுவருதல்***; to bring, as a river. "அட்டித்தரப் பணியே" (தேவா. 7.20 : 1). 4. ***தான பட்டயம் (சாஸனம்) அளித்தல்***; to endow, as on a temple. 'கோக்கரு நந்தடக்கன்........................அட்டின பூமி' (T.A.S. i, 6). 5. ***இடுதல்***; to give. "அளகத்தி னட்டிய தாதும்" (திருக்கோ. 122). 6. ***செலுத்துதல்*** (S.I.I. ii, 147); to remit money.

க. அட்டு; து. அட்டுனி; கோத. அட்; துட. ஒட்.

**அட்டு**[2]**-தல்** *aṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **ஒட்டு தல்**; to join, stick, paste.

க. அண்டிசு; தெ. அண்டு; து. அண்டு; கோத. அண்ட்; கோண். அட்க்; கொண். அட்கி; கொலா., நா. அட்.

*[ஒட்டு → அட்டு.]*

**அட்டு**[3]**-தல்** *aṭṭu-*, ஏ.து.வி. (imp. aux. v.) ***ஓர் ஈரேவல் (வினை) ஒருமையீறு***; a verbal singular suffix used as imperative auxiliary in the sense of 'let'.

ஏ-டு: அவன் செய்யட்டு, அது வரட்டு.
இதன் பன்மையீறு 'அட்டும்'.

ஏ-டு: அவன் செய்யட்டும், அது வரட்டும்.

ம. அட்டே

*[ஒட்டு→அட்டு. ஒல் → ஒள் → ஒண் → ஒட்டு. ஒட்டுதல் = இசைதல், இணங்குதல், (செய்ய) விடுதல்.]*

அவன் தூங்கவொட்டடார் = அவனைத் தூங்கவிடார், அவன் தூங்க இசையார்.

செய்ய + ஒட்டு – செய்யவொட்டு → செய் யொட்டு → செய்யட்டு.

செய்யட்டு – நீர் அவன் செய்யவொட்டு (ஒருமை). செய்யட்டும் – நீர் (நீம்) அவன் செய்யவொட்டும் (பன்மை).

ஒ.நோ: செய் (ஒருமை), செய்யும் (பன்மை). 'உம்' பன்மையீறு. ஊம் (நூம்) → உம். நூம் → நீம் (நீர்).

'செய்யட்டு' என்பதில் 'செய்' (செய்ய) என்பது படர்க்கை யேவலும் 'அட்டு' (ஒட்டு) என்பது முன்னிலை யேவலும் ஆகும். ஆதலால், இது இணையேவல் அல்லது இருமடியேவல்.

'செய்யட்டு' என்பது போன்றதே 'செய்வி', 'உண்பி' என்பனவும். செய்ய + ஈ – செய்யவீ → செய்வீ → செய்வி. வி → பி. உண்ணவீ → உண்ணவி → உண்வி → உண்பி.

ஒ.நோ: "செய்யென் வினைவழி விப்பி தனிவரின்
செய்வியென் ஏவல் இணையின் ஈரேவல்" (நன். 138).


அசரை


அசலை


அட்டவண்ணைத்திருக்கை


அட்டாலகம்


அட்டிகை


அட்டை

இதில் ஈரேவல் என்றது உண்மையில் மும் மடியேவல். ஈறுநோக்கியே ஈரேவல் எனப் பட்டது.

'செய்யட்டு' என்னும் ஒருமை ஏவல் வழக் கருகிப்போனதினால் 'செய்யட்டும்' என்னும் பன்மை ஏவலே இன்று ஒருமையாகவும் வழங்கிவருகின்றது.

**அட்டு**[1] *aṭṭu*, பெ. (n.) 1. வெல்லம்; cake of unrefined sugar. 2. பனம்பழத்திலிருந்து செய்யப்பட்ட பனாட்டு என்னும் வெல்லக்கட்டி; dried palmyra fruit jelly. பனாட்டு பார்க்க; see *panāṭṭu*.

க., தெ. அட்டு.

*[அடுதல் = காய்ச்சுதல். அடு → அட்டு = காய்ச்சப்பட்டது.]*

**அட்டு**[2] *aṭṭu*, பெ. (n.) அழுக்கான கூழ்ச்சேறு; dirty watery mud, slush. 2. அழுக்கு; dirt. அவன் அட்டுப் பிடித்தவன் (உ.வ.).

க. ஆட்டு

*[அள்ளுதல் = செறிதல். அள் = செறிவு. அள் → அள்ளல் = நெருக்கம், (மண் செறிந்த) சேறு. அள்ளு → அட்டு = அழுக்கும் மண்ணும் செறிந்த சேறு.]*

**அட்டு**[3] *aṭṭu*, இடை. (int.) பிறர் கூற்றை மறுக்கும் இடைச்சொல்; an exclamation of contradiction (Loc.). அட்டு, அவன் ஆறு நாளுக்குள் ஆண்டுப் பாடத்தையெல்லாம் படித்து விடுவானாம் (இ.வ.).

**அட்டுக்கிறை** *aṭṭukk(u)-iṟai*, பெ. (n.) பழைய வரிவகை (S.I.I. iii, 311); an ancient tax.

*[ஒருகா. அட்டுக்கு + இறை. அட்டு = வெல்லம். இறை = வரி.]*

**அட்டுணவு** *áṭṭuṇavu*, பெ. (n.) சமைத்த உணவு; cooked food.

*[அட்ட + உணவு.]*

அட்டூண் பார்க்க; see *aṭṭūṇ*.

**அட்டுப்பு** *aṭṭuppu*, பெ. (n.) 1. காய்ச்சிய வுப்பு (சா.அக.); salt produced by evaporating sea-water. ''அமிர்தையிங் கட்டுப்பு'' (தைலவ. தைல. 129). 2. கறியுப்பு; common salt extracted from soils containing it, either pure, singly or in combination with other salts by the process of filtration. 3. பூநீர் (பூநீறு), வெடியுப்பு, சீனம், சாரம், இந்துப்பு ஆகிய இவற்றைக் காமன் தண்ணீரில் (கழுதை மூத்திரத்தில்) கணக்காய் எரித்துப் பதங்கண்டு இறக்கி ஆறியபின் கட்டியாய் நிற்கும் ஒரு வகை வைப்புச் சரக்கு (மச்சமுனி, 800); a salt obtained by boiling pooneer, nitre, alum, sal ammoniac and rock-salt dissolved in ass's urine. 4. இருபத்தைந்து வகை இலவணங்களி லொன்றாகிய காய்ச்சு இலவணம்; one of the 25 kinds of salt described in the Indian Medical Science.

*[அட்ட + உப்பு.]*

ம., க. அட்டுப்பு; தெ. அட்டுப்பு, அண்டுப்பு.

**அட்டும்** *aṭṭum*, ஏ.து.வி. (imp. aux. v.) அட்டு[3]-தல் பார்க்க; see *aṭṭu*[3]-.

**அட்டூண்** *aṭṭūṇ*, பெ. (n.) சமைத்த உணவு; cooked food. ''அயலறியா வட்டூணோ வில்'' (பழமொழி, 148).

*[அட்ட + ஊண்.]*

**அட்டூழியம்** *aṭṭūḻiyam*, பெ. (n.) கொடுந்தீம்பு; atrocity. அவன் பண்ணின அட்டூழியத்திற்கு அளவில்லை (உ.வ.).

ம. அட்டூழியம்; க. அட்டுளி.

**அட்டை**[1] *aṭṭai*, பெ. (n.) நிலத்திலும் நீரிலும் வாழக்கூடியதும், நாங்கூழ்போற் குறுகி நீள்வதும், (தமிழ்நாட்டில்) ஒரு விரலம் (அங்குலம்) முதல் ஒரு சாண் வரை நீண்டு வளர்வதும், ஊனுடம்புகளில் ஒட்டிக்கொண்டு அரத்தத்தை யுறிஞ்சுவதும், புழுப்போன்றதுமான ஓர் ஊருயிரி; leech. ''ஆக்க முண்டே லட்டைகள் போற் சுவைப்பர்'' (திவ். திருவாய். 9.1 : 2). 'அட்டைக்கும் குட்டைக்குந்தான் உறவு, அதில் விழுந்த எருமைக்கு என்ன உறவு?', 'அட்டை செத்தால் குட்டைக்கு நட்டமா?', 'அட்டையைப் பிடித்து மெத்தையிலே வைத்தது போல' (பழ.).

ம., தெ. அட்ட; க., குட. அட்டெ.

*[ஒட்டு → அட்டு → அட்டை.]*

**அட்டை**[2] *aṭṭai*, பெ. (n.) 1. சன்னப் பலகை போன்று தடித்த தாளட்டை; card board. 2. பொத்தகக் கட்டட அட்டை; bound book-cover. 3. செருப்பின் தோலட்டை; layer of the sole of a sandal or shoe.

க., து. அட்டெ; தெ. அட்ட.

*[அள் = செறிவு, திண்மை. அள் → அட்டு → அட்டை = திண்ணமான தாட்பலகை அல்லது தோற்பட்டை.]*

**அட்டை**[3] *aṭṭai*, பெ. (n.) *பொத்தக மேலுறை*; book-cover.

க. அட்டெ; தெ. அட்ட.

[*ஒருகா. சட்டை → அட்டை.*]

பொத்தகப் போர்வையாகிய அட்டை, சன்னப் பலகை போன்ற திண்ணிய அட்டை யல்லாத தடித்த தாளில் அல்லது மெல்லிய தாளிலேயே இடப்படுவதால், அதைக் குறிக் கும் பெயரைச் சட்டை யென்னும் சொல்லின் திரிபாகக் கொள்வதே பொருத்தமாம்.

**அட்டை**[4] *aṭṭai*, பெ. (n.) *துலாக்கட்டை*; joist.

[*ஒருகா. ஒட்டு → ஒட்டை → அட்டை.*]

**அட்டை**[5] *aṭṭai*, பெ. (n.) *தலையில்லா முண்டம்*; headless trunk.

தெ. அட்ட (உடம்பு, தலையில்லா முண்டம்.); க., து. அட்டெ.

[*மொட்டை → மட்டை → அட்டை.*]

**அட்டைக்கடி** *aṭṭai-k-kaḍi*, பெ. (n.) 1. *அட்டை யினாற் கடிக்கப்படுதல்*; leech-bite. 2. *அட்டைக் கடித் தழும்பு*; scar left by leech-bite (சா.அக.).

[*அட்டை + கடி.*]

**அட்டைக்கடிப் பண்டுவம்** (சிகிச்சை) *aṭṭai-k-kaḍi-p-paṇḍuvam*, பெ. (n.) *அட்டையை உறிஞ்சவிட்டு நோயாளிகளின் கெட்ட அரத் தத்தை வெளியேற்றிக் குணப்படுத்துதல்*; the art of healing by draining blood by leech-bite, leech-craft (சா.அக.).

[*அட்டை + கடி + பண்டுவம்.*]

**அட்டைக்குப்பி** *aṭṭai-k-kuppi*, பெ. (n.) *பண்டு வத்திற்காக அட்டையை வைத்து வளர்க்கும் புட்டி*; glass tube for keeping leeches meant for curative purposes (சா.அக.).

[*அட்டை + குப்பி.*]

**அட்டைக்குழி** *aṭṭai-k-kuḻi*, பெ. (n.) 1. *அட்டை யுள்ள கிடங்கு*; pit of leeches. 2. *அட்டைக் கடியால் துன்புறும் நரகம்* (வின்.); a pit in Hell said to be infested with leeches.

[*அட்டை + குழி.*]

**அட்டைப்பால்** *aṭṭai-p-pāl*, பெ. (n.) *பனங் கள்*; palmyra toddy (சா.அக.).

**அட்டைப்பிசின்** *aṭṭai-p-pišin*, பெ. (n.) *அட்டையைப்போல் ஒட்டிக்கொள்ளும் பிசின்*; a kind of gum which would stick like a leech.

[*அட்டை + பிசின்.*]

**அட்டைப்பிரயோகம்** *aṭṭai-p-pirayōgam*, பெ. (n.) *உடம்பில் அரத்தம் கெட்டுப்போயிருப்பினும், கட்டியிருப்பினும், அதை வெளியேற்ற அட்டையைப் பயன்படுத்தல்*; application of leeches to the body of patients having impure or congested blood in their system (சா.அக.).

[*அட்டை* + Skt. pra-yoga > *த. பிரயோகம் = பயன்படுத்தல்.*]

**அட்டைப்பூச்சி** *aṭṭai-p-pūcci*, பெ. (n.) *வயிற் றுக்குள் அட்டையைப்போல் ஒட்டிக்கொண்டு வாழ்வதும், நாடாப்போல் நீண்டதுமான பூச்சி வகை*; tape-worm, which breeds by sticking to the inside walls of the stomach, like a leech (சா.அக.).

[*அட்டை + பூச்சி.*]

**அட்டையாடல்** *aṭṭai-y-āḍal*, பெ. (n.) *போர்க் களத்திற் போர் மறவனுடல் துண்டிக்கப்பட்ட விடத்தும், துண்டிக்கப்பட்ட அட்டை இயங்கித் துடித்தல் போன்று மறச்செயல் காட்டியாடுகை* (தொல். பொருள். புறத். 16, உரை); hero's body continuing to perform heroic deeds even after dismemberment, as the quivering of a leech after being cut in two.

க. அட்டெயாட

[*மட்டை → அட்டை. ஒ.நோ: மலர் → அலர். அட்டை = தலையற்ற முண்டம். அட்டை யாடல் = போர்க்களத்தில் தலையற்றவிடத்தும் போர்மறவனுடல் சிறிது நேரம் மறச்செயல் காட்டி யாடுகை.*]

அட்டையாடல் என்பது, இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரின் தொல் காப்பிய வுரையிற் கண்ட தொடர். அதிலுள்ள அட்டை யென்னுஞ் சொல்லிற்கு, அவ்விருவரே ஊருயிரியாகிய அட்டை யென்று பொருள்கொண்டுள்ளனர்.

அட்ட என்னும் தெலுங்கச் சொல் உடம் பைக் குறிப்பதால், அட்டையாடுதல் என்பது தலையில்லா முண்டம் ஆடுவதையே குறிக்கு மென்பர் ஒருசாராராய்ச்சியாளர். அட்டை போலாடுதல் என்னும் உவமைப் பொருளி னும், முண்டமாடுதல் என்னும் உவமை யில்லாப் பொருளே சிறந்திருத்தலால், இளம் பூரணர்க்கு முந்திய உரையாசிரியர் அப் பொருளே கொண்டிருக்கலாமென்று கருத இடமுண்டு. அங்ஙனமாயின், அப் பொருள் வழக்கு இளம்பூரணர் காலத்தில் இறந்து பட்டிருத்தல் வேண்டும்.

மொட்டை = 1. கூரின்மை. 2. தட்டையான தலைக்கவிப்பு (மொட்டைத் தொப்பி). 3. மயிர் மழித்த அல்லது வெட்டின தலை (மொட்டைத்தலை). 4. தலையில்லா முண்டம். 5. கொம்பில்லா மாடு (மொட்டை மாடு). 6. கும்பமில்லாத் தேர் (மொட்டைத் தேர்). 7. முடியமையாக் கோபுரம் (மொட்டைக் கோபுரம்). 8. முகடில்லா மச்சுவீடு (மொட்டை மாடி). 9. கூண்டில்லா வண்டி (மொட்டை வண்டி). 10. ஆடையில்லா வுடம்பு (மொட்டைக் கட்டை). 11. இலை பூ காய் கனி முற்றும் உதிர்ந்த மரம் (மொட்டை மரம்). 12. மரஞ்செடி கொடியில்லா மலை (மொட்டை மலை).

மொட்டை→மட்டை. **ஒ.நோ:** மொண்டை →மண்டை = மொள்கலம், இரப்போர் கலம், தலையோடு, இளவரசு மகுடம்.

மட்டை = 1. மயிர் மழித்த மொட்டைத் தலை. 'இறைவனில்லாமையால் தனித்துக் கொய்யப்பட்ட மொட்டையாகிய தலையுடனே' (புறநா. 261 : 17, உரை). 2. உடற்குறை (தலையில்லா முண்டம்). ''யூபங் கவந்தம் மட்டை யுடற்குறை'' (திவா. மக்கட் பெயர்த் தொகுதி).

ஆகவே, 'உடல் துண்டிக்கப்பட்ட விடத்தும் அட்டைபோல வீரனுடல் வீரச் செயல் காட்டி யாடுகை' என்பது பொருந்தாது. தெலுங்கு கன்னடத்தில், அட்டை யென்னுஞ் சொல் தலையில்லா முண்டத்தைக் குறிப்பதும் இதை வலியுறுத்தும்.

**அட்டையிலட்சணம்** *aṭṭai-y-ilaṭcaṇam*, பெ. (n.) ***தன்வந்திரி வாகடம் 110-ல் சொல்லியுள்ள அட்டையைப்பற்றிய நெறிமைகள் (விதிகள்)***; a treatise compiled by Dhanwantri on the art of healing by the use of leeches, a science on leech-craft (சா.அக.).

*[த. இலக்கணம்* > **Skt.** lakṣaṇa > *த. இலட்சணம்.]*

**இலக்கணம்** பார்க்க; see *ilakkaṇam*.

**அட்டையெண்ணெய்** (தயிலம்) *aṭṭai-y-eṇṇey*, பெ. (n.) ***அட்டைத் தலைகளினின்று உருவாக்கும் ஒருவகை யெண்ணெய்***; an extract prepared from the heads of leeches and employed to prevent the formation of blood clots (சா.அக.).

*[அட்டை + எண்ணெய்.]*

**அட்டையொட்டல்** *aṭṭai-y-oṭṭal*, பெ. (n.) ***காத்துக்கொள்ளாத வழிப்போக்கர்மேலும், வேட்டைக்காரர்மேலும் அட்டை தானாகவே ஒட்டிக்கொண்டு அரத்தத்தை யுறிஞ்சல்***; sticking of leeches by themselves to the body of unwary travellers and hunters for sucking their blood (சா.அக.).

*[அட்டை + ஒட்டல்.]*

**அட்டைவகை** *aṭṭai-vagai*, பெ. (n.) ***அட்டையின் பல்வேறு வகைகள்***; the different species of leeches.

அட்டைகள் பின்வருமாறு வெவ்வேறு வகையில் இவ்விரு பிரிவாகப் பிரிக்கப் படலாம்:

(1) ***இடவகை:*** நிலவட்டை, நீரட்டை; உள்நாட்டட்டை, வெளிநாட்டட்டை.

(2) ***கோலவகை:*** பொறியட்டை, பொறியிலட்டை.

(3) ***பயன்பாட்டுவகை:*** நல்லட்டை, நச்சட்டை.

நல்லட்டை யென்பன மருத்துவத்திற்குப் பயன்படுவன. அவை ஆயுர்வேத மருத்துவப் படி ஆறாகும்.

அவையாவன: குராலி (கபிலம்), உள்ளியம் (பிங்கலை), சங்குமுகன் (சங்குமுகி), எலியன் (மூஷிகம்), முளரிமுகன் (புண்டரீகமுகி), மரையடைவண்ணன் (சபரிகம்).

நிறவகையில் செவ்வட்டை, பச்சட்டை, காரட்டை, பொன்னட்டை என நான்காகப் பகுக்கலாம்.

**அட்டைவிடல்** *aṭṭai-viḍal*, பெ. (n.) ***உடம்பிலுள்ள கெட்ட அரத்தத்தை நீக்குமாறு, அட்டையை உறிஞ்சவிடல்***; employment of leeches for removing impure blood from a human body (சா.அக.).

**அட்டைவிதி** *aṭṭai-vidi*, பெ. (n.) ***அட்டையின் வேறுபாடுகளையும் அவற்றைக் கொண்டு செய்யும் பண்டுவ (சிகிச்சை) முறைகளையும் பற்றிக் கூறும் நூல்***; a treatise dealing with the various species of leeches, and the method of their application in the treatment of diseases (சா.அக.).

**Skt.** vidhi > த. விதி = நெறி, நெறிமை.

*[ஒட்டு → அட்டு → அட்டை.]*

**அட்டோலக்கம்** *aṭṭōlakkam*, பெ. (n.) *அட்டோ லகம்* பார்க்க; see *aṭṭōlagam.*

**அட்டோலகம்** *aṭṭōlagam*, பெ. (n.) *1. ஆரவாரக் காட்சி* (யாழ்ப்.); pomp, show, magnificence. *2. கெந்தளிப்பு* (யாழ்ப்.); mirth, festivity, rejoicing (J.).

*[ஒட்டோலக்கம் → அட்டோலக்கம் → அட்டோலகம்.]*

**ஒட்டோலக்கம்** பார்க்க; see *oṭṭōlakkam.*

**அட** *aḍa*, இடை. (int.) *1. துயரம், இரக்கம், வியப்பு, வெறுப்பு முதலியவற்றை யுணர்த்தும் இடைச்சொல்*; exclamation of regret, pity, surprise or wonder, dislike, etc. ***துயரம்:*** ''அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி யதிகமென்றே கற்றுவிட்டோ மறிவில் லாமல்'' (தனிப்பா. தி. 1, பக். 241). ***இரக்கம்:*** அட தெய்வமே! ஏன் இந்தத் தாயில்லாப் பிள்ளை இப்படி இரு கண்ணுங் குருடாய்ப் பிறக்க வேண்டும்? (உ.வ.). ***வியப்பு:*** அட! அமெரிக்கர் திங்களையும் அடைந்து திரும்பி விட்டனர் (உ.வ.). ***வெறுப்பு அல்லது சினம்:*** அட போ, உனக்கென்ன தெரியும் அவன் செய்தி? (உ.வ.). *2. விளியிடைச்சொல்*; vocative particle. அட பயலே! நான் சொன்ன படி செய் (உ.வ.).

**ம.** அட; **க.** எலா, அலா; **தெ.** அரே, அபே; **து.** எலா; **துட.** எத்.

*[ஏ (விளியிடைச்சொல்) → ஏல் → ஏல → ஏள → ஏழ → ஏட → (எட) → அட.]*

**அடக்கச்சடங்கு** *aḍakka-c-caḍaṅgu*, பெ. (n.) *சவத்தை அடக்கஞ் செய்யும் வினை*; burial.

*[அடக்கம் + சடங்கு.]*

**அடக்கச்செலவு** *aḍakka-c-celavu*, பெ. (n.) *1. அடக்கவினைக்குச் செல்லும் பணச்செலவு*; burial expenses. *2. அடக்கச் சடங்கு* (புதுவை); burial (Pond.).

*[அடக்கம் + செலவு.]*

**அடக்கஞ்செய்-தல்** *aḍakkañ-cey-*, 1 செ.குன்றா வி. (v.t.) *சவத்தைப் புதைத்தல்*; to bury the corpse.

*[அடக்கம் + செய்.]*

**அடக்கத்துச்சோரம்** *aḍakkattu-c-cōram*, பெ. (n.) *நாரி வெள்ளை (சுக்கிலம்)*; a fluid discharged apart from the menstrual blood in women through vagina (சா.அக.).

*[அடக்கம் + அத்து (சாரியை) + சோரம்.]*

**அடக்கநிலைமை** *aḍakka-nilaimai*, பெ. (n.) *1. செயப்பாடான நிலைமை*; a quiescent condition, as in a woman in the act of sexual intercourse. *2. பெண்ணின் மடமை*; modesty of a woman (சா.அக.).

**அடக்கம்**[1] *aḍakkam*, பெ. (n.) *1. அமைதி*; calmness. 'அடக்கமற்ற பெண் அவிந்து போன கண்', 'அடக்கமே அறிவுக்கு வித்து', 'அடக்கம் ஆயிரம் பொன் தரும்', 'அடக்கம் உடையார் அறிஞர், அடங்காதார் கல்லார்' (பழ.). *2. ஆரவாரமின்மை*; unostentatiousness. *3. பிறர் செய்தியில் தலையிடாமை*; non-interference. ''அடக்க முடையா ரறிவில ரென்றெண்ணிக் கடக்கக் கருதவும் வேண்டா!'' (மூதுரை, 16). *4. பணிவான ஒழுக்கம்*; humility, submission, subordination. 'அடக்கமென்பது, உயர்ந்தோர்முன் அடங்கி யொழுகும் ஒழுக்கம்; அவை: பணிந்த மொழியுந் தணிந்த நடையுந் தானை மடக் கலும் வாய்புதைத்தலும் முதலாயின' (தொல். பொருள். மெய்ப். 12, பேரா. உரை). *5. தன்னடக்கம்*; self-control. ''இளையா னடக்க மடக்கம்'' (நாலடி. 65). *6. பொறுமை*; patience. *7. ஐம்புல வடக்கம்*; subjugation of the five senses. ''ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்'' (குறள், 126). *8. மூச் சடக்கம்*; suppression of breath. *9. உயி ரொடுங்கியிருத்தல்*; subdued state of the animating powers, before death. *10. மயக்கம்*; loss of consciousness, stupor as from snakebite. *11. சவப்புதைப்பு*; burial. *12. சுருக் குகை*; contraction, as a tortoise withdrawing into its shell. *13. மறைபொருள், கமுக்கம்*; secret. எல்லாம் அடக்கமாயிருக்கிறது (உ.வ.). *14. செறிந்திருக்கை*; compactness. எல்லாப் பொத்தகங்களையும் பெட்டிக்குள் அடக்க மாக வை (உ.வ.). *15. உள்ளடங்கிய பொருள்*; contents, as of a box, enclosures, as of a letter. *16. செலவொடு சேர்ந்த மொத்த விலை*; cost price including incidental expenses. வண்டி விலை மற்றச் செலவொடு சேர்த்து அடக்கம் எவ்வளவாகிறது? *17. மொத்தச் செலவு*; total expenditure. வீடு கட்டினதற்குச் செலவு அடக்கம் எவ்வளவு? *18. கருத்து* (சங்.அக.); gist. *19. புதைபொருள்* (செ.அக.); treasure trove. *20. வாணவகை* (யாழ்ப்.); fireworks of crackers so arranged in layers, to produce a continuous series of bursts. *21. பறைவகை*;

a kind of drum. ''நிசாளந் துடுமை சிறுபறை யடக்கம்'' (சிலப். 3 : 27, அடியார்க். உரை).

த. அடக்கம் > **Skt.** ḍhakkā.

[அடங்கு → அடக்கு → அடக்கம்.]

**அடக்கம்**² *aḍakkam*, பெ. (n.) **குறிப்பிட்ட எல்லையிலிருந்து படிமத்தின் முன்னுறுப்பு களும் பின்னுறுப்புகளும் அடங்கியிருக்கும் அடக்க அளவு**; distance encompassed by the organs above and below a given point on an image (சி.செ. பக். 184, பத்தி 2).

[அடக்கு → அடக்கம்.]

**அடக்கம்பண்ணு-தல்** *aḍakkam-paṇṇu-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. **உள்ளடக்கி வைத்தல்**; to pack, stow away. 2. **சவத்தைப் புதைத்தல்**; to bury, inter, entomb. 3. **மறைத்து வைத்தல்**; to conceal, put out of sight.

**அடக்கமா(கு)-தல்** *aḍakkam-ā(gu)-*, 6 செ.கு.வி. (v.i.) 1. **பள்ளி(சமாதி) புகல்**; to enter into šamādhi voluntarily to attain union with the Universal soul or the Divine spirit. 2. **ஒடுக்க மாதல்**; to become modest. 3. **சுருங்குதல்**; to shrink (சா.அக.). —, 5 செ.குன்றாவி. (v.t.) **மூச்சொடுக்கல்**; to control the breath.

[அடக்கம் + ஆ(கு).]

**அடக்கமானம்** *aḍakkamāṉam*, பெ. (n.) **படிமக் கலையிற் கையாளப்படும் அறுவகை அளவு மானங்களுள் ஒன்று**; one of the six kinds of dimensions observed in sculpture. 'படிமத்தின் முன்புறத்தில் ஒரு தூக்குநூலைத் தொங்க விட்டு, அந்த நூலிலிருந்து படிமத்தின் தலை, நெற்றி, மூக்கு, மோவாய், கழுத்து, மார்பு, கொப்பூழ் (நாபி), தொடை ஆகிய உறுப்பு கள், அந் நூலுக்குச் செங்குத்தாக எவ்வெவ் வளவு அடக்கம் கொண்டு இருக்கின்றன என்பதை அறிய உதவும் இவ்வளவை............ அடக்கமானம் என்றும் தாழ்த்துமானம் என்றும்..................சொல்வது நடைமுறை வழக்கு'. (சி.செ. பக். 184, பத்தி 5).

[அடக்கம் + மானம். அடங்கு → அடக்கு → அடக்கம். மா + அனம் (தொ. பெ. ஈறு) — மானம்.].

**அடக்கமெழுப்பு-தல்** *aḍakkam-eḻuppu-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. **மயக்கந் தெளிவித்தல்**; to restore consciousness as from stupor caused by snake bite, fits, etc. 2. **நஞ்சிறக்கல்**; to dispel poisonous effects through medicine or magical chant (சா.அக.).

[அடக்கம் + எழுப்பு.]

**அடக்கமெழும்பு-தல்** *aḍakkam-eḻumbu-*, 5 செ.கு.வி. (v.i.) **மயக்கந்தெளிதல்**; to regain consciousness as from stupor caused by snake bite or a fit (W.).

[அடக்கம் + எழும்பு.]

**அடக்கவிலை** *aḍakka-vilai*, பெ. (n.) **ஊதியங் கருதாது சென்ற செலவின் அளவாகக் குறிக்கப் பட்ட விலை**; actual cost price, rock-bottom price, non-profit cost price of manufactured articles, books, etc.

**அடக்கவிலைப் பதிப்பு** *aḍakka-vilai-p-padippu*, பெ. (n.) **ஊதியங்கருதாது செலவின் அளவாக விலை குறிக்கப்பட்ட பதிப்பு**; cost price edition, cheapest edition of a publication.

[அடக்கம் + விலை + பதிப்பு.]

**அடக்காப்புல்** *aḍakkā-p-pul*, பெ. (n.) **பீனசப் புல்**; a kind of grass, *Panicum dactylon*.

**அடக்கி** *aḍakki*, பெ. (n.) 1. **தன் திறமையை அல்லது நிலைமையை வெளிக்குக் காட்டாத ஆள்**; taciturn person, one who conceals his real circumstances or ability. 2. **சிறுநீர் மலங் களை அவ்வப்போது வெளிப்படுத்தாது அடக்கி வைப்பவன்-ள்**; one who postpones answering calls of nature.

**அடக்கியல்** *aḍakkiyal*, பெ. (n.) **அடக்கியல் வாரம்** பார்க்க (வீரசோ. யாப். 11, உரை); see *aḍakkiyal-vāram*.

**அடக்கியல்வாரம்** *aḍakkiyal-vāram*, பெ. (n.) (யாப்.) **சிலவகைக் கலிப்பாக்களின் இறுதியில் வரும் 'சுரிதகம்' என்னும் உறுப்பு** (தொல். பொருள். செய். 144, பேரா. உரை); (Pros.) last member of certain kinds of *kalippā*, called *šuridagam*.

'அடக்கியல் வாரமென்பது அடக்கும் இயல் பிற்றாகிய வாரமென்றவாறு. ......அடக்கிய லென்றான், முன்னர்ப் பலவகையாற் புகழப் பட்ட தெய்வத்தினை ஒரு பெயர் கொடுத் தடக்கி நிற்றலின். வாரமென்றான், தெய்வக் கூற்றின் மக்களைப் புகழ்ந்த அடி மிகுமாகலி னென்பது' — பேராசிரியருரை.

''அடக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகியும்'' (செய். 149) என்று தொல்காப்பியரே கூறுத

லால், **அடக்கியல்** என்பதும் சுரிதகத்திற்கு ஒரு பெயரென்பது பெறப்படும். ஆகவே, **அடக்கியல்வாரம்** என்பது இருபெயரொட்டாகும். இருபெயரும் வெவ்வேறு பொருட்கரணியங் குறித்தலாலேயே இருபெயரொட்டாயின. கலிப்பாவில் முற்கூறப்பட்ட பொருள்களையெல்லாம் அடக்கி நிற்பதனால் **அடக்கியல்** என்றும், பாட்டின் முடிபைக் கொண்டு மகுடம்போல உயர்ந்து நிற்றலால் **வாரம்** என்றும், சுரிதகம் பெயர் பெற்றதென்று கொள்ளலாம். வார்தல் = உயர்தல்.

பேராசிரியர், நீண்டு வருதலென்று பொருட்கரணியங் கொண்டார். வார்தல் = நீளுதல். இவ் வியல்பு வாரங்கொண்ட எல்லாக் கலிப்பாவிற்கும் ஏற்காமை அவர் கூற்றானே விளங்கும்.

**அடக்கியொடுக்கி** *adakki-y-odukki*, கு.வி.எ. (adv.) 1. ***முற்றுங் கீழ்ப்படுத்தி;*** having subjugated completely. 2. ***வேரறக் களைந்து;*** having eradicated.

**அடக்கிராவி** *adakkirāvi*, பெ. (n.) ***நெல்வகை;*** variety of paddy (T.A.S. v, 204).

**அடக்கு-தல்** *adakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) அடங்கு என்பதன் பி.வி. (caus. of *adaṅgu*). 1. ***அடங்கச் செய்தல்;*** to bring under control. கலகத்தை அடக்கிவிட்டார்கள் (உ.வ.). 2. ***கீழ்ப்படுத்துதல்;*** to constrain, repress, bring to terms, to subjugate, curb, coerce, tame, break, as a horse. 3. ***சுருக்குதல்*** (வின்.); to condense, abbreviate. 4. ***உள்ளடக்குதல்;*** to pack, stow away. 5. ***புதைத்தல்;*** to bury. 6. ***சிறுநீர், மலங்களை வெளிப்படுத்துவதைக் கடத்திவைத்தல்;*** to postpone answering calls of nature.

**ம.** அடக்குக; **க.** அடக்கு; **தெ.** அடாசு; **கோத.** அற்கு; **கூ.** ஆட்ப; **துட.** ஒர்க்; **குட.** அடக்; **து.** அடேவுனி; **கொலா.** டாங்க்த்; **மா.** அர்கெ; **கொண்.** டாங்; **குரு.** அர்க்னா.

**அடக்குப்பண்ணு-தல்** *adakku-p-paṇṇu-*, 5 செ.கு.வி. (v.i.) ***தடைசெய்தல்;*** to hinder, stop.

*[அடக்கு + பண்ணு.]*

**அடக்குமுறை** *adakku-muṟai*, பெ. (n.) ***கண்டித் தடக்குகை*** (இக்.வ.); repression (Mod.). 'அடக்குவா ரற்ற கழுக்காணி', 'அடக்குவா ரின்றேல் ஆமையும் தாவும்' (பழ.).

**அடக்குமுறைச்சட்டம்** *adakku-muṟai-c-caṭṭam*, பெ. (n.) ***கண்டித்தடக்கும் சட்டம்*** (இக்.வ.); repressive legislation (Mod.).

*[அடக்குமுறை + சட்டம்.]*

**அடக்குமுறை யாட்சி** *adakku-muṟai-y-āṭci*, பெ. (n.) ***கண்டித்தடக்கும் அரசாட்சி*** (இக்.வ.); repressive government (Mod.).

*[அடக்குமுறை + ஆட்சி.]*

**அடகம்** *adagam*, பெ. (n.) 1. ***வசம்பு*** (பரி.அக.); sweet flag. அட்டகம் பார்க்க; see *aṭṭagam*. 2. ***நாய்வேளை;*** dog-mustard plant, *Cleome viscosa* (சா.அக.).

**அடகு**[1] *adagu*, பெ. (n.) 1. ***இலைக்கறி;*** greens, edible leaves. ''மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடகு'' (மதுரைக். 531). 2. ***பச்சிலை;*** odoriferous Indian plant, medicinal green leaves. ''ஆயிர மாண்டுபுல் லடகு மேயினான்'' (கந்தபு. தக்ஷ. கயமுகனுற். 73). 3. ***மகளிர் விளையாட்டு வகை;*** a girls' game. ''கூடலனையாளை யாடா வடகினுங் காணேன்'' (திணைமாலை. 4).

**க.** ஆகு; **தெ.** ஆக்கு; **கொண்.** ஆக்; **கோண்.** ஆதீ; **கூ., பெங்., மண்.** ஆகி; **குவி.** ஆக்கு; **குரு.** அட்கா; **மா.** அத்தெ; **பிராகி.** டாக.

*[அடை = இலை. அடை → அடகு.]*

**அடகு**[2] *adagu*, பெ. (n.) ***கொதுவை;*** pledge, pawn of personal property. ''ஆபரணம் வைத் தடகு தேடுபொருள்'' (திருப்பு. 606).

**ம.** அடமானம்; **க.** அடவு; **து.** அடவு, அடாவு; **தெ.** அட்டமு.

*[அடை → அடைவு = அடைமானம், கொதுவை. அடைவு → அடவு → அடகு.]*

**அடகுபிடி**[1]**-த்தல்** *adagu-pidi-*, 4 செ.குன்றாவி. (v.t.) ***கடனாகப் பணங்கொடுத்து அதற்கீடாக விலைபெறும் பொருள்களை வாங்கி வைத்தல்;*** to do pawn-broking.

**அடகுபிடி**[2]**-த்தல்** *adagu-pidi-*, 4 செ.கு.வி. (v.i.) (நடம்) ***கூத்தில் நளிநயக்கை பிடித்தல்;*** (Dan.) to assume poses in dancing.

*[அடி → அடிகு → அடகு.]*

**அடகோலை** *adag(u)-ōlai*, பெ. (n.) ***அடைமான ஓலை;*** lease deed.

*[அடகு + ஓலை.]*

**அடங்க** *aḍaṅga,* கு.வி.எ. (adv.) 1. **உள்ளாக**; to be contained within. "அவனி முழுது மோரடிக்கு ளடங்க வளந்து கொண்டவனே" (சூத. முத்தி. 4 : 29). 2. **முழுதும்**; wholly, entirely. 'வயலடங்கக் கரும்பும்' (ஈடு, 8.9:4).

ம. அடங்க, அடங்கனெ.

**அடங்கம்** *aḍaṅgam,* பெ. (n.) கடுகுரோகிணி (பச்.மூ.); Christmas rose.

**அடங்கல்** *aḍaṅgal,* பெ. (n.) 1. **கீழ்ப்படிகை**; submitting, obeying. 2. **பகுதியாக அமைகை**; being comprised or included. 3. **உள்ளிடம் பெற முடிகை**; being possible to be stuffed into. 4. **செய்யத் தகுகை**; being fit or worthy to act or perform. "தாதைய ரிட்ட காரிய மடங் கலின் றாயினு மமையு மாயினும்" (சேதுபு. அவைய. 2.). 5. **தங்குமிடம்**; abode. "அடங்கல் வீழிகொண் டிருந்தீர்" (பெரியபு. ஏயர்கோ. 59). 6. **சாகுபடி நோட்டம் (சோதனை)**; examination of the cultivation of village lands (R.F.). 7. **சாகுபடிக் கணக்கு**; detailed village account showing lands cultivated and the nature of the crops. 8. **அடங்கல் (குத்தகை) வேலை**; contract work.

ம. அடங்கல்; தெ. அடங்கு; பிரா. அட்கல்.

[அடங்கு → அடங்கல்.]

**அடங்கலமிசம்** *aḍaṅgal-amiśam,* பெ. (n.) **ஓராண்டு விளைவு மதிப்பு** (C.G.). estimated annual produce of a piece of land.

[த. அடங்கல் + **Skt.** amsa > த. அமிசம் = கூறு.]

**அடங்கலன்** *aḍaṅgalaṉ,* பெ. (n.) 1. **கீழ்ப் படியாதவன்**; insubordinate man. 2. **பகைவன்**; defiant enemy or foe. "அடங்கலர் முப்புர மெரித்தார்" (பெரியபு. இடங்கழி. 4). 3. **புலன்கள் அடங்காதவன்**; one whose senses are not restrained. "அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினால்" (சீவக. 2842).

**அடங்கலும்** *aḍaṅgalum,* கு.வி.எ. (adv.) **எல்லாம், முழுதும்**; quite, entirely. "திக்க டங்கலும்" (திருவிளை. திருநகரங் கண்ட. 13).

[அடங்கல் + உம் (முற்றும்மை).]

**அடங்கவும்** *aḍaṅgavum,* கு.வி.எ. (adv.) **அடங்கலும்** பார்க்க; see *aḍaṅgalum.* "உடம்ப டங்கவு மூன்கெட" (பெரியபு. திருநாவுக். 359).

**அடங்கன்முறை** *aḍaṅgaṉ-muṟai,* பெ. (n.) **அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்னும் மூவர் தேவாரம் முழுதும்**; *Tēvāram,* in the sense that it includes all the hymns of three Saints Appar, Sambandar and Sundarar.

[அடங்கல் + முறை. அடங்கல் = எல்லாம். முறை = சிவநெறித் திருமுறை பன்னிரண்டுள் முதல் ஏழான மூவர் தேவாரம்.]

**அடங்காக்கரத்தி** *aḍaṅgā-k-karatti,* பெ. (n.) **சதுரக்கள்ளி**; square spurge, *Euphorbia quadruculli* (சா.அக.).

**அடங்காத்தணலி** *aḍaṅgā-t-taṇali,* பெ. (n.) **கருப்புச் சித்திரமூலம்**; black or blue flowered leadwort, *Plumbago zeylanica* (சா.அக.).

[தழல் → தணல் → தணலி. அடங்காத → அடங்கா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + தணலி.]

**அடங்காத சத்தி** *aḍaṅgāda-satti,* பெ. (n.) **அடங்காக்கரத்தி** பார்க்க; see ***aḍaṅgā-k-karatti.***

**அடங்காப்பச்சை** *aḍaṅga-p-paccai,* பெ. (n.) **முலைப்பால்**; a woman's breast milk (சா.அக.).

[அடங்காத → அடங்கா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + பச்சை.]

**அடங்காப்பற்று** *aḍaṅga-p-paṟṟu,* பெ. (n.) **அரசன் கட்டளையை மீறுவோர் வதியும் ஊர்** (யாழ்ப்.); village rebellious against king's order (J.).

[அடங்காத → அடங்கா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + பற்று. பற்று = சிற்றூர்.]

**அடங்காப்பிடாரி** *aḍaṅgā-p-piḍāri,* பெ. (n.) **எவர்க்கும் அடங்காதவள்**; termagant, shrew. பிடாரி = காளி. காளிபோற் சினமும் முரட்டுத் தன்மையு முடையவளைக் காளி யென்பது உலக வழக்கு. 'அடங்காப் பிடாரியைக் கொண்டவனுங் கெட்டான், அறுகங் காட்டை உழுதவனும் கெட்டான்' (பழ.).

[அடங்காத → அடங்கா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + பிடாரி.]

**அடங்காமரம்** *aḍaṅgā-maram,* பெ. (n.) **ஒரு வகை மரம்** (இ.வ.); a kind of tree (Loc.).

**அடங்காமாரி** *aḍaṅgā-māri,* பெ. (n.) **அடங்காப் பிடாரி** பார்க்க; see ***aḍaṅgā-p-piḍāri.***

[அடங்காத → அடங்கா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + மாரி.]

மாரி என்பது காளியின் பெயர்களுள் ஒன்று. *மாரி* பார்க்க; see *māri*.

**அடங்கார்** *adaṅgār*, பெ. (n.) *பகைவர்;* enemies. ''அடங்காரை யெரியழலம் புகவூதி'' (திவ். திருவாய். 4.8 : 8).

**அடங்காவாரிதி** *adaṅgā-vāridi*, பெ. (n.) *1. கடலுப்பு* (வின்.); sea-salt. *2. சிறுநீர்;* urine.

**அடங்கிடம்** *adaṅgidam*, பெ. (n.) *பேரூழியிறுதியில் அனைத்தும் ஒடுங்கும் பரசிவம்;* Paraśivam, the highest form of Śiva, in whom all would be absorbed on the dissolution of the Grand Universe. ''விந்து நாதஞ் சத்தி நெறியே யடங்கி டும்பர சிவத்தினில்'' (அருணாசலபு. திருமலைச். 5).

*[அடங்கு + இடம்.]*

**அடங்கு-தல்** *adaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) *1. கீழ்ப்படிதல்;* to obey, yield, submit. பெற்றோர்க் கடங்கி நடத்தல் வேண்டும் (உ.வ.). *2. அறத்தின்கண் அமைந்தொழுகுதல்;* to behave righteously. ''கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான்'' (குறள், 150). *3. புலன் ஒடுங்குதல்;* to be still, to be subdued, as the mind of a sage. ''சிந்தையு மென் போலச் செயலற் றடங்கிவிட்டால்'' (தாயு. பராபர. 325). *4. உறங்குதல்;* to sleep. ''விழித்துழி விழித்தும் அடங்குழி யடங்கியும்'' (கல்லா. 7). *5. மக்கள் உறங்கி அமைதி நிலவுதல்;* to become quiet, as a result of all the inhabitants of a place having gone to sleep. ஊர் அடங்கிவிட்டது (உ.வ.). *6. உடம்பு ஒடுங்குதல்;* to be reduced, as the body, through disease, old age or grief. ஆறு மாதத் திற்குள் ஆள் அடங்கிவிட்டான் (உ.வ.). *7. நாடி நின்றுவிடுதல்;* to stop beating as the pulse. நாடியடங்கிவிட்டது (உ.வ.). *8. மூச்சு நின்றுவிடுதல்;* to stop breathing. மூச்சடங்கி விட்டது (உ.வ.). *9. நொசிப்புநிலையடைதல் (சமாதிபுகல்);* to attain a state of intense contemplation as the final stage of yoga. இராமலிங்க அடிகள் இறுதியில் அடங்கி விட்டார் (உ.வ.). *10. இறத்தல்* (மங்.வ.); to die (euphem.). எங்கள் அப்பனார் சென்ற ஆண்டே அடங்கிவிட்டார் (உ.வ.). *11. உள்ளாதல்;* to be comprised, included. ''அளவை, காண்டல் கருத லுரையென் றிம் மூன்றி னடங்கிடுமே'' (சி.சி. சுபக். அளவை. 1). *12. படிதல்;* to settle, subside, as dust. தூசி யடங்கத் தண்ணீர் தெளி (உ.வ.). *13. தங்குதல்;* to remain, stay. *14. கிடத்தல்;* to lie, lie down. ''வெள்ளேற் றெருத்தடங்கு வான்'' (கலித். 104 : 19). *15. மனத்துள்ளிருத்தல்;* to confine in the mind as a secret. ''அடங்கரு நாணமும் பயமுங் 'கொண்டனன்'' (சூத. எக்கி. 2.4 : 23). *16. சினையாதல்;* to be with young, as a cow impregnated. மாடு அடங்கியிருக்கிறது (இ.வ.). *17. நெருங்குதல்;* to be close together, thick or crowded. ''அலவன் கண்பெற வடங்கச் சுற்றிய'' (கலித். 85 : 6). *18. செய்யக்கூடியதாதல்;* to become possible for doing. ''இடங்கொளுந் தாதைய ரிட்ட காரிய மடங்கலின் றாயினு மமையு மாயினும்'' (சேதுபு. அவைய. 2). *19. தீர்தல்;* to be extinguished. ''தழற்பசி யடங்கிடாது'' (சூத. எக்கி. பூ. 20 : 6). *20. நின்றுபோதல்;* to cease. ''ஊறுநீ ரடங்கலி னுண்கயங் காணாது'' (கலித். 13 : 7). *21. மறைதல்;* to disappear or set, as a heavenly body. ''ஆதித்த னடங்கு மளவில்'' (கலித். 78 : 15, நச். உரை).

**அடச்செம்பை** *ada-c-cembai*, பெ. (n.) *கருஞ் செம்பை;* common sesban, l. sh., *Sesbania aegyptiaca*.

**அடசட்டா** *adašaṭṭā*, பெ. (n.) *சாகுபடி மதிப்பு* (R.T.); an estimate of cultivation.

**அடசர்ப்புல்** *adašar-p-pul*, பெ. (n.) *பீனசப்புல்;* a kind of grass, *Panicum dectylon* (சா.அக.).

க. அடசல

**அடசு-தல்** *adašu-*, 5 செ.கு.வி. (v.i.) *1. செறிதல்;* to be crowded. *2. சிறிது ஒதுங்குதல்;* to move aside. அடசி நில் (உ.வ.). —, 5 செ.குன்றாவி. (v.t.) *அடையச்செய்தல், செறித்தல்;* to set closely (சா.அக.). ''அழுந்த வாளி யொன்று பத்துநூறு வன்பொ னடசினான்'' (பாரத. பதினா. 30).

க. அடசு

*[அடைதல் = செறியக் குவித்தல். அடை → அடைசு → அடசு.]*

**அடசுவர்** *adašuvar*, பெ. (n.) *பால்;* milk (சா.அக.).

**அடடா** *adaḍā*, இடை. (int.) *1. வியப்புக் குறிப்பு;* an expression of surprise. அடடா! அவன் எவ்வளவு இனிமையாகப் பாடுகின் றான்! (உ.வ.). *2. இகழ்ச்சிக் குறிப்பு;* an expression of contempt. ''அடடா! வெளியே


அடப்பக்கத்தி


அடப்பக்கத்திப்பாறை


அடப்பான்


அடர்சோளம்


அடல்

புறப்பட்டார்'' (இராமநா. யுத்த. பக். 320). 3. வருந்தற் குறிப்பு; an expression of grief. அடடா! மோசம் போனேனே! (உ.வ.).

ம. அம்பம்பெடா, அம்பம்ப; க. அலலா, எலவெலவொ; தெ. அரரெ.

**அடந்தகம்** *aḍandagam,* பெ. (n.) வெள்ளைச் சாரணை; a kind of plant with white flowers of one-styled trianthema, *Trianthema monogyna* (சா.அக.).

**அடந்தை** *aḍandai,* பெ. (n.) ஒரு தாளம்; a time measure in music (சங்.அக.).

ம. அடந்த, அடதாளம்; க. அட்டதாள, அடதாள; தெ. அடதாளமு.

**அடப்பக்கத்தி** *aḍappa-k-katti,* பெ. (n.) ஒரு வகைக் கடல்மீன்; a kind of sea-fish, *Notopterus kapirat.*

**அடப்பக்கத்திப்பாறை** *aḍappa-k-katti-p-pāṟai,* பெ. (n.) ஒருவகைக் கடல்மீன்; a kind of sea-fish, *Notopterus chitala.*

**அடப்பங்கொடி** *aḍappaṅ-koḍi,* பெ. (n.) 1. ஆட்டுக்காலடம்பு அல்லது முயற்றழை (முசற்றழை); goat's foot creeper, goat's foot convolvulus or hareleaf, *Ipomaea biloba.* 2. வெள்ளடம்பு; white goat's foot, *Ipomaea beladamboo* alias *Convolvulus flagelliformis* (சா.அக.). 'அடப்பங் கொடியும் திரண்டால் மிடுக்கு' (பழ.).


அடப்பங்கொடி

ம. அடம்பு; க., து. அடும்பு.

[அடம்பு + அம் (சாரியை) + கொடி.]

**அடப்பதர்தி** *aḍappa-tādi,* பெ. (n.) சிவப்புக் கூத்தன் குதம்பை; a kind of plant bearing red flowers, *Inula indica.*

[த. அடப்பம் + Skt. tādi.]

**அடப்பம்¹** *aḍappam,* பெ. (n.) அடைப்பம் என்பதன் வேறு வடிவம்; dial. var. of *aḍaippam.*

**அடப்பம்²** *aḍappam,* பெ.(n.) வாதுமை; almond, *Amygdalus communis.*

**அடப்பம்விதை** *aḍappam-vidai,* பெ. (n.) வாதுமைப் பருப்பு; almond kernel. ''அடப்பம் விதையாம் வாதுமைப் பருப்பி னாலே'' (பதார்த்த. 785).

**அடப்பமரம்** *aḍappa-maram,* பெ. (n.) வாதுமை மரம்; almond tree.

ம. அடமரம்

**அடப்பன்¹** *aḍappaṉ,* பெ. (n.) கடம்பு (மலை.); common *caḍamba, Eugenia racemosa* alias *Anthocephalus cadamba* (சா.அக.).

**அடப்பன்²** *aḍappaṉ,* பெ. (n.) பரவர்குலப் பட்டப் பெயர் (யாழ்ப்.); a caste title of Paravās (J.).

**அடப்பனார்** *aḍappaṉār,* பெ. (n.) அடப்பன் என்னும் பட்டப்பெயரின் உயர்வுப் பன்மை வடிவம்; honorific form of the caste title *aḍappaṉ.*

**அடப்பான்** *aḍappāṉ,* பெ. (n.) வைரிப்புள், வல்லூறு (கலைமகள், 56 : 189); peregrine falcon.

**அடப்பி** *aḍappi,* பெ. (n.) அடப்பன்¹ பார்க்க see *aḍappaṉ*¹.

**அடப்பிமாதிகம்** *aḍappi-mādigam,* பெ. (n.) சிவப்புக் காசித்தும்பை; Benares red toombay (Lucas), balsom flower, *Impatiens genus* (சா.அக.).

**அடம்** *aḍam,* பெ. (n.) கத்தி (இ.வ.); knife (Loc.).

க. அடகத்தி; தெ. அடகத்து; து. இடகத்தி; மரா. அடகிதா.

**அடம்பாரம்** *aḍambāram,* பெ. (n.) 1. பண்டங்களின் ஏராளம் (தஞ்சை); plenty, as of articles (Tj.). 2. முழுதும்; the entire, whole, altogether (W.).

ம. அடம்பாடெ

**அடம்பு** *aḍambu,* பெ. (n.) 1. ஒரு படர்கொடி; (L.) hare-leaf, m.cl., *Ipomaea biloba.* 'அடம்பங் கொடியும் திரண்டால் மிடுக்கு' (பழ.). ''தும்பைவெள் ளடம்பு திங்கள்'' (பெரியபு. ஏயர்கோ. 100). 2. கடலிப்பூ; sea-flower, *Adambia glabra* (சா.அக.). 3. கடம்பு; (L.) common *caḍamba.* 4. கொன்றை (சம்.அக. கை.); Indian laburnum. 5. ஒருவகை மரம்; (L.) a kind of tree.

ம. அடம்பு; க., து. அடும்பு.

**அடமருது** *aḍamarudu,* பெ. (n.) கடலாத்தி (Nels.); stag's horn trumpet flower.

**அடமானம்** *aḍamāṉam*, பெ. (n.) *அடைமானம் பார்க்க*; see *aḍai-māṉam*.

**அடர்-தல்** *aḍar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **நெருங்கு தல், செறிதல்**; to be close together, thick, crowded. ''அறுகையு நெருஞ்சியு மடர்ந்து'' (மணிமே.12 : 60). 2. **போர் செய்தல்**; to fight, engage in a battle. ''எண்ணுறு படைக ளிவ்வா றெதிர்தழீஇ யடரும் வேலை'' (கந்தபு. உற்பத். தாரக. 39). —, 2 செ.குன்றா வி. (v.t.) 1. **நெருக்குதல்**; to press round, hem in. ''வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை'' (திருவாச. 6 : 37). 2. **புடைத்தல்**; to beat, strike. ''வச்சிரங்கொண் டிந்திரன்வெற் படர்வ தென்ன'' (ஞானவா. சனகரா. 14). 3. **தட்டியுருவாக்குதல்**; to fashion, mould by beating. ''ஐதடர்ந்த நூற்பெய்து'' (புறநா. 29 : 2).

ம. அடர்; க., தெ. அடரு; கோத. அய்ர்; குட. அடிச்; கொண். அட்.

[அள் → அடு → அடர். அள்ளுதல் = நெருங்கு தல். அடுத்தல் = நெருங்குதல். அடர்தல் = நெருங்குதல், புடைத்தல், தட்டியுருவாக்குதல்.]

**அடர்[1]-த்தல்** *aḍar-*, 4 செ.குன்றாவி. (v.t.) 'அடர்தல்' என்பதன் பி.வி. (caus. of *aḍardal*). 1. **அமுக்குதல்**; to press down, crush, squeeze. ''திருவிரலா லடர்த்தான்வல் லரக்கனையும்'' (தேவா. 7. 97 : 8). 2. **நெருக்குதல்**; to press hard, exert pressure upon. 3. **வருத்துதல்**; to oppress. ''அடர்புலன் போக்கற் றோர்க்கும்'' (கோயிற்பு. பாயி. 18). 4. **தாக்குதல், போர் செய்தல்**; to attack, make an onset upon, begin a quarrel. ''ஆளை யாள்கொண் டடர்த்தனர்'' (கந்தபு. யுத்த. முதனாட். 111). 5. **கொல்லு தல்**; to kill. ''இடங்கரை யாழி வலவ னடர்த்தது போல'' (கல்லா. 59). 6. **கெடுத் தல்**; to destroy, remove. ''பாவ மடர்த்தமர்வா ரேசிவலோ கத்து'' (சைவச. பொது. 567).

ம. அடர்க்குக; க. அடரிசு; தெ. அடரின்சு.

[அடு → அடர்.]

**அடர்[2]-த்தல்** *aḍar-*, 4 செ.குன்றாவி. (v.t.) **பறித்தல்**; to pluck, as coconuts. தேங்கா யடர்த்தல் (நாஞ்.).

க. அடர்ச்சு; தெ. அடலின்சு.

[ஒருகா. இட → அட → அடர். இடத்தல் = பெயர்த்தல், பறித்தல்.]

**அடர்[1]** *aḍar*, பெ. (n.) 1. **நெருக்கம்**; closeness. 2. **நெருக்குதல்**; the act of pressing, oppressing, troubling. ''அடர்க்குறு மாக்களொடு'' (மணிமே. 13 : 40). 'அடர விதைத்து ஆழ உழு', 'அடர்த்தியை அப்போதே பார், புழுக்கத்தைப் பின்னாலே பார்' (பழ.).

[அடு → அடர்.]

**அடர்[2]** *aḍar*, பெ. (n.) 1. **தகடு**; thin flat plate of metal, esp. gold. ''அடர்பொற் சிரகத்தால் வாக்கி'' (கலித். 51 : 7). 2. **பூவிதழ்**; flower petal. ''இலவம்பூ வடரனுக்கி'' (சீவக. 179). 3. **ஐயம்**; doubt.

[ஒருகா. அடி → அடர். அடித்தல் = சுத்தியால் அல்லது சம்மட்டியால் அடித்துத் தட்டையாக்கு தல்.]

**அடர்ச்சி** *aḍarcci*, பெ. (n.) 1. **நெருக்கம்** (சிந்தா. நி.); closeness. 2. **கொடிய வுரை யெண்ணஞ் செயல்களாகிய மாந்திகத்தின் (இராசதத்தின்) குணம்**; qualities of passion.

**அடர்சோளம்** *aḍar-šōḷam*, பெ. (n.) **கால்நடைத் தீனிக்காக அடர்த்தியாகப் பயிரிடும் காக்காய்ச் சோளம்**; black *šōḷam* sown closely as a fodder crop [M. Cm. D. (1887), 201].

**அடர்த்தி** *aḍartti*, பெ. (n.) **நெருக்கம்**; closeness, thickness. தலைமயிர் அடர்த்தியா யிருக்கிறது (உ.வ.).

**அடர்த்திப்பலகை** *aḍartti-p-palagai*, பெ. (n.) **திண்ணமான பலகை** (யாழ்ப்.); thick plank (J.).

[அடர்த்தி + பலகை.]

**அடர்ந்தேற்றம்** *aḍarnd(u)-ēṟṟam*, பெ. (n.) **கொடுமை, வல்லந்தம்** (வின்.); oppression, violence.

[அடர்ந்து + ஏற்றம்.]

**அடர்ந்தேற்றி** *aḍarnd(u)-ēṟṟi*, பெ. (n.) **அடர்ந் தேற்றம்** பார்க்க; see *aḍarnd(u)-ēṟṟam*.

[அடர்ந்து + ஏற்றி.]

**அடர்ப்பம்** *aḍarppam*, பெ. (n.) **நெருக்கம்** (யாழ்ப்.); closeness (J.).

**அடர்ப்பு** *aḍarppu*, பெ. (n.) 1. **நெருக்குகை**; pressure. ''அவன் சங்கற்ப புருடனைப்போ லசைவற் றிருப்ப வடர்ப்பரிதாய்'' (ஞானவா. ஞானவிண். 16). 2. **போர்**; struggle, battle. ''அசனியி னயிற்படை யடர்ப்புமோ ரயலாக'' (இரகு. திக்கு. 174).

**அடர்பு** *aḍarbu*, பெ. (n.) 1. **நெருக்கம்**; closenes (சங்.அக.). 2. **நெருங்கித் தொடர்கை**; close pursuit.

**அடர்மை** *aḍarmai*, பெ. (n.) **நொய்ம்மை**; lightness. "அரத்த வடர்மையும்" (பெருங். உஞ்சைக். 53 : 130).

**அடர்வைசூரி** *aḍar-vaišūri*, பெ. (n.) **ஒன்றோ டொன்று கலக்கும்படி நெருக்கமாக வார்க்கும் அம்மை நோய்**; small-pox in which the pustules run together or into each other, confluent small-pox alias *C. variola* (சா.அக.).

[த. அடர் + Skt. masūraka < த. வைசூரி.]

**அடரடிபடரடி** *aḍaraḍi - paḍaraḍi*, பெ. (n.) **முனைந்து பொருகை, பெருங்குழப்பம்** (வின்.); desperate fighting, hard scuffle, great confusion.

**அடரார்** *aḍarār*, பெ. (n.) **பகைவர்** (சிந்தா.நி.); enemies.

**அடரொலி** *aḍar-oli*, பெ. (n.) **அதட்டுஞ்சொல்** (பிங்.); vehement noise to scare away beasts.

[அடர் + ஒலி. அள் → அடு → அடர். அள்ளு தல் = நெருங்குதல். அடர்த்தல் = நெருங்கிப் பொருதல், வருத்துதல், கொல்லுதல்.]

**அடல்**[1] *aḍal*, பெ. (n.) 1. **சமைத்தல்**; cooking. 2. **கொல்லுகை**; killing, murdering. "அன்ன வர் தமையட லரிய தாமெனின்" (கந்தபு. யுத்த. மூவாயி. 70). 3. **வருத்துதல்**; to afflict, cause pain or suffering. "அடல்வண்ண வைம்பொறியும்" (சீவக. 1468). 4. **பகை**; hatred, enmity. "மன்னுசிற் றம்பலவர்க் கடலையுற் றாரின்" (திருக்கோ. 218). 5. **போர்** (சூடா.); war, conflict. "அடல்வலி மானவர்" (கந்தபு. தேவ. தெய்வ. 67). 6. **வலிமை**; power, strength. "அடன்மாவின் பேரு ரித்திறந் தரித்தனை" (கந்தபு. உற்பத். மோன. 12). 7. **வெற்றி**; victory, success. "அடலயி னெடுவே லண்ணல்" (கந்தபு. யுத்த. சூரபன். 256).

ம. அடல், அடர்; க., தெ. அடரு.

[அடு → அடல். அடுதல் = சமைத்தல், கொல்லுதல், வருத்துதல்.]

**அடல்**[2] *aḍal*, பெ. (n.) **ஒருவகைக் கடல்மீன்**; a kind of sea-fish, *Cynoglossus semifasciatus*.

**அடலம்** *aḍalam*, பெ. (n.) **மாறாமை** (சிந்தா. நி.); state of remaining unchanged.

**அடலி** *aḍali*, பெ. (n.) **அடுக்களை வேலைக் காரி, வெள்ளாட்டி** (யாழ்ப்.); a woman cook, maid-servant (J.).

[அடுதல் = சமைத்தல். அடு → அடல் → அடலி = சமையற்காரி.]

**அடலை**[1] *aḍalai*, பெ. (n.) 1. **காய்ச்சல்**; fever (சா.அக.). 2. **சுடலை** (பொதி.நி.); cremation ground. 3. **சோறு**; cooked rice. அக்காரடலை (உ.வ.). 4. **சாம்பல்**; ashes. "வேளும் புரமும் அடலைபட விழித்து" (உபதேசகா. நரகா. 39). 5. **நீறு (பற்பம்)** (இராசவைத். 161); metallic calx. 6. **திருநீறு**; sacred ashes smeared on the body as a mark of a Šaivaite. "ஆதி யாலயத் தடலைகொண்டு" (திருவிளை. சமணரைக். 82). 7. **போர்** (பிங்.); battle. 8. **போர்க்களம்**; battle-field. "அடலையி னுணர்வின் றாகும்" (கந்தபு. யுத்த. சூரபன். 256). ம. அடர்களம். 9. **துன்பம்**; trouble, distress. "அடலைக்கடல் கழிவான்" (தேவா. 4.110 : 6).

ம. அடர்; க. அடலு; தெ. அடலு, அடலடி.

[அடு → அடல் → அடலை. அடுதல் = சுடுதல், சமைத்தல், பொருதல், கொல்லுதல்.]

**அடலை**[2] *aḍalai*, பெ. (n.) **அடலம்** பார்க்க; see *aḍalam*.

**அடலைபுடலையாய்** *aḍalai-puḍalai-y-āy*, கு.வி.எ. (adv.) (நெல்லை) 1. **மிகத் துணிச்ச லாய்**; in an impetuous manner. 2. **திடுமென**; suddenly.

[அடு → அடல் → அடலை → அடலைபுடலை — 'அடலை'யின் எதுகையிரட்டல்.]

**அடலைமுடலை** *aḍalai-muḍalai*, பெ. (n.) **வீண் சொல்** (யாழ்ப்.); vain words (J.).

[அடலை → அடலைமுடலை — 'அடலை'யின் எதுகையிரட்டல்.]

**அடவாபிதன்** *aḍavābidaṉ*, பெ. (n.) **மஞ்சள்**; turmeric, saffron, *Curcuma longa* (சா.அக.).

**அடவி** *aḍavi*, பெ. (n.) 1. **மரமடர்ந்த காடு**; thick forest, jungle. "விந்தத் தடவியும்" (சிலப். 6 : 29). 'அடவி சென்றும் விறகுக்குப் பஞ்சமா?' (பழ.). 2. **சோலை**; grove. 3. **மிகுந்த கூட்டம் அல்லது அளவு**; large collection. "வேரிமலர் முண்டகத் தடவிதிக் கெறிய" (கல்லா. 56). 4. **பூஞ்சோலை (நந்தவனம்)** (திவா.); pleasure-garden.

ம., க., கொலா., பிராகி., அடவி; தெ. அடவி, அடிவி.

[அடு → அடர் → அடர்வி → அடவி = மரமடர்ந்த காடு.]

த. அடவி > Skt. aṭavī. அட் (to wander) என்னும் மூலத்தினின்று திரிந்து, அலைந்து திரியும் இடத்தைக் குறிப்பது அடவி யென்னுஞ் சொல்லென்று வடமொழியாளர் பொருட்காணியம் கூறுவது பொருந்தாது. இராமனும் பாண்டவரும் பிறரும் காட்டில் அலைந்து திரிந்ததை உட்கொண்டு அவர் அக் கருத்தைக் கொண்டிருக்கலாம். ஆயின், அது ஒரு சிலர்க்கே பொருந்துவதாதலானும், அடவி யென்பது மரமடர்ந்த காட்டையே குறிக்குஞ் சிறப்புச் சொல்லாதலானும், ஆரிய ரொடு தொடர்பற்ற ஆனைமலைக் காடரும் அச் சொல்லைத் தொன்றுதொட்டு வழங்கி வருதலானும், தமிழ் வடமொழிக்கு முந்திய தாதலானும், அடவியென்பது தமிழ்ச் சொல்லே யென்பது தேற்றமாம்.

**அடவிக்கச்சோலம்** *aḍavi-k-kaccōlam*, பெ. (n.) 1. **கத்தூரி மஞ்சள்**; long and round zedoary, *Curcuma amada*. 2. **ஒருவகை நறுமணப் பண்டம்**; an aromatic drug.

ம. அடவிக்கச்சோலம்

[அடவி + கச்சோலம்.]

**அடவிக்கம்பம்** *aḍavi-k-kambam*, பெ. (n.) **சாம்பல்**; ashes (சா.அக.).

**அடவிக்கல்** *aḍavi-k-kal*, பெ. (n.) **காட்டில் அகப்படும் கரும்புள்ளிக் கல், கானகக் கல்**; a stone with black dots, found in the forest (சா.அக.).

[அடவி + கல்.]

**அடவிக்காணம்** *aḍavi-k-kāṇam*, பெ. (n.) **காட்டுக் கொள்**; jungle horse-gram, *Cassia absus* (சா.அக.).

[அடவி + காணம்.]

**அடவிக்கொல்** *aḍavi-k-kol*, பெ. (n.) **கோரோசனை** (பரி.அக.); bezoar.

**அடவிகம்** *aḍavigam*, பெ. (n.) **சாம்பல்**; ashes (சா.அக.). அடவிக்கம்பம் பார்க்க; see *aḍavi-k-kambam*.

**அடவிச்சொல்** *aḍavi-c-col*, பெ. (n.) **கோரோசனை**; bezoar (மூ.அ.). **ஒ.நோ**: அடவிக் கொல்.

**அடவிசரர்** *aḍavi-šarar*, பெ. (n.) வேடர்; hunters. "அடவி சரர்குல மரகத வனிதையும்" (திருப்பு. 563).

[த. அடவி + Skt. cara > த. சரர்.]

**அடவிநீர்** *aḍavi-nīr*. பெ. (n.) **காட்டாற்று நீர்**; water of a jungle river (சா.அக.).

**அடவிமஞ்சள்** *aḍavi-mañjal*, பெ. (n.) **மரமஞ்சள்**; tree turmeric, *Coscinium fenestratum* (சா.அக.).

**அடவிமார்** *aḍavimār*, பெ. (n.) **நெசவாளருள் ஒரு வகுப்பார்**; a class of weavers (M.E.R. 310 of 1916-B).

[அடை → அடைவு → அடைவி → அடவி + மகார் → மார் (ப. பா. ஈறு).]

**அடவிமூர்ச்சி** *aḍavi-mūrcci*, பெ. (n.) **சிவப்புக் கிலுகிலுப்பை**; rattle-wort, *Crotolaria laburnifolia* (சா.அக.).

**அடவிமேற்புல்லுருவி** *aḍavi-mēṟ-pulluruvi*, பெ. (n.) **கள்ளிப்புதரில் முளைக்கும் புல்லுருவி**; a parasite found on *kaḷḷi* tree, *Euphorbia genus*.

[அடவி + மேல் + புல்லுருவி.]

**அடவிமை** *aḍavi-mai*, பெ. (n.) **கருங்கரிசாலை, கரிசலாங்கண்ணியின் கரிய வகை**; black eclipse plant, *Eclipta prostata* (nigra).

**அடவியன்**[1] *aḍaviyaṉ*, பெ. (n.) **காடுவாழ்நன்**; forest-dweller.

ம. அடவிகன்; க. அடவிசரரு.

**அடவியன்**[2] *aḍaviyaṉ*, பெ. (n.) 1. **ஓலையீர்க்கு, வாரடை** (யாழ்ப்.); mid-rib, as of a palm leaf (J.). 2. **துடைப்பவகை** (யாழ்ப்.); broom made of woody tendons or mid-ribs of palm leaves (J.).

**அடவியார்** *aḍaviyār*, பெ. (n.) **கைக்கோளரின் குலப் பட்டப்பெயர்களுள் ஒன்று** (இ.வ.); a caste title of the Kaikkōḷa weavers (Loc.).

[அடை → அடைவு → அடைவி → அடவி + ஆர் (உ. பன். ஈறு).]

அடைதல் = 1. அடைக்கலம் புகுதல். "அடைந்தவர்க் கருளா னாயின்" (கம்பரா. விபீடண. 111). 2. பேரின்ப வீடுபெறுதல்.

உலக வாழ்வில், ஒருவர் துன்பத்திற்கு அல்லது கொலைக்குத் தப்பி அடைக்கலம் புக அரசன், படைத்தலைவன், வலியவன், பெருஞ் செல்வன், முனிவன் முதலிய பலரிருப்பினும்,

இறைவனை அடைதலே சிறந்த அடைக்கலம் புகுதலாகக் கருதப்படும். இறைவன் பற்று விஞ்சியவர் நீறுபூசி, இலிங்கங்கட்டி முதலிய பட்டங்களைத் தாங்கிக்கொள்வதும் வழக்கம்.

கைக்கோளருள் ஒரு பிரிவார், இலிங்கம் என்னும் சிவக்குறி யணிபவர்; மற்றொரு பிரிவார் ***சீர்பாதம்*** என்னும் குலப்பட்டமுடையார். கோயில்களிலுள்ள தெய்வங்கட்குரிய சப்பரங்களையும் அணிகங்களையும் (வாகனங்களையும்) திருவிழாக் காலங்களில் தாங்கிச் செல்வார் சீபாதந் தாங்கிகள் எனப்படுவர். அப் பெயரின் குறுக்கமே சீபாதம் என்பது.

தேவபத்தி மிகுதியால், ஒவ்வொரு கைக்கோளக் குடும்பமும் ஒரு பெண்ணைக் கோயில் தொண்டிற்கு ஒப்படைத்து வந்ததாகத் தெரிகின்றது. அதுபற்றி, ***எட்கார் தரசத்தன்*** (Edgar Thurston) தம் ***தென்னாட்டுக் குலமரபுகள்*** (Castes and Tribes of Southern India) என்னும் நூலிற் பின்வருமாறு தெரிவித்துள்ளார் :

"In every Kaikōḷaṉ family, at least one girl should be set apart for and dedicated to temple service........"

"Kaikōḷaṉ girls are made *Dāsis* either by regular dedication to a temple, or by the headman tying *tāli* (*nāṭṭu poṭṭu*). The latter method is at the present day adopted because it is considered a sin to dedicate a girl to the god after she has reached puberty, and because the securing of the requisite official certificate for a girl to become a *Dāsi* involves considerable trouble."

"It is said", Mr. Stuart writes, "that, where the head of a house dies, leaving only female issue, one of the girls is made a *Dāsi* in order to allow of her working like a man at the loom, for no woman not dedicated in this manner may do so" (Vol. III, p. 37).

அடவியார் என்பது, பொருள்களை அடவு (mortgage) வாங்குபவர் என்றும் பொருள் படுமேனும், இறைவனை அடைந்தவர் அல்லது அடைக்கலமாகக் கொண்டவர் என்று பொருள் கொள்ளின், கைக்கோளரின் தேவ பத்தியைச் சிறப்பாகக் குறிக்குமாதலின், அதுவே பொருந்துவதாம்.

**அடவியில்திருடி** *aḍaviyil-tiruḍi*, பெ. (n.) ***சதுரக் கள்ளி;*** square spurge, *Euphorbia quadruculli.*

**அடவியீ** *aḍavi-y-ī*, பெ. (n.) ***கடிக்கின் பெருந் தூக்கமும் மயக்கமும் உண்டாக்கும் காட்டு ஈ*** (சீவரட். 451); an insect of the forest, the bite of which develops excessive sleep and stupor. 2. ***ஒருவகைக் காட்டுப்புழு;*** a forest worm (சா.அக.).

*[அடவி + ஈ.]*

**அடவு** *aḍavu*, பெ. (n.) அடகு (W.G.); pledge, pawn.

ம., க., து. அடவு; தெ. அட்டுமு.

*[அடைவு → அடவு.]*

**அடவுசெய்வார்** *aḍavu-ševvār*, பெ. (n.) அடவிமார் பார்க்க; see *aḍavimār.*

**அடவோலை** *aḍav(u)-ōlai*, பெ. (n.) ***அடைமான ஓலை;*** lease-deed.

*[அடை → அடைவு → அடவு. அடவு+ஓலை.]*

**அடளை** *aḍaḷai*, பெ. (n.) ***கடல்மீன்வகை;*** a kind of marine fish.

அடல்² பார்க்க; see *aḍal*².

**அடா¹** *aḍā*, இடை. (int.) 1. ***இழிந்தோன், கீழ்ப்பட்டவன், சிறுவன், சண்டையிடும் பகைவன் ஆகியோரை விளிக்கும் விளி;*** a vocative addressed to an outcaste, or an inferior, or a small boy or a quarrelling enemy. "அவன் செத்த சேதியைநீ யறியாயோ அடா பித்த" (இராமநா. சுந்தர. பக். 267). "நில்லடா சிறிது நில்லடா" (கம்பரா. யுத்த. நாகபா. 73). 2. ***இகழ்ச்சி, வெறுப்பு, வியப்பு, மனவருத்தம் முதலியவற்றின் குறிப்பிடைச்சொல்;*** an exclamation of contempt, hatred, surprise, regret, etc. அடா! இப்பொழுதுதானே பார்த்துவிட்டு வந்தேன். அதற்குள்ளேயா போய்விட்டார்! (உ.வ.).

ம. எடா; க. அடா; தெ. ஏரா.

*[ஏலா → ஏளா → ஏழா → ஏடா → எடா → அடா.]*

**அடா²** *aḍā*, பெ.எ. (adj.) ***அடாத*** பார்க்க; see *aḍāda.*

*[அடாத → அடா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]*

**அடாசனி** *aḍāšaṉi*, பெ. (n.) 1. ***நீர்க்கால்களில் இயற்கையாகப் படரும் ஆரைக்கீரை;*** greens growing near water channels. 2. ***புளியாரை*** (மலை.); yellow wood-sorrel, *Oxalis corniculata.*

**அடாசு-தல்** *aḍāśu-*, 5 செ.கு.வி. (v.i.) **விலகுதல்**; to recede, give place to. —, 5 செ.குன்றாவி. (v.t.) **திணித்தல்**; to stuff.

**க.** அடசு

[அடை → அடைசு → அடாசு.]

**அடாசு** *aḍāśu*, பெ. (n.) **மட்கின பொருள்**; spoiled substance, damaged stuff, putrefied matter.

**க.** அடசல; **து.** அதெசு; **மரா.** அடசாண்டா.

[அடு → அடாதது → அடாது → அடாசு = தகாதது.]

**அடாஞ்சி** *aḍāñji*, பெ. (n.) **இலவங்கப்பூ**; flower of the clove tree, *Caryophyllum* (சா.அக.).

**அடாதஞ்சம்** *aḍādañjam*, பெ. (n.) **துதிக்கையுள்ள அரிமாப் (சிங்கம்) போன்ற இறந்துபட்ட விலங்கினம், யாளி**; an extinct animal resembling the lion, but with a proboscis like that of the elephant.

**அடாத** *aḍāda*, பெ.எ. (adj.) **தகாத, பொருந்தாத**; unfit, improper.

[அடு + ஆ(எ.ம.இ.நி.) + த.]

**அடாதது** *aḍādadu*, பெ. (n.) **தகாதது**; that which is unfit, improper. ''தமக்கடாதது செய்துயிர் வாழ்வது தன்னில்'' (பிரபுலிங்க. அக்கமா. துற. 21).

**ம.** அடாதது

[அடுத்தல் = பொருந்துதல், ஏற்றல், தகுதல். அடுத்தது × அடாதது (எ. ம. வினையா. பெ.).]

**அடாது** *aḍādu*, பெ. (n.) அடாதது பார்க்க; see *aḍādadu*. ''அடாதுசெய் சடாசுரன்'' (பாரத. சடாசு. 22). 'அடாது செய்பவர் படாது படுவர்' (பழ.).

[அடாதது → அடாது.]

**அடாதுடி** *aḍāduḍi*, பெ. (n.) **தீம்பு**; perversity, wickedness.

**க., தெ.** அட்டாதிட்டி; **து.** அட்டாதுட்டி.

**அடாநிந்தை** *aḍā-nindai*, பெ. (n.) 1. **நிலைக்களம் (ஆதாரம்) இல்லாப் பழிச்சொல்**; unfounded reproach. 2. **பொறுக்கமுடியாப் பழிச்சொல்**; unbearable slander.

[**த.** அடா + **Skt.** nindā > **த.** நிந்தை = பழிப்பு. அடாத → அடா.]

**அடாநெறி** *aḍā-neṟi*, பெ. (n.) **தகாத வழி**; evil ways. ''அடாநெறி யறைதல் செல்லா வருமறை'' (கம்பரா. பால. எதிர்கொள். 1).

[அடாத → அடா + நெறி.]

அடா² பார்க்க; see *aḍā*².

**அடாப்பழி** *aḍā-p-paḻi*, பெ. (n.) **தகாத பழிச்சொல்** (சிலப். 9 : 7, உரை); slander, calumny, unjust accusation.

[அடாத → அடா + பழி.]

அடா² பார்க்க; see *aḍā*².

**அடாபிடாவெனல்** *aḍā-piḍā-v-eṉal*, பெ. (n.) **'அடா' என்று விளித்து மதிப்பின்றிப் பேசுதல்**; talking impolitely addressing one *aḍā*. ஏன் என்னை அடாபிடா என்று பேசுகிறாய்? மதிப்பாய்ப் பேசு (உ.வ.).

**அடாபிடி** *aḍā-piḍi*, பெ. (n.) **வன்செயல்**; violence.

**ம.** அடாபிடி

[**ஒருகா.** அடா (தகாத) + அடி – அடாவடி → அடாபிடி.]

**அடாபிடித்தனம்** *aḍā-piḍi-t-taṉam*, பெ. (n.) **வன்செயல் தன்மை**; the quality of being violent. குண்டர்களைக் கொண்டு நன்கொடைப் பணந் தண்டுவது அடாபிடித் தனம்.

[**ஒருகா.** அடா (தகாத) + அடி (தாக்கு) – அடாவடி → அடாபிடி.]

**அடாபுடாவெனல்** *aḍā-puḍā-v-eṉal*, பெ. (n.) **ஓர் ஆடவனை மதிப்புரவின்றிப் பேசுதல்**; speaking impolitely to a male person. அவன் என்னை அடாபுடா என்று பேசுகிறான் (உ.வ.).

[அட → அடா. 'புடா' எதிரொலிச்சொல் (echo-word). என் → எனல் (தொ.பெ.). 'அல்' (தொ.பெ. ஈறு).]

அடா¹ பார்க்க; see *aḍā*¹.

**அடார்** *aḍār*, பெ. (n.) **புலி முதலிய விலங்குகளை அகப்படுத்தும் பொறி**; trap for tigers and other animals. ''பெருங்கல் லடாரும் போன் மென'' (புறநா. 19 : 6).

[அடர்த்தல் = அமுக்குதல், நெருக்குதல். அடர் → அடார்.]

**அடார்வெளி** *aḍār-veḷi*, பெ. (n.) **தரிசுநிலம்** (இராட்.); uncultivated open land.

**அடாரளப்பூ** *aḍāraḷappū*, பெ. (n.) *முடக் கொற்றான்*; a plant palsy curer, *Cardiaspermum halicacabum*.

**அடாவடி** *aḍā-v-aḍi* பெ. (n.) *1.* **கொடும்பேச்சு**; violent talk. *2.* **கொடுஞ்செயல்**; outrage, violence.

**ம.** அடாபிடி; **க.**, **தெ.** அடாவுடி; **H.** haḍabaḍi.

*[அடா + அடி. அடாத → அடா.]*

**அடாவடித்தனம்** *aḍāvaḍi-t-taṉam*, ப.பெ. (abst.n.) *1.* **போக்கிரித்தனம்**; mischief. *2.* **கொடுஞ்செயல்**; act of violence, outrage. அவன் செய்வதெல்லாம் அடாவடித்தனம் (உ.வ.).

*[அடாவடி + தனம் (ப.பெ. ஈறு).]*

**அடாவடியடி[1]-த்தல்** *aḍā-v-aḍi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* **வல்லடி வழக்காடுதல்**; to lay unjust claim to the property of others using force. அடாவடியடித்து அவன் பணத்தை யெல்லாம் அக்கம்பக்கத்தார் கவர்ந்து கொண்டார்கள் (உ.வ.). *2.* **வம்புரையாடுதல்**; to harass by mischievous talk, as a rowdy.

**ம.** அடாபிடி; **க.** அடாவுடி; **தெ.** அடாவடி.

*[அடா (தகாத, முறையற்ற) + அடி (தாக்கு) + அடித்தல் (தாக்கியுரைத்தல்). அடுத்தல் = தகுதல். அடாத → அடா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]*

அடாவடி → டாவடி → ராவடி (கடுங்கொ.).

**அடாவடியடி[2]-த்தல்** *aḍā-v-aḍi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) **கொடுமையாகப் பேசுதல்**; to speak outrageously. ஓயாமல் அவனிடம் போய் அடாவடியடிக்கிறார்கள். நேற்று இரவெல்லாம் எல்லாருஞ் சேர்ந்து அவனை அடாவடியடித்தார்கள் (உ.வ.). —, 4 செ.குன்றாவி. (v.t.) **கொடுமை செய்தல்**; to do violence, to perpetrate outrage. அவன் பங்காளிகள் அடாவடியடித்து அவன் சொத்தையெல்லாம் பறித்துக்கொண்டார்கள் (உ.வ.).

*[அடாவடி + அடி (து.வி.).]*

**அடாவந்தி** *aḍā-vandi*, பெ. (n.) *1.* **முறையன்மை (அநியாயம்)** (வின்.); injustice, impropriety. *2.* **இட்டேற்றம்** (வின்.); foisted accusation, false report, slander. *3.* **துன்பம்** (வின்.); grievance.

*[அடா (அடாது) + வந்தி (வந்தது). அடாது = தகாது.]*

**அடாவரி** *aḍā-vari*, பெ. (n.) **முறைகேடான வரி** (இராட்.); unjust tax.

*[அடா + வரி. அடாத → அடா.]*

**அடாவழி** *aḍā-vaḻi*, பெ. (n.) *1.* **கடுவழி**; rough path. *2.* **தீயநெறி**; evil ways.

**ம.** அடாவழி

*[அடா + வழி. அடாத → அடா.]*

**அடி-த்தல்** *aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* **விளையாடுதல்**; to sport, play. குண்டடித்தல், கோலியடித்தல், சிலம்படித்தல், நொண்டியடித்தல் முதலியன. *2.* **தனியாக அல்லது கூடிக் கூத்தாடுதல்**; to dance singly or in groups. கூத்தடித்தல், கழியலடித்தல், கும்மியடித்தல் முதலியன. 'நான் இவ்வமணக் கூத்தெல்லா மடித்தேன்' (திவ். திருமாலை. 34, வியா.). *3.* **ஒரு நன்னிகழ்ச்சியின்போது கண்ணன்ன உறவினர் ஒருவரின்மையால் மனம் வருந்துதல்**; to suffer in mind due to the absence of a beloved person on a festive occasion. நேற்று நிகழ்ந்த விருந்திற்கு நீங்களின்மையால் என் மனம் மிகவும் அடித்துக்கொண்டது (உ.வ.). *4.* **துடித்தல்**; to twitch, move spasmodically. இருநாளாய் எனக்குக் கண் அடித்துக்கொள்கிறது, என்ன நேருமோ, தெரியவில்லை (உ.வ.). *5.* **சாடை காட்டுதல்**; to hint by gesture. அவன் அவளைப் பார்த்துக் கண்ணடிக்கிறான் (உ.வ.). *6.* **உடம்பு சுடுதல்**; to suffer from fever. அவனுக்குக் காய்ச்சலடிக்கிறது (உ.வ.). *7.* **பூசுதல்**; to besmear, daub. வீட்டிற்கு வெள்ளையடிக்கவேண்டும் (உ.வ.). *8.* **தடவுதல்**; to stroke, brush over. அவனுக்குக் குழையடித்துத் தேட்கொட்டு வலியைப் போக்கினார்கள் (உ.வ.). *9.* **அலப்புதல்**; to chatter, prattle, swagger, bluff. நாள் முழுவதும் அரட்டையடிக்கிறான். எங்கே போனாலும் வாயடிக்கிறான் (உ.வ.). *10.* **அசைத்தல்**; to wag. நாக்கடித்தல் = நாவசைத்தல், நாவசைத்துச் சொல்லுதல் அல்லது பேசுதல். இளநாக்கடித்தல் = ஒன்றன்மேல் விருப்பமில்லாததுபோற் காட்டுதல். இழந்த நாக்கடித்தல் = எண்ணிப் பாராது வாய்நேர்தல் (வாக்களித்தல்). *11.* **துணி காற்றில் அசைந்தாடுதல்**; to flutter, as a flag or cloth hung for drying. காயப்போட்ட வேட்டி காற்றிற் படபடவென்று அடிக்கிறது (உ.வ.). *12.* **மணி ஒலித்தல்**; to sound or ring, as a bell. கோயில் மணியடிக்கிறது (உ.வ.). *13.* **காற்று வீசுதல்**;

to blow, as strong wind. புயற்காற்றடிக்கிறது (உ.வ.). ''சண்டமா ருதச்சுழல் வந்துவந் தடிப்ப'' (தாயு. தேசோ. 2). 14. **மூக்கிற்குப் புலனாதல்**; to be perceived by the sense of smell. பூக்கடைக்குப் போனால் நல்ல மணம் (வாசனை) அடிக்கிறது; குப்பைப் பக்கம் போனால் தீய நாற்றம் அடிக்கிறது (உ.வ.). 15. **ஒளிர்தல்**; to shine, as moon; to flash, as lightning. நிலாப் பட்டுப்பட்டென்று அடிக் கிறது. நாலுபக்கமும் மின்னலடிக்கிறது (உ.வ.). 16. **பொறியியங்குதல்**; to work, as a machine. இந்தத் தையற்பொறி நன்றா யடிக்குமா? (உ.வ.). 17. **ஆக்கவாய்ப்பு மிகு தல்**; to have continued good luck. அவனுக்கு ஆக்கவாய்ப்பு (அதிர்ஷ்டம்) அடிக்கிறது (உ.வ.). 18. **பழைய நிலை கொள்ளுதல்**; to resile, as elastic bodies. இந்த வில்லை (spring) முறுக்கினால் எதிர்த்தடிக்கும் (உ.வ.). 19. **தாக்குதல்**; to afflict the body. வெக்கை யடிக்கிறது, வாடையடிக்கிறது, பனியடிக் கிறது. 20. **மழை கனத்துப் பெய்தல்**; to rain heavily. மழை உரத்தடிக்கிறது. 21. **தண்ணீர் வேகமாய்ப் பாய்தல்**; to issue forcibly, as water from a pipe. தண்ணீர் குழாயிலிருந்து 'சர்' என்றடிக்கிறது (உ.வ.). 22. **இயற்றுதல்**; to perform, as an athletic feat. அல்லாப்பரண்டி யடித்தல். 23. **இயங்குதல்**; to move. குதிரை பின்னுக்கடிக்கிறது. 24. **சேறு தெறித்தல்**; to splash, as mud. வண்டி வரும்போது விலகு, இல்லாவிட்டாற் சேறடிக்கும் (உ.வ.). 25. **நீந்தும்போது கைகால்களால் நீரையடித் தல்**; to dabble, to strike water with hands and feet while swimming. நீச்சலடித்தல். 26. **திரும்புதல்**; to turn. குப்புற அடித்து விழுந்தான். 27. **உணர்வு கெடுதல்**; to become unconscious. மயக்கமடித்து விழுந்தான். 28. **ஒருவன் அல்லது ஒருத்தி வீணாகத் தன்னை வருத்திக் கொள்ளுதல்**; to worry oneself unnecessarily, to complain vociferously and repeatedly. ஏன் இப்படி அடித்துக்கொள்ளு கிறாய்? 29. **ஒன்றன்மேலடித்துச் சூளுறுதியை மிகுத்தல்**; to increase the effect of swearing by striking on something important, dear or held sacred. நீ திருடவில்லையென்று உன் பிள்ளை தலையில் அடித்துச் சொல் (உ.வ.). 30. **விலை பேசிச் செய்த முடிவைக் கையிலடித்து உறுதிப் படுத்துதல்**; to confirm a bargain by striking the palm of another. விலைபேசி முடித்த வுடன் மாட்டுக்காரன் வாங்குகிறவன் கையில் அடித்துக் கொடுத்தான். 31. **தேர்வில் தவறு தல்**; to fail in an examination. மதியழகன் ஆட்டை (ஆண்டு)த் தேர்விற் கோட்டடித்து விட்டான். 32. **சுண்டுவில்லடித்தல்**; to catapult. நான் போனபோது மாட்டுக்காரப் பையன் கவட்டையடித்துக்கொண்டிருந் தான். 33. **மார்பில் அறைந்துகொள்ளுதல்**; to beat the breast and bewail the dead, as women do. பெண்கள் மாரடித்து அழுகிறார்கள் (உ.வ.). 34. **துளையடித்தல்**; to punch a hole. சுவரில் கண்டகண்ட இடமெல்லாம் இப்படியா துளையடிப்பது? 35. **பூசணம் பூத் தல்**; to become mouldy. மூடிவைத்த பல காரத்திற் பூஞ்சான் அடித்துவிட்டது. 36. **படர்தல்**; to spread, as moss. பாசியடித்த குளத்தில் இறங்காதே. 37. **மழித்தல்**; to shave. தம்பிக்கு மொட்டையடி. 38. **தங்கு தல்**; to abide. அது மூதேவி யடித்த முகம்; அதனொடு பேசாதே (இ.வ.). 39. **ஒரு திசை நோக்கி யியங்குதல்**; to proceed in a particular direction. காக்கை வலமடித்தது; கரிக்குருவி இடமடித்தது (உ.வ.). 40. **புலம்புதல்**; to lament. நேற்று நடுச்சாமத்தில் இந்தப் பக்கம் பேயடித்துக்கொண்டு போனதே; அது உன் காதில் பட்டதா? (இ.வ.). 41. **மலங்கழிதல்**; to have loose motion. மூன்று முறை வயிற்றா லடித்தது, களைத்துப் போய்விட்டான் (இ.வ.). 42. **நெஞ்சு பதைத்தல்**; to funk. இருவர் நெஞ்சமும் அடித்துக்கொண்டன. 43. **திரிதல்**; to roam about. ஊரெல்லாம் சுற்றியடித்துவிட்டு வந்திருக்கிறான். 44. **தீம்பு செய்தல்**; to be iniquitous and unruly, to make an insolent display of wealth and luxury. அண்ணனுந் தம்பியும் செல்வச் செருக்கினால் தலைகால் தெரியாமற் பெருங் கொட்டமடிக்கிறார்கள். 45. **ஒரு வினையில் ஒட்டாரம் பண்ணுதல்**; to be obstinate, to persist in anything. எருது மொண்டியடிக் கிறது, எவ்வளவு அடித்தாலும் எழவில்லை, நகரவில்லை. 46. **சாய்தல்**; to capsize, overturn, as a cart. வண்டி பள்ளத்திற் போனபோது ஓசாரமடித்துவிட்டது (உ.வ.). 47. **நடித்தல்**; (fig.) to pretend, feign. அவனுக்கு உண்மையாக நோயில்லை; நோயாளிபோல் நாடகமடிக்கிறான். 48. **புறப்பட்டுப் போதல்**; to proceed to a place. பள்ளிக்கூடம் விட்டவுடன் நேரே ஊருக்கு அடித்துவிட்டான். 49. **காலிற் கட்டி யடித்தல்**; to be tied to the feet and beaten about, an act of humiliation.

இது நடைமுறையிலன்றிப் பேச்சுவழக்காக மட்டுமுள்ளது. ஏதேனுமொரு துறையில் தாழ்ந்த திறமையுள்ளவரை உயர்ந்த திறமையுள்ளவருடன் ஒப்பிடும்போது, இவ் வழக்கு நேரும். அன்று, பெரும்பாலும், காணுதல் என்னும் துணைவினை எதிர்மறை வடிவில் இதனொடு சேர்ந்து வரும்.

எ-டு: இந்தப் பேராசிரியர் மும்மொழியுங் கற்றிருந்தாலும், மறைமலையடிகள் காலிற் கட்டியடிக்கக்கூடக் காணமாட்டார்; This professor, though conversant with three languages, cannot stand in comparison at all to *Maṟaimalai Aḍigaḷ*, lit., This professor ...... is not even fit to be tied to the feet of *Maṟaimalai Aḍigaḷ* and beaten. '......காலில்தான் கட்டியடிக்க வேண்டும்' என்னும் வழக்கு உள்ளது. அது ஒப்பீட்டிலுள்ள ஏற்றத் தாழ்வைச் சற்றுக் குறைக்கும்.

எ-டு: வடமொழியில் வருணாசிரம தரும சாத்திரம் தொகுத்த மனுவைச் சிலர் திருவள்ளுவரோடு ஒப்பிடுவர். முன்னவரைப் பின்னவர் காலில்தான் கட்டியடிக்க வேண்டும்.

—, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **விரித்த கையினாலாவது, கோல் முதலிய கருவியினாலாவது, ஆளை அல்லது அஃறிணைப் பொருளை அறைதல்**; to beat a person, place or thing with open hand or an instrument, smite, hammer. அவனைக் கன்னத்தில் ஐந்து விரலும்பட அடித்தான் (உ.வ.). 2. **தண்டித்தல்**; to punish. "அக்கிரமத்தாற் குற்றமடித்துத் தீர்த்து" (சி. சி. சுபக். 2 : 15). 'அடிக்கும் ஒரு கை, அணைக்கும் ஒரு கை' (பழ.). குட்டையிலடித்தல். 3. **தோற்கருவி யியக்குதல்**; to play on musical instruments made of hollow cylinder or hemisphere with parchment stretched over the opening like drums (S.). அழகநம்பி நன்றாய் மதங்கம் (மிருதங்கம்) அடிப்பான் (உ.வ.). 4. **மணியொலிப்பித்தல்**; to ring a bell. நிலையத்தில் சுமைதூக்கி (porter) மணியடித்தவுடன் வண்டி புறப்பட்டுவிட்டது. 5. **சிறகியக்குதல்**; to flap the wings. கூட்டிலிருந்த குஞ்சு சிறகடித்துப் பறந்துபோய்விட்டது. 6. **கல்லெறிந்து காய் வீழ்த்துதல்**; to throw a stone and cause fruit(s) to fall from a tree. ஒரே கல்லால் ஒரு மாங்குலையை அடித்துவிட்டான் (உ.வ.). 7. **தண்ணீரை வலுவாகத் தெளித்தல்**; to splash water with force. முகத்தில் தண்ணீரை அடி. 8. **மருந்து அல்லது மருந்துநீர் சிவிறியால் தெளித்தல்**; to spray liquid or powdered medicine. புன்செய்களுக்குப் பூச்சிமருந் தடித்தார்கள். 9. **மோதுதல்**; to dash. அலையடிக்கிறது. தொடர்வண்டியிற் போகும்போது பல கணிக்கு வெளியே தலையை நீட்டியதால் தொலைவரிக் கம்பம் அடித்துவிட்டது (உ.வ.). 10. **துவைத்தல்**; to wash by beating wet clothes on a stone. வேட்டியை இரண்டடி அடித்துத் தா. 11. **மாப்பிசைதல்**; knead, as flour. அப்பத்திற்கு மாவடிக்க வேண்டும். 12. **உடைத்தல்**; to break, as clods of earth. நிலத்தை உழுதபின் கட்டியடிக்க வேண்டும் (உ.வ.). 13. **போரில் தாக்குதல்**; to attack in battle. அடித்தான் பகதூர்வெள்ளை கங்கை கொண்டான் கயத்தாறுவரை. 14. **வண்டி குலுங்குதல்**; to jerk, jolt. பேரியங்கியின் (bus) பின்புறமும், இயங்கி நரவண்டியும் (auto-ricksha) ஓடும்போது தூக்கியடிக்கும். 15. **காலங் கடத்தி வருத்துதல்**; to annoy by undue postponing. வாங்கின கடனைக் கொடாமல் இழுத்தடிக்கிறான். 16. **முத்திரை பொறித்தல்**; to stamp, impress, mark on. முத்திரையடித்தல். 17. **பதித்தல்**; to strike into, drive in. சுவரில் ஆணியடித்திருக்கிறது. நிலத்தில் முளையடிக்க வேண்டும் (உ.வ.). 18. **அச்சிடுதல்**; to print. அச்சடிக்கும் இடம். 19. **பொறியில் தைத்தல்**; to sew on a machine. ஒரு சொக்காய் (shirt) அடித்துக் கொடு. 20. **வெட்டுதல்**; to dig. நீர்ப்பாசனத்திற்கு ஒரு கிணறடிக்கவேண்டும். 21. **செய்தல், கட்டுதல், அமைத்தல், பதித்தல்**; to make, build, construct, pitch. (அ) **கல்லிற் கருவி சமைத்தல்**; to make a stone implement by chiselling. அம்மி திரிகையுரல் அடிக்குமிடம். (ஆ). **கல்லில் அல்லது மாழையில் (உலோகத்தில்) உருவம் அமைத்தல்**; to sculpture by chiselling stone or casting metal. வள்ளுவர் கோட்டத்தில் திருவள்ளுவர் படிமை கருங்கல்லில் அடித்துவைத்திருக்கிறது. அவன் அடித்துவைத்த சிலைபோலிருக்கிறான் (உ.வ.). (இ) **வீடு கட்டுதல்**; to build, construct. மரத்தாலடித்த மனை. சோற்றாலடித்த சுவர். (ஈ) **படமாடம் அமைத்தல்**; to pitch a tent. புதிதாய் வந்த வட்டக்காட்சிக்குப் (circus) பெரிய கூடாரம் அடித்திருக்கிறார்கள். 22. **நகையாடிக் கூறுதல்**; to joke, to make fun

of. புது மணவாளப் பிள்ளையை முறைகாரப் பெண்கள் நையாண்டியடிப்பது வழக்கம். 23. **குறை சொல்லுதல்**; to criticise. கட்டத் தெரியாவிட்டாலும் கட்டின வீட்டிற்கு வக்கணையடிக்கத்தெரியும் (உ.வ.). 24. **ஓட்டுதல்**; to drive as cart, plough, bullocks, etc. வண்டியடித்தல், ஏரடித்தல், பிணையலடித்தல் முதலியன. 25. **வண்டியிற் கொண்டுவருதல்**; to cart. நாலுவண்டி மணலடித்தான் (உ.வ.). 26. **வண்டியிற் கொண்டு நிலத்திலிடுதல்**; to cart dry clay, manure, etc. நன்செய்க்குக் கரம்பையும் உரமும் அடிக்க வேண்டும். 27. **உள்ளிடுதல்**; to apply, inject. காரைமுள் தைத்துக் களைந்தெடுத்த இடத்தில் எருக்கம் பால் அடிக்கவேண்டும். 28. **வாரிக்கொண்டு போதல்**; to sweep away, as flood. களத்திலிருந்து நெல்லையெல்லாம் வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. 29. **கவர்தல்**; to seize, snatch, steal, rob, plunder, take by force. கோழிக்குஞ்சைப் பருந்தடித்துக் கொண்டு போய்விட்டது. அவன் பணப் பையை எவனோ அடித்துக்கொண்டு போய் விட்டான். அவன் சொத்தையெல்லாம் கொள்ளையடித்துவிட்டார்கள். 30. **நீக்குதல்**; to remove, erase, cross out, nullify. அந்த மாணவன் பெயரை அடித்துவிட்டார்கள். பிழையான விடைகளை யெல்லாம் ஆசிரியர் அடித்து வைத்திருக்கிறார். ஒரு சட்டம் இன்னொரு சட்டத்தை அடிக்கும். 31. **மறுத்தல்**; to refute, contradict. அவன் சொல்வதையெல்லாம் அடித்துப் பேசு. 32. **வெல்லுதல்**; to defeat, overcome, win the game. அவனை ஓட்டப் பந்தயத்தில் அடித்து விட்டான். 'அடித்தது ஆட்டம், பிடித்தது பெண்டு' (பழ.). 33. **வென்று பெறுதல்**; to win, as a prize. அவன் பேச்சுப் போட்டியில் ஒரு வெள்ளிக் கிண்ணத்தை அடித்து விட்டான். 34. **கொல்லுதல்**; to kill. 'புலியடிக்குமுன் கிலியடிக்கும்' (பழ.). அவன் பேயடித்துச் செத்தான். பழைய வீட்டுப் புறக்கடையில் ஒரு பாம்பும் ஒரு தேளும் அடித்தார்கள். மருமகன் வந்திருந்தபோது கோழியடித்து விருந்திட்டார்கள். வேட்டைக் காரன் ஒரு முயலடித்துக்கொண்டு வந்தான். 35. **அழித்தல்**; to ruin, destroy. திரௌபதி வஞ்சினம் கவுரவர் மரபை அடித்துவிட்டது. 36. **அடித்து உதிர்த்தல்**; to beat down fruits from trees. 37. **கதிரினின்று தவசமணிகளை அடித்துப் பிரித்தல்**; to beat and separate grains from spike or head of corn. இன்று களத்தில் நெல்லடித்தோம். 38. **பயிர்செய்தல், தவசம் விளைவித்தல்**; to raise a crop, produce food grain. அதே நிலத்தில் சென்ற ஆண்டு பத்து மூட்டை சாமை யடித்தோம் (தரும.). 39. **கரண்டியால் அடித்துக் கலக்குதல்**; to stir with a spoon. ஒரு முட்டையடித்து அடை சுடு; ஒரு குவளை தேநீர் அடித்துக்கொடு. 40. **பேரளவாயுண்ணுதல்**; to eat voraciously, to drink excessively. கருப்பண்ணன் இன்று காலை இருபது இட்டிலியும் ஐந்து குவளை கொழுந்துநீரும் (தேநீரும்) அடித்துவிட்டான். 41. **கொல்லாமற் சாக வைத்தல்**; to cause death through indirect means. அவனைப் பட்டினிபோட்டுச் சாகடித்தார்கள். 42. **வெடி குண்டு வீசுதல்**; to fire shots, discharge cannon balls. விட்டடித்தான் இரண்டு குண்டு. 43. **தொலைவரி விடுதல்**; to send telegraphic message. மகனை உடனே வரச்சொல்லித் தொலைவரி (தந்தி) யடித்தார்கள். 44. **தூசி துடைத்தல்**; to dust. மேசை நாற்காலியில் தூசியடி. 45. **ஏமாற்றுதல்**; to cheat, defraud, swindle. ஊரையடித்து உலையிற்போட்டு வாழ்கிறான் (உ.வ.). 46. **கஞ்சாப் புகை குடித்தல் அல்லது கஞ்சாக் குழம்பு (லேகியம்) உண்ணுதல்**; to smoke ganja or eat bhang. கஞ்சா (பங்கி) அடிக்கிறான். 47. **காசு உரு வாக்குதல்**; to mint, coin money. காசடிக்கும் இடம் (தங்கசாலை). 48. **விற்றல்**; to sell. என் வண்டியை எப்படியாவது கையடிக்கப் பார்க்கிறேன். 49. **மனப்பாடஞ் செய்தல்**; to memorize, learn by rote. பாடத்தை யெல்லாம் உருவடித்துவிட்டான் (உ.வ.). 50. **கையாளுதல்**; to employ, use, handle, practise. ஆங்கிலமுந் தமிழுங் கலந்தடிக் கிறான் (உ.வ.). எ-டு: உழப்பியடித்தல், கலங்கடித்தல், சிதறடித்தல், போக்கடித்தல். 51. **அரித்தல்**; to gnaw as white ant, to eat as moth. பொத்தகத்தைப் பூச்சி யடித்து விட்டது (இ.வ.). 52. **மழித்தல்**; to shave. அண்ணனுக்கு மீசையடி. 53. **நைத்தல்**; to crush. இந்த வேரை யடித்துப் புண்ணின்மேல் வைத்துக் கட்டு (இ.வ.). 54. **ஒன்றில் மாட்டி வைத்தல்**; to involve, entangle, implicate. என்னைக் குழப்பத்தி லடித்துவிட்டு வந்து விட்டான். 55. **கழித்தல்**; to pass, as urine. சிறுவன் நின்றுகொண்டே அடிக்கிறான் (நகை.). 56. **அழுத்துதல்**; to press down. வண்டியில் முன்பொறை (முன்பாரம்) அடிக்

கிறது, கொஞ்சம் பின்னால் நகருங்கள் (இ.வ.). 57. **கெடுத்தல்**; to spoil. கருமத்தை (காரியத்தை) உழப்பியடித்துவிட்டான். 58. **ஒன்றை எங்கேனும் தெரியாது விட்டு விடுதல்**; to mislay a thing unwittingly and lose it. மாணவன் தன் ஊற்றுத்தூவலைப் போக்கடித்துவிட்டான். 59. **பொறியாற் குத்துதல்**; to punch. 60. **ஒன்றைச் செய்வித்தல்**; to cause anything. கன்னெய் (petrol) விலையேற்றம் பல நாடுகளைக் கலங்கடித்து விட்டது. (கலங்க + அடித்தல் → கலங்கடித்தல் = கலங்கச் செய்தல்). 61. **துன்புறுத்துதல்**; to afflict, persecute. இட்டிலர் (Hitler) செருமானிய யூதரைச் சிதறடித்தார் (சிதற + அடித்தல் → சிதறடித்தல் = உலகெங்கும் சிதறிப் போமாறு துன்புறுத்துதல்). 62. **தூக்கந் தாக்குதல்**; to be affected by sleepiness. அவனைத் தூக்கம் அடிக்கிறது, போய்த் தூங்கச் சொல். 63. **சாய்த்தல்**; to bend, turn down. காற்று வேலியை அடித்து விட்டது. 64. **விதை நசுக்குதல்**; to castrate. அது காயடித்த காளை (உ.வ.).

ம. அடி, அடிக்குக; க. அடசு; தெ. அடுசு; து. அடிபுனி.

[அடு → அடி.]

அடி[1] *aḍi*, பெ. (n.) **அறை, தாக்கு, தட்டு, வீச்சு**; beat, stroke, blast, blow, as a wind. 'அடி அதிரசம் குத்து கொழுக்கட்டை', 'அடி உதவுவது போல் அண்ணன் தம்பி உதவார்', 'அடிக்கும் ஒரு கை அணைக்கும் ஒரு கை', 'அடிக்கிற புயலைத் தடுக்க முடியுமா?' (பழ.).

ம., க., கை., குற., து., குட. அடி; தெ. அடுபு, ஆடு; கோத. அய்ட்; மா., கொலா. அட்க்; பெங்., குவி. அத்த்; இரு. அடிகெ; பர்., ஒரி., கட. அட்; துட. ஒட்ய்; கொண். டுக்.

[அடு → அடி.]

அடி[2] *aḍi*, பெ. (n.) 1. **கீழ்ப்பாகம், கீழ்ப்பகுதி**; lower part, bottom, base, basement. அடிவயிறு, அடிவாரம், அடித்தளம். 'அடி ஒட்டையாயிருந்தாலும் கொழுக்கட்டை வேகவேண்டியதுதானே' (பழ.). 2. **கீழிடம்**; a place underneath. நிலைப்பேழைக்கு அடியில் அடித்துப் பெருக்கு. மரத்தடியில் உட்கார். தேரடிக்கடை. 'அடிச்சட்டிக்குள்ளே கரணம் போடலாமா', 'அடிவானம் கருத்தால் அப்பொழுதே மழை', 'அடிநாக்கில் நஞ்சும் நுனிநாக்கில் அமிர்தமுமா?' (பழ.). 3. **மண்டி** (அக.நி.); sediment. மண்டியை (அடியிலுள்ளதை)க் கீழே ஊற்று. 4. **அண்மை, ஓரம்**; nearness. கிணற்றடிப் புன்செய். 5. **பாதம்**; foot. "தோயு நிலத்தடி" (திருக்கோ. 3), "இப் பாலை நடந்தபெருங் காலடி மேலடி மானடியே" (தனிப்பா. தி. 2, 4:7). 6. **பாதமிதி**; tread. "ஆத்தனூன்று மடிதொறுந் தோன்றிய நீத்தம் யாவும்" (கந்தபு. மகேந். காவலா. 8). 7. **காற்றடம்** (சம்.அக.); footprint. இம் மண்ணில் பதிந்துள்ள அடி எவ்வழிச் செல்லுகிறது? 8. **செருப்படி (ஒரு மூலிகை)**; species of herb. சிறுசெருப்படி, பெருஞ்செருப்படி. 9. **(திருநீறுஞ் சந்தனமும் வைக்கும்) மடல் தாங்கி**; stand for a receptacle. 'புஷ்கர பத்தி மடல் அடியோடு மொன்று' (S.I.I. ii, 15). 10. **மரஅடி**; stump of a tree. மரத்தின் அடிப் பகுதியைக் கதவுக்குப் பயன்படுத்து. 11. **அடி மரம்**; trunk of a tree. நேற்றடித்த காற்றில் அடிமரம் வேரோடு சாய்ந்தது. 12. **பன்னிரு விரலம் (அங்குலம்) கொண்ட நீட்டலளவு**; linear measure of a foot = 12". வள்ளுவர் கோட்டத் தேரின் உயரம் 106 அடி. 13. **குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐவகைப் படும் செய்யுள் வரி**; metrical line, of which there are five kinds, viz., *kuṟaḷaḍi*, *šindaḍi*, *aḷavaḍi*, *neḍilaḍi* and *kaḻineḍilaḍi*. "நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே" (தொல். பொருள். செய். 31). 14. **தொடக்கம் (ஆதி)**; beginning. "நடுவின் முடிவினிலடியினன் றானபொருள்" (ஞானவா. சனகரா. 22). 15. **மூலம்**; source. இதனடியாக இது பிறந்தது. 16. **கடவுள்**; Supreme Being. "ஆரே யறிவா ரடியின் பெருமை" (திருமந். 2126). 17. **பழமை**; antiquity. "அடியிட்ட செந்தமிழின்" (தாயு. மலைவளர். 4). 18. **குல மூலம்**; ancestry. "பனிமதி மரபிற் கடியுநீ" (பாரத. குரு. 25). 19. **வழிமரபு (சந்தானம்)** (யாழ்ப்.); lineage, descent (J.). வாழையடி வாழையென வந்ததிருக் கூட்டம். 20. **மர வேர்**; root of a tree. "அடியற்ற மரமென்ன வடியிலே வீழ்ந்து" (தாயு. தேசோ. 10). 21. **சொல்வேர்**; root of a word. முகம் என்னுஞ் சொல் 'முகு' என்னும் அடியினின்று பிறந்தது. 22. **இசைப்பாட்டின் பல்லவி**; the chorus of a song. 'ஆயிரம் பாட்டிற்கு அடி தெரியும், ஒரு பாட்டிற்கும் உருத்தெரியாது' (பழ.). 23. **செண்டுவெளி** (சூடா.); race course. 24. **இடம்** (பிங்.); place. தேரடியில் பார்த்தேன். 25. **செல்வம்**; riches, wealth. 'அடி

யுடையார்க் கெல்லாம் சாதித்துக் கொள்ள லாமே' (ஈடு, 4.2 : 9). 26. **ஆம்புடை** (**உபாயம்**); plan of action. நல்ல அடி எடுத்தாய் (உ.வ.). 27. **சூதாடுவோர் குழூஉக்குறிகளுள் ஒன்று**; a conventional term in gambling. ''அடியிது பொட்டையீ தென்பர்'' (கந்தபு. தக்ஷ. கயமுகனுற். 168). 28. **உள்மூலநோய்**; internal piles or hemorrhoids situated within the sphincter ani (சா.அக.). அடிமூலம். 29. **கனியம்** (**தாது**); mineral (சா.அக.). செம்பும் நாகமும் அடியாகக்கொண்டது பித்தளை. 30. *கல்லுப்பு*; precipitated salt found at the bottom of the sea (சா.அக.). கடலின் அடியுப்பு. 31. *வழலை*; fuller's earth (சா.அக.). 32. *கட்டட நிலம்*; building site. மனையடி.

ம., க., குட. அடி; தெ. அடி, அடுகு; கோத. அட்ய்; துட. ஒட்ய்; கொண். அட்கி; பர். சடுங்; சிங். அடிய; இந். ஏடி.

*[அண்டி → அடி. இனி, அடு → அடி என்றுமாம்.]*

**அடி**[3] *aḍi*, இடை. (int.) **அண்மையிலுள்ள சிறுமிகளையும் தாழ்ந்த நிலைமைப் பெண்களையும், பழக்கம் இழிவு பகைமை முதலியனபற்றி விளிக்கும் விளியிடைச் சொல், 'அடா' என்பதன் பெண்பால்**; a vocative expressing familiarity, contempt or hatred addressed to small girls or inferior women who are nearby, fem. form of *aḍa*. 'அடியென் றழைக்கப் பெண்டாட்டி யில்லை, ஆண்பிள்ளை யெத்தனை பெண்பிள்ளை யெத்தனை என்கிறான்', 'என்னடி யம்மா தெற்கத்தியாள்! எந்நேரம் பார்த்தாலும் தொள்ளைக்காது', 'அடி என்கிற மந்திரியுமில்லை, பிடி என்கிற அரசனுமில்லை' (பழ.).

அடா[1] பார்க்க; see *aḍā*[1].

**அடிக்கட்டு-தல்** *aḍi-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **புண் புடைத்தல்**; to become inflamed, as a boil.

*[அடி + கட்டுதல்.]*

**அடிக்கட்டை** *aḍi-k-kaṭṭai*, பெ. (n.) **பாய்மரத்தின் அடிப்பாகம்** (M. Navi. 81); lower mast.

*[அடி + கட்டை.]*

**அடிக்கடி**[1] *aḍikk(u)-aḍi*, பெ. (n.) **அடிக்குச் சரியான அடி**; blow returned.

*[அடிக்கு + அடி.]*

**அடிக்கடி**[2] *aḍikkaḍi*, கு.வி.எ. (adv.) 1. **அடி பெயர்க்குந்தோறும்**; at every step. ''அடிக்கடி படித்துகள் பரவை தூர்த்தன'' (பாரத. பதினான். 201). 2. **திரும்பத் திரும்ப, பல முறை**; frequently, often, repeatedly. ''அண்ணல் சாமந்தன் றுஞ்சா னடிக்கடி யெழுந்து'' (திருவிளை. மெய்க்காட். 20). அவன் அடிக்கடி வந்து போகின்றான் (உ.வ.).

ம. அடிக்கடி; க. அடிகடிகெ; தெ. அடுகடுகுன.

*[அடிக்கு + அடி.]*

**அடிக்கடிசம்போகி** *aḍikkaḍi-šambōgi*, பெ. (n.) 1. *சேவல்*; cock. 2. *அடைக்கலங் குருவி*; house sparrow. இவை அடிக்கடி புணர்வதால் இப்பெயர் பெற்றன (சா.அக.).

*[Skt. sambhōgam (புணர்ச்சி) > த. சம்போகம் → சம்போகி = புணர்ச்சி செய்வது.]*

**அடிக்கணை** *aḍi-k-kaṇai*, பெ. (n.) *கணைக்கால்*; shin. ''இணைவரால் நிகரடிக் கணையாளை'' (சேதுபு. விதூம. 80).

*[அடி + கணை.]*

**அடிக்கப்பிடிக்க** *aḍikka-p-piḍikka*, நி.கா.எ. (inf.) **பந்தை அடிக்கவும் பிடிக்கவும்**; to strike the ball and catch it. கைப்பந்தாட்டத்தில் அடிக்கவும் பிடிக்கவும் நல்ல ஆளில்லை.

*[அடிக்க + பிடிக்க.]*

**அடிக்கயில்** *aḍi-k-kayil*, பெ. (n.) **தேங்காயின் அடிப்பாகம், கண்கயில் என்பதற்கு எதிரானது** (யாழ்ப்.); bottom half of a broken coconut shell, as opp. to the top half of the shell containing the three eyelets (J.).

க. அடிகரட

*[அடி + கயில்.]*

**அடிக்கரை** *aḍi-k-karai*, பெ. (n.) *கடற்கரையோரம்*; fringe of the seashore. அடிக்கரை பிடித்துப் போனால் முடிக்கரை சேரலாம் (உ.வ.).

*[அடி + கரை.]*

**அடிக்கல்** *aḍi-k-kal*, பெ. (n.) **அடிப்படைக் கல், கட்டுமானத்தின் அடையாளமாக முதன் முதலில் இடப்படும் கல்**; foundation stone. முதலமைச்சர் கல்லூரிக்கு அடிக்கல் நாட்டினார் (உ.வ.).

க. அடிகல்

*[அடி + கல்.]*

**அடிக்கலம்** *aḍi-k-kalam,* பெ. (n.) *சிலம்பு;* anklet. ''அடிக்கல மரற்ற'' (சீவக. 2041).

*[அடி + கலம். அடி = பாதம். கலம் = அணிகலன், சிலம்பு.]*

**அடிக்கழஞ்சுபெறு-தல்** *aḍi-k-kalañju-peṟu-,* 19 செ. குன்றாவி. (v.t.) **பெருமதிப்புப் பெறுதல்;** to be highly valued. 'உங்கள் போக்கு அடிக் கழஞ்சு பெறாதோ?' (ஈடு, 1.4 : 1).

*[அடி + கழஞ்சு+ பெறு.]*

**அடிக்கழிவு** *aḍikkaḻivu,* பெ. (n.) *முறைகேடு;* disorder, derangement, irregularity, confusion. 'நீ செய்கிற அடிக்கழிவால்' (ஈடு, 6.2 : 6).

**அடிக்காந்தல்** *aḍi-k-kāndal,* பெ. (n.) **எண்ணெய், குழம்பு முதலிய மருந்து வகை களைக் காய்ச்சும்போது, அவை பாண்டத்தின் அடியிற் பற்றித் தீய்தல்;** scorching due to over heating of medicines, under preparation, such as medicated oil, electuary, etc. adhering to the bottom of the vessel (சா.அக.).

**மறுவ.** அடிபற்றிக் காந்தல்

*[அடி + காந்தல்.]*

**அடிக்காயம்** *aḍi-k-kāyam,* பெ. (n.) *அடியால் உண்டான புண்;* contused wound, as caused by a blow or knock.

*[அடி + காயம்.]*

**அடிக்காரி** *aḍi-k-kāri,* பெ. (n.) *புணர்ச்சியிற் பெருவிருப்பங் கொண்ட பெண்;* a girl or woman having a strong desire for frequent copulation, a whore.

**அடிக்கீழ்** *aḍi-k-kīḻ,* பெ. (n.) **'உன்பாதத்தின்கீழ் வாழ்வேன்' என்னும் பொருள்கொண்ட ஒரு வணக்கச் சொல்** (புறநா. 67 : 12, உரை); 'your obedient servant as flourishing beneath your feet', an ancient term of submissive respect in the first person.

*[அடி + கீழ்.]*

**அடிக்கீழ்ப்படுத்து-தல்** *aḍi-k-kīḻ-p-paḍuttu-,* 2 பி.வி. (v. caus.) **வென்று தன் அதிகாரத்திற் குட்படுத்துதல்;** to bring under subjection.

*[அடி + கீழ்ப்படுத்து.]*

**அடிக்குச்சி** *aḍi-k-kucci,* பெ. (n.) **ஓரடி அளவு கோல்** (இ.வ.); foot-rule (Loc.).

**அடிக்கோல்** பார்க்க; see *aḍi-k-kōl.*

*[அடி + குச்சி.]*

**அடிக்குச்சு** *aḍi-k-kuccu,* பெ. (n.) *அடிக்குச்சி* பார்க்க; see *aḍi-k-kucci.*

**அடிக்குடல்** *aḍi-k-kuḍal,* பெ. (n.) *சிறுகுடலின் கீழ்ப்பாகம்;* the lower part of the small intestines (சா.அக.).

*[அடி + குடல்.]*

**அடிக்குடலிசிவு** *aḍi-k-kuḍal-iśivu,* பெ. (n.) **சிறு குடலை யிழுத்துப்பிடித்துத் துன்புறுத்தும் ஒரு கொடிய நோய்;** a dangerous ailment with a severe colic or spasm due to intestinal obstruction, Iliac passion or Ileus (சா.அக.).

*[அடி + குடல் + இசிவு.]*

**அடிக்குடி** *aḍi-k-kuḍi,* பெ. (n.) **இறைவனின் அடிமைத் தொண்டன்;** a humble devotee. ''வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா'' (தாயு. ஆசை. 37).

**ம.** அடிக்குடி

*[அடி + குடி.]*

**அடிக்குடில்** *aḍi-k-kuḍil,* பெ. (n.) 1. **இறை யடிமைக் குடும்பம்;** family devoted to service of the deity. ''அடி யோங்கள டிக்குடில் வீடு பெற் றுய்ந்ததுகாண்'' (திவ். திருப்பல். 10). 2. **அரண்மனை அல்லது கோயில் வேலைக் காரர் வாழும் அடிச்சேரி;** servants' quarters. ''அன்னந் துஞ்சு மடிக்குடிலின்'' (சீவக. 2588). 3. **புறநகர்;** suburb of a town or city (வின்.). 4. **வேடரிருக்குமூர்;** a village inhabited by hunters (சங்.அக.).

*[அடி + குடில்.]*

**அடிக்குழம்பு** *aḍi-k-kuḻambu,* பெ. (n.) *அடி மண்டி;* that which settles at the bottom, sediment.

**தெ.** அடிகண்டு

*[அடி + குழம்பு.]*

**அடிக்குள்** *aḍikkuḷ,* கு.வி.எ. (adv.) *மிக விரை வில்;* in a moment. ஓரடிக்குள் (ஓரடிக்குள்ளே) வந்துவிடு (உ.வ.).

*[அடிக்கு + உள்.]*

**அடிக்கொருக்க** *aḍikk(u)-orukka,* கு.வி.எ. (adv.) *அடிக்கொருக்கால்* பார்க்க; see *aḍikk(u)-oru-k-kāl.*

*[அடிக்கு + ஒருகால் – அடிக்கொருகால் → அடிக்கொருக்கால் → அடிக்கொருக்க (கொ.வ.).]*

**அடிக்கொருக்கால்** *aḍikk(u)-oru-k-kāl,* கு.வி.எ. (adv.) 1. **ஒவ்வோர் அடியெடுத்து வைப்பிற்கும்**

ஒருமுறை; once at every step. அடிக்கொருக் கால் திரும்பிப் பார்க்கிறான். 2. ஒவ்வொரு குறுகிய நேரங் கழித்தும்; regularly at short intervals. அடிக்கொருக்கால் தண்ணீர் கேட்கிறான்.

ஒருகால் பார்க்க; see *oru-kāl*.

[அடிக்கு + ஒருகால்.]

**அடிக்கொள்(ளு)-தல்** *aḍi-k-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) முளைத்தல், தோன்றுதல்; to sprout, originate. ''வாட்டடங் கண்ணி மார்பில் வந்தடிக் கொண்ட ஞான்றே'' (கூர்மபு. கண்ணனவ. 25.).

[அடி + கொள்.]

**அடிக்கோல்** *aḍi-k-kōl*, பெ. (n.) ஓரடி அளவு கோல்; foot-rule.

[அடி + கோல்.]

**அடிக்கோலு-தல்** *aḍi-k-kōlu-*, 7 செ.கு.வி. (v.i.) 1. அடிப்படையிடுதல்; to lay a foundation, make preparations. 2. தொடங்குதல்; to begin. ''அடிக்கோலி ஞாலத்தாள் பின்னு நலம்புரிந்த தென்கொலோ'' (திவ். இயற். 2 : 82).

[அடி + கோலு.]

**அடிகண்மார்** *aḍigaṇ-mār*, பெ. (n.) சமயக் குரவன்மார், சிறப்பாகச் சமணக் குரவர்; priests, esp. of the Jains. ''அடிகண் மார்க்கு மேவிய தீங்கு தன்னை விளைப்பது'' (பெரியபு. திருஞான. 641).

[அடிகள் + மார்.]

**அடிகல்** *aḍi-kal*, பெ. (n.) செதுக்கித் திருத்திய கல்; dressed stone.

[அடி + கல்.]

**அடிகள்** *aḍigaḷ*, பெ. (n.) 1. கடவுள்; God Almighty. 2. திருமால்; Viṣṇu. ''மலர்மகள் விரும்பும்நம் அரும்பெற லடிகள்'' (திவ். திருவாய். 1.3 : 1). 3. துறவறப் பெரியோர்; sages, ascetics. இளங்கோவடிகள். கவுந்தியடிகள். ''அடிகள் நீரே அருளுகென் றாற்கு'' (சிலப். பதி. 62). ''அடிகள் நீரே அருளுதிராயின்'' (சிலப். 10 : 62). 4. பேரறிஞரான இறையடியார் பெயருடன் இணைத்துவழங்கும் மதிப்புச் சொல்; a term of respect added to the names of scholarly devotees. எ-டு : மறைமலையடிகள். 5. அரசன்; king. 6. அரசி; queen. 'வீரசிம்மாசனத்து முக்கோக்கிழானடிகளோடும் வீற்றிருந்தருளிய' (சோழவமி. பக். 102). 7. குரு; spiritual preceptor.

ம. அடிகள்; க. அடிக.

[அடிகள் என்பது திருவடிகள் என்பதன் குறுக்கம். திருவடி = திருப்பாதம். இறைவனுக்கு உருவமில்லாவிடினும், அவனுக்குச் செய்யவேண்டிய தாழ்மையான பத்தி வணக்கத்தைக் குறித்தற்கு, மாந்தனுறுப்பில் தாழ்வான பாதத்தின் பெயர், தூய்மை குறித்த திரு என்னும் அடைமொழியுடன் ஆளப்பட்டது. பின்னர், தெய்வத்தன்மையும் வணக்கத்திற்குரிமையுமுடைய பன்னிலை மக்கள், அடைமொழி நீங்கிய 'அடிகள்' என்னும் பெயராற் குறிக்கப்பெற்றனர்.]

**அடிகனத்த சட்டி** *aḍi-kaṉatta-šaṭṭi*, பெ. (n.) எண்ணெய், குழம்பு முதலியன காய்ச்சுவதற்காக அடிப்பாகத்தைக் கனதியாகச் செய்த மட்கலம்; earthen vessel with a bottom sufficiently thick, so as not to break or give way while preparing medicated oils, electuary, etc. (சா.அக.).

[அடி + கனத்த + சட்டி.]

**அடிகனத்த தாழி** *aḍi-kaṉatta-tāḻi*, பெ. (n.) அடிகனத்த சட்டி பார்க்க; see *aḍi-kaṉatta-šaṭṭi*.

[அடி + கனத்த + தாழி.]

**அடிகாசு** *aḍi-kāšu*, பெ. (n.) பழைய வரிவகை (I.M.P. Sm. 91); an ancient tax collected from stalls in markets.

**அடிகாயம்** *aḍi-kāyam*, பெ. (n.) அடிக்காயம் பார்க்க; see *aḍi-k-kāyam*.

**அடிகாற்று** *aḍi-kāṟṟu*, பெ. (n.) பெருங்காற்று (யாழ்ப்.); powerful wind, strong gale, tempest, cyclone (J.).

**அடிகாரன்** *aḍi-kāraṉ*, பெ. (n.) 1. கறியுணவிற்காகக் கால்நடைகளைக் கொல்பவன்; butcher. 2. சிலம்பம் வீசுவோன்; man who fences with long bamboo sticks.

**அடிகுளிர்-தல்** *aḍi-kuḷir-*, 2 செ.கு.வி. (v.i.) 1. கால் சில்லிடுதல்; to become chill, as the legs or extremities of limbs. 2. அண்டி சில்லிடுதல்; to become chill, as the anus (சா.அக.).

**அடிகூலி** *aḍi-kūli*, பெ. (n.) கல்லில் அம்மி திரிகை உரல் முதலியன உளியாற் செதுக்கியமைப்பதற்குக் கொடுக்குங் கூலி; charges for

making grind-stone, hand-mill, stone mortar, etc., by cutting and chiselling.

**அடிகொள்(ளு)-தல்** *aḍi-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) தொடங்குதல்; to begin, commence (சா.அக.).

**அடிகோல் சயம்** *aḍi-kōl-šayam*, பெ. (n.) இருமல்நோயின் தொடக்கம்; incipient consumption (சா.அக.).

Skt. kṣaya > த. சயம்.

*[அடிகோல் + சயம்.]*

**அடிகோலு-தல்** *aḍi-kōlu-*, 7 செ.கு.வி. (v.i.) அடிக்கோலு-தல் பார்க்க; see *aḍi-k-kōlu-*.

**அடிச்சட்டம்** *aḍi-c-caṭṭam*, பெ. (n.) கதவு, பலகணி முதலியவற்றின் அடியிலிடும் மரம்; bottom piece, as of a door.

*[அடி + சட்டம்.]*

**அடிச்சரக்கு** *aḍi-c-carakku*, பெ. (n.) 1. மட்டமான சரக்கு; inferior articles of merchandise. 2. குப்பை; refuse.

*[அடி + சரக்கு.]*

**அடிச்சால்** *aḍi-c-cāl*, பெ. (n.) உழவின் முதற்சால்; first furrow in ploughing.

*[அடி + சால்.]*

**அடிச்சான்பிடிச்சான் வியாபாரம்** *aḍiccāṉ-piḍiccāṉ-viyābāram*, பெ. (n.) அடித்தான்பிடித்தான் வியாபாரம் பார்க்க; see *aḍittāṉ-piḍittāṉ-viyabāram*.

**அடிச்சி** *aḍicci*, பெ. (n.) அடியவள்; devoted maiden, maid-servant. "புனைகோதை சூட்டுடன் னடிச்சியை" (சீவக. 481). 'அடிச்சிக்கு ஆசை அரசன்மீது' (பழ.).

*[அடி → அடித்தி → அடிச்சி.]*

அடித்தி பார்க்க; see *aḍitti*.

**அடிச்சிரட்டை** *aḍi-c-ciraṭṭai*, பெ. (n.) தேங்காயின் அடிக்கொட்டாங்கச்சி, கண்சிரட்டையின் வேறானது (யாழ்ப்.); thick half or bottom of a coconut shell, used as a vessel, dist. fr. *kaṇširaṭṭai* (J.).

*[அடி + சிரட்டை.]*

**அடிச்சிப்பு** *aḍi-c-cippu*, பெ. (n.) வாழைக்குலையின் முதற் சீப்பு; first formed comb in a bunch of plantains.

*[அடி + சீப்பு.]*

**அடிச்சுவடு** *aḍi-c-cuvaḍu*, பெ. (n.) பாதத் தடம்; foot print.

*[அடி + சுவடு.]*

**அடிச்சூடு** *aḍi-c-cūḍu*, பெ. (n.) பாதத்தி லுறைக்கும் வெப்பம்; heat felt in the soles of the feet when walking.

*[அடி + சூடு.]*

**அடிச்சூத்திரன்** *aḍi-c-cūttiraṉ*, பெ. (n.) தாழ்ந்த வகுப்பினன்; a person of inferior caste.

*[அடி + சூத்திரன். Skt. sūdra > த. சூத்திரன்.]*

நாற்குலம் பார்க்க; see *nāṟ-kulam*.

**அடிச்சேரி** *aḍi-c-cēri*, பெ. (n.) 1. பணியாளர் குடியிருப்பு (ஈடு, 6.7 : 1); servants' quarters, section of a town occupied by the labouring classes. 2. ஊரிற் காணியாளர் குடியிருக்கும் பகுதி (W.G.); part of a village in which the hereditary proprietors reside. 3. நகரையடுத்த ஊர், புறநகர்; (Cm.) village near a town, suburb.

*[அடி + சேரி.]*

**அடிச்சேரியாள்** *aḍi-c-cēriyāḷ*, பெ. (n.) குச்சுக்காரி (நெல்லை); low-class prostitute (Tn.).

*[அடி + சேரியாள். குற்றில் → குச்சில் → குச்சு = குடிசை அல்லது சிறு கூரைவீடு. அதிற் குடியிருக்கும் எளிய பொதுமகள், குச்சுக்காரி.]*

**அடிசாய்-தல்** *aḍi-šāy-*, 2 செ.கு.வி. (v.i.) அடிக்கீழ் நிழல் சாய்தல்; sun's declining, as indicated by the lengthening of the shadow under one's foot.

**அடிசில்** *aḍišil*, பெ. (n.) 1. சோறு; boiled rice. 2. உணவு; food. 'அடிசில் என்பது.........' (தொல். சொல். கிளவி. 46, சேனா. உரை).

க. அடிகெ

*[அடுசில் → அடிசில்.]*

அடுசில் பார்க்க; see *aḍušil*.

**அடிசிற்சாலை** *aḍišiṟ-cālai*, பெ. (n.) உணவுக் கொடையில்லம், அன்னசத்திரம்; rest house for providing food. 'அடிசிற் சாலையும் அறப்புறமும்' (சீவக. 76, உரை).

*[அடிசில் + சாலை.]*

**அடிசிற்பள்ளி** *aḍiśiṟ-paḷḷi,* பெ. (n.) **மடைப் பள்ளி;** kitchen. "ஐவே றமைந்த அடிசிற் பள்ளியும்" (பெருங். இலாவாண. 7 : 133).

க. அடிகெமனெ

[அடிசில் + பள்ளி.]

**அடிசிற்புறம்** *aḍiśiṟ-puṟam,* பெ. (n.) **உணவிற் காக விடப்படும் இறையிலி நிலம்;** land assigned tax-free for providing food. "அடிசிற் புறம் ஆக்கினான்" (சீவக. 2577).

[அடிசில் + புறம்.]

**அடிசிற்றளி** *aḍiśiṟṟaḷi,* பெ. (n.) **மடைப்பள்ளி;** kitchen. "அடிசிற் றளியா னெய்வார்ந்து" (சீவக. 2579).

[அடிசில் + தளி.]

**அடிஞானம்** *aḍi-ñāṉam,* பெ. (n.) **ஆவியியல் அல்லது இறையியல் அறிவு** (பதிஞானம்); spiritual wisdom. "அடிஞான மான்மாவிற் றோன்றும்" (சி.சி. சுபக். 8 : 28).

**அடித்தண்டு** *aḍi-t-taṇḍu,* பெ. (n.) **வேரையடுத் துள்ள தண்டு;** that portion of the stalk nearest to the root (சா.அக.).

[அடி + தண்டு.]

**அடித்தலம்** *aḍi-t-talam,* பெ. (n.) 1. **கீழிடம்;** lower part. "பாசறை கொண்டே யொப்ப வடித்தலம் படுத்து" (கந்தபு. அசுர. நகர் செய். 3.). 2. **அடிப்படை (அஸ்திவாரம்);** foundation of a building (W.). 3. **பாதம்;** foot. "முத்தமிழ் விரகர் பொன்ன டித்தலம்" (பெரியபு. திருஞான. 1072). 'அடிச்சுவடு கொண்டு கள்ளனைப் பிடிக்கலாம்' (பழ.). 4. **திருவடிநிலை;** sandals of a great person. "அடித்தல மிரண்டையு மழுத கண்ணினான் முடித்தல மிவையென முறையிற் சூடினான்" (கம்பரா. அயோத். திருவடிசூட்டு. 136).

க. அடிதள

[அடி + தலம். **Skt.** sthala > த. தலம்.]

**அடித்த வெண்ணெய்** *aḍitta-veṇṇey,* பெ. (n.) **துப்புரவு செய்த வெண்ணெய்;** purified butter (சா.அக.).

**அடித்தழும்பு** *aḍi-t-taḻumbu,* பெ. (n.) **அடியால் ஏற்பட்ட புண்ணின் வடு;** cicatrice, mark left after healing of wound caused by a blow.

[அடி + தழும்பு.]

**அடித்தள்ளிப்போ-தல்** *aḍi-t-taḷḷi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. **இருக்கை (ஆசன) வாய் மூலம் வெளிப்பிதுங்கி நிற்றல்;** protrusion of the rectal walls beyond the anus, prolapse of the rectum. 2. **பெண்கட்டுக் கருப்பை வாய் தள்ளல் (உறுப்புத் தள்ளல்);** protrusion of the womb beyond the vulva, prolapse of the uterus (சா.அக.).

[அடி + தள்ளிப்போ.]

**அடித்தளம்** *aḍi-t-taḷam,* பெ. (n.) 1. **கட்டடத்தின் அடிநிலைப் பரப்பு;** ground floor. 2. **கிணற்றின் அடிப்பார்;** foundation of a well. 3. **அடிவரிசை;** lowest stratum, as of a pile (W.). 4. **அடித்திண்டு** (C.E.M.); basement. 5. **கற்படுத்த நிலம்** (சங்.அக.); ground paved with stones, stone pavement. 6. **படையின் பின்னணி;** rear guard of an army.

[அடி + தளம்.]

**அடித்தான்பிடித்தான் வியாபாரம்** *aḍittāṉ-piḍittāṉ-viyābāram,* பெ. (n.) **சண்டை சச்சர வான செய்தி;** an affair or matter involving quarrel and violent action. அது, அடித்தான் பிடித்தான் வியாபாரம், நாம் அதில் தலையிட வேண்டியதில்லை (உ.வ.).

[அடித்தான் + பிடித்தான் + வியாபாரம். **Skt.** vyāpāra > த. வியாபாரம் = தொழில், வேலை, செய்கை, செய்தி.]

**அடித்தானம்** *aḍi-t-tāṉam,* பெ. (n.) **நிலைக் களம் (ஆதாரம்);** basis, foundation.

ம., க., து. அடி; தெ. அடுகு.

[த. அடி + **Skt.** sthāna > த. தானம் = இடம். மண்டுதல் = நெருங்குதல், நெருங்கித் தொடுதல் அல்லது தாக்குதல், தாங்குதல். மண்டுகால் = முட்டுக்கால், தாங்குகால். மண்டு → மண்டி = தாங்கி. மண்டி → அண்டி = தாங்கி, தாங்கி நிற்கும் அடிப்பகுதி, கைகாலில்லா உடம்பின் அடிப்பகுதி (anus), அடி. அண்டி தள்ளுதல் = மலவாயிலைக் கொண்ட அடிப் பகுதி கீழிறங்குதல். அண்டி = அடிபோல் தோன்றும் நுனியிற் கொட்டையுள்ள பழம் பழுக்கும் ஒருவகை மரம். அண்டிக்கொட்டை (அண்டிமாங்கொட்டை) = மரமுந்திரிப் பழத்தின் அடியிலுள்ள கொட்டை. அண்டி → அடி.]

**ஒ.நோ:** தண்டி → தடி. இனி, நிலத்தை அடுத்திருக்கும் பகுதி அல்லது உறுப்பு அடி யெனப்பட்டது எனினுமாம். அடு → அடி. **ஒ.நோ:** தொடு → தொடி.

**அடித்தி** *aḍitti*, பெ. (n.) **அடியாள்**; devoted maiden, maid-servant. "அடித்தி யாரு முன் பட்ட தொழிந்து நுங்கண் முகவியர்" (சீவக. 2045).

*[அடி → அடித்தி.]*

**அடித்திகம்** *aḍittigam*, பெ. (n.) *அமுக்கிரா* (மலை.); species of withania. — *அமுக்கிறா*; horse-plant, *Withania somnifera* alias *Physalis flexuosa* (சா.அக.).

**அடித்திப்பை** *aḍi-t-tippai*, பெ. (n.) (பொறி.) *நிலைக்களம் (ஆதாரம்)* (C.E.M.); (Engin.) bed, that on which anything lies.

*[அடி + திப்பை.]*

**திப்பை** பார்க்க; see *tippai*.

**அடித்துக்கொண்டுபோ-தல்** *aḍittu-k-koṇḍu-pō-*, (8) செ.குன்றாவி. (v.t.) 1. **வாரிக்கொண்டு செல்லுதல்**; to sweep away, as a flood, carry away with a rush. வெள்ளம் வீடுகளை யெல்லாம் அடித்துக்கொண்டு போய்விட்டது. 2. **கொள்ளைகொண்டு செல்லுதல்**; to plunder, rob and get away. விசயநகர் அரண்மனையில் எஞ்சியிருந்த செல்வங்களை யெல்லாம் கொள்ளைக் கூட்டம் அடித்துக்கொண்டு போய்விட்டது. 3. **துயர மிகுதியால் ஒரு பெண் தன் தலையில் அடித்துக்கொண்டு செல்லுதல்**; to go about beating on the head, as a grief-stricken woman. தன் மகன் இறந்து விட்டானென்று தொலைவரி (தந்தி) வந்ததும், தாய் தன் தலையில் அடித்துக்கொண்டு போனாள். 4. **ஊர்காவலர் குற்றவாளிகளை அடித்துச் சிறைக்குக் கொண்டுசெல்லுதல்**; to beat the law-breakers and take them to prison, as policemen.

*[அடித்து + கொண்டு + போ.]*

**அடித்துக்கொல்(லு)-தல்** *aḍittu-k-kol(lu)-*, 7 செ. குன்றாவி. (v.t.) **கையால் அல்லது கருவியா லடித்துக் கொல்லுதல்**; to kill a person or animal by beating with hand(s) or weapons.

*[அடித்து + கொல்.]*

**அடித்துக்கொள்(ளு)-தல்** *aḍittu-k-koḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) 1. **தன்னை அறைந்து கொள்ளுதல்**; to beat oneself once or repeatedly. தன் கணவனுக்கு வேலைபோய்விட்டதென்று தன் தலையில் அடித்துக்கொண்டாள். 2. **பன்முறை தடுத்துரைத்தல்**; to repeatedly protest against. அது செய்யத் தகாதென்று முன்னமே எத்தனையோ முறை அடித்துக் கொண்டேன். 3. **அடிக்கடி சண்டையிடுதல்**; to quarrel again and again. இவ் விருவரும் நாள்தோறும் அடித்துக்கொள்கிறார்கள். 4. **மனம் வருந்துதல்**; to suffer in mind. திடுமென்று ஆற்றில் வெள்ளம் வந்ததனால், என் மகன் திரும்பி வரும்வரை என் மனம் மிகவும் அடித்துக்கொண்டது (உ.வ.).

*[அடித்து + கொள்.]*

**அடித்துக்கொளுத்து-தல்** *aḍittu-k-koḷuttu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **பொதுமேடையில் தலைசிறந்த சொற்பொழிவாற்றுதல்**; to deliver an excellent speech at a public meeting. அன்று நடந்த பொதுக்கூட்டத்தில் ஆ. இராமசாமி (முதலியார்) அடித்துக்கொளுத்திவிட்டார் (உ.வ.). 2. **பேச்சுப் போட்டியில் ஒப்புயர் வற்ற திறமை காட்டுதல்**; to exhibit extraordinary talents in an oratorical contest. நேற்றுப் பள்ளியில் நடந்த பேச்சுப்போட்டியில், உங்கள் மகன் அடித்துக்கொளுத்தி விட்டான் (உ.வ.).

ம. அடிச்சுதகர்க்குக

*[அடித்து + கொளுத்து.]*

**அடித்துச்சொல்(லு)-தல்** *aḍittu-c-col(lu)-*, 8 செ. குன்றாவி. (v.t.) **வலியுறுத்திக் கூறல்**; to say emphatically.

*[அடித்து + சொல்.]*

**அடித்துண்டு** *aḍi-t-tuṇḍu*, பெ. (n.) **பிழைப்பு மூலம், வாழ்க்கைமுதல் (ஜீவனாம்சம்)**; subsistence allowance.

*[அடி + துண்டு.]*

**மறுவ.** அடுத்தூண்

**அடித்துப்பிடுங்குகிறசுத்தியல்** *aḍittu-p-piḍuṅgu-giṟa-šuttiyal*, பெ. (n.) **ஆணி யடிக்கவும் அதைப் பிடுங்கவும் பயன்படும் சிறு சம்மட்டி, கவைசுத்தியல்**; small hammer used to drive nails in and pull them out.

**அடித்துப்புரண்டுவிழு-தல்** *aḍittu-p-puraṇḍu-viḻu-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **வழுக்குநிலத்தில் வழுக்கிவிழுதல்**; to slip and fall down violently on slippery ground. 2. **திகிலடைந்து கலைந்தோடுங் கூட்டத்தில் தடுக்கி விழுதல்**; to tumble and roll in a stampede. 3. **சாவீட்டில் பெண்கள் மார்பிலடித்துப் புரண்டு விழுதல்;**

to beat the breasts and fall down in lamentation at a house where death has occurred.

*[அடித்து + புரண்டு + விழு.]*

**அடித்துப்புரண்டுவிழுந்தழு - தல்** *adittu - p - purandu-vilund(u)-alu-*, 1 செ.கு.வி. (v.i.) *இழவு வீட்டில் மார்பிலடித்துக்கொண்டு தரையில் விழுந்து அழுதல்*; to beat the breasts and fall down at a house where death has occurred and bewail, as a woman.

*[அடித்து + புரண்டு + விழுந்து + அழு.]*

**அடித்துப்புரண்டுவிழுந்தெழு - தல்** *adittu - p - purandu - vilund(u) - elu-*, 2 செ.கு.வி. (v.i.) *நெரிசலில் கீழே விழுந்து உருண்டு எழுதல்*; to tumble and roll on the ground in stampede and rise.

*[அடித்து + புரண்டு + விழுந்து + எழு.]*

**அடித்துப்புரண்டுவிழுந்தெழுந்தோடு-தல்** *adittu - p - purandu - vilund(u) - elund(u) - ōdu-*, 5 செ.கு.வி. (v.i.) *நெரிசலில் தவறிக் கீழே விழுந்து உருண்டு விலகித் தப்பித்து ஓடுதல்*; to tumble and roll on the ground in stampede, and rise and run away.

*[அடித்து + புரண்டு + விழுந்து + எழுந்து + ஓடு.]*

**அடித்துப்புரண்டோடு-தல்** *adittu-p-purand(u)-ōdu-*, 5 செ.கு.வி. (v.i.) *வெள்ளம்போல் வாரியடித்துக்கொண்டு போதல்*; to roll and rush forward, as a water-fall or flooded river.

*[அடித்து + புரண்டு + ஓடு.]*

**அடித்துப்புரள்[ளு]-தல்** *adittu-p-pural-*, 16 செ. கு.வி. (v.i.) *சினந்து அடம்பிடிக்கும் குழந்தை அல்லது தினவுகொண்ட கழுதைபோல் தரையில் புரண்டு உருளுதல்*; to roll on the ground, as a naughty child in anger or as an ass, to allay itching.

*[அடித்து + புரள்.]*

**அடித்துப்பேசு-தல்** *adittu - p - pēšu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *மறுத்துப் பேசுதல்*; to refute, contradict emphatically.

*[அடித்து + பேசு.]*

**அடித்துமுதலானது** *adittu - mudal - ānadu*, பெ. (n.) *கதிரையடித்துக் களத்திற் குவித்த கூலம்*; quantity of grain threshed and heaped on the threshing-floor.

**அடித்துவிடு-தல்** *adittu-vidu-*, 18 செ.குன்றாவி. (v.t.) *வலிமையாகச் செய்துமுடித்தல்* (இராட்.); to accomplish by force (R.).

**அடித்துவிழு-தல்** *adittu-vilu-*, 2 செ.கு.வி. (v.i.) *இழவுவீட்டில் மாரடித்துக்கொண்டு விழுதல்*; to beat the breasts and fall down at the house where death has occurred, as a woman.

**அடித்துவிழுந்தழு-தல்** *adittu - vilund(u)-alu-*, 1 செ.கு.வி. (v.i.) *இழவு வீட்டில் மாரடித்துக் கொண்டு விழுந்தழுதல்*; to beat the breasts and fall down and bewail, as a woman, at the house where death has occurred.

*[அடித்து + விழுந்து + அழு.]*

**அடித்தூறு** *adi-t-tūru*, பெ. (n.) *மரத்தின் அடிக்கட்டை*; stump of a tree.

*[அடி + தூறு.]*

**அடித்தேறு** *adi-t-tēru*, பெ. (n.) *முறைகேடு, நயனன்மை (அநீதி)* (இ.வ.); injustice (Loc.).

*[அடி + தேறு.]*

**அடித்தொடை** *adi-t-todai*, பெ. (n.) 1. *தொடையின் மேற்பாகம்*; upper part of the thigh. 2. *தொடையின் பின்புறம்*; the back part of the thigh. 3. (யாப்.) *செய்யுளின் அடிதொறும் தொடையமையத் தொடுப்பது*; (Pros.) concatenation in which all the lines of a verse rhyme in one way or another.

*[அடி + தொடை.]*

**அடித்தொண்டை** *adi-t-tondai*, பெ. (n.) *தொண்டையின் கீழ்ப்பகுதி*; the lower part of the throat.

*[அடி + தொண்டை.]*

**அடித்தொண்டையிற் பேசு-தல்** *adi-t-tondaiyir-pēšu-*, 5 செ.கு.வி., 5 செ.குன்றாவி. (v.i. & v.t.) *குரலை அடித்தொண்டையி லடக்கிப் பேசுதல்*; to speak in guttural voice.

*[அடி + தொண்டை + இல் + பேசு.]*

**அடித்தொழில்** *adi-t-tolil*, பெ. (n.) *குற்றேவல்*; menial service. "அப்பிறப் பியானின் னடித் தொழில் கேட்குவன்" (மணிமே. 22 : 134).

*[அடி + தொழில்.]*

**அடித்தோழி** *adi-t-tōli*, பெ. (n.) *தலைமைத் தோழி*; chief woman attendant, confidante of

a lady. "அடித்தோழி சொல்" (சிலப். 29:4-ன் தலைப்பு).

[அடி + தோழி.]

**அடிதடி** *adidadi*, பெ. (n.) **அடித்துச் செய்யும் சண்டை**; quarrel that ends in blows. கடைசியில் அந்த வழக்காரம் (dispute) அடிதடியில் தான் வந்து முடியும். அந்தத் தெருவெல்லாம் அடிதடியாய்க் கிடக்கிறது (உ.வ.).

ம. அடிதட; க. அடிதடி.

**அடிதடில்** *adidadil*, பெ. (n.) அடிதடி பார்க்க; see *adidadi*.

**அடிதண்டம்** *adidandam*, பெ. (n.) 1. **தலையெடுக்க வொட்டாத திடீர் அடி**; sudden blow that incapacitates. 2. **அடிதண்டனை**; flogging (W.).

**அடிதண்டா** *adidanda*, பெ. (n.) 1. **மண்வெட்டி** (C.E.M.); shovel. 2. **கதவிற் குறுக்காக இடும் சட்டத் தாழ்ப்பாள்**; bar laid across a door.

**அடிதரிகம்** *adidarigam*, பெ. (n.) **அசுவகெந்தி**; a plant having the smell of a horse, *Withania somnifera* alias *Physalis flexuosa* (சா.அக.).

குறிப்பு: திரு. சாம்பசிவம் பிள்ளை, **அடித்திகம்** என்பதற்குப் போன்றே **அடிதரிகம்** என்பதற்கும், ஆங்கிலப் பொருள் கூறியிருக்கின்றார். ஆயின் பின்னதற்குத் தமிழ்ப் பொருள் 'அமுக்கிரா' என்னாது 'அசுவ கெந்தி' என்று வேறுபட்டுள்ளது.

**அடிதரிகம்** என்பது வேறு அகரமுதலிகளிற் காணப்படாமையாலும், மதுரைத் தமிழ்ச் சங்கத் **தமிழ்ச்சொல் லகராதி** அடித்திகம் என்பதற்கு அசுவகந்தி என்று பொருள் குறித்திருப்பதாலும், அடிதரிகம் என்பது அடித்திகம் என்பதன் (ஏட்டுப் பிழையால் நேர்ந்த) வேற்று வடிவமோ என ஐயுறக் கிடக்கின்றது.

அசுவகந்தி என்பதைக் குதிரைநாறி என்று தமிழிற் குறிக்கலாம்.

**அடிதலை** *adi-talai*, பெ. (n.) 1. **தொடக்க விறுதி, முதலும் முடிவும்**; beginning and end. "அடிதலை வரவிது" (அருணாசலபு. திருமலைச். 60). 2. **வரலாறு**; history, account. 3. **ஒழுங்கு**; order, regularity (W.). —, பெ., கு.வி.எ. (n. & adv.) **கீழ்மேல்**; upside down.

க. அடிதலெ

**அடிதலை தடுமாற்றம்** *adi-talai-tadumarram*, பெ. (n.) **முன்பின் முறையின்றிக் குழம்புதல்**; utter confusion or disorder in things or statements, topsyturvydom.

**அடிதலை தடுமாறு-தல்** *adi-talai-tadumaru-*, 5 செ.கு.வி. (v.i.) **தொடக்கவிறுதி தெரியா வாறு குழம்புதல்**; to be confused, in the statement of serial or chronological order of things or events. "அந்தமில் மறையெல்லா மடிதலை தடுமாறி" (கந்தபு. பாயிரப். 1).

[அடி + தலை + தடுமாறு.]

**அடிதவ்வு-தல்** *adi-tavvu-*, 5 செ.கு.வி. (v.i.) **அடிதாண்டிப் பழகுதல் அல்லது விளையாடுதல்**; to jump over, as an exercise of children or young animals (W.).

[அடி + தவ்வு. தவ்வு = தாவு, தாண்டு.]

**அடிதாளம்** *adi-talam*, பெ. (n.) **கைகளால் தட்டும் தாளம்**; beating time with the hand. 'அடிதாளம் போடாவிட்டால் பாட்டு வாராது என்பார்கள்' (மதி. களஞ். ii, 72).

[அடி + தாளம். அடி = கைகளால் தட்டுதல்.]

**அடிதாறு** *adi-taru*, பெ. (n.) **அடிச்சுவடு**; footprint, "நிழலு மடிதாறு மானோம்" (திவ். இயற். பெரியதிருவந். 31).

[அடி + தாறு. அடி = பாதம்.]

**அடிதிரும்பு-தல்** *adi-tirumbu-*, 5 செ.கு.வி. (v.i.) **பொழுது சாய்தல்**; sun's declining, as indicated by the turning eastward of the shadow under foot.

**அடிதின்னல்** *adi-tinnal*, தொ.பெ. (vbl. n.) **அடியுண்ணல்** 1 பார்க்க; see *adi-y-unnal* 1.

**அடிதொடு-தல்** *adi-todu-*, 20 செ.கு.வி. (v.i.) **தெய்வத்தின் பாதந் தொட்டுச் சூளிடுதல்**; to take an oath by touching the feet of God or a deity. "ஒழியப் போகே னுன்னடி தொட்டேன்" (மணிமே. 18:171). —, 19 செ.குன்றாவி. (v.t.) **பெரியோரின் பாதந் தொட்டு வணங்குதல்**; to pay homage to great men by touching their feet. "கோனடி தொட்டேன்" (கலித். 94 : 36).

[அடி + தொடு. அடி = பாதம்.]

**அடிதொறும்** *adi-torum*, கு.வி.எ. (adv.) **அடிக்கடி**; often, repeatedly. "அடிதொறாயிரங்கள் சிந்தி" (சீவக. 106).

*[அடி + தொறும்.]*

எடுத்துக்காட்டிய செய்யுள் தொடரில் 'உம்'மை தொக்கது.

**அடிதோறும்**[1] *aḍi-tōṟum*, கு.வி.எ. (adv.) *ஒவ்வோ ரடிப்பின் போதும்*; at every beat.

*[அடி + தோறும். அடி = அடிப்பு. தொறும் → தோறும்.]*

**அடிதோறும்**[2] *aḍi-tōṟum*, கு.வி.எ. (adv.) 1. *அடிக்கடி*; often, repeatedly. 2. *ஒவ்வொன்றன் அடியிலும்*; at the bottom of everything. 3. *ஒவ்வொரு பாதத்தின்கண்ணும்*; at every foot. 4. *செய்யுளின் ஒவ்வோ ரடியிலும்*; in every line of a poem or verse.

*[அடி + தோறும். தொறும் → தோறும்.]*

**அடிநகர்-தல்** *aḍi-nagar-*, 2 செ.கு.வி. (v.i.) *இடம்விட்டுப் பெயர்தல்*; to move a little, to be dislodged.

**அடிநடுமுடி** *aḍi-naḍu-muḍi*, பெ. (n.) *காரம், சாரம், உப்பு என்பவற்றை—சிறப்பாகச் சூதம், பூரம், சாரம் என்பவற்றைக் குறிக்கும் குழூஉக் குறியீடு*; a veiled term referring in general to alkali, acid and salt but in particular, to mercury, subchloride of mercury and hydrochlorate of ammonia (சா.அக.).

**அடிநமைச்சல்** *aḍi-namaiccal*, பெ. (n.) *மலவாயிலைச் சுற்றிலும் உண்டாகும் தினவு*; intense itching at the anus, *Pruritus ani* (சா.அக.).

**அடிநா** *aḍi-nā*, பெ. (n.) *நாவின் அடிப்பகுதி*; root or lower part of the tongue (W.).

**அடிநாச்சூலை** *aḍi-nā-c-cūlai*, பெ. (n.) *ஊதையினால் (வாதத்தினால்) நாவினடியில் ஏற்படும் குத்தல் நோய்*; a piercing pain at the root of the tongue.

*[அடி + நா + சூலை.]*

**அடிநாய்** *aḍi-nāy*, பெ. (n.) *பெரியோர் முன் தன்னைத் தாழ்த்திக் கூறுஞ் சொல்*; a term of humility meaning 'slave-dog'. "அடிநாயுரை" (தேவா. 7.59 : 11).

**அடிநாயேன்** *aḍi-nāyēṉ*, பெ. (n.) *'நாய்போலத் தாழ்ந்த அடிமையாகிய நான்' என்று பொருள்படும் ஒரு வணக்கச்சொல்*; a term of humility referring to oneself as 'Your humble slave-dog'. "உத்தம வடிநாயேனோதுவ துளது" (கம்பரா. அயோத். குகப். 37).

**அடிநாள்** *aḍi-nāḷ*, பெ. (n.) 1. *முதல்நாள், தொடக்கநாள்*; the first day. 2. *இளமைக் காலம்; தொடக்ககாலம்*; early life, younger days, early period.

**அடிநிலம்** *aḍi-nilam*, பெ. (n.) *அடிப்பக்கம், அடியிடம்*; bottom of the fort-wall. "அடி நிலத்திலே படிவன விடிமுகி லனைத்தும்" (பாரத. கிருட். 60).

**அடிநிலை**[1] *aḍi-nilai*, பெ. (n.) 1. *அடிப்படை (அஸ்திவாரம்)*; foundation. "ஆகமத்தா லடி நிலை பாரித்து" (பெரியபு. பூச. 6). 2. *பாதக்குறடு*; sandal.

ம. அடிநில

**அடிநிலை**[2] *aḍi-nilai*, பெ. (n.) *தூணின் அடிப்பகுதி*; the foot or lower member of a pillar.


அடிநிலை

**அடிநிலைச் சாத்து** *aḍi-nilai-c-cāttu*, பெ. (n.) *குதிரை யங்கவடி*; stirrup. "அடிநிலைச் சாத்தோ டியாப்புப் பிணியுறீஇ" (பெருங். இலாவாண. 18 : 22).

*[அடி + நிலை + சாத்து.]*

**அடிநிழலார்** *aḍi-niḻalār*, பெ. (n.) *குடிகள்* (P.); subjects of a king.

**அடிநீறு** *aḍi-nīṟu*, பெ. (n.) *பாதத்தூளி*; dust on the feet. "நின்றபிரா னடிநீறு அடியோம் கொண்டு சூடுவதே" (திவ். திருவாய். 5.9 : 2).

**அடிப்பட்ட காந்தி** *aḍi-p-paṭṭa-kāndi*, பெ. (n.) *தீமுறுகற் செய்நஞ்சு (பாடாணம்)* (மூ.அ.); an arsenic preparation.

**மறுவ.** அடிபட்ட காந்தி, அடிபட்ட முறுவல், அடியக்காந்தி, அடியட்காந்தி, அடியற்காந்தி (சா.அக.).

**அடிப்பட்ட சாந்தி** *aḍi-p-paṭṭa-šāndi*, பெ. (n.) *பேரமைதி (மகாசாந்தி)* (சங்.அக.); absolute peace, tranquillity or composure.

**அடிப்பட்ட சான்றோர்** *aḍi-p-paṭṭa-šāṉṟōr*, பெ. (n.) *பண்டை நல்லிசைப் புலவர்*; recognised scholars of yore. 'இலக்கண மன்றெனினும் இலக்கண முடையதுபோல அடிப்பட்ட சான்றோரால் வழங்கப்பட்டு வருவதும்' (நன். 266, மயிலை. உரை).

**அடிப்பட்ட முறுவல்** *adi-p-patta-muruval*, பெ. (n.) *அடிப்பட்ட காந்தி* பார்க்க; see *adi-p-patta-kandi*.

**அடிப்பட்டடை நெல்** *adi-p-pattadai-nel*, பெ. (n.) *களத்துப் பட்டடையில் வைக்கோலொடு கலந்துகிடக்கும் நெல்* (R.T.); grains of paddy caught in the straw on which paddy is heaped.

[அடி + பட்டடை + நெல்.]

**அடிப்பட்ட வழக்கு** *adi-p-patta-valakku*, பெ. (n.) *தொன்றுதொட்டு வரும் வழக்கு*; ancient usage.

**அடிப்படர்-தல்** *adi-p-padar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. *கீழ்ப்பரவுதல்*; to spread underneath, as roots, creepers. 2. *சூழ்நிலைகள் இசைந்து வருதல்*; to be propitious. "நல்லூழி யடிப் படர" (மதுரைக். 21).

[அடி + படர்.]

**அடிப்படி** *adi-p-padi*, பெ. (n.) *கதவுநிலையின் அடிமரப்படி*; bottom piece of the frame of a door.

[அடி + படி.]

**அடிப்படு-தல்** *adi-p-padu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. *கீழ்ப்படையிலிருத்தல் (சங்.அக.)*; to be in the lower stratum. 2. *அடிச்சுவடுபடுதல்*; to be worn-out by passing feet, as a path. "சிலநா ளடிப்படிற் கல்வரையு முண்டா நெறி" (நாலடி. 154). 3. *கீழ்ப்படிதல்*; to obey, do another's will willingly. "ஆணைகொண் டடிப்பட விருந்தன்று" (பு. வெ. 6 : 31). "உரிய வம்புவி பல்லாண் டடிப்பட வாண்டான்" (பாரத. உலூகன். 3). 4. *பழகுதல்*; to become accustomed to. 'ஒழுகுதலைக் கற்றலாவது அடிப்படுதல்' (குறள், 140, பரிமே. உரை). 5. *பழைமையாக வருதல்*; to be long established. 'அடிப்பட்ட சான்றோர்' (நன். 266, மயிலை. உரை).

[அடி + படு.]

**அடிப்படுத்து-தல்** *adi-p-paduttu-*, 2 பி.வி. (v. caus.) 1. *கீழ்ப்படுத்துதல், அடக்கியாளுதல்*; to subdue, subject, as a country, a foe. "பிறபுலங்க ளடிப்படுத்து" (பெரியபு. ஐயடி. 2). 2. *பாதத்தின்கீழ் அடங்கச் செய்தல்*; to hold or contain under a foot. "மாவலி யளிப்ப ஞால முழுவது மாய னெய்திப் பாவடிப் படுத்தி முன்னம் பண்பொடு கவர்ந்த வாறும்" (கூர்மபு. அனுக் கிரமணி. 9). 3. *நிலைபெறச் செய்தல்*; to establish firmly. 'தன் நெறிமுறைமை அடிப்படுத்து வருதற்குப் பிரிவன்' (கலித். 26, நச். உரை).

ம. அடிப்பெடுக

[அடி + படுத்து.]

**அடிப்படை** *adi-p-padai*, பெ. (n.) 1. *நிலைக்களம் (ஆதாரம்)*; foundation, base. 2. *சுவரின் அடித்தளம்*; lowest layer of mud or brick in a wall, basement. 3. *சேனையில் தலைமையாகவுள்ள பகுதி*; the main division of an army (W.).

ம. அடிப்பட

[அடி + படை.]

**அடிப்பணி** *adi-p-pani*, பெ. (n.) *குற்றேவல்*; menial service. "அன்னவற் குரிய னென்ன வடிப்பணி செய்வல்" (சீவக. 552).

[அடி + பணி.]

**அடிப்பதறு-தல்** *adi-p-padaru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *கால் நடுங்குதல்*; to tremble, as the feet (W.). 2. *நிலைதவறுதல் (யாழ்ப்.)*; to fall in business, lose a situation or property (J.). 3. *மனங்கலங்குதல் (யாழ்ப்.)*; to be perplexed in consequence of failure (J.).

[அடி + பதறு.]

**அடிப்பந்தி** *adi-p-pandi*, பெ.(n.) 1. *முதன்முறை யுண்போர் வரிசை*; row of people first sitting down to a meal. 'இடுகிறவன் தன்னவனானால் அடிப்பந்தியி லிருந்தா லென்ன, கடைப் பந்தியி லிருந்தா லென்ன?' (பழ.). 2. *உண்போரின் முதல் வரிசை*; front row of people at a meal.

[அடி + பந்தி.]

**அடிப்பரத்து-தல்** *adi-p-parattu-*, 5 செ.கு.வி. (v.i.) *பூப்புக்குளிப்பு (ருதுஸ்நான)ச் சடங்கில் நிலத்தில் நெற்பரப்பி மணையிட்டு அதன்மேற் பூப்படைந்த பெண்ணை உட்காரவைத்தல்*; to seat a girl on paddy spread on the ground, as part of the ceremony performed on her attaining puberty.

[அடி + பரத்து.]

**அடிப்பல்** *adi-p-pal*, பெ. (n.) *கீழ்வரிசைப் பற்களுள் ஒன்று*; one of the teeth in the lower jaw.

[அடி + பல்.]

**அடிப்பலம்** *aḍi-p-palam*, பெ. (n.) *அடிப்படை வலிமை;* strength of groundwork or basis.

*[அடி +* **Skt.** bala. **த.** *வலம் >* **Skt.** bala > **த.** *பலம்.]*

**அடிப்பலன்** *aḍi-p-palaṉ*, பெ. (n.) *முதற்பயன்;* first fruits or advantage.

*[அடி +* **Skt.** phala. **த.** *பழம் >* **Skt.** phala > **த.** *பலம் → பலன்.]*

**அடிப்பற்று-தல்** *aḍi-p-paṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *அடுகலத்தின் அடியிற் சோறு, கறி முதலியன தீய்ந்துபோதல்;* to be scorched or charred, as rice, curry, etc., for want of water or over-heating when cooking. 2. *மிகு தீயினால் சோறு, கறி முதலியன அடுகலத்தினடியில் பற்றிக் கொள்ளுதல்;* to stick to the bottom of the inside of the cooking vessel, as rice, curry, etc. ''கனலடிப் பற்றா வண்ண மிடைவி டாமற் றுழாவி'' (தைலவ. தைல. *94*). 3. *இறைவன் திருவடியைப் பற்றுதல்* (ஈடு, *2.6 : 9*); to cling to the feet of God.

**ம.** அடிக்குபற்றுக; **க.** அடிகத்து.

*[அடி + பற்று.]*

**அடிப்பற்று** *aḍi-p-paṟṟu*, பெ. (n.) 1. *சமையலில் தீய்ந்துபோன சோறு, கறி முதலியன;* food, curry, etc., charred in cooking. 2. *பாறையுப்பு* (யாழ்.அக.); rock-salt.

*[அடி + பற்று.]*

**அடிப்பாடு** *aḍi-p-pāḍu*, பெ. (n.) 1. *அடிச்சுவடு;* track, footprint. ''நிலந்தனி லடிப்பா டுணர்ந்து'' (நல். பாரத. சாந்தி. அரசநீ. 155). 2. *அடிப்பட்ட வழி* (யாழ்.அக.); beaten path. 3. *வழக்கு;* usage, custom. 'விகாரமாவன : பதத்துள் அடிப்பாடும் செய்யுட்டொடையும் ஒலியும் காரணமாக வலித்தல் மெலித்தல் முதலாயினவாக வருவன' (நன். 132, மயிலை. உரை). 4. *உறுதியான நிலை;* firmness, stability, fortitude. 'இதிறே உபாயத்தில் அடிப்பாடு' (ஈடு, *6.3 : 3*). 5. *வரலாறு;* origin, history. 'உகந்தருளின நிலங்களுடைய அடிப்பாடு சொல்லுகிறது' (திவ். திருநெடுந். 6, வியா.). 6. *திருவடியில் ஈடுபாடு;* attachment to the feet of God. 'இதென்ன அடிப்பாடுதான்' (ஈடு, *4.1 : 11*). 7. *முதனிலை;* stem of noun or verb. 'பகுதி, முதனிலை, வினையடி, அடிப்பாடு, தாது என்பனவெல்லாம் ஒரு பொருள்' (நன். *321*, இராமா. உரை).

**ம.** அடிப்பாடு

*[அடிப்படு → அடிப்பாடு. படு → பாடு.]*

**அடிப்பாய்-தல்** *aḍi-p-pāy-*, 2 செ.கு.வி. (v.i.) *தாவிக் குதித்தல்;* to leap over a mark, as a child, play at leap-frog (W.).

*[அடி + பாய்.]*

**அடிப்பார்-த்தல்** *aḍi-p-pār-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *நிழலளந்து பொழுதறிதல்;* to measure time by one's shadow. 2. *தகுந்த சமயம் நோக்குதல்;* to wait for an opportunity.

*[அடி + பார்.]*

**அடிப்பாரம்** *aḍi-p-pāram*, பெ. (n.) 1. *அடிப்படை (அஸ்திவாரம்)* (கோயிலொ. *130*); foundation. 2. *கப்பலடியிலுள்ள சரக்குக் கனம், சாலையமைப்பின் அடிக்கனம்;* ballast. 3. *சிரங்கின் புடைப்பு;* swellings of eczema or itch.

*[அடி +***Skt.** bhāra. **த.** *பொறு >***Skt.** phar→ bhr → bhāra > **த.** *பாரம்.]*

**அடிப்பிச்சை** *aḍi-p-piccai*, பெ. (n.) 1. *இரப்பெடுக்கப் போகும்போது கலத்திலிட்டுக் கொள்ளும் சிறிது அரிசி அல்லது சோறு;* a small quantity of food in a beggar's bowl as a start in proceeding to beg. 2. *சிறு மூலச் சொத்து;* small ancestral property. அவனுக்கு அடிப்பிச்சை ஏதாவது உண்டா ? (உ.வ.).

*[அடி +* **Skt.** bhikṣā. ஒருகா. **த.** *வேள் → வேட்கும் →* **க.** பேகு > **Skt.** bhikṣ → bhikṣā > **த.** *பிச்சை.* ஒ.நோ : **க.** பேகு; **E.** beg. *வேள் → வேண் → வேண்டு → வேண்டும். வேள் → வேட்கும் = வேண்டும். வேண்டுதல் = விரும்புதல், கெஞ்சுதல், இரத்தல்.]*

**அடிப்பிடி-த்தல்** *aḍi-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *சோறு, கறி முதலியன சமையற் கலத்தினடியிற் பற்றிப்போதல்;* to stick to the bottom of the cooking vessel and become scorched, as rice, curry, etc. (யாழ்.அக.). 2. *அடிச்சுவட்டைக் கண்டுபிடித்தல்;* to trace a footprint. 3. *குறிப்பறிதல்;* to get the clue. 4. *முதலிலிருந்து தொடங்குதல்;* to begin from the beginning. 5. *தட்டி முடைதல்* (செ.அக.); to weave palmleaf screen. 6. *காலைப்பிடித்து வேண்டுதல்;* to take hold of the feet in supplication. —, 4 செ.குன்றாவி. (v.t.) *பின்றொடர்தல்;* to follow, pursue (W.).

*[அடி + பிடி.]*

**அடிப்பிரதட்சிணம்** *aḍi-p-piradaṭciṇam*, பெ. (n.) *அடியடியாய் மெதுவாய் நடந்து கோயிலை வலம்வருகை*; going around a sacred place slowly, as if measuring the distance in feet, circumambulation.

[அடி + **Skt.** pradakṣiṇa > த. பிரதட்சிணம்.]

**அடிப்பினை** *aḍippiṇai*, பெ. (n.) 1. *வங்க மணல்* (மூ.அ.); sand containing lead, lead ore. 2. *வங்கம்* (மூ.அ.); lead.

**அடிப்புக் கண்டுமுதல்** *aḍippu-k-kaṇḍumudal*, பெ. (n.) *மொத்த நெல்விளைவு* (R.T.); gross out-put of paddy.

[அடிப்பு + கண்டுமுதல்.]

**அடிப்புக்கூலி** *aḍippu-k-kūli*, பெ. (n.) *கதிரடிக்குங் கூலி*; wages for threshing grain.

[அடிப்பு + கூலி.]

**அடிப்புல்** *aḍi-p-pul*, பெ. (n.) *நிலத்தினடியில் எறும்புகள் சேர்த்துவைக்கும் தவசம்*; grain stored by ants under the ground.

[அடி + புல். புல் = புல்லரிசி.]

**அடிப்புல்லரிசி** *aḍi-p-pul-l-ariši*, பெ. (n.) *புல்லின் தண்டிலிருக்கும் விதைகள்*; seeds in the stalk of green grass (சா.அக.).

[அடி + புல் + அரிசி.]

**அடிப்பெருங்கடவுள்** *aḍi-p-peruṅ-kaḍavuḷ*, பெ. (n.) *எல்லாவற்றிற்கும் மூலமான முழுமுதவிறைவன்*; the Supreme Being. ''அடிப்பெருங்கடவு ளூழி யீறுதொறும்'' (தக்கயாகப். 656).

[அடி + பெருங்கடவுள்.]

**அடிப்பையாதகம்** *aḍippaiyādagam*, பெ. (n.) *காட்டெருமை*; wild buffalo (சா.அக.).

**அடிப்போடு-தல்** *aḍi-p-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. *தொடங்குதல்*; to lay the foundation, begin (W.). 2. *ஒருவரிடம் உதவி பெறுதற்கு ஏற்ற செய்திகளை முன்னடிப்படையாகச் சொல்லிவைத்தல்*; to say or do things as preparing the ground for getting favours from somebody. இவன் பணத்திற்கு அடிப்போடுகிறான் (உ.வ.).

[அடி + போடு.]

**அடிபட்டவன்** *aḍi-paṭṭavaṉ*, பெ. (n.) 1. *காயம் பட்டவன்*; wounded person. 2. *தோற்றவன்*; defeated contestant. 3. *இயற்கை நிலைமைகளைப் பட்டறிந்தவன்*; one who has experienced different situations in life. மழையிலுங் காற்றிலும் அடிபட்டவன் (உ.வ.). 4. *ஒன்றிற் பழகினவன் அல்லது பயிற்சி பெற்றவன்*; trained, experienced person.

**அடிபடு-தல்** *aḍi-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. *அடிக்கப்படுதல்*; to be beaten, struck. ''பிட்டமுதுக் கடிபடுவோன்'' (திருப்பு. 451). ''விண்ணிலுறை வானவரில் யாரடி படாதவர்'' (பாரத. அருச். தவ. 107). 2. *தாக்குண்ணுதல்*; to hit against, stub, be attacked. ''அவசமாகி யடிபட் டெனைத்தா முறுப்புந் தூளாய்'' (ஞானவா. மனத். 6). 3. *நீக்கப்படுதல்*; to be struck off, removed. அவன் பெயர் அடிபட்டுப்போயிற்று. 4. *தானாக நீங்கிவிடுதல்*; to be automatically cancelled, repealed, nullified. புதுச் சட்டத்தால் பழைய சட்டம் அடிபட்டுவிட்டது. 5. *பலர் வாயில் வழங்குதல்*; to be in every one's mouth, be a household word. அடுத்த ஆளுநராக அவர் வருவாரென்று, அவர் பெயர் எல்லார் வாயிலும் அடிபடுகிறது. 6. *செவிக்கெட்டுதல்*; to reach one's ears, as a rumour. அந்தச் செய்தி நேற்றுத்தான் என் காதில் அடிபட்டது (உ.வ.). 7. *உலகப் பட்டறிவில் அழுந்துதல்*; to be involved, plunged. பல வகைத் துன்பங்களிலும் கட்டங்களிலும் அடிபட்டவன் (உ.வ.). 8. *செலவழித்தல்*; to be spent, expended. எத்தனை கலம் நெல்லானாலும் இந்தக் குடும்பத்தில் அடிபட்டுப் போம் (உ.வ.). 9. *கொல்லப்படுதல்*; to be slaughtered. இந்த நகரில் ஒரு நாளைக்கு இருநூறு ஆடுகள் அடிபடும் (உ.வ.). 10. *நோய் நீங்குதல்*; to be cured, eradicated, as a disease. இந்த மருந்தாற் பல நோய்கள் அடிபடும் (உ.வ.). 11. *தட்பவெப்ப நிலையால் தாக்குண்ணுதல்*; to be weather-beaten. இந்தக் கட்டடம் காற்றிலும் மழையிலும் அடிபட்டு உரங்குன்றிவிட்டது (உ.வ.). 12. *அச்சிடப்படுதல்*; to be printed, to be struck, as composed matter. நாளைக்கு நாலு படிவம் (formes) அடிபடும் (உ.வ.).

**அடிபணி-தல்** *aḍi-paṇi-*, 2 செ.கு.வி. (v.i.) *தண்டனிடுதல்*; to fall at one's feet, worship. ''அடிபணிந்தேன் விண்ணப்பம்'' (திவ். பெரியாழ். 3.10 : 2).

**அடிபதறு-தல்** *aḍi-padaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *அடிப்பதறு - தல் 1* பார்க்க; see *aḍi-p-*

*padaṟu-*, 1. 2. **பாதம் உதறுதல் அல்லது துடித்தல்**; shaking of the feet, as in shaking palsy (சா.அக.).

**அடிபற்றிக்காந்தல்** *aḍi-paṟṟi-k-kāndal*, பெ. (n.) **அடிக்காந்தல்** பார்க்க; see *aḍi-k-kāndal*.

[அடி + பற்றி + காந்தல்.]

**அடிபற்று-தல்** *aḍi-paṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) **அடிப்பற்று-தல் 1, 2** பார்க்க; see *aḍi-p-paṟṟu-*, 1, 2.

**அடிபறி-தல்** *aḍi-paṟi-*, 2 செ.கு.வி. (v.i.) **வேரொடு பெயர்தல்**; to be uprooted. 'ஊசிவேர் அடிபறிய' (தக்கயாகப். 144, உரை).

**அடிபாடு** *aḍi-pāḍu*, பெ. (n.) **மாடு, குதிரை முதலிய வீட்டு விலங்குகளின் உழைப்பு** (இ.வ.); labour, work, as done by domestic animals (Loc.).

ம. அடிபாடு

**அடிபிடி-த்தல்** *aḍi-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **எண்ணெய், மெழுகு முதலிய மருந்து வகைகளைக் காய்ச்சும்போது, அடிக்கடி கிண்டாமையால் அடியிலுள்ள மருந்து தீய்ந்து சட்டியுடன் ஒட்டிக்கொள்ளுதல்**; to stick to the bottom of vessel after having been scorched, as medicines such as oil and electuary, when they are not stirred up properly in the course of preparation (சா.அக.). 2. **ஒருவனுடைய அடிச்சுவடு பற்றிப்போதல்**; to trace one's footstep. 3. **துப்பறிதல்**; to get a clue, as to a crime. —, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **அணை அல்லது கரை கட்டுதல்**; to construct a dam or bank. ''அண்டகடாகம் வெடித்து அடிபிடிக்க வேண்டும்'' (திவ். அமலனாதி. 3, வியா.). 2. **தொடருதல்**; to pursue.

க. அடிவிடி

**அடிபிடி** *aḍi-piḍi*, பெ. (n.) **சண்டை**; broil, fray, scuffle. இரு கட்சியார்க்கும் எங்குப் பார்த்தாலும் அடிபிடியாய்க் கிடக்கிறது (உ.வ.).

**அடிபிடிக்காமற் சாடு-தல்** *aḍi-piḍikkāmaṟ-cāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) **பாண்டத்தினடியில் மருந்து பற்றாதபடி, துடுப்புக்கொண்டு கிளறுதல் அல்லது துழாவுதல்**; to stir with a wooden spatula, so as not to allow any thick solution of the medicine to adhere to the bottom of the vessel in which it is prepared.

[அடி + பிடிக்காமல் + சாடு.]

**அடிபிடிசண்டை** *aḍi-piḍi-šaṇḍai*, பெ. (n.) **ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு செய்யுஞ் சண்டை**; quarrel in which both parties exchange blows. அண்ணன் தம்பியிருவர்க்கும் இன்று காலை அடிபிடி சண்டை (உ.வ.).

**அடிபிழை-த்தல்** *aḍi-piḻai-*, 4 செ.கு.வி. (v.i.) **நெறிதவறி நடத்தல்**; to act unlawfully, illegally. ''வேந்தன் அடிபிழைத் தாரை யொறுக்குந் தண்டத்து'' (மணிமே. 19 : 43).

**அடிபிறக்கிடு-தல்** *aḍi-piṟakkiḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **பின்வாங்குதல்**; to fall back, retreat. 'அடிபிறக்கிட் டோனையும்' (தொல். பொருள். புறத். 10, நச். உரை).

**அடிபுதையரணம்** *aḍi-pudai-y-araṇam*, பெ. (n.) **பாதக்கூடு**; boot or bootlike sandal. ''அடி புதை யரண மெய்தி'' (பெரும்பாண். 69).

[அடி + புதை + அரணம்.]

**அடிபுனைதோல்** *aḍi-puṉai-tōl*, பெ. (n.) **செருப்பு**; sandal. ''அடிபுனை தோலி னரண்சேர்ந்து'' (பெருந்தொ. 437).

**அடிபெயர்-தல்** *aḍi-peyar-*, 2 செ.கு.வி. (v.i.) **காலெடுத்து வைத்தல்**; to move a step, move from the spot where one stands.

**அடிபெயர்-த்தல்** *aḍi-peyar-*, 4 செ.கு.வி. (v.i.) **அடிபெயர்-தல்** பார்க்க; see *aḍi-peyar-*.

**அடிபோடியெனல்** *aḍi-pōḍi-y-eṉal*, பெ. (n.) **ஒரு பெண்ணை மதிப்புரவின்றிப் பேசுதல்**; speaking impolitely to a woman. அவன் என்னை அடிபோடி என்று பேசுகிறான் (உ.வ.).

[அட (ஆ.பா. விளி) — அடி (பெ.பா. விளி). போ + அடி — போடி.]

**அடிபோடு-தல்** *aḍi-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **அடிப்போடு-தல்** பார்க்க; see *aḍi-p-pōḍu-*.

**அடிம்பு** *aḍimbu*, பெ. (n.) **சிவதை**; Indian jalap, *Convolvulus turpethum* alias *Ipomaea turpethum* (சா.அக.).

**அடிம்புருகம்** *aḍimburugam*, பெ. (n.) **அடிம்பு** பார்க்க; see *aḍimbu*.

**அடிமட்டம்** *aḍi-maṭṭam*, பெ. (n.) *கீழ்மட்டம்;* base level, bottom level.

**அடிமடக்கு** *aḍi-maḍakku*, பெ. (n.) 1. (அணி.) *செய்யுளடி மீண்டும் அல்லது மீண்டும் மீண்டும் பொருள் வேறுபட்டுவரும் சொல்லணி வகை;* (Rhet.) repetition of a line in a poem or stanza once or several times with a variation in sense. 2. (யாப்.) *செய்யுளடியின் பெரும் பகுதி பொருள் வேறுபடாது மீண்டும் வரும் யாப்பு வகை;* (Pros.) repetition of a large part of a metrical line without change of meaning and not more than once.

**அடிமடி** *aḍi-maḍi*, பெ. (n.) *ஆடையின் உள் மடிப்பு;* inner fold of the waist-cloth.

**அடிமடியில் நெருப்பைக்கட்டு-தல்** *aḍi-maḍiyil-neruppai-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *கன்னிப் பெண்ணை மணம்முடித்துத் தரும்வரை மிகவும் விழிப்போடு காக்கும் கடும் பொறுப்பேற்றல்;* to take up the heavy responsibility of protecting as a mother or a matron, the virginity of a matured girl till she is given away in marriage, lit., to keep tied up embers in the inner fold of the waist-cloth.

[அடி + மடி + இல் + நெருப்பு + ஐ + கட்டு.]

**அடிமடை** *aḍi-maḍai*, பெ. (n.) *முதன்மடை;* head of a sluice.

**அடிமடையன்** *aḍi-maḍaiyaṉ*, பெ. (n.) *முழு முட்டாள்;* utter idiot or fool.

**அடிமண்** *aḍi-maṇ*, பெ. (n.) 1. *கீழ்மண்;* soil underneath. 2. *செய்வினைக்காக (சூனியத்திற் காக) எடுக்கும் காலிலொட்டிய மண்;* earth that has been touched by a person's foot, taken for witchcraft against him (W.).

**அடிமண்டி** *aḍi-maṇḍi*, பெ. (n.) *ஒரு கலத்தின் அடியில் தங்கும் மண்டி அல்லது கசடு;* dregs, deposit. 'தாம் தந்த மயர்வறு மதிநல மெல்லாம் அடிமண்டியோடே கலங்கிற்று என்னுங்கோள்' (ஈடு, 1.4 : 3, வியா.).

**அடிமணியிடு-தல்** *aḍi-maṇi-y-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *தொடக்கஞ் செய்துவைத்தல்;* to make a beginning, as placing gems in the place where a foundation is to be laid. ''இனிமுடிக்கும் வென்றிக் கடிமணி யிட்டாய்'' (கம்பரா. யுத்த. மகுடபங். 47).

[அடி + மணி + இடு.]

18

**அடிமனை** *aḍi-maṉai*, பெ. (n.) *நிலைக்களம் (ஆதாரம்);* basis, support. 'எல்லாப் பண் ணிற்கும் இஃது அடிமனையாதலின்' (சிலப். 3 : 63, அடியார்க். உரை).

**அடிமயக்கு** *aḍi-mayakku*, பெ. (n.) (யாப்.) *பொருள் வேறுபாடின்றி அடிகளை முன்பின் னாக முறைமாற்றுமாறு அமைந்த செய்யுள்;* (Pros.) a verse so constructed that transposing of its lines does not destroy its sense (W.).

**அடிமரம்** *aḍi-maram*, பெ. (n.) 1. *மரத்தின் அடி;* trunk of a tree. 2. *பாய்மரத்தின் அடிப் பாகம்* (M. Navi. 81); lower mast.

**அடிமறி** *aḍi-maṟi*, பெ. (n.) *அடிமறிமாற்று* பார்க்க; see ***aḍi-maṟi-māṟṟu***. ''அடிமறி யான'' (தொல். சொல். எச். 12).

**அடிமறிமண்டிலம்** *aḍi-maṟi-maṇḍilam*, பெ. (n.) *அடிகளை எவ்வாறு முறைமாற்றினும் பொருள் மாறாவாறு, அதாவது, எல்லாவடிகளும் அடிதோறும் பொருள்முடியும் அளவடியாகப் பாடப்படும் அகவற்பா வகை;* a kind of *agavaṟpā* verse so constructed that the lines are interchangeable without change of meaning. ''நடுவாதி யந்தத்து அடைதரு பாதத் தகவல் அடிமறி மண்டிலமே'' (யா. கா. 28).

எ-டு :

''சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வாரலை யெனினே யானஞ் சுவலே
சார னாட நீவர லாறே.''

**அடிமறிமண்டிலவாசிரியம்** *aḍi-maṟi-maṇḍila-v-āsiriyam*, பெ. (n.) *அடிமறிமண்டிலம்* பார்க்க; see *aḍi-maṟi-maṇḍilam*. ''அகப்படு மடிமுத லிடையீ றாயின் அடிமறி மண்டில வாசிரிய மாதலும்'' (இலக். வி. 734).

[அடி + மறி + மண்டிலம் + ஆசிரியம்.]

**அடிமறிமாற்று** *aḍi-maṟi-māṟṟu*, பெ. (n.) *எண் வகைப் பொருள்கோள்களுள், பொருளுக்கு ஏற்றவாறு அடிகளையெடுத்துக் கூட்டுவதும், எந்த அடியை எங்கு நிறுத்தினும் ஓசையும் பொருளும் வேறுபடாததும் ஆகிய வகை;* mode of construing in which the lines of a verse have to change places to give the intended meaning, or can change places without affecting the rhythm and meaning at the same time, one of eight modes of construing verses.

"ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறா அடியவும் அடிமறி"
(நன். 419).

இந் நூற்பாவின்படி, (1) ஏற்புழிக்கூட்டும் அடிமறிமாற்று, (2) மாறா அடிமறிமாற்று என அடிமறிமாற்றுப் பொருள்கோள் இரு வகைப்படும். அவற்றுட் பின்னது, (அ) பொருளிசைமாட்சி மாறா அடிமறிமாற்று, (ஆ) பொருள்மாட்சி மாறா அடிமறிமாற்று என இருவகைப்படும்.

**(1) ஏற்புழிக்கூட்டும் அடிமறிமாற்று**

எ-டு :

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கா லீண்டும்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்."

இது,

"கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கா லீண்டும்,
விடுக்கும் வினையுலந்தக் கால்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம், (இஃதறியார்)
நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்"

என்று, பொருளுக் கேற்றவாறு அடிகள் கொண்டுகூட்டப்படுவதால், ***ஏற்புழிக்கூட்டும் அடிமறிமாற்று.***

**(2) மாறா அடிமறிமாற்று**

**(அ) *பொருளிசைமாட்சி மாறா அடிமறி மாற்று***

எ-டு :

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே."

இஃது, எவ்வடியை எங்கு நிறுத்தினும் ஓசையும் பொருளும் வேறுபடாமையால் ***பொருளிசைமாட்சி மாறா அடிமறிமாற்று.***

**(ஆ) *பொருள்மாட்சி மாறா அடிமறிமாற்று***

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்."

இஃது, எவ்வடியை எங்கு நிறுத்தினும் பொருள் வேறுபடாவிடினும், ஈற்றடியால் ஓசை வேறுபட்டுவிடுவதால், ***பொருள்மாட்சி மாறா அடிமறிமாற்று.***

இம் மூவகை அடிமறிமாற்றுகளுள், ஏற்புழிக்கூட்டும் அடிமறிமாற்று மறிதல் என்னும் சொல்லிற்குப் பொருந்தாமையால், அதனைத் தனியாக ஒரு பொருள்கோளாக்கி ***அடிமாற்று*** எனப் பெயரிடுவதே தக்கதாம்.

**அடிமனை** *aḍi-maṉai*, பெ. (n.) *1. சுற்றுச்சுவர்*; walls of a building. *"அடிமனை பவள மாக"* (*சீவக. 837*). *2. வீடுகட்டுதற்குரிய **அடிநிலம்***; ground, plot.

**அடிமாடு** *aḍi-māḍu*, பெ. (n.) ***கறிசமைக்கக் கொல்வதற்குரிய மாடு***; cattle for slaughter.

**அடிமாண்டுபோ-தல்** *aḍi-māṇḍu-pō-*, 7 செ.கு.வி. (v.i.) ***அடியோடழிதல்***; to perish completely, root and branch.

†**அடிமாற்று** *aḍi-māṟṟu*, பெ. (n.) ***ஏற்புழிக் கூட்டும் அடிமறிமாற்று*** பார்க்க; see *ēṟpuḻi-k-kūṭṭum-aḍi-maṟi-māṟṟu.*

[*அடி + மாற்று.* **படைத்.** *பாவாணர்.*]

**அடிமுகனை** *aḍi-mugaṉai*, பெ. (n.) ***தொடக்கம்***; beginning (W.).

**அடிமுட்டாள்** *aḍi-muṭṭāḷ*, பெ. (n.) ***முழு மூடன்***; utter fool or idiot.

**அடிமுடி** *aḍi-muḍi*, பெ. (n.) *1. **காலுந் தலையும், பாதமுந்தலையும்***; head and foot. *2. **ஒழுங்கு*** (*யாழ்.அக.*); order, regularity (W.). *3. **தொடக்கமும் முடிவும்***; beginning and end. *"அடிமுடியொன் றில்லாத வகண்ட வாழ்வே"* (தாயு. பன்மாலை, 3). *4. **வரலாறு*** (சங்.அக.); history.

**அடிமுண்டம்** *aḍi-muṇḍam*, பெ. (n.) *1. **வெட்டிய மரத்தின் அடிப்பாகம்***; stump of a tree. *2. **பயனற்றவன்-ள்***; worthless person (Loc.).

**அடிமுதன்மடக்கு** *aḍi-mudaṉ-maḍakku*, பெ. (n.) ***செய்யுளடியின் முதற்சீர் மடங்கிப் பொருள் வேறுபட்டு வரும் சொல்லணி***; repetition of the initial foot in a poetic line with a variation in sense.

[*அடி + முதல் + மடக்கு.*]

அடிமுந்தி *aḍi-mundi*, பெ. (n.) சீலையின் உள் முகப்பு; the end of a woman's cloth, which is worn inside.

[அடி + முன் + தானை – அடிமுன்றானை → அடிமுந்தானை → அடிமுந்தி.]

அடிமுன்றானை பார்க்க; see *aḍi-muṉṟāṉai*.

அடிமுரண்டொடை *aḍi-muraṇḍoḍai*, பெ. (n.) (யாப்.) செய்யுளில், ஓரடியின் முதலிலுள்ள சொல் அல்லது அதன் பொருள், அடுத்த அடியின் முதலிலுள்ள சொல்லொடு அல்லது அதன் பொருளொடு மாறுபடத் தொடுக்கும் தொடுப்புவகை; (Pros.) concatenation in which the first word of a line or its sense is antithetical to the first word of the next line or its sense. ''மறுதலைத்த மொழியான் வரினும் முரண்'' (யா. கா. 16).

[அடி + முரண் + தொடை.]

அடிமுன்றானை *aḍi-muṉṟāṉai*, பெ. (n.) சீலையின் உள்முகப்பு; the end of a woman's cloth, which is worn inside.

[அடி + முன் + தானை.]

அடிமூலம் *aḍi-mūlam*, பெ. (n.) 1. அடிவேர், ஆணிவேர்; main root (சா.அக.). 2. உள் மூலம்; internal hemorrhoids.

[அடி + மூலம்.]

உள்மூலம் பார்க்க; see *uḷ-mūlam*.

அடிமேலடியடி - த்தல் *aḍi-mēl-aḍi-y-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) ஒரேயிடத்தில் மேலும் மேலும் அடித்தல்; to beat or strike repeatedly on the same spot. 'அடிமேல் அடியடித்தால் அம்மியும் நகரும்' (பழ.).

[அடி + மேல் + அடி + அடி.]

அடிமை *aḍimai*, பெ. (n.) 1. தொழும்பு, பிறருக்குக் கட்டாயத் தொண்டு செய்யும் நிலைமை; slavery, bondage, servitude. ''ஒன்னார்க் கடிமை புகுத்தி விடும்'' (குறள், 608). 2. அடிமையாள், தொழும்பன்; slave, formerly attached to land and transferable with it. ''நீ அடிமை யாதல் சாதிப்பன்'' (பெரியபு. தடுத்தாட். 49). 3. தொண்டன், இறையடியான்; servant, devotee. ''அஞ்சலஞ்சலென் றடிமைக்கு..................நெஞ்சிலுணர்த்தும்'' (தாயு. பராபர. 124). 'அடிமை படைத்தால் ஆள்வது கடன்' (பழ.).

ம. அடிமு; க. அடிமெ; தெ. அடிமெ, அடியண்டு.

அடிமைக்காசு *aḍimai-k-kāšu*, பெ. (n.) கோயில் வேலைக்காரரிடமிருந்து பெறும் வரிவகை (I.M.P. Sm. 38); a fee collected from temple servants.

ம. அடிமக்காசு

[அடிமை + காசு.]

அடிமைச்சீட்டு *aḍimai-c-ciṭṭu*, பெ. (n.) அடிமை யோலை; slave-bond.

[அடிமை + சீட்டு.]

அடிமைப்படு-தல் *aḍimai-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) அடிமையாதல்; to become a slave, to be enslaved.

[அடிமை + படு.]

அடிமைப்படுத்து-தல் *aḍimai-p-paḍuttu-*, 2 பி.வி. (v. caus.) அடிமையாக்குதல்; to enslave.

[அடிமை + படுத்து.]

அடிமைப்பத்திரம் *aḍimai-p-pattiram*, பெ. (n.) அடிமையோலை; slave-bond.

[அடிமை + Skt. patra > த. பத்திரம் = ஓலை, ஆவணம்.]

அடிமைப்பள்ளன் *aḍimai-p-paḷḷaṉ*, பெ. (n.) பள்ளருள் அடிமைப்பணி செய்பவன் (P.T.L.); serf or bond-labourer of the Paḷḷa caste.

[அடிமை + பள்ளன்.]

அடிமைபூண்[ணு]-தல் *aḍimai-pūṇ-*, 12 செ. கு.வி. (v.i.) 1. அடிமையாயமைதல்; to become a bond-slave. 2. திருத்தொண்டனாதல்; to become a devotee. ''நானடிமை பூண்டேன்'' (திவ். பெரியதி. 7.2 : 5).

அடிமையோலை *aḍimai-y-ōlai*, பெ. (n.) அடிமையாவணம் (அடிமைப்பத்திரம்); bond of a slave.

ம. அடிம ஓல

[அடிமை + ஓலை.]

அடிமோனைத்தொடை *aḍi-mōṉai-t-toḍai*, பெ. (n.) (யாப்.) அடிகளின் முதலெழுத்து மோனையாக ஒன்றிவரத் தொடுப்பது; (Pros.) concatenation, in which, the lines of a verse begin with the same letter or letters related according to the laws of alliteration in Tamil. ''எழுவா யெழுத்தொன்றின் மோனை'' (யா. கா. 16).

[அடி + மோனை + தொடை.]

**அடியக்காந்தி** *adiya-k-kāndi*, பெ. (n.) *அடிப் பட்ட காந்தி* பார்க்க; see *adi-p-patta-kāndi*.

**அடியட்காந்தி** *adiyat-kāndi*, பெ. (n.) *அடிப் பட்ட காந்தி* பார்க்க; see *adi-p-patta-kāndi*.

**அடியடியாக** *adi-y-adi-y-āga*, கு.வி.எ. (adv.) 1. *ஒவ்வோரடியாக*; line by line. 2. *தலை முறை தலைமுறையாக* (யாழ்ப்.); hereditarily, from generation to generation (J.). 3. *அடிமே லடியாக*; step by step.

*[அடி + அடி + ஆக.]*

**அடியந்தாதி** *adi-y-andādi*, பெ. (n.) *ஒரு செய்யுளின் ஓரடி அடுத்தவடியாகவேனும், ஒரு செய்யுளின் ஈற்றடி அடுத்த செய்யுளின் முதலடியாகவேனும் அமையுமாறு தொடுக்கப் படுவது*; mode of versification, in which, a line in verse is repeated as the next line, or a line that ends one stanza begins the following stanza.

''அடியுஞ் சீரு மசையு மெழுத்து
முடிவு முதலாச் செய்யுள் மொழியினஃ
தந்தாதித் தொடையென் றறிதல்
வேண்டும்''
(யாப். வி. 52, மேற். பக். 183).

எ-டு :

''ஆதியங் கடவுளை யருமறை பயந்தனை
போதியங் கிழவனை பூமிசை யொதுங்கினை
போதியங் கிழவனை பூமிசை யொதுங்கிய
சேதியஞ் செல்வநின் றிருவடி பரவுதும்''
(யாப். வி. 52, மேற். பக். 186).

இதில் இரண்டாம் அடியே, ஈற்றெழுத்து மட்டும் மாறி மூன்றாம் அடியாய் அமைந் திருத்தல் காண்க.

*[அடி + அந்தாதி.]*

**அடியந்திரம்** *adi-yandiram*, பெ. (n.) *திருமணம், விருந்து முதலிய சிறப்பு (விசேடம்)*; marriage, feast, etc., anything special.

*[ம. அடியந்தரம் → த. அடியந்திரம்.]*

**அடியம்** *adiyam*, பெ. (n.) *'அடியேன்' என்பதன் பன்மை*; pl. of *adiyēn*. ''அடியமில் லறத்தை யாற்றி'' (கந்தபு. திருநகரப். 112).

**அடியர்** *adiyar*, பெ. (n.) 1. *அடிமைகள்*; slaves. ''அடியரு மாயமும் நொடிவனர் வியப்ப'' (பெருங். உஞ்சைக். 34 : 179). 2. *அடியார், தொண்டர்*; devotees. ''பணிதற் கடியர் சென்றெதிர் கொள'' (பெரியபு. திரு ஞான. 501).

**அடியரேங்கள்** *adiyarēngal*, பெ. (n.) *'அடிய னேன்' என்பதன் இரட்டைப் பன்மை*; double pl. of *adiyanēn*. ''சிற்றடிய ரேங்கள்செயல் சீருளதை யன்றோ'' (கந்தபு. தேவ. தெய்வ. 226).

**அடியரேம்** *adiyarēm*, பெ. (n.) *'அடியனேன்' என்பதன் பன்மை*; pl. of *adiyanēn*.

**அடியவர்** *adiyavar*, பெ. (n.) *தொண்டர்*; devotees. ''அந்நகரில் வாழ்வாரு மடியவரு மனமகிழ்ந்து'' (பெரியபு. திருஞான. 325).

**அடியவன்** *adiyavan*, பெ. (n.) 1. *அடிமை*; slave. 2. *பத்தன்* (பக்தன்); devotee. ''அமரர்நா யகன்றனக் கடியவன்'' (கந்தபு. யுத்த. சிங்கமுகா. 279).

ம. அடியான்; க. அடிய; தெ. அடிய, அடியடு.

**அடியளபெடைத்தொடை** *adi-y-alabedai-t-todai*, பெ. (n.) *செய்யுளடிகளின் முதற்கண் அளபெடை யமையத் தொடுப்பது*; concatenation, in which, the initial feet of the lines of a verse begin with prolonged vowels or vowel-consonants. ''அடிதோறு முதன்மொழிக்கண் அழியா தளபெடுத் தொன்றுவ தாகு மளபெடையே'' (யா. கா. 16)

எ-டு :

''ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்.''

''அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து
நங்ங் களங்கறுப்பா நாம்.''

*[அடி + அளபெடை + தொடை.]*

**அடியற்காந்தி** *adiyar-kāndi*, பெ. (n.) *அடிப் பட்ட காந்தி* பார்க்க; see *adi-p-patta-kāndi*.

**அடியறி-தல்** *adi-y-ari-*, 2 செ.கு.வி. (v.i.) *மூல காரணந் தெரிதல்*; to find out the first or primary cause. 'அடியறியும் வியாசமுனிவர்' (ஈடு, 1.1 : 8).

*[அடி + அறி.]*

**அடியறு-த்தல்** *adi-y-aru-*, 4 செ.குன்றாவி. (v.t.) *மூலத்தோடு நீக்குதல்*; to eradicate. 'அஹங்கார மமகாரங்களையும்..........அடி யறுத்து' (ரஹஸ்ய. 320).

ம. அடியறுக்குக

*[அடி + அறு.]*

**அடியறு-தல்** *adi-y-aru-*, 2 செ.கு.வி. (v.i.) *மூலமறுதல், முழுதும் அழிதல்*; to be uprooted,

completely removed. 'அடியற்ற மரம்போல் அலறி விழுகிறது', 'அடி யற்றால் நுனி விழாம லிருக்குமா?' (பழ.).

[அடி + அறு.]

**அடியறுக்கி** *aḍi-y-aṟukki*, பெ. (n.) *குயவன் மட்கல மறுக்குங் கருவி*; flat piece of wood by which the potter marks his work and separates it from the wheel below (W.).

[அடி + அறுக்கி.]

**அடியறை** *aḍi-y-aṟai*, பெ. (n.) *அடியற்றது*; that which has no basis or support.

[அடி + அறை.]

**அடியன்** *aḍiyaṉ*, பெ. (n.) 1. *கீழிருப்பவன்*; he who is underneath. 2. *அடிமை*; slave. 3. *தொண்டன்*; devotee.

[அடி + அன்.]

**அடியனாதி** *aḍi-y-aṉādi*, பெ. (n.) *எண்ணிற்கு மெட்டாத் தொன்மை*; time immemorial.

[அடி + Skt. anādi (அன் + ஆதி).]

*அன்*² பார்க்க; see *aṉ*².

**அடியனேன்** *aḍiyaṉēṉ*, பெ. (n.) *அடியேன், உன் அடியனாகிய நான்*; a submissive term of respect meaning, 'I, your slave, your humble servant.' "உன்னடிய னேனும்வந் தடி யிணை யடைந்தேன்" (திவ். பெரியதி. 5.8 : 3).

[அடியன் + ஏன் (த. ஒ. ஈறு).]

**அடியாகெதுகை** *aḍi-y-āg(u)-edugai*, பெ. (n.) *அடியெதுகைத்தொடை* பார்க்க; see *aḍi-y-edugai-t-toḍai*.

[அடி + ஆகு + எதுகை.]

**அடியாட்டி** *aḍiyāṭṭi*, பெ. (n.) *அடியாள்*; maid-servant. 'கூனி சொன்னது கேட்க வேண்டா தொழிகிறது, அடியாட்டி யாகை யாலே' (திவ். திருநெடுந். 12, வியா.).

ம. அடியாட்டி, அடியாத்தி.

[அடியான் (ஆ.பா.) – அடியாட்டி (பெ.பா.).]

**அடியார்** *aḍiyār*, பெ. (n.) 1. *அடிமையர்*; slaves. "பின்னும் பகர்வாள் மகனே யிவன் பின் செல்தம்பி யென்னும் படியன் றடியாரினி னேவல் செய்தி" (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 147). 2. *தொண்டர்*; devotees. "அடியார்க் கெல்லா மலகிலா வினைதீர்க்க" (தாயு. ஆசை. 7).

**அடியார்க்குநல்லார்** *aḍiyār-k-ku-nallār*, பெ. (n.) *சிலப்பதிகாரத்திற்குச் சிறந்த விரிவுரை வரைந்த 12ஆம் நூற்றாண்டு உரையாசிரியர்*; name of a commentator of *Śilappadigāram*, who lived in the 12th century A.D.

அடியார்க்குநல்லார் என்பது, அடியார்க் கன்பன் (பக்தவத்ஸல) என்பது போன்ற இறைவன் பெயர். இறைவன் பெயரை மக்கட்கு இயற்பெயராக இடுவது தொன்று தொட்ட தமிழர் வழக்கம். நல்லார் என்பது நல்லான் என்பதன் உயர்வுப் பன்மை.

**அடியாள்**¹ *aḍi-y-āḷ*, பெ. (n.) *பகைவரை அடிப்பதற்காக அமர்த்தப்படும் தடியன்*; hooligan hired for beating enemies.

**அடியாள்**² *aḍiyāḷ*, பெ. (n.) *குற்றேவற்பெண்* (I.M.P. Sm. 38); maid-servant.

ம. அடியாள்; க. அடியாளு.

**அடியாளுறுத்தி** *aḍiyāḷuṟutti*, பெ. (n.) *சிறு குறிஞ்சா*; small Indian ipecacuanha, *Gymnema sylvestre* (சா.அக.).

**அடியாறு** *aḍi-y-āṟu*, பெ. (n.) *தொன்று தொட்ட வரலாறு* (இ.வ.); historical succession from ancient times (Loc.).

**அடியான்** *aḍiyāṉ*, பெ. (n.) 1. *அடிமை*; slave. 2. *ஏவலாளன்*; man-servant. 3. *தொண்டன்*; devotee, servant as of a deity. "குன்றாமல் உலக மளந்த அடியானை அடைந்தடியேன் உய்ந்த வாறே" (திவ். திருவாய். 9.4 : 10).

ம. அடியான்; க. அடிய; தெ. அடியடு.

**அடியானபடி** *aḍi-y-āṉa-paḍi*, பெ. (n.) *தலை*; head (சா.அக.).

[அடி + ஆன + படி.]

இப் பொருள், அடியார் இறைவன் திருவடி யைச் சூடும் கருத்தில், அடியார் தலை இறைவன் திருப்பாதத்திற்குப் படிபோ லமையுங் குறிப்பைக் கொண்டதா யிருக்க லாம்.

**அடியிடு-தல்** *aḍi-y-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. *தொடங்குதல், தொடக்கஞ் செய்தல்*; to make a beginning, commence an undertaking. "படிந்தழுவ தற்குப் பாவா யடியிட்ட வாறு" (சீவக. 1391). 2. *கூடை, பாய் முதலியன முடைதற்கு அடியமைத்தல்*; to make the bottom of a basket or one end of a mat as the first step in basket making or mat weaving. 3. *நடக்கக் காலெடுத்துவைத்தல்*; to step

forward. ''பரவை வாயி லம்மட்டு மடியிட்டு'' (தாயு. மலைவளர். 4). 4. **நடத்தல்**; to walk. ''ஆடுந ராட நெஞ்சி னெண்ணினோ ரடியிட் டோர்கள்'' (கூர்மபு. நவகண். 31). 5. **மிதித்தல்**; to tread on. ''சேடன் முடியுங் கதிர்கொள் சென்னி வரையுந் தூளாட வடியிட்டு'' (திருவிளை. மாயப். 6). 6. **சீர்கள் தொடர்ந்து செய்யுளடியாக வமைதல்**; to form a line in a verse, as metrical feet. ''அடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரில்'' (தாயு. மலைவளர். 4).

ம. அடியிடுக

[அடி + இடு.]

**அடியியைபுத்தொடை** *aḍi-y-iyaibu-t-toḍai*, பெ. (n.) (யாப்.) **செய்யுளடிகளின் இறுதி யெழுத்தேனும் அசையேனும் சொல்லேனும் சீரேனும் ஒன்றிவரத் தொடுப்பது**; (Pros.) concatenation in which the final letters, syllables, words, or feet of the lines of a verse are the same. ''இறுதி யியைபு'' (யா. கா. 16).

எ-டு :

(1) ''வளைவளர் தருதுறையே மணம்விரி தருபொழிலே
தளையவிழ் நறுமலரே தனியவள் திரியிடமே
முளைவளர் இளநகையே முழுமதி புரைமுகமே
இளையவள் இணைமுலையே எனையிடர் செய்தவையே''
(சிலப். 7, முரிவரி, 3).

(2) ''உழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே;
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே;
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே;
நான்கே, அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே''
(புறநா. 109).

(3) ''இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே
நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே
ஆடமைத் தோளி யூடலு மணங்கே
அரிமதர் மழைக்கணு மணங்கே
திருநுதற் பொலிந்த திலகமு மணங்கே''
(யா. கா. 16, உரைமேற்.).

[அடி + இயைபு + தொடை.]

**அடியிரட்டி-த்தல்** *aḍi-y-iraṭṭi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **இட்ட அடியின்மேல் அடியிடுதல்**; to take steps without advancing, to mark time. ''அடியிரட்டித் திட்டாடு மாட்டு'' (பு. வெ. 2 : 8). 2. **அம்மானைச்செய்யுளின் இரண்டாமடியிரட்டுதல்**; to be repeated immediately like the doubling of the second line of an *ammāṉai* verse.

எ-டு :

''விரிந்தபுகழ்ப் புள்ளிருக்கு வேளூர் வயித்தியனார்
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதர்கா ணம்மானை;
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதரே யாமாயின்
மருந்துவிலை கைக்கூலி வாங்காரோ வம்மானை?
வாயினிலே மண்போட்டு வாங்குவார்கா ணம்மானை.''

இத்தகைய செய்யுள்களின் இரண்டாமடி ஈற்றுச் சீர் மாற்றியே மடக்கப்படும்.

[அடி + இரட்டி.]

**அடியிலிடுகலசம்** *aḍiyil-iḍu-kalaśam*, பெ. (n.) **எண்ணெய் வடிக்குங் கலம்**; a vessel for filtering medicated oils (சா.அக.).

[**Skt.** kalaśa > **த.** கலசம் = கும்பம்.]

அடியிலிடுகும்பம் அல்லது கலம் எனின் முற்றுந் தமிழாம்.

[அடி + இல் + இடு + கலசம்.]

**அடியிலேயுறை-தல்** *aḍiyilē-y-uṟai-*, 2 செ.கு.வி. (v.i.) **வழிபடுதல்**; to worship, to be in reverence. 'அடியிலே யுறைதல் வழிபாடென்னும் பொருடந்து நிற்றலின்' (கலித். 140, நச். உரை).

[அடி + இல் + ஏ + உறை.]

**அடியிறங்கு-தல்** *aḍi-y-iṟaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **சூலிக்குப் பிள்ளைப்பேற்றுக் காலத்தில் வயிறு தளர்தல்**; sinking due to loosening of the muscles of the abdomen in a woman, as a sign of approaching labour (சா.அக.). 2. **அடித்தள்ளிப்போ-தல்** 2 பார்க்க; see *aḍi-t-taḷḷi-p-pō-*, 2.

[அடி + இறங்கு.]

**அடியீடு** *aḍi-y-īḍu*, பெ. (n.) 1. **அடியிட்டு மெல்ல நடக்கை**; slow dignified steps, as of a

king or a noble. ''அருந்திறன் மாக்க ளடியீ டேத்த'' (சிலப். 26 : 90). 2. தொடக்கம்; beginning.

[அடி + ஈடே. இடு → ஈடு.]

**அடியீரல்** *aḍi-y-īral*, பெ. (n.) *மண்ணீரல்*; spleen (சா.அக.).

[அடி + ஈரல்.]

**அடியுடுப்புமுண்டு** *aḍi-y-uḍuppu-muṇḍu*, பெ. (n.) **இடுப்புவேட்டி** (நாஞ்.); cloth worn round the waist (Nāñ.).

[அடி + உடுப்பு + முண்டு.]

**அடியுண்(ணு)-தல்** *aḍi-y-uṇ(ṇu)-*, 12 செ.கு.வி. (v.i.) 1. *அடிக்கப்படுதல்*; to be beaten. 2. *பல விடத்துந் திரிந்து துன்பப்பட்டுப் பழகுதல்*; to wander along experiencing all sorts of troubles.

[அடி + உண்.]

**அடியுண்ணல்** *aḍi-y-uṇṇal*, தொ. பெ. (vbl. n.) 1. *அடிபடுதல்*; the act of receiving beatings. 2. *வெயிலிலும் மழையிலும் திரிந்து பழகுதல்*; tramping here and there in sun and rain and becoming experienced.

[அடி + உண்ணல்.]

**அடியுணி** *aḍi-y-uṇi*, பெ. (n.) *அடிபட்டவன்-ள்*; one who is beaten (W.).

[அடி + உணி. உண்ணி → உணி.]

**அடியுப்பு** *aḍi-y-uppu*, பெ. (n.) *கல்லுப்பு*; common salt dug out from the bottom of the sea, where it is deposited after the evaporation of the sea-water (சா.அக.).

[அடி + உப்பு.]

**அடியுரம்** *aḍi-y-uram*, பெ. (n.) 1. *முன்பு இட்ட எரு*; manure put in previous seasons. 2. *மரத்தைச் சுற்றியிடும் எரு* (யாழ்ப்.); manure added to the soil around a tree (J.). 3. *அடுத்த ஆண்டிற்காகச் சேமித்து வைக்கப் படும் நடப்பு ஆண்டுத் தவசம்* (யாழ்ப்.); crop of a year preserved for subsistence during the following year (J.). 4. *முன்னோர் தேட்டு, முதுசொம்* (யாழ்ப்.); ancestral property (J.). 5. *ஆற்றல்* (யாழ்ப்.); physical strength, power of wealth (J.). 6. *அடிப்படை* (யாழ்.அக.); foundation.

[அடி + உரம்.]

**அடியுறை** *aḍi-y-uṟai*, பெ. (n.) 1. *பாத காணிக்கை*; offering to God or a great personage, as laid at His or his feet. ''ஈட்டிய பல்பொருள்க ளெம்பிரானுக் கடியுறை யென்று'' (திவ். பெரியாழ். 4.3 : 9). 2. *வழி பாட்டுறைகை*; living a life of reverence, as for a person worthy of respect. ''அடியுறை காட்டிய செல்வேன்'' (கலித். 140 : 11). 3. *'உன் பாதத்தில் வாழ்வேன்' என்னும் பொருளில் வழங்கும் ஒரு வணக்கச்சொல்*; 'your obedient servant who would be honoured to flourish under your feet', an ancient term of submission and respect, in the first person. ''நின் னடிநிழற் பழகிய வடியுறை'' (புறநா. 198 : 26).

ம. அடியுற

[அடி + உறை.]

**அடியெடு-த்தல்** *aḍi-y-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *அடிவைத்தல்*; to step. ''அடியெடுத்துக் கொண்டென்பால் வரலாகுங்கொல்'' (சடகோபரந். 28). 2. *அப்பாற் போதல்*; to go beyond. ''அடியெடுப்ப தன்றோ வழகு'' (திவ். இயற். பெரிய திருவந். 30).

[அடி + எடு.]

**அடியெடுத்துக்கொடு-த்தல்** *aḍi-y-eḍuttu-k-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *மாணவன் ஒரு வனப்பு (காவியம்) இயற்றுவதற்குத் தொடக்கச்சொல்லை அல்லது சொற்றொடரை ஆசிரியன் சொல்லியுதவுதல்*; to help a student, as a teacher, to compose a poem, by suggesting an apt beginning word or phrase. 2. *ஓர் அடியாரான புலவர் ஒரு திருவனப்பை இயற்று தற்கு, இறைவனே தொடக்கச் சொல்லை உடம்பிலிக் கூற்றாக வுரைத்தருளுதல்*; to help a devotee to compose a sacred poem, by uttering the apt beginning word, as God Almighty in His invisible form often does.

''அடைய லார்புரம் நீறெ ழத்திரு
நகைசெய் தன்றொரு மூவரைப்
படியின் மேலடி மைக்கொ ளும்பத
பங்க யங்கள்ப ணிந்துநின்
றடிக ளேயுன தடியர் சீரடி
யேனு ரைத்திட **அடியெடுத்**
திடர்கெ டத்தரு வாயெ னத்திரு
வருளை எண்ணியி றைஞ்சினார்,''

''அலைபு னற்பகி ரதிந திச்சடை
யாட வாடர வாடநின்
றிலகு மன்றினி லாடு வார்திரு
வருளி னாலச ரீரிவாக்(கு)
'உலகெ லா'மென அடியெ டுத்துரை
செய்த பேரொலி யோசைமிக்
கிலகு சீரடி யார்செ விப்புலத்
தெங்கு மாகிநி றைந்ததால்''
(திருத்தொண் பு. வ. 30, 31).

[அடி + எடுத்து + கொடு.]

**அடியெதுகைத்தொடை** *aḍi-y-edugai-t-toḍai*, பெ. (n.) (யாப்.) **செய்யுளடிகளின் முதற்கண் முதலெழுத்து மாத்திரை யொத்தும் இரண்டா மெழுத்து ஒலியொத்தும் வரத் தொடுப்பது**; (Pros.) concatenation, in which, the second letters of the lines of a verse rhyme, while the first letters agree in quantity. ''இரண்டாம் வழுவா எழுத்தொன்றின் எதுகை'' (யா. கா. 16).

''துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டு நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்'' (நாலடி. 2).

[அடி + எதுகை + தொடை.]

**அடியெழுத்து** *aḍi-y-eḻuttu*, பெ. (n.) (இலக்.) **உயிரெழுத்துகள் பன்னிரண்டும் மெய்யெழுத்துகள் பதினெட்டும் ஆகிய முப்பது முதலெழுத்துகள்**; (Gram.) the primary letters comprising the twelve vowels and the eighteen consonants. 'பன்னீருயிரும் பதினெண் மெய்யுமாகிய முதலெழுத்து' (பேரகத். 8, உரை).

[அடி + எழுத்து.]

**அடியேந்திரம்** *aḍi-y-ēndiram*, பெ. (n.) **அடியந்திரம்** பார்க்க; see *aḍi-yandiram*.

**அடியேபிடித்து** *aḍi-y-ē-piḍittu*, கு.வி.எ. (adv.) **தொடக்கத்திலிருந்து (ஆதியிலிருந்து)**; from the beginning.

**அடியேம்** *aḍiyēm*, பெ. (n.) **'உம் அடியாராகிய யாம்' என்னும் பொருளில் வரும் வணக்க மொழி, 'அடியேன்' என்பதன் பன்மை**; a humble term of respect meaning, 'We, your slaves, your humble servants', pl. of *aḍiyēṉ*. ''தொழுமடியேம் வல்வினையின் வேர்தடிந் தாய்'' (கந்தபு. யுத்த. தேவர்கள். 3).

[அடி + ஏம்.]

**அடியேன்** *aḍiyēṉ*, பெ. (n.) **'உன் அடியானாகிய நான்' என்னும் பொருளில் வரும் ஒரு வணக்கமொழி**; a modest term of respect meaning, 'I, your slave, your humble servant'. ''நானும் உனக்குப் பழவடியேன்'' (திவ். திருப்பல். 11).

[அடி + ஏன்.]

**அடியொட்டி** *aḍi-y-oṭṭi*, பெ. (n.) 1. **தண்டனைக்குத் தப்பியோடும் தீவினையார் காலில் தைக்கும்படி நிலத்தில் நட்டுவைக்கும் இருப்பூசி**; iron spikes planted in the ground, in order to pierce the feet of those, who try to run away and escape punishment for their evil deeds. ''ஊளைக்கொண் டோடுகின்றா ருள்ளடி யூசி பாய'' (சீவக. 2768). இதன் உரை : 'கூப்பிட்டு ஓடுகின்றவர்கள் அங்ஙன மோடாமைக்கு நட்டு வைத்த அடியொட்டி உள்ளடியிலே பாய்கையினாலே'. 2. **பூடு வகை (நெருஞ்சிமுள்)**; a kind of thorny shrub.

[அடி + ஒட்டி.]

**அடியொத்தகாலம்** *aḍi-y-otta-kālam*, பெ. (n.) **நிழல் பாதத்தடியில் நிற்கும் நண்பகல்**; midday, as being the time when one's shadow is at his feet. 'வளைந்த வாயினையுடைய கூகை அடியொத்த காலத்தே கூப்பிடும்படி யாகவும்' (பட்டினப். 268, நச். உரை)—(ஷ அடிக்.) அடியொத்த காலம் = நிழல் அடியோடு பொருந்திய காலம்; என்றது உச்சிக் காலத்தை.

[அடி + ஒத்த + காலம்.]

**அடியொற்று-தல்** *aḍi-y-oṟṟu-*, 5 செ.குன்றா வி. (v.t.) 1. **பின்பற்றுதல்**; to follow. 'அதை அடியொற்றி யாயிற்று, இவர் இப்படி அருளிச் செய்தது' (திருவாய். நூற். 1, வியா.). இயேசுவின் மாணவர் பன்னிருவருட் பதினொருவர் அவரை அடியொற்றிச் சென்றனர். மறைமலையடிகளின் சாகுந்தல நாடகம் எல்லா வகையிலும் மூலத்தை அடியொற்றியது. 2. **புறப்படுதல்**; to start, to step out. 'பரமபதத்தி னின்றும் அடியொற்றினான், திருமலை யளவும் பயண முண்டாயிருந்தது' (திவ். அமலனாதி. 3, வியா.).

ம. அடியிருத்துக; தெ. அடுகுபெட்டு.

[அடி + ஒற்று.]

**அடியோட்டி** *aḍi-y-ōṭṭi,* பெ. (n.) 1. ஆனை நெருஞ்சில் போன்றவடிவுங் கூருமமைந்து, தன் மேல் நடப்பாரின் பாதங்களைக் கிழிக்கவல்ல இருப்பு முள் (வின்.); caltrops, a spiked iron ball kept on the ground meant for piercing the feet of men who tread on it. 2. நெருஞ்சில்; a thorny shrub, *Tribulus terrestris* (சா.அக.).

[அடி + ஒட்டி – அடியொட்டி → அடியோட்டி.]

அடியொட்டி பார்க்க; see *aḍi-y-oṭṭi.*

**அடியோடு** *aḍi-y-ōḍu,* கு.வி.எ. (adv.) வேருடன், முழுதும்; radically, completely, utterly. "அறஞ்செயா தடியோ டிறந்து" (திருப்பு. 57).

[அடி + ஓடு.]

**அடியோர்** *aḍiyōr,* பெ.(n.) பிறர்க்குக் குற்றேவல் செய்வோர்; menial servants. "அடியோர் பாங்கினும்" (தொல். பொருள். அகத். 23).

**அடியோன்** *aḍiyōṉ,* பெ. (n.) 1. குற்றேவலன், வீட்டு வேலைக்காரன்; menial, household servant. 2. அடிமை; slave.

**அடிலவோடாகம்** *aḍilavōḍāgam,* பெ. (n.) ஒரு செடி. இதன் இலைகளும் வேரும் சாறு பிழிந்து, மந்தார ஈளை (மந்தாரகாசம்), கோழை (கபம்) என்னும் நோய்கட்கு மருந் தென்று, மலையாள நாட்டில் வழங்குகிறார் களாம் (சங்.அக.). — மலையாளத்தில் விளையுமொரு செடி; a plant found in Malabār, *Justicia bivalvis ?* (சா.அக.).

**அடிவட்டம்** *aḍi-vaṭṭam,* பெ. (n.) 1. பாத அளவு; measure of foot. "அடிவட்டத் தாலளப்ப" (திவ். இயற். 3 : 13). 2. இசைக்குழலின் (நாத சுரத்தின்) அடிப்பூண் (பரத. ஒழிபி. 6); large end of the Indian clarionet.

**அடிவண்டல்** *aḍi-vaṇḍal,* பெ. (n.) எண்ணெய் முதலியவற்றைக் காய்ச்சும்போது, அடியில் தங்கி நிற்கும் கசடு; the sediment deposited at the bottom of a vessel while boiling, in the preparation of a decoction, medicated oil, etc. (சா.அக.).

**அடிவயிற்றிசிவு** *aḍi-vayiṟṟ(u)-isivu,* பெ. (n.) மல மூத்திரங்களை யடக்குவதனாலும், மந்தத்தை யுண்டாக்கும் பல பண்டங்களை யுண்பத னாலும், வளி (வாயு) அடிவயிற்றில் தங்கி, அதனால் நரம்பு சுருங்கி, மல மூத்திரம் வராதபடி மேலே யிழுத்துப் பிடித்து, வலியை யுண்டாக்கும் ஓர் ஊதை (வாத) நோய்; a spasm of the abdomen resulting in obstruction to the free movement of faeces and urine and causing pain (சா.அக.).

[அடி + வயிறு + இசிவு.]

**அடிவயிற்றிறுக்கம்** *aḍi-vayiṟṟ(u)-iṟukkam,* பெ. (n.) தாழ்வான இருக்கையில் அமர்தல், இறுக்கமான வுடைகளை யணிதல் முதலிய காரணங்களால், அடிவயிறு அடிக்கடி அழுந்தி, அதனால் நேரும் நிலைமை; abdominal compression, a condition brought about by the compression of bowels due to habitual sitting on a low seat and use of tight dress (சா.அக.).

[அடி + வயிறு + இறுக்கம்.]

**அடிவயிற்றுக்கட்டு** *aḍi-vayiṟṟu-k-kaṭṭu,* பெ. (n.) பிள்ளைபெற்ற பெண்கட்கு, மார்பிலிருந்து அடிவயிறு வரையும், கருப்பை யழுந்தும்படி துணியால் இறுகச் சுற்றிக் கட்டும் கட்டு; abdominal bandage, a tight bandage worn by women immediately after delivery round the abdominal region in order to exert pressure on the womb (சா.அக.).

[அடி + வயிறு + கட்டு.]

**அடிவயிற்றுக் கருப்பம்** *aḍi-vayiṟṟu-k-karuppam,* பெ. (n.) பெண்களின் கீழ்வயிற்றிற் கருத் தங்கிப் புடைத்துக் காட்டும் ஒருவகைச் சூல்; abdominal pregnancy, lodgment of ovum in a woman, in the abdominal cavity (சா.அக.).

[அடி + வயிறு + கருப்பம்.]

**அடிவயிற்றுக்கழலை** *aḍi-vayiṟṟu-k-kaḻalai,* பெ. (n.) ஆவிற்கு (பசுவிற்கு) அடிவயிற்றில் காணுமொரு கட்டி; abdominal tumour, a peri-tonitic disease attacking cows (சா.அக.).

[அடி + வயிறு + கழலை.]

**அடிவயிற்றுக் கோளாறு** *aḍi-vayiṟṟu-k-kōḷāṟu,* பெ. (n.) அடிவயிற்றி லேற்படும் குழப்பம்; disorder of the abdominal organs (சா.அக.).

[அடி + வயிறு + கோளாறு.]

**அடிவயிற்றுட்சவ்வு** *aḍi-vayiṟṟ(u)-uṭ-cavvu,* பெ. (n.) கீழ்வயிற்றின் உட்புறச் சவ்வு; perito-neum, a membrane investing the internal surface of the abdomen (சா.அக.).

[அடி + வயிறு + உள் + சவ்வு.]

**அடிவயிற்றுப்புரட்டல்** *aḍi-vayiṟṟu-p-puraṭṭal*, பெ. (n.) *நீர்க்கொம்பன் (வாந்திபேதி), பித்தக் கோளாறு, நஞ்சு முதலியவற்றால் வயிற்றில் ஏற்படும் புரட்டல்;* the turning of bowels in cholera, bilious disorders, poisonous affections, etc. (சா.அக.).

[*அடி + வயிறு + புரட்டல்.*]

**அடிவயிற்றுப்பொருமல்** *aḍi-vayiṟṟu-p-porumal*, பெ. (n.) *1. செரியாமையால் வயிற்றின் கீழ்ப் பாகத்தி லேற்படும் உப்பசம்;* distension of the abdomen due to the presence of gas in the intestines, flatus. *2. அடிவயிற்றுச் சவ்வின் அழற்சியா லேற்படும் வீக்கம்*; distension of the abdomen due to the presence of gas or air in the peritoneal cavity, as in peritonitis, Peritoneal tympanites (சா.அக.).

[*அடி + வயிறு + பொருமல்.*]

**அடிவயிற்றுவலி** *aḍi-vayiṟṟu-vali*, பெ. (n.) *1. கீழ்வயிற்றிற் காணும் வலி*; abdominal pain in general. *2. பெருங்குடலிற் காணும் வலி*; colic. *3. பித்தக் கோளாற்றினா லேற்படும் வலி*; bilious colic. *4. குடலிற் காணும் ஒரு கொடிய வலி*; intestinal colic. *5. மாதவிடாய்க் கோளாற்றினாற் பெண்கட்கு அடிவயிற்றிற் காணும் ஒரு கொடிய வலி*; menstrual colic (சா.அக.).

[*அடி + வயிறு + வலி.*]

**அடிவயிறு** *aḍi-vayiṟu*, பெ. (n.) *கீழ்வயிறு*; lower part of the abdomen.

**அடிவரலாறு** *aḍi-varalāṟu*, பெ.(n.) *1. கரணியம் (காரணம்)*; cause, source. *2. பழைய வரலாறு*; old history. *3. கொடிவழி*; lineage, ancestry (W.).

**அடிவரவு** *aḍi-varavu*, பெ. (n.) *பாடல்களின் முதற்குறிப்பு*; mnemonic of initial syllables or initial words of stanzas in a poem.

**அடிவருடி** *aḍi-varuḍi*, பெ. (n.) *1. கால் பிடிப் பவ-ன்-ள்-ர்*; massager. *2. தான் எண்ணியது எய்தப் பிறரைப் போற்றுபவர்*; bootlicker.

**அடிவருடு-தல்** *aḍi-varuḍu-*, 5 செ.கு.வி. (v.i.) *கால்பிடித்தல், உளைச்சல் சோம்பல் முதலியன தீரப் பாதங்களைப் பிடித்துப் பிசைதல்*; to massage the feet to stimulate them to action or relieve pain.

**அடிவரை** *aḍi-varai*, பெ. (n.) *1. மலையடிவாரம், தாழ்வரை*; foot of a mountain. 'அடிவரை யிலே சிங்கம் பாய்ந்தாற்போல்' (கலித். 86, உரை). *2. செய்யுளின் அடிவரம்பு;* limit to the length of a poetic line or to that of a stanza or poem. "அடிவரை யில்லன ஆறென மொழிப" (தொல். பொருள். செய். 162).

**அடிவரையறை** *aḍi-varai-y-aṟai*, பெ. (n.) *1. செய்யுளின் அடிவரம்பீடு;* regulation regarding the number of lines in different kinds of stanzas or poems. 'அடிவரையறை யின்மையும் அளவிய லென்பதும்' (தொல். பொருள். செய். 164, பேரா. உரை). *2. பாட்டின் முதற்குறிப்பு வரிசை* (மீனாட்சிசுந். சரித். 1, பக். 10); index of initial syllables of the stanzas in a poem.

[*அடி + வரை + அறை.*]

**அடிவளையம்** *aḍi-vaḷaiyam*, பெ. (n.) *அண்டி வாயிலுக்குள் அமைந்திருக்கும் மூவகை வளையங்களுள் அடிப்பாகத்திலுள்ளது*; one of the three rings of sphincter muscles at the anus, which is located internally, sphincter ani *internal* (சா.அக.).

**அடிவாரச்செயல்** *aḍi-vāra-c-ceyal*, பெ. (n.) *மண்டையோட்டின் மூலத்துளைக்கு முன்பாக வுள்ள ஒருவகை யெலும்பு*; a strong quadrilateral plate of occipital bone in front of the foramen magnum, basilar process (சா.அக.).

**அடிவாரம்** *aḍi-vāram*, பெ. (n.) *மலையினடி*; foot of a hill. "பிடியு மடிவாரஞ் சேர்கயிலை" (தேவா. 1.68 : 5).

ம. அடிவாரம்; க., பட. அடிவார; தெ. அடி வாரமு.

**அடிவானம்** *aḍi-vāṉam*, பெ. (n.) *1. கீழ்வானம்*; horizon. *2. அடிப்படை (அஸ்திவாரம்)*; foundation, groundwork.

ம. அடிவானம்

[*2. அடிவாணம் → அடிவானம்.*]

**அடிவிடு-தல்** *aḍi-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *அடிவிரி-தல் பார்க்க*; see *aḍi-viri-*.

**அடிவிரி-தல்** *aḍi-viri-*, 2 செ.கு.வி. (v.i.) *1. பாதம் வெடித்தல்*; to become cracked, as the skin of the feet. *2. சமையற் கலத்தில் அடி கீறிப்போதல் அல்லது வெடித்தல்;* to crack at the bottom, as a cooking vessel.

**அடிவிள்(ளு)-தல்** *aḍi-viḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) *அடிவிரி-தல்* பார்க்க; see *aḍi-viri-*.

**அடிவிளக்கு-தல்** *aḍi-viḷakku-*, 5 செ.கு.வி. (v.i.) **இறையடியார், ஆசிரியர், துறவியர் முதலிய கண்ணியமுள்ள விருந்தினரின் பாதங்களைக் கழுவிச் சிறப்புச் செய்தல்**; to wash the feet of an honoured guest. ''திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்'' (மணிமே. 24 : 96).

**அடிவினை**[1] *aḍi-viṉai*, பெ. (n.) **ஆடையொலிக்கை**; washing of clothes. ''அடி வினைக் கம்மியர் வெடிபட வடுக்கிய'' (பெருங். இலாவாண. 4 : 183).

[அடுதல் = கொல்லுதல், வருத்துதல். அடித்தல் = புடைத்தல், வருத்துதல், கொல்லுதல். அடு → அடி.]

ஆடடித்தல், கோழியடித்தல், முயலடித்தல், புலியடித்தல், பேயடித்தல் முதலிய வழக்குகள் கொலைத்தொழிலைக் குறித்தலையும், இந்தியில் 'மார்னா' என்னும் சொல் அடித்தல் என்றும் கொல்லுதல் என்றும் பொருள் படுதலையும் நோக்குக.

**அடிவினை**[2] *aḍi-viṉai*, பெ. (n.) 1. **கேடான சூழ்வினை**; scheming, undermining, stratagem. அவனுக்கு அடிவினை வைக்கிறான் (உ.வ.). 2. **மாறாட்டம்**; perversity. 3. **கறுவு** (இராட்.); extreme malice (R.).

**அடிவீக்கம்** *aḍi-vīkkam*, பெ. (n.) 1. **உள் வீக்கம்**; internal swelling. 2. **ஆழ்ந்த அல்லது அடிகனத்த வீக்கம்**; a deep-seated swelling, as in carbuncle (சா.அக.).

**அடிவீழ்-தல்** *aḍi-vīḻ-*, 2 செ.கு.வி. (v.i.) **தண்டனிடுதல், காலில் விழுந்து கும்பிடுதல்**; to fall at another's feet, as in worship or paying homage. ''அடிகண் முன்னர் யானடி வீழ்ந்தேன்'' (சிலப். 13 : 87).

க. அடிபீழ்

**அடிவீழ்ச்சி** *aḍi-vīḻcci*, பெ. (n.) **வணக்கம்**; prostration, homage. ''தத்தையடி வீழ்ச்சி'' (சீவக. 2587).

**அடிவெண்குருத்து** *aḍi-veṇ-kuruttu*, பெ. (n.) **தென்னை, பனை, வாழை முதலியவற்றின் அடியிளங் குருத்து**; the tender white shoots of the palm and plantain trees.

**அடிவெயிற்காய்-தல்** *aḍi-veyiṟ-kāy-*, 2 செ.கு.வி. (v.i.) **அடையுங்கால மஞ்சள் வெயிலிற் காய்தல்**; to expose oneself to the rays of the setting sun (சா.அக.).

[அடி + வெயில் + காய்.]

**அடிவை-த்தல்** *aḍi-vai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **காலடி வைத்தல்**; to place one's foot. 2. **குழந்தை அடியெடுத்து வைத்து நடக்கப் பழகுதல்**; to learn to walk, as a child. 3. **தொடங்குதல்**; to begin. 4. **ஒரு வினை முயற்சியை மேற்கொள்ளுதல்**; to enter into an affair. 5. **பிறர் கருமத்தில் தலையிடுதல்**; to meddle in another's affair. —, 4 செ. குன்றாவி. (v.t.) **உள்நோக்கமாக ஒன்றைக் கொள்ளுதல்**; to harbour an unrevealed intent or purpose in one's mind. அவன் எதையோ அடிவைத்துக்கொண்டு பேசுகிறான் (உ.வ.).

**அடிவைக்கும் ஆலாத்து** *aḍi-vaikkum-ālāttu*, பெ. (n.) **கப்பலில் பணியாளர் நின்று வேலை செய்ய உதவும் பெருங்கயிறு**; cable that serves as a foot rest for workers in a ship.

**அடீ** *aḍī*, இடை. (int.) **'அடி' என்னும் பெண்பால் விளியின் (மகடூஉ முன்னிலையின்) சேய்மைக் கேற்ற நீட்டல் வடிவம்**; the lengthened form of the feminine address *aḍi* used on account of the remoteness of the addressee. ''நில்லடீஇயெனக் கடுகினன்'' (கம்பரா. ஆரணிய. சூர்ப்பணகைப். 93).

**அடு**[1]**-த்தல்** *aḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **அண்மையிலிருத்தல்**; to be adjacent, next, near. ''அடுத்தநாட் டரசியல் புடைய'' (கம்பரா. யுத்த. வீடணன். 79). 2. **தகுந்ததாதல்**; to be fit, becoming, deserving. இப்படிச் செய்திருக்கிறாயே! இஃது உனக்கு அடுக்குமா? (உ.வ.). 3. **நிகழ்தல்**; to happen, occur. ''ஆவி நைந்திற வடுத்ததென்?'' (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 13). 4. **கூத்தாடுதல்** (பிங்.); to dance. —, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **கிட்டுதல்**; to approach, approximate to, come in contact with. ''மயிலன்னா ளடுத்து வயமா ருதியை'' (பாரத. மணிமா. 3). 2. **புகலடைதல்**; to take refuge. ''கற்பகந் தனையடுத் துய்வாம்'' (சூத. முத். 1). 3. **அடைதல்**; to reach, arrive at. தலைநகர் அடுத்தோம் (உ.வ.). 4. **சார்தல், சேர்தல்**; to join. ''முனிவர் யாரு மடுத்திடு மவைக்கணெய்தி'' (கந்தபு. தக்க. ததீசியுத்தரப். 39). 5. **சேர்த்தல்**; to join together. ''வெண்டுகி லடுத்து'' (சீவக. 617). 6. **அண்டிப் பற்று**

தல்; to join, to seek protection from. அடுத்தவனைக் கெடுக்கலாமா ? 7. கொடுத்தல்; to give. ''வளைக்கரத் தார்க்கடுத்தோம்'' (திருக்கோ. 357). 8. அமுக்குதல்; to press down. ''எடுத்தான் புயந்தனை யடுத்தான் மருதரை'' (தேவா. 1.95 : 8). 9. ஒப்புவித்தல் (S.I.I. ii, 250); to assign. ''இடித்து மின்னி யிருண்டு மேக மெழுந்த போதிது பெய்யுமென் றடுத்ததும்'' (சி.சி. பர. உலகா. மறு. 2). 10. கருதுதல்; to infer, think, know.

ம. அடுக்க; க. அட்டு; தெ., து. அண்டு; குட. அடி; கூ. அட்ப; குவி. அடு; மா. அட்தெ, அட்யெ.

'*ad*-, pref. of Latin origin expressing direction toward or addition to.—*ad*- appears in this form before a vowel and before the consonants *d*, *h*, *j*, *m*, *v*. It is simplified to *a*- before *sc*, *sp*, *st*. Before *c*, *f*, *g*, *l*, *n*, *p*, *q*, *r*, *s* and *t*. *ad*- is assimilated to *ac*-, resp. *af*-, *ag*-, *al*-, *an*-, *ap*-, *ac*-, *ar*-, *as*-, *at*-. —**L.** *ad*-, etc., fr. *ad*, 'to, toward', rel. to **Umbr.** *ar*-, *ars*-, **Oscan** *ad*-, *az* (for *ad-s*), 'to, toward', and cogn. with **Goth.** *at*, **OE.** *æt*, at.

அடு → அடுக்கு.

**E** *add*, v.t. and v.i. **L.** *addere*, 'to put to, lay on, give in addition to, add', fr. *ad*- and -*dere*, fr. *dare*, 'to give'. See *date*, 'point of time', and cp. addendum, additament, addition.

**E.** *at*, prep.—**OE** *æt*, rel. to **ON.**, **OS.**, **Goth.** *at*, **OFris.** *et*, *at*, **OHG.** *az*, and cogn. with **L.** *ad*, 'to, toward', **OIr.** *ad*-, **W.** *add*-, **Phryg.** *αδ*-, *αβ*-, 'to'. Cp. *ad*-. *at*-, assimilated form of *ad*- before *t*.' (K. C. E. D. E. L.)

[அள்ளுதல் = நெருங்குதல். அள் → அண். அண்ணுதல் = நெருங்குதல். அண் → அடு. அடுத்தல் = நெருங்குதல், சேர்தல்.

அடு → அடுக்கு → அடுக்கல், அடுக்கம். இனி, அண் → அண்டு → அடு என்றுமாம்.]

**அடு**[2] **-தல்** *aḍu*-, 17 செ.குன்றாவி. (v.t.) 1. சுடுதல், வாட்டுதல், வறுத்தல், பொரித்தல்; to roast, fry. 2. காய்ச்சுதல்; to boil. ''அட்டாலும் பால்சுவையிற் குன்றாது'' (மூதுரை, 4). 3. சமைத்தல்; to cook, dress, as food. ''அமுதமடு மடைப்பள்ளி'' (கல்லா. 14). 4. உருக்குதல்; to melt. ''அட்டொளி யரத்த வாய்க் கணிகை'' (சீவக. 98). 5. கொல்லுதல்; to kill. ''அடுநை யாயினும்'' (புறநா. 36 : 1). 6. பொருதல்; to fight, wage war. ''அடுவா ரடலுளோர்'' (சேதுபு. தனுக்கோ. 34). 7. வெல்லுதல்; to conquer, subdue, as the senses, passions. ''ஐம்பொறியு மட்டுயர்ந் தார்'' (சீவக.1468). 8. வருத்துதல்; to trouble, afflict. ''கழிபசி நோயடக் கவலும் பூதரும்'' (கந்தபு. மகேந். சூரன்அமைச். 59). 9. அழித்தல்; to destroy, consume. ''எல்லாப் புவனமும்......அடுபவர்'' (கந்தபு. யுத்த. ஏமகூடப். 18). 10. குற்றுதல்; to pound, as rice. ''வித்தட் டுண்டனை'' (புறநா. 227 : 2). 11. இயக்கமறச் செய்தல்; to stop moving. ''வியாத னீட்டிய கையடு நந்தி'' (கந்தபு. கடவுள் வாழ்த்து, 19).

ம., க., குட. அடு; தெ. வண்டு; து. அடுப்பினி; கோத. அட்; கோண். அட்டாணி; துட. ஒட்; மா. அடான; மரா. அட்ணெம்; பிராகி. அட்டை.

[உல் → உல. உலத்தல் = காய்தல். உல → உலவை = காய்ந்த மரக்கொம்பு (கலித். 11). உல→உலர். உலர்தல் = காய்தல். உல→உலை = நெருப்புள்ள அடுப்பு. உல்→உள்→ஒள்→ஒளி. உள் → உண் → உண்ணம் = வெப்பம். உண் → உண. உணத்தல் = காய்தல். உண → உணகு → உணங்கு. உணங்குதல் = காய்தல், சுடுதல், வருத்துதல். உணங்கு → அணங்கு. அணங்குதல் = வருத்துதல். உண் → உடு = ஒளியுள்ள நாண்மீன், வெள்ளி. உடு → அடு. அடுதல் = சுடுதல், சமைத்தல், எரித்தல், கொல்லுதல், வருத்துதல்.]

**அடுக்கடுக்காய்** *aḍukk(u)-aḍukk(u)-āy*, கு.வி.எ. (adv.) கட்டுக்கட்டாய், கோப்புக்கோப்பாய், வரிசை வரிசையாய், தொகுதி தொகுதியாய், படை படையாய்; in piles, in tiers. பெட்டிக்குள் அடுக்கடுக்காய் உடுப்புகளை வைத்திருக்கிறான் (உ.வ.). ''அண்டமவை யடுக்கடுக்கா யந்தரத்தி னிறுத்தும்'' (தாயு. மண்டல. 1).

[அடுக்கு + அடுக்கு + ஆய்.]

**அடுக்கடுக்காய் வாட்டு-தல்** *aḍukk(u)-aḍukk(u)-āy-vāṭṭu*-, 5 செ.குன்றாவி. (v.t.) கொத்துக் கொத்தாய் நெருப்பிலிட்டுச் சுடுதல்; to roast batch by batch.

[அடுக்கு + அடுக்கு + ஆய் + வாட்டு.]

**அடுக்கணி** *aḍukk(u)-aṇi*, பெ. (n.) (அணி.) ஒரு பொருளின் சிறப்பை அல்லது மிகுதியைக்

காட்ட ஒருபொருட் பல சொற்களை அடுக்கி வைப்பது; (Rhet.) using of more than one synonym to show the greatness of a thing or the intensity of a feeling.

''அடுக்கணி யொருபொருட் கடுக்கிய திரிசொல்
அடுக்கி வைப்ப தடுக்கணி யெனப்படும்.''

(இ-ள்.) சிறப்புக் காட்டவும், அன்பு துயர் களிப்பிவற்றை மிக்கெனத் தோற்றவும், ஒரு பொருளைத் தரும் பல திரிசொல் லடுக்கி வைப்ப தடுக்கணி யெனப்படும். (வ-று.):

''இகழ்ந்தொ ளித்தானோ வென்னை யிகழ்ந்தகன் றானோ
கொடிய நெஞ்சான்'',
''என்னுயிர் காத்துப் புரந்தாண்ட வென்னிறைவன்
தன்னுயிர் பட்டிறந்து சாய்ந்தொழிந்தான் —பின்னுயிராய்
மீண்டென்னைக் காத்தோம்ப மேவிப் புரந்தளிப்ப
யாண்டையும் யார்யா ரெனக்கு''

என்பன விவற்றுட் டுயரின் மிகுதியைக் காட்டப் பல திரிசொல் சிறப்பி லடுக்கி வந்த வாறு காண்க (தொன். வி. 317, நூற்பாவும் உரையும்).

[அடுக்கு + அணி.]

**அடுக்கம்** *adukkam*, பெ. (n.) 1. அடுக்கு; pile, tier. 2. ஒன்றன்மே லொன்றாய் அடுக்கிச் செய்யப்பட்ட வீடு; a tier of houses. ''விஞ்சு மேனில வடுக்கமும்'' (கந்தபு. மகேந். நகர்புகு. 82). 3. பன்மலை வரிசை; a complex mountain range. ''பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடும்'' (சிலப். 11 : 19). 4. அரைமலை; middle of a mountain slope. ''ஆடுமழை யணங்குசா லடுக்கம் பொழியுநும்'' (புறநா. 151 : 10 - 11). 5. மலைச்சாரல்; mountain slope. ''கறி வள ரடுக்கத்து மலர்ந்த காந்தள்'' (புறநா. 168 : 2). 6. பக்கமலை; lesser mountain adjacent to a greater one. ''மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்து'' (திருமுருகு. 42). 7. மரஞ்செறிந்த சோலை; thick grove. ''குரங் கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து'' (சிலப். 10 : 157). 8. மலைப் பக்கம்; hillside. 9. பாறை; ledge of rock, stratum of stone. ''மால்வரை யடுக்கத்து'' (கலித். 44 : 2). 10. படுக்கை; bed. ''நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்'' (அகநா. 2 : 7).

ம. அடுக்கம்

[அடு→அடுக்கு + அம் (ஈறு).]

**அடுக்கல்** *adukkal*, பெ.(n.) 1. ஒன்றன்மேலொன் றாக வைத்தல்; to pile up one on top of another. ''திங்கண்மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்'' (சிலப். 11 : 1). 2. அடுக்கு; series. ''ஆர வடுக்கல்பொன் னாக மிலங்க'' (கந்தபு. மகேந். அவைபுகு. 35). 3. குவியல்; heap, collection. ''மீனத் தடுக்கன் முழுவது நோக்கி'' (கந்தபு. அசுர. தேவரையேவல். 8). 4. படைபடையாய் அமைந்த மலை; mountain as stratified. ''அடுக்கன் மீமிசை யருப்பம் பேணாது'' (மலைபடு. 19).

[அடு → அடுக்கு + அல் (தொ. பெ. ஈறு).]

**அடுக்கலரி** *adukk(u)-alari*, பெ. (n.) இரட்டை யலரி; double-flowered oleander.

[அடு→அடுக்கு+அலரி. அலர்→அலரி.]

**அடுக்கலிடு-தல்** *adukkal-idu-*, 17 செ.குன்றாவி. (v.t.) உமியை முற்றும் போக்க, நெல் முதலிய வற்றை இரண்டாம்முறை குற்றுதல்; to pound grains like paddy a second time to remove all husks (W.).

[அடு → அடுக்கு + அல் (தொ. பெ. ஈறு) – அடுக்கல். அடுக்கல் + இடு.]

**அடுக்கவரை** *adukk(u)-avarai*, பெ. (n.) அவரை பார்க்க; see *avarai*.

[அடுக்கு + அவரை.]

**அடுக்களை** *adukkaḷai*, பெ. (n.) 1. அடுப்பு; oven. 2. சமையலறை; kitchen, cook-house. ''வகையமை யடுக்களைபோல்'' (மணிமே. 29 : 61). 'அடுக்களைப் பூனைபோல் இடுக் கிலே ஒளிக்கிறது', 'அடுக்களைப் பெண் ணுக்கு அழகு வேண்டுமா?', 'அடுக்களைக் கிணற்றிலே அமுதம் எழுந்தாற்போல்' (பழ.).

ம. அடுக்கள; க. அடுகள; தெ. அடசால; து. அட்கல.

[அடு + களம் — அடுக்களம் → அடுக்களை. களம் → களை. களம் = இடம்.]

**அடுக்களைக் குருக்கள்** *adukkaḷai-k-kurukkaḷ*, பெ. (n.) நாட்டுக்கோட்டைச் செட்டிப் பெண் டிர்க்குரிய குரு (செட்.நா.); spiritual guru of the women of the Nāṭṭukkōṭṭai Cheṭṭi caste.

**அடுக்களை காணுதல்** *adukkaḷai-kāṇudal*, பெ. (n.) மருமகளின் தாய் அவளை வந்து

*காணும்போது செய்யும் சடங்கு* (நாஞ்.); a ceremony performed by the girl's mother when she visits her daughter in her house (Nāñ.).

**அடுக்களைப்புறம்** *aḍukkaḷai-p-puṟam*, பெ. (n.) *கோயில் மடைப்பள்ளிச் செலவிற்காக விடப் படும் மானியம்* (M.E.R. 574 of 1926); endowment for the kitchen expenses of a temple.

ம. அடுக்களப்புறம்

*[அடுக்களை + புறம்.]*

**அடுக்காலாத்தி** *aḍukk(u)-ālatti*, பெ. (n.) *அடுக்குத்தீபம்* பார்க்க; see *aḍukku-t-tībam.*

*[அடுக்கு + ஆலாத்தி.]*

**அடுக்காழி** *aḍukk(u)-āḻi*, பெ. (n.) *மணிக்கல் பதிக்கப்பட்ட மோதிரம்;* finger ring set with gems. 'இரத்தினக் கற்கள் பதிக்கப்பெற்ற மோதிரம் அடுக்காழி என்று சொல்லப்படும்' (சி. செ. பக். 100, பத்தி 7).

*[அடுக்கு + ஆழி.]*

**அடுக்கானகன்னி** *aḍukk(u)-āṉa-kaṉṉi*, பெ. (n.) *1. அழகும் குணமும் நிறைந்தவள்* (வின்.); perfect woman. *2. பவளப்புற்றுச் செய்நஞ்சு (பாடாணம்)* (மூ.அ.); an arsenic preparation.

*[அடுக்கு+ஆன+கன்னி.]*

**அடுக்கியல்** *aḍukk(u)-iyal*, பெ. (n.) (யாப்.) *வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்றான அராகம்;* (Pros.) a constituent of a variety of *kalippā* (வீரசோ. யாப். 11, உரை).

*[அடுக்கு+இயல்.]*

**அடுக்கிளநீர்** *aḍukk(u)-iḷanīr*, பெ. (n.) *ஆயிரங் காய்ச்சித் தேங்காயின் நீர்;* water inside the kernel of a particular variety of coconut palm, which bears fruits abundantly.

*[அடுக்கு+இளநீர்.]*

**அடுக்கிறை** *aḍukkiṟai*, பெ. (n.) *வெண்டாமரை;* white lotus, *Nelumbium speciosum* (alba) (சா.அக.).

**அடுக்கு-தல்** *aḍukku-*, 5 செ. குன்றாவி. (v.t.) *1. கலங்கள்போல் ஒன்றன்மே லொன்றாக வைத்தல்;* to pile up one on top of another. "திங்கண்மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்" (சிலப்.11:1). 'அடுக்குகிற அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியுமா?' (பழ.). *2. வரிசைப்பட வைத்தல்;* to arrange in a series, row, or order. பொத்தகங்களை யெல்லாம் வரிசையாக அடுக்கிவை (உ.வ.). *3. பணத்தை மேன்மேலும் பெருக்குதல்;* to accumulate money or wealth. "அடுக்கிய கோடி பெறினும்" (குறள், 954). *4. சொற்களை மேன்மேலும் தொடுத்தல்;* to go on speaking or adding words. சொல்லச் சொல்ல கேட்காமல் அடுக்கிக்கொண்டே போகிறாள் (உ.வ.).

ம. அடுக்கு; க. அடுகு; துட. ஒட்த்.

*[அடு → அடுக்கு.]*

**அடுக்கு** *aḍukku*, பெ. (n.) *1. ஒன்றன்மே லொன்றாக அடுக்கியது;* pile, tier. "அண்டகோ டியையெலாங் கருப்பவறை போலவு மடுக்கடுக் காக வமைத்து" (தாயு. தேசோ. 7). *2. வரிசை;* series, row. கொலுப்பொம்மை யடுக்கு நன்றாயிருக்கிறது (உ.வ.). *3. அடுக்குக் கலம்;* set of vessels which fit one within another. என் பெண்ணுக்குச் சீர்வரிசையாகப் பித்தளை பதினோரடுக்கு வைத்தேன் (உ.வ.). *4. அடுக்குத் தொடர்;* repetition of words. "தழுவு தொடரடுக் கெனவீ ரேழே" (நன். 152). *5. கோப்பு;* file. இக்கடிதத்தை அடுக்கிலே வை (உ.வ.). *6. செழிப்பு;* prosperity. அவள் அடுக்காய் வாழ்கிறாள் (உ.வ.). *7. நூலடுக்கு;* four threads of yarn, a term used by weavers (W.).

*[அடு→அடுக்கு.]*

**அடுக்குக்குலை-தல்** *aḍukku-k-kulai-*, 2 செ.கு.வி. (v.i.) *1. வரிசை கலைதல்;* to get into disorder, as a row or pile of things (W.). *2. நிலை கெடுதல்;* to become deranged, as one's business or circumstances. *3. கற்பிழத்தல்;* to lose one's chastity, as a woman.

*[அடுக்கு+குலை.]*

**அடுக்குச்சட்டி** *aḍukku-c-caṭṭi*, பெ. (n.) *அடுக்குக் கலம்;* tier of pots of a particular size and shape; set of such vessels which fit one within another.

*[அடுக்கு+சட்டி.]*

**அடுக்குச்சாத்து-தல்** *aḍukku-c-cāttu-*, 5 செ.கு. வி. (v.i.) *தெய்வத் திருமேனிக்குக் கொய்து ஆடை யணிதல்* (கோயிலொ. 38); to adorn an idol with a cloth gathered in folds.

*[அடுக்கு+சாத்து.]*

**அடுக்குச் செம்பரத்தை** *aḍukku-c-cembarattai*, பெ. (n.) அடுக்காக இதழுள்ள இரட்டைச் செம் பரத்தைப் பூ; double shoe-flower (சா.அக.). இது பின்வருமாறு மூவகைப்படும்:

(1) இரட்டைச் சிவப்புச் செம்பரத்தை அல்லது குங்குமச் செம்பரத்தை; double flesh-coloured shoe-flower or scarlet shoe-flower, *Hibiscus rosa-sinensis* (carnea-plena).

(2) இரட்டை மஞ்சட் செம்பரத்தை; double bluff-coloured shoe-flower, *Hibiscus sinensis* (flava-plena).

(3) இரட்டை வெள்ளைச் செம்பரத்தை; double white-coloured shoe-flower, *Hibiscus mutabilis* (alba rubescens).

*[அடுக்கு+செம்பு+அரத்தை.]*

**அடுக்குச் செவ்வரத்தை** *aḍukku-c-cev-v-arattai*, பெ. (n.) அடுக்குச் செம்பரத்தை பார்க்க; see *aḍukku-c-cembarattai.*

*[அடுக்கு + செவ் (செம்) + அரத்தை.]*

**அடுக்குத்தீபம்** *aḍukku-t-tibam*, பெ. (n.) ஒன்றன்மே லொன்றான வட்ட வரிசைகளாக அமைக்கப்பட்ட கோயில் விளக்குவகை; tier





அடுக்குத்தீபம்

of lamps in circular rows, used in temple worship.

*[அடுக்கு+தீவம். த. தீ→தீவு→தீவம் > Skt. dīpa > த. தீபம்.]*

**அடுக்குத்தும்பை** *aḍukku-t-tumbai*, பெ. (n.) காசித்தும்பை (மலை.); a species of double balsam, Banares tumbai, *Leucas linifolia* (சா.அக.).

*[அடுக்கு + தும்பை.]*

**அடுக்குத்தொடர்** *aḍukku-t-toḍar*, பெ. (n.) உடன்பாடு, உணர்ச்சி, வற்புறை அல்லது தேற்றம், விரைவு, பல்கால் நிகழ்ச்சி, இசை நிறை முதலியனபற்றி, ஒரு சொல் இருமுறை முதல் நான்குமுறை வரை அடுக்கி வருவது; repetition of a word twice to four times in token of having followed what is said or to indicate one's agreement, or emotion, or for emphasis or suggestive of swiftness or repetition of action, or as an expletive used to fill a gap in metre.

''அசைநிலை பொருணிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்''
(நன். 396).

எ-டு:

1. **அசைநிலை**
நல்லது நல்லது, மதி மதி, அடியேன் அடியேன்.

2. **பொருணிலை**
வருக வருக, வாழ்க வாழ்க — மகிழ்ச்சி.
அடி அடி, கொல் கொல் — சினம், பகை, வெறுப்பு.
பாம்பு பாம்பு, தீத்தீத்தீ—அச்சம்.
ஐயையோ (ஐயோ ஐயோ), செத்தேன் செத்தேன்—துன்பம்.
அடாடா (அடா அடா), கெட்டேன் கெட்டேன்—மனவருத்தம்.
உண்டு உண்டு, வருவான் வருவான் — வற்புறை.
வந்தேன் வந்தேன், போ போ போ — விரைவு.
திரும்பத்திரும்ப, போய்ப்போய், மேலும் மேலும்—பல்கால் நிகழ்ச்சி.
சரிசரி, ஆகட்டும் ஆகட்டும்—உடன்பாடு.

3. **இசைநிறை**
ஏ ஏ, நல்குமே நல்குமே நல்குமே,
பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ.

குறிப்பு: (1) உலக வழக்கும் செய்யுள் வழக்கும் என, அசைநிலை இரு வகைப்படும். அவற்றுள், முன்னது பொருள் குறியாது பிறர் சொல்வதைக் கேட்டற் குறியளவாக நிற்கும்; பின்னது பொருளற்று நிற்பதாகச் சொல்லப்படும்.

(2) இசைநிறை யெல்லாம் செய்யுள் வழக்கே.

(3) அடுக்குத்தொடர் தனிச்சொல்லாக மட்டுமன்றித் தொடர்ச் சொல்லாகவும் வரும்.

எ-டு:
என்செய்தேன் என் செய்தேன், என்னத்தைச் சொல்ல என்னத்தைச் சொல்ல.

[அடுக்கு + தொடர்.]

**அடுக்கு நந்தியாவட்டம்** *aḍukku-nandiyāvaṭṭam*, பெ.(n.) 1. அடுக்குக் கண்வலிப் பூ; double-blossomed eye-flower, l. sh., *Tabernaemontana coronaria* (L.) (செ.அக.). 2. இரட்டை நந்தியா வட்டம்; double-blossomed common wax-flower; dog bane, *Tabernaemontana coronaria* (சா.அக.).

[அடுக்கு + **Skt.** nandyāvarta > **த.** நந்தியா வட்டம்.]

**அடுக்குப்பண்ணு-தல்** *aḍukku-p-paṇṇu-*, 5 செ. குன்றாவி. (v.t.) அணியம் (ஆயத்தம்) செய்தல்; to prepare, to make preparation(s).

[அடுக்கு + பண்ணு.]

**அடுக்குப்பணியாரம்** *aḍukku-p-paṇiyāram*, பெ. (n.) கோதுமை மாவால் ஏழு அடைகளைத் தட்டி நெய்கூட்டி, ஒன்றன்மே லொன்றாக அடுக்கிச் சுட்டெடுக்கும் பலகாரம். இதற்குப் பூரி எனவும் பெயர்; a kind of cake made of seven thin layers of wheat flour and fried in ghee (சா.அக.).

[அடுக்கு + பணியாரம்.]

**அடுக்குப்பருத்தி** *aḍukku-p-parutti*, பெ. (n.) பெரும்பருத்தி, ஒருவகை யுயர்ந்த பருத்தி (G. Sm. D. I. i, 227); a superior variety of cotton raised in red loam.

[அடுக்கு + பருத்தி.]

**அடுக்குப்பற்சுறா** *aḍukku-p-paṟ-cuṟā*, பெ. (n.) ஒருவகைச் சாம்பல்நிறச் சுறா; grey shark, *Carcharias ellioti*.

[அடுக்கு + பல் + சுறா.]

**அடுக்குப்பாத்திரம்** *aḍukku-p-pāttiram*, பெ. (n.) ஒன்றனுள் ஒன்று அடுக்கி அடுக்காகவுள்ள கலங்கள்; a set of vessels or cups placed one inside of another or one upon another.

**ம.** அடுக்குப் பாத்திரம்; **க.** அடுக்கு பாத்ரெ.

[அடுக்கு + **Skt.** pāttra > **த.** பாத்திரம்.]

**அடுக்குப்பார்-த்தல்** *aḍukku-p-pār-*, 4 செ.கு.வி. (v.i.) 1. தக்க துணை தேடுதல் (இ.வ.); to look out for suitable help or companion (Loc.). 2. ஒத்திகை பார்த்தல் (யாழ்ப்.); to rehearse, as stage players (J.).

[அடுக்கு + பார்.]

**அடுக்குப்பாளம்** *aḍukku-p-pāḷam*, பெ. (n.) தெய்வச்சிலைக்குப் பின்புறத்திற் சாத்தும் கொய்த ஆடை; cloth gathered into folds, worn on the back of an idol.

[அடுக்கு + பாளம்.]

**அடுக்குப்பாற்சொற்றி** *aḍukku-p-pāṟcoṟṟi*, பெ. (n.) பாற்சொற்றி யென்னும் செடிவகை; a variety of the plant, *Ruellia secunda* (W.).

[அடுக்கு + பாற்சொற்றி.]

**அடுக்குப்பாறை** *aḍukku-p-pāṟai*, பெ. (n.) நிலத்தில் தளவரிசையாகப் பொத்தக ஏடுகள்போல் ஒன்றன்மே லொன்றா யமைந்த பல்வேறு படைக் கற்பாறை; a mound of rock composed of different horizontal strata of rocks, like the leaves of a book (சா.அக.).

[அடுக்கு + பாறை.]

**அடுக்குப்பானை** *aḍukku-p-pāṉai*, பெ. (n.) 1. பல்பொருள்கள் போட்டு வைப்பதற்கு ஒன்றன்மேலொன்றா யடுக்கிய மட்பானைகள்; big earthen pots piled one over another and used as receptacles. 2. சில குலத்தார் கலியாணச் சடங்கிற்கு அடுக்கிவைக்கும் ஏழு கோலப் பானைகள்; tier of seven painted pots used at marriage ceremony among certain castes.

[அடுக்கு + பானை.]

**அடுக்குப்பூண்டு** *aḍukku-p-pūṇḍu*, பெ. (n.) கோபுரப் பூண்டு; a kind of plant (சா.அக.).

[அடுக்கு + பூண்டு.]

**அடுக்குமல்லிகை** *aḍukku-malligai*, பெ. (n.) பல இதழ் வரிசையுள்ள மல்லிகைவகை (மூ.அ.); double-flowered jasmine, m. sh., *Jasminum sambac*.

**அடுக்குமாடி** *aḍukku-māḍi*, பெ. (n.) பல நிலையுள்ள கட்டடம் அல்லது வீடு; multi-storied building or house. ஏழடுக்குமாடி.

**அடுக்குமுள்ளி** *aḍukku-muḷḷi*, பெ. (n.) பெருமுள்ளி யென்னும் பூடுவகை (மூ.அ.); thorn-bush, a variety of prickly night shade, Indian hyssop, Solanum (Genus) (சா.அக.)


அடுக்குப்பற்சுறா (வாய்)


அடளை


அடுக்குச்செம்பரத்தை


அடுக்குத்தீபம்


அடுக்குப்பற்சுறா


அடுக்குமல்லிகை

அடுக்குமெத்தை[1] *aḍukku-mettai*, பெ. (n.) தேங்காய் நார், பருத்திப் பஞ்சு, இலவம் பஞ்சு, ஓதிமத் தூவி, நறுமென் மலரிதழ் ஆகியவற்றா லமைந்த மெத்தைகள் முறையே ஒன்றன்மே லொன்றா யமைந்த அஞ்சணைப் படுக்கை; bed with mattresses made of coconut fibre, cotton, silk-cotton, swan's down and soft fragrant flower petals, placed one upon another in the given order.

அடுக்குமெத்தை[2] *aḍukku-mettai*, பெ. (n.) அடுக்குமாடி பார்க்க; see *aḍukku-māḍi*.

அடுக்குவட்டா *aḍukku-vaṭṭā*, பெ. (n.) சாப்பாடு தூக்கிக்கொண்டு போவதற்குப் பல வட்டக் கிண்ணங்கள் ஒன்றன்மே லொன்றாக அமைந்த தூக்குக் கலம் (இக்.வ.); tiffin-carrier or meal-carrier consisting of several cups or round vessels placed one upon the other (Mod.).

அடுக்குவாகை *aḍukku-vāgai*, பெ. (n.) பெரு வாகைமரம்; sirissa tree, *Albizzia labbak* (சா.அக.).

அடுக்குவாழை *aḍukku-vāḻai*, பெ. (n.) பனை வாழை; a kind of plantain tree (சா.அக.).

ம. அடுக்கன் வாழ

அடுக்குவிருசு *aḍukku-virušu*, பெ. (n.) பொரி வாணவகை; (T.C.M. ii, 2, 598); a kind of rocket.

அடுக்குள் *aḍukkuḷ*, பெ. (n.) 1. அறைக்குள் அறை; room within a room. 2. சமையலறை; kitchen (Brāhm.).

க. அடுகள

[அடுக்கு + உள்.]

அடுக்குளமைந்தோன் *aḍukkuḷ-amaindōṉ*, பெ. (n.) ஒருவகைச் செய்ந்நஞ்சு (மிருத பாடாணம்); a kind of arsenic preparation (சா.அக.).

அடுக்கூமத்தை *aḍukk(u)-ūmattai*, பெ. (n.) காட்டூமத்தை; downy datura, m. sh., *Datura metal* (சா.அக.).

[அடுக்கு + ஊமத்தை. த. மத்தை > Skt. matta → unmatta > த. ஊமத்தை.]

அடுகலம் *aḍu-kalam*, பெ. (n.) அடுகலன் பார்க்க; see *aḍu-kalaṉ*.

[அடு + கலம்.]



அடுகலன் *aḍu-kalaṉ*, பெ. (n.) சமையற்கலம்; vessel for cooking. "அடுகலன் பிறவு மெரி பொனா லிழைத்து" (திருவிளை. திருநகரப். 64).

க. அடுகல

[அடு + கலம். கலம் → கலன்.]

அடுகளம் *aḍu-kaḷam*, பெ. (n.) போர்க்களம்; battle-field. "அடுகளத்துள்.........வாளமர் வேண்டி" (திவ். இயற். 1 : 81).

அடுகனலவன் *aḍu-kaṉal-avaṉ*, பெ. (n.) அழிப்புத் தொழில் செய்யும் ஊழித்தீ யுருத்திரன்; Rudra, the God of destruction. "அடுகனல வன் கூர்மாண்ட னாடகன்" (கந்தபு. உற்பத். திருக்கல். 94).

[அடு + கனல் + அவன்.]

அடுகிடை *aḍu-kiḍai*, பெ. (n.) அடுத்துக் கிடத்தல்; lying closely.

[அடு + கிடை. கிடை = கிடத்தல்.]

அடுகிடைபடுகிடை *aḍu-kiḍai-paḍu-kiḍai*, பெ. (n.) 1. விரும்பியது பெறுமளவும் ஒருவர் வீட்டின்முன் படுத்துக்கிடக்கை; lying down at a person's house determined not to leave the place till the thing asked for is obtained (W.). 2. நோய்வாய்ப்பட்டுப் பாயும் படுக்கையு மாய்க் கிடத்தல்; being completely bedridden, as in illness. அவன் ஒரு மாதமாக அடு கிடை படுகிடையாய்க் கிடக்கிறான் (உ.வ.).

அடுகுவளம் *aḍugu-vaḷam*, பெ. (n.) 1. அடுக்கி வைக்கப்பட்ட உண்டிப்பெட்டி (ஈடு, 6.1 : 2); pile of baskets or vessels containing cakes, sweet meats, etc., one on another. 2. உண்டி; food. 'அடுகுவளம் தடைப்படும் போல் காணும்' (ஈடு, 10.4 : 3).

[அடுக்கு → அடுகு + வளம் = உண்டிப் பெருக்கம்.]

அடுகுறல் *aḍuguṟal*, தொ.பெ. (vbl. n.) கொல்லு தல்; killing. "அடுகுற றிடுகு லமடற் கதைக டொடுகுற றனர்" (கந்தபு. யுத்த. மூவாயிர. 28).

[அடு → அடுகு + உறல். 'கு' சொல் விரி வீற்றுச் சாரியை.]

அடுகைமனை *aḍugai-maṉai*, பெ. (n.) மடைப் பள்ளி; kitchen, cook-house. "அங்கிமுதற் றென்றிசை யந்தத் தடுகைமனை" (சிவதரு. சிவஞானதா. 70).

க. அடிகெமனெ

[அடு → அடுகை + மனை.]

**அடுங்குன்றம்** *aḍuṅ-kuṉṟam,* பெ. (n.) *யானை*; elephant (சா.அக.).

[அடுதல் = கொல்லுதல். குன்றம் = சிறுமலை. அடுங்குன்றம் = கொல்லுஞ் சிறுமலை போன்றது.]

**அடுசில்** *aḍuśil,* பெ. (n.) *சோறு*; boiled rice. 'அடுசில்நெய் யாகிய ஆவுதி' (பதிற். 21, உரை).

ம. அட்டம்; க. அடிகெ; தெ. அட்டமு; து. அட்யெ; Skt. aṭṭam.

[அடு → அடுதல் → அடுசல் → அடுசில்.]

**அடுசிலைக்காரம்** *aḍuśilai-k-kāram,* பெ. (n.) *செந்நாயுருவி* (மூ.அ.); red species of Indian burr, *Achyranthus aspera* (சா.அக.).

**அடுத்த** *aḍutta,* கு.பெ.எ. (adj.) 1. *ஒட்டியுள்ள, நெருங்கியுள்ள;* adjoining, contiguous, neighbouring, next. 'அடுத்த வீட்டுக்காரி பிள்ளை பெற்றாளென்று அம்மிக்குழவி யெடுத்துக் குத்திக்கொண்டாளாம்' (பழ.). 2. *அண்டியுள்ள*; support-seeking.

ம. அடுத்த; மா. அட்கெ; கூ. அட.

**அடுத்தடுத்து** *aḍutt(u)-aḍuttu,* கு.வி.எ. (adv.) 1. *ஒன்றன்பின் ஒன்றாக;* one after another. "அடுத்தடுத்து வன்காய் பலபல காய்ப் பினும்" (நாலடி. 203). 2. *அடிக்கடி*; often, ever and anon. "அடுத்தடுத்து வேக முடைத் தாம்" (நாலடி. 348). 'அடுத்தடுத்துச் சொன் னால் தொடுத்த காரியம் முடியும்' (பழ.).

ம. அடுத்தடுத்து

[அடுத்து + அடுத்து.]

**அடுத்தணித்தாக** *aḍutt(u)-aṇitt(u)-āga,* கு.வி.எ. (adv.) *மிக அண்மையில்* (ஈடு, 9.8 : 7); very near, close by.

[அடுத்து + அணித்து + ஆக.]

**அடுத்தமுறை** *aḍutta-muṟai,* பெ. (n.) 1. *மறு தடவை*; next time. 2. *நெருங்கின உறவு*; nearest relationship.

**அடுத்தவரைக் கெடு-த்தல்** *aḍuttavarai-k-keḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) *புகலடைந்தவர்க்குத் தீங்கு செய்தல்*; to ruin or kill refugees treacherously. 'அடுத்தவரைக் கெடுக்கலாமா?' (பழ.).

[அடுத்தவரை + கெடு.]

**அடுத்தார்** *aḍuttār,* பெ. (n.) 1. *உதவி நாடி வந்தவர்*; those who have approached for help. 2. *வந்து சேர்ந்தவர்*; those who have joined, seeking protection.

**அடுத்தாரைக்கொல்லி** *aḍuttārai-k-kolli,* பெ. (n.) *நெருப்பு*; fire (சா.அக.).

ஒ.நோ: "சேர்ந்தாரைக் கொல்லி" (குறள், 306).

[அடுத்த + அவரை – அடுத்தவரை → அடுத் தாரை + கொல்லி.]

**அடுத்தாரை மயக்கி** *aḍuttārai-mayakki,* பெ. (n.) *கஞ்சா. இதன் மறுபெயர்கள் கோரக்கர் மூலி, சித்தருண்ணு மூலி, கற்பத்து ஞானி, யோகம் வளர்க்கு மூலி என்பன*; gunjah, *Cannabis sativa.* It is known by different names such as carl hemp, Korakkan's drug, fimble, gallow grass, giddy plant, Indian hemp, wishing plant, victory (siddhi) plant and so on (சா.அக.).

**அடுத்தாள்** *aḍuttāḷ,* பெ. (n.) *உதவியாள்* (இ.வ.); assistant (Loc.).

[அடுத்த + ஆள்.]

**அடுத்தி** *aḍutti,* பெ. (n.) *முறைகேடான வட்டி* (W.G.); usury.

க. அட்; தெ. அடிதி; து. அடவு.

[அடு → அடர் → அடர்த்தி → அடத்தி → அடுத்தி.]

**அடுத்து** *aḍuttu,* கு.வி.எ. (adv.) 1. *நெருங்கி, அண்டி*; having approached. 'அடுத்து வந்த வர்க்கு ஆதரவு சொல்வோன் குரு' (பழ.). 2. *மறு நிகழ்ச்சியாக*; as the next item, next. அடுத்து, பேரா. இராமசாமிக் கவுண்டர் அவர்கள் தொல்காப்பியம்பற்றி ஓர் அரிய ஆய்வுரை நிகழ்த்துவார்கள். 3. *மேன்மேல்*; again and again, further and further. "அதனை யடுத்தூர்வ தஃதொப்ப தில்" (குறள், 621).

**அடுத்துக் கழுத்தறு-த்தல்** *aḍuttu-k-kaḻutt(u)-aṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. *நம்பிக்கைக் கேடுசெய்து கொல்லுதல்*; to kill by treachery. 2. *நண்பன்போற் பலநாட் பழகிக் கேடு செய் தல்*; to do harm insidiously.

[அடுத்து + கழுத்து + அறு.]

**அடுத்துக்கெடு-த்தல்** *aḍuttu-k-keḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) **நட்புப்போற் சேர்ந்து கேடு செய்தல்**; to ruin a person by associating with him, to kill by treachery. 'அடுத்துக் கெடுப் பான் கபடன், தொடுத்துக் கெடுப்பாள் மடந்தை' (பழ.).

[அடுத்து + கெடு.]

**அடுத்துமுயல்-தல்** *aḍuttu-muyal-*, 13 செ.கு.வி. (v.i.) **இடைவிடாது முயலுதல்**; to make continuous effort. "அடுத்து முயன்றாலும்" (மூதுரை, 5). 'அடுத்து முயன்றாலும் ஆகும் நாள்தான் ஆகும்' (பழ.).

**அடுத்துவரலுவமை** *aḍuttu-varal-uvamai*, பெ. (n.) (அணி.) **உவமைக்கு உவமை**; (Rhet.) comparison in which the standard of comparison is in its turn compared to another.

எ-டு: பவளம்போன்றது கோவைப்பழம்; கோவைப்பழம் போன்றது சிவந்த உதடு. "துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" (சீவக. 107) என்பதில், 'தொண்டை வாய்க்கு அடை. துப்பை யொக்கும் தொண்டை போலும் செவ்வாயென இரண்டுவமையும் செவ்வாயை நோக்குதலின், அடுத்துவரலுவமை யன்று' (நச். உரை).

[அடுத்து + வரல் + உவமை.]

**அடுத்துவிளக்கு-தல்** *aḍuttu-viḷakku-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. **மாழை (உலோக)ப் பற்று வைத்தொட்டுதல்**; to solder. 'அடுத்து விளக்கின மொட்டும் பறளையும்' (S.I.I. ii, 96). 2. **அடுத்தாற்போல் விளக்கிச் சொல்லு தல்**; to explain subsequently.

**அடுத்தூண்** *aḍutt(u)-ūṇ*, பெ. (n.) **பிழைப்பிற்கு விடப்பட்ட நிலம்** (ஈடு, 4.8 : 8); land given for one's livelihood.

ம. அடுத்தூண்

[அடுத்து + ஊண்.]

**அடுத்தேறு** *aḍutt(u)-ēṟu*, பெ. (n.) **மிகை**; excess. 'அடுத்தேறாக வந்த கரத்தைக் கழித்து' (ஈடு, 3.8 : 9).

[அடுத்து + ஏறு.]

**அடுநறா** *aḍu-naṟā*, பெ. (n.) **காய்ச்சிய சாறாயம்**; distilled intoxicating drink.

**அடுப்பங்கடை** *aḍuppaṅ-kaḍai*, பெ. (n.) 1. **அடுப்பின் பக்கம்**; side of the oven. 2. **சமையலறை**; kitchen.

[அடுப்பு + அம் (சாரியை) + கடை. கடை= பக்கம்.]

**அடுப்பங்கரை** *aḍuppaṅ-karai*, பெ. (n.) **அடுப் பங்கடை பார்க்க**; see *aḍuppaṅ-kaḍai*.

[கடை → கரை.]

'அடுப்பாங்கரை' என்பது நீட்டிய உலக வழக்கு.

**அடுப்பம்** *aḍuppam*, பெ. (n.) 1. **கனம்**; heaviness, weight. 'மேக அடுப்பமும் பார் அடுப்பமும் ஒத்தன பேய்க்கணங் கட்கு' (தக்கயாகப். 361, உரை). 2. **நெருங்கிய உறவு** (நெல்லை); close intimacy or relationship (Tn.).

ம. அடுப்பம்

[அடு → அடுப்பம். அடு = நெருங்கு.]

**அடுப்பு** *aḍuppu*, பெ. (n.) 1. **சமையற் கலத்தை யேற்றி யெரிக்கவுதவும் முக்கற் கூட்டு**; three stones arranged in triangular form to serve as an oven. 'அடுப்புக் கூட்டுப்போல...... மூன்று புள்ளிவைத்து எழுதப்படுதலால்' (நன். 90, சடகோ. உரை). 'அடுப்புக் கட்டிக்கு அழகு வேண்டுமா?' (பழ.). 2. **விறகிட்டு எரித்தற்கு மண், இரும்பு முதலியவற்றாற் செய்யப்பட்ட கருவி**; oven, fire-place for cooking. "பாலைக் கறந் தடுப்பேற வைத்து" (திவ். பெரியாழ். 2.9 : 5). 'அடுப்பு மூன்றானால் அம்மா பாடு திண்டாட்டம்' (பழ.). 3. **அடுப்பு நெருப்பு**; fire, in the oven. அடுப்பெரிகிறதா பார்? (உ.வ.). 'அடுப்பு எரிந்தால் பொரி பொரியும்', 'அடுப்புநெருப்பும் போய் வாய்த்தவிடும் போச்சு' (பழ.). 4. **முக்கல் லடுப்பு வடிவான நாண்மீன் (பரணி)**; the second lunar constellation. 5. **மனைவி** (இழிசி.வ.); wife. 6. **அச்சம்** (பிங்.); fear.

ம. அடுப்பு; து. அட்பு, அட்கல.

[அடுதல் = சுடுதல், சமைத்தல். அடு → அடுப்பு.]

**அடுப்பு ஊதி** *aḍuppu-ūdi*, பெ. (n.) **பொருவா, ஒருவகைக் கடல்மீன்**; a kind of sea-fish, *Thryssa malabarica*.

**அடுப்புக்கரி** *aḍuppu-k-kari*, பெ. (n.) 1. **அடுப்பி லெரித்த கரி**; dead coals from an oven. 2. **மரக்கரி**; charcoal, as taken out from or used in an oven.

ம. அடுப்புக்கரி; க. அடுகரி; து. அட்கலகரி.

[அடுப்பு + கரி.]

**அடுப்புக்கும்பி** *aḍuppu-k-kumbi*, பெ. (n.) **அடுப்புச் சாம்பல் அல்லது சுடுசாம்பல்**; hot ashes in the oven.

[அடுப்பு + கும்பி.]

**அடுப்புக்கொட்டம்** *aḍuppu-k-koṭṭam*, பெ. (n.) **சமையற் கொட்டகை**; kitchen shed.

[அடுப்பு + கொட்டம்.]

**அடுப்புந்துடுப்புமாய்** *aḍuppun - tuḍuppum - āy*, கு.வி.எ. (adv.) **சமையல்வேலை செய்து கொண்டு**; engaged in cooking. அடுப்புந் துடுப்புமா யிருக்கிறேன்; இப்போது வரமுடி யாது (உ.வ.).

[அடுப்பும் + துடுப்பும் + ஆய்.]

**அடுப்புப்பற்றவை - த்தல்** *aḍuppu-p-paṟṟa-vai-*, 4 செ.கு.வி. (v.i.) **அடுப்பில் நெருப்பு மூட்டுதல்**; to kindle fire in the oven.

[அடுப்பு + பற்றவை.]

**அடுப்புவெட்டு** *aḍuppu-veṭṭu*, பெ. (n.) **மழித்த இடம் அடுப்புத் திறப்புப்போல் அல்லது தலை கீழான பகரம்போல் தோன்றுமாறு, முன்றலை மயிரை வறண்டி வைத்தல்**; shaving the hair just above the forehead, in such a fashion that the shaven part looks like the opening of an oven.

**அடுப்பூதி** *aḍupp(u)-ūdi*, பெ. (n.) 1. **சமையற் கா-ரன்-ரி**; cook. 2. **மூடன்** (மதி. களஞ். ii, 5); fool.

[அடுப்பு + ஊதி.]

**அடுப்பூது-தல்** *aḍupp(u)-ūdu-*, 5 செ.கு.வி. (v.i.) **அடுப்பில் விறகு எரியாதபோது ஊதாங்குழல் வாயிலாகக் காற்றூதி யெரிய வைத்தல்**; to blow and kindle the fire in the oven. 'அடுப் பூதும் பெண்ணிற்குப் படிப்பென்னத்திற்கு?' (பழ.).

[அடுப்பு + ஊது.]

**அடுப்பெரி-தல்** *aḍupp(u)-eri-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **அடுப்பில் நெருப்பு எரிதல்**; to burn, as fire in the oven. 2. **வீட்டில் சமையல் நடைபெறு தல்**; to do cooking in a house. பணமுடை யால் ஐந்து நாளாய் அடுப்பெரியவில்லை (உ.வ.).

[அடுப்பு + எரி.]

**அடுப்பேற்று-தல்** *aḍupp(u)-ēṟṟu-*, 5 செ.குன்றா வி. (v.t.) **உலைவைத்தல், சமைத்தற்கு நீரிட்ட கலத்தை அடுப்பின்மேல் வைத்தல்**; to set a pot of water on the fire for boiling or cooking anything.

[அடுப்பு + ஏற்று.]

**அடும்பு** *aḍumbu*, பெ. (n.) அடம்பு பார்க்க; see *aḍambu*. ''அடும்பிவ ரணியெக்கர்'' (கலித். 132 : 16).

ம., க., து. அடும்பு.

[அடம்பு → அடும்பு.]

**அடுமா** *aḍumā*, பெ. (n.) **கொட்டை** (பரி.அக.); nut.

[ஒருகா. அண்டுமா (அண்டிமா) → அடுமா.]

**அடுவம்** *aḍuvam*, பெ. (n.) **மலைப்புன்கு** (L.); Wight's Indian nettle.

**அடுவல்** *aḍuval*, பெ. (n.) **வரகு நெல் கலப்பு** (யாழ்ப்.); mixure of paddy and common millet (J.).

[ஒருகா. அடு → அடுவல். அடு = சேர், கல.]

**அடே** *aḍē*, இடை. (part.) **'அடா' என்னும் ஆண்பால் (சேய்மை) விளியின் மறுவடிவம்**; an exclamation of calling, another form of the masculine address *aḍā*.

[அட (விளியி.) + ஏ (விளியு.).]

**அடேயப்பா** *aḍē-y-appā*, இடை. (int.) **வியப்புக் குறிப்பு**; an exclamation of astonishment.

[அட (விளியி.) → அடே. அப்பன் → அப்பா (விளிப்பெயர்). அடே + அப்பா – அடேயப்பா. முதற்காலத்தில் விளிப்பெயராக மட்டு மிருந்த 'அப்பா' என்னுஞ் சொல், பிற்காலத்தில் வியப் பிடைச் சொல்லுமாயிற்று.]

**அப்பா** பார்க்க; see *appā*.

அட, அடா, அடே, அடோ என்னும் பல வடிவான விளியிடைச் சொல் தந்தை முறைப் பெயருக்கு முன்னும் வரும், பின்னும் வரும். ஆயின், இட வேறுபாட்டிற்கேற்பப் பொருள் வேறுபடும்.

எ-டு :

அடேயப்பா (அடாயப்பா) – வியப்புக் குறிப்பு.

அப்பாடா (அப்பா + அடா) – ஓய்வு அல்லது இளைப்பாறற் குறிப்பு.

**அடை**[1] **- தல்** *aḍai-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **பறவைகள் கூட்டில் இராத் தங்குதல்**; to go to roost, as birds. 2. **பாம்புகள் வளைக் குட் புகுதல்**; to resort to holes, as snakes. 3. **ஆடுமாடுகள் கூடிக்கிடத்தல்**; to gather together and lie down for rest, as sheep or cattle. 4. **கோழி அடைகாத்தல்**; to sit on eggs, as a hen. 5. **மாந்தர் இறந்தடங்குதல்**; to attain eternal rest, die. அந்தப் பெரியவர் அடைந்துவிட்டார் (உ.வ.). 6. **தூசி சேர்தல்**; to collect, gather as dust. மேசை நாற்காலி களில் நாள்தோறும் தூசி வந்தடைகிறது (உ.வ.). 7. **வண்டல் படிதல்**; to be deposited, as alluvium. 8. **கிணறு தூர்தல்**; to be silted up, choked up, filled up, closed, as a well. 9. **கடன்தீர்தல்**; to be paid-up, as a debt. கடனெல்லாம் அடைந்துபோயிற்று (உ.வ.). 10. **சேர்ந்திறுகுதல்**; to settle, become close, compact, hard, as sand by rain. 11. **பொருந்து தல்**; join, mingle. "அணுவினோ டெல்லா மாகி யடைந்திடுந் தத்துவங்கள்" (சி. சி. சுபக். 2 : 78). 12. **அடைகா யடைதல்**; to be preserved, as pickles (W.). —, 2 செ.குன்றாவி. (v.t.) 1. **சேர்தல்;** to reach, arrive at. "கரைய டைந்தனர்" (பாரத. வாரணா. 2). 2. **அடைக்கலம் புகுதல்**; to take refuge in. "அடைந்தவர்க் கருளா னாயின்" (கம்பரா. யுத்த. வீடண. 108). 3. **பெறுதல்**; to get. இந்தியா 1947ஆம் ஆண்டு ஆங்கிலராட்சியி னின்று விடுதலையடைந்தது (உ.வ.). 4. **சாணை அல்லது சூடு சேர்த்தல்**; to heap up sheaves or ears of corn in pyramidal shape with round, square or rectangular base. உழவர், அறுவடையின் பின், அரிக்கட்டுகளை அல்லது கதிர்களைச் சாணையாக அடைந்து வைப்பர் (உ.வ.).

**ம.** அடயுக; **க., பட.** அடெ; **தெ.** அடகு; **துட., கோத.** அட்த; **து.** அடெபுனி.

[அள்ளுதல் = நெருங்குதல், சேர்தல். அள் → அண் → அடு → அடை. இனி, அண் → அண்டு → அடு → அடை என்றுமாம்.]

**அடை**[2]**-த்தல்** *aḍai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **ஊழால் முன்னமே நெறியிடப்படுதல் (விதிக்கப்படுதல்)**; to be pre-ordained by destiny. 'தனக்கடைத்த நாளறுதலின்' (சீவக. 2831, நச். உரை). 2. **வேலைக்கமர்த்தப்படுதல்**; to be appointed, assigned. "கழனிக் கடைத்த மகளிர்" (திவா. 2 : 140). 3. **உறுப்பின் புலன் அல்லது செயல் கெடுதல்**; to be obstructed, as the ear, throat. வெடியோசை கேட்டதும் காது அடைத்துக் கொண்டது. அந்த மருந்து உண்டதிலிருந்து தொண்டை அடைக்கிறது (உ.வ.). 4. **உரியதாதல்**; to be appropriate. 'அக் காலத்துக்கு அடைத்த காற்றுக்கள்' (ஈடு, 10 : 3, பிர.). —, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **கதவு சாத்துதல்**; to shut, close the door. "பாடுநர்க் கடைத்த கதவின்" (புறநா. 151 : 10). 2. **வழிதடுத்தல்**; to obstruct, block, as a passage. "வாழ்நாள் வழியடைக்குங் கல்" (குறள், 38). 'அடைத்தவன் காட்டைப் பார், மேய்த்தவன் மாட்டைப் பார்' (பழ.). 3. **துளையடைத்தல்;** to fill up, a hole. எலி வளையை அடைத்துவிட்டேன் (உ.வ.). 4. **புகுத்துதல்;** to put in, insert. "கடுகிற் பெரிய கடலடைக்கும்" (தாயு. சொல்லரிய. 1). 5. **பூட்டுதல், தாழிடுதல்;** to lock, fasten. "அன்பிற்கு முண்டோ வடைக்குந் தாழ்" (குறள், 71). 6. **சிறையில் வைத்தல்**; to imprison. "செழிய னடைத்த சென்னி பாட" (கல்லா. 34 : 7). 7. **ஒளித்துவைத்தல்**; to conceal, hide. 8. **ஒப்புவித்தல், ஒப்படைத்தல்**; to entrust. "கணங்கடமக் கடைத்துப் புறப்பட்டான்" (திருவாலவா. 28 : 13). 9. **குத்தகைக்கு விடுதல்**; to lease, give in contract, farm out. என் நிலத்தை வாரத்திற்கு அடைத்திருக்கிறேன் (உ.வ.). 10. **கொடுத்தல்**; to bestow. "உயிர்க்கின்ப மென்று மடைப் பானாம்" (சி. சி. சுபக். 1 : 54). 11. **பிரித்தல்**; to divide. 'நாலு கூறாக அடைப்பதாகவும்' (S.I.I. i, 64).

**ம.** அடெக்க; **க.** அடயிசு; **பர்.** அட்டெ்ா மர்; **பட.** அட்டெக.

[அடு → அடை.]

**அடை**[3] *aḍai*, பெ. (n.) 1. **கோழி அடைகாத் தல்**; incubation. 2. **பொருந்துகை**; joining. "ஆடுகின்றனர் பண்ணடை வின்றியே பாடு கின்றனர்" (கம்பரா. அயோத். மந்தரை. 2). 3. **சேர்ப்பிக்கை**; delivering, conveying. "அவன்க ணடைசூழ்ந்தார் நின்னை" (கலித். 115 : 18). 4. **அடைக்கலம்**; resort, refuge. 5. **அடைக்கலப்பொருள்** (ஈடு, 5.10 : 5); deposit, that which has been accepted for safe keeping. 6. **சன்னமான அப்பவகை**; thin cake, wafer. "நமக்கு மாவடை பழவனம் பிரியம்" (அழகர் கலம். 55). 7. **தோசையைப்போல் தட்டிய மருந்து**; a medicinal preparation pressed and

shaped like a round and flat rice-cake (சா.அக.). 8. இலை; leaf. ''புழற்கா லாம்ப லகலடை'' (புறநா. 266 : 3). 9. வெற்றிலை; betel leaf. ''நூறு காயடை கூடும்'' (சி. சி. பர. உலகா. மறு. 7). 10. இலைக்கறி (பிங்.); greens. 11. முளை; sprout. ''பூம்புற நல்லடை'' (பெரும்பாண். 278). 12. சுமை யடை (சும்மாடு); load-pad or cushion for the head to bear a load. 13. தாங்கி; prop, slight support (W.). 14. கனம் (பிங்.); gravity, weight. 15. கரை; bank, shore. 'கடலுங் கடலடைந்த விடமுங் கடலெனப்படுதலின், அடைகடலென்பது அடையாகிய கடலென இருபெயர்ப் பண்புத்தொகை' (தொல். சொல். எச்ச. 23, சேனா. உரை). 16. வழி (பிங்.); way. 17. அடைமொழி (விசேடணம்); qualifying word or clause, attribute, adjunct. ''ஈரடை முதலோ டாதலும்'' (நன். 403). 18. பண்புச்சொல்; word denoting quality. ''அடைசினை முதலென'' (தொல். சொல். கிளவி. 26). 19. கலிப்பாவின் உறுப்பாகிய அடைநிலைக்கிளவி யென்னும் தனிச்சொல் (தொல். பொருள். செய். 131); detached foot that is a constituent of *kalippā*. 20. நிலவரி (வின்.); land tax, king's share of the produce of the land whether one-sixth or one-tenth or otherwise (W.). 21. விலை (பிங்.); price. 22. கருக்கு (கஷாயம்); decoction. 23. தேனடை; honey comb.

ம. அட; க. அடெ, அடவு; தெ. அட்டு; து. அட்யெ.

*[அடு → அடை.]*

**அடை**[4] *aḍai*, பெ. (n.) செருப்படை, செருப்படி (பச்.மூ.); a medicinal herb, *Coldenia procumbens* (சா.அக.).

**அடைக்க** *aḍaikka*, கு.வி.எ. (adv.) முழுவதும்; entirely. வீடடைக்க நோயா யிருக்கிறது (உ.வ.).

ம. அடக்கம்; க., பட. அடெ.

*[அடை → அடைக்க.]*

**அடைக்கண்** *aḍai-k-kaṇ*, பெ. (n.) கண்ணிமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும் நோய் (வைத். சங்.); a disease that makes eyelids stick to each other, *ankyloblepharon*.

*[அடை + கண்.]*

**அடைக்கப்பட்டார்** *aḍaikka-p-paṭṭār*, பெ. (n.) கள்ளர் குலப் பட்டப்பெயர்களு ளொன்று (கள்ளர் சரித். பக். 145); a title of Kaḷḷars.

**அடைக்கப்புடைக்க** *aḍaikka-p-puḍaikka*, கு.வி.எ. (adv.) பரபரப்பாக, சுருக்காக, விரைவாக; hurriedly, quickly.

**அடைக்கலக்குருவி** *aḍaikkala-k-kuruvi*, பெ. (n.) அடைக்கலங்குருவி பார்க்க; see *aḍaikkalaṅ-kuruvi*.

*[அடைக்கலம் + குருவி.]*

**அடைக்கலங்கா-த்தல்** *aḍaikkalaṅ-kā-*, 4 செ. கு.வி. (v.i.) ஒப்படைக்கப்பட்ட பொருளைப் பாதுகாத்தல்; to protect one who seeks refuge, to take care of a deposit or trust.

*[அடைக்கலம் + காத்தல்.]*

**அடைக்கலங்காத்தான்** *aḍaikkalaṅ-kāttāṉ*, பெ. (n.) அடைக்கலங்குருவி பார்க்க; see *aḍaikkalaṅ-kuruvi*.

ம. அடக்காவு

*[அடைக்கலம் + காத்தான்.]*

**அடைக்கலங்குருவி** *aḍaikkalaṅ-kuruvi*, பெ. (n.) வீட்டுக் கூரைகளிற் கூடுகட்டி வாழும் குருவி; house sparrow, *Passer domesticus*. 'அடைக் கலங் குருவிக்கு ஆயிரத்தெட்டுக் கண்டம்' (பழ.).



அடைக்கலங்குருவி ஆண் பெண்

ம. அடுக்கலக்குரிகில்

*[வீடுகளில் அடைந்து வாழ்வதால், அடைக் கலங்குருவி யெனப்பட்டது.]*

**அடைக்கலஞ்செய்-தல்** *aḍaikkalañ-cey-,* 1 செ. குன்றாவி. (v.t.) *சவத்தைப் புதைத்தல்* (மதி. களஞ். ii, 145); to bury, intern, entomb.

ம. அடக்கு

*[அடைக்கலம் + செய்.]*

**அடைக்கலத்தளம்** *aḍaikkala-t-taḷam,* பெ. (n.) புகலிடம் (இராட்.); asylum, place of refuge (R.).

*[அடைக்கலம் + தளம்.]*

**அடைக்கலத்தான்** *aḍaikkalattāṉ,* பெ. (n.) *அடைக்கலங்குருவி* பார்க்க; see *aḍaikkalaṅ-kuruvi.*

*[அடைக்கலம் + அத்து (சாரியை) + ஆன்.]*

**அடைக்கலப்பொருள்** *aḍaikkala-p-poruḷ,* பெ. (n.) *பாதுகாப்பிற்காக ஒப்படைக்கப்பட்ட பொருள்;* deposit, which is entrusted for safe keeping.

*[அடைக்கலம் + பொருள்.]*

**அடைக்கலம்** *aḍaikkalam,* பெ. (n.) 1. *புகலிடம்;* asylum, refuge, shelter, person who gives shelter. அவன் எல்லார்க்கும் அடைக்கலம் (உ.வ.). 'அடைக்கலம் என்று வந்தவன் படைக்கலம் எடுக்கிறான்' (பழ.). 2. *பாதுகாப்பிற்காக ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொருள்;* deposit, which is entrusted for safe keeping.

ம. அடைக்கலம்

**அடைக்கலம்புகு-தல்** *aḍaikkalam-pugu-,* 2 செ. கு.வி. (v.i.) *புகலடைதல்;* to fly to one for shelter, take refuge.

**அடைக்கலமாதா** *aḍaikkala-māda,* பெ. (n.) *இயேசுவின் தாய், அடைக்கல மளிக்கும் தேவ அன்னை* (உரோ. கத்.); The Lady of Refuge (R.C.).

*[அடைக்கலம் + மாதா.]*

**அடைக்கலாங்குருவி** *aḍaikkalāṅ-kuruvi,* பெ. (n.) *அடைக்கலங்குருவி* பார்க்க; see *aḍaikkalaṅ-kuruvi.*

*[அடைக்கலம் + ஆம் + குருவி.]*

**அடைக்காய்** *aḍai-k-kāy,* பெ. (n.) 1. *பாக்கு;* areca-nut. ''வெள்ளிலை யடைக்காய் விரும்பி'' (தாயு. சச்சி. 11). 2. *தாம்பூலம்;* pān supāri. ''விஞ்சிய வடைக்கா யுண்டி வழியிடை வெறுப்ப தாக்கி'' (அருணாசலபு. திருமலைவலம். 26).

ம. அடய்க்க; க., பட., குட. அடகெ, அடிகெ; துட., கோத. அட்கெ; து. அட்டெ கட்டெரி.

*[அடை+காய். அடை=இலை, வெற்றிலை.]*

**அடைக்கியாழம்** *aḍai-k-kiyāḻam,* பெ. (n.) *அடைக்குடிநீர்* பார்க்க; see *aḍai-k-kuḍi-nīr.*

*[அடை + Skt. kaṣāya > த. கியாழம்.]*

**அடைக்குஞ்சவ்வு** *aḍaikkuñ-cavvu,* பெ. (n.) மூடுசவ்வு; valve (சா.அக.).

*[அடைக்கும் + சவ்வு.]*

**அடைக்குடிநீர்** *aḍai-k-kuḍi-nīr,* பெ. (n.) *மரம், செடி, கொடி, புல் என்னும் நால்வகை நிலைத் திணையின் வேர் (கிழங்கு), பட்டை, கட்டை, பிசின், இலை, பூ, கனி, வித்து என்னும் எண் வகை யுறுப்புகளையும் காரசாரச் சரக்கு களையும் சேர்த்து ஒன்றாக இடித்து, ஒரு பானையிலிட்டுப் பலநாட் குதவுமாறு சுண்டக் காய்ச்சி வடித்தெடுத்த கருக்கு* (சங்.அக.); a strong decoction of the roots, barks, woods, gums, leaves, flowers, fruits and seeds of several herbs, shrubs, creepers and trees, mixed up with some spices, boiled down to a certain degree and proportion with a view to preserve it for many days (சா.அக.). ''நான் காகச் செப்புவன்மை வேராதிகளை வெவ்வே றிடித்துச் சீவநீயத் தூறச் செய்தாக்கற் குடிநீ ரொப்பிலடை'' (தைலவ. தைல. பாயிர. 29).

*[அடை + குடி + நீர்.]*

**அடைக்குத்தகை** *aḍai-k-kuttagai,* பெ. (n.) *குத்தகைக்காரன் தவசமாகக் கொடுக்கும் அரசிறை;* revenue in the form of grain from land leased out by Government.

ம. அடக்காணம்

*[அடை + குத்தகை.]*

**அடைக்கெத்து** *aḍai-k-kettu,* பெ. (n.) *அடைக் கோழி சிறப்பாக இடுங்குரல்;* peculiar clucking of a brooding hen.

*[அடை + கெத்து.]*

'அடைக்கத்து' எனச் சில அகரமுதலிகள் குறிப்பது தவறாகும்.

**அடைக்கோழி** *aḍai-k-kōḻi*, பெ. (n.) ***அடை காக்குங் கோழி***; sitting hen.

ம. அடகோழி

[அடை + கோழி.]

**அடைகசாயம்** *aḍai-kaṡāyam*, பெ. (n.) அடைக் குடிநீர் பார்க்க; see *aḍai-k-kuḍi-nīr*.

**அடைகட்டி** *aḍai-kaṭṭi*, பெ. (n.) 1. ***கலப்பையி லொட்டும் மண்***; earth that sticks to the plough. 2. ***வண்டல் படிந்த மண்கட்டி***; a clod of silt, a lump of fine earth or clay (சா.அக.).

**அடைகட்டு-தல்** *aḍai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***நீர்ப்பெருக்கைத் தடுக்க அணைகட்டுதல்***; to construct a dam. 'அண்ட கடாகம் வெடித்து அடைகட்ட வேண்டும்படி' (திவ். அமலனாதி. 2, வியா.). 2. ***வண்டி நகராதபடி சக்கரத்திற்குமுன் தடைவைத்தல்***; to place a bar of wood or stone in front of a wheel of carriage to prevent it from moving. 3. ***தேர் வண்டிகளின் சக்கரத்தைத் தூக்க அடியில் முட்டுக்கொடுத்தல்***; to insert a piece of wood under a car or cart and thus lift the wheel out of a rut.

ம. அடயல்; க. அட்டுகட்டெ; தெ. அட்டு கட்ட.

**அடைகடல்** *aḍai-kaḍal*, பெ. (n.) ***கடற்கரை***; sea coast. 'அடைகட லென்பது அடையாகிய கடலென இருபெயர்ப் பண்புத்தொகை' (தொல். சொல். எச்ச. 23, சேனா. உரை).

**அடைகரை** *aḍai-karai*, பெ. (n.) ***கரைப்பக்கம்***; shore. "உரவுத்திரை பொருத திணிமண லடைகரை" (குறுந். 175).

**அடைகல்**[1] *aḍai-kal*, பெ. (n.) 1. ***பட்டடை***; anvil. "சுட்ட வல்லிரும் படைகலைச் சுடு கலா ததுபோல்" (கம்பரா. சுந்தர. பாச. 58). 2. ***நிலைக்களக் கற்படை***; stone base. "ஆமையாய் மேருத் தாங்கி யடைகலாய்க் கிடந்த போது" (சி. சி. பர. பாஞ்சரா. மறு. 11).

ம. அடகல்லு; க. அடெகல்லு; தெ. டாகல்லு; து. அட்டெ; கோத. அர்கல்.

**அடைகல்**[2] *aḍai-kal*, பெ. (n.) ***மதகடைக்குங் கல்***; stone placed at the mouth of a sluice to stop the flow of water.

**அடைகலம்** *aḍai-kalam*, பெ. (n.) ***சேமக்கலம், கோயில்களில் அடிக்கும் வட்ட மணி***; gong used in temples.

**அடைகா-த்தல்** *aḍai-kā-*, 4 செ.கு.வி. (v.i.) ***கோழி அவயங்காத்தல்***; to incubate, as a hen.

**அடைகாய்** *aḍai-kāy*, பெ. (n.) 1. ***வெற்றிலை பாக்கு***; betel and areca-nut. 2. ***ஊறுகாய்***; pickle (சா.அக.). 3. ***காயவைத்துப் பதப்படுத் திய காய்***; dried and preserved fruit (சா.அக.).

ம. அடுவந்து; க. அடுகாய்.

**அடைகிட-த்தல்** *aḍai-kiḍa-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ***கோழி அடைகாத்தல்***; to incubate, as a hen. 2. ***தங்கியிருத்தல்***; to abide, stay permanently. "முயலடை கிடக்குந் திங்கள்" (கூர்மபு. மேருவின். 16).

**அடைகியாழம்** *aḍai-kiyāḻam*, பெ. (n.) ***அடைக் கியாழம்*** பார்க்க; see ***aḍai-k-kiyāḻam***.

**அடைகு-தல்** *aḍaigu-*, 9 செ.கு.வி. (v.i.) ***சேர்தல்***; to reach. —, 5 செ.குன்றாவி. (v.t.) ***பெறுதல்***; to obtain. "புரையில் வீட்டின்ப மடைகு வான்" (வைராக். 17.).

[அடை → அடைகு. 'கு' சொல் விரிவிற்றுச் சாரியை.]

**அடைகுடி** *aḍai-kuḍi*, பெ. (n.) 1. ***சார்ந்த குடும்பம்***; dependent family. 'இவன் தானும் இவன் அடைகுடி.........ஆனைச்சாத்தனும்' (S.I.I. ii, 444). 2. ***பயிரிடுங்குடி***; cultivating tenant (S.I.I. ii, 250).

ம. அடகுடி; க. அட்டொக்கல்.

**அடைகுத்து-தல்** *aḍai-kuttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ***அடைமானம் வைத்தல்***; to mortgage. 'குடியொடுகுடி பெறும் விலைக்கு அடை குத்துக என்று' (S.I.I. v, 305).

**அடைகுளம்** *aḍai-kuḷam*, பெ. (n.) ***போக்கில்லாத குளம்*** (யாழ்ப்.); tank with no outlet (J.).

**அடைகுறடு** *aḍai-kuṟaḍu*, பெ. (n.) 1. ***கம்மியர் பட்டடை*** (பிங்.); anvil. 2. ***பற்றுக்குறடு***; tongs (W.).

ம. அடகொரடு

**அடைகொடு-த்தல்** *aḍai-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) ***நிலவிளைவில் அரசன் பங்கைச் செலுத்துதல்***; to pay the king's share of the produce (W.). 2. ***நிறைத்து வைத்தல்***; to fill up. 3. ***அடை மொழி முன்வைத்தல்***; to prefix an adjunct or epithet.

**அடைகொள்(ளு)-தல்** *aḍai-koḷ(ḷu)-*, 10 செ. குன்றாவி. (v.t.) 1. *பாதுகாப்பிற்காக ஒப் படைக்கப்பட்ட பொருளை ஏற்றுக்கொள்ளு தல்*; to accept a deposit for safe keeping. 'அடைகொண்டு பாழ்போக்குவா னொருவ னன்றே' (ஈடு, 5.10 : 5). 2. *நிலத்தை ஒற்றி யாகப் பெறுதல்;* to take a land on mortgage. 'இலட்சுமண நம்பி அடைகொண்ட நிலமும்' (S.I.I. iv, 81).

**அடைகொளி** *aḍai-koḷi*, பெ. (n.) *அடைமொழி யென்னும் சிறப்பிக்கும் சொல்லைக் கொண் டது (விசேடியம்)* (நன். 401, சடகோ. உரை); that which is qualified.

[அடை + கொள் + இ. 'இ' உடைமை குறித்த ஈறு.]

**அடைகோட்டை** *aḍai-kōṭṭai*, பெ. (n.) *முற்றுகை யிடப்பட்ட கோட்டை*; a besieged fort.

**அடைகோழி** *aḍai-kōḻi*, பெ. (n.) *அடைக்கோழி* பார்க்க; see *aḍai-k-kōḻi*.

**அடைகோன்** *aḍai-kōṉ*, பெ. (n.) *அடைக்குந் திருகு*; stop-cock (சா.அக.).

**அடைச்சீட்டு** *aḍai-c-cīṭṭu*, பெ. (n.) *வரிப் பற்று முறி* (யாழ்ப்.); receipt for payment of tithe or tax (J.).

[அடை + சீட்டு.]

**அடைச்சு-தல்** *aḍaiccu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *அடைவித்தல், சேரச்செய்தல்;* to put, place. "அடைச்சிய கோதை பரிந்து" (கலித். 51:2-3). 2. *செருகுதல்* (சூடா.); to insert, stick in, as flower in the hair. 3. *உடுத்துக்கொள்ளுதல்*; to clothe or wrap oneself in. "நெடுந் தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி" (மதுரைக். 588). 4. *பொத்துதல்*; to shut, to close. "கையாற் செவிமுத லடைச்சிச் சொன்னாள்" (சீவக. 1048).

க. அடசுவிகெ

[அடைத்து → அடைச்சு.]

**அடைசல்** *aḍaišal*, பெ. (n.) *பொருள் நெருக்கம்*; crowded condition, density.

[அடைத்தல் → அடைச்சல் → அடைசல்.]

**அடைசாரல்** *aḍai-šāral*, பெ. (n.) *பருவகாலத்து அடைமழை*; heavy monsoon rains. 'ஆனி முற்சாரல், ஆடி அடைசாரல்' (பழ.).

**அடைசீலை** *aḍai-šīlai*, பெ. (n.) *பாளச்சீலை*; cloth steeped in a medicinal preparation and put in the mouth for sore throat (W.). — 1. *காரச்சீலை*; a corrosive plaster used in the treatment of abnormal or morbid growth of flesh or sores. 2. *மருந்துச் சீலை*; plaster. 3. *புண்ணின் வாயில் மருந்திட்டு அடைக்கப் பட்ட சீலை*; cloth soaked in medicine and plugged as is done to the mouth of a sinus-sore (சா.அக.).

**அடைசு-தல்** *aḍaišu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *அடை தல்* (சங்.அக.); to reach. 2. *கிட்டுதல்*; to get near. 3. *நெருங்குதல்*; to crowd, get close together. "அஞ்சு பூத மடைசிய சவடனை" (திருப்பு. 638). 4. *பொருந்துதல்;* to be joined, placed. 'உள்ளே சீலை யடைசின...... சட்டை' (சீவக. 819, நச். உரை). 5. *ஒதுங்கு தல்*; to deviate, recede, give place, make room. அடைசி நில் (உ.வ.). —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *நெருங்கச் சொரிதல் அல்லது எய்தல்*; to shower upon. "அழுந்த வாளியொன்று பத்துநூறு வன்பொ டடைசினான்" (பாரத. பதினான். 30). 2. *நெருக்குதல்*; to press hard, exert pressure upon.

க. அடசு

[அடைத்து → அடைச்சு → அடைசு.]

**அடைசுபலகை** *aḍaišu-palagai*, பெ. (n.) 1. *வாயிற் கதவாகச் செருகுபலகை*; boards inserted into grooves to form a door (W.). 2. *கதவுநிலைகளின்மேல் வைக்குஞ் சூரிப் பலகை*; plank placed above the lintel of a door frame (W.).

க. அடவு, அட்டுவலகெ.

**அடைசுபொட்டணம்** *aḍaišu-poṭṭaṇam*, பெ. (n.) *அடைசீலை* பார்க்க; see *aḍai-šīlai*.

**அடைசுமருந்து** *aḍaišu-marundu*, பெ. (n.) *வாய்ப் புண்ணிற்காகக் கொப்புளிக்கும் மருந்து நீர்;* any liquid preparation used for washing the mouth and the throat, gargle (சா.அக.).

**அடைசுவலை** *aḍaišu-valai*, பெ. (n.) *வலை வகை* (இ.வ.); a kind of net (Loc.).

**அடைசொல்** *aḍai-šol*, பெ. (n.) 1. (இலக்.) *அடைமொழி*; (Gram.) qualifying word. 2. (இலக்.) *ஈறு*; (Gram.) termination, ending of a word. 'கள்ளென்பது புன்மை அடை சொல்' (தக்க. 463, உரை).

**அடைத்தகுரல்** *aḍaitta-kural*, பெ. (n.) *கம்மிய குரல்*; hoarse, husky voice (W.).

**அடைத்தது** *aḍaittadu*, பெ. (n.) *இட்ட கட்டளை*; order or command given. "ஈதுனக் கடைத்த தென்ன" (கந்தபு. உற்பத். மேருப். 9).

**அடைத்து** *aḍaittu*, கு.வி.எ. (adv.) *முழுவதும்*; entirely, wholly. வீடடைத்து நூல்கள் (உ.வ.).

**அடைத்துப்பெய்-தல்** *aḍaittu-p-pey-*, 1. செ.கு.வி. (v.i.) *வானம் முகில் (மேகம்) மூடி, விடாது பெய்தல்*; to rain incessantly with the whole sky overcast.

[அடைத்து + பெய்.]

**அடைத்தேற்று-தல்** *aḍaitt(u)-ēṟṟu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *வருந்திக் கரும முடித்தல்* (ஈடு, 6.8:1); to accomplish with difficulty, as lifting water to an upper channel.

[அடைத்து + ஏற்று.]

**அடைதடையம்** *aḍai-taḍaiyam*, பெ. (n.) *பொய்யாய் உரிமைப்படுத்திய பொருள்* (இ.வ.); foisted property (Loc.).

[அடை + தடையம்.]

**அடைதூண்** *aḍai-tūṇ*, பெ. (n.) *கடைதறி*; pillar to which the churning rod is tied. "மத்து மந்தரம் வாசுகி கடைகயி றடைதூண் மெத்து சந்திரன்" (கம்பரா. பால. அகலிகை. மிகைப். 3-19).

[அடை + தூண்.]

**அடைந்தார்** *aḍaindār*, பெ. (n.) 1. *அடைந்தவர்*; those who have reached or arrived. 2. *அடைக்கலம் புகுந்தவர்*; refugees. 3. *நண்பர்*; friends. 4. *இறந்துபோனவர்*; those who have passed away, the dead.

**அடைந்தெழுந்திடுதல்** *aḍaindeḻundiḍudal*, பெ. (n.) *கண்ணில் நீர் வடிந்து விழி கடுத்து, இமைகள் வீங்கிக் கண் சிவந்து, எரிச்சலுண்டாகிப் பீளைகட்டுவதும்; பூச்சி யூர்வதுபோலரிப்புண்டாக்கி, மூக்கில் நீர்வடிவதுடன் அடுத்தடுத்து வலியையும் உண்டாக்குவதுமான ஒரு நோய்*; a kind of ophthalmia characterised by itching sensation, water running through the nose and intermittent pain in the eyes (சா.அக.).

**அடைந்தோர்** *aḍaindōr*, பெ. (n.) 1. *அடைக்கலம் புகுந்தவர்*; those who have taken refuge. "அடைந்தோர் தம்மை யேமுற வினிதி னோம்பி" (கம்பரா. யுத்த. வீடண. 111). 'அடைந்தோரை ஆதரி' (பழ.). 2. *சுற்றத்தார்* (சது.); relatives.

**அடைநிலப்பீர்க்கு** *aḍai-nila-p-pīrkku*, பெ. (n.) *அதளை*; species of bitter luffa.

**அடைநிலை** *aḍai-nilai*, பெ. (n.) *கலிப்பாவி னுறுப்பாகிய தனிச்சொல்* (தொல். பொருள். செய். 131); detached foot that is a constituent of *kali* verse.

**அடைநேர்-தல்** *aḍai-nēr-*, 2 செ.குன்றாவி. (v.t.) *மகட்கொடைக்கு உடம்படுதல்*; to agree to give one's daughter in marriage. 'தலைவர்க்கே நம்மை அடைநேர்ந்தில ராயினும்' (குறிஞ்சிப். 23, நச். உரை).

**அடைப்பக்காரன்** *aḍaippa-k-kāraṉ*, பெ. (n.) 1. *வெற்றிலைப் பை வைத்துக்கொண்டு அரசர்க்கும் பெருமக்கட்கும் வெற்றிலை மடித்துக் கொடுக்கும் வேலைக்காரன்*; servant who carries the betel pouch, and gives folded betel leaves to kings and nobles for chewing. 2. *முடிதிருத்துபவர்*; barber.

ம. அடப்பக்காரன்; க. அடபதார; தெ. அடபதாண்டு.

[அடை + பை + காரன் (உடையானைக் குறிக்கும் ஈறு) – அடைப்பைக்காரன் → அடைப் பக்காரன். அடை = வெற்றிலை.]

அடைப்பைக்காரன் பார்க்க; see *aḍai-p-pai-k-kāraṉ*.

**அடைப்படி** *aḍai-p-paḍi*, பெ. (n.) *அடைமானம்* (S.I.I. iii, 307); pledge.

[அடை + படி.]

**அடைப்பம்**[1] *aḍaippam*, பெ. (n.) 1. *வெற்றிலைப் பை*; betel pouch. 2. *மஞ்சிகன் (நாவிதன்) கருவிப் பை*; barber's razor case. 3. *பண்டங்கள் பெய்யும் பை* (சங்.அக.); bag for keeping miscellaneous things in. 4. *அடைப்பக்காரன்* (I. M. P. N.A. 195); servant serving betel.

ம. அடப்பம்; க., து. அடப்ப; தெ. அடப்பமு; பிரா. ஓதப்ப.

[அடைப்பை → அடைப்பம்.]

**அடைப்பம்**[2] *aḍaippam*, பெ. (n.) *அடைக்கும் பொருள்*; a stopper or a plug (சா.அக.).

*[அடைப்பு + அம்.]*

**அடைப்பன்**[1] *aḍaippaṉ*, பெ. (n.) 1. *வரவெக்கை நோய்* (G. Tj. D. i, 11); aggravated constipation, a cattle disease. 2. *மாடுகளுக்குத் தொண்டையில் வரும் ஒரு வெக்கைநோய்*; inflammation of the throat or parts adjacent to it, a common disease among cattle, Anthrax (*சா.அக.*).

ம. அடப்பாம்குரு

**அடைப்பன்**[2] *aḍaippaṉ*, பெ. (n.) *கடுக்காய்*; Indian gall-nut, *Terminalia chebula* (சா.அக.).

**அடைப்பன்கட்டு** *aḍaippaṉ-kaṭṭu*, பெ. (n.) 1. *ஆடுமாடுகளுக் குண்டாகும் ஒருவகை வெக்கை நோய்*; a splenic fever in sheep and cattle caused by minute organisms introduced into the blood, Malignant anthrax. 2. *ஆடு மாடுகளின் அடப்பன்கட்டு நோயினால் மாந்தருக்கு முண்டாகும் தொண்டையடைப்பு*; a malignant pustule caused in men by infection from the animals so affected, contagious anthrax (*சா.அக.*).

**அடைப்பாசாரம்** *aḍaippāšāram*, பெ. (n.) *காற்றோட்டமின்மை* (சேலம்); want of ventilation (Sm.). இந்த வீடு அடைப்பாசாரமா யிருக்கிறது (உ.வ.).

*[அடைப்பு + (ஒருகா.) ஆசாரம் (அரசர்வாழ் கூடம்).]*

**அடைப்பான்** *aḍaippāṉ*, பெ. (n.) 1. *கால்நடை நோய்வகை* (கால். வி.15); anthrax. 2. *அடைக்கும் மூடி*; plug, stopper, cork.

**அடைப்பான்வந்தை** *aḍaippāṉ-vandai*, பெ. (n.) *அடைப்பான் நோயை உண்டாக்கும் பூச்சி* (கால். வி. 25); anthrax parasite.

**அடைப்பிரதமன்** *aḍai-p-piradamaṉ*, பெ. (n.) *கன்னலமுது (பாயச) வகை*; a kind of porridge.

ம. அடப்பிரதமன்

*[அடை + ம. பிரதமன்.]*

**அடைப்பு** *aḍaippu*, பெ. (n.) 1. *மூடுகை*; shutting, closing, stopping. 'அடைப்பைப் பிடுங்கினால் பாம்பு கடிக்கும்' (பழ.). 2. *வேலி* (பிங்.); fence, enclosure. 3. *தடை*; obstruction. இது காற்றடைப்பான இடம் (உ.வ.). 4. *அடைக்கும் மூடி*; plug, stopper, cork. 5. *படற்கதவு*; door or small gate of braided palm leaves or thorns but not of boards. 6. *வாரச் சாகுபடி, குத்தகை*; lease. 7. *நோய் வகை*; a disease. "சிகைபிடித் தீர்த்தோர் அடைப்புநீர்க் கடுப்புக்கல் லெரிப்பர்" (கடம்ப. பு. இலீலா. 146). 8. *அடைப்பக் காரன்*: servant serving betel (M.E.R. 205 of 1919).

ம. அடப்பு; க., து. அட்டு; தெ. அட்டமு; கோத. அட்வ்; துட. அட்ப்; குட. அட; மா. அடரெ; பர். அட்டொம்; பிரா. அர், அரி.

*[அடை → அடைப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அடைப்புக்கருக்கு** *aḍaippu-k-karukku*, பெ. (n.) *கட்டடங்களின் வெற்றிடங்களை நிரப்பும் (அடைக்கும்) ஓவிய வேலைப்பாடு*; floral or other ornamental designs sculptured on walls and pillars, architecturally intended to fill up empty spaces in a building. 'கட்டடங்களின் குறிப்பிட்ட ஒருசில வெற்றிடமான பகுதி களை இலை, கொடி, பூக்கள் செறிந்த கருக் கமைப்பால் நிரப்பி, அணிபெறச்செய்தல் ஒரு விதக் கலை வழக்காகும். இதற்கு அடைப்புக் கருக்கு என்று பெயர்' (சி. செ. பக். 116, பத்தி 2).

*[அடை → அடைப்பு. 'பு' தொ. பெ. ஈறு. கரு → கருக்கு = பொறித்த ஓவியம்.]*

**அடைப்புக்குச்சு** *aḍaippu-k-kuccu*, பெ. (n.) 1. *தக்கை*; cork (சா.அக.). 2. *குப்பி மூடி*; stopper (சா.அக.).

*[அடைப்பு + குச்சு.]*

**அடைப்புக்குழல்** *aḍaippu-k-kuḻal*, பெ. (n.) *தண்ணீர்க்குழாய்த் திருப்பு மூடி*; a turning cock used for stopping or regulating the flow of water, liquids or gases in a pipe, stop-cock (சா.அக.).

*[அடைப்பு + குழல்.]*

**அடைப்புண்(ணு)-தல்** *aḍaippuṇ(ṇu)-*, (*13*) செ. கு.வி. (v.i.) *ஒன்றனுள் அடங்குதல்*; to be included. 'கழிந்தவற்றிலும் வருமவற்றிலும் அடைப்புண்ணுமிறே வர்த்தமானம்' (ஈடு, *1.1 : 4*).

*[அடைப்பு + உண்.]*

**அடைப்புமுதலிகள்** *aḍaippu-mudaligaḷ*, பெ. (n.) **அவையின் கருமத் தலைவர்** (M.E.R. 191 of 1925); executive officers of an assembly.

**அடைப்பை** *aḍai-p-pai*, பெ. (n.) 1. **வெற்றிலைப் பை**; betel pouch. "செம்பொனடைப்பையுட் பாகு செல்ல" (சீவக. 1303). 2. **பாக்கு, வெற்றிலை, அட்டிகம் (சாதிக்காய்), ஏலம் முதலிய நறும்பொருள்கள் வைத்திருக்கும் பை** (பெரியபு. தடுத். 187, உரை); bag containing spices, such as areca-nut, betel, nutmeg, and cardamom.

ம. அடப்பன்; க., து. அடப; தெ. அடப்பமு.

[அடை + பை.]

**அடைப்பைக்காரன்** *aḍai-p-pai-k-kāraṉ*, பெ. (n.) **வெற்றிலை மடித்துக் கொடுக்கும் வேலைக்காரன்**; servant who serves betel leaves rolled up with the required spices.

ம. அடப்பக்காரன்

[அடை + பை + காரன் (உடையவனைக் குறிக்கும் ஈறு).]

**அடைப்பைகட்டு-தல்** *aḍai-p-pai-kaṭṭu-*, 5 செ. கு.வி. (v.i.) **வெற்றிலை மடித்துக் கொடுத்தல்**; to prepare and serve rolls of betel leaves with spices for chewing. 'பிரதாபருத்திரனிடத்திற் போய் அவன் அடைப்பை கட்டிவரக் கம்பர் பாடிய வெண்பா' (பெருந்தொ. 1203).

[அடை + பை + கட்டு.]

**அடைப்பையான்** *aḍai-p-paiyāṉ*, பெ. (n.) **அடைப்பைக்காரன்** பார்க்க; see *aḍaippai-k-kāraṉ*. 'அடைப்பையான் கொள்ளச் சிறுகோல் கொடுத்தான்' (பெருந்தொ. 863).

[அடை + பை + ஆன்.]

**அடைபடு-தல்** *aḍai-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. **அடைக்கப்படுதல்**; to be shut or enclosed. 'அடைபட்டுக் கிடக்கிறான் செட்டி, அவனை அழைத்துவா, பணம் பாக்கி என்கிறான் பட்டி' (பழ.). 2. **முடிதல்**; to be completed. 3. **கடன் தீர்தல்**; to be paid up, as debt.

[அடை + படு.]

**அடைபுடை** *aḍai-puḍai*, பெ. (n.) 1. **அக்கம் பக்கம்**; surroundings. 2. **இராப்பகல்**; day and night. "அடைபுடை தழுவி அண்டநின் றதிரும்" (திவ். பெரியதி. 4.10 : 3).

**அடைபொருள்** *aḍai-poruḷ*, பெ. (n.) **தேட்டுப் பொருள்**; earnings. 'அடைபொருள் கருதுவிராயின்' (இறை. 28, உரை, பக். 169).

**அடைமண்** *aḍai-maṇ*, பெ. (n.) 1. **கலப்பையிலொட்டும் மண்** (யாழ்.அக.); earth that sticks to the plough. 2. **வண்டல் மண்**; silt, alluvium. 3. **பொருக்கு மண்**; sand and clay mixed with gravel and pebbles (சா.அக.).

அடை + மண். அடு → அடை = ஒட்டுதல்.]

களிமண், மணல் என்னும் பொருள் இச் சொற்குப் பொருந்துவதாய்த் தோன்றவில்லை.

**அடைமதிற்படு-தல்** *aḍai-madiṟ-paḍu-*, 20 செ. கு.வி. (v.i.) **முற்றுகையிடப்படுதல்**; to be besieged. 'நெடுநாட்பட அடைமதிற்பட்ட காலத்தே விளைத்துக் கோடற்கு' (பதிற். 16 : 2, உரை).

[அடை + மதில் + படு.]

**அடைமழை** *aḍai-maḻai*, பெ. (n.) **விடாமழை, அடைத்துப் பெய்யும் மழை**; continuous rain from an overcast sky. 'ஐப்பசி அடைமழை, கார்த்திகை கனமழை', 'அடைமழைக்குக் குடை இல்லாதவனுக்கு ஐந்து பெண்டாட்டியாம்', 'அடைமழையில் நாற்று நட்டால் ஆற்றோடு போகும்', 'அடைமழை விட்டும் செடிமழை விடவில்லை' (பழ.).

ம. அடமழ; க. அட்டமழெ.

[அடை + மழை. அடை = அடைத்தல்.]

**அடைமாங்காய்** *aḍai-māṅgāy*, பெ. (n.) 1. **மாங்காய் ஊறுகாய்**; mango pickle. 2. **உப்பிட்டுக் காயவைத்த மாங்காய்**; dried, salted mango (சா.அக.).

ம. அடமாஙஙு; க. அட; து. அடங்காயி.

[அடை + மாங்காய்.]

**அடைமானம்** *aḍai-māṉam*, பெ. (n.) 1. **கொதுவை**; pledge, property mortgaged. 2. **(தொல்லை தீரும்) வழிவகை**; help, remedy, means. 3. **உவமை** (யாழ்.அக.); resemblance, comparison. 4. **ஒப்பானது, ஈடானது, படி (பிரதி)**; equivalent (W.).

ம. அடமானம்; க., பட. அடமான; தெ. அட்டமு, அடமானமு; து. அடவு.

[அடை + மானம் (ஈறு).]

**அடைமானவோலை** *aḍaimāṉa-v-ōlai*, பெ. (n.) *அடைமான ஆவணம் (பத்திரம்)*; mortgage deed, deed of hypothecation.

*[அடைமானம் + ஓலை.]*

**அடைமுதற்பற்று** *aḍai-mudaṟ-paṟṟu*, பெ. (n.) *குடிகட்குப் பற்றடைக்கப்பட்ட நிலம்* (M.E.R. 209 of 1925); land leased out to tenants.

*[அடை + முதல் + பற்று.]*

**அடைமொழி** *aḍai-moḻi*, பெ. (n.) (இலக்.) *தழுவும் சொல் அல்லது சொற்றொடர் (விசேடணம்)*; (Gram.) qualifying word or phrase, attribute, adjunct. "அடைமொழி யினமல் லதுந்தரும்" (நன். 402).

**அடைய** *aḍaiya*, கு.வி.எ. (adv.) *முழுவதும்*; completely, thoroughly, altogether. "கோயி லடைய விளக்கேற்றி" (பெரியபு. நமிநந்தி. 14).

**ம.** அடய, அடவெ.

**அடையங்கம்** *aḍaiyaṅgam*, பெ. (n.) *உழுந்து*; black gram, *Phaseolus mungo.*

**அடையடிமை** *aḍai-y-aḍimai*, பெ. (n.) *விலைக்குப்பெற்ற அடிமையாள்* (இ.வ.); purchased slave (Loc.).

*[அடை + அடிமை.]*

**அடையடுத்தவாகுபெயர்** *aḍai-y-aḍutta-v-āgu-peyar*, பெ. (n.) *ஆகுபெயர்வகை*; metonymical synecdochical expr. invariably including a qualifying word. " 'வெற்றிலை நடு', 'மருக் கொழுந்து நட்டான்', 'திருவாசகம்' என்ப வற்றில், வெறு மரு திரு என்னும் அடை மொழிகளால் அடுக்கப்பட்ட இலை, கொழுந்து, வாசகம் என்பன ஆகுபெய ராதலால், இவை அடையடுத்த ஆகுபெயர்" (நன். 290, சடகோ. உரை).

*[அடை + அடுத்த + ஆகுபெயர்.]*

**அடையல்** *aḍaiyal*, பெ. (n.) 1. *அடைகை*; reaching. "சாயலு ளடையலுற் றிருந்தேன்" (தேவா. 7.58 : 7). 2. *அடைந்த பொருள்*; acquired thing or property. 3. *எல்லாம்*; all. 4. *செருப்புவகை*; a kind of sandals. "புரிமென் பீலிப் போழ்புனை யடையல்" (பரிபா. 21 : 7). 5. *நீர் தெளிதலா லுண்டான அடிமண்டி அல்லது வண்டல்*; a substance deposited from a liquid in which it had remained suspended, precipitate (சா.அக.).

*[அடை + அல். 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அடையலர்** *aḍaiyalar*, பெ. (n.) *பகைவர்* (பிங்.); enemies, foes. "அடையலர் தம்மை வென்று" (கந்தபு. யுத்த. அக்கினி. 131). 'அடையலரை அடுத்து வெல்லு' (பழ.).

**ம.** அடயலர்

*[அடை + அல் + அர். 'அல்' எ.ம.இ.நி.]*

**அடையலவர்** *aḍaiyal-avar*, பெ. (n.) *அடையலர் பார்க்க*; see *aḍaiyalar*. "அடையலவ ராவி வெருவ" (திருப்பு. 4).

**ம.** அடயலர்

**அடையலார்** *aḍaiyalār*, பெ. (n.) *அடையலர் பார்க்க*; see *aḍaiyalar*.

*[அடை + அல் + ஆர். 'அல்' எ.ம.இ.நி.]*

**அடையவளைஞ்சான்** *aḍaiya-vaḷaiñjāṉ*, பெ. (n.) 1. *கோயிலின் வெளிச்சுற்றுமதிற் புறத்தெரு*; street surrounding the outermost walls of a temple. 'அடையவளைஞ்சான் தளவிசை படுப்பித்தார்' (S.I.I. i, 84). 2. *அடையவளைந் தான் பார்க்க*; see *aḍaiya-vaḷaindāṉ*.

*[அடையவளைந்தான்→அடையவளைஞ்சான் (கொ.வ.).]*

**அடையவளைந்தான்** *aḍaiya-vaḷaindāṉ*, பெ. (n.) 1. *அடையவளைஞ்சான்*; street surrounding the outermost walls of a temple. 2. *தட்டுச் சுற்று வேட்டி*; cloth tied around the waist and hanging down to the ankles. 3. *ஈட்டின் ஓர் அருஞ்சொல் லுரை*; one of the glosses for the commentary *Īḍu.*

**அடையன்** *aḍaiyaṉ*, பெ. (n.) *கடுக்காய்*; gall-nut (T.C.M. ii, 2, 429), *Chebulic myrobalan.*

**அடையாண்கிளவி** *aḍaiyāṇ-kiḷavi*, பெ. (n.) *குழூஉக்குறிபோல் வழங்கும் அடையாளச் சொல்*; word used for recognition, pass-word. "அறியக் கூறிய அடையாண் கிளவியும்" (பெருங். உஞ்சைக். 56 : 184).

*[அடையாளம் + கிளவி – அடையாளங் கிளவி → அடையாண்கிளவி. கிளவி = சொல்.]*

**அடையாதவர்** *aḍaiyādavar*, பெ. (n.) *பகைவர்*; enemies, foes. "அடையாதவர் மூவெயில் சீறும் விடையான்" (தேவா. 1.37 : 7).

[அடையாத + அவர் – அடையாதவர் (வினையா. பெ.)]

**அடையாதார்** *aḍaiyādār*, பெ. (n.) அடையாதவர் பார்க்க; see *aḍaiyādavar*.

**அடையார்** *aḍaiyār*, பெ. (n.) அடையாதவர் பார்க்க; see *aḍaiyādavar*. "அடையார்தம் புரங்கள்" (தேவா. 1.65 : 1).

**அடையாள்** *aḍaiyāḷ*, பெ. (n.) வேலையாள் (S.I.I. vii, 72); servant.

[அடை + ஆள்.]

**அடையாளக்காரர்** *aḍaiyāḷa-k-kārar*, பெ. (n.) அரச விருதுகளையும் எடுபிடிகளையும் பிடித்துச் செல்வோர் (ரஹஸ்ய. 587); persons who carry the insignia of royalty or royal paraphernalia.

[அடையாளம் + காரர்.]

**அடையாளப்பூ** *aḍaiyāḷa-p-pū*, பெ. (n.) அரசக் குடியின் அடையாளமாக அணியும் பூ; particular flower worn as a symbol, as of a dynasty. 'இப் பாட்டு.........வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம் என அடையாளப்பூக் கூறின மையின், அகமாகாதாயிற்று' (நெடுநல். நச். முன்னுரை).

[அடையாளம் + பூ.]

**அடையாளம்** *aḍaiyāḷam*, பெ. (n.) 1. அறிகுறி; mark, symbol, emblem, seal, sign. "அந்தமில் குணங்கள் செய்கை யாதியா வடையா ளங்கண் முந்தையின் வழுவா வண்ணம் முறையினான் மொழிந்தான் முன்னோன்" (திருவிளை. மாமனாக. 32). "தவத்தைச் சிதைத்ததுமோ ரடையாளம்" (திவ். பெரியாழ். 3.10 : 1). 2. நோய்க்குறி; symptoms of diseases. தழும்பு (scar) முதலியனவும் அறிகுறியுள் அடங்கும்.

ம. அடயாளம்; க. அடயாள; தெ. அடியாளமு; துட. ஒட்யோள்ம்.

**அடையுண்(ணு)-தல்** *aḍai-y-uṇ(ṇu)-*, (13) செ.கு.வி. (v.i.) அடைபடுதல்; to be shut up or enclosed. 'புலிக்குட்டி கூட்டிடத்தே அடையுண் டிருந்து' (பட்டினப். 221, நச். உரை).

[அடை + உண்.]

**அடையுணி** *aḍai-y-uṇi*, பெ. (n.) ஒருவரைச் சார்ந்து உண்பவ-ன்-ள்; one depending on another for food.

[அடை + உண் + இ. 'இ' உடைமை குறித்த ஈறு.]

**அடையெழுது-தல்** *aḍai-y-eḻudu-*, 5 செ.குன்றா வி. (v.t.) கணக்கிற் பதிவுசெய்தல்; (S.I.I. iv, 150); to make an entry in an account.

[அடை + எழுது.]

**அடையோடறுதல்** *aḍaiyōḍaṟudal*, பெ. (n.) ஒரு வகைக் கண்ணோய்; a kind of eye-disease (சா.அக.).

**அடையோலை** *aḍai-y-ōlai*, பெ. (n.) அடைமான ஆவணம் (பத்திரம்) (I.M.P. S.A. 15); *ōla* document serving as evidence of pledge.

ம. அடயோல

[அடை + ஓலை.]

**அடைவளைந்தார்** *aḍai-vaḷaindār*, பெ. (n.) கள்ளர்குலப் பட்டப் பெயர்களுள் ஒன்று (கள்ளர் சரித். பக். 145); a title of Kaḷḷars.

[அடையவளைந்தார் → அடைவளைந்தார். அடைய = முழுதும். வளைதல் = முற்றுகையிடுதல்.]

**அடைவாகவுண்ணல்** *aḍaiv(u)-āga-v-uṇṇal*, பெ. (n.) தொடர்ச்சியாய் மருந்துண்ணல்; taking medicine continuously (சா.அக.).

[அடைவு + ஆக + உண்ணல்.]

**அடைவிக்கச்சோலம்** *aḍaivi-k-kaccōlam*, பெ. (n.) அடவிக்கச்சோலம் பார்க்க; see *aḍavi-k-kaccōlam*.

[அடவி → அடைவி + கச்சோலம்.]

**அடைவு** *aḍaivu*, பெ. (n.) 1. அடைகை; arrival, joining, acquisition. 2. புகலிடம்; refuge. "அடைவிலோ மென்றுநீ யயர்வொழி" (தேவா. 3.282 : 5). 3. பறவைகள் தங்குமிடம்; roosting place for birds. 4. கொதுவை; pledge (W.). 5. வரலாறு; origin, history. "கயிலையி னடைவு சொற் றாம்" (காஞ்சிப்பு. வீரரா. 1). 6. வழி (பிங்.); path, way. 7. வகை; kind, manner. 8. முறை; order, course. "அடைவீன் றளித்த" (கல்லா. 6 : 35). "அங்கதி னொருசில வடைவிற் கூறுகேன்" (கந்தபு. அவையட. 12). 9. நிரனிறையணி (வீரசோ. அலங். 12); a figure of speech indicating the arrangement of two or more groups of words in their respective order. 10. ஒப்புமை; resemblance, similarity. 11. எல்லாம்; all. 12. துணை; help, aid. "நின்னை யடைவாக வுடன்போந்தேன்"

(பெரியபு. திருஞான. 475). 13. தகுதி; fitness, propriety (W.). 14. ஏது; cause, occasion. ''அடைவு துன்புறு வதற்கிலை'' (பெரியபு. திருஞான. 1066). 15. ஆம்பல்; water-lily, *Nymphaea edulis* (சா.அக.)

ம. அடவு; க. அடவு.

*[அடை → அடைவு.]*

**அடைவுகேடு** *aḍaivu-kēḍu*, பெ. (n.) முறைத் தவறு, முறைகேடு, ஒழுங்கின்மை; irregularity, impropriety, disorder, derangement.

**அடைவுசரக்கு** *aḍaivu-šarakku*, பெ. (n.) கற்பூரவகை (சிலப். 14 : 109, அடியார்க். உரை); a kind of camphor.

**அடைவுபடு-தல்** *aḍaivu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) ஒழுங்காதல் (திவ். திருநெடுந். 22, வியா.); to be in order, orderly.

**அடைவே** *aḍaivē*, கு.வி.எ. (adv.) 1. ஒழுங்காக; regularly, in an orderly manner. 2. நெடுக; along. 'கரையடைவே போன வாய்க் காலுக்கும்' (S.I.I. ii, 103).

ம., க. அடவு.

*[அடைவு + ஏ.]*

**அடைவை-த்தல்** *aḍai-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. அடைகாக்கும்படி கோழியை முட்டை களின்மேல் வைத்தல்; to make a hen sit on eggs for incubation. 2. தேன்கூடுகட்டுதல்; to build a hive, as bees. தேன் அடைவைத் திருக்கிறது (உ.வ.).

*[அடை + வை.]*

**அண்** *aṇ*, பெ. (n.) 1. மேல், மேற்பக்கம் (சங்.அக.); upper part. 2. வேட்டைநாயின் உருவுகயிறு; leash for dogs, running knot (W.). 3. தடியில் வெட்டிய வரை (இராட்.); notch, indentation made in a stick (R.).

ம., க. அண்.

*[உ → உண் → ஒண் → அண். அண் = மேல், மேல்வாய். அண்பல் = மேல்வாய்ப் பல்.]*

அண்ணம் = மேல்வாய்ப்புறம். அண்ணல் = மேலோன், தலைவன், அரசன், கடவுள். அண்ணன் = மேலோன், மூத்தோன், தமையன். அண்ணாத்தல் = மேனோக்குதல். அணத்தல் = தலையெடுத்தல், தலைதூக்குதல். அணர்தல் = மேனோக்கியெழுதல். அணர் = மேல்வாய்ப்புறம். அணரி = மேல்வாய்ப்புறம். அணவுதல் = மேனோக்கியெழுதல். அணிதல் உடம்பின்மே விடுதல் (to put on).

**E.** *on*, prep.—**ME.**, fr. **OE.** *on*, *an*, rel. to **OS.** *an*, **ON.** *á*, **Du.** *aan*, **OHG.** *ana*, **MHG.** *ane*, **G.** *an*, **Goth.** *ana*, 'on, upon', and cogn. with Avestic *ana*, 'on', **Gk.** *ανα*, **OSlav.** *na*, **OPruss.** *no*, *na*, 'on, upon'.

**E.** *on*, n., the on or leg side of the field.

**Fr.** *on*, adj.

**அண்டக்கட்டு-தல்** *aṇḍa-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) வீங்குதல்; to swell, as on account of a boil. —, 5 செ.குன்றாவி. (v.t.) முட்டித் தாங்க வைத்தல்; to prop up, support, buttress.

*[அண்ட + கட்டு. அண்டுதல் = நெருங்குதல், முட்டுதல், முட்டித் தாங்குதல்.]*

**அண்டக்கொடு-த்தல்** *aṇḍa-k-koḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) அண்டக்கட்டு-தல் பார்க்க; see *aṇḍa-k-kaṭṭu-*.

*[அண்ட + கொடு.]*

**அண்டகம்** *aṇḍagam*, பெ. (n.) குப்பைமேனி (மலை.); Indian acalypha.

**அண்டங்காக்கை** *aṇḍaṅ-kākkai*, பெ.(n.) பெரியதும், முற்றும் மிகக் கரியதுமான காட்டுக் காக்கை (பிங்.); Indian raven, a big jet black jungle crow, *Corvus mactorhyncus*. 'அண்டங் காக்காய்குழறுகிறாப் போலே' (பழ.).

ம. அண்டன்காக்க



அண்டங்காக்கை

**அண்டங்காகம்** *aṇḍaṅ-kāgam*, பெ. (n.) அண்டங்காக்கை பார்க்க; see *aṇḍaṅ-kākkai*.

**அண்டநாடு** *aṇḍa-nāḍu*, பெ. (n.) பாண்டி நாட்டின் ஒரு பகுதி (I.M.P. ii, 62); a sub-division of the *Pāṇḍya* (country) Kingdom.

**அண்டப்பார்-த்தல்** *aṇḍa-p-pār-*, 4 செ.குன்றா வி. (v.t.) பொருந்தச் செய்தல்; to unite, join.

*[அண்டு → அண்ட + பார்.]*

**அண்டர்**[1] *aṇḍar*, பெ. (n.) இடையர்; herdsmen, cowherds, shepherds. "அண்டர் மிண்டிப் புகுந்துநெய் யாடினார்" (திவ். பெரியாழ். 1.1 : 5).

ம. அண்டர்; சிங். எண்டேர.

[அண்டுதல் = நெருங்குதல். அண்டு → அண்டர் = நெருங்கி அல்லது சேர்ந்து குடியிருப் பவர். ஒ.நோ: சேர் → சேரி = வீடுகள் சேர்ந்து அல்லது நெருங்கியுள்ள இடையருர்.]

**அண்டர்**[2] *aṇḍar*, பெ. (n.) பகைவர்; foes, enemies. "கால்வல் புரவி யண்ட ரோட்டி" (பதிற். 88 : 9).

ம. அண்டர்

[அண்டார் → அண்டர்.]

**அண்டர்நிலை** *aṇḍar-nilai*, பெ. (n.) பொன்னாங் கண்ணி (தைலவ. பாயி. 57); species of *Alternanthera* (L.). — an edible plant with yellow flowers, *Illecebrum sessile* (சா.அக.).

**அண்டலர்** *aṇḍalar*, பெ. (n.) பகைவர்; foes, enemies. "அண்டல ரெனினுங் கண்டா லன்பு வைத்து" (யசோதர. 1 : 25).

ம. அண்டலர்

[அண்டு + அலர்.]

**அண்டாதவன்** *aṇḍādavaṉ*, பெ. (n.) பகைவன்; foe, enemy. "அண்டா தவனாலெம் மகத் திலிரு ளுண்டாகிய தன்மை யுணர்ந்து" (கந்தபு. யுத்த. முதனாட். 351).

**அண்டாதோடல்** *aṇḍād(u)-ōdal*, தொ. பெ. (vbl. n.) நோய் திரும்பவும் வராமல் உடம்பைவிட் டகலல்; a permanent or radical cure (சா.அக.).

[அண்டாது + ஓடல்.]

**அண்டார்** *aṇḍār*, பெ. (n.) பகைவர்; foes, enemies. "அண்டார்தமக் கோரரியே." (கந்தபு. யுத்த. சிங்க. 470).

ம. அண்டார்

[அண்டாதவர் → அண்டாதார் → அண்டார்.]

**அண்டிக்கொட்டை** *aṇḍi-k-koṭṭai*, பெ. (n.) முந்திரிக்கொட்டை (நெல்லை); cashew-nut (Tn.).

ம. அண்டி

[அண்டி + கொட்டை. அண்டி = அடி.]

**அண்டிகம்** *aṇḍigam*, பெ. (n.) செந்நாய் (பிங்.); a wild dog, *Cyon dukhunensis* (L.). — a red wild dog, *Canis dukhenensis* alias *C. primaerus* (சா.அக.)

**அண்டிதள்ளுகை** *aṇḍi-taḷḷugai*, தொ. பெ. (vbl. n.) மலவாயின் (ஆசனத்தின்) உட்பகுதி வெளித்தள்ளல் (நெல்லை); *Prolapsus ani* (Tn.).

**அண்டிமா** *aṇḍimā*, பெ. (n.) மரமுந்திரி; cashew.

**அண்டிமாங்கொட்டை** *aṇḍi-māṅgoṭṭai*, பெ. (n.) மரமுந்திரிக்கொட்டை; cashew-nut.

ம. அண்டிமாங்ங

**அண்டிரன்** *aṇḍiraṉ*, பெ. (n.) 1. கடையெழு வள்ளல்களுள் ஒருவனான ஆய் அண்டிரன்; one of the last seven liberal chiefs in South Indian History. "ஆஅ யண்டிர னடுபோ ரண்ணல்" (புறநா. 129 : 5). 2. ஆடவன்; male human being. 3. சமர்த்தன்; clever or capable man. 4. மாந்தன் (சிந்தா. நி. 114); man.

தெ. அண்டீருண்டு

[ஆண் + திறம் – ஆண்டிறம் → ஆண்டிறன் = ஆண்டிறலோன், ஆண்டகை. ஒ.நோ: Gk. *anir, andros*, male.]

**அண்டில்** *aṇḍil*, பெ. (n.) மாடு, குதிரை முதலிய வற்றின் கண்ணிற் பற்றுமொரு பூச்சி (யாழ்ப்.); parasite that sticks to the eyes of cattle and horses (J.).

[அண்டு → அண்டில்.]

**அண்டுப்புழு** பார்க்க; see *aṇḍu-p-puḻu*.

**அண்டினவன்** *aṇḍiṉavaṉ*, பெ. (n.) தம்பிச் சேர்ந்தவன்; one who had taken refuge. "உற் றார் கன்மத்தா லண்டினவர்" (திருவாய். நூற். 81).

**அண்டீரன்** *āṇḍiraṉ*, பெ. (n.) (நாநார்த்த.) 1. ஆண்டகை; hero, warrior. 2. மாந்தன்; man.

தெ. அண்டீரண்டு, அண்டீரடு.

[அண்டிரன் → அண்டீரன்.]

**அண்டு-தல்** *aṇḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கிட்டுதல்; to approach. "அண்டினள் சேர் தலும்" (கந்தபு. தக்க. திருமண. 45). 2. ஏற் றல், பொருந்துதல்; to fit, to be appropriate to. "ஆகார மாமுவமைக் கண்டா தென்னும்" (ஞானவா. முமுட்சு. 27). 3. பற்றுக்கோடா கக் கொள்ளுதல்; to have as a support. ஒரு

வனை அண்டிப் பிழைக்க இடமில்லை (உ.வ.). 4. **ஒதுங்குதல்**; to take refuge in, retire for shelter. 'அண்ட நிழலில்லாமற் போனாலும் ஒண்ட அடியுண்டு' (பழ.). 5. **அழுந்துதல்** (சங்.அக.); to get pressed, to be impressed, to press hard.

**ம.** அண்டுக; **க.** அண்டிசு; **தெ.** அண்டு; **கோத.** அண்ட்.

*[அள் → அண் → அண்டு.]*

**அண்டு** *aṇḍu*, பெ. (n.) **மணிமாலை முதலியவற்றின் தனியுரு** (இ.வ.); unit in a string of beads, link in a chain (Loc.). அந்தத் தொடரிக்கு (சங்கிலிக்கு) இன்னும் நாலு அண்டு வேண்டும் (உ.வ.).

**தெ.** அண்டு

**அண்டுகம்** *aṇḍugam*, பெ. (n.) ஒரு பறவை; a kind of bird (சா.அக.).

**அண்டுதள்ளுகை** *aṇḍu-taḷḷugai*, பெ. (n.) 1. **மலவாயின் (ஆசனத்தின்) உள்ளுறுப்பு வெளித்தள்ளல்**; protrusion of the rectal walls beyond the anus, prolapsis of the anus or the rectum. 2. **பெண்களின் குறித் துளையின் (யோனித் துவாரத்தின்) சதை நழுவி வெளிவருதல்**; a condition in which the walls of the vagina are thrust out beyond the normal limit (சா.அக.).

**க.** அண்டு

அண்டிதள்ளுகை பார்க்க; see *aṇḍi-taḷḷugai*.

**அண்டுப்புழு** *aṇḍu-p-puḻu*, பெ. (n.) **அண்டில்** (யாழ்ப்.); worm that enters the eyes of cattle and horses (J.).

*[அண்டு + புழு.]*

**அண்டுபடு-தல்** *aṇḍu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **பிடிபடுதல்** (இ.வ.); to be within reach (Loc.).

**அண்டை** *aṇḍai*, பெ. (n.) 1. **அண்மை**; nearness, vicinity. அண்டையில் ஒரு கடையும் இல்லை (உ.வ.). 2. **அயல்**; neighbourhood. அண்டைவீட்டுக் கடன் ஆகாது (உ.வ.). 'அண்டைவீட்டுக் கடனும் பிட்டத்துச் சிரங்கும் ஆகாது', 'அண்டைவீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி' (பழ.). 3. **பக்கம்**; side, direction. அந்த வூர்க்கு நாலண்டையும் வழி (உ.வ.). 4. **ஓட்டை யடைக்கும் ஒட்டு**; thing attached, annexed, as a plug to close a hole, patch. சீலைக்கு அண்டை வைத்துத் தைத்தான் (உ.வ.). 5. **முட்டு**; prop, support. சுவர் சாயாதபடி அண்டை கொடு (உ.வ.). 6. **வரப்பு**; field bund, ridge of a field. "அண்டை கொண்டு கெண்டை மேயும்" (திவ். திருச்சந்த. 49). 7. **நீர்தூவுங் கருவி**; a contraption that squirts water, used on certain festive occasions. "வெண்பொ னண்டை கொண்டு" (திருவிளை. உக்கிரபா. 24). 8. **ஒரு கட்டியின் அல்லது காயத்தின் விளைவாக மற்றோரிடத்தில் தோன்றும் வீக்கம்**; sympathetic pain or swelling. முழங்கால் கட்டியினால் துடையில் அண்டைகட்டியிருக்கிறது (உ.வ.). —, இடை. (part.) **இட வேற்றுமை யுருபு**; a loc. ending. கிணற்றண்டை நில். என்னண்டை பணமில்லை (உ.வ.).

**க.** அண்டெ; **தெ.** அண்ட.

*[அண்டு → அண்டை.]*

**அண்டைகட்டு-தல்** *aṇḍai-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஒருறுப்பில் உண்டான கட்டி அல்லது காயத்தின் விளைவாக மற்றோருறுப்பில், பொதுவாகக் கமுக்கூட்டில் அல்லது கவானில், வலி அல்லது வீக்கம் தோன்றுதல்**; to get pain or swelling in the glands generally in the armpit or in the loins as a sympathetic response to swelling or pain in the connected limbs of the body.

**அண்டைகொள்(ளு)-தல்** *aṇḍai-koḷ(ḷu)-*, 10 செ.குன்றாவி. (v.t.) **பக்கத்துணை கொள்ளுதல்**; to gain the support of, secure the help of. 'கிருஷ்ணனை அண்டை கொண்டு' (திவ். திருநெடுந். 13, வியா.).

**அண்டைபோடு-தல்** *aṇḍai-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **ஒட்டுப்போடுதல்** (இ.வ.); to mend, patch (Loc.).

**அண்டையயல்** *aṇḍai-y-ayal*, பெ. (n.) **அக்கம் பக்கம்**; neighbourhood. அண்டையயல் பார்த்துப் பேசவேண்டும் (உ.வ.).

*[அண்டை + அயல்.]*

**அண்டைவீடு அடுத்தவீடு** *aṇḍai-vīḍu-aḍutta-vīḍu*, பெ. (n.) **அக்கம்பக்கத்து வீடுகள்**; neighbouring houses. அண்டைவீடு அடுத்த வீடெல்லாம் சிரிக்கும்படி சண்டை போடுகிறார்கள் (உ.வ.).

**அண்டைவெட்டு-தல்** *aṇḍai-veṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *வரப்புவெட்டுதல்* (இ.வ.); to cut or trim the ridge or bunds in the field (Loc.).

*[அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் → அண். அண்ணுதல் = நெருங்குதல். அண் → அண்டு. அண்டுதல் = நெருங்குதல். அண்டு → அண்டை = நெருங்கிய பக்கம், ஒட்டு, முட்டு, திரட்சி, வரப்பு.]*

**அண்ணக்குஞ்சம்** *aṇṇa-k-kuñjam*, பெ. (n.) **உண்ணாக்கு**; pendulum of the palate, uvula (சா.அக.).

*[அண்ணம் + குஞ்சம்.]*

**அண்ணச்சோர்வு** *aṇṇa-c-cōrvu*, பெ. (n.) *மேல் வாயின் நரம்புச் சோர்வு*; paralysis of the palate, *palatoplegia* (சா.அக.).

*[அண்ணம் + சோர்வு.]*

**அண்ணணி** *aṇ-ṇ-aṇi*, கு.வி.எ. (adv.) **நெருங்கிய அண்மையில்**; in close proximity. 'அண்ணணிக் கொண்டான்' (தொல். எழுத்து. உயிர்மயங். 44, நச். உரை).

*[அண்ணுதல் = நெருங்குதல். அண் → அணி = அண்மையில். அண் + அணி — அண்ணணி = நெருங்கிய அண்மையில், மிக அண்மையில்.]*

**அண்ணணித்து** *aṇ-ṇ-aṇittu*, பெ. (n.) *மிக அண்மையானது*; that which is close by, very near. ''அண்ணணித் தூராயின்'' (கலித். *108 : 36*).

*[அண் + அணித்து.]*

**அண்ணத்தாபிதம்** *aṇṇa-t-tābidam*, பெ. (n.) 1. *மேல்வாயழற்சி*; inflammation of the palate, *Palatitis*. 2. *வாயின் மேற்பரட்டிற் காணும் அழற்சி*; inflammation of the hard palate, uranisconitis (சா.அக.).

*[அண்ணம் +* **Skt.** tābita > *த. தாபிதம்.]*

**அண்ணத்தொங்கணி** *aṇṇa-t-toṅgaṇi*, பெ. (n.) **அண்ணக்குஞ்சம்** பார்க்க; see *aṇṇa-k-kuñjam*.

*[அண்ணம் + தொங்கணி.]*

**அண்ணந்தாள்** *aṇṇandāḷ*, பெ. (n.) **அண்ணாந்தாள்** பார்க்க; see *aṇṇāndāḷ*.

**அண்ணப்பரடு** *aṇṇa-p-paraḍu*, பெ. (n.) **மேல் வாயின் கரடு**; hard or bony palate (சா.அக.).

*[அண்ணம் + பரடு.]*

**அண்ணப்பிளப்பு** *aṇṇa-p-piḷappu*, பெ. (n.) **மேல் வாயின் அல்லது மேற்பரட்டின் வெடிப்பு**; a fissure or a narrow opening in the palate, Uranisochasma, Palatoschisis (சா.அக.).

**அண்ணப்பிளவு** *aṇṇa-p-piḷavu*, பெ. (n.) **மேல் வாயின் பிளவு**; a cleft or congenital fissure of the palate, cleft palate (சா.அக.).

*[அண்ணம் + பிளவு.]*

**அண்ணம்** *aṇṇam*, பெ. (n.) 1. *மேல்வாய்*; palate, roof of the mouth. ''அண்ண நண்ணிய பல்'' (தொல். எழுத்து. பிறப். 11). 2. **உண்ணாக்கு** (திவா.); uvula. 3. *அண்ணாக்கு*; the soft palate behind the uvula, *palatum molle* (சா.அக.).

**ம.** அண்ணம்; **க.** அங்கல, அண்ணாலிகெ; **தெ.** அங்கிலி; **து.** அண்ண; **நா.** அங்குல்; **பட.** அங்குவ.

*[அண் + அம்.]*

அண் என்பது மேற்புறத்தைக் குறித்த சொல்லாதலால், அண்ணம் என்பதற்குக் கீழ்வாய்ப்புறம் என்றும் சில அகரமுதலிகள் பொருள் குறிப்பது பொருந்தாது.

**அண்ணம் வீழ்ச்சி** *aṇṇam-vīḻcci*, பெ. (n.) 1. **அண்ணாக்கு விரிந்து தொங்கல்**; sagging of the soft palate, Uvuloptosis. 2. **உண்ணாக்கு** *வளர்த்தி*; elongation or pendulous condition of the uvula, *staphyloptosis* (சா.அக.).

**அண்ணம்வெடிப்பு** *aṇṇam-veḍippu*, பெ. (n.) **அண்ணப்பிளப்பு** பார்க்க; see *aṇṇa-p-piḷappu*.

**அண்ணமார்** *aṇṇamār*, பெ. (n.) 1. **ஒரு சிற்றூர்ச் சிறுதெய்வம்** (கோவை); a minor village deity (Cm.) — (L.). 2. **ஓர் அசுரப் பெண் தேவதை**: a female evil spirit, demoness (சா.அக.).

**அண்ணமார்கல்** *aṇṇam-ār-kal*, பெ. (n.) **கட்டடத்தில் தட்டை வளைவின் குத்துக்கல்** (சென்னை); upright bricks of a flat arch (Madr.).

*[அண்ணம் + ஆர் + கல் — அண்ணமார்கல் = வளைவின் மேற்பகுதியிற் பொருத்திய குத்துக்கல்.]*

**அண்ணல்** *aṇṇal*, பெ. (n.) 1. *பெருமை*; greatness. ''அண்ணலங் குமரரா மென்று'' (பாரத. திரௌ. 63). 2. **உயர்வு, சிறப்பு**; exaltation, excellence, loftiness. ''ஓங்கு

மண்ணல் மால்வரை'' (கூர்மபு. திருக்கல். 18). 3. **தலைமை**; superiority. ''அண்ணல் மணி நெடுந்தேர்'' (திருக்கோ. 256). 4. **பெருமையிற் சிறந்தோன்**; greatman, superior. ''அகத் தியனுக் கோத்துரைக்கு மண்ணல்'' (சிவப்பிர. 4). 5. **தலைவன்**; master. ''அடுபோ ரண்ணல் கேட்டிசின் வாழி'' (மதுரைக். 207, 208). 6. **தந்தை** (அரு.நி.); father. 7. **அண்ணன்** (நாநார்த்த.); elder brother. 8. **குரு, குரவன், ஆசிரியன்**; preceptor, spiritual guide. 9. **முல்லைநிலத் தலைவன்** (தொல். பொருள். அகத். 20, நச். உரை); ruler of a land predominantly pastoral. 10. **அரசன்** (சூடா.); king. 11. **சிவன்**; Šiva. ''அண்ண லாரு மதுவுணர்ந்து'' (பெரியபு. திருநாவுக். 296). 12. **கடவுள்**; God. ''அண்ண லருளா னண்ணி'' (சிவப்பிர. 19). 13. **புத்தன்** (பொதி.நி.); the Buddha. 14. **அருகன்** (நாநார்த்த.); Arhat.

ம. அண்ணல்; க. அண்ணலெ; தெ. அண்ணு.

**அண்ணல்வல்லி** *aṇṇal-valli*, பெ. (n.) **கோவை**; Indian caper, *Cephalandra indica* alias *Bryonia grandis* (சா.அக.).

**அண்ணலார்** *aṇṇalār*, பெ. (n.) **சிவன்**; Šiva. ''ஆடன் மேவிய வண்ண லாரடி'' (பெரியபு. ஏயர்கோ. 98).

ம. அண்ணலார்

[அண்ணல் + ஆர் (உ.ப. ஈறு).]

**அண்ணவெலும்பு** *aṇṇa-v-elumbu*, பெ. (n.) **மூக்கின் பின்புறத்திலிருக்கும் எலும்பு**; the bony structure behind the nostrils (சா.அக.).

[அண்ணம் + எலும்பு.]

**அண்ணவோதை** *aṇṇa-v-ōdai*, பெ. (n.) **நாவாற் கொட்டும் ஒலி**; clicking sound produced by pressing the tongue against the roof of the mouth (W.).

[அண்ணம் + ஓதை.]

**அண்ணன்** *aṇṇaṉ*, பெ. (n.) 1. **தமையன், தம்முன்** (பிங்.); elder brother. ''முன்னவ னண்ணன் மூத்தோன்'' (சூடா.). 2. **மதிக்கத் தக்க மூத்தோன்**; respectable elderly man. 'அண்ணனுக்குத் தம்பி அல்லவென்று போகுமா?', 'அண்ணனுக்குப் பெண் பிறந் தால் அத்தை அயல்நாட்டாள்', 'ஐந்து வயதில் அண்ணன் தம்பி, பத்து வயதில் பங்காளி' (பழ.).

ம. அண்ணன்; க., பட., குட. அண்ண; தெ., குவி. அன்ன; து. அண்ணெ; கோத. அண்ணன்; இரு., குரு., துட. ஒணென்; கொலா. அனுக்; கோண். தன்னால்; கொர. ஆண்; எரு. அண; சப். அண்ணா.

**அண்ணனார்** *aṇṇaṉār*, பெ. (n.) **அண்ணன் என்பதன் உயர்வுப்பன்மை**; honorific of *aṇṇaṉ*.

[அண்ணன் + ஆர் (உ.ப. ஈறு).]

அண்ணார் என்னுங் கொச்சை வடிவம், அண்ணனார் என்பதன் மரூஉவன்று. அண்ணா என்னும் விளிவடிவே, ரகர மெய்யீறு பெற்று அண்ணார் என்று தவறாக வழங்கிவருகின்றது.

**அண்ணா-த்தல்** *aṇṇā-*, 3 செ.கு.வி. (v.i.) 1. **மேல்நோக்குதல்**; to look upward. செம்பில் வாய்படாமல் தண்ணீரை அண்ணாக்கக் குடி (உ.வ.). 2. **மேனோக்கிப் பார்த்தல்**; to look up intently. ''அண்ணாந்து கேட்ப ரழகழ கென்பர்'' (தனிப். தி. 2, பக். 293). 3. **தலைநிமிர்தல்**; to hold the head erect. ''நண்ணார் நாண அண்ணாந் தேகி'' (புறநா. 47 : 8). 4. **நிமிர்ந்து நிற்றல்**; to stand erect. ''அண்ணாந் தேந்திய வன முலை'' (நற். 10 : 1). 5. **வாய்திறத்தல்**; to gape, open the mouth. ''அண்ணாத்தல் செய்யா தளறு'' (குறள், 255).

ம. அண்ணா; க. அண்ணெ; து. அண்ணா வுனி, அணாவு.

**அண்ணா**[1] *aṇṇā*, பெ. (n.) **உண்ணாக்கு**; uvula. ''அண்ணா வுரிஞ்சி மூக்குயர்த்தார்'' (சீவக. 2703).

ம. அண்ணா

[உள் + நா – உண்ணா → அண்ணா.]

**அண்ணா**[2] *aṇṇā*, பெ. (n.) **திருவண்ணாமலை**; Tiruvaṇṇāmalai, a Šiva shrine. ''உயர்பொழி லண்ணாவி லுறைகின் றாரும்'' (தேவா. 6.16 : 5).

[அருணமலை → அண்ணாமலை → அண்ணா.]

**அண்ணா**[3] *aṇṇā*, பெ. (n.) 1. **அண்ணன்**; elder brother. 2. **தந்தை** (பிராம.); father (Brāhm.).

[அண்ணன் → அண்ணா (விளி).]

முறைப்பெயர்களின் விளிவடிவை முதல் வேற்றுமையாக (எழுவாயாக) வழங்குவது பிற்காலத்தெழுந்த வழுவழக் காதலால், அதைப் பொத்தகங்களிற் கையாளாததோடு பேச்சிலும் விட்டுவிடல் வேண்டும். இவ் வழக்கு, கன்னட முதலிய திரவிடமொழிகளில் வழுவமைதியாயினும், தமிழில் ஆகாது.

**அண்ணாக்க** *aṇṇākka*, கு.வி.எ. (adv.) *மேனோக்கி, பல்லில் அல்லது உதட்டிற் படாமல்*; with head turned upward gulping food or drink without the vessel or food touching the teeth and lips. *தண்ணீரை அண்ணாக்கக் குடி. மருந்தை அண்ணாக்க விழுங்கிவிடு* (உ.வ.).

ம. அண்ணான்னு

**அண்ணாக்கழற்சி** *aṇṇākk(u)-alarci*, பெ. (n.) 1. *உண்ணாக் கழற்சி*; inflammation of the uvula, uvulitis. 2. *மேல்வாயின் கீழ்ப்புறத்திற் காணும் அழற்சி*; inflammation of the soft palate, *Palatitis* (சா.அக.).

*[அண்ணாக்கு + அழற்சி. உள் + நாக்கு – உண்ணாக்கு → அண்ணாக்கு.]*

**அண்ணாக்கறுத்தல்** *aṇṇākk(u)-aruttal*, தொ. பெ. (vbl.n.) 1. *உண்ணாக்கு வளர்ச்சியைக் கத்தியா லறுத்து நீக்கல்*; the surgical operation of the uvula or a part there of, uvulotomy. 2. *உண்ணாக்குச் சதை கரையும்படி கார மருந்திடல்*; application of corrosive drug to the uvula to reduce its size (சா.அக.).

*[உள் + நாக்கு – உண்ணாக்கு → அண்ணர்க்கு + அறுத்தல்.]*

**அண்ணாக்கு** *aṇṇākku*, பெ. (n.) *உண்ணாக்கு*; uvula. *'அண்ணாக்கும் தொண்டையும் அதிர அடைத்தது'* (பழ.).

ம. அண்ணாக்கு; க. அண்ணாலிகெ; தெ. அங்கிலி.

*[உள் + நாக்கு – உண்ணாக்கு → அண்ணாக்கு.]*

**அண்ணாக்குப் பிரிவு** *aṇṇākku-p-pirivu*, பெ. (n.) *இரண்டாகப் பிரிந்த உண்ணாக்கு*; a split uvula, bifid uvula (சா.அக.).

*[உண்ணாக்கு → அண்ணாக்கு + பிரிவு.]*

**அண்ணாக்கெடுத்தல்** *aṇṇākk(u)-eduttal*, தொ. பெ. (vbl.n.) *உண்ணாக்கிற்கு மேற்புறந் தொங்கும் சதையை, வாய்க்குட் கையை விட்டோ உச்சிமயிரைத் தூக்கிப்பிடித்தோ தொங்காதவாறு செய்தல்*; arresting the sagging of the soft palate, either by thrusting the fingers into the mouth, or by holding the head up by the hair on the crown.

*[உண்ணாக்கு → அண்ணாக்கு + எடுத்தல்.]*

**அண்ணாச்சி** *aṇṇācci*, பெ. (n.) *அண்ணனார்* (தெற்கு); elder brother (South).

ம. அண்ணாச்சி, அண்ணாழ்வி.

*[அண்ணாட்சி → அண்ணாச்சி.]*

**அண்ணாட்சி** *aṇṇāṭci*, பெ. (n.) *அண்ணனார்* (தெற்கு); elder brother (South).

*[அண்ணன் + ஆட்சி – அண்ணாட்சி. ஒ.நோ: அண்ணன் + ஆள்வி – அண்ணாள்வி → அண்ணாவி.]*

பொதுவாக, அண்ணன் என்பது படியாதவர் வழக்கும், அண்ணாட்சி என்பது படித்தவர் வழக்கும் ஆகும்.

'தந்தைக்குப் பின் தமையன்' என்னும் முறைப்படி ஆண்மக்கள் பலருள்ள குடும்பத்தில் மூத்தவனே தந்தைக்குப் பின் குடும்ப ஆட்சியை மேற்கொள்வானாதலால், அவன் தம்பி தங்கைமாரால் அண்ணாட்சியென விளிக்கப்பட்டான். முதற் காலத்தில் மூத்த அண்ணனுக்கு வழங்கிய பெயர்வடிவம், பிற் காலத்தில் இளைய அண்ணன்மார்க்கும் வழங்கலாயிற்று. அவருள் வேறுபாடு குறிக்க 'மூத்த', 'இளைய' அல்லது 'பெரிய', 'சின்ன' என்னும் அடைகள் சேர்க்கப்பட்டன.

**அண்ணாத்தை** *aṇṇāttai*, பெ. (n.) 1. *அண்ணன், சில சமயங்களில் இழிவு குறித்தது* (வடக்கு); elder brother, sometimes in contempt (North). 2. *வெறும் பெரியவர்* (இ.வ.); idler, worthless fellow (Loc.).

*[ஒருகா. அண்ணன் + தே – அண்ணாத்தை அல்லது அண்ணன் + அத்தன் → அண்ணத்தன் → அண்ணத்தை → அண்ணாத்தை.]*

அண்ணாத்தை என்பது, சில சமயங்களில் இளையவர்க்கும் தகுதியில்லாதவர்க்கும் இழிவு குறித்த பகடிச்சொல்லாக வழங்கினும், மூத்தவர்க்கும் தகுதியுள்ளவர்க்கும் அண்ணனார், தமையனார், அண்ணாட்சி என்பன போன்று மதிப்புச் சொல்லாகவும் வழங்கிவருகின்றது.

தெய்வத்தையும் தலைவனையுங் குறிக்கும் தே என்னும் சொல்லைப் பின்னொட்டாகப் பெற்று வழங்கும் நாயன்தே என்பது போன்று, அண்ணாத்தே என்னுஞ் சொல்லுந் தோன்றி அண்ணாத்தை யென்று மருவியிருக்கலாம்.

ஒ.நோ : நாயன்தே → நாயந்தே → நாயிந்தே → நயிந்தே → நயிந்தை.
அண்ணாத்தே → அண்ணாத்தை.

இனி, அண்ணன் அல்லது அண்ணா என்னுஞ் சொல் தந்தையைக் குறிக்கும் அத்தன் என்னுஞ் சொல்லொடு புணர்ந்து அண்ணாத்தன் → அண்ணாத்தை என்று திரிந்ததாகக் கொள்ளவும் இடமுண்டு.

அத்தை யென்பது பெண்பாற் பெயராதலின், அண்ணாத்தை யென்னும் புணர்ச் சொல்லின் வருஞ்சொல்லாக இருத்தல் இயலாது.

**அண்ணாந்தாள்** *aṇṇāndāḷ*, பெ. (n.) **ஒருவனைக் குனியவைத்து, அவன் கழுத்தைச் சுற்றி ஒரு கயிற்றைத் தொங்கவிட்டு, அதன் ஒரு முனையை ஒருகாற் பெருவிரலிலும் மற்றொரு முனையை மற்றொருகாற் பெருவிரலிலுங் கட்டி, முதுகின்மேல் ஒரு கனத்த கல்லையும் ஏற்றி, நீண்ட நேரம் அதே நிலையில் இருக்கச் செய்யுந் தண்டனை**; placing an individual in a stooping position, fastening a string to each great toe, passing the bight over the back of the neck, and putting a stone on his back, as a punishment (E.T.). —**தலையையுங் காலிற் பெருவிரலையுஞ் சேர்த்துக் கட்டித் தலை நிமிர்ந்திருக்கச் செய்யுந் தண்டனை** (சங்.அக.); fastening the head and toes of an individual, and making him hold his head in an erect position, as a punishment (S.D.).

**அண்ணாந்தாள்பூட்டு - தல்** *aṇṇāndāḷ-pūṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அண்ணாந்தாள் தண்டனை யிடுதல்**; to inflict *aṇṇāndāḷ* punishment.

**அண்ணாந்துபார்-த்தல்** *aṇṇāndu-pār-*, 4 செ. கு.வி. (v.i.) **மேல்நோக்கிப் பார்த்தல்**; to look upward. —, 4 செ.குன்றாவி. (v.t.) **கூர்ந்து பார்த்தல்**; to look into, consider deeply. "அண்ணாந்து பார்க்க வழியு முடம்பே" (திருமந். 2139).

**அண்ணாநாடு** *aṇṇā-nāḍu*, பெ. (n.) **திருவண்ணாமலை வட்டாரம்**; the region about Tiruvaṇṇāmalai. 'அண்ணாநாட்டு எல்லையில் திருந்திகை யாற்றை யடைத்து' (S.I.I. viii, 44).

**அண்ணாமலை** *aṇṇā-malai*, பெ. (n.) **சிவன் கோயில்கொண்டுள்ள திருவண்ணாமலை**; Tiruvaṇṇāmalai, a Śiva shrine. "அண்ணா மலையங் கமரர்பிரான்" (பெரியபு. திருஞான. 970). 'அண்ணாமலையாருக்கு அறுபத்து நான்கு பூசை, ஆண்டிகளுக்கு எழுபத்து நான்கு பூசை', 'அண்ணாமலையார் அருளுண்டானால் மன்னார்சாமி வம்பா செய்யும்?' (பழ.).

[அருணமலை → அண்ணாமலை.]

**அண்ணாமலை முழம்** *aṇṇāmalai-muḻam*, பெ. (n.) **24 விரல்கொண்டதும், முன்பு தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிற்கும் பின்பு திருவண்ணாமலைத் திருக்கோயிற்கும் கட்டுமானத்திற் பயன்படுத்தியதுமான அளவுகோல்**; a standard measuring rod, so called because it was used in the construction of the temples at Thañjāvūr and Tiruvaṇṇāmalai.

'24 விரல்கொண்ட கிஷ்கு முழத்திற்குத் தஞ்சை முழமென்றும் ஒரு பெயர் வழக்கில் உண்டு. தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலை நிருமாணிப்பதில் இம் முழம் கையாளப் பெற்றமையால் இப் பெயர் பெற்றது. திருவண்ணாமலைத் திருக்கோயிலை அமைப்பதற்குப் பயன்படுத்திய அளவுகோல் இம் முழக்கோலாகையினால் இதற்கு அண்ணாமலை முழமென்று மற்றொரு பெயருமுண்டு' (சி.செ. பக். 3, பத்தி 1).

[அருணமலை → அண்ணாமலை + முள் → முழி (மொழி) → முழம்.]

**அண்ணார்** *aṇṇār*, பெ. (n.) **பகைவர், வணங்கார்**; enemies, recalcitrants. "அண்ணார் புரமவிய" (உபதேசகா. திரிபுர. 112).

ம. அண்ணார்

[அண் + ஆ (எ.ம.இ.நி.) + ஆர் (ப.பா. ஈறு). 'ஆர்' புணர்ச்சியில் முதல் கெட்டது.]

கொச்சை வழக்கில் உயர்வுப் பன்மையாக அண்ணனைக் குறிக்கும் அண்ணார் (அண்ணா + ஆர்) என்னுஞ்சொல், வழூஉச் சொல்லாதலின் இவ் வகரமுதலியிற் கொள்ளப்படவில்லை.

**அண்ணனார்** பார்க்க; see *aṇṇaṉār*.

**அண்ணாவி** *aṇṇāvi*, பெ. (n.) 1. **ஆசிரியன்**; teacher. 'தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி என்ன செய்வான்?', 'அண்ணாவி தான் செத்தார், அவர் சொல்லிக் கொடுத்த பாடமுமா செத்தது?', 'அண்ணாவி விழுந்ததும் ஓர் அடவுதான்' (பழ.). 2. **கூத்துப் பயிற்றுவோன், நாடக ஆசிரியன்**; dancing master, director of theatrical performances. 3. **அதிகாரி**; master, superior, one in authority. நீ அதற்கு அண்ணாவி யல்லை (உ.வ.). 4. **புலவன்** (யாழ்.அக.); poet.

ம. அண்ணாவி

*[அண்ணன் + ஆள்வி – அண்ணாள்வி → அண்ணாவி.]*

**அண்ணாள்வி** *aṇṇāḷvi*, பெ. (n.) **அண்ணனார், அண்ணாட்சி**; elder brother or cousin. 'எங்கஎண்ணாழ்வி (அண்ணாள்வி) செய்த பணி' (T.A.S. i, 103).

ம. அண்ணாழ்வி

அண்ணாழ்வி என்பது, ஆழ்வார் என்னுஞ் சொல்லைப் பின்பற்றின தவற்று வடிவமாகும்.

*[அண்ணன் + ஆள்வி – அண்ணாள்வி. ஆள்வு → ஆள்வி = ஆள்வோன், ஆளி.]*

**அண்ணாளன்** *aṇṇāḷaṉ*, பெ. (n.) 1. **பெண் வழிச் செல்வோன்** (இ.வ.); husband under the authority of his wife, hen-pecked husband (Loc.). 2. **அலி** (இ.வ.); hermaphrodite (Loc.). இச்சொல் ஷண்ட என்னும் வடசொல்லொடு தொடர்புடையதாகத் தெரியவில்லை.

**அண்ணி-த்தல்** *aṇṇi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **நெருங்குதல்**; to come near, get close. 2. **பொருந்துதல்**; to join, unite. "அடியார்க் கென்று மாரமுதா யண்ணிக்கு மையாற் றான் காண்" (தேவா. 6.30 : 2). 3. **தித்தித்தல்**; to taste sweet. "சிந்தை செயச்செயக் கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே" (தேவா. 5.61 : 5).

*[அண் → அண்ணி. அண்ணுதல் = நெருங்குதல், பொருந்துதல், தித்தித்தல்.]*

**அண்ணி** *aṇṇi*, பெ. (n.) **அண்ணன் மனைவி**; elder brother's wife. 'அண்ணன்தான் கூடப் பிறந்தான், அண்ணியுமா கூடப்பிறந்தாள்?' (பழ.).

**அண்ணிது** *aṇṇidu*, பெ. (n.) 1. **அண்மை**; proximity, nearness. 2. **அண்மையிலுள்ள**; that which is near.

*[அண் + இது. இனி, அண்ணியது → அண்ணிது என்றுமாம். அண்ணிது → அண்ணிசு (யாழ்.அக.). ஒ.நோ: பெரிது → பெரிசு.]*

**அண்ணிமை** *aṇṇimai*, பெ. (n.) **அண்மை** (ஈடு); nearness.

*[அண்மை → அணிமை → அண்ணிமை.]*

**அண்ணியது** *aṇṇiyadu*, பெ. (n.) **கிட்டியது**; that which is near. "அண்ணிய தாயு மகன்றும்" (கூர்மபு. பொது. 12).

**அண்ணியன்** *aṇṇiyaṉ*, பெ. (n.) 1. **அண்மையன்**; he who is near. 2. **நெருங்கிய உறவினன்**; close kinsman. 'தமப்பன் பகையாக அவனிலும் இவன் அண்ணியனென்று வர நின்ற ப்ரஹலாதன்' (ஈடு, 10 : 3, பிர. பக். 70).

*[அண் → அண்ணியன்.]*

**அண்ணு-தல்** *aṇṇu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **கிட்டுதல்**; to approach, draw near. "அண்ணிய தாயு மகன்றும்" (கூர்மபு. பொது. 12). 2. **சேர்தல்**; to join, unite with. "உன் னடிக்கீ ழண்ணியமெய் யடியவர்க்கு" (திருவிளை. மெய்க்காட். 8). 3. **ஒத்தல்**; to resemble. "புகலும் வாளரிக் கண்ணியர்" (கம்பரா. பால. வரைக்காட். 28).

து. அண்டுனி

*[அள் → அண் → அண்ணு.]*

**அண்ணுண்டார்** *aṇṇuṇḍār*, பெ. (n.) **கள்ளர் குலப் பட்டப்பெயர்களுள் ஒன்று** (கள்ளர் சரித். பக். 145); a caste title of Kaḷḷars.

*[ஒருகா. 'அரண்வென்றார்' என்பது அண்ணுண்டார் என்று திரிந்திருக்கலாம்.]*

**அண்ணூத்திப்பிரியர்** *aṇṇūtti-p-piriyar*, பெ. (n.) **கள்ளர்குலப் பட்டப்பெயர்களுள் ஒன்று** (கள்ளர் சரித். பக். 145); a caste title of Kaḷḷars.

**ஒருகா.** 'ஐந்நூற்றுப் பேரர்' என்பது இதன் மூலமா யிருந்திருக்கலாமென்று, **சென்னை அகரமுதலி** கருதுகின்றது. அதை 'ஐந்நூற்றுப் பிரிவார்' அல்லது 'ஐந்நூற்றுப் பெரியார்' என்று கொள்ளவும் இடமுண்டு.

**அண்ணெரிஞ்சான்பூண்டு** *aṇṇeriñjāṉ - pūṇḍu*, பெ. (n.) இது கொச்சை வடிவமாதலாற் கொள்ளத்தக்கதன்று.

*[அன்றெரிந்தான் பூண்டு → அண்ணெரிஞ்சான் பூண்டு.]*

**அன்றெரிந்தான் பூண்டு** பார்க்க; see *aṉṟerindāṉ-pūṇḍu.*

**அண்ணை** *aṇṇai*, பெ. (n.) பேய் (பொதி.நி.); devil, ghost, goblin.

*[மண்ணை (பேய்) → அண்ணை.]*

**அண்பல்** *aṇ-pal*, பெ. (n.) **மேல்வாய்ப் பல்;** upper tooth or teeth. "அண்பல் முதனா விளிம்புற வருமே" (நன். 77).

ம. அணப்பல்லு

*[அண்பல் = அண்ணத்தைப் பொருந்திய பல்.]*

சீவகசிந்தாமணி 928ஆம் செய்யுளிலுள்ள, "அண்பன் னீரு றமிர்தம்" என்னுந் தொடருக்கு, 'அடிப்பல்லில் நீரூறமிர்தம் — புளிங்கறி' என்று நச்சினார்க்கினியர் குறிப்புரை வரைந்திருக்கின்றார். 'அண்பல்' என்பதற்கு 'அடிப்பல்' என்னும் பொருள் எங்ஙனம் பொருந்துமென்பது தெரியவில்லை. புளிங்கறிக்கோ பிறவகை யுண்டிகட்கோ உமிழ்நீர் சுரப்பின், அது எல்லாப் பற்கும் பொதுவாதலால், இங்கு 'அண்பல்' என்பதற்கு, அண்ணி அல்லது நெருங்கிய பற்கள் என்று பொதுப்படக் கூறுவதே பொருத்தமாம்.

**அண்பினார்** *aṇbiṉār*, பெ. (n.) **அண்டினவர்;** those who have taken refuge. "அண்பினார் பிரியார்" (தேவா. 3.379 : 6).

*[அண் → அண்மு → அண்பு + இன் + ஆர்.]*

**அண்பு-தல்** *aṇbu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அண்ணுதல்;** to approach (தேவா. 3.379 : 6). 2. **அண்டுதல்;** to associate with, to take refuge.

*[அண் → அண்மு → அண்பு.]*

**அண்மு-தல்** *aṇmu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **கிட்டுதல்;** to approach. "அணிமாடத் திடையோர் மண்டபத்தை யண்மி" (கம்பரா. பால. திருவவ. 61).

*[அண்மை → அண்மு.]*

**அண்மை** *aṇmai*, பெ. (n.) 1. **காலத்தால் அல்லது இடத்தால் நெருங்கியுள்ள நிலைமை;** nearness of time or place. "அண்மையாற் சேய்த்தன்றி" (கலித். 108 : 35). 2. **பொருள் தொடர்புள்ள இருசொற்கள் அல்லது தொடர்ச்சொற்கள் ஒன்றையொன்று அடுத்து நிற்றல், தொடர்ச்சொற்கள் பொருள் தொடர்பு கொள்ளு முறை மூன்றனுள் ஒன்று;** immediate proximity of the qualifying (or governing) and the qualified (or governed) words to each other, one of the three modes by which words or phrases express their syntactic relationship. 3. **அடையுந் தன்மை;** nature of approaching or joining. "விண்ணவர்பா லண்மையிலனாகு மண்ணல்" (கந்தபு. உற்பத். காமதக. 38).

*[அண் → அண்மை.]*

**அண்மைச்சுட்டு** *aṇmai-c-cuṭṭu-*, பெ. (n.) (இலக்.) **காலமும் இடமும் அவற்றில் தோன்றும் அல்லது உள்ள பொருள்களும் ஆகியவற்றின் நெருங்கிய நிலைமையைக் குறித்துக் காட்டும் எழுத்து அல்லது சொல், சேய்மைச்சுட்டிற்கு எதிரானது;** (Gram.) demonstrative letter or word denoting the nearness of a person, place, thing or time; dist. from *šēymai-c-cuṭṭu.* இவன் இங்கு இதைச் செய்தது இன்றுதான் (உ.வ.).

*[அண்மை + சுட்டு.]*

**அண்மைவிளி** *aṇmai-viḷi*, பெ. (n.) (இலக்.) **அருகிலுள்ளவர்களைக் கூப்பிடும் பெயர்வடிவம், பெரும்பான்மை இயல்பாயும் சிறுபான்மை திரிந்தும் இருப்பது, சேய்மைவிளிக்கு எதிரானது;** (Gram.) voc. used to address a person nearby, the form of the nominative unaltered in a majority of cases, dist. from *šēymai-viḷi.*

நாய், பூனை முதலிய சில வீட்டு விலங்குகட்குப் பெயரிட்டு விளிப்பினும், அப் பெயர்கள் அவற்றிற்கு ஒருவகை அடையாளச் சொல்லாகவே யிருத்தலால், அவற்றின் விளி மக்கட்பெயர்விளிக் கொப்பாகக் கொள்ளப் படா.

**அண்வரு-தல் (அண்வா-தல்)** *aṇ-varu-(aṇ-vā-)*, 18 செ.கு.வி. (v.i.) 1. **அருகில் வருதல்;** to come near. 2. **அருகிலிருத்தல்;** to be close, near. 'ஆவண வீதியெல் லாம்நிழல் பாயநின் றணவருமே' (இறை. 2, உரை, பக். 53).

**அண[1]-த்தல்** *aṇa-*, 3 செ.கு.வி. (v.i.) **பொருந்துதல்;** to be joined, united. "முலைமுன் றணந்த சிறுநுதல்" (கல்லா. 13 : 12).

*[அண் → அண. அண்ணுதல் = பொருந்துதல்.]*

**அண[2]-த்தல்** *aṇa-*, 3 செ.கு.வி. (v.i.) 1. **தலையெடுத்தல்**; to lift the head. "பாம்பணந் தன்ன" (பொருந. 13). 2. **மேனோக்குதல்**; to look upward. "நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை" (குறிஞ்சிப். 35).

**து.** அணவு, அணாவுனி.

[அண் → அண.]

**அணங்கம்** *aṇaṅgam*, பெ. (n.) **இலக்கணம்** (சிந்தா. நி. 103); grammar.

[அஞ்சணங்கம் = ஐந்திலக்கணம் (யாழ்.அக.). அணங்கு + அம். அணங்கு = ஒலி, எழுத்து.]

**ஐந்திலக்கணம்** பார்க்க; see *aind(u)-ilakkaṇam.*

**அணங்கயர்-தல்** *aṇaṅg(u)-ayar-*, 2 செ.கு.வி. (v.i.) **திருவிழாக் கொண்டாடுதல்**; to celebrate a religious festival. "சுறவ முண்மருப் பணங் கயர் வனகழிச் சூழல்" (பெரியபு. திருக்குறிப். 7).

[அணங்கு + அயர்.]

**அணங்காட்டு** *aṇaṅg(u)-āṭṭu*, பெ. (n.) **வேலன் வெறியாட்டு** (வின்.); dance under possession by *Vēlaṉ* (W.).

[அணங்கு + ஆட்டு.]

**அணங்காடு-தல்** *aṇaṅg(u)-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) **தெய்வமேறி யாடுதல்**; dance of one possessed by the spirit of *Vēlaṉ*. "அணங்காடுத லன்றந்தோ" (திவ். திருவாய். 4.6 : 5).

[அணங்கு + ஆடு.]

**அணங்கார்** *aṇaṅgār*, பெ. (n.) **பெண்கள்**; women (சங்.அக.).

[அணங்கு + ஆர் (ப.பா. ஈறு).]

**அணங்கிய** *aṇaṅgiya*, கு.பெ.எ. (adj.) **அழகிய**; beautiful. "சீரணங்கிய தேவர்கள்" (பெரியபு. திருநகரச். 10).

**அணங்கியம்** *aṇaṅgiyam*, பெ. (n.) **இலக்கியம்**; literature.

அஞ்சணங்கியம் = ஐந்திலக்கியம்.

[அணங்கு + இயம்.]

**ஐந்திலக்கியம்** பார்க்க; see *aind(u)-ilakkiyam.*

**அணங்கியோன்** *aṇaṅgiyōṉ*, பெ. (n.) **வருத்தியவன்**; one who persecuted. "பெருந்துறைக் கண்டிவ ளணங்கி யோனே" (ஐங்குறு. 182).

**அணங்கினர்** *aṇaṅgiṉar*, பெ. (n.) **தெய்வப் பெண்கள்**; celestial damsels. "புடையுற வணங்கினர் போற்றி" (கந்தபு. தேவ. தெய்வ. 10).

**அணங்கு[1]-தல்** *aṇaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஒலித்தல்**; to sound; make noise. "புகை யணங்க" (பு. வெ. 10 : 8).

[ஒல் → ஒலி. ஒல் → அல் → அலம்பு. அலம்புதல் = ஒலித்தல். அல் → அலு → அலுங்கு → அனுங்கு. அனுங்குதல் = முனுமுனுத்தல், ஒலித்தல். அலுங்கு → அனுங்கு → அணங்கு.]

**அணங்கு[2]-தல்** *aṇaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அஞ்சுதல்** (சங்.அக.); to fear, to be afraid. 2. **வருந்துதல்**; to suffer, to be distressed. "ஆடியுட் பாவை போனீ யணங்கிய தணங்க வென்றான்" (சீவக. 957). 3. **இறந்துபடுதல்**; to die, to be slain. "நற்போ ரணங்கிய" (பு.வெ. 7 : 27). 4. **பொருந்துதல்**; to be joined' united. 'உரையணங்குந் தமிழ்வேந்தன்' (இறை. 50, உரை, பக். 230). 5. **பின்னி வளர்தல்**; to grow, thick with branches interlaced as bamboos. "முழுநெறி யணங்கிய நுண்கோல் வேரலோடு" (மலைபடு. 223). 6. **விரும்புதல்** (சங்.அக.); to desire. —, 5 செ. குன்றாவி. (v.t.) 1. **அஞ்சுதல்**; to dread. 2. **வருந்துதல்**; to afflict. "புறத்தோ னணங்கிய பக்கமும்" (தொல். பொருள். புறத். 10). 3. **கொல்லுதல்**; to kill, murder, slay. "அணங்குவாள் விடவரா" (கம்பரா. அயோத். மந்தரை. 53).

[உணங்கு → அணங்கு.]

**அணங்கு[1]** *aṇaṅgu*, பெ. (n.) 1. **ஒலி**; sound. 2. **எழுத்து**; letter.

[ஒல் → அல் → அலு → அலுங்கு → அனுங்கு → அணங்கு.]

**அணங்கு[2]** *aṇaṅgu*, பெ. (n.) 1. **வருத்தம்**; suffering, pain. "அணங்குசா லுயர்நிலை தழீஇ" (திருமுருகு. 289). 2. **வருத்துதல்**; affliction. "அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த" (கலித். 50 : 6). 3. **கொலை**; killing (பிங்.). "அணங்கு பார்த்து நகை முகிழ்த் தாவியோ டுணங்கு பேய்முலை" (கூர்மபு. கண்ணனவ. 51). 4. **அச்சம்**; fear. "நான்முகத் தோன்கண் ணணங்குற வருபவர்க் கடிதிர்" (கூர்மபு. அட்டமூ. 5). 5. **நோய்** (பிங்.); disease. 6. **காமநெறியால்**

**உயிர்கொள்ளுந் தெய்வமகள்**; demoness who destroys one's life by kindling lust in him. "ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப" (குறள், *918*). 7. **வருத்திக் கொல்லுந் தெய்வ மகள்**; demoness who inflicts sufferings and takes away one's life. 8. **கொல்லிப்பாவை**; the demoness of literary fame who resided at the *Kolli* Hills. 9. **தெய்வம்**; deity. "அணங் குருத் தன்ன கணங்கொ டானை" (புறநா. *362 : 6*). 10. **தெய்வமகள்**; celestial damsel. "அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ" (குறள், *1081*). 11. **தெய்வத்தன்மை**; divinity. "சீரணங்கு மணிமாடத் திருச்சிற்றம் பலம் போற்றி" (கோயிற்பு. பாயிர. 2.). 12. **(கொல்லும் பெண்தெய்வத்தின்) அழகு** (பிங்.); beauty. 13. வடிவு; form. "அருந்திற லணங்கி னாவியர் பெருமகன்" (சிறுபாண். *86*). 14. **மையல்நோய்**; lust. 15. **ஆசை** (சூடா.); desire. 16. **வெறியாட்டு**; dancing under religious excitation, esp. possession by the spirit of *Vēlan*. 17. **சிவ ஆற்றல்**; Šiva's supreme energy. "பேரணங்கி னுடனாடும் பெரும்பற்றப் புலியூர்" (கோயிற்பு. பாயிர. 2). 18. **அழகிய பெண்**; beautiful woman. 19. **பெண்**; woman. "ஆண்டவ் விராக்கத வணங்கு மெய்தும்" (சேதுபு. வேதாள. 58). 20. **பேய்மகள்**; a female devil. "துணங்கை யஞ் செல்விக் கணங்குநொடித் தாங்கு" (பெரும்பாண். *459*). 21. **பேய்**; devil. "அணங்கே விலங்கே" (தொல். பொருள். மெய்ப். 8). 22. **சண்டாளன்** (பிங்.); a person of low-caste. 23. **ஆளியின் குட்டி**; young offspring of *yāḷi*, an extinct animal. "ஆளியி னணங்கு மரியின் குருளையும்" (சிலப். 25 : 48).

ம. அணங்ஙு

*[உணங்குதல் = காய்தல், வாடுதல், மெலிதல், வருந்துதல், செயலறுதல். உணங்கு → அணங்கு. அணங்குதல் = வருந்துதல், வருத்து தல். வருத்துதலே வருந்துதலல்லாத ஏனைப் பொருள்கட்கும் அடிப்படை.]*

"ஆளியி னணங்கு மரியின் குருளையும்" என்று சிலப்பதிகாரத்தில் வேறுபடுத்திக் (25 : 48) கூறப்பட்டிருப்பதால், ஆளி (யாளி) வேறு, அரி (சிங்கம்) வேறு என்பது பெறப் படும்.

'யாளியை ஆளியென்றார், "கடிசொ லில்லை" என்பதனான்' என்று நச்சினார்க் கினியர் பொருநராற்றுப்படை யுரையிற் (139) கூறியதினின்று, யாளி என்னுஞ் சொல்லே யானை → ஆனை என்பதுபோன்று முதன் மெய் நீங்கி ஆளியென வழங்கிவருவதை அறியலாம்.

அணங்கு என்னும் இளமைப் பெயர் ஆளி யினத்திற்கே சிறப்பாக வழங்கப்பட்டிருப்ப தால், அதற்கொரு சிறப்பான பொருட் கரணியமும் இருத்தல் வேண்டும்.

"ஆளி நன்மா வணங்குடைக் குருளை" என்னும் பொருநராற்றுப்படை யடியில் (139), குருளை என்பது ஆளிக்குட்டியின் பெய ராகவும், அணங்குடை யென்பது அதற்கு அடைமொழியாகவும் வந்துள்ளன. இவ் வடைமொழியின் பொருளை விளக்கும் வகையில்,

"மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை
ஞெரேரெனத்
தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்(கு)"

என்னும் அடுத்த மூவடி யமைந்துள்ளன. அவற்றுள் முதலடியை நச்சினார்க்கினியர் கரிகாற் பெருவளத்தானைப்பற்றியதாகப் பிரித்துக் காட்டினும் ஏனை யீரடிகளையும் 139ஆம் அடியொடு சேர்த்து, அவற்றிற்கு, 'ஆளியாகிய நல்ல மாவினது வருத்துதலை யுடைய குருளை முலையை யுண்டலைக் கை விடாத இளைய பருவத்தே கடுக, முற்பட இரையைக் கோடற்குக் காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற் போல' என்று பொருள் வரைந்திருப்பதால், ஆளியின் குட்டியைக் குறிக்கும் அணங்கு என்னுஞ் சொற்கும் வருத்துதல் என்பதே பொருட்கரணியம் என்பது தேற்றம்.

ஆளி பார்க்க; see *āḷi*.

**அணங்குசார்ந்தாள்** *aṇaṅgu-šārndāḷ*, பெ. (n.) **தேவராட்டி**; temple-priestess divinely inspired and possessed with oracular powers. "அழைத்தபணி யென்னென்றா ளணங்கு சார்ந்தாள்" (பெரியபு. கண்ணப். 49).

**அணங்குடையாட்டி** *aṇaṅg(u)-uḍai-y-āṭṭi*, பெ. (n.) **தெய்வமேறி யாடுபவள்**; a divinely inspired woman having oracular powers. "அப் பெற்றியில் வாழ்த்தும் அணங்குடை யாட்டி" (பெரியபு. கண்ணப். 67).

*[அணங்கு + உடை + ஆட்டி.]*

**அணங்குத்தாக்கு** *aṇaṅgu-t-tākku,* பெ. (n.) *அணங்குதாக்கு பார்க்க;* see *aṇaṅgu-tākku.*

**அணங்குதாக்கு** *aṇaṅgu-tākku,* பெ. (n.) **காம நெறியா லுயிர்கொள்ளுந் தெய்வமகளால் தாக்கப்படுகை;** possession by a demoness of lust.

*[அணங்கு + தாக்கு.]*

**அணங்குறைவாள்** *aṇaṅg(u)-uṟaivāḷ,* பெ. (n.) *அணங்குடையாட்டி பார்க்க;* see *aṇaṅg(u)-uḍai-y-āṭṭi.* "அணங்குறை வாளையுங் கொண்டு" (பெரியபு. கண்ணப். 153).

*[அணங்கு + உறைவாள்.]*

**அணங்கெழுந்தாடு-தல்** *aṇaṅg(u)-eḻund(u)-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) *அணங்காடு-தல் பார்க்க;* see *aṇaṅg(u)-āḍu-* (சிலப். 5 : 70).

*[அணங்கு + எழுந்து + ஆடு.]*

**அணத்தான்** *aṇattāṉ,* பெ. (n.) **ஓணான்** (கோவை); blood-sucker, *Calotes verisicolor* (Cm.).



அணத்தான் (ஓணான்)

*[அணத்தல் = தலையெடுத்தல். அண → அணந்தான் → அணத்தான் = அடிக்கடி தலை யெடுக்கும் ஓணான்.]*

**அணப்பு** *aṇappu,* பெ. (n.) *1.* **முப்பத்தைந்திலிருந்து ஐம்பதுவரைப்பட்ட கசம்** (yd.) **கொண்ட நீட்டலளவு** (G. Tp. D. i, 179); a measure of length = 35 to 50 yds. *2.* **அரைச் செறுவிற்கு** (acre) **மேற்பட்ட சதுர அளவு** (G. Tp. D. i, 179); a square measure exceeding ½ acre.

*[அணை → அணைப்பு → அணப்பு.]*

ஓர் அணைப்புத் தொலை (தூரம்) = ஒரு படைச்சால் நீளம். ஓர் அணைப்பு = ஓரிணை யேர்கொண்டு ஒரு நாளில் உழக்கூடிய நிலப் பரப்பு. அணைத்தல் = தழுவுதல், சேர்த்தல், கட்டுதல், கையை வளைத்துக் கட்டித் தழுவினாற்போல் சால்வளைத்து உழுதல்.

**அணம்** *aṇam,* பெ. (n.) *1.* **மேல்வாய்;** the palate or the roof of the mouth. "பல்லணத் தொழிலின்" (நன். 74). *2.* **மேல்வாய்ப்புறம்;** the side of the upper jaw (சா.அக.).

மேல்வாய் என்பது மேல்வாய்ப்புறத் தையுங் குறிக்குமாதலால், அதை ஒரு தனிப் பொருளாகக் குறிக்கத் தேவையில்லை.

*[அண்ணம் → அணம்.]*

**அணர்-தல்** *aṇar-,* 2 செ.கு.வி. (v.i.) **மேனோக்கிச் செல்லுதல்;** to rise, move upward. "அணரி நுனிநா வண்ண மொற்ற" (தொல். எழுத்து. பிறப். 12).

*[அண் → அண → அணர்.]*

**அணர்** *aṇar,* பெ. (n.) *1.* **மேல்வாய்ப்புறம்** (பிங்.); the side of the upper jaw. *2.* **மேற் பரடு;** hard palate (சா.அக.). *3.* **மீசை முளைக்குமிடம்;** that part of the face where the moustache grows.

*[அணல் → அணர்.]*

**அணர்ச்செவி** *aṇar-c-cevi,* பெ. (n.) **எடுத்த அல்லது மேனோக்கிய காது;** prominent or erect ears. "நோன்புறத் தணர்ச்செவிக் கழுதைச் சாத்தொடு" (பெரும்பாண். 79-80.).

*[அணர் + செவி.]*

**அணரி** *aṇari,* பெ. (n.) **மேல்வாய்;** palate, roof of the mouth. 'அணரியிலே கறையையும்' (ஞானா. 44, உரை).

*[அணர் → அணரி.]*

**அணரிடு-தல்** *aṇar-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **கொக்கரித்தல்;** to shout in token of triumph. "சொக்கனுமங் கணரிட்டுத் துடைதட்டிச் சிரித்தருளி" (திருவாலவா. 52 : 8).

*[அணர் + இடு. ஒருகா. சேவல் போரில் வென்றபின் தலைதூக்கிக் கொக்கரித்தாற்போல், போர்மறவனும் வெற்றி பெற்றபின் தலை நிமிர்ந்து ஆரவாரித்தல். அணர்தல் = மேனோக்கு தல், மேலெழுதல்.]*

**அணல்** *aṇal,* பெ. (n.) *1.* **மேல்வாய்ப்புறம்** (பிங்.); the side of the upper jaw. *2.* **உள் மிடறு** (பிங்.); throat, windpipe. *3.* **கழுத்து;** neck. "கறையணற் குறும்பூழ்" (பெரும் பாண். 205). *4.* **கீழ்வாய்ப்புறம்** (திவா.); lower part of the mouth, chin. *5.* **தாடி;** beard. "மையணற் காளை" (புறநா. 83 : 1).

6. **அலைதாடி**; dewlap. "மொய்யண லானிரை" (பு. வெ. 1 : 12).

ம., க. அணல்.

[அண் → அணல்.]

**அணவல்** *aṇaval*, பெ. (n.) **பல்** (சம்.அக.கை.); tooth. —, தொ.பெ. (vbl.n.) 1. **அணுகுதல்**; to go near, approach, come close to. 2. **பொருந்துதல்**; to unite.

ம. அணயுக; க. அணெ, அணி.

[அண் → அண → அணவு → அணவல். அண்ணுதல் = நெருங்குதல். அணவுதல் = பொருந்துதல். நெருங்கியிருத்தலால் அல்லது பொருந்துதலால், பல் அணவல் எனப்பட்டது போலும். இது தொழிலாகுபெயர்.]

**அணவன்** *aṇavaṉ*, பெ. (n.) **பொருந்தினவன்**; one who has taken abode, resident. "குரங்காடு துறைதனி லணவன்தான்" (தேவா. 5.63 : 4).

[அண → அணவு → அணவன்.]

**அணவா[1]-தல்** (**அணவரு-தல்**) *aṇa-vā-* (*aṇa-varu-*), 18 செ.கு.வி. (v.i.) **அணுகுதல்**; to come near.

[அண் → அண (நி.கா.வி.எ.) + வா.]

**அணவா[2]-தல்** (**அணவரு-தல்**) *aṇa-vā-* (*aṇa-varu-*), 18 செ.கு.வி. (v.i.) **மேலுயர்த்தப்படுதல்**; to be raised. "நீர்வழிக் கணவரு நெடுங்கைய வாகி" (பெருங். உஞ்சைக். 54 : 42).

[அண் → அண (நி.கா.வி.எ.) + வா.]

**அணவா** *aṇavā*, பெ. (n.) **ஒரு பூண்டு**; a plant (unidentified) (சா.அக.).

**அணவு[1]-தல்** *aṇavu-*, 5 செ.கு.வி. (v.i.) **மேல் நோக்கிச் செல்லுதல்**; to go upward, ascend. "அந்தர வகடுதொட் டணவு நீள்புகழ்" (சீவக. 1239).

[அண் → அண → அணவு.]

**அணவு[2]-தல்** *aṇavu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அணுகுதல்** (சூடா.); to go near, approach, come close to. 2. **தொடுதல், புல்லுதல்** (சூடா.); to embrace. "மாடக்கொடி கதிரணவுந் திருவெள்ளி யங்குடி" (திவ். பெரிய திரு. 4.10 : 4). 3. **பொருந்துதல்**; to unite. 4. **ஒட்டுதல்** (பிங்.); to stick to, adhere to. 5. **புணர்தல்**; to have sexual intercourse (சா.அக.).

ம. அணவு; க. அணசு.

[அண் → அண → அணவு.]

**அணவு[1]** *aṇavu*, தொ.பெ. (vbl.n.) **பொருந்துதல்**; joining, uniting. "இருகரை யணவுறக் கிடக்கும்" (உபதேசகா. மச்ச. 12).

[அண் → அண → அணவு.]

**அணவு[2]** *aṇavu*, பெ. (n.) **நடு** (பிங்.); middle.

[உள் = உள்ளிடம், நடு. உள் → உண் → அண் → அண → அணவு.]

**அணற்கமந்திரம்** *aṇaṟka-mandiram*, பெ. (n.) **தூதுவளை**; three-lobed night shade, *Solanum trilobatum* (சா.அக.).

**அணன்** *aṇaṉ*, பெ. (n.) 1. **பொருந்தியவன்**; one who possesses, as greatness. "சீரணனை" (திவ். இயற். நான். 67). 2. **இரண்டறக் கலந்தவன்**; one who is inseparably united with the universe.

[அண் + அன்.]

**அணா** *aṇā*, பெ. (n.) **இன்பப்போக்கு, பற்றாட்டு**; pastime, recreation, hobby, sport. 'அணாவாய்த்துக் காலங்கழிக்க' (ஈடு).

[அண்ணுதல் = பற்றுதல். அணா = மனம் பற்றிய ஆட்டு.]

**அணாப்பன்** *aṇāppaṉ*, பெ. (n.) **ஏமாற்றுபவன்**; a male cheat, swindler, deceiver.

[அணாப்பு + அன் (ஆ.பா. ஈறு).]

**அணாப்பி** *aṇāppi*, பெ. (n.) **ஏமாற்றுபவள்**; deceitful woman. "அணாப்பிகள், படிறிகள்" (திருப்பு. 343).

[அணாப்பு + இ (பெ.பா. ஈறு).]

**அணாப்பு-தல்** *aṇāppu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **ஏமாற்றுதல்**; to deceive, cheat. "அணாப்பித் துலக்கஞ் சீர்த்துத் திரிமானார்" (திருப்பு. 381).

[அணா (அணவு) → அணாப்பு. அணாப்பு = ஒக்க அல்லது பொருந்தச் சொல்லி ஏமாற்றுதல். ஒ.நோ: ஏய்தல் = ஒத்தல். ஏய்த்தல் = ஏமாற்றுதல்.]

**அணாப்பு** *aṇāppu*, தொ.பெ. (vbl.n.) **ஏமாற்றுகை** (இ.வ.); deceit, fraud (Loc.). **அணாப்பு-தல்** பார்க்க; see *aṇāppu-*.

ம. அணப்பு

**அணார்** *aṇār*, பெ. (n.) **கழுத்து**; neck. "அணார் சொறிய" (திவ். பெரியாழ். *3.5 : 8*).

*[அணல் → அணர் → அணார்.]*

**அணாவு-தல்** *aṇāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **கிட்டுதல்**; to approach. "அருக்கன் மண்டலத் தணாவு மந்த ணாரூர்" (தேவா. *2.237 : 1*).

*[அணவு → அணாவு.]*

**அணி-தல்** *aṇi-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **அழகாதல்**; to be beautiful. "பாஅ யன்ன பாறை யணிந்து" (மதுரைக். *278*). *2.* **அணிகலமாதல்** (செ.அக.); to be an ornament. "ஐயிரு திசையினு மணிந்து செல்வன" (கந்தபு. தேவ. தெய்வ. *65*). *3.* **வரிசையாதல்**; to be drawn up in lines. "ஐயிரு திசையினு மணிந்து செல்வன" (கந்தபு. தேவ. தெய்வ. *65*)—(சங். அக.). *4.* **பரத்தல்**; to spread. "சுணங்கணி யாகம்" (கலித். *4 : 17*). —, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **அலங்கரித்தல்**; to adorn. "இக்கோ நகரணிக" (கம்பரா. அயோத். மந்தரை. *33*). *2.* **தாங்குதல்**; to bear, as weapons; to wear, as dress. "ஆத லாற்றனை வியப்பதற் கன்றவை யணிதல்" (கந்தபு. தக்க. ததீசியுத். *14*). *3.* **பூணுதல்**; to wear, as jewels. *4.* **பொருந்துதல்**; to join with. "சாறயர்ந் தன்ன காரணி யாணர்த் தூம்பகம்" (பதிற். *81 : 20-21*). *5.* **படை வகுத்தல்**; to put in array, as an army. "இத்தக வாக வணிந்திரு சேனையும்" (பாரத. பதின்மூன். *8*). *6.* **சூழ்தல்**; to surround. "துகிலணி யல்குற் றுளங்கி யன் மகளிர்" (சிறுபாண். *262*). *7.* **வண்ணித்தல்**; to describe in embellished language. "அனையதை யணியமாட் டாது" (பிரபுலிங்க. கைலாச. *8*).

ம. அணியுக

*[அண் → அணி. அண் = மேல். அணி = மேலிடு.]*

**அணி**[1] *aṇi*, பெ. (n.) *1.* **அழகு** (பிங்.); beauty. "அணிமாழ்கி" (கந்தபு. உற்பத். காமதக. *8*). *2.* **அணிகலம்**; ornament, jewel. 'அணியென் பது கவிப்பன கட்டுவன செறிப்பன பூண்பன வென்னுந் தொடக்கத்தன' (தொல். சொல். கிளவி. *46*, சேனா. உரை). 'அணிபூண்ட நாய்போல', 'அணியெல்லாம் ஆடையின் பின்' (பழ.). *3.* **ஒப்பனை** (பிங்.); embellishment, decoration. *4.* **சொல்லணி பொருளணி யென்னும் இருவகை யிலக்கிய அழகு**; figure of speech. "வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்" (நன். *268*). *5.* **அணியிலக்கணம்**; rhetoric. *6.* **தொழிற்கருவி**; mechanic's tool. *7.* **வழிப்போக்கு, போர் முதலியவற்றிற்குரிய பூட்டுப் பொருத்துகள்**; outfit for journey, equipment for battle. *8.* **கோலம்**; disguise. "அணியி னரங்கின்மே லாடுநர்போல்" (ஏலாதி, *24*). *9.* **அடுக்கு**; tier. "அணிநிலை மாடம்" (பெருங். உஞ்சைக். *33 : 105*). *10.* **திரள்**; pile, heap. "அணியணி யாகிய தாரர்" (பரிபா. *6 : 31*). *11.* **கூட்டம்**; assembly, gathering. "தேவ ரணிதொழ" (கோயிற்பு. பதஞ்சலி. *9*). *12.* **பெருமை** (பிங்.); greatness. *13.* **வரிசை**; order, row. "சுருப்பணி நிரைத்த" (கல்லா. *15 : 5*). *14.* **ஒழுங்கு**; regularity. *15.* **பூமாலை** (சங்.அக.); flower-garland. *16.* **படைவகுப்பு** (பிங்.); array of an army. *17.* **படையுறுப்பு** (பிங்.); division of an army. *18.* **அழகுதோன்றும் முகம்**; beautiful face, face. "நண்பகன் மதியம்போ னலஞ்சாய்ந்த வணியாட்கு" (கலித். *121 : 18*). *19.* **இனிமை**; pleasantness. "அணிநிலா" (சிலப். *4 : 3*). *20.* **நன்மை**; goodness. *21.* **கூட்டுச்சரக்கு (சம்பாரம்)** (சங்.அக.); curry-stuff. *22.* **அன்பு** (பிங்.); love. *23.* **தேரின் அச்சாணி** (சங்.அக.); linch pin. *24.* **அண்மை**; nearness. *25.* **எல்லை**; limit, boundary (யாழ்.அக.). *26.* **நுணா**; a tree, *Morinda umbellata* alias *M. citrifolia* (சா. அக.). *27.* **முப்பத்தைந்தைக் குறிக்கும் குழூஉக் குறி** (சோதிட அக.); cant for the number 35. —, இடை. (part.) **ஓர் உவமவுருபு**; an adjectival word of comparison. "நிலவிரி கதி ரணி நிகரறு நெறியினை" (சீவக. *2562*).

ம., க., தெ., து., குட. அணி; பிராகி. அணிய.

*[அண் → அணி. குழூஉக்குறிப் பொருள் பொருளணியின் தொகைபற்றியதாயிருக்க லாம்.]*

**அணி**[2] *aṇi*, கு.வி.எ. (adv.) **அருகில்**; near.

"இனியணி யென்னுங் காலையும் இடனும்
வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டும் அன்ன"
(தொல். எழுத்து. உயிர்மயங். *34*).

க. அணி

*[அண் → அணி.]*

**அணிக்கிழங்கு** *aṇi-k-kiḻaṅgu*, பெ. (n.) **நுணாவின் அடிவேர்க் கிழங்கு**; the bulbus root of the *nuṇā* (சா.அக.).

*[ஒருகா. அடிக்கிழங்கு → அணிக்கிழங்கு.]*

**அணிகம்** *aṇigam*, பெ. (n.) 1. *அணிகலம்*; ornament. "அணிகமாப் பணிகள் செய்து" (சீவக 2811). 2. *ஊர்தி*; conveyance, vehicle. "அணிகமூர்ந் தமர ரீண்டி" (சீவக. 3115).

*[அணி → அணிகு → அணிகம். அண் = மேல். அணிகம் = மேலூர்ந்து செல்வது.]*

**அணிகயிறு** *aṇi-kayiṟu*, பெ. (n.) *குதிரையின் கடிவாளம்*; reins. "அணிகயிறு தெரிபு வருவார்" (பரிபா. 9 : 52).

**அணிகலச்செப்பு** *aṇi-kala-c-ceppu*, பெ. (n.) *நகைப் பெட்டி* (பிங்.); jewel-casket.


அணிகலச்செப்பு

*[அணிகலம் + செப்பு.]*

**அணிகலம்** *aṇi-kalam*, பெ. (n.) 1. *நகை*; ornament, jewel. 2. *நகைப்பெட்டி* (புதுவை); jewel-casket (Poṇḍ.); 3. *கம்மாளர் கருவி* (யாழ்.அக.); smith's instrument.

ம. அணிகலம்

**அணிகலன்கள்** *aṇi-kalaṉgaḷ*, பெ. (n.) *நகை நட்டு*; ornaments, jewels. "செய்யணி கலன்கள் சிந்தி" (சீவக. 117).

*[அணிகலம் → அணிகலன்.]*

**அணிச்சுரம்** *aṇiccuram*, பெ. (n.) *அணிசநாசம் பார்க்க*; see *aṇišanāšam.*

**அணிச்சுராவிதம்** *aṇiccurāvidam*, பெ. (n.) *சிவப்புக் கீழ்க்காய் நெல்லி*; red small-leaved feather foil, *Phyllanthus polyphyllus* alias *P. niruri* (சா.அக.).

**அணிச்சை** *aṇiccai*, பெ. (n.) *நாகமல்லி* (பச்.மூ.); ringworm root.

ஒ.நோ: *அனிச்சை.*

**அணிசநாசம்** *aṇišanāšam*, பெ. (n.) *நாக மல்லிகை*; snake jasmine, *Rhinacanthus communis* (சா.அக.).

**அணிஞ்சகம்** *aṇiñjagam*, பெ. (n.) *கொடிவேலி*; Ceylon leadwort, *Plumbago zeylanica* (சா. அக.).

**அணிஞ்சில்**[1] *aṇiñjil*, பெ. (n.) 1. *கொடிவேலி* (மலை.); Ceylon leadwort. 2. *சிற்றாமுட்டி* (மலை.); rose-coloured sticky mallow. 3. *நொச்சி* (மலை.); five-leaved chaste tree. 4. *முள்ளி* (மலை.); species of Solanum.

**அணிஞ்சில்**[2] *aṇiñjil*, பெ. (n.) *அழிஞ்சில்* (வின்.); sage-leaved tree, Alangium.

*[அழிஞ்சில் → அணிஞ்சில்.]*

**அணிஞ்சேபம்** *aṇiñjēbam*, பெ. (n.) *சிவப்புக் கொம்மட்டி*; a red variety of water-melon, *Citrullus vulgaris* (சா.அக.).

**அணிந்தம்** *aṇindam*, பெ. (n.) *கோபுரவாயிலின் முகப்பிலுள்ள மேடை* (வின்.); pial at the entrance of a temple tower.

*[அணி → அணிந்து → அணிந்தம் → அளிந்தம் > **Skt.** alinda.]*

**அணிந்தவைதிருத்தல்** *aṇindavai-tiruttal*, பெ. (n.) *காதல் மயக்குற்ற இளம்பெண் தன் நெகிழ்ந்துபோன வளையல் முதலிய அணிகளைச் செறித்தல், இருபத்து நான்கு மெய்ப்பாட்டுச் செயல்களுள் ஒன்று*; one of the 24 emotional acts of a maiden overwhelmed with love, such as tightening the loosened bracelets. "அணிந்தவை திருத்தல்" (தொல். பொருள். மெய்ப். 15).

**அணிந்தற்றுப்போ-தல்** *aṇindaṟṟu-p-pō-*, 8 செ. கு.வி. (v.i.) *வறுமைப்படுதல்* (இராட்.); to become destitute (R.).

*[ஒருகா. அழிந்தற்றுப்போ → அணிந்தற்றுப் போ.]*

**அணிந்துரை** *aṇindurai*, பெ. (n.) *முகவுரை, பாயிரம்*; preface (நன். 1).

*[அணிந்து + உரை.]*

**அணிநிலைமாடம்** *aṇi-nilai-māḍam*, பெ. (n.) *அடுக்கான மேனிலைகளுள்ள வீடு அல்லது கட்டடம்*; storeyed house. "அத்தம் பெயரிய வணிநிலை மாடத்து" (பெருங். உஞ்சைக். 33 : 105).

**அணிநுணா** *aṇinuṇā*, பெ. (n.) *இராமசீத்தா* (யாழ்ப்.); bullock's heart, s. tr., *Anona reticulata.*

ஒ.நோ: **Span.** anona.

**அணிநோக்கி** *aṇinōkki*, பெ. (n.) *செங்கொன்றை*; red Indian cassia, *Cassia marginata* (சா.அக.).

**அணிப்பாடு** *aṇi-p-pāḍu*, பெ. (n.) *வணிக மருமம்* (இ.வ.); trade secret (Loc.).

க. அணிபாடு

**அணிப்பூ** *aṇi-p-pū*, பெ. (n.) *புளி*; tamarind, *Tamarindus indica* (சா.அக.).

**அணிபடு-த்தல்** *aṇi-paḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. சுவடித்தல், அழகுபடுத்துதல்*; to decorate. "அண்டம் வெஃக அணிபடுத் திட்டவை" (கந்தபு. உற்பத். திருக்கல். 31). *2. ஒழுங் காக்குதல்*; to set in order, arrange, regulate.

**அணிபெறு-த்தல்** *aṇi-peṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *அழகுபெறச் செய்தல், புனைதல்*; to adorn. "அந்நகருக் கோர்நாம மணிபெறுத்தி யளித்தனனே" (கந்தபு. அசுர. நகர்செய். 22).

**அணிமாக்கசங்கு** *aṇimā-k-kaśaṅgu*, பெ. (n.) *இந்துப்பு*; rock-salt (சா.அக.).

**அணிமுகம்** *aṇi-mugam*, பெ. (n.) *அலங்காரமான வாயில்முகப்பு*; decorated portal. "வாயின் மாடத் தாய்நல வணிமுகத்து" (பெருங். மகத. 3 : 31).

**அணிமுலை** *aṇi-mulai*, பெ. (n.) *1. பூசணி* (மலை.); pumpkin. *2. அழிஞ்சில்*; ancola fruit plant, *Alangium lamarckii* (சா.அக.).

**அணிமுலைப்பால்** *aṇi-mulai-p-pāl*, பெ. (n.) *பூசணிக்காம்பினின்று ஒழுகும் நீர்*; fluid oozing out of the pumpkin peduncle (சா.அக.).

*[அணிமுலை + பால்.]*

**அணிமுலைமாது** *aṇi-mulai-mādu*, பெ. (n.) *பூசணிக்காய்*; pumpkin, *Cucurbita maxima*.

**அணிமை**[1] *aṇimai*, பெ. (n.) *அருகு*; nearness, proximity, either of time or place. "மூதூ ரணிமையின்" (காஞ்சிப்பு. நாட். 16).

*[அண் → அணி → அணிமை.]*

**அணிமை**[2] *aṇimai*, பெ. (n.) *1. நுண்மை* (சிந்தா.நி. 105); minuteness. *2. அணுவைப் போல் நுண்மையாகை, எண்பெரும் பெற்றி களுள் ஒன்று*; supernatural power of becoming as small as an atom, one of *eṇperum-peṟṟigaḷ*.

*[அள் = கூர்மை, நுண்மை. அள் → அண் → அணி → அணிமை.]*

**அணியத்துக்கட்டை** *aṇiyattu-k-kaṭṭai*, பெ. (n.) (கப்.) *கப்பலின் முன்பக்கத்து ஓரம்*; (Naut.) cutwater of a ship.

*[அண் → அணி → அணியம். அணியம் + அத்து + கட்டை.]*

**அணியப் பாய்மரப் பருமல்** *aṇiya-p-pāy-mara-p-parumal*, பெ. (n.) *அணியப் பாய்மரப் பாய்* பார்க்க; see *aṇiya-p-pāymara-p-pāy*.

*[அணியம் + பாய்மரம் + பருமல்.]*

**அணியப் பாய்மரப் பாய்** *aṇiya-p-pāy-mara-p-pāy*, பெ. (n.) *அணியத்திலுள்ள பாய்மரத்திற் கட்டும் பாய்* (புதுவை); sail of the mast on the prow of a vessel (Poṇḍ.).

*[அணியம் + பாய் + மரம் + பாய்.]*

**அணியம்** *aṇiyam*, பெ. (n.) *1. படைவகுப்பு*; array of an army. *2. உடனே வினைதொடங் கற்கேற்ற நிலை (ஆயத்தம்)* (வின்.); readiness. க. அணி. *3. கப்பலின் முன்பக்கம்*; forepart of a vessel, stem, prow. அணியத்திலே கிழிந் தாலுங் கிழிந்தது, அமரத்திலே கிழிந்தாலுங் கிழிந்தது (உ.வ.). *4. துணைக்கருவி*; apparatus (சா.அக.). *5. ஆட்டின் தலை*; sheep's head (சா.அக.).

ம. அணியம்; து. அண்ய.

*[அணி → அணியம் = போருடையணிந்து படைக்கலங்களைத் தாங்கி நிற்றல்போல், அல்லது போர்க்களத்திற் படைவகுப்பு வகுக்கப் பட்டதுபோல், வினை உடனே தொடங்கற்கேற்ற நிலை. ஒருகா. போர்ப்படையின் முன்னணியும் கப்பலின் முன்பக்கமும் போர் தொடங்குவதை யொத்தது போலும், போர்முகத்தில் வெட்டப் படும் ஆட்டுக்கடாவெட்டு.]*

**அணியல்** *aṇiyal*, பெ. (n.) *1. வரிசை*; line, order. "அளக்கர்வாய் முத்தமுர லணியலா ரணியின் சோதி" (கம்பரா. அயோத். கைகேயி சூ. 79). *2. மாலை*; garland. "அணிய லணிகுவ னன்றி" (நைடத. அன்னத்தைத்தூ. 99). *3. அழகுசெய்கை*; adorning, decorating. "கறை மிட றணியலு மணிந்தன்று" (புறநா. 1 : 5).

ம. அணியல்

*[அணி → அணியல்.]*

**அணியன்**[1] *aṇiyaṉ*, பெ. (n.) *1. அழகன்*; handsome man. *2. அணியுடையவன்*; one who possesses ornaments. *3. அணிகளை யணிந்தவன்*; one who is wearing ornaments.

*[அணி → அணியன்.]*

**அணியன்**[2] *aṇiyaṉ*, பெ. (n.) *நெருங்கினவன்*; one who is very close. "நாய்க்காற் சிறு விரல்போ னன்கணியர்" (நாலடி. 218).

க. அணுக

*[அணி → அணியன்.]*

**அணியாத்தரங்கன்** *aṇiyāttaraṅgaṉ*, பெ. (n.) அணில்; squirrel (சா.அக.).

**அணியிடுவான்வரி** *aṇi-y-iḍuvāṉ-vari*, பெ. (n.) பழைய வரிவகை (S.I.I. iv, i22); an ancient tax.

**அணியியல்** *aṇi-y-iyal*, பெ. (n.) 1. (இலக்.) அணியிலக்கணம்; (Gram.) rhetoric. 2. ஒரு பண்டை அணியிலக்கண நூல் (சிலப். 2 : 27, உரை); an ancient work on rhetoric.

[அணி + இயல்.]

**அணியிலக்கணம்** *aṇi-y-ilakkaṇam*, பெ. (n.) சொல்லணி பொருளணி யென்னும் இருவகை யணிகளையும்பற்றிக் கூறும் இலக்கணம்; rhetoric.

[அணி + இலக்கணம்.]

**அணியிழை** *aṇi-y-iḻai*, பெ. (n.) 1. அழகிய அணிகலம்; beautiful jewel or ornament. 2. அழகிய அணிகளை யணிந்த பெண்; woman, adorned with beautiful jewels. "அணியிழை தன்னோய்க்குத் தானே மருந்து" (குறள், 1102).

[அணி + இழை.]

**அணியுஞ்செம்பு** *aṇiyuñ-cembu*, பெ. (n.) உயர்ந்த களிம்பற்ற செம்பு; superior copper which is free from verdigris, pure copper (சா.அக.).

[அணியும் + செம்பு.]

**அணியெண்** *aṇi-y-eṇ*, பெ. (n.) 35 என்னும் எண், தண்டியலங்காரம் என்னும் தமிழ் அணி யிலக்கண நூலிற் சொல்லப்பட்டுள்ள பொரு ளணிகளின் தொகை; the number 35, as that of *poruḷ aṇi* in *Taṇḍiyalaṅgāram*, a Tamil treatise on rhetoric. "அணியெண் முதலிரண் டரைத்தூக்கு" (தைலவ. தைல. 42).

**அணியொட்டிக்கால்** *aṇi-y-oṭṭi-k-kāl*, பெ. (n.) தலைப்பக்கம் வேலைப்பாடமைந்த தமிழ் நாட்டுக் கோயிற் கற்றூண்; Dravidian temple pillar with ornamented capital. அணி யொட்டிக்கால் மண்டபம் (உ.வ.).

[அணி + ஒட்டி + கால்.]

**அணில்** *aṇil*, பெ. (n.) மரங்களில் வாழ்வதும், சாம்பல் நிறமும் மயிரடர்ந்த வாலும் முதுகில் மூவெள் வரியும் உள்ளதும், வால் நீங்கலாக 8 விரலம் (அங்குலம்) நீளம் வளர்வதும், வேக மாய் ஓடவும் தாவவும் வல்லதும்; கொறிப்பான் (rodent) வகுப்பைச் சேர்ந்ததுமான உயிரி (பிராணி); squirrel, *Furambulus palmarum*, a kind of arboreal rodent of ashen grey colour, growing to a length of about 8 inches excluding the tail, with three whitish stripes along the whole length of the back and with bushy tail, distinguished by its agility and power of leaping and fast-running. "மூவரி யணிலொடு" (தொல். பொருள். மர. 6). 'அணில் கொப் பிலும் ஆமை கிணற்றிலும்', 'அணில் நெட் டியா தென்னை சாயும்?', 'அணிற்பிள்ளைக்கு நுங்கு அரிதோ? ஆண்டிச்சி பிள்ளைக்குச் சோறு அரிதோ?', 'அணிற்பிள்ளையின் தலை மீது அம்மிக் கல்லை வைத்தது போல' (பழ.).

ம., க., பட., துட. அணில்; து. சணில்.

[அணி → அணில் = முதுகில் மூவரியுள்ளது. அணி = வரி.]

சாம்பசிவம் பிள்ளை தமிழ் - ஆங்கில அகர முதலி அணிலைப்பற்றிச் சிறப்பாகக் கூறுவது வருமாறு :

Squirrel, *Sciurus palmarum*. It is the name given to the various species of rodents living in trees............The several species are :

1. பனையேறியணில்; palm squirrel.
2. வரியணில்; striped squirrel, *Pencillatus*.
3. பறவையணில்; flying squirrel, *Pteromis petaurista*.

Besides the above three, there are also striped squirrels of Travancore, Nilgiris, Malabar, etc.

The other South Indian species are—*Elephinstonei*, *Layardi*, *Macrourus*, *Tristriatus*, *Sublineatus*.

**அணில்வரிக் கொடுங்காய்** *aṇil-vari-k-koḍuṅgāy*, பெ. (n.) வெள்ளரிக்காய் (புறநா. 246 : 1); cucumber.

[அணில் + வரி + கொடும் + காய்.]

**அணில்வரியன்** *aṇil-variyaṉ*, பெ. (n.) 1. வெள்ளரிவகை (யாழ்ப்.); mottled water-melon, *Citrullus vulgaris* (J.). 2. வரிப் பலாப் பழம் (யாழ்ப்.); a streaked jackfruit (J.). 3. முதுகில் வரியுள்ள ஆவு (பசு) (யாழ்ப்.); cow with a large stripe on its back (J.). 4. ஒருவகைக் கோடுள்ள பட்டு (யாழ்ப்.); a kind of silk cloth with stripes (J.).

**அணில்வாற்றினை** *aṇil-vāṟṟiṉai*, பெ. (n.) *அணிலின் வாலைப்போன்ற கதிருள்ள ஒரு வகைத் தினை* (யாழ்ப்.); species of Italian millet, *Panicum italicum* (J.).

*[அணில் + வால் + தினை.]*

**அணிலம்** *aṇilam*, பெ. (n.) *அணில்*; squirrel. "தரங்கநீ ரடைக்க லுற்ற சலமிலா வணிலம்" (திவ். திருமாலை, 27).

*[அணில் → அணிலம்.]*

**அணிவகு-த்தல்** *aṇi-vagu-*, 4 செ.குன்றாவி. (v.t.) *தானை, குதிரை, யானை, தேர் என்னும் நால்வகைப் படைகளையும், வெற்றிபெறற் கேற்றவாறு பெரும்படைத் தலைவன் தான் கருதியபடி போர்க்களத்தில் வகுத்து நிறுத்து தல்*; to draw up in battle array, as the commander-in-chief or generalissimo, all the four constituents of an army, namely infantry, cavalry, elephantry and chariotry, on the battle-field in strategic formation. "மண்ணகத்தணி யணிகளாக மகீபர்தம்மை வகுத்துளான்" (பாரத. படையெழுச். 38).

**அணிவகுப்பு** *aṇi-vaguppu*, பெ. (n.) *படை மறவரை வரிசைப்பட நிறுத்துதல்*; strategic formation of an army in battle array.

அணிவகுப்பு எனினும் படைவகுப்பு எனினும் ஒக்கும். அது வடிவு (வியூகம்), உறுப்பு என இருதிறப்படும்.

தண்டம், மண்டலம், சக்கரம், சகடம், பருந்து முதலியனவாக வடிவு பலவகைப் படும். வடிவின்வகை, சேனையின் அளவையும் படையின் வகையையும் போர்க்களத்தின் பரப்பையும் அவ்வப்போது நேரும் போர் நிலைமையையும் படைத்தலைவன் திறமை யையும் பொறுத்தது.

ஒட்டு, உண்டை, அணி என்பன வடிவின் பெயர்கள்.

"ஒட்டும் யூகமு முண்டையு மணியு
மற்றிவை படையின் வகுப்பென லாகும்"
(பிங். 6 : 402).

தூசி (தூசு), கூழை, நெற்றி, கை, அணி என்பன உறுப்பின் பெயர்கள். உறுப்புகள் என்பன வடிவுகளின் பிரிவுகள். பருந்து வடிவின் உறுப்புகள் ஏழாகலாம். தார், தூசி, கொடி என்பன ஒருபொருட் சொற்கள். அவை படையின் முன்னணியைக் குறிப்பன. கூழை யென்பது பின்னணி. அதன் பிற்பகுதி கடைக்கூழை யெனப்படும்.

"தூசியுங் கூழையு நெற்றியுங் கையு
மணியு மென்ப தப்படைக் குறுப்பே"
(பிங். 6 : 403).

"தாரே முன்செல் கொடிப்படை யாகும்"
(பிங். 6 : 405).

படையியல்பற்றிக் கூறும் பண்டைத் தமிழ்ப் பொருள்நூல்களெல்லாம் இறந்துபட்டன. அதனாலேயே, பரிமேலழகர் 'படை வகுப் பாவது வியூகம்; அஃது எழுவகை உறுப் பிற்றாய், வகையால் நான்காய், விரியால் முப்பதாம்................இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற்பெருகும். அவை யெல்லாம் வடநூல்களுட் கண்டுகொள்க' என்று உரைத்தார் (குறள், 767, பரிமே. உரை). 'தொன்றுதொட்டு வருதல் சேர சோழ பாண்டிய ரென்றாற்போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்' என்று அவரே (குறள், 955, உரை) கூறியிருப்பதால், இறந்துபட்ட தமிழ்நூல்களே வடநூல்கட்கு முதனூல்களென்பது தானே பெறப்படும்.

**அணிவடம்** *aṇi-vaḍam*, பெ. (n.) *கழுத்தி லணியும் மணிமாலை*; ornamental string of jewels, necklace.

**அணிவியூகம்** *aṇi-viyūgam*, பெ. (n.) *படை வகுப்பு*; military array.

*[அணி + Skt. vyūha > த. வியூகம்.]*

**அணிவிரல்** *aṇi-viral*, பெ. (n.) *மோதிர விரல்*; ring - finger. "அதிரதர் தம்மை யெண்ணி லணிவிரல் முடக்க வொட்டா" (பாரத. நிரைமீட். 91).


அணிவிரல்

ம. அணிவிரல்

*[அணி + விரல். அணி = மோதிரம், கைந்நகை. அண் → அணி.]*

**அணிவில்** *aṇi-vil*, பெ. (n.) *பேரேடு* (கணக். பதி. 36); ledger.

**அணிவிளக்கு-தல்** *aṇi-viḷakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *அலங்கரித்தல்*; to adorn. "தில்லைநகர் மணிவீதி யணிவிளக்கும்......... அனபாயன்" (பெரியபு. புகழ்ச். 8).



அடுக்குவாழை



அடுப்பூஊதி



அண்டிக்கொட்டை



அணில்



அணைகயிறு

**அணிவு** *aṇivu,* பெ. (n.) **அணிகை**; wearing. "புனையிழைகள் அணிவும்" (திவ். திருவாய். 8.9 : 5).

ம. அணிவு

*[அணி → அணிவு.]*

**அணிவேர்** *aṇi-vēr,* பெ. (n.) **வெட்டிவேர்**; cuscuss grass root, *Andropogon aromatices.* "அணிவேர் தகரம் பூரம்" (தைலவ. தைல. 86).

**அணிற்பிள்ளை** *aṇiṟ-piḷḷai,* பெ. (n.) 1. **அணிற் குட்டி**; young of squirrel. 2. **அணில்**; squirrel.

*[அணில் + பிள்ளை.]*

சிலர் அணிலைப் பிள்ளையைப்போல் வீட்டில் வளர்ப்பதால், அதன் குட்டிமட்டு மன்று, முழுவளர்ச்சி யடைந்த அணிலும், பிள்ளை யெனப்படும். இருக்கும் பிள்ளை மூன்று, பறக்கும் பிள்ளை மூன்று, ஓடும் பிள்ளை மூன்று என்பது ஒரு சொலவடை. ஓடும் பிள்ளை மூன்றனுள் ஒன்று அணில்.

**அணு** *aṇu,* பெ. (n.) 1. **நுண்மை** (பிங்.); minuteness, smallness, subtleness. 'அணு அளவு இலாபத்திலும் அரைப்பங்கு பாழ்', 'அணு மாமேரு ஆகுமா?', 'அணுவும் மலையாச்சு மலையும் அணுவாச்சு' (பழ.). 2. **பகுக்க முடியாவாறு நுண்மையானது**; minute particle of matter, atom. "அணும யங்குமின் நுழை கதிர் எறிந்தவா ளாக" (பிரபுலிங்க. கோரக். 53); 'அவனன்றி அணுவு மசையாது' (பழ.). 3. **ஆதன் (ஆன்மா)**; soul. "அன்னை யொப்ப வணுக்கட்கு நல்லவர்" (திருவாலவா. 34 : 19). 4. **நுண்ணுடம்பு (சூக்கும சரீரம்)**; subtle body. "உளமணுவாய்ச் சென்று" (சி.போ. சிற். 2.3 : 1). 5. **நுண்ணாற்றல் வடிவம் (சூக்கும சத்திரூபம்)**; a body or form having minute power. "வித்துச் சாகாதி யணுக்க ளாக வேற்றதேல்" (சி.சி. சுபக். 1 : 14). 6. **மந்திரம்** (பொதி. நி.); mantra. 7. **பொடி** (பிங்.); dust. 8. **தினை**; Italian millet, *Panicum italicum* (சா.அக.). 9. **வரகு**; common millet (சா.அக.).

ம., க., து. அணு.

*[அள் = கூர்மை. அள் → அள்கு → அஃகு. அஃகுதல் = கூரிதாதல், சுருங்குதல், நுண்ணி தாதல். அள் → அண் → அணு = நுண்மை, நுண்ணியது, மிகச் சிறியது.]*

**அணுக்கச்சேவகம்** *aṇukka-c-cēvagam,* பெ. (n.) **அரசர் முதலியோரிடம் அணுகிச் செய்யும் ஊழியம்**; service to kings and nobles as personal attendant. "அணுக்கச் சேவகத்தி லுள்ளோர்" (பெரியபு. ஏயர்கோ. 332).

*[அணுக்கம் +* **Skt.** *sēvaka > த. சேவகம்.]*

**அணுக்கம்** பார்க்க; see *aṇukkam.*

**அணுக்கடிக்கை** *aṇukk(u)-aḍikkai,* பெ. (n.) **உண்ணெருக்கமாகுகை** (ஈடு, 7.3 : 4); becoming intimate, becoming a confidential friend.

*[அணுக்கு + அடிக்கை. அடி → அடிக்கை.]*

**அணுக்கு** பார்க்க; see *aṇukku.*

**அணுக்கத்தொண்டன்** *aṇukka-t-toṇḍaṉ,* பெ. (n.) 1. **அரசனுக்கு நெருங்கிப் பணிசெய் வோன்**; one who renders service to a king as his personal attendant. 2. **இறைவனுக்கு நெருங்கிய அடியான்**; an ardent devotee of God.

*[அணுக்கம் + தொண்டன்.]*

**அணுக்கநம்பி** *aṇukka-nambi,* பெ. (n.) **சுந்தர மூர்த்தி நாயனார்** (செந். XXV : 342); Saint Śundarar.

*[அணுக்கம் + நம்பி.]*

**அணுக்கம்**[1] *aṇukkam,* பெ. (n.) **அண்மை, நெருக்கம்**; proximity, nearness, closeness. "அணுக்க வன்றொண்டர்" (பெரியபு. வெள்ளா. 3).

*[அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் → அண். அண்ணுதல் = நெருங்குதல். அண் → அணு → அணுகு. அணுகுதல் = கிட்டுதல், நெருங்குதல். அணுகு → அணுக்கு → அணுக்கம்.]*

**அணுக்கம்**[2] *aṇukkam,* பெ. (n.) 1. **சந்தனம்**; sandalwood (அக.நி.). ஒ.நோ : அணுகம். 2. **பாம்பு**; snake.

**அணுக்கவிளக்கு** *aṇukka-viḷakku,* பெ. (n.) **கோயில் திருமேனிக்கு (மூர்த்திக்கு)ப் பக்கத் தில் எரியும் திருவிளக்குவகை**; light burning near the chief deity of a temple. 'இரவை ஸந்திக்கு அணுக்க விளக்காக எரியவைத்த விளக்கு ஒன்றுக்கு' (S.I.I. viii, 34).

**அணுக்கற்பிதம்** *aṇu-k-kaṟpidam,* பெ. (n.) 1. (உடலியங்.) **அணுவைப்பற்றிய கோட்பாடு**; (Physiol.) Corpuscular theory. 2. (வேதி.) **அணுவின் கோட்பாடுகளைக் கற்பிக்கும் நூல்**; (Chem.) the doctrine that goes to explain the following theories :

(1) தனிமங்கள் பகுக்க முடியாத அணுக்களால் அமைந்தவை; the elements consist of indivisible atoms.

(2) வெவ்வேறு தனிமங்களின் அணுக்கள் குறிப்பிட்ட விழுக்காட்டிற் கலக்கின்றன; the atoms of different elements unite in fixed proportions.

(3) அவை வேதியற் கூட்டிற்கு உட்படுகின்றன; they enter into chemical combinations (சா.அக.).

*[அணுக்கற்பிதம் = அணுக்கோட்பாடு. அணு + கற்பிதம்.* **Skt.** kalpita > **த.** *கற்பிதம்.]*

**அணுக்கன்** *aṉukkaṉ*, பெ. (n.) 1. **அண்மையன்;** one who is near. "வீரனை யணுக்கனாய்த் தொழுதான்" (தணிகைப்பு. நந்தி. 40). 2. **தொண்டன்;** devotee, as being near to God. "அவ்வப் புவன பதிகளுக்கு அணுக்கராய் வைகி" (சி.போ. பா. 8 : 1, பக். 429). 3. **உண்ணெருக்கமானவன் (அந்தரங்கமானவன்)** (திவ். பெரியாழ். 5.4 : 11); one who is intimate. 4. **குடை;** umbrella. "அணுக்கனைக் கவிழ்த்துப் பிடித்தாற்போலே" (ஈடு, 5.6 : 6).

*[அணுக்கம் → அணுக்கன்.]*

**அணுக்கன்திருவாயில்** *aṉukkaṉ-tiru-vāyil*, பெ. (n.) **உண்ணாழிகை (கர்ப்பக்கிருக வாயில்;** entrance to the inner sanctuary.

**அணுக்கி** *aṉukki*, பெ. (n.) **திருவடியாள்;** a female devotee. "அணுக்கி மாரும் அநேகர் இருக்கவே" (கலிங். 321).

*[அணுக்கன் (ஆ.பா.) — அணுக்கி (பெ.பா.).]*

**அணுக்கிருமி** *aṉu-k-kirumi*, பெ. (n.) 1. **அரத்தமோடும் நரம்பிடங்களில் பிறந்து அவற்றில் உலாவும் அறுவகைப் பூச்சிகளுள் ஒன்று;** the minute organisms which appear in organic matter and are found moving in blood-vessels, Bacteria. 2. **சிறிய புழு;** a germ, microbe.

*[அணுக்கிருமி = அணுப்புழு. அணு +* **Skt.** krimi > **த.** *கிருமி.]*

**அரத்தக்கிருமி** பார்க்க; see *aratta-k-kirumi*.

**அணுக்கு** *aṉukku*, பெ. (n.) **அணிமை, நெருங்கிய அண்மை;** nearness. "தன்ன பேரணுக்குப்பெற்ற பெற்றியி னோடு" (திருக்கோ. 373).

*[அண் → அணுக்கு.]*

**அணுக்கொப்புளம்** *aṉu-k-koppuḷam*, பெ. (n.) **மிகச் சிறிய கொப்புளம்;** a minute vesicle (சா.அக.).

*[அணு + கொப்புளம்.]*

**அணுக்கோட்பாடு** *aṉu-k-kōṭpāḍu*, பெ. (n.) **அணுவின் கற்பனை (அணுக்கொள்கை);** the theory that all matter is composed of atoms and the weight of each atom differs in different substances, the hypothesis that all chemical combinations take place between the ultimate particles of bodies and in proportions expressed by the simple multiple of the number of atoms, Atomic theory (சா.அக.) — Atomic theory that states that elemental bodies consist of indivisible atoms of definite relative weight, and that atoms of different elements unite with each other in fixed proportions, which determine the proportions in which elements and compounds enter into chemical combination — (C.O.D.).

*[அணு + கோள் + படு. கோட்படு → கோட்பாடு = கொள்கை.]*

**அணுக்கற்பிதம்** பார்க்க; see *aṉu-k-kaṟpidam*.

**அணுகம்** *aṉugam*, பெ. (n.) **செஞ்சந்தனம்** (பச். மூ.); red sanders.

**அணுகலர்** *aṉugalar*, பெ. (n.) **பகைவர்;** enemies, foes.

**அணுகார்** *aṉugār*, பெ. (n.) *அணுகலர்* பார்க்க; see *aṉugalar*.

**அணுகாரணவாதம்** *aṉu-kāraṇa-vādam*, **ஐம்பூத நுண்ணணுக்களே உலக முதற்கருவி யென்னுங் கொள்கை** (சி.சி. சுபக். 1 : 11, சிவஞா.); doctrine that the Universe is created from the atoms of the five elements.

*[அணு + காரணம் + வாதம்.* **Skt.** kāraṇa > **த.** *காரணம்.* **Skt.** vāda > **த.** *வாதம். காரணம் =* **த.** *கரணியம். வாதம் =* **த.** *உறழ். அணுகாரண வாதம் →* **த.** *அணுகரணியவுறழ்.]*

**அணுகு-தல்** *aṉugu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **கிட்டுதல், நெருங்குதல்;** to draw near, approach. "தாணிழன் மருங்கி லணுகுபு" (பொருந. 149).

*[அள் → அண் → அணு → அணுகு.]*

**அணுசதாசிவர்** *aṇu-šadāšivar,* பெ. (n.) (சிவ.) *அருளாண்மை மெய்ப்பொருள் நிலையில் (சாதாக்கிய தத்துவத்தில்) இன்பம் நுகரும் ஆதன்கள் (ஆன்மாக்கள்);* (Šaiva.) souls in enjoyment of the Divine Bliss in the *šadākkiya tattuvam.*

[**Skt.** sadāšiva > **த.** *சதாசிவம் = அருட்சிவம்.*]

*அணுசதாசிவர் =* **த.** *அணுவருட்சிவர்.*

**அணுசாத்திரம்** *aṇu-šāttiram,* பெ. (n.) *நுண்ணணுக்களைப்பற்றிய நூல்;* the science of atoms, atomology.

[**Skt.** šāstra > **த.** *சாத்திரம் = நூல்.*]

*அணுசாத்திரம் =* **த.** *அணுநூல்.*

**அணுசைவம்** *aṇu-šaivam,* பெ. (n.) *பதினாறு வகைச் சிவனியத்துள் (சைவத்துள்) ஒன்று; அது சிவனை உள்ளும் புறமும் ஐந்தொழில் (பஞ்ச கிருத்தியம்) செய்வனென் றறிந்து அம்மணக்கோலம் (திகம்பர வேடம்) பூண்டு, நன்னெறி யிலக்கணத்தோடு (சன்மார்க்க லக்கணத்தோடு) கூடிக் குருவிலங்கக் கோலம் (குருலிங்க வேடம்) பொருளாய்ச் சிவன் செய்யுந் தொழில்களைப் பட்டறிவிலே (அனுபவத்திலே) பார்த்து, இன்பம் (ஆனந்தம்) பொங்கி அதன்கண் மனம் ஒன்றிவிடுவதே (மனோலய மாவதே) வீடு (மோட்சம்) என்று சொல்வது (த.நி.போ. 259) — (சங்.அக.);* Šaiva sect which holds that an initiate into Šaivism should realise Šiva as performing the *pañca-kiruttiyam* in and out of himself, take delight there in and get absorbed in mind one of the 16 *Šaivam.*

[*சிவன் → சிவம்* > **Skt.** šaiva > **த.** *சைவம்.*]

**அணுத்தத்துவம்** *aṇu-t-tattuvam,* பெ. (n.) *நுண்ணணுவின் உண்மையைப்பற்றிய வொரு நூல்;* the science dealing with the philosophy of atoms, the doctrine of the formation of all things from individual particles endowed with gravity and motion, atomic philosophy (சா.அக.).

[*அணு + தத்துவம்.* **த.** *தான்* > **Skt.** tat → tattva = *அதாயிருக்குந் தன்மை, உண்மைத் தன்மை, மெய்ப்பொருள்.* **Skt.** tattva > **த.** *தத்துவம்.*]

**அணுத்திரள்** *aṇu-t-tiraḷ,* பெ. (n.) *தனிமையாகத் தோற்றமளிக்கும் அணுக்கூட்டமாகிய ஒரு பொருள்;* a very minute particle of matter consisting of a number of atoms and capable of existing in a separate form—a molecule (சா.அக.).

[*அணு + திரள்.*]

**அணுத்துவம்** *aṇuttuvam,* பெ. (n.) 1. *நுண்மை;* minuteness, atomic nature (செ.அக.); 2. *அணுக்கள் அமைந்திருக்குந் தன்மை;* chemical valency of an atom—Atomicity (சா.அக.).

[*அணு* > **Skt.** aṇutva > **த.** *அணுத்துவம் = அணுத்தன்மை, அணுமை.*]

**அணுத்தைலம்** *aṇu-t-tailam,* பெ. (n.) *பல சரக்குகளைச் சேர்த்து மூக்கிற் பிழிவதற்காக உருவாக்கிய ஒருவகை யெண்ணெய்;* a medicated oil prepared from several drugs for application in the nostrils (சா.அக.).

[*அணு + தைலம்.* **Skt.** tila > **த.** *தைலம் = எண்ணெய். அணுத்தைலம் = அணுஎண்ணெய்.*]

**அணுதரிசினி** *aṇu-tarišini,* பெ. (n.) *நுண்பொருளைப் பெரிதாகக் காட்டும் கண்ணாடி;* microscope.

[**Skt.** dṛš > **த.** *தரிசி → தரிசினி. அணுதரிசினி = அணுக்காணி, பூதக்கண்ணாடி, பெருக்கங்காட்டி.*]

**அணுநுட்பம்** *aṇu-nuṭpam,* பெ. (n.) *நுண்ணணு (பரமாணு), அணுவிற்கணு;* the ultimate unit of an element which is incapable of further sub-division—Atom (சா.அக.).

**அணுநூல்** *aṇu-nūl,* பெ. (n.) *அணுவைப்பற்றிய நூல் (அணுசாத்திரம்);* the science of atoms—Atomology.

**அணுப்பகுப்பு** *aṇu-p-paguppu,* பெ. (n.) *அணுவைக் கூறுபடுத்துதல்* (இக்.வ.); splitting of atom (Mod.).

[*அணு + பகுப்பு.*]

**அணுப்பிரி-த்தல்** *aṇu-p-piri-,* 4 செ.குன்றாவி. (v.t.) *நீரை நுண்துளிகளாகப் பிரித்தல்;* the mechanical process of breaking liquid into spray, atomization (சா.அக.).

[*அணு + பிரி.*]

**அணுப்பீச்சி** *aṇu-p-picci,* பெ. (n.) *நுண்டுளி சிதறுங் கருவி;* an instrument that throws a jet of spray (சா.அக.).

**அணுபட்சம்** *aṇu-paṭcam*, பெ. (n.) (சிவக்.) 1. சிவனது ஏவலின்கீழ்த் தூவிலா வுலகத்தில் (அசுத்த பிரபஞ்சத்தில்) தொழில்புரியும் (அனந்தர், சீகண்ட வுருத்திரர் போன்ற) மிகு சமைவுற்ற (பரிபக்குவ மடைந்த) ஆதன்களான (ஆன்மாக்களான) சிவ வேறுபாடுகள் (பேதங்கள்) (சி.போ. பா. 2 : 4, பக். 276); (Šaiva. phil.) exalted souls which function in the impure universe under the direction of Šiva, such as *Anantās* and *Srikaṇṭa Rudrās*. 2. ஆதன்கள் (ஆன்மாக்கள்) தாமே சமைவுற்று (பக்குவப்பட்டு) இறைவனை அடையும் நெறி, சம்புபட்சத்தின் எதிர்; the spontaneous mode of elevation of the souls to the feet of God, dist. from *šambupaṭcam*. ''ஆனநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற் றணுபட்ச சம்புபட்ச மாமிரு விகற்பமும்'' (தாயு. மௌன. 5).

[பகு → பக்கம் (பகுதி, வகுப்பு, கட்சி.) > **Skt.** pakṣa > த. பட்சம். அணுபட்சம் = ஆதன் பக்கம்.]

**அணுபரசிவன்** *aṇu-para-šivaṉ*, பெ. (n.) (சிவ.) அணுபட்சத்துப் பரசிவன்; (Šaiva.) Para-Šiva of *aṇupaṭcam*. ''அணுபர சிவாந்த அநேகே சுரர்கள்'' (சி.சி. சுபக். 3 : 74, ஞானப். உரை).

[புரம் → பரம் → பர = மேலான, உயர்ந்த. சிவ → சிவன். பரசிவன் = உயர்நிலைச் சிவன் (Šiva in His highest form).]

**அணுபரிணாமவாதம்** *aṇu-pariṇāma-vādam*, பெ. (n.) அணுவிலிருந்து எல்லா உலகங்களும் உண்டாயிருப்பதாகக் கூறும் கொண்முடிபு (சித்தாந்தம்) (இக்.வ.); atomism (Mod.).

[**Skt.** pariṇāma = த. மாற்றம். **Skt.** vādam = த. உறழ். அணுபரிணாமவாதம் = அணுமாற்ற வுறழ்.]

**அணுபலை** *aṇu-palai*, பெ. (n.) காட்டுப்பயறு; small wild-gram, *Phaseolus amarus* (சா.அக.).

**அணுபேதம்** *aṇu-pēdam*, பெ. (n.) ஆதன்பக்க வேறுபாடு (ஆன்மபட்ச பேதம்); difference of *aṇupaṭcam*. ''சிவபேத மணுபேத மெனப் பிரமாதி'' (சி.சி. சுபக். 2 : 74, ஞானப். உரை).

[**Skt.** bhēda > த. பேதம் = வேறுபாடு.]

**அணுமூர்த்தி** *aṇu-mūrtti*, பெ. (n.) ஆதத் திருமேனி (ஆன்மமூர்த்தி) (சங்.அக.); an attributive name of Šiva.

**அணுமுலுதுவரை** *aṇu-mūlu-tuvarai*, பெ. (n.) போகர் நிகண்டிற் சொல்லப்பட்டுள்ள ஒரு வகைத் துவரை; a kind of red-gram referred to in the *Bhōgar Nighaṇḍu* (சா.அக.).

**அணுமை**[1] *aṇumai*, பெ. (n.) அணுத்தன்மை; atomicity.

[அணு → அணுமை.]

**அணுமை**[2] *aṇumai*, பெ. (n.) அணிமை; nearness. ''வரைந்த அணுமைக் கண்ணே'' (ஐங்குறு. 83, உரை).

[அண் → அணு (அண்ணு) → அணுமை. இனி, அண் → அணி → அணிமை → அணுமை என்று மாம்.]

**அணுவலி** *aṇu-vali*, பெ. (n.) 1. ஆதன் ஆற்றல் (ஆன்மசக்தி); the power of the soul. ''அடங்கிடு மனாதி முத்தன் வலியணு வலியு மென்னில்'' (சிவதரு. சிவஞானயோ. 107). 2. அணுவின் ஆற்றல் (இக்.வ.); atomic power (Mod.).

**அணுவிடை** *aṇu-v-iḍai*, பெ. (n.) அணுவினிடை (அணுவாந்திரிகம்); inter-molecule (சா.அக.).

**அணுவிரதம்** *aṇu-viradam*, பெ. (n.) ஒரு சமண நோன்பு; subordinate duties or vows of Jaina laymen.

[**Skt.** vrata > த. விரதம் = நோன்பு. அணு விரதம் = அணுநோன்பு.]

**அணுவிற்கணு** *aṇuviṟk(u)-aṇu*, பெ. (n.) 1. நுண்ணணு (பரமாணு); the smallest atom. ''அணுவிற் கணுவாய் அப்பாலுக் கப்பா லாய்'' (விநா.அகவல்). 2. ஆதன் (ஆன்மா); soul.

[அணுவிற்கு + அணு.]

**அணுவுருவம்** *aṇu-v-uruvam*, பெ. (n.) 1. அணு வகை; a kind of atom. ''ஒழிந்திடு மணுரு பங்கள்'' (சி.சி. சுபக். 1 : 11). 2. நுண்ணிய வடிவம்; minuteness.

[அணு + உருவம். உரு → உருவு → உருவம் > **Skt.** rūpa.]

**அணுவுருவி** *aṇu-v-uruvi*, பெ. (n.) 1. ஆதன் (ஆன்மா); soul. 2. கடவுள்; God.

[அணு + உருவி. உரு → உருவு → உருவி > **Skt.** rūpi.]

**அணுவெடை** *aṇu-v-eḍai*, பெ. (n.) மிகச் சிறு பொருளின் நிறை; the weight of an atom of an element, atomic weight (சா.அக.).

[அணு + எடை.]

**அணை**[1]**-தல்** *aṇai-*, 2 செ.கு.வி. (v.i.) 1. *உண்டாதல், பிறத்தல்*; to be born. தவத்தா லணைந்த புதல்வன் (உ.வ.). 2. *படுத்தல்*; to be laid down. "அணைவ தரவணை மேல்" (திவ். திருவாய். 2.8 : 1). 3. *அவிதல்*; to be extinguished. விளக்கணைந்தது (உ.வ.). —, 2 செ.குன்றாவி. (v.t.) 1. *அடைதல், சார்தல்*; to approach, come near. "பெருந்துறை மருங்கினி லணைந்தார்" (திருவாத. திருப் பெருந். 23). "அணைந்திது நெஞ்சஞ் சாம லறைவதென்" (திருவாலவா. 29 : 14). 2. *பொருந்துதல்*; to touch, come in contact with. "பாரணையா வடிதாங்க" (திருநூற். 91). "அடுகொலைக் கணைந்த முகிலுருப் பெறும்" (கல்லா. 15 : 26-7). 3. *புணர்தல்*; to copulate with. "கிரதுவினை யணைந்து பெற்றாள்" (கூர்மபு. பிருகுவா. 8).

ம. அணயுக; க. அணெ; தெ. அண்டு; து. அணெபுனி.

*[அள் → அண் → அண → அணை.]*

**அணை**[2]**-த்தல்** *aṇai-*, பெ. (n.) 4 செ.குன்றாவி. (v.t.) 1. *உண்டாக்குதல்*; to produce. "மம்மரே யணைக்குங் கள்" (சேதுபு. திரு நாட். 54). 2. *அடுத்துச்சேர்த்தல்*; to join, put close to, as heaping with earth the base of a tree trunk. மரத்துக்கு மண் அணைத்தான் (உ.வ.). 3. *அமைத்துவைத்தல்*; to cause to happen, to predestine. "அல்லன்மிக வுயிர்க் கிவைதா னணைத்தது" (சிவப்பிர. 25). 4. *அடைகிடத்தல்*; to incubate. "குருகு மன்னமும் வால்வளைக் குப்பையை யண்டமும் பார்ப்பு மாமென வணைக்கும்" (கல்லா. 46 : 23-4). 5. *தழுவுதல்*; to embrace, hold, clasp in the arms. "அன்னை யடுங்கனா வொழித்து வல்லே யணைத்திடப் பெறுஞ் சிறார்" (காஞ்சிப்பு. தக்கே. 59). 6. *கட்டுதல்*; to tie, fasten, as animals. "களிறணைக்குங் கந்தாகும்" (நாலடி. 192). 7. *கூட்டி முடித்தல்*; to tie up in a bunch. "அணைத்த கூந்தல்" (திருமுருகு. 200). 8. *அவித்தல்*; to quench, extinguish. விளக்கை யணைத்தான் (உ.வ.). தீயணைக்கும் பொறி.

க. அணெ

*[அள் → அண் → அண → அணை.]*

**அணை**[3] *aṇai*, பெ. (n.) 1. *அணைக்கட்டு*; embankment, bund, dam, ridge for retaining water in a field. 'அணைகடந்த வெள்ளத்தை மறிப்பவர் யார் ?', 'அணைகடந்த வெள்ளம் அழுதாலும் வராது', 'அணைகட்ட இறங்கி ஆற்றோடு போய்விட்டான்' (பழ.). 2. *தடை*; hindrance, obstacle. "அணையின்றி யுயர்ந்த வென்றி" (கம்பரா. யுத்த. கும்ப. 159). 3. *நீர்க்கரை*; bank of a river, seashore. "அணையை நூக்கிச் சென்றநீர் வெள்ளம்" (பெரியபு. திருஞான. 723). 4. *செய்கரை* (*சேது*); causeway, bridge. "அலைகடநீறலை யன்றணை வேண்டிய" (கம்பரா. பால. ஆற்றுப். 9). 5. *முட்டு*; support, prop, buttress. மரம் விழாதபடி அணை வை (உ.வ.). 6. *உதவி*; protection, help, accessoriness to a crime (W.). 7. *இருக்கை* (*ஆசனம்*); raised seat, couch. "அரியணை யனுமன்றாங்க" (கம்பரா. யுத்த. திருமுடி. 38). 8. *மெத்தை*; cushion, mattress. "அணைமரு ளின்றுயில்" (கலித். 14 : 1). 9. *படுக்கை, துயிலிடம்* (பிங்.); bed, couch, sleeping place. "நுண்ணிடையாள் வெவ்வுயிர்த்து மெல்லணைமேல் வீழ்ந்த போது" (பெரியபு. தடுத்தாட். 172). 10. *தழுவல்*; embrace. 11. *புணர்ச்சி* (பிங்.); coition, copulation. 12. *ஓரேர் மாட்டிணை*; a yoke of oxen (W.). ஓரணையேர்மாடு, ஈரணை யேர்மாடு (உ.வ.). 13. *தலையணை* (பொதி. நி.); pillow. 14. *மணை* (பொதி.நி.); small low wooden seat. 15. *அணைமரம்*; a wooden frame.

ம. அண; க., பட. அணெ; தெ. ஆன கட்ட.

*[அள் → அண் → அண → அணை.]*

**அணைக்கட்டி** *aṇai-k-kaṭṭi*, பெ. (n.) *உழுசாலிற் பெயருங் கட்டி*; furrow-slice, clod of earth that turns up while ploughing.

*[அணை + கட்டி.]*

**அணைக்கட்டிபோடு-தல்** *aṇai-k-kaṭṭi-pōḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) *உழுசாலிற் பெயர்ந்த கட்டிகளை யுடைத்து நிரவுதல்* (இ.வ.); to break the clods of earth turned up by the plough and level up the ground (Loc.).

*[அணை + கட்டி + போடு.]*

**அணைக்கட்டு** *aṇai-k-kaṭṭu*, பெ. (n.) *நீர்ப் பாசனத்திற்காக ஆறு, கால்வாய்களின் குறுக்கே கட்டும் அணை*; anaicut, dam for regulating the flow of water in an irrigating channel. 2. *செய்கரை*; embankment, dyke.



அணைக்கட்டு

க. அணெகட்டு

[அணை + கட்டு.]

**அணைக்கல்** *aṇai-k-kal*, பெ. (n.) **அணையி லுள்ள குத்துக்கல்** (R.T.); upright stones in a dam.

[அணை + கல்.]

**அணைக்காரன்** *aṇai-k-kāraṉ*, பெ. (n.) **அணைக் கட்டின் காவற்காரன்**; watchman of an anaicut.

[அணை + காரன் (பணிசெயல்பற்றிய ஆ.பா. ஈறு).]

**அணைகட்டிப்பேசு-தல்** *aṇai-kaṭṭi-p-pēšu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **ஒருவன் தன் குற்றத்தை மறைத்துப் பேசுதல்**; to speak in veiled terms to escape blame.

[அணைகட்டி + பேசு.]

**அணைகட்டு-தல்** *aṇai-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அணைக்கட்டு அமைத்தல்**; to construct a dam. ''குரக்கினத் தாலே குரைகட றன்னை நெருக்கி யணைகட்டி'' (திவ். பெரியாழ். 1.6 : 8).

**அணைகட-த்தல்** *aṇai-kaḍa-*, 3 செ.கு.வி. (v.i.) 1. **வெள்ளம் எல்லைகடந்து மீளாநிலை யடைதல்**; to overflow an embankment, as flood, beyond control. 'அணைகடந்த வெள்ளம் அழுதாலும் வராது' (பழ.). 2. **ஒரு வினை உரிய காலத்திற் செய்யப்படாமையால் ஒரு வாய்ப்பு என்றும் இழக்கப்படுதல்**; to be lost for ever, as a chance, owing to failure to do a thing in time.

**அணைகயிறு** *aṇai-kayiṟu*, பெ. (n.) 1. **பால் கறக்கும்போது ஆவின் பின்னங்காலிற் கட்டுங் கயிறு**; cord used for tying together a cow's hind-legs when she is milked. 2. **பால் கறக்கும் போது ஆவின் முன்னங்காலிற் கன்றைக் கட்டுங் கயிறு**; cord with which a calf is tied to the cow's foreleg, when she is milked.

**அணைகல்** *aṇai-kal*, பெ. (n.) **தீட்டுக்கல்**; whetstone.

**அணைகோலு-தல்** *aṇai-kōlu-*, 10 செ.கு.வி. (v.i.) **வெள்ளத்தைத் தடுக்க அணை அமைத்தல்**; to form an embankment to confine flood. ''வெள்ளம் வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்'' (நன்னெறி, 30).

**அணைசு-தல்** *aṇaišu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஒதுங்குதல், விலகுதல்**; to step aside and give way to a superior, as a mark of respect.

ஒ.நோ : அடைசுதல்

**அணைசு** *aṇaišu*, பெ. (n.) **இசைக்குழலின் வெண்கலச் சீவாளி அல்லது ஊதி**; metalic mouth-piece of a wind instrument. 'வெண்கலத்தாலே அணைசு பண்ணி இடமுகத்தை யடைத்து' (சிலப். 3 : 26, அடியார்க். உரை).

ம. அணசி

[அணை → அணைசு.]

**அணைசொல்** *aṇai-šol*, பெ. (n.) **துணைச்சொல்**; word supplied to assist a hesitating speaker, a prompt (W.).

**அணைதறி** *aṇai-taṟi*, பெ. (n.) **யானை, குதிரை, மாடு முதலியவற்றைக் கட்டும் கம்பம் அல்லது குறுந்தறி**; post or peg for tying elephants, horses, cows, etc.

**அணைப்பு**[1] *aṇaippu*, பெ. (n.) 1. **தழுவுகை**; embracing. 2. **ஒரு நாளில் இரண்டேரைக் கொண்டு உழக்கூடிய நிலப்பரப்பு** (G. Sm. D. I. i, 288); area that can be ploughed by two pairs of oxen in a day, from half to one acre.

ம. அணச்சல்

[அணை → அணைப்பு.]

**அணைப்பு**[2] *aṇaippu*, பெ. (n.) **அணாப்பு** பார்க்க; see *aṇāppu*.

**அணைப்புத்தூரம்** *aṇaippu-t-tūram*, பெ. (n.) **ஓர் உழவுச்சால் தொலைவு** (G. Sm. D. I. i, 287); length of a furrow from one end of the field to the other, approximately taken as 50 yds.

[அணைப்பு + Skt. dūra > த. தூரம்.]

அணைப்புத்தூரம் = த. அணைப்புத் தொலைவு.

**அணைமரம்** *aṇai-maram,* பெ. (n.) **கன்றிழந்த ஆவைக் கறத்தற்கு அணைக்குங் கணைமரம்** (இ.வ.); narrow wooden enclosure in which a cow is penned for milking, especially when it has lost its calf and resents milking (Loc.).

**அணையம்** *aṇaiyam,* பெ. (n.) *கருப்பையில் தாய்க்கும் பிளுக்கும் தொடர்பை யுண்டுபண்ணு வதும், நஞ்சுக் கொடியொடு சேர்ந்ததுமான ஓர் உறுப்பு;* an organ within the womb of mammals in pregnancy, establishing connection between the pregnant mother and the foetus by means of the umbilical cord, placenta (சா.அக.).

**அணையமறி** *aṇaiyamaṛi,* பெ. (n.) **பிள்ளை பிறந்தவுடன் நஞ்சுக்கொடி விழாமை;** retention of placenta, incarcerated placenta (சா.அக.).

**அணையமாதி** *aṇaiyam-ādi,* பெ. (n.) *நஞ்சுக் கொடி முதலியன;* placenta and other secundines (சா.அக.).

[அணையம் + ஆதி. Skt. ādi = முதல், முதலியன. அணையமாதி = அணைய முதல், அணைய முதல, அணைய முதலியன.]

**அணையாடை** *aṇai-y-āḍai,* பெ. (n.) 1. **சேய்க்கு அடியிலிடும் துணிப்படுக்கை;** strip of cloth used as a bed for an infant. "அணை யாடை மண்பட வுந்தி யுதைந்து கவிழ்ந்து" (பட்டினத். உடற்கூற்று.). 2. **பிறந்த குழ விக்குத் தொப்புளிறுக்குஞ் சீலை** (இ.வ.); cloth tied over the navel of an infant (Loc.) — (W.).

ம. அணச்சீல

[அணை + ஆடை.]

**அணையார்** *aṇai-y-ār,* பெ. (n.) பகைவர்; enemies, foes. "அணையார்தம் படைக் கடலில்" (பாரத. பதினே. 260).

[அணை + ஆ (எ.ம.இ.நி.) + ஆர் (ப.பா. ஈறு).]

**அணையுறுமூக்கு** *aṇai-y-uṟu-mūkku,* பெ. (n.) 1. **பேய்க்கொள்;** wild bitter gram. 2. **காட்டுக் கொள்;** wild-gram, *Rynchosia* (Genus) (சா.அக.).

**அணைவு** *aṇaivu,* பெ. (n.) 1. **தழுவுகை** (சங்.அக.); embracing. "முன்னும் பின்னு மருங்கு மணைவெய்த" (பெரியபு. ஏயர்கோ. 369). 2. **தழுவப்பட்டது;** that which is embraced.

[அணை → அணைவு.]

**அணோக்கம்** *aṇōkkam,* பெ. (n.) **மேனோக்கம்;** looking upward, high aspiration.

[அண் = மேல். நோக்கம் = பார்வை, குறிக் கோள். அண் + நோக்கம் – அண்ணோக்கம் → அணோக்கம்.]

பல அகரமுதலிகளில் இச் சொற்கு 'மரம்' அல்லது 'மரப்பொது' என்று பொருள் குறிக்கப்பட்டுள்ளது.

"மரப்பொதுவெனப் பொருள்படும் 'அநோகஹம்' என்னும் வடமொழியைத் திரித்து அணோக்கம் என எழுதினாரும் உளர்" என்று **தமிழ்ச்சொல் லகராதி** யென்னும் மதுரைத் தமிழ்ச்சங்க அகரமுதலி குறித்திருப்பது கவனிக்கத்தக்கது.

**அத்தக**[1] *attaga,* கு.வி.எ. (adv.) **அத்தன்மைய தாக;** in that manner. "அத்தக நிறீஇ" (பெருங். இலாவாண. 6 : 150).

['அ' சேய்மைச்சுட்டு. தகுதல் = பொருந்து தல், ஒத்தல். தகு → தகை = பொருத்தம், ஒப்பு, தகுதி, தன்மை. தகு → தக (நி. கா. வி. எ.). அ + தக – அத்தக = அதற்குப் பொருந்த, அத் தன்மையதாக.]

**அத்தக**[2] *attaga,* கு.வி.எ. (adv.) **அழகு பொருந்த;** beautifully. "அத்தக வரிவைய ரளத்தல் காண்மின்" (பரிபா. 12 : 44).

[அம் = அழகு. தக = பொருந்த. அம் + தக – அந்தக → அத்தக.]

**அத்தகம்**[1] *attagam,* பெ. (n.) **கருஞ்சீரகம்** (மலை.); black cumin, *Nigella sativa.*

**அத்தகம்**[2] *attagam,* பெ. (n.) **கணக்கன்;** accountant. "அத்தகங் கூட்டமிடு மங்கணத் தில்" (நெல்விடு. 318).

[ஒருகா. அத்தகன் → அத்தகம்.]

**அத்தகாண்டகம்** *attakāṇḍagam,* பெ. (n.) *முத்து;* pearl (சா.அக.).

**அத்தகாதிதம்** *attakādidam,* பெ. (n.) **ஒரு மருந்துச் செடி (அதிவிடையம்);** a medicinal plant (சா.அக.).

**அத்தகிதம்** *attagidam,* பெ. (n.) *சிவப்பு முக்கறைச் சாரணை*; a red creeper (சா.அக.).

*[அத்தம் = சிவப்பு.]*

**அத்தகைச்சாரணை** *attagai-c-cāraṇai,* பெ. (n.) *சிவப்பு வட்டச் சாரணை*; a red species of round-leaved plant (சா.அக.).

*[அத்தம் = சிவப்பு.]*

**அத்தகோரம்** *attagōram,* பெ. (n.) *நெல்லி*; emblic myrobalan (W.).

**அத்தங்கார்** *attaṅgār,* பெ. (n.) *அத்தை மகள்* (பிராம.); paternal aunt's daughter (Brāhm.).

*[ஒருகா. அத்தை மங்கையார். மங்கை = பெண், மகள்.]*

**அத்தங்கி** *attaṅgi,* பெ. (n.) *முழங்கால்;* knee (சா.அக.).

**அத்தஞ்சடம்** *attañjaḍam,* பெ. (n.) ஒருவகை நஞ்சு (*கௌரி பாடாணம்*); yellow oxide of arsenic (சா.அக.).

**அத்தடம்** *attaḍam,* பெ. (n.) 1. ஒரு மருந்துச் சரக்கு (அதிவிடையம்); a bazaar drug called Indian atees (atis), *Aconitum heterophyllum.* 2. பொன்; gold.

**அத்தத்தாவெனல்** *attatta-v-eṉal,* தொ.பெ. (vbl.n.) குழந்தை தந்தையை அடுத்தடுத்துக் கூப்பிடுதல்; child calling its father repeatedly. ''அடுத்தடுத் தத்தத்தா வென்பான்'' (கலித். 81 : 19).

*[அத்தன் = தந்தை. அத்தன் → அத்தா (விளி). அத்தா + அத்தா – அத்தத்தா (பன்முறைபற்றிய அடுக்குத்தொடர்).]*

**அத்ததாளி** *attatāḷi,* பெ. (n.) காட்டுப்பூவரசு (L.); falsefern tree.

**அத்தம்**[1] *attam,* பெ. (n.) 1. குக்கில் (மூ.அ.); Indian bdellium. 2. ஒரு மருந்துச் செடி (அதிவிடையம்) (மூ.அ.); atis. 3. கரிசலாங்கண்ணி (இராசவைத்.); species of eclipta, *Eclipta alba.* 4. குந்துருக்கம்; white dammer, *Vateria indica* (சா.அக.). 5. கருங்குங்கிலியம்; black dammer, *Canarium strictum.* 6. வெள்ளை யாமணக்கு; white castor plant, *Jatropha curcas* (சா.அக.). 7. ஒருவகை நஞ்சு (கெந்தி பாடாணம்); a kind of arsenic.

**அத்தம்**[2] *attam,* பெ. (n.) *கண்ணாடி*; mirror. ''அத்தமதின் முன்பின்போல்'' (வேதா. சூ. 108).

தெ. அத்தமு

**அத்தம்**[3] *attam,* பெ. (n.) 1. ஆள் வழங்காக் காடு (திவா.); jungle. 2. செல்லுதற்கரிய காட்டுப் பாதை; rough and difficult jungle path. ''ஆளி லத்த மாகிய காடே'' (புறநா. 23 : 22). 3. வழி (பிங்.); way.

*[அறு → அற்றம் = அறுதல், ஆளில்லாமை. அற்றம் → அத்தம்.]*

'அத்தம்' என்னும் தென்சொல் சிறப்பாக ஆள் வழங்கா அருநெறியையே குறித்தலால், பொதுவான வழியைக் குறிக்கும் 'அத்வன்' (adhvan) என்னும் வடசொல்லினின்று தோன்றியிருத்தல் இயலாது. சிறப்புப் பொருட் சொல்லினின்றே பொதுப்பொருட் சொல் தோன்றியிருத்தல் வேண்டும்.

**அத்தம்**[4] *attam,* பெ. (n.) 1. முடிவு; end, termination. 2. அழிவு (நாநார்த்த.); destruction.

*[அறுதல் = நீங்குதல், முடிதல். அற்ற பேச்சு = முடிவான பேச்சு. அறு → அற்றம் = அழிவு, முடிவு. அற்றம் → அத்தம்.]*

**அத்தம்**[5] *attam,* பெ. (n.) *செம்மை*; red colour.

*[அரத்தம் = செந்நீர் (குருதி), செந்நிறம். அரத்தம் → அத்தம் = சிவப்பு.]*

**அத்தம்பியார்** *attambiyār,* பெ. (n.) அக்கை கணவன், அத்தான் (இ.வ.); sister's husband (Loc.).

*[ஒருகா. அத்தி + நம்பியார் – அத்தம்பியார். அத்தன் = அப்பன். அத்தி = அன்னை, அக்கை. நம்பி = ஆடவருட் சிறந்தோன், ஆடவன், கணவன்.]*

**அத்தரசிதம்** *attaraśidam,* பெ. (n.) மயில்துத்தம் (மூ.அ.); native hydrous silicate of zinc, calamin.

குறிப்பு: இதையொத்த சொல் வடமொழியி லின்மையால், இது இத் தென்சொல் லகரமுதலியிற் சேர்க்கப்பட்டது.

**அத்தவத்திரதம்** *attavattiradam,* பெ. (n.) ஒரு வகை மருந்துச் சரக்கு; a kind of drug. ''துத்த மாஞ்சி யத்தவத் திரதம்'' (பெருங். மகத. 17 : 147).

**அத்தவாளம்**[1] *atta-vāḷam,* பெ. (n.) காடு; jungle (W.).

*[அத்தம்+வாளம். அத்தம்=காடு. வாளம்= வட்டம், வட்டாரம், நிலப்பகுதி.]*

**அத்தவாளம்**[2] *atta-vāḷam,* பெ. (n.) 1. *முன்றானை* (ஈடு, 9 : 10, பிர.); outer loose end of a saree. 2. ***முன்றானைபோல் ஆடவர் தோண்மேலணியும் மேலாடை*** (பிங்.); a garment loosely worn by men on their shoulders. 3. ***போர்வைச் சீலை*** (சங்.அக.); covering upper cloth. ''வடகமுல்லாசமத்தவாளம்'' (பிங். 6 : 179). ''அத்தவாளப் பட்டு மதலும் வடகம்'' (பிங். 10 : 987). 'வடகம், அத்த வாளம் உடைவிசேடம்' (சீவக. 462, நச். உரை).

*[ஒருகா. அற்றம் → அத்தம் = முடிவு, கடை. வாலம் → வாளம் = நீண்ட துணி. அத்தவாளம் = சேலையின் முன்கடைப் பக்கமான வெளிமுந்தி (முன்றானை). போர்வைச் சீலை உடம்பைப் போர்ப்பதில் முன்றானையையும் மேலாடை யையும் ஓரளவு ஒக்கும்.]*

**அத்தவாளம்**[3] *atta-vāḷam,* பெ. (n.) ***உள்ளக் கிளர்ச்சி, கெந்தளிப்பு***; hilarity, elation, mirth. ''வடகமுல்லாசமத்தவாளம்'' (பிங். 6 : 179).

**அத்தவாளம்**[4] *atta-vāḷam,* பெ. (n.) ***வடகம்***; a mixture of different kinds of drugs, spices, etc., in which onion and mustard form the chief ingredients (சா.அக.).

''அத்தவாளப் பட்டு மதலும் வடகம்'' (பிங். 10 : 987).

குறிப்பு: அத்தவாளம் என்னும் சொல் லிற்குச் சில அகரமுதலிகளில் வடகம் என்றொரு பொருள் குறிக்கப்பட்டுள்ளது; சிலவற்றிற் குறிக்கப்படவில்லை.

வடகம் என்னும் சொல், ***சீவகசிந்தா மணியில்*** ஒருவகை மேலாடை என்னும் பொருளில் ஆளப்பட்டும், ***சிலப்பதிகார*** வுரையில் (14 : 108) துகில் என்னும் உயர்ந்த துணியின் முப்பத்தாறு வகைகளுள் ஒன்றன் பெயராகக் குறிக்கப்பட்டும் உள்ளது. **பிங்கல நிகண்டும் சூடாமணி நிகண்டும்** இச் சொற்குத் தோல், அத்தவாளம் என்று இருபொருளே குறித்துள்ளன. இவை அத்தவாளம் என்றது உடைவகையையே.

***சாம்பசிவம் பிள்ளை*** தமிழ் - ஆங்கில அகர முதலி யொன்றே, அத்தவாளம் என்னும் சொற்கு, தாளிக்கும் உருண்டையான வடகம் என்னும் பொருளைக் குறித்துள்ளது.

இஃது, அத்தவாளம் என்பதன் பெயர்களுள் ஒன்றான வடகம் என்னும் சொல்லின் மறு பொருளைக் குறிக்குமாயின், ஒருபொருட் சொல்லில் மறுபொருட் கூறல் என்னுங் குற்ற மாகும். இது பிறவிக் குருடனுக்குப் பாலின் இயல்பை யுணர்த்திய கதையை நினை வுறுத்தும்.

**அத்தன்**[1] *attaṉ,* பெ. (n.) 1. ***அப்பன்***; father. ''என்னத்தனை வென்றிசை கொண்டிலனோ'' (கந்தபு. உற்பத். காமதக. 10). 2. ***தமையன்***; elder brother. 3. ***மூத்தோன்*** (திவா.); elder. 4. ***உயர்ந்தோன்***; person of rank or eminence. ''அத்தரின் அரும் பொருள்'' (திருவிளை. மெய்க்காட். 34). 5. குரு; priest. ''அத்தனே யடுவ லாண்மை'' (பாரத. பதினைந். 27). 6. ***சிவன்***; Śiva. ''அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே'' (தேவா. 7.1 : 1). 7. ***திருமால்***; Viṣṇu. 8. ***வைரவன்***; Bhairava. 9. ***அருகன்***; Arhat.

ம. அத்தன்

**Hit.** *at-ta-as*; **L.** *atavus*, great-grandfather's grandfather (*ata+avus*, grandfather); **Pkt.** atta.

*[ஒல்லுதல்=பொருந்துதல், இயலுதல். ஒல் → ஒள் → ஒண். ஒண்ணுதல் = பொருந்துதல், இயலுதல். ஒல்→ஒற்று; ஒள்→ஒட்டு. ஒற்று→ ஒத்து → அத்து; ஒட்டு → அட்டு. அத்துதல் = சார்தல்; to lean on. குடும்பம் தந்தையைச் சார்ந்திருத்தலால், அத்தன் என்னும் பெயர் அத்து என்னுஞ் சொல்லினின்று தோன்றியிருக்கலாம். அத்து → அத்தன். கால்டுவெலார் கருத்தும் இ·தே.]*

தந்தையைக் குறிக்கும் அத்தன் என்னும் தமிழ்ப்பெயர் திரவிட மொழிகளில் வழக் கற்றது. அதன் திரிபான அத்தான் என்னும் (முறை வேறுபட்ட) ஆண்பாற் பெயரும், அத்தி, அத்தை யென்னும் பெண்பாற் பெயர் களும் திரவிட மொழிகளிலும் பிராகிருதத் திலும் சமற்கிருதத்திலும் வழங்கி வருகின்றன.

அத்தன் என்பதன் திரிபான அச்சன், அஜ்ஜ என்னும் தந்தை முறைப்பெயர்களும் பாட்டன் முறைப்பெயர்களும், திரவிட மொழிகளில் வழங்கிவருகின்றன. அவை

**அச்சன்** என்னும் உருப்படியிற் காட்டப் பட்டன.

இலத்தீன் மொழியில், *avus* என்பது பாட்டனையும், *atavus* என்பது பூட்டனின் பாட்டனையும் குறிக்கும் முறைப்பெயர்க ளாகும். ஆகவே, *ata* என்னும் இலத்தீன் சொல்லைச் சேயானின் தந்தைமுறைப் பெயராகக் கொள்ளலாம்.

பாட்டனின் தந்தை பூட்டன்; பூட்டனின் தந்தை சேயான்.

**அத்தன்**[2] *attaṉ*, பெ. (n.) *1.* **கடுக்காய்** (மூ.அ.); chebulic myrobalan, *Terminalia chebula*. *2.* **வெள்ளீயம்** (மூ.அ.); white lead, tin.

**அத்தன்பாதம்** *attaṉ-pādam*, பெ. (n.) **செருப் படை**; a medicinal plant, *Coldenia procumbens* (சா.அக.).

**அத்தன்புள்ளடி** *attaṉ-puḷ-ḷ-aḍi*, பெ. (n.) **அத்தன்பாதம்** பார்க்க; see *attaṉ-pādam*.

**அத்தனாபேதி** *attaṉ-ā-pēdi*, பெ. (n.) **கடுக்காய் சேர்ந்த குய்யபேதி (என்னுங் கழிச்சல் மருந்து)**; a purgative containing ink-nut as the chief ingredient (சா.அக.).

*[அத்தன் + ஆ* **(இணைப்பிடைச்சொல்)** *+ பேதி.* **Skt.** bhēdin > **த.** *பேதி = பிரிப்பு, கழிச்சல், கழிச்சல் மருந்து.]*

**அத்தனை** *a-t-taṉai*, பெ. (n.) **அவ்வளவு**; that much. "நீருரைத்த தொன்றை நான்செய்யு மத்தனை" (பெரியபு. இயற். 9). கடுகத்தனை கொடுத்தான். **அத்தனையுந்** தின்றுவிட்டான் (உ.வ.). —, பெ.எ. (adj.) *1.* **அத்தொகை யான**; so many. **அத்தனைபேருந்** தேறி விட்டனர். **அத்தனை** மரங்களும் பட்டுப் போய்விட்டன (உ.வ.). 'அத்தனையும் நேர்ந்தாள் உப்பிட மறந்தாள்' (பழ.). *2.* **அவ்வளவு**; so much. "அத்தனை குணக் கேடர் கண்டதாக் கேட்டதா வவனிமிசை யுண்டோ சொலாய்" (தாயு. ஆனந்தமான பரம். 9).

**ம.** அத்தன

*[அ (சேய்மைச்சுட்டு) +* **துணை** *(அளவு) →* **தனை**.*]*

**அத்தாச்சி**[1] *attācci*, பெ. (n.) **அண்ணி (அண்ணன் மனைவி)** (இ.வ.); elder brother's wife (Loc.).

**க., து., பட.** அத்திகெ.

*[அத்தன் = பெரிய அண்ணன்,* **அண்ணன்.** *அச்சி =* **அன்னை**, *அக்கை. அத்தன் + அச்சி – அத்தாச்சி.]*

அண்ணன், சிறப்பாகப் பெரியண்ணன் தந்தையொத்தவனாதலால், அவன் மனைவி தாயொத்தவள் என்பது கருத்து.

**அத்தாச்சி**[2] *attācci*, பெ. (n.) **நாத்தூணாள் (கணவன்:உடன்பிறந்தாள்)** (இ.வ.); husband's sister (Loc.).

**க.** அத்திகெ; **பட.** அத்திகெனன்னி.

*[அத்தான் = மூத்த அளியன் (மைத்துனன்), கணவன். அச்சி =* **அன்னை**, *அக்கை. அத்தான் + அச்சி – அத்தாச்சி.]*

அண்ணியும் மூத்த நாத்தூணாளும் முறை யிலும் மதிப்பிலும் ஒத்தவர் என்பது கருத்து.

இளைய நாத்தூணாளைக் கொழுந்தி யென்பது மரபு. அத்தாச்சியென்னும் பெயர் கொழுந்தியைக் குறிக்குமாயின், அச்சி யென்பது அன்பு அல்லது அருமைபற்றிய தாகும்.

**ஒ.நோ:** *தங்கை + அச்சி – தங்கைச்சி.*

**அத்தாசம்** *attāśam*, பெ. (n.) **உயர்வெளி (அந்தரம்)**; mid-air, aloft or above the head. **அவனை** அத்தாசமாய்த் தூக்கிக்கொண்டு போனான் (உ.வ.).

*[அத்தாயம் → அத்தாசம்.]*

**அத்தாய்** *attāy*, பெ. (n.) (செவிலி.) **ஆடை** (இ.வ.); (Nurs.) cloth (Loc.).

*[ஆடை → ஆதை → ஆதாய் → அத்தாய்.]*

**அத்தாயப்படு-தல்** *attāya-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **கட்டப்படுதல், துன்பப்படுதல்** (இ.வ.); to suffer, to be distressed (Loc.). **அவன்** மிக அத்தாயப்படுகிறான் (உ.வ.).

*[அத்தாயம் + படு.]*

**அத்தாயம்** *attāyam*, பெ. (n.) *1.* **கடைசற் சக்கரத்தின் மிதிதடி** (யாழ்ப்.); treadle of a turner's lathe (J.). *2.* **உயர்வெளி (அந்தரம்)**; mid-air aloft or above the head. **அவனை** அத்தாயமாய்த் தூக்கியெறிந்தான் (உ.வ.). *3.* **இளைப்பு**; fatigue, weariness. *4.* **கட்டம், துன்பம்;** difficulty, distress.

**அத்தாரம்** *attāram*, பெ. (n.) **மரமஞ்சள்**; tree-turmeric, *Coscinium fenestratum* (சா.அக.).

**அத்தாவரி** *attāvari*, பெ. (n.) **வெட்பாலை யரிசி** (பரி.அக.); the drug known as *veṭpālaiyariši* (செ.அக.) — **வெட்பாலரிசி;** dyer's oleander, seeds of *Wrightia tinctoria* (சா.அக.).

**அத்தாள்** *attāḷ*, பெ. (n.) **தாய்** (இராட்.); mother (R.).

**தெ.** அத்த

**ஒ.நோ:** ஆத்தாள்

*[அத்தை → அத்தா → அத்தாள். அத்தன் (ஆ.பா.)— அத்தி (பெ.பா.) = அன்னை. அத்தன் (ஆ.பா.) — அத்தை → ஆத்தை (பெ.பா.) = அன்னை.]*

ஐகாரவீற்று அன்னை (அல்லது அக்கை) முறைப்பெயர்களின் ஆகாரவீற்று விளிவடிவங்கள் பல, கொச்சை வழக்கில் ளகர மெய்யீறு ஏற்றும் ஏலாதும் எழுவாய் வடிவுகளாக வழங்கிவருகின்றன.

எ-டு : அம்மை → அம்மா → அம்மாள்.

இம் முறையில், ஆத்தை என்பது ஆத்தாள் என்று திரிந்து வழங்குகின்றது.

அத்தி (அன்னை) என்பது, இலக்கண முறைப்படி, அத்தீ என்று ஈறுநீண்டே விளியேற்கும். ஆதலால், ளகர மெய்யீறு பெறாது.

இன்று தந்தையின் உடன்பிறந்தாளையும் மாமியையுங் குறிக்கும் அத்தை யென்னுஞ் சொல், முதற்காலத்தில் அன்னையையுங் குறித்திருத்தல் வேண்டும். அன்றேல், அத்தாள் என்னும் வடிவு பெற்றிராது.

**பிராகி., வ.** அத்தா.

ஐகார ஈறு ஆகார ஈறாகத் திரிவது பிராகிருத ஆரிய (சமற்கிருத) இயல்பே.

**அத்தாளம்** *attāḷam*, பெ. (n.) **இராச் சாப்பாடு** (இ.வ.); supper (Loc.). ''அத்தாளப் பட்டினியு மப்படியே'' (சரவண. பணவிடு.).

**ம.** அத்தாழம்

*[அல் + தாலம் — அற்றாலம் → அத்தாளம்.]*

அல் = இரவு. தாலம் = தட்டு, உண்கலம், உண்டி (இடவாகுபெயர்). **ஒ.நோ: E.** dish = vessel for holding food, food so held, particular kind of food.

**அத்தாளி** *attāḷi*, பெ. (n.) **காட்டுப் பூவரசு;** falsefern tree. **அத்ததாளி** பார்க்க; see *attatāḷi*.

*[அத்ததாளி → அத்தாளி.]*

**அத்தான்**[1] *attāṉ*, பெ. (n.) 1. **அக்கை கணவன்;** elder sister's husband. 2. **மனைவி தமையன்;** wife's brother, when elder. 3. **கணவன் தமையன்;** husband's brother, when elder. 4. **அம்மான் மகன்;** maternal uncle's son, when elder. 5. **அத்தை மகன்;** paternal aunt's son, when elder.

*[அத்தன் → அத்தான் = மதிப்பில் தந்தையை அல்லது தமையனை ஒத்தவனாய், மணஞ் செய்துகொள்ளும் முறையில் உள்ளவன்.*

*இனி, அத்தை மகன் → அத்தைமான் → அத்தான் என்றுமாம்.]*

**அத்தான்**[2] *attāṉ* பெ. (n.) **முடக்கொற்றான்** (பரி.அக.); balloon-vine.

*[முடங்கொன்றான் → முடக்கொற்றான். முடக்கற்றான் என்னும் தவறான வடிவை, முடக்கு + அற்றான் என்று பிரித்ததனால் ஏற்பட்ட 'அற்றான்' என்னுங் குறுக்கம் 'அத்தான்' என்று திரிந்திருக்கலாம்.]*

**அத்தான் மதனி** *attāṉ-madaṉi*, பெ. (n.) **அத்தான் மதினி** பார்க்க; see *attāṉ-madiṉi*.

**அத்தான் மதினி** *attāṉ-madiṉi*, பெ. (n.) **அத்தை மகன் மனைவி** (பிராம.); wife of the paternal aunt's son (Brāhm.).

**அத்தி**[1] *atti*, பெ. (n.) 1. **அன்னை;** mother. 2. **அக்கை;** elder sister.

**ம.** அத்திக; **க.** அத்திகெ (அக்கை); **தெ.** அத்தி (தாய்); **கூ.** அத (பாட்டி); **பிரா.** அத்தி (தாய்); **பிராகி.** அத்தா (தாய்).

**வ.** அத்தா = அன்னை, அக்கை; அந்தி(கா), அத்திகா = அக்கை.

வடமொழி ஆவீறு தமிழில் ஐயீறாவது போன்று, தமிழ் ஐயீறு வடமொழியில் ஆவீறாகும்.

அத்தன் (ஆ.பா.) — அத்தி (பெ.பா.).

அத்தி என்னுஞ் சொல், அக்கை யென்னும் பொருளில் தமிழில் வழக்கற்றது. ஆயின், அதன் திரிபான அச்சி என்னும் வடிவம் அப்பொருளில் உலக வழக்கில், சிறப்பாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பாரிடை வழங்கி வருகின்றது.

மூத்த உடன்பிறந்தாள் தாய்க்குச் சமமாதலால், தாய் முறைப்பெயர் அக்கைக்கு வழங்கி வருவது இயல்பே.

**ஒ.நோ :** அவ்வை = அன்னை, அக்கை. தம் + அவ்வை – தவ்வை = தமக்கை.

'கை' கு.பொ.பின். (dim. suff.)

எ-டு : குடி → குடிகை = சிறுகோயில். கன்னி → கன்னிகை = இளங்கன்னி. அண்ணன் தந்தையை யொத்தவனாயின் அண்ணி தாயையொத்தவளாதலால் கன்னடத்தில் 'அத்திகெ' என்பது அண்ணியைக் குறிக்கின்றது. ஐகார ஈறு கன்னடத்தில் எகர ஈறாவது இயல்பே.

இம் முறையில், அத்திகை என்பது, முதற் கண் அக்கைமாருள் இளையவளைக் குறித் திருக்கலாம்.

அன்னையும் அக்கையும் போலப் பாட்டியும் அன்னையு மிருத்தலால், இடைப்பட்ட அன்னை முறைப்பெயர் அக்கைக்கு வழங்கு வது போன்று பாட்டிக்கும் சிறுபான்மை வழங்கி வருகின்றது.

**ஒ.நோ :** அவ்வை = அன்னை, பாட்டி.

தமிழ்ச்சொல் திரவிடத்தில் வழங்குவது போன்றே, திரவிடச்சொல் பிராகிருதத் திலும், பிராகிருதச்சொல் சமற்கிருதத்திலும் வழங்கிவருகின்றனவென அறிக.

**அத்தி**[2] *atti*, இடை. (part.) **ஒரு பெண்பாலீறு**; a fem. suff.

எ-டு : நட்டுவத்தி, வேட்டுவத்தி, குறத்தி, மறத்தி.

அன்னை முறைப்பெயர், பொதுவாக மதிப் பான பெண்ணைக் குறிப்பதுடன், பெண்பா லீறாகவும் வழங்கும்.

எ-டு : அந்த அம்மை யார் ?
ஓர் அம்மையார் வந்திருக் கிறார்.
ஓர் அம்மா வந்திருக்கிறது (கொச்சை).
} மதிப்பான பெண்.

கண்ணம்மை,
பொன்னம்மை.
கண்ணம்மா,
பொன்னம்மா (கொச்சை).
} பெண்பா லீறு.

இந்த முறையிலேயே, அத்தி என்னும் அன்னை முறைப்பெயரும் பெண்பாலீறாகும்; ஏனைப் பொருள்களில் அது வழக்கற்றது.

'அத்தி' என்னும் சொல்லே இகரவீறு பெற்ற ஒரு பெண்பாற் பெயராதலால் முன்னை யிலக்கண நூலார் அதை ஓர் ஈறாகக் கூறிற்றிலர். **வீரசோழியம்** என்னும் பின்னை யிலக்கண நூலில் அஃது ஒரு பெண்பாலீறாகக் கூறப்பட்டுள்ளது. "அச்சியொ டாட்டி யணி யாத் தியத்தி" (வீரசோ. சொல். தத்திதப். 4).

ஆயின், அச் சொல்லின் வரலாற்றை அந் நூலாசிரியர் அறிந்தவரல்லர்.

**அத்தி**[3] *atti*, பெ. (n.) **நாட்டிலுங் காட்டிலும் 40 அடி உயரம் வரை வளர்வதும், கரந்துபூப்பதும், பலவகைப்பட்டதும், மருத்துவத்திற்கு மிகப் பயன்படுவதும், பெரும்பாலுஞ் சாலைகளின் இருமருங்கும் நிழன்மரமாக வளர்க்கப் படுவதுமான ஒருவகைப் பெருமரம்;** a large cryptogamous species of tree of many varieties, growing up to a height of 40 feet in both wild and cultivated conditions, useful for medicinal purposes, and very often seen on avenues and trunk roads.

அத்தியின் வகைகளாவன (சா.அக.) :

(1) நாட்டத்தி — country fig, *Ficus glomerata* alias *Ficus racemosa.*

(2) செவ்வத்தி — red fig, *Ficus heterophylla.*

(3) சீமையத்தி (அயல்நாட்டத்தி) அல்லது தேனத்தி — foreign fig, *Ficus carica.*

இது மிக அரியது; மணமுள்ளது; நீல மலை, காசுமீரம், காபூல் முதலிய இடங் களிலுள்ள மலைச்சாரல்களிற் பயிரா வது. இதன் கனியை யுண்டால் அரத்தப் பெருக்க முண்டாகி மலக்கட்டு நீங்கும்.

(4) காட்டத்தி — jungle fig, *Ficus hispida.*

(5) பேயத்தி — devil-fig, *Ficus oppositifolia.*

(6) கொடியத்தி — creeper-fig, *Ficus repens.*

(7) கல்லத்தி — stone-fig, *Ficus scandens.*

(8) மலையத்தி — mountain-fig, *Ficus macrocarpa.*

(9) விழலத்தி — a variety of fig.

(10) பேரத்தி — tall fig, *Ficus excelsa.*

(11) சிற்றத்தி — small fig, *Ficus polycarpa.*

இதன் கனி பட்டாணிக் கடலை யள விருக்கும்.

(12) குருகத்தி — glossy long-leaved fig, *Ficus tjakela.*

(13) மலந்தின்னியத்தி — sandpaper fig, *Ficus asperrima.*

(14) நீரத்தி — yellow fig, *Ficus callosa.*

**ம., க., தெ., பட., குட.** அத்தி; **து.** அர்த்தி; **துட.** ஒத்ய்; **கோத.** அத்ய்; **சிங்.** அத்திக்கா, அட்டிக்கா.]

[*அத்துதல் = ஒட்டேல். அத்து → அத்தி = கிளைகளை யொட்டிக் காய்க்கும் காய்களை யுடைய மரம்.*]

ஊழலத்தி என்றொரு வகை யத்தியைச் *சங்க அகரமுதலி* குறிக்கின்றது. ஒருகால் அது விழலத்தியின் மறுபெயரா யிருக்கலாம்.

நாயத்தி யென்னும் ஒருவகையுண்டு. தாழ்ந்த வகையான நிலைத்திணையின் பெயர்கள் பொதுவாக நாயென்னும் அடைமொழி பெறுவதால், நாயத்தியும் தாழ்ந்ததாய் இருத்தல் வேண்டும்.

**அத்திப் பழமொழிகள் :**

'அத்திக் காயைப் பிட்டுப் பார்த்தால் அங்கு மிங்கும் பொள்ளல்.'

'அத்திப் பழத்தைப் பிட்டுப் பார்த்தால் அத்தனையும் புழு.'

'அத்திப் பழத்தைப் பிட்டுப் பார்த்தால் அதற்குள்ளும் விதையிருக்கும்.'

'அத்திப் பூவை ஆர் அறிவார்?'

'அத்திப் பூவைக் கண்டவர் உண்டா? ஆந்தைக் குஞ்சைப் பார்த்தவர் உண்டா?'

'அத்தி பூத்தாற்போல் (இருக்கிறது).'

'அத்திபோல் துளிர்த்து (ஆல்போல் தழைத்து, அறுகுபோல் வேரூன்றி, அரசு போல் ஓங்கி, மூங்கில்போற் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்.)'

'அத்தி மரத்தில் தொத்திய கனிபோல்.'

**அத்தி**[4] *atti,* பெ. (n.) 1. *எருக்கங் கிழங்கு;* madar root or root of *Calotropis gigantea.* 2. **செவ்வாமணக்கு**; red castor oil plant, *Ricinus communis.* 3. *கருவிளை;* a wild creeper, *Clitoria ternatea.* 4. **குன்றிமணி**; rosary-pea, *Abrus precatorius.* 5. **வேங்கை**; kino rosewood, *Pterocarpus santalinus.* 6. *வாலை (பாதரசம்);* mercury obtained by distillation from vermillion. 7. *கண் நரம்புகளுள் ஒன்று;* one of the nerves of the eye. 8. *மயக்கம்;* swoon (சா.அக.).

[*செவ்வாமணக்கு, குன்றிமணி ஆகிய இரண்டின் பெயரும் அத்தம் (சிவப்பு) என்னும் மூலத்தினின்று தோன்றியிருக்கலாம்.*]

**அத்தி**[5] *atti,* பெ. (n.) 1. *மலை;* mountain. 2. வெருகஞ்செடி; tuberous-rooted herb, *Arum macrohizon* (செ.அக.).

**அத்தி**[6] *atti,* பெ. (n.) பறவை (பொதி.நி.); bird.

**அத்திக்கரணி** *atti-k-karaṇi,* பெ. (n.) 1. *சிற்றாமணக்கு;* small-seeded castor plant, *Rhicinus communis.* 2. *பலாசு;* bastard plant, *Butea frondosa* (சா.அக.).

**அத்திக்கள்** *atti-k-kaḷ,* பெ. (n.) *அத்திப் பதநீர், அத்திப்பால், நாட்டத்தி வேரினின்று எடுக்கப் படும் கள்;* toddy extracted from the country fig.

**ம.** அத்திக் கள்ளு

**மறுவ.** அத்திப் பதநீர், அத்திப்பால், அத்தி நீர்.

**அத்திக்கன்னி** *atti-k-kaṉṉi,* பெ. (n.) **வெருகு**; toddy bird, *Paradoxurus niger.*

It is so called from its attachment to toddy trees, where it hangs its curious pensile nests (சா.அக.).

**அத்திக்கனி** *atti-k-kaṉi,* பெ. (n.) 1. *அத்திப் பழம்;* fig fruit. 2. *கரிசலாங்கண்ணி;* species of eclipta (செ.அக.) — eclipse plant, *Eclypta alba* (சா.அக.).

[*அத்தி + கனி.*]

**அத்திக்காய்க்கிரந்தி** *atti-k-kāy-k-kirandi,* பெ. (n.) *மேகநோயினால் உடம்பு முழுவதும் அத்திக்காய்ப் பருமன் கட்டிகளை யெழுப்பும் ஒரு புண்ணோய்;* a syphilitic affection causing fig-size ulcers or warts all over the body (சா.அக.).

[*அத்திக்காய்* + **Skt.** granthi > *த. கிரந்தி.*]

**அத்திக்காய்ப் பரு** *atti-k-kāy-p-paru,* பெ. (n.) *ஒரு மேகப் புண்ணோய்;* a fig-wart of venereal origin, a kind of verruca in secondary syphilis (சா.அக.).

**அத்திக்காளிக்கீரை** *atti-k-kāḷi-k-kīrai,* பெ. (n.) *கோழிக்குறும்பான் கீரை;* a kind of amaranthus known as cock's green, *Portulaca oleracea* (சா.அக.).

**அத்திக்கொடி** *atti-k-koḍi*, பெ. (n.) ***கொடியத்தி***; a fig creeper, ***Ficus repens*** (சா.அக.).

**ம.** அத்திக்கிழங்குவள்ளி

*[அத்தி + கொடி.]*

**அத்திக்கோலிகம்** *atti-k-kōligam*, பெ. (n.) ***சிறு குறிஞ்சா***; a small Indian ipecacuanha, *Gymnema parviflorum* (சா.அக.).

**அத்திகை** *attigai*, பெ. (n.) ***தமக்கை***; elder sister.

**ம., க.** அத்திகெ; **Skt.** attiga.

*[அத்தி (அக்கை) + கை (கு.பொ.பின்.) – அத்திகை (இளைய அக்கை, அக்கை).)]*

**அத்திகோலம்** *attikōlam*, பெ. (n.) ***அழிஞ்சில்*** (மலை.); sage-leaved alangium.

**அத்திசம்** *attišam*, பெ. (n.) ***நீர்முள்ளி***; a thorny shrub, *Hygrophila spinosa* (சா.அக.).

**அத்தித்தேக்கி** *atti-t-tēkki*, பெ. (n.) ***சிறு கொத்தவரை (சீனியவரை)***; a small species of cluster beans, *Cyamopsis peoralioides* (சா.அக.).

*[அத்துதல் = ஒட்டுதல். தேக்குதல் = நிறைத்தல், கூட்டுதல், கொத்தாக்குதல். கிளை யொட்டிக் கொத்துக்கொத்தாய்க் காய்த்தலால், கொத்தவரை யெனப்பட்டது.]*

**அத்திநீர்** *atti-nīr*, பெ. (n.) ***அத்திப்பதநீர்*** பார்க்க; see *atti-p-pada-nīr*.

**அத்திப்பட்டை** *atti-p-paṭṭai*, பெ. (n.) ***அத்தி மரத்தின் உரி (மேல்தோல்)***; bark of the fig tree.

*[அத்தி + பட்டை.]*

இப் பட்டைச்சாறு, நச்சுக்கடி, புலி அல்லது பூனை யுகிர்ப் பறண்டல், பிளவை, பெரும்பாடு ஆகியவற்றைக் குணமாக்கும்; The juice from this bark is a cure for poisonous bites, scratches caused by tiger's claws or cat's paw, *carbuncles* and *menorrhagia*.

**அத்திப்பதநீர்** *atti-p-pada-nīr*, பெ. (n.) ***அத்தி மரத்தின் வேரினின்று வடியும் நீர் அல்லது கள்***; a fluid exuding from the root of the fig tree.

இஃது உடம்பிற்குக் குளிர்ச்சியை யுண்டாக்கி, வெட்டைச் சூடு, கண்ணெரிச்சல் முதலியவற்றைப் போக்கும்; This is used for cooling down the human body system, and for removing venereal heat and for curing inflammation of the eyes.

*[அத்தி + பதநீர்.]*

**அத்திப்பழச்சாறு** *atti-p-paḷa-c-cāṟu*, பெ. (n.) ***அத்திப்பழத்தின் பிழியல்***; the juice of fig fruit.

இது, மதுமேகம், மூத்திரநோய் முதலியவற்றிற்குக் கொடுக்கும் சுண்ணம் (பற்பம்), செந்தூரம் முதலிய மருந்துகட்கு உடன்குடிப்பாக (அனுபானமாக) உதவும்; This is used by native physicians as a medium in the administration of calcined oxides and red oxides or other metalic preparations, for curing diabetes and urinary disorders (சா.அக.).

*[அத்தி + பழம் + சாறு.]*

**அத்திப்பால்** *atti-p-pāl*, பெ. (n.) ***அத்திமரத்தினடியிற் குத்தியெடுக்கப்படும் பால்***; the milky juice of the country fig tree collected from the stem.

நாட்டத்திப்பால் அரத்தக்கழிச்சல், வயிற்றுக்கடுப்பு, வயிற்றுப்போக்கு, நீரிழிவு, மூலம், பெரும்பாடு, அரத்தமூத்திரம் முதலியவற்றைக் குணமாக்கும். அயல்நாட்டத்திப் பாலோ, உடம்பிற் பட்டாற் சிவந்து புண்ணாகும்; The juice of the country fig tree is a good remedy for dysentery, inflammation or irritation of the stomach, diarrhoea, diabetes, piles, menorrhagia, blood in the urine, etc. But, the juice of the foreign fig tree has only a blistering effect (சா.அக.).

*[அத்தி + பால்.]*

**அத்திம்பியார்**[1] *attimbiyār*, பெ. (n.) ***அக்கை கணவன்*** (பிராம.); elder sisters's husband (Brāhm.).

**மறுவ.** அத்தம்பியார், அத்திம்பேர்.

*[ஒருகா. அத்தி + நம்பியார் – அத்திநம்பியார் → அத்திம்பியார்.]*

**அத்தம்பியார்** பார்க்க; see *attambiyār*.

**அத்திம்பியார்**[2] *attimbiyār*, பெ. (n.) ***அத்தை கணவன்*** (பிராம.); paternal aunt's husband (Brāhm.).

*[ஒருகா. அத்தை + நம்பியார் – அத்தைநம்பியார் → அத்திம்பியார்.]*

**அத்திம்பேர்**[1] *attimbēr*, பெ. (n.) ***அக்கை கணவன்*** (பிராம.); elder sister's husband (Brāhm.).

*[ஒருகா. அத்தி + நம்பியார் — அத்திநம்பியார் → அத்திம்பேர்.]*

**அத்திம்பேர்**[2] *attimbēr*, பெ. (n.) **அத்தை கணவன்** (பிராம.); paternal aunt's husband (Brāhm.).

*[ஒருகா. அத்தை + நம்பியார் — அத்தைநம்பியார் → அத்திம்பியார் → அத்திம்பேர்.]*

**அத்திமானம்** *attimāṉam*, பெ. (n.) **ஆமணக்கு** (சித்.அக.); castor plant.

**அத்திமேற்புல்லுருவி** *atti-mēṟ-pulluruvi*, பெ. (n.) **அத்திமரத்தில் முளைத்திருக்கும் புல்லுருவிப் பூடு**; a parasitic plant found growing on fig tree, *Banda roxburghii* (சா.அக.).

**அத்திரதம்** *attiradam*, பெ. (n.) **இஞ்சி**; ginger, *Zinziber officinale*.

**அத்திரப்பல்** *attira-p-pal*, பெ. (n.) 1. **குழந்தைகட்கு 7ஆம் மாத முதல் 36ஆம் மாதம் வரை முளைக்கும் 20 பற்கள்**; the 20 temporary or milk teeth that grow in children between the 7th and 36th month. 2. **பாற்பல்**; the tooth of the first dentition, milk-tooth. 3. **குதிரைப் பல்**; horse tooth (சா.அக.).

**அத்திரப்பிடுக்கன்** *attira-p-piḍukkaṉ*, பெ. (n.) 1. **குதிரைப்பிடுக்கன்மரம்**; horse almond tree, *Sterculia foetida*. 2. **பருத்த பிடுக்கையுடையவன்**; one with a big scrotum (சா.அக.).

*[அத்திரம் + பிடுக்கன்.]*

**அத்திரம்**[1] *attiram*, பெ. (n.) 1. **குதிரை**; horse. 2. **கழுதை**; ass (அக.நி.).

**அத்திரம்**[2] *attiram*, பெ. (n.) 1. **இலந்தை**; (மூ.அ.); jujube, sh. & s. tr., *Zizyphus jujuba*. 2. **இஞ்சி** (பச்.மூ.); green ginger, *Zinziber officinale*. 3. **குங்கிலியம்** (சித்.அக.); Indian bdellium. 4. **கடுக்காய்ப்பூ** (வை.மூ.); Japanese wax-tree. 5. **குக்கில்**; a resin, *Balsmodendron roxburghii* (சா.அக.).

**அத்திரா** *attirā*, பெ. (n.) **அரசு** (சித்.அக.); pipal.

**அத்திரி** *attiri*, பெ. (n.) 1. **ஒட்டகம்** (பிங்.); camel. 2. **குதிரை**; horse. "மனப்பே ரத்திரி யுகைத்து" (ஞானா. 33 : 10). 3. **கழுதை** (திவா.); ass. 4. **கோவேறு கழுதை**; mule. "வான வண்கைய னத்திரி யேற" (சிலப். 6 : 119). 5. **உலைத்துருத்தி** (திவா.); forge, bellows.

ம. அத்திரி

**அத்திரிகா** *attirigā*, பெ. (n.) **சிறு சிமிட்டி**; a kind of plant (சா.அக.).

**அத்திரிப்பாய்ச்சல்** *attiri-p-pāyccal*, பெ. (n.) **குதிரை தாவியோடும் வேகம்**; gallop of a horse.

*[அத்திரி + பாய்ச்சல்.]*

**அத்திரியர்** *attiriyar*, பெ. (n.) **கள்ளர்குலப் பட்டப் பெயர்களுள் ஒன்று** (கள்ளர் சரித். பக். 145); a title of Kaḷḷars.

*[அத்திரி = குதிரை. அத்திரி → அத்திரியன் = குதிரை மறவன்.]*

சோழர் குதிரைப்படையினரின் வழிவந்த கள்ளர், தம் முன்னோரின் தொழிலடிப் பெயரை இன்று தம் குலப் பட்டப்பெயராகக் கொண்டுள்ளதாக விருக்கலாம்.

அத்திரியன் (ஒருமை) — அத்திரியர் (பன்மையும் உயர்வுப் பன்மையும்).

**அத்திரு** *attiru*, பெ. (n.) **அரசு, அரசமரம்** (மலை.); pipal tree, *Ficus religiosa*.

**அத்திலிகை** *attiligai*, பெ. (n.) **நஞ்சுத் தொடர்பான நீரட்டையை (சூகையை)க் கையாள்வதால் (பிரயோகிப்பதால்) வளி (வாயு) வேகமடைந்து உடம்பிலெழும்புங் காய்ப்பருக்கள்**; eruptions of hard stone-like pimples on the body due to activisation of *vāyu* locally where a plaster of poisonous *šūka* (leech) has been applied.

**அத்திலை** *attilai*, பெ. (n.) **செருப்படை** (மூ.அ.); a low spreading plant, species of coldenia, *Coldenia procumbens*.

**அத்திவங்கம்** *attivaṅgam*, பெ. (n.) **காரீயம்**; lead, *plumbago* (சா.அக.).

**அத்திவீரம்** *attiviram*, பெ. (n.) **சவ்வீரம்**; *Hydrargiri perchloridum* (சா.அக.).

**அத்தின்** *attin*, பெ., 5ஆம் வேற். (n., ab.c.) **அதனின், அதனின்று**; from that. "தானத்தின் வேறாகுந் தான்" (சி. போ. 3 : 7, வெண்பா).

**[அது → அத்து + இன். ஒ.நோ : எது → எத்து. 'எத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்' (பழ.).]**

**அத்தீர்** *attīr*, பெ. (n.) **குழித்தாமரை** (பரி.அக.); rootless nelumbo (செ.அக.) — **குளிர்தாமரை**; sky lotus, *Distia stralioles* (சா.அக.).

**அத்து**[1]**-தல்** *attu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அப்புதல்**; to apply, as medicine to a wound. மருந்தைக் காயத்தின்மே லத்தி வைத்தான் (வின்.). 2. **இரு அல்லது பல துண்டை ஒன்றாகப் பொருத்தியிசைத்தல்**; to join two or more parts making them fit in with one another. அத்தித் தைத்தான் (வின்.). 3. **சார்தல்**; to lean on. என் தோளை அத்திக்கொண்டு வா (வின்.). 4. **எட்டுதல்**; to reach. அந்தச் செய்தி தலைவர் காதிலும் அத்திப்போய் விட்டது (உ.வ.).

ம. அத்துக; க. அதுகு; தெ. அத்து.

[உ → உத்து → அத்து. உத்தல் = பொருந்துதல், ஒத்தல்.]

**அத்து**[2] *attu*, பெ. (n.) 1. **அரைப்பட்டிகை** (பிங்.); girdle, waist ornament. 2. **தையல்** (பிங்.); sewing.

[உ → உத்து → அத்து.]

**அத்து**[3] *attu*, பெ. (n.) 1. **சிவப்பு**; redness. "அத்து ணாடையர்" (சீவக. 1848). 2. **செவ்வை** (சங்.அக.); straightness, correctness, sound condition. 3. **துவர்**; astringents. "ஆடு நீரன வத்து மண்களும்" (சீவக. 2418). 4. **காட்டத்தி**; wild-fig, *Ficus glomerata* alias *F. guttata* (சா.அக.). 5. **கடப்பம்பட்டை** (இராசவைத்.); bark of common *kaḍamba*. 6. **அழிஞ்சிற்பட்டை** (இராசவைத்.); bark of sage-leaved alangium.

ம. அத்து; து. அத்தசமர.

[நிறப்பெயர்கள், பொதுவாக அவ்வந் நிறங் களையுடைய பொருள்களின் பெயரினின்று அமைந்துள்ளன. அப் பொருள்கள் கட்டி யாகவோ நீராகவோ ஆவியாகவோ இருக்கலாம்.

நெருப்புச் சிவந்திருப்பதால், நெருப்பு வடி வானதும் தோற்றத்திலும் மறைவிலும் சிவந்து தோன்றுவதுமான கதிரவன் பெயரினின்று, செந்நிறப் பெயர் தோன்றிப் பல்வேறு வடிவாகத் திரிந்துள்ளது.

உல் → உர் → உரு. உருத்தல் = அழலுதல், எரிதல். உர் → க. உரி. உல் → எல் = கதிரவன். எல் → எர் → எரி = நெருப்பு, சிவப்பு. எரிமலர் = முருக்கமலர், செந்தாமரை மலர். எர் → தெ. எறு → எறுப்பு = சிவப்பு. எரங்காடு = செந்நிலம்.

உல் (எல்) → அல் → அல → அலத்தம் = செம் பருத்தி. அலத்தம் → அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அலத்தம் → அரத்தம் = சிவப்பு, செந் நீர் (குருதி), அரக்கு. அலத்தகம் → அரத்தகம்.

அல் → அல → அலக்கு → அரக்கு = சிவப்பு, செம்மெழுகு.

எல் → இல் → இல → இலத்தி → இரத்தி = செங்கனி முட்செடி. இலத்தி → இலத்தை → இலந்தை = செங்கனி முட்செடி. இலத்தை → இலதை (மலை.).

அல் → அது → அத்து = சிவப்பு, துவர்ப்பு, துவர்ப்பொருள். பாக்கு, காசுக்கட்டி முதலிய செந்நிறப் பொருள்கள் துவர்த்தலால், அத்து என்னுஞ் சொல் துவர்ப்புப் பொருள் பெற்றது.

ஒ.நோ : மெல் → மெது → மெத்து.]

**அத்து**[4] *attu*, சு.பெ. (demons. pron.) 1. **அது**; that, it. "அத்தொ டொருமருவு கோள்" (சௌந். 11). 'அத்தோடே நின்றது அலைச் சல்; கொட்டோடே நின்றது குலைச்சல்' (பழ.). 2. **எல்லை**; boundary, limit. 'அத்து மீறிக் கத்தாதே', 'அத்துமீறிப் போனான், பித்துக்கொள்ளி ஆனான்' (பழ.).

[அது → அத்து. ஒ.நோ : மெது → மெத்து.]

**அத்து**[5] *attu*, இடை. (part.) **உருபு புணர்ச்சியில், மகர மெய்யீற்றுப் பெயர்ச்சொல்லிற்கும் வேற்றுமை யுருபிற்கும் இடையில் சாரியையாக வரும் இணைப்பிடைச்சொல்**; an euphonic increment inserted between a noun ending in 'அம்' and its case-ending in declension, the final syllable 'அம்' of the noun being elided invariably in prose.

"இன்னே வற்றே அத்தே அம்மே
......................................
அன்ன என்ப சாரியை மொழியே"
(தொல். எழுத்து. புண. 17).

"அத்தின் அகரம் அகரமுனை யில்லை"
(தொல். எழுத்து. புண. 23).

எ-டு : மரம் + ஐ (மரம் + அத்து + ஐ) – மரத்தை, முகம் + இல் (முகம் + அத்து + இல்) – முகத்தில்.

**அத்து**[6] *attu*, இடை. (part.) **கிழமைப் பொருளிலும் இடப்பொருளிலும் வரும் சாரியை யாகிய உருபு போலி**; an euphonic increment generally used as a genitive or locative case-ending.

எ-டு :
மரத்து வேர் —கிழமை வேற்றுமை.
பட்டினத்துப்பிள்ளை —இடவேற்றுமை.
குன்றத்திருந்தான் —இடவேற்றுமை.

அத்துச்சாரியையேற்ற பெயர், பெயரொடு கூடின் கிழமை அல்லது இடப்பொருளையும் வினையொடு கூடின் இடப்பொருளையும் உணர்த்தும்.

**அத்துகம்** *attugam*, பெ. (n.) 1. **ஆமணக்கு** (மலை.); castor-plant, *Recinus communis*. 2. **ஆமணக்கமரம்** (சங்.அக.); castor-tree.

**அத்துகமணி** *attugamaṇi*, பெ. (n.) *அரசு, அரசமரம்* (பச்.மூ.); pipal tree.

**அத்துகமானி** *attugamāṉi*, பெ. (n.) *அரசு, அரசமரம்* (மலை.); pipal tree, *Ficus religiosa*.

மறுவ. அத்துகமணி, அத்துமணி, அத்து மானி.

**அத்துகமேதி** *attugamēdi*, பெ. (n.) *சிறுசிலும் பான்*; a kind of plant (சா.அக.).

**அத்துகோசகம்** *attukōšagam*, பெ. (n.) *சிறு சீரகம், பெருஞ்சீரகத்திற்கு எதிர்*; cumin, *Cuminum cyminum*, opp. to *peruñjīragam*.

**அத்துசம்** *attušam*, பெ. (n.) *மரமஞ்சள்* (பச்.மூ.); tree-turmeric, *Coscinium fenestratum*.

**அத்துணை** *a-t-tuṇai*, பெ. (n.) *அவ்வளவு*; that much, so much. அஃது அத்துணை நன்றா யில்லை (உ.வ.).

*[அ (சேய்மைச்சுட்டு) + துணை (அளவு) – அத்துணை.]*

**அத்துதல்** *attudal*, பெ. (n.) *அரத்தைப்பூடு*; galangal, *Alpinia galangal* (சா.அக.).

**அத்துமணி** *attumaṇi*, பெ. (n.) **அத்துகமானி** பார்க்க; see *attugamāṉi*.

**அத்துமம்** *attumam*, பெ. (n.) *அரத்தை* (மூ.அ.); galangal, *Alpinia galangal*.

**அத்துமாகசம்** *attumāgašam*, பெ. (n.) *சிறு செந்தொட்டி*; small climbing nettle, *Tragia involucrata* (சா.அக.).

**அத்துமானி** *attumāṉi*, பெ. (n.) **அத்துகமானி** பார்க்க; see *attugamāṉi*.

**அத்துராதி** *atturādi*, பெ. (n.) *வால்மிளகு*; *tail* pepper, *Piper cubeba* (சா.அக.).

**அத்துலாக்கி** *attulākki*, பெ. (n.) *கருஞ்சீரகம்* (மூ.அ.); black cumin, *Nigella sativa*.

**மறுவ.** அத்துலாக்கினம், அத்துவர்க்கயம், அத்துவர்க்காயம், அத்துவாக்காயம்.

**அத்துலாக்கினம்** *attulākkiṉam*, பெ. (n.) **அத்து லாக்கி** பார்க்க; see *attulākki* (சா.அக.).

**அத்துலி** *attuli*, பெ. (n.) **சிறுதெல்லு**; a kind of creeper (சா.அக.).

**அத்துவசம்** *attuvašam*, பெ. (n.) ஒரு பூடு; the plant svarmūli (சா.அக.).

**அத்துவசல்லியம்** *attuvašalliyam*, பெ. (n.) *நாயுருவி*; Indian burr, *Achyranthes aspera* (சா.அக.).

**அத்துவம்** *attuvam*, பெ. (n.) *சிவப்பு*; redness (சா.அக.).

*[அத்து = சிவப்பு. அத்து → அத்துவம்.]*

**அத்துவர்க்கயம்** *attuvarkkayam*, பெ. (n.) **கருஞ் சீரகம்**; black cumin, *Nigella sativa* (சா.அக.).

**அத்துவர்க்காயம்** *attuvarkkāyam*, பெ. (n.) **அத்துவர்க்கயம்** பார்க்க; see *attuvarkkayam*.

**அத்துவாக்காயம்** *attuvākkāyam*, பெ. (n.) **அத்து வர்க்கயம்** பார்க்க; see *attuvarkkayam*.

**அத்துவானம்**[1] *attu-vāṉam*, பெ. (n.) **செவ் வானம்** (சங்.அக.): red tinted sky.

*[அத்து + வானம். அத்து = சிவப்பு.]*

**அத்துவானம்**[2] *attu-vāṉam*, பெ. (n.) 1. *பாழ்ங் காடு* (சங்.அக.); desert. அது அத்துவானக் காடு (உ.வ.). 2. *பாழிடம்*; desolate place. அத்துவானப் பொட்டல் (உ.வ.). 3. *பாழ்*; ruins.

தெ. அத்துவானம்

*[அத்தம் = ஆள்வழங்கா அருநெறி, கடுங்காட்டு வழி. வனம் = காடு. அத்தவனம் → அத்து வானம்.]*

**அத்துளாசுண்ணம்** *attuḷā-šuṇṇam*, பெ. (n.) *ஈரற்சுண்ணம்*; a calcined powder prepared out of gall-stone (சா.அக.).

**அத்தூரம்** *attūram*, பெ. (n.) *மரமஞ்சள்* (மூ.அ.); tree-turmeric, *Coscinium fenestratum*.

**அத்தை**[1] *attai*, பெ. (n.) 1. **தந்தையுடன் பிறந்தவள்**; father's sister. ''கானிடை யத்தைக் குற்ற குற்றமும்'' (கம்பரா. சுந்தர. பாசப். 44). 'அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா எனலாம்', 'அத்தைமக ளானா லும் சும்மா வருமா', 'அத்தைமகள் சொத்தை அவள் கேட்கிறாள் மெத்தை' (பழ.).

2. **மனைவியின் தாய்**; wife's mother, mother-in-law. ''மாமியை யத்தையைத் தோயின்'' (கூர்மபு. பிராயச். 1). 3. **கணவன் தாய்**; husband's mother, mother-in-law. ''அரசர்க் கத்தையர்க்கு'' (கம்பரா. அயோத். தைல. 39). 4. **தாய்**; mother. 5. **தமக்கை**; elder sister. 6. **தலைவி** (பிங்.); lady, woman of rank or eminence. 7. **குருபத்தினி** (நாநார்த்த.); guru's wife.

**ம.** அத்த (தந்தையுடன் பிறந்தாள், கணவன் அல்லது மனைவியின் தாய்); **க.** அத்தி (அத்தை, மாமி); **க.** சோதர் அத்தெ, சோதர் அத்தி (தந்தையுடன் பிறந்தாள், அம்மான் மனைவி); **தெ.** அத்த (மாமி, தந்தையுடன் பிறந்தாள், அம்மான் மனைவி); **து.** அத்தெ (மாமி); **கட.** ஆத்த (மாமி, தந்தையுடன் பிறந்தாள்); **கோண்.** ஆத்தீ (தந்தையுடன் பிறந்தாள்); **குவி.** அத்த; **பிராகி.** அத்தா (மாமி, தந்தையுடன் பிறந்தாளின் கணவன்); **மரா.** அத்தா (மூத்தவள்).

*[அத்தன் (ஆ.பா.) — அத்தை (பெ.பா.) = அத்தனுடன் (தந்தையுடன்) பிறந்தவள். அம்மை யுடன் பிறந்தவன் அம்மான் எனப்பட்டதுபோல், அத்தனுடன் பிறந்தவள் அத்தை யெனப் பட்டாள்.]*

'அத்தி' யென்னும் இகரவீற்றுப் பெண்பாற் சொல், என்றும் தாயை அல்லது தமக்கை யையே குறிக்கும். ஆதலால், அத்தி யென்னுஞ் சொல்லை அத்தை யென்னுஞ் சொல்லோடு மயக்க இடமில்லை. ஆயினும், கவனிப்பின்மையாலோ திசை வழக்காகவோ, இவ்வீற்றுச் சொற்களும் ஒன்றோடொன்று மயங்கியும் வந்திருக்கின்றன. அம் மயக்க மெல்லாம் ஏனைத் திரவிட ஆரிய மொழி களிலன்றித் தமிழிலில்லை. ஆதலால், ஐகார வீற்றுச்சொல் அத்தியை அல்லது தாயைக் குறிக்குமிடத்து, ஆத்தை 'யென்று' முதல் நீட்டம் பெறும். அதுவே ஆத்தா என்றும் ஆத்தாள் என்றும் கொச்சை வழக்கில் திரிந்து வழங்குகின்றது.

**அத்தை**[2] *attai*, பெ. (n.) **கற்றாழை** (இராச வைத்.); common Indian aloe, *Aloe vera* (*afficinalia*).

**அத்தை**[3] *attai*, சு.பெ., 2ஆம் வே. (demons. pron., acc.c.) **அதை, அதனை**; acc. of that or it. ''அத்தை யறியாதே'' (தாயு. ஆனந்தக். 13). 'அத்தைத்தான் சொல்வானேன் வாயைத் தான் வலிப்பானேன்' (பழ.).

*[அது → அத்து + ஐ (2ஆம் வே. உ.) – அத்தை.]*

**அத்தை**[4] *attai*, இடை. (part.) **ஒரு முன்னிலை யசைச்சொல்**; a poetic expletive joined to a verb in the 2nd pers. ''நடுக்கின்றி நிலியரோ வத்தை'' (புறநா. 2 : 20).

*[அது → அத்து → அத்தை. அத்தை யென்னும் 2ஆம் வே. உருபேற்ற சுட்டுப்பெயரே, தன் பொருளிழந்து முன்னிலை யசைச்சொல்லாகப் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கலாம்.]*

'செய்யிய ரத்தை' என்னுமிடத்து, 'செய்க அதை' யென்று பொருள்கொள்ள இடமுண்டு; ஆயின், அத்தை யென்பதைச் செய்யுளில் இடத்தை நிரப்ப வரும் பொருளற்ற சொல் லென்று கொண்ட பின், அதைப் பொருள் பொருந்தாத சொல்லொடும் இணைக்கலாம்.

''எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே'' (தொல். சொல். பெய. 1) என்பது, சொல்லமைதியின் அடிப்படை நெறிமுறை யாம்.

**அத்தைசார்** *attaiśār*, பெ. (n.) **அத்தையார் (தந்தையுடன் பிறந்தவள்)**; father's sister. அத்தை[1], 1. பார்க்க; see *attai*[1], 1.

*[ஆர் → உ.பன். ஈறு. யா → சா, போலி.]*

**அத்தைதாளி** *attai-tāḷi*, பெ. (n.) **காட்டுப் பூவரசு**; falsefern tree, *Filicium decipiens*.

**அத்தைநாறி** *attai-nāṟi*, பெ. (n.) **காட்டுக் கோங்கு** (L.); prussic acid tree.

**அத்தைப்பாட்டி** *attai-p-pāṭṭi*, பெ. (n.) **பாட்ட னுடன் பிறந்தாள்**; grand-father's sister. 'அத்தைப்பாட்டி போல அளந்து கொட்டு கிறாள் பெரிதாக' (பழ.).

*[அத்தை + பாட்டி.]*

**அத்தைபிள்ளை** *attai-piḷḷai*, பெ. (n.) **அத்தான்** (இ.வ.); father's sister's son (Loc.).

**அத்தோ** *attō*, இடை. (int.) **வியப்பு, இரக்கம் முதலியவற்றை யுணர்த்தும் குறிப்பிடைச் சொல்** (பிங்.); an exclamation of wonder, pity, etc.

*[அத்தன் = தந்தை. அத்தன் → அத்தோ. ஒ.நோ : ஐயன் → ஐயோ (இரக்கக் குறிப்பு).*

தாய்தந்தை முறைப்பெயர்களின் விளிவடிவங்கள் பல்வேறு குறிப்பிடைச் சொற்களாவது, முன்னரே கூறப்பட்டது.]

அக்கோ பார்க்க; see *akkō*.

**அத** *ada*, பெ. (n.) **அத்தி**; country fig, *Ficus glomerata*. 'அதக்குறிது' (தொல். எழுத்து. உயிர். 1, நச். உரை).

**மறுவ.** அதவம், அதவு, அதா.

**அதக்காயநாளம்** *adakkāya-nāḷam*, பெ. (n.) **ஈரலின் இடப்புற நாளம்**; a large hollow vein of the liver, *Vena cava hepatica*.

**அதக்கு-தல்** *adakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **மெல்ல அமுக்குதல்**; to press gently or softly as is done to a boil to bring out the pus or other matter (சா.அக.). 2. **கீழ்ப்படுத்துதல், அடக்குதல்**; to subdue, subject, control. "மாவலியைக் குறும்பதக்கி" (திவ். பெரியாழ். 4.9:7). 3. **கசக்கியிளக்குதல்** (வின்.); to grind, rub in the hand, press softly, soften, as fruit. 4. **வாயில் அடக்குதல்**; to cram in the mouth, as betel, as a monkey, its food. 5. **குதப்புதல்**; to turn about food in the mouth, munch.

**ம.** அதக்குக; **க.** அதுக்கு; **தெ.** அதுமு.

[அல் → அலு → அலுங்கு → அலுக்கு → அதுக்கு → அதக்கு. அலுங்குதல் = அசைதல். அலுக்குதல் = அசைத்தல். அதுக்குதல் = அசைத்து'இளக்குதல், கசக்குதல், அடக்குதல். ல → த, போலி.]

**அதகடி** *adakaḍi*, பெ. (n.) **அதட்டு** (யாழ்ப்.); menace, threat, hectoring (J.).

[அதக்கு + அடி – அதக்கடி → அதகடி.]

**அதங்கதம்** *adaṅgadam*, பெ. (n.) **யானைத் தீனி** (அக.நி.); food of elephant.

**அதங்கம்** *adaṅgam*, பெ. (n.) **ஈயம்** (மூ.அ.); lead, plumbum.

[ஒருகா. அதக்கு → அதக்கம் → அதங்கம் = எளிதாய் இளகுவது.]

**அதங்கோட்டாசான்** *adaṅgōṭṭāšāṉ*, பெ. (n.) **கி.மு. 6ஆம் அல்லது 7ஆம் நூற்றாண்டில், நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்தில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்ட போது, அவ்வரங்கிற்குப் புலமைத் தலைமை தாங்கி அந் நூற்கு ஒப்பந் தந்த அதங்கோட்டு வாணனான பேராசிரியன்**; a great Tamil scholar of *Adaṅgōḍu*, who as president, gave his approval to *Tolkāppiyam* when it was presented before a learned assembly for acceptance, in the immediate presence of King *Nilandaru-thiruviṟ Pāṇḍiyaṉ*, who ruled over the *Pāṇḍya* Kingdom in the 6th or 7th century B.C.

[அதங்கோடு + ஆசான்.]

**அதங்கோடு** *adaṅgōḍu*, பெ. (n.) **சேரநாட்டில் திருவனந்தபுரம் பக்கத்திலுள்ள ஒரு பழைய ஊர்**; an old town in the *Cēra* or *Kērala* country near Trivandrum. அது பின்னர் வேணாட்டுத் தலைநகரானபோது திரு என்னும் அடைபெற்றுத் திருவதங்கோடு எனப்பட்டது. அப் பெயர் பின்னர்த் திருவிதாங்கூர் என மருவிற்று. ஆங்கிலர் காலத்தில் அது திருவாங்கூர் (Travancore) எனக் குறுகிற்று. அவ்வூரைத் தலைநகராகக் கொண்ட நாடும் திருவாங்கூர் எனப் பெற்றது.

**அதட்டு-தல்** *adaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **உறுக்குதல்**; to rebuke authoritatively, hector. "எவரு மடங்க........அதட்டு வான் போன்று" (பிரபோத. 11:1). 2. **ஒலித்து உரப்புதல்**; to frighten with a vehement or sudden noise, as a beast. "உரத்த தொனியோ டதட்டி" (நல். பாரத. உத்தரநிரை. 334). 'அதட்டிப் பேசினால் உண்மை அழிந்தா போகும்?' (பழ.).

**க.** அதடு

[அரட்டு → அதட்டு.]

**அதட்டு** *adaṭṭu*, பெ. (n.) **வெருட்டும் ஓர் உரத்த ஒலி அல்லது சொல்**; rebuke, ranting, hectoring. ஓர் அதட்டுப் போட்டான் ஊர் வெடிக்க (உ.வ.).

[அரட்டு → அதட்டு.]

**அதப்பு** *adappu*, பெ. (n.) **செருக்கு** (இ.வ.); arrogance (Loc.).

**அதம்** *adam*, பெ. (n.) **அத்தி** (சூடா.); country fig, *Ficus glomerata*.

[அத → அதம்.]

**அதம்பம்** *adambam*, பெ. (n.) **ஒரு கனிய நஞ்சு (கற்பரி பாடாணம்)** (மூ.அ.); a mineral poison.

**அதம்பழம்** *adam-paḻam*, பெ. (n.) *அளிந்த பழம்* (*அருங்கலச். 123*); over-ripe fruit.

**அதம்பு-தல்** *adambu-*, 5 செ.கு.வி. (v.i.) *அடங் காது பேசுதல்* (இ.வ.); to speak intemperately (Loc.). க. அதப்பு. —, 5 செ.குன்றாவி. (v.t.) *கண்டித்தல்* (வின்.); to rebuke. தெ. அதல்பு.

*[ஒருகா. அரம்பு → அதம்பு.]*

**அதர்**[1] *adar*, பெ. (n.) *1. வழி*; way, path, public road. "ஆக்க மதர்வினாய்ச் செல்லும்" (குறள், 594). "ஆனினங் கலித்த வதர்பல கடந்து" (புறநா. 138 : 1). க., தெ. தாரி. *2. முறைமை*; order. "அதர்படத் துதித்து" (திருவாலவா. 25 : 26).

**அதர்**[2] *adar*, பெ. (n.) *1. சிறுகல்* (பொதி.நி.); gravel. *2. நுண்மணல்* (பிங்.); fine sand. க. அதுரு. *3. புழுதி* (சூடா.); dust. *4. மருந்துக் கசடு* (சித்.அக.); sediment in medicine.

**அதர்**[3] *adar*, பெ. (n.) *தலைப்பொடுகு*; dandruff. "குழலான மாலைப் பார்த்தா லதர்மிடைந்து ஞறிடும்" (நூற்றெட்டுத். திருப்பு. 56).

ஒ.நோ : அசறு

**அதர்**[4] *adar*, பெ. (n.) *ஊமணி, ஆட்டின் கழுத் தில் தொங்கும் தசைக்காம்பு* (சூடா.); a kind of wattle or excrescence under the neck of goats and sheep. "ஆட்டின் கழுத்தில் அதர்கறந்த வாறே" (திருமந். 2937).

*[ஒருகா. அதள் → அதல் → அதர். அதள் = தோல்.]*

**அதர்**[5] *adar*, பெ. (n.) *நீளக்கிடங்கு* (யாழ்ப்.); a long excavation for a foundation or long pit, ditch or trench.

**அதர்கோள்** *adar-kōḷ*, பெ. (n.) *வழிப்பறி* (திவா.); highway robbery.

**அதர்ப்படு-தல்** *adar-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *நெறிப்படுதல்*; to conform to rules. "அதர்ப் பட யாத்தலோ டனைமர பினவே" (தொல். பொருள். மர. 99).

*[அதர் + படு. அதர் = வழி.]*

**அதர்பறி-த்தல்** *adar-paṟi-*, 4 செ.கு.வி. (v.i.) *நீளக்கிடங்கு வெட்டுதல்*; to dig a long pit for a foundation, ditch or trench.

*[அதர் + பறி. அதர் = நீளக்கிடங்கு.]*

**அதர்வை** *adarvai*, பெ. (n.) *1. வழி*; way, path. "அம்புதல் அதர்வை" (பெருங். உஞ்சைக். 53 : 145). தெ. தோவ. *2. ஒருவகைக் கொடி*; a climber. "அதர்வைக் கொடிபுரை கயிற் றொடு கொளுத்தினர்" (பெருங். உஞ்சைக். 55 : 53-54).

**அதரஞ்செய்-தல்** *adarañ-cey-*, 1 செ.குன்றாவி. (v.t.) *தடைசெய்தல்*; to obstruct. "புரை யிடத்திற் சென்று அதரஞ் செய்யு மவர்களும்" (T.A.S. iii, 194).

**அதரம்** *adaram*, பெ. (n.) *மஞ்சள்* (பரி.அக.); turmeric.

**அதரவன்** *adaravaṉ*, பெ. (n.) *வெண்டோன்றி* (வை.மூ.); Malabar glory-lily.

**அதரிகொள்(ளு)-தல்** *adari-koḷ(ḷu)-*, 10 செ. குன்றாவி. (v.t.) *களத்திற் கதிரைக் கடாவிட்டு உழக்குதல்*; to thresh grain with cattle on the threshing floor. "அதரி கொள்பவர்" (மதுரைக். 94). *2. பகையழித்தல்*; to tread upon enemies, as on a threshing floor. "கொண்டனை பெரும குடபுலத் ததரி" (புறநா. 373 : 26).

**அதரிடைச்செலவு** *adar-iḍai-c-celavu*, பெ. (n.) *மறவர் நிரைமீட்சிக்குப் புறப்படும் புறத்துறை* (பு. வெ. 2 : 3); theme of an episode in which warriors set forth to recover cattle seized by enemies.

*[அதர் + இடை + செலவு.]*

**அதரிதிரி-த்தல்** *adari-tiri-*, 4 செ.குன்றாவி. (v.t.) *கதிரைக் கடா விட்டு உழக்குதல்*; to thresh grain with cattle. "அதரி திரித்த வாளுகு கடாவின்" (புறநா. 371 : 17).

*[அதரி + திரி.]*

**அதலமூலி** *adala-mūli*, பெ. (n.) *ஆடுதின்னாப் பாலை*; a plant, worm-killer, *Aristolochia bracteata*.

**அதலி** *adali*, பெ. (n.) *அதிலி* பார்க்க; see *adili*.

*[அதிலி → அதலி.]*

**அதவம்** *adavam*, பெ. (n.) *1. அத்தி*; country fig. "வெண்கோட் டதவத் தெழுகுளிறு மிதித்த வொருபழம்" (குறுந். 24). *2. நெய்த் துடுப்பு*; ladle for ghee used in sacrifice. "அதவமாய் நறுநெ யுண்டு" (கம்பரா. ஆரணிய. விராதன். 44).

*[அத → அதவு → அதவம்.]*

**அதவல்குதவல்** *adaval-kudaval*, பெ. (n.) ***தீனி செரியாது கழிந்த சாணி***; loose dung of cattle. ''சாணி அதவல்குதவலாகப் போடும்'' (பெரியமாட். *104*).

**அதவு** *adavu*, பெ. (n.) ***அத்தி***; country fig. ''அதவுதி ரரிசி யன்ன'' (கல்லா. *99 : 18*).

[*அத → அதவு.*]

**அதவு-தல்** *adavu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1*. ***எதிர்த்து நெருக்குதல்***; to attack. ''அதவிப் போர் யானை யொசித்து'' (திவ். இயற். *2 : 89*). *2*. ***கொல்லுதல்***; to kill. ''முதலை மடுவினி லதவிய புயலென'' (திருப்பு. *282*).

**அதவுநெய்** *adavu-ney*, பெ. (n.) ***அத்திப் பிசின்***; the gum of the fig tree (*சா.அக.*).

**அதழ்** *adal*, பெ. (n.) ***பூவிதழ்***; petal. ''ஞெகிழதழ்க் கோடலும்'' (கலித். *101 : 4*).

[*உது → உதழ் → அதழ்.*]

**அதள்** *adal*, பெ. (n.) *1*. ***தோல்***; skin. ''அதளோன் துஞ்சுங் காப்பின்'' (பெரும்பாண். *151*). *2*. ***மரப்பட்டை***; bark. ''வேங்கை யதள்'' (தைலவ.). *3*. ***எருதின் அலைதாடி***; bull's dew-lap (*சங்.அக.*).

[*அத்து → அது → அதள் = உடம்பின்மேல் ஒட்டியிருப்பது.*]

**அதள்புனையரணம்** *adal-punai-y-aranam*, பெ. (n.) ***தோற் கைத்தளம் என்னும் கையுறை***; glove used in warfare. ''அதள்புனை யரணமும்'' (சிலப். *14 : 170*).

[*அதள் + புனை + அரணம்.*]

**அதளப்பிச்சி** *adala-p-picci*, பெ. (n.) ***செந்நிறமான சீமைப் பிச்சி, வாதுமையைப் போன்றது. பாரசீகத்திலிருந்து கொண்டுவரப்பட்டதால் பாரசீகப் பழம் எனப்படும்***; a well-known fruit of a pale-red colour allied to the almond, supposed to have been brought originally from Persia, and hence the name Persian fruit (*சா.அக.*).

**அதளமேலிச்சாரணை** *adalaméli-c-caranai*, பெ. (n.) ***சிவப்புச் சத்திச் சாரணை***; a red variety of the plant, *Boerhaavia procumbens* alias *B. repens* (*சா.அக.*).

**அதளி** *adali*, பெ. (n.) குழப்பம், ஆரவாரம் (வின்.); noise, tumult.

**ம.** அதளி

**ஒ.நோ :** ஆதாளி

**அதளை**[1] *adalai*, பெ. (n.) *1*. ***நீர்ப்பீர்க்கு***; a bitter plant, *Cucumis tuberosus*. *2*. ***பாகல்***; fig-gourd, *Momordica charantia*. *3*. ***நிலப்பீர்க்கு***; gourd plant, *Cucurbita acutangulus*. *4*. ***புளியதளை***; a variety of sour gourd of the species of *Cucurbita* (*சா.அக.*) — (*செ. அக.*) *1*. *நிலப்பீர்க்கு* (*மூ.அ.*); species of bitter luffa. *2*. ***புளியுருண்டை*** (*வின்.*); ball made of the pulp of tamarind fruit.

**அதளை**[2] *adalai*, பெ. (n.) *1*. ***பெரும்பாண்டம்***; large pot (W.). *2*. ***காவற் குடிசை***; hut for shelter of those who watch over the harvest (W.).

**அதளைவற்றல்** *adalai-varral*, பெ. (n.) ***நிலப்பீர்க்கு வற்றல்***; the preserves of *adalai* fruit (*சா.அக.*).

**அதற்றி** *adarri*, பெ. (n.) ***மாவிலங்கமரம்***; lingam tree, *Crataeva religiosa* (*Rox burghii*) (*சா.அக.*).

**அதறஞ்சி** *adarañji*, பெ. (n.) ***காட்டுமுருங்கை***; wild drum-stick tree, *Moringa conconensis* alias *Ormocarpum sennoides* (*சா.அக.*).

**அதறு-தல்** *adaru-*, 5 செ.கு.வி. (v.i.) பதறுதல் (*திசைச்.*); to be shaken by fear (Prov.) (*சங்.அக.*).

**அதனப்பற்று** *adana-p-parru*, பெ. (n.) ***அதிகப் பற்று***; debit in account, overdraft. ***உன்*** கணக்கு அதனப்பற்றா யிருக்கிறது (உ.வ.).

**அதனப்பிரசங்கி** *adana-p-pirašangi*, பெ. (n.) ***அடங்காப் பேச்சாளி***; impudent speaker.

[*அதனம்* + **Skt.** prasaṅga > **த.** *பிரசங்கம் → பிரசங்கி.*]

*அதனப்பிரசங்கி = அதனப் பொழிவாளன்.*

**அதனம்** *adanam*, பெ. (n.) ***அதிகம், மிகுதி, மிகை***; much, excess.

தெ. *அதனமு*

[*அதித்தல் = மிகுதல். அதி + அனம் – அதனம்.*]

**அதா**[1] *ada*, பெ. (n.) ***அத்தி*** (பரி.அக.); country fig.

[*அத → அதா.*]

**அதா**[2] *ada*, இடை. (int.) ***இடத்தைச் சுட்டிக் காட்டும் சேய்மைச்சுட்டு***; demons. int. meaning 'behold there!' *அதா பார் மயில்!*

**ஒ.நோ :** அதோ, அந்தா[1].

**தெ.** அதிகோ, அதுகோ.

**அதாகம்** *adāgam,* பெ. (n.) ***சிவப்புச் சிவதை;*** Indian red rhubarb or jalap, *Ipomaca turpethum* (சா.அக.).

**அதாங்கி** *adāṅgi,* பெ. (n.) ***ஒரு காட்டுமரம்*** (கா.வ.); a kind of wild tree, Nagetta, l. tr. *Gordonia obtusa,* Kāḍar usage (L.).

**அதாவது** *adāvadu,* கு.வி.எ.தொ. (adv. phr.) ***அஃது என்னவென்றால்;*** that is to say, namely. இடைக்கால மலையாளநாட்டிற் பெரு வழக்காயிருந்தது மருமக்கட்டாயம்; அதாவது, ஒருவனது சொத்தை அவனுக்குப் பின் அவனுடைய உடன்பிறந்தாளின் புதல்வர் அடையும் உரிமைமுறை.

ம. அதாயது

*[அது + ஆவது – அதாவது.]*

**அதான்று** *adāṉṟu,* இடை. (conj.) ***அதுவன்றி, அதுவல்லாமல்;*** besides, moreover.

அது + அன்று – அதுவன்று, அதன்று. இங்ஙனம் புணர்வதே இயற்கையான முறை. செய்யுளில் ஒரோவிடத்து 'அதான்று' என வருவதுபற்றி,

"அன்றுவரு காலை யாவா குதலும்
.........................................
செய்யுண் மருங்கி னுரித்தென மொழிப"
(தொல். எழுத்து. உயிர். 56)

என்று தொல்காப்பியர் நூற்பா யாத்தார்.

எதுகை நோக்கியோ இசை நிறைப்புப் பற்றியோ, செய்யுளில் எழுத்துகள், நீள்வதும் அளபெடுப்பதும் இயல்பு. அதனால், 'அதன்று' என்பது 'அதான்று' என நீட்டல் திரிபு பெற்றும், 'அதாஅன்று' என அளபெடுத்தும் வரும். 'அதான்று' என்பதே ஒரு செய்யுள் நீட்டம். 'அதாஅன்று' என் பதோ, அதன்மேலும் ஓர் அளபெடை நீட்டம். உரையாசிரியன்மார் இதை நோக்காது, மேற் கூறிய நூற்பாவிற்கு,

அதாஅன்றம்ம, இதாஅன்றம்ம, உதாஅன் றம்ம, 'அதாஅன் றென்ப வெண்பா யாப்பே' என அளபெடுத்த தொடர்களையே எடுத்துக் காட்டியுள்ளனர்.

'அதான்று' என்னும் புணர்ச்சொல்லின் ஆகாரத்தை, தொல்காப்பியர் 'அது' என்னும் நிலைச்சொல்லீற்றுத் திரிபாகக் கொண்டார். அங்ஙனமே உரையாசிரியன்மாரும் கொண்டனர்.

ஆயின், நன்னூலாரோ, அவ்வாகாரத்தை வருஞ்சொன் முதலெழுத்துத் திரிபாகக் கொண்டு,

"அதுமுன் வருமன் றான்றாந் தூக்கின்"
(நன். 180)

என நூற்பாவியற்றினார். ஆயினும், சொற் புணர்ச்சியளவில் இருவரிடையும் ஒரு வேறு பாடு மில்லை.

அதுவன்று, அதன்று என்னும் புணர்ச்சியே உலகவழக்கிற்கும் உரைநடைக்கும் ஒத்த தென்பதும், அதான்று, அதாஅன்று என்பன செய்யுட்கே யுரியன வென்பதும், 'மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியா ததனை முட்டின்றி முடித்த லென்பதனால், அதன்று இதன்று உதன்று என உகரங் கெட்டுத் தகரவொற்று நிற்றல் கொள்க' என்று நச்சினார்க்கினியரும்,

'ஆன்றேயாம் என இயல்பை விலக்கா மையின், அதுவன்று அதன்று என வருவனவுங் கொள்க' என்று நன்னூல் விரிவுரைஞர் சங்கரநமச்சிவாயப் புலவரும்,

'ஆன்றேயாமெனத் தேற்றேகாரங் கொடா மையால், அதுவன்று, அதன்று என வருவனவுங் கொள்க' என்று நன்னூல் விரிவுரைஞர் இராமானுசக்கவிராயரும்,

'ஆன்றேயா மென்னாமையால், அதன்று, அதுவன்று என நீளாமலும் வரும்' என்று நன்னூற் காண்டிகையுரைஞர் சடகோப ராமானுசாசாரியாரும் உரைத்ததினின்று தெளியப்படும்.

"உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரினிய்யாம் முற்றுமற் றொரோவழி"

என்னும் நன்னூல் 164ஆம் நூற்பா இங்குக் கவனிக்கத் தக்கது.

**அதி**[1]**-த்தல்** *adi-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* ***மிகுதல்;*** to increase, to become abundant. *2.* ***மிகையாதல்;*** to exceed, to become excessive. *3.* ***சிறத்தல்;*** to excel, to become excellent. "அதிக் கின்ற ஐவருள் நாத மொடுங்க" (திருமந். 610).

அதி > **Skt.** ati. **Sinh.** ati.

*[அதை → அதி. அதைத்தல் = வீங்குதல், பருத்தல், மிகுதல், செருக்குதல்.]*

**அதி**[2] *adi,* இடை. (pref.) ***மிகுதிப்பொருள் தரும் முன்னொட்டு;*** pref. implying intensity,

excessiveness, rarely made use of in poetry or prose. "அதிநுட்பம் யாவுள" (குறள், 636). செல்வம் மிகமிகச் செருக்கு அதிகரிக்கும் (உ.வ.).

அதி > **Skt.** adhi.

**அதி**[3] *adi*, பெ. (n.) **வலையர் குலம்**; the Valaiya caste. "கார்தலியோ டதியரையன் கனகமழை பொழிந்து" (திருவாலவா. 22 : 18).

**அதிக்கண்டம்** *adi-k-kaṇḍam*, பெ. (n.) (யாப்.) செய்யுட்சீர்; (Pros.) metrical foot. 'அதிக் கண்ட மென்றும்..........சீரை..........பகர்வர்' (யாப். வி. 22, மேற். பக். 97).

**அதிக்கம்** *adikkam*, பெ. (n.) **மேன்மை**; excellence. "அதிக்க மன்னவர் முகம்" (இரகு. கடிமண. 40).

*[அதி → அதிக்கம்.]*

**அதிக்குதி** *adi-k-kudi*, பெ. (n.) **வெற்றியினால் அல்லது உயர்நிலையால் ஏற்படும் செருக்கு நடை** (யாழ்ப்.); ostentatious conduct, because of success or superiority, as jumping up and down (J.).

**அதிகடப்பால்** *adi-kaḍa-p-pāl*, பெ. (n.) 1. **எருக்கம்பால்**; milk of the spurge, *Calotropis gigantea*. 2. **யானைப்பால்**; elephant's milk (சா.அக.).

*[அதி + கடம் + பால். அதி = மிகுந்த, கடுமையான. கடம் = 1. காடு, 2. மதம்.]*

**அதிகடம்** *adi-kaḍam*, பெ. (n.) யானை; elephant (சங். அக.).

*[அதி = மிகுந்த. கடம் = மதம். அதிகடம் = மதமிக்க யானை, யானை.]*

**அதிகண்டகம்** *adi-kaṇḍagam*, பெ. (n.) **பெருங் காஞ்சொறி**; nettle plant of the big species, *Tragia involucrata* (சா.அக.).

*[அதி + கண்டகம். அதி = மிகுந்த. கள் → கண்டு → கண்டம் → கண்டகம் = முள்.]*

**அதிகண்ணி** *adi-kaṇṇi*, பெ. (n.) 1. **முன்துடரி**; a species of *tuḍari* plant, *Rhamnus circumcissus*. 2. **பெருங்கண்ணையுடையவள்**; a woman with big eyes (சா.அக.).

**அதிகத்தி** *adigatti*, பெ. (n.) **குருக்கத்தி**; a species of fig tree.

**அதிகதை** *adi-kadai*, பெ. (n.) [1]**வெற்றுரை** (வின்.); meaningless talk, senseless expression.

*[அதி = மிகுந்த. கத்துதல் = உரக்கக் கூவுதல், உரக்கச் சொல்லுதல். கத்து → கதை. ஒ.நோ : நச்சு → நசை. கதை = பலருக்கு உரக்கச் சொல்லும் பழைய வரலாறு, வரலாற்றுக் கதை, கட்டுக்கதை.]*

இதன் விளக்கத்தைக் **கதை** என்னும் உருப் படியில் காண்க.

அதிகதை > **Skt.** ati-kathā.

**அதிகநங்கை** *adiga-naṅgai*, பெ. (n.) **சிறியா ணங்கை**; snake-root, *Polygala glabra* (சா.அக.).

**அதிகநாரி** *adiga-nāri*, பெ. (n.) **அதிகநாறி** பார்க்க; see *adiga-nāṟi*.

**அதிகநாலம்** *adiga-nālam*, பெ. (n.) **கொடிவேலி**; Ceylon leadwort. **அதிகநாறி** பார்க்க; see *adiga-nāṟi*.

**அதிகநாலினி** *adiga-nāliṉi*, பெ. (n.) **சிவப்புத் தட்டைப் பயறு**; a red variety of gram (சா.அக.).

**அதிகநாவி** *adiga-nāvi*, பெ. (n.) **வெண்ணாவி**; white aconite, a poisonous root.

**அதிகநாறி** *adiga-nāṟi*, பெ. (n.) (செ.அக.) கொடுவேலி (மலை.); Ceylon leadwort — (சா.அக.) 1. **கொடிவேலி**; Ceylon leadwort, *Plumbago zeylanica*. 2. **மிகுதியாக நாற்ற முடையது**; that which is excessively fetid or that which has a strong smell. 3. **பெருங்காயம்**; asafoetida. 4. **பீநாறி**; a fetid plant or tree, *Sterculia foetida*.

**மறுவ.** அதிகநாரி, அதிகநாலம், அதிகாரி, அதிபதுங்கி.

**அதிகப்படி** *adiga-p-paḍi*, பெ. (n.) **அளவிற்குமே விருக்கை**; being excessive, overmuch.

*[அதிகம் + படி (அளவு).]*

**அதிகப்படு-தல்** *adiga-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **மிகுதியாதல்**; to increase, become greater.

*[அதிகம் + படு. படுதல் = உண்டாதல்.]*

**அதிகப்பற்று** *adiga-p-paṟṟu*, பெ. (n.) **அளவிற்கு அதிகமாகப் பற்றிக்கொண்ட பொருள்**; debit in account, overdraft.

*[அதிகம் + பற்று.]*

**அதிகப்பிரசங்கம்** *adiga-p-piraśaṅgam*, பெ. (n.) *அடங்காப் பேச்சு*; impudent talk.

[*அதிகம்* + **Skt.** prasaṅga > **த.** *பிரசங்கம்= சொற்பொழிவு.*]

**அதிகப்பிரசங்கி** *adiga-p-piraśaṅgi*, பெ. (n.) 1. *வளவளத்த பேச்சாளி*; garrulous person. 2. *அடங்காப் பேச்சாளி*; impudent fellow.

[*அதிகம்* + **Skt.** prasaṅga > **த.** *பிரசங்கம்→ பிரசங்கி.*]

**அதிகப்பேச்சு** *adiga-p-pēccu*, பெ. (n.) *கோட்டி (பைத்தியம்), இசிவு (சன்னி), பக்கச்சூலை (அதிர்தாக்கம்), பேய்கோள் முதலிய நோய் களினால் அறிவுகெட்டு, உடம்பிலுள்ள கூழ்ம் பாலும்* (chyle) *அரத்தமும் சுண்டுமாறு அளவிறந்து பேசுதல்*; excessive indulgence in talking resulting in the loss of vital forces of the chyle and blood in the system, as in lunacy, delirium, apoplexy, devilry, etc. (சா.அக.).

[*அதிகம் + பேச்சு. பேசு → பேச்சு.*]

**அதிகம்**[1] *adigam*, பெ. (n.) 1. *மிகுதி* (திவா.); much abundance, excess, surplus. 'அதிக ஆசை அதிக நட்டம்', 'அதிகக் கரிசனமானா லும் ஆமுடையானை அப்பா என்றழைக் கிறதா?' (பழ.). 2. *ஒன்றினொன்று மிகுதி*; one being in excess of another. "போகந் துய்ப்ப ரொன்றற்கொன் றதிகமாக" (சூத. முத்தி. 2 : 26). 3. *மேன்மை*; excellence. "அதிகமாயின திருப்பணி" (பெரியபு. ஏயர்கோ. 7). 4. *யாவற்றுள்ளும் உயர்வு*; pre-eminence. "எவ்வகைய வுலகத்துந் தரும தல மதிகம்" (திருவிளை. தலவிசே. 3). 5. *சேனை*; army (சங்.அக.). 6. *தாங்குவதினும் தாங்கப்படுவதைப் பெரிதாகக் காட்டும் ஓர் அணி*; a figure of speech in which, that which is supported is shown to be larger than the support. "உலக முழுதடங்கு மாவிசும்பி லுன் றனலகில் குணமடங்கா வாம்" (விசாகப். அணியி. 41). 7. *ஊதியம்* (வின்.); gain, profit. 8. *பொலிவு* (திவா.); brightness, blooming complexion.

**ம.** அதிகம்; **க., து., கொங்.** அதிக; **தெ.** அதிகமு; **Pali** atiga.

[*அதி + இகம் (ஈறு) – அதிகம்.*]

**அதிகம்**[2] *adigam*, பெ. (n.) *குருக்கத்தி* (மலை.); common delight-of-the-woods (செ.அக.).

**அதிகமரிச்சம்** *adigamariccam*, பெ. (n.) *வாலுளுவை யரிசி* (சு.வை.ர. 558); seeds of climbing-staff plant.

ஒ.நோ: அதிபறிச்சம்

**அதிகமாதம்** *adiga-mādam*, பெ. (n.) *மூவாண்டிற் கொருமுறை அதிகப்பட்டு வரும் மாதம்* (விதான. குணா. 81, உரை); intercalated month occurring once in three years.

[*அதிகம் + மாதம்.*]

**அதிகமாலி** *adiga-māli*, பெ. (n.) *குருக்கத்தி*; tripterocarp creeper, *Hiptage madablota* (சா.அக.).

**அதிகமான்**[1] *adigamāṉ*, பெ. (n.) *கி.பி. 2ஆம் நூற்றாண்டில், இற்றைத் தருமபுரியான தகடூரைத் தலைநகராகக் கொண்டு, கொங்கு நாட்டின் ஒரு பகுதியையாண்ட சேரர்குடிச் சிற்றரசன், கடையெழு வள்ளல்களுள் ஒருவன்*; a liberal chief of the *Cēra* family, who reigned over a part of the *Koṅgu* country in the 2nd century A.D. with *Tagaḍūr*, modern Dharmapuri, as his capital. 'அது **சேரமான்** செல் வுழித் தகடூரிடை **அதிகமான்** இருந்ததாம்' (தொல். பொருள். புறத். 7, நச். உரை).

[*அதிகம் → அதிகன் = மேம்பட்டவன். மகன் → மான். அதிகன் + மான் (ஆ. பா. ஈறு) – அதிகமான்.*]

**அதிகமான்**[2] *adigamāṉ*, பெ. (n.) *கள்ளர்குலப் பட்டப்பெயர்களுள் ஒன்று* (கள்ளர் சரித். பக். 145); a caste title of Kaḷḷars.

ஒருசார் கள்ளர், **அதிகமான்** வழிவந்த பிற் காலச் சிற்றரசருள் ஒருவனுடைய படை மறவரா யிருந்திருக்கலாம்.

**அதிகமானஞ்சி** *adigamāṉ-añji*, பெ. (n.) *அதிய மான் நெடுமானஞ்சி* பார்க்க; see *adiyamāṉ-neḍumāṉ-añji.*

**அதிகர்** *adigar*, பெ. (n.) 1. *பெரியோர்*; great men, wise men, saints. "அதிகருக் கமுத மேந்தல்" (சூடா. 12 : 99). 2. *அதிகமான் குடியினர்*; name of the line of *Adigamāṉ*, a branch of the *Cēras*.

[*அதிகம் → அதிகன் → அதிகர் (ப.பா.).*]

**அதிகரம்** *adigaram*, பெ. (n.) *காட்டுமல்லிகை* (வின்.); wild jasmine, *Jasminum angustifolium* (சா.அக.).

**அதிகரி-த்தல்** *adigari-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **மிகுதல், அதிகப்படுதல்**; to increase, enlarge. "அதிகரித்த குந்தனை" (தைலவ. தைல. 13). 2. **வளர்ச்சியடைதல்**; to grow, develop, make progress. 3. **வினையில் முனைதல்**; to be diligently engaged in. 'ஐவர்க்கும் பரதந்த்ர னாய்க் கொண்டு தூதக்ருத்யத்திலே அதி கரித்து' (திவ். பெரியாழ். 1.8:3, வியா.). 4. **நூற் பெரும்பிரிவாதல்**; to be the subject or topic forming the major section of a literary work. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்றாற் போல்வன. 5. **அதிகாரத்தொடு பொருந்தவருதல்**; to fit in with the theme of a chapter or major section of a literary work. 'அதிகாரமாவது: எடுத்துக் கொண்ட அதிகாரம் இதுவாதலின், இச் சூத்திரத்து அதிகரித்த பொருள் இதுவென அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்க வேண்டுழி உரைத்தல்' (நன். 21, சங்கரநமச். உரை). 6. **உரிமைபூண்டு கொண்டாடல்**; to cherish, as a right. 'மறைமொழிகளை யதிகரிக்கும் பிராமணர்' (சிவதரு. பாயி. 9, உரை). 7. **உரிமைபூண்டு கற்றல்**; to learn a best-suited art or study an appropriate literary work. "அவைநீ அதிகரித்தற் குரியை" (அரிசமய. பராங்குச. 78). 8. **அதிகாரஞ் செலுத்துதல்**; to exercise authority; 'அதி காரம்-அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்துழி யிருந்து தன்நிலம் முழுவதும் தன்னாணையின் நடப்பச் செய்வது'......(நன். எழுத்து. முன் னுரை, சிவஞான. விருத்.). 9. **தலைமைப் பட்டு நிற்றல்**; to be supreme.

ம. அதிகரிக்குக; க. அதிகரிசு.

[*கடுத்தல் = மிகுதல், கடுமையாதல், விரைதல், நோதல், உறைத்தல், சினத்தல், புளித்தல், உவர்த்தல் முதலியன. இப் பொருள்களுள் முதலதே ஏனையவற்றிற்கெல்லாம் அடிப்படை. உப்புக்கடுத்தல் என்பது உப்புச்சுவை மிகுதலே. இங்ஙனமே பிறவும்.*

*கடு → கடி → கரி.*

*கடி = மிகுதி, விரைவு, கரிப்பு (உறைப்பு). கரித்தல் = மிகுதல், உறுத்துதல், உறைத்தல். உப்புக்கடுத்தல் = உப்புக்கரித்தல்.*

*கரி → காரம் = மிகுதி, கடுமை, உறைப்பு, சினம், வலிமை, பயன்படுத்துரிமை, ஆளு மதிகாரம். கரி — அதிகரி (மீமிசைச்சொல்). அதிகரித்தல் = மிகப்பெருகுதல்.*

*காரம் → காரன் = உரியவன், உடையவன், ஆள்பவன். காரன் (ஆ.பா. ஈறு) — காரி (பெ.பா.ஈறு). காரி = உரியவள், உடையவள்.*]

ஆட்டுக்காரன், கடைக்காரன், சொந்தக் காரன், தோட்டக்காரன், நிலத்துக்காரன், பணக்காரன், மாட்டுக்காரன், வண்டிக் காரன், வீட்டுக்காரன், பிள்ளைக்காரி, பூக் காரி, தயிர்க்காரி முதலிய நூற்றுக்கணக்கான காரன் - காரி யீற்றுப் பெயர்கள் உரியவரை அல்லது உடையவரையே குறித்தல் காண்க.

கொள்ளைக்காரன், நாட்டாண்மைக் காரன், வேலைக்காரன் முதலிய பெயர்கட் கும், அவ்வத் தொழிலை யுடையவர் என்பதே முதற்பொருள்; அவற்றைச் செய்பவர் என் பது பொருந்திவரும் வழிப்பொருளே.

குதிரைக்காரன், கோழிக்காரன், முட்டைக் காரன், பிள்ளைக்காரி முதலிய பெயர்கள், செய்பவர் என்னும் பொருட்கு இம்மியும் பொருந்தாமையுங் கண்டு உண்மை தெளிக.

ஆகவே 'காரன்' என்னும் பெயருக்கு அல்லது ஈற்றிற்கு அதிகாரன், உரியவன், உடையவன் என்பனவே பொருளாம். ஆத லால், மிகுதலைக் குறிக்கும் 'கரி' என்னும் தென்சொல்லே அதன் முதனிலையாகும். செய்தலைக் குறிக்கும் 'கரு' என்னும் வழக் கிறந்த தென்சொல்லையோ, 'க்ரு' என்னும் அதன் திரிபான வடசொல்லையோ, முத னிலையாகக் கொள்வது பொருந்தாது. செய்தற் பொருளை அடிப்படையாகக் கொண்ட கருமம், கருவி, கரணம் முதலிய சொற்களும், மிகுதற் பொருளை அடிப்படை யாகக் கொண்ட காரன், அதிகாரன் முதலிய சொற்களும் வெவ்வேறு மூலத்தின என்றறி தல் வேண்டும்.

**அதிகல்** *adigal*, பெ. (n.) **காட்டுமல்லிகை** (வின்.); wild jasmine.

**ஒ.நோ:** அதிரல்

**அதிகவணி** *adiga-v-aṇi*, பெ. (n.) **அதிகம்**[1], 6 பார்க்க; see *adigam*[1], 6.

**அதிகவாரம்** *adiga-vāram*, பெ. (n.) **பிராமணர் முதலிய சிறப்புரிமையாளர்க்கு விளையுளில் (மாசூலில்) பிரித்துக் கொடுக்கும் அதிகப் பங்கு**; an extra share assigned to Brāhmins or other privileged persons in the distribution of the farm yield (W.G.).

[*அதிகம் + வாரம்.*]

**அதிகவுச்சம்** *adiga-v-uccam*, பெ. (n.) ***கோள்களின் மிகுந்த வுச்சநிலை***; highly elevated position of planets.

"அதிகவுச்சந் தனையுரைக்கிற்
கதிரவ னுக்குத்தா
னானமே டந்தனிலே
பாகையொரு பத்தாம்
மதிதனக்கே ரிடபத்திற்
றான்மூன்று பாகை
வருஞ்சேய்க்கு மகரத்தி
லிருபத்தெட் டாகுந்
துதிபுதற்குக் கன்னியினிற்
பதினைந்து பாகை
சொற்குருவுக் கேகடகந்
தனிலைந்து பாகை
புதியபுதற் கேமீனி
லிருபத்தேழ் பாகை
புகழ்ச்சனிக்குக் கோலிலிரு
பதுபாகை யென்பார்"
(சாதக சிந். 129).

*[அதிகம் + உச்சம்.]*

**அதிகழிச்சல்** *adi-kaliccal*, பெ. (n.) *1.* ***மிகுதியாகக் கழிச்சலாதல்***; excessive purgation, *Hypercatharsis.* *2.* ***அதிக அரத்தப்போக்கு***; excessive bleeding. *3.* ***வயிற்றோட்டம்***; diarrh(o)ea. *4.* ***வயிற்றளைச்சல் (சீதபேதி)***; dysentery (சா.அக.).

*[அதி + கழிச்சல்.]*

**அதிகற்றாதி** *adikarrādi*, பெ. (n.) ***கொடுவேலி*** (மலை.); Ceylon leadwort, *Plumbago zeylanica.*

**அதிகன்** *adigan*, பெ. (n.) *1.* ***கடையெழு வள்ளல்களு ளொருவனான அதிகமான்***; *Adigamān*, a liberal chieftain of the 2nd century A.D. "அரவக் கடற்றானை யதிகனும்" (சிறுபாண். 103). *2.* ***மேம்பட்டவன்***; superior person. "பகைஞர்க் கெல்லா மதிகனாய்" (பிரபோத. 26 : 110). *3.* ***பரம்பொருள்***; Supreme Being. "அதிகன் வேணியி லார்தரு கங்கையை" (கந்தபு. உற்பத்தி. திருக்கயி. 20).

**அதிகாந்தம்** *adi-kāndam*, பெ. (n.) *1.* ***ஒரு விலையுயர்ந்த ஒளிக்கல்*** (வின்.); a precious stone *2.* ***செவ்வானம்*** (சிந்தா. நி. 137); flame-red sky at sunset. *3.* ***பேரழகு***; great beauty.

*[காந்துதல் = எரிதல், ஒளிர்தல். காந்து → காந்தம். அதிகாந்தம் = மிகுந்த வொளியுள்ளது.]*

**அதிகாந்தி** *adi-kāndi*, பெ. (n.) ***குருக்கத்தி***; tripterocarp creeper, *Hiptage madablota* (சா.அக.).

**அதிகாரக்கணக்கு** *adigāra-k-kaṇakku*, பெ. (n.) ***அரசியல் வருமானக் கணக்கு*** (யாழ்ப்.); accounts relating to State revenue (J.).

*[அதிகாரம் + கணக்கு.]*

**அதிகாரச்சாலை** *adigāra-c-cālai*, பெ. (n.) *1.* ***அலுவலகம்***; office (R.). *2.* ***வழக்குமன்றம்***; court (R.).

ம. அதிகார மண்டபம்; தெ. அதிகரணமு.

*[அதிகாரம் + சாலை.]*

**அதிகாரசிவன்** *adigāra-šivan*, பெ. (n.) (சிவ.) ***சிவன் செயல்வலிமை மிக்குத் தோன்றும் பெருவுடையார் (மகேசுரன்) நிலை;*** (Šaiva.); The Mahēsvara aspect of Šiva in which the Energy of action predominates.

*[அதிகாரம் + சிவன்.]*

**அதிகாரஞ்செலுத்து-தல்** *adigārañ-celuttu-*, 5 செ.கு.வி. (v.i.) ***ஆட்சி நடாத்துதல், தன் கட்டளையை நிறைவேற்றுவித்தல்***; to exercise authority.

*[அதிகாரம் + செலுத்து.]*

**அதிகாரநூற்பா (சூத்திரம்)** *adigāra-nūrpa*, பெ. (n.) ***தான் ஒன்றையும் சிறப்பாக நெறியிடாது (விதித்திடாது) ஓர் இலக்கணச் செய்தியைப் பொதுப்படக் குறித்துப் பல நூற்பாக்கட்குமுன் படிக்கப்பட்டு, அவற்றுக்குப் பொருள் கொள்ளும்போது, அவற்றுடன் சேர்ந்து பொருள் கொள்ளப்படும் நூற்பா***; a *nūrpā* (*šūtra*) defining the scope of the other *nūrpās* in a section of a treatise.

எ-டு :

"அவற்றுவழி மருங்கின் சாரியை வருமே"
(தொல். எழுத்து. புண. 16),

"அவைதாம்
இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்படப் பிறவும்
அன்ன என்ப சாரியை மொழியே"
(தொல். எழுத்து. புண. 17),

"அவற்றுள்
இன்னின் இகர மாவின் இறுதி
முன்னர்க் கெடுதல் உரித்து மாகும்"
(தொல். எழுத்து. புண. 18).

*[அதிகாரம் + நூற்பா.]*

**அதிகாரப்புறனடை** *adigāra-p-puṟaṉ-aḍai*, பெ. (n.) ***ஒரு நூலின் அதிகார விறுதியில், முற்கூறாதவற்றையெல்லாம் கூறியவற்றைக் கொண்டு முடித்துக்கொள்ளுமாறு கூறும் பொது நூற்பா***; general permissive rule at the end of a chapter, sanctioning grammatical forms, not specifically dealt with earlier.

"பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன
சூத்திரம்"
(நன். 20).

(இ-ள்.) 'பிண்டமெனவும் தொகையெனவும் வகையெனவும் குறியெனவும் செய்கை யெனவும், இவற்றை அலைவறக்கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடையெனவும் கூறுங் கூற்றினை யுடைய வாம், மேற்கூறிய சூத்திரங்கள்' (நன். 20, சங்கரநமச். உரை).

எ-டு :

**தொல். எழுத்ததிகாரப் புறனடை நூற்பா**

"கிளந்த வல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத்
தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தன
ரொழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்"
(தொல். எழுத்து. குற்றிய. 77).

*[அதிகாரம் + புறன் + அடை.]*

**அதிகாரப்பேறு** *adigāra-p-pēṟu*, பெ. (n.) *பழைய வரிவகை* (S.I.I. iv, 125); an ancient tax.

*[அதிகாரம் + பேறு.]*

**அதிகாரப்பொன்** *adigāra-p-poṉ*, பெ. (n.) ***பொற்காசாக வாங்கப்பட்ட பழைய வரிவகை*** (S.I.I. iv, 195); a kind of ancient tax, in gold.

*[அதிகாரம் + பொன்.]*

**அதிகாரம்**[1] *adigāram*, பெ. (n.) 1. ***அதிகரித்தல்***; the act of increasing, enlargement. 'எழுத்ததிகார மென்பதற்கு எழுத்து அதிகரித் தல் எனப் பொருள் கூறுவாரும் உண்டு' (நன். எழுத்து. முன்னுரை, இராமா. விருத்.). 2. ***உடைமை, உடையனாந் தன்மை***; possession, ownership. இவனே இந்த வீட்டின் அதிகார முடையவன் (உ.வ.). 3. ***உரிமை***; right of possession or enjoyment. 'அதிகார மென்ற பொருண்மை.........கிழமையெனவும் கொள்ளப்படும்' (தொல். பொருள். மர. 110, பேரா. உரை). 4. ***ஆட்சி***; rule, dominion, sovereignty. 'அதிகாரத்தைத் தன்மாட்டு வைத்து மன்னவன் வறிதே யிருப்ப' (சி. போ. பா. 6 : 2, பக். 376). 5. ***பதவி வலிமை, அலுவலாற்றல்***; public office, power, authority. அவருக்குப் பணியாளரை அமர்த்தவுந் தள்ளவும் அதிகாரமுண்டு. அழுத பிள்ளையும் வாய் மூடும் அதிகாரம் (உ.வ.). 'அதிகாரம் இல்லாவிட்டால் பரியாரம் வேண்டும்' (பழ.). 6. ***தலைமை***; headship, leadership. 7. ***நூற் பெரும்பிரிவு***; main division of a treatise. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதி காரம். 'எழுத்தை நுதலிவரும் பல ஓத்தினது தொகுதி எழுத்ததிகாரம் என்றாராயிற்று' (நன். எழுத்து. முன்னுரை, சிவஞான. விருத்.). 8. ***நூல்*** (பிங்.); a scientific work, a grammatical treatise. 9. ***முறைமை***; order, regulation. 'அதிகார மென்ற பொருண்மை யென்னை யெனின், முறைமையெனவும்........கொள்ளப் படும்' (தொல். பொருள். மர. 110, பேரா. உரை). 10. ***தகுதி***; fitness, worthiness, eligibility. "அனையவ னதிகாரந் தெரிந்து" (வேதா. சூ. 19). 11. ***அமையம் (சந்தர்ப்பம்)***; context. 'பொருளென்பது அதிகாரத்தான் வருவித்து, அளவென்பது பின்னுங் கூட்டி யுரைக்கப்பட்டன' (குறள், 478, பரிமே. உரை). 12. ***கூற்றம், நாட்டுப் பிரிவு (தாலுக் காவின் உட்பகுதி)*** (நாஞ்.); administrative sub-division of a taluk (Nāñ.). 13. ***இடம்***; place. 'அதிகாரமென்ற பொருண்மை........ இடமெனவும்........கொள்ளப்படும்' (தொல். பொருள். மர. 110, பேரா. உரை). 14. (சிவ.) ***மூன்றவத்தைகளுள் ஒன்றான செயல் மிக்குத் தோன்றுங் கடவுள் நிலை*** (சி. போ. பா. 2 : 2, பக். 163); (Śaiva.) aspect of God in which action is seen predominant, one of three *avattai*.

ம. அதிகாரம்; க., து., பட. அதிகார; தெ. அதிகாரமு; கொங். அதிகார்.

*[அதி = மிகுந்த, பெருத்த. கரித்தல் = மிகுதல். கரி → காரம் = மிகுதி, கடுமை, வலிமை. அதிகாரம் = மிகுதி, வலிமை, ஆட்சி.]*

**அதிகாரம்**[2] *adigāram*, பெ. (n.) ***பணியாரவகை*** (நாஞ்.); a kind of sweet cake (Nāñ.).

**அதிகாரமலம்** *adigāra-malam*, பெ. (n.) (சிவ.) ***உலகத்து அதிகாரத்தை விரும்பும் ஆதன்***

**(ஆன்ம) நாட்டம்** (சி. போ. பா. *2 : 2*, பக். *164*); (Śaiva.) inclination of the soul to enjoy worldly power.

*[அதிகாரம் + மலம்.]*

**அதிகாரமுறை** *adigāra-muṟai,* பெ. (n.) ***நூற் பிரிவின் முறைவைப்பு***; logical order of subjects in a book.

'அதிகார முறைமை என்பது, முன்னின்ற சூத்திரப் பொருண்மை பின்வருஞ் சூத்திரத் திற்கும் பெறற்பாலன பெறவைத்தல்; அவை :

''இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத் தல்'' (தொல். சொல். கிளவி. *19*) என்றவழி இற்றெனக் கிளத்த லுரிமை பூண்டதன்றே. அதனை, ''செயற்கைப் பொருளை யாக்க மொடு கூறல்'' (தொல். சொல். கிளவி. *20*) என்புழியுங் கொள்ள வைத்தலும்; ''குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்'' (தொல். எழுத்து. மொழி. *1*) என்பதனை, ''குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே'' (தொல். எழுத்து. மொழி. *3*) நிற்றல் வேண்டும் என்று கொள்ளவைத் தலும் போல்வன.

இனி, வழக்கியலும் வழக்கியலாற் செய்யப் பட்ட செய்யுளியலும்பற்றி எழுந்த இலக் கணம் இயற்றமிழெனப்படும். அச் செய்யு ளின்றி அமையாத இசையிலக்கணம் இசைத் தமிழெனப் பெயரெய்தி அவ் வியற்றமிழ்ப் பின்னர் வைக்கப்பட்டதெனப்படும்; இவ் விரண்டன்வழி நிகழ்த்துங் கூத்திலக்கணங் கூறிய நாடகத்தமிழ் அவற்றுப் பின்னர்த்தா மென முறைமை கூறுதலும்; இனி இயற்றமி ழுள்ளும் எழுத்ததிகாரத்தோடு சொல்லதி காரத்திற்கும், சொல்லதிகாரத்தோடு பொருளதிகாரத்திற்கும் இயைபு கூறுதலும்; அதிகாரத்துள் ஒத்துப் பலவாகலின் அவை ஒன்றன்பின் ஒன்று வைத்தற்கு இயைபு கூறுதலும்; அவ்வாறே சூத்திரத்திற்கு இயைபு கூறுதலுமெல்லாம் அதிகாரமுறைமைக்கு இன மென்று சேர்த்தியுணரப்படும்' (தொல். பொருள். மர. *110*, பேரா. உரை).

*[அதிகாரம் + முறை.]*

**அதிகாரமேலெழுத்து** *adigāra-mēleḻuttu,* பெ. (n.) ***கீழலுவலர் பிறப்பித்த கட்டளையை மாற்றியெழுதும் ஆணை***; revisional order. 'திருச்சிவிந்திரத்து மஹாஸபையோம் அதி கார மேலெழுத்து' (T.A.S. iii, 71).

*[அதிகாரம் + மேலெழுத்து.]*

**அதிகாரவுரை** *adigāra-v-urai,* பெ. (n.) ***ஒரு நூற் பாவிற்கு அதிகாரத்தோடு அல்லது நூற்பிரி வோடு பொருந்த ஓரிரு சொல்லை வருவித் துரைக்கும் உரை, நூலுரை பதினான்கனுள் ஒன்று***; supplying of an ellipsis to complete the sense of a rule or passage according to the context, one of the 14 requisites of a commentary. 'அதிகாரத்தால் வருவிக்கப்பட்டதென அதிகாரத்தொடு பொருந்தக் காட்டி யெழுது முறை அதிகாரவுரை' (நன். *21*, இராமா. விருத்.).

*[அதிகாரம் + உரை.]*

**அதிகாரவோலை (பத்திரம்)** *adigāra-v-ōlai,* பெ. (n.) ***ஒருவன் தனக்குத் தலைமாறாக (பதி லாக) வினையாற்றவோ வழக்காடவோ இன்னொருவனுக்கு எழுதிக்கொடுக்கும் ஓலை***; letter of authority, power of attorney by which a person appoints another to act for him in business or legal matters.

*[அதிகாரம் + ஓலை.]*

**அதிகாரன்** *adigāraṉ,* பெ. (n.) 1. *அதிகாரி*; officer, superintending official, a person of authority. 'வரிகளைச் சுமத்தி அநியாயஞ் செய்த பூர்விக அதிகாரர்கள் சதிகாரர்களே' (பெண்மதிமாலை, பக். *136*). 2. **அதிகார சிவன்** பார்க்க; see *adigāra-śivaṉ.*

ம. அதிகாரர்

**அதிகாரி**[1] *adigāri,* பெ. (n.) 1. ***கேள்வித் தலை வர் (விசாரணைக் கர்த்தா)*** (வெட்.); executive or superintending officer (Insc.). 'அதிகாரி யுடனே எதிர்பண்ணலாமா?', 'அதிகாரியும் தலையாரியும் ஒன்றானால் விடியுமட்டும் திருடலாம்', 'அதிகாரி வீட்டில் திருடித் தலை யாரி வீட்டில் வைத்ததுபோல', 'அதிகாரி வீட்டுக் கோழிமுட்டை குடியானவன் வீட்டு அம்மியை யுடைத்ததாம்' (பழ.). 2. ***அரசியல் அலுவலர்***; government officer or official. 3. ***மேலதிகாரி***; superior, higher authority over one. நீ எனக்கு அதிகாரியா? 4. ***ஓர் அதி காரத்தின் தலைமை யலுவலன்*** (நாஞ்.); officer in charge of a *adigāram* (Nāñ.). 5. (சிவ.) ***பெருவுடையார் (மகேசுவரன்)*** (சி.சி. *5.1 : 65*, மறைஞா.); (Śaiva.) Mahēsvara concept of Śiva in which Energy of action stands predominant. 6. ***உரிமையுள்ளவன்***; rightful claimant, proprietor, owner, master. 7. ***ஒரு படிப்புத் துறை யில் அல்லது ஒரு நூலறிவில் தேர்ச்சிபெற்ற***

வன்; an authority on a subject or a branch of knowledge. நூலகக் கல்விக்கு அரங்கநாதன் ஓர் அதிகாரி, குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்குச் சந்திரசேகரன் ஓர் அதிகாரி, பெரியபுராணத்திற்குக் கோவைச் சுப்பிர மணிய முதலியார் ஓர் அதிகாரியாவர். 8. ஒரு நூலைக் கற்கத் தகுந்தவன்; one qualified to study a literary or scientific work. 'அந்நூல்.............கேட்டற்குரிய அதிகாரிக ளாவார் இவரென்ப தூஉம்' (நன். சிறப்புப். சிவஞான. விருத்.).

**ம., க., தெ., கொங்.** அதிகாரி; **து.** அதிகா ரச்தே.

*[அதிகாரி* > **Skt.** adhikārin.]

**அதிகாரி**[2] *adigāri*, பெ. (n.) 1. **கொடிவேலி;** Ceylon leadwort. **அதிகநாறி** பார்க்க; see *adiga-nāṟi*. 2. **(அதி+காரி) மிக்க கருமை;** jet black. 3. **கொடிய நஞ்சு;** a virulent poison. 4. **வெண்காரம்;** borax (சா.அக.).

கொடிவேலி என்பதன் மறுவடிவம் 'கொடு வேலி'.

*[அதிகாரி = மிகக் கரியது என்பது மிகப் பொருத்தம்.]*

**அதிகாலம்** *adi-kālam*, பெ. (n.) 1. **விடியற் கருக்கல்;** early dawn. "அதிகால விழிப்பின் குணத்தைக் காண்" (பதார்த்த. 1309). 2. **நெடுநேரம்;** long time (சா.அக.).

**அதிகாலை** *adi-kālai*, பெ. (n.) **அதிகாலம்** 1, பார்க்க; see *adi-kālam*, 1. 'அதிகாலை எழாத வன் வேலை அழுதாலும் தீராது' (பழ.).

**அதிகுகம்** *adikugam*, பெ. (n.) **பேராமல்லி;** single-flowered Arabian jasmine, *Jasminum sambuc* (சா.அக.).

**அதிகுணம்** *adi-kuṇam*, பெ. (n.) மிகு நற்பண்பு, **மேலான தன்மை;** good quality, virtuous character, extraordinary greatness.

**அதிகுணன்** *adi-kuṇaṉ*, பெ. (n.) 1. **மேலான குணமுள்ளவன்;** one possessing extraordinary attributes. "களிறது பிளிறிட வுரிசெய்த அதிகுணன்" (தேவா. 1.22:5). 2. கடவுள்; God, as transcending all attributes. 3. அரு கன் (திவா.); Arhat.

**அதிகும்பை** *adikumbai*, பெ. (n.) **கரிசலாங் கண்ணி** (மலை.); species of eclipta (செ.அக.) — **பொற்றலைக் கையாந்தகரை;** Marigold verbisena, *Wedelia calundulacea* (சா.அக.).

**அதிகை** *adigai*, பெ. (n.) 1. **அதிகமானது;** that which is much or in excess. 'பலாதிகை யானால்' (பௌட். மாயா. 55, உரை) (சங்.அக.). 2. **(நடுநாடென்னும்) தென்னார்க் காடு மாவட்டத்திலுள்ளதும், சிவபெருமான் முப்புரத்தை யெரித்ததாகச் சொல்லப்படுவது மான ஒரு சிவநகர், எண் மறத்தாவுகளுள் ஒன்று;** Šiva shrine in South Arcot district where Šiva is believed to have reduced to ashes the *Tiripuram*, one of *Aṭṭa Virattam*.

**அதிகோரம்** *adigōram*, பெ. (n.) **நெல்லி** (T.C.M. ii, 2:429); *Emblic myrobalan*.

**அதிகோலம்** *adi-kōlam*, பெ. (n.) 1. **மிக்கவழகு;** excessive beauty (சா.அக.). 2. **அழிஞ்சில்** (மூ.அ.); sage-leaved alangium, *Alangium lamarckii*.

**அதிகோவம்** *adi-kōvam*, பெ. (n.) **அதிகோலம்** பார்க்க; see *adi-kōlam*.

**அதிகோவிகம்** *adikōvigam*, பெ. (n.) **செந் தோட்டி;** climbing nettle, *Tragia involucrata* (சா.அக.).

**அதிங்கம்** *adiṅgam*, பெ. (n.) 1. **அதிமதுரம்;** liquorice plant. "அதிங்கத்தின் கவளங் கொண்டால்" (சீவக. 750). 2. **குன்றி** (L.); crab's-eye.

*[அதிங்கு → அதிங்கம்.]*

**அதிங்கு** பார்க்க; see *adiṅgu*.

**அதிங்கன்** *adiṅgaṉ*, பெ. (n.) **அதிங்கம்** பார்க்க; see *adiṅgam*.

**அதிங்கு** *adiṅgu*, பெ. (n.) **அதிமதுரம்;** liquorice plant. "அரக்கு மதிங்கும்" (பெருங். இலா வாண. 18:46).

**மறுவ.** அதிங்கை, அதிங்கம், அதிங்கன்.

**அதிங்கை** *adiṅgai*, பெ. (n.) **அதிங்கம்** பார்க்க; see *adiṅgam*.

**அதிசுட்கம்** *adi-šuṭkam*, பெ. (n.) **வயிற்றுத் தீயின் (சமாக்கினியின்) குறைவால் நாளுக்கு நாள் உடம்பு மெலிந்து, கழுத்து வயிறு தொடை முதலிய உறுப்புகள் உலர்ந்து சூம்பித் தேவாங்கைப்போல் இளைத்த உருவத்தை அடையச் செய்யும் நோய்;** a progressive wasting disease arising from decreased appetite due to digestive disorders. It is marked by reduction of fat, loss of blood and weakening of muscles in the thighs, neck, abdomen, etc.,

and a general emaciation owing to lack of nutrition, Idiopathic muscular atrophy (சா.அக.).

**அதிசுரம்** *adi-šuram*, பெ. (n.) *கடுங்காய்ச்சல்*; high fever, *Hyperpyrexia* (சா.அக.).

**அதிசுழுத்தி** *adi-šulutti*, பெ. (n.) *மயக்கத்தோடு கூடிய தூக்கம்*; (in pathology) a sleep accompanied by giddiness or suspension of sensibility, coma.

**அதிசூரன்** *adi-šūran*, பெ. (n.) *பெருமறவன்*; great hero, one who excels in valour.

**அதிதாகம்** *adi-tāgam*, பெ. (n.) *மிகுந்த நீர் வேட்கை*; intense thirst, *Anadypsia* (சா.அக.).

க. அதிதாக

*[அதி + தாகம்.* **Skt.** dāha > **த.** *தாகம்.]*

**அதிதாரம்** *adidāram*, பெ. (n.) *இலந்தை* (மலை.); jujube tree, *Ziziphus jujuba.*

**மறுவ.** அதிநாரம்

**அதிதானம்** *adi-tānam*, பெ. (n.) *பெருங்கொடை* (சிந்தா. நி. *143*); munificence, liberal giving.

**அதிதூதன்** *adi-tūdan*, பெ. (n.) (கிறித்.) *தலைமைத் தேவதூதன்*; (Chr.) archangel.

**அதிதெய்வம்** *adi-teyvam*, பெ. (n.) *இடத்தையாளுந் தெய்வம், எழுந்தருளியிருக்குந் தெய்வம்*; presiding deity. "புரம்பொடி படுத்த புண்ணியனே யதிதெய்வம்" (சூத. எக்கி. பூ. *6 : 4*).

**அதிதேவன்** *adi-tēvan*, பெ. (n.) *1. குலதெய்வம்*; tutelary deity. *2. மேலான கடவுள்*; Supreme God.

**ம.** அதிதேவன்; **க.** அதிதேவதெ; **தெ.** அதி தேவுடு; **Pali** atideva.

**அதிநரம்** *adinaram*, பெ. (n.) *சீமை அதிமதுரம்*; sweet root, *Glycirrhiza glabra* (சா.அக.).

**அதிநாரம்** *adināram*, பெ. (n.) *இலந்தை*; Indian plum, *Ziziphus jujuba* (சா.அக.).

**அதிதாரம்** பார்க்க; see *adidāram.*

**அதிநீர்** *adi-nīr*, பெ. (n.) *1. மிக்க நீர்*; water in excess, as in cold. *2. அளவிற்கு மிஞ்சின மூத்திரம்*; excessive urination, as in diabetes (சா.அக.).

**அதிநீலம்** *adinīlam*, பெ. (n.) *இலுப்பை*; honey tree, *Bassia longifolia* alias *B. latifolia* (சா.அக.).

**அதிநுட்பம்** *adi-nutpam*, பெ. (n.) *1. மிகு நுண்மை*; microscopic minuteness. *2. விளங்காத அல்லது விடுவிக்க முடியாத நுண்ணிய சிக்கலான செய்தி*; that which is exceedingly minute, complex and difficult to understand or solve.

"மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம் யாவுள முன்னிற் பவை" (குறள், *636*).

**அதிநுண்கணிதம்** *adi-nun-kaṇidam*, பெ. (n.) *வகையீட்டு நுண்கணிதம்* (புதுவை); Differential Calculus (Poṇḍ.).

**அதிநோய்** *adinōy*, பெ. (n.) *அழிஞ்சில்* (பரி.அக.); sage-leaved alangium.

**அதிபசமி** *adipašami*, பெ. (n.) *கொன்றை* (மலை.); Indian laburnum, *Cassia fistula.*

**தெ.** அதிபசிமி

**அதிபசி** *adi-paši*, பெ. (n.) *கடும்பசி*; abnormal increase in the sensation of hunger, *Hyperorexia* (சா.அக.).

**அதிபத்தநாயனார்** *adipatta-nāyaṉār*, பெ. (n.) *அறுபத்துமூன்று சிவனடியார்களுள் ஒருவர்*; name of a canonized Saiva saint, one of 63.

**அதிபதுங்கி** *adi-paduṅgi*, பெ. (n.) *கொடுவேலி* (மூ.அ.); Ceylon leadwort, *Plumbago zeylanica.*

**அதிபம்** *adibam*, பெ. (n.) *வேம்பு* (சித்.அக.); margosa.

**அதிபலம்** *adipalam*, பெ. (n.) *1. நேர்வாளம்* (பச்.மூ.); true croton-oil plant, *Croton tigilium.* *2. மயிர்மாணிக்கம்*; morning mallow, *Sida acuta* (சா.அக.).

**அதிபலா** *adipalā*, பெ. (n.) *சிறுதுத்தி*; evening mallow, *Abutilon crispum* (சா.அக.).

**ம.** அதிம்பல

**அதிபலை** *adipalai*, பெ. (n.) *பேராமுட்டி* (தைலவ.); species of Hibiscus (செ.அக.) — fragrant sticky mallow, *Pavonia odorata* (சா.அக.).

**அதிபற்கூச்சம்** *adi-paṟ-kūccam*, பெ. (n.) *பற்கள் அதிகமாகக் கூசுதல்*; over-sensitiveness of the teeth, *Odonthemodia.*

*[அதி + பல் + கூச்சம்.]*

**அதிபறிச்சம்** *adiparịccam,* பெ. (n.) வாலுளுவை (மூ.அ.); climbing staff plant (செ.அக.) — intellect tree, *Celastrus pariculata* (சா.அக.).

**அதிபாற்சொரிவு** *adi-pāṟ-corivu,* பெ. (n.) 1. மிகுதியான பால் சுரப்பு; excessive secretion of milk, *Hyperlactation.* 2. முலைப்பால் மிகுதியாகச் சுரந்து ஒழுகுதல்; excessive secretion and flow of milk in a nursing woman, *Galactorrhea.*

[அதி + பால் + சொரிவு.]

**அதிபித்தம்** *adi-pittam,* பெ. (n.) பித்த மிகுதி; excessive secretion of bile, *Hypercholia.*

**அதிபிள்ளை** *adi-piḷḷai,* பெ. (n.) மூத்த மனைவி (கோவை); senior wife (Cm.).

[ஒருகா. **Skt.** ādi + **த.** பிள்ளை (மனைவி).]

**அதிபூதம்** *adi-pūdam,* பெ. (n.) 1. மாயைமலம்; the spiritual substratum of the material or gross objects (சா.அக.). 2. மாயை யாற்றல்; the all penetrating influence of the Supreme Spirit. 3. முதனிலை (பிரகிருதி) மாயை, அதாவது உலகத்திற்குக் கரணியமான (காரண மான) மாயை; material Maya (illusion) as the base on which this material world is created. தூவில் (அசுத்த) மாயை பார்க்க; see *tūvil-māyay.* 4. உடம்பிற்கு (சரீரத்துக்கு) வேறாயும், பொறிகட்குப் புலனாயும் (இந்திரியங்களுக்கு விடயமாயும்) இருக்கும் பொருள் (விசாரசா. 29); matter which is different from the body and perceived by the senses (சங்.அக.). 5. பரம ஆதன் (பரமாத்துமா); the Supreme or Universal Soul (சா.அக.).

**ம.** அதிபூதம்; **க.** அதிபூத.

[அதி + பூதம். பூத்தல் = தோன்றுதல். பூ→ பூது→பூதம் = ஐம்பொருட் கூறுகளுள் ஒன்றாகத் தோன்றியது.]

இதன் விளக்கத்தைப் **பூதம்** என்னும் உருப் படியிற் காண்க.

**அதிமதுக்குரு** *adi-madu-k-kuru,* பெ. (n.) நீரிழிவு நோயில் சருக்கரையினா லேற்படும் சிறுகொப் புளங்கள்; small papules occurring in diabetes due to irritation of the skin, *Symptomatic prurigo* (சா.அக.).

[அதி + மது + குரு.]

**அதிமதுக்குருதி** *adi-madu-k-kurudi,* பெ. (n.) அதிகமாகத் தித்திப்புச் சேர்ந்த அரத்தம்; excess of sugar in the blood, *Hyperglycemia* (சா.அக.).

[அதி + மது + குருதி.]

**அதிமதுரகவி** *adi-madura-kavi,* பெ. (n.) 15ஆம் நூற்றாண்டில் காளமேகப் புலவர் காலத்தி லிருந்த திருமலைராயன் அவைக்களத் தலைமைப் புலவர் (தமிழ்நாவ. 209); name of the poet laureate in the court of *Thirumalai-rāyaṉ,* contemporary of *Kāḷamēgappulavar,* 15th century.

[மத்து → மது → மதுர் → மதுரம். அதி + மதுரம் + **Skt.** kavi — அதிமதுரகவி.]

**மதுரம்** பார்க்க; see *maduram.*

**அதிமதுரப்பால்** *adi-madura-p-pāl,* பெ. (n.) அதிமதுரச் செடியின் வேரினின்று வடிக்கும் பால். இக் கடைச்சரக்கு வாயிலடக்கிக் கொள்ளின் நாவறட்சி, வாய்ப்புண், வேக் காளம் முதலியவற்றை நீக்கும்; a dry extract prepared from the decoction of the roots of honey-creeper by evaporation, used as a cure for persistent thirst or parched tongue, stomatitis or ulcers of the mouth, inflammation of the mouth, etc. (சா.அக.).

[அதிமதுரம் + பால்.]

**அதிமதுரம்**[1] *adi-maduram,* பெ. (n.) மிக இனிமையானது; that which is very sweet. "அதிமதுரக் கனியொன்று" (பெரியபு. காரைக். 25).

**ம., க.** அதிமதுர; **தெ.** அதிமதுரமு.

**அதிமதுரம்**[2] *adi-maduram,* பெ. (n.) 1. நறு மணப் பூடுவகை. "பிங்குணம் பிரச பூர வருந்ததிமதுரம்" (மச்சபு. சருவ. 8); liquorice-plant, *Glycyrrhiza glabra* (செ.அக.) — சீமை அதிமதுரம்; honey-creeper, *Glycirrhiza triphylla* (சா.அக.). 2. குன்றி (மலை.); crab's-eye (செ.அக.). 3. நாட்டு அதிமதுரம் அல்லது குன்றிவேர்; Indian liquorice root, *Abrus precatorious* (சா.அக.).

**ம.** அதிமதுரம்; **க.** அதிமதுர; **தெ.** அதி மதுரமு.

**அதிமந்தம்** *adi-mandam,* பெ. (n.) மிகுந்த கண்ணோவையும் ஒற்றைத் தலைவலியையும் உண்டாக்கும் ஒரு கண்ணோய்; a disease invariably attended with an excruciating pain

in the eye, and extending upward to one side of the head (சா.அக.).

[அதி + மந்தம். மொத்து → மொந்து → மொந்தம் → மந்தம்.]

அதிமந்தம் - முழுக்கண்ணோய் மூன்றனுள் ஒன்று. அது ஊதையதிமந்தம் (வாதாதி மந்தம்), பித்தவதிமந்தம், கோழையதிமந்தம் (சிலேட்டுமாதிமந்தம்), அரத்தவதிமந்தம் (ரக்தாதிமந்தம்), மிகையதிமந்தம் (அதாதி மந்தம்) என ஐவகைப்படும் (சீவரட். 258)—(சங்.அக.).

**அதிமந்தாரம்** *adi-mandāram*, பெ. (n.) **கண் வலித்துக் கடுத்து நீர் வடிந்து, பாவையிற் குத்தலுண்டாகிப் பார்வை நாளுக்குநாள் இருண்டுவரும் தீராக் கண்ணோய்**; a chronic incurable disease of the eye, marked by inflammation and darting pain of the cornea, watery discharge from the eyes, hazy vision and gradual loss of sight (சா.அக.).

[மந்தம் + ஆரம் (ஓர் ஈறு) — மந்தாரம்.]

**அதிமயிர்வளர்த்தி** *adi-mayir-vaḷartti*, பெ. (n.) 1. **தலைமயிர் அதிகமாக வளர்தல்**; excessive growth of hair on the scalp. 2. **உடம்பில் அதிகமாக மயிர் முளைத்தல்**; excessive growth of hair all over body, *Hypertrichiasis universalis* (சா.அக.).

**அதிமல்லி** *adimalli*, பெ. (n.) மாவிலங்கம் (மறை.அக.); a species of crataeva.

ஒ.நோ : அதிமலம் 1.

**அதிமலம்** *adi-malam*, பெ. (n.) 1. **மாவிலிங்கம்** (மூ.அ.); species of crataeva (செ.அக.) — sacred lingam tree, *Crataeva religiosa* (சா.அக.). 2. **அதிக மலந்தள்ளல்**; excessive discharge of faecal matter (சா.அக.).

**அதிமாதம்** *adi-mādam*, பெ. (n.) **அதிக மாதம்** பார்க்க; see *adiga-mādam*.

**அதிமிதி** *adi-midi*, பெ. (n.) **வீம்பாட்டம், ஒட்டோலக்க நடை** (யாழ்ப்.); acting very ostentatiously because of prosperity (J.).

**அதிமுணி** *adimuṇi*, பெ. (n.) பிறருடைய **கிணற்றிலிருந்து** நீரிறைத்துப் பயிரிடுவதற்**காகக் கிணற்றுக்காரருக்குக்** கொடுக்கும் **வாரம்**; dues payable by owners of fields to owners of wells for drawing water from the wells for irrigating their fields (R.T.).

[ஒருகா. அதிகம் + உணி.]

**அதிமுத்தகம்** *adi-muttagam*, பெ. (n.) 1. **அனிச்சை**; ring-worm root, *Rhinacanthus communis*. 2. **மஞ்சள் மந்தாரை**; mountain ebony, *Bauhinia tomentosa* (சா.அக.).

**அதிமூத்திரநீக்கி** *adi-mūttira-nikki*, பெ. (n.) **சிவப்புப் பொன்னாங்கண்ணி**; a red species of edible plant, river blatty, *Illecebrum sessile* (சா.அக.).

[அதிமூத்திரம் + நீக்கி.]

**அதிமூத்திரம்** *adi-mūttiram*, பெ. (n.) 1. **மூத்திரம் மிகுதியாகப் பெய்தல்**; excessive secretion of urine, *Hyperdiuresis*. 2. **ஒருவகை நீரிழிவு**; a kind of diabetes, *Diabetes insipidus* (சா.அக.).

[அதி + மூத்திரம்.]

**அதிமூத்திரவொழுக்கு** *adi-mūttira-v-oḻukku*, பெ. (n.) **மூத்திரம் மிகுதியாக வொழுகுதல்**; an excessive flow of urine, *Urorrhagia, urethrorrhea* (சா.அக.).

[அதி + மூத்திரம் + ஒழுக்கு.]

**அதியம்** *adiyam*, பெ. (n.) 1. **ஒரு மருந்து** (சங்.அக.); a kind of medicine. 2. **ஒருவகைச் செயற்கை நஞ்சு (அப்பிரகப் பாடாணம்)**; a kind of mineral poison prepared from mica (சா.அக.).

**அதியமான்**[1] *adiyamāṉ*, பெ. (n.) **கடையெழு வள்ளல்களு ளொருவன்**; a liberal chief of the 2nd century A.D. "அணிபூ ணணிந்த யானை யியறேர் அதியமான்" (புறநா. 101 : 4-5).

**அதியமான் நெடுமானஞ்சி** பார்க்க; see *adiyamāṉ-neḍumāṉ-añji*.

[அதிகன் → அதியன். மகன் → மான். அதியன் + மான் (ஆ.பா. ஈறு) — அதியமான்.]

**அதியமான்**[2] *adiyamāṉ*, பெ. (n.) **அதிகமான்**[2] பார்க்க; see *adigamāṉ*[2].

**அதியமான் நெடுமானஞ்சி** *adiyamāṉ-neḍumāṉ-añji*, பெ. (n.) **கடையெழு வள்ளல்களுள் ஒருவனும் ஔவையாரைச் சிறப்பாகப் போற்றினவனுமான ஒரு சிற்றரசன்**; name of an ancient chief noted for his liberality and for his

patronage of the poetess *Avvai*, one of seven *Kaḍai vaḷḷal*. 'அதியமான் நெடுமா னஞ்சியை ஔவையார் பாடியது' (புறநா. 87, கொளு).

[*அதியன் + மான் + நெடு + மான் + அஞ்சி.*]

**அதியர்** *adiyar*, பெ. (n.) **அதிகமான் குடியினர்**; name of the line of *Adigamāṉ*, a branch of the *Cēras*. "ஆர்கலி நறவி னதியர் கோமான்" (புறநா. *91 : 3*).

**அதியர்கோமான்** *adiyar-kōmāṉ*, பெ. (n.) **அதிகர்குடித் தலைவனான அதியமான் நெடுமா னஞ்சி**; *Adiyamāṉ*, a chief of a branch of the *Cēras*.

"ஆர்கலி நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி"
(புறநா. *91 : 3-4*).

[*அதியன் → அதியர் + கோமான். கோ + மகன் — கோமகன் → கோமான்.*]

**அதியரத்தம்** *adi-y-arattam*, பெ. (n.) *1.* **மிகச் சிவப்பு**; bright red. *2.* **உடம்பிலுள்ள அரத்த மிகை**; excessive blood in the body, *Hyperemia* (சா.அக.).

**ம.**, **க.** அதிரக்த.

[*அதி + அரத்தம்.*]

**அதியருவதம்** *adi-y-aruvadam*, பெ. (n.) *1.* **ஏற்கெனவே யுள்ள கழலைமேற் புறப்படும் மற்றொரு கரையாக் கழலைக் கட்டி**; an incurable tumour cropping upon another existing one, secondary tumour. *2.* **ஒரே காலத்தில் அல்லது ஒன்றன் பின் ஒன்றாக எழும்பும் பல கழலைக் கட்டிகள்**; numerous contiguous tumours cropping up simultaneously or one after another, multiple tumour (சா.அக.).

[*அதி + அருவதம்.*]

**அதியரையன்** *adi-y-araiyaṉ*, பெ. (n.) **மீன் வலைஞர் தலைவன்**; chief of fishermen. "இலங்கதி யரையனம் மன்பன்" (திருவால வா. *22 : 9*).

[*அதி + அரையன்.*]

**அதியன்** *adiyaṉ*, பெ. (n.) *1.* **மேம்பட்டவன்**; one who is pre-eminent. "திருவாவடு துறையுள் அதியனே" (தேவா. 7.70 : 4). *2.* **அதிகமான்**; *Adigamāṉ*.

**ம.** அதியன்

[*அதிகன் → அதியன்.*]

**அதியாமம்** *adiyāmam*, பெ. (n.) **அறுகம்புல்** (மூ.அ.); Cynodon grass (செ.அக.) — (சா. அக.) *1.* **அறுகம்புல்**; couch grass, *Agrostis linearis*. *2.* **முயற்புல்**; Cynodon grass, *Cynodon dectylon*.

**அதியுச்சம்** *adi-y-uccam*, பெ. (n.) (கணி.) **கோள் உச்ச வீட்டில் மிக வுச்சமான பாகையி லிருக்கை** (சோதிட. சிந். பக். 145); (Astron.) highly exalted position of a planet in the house of its exaltation.

[*அதி + உச்சம். உத்தி → உச்சி → உச்சம்.*]

**அதியுமிழ்-தல்** *adi-y-umiḻ-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **அதிகமாக வாய்நீரூறலால் அடிக்கடி துப்புதல்**; constant spitting owing to excessive flow of saliva. *2.* **இதள் (ரச) மருந்தைத் தவறாகப் பயன்படுத்தலால் அளவிற்கு மிஞ்சி வாய்நீர் ஒழுகல்**; abnormal flow of saliva due to misuse of mercury drugs, *Mercurialism* alias *Mercury ptyalism* (சா.அக.).

[*அதி + உமிழ்தல்.*]

**அதிர்-தல்** *adir-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **குலுங்குதல்**; to shake, quake, tremble, as by an earthquake, by the fall of a tree, by the rolling of chariots, by the loud report of a gun. நில மதிர்ந்தது (உ.வ.). "பெண்ணொருத்தி பேசிற் பெரும்பூமி தானதிரும்" (நீதிவெண். 31). 'அதிர அடித்தால் உதிர விளையும்', 'அதிர ஆடிக் குடியைக் கெடுத்தாள்' (பழ.). *2.* **உடம்பு நடுங்குதல்**; to be startled, as by the sound of a cannon. *3.* **உளம் நடுங்குதல்**; to be alarmed, as by reports of robbery, by the prevalence of an epidemic. "அதிர வருவதோர் நோய்" (குறள், 429). *4.* **விசையாகத் துடித்தல்**; to vibrate. *5.* **முழங்குதல்**; to resound, as thunder, to reverberate, to sound as a drum, to roar as a lion. "அதிர மாமுழவு" (திருவாலவா. *37 : 23*). *6.* **எதிரொலித்தல்**; to echo. "குரல்கேட்ட கோழி குன்றதிரக் கூவ" (பரிபா. *8 : 19*).

**ம.** அதிருக; **க.** அதிரு; **தெ.** அதரு; **து.** அதுருனி.

**அதிர்-த்தல்** *adir-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* **முழங்குதல்**; to thunder, roar, as the sea. "மதித்த வேலையவ் வேலையி னுடைந்தென வாய்விட் டதிர்த்த" (கந்தபு. தக்க. ததீசியுத். 325). *2.* **கலங்குதல்**; to be confused. "கற்றா

னதிர்ப்பிற் பொருளதிர்க்கும்'' (நான்மணிக். 21). —, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **அசைத்தல்**; to shake. 2. **நடுங்கச் செய்தல்**; to cause alarm by shouting, intimidate. ''பின்னதிர்க்குஞ் செய்வினை'' (நான்மணிக். 69). 3. **அதட்டுதல்**; to rebuke, menace. ''அரிப்பதாக னுரகப் பதாகனை யதிர்த்து'' (பாரத. பதினெட். 186). 4. **சொல்லுதல்**; to say, tell (பிங்.). 5. **அசைத்துத் தள்ளுதல்** (சங்.அக.); to shake and push away. ''அஞ்செழுத்தாலதிர்த்தெழுந்து'' (கோயிற்பு. பாயி. 9).

**அதிர்** *adir*, பெ. (n.) 1. **நடுக்கம்**; shivering. 2. **அச்சம்**; fear. 3. கடுவிலை; exorbitant demand or price.

**அதிர்காணி** *adir-kāṇi*, பெ. (n.) **காணியாட்சியுரிமை**; proprietary right in village lands. 'தனக்கு அதிர்காணியாக' (S.I.I. iv, 156).

[அதிர் + காணி.]

**அதிர்ச்சி** *adircci*, பெ. (n.) 1. **அசைவு** (சா.அக.); shaking. 2. **அதிகப்படுதல்** (சங்.அக.); increase. 3. **நடுங்குகை** (திவா.); trembling as by an earthquake, from thunder. 4. **அச்சம்**; fear. 5. **பேரோசை** (திவா.); loud noise or report. 6. **பிளிறல், உரறல்**; roaring. ''காய்சினக் களிற திர்ந்திடு மதிர்ச்சி'' (உபதேசகா. விபூதி. 118). 7. **மின்வலியால் நரம்பிற்கும், கடுந் துயரச் செய்தியால் மனத்திற்கும் ஏற்படும் திடுந்தாக்கு**; electric shock or sudden and violent emotion caused by unbearable tragic news.

க. அதிருவிகெ

[அதிர்த்தி → அதிர்ச்சி.]

**அதிர்சன்னி** *adir-šaṉṉi*, பெ. (n.) 1. **இசிவு நோயால் ஏற்படும் அதிர்ச்சி**; tremors in delirium. 2. **தாங்கமுடியா நோவு, அடி, காயம், புண் முதலியவற்றாலேற்படும் அதிர்ச்சி யிசிவு**; delirium as a result of unbearable pain, severe blow, wound, ulcer, etc., *Traumatic delirium.*

[அதிர் + சன்னி. Skt. sannipāda > த. சன்னி = இசிவு.]

**அதிர்த்தி** *adirtti*, பெ. (n.) **அதிர்ச்சிப் பேரோசை**; loud noise or report. 'அதுதான் இவன் கன்றுமறித் தோடுகிற வதிர்த்தியாலும்' (திவ். பெரியாழ். 3.2 : 3, வியா.).

[அதிர் → அதிர்த்தி.]

**அதிர்ப்பு** *adirppu*, பெ. (n.) 1. **அதிர்ச்சி, நடுக்கம்**; trembling. ''இப்படி யருஞ்சம ரிழைத்திடு மதிர்ப்பினில்'' (உபதேசகா. சூராதி. 28). 2. **எதிரொலி**; echo. ''எதிர்குதி ராகின் றதிர்ப்பு'' (பரிபா. 8 : 21).

க. அதிர்ப்பு

[அதிர் → அதிர்ப்பு.]

**அதிர்விலை** *adir-vilai*, பெ. (n.) **மன நடுங்கத் தக்க கடுவிலை**; exorbitant demand, fabulous price.

**அதிர்வு** *adirvu*, பெ. (n.) 1. **நடுக்கம்**; shaking' trembling. 2. **யாழ்நரம்பின் அதிர்ச்சி**; tremolo in a stringed instrument. ''செம்பகை யார்ப்பே யதிர்வே கூடம்'' (சிலப். 8 : 29).

க. அதிர்கெ; தெ. அதுரு.

[அதிர் → அதிர்வு.]

**அதிர்வெடி** *adir-veḍi*, பெ. (n.) **அதிர்வேட்டு** பார்க்க; see *adir-vēṭṭu.*

**அதிர்வேட்டு** *adir-vēṭṭu*, பெ. (n.) 1. **குழாய்வெடியோசை**; explosion of a rocket, usu. in temple festivals. 2. **வெடிகுழாய்** (யாழ்ப்.); rocket (J.).

தெ. அதுருவேடு

**அதிரடி** *adir-aḍi*, பெ. (n.) 1. **பெருங்கலக்கம்**; violent agitation. ''அச்சந் திகிலு மதிரடியுஞ் சொற்பனமும்'' (பஞ்ச. திருமுக. 720). 2. **மிரட்டு** (நெல்லை); bluff (Tn.). 3. **கடுவிலை**; excess, as of prices. விலை அதிரடியாயிருக்கிறது (உ.வ.). 4. **கடும்பேச்சு**; violent language.

[அதிர் + அடி.]

**அதிரடிக்காரன்** *adir-aḍi-k-kāraṉ*, பெ. (n.) **கேட்பார்க்கு அதிர்ச்சி அல்லது அச்சம் உண்டாகுமாறு உரத்த குரலிற் கடுமையாகப் பேசுபவன்**; boisterous fellow.

[அதிர் + அடி + காரன்.]

**அதிரர்** *adirar*, பெ. (n.) **அசுரர்**; Asuras. ''அதிரர் தேவ ரியக்கர்'' (தேவா. 5 . 32 : 8).

[அசுரர் → அதிரர்.]

**அதிரல்** *adiral*, பெ. (n.) 1. **நடுங்கல்**; trembling. 2. **காட்டுமல்லிகை**; wild jasmin(e). 'விரிமலர் அதிரலும்' (சிலப். 13 : 156, அரும்.).

3. புனலி (மோசிமல்லிகை); hog-creeper. ''அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்'' (முல்லைப். 51) (செ.அக.) — புனலிப்பூ; bastard rosewood climber, *Dalbergia volubilis* (சா.அக.). 4. அடித்தூறு; spreading base of a tree's trunk, stump (W.).

**அதிராகம்** *adirāgam*, பெ. (n.) கந்தகம் (மூ.அ.); sulphur.

**அதிராம்பை** *adirāmbai*, பெ. (n.) பொற்றலைக் கையாந்தகரை (மலை.); a medicinal herb (செ.அக.); eclypta with yellow flowers, *Marygold verbesina, Wedelia calendulacea* (சா.அக.).

**அதிராயம்** *adirāyam*, பெ. (n.) இறும்பூது (அதிசயம்); amazement, wonder (W.).

**அதிராவடிகள்** *adirā-v-aḍigaḷ*, பெ. (n.) மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவையின் ஆசிரியரான ஒரு சிவனடியார் (பதினொ.); name of a Šaiva saint, author of the *Mūtta Piḷḷaiyār Tirumummaṇikkōvai*.

**அதிலி** *adili*, பெ. (n.) ஒருவகை வேர்; a kind of root. 'காக்கணம் வேர், அதிலிவேர், பாலை வேர் இம் மூன்றும் அரைத்துப் பாத மேற் பூச்சுச் செய்யவும், நச்சுத் தீண்டாது' (T.C.M. ii, 2, 481) — Corr. of *alari* (செ.அக.).

**அதிவிடயம்** *adiviḍayam*, பெ. (n.) ஒரு மருந்துச் சரக்கு; a bazaar drug called Indian atees, *Aconitum heterophyllum*.



அதிவிடயம்

**அதிவியர்வை** *adi-viyarvai*, பெ. (n.) மிகுதியாக வியர்வை காணல்; excessive sweating, *Hyperephidrosis* (சா.அக.).

**அதிவீரராமபாண்டியன்** *adi-vīra-rāma-pāṇḍiyaṉ*, பெ. (n.) 16ஆம் நூற்றாண்டில் திருநெல்வேலி நாட்டை யாண்டவரும், நைடதம், காசி காண்டம் முதலிய பனுவல்களின் ஆசிரியரும், இறுதிக்காலப் பாண்டியருள் ஒருவருமான சிற்றரசர்; name of a later *Pāṇḍya* king of Thirunelvēli, author of the *Naiḍadam, Kašikāṇḍam* and other works during 16th century.

**அதிவெப்பம்** *adi-veppam*, பெ. (n.) மிக்க கொதிப்பு; high temperature, excessive heat, *Hyperthermia* (சா.அக.).

**அதிவெள்ளை** *adi-veḷḷai*, பெ. (n.) ஒரு செயற்கை நஞ்சு (பரங்கிப் பாடாணம்); sublimate of mercury (சா.அக.).

**அதிவெள்ளைச்செந்தூரம்** *adi-veḷḷai-c-cendū-ram*, பெ. (n.) அதிவெள்ளை பார்க்க; see *adi-veḷḷai*.

[அதி + வெள்ளை + செந்தூரம்.]

**அது**[1] *adu*, சு.பெ. (demons. pron.) 1. பொது வாக மெய்ம்முதற் சொல்லின்முன் ஆளப்படும் அஃறிணை யொருமைச் சேய்மைச் சுட்டுப் பெயர்; that, a demonstrative pronoun denoting a remote singular young child, animal or inanimate object, generally used before a consonant. 'அததற்கு ஒரு கவலை ஐயாவுக்கு எட்டுக் கவலை', 'அது மூன்றே முக்கால் நாழிகை வாழ்வு' (பழ.). 2. அஃறிணை யுலகைக் குறிக்கும் சுட்டுப்பெயர்; a pronoun denoting the inanimate world. ''அவனவ ளதுவெனு மவைமூ வினைமையில்'' (சி.போ. 1). 3. முற்கூறியதைக் குறிக்கும் சுட்டுப் பெயர்; a pronoun referring to something mentioned or a statement made before. நேற்று ஒருமாம்பழம் தின்றேன்; அது மிக இனிமையா யிருந்தது. இந்தியா ஆங்கிலத்தை விடமுடியா தென்று, தலைமை மந்திரினியார் இந்திரா காந்தி யம்மையார் தெரிவித்திருக்கின்றார்; அது மிக நல்ல செய்தி (உ.வ.).

ம., க., கோத., துட., பட., குட. அது; தெ. அதி; து. அவு; குரு. ஆத்; கோண்., பர்., கொலா., அத்; பிரா. ஏத்.

[அ → அல் → அது. ஒ.நோ: மெல் → மெது. இனி, ஆது → அது என்றுமாம்.]

**அது**[2] *adu*, இடை. (part.) 1. அஃறிணை யொருமை வினைமுற்றீறு; a neut. sing. ending of the finite verb. அது வந்தது (உ.வ.). 2. காலங்காட்டும் தொழிற்பெயர் ஈறுகளுள்

**ஒன்று**; a tense-showing vbl. n. ending. அவன் வந்தது எனக்குத் தெரியாது (உ.வ.). 3. **ஆறாம் வேற்றுமை யொருமை யுருபு**; a gen. ending followed by a neut. sing. ''ஆற னொருமைக் கதுவும் ஆதுவும் பன்மைக் கவ்வு முருபாம்'' (நன். 300). எனது கை, எனது பொத்தகம் (உ.வ.). 4. **முதனிலைப்பொரு ளீறுகளுள் (பகுதிப்பொருள் விகுதிகளுள்) ஒன்று**; an expletive noun suff. ''உருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலர்'' (சி.சி. 8 : 36). ''மரமது மரத்திலேறி மரமதைத் தோளில் வைத்து'' (தனிப்பா. தி. 2 : 573).

**அது இது எனல்** *adu-idu-enal*, தொ.பெ. (vbl.n.) 1. **ஏதேனும் ஒன்றுபற்றி முறையிடுதல்**; to complain about something or other. என்னிடத்தில் அது இது என்று சொல்லக் கூடாது (உ.வ.). 2. **ஏதேனும் ஒன்று கேட்டல்**; to ask something or other. என்னிடம் அது இது என்று கேட்கக்கூடாது (உ.வ.).

*[என் + அல் (தொ.பெ. ஈறு).]*

**அதுக்கம்** *adukkam*, பெ. (n.) 1. **அமுக்கம்**; reduced condition, as of a boil. 2. **ஒதுக்கம்**; stuffing into the mouth. 3. **அடிப்பு**; beating.

*[ஒடுங்கு → ஒதுங்கு → அதுங்கு → அதுக்கு. அதுக்கு + அம் – அதுக்கம்.]*

**அதுக்கு-தல்** *adukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அமுக்குதல்**; to press with the fingers, as a ripe fruit or boil. 2. **பிசைதல்**; to squeeze, pinch, as the stomach in grief. ''அவ்வயி றதுக்கும்'' (திருவிளை. வன்னியுங். 41). 3. **கடித்தல்**; to bite, as one's lips. ''நண்ணுந் துயரந்தனை நோக்கி நகையாச் சினவி யித ழதுக்கி'' (கூர்மபு. தக்கன்வே. 32). 4. **நறுக்கு தல்**; to cut into pieces, mince as vegetables. ''வீரநோய் வெகுளி தோற்றி விழுப்பற வதுக்கி யிட்டுக் காரகற் பொரிப்பர்'' (சீவக. 2771). 5. **மெல்லுதல்**; to chew. ''வாயினி லதுக்கிப் பார்த்து'' (பெரியபு. கண்ணப்ப. 118). 6. **வாயிலடக்குதல்**; to stuff into the mouth, as does a monkey. 7. **அடித்தல்**; to slap with the hand, beat with a stick. ''தாளிற மூர்க்க ரதுக்கலின்'' (சீவக. 936).

ம. அதுக்குக; க. அதகு; தெ. அதுமு; து. அலமுனி.

*[ஒடுங்கு → ஒதுங்கு → அதுங்கு (த.வி.) – அதுக்கு (பி.வி.).]*

**அதுக்கு** *adukku*, பெ. (n.) **ஏனங்களின் ஒடுக்கு**; state of being pressed in as of parts of a vessel, dent, or depression in a metal utensil.

*[அதுங்கு → அதுக்கு.]*

**அதுக்கெடு-த்தல்** *adukk(u)-edu-*, 4 செ.கு.வி. (v.i.) **ஏனங்களைத் தட்டி நெளிவெடுத்தல்**; to remove a dent, smooth out the dented surface of a metal utensil.

*[அதுங்கு → அதுக்கு + எடு.]*

**அதுகுபடி** *adugu-padi*, பெ. (n.) 1. **தரிசு நிலத்தைக் குறைந்த வரியிற் பயிரிட விடுதல்**; giving waste land to a cultivator at a low rate of assessment on condition of his cultivating it (W.G.). 2. **பயிரிடத் தகுதியாக ஒரு நிலத்தைத் திருத்தும்பொருட்டுக் குறைந்த தீர்வைக்குக் கொடுக்கப்படும் பாசன நீர்**; supplying water to a cultivator at a low rate of assessment on condition of his bringing a piece of unoccupied land into cultivation (R.T.).

தெ. அதுகுபடி

*[ஒருகா. அதுக்கு → அதுகு + படி.]*

**அதுங்கு-தல்** *adungu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அமுங்குதல்**; to be forced out or in by pressure, to be stuffed in, compressed. 2. **ஒதுங்குதல்**; to draw to one side.

*[ஒடுங்கு → ஒதுங்கு → அதுங்கு.]*

**அதும்பு-தல்** *adumbu-*, 5 செ.கு.வி. (v.i.) **மொய்த்தல்**; to swarm. ''முரல்வண் டதும்புங் கொழுந்தேன்'' (திருவாச. 6 : 36).

*[ஒல்லுதல் = பொருந்துதல், கூடுதல். ஒல் → அல் → அது → அதும்பு.]*

**அதெந்து** *adendu*, இடை. (int.) **அச்சந் தீருமாறு 'அது என்ன?' என்று அருளொடு வினவற் குறிப்பு**; 'What is that?' as a question uttered by one to dispel the fears of his dependant or to encourage him. ''ஆதியே அடியேனாதரித் தழைத்தால் அதெந்துவே யென்றருளாயே'' (திருவாச. 29 : 1).

ம. அதெந்து

*[அது + எந்து. எது → எத்து → எந்து = என்னது? இனி, என்னது (என் + அது) → என்று (என் + து) → எந்து என்றுமாம். ஒ.நோ: த. ஒன்று → க. ஒந்து.]*

ஒருவன் துன்புற்று மேலோன் துணை வேண்டி விளிக்கும்போது, அம் மேலோன் அதென்னவென்று வினவுவது இயல்பே. 'எத்தால் வாழலாம், ஒத்தால் வாழலாம்' என்னும் பழமொழியினின்று 'எது' என்னுஞ் சொல்லிற்கு 'எத்து' என்னும் வடிவுண்மை அறியப்படும். ஆதலால், 'அதெந்து' என்னுங் கூட்டுச்சொல் திசைச்சொல் என்றும், தெலுங்கச்சொல் என்றும் கொள்வது தவறாம்.

**அதே** *adē*, சு.பெ. (demons. pron.) 1. '*அது தான்*' *என்று பொருள்படும் தேற்றேகாரம் பெற்ற படர்க்கை யொன்றன்பாற் சுட்டுப் பெயர்*; a demons. pron. of the third person irr. sing. comb. with the emphatic particle 'ē', and meaning, 'It is the same'. 2. '*அதுதானா?*' *அல்லது* '*அதுவா?*' *என்று பொருள்படும் வினாவேகாரம் பெற்ற படர்க்கை யொன்றன் பாற் சுட்டுப்பெயர்*; a demons. pron. of the third person irr. sing. comb. with the interrogative particle 'ē' and meaning 'Is it the same?' or 'Is it that?' —, பெ.எ. (adj.) *அதுவேயான*, *அதையேயொத்த*; the same, the very same. அதே வண்டியில் நாங்களும் ஏறிக்கொண் டோம். அதே நிறத்தில் அவரும் சட்டை யணிந்திருந்தார். —, இடை. (part.) **ஆம்**; yes. **கூறுவோன் :** ஒற்றுமை யின்மையாலேயே மூவேந்தரும் வலிமை குன்றி ஆட்சியிழந்தனர். **கேட்போன் :** அதே.

ம., க., குட. அதே.

ஒ.நோ : அஃதே

[*அது + ஏ (தேற்ற வினா இடைச்சொல்) — அதே.*]

**அதை-த்தல்** *adai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. *வீங்குதல்*; to swell, to be puffed up. கன்னம் அதைத்திருக்கிறது. 2. *செருக்குதல்*; to grow arrogant, become proud. இவனுக்கு அதைத்துப்போயிற்று (வின்.). 3. *தாக்கி மீளுதல்*; to rebound, recoil. அதைத்து விழுந்த பந்து. 4. *அலைதல்*; to wander about. "உனை நாடி யதைத்தொழிந் தேன்" (திருமந். *1691*).

**அதைப்பு** *adaippu*, பெ. (n.) 1. *வீக்கம்*; swelling. 2. *நீர்க்கோப்பு*; dropsy, an unnatural collection of fluid in any cavity of the body. 3. *செருக்கு*; pride. 4. *தாக்கி மீளல்*; rebounding. 5. *விம்மல்*; turgescence (சா.அக.). 6. *எலும்பினெழுச்சி*; protuberance of a bone, tuberosity.

**அதோ** *adō*, இடை. (int.) *சேய்மை யிடத்தைச் சுட்டிக் கவனிக்கச்செய்தற் குறிப்பு*; behold there! 'இதோ' என்பதற்கு எதிர்; look there! opp. *idō*. "அங்கதோ வுள்கறுத் தழகிற் றேய்ந்தது" (சீவக. *2679*).

ம. அதா; க. அதோ.

[*அது → அதா → அதோ.*]

**அதோள்** *adōḷ*, கு.வி.எ. (adv.) *அங்கே, அவ் விடத்தில்*; there. 'இதனானே அதோட் கொண்டான், இதோட் கொண்டான், உதோட் கொண்டான், எதோட் கொண் டான்........என உருபு வாராது உருபின் பொருள்பட வந்தனவுங் கொள்க' (தொல். எழுத்து. புள்ளி. *103*, நச். உரை).

[*அது → அதோ → அதோல் → அதோள்.* ஒ.நோ : இந். *உதர்*; Skt. tatra; E. thither.]

**அதோளி** *adōḷi*, கு.வி.எ. (adv.) *அதோள்* பார்க்க; see *adōḷ*.

க., பட. அல்லி.

"சுட்டுமுதலாகிய விகர விறுதியும்" (தொல். எழுத்து. தொகை. *17*). 'அதோளிக் கொண் டான், இதோளிக் கொண்டான், உதோளிக் கொண்டான், எதோளிக் கொண்டான்...... எனவும் இவை மிக்கன. அதோளி அவ்விட மென்னும் பொருட்டு' (தொல். எழுத்து. தொகை. *17*, நச். உரை).

அதோள், அதோளி; இதோள், இதோளி; உதோள், உதோளி; எதோள், எதோளி என் பன இறந்துபட்ட குமரிநாட்டுச் சொற்கள்.

**அந்த**[1] *anda*, கு.பெ.எ. (adj.) *அங்குள்ள, அன்றுள்ள, முன்சொன்ன என்று பொருள் படும் சேய்மைச்சுட்டுப் பெயரெச்சம்*; that. "காலா லந்தக் கருங்கனி சிதைத்தேன்" (மணிமே. *17 : 34*) 'அந்த வெட்கக்கேட்டை ஆரோட சொல்கிறது' (பழ.).

ம. அ; க., து., பட., தெ. ஆ; துட. அமுன்.

[*ஆ → அ → அல் → அது → அத்து → அந்து → அந்த. 'அ' பெயரெச்ச ஈறு. அந்து + அ — அந்த.*]

**அந்த**[2] *anda*, இடை. (int.) *இரக்கக் குறிப்புச் சொல்*; exclamation of pity. "அந்தொக்க வரற்றவோ" (கம்பரா. யுத்த. இராவணன் சோ. *38*).

சிங். அந்தோ; Skt. hanta.

*[அத்தன் (தந்தை) → அத்தோ → அந்தோ → அந்த → **Skt.** hanta. இனி, அத்தன் → அத்த → அந்த என்றுமாம். ஒ.நோ: ஐயன் → ஐயோ, ஐயன் → ஐய.]*

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி"

என்னும் தொல்காப்பிய நூற்பா (சொல். எச். 4) உரையில் நச்சினார்க்கினியர்,

'பன்னிரு நிலமாவன: பொங்கர் நாடு, ஒளி நாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குட நாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலையமானாடு, அருவாநாடு, அருவாவடதலை எனத் தென்கீழ்பால் முத லாக வடகீழ்பா லீறாக எண்ணுக.

'இனிப் பன்னிரண்டையுஞ் சூழ்ந்த பன் னிரண்டாவன: சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும், துளு வும், குடகமும், கருநடமும், கூடமும், வடுகும், தெலுங்கும், கலிங்கமுமாம்.

'.........சிங்களம் அந்தோ வென்பது........' என்வுரைத்தார்.

தெய்வச்சிலையார்,

'பன்னிருநிலமாவன: வையை ஆற்றின்... ......(பொதுங்கர்) நாடு, ஒளிநாடு, தென் பாண்டிநாடு, கருங்குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதை (சீத)நாடு, பூழிநாடு, மலாடு, அருவாநாடு, அருவா வடதலை என்ப. இவை செந்தமிழ் நாட் டகத்த. செந்தமிழ் (சேர்ந்த) நாடென்றமை யால், பிற நாடாகல் வேண்டுமென்பார் உதாரணங் காட்டுமாறு: — "கன்னித் தென் கரைக் கடற்பழந் தீபம் கொல்லங் கூபகஞ் சிங்கள மென்னும் எல்லையின் புறத்தவும், கன்னடம் வடுகம் கலிங்கம் தெலிங்கம் கொங் கணம் துளுவம் குடகம் குன்றகம்" என்பன.'

'......அந்தோ என்பது சிங்களவர் ஐயோ என்பதற்கிட்ட பெயர்......' எனவுரைத்தார்.

நன்னூற் காண்டிகை யுரையாசிரியன்மா ராகிய சடகோபராமானுச கிருட்டிணமா சாரியன்மாரோ, 273ஆம் நூற்பாவுரையில்,

"ஐயோ என்பதை 'அந்தோ என்பது, சிங்களநாட்டுச் சொல்' என்று முன்னைய வுரையாசிரியர்கள் எழுதியிருந்தாலும், அது 'ஹந்த' என்னும் வடசொல்லின் சிதைவு என்று தெரிதலால், இங்குக் கொள்ளப்பட வில்லை" என்று உரைத்துள்ளனர்.

மேற்கூறிய நால்வரும் 'அந்தோ' என்னுஞ் சொல்மூலத்தை அறியாமையாலேயே அதைச் சிங்களச் சொல்லென்றும், வடசொல் லென்றும் பிறழக் கொண்டனர்.

இரக்கம், நோதல், அச்சம், வியப்பு முதலிய குறிப்புகளை யுணர்த்தும் தமிழ்ச்சொற்கள் பெரும்பாலும் பெற்றோர் முறைப்பெயரி னின்றே தோன்றியுள்ளன என்பது, முன்னரே அக்கை, அச்சன், அத்தன் முதலிய சொற் களின் கீழ் விளக்கப்பட்டது. ஆண்டுக் காண்க.

அந்தோ என்னும் தமிழ்ச்சொல்லே, சிங்களத்தில் இயல்பாகவும், வடமொழியில் திரிந்தும் வழங்குகின்றதென்க.

**அந்தகக்கவி விரராகவ முதலியார்** *andaka-k-kavi-vīra-rāgava-mudaliyār*, பெ. (n.) 17ஆம் நூற்றாண்டினவரும், கழுக்குன்றப் புராணமும் பிற பனுவல்களும் இயற்றியவரும், கடும்பா (ஆசுகவி) வல்லுநரும், பிறவிக் குருடருமான ஒரு தமிழப் பாவலர்; name of a blind poet, author of the *Kaḻukkuṉṟa-p-purāṇam* and other works, 17th century.

*[**Skt.** andhaka + kavi + Vīra + Rāghava + த. முதலியார்.]*

**அந்தகம்** *andagam*, பெ. (n.) **ஆமணக்கு** (மலை.); castor-plant.

**அந்தகோ** *andagō*, இடை. (int.) **இரக்கக் குறிப்புச்சொல்**; an exclamation of pity. "அந்த கோவிது வருவதே யெனக்கு" (வேதா ரணியபு. பிரமசா. 22). அந்த[2] பார்க்க; see *anda*[2].

*[அத்தன் → அத்த → அந்த → அந்தவோ → அந்தகோ. ஒ.நோ: ஐயன் → ஐய → ஐயவோ → ஐயகோ; அம்மை → அம்ம → அம்மவோ → அம்மகோ. வ → க, போலி.]*

**அந்தகோரம்** *andagōram*, பெ. (n.) **நெல்லி** (மலை.); emblic myrobalan (செ. அக.) — gooseberry tree, *Phyllanthus emblica* (சா.அக.).

**மறுவ.** அந்தகோலம், அந்தகோளம்.

**அந்தகோலம்** *andagōlam*, பெ. (n.) **அந்தகோரம்** பார்க்க; see *andagōram*.

**அந்தகோளம்** *andagōḷam*, பெ. (n.) **அந்தகோரம்** பார்க்க; see *andagōram*.

**அந்தச்சம்** *andaccam,* பெ. (n.) அந்தச்சு பார்க்க; see *andaccu.*

[அந்தச்சு → அந்தச்சம்.]

**அந்தச்சு** *andaccu,* பெ. (n.) வடிவின் சரியொப்பு; striking resemblance.

[அந்த + அச்சு – அந்தச்சு (அதே வடிவம்).]

**அந்தண்** *andaṇ,* பெ. (n.) 1. துறவியர் வகுப்பு; a class of ascetics. "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள், 30). 2. பிராமணர் குலம்; Brāhmin caste. "அந்தண்மா முதுகுரவரென் றுன்னினன்."

[அந்தணன் → அந்தண்.]

அந்தணன் பார்க்க; see *andaṇaṉ.*

**அந்தண்டை** *andaṇḍai,* பெ. (n.) கு.வி.எ. (adv.) 1. அந்தப் பக்கம்; that side. போ அந்தண்டை. 2. அப்பால், அக்கரைப்பக்கம்; beyond, the opposite side. சென்னைக்கு அந்தண்டை திருப்பதி. ஆற்றிற்கு அந்தண்டை எங்கள் புன்செய் இருக்கிறது (உ.வ.).

[அ → அந்த + அண்டை.]

**அந்தண்பாடி** *andaṇ-pāḍi,* பெ. (n.) 1. தமிழ்ப் பார்ப்பார் குடியிருப்பு (பழை.வ.); quarters where the learned Tamilians lived (Arch.). 2. பிராமணர் குடியிருக்குமிடம்; quarters where Brāhmins reside. "அந்தண் பாடியு மணுகி யல்லது" (பெருங். மகத. 4 : 33).

[அந்தணர்பாடி → அந்தண்பாடி.]

அந்தணன் பார்க்க; see *andaṇaṉ.*

**அந்தண்புலவன்** *andaṇ-pulavaṉ,* பெ. (n.) 1. கற்ற துறவி (பழை.வ.); a learned ascetic (Arch.). 2. பிராமணப் புலவன்; Brāhmin scholar. "மறையறிப வந்தண் புலவர்" (நான்மணிக். 91).

[அந்தணப்புலவன் → அந்தண்புலவன்.]

அந்தணன் பார்க்க; see *andaṇaṉ.*

**அந்தண்மை** *andaṇmai,* பெ. (n.) 1. அழகிய குளிர்ந்த அருள்; comely graciousness. "அந் தண்மை பூண்ட.........அந்தணர்" (திருமந். 234). 2. துறவுநிலை; asceticism. 3. பிராமணத் தன்மை; Brāhminhood.

[அம் = அழகிய. தண் = குளிர்ந்த. மை = தன்மை, தன்மை யுணர்த்தும் ஈறு. அம் + தண் + மை – அந்தண்மை.]

**அந்தணநாகம்** *andaṇa-nāgam,* பெ. (n.) பொன்னிறமான நல்லபாம்பு; cobra of a golden colour, lit. Brāhmin cobra, so called because of its bright colour.

[அந்தணன் + நாகம் – அந்தணநாகம் = பிராமணன் நிறமுள்ள நல்லபாம்பு.]

**அந்தணநாபி** *andaṇa-nābi,* பெ. (n.) நாபிவகை (மூ.அ.); white variety of aconite — (செ.அக.) 1. நச்சுத் தன்மையைப் போக்குமொரு முதன்மையான மருந்து; sacerdotal antidote for a kind of poison. 2. வெண்ணாபி; a white variety of aconite root (சா.அக.).

**அந்தணமை** *andaṇamai,* பெ. (n.) 1. அழகிய குளிர்ந்த அருட்டன்மை; comely graciousness. 2. துறவுநிலை; asceticism. 3. பிராமணத் தன்மை; Brāhminhood. "குளித்துமூன் றனலை யோம்புங் குறிகொளந் தணமை தன்னை யொளித்திட்டேன்" (திவ். திரு மாலை, 25).

[அந்தண்மை → அந்தணமை.]

அந்தண்மை பார்க்க; see *andaṇmai.*

**அந்தணர்** *andaṇar,* பெ. (n.) 1. அழகிய குளிர்ந்த அருளையுடைய துறவியர்; the gracious ascetics. "அந்தண ரென்போ ரற வோர்மற் றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள், 30). 2. பிராமணர்; Brāhmins. "ஆறறி யந்தணர்க் கரு மறை பலபகர்ந்து" (கலித். கடவுள்வா. 1).

[அம் = அழகு. தணம் = குளிர்ச்சி, குளிர்ந்த அருள். தணம் → தணன் = குளிர்ந்த அருளுடையவன். தணன் (ஒருமை) – தணர் (பன்மை). அம் + தணம் + அர் (ஈறு).]

'அந்தத்தை அணவுவார் அந்தணர் என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பா ரென்றவாறு' என்று நச்சினார்க்கினியர் அந்தணர் என்னுஞ் சொல்லிற்குக் கூறியுள்ள பொருட்காரணம் பொருந்தாது.

**அந்தணர்சேரி** *andaṇar-šēri,* பெ. (n.) அந்தண் பாடி பார்க்க; see *andaṇ-pāḍi.* "அந்தணர் சேரி யகவித ழாக" (பெருங். மகத. 3 : 87).

**அந்தணர்வாக்கு** *andaṇar-vākku,* பெ. (n.) 1. வேதம் (சிந்தா. நி.); the Vēdas. 2. பிராமணர் கூற்று; sayings of Brāhmins.

**அந்தணரறுதொழில்** *andaṇar-aṟu-toḻil*, பெ. (n.) **ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்** (திவா.); the six occupations of the Brāhmins, viz., learning, teaching, sacrificing, conducting sacrifices, giving and receiving.

*[அந்தணர் + ஆறு + தொழில். ஆறு→அறு.]*

இது பிற்காலக் கொள்கையும் வழக்குமாகும். ஆரியப் பூசாரியர் தென்னாடு வருமுன், அந்தணர் என்னும் பெயர் தமிழத் துறவியரையே சிறப்பாகவும், தமிழப் பூசாரியரையும் புலவரையுமே பொதுவாகவுங் குறித்ததனால், தமிழமுறைப்படி அந்தணரறுதொழில் ஓதல், ஓதுவித்தல், ஈதல், ஏற்றல், தூதுபோதல், சந்துசெய்தல் என்னும் ஆறேயாகும்.

ஔவை, அதியமான் விடத் தொண்டைமானுழைத் தூது சென்றதையும் (புறநா. 95), கோவூர்கிழார், உறையூர் முற்றியிருந்த சோழன் நலங்கிள்ளியையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் பாடிச் சந்துசெய்ததையும் (புறநா. 45) நோக்குக. இதனால்,

"ஆபயன் குன்று மறுதொழிலோர்
நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்"

என்னுங் குறளில் (560) உள்ள 'அறுதொழிலோர்' என்னுஞ் சொல், தமிழ அந்தணர்க்குப் பொருந்துதலையுங் காண்க.

சந்துசெய்தலில், தலைவன் தலைவியர் பிணக்குத் தீர்த்தலும் அடங்கும்.

பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக, அவனைக் கபிலர் (புறநா. 143), பரணர் (புறநா. 144, 145), அரிசில்கிழார் (புறநா. 146), பெருங்குன்றூர்கிழார் (புறநா. 147) பாடியதையும்;

"கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும்
வழிகொள
நல்லவை யுரைத்தலும் அல்லவை
கடிதலும்
செவிலிக் குரிய வாகு மென்ப"
(பொருள். கற். 12),

"சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய"
(பொருள். கற். 13)

என்னும் தொல்காப்பிய நூற்பாக்களையும் நோக்குக.

**அந்தணன்** *andaṇaṉ*, பெ. (n.) 1. **அழகிய அருளாளன்**; the gracious one. 2. **முனிவன், துறவி**; sage, recluse, ascetic. "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுக லான்" (குறள், 30). 3. **அறவோன்** (பொதி. நி.); virtuous person. 4. **தூயோன்**; pure person. "தேவர்க்கும் அறிய லாகா அந்தணனை" (திவ். திருநெடுந். 4). 5. **பிராமணன்**; Brāhmin. "நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங் காலை யந்தணர்க் குரிய" (தொல். பொருள். மர. 71). 6. **பிராமணவகை நாகம்**; cobra of the Brāhmin variety. "அந்தணனாறு மான்பா லவியினை (சீவக. 1287). 7. **பிரமன்**; Brahma (பிங்.). 8. **சிவன்**; Śiva. "யாழ்கெழு மணிமிடற் றந்தணன்" (அகநா. கடவுள்வா.). 9. **அருகன்**; Arhat (சங்.அக.). 10. **கடவுள்**; God (சங்.அக.). 11. **வியாழன்**; Jupiter. "மற்றவன் மேலுய ரந்தண னுலவும்" (கூர்மபு. மண்டல. 16). 12. **காரி**; Saturn (சங்.அக.). 13. **ஒரு சிறந்த முழுத்தம்** (முகூர்த்தம்); a highly auspicious time. "அரன்பாம் பனுட மகம்புட் புனலாடி யந்தணன் றேர்" (விதான. குணா. 72 : 73). இது பகலிலே எட்டாவதாக நிகழுமென்றும் நூறாயிரங் குற்றத்தைப் போக்குமென்றும் சொல்லப்படும் (சங்.அக.).

ம. அந்தணன்

*[அம் + தணம் + அன் (ஈறு) – அந்தணன்.]*

அந்தணர் பார்க்க; see *andaṇar*.

**அந்தணாட்டி** *andaṇāṭṭi*, பெ. (n.) 1. **அழகிய குளிர்ந்த அருளுடையவள்**; gracious woman. 2. **துறவினி (பெண்துறவி)**; a woman ascetic. 3. **பிராமணத்தி**; a Brāhmin woman. "மந்திர நாவி னந்த ணாட்டி" (பெருங். இலாவாண. 17 : 18).

*[அம் + தணம் + ஆட்டி (பெ.பா. ஈறு) – அந்தணாட்டி, அந்தணாளன் என்பதன் பெண்பால். ஆள் + தி – ஆட்டி.]*

**அந்தணாளன்** *andaṇāḷaṉ*, பெ. (n.) 1. **அழகிய குளிர்ந்த அருளாளன்**; gracious person, gracious one. "செய்யதீ வண்ண ரந்த ணாளர் கண்டீர்" (தேவா. 5.8 : 6). 2. **முனிவன்**; sage, recluse, hermit. "அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத" (தேவா. 7 . 55 : 1). 3. **பிராமணன்**; Brāhmin. "அந்த ணாளனு மதி

சயித் தரும்பெறன் மகட்கு'' (திருவிளை. விருத்தகு. 5).

[அம் + தணம் + ஆளன் (ஈறு) – அந்த ணாளன். ஆள் + அன் – ஆளன்.]

**அந்தணி** *andaṇi*, பெ. (n.) 1. அழகிய குளிர்ந்த அருளுள்ளவள்; gracious woman. 2. துறவினி; female ascetic. 3. பிராமணத்தி; a Brāhmin woman. "அந்தணி தான்கொண் டெழுந்த தவத்துறை நீங்கி" (பெருங். உஞ்சைக். 36 : 195-6).

ம. அந்தணி

[அந்தணன் (ஆ.பா.) – அந்தணி (பெ.பா.). அம் + தணம் + இ (பெ.பா. ஈறு) – அந்தணி.]

அந்தணாட்டி பார்க்க; see *andaṇāṭṭi*.

**அந்தந்த** *andanda*, கு.பெ.எ. (adj.) பெரும் பான்மை, எந்தெந்த, ஒவ்வொரு, எல்லாம் என்னுஞ் சொற்களுள் ஒன்றோடு உடனுறவுச் சொல்லாகவும் (correlative) சிறுபான்மை தனித்தும் நின்று, பல பொருளிடங் காலஞ் செயல்களைத் தனித்தனி குறிக்கும் சேய்மைச் சுட்டுப் பெயரெச்ச வடுக்கு; reduplication of the remote, demons. adj. *anda*, meaning, 'such and such', 'respective', 'proper', 'fitting' or 'appropriate'. எ-டு: பொத்தகங்களை எந் தெந்த இடத்திலிருந்து எடுத்தீர்களோ அந்தந்த இடத்தில் வைத்துவிடுங்கள். ஒவ் வொருவரும் எந்தெந்த வேலைக்குத் தகுதி யென்று கண்டு அந்தந்த வேலையில் அமர்த்த வேண்டும். எல்லாப் பயிர்களையும் அந்தந்தக் காலத்திற் பயிரிட வேண்டும். அந்தந்தக் காலத்திலேயே பாடங்களைப் படித்து வந் திருந்தால் தேர்வுச் சமையத்தில் திண்டாட வேண்டிய தில்லையே!

**அந்தம்** *andam*, பெ. (n.) அழகு; beauty, comeliness. "அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே" (தொல். பொருள். மர. 3). அந்தங் கெட்டவள் (உ.வ.).

ம. அந்தம்; க., து. அந்த; தெ. அந்தமு.

[அம் = அழகு. அம் → அந்து → அந்தம். அந்தம் என்பதற்கு முடிவு என்று பேராசிரியர் பொருளுரைத்திருப்பது அத்துணைப் பொருத்த மாய்த் தோன்றவில்லை.]

**அந்தரி** *andari*, பெ. (n.) தோற்கருவி வகை; a kind of drum (சிலப். 3 : 27, அடியார்க். உரை).

ம. அந்தரி

**அந்தரை** *andarai*, பெ. (n.) பரவர் பட்டப் பெயர்; a title of Paravas (T.A.S. iv, 179).

**அந்தலை** *andalai*, பெ. (n.) 1. சந்திப்பு (யாழ்ப்.); juncture (J.). 2. முடிவு (யாழ்ப்.); end, extremity, border (J.). 3. மேடு (யாழ்ப்.); projection as of roof (J.).

[அந்துதல் = சந்தித்தல். அந்து → அந்தல் → அந்தலை.]

**அந்தளகத்தாளார்** *andaḷagatt(u)-āḷār*, பெ. (n.) கவசந் தாங்கிய போர்மறவர்; warriors wearing coat of mail. உத்தமசோழத் தெரிந்த வந்தளகத்தாளார் (S.I.I. ii, 97).

[அந்தளகம் + அத்து (சாரியை) + ஆள் + ஆர் (ப.பா. ஈறு).]

**அந்தளகம்** *andaḷagam*, பெ. (n.) கவசம்; coat of mail (S.I.I. ii, 98, குறிப்பு).

ஒ.நோ: தெ. பொந்தளமு

[அந்தளம் → அந்தளகம்.]

**அந்தளம்**[1] *andaḷam*, பெ. (n.) கவசம் (பிங்.); coat of mail.

[உம் → உந்து → அந்து → அந்தளம்.]

**அந்தளம்**[2] *andaḷam*, பெ. (n.) புல்லுருவி; a parasitic plant (சா.அக.).

**அந்தளி** *andaḷi*, பெ. (n.) தேவர் கோயில்; temple (சங்.அக.).

**அந்தன்** *andaṉ*, பெ. (n.) அந்தனம் பார்க்க; see *andaṉam* (மலை.).

**அந்தனம்** *andaṉam*, பெ. (n.) கடுக்காய்; ink-nut, *Terminalia chebula* (சா.அக.).

**அந்தனாதி** *andaṉādi*, பெ. (n.) பழம்புளி; tamarind, kept in storage for a long time.

**அந்தா**[1] *andā*, இடை. (int.) அதோ!, ஒரு சேய்மைச்சுட்டுச் சொல், ஒரு பொருளைச் சுட்டிக் கவனிக்கச்செய்தற் குறிப்பு; remote demonstrative.

[அது → அத்து → அந்து → அந்தா.]

**அந்தா**[2] *andā*, இடை. (int.) 1. ஒரு வியப்புக் குறிப்பு; an exclamation of wonder. "அந்தாவிவ ளயிராணி" (கந்தபு. அசுர. அசமுகிப். 17). 2. ஒரு மகிழ்ச்சிக் குறிப்பு;

an exclamation of joy. ''அந்தா வுய்ந்தேன்'' (கந்தபு. அசுர. அசுரர்தோ. 1).

[அத்தன் (தந்தை) → அத்தா (விளி) → அந்தா. ஒ.நோ: அப்பன் → அப்பா, அடேயப்பா (வியப்புக் குறிப்பு).]

**அந்தாக** *andāga*, பெ. (n.) **'அப்படியே யாகுக!' என்று பொருள்படும் ஓர் இசைவுத் தொடர்புச் சொல்**; an expression, meaning 'Let it be so.' ''அந்தாக வென்றுவந் தையனும்'' (கம்பரா. யுத்த. நிகும்பலை. 101).

[அது → அத்து → அந்து + ஆக. ஆகு + அ (வியங். ஈறு) – ஆக. இனி, அன்னது → அன்று (அன் + து) → அந்து + ஆக என்றுமாம்.]

**அந்தாயம்** *andāyam*, பெ. (n.) 1. **போலிகை (மாதிரி)** (இ.வ.); model (Loc.). 2. **குத்து மதிப்பு**; rough estimate.

ம. அந்தாயம்

**அந்தாரப்பனை** *andāra-p-paṉai*, பெ. (n.) **தொட்டிப்பனை**; a species of palmyra (சா.அக.).

**அந்தாலே** *andālē*, சு.கு.வி.எ. (demons. adv.) அங்கே (யாழ்ப்.); there, over there (J.).

[அது → அத்து → அந்து + ஆல் + ஏ. அந்து = அங்கு. 'ஆல்' இடவுருபு. 'ஏ' பிரிநிலை அல்லது தேற்றப்பொரு ளிழந்த ஈற்றசை. ஒ.நோ: பின் → பின்னால் → பின்னாலே, பிறகு → பிறகால் → பிறகாலே.]

**அந்தாளி** *andāḷi*, பெ. (n.) (இசை) **குறிஞ்சி யாழ்த் திறமென்னும் குறிஞ்சிப் பண்ணின் முப்பத்திரு பிரிவுகளுள் ஒன்று** (பிங்.); (Mus.) an ancient secondary melody-type, one of the 32 varieties of *kuṟiñji*, a primary melody-type.

ம., க. அந்தாளி.

**அந்தாளிக்குறிஞ்சி** *andāḷi-k-kuṟiñji*, பெ. (n.) **அந்தாளி** பார்க்க; see *andāḷi*.

[அந்தாளி + குறிஞ்சி.]

**அந்தாளிபாடை** *andāḷi-pāḍai*, பெ. (n.) (இசை) **பாலையாழ்த் திறமென்னும் பாலைப் பண்ணின் இருபது பிரிவுகளுள் ஒன்று**; (Mus.) an ancient secondary melody-type, one of the 20 varieties of *pālai*, a primary melody-type.

[அந்தாளி + Skt. bhāṣā > த. பாடை.]

**அந்தான்** *andāṉ*, பெ. (n.) **கப்பல் அல்லது படகி லுண்டாகுஞ் சிறு பொத்தல் வழியே தண்ணீர் புகாதபடி அடைக்குஞ் சிறுபலகை**; a small wooden board nailed over a hole in a ship or boat to close a leak (R.).

[அத்துதல் = இரு துண்டை ஒன்றா யிணைத்தல், ஒட்டுப்போட்டுத் தைத்தல். அத்து → அந்து → அந்தான்.]

**அந்தி-த்தல்** *andi-*, 4 செ.கு.வி. (v.i.) **பொருந்துதல்** (பொதி.நி.); to fit in. —, 4 செ.குன்றா வி. (v.t.) 1. **கிட்டுதல்**; to approach. ''வேதம் அந்தித்தும் அறியான்'' (திருவிளை. நகர. 106). 2. **சந்தித்தல்**; to unite, join, meet. ''யமபடையென வந்திக்குங் கட்கடையாலே'' (திருப்பு. 55). 3. **முடித்து வைத்தல்**; to tie up in a knot. ''அந்தித் திருக்கும் பொருளில்லை'' (திருவாலவா. 30 : 14). 4. **ஏற்படுத்துதல் (நியமித்தல்)**; to appoint, ordain. ''அந்தித்த நின்புணர்ப்பை'' (கந்தபு. மகேந்திர. சயந்தன்புலம். 58).

க., தெ. அந்து.

[உம் → உந்து → அந்து → அந்தி.]

**அந்தி**[2] பார்க்க; see *andi*[2].

**அந்தி**[1] *andi*, பெ. (n.) 1. **ஒரு தெரு இன்னொரு தெருவிற் குறுக்காக வந்து சேர்வதால், அல்லது மூவேறு தெரு ஒன்றுகூடுவதால், ஏற்படும் முச்சந்தி**; junction of two or three streets. ''அந்தியுஞ் சதுக்கமு மாவண வீதியும்'' (சிலப். 14 : 213). 2. **இரவும் பகலுங் கலக்கும் விடியற்காலை**; morning twilight, as joining night with day. ''காலை யந்தியும்'' (புறநா. 34 : 8). 3. **பகலும் இரவுங் கலக்கும் மாலைக் காலம்**; evening twilight, as joining day with night. ''மாலை யந்தியும்'' (புறநா. 34 : 8). 'அந்தி ஈசல் அடைமழைக்கு அறிகுறி', 'அந்தி ஈசல் பூத்தால் அடைமழை அதிகரிக்கும்', 'அந்தி மழை அழுதாலும் விடாது', 'அந்தி மழையும் விடாது ஔவையாரைப் பிடித்த பிணியும் விடாது' (பழ.). 4. **அந்தியுஞ் சந்தியுஞ் செய்யுந் திருமன்றாட்டு**; morning and evening prayers. ''ஓதி யுருவெண்ணு மந்தியால்'' (திவ். இயற். 1 : 33). 5. **மாலை யந்தியிற் பூக்கும் அந்திமந்தாரை**; plant whose flowers blossom at 5 p.m., *Mirabilis jalapa*. 6. **மாலைச் செவ்வானம்**; red glow of sunset. ''அந்தி வண்ணர்தம் மடியவர்க் கமுதுசெய் வித்து'' (பெரியபு. அமர்நீதி. 3). 7. **மாலையொடு தொடங்கும் இரவு**; night. ''அந்தி காவலன்'' (திவ். பெரியதி. 8.5 : 1).

8. *பொருத்து, முடிவு*; joint, end. ''அந்திக் கடலிற் கடிதோட'' (திருப்பு. 76) (சங்.அக.). 9. *பகல் முடிவு போன்ற ஊழி முடிவு*; dissolution of the universe at the end of an aeon. ''படரணி யந்திப் பசுங்கட் கடவுள்'' (கலித். 101 : 24). 10. *பாலையாழ்த்திறவகை*; an ancient secondary melody-type of the *pālai* class.

ம. அந்தி; க., தெ. அன்த.

*[உம் → உந்து → அந்து → அந்தி.]*

உம்முதல் = கூடுதல், பொருந்துதல், கலத்தல். உம் = சொல்லும் பொருளும் இரண்டும் பலவுமாய்க் கூடுதலைக் குறிக்கும் இடைச் சொல்.

எ-டு:

''மழவும் குழவும் இளமைப் பொருள''
(தொல். சொல். உரி. 14).

''இன்பமும் பொருளும் அறனும்''
(தொல். பொருள். கள. 1).

உம் → உந்து.

''உம்உந் தாகும் இடனுமா ருண்டே''
(தொல். சொல். இடை. 44).

உந்து → அந்து. ஒ.நோ : உகை → அகை.

அந்துதல் = கலத்தல். அந்து → அந்தி = இரு தெரு அல்லது முத்தெருக் கூடும் முச்சந்தி, பகலும் இரவுங் கலக்கும் காலை அல்லது மாலைவேளை. "காலை யந்தியும் மாலை யந்தியும்" என்று புறநானூறு (34) கூறு வதால், முதற்கண் 'அந்தி' யென்பது இரு வேளைக்கும் பொதுவாய் வழங்கினமை அறியப்படும். பின்னர் மாலையை வேறு படுத்தற்குச் சகரமெய் சேர்க்கப்பட்டுச் 'சந்தி' யென்னுஞ் சொல் தோன்றிற்று. காலையும் மாலையும் என்னும் பொருளில், அந்தியுஞ் சந்தியும் என்று இன்றும் உலகவழக்கு வழங்கு தல் காண்க.

அமைத்தல் என்னும் பொதுப்பொருட் சொல், சோறமைத்தலைச் சிறப்பாகக் குறிக்கச் சமைத்தல் என்று சகரமெய் பெற்றிருத்தலை இதனுடன் ஒப்புநோக்குக.

'அந்தி', 'சந்தி' ஆனபோது, 'அந்து', 'சந்து' ஆயிற்று. சந்து = உறுப்புப் பொருத்து, இரு பகைவரை ஒப்புரவாக்கும் இணைப்பு.

முச்சந்தியைக் குறித்த 'அந்தி'யும் 'சந்தி' யாயிற்று. அதனால், அந்தியுஞ் சதுக்கமும் என்பது சந்தியுஞ் சதுக்கமும் என மோனைத் தொடராயிற்று. சந்திக்கிழுத்தல், சந்தி சிரித்தல், சந்தியில் விடுதல் என்னும் வழக்கு களில், 'சந்தி' யென்பது இன்று முச்சந்திக்கும் நாற்சந்திக்கும் பொதுவாகும்.

சந்து → சந்தை. ஒ.நோ : மந்து → மந்தை.

சந்தை = பெரும்பாலும் நாட்டுப்புற நகர் களில், கிழமைக் கொருநாள், பல்வேறிடங் களினின்று பல்வேறு விற்பனையாளர் பல்வேறு பொருள்களைக் கொண்டுவந்து விற்கும் கிழமை யங்காடி.

சந்தித்தல் என்னும் பொருளில் அந்தித்தல் என்னும் சொல் தமிழில் வழங்கியிருத்தலால், சந்தித்தல் அல்லது சந்திப்பு என்னும் சொல் தென்சொல்லே.

சந்தித்தலைக் குறிக்கும் 'ஸம்-தா' (sam-dhā) என்னும் வடசொல் முதனிலை, ஸம் (உடன், கூட, together), தா (இடு, வை, put) என்னும் இருசொற் கொண்ட கூட்டுச்சொல்; சந்து என்பதன் மூலமான 'அந்து' என்னும் தமிழ் முதனிலையோ தனிச்சொல்.

முச்சந்தி, நாற்சந்தி, சந்துசெய்தல், சந்தை என்னும் பொருள்கள் வடசொல் வழக்கி லில்லை.

சென்னை அகரமுதலியில், தெருக்கூடு மிடத்தைக் குறிக்கும் சந்தி யென்னுஞ் சொற்கும் சந்து என்னும் சொற்கும் 'ஸம்-தி' (sam-dhi) என்னும் வடசொல் வடிவும், சந்தை யென்னுஞ் சொற்கு 'ஸம்-தா' (sam-dhā) என்னும் வடசொல் வடிவும், காலை மாலை வேளையைக் குறிக்கும் சந்தி யென்னுஞ் சொற்கு 'ஸம்-த்யா' (sam-dhyā) என்னும் வட சொல் வடிவும் மூலமாகக் காட்டப் பட்டுள்ளன. அவற்றின் பொருந்தாமை, தமிழின் முன்மையையும் தமிழ்ச்சொல்லின் மூலத்தையும் நோக்கின் வெள்ளிடை மலை யாம்.

**அந்தி**[2] *andi*, பெ. (n.) *அக்கை* (சங்.அக.); elder sister.

ம. அந்தி; தெ. அந்திக.

*[அத்தி = தாய், அக்கை. அத்தி → அந்தி.]*

**அந்தி**[3] *andi*, பெ. (n.) *தில்லைமரம்* (மலை.); blinding tree, tiger's milk-spurge, *Excoecaria agallocha* (சா.அக.).

**அந்தி**[4] *andi*, பெ. (n.) (ஓகம்) **அறுநிலைக் களங்களுள் (ஆறாதாரங்களுள்) ஒன்றான உந்திவட்டத்தில் பத்திதழ்த் தாமரை வடிவுடையதாகக் கருதப்படும் இடம்;** (Yoga) a mystic centre in the body, described as a ten-petalled lotus and situated in the navel region.

**அந்தி**[5] *andi*, இடை. (part.) **ஓர் அசைச்சொல்** (பொதி.நி.); an expletive.

[அந்தில் → அந்தி.]

''அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென் றாயிரண் டாகு மியற்கைய என்ப''
(தொல். சொல். இடை. 19).

**அந்திக்கடை** *andi-k-kaḍai*, பெ. (n.) **மாலையில் விற்குங்கடை, அல்லங்காடி;** evening bazaar.

ம. அந்திக்கட

[அந்தி + கடை.]

**அந்திக்காப்பு** *andi-k-kāppu*, பெ. (n.) 1. **குழந்தைகளுக்கு அந்திப்பொழுதிற் செய்யுங் காப்புச்சடங்கு;** mystic rite performed in the evening for a child, to avert evil (திவ். பெரியாழ். 2:8, வியா. பிர.). 2. **கடவுட்கு மாலைக்காலத்துச் செய்யும் வழிபாடு** (மதுரைக். 460, நச். உரை, அடிக் குறிப்பு); evening service performed in a temple.

ம. அந்திக்காப்பு

[அந்தி + காப்பு.]

**அந்திக்கோன்** *andi-k-kōn*, பெ. (n.) **இரவிற்கு அரசனான திங்கள்;** moon. ''அந்திக் கோன்றனக் கேயருள் செய்தவர்'' (தேவா. 5. 25:1).

[அந்தி + கோன்.]

**அந்திகாசம்** *andi-kāšam*, பெ. (n.) **மாலைக் கண்;** night blindness, *Nyctalopia* (சா.அக.).

[அந்தி + காசம். **Skt.** kāca > த. காசம் = கண்ணோய்.]

**அந்திகால்** *andi-kāl*, பெ. (n.) **சுரபுன்னை, ஒரு மரம்;** a tree, soorapoon, *Octrocarpus longifolius* (சா.அக.).

**அந்திகாவலன்** *andi-kāvalan*, பெ. (n.) **இராக் காலத்துக் காவலன் போன்ற திங்கள்;** moon, as the lord of night or night guardian. ''அந்தி காவல னமுதுறு பசுங்கதிர்'' (திவ். பெரியதி. 8. 5:1).

**அந்திகுணம்** *andiguṇam*, பெ. (n.) **பெருங் காயம்;** asafoetida (சா.அக.).

**அந்திகூப்பு-தல்** *andi-kūppu-*, 5 செ.கு.வி. (v.i.) **மாலைத் தெய்வ வணக்கஞ் செய்தல்;** to offer evening prayers or perform evening worship. ''மந்திரத் தந்தி கூப்பி'' (பெருங். உஞ்சைக். 55:7-8).

ம. அந்தி வழங்குக

**அந்திகை**[1] *andigai*, பெ. (n.) 1. **அண்மை;** nearness, neighbourhood (சங்.அக.). 2. **இரவு;** night.

ம. அந்திகம்; தெ. அந்திகமு.

**அந்திகை**[2] *andigai*, பெ. (n.) **அக்கை;** elder sister (சங்.அக.).

ம. அந்தி; தெ. அந்திக.

[அத்தி = அன்னை, அக்கை. அத்தி → அந்தி → அந்திகை = இளைய அக்கை. 'கை' கு.பொ.பின். ஒ.நோ: கன்னி → கன்னிகை.]

**அந்திகை**[3] *andigai*, பெ. (n.) **அடுப்பு;** oven (சங்.அக.).

ம., தெ. அந்திக; க. அந்திகெ.

**அந்திசந்தி** *andi-šandi*, பெ. (n.) 1. **காலை அல்லது மாலை;** morning or evening. 2. **காலையும் மாலையும்;** morning and evening. அந்தியுஞ் சந்தியும் = 1. **காலையும் மாலையும்;** both (in the) morning and evening. 2. **எப் போதும்;** always. அவனுக்கு அந்தியுஞ் சந்தியும் இதுதான் வேலை (உ.வ.).

**அந்திசந்துவாதம்** *andi-šandu-vādam*, பெ. (n.) **இராக்காலத்தில் மூட்டுகளைத் தாக்கும் ஊத (வாத) நோய்;** a disease affecting the joints during the night, evening; arthritis, gout (சா.அக.).

[அந்தி + சந்து + **Skt.** vāta > த. வாதம்.]

**அந்திதோசம்** *andi-tōšam*, பெ. (n.) **அந்திப்புள் தோசம்** பார்க்க; see *andi-p-puḷ-tōšam*.

[அந்தி + **Skt.** dōṣam > த. தோசம்.]

**அந்திநட்சத்திரம்** *andi-naṭcattiram*, பெ. (n.) **மாலை வெள்ளி, விடிவெள்ளிக்கு எதிர்;** evening star (W.) opp. *viḍiveḷḷi*.

[அந்தி + நட்சத்திரம். **Skt.** nakṣatra > த. நட்சத்திரம் = வெள்ளி.]

**அந்திப்பீளை** *andi-p-pīḷai*, பெ. (n.) **சிறுபூளை**; woolly caper, *Achyranthes lanata* (சா.அக.).

*[அந்தி + பீளை. பூளை → பீளை.]*

**அந்திப்புள்தோசம்** *andi-p-puḷ-tōšam*, பெ. (n.) **பொழுதடையும் நேரத்தில் பறவைகள் கூடு நோக்கிப் பறந்து போகும்போது குழவிகளைப் புறத்துக் காட்டலால் நேரும் தீட்டு**; disease of babies caused by their being exposed at sunset when birds fly to their nests.

*[அந்தி = மாலைத் தொடக்க வேளை. புள் = பறவை.* **Skt.** dōṣa > *த. தோசம் = குற்றம், தீட்டு.]*

தோஷ என்னும் வடசொல் தமிழில் தோடம் என்றும் திரியும். அதனால், **பால வாகடத் திரட்டு** என்னும் மருத்துவ நூலில் (93), 'அந்திப்புட்டோடம்' என்னும் வடிவு ஆளப்பட்டுள்ளது.

**அந்திப்பூ** *andi-p-pū*, பெ. (n.) **அந்திமல்லிகை** (மலை.); four o'clock flower, *Mirabilis jalapa.*

ம. அந்திமலரி, அந்திமந்தாரம்.

*[அந்தி + பூ.]*

இது, அந்தி மந்தார வேளையிற் பூப்பதால் அந்திமந்தாரம், அந்திமந்தாரை யென்றும், சாயுங்காலம் 5 மணிக்குப் பூப்பதால் அஞ்சு மணிப் பூ என்றும் பெயர் பெறும்.

**அந்திப்பொழுது** *andi-p-poḻudu*, பெ. (n.) **கையெழுத்து மறையும் மாலை மசங்கல் நேரம்**; evening twilight, dusk, about the time when written characters start fading and become indistinct (சா.அக.).

ம. அந்திகெட்டந்தி

*[அந்தி + பொழுது.]*

**அந்திபகல்** *andi-pagal*, பெ. (n.) 1. **இரவும் பகலும்**; night and day. ''அந்திபக லாச் சிவனை யாதரித்து'' (பட்டினத்துப். பொது. 2.). 2. (சிவ.) **கீழால் மேலால் நிலைகளைக் (கேவல சகலாவத்தைகளைக்) குறிக்கும் குறிப்புச் சொல்**; (Šaiva.) symbolic term standing for the descending and ascending states of the soul through the five stages from wakefulness to absolute unconsciousness.

**அந்திமந்தாரம்** *andi-mandāram*, பெ. (n.) **அந்திமந்தாரை** பார்க்க; see *andi-mandārai.*

**அந்திமந்தாரை** *andi-mandārai*, பெ. (n.) **அஞ்சு மணிப் பூ**; four o'clock flower, *Mirabilis jalapa.*

ம. அந்திமந்தாரம்

**மறுவ.** அந்திமந்தாரம், அந்திமல்லி, அந்தி மல்லிகை, அந்திமலர்ந்தான், அந்திமலரி.

**அந்திமந்தி** *andi-mandi*, பெ. (n.) **மாலை மங்கற் பொழுது**; evening twilight. அந்திமந்தி நேரத்தில் வெளியே போகாதே (உ.வ.).

**அந்திமல்லி** *andi-malli*, பெ. (n.) **அந்திமந்தாரை** பார்க்க; see *andi-mandārai.*

ம. அந்திமலரி

**அந்திமல்லிகை** *andi-malligai*, பெ. (n.) **அந்திமந்தாரை** பார்க்க; see *andi-mandārai.*

**அந்திமலர்ந்தான்** *andi-malarndān*, பெ. (n.) **அந்திமந்தாரை** பார்க்க; see *andi-mandārai.*

**அந்திமலரி** *andi-malari*, பெ. (n.) **அந்திமந்தாரை** பார்க்க; see *andi-mandārai.*

**அந்திமாலை** *andi-mālai*, பெ. (n.) 1. **மாலைப் பொழுது**; evening. ''அந்திமாலைச் சிறப்புச் செய் காதையும்'' (சிலப். பதி. 66). 2. **மாலைக்கண்**; night-blindness, *Nyctalopia.* 3. **பகுதி அல்லது முழுதும் பார்வை கெடும் கண்ணோய் வகை** (M.L.); partial or total loss of sight, *Amaurosis.*

ம. அந்திக்குருடு

**அந்தியுழவு** *andi-y-uḻavu*, பெ. (n.) **கோடையில் அந்தி நேரத்தில் உழுகை** (நாஞ்.); tilling the soil in the evening time during summer (Nāñ.).

*[அந்தி + உழவு.]*

**அந்திரர்** *andirar*, பெ. (n.) **ஆந்திரர்**; the Āndhras. ''அந்திரர் முதலிய வரசர்'' (பெருந்தொ. 783).

**Skt.** āndhra

**அண்டிரன், ஆந்திரன்** பார்க்க; see *aṇḍiraṉ, āndiraṉ.*

**அந்திரன்** *andiraṉ*, பெ. (n.) **வேடன்** (சிந்தா.நி. 160); hunter.

**Skt.** andhra

**அந்தில்**[1] *andil*, பெ. (n.) 1. **இடம்** (அக.நி.); place. 2. **இரண்டு** (பொதி.நி.); two. —, சு.கு.வி.எ. (demons. adv.) **அவ்விடம்**; there. ''அந்தி லரங்கத் தகன்பொழில்'' (சிலப்.

11:6). —, இடை. (part.) **ஓர் அசைச்சொல்**; an expletive in poetry.

"அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்
றாயிரண் டாகு மியற்கைய என்ப"
(தொல். சொல். இடை. 19).

*[அந்த + இல் – அந்தில். இல் = இடம்.]*

**அந்தில்**[2] *andil*, பெ. (n.) **வெண்கடுகு** (பிங்.); white mustard, *Brassica alba*.

**அந்திவண்ணன்** *andi-vaṇṇaṉ*, பெ. (n.) **செவ் வானம்போற் சிவந்த சிவன்** (பிங்.); Śiva, His body having the red hue of sunset.

*[அந்தி + வண்ணன். வண்ணம் → வண்ணன்.]*

**அந்து**[1] *andu*, சு.கு.வி.எ. (demons. adv.) **அப்படி**; in that way. "அந்துசெய் குவெனென" (கம்பரா. யுத்த. இராவணன்வதைப். 61).

க. அந்து; தெ. அடு; து. அஞ்ச.

*[அ → அன் → அனை → அனைத்து → அந்து = அவ்வளவு, அப்படி.]*

**அந்து**[2] *andu*, பெ. (n.) **நெற்பூச்சி**; a small grey-winged insect found in stored paddy (செ.அக.). "அந்துகடி துண்டுபோய கதிர்நெல்லும்" (பிரபோத. 19 : 6). 'அந்தூது நெல்லானேன்' (பழ.). — a small insect that causes damage to stored paddy or other grains, *Weevil* (சா.அக.).

க. அந்தி

**அந்து**[3] *andu*, பெ. (n.) **மொத்தக் கூட்டுத் தொகை** (இ.வ.); total, aggregate (Loc.).

தெ. அந்து

*[ஒருகா. அனைத்தும் → அந்தும் → அந்து = அவ்வளவும், முழுதும்.]*

**அந்துக்கண்ணி** *andu-k-kaṇṇi*, பெ. (n.) **புளிச்சைக்கண்ணி**, blear-eyed, ill-looking girl or woman. 'அந்துக்கண்ணிக்கு அழுதாலும் வாரான் அகமுடையான்' (பழ.).

*[அந்து + கண்ணி.]*

**அந்துளியிந்துளியா - தல்** *anduḷi-y-induḷi-y-ā-*, 4 செ.கு.வி. (v.i.) (சங்.அக.) 1. **தலை சுழலு தல்**; to suffer from vertigo. 2. **பதைபதைத் தல்**; to throb with pain, shiver with fear or grief. —, 4 செ.குன்றாவி. (v.t.) **சூறையாடல்**; to plunder, pillage.

**அந்தை** *andai*, பெ. (n.) **ஒரு பழைய நிறைவகை** (தொல். எழுத்து. தொகை. 28, நச். உரை); an ancient standard weight.

*[ஒருகா. அண்டை → அந்தை.]*

**அந்தைமந்தை** *andai-mandai*, பெ. (n.) **மந்த குணம்**; sluggishness, dull nature (சா.அக.).

**அந்தோ**[1] *andō*, இடை. (int.) 1. **வியப்புருக்கக் குறிப்புச் சொல்**; an exclamation of reverential wonder. "அந்தோவென் னாருயிரே யரசே யருள்" (திவ். பெரியதி. 7 . 2 : 6). 2. **இரக்கக் குறிப்புச் சொல்**; an exclamation of pity. "பெற்றிலள் தவமந்தோ பெருநில மகள்" (கம்பரா. அயோத். வனம்புகு. 25).

*[அத்தன் (தந்தை) → அத்தோ (விளி) → அந்தோ.]*

இச் சொல் இரக்கம், துயரம், துன்பம், வியப்பு முதலிய பல குறிப்புகளை உணர்த்து மேனும், இரக்கக் குறிப்பே இதற்குச் சிறப் பாக வுரியதாம்.

ஐயோ என்னும் சொல் இரக்கம், துயரம், துன்பம், வியப்பு முதலிய பல குறிப்புகளை யுணர்த்தினும், இரக்கக் குறிப்பையே சிறப் பாக வுணர்த்துதலை இதனுடன் ஒப்பு நோக்குக.

சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியு மில்லாத காலத்தில், நச்சினார்க்கினியரும், தெய்வச்சிலையாரும், பிறரும் 'அந்தோ' என்னும் குறிப்புச் சொல்லைச் சிங்களச் சொல் லென்றும் வடசொல்லென்றும் மயங்கினர். அது சிங்களத்திற்கும் வடமொழிக்கும் முந் தின குமரிநாட்டுத் தென்சொல் லென்பதை அவரறியார்.

"நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்"

என்னும் தொல்காப்பிய நூற்பா (சொல். இடை. 34) உரையில், 'அந்தீற் றோவும் அன்னீற் றோவுமாவன: அந்தோ அன்னோ என்பன' என்றும், 'அடுக்கியும் அடுக்காதும் இரங்கற் குறிப்பு வெளிப்படுக்கும்' என்றும், சேனாவரையர் கூறியிருத்தல் காண்க.

தமிழிலுள்ள இரங்கல் துயர துன்ப வியப் புக் குறிப்புச் சொற்களுட் பெரும்பாலன பெற்றோர் முறைப்பெயரின் விளிகள் என்னும் உண்மையை அறியின், அந்தோ

அன்னோ முதலிய குறிப்புச் சொற்களின் மூலம் வெள்ளிடைமலையாய் விளங்கும்.

[அத்தன் → அத்தோ → அந்தோ. அத்தன் → அத்த → அந்த → அந்தவோ → அந்தகோ. அத்தோ → அச்சோ. அன்னை → அன்னோ.]

*அந்த*[2] பார்க்க; see *anda*[2].

**அந்தோ**[2] *andō*, இடை. (int.) *கவனிக்கச் செய்யுஞ் சேய்மைச்சுட்டுக் குறிப்பு*; remote demonstrative. அந்தோ பார்; behold there!

[அ → அது → அத்து → அந்து → அந்தோ. ஒ.நோ: அதோ.]

**அந்தோர்** *andōr*, பெ. (n.) *நெல்லி* (மலை.); emblic myrobalan (செ.அக.) — (சா.அக.) Indian gooseberry tree, *Phyllanthus emblica*.

**அநாகரிகம்** *anāgarigam*, பெ. (n.) 1. *நாகரிகமின்மை*; boorishness, uncivilizedness. 2. *பண்பாடின்மை*; uncultured state.

[அல் → அ + நாகரிகம்.]

**அப்ப** *appa*, பெ. (n.) *அப்பன் என்னும் பெயரின் விளிவடிவம்*; voc. of *appan*. —, இடை. (int.) *வியப்புக் குறிப்புச் சொல்*; an exclamation of wonder.

**அப்பக்காய்க்கறியமிது** *appa-k-kāy-k-kari-y-amidu*, பெ. (n.) *அப்பக்காய்க்கறியமுது* பார்க்க; see *appa-k-kāy-k-kari-y-amudu*. 'அப்பக்காய்க் கறியமிதுக்கு' (S.I.I. ii, 127).

**அப்பக்காய்க்கறியமுது** *appa-k-kāy-k-kari-y-amudu*, பெ. (n.) *சமைத்த அப்பக்காய்க் கறி*; a kind of curry preparation of *appakkāy*.

'அமிது' கொச்சை வடிவம். *அப்பைக்காய்* பார்க்க; see *appai-k-kāy*.

[அப்பக்காய் + கறி + அமுது.]

**அப்பக்கொடி** *appa-k-kodi*, பெ. (n.) *கோவைக் கொடிவகை*; a common creeper, weed, *Ageratum conyzoides* (சா.அக.).

ம. அப்ப

**அப்பகம்** *appagam*, பெ. (n.) *வட்டத்திருப்பி*; Indian pareira, *Cissampelos pareira* (சா.அக.).

மறுவ. அப்பட்டர், அப்பட்டா, அப்பம்.

**அப்பகாசம்** *appakāsam*, பெ. (n.) *சீமைச் சோம்பு*; foreign aniseed or Armenian cumin, *Carum carui* (சா.அக.).

**அப்பச்சன்** *appaccan*, பெ. (n.) 1. *தந்தையின் தந்தை*; paternal grandfather. 2. *தந்தை* (நாஞ்.); father (Nāñ.).

[அப்பன் + அச்சன் — அப்பச்சன்.]

அப்பிச்சன் என்பது நாஞ்சில்நாட்டுக் கொச்சை வழக்கு.

**அப்பச்சி**[1] *appacci*, பெ. (n.) 1. *பாட்டன்* (பள்.); grandfather (Palla.). 2. *அப்பன்* (செட்.நா.); father (C.N.). 'அப்பச்சி குதம்பையைச் சூப்பப் பிள்ளை முற்றின தேங்காய்க்கு அழுகிறதுபோல', 'அப்பச்சி கோவணத்தைப் பருந்து கொண்டு ஓடுகிறது, பிள்ளை வீரவாளிப் பட்டுக்கு அழுகிறது' (பழ.). 3. *பள்ளர் மறவரை விளிக்கும் மதிப்புரவுப் பெயர்*; a term of respect used by Pallas in addressing Maravas.

ம. அப்பச்சன்

[அப்பன் + அச்சு — அப்பச்சு → அப்பச்சி = அப்பனைப் பெற்ற பாட்டன். அச்சன் = தந்தை. அச்சன் → அச்சு. ஒ.நோ: அப்பன் → அப்பு.]

அப்பச்சன் என்றிருக்க வேண்டிய பெயர் அப்பச்சி என வழங்கிவருகின்றது. தந்தையை அப்பச்சி யென்னும் செட்டிநாட்டு வழக்கு, பாட்டனைத் தந்தை பெயராலும் பாட்டியைத் தாய் பெயராலும் விளிக்கும் வழக்கின் தலைமாற்றாகும்.

**அப்பச்சி**[2] *appacci*, பெ. (n.) *சிற்றுண்டி*; light refreshment.

ம. அப்பாச்சி; க., தெ. அப்பச்சி; பிராகி. அபூப.

[ஒருகா. அப்பம் + சோய் (சோறு) — அப்பச் சோய் என்னும் குழந்தை வழக்காகவோ செவிலி மொழியாகவோ (Nursery usage) இருக்கலாம்.]

**அப்பட்டச்சரக்கு** *appatta-c-carakku*, பெ. (n.) *உயர்ந்த பண்டம்*; high quality goods.

*அப்பட்டம்* பார்க்க; see *appattam*.

அப்பட்டச் சரக்கு என்பது கொச்சை வழக்கு.

**அப்பட்டம்** *appattam*, பெ. (n.) 1. *கலப்பற்றது, தூயது*; that which is unmixed, unadulterated, pure. அப்பட்டம் பால் (அப்பட்டப் பால்), அப்பட்டம் எண்ணெய். 2. *வெளிப்படையானது* (இ.வ.); that which is plain (Loc.).

க., பட. அப்பட்ட; தெ. அப்பட்டமு, அபூடமு; கொங்., மரா. அபூட; பிராகி. அபுட்ட.

*[ஒருகா. அப்பு + அற்றம் – அப்பற்றம் → அப்பட்டம் = நீர் கலவாதது.]*

**அப்பட்டர்** *appaṭṭar*, பெ. (n.) **அப்பகம்** பார்க்க; see *appagam*.

**அப்பட்டா** *appaṭṭā*, பெ. (n.) **வட்டத்திருப்பி** (மலை.); Indian pareira.

**அப்பகம்** பார்க்க; see *appagam*.

**அப்படா** *appaḍā*, இடை. (int.) 1. **வியப்புக் குறிப்புச் சொல்**; an exclamation of wonder. 2. **இளைப்பாறற்குறிப்புச் சொல்**; an exclamation of repose. வழிப்போக்கன் மரத்தடியில் 'அப்படா' என்று உட்கார்ந்தான் (உ.வ.).

*[அப்பன் → அப்ப (விளி) + அடா (ஆ.பா. விளி) – அப்படா.]*

**அப்படி** *appaḍi*, கு.வி.எ. (adv.) 1. **அவ்வாறு**; so, in that way. "அப்படி யொருத்தி செல்ல" (கந்தபு. தேவ. தெய்வ. 89). 2. **அவ்வரிசையில்**; in that order. 'அப்படிப் பார்த்தாலும் விகடகவி, இப்படிப் பார்த்தாலும் விகடகவி' (தென்னாலிரா.). '**அப்படிச் சொல் வழக்கை, அவன் கையில் கொடு உழக்கை**' (பழ.). 3. **அத்தன்மை**; in that manner.

ம. அப்படி

*[அ + படி – அப்படி. படி = வகை, வண்ணம்.]*

**அப்படிக்கூடி** *a-p-paḍi-k-kūḍi*, கு.வி.எ. (adv.) **அவ்வழியாக**; by that way. அப்படிக்கூடி வா, போ (உ.வ.).

*[அ + படி + கூடி. கூடு → கூடி (இ.கா. வி.எ.).]*

**அப்படிப்பட்ட** *a-p-paḍi-p-paṭṭa*, கு.பெ.எ. (adj.) **அத்தன்மையான**; of that type, kind or category. அப்படிப்பட்ட வள்ளலை இன்று காணமுடியாது. அப்படிப்பட்ட திருட்டுப் பயலை ஏன் வீட்டில் வைத்துக்கொண்டிருக்கிறாய்? (உ.வ.).

*[அ + படி + பட்ட. படு → பட்ட (இ.கா. பெ.எ.). 'படு' துணைவினை.]*

**அப்படிப்போல்** *a-p-paḍi-p-pōl*, கு.வி.எ. (adv.) **அதைப்போல்**; like that, similarly.

"ஆனைகட்டச் சங்கிலி தானெடுத்துக்
கொடுக்கும்
அப்படிப்போல் நமது வாயும்நமைக்
கெடுக்கும்"
(ச. ச. ச. கீர்த்.)

*[அ + படி + போல்.]*

**அப்படியப்படியே** *a-p-paḍi-y-a-p-paḍiyē*, கு.வி.எ. (adv.) 1. **ஒன்றையும் எடுக்காமல் உடனே**; without removing anything, leaving things as they are. தொலைவரி வந்தவுடன், வேலைக்காரரை மட்டும் வைத்துவிட்டு எல்லாரும் அப்படியப்படியே எழுந்து புறப்பட்டுவிட்டார்கள் (உ.வ.). 2. **வெவ்வேறு திசையில் அவரவரிடத்திற்கு**; in various directions to their respective places. கூட்டம் முடிந்தவுடன் எல்லாரும் அப்படியப்படியே போய்விட்டார்கள் (உ.வ.).

*[அ + படி + அ + படி + ஏ (இடை.). 'அப்படியப்படி' அடுக்குத்தொடர்.]*

**அப்படியாதற்குகந்த** *a-p-paḍi-y-ādaṟk(u)-uganda*, பெ.எ. (adj.) **அப்படிப்பட்ட, அருமையான**; of such an excellence or merit. அப்படியாதற் குகந்த பெருமக்களே போய்விட்டார்கள்; இனி மற்றவர்களைப்பற்றிக் கவனிப்பானேன்? (உ.வ.).

*[அ + படி + ஆதற்கு + உகந்த. ஆ → ஆதல் (தொ.பெ.). ஆதற்கு (4ஆம் வே.). உக → உகந்த (இ.கா.பெ.எ.). உகத்தல் = தகுதல், ஏற்றல்.]*

இது இன்று 'அப்படியாக்கொத்த', 'அப்படியாக்கொந்த' என்று கொச்சையாய் வழங்குகின்றது.

**அப்படியாகப்பட்ட** *a-p-paḍi-y-āga-p-paṭṭa*, பெ.எ. (adj.) **அப்படிப்பட்ட சிறந்த**; of such merit and importance. அப்படியாகப்பட்ட மக்களை யெல்லாம் பெற்றுவிட்டு இந்த நிலைமையிலிருக்கிறேன் (உ.வ.).

*[அ + படி + ஆக + பட்ட. ஆகு → ஆக (நி.கா.வி.எ.). படு → பட்ட (இ.கா.பெ.எ.). 'படு' துணைவினை.]*

**அப்படியிப்படி** *a-p-paḍi-y-i-p-paḍi*, வி.எ. (adv.) 1. **அப்பக்கம் இப்பக்கம், அத்திசை இத்திசை**; this side or that side. அப்படியிப்படித் திரும்பாதே. 2. **ஏதேனும் மாறாக**; in any way against, anything different from.

உன்னைப்பற்றி அப்படியிப்படி யென்று ஒன்றும் என் காதில் விழக்கூடாது (உ.வ.).

*[அ + படி + இ + படி.]*

**அப்படியும்** *a-p-paḍi-y-um*, வி.எ. (adv.) 1. *அவ்வகையிலும்*; in that way also. அப்படியுஞ் சொல்லிப் பார்த்தேன்; அவன் கேட்கவில்லை (உ.வ.). 2. *அப்படி யிருந்தாலும்கூட*; even in that event, even if it were so. அப்படியும் அவன் தன் மனைவியைத் தன்னந்தனியாய் விட்டுவிட்டுப் போகலாமா? (உ.வ.).

*[அ + படி + உம் (இடை.).]*

**அப்படியும் இப்படியும்** *a-p-paḍi-y-um-i-p-paḍi-y-um*, வி.எ. (adv.) 1. *அப்பக்கமும் இப்பக்கமும்*; this side and that side. அப்படியும் இப்படியும் திரும்பிக்கொண்டே யிருக்கிறான் (உ.வ.). 2. *அவ்வகையிலும் இவ்வகையிலும், இருவகையிலும், சார்பாகவும் மாறாகவும்*; in this way and that way, both ways, for and against. அவன் அப்படியும் பேசுவான் இப்படியும் பேசுவான் (உ.வ.).

*[அ + படி + உம் + இ + படி + உம்.]*

**அப்படியே** *a-p-paḍi-y-ē*, கு.வி.எ. (adv.) 1. *அந்நிலையிலேயே*; in the same state or situation. மரத்திலிருந்தவன் அப்படியே கீழே விழுந்து விட்டான். காமராசர் இளம்பருவத்திலேயே பேராயக்கட்சியிற் சேர்ந்து இறுதிவரை அப்படியே இருந்துவிட்டார் (உ.வ.). 2. *ஒருவர் சொன்னபடியே*; exactly as one said. ஆசிரியர் சொன்னதை அப்படியே மாணவன் சொல்லிவிட்டான் (உ.வ.). 3. *ஒருவர் செய்த படியே*; exactly as one did. தியாகராசப் பாடகர் எப்படிப் பாடினாரோ அப்படியே இவனும் பாடுகிறான் (உ.வ.). 4. *அந்த வழியே*; by that way alone. அப்படியே போ (உ.வ.).

*[அ + படி + ஏ (இடை.).]*

**அப்பத்தாள்** *appattāḷ*, பெ. (n.) 1. *தந்தையின் தாய்* (நாஞ்.); father's mother (Nāñ.). 2. *தமக்கை; அக்கை* (யாழ்ப்.); elder sister (J.).

*[அப்பன் + ஆத்தாள் – அப்பாத்தாள் → அப்பத்தாள். ஆத்தை → ஆத்தா → ஆத்தாள்.]*

முறைப்பெயர்களின் விளிவடிவங்கள் பாலீறு பெற்று வழங்குவது கொச்சைத் தமிழ் வழக்கு.

**அப்பநிவேதனம்** *appa-nivēdaṉam*, பெ. (n.) *அப்பமுது*; bread or cake offering. 'அப்ப நிவேதனம்' (S.I.I. iii, 150).

அப்பமுது பார்க்க; see *appamudu*.

*[அப்பம் + நிவேதனம். Skt. nivēdana > த. நிவேதனம்.]*

**அப்பப்ப** *appappa*, இடை. (int.) *வியப்பு, இரக்கம், துயரம் முதலியவற்றின் குறிப்பு*; exclamation of wonder, pity, grief, etc. அப்பப்ப, வறுமை கொடிது! (உ.வ.).

ம. அப்பப்பா; க., தெ., பட. அப்பப்ப; து. அப்ப.

*[அப்பன் → அப்ப (விளி). அப்ப + அப்ப – அப்பப்ப.]*

**அப்பப்பா** *appappā*, இடை. (int.) அப்பப்ப பார்க்க; see *appappa*.

*[அப்பன் → அப்ப (விளி); அப்ப + அப்பா – அப்பப்பா.]*

**அப்பம்**[1] *appam*, பெ. (n.) 1. *பண்ணிகார வகை*; round cake of rice flour and sugar, fried in ghee. ''அப்பம்......சுட்டுவைத்தேன்'' (திவ். பெரியாழ். 2 . 4 : 5). 'அப்பத்தை எப்படிச் சுட்டாளோ, தித்திப்பை எப்படி நுழைத்தாளோ?', 'அப்பம் என்றால் பிட்டுக்காட்ட வேண்டுமா?', 'அப்பம் சுட்டது சட்டியில் அவல் இடித்தது திட்டையில்' (பழ.). 2. *அடை* (பிங்.); thin cake, wafer, bread. 3. *உணவு* (கிறித்.); food (Chr.). 'எங்கள் அன்றாட அப்பத்தை இன்று எங்களுக்குத் தாரும்' (பரமண்டல மன்றாட்டு).

ம. அப்பம்; க., து. அப்ப; தெ. அப்பமு; வ. அபூப; பிராகி. அபூய, அபூவ; பிரா. அப்பம்.

*[உப்புதல் = பருத்தல், எழும்புதல். உப்பு → உப்பம் → அப்பம்.]*

**அப்பம்**[2] *appam*, பெ. (n.) 1. *புட்டுத்திருப்பி*; a plant, *Sida acuta* (சா.அக.). 2. *வட்டத்திருப்பி*; Indian pareira, *Cissampelos pareira* (சா.அக.).

**அப்பமுது** *appamudu*, பெ. (n.) *அப்பப் படையல்*; bread or cake offering.

*[அப்பம் + அமுது.]*

**அப்பர்**[1] *appar*, பெ. (n.) 1. *ஆணாடு, வெள்ளாட்டுக் கடா, செம்மறியாட்டுக் கடா;*

he-goat, ram. ''மோத்தையுந் தகரும் உதளும் அப்பரும்.....................யாத்த ஆண்பாற் பெயரென மொழிப'' (தொல். பொருள். மர. 2). 2. **ஆண்குரங்கு;** male monkey. 'அப்பர் குரங்கென்றலுமாம்' (தொல். பொருள். மர. 47, பேரா. உரை).

*[ஒருகா. உப்பு → உப்பர் → அப்பர் = பருத்தது.]*

விலங்குகளில் பெண்ணினும் ஆண் பருத் திருப்பது பெரும்பான்மை.

**அப்பர்**[2] *appar*, பெ. (n.) *1. தேவார மூவருள் ஒரு* ***வரும் சிவசமய குரவர் நால்வருள் ஒருவரும் ஆன திருநாவுக்கரசு நாயனார்;*** *Tirunāvuk-karašu Nāyanār*, one of the three celebrated authors of the *Tēvāram*.

*[அப்பன் → அப்பர் → அப்பனார் (உயர்வுப் பன்மை).]*

''தொழுதணைவுற் றாண்டஅர சன்புருகத்
தொண்டர்குழாத் திடையே சென்று
பழுதில்பெருங் காதலுடன் அடிபணியப்
பணிந்தவர்தம் கரங்கள் பற்றி
எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி
விடையின்மேல் வருவார் தம்மை
அழுதழைத்துக் கொண்டவர்தாம் **அப்பரே**
என**அவரும் அடியேன்** என்றார்''

(பெரியபு. திருநாவுக். *182*). 2. ***தந்தையார்;*** father. ''விற்பரம ரப்பரருள் வித்தகம ருப்புடைய பெருமாளே'' (திருப்பு. *3*). 3. **சிவன்;** Šiva. ''அந்நீர் முகந்து கொண்டேறி அப்பர் கோயி லடைந்தகலுள்'' (பெரியபு. நமிநந்தி. *13*).

திருநாவுக்கரசரின் முதுமையுஞ் சிவத் தொண்டும் நோக்கி, திருஞானசம்பந்தர் அவரை 'அப்பர்' என்றார். மூத்த பிள்ளை யாரின் தந்தை சிவனென்பது தொல்கதை (புராணம்). இறைவன் என்னும் முறையில் சிவன் எல்லா வுயிர்கட்கும் தந்தை.

**அப்பவருக்கம்** *appa-varukkam*, பெ. (n.) ***அப்பம் என்னும் பலகாரவினம்;*** various kinds of cakes or pastry, numbering ten and belonging to the class *appam*.

அபூபம், கஞ்சம், இலையடை, மெல்லடை, நொலையல், பூரிகை, சஃகுல்லி, போனகம், மண்டிகை, பொள்ளல் என்னும் பத்தும் அப்பவினமாம்.

''அபூபங் கஞ்ச மிலையடை மெல்லடை
நொலையல் பூரிகை சஃகுல்லி போனக
மண்டிகை பொள்ள லு மப்ப வருக்கம்''
(பிங். *6 : 17*).

அப்பம் > **Skt.** abūba.

பிங்கல நிகண்டு 10ஆம் நூற்றாண்டின தாதலால், அபூப என்னும் வடசொல் வடிவை ஆண்டுள்ளது.

*[அப்பம் + வருக்கம்.* **Skt.** varga > *த. வருக்கம் = இனம்.]*

**அப்பவாணிகம்** *appa-vāṇigam*, பெ. (n.) ***பண்ணி கார விற்பனை;*** sweet-meat selling.

*[அப்பம் + வாணிகம்.]*

**அப்பவாணிகர்** *appa-vāṇigar*, பெ. (n.) ***பண்ணி காரம் விற்போர்;*** sweet-meat sellers (சிலப். 5 : 24, அடியார்க். உரை).

*[அப்பம் + வாணிகர்.]*

**அப்பழுக்கு** *appaḻukku*, பெ. (n.) *1.* ***மாசு, அழுக்கு, கறை;*** blot, dirt, speck. அவன் உடுத்திருக்கும் ஆடை அப்பழுக்கில்லாதது (உ.வ.). 2. **குற்றம், மாசுமறு;** fault, guilt, defect. அவன் அப்பழுக்கில்லாதவன் (உ.வ.).

*[ஒருகா. அப்பு + அழுக்கு – அப்பழுக்கு. அப்புதல் = படையாய் ஒட்டிக்கொண்டிருத்தல்.]*

**அப்பளக்காரம்** *appaḷa-k-kāram*, பெ. (n.) ***அப் பளத்திற்குப் பயன்படுத்தப்படும் உறைப்பும் உவர்ப்புமுள்ள ஒரு கடைச்சரக்கு;*** a sub-carbonate of soda, used chiefly in manufacturing *appaḷams*.

''குடல்வாதஞ் சூலை கொடிதான வாத
மடல்புரியு மையு மறுக்கும் — நெடுவயிற்றி
னுப்பிசத்தி னோடே யுயர்குன்ம நோயகற்று
மப்பளக் கார மது''
(பதார்த்த. *1134*).

'அப்பளாக்காரம்' என்பது கொச்சை வழக்கு.

*[அப்பளம் + காரம்.]*

**அப்பளக்குழவி** *appaḷa-k-kuḻavi*, பெ. (n.) ***அப் பளந் தேய்க்கும் உருளைக்கட்டை;*** rolling pin for smoothing out the dough for flour cakes.

*[அப்பளம் + குழவி.]*

**அப்பளம்** *appaḷam*, பெ. (n.) ***உழுத்தமாவினா லும் அரிசிமாவினாலும் செய்யப்படும் மெல்லிய அடை;*** light, thin flour-cake, usually of black gram and rice.

''வார்த்தை யுண்டாக்கு மாபலத்தை
யுங்கொடுக்குஞ்
சீதத்தை மேவுகபந் தீர்க்குங்காண் —
ஓதுமுழுந்
தப்பளஞ்சோற் றப்பளங்கா லாதிகள்விஞ்
சாதுநிலை
யொப்பவளஞ் செய்யு முறை''
(பதார்த்த. 1446).

ம. பப்படம்; க. அப்பள; தெ. அப்பளமு; து. அப்பளோ; பிராகி. அப்பட; பட. பப்பட; **Skt.** parpaṭa.

[*அப்பளித்தல் = சமனாகத் தேய்த்தல். அப்பளி → அப்பளம்.*]

'சுவரை அப்பளித்துப் பூசுகிறான்' என்னும் வழக்கை நோக்குக. 'அப்பளாம்' என்பது பிராமணக் கொச்சை வழக்கு.

**அப்பளி-த்தல்** *appaḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) ***சுவரிற் சாந்து பூசும்போது சமனாக்கித் தேய்த்தல்***; to remove unevenness in the wall when plastering. *சுவரை அப்பளித்துப் பூசுகிறான்* (உ.வ.).

க. அப்பளிசு; தெ. அப்பளிஞ்சு; து. அப்பரீபு.

[*அப்பு → அப்பளி. அப்புதல் = சாத்துதல், பூசுதல்.*]

**அப்பளாசிட்டி** *appaḷā-šiṭṭi*, பெ. (n.) ***அப்பளம் வெண்மையாதற்குப் பயன்படுத்தும் சாறுள்ள ஒரு பூண்டு***; a herbaceous plant, the juice of which is used for making *appalams* look white (சா.அக.).

**அப்பறாத்தூணி**[1] *app(u)-aṟā-t-tūṇi*, பெ. (n.) ***அம்பறாத்தூணி*** பார்க்க; see *amb(u)-aṟā-t-tūṇi*.

[*அம்பு + அறா (நீங்காத) + தூணி (கூடு). அம்பறாத்தூணி → அப்பறாத்தூணி.*]

அப்புறாத்தூணி என்பது கொச்சை வடிவம்.

**அப்பறாத்தூணி**[2] *appaṟāttūṇi*, பெ. (n.) ***ஒரு வகை நஞ்சு (சரகண்ட பாடாணம்)***; a kind of native arsenic (சா.அக.).

**அப்பன்** *appaṉ*, பெ. (n.) 1. ***தந்தை***; father. "அப்பன்நீ யம்மைநீ" (தேவா. 6 . 95 : 1). 'அப்பன் அருமை அப்பன் மாண்டால் தெரியும், உப்பின் அருமை உப்பு இல்லாவிட்டால் தெரியும்', 'அப்பன் செத்தும் தம்பிக்கு அழுகிறதா?', 'அப்பன் மரித்தால் அந்தத் துணி எனக்கு' (பழ.). 2. ***சிறுவரையும் கீழோரையும் விளிக்கும் அருமைச் சொல்***; a term of endearment used in addressing little children or inferiors. 3. ***பெற்றோர் மகனைக் குறிக்கும் அருமைச் சொல்***; a term of endearment used by parents in addressing their son, especially when young. 4. ***வள்ளல், பெருநன்மை செய்தவன்***; patron, benefactor. 'கீழைச்சாரம் வெங்களப்பன், மேலைச்சாரம் எங்களப்பன்' (பழ.). 5. ***ஆண்பாற் பெயரீற்றுச் சொல்***; a component word suffixed to names of male persons. *கண்ணப்பன், செல்லப்பன்*. 6. ***பெரிய தகப்பன்*** (ஆதி.); father's elder brother (Ādi.—Lex. Sup.). 7. ***திருநாவுக்கரசு நாயனார்*** (உபதேசகா. கடவுள்வா. 7); *Tirunāvukkarašu Nāyaṉār*. 8. ***திறமையிற் பெரியவன்***; one's better, superior in ability. இவன் இசைக்குழல் (நாதசுரம்) இசைப்பதில் இராசரத்தினத்திற்கு அப்பனாய் வருவான் (உ.வ.).

ம. அப்பன்; தெ., க., து., பிராகி., பட. அப்ப; குட. அப்பெ; கோண். ஆபோரோல்; கூ. ஆப; குருக். அப்பா; பிரா. அபா; கொங். பாபா; சிங். அப்பா; மணி. இபா; வங். பாபா.

**Aram.** *abba*, the father, my father, emphatic state of *ābh*, father.

**Chal.** *abba*; **Syr.** *abba* or *abbo*, the father or grandfather.

**Heb.** *ābh*, father; **Ar.** *āb*, father.

**N.T. Gk.** *abba*, father (Mark. xiv, 36).

**Gk.** *abba;* **L.** *abba;* **E.** *abba*, a title of honour.

The following list of words for 'father' is given in 'Some Problems in Kannada Linguistics', by its author C. R. Sankaran, M.A.

| | |
|---|---|
| **Sumere - Oceanian** | : *ab*. |
| **Melanesian** | : *o'fa, apa*. |
| **Polynesian** | : *pa*, term of respect denoting father. |
| **Indonesian** | : *pa, apai, apang, aba, pa*. |
| **Mon-Khmer** | : *pa, pā, pāpa, ipa, apa, āpe, apā, pā, apa*, father *āpe*, good father. |
| **Munda** | : *appā, appan*. |
| **Sumerian** | : *ap, abha*. |
| **Akkadian** | : *babu, apu*. |
| **Egyptian** | : *ab, papa*. |

ஒருகா. தாயினும் வன்மையான தந்தையைக் குறிக்க, மகரத்திற்கு இனமான வல்லின மெய்ச் சொல்வடிவு கொள்ளப்பட்டிருக்கலாம்.

**அப்பன்காளை** *appaṉ-kāḷai*, பெ. (n.) *தாதர் என்னும் இரப்போர் வகுப்பார் வீடுவீடாய்க் கொண்டுபோய் மூக்கணாங்கயிற்றை யிழுக்கும்போது, கேட்ட கேள்விக்கு உடன்பாட்டு விடை சொல்வதுபோல் தலையசைப்பதும், பலகறையாலும் வண்ணத்துணியாலும் அணி செய்யப்பட்டிருப்பதுமான பெருமாள் மாடு* (இ.வ.); sacred bull owned by men of the *Tādar* caste and trained to respond by nodding its head to questions put to it as it is taken round decked with multicoloured clothes and cowrie shells, to houses for the purpose of collecting alms (Loc.).

ம. அப்பக்காள

பெருமாள்மாடு என்பதே பெருவழக்கு. சில விடங்களில் பூம்மாடு என்றும் சொல்லப்படும்.

**அப்பா** *appā*, பெ. (n.) 1. *அப்பன் என்னும் தந்தை முறைப்பெயரின் விளிவடிவம்*; voc. of *appaṉ*. 2. *இளையவரும் கல்லாதவருமான ஆடவரை விளிக்குஞ் சொல்* (நெல்லை); a vocative employed in addressing young or illiterate men (Tn.). அப்பா! இந்தச் சுமையைச் சற்றுத் தூக்கிவிடு (உ.வ.). 'அப்பா என்றால் உச்சி குளிருமா?' (பழ.). —, இடை. (int.) 1. *ஓர் இளைப்பாறற் குறிப்புச் சொல்*; an exclamation of repose. உழைப்பாளி, 'அப்பா!' என்று சொல்லி நிழலில் உட்கார்ந்தான் (உ.வ.). 2. *வியப்பு, துயரம், நோவு முதலியவற்றை யுணர்த்துங் குறிப்புச்சொல்*; an exclamation of wonder, grief, pain, etc. "என்னப்பா மற்றிவ் வெழுபது வெள்ளமு மொருவன் தின்னப் போதுமோ" (கம்பரா. யுத்த. மூலபல. 40). இது வியப்புக்குறிப்பு.

க., து., பட. அப்ப.

*[அப்பன் (தந்தை) → அப்பா (விளி).]*

**அப்பாகம்** *appāgam*, பெ. (n.) வாலுளுவை (பச்.மூ.); climbing staff plant (செ.அக.) — intellect tree, *Celastrus paniculata* (சா.அக.).

**அப்பாசி** *appāsi*, பெ. (n.) *விசயநகர வேந்தரான கிருட்டிண தேவராயரின் பெயர்பெற்ற மந்திரி*; Appāji, the famous minister of the Vijayanagar king Krișnadēvarāyar. "அப்பாசி யூகி...... இவர்களினும் மெய்ப்பான புத்தி விதரணமும்" (தெய்வச். விறலி. 82).

**அப்பாட்டன்** *appāṭṭaṉ*, பெ. (n.) *தந்தையின் பாட்டன்* (இ.வ.); great-grandfather (Loc.).

*[அப்பன் + பாட்டன் – அப்பாட்டன்.]*

**அப்பாடா** *appāḍā*, இடை. (int.) *இளைப்பாறல், வியப்பு, நோவு ஆகிய குறிப்புகளை உணர்த்துஞ் சொல்*; an exclamation of relief, wonder, surprise or pain. மூட்டைக்காரன் தலையிலிருந்து மூட்டையை இறக்கி வைத்துவிட்டு 'அப்பாடா' என்று மரத்தடியில் உட்கார்ந்தான் (இளைப்பாறற் குறிப்பு). தென்னாலியிராமனாற் சூடிடப்பட்ட பிராமணர், 'அப்பாடா! அப்பாடா!' என்று கத்திக் கொண்டு ஓடினார்கள் (நோவுக் குறிப்பு).

*[அப்பன் → அப்பா (விளி) + அடா (ஆ.பா. விளி) – அப்பாடா.]*

இது பெரும்பாலும் ஆடவர் கூற்று.

**அப்பாடி** *appāḍi*, இடை. (int.) *அப்பாடா என்பதன் பெண்பால் வடிவம்*; fem. form of *appāḍā*.

*[அப்பன் → அப்பா (விளி) + அடி (பெ.பா. விளி) – அப்பாடி.]*

இது பெண்டிர் கூற்று. உணர்ச்சி யளவிற்கேற்ப இது 'அப்பாடீ' என்று நீளவுஞ் செய்யும்.

**அப்பாத்தாள்** *appāttāḷ*, பெ. (n.) *தந்தையைப் பெற்ற பாட்டி* (இ.வ.); father's mother, paternal grandmother (Loc.).

*[அப்பன் (தந்தை) + ஆத்தாள் (தாய்) – அப்பாத்தாள். ஆத்தை (தாய்) → ஆத்தா → ஆத்தாள்.]*

**அப்பாத்தை** *appāttai*, பெ. (n.) *அக்கை, தமக்கை* (இ.வ.); elder sister (Loc.).

*[அப்பன் (தந்தை) + ஆத்தை (தாய், அக்கை) – அப்பாத்தை.]*

இதில் 'அப்பன்' என்னும் நிலைச்சொல் பொருத்தமும் பயனும் அற்றது.

**அப்பாய்** *appāy*, பெ. (n.) *தந்தையின் தாய்* (இ.வ.); paternal grandmother (Loc.).

ம. அப்பாயி

*[அப்பன் + ஆய் (தாய்) – அப்பாய்.]*

'அப்பாயி' என்பது கொச்சை வழக்கு.

**அப்பாயி** *appāyi*, பெ. (n.) **பையன், இளைஞன்** (இ.வ.); boy, lad (Loc.).

*[அப்பு > தெ. அப்பாய், அப்பாயி; தெ. அப்பாயி > த. அப்பாயி.]*

**அப்பாரகம்** *appāragam*, பெ. (n.) *புளிமா*; sour mango, *Mangifera indica* (*சா.அக.*).

**அப்பால்** *a-p-pāl*, பெ. (n.) *அப்பக்கம்*; that side. "அப்பாலிருந்த வனசரித ரைவர்க்கு" (பாரத. நச்சுப். 16). —, கு.வி.எ. (adv.) 1. *அதன்மேல்*; after that, afterwards, further, beyond. "பின்னவன் பெற்ற செல்வ மடியனேன் பெற்ற தன்றோ வென்னினி யுறுதி யப்பால்" (கம்பரா. அயோத். கைகேயி சூழ். 114). 2. *பிறகு*; afterwards, sometime later. அப்பால் கொடுக்கிறேன் (உ.வ.).

ம. அப்பால்

*அப்பால்* என்னும் இச் சொல் ஆரிய மொழி களில் பல்வேறு வடிவில் முன்னொட்டாக (pref.) வழங்குகின்றது.

எ-டு :

**Skt.** *apa*, away from.

**Gk.** *apo*, from, off, away; *aph* (before an aspirate), away from.

**L.** *ap*, away. *ab*, from, orig. form *ap*. *aba*, extended form of *ab*.

**E.** *of*, **OE.** *of*, weaker form of *æf*, originally *af*, corresp. to **OFris.** *af*, *of*, *ofe*. **OS.** *af*, **MLG.** *af* prep. and adv. **MDu.** *ave*, *af*, *of*; **Du.** *af* adv. *off*; **OHG.** *aba*, *ab*; **MHG.** *abe*, *ab*. prep. and adv. **Ger.** *ab* adv. off, away; **ON.** *af*; **Goth.** *af* prep. and adv. **OTeut.** *aba*, un-accented by-form *ab*; corresp. to **Skt.** *apa*, away from, down from; **Gk.** *apo*; **L.** *ab*.

**E.** *off*, originally the same word as **OF**; *off* being at first a variant spelling, which was gradually appropriated to the emphatic form, i.e. to the adverb and the prepositional senses closely related to it, while *of* was retained in the transferred and weakened senses, in which the prep. is usually stressless and sinks to (əv.). *Off* appears casually from *c* 1400, but *of* and *off* were not completely differentiated till after 1600.

**E.** *offe*, adv. and prep. An early **ME.** deriv. form from **OF**, on the analogy of **INNE.** *ute* **OUTE**, **UPPE.** (O.D.) The **L.** pref. *ab* also appears as ***a-***, ***adv-***, ***av-***,***v-***, as in a-vert, adv-ance, av-aunt, v-anguard (S.E.D.E.L. p. 732).

**E.** *apo-*, *ap-* (before a vowel), *aph-* (before an aspirated vowel), pref. meaning 'from, away from, asunder, separate'. —**Gk.** *apo-*, *ap-*, *aph-*, fr. *apo*, 'from, away from', cogn. with **OI.** *apa*, away from, **L.** *ab* (orig. *ap*), 'away from, from', **Goth.** *af*, **OE.** *of* 'away from, from'.

**E.** *of-*, assimilated form of *ob*-before *f*.

*off*, adv., prep. and adj. The stressed form of *of*. Cp. *offal*, *offing*, *offish*, and the second element in *doff*.

*off*, n. the offside (cricket) (K.C.E. D.E.L.).

*[அ + பால்.]*

**அப்பாலுக்கப்பால்** *appālukk(u)-appāl*, பெ. (n.) *மனத்திற்கு எட்டாத* **தொலைவு**; distance beyond one's imagination. "அணுவிற் கணுவா யப்பாலுக் கப்பாலாய்" (விநா. அகவல்) (சா.அக.).

*[அப்பாலுக்கு + அப்பால்.]*

**அப்பாலுமடிச்சார்ந்தார்** *appālum-aḍi-c-cārndār*, பெ. (n.) *தமிழ்நாட்டிற்கு அப்பாற்பட்டவரும் சிவனடியார் அறுபத்து மூவர்க்கு முன்னும் பின்னு மிருந்தவருமான தொகையடியாருள் ஒரு வகுப்பார்*; Those who, hailing from lands outside the Tamil country, have attained the feet of God, and who existed before and after the period of the 63 canonized Šaiva saints, one group of *Togaiyaḍiyār*.

"மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்

பூவேய்ந்த் நெடுஞ்சடைமே லடம்பு
தும்பை
புதியமதி நதியிதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந்
தாரும்
செப்பியஅப் பாலுமடிச் சார்ந்தார்
தாமே''
(பெரியபு. அப்பாலுமடிச். 1).

*[அப்பாலும் + அடி + சார்ந்தார்.]*

**அப்பாவி** *appāvi*, பெ. (n.) **பேதை, வெள்ளந்தி, தீங்கில்லாதவன்-ள்**; simpleton, artless and harmless person.

*[அல் → அ (எ.ம.முன்.) + **Skt.** pāpi > த. பாவி → அபாவி → அப்பாவி. **Skt.** pāpa (தீவினை) > த. பாவம். பாவி = தீவினைஞன். அபாவி = தீவினைசெய்யாதவன், தீங்கில்லாத வன்.]*

**அப்பிரு** *appiru*, பெ. (n.) **பேரோசனை** (R.); a kind of mineral, turquoise.

**அப்பு**[1]**-தல்** *appu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **பூசுதல்**; to stick or daub with the hand, as sandal paste, to plaster with a trowel, as mortar. ''அரைபடு மகிலுஞ் சாந்து மப்பி'' (திருவிளை. நாட்டு. 13). 2. **சாத்துதல்**; to put on. ''மலர்த்தார்......அப்ப'' (பதினொ. கோயிற்றிருப். 4). 3. **ஒற்றுதல்**; to apply repeatedly, as a fomentation (W.). 4. **தாக்கு தல்**; to come to grips, to grapple with, as in wrestling. ''இருவரும் புயங்களி னப்பி மொத்தினர்'' (பாரத. பதினேழா. 147). 5. **அறைதல்** (சங்.அக.); to beat, strike. 6. **கும்முதல்** (சங்.அக.); to pommel. 7. கவ்வு தல்; to snatch at firmly. நாய் அப்பிக்கொண்டு போய்விட்டது (உ.வ.). 8. **வாயில் திணித் தல்**; to thrust in the mouth. ''அவல்தேனு மப்பி யமுதுசெயும்'' (திருப்பு. 1147). 9. **கொட்டுதல்** (சங்.அக.); to throw or cast into a vessel.

**ம.** அப்புக; **க.** அப்பிகெ; **தெ.** அப் பளிஞ்சு; **து.** அப்பளிபுனி; **பிராகி.** அப்பால; **பட.** அப்பு.

*[அம்மு → அப்பு.]*

**அப்பு**[2] *appu*, பெ. (n.) 1. **அப்பன்** (இ.வ.); father (Loc.). 2. **சிறுவரையுங் கீழோரையும் அன்புகாட்டி அழைக்குஞ் சொல்** (இ.வ.); a term of endearment used in addressing children or inferiors (Loc.). **ம., க.** அப்பு; **பட.** அப்பி. அப்பி என்பது கொச்சை வழக்கு. 3. **வீட்டு வேலைக்காரன்**; domestic man-servant. **சிங்.** அப்பு.

*[அப்பன் → அப்பு.]*

**அப்பு**[3] *appu*, பெ. (n.) 1. **ஐம்பூதங்களுள் ஒன்றான நீர்** (பிங்.); water, as one of the five elements. 2. கடல்; sea. 3. **பனிக்குடத்து நீர்**; liquid of the amniotic sac, amnic liquor (சா.அக.).

**ம.,** க. அப்பு; **மரா.** அப்; **L.** aqua.

*[அப்பு > **Skt.** ap. அம்முதல் = பொருந்து தல், கலத்தல். அம் = நீர். அம் → அம்பு → அப்பு.]*

**அம்பு**[1] பார்க்க; see *ambu*[1].

**அப்பு**[4] *appu*, பெ. (n.) அம்பு; arrow. ''வில்லுமி ழப்பொடு'' (கந்தபு. யுத்த. இரண்டா. சூரபன். 41).

*[அம்பு → அப்பு. இது வலித்தல் என்னும் செய்யுள் திரிபு.]*

**அப்பு**[5] *appu*, பெ. (n.) **துடை**; thigh. ''அம்ம வென்று அப்புத் தட்டி'' (ஈடு. 5.4 : 7).

*[**ஒருகா.** அப்புதல் = ஒட்டுதல். அப்பு = ஒட்டிக்கொண்டிருக்கும் தொடை. **ஒ.நோ:** துடு → தொடு → தொடை = துடை.]*

**அப்பு**[6] *appu*, பெ. (n.) **பாதிரிமரம்** (மலை.); trumpet tree, *Stereospermum suaveolens*.

**அப்பு**[7] *appu*, பெ. (n.) **ஈயம்**; lead (சா.அக.).

**அப்பு**[8] *appu*, பெ. (n.) **ஒரு கனிய நஞ்சு (வெள்ளைப் பாடாணம்)** (வை.மூ.); a mineral poison.

**அப்பு**[9] *appu*, பெ. (n.) **முட்டாள்** (இ.வ.); dolt, idiot (Loc.).

*[அப்புண்டு = முட்டாள் (நெல்லை); dolt, idiot (Tn.). அப்புண்டு → அப்பு.]*

**அப்பு**[10] *appu*, பெ. (n.) **கடன்**; loan, debt (W.).
*[**தெ.** அப்பு (கடன்) > **த.** அப்பு.]*

**அப்பு**[11] *appu*, பெ. (n.) 1. **முற்குளம், 20ஆம் நாண்மீன்**; the twentieth asterism. 2. **பகல் பதினைந்து முழுத்தத்துள் (முகூர்த்தத்துள்)**

ஆறாவது (விதான. குணா. 73, உரை); the sixth of 15 divisions of the day.

**அப்பு**[12] *appu*, பெ. (n.) **முப்பத்தாறு மெய்ப் பொருள்களுள் ஒன்று;** one of the 36 reals.

அது சிறுகோளத்தில் (சிற்றண்டத்தில்) நிலப்பூதத்திற்கும் தீப்பூதத்திற்கும் இடையி லிருக்கும் ஒரு பொதுவகை யல்லாத (அசா தாரண) பூதமாய்ப் பிறைவடிவுள்ளதாய் வெண்ணிறமானதாய்த் தாமரைப்பூ அடை யாள முடையதா யிருக்கு மென்றும், பெருங் கோளத்தில் (பேரண்டத்தில்) பருப்பொருட் பூதநில மெய்ப்பொருட்கு (தூலபூத பிருதுவி தத்துவத்திற்கு) அப்பால் பன் (தச) குண மதிகமாக மறைத்திருக்குமென்றும் சொல்வர் (சி. சி. சுபக். 2 : 66, 67, 68, உரை; வி-ணி. 271) — (சங்.அக.).

**அப்புக்கட்டு** *appu-k-kaṭṭu*, பெ. (n.) **அம்பு களின் கற்றை** (பதிற்றுப். 16 : 4, உரை); sheaf of arrows.

*[அம்பு + கட்டு.]*

**அப்புக்காய்** *appu-k-kāy*, பெ. (n.) **ஒருவகைக் காய்;** a kind of unripe fruit (சா.அக.).

**அப்புக்குட்டி** *appu-k-kuṭṭi*, பெ. (n.) **ஒருவகைக் கடல்மீன்;** sucker fish, remora (சா.அக.).

*[ஒருகா. அப்புக்குள் + ஒட்டி – அப்புக்கு ளொட்டி → அப்புக்குட்டி. அப்பு = நீர்.]*

**அப்புண்டு** *appuṇḍu*, பெ. (n.) **முட்டாள்** (நெல்லை); dolt, idiot (Tn.).

**அம்முண்டு** பார்க்க; see *ammuṇḍu*.

*[அம்முண்டு → அப்புண்டு.]*

**அப்புத்திரட்டி** *appu-t-tiraṭṭi*, பெ. (n.) **கட்டுக் கொடி, நீரை உறைவிக்க வல்லது;** a creeper which is capable of solidifying water, *Smilax pseudo-china* (சா.அக.).

*[அம் → அம்பு → அப்பு + திரட்டி – அப்புத் திரட்டி. அம் = நீர். திரள் → திரட்டு → திரட்டி = திரள அல்லது உறையச் செய்வது.]*

கட்டு என்னும் பெயரும் இப் பொருளதே.

**அப்புதத்துவம்** *appu-tattuvam*, பெ. (n.) **முப்பத் தாறு தத்துவங்களுள் ஒன்று;** one of the 36 reals.

*[அப்பு + **Skt.** tattva > **த.** தத்துவம். **த.** தான் > **Skt.** tat = அது. தத்வ = அதாயிருக் குந் தன்மை, தானாயிருக்கை, தனிப்பொருள், மெய்ப்பொருள்.]*

**அப்புதம்** *appudam*, பெ. (n.) **கோரைவகை** (பச்.மூ.); a sedge.

*[ஒருகா. அப்பு → அப்புது → அப்புதம் = நீரில் விளைவது.]*

**அப்புது** *appudu*, இடை. (int.) **பாகர் யானையைத் தட்டிக் கொடுத்து அமைதிப் படுத்தும்போது கூறும் ஒரு குறிப்புச்சொல்;** expr. which a mahout uses while patting and quieting down an elephant.

''அங்கையந் தலத்தினா லப்புதா தையெனக்
கொங்கலர் கண்ணியான் கொம்மைதான்
கொட்டலும்
பொங்கிய வுவகையிற் பொலிந்துமாக்
களிறவன்
றங்கிய பயிர்த்தொழி றடக்கையாற்
செய்ததே''
(சீவக. 1834).

இ-ள் : கண்ணியான், அப்புது அப்புது, ஆது ஆது, ஐ ஐ என்று கூறி, அங்கையாகிய அழகிய தலத்தாற் பொய்க்கத் தட்டின வளவிலே, அக் களிறு உவகையாற் பொலிந்து அவன்கட் டங்கிய பயிராற் றொழில்களைத் தன் கையாலே செய்த தென்க.

பயிராவன : பரிபரி யென்பன முதலியன. தொழில் = தோட்டி முதலியன எடுத்துக் கொடுத்தல் (நச். உரை).

பயிர் = மரபுக் குறிப்புமொழி (பரிபாஷை).

யானை கூட்டங் கூட்டமாகத் தொன்று தொட்டுக் குடமலைத் தொடரில் வாழ்ந்து வருவதனாலும், தமிழவேந்தர் மூவரும் தொடக்கந்தொட்டுக் கொண்டிருந்த நால் வகைப் படையுள் யானைப்படை யொன்றாத லாலும், அரசர் வழிப்போக்கிற்கும் முரசறைந்து விளம்பரஞ் செய்தற்கும் விழாக் கால வூர்வலத்திற்கும் புலவர்க்குப் பரிசளிப் பிற்கும் யானை மிகப் பயன்பட்டதனாலும், யானையைப் பயிற்றுந் தொழில் தமிழர்க்கு நன்றாகத் தெரிந்ததே. அப் பயிற்சிக்குரிய சொற்களும் தனித்தமிழ்ச் சொற்களே. அவற்றின் பொருள் இன்று அறியப்படாமை யால் அவை அயற்சொற்களாகா.

**அப்புநீர்** *appu-nīr*, பெ. (n.) **கடல்நீர்;** sea-water (சா.அக.).

*[அம் → அம்பு → அப்பு.]*

**அப்புநீறு** *appu-nīṟu*, பெ. (n.) *கடலுப்பு*; sea-salt (சா.அக.).

[அப்பு = நீர், கடல். நீறு = சுண்ணம், பொடி.]

**அப்புப்பு** *appu-uppu*, பெ. (n.) *சோற்றுப்பு*; common salt generally extracted from sea-water and used with food (சா.அக.).

[அப்பு + உப்பு. அப்பு = நீர்.]

**அப்புப்புச்செயனீர்** *appuppu-c-ceyanir*, பெ. (n.) *பிண்ட வுப்புச் செயனீர்*; a liquid obtained from the salt extracted from the foetus (சா.அக.).

**அப்புப்போடு-தல்** *appu-p-pōḍu-*, 19 செ.குன்றா வி. (v.t.) *வாங்கின கடனைத் தீர்க்காது ஏமாற்றுதல்* (இ.வ.); to deceive by evading or denying repayment of debt (Loc.). அவன் ஐம்பது உருபா அப்புப் போட்டுக்கொண்டான்.

[தெ. அப்பு = கடன். போடுதல் = வாயிற் போட்டுக்கொள்ளுதல், கவர்ந்துகொள்ளுதல், தனக்குப் பயன்படுத்திக்கொள்ளுதல்.]

**அப்புபூதவாதிமதம்** *appu-pūda-vādi-madam*, பெ. (n.) *அப்பு என்னும் பூதமே பரம்பொருள் என்று கொள்வோன் மதம்* (த.நி.போ. 280); the religion of one who holds that the element water is the Supreme Being.

**அப்புமேழி** *appu-mēḻi*, பெ. (n.) *வயல் உழுதற் குரிய மேழிவகை*; a kind of plough.

[அப்பு = நீர், நீருள்ள வயல். மேழி = கலப்பையின் கைப்பிடி அல்லது மேற்பகுதி. ஒருகா. மேலி → மேழி.]

**அப்புரா** *appurā*, பெ. (n.) *பாதிரி*; trumpet flower tree, *Bignonia chelonoides* (சா.அக.).

**அப்புருவம்** *āpp(u)-uruvam*, பெ. (n.) 1. *உப்பு*; salt. 2. *நவச்சாரம்*; salammoniac, Ammonium hydrochlorate (சா.அக.).

[அப்பு + உருவம்.]

**அப்புலிங்கத்தலம்** *appu-linga-t-talam*, பெ. (n.) *இலங்கம் (இலிங்கம்) நீர் வடிவாக வுள்ள திருவானைக்காவல்* (திருவானைக். மூர்த்தி. 3); *Tiruvānaikkāval*, where the linga in the shrine represents the element, water.

[அப்பு + லிங்கம் + Skt. sthala > த. தலம் (இடம்).]

**அப்புலிங்கம்** பார்க்க; see *appu-lingam*.

**அப்புலிங்கம்** *appu-lingam*, பெ. (n.) *ஐம்பூதங்களையும் நிகர்க்கும் ஐந்திலங்கங்களுள் ஒன்றானதும், திருவானைக்காவிலுள்ளதுமான நீரிலங்கம்*; Linga in the shrine at *Tiruvānaik-kāval*, as representing the element water, one of the *pañja lingams* which represent the five elements.

[அம் → அம்பு → அப்பு = நீர். இலக்கு → இலக்கம் = குறி. இலக்கம் → இலங்கம் → இலிங்கம் → லிங்கம் (கொச்சை) > **Skt.** linga. ஒ.நோ : அர் → அரங்கு → அரங்கம் → ரங்கம் (கொச்சை) > **Skt.** ranga. உல் → உர் → அர் → அரத்தம் → ரத்தம் (கொச்சை) > **Skt.** rakta. மாவிலிங்கம் (மரம்) என்பது மாவிலங்கம் என்று வழங்குதலையும் நோக்குக.]

சிவமதம் குமரிநாட்டில் தோன்றிய தூய தமிழ மதம். அம்மையப்பர் வழிபாடு போன்றே இலிங்க வழிபாடும் அங்குத் தோன்றியதாகும். உருத்திரன் என்னும் ஆரியச் சிறுதெய்வத்திற்கும் சிவன் என்னும் தமிழ இறைவனுக்கும், எத்தகைத் தொடர்புமில்லை. வேத ஆரியர், வட இந்தியச் சிவநெறியாரை ஆண்குறித் தெய்வ வணக்கத்தார் (சிசிநதேவ) என்று முதற்கண் பழித்து வந்தனர். தமிழரது சிவமதம் மிகமிகவுயர்ந்த தென்று கண்ட பின்னரே, அவர் அதைத் தழுவலாயினர். இலங்கம் (லிங்கம்) என்னும் தென்சொல்லை வடசொல் லென்பது, தமிழரது சிவமதத்தை ஆரிய மதம் என்பது போன்றதே.

**அப்புவின் கூறு** *appuvin-kūṟu*, பெ. (n.) (சிவ.) *புறநிலைக்கருவியின் 11 வகைகளுள் ஒன்றாவனவும், நீர் என்னும் பூதத்தின் கூறாவனவுமான சிறுநீர், அரத்தம், விந்து, மண்டைமூளை, எலும்புமூளை என்பன* (சிவப். கட்.); (Śaiva.) categories which partake of the nature of the element water, five in number, viz., urine, blood, semen, brain, marrow, one of 11 divisions of *puranilaikkaruvi* (சா.அக.).

உடம்பிலிருக்கும் நீர்ப்பாகங்கள், அதாவது சிறுநீர், அரத்தம், சுக்கிலம் (வெள்ளை) முதலியன; the liquid portion of the body, viz., urine, blood, semen, etc. (சா.அக.).

**அப்புளண்டம்** *appuḷaṇḍam*, பெ. (n.) *தகரை* (மலை.); fetid cassia (செ.அக.). *தகரைச் செடி*; ringworm plant, *Cassia tora* (சா.அக.).


அத்தான் (முடக்கொற்றான்)


அத்தீர் (குழித்தாமரை)


அத்தி (நாட்டத்தி)


அதிகமரிச்சம்


அப்பன்காளை


அப்புக்குட்டி

**அப்புளாகாசம்** *appuḷāgāšam*, பெ. (n.) **வேரில்லாக் கொத்தான்**; princess hair, moss creeper, *Cassytha filiformis* (சா.அக.).

**அப்புறக்கடல்** *a-p-puṟa-k-kaḍal*, பெ. (n.) பெரும்புறக்கடல்; the mythical outermost sea. "அப்புறக்கட லுஞ்சுவை யற்றன" (கம்பரா. யுத்த. சேது. 61).

*[அ + புறம் + கடல்.]*

**அப்புறத்தையோட்டிவைத்தான்** *appuṟattai-y-ōṭṭi-vaittāṉ*, பெ. (n.) **காசுக்கட்டி**; a brown-red colouring matter obtained from areca-nut, Areca red, Arecin (சா.அக.).

*[அப்புறம் + அத்து (சாரியை) + ஐ (2ஆம் வே.உ.) + ஒட்டி + வைத்தான்.]*

**அப்புறப்படுத்து-தல்** *appuṟa-p-paḍuttu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **இடத்தைவிட்டு அகற்றுதல், வேறிடத்திற்குக் கொண்டுபோய் வைத்தல்**; to remove, send away.

*[அப்புறம் = அந்தப் பக்கம். படுதல் (த.வி.) = அமர்தல், சேர்தல். படுத்துதல் (பி.வி.) = சேர்த்தல், இடுதல், வைத்தல்.]*

**அப்புறம்** *a-p-puṟam*, பெ. (n.) **அந்தப் பக்கம்**; that side. —, கு.வி.எ. (adv.) 1. **அதன்பின், மேற்பட்டு**; then, after that, thenceforward, furthermore. 2. **சற்றுநேரங் கழித்து**; after sometime, a little later. அப்புறம் வா, தருகிறேன் (உ.வ.). 3. **மற்றைப் பக்கம்**; the other side. "அப்புற வுலகி லுள்ளார் அறிந் திட யானே சென்று செப்புவ னென்பான் போல" (கந்தபு. உற்பத். தேவகிரிப். 3). 4. **வெளிப்பக்கம்**; the outside. "சுற்ற மப்புற நிற்க" (கம்பரா. அயோத். குகப். 10).

ம. அப்புறம்; க. அப்பர; து. அபர; **Nep.** apar; **Skt.** apara.

*[அ + புறம்.]*

**அப்பூச்சி** *appūcci*, பெ. (n.) **ஒளிந்துநின்று திடுமென்று தோன்றி மகிழ்விக்கும் விளையாட்டு**; a game in which one hides and then makes a sudden appearance thus causing a pleasant surprise, bo-peep.

தெ. அப்பச்சி

*[ஒருகா. இராவேளையில் விளக்கு வெளிச் சத்தில் விட்டிற்பூச்சிகள் திடுமென்று தோன்றித் திடுமென்று மறைவதை யொத்த சிறுபிள்ளைகள் விளையாட்டா யிருக்கலாம். 'அ' என்பது ஒரு முன்னொட்டாகவோ (pref.) 'அம்' என்னும் சொற்சிதைவாகவோ இருக்கலாம்.]*

**அப்பூச்சிகாட்டு-தல்** *a-p-pūcci-kāṭṭu-*, 5 செ.கு. வி. (v.i.) **கண்ணிதழை மடித்துச் சிறு பிள்ளைகளை அச்சுறுத்துதல்**; to frighten children by the ghastly look of eyes with eyelids folded inside out. "அத்தூதன் அப் பூச்சி காட்டுகின்றான்" (திவ். பெரியாழ். 2.1:1).

*[பூச்சி = அச்சம், அஞ்சத்தக்க வுருவம். 'அ' முன்னொட்டு.]*

**அப்பூதி** *appūdi*, பெ. (n.) **அப்பூதியடிகள்**; name of a canonized Šaiva saint. "ஒருநம்பி அப்பூதி" (தேவா. 7.39:4).

**அப்பூதியடிகள்** *appūdi-y-aḍigaḷ*, பெ. (n.) **அப்பூதியடிகள் நாயனார்** பார்க்க; see *appūdi-y-aḍigaḷ-nāyaṉār*.

**அப்பூதியடிகள் நாயனார்** *appūdi-y-aḍigaḷ-nāyaṉār*, பெ. (n.) **திருநாவுக்கரசு நாயனார் காலத்தவரும், அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவருமான சிவனடியார்** (பெரியபு.); name of a canonized Šaiva saint, contemporary of *Tirunāvukkarašu Nāyaṉār*, one of the 63 *Nāyaṉārs*.

*[அப்பூதி + அடிகள் + நாயனார்.]*

**அப்பை** *appai*, பெ. (n.) 1. **அப்பைக்கோவை** பார்க்க; see *appai-k-kōvai* (பாலவா. 347). 2. **கொன்றை**; common cassia, *Cassia fistula* (சா.அக.). 3. **சரக்கொன்றை**; Indian laburnum. 4. **கற்கோவை**; a plant, *Bryonia epigea*. 5. **ஒரு சிறு கடல்மீன்**; a marine fish, brownish, attaining more than one foot in length, *Monocanthus monoceros*.

**அப்பைக்காய்** *appai-k-kāy*, பெ. (n.) **கொவ்வைக் காய்**; the unripe fruit of a climbing plant, *Bryonia* (சா.அக.). "அப்பைக்காய் நெய் துவட்ட லாக்கினாள்" (தனிப்பா. தி. 1, பக். 39).

**அப்பைக்கிழங்கு** *appai-k-kiḻaṅgu*, பெ. (n.) **அப்பைக்கோவைக்கிழங்கு**; the root of a climber, *Bryonia rostrata* (சா.அக.).

*[அப்பை + கிழங்கு.]*

**அப்பைக்கொடி** *appai-k-koḍi*, பெ. (n.) **அப்பைக் கோவை** பார்க்க; see *appai-k-kōvai*.

*[அப்பை + கொடி.]*

**அப்பைக்கொவ்வை** *appai-k-kovvai*, பெ. (n.) *அப்பைக்கோவை* பார்க்க; see *appai-k-kōvai*.

**அப்பைக்கோவை** *appai-k-kōvai*, பெ. (n.) **ஓர் இவர்கொடி** (மலை.); a climber, *Bryonia rostrata*.

*[அப்பை + கோவை.]*

**அப்பைக்கோவைக்கிழங்கு** *appai-k-kōvai-k-kiḻangu*, பெ. (n.) *அப்பைக்கிழங்கு* பார்க்க; see *appai-k-kiḻangu*.

*[அப்பை + கோவை + கிழங்கு.]*

**அப்பைச்சுருக்கி** *appai-c-curukki*, பெ. (n.) **சிறு கீரை**; a kind of vegetable greens, *Amaranthus campestris* (சா.அக.).

*[அப்பை + சுருக்கி.]*

**அப்பொழுது** *a-p-poḻudu*, கு.வி.எ. (adv.) 1. *அந்தக் காலத்தில், அந்த நேரத்தில்*; then, at that time. ''அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா'' (கம்பரா. அயோத். கைகேயிசூழ். 112). 2. *அப்படி யானால்*; then, if so, in that case.

ம. அப்பொழுது; க. ஆவொத்து; தெ. அப் ரொத்து, அப்புடு; து. ஆபொலே; பட. ஆக; பர்., கோண். அப்பொடு; கொலா. அபுடு; கை. அபோ; நா. அபுர்.

*[அ + பொழுது.]*

**அப்பொழுதை** *a-p-poḻudai*, கு.பெ.எ. (adj.) *அந் நேரத்திற்குரிய*; of that time. ''அப் பொழுதைத் தாமரைப்பூக் கண்பாதம்'' (திவ். திருவாய். 2. 5 : 4). அப்பொழுதை நிலைமை சரியாயில்லை (உ.வ.).

*[அ + பொழுதை.]*

**அப்பொழுதைக்கு** *a-p-poḻudaikku*, கு.வி.எ. (adv.) *அந்த நேரத்திற்கு*; for that time.

*[அ + பொழுதைக்கு.]*

**அப்போது** *a-p-pōdu*, கு.வி.எ. (adv.) 1. *அன்று, அந்த நேரத்தில்*; then, at that time. 2. *அப் படியானால்*; then, if it be so. அப்போது நாம் திரும்பி வந்துவிடலாம் (உ.வ.).

ம. அப்போது; க., பட. ஆக.

*[அ + பொழுது → போது.]*

**அப்போதைக்கப்போது** *a-p-pōdaikk(u)-a-p-pōdu*, கு.வி.எ. (adv.) 1. *அவ்வக் காலத்தில்*; from time to time. 2. *அன்றன்று, உடனுக்குடனே*; then and there, forthwith.

*[அ + பொழுதைக்கு + அ + பொழுது – அப் பொழுதைக்கப்பொழுது → அப்போதைக்கப் போது.]*

**அப்போழ்து** *a-p-pōḻdu*, கு.வி.எ. (adv.) *அன்று, அந்த நேரத்தில்*; then, at that time.

ம. அப்போழ்

*[அ + பொழுது – அப்பொழுது → அப் போழ்து. பொழுது → போழ்து.]*

**அபயலை** *abayalai*, பெ. (n.) **இலாமிச்சை** (தைலவ. தைல. 34); cuscus grass, *Andropogon muricatus*.

**அபலம்** *abalam*, பெ. (n.) **திமிங்கிலம்** (வை.மூ.); whale.

**அபலி** *abali*, பெ. (n.) **வெண்கடுகு** (பச்.மூ.); white mustard, *Brassica alba*.

**அபின்னை** *abinnai*, பெ. (n.) *திருமாலினின்று பிரிக்கப்படாத திருமகள்*; *Tirumagaḷ*, the Goddess of wealth inseparable from *Tirumāl* (Viṣṇu.). 'ஸ்ரீ எனப்படும் லக்ஷ்மி, விஷ்ணு விடம் அபின்னையாக (பிரிக்க முடியாத வளாக) இருக்கின்றாள் என்பதைக் காட்டும்' (சி. செ. பக். 133).

*[அ (எ.ம.முன்.) + பின்னை. பிள் → பில் → பின் → பின்னை. பிள்ளுதல் = பிளவுபடுதல், வேறுபடுதல், பிரிக்கப்படுதல்.]*

**அம்**[1] *am*, பெ. (n.) **நீர்**; water. ''அந்தாழ் சடையார்'' (வெங்கைக்கோ. 35).

*[உம்முதல் = கூடுதல். உம் → அம். அம்முதல் = கலத்தல்.]*

ஐம்பூதங்களுள், தன்னொடு தானும் பிறி தொடு தானும் மிகவொன்றிக் கலக்கக் கூடியது நீர் ஒன்றே.

''நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்''
(குறள், 452),

''செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே''
(குறுந். 40)

என்பன கவனிக்கத்தக்கன.

**அம்**[2] *am*, பெ. (n.) *அழகு*; beauty, prettiness. ''கிஞ்சுகவா யஞ்சுகமே'' (திருவாச. 19 : 5).

*[இயற்கை யழகெல்லாம் நீர்வளத்தா லுண்டாவதால், அம் என்னும் நீர்ப்பெயர் அழகு பொருள் பெற்றிருக்கலாம்.]*

**அம்**[3] *am*, இடை. (part.) I. *பெயரீறு*; n. suff. 1. *ஒரு வினைமுதற்பொருளீறு*; suff. denoting the agent or subject of the action expressed by a verb. *எ-டு: எச்சம் = எஞ்சுவது, எஞ்சி நிற்பது.* 2. *ஒரு கருவிப்பொருளீறு*; suff. denoting the instrument. *எ-டு: அரம் = அராவுங் கருவி, அரம்பம் = அரம்பும் (அராவி யறுக்கும்) கருவி.* 3. *ஒரு செயப்படுபொருளீறு*; suff. denoting the object of the action expressed by a verb. *எ-டு: நீத்தம் = நீந்தப்படும் வெள்ளம், பாடம் = படிக்கப்படும் செய்தி அல்லது பொருள்.* 4. *ஒரு தொழிற்பெயரீறு*; vbl.n. suff. *எ-டு: ஓட்டம், ஆட்டம்.* 5. *ஒரு பண்புப்பெயரீறு*; an abs. n. suff. *எ-டு: நீலம், நிறம்.* 6. *ஒரு நாட்டுப்பெயரீறு*; suff. of a n. denoting a country. *எ-டு: கலிங்கம், நிடதம்.* 7. *ஒரு மொழிப்பெயரீறு*; suff. of a n. denoting a language. *எ-டு: ஆங்கிலம், திரவிடம்.* 8. *ஓரினத்தாரின் நாகரிக அல்லது பண்பாட்டுப் பெயரீறு*; suff. of a n. denoting the civilization or culture of a nation or race. *எ-டு: தமிழம்.* 9. *ஒரு பெருமைப் பொருட் பின்னொட்டு*; an aug. suff. *எ-டு: நிலை → நிலையம், மதி → மதியம் (முழுநிலா), விளக்கு → விளக்கம்.* 10. *ஒரு சொற்றிரிவீறு*; a derivational suff. *எ-டு: மதி → மாதம், வட்டு → வட்டம்.* II. *வினையீறு*; vbl. ending. *தன்மைப் பன்மையீறு*; ending denoting the 1st pers. pl. *எ-டு: செய்தம், செய்தனம்; பெரியம், பெரியனம்.* III. *சாரியை*; euphonic augment. *எ-டு: புளி + காய் — புளியங்காய், புளி + மரம் — புளியமரம்.* IV. *அசைநிலை*; expletive. *எ-டு: போமின் → போமினம் (சீவக. 1411).*

**அம்பகம்**[1] *ambagam*, பெ. (n.) *எழுச்சி* (சது.); elevation.

*[எம்புதல் = எழுதல். எம்பு → எம்பகம் → அம்பகம்.]*

எழும்பு → எம்பு என்று கொள்ளவும் இடமுண்டு. ஆயின் எஃகு, எக்கு, எங்கு, எஞ்சு, எட்டு, எவ்வு, எழு, ஏண், ஏத்து, ஏந்து, ஏப்பம், ஏர், ஏல், ஏறு என ஏறத்தாழ எல்லா மெய்களையும் பிற்கொண்டு எழுச்சி குறித்த எகர ஏகார முதற்சொற்கள் தொன்று தொட்டு வழங்கிவருவதால், எம்பு என்பது ஒரு தனிச்சொல் என்றே கொள்ளப்படும்.

**அம்பகம்**[2] *ambagam*, பெ. (n.) *இசைவுமொழி, உத்தரவு*; permission, leave.

தெ. அம்பகமு

*[ஒம்புதல் = இசைதல், மணங்கொள்ளுதல். ஒம்பு → ஒம்பகம் → அம்பகம்.]*

மனத்திற்கு ஒம்பவில்லை என்பது உலக வழக்கு.

**அம்பகம்**[3] *ambagam*, பெ. (n.) *சேம்பு* (பச்.மூ.); Indian kales, *Colocasia antiquorum* (செ.அக.)— a garden plant, *Caladium esculentum* (சா.அக.).

**அம்பகம்**[4] *ambagam*, பெ. (n.) *நடிகர் கூலி* (யாழ்ப்.); pay of an actor in a play (J.).

**அம்பகம்**[5] *ambagam*, பெ. (n.) *செம்பு* (மூ.அ.); copper.

**அம்பகன்** *ambagan*, பெ. (n.) *ஒரு கனிய நஞ்சு (சீர்பந்த பாடாணம்)* (மூ.அ.); a mineral poison.

**அம்படம்** *ambaḍam*, பெ. (n.) *ஆடுதின்னாப் பாளை* (மலை.); a worm-killer (செ.அக.) — *ஆடுதின்னாப்பாலை*; a worm-killer, *Aristalachia bracteata* (சா.அக.).

*சங்க அகராதியில்* இச் சொற்குப் புழுக் கொல்லி என்று வேறொரு பொருள் குறிக்கப் பட்டுள்ளது. அது ஆங்கிலப் பெயரின் மொழி பெயர்ப்பாகவோ ஆடுதின்னாப்பாளையின் மறுபெயராகவோ இருப்பினும் இருக்கலாம்.

**அம்படலம்**[1] *ambaḍalam*, பெ. (n.) *அம்மி*; grinding stone (அக.நி.).

**அம்படலம்**[2] *ambaḍalam*, பெ. (n.) 1. *இதள் (பாதரசம்)*; mercury (அக.நி.). 2. *ஈயம்*; lead. 3. *வெள்ளி*; silver. 4. *வெளி*; open space.

**அம்படலம்**[3] *ambaḍalam*, பெ. (n.) 1. *மரக்கால்*; a grain measure varying in different places, from 4 to 8 *paḍis* (அக.நி.). 2. *ஓடம், மரக்கலம்*; boat, ship (அக.நி.). 3. *தேர்*; car, chariot (சங்.அக.).

**அம்படலம்**[4] *ambaḍalam*, பெ. (n.) *வாழை*; plantain tree, *Musa paradisiaca* (சா.அக.).

**அம்பணத்தி** *ambaṇatti*, பெ. (n.) *காளி, துர்க்கை* (பிங்.); *Kāli*, Durga.

*[அம்பணம் = மரக்கால். அம்பணத்தின்மேல் நின்றாடியவள் அம்பணத்தி. அம்பணம் + அத்து (சாரியை) + இ (பெயா. ஈறு).]*

"அம்பண வளவைய ரெங்கணுந் திரிதர" (சிலப். 14 : 209). பதினோராடல்களுள் ஒன்றான மரக்கால், காளியாடியது. 'கடைய மயி ராணிமரக் கால்விந்தை', 'மாயவ ளாடன் மரக்கால்' (சிலப். 3 : 14, அடியார்க். உரை). காளி அவுணரென்னும் அசுரரை வென்று மரக்கால்மேல் நின்றாடிய வெற்றிக் கூத்து மரக்கால் எனப்பட்டது.

"ஆய்பொன் னரிச்சிலம்புஞ் சூடகமு
மேகலையு மார்ப்ப வார்ப்ப
மாயஞ்செய் வாளவுணர் வீழநங்கை மரக்
கான்மேல் வாளமலை யாடும்போலும்"
(சிலப். 12, கூத்துள்படுதல்).

**அம்பணம்**[1] *ambaṇam*, பெ. (n.) 1. *நீர்* (சது.); water. 2. *நீர்விழுங் குழாய்*; water - pipe. "கிம்புரிப் பகுவா யம்பண நிறைய" (நெடு நல். 96). 3. *வாழை* (பிங்.); plantain tree, *Musa paradisiaca*. 4. *வாழைத் தண்டு* (நாநார்த்த.); stem of the plantain tree. 5. *ஊறுகாய்*; pickles (சா.அக.). 6. *வாய்* (அக.நி.); mouth.

*[அம் = நீர். அம் → அம்பு → அம்பணம் = நீர், நீருள்ள பொருள். அணத்தல் = பொருந்து தல். அண → அணம்.]*

**அம்பணம்**[2] *ambaṇam*, பெ. (n.) 1. *மரக்கால்*; a grain measure. "அம்பண வளவைய ரெங் கணுந் திரிதர" (சிலப். 14 : 209). பாலி. அம்பண. 2. *மரக்கலம்* (அக.நி.); ship, boat. 3. *துலாக்கோல்* (அக.நி.); beam of scales, balance. 4. *ஆமை* (அக.நி.); tortoise. 5. *ஒரு வகை யாழ்*; a kind of lute. "அம்பண கரதலி" (திருப்பு. 129).

ம. அம்பணம்

*[அம்பு = வட்டம், வளையல். அம்பு + அணம் (ஈறு) – அம்பணம் = வட்டமான பொருள்.]*

பரிசல்போல் வட்டமான படகும் கப்பலும் இருந்திருத்தல் வேண்டும். வங்கம் என்னும் கப்பற் பெயர் வட்டமானது என்னும் பொருளதே.

துலாக்கோலின் தட்டு வட்டமானது. குழிந்த தட்டு ஆமையோட்டு வடிவினது.

ஒற்றை நரம்புச் சுரையாழின் பத்தர் சுரைக்குடுக்கையாற் செய்யப்படுவது. அது வடிவில் ஒரளவு ஆமை யொத்தது. சித்தார் என்னும் நரப்புக்கருவியின் பத்தர் சுரைக் குடுக்கையாற் செய்யப்படுவதே. பண்ணிசைத்தற் கேற்ற பெருஞ்சித்தாரின் பத்தர், அகன்று சப்பையான சுரைக்குடுக்கையாற் செய்யப்படும். அதனால் அத்தகையதற்குக் கச்சுவா என்று பெயர். கச்சபம் (வ. கச்சப)= ஆமை. கச்சப வடிவான பத்தர்கொண்ட சித்தார் கச்சுவா.

பண்டை யாழ்வகைகளுள் ஒன்று ஆமை யாழ். அதுவே அம்பணம் என்று பெயர் பெற்றிருத்தல் வேண்டும். கச்சுவா என்பது அதன் மொழிபெயர்ப்பே.

**அம்பணம்**[3] *ambaṇam*, பெ. (n.) பவளம் (அக.நி.); coral.

*[அம்பகம் = செம்பு (copper), சிவப்பான மாழை (உலோகம்). ஒருகா. அம்பு → அம்பணம்.]*

**அம்பணவர்**[1] *ambaṇavar*, பெ. (n.) **ஆமையாழ்ப் பாணர், பாணர்**; an ancient caste of musicians who played on a kind of lute called *āmaiyāḻ*.

*[அம்பணம் = ஆமை, ஆமையாழ். அம்பணம் → அம்பணவன் → அம்பணவர்.]*

**அம்பணவர்**[2] *ambaṇavar*, பெ. (n.) கி.பி. 2ஆம் நூற்றாண்டில், வேதம் ஓதாது இசைத் தொழிலை மேற்கொண்டு வேறுபிரிந்து தனிக் குடியிருப்பில் வதிந்த தமிழ்நாட்டுப் பிராமணக் கூட்டத்தார்; a sect of Brāhmins of Tamil Nadu, who gave up reciting the Vēdas, took to practising music and so moved into separate residential colonies in second century A.D. "வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப் புரிநூன் மார்பர்" (சிலப். 13 : 38-9).

*[பண் → பண்ணவன் = பாணன். பண்ணவன் → பணவன். அம் (அழகிய) + பணவன் – அம்பணவன் → அம்பணவர்.]*

**அம்பணவர்**[3] *ambaṇavar*, பெ. (n.) *பாணர், சிறப்பாக யாழ்ப்பாணர்*; an ancient caste of musicians, especially lute players.

"......... ............ ......ஆங்கு
ஆடியல் கொள்கை யந்தரி கோலம்
பாடும் பாணரிற் பாங்குறச் சேர்ந்து"

என்னும் சிலப்பதிகார அடிகட்கு (13 : 103-105), அடியார்க்குநல்லார், 'அவ்விடத்துத் துர்க்கையது வெற்றிபொருந்திய அசுரரோடு பொருத போர்க்கோலத்தைப் பாடும் பாட்டாண்மையை யுடைய அம்பணவரில்

தானுமொருவனாகக் கலந்து' என்று உரை வரைந்திருத்தல் காண்க.

[அம்பணம் = ஆமை, மரக்கால். ஆமை அல்லது மரக்கால் போன்ற குடத்தையுடைய யாழ். அம்பணம் → அம்பணவர் = ஆமை வடிவ யாழைக்கொண்ட பாணர்.]

**அம்பதை** *ambadai*, பெ. (n.) கள் (திவா.); toddy.

**அம்பர்**[1] *ambar*, கு.வி.எ. (adv.) அங்கே, அவ்விடம்; yonder, there. "அம்பர்ப் பருந்துபட" (பெரும்பாண். 117).

[ஆ → அ → அம் → அம்பு → அம்பர்.]

**அம்பர்**[2] *ambar*, பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற ஓர் ஊர்; name of a village of historical importance in Thanjāvūr district. "அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்" (தேவா. 7.39 : 5).

**அம்பர்**[3] *ambar*, பெ. (n.) ஒருவகைப் பிசின்; amber, a fossil resin, *succinite* (செ.அக.).

ம. அம்பர்; தெ. அம்பரமு, அம்பரு.

**U., Ar.** *ambar;* **L.** *ambra*; **OF.** *ambre*; **ME., E.** *amber.*

*அம்பர்*, பொன்னம்பர் அல்லது கற்பூரமண். இது தேவமரம் (தேவதாரு) முதலிய மரங்களின் பிசின்; தானாகவே உறைந்து நிலத்திற்குள் அமைந்தது. இது சுண்ணாம்பு நிலத்தில் விளைந்த மரத்தின் பிசினாகையால், இதற்குத் தமிழில் 'கற்பூ' என்றும், துலுக்கு மொழியில் 'கற்பா' என்றும் பெயர். சப்பான் நாட்டில் இதை 'நம்பு' என்று சொல்வதுண்டு. இக் கற்பூவை மணியாகச் செய்வதால், இதற்குக் கற்பூரமணி யென்றும் பெயர் வழங்கும். இது தக்கண தேசத்தில் நேர்த்தியானதாய் அகப்படும். ஆனால், மிக அரிது. சில சமையம் திருவாங்கூர், ஆசாம் முதலிய இடங்களிலுங் கிடைக்கும். இது மிகுதியாய்ச் சீனம், சப்பான் நாடுகளினின்றும் இறக்குமதியாகிறது. இது மஞ்சளாயும் கெட்டியானதாயும் ஒடியுந் தன்மை வாய்ந்ததாயுமிருக்கும். இதைத் தேய்ப்பதனால் மின்னாற்றல் உண்டாகும். இதை யொத்த ஒரு பிசின் அண்மையில் சிசிலியில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

இதில் பலவகைக ளிருப்பினும், கசகசா அம்பர், வெள்ளம்பர், கருப்பம்பர் முதலியவை தாம் முதன்மையானவை; amber, a yellowish fossil resin. It is the gum of several species of coniferous trees chiefly pine (deodar) which grew during the Cretaceous Period of the geologists. It is known as 'stone flower' in Tamil, as the tree that yields this resin usually grows in limestone soils. It is termed 'karbah' in Hindustani and 'nambu' in Japan. As this resin is made into beads, it is also known as Camphor beads — *Succinum* or *electrum.*

Amber of a fine quality is found in the Deccan, but it is very rare. It is occasionally met with in Travancore and Assam. It is generally imported from Japan and China. It is a yellow hard but brittle substance almost transparent with an aromatic odour. When rubbed with silk it produces electricity. A similar resin has been recently found in Sicily.

There are different varieties of amber:

1) Poppy amber which is a little dark in colour.
2) White amber of a lighter shade.
3) Black amber of a black colour.

*amber*, n. yellow translucent fossil resin, found chiefly on S. shore of Baltic.

**(ME. f. OF.** *ambre,* or med. **L.** *ambra*) — (C.O.D.)

**அம்பர்**[4] *ambar*, பெ. (n.) ஓர்க்கோலை; ambergris a morbid secretion of the liver or intestines of the spermaceti whale (செ.அக.) — திமிங்கிலத்தின் ஈரலில் அல்லது மணிக்குடலில் உண்டாகும் சத்து. இதற்கு மீனம்பர் என்று பெயர்; substance excreted from the liver or the small intestines of the sperm whale, ambergris. (சா.அக.).

"ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம்
வெண்முத்தம்
நீர்ப்படு முப்பினோ டைந்து"
(சிலப். 10 : 107, அடியார்க். உரை).

இது ஒக்கோலை யெனவும் படும்.

"பவள முத்துச் சங்கொக் கோலை
யுப்புக் கடல்படு திரவிய மைந்தே"
(பிங். 3 : 86).

*ambergris*, n. wax-like substance found floating in tropical seas, and in intestines of sperm-whale, odoriferous and used in perfumery, formerly in cookery.

(late ME., f. OF. *ambre gris*, grey amber) — (C.O.D.)

*[கடலில் மிதப்பதாகச் சொல்லப்படுவதனால், ஒருகா. அம்பு (கடல்) → அம்பர்.]*

**அம்பர்**[5] *ambar*, பெ. (n.) 1. *இரும்புத்துரு, மணற்சத்து முதலிய பொருள்கள் சேர்ந்த இயற்கை மண். இது சாயத்திற்குதவும்*; a natural earth containing chiefly manganese, iron oxide, and silica. It is used as a pigment, umber. 2. *கருப்பு அம்பர்*; fossilized resin of the black poplar (சா.அக.).

**அம்பர்கிழானருவந்தை** *ambar-kiḻāṉ-aruvandai*, பெ. (n.) *திவாகர நிகண்டு தொகுப்பித்தோன்* (திவா. இறுதிக்கட்டுரை); *Aruvandai*, chief of Ambar, under whose auspices the *Tivāgaram* was compiled.

*[அம்பர் = ஒரூர். கிழவன் → கிழான் = தலைவன். அருவன் + தந்தை — அருவந்தை.]*

**அம்பர்மாகாளம்** *ambarmāgāḷam*, பெ. (n.) *ஒரு திருநகர்*; a shrine.

**அம்பரத்தவர்** *ambarattavar*, பெ. (n.) தேவர்; celestials. ''அம்ப ரத்தவ ருடன்று சீறினுமொ ரம்பிலே யழிவர்'' (பாரத. கிருட். 135).

*[அம்பரம் = தேவருலகம். அம்பரம் + அத்து (சாரியை) + அவர் (ப.பா. ஈறு).]*

**அம்பரம்**[1] *ambaram*, பெ. (n.) 1. *தேவருலகம்*; celestial world. 2. *உயர்ந்த வானவெளி, காயம் (ஆகாயம்)*; sky, atmosphere, ether. ''அம்பர மனல்கால்'' (திவ். பெரியதி. 1.8 : 8). 3. *திசை*; point of the compass. ''விஞ்ச வம்பர மேவிய போதினும்'' (ஞானவா. தாம வியான. 21).

ம. அம்பரம்; க., து. அம்பர; தெ. அம்பரமு; பட. அம்பார் (மேலே); பாலி. அம்பர; **Skt.** ambara.

*[உ → உம்பு → உம்பர் = மேல், மேலுலகம், தேவர், தேவருலகம். உம்பர் → உம்பரம் = தேவருலகம். உம்பரம் → அம்பரம்.]*

**அம்பரம்**[2] *ambaram*, பெ. (n.) *கடல், வாரி*; sea, ocean. ''எரிகணை யேவ வம்பர முற்றது'' (பாரத. பதினான். 93).

*[அம் = நீர். அம் → அம்பு = நீர், கடல். அம்பு → அம்பரம்.]*

**அம்பரம்**[3] *ambaram*, பெ. (n.) 1. *அம்பர்* (நாநார்த்த.); ambergris, a fragrant substance. தெ. அம்பரமு. 2. *(அம்பர் நிறமுள்ள) மஞ்சள்*; turmeric. ''அம்பரமும் பொன்னு மணிக்கோடும் பொருந்தி'' (மான்விடு. 70). 3. *(அம்பர் மணம் போன்ற) நறுமணம்*; perfume (சா.அக.).

ம. அம்பரி; க. அம்பர.

*[அம்பரம் (மஞ்சள்) >* **Skt.** ambara. *அம்பர் → அம்பரம்.]*

**அம்பர்**[4] பார்க்க; see *ambar*[4].

**அம்பரம்**[4] *ambaram*, பெ. (n.) 1. *ஆடை*; clothes, apparel, garment. ''அம்பரமே தண்ணீரே சோறே'' (திவ். திருப்பா. 17). 2. *ஆடைக்கு உதவும் பருத்தி* (சங்.அக.); cotton. 3. *சித்திரை நாண்மீன்* (சங்.அக.); the 14th lunar constellation.

ம. அம்பரம்; க., து. அம்பர; தெ. அம்பரமு; **Skt.** ambara.

*[அம்பு = வளையல். ஒருகா. ஆடை உடம்பைச் சுற்றிக் கட்டப்படுவதால் அம்பு எனப் பெயர் பெற்றிருக்கலாம். சித்திரை நாண்மீனுக்கு அறுவை என்பது ஒரு பெயர். அறுவை என்பது ஆடையையுங் குறிக்கும். அம்பரம் என்பதும் அப்பொருள் குறித்தலால் சித்திரைக்குப் பெயராயிற்றுப் போலும்.]*

**அம்பரம்**[5] *ambaram*, பெ. (n.) *அம்பலம், மன்றம்* (நாநார்த்த.); hall, public place.

*[அம்பலம் → அம்பரம்.]*

**அம்பலம்**[1] பார்க்க; see *ambalam*[1].

**அம்பரம்**[6] *ambaram*, பெ. (n.) 1. *காக்கைப் பொன் (அப்பிரகம்)*; mica or talc (சா.அக.). 2. *துயிலிடம்*; sleeping place, bedroom (பிங்.). 3. *கரிசு, தீவினை* (நாநார்த்த.); sin.

**அம்பரமணி** *ambara-maṇi*, பெ. (n.) *கதிரவன்*; the sun, lit., the jewel of the sky.

**Skt.** ambaramaṇi

*[அம்பரம் = வானம். மணி = ஒளிர்கல், மணிபோல் ஒளிவீசுவது.]*

**அம்பரர்** *ambarar*, பெ. (n.) *அசுரர்* (சங்.அக.); the Asuras, a class of super human beings said to have been at war with the gods. ''அம்பர ருயிர்'' (கந்தரந். காப்பு, 2).

*[அம்பரம் = கடல். அம்பரம் → அம்பரர் = கடலிடத் தொரு நகரில் வாழ்ந்தவர் (சங்.அக.).]*

**அம்பரவாணம்** *ambaravāṇam,* பெ. (n.) ***எண் கால் புள்*** (பிங்.); fabulous eight-legged bird.

மறுவ. அம்பாவனம்

**அம்பரான்** *ambaraṉ,* பெ. (n.) ***அம்பரென்னும் திருநகரிலிருக்குஞ் சிவன்;*** Śiva, who has taken abode at Ambar. ''இன்னல் களைவன இன்னம்ப ரான்றன் இணையடியே'' (தேவா. 4.100 : 1).

**அம்பரை** *ambarai,* பெ. (n.) *1. நிமிளை* (மூ.அ.) bismuth (செ.அக.)—a hard mineral of a brass-yellow colour used in the production of sulphur and sulphuric acid, iron pyrites (சா.அக.). *2.* ***பொன்னிமிளை;*** iron pyrites occurring in dark yellow nodules with a golden lustre. *3.* ***வெண்கல நிமிளை.*** இஃது உடம்பிற்கு வலுவை யுண்டாக்கும்; bismuth. It is medicinally a tonic.

**அம்பல்** *ambal,* பெ. (n.) *1.* ***பூ அலர்தற்குச் சிறிது முன்னுள்ள நிலை*** (இறை. 22, உரை); condition of a flower about to blossom. *2.* ***சிலர் கூறும் புறங்கூற்று, அலருக்கு எதிர்;*** slander uttered by a few. ''அம்பலே சிலரறிந் திட்டது புறங்கூற லாகும்'' (சூடா. 10 : 8). *3.* ***சிலரறிந்து தம்முட் கூறும் களவுக் காதற் செய்தி;*** private talk between people concerning love intrigues of others, dist. fr. *alar.* ''அம்பலு மலருங் களவுவெளிப் படுத்தலின்'' (தொல். பொருள். கள. 49). *4. பழிச்சொல்* (பிங்.); calumny.

*[உம் → அம் → அம்பு. அம்புதல் = குவிதல். அம்பு → அம்பல் = குவிந்துள்ள அரும்பு அல்லது முகை, அலராத அரும்புபோற் பரவாத பழிச் சொல் அல்லது மறைவுச் செய்தி.]*

**அம்பலக்கல்** *ambala-k-kal,* பெ. (n.) ***ஊரவையார் இருந்து ஊராட்சிச் செய்திகளைப் பேசும் ஊர்ப் பொதுமேடைக் கல்*** (இ.வ.); broad stone slab set up as a platform in a village, on which the members of the village committee sit and discuss village matters (Loc.).

*[அம்பலம் + கல்.]*

**அம்பலக்கனி** *ambala-k-kaṉi,* பெ. (n.) ***செங் கொய்யா;*** red guava, *Psidium guava* (*pomiferum*) (சா.அக.).

**அம்பலக்கூத்தன்** *ambala-k-kūttaṉ,* பெ. (n.) ***தில்லைப் பொன்னம்பலத்தில் முத்தொழிற் கூத்தாடுஞ் சிவபெருமான்;*** Śiva, as dancing the dance of triple functions of Godhead, in an open space of *Tillai* (Chidambaram). ''அனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனை'' (தேவா. 5 . 2 : 1).

*[அம்பலம் + கூத்தன்.]*

**அம்பலக்கோடகம்** *ambala-k-kōḍagam,* பெ. (n.) ***கோடகசாலை;*** a kind of plant, *Justicia procumbens.*

**அம்பலகாரன்** *ambala-kāraṉ,* பெ. (n.) *1.* ***ஊரவைத் தலைவன்*** (R.T.); chairman of a village assembly. *2.* ***ஊர்த்தலைவன்;*** headman of a village. *3.* ***கள்ளர், வலையர் பட்டப் பெயர்;*** a caste title of Kaḷḷars and Valaiyars.

ம. அம்பலக்காரன்

*[அம்பலம் + காரன் (உடைமை அல்லது உரிமை குறித்த ஆ.பா. ஈறு).]*

**அம்பலச்சாவடி** *ambala-c-cāvaḍi,* பெ. (n.) ***ஊரவை மண்டபம்;*** public building in a village where village affairs are discussed and settled.

*[அம்பலம் + சாவடி.]*

**அம்பலத்தாடி** *ambalatt(u)-āḍi,* பெ. (n.) ***ஐவகை யம்பலத்தில், சிறப்பாகப் பொன்னம்பலத்தில், முத்தொழில் நடஞ்செய்யுஞ் சிவபெருமான்;*** Śiva, as dancing the dance of triple functions of Godhead in an open space at five places, especially at *Tillai* (Chidambaram). ''புனையு மம்பலத் தாடிபொற் பாதமும் போற்றி'' (சூத. எக்கிய. பூ. 43 : 44).

ம. அம்பலத்தாடி

*[அம்பலம் + அத்து (சாரியை) + ஆடி. ஆடி = கூத்தாடுபவன்.]*

**அம்பலத்தார்** *ambalattār,* பெ. (n.) ***ஊரவையார்;*** members of a village assembly. ''நிலத்தை வலுக்கொண் டம்பலத்தா ரெடுத்துழுது கொண்டார்க ளென்று'' (சரவண. பணவிடு. 185).

*[அம்பலம் + அத்து (சாரியை) + ஆர் (ப.பா. ஈறு).]*

**அம்பலத்தி** *ambalatti,* பெ. (n.) *1.* ***தான்றிமரம்.*** belleric myrobalan, *Terminalia belerica.* *2.* ***தில்லை மரம்;*** blinding tree, spurgewort, *Excoecaria agallocha* (சா.அக.).

**அம்பலத்திற் கட்டுச்சோறவிழ்-த்தல்** *ambalattir-kaṭṭu-c-cōṟavil-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒரு

மறைவுச் செய்தியை ஒரு கூட்டத்திற் சொல்லுதல்; to divulge a secret at a public meeting. 'அம்பலத்தில் பொதி அவிழ்க்க லாகாது' (பழ.).

[அம்பலத்தில் + கட்டுச்சோறு + அவிழ்.]

**அம்பலத்திற்கு வா(வரு)-தல்** *ambalattiṟku-va-*, 18 செ.கு.வி. (v.i.) **மறைவு வெளிப்படுதல்**; to become public, as a secret.

**அம்பலத்தோதிகம்** *ambalattōdigam*, பெ. (n.) **செஞ்சதுரக் கள்ளி**; a red variety of square milk hedge, square spurge, *Euphorbium antiquorum* (சா.அக.).

**அம்பலநாட்டான்** *ambala-nāṭṭāṉ*, பெ. (n.) 1. **ஊர்த் தலைவன்**; headman of a village. 2. **அம்பலகாரன், ஊரவைத் தலைவன்**; chairman of a village assembly. "கிராம முன்சீ பம்பல நாட்டா ரெவர்க்கும்" (பஞ்ச. திருமுக. 380).

**அம்பலம்**[1] *ambalam*, பெ. (n.) 1. **பலர் கூடும் வெளியிடம்**; open space for the use of the public. 'அம்பலக் கழுதை அம்பலத்திற் கிடந்தா லென்ன? அடுத்த திருமாளிகையிற் கிடந்தா லென்ன?' (பழ.). 2. **ஊரவை**; village assembly for transacting village affairs. 'அகதி சொல் அம்பல மேறாது' (பழ.). 3. **கற்றோரவை**; assembly of scholars. 'அரைச்சொல் கொண்டு அம்பல மேறலாமா?' (பழ.). 4. **கூத்துக் காண்போர் இருக்கை**; pit of a theatre. "அம்பலமு மரங்கமுஞ் சாலையும்" (சீவக. 2112). 5. **தில்லையம்பலம்**; Śiva shrine at *Tillai* (Chidambaram). "பாம்பலங் காரப் பரன்றில்லை யம்பலம்" (திருக்கோ. 11). 6. **சித்திரகூடம்** (சங்.அக.); Viṣṇu shrine in Chidambaram. 7. **சிற்றூர் அலுவல் (கிராம உத்தியோக) வகை**; village revenue office. 8. **அம்பலகாரன்**; headman of a village. 9. **கள்ளர், வலையர் பட்டப்பெயர்**; a caste title of Kaḷḷars and Valaiyars.

ம. அம்பலம்; க. அம்பல; து., குட. அம்பில; **Skt.** ambara.

[அம்புதல் = குவிதல், கூடுதல். அம்பு → அம்பல் → அம்பலம் = கூடும் அவை, அவைக் களம்.]

**அம்பலம்**[2] *ambalam*, பெ. (n.) 1. **ஆமை**; tortoise. 2. **புளிமா**; sour mango, *Spondias mangifera*.

**அம்பலமானியம்** *ambala-māṉiyam*, பெ. (n.) **ஊர்த்தலைவன் பயனுகரும் (அனுபவிக்கும்) இறையிலி நிலம்** (W.G.); land held free of tax by the headman of a village, as a perquisite of his office.

**அம்பலமேறு-தல்** *ambalam-ēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **வழக்குத் தொடுக்க அறங்கூறவையத்திற்கு அல்லது வழக்குமன்றத்திற்குச் செல்லுதல்**; to go to court or village assembly. 2. **அவையாரால் ஏற்றுக்கொள்ளப்படுதல்**; to be acceptable to the assembly. 'அகதிசொல் அம்பல மேறாது', 'அம்பலத்தி லேறும் பேச்சை அடக்கம்பண்ணப் பார்க்கிறான்' (பழ.).

[அம்பலம் + ஏறு.]

**அம்பலவரி** *ambala-vari*, பெ. (n.) **இராமநாதபுரம் வேளகத்தில் (சமீந்தாரியில்) சிற்றூரலுவலர் தம் சம்பளவுரிமைக்காகச் செலுத்திய வரி**; tax paid by village officers in the Ramnad Zamindary to keep up their claim to official emoluments or mirasis.

**அம்பலவன்** *ambalavaṉ*, பெ. (n.) **தில்லைச் சிவபிரான்**; Śiva at *Tillai* (Chidambaram). "குவளைக் களத்தம் பலவன்" (திருக்கோ. 33).

[அம்பலம் + அவன் (ஆ.பா. ஈறு).]

**அம்பலவாசி** *ambala-vāśi*, பெ. (n.) 1. **மலையாள நாட்டிற் கோயில்வேலை செய்யும் ஒரு குலம்** (அபி.சிந்.); a caste in Malayalam country rendering service in temples. 2. **அக்குலத்தான்**; a member of that caste.

[அம்பலம் + வாசி. வசிதல் = தங்குதல், வாழ்தல், இருத்தல். வசி → வசி → வாசம் → வாசி. அம்பலவாசி = கோயிலில் தங்கி வேலை செய்பவன்.]

**அம்பலவாண கவிராயர்** *ambala-vāṇa-kavi-rāyar*, பெ. (n.) **அறப்பளீசுர சதகம் என்னும் அறநூலின் ஆசிரியர்**; name of the author of *Aṟappaḷīśura śadagam*, an ethical poem of hundred stanzas.

[அம்பலம் + வாணன். வாழ் → வாழ்நன் → வாணன். **Skt.** kavi + அரசன் → அரைசன் → அரையன் → ராயன் → ராயர். கவிராயர் = பாவரசர், பாவியற்றுவதில் அல்லது செய்யுள் செய்வதில் வல்லவர்.]

**அம்பலவாண தேசிகர்** *ambala-vāṇa-tēśigar*, பெ. (n.) **பண்டார சாத்திரம் என்னும் 14**

சிவக் கொண்முடிபு (சைவ சித்தாந்த) நூல்களுள் பத்தை இயற்றிய திருவாவடுதுறை மடத்துச் சிவத்துறவியார்; name of a Šaiva ascetic of the *Tiruvāvaḍuturai* mutt, author of ten of the fourteen *Šaiva* philosophical works called *Paṇḍāra šāttiram*.

*[அம்பலவாணன் +* **Skt.** dēšika > **த.** *தேசிகன் = குரு.]*

அம்பலவாணன் *ambala-vāṇaṉ*, பெ. (n.) **தில்லையம்பலத்திற் கோயில் கொண்டுள்ள சிவபெருமான்**; Šiva, as the presiding deity at the shrine of *Tillai* (Chidambaram). "ஆயும் புகழ்த்தில்லை யம்பல வாணன்" (பட்டினத். திருத்தில். 9).

*[அம்பலம் + வாணன். வாழ் → வாழ்நன் → வாணன்.]*

அம்பலவேகி *ambala-vēgi*, பெ. (n.) **செஞ்சூரன்** *பார்க்க*; see *šeñjūraṉ*.

அம்பலி[1] *ambali*, பெ. (n.) **ஒரு பழைய தோலிசைக் கருவி**; an ancient drum. "அம்பலி கணுவை யூமை" (கம்பரா. யுத்த. பிரமாத் திர. 5).

**அம்பலி**[2] *ambali*, பெ. (n.) *1.* **களி, சிறப்பாகக் கேழ்வரகுகூழ்;** porridge, esp. of ragi. *2.* **பசை;** a gummy substance (*சா.அக.*). *3.* **முட்டை வெள்ளை** (*ஜாலத். பக். 21*); the white of an egg.

க., தெ. அம்பலி; து. அம்பெலி; கொலா. அம்ப; நா. அம்பால்; பட. அம்பிலி.

அம்பளங்காய் *ambaḷaṅgāy*, பெ. (n.) *1.* **வெடியுப்பைக் கட்டுஞ் சீனதேசத்துக் காய்**; a fruit grown in China, said to consolidate nitre. *2.* **பேரிக்காய்**; Indian apple (*சா.அக.*).

அம்பளாசை *ambaḷāšai*, பெ. (n.) **அகத்தி**; Indian pea-tree, *Sesbania grandiflora* (*சா.அக.*).

அம்பறாத்தூணி *amb(u)-aṟā-t-tūṇi*, பெ. (n.) **அம்புக்கூடு** (பிங்.); quiver, case for arrows.

*[அம்பு + அறு + ஆ (எ.ம. இ.நி.) + தூணி (கூடு). அறா = நீங்காத.]*

**மறுவ.** அம்புக்கூடு, அம்புப்புட்டில், அம்புறைதூணி.



அம்பறாத்தூணி

அம்பறு-த்தல் *amb(u)-aṟu-*, 4 செ.கு.வி. (v.i.) **அம்பைத் தூணியினின்று உருவுதல்**; to draw an arrow out of the quiver. 'அம்பறுத் தெய்ய வேண்டும்படி' (ஈடு, *1.2:7*).

*[அம்பு + அறு.]*

அம்பனத்திப்பழம் *ambaṉatti-p-paḻam*, பெ. (n.) **பொன்னாங்காய் அல்லது பூவந்திக்கொட்டை**; soap-nut tree, *Sapiandus emarginatus* (*சா.அக.*).

அம்பனம் *ambaṉam*, பெ. (n.) *வாழை*; common plantain tree, *Musa paradisiaca* (*சா.அக.*).

*[அம்பு = நீர். அம்பு → அம்பனம் = நீருள்ளது.]*

அம்பாணி *ambāṇi*, பெ. (n.) **அம்பு நுனி**; sharp head of an arrow. அம்பாணி தைத்தது போலப் பேசுகிறான் (உ.வ.).

*[அம்பு + ஆணி. ஆழ் → ஆணு → ஆணி = ஆழ்ந்து பதியும் ஊசி.]*

அண் → (அண்ணி) → ஆணி என்பர் கால்டுவெல். ஒன்றோடு இறுகப் பொருந்துவதினும் ஒன்றில் ஆழமா யிறங்குவதே ஆணியாதலால், 'ஆழ்' என்னும் மூலமே மிகப் பொருத்தமாம். ஆணிவேர், ஆணிக்குருத்து, ஆணிக் கொள்ளுதல் (ஊன்றிக்கொள்ளுதல்) என்னும் வழக்குகளை நோக்குக.

ஆணி > **Skt.** āṇi.

அம்பாயப்படு-தல் *ambāya-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **பிள்ளைப்பேற்று நோவுறுதல்**; to travail at child-birth.

அம்பாயம் *ambāyam*, பெ. (n.) *1.* **பிள்ளைப் பேற்று நோவு**; travail, pangs of child-birth. *2.* வலி, நோவு (வின்.); pain.

அம்பால்[1] *ambāl*, பெ. (n.) **தோட்டம்** (வின்.); garden.

*[ஒருகா. அம் + பால். அம் = அழகிய. பால் = இடம்.]*

அம்பால்[2] *ambāl*, இடை. (ind.) **பிள்ளைகள் கூட்டு விளையாட்டில், ஆடைநெகிழின் அதைத் திருத்துதற்கு விளையாட்டைச் சில நொடிகள் நிறுத்திவைக்குமாறு பயன்படுத்துஞ்சொல்**; a word used in children's games, meaning 'wait a minute!' or 'stop for a few seconds!' in order to tighten the garment when it becomes loose or slips off.

ம. அம்பாலெ; தெ. அம்பால்; பட. அம்பேல்.

[ஒருகா. அப்பால் என்பது அம்பால் என மெலிந்திருக்கலாம்.]

**அம்பாலம்** *ambālam*, பெ. (n.) மருமாங்காய்; hogplum, *Spondias mangifera* (சா.அக.).

ம. அம்பாழம்

**அம்பாலிகை** *ambāligai*, பெ. (n.) அறத்தேவி (பிங்.); Goddess of virtue.

**அம்பாவனம்** *ambāvaṉam*, பெ. (n.) எண்காற் புள் (சரபபட்சி) (வின்.); fabulous eight-legged bird.

[அம்பரவாணம் → அம்பாவனம் (கொச்சைத் திரிபு).]

அம்பரவாணம் பார்க்க; see *ambaravāṇam*.

**அம்பி**[1] *ambi*, பெ. (n.) 1. மிடா; large water-jar. 2. இறைகூடை; baling-basket. 3. நீர்ப் பொறி; water-lift, wind-mill. 4. தாம்பு, நீரிறைக்குங் கயிறு; rope used for drawing water. 5. தெப்பம்; raft, float. ''துறையம்பி யூர்வான்'' (கலித். 103 : 38). 6. தோணி; small boat. ''பரிமுக வம்பியுங் கரிமுக வம்பி யும்'' (சிலப். 13 : 176). 7. ஓடம்; flat-bottomed ferry-boat. ''ஆயிர மம்பிக்கு நாயகன்'' (கம்பரா. அயோத். குகப். 1).



அரிமுக அம்பி ஓதிம அம்பி (அன்னமுக அம்பி)



கரிமுக அம்பி பரிமுக அம்பி

8. மரக்கலம் (திவா.); ship. 9. காராம்பி (பிங்.); suspended water shovel. 10. கள் (திவா.); toddy.

க. அம்பி

[அம் → அம்பு = நீர். அம்பு → அம்பி = நீர் வடிவானது, நீர்த் தொடர்புள்ளது.]

**அம்பி**[2] *ambi*, பெ. (n.) விசயநகரத் தரசர் தலை நகரான அம்பி (ஹம்பி) யென்ற ஊர்; Hampi, the capital of the Vijayanagar kings. ''அம்பி நகருங் கெடுக்கவந்த குலாமா'' (தமிழ்நா. 224).

**அம்பிகா** *ambigā*, பெ. (n.) அம்பளங்காய் பார்க்க; see *ambaḷaṅgāy* (சா.அக.).

**அம்பிகை** *ambigai*, பெ. (n.) வெட்பாலை; a plant, *Wrightia antidysenterica* (சா.அக.).

**அம்பிகைக்குழலாள்** *ambigai-k-kuḻalāḷ*, பெ. (n.) பெருச்சாளி; bandicoot (சா.அக.).

**அம்பிடி** *ambiḍi*, பெ. (n.) சருக்கரை (பச்.மூ.); white sugar.

**அம்பியம்** *ambiyam*, பெ. (n.) கள்; toddy.

[அம்பி = கள். அம்பி → அம்பியம்.]

**அம்பிலி** *ambili*, பெ. (n.) கேழ்வரகின் கூழ்; porridge, esp. of ragi.

U. ambil

[அம்பலி → அம்பிலி.]

அம்பலி[2] பார்க்க; see *ambali*[2].

**அம்பிளி** *ambiḷi*, பெ. (n.) அம்பலி என்பதன் கொச்சை; corrupt of *ambali*.

**அம்பினடி** *ambiṉ-aḍi*, பெ. (n.) திப்பிலி மூலம்; root of long pepper. ''திரிகடுகு வசம்போம மம்பினடி'' (தைலவ. தைல. 39).

**அம்பு**[1] *ambu*, பெ. (n.) 1. நீர்; water. ''வழிச் செல்வோர்க்கு மோதுகானலி னம்புமுறைமை போல்'' (ஞானவா. வைராக். 61). 2. கடல்; sea. ''அம்பேழும்'' (திருப்பு. 99). 3. முகில் (மேகம்) (அக.நி.); cloud. 4. குடிநீர்; tincture. ''இருசத் தம்பில்வரும் பேசு'' (தைலவ. பாயி. 30). 5. ஊண்செரிபால் (அன்னசாரம்); chyle of digested food. 6. நீர்சூழ்ந்த வுலகம்; world, surrounded by water. ''அம்புகைக் கொண்டால்'' (சீவக. 2332).

[அம் = நீர். அம் → அம்பு = நீர், நீர்நிலை, நீருள்ளது, நீர்த்தொடர்பு கொண்டது.]

**அம்பு**[2] *ambu,* பெ. (n.) 1. **ஆடுதின்னாப் பாலை**; a worm-killer, *Aristolachia bracteata.* 2. **எலுமிச்சை**; lime, *Citrus medica.* 3. **பாதிரி மரம்**; trumpet flower tree, *Stereospermum chelonoides.* 4. **தண்ணீர்விட்டான்கிழங்கு**; water-root, *Aspharagus racemosus.* 5. **திப்பிலி**; long pepper, *Piper longum.* "அம்பேல மிங் கொலி" (தைலவ. தைல. 119). 6. **யானைத் திப்பிலி**; elephant pepper, climbing arum, *Scindapsus officinalis.* "அட்டவர்க்க மம்பணி வேர்" (தைலவ. தைல. 86). 7. **வெட்டிவேர்** (நாநார்த்த.); cuscus grass.

**அம்பு**[3] *ambu,* பெ. (n.) 1. **தளிர்;** tender leaf, sprout. 2. **மூங்கில்**; bamboo, *Bambusa arundinacea.* 3. வாளி (**பாணம்**); arrow. "எம்மம்பு கடிவிடுதும்" (புறநா. 9 : 5). 4. **ஒருவகைக் கனிய நஞ்சு** (**சரகாண்ட பாடாணம்**); a mineral poison.

ம., க., தெ., து., பட., கோத. அம்பு; துட. ஒப்; **பர்.** அம்.

**அம்பு**[4] *ambu,* பெ. (n.) **வளையல்**; bracelet. "அம்புகைக் காணாம்" (சீவக. 2332).

**அம்பு**[5] *ambu,* பெ. (n.) **விண்** (பொதி.நி.); sky, firmament.

[உம்பரம் = மேலுலகம், விண்ணுலகம். உம்பரம் → அம்பரம் → அம்பு.]

**அம்புக்கட்டு** *ambu-k-kaṭṭu,* பெ. (n.) **அம்புக் கற்றை** (பிங்.); sheaf of arrows.

[அம்பு + கட்டு.]

**அம்புக்குதை** *ambu-k-kudai,* பெ. (n.) **அம்பின் நுனி** (திவா.); pointed end of an arrow.

[அம்பு + குதை.]

**அம்புக்குப்பி** *ambu-k-kuppi,* பெ. (n.) **அம்பின் கொண்டை** (பிங்.); arrow-head.

[அம்பு + குப்பி.]

**அம்புக்குழைச்சு** *ambu-k-kuḻaiccu,* பெ. (n.) **அம்புக்குப்பி** பார்க்க; see *ambu-k-kuppi.*

[அம்பு + குழைச்சு.]

**அம்புக்கூடு** *ambu-k-kūḍu,* பெ. (n.) **அம்பறாத் தூணி** (திவா.); quiver.

[அம்பு + கூடு.]

**அம்புகணை** *ambu-kaṇai,* பெ. (n.) **32 வகைக் கனிய நஞ்சுகளுள் ஒன்று** (**சரகாண்ட பாடாணம்**); one of the 32 kinds of arsenic (சா.அக.).

**அம்புச்சிறகு** *ambu-c-ciṟagu,* பெ. (n.) **அம்பின் அடிப்பாகம்** (நாமதீப.); feather end of an arrow.

[அம்பு + சிறகு.]




**அம்புடம்** *ambuḍam,* பெ. (n.) **அம்படம்** பார்க்க; see *ambaḍam.*

**அம்புத்தலை** *ambu-t-talai,* பெ. (n.) **அம்பின் அடி** (திவா.); butt end of an arrow.

[அம்பு + தலை.]

**அம்புநீர்** *ambu-nīr,* பெ. (n.) **விந்து** (சித்.அக.); semen.

**அம்புநேசம்** *ambu-nēšam,* பெ. (n.) **தாமரை** (பரி. அக.); lotus, *Nelumbium speciosum.*

**அம்புப்பறை** *ambu-p-paṟai,* பெ. (n.) **பறையருள் ஒரு பிரிவு**; name of a class of Paraiahs.

**அம்புப்புட்டில்** *ambu-p-puṭṭil,* பெ. (n.) **அம்பறாத்தூணி**; quiver.

[அம்பு + புட்டில். புட்டி → புட்டில் = **சிறு** புட்டி, கூடு. '**இல்**' **சிறு**.பொ.பின். (dim. suff.)]

**அம்புமுது** *ambu-mudu,* பெ. (n.) **முத்துவகை** (S.I.I. ii, 431); a kind of pearl.

**அம்புமுதுபாடன்** *ambu-mudu-pāḍaṉ,* பெ. (n.) **முத்துவகை** (S.I.I. ii, 78); a kind of pearl.

**அம்புமுதுவரை** *ambu-mudu-varai,* பெ. (n.) **முத்துவகை** (S.I.I. ii, 78); a kind of pearl.

**அம்புயம்** *ambuyam,* பெ. (n.) 1. **பொதி**; pack, bundle. 2. **அம்புப்புட்டில்**; quiver (அக.நி.).

**அம்புலி**[1] *ambuli,* பெ. (n.) 1. **நிலா;** moon. "அம்புலி காட்ட லினிது" (கலித். 80 : 19). 2. **நிலவொளி**; moon-light (சா.அக.). 3. **அம்புலிப்பருவம்** (இலக். வி. 806); a certain stage of childhood when moon is shown to the child for its enjoyment. 4. **நிலாத்திருப்பி** (**சந்திரகாந்தி**); a flower which turns towards the moon, moon flower (சா.அக.).

ம. அம்புளி

[ஒருகா. அம் + புல்லி – அம்புல்லி → அம்புலி = நீரின் தன்மை, அதாவது குளிர்ச்சி பொருந்தியது.]

**அம்புலி**[2] *ambuli*, பெ. (n.) சோளக்கூழ்; maize porridge. 'பட்டிநாய்களுக்கு அம்புலி காய்ச்சு மிடமும்' (எங். ஊர், 40).

அம்பலி[2] பார்க்க; see *ambali*[2].

**அம்புலிகா** *ambulikā*, பெ. (n.) புளியாரை; a vegetable green, sorrel, *Oxalis corniculata* (சா.அக.).

**அம்புலிப்பருவம்** *ambuli-p-paruvam*, பெ. (n.) இது சிறுபிள்ளைச் செய்திகளைப் பாட்டுடைத் தலைவன்மேலேற்றி வரணித்துக் கூறும் பிள்ளைத்தமிழ் என்னும் சிறுவனப்பு (காவிய) வகையில் பத்துப் பருவங்களுள் ஏழாவது; தாய் தன் குழந்தைக்கு நிலாவைக் காட்டி அதனை அக் குழந்தையுடன் விளையாட வருமாறு அழைப்பதைப் பொருளாகக் கொண்டது; the seventh out of the ten stages of childhood described in *Pillaittamil*, a species of minor poem, during which the mother points out the moon to the child and makes gestures to the moon to come and play with the child.

[அம்புலி + பருவம். அம்புலி = நிலா.]

**அம்புலிமணி** *ambuli-maṇi*, பெ. (n.) நில வொளியில் ஈரங் கொள்வதாகச் சொல்லப்படும் நிலாக்காந்தக்கல் (சந்திரகாந்தக்கல்) (இரகு. சீதைவ. 23); moonstone said to emit moisture when placed in the moon-light, *adularia*.

ம. அம்பிளிமணி

**அம்புலிமான்** *ambuli-māṉ*, பெ. (n.) அம்புலி யம்மான் பார்க்க; see *ambuli-y-ammāṉ*.

**அம்புலியம்மான்** *ambuli-y-ammāṉ*, பெ. (n.) நிலா; moon. 'அம்புலியம்மானைப் பிடித்துத் தரவேணு மென்றழுத ப்ரஜைக்கு' (ஈடு, 4 : 3, பிர.) (Nurs.).

ம. அம்பிளியம்மாவன்

[ஒருகா. நிலாவின் களங்கத்தை ஒரு மான் வடிவினதாகக் கருதி அம்புலிமான் அல்லது அம்புலியம்மான் என்றனர் போலும்.]

**அம்புவல்லி** *ambu-valli*, பெ. (n.) ஒரு பூண்டு; a plant, *Momordica charantia* (சா.அக.).

**அம்புவி** *ambuvi*, பெ. (n.) ஞாலம் (பூமி); earth. ''அம்புவி யெயினர் போற்றும் வள்ளியை'' (கந்தபு. தக்க. வள்ளி. 1).

[அம் = அழகிய. Skt. bhuvi = ஞாலம்.]

**அம்புறைதூணி** *amb(u)-uṟai-tūṇi*, பெ. (n.) அம்பறாத்தூணி (சங்.அக.); quiver.

[அம்பு + உறை + தூணி. உறைதல் = தங்குதல், இருத்தல். தூணி = கூடு.]

**அம்பேல்** *ambēl*, பெ. (n.) அம்பால்[2] பார்க்க; see *ambāl*[2].

**அம்பை** *ambai*, பெ. (n.) 1. வெட்டிவேர் (புதுவை); cuscus grass, *Andropogon aromaticus* (Poṇḍ.). 2. கொக்குமந்தாரை (நாமதீப.); taper-pointed mountain ebony. 3. வெள்ளைச் சாரணை; a plant (நாமதீப.). 4. மூத்திரக் கிறிச்சனம்; a urinary disease, difficulty in voiding urine (சா.அக.).

[அம்பு → அம்பை.]

அம்பு[2] பார்க்க; see *ambu*[2].

**அம்பொருந்தகரை** *amborun-tagarai*, பெ. (n.) செந்தகரை; a plant (சா.அக.).

**அம்போ** *ambō*, பெ. (n.) 1. நீரிற் பிறப்பன; the water-born. 2. தாமரை; day-lotus. 3. ஒரு செடி; a plant, *Calcumus rotang*. 4. நாரை; Indian crane (சா.அக.).

**அம்போதரங்கம்** *ambōdaraṅgam*, பெ. (n.) அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவின் ஐந்துறுப்புகளுள் ஒன்றும், வண்ணக வொத் தாழிசைக் கலிப்பாவின் ஆறுறுப்புகளுள் ஒன்றுமாக அமைவதும், ஈரளவடியும் ஓரள வடியும் சிந்தடியும் குறளடியுமாக உயர்ந் தெழுந்து வரவரச் சுருங்கும் கடற்கரை யலை போல் வரவரக் குறைவதுமான செய்யுளுறுப்பு; one of the five members of *ambōdaraṅga-vottāḷiśaikkalippā* and one of the six members of the *vaṇṇaga vottāḷiśaikkalippā*, in which the lines diminish in length gradually like waves on the shore.

அம்போதரங்கம், அம்போதரங்க வொத் தாழிசைக் கலிப்பாவில் தாழிசைக்குப் பின்னும், வண்ணக வொத்தாழிசைக் கலிப் பாவில் அராகத்திற்குப் பின்னும், இணை யளவடி யிரண்டும், தனி யளவடி நான்கும், சிந்தடி எட்டும், குறளடி பதினாறுமாக வந்து,

முறையே பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் எனப் பெயர்பெறும்.

இவ் வெண்ணுறுப்புகள், முறையே இணையளவடி யொன்றும், தனி யளவடி யிரண்டும், சிந்தடி நான்கும், குறளடி யெட்டுமாகப் பப்பாதி குறைந்தும் வரும். அது சிறப்பில தாகக் கருதப்படும்.

''.................................................
.........மன்னியவீ ரடியிரண்டு மோரடியா
னான்கும்
உளமலிசிந் தடியெட்டுங் குறளடியீ ரெட்டும்
ஒருங்கியல்பே ரெண்சிற்றெண் ணிடை
யெண்ணோ டளவெண்
தளமலியம் போதரங்க மெனும்பெயரா
னிலவும்''
(வீரசோ. யாப். 10, உரை).

*[அம் → அம்பு = நீர், கடல். தரங்கு = குத்துப் படைக்கலம். தரங்கு → தரங்கம் = கரையைக் குத்தும் அலை. அம்பு + ஒ (சாரியை) + தரங்கம் = அம்போதரங்கம்.]*

**அம்போதரங்கவொத்தாழிசை** *ambōdaraṅga-v-ottāḻiśai*, பெ. (n.) **அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா** பார்க்க; see ***ambōdaraṅga-vottāḻiśai-k-kali-p-pā***.

*[அம்போதரங்கம் + ஒத்தாழிசை.]*

**அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா** *ambō-daraṅga-v-ottāḻiśai-k-kali-p-pā*, பெ. (n.) **ஒரு தரவு, மூன்று தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஐந்துறுப்பும் பெற்றுவரும் ஒத்தாழிசைக் கலிப்பா வகை**; a variety of *ottāḻiśaikkali* verse having *ambōdaraṅgam* as one of its members in the middle.

''தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொற்
சுரிதகமாய்
நிரலொன்றி னேரிசை யொத்தா ழிசைக்
கலி நீர்த்திரைபோன்
மரபொன்று நேரடி முச்சீர் குறணடு
வேமடுப்பின்
அரவொன்று மல்குல தம்போ தரங்க
வொத் தாழிசையே''
(யா. கா. 38).

*[அம்போதரங்கம் + ஒ + தாழ் + இசை + கலி + பா. ஒ = ஒத்த. தாழ் = தாழ்ந்த, தாழம் பட்ட. இசை = ஒலி, ஓசை. தாழிசை = தாழம் பட்ட ஓசையுள்ள கலிப்பா வுறுப்பு. கலித்தல் = துள்ளல். கலி = துள்ளலோசையுள்ள பாவகை. பண் → பாண் → பா = இசைப்பாட்டு, செய்யுள் வகை.]*

**அம்போதரங்கம்** பார்க்க; see ***ambōdaraṅ-gam***.

**அம்போதரங்கவொருபோகு** *ambōdaraṅga-v-oru-pōgu*, பெ. (n.) **கொச்சகக் கலிப்பா வகைகளுள் ஒன்று**; a variety of *koccagakkali* verse.

இது தரவு, கொச்சகம், அராகம், சிற்றெண், அடக்கியல்வாரம் என்னும் ஐந்துறுப்புப் பெற்று, தலையளவில் 60 அடியும், இடையளவில் 30 அடியும், கடையளவில் 15 அடியும் கொண்டு வரும்.

''அம்போ தரங்க மறுபதிற் றடித்தே
செம்பால் வாரஞ் சிறுமைக் கெல்லை''
(தொல். பொருள். செய். 145).

''எருத்தே கொச்சக மராகஞ் சிற்றெண்
அடக்கியல் வாரமொ டந்நிலைக்
குரித்தே''
(தொல். பொருள். செய். 146).

அம்போதரங்கத்தின் நால்வகை யெண்ணுள் ஒன்றாகிய சிற்றெண்ணே பெற்றதனால், ''கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல்'' என்று தொடங்கும் கலித்தொகை 102ஆம் செய்யுள் அம்போதரங்க வொத்தாழிசைக் கலியாகாது, அம்போதரங்க வொருபோகாயிற்று.

''தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை
யுடையது
கொச்சக வொருபோ காகு மென்ப''
(தொல். பொருள். செய். 143)

என்னும் நூற்பாப்படி இஃது எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றும் கொச்சக வொரு போகாகும்.

*[ஒருபோக்கு = மாறான நடை. ஒருபோக்கு → ஒருபோகு = ஒழுங்கான இயல்பினின்றும் வேறுபட்ட செய்யுள்வகை. கொச்சக வுறுப்புடைய வொருபோகு கொச்சக வொருபோகு. கொய்சகம் → கொசகம் → கொச்சகம். பெண்டிர் கொய்துடுக்கும் சேலை மடிப்புப்போன்று, தாழிசை யொத்த பலவுறுப்புகள் அடுக்கி வருவது கொச்சகம்.]*

**அம்போதி** *ambōdi*, பெ. (n.) **பாட்டின் உட் பொருள்** (சங்.அக.); the inner meaning of a stanza.

[அகம் = உள். பொதி = பொதிந்திருப்பது, அடங்கியிருப்பது. அகம் + பொதி – அகம் பொதி → அம்போதி.]

**அம்ம** *amma*, பெ. (n.) **அம்மை என்னும் தாய் முறைப் பெயரின் விளி;** voc. of *ammai* (mother). —, இடை. (int.) *1.* **கேட்பாயாக எனப் பொருள்படும் ஓர் இடைச்சொல்;** an exclamation inviting attention. "அம்மகேட் பிக்கும்" (தொல். சொல். இடை. 28). 2. **ஒரு வியப்புக் குறிப்பு;** an exclamation of surprise or wonder. "விதியினார்க் கியானம்ம செய் கின்றதோ ரளவுண்டோ" (கந்தபு. அசுர. அசுரர் தோற். 14). —, இடை. (part.) **ஓர் உரையசைச் சொல்;** expletive adding grace to composition. "அதுமற் றம்ம" (நன். 438, விருத்தி உரை).

ம., க., தெ. அம்ம; குட. அம்மெ; பட. அமெ.

[அம்மை → அம்ம (விளி).]

**அம்மகோ** *ammagō*, இடை. (int.) **ஓர் இரக்கக் குறிப்பு;** an exclamation of pity. "அம்மகோ வெனும் விழுமழும்" (மதுரைக்கலம். 15).

[அம்மை → அம்ம → அம்மவோ → அம்மகோ.]

**அம்மங்கார்**[1] *ammaṅgār*, பெ. (n.) **திருமாலிய (வைணவ)க் குரவன் மனைவி** (திருமா.); wife of a Vaiṣṇava Ācārya or priest (Vaiṣṇ.).

தெ. அம்மகாரு

[அம்மையவர் > தெ. அம்மவாரு → அம்ம காரு > த. அம்மங்கார்.]

**அம்மங்கார்**[2] *ammaṅgār*, பெ. (n.) **அம்மான் மகள்** (பிராம.); daughter of a maternal uncle (Brāhm.).

[அம்மான் + மங்கையார் (மகள்) – அம்மான் மங்கையார் → அம்மங்கார்.]

**அம்மங்காள்** *ammaṅgāl*, பெ. (n.) **அம்மங்கார்**[2] பார்க்க; see *ammaṅgār*[2].

[மங்கை → மங்கா → மங்காள். ஒ.நோ : தங்கை → தங்கா → தங்காள். அம்மான் + மங்காள் – அம்மங்காள் (கொ.வ.).]

**அம்மச்சி** *ammacci*, பெ. (n.) **செந்தணக்கு;** false tragacanth, *Sterculia urens* (சா.அக.).

**அம்மட்டம்** *ammaṭṭam*, பெ. (n.) **வட்டத்திருப்பி** (சங்.அக.); velvet leaf.

**அம்மட்டி** *ammaṭṭi*, பெ. (n.) **கொட்டி** (பச்.மூ.); an aquatic plant (செ.அக.) — (சா.அக.) **கொட்டிக்கிழங்கு;** an edible root of a water-plant, *Aponogeton:*

**அம்மடிங்கம்** *ammadiṅgam*, பெ. (n.) பட்டாணி; pea, *Pisum sativum* (சா.அக.).

**அம்மண்டார்** *ammaṇḍār*, பெ. (n.) **தாய்மாமன்** (நாஞ்.); maternal uncle (Nāñ.).

[அம்மான் + ஆண்டார் – அம்மாண்டார் → அம்மண்டார்.]

**அம்மணி**[1] *ammaṇi*, பெ. (n.) **பெண்ணைக் குறிக்கும் மதிப்புரவுச் சொல்** (குருபரம். 285); a term of respect used in referring to or calling a woman.

ம. அம்மிணி; க., தெ. அம்மண்ணி.

[அம்மனை → அம்மணி. இனி, அம்மை + மணி என்றுமாம்.]

**அம்மணி**[2] *ammaṇi*, பெ. (n.) *1.* **மடி** (சம்.அக. கை.); lap. 2. **இடை, இடுப்பு;** waist of a woman. "நின் னம்மைதன் அம்மணிமேற் கொட்டாய் சப்பாணி" (திவ். பெரியாழ். 1.7:3).

ம. அம்மணி

[அம் (அழகிய) + மடி – அம்மடி → அம்மணி. ஒ.நோ : பிடி → பிணி.]

**அம்மந்தி** *ammandi*, பெ. (n.) **அம்மான் மனைவி, அத்தை** (இ.வ.); maternal uncle's wife (Loc.).

[அம்மான் + தேவி – அம்மாந்தேவி → (அம் மாந்தே) → அம்மாந்தி → அம்மந்தி. தேவி = பெண்தெய்வம், பெண், மனைவி.]

**அம்மம்** *ammam*, பெ. (n.) *1.* **பெண்முலை;** woman's breast. "கொம்மை யம்ம மசைவுற" (இரகு. நாட்டு. 50). 2. **முலைப்பால்;** woman's breast milk. "அம்ம முண்ணத் துயி லெழாயே" (திவ். பெரியாழ். 2.2:1). "அன்னே யுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே" (திவ். பெரியாழ். 3.1:1). *3.* **குழந்தை யுணவு;** babies' food (சா.அக.).

ம. அம்மிஞ்ஞி; க. அம்மி; நு. அமணி. ஒ.நோ : L. *mamma*.

*[மருமம் = மார்பு, முலை. மருமம் → மம்மம் → அம்மம். ஒ.நோ : கருமம் → கம்மம் → கம்.]*

**அம்மம்ம** *ammamma*, இடை. (int.) ***அம்ம என்பதன் மிகு வியப்புக் குறிப்பு***; an exclamation of astonishment or bewilderment. ''அம்மம்ம வெல்ல லெளிதோ'' (தாயு. சச்சி. 4).

ம. அம்மம்ம, அம்பம்பட; க. அம்மம்ம.

*[அம்மை (தாய்) → அம்ம (விளி) → அம்ம அம்ம (இரட்டல்) → அம்மவம்ம → அம்மம்ம.]*

***அம்மவம்ம*** பார்க்க; see *amma-v-amma*.

**அம்மமுண்ணு-தல்** *ammam-uṉṉu-*, 12 செ.கு.வி. (v.i.) ***முலைப்பால் குடித்தல்;*** sucking milk from woman's breast.

*[அம்மம் + உண்ணு.]*

**அம்மல்** *ammal*, பெ. (n.) 1. ***செரியாமை***; indigestion. 2. ***மந்தாரம்***; cloudiness, murkiness. 3. ***மூடம்***; stupidity. 4. ***விறைப்பு***; stiffness, numbness.

*[கம்முதல் = மந்தாரமாதல், மந்தமாதல். கம் → கம்மல் → அம்மல்.]*

**அம்மலர்மூலி** *ammalar-mūli*, பெ. (n.) ***செங்குன்றி***; red bead vine, *Abrus precatorius* (சா.அக.).

**அம்மவம்ம** *amma-v-amma*, இடை. (int.) ***மிகு வியப்புக் குறிப்பு***; an exclamation of intense surprise or wonder. ''அம்மவம்ம கடவுண் மகனான நின்னா லறிவுற்றேன்'' (ஞானவா. சிகித்து. 130).

*[அம்மை (தாய்) → அம்ம (விளி). அம்ம அம்ம (இரட்டல்( → அம்மவம்ம.]*

**அம்மவோ** *ammavō*, இடை. (int.) ***ஓர் இரக்கக் குறிப்பு***; an exclamation of pity. ''அம்மவோ விதியே யென்னும்'' (கந்தபு. யுத்த. அக்கினி. 194).

தெ. அம்மரோ

*[அம்மை (தாய்) → அம்ம (விளி) → அம்மவோ. அம்ம + ஒ (வி.இ.) – அம்மவோ.]*

**அம்மன்** *ammaṉ*, பெ. (n.) 1. ***தாய்*** (சங்.அக.); mother. 2. ***மறப் பெண்தெய்வம்;*** manly goddess. 3. ***காளி***; *Kāḷi*. அம்மன்கொண்டாடி. 4. ***அம்மை நோய்வகை***; smallpox, chickenpox, measles.

ம., க. அம்மன்; தெ. அம்மவாரு.

**அம்மன்கட்டு** *ammaṉ-kaṭṭu*, பெ. (n.) ***அம்மைக் கட்டு, கூகைக்கட்டு***; mumps, *Idiopathic parotiditis*, an infectious disease of children between the ages of 5 and 15 characterised by swelling of the parotid and other salivary glands of the neck and the cheek, running a definite course and generally terminating in recovery.

மறுவ. பொன்னுக்குவீங்கி, புட்டாலம்மை.

*[அம்மன் = காளியம்மை. கட்டு = வீக்கம். அம்மன்கட்டு = காளியம்மையால் நேர்வதாகக் கருதப்பட்ட கன்னங்கழுத்து வீக்கம்.]*

**அம்மன்காசு** *ammaṉ-kāsu*, பெ. (n.) ***பழைய புதுக்கோட்டை நாட்டில், காவல் தெய்வமாகிய பெருவுடையாட்டியின் (பிருகதம்பாவின்) உருவம் பொறிக்கப் பட்டு, பெயரளவில் 1/16 அணா மதிப்பும் நடை முறையில் 1/20 அணா மதிப்பும் பெற்று வழங்கிய சிறு செப்புக் காசு;*** copper coin of the old Pudukkōṭṭai State, nominally 1/16 anna, practically 1/20 anna, as bearing the image of the tutelary deity Bṛahadāmbā.



அம்மன்காசு

*[சிவனுடைய ஆற்றலும் அருளும் ஆணும் பெண்ணுமாக உருவகிக்கப்பட்டு, பொது மக்கட்கு எளிதாக விளங்குமாறும் தெய்வப் பற்றுண்டாக்குமாறும் உலகத் தந்தைதாயாகக் காட்டப்பட்டபின், சிவன் தேவியாகவும் அனைத்துயிர்க்கும் அன்னையாகவும் கருதப்பட்ட பெண் தெய்வம் அம்மன். ஒருகா. அம்மம் (முலைப் பால்) → அம்ம → அம்மன். இனி, அம்மா (ஆவின் கன்று தாயை விளிக்குங் குரல்) → அம்ம → அம்மன் என்றுமாம்.]*

**அம்மன்கொடை** *ammaṉ-koḍai*, பெ. (n.) 1. ***ஒரு சிற்றூர்ப் பெண்தெய்வத்தைக் கொண்டாடும் திருவிழா*** (G.Tn. D. i, 111); festival of a village goddess. 2. ***காளிக்கு ஆடுமாடுகளைக் காவு கொடுக்கும் சிற்றூர்ப் பெருவிழா***; sacrifice of goats and cattle to *Kāḷi* in a village festival.

ம. அம்மன்கொட

*[அம்மை → அம்மன். கொடு → கொடை.]*

**அம்மன்கொண்டாடி** *amman-kondadi*, பெ. (n.) ***தெய்வமேறியாடும் காளிகோயிற் பூசாரி***; priest of *Kaliyamman* temple, who goes about dancing under inspiration.

*[அம்மை → அம்மன். கொண்டு + ஆடு – கொண்டாடு. ஆடு + இ (ஒருமை வினை முதலீறு) – ஆடி.]*

**அம்மனே** *ammanē*, இடை. (int.) ***ஒரு வியப்புக் குறிப்பு***; an exclamation of wonder or surprise. "உடைந்ததுவு மாய்ச்சிபான் மத்துக்கே யம்மனே" (திவ். இயற். 3 : 28).

*[அம்மை (தாய்) → அம்மன் → அம்மனே (விளி).]*

**அம்மனை**[1] *ammanai*, பெ. (n.) 1. ***தாய்***; mother. "தன்கைக்கோல் அம்மனைக்கோ லாகிய ஞான்று" (நாலடி. 14). 2. ***தலைவி***; lady, mistress. "நோற்றுச் சுவர்க்கம் புகு கின்ற அம்மனாய்" (திவ். திருப்பா. 10).

*[அம்மை + அன்னை – அம்மையன்னை → அம்மன்னை → அம்மனை (அருமைபற்றி வந்த மீமிசைச்சொல்). ஒ.நோ : தாய் + அம்மை – தாயம்மை.]*

**அம்மனை**[2] *ammanai*, பெ. (n.) 1. ***அம்மானை யென்னும் மகளிர் பந்து விளையாட்டு*** (பிங்.); a girls' game with balls. 2. ***அம்மானை விளையாடும் பந்து***; balls used in the game. "அம்மனை தங்கையிற் கொண்டு" (சிலப். 29, அம்மானை வரி, 4).

**ம.** அம்மன; **க.** அம்மாலெ; **தெ.** அம்மனலு.

*[அம்ம + அனை (அன்னை) – அம்மனை.]*

***அம்மானை*** பார்க்க; see *ammānai*.

**அம்மனை**[3] *ammanai*, பெ. (n.) ***நெருப்பு***; fire. "நம்மனைக் கம்மனை வழங்கும்" (பாரத. வாரணா. 124).

*[அம் = நீர். அனை (அன்னை) = தாய். அம் + அன்னை – அம்மன்னை → அம்மனை.]*

நெருப்பினின்று நீர் தோன்றிற்று என்னும் கொள்கைபற்றி, நெருப்பு அம்மனை யெனப் பட்டது. இதற்கு நேர் வடசொல் 'க்ருபீட யோனி'. க்ருபீட = நீர். யோனி = பிறப்பிடம். இங்ஙனம் பொருளும் பொருட் காரணமும் ஒத்திருத்தலால், தென்சொல்லை வட சொல்லின் மொழிபெயர்ப்பென்பர். நெருப்பி னின்று நீர் தோன்றிற்றென்னுங் கொள்கை பண்டைத் தமிழர்க்கு மிருந்ததனால், வட சொல்லே தென்சொல்லின் மொழிபெயர்ப் பாகவு மிருக்கலாம்.

**ஒ.நோ:**

"கருவளர் வானத் திசையிற் றோன்றி
யுருவறி வாரா வொன்ற னூழியும்
உந்துவளி கிளர்ந்த வூழ ழூழியும்
செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய வூழியும்"
(பரிபா. 2 : 5-9).

**அம்மனை**[4] *ammanai*, பெ. (n.) ***அவ்வீடு***; that house. இம்மனையினும் அம்மனை பெரிது (உ.வ.).

**க.** ஆமனெ

*['அ' சேய்மைச்சுட்டு. மனை = வீடு, மாளிகை. அ + மனை – அம்மனை.]*

**அம்மனைப்பாட்டு** *ammanai-p-pāttu*, பெ. (n.) ***அம்மானை விளையாட்டிற் பாடும் பாட்டு***; song sung by girls when playing the game of balls.

**அம்மனைமடக்கு** *ammanai-madakku*, பெ. (n.) ***மகளிர் இருவர் வினாவிடையாய் இருபொருள் படக் கூறுவதாகக் கலித்தாழிசையால் இயற்றப்படும் அம்மானைப் பாட்டு***; poetic composition in *kalittālisai* metre, in which, two girls engaged in conversation try to outwit each other through questions and responses couched in ambiguous words.

"அம்மனை கைக்கொண் டாடுநர் தம்மையும்
அம்மனை யாய்மதித் தாங்கொர்கர்த் தாவினை
நிந்தாத் துதிதுதி பெறநிகழ்த் துதலும்
அந்தா தித்திடை யடிமடக் காகவும்
ஈற்றடி யிரட்டுற விசைத்ததைத் தாபித்
தாற்றலி னமைக்குமம் மனைமடக் கொன்றுள"
(மாற. 267).

*[அம்மானை → அம்மனை. மடங்கு → மடக்கு = மடக்கி (திரும்ப, திரும்பத்திரும்ப) வரும் அசை, சொல், சீர், தொடர், அடி முதலியன.]*

**அம்மனையோ** *ammanai-y-ō*, இடை. (int.) ***ஒரு துயரக் குறிப்பு***; an exclamation of grief. "அம்மனை யோவெனாத் துண்ணெ னெஞ்சின ளாய்த்துடித்து" (சீவக. 760).

*[அம்மை (தாய்) + அனை (அன்னை) + ஓ (விளியுருபு) – அம்மனையோ.]*

**அம்மனோ** *ammanō*, இடை. (int.) **ஒரு துயரக் குறிப்பு**; an exclamation of grief. "வழா நெடுந் துன்பத்த ளென்றிரங்கார் அம்மனோ" (திவ். இயற். திருவிருத். 37).

*[அன்னை + ஓ (விளியுருபு) – அன்னையோ → அன்னோ. அம்மை + அன்னோ – அம்மன்னோ → அம்மனோ.]*

**அம்மா**[1] *ammā*, பெ. (n.) 1. **தாய்** (விளி. வே.); mother (voc.). 2. **தலைவி, பெருமாட்டி**; matron, lady. 3. **தாய்** (உ.வ.); mother (com.u.). —, இடை. (int.) 1. **ஒரு வியப்புக் குறிப்பு**; an exclamation of wonder. "பொன்னக ரிதனை யொக்கு மென்பது புல்லி தம்மா" (கம்பரா. சுந்தர. கடல்தாவு. 92). 2. **ஓர் இரக்கக் குறிப்பு**; an exclamation of pity. "பிறந்தவர்க......வெறும்பொருள தம்மா விடுத்திடுமி னென்றாள்" (சீவக. 2622). 3. **ஓர் உவப்புக் குறிப்பு**; an exclamation of joy. "அம்மாவென் றுகந்தழைக்கு மார்வச் சொல்" (திவ். பெருமாள்தி. 9 : 6). 4. **ஓர் அசைச்சொல்**; an expletive. "கடவுளர்க் கமைத்த யாக தலமெனக் கவினிற் றம்மா" (பாரத. இராசசூய. 91). 5. **மதிக்கப்படும் பெண்**; respectable woman. ஓர் அம்மா வந்திருக்கிறது (உ.வ.).

**ம., க., தெ., எரு., நா., கை., குற., கொர., து.** அம்ம; **குட.** அம்மெ; **பட., கோத.** அவ்வே; **இரு.** அவ்வெ; **துட.** அவ்வ; **கோண்.** அவ்வாள்; **குரு.** ஆவ்வெ; **மா.** அய; **கொலா., பிரா., கூ., மரா., பா., பிராகி., சிங்., இந்.** அம்மா; **சிந்.** அமா; **வங்.** மா; **மணிபு.** இமா.

**G.** *amme*; **OHG.** *amma*; **OS.** *amma*; **E.** *mammā*; **Fin.** *emā*; **Skt.** *ambā*; **Ost.** *ane*; **Hung.** *eme*; **Heb.** *ēm*; **Mord.** *anai*; **Turk.** *anna*; **Mal.** *amā*; **Tib.** *mā, mō*; **Ar.** *amun*; **Russ.** *mat*; **It., Sp.** *madre*; **Swa.** *mama*; **Port.** *mãe*; **Rum.** *mamā*; **F.** *mēre*; **Pol.** *matka*; **Yid.** *muter*; **Jap.** *aba, haha*; **Kor., Icel.** *amma*; **Chin.** *mā*.

**அம்மா**[2] *ammā*, பெ. (n.) **மாவிலங்க மரம்**; lingam tree, *Crataeva religiosa*.

**அம்மாச்சன்** *ammāccaṉ*, பெ. (n.) **தாய்மாமன்** (நாஞ்.); maternal uncle (Nāñ.). **அம்மண்டார்** பார்க்க; see *ammaṇḍār*.

*[அம்மான் + அச்சன் – அம்மாச்சன் (அம்மானாகிய அச்சன்). அம்மான் = தாய் மாமன். அச்சன் = தந்தை, தந்தை போல்வான்.]*

**அம்மாச்சி** *ammācci*, பெ. (n.) 1. **தாயைப் பெற்ற பாட்டி** (தஞ்சை); maternal grandmother (Tj.). 2. **தாய்**; mother (சங்.அக.).

*[அம்மா = தாய். அச்சி = தாய். அம்மா + அச்சி – அம்மாச்சி (தாயின் தாய்).]*

பாட்டி யென்பதே இச் சொற்கு உரிய பொருள். தாயை அம்மாச்சி யென்பது ஒருசிலர் வழக்கே.

**அம்மாஞ்சி** *ammāñji*, பெ. (n.) 1. **அம்மான் மகன்** (பிராம.); son of a maternal uncle (Brāhm.). 2. **மூடன்**; fool cf. mātula-tanaya, a name for *ūmattai* which by its derivation *unmatta* suggests foolishness, eccentricity akin to madness (செ.அக.).

ம. அம்மாஞ்சி

*[அம்மான் + சேய் – அம்மான்சேய் → அம் மாஞ்சேய் → அம்மாஞ்சி (கொச்சை).]*

**அம்மாஞ்சிமதினி** *ammāñji-madiṉi*, பெ. (n.) **அம்மான் மகன் மனைவி** (பிராம.); wife of the son of a maternal uncle (Brāhm.).

*[அம்மான் + சேய் + மதினி – அம்மாஞ்சி மதினி.* **Skt.** maithuni > **த.** *மதினி.]*

**அம்மாட்டி** *ammāṭṭi*, பெ. (n.) **கொட்டிக்கிழங்கு** (மலை.); the root of a waterplant, species of aponogeton, *Aponogeton monastachyon* (சா. அக.).

*[அம்மட்டி → அம்மாட்டி.]*

*அம்மட்டி பார்க்க*; see *ammaṭṭi*.

**அம்மாடி** *ammāḍi*, இடை. (int.) 1. **வியப்புக் குறிப்பு**; an exclamation of wonder. அம்மாடி! எவ்வளவு பெரிய ஆமை! 2. **அச்சக் குறிப்பு**; an exclamation of dread. அம்மாடி! எவ்வளவு பெரிய தேள்! 3. **இரக்கக் குறிப்பு**; an exclamation of pity. அம்மாடி! இவ்வழகான பிள்ளைக்கு இருகண்ணு மில்லையே! 4. **நோவுக் குறிப்பு**; an exclamation of pain. அம்மாடி! வயிற்றுவலி தாங்க முடிய வில்லையே! 5. **இளைப்பாறற் குறிப்பு**; an exclamation of relief. கனத்த சுமையை இறக்கிவிட்டு 'அம்மாடி' என்று மரத்தடியில் உட்கார்ந்தான் (உ.வ.).

*[அம்மை (தாய்) → அம்மா (விளி) + அடி (பெ.பா. விளி) – அம்மாடி. அட (ஆ.பா.) – அடி (பெ.பா.).]*

பொதுவாக ஆடவர் அப்பனையும் பெண்டிர் அம்மையையும் விளித்து, ஒன்றைச் சொல்வது அல்லது ஒரு குறிப்பைத் தெரிவிப்பது இயல்பு. அப்பாடா (ஆ.பா.) — அம்மாடீ → அம்மாடி (பெ.பா.).

**அம்மாத்தாள்** *ammāttāḷ*, பெ. (n.) **தாயைப் பெற்ற பாட்டி** (இ.வ.); mother's mother (Loc.).

*[அம்மை → அம்மா + ஆத்தாள் — அம்மாத்தாள். ஆத்தை (தாய்) → ஆத்தா → ஆத்தாள் (கொ.வ.).]*

பாட்டன் பாட்டி, தாய் தந்தை, அண்ணன் அக்கை ஆகிய மூத்தோரின் முறைப்பெயர்களின் விளிவடிவம் பாலீறு பெற்று வழங்குவது வழுவாயினும், பெரும்பால் உலக வழக்காயுள்ளது.

**அம்மாத்திரம்** *ammāttiram*, பெ. (n.) **அவ்வளவு**; that much, so much.

ம. அம்மாத்திரம்

*[அ (அந்த) + மாத்திரம் (அளவு).]*

அம்மாத்தம் என்பது கொச்சை.

**அம்மாதிகம்** *ammādigam*, பெ. (n.) **செந்திராய்**; a red variety of Indian chickweed, *Mollugo parviflora* (சா.அக.).

**அம்மாபத்தினி** *ammāpattiṉi*, பெ. (n.) வேம்பு; margosa, *Azadirachta indica* (சா.அக.).

**அம்மாமி** *ammāmi*, பெ. (n.) 1. **அம்மான் மனைவி;** maternal uncle's wife. 2. **கணவன் தாய்**; husband's mother. ''அம்மாமி தன் வீவுங் கேட்டாயோ தோழி'' (சிலப். 29, தேவந்தி யரற்று).

ம. அம்மாவி

*[1. அம்மான் + மாமி — அம்மான்மாமி = **அம்மான் மனைவியாகிய** மாமி. ஒ.நோ: மகன் பிள்ளை பேரன் = மகன் பிள்ளையாகிய பேரன். கணவன் தாயாகிய மாமியினின்றும் வேறுபடுத்த அம்மான் என்னும் அடை வந்தது. அவ்வடை அம்மான் தொடர்பு குறிப்பதனால், அம்மான் மாமி என்பது அத்தையைக் குறிக்கும். அத்தை மணவுறவு முறையில் மாமியை ஒத்திருப்பதால், அவளும் மாமியெனப்பட்டாள். அம்மான்மாமி → அம்மாமி.*

*2. அம் (அழகிய, நல்ல) + மாமி — அம்மாமி. நல்லம்மான், நற்றாய் என்பவற்றிலுள்ள 'நல்' என்னும் அடைபோல், அம்மாமி என்பதில் 'அம்' என்னும் அடை அருமையும் நெருக்கமுங் குறித்து வந்தது.]*

**அம்மாய்** *ammāy*, பெ. (n.) **தாயைப் பெற்ற பாட்டி** (வின்.); maternal grandmother.

ம. அம்மாம்ம

*[அம்மை → அம்மா + ஆய் — அம்மாய். ஆய் = அன்னை.]*

அம்மாயி என்பது கொச்சை வடிவம்.

**அம்மாரம்** *ammāram*, பெ. (n.) **அலரிச்செடி** (பச்.மூ.); sweet scented oleander, *Nerium odorum*.

**அம்மாலிகை** *ammāligai*, பெ. (n.) புளி; tamarind, *Tamarindus indica* (சா.அக.).

**அம்மாலைத்தேவர்** *am-mālai-t-tēvar*, பெ. (n.) **கள்ளர்குலப் பட்டப் பெயர்களுள் ஒன்று** (கள்ளர் சரித். பக். 145); a caste title of Kaḷḷars.

*[அம் + மாலை + தேவர்.]*

**அம்மாள்** *ammāḷ*, பெ. (n.) 1. **தாய்**; mother. 2. **தாய்போல் மதிக்கப்படுபவள்**; any matron respected as a mother. அந்த அம்மாள் நல்ல அம்மாள். 3. **ஒரு திருமாலிய (வைணவ) ஆசிரியர் பெயர்**; name of a Vaiṣṇava Ācārya. 'நடாதூரம்மாள்' (ஈடு, 7. 6 : 10).

ம. அம்மாள்

*[மருமம் = மார்பு, முலை. மருமம் → மம்மம் → அம்மம் = தாயின் அல்லது பெண்ணின் முலை, முலைப்பால், குழந்தையுணவு. ஒ.நோ: கருமம் → கம்மம் → கம். அம்மம் → அம் → அம்மு = தாய்ப்பால், குழந்தையுணவு, குழந்தைக்கு ஊட்டுஞ்சோறு.*

*அம் → அம்ம = பாலூட்டுந் தாய். அம்ம → அம்மை = தாய். 'அம்ம' என்பதே முந்துவடிவம்; அதன் இலக்கிய வடிவமே 'அம்மை'. ம., தெ., க. அம்ம.*

*அம்ம → அம்மா = 1. விளி வடிவம். 2. எழுவாய் வடிவம். அம்மா→அம்மாள் = தாய் (உ.வ.). ஒ.நோ: அக்க → அக்கா → அக்காள். அம்மா, அம்மாள் என்னும் வடிவங்கள் கொச்சையாகக் கொள்ளப்படாவிடினும், வழுவான வடிவங்களாகும். முன்னது வேற்றுமை வழு; பின்னது அதன்மேலும் பெண்பாலீறு சேர்ந்த ஈற்று வழு. அம்ம அல்லது அம்மை என்பதே பெண்பாற்*

பெயர். அதன்மேலும் பெண்பாலீறு சேர்ப்பது மிகைபடக்கூறல்.

அம்மை → அம்மன் = காளி போன்ற ஆண் மறம் மிக்க பெண் தெய்வம். அன்னீறு ஆண்மையை யுணர்த்தும்.]

**அம்மான்** *ammāṉ*, பெ. (n.) 1. தாயுடன் பிறந்தவன் (பிங்.); mother's brother, maternal uncle. 2. பெண்கொடுத்த மாமன் (இ.வ.); wife's father (Loc.). ''உரியவம்மான் மாதுலன் றான்'' (கூர்மபு. வியாதர் கரும. 10). 3. அத்தை கணவன்; husband of father's sister. 4. தந்தை; father. ''மலரோ னம்மான்'' (கம்பரா. ஆரணிய. மாரீசன். 50). 5. அழகிய பெரியோன்; the beautiful great one. ''திகழத் திகழு மடிமுடியுங் காண்பான் கீழ்மே லயனு மாலும் அகழப் பறந்துங் காணமாட்டா வம்மான்'' (திருவாச. 442). 6. கடவுள்; God, as father. ''அன்னவர் செய்யுஞ் சிருட்டியு மம்மா னருளினாற் றன்வயத் தாக்கி'' (சூத. சிவமான். 10 : 17). ''ஆழி யங்கைக் கருமேனி யம்மான்'' (திவ். திருவாய். 5. 1 : 6).

ம. அம்மாவன்

[அம்மை → அம்மான் = அம்மையொடு பிறந்தவன்.]

**அம்மான்கோலம்** *ammāṉ-kōlam*, பெ. (n.) தாய் மாமன் மூன்றாம் நாள் பெண்ணிற்கு ஆணுடை யணிவித்துச் செய்துவைக்கும் திருமணவூர்வலம் (பிராம.); a ceremony conducted under the auspices of the maternal uncle usually on the third day of marriage, when the bride dressed as a boy is taken in procession (Brāhm.).

**அம்மான்சம்பாவனை** *ammāṉ-śambāvaṉai*, பெ. (n.) திருமணத்தில் அம்மான் கொடுப்ப தாக விளம்பியிடும் முதற் கொடைப்பணம் (பிராம.); first money gift made at the wedding by the maternal uncle to the bride or bridegroom (Brāhm.).

[அம்மான் + Skt. sambhāvanā > த. சம்பாவனை = சிறப்பு, நன்கொடை.]

**அம்மான்சீர்** *ammāṉ-šīr*, பெ. (n.) பையனுக்குப் பூணூற் சடங்கிலாவது பெண்ணிற்குத் திருமணத்திலாவது தாய்மாமன் வைக்கும் வரிசை; gifts made by a maternal uncle to his nephew during his investiture with the sacred thread, or to his niece at her wedding.

**அம்மான்பச்சரிசி** *ammāṉ-paccariši*, பெ. (n.) 1. நிலத்தையொட்டிப் படரும் ஒரு செடிவகை; an annual with procumbent branches, *Euphorbia hirta* (செ.அக.)—raw-rice plant, *Euphorbia indica* alias *E. thymifolia* (சா.அக.).


அம்மான்பச்சரிசி

மறுவ. சித்திரப் பாலாவி, சித்திரவல்லாதி, சிற்றிலைப்பாலாவி, சீதேவியார் செங்கழுநீர்.

சென்னை அகராதியின் (Lexicon)பின்னிணைப்பில் red Indian water-lily; செங்கழுநீர் என்று குறித்திருப்பது ஐயுறவிற் கிடமானது.

அம்மான்பச்சரிசியின் மூவகைகள் :

1. சின்னம்மான்பச்சரிசி ; thyme - leaved spurge, *Euphorbia thymifolia* alias *E. macrophylla*. இதுவே மூன்றிலும் பெருவழக்கானது.
2. பெரியம்மான்பச்சரிசி ; pill - beariho-spurge, a common weed, *Euphorbia pilulifera* alias *E. hirta*.
3. சிவப்பம்மான்பச்சரிசி; a red variety, *Euphorbia rosea*.

**அம்மான்பொடி** *ammāṉ-poḍi*, பெ. (n.) 'அம்மான் அம்மான்' என்று கத்திக்கொண்டு தன் பின்னால் வருமாறு பிள்ளைக்கடத்தி பிள்ளை களின்மேல் தூவும் சொக்குப்பொடி (திவ். நாய்ச். 2 : 4, வியா.); magic powder thrown by a kidnapper on a child causing the child to follow him crying *ammāṉ* '*ammāṉ* (செ.அக.) — a medicinal or magic powder having the quality of inducing sleep—Soporific, Hypnotic.

Note: It was generally used in olden days by Koravas and other criminals to decoy children for purposes of theft, and by magicians to decoy children as well as adults for purposes of their own (சா.அக.).

**அம்மானார்** *ammāṉār*, பெ. (n.) 1. மகளிரின் அம்மானைப் பந்தாட்டம்; a game of balls played by girls. அம்மானை பார்க்க; see *ammāṉai*. 2. அம்மானைப் பனுவல்; a species of poem, which has the word *ammāṉai* as its

refrain. ''சீராமர் அம்மானார் முகிந்தது முற்றும்'' (தஞ். சரசு. i, 467).

**அம்மானை** *ammāṉai*, பெ. (n.) 1. ***மகளிர் மூவர் கூடிப் பல பந்துகளை மேலெறிந்து அம்மானைப் பாட்டுப் பாடிக்கொண்டு அவை நிலத்தில் விழாவாறு மேன்மேலும் ஒவ்வொன் றாக விரைந்து கையால் தட்டி மேலெழுப்பி, விரும்பிய நேரம் விளையாடும் விளையாட்டு***; a game played by girls singing the *ammāṉai* song, at the same time, throwing up and keeping a number of balls in the air (இலக். வி. 807). 2. ***அம்மானையாடும் பந்துகள்***; balls used in the game. 3. ***அம்மானையாடும் போது பாடும் கலித்தாழிசைப் பாட்டு***; a particular type of song sung by the players during the game.

எ-டு :

''கருமிடற்றா ருலகமெலாங்
காணியெனக் கொண்டதனால்
கருதரிய பெருஞ்செல்வர்
காலமெலாம் அம்மானை
கருதரிய பெருஞ்செல்வர்
காலமெலாம் ஆவாரேல்
கருவையிலேன் பலரறியக்
களவாண்டார் அம்மானை
களவாண்ட பின்மறைவாய்க்
கடந்துமுளா ரம்மானை.''

4. ***அம்மானைப்பருவம்*** பார்க்க; see *ammāṉai-p-paruvam*. 5. ***பதினெண் கலம்பக வுறுப்பு களுள் ஒன்றான பாட்டு, அம்மானைப் பாட்டுப் போல் இயற்றப்படுவது*** (இலக். வி. 812); a section of *kalambagam*, a species of poem. 6. ***உறுப்பிசை*** (stanza) ***தோறும் ஈற்றில் அம்மானை அல்லது அம்மானாய் என்று முடியும் தொகைப் பா***; a minor species of poetic composition, each verse or stanza of which has *ammāṉai* or *ammāṉāy* as its refrain.

எ-டு :

''செங்க ணெடுமாலுஞ் சென்றிடந்துங்
காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே
போந்தருளி
யெங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு
மாட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன்
பெருந்துறையான்
அங்கண னந்தணனா யறைகூவி
வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண்
அம்மானாய்''
(திருவாச. 175).

7. ***அடிதோறும் அல்லது அரையடிதோறும் அம்மானை யென்று முடியும் தனிப்பாட்டு***; stray piece of poetry ending with the refrain *ammāṉai* at the end of each line or even half a line.

எ-டு :

''திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ
வம்மானை
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ
வம்மானை
ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளிந்த
தம்மானை
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ
வம்மானை''
(தனிப்பா. தி. 1, பக். 170).

**ம.** அம்மான; **க.** அம்மாலெ; **தெ.** அம் மனலு.

*[அம்மை + அனை (அன்னை) – அம்மனை → அம்மானை.]*

**வி-ம் :** அம்மானைப் பந்து விளையாட்டு மும்மகளிர் கூடி யாடுவது. ஒவ்வொருவரும் குறைந்தபக்கம் முப்பந்து கொண்டு விளை யாடுவர். இதனால் மேலிருந்து விழும் நற் பொருள்களை நிலத்தில் விழுமுன் விரைந்து பிடிக்குந் திறமும், தன்மேல் விழுந்து தாக்கும் தீய பொருள்களை விரைந்து தடுக்குந் திறமும் மிகும்.

ஆடும்போது பாடும் ஒவ்வொரு பாட்டும் ஒரு சிறந்த கூற்றும், அதுபற்றிய வினாவும், அதற்குரிய விடையுமாக அமையும். ஒரு பெண் முதற்கண் ஒரு கூற்றை நிகழ்த்துவாள்; இன்னொரு பெண் அதுபற்றி ஒரு வினா வெழுப்புவாள்; மூன்றாம் பெண் அதற்கு விடையிறுப்பாள். வினாவும் விடையும் பெரும்பாலும் இரட்டுறலா யிருந்து இன்பந் தரும். மேற்காட்டிய முதல் அம்மானைப் பாட்டிலுள்ள இரட்டுறல்கள் வருமாறு :

களவாண்டார் = களவு செய்தவர், களா மரத்தடியிற் படிமை வடிவா யிருப்பவர்.

மறைவாய் = ஒளிந்து, திருமறையில் நூற் பொருளாய்.

கடந்து = ஓடிப்போய், முக்கரணத்திற் கெட்டாது.

இரட்டுற லில்லாவிடத்தும், அம்மானைப் பாட்டு நகைச்சுவையா யிருப்பதுண்டு.

எ-டு :

''விரிந்தபுகழ் புள்ளிருக்கு வேளூர்வ
யித்தியனார்
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதர்கா
ணம்மானை
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதரே
யாமாயின்
மருந்துவிலை கைக்கூலி வாங்காரோ
வம்மானை
வாயிலே மண்போட்டு வாங்குவார்கா
ணம்மானை''

(தனிப்பா. தி. 1, பக். 65).

வினைதீர்த்தான் (வைத்தீசுவரன்) கோயிலுக்குத் தெய்வக்காண்பு (சுவாமி தரிசனம்) காணச் செல்பவர், தம் நோய் நீங்கும் பொருட்டு அத் தலத்து மண்ணைச் சிறிது உட்கொள்வது வழக்கம்.

ஒரே சமையத்திற் பந்துகளையும் நிலத்தில் விழாவாறு தட்டிக்கொண்டு, பாட்டையும் தாளமுங் கூற்றுந் தப்பாது இன்னிசையாய்ப் பாடிக்கொண்டு, இடைவிடாது இவ் வாட்டை யாடுவது, ஒரு பல்கவனப் பயிற்சி யாகவு மிருக்கும்.

அம்மானைப் பாட்டின் யாப்பும் பொருளும் அணியும் நோக்கின், பண்டைத் தமிழ மகளிரின் கல்வித்திறமும் விளங்கும்.

காண்பார் களிக்கத்தக்க வட்டக்காட்சி (circus) நிகழ்ச்சியொத்த இவ்வரிய இளமகளிர் விளையாட்டு, பெண்டிர் வெளியே தலைகாட்ட முடியாத வேற்றரசு கொடுங்கோற் காலத்தில் அறவே வழக்கொழிந்தது.

**அம்மானைப்பருவம்** *ammāṉai-p-paruvam*, பெ. (n.) **பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பனுவற் பருவங்கள் பத்தனுள் ஒன்று**; a section of *peṇpāṟpiḷḷaittamiḻ*, which describes the stage of childhood, in which the child plays the *ammāṉai* game. There are ten stages of childhood, of which this stage is one.

*[அம்மானை + பருவம்.]*

**அம்மானைவரி** *ammāṉai-vari*, பெ. (n.) **ஒருவரைப் புகழ்ந்து பாடும் அம்மானைப் பாட்டு**; song sung in praise of a person by girls or women while playing the *ammāṉai* game.

ம. அம்மானப்பாட்டு

எ-டு :

''வீங்குநீர் வேலி யுலகாண்டு
விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த வுரவோன்யார்
அம்மானை
ஓங்கரணங் காத்த வுரவோன்
உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண்
அம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ
ரம்மானை''

(சிலப். 29, அம்மானை வரி).

இது, வினாவும் விடையும் அதனாலெடுக்கும் முடிபுமாக அமைந்துள்ளது.

*[வள் → வர் → வரி. வரித்தல் = வரணித்தல், புகழ்தல். வரி = ஒன்றை வண்ணித்து அல்லது புகழ்ந்து பாடும் பாட்டு, அம்மானை விளையாட்டிற் பாடும் வரிப்பாட்டு.]*

**அம்மி** *ammi*, பெ. (n.) 1. **கறிச்சரக்கு அரைக்கும் சின்னம்மி**; horizontal flat stone on which spices for curry are crushed or ground with a stone roller. ''உரலி லம்மியி லோங்கு முலக்கையில்'' (காசிகாண். கற்பிலக். 26). 2. **சாந்தரைக்கும் பெரியம்மி**; big horizontal level or concave stone used for grinding fine mortar. 3. *மாமி*; mother-in-law (சங்.அக.).

ம. அம்மி

*[அம்முதல் = அமுக்குதல், அமுக்கியரைத்தல். அம் + இ – அம்மி.]*

**அம்மிக்கல்** *ammi-k-kal*, பெ. (n.) 1. **அரைகல், அம்மி**; grinding stone. ''பெருத்த வம்மிக் கன் முதலிய தாங்கிப் பேணிவிற் றுண்ப னோ வுணர்வீர்'' (சூத. ஞான. 11 : 27). 2. **அம்மிக் குழவி** (பிங்.); stone roller for grinding.

அம்மிக்கல்

ம. அம்மிக்குட்டி, அம்மிக்குழவி.

*[அம்மி + கல்.]*

**அம்மிக்குழவி** *ammi-k-kuḻavi*, பெ. (n.) **அம்மியில் அரைக்கும் நீண்ட கல்லுருளை**; cylindrical stone roller used for grinding curry ingredients.

ம. அம்மிக்குழவி

*[அம்மி + குழவி.]*

**அம்மிப்பாலுண்ணவரை - த்தல்,** *ammi-p-pāl-uṇṇa-v-arai-,* 4 செ.குன்றாவி. (v.t.) *கலுவத்தில் ஈரமில்லாதபடி குழவியைக்கொண்டரைத்தல்;* to grind without leaving moisture (சா.அக.).

*[அம்மி + பால் + உண்ண + அரை.]*

**அம்மிமிதி-த்தல்** *ammi-midi-,* 4 செ.கு.வி. (v.i.) *திருமணக் கரணத்தில் மணமகன் மணமகள் வலக்காலைத் தூக்கிவைக்க உதவ, அவள் அதை அம்மிமேல் வைத்தல்;* to perform the ceremonial procedure in which the bride places her right foot on the grinding-stone, the bridegroom helping her to do so. "அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீநான்" (திவ். நாய்ச். 6 : 8).

ம. அம்மிசவிட்டுக

**அம்மியம்** *ammiyam,* பெ. (n.) *1. கள்* (பிங்.); toddy. *2. காளம்* (வின்.); trumpet. *3. சிறு சின்னம்* (சங்.அக.); a kind of clarionet.

**அம்மிரா** *ammirā,* பெ. (n.) *செந்தாழை;* false tragacanth, *Sterculia urens* (சா.அக.).

**அம்மினியுளுவை** *ammini-y-uḷuvai,* பெ. (n.) *ஒரு வகை மீன்;* a kind of fish, *Narcine timlei.*

**அம்மு** *ammu,* பெ. (n.) *சோறு;* boiled rice.

*[அம்முதல் = உண்ணுதல். அம்மு (மு.தொ. ஆ.பெ.).]*

**அம்மு-தல்** *ammu-,* 5 செ.கு.வி. (v.i.) *1. முகில் படிந்து வானம் மந்தாரமாதல்* (யாழ்ப்.); to spread thickly, as a mass of motionless clouds that overspread the heavens, obscuring the rays of the sun (J.). *2. மாயம் பண்ணுதல்* (வின்.); to dissemble, on hearing a thing spoken of, by seeming to know nothing about it, to act with reserve and duplicity. —, 5 செ. குன்றாவி. (v.t.) *1. அமுக்குதல்;* to press down. "வல்லிய மாமனெகிழ்த்து" (மருதூரந். 91). *2. விரைந்து மிகுதியா யுண்ணுதல்;* to eat voraciously. சோற்றை நன்றாய் அமுக்கு கிறான் (உ.வ.). *3. அடைத்தல்;* to plug (சா.அக.). *4. மூடுதல்;* to cover (சா.அக.). *5. ஏமாற்றுதல்;* to deceive.

ம. அம்முக

*[அம் → அம்மு. அம்முதல் = அமுங்குதல், அமுக்குதல்.]*

**அம்முக்கள்ளன்** *ammu-k-kaḷḷaṉ,* பெ. (n.) *அடக்கத் திருடன், மாய்மாலக் கயவன்;* thievish person, dissembling rogue (W.).

ம. அம்மக்கள்ளன்

*[அம்மு + கள்ளன்.]*

**அம்முண்டு** *ammuṇḍu,* பெ. (n.) *முட்டாள், மதியிலி* (இ.வ.); dolt, idiot (Loc.).

*[அம் = அமுக்கம், அடக்கம். உண்டு = உள்ளது. அம் + உண்டு – அம்முண்டு (மதியமுங்கி அல்லது மதிகுன்றி யிருப்ப-வன்-வள்). அம்முண்டு → அப்புண்டு (நெல்லை).]*

**அம்மூவனார்** *ammūvaṉār,* பெ. (n.) *எட்டுத் தொகையுள் ஒன்றான ஐங்குறுநூற்றில் இரண்டாம் நூறான நெய்தலை யியற்றியவர்;* name of the author of the second section of *Aiṅguṟunūṟu,* one of the Eight Anthologies of the *Saṅgam* period.

**அம்மெனல்** *am-m-eṉal,* பெ. (n.) *1. நீர் ததும்பற் குறிப்பு;* onom. expr. of filling or overflowing, as of water. "அம்மெனக் கண்ணீ ரரும்பி" (பதினொ. திருவிடை. மும். 10 : 16). *2. ஓர் ஒலிக்குறிப்பு* (பிங்.); onom. expr. of humming. *3. ஓர் அசை;* a syllable. "அம் மென்றா லாயிரம்பாட் டாகாதோ?" (தனிப்பா. தி. 1, பக். 10).

*[அம் + எனல்.]*

**அம்மே** *ammē,* பெ. (n.) *குறத்திப்பாட்டில் பாட்டு தொறும் அல்லது அடிதொறும் ஈற்றில் வரும் மகடூஉ முன்னிலை;* a vocative addressing a lady, and occurring at the end of each stanza or line of a song sung by a Kuṟava woman in the traditional pattern, or of one composed in imitation of that.

*எ-டு :*

"மோரியாவின் மலைதனிலே யாபிரகா
மம்மே
முக்கியமா யீசாக்கைப் பலிகொடுத்தா
னம்மே"
(பெத்லகேம் குறவஞ்சி, மலைவளம், 3).

**அம்மை**[1] *ammai,* பெ. (n.) *1. தாய்;* mother. "அத்தனொடும் அம்மையெனக் கானார்" (தேவா. 6.53 : 9). *2. மலைமகள்* (பிங்.); Pārvati. *3. காளி;* *Kāḷi.* *4. பாட்டி* (பரவர்); grandmother (Paravas). *5. சமணத் துறவினி (பெண்துறவி)* (சூடா.); female Jaina recluse. *6. அறத்தேவி (தருமதேவதை)* (சூடா.); Goddess of virtue. *7. அம்மைநோய் வகைகள்;* kinds of pox.

**Sum.** *eme*; **Akkad.** *ama, amu*; **Sum., Oce.** *um, ama*; **Ar.** *um*; **Indon.** *ma, uma, amai, umai, yāma*; **Mon-Khm.** *ama, ma*; **Mu.** umā, *māc, māy, mā-in*; **Skt.** umā, ambā.

அம்மைநோய் வகைகள் :

1. சின்னம்மை; small-pox, *Variola.*
2. பெரியம்மை; small-pox with an eruption of large blebs, *Variola pemphigosa.*
3. விளையாட்டம்மை; a mild form of small-pox, *Varioloid.*
4. தட்டம்மை; pseudo small-pox, almost the same as the preceding.
5. பாலம்மை; a mitigated form of small-pox, milk-pox.
6. தவளையம்மை; another form of small-pox affecting the joints.
7. கல்லம்மை; wart-pox with hard pustules, *Variola verrucosa.*
8. மிளகம்மை; a small-pox with pepper like distinct vesicles, *Discrete variola.*
9. கடுகம்மை; one with an eruption of small vesicles like mustard seeds, *Variola miliaris.*
10. பாசிப்பயற்றம்மை, பயற்றம்மை; simple and unmodified small-pox, *Variola vera.*
11. வெந்தயவம்மை; small-pox with pustules like the dill-seeds.
12. கொள்ளம்மை; another variety with pustules of the size of horse gram.
13. பனையேறி, ஒரு குரு அம்மை; a kind of measles, the eruptions of which appear to ascend from the lower limbs, and thence spread over the body.
14. பனைமுகரி, ஒரு கருப்புக் குரு அம்மை; a severe form of black measles.
15. கரும்பனசை; a small-pox with black vesicles, Black or *Hemorrhagic variola.*
16. பயறி; another variety of measles.
17. இராமக்கம்; a form of small-pox in which the pustules strike in and the contents become absorbed, leaving the walls empty, *Variola siliquosa.*
18. விச்சிலுப்பை அல்லது விச்சிலிர்ப்பான்; chicken-pox, *Varicella.* இது சிச்சிலுப்பான் அல்லது சிச்சிலிர்ப்பான் எனவும் படும்.
19. நீர்க்கொள்வான்; a mild form of chicken-pox, varioloid, *Pustular varicella.*
20. கொப்புளிப்பான்; another variety of chicken-pox.

(சா.அக.)

விலங்கின அம்மைநோய் :

1. மாட்டம்மை; cow-pox, *vaccinia.*
2. ஆட்டம்மை; sheep-pox, *ovinia.*
3. பன்றியம்மை; swine-pox.
4. குதிரையம்மை; horse-pox.
5. ஒட்டக அம்மை; camel-pox. (சா.அக.)

*[அம்மம் = முலைப்பால். அம்மம் → அம்ம → அம்மை = முலைப்பாலூட்டுந் தாய். இனி, அம்மு → அம்ம → அம்மை என்றுமாம். அம்மு = சோறு, சோறூட்டுந் தாய், தாயின் தாய், தாய் போன்ற தெய்வம், தாய்போன்ற பெண்.*

*அம்மை என்னும் நோய்ப்பெயர் அம்மை யென்னும் காளியின் பெயரினின்று ஏற்பட்டது.]*

திணைமயக்க மில்லாத ஐந்திணை மக்கட் பாகுபாடு, கடல்கோள்கட்கு முந்திய குமரி நாட்டில் தோன்றிற்று. முதுவேனிற்கால முதிர்வெப்பத்தாற் கொப்புளநோய் பாலை வாணரைத் தாக்கியபோது, அது அவர் தெய்வமாகிய காளியம்மையால் உண்டான தென்று கருதி, அதற்கு அம்மைநோய் என்று பெயரிட்டனர்.

திணைமயக்கம் ஏற்பட்டுப் பாலைவாணர் வெட்சி கரந்தை மறவரும் காட்டுப் படைஞரு மாக மருதநில மன்னராலும் வேந்தராலும் அமர்த்தப்பட்ட பின், காளி ஐந்திணை நிலத் திற்கும் பொதுவான கொற்றவை என்னும் போர் வெற்றித் தெய்வமும், கொப்புளநோய் வாராமல் தடுத்தற்கு வழிபடும் மறத்தெய்வ மும் ஆனாள். அம்மை என்னும் பாலை நிலத்துக் கொப்புள நோய்ப்பெயர், ஏனை நால்நிலங்கட்கும் பரவிற்று.

**அம்மை**[2] *ammai,* பெ. (n.) 1. **மேலுலகம்;** heaven. "அம்மை பயக்கு மமிர்து" (தேவா. 6.23:8). 2, முற்பிறப்பு; former birth. "அம்மையாற் றவங்க டாங்கி" (சூளா. மந்தி. 118). 3. வருபிறப்பு (பிங்.); future birth. "அம்மையில் வாழ்விடை யற்ற முறாமே" (கந்தபு. தேவ. தெய்வ. 41). 4. **மறுமை;** the next world, state after death.

*['உ' முன்மைச் சுட்டு, உயர்வுச் சுட்டு. உ → உம்மை = முன்னிலைமை, உயர்நிலைமை, பின்னிலைமை (வருநிலைமை, எதிர்நிலைமை). காலமுன் இடமுன் என முன்மை இரண்டு. உம்மை → அம்மை.]*

**அம்மை**[3] *ammai*, பெ. (n.) 1. அமைதி; calmness, quietude, gentleness. ''அம்மை யஞ் சொலார்'' (சீவக. 3131). 2. அழகு (பிங்.); beauty. 3. **சிலவாகிய சொற்களால் சிறந்த பொருளைக் கூறி நாலடியின் மிகாது வரும் செய்யுள்களைக்கொண்ட பனுவல், எண்வகை வனப்புகளுள் ஒன்று**; an epic poem presenting an excellent subject consisting of verses of not more than four lines composed of short sweet words, one of eight *vanappus*.

''வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் சீரிது நுவலின்
அம்மை தானே அடிநிமிர் பின்றே''
(தொல். பொருள். செய். 227).

இந் நூற்பாவின் 2ஆம் அடியை உரையாசிரியர் சிலர் ''சின்மென் மொழியாற் றாய பனுவலோடு'' என்று பாடம் மாற்றி, 'இடையிட்டு வந்த பனுவ லிலக்கணத்தோடும்' என்றும், 'அறம் பொரு ளின்ப மென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப வேறிடையிடை அவையின்றியுந் தாய்ச் செல்வ தென்றவாறு; அஃதாவது, பதினெண் கீழ்க்கணக்கென வுணர்க' என்றும்,

''பொருள்கருவி காலம் வினையிடனொ
டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்''
(குறள், 675)

என்பது, இலக்கணங் கூறிய தாகலிற் பனுவலோ டென்றான்.

''மலர்காணின் மையாத்தி நெஞ்சே
யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று''
(குறள், 1112)

என இஃது இலக்கிய மாகலாற் றாயபனுவ லெனப்பட்டது. இவை தனித்து வரினும் அவ் வனப்பெனப்படும்; தாவுதல் என்பது இடையிடுதல் என்றும், பிறவாறும் உரைப்பர்.

''பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்
..................................................
யாப்பின் வழிய தென்மனார் புலவர்''
(தொல். பொருள். செய். 75)

என்று மேற்கூறிய எழுநிலை யாப்புள் பாட்டொன்றையே பின்னர் எண்வகை வனப்பாக ஆசிரியர் வகுத்துக் கூறுதலானும், பாட்டு நூலன்மையானும், பதினெண் மேற்கணக்கும் பதினெண் கீழ்க்கணக்கும், ஒரு சில புறநானூற்றுச் செய்யுள்கள் தவிர ஏனையவெல்லாம் திருக்குறட்குப் பிற்பட்டவை யாதலானும், எண்வகை வனப்பிலக்கணமும் அகலப் பாவிற்கும் தொடர்நிலைச் செய்யுட்குமே யுரியவை யாதலானும், அவ்வுரைகள் பொருந்தா வென வறிக. மேலும், ''சீரிது நுவலின்'' என்னும் பாடமே மோனையா யமைதலையும் பொருள் சிறத்தலையும் நோக்குக.

இனி, தொல்காப்பியத்திற்கு இலக்கியமா யிருந்த பண்டைத் தமிழ்நூல்களும் பனுவல் களுமெல்லாம் இறந்துபட்டனவென்றும், அம்மை வனப்பிற்குச் சில தனிப்பாக்களை மட்டும் இற்றை யிலக்கியத்தினின்று எடுத்துக் காட்ட வொண்ணுமென்றும் அறிந்து கொள்க.

*[அம் → அம்மை. அம் = அழகு.]*

**அம்மை**[4] *ammai*, பெ. (n.) **கடுக்காய்**; Indian or country gall-nut, *Chebulic myrobalan*.

**அம்மைக்கட்டு** *ammai-k-kattu*, பெ. (n.) **கூகைக் கட்டு**; inflammation of the salivary glands with swelling along the neck, mumps, *Parotitis* (சா.அக.).

அம்மன்கட்டு பார்க்க; see *amman-kattu*.

**அம்மைக்குரு** *ammai-k-kuru*, பெ. (n.) **அம்மைக் கொப்புளம்**; pustule of small-pox.

*[அம்மை + குரு.]*

**அம்மைக்கொண்டை** *ammai-k-kondai*, பெ. (n.) **பெண்டிர் கொண்டைவகை**; a mode of coiffure.

*[அம்மை + கொண்டை.]*

**அம்மைக்கொப்புளம்** *ammai-k-koppulam*, பெ. (n.) **அம்மைநோயில் தோன்றும் சலக் கட்டி**; pustule of small-pox.

*[அம்மை + கொப்புளம்.]*

**அம்மைகுண்டலி** *ammai-kundali*, பெ. (n.) (ஓகம்) **மூல நிலைக்களத்தில் (மூலாதாரத்தில்) அமர்ந்திருப்பதாகக் கருதப்படும் தாயாகிய குண்டலி யாற்றல் (சக்தி)**; (Yoga) the supreme goddess *Kundali* (representing the creative

force) who is supposed to dwell at the base of the spinal column in the region of the sacral plexus. "காலைப் பிடித்தனலை யம்மை குண் டலியடிக் கலைமதியி னூடு தாக்கி" (தாயு. தேசோ. 1).

Note: In Tantric science, it is described as a coiled serpent lying dormant in the human body. It is by rousing this Cosmic power that a Yogi is said to obtain whatever he desires and gains all psychic powers (சா.அக.).

**அம்மைகுத்து-தல்** *ammai-kuttu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* **ஆவின் அம்மைக் கொப்புளத்தினின்று எடுத்த பாலை அம்மைநோய் தாக்காவாறு மக்களுடம்பில் ஊசிவாயிலாகச் செலுத்துதல்;** to inoculate with vaccine (virus of cow-pox) to procure immunity from small-pox or at-least mitigate its virility or severity, vaccinate. *2.* **அம்மைகுத்தல்**; vaccination.

**அம்மைச்சுரம்** *ammai-c-curam*, பெ. (n.) **அம்மைக் கொப்புளத்தோடு கூடி வரும் காய்ச்சல்**; fever accompanied by eruption on the skin, as in small-pox, eruptive fever.

*[அம்மை + சுரம். சுள் → சுல் → சுர் → சுரம் = உடம்பு சுடும் காய்ச்சல். சுள்ளெனல் = சுடுதல்.]*

சுரம் > **Skt.** jvara.

**அம்மைத்தழும்பு** *ammai-t-taḷumbu*, பெ. (n.) **அம்மைக் கொப்புளம் அடங்கித் தீர்ந்தபின் ஏற்படும் வடு**; small-pox pit.

*[அம்மை + தழும்பு.]*

**அம்மைப்பால்** *ammai-p-pāl*, பெ. (n.) *1.* **அம்மை குத்துதற்குரிய பால்**; virus of cow-pox as used in vaccination. *2.* **அம்மையின் பால்**; small-pox vaccine (சா.அக.).

அம்மைகுத்தற் பாலின் இருவகை: *1.* ஆவம்மைப் பால்; bovine vaccine got direct from cow. *2.* மாந்தன்வாய்ப் பால்; humanized vaccine, got from human subject (C.O.D.).

*[அம்மை + பால்.]*

**அம்மைபோடு-தல்** *ammai-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **அம்மை வார்த்தல்**; to have an attack of small-pox, chicken-pox or any other allied disease. வீட்டில் குழந்தைக்கு அம்மை போட்டிருக்கிறது (உ.வ.).

*[அம்மை + போடு. போடுதல் = கொப்புளம் உண்டாதல்.]*

அம்மை போட்டுதல் என்பது சொல்வழு. புகவிடு → புகடு → புகட்டு → போட்டு. போட்டுதல் = குழந்தைக்கும் நோயாளிக்கும் பால், மருந்து, நீர் முதலியவற்றைச் சங்கில் அல்லது கறண்டியிலிட்டு வாய்வழி உட் செலுத்துதல்.

**அம்மைமுத்து** *ammai-muttu*, பெ. (n.) **அம்மை நோய்க் கொப்புளம்**; pustule of small-pox.

*[முத்துப்போல் உருண்டையாயும் சற்றுப் பளபளப்பாயும் இருத்தலால், கொப்புளம் முத் தெனப்பட்டது (உ.ஆ.பெ.).]*

**அம்மையப்பர்** *ammai-y-appar*, பெ. (n.) **உயிரினங்க ளெல்லாவற்றிற்கும் தாயுந் தந்தையும் போன்ற இறைவன், சிவன்**; God, as father and mother of all living beings, Śiva. "அம்மை யப்பரே யுலகுக் கம்மை யப்பரென் றறிக" (திருக்களிற்றுப். 1).

*[அம்மை + அப்பன் — அம்மையப்பன் → அம்மையப்பர். 'அர்' உயர்வுப் பன்மையீறு.]*

கடவுள், தாய் கூறும் தந்தை கூறும் ஒருங்கே கொண்டவர் என்பதைப் பொதுமக்கட்கு எளிதாய் விளக்குதற்பொருட்டு, முந்துகால மெய்ப்பொருளியலார் கடவுளின் ஆற்றலைத் தனியாகப் பிரித்து அம்மையென்றும், எஞ்சிய கூற்றை அப்பனென்றும் உருவகித்துக் கூறினர். ஆயின், உருவ வழிபாட்டை நிலை நாட்ட விரும்பிய பிற்காலத்தார், அவ்வணி வகை யிருகூறுகளையும் உண்மையான ஆண் பெண் வடிவுகளாகவே காட்டி உருவங்களை யுஞ் செய்துவிட்டனர்.

உண்மையில், கடவுள் உருவமும் பாலியல்பு மின்றி, ஒரு வகையிலும் பகுக்கப்பட முடியாத வராய், ஆவி வடிவில் எங்கும் நிறைந்து மன மொழி மெய்களைக் கடந்திருப்பவர்.

சிவமதம் முதன்முதல் தமிழ்நாட்டில் தோன்றியமையாலும், இன்றும் பெருவழக்கா யுள்ளமையாலும், 'சிவன்' என்னும் பெயர் கடவுளைச் சிறப்பாகக் குறித்தது.

**அம்மையப்பன்** *ammai-y-appaṉ*, பெ. (n.) **அம்மையப்பர்** பார்க்க; see *ammai-y-appar*.

*[அம்மை + அப்பன்.]*

**அம்மையார்கூந்தல்** *ammaiyār-kūndal*, பெ. (n.) **கொடியார்கூந்தலென்னும் பூண்டு** (சங்.அக.); a kind of plant called *koḍiyārkūndal* — **பூண்டு வகை** (மூ.அ.) — Seeta's thread, m. cl., *Cuscuta reflexa* (செ.அக.).

ம. அம்மையார்கூந்தல்

ammaiyō, இடை. (int.) ஒரு
ு; an exclamation of astonish-
ையோ வென்றது அம்மையோ
ு' (கலித். 85 : 29, நச். உரை).
.]

ai-vaḍu, பெ. (n.) அம்மைத்
pox pits, pock-mark.

ammai-vaṉappu, பெ. (n.)
க; see ammai³.

ammai-vār-, 4 செ.கு.வி.
போடுதல்; to have small-pox,
c.

சொள்ளை ammai-vārtta-šoḷḷai,
மநோயா லேற்பட்ட தழும்புக்
rk left by the small-pox pustule,
ock-pit (சா.அக.).

கம் ammai-vārtta-mugam,
மைத் தழும்புள்ள முகம்; face
pits, pock-marked face.

ஞ்சி ammai-vārtta-mūñji,
மைவார்த்தமுகம் பார்க்க; see
ugam.

கம். மக்கள் முகத்தை 'முஞ்சி'
ழக்கு (slang).]

டு-தல் ammai-viḷaiyāḍu-, 5
அம்மைநோய் காணுதல்; to
of small-pox, chicken-pox, etc.

ம. அம்மோ

அம்வந்தி amvandi, பெ. (n.) நீ
உரை); diabetes.

[ஒருகா. அம் + வந்தி. அ
வந்தி.]

அமங்கலம்[1] a-maṅgalam, பெ
யல்லாத நிகழ்ச்சி; inauspic
2. சாவு; death. 3. கைம்
"மங்கலங்களும் அமங்கலமா
அனேகத. 8).

ம. அமங்கள; க. அமங்கல;
அமங்கலம் > Skt. amaṅgala

[அல் → அ (எ.ம.முன்.). அ
கலம்.]

அமங்கலம்[2] amaṅgalam, பெ.
(சங்.அக.); castor-plant, Rici

அமங்கலி a-maṅgali, பெ. (
யிழந்ததனால் தாலியில்லாத
பெண் (பிங்.); மங்கலி எ
widow, as without the tāli, op

[அல் → அ (எ.ம.முன்.).
மங்கலம் → மங்கலி = தாலியு
னொடு வாழ்பவள். அ + மங்
'இ' பெ.பா. ஈறு.]

ம. அமங்கலி; க. அமங்க

அமங்கலை a-maṅgalai, பெ. (
பார்க்க; see a-maṅgali. "கை
பூண்ட கலன்கழி மடந்தை
விதவை நான்கே அமங்கலை

கம்

டக்கம் — அமையடக்கம் → அம
சடக்கம்.]

, பெ. (n.) 1. கூலியில்லாமற்
கட்டாய வேலை; forced unpaid
ணானது; that which is useless.
லைத் தட்டுமுட்டு; trumpery

தெ. அமிசி.

ரி பார்க்க; see *amainda-paṇi*.

*añji-paṇi*, பெ. (n.) அமைந்த
see *amainda-paṇi*.

ணி

சி → அமஞ்சிபணி.]

*añji-y-āḷ*, பெ. (n.) கூலியில்லா
ாய வேலை செய்பவன்; work-
to service without wages, forced
ourer.

ஆள்.]

*amañji-vēlai*, பெ. (n.) போலி
y work.

*am*, பெ. (n.) அம்மட்டம்
*mmaṭṭam*.

*aṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1.
); to wobble. 2. நிலைப்படா
அக.); to be unsteady, as a bench

[ஒருகா. அமல்தல் = நெரு
அமள் → அமடு.]

அமண்டலாதி *amaṇḍalādi*,
கடம்பு (சித்.அக.); small Ind
— a red species of *kaḍambu*
*acutangula* (சா.அக.).

அமணம் *amaṇam*, பெ. (n.)
கொட்டைப்பாக்கு; 20
"பதினாயிரங் கொட்டைப்
னள் பைந்தொடியே" (தல
11).

ம. அவணம்

அமணம் என்பது இருபதி
எண்ணைக் குறிக்கப் பா
ஆளப்படும் தொகைப்பெயா
என்பது அதிற் பாதியாகும்
பது அம்மணம் என் னு
தொகுத்தலாதலால், அரை
கூட்டுச்சொல் இடுப்பில் ஆ
கும் மொட்டைக்கட்டை நீ
வேறொரு பொருளையுந் த
யும், ஒருவகை யிடக்கரட
பாவாசிரியர் அக் கூட்டு
பொருளை மற்றொரு பொ
சொற்றொடரால் வட்டெ
(circumlocution or periph
ளார்.

அமணாளைப்படு-தல் *amaṇ-*
செ.கு.வி. (v.i.) காமவெறி
to burn with lust. 'களிறு.

**அமதி**[1] *amadi*, பெ. (n.) **அறிவின்மை**; foolishness, ignorance.

ம., க., தெ. அமதி; **Skt.** amati.

[அல் → அ (எ.ம.முன்.). மதி = அறிவு, அறிவுப் புலன். அ + மதி.]

**அமதி**[2] *amadi*, பெ. (n.) **சமையம், காலம்**; time, context.

ம., க. அமதி.

[அமைதல் = பொருந்துதல், நேர்தல். அமை → அமைதி → அமதி. ஒ.நோ: அமை → அமையம் → அமயம்.]

**அமந்தம்** *amandam*, பெ. (n.) 1. **மந்தமின்மை, செரிமான நிலை**; the state of being free from indigestion or dullness of appetite (சா.அக.). 2. **சுறுசுறுப்பு**; diligence, activity. 3. **விழிப்பு**; watchfulness, vigilance, alertness. 4. **வினைத் திறம்**; business ability. 5. **வேகம்**; vehemence, force.

ம. அமந்தம்; க. அமந்த; தெ. அமந்தமு.

[அல் → அ (எ.ம.முன்.). மொத்தம் → மத்தம் → மந்தம். அ + மந்தம் – அமந்தம்.]

**அமந்தலம்** *amandalam*, பெ. (n.) செங்கத்தரி (மூ.அ.); orbicular-leaved caper shrub (செ.அக.) — false peacock's foot tree, *Niebuhria linearis* (சா.அக.).

**அமந்தாசிகம்** *amandāšigam*, பெ. (n.) சுருளி (சித்.அக.); iron-wood of Ceylon (செ.அக.)— **சுருள்பட்டை**; red creeper, *Ventilago madraspatana* (சா.அக.).

**அமயம்** *amayam*, பெ. (n.) **சமையம்**; right time, opportunity, context. "ஆனதோ ரமயந் தன்னி லாடின ரமரர் மாதர்" (கந்தபு. உற்பத். திருக்கல். 72).

[அமைதல் = பொருந்துதல், நேர்தல். அமை → அமையம் → அமயம். ஒ.நோ: நேர் → நேரம்.]

**அமர்-தல்** *amar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **இருத்தல்**; to abide, be seated, remain. "திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவோம்" (கந்தபு. கடவுள்வா. 12). 2. **அமைதியாதல்**; to become still or tranquil. காற்றமர்ந்தது (உ.வ.). 3. **இளைப்பாறுதல்**; to rest, repose. 4. **படிதல்**; to settle, be deposited, as a sediment, become close and hard, as sand by rain. 5. **பொருந்துதல்**; to rest upon, as a javelin on the person. "தன்னம ரொள்வாளென் கைதந் தான்" (பு.வெ. 4 : 5). 6. **பொலிதல்** (திவா.); to flourish, to be abundant. 7. **விளக்கணைதல்**; to be extinguished, as a lamp. 'விளக் கானது......காற்றினால் அமருமா போலே' (குருபரம். 305). 8. **ஏற்றதாதல்**; to be suitable; குலத்துக் கமர்ந்த தொழில் (உ.வ.). 9. **திட்டமாதல்**; to be settled, as an affair, to be engaged, as a house. 10. **வேலையிற் சேர்தல்**; to join duty, to be established in a work. வேலையில் அமர்ந்தான் (உ.வ.). 11. **மகிழ்தல்**; to be glad, to rejoice, to be delighted. "அகனமர்ந் தீதலி னன்றே" (குறள், 92). 12. **உள்ளங்கிளர்ந்திருத்தல், இன்முகமாயிருத்தல்**; to be cheerful. "முகனமர்ந்து இன்சொல னாகப் பெறின்" (குறள், 92). —, 2 செ. குன்றாவி. (v.t.) 1. **நெருங்குதல்**; to get close to. "அமரப்புல்லும்" (திருக்கோ. 372). 2. **ஒப்பாதல்** (விதான. குணா. 38); to resemble. 3. **விரும்புதல்**; to wish, desire. "அகனமர்ந் தீதலி னன்றே" (குறள், 92). 4. **செய்தல்**; to do, perform. "நீயிவ ணமர்ந்தன யாவுந் தூதர் கூற" (கந்தபு. யுத்த. முதனாட். 60). 5. **பொந்திகை (திருப்தி) கொண்டமைதல்**; to rest satisfied. 6. **மேற்கொள்ளுதல்**; to undertake, take upon oneself to do. "ஆட லமர்ந்தா னமர்வெய்யோன்" (பு.வெ. 7 : 15). 7. **விரும்புதல்**; to wish, desire, like, to be pleased with. 8. **நேசித்தல், அன்புவைத்தல்**; to love. "ஆத்தி சூடி யமர்ந்த தேவனை" (ஆ. சூ. கடவுள்வா.). 9. **காமித்தல், காமத்தோடு காதலித்தல்**; to have sexual love.

ம., க. அமர்; தெ. அமரு; து. அமரி.

**L.** *amo*, to love. *amor*, love from inclination.

**E.** *amorist*, one who professes (esp. sexual) love.

**L.** *amōrem*; **F.** *amour*, love; **E.** *amour*, love affair.

**L.** *amīcus*, friend; **E.** *amicable*, friendly.

**L.** *amicābilem*; **OF.** *amiable*; **F.** *amiable*; **E.** *amiable*, lovable.

**L.** *amatorius*; **E.** *amatory*, pertaining to a lover (sexual love).

**L.** *amātōrem*; **F.** *amateur*; **E.** *amateur*, one who is fond of anything.

[உம்முதல் = பொருந்துதல், கூடுதல். உம் → அம் → அமல் → அமர். அமர்தல் = பொருந்துதல்.]

பொருந்துதல் என்னும் பொதுக் கருத்தினின்று உளம் பொருந்துதற் கருத்துத் தோன்றும். அதினின்று மகிழ்தல், உளங்கிளர்தல், விரும்புதல், அன்புகூர்தல், காமத்தொடு காதலித்தல் என்னும் ஐந்து நுண் கருத்துகள் கிளைக்கும். இவை இடம்நோக்கி ஆட்சியால் உணரப்படும்.

அமர்தல் என்று பொதுவாகச் சொல்லின், அது இவ்வைங் கருத்தையுந் தழுவும். "அமர்தல்மேவல்" (தொல். சொல். உரி. 83) என்பது அது.

**அமர்-த்தல்** *amar-*, 4 செ.கு.வி. (v.i.) ***பொருதல், மாறுபடுதல்***; to be at strife. "பேதைக் கமர்த்தன கண்" (குறள், 1084).

**ம.** அமருக; **க.** அமர்; **தெ.** அமரு.

**அமர்** *amar*, பெ. (n.) ***1. விருப்பம், அன்பு, காதல்***; desire, wish, love. "வாலெயிற் றமர் நகை" (ஐங்குறு. 198). ***2. போர்*** (சூடா.); battle, war. "பூழி புனைந்தவர் பாலகனோ வமர்புரி வானே" (கந்தபு. யுத்த. வரவுகே. 13). ***3. போர்க்களம்***; battle-field. "அஞ்சுவரு தானை யமரென்னு நீள்வயலுள்" (பு. வெ. 8 : 5). ***4. கோட்டைமதில்*** (வின்.); wall around a fort, battlement, rampart. 5. ***வெறி***; fury, rage, passion (சா.அக.). ***6. நோய்க்கடுமை***; virulency of a disease. ***7. காய்ச்சலின் மும்முரம்***; the acme of fever (சா.அக.).

**L.** *amo*, to love from inclination or passion, *amo-amor*, love, Cupid (C.L.D.). **E.** *amour*, n., a love affair; **F.** 'love' fr. **L.** *amorem*, acc. of *amor*, 'love' fr. *amare*, 'to love' (K.C.E.D. E.L.).

*[உம் → அம் → அமல் → அமர்.]*

அமர்தல் = பொருந்துதல். பொருந்துதல் என்பது கூடுதல், ஒன்றாதல் என இருதிறப்படும். பல பொருள்கள் நெருங்கியிருத்தல் கூடுதல்; பல பொருள்கள் ஒன்றாய் இணைந்து விடுதல் ஒன்றுதல்.

போர்க்களத்தில் இரு பகைப்படைகள் கலத்தல் கூடுதல்; இருவரின் அல்லது பலரின் உள்ளங்கலத்தல் ஒன்றுதல். இவ்விருதிறக் கருத்தினால், அமர் என்னுஞ் சொல் விருப்பத்தையும் போரையுங் குறித்தது.

**ஒ.நோ :** பொருதல் = பொருந்துதல், போர் செய்தல். பொரு → போர். அல்லுதல் = பொருந்துதல். அல் + பு – அன்பு (உளம் பொருந்திய நேயம்).

வெறி, மும்முரம் என்பன போர்த்தொழிற் குரிய குணங்கள்.

போரும் அன்பும் முற்றும் முரண்பட்டவை யாயினும், மூலச்சொல்லும் மூலக்கருத்தும் ஒன்றாதல்பற்றி, இருபொருட் சொற்களும் ஒரே உருப்படியிற் கூறப்பட்டன என அறிக.

**ஒ.நோ :** சமம் = ஒப்பு, போர். பொருதல் = ஒத்தல், போர்செய்தல்.

அமர் என்பது சமர் என்பதன் திரிபன்று; சமர் என்பதே அமர் என்பதன் முதன்மிகை யான திரிபு. **ஒ.நோ :** அமை → சமை.

**சமர்** என்னும் உருப்படியில் இது விரிவாக விளக்கப்படும்.

**அமர்க்கம்** *amarkkam*, பெ. (n.) ***எருக்கு***; a milky shrub, giant swallow-wort, *Calotropis gigantea*.

**அமர்க்களம்** *amar-k-kaḷam*, பெ. (n.) ***1. போர்க்களம்***; battle-field. "இடைந்தி லாவமர்க் களத்திடை" (இரகு. திக்கு. 172). ***2. குழம்பிய ஆரவாரம்***; confused noise, stir, bustle, as at a battle-field.

**ம.** அமர்க்களம்; **க.** அமக்கள.

*[அம் → அமர் + களம் (வயல், நிலம், இடம்) – அமர்க்களம்.]*

அமக்களம் என்பது கொச்சை வடிவம்.

**அமர்கொடு-த்தல்** *amar-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) ***பொருதல்***; to give battle, fight, wage war against. "கலுழனோ டெதிர்மலைந் தமர் கொடுத் தனர்களால்" (உபதேசகா. சூராதி. 22).

**அமர்த்த** *amartta*, பெ.எ. (adj.) ***1. பொருந்திய***; befitting, suitable. ***2. மாறுபட்ட***; opposed in character, inconsistent. ***3. விரும்பிய***; amorous (சங்.அக.).

*[அமர் → அமர்த்த.]*

**அமர்த்திக்கை** *amarttikkai*, பெ. (n.) ***வீண் பெருமை பாராட்டுகை*** (இ.வ.); giving oneself airs, being vainglorious (Loc.).

*[அமர்த்து → அமர்த்தி + கை (தொ.பெ. ஈறு) – அமர்த்திக்கை.]*

**அமர்த்து-தல்** *amarttu-*, 2 பி. வி. (v. caus.) ***1. அமைதியாயிருக்கச் செய்தல்***; to make quiet, tranquillize. ***2. அடக்குதல்***; to restrain.

3. **திட்டப்படுத்துதல்;** to engage as, a house, a servant. குடியிருக்க வீடமர்த்திவிட்டான் (உ.வ.). 4. **நிலைநிறுத்துதல்;** to establish, as one in life. 5. **இருத்துதல்;** to seat. 6. **குடியிருக்கச் செய்தல்;** to make one settle down. —, 5 செ.கு.வி. (v.i.) **பெருமிதம்பட நடித்தல்;** to pose, affect greatness. "அமர்த்துத லிவ்வளவு வேணுமடி" (கவிகுஞ். 34).

**க.** அமரிசு; **தெ.** அமர்ச்சு; **து.** அமருனி.

*[அமர் + து (பி.வி. ஈறு) — அமர்த்து.]*

**அமர்ந்ததிருக்கோலப்படிமம்** *amarnda-tiru-k-kōla-p-paḍimam,* பெ. (n.) **திருமாலின் இருந்த திருக்கோலவுருவம்;** image of *Tirumal* (Viṣṇu) in the sitting posture. 'ராஜச உயரத்தை அமர்ந்த திருக்கோலப் படிமங்கட்கும்......... உரியதாகத் தெரிந்தெடுத்தல் வேண்டும்' (சி. செ. பக். 19).

*[அமர் → அமர்ந்த (இ.கா.பெ.எ.) + திரு + கோலம் + படிமம். படி → படிமை → படிமம்.]*

**அமர்ந்ததிருக்கோலம்** *amarnda-tiru-k-kōlam,* பெ. (n.) **திருமாலின் இருந்த திருக்கோலம்;** the sitting posture of *Tirumal* (Viṣṇu).

***அமர்ந்ததிருக்கோலப்படிமம்*** பார்க்க; see *amarnda-tiru-k-kōla-p-paḍimam.*

**அமர்ந்ததிருமேனி** *amarnda-tiru-mēṉi,* பெ. (n.) **திருமாலின் இருந்த திருக்கோலம்** (சி. செ. பக். 22); the image of *Tirumal* (Viṣṇu) in the sitting posture.

*[அமர் → அமர்ந்த (இ.கா.பெ.எ.) + திரு + மேனி. மேல் → (மேலி) → மேனி.]*

**அமர்ந்தநிலை** *amarnda-nilai,* பெ. (n.) **இருந்த நிலை** (சி. செ. பக். 138); sitting posture.

*[அமர் → அமர்ந்த (இ.கா.பெ.எ.) + நிலை. நில் → நிலை. 'ஐ' தொ.பெ. ஈறு.]*

**அமர்நீதிநாயனார்** *amar-nīdi-nāyaṉār,* பெ. (n.) ***சிவனடியாரான அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர்;*** name of a canonized Šaiva saint, one of 63 (பெரியபு.).

*[அமர் + **Skt.** nīti + நாயனார்.]*

**அமர்வு** *amarvu,* பெ. (n.) **இருப்பிடம்;** abode. "அரிபுரு டோத்தம னமர்வு" (திவ். பெரியாழ். 4.7:8).

*[அமர் + வு (தொ.பெ. ஈறு) — அமர்வு.]*

**அமர** *amara,* நி.கா.வி.எ. (inf.) **இருக்க, உட்கார;** to sit, be seated. "குமரவே ளொருபுடை யமர" (கந்தபு. உற்பத். சரவண. 25). —, இடை. (part.) **ஓர் உவமவுருபு** (தொல். பொருள். உவம. 11, பேரா. உரை); an adverbial of comparison.

*[அமர் + அ (நி.கா.வி.எ. ஈறு) — அமர.]*

**அமரக்காரன்** *amara-k-kāraṉ,* பெ. (n.) 1. **சிற்றரசன்கீழுள்ள படைமறவன்;** military retainer of a chief. 2. **ஆயிரங்காலாள்களுக்குத் தலைவன்;** commander of thousand foot-soldiers.

**க.** அமர; **தெ.** அமரகாடு.

*[அமர் → அமரம். காரம் → காரன் (ஆ.பா. ஈறு). அமரம் + காரன் — அமரக்காரன்.]*

**அமரகண்டம்** *amara-kaṇḍam,* பெ. (n.) **குதிரை வலிப்பு** (சீவரட்.); a severe type of convulsion or spasm so called from its similarity to the attack in horses.

இது உடம்புவலி, மயக்கம், அசைவின்றிக் கிடத்தல், வியர்த்தல், பல்லை யிளித்தல் முதலிய குணங்களை யுடைய ஒரு வலிப்பு நோய் (சா.அக.).

*[மூலம் தெரியவில்லை. கண்டம் = சாவுக் கேதுவான நிலை.]*

**அமரகம்** *amar-agam,* பெ. (n.) **போர்க்களம்;** battle-field. "அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா" (குறள், 814).

*[அமர் = போர். அகம் = இடம்.]*

**அமரகுணர்** *amara-kuṇar,* பெ. (n.) **கடுக்காய்ப் பூ** (சங்.அக.); flower of *Chebulic myrobalan.*

**அமரசிலை** *amara-šilai,* பெ. (n.) 1. **ஒருவகைக் கந்தகம்;** a variety of sulphur (சா.அக.). 2. **ஒருவகை வைப்பு நஞ்சு;** a kind of prepared arsenic (சா.அக.).

**அமரசிலைக்கந்தகம்** *amara-šilai-k-kandagam,* பெ. (n.) **ஒருவகை வைப்பு நஞ்சு;** a kind of prepared arsenic (சா.அக.).

**அமரநாயகம்** *amara-nāyagam,* பெ. (n.) 1. **படைத்தலைமை** (M.E.R. 36 of 1928-9); commandership. 2. **படைத் தலைவனுக்கு விடப்பட்ட நிலம்** (I.M.P. Tn. 407); grant of land to the commander of an army.

**க.** அமர; **தெ.** அமரநாயகுடு, அமரமு.

**அமரம்**[1] *amaram*, பெ. (n.) **கண்சூட்டுநோய்** (தைலவ.தைல. 34); disease of the conjunctival membrane of the eye, *conjunctivitis* (செ.அக.) — **ஒருவகைக் கண்ணோய்** (சங்.அக.); a kind of disease of the eye. "விழியருக லொடுநீர்க் கம்மலும் அமரமுங் கண்ணோயு மேக வழற லைநோயு மாமையஞ் சிறகாமரோ" (தைலவ. தைல. 34).

கண்களின் இறப்பைத்தோலில் குருக்களைப் போலெழுப்பி, அப் பாகத்தை உருவழியச் செய்யும் ஒரு கண்ணோய்; a disease of the conjunctiva attended with the formation of small elevations on the conjunctiva of the lids which results in the deformity of the lids, *Granular conjunctivitis* or *Trachoma* (சா.அக.).

**அமரம்**[2] *amaram*, பெ. (n.) 1. **பண்டைக் காலத்திற் சிற்றரசனால் அமரக்காரருக்கு விடப்பட்ட மானியம்**; land or revenue granted in ancient times by a chief to his retainers for military service. 2. **ஆயிரங் காலாள்களை ஆளுகை**; command of one thousand foot-soldiers.

ம. அமரு; க. அமர; தெ. அமரமு.

*[அமர் = போர். அமர் → அமரன் = போர் மறவன். அமரன் → அமரம்.]*

**அமரம்**[3] *amaram*, பெ. (n.) படகோட்டுந் தண்டு; oar used to steer a boat.

ம. அமரம்; தெ. அமரமு; து. அமர.

**அமரம்**[4] *amaram*, பெ. (n.) 1. **நஞ்சுக்கொடி**; umbilical cord. 2. **பலவகைப் பூண்டு செடி களின் பெயர்**; *Tiaridium indicum, Panicum dactylon, Cocculus cordifolia, Sanseviera roxburghiana, etc.* (சா.அக.).

ம., க. அமர.

**அமரம்பால்** *amaram-pāl*, பெ. (n.) **பனங் கள்**; palmyra toddy (சா.அக.).

**அமரம்பிரிதற்கண்** *amaram-piridaṟ-kaṇ*, பெ. (n.) **ஒருவகைக் கண்ணோய்**; an eye disease (சா.அக.).

**அமரர்** *amarar*, பெ. (n.) **பகைவர்** (பிங்.); foes, enemies. **அமரார்** பார்க்க; see *amarār*.

*[அமர்தல் = பொருந்துதல். அமரார் = பொருந் தாதவர், பகைவர். ஒ.நோ: ஒன்றார், ஒன் னார், நண்ணார், துன்னார் = பொருந்தாதவர், பகைவர். அமரார் → அமரர்.]*

**அமரல்** *amaral*, பெ. (n.) 1. **நெருக்கம்** (பொதி. நி.); closeness, density. 2. **மிகுதி** (பொதி.நி.); abundance, excess. 3. **பொலிவு** (திவா.); fertility, luxuriance, prosperity. 4. **பீடு, பெருமை, சிறப்பு** (பொதி.நி.); excellence, grandeur.

*[அமர்தல் = நெருங்குதல், பொருந்துதல். அமர் → அமரல்.]*

**அமரன்** *amaraṉ*, பெ. (n.) **போர்மறவன்**; warrior. "அமர னாயி னமைவொடு நிற்கென" (பெருங். உஞ்சைக். 37 : 202).

*[அமர் = போர். அமர் → அமரன்.]*

**அமராடு-தல்** *amar-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) **போர் செய்தல்**; to fight, carry on war. "அந்தண் சேய்களுக் காயம ராடுநின் மைந்தன் றானு மடிந்தனன்" (சேதுபு. இராமதீ. 54).

*[அமர் = போர். அமர் + ஆடு (துணை வினை).]*

**அமராபரணன்** *amar-ābaraṇaṉ*, பெ. (n.) **போரையே அணிகலமாகக் கொண்டவன்**; warrior, one who regards warfare as his decoration. "அருங்கலை வினோத னமரா பரணன்" (நன். சிறப்புப்பா.).

*[அமர் + வ. ஆபரணன். Skt. ābharaṇa > த. ஆபரணம் = அணிகலம். ஆபரணம் → ஆபரணன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அமரார்** *amarār*, பெ. (n.) **பகைவர்**; foes, as not agreeing or associating cordially. "அமராரை வெல்ல வல்லான் வரோதயன் வாணன்" (தஞ்சைவா. 8).

*[அமர்தல் = பொருந்துதல். அமர் → அமரார் = பொருந்தாதவர்.]*

**அமரி**[1] *amari*, பெ. (n.) **சிறுநீர்** (பிங்.); urine.

ம. அமரி

*[உவரி → உமரி → அமரி.]*

**அமரி**[2] *amari*, பெ. (n.) **போர்த்தெய்வமான காளி** (பிங்.); *Kāḷi*, as war goddess. "பலர் தொழும் அமரி" (சிலப். 12 : 66-7).

ம., க., தெ. அமரி.

*[அமர் = போர். அமர் → அமரி.]*

பண்டைத் தமிழகத்தில், வெட்சிமறவர் நிரைகவரச் செல்லு முன்பும், படைமறவர் போர்க்களத்திற்குச் செல்லு முன்பும் கொற்றவை யென்னும் வெற்றித்தெய்வ மாகிய காளிக்குக் காவு கொடுப்பது வழக்கம்.

"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"
(தொல். பொருள். புறத். 4).

**அமரி**[3] *amari*, பெ. (n.) **கற்றாழை** (மலை.); aloe.

*[ஒருகா. குமரி → அமரி. கற்றாழைக்குக் குமரி என்றொரு பெயருமுண்டு. குமரி யென்பது காளிக்கும் பெயராதலால், அவளின் மறுபெயரான அமரி யென்னுஞ் சொல் கற்றாழையைக் குறிக்க ஆளப்பட்டிருக்கலாம்.]*

**அமரி**[4] *amari*, பெ. (n.) 1. **நஞ்சு**; poison. 2. **பேய்ப் புல்**; a kind of poisonous grass (சா.அக.).

**அமரிக்கை** *amarikkai*, ப.பெ. (abs. n.) **அமைதி, அடக்கம்** (உ.வ.); quietness, stillness, tranquillity, calmness (com.u.).

ம. அமர்ச்ச; க. அமக; தெ. அமரிக; து. அமருனி.

*[அமர்தல் = அமைத்தல், அடங்குதல், அமைதியாயிருத்தல். அமர் → அமர்கை → அமருகை → அமரிக்கை. ஒ.நோ : கோர் → கோரு → கோருகை → கோரிக்கை. எண் → எண்ணு → எண்ணுகை → எண்ணிக்கை.]*

**அமரிதாவிகம்** *amaridāvigam*, பெ. (n.) **கையாந்தகரை** (சித்.அக.); a plant growing in damp places (செ.அக.) — **செங்கரிப்பான் அல்லது சிவப்புக் கரிசலை**; a red variety of a plant, *Euclypta prostrata* (சா.அக.).

**அமரிப்புல்** *amari-p-pul*, பெ. (n.) **ஒட்டுப்புல்** (சித்.அக.); sticking grass.

*[அமர்தல் = பொருந்துதல், ஒட்டுதல். அமர் → அமரி. அமரி + புல்.]*

**அமரிப்பூகம்** *amari-p-pūgam*, பெ. (n.) **செங்கரந்தை** (சித்.அக.); red basil, *Sphoeranthes*.

**அமரிய** *amariya*, பெ.எ. (adj.) **பொருத**; that which fought. "அமரிய சேனை" (சங்.அக.)

*[அமர்த்தல் = மாறுபடுதல், பொருதல். அமர் → அமரி → அமரிய.]*

**அமரியம்** *amariyam*, பெ. (n.) 1. **குருத்து** (மலை.); species of atlantia (செ.அக.) — **குருந்தமரம்**; wild lime tree, *Atlantia missionis* (சா.அக.). 2. **சண்பகம்**; champak. 3. **சண்பகப்பூ**; flower of tulip tree, *Michelia champaca* (சா.அக.).

**அமரியுப்பு** *amari-y-uppu*, பெ. (n.) **சிறுநீருப்பு**; salt taken from urine.

*[அமரி = சிறுநீர். அமரி + உப்பு.]*

**அமரி**[1] பார்க்க; see *amari*[1].

**அமரியோன்** *amariyōn*, பெ. (n.) **போர்மறவன்**; warrior. "அமரி யோர்களொ ரைம்பது வெள்ளத்தர்" (கந்தபு. மகேந். காவலா. 15).

*[அமர்தல் = பொருதல். அமர் → அமரியவன் → அமரியான் → அமரியோன் (ஆ.பா.) — அமரியோர் (ப.பா.).]*

**அமரை** *amarai*, பெ. (n.) 1. **தூண்**; pillar. 2. **அறுகம்புல்**; durva grass. 3. **சீந்தில்**; gulancha (சா.அக.). 4. **அறுகு**; panic grass, *Cynodon dactylon*. 5. **கருப்பை**; the uterus of a female. 6. **கொப்பூழ்க்கொடி**; the umbilical cord (சா.அக.).

**அமரோசை** *amarōśai*, பெ. (n.) (இசை) **ஏழிசையென்னும் முரல் வரிசையில் (சுராவளியில்) மேலிருந்து கீழிறங்கும் ஓசை, பத்துவகை அலுக்குகளுள் (கமகங்களுள்) ஒன்று, ஆரோசை என்பதற்கு எதிர்**; (Mus.) complete descent of the gamut, opp. to *ārōśai*, one of ten *alukku* (kamakam). "அத்தகைமை யாரோசை யமரோசை களினமைத்தார்" (பெரியபு. ஆனாய. 24).

*[அம்முதல் = அமுங்குதல். அம் → அமர் → அமர்தல் = அமைதல். அடங்குதல், தாழ்தல். அமர் + ஓசை.]*

**அமல்[லு]-தல்** *amal-*, 13 செ.கு.வி. (v.i.) 1. **நெருங்குதல்**; to be close, thickly grown. "வேயமலகலறை" (கலித். 45:1). 2. **பொருந்துதல்**; to join, unite with. 3. **மிகுதல், அதிகரித்தல்**; to be abundant, to increase. "தருக்கமலமலமென்ன" (திருவானைக். கோச். 3). 4. **பரவுதல்**; to spread, pervade. "எங்கணுந் தானினி தமலும்" (ஞானா. 14). —, 7 செ.குன்றாவி. (v.t.) 1. **அடைதல், சேர்தல்**; to reach, arrive at. "அமலும் வேறிட மளவையின்றியே விமல ரூபமாய் வரவும்" (சேதுபு. சீவதீர்த்த. 70). 2. **அணைதல்**; to embrace. "அமல லகல மகல லபய" (தண்டி. சொல். 6).

ம. அமலிக்குக

*[அம்முதல் = பொருந்துதல். அம் → அமல்.]*

**அமல்** *amal*, பெ. (n.) **நிறைவு** (ஞானா. 34); fullness.

ம. அமல்

*[அம் → அமல்.]*

**அமலமஞ்சள்** *amala-mañjaḷ*, பெ. (n.) *மரமஞ்சள்* (சித்.அக.); tree turmeric.

**அமலனாதிப்பிரான்** *amalaṉ-ādi-p-pirāṉ*, பெ. (n.) *'அமல னாதிப் பிரான்' என்று தொடங்கும் திருப்பாணாழ்வார் பதிகம், நாலாயிரத் தெய்வப் பனுவலுள் (திவ்வியப் பிரபந்தத்துள்) ஒன்று*; a division of Tivviyaprabandham.

*[அல் → அ (எ.ம.முன்.) + மலம் (குற்றம்) → மலன் (குற்றமுற்றவன்) — அமலன் = குற்ற மற்றவன். வ. ஆதி = முதல். பெருமகன் → பெருமான் → பிரான். அமலனாதிப்பிரான் = குற்றமற்றவனும் உலக முதல்வனும் பெருமானு மான இறைவன், திருமால்.]*

**அமலை**[1] *amalai*, பெ. (n.) 1. *மிகுதி* (திவா.); abundance. 2. *செறிவு*; denseness. "அடுசினத் தமலையை" (ஞானா. 43). 3. *சோற்றுத் திரளை*; lump of rice. "பிச்சைப் பாத்திரப் பெருஞ்சோற் றமலை" (மணிமே. 17 : 2). 4. *சோற்றுருண்டை*; rice ball. "வெண் ணெறிந் தியற்றிய மாக்க ணமலை" (மலை படு. 441). 5. *சோறு* (திவா.); boiled rice. 6. *கட்டி*; boil. 7. *கடுக்காய்* (மலை.); chebulic myrobalan (செ.அக.) — ink-nut, *Terminalia chebula* (சா.அக.). 8. *படைமறவர் திரண்டு பட்ட பகைவேந்தனைச் சூழ்ந்துநின்று ஆடுங் கூத்து*; dance of soldiers who have gathered around a fallen enemy king. "களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும்" (தொல். பொருள். புறத். 14). 9. *படைமறவர் திரண்டு பட்ட பகை வேந்தனைச் சூழ்ந்துநின்று பாடும் பாட்டு*; songs sung by soldiers who have gathered around a fallen enemy king (தொல். பொருள். புறத். 14, இளம்பூ. உரை). 10. *ஆரவாரம்*; hubbub, confused yelling of war-cry, great din. "அறைகழல் வீர ரார்க்கு மமலையை" (நைடத. நாட்டு. 13). 11. *படைமறவர் தம் வேந்தனுடன் கூடியாடுங் கூத்து*; dance of soldiers together with their king. "ஒள்வா ளமலை" (பு. வெ. 147, கொளு).

"காய்ந்தடு துப்பிற் கழன்மறவ ராடினார்
வேந்தொடு வெள்வாள் விதிர்த்து"
(பு. வெ. 7 : 21).

*[அம்முதல் = பொருந்துதல், கூடுதல். அம் → அமல் → அமலை. அமலுதல் = நெருங்குதல், பொருந்துதல், மிகுதல்.]*

**அமலை**[2] *amalai*, பெ. (n.) 1. *கொப்பூழ்க் கொடி*; umbilical cord (சா.அக.). 2. *பூவந்தி*; soapnut tree.

ம., தெ. அமல.

**அமலைதாரம்** *amalai-tāram*, பெ. (n.) *அரிதாரம்* (சித்.அக.); orpiment.

**அமளி** *amaḷi*, பெ. (n.) 1. *மிகுதி*; increase, abundance. பனம்பழம் இப்போது நல்ல அமளியா யிருக்கும் (யாழ்ப்.). ம. அமலி. 2. *ஆரவாரம்*; tumult, uproar, bustle, stir, press of business. 'வந்தபோ திருந்த அமளி காண்' (திவ். திருநெடுந். 21, வியா.). 3. *மக்கட் படுக்கை*; bed, mattress, sleeping couch. "ஐந்துமூன் றடுத்த செல்வத் தமளிமூன் றியற்றி" (சீவக. 838). 4. *கட்டில்*; cot, bedstead. "மணிக்கா லமளி" (பெருங். உஞ்சைக். 33 : 106). 5. *பள்ளியறை* (சங். அக.); bedroom.

*[அமல் → அமலி → அமளி. அமலுதல் = பொருந்துதல், மிகுதல், அமர்தல்.]*

**அமளிகுமளி** *amaḷi-kumaḷi*, பெ. (n.) *பேரார வாரம்*; great uproar.

ம. அமரல்

*[அமல் → அமலி → அமளி. கும்முதல் = கூடு தல், திரளுதல். கும் → குமல் → குமலி → குமளி. அமளிகுமளி — பொருளை மிகுத்துக் காட்டும் இணைமொழி* (words in pairs).*]*

**அமளிபண்ணு-தல்** *amaḷi-paṇṇu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *ஆரவாரஞ் செய்தல்*; to make a great noise, raise hue and cry, make a fuss. 2. *சச்சரவு விளைத்தல்*; to create disturbance, cause commotion.

*அமளி பார்க்க*; see *amaḷi*.

**அமளை** *amaḷai*, பெ. (n.) 1. *கடுகுரோகணி* (மலை.); black hellebore (செ.அக.) — black hellebore or bear's foot, *Helleborus niger* (சா.அக.). 2. *மரவகை* (L.); diverse trifoliate sumach soap-nut, s. tr., *Allophyllus cobbe*.

**அமளைக்கண்ணி** *amaḷai-k-kaṇṇi*, பெ. (n.) *கொள் (காணம்)* (பச்.மூ.); horse-gram.

**அமளோகிதம்** *amaḷōgidam*, பெ. (n.) *செங்கீரை* (சித்.அக.); cock's comb greens.

**அமனிதம்** *amaṉidam*, பெ. (n.) *புளியாரை* (சித்.அக.); yellow wood-sorrel (செ.அக.) — sorrel, *Oxalis corniculata* (சா.அக.).

**அமனைக்கன்னி** *amaṉai-k-kaṉṉi*, பெ. (n.) *காணம்;* horse-gram, *Dolichos uniflorus* alias *D. biflorus* (சா.அக.).

ஒ.நோ : அமளைக்கண்ணி

**அமாத்திரை** *amāttirai*, பெ. (n.) *ஓம் என்னும் முளைமந்திரத்திலுள்ள மகரமெய்;* the consonant 'ம்' (m) in the mystic syllable *ōm*. 'ஓம் என்ற பிரணவ ஒலியில் அ, உ, ம ஆகிய மூன்று எழுத்துகள் அடங்கும். இவற்றுக்கு மாத்திரைகள் என்று பெயர். ஓம் என்பதில் மெய் ஒற்றும் இருக்கின்றதல்லவா? இதனை அமாத்திரை என்பர் அறிஞர்' (சி. செ. பக். 274).

*[அ + மாத்திரை. மா → மாத்திரை. 'திரை' ப.பெ. ஈறு.]*

ஓம் என்பதில் ஒ என்பதே உயிர்நாடி யெழுத்து. மகரமெய் புறவெழுத்து அல்லது மிகையெழுத்து என்னுங் கருத்தில் அதை அமாத்திரை என்றனர் போலும்!

**அமாந்தக்காரன்** *amānda-k-kāraṉ*, பெ. (n.) 1. *சவளி வணிகன்* (புதுவை); cloth merchant (Poṇḍ.). 2. *தெருவிற் பண்டம் விற்கும் மூட்டைக் காரன்;* street hawker (R.).

**அமாந்தம்** *amāndam*, பெ. (n.) *பொய்* (நாஞ்.); fib, lie (Nāñ.).

**அமாந்தம்பற்றவை-த்தல்** *amāndam-paṟṟa-vai-*, 4 செ.கு.வி. (v.i.) **இல்லாததைச் சொல்லுதல்** (நாஞ்.); to fib (Nāñ.).

**அமாமிக்கடம்பு** *amāmi-k-kaḍambu*, பெ. (n.) *செங்கடம்பு* (சித்.அக.); small Indian oak.

**அமானி** *amāṉi*, பெ. (n.) *புளியாரை* (மலை.); yellow wood-sorrel.

ஒ.நோ : அமனிதம்

**அமிசடக்கம்** *amiśaḍakkam*, பெ. (n.) *அமைதி, அடக்கமான ஒழுக்கம்;* modesty, quiet behaviour.

*[அமை + அடக்கம் – அமையடக்கம் → அமைசடக்கம் → அமிசடக்கம்.]*

**அமிஞ்சி** *amiñji*, பெ. (n.) *அமஞ்சி* பார்க்க; see *amañji*. 'அமிஞ்சிக்கு உழுதால் சரியாய் விளையுமா? (உ.வ.).

**அமிஞை** *amiñai*, பெ. (n.) *தாயைப் பெற்ற பாட்டி* (பள்.); maternal grandmother (Paḷ.).

*[அம்மை + அஞ்ஞை – அம்மைஞ்ஞை → அமிஞ்ஞை → அமிஞை. அன்னை → அஞ்ஞை.]*

**அமிதசாகரர்** *amida-śāgarar*, பெ. (n.) *11ஆம் நூற்றாண்டினரும், யாப்பருங்கலம், யாப்பருங் கலக் காரிகை என்னும் யாப்பிலக்கண நூல் களின் ஆசிரியருமாகிய ஒரு சமணத் துறவியார்;* name of a Jaina sage of the 11th century and author of two grammatical treatises on Tamil prosody, viz. *Yāpparuṅgalam* and *Yāpparuṅgalakkārigai*.

''அளப்பருங் கடற்பெய ரருந்தவத்தோனே''
(யாப். வி. சி. பா.)

*[அ (எ.ம.முன்.) +* **Skt.** mita + **Skt.** sāgara.*]*

**அமிர்தக்கடுக்காய்** *amirda-k-kaḍu-k-kāy*, பெ. (n.) *கடுக்காய் வகை;* species of chebulic myrobalan (செ.அக.).

விம்மித் தசை மிகுந்துள்ள 32 வகைக் கடுக் காய்களிலொன்று; இது காசியில் விளையும்; தொண்டையி லுண்டாகும் கீச்சொலியையுங் கோழையையும் நீக்கும்; one of the 32 kinds of country gall-nuts which contain thick coverings and small kernels, said to grow in Benares and cure the wheezing sound or whistling noise in the throat due to phlegm (சா.அக.).

''அமிர்த மெனுங்கடுக்கா யம்புவியி லுள்ள
திமிர்த சிலேட்டுமத்தைத் தீர்க்கும் —
விமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றிலதன்
றேசங்
கதிக்கொத்த காசியென்பார் காண்''
(பதார்த்த. 1004).

*[அமிர்தம் + கடு + காய்.]*

**அமிழ்து** பார்க்க; see *amiḻdu*.

**அமிர்தக்குமரி** *amirda-k-kumari*, பெ. (n.) *சீந்திற்கொடி, கற்றாழை முதலிய மூலிகை களினின்று வடிக்கப்படும் எண்ணெய்;* a medicated oil prepared from moon-creeper, aloe and other plants (சா.அக.).

*[அமிர்தம் + குமரி. அமிழ்து → அமிர்து.]*

**அமிர்தக்குழல்** *amirda-k-kuḻal*, பெ. (n.) *உழுந்து மாவும், அரிசிமாவும், வெண்ணெயும், வெல்லப் பாகுஞ் சேர்த்து, நாவிற்கும் மனத்திற்கும் இன்பந்தருமாறு செய்யப்படும் 'மனோகரம்' என்னும் பணிகார வகை;* confection made of black gram, rice and butter mixed with treacle.

உழுந்துமாவிற்குத் தலைமாறாகக் கடலை மாவைச் சேர்ப்பதுமுண்டு.

[அமிர்தம் + குழல் (தேங்குழல் போன்றது).]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தக்கொடி** *amirda-k-koḍi,* பெ. (n.) **சீந்திற் கொடி** (சங்.அக.)—gulancha (செ.அக.)—moon-creeper, bile killer, *Tinosphora cordifolia* alias *Menispermum cordifolium* (சா.அக.).

[அமிர்தம் + கொடி.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தக்கோலி** *amirda-k-kōli,* பெ. (n.) **திருநெல்வேலி மாவட்டத்திலோடும் பொருநை (தாம்பிரவரணி) யாறு;** the river *Tāmbiravarani,* flowing in Thirunelvēli district.

[அமிர்தம் + கோலி.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தகணத்தார்** *amirda-kaṇattār,* பெ. (n.) 1. **ஊரவையாரான கணப்பெருமக்கள்** (I.M.P. Cg. 1027); members of the committee for the management of village affairs. 2. **கோயிற் பண வருமானங்களைக் கணக்கிடுஞ் சவையார்** (M.E.R. 90 of 1913); members in charge of the cash receipts of a temple.

[அமிர்தம் + கணத்தார்.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தகலை** *amirda-kalai,* பெ. (n.) **திங்களின் 16 கூறுகளுள் ஒன்று;** a digit or 1/16 of the moon's disc, a phase of the moon. "அமிர்த கலையி னீரை மாந்தி" (சிலப். 5 : 208, உரை).

ம. அம்ருதகல

[அமிர்தம் + கலை.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

நிலவொளி குளிர்ந்து இன்பந் தருவதனாலும், திங்களின் பெயராகிய மதியென்னுஞ் சொற்கு மது (தேன்) என்னுஞ் சொல்லை மூலமாகக் கொண்டதனாலும், திங்கட்கு 'அமிர்தகிரணன்' என்று வடமொழியில் ஒரு பெயரிருப்பதனாலும், மதியொளியிற் படுப்பதனால் மத்தம் உண்டாகுமென்று பண்டையோர் நம்பியதனாலும், திங்களின் கூறு அமிர்தகலை யெனப்பட்டது.

**அமிர்தகவிராயர்** *amirda-kavi-rāyar,* பெ. (n.) **17ஆம் நூற்றாண்டி விருந்தவரும் 'ஒருதுறைக் கோவை' யாசிரியருமான சிறந்த புலவர்;** name of a poet, author of *Oruturaikkōvai,* 17th century.

[அமிழ்தம் → அமிர்தம் + வ. கவி + அரசன் → அரைசன் → அரையன் → அரையர் → ராயர்.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தகுணம்** *amirda-kuṇam,* பெ. (n.) **சிறந்த குணம்;** excellent quality (தெய்வச். விறலி. 147).

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

[அமிர்தம் + குணம். இனிமையும் நன்மையும் பற்றிச் சிறந்த குணம் அமிர்தகுணம் எனப் பட்டது.]

**அமிர்தங்கலங்கு-தல்** *amirdaṅ-kalaṅgu-,* 5 செ. கு.வி. (v.i.) **மூளை கலங்குதல்** (வின்.); brain being disturbed, shocked, as by a blow, concussion of the brain.

[அமிர்தம் → அமிதம் → அமுதம் = சோறு. அமிர்தம் = குழைந்த சோறு போன்ற மூளை.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தசர்க்கரை** *amirda-śarkkarai,* பெ. (n.) 1. **சீந்தில்மா;** flour made from gulancha stalk. 2. **சீந்திற்கொடியினின்று எடுக்கப்படும் வெள்ளுப்பு, மண்ணீரல் வலுவிற்கும் மெலிந்த வுடம்பை வலுப்படுத்தற்கும் பயன்படுத்தப் படுவது;** a white salt extracted from the moon-creeper, used in diseases of the spleen and as a tonic in convalescence.

[அமிர்தம் + சருக்கரை. அமிர்தம் = சீந்திற் கொடி.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தசாரவெண்பா** *amirda-śāra-veṇbā,* பெ. (n.) **தத்துவராயர் இயற்றிய ஒரு பனுவல்;** name of a poem by *Tattuvarāyar.*

[அமிர்தம் + சாரம் + வெள்ளை + பா.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தசூரணம்** *amirda-śūraṇam,* பெ. (n.) **சீந்திற்கொடிச் சுண்ணம், குடற் கோளாற்றிற்கும் காமாலைக்கும் பயன்படுத்தப்படுவது;** a bitter and slightly nauseous powder of the dried tender shoots of the moon-creeper, *Tinosphora cordifolia* alias *Menispermum cordifolium,* prescribed as an alternative in cases of visceral obstructions and jaundice (சா.அக.).

[அமிர்தம் + சூரணம். சுள்ளெனல் = சுடுதல், எரித்துச் சாம்பல் அல்லது நீறாக்குதல். சுள் →

சுண் → சுண்ணம் = நீறு, பொடி. சுள் → சுர் → தூர் → தூரணம்.]

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தசெந்தூரம்** *amirda-šendūram,* பெ. (n.) **தூலை, காயம், புரை, புண் முதலிய நோய்கட்குக் கொடுக்கும் செந்நீறு;** a calcined red metallic oxide prescribed for healing acute pain, sores, sinuses or other wounds.

*[அமிர்தம் + செந்தூரம். செந்தூள் → செந்தூளம் → செந்தூரம்.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்ததலைச்சி** *amirda-talaicci,* பெ. (n.) **சீந்திற் கொடி;** gulancha (செ.அக.) — moon-creeper (சா.அக.).

*[அமிர்தம் + தலைச்சி.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தநிலை** *amirda-nilai,* பெ. (n.) *அமுத நிலை* பார்க்க; see *amuda-nilai.* ''அறிந்து பதினைந் தமிர்தநிலை யாராய்ந்து'' (விறலி விடு. 546).

*[அமிர்தம் + நிலை.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தப்பால்** *amirda-p-pāl,* பெ. (n.) **தாய்ப் பால்;** mother's breast milk.

*[அமிர்தம் + பால்.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தபதி** *amirda-padi,* பெ. (n.) **ஒரு பழந் தமிழ்ப் பனுவல்** (யாப். வி. 95, பக். 487); an ancient Tamil Poetic work.

*[அமிர்தம் + பதி.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தபலா** *amirda-palā,* பெ. (n.) **கொய்யா மரம்;** guava tree, *Pisidium guyava* (சா.அக.).

*[அமிர்தம் + பலா.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தபழம்** *amirda-paḻam,* பெ. (n.) **ஒரு நீல மலைப்பழம்;** nectar fruit or pear, *Pyrus communis,* borne by a small thorny tree in the Nilgiris (சா.அக.).

*[அமிர்தம் + பழம்.]*

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

பேரிக்காய் மேனாட்டினின்று கொண்டு வந்து பயிராக்கப்பட்டது.

**அமிர்தம்** *amirdam,* பெ. (n.) 1. **முலைப்பால்;** woman's breast milk. 2. **ஆவின் பால்;** cow's milk. ''திலநெய் யமிர்தம்'' (தைலவ. தைல. 1). 3. **பாலிருப்பிடம்;** the source of milk. 4. **வெண்ணெய்;** butter. 5. **நெய்;** ghee. 6. **தேன்;** honey. 7. **இனிப்பு;** sweetness. 8. **இனிப்புப் பண்டம்;** sweet cake. 9. **இனிமை;** pleasantness. ''அமிர்தங் கொளவுயிர்க்குங் கருங்கா ழகிலி னறும்புகை'' (சீவக. 349). 10. **நீர்;** water. 11. **உணவு;** food. ''தந்தவ னமிர்த மூட்ட வுண்டு'' (சீவக. 1178). 12. **சோறு;** boiled rice. 13. **இரவாது வரும் உணவு அல்லது பொருள்;** unsolicited alms. ''ஒன்றிரவாமல் வருவதே யமிர்தம்'' (காஞ்சிப்பு. ஒழுக். 36). 14. **நஞ்சு தீர்க்கும் மருந்து;** antidote to poison. 15. **மயக்கந் தெளிவிக்கும் மருந்து;** a reviving cordial. 16. **இதள் (பாதரசம்);** quick-silver. 17. **விந்து;** semen virile. 18. **பொன்;** gold. 19. **செல்வம்;** prosperity. 20. **சாறாயம்;** liquor, arrack. 21. **சீந்தில்;** moon-creeper, *Menispermum cordifolium.* 22. **சிவப்பாமணக்கு;** red castor seed, *Ricinus communis.* 23. **ஒரு பூண்டு;** a plant, *Phaseolus trilobus.* 24. **ஒரு வேர்;** the root of a plant. 25. **ஒரு வெள்ளை வைப்பு நஞ்சு;** a white arsenic.

ம. அமிர்தம்; க. அம்ருத; தெ. அம்ருதமு.

குறிப்பு: இச் சொல் (அமிர்தம்) காய் கனிகளைக் குறிக்கும்போது செந்தாழை (அனாசி), எலுமிச்சை, நெல்லி, கொய்யா, கடுக்காய், சீந்தில் முதலியவற்றைக் குறிக்கும் (சா.அக.).

அமிழ்து பார்க்க; see *amiḻdu.*

**அமிர்தமூடியவிடம்** *amirdam-mūḍiya-v-iḍam,* பெ. (n.) **மாச் சுக்கு;** soft dried ginger (சா.அக.) — (தைலவ. தைல. 1).

**அமிர்தமூடுமிடம்** *amirdam-mūḍum-iḍam,* பெ. (n.) **அமிர்தமூடியவிடம்** பார்க்க; see *amirdam-mūḍiya-v-iḍam.* ''சீரமிர்த மூடுமிட மஃதை'' (தைலவ. தைல. 1).

குறிப்பு: சங்க அகரமுதலியிலும் அதிலுள்ள மேற்கோளிலும் 'மூடுவிடம்' என்னும் பாடம் உள்ளது.

**அமிர்தவடிகம்** *amirda-vaḍigam,* பெ. (n.) **அமிர்தத்தைக் கொடுக்குஞ் சீந்திற்கொடி;**

moon-creeper which gives an essence like nectar (சா.அக.).

[அமிர்தம் + வடிகம்.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிர்தவடை** *amirda-vadai*, பெ. (n.) **தித்திப்பான உழுந்துவடை**; a sweet cake made of black gram and sugar.

[அமிர்தம் + வடை.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிர்தவல்லி** *amirda-valli*, பெ. (n.) **சீந்திற் கொடி** (சூடா.); gulancha (செ.அக.).

ம. அமிர்தவல்லி; க. அம்ருதபல்லி; தெ. அம்ருதவல்லி.

[அமிர்தம் + வல்லி.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிர்தவள்ளி** *amirda-valli*, பெ. (n.) **சர்க்கரை வள்ளிக் கிழங்கு**; sweet potato, *Ipomala batatas*.

[அமிர்தம் + வள்ளி.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிர்தவிந்து** *amirda-vindu*, பெ. (n.) **இதள்** (**பாதரசம்**) (சங்.அக.); quick-silver.

[அமிர்தம் + விந்து.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிர்தவுப்பு** *amirda-v-uppu*, பெ. (n.) *சீந்திலுப்பு*; salt extracted from the moon-creeper, *Tinosphora cordifolia*. அமிர்தசர்க்கரை பார்க்க; see *amirda-šarkkarai*.

[அமிர்தம் + உப்பு.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிர்து** *amirdu*, பெ. (n.) 1. *முலைப்பால்*; breast milk. "கனதனத்தி லூறுமமிர் தூட்டினளால்" (கந்தபு. தக்க. வள்ளி. 37). 2. **சோறு**; boiled rice. "அத்திரத்தா லந்நீ ரமிர்திற் புரோக்கிக்க" (சைவச. பொது. 296). 3. **திணை நிலச் செல்வம்**; products of particular tracts of land. "நாட்டகத் தமிர்து நளிகட லமிர்து நல்வரை யமிர்தமு மல்லாக் காட்டகத் தமிர்துங் காண்வர" (சீவக. 2110).

[அமிழ்து → அமிர்து.]

**அமிழ்து** பார்க்க; see *amildu*.

**அமிரம்** *amiram*, பெ. (n.) *மிளகு* (மலை.); black pepper.

தெ. மிரியமு

**அமிழ்-தல்** *amil-*, 2 செ.கு.வி. (v.i.) **முழுகுதல், ஆழ்தல்**; to sink, to be immersed, to plunge. "இன்பக் கடலூடே யமிழுவேனை" (திருப்பு. 36).

ம. அமிழுக; க. அவுகு; து. கமரு; பட. அமுகு.

[அம்முதல் = அமுங்குதல். அம் → (அமில்) → அமிழ்.]

**அமிழ்த்து-தல்** *amilttu-*, 2 பி.வி. (v.caus.) 1. **அமுக்குதல்**; to press down. 2. **முழுக்குதல், ஆழ்த்துதல்**; to cause to sink, immerse, ingulf, drown. "ஆடன் மைந்த ரடங்க வமிழ்த்தினான்" (சேதுபு. அக்கினி. 31). 3. **மறைத்தல்**; to cover, as eyelids cover the eyes. "அமிழிமைத் துணைகள்" (கம்பரா. பால. கோலங். 3).

ம. அமிழ்த்துக; க. அமுகு; து. அமபுனி; பட. அமுக்கு; கோத. அம்ங்; நாட. ஒம்க்.

[அமிழ் (த.வி.) – அமிழ்த்து (பி.வி.)]

**அமிழ்தக்கொடி** *amilda-k-kodi*, பெ. (n.) அமிர்தக்கொடி பார்க்க; see *amirda-k-kodi*.

**அமிழ்தம்** *amildam*, பெ. (n.) 1. **உணவு**; food. "அங்கவர்க் கறுசுவை நால்வகை யமிழ்தம்" (மணிமே. 28 : 116). 2. **உயிர்மருந்து**; elixir. "தானமிழ்த மென்றுணரற் பாற்று" (குறள், 11). 3. **முலைப்பால்**; woman's breast milk. 4. **ஆவின்பால்**; cow's milk. 5. *தீங்குடிப்பு*; honey-sweet drink.

ம. அமுதம், அமிர்தம்.

[அமிழ்து → அமிழ்தம்.]

**அமிழ்து** *amildu*, பெ. (n.) 1. **உணவு**; food. 2. *முலைப்பால்*; woman's breast milk. 3. **ஆவின்பால்**; cow's milk. "இருதாணி யமிழ்துகுத் ததின்" (தைலவ. தைல. 28). 4. **உயிர்மருந்து**; elixir. "அமிழ்தினு மாற்ற வினிதே" (குறள், 64). 5. **உயிர்மருந்துபோற் சிறந்தது**; anything as good as elixir. 6. **இனிப்புப் பண்டம்**; sweet meat. 7. **தேங் கூழ்**; honey-sweet salad or porridge.

ம. அமிர்து; க., து. அம்ருத; தெ. அம்ருதமு; கொங். அம்ருத்.

[மருமம் = மார்பு, முலை. மருமம் → மம்மம் = முலை. ஒ.நோ: கருமம் → கம்மம். மம்மம் > L. *mamma*, milk – secreting organ of female in mammals.

மம்மம் → அம்மம் = முலை, முலைப்பால், குழந்தையுணவு. அம்மம் → அம்மு = முலைப் பால், குழந்தை யுணவு, குழந்தைக்கு மதித்து ஊட்டும் சோறு. அம்முதல் = உண்ணுதல். அம்மு → அம்முது → அமுது = முலைப்பால், ஆவின்பால், உணவு. அமுது → அமுதம் = பால், உணவு. அமுதப்பால் என்பது உலக வழக்கில் தாய்ப்பாலான முலைப்பாலையே குறித்தல் காண்க.

அவிதல் = வேதல், சமைதல். அவி → அவிழ் = வெந்த சோற்றுப்பருக்கை, சோறு. அவி → அவிழ்து → அவிழ்தம் = சோறு.

அவிழ்து → அமிழ்து = சோறு, உணவு. அமிழ்து → அமிழ்தம் = சோறு, உணவு.

அமிழ்து → அமிது → அமுது → அமுதம். ஒ.நோ: தாழ்வடம் → தாவடம். தாழ்வில்லை → தாழ்விலை → தாவிலை. உயிரிசைவு மாற்றம் (harmonic sequence of vowels) என்னும் நெறிப் படி, இறுதியுகரச் சார்பினால் இடையிகரம் உகரமாயிற்று, அமிது → அமுது என. இச் சொல்லைப் பின்பற்றியே அம்மு → அமுது என்னுந் திரிபு தோன்றியிருக்கலாம்.]

இங்ஙனம், பாலைச் சிறப்பாகக் குறிக்குஞ் சொல்லும், சோற்றைச் சிறப்பாகக் குறிக்குஞ் சொல்லும், வெவ்வேறு வகையில் திரிந்து அமுது என்னும் பொதுவடிவடைந்துவிட்ட தனால், ஒன்றோடொன்று மயங்கி, அவ்விரு சொல்லும் பாலுஞ்சோறுமாகிய இரு பொருளையும் உணர்த்தத் தலைப்பட்டு விட்டன. ஆயினும், அமுது என்னுஞ் சொல் பெருவழக்காகச் சோற்றைக் குறிப்பது அமுதுசெய்தல், அமுதுபடைத்தல், அமுது பாறை, அமுதுமண்டபம், அமுதூட்டுதல், திருவமுது என்னும் சொல் வழக்குகளால் அறியப்படும்.

சோறு என்பது, ''ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே'' (நன். 358) என் னும் நூற்பாவிற் கிணங்க, சோற்றுடன் உண்ணும் நால்வகை யுண்டிகளையுங் குறிக் கும். அதனால் அவையும் அமுதெனப்படும்.

எ-டு: பருப்பமுது, கறியமுது, இலையமுது, தயிரமுது, கன்னலமுது.

அமுதுகுத்துதல் என்னும் வழக்கில் 'அமுது' உறை மோரை யுணர்த்திற்று.

சோறு அரிசியின் திரிபாக்கமாதலால், அமுது அல்லது அவிழ் என்னுஞ் சொல் சிறு பான்மை அரிசியையும் குறிக்கும்.

எ-டு: அமுதுபடி = அரிசி. ''அமுதுபடி புறம்பில்லையென்செய்கேன்'' (திருவாலவா. 31 : 12). 'கலவுமி தின்றால் ஒரு அவிழ் (ஓரவிழ்) தட்டாதா?' (பழ.).

ளகரமெய் போன்றே அதற்கினமான ழகர மெய்யும் ரகரமாகத் திரியும். அதனால், அமிழ்து என்பது அமிர்து என்றும், அமிழ்தம் என்பது அமிர்தம் என்றும் வடிவுகொள்ளும். இவ் வடிவே திருப்பாற்கடல் கடைந்த தொன்மக் கதைக்கு வழிவகுத்தது.

தென்சொற்களை வடமொழியில் ஆளும் போது, முதலிலு மிடையிலுமுள்ள உயிர்மெய் களின் உயிரைப்போக்கி ரகரஞ் சேர்த்துக் கொள்வது வடமொழியாளர் வழக்கம். தென்சொல்லில் ஏற்கெனவே ரகரமிருப்பின், அதை அப்படியே வைத்துக்கொள்வர்.

எ-டு: மதங்கம் > ம்ருதங்க, மிதி > ம்ருத், மெது > ம்ருது.

இம் முறைப்படி, 'அமிர்தம்' வடமொழியில் 'அம்ருத' என்றாயிற்று. அதை ஆரியச்சொல் லாக்க வேண்டி ஆரியவழிப் பொருட் காரணங் கூறின், அ + ம்ருத் என்று பகுத்து, சாவின்மை அல்லது சாவைத் தவிர்ப்பது என்றுதான் பொருள் கூறவொண்ணும். ஆதலால் அங்ஙனம் பகுத்து, சுரர் என்னும் தேவர் தம் பகைவராகிய அசுரரைத் துணைக் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்து சுரை (சுரா) யென்னும் அமிர்தமெடுத்துண்டு, சாவு நீங்கினர் என்று கதை கட்டிவிட்டனர். இக் கதையின் பொய்ம்மைச் சான்றுகளாவன :

1. திருப்பாற் கடலென்று ஒரு கடலும் இருந்ததின்மை. வெண்கடல் (white sea) என்றுதான் ஒன்றுளது. அது தமிழிற் பாற் கடல் எனப்படும். பாற்கதிர், பாற்கவடி, பாற்கெண்டை, பாற்சுறா, பால்நண்டு, பால்வண்ணன், பால்வெள்ளி என்பன வெண்ணிறம் பற்றியன. நன்னீர், உவர் நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்னும் எழுவகைக் கடற்கொள் கையை அடிப்படையாகக் கொண்டது திருப்பாற்கடல் கடைந்த கதை.

2. சுரரும் அசுரரும் ஒரு வகுப்பார்க் கொரு வகுப்பார் உயிர்ப் பகைவராதலால்

ஒரு வினைமுயற்சியில் இசைந்து ஈடு பட்டிருக்க முடியாமை. மேலும், நிலையான தேவர்க்குச் சுரை வேண்டியதில்லை; பிறவிக்குட்பட்ட தேவர்க்கு அது பயன் படாது.

3. மந்தரமலையாகிய மத்து, வாசுகி யென்னும் பாம்புக்கயிறு முதலிய கருவிகள் சிறுவரும் நம்பக்கூடாமை.

4. மத்தமிழாது தாங்கிய திருமால் தடுக்க முடியாத நஞ்சைச் சிவபெருமான் உண்டதனால் அவன் கழுத்துக் கறுத்த தென்ற கூற்று.

5. கதிரவன் திங்கள் மறைவிற்குக் காரணமாகக் கட்டப்பட்டுள்ள நிகழ்ச்சிகள்.

6. கூடியுழைத்த அசுரருக்குத் திருமால் சுரையளிக்கவில்லையென்னும் முறை கேட்டுச் செய்தி. கிரேக்கர் வேத ஆரியரின் முன்னோருக்கு மிக நெருங்கியவராதலால், 'அம்ருத' என்னும் வடசொல் கிரேக்க மொழியில் 'அம்புரோசியா' (ambrōsia) என்று வழங்குவது, அச் சொல் ஆரியச் சொல் என்பதற்குச் சான்றாகாது.

''வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று''

என்னும் குறளில் (11), அமிழ்து என்பது உயிர்மருந்து என்று பொருள்படுவதே யன்றி எக் கதையையுஞ் சுட்டுவதன்று. நீரும் சோறுமாகிய இருவகை யுணவும், பசி நோய் நீங்கி உயிர்வாழ இன்றியமையாதன வாதலால், இருமருந் தெனப்படும். அவற்றுள் நீரே ஏனையதையும் விளைத் தலால், அதனை அமிழ்தம் என்று சிறப்பித் தார் ஆசிரியர். 'உணரற் பாற்று' என்னும் தொடர் பொருள்பொதிந்த தொன்று.

இனி,

''விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று''

என்னுங் குறளிலும் (82), சாவாமருந்து என்பது சாவாமைக்கு ஏதுவான மருந்தென்று பொருள் படுவதேயன்றி, தேவருணவையோ திருப்பாற்கடற் கதையையோ நினைவுறுத்துவதன்று.

எல்லா மக்கட்கும் பிறப்பிலிருந்து இறப்பு வரை பல்வேறு நோய்வருவது இயல்பு. மருந்துண்டு நோய் நீங்கினாற் பிழைப்பு; இன்றேற் சாவு. சிலர், ''நெடுநா ளிருந்தபே ரும்நிலை யாகவே யினுங்காய கற்பந் தேடி நெஞ்சுபுண் ணாவ ரெல்லாம்'' என்று தாயுமானவர் (பரிபூரணா. 10) பாடியதற் கேற்ப, இயற்கையுஞ் செயற்கையுமான மூவா மருந்துஞ் சாவாமருந்துந் தேடி உலகெங்குந் திரிவர். அத்தகைய மருந்தொன்றையே திருவள்ளுவர் தம் குறளிற் குறித்துள்ளார். ''சாவா மருந்தெனினும்'' என்பதிலுள்ள உம்மை எதிர்மறையும்மை யென்பதையும் முதன்மையாய்க் கவனித்தல் வேண்டும். ஏனெனின், மண்ணுலகிற் பிறந்தவரெல்லாம் மாய்வது திண்ணம். விருந்திருக்கத் தனித் துண்டலின் தீமையை விளக்கவே ''சாவா மருந்தெனினும்'' என்றார்.

''அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்''

என்னுங் குறளிலும் (64), அமிழ்து என்பது கருப்பஞ்சாறு, கன்னல் (பாயசம்), பதநீர் (தெளிவு), தேன்கலந்த பால், பழக்கூட்டு முதலிய உலகத்திலுள்ளனவும் உண்டினிமை கண்டனவுமான இன்குடிப்புகளுள் அல்லது தேங்கூழ்களுள் ஒன்றனையே குறிக்கும்.

''பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்''

என்று திருவள்ளுவர் பின்னருங் கூறுதல் காண்க (1121).

ஏதேனுமொருவகையில் இருபொருள்களின் ஏற்றத்தாழ்வை ஒப்புநோக்கிக் கூறும்போது, கண்டறிந்தவற்றைப்பற்றிக் கூறுவதே பொருளுள்ளதும் எல்லார்க்கும் ஏற்பது மாகும்.

அதுவே, அம்மம் அல்லது அவிழ் என்னும் மூலத்தினின்று திரிந்த அமிர்து என்னும் தனிச்சொல்லைக் கூட்டுச்சொல்லாகக் கொண்டு, அ+மிர்து என்று பகுத்து, சாவைத் தவிர்ப்பது என்று பொருள்கூறி, அதற்கொரு கதையுங் கட்டிச் சான்றாகக் காட்டுவது சற்றும் பொருந்தாது.

உகரவீற்றுப் பொருட்பெயர்ச் சொற்க ளெல்லாம் பெருமைப் பொருள் கருதா விடத்தும் அம்மீறு பெறுவது இயல்பு.

எ-டு: கடுகு → கடுகம், குமுது → குமுதம், குரவு → குரவம், நஞ்சு → நஞ்சம், நரகு → நரகம், புறவு → புறவம், விளவு → விளவம்.

இங்ஙனமே அமிர்து அமிர்தமாயிற்று.

**அமிழ்ந்து - தல்** *amiḻndu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஆழ்தல், முழுகுதல்;** to sink. ''சூழ்ந்த

புனற்கய மதனேர் விழுந்த மிழ்ந்தி மீள வெழும்" (சேதுபு. அகத். 14).

ம. அமிழ்ந்துக; தெ. அமுகு.

*[அம் → அமிழ் → அமிழ்ந்து.]*

**அமுக்கடி** *amukk(u)-aḍi*, பெ. (n.) 1. *நெருக்கடி*; density in a throng of people. 2. *மந்தாரம்*; cloudiness. 3. *முட்டாயிருத்தல்* (சங்.அக.); to be in straitened circumstances. 4. *மூடமாயிருத்தல்* (சங்.அக.); stupidity, ignorance. 5. *மூடிக் கொள்ளுதல்* (சங்.அக.); to close, as a hand or flower.

*[அமுக்கு + அடி.]*

**அமுக்கம்** *amukkam*, பெ. (n.) *உள்ளே யமுங்கி யிருக்குந் தன்மை*; compression.

*[அமுக்கு → அமுக்கம்.]*

**அமுக்கலான்** *amukkalāṉ*, பெ. (n.) *கட்டி, சிலந்தி முதலியவற்றைக் கரையச்செய்யுந் தழையுள்ள செடி*; a plant whose leaves are used as absorbifacient.

*[அமுக்கு → அமுக்கல் → அமுக்கலான்.]*

**அமுக்கன்** *amukkaṉ*, பெ. (n.) 1. *மறைவாகக் கருமஞ்செய்வோன்*; one who does things secretly. 2. *கரவுள்ளவன்*; sly, cunning person, dissembler. 3. *தூங்கும்போது ஒரு பேய் மேலுட்கார்ந்து அமுக்குவதுபோல் தோன்றும் உணர்ச்சி*; nightmare.

ம. அமுக்கன்

*[அமுக்கு → அமுக்கன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அமுக்கனங்கிழங்கு** *amukkaṉaṅ-kiḻaṅgu*, பெ. (n.) *அமுக்கிராக்கிழங்கு* பார்க்க; see *amukkirā-k-kiḻaṅgu*.

**அமுக்கி** *amukki*, பெ. (n.) *அமுக்கன்* பார்க்க; see *amukkaṉ*.

*[அமுக்கு → அமுக்கி. 'இ' ஒருமை யீறு.]*

**அமுக்கிரா** *amukkirā*, பெ. (n.) *ஒரு மருந்துச் செடி*; a medicinal plant, Indian winter cherry, ṣ. sh., *Withania somnifera*.


அமுக்கிரா

மறுவ. அமுக்கிரி, அமுக்குரா, அமுக்குரவு.

ம. அமுக்கிரம்; க. அமக்கீர.

**அமுக்கிராக்கிழங்கு** *amukkirā-k-kiḻaṅgu*, பெ. (n.) *அமுக்கிராச் செடியின் கிழங்கு, கட்டிகளைக் கரைக்கும் மருந்து*; the root of Indian winter cherry used as an absorbifacient.

*[அமுக்கிரா + கிழங்கு.]*

மறுவ. அமுக்கனங்கிழங்கு, அமுக்கிராங் கிழங்கு.

**அமுக்கிராங்கிழங்கு** *amukkirāṅ - kiḻaṅgu*, பெ. (n.) *அமுக்கிராக்கிழங்கு* பார்க்க; see *amukkirā-k-kiḻaṅgu*.

*[அமுக்கிரா + கிழங்கு.]*

**அமுக்கிரி** *amukkiri*, பெ. (n.) *அமுக்கிரா* பார்க்க; see *amukkirā* (தைலவ. தைல. 42).

**அமுக்கு-தல்** *amukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *அழுத்துதல், நெருக்குதல், கசக்குதல்*; to crush, press, squeeze, as a fruit or a boil. 2. *அமரச்செய்தல், பிடித்திழுத்தல்*; to press down, pull back. "வெற்பி னுச்சிதொட் டமுக்கின சிலகரம்" (உபதேச. கூர்ம. 15). 3. *நீருள் அமிழ்த்துதல்*; to press down into water, immerse. "ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலுள்" (மூதுரை, 19). 4. *தோற்கடித்தல், அடக்கியொடுக்குதல்*; to overcome, repress. அவனைச் சண்டையில் அமுக்கி விட்டான் (உ.வ.).

ம. அமுக்குக; க. அமுகு, அவுங்கு; தெ. அவுக்கு, அன்சு; து. அமபுனி; கோத. அம்க்; துட. ஒம்க்; பட. அமக்கு.

*[அம் → அமுங்கு → அமுக்கு.]*

**அமுக்கு** *amukku*, பெ. (n.) 1. *அழுத்துகை*; pressure, as in a nightmare. அவன் அமுக்குண்டு கதறிக்கொண்டு கிடந்தான் (உ.வ.). 2. *அழுத்துகிற பொறை (பாரம்)*; the thing that compresses, incumbent weight (W.).

*[அம் → அமுங்கு → அமுக்கு (மு.தொ.பெ.).]*

**அமுக்குணி** *amukkuṇi*, பெ. (n.) 1. *அடக்கி*; a reticent person, one who pretends not to know anything about an event or incident. 2. *இருந்த இடத்தைவிட்டு அசையாத-வன்-வள்*; one who sits unmoved.

*[அமுக்கு + உண்ணி – அமுக்குண்ணி → அமுக்குணி. 'இ' ஒருமை யீறு. 'உண்' செயப் பாட்டுத் துணை வினை.]*

**அமுக்குணிப்பிள்ளையார்** *amukkuṇi-p-piḷḷaiyār*, பெ. (n.) 1. *பிள்ளையார்போல் இருந்த*

இடத்தைவிட்டு **அசையாத-வன்-வள்** (உ.வ.); one who sits unmoved as the image of Ganēša (Com.u.). 2. **ஒன்றும்தெரியாத-வன்-வள் போல் நடிப்ப-வன்-வள்**; dissembler, reticent person.

*[அமுக்கு + உண்ணி + பிள்ளையார்.]*

அமுக்குணி பார்க்க; see *amukkuṇi*.

**அமுக்குரவு** *amukkuravu*, பெ. (n.) *அமுக்கிரா* பார்க்க; see *amukkirā*.

**அமுக்குரா** *amukkurā*, பெ. (n.) *அமுக்கிரா* பார்க்க; see *amukkirā*.

**ம.** அமுக்கிரம்; **க.** அமங்குர.

**அமுக்கொத்தி** *amukkotti*, பெ. (n.) **கத்திவகை, பாசவன் கத்தி**; cleaver, butcher's knife (W.).

*[அமுக்கு + கொத்தி. அமுக்கு + கத்தி எனினுமாம்.]*

**அமுகம்** *amugam*, பெ. (n.) 1. **கடுக்காய்**; gall-nut, *Chebulic myrobalan*. 2. **சீந்தில்**; gulancha, *Tinospera cordifolia*. 3. **நெல்லி**; emblic myrobalan, *Phyllanthus emblica*.

**அமுங்காக்கொடி** *amuṅgā-k-kodi*, பெ. (n.) **நெட்டி** (சித்.அக.); sola pith.

**அமுங்கு-தல்** *amuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அமர்தல்** (சங்.அக.); to become compressed, to sink to a lower level. கட்டமுங்கிவிட்டது. 2. **அமிழ்தல்**; to sink. 3. **அழுந்துதல்**; to be pressed down, mashed, as ripe fruit. 4. **நெரி படல்**; to be crushed, as by a weight. வீடுவிழ எல்லாரும் அமுங்கிப்போனார்கள் (உ.வ.).

**ம.** அமுங்நுக, அமங்நுக; **க.** அமுக்கு, அமுகு; **தெ.** அதுமு; **கோண்.** அதமன; **கொலா., நா.** அதும்.

**அமுசகம்** *amušagam*, பெ. (n.) **செருப்படை** (சித்.அக.); a diffuse prostrate herb found in tank beds and in the harvested fields, *Coldenia procumbens*.

*[அம்முதல் = அமுங்குதல். அம் → அமுசு → அமுசகம்.]*

**அமுசம்** *amušam*, பெ. (n.) **சிறுசெருப்படை** (மலை.); a small variety of *Coldenia procumbens*.

*[அம்முதல் = அமுங்குதல். அம் → அமுசு → அமுசம்.]*

**அமுசு** *amušu*, பெ. (n.) **ஒட்டடை**; soot.

*[அம் → அமுசு.]*



**அமுணங்கம்** *amuṇaṅgam*, பெ. (n.) **அடக்க மின்மை** (சிந்தா. நி. 190); want of self-restraint.

*[முணங்குதல் = முடங்குதல், உள்ளடங்குதல். முணங்கு → முணங்கம் = உள்ளொடுக்கம், அடக்கம். அ (எ.ம. முன்.) + முணங்கம் – அமுணங்கம்.]*

**அமுத்தல்** *amuttal*, பெ. (n.) **கர்க்கடசிங்கி** (பரி.அக.); Japanese wax-tree.

**அமுத்தி** *amutti*, பெ. (n.) **விருப்பின்மை** (சிந்தா. நி.); dislike.

**அமுத்திரம்** *amuttiram*, பெ. (n.) **மஞ்சிட்டி** (பச். மூ.); Indian madder, mañjit.

**ஒ.நோ:** அமுதசகரம்

**அமுதக்கதிர்க் கடவுள்** *amuda-k-kadir-k-kaḍavuḷ*, பெ. (n.) **திங்கள்**; moon. "அமுதக் கதிர்க் கடவுள் ரவிகட் கிரட்டி தனி" (தக்கயாகப். 460).

*[அமுதம் + கதிர் + கடவுள்.]*

**அமுதக்குவிகம்** *amuda-k-kuvigam*, பெ. (n.) **செங்கற்றாழை**; a species of aloe (சித்.அக.) — dull red-flowered aloe, *Aloe vera* (*rosea*) (செ.அக.).

*[அமுதம் + குவிகம். அமுதம் = சிறந்த மருந்து. குவிகம் = மேனோக்கிக் குவிந்தது.]*

**அமுதக்கொடி** *amuda-k-koḍi*, பெ. (n.) **பெரு மருந்துக்கொடி** (பச்.மூ.); Indian birthwort.

*[அமுதம் + கொடி.]*

**அமுதக்கோணிகம்** *amuda-k-kōṇigam*, பெ. (n.) **செங்கிளுவை** (சித்.அக.); whistling teal.

*[அமுதம் + கோணிகம். அமுதம் = சிறந்தது.]*

**அமுதகடிகை** *amuda-kaḍigai*, பெ. (n.) **சில நாண்மீன் காலங்களில் மங்கல வினைகட் குரியனவாகச் சொல்லப்படும் நாழிகைகள்** (விதான. குணா. 26 : 27); auspicious hour of each day.

*[அமுதம் + கடிகை. அமுதம் = அமுதம்போற் சிறந்தது. கடிகை = நாழிகைவட்டில், நாழிகை.]*

**அமுதகதிரோன்** *amuda-kadirōṉ*, பெ. (n.) **திங்கள்** (பிங்.); moon.

*[அமுதம் + கதிரோன். அமுதம் = இனிமை, இன்பம். கதிரோன் = ஒளிக்கதிருடையது.]*

**அமுதகம்** *amudagam,* பெ. (n.) *1.* **கொங்கை;** woman's breast. *2.* *பாற்கடல்;* sea of milk. *3.* **உண்டிச்சாலை;** hotel, eating house. *4.* *நீர்;* water.

*[அமுது (பால், உணவு) + அகம் (இடம்).]*

**அமுதகரந்தை** *amuda-karandai,* பெ. (n.) **சிவ கரந்தை** (சித்.அக.) — fever basil (செ.அக.) — a plant, *Schoenanthes zeylanica* (சா.அக.).

*[அமுதம்+கரந்தை. அமுதம்=சிறந்த மருந்து. கரந்தை = கரிய (நீல)நிறப் பூப் பூக்கும் பூண்டு. கள் → கர் → கரம் → கரந்து → கரந்தை.]*

**அமுதகிண்ணம்** *amuda-kiṇṇam,* பெ. (n.) *1.* **பாற்கிண்ணம்;** milk bowl. *2.* **இளம்பெண் முலை;** maiden's breast (சா.அக.).

*[அமுதம் (பாலுள்ளது)+கிண்ணம் (சிறுகலம், கிண்ணம் போன்ற வடிவுகொண்ட வுறுப்பு).]*

**அமுதகுடம்** *amuda-kuḍam,* பெ. (n.) *1.* **பாற் குடம்;** milk-pitcher. *2.* **பெண்முலை;** woman's breast (சா.அக.).

T. 5048

*[அமுதம் (பாலுள்ளது) + குடம் (உருண்ட கலம், குடம்போன்ற வுறுப்பு).]*

**அமுதகுண்டம்** *amuda-kuṇḍam,* பெ. (n.) **பாற் குடம்;** milk pot.

*[***Skt.*** amṛita + குண்டம். அமுதம்+குண்டம் (குண்டாயிருக்குங் கலம்).]*

**அமுதகுண்டா** *amuda-kuṇḍā,* பெ. (n.) **இரப் போர் கலம்;** beggar's bowl.

*[***Skt.*** amṛita + குண்டா. அமுதம் = உணவு, சோறு. குள் → குண்டு → குண்டா.]*

**அமுதகுலர்** *amuda-kular,* பெ. (n.) *1.* **இடையர்** (வின்.); herdsmen, as dispensers of milk. *2.* **சான்றோர்** (வின்.); the learned, the great.

*[அமுதம்=பால், அமுதம்போற் சிறந்த அறிவு. குலம் = கூட்டம், தொழில்வகுப்பு, வகுப்பு. குலம் → குலன் (ஆ.பா.) — குலர் (ப.பா.).]*

**அமுதகுவிகம்** *amuda-kuvigam,* பெ. (n.) **அமுதக் குவிகம்** பார்க்க; see ***amuda-k-kuvigam.***

**அமுதகுழல்** *amuda-kuḻal,* பெ. (n.) **அமுத கோளத்தின் குழாய்;** the duct of a gland (சா.அக.).

**அமுதகுழலற்றகோளம்** *amuda-kuḻal-aṟṟa-kōḷam,* பெ. (n.) **அமுததாரை யில்லாத கோளங்கள்;** ductless glands (சா.அக.).

*[அமுதம் + குழல் + அற்ற + கோளம்.]*

**அமுதகோணிகம்** *amuda-kōṇigam,* பெ. (n.) **செங்கிளுவை;** the whistling teal, *Dendrocygna awsuree* alias *D. arcuata* (சா.அக.).

சில கூட்டுச்சொற்கள், **செ. அகரமுதலியில்** (Lexicon) வலிமிக்கும், **சா. அகரமுதலியில்** வலிமிகாதும் புணர்ந்துள்ளன.

| எ-டு: | **செ. அகரமுதலி** | **சா. அகரமுதலி** |
|---|---|---|
| | அமுதக்குவிகம் | அமுதகுவிகம் |
| | அமுதச்சேவிகம் | அமுதசேவிகம் |

இங்ஙனமே அமுதக்கோணிகம் என்று செ. அகரமுதலியிலும் (பின்னிணைப்பு), அமுத கோணிகம் என்று சா. அகரமுதலியிலும் உள்ளன. இவ் விரண்டும் ஒன்றே.

எல்லா ஆங்கில அகரமுதலிகளிலும் 'peal' (அல்லது peel) என்பது ஒரு கடல்மீனென்றும், 'teal' என்பது ஒரு வாத்து என்றுமே குறிக்கப் பட்டுள்ளன.

'peal' என்னும் கடல்மீன் பிரித்தானியத் தீவுக் கடல்களில் மட்டும் கிடைப்பது. அதன் பெயர் 'salmon grilse' என்று அயர்லாந்திலும், 'sea-trout' என்று இங்கிலாந்திலும் வழங்கு கின்றது.

வீளை (whistle) யொலிக்கும் அஃறிணை வுயிரினங்களாகச் சில மரங்களும், மீன்களும், பறவைகளும், எலி பாம்பு போன்ற நில வுயிரிகளும் ஆங்கில அகரமுதலிகளிற் குறிக்கப் படுகின்றன. அவை 'whistler' என்று பொதுப் பெயர் பெறுகின்றன.

கூட்டுச்சொற் பெயர் பெறின், whistle-coot, whistle-fish, whistle-insect, whistle-duck, whistle-pig, whistle-wing, whistle-wood என்றும்; whistling dick, whistling duck, whistling eagle அல்லது whistling kite whistling fish, whistling frog, whistling hawk, whistling marmot, whistling moth, whistling plover, whistling snipe, whistling swan, whistling teal, whistling thrush என்றும் குறிக்கப்படுகின்றன.

எருதந்துறைப் பேரகரமுதலியிலும் (The Oxford English Dictionary)

Whistle-fish, a name for different species of rockling or sea-loach,

Whistler 2. C.whistle-fish.,

Whistling fish = whistle-fish

என்றும்,

Peal, a name given to **a.** a grilse or young salmon; (now esp. one under two pounds in weight); **b.** a smaller species of salmon என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

ஆயின் 'whistle-peal' என்றோ, 'whistling peal' என்றோ ஓரகர முதலியிலும் குறிக்கப் படவில்லை. 'whistle-fish' அல்லது 'whistling fish' என்று வருமிடமெல்லாம், rockling அல்லது sea-loach அல்லது three or five-bearded rockling என்றே பொருள் கூறப் பட்டுள்ளது; peal என்றோ, salmon, grilse என்றோ, sea-trout என்றோ கூறப்படவில்லை. ஆகவே, 'peal' என்பது வீளைமீனினத்தைச் (whistle-fish) சேர்ந்ததன் றென்பது தெளி வாகின்றது.

மேலும், 'peal' என்பது பிரித்தானியக் கடல் மீன்களுள் (British fishes) ஒன்றாயிருப்பதால், அதற்குத் தமிழ்நாட்டிற் 'செங்கிளுவை' யென்று பெயர் ஏற்பட்டிருக்கவும் முடியாது. 'teal' என்னும் சிறு குள்ளவாத்து வகை இந்தியாவிலுமுள்ளது.

*Teal*, a small fresh-water fowl *Querquedula* or *Anascrecca*, or other species of the genus, the smallest of the ducks, widely distributed in Europe, Asia, and America; also locally applied to other genera of the *Anatidae* (O.E.D.).

ஆகவே, **சா. அகரமுதலி**யில் 'அமுத கோணிகம்' என்பதற்கு 'whistling teal' என்று குறித்திருப்பதே சரியென்பதும், **செ. அகர முதலி**யில் (பின்னிணைப்பு) 'whistling peal' என்று குறித்திருப்பது தவறு என்பதும் அறியப்படும். இத் தவறு பெரும்பாலும் அச்சுப்பிழையா யிருக்கலாம்.

இதனால் கிளுவை யென்றொரு மீனிருப் பினும், செங்கிளுவை யென்பது பறவையின மென்பது அறியப்படும்.

செங்கிளுவை யென்னுஞ் சொல்லிற்கு, **செ. அகரமுதலி** மூலத்தொகுதியிலேயே, *1.* கீச்சுத் தாரா; *2.* ஒருவகை மரம் என்று இரு பொருளே கூறப்பட்டிருத்தல் காண்க.

**அமுதகோளம்** *amuda-kōḷam*, பெ. (n.) (சித்தர் கொண்முடிபு) **உடம்பின் பலவிடங்களிற் காணப்படுவனவும், உயிர்மருந்து போன்ற வலுவுள்ள நீரைச் சுரப்பனவுமான, சிறிய உருண்டையான ஊன்மொத்தைகள், அமுத சுரப்பிகள்**; (Šiddha philosophy) glands or small globular masses found in many parts of the body and said to secrete some vital fluid like ambrosia essential to the growth of the system, ambrosial glands (சா.அக.).

*[அமுதம் + கோளம். அமுதம் = உயிர்மருந்து ஒத்த சுரப்பு நீர். கோளம் = உருண்டை. குள் → கொள் → கோள் → கோளம்.]*

**அமுதங்கரந்த நஞ்சு** *amudaṅ-karanda-nañju*, பெ. (n.) *1.* **இஞ்சி**; ginger. *2.* **கடுஞ்சொல்லுங் கனிந்த மனமுமுடைய-வன்-வள்**; a person of harsh words but kind disposition (W.).

**அமுதச்சேவிதம்** *amuda-c-cēvidam*, பெ. (n.) **சிறுகுறிஞ்சா** (சித்.அக.); a medicinal climbing plant (செ.அக.) — ***அமுதசேவிதம்***; small Indian ipecacuanha, *Gymnema sylvestris* (சா.அக.).

**அமுதச்சோகிதம்** *amuda-c-cōgidam*, பெ. (n.) **செங்குமிழ்** (சித்.அக.); small cashmeer tree (செ.அக.) — ***அமுதசோகிதம்***; red cashmeer tree, *Gmelina tomentosa* (சா.அக.).

**அமுதசகரம்** *amuda-šagaram*, பெ. (n.) **மஞ்சிட்டி** (வை.மூ.); Indian madder, mañjit.

**ஒ.நோ** : அமுத்திரம்

**அமுதசருக்கரை** *amuda-šarukkarai*, பெ. (n.) **சீந்திற்கிழங்கிலிருந்து செய்த சருக்கரை** (சங்.அக.); a medicinal vegetable salt prepared from the root or stem of the plant gulancha.

**மறுவ.** சீந்தில்மா

**அமுதசாரணி** *amuda-šāraṇi*, பெ. (n.) **வெள்வேல்** (வை.மூ.); panicled babul (செ.அக.) — white babool, white bark acacia, *Acacia leucophloea* (சா.அக.).

**அமுதசாரம்** *amuda-šāram*, பெ. (n.) *1.* **அமுத சாரணி** பார்க்க; see *amuda-šāraṇi*. *2.* **தேன்**; honey (சா.அக.). *3.* **கற்கண்டு**; sugar-candy (சா.அக.).

**அமுதசுரபி** *amuda-šurabi*, பெ. (n.) **மணி மேகலை கையிலிருந்த உலவாக் கலம் (அட்சய பாத்திரம்)**; a vessel supplying inexhaustible food, used by *Maṇimēgalai* for feeding the poor. "அமுத சுரபியெனும் மாபெரும் பாத்திரம்" (மணிமே. *11 : 44-5*).

*[அமுதம் + சுரபி. சுரத்தல் = ஊறுதல், சொரிதல், கறத்தல். சுர → சுரப்பு → சுரப்பி → சுரபி >* **Skt.** *surabhi.]*

**அமுதசுரா** *amuda-šurā*, பெ. (n.) அமுதசாரணி பார்க்க; see *amuda-šāraṇi*,

**அமுதசுறா**[1] *amuda-šuṟā*, பெ. (n.) அமுதசுரா பார்க்க; see *amuda-šurā*.

[அமுதம்+சுரா (சாரம்)→சுறா (வெள்வேல்). சுர → சுரா.]

**அமுதசுறா**[2] *amuda-šuṟā*, பெ. (n.) பாற்சுறா; a white shark (சா.அக.).

[சுள் → சுர் → சுரி. சுரித்தல் = துளைத்தல், குத்துதல், வெட்டுதல். சுரி → சூரி = குத்தி, கத்தி வகை. சுர் → சுறு → சுற → சுறவு → சுறா. அமுதம் (பால், வெள்ளை) + சுறா (வெட்டும் செதிளுடைய மீன்.]

**அமுததரம்** *amuda-taram*, பெ. (n.) 1. மஞ்சிட்டி (மலை.); muñjit. 2. மஞ்சிட்டி; arnotto (L.) madder of Bengal, *Bixa orellan* (சா.அக.).

**அமுததாரை** *amuda-tārai*, பெ. (n.) 1. அமிர்தத் துளி; ambrosial drop. ''அமுத தாரைகள் எற்புத் துளைதொறு மேற்றினன்'' (திருவாச. 3 : 174-5). 2. உடம்பினுள் அமுதந் தங்கி நிற்கும் பலவிடங்கட்குப் போகும் வழி; nerve-channel through which ambrosia is supposed to circulate and reach several centres in the human system (சா.அக.). 3. முலைப்பால் வரும் வழி; milk duct, galactophorous duct.

**அமுதநிலை** *amuda-nilai*, பெ. (n.) 1. உடம்பில் அமுதந் தங்கிநிற்குங் கோளங்கள்; situation of several glands in the body supposed to be capable of producing secretions or vital fluids like ambrosia. ''அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்'' (விநா. அக.) — (சா. அக.). 2. மகளிர் உடம்பில் குறித்த காலங்களில் தொடுவ தால் காமவின்பம் விளைப்பதாகக் கருதப் படும் பெருவிரல், புறந்தாள், பரடு, முழங்கால், அல்குல், கொப்பூழ், மார்பு, முலை, கைமூலம், கழுத்து, கன்னம், வாய், கண், நெற்றி, உச்சி என்னும் பதினைந் திடங்கள் (கொக்கோ. 2:1); The 15 parts of a woman's body supposed to yield sensuous delight when touched on particular days, viz., big toe, instep, ankle, knee, the part between the waist and the genital organ, navel, chest, breast, arm-pit, neck, cheek, mouth, eye, forehead and crown.

**அமுதநீர்** *amuda-nīr*, பெ. (n.) 1. விந்து, வெள்ளை (சுக்கிலம்) (சித்.அக.); semen virile. 2. விடாய்நீர் (சூதகநீர்) (சித்.அக.); menstrual fluid or blood. 3. பிண்ட நீர்; liquid contained in the amniotic sac in which the foetus lies (சா.அக.). 4. திரைந்த பாலினின்று பிரிக்கப் பட்ட நீர்; whey.

**அமுதப்பார்வை** *amuda-p-pārvai*, பெ. (n.) குளிர்ந்த இனிய பார்வை; sweet inspiring look, as a lady's towards her lover (W.).

[அமுதம் + பார்வை.]

**அமுதப்பால்** *amuda-p-pāl*, பெ. (n.) முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

[அமுதம் + பால்.]

**அமுதப்பீ** *amuda-p-pī*, பெ. (n.) தான்றிக்காய் (பச்.மூ.); unripe fruit of belleric myrobalan.

[அமுதம் + பீ.]

**அமுதபுரம்** *amuda-puram*, பெ. (n.) சிறுகுறிஞ்சா (பச்.மூ.); a medicinal climbing plant.

அமுதச்சேவிதம் பார்க்க; see *amuda-c-cēvidam*.

**அமுதம்** *amudam*, பெ. (n.) 1. முலைப்பால்; mother's breast milk. 2. ஆவின்பால்; cow's milk (பிங்.). 3. தயிர் (வின்.); curd. 4. மழை (அக.நி.); rain. 5. முகில் (பொதி.நி.); cloud. 6. நீர்; water. ''துலங்கிய வமுதம்'' (கல்லா. 5). 7. சோறு (பிங்.); boiled rice. 8. உப்பு (பிங்.); salt. 9. இனிமை (நாமதீப.); sweetness. ''தேன்பொதிந் தமுத மூறப் பயிரிலா நரம்பிற் கீதம்'' (சீவக. 2048). 10. சுவை (பிங்.); taste, flavour, relish. 11. பெருமை (பொதி.நி.); eminence, greatness. 12. சிறந்த தன்மை; excellence. 13. விரும்பப்படுவது (சங்.அக.); desirable thing. 14. உயிர்மருந்து; nectar of life. 15. சீந்தில் (மலை.); gulancha. 16. 'திரிபலை' யென்னும் முக்காய் (வின்.) — கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் என்பன; the three myrobalan fruits, viz., *Terminalia chebula, Phyllanthus emblica* and *Terminalia bellerica* (சா.அக.). 17. முக்கடுகம் என்னும் சுக்கு மிளகு திப்பிலி; the three special spices, viz., dried ginger, pepper and long pepper. 18. அமிர்தக் கடுக்காய்; a class of fleshy gall-nut with small kernels (சா.அக.). 19. 'பூமிசர்க்கரை' என் னும் நிலச்சருக்கரை (நாமதீப.); necklace-berried climbing caper. 20. காட்டுக்கொஞ்சி (பச்.மூ.); opal orange, *Glycosmis pentaphylla* (சா.அக.). 21. விந்து (நாமதீப.); semen. 22. தலைப்பிண்டச் செயனீர்; a liquid essence prepared from the brain of the first-born child

(சா.அக.). 23. உருக்கு; steel (சா.அக.). 24. **அமுதகடிகை;** auspicious hour of each day. "ஆங்கதன் மேனான் கமுத மென்னே" (விதான. குணாகுண. 27). 25. **பேரின்ப வீடு (முத்தி);** final liberation from this world. "அமுதம் பெறுசண்டி" (தேவா. 7.65 : 2).

*[அம்மு (பால்) → அம்முது → அமுது → அமுதம். அவிழ் (சோறு) → அவிழ்து → அமிழ்து → அமிழ்தம் → அமிதம் → அமுதம்.]*

**அமிழ்து** பார்க்க; see *amiḻdu.*

**அமுதமூளை** *amuda-mūḷai,* பெ. (n.) பெருமூளை; cerebrum (சா.அக.).

**அமுதமேந்தல்** *amudam-ēndal,* தொ.பெ. (vbl.n.) பெரியோர்க்கு உண்டி படைத்தல் (சூடா.); serving food to the holy or the great.

*[அமுதம் + ஏந்தல்.]*

**அமுதர்** *amudar,* பெ. (n.) **பால் விற்கும் முல்லை நில மாக்கள், இடையர்** (பிங்.); herdsmen, as dispensers of milk.

*[அமுதம் (பால்) → அமுதன் (ஆ.பா.) – அமுதர் (ப.பா.).]*

**அமுதவல்லி** *amuda-valli,* பெ. (n.) **சீந்தில்** (திவா.); gulancha (செ.அக.) — moon-creeper, *Tinosphora cordifolia* alias *Menispermum cordifolium* (சா.அக.).

**அமுதவி** *amudavi,* பெ. (n.) 1. கடுக்காய்; country gall-nut, chebulic myrobalan. 2. **அமுதவல்லி** பார்க்க; see *amuda-valli.* 3. **நெல்லி;** country goose berry, *Phyllanthus emblica* (சா.அக.).

**அமுதவிந்து** *amuda-vindu,* பெ. (n.) (சிவ.) **வான மண்டலத்திற்கு அடையாளமாகிய வட்டத் துளி;** (Šaiv.) a mystic symbol representing ether, in the form of a globular drop. "அறு புள்ளி அமுதவிந்து" (சி. சி. சுபக். 2 : 68).

**அமுதவெழுத்து** *amuda-v-eḻuttu,* பெ. (n.) (பாட்.) **பாட்டியல் நூற்படி புகழ்ச்சிப் பனுவல் களிலும் வாழ்த்துப் பாக்களிலும் முதலெழுத்தாக வரக்கூடிய க, ச, த, ந, ப, ம, வ என்னும் ஏழு மெய்யெழுத்துகளும் அ, இ, உ, எ என்னும் நாலுயிரெழுத்துகளுமாகிய பதினொரு மங்கல வெழுத்துகளுள் ஒன்று;** (Poet.) one of the 11 nectar-letters comprising the four short vowels *a, i, u, e* and the seven consonants *k, š, t, n, p, m, v* which should be the commencing letter of a laudatory or benedictory poem, in order to make it auspicious, according to Poetics.

"கசதந பமவ வேமொடும் அகரம்
இகரம் உகரம் எகரம் நான்கும்
அமுத வெழுத்தென் றறைந்தனர் புலவர்"
(இலக். வி. 779).

*[அமுதம் + எழுத்து.]*

**அமிழ்து** பார்க்க; see *amiḻdu.*

**அமுதனார்** *amudaṉār,* பெ. (n.) **மாலியக் குரவருள் (வைஷ்ணவாசாரியருள்) ஒருவரும் இராமானுசாசாரியரின் காலத்தவரும் இராமானுச நூற்றந்தாதியின் ஆசிரியருமானவர்;** name of the author of the *Rāmāṉuša-nūṟṟandādi,* contemporary of Rāmānujāchārya.

*[அமுதம் → அமுதன் (ஆ.பா.) – அமுதனார்.]*

**அமுதாரி** *amudāri,* பெ. (n.) **பூனைக்காலி** (மலை.); cowhage (செ. அக.) — cat-bean, *Mucana pruriens* (சா.அக.).

**அமுது** *amudu,* பெ. (n.) 1. **முலைப்பால்;** breast milk. 2. **ஆவின் பால்;** cow's milk. 3. **உறை மோர்;** butter-milk, used for curdling boiled milk. 4. **சோறு;** boiled rice. 5. **உணவு;** food. "வாடா மலரும் நல்லமுதும்" (ஞானவா. பிரகலா. 8). 6. **உப்பு;** salt. "அள்ளலோங்களத் தமுதின் பண்டியும்" (கம்பரா. பால. நாட்டு. 54). 7. **தெய்வத்திற்குப் படைக்கும் கறிவகை, உணவுவகைகளைக் குறிக்கும் பொதுச்சொல்;** affix to the names of articles of food and drink offered to God. எ-டு: கறியமுது, பருப்பமுது, இலையமுது, தயிரமுது. 8. **மழை** (பொதி.நி.); rain. 9. **நீர்;** water. "அமுதுகொப் பளித்திட வாங்கி" (தைலவ. தைல. 34). 10. **உயிர் மருந்து;** elixir. 11. **இனிமை** (பிங்.); sweetness. 12. **இயற்கையாக விளையும் செல்வப் பொருள்;** natural products. "கடல்படு மமுதும்" (நைடத. நாட்டு. 25). 13. **நிலவொளி;** moon light. "திங்க ளின்னமு திறைப்ப" (கூர்மபு. அட்ட. 27). 14. **அமுதகடிகை;** auspicious hour of each day. "பொன்னவன் கடத்துறினு மமுதெனப் போற்றுவரே" (விதான. குணாகுண. 25). 15. **பேரின்ப வீடு, ஆதன் விடுதலை;** eternal bliss, liberation of the soul.

*[அம்மு → அம்முது → அமுது. அவிழ் → அவிழ்து → அமிழ்து → அமிது → அமுது.]*

**அமிழ்து** பார்க்க; see *amiḻdu.*

**அமுதுகுத்து-தல்** *amudu-kuttu-*, 5 செ.கு.வி. (v.i.) **பிரைமோர் ஊற்றுதல்** (மாலியப்பிராம.); to add a little butter-milk to boiled milk to make curd (Vaiṣṇ. Brāhm.).

**அமுதுசெய்-தல்** *amudu-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) **உண்ணுதல் (ஒரு கண்ணிய வினைச் சொல்)**; to eat, dine (a term used to enhance respect). ''நறுவெண்ணெ யாயர் மங்கைய ரிடவிட வமுது செய்து'' (பாரத. நச்சு. 1).

**அமுதுபடி** *amudu-paḍi*, பெ. (n.) 1. **உணவு**; food. 'இவள்தான் அமுதுபடி திருத்துவது சாத்துப்படி திருத்துவதாகாநின்றாள்' (திவ். பெரியாழ். 3 . 7 : 8, வியா.). 2. **அரிசி**; rice. ''அமுதுபடி புறம்பில்லை யென்செய் கேன்'' (திருவாலவா. 31 : 12).

ம. அமுதுபடி

*[அமுது = சோறு. படி = நாழி, அளவு, அளவிட்ட சோறு அல்லது உணவு, அளவிட்ட அரிசி.]*

**அமுதுபடை-த்தல்** *amudu-paḍai-*, 4 செ. குன்றாவி. (v.t.) **உணவு பரிமாறுதல்**; to serve food. ''உழையிடை யமுது படையென'' (திருவாலவா. 31 : 11).

**அமுதுபாறை** *amudu-pāṟai*, பெ. (n.) **பெருமாள் கோயில்களிற் சோற்றுடன் தயிரை அல்லது புளிச்சாற்றைக் கலக்குங் கற்பலகை**; stone slab on which boiled rice is mixed with curds or prepared tamarind juice, in Viṣṇu temples.

**அமுதுபுரம்** *amudu-puram*, பெ. (n.) **சிறு குறிஞ்சா**; a medicinal climbing plant.

அமுதச்சேவிதம் பார்க்க; see *amuda-c-cēvidam*.

**அமுதுமண்டபம்** *amudu-maṇḍabam*, பெ. (n.) **கோயில் மடைப்பள்ளி** (கல்வெட்.); temple kitchen hall where food is prepared (Insc.).

**அமுதுமோர்** *amudu-mōr*, பெ. (n.) **உறைமோர்**; butter-milk used for curdling boiled milk.

**அமுதுறை** *amuduṟai*, பெ. (n.) எலுமிச்சை (சிந்தா. நி. 198); sour lime, *Citrus medica acida*.

*[அமுது + உறை — அமுதுறை (பாலை உறையச் செய்யும் சாறுள்ள கனிமரம்).]*

**அமுதூட்டு-தல்** *amud(u)-ūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **குழந்தைக்குப் பாலூட்டுதல்**; to feed a child with milk, to suckle. 2. **பிள்ளைக்கு ஏழாம் மாதம் சோறூட்டுதல்** (பிங்.); to start feeding a child with boiled rice in the seventh month.

*[அமுது + ஊட்டு. உண் (த.வி.) — ஊட்டு (பி.வி.).]*

**அமுதெழுத்து** *amud(u)-eḻuttu*, பெ. (n.) **பாட்டியற்படி ஒரு பனுவலின் அல்லது பாடலின் முதலில் வரவேண்டிய மங்கல வெழுத்து** (பிங்.); a letter deemed auspicious for commencing a poem, acc. to Poetics.

அமுதவெழுத்து பார்க்க; see *amuda-v-eḻuttu*.

*[அமுது + எழுத்து.]*

**அமுதை** *amudai*, பெ. (n.) 1. **சீந்தில்**; gulancha. 2. **கடுமரம்**; chebulic myrobalan. 3. **நெல்லி**; emblic myrobalan.

அமுதை > **Skt**. amṛita.

*[அமுது → அமுதை.]*

**அமுந்திரம்** *amundiram*, பெ. (n.) **முத்தக்காசு** (பரி.அக.); straight sedge.

**அமுந்திரி** *amundiri*, பெ. (n.) **அரிசி** (மாலி.); rice (Vaiṣṇ.).

*[ஒருகா. அமுது + அரி. அமுது = சோறு. அரி = அரிசி.]*

**அமுரி** *amuri*, பெ. (n.) 1. **மூத்திரம், சிறப்பாகச் சிறுகுழந்தை மூத்திரம்**; urine, esp. that of a child. 2. **கடல்நீர்**; sea water. 3. **கருங்குன்றி**; a black species of Indian liquorice, *Abrus precatorius*. 4. **ஒரு செடி**; a plant. எ-டு: அமுரி சுட்டுச் சாம்பலாக்கல். 5. **ஓகப் பயிற்சியினால் உடலிலுண்டாகும் அமுதம்**; nectar believed to be generated in the body by yogic exercises (செ.அக.).

ஓகம் > **Skt**. yōga.

*[உவர் → உவரி → உமரி → அமரி → அமுரி.]*

**அமுரிகம்** *amurigam*, பெ. (n.) **சிறுநீருள் ளிருக்கும் ஒரு பளிங்கியற் பொருள்**; a crystalline substance that exists in urine, urea (சா.அக.).

*[அமுரி → அமுரிகம்.]*

**அமுரிசிங்கி** *amuri-šiṅgi*, பெ. (n.) **ஒரு மருந் தெண்ணெய்**; a kind of medicated oil (சா. அக.).

**அமுரித்திரகம்** *amuri-t-tiragam*, பெ. (n.) **குண்டிக் காயினுள் ளிருக்கும் சிறுநீர்க் குழாய்கள்**; the urinary tubes of the kidneys, urinoferous tubules (சா.அக.).

[அமுரி + திரகம். ஒருகா. துர → துரகம் → திரகம். துரத்தல் = செலுத்தல்.]

**அமுரிதம்** *amuridam*, பெ. (n.) **சிறுநீர் பெய்விக்கும் மருந்து**; medicine exciting discharge of urine, diuretic (சா.அக.).

**ஒ.நோ :** அமுரியோட்டி

[அமுரி → அமுரிதம்.]

**அமுரிநஞ்சு** *amuri-nañju*, பெ. (n.) **சிறுநீர்ப் பொருள்கள் உடம்பின் தாதுவிற் சேர்வதனாலுண்டாகும் நச்சுத்தன்மை**; urosepsis. 2. **சிறுநீரி லுண்டான நச்சுப்பொருள்**; urotoxin (சா.அக.).

**அமுரிமுறி-த்தல்** *amuri-muri-*, 4 செ.கு.வி. (v.i.) **சிறுநீரிலுள்ள களங்கங்களை நீக்குதல்**; to remove the impurities in the urine (சா.அக.).

**அமுரியரத்தம்** *amuri-y-arattam*, பெ. (n.) **சிறுநீர்க் கழிவு அரத்தத்திற் கலப்பதனா லேற்படும் நோய்**; morbid condition of blood due to retention of urinary matter normally eliminated by kidneys, uraemia (சா.அக.).

[அமுரி + அரத்தம்.]

அமுரி பார்க்க; see *amuri*.

**அமுரியான்** *amuriyāṉ*, பெ. (n.) **நவச்சாரம்**; ammonia hydrochlorate (சா.அக.).

[அமுரி → அமுரியான்.]

**அமுரியுப்பு** *amuri-y-uppu*, பெ. (n.) **சிறுநீரினின் றெடுக்கும் உப்பு**; salt extracted from urine, urate. 2. **சுண்ணத்தினின்று (சுண்ணாம்பினின்று) நீரைப் பிரிக்கும் ஓர் உப்பு**; a salt used for absorbing water from lime (சா.அக.).

[அமுரி + உப்பு.]

அமுரி பார்க்க; see *amuri*.

**அமுரியோட்டி** *amuri-y-ōṭṭi*, பெ. (n.) **சிறுநீரை அடிக்கடி வெளிப்படுத்தும் மருந்து**; a medicine that hastens the secretion or excretion of urine, diuretic (சா.அக.).

**ஒ.நோ :** அமுரிதம்

[அமுரி + ஒட்டி. ஓடு → ஓட்டு → ஓட்டி. ஓட்டுதல் = விரைந்து போக்குதல். 'இ' வினைமுதல் ஈறு.]

**குறிப்பு :**

'அமுர்தம்' என்னும் வடிவு வழுநிலையாதலால், அச் சொல்லும் அதனை நிலைச் சொல்லாகக் கொண்ட கூட்டுச்சொற்களும் இவ் வகரமுதலியிற் கொள்ளப்பட்டில. அச் சொல் வழக்குள்ள இடமெல்லாம் அமிர்தம் அல்லது அமுதம் என்று மாற்றிக்கொள்க.

**அமுறை** *amuṟai*, பெ. (n.) **பூசணி மொக்குள்** (இராசவைத்.); pumpkin bud (சங்.அக.).

**அமை-தல்** *amai-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **நெருங்குதல்**; to be near, crowd together, be close. ''வழையமை சாரல்'' (மலைபடு. 181). 2. **பொருந்துதல்**; to be attached, connected, joined. ''பாங்கமை பதலை'' (கந்தபு. தேவ. திருப்பர. 9). 3. **நிறைதல்**; to be full, complete. ''உறுப்பமைந்து'' (குறள், 761). 4. **மாட்சிமையுடையதாதல்**; to be excellent, glorious. 5. **அடங்குதல்**; to be comprised, included. 6. **அடக்கமாயிருத்தல்**; to become still, quiet, to subside, to be mild, gentle or tractable, to become submissive, modest or humble. ''அமையா வென்றி யரத்தநெடு வேலோய்'' (கல்லா. பாயி. வேலன். 15). 7. **ஒடுங்குதல்;** to be reverentially obedient or silent. ''வாய்மொழி யமைந்து நின்றான்'' (ஞானவா. வைராக். 134). 8. **தங்குதல்;** to abide. ''மறந்தவ ணமையா ராயினும்'' (அகநா. 37 : 1). 9. **பதிதல்**; to be impressed, as on the mind. 10. **நட்பாய்ப் பொருந்துதல்**; to become friendly or amiable. ''அமைந்தாங் கொழுகான்'' (குறள், 474). 11. **வசமாதல்**; to be brought into one's possession. ''அமைந்தாலு மின்பந் தேடும்'' (ஞானவா. வைராக். 79). 12. **உடன்படுதல்**; to agree, acquiesce, submit. ''கெழுதகைமை செய்தாங் கமையாக் கடை'' (குறள், 803). 13. (இலக்.) **வழுவாயினும் ஏற்புடையதாதல்**; to be regularized, as irregular expressions. ''பொருள் வேறுபட்டு வழீஇ யமையுமாறு'' (தொல். பொருள். பொருளியல், 2, நச். உரை). 14. **தகுதியாதல்**; to be suitable, appropriate. 15. **அணியமாதல் (ஆயத்தமாதல்)**; to prepare. ''அமைதிர் போருக்கு'' (கந்தபு. மகேந். வச்சிர. 14). 16. **பொந்திகை (திருப்தி) யடைதல்;** to be satisfied, contented. அமைய வுண்மின் (வின்.). 17. **போதியதாதல்**; to suffice. ''கற்பனவு மினி யமையும்'' (திருவாச. 39 : 3). 18. **தீர்மானமாதல்**; to be settled, fixed up. அந்த வீடு எனக்கு அமைந்துவிட்டது. 19. **ஏற்படுதல்**; to come into existence, to become formed, to be produced or created. எனக்கொருவர் துணை

யாயமைந்தார் (உ.வ.). 20. **நிகழ்தல்**; to happen, occur. 21. **முடிவடைதல்**; to come to an end, to be finished. ''அமைந்த தினிநின் றொழில்'' (கலித். 82 : 35). 22. **கூடியதாதல்**; to be possible, practicable. ''காரியம்......... அமையு மாயினும்'' (சேதுபு. அவை. 2). 23. **இல்லையாதல்**; to be non-existent. ''துணையமை வடிவுஞ் சொல்லின்'' (சீவக. 1721).

ம. அமயுக

[உம்முதல் = பொருந்துதல், கூடுதல். உம் = அம். அம்முதல் = பொருந்துதல். அம் → அமை.]

**அமை-த்தல்** *amai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **சேர்த்தல்**; to bring together. ''அனாதி யாதி யமைக்க வேண்டும்'' (சி. சி. பர. லோகா. மறு. 18). 2. **சாத்துதல்**; to offer in worship. ''அரு மறைத் தாபத னமைத்திடு செம்மலர்'' (கல்லா. 15). 3. **நாட்குறித்தல்**; to appoint, fix, as time. ''நாளமைத் தழைக்க'' (கல்லா. 15). 4. **ஏற்படுத்துதல், தோற்றுவித்தல், அமர்த்துதல்**; to appoint, constitute, set up as a committee. அதற்கு ஒரு குழு அமைக்க வேண்டும் (உ.வ.). 5. **அடக்குதல்**; to control, keep in subjection. ''புலனைந்தும் விடயங் களிற் செலாதமைத்து'' (வைராக். சத. 37). 6. **நிறுத்துதல்**; to stop. 'திருவடிகளின் மார்த்தவத்தை நினைத்து இந்தக் கூத்தை அமைக்கைக்காக வணங்க' (திவ். பெரியாழ். 1 . 9 : 8, வியா.). 7. **வசமாக்குதல்**; to get into possession, get over to one's interest. 8. **அமைதிபெறச் செய்தல்**; to cause to be still, patient. ''பாரிடக் கணங்களைப் பாணியா லமைத்து'' (கந்தபு. யுத்த. அக்கினி. 67). 9. **அழுத்துதல், பதித்தல்**; to inlay. ''பொற்குட முகட்டுக் கருமணி யமைத்தென'' (கல்லா. 5). 10. **(இலக்.) வழுவமைத்தல்**; (Gram.) to regularize, as irregular expressions. 'வழுப் படக் கூறினும் வரைவுகாரணத்தாற் கூறலின் அமைக்க வென்றவாறாம்' (தொல். பொருள். பொருளியல், 16, நச். உரை). 11. **பொறுத்தல்**; to bear with, tolerate. ''குற்ற மமைத் தருள்'' (சேதுபு. துத்தம. 10). 12. **சமைத்தல்**; to cook, prepare food. ''ஐந்துபல் வகையிற் கறிகளும் வெவ்வே றுசுவை மாறுமா றமைப்பேன்'' (பாரத. நாடுகர. 14). 13. **நூற்பா (சூத்திரம்) இயற்றி முடித்தல்**; to compose a grammatical aphorism, which though succinct in form is comprehensive in import.

''அவற்றுட்
சூத்திரந் தானே
ஆடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே''

(தொல். பொருள். செய். 162). 14. **படைத்தல்**; to create. ''அரனய னெனவுல கழித் தமைத் துளனே'' (திவ். திருவாய். 1 . 1 : 8). 15. **கட்டுதல்**; to build, construct, as a township. நகரமைப்புத் திட்டம். 16. **அரசியற் சட்டதிட்டம் வகுத்தல்**; to frame a Constitution. அரசியலமைப்பு. 17. **ஊழிடுதல் (விதித்தல்)**; to destine, fore-ordain, as God. கடவுள் அமைத்தபடியே எல்லாம் நடக்கும் (உ.வ.). 18. **ஒழுங்குபடுத்துதல்**; to organize.

ம. அமய்க்குக

[அமைதல் (த.வி.) – அமைத்தல். (பி.வி.).]

**அமைதல்** பார்க்க; see *amai-*.

**அமை**[1] *amai*, பெ. (n.) 1. **அமைவு, பொருத்தம்** (பிங்.); fitness. 2. **அழகு** (பிங்.); beauty. 3. **நாணல்**; reed, kaus. 4. **கெட்டிமூங்கில்**; solid bamboo. ''அமையொடு வேய்கலாம் வெற்ப'' (பழ. 357). 5. **மூங்கில்** (பிங்.); bamboo, *Bambusa arundinacea*. 6. **கூந்தற்கமுகு**; cocoa-palm (சா.அக.) — areca palm, *Areca catechu* (செ.அக.).

ம. அம

[அம்முதல் = பொருந்துதல், கூடுதல். அம் → அமை. அமைதல் = பொருந்துதல், சேர்தல், திரளுதல், கெட்டியாதல். அமைத்தல் = பொருத்துதல், புனைதல்.]

**அமை**[2] *amai*, பெ. (n.) **தினவு** (தைலவ. தைல. 124); itching sensation.

[நமை → அமை. நமை → நமைச்சல் = தினவு.]

**அமைச்சன்** *amaiccaṉ*, பெ. (n.) 1. **மந்திரி** (பிங்.); minister of a state. ''விதுரனே யமைச்சனிக் காவ லற்கென வைத்தான்'' (பாரத. சம்பவ. 21). 2. **மந்திரித் தலைவன்** (பிங்.); prime minister. 3. **மந்திரித் தலைவனுடைய நட்பாளன்** (பிங்.); friend of the prime minister. 4. **வியாழன்** (சூடா.); the planet Jupiter.

ம. அமச்சன்; க. அமாத்ய; தெ. அமாத்யுடு.

'அமைச்சன்' என்பது, இயல்பாக ஒரு மந்திரியைக் குறிக்குமே யன்றி, மந்திரித் தலைவனைக் குறிக்காது. மந்திரித் தலை

வனைக் குறிக்கவேண்டின், முதலமைச்சன் அல்லது தலைமையமைச்சன் என்று குறித்தல் வேண்டும்.

மந்திரித் தலைவனின் நண்பனையும் அமைச்சன் என்பது சற்றும் பொருந்தாது.

பிருகற்பதி (ப்ருகஸ்பதி) என்று பெயர் கொண்டிருந்த ஒரு வடநாட்டு அமைச்சனை அப் பெயருள்ள வியாழக்கோளொடு மயக்கி, அக் கோளையும் அமைச்சன் என்றது தொன்மக் கூற்று. தொன்மம் = புராணம்.

இக்கால இந்திய நிலைக் கேற்றவாறு, நடுவண் அமைச்சர் தலைவனைத் தலைமை மந்திரி (Prime Minister) என்றும், நாட்டு அமைச்சர் தலைவனை முதலமைச்சன் (Chief Minister) என்றும் வேறுபடுத்திக் கூறலாம். மந்திரி (ஆ.பா.) — மந்திரினி (பெ.பா.). அமைச்சன் (ஆ.பா.)—அமைச்சி (பெ.பா.).

'அமைத்தன்' (அமைத்தோன்) என்னும் தென்சொல்லும் 'அமாத்ய' என்னும் வட சொல்லும் வடிவொத்திருப்பதால், இவற்றுட் பின்னதே முன்னதற்கு மூலமோவென ஆராய்ச்சியில்லார்க்கு ஐயுறவெழும்.

***மானியர் வில்லியம்சு*** சமற்கிருத—ஆங்கில அகரமுதலியில், 'அமாத்ய' என்னும் வட சொல்லிற்கு, inmate of the same house, belonging to the same house or family, 'a companion (of a king)', minister என்று பொருள் கூறி, அதற்கு மூலமாகக் காட்டப்பட்டுள்ள 'அமா' என்னும் சொற்கு, at home, in the house, in the house of, with, together என்று பொருள் குறிக்கப்பட்டுள்ளது.

இது பொருளும் பொருட்கரணியமும் (காரணமும்) பற்றி உழையன் என்னுஞ் சொல்லை யொத்தது.

உழை = பக்கம், இடம், ஏழனுருபுகளுள் ஒன்று.

''பின்பா டளைதேம் உழைவழி யுழியுளி
உள்அகம் புறம்இல் இடப்பொரு ளுருபே''
(நன். 302).

உழையர் = பக்கத்தவர் (ஐங்குறு. 12, உரை), அமைச்சர் (சூடா.).

உழையிருந்தான் = அமைச்சன் (குறள், 638).

'அமாத்ய' என்னும் வடசொல்லிற்கு அருகிருப்பவன் என்பதே பொருளாயினும், அச்சொல்லும் தென்சொல் தொடர்பினின்று தீர்ந்ததாகாது. அம்முதல் = நெருங்குதல், அடைதல், பொருந்துதல். அம் → அமை. அமைதல் = நெருங்குதல் (மலைபடு. 181). அமை = நெருக்கம், அண்மை. அமை > **Skt.** amā.

அமைச்சன் பதவியிலும் வினையிலும் அரசனுக்கு அடுத்தவனாதலின், அருகிருத்தல் என்பது மட்டும் அத்துணையும் அவன் சிறப்பை யுணர்த்துவ தாகாது. பக்கத்திலிருக்கும் வேலைக்காரருக்கும் ஏவலருக்கும் உழையோர் என்னும் பெயருண்டு.

''உலக மன்னவ னுழையோ ராங்குளர்''
(மணிமே. 3 : 46).

''இளங்கோவென் றுழையவர் கூற''
(சீவக. 2864).

''உழைய ரோடி யரசுவா வருக வென்ன''
(சூளா. கலியா. 100).

''உரைசெய் தாரர சற்குழை யாளரே''
(யசோதர. 208).

அரசனின் ஆள்வினைக்கும் போர்வினைக்கும் ஏற்ற மந்திரம் (சூழ்வுரை) கூறும் மந்திரி, அரசியல் வினை யனைத்தையும் அமைப்பவனாதலால், அமைச்சன் என்னும் பெயர் அத் தொழில்பற்றியே அமைந்ததாகல் வேண்டும்.

*[அமை → அமைத்தோன் → அமைத்தன்.* ***ஒ.நோ :*** *வேய்ந்தோன் → வேந்தன்.*

*அமைத்தன் → அமைச்சன். த → ச, போலித் திரிபு.* ***ஒ.நோ :*** *அத்தன் → அச்சன், நத்து → நச்சு, காய்த்தல் → காய்ச்சல், மேய்த்தி → மேய்ச்சி.]*

அமைச்சன் — அமைச்சு. **ஒ.நோ :** அரசன் — அரசு. சமற்கிருதந் தோன்றுமுன்பும், வேத ஆரியர் இந்தியாவிற்குட் புகுமுன்னும் மூவேந்த ராட்சி தென்னாட்டில் நிலைத்திருந்தது.

''படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு'' (குறள், 381)

என்னும் திருவள்ளுவர் கூற்று, கி.மு. முதல் நூற்றாண்டினதாயினும், வரலாற்றிற்கு முன்னைச் செய்தி குறித்ததாகும்.

ஆதலால், 'அமாத்ய' என்னும் வடசொல் 'அமைத்தன்' (அமைத்தோன்) என்னும் தென்சொல்லின் திரிபே யென்பது தெரிதரு தேற்றம். அதற்கு அண்மையி லிருப்பவன் என்று பொருள் கூறினும், அதுவும்,

''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்'' (குறள், 380)
என்பதற்கேற்ப, அ தை த் தென்சொற் றிரிபென்றே காட்டுதல் காண்க.

**அமைச்சாகிதம்** *amaiccāgidam*, பெ. (n.) **செங் குறுந்தொட்டி**; a red variety of rose-coloured sticky mallow, *Pavonia zeylanica* (சா.அக.).

**அமைச்சி**[1] *amaicci*, பெ. (n.) **பெண் அமைச்சர்**; a woman minister.

*[அமைச்சன் (ஆ.பா.) – அமைச்சி (பெ.பா.).]*

**அமைச்சி**[2] *amaicci*, பெ. (n.) **விரையூதம் (அண்டவாதம்)**; hydrocele (சா.அக.).

*[ஒருகா. அமை (கட்டி, கெட்டி) → அமைச்சி.]*

**அமைச்சியல்** *amaicciyal*, பெ. (n.) 1. **மந்திரித் தொழில்**; duties of a minister. ''சிறுவ ராந்தனி முதல்வற்கு மமைச்சியல் செய்வார்'' (கந்தபு. மகேந். அவைபுகு. 114). 2. **மந்திரி யிலக்கணம்**; qualifications of a minister (குறள், பொருட்பால் — அமைச்சியல்).

*[அமை → அமைத்தன் → அ மை ச் ச ன் → அமைச்சு + இயல். இ ய ல் = இலக்கணம், இயல்பு, தொழில்.]*

**அமைச்சு**[1] *amaiccu*, பெ. (n.) 1. **அமைச்சன்**; minister. ''அருவினையு மாண்ட தமைச்சு'' (குறள், 631). 2. **அமைச்சனது தன்மை, அதாவது அவன் குணங்களுஞ் செயல்களும்**; nature and functions of a minister (குறள், 64ஆம் அதி. முக.).

*[அமைத்தன் → அமைச்சன் → அமைச்சு.]*

**அமைச்சு**[2] *amaiccu*, பெ. (n.) **பித்தம்**; bile (சா.அக.).

**அமைத்தன்** *amaittaṉ*, பெ. (n.) **மந்திரி, அமைச்சன்**; minister. முதலமைத்தன் மகன் (M.E.R. 1926-7, p. 89).

ம. அமச்சன்

அமைத்தன் > **Skt.** amātya.

*[அமைத்தல் = அ ர சி ய ற் கருமங்களை ஒழுங்குசெய்தல். அமை → அமைத்தோன் → அமைத்தன்.]*

**அமைதல்** *amaidal*, பெ. (n.) **பொழுது** (பொதி. நி.); season, occasion, opportunity.

*[அமை → அமைதல்.]*

**அமைதி** *amaidi*, பெ. (n.) 1. **பொருந்துகை**; being attached, joined. 2. **உறைவிடம்** (சங். அக.); residence, dwelling place, habitat. 3. **பொருத்தம், தகுதி**; fitness, propriety. ''அகலிட நெடிதாளு மமைதியை'' (கம்பரா. அயோத். வனம்புகு. 24). 4. **மிகுதி**; abundance, plenitude. 5. **நிறைவு**; fulness, perfectness, completeness. 6. **சிறப்பு, மாட்சிமை**; grandeur, glory, magnificence, splendour. ''அண்ணலங் கடிநக ரமைதி செப்புவாம்'' (சீவக. 78). 7. **பொந்திகை (திருப்தி)**; satisfaction, contentment. ''அமைதியொடு பேசாத பெருமை பெறு குணசந்த்ர ராமென விருந்த பேரும்'' (தாயு. பரிபூரண. 3). 8. **தன்மை**; nature. ''ஆற்றின தமைதியங் கறியக் கூறினான்'' (சீவக. 1176). 9. **செய்கை, தொழில்**; deed, action. ''அவ்விடை செ ய் தி டு மமைதி கூறுவாம்'' (கந்தபு. தேவ. தெய்வ. 185). 10. **சமையம்**; occasion, opportunity. ''அன்னதோ ரமைதி தன்னில்'' (கந்தபு. யுத்த. மூன்றா. 210). 11. **நிகழ்ச்சி** (சங்.அக.); occurrence, incident, event. 12. **அடக்கம்**; modesty. 13. **அமரிக்கை, சாந்தம்**; calmness, quietude, serenity of spirit. ''ஆய்ந்தறி பெரியோர் சிந்தை யமைதியின்'' (இரகு. தேனு. 17). 14. **அமைந்த மனநிலை**; peace of mind. 15. **தாழ்மை, தாழ்ச்சி**; humility, submissiveness. ''தொழுதகை யமைதியி னமர்ந்தோயு நீயே'' (பரிபா. 4:71). 16. **கீழ்ப்படிவு** (சங்.அக.); obedience. 17. **நன்னிலை**; good condition.

''செல்வம் விளைவுபல் வளஞ்செங் கோன்மை
கொல்குறும் பின்மை கொடும்பிணி யின்மை
யவ்வயி னாறு நன்னாட் டமைதி''

(திவா. 12). 18. **இலக்கண வழுவமைதி**; sanctioned deviation from grammatical rules, as in 'class', gender, number, person, tense, etc., recognised anomaly. இவ் வழுவிற்கு அமைதி இது.

ம. அமதி; தெ. அமதி.

*[அமை → அமைதி.]*

**அமைதிப்பொடி** *amaidi-p-poḍi*, பெ. (n.) **மன வடக்கத்தை யுண்டுபண்ணும் ஒரு மருந்துப் பொடி**; a powder inducing tranquillity or calmness, a sedative (சா.அக.).

*[அமைதி + பொடி.]*

**அமைந்தபணி** *amainda-paṇi*, பெ. (n.) 1. **ஒப்புக் கொண்ட வேலை**; work that was accepted. 2. **இலவயமாகச் செய்வதாக ஒப்புக்கொண்ட வேலை**; a job or work that was undertaken

without wages. 3. **இலவயமாகச் செய்து முடிக்குமாறு கட்டளையிடப்பட்ட ஊர்ப்பொதுப் பணி**; a village communal work that was ordained to be completed without wages. 'இவ்வமஞ்ஞுது பண்ணாதவன் பெருமானடிகள்க்கு ஐம்பதின்கழைஞ்ஞு பொன் தண்டம்' (திருவல்லம் கல்வெட்டு — T.A.S. ii, 194).

[அமை → அமைந்த + பணி.]

**அமைப்பகம்** *amaipp(u)-agam*, பெ. (n.) **பலர் அல்லது பல வகுப்பார் அல்லது பல நாட்டார் கூடி ஏற்படுத்தும் ஒரு பொதுநல அல்லது கூட்டுறவுப் பணி நிலையம் அல்லது அலுவலகம்**; an organization, incorporation or public institution. 'ஒன்றிய நாட்டினங்கள்' ஓர் உலகப் பொது அமைப்பகம்.

[அமை → அமைப்பு + அகம்.]

**அமைப்பு** *amaippu*, பெ. (n.) 1. **கூட்டரவு, புணர்ப்பு, சேர்ப்பு**; uniting, joining. ''அனாதியாதி யமைக்க வேண்டு மமைப்பி னோடு மனாதியே'' (சி. சி. பர. உலகா. மறு. 18). 2. **சொல் அல்லது சொற்றொடர்க் கட்டு**; structure or construction of a word or sentence. சொல்லமைப்பு, சொற்றொடரமைப்பு. 3. **வீடு அல்லது நகர் கட்டுகை**; building a house or township. வீடமைப்புத் துறை, நகரமைப்புத் திட்டம். 4. **கட்டுக்கோப்பு**; build, constitution, style of construction. கட்டுக்கோப்புச் சரியா யில்லாமையாற் கடுங் காற்றிற்குக் கட்டடம் விழுந்துவிட்டது. 5. **கட்டட வடிவுவகை**; plan. அவ் வீட்டின் அமைப்பு ஒரு புதுவகையானது. 6. **அமர்த்துகை, ஏற்படுத்துகை**; appointment, constitution, formation, setting up. வரவேற்புக் குழு வமைப்பு ஒழுங்காய் நடைபெறவில்லை. 7. **இயற்கைக்கு மாறான உறுப்பு அல்லது இயல்பு**; abnormal feature. கைகால்களில் அவ்வாறு விரலிருப்பது ஓர் அமைப்பு. 8. **ஊழ்**; destiny, fate. எல்லாருக்கும் அவரவர் அமைப்பின்படியே நடக்கும். 9. **இலக்கண வழுவமைப்பு**; (Gram.) recognition of anomalies.

**அமைப்போன்** *amaippōn*, பெ. (n.) 1. **செய்பவன், வினைமுதல்**; actor, agent. ''அமைப்போனாத லெனக் கெங்கே'' (ஞானவா. திருவா. 20). 2. **ஏற்படுத்துவோன்**; organizer.

**அமைமோனி** *amai-mōni*, பெ. (n.) **செங்கொடிவேலி**; rosy-flowered leadwort, *Plumbago rosea* (சா.அக.).

**அமைய** *amaiya*, வி.எ. (adv.) 1. **பொருந்த**; fittingly, suitably, appropriately. 2. **போதிய வளவு**; sufficiently. 3. **பொந்திகை பெற (திருப்தி வர)**; to the degree or extent of satisfaction. ''சிறுவனை யமைய நோக்கி'' (கூர்மபு. கண்ணனவ. 27).

**அமையப்படை** *amaiya-p-padai*, பெ. (n.) **குறுங் காலத்தில் திரட்டப்படும் சேனை** (சுக்கிரநீதி, 303); forces raised within a short period.

[அமையம் + படை.]

**அமையம்**[1] *amaiyam*, பெ. (n.) **இலாமிச்சை** (மலை.); cuscuss grass (செ.அக.)— **விலாமிச்சு**; a fragrant grass (சா.அக.).

**அமையம்**[2] *amaiyam*, பெ. (n.) **சமையம் (சந்தர்ப்பம்)**; occasion, context, opportunity. ''ஆனதோ ரமையந் தன்னில்'' (கந்தபு. உற்பத். திருக்கல். 72).

[அமைதல் = பொருந்துதல், நேர்தல். அமை → அமையம்.]

**அமையவன்** *amaiyavan*, பெ. (n.) **அருகன்** (திவா.); Arhat.

[அமைதல் = அடங்குதல், புலனடங்குதல். அமை + அவன் (ஆ.பா. ஈறு) – அமையவன் = ஐம்புலனு மடங்கிய அருகன்.]

**அமையாமை** *amaiyāmai*, பெ. (n.) 1. **கிடைத்தற் கருமை**; difficulty of attainment. ''அமையா வின்பவிண் ணாட்டில்'' (ஞானவா. சுக்கிர. 9). 2. **கீழ்ப்படியாமை**; disobedience. 3. **பொந்திகை யடையாமை (திருப்திப்படாமை)**; dissatisfaction. ''பெரும்பாழ் செய்து மமையான்'' (பட்டினப். 270).

**அமைலம்** *amailam*, பெ. (n.) **மாப்பசை**; a vegetable substance universally diffused in plants and generally extracted from wheat flour, rice, etc., starch (சா.அக.).

**அமைவடக்கம்** *amaiv(u)-adakkam*, பெ. (n.) 1. **அடங்கிய வொழுக்கம்** (வின்.); modesty, respectful behaviour. 2. **மனம் ஒருவழிப் பட் டடங்கிநிற்றல்** (சங்.அக.); restraint of the senses and concentration of mind. 3. **மறைவு** (சங்.அக.); disappearance. 4. **சாவு**; demise.

[அமைவு + அடக்கம். அமை → அமைவு. அடங்கு → அடக்கு → அடக்கம்.]

**அமைவர** *amai-vara*, வி.எ. (adv.) **மனத்துட் பதிய**; to be clearly understood and grasped. ''ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்'' (நன். 41).

[அமை + வர. அமை → அமைவு = பதிவு.]

**அமைவன்** *amaivaṉ*, பெ. (n.) 1. **அடக்க முள்ளோன்**; one who has self-control. 2. **முனிவன்**; sage, as a serene person. ''பிருகு வென்னு மமைவன்'' (விநாயகபு. பதி. 2). 3. **அருகன்** (நாநார்த்த.); Arhat. 4. **கடவுள்**; the Supreme Being. ''அமைவன தடி பணிந்து'' (இலக். வி. 159).

**அமைவு** *amaivu*, பெ. (n.) 1. **சேர்வு, கூட்டு**; joining, uniting. 2. **ஒப்புமை**; similarity. 3. **பொருந்துகை, ஏற்றதாதல்**; fitting, being suitable or acceptable, conformity. 'அமை வின்மை அம்மரபிற் கேலாமை' (குறள், 956, பரிமே. உரை). 4. **நட்புப் பொருத்தம்**; friendly relation. ''அஞ்சு மறியா னமைவிலன்'' (குறள், 863). 5. **இடங்கொண்டிருப்ப-வன்-வள்-து**; resident, presiding deity. ''திருக்கா ளத்தியுள் ளமைவே'' (தேவா. 7 . 26 : 2). 6. **அடக்கம்** (சிந்தா.நி.); modesty, respectable conduct. 7. **புலனடக்கம்** (சங்.அக.); control of the senses. ''அமைவு பிறக்கு மமரர்கள்'' (விருத்தா. திருத்த. 14). 8. **பொறுமை**; patience. ''ஞாலத் தார்கொலோ வமைவின் மிக்கோர்'' (பாரத. நிரை. 132). 9. **மனவமைதி**; peace of mind. ''நிகராகியு மமைவுற்றோ னிமல முத்தனாம்'' (ஞானவா. வேதாள. 3). 10. **ஆறுதல், ஆற்றியிருத்தல்**; consolation, bearing the pangs of separation. ''அவர்க் காணா தமைவில கண்'' (குறள், 1178). 11. **நிறைவு**; fulness, completeness, perfection. ''ஆங்கமை வெய்தியக் கண்ணும்'' (குறள், 740). 12. **பொந்திகை (திருப்தி)**; satisfaction.

[அமை + வு (தொ.பெ. ஈறு). அவு → வு.]

**அயக்கம்** *ayakkam*, பெ. (n.) **நோயின்மை**; free from disease, healthiness (சா.அக.).

[ஒருகா. அயங்கு → அயக்கு → அயக்கம். அயங்குதல் = விளங்குதல்.]

**அயக்கு-தல்** *ayakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அசைத்தல்**; to shake, cause to tremble. ''குன்றுக ளயக்கலின்'' (கம்பரா. யுத்த. சேதுப. 10).

[அலை → அசை → அசக்கு → அயக்கு.]

**அயகத்திணை** *ayaga-t-tiṉai*, பெ. (n.) **செந்திணை**; red millet (சா.அக.).

**அயகம்** *ayagam*, பெ. (n.) 1. **சிறுகுறிஞ்சா**; species of *Gymnema* (செ.அக.) — the small Indian ipecacuanha, *Gymnemia silvestre* alias *G. parviflorum* (சா.அக.). 2. **வசம்பு** (மலை.); sweet-flag, *Acorus calamus* (சா.அக.).

**அயங்கு-தல்** *ayaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) **விளங்குதல்**; to shine, appear bright. ''பல்ல யங்குதலை யேந்தினார்'' (தேவா. 2 . 211 : 4).

[வயங்குதல் = விளங்குதல். வயங்கு → அயங்கு.]

**அயதி** *ayadi*, பெ. (n.) **திருநாமப்பாலைக்கொடி** (மூ.அ.); oval-leaved China root.

**அயம்**[1] *ayam*, பெ. (n.) 1. **பள்ளம்**; depression, ditch, valley. ''அயமிழி யருவி'' (கலித். 46:9). 2. **குளம்** (பிங்.); tank, pond. ''அயத்துவளர் பைஞ்சாய்'' (அகநா. 62:1). 3. **சுனை** (அகநா. 38, உரை); spring on a mountain. 4. **நீர்** (பிங்.); water. 5. **மழைநீர்** (பச்.மூ.); rain water. 6. **சேறு** (உரி.நி.); mud, mire.

[பள் → பய் → பயம் → பயம்பு = பள்ளம். பயம் → அயம். இனி, பள்ளம் → பய்யம் → பயம் என்றுமாம்.]

**அயம்**[2] *ayam*, பெ. (n.) **சிறுபூலா**; a shrub.

**அயம்**[3] *ayam*, பெ. (n.) **ஐயம் (சந்தேகம்)**; doubt. ''மன்னவன்...அயம தெய்தி'' (திருவாலவா. 33 : 15).

[ஐயம் → அயம்.]

**அயமவாதி** *ayamavādi*, பெ. (n.) **அயவாசி** பார்க்க; see *ayavāši*.

**அயமி** *ayami*, பெ. (n.) **வெண்கடுகு** (மலை.); white mustard.

**அயர்**[1]**-தல்** *ayar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **விளை யாடுதல்**; to play, sport. ''மடக்குறு மாக் களோ டோரை யயரும்'' (கலித். 82 : 9). 2. **சோர்தல், தளர்தல், இளைத்தல்**; to become weary, to be fatigued, to be exhausted. ''அடி யேனு மயலார் போல வயர்வேனோ'' (திரு வாச. 32 : 9). 3. **உணர்வழிதல்**; to lose consciousness, as in fainting, sleep or drunkenness. ''கள்ளுண் டயர்தல்'' (கூர்மபு. திரிபுர. 28). —, 2 செ.குன்றாவி. (v.t.) 1. **மெய்வருந்திச் செய்தல்**; to labour hard, to do dili-

gently. 2. **செய்தல்** (திவா.); to do, perform. 3. **தேர் செலுத்துதல்**; to drive, as a chariot. ''திண்டேட ரயர்மதி'' (கலித். 30 : 19). 4. **வழி படுதல்**; to worship. ''பலிசெய் தயரா நிற்கும்'' (திருக்கோ. 348). 5. **வேலன் வெறியாடுதல்**; to dance under possession by *Muruga*. ''வெறியயர் வியன்களம் பொறப்ப'' (அகநா. 98:19). 6. **விழாக் கொண்டாடுதல்**; to celebrate a festival. 7. **விருந்தோம்பல்**; to entertain guests. 8. **விரும்புதல்**; to desire. ''செல வயர்தும்'' (பு.வெ. ஒழிபு, 1). 9. **மறத்தல்**; to forget. ''ஆயா தறிவயர்ந்து'' (பு.வெ. 10, காஞ்சி. 2).

ம. அயர்க்குக; க., தெ. அசுரு.

*[ஐ = மென்மை, நுண்மை. ஐ → அய் → அயர். அய் → ஆய். ஆய்தல் = நுணுகுதல், வருந்து தல், அசைதல், இளைத்தல்.]*

**அயர்²-த்தல்** *ayar-*, 4 செ.குன்றாவி. (v.t.) **மறத்தல்**; to forget. ''அங்கவ டன் றிற மயர்ப்பா யென்றே'' (மணிமே. 19 : 9).

**அயர்க்கு-தல்** *ayarkku-*, 4 செ.குன்றாவி. (v.t.) **மறத்தல்**; to forget. ''தன்னை யயர்க்குதல்'' (உபதேசகா. சிவபுண்ணி. 28).

**அயர்ச்சி¹** *ayarcci*, பெ. (n.) 1. **செய்கை**; deed, action, performance. ''சாறயர்ச்சி விளைப்பன'' (சீகாழித். பூந்தரா. 4). 2. **களைப்பு, சோர்வு**; fatigue, weariness. 3. **மறதி**; forgetfulness. ''அயர்ச்சி மனத்தி லறுத்து'' (சைவச. பொது. 372). 4. **மனக் கவற்சி**; anxiety. ''அயர்விலர்''(புறநா. 182:6). 5. **வருத்தம்**; distress. ''மறைந்து போயினா ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தினிறைந்த தோர் பெருங் கவற்சியை'' (திருவிளை. இரசவா. 27). 6. **வலுக்குறைவு**; weakness. 7. **உணர்வழிவு**; unconsciousness. 8. **சோம்பு** (சங்.அக.); slackness, lethargy. 9. **வெறுப்பு** (சங்.அக.); dislike, disgust, aversion.

ம. அயர்ச்ச

*[அயர் → அயர்ச்சி.]*

**அயர்ச்சி²** *ayarcci*, பெ. (n.) **அழலை**; heat (சா.அக.).

ம. அயல்

*[ஒருகா. அழற்சி → அயர்ச்சி.]*

**அயர்த்ததுமறந்தது** *ayarttadu-maṟandadu*, பெ. (n.) **மறந்துபோன பொருள் அல்லது செய்தி**; forgotten thing or matter. அயர்த்தது மறந்தது ஏதேனு மிருந்தால் இப்பொழுதே பார்த்துக்கொள்ளுங்கள் (உ.வ.).

*[மரபிணை மொழி (idiomatic words-in-pairs).]*

**அயர்தி** *ayardi*, பெ. (n.) 1. **இளைப்பு**; feebleness, languor. 2. **களைப்பு, சோர்வு, தளர்வு**; weariness, fatigue. 3. **உணர்வழிவு**; fainting, loss of consciousness. 4. **மறதி**; forgetfulness. 5. **சோம்பு** (சங்.அக.); slackness.

ம. அயர்தி; க. அயலு; தெ. அசுரு.

*[அயர் + தி (தொ. பெ. ஈறு).]*

**அயர்திமறதி** *ayardi-maradi*, பெ. (n.) **மறப்புத் தன்மை**; forgetfulness. அயர்திமறதியா யிராதே (உ.வ.).

மரபிணைமொழி (idiomatic words - in-pairs). அயர்திமறதி என்பது, எதுகை நோக்கித் தவறாக அரதிமறதியென்று உலக வழக்கில் வழங்கிவருகின்றது.

**அயர்ந்ததூக்கம்** *ayarnda-tūkkam*, பெ. (n.) **உழைப்பினாலுங் களைப்பினாலும் ஏற்பட்ட மெய்ம்மறந்த தூக்கம்**; deep sleep caused by hard labour and exhaustion.

**அயர்ப்பு** *ayarppu*, பெ. (n.) **மறப்பு**; forgetfulness. ''அயர்ப்பிலா தானே யோலம்'' (பெரியபு. இயற். 29).

ம. அயர்ப்பு

*[அயர் + பு (தொ.பெ. ஈறு).]*

**அயர்வு** *ayarvu*, பெ. (n.) 1. **சோர்வு** (நாநார்த்த.), **தளர்வு**; fatigue, weariness. ''களைந்து களைந்தயர் வுறுவார்'' (சேதுபு. நாட்டு. 62). 2. **சோம்பு**; slackness, lethargy. ''அயர்வில் காலன்'' (ஞானவா. ஞானவிண். 20). 3. **மனக் கவற்சி**; anxiety. ''உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்'' (புறநா. 182 : 6). 4. **வருத்தம்** (நாமதீப.); suffering. ''அயர் வன்றியில்'' (ஞானவா. புசுண். 84). 5. **அவலம்**; distress. 6. **மயக்கம்** (நாநார்த்த.); dizziness, fainting, swooning. 7. **மத்தம்**; suspension of sensibility. 8. **வெறுப்பு**; disgust, aversion.

ம. அயவு

*[அயர் + வு (தொ. பெ. ஈறு, ப. பெ. ஈறு). அவு → வு.]*

**அயர்வுயிர்-த்தல்** *ayarv(u)-uyir-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **இளைப்பாறுதல்**; to rest. "திருவயர் வுயிர்க்கு மார்பன்" (சூளா. துற. 23). 2. **சிந்துதல்**; to be spilled. "கள்ளயர் வுயிர்க்குஞ் செழுங்கமல மென்பொகுட்டு வள்ளல்" (கூர்மபு. அட்ட. 8). 3. **சோர்வு நீங்குதல்**; to be relieved of fatigue, to recoup one's energy. "குருகயர் வுயிர்க்குஞ் சோலை" (சூளா. துற. 23). 4. *மயக்கந் தீர்தல்*; to recover from stupor. 5. *வருத்தந் தீர்தல்;* to be relieved of suffering.

*[அயர்வு + உயிர். உயிர்த்தல் = வெளிப் படுத்துதல், தளர்வு அல்லது மயக்கந் தீர்தல்.]*

**அயரப்போடு-தல்** *ayara-p-pōḍu-*, 19 செ. குன்றாவி. (v.t.) **அசரப்போடு-தல்** பார்க்க; see *aŝara-p-pōḍu-*.

*[அயர + போடு.]*

**அயரவிடு-தல்** *ayara-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) **அயரப்போடு-தல்** பார்க்க; see *ayara-p-pōḍu-*.

**அயல்-தல்** *ayal-*, 11 செ.கு.வி. (v.i.) **காரம் மிகுதல், உறைத்தல்**; to be acrid, pungent. குழம்பு அயலுகிறது (உ.வ.).

*[அழல் → அயல்.]*

**அயல்**[1] *ayal*, பெ. (n.) 1. **அருகிடம்**; neighbourhood, adjacent place. "தனக்கயலின் வந்த பரிசனத்தை" (கந்தபு. உற்பத். காம தக. 65). 2. **இடம்** (பிங்.); place. 3. **வெளியிடம், புறம்பு**; outside. "பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்" (தாயு. சுக. 3). 4. **வேற்றினமானது, வெளிநாட்டது**; that which is foreign or alien. "ஆருற வெனக்கிங் காரய லுள்ளார்" (திருவாச. 22 : 8). 5. **வேறு**; that which is different. "விரி யுருவா யயல்போலாய்" (ஞானவா. விரதசு. 3). —, இடை. (part.) **இடப்பொருளுருபு**; a locative ending. "தலைக்குவட் டயன்மதி தவழு மாளிகை" (கம்பரா. அயோத். நகர்நீங். 193).

ம. அயல்

*[அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் → அய் → அயல்.]*

**அயல்**[2] *ayal*, பெ. (n.) **காரம், உறைப்பு**; pungency. அயல் கொளுத்துகிறது.

*[அழல் (நெருப்பு) → அயல். உறைப்புப் பொருள், நாவில் அல்லது உடம்பிற் படும்போது நெருப்பைப்போற் காந்துதலால், அழல் எனப் பட்டது.]*

**அயலகத்தான்** *ayal-agattān*, பெ. (n.) 1. **அடுத்த வீட்டுக்காரன்**; next door neighbour. 2. **பக்கத்திலுள்ளவன்**; neighbour. 3. **வெளியூரான்**; stranger.

ம. அயலூதி, அயல்காரன்.

*[அயல் + அகம் (வீடு, இடம்) + அத்து (சாரியை) + ஆன் (ஆ.பா. ஈறு).]*

**அயலகம்** *ayal-agam*, பெ. (n.) 1. **அடுத்த வீடு**; next house. 2. **பக்கம்**; neighbourhood.

*[அயல் + அகம்.]*

**அயலத்தான்** *ayalattān*, பெ. (n.) **அயலகத்தான்** பார்க்க; see *ayal-agattān*.

**அயலவன்** *ayalavan*, பெ. (n.) 1. **பக்கத்தான்**; neighbour. 2. **வேற்றூரான், உறவல்லாதவன்**; stranger. 3. **நொதுமலான்** (சூடா.); a neutral.

ம. அயலான்

*[அயல் + அவன் (ஆ.பா. ஈறு).]*

**அயலன்** *ayalan*, பெ. (n.) **அயலவன்** பார்க்க; see *ayalavan*.

**அயலார்** *ayalār*, பெ. (n.) 1. **பக்கத்தார்**; neighbours. "அன்புடையன் கொல்லென் றயலா ரெடுத்துரைப்ப" (கந்தபு. யுத்த. இரணியன்பு. 8). 2. **ஏவலாளர்**; servants. "தன் பன்னியொடு மயலார் சுற்றந் தம ரோடும்" (திருவிளை. உலவாக்கோ. 18). 3. **உறவல்லாத பிறர், வேற்றிடத்தார்**; strangers.

*[அயல் + ஆர் (ப.பா. ஈறு).]*

**அயலார்காட்சி** *ayalār-kāṭci*, பெ. (n.) **கண்டோர் சான்று** (Cōla. II. ii, 258); testimony of eye-witnesses. "அயலார் தங்கள் காட்சியில்" (பெரியபு. தடுத்தாட். 56).

**அயலாள்** *ayalāḷ*, பெ. (n.) **உறவல்லாத வெளியூரா-ன்-ள்**; stranger.

*[அயல் + ஆள்.]*

**அயலான்** *ayalān*, பெ. (n.) 1. **பக்கத்தான்**; neighbour. 2. **உறவல்லாத வெளியூரான்**; stranger. 3. **பகைவன்**; enemy. "அயலா ருரி லஞ்சிலே யொன்றை வைத்தான்" (கம்பரா. பால. மிகைப். 10).

ம. அயலான், அயவன்.

*[அயல் + ஆன் (ஆ.பா. ஈறு).]*

**அயலி** *ayali*, பெ. (n.) 1. **வெண்கடுகு** (மலை.); white mustard, *Brassica alba*. 2. **சிற்றரத்தை**; lesser galangal, *Alpinia galanga* (minor) (சா.அக.).

**அயலிலாட்டி** *ayal-il-āṭṭi*, பெ. (n.) **அடுத்த வீட்டுப் பெண்டு**; woman of the next house. ''அமுத முண்கநம் மயலி லாட்டி'' (நற். 65).

*[அயல் + இல் (வீடு) + ஆட்டி (பெண்டு). ஆள் (பெ.பா.) – ஆளன் (ஆ.பா.) – ஆட்டி (பெ.பா.). ஆளன் = ஆடவன். ஆட்டி = பெண்டு. ஆள் + தி (பெ.பா. ஈறு) – ஆட்டி. அத்தி (தாய்) → தி (பெ.பா. ஈறு). ஒ.நோ: மறத்தி, குறத்தி, வண்ணாத்தி.]*

**அயலுரை** *ayal-urai*, பெ. (n.) 1. **அயலா ரொருப்பட்ட வுரை**; resolute talk of neighbours. 2. **இயைபில்லாத பேச்சு**; irrelevant talk.

''கயல்புரை கண்ணியை
அயலுரை யுரைத்தது''
(திருக்கோ. 137, கொளு).

'அயலுரை - தலைமகட்கியாதும் இயை
பில்லாத வுரை;
அயலா ரொருப்பட்ட வுரை யென்றுமாம்'
(ஷை உரை).

*[அயல் (அயலார்) + உரை (பெண்கோடற் பேச்சு).]*

**அயலை** *ayalai*, பெ. (n.) **அயிலை** பார்க்க; see *ayilai*.

**அயலோர்** *ayalōr*, பெ. (n.) 1. **பக்கத்தவர்**; neighbours. 2. **மற்றையோர்**; others. ''ஆரியர் பேணுவ தாகி யயலோர்க் கெல்லா மரிதான'' (ஞானவா. முமுட்சு. 17).

*[அயலார் → அயலோர்.]*

**அயவகண்டம்** *ayavakaṇḍam*, பெ. (n.) **முசு முசுக்கை**; bristly bryonia, *Bryonia scabra* (சா.அக.).

**அயவந்தி** *ayavandi*, பெ. (n.) **ஒரு சிவநகர்**; a Šaiva shrine. ''அயவந்தி யமர்ந்தருளு மங்கணர்தம் கோயில் மருங்கணைந்து'' (பெரியபு. திருஞான. 461).

**அயவம்** *ayavam*, பெ. (n.) **ஒருவகைக் குடற்புழு**; one of the seven species of worms in the intestines (சா.அக.).

**அயவல்லி** *ayavalli*, பெ. (n.) **கோவை**; Indian caper, *Bryonia grandis* (சா.அக.).

**அயவாசி** *ayavāši*, பெ. (n.) **வசம்பு** (பச்.மூ.); sweet flag.

**மறுவ.** அயவாரி, அயவாரிதி.

**அயவாரி** *ayavāri*, பெ. (n.) 1. **அயவாசி** பார்க்க; see *ayavāši*. 2. **செந்நாகதாளி**; crimson-flowered prickly pear, *Opuntia monocantha* (சா.அக.).

**அயவாரிதி** *ayavāridi*, பெ. (n.) **அயவாசி** பார்க்க; see *ayavāši*.

**அயவாருகம்** *ayavārugam*, பெ. (n.) **செந் நாயுருவி**; a red species of the plant, *Achyranthes aspera* (சா.அக.).

**அயவி** *ayavi*, பெ. (n.) **சிற்றரத்தை** (மலை.); lesser galangal, *Alpinia galangal* (minor) (சா.அக.).

**மறுவ.** அயலி, அயவிகம்.

**அயவிகம்** *ayavigam*, பெ. (n.) **அயவி** பார்க்க; see *ayavi*.

**அயவு** *ayavu*, பெ. (n.) **அகலம்** (சிந்தா.நி.); breadth, width.

**அயற்படு-தல்** *ayaṟ-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **நீங்கிப்போதல்**; to leave, depart, disappear. ''இயற்படு மானமு மிகலு நாணமு மயற்பட'' (கந்தபு. மகேந். சயந்தன்பு. 5).

*[அயல் (பக்கம், அப்பால்) + படுதல் (சேர்தல், செல்லுதல்).]*

**அயறு** *ayaṟu*, பெ. (n.) **புண்வழலை, புண்ணின் பொருக்கு**; scab of a wound, excrescence resulting from a sore. ''அயறுசோரு மிருஞ் சென்னிய'' (புறநா. 22 : 7).

**ம.** அயறு

*[ஒருகா. அளறு → அயறு. இனி, அசறு → அயறு என்றுமாம்.]*

அசறு³ பார்க்க; see *aśaṟu*³.

**அயன்முப்பு** *ayaṉ-muppu*, பெ. (n.) **தலைப் பிண்டம்** (குழூஉக்குறி); the first-born foetus (சா.அக.).

**அயன்மை** *ayaṉmai*, பெ. (n.) **உறவன்மை**; absence of kinship, non-relationship. ''எமக் கிவன் யாரென்று அயன்மை கூறுதலாம்'' (தொல். பொருள். கற். 6, நச். உரை).

*[அயல் + மை (ப.பெ. ஈறு).]*

**அயா** *ayā*, பெ. (n.) 1. **தளர்ச்சி** (திவா.); languor, faintness. 2. **வருத்தம்**; distress.

''மானயா நோக்கியர் மருங்குல்'' (சீவக. 1822).

*[அயர் → அயா. அயர்தல் = தளர்தல், வருந்துதல்.]*

**அயாகம்** *ayāgam*, பெ. (n.) **மத்தை (ஊமத்தை)**; datura, *Datura fastuosa*.

**மறுவ.** அயிகம், அயிகா, அயிரகம்.

**அயாஞ்சி** *ayāñji*, பெ. (n.) **நிலப்பனை, ஒரு மருந்துச்செடி**; a medicinal herb, *Curculigo orchioides* (சா.அக.).

**மறுவ.** அயிஞ்சி

**அயாந்திரமாகம்** *ayāndiramāgam*, பெ. (n.) 1. **கருங்காணம்** (பச்.மூ.); a species of horse-gram (செ.அக.). 2. **கருங்காக்கணம்**; crow creeper, *Clitoria ternatea* (சா.அக.).

**ஒ.நோ :** அயித்திரம்

**அயாரியம்** *ayāriyam*, பெ. (n.) **நெட்டிச்செடி**; cork-plant (சா.அக.).

**அயாலி** *ayāli*, பெ. (n.) **கோரை** (பச்.மூ.); sedge (செ.அக.) — a species of grass, *Cyperus* (சா.அக.).

**அயாவு-தல்** *ayāvu-*, 5 செ.கு.வி. (v.i.) **வருந்துதல்**; to be distressed. ''மானயா நோக்கியர்'' (சீவக. 1822).

**ம.** அயவு

*[அயர் (தளர்) → அயா (வருத்தம்) → அயாவு.]*

**அயாவுயிர்-த்தல்** *ayā-v-uyir-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **நெட்டுயிர்த்தல், பெருமூச்செறிதல்**; to take a deep breath, to sigh. ''அழுதன ளேங்கி யயாவுயிர்த் தெழுதலும்'' (மணிமே. 21 : 26). 2. **இளைப்பாறுதல்**; to take rest. 3. **மயக்கந் தெளிதல்**; to recover from swoon. 4. **வருத்தந் தீர்தல்**; to be relieved of distress or pain. 5. **கொப்புளித்தல்**; to bubble up, burst forth. ''நறவயா வுயிர்க்கு மாலை'' (சீவக. 1125). —, 4 செ.குன்றாவி. (v.t.) **இளைப்பாற்றுதல்**; to give rest to, to refresh. ''எம்மைச் சுமந்தயா வுயிர்த்த வாண்மை'' (சீவக. 2947).

*[அயர் → அயா (தளர்ச்சி, வருத்தம்)+உயிர். உயிர்த்தல் = மூச்சுவிட்டுத் தீர்தல்.]*

**அயிகம்** *ayigam*, பெ. (n.) 1. **அயாகம்** பார்க்க; see *ayāgam*. 2. **இலவு**; silk-cotton tree (சா.அக.).

**அயிகா** *ayigā*, பெ. (n.) **அயிகம்** பார்க்க; see *ayigam*.

**அயிங்கவலை** *ayiṅgavalai*, பெ. (n.) **குடைமீன்**; bluish-green sardine fish, *Clupea fimbriata* (சா.அக.).

**அயிஞ்சி** *ayiñji*, பெ. (n.) **அயாஞ்சி** பார்க்க; see *ayāñji*.

**அயித்திரம்** *ayittiram*, பெ. (n.) 1. **கருங்காணம்**; black horse-gram (செ.அக.). 2. **கருங்காக்கணம்**; crow creeper, *Clitoria ternatea* (சா.அக.).

**அயிநார்** *ayinār*, பெ. (n.) **ஐநார்** பார்க்க; see *ainār*.

**அயிப்பை** *ayippai*, பெ. (n.) **ஒரு செடி**; a shrub.

**அயிர்-த்தல்** *ayir-*, 4 செ.கு.வி. (v.i.) **ஐயுறுதல் (சந்தேகித்தல்)**; to suspect. ''அருங்கடி வாயி லயிராது புகுமின்'' (மலைபடு. 491). —, 4 செ.குன்றாவி. (v.t.) **மறைத்தல்**; to hide, conceal. ''உயிரனை யாயயி ராம லுரை யெனக்கே'' (தஞ்சைவா. 303) — (சங்.அக.).

*[ஐ (ஐயம்) → அய் → அயிர். ஐயுறுதல் = சொல்லத் தகாதென்று மறைத்தல் (சொக்கப்ப நாவலர் உரை).]*

**அயிர்**[1] *ayir*, பெ. (n.) **ஐயவுணர்வு**; doubt, suspicion. ''அயிரிற் றீர்ந்தபே ரறிஞரும்'' (திருவிளை. திருநகர. 65).

*[ஐ (ஐயம்) → அய் → அயிர்.]*

**அயிர்**[2] *ayir*, பெ. (n.) 1. **நுண்மை** (திவா.); fineness, subtlety. 2. **நுண்மணல்**; fine sand. ''அயிர செறியிலைக் காயா அஞ்சனம் மலர'' (முல்லைப். 92-3). **ம.** அயிர். 3. **சருக்கரை**; sugar. ''அயிருந் தேனும்'' (கம்பரா. பால. நாட்டு. 55). 4. **கண்டசருக்கரை** (திவா.); candied sugar. 5. **புகைக்கும் ஒரு வெள்ளை நறுமணப்பொருள்**; name of an imported white fragrant substance for burning. ''குட திசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு'' (சிலப். 4 : 35). 6. **சிறுநீர்** (இராசவைத்.); urine. 7. **வெள்வேலம் பட்டை**; the bark of white acacia, *Acacia leucophloea* (சா.அக.). 8. **யானைக்காஞ்சொறி**; a species of nettle, *Tragia involucrata* (சா.அக.).

*[ஐ → அய் → அயிர். ஐ = மென்மை, நுண்மை.]*


அம்மான்பச்சரிசி


அம்மினியுளுவை


அமிர்தவல்லி


அயிங்கவலை


அயிலைக்கீரை


அயிலாலி

**அயிர்க்கடு** *ayir-k-kaḍu*, பெ. (n.) **யானைத் துறட்டி** (சிந்தா. நி. 220); goad for elephants.

[அயில் = கூர்மை. கோடு = வளைவு, கொம்பு. அயில் + கோடு – அயிற்கோடு → அயிர்க்கடு.]

அயிற்கடு பார்க்க; see *ayiṟ-kaḍu*.

**அயிர்த்துரைத்தல்** *ayirtt(u)-uraittal*, பெ. (n.) (அகப்.) **தலைமகளின் கண்சிவப்பு முதலிய வற்றைத் தோழி கண்டு ஐயங்கொள்வதைக் கூறும் அகப்பொருட்டுறை;** theme describing the maid's doubts on seeing the reddened eyes, etc., of the heroine (களவியற். 50).

[அயிர்த்து + உரைத்தல்.]

**அயிர்ப்பு** *ayirppu*, பெ. (n.) 1. ஐயுறவு; doubt, suspicion. ''அண்ணலங் குமர ராமென் றயிர்ப்புறு மரசர் யாரும்'' (பாரத. திரௌ. 63). 2. (இசை) **குறிஞ்சி யாழ்த்திறவகை** (பிங்.); (Mus.) a secondary melody-type of the *Kuṟiñji* class.

[அயிர் → அயிர்ப்பு.]

**அயிரகம்** *ayiragam*, பெ. (n.) 1. **மத்தங்காய்; அயிகம்** பார்க்க; see *ayigam*. 2. **கருமத்தை (காருமத்தை)**; black variety of datura, *Stramonium fastuosa* (சா.அக.), (சித்.அக.)—purple stramony (செ.அக.).

**அயிரம்** *ayiram*, பெ. (n.) **கண்டசருக்கரை** (மூ.அ.); candied sugar.

[அயிர் = நுண்மை, நுண்மணல். அயிர் → அயிரம்.]

**அயிரி**[1] *ayiri*, பெ. (n.) **மீன்முள்ளை எடுக்க உதவுங் கத்தி;** a knife, for picking out the bones of fish (W.).

ம. அயிரி

[அயில் = கூர்மை. அயில் → அயிர் → அயிரி.]

**அயிரி**[2] *ayiri*, பெ. (n.) **நெட்டிப்புல்;** long grass (செ.அக.)—pith-grass, *Typha angustifolia* (சா.அக.).

**அயிரியம்** *ayiriyam*, பெ. (n.) **நெட்டி** (மூ.அ.); sola pith, *Aeschynomene aspera*.

**அயிரை** *ayirai*, பெ. (n). 1. **நுண்மணல்;** fine sand. ''அயிரை வார்கரைக் குடகடல்'' (சூளா. கல்யா. 53). 2. **ஒரு சிறு ஆற்றுமீன் அல்லது குளத்துமீன்;** a small river-fish or tank-fish. ''குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி'' (புறநா. 67 : 6) — **நொய்ம்மீன்** small edible freshwater fish, loach, sandy coloured *Cobitio thermalis*. ''சிறுவெண் காக்கை......அயிரை யாரும்'' (ஐங்குறு. 164) (செ.அக.). ம. அயிர. 3. **சேரநாட்டிலுள்ள ஓர் ஆறு;** name of a river in the *Cēra* country. ''உருகெழு மரபினயிரை மண்ணி'' (சிலப். 28: 145). 4. **சேரநாட்டிலுள்ள ஒரு மலை;** name of a hill in the *Cēra* country, 9 miles west of *Paḻani*. ''நேருயர் நெடுவரை யயிரைப் பொருந'' (பதிற்றுப். 21 : 29).

[ஐ → அய் → அயிர் = நுண்மை. அயிர் → அயிரை = நுண்மணற் சிறுமீன், நுண்மண லாறு.]

**அயில்-தல்** *ayil-*, 7 செ.குன்றாவி. (v.t.) 1. **உண்ணுதல்;** to eat. ''அடிசி லயில்வோர் தம்மை'' (திருவிளை. உக். வேல்வளை. 60). 2. பருகுதல், குடித்தல்; to drink. ''பாலயி லுற்றிடு பொழுதத் தினில்'' (கந்தபு. உற்பத். சரவண. 33).

[ஐ = நுண்மை, மென்மை. ஐ → அய் → அயில். அயிலுதல் = குழந்தை சிறிது சிறிதாக மெல்லுணவுண்ணுதல். அயில் → அயிலி → அயினி = குழந்தை முதன்முதலாக உண்ணுஞ் சோறு. இனி, அள்ளுதல் = நுகர்தல். அளைதல் = நுகர்தல், அள் → அய் → அயில் என்றுமாம்.]

**அயில்**[1] *ayil*, பெ. (n.) 1. **கூர்மை;** sharpness. ''ஆண்மகன் கையி லயில்வாள்'' (நாலடி. 386). 2. **வேல்;** javelin, lance. ''அயில்புரை நெடுங்கண்'' (ஞானா. 33). ம. அயில். 3. **அறுவைசெய்யும் கத்தி;** surgical knife, lancet. ''அயிலரி யிரலை விழுப்புண்'' (ஞானா. 30). 4. **கலப்பை** (சங்.அக.); plough. தெ. அயர. 5. **இரும்பு;** iron. ''அயிலாலே போழ்ப வயில்'' (பழ. 8). ம. அயில். 6. **கோரை;** sedge (W.). 7. **முசுமுசுக்கை** (பச். மூ.); rough bristly bryony, *Bryonia scabra* (சா.அக.). 8. **வேலம்பட்டை** (இராசவைத்.); babul bark.

[அள் = கூர்மை. அள் → அய் → அயில் = கூர்மை, கூரிய பொருள்.]

**அயில்**[2] *ayil*, பெ. (n.) **அழகு;** beauty.

க. அய், அய்ன்; தெ. அயன.

[ஐ = அழகு. ஐ → அய் → அயில்.]

**அயில்**[3] *ayil*, பெ. (n.) **விரை** (அக.நி.); perfume.

[அகில் = நறுமணக்கட்டை, நறுமணம். அகில் → அயில்.]

**அயிலம்** *ayilam*, பெ. (n.) **இலுப்பைவேர்ப் பட்டை** (இராசவைத்.); bark of the mahwa root (செ.அக.) — the root bark of the flower dropping tree, *Bassia longifolia* (சா.அக.).

**அயிலவன்** *ayil-avan*, பெ. (n.) முருகன்; Lord *Muruga*, as bearing a javelin. "தினைகாவன் மயிலை மணந்த வயிலவ" (திருப்பு. 341).

[அயில்+அவன் (ஆ.பா. ஈறு). அயிலவன் = வேற்படையுடையவன்.]

**அயிலான்** *ayilān*, பெ. (n.) அயிலவன் பார்க்க; see *ayil-avan* (உரி.நி.).

[அயில் + ஆன் (ஆ.பா. ஈறு).]

**அயிலாலி** *ayilāli*, பெ. (n.) **செந்நாரை**; a red crane, *Tantalus gangeticus* (சா.அக.).

**அயிலி** *ayili*, பெ. (n.) **சதுரக்கள்ளி** (பிங்.); square spurge. 2. அயிலக்கீரை; a kind of edible greens.

[அயில் → அயிலி.]

**அயிலிடம்** *ayilidam*, பெ. (n.) சிற்றரத்தை (மலை.); lesser galangal.

**அயிலுழவன்** *ayil-ulavan*, பெ. (n.) போர் **மறவன், வீரன்** (உரி.நி.); warrior, as ploughman with javelin.

[அயில் (வேல்) + உழவன் – அயிலுழவன் = வேலால் உழுபவன், பொருநன், மறவன்.]

**அயிலேயம்** *ayilēyam*, பெ. (n.) முசுமுசுக்கை (நாமதீப.); bristly bryony, *Bryonia scabra*.

[அயில் → அயிலை → அயிலையம் → அயிலேயம்.]

**அயிலை** *ayilai*, பெ. (n.) 1. ஒரு கடல்மீன் **வகை**; a kind of sea-fish. "அயிலை துழந்த வம்புளி" (அகநா. 60 : 5).

**அயிலைக்கீரை** *ayilai-k-kīrai*, பெ. (n.) **ஒரு வகைக் கீரை**; a kind of edible greens.

**அயிவாவி** *ayivāvi*, பெ. (n.) **செந்நாவி**; red aconite, *Aconitum ferox* (சா.அக.).

**அயிற்கடு** *ayir-kadu*, பெ. (n.) **யானைத்துறட்டி**; goad for elephant.

[அயில் = கூர்மை. கோடு = வளைவு, கொம்பு. அயிற்கோடு → அயிற்கடு.]

**அயிற்பட்டை** *ayir-pattai*, பெ. (n.) **வேலம் பட்டை**; the bark of acacia tree, *Acacia leucophloea* (சா.அக.).

[அயில் + பட்டை.]

**அயிற்பூகம்** *ayir-pūgam*, பெ. (n.) **செந்நெல்லி**; red gooseberry, *Phyllanthus emblica*.

**அயிற்பெண்டு** *ayir-pendu*, பெ. (n.) **வரிக் கூத்துவகை**; a masquerade dance. "திரு விளக்குப் பிச்சி திருக்குன் றயிற்பெண்டு" (சிலப். 3 : 13, அடியார்க். உரை).

[அயில் + பெண்டு – அயிற்பெண்டு = ஒரு பெண் வேலேந்தியாடும் கூத்துபோலும்!]

**அயின்றாள்** *ayinrāl*, பெ. (n.) **அன்னை** (அக.நி.); mother.

[ஒருகா. புளிக்குடித்தவள் என்னும் பொருளுள்ளதா யிருக்கலாம்; அன்றேல், ஈன்றாள் என்பதன் கொச்சைத் திரிபா யிருக்கலாம்.]

**அயினாலிகம்** *ayināligam*, பெ. (n.) **செம்பசலை**; red pursalane (சா.அக.).

**அயினி** *ayini*, பெ. (n.) 1. குழந்தை முதலில் **உண்ணுஞ் சோறு**; the first rice meal of a child. "பால்விட் டயினியு மின்றயின் றனனே" (புறநா. 77 : 8). 2. **உணவு**; food. "நன்னற்கு மயினி சான்மென" (மலைபடு. 467). ம. அயனி. 3. பழஞ்சோற்று நீர் (இராசவைத்.); water in which boiled rice had been kept soaked for sometime.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் சிற்றிளமையைக் குழந்தைப் பருவம் போன்று உயர்வுநவிற்சியாகக் கூறவிரும்பிய இடைக்குன்றூர்கிழார்,

"கிண்கிணி களைந்தகா லொண்கழல் தொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பி னொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவவன் கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே......"

என்று (புறநா. 77) பாடியிருத்தலால், குழந்தை பால்குடி மறந்து முதன்முதலாக வுண்ணுஞ் சோறு அயினி யெனப்பட்டதென்று கொள்ள இடமுண்டு.

*[ஐ → அய் → அயில். அயில்தல் = குழந்தை ஐதாக வுண்ணுதல். ஐது = நுண்ணிது, சிறிது, மெல்லிது. அயில் → அயிலி → அயினி = மெல் லுணவு, உணவு, சோறு, சோற்றுநீர்.*

*இனி, அள்ளுதல் = நுகர்தல். அளைதல் = நுகர்தல். அள் → அய் → அயில் → அயிலி → அயினி என்றுமாம்.]*

**அயினிக்கீரை** *ayiṉi-k-kīrai*, பெ. (n.) **மணலிக் கீரை**; a bitter kitchen herb, *Gisekia pharmacioides* (சா.அக.).

*[அயிலி + கீரை → அயினிக்கீரை.]*

**அயினிநீர்** *ayiṉi-nīr*, பெ. (n.) **மணமக்கள் முன் அல்லது ஒரு வெற்றியாளன் முன், கண்ணேச் சில் கழிக்குமாறு மங்கலப் பெண்டிர் சுற்றி யெடுக்கும் சோறும் மஞ்சளும் சுண்ணாம்புங் கலந்த ஆலத்தி நீர்**; water mixed with boiled rice, saffron and lime, waved before the bridal couple or a victor in any contest, in order to dispel the supposed effects of the evil eye.

**அயினிநீர்சுழற்று-தல்** *ayiṉi-nīr-šuḻaṟṟu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **மேற்கூறியவாறு ஆலத்தி சுற்றியெடுத்தல்**; to perform the ceremony of waving saffron water, as said above. "போதுட னயினிநீர் சுழற்றி" (கம்பரா. பால. மிதிலை. 51).

**அர்** *ar*, இடை. (part.) *1.* பலர்பாலீறு; pl. suff. அரசர் ஆண்டனர். *2.* **உயர்வுப்பன்மையீறு**; honorific pl. suff. திருவள்ளுவர். *3.* **முத னிலைப் பொருள் ஈறு**; an expletive affixed to some words. பின் - பின்னர். *4.* **சில குற்றிய லுகர வீற்றுப் பெயர்களுடன் சேர்க்கப்பெறும் ஈறு**; an expletive added to some nouns ending in short 'u' (உ). சுரும்பர், வண்டர். அர் - உயர்திணை உயர்வுப்பன்மை யீறு, அஃறிணை நகைச்சுவை ஒருமைப்பெயரீறு. எலியர் வந்தார்.

ம. அர், அரு; தெ. அரு; து. எர்; குட. ஆரு; கோண். ஓர்; குரு. அர், ஓர், ஓர்க்; பிரா. உர், அர், ஓர், ர்.

E. -er. suff. used to form nouns denoting an agent as in hatter, ruler, teacher. **ME.** -ere, -er, fr. **OE.** -ere, rel. to **OS.** -eri. **ON.** -ari, **Dan., Du.** -er. **OHG.** -āri, ari, -eri, **MHG.** -ere, **G.** -er, **Goth.** -areis, fr. **OTeut.** which derives fr. **L.** ārius — (K.C.E.D.E.L.).

**E.** -or suff. denoting an agent or an instrument.— (1) **ME.** -or, -our, fr. **OE.** -eor, -eur (**F.** -eur), fr. **L.** -ōrem, acc. of -or, a suff. added to the pp. stem of verbs (Cp. e.g. actor, author); (2) **ME.** -or, -our, fr. **OF.** -eor, -eur (**F.** -eur), fr. **L.** -ātōrem acc. of -ātor (Cp. e.g. donor, emperor); see -tor, -ator. Cp. the agential suff. -er. According to the general rule, -or is added to words of Latin -er to those of English origin — (K.C.E.D.E.L.).

**அர்க்கம்** *arkkam*, பெ. (n.) **நீர்க்காக்கை** (பிங்.); little cormorant. **ஆலர்க்கம்** பார்க்க; see *ālarkkam*.


அர்க்கம்

**அர்க்கமலை** *arkka-malai*, பெ. (n.) **திரு வண்ணாமலைக்குக் கிழக்கேயுள்ள மலை**; a hill to the east of *Tiruvaṇṇāmalai*. "அர்க்கமா மலையுள தடுத்த கீழ்த்திசை" (அருணாசலபு. திருநகர. 36).

**அருக்கமலை** பார்க்க; see *arukka-malai*.

**அர்க்குளா** *arkkuḷā*, பெ. (n.) **மேற்புறம் நீலமா யும் அடிப்புறம் வெள்ளையாயு முள்ள நால் விரல் (அங்குல) நீளக் கடல்மீன்**; seer-fish, bluish above, silvery below, attaining 4 inches in length, *Cybium commer sonji*.

*[அறக்குளா → அர்க்குளா.]*

**அறக்குளா** பார்க்க; see *aṟakkuḷā*.

**அர** *ara*, பெ. (n.) பாம்பு; snake. "பையர விழுங்கப் பட்ட பசுங்கதிர் மதியம்" (சீவக. 1540).

ம. அரவு

*[அர் → அர → அரவு. அரவுதல் = வருத்துதல். அர் → அரா → அர.]*

**அரக்கக்குரியான்** *arakkakkuriyāṉ*, பெ. (n.) **மருள்**; bewilderment of the mind (சா.அக.).

**அரக்ககத்தி** *arakk(u)-agatti*, பெ. (n.) **சிற்றகத்தி**; a small variety of *agatti* tree, *Cassia cuspidata* alias *C. aegyptiaca* (சா.அக.).

**அரக்கம்**[1] *arakkam*, பெ. (n.) *1.* **அரத்தம்**; blood. *2.* **அவலரக்கு**; shellac. "அரக்கத்

தன்ன நுண்மணற் கோடுகொண்டு" (பதிற்றுப். 30:27). 3. கொம்பரக்கு (சங்.அக.), அரக்குவகை; stick-lac. 4. அரக்கரிசி; seed-lac (சா.அக.). 5. அகில் (பரி.அக.); eaglewood.

ம. அரத்தம்

[உல் → உர் → உரு. உருத்தல் = எரிதல், அழலுதல். உல் → எல் = ஒளி, நெருப்பு, கதிரவன். எல் → எரி. எரி = நெருப்பு, சிவப்பு. உல் → அல் → அலத்தம் → அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அல் → அர் → அரகு → அரக்கு = சிவந்தது. அரக்கு → அரக்கம்.]

**அரக்கம்**[2] *arakkam*, பெ. (n.) 1. நன்னாரி (மலை.); Indian sarasaparilla. 2. திருநாமப் பாலை (வை.மூ.); oval-leaved China root, *Smilax macrophylla* (செ.அக.) — wild sarasaparilla (சா.அக.).

**அரக்கரிசி** *arakk(u)-ariši*, பெ. (n.) அரக்குவகை; seed-lac.

[அரக்கு + அரிசி.]

அரக்கு பார்க்க: see *arakku*.

**அரக்கல்**[1] *arakkal*, பெ. (n.) அரசிறைத் தவணை (T.A.S. iii, 62); an instalment of land tax.

ம. அரக்கல்

**அரக்கல்**[2] *arakkal*, தொ.பெ. (vbl.n.) அரக்குதல் பார்க்க; see *arakku-*.

**அரக்கன்**[1] *arakkan*, பெ. (n.) 1. ஆறடிக்குமேல் வளர்ந்து பருத்தவுடம்பும், பெரும்பாலும் கருத்த மேனியும், பெருவலிமையும் கொண்டு, பிறரை வருத்தும் நாகரிகப் பண்பாடற்ற மாந்தன்; inhumanly wicked person of gigantic stature. 2. பண்டைக்காலத்தில் இலங்கையிலும் பிற விடங்களிலும் இருந்ததாகத் தவறாகக் கருதப் படும் ஒருவகைப் பூதமாந்தரினத்தான்; one of an anthropomorphous race of demons erroneously considered to have inhabited Ceylon and other places in pre-historic times. "அரக்கரோ ரழிவுசெய்து கழிவரேல்" (கம்பரா. கிட்கிந்தா. வாலிவதை. 87). 3. பலரைத் துன் புறுத்துங் கொடியவன்; one who harasses and ruins many.

ம. அரக்கன்; பிராகி. ரக்க.

[அரக்குதல் = வருத்துதல், அழித்தல். அரக்கு → அரக்கன்.]

**அரக்கன்**[2] *arakkan*, பெ. (n.) அசுரன் (சுரர் என்னும் தேவர்க்குப் பகைவராகவும், வானத்தில் இயங்கும் பதினெண் கணத்தாருள் ஒரு கணத்தாராகவும் சொல்லப்படும் அசுரர் வகுப்பினன்); one of the class of demons called Asurās warring with the gods and forming one of the 18 classes of celestial hosts. "ஆம்பன்முக வரக்கன்" (கல்லா. கண. 19).

பதினெண்கணம் என்பது ஆரியத் தொன்மப் பகுப்பு. தொன்மம் (த.) என்பது புராணம் (வ.).

பதினெண்கணத்துள் அரக்கரும் அசுரரும் வெவ்வேறு கணத்தாராகவே கூறப்படு கின்றனர். 'நிசாசரர்' என்னும் பெயர் அவ் விரு கணத்தார்க்கும் பொதுவாயிருப்பது, அவ் வேற்றுமையை விலக்கவில்லை.

"அமரர் சித்தர் அசுரர் தைத்தியர்
கருடர் கின்னரர் நிருதர்கிம் புருடர்
காந்தருவர் இயக்கர் விஞ்சையர் பூதர்
பசாசர் அந்தரர் முனிவர் உரகர்
ஆகாய வாசியர் போகபூ மியர்எனப்
பாகு பட்டன பதினெண் கணமே"
(பிங். 1 : 92).

இதில் அசுரர், பூதர், முனிவர், உரகர் என்பன தமிழ்ச்சொற்கள். கருடர் என்பது கலுழர் என்பதன் திரிபு.

நிருதர் என்பவர் தமிழில் அரக்கர் அல்லது இராக்கதர் என்றே குறிக்கப்படுவர். அசுரரும் அரக்கரும் இருவேறு கணத்தா ரென்றே திவா கரத்திலும் பிங்கலத்திலும் குறிக்கப் பட்டுள்ளனர். பிங்கலம் நிருதரையும் அரக் கரையும் வெவ்வேறாகப் பிரித்துக் கூறியிருப் பினும், அசுரரை அவரொடு மயக்கவில்லை. அதனால், அரக்கன் என்னுஞ் சொல்லை அசுரன் என்னும் பொருளில் ஆள்வது தவறேயாம்.

அரக்கன் என்னுஞ் சொல்லும் பொருளும் தமிழாதலால், அச் சொல் இங்குக் கொள்ளப் பட்டது.

ராக்ஷத என்னும் வடசொல்லின் திரிபான இராக்கதன் என்பதன் சிதைவே அரக்கன் என்பது தவறாகும்.

**இராக்கதன்** பார்க்க; see *irākkadan*.

**அரக்கன்**[3] *arakkan*, பெ. (n.) சூடுபோடுதற்குரிய மாடு (யாழ்ப்.); cattle for branding (J.).

**அரக்காணி** *arakkāṇi*, பெ. (n.) **செம்புளிச்சை**; a kind of fragrant wood tree like cedar (சா. அக.).

[*அரக்கம் + ஆணி.*]

**அரக்காந்தம்** *arakkāndam*, பெ. (n.) *அரக்குக் காந்தம் பார்க்க*; see *arakku-k-kāndam*.

[*அரக்கு + காந்தம் – அரக்குக்காந்தம் → அரக்காந்தம்.*]

**அரக்காம்பல்** *arakk(u)-āmbal*, பெ. (n.) **செவ்வாம்பல்** (பிங்.); red water-lily, *Nymphae rubra*. "அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ" (முத்தொள். 110).

ம. அரக்காம்பல்

[*அரக்கு (சிவப்பு) + ஆம்பல்.*]

**அரக்கி**[1] *arakki*, பெ. (n.) 1. **கொடிய பெண்**; wicked and fierce woman. 2. (தொன்.) **அரக்க இனப் பெண்**; (Myth.) anthropomorphous demoness. "மைவண்ணத் தரக்கி" (கம்பரா. பால. அகலி. 24).

[*அரக்கு → அரக்கி. அரக்குதல் = வருத்துதல்.*]

**அரக்கி**[2] *arakki*, பெ. (n.) 1. **கடுக்காய்**; Indian gall-nut, *Terminalia chebula*. 2. **சேங்கொட்டை**; marking nut, *Semcarpus anacardium*. 3. **கல்லுப்பு**; a kind of salt, dug out from the beds of salt deposited at the bottom of the sea. 4. **மனோசிலை**; red arsenic, *Arsenicum rubrum* (சா.அக.). 5. **ஒரு நஞ்சு** (பாடாணம்), (வை.மூ.); poison.

[*அரக்குதல் = உராய்தல், தேய்த்தல், சிதைத்தல், தறித்தல், ஒடுக்குதல், குறைத்தல், வருத்துதல், வெட்டுதல். அரக்கு + இ (வி.முத. ஈறு) – அரக்கி.*]

**அரக்கிநட-த்தல்** *arakki-naḍa-*, 3 செ.கு.வி. (v.i.) 1. **நெளிந்துநடத்தல்** (வின்.); to wriggle as a snake, to waddle. 2. **தொடைகள் ஒன்றோடொன்று உராய நடத்தல்**; to walk with difficulty, as a man whose thighs rub against each other while walking. அவன் அரக்கி நடக்கிறான் (உ.வ.).

**அரக்கு-தல்** *arakku-*, 4 செ.கு.வி. (v.i.) **நெளிந்து நடத்தல்**; to waddle. —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அழுத்துதல்**; to press down. "விரலாற் றலைய ரக்கினான்" (தேவா. 5 . 20 : 10). 2. **தேய்த்தல்**; to rub with the palm of the hand or the sole of foot. கண்ணரக்கல் (சினேந். 456). "அரக்க னீரைந்து வாயு மலறவே யரக்கினா னடியாலும்" (தேவா. 5 . 27 : 10). 3. **கனத்தவுடம்பை இருப்புவிட்டுப் பெயர்த்தல்** (யாழ்ப்.); to push, drag or otherwise move, as a heavy body (J.). 4. **குழந்தை புட்டத்தை நிலத்தில் தேய்த்துப் பெயர்தல்**; to move by rubbing the buttocks against the ground, as a child. பிள்ளை யரக்கி யரக்கி வந்தது (உ.வ.). 5. **துடைத்தல்**; to wipe, as tears. "பெருமதர் மழைக்கண் வருபனி யரக்கி" (பெருங். உஞ்சைக். 33 : 136). 6. **அரைத்தல்**; to grind. 7. **வருத்துதல்**; to cause trouble to, afflict. "எல்லரக்கு மயினுதிவே லிராவணனும்" (கம்பரா. சுந்தர. ஊர்தேடு. 230). 8. **சிதைத்தல்** (சூடா.); to waste, ruin. 9. **கிளைதறித்தல்**; to clip off, prune. 10. **வெட்டுதல்**; to cut, sever. "தாளுந் தோளு மரக்கி" (விநாயகபு. 42 : 4). 11. **குறைத்தல்**; to cause to diminish. "காரரக்குங் கடல்" (தேவா. 1 . 65 : 8). 12. **வாய்நிறைய உண்ணுதல்**; to eat incessantly in large mouthfuls. ஆடு குழையரக்குகிறது (இ.வ.). 13. **முழுதுமுண்ணுதல்** (இ.வ.); to eat up. 14. **கரத்தல்**; to hide, conceal. (திவ். திருச்சந். 32, வியா.). 15. **அழித்தல்** (சங்.அக.); to destroy.

ம. அரக்குக; க. அரகு; தெ. அரகு, அருகு.

[*அரங்குதல் = அழுந்துதல், வருந்துதல், அழிதல். அரங்கு (த.வி.) → அரக்கு (பி.வி.).*]

**அரக்கு**[1] *arakku*, பெ. (n.) 1. **சிவப்பு**; redness. "அரக்குண் பஞ்சிக டிரட்டி" (சீவக. 1564). ம., க. அரக்கு. 2. **செம்மெழுகு**; sealing wax. "தீயூட்டரக்கே யென்ன வுருகி" (கந்தபு.அசுர. மார்க்கண். 95). 3. **சாதிலிங்கம்**; vermilion. "அங்கை யரக்குத் தோய்ந்தன்ன சேயிதழ்" (சிறுபாண். 74). 4. **அரக்கு மஞ்சள்**; saffron root (சா.அக.). 5. **தேன்** (சங்.அக.); honey. 6. **எள்ளுக்காயிற் காணும் ஒருவகை நோய்**; a disease peculiar to sesame pods. 'மகுளி பாயாது = அரக்குப் பாயாமல்' (மலைபடு. 103, நச். உரை). 7. **சாயம், மசி, முத்திரை முதலியவற்றிற்குதவும் பிசின் போன்ற ஒரு சரக்கு**; lac.

ம. அரக்கு; க., து. அரகு; தெ. லாகா; குரு. அரகு.

[*உல் → உல. உலத்தல் = காய்தல். உல → உலர். உல் → உர் → உரு. உருத்தல் = எரிதல், அழலுதல். உல் → அல் → அள் → அழல். அல் → அல → அலத்தம் = செம்பருத்தி. அலத்தம் →*

*அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அல் → அர் → அரம் = சிவப்பு. அரம் → அரன் = சிவன். அர் → அர → அரகு → அரக்கு = சிவப்பு, சிவந்த பொருள். நெருப்பின் நிறம் சிவப்பாதலால் நெருப்புக் கருத்தினின்று சிவப்புக் கருத்துத் தோன்றிற்று.]*

*அரக்குண்டாகும் வகை* (How lac is formed):

ஒருவகைப் பூச்சியினத்தின் பெண், மரத்தில் துளையிட்டு அதில் முட்டையிட்டு வதியும் போது, அதன் உடம்பினின்று கழியும் பிசின் போன்ற பொருளே அரக்கு. அது சாயங் காய்ச்சவும், மசி கூட்டவும், பல்வேறு மருந்து செய்யவும் பயன்படுத்தப்படுகிறது. The female of the species of insect called *Coccus lacca hemiptera* makes holes in the bark of certain trees in order to lay its eggs in. The incrustation there is called 'lac', and it is in fact formed by the exudation from the bodies of the insects. It is universally employed for dyeing red and also used in preparation of native ink and in various medical treatments (*சா.அக.*).

*அரக்கின் வகைகள்* (The different varieties of lac):

1. பச்சையரக்கு - gum lac.
2. சிவப்பரக்கு, செம்பரக்கு - red lac, sold in the bazaar in the form of square cakes.
3. கட்டியரக்கு - lump wax, seed-lac melted into masses.
4. முத்திரையரக்கு அல்லது செய்மெழுகு - sealing wax or gum lac incorporated with resin.
5. அரிசியரக்கு - seed-lac appearing in a granulated form, deprived of its resinous quality.
6. அவலரக்கு - shellac, the most common form in which the lac is known.
7. கொம்பரக்கு - stick-lac, a substance in its natural state, sticking to the twigs of the tree.

Note: The insect *Caccus lacca* (Indian origin) should not be confounded with that of the Mexican, cochineal insect called *Coccus cacti* introduced into India from Mexico by the East India Company about the year 1799 (*சா.அக.*).

**அரக்கு**[2] ***arakku***, பெ. (n.) **கஞ்சி** (நாமதீப.); gruel.

**அரக்குக்கச்சி** *arakku-k-kacci*, பெ. (n.) 1. **செம்முள்ளங்கி**; a red variety of country radish, *Raphanus sativus* alias *R. radicula.* 2. **கெம்பு முள்ளங்கி அல்லது சிவப்பு முள்ளங்கி**; red country radish, *Daucus carota* (சா.அக.).

**அரக்குக்காந்தம்** *arakku-k-kāndam*, பெ. (n.) **ஒருவகைக் காந்தக்கல்** (வின்.); magnetic iron-stone used medicinally.

*[அரக்கு + காந்தம்.]*

**அரக்குக்குகை** *arakku - k - kugai*, பெ. (n.) 1. **மாழையுருக்கும் ஒருவகைக் குகை**; a kind of crucible for melting metals. 2. **சிவப்புக் குகை**; a red crucible (*சா.அக.*).

*[அரக்கு + குகை.]*

**அரக்குக்குப்பி** *arakku-k-kuppi*, பெ. (n.) **சிவப்புப்புட்டி**; a red bottle.

*[அரக்கு + குப்பி.]*

**அரக்குச்சந்தனாதி** *arakku-c-candaṉādi*, பெ. (n.) **கொம்பரக்குடன் சில கடைச்சரக்குகளை நல்லெண்ணெயிற் சேர்த்துக் காய்ச்சி வடிக்கும் ஒருவகை யெண்ணெய்**; a medicinal oil prepared by boiling and filtering, a mixture of gingelly oil with a few other ingredients.

இதை உடம்பில் தேய்ப்பதனால் திராத காய்ச்சல் தீரும்; Rubbing the body with this oil is said to be an infallible cure in cases of persistent and chronic fevers.

*[அரக்கு + சந்தனம் + ஆதி (வடநாட்டுச் சொல்). இதை முழுத் தமிழில் அரக்குச் சந்தன முதலி எனலாம்.]*

**அரக்குச்சாயம்** *arakku-c-cāyam*, பெ. (n.) 1. **சீலைகளுக்கூட்டும் கருஞ்சிவப்புச் சாயம்**; lac dye, colouring matter extracted from stick-lac. 2. **மெருகெண்ணெய்** (M.M.); varnish with lac as its chief ingredient.

*[அரக்கு + சாயம்.]*

**அரக்குச்சாராயம்** *arakku-c-cārāyam*, பெ. (n.) **வேலம்பட்டை சேர்த்துக் காய்ச்சிய தென்னங் கள் அல்லது பனங் கள்** (இராட்.); arrack, spirituous liquors distilled by boiling the bark of *vēl* with toddy or palm wine.

*[அரக்கு+சாராயம். சாறாயம் → சாராயம்.]*

**அரக்குச்சொக்கட்டான்** *arakku - c - cokkaṭṭāṉ*, பெ. (n.) **சேலைவகை**; a kind of saree.

**அரக்குநாயகி** *arakku-nāyagi*, பெ. (n.) **செங் குருந்து**; red canary, *Gluta travancoria* (சா. அக.).

**அரக்குநீர்** *arakku-nir*, பெ. (n.) 1. **சாதிலிங்கங் கலந்த நீர்**; vermilion water, used for sprinkling on festive occasions. "அரக்குநீர்ச் சிவிறி யேந்தி" (சீவக. 2657). 2. **ஆலத்தி நீர்**; solution of saffron and lime ceremoniously waved in front of a bridal couple to ward off the evil eye. "அரக்குநீர் சுழற்றி" (விநாயகபு. 80 : 277). 3. **அரத்தம்**; blood. "புண்ணிடை யரக்குநீர் பொழிய" (சூத. முத்தி. 7:25), (செ. அக.). 4. **அரத்தநீர்**; the serum of the blood (சா.அக.). 5. **ஒரு நறுமண நீர்**; a perfumed water (சா.அக.).

**அரக்குப்புளிப்பு** *arakku-p-pulippu*, பெ. (n.) **அரக்கினின்று உண்டாக்கும் ஒருவகைப் புளிப்பு**; a peculiar acid prepared from lac, laccic acid (சா.அக.).

[அரக்கு + புளிப்பு.]

**அரக்குப்பூச்சி** *arakku-p-pūcci*, பெ. (n.) **அரக்கை உண்டாக்கும் ஒரு பூச்சிவகை**; lac insect.

[அரக்கு + பூச்சி.]

**அரக்குப் பேய்ப்பீர்க்கு** *arakku-p-pēy-p-pirkku*, பெ. (n.) **மெழுகுப் பேய்ப்பீர்க்கு**; a kind of bitter luffa, *Luffa amara* (சா.அக.).

[அரக்கு + பேய் + பீர்க்கு.]

**அரக்குமஞ்சள்** *arakku-mañjal*, பெ. (n.) 1. **கருஞ் சிவப்பு மஞ்சள்**; saffron root of a deep yellow colour (செ.அக.) — **மஞ்சள்வேர்க் கொம்பு**; dark-red saffron, *Curcuma longa*. 2. **சிவப்பு மஞ்சள்**; red saffron (சா.அக.).

**அரக்குமாளிகை** *arakku-māligai*, பெ. (n.) **பாண்டவரை வஞ்சனையாற் கொல்லத் துரி யோதனன் அரக்கினாற் செய்வித்த பெருமனை**; wax palace built by Duryōdhana to carry out his scheme for the destruction of the Pāṇḍavās.

"அரக்கு மாளிகைஇப் படியினால்
இயற்றிய தொழில்"
(பாரத. வாரணா. 122).

**அரக்குமுத்திரை** *arakku-muttirai*, பெ. (n.) **அரக்கில் இடப்பட்ட முத்திரை**; stamp impressed with sealing wax.

**அரக்குமெழுகு** *arakku-meḻugu*, பெ. (n.) **பச்சை யரக்கு**; lac in its raw state. "எரியணை அரக்கு மெழுகும் ஒக்கும்" (திவ். திருவாய். 2.4:3).

**அரக்குரோசா** *arakku-rōšā*, பெ. (n.) **சிவப்பு உரோசாப்பூ**; dark red rose.

[அரக்கு = சிவப்பு. E. rose > த. உரோசா.]

உரோசா மலரைத் தமிழில் முளரிகை யெனலாம்.

**அரக்குவட்டச்சாரணை** *arakku-vaṭṭa-c-cāraṇai*, பெ. (n.) **சிவப்புவட்டச்சாரணை**; the red variety of *vaṭṭaccāraṇai* (round-leaved trianthema).

**அரக்குவளையல்** *arakku-vaḷaiyal*, பெ. (n.) **அரக் கினாற் செய்த கையணி**; wax bracelet covered with thin brass leaf tinsel.

**அரக்குவிசிறி** *arakku-višiṟi*, பெ. (n.) **சேலை வகை**; a kind of saree.

**அரக்குவை-த்தல்** *arakku-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **அரக்குமுத்திரையிடுதல்**; to seal with wax.

**அரக்கெண்ணெய்** *arakk(u)-eṇṇey*, பெ. (n.) **கொம்பரக்குடன் அமுக்கிறாவேர், ஆவின்பால், பழங்காடி, நல்லெண்ணெய், சில கடைச் சரக்குகள் முதலியவற்றைச் சேர்த்துக் காய்ச்சி வடித்த தலைமுழுக் கெண்ணெய்**; a medicated oil obtained by boiling stick-lac, Indian winter cherry and other ingredients in a mixture of cow's milk, seasoned vinegar and gingelly oil, anointed preparatory to bath, shellac oil (சா.அக.).

[அரக்கு + எண்ணெய்.]

**அரகண்டரி** *arakaṇḍari*, பெ. (n.) **பாசிப்பயறு**; green gram (சா.அக.).

**அரகதி** *aragadi*, பெ. (n.) **செவ்வல்லி**; red lily, *Nymphae rubra* (சா.அக.).

**அரகம்** *aragam*, பெ. (n.) 1. **ஒரு பூண்டு**; a plant, *Blyxa ottandra*. 2. **கம்பிழ்**; a plant, *Gardenia enneandra* (சா.அக.).

**அரகர** *aragara*, பெ. (n). **வழிபாட்டில் அல்லது வழுத்திற் சிவனை விளிக்கும் விளிப்பெயர்**; address to Šiva in invocation or praise. "அரகர முழக்கஞ் செய்வோர்" (திருவிளை. இந்திரன் முடி. 17).

*[அரன் = சிவன். அரன் → அர (விளி). அர + அர – அரவர (விளியடுக்கு) → அரகர. வ → க, போலி.]*

அழிப்பவன் என்று பொருள்படும் 'ஹர' என்னும் சமற்கிருதச்சொல் வேறு; செவ் வண்ணன் என்று பொருள்படும் 'அரன்' என்னும் தமிழ்ச்சொல் வேறு.

**அரன்** பார்க்க; see *aran̲*.

**அரங்கக்கூத்தி** *araṅga-k-kūtti*, பெ. (n.) **நாடக மேடையில் நடிக்கும் அல்லது நடஞ்செய்யும் பெண்;** female actor or dancer on the stage. "அரங்கக் கூத்திசென் றையங் கொண்டதும்" (மணிமே. **24 : 22**).

*[அரங்கம் + கூத்தி.]*

**அரங்கம்** பார்க்க; see *araṅgam*.

**அரங்கணி** *araṅgaṇi*, பெ. (n.) *அறுவு* (இ.வ.); dried up source of a tank or well (Loc.).

*[அரங்குதல் = அழுந்துதல், அழிதல், வற்றுதல். அரங்கல் + நீர் – அரங்கனீர் → அரங்கணி (கொச்சைத் திரிபு). ஒ.நோ. தண்ணீர் → தண்ணி (கொச்சை).]*

**அரங்கநாதன்** *araṅga-nādan̲*, பெ. (n.) **திரு வரங்கத்தில் வழிபடப்படும் திருமால்;** Viṣṇu, as worshipped in *Tiruvaraṅgam* (Śriraṅgam).

*[அரங்கம் + **Skt.** nātha > த. நாதன் = தலைவன், கடவுள்.]*

**அரங்கபூசை** *araṅga-pūšai*, பெ. (n.) *1.* **போர்த் தொடக்கத்தில் கொற்றவை யென்னும் வெற் றித் தெய்வமாகிய காளிக்குச் செய்யும் வழி பாடு;** worship of *Kor̲r̲avai* (*Kaḷi*), the goddess of victory, preliminary to a battle.

"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"

(தொல். பொருள். புறத். 4). 2. **பந்தய விளை யாட்டின் தொடக்கத்திற் செய்யும் வழிபாடு;** worship at the commencement of an athletic contest. "சினந்தணிந் தரங்கபூசை செய்வன்" (பாரத. வாரணா. 64). 3. **நாடகத் தொடக் கத்திற் செய்யும் வழிபாடு;** worship preliminary to a dramatic performance.

*[அரங்கம் + பூசை.]*

**அரங்கம்** பார்க்க; see *araṅgam*.

**அரங்கம்** *araṅgam*, பெ. (n.) *1.* **ஆற்றிடைக் குறை;** island formed by a river or rivers, ait. "ஆற்றுவீ யரங்கத்து" (சிலப். **10:156**). 2. **திரு வரங்கம்;** Śriraṅgam. "அண்டமுந் தானாய் நின்ற எம்பெருமான் அரங்கமா நகரமர்ந் தானே" (திவ். பெரியதி. 5 . 7 : 1). 3. **நாடக மேடை;** stage. ம. அரங்ஙு. 4. **நாடகசாலை;** theatre, dancing hall. "ஆடம் பலமு மரங்க முஞ் சாலையும்" (சீவக. **2112**). 5. **அவைக் களம்;** hall for assembly of learned men. 6. **அவை** (திவா.); assembly of learned men. 7. **சூதாடுமிடம்** (பிங்.); gambling house. 8. **படைக்கலம் பயிலுமிடம்** (சூடா.); school for practice of arms. 9. **சிலம்பக்கூடம்;** fencing school. 10. **மற்போர்க்களம்;** wrestling arena. 11. **போர்க்களம்;** battle-field. 12. **கமுக்கம்** (இ.வ.); secrecy (Loc.). திருமணம் முடியும் வரை எல்லாச் செய்திகளையும் அரங்கமாய் வைத்துக்கொண்டார்கள் (உ.வ.).

ம. அரங்ஙு

*[அரங்கு = அறை, அறைவகுத்த இடம். அரங்கு → அரங்கம் = ஆற்றுநீரால் அறுக்கப் பட்ட திட்டை, மேடை, விளையாட்டிற்கும் போர்க்கும் வகுக்கப்பட்ட இடம்.]*

**அரங்கு** பார்க்க; see *araṅgu*.

**அரங்கமேடை** *araṅga-mēdai*, பெ. (n.) **நாடகம் நடிக்கும் அல்லது நடஞ்செய்யும் இடம்;** stage.

*[அரங்கம் + மேடை.]*

**அரங்கவாசல்** *araṅga-vāšal*, பெ. (n.) **நகர்முற்ற வெளி** (புதுவை); esplanade (Pond.).

*[அரங்கம் + வாசல். வாயில் → வாயல் → வாசல்.]*

**அரங்கல்களிம்பு** *araṅgal-kaḷimbu*, பெ. (n.) **கட்டிகளைக் கரைக்கவும், அவற்றைப் பழுக்க அல்லது அழுந்திப்போகும்படி செய்யவும், வீக்கங்களை மெதுவாக்கவும் தடவும் ஒரு வகைக் களிம்பு;** an ointment or paste used in medical practice for reducing, ripening, suppressing or suppurating an abscess (சா.அக.).

*[அரங்கு → அரங்கல்.]*

**அரங்கு-தல்** பார்க்க; see *araṅgu-*.

**அரங்கன்** *araṅgan̲*, பெ. (n.) **திருவரங்கப் பெரு மாள்;** Viṣṇu, as worshipped at *Tiruvaraṅgam* (Śriraṅgam). "அண்டர்கோ னணியரங்கன்" (திவ். அமலனாதி. 10).

ம. அரங்ஙன்; க. ரங்கனு; தெ. ரங்கடு.

*[அரங்கம் → அரங்கன்.]*

# அரக்கு



அயிலை



அரக்கு (வில்லை)



அரிசியரக்கு



அவலரக்கு



கொம்பரக்கு



அரக்குப்பூச்சி

**அரங்கி** *arangi*, பெ. (n.) 1. *நடனக்காரி;* dancing girl. "மடவா ராயிரம்பே ருண்டென் றரங்கி யறியாளோ" (கூளப்ப. காதல், 359). 2. *செய்திகளை மறைத்துவைக்கும் வஞ்சகக் காரி;* taciturn and deceitful woman. 'ஆரை நம்பினாலும் அரங்கியை நம்பக்கூடாது' (பழ.).

*[அரங்கு → அரங்கி = 1. அரங்கில் ஆடுபவள். 2. அறைக்குள்ளிருப்பவள் அல்லது அடக்கி வைப்பவள்.]*

**அரங்கு-தல்** *arangu-*, 5செ.கு.வி. (v.i.) 1. *தேய்தல்;* to wear away by friction. 2. *அழுந்துதல்* (உரி.நி.); to be pressed down. 3. *அம்பு முதலியன தைத்தல்;* to pierce, penetrate, as an arrow. "வேலம்பு......துணை முலையினுள் ளரங்கி மூழ்க" (சீவக. 293). 4. *சிதைதல்;* to be injured. 5. *குறைதல்;* to diminish. 6. *வருந்துதல்;* to suffer. "கடகரிக் கோடரங் கிடவெழுங் குவிதடங் கொங்கையார்" (கம்பரா. பால. எதிர்கொள். 33). 7. *உருகுதல்* (இ.வ.); to melt, as ghee (Loc.). நெய்யை அரங்கவை. 8. *கெடுதல், அழிதல், நீங்குதல்;* to be destroyed, to be removed. "பிணியரங்க" (கம்பரா. பால. குலமுறை. 2).

ம. அரங்ஙுக

*[அர் → அர → அரவு → அராவு. அர்→அரம். அரவு → அரகு → அரங்கு.]*

**அரங்கு** *arangu*, பெ. (n.) 1. *அறை;* room. வீடு அரங்கரங்கா யிருக்கிறது (உ.வ.). 2. *உள்ளறை* (நாநார்த்த.); inner room. 3. *பாண்டி (சில்லாக்கு) விளையாட்டிற்கு நிலத்திற் கீறியமைக்கப்படும் பலவறைக் கட்டம்;* chequered lines traced on the ground for playing *pāṇḍi*, a children's game.

> "கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
> கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்"

(நற். 3). 4. *சூதாட்டத்திற்கு வகுக்கப்பட்ட பலவறைக் கட்டம்;* place or board chequered with squares for gambling. "அரங்கின்றி வட்டாடி யற்றே" (குறள், 401). 5. *சூதாடுமிடம்;* gambling house. "அறிவிலாளர் சூதாடு மரங்கினும்" (பிரமோத். 22 : 13). 6. *ஆற்றிடைக்குறை* (சங்.அக.); island formed within a river. 7. *நாடகமேடை;* stage. "அவைபுக ழரங்கின்மே லாடுவாள்" (கலித். 79). 8. *நடனக் கூடம்;* dancing hall. 9. *போர்க்களம்* (சங்.அக.); battle-field. 10. *மற்போர், குத்துச்சண்டை முதலியன நிகழும் இடம்;* arena. 11. *அவைக்களம்;* hall of learned assembly. 12. *கருவகம், சூல்;* womb, pregnancy. "அரங்கி லவனென்னை யெய்தாமற் காப்பான்" (திவ். இயற். நான். 30). 13. *திரைப்பட மனை, திரையரங்கு* (இக்.வ.); cinema theatre (Mod.).

ம. அரங்ஙு; க. ரங்க; தெ. ரங்கமு.

*[அர் → அறு. அர் → அர → அரவு → அரகு → அரங்கு = அறை, அறைக்கட்டம், அறுத்தமேடை, வரையறுத்த இடம்.]*

வரிப்பந்து (tennis), பூப்பந்து (badminton) முதலிய மேலை விளையாட்டுகட்கு அமைக்குங் கட்டத்தையும் (court) அரங்கு எனலாம்.

**அரங்குவீடு** *arangu-vīḍu*, பெ. (n.) *பாதுகாப்பான உள்ளறை* (நெல்லை); inner room, regarded as secure (Tn.).

**அரங்கேற்றம்** *arang(u)-ēṟṟam*, பெ. (n.) *ஒரு புலவரின் புதுநூல் அல்லது பனுவல், ஒரு கணிகையின் நடனத்திறமை முதலியவற்றை அறிஞரவையிற் காட்டி, அவரது ஒப்பம் பெறுகை;* presentation of a new literary work by its author or the first public performance of a dancing girl, before a learned assembly for approval.

ம. அரங்ஙேற்றம்

*[அரங்கு = மேடை. ஏறு → ஏற்று → ஏற்றம் = ஏறிப் புலமை அல்லது திறமை காட்டுகை.]*

**அரங்கேற்று** *arang(u)-ēṟṟu*, பெ. (n.) *அரங்கேற்றம்* பார்க்க; see *arang(u)-ēṟṟam.*

*[அரங்கு + ஏற்று – அரங்கேற்று (முத.தொ.பெ.).]*

**அரங்கேற்று-தல்** *arang(u)-ēṟṟu-*, 5செ.குன்றாவி. (v.t.) 1. *ஒரு நல்லிசைப் புலவர் தம் புதுநூலை அல்லது பனுவலைத் தலையாய புலவரவையிற் படித்துக்காட்டி, அவர் நிகழ்த்தும் தடைகட் கெல்லாம் தக்க விடைகள் கூறி, அவர்தம் ஒப்பம் பெறுதல்;* to present, as an author, a new literary work, before an eminent body of learned men and get its approval, after countering all objections raised.

> "எண்ணிய சகாத்த மெண்ணூற்
> றேழின்மேற் சடையன் வாழ்வு
> நண்ணிய வெண்ணெய் நல்லூர்
> தன்னிலே கம்ப நாடன்

பண்ணிய விராம காதை
பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே
கவியரங் கேற்றி னானே''

(கம்பரா. பால. தனியன், மிகைப். 9). 2. ஓர் இளங்கணிகை, பயிற்சி முற்றியபின், தன் ஆடல் பாடலை இசையாசிரியர் முன்னும் நாடகவாசிரியர் முன்னும் ஆடிப்பாடிக் காட்டி, அவர்தம் ஒப்பமும் அரசனிடமிருந்து தலைக் கோற் பட்டமும் ஆயிரத்தெண் கழஞ்சு பொன் மதிப்பும் பெறுதல்; to give the first public performance, as a dancing girl, before competent authorities on the arts of singing and dancing and get their approval for proficiency, thus entitling her to receive the *Talaikkōl* title and eligibility to a prize of 1008 *kalañjus* of pure gold from the king (சிலப். அரங்கேற்று காதை).

ம. அரங்ஙேறுக

[அரங்கு = மேடை. ஏறு → ஏற்று. ஏற்றுதல் = மேடையேறிப் புதுநூலைப் படித்து விளக்கி அல்லது ஆடல்பாடலை நிகழ்த்திக் காட்டி, அறிஞரின் ஒப்பம் பெறுதல்.]

**அரங்கேற்றுப்படி** *arang(u)-ēṟṟu-p-paḍi*, பெ.(n.) அரங்கேற்றம் பார்க்க; see *arang(u)-ēṟṟam*.

**அரங்கேறு-தல்** *arang(u)-ēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. புதுநூலாசிரியன் அல்லது இளங்கணிகை அறிஞரின் ஒப்பம் பெறுதல்; to get the approval of competent authorities, as an author or a dancing girl. 'அவருட் கவியரங் கேறினார் எழுவர் பாண்டிய ரென்ப' (இறை. 1, உரை). மாதவி கரிகாலன் முன்னிலையில் ஆடல்பாட லரங்கேறினாள். 2. புதுநூல் அல்லது கணிகை திறம் அறிஞரின் ஒப்பம் பெறுதல்; to be approved by the authorities, as a new treatise or a dancing girl's ability.

[அரங்கு (மேடை) + ஏறு.]

அரங்கு பார்க்க; see *arangu*.

**அரங்கொழிசெய்யுள்** *arangoḻi-šeyyuḷ*, பெ. (n.) புறநாடக வுருக்களுள் இறுதியானது; the last item in the list of the species of musical compositions relating to themes other than love and intended for theatrical performance. 'புற நாடகங்களுக்குரிய உருவாவன: தேவபாணி முதலாக அரங்கொழிசெய்யு ளீறாக வுள்ள செந்துறை விகற்பங்க ளெல்லா மென்க' (சிலப். 3 : 14, அடியார்க். உரை).

**அரசகம்** *araš(u)-agam*, பெ. (n.) 1. அரசினர் வீடு; government house. 2. அரசன்வாழ் மனை; royal residence. 3. அரசிருக்கை; seat of government. 4. செம்மணத்தி; a kind of fragrant wood tree (சா.அக.).

[அரசு + அகம்.]

அரசன் பார்க்க; see *arašaṉ*.

**அரசகேசரி** *araša-kēšari*, பெ. (n.) பிற்காலச் சோழர் ஒருவர்விட்டு ஒருவராகத் தாங்கி வந்த பட்டம், பரகேசரி என்பதற்கு எதிர்; a title borne by the later *Cōlas* alternately, opp. to *parakēšari*. 2. பரராசசேகரவரசன் காலத் தவரும் தமிழ் இரகுவமிச ஆசிரியருமான பெயர் பெற்ற யாழ்ப்பாணப் புலவர்; name of a famous Jaffna poet, author of the Tamil *Iragu-vamišam*, contemporary of the king Pararāša-šēgaraṉ.

[அரசன் → அரச > Skt. rāja. Skt. kēsarin > த. கேசரி (அரிமா). அரசகேசரி = பகை யரசர்க்கு அரிமாப் போன்றவன்.]

**அரசங்கள்** *arašaṅ-kaḷ*, பெ. (n.) அரசமரத்தி னின் றெடுக்குங் கள்; pipal toddy (செ.அக.) — அரசமரத்தினின்று வடியும் பதநீர்; the liquid product of the tree peepul, used medicinally (சா.அக.).

[அரசு (ஒரு மரம்) + அம் (சாரியை) + கள்.]

**அரசசட்டம்** *araša-šaṭṭam*, பெ. (n.) ஓர் இறந்து பட்ட கணிதநூல் (யாப். வி. பக். 528); a treatise on mathematics, now not extant.

**அரசசின்னம்** *araša-šiṉṉam*, பெ. (n.) அரசர்க் குரியனவாகச் சொல்லப்படும் அடையாளப் பொருள்கள் இருபத்தொன்று. அவை: மகுடம், குடை, கொடி, முரசு, பூமாலை, கவரி, அரி யணை, யானை, சக்கரம், தோட்டி, சங்கு, மதில், தோரணம், நீர்க்குடம், கடல், சுறவு, ஆமை, இணைக்கயல், தீவம், அரிமா, விடை என்பன; the insignia of State and royal emblems numbering twenty-one, viz., crown, umbrella, flag, drum, garland, yak-tail fan, throne, elephant, wheel, elephant goad, conch, fort-wall, festoon, water-jar, sea, shark, turtle, pair of carp fish, lamp, lion and bull.

''முடிகுடை கவரி தோட்டி
முரசுசக் கரமே நால்வாய்
கொடிமதில் தோர ணம்நீர்க்
குடமலர் மாலை சங்கு

கடலொடு மகர மாமை
 கயலிணை யரிமாத் தீபம்
இடபமா சனமூ வேழு
 மிறைதிருப் பொறிக ளாமே''
 (சூடா. 12 : 121).

அரச சின்னமென்று மேற்குறித்த இருபத்தொன்றும் சின்னமல்ல; சில சின்னங்கள்; சில மங்கலப் பொருள்கள்; சில அரசனின் வலிமை பெருமை முதலிய சிறப்புகளைக் குறிப்பன.

முதன்மையான அரச சின்னங்களுள் ஒன்றான செங்கோல் இவற்றுட் சேர்க்கப் படாமை ஒரு குறையேயாம்.

**அரசண்மை** *araś(u)-aṇmai*, பெ. (n.) ***நாட்டுக் கேடு ஆறனுள் ஒன்று***; approach or nearness of an enemy king, one of the six disasters that may befall a land.

''மிக்கபெய லோடுபெய லின்மையெலி
 விட்டில்கிளி
அக்கண ரசண்மையோ டாறு''
 (குறள், 732, பரிமே. உரை).

*[அரசு + அண்மை.]*

*அரசன்* பார்க்க; see *araśaṉ*.

**அரசநாகம்** *araśa-nāgam*, பெ. (n.) ***பறவைமா நாகம்*** (நாமதீப.); winged serpent.

**அரசநீதி** *araśa-nīdi*, பெ. (n.) 1. ***அரசியல் முறை;*** kingly duties. 2. ***அரசியல் நூல்;*** political science, politics. ''அரசருக் கென்று கொண்டரச நீதியிற் சொன்னார்'' (பாரத. சூது. 71).

*[அரசன் → அரச +* **Skt.** *nīti.]*

**அரசப்பள்ளி** *araśa-p-paḷḷi*, பெ. (n.) ***வன்னியர் குலப் பிரிவுகளுள் ஒன்று;*** a division of the Vaṉṉiya caste.

*[அரசன் → அரச + பள்ளி.]*

**அரசப்புரசல்** *araśa-p-puraśal*, பெ. (n.) ***மிகக் குறைவு*** (இ.வ.); scarceness, scantiness (Loc.).

*[அரைதல் = தேய்தல். அரைதல் → அரைசல். புரைசல் = துளை, பொல்லம் பொத்துதல். அரைசல்புரைசல் (மீமிசைச் சொல்லான மரபிணை மொழி) → அரசல்புரசல் → அரசப் புரசல்.]*

**அரசம்பதநீர்** *araśam-pada-nīr*, ***அரசங்கள்*** பார்க்க; see *araśaṅ-kaḷ*.

**அரசம்புல்லுருவி** *araśam-pul(l)-uruvi*, பெ. (n.) ***அரசமரத்தின்மேல் முளைத்திருக்கும் புல்லுருவிச் செடி;*** a parasite on the pipal tree.

*[அரசு + அம் (சாரியை) + புல் + உருவி.]*

**அரசமாடம்** *araśa-māḍam*, பெ. (n.) ***பெரும்பயறு*** (நாமதீப.); chowli bean.

**அரசமுத்திரைக்காரன்** *araśa-muttirai-k-kāraṉ*, பெ. (n.) ***அரசனது முத்திரையை வைத்திருக்கும் அலுவலன்*** (புதுவை); keeper of the privy seal (Poṇḍ.).

*[அரசன் → அரச + முத்திரை + காரன்.]*

**அரசமுல்லை** *araśa-mullai*, பெ. (n.) ***அரசன் பகைவரை வென்று குடிகளைக் காக்குந் திறமையைப் போற்றிக் கூறும் புறத்துறை;*** theme extolling a king's power to destroy his foes and protect his subjects.

''செருமுனை யுடற்றுஞ் செஞ்சுடர் நெடுவே
லிருநிலங் காவல னியல்புரைத் தன்று''
 (பு.வெ. 8 : 17).

*[அரசன் → அரச + முல்லை.]*

**அரசர்** *araśar*, பெ. (n.) 1. ***அரசன் என்பதன் உயர்வுப் பன்மை;*** hon. pl. of *araśaṉ* (king). 2. ***அரசர்கள்;*** pl. of *araśaṉ* (king).

**அரசர்க்கரசன்** *araśarkk(u)-araśaṉ*, பெ. (n.) ***மன்னர்மன்னன் (சக்கரவர்த்தி);*** king of kings.

*[அரசர்க்கு + அரசன்.]*

**அரசர்குணம்** *araśar-kuṇam*, பெ. (n.) ***அரசர்க்கு வேண்டிய தூங்காமை, கல்வி, துணிவுடைமை என்னும் முக்குணங்கள்*** (சங்.அக.); the three indispensable qualities of kings, viz., vigilance, learning and power of determination.

''தூங்காமை கல்வி துணிவுடைமை
 யிம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு'' (குறள், 383).

அரசர்க்கு இன்றியமையாத சிறப்புக் குணங்கள் ஏழு. அவற்றுள் நான்கை இயல் பென்றும், மூன்றைக் குணமென்றும் பிரித்துக் கூறுவது பொருந்தாது. ஏழு குணங்களையும் ஒரே குறளில் அடக்கிக் கூற இயலாமை பற்றியே, அவற்றை இரு குறள்களில் கூறினார் திருவள்ளுவர்.

***அரசரெழுகுணம்*** பார்க்க; see *araśar-eḻu-kuṇam*.

**அரசர்குழு** *arašar-kuḻu*, பெ. (n.) ஐம்பெருங்குழு பார்க்க; see *aim-peruṅ-kuḻu*.

**அரசர்சின்னம்** *arašar-siṉṉam*, பெ. (n.) *அரச சின்னம்* பார்க்க; see *araša-šiṉṉam*.

**அரசர்பக்கம்** *arašar-pakkam*, பெ. (n.) அரசரின் **ஓதல், ஈதல், காத்தல், படைக்கலம் பயிறல், பொருதல், தண்டஞ்செய்தல் என்னும் அறு வகைத் தொழில்கள்;** occupations of a king, six in number, viz., learning, liberality, protection of subjects, practice of arms, warfare and chastisement.

*[பக்கம் = பகுதி. அரசர்பக்கம் = அரசர் தொழிற்பகுதி அல்லது கடமைக் கூறு.]*

அரசர் தொழில் ஆறே யன்றி ஐந்தல்ல. ''ஐவகை மரபி னரசர் பக்கமும்'' என்று தொல்காப்பியத்துள் (புறத். 20) காணப்படு வது வழுவாகும். தொல்காப்பியர் கருத்து இவ்வாறிருக்க முடியாது. இஃது ஏடெழுது வோரால் ஏற்பட்ட பிழை எனக் கருத இட முளது. 'அவ்வகை' என்பதனை 'ஐவகை' என்று பாடங் கொண்டுள்ளனர். இப் பாடத் திற்கேற்ப, 'ஓதல் வேட்டல் ஈதல் காத்தல் தண்டஞ்செய்தல் என்னும் ஐவகை யிலக் கணத்தை யுடைய அரசியற் கூறு' என்று, நச்சினார்க்கினியரும் தவறாக உரை கூறி யுள்ளார்.

அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர் என் னும் நால்வகுப்பார்க்கும், ஒரொக்க அவ்வாறு தொழிலே சூடாமணி நிகண்டு கூறுதல் காண்க (12 : 52, 53, 54).

''ஓதல் பொருதல் உலகு புரத்தல்
ஈதல் வேட்டல் படைபயிற லறுதொழில்''

என்று பிங்கலத் தொகுதியும் (நிகண்டும்) அர சர் தொழிலை ஆறாகவே கூறுகின்றது (5:42).

''அறனிழுக்காது'' (384) என்னும் குறளுரை யில், பரிமேலழகரும், 'அவ் வறமாவது, ஓதல், வேட்டல், ஈதலென்னும் பொதுத் தொழிலி னும், படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறந் தெறுதல் என்னுஞ் சிறப்புத் தொழிலினும், வழுவாது நிற்றல்' என்று அரசர் தொழில் ஆறென்றே குறித்துள்ளமை காண்க.

சேர சோழ பாண்டியர்குடி படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வருவதென்று, பரிமேலழகரும் ஒப்புக்கொண்டுள்ளமையால், வேட்டல் என்னும் பிற்கால ஆரியத் தொழில் தமிழரசர்க்குரிய தாகாது. ஆகவே, வேட்டல் என்பதற்குத் தலைமாறாகப் பொருதலையே அரசர் தொழிலாகக் கொள்ளல் வேண்டும். காத்தலும் தண்டஞ்செய்தலும் போரால் நிகழ்தலாலும், படைக்கலம் பயிறல் போருக்கேயாதலாலும், பொருதல் அரசர்க்கு இன்றியமையாத தொழிலாம். பிங்கலமும் பொருதலை அரசர் அறுதொழிலுள் ஒன்றாகக் குறித்திருப்பது கவனிக்கத் தக்கது. ''நுந் தமரேல் வெஞ்சமராம்'' என்னும் தனிப்பாடல் தொடரும் இவ் வுண்மையை வலியுறுத்தும்.

தண்டஞ்செய்தல் என்பது குற்றஞ் செய்த குடிகளைத் தண்டித்தலையுங் குறித்தலால், அதனுள் பொருதல் அடங்காது. மேலும், தண்டஞ்செய்தல் கருதிப் பகைமேற் செல்லும் வல்லரசும், ஒருகால் எதிர்பாராத கரணியங் களால் (காரணங்களால்) தோல்வியடைந்து தானே தண்டனைக்குள்ளாகினும் ஆகலாம்.

''ஓதலே வேட்டல் ஈதல்
உலகோம்பல் படைப யிற்றல்
மேதகு போர்செய் தீட்டல்
வேந்தர்செய் தொழில்கள் ஆறே''

என்று சூடாமணி நிகண்டும் (12:52) போரை அரசரறுதொழிலுள் ஒன்றாகக் குறிக்கின்றது.

இங்ஙனம், பொருதலும் அதற்கின்றியமை யாத படைக்கலப் பயிற்சியும் அரசரின் முதன் மையான தொழில்களாம்.

இனி, போர்செய்தீட்டல் என்று, சூடா மணியார் போரைப் பொருளீட்டல் வகை யாகக் குறித்திருப்பதும் கவனிக்கத்தக்கது.

''உறுபொருளும் உல்கு பொருளுந்தன்
ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்''
(குறள், 756)

என்றது பொதுமறையும்.

இனி,

''.................................ஒன்னார்
ஆரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய்''
(புறநா. 203 : 9-11),

''அரிய வெல்லா மெளிதி னிற்கொண்
டுரிய வெல்லா மோம்பாது வீசி''
(மதுரைக். 145-6),

''பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற
அரிய வென்னா தோம்பாது வீசி''
(பதிற்றுப். 44 : 3-4)

என்பவற்றால், அரசரது ஈதல் தொழிலுக்கும் போர் ஏதுவாகு மென்பது பெறப்படும்.

ஆதலால், நச்சினார்க்கினியர் கூறிய வேட்டலை நீக்கிவிட்டுப் படைக்கலம் பயிறல், பொருதல் என்னும் இரண்டையுஞ் சேர்த்து ஆறாக்கி,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்பதன்கீழ்

"ஐவகை மரபின் அரசர் பக்கமும்" என்பதை

"அவ்வகை மரபி னரசர் பக்கமும்" என்று மாற்றிப் பாட மோதுவதே தக்கதாம். இங்ஙனம் ஓதின் பொருள் நிரம்புவதொடு, தொல்காப்பியமும் வழுவுதலின்றாம்.

**அரசர்பரி** *arašar-pari*, பெ. (n.) ***பெண்டிர் மணம்போல மிக்க மணத்ததாய், வாழைப்பூ மடல் போன்ற செவியுடையதாய், நாற்காலும் முன்புறமும் முதுகும் பிடர்த்தலையும் முகமும் வெண்மையாய், 82 விரலம் (அங்குலம்) உயர்ந்ததாயுள்ள அரசர்க்குரிய குதிரை;*** royal horse, supposed to have fragrant smell like women, ears like the petals of a plantain flower, with legs, forepart, back, neck and face all white, and a height of 82 inches.

"மாதர்தம் மணமென மிக்க மணத்தது
வாழை மடலென வளர்ந்த செவியது
நாலு தாளும் எருத்தும் முகனும்
வெந்நு முன்னும் வெண்மை யுடையதாய்
எண்பத் திருவிர லுயர முயர்ந்தது
பண்புடை யரசர்க் காவது பரியே"
(பிங். 6 : 1493).

**அரசர்பா** *arašar-pā*, பெ. (n.) ***அரசர்க்கே யுரிய தாகப் பாட்டியல்கள் கூறும் அகவல் என்னும் ஆசிரியப்பா;*** *Agaval* metre, the kind of verse prescribed by treatises on Poetics, to be used exclusively in respect of kings. "அரசர் பாவா லாற்றுப் படைமேல்" (இலக். வி. 873). "காவலர் சாதியாகிய அகவற்கு" (பன். பாட். 92).

**அரசர்பின்னோர்** *arašar-pinnōr*, பெ. (n.) ***தொழில் பற்றிய நால்வகுப்பாருள் அரசர்க்கு அடுத்துச் சொல்லப்படும் வணிகர்;*** Vanigar (Vaisyas) ranking next to kings in the vocational system of castes. "அரசர் பின்னோர்க் கருமறை மருங்கின்" (சிலப். 16 : 44).

**அரசர்மன்னன்** *arašar-mannan*, பெ. (n.) ***துரியோதனன் (சூடா.);*** Duryodhana, as a king of kings.

**அரசரறுகுணம்** *arašar-aṟu-kuṇam*, பெ. (n.) ***அரசர் பிறவரசரொடு தொடர்புகொள்ளும் முறைகள் ஆறு; அவை: நட்பு, பகை, செலவு, இருக்கை, கூடினரைப் பிரித்தல், கூட்டல் என்பன*** (பு. வெ. 9 : 37, உரை); six measures of foreign policy of kings, viz., friendship, enmity, expedition, waiting for opportunity, effecting discord among foes, restoring friendship with those who have seceded.

*[அரசர் + அறு + குணம். ஆறு → அறு.]*

இவற்றை அரசர் அறுகுணம் என்னாது, அரசர் அறுவலக்காரம் அல்லது அறுதிறம் என்று கூறுவது மிகப் பொருத்தம்.

**அரசரறுதொழில்** *arašar-aṟu-toḻil*, பெ. (n.) ***ஓதல், ஈதல், காத்தல், படைக்கலம்பயிறல், பொருதல், தண்டஞ்செய்தல் என்னும் அரசர் அறுசெயல்கள்;*** six occupations of kings, viz., learning, liberality, protection of subjects, practice of arms, warfare and chastisement.

*[அரசர் + அறு + தொழில். ஆறு → அறு.]*

**அரசர்பக்கம்** பார்க்க; see *arašar-pakkam*.

**அரசரியல்பு** *arašar-iyalbu*, பெ. (n.) ***அரசர்க்கு இயல்பாக இருக்கவேண்டிய தன்மைகள்; அவை: அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் என்பன;*** the indispensable natural kingly qualities, four in number, viz., intrepidity, liberality, sagacity and energy.

"அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு"
(குறள், 382).

*[அரசர் + இயல்பு.]*

**அரசரெழுகுணம்** *arašar-eḻu-kuṇam*, பெ. (n.) ***அரசர்க்கு எப்போதும் இருக்கவேண்டிய ஏழு குணங்கள்; அவை: அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை என்பன;*** the seven qualities that must be permanently possessed by kings, viz., intrepidity, liberality, sagacity, energy, vigilance, learning and power of determination.

"அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு"
(குறள், 382).

"தூங்காமை கல்வி துணிவுடைமை
இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு" (குறள், 383).

ஊன்றிநோக்கின், இவ்வேழு குணங்களும் அரசர்க்கு ஒருபடித்தாய் என்றுமிருக்க வேண்டிய குணங்களென்று திருவள்ளுவர் கொண்டமை புலனாம். எஞ்சா இயல்பு, நீங்காக்குணம் என்னும் இரு பயனிலைகளும், சற்றும் ஏற்றத்தாழ்வின்றிப் பொருளும் வலிமையும் ஒத்திருத்தல் காண்க. ஏழு குணங்களையும் ஒரே குறளில் அடக்க வியலாமைபற்றியே, இருவேறு குறளில் இடையீடின்றித் தொடர்ந்து கூறினார் என அறிக.

[அரசர் + எழு + குணம். ஏழு → எழு.]

**அரசரொளி** *araśar-oḷi*, பெ. (n.) **குடிகளைப் பேணல், செங்கோலாட்சி, கொடை, அருளுடைமை ஆகிய நாற்குணங்களை யுடைமையால், அரசர் குலத்திற்கு ஒளிபோல் வான்;** that king who is a luminary among rulers by virtue of possessing the four essentials, viz., tender protection of subjects, righteous government, munificence and graciousness.

"கொடையளி செங்கோல் குடியோம்பல்
நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி"
(குறள், 390).

[அரசர் + ஒளி.]

**அரசவனம்** *araśa-vanam*, பெ. (n.) **தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாவடுதுறையென்னுஞ் சிவநகர்;** *Tiruvāvaḍuturai*, a Śiva shrine in Thañjāvūr District. 'ஸ்ரீஞானக் கோமுத்தி, நவகோடி சித்தவாசபுரம், அரசவனம் ஆதியாகிய திருப்பெயர்கள் பூண்ட திருவாவடுதுறையை அடைந்து' (கச்சியப்ப முனிவரர் சரித்திரம், தணி. 4).

**அரசவாகை** *araśa-vāgai*, பெ. (n.) **அரசனின் அறுதொழில் வெற்றியைப் புகழ்ந்துகூறும் புறத்துறை** (பு. வெ. 8 : 3); theme extolling the successful discharge of the sixfold duties of a king.

[அரசன் → அரச + வாகை.]

**அறுதொழில்கள்: ஓதல், காத்தல், படைக் கலம் பயிறல், பொருதல், தண்டஞ்செய்தல்;** learning, liberality, protection, practice of arms, warfare and chastisement.

புறப்பொருள் வெண்பா மாலை ஒருமருங்கு தொல்காப்பியத்தைப் பின்பற்றுவதோரூ. தமிழகத்தில் ஆரியம் வேரூன்றிய பிற்கால நூலாதலால், அது, "ஐந்தொழி னான்மறை முத்தீ யிருபிறப்பு" அரசனியல்பாகக் கூறு வது தமிழ் மரபிற்கு முற்றும் முரணானதாம்.

**அரசவாரியன்** *araśa-vāriyaṉ*, பெ. (n.) **குதிரை நடத்துவோரிற் சிறந்தவன்** (கலித். 96, உரை); skilled horseman.

**அரசவாலன்** *araśavālaṉ*, பெ. (n.) **இராமநாதபுர மாவட்ட முட்புதர்களில் காணப்படும், நீண்ட வாலுடைய ஒருவகைக் குருவி;** a long-tailed bird to be found in thickets in Ramanāthapuram District. — *Paradise flycatcher*.


அரசவாலன்

**அரசவிலைமுருகு** *araśa-v-ilai-murugu*, பெ. (n.) **காதணிவகை** (சரவண. பணவிடு. 121); an ear-ornament.

ம. அரசில

[அரசு (அரசமரம்) → அரச (அகரமேறிய கு.பெ.எ.) + இலை + முருகு. அரசிலை வடிவிற் செய்யப்பட்டதனால் அரசிலை முருகென்ப் பெயர் பெற்ற காதணி; இலக்கியத்தில் அரச விலை முருகென்னும் வடிவுகொண்டது. அரசு + இலை – அரசிலை. அரச + இலை – அரச விலை. வகரவுடம்படுமெய் புணர்ச்சியால் தோன்றியது. அரசமரம், அரசங் கள், அரசம் பட்டை முதலிய வழக்குகள் அரசவிலை யென் பதற்கு வழிவகுத்தன. இனி, அரசன் என்பது பூவரசமரப்பெயராதலால், அரசவிலை என்னும் கூட்டுச்சொல்லில் அரச என்னும் நிலைச்சொல் ஈறுகெட்ட குறிப்புப் பெயரெச்சம் என்றலுமாம்.]

**அரசவை** *araśavai*, பெ. (n.) 1. **அரச அவை;** king's council. 2. **அரச அவைக்களம்;** king's council chamber or audience hall. "அரசவை யிருந்த" (பொருந. 55).

[அரசன் → அரச + அவை. இனி, அரசு + அவை என்றுமாம்.]

**அரசளி-த்தல்** *araš(u)-aḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **அரசாளுதல்**; to rule, as a king. "திருவாரூ ரரச ளிப்பவர்" (பெரியபு. திருஞான. 506).

*[அரசு + அளி.]*

**அரசன்**[1] *arašaṉ*, பெ. (n.) 1. **ஆள்வோன்**; king. 2. **வன்னியன்** (பொதி.நி.); a person of the Vanniya caste. 3. **வியாழன்** (பிங்.); Jupiter. 4. **பூவரசு** (மருத்.); portia tree, *Thespesia populanea.* 5. **கோவைக்கொடி** (மருத்.); a common creeper of the hedges.

ம. அரசன்; க. அரச; து. அரசு; தெ. அரசு, ராசு; கோத. அர்ச்; துட. அர்ச்.

*[அரசனுக்கு இன்றியமையாத கருவி வலிமை. அது படைவலிமை, சூழ்ச்சிவலிமை, மனவலிமை என முத்திறப்படும்.*

*உரம் = வலிமை. உரம் → உரவு = வலிமை. உரவு → உரவன் = வலியோன். உரவன் → உரவோன்.*

*"பரந்துபட்ட வியன்ஞாலம்*
*தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ*
*யொருதா மாகிய வுரவோ ரும்பல்"*
*(புறநா. 18 : 2 - 4)*

*இதிற் பாண்டியன் நெடுஞ்செழியனின் முன்னோரை யெல்லாம் உரவோர் என்றார் குடபுலவியனார்.*

*உரவன் = வலியோன், அரசன். உரவு → அரவு → அரசு. ஒ.நோ: பரவு → பரசு. விரவு→ விரசு. அரவணைத்தல் = அரசுபோ லணைத்துக் காத்தல். அரவு → அரவன் → ராவன் → ராவ் (மராட்டியர் பட்டப்பெயர்).*

*ஒ.நோ: அரசு→ அரசன்→ராசன்→ராஜன்→ ராஜ், ராஜு (ஒரு தெலுங்க வகுப்பார் பட்டப் பெயர்).*

*அரசு → அரசன் → அரைசன் → அரையன் → ராயன் → ராயர்.]*

1. **விசயநகர அரசர் பட்டப்பெயர்.** 2. **ஒரு சார் கள்ளரின் பட்டப்பெயர்.** த. அரசன் > **Gk.** *archon*, one of the nine chief magistrates in ancient Athens, ruler, president. **L.** *rex*, king; *regis*, king.

**Skt.** ராஜன் (rājan) *raj*, to shine அல்லது *rnj*, to make straight or right என்று சமற்கிருதச் சொல்லிற்கு மூலங் காட்டுவது பொருந்தாது; *reg(o)*, to direct என்று இலத்தீன் சொல்லிற்கு மூலங் காட்டுவது பொருந்தப் புகலுதலே யன்றி உண்மையான தென்று ஏற்கத் தக்கதன்று. 'ரஜ்' (திகழ்) என்பது 'ரங்' (நிறம்) என்பதினின்று திரிக்கப் படுதலால், அதை ராஜன் என்பதற்கு மூலங் காட்டுதல் வலிந்தும் நலிந்தும் கோடலே யாம்.

Royal, royalty, royalist, vice-roy முதலிய ஆங்கிலச் சொற்களும், அவற்றிற்கு மூலமான பிரெஞ்சு இலத்தீன் சொற்களும், ரால், ராய், ராய, ராயலு, ராசு என்னும் பட்டப்பெயர் களும், அரசன் என்னும் தமிழ்ச்சொல்லையே மேற்குறித்த ஆரியச் சொற்கட்கு மூலமாகக் காட்டுதல் காண்க.

**அரசன்**[2] *arašaṉ*, பெ. (n.) 1. **துருசு** (மூ.அ.); blue vitriol (செ.அக.) — **துரிசு**; copper acetate (சா.அக.). 2. **கார்முகில் நஞ்சு** (பாடாணம்) (வின்.); a mineral poison (செ.அக.) — a kind of native arsenic (சா.அக.). 3. **வாண கெந்தகம்** (வின்.); a prepared arsenic (செ. அக.) — **வாணகெந்தி**; stick or roll sulphur (சா.அக.).

**அரசன்கன்னி** *arašaṉ-kaṉṉi*, பெ. (n.) **கந்தகம்**; sulphur (சா.அக.).

**அரசன்தோல்** *arašaṉ-tōl*, பெ. (n.) **அரசன் பட்டை** பார்க்க; see *arašaṉ-paṭṭai.*

**அரசன்பட்டை** *arašaṉ-paṭṭai*, பெ. (n.) **பூவரசம் பட்டை**; the bark of the portia or tulip tree (சா.அக.).

**அரசன்விருத்தம்** *arašaṉ-viruttam*, பெ. (n.) **பத்துக் கலித்துறையும், முப்பது விருத்தமும் கலித்தாழிசையுமாக, மலை கடல் நாட்டு வரணனையும் நில வரணனையும் வாண் மங்கலமும் தோண்மங்கலமும் பாடி முடிக்கும் பனுவல் வகை. இது முடிபுனைந்த வேந்தற் காம்** (தொல். வி. 283, உரை); poem celebrating the natural resources, prosperity of the land and prowess of a ruling king, containing 10 *kalitturai* and 30 *viruttam* besides 30 *kalittāḻišai.* விருத்தம் என்பது தனித்தமிழில் மண்டிலம் எனப்படும்.

**அரசாங்கம்** *arašāṅgam*, பெ. (n.) **அரசு**; government.

க. அரசாங்க

**அரசாட்சி** *arašāṭci*, பெ. (n.) **அரசாளுகை**; reign, rule, government. "என்னேயிவ்

வரசாட்சி யினிதே யம்மா" (கம்பரா. யுத்த. மீட்சி. 221).

ம. அரசு; க. அரசாளிகெ.

[அரசு + ஆட்சி.]

**அரசாணி**[1] *arasāṇi*, பெ. (n.) அரசி; queen. அல்லியரசாணிமாலை.

க. அரசாணி, அரசி.

[அரசன் (ஆ.பா.) – அரசி (பெ.பா.) → அரசினி (இரட்டைப் பெ.பா.) → அரசாணி. இராணி (ராஜ்ஞீ) என்னும் வடசொல் திரிபின் வடிவைப் பின்பற்றி அரசாணி என்னும் வடிவு ஏற்பட்டிருக்கலாம். ஒ.நோ: பாணன் → பாணி → பாணினி → பாடினி. 'இ' பெ.பா. ஈறு.]

**அரசாணி**[2] *arasāṇi*, பெ. (n.) 1. அரசங் கொம்பு; branch of the pipal tree. "அரசாணியை வழிபட்டு" (திவ். பெரியாழ். 3.8:3). 2. **அரசங்கொம்பு நடப்பட்ட மண மேடை அல்லது அறை** (யாழ்.அக.); marriage platform having a branch of pipal planted on it.

[அரசு (மரம்)+ஆணி (நிலைக்களம், தாங்கல்). "மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறநா. 186:2). ஆதலால், உழுவார்போல் உலகத்திற்கு ஆணியாயிருக்கும் அரசனுக்கு அடையாளமாக நிறுவப்பெறும் அரசமரக் கொம்பு, அரசாணிக் கொம்பு எனப்பட்டது போலும். இனி, அரசனுக்கு அடையாளமாக ஊன்றுங்கோல் என்றுமாம். ஆணுதல் = ஊன்றுதல். 'அரசாணி' மண மேடையைக் குறிப்பின், இடவணாகுபெயர் (தானியாகுபெயர்).]

**அரசாணி**[3] *arasāṇi*, பெ. (n.) அம்மி; a flat horizontal stone used for macerating spices for curry (திவ். பெரியாழ். 3.8 : 3, வியா.).

[அரை + சாணை (சாணைக்கல்) – அரை சாணை → அரசாணை → அரசாணி.]

**அரசாணிக்காய்** *arasāṇi-k-kāy*, பெ. (n.) **பூசணிக்காய்** (M.M.); pumpkin, *Cucurlita maxima*.

**அரசாணிக்கால்** *arasāṇi-k-kāl*, பெ. (n.) **மண வறையில் முருக்குடன் நடப்படும் அரசங் கொம்பு**; pipal branch along with branches of other trees kept planted on a platform and around which the bridegroom and bride are made to go in a marriage ceremony.

[அரசு + ஆணி + கால் (கொம்பு, தூண்). அரசாணி = மணவறை.]

**அரசாணிப்பானை** *arasāṇi-p-pāṇai*, பெ. (n.) பலவண்ணம் பூசினவும், நீரில் அல்லது தவசத்தில் சில சமையங்களில் பொன்துணுக்குகள் கொண்டன வும், மணவறைப் பக்கத்தில் வைக்கப்படுவனவுமான அடுக்குப் பானை; large painted earthen pots placed one above another near the marriage chamber, and often அரசாணிப்பானை containing water or grain with a few pieces of gold thrown in.



க. அய்ரணெ; தெ. ஐரேனி.

[அரசாணி (மணமேடை, மணவறை) + பானை.]

**அரசாணிமேடை** *arasāṇi-mēḍai*, பெ. (n.) **அரசங்கொம்பு நடப்பட்ட மணமேடை**; marriage platform, on which is planted a pipal branch.

**அரசாணை** *arasāṇai*, பெ. (n.) **அரசு வெளி யிட்ட ஆணை**; order issued by the government.

க. அரசாணெ

**அரசாமியம்** *arasāmiyam*, பெ. (n.) **செவ்வகத்தி**; a red species of the *agatti* tree, *Coronilla coccinea* (சா.அக.).

**அரசாள்[ளு]-தல்** *arasāḷ-*, 10 செ.குன்றாவி. (v.t.) **அரசன் ஆட்சி செய்தல்**; to reign, rule, govern. "மூண்டபகை செற்றுலக முற்று மரசாளும் பாண்டியன்" (திருவாத. பு. மந்திரி. 2).

க. அரசாளு

[அரசு + ஆள்.]

அரசன் பார்க்க; see *arasaṉ*.

**அரசாள்** *arasāḷ*, பெ. (n.) **கரும்பு**; sugar-cane, *Saccharum officinarum* (சா.அக.).

**அரசானம்** *arasāṉam*, பெ. (n.) 1. **அரசு** (மலை.); pipal. 2. **அரத்தை** (மலை.); galangal. 3. **பேரரத்தை**; greater galangal, *Alpinia galangal* (major) (சா.அக.).

ம. அரசு; Skt. rāsna.

**அரசி** *araši*, பெ. (n.) 1. *அரசன் தேவி*; queen. "மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை" (தேவா. *3 . 378 : 1*). 2. *நாடாள்பவள்*; reigning queen. 3. *கற்பரசி*; queen of chastity. "உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகிற் பின்னைக் காட்டுவ தரியதென் றெண்ணி" (கம்பரா. யுத்த. மீட்சி. 122).

க. அரசி

[*அரசன் (ஆ.பா.) – அரசி (பெ.பா.). 'இ' பெ. பா. ஈறு.*]

***அரசியம்** *arašiyam*, பெ. (n.) 1. *அரசு, ஆளுகைக்குட்பட்ட நிலம்*; kingdom, territory of a ruler.

ம. அரசு

[*அரசு → அரசியம். அரசியம்* > **Skt.** rājya.]

**அரசியல்** *araš(u)-iyal*, பெ. (n.) 1. *அரச னியல்புங் கடமையும்*; kingly qualities and duties. 2. *ஆட்சி*; government. 3. *ஆட்சி யமைப்பு*; the institution of government, requisites of regal administration. 4. *ஆட்சி நூல்*; political treatise. 5. *அரசனியல்பைக் கூறும் திருக்குறள் பகுதி*; a chapter of *Tirukkuṟaḷ* dealing with kingship.

[*அரசு + இயல் (தன்மை, முறை).*]

**அரசிரு-த்தல்** *araš(u)-iru-*, 3 செ.குன்றாவி. (v.t.) *அரசாக வீற்றிருத்தல்*; to sit in state, as a king. "கன்னிப்பெண் ணரசிருந்து" (திருவிளை. தடாதகை. 43).

[*அரசு + இரு.*]

**அரசிருக்கை** *araš(u)-irukkai*, பெ. (n.) 1. *அரசு வீற்றிருக்கை*; the sitting in state of a king or queen. 2. *அரசவைக்களம் அல்லது ஓலக்க மண்டபம்* (பிங்.); king's council chamber or audience hall. 3. *அரியணை*; throne. 4. *ஆட்சியுரிமை*; the right to govern. "தனைய னாங் குலோத்துங் கற்குத் தன்னர சிருக்கை நல்கி" (திருவிளை. பழியஞ். 2).

[*அரசு + இருக்கை (தொ.பெ., தொ.ஆகு.).*]

**அரசிருப்பு** *araš(u)-iruppu*, பெ. (n.) 1. *அரசு வீற்றிருக்கை*; the sitting in state of a king or queen. 2. *அரசு வீற்றிருக்குமிடம்*; the seat of a king or government. "அவனகரு மரசிருப்பு மண்டபமும்" (திருவிளை. மாணிக். 77).

க. அரமனெ

[*அரசு + இருப்பு.*]

40

**அரசிலக்கணம்** *araš(u)-ilakkaṇam*, பெ. (n.) *அரசர்க்குரிய குணங்கள்*; kingly qualities. "நித்திய கரும மகன்று வாளா விருந்திடுத லரசிலக்கண மன்றென" (மகாராஜா துறவு, 31).

க. அரசஞ்செ

[*அரசு + இலக்கணம்.*]

**அரசிலி** *arašili*, பெ. (n.) *ஒரு சிவதகர்* (பெரியபு. திருஞான. 1135); a Šiva shrine.

**அரசிலை** *araš(u)-ilai*, பெ. (n.) 1. *அரசமரத்தின் இலை*; pipal leaf. 2. *அரைமூடி, அற்றம் மறைக்கும் சிறுமியர் அணிகலம்*; pipal leaf-shaped plate of metal or glass worn by naked little girls to cover their pubes. 3. *எருதின் தலைமேலிடும் ஒருவகை யணி*; ornament, for the head of a bull, in the shape of a pipal leaf. "அரசிலை யொளிபெற மிளிர்வதோர் சினமுதிர் விடை" (தேவா. 3 . 344 : 2). 4. *விலங்கு களுக் கிடுஞ் சூட்டுக் குறி*; figure of a leaf as branded on beasts (W.).



அரசிலை

[*அரசு + இலை.*]

**அரசிலைக்கரண்டி** *araš(u)-ilai-k-karaṇḍi*, பெ. (n.) *அரசிலை வடிவான கொத்தன் கரண்டி*; mason's trowel in the shape of a pipal leaf.



அரசிலைக்கரண்டி

[*அரசு + இலை + கரண்டி.*]

**அரசிலைத்தூக்கம்** *araš(u)-ilai-t-tūkkam*, பெ. (n.) *அரைஞாணிற் கோத்துப் பெண் குழந்தையின் அரையிற் கட்டுவதும், அரசிலை போன்று பொன் அல்லது வெள்ளியால் ஆனது மான தகட்டணி* (இ.வ.); plate of gold or silver in the shape of pipal leaf, strung in the waistband of little girls to cover their pubes (Loc.).

[*அரசு + இலை + தூக்கம். தூக்கம் = தொங் கல்.*]

**அரசிலைத்தொங்கல்** *araś(u)-ilai-t-toṅgal*, பெ. (n.) *அரசிலைத்தூக்கம்* பார்க்க; see *araś(u)-ilai-t-tūkkam.*

*[அரசு + இலை + தொங்கல்.]*

**அரசிலையைம்படை (அரசிலைப் பஞ்சாயுதம்)** *araś(u)-ilai-y-aimbaḍai*, பெ. (n.) *அரசிலை வடிவாகப் பொன்னாற் செய்யப்பட்டதும், திருமாலின் ஐம்படை பொறிக்கப்பட்டதும், சிறுபிள்ளைகளாலும் பெண்டிராலும் அணியப் படுவதுமான கழுத்தணி* (யாழ்ப்.); a fig leaf-shaped gold ornament worn by children or women, with the *tāli* of a woman showing in relief the five weapons of *Tirumāl* (Viṣṇu) (J.).

*[அரசு + இலை+ஐம்+படை. ஐந்து → ஐம்.]*

திருமாலியம் (வைணவம்) தமிழர்மத மாதலாலும், ஐம்படைத்தாலி யென்பதே பண்டை வழக்காதலாலும், பஞ்சாயுதம் என்னும் வடசொல் வழக்குப் பிற்காலத்த தாகல் வேண்டும்.

**அரசிலைவாளி** *araś(u)-ilai-vāḷi*, பெ. (n.) *அரசிலை வடிவான பெண்டிர் காதணி;* a fig leaf-shaped ear ornament of women.

ம. அரசில

*[அரசு + இலை + வாளி.]*

**அரசிறை**[1] *araś(u)-iṟai*, பெ. (n.) *அரசனுக்கு இறுக்கப்படும் (செலுத்தப்படும்) நிலவரி;* tax on land. "இறைவற் கிறையொருங்கு நேர்வது நாடு" (குறள், 733).

*[அரசு + இறை. இறுத்தல் = கடனாகச் செலுத்துதல். இறு → இறை.]*

**அரசிறை**[2] *araś(u)-iṟai*, பெ. (n.) *அரசர்க்கரசன்;* king of kings. "அரசிறை யரசரொ டெழுத லும்" (சூளா. கல்யாண. 109).

*[அரசு + இறை. இறுத்தல் = தங்குதல், எங்குந் தங்குதல். இறு → இறை = எங்குந் தங்கும் இறைவன் (கடவுள்). உலகில் இறைவனை நிகர்க்கும் அல்லது அதிகாரத்தால் தன் நாடு முழுதுந் தங்கும் அரசன்.]*

**அரசு** *araśu*, பெ. (n.) 1. *அரசன்;* king. "நராதிப னாகருக் கரசாய் மகுட மேந்திய குரிசில்" (பாரத. குருகுல. 20). 2. *அரசர்;* kings. "அரசுபட வமருழக்கி" (மதுரைக். 128). 3. *அரசனது தன்மை;* kingliness. "மான முடைய தரசு" (குறள், 384). 4. *அரசாட்சி;* government. "அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த" (சிலப். 13 : 64). 5. *அரசியம் (ராஜ்யம்);* kingdom, territory of a ruler. "எனதுயி ரரசு வாழ் வென்ப யாவையும்" (பாரத. குருகுல. 51). 6. *தலைமையானது;* that which is pre-eminent. "மின்னார் தமக்கோ ரரசே" (கந்தபு. தேவ. தெய்வ. 143). 7. *பண்டை வேளாளர் பட்டப்பெயர்;* an ancient title of Vēḷāḷa chieftains. 'வேளெனவும் அரசென வும் உரிமை யெய்தினோரும்' (தொல். பொருள். அகத். 30, நச். உரை). 8. *தேவார மூவருள் ஒருவராகிய திருநாவுக்கரசு நாயனார்;* *Tirunāvukkaraśu Nāyaṉār*, one of the three authors of *Tēvāram.* "அங்கண ராரூர் வணங்கிப் போந்த அரசும் எதிர்வந் தணைய" (பெரியபு. திருஞான. 494). 9. *அரசமரம், மரங்கட்குள் அரசுபோல் ஓங்கியது;* pipal tree. 10. *காவலுரிமை* (P.T.L.); privileges allowed to watchmen. 11. *காணி நிலம்* (பொதி.நி.); domain, land. 12. *சதுரங்க ஆட்டத்தில் அரசன் கட்டுப்பட விருத்தலைக் குறிக்கும் குறிப்புச் சொல்;* an exclamation equivalent to 'check', used in the game of chess.

ம., து. அரசு; க. அரசு, அரச; தெ. அரசு, ராசு; பட. ராசு; Skt. rājan.

*[அரசன் → அரசு (ஈறு கெட்டது). ஒ.நோ: வேந்தன் → வேந்து.]*

*அரசன்* பார்க்க; see *araśaṉ.*

'அத்திபோல் துளிர்த்து' என்று தொடங் கும் மரபு திருமண வாழ்த்துத் தொடரில், 'அரசுபோ லோங்கி' என்றிருப்பதனால், அரசமரம் மரங்களுக்குள் அரசாகக் கருதப் பட்டது போலும்!

அரசமர வுறுப்புகள் பலவகையில் மருந் தாகப் பயன்படுவதுடன், அரசங்கொம்பு மணவறையிற் காப்பாக நடப்படுவதும், அரச மரம் கோயில் குளங்களின் அருகில் வைத்து வளர்க்கப்படுவதும், அதனடியிற் பிள்ளை யாரும் பிற வழிபடும் உருவங்களும் வைக்கப் பெறுவதும், புத்தர் அதனடியில் ஓகிருந்த தனாலேயே ஓதி (ஞானம்) அடைந்தார் என்று சொல்லப்படுவதும், அம் மரம் தெய்வத் தன்மையுள்ள தென்னும் மக்கள் கருத்தைப் புலப்படுத்தும். அதற்கு மேலை நிலைத்திணை நூலார் இட்ட '*Ficus religiosa*' என்னும் பெயரும் அதை வலியுறுத்தும்.

**அரசமரத்தின் இனவகைகள் :**

1. நல்லரசு (புண்ணியவரசு); sacred fig, *Ficus religiosa*.
2. கொடியரசு; short tailed pipal, *Ficus arnottiana*.
3. கல்லரசு; wild pipal, *Urostigma arnottianum*.
4. ஆற்றரசு; river side pipal.
5. மலையரசு; hill pipal, *Ficus vagas*.
6. பூவரசு; flowering pipal, portia tree, *Thespesia populnea*.

இவற்றுள், ஆற்றரசு தவிர ஏனையவெல்லாம் **சாம்பசிவம்பிள்ளை** அகரமுதலியிற் சொல்லப்பட்டவை.

பூவரசு என்பது, இலைவடிவொன்று தவிர ஏனை வகைகளில் அரசமர வகைகளை ஒத்த தன்று. வெளிப்படைப்பூ (phanerogam) வுண்மையால், பூவரசென்று, கரந்தபூ (cryptogam) வுள்ள பிற அரசமர வகைகளினின்று பிரித்துக் கூறப்பட்டது.

ஏதேனும் உறுப்பு வடிவொப்புமைபற்றி, பல மரஞ்செடிகொடிகள் அடையடுத்த பொதுப்பெயர் பெற்றுள்ளன. அவையெல்லாம் ஓரினத்தவல்ல. நெல்லிக்கும் கீழ்க்காய்நெல்லிக்கும், வாழைக்கும் கல்வாழைக்கும், வாகைக்கும் நிலவாகைக்கும் யாதொரு தொடர்புமில்லை. இங்ஙனமே அரசிற்கும் பூவரசிற்கும் என அறிக. இவ் விரண்டும் மரமாயிருப்பதே ஒற்றுமை.

**அரசுக்காரன்** *arašu-k-kāraṉ*, பெ. (n.) **காவலுரிமைக்காரன்** (P.T.L.); person holding particular privileges for doing police duty.

*[அரசு (காவல்) + காரன் (உரியவன்). 'காரன்' ஆ.பா. ஈறு.]*

**அரசுக்காவல்** *arašu-k-kāval*, பெ. (n.) 1. **நாட்டுப் பொதுக்காவல்** (M.M.), **ஊர்க்காவல் என்பதற்கு எதிர்**; general police duty, as distinguished from village police duty. 2. **நாட்டுப் பொதுக்காவல் செய்வதற்காக ஏற்பட்ட நில மானியம்** (R.T.); land granted for services in performing general police duties, dist. fr. *ūrkkāval*.

*[அரசு + காவல்.]*

**அரசுகட்டில்** *arašu-kaṭṭil*, பெ. (n.) **அரசன் வீற்றிருக்கும் அரியணை**; throne. "அரைசு கட்டிலிற் றுஞ்சிய பாண்டியன்" (சிலப். 23 : கட்டுரை, 17).

(அரசுகட்டில் என்பது, அரசின் அல்லது அரசனது கட்டில் என்று 6 ஆம் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளப்பட்டதனால் இயல்பு புணர்ச்சியாயிற்று. முரசுகட்டில் என்பதும் இங்ஙனமே.)

**அரசுசெய்-தல்** *arašu-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) **ஆளுதல்**; to govern, reign, rule.

**அரசுசொல்(லு)-தல்** *arašu-šol(lu)-*, (8) செ.கு.வி. (v.i.) **சதுரங்க விளையாட்டில் அரசனுக்குப் பகைக்காயை எடுத்துவைத்து, 'அரசு' என்று சொல்லுதல்**; to say 'check' in a chess game.

**அரசுதலைபணி-த்தல்** *arašu-talai-paṇi-*, 4 செ.கு.வி. (v.i.) **முடிசூட்டப் பெறுதல்**; to be crowned as king. "அங்கர்கோனா யரசுதலை பணித்து" (ஞானா. 32).

*[பணிதல் (த.வி.) → பணித்தல் (பி.வி.). முடிசூடும்போது தலை தாழ்த்தலால், முடிசூட்டுதலைப் பணித்தல் எனப்பட்டது.]*

**அரசுபேறு** *arašu-pēṟu*, பெ. (n.) **அரசன் குடிகளிடம் பெறும் இறை அல்லது வரி** (I.M.P. Tj., 464); tax due to a king.

*[அரசு + பேறு. பெறு → பேறு (தொ.ஆகு.).]*

**அரசுவா** *araš(u)-uvā*, பெ. (n.) **நாற்கால், துதிக்கை, குறி, வால் ஆகிய ஏழுறுப்பும் நிலத்தில் தோய்வனவாய்; காலுகிர் (நகம்) பாலும் சங்கும் போல் வெண்ணிறமாய்; நாற்கால், துதிக்கை, வால், இருமருப்பு (தந்தம்) ஆகிய எண்ணுறுப்புங் கொல்லவல்லனவாய், ஏழுமுழ வுயர்ச்சியும் ஒன்பது முழ நீட்சியும் பதின்மூன்று முழச் சுற்றளவு முடையதாய்; சிறுகண்ணுஞ் செம்புள்ளியுமுடையதாய்; முற்பக்க முயர்ந்து பிற்பக்கந் தாழ்ந்த பட்டத்தியானை** (பிங்.); State elephant, having its four legs, trunk, sexual organ and tail touching the ground with white toe-nails, seven cubits in height, nine cubits long and thirteen cubits in circumference, with the fore part of the body higher than the back part, its four legs, trunk, tail and tusks serving it as weapons. "அரசோடு அரசுவா வீழ்ந்த" (களவழி. 35).

"காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும்
வாலுறுப்போ டேழு மாநிலந்தோய்வதும்
பாலுஞ் சங்கும் போலுங் காலுகிர்
காலினுந் தன்றனிக் கையினு மெய்யினும்

வாலினு மருப்பினுங் கோறல்வல் லதுவா
யேழ்முழ முயர்ந்தொன் பான்முழ நீண்டு
பதின்முன் றுமுழஞ் சுற்றுடைத் தாகித்
தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய்
முன்னுயர்ந்து பின்னுப ணித்தாய
தியானை யரசுவா வாகு மென்ப"
(பிங். 6 : 1492).

[அரசு + உவா (உயரமான விலங்கு, யானை). 'உவத்தல் = உயர்தல். உவ → உவண் = மேலிடம், உயர்ச்சி. ஒ.நோ : உம்பல் = (உயரமான) யானை. ஓங்கல் = (ஓங்கி வளர்ந்த) யானை.]

**அரசுறுப்பு** *araš(u)-uṟuppu*, பெ. (n.) **அரசுக்குரிய படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறு உறுப்புகள்**; the six constituents of State, viz., army, people, wealth, ministry, allies and fortress.

"படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையான் அரசருள் ஏறு" (குறள், 381).

[அரசு + உறுப்பு.]

**அரட்சி** *araṭci*, பெ. (n.) **அச்சம் மிக்க நிலை**; state of fear, frightful confusion.

ம. அரட்டு; க. அரலு; தெ. அரடொணு.

[அரளுதல் = அச்சம் மிகக் கொள்ளுதல். அரள் → அரட்சி.]

**அரட்டடக்கி** *araṭṭ(u)-aḍakki*, பெ. (n.) **குறும்பரையும் செருக்கரையும் அடக்கியாள்பவன்**; one who subdues harassers and haughty persons. "தக்கன்றன் வேள்வியை அரட்டடக்கிதன் னாரூ ரடைமினே" (தேவா. 5.7 : 5).

[அரள் (த.வி.) → அரட்டு (பி.வி.) → அரட்டன் → அரட்டு (ஈறு கெட்டது) + அடக்கி. அடக்கு → அடக்கி. 'இ' வி.முத. ஈறு.]

**அரட்டம்**[1] *araṭṭam*, பெ. (n.) **பாலைநிலம்** (சிந்தா. நி. 272); desert tract.

[அரள் (த.வி.) → அரட்டு (பி.வி.) → அரட்டன் = குறும்பன், கொள்ளைக்காரன். அரட்டன் → அரட்டம் = ஆறலைப்போர் வாழும் வறண்ட நிலம்.]

**அரட்டம்**[2] *araṭṭam*, பெ. (n.) **விடிகை** (அக.நி.); dawn.

**அரட்டமுக்கி** *araṭṭ(u)-amukki*, பெ. (n.) 1. **குறும்பரை அடக்குபவன்**; one who keeps under control harassing petty chieftains. அரட்டடக்கி பார்க்க; see *araṭṭ(u)-aḍakki*. 2. **திருமங்கை யாழ்வார்**; *Tirumangaiyāḻvār*. "அருள்மாரி அரட்டமுக்கி" (திவ். பெரியதி. 3.4 : 10).

[அரள் (த.வி.) → அரட்டு (பி.வி.) → அரட்டன் → அரட்டு (ஈறு கெட்டது) + அமுக்கி. அமுக்குதல் = அடக்குதல். அமுக்கு → அமுக்கி. 'இ' வி.முத. ஈறு.]

**அரட்டர்** *araṭṭar*, பெ. (n.) 1. **கொள்ளையடிக்குங் குறுநிலமன்னர்**; harrying petty chieftains. "அரட்டக் கரும்படை மானவேற் குறுமன்னவர் நண்ணினார்" (திருவிளை. உக்கிர. வேல்வளை. 19). 2. **குறும்பர், தீயர்**; harriers, mischief-makers, wicked persons. "அடைந்தவர்க் குறுக ணாற்று மரட்டரும்" (காஞ்சிப்பு. இருபத். 384).

[அரள் (த.வி.) → அரட்டு (பி.வி.) → அரட்டர் = அச்சுறுத்துவோர், துன்புறுத்துவோர்.]

**அரட்டல்** *araṭṭal*, தொ.பெ. (vbl.n.) **அச்சுறுத்தல்**; frightening, intimidation.

[அரட்டு + அல் (தொ.பெ. ஈறு).]

**அரட்டல்புரட்டல்** *araṭṭal-puraṭṭal*, தொ.பெ. (vbl.n.) 1. **இழித்தும் பழித்தும் அச்சுறுத்தி மிரட்டுதல்**; threatening speech, acts of intimidation. இந்த அரட்டல் புரட்டலெல்லாம் இங்குச் செல்லாது. 2. **நோய் முற்றலால் அல்லது நஞ்சு வேகத்தால் ஏற்படும் தாங்கொணா நோவு அல்லது ஆரவார உடற்கோளாறு**; tossing restlessly, as in agonising pain caused by severe disease or venomous bite.

[அரட்டு → அரட்டல் + புரட்டு → புரட்டல். பொருளை மிகுதிப்படுத்த வந்த மரபிணைமொழி.]

**அரட்டன்** *araṭṭaṉ*, பெ. (n.) 1. **அரட்டர் பார்க்க**; see *araṭṭar*. 2. **மிடுக்கன்**; strong, powerful and arrogant man. "அரட்டன்வந் தப்பூச்சி காட்டுகின்றான்" (திவ். பெரியாழ். 2.1 : 4).

[அரள் → அரட்டு → அரட்டன்.]

**அரட்டி** *araṭṭi*, பெ. (n.) **அச்சம்** (வின்.); fear, terror.

[அரட்டு → அரட்டி.]

**அரட்டு-தல்** *araṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அச்சுறுத்தல்**; to frighten, terrify.

ம. அரட்டு

*[அரள் (த.வி.)→அரட்டு (பி.வி.). அரளுதல்= அஞ்சுதல்.]*

**அரட்டு** *arattu*, பெ. (n.) 1. *அச்சுறுத்தம்;* frightening, intimidation, severe rebuke. 2. *குறும்பு;* mischief. ''மலநோ யரட்டொதுக் கும்'' (காஞ்சிப்பு. சிவபுண். 10). 3. *மிடுக்கு;* prowess. (திவ். பெரியாழ். 2.1:4, வியா.). 4. *அச்சம்* (இ.வ.); fear, tremor (Loc.).

*[அரள் → அரட்டு (தொ.பெ.).]*

**அரட்டுப்புரட்டு** *arattu-p-purattu*, பெ. (n.) *அச்சுறுத்தும் பொய்புரட்டு* (சம்.அக.); bluff, frightening and deceiving.

*[அரள்→ அரட்டு+புரள் → புரட்டு. அரட்டும் புரட்டும் = அச்சுறுத்தும் பொய்யும்.]*

**அரட்டை** *arattai*, பெ. (n.) 1. *வீண்பேச்சு,* வம்பளப்பு (நெல்லை); idle talk, gossip (Tn.). 2. *வீண்பேச்சாளி;* idle talker, gossiper. 'அப்பனில்லாதது அரட்டை, தாயில்லாதது தறுதலை' (பழ.).

*[அரட்டு → அரட்டை.]*

**அரட்டையடி-த்தல்** *arattai-y-adi-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. *வீண்பேச்சுப் பேசுதல்;* to gossip, talk purposelessly. 2. *வீண்பெருமை பேசுதல்* (உ.வ.); to swagger, bluster (Com.u.).

*[அரட்டு → அரட்டை + அடி.]*

**அரடா** *arada*, பெ. (n.) *அணியின் விளிம்புறுப்பு;* the raised rim of a jewel.

தெ. அரடா

**அரடு** *aradu*, பெ. (n.) *ஒரு மரம்;* Indian trumpet flower, *Colosanthes indica* (சா.அக.).

**அரண்**[1] *aran*, பெ. (n.) 1. *வலிமை;* strength. 2. *காப்பு;* protection. 3. *தற்காப்பு;* defence. 4. *கோட்டை;* fort, fortress, castle. 5. *கோட்டைமதில்;* fort-wall, rampart. 6. *சுற்று மதில்;* compound wall, as of a temple. 7. *காப்பான இடம்;* fortified place. 8. *மார்புக் காப்பான அல்லது உடற்காப்பான கவசம்;* armour. 9. *பாதக் காப்பான செருப்பு;* sandals, as protection for the feet. 10. *வேல்* (பிங்.); spear. 11. *அழகு* (சங்.அக.); beauty.

ம. அரண்; க. அருணி.

அழகான பெண்ணும் பொருளும் இடமும் போற்றிக் காக்கப்படுவதனால், அழகும் ஒரு வகை அரணாயிற்று. அதனால் 'அரண்' என்னும் சொல் 'அழகு' என்னும் பொருளுங் கொண்டது.

**அரண்வகைகள்:**

1. மதிலரண்; fort-wall, rampart.
2. நீரரண்; moat.
3. நிலவரண்; natural defence consisting of arid expanse of earth.
4. *காட்டரண்;* forest, as a source of defence.
5. மலையரண்; mountain, as a natural defence.

''மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடைய தரண்''

என்னுங் குறளில் (742), நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்னும் நால்வகை அரண்கள் குறிக்கப்பட்டன.

**மதிலரண் வகைகள்:**

1. உயர்மதிலரண்; unscalable fort-wall.
2. அகன்மதிலரண்; broad fort-wall with accommodation for fighters on the top.
3. திண்மதிலரண்; impenetrable fort-wall.
4. அருமதிலரண்; inaccessible fort-wall, with war machines fitted on the top.

''உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்''
(குறள், 743).

அருமதில் என்பது பல்வகைக் கடும் பொறிகள் அமைந்தது. அப்பொறிகளாவன:

''.................. - ... வளைவிற் பொறியும்
கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையும்
தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்பும்
கவையுங் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமுங் கைபெய லூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமும்
கோலுங் குந்தமும் வேலும் பிறவும்''
(சிலப். 15: 207-216).

''பிறவும்'' என்பன, நூற்றுவரைக்கொல்லி, தள்ளிவெட்டி, களிற்றுப் பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப் பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரி நூற்பொறி முதலியன.

**நீரரண்வகைகள்:**

1. இயற்கை நீரரண்—ஆறும் கடலும்.
2. செயற்கை நீரரண்—அகழி.

*[அரு = அணுகுதற்கு அல்லது அடைதற்கு அரிய. அண் = பொருந்திய இடம், இடம். ஒ.நோ: அவண் = அவ்விடம். உவண் = மேலிடம். நடுவண் = நடுவிடம். அரு + அண் — அரண்.]*

அரு + எயில் — ஆரெயில். ''உடன்றோர் வருபகை பேணார் ஆரெயில்'' (தொல். பொருள். புறத். 12) = 'புறத்தோன் அகத்தோன்மேல் வந்துழி அவன் பகையினைப் போற்றாது அகத்தோன் இகழ்ந்திருத்தற்கு அமைந்த மதிலரண்' (நச். உரை).

'அருமை=பொறிகளான் அணுகற் கருமை' (குறள், 743, பரிமே. உரை).

**அரண்**[2] *aran*, பெ. (n.) *அச்சம்* (பொதி.நி.); fear, terror.

*[அரள் → அரண். அரளுதல் = அஞ்சியொடுங்குதல்.]*

**அரண்மனை** *aran-manai*, பெ. (n.) 1. *மதிலரண் சூழ்ந்த மாளிகை*; fortified palace. 2. *அரசன் குடியிருக்கும் மாளிகை*; royal palace. 'அரண்மனைக் கோழிமுட்டை அம்மியை உடைக்கும்' (பழ.).

ம. அரமன; க., து., குட., பட. அரமனெ. அரண்மனை → அரமனை (இழி.வ.).

*[அரண் + மனை.]*

**அரண்மனைக்காகிதம்** *aran-manai-k-kāgidam*, பெ. (n.) *அரசியற் கட்டளைத் திருமுகம்* (புதுவை); government despatch or order (Pond.).

க. அரசாணெ

*[அரண்மனை + காகிதம்.]*

**அரண்மனைக்காணி** *aran-manai-k-kāni*, பெ. (n.) *படைக்கு வேண்டிய உணவுப்பொருள்களை நேரடியாக விளைவிப்பதற்காக அரசியலார் வைத்துக்கொள்ளும் பண்ணைகள்*; estate run directly by the government for the supply of grain to troops.

*[அரண்மனை + காணி.]*

**அரண்மனைச்சீட்டு** *aran-manai-c-cittu*, பெ. (n.) *அரண்மனைக்காகிதம்* பார்க்க; see *aran-manai-k-kāgidam.*

*[அரண்மனை + சீட்டு.]*

**அரண்மனைப்பற்று** *aran-manai-p-parru*, பெ. (n.) *அரசகுடும்பத்திற்குச் சொந்தமான ஊர்*; village in the possession of a royal family.

*[அரண்மனை + பற்று.]*

பற்று பார்க்க; see *parru.*

**அரண்மனையார்** *aran-manai-y-ār*, பெ. (n.) 1. *அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்*; members of the royal family or household. 2. *அரண்மனை யலுவலர்*; palace officials.

*[அரண்மனை + ஆர் (ப.பா. ஈறு).]*

**அரண்மனையூழியம்** *aran-manai-y-ūliyam*, பெ. (n.) *அமஞ்சி, கூலியில்லா வேலை* (புதுவை); work without remuneration (Pond.).

*[அரண்மனை + ஊழியம்.]*

**அரண்மனைவார்த்தை** *aran-manai-vārttai*, பெ. (n.) *அரசியல் நடவடிக்கைகளில் வழங்குஞ் சொல்* (P.T.L.); words used in official records or communications.

*[அரண் + மனை + **Skt.** vārtta > த. வார்த்தை=சொல்.]*

இது அறமனைவார்த்தை யென்று தவறாக வழங்கிவருகின்றது.

**அரணம்** *aranam*, பெ. (n.) 1. *கோட்டை மதில்*; wall round a fort. ''முழுமுத லரண முற்றலுங் கோடலும்'' (தொல். பொருள். புறத். 10). 2. *கோட்டை*; fort. 3. *காவற்கூடம்*; prison-house. 4. *கொத்தளம்* (அக.நி.); bastion. 5. *காட்டரண்* (பிங்.); forest, as a strong defence. 6. *காடு* (அக.நி.); forest. 7. *தடை*; obstruction. ''அறிவுகா ணாமே அரணமல் லவர்க்கிவை கடந்தகல் வரிதாக'' (கம்பரா. யுத்த. மீட்சி. 106). 8. *காப்பு*; protection. ''அவுணர் வைகுமோ ரரணமான கிரவுஞ்சகிரி'' (கந்தபு. உற்பத். தாரகன்வதை. 108), ''என்னுயிர்க் கரணம் நின்னோடு'' (யசோதர. 102). 9. *அரணான இடம்*; place of safety. ''துன்னெறி யவுணர் யாருந் துவன்றிய வரணமாகி'' (கந்தபு. அசுர. விந்தம்பிலம். 1). 10. *கவசம்* (பிங்.); coat of mail. ''பாசம் பிணித்த வரணம் பரிவெய்த'' (கந்தபு. அசுர. அமரர். 54). 11. வேலி (சூடா.); hedge, enclosure. ''மாற்பெரு மதிலைச் சூழ வரம்பறு தானைதன்னை யேற்புடை யரண மாக வியற்றுவித்து'' (கந்தபு. அசுர. அசுரர்யா. 37). 12. *கழுவாய், மாற்று* (பரிகாரம்); remedy.

''அரணமில் கூற்றின் முரண்டொலை யொருவனும்'' (ஞானா. 56). 13. வேல் (பிங்.); dart, spear. 14. செருப்பு; sandal. ''அடிபுதை யரணம்'' (பெரும்பாண். 69). 15. மஞ்சம் (அக.நி.); bed, couch. 16. அழகு (சங்.அக.); beauty.

ம. அரணம்

[அரண் → அரணம்.]

**அரணம்வீசு-தல்** *araṇam-vīšu-*, 5 செ.கு.வி. (v.i.) **கவசமணிதல்**; to put on a coat of mail. ''அரைசரு மமர்மலைந் தரணம் வீசினார்'' (சீவக. 777).

**அரணவுணர்வு** *araṇa-v-uṇarvu*, பெ. (n.) **இறையறிவு (பதிஞானம்)**; knowledge of God.

[அரணம் + உணர்வு.]

**அரணாம்பரம்** *araṇāmbaram*, பெ. (n.) 1. **மதில்**; fort-wall. 2. **வேலி**; hedge.

[அரண் → அரணம் + அம்பரம். உம்பரம் (வானம்) → அம்பரம் = வானளாவும் உயர்ச்சி.]

**அரணி-த்தல்** *araṇi-*, 4 செ.கு.வி. (v.i.) **உரத்தல், கடினப்படுதல்**; to grow hard, as a boil. —, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **அரண்செய்தல்** (M.); to fortify, strengthen. 2. **காவல் செய்தல்**; to defend, protect. 3. **அழகுபடுத்துதல்**; to adorn.

[அரண் → அரணி.]

**அரணி**[1] *araṇi*, பெ. (n.) 1. **கோட்டை மதில்** (அக.நி.); wall of a fort. 2. **வேலி** (பொதி.நி.); hedge. 3. **கவசம்** (அக.நி.); coat of mail. 4. **காடு**; jungle, forest (W.).

[அரண் → அரணி.]

**அரணி**[2] *araṇi*, பெ. (n.) **கன்னி முத்திரை, அல்குல் சவ்வு**; the fold of mucous membrane at the vaginal entrance, hymen (சா.அக.).

**அரணிச்சுறா** *araṇi-c-curā*, பெ. (n.) **ஒருவகைக் கடல்மீன்**; a kind of sea-fish, *Scyllium marmoratum*.

[அரணி + சுறா.]

**அரணித்த பரு** *araṇitta-paru*, பெ. (n.) **கட்டி**; an abcess or boil, a matured wart (சா.அக.).

**அரணிய** *araṇiya*, பெ.எ. (adj.) **காப்புடைய**; defended. ''அரணிய விலங்கை'' (பாரத. இராசசூ. 67).

[அரண் → அரணிய.]

**அரணிருக்கை** *araṇ-irukkai*, பெ. (n.) **கோட்டை** (சங்.அக.); fort, fortress.

[அரண் + இருக்கை (தொ.ஆகு.).]

**அரணை**[1] *araṇai* பெ. (n.) 1. **பல்லியரணை**; a type of red-tailed lizard, *lacertidae*. 2. **பாம்பரணை, பல்லியைப் போன்ற வடிவும் பாம்பைப் போன்ற தோற்றமும் முழு வளர்ச்சியில் 8 அல்லது 9 விரலம் (அங்குலம்) நீளமுமுள்ள அரணை**; smooth streaked lizard, *Lacerta interpanctula* (செ.அக.).



அரணை

உடும்பைப்போல் இரட்டை நாக்குடையதும், பல்லியைப்போன்ற வடிவுள்ளதுமான ஒரு நச்சுயிரி. இது தலைப்பக்கம் உறை போன்ற அமைப்புடன், முதுகிற் சிலாம்புகள் உள்ளதாயும், பக்கங்களிற் சுரசுரப்பானதாயும், வால் நீண்டும் இருக்கும். இது கடித்தால் (அல்லது நக்கினால்) உடம்பு முழுவதும் நடுக்கங் கண்டு, நாக்குத் தடித்து, வாயில் நுரை தள்ளும். 'அரணை கடித்தால் (தீண்டினால்) மரணம்' என்பது பழமொழி. அரணையிற் பலவகையுண்டு. காவேரி, சேலம், கோயம்புத்தூர் — இவ்விடங்களில் இவற்றை மிகுதியாகக் காணலாம்; a house lizard with red tail. It is a reptile having double tongue like the iguana and resembling the lizard in its structure. It is a class of reptiles that have heads covered with shields. It is $5\frac{1}{2}''$ long. Its tongue is slender, free, exertive and terminating in a fork. It has scales on the back and is granular on the sides. Its tail is very long. Its licking is considered poisonous and is marked by tremor and thickening of tongue. There is a Tamil proverb, viz., 'If a streaked lizard bites death ensues'. The reptile is very common on the Coromandel coast, Salem and Coimbatore, especially near the banks of *Cāvēry*, *Cabrita leschenaultii*.

The other South Indian species are :

1. *Acanthodactylus nilgherrensis.*
2. *Nilgherries.*
3. *Calosaura leschenaultii.*
4. *Lacerta leschenaultii.*

ம. அரண; க., து. அரணெ.

[அரள் → அரளை → அரணை = அச்சத்தை யுண்டுபண்ணுவது. 'அரணை தீண்டினால் மரணம்' (பழ.). இனி, அரணை ஒருமருங்கு பாம்பை யொத்திருப்பதனாலும், கொல்லுந் திறனுடையதாயிருந்தும் மக்கள் தங்கும் அல்லது வழங்கும் இடத்தில் அச்சமின்றித் தாராளமாய் வந்து திரிவதனாலும், அர (பாம்பு) + அணை (சார்பு) என்று கருத இடமிருப்பினும், அது அத்துணைக் கொள்ளத்தக்கதன்று.]

**அரணை**[2] *aranai*, பெ. (n.) எயிறு (எகிர்) (நெல்லை); the gums (Tn.).

[அரண் → அரணை = பல்லிற்கு, அரண்போ லிருப்பது.]

**அரணைக்கடி** *aranai-k-kadi*, பெ. (n.) அரணை நக்கல்; the licking of a streaked lizard.

[அரணை + கடி.]

**அரணைக்கல்** *aranai-k-kal*, பெ. (n.) வேலை செய்யப்படாத கல் (இ.வ.); uncut stone (Loc.).

[அரணை + கல்.]

**அரணைச்சம்பா** *aranai-c-cambā*, பெ. (n.) நெல் வகை (A.); a kind of paddy.

[அரணை + சம்பா.]

**அரணைதீண்டல்** *aranai-tindal*, தொ.பெ. (vbl.n.) அரணைநக்கல்; the licking of a streaked lizard.

**அரணைநக்கல்** *aranai-nakkal*, தொ.பெ. (vbl.n.) அரணைதீண்டல் பார்க்க; see *aranai-tindal.*

**அரணைமதி** *aranai-madi*, பெ. (n.) நினைவுக் குறைவான மதி (புத்தி) (இ.வ.); mind deficient in memory (Loc.).

**அரணைவாற்சுருட்டை** *aranai-vār-curuttai*, பெ. (n.) அரணைபோல வாலுடைய ஒருவகைச் சுருட்டைப் பாம்பு; a kind of *suruttai* snake with tail like that of the green lizard, lizard-tail carpet snake (சா.அக.) — சுருட்டைப் பாம்பு வகை (M.M.); variety of *Echis carinata* (செ. அக.).

[அரணை + வால் + சுருட்டை.]

**அரணைவாற்றுடிப்பு** *aranai-vār-rudippu*, பெ. (n.) துண்டிக்கப்பட்ட அரணைவால் துடித்தல்போல் மாந்தர் நாடி விரைவாகத் துடித்தல்; violent pulsation like the flirt or flutter of the cut-off tail of a streaked lizard (சா.அக.).

[அரணை + வால் + துடிப்பு.]

**அரத்தக்கசடு** *aratta-k-kasadu*, பெ. (n.) அரத்தக் கேடு; impurities of blood (சா.அக.).

[அரத்தம் + கசடு. கசண்டு → கசடு.]

**அரத்தக்கசிவு** *aratta-k-kasivu*, பெ. (n.) அரத்தம் கசிதல்; oozing of blood, *Angiorrhea* (சா.அக.).

[அரத்தம் + கசிவு. கசி → கசிவு. 'வு' தொ.பெ. ஈறு.]

**அரத்தக்கட்டி** *aratta-k-katti*, பெ. (n.) 1. வேனிற் காலத்தில் அரத்தக் கொதிப்பினால் உடம்பிற் பலவிடங்களில் எழும்புங் கட்டி; painful boils appearing on several parts of the body during summer, oriental boil. 2. அரத்தம் தங்கி நிற்கும் கட்டி; an abscess which contains blood, *Haemorrhagic abscess.* 3. அரத்தம் உறைந்து திரண்ட கட்டி; a clot of blood, *Crassamentum* (சா.அக.).

[அரத்தம்+கட்டி. கட்டு → கட்டி. 'இ' வி.முத. ஈறு.]

**அரத்தக்கட்டு** *aratta-k-kattu*, பெ. (n.) 1. அரத்தத் தேக்கம்; congestion of blood, overfullness of the capillaries and other blood vessels in any part of the body. 2. அரத்தம் உறைதல்; clotting or coagulation of blood.

[அரத்தம் + கட்டு (முத.தொ.பெ.).]

**அரத்தக்கடுப்பு** *aratta-k-kaduppu*, பெ. (n.) 1. சீலமும் அரத்தமுமாகவாவது அரத்தமாக வாவது கழியும் வயிற்றுளைச்சல்; dysentery characterised by discharge of blood with or without mucus. 2. அரத்தக் கழிச்சலால் மல வாயிலிற் காணும் எரிச்சல்; burning sensation felt in the anus from discharge of blood. 3. அரத்தக் கொதிப்பு; the heated condition of blood in the system (சா.அக.).

[அரத்தம் + கடுப்பு. கடு → கடுப்பு. 'பு' தொ. பெ.ஈறு. கடுத்தல் = எரிதல், வெப்பமாதல்.]

**அரத்தக்கண்** *aratta-k-kan*, பெ. (n.) கண்களி லுள்ள அரத்தக் குழாய்கள் பருத்து அதனால்

மிகுதியாக அரத்தந் தங்கிச் சிவந்த கண்; blood-shot eyes due to the extravasation of blood within the eye. 2. சினக்கண்; reddened eyes of an irate person.

[அரத்தம் + கண்.]

**அரத்தக்கண்ணன்** *aratta-k-kaṇṇaṉ*, பெ. (n.) 1. செங்கண்ணன்; a person with blood-shot eyes. 2. புளிச்சக்கண்ணன்; one with blear-eyes (சா.அக.). 3. சினக்கண்ணன்; irate person with reddened eyes.

[அரத்தம் + கண்ணன். கண் → கண்ணன். 'அன்' உடையவன் ஈறு (ஆ.பா.).]

**அரத்தக்கணம்** *aratta-k-kaṇam*, பெ. (n.) குழந்தைகட்கு நாக்குப் பூத்து, வயிறு கடுத்து, நாடி அயர்ந்து, உடல் வாடி, இருமலுடன் அரத்தங் கழியும் ஒருவகைக் கணநோய்; an obscure disease in children complicated with intestinal disturbances, and characterised by furred tongue, irritation of the bowels, weakness, emaciation, cough, haemorrhages from mucous membranes, etc., a kind of tabes (சா.அக.).

[அரத்தம் + கணம். கணத்தல் = எரிதல், சுடுதல். கண → கணம்.]

**அரத்தக்கணமூலம்** *aratta-k-kaṇa-mūlam*, பெ. (n.) கணநோயாற் குழந்தைகட்கு மலவாயின் வழியாக அரத்தம் ஒழுகும் ஒருவகை மூலநோய்; bleeding from the anus in children due to improper diet, infantile scurvy (சா.அக.).

[அரத்தம் + கணம் + மூலம்.]

**அரத்தக்கத்தரி** *aratta-k-kattari*, பெ. (n.) ஒருவகைப் பாம்பு; a kind of snake (சா.அக.).

[அரத்தம் + கத்தரி.]

**அரத்தக்கதசுரம்** *aratta-k-kada-šuram*, பெ. (n.) 1. அரத்தத்தை முறித்து உடம்பின் வலுவைக் குறைக்கும் ஒருவகைக் காய்ச்சல்; a fever in which the blood undergoes rapid degenerative changes and as a result of which the body becomes weak. 2. அரத்த மூத்திரத்தையுண்டாக்கும் ஒரு நச்சுக் காய்ச்சல்; a malarial fever causing the passing of blood in urine, Haematuric fever (சா.அக.).

[அரத்தம் + கதம் + சுரம். கதத்தல் = சுடுதல். கத → கதம். சுள் → சுர் → சுரம் = சூடு, காய்ச்சல், சுடும் பாலைநிலம்.]

**அரத்தக்கதிப்பு** *aratta-k-kadippu*, பெ. (n.) உடம்பில் எப் பாகத்திலேனும் ஏற்படும் அரத்த மிகுதி; excess of blood in any part of the body, *Hyperemia* (சா.அக.).

[அரத்தம் + கதிப்பு. கதித்தல் = மிகுதல். 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தக்கந்தகம்** *aratta-k-kandagam*, பெ. (n.) நால்வகைக் கந்தகங்களுள் ஒன்றாகிய சிவப்புக் கந்தகம்; red sulphur (சா.அக.).

[அரத்தம் + கந்தகம். காந்து → காந்தகம் → கந்தகம் = விரைந்து எரியும் பொருள். காந்துதல் = எரிதல்.]

சமற்கிருதத்திலுள்ள 'கந்தக' (gandhaka) என்னும் சொற்கு 'மணமுள்ள' என்றே பொருள் கூறப்பட்டுள்ளது. அது பொருந்தாது. ஆதலால், அச் சொல் தென்மொழியினின்று வடமொழி கடன்கொண்டதாகவேயிருத்தல் வேண்டும்.

**அரத்தக்கமலம்** *aratta-k-kamalam*, பெ. (n.) செந்தாமரை; red lotus, *Nelumbium speciosum* (சா.அக.).

[அரத்தம்+கமலம். கம்=நீர். கம் → கமல் → கமலம் = நீரில் முளைப்பது.]

**அரத்தக்கல்** *aratta-k-kal*, பெ. (n.) ஈரற்கல்; blood-stone or oriental jasper, *Heliotrope* (சா.அக.).

[அரத்தம் + கல்.]

**அரத்தக்கலசவெரிச்சல்** *aratta-k-kalaša-v-ericcal*, பெ. (n.) மாடுகட்குண்டாகும் மார்பெரிச்சல்; inflammation of the heart in cattle, heart-burning (சா.அக.).

[அரத்தம்+கலசம்+எரிச்சல். எரி→எரிச்சல். 'சல்' தொ.பெ. ஈறு.]

அரத்தக்குலையெரிச்சல் என்பது தூய தமிழ்.

**அரத்தக்கலப்பு** *aratta-k-kalappu*, பெ. (n.) 1. நெருங்கியவுறவு; consanguinity, blood-relationship. 2. ஒருவரின் அரத்தம் மற்றொருவருடம்பிற் போய்க் கலத்தல்; running of one's blood in another's veins, said of relatives. 3. இருவகை யரத்தம் ஒருமிக்கச் சேர்தல்; an admixture of two kinds of blood. 4. அரத்தத்திலுண்டான பலவகைக் கூறுகளின் கலப்பு; composition of blood (சா.அக.).

[அரத்தம் + கலப்பு.]

**அரத்தக்கலிதம்** *aratta-k-kalidam,* பெ. (n.) 1. **ஆண்குறியின் வழியாக அரத்தம் வெளிப் படல்;** discharge of blood through the urinary tract. 2. ***அரத்தம் கலந்த விந்து வெளிப்படல்;*** discharge of blood in semen, *Haematospermia* (சா.அக.).

[அரத்தம் + **Skt.** skhalitā > த. கலிதம் = கழிகை, வெளிப்பாடு.]

அரத்தக்கழிவு என்பது தூய தமிழ்.

**அரத்தக்கவிச்சு** *aratta-k-kaviccu,* பெ. (n.) ***அரத்த நாற்றம்;*** stink of blood (W.).

[அரத்தம் + கவிச்சு. ஒருகா. கொச்சு (கொச்சை) → கவிச்சு.]

**அரத்தக்கழலை** *aratta-k-kaḻalai,* பெ. (n.) 1. ***அரத்தச் சொரிவினாலேற்பட்ட கழலைக் கட்டி;*** a tumour containing effused blood, blood tumour, *Haematoma.* 2. ***கண்ணிமைக்கு மேல் சிவப்பாக எழும்பும் ஒருவகைக் கழலைக் கட்டி, மூவகைக் கழலைகளுள் ஒன்று;*** one of the three tumours contemplated in Tamil Medical Science, *i.e.*, a sebaceous cyst of an eye-lid, stye, *Blepharo atheroma.* 3. ***அரத்த நரம்புகளா லாக்கப்பட்ட ஒருவகைக் கழலை;*** a tumour formed by an artery and filled with blood, *Aneurysm.* 4. ***அரத்தக் குழாய்கள் அமைந்த கழலை;*** a tumour made up of new-formed blood vessels, *Haemangioma* (சா.அக.).

[அரத்தம் + கழலை. கழலுதல் = நெகிழ்தல். கழல் → கழலை = நெகிழும் கட்டி.]

**அரத்தக்கழிச்சல்** *aratta-k-kaḻiccal,* பெ. (n.) 1. ***அரத்தமுஞ் சீலமுங் கலந்த வயிற்றோட்டம்;*** diarrhoea with discharge of blood and mucous stools, *Dysenteric diarrhoea, Melaena.* 2. ***அரத்தப்போக்கு;*** discharge of blood, dysentery, bloody flux. 3. ***மலம் கலந்த அரத்தப் போக்கு;*** the passage of blood in faeces, *Haematechezia.* 4. ***அரத்தமும் சீலமும் மலமுங் கலந்த கழிச்சல்;*** purgation or discharge through the anus, of blood mixed with faeces and mucus (சா.அக.).

இவ் விறுதிவகை பல்வேறு கரணியங்களால் நிகழும்.

(1) செரிமானக் கோளாறு; disorder of digestive organs, as in dysentery, etc.

(2) கடுமையான கழிச்சல் மருந்து; violent purgative.

(3) நஞ்சுக் கலப்பு; blood-poisoning.

(4) திகில், திடும் அச்சம், திடுக்கிடல் முதலியன; fear, shock, sudden agitation, etc., intestinal haemorrhage.

(5) பேய்மந்திரம், செய்வினை, ஏவல் முதலிய கருங்கலை; black art such as sorcery, witchcraft, etc.

(6) நாட்பட்ட சில நோய்களால் ஏற்படுங் கோளாறு; complications arising from some chronic diseases.

**அரத்தக்கள்ளி** *aratta-k-kaḷḷi,* பெ. (n.) ***சிவப்புச் சதுரக்கள்ளி;*** a red variety of square-spurge, *Euphorbia antiquorum* (சா.அக.).

[அரத்தம் (சிவப்பு) + கள்ளி. கள் = முள். கள் → கள்ளி.]

**அரத்தக்கற்றாழை** *aratta-k-kaṟṟāḻai,* பெ. (n.) ***செங்கற்றாழை;*** red aloe, *Aloe vera (officinalis).*

[அரத்தம் + கற்றாழை. அரத்தம் = சிவப்பு.]

**அரத்தக்கன்னசூலை** *aratta-k-kaṉṉa-šūlai,* பெ. (n.) ***ஊதை பித்த கோழையாலும், கல் முதலியவற்றால் அடியுண்பதனாலும், காதினுள் சீழ் அரத்தம் முதலியன சேர்ந்து குத்தலையும் அரத்தவொழுக்கையும் உண்டாக்கும் ஒரு காது நோய்;*** a disease of the ear followed by pricking pain and discharge of blood arising from the deranged condition of the humours in the system, and also from traumatic causes, *Otitis haemorrhagica* (சா.அக.).

[அரத்தம் + கன்னம் + சூலை.]

அரத்தம், கன்னம்², சூலை பார்க்க; see *arattam, kaṉṉam², šūlai.*

**அரத்தக்கனப்பு** *aratta-k-kaṉappu,* பெ. (n.) 1. ***அரத்தம் மீறுகை;*** a condition marked by excess of blood and fullness of pulse, *plethora.* ***அரத்தக்கொழுப்பு*** பார்க்க; see *aratta-k-koḻuppu.* 2. ***அரத்தக் கொதிப்பினால் எழும் சூடு;*** local increase of heat due to larger supply of blood in a part of the body.

[அரத்தம் + கனப்பு. கனத்தல் = மிகுதல். கன → கனப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தக்கனி** *aratta-k-kaṉi,* பெ. (n.) ***கோவைப் பழம்;*** bright scarlet edible fruit of Indian caper, *Bryonia grandis* (சா.அக.).

[அரத்தம் (சிவப்பு) + கனி. கன்னுதல் = பழுத்தல். கன் → கன்னி → கனி.]

**அரத்தக்காசம்** *aratta-k-kašam*, பெ. (n.) **செங் கீரை;** a red edible greens, *Amaranthus* (genus) (சா.அக.).

**அரத்தக்காஞ்சனம்** *aratta-k-kañjanam*, பெ. (n.) **செம்மந்தாரை;** pink and yellow mountain ebony, *Bauhinia variegata* (சா.அக.).

**அரத்தக்காஞ்சினை** *aratta-k-kañjinai*, பெ. (n.) **ஆற்றலரி;** marking-nut tree, *Semicarpus anacardium* (சா.அக.).

**அரத்தக்காம்பிலூசரமாக்கி** *aratta-k-kambil-ūšaram-akki*, பெ. (n.) **உகாமரம்;** tooth-brush tree, *Salvadora persica* (சா.அக.).

**அரத்தக்காட்டேறி** *aratta-k-kattēri*, பெ. (n.) *அரத்தத்தை உறிஞ்சும் ஒருவகைப் பெண்பேய்;* a blood-thirsty female demon (சா.அக.).

*[அரத்தம் + காட்டேறி (காடு + ஏறி). ஏறு → ஏறி. 'இ' வி.முத. ஈறு.]*

**அரத்தக்காணிக்கை** *aratta-k-kāṇikkai*, பெ. (n.) *போரில் விழுப்புண்பட்ட அல்லது மடிந்த மறவரின் மைந்தர்க்குக் கொடுக்கும் நிலமானியம்* (M.M.); 'Blood-present', an endowment in the form of a gift of land rent free for the support of the heirs of warriors wounded or killed in battle.

*[அரத்தம் + காணிக்கை. காணித்தல் = மேற்பார்த்தல், கவனித்தல், காத்தல். காணி → காணிக்கை (தொ.ஆகு.). 'கை' தொ.பெ. ஈறு.]*

**அரத்தக்காயம்** *aratta-k-kayam*, பெ. (n.) *அரத்தம் ஒழுகும் புதுப்புண், கத்திபடுவதனால் அல்லது கரடுமுரடான கற்போன்ற கடினப் பொருள் மோதுவதனால் உண்டாவது;* bleeding wound caused by knife, rough stone, etc.

ம. காயம்; க., து. காய; தெ. காயமு; மரா. காய.

*[காழ்த்தல் = தழும்புண்டாதல். காழ் = தழும்பு, புண் (ஆகு.). காழ் → காய் → காயம்.]*

**அரத்தக்காலி** *aratta-k-kali*, பெ. (n.) **செந்நெல்;** red paddy (சா.அக.).

*[அரத்தம் + காலி. அரத்தம் = சிவப்பு.]*

**அரத்தக்கிட்டம்** *aratta-k-kiṭṭam*, பெ. (n.) *அரத்தக் கட்டியின்மேல் உண்டாகும் ஏடு (புதுவை);* buffy coat of coagulated blood (Poṇḍ.).

*[அரத்தம் + கிட்டம். கிட்டுதல் = நெருங்குதல், இறுகுதல். கிட்டு → கிட்டம் (தொ.ஆகு.). இறுகிய அல்லது திணிந்த ஏடு. 'அம்' தொ.பெ. ஈறு.]*

**அரத்தக்கிருமி** *aratta-k-kirumi*, பெ. (n.) *அரத்தம் கெடுவதனால் அரத்தமோடும் நரம்பிடங்களிற் பிறந்து பிறகு தனித்தனியே பெருங்கூட்டங் களாகி எங்கும் பரவி மயிர்க்கால்களை யணுகி மயிர்களை உதிரச் செய்தும், உடம்பின் நிறத்தை மாற்றியும் மற்றும் பல்வகை இடையூறுகளைச் செய்யும் நோய்ப்பூச்சிகள். அணுக்கிருமி, வட்டக்கிருமி, வாலில்லாக்கிருமி, மிகநுண்கிருமி, செங்கிருமி, தோற்றாக்கிருமி என இவை அறு வகைப்படும்;* the germs supposed to originate in the veins due to the vitiation of the blood. They increase in large numbers and are carried by the circulation to the hair-follicles where they bring about unhealthy changes, such as, falling of hairs, change of complexion, etc. They are of six kinds, as enumerated above of which, some are minute, but visible, while others are invisible virus. Some are round and some without flagellum and some are red and others are black (சா.அக.).

*[அரத்தம் + கிருமி.* **Skt.** krimi > த. *கிருமி.]*

**அரத்தக்கிலிட்டம்** *aratta-k-kiliṭṭam*, பெ. (n.) *ஒரு காரணியமுமின்றிக் கண்களுக்கு மிகுந்த அரத்த நிறத்தையும் வாட்டத்தையும் உண்டு பண்ணும் கண்ணோய் வகை;* congestion or inflammation of the eye without any apparent cause (சா.அக.).

**அரத்தக்குட்டம்** *aratta-k-kuṭṭam*, பெ. (n.) *புண்களினின்று அரத்தம் வடியும் ஒருவகைக் குட்டநோய்;* a kind of leprosy attended with discharge of blood from the ulcers (சா.அக.).

*[அரத்தம் + குட்டம். குள் → குட்டு → குட்டம் = உறுப்புகள் அழுகிக் குட்டம் படுதல் (குட்டையாதல்).]*

**அரத்தக்குடல்விருத்தி** *aratta-k-kuḍal-virutti*, பெ. (n.) *அரத்தம் குடலில் நிறைந்து அதைப் பருக்கச் செய்தும், சிறுசிறு கொப்புளங்களை யுண்டாக்கியும் குடலில் வலியைத் தோற்று விக்கும் ஒருவகைக் குடல்நோய்;* enlargement

of the intestines marked by pain and ulceration, caused by the accumulation of blood in the bowels (சா.அக.).

[அரத்தம்+குடல்+**Skt.** vriddhi = வளர்ச்சி.]

அரத்தக்குடல் வளர்ச்சி அல்லது பெருக்கம் என்பது தூய தமிழாகும்.

**அரத்தக்குந்தம்** *aratta-k-kundam,* பெ. (n.) **கண்விழியின் சதை சிவந்து பிதுங்கிக் குத்த லெடுக்கும் ஒருவகைக் கண்ணோய்;** protrusion of the cornea or sclera resulting from inflammation and marked by lancinating pain, *Staphyloma* (சா.அக.).

[அரத்தம்+குந்தம். குத்து→குந்து→குந்தம் = குத்தும் ஈட்டி, ஈட்டி குத்துவது போன்ற குத்தல் வலி.]

**அரத்தக்குமிளம்** *aratta-k-kumiḷam,* பெ. (n.) **வெள்விழியிற் சிவப்புக் குண்டுமணிபோற் சிவந்த கொப்புளத்தை யுண்டாக்கும் ஒரு வகைக் கண்ணோய்;** a disease developing red pustules in the white of the eye; a variety marked by small vesicles or ulcers, each surrounded by a reddened zone, *Phyletenular conjunctivitis* (சா.அக.).

[அரத்தம் + குமிளம். கும்→குமி→குமிள்→குமிளம் = உருண்ட திரண்ட கொப்புளம்.]

**அரத்தக்குமுதம்** *aratta-k-kumudam,* பெ. (n.) 1. *செவ்வாம்பல்;* red Indian water-lily. 2. *செஞ் சந்தனம்;* red sandal. 3. *கருவிழியில் அரத்தம் போற் சிவந்த சதை வளர்ந்து தீச்சுட்ட புண் போல் எரிச்சலும் குத்தலும் உண்டாகி முன் துருத்திக்கொண்டிருக்கும் கண்ணோய்;* Staphyloma formed by an iris protruding through the cornea and causing acute pain as a result of inflammation, *Staphyloma corneae* (சா.அக.).

[அரத்தம் (சிவப்பு)+குமுதம். கும்→குமுது→குமுதம் = குவிவது.]

அரத்தக் குமுதம் என்பது செந்தாமரைக்கு ஒரு பெயராக *மலையகராதியிற்* குறித்திருப்பது பொருந்தாது.

**அரத்தக்குரா** *aratta-k-kurā,* பெ. (n.) **வேங்கை மரம்;** Indian kino tree, *Pterocarpus marsupium* (சா.அக.).

[அரத்தம் + குரா.]

**அரத்தக்குலை** *aratta-k-kulai,* பெ. (n.) **அரத்தம் வெளிப்படும் ஒருவகைக் குலைநோய்;** an internal disease, so called from the discharge of blood from the viscera (சா.அக.).

[அரத்தம் + குலை.]

**அரத்தக்குவை** *aratta-k-kuvai,* பெ. (n.) **கடைக் கண்ணில் அரத்த நிறமான நுண்ணிய சதை வளரும் ஒருவகைக் கண்ணோய்;** an eye disease marked by a growth of thin red flesh on the inner corner of the eye, *Pterygium;* a patch of thickened conjunctiva extending over a part of the cornea, *Congenital pterygium* (சா.அக.).

[அரத்தம் (சிவப்பு)+குவை. குவி → குவை.]

**அரத்தக்குழல்** *aratta-k-kuḻal,* பெ. (n.) 1. *அரத்தம் ஓடும் குழாய்;* blood-vessel. 2. *அரத்தம் ஓடும் நாடிகள், நாளங்கள், தந்துகிகள் ஆகிய அரத்தக் குழாய் வகைகளின் பொதுப் பெயர்;* a common name for the system of blood-vessels comprising of the arteries, veins and capillaries (சா.அக.).

[அரத்தம் + குழல்.]

தந்துகிகளை மயிரங்கள் எனலாம். **ஒ.நோ. L.** *capillus,* hair. **E.** *capillary,* blood-vessel of minute or hair-like diameter.

அரத்தக்குழல் விரிவு; dilatation of the blood-vessels (சா.அக.).

**அரத்தக்குழாய்** *aratta-k-kuḻāy,* பெ. (n.) *அரத்தக்குழல் பார்க்க;* see *aratta-k-kuḻal.*

[அரத்தம் + குழாய்.]

**அரத்தக்குறுகடம்** *aratta-k-kuṟugaḍam,* பெ. (n.) 1. *உடம்பிலுள்ள அரத்தத்திற் காணப்படும் சிறிய சாலங்கள் (சிற்றுருக்கள்);* blood corpuscles, *Haemad.* 2. *சிவப்புக் குறு கடம்;* red corpuscle, *Erythrocyte* (சா.அக.).

[அரத்தம் + குறு + கடம். குடம் → கடம் = குடம்போன்ற உடம்பு, பொருள், உருவம்.]

**L.** corpus = body, corpusculum (சிற்றுடம்பு). **E.** corpuscle = minute body forming distinct part of the organism, esp. (pl.) those constituting large part of the blood in vertebrates.

குறுகடம் என்பது ஆங்கிலச் சொல்லின் மொழிபெயர்ப்பாகத் தோன்றுகின்றது. குறுங்கடம் என்பது சிறுகடம் என்பதை யொத்துக் குறுகடம் என்றானது.

**அரத்தக்குறைச்சல்** *aratta-k-kuṟaiccal,* பெ. (n.) *அரத்தக்குறைவு பார்க்க;* see *aratta-k-kuṟaivu.*

[அரத்தம் + குறைச்சல்.]

**அரத்தக்குறை(ப்)பாடு** *aratta-k-kuṟai(p)pāḍu*, பெ. (n.) உடம்பில் அரத்தம் குறைவாயிருத்தல்; deficiency in the volume of blood in the system, *Oligemia* (சா.அக.).

[அரத்தம் + குறைபாடு. குறைபடு → குறைபாடு (முத.தி.தொ.பெ.). 'படு' து.வி.]

**அரத்தக்குறைவு** *aratta-k-kuṟaivu*, பெ. (n.) 1. அரத்தக்குறை; deficiency of blood in quality, anaemia. 2. அரத்தக் குறைச்சல்; deficiency of blood in quantity, *Oligocythemia* (சா.அக.).

[அரத்தம் + குறைவு. குறை → குறைவு (தொ.பெ.). 'வு' தொ.பெ. ஈறு.]

**அரத்தக்குன்மம்** *aratta-k-kuṉmam*, பெ. (n.) பெண்டிரின் மாதவிடாய் தடைப்படும் ஒரு நோய் (தைலவ. தைல. 108); uterine tumour, a disease causing *amenorrhoea*.

[அரத்தம் + Skt. gulma > த. குன்மம்.]

இதை விடாய்க்கட்டு எனலாம்.

**அரத்தக்கூட்டு** *aratta-k-kūṭṭu*, பெ. (n.) அரத்தக் கலப்பு; mixture of blood (சா.அக.).

[அரத்தம் + கூட்டு.]

**அரத்தக்கூறுபாடு** *aratta-k-kūṟupāḍu*, பெ. (n.) அரத்தக் கூறுகளைப் பிரித்தல்; analysis of the blood, *Haemanalysis* (சா.அக.).

[அரத்தம் + கூறுபாடு. கூறுபடு → கூறுபாடு (முத.தி.தொ.பெ.). 'படு' து.வி.]

**அரத்தக்கேடு** *aratta-k-kēḍu*, பெ. (n.) 1. அரத்தக் கெடுதி; the disintegration or degeneration of the blood, *Haematolysis* or *Haemalysis*. 2. அரத்தக் குறைவு; defective state of the blood, Anaemia (சா.அக.).

[அரத்தம் + கேடு. கெடு → கேடு (முத.தி. தொ.பெ.).]

**அரத்தக்கொதி** *aratta-k-kodi*, பெ. (n.) 1. துயரம், கவலை, மூளையுழைப்பு முதலிய வற்றாலுண்டாகும் அரத்தக் கொதிப்பு; heated condition of the blood, consequent on excessive grief, care, brain-work, etc. 2. காமச்சூடு; heat of blood in youth inflamed with sexual passion, lasciviousness.

[அரத்தம் + கொதி.]

**அரத்தக்கொப்புளம்** *aratta-k-koppuḷam*, பெ. (n.) அரத்தங்கட்டிய கொப்புளம்; blister containing blood (சா.அக.).

[அரத்தம் + கொப்புளம். கொப்புளி → கொப்புளம் (தொ.பெ.). 'அம்' தொ.பெ. ஈறு.]

**அரத்தக்கொய்யா** *aratta-k-koyyā*, பெ. (n.) சிவப்புக்கொய்யா; red guava fruit.

[அரத்தம் + கொய்யா. **Sp.** guayaba > **E.** guava > த. கொய்யா.]

**அரத்தக்கொழுப்பு** *aratta-k-koḻuppu*, பெ. (n.) 1. அரத்தச் செழுமை; fullness of blood. 2. மதம், மதர்ப்பு; high mettle, voluptuousness. 3. செருக்கு; arrogance, haughtiness (W.).

[அரத்தம் + கொழுப்பு. கொழுத்தல் = செழித்தல். கொழு → கொழுப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தக்கோமாரி** *aratta-k-kōmāri*, பெ. (n.) 1. மாட்டிற்குண்டாகும் அரத்தக் கழிச்சல் (மூ.அ.); a disease incident to cattle characterized by a discharge of blood. 2. ஒருவகைப் புல்; a species of red grass (சா.அக.).

[அரத்தம் + கோ + மாரி. கோ = ஆன், ஆனினம், மாடு. ஒருகா. மாரி = அம்மைநோய் வகை. மால் → மார் → மாரி = காளி, அம்மை நோய்.]

மாரி பார்க்க; see **māri**.

**அரத்தக்கோவை** *aratta-k-kōvai*, பெ. (n.) ஒரு கல்லீரல் நோய்; congestion of the liver, *Hepatitis* (சா.அக.).

**அரத்தக்கோழை** *aratta-k-kōḻai*, பெ. (n.) அரத்தங்கலந்த கோழை; mucous streaked with blood (சா.அக.).

[அரத்தம் + கோழை.]

**அரத்தகம்** *arattagam*, பெ. (n.) பெண்டிர் தம் பாதத்திற்கும் இதழுக்கும் ஊட்டும் செம்பஞ்சுக் குழம்பு; red lac used by women for dyeing the feet and sometimes the lips. "அரத்தக மருளச் செய்த சீறடி" (சீவக. 2459).

**Skt.** alaktaka

[உல் → உல, உலர். உலர்தல் = காய்தல். உல் → எல் → எரி = நெருப்பு, நெருப்பின் நிறமான சிவப்பு. உல் → அல் → அலத்தம் = சிவப்பு, செம்பருத்தி. அலத்தம் → அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அலத்தகம் → அரத்தகம். ஒ.நோ: அலத்தம் → அரத்தம். இலத்தி → இரத்தி.

*(இலத்தி → இலத்தை → இலந்தை). ல → ர, போலி.]*

'அ-லக்தக' என்று வடமொழியார் பிரிப்பது தவறு.

**அரத்தங்கக்கல்** *arattaṅ-kakkal*, பெ. (n.) 1. **இருமலினால் அரத்தங் கக்கல்;** spitting of blood through cough, *Haemoptysis.* 2. **நுரையீரலிலிருந்து அரத்தம் வெளிப்படல்;** discharge of blood from the lungs, Bronchial haemorrhage (சா.அக.).

*[அரத்தம்+கக்கல். கக்கு → கக்கல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அரத்தங்கட்டல்** *arattaṅ-kaṭṭal*, தொ.பெ. (vbl.n.) 1. *அரத்தக் குழாயினின்று அரத்தம் வெளிப்பட்டுச் சதையில் தங்குதல்;* a discharge or escape of blood from a vessel into the tissue, extravasation of blood. 2. **சாகுந்தறுவாயில் உடம்பிலுள்ள அரத்தம் கட்டிகளாக உறைதல்;** clot of blood formed in the system in the process of dying, *thrombus* (சா.அக.).

*[அரத்தம் + கட்டல். கட்டு → கட்டல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அரத்தங்கன்றல்** *arattaṅ-kaṉṟal*, தொ.பெ. (vbl.n.) 1. *அடி, காயம் முதலியவற்றால் அரத்தம் இறுகுதல்;* a livid, black or yellow spot produced by extravasated blood caused by a contusion. 2. **அடியினால் தோல்நிறம் மாறுதல்;** discolouration of the skin through contusion, bruise.

*[அரத்தம் + கன்றல். கன்று → கன்றல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அரத்தங்குத்திவாங்கல்** *arattaṅ-kutti-vāṅgal*, தொ.பெ. (vbl.n.) *அரத்தநாளத்தைத் திறந்து அரத்தம் வெளியெடுத்தல்;* the opening of a vein for blood-letting, venesection, *Phlebotomy* (சா.அக.).

*[அரத்தம் + குத்தி + வாங்கல்.]*

**அரத்த(ச்)சஞ்சம்** *aratta-(c)-cañjam (aratta-šañjam)*, பெ. (n.) 1. **மலைமா;** hill mango. 2. **செங்கிளுவை;** red teal. 3. **செவ்வரக்கு;** red sealing wax (சா.அக.).

**அரத்தச்சதுரக்கள்ளி** *aratta-c-cadura-k-kaḷḷi*, பெ. (n.) **ஒருவகைச் சிவப்புச் சதுரக்கள்ளி;** red square-spurge, *Euphorbia antiquorum* (சா.அக.).

*[அரத்தம் + சதுரம் + கள்ளி.]*

**அரத்தச்சந்தனம்** *aratta-c-candaṉam*, பெ. (n.) **செஞ்சந்தனம்;** red sandalwood paste, *Pterocarpus santalinus* (சா.அக.).

*[அரத்தம் + சந்தனம்.]*

**அரத்தச்சந்தியகம்** *aratta-c-candiyagam*, பெ. (n.) **செங்கழுநீர்;** Indian red water-lily, *Nymphae odorata* (சா.அக.).

*[அரத்தம் + சந்தியகம்.]*

**அரத்தச்சந்தியம்** *aratta-c-candiyam*, பெ. (n.) **குளிரி;** arrow leaf plant, *Saggitaria obtusifolia* (சா.அக.).

**அரத்தச்சவாகை** *aratta-c-cavāgai*, பெ. (n.) பெருவேம்பு; giant neem or mountain neem, *Melia composita* (சா.அக.).

**அரத்தச்சாட்சி** *aratta-c-cāṭci*, பெ. (n.) 1. **மதத்தின்பொருட்டுக் கொல்லப்படுகை** (கிறித்.வ.); martyrdom (Chr.). 2. **மதத்தின்பொருட்டுக் கொல்லப்படுபவன்** (கிறித்.வ.); martyr (Chr.).

ம., து. ரக்தசாக்ழி.

*[அரத்தம்+சாட்சி.* **Skt.** sākshin > **த.** *சாட்சி = சான்று, சான்றாளன்.]*

**அரத்தச்சாயல்** *aratta-c-cāyal*, பெ. (n.) 1. அரத்தங் **கலந்தது;** blood-streaked. 2. அரத்த **நிறம் போன்றது;** resemblance to a blood-red colour (சா.அக.).

*[அரத்தம் + சாயல். சாய் → சாயல். 'அல்' தொ.பெ., பண்.பெ. ஈறு.]*

**அரத்தச்சாய்ப்பு** *aratta-c-cāyppu*, தொ.பெ. (vbl.n.) *அரத்தங்கொட்டல்;* bleeding, haemorrhage (சா.அக.).

ம. ரக்தச்சாரி; க. ரக்ததாரெ.

*[அரத்தம் + சாய்ப்பு. சாய் → சாய்ப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அரத்த(ச்)சாரம்** *aratta-(c)-cāram (aratta-šāram)*, பெ. (n.) **கருங்காலி** (சித்.அக.); ebony.

**அரத்தச்சாலி** *aratta-c-cāli*, பெ. (n.) **செஞ்சம்பா (அரிசி);** a kind of red rice (சா.அக.).

*[அரத்தம் + சாலி.]*

சாலி என்பதே செந்நெல்லின் பெயராகும். அரத்தச்சாலி என்பது மிகைபடக் கூறலே.

**அரத்தச்சித்திரமூலம்** *aratta-c-cittira-mūlam*, பெ. (n.) பாறைவெடிப்பில் வளர்ந்திருக்கும்

**சிவப்புச் சித்திரமூலம்**; a red variety of leadwort, *Plumbago rosea* (சா.அக.).

[அரத்தம் + சித்திரமூலம்.]

**அரத்தச்சிலந்தி** *aratta-c-cilandi*, பெ.(n.) 1. **புண் கட்டிவகை**; herpes. 2. **உடம்பிற்பட்ட விடத்தில் அரத்தம் வடியும் கொப்புளங்களை யெழுப்பும் சிலந்திப்பூச்சி வகை**; a kind of poisonous spider which causes bleeding blisters on coming in contact with the human body. 3. அரத்தம் **வடியும் புண்வகை**; haemorrhagic ulcer.

[அரத்தம் + சிலந்தி.]

**சிலந்தி** பார்க்க; see *šilandi*.

**அரத்தச்சிவதை** *aratta-c-civadai*, பெ.(n.) **சிவப்புச் சிவதை**; Indian jalap, *Ipomaea turpethum* (சா.அக.).

[அரத்தம் + சிவதை.]

**அரத்தச்சிவப்பு** *aratta-c-civappu*, பெ. (n.) 1. **அரத்தம்போன்ற சிவப்பு**; blood-red colour, scarlet. 2. **அரத்தத்திலுள்ள செந்நிறப் பொருள்**; the red colouring matter of the blood, Haemachrome (சா.அக.).

[அரத்தம் + சிவப்பு. சிவ → சிவப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ., பண்.பெ. ஈறு.]

**அரத்தச்சுரப்பு** *aratta-c-curappu*, பெ. (n.) 1. **அரத்த மிகுதி**; fullness of blood. 2. **அரத்த வூறல்**; suffusion of blood from a bruise (சா.அக.). 3. **செருக்கு**; arrogance, haughtiness.

[அரத்தம் + சுரப்பு. சுரத்தல் = ஊறல், மிகுதல். சுர → சுரப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தச்சுரம்** *aratta-c-curam*, பெ. (n.) **குழந்தை கட்கு விட்டுவிட்டுக் காய்ச்சலடிப்பதனால் அரத்தக்கொதிப்பு ஏற்பட்டு மயக்கத்தை யுண்டுபண்ணும் காய்ச்சல் வகை**; an intermittent fever in children attended with swooning as a result of heated condition of the blood.

[அரத்தம் + சுரம். சுள் → சுர் → சுரம்.]

**அரத்தச்சுருட்டை** *aratta-c-curuttai*, பெ. (n.) **கடிப்பதனால் அரத்தங் கக்கவைக்கும் சுருட்டைப் பாம்பு வகை** (M.M.); blood carpet-snake, the bite of which causes vomiting of blood, variety of *Echis carinata* (சா.அக.).

[அரத்தம் + சுருட்டை. சுருள் → சுருட்டு → சுருட்டை. கடிப்பினால் அரத்தங் கக்கவைக்கும் குணத்தால் அரத்தச்சுருட்டை யெனப்பட்டது.]

**அரத்தச்சுழற்சி** *aratta-c-cularci*, பெ. (n.) **அரத்த வோட்டம்**; circulation of blood (சா.அக.).

[அரத்தம் + சுழற்சி. சுழல் → சுழற்சி (தொ.பெ.). 'சி' தொ.பெ. ஈறு.]

அரத்தம் நெஞ்சாங்குலையினின்று நாடிகள் வாயிலாகச் சென்று உடம்பு முழுவதும் பரவி நாளங்கள் வாயிலாக நெஞ்சாங்குலைக்கு மீள்வது ஒரு சுழற்சியாயிற்று.

**அரத்தச்சுற்றோட்டம்** *aratta-c-currōttam*, பெ. (n.) **அரத்தச்சுழற்சி** பார்க்க; see *aratta-c-cularci*.

[அரத்தம் + சுற்றோட்டம்.]

**அரத்தச்சூரிகை** *aratta-c-cūrigai*, பெ. (n.) **அரத்தவொழுக்கேற்படுத்தும் ஒருவகைக் கடுங் காய்ச்சல்**; a kind of acute fever attended with extravasation of blood into the skin and mucous membranes, *Scarlatina haemorrhagica* (சா.அக.).

[அரத்தம் + சூரிகை. சுள் → சுர் → சுரம் → சூரம் → சூரிகை.]

**அரத்தச்சூலை** *aratta-c-cūlai*, பெ. (n.) **சூதகவாயு (மாதவிடாய்த் தடைவளி)**; swelling of the abdomen, due to obstruction of the menstrual flow (W.) (செ.அக.).

**உடம்பின் எப் பாகத்திலாவது உறுப்பிலாவது அரத்தம் அதிகமாய்ச் சேர்வதால் ஏற்படும் குத்தல்நோய்**; an acute pain arising in any part or organ of the body due to the accumulation of blood (சா.அக.).

[அரத்தம் + சூலை.]

**அரத்தச்சூலைவாயு** *aratta-c-cūlai-vāyu*, பெ. (n.) **சூதகவாயு (மாதவிடாய்த் தடைவளி)**; painful menstruation, *Dysmenorrhoea* (சா.அக.).

[அரத்தம் + சூலை + **Skt.** vāyu = வளி.]

**அரத்தச்சூறை** *aratta-c-cūrai*, பெ. (n.) **சாம்பல் நிறமான மீன்வகை**; greyish tunny, *Thynnus macropterus*.

[அரத்தம் + சூறை.]

**அரத்தச்செம்மை** *aratta-c-cemmai*, பெ. (n.) **மாணிக்கம்**; ruby, one of the nine gems.

[அரத்தம் + செம்மை.]

**அரத்தச்சேமி** *aratta-c-cēmi*, பெ. (n.) **நெருஞ்சில்**; a thorny herb, *Tribulus terrestris* (சா.அக.).

**அரத்தச்சொறி** *aratta-c-cori*, பெ. (n.) 1. **அரத்தங் காணும்வரை தினவெடுக்கும் சொறிவகை**; a skin disease causing intense itching resulting in bleeding. 2. **அரத்தக் கேட்டினாலுண்டாகுஞ் சொறி**; itching due to impurities of blood in the system (சா.அக.).

[அரத்தம் + சொறி.]

**அரத்தச்சோகை** *aratta-c-cōgai*, பெ. (n.) 1. **ஓரிடத்தில் அரத்தங் கட்டிக்கொண்டு காணும் வீக்கம்**; a swelling caused by extravasation of blood. 2. **அரத்தக் குறைவினா லேற்படும் சோகைநோய்**; anaemia caused by malnutrition and reduction in blood-cells, *Haemophthisis* (சா.அக.).

[ஒருகா. அரத்தம் + சோர்வை → சோவை → சோகை.]

'சோகை' என்னுஞ் சொல்லிற்குச் 'சோஷ' என்னும் வடசொல்லை மூலமாகக் காட்டுவது பொருந்தாது.

**சோகை** பார்க்க; see *šōgai*.

**அரத்தஞ்சாதல்** *arattañ-cādal*, தொ.பெ. (vbl.n.) **அரத்தம் வெளுத்துக் காணுதல்**; blood appearing pallid (சா.அக.).

[அரத்தம் + சாதல். சா → சாதல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தஞ்சுண்டுதல்** *arattañ-cuṇḍudal*, தொ.பெ. (vbl.n.) 1. **அரத்தம் வற்றுதல்**; gradual loss of blood. 2. **நோயினால் அல்லது மூப்பினால் உடம்பில் அரத்தக் குறைவுண்டாதல்**; drying up or decreasing of blood due to disease or old age (சா.அக.).

[அரத்தம் + சுண்டுதல். சுள் → சுண்டு → சுண்டுதல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

**அரத்ததசரம்** *aratta-tašaram*, பெ. (n.) **அரத்த வோட்டத் தொடர்பான கருவிகள்**; blood-vessels subserving circulation (சா.அக.).

[அரத்தம் + தசரம்.]

**அரத்ததசரமண்டலம்** *aratta-tašara-maṇḍalam*, பெ. (n.) **அரத்தக்குழாய்த் தொகுதி**; vascular system (சா.அக.).

[அரத்தம் + தசரம் + மண்டலம்.]

**மண்டலம்** பார்க்க; see *maṇḍalam*.

**அரத்தத்தடிப்பு** *aratta-t-tadippu*, பெ. (n.) **அரத்தநீர்க் குறைவால் அரத்தத்தில் ஏற்படும் திண்மைநிலை**; deficiency of water in the blood, thickened condition of blood (சா.அக.).

[அரத்தம் + தடிப்பு. தடி → தடிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தத்தடை** *aratta-t-tadai*, பெ. (n.) **அரத்த வடைப்பு**; stoppage of blood (சா.அக.).

[அரத்தம் + தடை.]

**அரத்தத்தாது** *aratta-t-tādu*, பெ. (n.) 1. **உடம்பின் எழுகூறுகளுள் ஒன்றான அரத்தம்**; blood which is one of the seven constituent parts of the body. 2. **அரத்த நாடி**; artery. 3. **செம்பு**; copper. 4. **செவ்வரி தாரம்**; red orpiment (சா.அக.).

[அரத்தம் + தாது.]

**தாது** பார்க்க; see *tādu*.

**அரத்தத்தாதுகதசுரம்** *aratta-t-tādu-kada-šuram*, பெ. (n.) **உடம்பு சிவந்து தடிப்புண்டாகி, நெஞ்சிற் கோழைகட்டி, உமிழ்நீரில் அரத்தம் விழும் ஒருவகைக் காய்ச்சல்**; a fever in which the skin turns red with raised patches, the phlegm is collected in the lungs and the saliva is streaked with blood (சா.அக.).

[அரத்தம் + தாது + கதம் + சுரம்.]

**தாது, கதம், சுரம்** பார்க்க; see *tādu, kadam, šuram*.

**அரத்தத்தாரை** *aratta-t-tārai*, பெ. (n.) **அரத்தஞ் செல்லும் வழி**; the passage of blood, the course of the circulation of blood (சா.அக.).

[அரத்தம் + தாரை. தார் → தாரை = தாரை போன்ற குழாய்.]

**அரத்தத்திமிர்** *aratta-t-timir*, பெ. (n.) 1. **அரத்தக் கதிப்பினால் (மிகையினால்) ஏற்பட்ட மதம்**; a restlessness arising from fullness of blood. 2. **அரத்தத்தினாலுண்டான மரப்பு**; numbness due to blood condition (சா.அக.).

[அரத்தம் + திமிர். திம் → திமிர். திமுதல் = திணிதல்.]

**அரத்தத்திரட்சி** *aratta-t-tiraṭci*, பெ. (n.) 1. **அரத்தம் உறைதல்**; clotting or coagulation of blood. 2. **பெண்குறிப் புழையில் அரத்தம் திரண்டு தங்கல்**; accumulation of blood or menstrual fluid in the uterus, Haematocolpos. 3. **அரத்தம் சேர்தல்**; accumulation or extravasation of blood (சா.அக.).

[அரத்தம் + திரட்சி. திரள் → திரட்சி (தொ.பெ.). 'சி' தொ.பெ. ஈறு.]

**அரத்தத்திரள்** *aratta-t-tiral*, பெ. (n.) *அரத்தத் திரட்சி 3 பார்க்க*; see *aratta-t-tiratci 3*.

[அரத்தம் + திரள்.]

**அரத்தத்துடிப்பு** *aratta-t-tuḍippu*, பெ. (n.) 1. **அரத்தவேகம்**; the pressure of blood on the walls of the arteries. 2. **நாடித்துடிப்பு**; pulsation of blood, pulse (சா.அக.).

[அரத்தம் + துடிப்பு. துடி → துடிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தத்தொடர்பு** *aratta-t-toḍarbu*, பெ. (n.) **அரத்தச்சேர்பு, அரத்தம்பற்றியது**; relating to blood.

[அரத்தம் + தொடர்பு.]

**அரத்தந்ததும்பு-தல்** *arattan-tadumbu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **முகஞ் சிவந்துகாட்டுதல்**; to be florid, as the flushed countenance (W.). 2. **சினத்தால் முகஞ்சிவத்தல்**; to be inflamed, as the face through anger (W.). 3. **அரத்தம் நிறைந்த கலத்தில் தளம்புதல்**; to wabble, flap, fluctuate, as blood in a moving or shaking vessel which is full to the brim.

[அரத்தம்+ததும்பு. தள (தளதள) → தளம்பு → ததம்பு → ததும்பு. தளதளத்தல் = நீர் அசைதல்.]

**அரத்தநரம்பழற்சி** *aratta-naramb(u)-alarci*, பெ. (n.) **அரத்தக்குழாயின் வெம்மை**; inflammation of a blood-vessel (சா.அக.).

[அரத்தம் + நரம்பு + அழற்சி. அழல் → அழற்சி (தொ.பெ.). 'சி' தொ.பெ. ஈறு.]

**அரத்தநரம்பு** *aratta-narambu*, பெ. (n.) 1. **அரத்தநாடி**; artery. 2. **அரத்தநாளம்**; vein. 3. **அரத்தக்குழாய்**; blood-vessel in common (சா.அக.).

[அரத்தம்+நரம்பு. நார் → (நரம்) → நரம்பு.]

**அரத்தநரம்பொடுக்கம்** *aratta-naramb(u)-oḍuk-kam*, பெ. (n.) **அரத்தக்குழாய் சிறுத்தல்**; the shrinking of a blood-vessel, *Haemadostenosis* (சா.அக.).

[அரத்தம் + நரம்பு + ஒடுக்கம். ஒடு → ஒடுங்கு → ஒடுக்கு → ஒடுக்கம்.]

**அரத்தநாகி** *aratta-nāgi*, பெ. (n.) **சாயவேர் (மண்திருஷ்டி)**; madder of Bengal, chaya root, *Oldenlandia umbellata* (சா.அக.).

**அரத்தநாடி** *aratta-nāḍi*, பெ. (n.) **நெஞ்சாங் குலையினின்று உடம்பின் பலவிடங்கட்கும் அரத்தங் கொண்டுசெல்லும் குழாய்**; any one of the vessels through which blood passes from the heart to the various parts of the body, artery (சா.அக.).

[அரத்தம் + நாடி. நாளம் → நாளி → நாழி → நாடி.]

**அரத்தநாடிப்பிளப்பு** *aratta-nāḍi-p-piḷappu*, பெ. (n.) **அரத்தநாடி தெறித்துப்போதல் அல்லது அறுந்துபோதல்**; the forcible tearing or rupture of a blood-vessel, *Angiorrhexis* (சா.அக.).

[அரத்தம் + நாடி + பிளப்பு. பிள் → பிள → பிளப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தநாடிமூலம்** *aratta-nāḍi-mūlam*, பெ. (n.) **அரத்தப் பெருங்குழாய்**; the great artery that springs from the heart, *Aorta* (சா.அக.).

[அரத்தம் + நாடி + மூலம்.]

**அரத்தநாடிவிரிவு** *aratta-nāḍi-virivu*, பெ. (n.) **அரத்தக்குழாயின் விரிவு**; dilatation of a blood-vessel, *Angiochalasis* (சா.அக.).

[அரத்தம் + நாடி + விரிவு. விரி → விரிவு (தொ.பெ.). 'வு' தொ.பெ. ஈறு.]

**அரத்தநார்** *aratta-nār*, பெ. (n.) **உடம்பின் அரத்தத்திலுள்ள வெண்கரு வலுவின் (சத்தின்) இனத்தைச் சேர்ந்த ஒரு பொருள்**; a peculiar organic substance of the nature of the white of an egg found in animals and vegetables and readily obtained from fresh blood, protein (சா.அக.).

[அரத்தம் + நார்.]

**அரத்தநார்ச்சத்து** *aratta-nār-c-cattu*, பெ. (n.) **அரத்தம் புளிப்பதனா லுண்டாகும் நாரைப் போன்ற ஒருவகை வெண்கரு வலு(சத்து)**; a whitish protein from the blood formed by the action of a ferment in blood, fibrin (சா.அக.).

[அரத்தம் + நார் + Skt. sat > த. சத்து = வலு.]

இதை 'அரத்தநார் வலு' எனலாம்.

**அரத்தநாளம்** *aratta-nāḷam*, பெ. (n.) 1. **கெட்ட அரத்தத்தை நெஞ்சாங்குலைக்குக் கொண்டு செல்லும் குழாய்**; a vessel which conveys impure blood to the heart, vein. 2. **செங்கழுநீர்**; red water-lily, *Nymphaea odorata* (சா.அக.).

[அரத்தம் + நாளம். நுள் → நள் → (நாள்) → நாளம்.]

நாளம் பார்க்க; see *nālam*.

**அரத்தநிற்பாட்டு** *aratta-nirpāṭṭu*, பெ. (n.) **அரத்தவொழுக்கை நிற்கச்செய்தல்**; the arresting of bleeding, *Haemostasis* (சா.அக.).

[அரத்தம் + நிற்பாட்டு. நில் → நிற்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. ஆடு (த.வி.) → ஆட்டு (பி.வி.). நிற்பு + ஆட்டு (து.வி.) – நிற்பாட்டு (முத.தொ.பெ.).]

**அரத்தநிறம்** *aratta-niṟam*, பெ. (n.) **அரத்தச் செந்நிறம்**; blood-red colour.

**அரத்தநீர்** *aratta-nir*, பெ. (n.) 1. **அரத்தம் உறையுங்காலத்து மேற்பாகத்தில் தெளிந்துநிற்கும் நீர், ஊனீர்**; the thin transparent watery substance that separates and stands over the solidified part when blood kept in a vessel coagulates, serum, *Liquor sanguinis*. 2. **அரத்தங்கலந்த சிறுநீர்**; urine found to be of blood colour or urine charged with blood (சா.அக.).

[அரத்தம் + நீர்.]

**அரத்தநீர்க்குறை** *aratta-nir-k-kuṟai*, பெ. (n.) **ஊனீர்க்குறைவு**; deficiency of water in the blood, *Anydremia* (சா.அக.).

**அரத்தநீர்ச்சுருக்கம்** *aratta-nir-c-curukkam*, பெ. (n.) **அரத்தநீர்க்குறை** பார்க்க; see *aratta-nir-k-kuṟai*.

[அரத்தம் + நீர் + சுருக்கம்.]

**அரத்தநோய்** *aratta-nōy*, பெ. (n.) 1. **அரத்தத்தினால் உடம்பில் ஏற்படும் நோய்கள்**; diseases arising from or relating to blood. 2. **அரத்தம் பரவிய ஒருவகைக் கண்ணோய்**; an extravasation of blood within the eye, *Haemophthalmia* (சா.அக.).

[அரத்தம் + நோய். நொள் → நோள் → நோய்.]

'அரத்தநோய்' என்பது அரத்தத் தொடர்பான நோய்கட்கெல்லாம் பொதுப்பெயராயிருப்பதனாலும், அரத்தம் பரவிய கண்ணோய்க்கு 'அரத்தக்கண்' என்று சிறப்புப் பெயரிருப்பதனாலும், பின்னதை இரண்டாம் பொருளாக இங்குக் கூறுவது பொருந்தாது.

**அரத்தப்பசப்பு** *aratta-p-pašappu*, பெ. (n.) **அரத்தச் செழுமை**; fullness of blood.

[அரத்தம் + பசப்பு. பசு → பச → பசப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தப்பசுமை** *aratta-p-pašumai*, பெ. (n.) **அரத்தப்பசப்பு** பார்க்க; see *aratta-p-pašappu*.

[அரத்தம் + பசுமை. பசு → பசுமை (பண்.பெ.). 'மை' பண்.பெ. ஈறு.]

**அரத்தப்பசை** *aratta-p-pašai*, பெ. (n.) 1. **அரத்தப்பிசுபிசுப்பு**; viscidity of blood. 2. **அரத்தச்சாரம்**; essence of blood.

[அரத்தம் + பசை.]

பசை பார்க்க; see *pašai*.

**அரத்தப்படலம்** *aratta-p-paḍalam*, பெ. (n.) **கண்மணியிற் கரித்தல், காந்தல், கன்றுதல், பீளை சாரல், எரிதல், அரத்தங்கட்டல், புருவம்நெற்றி பிடரிகளிற் குத்தல் முதலிய குணங்களைக் காட்டும் கண்ணோய்**; an eye-disease characterised by inflammation and congestion of the pupil, accumulation of muco-purulence, burning sensation and pin-prick pain in the eye-brows, forehead and the nape of the neck, pannus (சா.அக.).

[அரத்தம் + படலம். படு → படல் → படலம்.]

**அரத்தப்படாத்தி** *aratta-p-paḍātti*, பெ. (n.) 1. **வெள்விழியில் அரத்தம் குழம்பும்படி செந்நிறச் சதையை வளர்க்கும் நோய்**; a disease in the white of the eye marked by a morbid growth of red flesh and congestion of the part affected. 2. **கடைக்கண்ணில் வெப்பத்துடன் அரத்தம் வடியச் செய்யும் நோய்**; congestion of the corner of the eye with discharge of blood (சா.அக.).

[ஒருகா. அரத்தம் + படர்த்தி. படர் → படர்த்தி → படாத்தி.]

**அரத்தப்படுவன்** *aratta-p-paḍuvaṉ*, பெ. (n.) **ஒருவகைக் கண்ணோய்**; a kind of eye-disease (சா.அக.).

**அரத்தச்சிலந்தி** பார்க்க; see *aratta-c-cilandi*.

[அரத்தம் + படுவன். ஒருகா. படு (தோன்று) → படுவன். ஒ.நோ: புறப்படு → புறப்பாடு = உடல்மேல் தோன்றும் கொப்புளம், சிலந்தி, பிளவை முதலிய புண்கட்டிவகை.]

**அரத்தப்பண்டுவம்** *aratta-p-paṇḍuvam*, பெ. (n.) **அரத்தத்தை உடம்பினின்று வெளிப்படுத்தி அல்லது உட்புகட்டி நோய்களைக் குணப்படுத்தும் மருத்துவமுறை (சிகிச்சை)**; treatment of

disease using blood or blood preparations, as in venesection, transfusion of blood, etc.

[அரத்தம் + பண்டுவம். பண்டு → பண்டுவன் → பண்டுவம்.]

**அரத்தப்பரு** *aratta-p-paru*, பெ. (n.) அரத்தம் நிறைந்த பரு; a wart containing blood.

[அரத்தம் + பரு. புருத்தல் = தோன்றுதல், பிறத்தல். ஒருகா. புரு → பரு.]

**அரத்தப்பலி** *aratta-p-pali*, பெ. (n.) 1. அரத்தப் படையல், அரத்தக் காவு; libation of blood, blood sacrifice. 2. கொலை; murder (W.).

[அரத்தம் + **Skt.** bali > த. பலி.]

அரத்தக்காவு என்பது தூய தமிழ்.

**அரத்தப்பழம்** *aratta-p-paḻam*, பெ. (n.) 1. சிவந்த பழம்; a red fruit. 2. கோவைப்பழம்; the fruit of a common creeper of the hedges, *Coccinia indica*. 3. ஆலம்பழம்; the fruit of the banyan tree, *Ficus bengalensis*. கோவையை *Bryonia grandis* என்று சா. அகரமுதலி கூறும்.

[அரத்தம் + பழம்.]

**அரத்தப்பழி** *aratta-p-paḻi*, பெ. (n.) 1. கொலைக் குற்றம்; crime of bloodshed (W.). 2. கொலைக்குக் கொலை; revenge for murder.

[அரத்தம் + பழி.]

**அரத்தப்பனையன்** *aratta-p-paṉaiyaṉ*, பெ. (n.) ஒரு கொடிய பாம்பு; a venomous snake (சா.அக.).

[அரத்தம் + பனையன். ஒருகா. பனை → பனையன் = பனைவிரியன்.]

**அரத்தப்பாடு** *aratta-p-pāḍu*, பெ. (n.) 1. பெரும்பாடு; abnormally profuse menstruation, *Menorrhagia*. 2. பெரும்பாட்டைப்போல் பெண்குறிப் புழைவழியாக ஒழுகும் அரத்தவொழுக்கு; an excessive haemorrhage like menorrhagia in the uterus, *Metrorrhagia* (சா.அக.).

[அரத்தம் + பாடு. படு → பாடு (முத.தி. தொ.பெ.]

**அரத்தப்பாதம்** *aratta-p-pādam*, பெ. (n.) 1. (முழங்காலிற் சிவந்த) கிளி; parrot, so called from its red coloured knee. 2. முருக்கமரம்; Indian coral tree, *Butea frondosa* alias *Erythrina indica*.

[அரத்தம் + பாதம். பதி → பாதம் = நிலத்திற் பதியும் உறுப்பு.]

**அரத்தப்பாதிரி** *aratta-p-pādiri*, பெ. (n.) சிறு புள்ளடி, ஒரு செடிவகை (பதார்த்த. 366); a plant, *Hedysarum* (சா.அக.).

**அரத்தப்பாய்ச்சல்** *aratta-p-pāyccal*, பெ. (n.) 1. உடம்பிற்குள் ஓரிடத்திற்கு அரத்தம் பாய்தல்; the flow or rush of blood to a particular part of the body, afflux. 2. உடம்பிற்குள் பல விடங்கட்கும் அரத்தம் பாய்தல்; circulation of blood in the system. 3. அரத்தப் போக்கு; bleeding in general. 4. எலிகடி நஞ்சினாற் பற்களிலுண்டாகும் அரத்தப் போக்கு; bleeding from the gum of the teeth due to the poisonous bite of a rat (சா.அக.).

[அரத்தம் + பாய்ச்சல். பாய் → பாய்ச்சல் (தொ.பெ.). 'சல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தப்பாலா** *aratta-p-pāla*, பெ. (n.) தித்திப்புக் கோவை; a variety of sweet bryony (not identified), said to be used for solidifying mercury (சா.அக.).

[அரத்தம் + பாலா.]

**அரத்தப்பாலி** *aratta-p-pāli*, பெ. (n.) செந்தாடு பாவை, ஒரு மூலிகை; an unidentified plant supposed to possess powerful qualities (சா.அக.).

மறுவ. செந்தாடுபாவை, சேர்ந்தாடு பாவை.

[அரத்தம் + பாலி.]

**அரத்தப்பாளம்** *aratta-p-pāḷam*, பெ. (n.) 1. உறைந்த அரத்தத்தின் பரந்த கட்டி; a big mass of coagulated blood. 2. கரியபோளப் பிசின் (மூசாம்பரம்); a resinous inspissated juice of the Aloe species, *Myrrh* (சா.அக.).

**அரத்தப்பிண்டகம்** *aratta-p-piṇḍagam*, பெ. (n.) ஒரு பூடு; *Ipomaea barbata* (சா.அக.).

[அரத்தம்+பிண்டகம். பிண்டம் → பிண்டகம்.]

**அரத்தப்பிண்டம்** *aratta-p-piṇḍam*, பெ. (n.) 1. சீனமல்லிகை (மலை.); China jasmine, Rangoon creeper. 2. காட்டுமல்லிகை; wild jasmine, *Jasminum angustifolium* (சா.அக.).

[அரத்தம் + பிண்டம்.]

**அரத்தப்பிணிநீர்ப்பை** *aratta-p-piṇi-nīr-p-pai*, பெ. (n.) அரத்தம் தங்கிநிற்கும் கழலை போன்ற ஒரு சதைப் பை; a sac-like tumour containing blood, blood-cyst, *Haemato-cyst* (சா.அக.).

[அரத்தம் + பிணி + நீர் + பை.]

is accompanied by vomiting of
.

த்தம் + சூலை.]

*aratta-p-pittam*, பெ. (n.) கினாலும் அரத்தக் கேட்டினா று ஒன்பான் துளை வழியாய் ரிப்படும் அரத்தவொழுக்கு; a of blood from vessels through gs of the body, bleeding or ா.அக.).

த்தம். பித்து → பித்தம்.]

*ratta-p-pittam*, பெ. (n.) ஆடா ar-nut (சித்.அக.).

*aratta-p-pittu*, பெ. (n.) a kind of ruby (சா.அக.).

*aratta-p-piriyan*, பெ. (n.) ா; bloodthirsty person.

kt. priya > த. *பிரியன்.* *புரி* . *புரி → புரியம்* > **Skt.** priya.]

கையன்' என்பது தூய தமிழ்.

*atta-p-pilai*, பெ. (n.) வெள் உண்டாகும்போது சரியும் urulent discharge with blood-yes, appearing especially when s membrane is formed on the (சா.அக.).

follicles, causing falling off of skin complexion, etc. They (சா.அக.).

[அரத்தம் + புழு.]

'கிருமி' என்னும் வடசொ என்னும் தென்சொல் பட்டுள்ளது.

**அரத்தப்புளி** *aratta-p-puli*, பெ red tamarind (சா.அக.).

[அரத்தம் + புளி. அரத்தம்

**அரத்தப்புளிப்பு** *aratta-p-pulip* (vbl.n.) அரத்தங்கெட்டுப் புளி tion of the blood, *Haemotozym*

[அரத்தம் + புளிப்பு. புளி பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தப்பூசம்** *aratta-p-pū* கோசாப்பழம் (தர்பூசணி); goa water-melon, *Citrullus vulgari*

[அரத்தம் + பூசம். அரத்தம்

**அரத்தப்பூஞ்செடி** *aratta-p-pū* சூரைச்செடி; a plant, jackal *oenoplia* (சா.அக.).

[அரத்தம் + பூ + செடி.]

**அரத்தப்பூடம்** *aratta-p-pū* முள்ளிலவு; red-flowered silk-*malabaricum* (சா.அக.).

பெரு நாளம் (*inferior vena cava*) என இரு வகைப்படும். இவற்றுள், முன்னது உடம்பின் மேற்பாதியிலுள்ள அரத்தத்தையும், பின்னது கீழ்ப்பாதியிலுள்ள அரத்தத்தையும் கொண்டு செல்லும்.

[அரத்தம் + பெருநாளம்.]

**அரத்தப்பெரும்பாடு** *aratta-p-perumbāḍu*, பெ. (n.) இடைவிடாது மிகுதியாக அரத்தம் வெளிப்படும் மாதவிடாய்ப் போக்கு; an abnormally profuse and continuous menstruation (சா.அக.).

[அரத்தம் + பெரும்பாடு.]

**அரத்தப்பைத்தியம்** *aratta-p-paittiyam*, பெ. (n.) அரத்தக்கோட்டி; mania to kill, homicidal mania (சா.அக.).

[அரத்தம் + பித்தம் > **Skt.** paittika > த. பைத்தியம்.]

அரத்தக்கோட்டி என்பது தூய தமிழ்.

**அரத்தப்பொருமல்** *aratta-p-porumal*, பெ. (n.) நெஞ்சாங்குலையைச் சார்ந்த பெரிய அரத்தக் குழாய்களிடம் உண்டாகும் ஓர் அமைதியான ஒலி; a faint murmur of blood heard in the main blood vessels at the base of the heart, *Heimic murmur* or *Anaemic murmur* (சா.அக.).

[அரத்தம்+பொருமல். பொருமு→ பொருமல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தப்போக்கு** *aratta-p-pōkku*, பெ. (n.) 1. அரத்தம் வெளிப்படல், போதல், ஒழுகல்; discharge or flow of blood. 2. அரத்தம் வெளிப்படும் வழி; the opening through which blood is discharged.

[அரத்தம் + போக்கு. போ → போகு → போக்கு (தொ.பெ.).]

**அரத்தப்போளம்** *aratta-p-pōḷam*, பெ. (n.) ஒரு வகை நறுமணப் பண்டம் (மூ.அ.); gum-myrrh.

**அரத்தம்**[1] *arattam*, பெ. (n.) 1. சிவப்பு; red colour. "அரத்த வேணியர்" (கந்தபு. யுத்த. முதனா. 82). 2. சிவந்த பொருள் (நாநார்த்த.); red substance. 3. குருதி; blood. "அரத்தமுண் டொளிரும்வா ளவுணர்" (நைடத. நளன் றா. 14). 4. பவளம் (திவா.); coral. 5. அரக்கு (திவா.); lac, red sealing-wax. 6. செம்பு (சங்.அக.); copper. 7. செம்பருந்து (சங்.அக.); sacred kite (bird). 8. செந்தாமரை; red lotus. 9. செம்பருத்தி (L.); Brazil cotton. 10. செம்பரத்தை (மலை.); shoe-flower. 11. செங்கழுநீர் (சூடா.); red water-lily. 12. செங்குவளை (சங்.அக.); a kind of water-lily. 13. செங்கடம்பு (பிங்.); small Indian oak, *Barringtonia acutangula* (சா.அக.). 14. குங்குமப்பூ (தைலவ. அரும் பத.); saffron flower, *Crocus sativus* (சா.அக.). 15. ஒருவகைத் துகில் (சிலப். 14:108, அடியார்க். உரை); a red garment of ancient times. 16. செம்மெழுகு (சங்.அக.); bee's wax. 17. செம்பொட்டு (நெற்றித் திலகம்)(நாநார்த்த.); tilaka on the forehead. 18. செம்பொன் (அக.நி.); superior gold of a slightly reddish colour. 19. செம்மஞ்சள்; reddish yellow turmeric. 20. செம்பஞ்சுக் குழம்பு; red lac used by women for dyeing the feet.

ம. அரத்தம்; க., து. ரக்த; தெ. ரக்தமு; கொங். ரகத்; பட. ரத்த; **Mar.** rakta., **Sinh.** rata.

[உல் → உல → உலர். உலர்தல் = காய்தல். உல் → எல் → எர் → எரி = நெருப்பு, நெருப்பின் நிறமான சிவப்பு. உல் → அல் → அல → அலத்தம் = சிவப்பு, சிவந்த பொருள். அலத்தம் → அரத்தம். ல → ர, போலி. அரத்தம் > **Skt.** rakta.]

அரத்தகம் பார்க்க; see *arattagam*.

அரத்தம் என்னும் சொல் கீழ்வருமாறு மேலையாரிய மொழிகளிற் பல்வேறு வடிவில் திரிந்து வழங்குகின்றது.

உலகில் நெருப்புண்டாவது, பொதுவாகப் பொருள்கள் ஒன்றோடொன்று உராய்வதனா லென்பது அனைவரும் அறிந்ததே. முதற்கால மக்கள் இதைக் கண்டே, உராய்தல் வினையி னின்று நெருப்பை யுணர்த்துஞ் சொற் களைத் தோற்றுவித்திருக்கின்றனர்.

உரவு → உரசு, உரப்பு (க., தெ. ருப்பு). உரிஞ் → உரிஞ்சு, உரை (உராய்), உறழ் என்பன உராய்தலைக் குறிக்குஞ் சொற்கள். இவற்றின் வேர் உர்; மூலம் உல்.

உரு (உருத்தல் = அழலுதல்), உருப்பு → உருப்பம் (வெப்பம்), உரும்பு (கொதிப்பு), உருமம் (நண்பகல் வெப்பம்), உருமி (புழுங்கு), உரி (க.) என்பன நெருப்பை யுணர்த்துஞ் சொற்கள். இவற்றின் வேர் உர்; மூலம் உல்.

உல, உலர், உலவை (காய்ந்த மரக்கிளை), உலை (அடுப்பு நெருப்பு) என்பன, ரகரமாய்த் திரியாது நெருப்பை யுணர்த்தும் லகரவீற்றுச் சொற்கள். ஆகையால், அலத்தி (மின்மினி)

என்பது நெருப்பின் ஒளியையும்; அலத்தம் → அலத்தகம் (செம்பஞ்சுக் குழம்பு, செம்பருத்தி), அலத்தை (செம்பஞ்சு), அலந்தல் → அலந்தலி (செங்கத்தரி) என்பன நெருப்பின் நிறமாகிய சிவப்பையும் அதைக்கொண்ட பொருள்களையும் உணர்த்துகின்றன. உல் → அல்.

உல் என்னும் மூலம் அல், இல் → எல் என்று திரிந்தது போன்றே, உர் என்னும் வேரும் அர், இர் → எர் என்று திரிந்துள்ளது. எல் (ஒளி) → எல்லோன் = கதிரவன். எர் → எரி (நெருப்பு).

அரக்கு, அரத்தம் என்னும் சொற்கள், முதற்கண் நெருப்பின் நிறமான சிவப்பையுடைய செம்மெழுகையும் குருதியையும் சிறப்பாக வுணர்த்திப் பின்னர்ச் செந்நிறப் பெயர்களாகவும் வழங்கத் தலைப்பட்டுவிட்டன.

எ-டு: அரக்காம்பல் = செவ்வாம்பல், அரத்தப் பூம்பட்டாடை = செந்நிறப் பூம் பட்டாடை.

ஒ.நோ: பவளச்சோளம், பவளவாய்.

இங்கு இத்துணையுங் கூறியது, செந்நிறத்தைப் பெருவழக்காகக் குறிக்கும் மேலையாரியச் சொற்கட்கெல்லாம் மூலம், 'அரத்தம்' என்னுந் தென்சொல்லே யன்றி, 'ருதிர' அல்லது 'ரக்த' என்னும் வடசொல்லன்று என்பதை யுணர்த்தற்கே.

*அரத்த(ம்)* — **E.** red; **OE.** réad, réod; **OFris.** râd; **OS. (M.DU.MLG.)** rôd; **Du.**, **LG.** rood; **OHG.**, **MHG.** rōt; **mod.G.** roth, rot; **ON.** rauðr, rjóðr; **Sw.**, **Da.** röd; **Goth.** rauths; **Gmc.** rauthaz; **L.** ruber, rūfus; **OIr.** ruad (h); **Lith.** raũda-s; **Gk.** éruthrós; **OSl.** rŭdrŭ; **Skt.** rudhirá.

**ஆங்கிலச் சொல்லின் பலவடிவங்கள் :**

red, read, reade, reed, reede, raed, rede, redd, redde, radd, raid, rid, rud, rudd, ruddy.

சமற்கிருதத்திலுள்ள 'ருதிர' என்பது மேலையாரியத்தினின்று வந்த பழஞ்சொல்லும், 'ரக்த' என்பது தமிழினின்று சென்ற புதுச்சொல்லும் ஆகும். அரத்தம் > ரக்த.

தகரம் இரட்டிவரும் தமிழ்ச்சொல்லில் முதல் தகரத்தைக் ககரமாக்குவது வடமொழி யியல்பு.

எ-டு: முத்து → முத்தம் > **Skt.** mukta. பத்தி > **Skt.** bhakti.

**அரத்தம்²** *arattam*, பெ. (n.) கடுக்காய் (பரி.அக.); chebulic myrobalan.

**அரத்தம்நிறுத்தல்** *arattam-niṟuttal*, தொ.பெ. (vbl.n.) 1. **அரத்தத்தை நிற்பாட்டுதல்;** arresting or preventing the flow of blood, *Haemostasis* (சா.அக.).

[அரத்தம் + நிறுத்தல் – அரத்தம் நிறுத்தல். நிறு → நிறுத்து → நிறுத்தல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தம்படல்** *arattam-paḍal*, தொ.பெ. (vbl.n.) 1. **மாதவிடாய் உண்டாதல்;** the act of menstruating. 2. **மாதவிடாய் சரியாக ஒழுகாமற் சிறிதாய் வரல்;** scanty discharge of menstrual blood (சா.அக.).

[அரத்தம் + படல். படுதல் = உண்டாதல், சிறிதாய்த் தோன்றுதல். படு → படல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தம்பீரிடல்** *arattam-pīr-iḍal*, தொ.பெ. (vbl.n.) **அரத்தம் வேகமாய்ப் பாய்தல்;** blood gushing out, spouting of blood, *Arterial haemorrhage* (சா.அக.).

[அரத்தம் + பீர் + இடல். பீல் → பீர். இடு (து.வி.) → இடல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தம்பெய்-தல்** *arattam-pey-*, 1 செ. குன்றாவி. (v.t.) **அரத்தங் கலந்த சிறுநீர் விடுதல்;** to discharge urine mixed with blood (சா.அக.).

**அரத்தம்மை** *arattammai*, பெ. (n.) **கொப்புளங்களிலிருந்து அரத்தம் வடியும் அம்மைநோய் வகை;** a form of small-pox in which haemorrhage occurs in the vesicles, *Haemorrhagic variola* (சா.அக.).

[அரத்தம் + அம்மை – அரத்தவம்மை → அரத்தம்மை.]

**அரத்தம்வடிதல்** *arattam-vaḍidal*, தொ.பெ. (vbl.n.) **அரத்தவொழுக்கு;** bleeding or haemorrhage (சா.அக.).

**அரத்தம்வாங்கல்** *arattam-vāṅgal*, பெ. (n.) **அரத்தம் குத்தியெடுத்தல்;** therapeutic withdrawal of blood (சா.அக.).

[அரத்தம் + வாங்கல். வாங்கு → வாங்கல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு. வாங்குதல் = எடுத்தல், பெறுதல்.]

**அரத்தம்வாங்கி** *arattam-vāṅgi*, பெ. (n.) **உடம்பினின்று அரத்தத்தை வெளிப்படுத்துவதற்குப் பயன்படுத்தும் கருவி;** a glass vessel like a cup

applied to the skin or any device for drawing blood, cupping glass, *Cucurbitula* alias *Haemospast*.

[அரத்தம் + வாங்கி. வாங்கு → வாங்கி. 'இ' வி.முத. ஈறு.]

**அரத்தம்விடல்** *arattam-viḍal*, தொ.பெ. (vbl.n.) **பழங்காலத்தில், உடம்பில் அரத்தக்குறைவு ஏற்படுங்கால், எருதின் அரத்தத்தை உடம்பிற் குட் செலுத்தல்;** treatment of human diseases in olden days by transfusion of arterial blood of bullocks by injection or through the mouth, *Haemotherapy* (சா.அக.).

[அரத்தம் + விடல். விடுதல் = உள்ளிடுதல். விடு → விடல் (தொ.பெ.).]

'அரத்தக்குறைவு ஏற்படுங்கால்' என்று ஒரு நோயை விதந்துகூறும் தமிழ்ப் பொருளொடு, 'treatment of diseases' என்று பொதுப்படக் கூறும் ஆங்கிலப் பொருள், ஓரளவு முரண்படு கின்றது.

**அரத்தமடக்கி** *arattam-aḍakki*, பெ. (n.) **அரத்த வொழுக்கை நிறுத்தும் மருந்து** (M.M.); styptic, medicine to stop or restrain haemorrhage.

[அரத்தம் + அடக்கி. அடங்கு (த.வி.) → அடக்கு (பி.வி.) → அடக்கி. 'இ' வி.முத. ஈறு.]

**அரத்தமண்டலம்** *aratta-maṇḍalam*, பெ. (n.) 1. **அரத்த வட்டம்**; circulatory system. 2. **உடம் பிற் காணும் செந்நிறப் படைநோய்;** a skin disease marked by red patches on the body (சா.அக.). 3. **செந்தாமரை** (மலை.); red lotus.

[அரத்தம்+மண்டலம். மண்டுதல்=வளைதல். மண்டு → மண்டலம் (வட்டம்). 'அலம்' தொ.பெ., தொ.ஆகு., பண்.பெ. ஈறு.]

**அரத்தமண்டலி**[1] *aratta-maṇḍali*, பெ. (n.) **உடம்பின்மேற் செம்புள்ளிகளை அல்லது வளையங்களையுடைய நச்சுப் பாம்பு;** a venomous snake with red spots or rings over its body.

[அரத்தம் + மண்டலி. மண்டலம் (வட்டம்) → மண்டலி. 'இ' உடையவன் ஈறு.]

**அரத்தமண்டலி**[2] *aratta-maṇḍali*, பெ. (n.) 1. **குளத்தில் காணப்படும் துளசிப்பூண்டு;** a variety of basil found in tanks. 2. **கழுதைத் தும்பை;** a species of leucas, donkey toombay Indian borage, *Borago indica* (சா.அக.).

**அரத்தமதப்பால்** *aratta-mada-p-pāl*, பெ. (n.) **சிவப்புக் கொய்யா;** red guava fruit (சா.அக.).

**அரத்தமதம்** *aratta-madam*, பெ. (n.) **அரத்தப் பெருக்கினால் உடம்புங் கண்ணும் மதர்த்து உணர்ச்சியற்று மூக்கினால் அரத்தவொழுக்கு முதலிய பல கெட்ட குணங்களைக் காட்டும் நோய்;** a condition marked by vascular turgescence, excess of blood, fullness of pulse, bleeding from the nose, and various other bad signs, *Plethora* (சா.அக.).

[அரத்தம் + மதம்.]

**அரத்தமயக்கம்** *aratta-mayakkam*, பெ. (n.) 1. **அரத்தவொழுக்கினால் ஏற்படும் மயக்கம்;** giddiness due to excessive bleeding. 2. **உடம் பில் அரத்தப்பெருக்கினால் ஏற்படும் மயக்கம்;** giddiness caused by blood pressure (சா.அக.).

[அரத்தம் + மயக்கம். மயங்கு (த.வி.) → மயக்கு (பி.வி.) → மயக்கம் (தொ.பெ.). 'அம்' தொ.பெ. ஈறு.]

**அரத்தமலடு** *aratta-malaḍu*, பெ. (n.) **கருப்பை யில் அரத்தஞ் சேர்ந்து பந்துபோ லுருண்டு வளி (வாயு)போலோடும் மாதவிடாய் (சூதக) நோய்;** a condition of sterility in women characterised by suppression of menses and other symptoms of pregnancy.

**அரத்தமலப்போக்கு** *aratta-mala-p-pōkku*, பெ. (n.) **அரத்தங் கலந்த மலப்போக்கு;** blood in the faeces (சா.அக.).

[அரத்தம் + மலம் + போக்கு.]

**அரத்தமலம்** *aratta-malam*, பெ. (n.) 1. **வயிற் றுளைச்சல்;** dysentery attended with discharge of blood. 2. **அரத்தங் கலந்து வெளிவரும் மலம்;** blood in the faeces. 3. **அரத்தவழுக்கு;** impurities of blood (சா.அக.).

[அரத்தம் + மலம்.]

**மலம்** பார்க்க; see *malam*.

**அரத்தமறிப்பு** *aratta-maṟippu*, பெ. (n.) **அரத்த வொழுக்கைத் தடுத்தல்;** checking the flow of blood, *Haemostatic* (சா.அக.).

[அரத்தம் + மறிப்பு. மறித்தல் = தடுத்தல். மறி → மறிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தமாடன்** *aratta-māḍaṉ*, பெ. (n.) **அரத்த வேட்கையுள்ள ஒரு பேய்;** a bloodthirsty evil spirit.

[அரத்தம் + மாடன் (இறந்துபோன ஒரு மறவன் பெயர்).]

**அரத்தமாரணம்** *aratta-māraṇam*, பெ. (n.) **காவிக்கல்**; reddle, red ochre (சங்.அக.).

[அரத்தம் + மாரணம்.]

**அரத்தமாரம்** *aratta-māram*, பெ. (n.) **அரத்த மாரணம்** பார்க்க; see *aratta-māraṇam* (சா. அக.).

**அரத்தமானியம்** *aratta-māṉiyam*, பெ. (n.) **படைத்துறை யூழியத்திற்காகக் கொடுக்கப் பட்ட உம்பள (நில) மானியம்**; blood fief, fief granted as reward for military service.

[அரத்தம் + மானியம். மானித்தல் = மதித்தல், பெருமைப்படுத்தல். மானம் → மானி → மானியம்.]

**அரத்தமுறிஞ்சல்** *arattam-uṟiñjal*, தொ.பெ. (vbl.n.) **அட்டை முதலியவற்றால் உடம்பி னின்று அரத்தத்தை வெளிப்படுத்தல்**; abstraction of blood from the body in leech-bite, devilry, diseases, etc. (சா.அக.).

[அரத்தம் + உறிஞ்சல். உறி → உறிஞ்சு → உறிஞ்சல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தமுறிக்கும்பாலி** *aratta(m)-muṟikkum-pāli*, பெ. (n.) **சிவப்புச் சதுரக்கள்ளி**; a red variety of square-spurge, *Euphorbia antiquorum* (சா. அக.).

[அரத்தம் + முறிக்கும் + பாலி. முறி → முறிக்கும் (பெ.எ.). பால் → பாலி. 'இ' உடையவன் ஈறு.]

**அரத்தமூத்திரம்** *aratta-mūttiram*, பெ. (n.) **அரத்தங் கலந்துவரும் சிறுநீர்**; presence of blood in the urine, discharge of blood in urine, *Haematuria*.

[அரத்தம்+மூத்திரம். மோத்திரம் → மூத்திரம்.]

**மோத்திரம்** பார்க்க; see *mōttiram*.

**அரத்தமூலம்** *aratta-mūlam*, பெ. (n.) **அண்டியி லிருந்து அரத்தம்வடியும் மூலநோய்** (மூ.அ.); bleeding piles, *Haemorrhoids*. "அரத்த மூலநீர்ச் செறுப்புவெங் கயத்தர்" (கடம்ப. பு. இலீலா. 128).

[அரத்தம் + மூலம் (முளை).]

இது (1) அண்டிவாய்க்கு உட்பட்டது (internal), (2) வெளிப்பட்டது (external), (3) உட்பட்டும் வெளிப்பட்டுமிருப்பது (mixed) என மூவகைப்பட்டதாகச் **சா. அகரமுதலி** கூறும்.

**அரத்தமெடுத்தல்** *arattam-eḍuttal*, தொ.பெ. (vbl.n.) **அரத்தம்வாங்கல்** பார்க்க; see *arattam-vāṅgal*.

[அரத்தம் + எடுத்தல்.]

**அரத்தமேகம்** *aratta-mēgam*, பெ. (n.) **அரத்த வெட்டை** பார்க்க; see *aratta-veṭṭai*.

[அரத்தம் + Skt. mēha > த. மேகம்.]

**அரத்தவடி** *aratta-vaḍi*, பெ. (n.) **அம்மைக் கொப்புளம், அம்மைநோய்** (மூ.அ.); small-pox pustule, small-pox.

Skt. vaṭī

[அரத்தம் + வடி. வள் → வட்டு → வட்டி → வடி = உருண்ட கொப்புளம்.]

**அரத்தவண்ணகம்** *aratta-vaṇṇagam*, பெ. (n.) **பெருங்கம்பிப் பூடு**; a plant (unidentified) (சா.அக.).

[அரத்தம் + வண்ணகம். வண்ணம் → வண்ணகம்.]

**அரத்தவண்ணம்** பார்க்க; see *aratta-vaṇṇam*.

**அரத்தவண்ணம்** *aratta-vaṇṇam*, பெ. (n.) 1. **அரத்தச் செந்நிறம்**; blood-redcolour. 2. **ஒருவகைச் செவ்வரிசி**; a kind of red rice (சா.அக.).

[அரத்தம் + வண்ணம். வள் → வண் → வண்ணம். வள் → வர் → வரி → வரணம்.]

**வண்ணம், வரணம்** பார்க்க; see *vaṇṇam*, *varaṇam*.

நெல் (paddy) என்பது உமியும் அரிசியும் சேர்ந்தது. அரிசி என்பதை 'rice' என்றே ஆங்கிலத்திற் குறித்தல் வேண்டும். இதைச் சில அகரமுதலிகள் கவனிப்பதில்லை.

**அரத்தவம்மை** *aratta-v-ammai*, பெ. (n.) **அரத் தம்மை** பார்க்க; see *arattammai*.

[அரத்தம் + அம்மை.]

**அரத்தவரி**[1] *aratta-vari*, பெ. (n.) **கயிறுபோன்ற இருவரிகள் அரத்த நிறத்துடன் கடைக்கண் வரை படர்ந்து கருவிழியைத் தாக்கும் ஒரு கண்ணோய்**; a disease affecting the iris of the eye, and characterised by blood-streaked lines extending to the corners of the eyes (சா.அக.).

[அரத்தம்+வரி. வள் → வர் → வரி = கோடு.]

**அரத்தவரி**[2] *aratta-v-ari*, பெ. (n.) **கண்ணில் அரத்தவூறலினால் தமைச்சலெடுக்கும் ஒரு**

வகைக் கண்ணோய்; an eye-disease attended with itching sensation due to extravasation of blood in the eye (சா.அக.).

[அரத்தம் + அரி (அரிப்பு) முத.தொ.பெ.]

**அரத்தவல்லி** *aratta-valli*, பெ. (n.) **ஒரு சிவப்புக் கொடி;** a red creeper, *Ventilago madraspatana* (சா.அக.).

[அரத்தம் + வல்லி. வல்லுதல் = வளைதல். வல் → வல்லி. 'இ' வி.முத. ஈறு.]

**அரத்தவலிப்பு** *aratta-valippu*, பெ. (n.) **அரத்த மிகுதியினா லுண்டாகும் இசிவுநோய்** (மூ.அ.); convulsion caused by very high blood pressure.

[அரத்தம் + வலிப்பு. வலித்தல் = இழுத்தல். வலி → வலிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தவழலை** *aratta-valalai*, பெ. (n.) **கடிப்பதனால் அரத்தங் கக்கவைக்கும் ஒரு வகை நச்சுப்பாம்பு;** a poisonous snake, the bite of which causes vomiting of viscid blood (சா.அக.) — a snake causing vomiting of blood by its bite prob. russell's viper (செ. அக.).

[அரத்தம் + வழலை (ஒருவகைப் பாம்பு). ஒருகா. வழல் → வழலை.]

**அரத்தவள்ளி** *aratta-valli*, பெ. (n.) **செவ்வள்ளி** (வின்.); purple yam (செ.அக.) — yam, sweet potato, *Dioscorea purpurea* (சா.அக.).

[அரத்தம் + வள்ளி. வள்ளுதல் = வளைதல். வள் → வள்ளி = கொடி. கிழங்கைக் குறிப்பின், வள்ளுதல் = வளமாதல், உருண்டு திரளுதல். வள்ளி = உருண்டு திரண்ட கிழங்கு என்றாகும்.]

**அரத்தவற்கனம்** *aratta-varkanam*, பெ. (n.) **செம்பு;** copper (சா.அக.).

[அரத்தம் + வற்கனம். ஒருகா. வல் → வற்கு → வற்கனம்.]

**அரத்தவாமைக்கட்டி** *aratta-v-āmai-k-katti*, பெ.(n.) **மண்ணீரலிற் காணும் அரத்தத் திரட்சி;** enlargement of the spleen attended with marked increase of blood, congestion of the spleen with blood, *Splenemia* (சா.அக.).

[அரத்தம் + ஆமை + கட்டி. ஆமை = ஆமை வடிவு. கட்டு → கட்டி.]

**அரத்தவாரி** *aratta-vāri*, பெ. (n.) 1. **மாதவிடாய்ப் பெருக்கு;** abnormal flow of menstrual blood. 2. **மிகுந்த அரத்தப்போக்கு;** profuse bleeding, *Haemorrhage*. 3. **பெரும்பாடு;** *Menorrhagia*.

[அரத்தம் + வாரி. வார்தல் = ஒழுகல், போதல், நீளல். வார் → வாரி.]

"வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள"
(தொல். சொல். உரி. 20).

**அரத்தவிந்து** *aratta-vindu*, பெ. (n.) **குருவிந்தம் என்னும் மாணிக்கவகை** (சிலப். 14 : 186, அடியார்க். உரை); corundum, alumina in a crystalline state.

[அரத்தம் + விந்து. வித்து → விந்து.]

**அரத்தவியர்வை** *aratta-viyarvai*, பெ. (n.) **அரத்தமே வியர்வையாகக் காணுதல்;** sweating of blood (சா.அக.).

[அரத்தம் + வியர்வை. விளர் → வியர் → வியர்வை.]

**அரத்தவிரியன்** *aratta-viriyan*, பெ. (n.) **கடித்தவுடன் அரத்தங் கக்கவைக்கும் விரியன்பாம்பு வகை;** russell's viper, *Vipera russellii*.

[அரத்தம் + விரியன்.]

**அரத்தவிருமல்** *aratta-v-irumal*, பெ. (n.) 1. **இருமும்போது அரத்தங்கக்கும் இருமல் நோய்;** discharge of blood from the lungs during cough in a consumptive patient. 2. **திடுமென்று ஏற்படும் திகிலினா லுண்டாகும் அரத்தங் கக்கல்;** a cough with spitting of blood due to shock or sudden fear.

[அரத்தம் + இருமல். இருமு → இருமல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தவிரைச்சல்** *aratta-v-iraiccal*, பெ. (n.) **உடம்பில் அரத்தக் குறைவினால் உண்டாகும் ஒலி;** murmur due to anaemic condition of the blood, *Haemic murmur* (சா.அக.).

[அரத்தம் + இரைச்சல். இரை → இரைச்சல் (தொ.பெ.). 'சல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தவீக்கம்** *aratta-vikkam*, பெ. (n.) **உடம்பில் ஓரிடத்தில் அரத்தஞ் சேர்வதனால் ஏற்படும் வீக்கம்;** a swelling due to accumulation of blood in the tissues or cavities of the body, *Congestive edema* (சா.அக.).

[அரத்தம் + வீக்கம். வீங்கு → வீக்கு → வீக்கம் (தொ.பெ.). 'அம்' தொ.பெ. ஈறு.]

**அரத்தவீளை** *aratta-viḷai*, பெ. (n.) **அரத்தங் கக்கும் ஈளை (காச)நோய்;** asthma attended with spitting of blood.

[அரத்தம் + ஈளை.]

**அரத்தவுப்பசம்** *aratta-v-uppašam*, பெ. (n.) அரத்தமிகுதியினால் நாடி அல்லது நாளம் பருத்துக் காணல்; distension of blood-vessels (சா.அக.).

[அரத்தம் + உப்பசம். உப்புதல் = பருத்தல், வீங்குதல். உப்பு → உப்பசம் (தொ.பெ.). 'அசம்' தொ.பெ. ஈறு.]

**அரத்தவுதிரி** *aratta-v-udiri*, பெ. (n.) மாட்டு நோய்வகை (மாட்டுவை. சிந். 5); a disease in cattle.

[அரத்தம் + உதிரி. ஒருகா. உதிர் → உதிரி. 'இ' வி.முத. ஈறு.]

**அரத்தவூறல்** *aratta-v-ūṟal*, பெ. (n.) 1. அரத்தச் சுரப்பு பார்க்க; see *aratta-c-curappu*. 2. அரத்தப் பசப்பு பார்க்க; see *aratta-p-pašappu* (சா.அக.).

[அரத்தம் + ஊறல். ஊறு → ஊறல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அரத்தவெட்டை** *aratta-veṭṭai*, பெ. (n.) 1. அரத்தங் கலந்த மூத்திரம் வெளிப்படும் நோய்வகை; gonorrhoea with discharge of blood (செ.அக.). 2. வெட்டைச் சூட்டினால் விந்து (வெள்ளை) அரத்தத்தொடு கலந்து ஆண் குறி வழியாய் ஒழுகல்; discharge of semen mixed with blood through the penis, due to venereal heat of the system, blood stained condition of the semen, *Hemospermia* (சா.அக.).

[அரத்தம் + வெட்டை. வெள் → வெட்டை = சூடு, காமச்சூடு.]

**அரத்தவெள்ளுடைப்பு** *aratta-veḷ-ḷ-uḍaippu*, பெ. (n.) விழுகின்ற அரத்தத்தை விழவொட்டாமற் செய்யும் மருந்து; a kind of medicinal ghee administered to stop all kinds of haemorrhages.

[அரத்தம் + வெள் + உடைப்பு (தொ.பெ.). உடை → உடைப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]

**அரத்தவெள்ளை** *aratta-veḷḷai*, பெ. (n.) 1. நோய் கொண்ட பெண்டிரைப் புணர்வதனாற் சிறுநீர்த் துளையிற் புண்ணாகி, அதினின்று அரத்தமும் வெள்ளைநீரும் சீழும் வடியும் நீர் (மேக) நோய்; (in men) venereal disease marked by itching, inflammation of the urinary passage, and thin whitish discharge mixed with blood. 2. பிள்ளை பெற்ற பெண்டிர்க்குக் காணும் அரத்தங் கலந்த வெள்ளையொழுக்கு; (in women) the discharge from the vagina, lasting for a few days after child birth, Lochial discharge (சா.அக.).

[அரத்தம் + வெள்ளை. வெள் → வெள்ளை.]

**அரத்தவெறி** *aratta-veṟi*, பெ. (n.) 1. அரத்தங் குடிப்பதனால் உண்டாகும் வெறி; fury arising from drinking blood. 2. கொலைசெய்ய உண்டாகும் கோட்டித்தனம்; an insane tendency to murder, running amuck, *Haemothymia* (சா.அக.).

[அரத்தம் + வெறி.]

**அரத்தவேங்கை** *aratta-vēṅgai*, பெ. (n.) சிவந்த வேங்கைமரம்; a red species of kino tree, kino rose-wood, *Pterocarpus marsupium (acuminata)* (சா.அக.).

[அரத்தம் + வேங்கை. அரத்தம் = சிவப்பு.]

**அரத்தவேட்கை** *aratta-vēṭkai*, பெ. (n.) கொலை விருப்பு; bloodthirstiness.

[அரத்தம் + வேட்கை.]

அரத்தவேட்கையன் பார்க்க; see *aratta-vēṭkaiyaṉ*.

**அரத்தவேட்கையன்** *aratta-vēṭkaiyaṉ*, பெ. (n.) கொலைவிருப்புள்ளவன், கொலைவிரும்பி; bloodthirsty person.

[அரத்தம் + வேட்கை + அன். வேட்டல் = விரும்பல். வேள் → வேட்கை (தொ.பெ.). 'கை' தொ.பெ. ஈறு. 'அன்' ஆ.பா. ஈறு.]

**அரத்தவேற்றம்** *aratta-v-ēṟṟam*, தொ.பெ. (vbl.n.) அரத்தந் திரளுதல்; congestion or accumulation of blood (சா.அக.).

[அரத்தம் + ஏற்றம். ஏறு → ஏற்று → ஏற்றம் (தொ.பெ.). 'அம்' தொ.பெ. ஈறு.]

**அரத்தவொழுக்கு** *aratta-v-oḻukku*, பெ. (n.) 1. அரத்தம்வடிதல்; bleeding or haemorrhage. 2. மாதவிடாய்; menstrual flow. 3. பெரும்பாடு; excessive flow of blood from the vagina, *Menorrhagia* (சா.அக.).

[அரத்தம் + ஒழுக்கு. ஒழுகு → ஒழுக்கு (தொ.பெ.).]

**அரத்தவோட்டம்** *aratta-v-ōṭṭam*, தொ.பெ. (vbl.n.) நெஞ்சாங்குலையினின்று அரத்தம் உடம்பெங்கும் சென்று திரும்புகை; circulation of blood.

[அரத்தம் + ஓட்டம். ஓடு → ஓட்டு → ஓட்டம் (தொ.பெ.).]

**அரத்தன்** *arattaṉ*, பெ. (n.) **செவ்வாய்** (பிங்.); the planet Mars, as red.

[அரத்தம் → அரத்தன்.]

**அரத்தாங்கம்** *arattāṅgam*, பெ. (n.) பவளம்; coral.

[அரத்தம் + Skt. aṅga > த. அங்கம் = உடம்பு.]

**அரத்தாங்கன்** *arattāṅgaṉ*, பெ. (n.) **செவ்வாய்** (சோதிட அக.); **அரத்தன்** பார்க்க; see *arattaṉ*.

[அரத்தம் (சிவப்பு) + Skt. aṅga > த. அங்கன் = உடம்பினன்.]

**அரத்தி** *aratti*, பெ. (n.) 1. **அரத்தாங்கன்** பார்க்க; see *arattāṅgaṉ*. 2. **செவ்வல்லி** (சிந்தா.நி.); red water-lily, *Nymphaea edulis*.

**அரத்திதம்** *arattidam*, பெ. (n.) **செவ்வாமணக்கு**; a red variety of castor plant, *Ricinus communis* (சா.அக).

**அரத்துறை** *aratturai*, பெ. (n.) **ஒரு சிவநகர்**; a Śiva shrine. "அரத்துறை நோக்கியே காதலா லணைவார்" (பெரியபு.திருஞான. 187).

**அரத்தை** *arattai*, பெ. (n.) 1. **சிற்றரத்தை**; lesser galangal, m. sh., *Alpinia officinarum*.

ம. அரத்த; Skt. rāsnā.

"வாந்திபித் தங்கரப்பான் வாதஞ்
சிரரோகம்
சேர்ந்தகப முத்தோடஞ் சீதமொடு —
நேர்ந்தசுர
மற்றரத்தைக் காட்டி வருமிரும லுந்தீரும்
சிற்றரத்தை நன்மருந்தாற் றேர்"
(பதார்த்த. 1019).

2. **சிற்றரத்தை வகை** (L.); light galangal, l. sh., *Alpinia nutans*. 3. பேரரத்தை; big galangal, s. sh., *Alpinia galangal*.

"வாத மிசிவு வலிசன்னி பித்தையும்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீர் — ஓதுபல
வாங்கடுப் பூப்படரு மாறு மொளியாரு
மீங்கடரும் பேரரத்தை யால்"
(பதார்த்த. 1018).

4. முடக்கொற்றான் (பச்.மூ.); balloon vine.
5. பசரை (சா.அக.); a plant called palsy curer.

**அரத்தைப்பெட்டி** *arattai-p-petti*, பெ. (n.) **நெல் வகை** (A.); a kind of paddy.

**அரத்தொகுத்தி** *arattogutti*, பெ. (n.) **செவ்வல்லி**; red water-lily, *Nymphaea edulis* (சா.அக.).

**அரத்தோற்பலம்** *arattōṟpalam*, பெ. (n.) 1. **செங்குவளை**; red Indian water-lily. 2. **செங்கழுநீர்**; purple Indian water-lily.

[அரத்தம் + Skt. utpala > த. உற்பலம்.]

**அரதேசிபரதேசி** *aradēśi-paradēśi*, பெ. (n.) **அகதேசி** பார்க்க; see *agadēśi*.

**அரதைப்பெரும்பாழி** *aradai-p-perumbāḻi*, பெ. (n.) ஓர் ஊர்; a town. "பாடும் அரதைப் பெரும் பாழியே முதலாக" (பெரியபு. திருஞான. 403).

**அரந்தம்** *arandam*, பெ. (n.) 1. **செங்கழுநீர்**; red water-lily, *Nymphaea odorata*. 2. **தாமரை**; lotus, *Nelumbiam speciosum*. 3. **கடுக்காய்**; chebulic myrobalan, *Terminalia chebula*. 4. **கற்பரி நஞ்சம்** (பாடாணம்); a kind of arsenic (சா.அக.).

[அரத்தம் → அரந்தம்.]

**அரந்தளி** *arandaḷi*, பெ. (n.) **மரவுரி யென்னும் மரம்** (L); bark tree (செ.அக.) — **பட்டைமரம், இரைஞ்சி**; bark tree, *Antiaris toxicuria* (சா.அக.).

**அரந்தெல்லி** *arandelli*, பெ. (n.) **அரந்தளி** பார்க்க; see *arandaḷi*.

**அரந்தை**[1] *arandai*, பெ. (n.) 1. **காட்டுத் தீ**; wild fire. "அரந்தை விரிந்தவியு மாறுபோல்" (தொல். பொருள். புறத். 3, நச். மேற்கோள்). 2. சுரவெட்டை (இராசவைத்.); high temperature in fever (சா.அக.). 3. **சொரிகொன்றை**; Indian calosanthes (சா.அக.).

[உல் → அல் → அன் → அனல். அல் → அள் → அழல். அல் → அர் → அரி = நெருப்பு. அர் → அரம் = அரந்தை.]

**அரந்தை**[2] *arandai*, பெ. (n.) 1. **துன்பம்**; affliction, trouble. "ஒருதனி வேழத் தரந்தையை ............தீர்த்தனை" (திவ்.இயற். திருவெழு கூற். 12-13). 2. **மனக்கவற்சி, துயரம்**; sorrow, distress. "அரந்தைப் பெண்டி ரினைந்தன ரகவ" (மதுரைக். 166), "துன்பத் தரந்தையிற் கன்றுபு கனலும்" (ஞானா. 27). 3. **பக்க இசிவு (பாரிசசன்னி)**; paralysis.

[அலத்தல் = துன்புறுதல். அல → அலம் = துன்பம். அலம் → அலந்தை = துன்பம். அலந்தை → அரந்தை.]

**அரந்தை**[3] *arandai*, பெ. (n.) நீர்நிலை (அக.நி.); tank.

*[அல் → அலை. அலைதல் = அசைதல், இயங்குதல். அலை = திரை, நீர்நிலை, கடல். அல் → அல → அலந்தை = நீர்நிலை (பிங்.). அலந்தை → அரந்தை.]*

**அரந்தை**[4] *arandai*, பெ. (n.) குறிஞ்சி நிலத் திற்குச் சிறப்பாக ஏற்ற குறிஞ்சி யென்னும் தாய்ப் பெரும்பண்; a primary melody-type of the *kuriñji* class especially suited to poetic treatment of the hilly tract.

**அரந்தையன்** *arandaiyaṉ*, பெ. (n.) வறியன் (சம்.அக.); destitute person.

*[அரந்தை = துன்பம், துன்பத்திற் கேதுவான வறுமை. அரந்தை → அரந்தையன்.]*

"இன்மையி னின்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே யின்னா தது" (குறள், *1041*).

**அரப்பள்ளி** *ara-p-paḷḷi*, பெ. (n.) திருமாலின் படுக்கையாகச் சொல்லப்படும் அரவணை (பாம்புப்படுக்கை); *Tirumāl's* (Viṣṇu's) serpent bed, formed of the coils of Ādišēṣa.

*[அர = பாம்பு. பள்ளி = படுக்கை.]*

**அரப்பள்ளியான்** *ara-p-paḷḷiyāṉ*, பெ. (n.) அர வணையானாகிய திருமால்; *Tirumāl* (Viṣṇu) reclining on the serpent, Ādišēṣa. "அரப்பள்ளி யானு மலருறை வானும்" (தேவா. *1.98 : 9*).

அரப்பள்ளி பார்க்க; see *ara-p-paḷḷi*.

**அரப்பிரியை** *ara-p-piriyai*, பெ. (n.) சிவன்தேவி; Šiva's consort. "அரப்பிரியை பார்ப்பதியே" (திருவானைக். கோச்செங். *81*).

*[அர் → அரம் (சிவப்பு) → அரன் (சிவன்) >* **Skt.** Hara. *புரிதல் = விரும்புதல். புரி >* **Skt.** pri → priya → priyā.*]*

**அரப்பொடி** *ara-p-poḍi*, பெ. (n.) இரும்புத் தூள்; iron filings, *Ferri limatura* (செ.அக.).

**அரபத்தநாவலர்** *ara-patta-nāvalar*, பெ. (n.) பரதசாத்திர நூலாசிரியர்; name of the author of the *Parada šāttiram*.

*[அரன் + பத்தன் + நாவலர். அரன் >* **Skt.** Hara. *பத்தன் >* **Skt.** bhakta.*]*

அரன், பத்தன் பார்க்க; see *araṉ, pattaṉ*.

**அரபி** *arabi*, பெ. (n.) கடுக்காய் (மலை.); chebulic myrobalan.

**அரம்**[1] *aram*, பெ. (n.) 1. இரும்பு செம்பு முதலிய மாழைகளையும் (உலோகங்களையும்) மரம் கொம்பு முதலிய வன்பொருள்களையும் அராவும் இரும்புக் கருவி; file, rasp. "அரம் போலுங் கூர்மைய ரேனும்" (குறள், **997**). 2. வாளரம், அரம்பம்; saw. "அரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளை" (மதுரைக். *316*). *3.* உருக்கு; steel (சா.அக.). 4. புண் (இராசவைத்.); wound.

ம. அரம்; க., து., பட. அர; தெ. ஆகுராயி; கோத. ஆர்ம்; பிரா. அர.

*[உர் → அர் → அரவு → அராவு. அர் → அரம்.]*



அரவகைகள்

**அரம்**[2] *aram*, பெ. (n.) 1. நாகருலகம், கீழுல கம்; nether world of serpents. "அரமேவி வெம்பின பணி" (இரகு. யாகப். *81*). 2. கீழறை (சங்.அக.); cellar, underground room. *3.* குகை (சங்.அக.); cave.

*[அர = பாம்பு. அர → அரம் = பாம்புவணக்க நாகர் வாழ்ந்த கீழைநாடுகள்.]*

நாகவணக்கம் மேற்கொண்டவரும் நாக வுருவை முடியிலணிந்தவருமான நாகர் என்னும் வகுப்பார் பண்டைக்காலத்திற் கிழக்கு நாடுகளில் வாழ்ந்துவந்தனர். அதனாற் கீழைநாடுகள் நாகர்நாடுகள் அல்லது நாகநாடுகள் என்றும், நாகருலகம் என்றும் பெயர் பெற்றன. தொன்மக் (புராண) காலத்தில், ஆராய்ச்சி யில்லாதார் கீழுலகம் என்பதற்குக் கிழக்குலகம் என்று

பொருள்கொள்ளாது நிலத்திற்குள்ளிருக்கும் உலகம் என்றும், நாகர் என்பதற்குப் பாம்புகள் என்றும் தவறாகப் பொருள் கொண்டுவிட்டனர்.

**அரம்**[3] *aram*, பெ. (n.) **தோல்** (நாநார்த்த.); leather.

**அரம்**[4] *aram*, பெ. (n.) **வெட்டிவேர்**; khuskhus root, *Andropogon muricatus* (சா.அக.).

**அரம்பணம்** *arambaṇam*, பெ. (n.) **வெற்றிலை நறுக்குங் கருவி** (C.G.); betel-leaf plucker's thimble.

*[அரம் → அரம்பு → அரம்பணம்.]*



அரம்பணம்

**அரம்பன்** *arambaṉ*, பெ. (n.) **குறும்பன், குறும்பு செய்வோன்**; mischievous fellow. "அரம்பா வுன்னை யறிந்து கொண்டேன்" (திவ். பெரியாழ். 3 . 1 : 6).

ம. அரம்பன்

*[அர் → அரம் → அரம்பு → அரம்பன்.]*

**அரம்பிலம்** *arambilam*, பெ. (n.) **கீழுலகம்** (**பாதலம்**) (சிந்தா.நி.); the nether world.

*[அரம் + பிலம். அர → அரம் = நாகருலகம், கீழுலகம். **Skt.** bila > த. பிலம் = கீழுலகம். இனி, புல் → பில் (பிள்) → பிலம் = பிளவு, வெடிப்பு, குழி, வளை, குகை, கீழறை, கீழுலகம் என்றுமாம்.]*

**அரம்பு** *arambu*, பெ. (n.) 1. **குறும்பு**; mischief, wicked deed. "வரம்பிகந் தரம்பு செய்யுங் கலி" (சீவக. 2727). 2. **விரும்பியதைச் செய்து முடிக்கும் வன்மை** (திவ். பெரியாழ். 3 . 1 : 6, வியா.); ability to accomplish one's desires.

*[அர் → அரவு. அர் → அரம் → அரம்பு.]*

**அரம்பை** *arambai*, பெ. (n.) **ஓமம்** (மலை.); omum.

**அரமகள்** *ara-magaḷ*, பெ. (n.) **தெய்வப்பெண்**; celestial damsel. "அங்கினி திருந்த காலை யரமக ளவனை நோக்கி" (கந்தபு. தக்க. வள்ளி. 237).

*[அர் → அரம் = அச்சம், துன்பம். அரமகள் = துன்புறுத்தும் தெய்வப்பெண், தெய்வப் பெண்.]*

**அரமங்கை** *ara-maṅgai*, பெ. (n.) **தெய்வப் பெண்**; celestial damsel. "அரமங்கையர் சாமரை பாங்க ரசைத்திட" (காஞ்சிப்பு. பன்னி. 294). **அரமகள்** பார்க்க; see *ara-magaḷ*.

*[அரம் + மங்கை.]*

**அரமாதர்** *ara-mādar*, பெ. (n.) **தெய்வப்பெண்கள்**; celestial damsels. "அம்மென் மூர லரமாதர்" (இரகு. திக்கு. 105).

*[அரம் + மாதர்.]*

**அரமாரவம்** *aramāravam*, பெ. (n.) **நாயுருவி** (மலை.); species of achyranthus (செ.அக.) — Indian burr, *Achyranthes aspera* (சா.அக.).

**அரமான்** *ara-māṉ*, பெ. (n.) **தெய்வப்பெண்** (நாமதீப.); celestial damsel. **அரமகள்** பார்க்க; see *ara-magaḷ*.

*[அரம் + மான் (மான்போலுஞ் சாயலையுடைய பெண்). "மட்டுப் படாக்கொங்கை மானார் கலவி மயக்கத்திலே" (தனிப்பா. I. பக். 157).]*

**அரமானசூலை** *aram-āṉa-šūlai*, பெ. (n.). **ஒருவகைச் சூலைநோய்**; a severe piercing pain (சா.அக.).

*[அரம் + ஆன + சூலை. அரம் = அச்சம், துன்பம்.]*

**அரமி** *arami*, பெ. (n.) **கடுக்காய்**; gall-nut, chebulic myrobalan, *Terminalia chebula* (சா.அக.).

**அரமியம்** *aramiyam*, பெ. (n.) **நாயுருவி** (பச்.மூ.); a species of achyranthus.

**அரமீன்** *ara-mīṉ*, பெ. (n.) **ஒருவகைக் கடல்மீன்**; a kind of sea-fish, file fish (சா.அக.).

*[அரம் + மீன். முதுகில் அரம்போன்ற முட்கள் உடையது.]*

**அரமுறி** *ara-muṟi*, பெ. (n.) 1. **இருப்புமுறிச் செடி**; silvery leaved indigo or Arabian indigo, *Indigofera argentia*. 2. **எஃகு**; steel (சா.அக.).

**அரயக்கொம்மை** *araya-k-kommai*, பெ. (n.) **ஒரு பூவாழை**; true banana, *Musa sapientum* (*champa*) (சா.அக.).

**அரயரல்** *arayaral*, பெ. (n.) **அரசு**; pipal tree, *Ficus religiosa* (சா.அக.).

**அரல்**[1] *aral*, பெ. (n.) **கோழை (சிலேட்டுமம்)** (பரி.அக.); phlegmatic humour in the body.

**அரல்**[3] *aral*, பெ. (n.) **முதலாளி** (யாழ்ப்.); principal, master (J.).

**அரலை**[1] *aralai*, பெ. (n.) **கோழை** (சங்.அக.); phlegm.

*[அரல் → அரலை.]*

**அரலை**[2] *aralai*, பெ. (n.) 1. **கனி**; fruit. 2. **கழலை**; wen, tubercle, tumour. "அயிலரி யரலை விழுப்புண்" (ஞானா. 30). 3. **விதை** (சூடா.); seed. "அரலை யுக்கன நெடுந்தா ளாசினி" (மலைபடு. 139). 4. **பொடிக்கல்**; stone broken for roads. "அரலைக் கற்களாற் சிவபரனை மறைத்திட் டானால்" (திருக் காளத். பு. 5 : 8).

துட. அர்ல

**அரலை**[3] *aralai*, பெ. (n.) 1. **மரல்** (சூடா.); bowstring hemp. 2. **கற்றாழை**; aloes.

ம. அரல

**அரலை**[4] *aralai*, பெ. (n.) 1. **கொடுமுறுக்கு** (மலைபடு. 24, உரை); twist, knot in a string or thread. 2. **குற்றம்**; fault. "அரலை தீர வுரீஇ" (மலைபடு. 24).

**அரலை**[5] *aralai*, பெ. (n.) **கடல்** (சூடா.); sea.

**அரலை**[6] *aralai*, பெ. (n.) **காளி (துர்க்கை)** (சங். அக.); *Kāḷi.*

**அரவக்கடி** *arava-k-kaḍi*, பெ. (n.) **பாம்புக் கடி**; snake-bite.

*[அரவம் + கடி.]*

**அரவக்கிரி** *arava-k-kiri*, பெ. (n.) **ஆதிசேடன் வடிவாகச் சொல்லப்படும் வேங்கடமலை**; *Tiruppadi* hills, the serpent Šēṣa said to be in the form of a hill. "அரவக்கிரி சார்ந்தான்" (பாரத. அருச்சுனன்றீர். 12).

*[அரவம் +* **Skt.** giri.*]*

**அரவக்கொடியோன்** *arava-k-koḍiyōṉ*, பெ. (n.) **பாம்புக்கொடியையுடைய துரியோதனன்**; Duryodhana having the banner with serpent emblem.

ம. அரவக்கொடி

*[அரவம் + கொடியோன்.]*

**அரவங்கலக்கம்** *aravaṅ-kalakkam*, பெ. (n.) **சாகுங்காலத்து உண்டாகும் மனத்தெளிம்பு** (இ.வ.); brightening of the mind on the approach of death (Loc.).

*[ஒருகா. அறவன் கலகலக்கம் → அரவங்கலக்கம். அறவன் = நல்லொழுக்கன். கலகலத்தல் = உள்ளத்தில் உள்ளதை மறையாது சொல்லுதல், ஊக்கங்கொள்ளுதல்.]*

**அரவஞ்செய்**[1]**-தல்** *aravañ-cey-*, 1 செ.கு.வி. (v.i.) **ஒலித்தல், ஓசையுண்டாக்குதல், கத்துதல்**; to sound, make a noise, shout.

*[அரவம் (ஒலி, ஓசை) + செய்.]*

**அரவஞ்செய்**[2]**-தல்** *aravañ-cey-*, 1 செ.குன்றாவி. (v.t.) **மனங்கலக்குதல், வருத்துதல்**; to confuse the mind, to torment. "கண்ணும் புருவமு மரவஞ் செய்ய" (சீவக. 2806.)

*[அரவுதல் = வருத்துதல். அரவு → அரவம் + செய்.]*

**அரவணிந்தோன்** *arav(u)-aṇindōṉ*, பெ. (n.) **சிவன்** (சூடா.); Šiva, wearing serpents.

ம. அரவணி (பாம்பணி).

*[அரவு + அணிந்தோன்.]*

**அரவணை-த்தல்** *arav(u)-aṇai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **கட்டித்தழுவுதல்** (ஏகாம். உலா. 436); to embrace, fondle. 2. **தாங்குதல், உதவிசெய்து அன்பாகப் போற்றிக் காத்தல்**; to support, cherish, protect dearly.

*[அரவு → அரசு. அரவணைத்தல் = அரசன் போலப் போற்றிக் காத்தல்.]*

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு" (குறள், 544).

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே"
(புறநா. 186).

"வய்யக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசுசெய்
கின்றான்"
(கம்பரா. பால. அரசியற். 12).

இவையும், இத்தகைய பிறவும், அரசனின் அரவணைத்தற் சிறப்பைத் தெளிவாகக் காட்டும்.

அரசனை அல்லது அரசைக் குறிக்கும் 'அரவு' என்னும் பண்டைச்சொல் வழக்கற்றுப் போனபின், 'அரவணைத்தல்' என்னுங் கூட்டுச்சொல் வினைக்குப் பாம்பு தழுவுதல் என்னும் போலிப்பொருளே,

ஆராய்ச்சியில்லார்க்குத் தோன்றிற்று. சொல் வகையி லாயினும் அணிவகையி லாயினும் இப் பொருள் பொருந்தாமையை எண்ணிக் காண்க.

*அரசன் பார்க்க; see arašan.*

**அரவணை** *arav(u)-aṇai,* பெ. (n.) 1. **ஆதிசேடன் சுருளையாலான திருமாலின் பாம்புப்படுக்கை;** *Tirumāl's* (Viṣṇu's) serpent bed, formed of the coils of Ādišēṣa. "ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்" (சிலப். 30 : 51). 2. **திருமால் கோயில்களில் நடுச்சாமத்திற் படைக்குஞ் சருக் கரைப் பொங்கல்;** a sweet rice meal with sugar and other ingredients offered to *Tirumāl* (Viṣṇu), at night, before bed time.

ம. அரவண

[அர → அரவு (பாம்பு) + அணை.]

**அரவணைச்செல்வன்** *arav(u) - aṇai - c - celvaṉ,* பெ. (n.) **அரவணையான்** பார்க்க; see *arav(u)-aṇaiyāṉ.*

[அரவு + அணை + செல்வன்.]

**அரவணைப்பு** *arav(u)-aṇaippu,* தொ.பெ. (vbl.n.) 1. **தழூஉ (தழுவல்);** embrace. 2. **அன்பான போற்றிக் காப்பு;** affectionate support or loving protection. "ஐயன் புரியு மரவணைப்பும்" (பணவிடு. 27).

து. அராவுனி

[அரவு + அணைப்பு.]

**அரவணையான்** *arav(u)-aṇaiyāṉ,* பெ. (n.) **பாம்புப்படுக்கையானாகிய திருமால்;** *Tirumāl* (Viṣṇu), reclining on the serpent. "அரவணை யான்பாதம் எவர்வணங்கி யேத்தாதார்" (திவ். இயற். 2 : 12).

[அரவு + அணையான். அரவு = பாம்பு.]

**அரவந்தீண்டல்** *aravan-tīṇḍal,* தொ.பெ. (vbl n.) **பாம்பு கடித்தல்;** snake-bite.

[அரவம் + தீண்டல்.]

**அரவப்பகை** *arava-p-pagai,* பெ. (n.) **பாம்புப் பகையான கலுழன் (கருடன்);** Garuda, the enemy of snakes. "அரவப்பகை யூர்தி யவ னுடைய" (திவ். பெரியாழ். 3 . 5 : 11).

[அர → அரவு → அரவம் + பகை.]

**அரவம்**[1] *aravam,* பெ.(n.) 1. **பாம்பு;** snake. "வெஞ்சின வரவம்" (மணிமே. 20 : 104). 2. **ஒன்பதாம் நாண்மீன் (ஆயிலியம்);** the ninth lunar asterism. "ஆதிரை கேட்டை யரவம்" (விதான. பஞ்சாங். 16). 3. **இராகு கேதுக்கள்;** ascending and descending nodes, regarded as planets in the form of monstrous dragons. "வரியரவம் பெண்" (விதான. பஞ்சாங். 17). 4. **ஆதிசேடனின் தோற்றரவாகக் (அவதார மாகக்) கருதப்படும் பதஞ்சலி முனிவர்;** Patañjali, a sage, considered to be an incarnation of Ādišēṣa. "புலியரவங் கண்டு கொண்டாட வாடும் புராதனன்" (புலியூரந். 71). 5. **வருத்தம், மனக்கலக்கம்;** torment, confusion of mind. "கண்ணும் புருவமு மரவஞ் செய்ய" (சீவக. 2806).

ம. அரவம்

[அரவுதல் = வருத்துதல். அர → அரவு → அரவம்.]

**அரவம்**[2] *aravam,* பெ. (n.) 1. **ஒலி;** mild sound. "மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி" (நன். 58). 2. **ஓசை;** loud sound, noise. கோபுர மணியோசை கேட்கிறது (உ.வ.). 3. **பேரொலி, இரைச்சல், ஆரவாரம்;** roaring, bustle, tumult, din, uproar, confused noise. "படையியங் கரவம்" (தொல். பொருள். புறத். 3). 4. **வில் நாண்** (பொதி.நி.); bow-string which twangs when plucked. 5. **அரிபெய் சிலம்பு** (பிங்.); jingling anklet.

ம. அரவம்; த. அரவம் > **Skt.** rava.

[அர் = ஓர் ஒலிக்குறிப்பு. அர் → அரி. அரித்தல் = ஒலித்தல். அர் → ஆர். ஆர்த்தல் = ஒலித்தல். ஆர் → ஆரி. ஆரித்தல் = ஒலித்தல். அர் → அர → அரவு → அரவம்.]

**அரவம்**[3] *aravam,* பெ. (n.) **ஆசை** (அக.நி.); desire.

[ஆர்தல் = அன்புசெய்தல். ஆர் → ஆர்வு → ஆர்வம் → அரவம்.]

**அரவம்**[4] *aravam,* பெ. (n.) 1. **அதிமதுரம்** (பரி. அக.); liquorice. 2. **குங்குமம்** (வை.மூ.); saffron. 3. **மரமஞ்சள்** (பச்.மூ.); tree turmeric.

**அரவமகுடி (அரவக்கிரீடி)** *arava-magudi,* பெ. (n.) **கீரிப்பூடு;** Indian snake root or mongoose plant, *Ophiorrhiza mungos* (சா.அக.).

**அரவமணி** *arava-maṇi,* பெ.(n.) 1. **நாகமணி (நாகரத்தினம்);** a kind of ruby said to be found on the heads of certain aged cobras. 2. **உருத்திராக்கம்;** rudrākṣa bead, *Eleocarpus tuberculatus* (சா.அக.).

[1. அர → அரவு → அரவம் (பாம்பு) + மணி. 2. அரவன் = பாம்பையணிந்த சிவன். அரவ மணி = சிவமணி.]

**அரவமணிக்கல்** *arava-maṇi-k-kal*, பெ. (n.) **மணிக்குடல்** (வை.மூ.); small intestine.

**அரவமாகம்** *aravamāgam*, பெ. (n.) **அவல்**; flattened rice obtained by pounding fried paddy (சா.அக.).

**அரவர்** *aravar*, பெ. (n.) **தமிழர்** (அக.நி.); the Tamils.

அருவர் பார்க்க; see *aruvar*.

[அருவா (நாடு) → அருவர் → அரவர்.]

அரவர் என்பது திருத்தமான சொல்லன்று.

**அரவன்** *aravaṉ*, பெ. (n.) **சிவன்** (உரி.நி.); Śiva, wearing serpents.

**அரவாட்டிப்பச்சை** *aravāṭṭi-p-paccai*, பெ. (n.) **தொழுகண்ணி**; telegraph plant (செ.அக.) — telegraph plant or moving plant, *Desmodium gyrans* alias *Hedysarum gyrans* (சா.அக.).

[ஒருகா. அரவு + ஆட்டி + பச்சை.]

**அரவாபரணன்** *arav(u)-ābaraṇaṉ*, பெ.(n.) **பாம்பை யணிகலமாக வணிந்த சிவன்**; Śiva, as adorned with serpents. "அரவா பரணன் றந்தரு ளருமா மறை" (பாரத.பதினான். 51).

[அரவு + Skt. ābharaṇa > த. ஆபரணம்.]

**அரவாய்க்கடிப்பகை** *ara-vāy-k-kaḍi-p-pagai*, பெ. (n.) **அரம் (அரம்பம்) போன்ற விளிம் புடையதும் பேயோட்டுவதுமான வேப்பிலை**; serrated leaf of the margosa (*Azadirachta indica*), as hostile to demoniac influence. "அர வாய்க் கடிப்பகை" (மணிமே. 7 : 73).

[அரம் + வாய் + கடி (பேய்) + பகை.]

**அரவாள்** *aravāḷ*, பெ. (n.) **ஒரு பழைய காசு (நாணய)வகை** (சரவண. பணவிடு. 58); an ancient coin.

**அரவி-த்தல்** *aravi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **ஓசை யுண்டாக்குதல், அரவஞ்செய்தல்**; to make noise. "அமரரோ டசுரர் கூடி யரவித்துக் கடைய" (தேவா. 4 .70 : 7).

[அரவம் (பெ.) → அரவி (வி.).]

**அரவிந்தம்** *aravindam*, பெ. (n.) **அரன்விந்து** பார்க்க; see *araṉ-vindu*.

**அரவிந்து** *aravindu*, பெ. (n.) **அரன்விந்து** பார்க்க; see *araṉ-vindu*.

**அரவினாள்** *araviṉāḷ*, பெ. (n.) **ஒன்பதாம் நாண் மீன் (ஆயிலியம்)** (திவா.); the ninth lunar asterism.

அரவம்[1] பார்க்க; see *aravam*[1].

அரவு (பாம்பு) + இன் + நாள்.]

**அரவீசம்** *aravīšam*, பெ. (n.) **இதள் (பாதரசம்)**; mercury.

[அரன் > Skt. hara. Skt. harabīja > த. அரபீசம் → அரவீசம் = அரன்விந்து.]

**அரவு[1]-தல்** *aravu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஒலித்தல், அரவஞ்செய்தல்**; to sound, hum. "வண்டரவு கொன்றை" (தேவா. 3 . 339 : 3).

[அர் → அர → அரவு.]

**அரவு[2]-தல்** *aravu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **வருத்துதல்**; to torment. "வேளரவு கொங்கை யிள மங்கையர்கள்" (தேவா. 3 . 332 : 2).

[அர் → அர → அரவு.]

**அரவு[3]** *aravu*, பெ. (n.) **ஒலி**; sound. "பாய் குழக் கன்றி னார்ப்பரவும்" (திருக்காளத். பு. 2 : 7).

ம. அரவு

[அர் → அர → அரவு.]

**அரவு[4]** *aravu*, பெ. (n.) 1. **பாம்பு**; snake. "நச்சா டரவணையான்" (பாரத. பதின்மூ. 108). 2. **பாம்பின் நஞ்சு**; snake poison. "அரவுறு துயர மெய்துப" (ஐங்குறு. 173). 3. **ஒன்பதாம் நாண்மீன் (ஆயிலியம்)**; the ninth lunar asterism. "அளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற" (கம்பரா. பால. திருவவ. 105). 4. **ஆதிசேடனின் தோற்றரவாகக் கருதப்படும் பதஞ்சலி முனிவர்**; Patañjali, a sage, considered to be an incarnation of Ādišēṣa. "புலியோ டரவுதொழுங் கூத்து டையவர்" (வெங்கைக்கோ. 347). 5. **உடைப் படைக்கும் வைக்கோற் பழுதை**; twisted rope of straw entwined about stakes for closing a breach in a bund. "அரவு ருட்டுவார்" (திரு விளை. மண்சுமந்த. 5).

ம. அரவு

[அர → அரவு. அரவுதல் = வருத்துதல்.]

**அரவு[5]** *aravu*, பெ. (n.) **விந்து**; semen (சா.அக.).

**அரவு**[6] *aravu*, இடை. (part.) **ஒரு தொழிற்பெய ரீறு**; a vbl. n. suff.

எ-டு : தேற்றரவு, தோற்றரவு.

**அரவுச்சக்கரம்** *aravu-c-cakkaram*, பெ. (n.) (அணி.) **சித்திரப்பாவகை**; (Rhet.) a kind of fanciful versification. 'இதனுட் சக்கரமென்ற தனானே........அரவுச் சக்கரமும் முதலாக வுடையன, புணர்ப்பாவை யுள்ளும் போக்கி யத்துள்ளும் கிரணியத்துள்ளும் வதுவிச்சை யுள்ளும், கண்டுகொள்க' (யாப். வி. ஒழிபி. பக். 497).

*[அரவு + சக்கரம்.]*

**அரவுநாள்** *aravu-nāḷ*, பெ. (n.) **அரவினாள்** பார்க்க; see *aravināḷ*.

**அரவுயர்த்தவன்** *arav(u)-uyarttavaṉ*, பெ. (n.) **துரியோதனன்** (சூடா.); Duryōdhana, having the serpent as emblem on his banner.

*[அரவு + உயர்த்தவன் (வினையா.பெ.).]*

**அரவுயிர்ப்பு** *arav(u)-uyirppu*, பெ. (n.) **பாம்பின் மூச்சு**; breath of a serpent.

*[அரவு + உயிர்ப்பு. உயிர்த்தல் = மூச்சு விடுதல்.]*

**அரவுருட்டு-தல்** *arav(u)-uruṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **வைக்கோற் புரியை உடைப்பிற் செலுத்து தல்;** to thrust twisted straw into a breach. ''அரவு ருட்டுவார்'' (திருவிளை. மண்சுமந். 5).

*[அரவு + உருட்டு. உருள் (த.வி.) → உருட்டு (பி.வி.).]*

**அரவை-த்தல்** *aravai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **புடமிடுதல்** (சா.அக.); to calcine, refine metals.

**அரவொலி** *ara-v-oli*, பெ. (n.) **'அர' என்னும் விளியொலி;** the acclamation *Ara*, addressed to Šiva. ''அரவொலி யாகமங்க ளறிவார்'' (தேவா. 7 . 100 : 8).

*[அரன் (சிவன்) → அர (விளி) > Skt. Hara.]*

**அரவோன்** *aravōṉ*, பெ. (n.) **ஆதிசேடன் தோற்றரவாகக் கருதப்படும் பதஞ்சலி முனிவன்**; Patañjali, a sage, considered to be an incarnation of Ādišēṣa. ''சீரர வோனும்'' (கோயிற்பு. நடராச. 70).

*[அரவு (பாம்பு) + ஓன் (ஆ.பா. ஈறு).]*

**அரள்[ளு]-தல்** *araḷ-*, 16. செ.கு.வி. (v.i.) **மாபேரச்சங் கொள்ளுதல்**; to be extremely terrified. 'அரண்டவன் கண்ணுக்கு இருண்ட தெல்லாம் பேய்' (பழ.).

ம. அரளுக; க. அரள்; தெ. அரடொணு; பட. அருண்டு.

*[அர் → அரள்.]*

**அரளி** *araḷi*, பெ. (n.) 1. **பீநாறி** (மலை.); fetid tree, *Sterculia foetida*. 2. **செம்பருத்தி** (இ.வ.); a variety of cotton flower (Loc.). 3. **அலரி** (உ.வ.); oleander, *Nerium odorum*.

ம., க. அரளி.

**அரளித்தொக்கு** *araḷi-t-tokku*, பெ. (n.) **பீநாறிப் பட்டை**; the bark of fetid tree.

**அரளைசரளை** *araḷai-šaraḷai*, பெ. (n.) **பாதையும் சாலையும் அமைக்கப் பயன்படுத்தப்படும் மணற்பாறைச் சல்லிக் கற்கள்**; gravel used for laying paths and roads. அரளைசரளை பரப்பியாகிவிட்டதா? (உ.வ.).

*[சரள் = மணற்பாறைச் சல்லி, முரம்பு. சரள் → சரளை. அரலை → அரளை — இணைமொழி யெதுகைச்சொல். அரளைசரளை — மரபிணைமொழி.]*

**அரற்றல்** *ararral*, பெ. (n.) **யாழ்நரம்போசை** (பிங்.); twang of the string of a lute.

*[அரற்று → அரற்றல்.]*

**அரற்று-தல்** *ararru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **திடுமென்று அஞ்சிக் கதறுதல்**; to shout suddenly with fear. 2. **கதறியழுதல்**; to cry, weep aloud, bewail. ''மடந்தை......கனவி னரற்றின்று'' (பு. வெ. கைக்கிளை. 9). 3. **பலவுஞ் சொல்லித் தன் குறைகூறிப் புலம்புதல்** (தொல். பொருள். மெய்ப். 12, பேரா. உரை); to pour out one's troubles in lamentation. 4. **உரத்து முறையிடுதல்**; to complain vociferously. ''அருமறை யின்னமுங் காணா தரற்ற'' (தாயு. ஆகார. 4). 5. **ஆரவாரித்தல்** (பிங்.); to shout with excitement. 6. **கத்திச் சொல்லுதல்**; to utter loudly. ''அங்க சரீரி யரற்றிய மாற்றம்'' (பாரத. முண்டகச். 80). 7. **ஒலித்தல்**; to sound, tinkle. ''நோன்கழல் கல்லென வரற்றிட'' (கந்தபு. யுத்த. முதனாட். 22). 8. **பிதற்றுதல்** (நாநார்த்த.); to blabber.

ம. அறளுக

*[அலறு → அரறு → அரற்று.]*

**அரற்று** *araṟṟu*, பெ. (n.) *1. பலசொல்லிப் புலம்பல்;* lamentation, expressing one's woes in many words. 'தேவந்தி யரற்று' (சிலப். 29). *2.* **ஒலி**; sound. ''அரற்றொடு குறைந்து வீழ்ந்தும்'' (கந்தபு. யுத்த. சூரபன். வதை. 488). *3. குறிஞ்சி யாழ்த்திறவகை* (திவா.); secondary melody-type of the *kuriñji* class.

ம. அரள்ச்ச; து. அரடுனி.

*[அலறு → அரறு → அரற்று.]*

**அரறு-தல்** *araṟu-*, 5 செ.குன்றாவி. (v.i.) *பேரொலி செய்தல், முழங்குதல்;* to roar. ''அரறுவ போல வார்க்கும்'' (பெருங். உஞ்சைக். 38 : 40).

*[உரறுதல் = உரத்து முழங்குதல். உரறு → அரறு.]*

**அரன்** *araṉ*, பெ. (n.) *1.* **சிவன்**; Śiva. *2.* **எப்பொருட்கும் இறைவன்** (சூடா.); Lord of the Universe. *3. அரசன்* (நாமதீப.); king. *4.* **உருத்திரன், அழிப்புத்தலைவன் (சங்கார கர்த்தா)** (சிவதரு. ஐவகை. 33); the destroyer. *5.* **உருத்திரர் பதினொருவருள் ஒருவன்** (பிங்.); one of the eleven Rudrās. *6.* **பகலிலும் இரவிலும் முதலில் நிகழும் உருத்திர முழுத்தம் (ரௌத்திர முகூர்த்தம்)** (விதான. குணா. 73); *Rudra muhūrta*. *7.* **அழலோன்** (நாநார்த்த.); Agni, the god of fire. *8.* **மஞ்சள்** (பச்.மூ.); turmeric.

ம. அரன்; க. அரஜின; தெ. அரருண்டு; அரன் > **Skt.** Hara.

*[அரம் = சிவப்பு. அரம் → அரன் = செந்நிறமான சிவன்.]*

அரன் என்பது, முதற்கண் கருஞ்சிவப்பான அரக்குமஞ்சளைக் குறித்துப் பின்னர்ப் பொது மஞ்சட்கும் பெயராகி யிருத்தல் வேண்டும்.

பழுத்த ஆதன்களின் (பக்குவ ஆன்மாக்களின்) கட்டை (பாசத்தை) யரிக்கையினாலே சிவன் அரனெனப்பட்டான் என்பது பொருந்தினும், உண்மையான தன்று.

**அரன்சிறுகு** *araṉ-siṟugu*, பெ. (n.) **மான்செவிக்கள்ளி**; a kind of spurge, the leaves of which resemble the ears of the deer (சா.அக.).

**அரன்பாகிகம்** *araṉ-pāgigam*, பெ. (n.) **செவ்வாழை**; red or royal banana, *Musa sapientum* (*rubra*) (சா.அக.).

**அரன்பூசைமரம்** *araṉ-pūšai-maram*, பெ. (n.) **செம்மந்தாரை**; pink and yellow mountain ebony, *Bauhinia variegata* (*purpurascens*) (சா.அக.).

**அரன்பெண்டிர்** *araṉ-peṇḍir*, பெ. (n.) **கந்தகம்**; sulphur.

**அரன்மகன்** *araṉ-magaṉ*, பெ. (n.) *1.* **முருகன்**; *Muruga*. ''மத்தமும் மதியமும் வைத்திடு மரன் மகன்'' (திருப்பு. 1.). *2.* **பிள்ளையார்** (சங். அக.); Vināyaka. *3.* **வீரபத்திரன்** (சங்.அக.); Vīrabhadra.

**அரன்முப்பு** *araṉ-muppu*, பெ. (n.) **தலைப் பிண்டம்**; the first foetus.

'சித்தர்' என்னும் வென்னர் ஒரு மரும முறையால், ஒரு வியன் பொதுவுப்பைச் செய்வதற்கு அதைப் பயன்படுத்துவதால், அது அப்பெயர் பெற்றது; It is so called as it is used for preparing a universal salt, by a secret process known to *Siddhars* (சா.அக.).

*[அரன் + முப்பு (மூவுப்பு).]*

**அரன்விந்து** *araṉ-vindu*, பெ. (n.) *1.* **இதள் (பாதரசம்)** (பச்.மூ.); mercury. *2.* **வெள்ளி** (சங்.அக.); silver.

*[அரன்விந்து >* **Skt.** *harabindu.]*

**அரன்வெற்பு** *araṉ-veṟpu*, பெ. (n.) **வெள்ளிமலை (கைலாயம்)**; Mt. Kailas (சங்.அக.).

*[சிவமதம் குறிஞ்சிநில முருக வணக்கத்தினின்று தோன்றியதனால், மலைகளுட் சிறந்த வெள்ளிமலை அரன்வெற்பு (சிவன்மலை) எனப் பட்டது.]*

**அரன்றலையணி** *araṉ-ṟalai-y-aṇi*, பெ. (n.) **அறுகு** (பச்.மூ.); harialli grass, *Cynodon dactylon*.

*[அரன் + தலை + அணி. சிவன் அறுகம் புல்லைத் தலையிலணிந்திருப்பதாகச் சொல்லப் படுவதால், அது அப் பெயர் பெற்றது.]*

**அரன்றோழன்** *araṉ-ṟolaṉ*, பெ. (n.) **சிவனுடைய நண்பனாகச் சொல்லப்படும் குபேரன்** (திவா.); Kubēra, the companion of Śiva.

*[அரன் + தோழன்.]*

**அரனாள்** *aranāḷ*, பெ. (n.) **ஆறாம் நாண்மீனாகிய மூதிரை (ஆதிரை)** (பிங்.); the sixth lunar asterism presided over by *Aran*, Śiva.

[அரன் + நாள் – அரனாள். அரனுக்குரிய நாண்மீன்.]

**அரனிடத்தவள்** *aran̠-iḍattavaḷ*, பெ. (n.) **சிவனது இடப்பாகத்தி லமர்ந்திருக்கும் தேவியாகிய மலைமகள்** (பார்வதி) (பிங்.); *Malaimagaḷ* (Pārvati), sitting on the left of Šiva, as His consort.

[அரன் + இடத்து + அவள். இடம் (இடப் பாகம்)→இடத்து (7ஆம் வே.). 'அத்து' சாரியை.]

**அரனுகம்** *aran̠ugam*, பெ. (n.) **வால்மிளகு** (பச். மூ.); tail pepper, *piper cubeba*.

**அரனெறி** *aran̠eṟi*, பெ. (n.) **திருவாரூரிலுள்ள ஒரு சிவநிலையம்** (பெரியபு. புராணசா. 31); a Šiva shrine at *Tiruvārūr*. ''அரனெறி யமர்ந்த செங்க ணேற்றவர் சேவடி வணங்கி'' (பெரியபு. திருஞான. 513).

[அரன் + நெறி.]

**அரா** *arā*, பெ. (n.) 1. **பாம்பு**; snake, serpent. ''நல்லரா வுறையும் புற்றம்'' (புறநா. 309:3). 2. **ஒன்பதாம் நாண்மீனாகிய அரவினாள்** (**ஆயிலியம்**); the ninth lunar asterism. ''முற்றி லரா வழல்பூர மூன்று மகம்விற் பரணி யதோ முகம்'' (விதான. பஞ்சாங். 18). 3. **நாகமல்லி** (இராசவைத்.); ringworm-root, *Rhinacanthus communis*.

[அர் → அர → அரா.]

**அராக்கோள்** *arā-k-kōḷ*, பெ. (n.) **இராகுகேதுக் கள்**; ascending and descending nodes of the moon, Rāhu and Kētu. ''அராக்கோ ளிரண்டும்'' (திவா. 12).

[அரா=பாம்பு. கோள்=கொட்கும் (சுற்றும்) விண்சுடர் அல்லது விண்ணுலகு. கதிரவன் மறைவும் திங்கள் மறைவும், அவற்றைச் செம் பாம்பும் கரும்பாம்பும் கவ்வுதலாகப் பண்டை யாரியர் கருதியதால், அவை கேது இராகு என்னும் பாம்புக்கோள்களாகச் சொல்லப் பட்டன.]

**அராகம்**[1] *arāgam*, பெ. (n.) (யாப்.) 1. **கலிப் பாவின் வகைகளுள் ஒன்றான வண்ணக வொத்தாழிசையின் ஆறு உறுப்புகளுள் ஒன்று**; a member of *vaṇṇaga vottāḻišai*, a variety of *kali* metre, characterised by rapid movement caused by quick succession of short vowels. ''எருத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்'' (தொல்.பொருள். செய். 152).

எ-டு:

''உருகெழு முருகிய முருமென வதிர்தொறு
மருகெழு சிறகொடு மணவரு மணிமயில்''
(தொல்.பொருள். செய். 152, பேரா.உரை மேற்கோள்.).

2. **பாலை யாழ்த்திறவகை** (பிங்.); a secondary melody-type of the *pālai* class. 3. **தக்கராகம்** (பிங்.); a melody-type.

அராகம் > **Skt.** rāga.

[அர் – ஓர் ஒலிக்குறிப்பு. அர் → அர → அரவு → அரவம் = ஒலி, ஓசை. அரவம் → அராவம் → அராகம் = ஒலிச்சிறப்புள்ள செய்யுளுறுப்பு அல்லது பண்.]

வண்ணகம் என்னும் கலிப்பாவுறுப்பு பற்றிக் கருத்து வேறுபாடுண்டு. தொல் காப்பியர், வண்ணகவொத்தாழிசைக் கலிப்பாபற்றிய,

''வண்ணகந் தானே
தரவே தாழிசை எண்ணே வ்ாரமென்
றந்நால் வகையிற் றோன்று மென்ப''

என்னும் நூற்பாவில் (செய். 140), அராகத் தைக் குறிக்கவில்லை. அதனால், பேராசிரியர், அந் நூற்பாவிற்கு,

'தரவும் தாழிசையும் எண்ணும் வாரமு மென்னும் உறுப்பு முறையானே வருவது வண்ணகவொத்தாழிசையாம் என்றவாறு.....

'வண்ணித்துப் புகழ்தலின் வண்ணக மெனப்படும்; என்னை? தரவினானே தெய்வத்தினை முன்னிலையாகத் தந்து நிறீஇப் பின்ன ரத் தெய்வத்தினைத் தாழிசை யானே வண்ணித்துப் புகழ்தலின் அப் பெயர் பெற்றதாகலின். ஒழிந்த உறுப்பான் வண்ணிப்பினுஞ் சிறந்த உறுப்பு இதுவென்க; எனவே அகநிலைச் செய்யுட் டாழிசை வண்ணித்து வாரா வென்பதாம்......

'இனி, வண்ணக மென்பது, அராக மென உரைத்து, அவ்வுறுப்புடையன வண்ணக வொத்தாழிசை யெனச் சொல்லுவாரும் உளர். எல்லா ஆசிரியருஞ் செய்த வழிநூற்கு இது முன்னூ லாதலின், இவரோடு மாறு படுதல் மரபன்றென மறுக்க' எனவுரைத்தார்.

இனி, அமிதசாகரனாரோ, தம் யாப்பருங் கலத்துள்,

''தரவொன்று தாழிசை மூன்றுஞ் சமனாய்த்
தரவிற் சுருங்கித் தனிநிலைத் தாகிச்

சுரிதகஞ் சொன்ன விரண்டினு ளொன்றாய்
நிகழ்வது நேரிசை யொத்தா ழிசைக்கலி''
(82),

''முந்திய தாழிசைக் கீறாய் முறைமுறை
ஒன்றினுக் கொன்று சுருங்கு முறுப்பின
தம்போ தரங்கவொத் தாழிசைக் கலியே''
(83),

''அவற்றொடு முடுகிய லடியுடை யராக
மடுப்பது வண்ணக வொத்தா ழிசைக்கலி''
(84)

என வண்ணகமே அராகமென்று வகுத்தார். பிற்காலத்து உரையாசிரிய ரெல்லாம் இதனையே பின்பற்றுவதனால், இங்கும் அதனையொட்டியே கூறப்பட்டது.

இதன் விளக்கத்தை **வண்ணகம்** என்னும் உருப்படியிற் காண்க.

**அராகம்**[2] *aragam,* பெ. (n.) 1. சிவப்பு (பிங்.); red. 2. பொன் (பிங்.); gold.

[உல் → அல் → அலத்தம் = செம்பருத்தி. அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அல் → அர் → அரன் = சிவன். அலத்தம் → அரத்தம் = குருதி, சிவப்பு. அர் → அரக்கு = செம்மெழுகு. அர் → அரகு → (அரகம்) → அராகம் = சிவப்பு. பைம்பொன் என்பதற்கு மாறான செம்பொன் என்னும் வழக்குப்பற்றி, பொன் அராகம் என்று பெயர் பெற்றிருக்கலாம்.]

**அராகவொத்தாழிசைக் கலிப்பா** *araga-v-ottalisai-k-kali-p-pa,* பெ. (n.) தரவு, தாழிசை, அராகம் (வண்ணகம்), அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் வரிசையில் ஆறுறுப்பும் வரும் வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா (இலக். வி. 738); a variety of *kali* metre, in which all its six members occur in the following order, viz., *taravu, talisai, aragam, ambōdarangam, taniccol* and *šuridagam.*

அராகம்[1] பார்க்க; see *aragam*[1].

[அராகம் + ஒத்தாழிசை + கலிப்பா.]

**அராகி-த்தல்** *aragi-,* 4 செ.கு.வி. (v.i.) செய்யுளோசை இடையறாது கடுகிச்செல்லுதல்; to move rapidly, as a verse. (தொல். பொருள். செய். 152, பேரா. உரை).

[அராகம் → அராகி.].

**அராட்டுப்பிராட்டு** *arattu-p-pirattu,* பெ. (n.) போதியதும் போதாததுமானது; that which may or may not be sufficient (ஈடு, 3.7 : 3).

அறாட்டுப்பறாட்டு பார்க்க; see *arattu-p-parattu.*

**அராத்து-தல்** *arattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அராவுதல் (சங்.அக.); to file, grate. 2. முட்டுதல் (சங்.அக.); to butt, hit against. 3. உள்குதல் (சிந்தித்தல்) (சங்.அக.); to consider, ponder, meditate. 4. மிண்டுதல் (யாழ்ப்.); to talk arrogantly, resist openly (J.).

[அர் → அரா → அராத்து.]

**அராத்தொட்டிலை** *arattottilai,* பெ. (n.) மணிக்கிச்செடி (பச்.மூ.); the plant *manikki.*

**அராந்தல்** *arandal,* பெ. (n.) ஒரு காட்டுப் பலா; tender wild jack, *Pajanelia rheedii* (சா.அக.).

**அராநட்பு** *ara-natpu,* பெ. (n.) பிடிகொடாத கொண்டாட்டம் (சங்.அக.); exultation over escape or evasion.

[அரா (பாம்பு) + நட்பு.]

**அராப்புக்கோட்டை** *arappu-k-kōttai,* பெ. (n.) படைவீடு (இராட்.); citadel.

[அராப்பு = பாதுகாப்பு, அராப்பு → ராப்பு (சென்னை).]

**அராப்பொடி** *ara-p-podi,* பெ. (n.) இரும்புத் தூள்; iron filings.

[அரா (இரும்பை அராவுகை) + பொடி.]

**அராபதம்** *ara-padam,* பெ. (n.) வண்டு; beetle. ''தங்க ராபத நெருங்கு தொங்கல்'' (பாரத. மணிமான். 109).

[ஒருகா. அறுபதம் → அராபதம்.]

**அராபதம்பாணி** *ara-padam-pani,* பெ. (n.) கீரிப்பிள்ளை; mongoose, *Herpestese mungo,* also called Indian ichneumon or Pharoah's cat (சா.அக.).



அராபதம்பாணி

**அராம்பை** *arambai,* பெ. (n.) கழுதைத்தும்பை; donkey's toombay.

**அராமுனி** *ara-muni,* பெ. (n.) ஆதிசேடன் தோற்றரவாகக் கருதப்படும் பதஞ்சலி முனிவன்; Patañjali, a sage, considered as an incar-

nation of Ādišēṣa. ''அராமுனி யீது வேண் டும்'' (திருவிளை. வெள்ளி. திருக்கூ. 25).

[அர → அரா (பாம்பு) + முனி (முனிவன்).]

**அராலம்** *arālam*, பெ. (n.) குங்கிலியம்; resin of the plant *Shorea robusta* (சா.அக.).

**அராலி** *arāli*, பெ. (n.) பில்லிப்பிச்சு; fetid holly, *Mappia foetida* (*typica*) (சா.அக.).

**அராவடம்** *arāv-aḍam*, பெ. (n.) 1. அராவு தொழில் (R.). act of filing. 2. சாணை பிடிக்கை; grinding. 3. மெருகிடுகை; polishing.

[அராவு + அடம் (தொ.பெ. ஈறு).]

**அராவணம்** *arā-v-aṇam*, பெ. (n.) புலம்பாமை; not lamenting. ''ஞாலம் அராவண மதா வவதரித் திடுமருட் சீதரா'' (சேதுபு. இராம னருச். 59) (சங்.அக.).

**அராவணல்** *arā-v-aṇal*, பெ. (n.) பாம்புகட்குள் தலைமையான ஆதிசேடன்; Ādišēṣa, as chief of the snakes. ''அராவணன் முடித்தலை'' (சேதுபு. இராமனருச். 59).

[அரா (பாம்பு) + அண்ணல் (தலைவன்) → அணல்.]

**அராவணை** *arā-v-aṇai*, பெ. (n.) திருமாலின் பாம்புப்படுக்கை, சேடப்பள்ளி; *Tirumāl's* (Viṣṇu's) serpent bed, formed of the coils of Šēṣa. ''அராவணை யிற்றுயில் வோயென'' (கம்பரா. பால. திருவவ. 117). அரவணை பார்க்க; see *arav(u)-aṇai*.

[அரா (பாம்பு) + அணை.]

ம. அரவண

**அராவாரம்** *arāvāram*, பெ. (n.) கொடிமுந்திரி (திராட்சை); grape vine. ''மதுமாங்கனி மாதுலங்கங் கதலி யராவாரங் கொளுஞ்சி'' (தைலவ. தைல. 135).

**அராவு-தல்** *arāvu-*, 5 செ.குன்றாவி. (v.i.) மாறுபடு தல் (வின்.); to clash with, disagree with. —. 5 செ.குன்றாவி. (v.t.) 1. அரத்தால் தேய்த் தல்; to file. ''வைய ராவிய மாரன் வாளி யும்'' (கம்பரா. அயோத். கைகேயி. 58). 2. உரசுதல்; to rub, grate. ''பொருப்ப ராவி யிழிபுனல்'' (தேவா. 5 . 30 : 7). 3. அறுத் தல்; to cut. ''மெய்ய ராவிட'' (கம்பரா. அயோத். கைகேயி. 58).

ம. அராவுக

[அர் → அர → அரவு → அராவு.]

**அராவைரி** *arā-vairi*, பெ. (n.) 1. கலுழன் (கருடன்); Garuda, the enemy of serpents 2. மயில்; peacock. 3. கீரி; mongoose (W.).

[அரா (பாம்பு)+வைரி (பகை). வயிர்த்தல் = கடினமாதல், செற்றங்கொள்ளுதல், பகைத்தல். வயிர் → வயிரம் → வைரம் → வைரி.]

**அராளகி** *arāḷagi*, பெ. (n.) வால்வெள்ளி (தூமகேது) வகை. (தக்கயாகப். 457, உரை); a comet.

**அராளம்** *arāḷam*, பெ. (n.) 1. இருவாட்சி (தைலவ. தைல.135,49); Tuscan jasmine. 2. குங்கிலியம் (தைலவ. தைல. 119); sāl resin (செ.அக.) — a hard, dark coloured, brittle resinous substance which exudes from the trees of Dammara genus in the Eastern islands, Resin of *Shorea robusta* (சா.அக.).

ம. அராளம்

**அரி-தல்** *ari-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. நெல், சாமை, வரகு முதலியவற்றின் தாளை யறுத் தல்; to cut the stalk of paddy, poor man's millet, common man's millet, etc. ''நெல்லரி தொழுவர்'' (புறநா. 379:3). 2. உறுப்பறுத் தல்; to cut off, as an organ. ''நாக்கரியுந் தயமுகனார்'' (கம்பரா. ஆரணிய. சூர்ப்ப. 125). 3. செங்கலறுத்தல் (யாழ்ப்.); to cut and remove the excess clay spilling out of the mould in making bricks. 4. சங்கறுத்தல்; to cut chank for making ornaments. ''சங்கை யரிந்துண்டு வாழ்வோம்'' (தனிப்பா. 1, பக். 213). 5. காய் கறிகளைப் பொடியாக நறுக்குதல்; to cut vegetables into very small pieces. அரிவாள்மணை.

ம. அரியுக; க., து., பட. அரி; துட. அர்ஷி; கொலா., நா. அர்க்.

[அர் → அறு. அர் → அரி.]

**அரி[1]-த்தல்** *ari-*, செ.கு.வி. (v.i.) 1. தினவெடுத் தல்; to have an acute itching sensation. 2. இடைவிட்டொலித்தல்; to sound intermittently. ''வாட லுழுஞ்சில் விளைநெற் றந்துணர் ஆடுகளப் பறையி னரிப்பன வொலிப்ப'' (அகநா. 45 : 1-2). 3. இடைவிடுதல்; to intermit. ''உண்கண் கலுழ்ந்துவா ரரிப்பனி'' (புறநா. 144 : 4-5). —, 4செ.குன்றாவி. (v.t.) 1. கறை யான் தின்னுதல்; to gnaw, as white ants. ''கணைச்சித லரித்த'' (சிறுபாண். 133). 2. புழு பூச்சி துளைத்தல்; to burrow, as worms or in-

sects. *3. உருக்கிநோய் தோல் சதை யெலும்பைக் குறைத்தல்;* to corrode the skin, flesh or bone, as emaciating diseases. *4. துருப் பிடித்தல்;* to be eaten away by rust. *5. வண் டுண்ணுதல்;* to feed, browse or eat away, as beetles. ''மாலையை வேய்ந்தரிக்கு மிஞிறு'' (சீவக. 1769). *6. நீர் அறுத்துச் செல்லுதல்;* erosion of the bank or shore by waves. ''அரித் தொழுகும் வெள்ளருவி'' (தேவா. 4.3:3). *7. அரிசியை நீரிற் கழுவிக் கொஞ்சங் கொஞ்ச மாகப் பிரித்தல்;* rinse, as rice. *8. கொழித் தெடுத்தல்;* to sift, separate the longer from smaller bodies with the hand, with a sieve or riddle. சல்லடையால் அரித்தெடுக்க வேண்டும். *9. தொந்தரவு செய்தல்;* to vex by importunity. *10. கடுமையா யொலித்தல்;* to sound hard. ''அரிப்பறை மேகலை யாகி யார்த்தவே'' (சீவக. 2688). *11. தீயதை நீக்குதல்;* to remove the bad. ''ஆய்ந்தரிக்குந் நறவம் மலர்மாலை'' (சீவக. 1769). *12. கீரை முதலியவற்றில் கூளம் பார்த்தெடுத்தல்;* to remove straw, grass, etc. from greens. *13. கழித்தல்;* to subtract. *14. வகுத்தல்;* (சூடா. உள். 378, உரை); to divide. *15. தேடுதல்;* to search through and through. *16. கெடுத்தல்;* to spoil, corrupt. *17. அழித்தல்;* to destroy. ''உலகரிப்பான்'' (சீகாழி. ஆபத்து. 4).

ம. அரிக்குக; க., குட. அரி; து. அரிபுனி.

**அரி[2]-த்தல்** *ari-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1. சிறிது சிறிதாகக் கூட்டிச் சேர்த்தல்;* to sweep up, gather little by little. 'சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லை' (பழ.). *2. பூதங்களைச் சேர்த்துப் படைத்தல்;* to create. ''ஓங்குலகை யரித்து மளித்து மழிப்பவ ராத்த ரென்னு'' (திருநூற். 16).

**அரி[1]** *ari*, செ.பெ. (ger.) *அரிகை* (சூடா.); cutting, nipping.

**அரி[2]** *ari*, பெ. (n.) *1. நெற்கதிர்* (பிங்.); ear of paddy. *2. கைப்பிடிக்கதிர்;* a handful of harvested ears of paddy. *3. கதிர்க் குவியல்* (R.F.); a heap of harvested ears of paddy or spikes of corn. *4. கதிரறுக்கும் பருவம்;* matured state of grain, time for harvest. ''அரிபுகு பொழுதின்'' (பெரும்பாண். 202). *5. நெல்* (தைலவ. தைல. 84); paddy. *6. நெற்சூடு;* heat from a heap of paddy (சா.அக.).

ம., க., து. அரி; கோத. அய்ர்.

**அரி[3]** *ari*, தொ.பெ. (vbl.n.) *1. அரிக்கை* (சூடா.); sifting, separating. *2. இடைவிடுகை;* intermittance. ''கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப'' (புறநா. 144:5).

ம. அரிப்பு; க. அரிபு.

**அரி[4]** *ari*, பெ. (n.) *1. ஈர்வாள், அரம்பம்* (அக.நி.); saw. *2. வேந்தன் வயிரப்படை (இந்திரன் குலிசம்)* (பொதி.நி.); Indra's weapon. *3. படைக்கலம்;* weapon. *4. அரிபூச்சி அல்லது புழு;* a burrowing insect or worm. *5. மடங்கல் (அரிமா)* (பிங்.); lion. *6. மடங்கலோரை (சிங்கராசி)* (சூடா.); Leo of the Zodiac. *7. மடங்கல் (ஆவணி) மாதம்* (இராசவைத்.); the fifth Tamil month, August-September. *8. சக்கரம்;* discus. *9. பனங்கருக்கு* (இராசவைத். 146); jagged edge of the palmyra leaf-stalk. *10. முருகனாற் கொல்லப்பட்ட அரிமாமுகன் (சிங்கமுகன்) என்னும் அசுரன்;* lion-faced Asura killed by *Muruga*. ''திறலரிக் கிளவல்'' (கந்தபு. அசுர. கிரவுஞ்ச. 1). *11. பகை;* enmity. *12. பகைவன்* (பிங்.); enemy. *13. குற்றம்;* guilt, sin. *14. காமம், சினம், இவறல், செருக்கு, மயக்கம், பொறாமை என்னும் ஆறு உட்பகை;* the six inherent enemies of man, *i.e.*, the six emotions or strong passions that disturb his mind and corrupt his soul, viz., lust, wrath, avarice, arrogance, delusion and envy. *15. ஆறு என்னும் எண்;* the number 'six'. *16. எழும் ஓரைக்கு ஆறாம் இடம்;* the sixth place from that of the rising sign of the Zodiac in the astrological diagram. *17. பாம்பு* (பிங்.); snake. *18. கூற்றுவன்* (பிங்.); god of death. *19. வெற்றி;* victory. *20. வலிமை;* strength. *21. துளை;* hole. *22. உட்டுளை* (சூடா.); hollow space. *23. வாய்* (பொதி.நி.); mouth. *24. மூங்கில்* (பிங்.); bamboo. *25. நீர்;* water. *26. காற்று* (பிங்.); wind.

ம., க., தெ., து. அரி; **Mar., Pali., Sinh., Nep.** ari.

*[அர் → அரி. அரித்தல் = அறுத்தல், துளைத்தல், நீக்குதல், அழித்தல்.]*

**அரி[5]** *ari*, பெ. (n.) *1. துண்டம்;* piece *2. பொடி;* powder. *3. நீர்த்திவலை, துளி* (திவா.); drop of water. *4. மழைத் தூறல்;* drizzling. *5. அரிசி* (பிங்.); rice. *6. மூங்கிலரிசி* (பச்.மூ.); bamboo seeds. *7. சோறு;* boiled rice. *8. அரிசிக் கள்;* fermented liquor prepared from rice. 9.

**மென்மை;** softness. ''திரண்டநே ரரிமுன்கை'' (கலித். 59 : 4). 10. **ஐம்மை, தகட்டுவடிவு;** thinness and flatness, as of a plate. ''அரியே ஐம்மை'' (தொல். சொல். உரி. 59). 11. **அரி நெல்லி;** otaheite gooseberry, *Phyllanthus distichus*. ''அரிநெல்லிக் காய்குளிர்ச்சி யாம்'' (பதார்த்த. 702). 12. **கீழாநெல்லி (கீழ்க்காய் நெல்லி);** small-leaved feather foil, *Phyllanthus polyphyllus*. 13. **குன்று, சிறுமலை;** hill, hillock. 14. **கூர்மை** (சூடா.); sharpness, keenness. 15. **அம்பு** (பொதி.நி.); arrow.

[அரி = அறுக்கப்பட்டது, துண்டு, சிறியது.]

அவரை துவரை முதலிய பயறுகளின் பருப்பைவிட நெல்லரிசி புல்லரிசி (கம்பரிசி) முதலிய கூல (தவச) அரிசிகள் சிறியனவாயும் பிளவின்றியு மிருத்தல் காண்க.

அரி[6] *ari*, பெ. (n.) 1. **அடர்பு, நெருக்கம்;** closeness, thick growth, as of hair. 2 **சோலை** (பிங்.); grove. 3. **பூமாலை** (சூடா.); garland. 4. **தெருச்சந்தி** (பிங்.); junction of roads or streets. 5. **கட்டில்** (திவா.); bedstead, couch. 6. **விசி, விசிப்பலகை** (திவா.); bench. 7. **தூக்கம்** (பிங்.); sleep. 8. **மக்கள் துயிலிடம்** (பிங்.); sleeping place, dormitory. 9. **குடியிறை** (பிங்.); tax, duty.

[அரித்தல் = சிறிது சிறிதாய்ச் சேர்த்தல், திரட்டுதல், பொருத்துதல், தொகுத்தல். அரி = அடர்த்தி.]

அரி[7] *ari*, பெ. (n.) 1. **அரித்தெழும் ஓசையுடைய பறை;** drum that makes a deafening sound. ''அரிக்கூ டின்னியங் கறங்க'' (மதுரைக். 612). 2. **மருதநிலப் பறை;** drum made use of by the people in the agricultural tract. 3. **அரிதாளம்** (சூடா.); a variety of time measure in music. 4. **தாளக் கருவி, சாலர்;** cymbal for keeping time in music. 5. **சிலம்பு** (பிங்.); woman's anklet. 6. **சிலம்பினுட்பரல்;** pebbles or pearls or pieces of metal inside a woman's anklets which make a tinkling sound while walking. ''யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே'' (சிலப். 20 : 69). 7. **யாழ்நரம்பு;** string of lute. 8. **அரற்றும் வண்டு;** beetle, humming insect. ''மெல்லிலை யரியாம்பலொடு'' (மதுரைக். 252).

[அர் → அர → அரவு → அரவம் = ஒலி. அர் → அரி. அரித்தல் = ஒலித்தல்.]

அரி[8] *ari*, பெ. (n.) 1. **குற்றம்** (சூடா.); blot, fault, blemish. 2. **கண்;** eye. ''அரிமுதி ரமரர்க் கரசன்'' (கல்லா. 10). 3. **பன்றி** (பிங்.); hog, pig. 4. **கருங்காலி;** black catechu, *Acacia catechu (sundra)* (சா.அக.). 5. **கருங்கிளி;** black parrot (சா.அக.). 6. **மயில்;** peacock. 7. **(ஆண்) குயில்;** (male) cuckoo. 8. **மரவயிரம்** (திவா.); solid part of timber, the core or heart of a tree trunk. 9. **கடல்** (பிங்.); sea. 10. **கருஞ்சிவப்பு;** dark-red, reddish black.

[அல்லுதல் = பொருந்துதல், கலத்தல், மயங்குதல், இருளுதல், கருத்தல். அல் = இரவு, இருள். அல் → அர் → அரி = கருப்பு, கரும்பொருள்.]

அல் பார்க்க; see *al*.

அரி[9] *ari*, பெ. (n.) 1. **தீ;** fire. 2. **தீத் தெய்வம்;** god of fire. ''அரியுமற் றெனதுகூறு நீலனென் றறைந்திட் டானால்'' (கம்பரா. பால. திருவவ. 26). 3. **செம்மை;** redness. 4. **செம்மறியாடு, செம்மறியாட்டுக் கடா;** sheep, ram (சா.அக.). 5. **மான்;** deer. 6. **செங்கதிர், கதிரவன்** (பிங்.); sun. 7. **கண்ணின் செவ்வரி;** red lines in the white of the eye. ''அரிமத ருண் கண்ணார்'' (கலித். 91 : 13). 8. **வரி;** line, stripe, streak. 9. **வரிவண்டு;** striped bee or beetle. 10. **புகை** (திவா.); smoke. 11. **காய்ச்சல்** (இராசவைத்.156); fever. 12. **ஒளி** (பிங்.); light. 13. **வயிரம்** (பொதி.நி.); diamond. 14. **மதி** (பிங்.); moon. 15. **நிறம்;** colour. 16. **அழகு;** beauty. ''அரிமுன்கை'' (கலித். 54 : 3). 17. **பொன்;** gold. ''அரித்தேர் நல்கியு மமையான்'' (பெரும்பாண். 490). 18. **மஞ்சள் நிறம்;** yellow colour. 19. **வெண்புகை** (ஆசிரிய.நி.); white smoke.

[உல் → உல → உலவை = காய்ந்த கிளை. உல → உலர். உலர்தல் = காய்தல். உல் → உர் → உரு. உருத்தல் = அழலுதல். உரு → உருப்பு = வெப்பம். உல் → உள் → ஒள் → ஒளி. உல் → எல் = ஒளி, வெண்மை. எல் → எர் → எரி = நெருப்பு, சிவப்பு. உல் → அல் → அர் → அரி.]

அரி[10] *ari*, பெ. (n.) 1. **காற்று** (பிங்.); air, wind. 2. **ஊதைநோய் (வாதரோகம்)** (நீர்நிறக். 17); rheumatism. 3. **ஈளை;** asthma (சா.அக.). 4. **செரியா நோய் (குன்மம்);** chronic dyspepsia. 5. **விசுங்கப் பறவை;** a kind of bird (சா.அக.). 6. **உருளை, சக்கரம்;** wheel. 7. **தேர்;** car. 8. **கடுக்காய்;** a species of country gall-nut, *Ter-*

*minalia chebula* (சா.அக.). 9. **கொடுவேலி** (மலை.) — **கொடிவேலி**; Ceylon leadwort, *Plumbago zeylanica* (சா.அக.). 10. **கொள் வேர்**; horse-gram root. 11. **தான்றிக்காய்**; devils abode, *Terminalia belerica* (சா.அக.). 12. **கம் மாலை யேற்றம்**; water-lift, consisting of a large hemispherical leather or iron bucket, worked with bullocks. 13. **ஒரு பேரெண்**; a high number.

**அரிக்கஞ்சட்டி** *arikkañ-caṭṭi*, பெ. (n.) **அரிசி களையும் அகன்றவாய்ச் சட்டி**; large-mouthed shallow pot for cleaning rice.

ம. அரிப்ப, அரிக்குட்ட.

*[அரிக்குஞ்சட்டி → அரிக்கஞ்சட்டி.]*

**அரிக்கஞ்சம்பா** *arikkañ-cambā*, பெ. (n.) **அரக்கன் நாட்டினின்று கொண்டுவரப்பட்ட நெல் வகை** (நெல்லை); a kind of paddy, originally brought from the Arakkan country (Tn.) (செ. அக.).

*[அரக்கன் + சம்பா — அரக்கஞ் சம்பா → அரிக்கஞ்சம்பா.]*

**அரிக்கட்டு** *ari-k-kaṭṭu*, பெ. (n.) **நெற்கதிர்க் கட்டு**; sheaf of paddy, bundle of reaped grain (G.G.).

*[அரி + கட்டு.]*



அரிக்கட்டு

**அரிக்கண்சட்டி** *ari-k-kaṇ-caṭṭi*, பெ. (n.) **அரிசி யரித்தற்குச் சிறு துளைகள் விட்டுச் செய்யப் பட்ட அகன்றவாய்ச் சட்டி** (சங்.அக.); large-mouthed perforated shallow pot for cleaning rice before cooking.

இச் சொல் 'அரிக்கஞ்சட்டி' என்பதன் தவறான வடிவாக இருக்கலாம்.

**அரிக்காமரம்** *arikkā-maram*, பெ. (n.) **ஆத்திமரம்**; mountain ebony, *Bauhinia racemosa* (சா.அக.).

**அரிக்கி** *arikki*, பெ. (n.) **கடுக்காய்**; Indian gall-nut, *Terminalia chebula* (சா.அக.).

**அரிக்கியந்தம்** *arikkiyandam*, பெ. (n.) **பூனைக் காலி**; cat bean, *Mucana pruriens* (சா.அக.).

**அரிக்கிராவி** *arikkirāvi*, பெ. (n.) **சுறவத்திற்கும் (தைக்கும்) மீனத்திற்கும் (பங்குனிக்கும்) இடையில் அறுவடையாகும் ஒருவகை மட்ட நெல்**; a coarse paddy that is harvested between January and March (Rmd.M.).

மறுவ. அருகிராவி

**அரிக்குரம்** *arikkuram*, பெ. (n.) **காட்டுக் கரணைக் கிழங்கு**; a tuberous-rooted plant, *Amorphophallus campamulatus* (சா.அக.).

**அரிக்குரல்** *ari-k-kural*, பெ. (n.) 1. **அரித்தெழும் ஓசை**; shrill sound. "அரிக்குரற் றடாரி" (புறநா. 249 : 4). 2. **இனியவொலி**; sweet sound. "அரிக்குரற் பேடை" (ஐங்குறு. 85). 3. **நுண்ணிய ஒலி**; minute sound.

**அரிக்குழி** *ari-k-kuḻi*, பெ. (n.) **முற்காலப் பள்ளிப் பிள்ளைகள் அரி (ஹரி) என்று தொடங்கி வண்ணமாலையை விரலால் எழுதுவதற்காகத் தோண்டிய பள்ளம்** (ஈடு, 5 . 6 : 2. ஜீ.); depression made by school children in the ground for writing with the finger *Ari* (Hari), with which the Tamil alphabet began in the medieval days.

*[அரி என்பது திருமாலைக் குறிக்கும் வட சொல். அது மால் என்னும் தென்சொல்லின் மொழிபெயர்ப்பு. நம்மாழ்வார் காலத்தில் மாலியம் (வைணவம்) தமிழகத்தில் முன்னினும் மிக்குப் பரவியிருந்ததனால், தமிழ் வண்ண மாலை அல்லது நெடுங்கணக்கு 'அரிஓம் நம' (ஓம் மால் வணக்கம்) என்று திருமால் வணக்கத் துடன் தொடங்கியதாகத் தெரிகின்றது.]*

**அரிக்குறடு** *ari-k-kuraḍu*, பெ. (n.) **அறுக்குங் குறடு**; saw forceps (சா.அக.).

*[அரி + குறடு. அரி = அறுப்பு.]*

**அரிக்கோவை நெல்** *arikkōvai-nel*, பெ. (n.) **நெல் வகை**; a kind of paddy (A.).

**அரிகண்டம்**[1] *ari-kaṇḍam*, பெ. (n.) 1. **ஓர் அடியான் தன்னொறுப்பாகத் தன் கழுத்தில் மாட்டிக்கொள்ளும் இருப்புச்சட்டம் அல்லது கூண்டு** (ஈடு, 4 . 6 : 2); iron grate or frame or cage of cross-bars, worn on the neck by a devotee, as a mode of self-torture. 2. **அறளை, தொந்தரவு, நைப்புத் தொல்லை**; teasing, annoying, vexing. 3. **கவர்க்கால்** (புதுவை); post or stem forked at one end (Poṇḍ.).

*[அரி = அறுப்பு, நைப்பு. கள்ளுதல் = பொருந்துதல். கள் → களம் = தலை உடல் என்னும் இரண்டின் பொருத்து, கழுத்து. கள் → களுத்து → கழுத்து. கள் → கண்டு → கண்டம் >* **Skt.** *kaṇṭha.]*

மறுவ. அரியண்டம்

**அரிகண்டம்**[2] *ari-kaṇḍam*, பெ .(n.) *அறுக்கப் பட்ட* **துண்டம்**; a sliced piece or lump.

**அரிகண்டம்பாடு - தல்** *ari - kaṇḍam - pāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஒரு பாவலன், தான் தோற்றுப் போனால் கழுத்தறுப்புண்டு சாவதற்கு அணிய** *மாயிருப்பதாகக் காட்டி,* **தன் கழுத்தில் ஒரு** *வாளைக் கட்டிக்கொண்டு* **தன் எதிரி கொடுக்குங் குறிப்பிற்கிணங்க உடனுடன் பாடு தல்**; to compose verses extempore on a challenge from his rival, with a sword hung about his neck indicating readiness to die, if not successful.

[*அரி + கண்டம் + பாடு. அரிதல் = அறுத் தல். கண்டம் = கழுத்து.*]

**அரிகயிறு** *ari-kayiṟu*, பெ. (n.) (பகைவரின்) **தொட்ட கையை** *அறுக்குமாறு* **கோட்டை வாயிலிற் குறுக்காகக் கட்டப்படும் கயிற்றுப் பொறி** (சீவக. 104, உரை); cord tied across the entrance of a fort and so contrived as to cut off the hand that grasps it.

**அரிகரப்பன்** *ari-karappaṉ*, பெ. (n.) 1. *கிளி* **வன்னம் என்னும் செடி** (பச்.மூ.); the plant *kiḷivaṉṉam*. 2. **குழந்தைகளுக்குக் குறியுறுப்பிற் புற்றுண்டாகி உருவையழிக்கும் ஊதை (வாத)க் கரப்பான் நோய்**; a kind of itching eczema, common in children, arising in the genitals in the form of a sore (சா.அக.).

**அரிகரப்பான்** *ari-karappāṉ*, பெ. (n.) **அரிகரப்பன்** 2 பார்க்க; see *ari-karappaṉ* 2. "குட்டரிகரப் பான் வெய்ய மருத்தணி மருட்காய்கள் வதப்பும் போம்" (தைலவ. தைல. *133*).

**அரிகரி** *arikari*, பெ. (n.) **அத்திக்கொழுந்து**; tender leaves of the fig tree.

**அரிகளவம்** *arikaḷavam*, பெ. (n.) **ஆறு** (சங்.அக.); river.

**அரிகறையான்** *ari-kaṟaiyāṉ*, பெ. (n.) *1. அரிக் கின்ற சிதல்*; gnawing white ant. 2. **தொந்தரவு செய்பவன்**; teaser, vexatious person (W.).

**அரிகாரம்** *ari-kāram*, பெ. (n.) *1. சீனக்காரம்* (வை.மூ.); alum (செ.அக.) — China alkali (சா. அக.). 2. **பொரிகாரம்**; alum, alumen, a double salt composed of sulphate of potash and sulphate of ammonia (சா.அக.).

**அரிகால்** *ari-kāl*, பெ. (n.) **அரிதாள்**; stubble. "அரிகாலின் கீழுகூஉ மந்நெல்லே" (பொருந. தனிப்பா.).

**அரிகிணை** *ari-kiṇai*, பெ. (n.) **அறுவடைக் காலத்தில் மள்ளர் (பள்ளர்) இயக்கும் உறுமி யென்னும் பறை**; a peculiar drum called *uṟumi* beaten by the agriculturist class during harvest time. "மள்ள ரரிகிணைக் கிசைய வூதும்" (அருணாசல பு. திருக்கண் பு. 45).

[*அரி = அறுப்பு. கிணை = உறுமிப்பறை.*]

**அரிகிரந்தி** *ari-kirandi*, பெ. (n.) **விரைந்து பரவிச் சதையை அரித்து அழுகச் செய்யும் புண்ணோய்**; an ulcer which spreads rapidly and destructively, eating away the tissues, *Phagedenic ulcer* (சா.அக.).

[*அரி* + Skt. granthi > த. *கிரந்தி. அரித் தல் = கறையான்போற் சிறிதுசிறிதாய்த் தின்னுதல்.*]

**அரிகீரை** *ari-kīrai*, பெ. (n.) **அறைக்கீரை**; a pot-herb.

**அரிகுரல்** *ari-kural*, பெ. (n.) **கரகரத்த வொலி**; hoarse or discordant sound. "அரிகுரற் கோழி" (சீவக. 1755).

[*அரி + குரல்.*]

**அரிகூடம்** *ari-kūḍam*, பெ. (n.) **கோபுர வாயின் மண்டபம்**; passage or hall under the tower at the entrance to a castle or temple.

**அரிகூலி** *ari-kūli*, பெ. (n.) **பழைய வரிவகை** (Anc. Dec. 344); an ancient tax.

[*அரி + கூலி.*]

**அரிகேசரி** *ari-kēšari*, பெ. (n.) **கடைக்கழகக் காலப் பாண்டியர் சிலர் தாங்கிவந்த பட்டப் பெயர்**; a title of certain *Pāṇḍyas* of the period of the 3rd Academy.

[*அரி = பகைவன்.* Skt. kēsarin > த. *கேசரி = அரிமா. அரிகேசரி = பகைவருக்கு அரிமாப் போன்றவன்.*]

**அரிகொழி** *ari-koḻi*, பெ. (n.) **பழைய வரிவகை** (S.I.I. ii, 352); an ancient tax.

[*அரி = அரிசி. கொழி = கொழித்தல், தெள்ளுதல்.*]

**அரிச்சந்தனம்** *ari-c-candaṉam*, பெ. (n.) **செஞ் சந்தனம்** (பச்.மூ.); red-sanders (செ.அக.) — red sandal, *Pterocarpus santalinus* (சா.அக.).

**அரிச்சந்தனம்** > Skt. haricandana.

[*அரி + சந்தனம். அர் → அரி = சிவப்பு.*]

**அரிச்சந்திரபுராணம்** *ariccandira-purāṇam*, பெ. (n.) **வீரைஆசுகவிராயர் கி.பி. 1524-ல் அரிச்சந்திரன் கதையைப்பற்றிப் பாடிய பனுவல்;** name of a poem relating to the story of Hariścandra, composed in A.D. 1524 by Virai Āśukavirāyar.

[**Skt.** Hariścandra > த. *அரிச்சந்திரன். வாய்மை யறத்தைக் கடைப்பிடிக்க எல்லாவற்றையும் தன்னையும் ஒப்புக்கொடுத்தவனாகச் சொல்லப்படும் பண்டை வடநாட்டுக் கதிரவக் குடி (சூரியவமிச) அரசன்.*]

**அரிச்சந்திரம்** *ariccandiram*, பெ. (n.) **முகட்டுக்கை தாங்குங் கட்டை** (Madr.); kingpost in a truss.

**அரிச்சல்** *ariccal*, பெ. (n.) 1. **நாணம்** (இ.வ.); bashfulness (Loc.). 2. **அருமை;** rarity.

**அரிச்சலாக** *ariccalāga*, கு.வி.எ. (adv.) **அருமையாக;** once in a way, rarely. உங்களை எங்கேயோ அரிச்சலாகப் பார்த்த நினைவிருக்கிறது (உ.வ.).

[*அரு → அருகு → அருக்கு → அருக்கம் = அருமை. அருக்கம் → அருக்கல் → அருச்சல் → அரிச்சல். ஒ.நோ: பக்கம் → பக்கல்.*]

**அரிச்சாவி** *ariccāvi*, பெ. (n.) **பெருங்குமிழ்** (பச்.மூ.) — **பெருங்குமிழ்;** coomb teak (செ. அக.) — kandahar tree, *Gmelina arborea* (சா. அக.).

**மறுவ.** அரிசா, அரிசாகிகம்.

**அரிச்சுவடி** *ari-c-cuvaḍi*, பெ. (n.) **அரி என்று தொடங்கும் நெடுங்கணக்குப் பொத்தகம் அல்லது ஓலைக்கற்றை;** Tamil alphabet book commencing with the name *Ari* (Viṣṇu).

[*இடைக்காலத்தில் நெடுங்கணக்குச் சுவடி திருமால் வணக்கத்தொடு தொடங்கியதால் அரிச்சுவடி யெனப்பட்டது. அரி (திருமால்) + சுவடி (சிறுபொத்தகம், பொத்தகம்).*]

**அரிக்குழி** பார்க்க; see **ari-k-kuḻi.**

**அரிச்சோளம்** *ari-c-cōḷam*, பெ. (n.) **வெள்ளைச் சோளம்;** white maize (சா.அக.).

**ம.** அரிச்சோளம்; **து.** அரிஜோள.

[*அரி + சோளம்.*]

**அரிச்சோனகம்** *ari-c-cōṉagam*, பெ. (n.) **நரியீந்து;** small date, *Phoenix farinifera* (சா.அக.).

**அரிசம்** *ariśam*, பெ. (n.) 1. **மிளகு;** black pepper, *Piper nigrum*. 2. **மஞ்சள்;** turmeric, *Curcuma longa*. க. அரிசின. 3. **மூலம்;** piles or haemorrhoids. தெ. அரிசெ; ம. அரிசஸ். 4. **மூலமுளை;** vascular tumour in the rectum (சா. அக.).

**அரிசம்மாரிகம்** *ariśam-mārigam*, பெ. (n.) **நரிக்கொன்றை;** horse cassia, *Cassia marginata* (சா.அக.).

**அரிசயம்** *ariśayam*, பெ. (n.) 1. **சரக்கொன்றை** (மலை.); Indian laburnum (செ.அக.) — king's tree or Indian laburnum, *Cassia fistula*. 2. **எலுமிச்சை** (மலை.); sour lime (செ.அக.) — lime, *Citrus medica-acida* (சா.அக.).

**மறுவ.** அரிசலம்

**அரிசயமங்கு** *ariśaya maṅgu*, பெ. (n.) **கொன்றை;** common cassia, *Cassia fistula*.

**அரிசரி** *ariśari*, பெ. (n.) **அத்திக்கொழுந்து** (வை.மூ.); tender leaves of the Indian fig.

**அரிசலம்** *ariśalam*, பெ. (n.) **அரிசயம்** பார்க்க; see *ariśayam*.

**அரிசனம்** *ariśaṉam*, பெ. (n.) 1. **மஞ்சள்;** turmeric, *Curcuma longa*. "அரிசன மேனி நல்லாள்" (கந்தபு. தேவ. தெய்வ. 87). 2. **மஞ்சள் விரவிய கலவைப் பொடி;** a mixture of turmeric powder and other powders. "ஆசனத் தணிநீ ராட்டி யரிசனஞ் சாத்தி" (பெரியபு. தடுத்தாட். 15, உரை) (சங்.அக.).

**க., பட.** அரிஸின; **கோத., துட.** அர்சன்.

**அரிசனி** *ariśaṉi*, பெ. (n.) **குத்தல்வலி;** pricking or piercing pain (சா.அக.).

**அரிசா** *ariśā*, பெ. (n.) **பெருங்குமிழ்** (மலை.); coomb teak (செ.அக.).

**அரிச்சாவி** பார்க்க; see **ari-c-cāvi.**

**அரிசாகிகம்** *ariśāgigam*, பெ. (n.) **அரிச்சாவி** பார்க்க; see *ari-c-cāvi*.

**அரிசாரணம்** *ariśāraṇam*, பெ. (n.) **மாவிலிங்கம்** (பரி.அக.); lingam tree (செ.அக.) — sacred lingam tree, *Cretaeva religiosa* (சா அக.).

**அரிசாரம்** *ariśāram*, பெ. (n.) **பழுப்பு;** essence of yellow colour (சா.அக.).

[*அரி = மஞ்சள். சாரம் = சாறு, உட்பொருள்.*]

**அரிசி**[1] *ariśi*, பெ. (n). 1. **உமிநீங்கிய நென்மணி;** rice removed of its husk. "நாழியரிசிக்கே நாம்" (நல்வழி, 19). 2. **உமி**

நீங்கிய தவசமணி; any husked grain. ''வர கரிசிச் சோறும்'' (தனிப்பா. 1, பக். 112). 3. நெய்யுள்ள வித்தின் உட்பருப்பு (நாமதீப.); inner pulp of oil seeds. 4. மூங்கிலரிசி முதலி யன; small seeds, as of the bamboo, etc.

அரிசி வகைகள் :

1. அறுவகை மருத்துவ அரிசி (the six kinds of seeds or rice used in medicines) :
   - (1) கார்போகரிசி; hazel leaved psoralea, *Psoralea corylifolia*.
   - (2) வாலுளுவையரிசி; spindle tree, *Celastrus paniculata*.
   - (3) திப்பிலியரிசி; (berries of) *Charica roxburghii*.
   - (4) வெட்பாலையரிசி அல்லது விளா வரிசி; (seeds of) *Wrightia tinctoria*.
   - (5) மூங்கிலரிசி; bamboo seed, *Bambusa arundinacea*.
   - (6) ஏலரிசி; *Amomum cardomum*.

   அதவரிசி, உருளரிசி, ஏலரிசி, கார் புகா அரிசி, லூவா அரிசி, வெட் பாலை அரிசி (சங்.அக.).

2. ஐவகைப் பத்தியக் கஞ்சி யரிசி (the five kinds of rice used as diet, when one is under medical treatment):
   - (1) புழுங்கலரிசி; boiled rice.
   - (2) வாற்கோதுமை யரிசி; barley rice.
   - (3) கோதுமை யரிசி; wheat rice.
   - (4) சவ்வரிசி; sago.
   - (5) கருங்குறுவையரிசி; red coloured husked rice from black paddy.

**குறிப்பு :** The rice mentioned in No. 5 (கருங் குறுவையரிசி) is considered the best of all kinds mentioned in Tamil medical science. It is even recommended as the best diet for Yogis and *Siddhars* while taking kalpam for longevity or when engaged in yoga practice (சா.அக.).

**ம., து.** அரி; **தெ.** அரிசெ (அரிசிமாவாற் செய்த இனிப்புத் தின்பண்டம்); **க., பட., குட., கோத.** அக்கி; **துட.** அச்கி; **கோண்.** வரி; **கூ.** உர்சி; **மா.** அத்வ.

**E.** rys, rysz, ryzs, ryse, rysse, ris, rise, rize, ryce, rice.

**ME.** rys; **Fris.** rys; **Du.** rijst, rijs, rys. **MLG.** riis, rîs; **MHG.** rîs; **G.** reis; **MSw.** riis; **Sw.**, **Da.** ris; **OF.** ris; **F.** riz; **It.** riso; **L.** *Orizum*, oriza, oryza; **Gk.** oruza, oruzon; **Sp.**, **Port.** arroz; **Arab.** aruz, aruzz, uruz, uruzz —(O.E.D.).

[அரி = சிறியது. எ-டு: அரிநெல்லி. அரி → அரிசி.]

தவசம், பயறு என்னும் இருவகைக் கூலங்களுள், முன்னதன் உள்ளீடு சிறிதாகவும் பின்னதன் உள்ளீடு பெரும்பாலும் பெரி தாகவு மிருத்தலால், அவை முறையே அரிசி, பருப்பு எனப் பெயர்பெற்றன. அரிசி முதன் முதல் தமிழகத்தினின்றே உலகத்தின் பல பாகங்கட்கும் ஏற்றுமதியானதினால், அதன் தமிழ்ப்பெயரே, பல்வேறு மொழிகளிலும் பல்வேறு வடிவுபெற்று வழங்குகின்றது. 'சோறுங்கறியும்' என்னும் தமிழ் இணை மொழி 'rice and curry' என்று ஆங்கிலத்தில் வழங்குதல் காண்க. ஆங்கிலத்திற் சோறு 'rice' என்று வழங்குவது கருவியாகுபெயர்.

அரிசி என்பது பல தவசங்களின் உள்ளீட்டிற்குப் பொதுப்பெயராக விருந் தாலும், பெருவழக்கும் பயன்பாட்டுப் பொதுமையும்பற்றிச் சிறப்பாக நெல் லரிசியையே குறிக்கும்.

எருதந்துறை ஆங்கிலப் பேரகரமுதலி (The Oxford English Dictionary) உருவாக எழுபதாண்டுக் காலஞ் சென்றிருப்பினும், தமிழின் தொன்மையையும் முன்மையையும் அறிந்து 'rice' என்னும் ஆங்கிலச் சொல்லின் மூலம் 'அரிசி' என்னும் தென்சொல்லென்று குறியாது, 'probably of Oriental origin' என்று மட்டும் பொதுப்படக் குறித்திருப்பது கண்டிக்கத்தக்கதே.

அரிசி[2] *ariśi*, பெ. (n.) கடுக்காய்; chebulic myrobalan.

அரிசி[3] *ariśi*, பெ. (n.) மஞ்சள் (T.C.M. ii, 2: 429); turmeric.

[ஒருகா. அரிசனம் → அரிசி.]

அரிசி[4] *ariśi*, கு.பெ.எ. (adj.) **ஒரு சிறுமைப் பொருள் முன்னொட்டு;** a dim. pref. அரிசிக் களா, அரிசிப்பல்.

அரிசிக்கஞ்சி *ariśi-k-kañji*, பெ. (n.) 1. **நோயாளி கட்காகவும் வலுவற்றவர்க்காகவும் வேக வைத்த நீரோடு கலந்த குழைந்த அரிசிச்**

**சோறு**; over cooked or recooked rice along with the water in which it has been cooked as diet for sick persons and invalids. 2. **குழந்தைகட் காகக் கூழ்ப்பதமாகக் காய்ச்சின அரிசிச் சோறு**; gruel prepared from rice for infants.

க., படை. அக்கி தஞ்சி; து. அர்கஞ்சி.

[அரிசி + கஞ்சி.]

**அரிசிக்கணக்கு** *ariši-k-kaṇakku*, பெ. (n.) **ஒன் றனைப்பற்றிக் கேட்டவர்க்கு 'உனக்கும் (உமக்கும்) அதற்கும் தொடர்பில்லை' என் பதைக் குறிக்கும் சொல்**; a term indicating, 'a matter that does not concern you.' அது அரிசிக் கணக்கு (உ.வ.).

**அரிசிக்கம்பு** *ariši-k-kambu*, பெ. (n.) **மேழத்தில் (சித்திரையில்) விதைத்து அலவனில் (ஆடி யில்) அறுவடையாகும் சிறுகம்பு** (G.S.D. ii, 219); a short species of *kambu*, sown in April - May and harvested in July - August.

['அரிசி' கு.பொ.முன். (a dim. pref.).]

**அரிசிக்கழுநீர்** *ariši-k-kaḻu-nīr*, பெ. (n.) **அரிசி கழுவிக் களைந்த நீர்**; the water with which rice has been washed and cleaned.

[அரிசி + கழு + நீர்.]

**அரிசிக்களா** *ariši-k-kaḷā*, பெ. (n.) **சிறுகளா**; a low-spreading spiny evergreen shrub, *Carissa spinarum*.

['அரிசி' கு.பொ.முன்.]

**அரிசிக்காடி** *ariši-k-kāḍi*, பெ. (n.) **புளித்த கஞ்சி**; grain vinegar, sour gruel, from the acetous fermentation of rice (செ.அக.) — 1. **அரிசிக் கஞ்சியைப் புளிக்கவைத்து அதனின்று வடித்த காடி. இதற்குக் காஞ்சிகம் என்று பெயர்**; an acetous fermentation of powdered rice, rice ferment or grain vinegar, acetum of chemists. 2. **புளித்த கஞ்சி**; sour *conjee*. 3. **கருங்குறுவை யரிசியைக்கொண்டு போகர் 7000-ற் சொல்லியபடி உண்டாக்கிய ஆறு மாதக் காடி. இது தமிழ் மருத்துவத்தில் மருந்துகள் அரைத்துப் புடமிடுவதற்கு மிகப் பயன்படும். இதற்குப் 'பழச்சாறு' என்பது குழூஉக்குறி**; acetic acid prepared from the husked black paddy, as per process laid down in Bōgar (7000). The liquid *conjee* to be fermented is kept in earthen jars or pots just covering the mouth with a piece of white cloth, and exposing the same to the hot sun for six months (between February and July) when the acetification is said to be accomplished. This is known by the secret term *paḻaccāṟu* (சா.அக.).

ம. அரிக்காடி

[அரிசி + காடி.]

**அரிசிக்காணம்** *ariši-k-kāṇam*, பெ. (n.) **பழைய வரிவகை** (I.M.P. Tp. 234); an ancient tax on rice.

[அரிசி + காணம் (வரி).]

**அரிசிக்காய்** *ariši-k-kāy*, பெ. (n.) **ஒருவகை மாங்காய், பச்சரிசி மாங்காய்**; a variety of mango.

[பச்சரிசி → அரிசி (குறுக்கம்).]

**அரிசிக்கோதுமை** *ariši-k-kōdumai*, பெ. (n.) **வாற்கோதுமை** (விலசா. 3); a species of wheat.

[அரிசி + கோதுமை.]

**அரிசிங்காமூலி** *ari-šiṅgā-mūli*, பெ. (n.) **சிறியா ணங்கை, பெரியாணங்கை என்பதற்கு எதிர்**; a plant with peculiar virtues of curing snake-bites, *Polygula glabra*, opp. to *periyāṇaṅgai*.

[அரி = அழகு. சிங்கா = குன்றாத. மூலி = மூலிகை. சிங்குதல் = குன்றுதல், அழிதல்.]

**அரிசிங்கி** *ari-šiṅgi*, பெ. (n.) **அழகைக் குறைக் கும் ஒருவகைப் புண்ணோய்**; a kind of ulcerous disease affecting the handsome or beautiful looks of a person.

[அரி = அழகு. சிங்கி = குன்றி, குறைவது. சிங்குதல் = குன்றுதல், அழிதல்.]

**அரிசிச்சாதம்** *ariši-c-cādam*, பெ. (n.) **அரிசிச் சோறு**; boiled rice. "நெய்யிலாச் சாதமுந் திருத்தி யில்லை" (குமரேச சத. 63).

தெ. ஶாதமு

[அரிசி + சாதம். 'சாதம்' என்னுஞ் சொல் பொதுவாக வடசொல்லாகக் கருதப்படுகின்றது. ஆயின், 'ப்ரஸாத' என்னுங் கூட்டுச்சொல்லி லன்றி, வடமொழியிலும் இது தனித்து வழங்குவ தில்லை. அதனால் இதற்கு மூலமும் இம்மொழி யில் இல்லை. ஒருகால், சோறு → சோது → சாது → சாதம் என்று திரவிடத்தில் திரிந்திருக் கலாம். மாணிக்கவாசகர் 'சோறு' என்னுஞ் சொல்லை வீடு (முத்தி) என்னும் பொருளில் ஆண்டிருத்தலால், 'சாதம்' என்னும் வடிவம் வட

மொழியிற் 'ப்ர' என்னும் முன்னொட்டுப் பெற்றுப் 'ப்ரஸாத' என்றாகிக் கோயிலிற் படைக்கப்படும் திருச்சோற்றிற்கு அல்லது திருப் படையலுக்குப் பெயராகி யிருக்கலாம்.]

**அரிசிச்சாராயம்** *ariši-c-cārāyam*, பெ. (n.) **புளிக்கவைத்த அரிசியொடு வெல்லங் கலந்து அதனின்றெடுக்கும் மதுவகை**; arrack extracted from rice fermented with jaggery.

[அரிசி + சாராயம். சாறாயம் → சாராயம்.]

**அரிசிச்சோளம்** *ariši-c-cōḷam*, பெ. (n.) **சிறு சோளம், சோளவகை** (Rmd.M.); variety of *cōḷam, Holcus saccharatus* (சா.அக.).

ம. அரிச்சோளம்; து. அரிசோள.

[அரிசி + சோளம். 'அரிசி' சி.பொ.முன்.]

**அரிசிச்சோறு** *ariši-c-cōṟu*, பெ. (n.) **நெல்லரிசிச் சோறு**; boiled rice.

[அரிசி + சோறு.]

**அரிசித்தழுப்பு** *ariši-t-taḻuppu*, பெ. (n.) **பெண்டிர் காதணிவகை** (நெல்லை); a kind of women's ear ornament (Tn.).

**அரிசித்திப்பிலி** *ariši-t-tippili*, பெ. (n.) **சிறு திப்பிலி**; a small variety of long pepper, *Piper longum* (சா.அக.).

[அரிசி + திப்பிலி. 'அரிசி' சி.பொ. முன்.]

**அரிசித்தினை** *ariši-t-tiṉai*, பெ. (n.) **சிறுதினை, தினைவகை** (விவசா. 3); a kind of small millet.

[அரிசி + தினை. 'அரிசி' சி.பொ. முன்.]

**அரிசித்துண்டம்** *ariši-t-tuṇḍam*, பெ. (n.) **பழைய வரிவகை** (M.E.R. 110 of 1917); an ancient tax.

**அரிசிதவசி** *ariši-tavaši*, பெ. (n.) **அரிசியும் அதற்கினமான பிறவும்**; rice and allied food-grains. அந்தவூரில் அரிசிதவசி மலிவாய் விற்கும் (உ.வ.).

['அரிசிதவசி' ஒரு மரபிணைமொழி. தவசம் → தவசி, எதுகை நோக்கி ஈறு திரிந்தது.]

**அரிசிப்பல்** *ariši-p-pal*, பெ. (n.) **சிறுபல்** (நெல்லை); small tooth or teeth (Tn.).

[அரிசி + பல். 'அரிசி' சி.பொ. முன்.]

**அரிசிப்பிட்டு** *ariši-p-piṭṭu*, பெ. (n.) **அரிசிமாப் பிட்டு**; a kind of pastry prepared by steaming rice flour.

ம. அரிமாவு (அரிசிமாவு); க. அக்கி திட்டு.

[அரிசி + பிட்டு.]

**அரிசிப்புல்** *ariši-p-pul*, பெ. (n.) 1. **மத்தங்காய்ப் புல்**; a kind of grass, *Cynosurus egypticus* (சா.அக.). "அரிசிப்புல் லார்ந்த மோட்டின" (சீவக. 43). 2. **கம்பரிசி**; a species of husked *kambu* millet (சா.அக.).

க. அக்கி குல்லு

[அரிசி + புல்.]

**அரிசியரக்கு** *ariši-y-arakku*, பெ. (n.) **பொடி யரக்கு**; lac in granulated form deprived of its resinous matter and part of its colouring.

[அரிசி + அரக்கு. 'அரிசி' சி.பொ.முன்.]

**அரிசியற்றுப்போ-தல்** *ariši-y-aṟṟu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **வாழ்நாள் இறுதியடைதல்** (நாஞ்.); to reach the closing days of one's life (Nāñ.).

[அரிசி + அற்று + போ.]

**அரிசியிடு-தல்** *ariši-y-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **பிணத்தின் வாயில் உறவினர் அரிசியிடுதல்**; to put rice into the mouth of a deceased person, as part of the funeral rites. "அள்ளி யிடுவ தரிசியோ" (பட்டினத். பொது. தாயா. 6).

[அரிசி + இடு.]

**அரிசியிலந்தை** *ariši-y-ilandai*, பெ. (n.) **நரி யிலந்தை**; a small species of jujube, *Zizyphus horrida*.

[அரிசி + இலந்தை. 'அரிசி' சி.பொ.முன்.]

**அரிசிரங்கு** *ari-širaṅgu*, பெ. (n.) **சொறிசிரங்கு**; itch, scabies.

[அரித்தல் = நமைச்சலெடுத்தல். அரி (அரிக் கின்ற) + சிரங்கு.]

**அரிசில்** *arišil*, பெ. (n.) 1. **சோணாட்டிலுள்ள காவிரியின் கிளையான ஓர் ஆறு**; name of an affluent of the *Kāvēri* in Thañjāvūr district. "அம்பர் சூழ்ந்த வரிசில்" (நற். 141 : 11). "அரிசிற் றென்கரை யழகார் திருப்புத்தூர்" (தேவா.7 . 9 : 5). 2. **ஒரு பழைய ஊர்**; name of an ancient village.

**அரிசில்கிழார்** *arišil-kiḻār*, பெ. (n.) **பதிற்றுப் பத்தில் 8ஆம் பத்தைப் பாடிய ஒரு புலவர்**; name of an ancient poet, author of the eighth ten of the *Padiṟṟuppattu*.

**அரிஞ்சான்** *ariñjāṉ*, பெ. (n.) **ஒருவகைக் கடல் மீன்**; a kind of sea-fish, *Cirrhina reba.*

**அரிணம்**[1] *ariṇam*, பெ. (n.) *1.* **சிவப்பு**; red colour. *2.* **காவிநிறம்**; tawny colour. *3.* **மானிறம்** (நாநார்த்த.); fawn colour. *4.* **மான்** (சூடா.); deer. "வெங்கோட் டரிணத் தொக்கு" (பாரத. இராசசூ. 105). *5.* **மஞ்சள் நிறம்**; yellow colour. *6.* **பொன்** (R.); gold. *7.* **எலுமிச்சை**; sour lime, *Citrus medica-acida.* *8.* **வெண்மை** (R.); whiteness.

ம. அருணம்; க. அருண; தெ. அருணமு.

அரிணம் > **Skt.** hariṇa.

*[அரி = நெருப்பு. செம்மை, மானிறம், மஞ்சள் நிறம் – இம் மூன்றும் நெருப்பிற் குரியன. வெண்மை நெருப்பின் ஒளிக்குரியது. உல் → அல் → அர் → அரணம் → அருணம் → அரிணம் = சிவப்பு.]*

**அரிணம்**[2] *ariṇam*, பெ. (n.) **சந்தனம்** (பச்.மூ.); sandal wood.

*[அரிணம் என்பது செஞ்சந்தனம்போலும்.]*

**அரிணன்** *ariṇaṉ*, பெ. (n.) *1.* **சிவன்**; Šiva. *2.* **கதிரவன்**; sun.

*[அருணம் = சிவப்பு. அருணம் → அருணன் = செந்நிறத்தனான சிவன், எழுகையிலும் விழுகையிலும் சிவந்து தோன்றுங் கதிரவன். அருணன் → அரிணன்.]*

**அரிணி** *ariṇi*, பெ. (n.) *1.* **பொன்னாலாகிய உருவம்** (சங்.அக.); gold image. *2.* **அழகி**; beautiful woman. *3.* **வஞ்சிக்கொடி**; water rattan, *Calamus rotang* (சா.அக.).

*[அரிணம் = பொன், அழகு. அரிணம் → அரிணி = அழகி.]*

**அரிணை** *ariṇai*, பெ. (n.) **கள்** (வை.மூ.); toddy.

**அரித்துக்கட்டி** *arittu-k-kaṭṭi*, பெ. (n.) **கண்டதையெல்லாம் தனக்கென்று ஈட்டுவோன்**; one who scrapes and picks and appropriates whatever comes in his way, a grabbing person. அவன் ஒரு பெரிய **அரிச்சுக்கட்டி** (உ.வ.).

*[அரித்துக்கட்டி → அரிச்சுக்கட்டி.]*

**அரித்தை** *arittai*, பெ.(n.) *1.* **துயரம்** (சங்.அக.); grief. *2.* **துன்பம்**; distress.

*[அரித்தல் → துன்புறுத்துதல், அழித்தல். அரி → அரித்தை.]*

**அரிதட்டு** *ari-taṭṭu*, பெ. (n.) **சல்லடை** (புதுவை); sieve (Poṇḍ.).



அரிதட்டு

**அரிதளம்** *aritaḷam*, பெ. (n.) *1.* **அரிதாரம்** (வின்.); yellow orpiment. *2.* **தாளகச் செய்நஞ்சு** (பாடாணம்); a kind of arsenic (சா. அக.).

*[அரிதாரம் → அரிதாலம் → அரிதாளம் → அரிதளம்.]*

**அரிதாசம்** *aridāšam*, பெ. (n.) **செம்பைமரம்**; a flowering tree, *Coronilla sesban* (சா.அக.).

**அரிதாசர்** *aridāšar*, பெ. (n.) **இருசமய விளக்கம் என்னும் நூலாசிரியரான 18ஆம் நூற்றாண்டுப்புலவர்**; name of a poet at the beginning of the 18th century, author of the *Iru Šamaya Viḷakkam.*

[**Skt.** Haridāsa > **த.** *அரிதாசர் = திருமாலடியார்.]*

**அரிதாட்புள்ளி** *aridāṭ-puḷḷi*, பெ. (n.) **கதிரறுத்த தாளைக்கொண்டு கணிக்கும் பொலி மதிப்பு**; estimate of the produce of a field from the appearance of the stubble (R.F.).

*[அரிதல் = தாளறுத்தல். அரி + தாள் + புள்ளி (மதிப்பு, கணக்கு).]*

**அரிதாரக்கட்டு** *aridāra-k-kaṭṭu*, பெ. (n.) **தாளகக்கட்டு** (வின்.); consolidated orpiment.

*[அரிதாரம் + கட்டு.]*

**அரிதாரசெந்தூரி** *aridāra-šendūri*, பெ. (n.) **கப்புச்சடைச்சி**; a plant (unidentified) (சா. அக.).

**அரிதாரநாகம்** *aridāra-nāgam*, பெ. (n.) **தலைச்சன் பிள்ளையின் மண்டையோட்டினின்று உருவாக்கும் ஒருவகை அண்டச் சுண்ணம்**; a kind of calcium compound prepared out of the skull of the first born child (சா.அக.).

**அரிதாரநீற்றி** *aridāra-niṟṟi*, பெ. (n.) **முட்பலா**; a kind of plant capable of calcining orpiment.

*[அரிதாரம் + நீற்றி. நீறு → நீற்று. நீற்றுதல் = சுண்ணமாக்குதல். நீற்று → நீற்றி. 'இ' வி.முத. ஈறு.]*

**அரிதாரப்புகை** *aridāra-p-pugai*, பெ.(n.) 1. **அகத்தியர் மருத்துவ நூலிற் சொல்லப் பட்டுள்ள ஒரு மருந்துப் புகை**; a kind of fumigation described in Agastiyar's treatise on medicine. 2. **கைகாலுளைச்சல், கறடு முதலிய வற்றிற்கு அரிதாரத்தைக்கொண்டு போடும் புகை**; the smoke of orpiment used for curing pain in the limbs and other rheumatic complaints (சா.அக.).

[அரிதாரம் + புகை.]

**அரிதாரபூதிச்சி** *aridāra-pūdicci*, பெ.(n.) **தும்பி**; moss creeper, *Cassytha filiformis*, capable of calcining orpiment.

[அரிதாரம் + பூதிச்சி. பூதி = புழுதி, சாம்பல், திருநீறு. பூதித்தல் = நீற்றுதல். பூதி → பூதிச்சி.]

**அரிதாரம்** *aridāram*, பெ. (n.) 1. **தாளகச் செய்ந்நஞ்சு (பாடாணம்)**; yellow orpiment, arsenic sulphide. "குன்மமெட்டும் பேருங் காண்..............அரிதா ரத்தால்" (பதார்த்த. 1188). 2. **காசறை (கஸ்தூரி) மானின் கொப் பூழினின்று எடுக்கப்படும் நறுமைப் பொருள்**; musk. "மான் வயிற்றி னொள்ளரி தாரம் பிறக்கும்" (நான்மணிக். 6). 3. **மஞ்சள்** (வை.மூ.); turmeric.

ம. அரிதாரம்; க. அரிதாள; தெ. அரிதளமு.

[அரி = மஞ்சள். தாரம் = சரக்கு.]

மறுவ. அரிமின், அரியணைச்செல்வி.

அரிதாரம் (தாளக பாடாணம்)பற்றிய சிறப்புக் குறிப்புகள் :

1. மனோசிலை யென்னும் அரிதாரம் மலைகளிலே பிறக்கும் (பெரியபு. கண்ணப்ப. 48, உரை) (சங்.அக.மேற்.).
2. இது (அரிதாரம்) சீனம், பர்மா, சுமத்திரா முதலிய விடங்களிலிருந்து இறக்குமதியாகுஞ் சரக்கு. இது எலுமிச்சம்பழ நிறமாகவிருந்து, பிறகு பழுப்பு நிறமாக மாறும். இதன் துண்டுகள் கோணங்களாக அகப்படும். இதற்கு எலிக்கூட்டுப் பாடாண மென்றும், பொன்னிறமென்றும் பல பெயர்களுண்டு.

இது அடியிற் கண்டபடி பலவகைத் தாயினும் கடையில் மூன்று வகையான சரக்குகள்தாம் அகப்படும். ஒன்று பளபளப் புள்ள கம்பிபாய்ந்த சரக்கு; மற்றிரண்டும் மஞ்சள் நிறமான கட்டிகளாக விருக்கும்.

அரிதார வகைகள் :

(1) கட்டரிதாரம் — Arsenicum flavum (*Lump orpiment*).
(2) கரட்டரிதாரம் — orpiment got in large angulo-granular distinct concretions.
(3) கனத்தீ யரிதாரம் — another variety of orpiment.
(4) பொன்னரிதாரம் — yellow orpiment or golden pigment or king's yellow sulphuret of arsenic, *Arsenicum trisulphidum*.
(5) மடலரிதாரம் — orpiment in flakes.
(6) தகட்டரிதாரம் — orpiment found in thin leaves, or plates., concentrated lamellar concretions of orpiment.
(7) வைப்பரிதாரம் — orpiment prepared as per process of *Siddhars*' science.
(8) தாளகம் — Arsenicum tersulphuretum, used as a medicine.
(9) கல்லரிதாரம் — stone orpiment, found in lumps (சா.அக.).

**அரிதாரவஞ்சி** *aridāra-vañji*, பெ. (n.) **கொத்த மல்லி**; coriander seed, *Coriandrum sativum* (சா.அக.).

**அரிதாரவெண்ணெய்** *aridāra-v-eṇṇey*, பெ. (n.) **வலி, சொறி, சிரங்கு, கரப்பன் படை, ஆறாப் புண் முதலியவற்றிற்கு, அரிதாரத்துடன் மற்றச் சரக்குகளைச் சேர்த்து நல்லெண்ணெயி லிட்டுக் காய்ச்சி உருவாக்கும் மருந்தெண் ணெய்**; a medicinal oil prepared by boiling a mixture of gingelly oil with yellow orpiment as chief ingredient amongst several other drugs, and used in aches, eczema, karpaung, etc. (சா.அக.).

[அரிதாரம் + எண்ணெய் (எள் + நெய்).]

**அரிதாலம்** *aridālam*, பெ. (n.) 1. **பொன்னரி தாரம்** (புதுவை); yellow orpiment (Poṇḍ.). 2. **மஞ்சள் நிறமான ஒருவகைப் புறா**; a high class pigeon of a yellow colour, golden pigeon, *Carpophaga sylvatica* alias *C. pusilla* (சா.அக.). 3. **வெண்ணிறமான மலையாள நாட்டுப் புறா**; bronze-backed imperial pigeon of Malabar, *Carpophaga insignis* (சா.அக.).

[அரிதாரம் (மஞ்சள் நிறமானது) → அரி தாலம். அரி = சிவப்பு, மஞ்சள், வெள்ளை.]

**அரிதாள்** *ari-tāḷ*, பெ. (n.) **நெல், வரகு, தினை, சாமை முதலியவற்றின் கதிரறுத்த தாள்;** stubble left on a harvested field.

**அரிதாளகம்** *aridāḷagam*, பெ. (n.) **பொன்னரி தாரம்;** yellow orpiment (சா.அக.).

[அரிதாரம் → அரிதாலம் → அரிதாளம் → அரிதாளகம்.]

**அரிதாளம்**[1] *aridāḷam*, பெ.(n.) **பொன்னரிதாரம்** (வின்.); yellow orpiment (சா.அக.).

[அரிதாரம் → அரிதாலம் → அரிதாளம்.]

**அரிதாளம்**[2] *ari-tāḷam*, பெ. (n.) **ஒருவகைத் தாளம்;** a variety of time-measure in music.

[அரி + தாளம் (தாளால் அல்லது காலால் தட்டிக் காட்டும் இசைக்கால அளவு.]

**அரிதின்பாலை** *aridiṉ-pālai*, பெ. (n.) **திருநாமப் பாலை;** oval-leaved China root, *Smilax macrophylla* (சா.அக.).

[ஒருகா. அரிது + இன் + பாலை.]

**அரிதின்வயச்சி** *aridiṉ-vayacci*, பெ. (n.) 1. **அரிதின்பாலை** பார்க்க; see *aridiṉ-pālai* (மலை.); 2. **காட்டு நன்னாரி;** false sarsaparilla, *Hemidesmus indica* (சா.அக.).

[ஒருகா. அரிது + இன் + வயச்சி.]

**அரிது** *aridu*, பெ. (n.) 1. **அருமையானது;** that which is rare, precious. மணிகளுள் அரிது கோகினூர் வயிரம். 2. **பெறுதற்கு அல்லது செய்தற்கு மிகக் கடினமானது;** that which is very difficult to obtain or perform. "சிந்தையை யடக்கியே சும்மா யிருக்கின்ற திறமரிது" (தாயு. தேசோ. 8). 3. **எவ்வகையிலும் பெற அல்லது செய்ய இயலாதது;** that which is unattainable or impossible. எத்துணை முயலினும் ஒருவன் இறவாதிருத்தல் அரிது.

ம., தெ. அருது; க. அரிது.

[அரு → அரிது.]

**அரிதொடர்** *ari-toḍar*, பெ. (n.) **தொட்டார் கையை நறுக்கும் தொடரிப் (சங்கிலிப்) பொறி;** chain across the entrance to a fort, capable, on mere contact, of severing the hands of approaching enemies. "அரிதொடர் பிடித்தகை யறுக்க விட்டு" (திருவிளை. திருநகரப். 27).

[அரி + தொடர்.]

**அரிநாரி** *ari-nāri*, பெ. (n.) **குண்டுப்பனை;** a species of palmyra, *Borassus flabellifer* (சா.அக.).

**அரிநுகர்மூலம்** *ari-nugar-mūlam*, பெ. (n.) **கோரைக்கிழங்கு;** coray root, *Cyperus rotundus* (சா.அக.).

[அரி = பன்றி. நுகர்தல் = தின்னுதல். மூலம் = கிழங்கு.]

**அரிநூற்பொறி** *ari-nūṟ-poṟi*, பெ. (n.) **தொட்டவர் கையை அரியும் நூற்பொறி** (சிலப். 15 : 216, அடியார்க். உரை.); cord across the entrance to a fort so contrived as to cut off the hand that grasps it.

[அரி + நூல் + பொறி.]

**அரிநெல்லி** *ari-nelli*, பெ. (n.) **சிறுநெல்லி;** otaheite goose-berry, s.tr. *Phyllanthus distichus* (செ.அக.) — country star goose-berry, Brazil cherry, *Phyllanthus distichus* (சா.அக.).

ம. அரிநெல்லி

[அரி + நெல்லி. 'அரி' சி.பொ. முன்.]

**அரிப்பர்** *arippar*, பெ. (n.) **அரித்துப் பொருள் தேடுவோர்;** those who scrape and dig and appropriate whatever comes in their way. "அரிப்பர் கையகப் படுவன வாயிரத் திரட்டி" (திருவிளை. திருநகரப். 66).

[அரிப்பு → அரிப்பர்.]

**அரிப்பரி-த்தல்** *aripp(u)-ari-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **சிறிது சிறிதாகச் சேர்த்தல்;** to gather in small quantities. அரிப்பரித்துப் பொருள் சேர்க்கிறான். 2. **வயலில் அல்லது களத்தில் விழுந்த நென்மணிகளைக் கூட்டிக் கொழித்தெடுத்தல்;** to separate grains by sifting. "கைத் தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித் தாங்கு" (நீதிநெறி. 8).

[அரி → அரிப்பு (தொ.பெ.) + அரி.]

**அரிப்பறை** *ari-p-paṟai*, பெ. (n.) **இரைந்தொலிக்கின்ற கிணை அல்லது உறுமியென்னும் மருத நிலப் பறை;** a peculiar drum, of the people of the agricultural tract, called *kiṇai* or *uṟumi*. "அரிப்பறை வினைஞர்" (ஐங்குறு. 81).

ம. அரிப்பற

[அரித்தல் = இரைந்தொலித்தல். அரி (தொ. பெ.) + பறை. இனி, நெல்லரியும்போது உழவர் கொட்டும் பறை என்றுமாம்.]

அரி = நெற்றாளரிதல். அரி (தொ. பெ.) + பறை. **ஒ.நோ :** "விளைந்த கழனி வன்கை வினைஞ ரரிப்பறை" (மதுரைக். 261-2).

''விளைகழனி யரிப்பறையாற் புள்ளோப் புந்து'' (புறநா. 396 : 3-4). உழவர் அறுவடை செய்யும்போது இன்னியம் இயக்குவது பண்டை மரபு. இதை, ''வெண்ணெல் லரிஞர் தண்ணுமை'' (புறநா. 348 : 1), ''வெண்ணெ லரிநர் தண்ணுமை'' (நற். 350 : 1), ''வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்புந் தண்ணுமை'' (அகநா. 40 : 13), ''வெண்ணெல் லரிநர் மடிவாய்த் தண்ணுமை'' (அகநா. 204 : 10), ''வெண்ணெல் லரிநர் தண்ணுமை'' (மலைபடு. 471) என்பவற்றால் அறிக.

**அரிப்பன்** *arippaṉ*, பெ. (n.) 1. *அரிப்புக்காரன்,* **பொற்றுகளை மணலினின்று** *அரித்தெடுப்* **போன்;** one who sifts gold particles from sand. ''குருட்ட ரிப்ப னார்க்குங் குபேர னென்று பேரோ'' (ஒழிவி. பொது. 5). 2. **சருகு முதலியவற்றை** *அரிப்பவன்;* one who gathers dry leaves, etc.

ம. அரிப்பன்

[அரி → அரிப்பு → அரிப்பன்.]

**அரிப்பாளன்** *arippāḷaṉ*, பெ. (n.) *அரிப்* **போன்;** sifter. 'பிறவி யந்தகனாகிய வரிப் பாளனுக்குங் குபேரனென்று பெயருண்டு கொலோ' (ஒழிவி. பொது. 5, உரை).

[அரிப்பு + **ஆளன்** (ஆ.பா. ஈறு).]

**அரிப்பான்** *arippāṉ*, பெ. (n.) *அரிப்பன்* பார்க்க; see *arippaṉ*.

**அரிப்பு** *arippu*, பெ. (n.) 1. *அரித்தல்;* gathering or collecting in small quantities. 2. *பிரித்* **தெடுக்கை;** sifting, separating. ''அரிப்பரித்தாங் கெய்த்துப் பொருள்செய் திடல்'' (நீதிநெறி.9). 3. **தினவு;** itching, *pruritus*. 4. **சினம்** (சூடா.); anger. 5. **குற்றம்** (திவா.); fault. 6. **சிறிது சிறிதாய்க் கடித்தல் அல்லது அறுத்தல்;** gnawing, corrosion.

ம. அரிப்பு; க. அரிபு; து. அரிபுனி.

[அரி + பு (தொ. பெ. ஈறு).]

**அரிப்புக்காரன்** *arippu-k-kāraṉ*, பெ. (n.) 1. *அரித்துப் பிழைப்பவன்;* sifter, one who lives by sifting. 2. **அரித்துப் பொருள் தேடுவோன்;** money scraper.

ம. அரிப்பன்

[அரி + பு (தொ.பெ. ஈறு) — அரிப்பு. 'காரன்' உடையோனைக் குறிக்கும் ஈறு.]

**அரிப்புக்கூடை** *arippu-k-kūḍai*, பெ. (n.) 1. சல்லடை (வின்.); riddle, sieve. 2. **ஒருவகை மீன்பிடி கருவி;** a kind of fishing implement.

ம. அரிப்புக்கூட; து. அரிப்பு.

[அரிப்பு + கூடை.]

**அரிப்புச்சரி** *arippu-c-cari*, பெ. (n.) **தொங்கல் வகை, ஓர் அணி** (S.I.I. iv, 77); a pendant.

[அரிப்பு = நுண் குற்றொலிப்பு. சரி = வளையம்.]

**அரிப்புப்படை** *arippu-p-paḍai*, பெ. (n.) **உடம்பிற் படர்ந்து தமைச்சலை யுண்டாக்கும் ஒரு தோல் நோய்;** a parasitic disease of the skin characterised by itching sensation, a kind of ringworm (சா.அக.).

[அரி + பு (தொ.பெ. ஈறு) — அரிப்பு. படை = படர்வு.]

**அரிப்புவலை** *arippu-valai*, பெ. (n.) **ஒருவகை மீன்பிடி வலை;** a kind of fishing net.

**அரிப்புழுக்கல்** *ari-p-puḻukkal*, பெ. (n.) **அரிசிச் சோறு;** boiled rice. ''சமையக் கொட்டிய வாலரிப் புழுக்கலும்'' (திருவிளை. குண்டோ. 6).

[அரி = அரிசி. புழுங்குதல் = வேதல், அவிதல். புழுங்கு → புழுக்கு → புழுக்கல் (தொ. ஆகு.).]

**அரிப்பூ** *arippū*, பெ. (n.) **ஒரு பூக்கும் பூண்டு;** a flowering plant, *Lantana indica* (சா. அக.).

ம. அரிப்பூ

**அரிப்பூண்டு** *ari-p-pūṇḍu*, பெ.(n.) **கடுகுரோகிணி** (சித். அக.); Christmas rose.

**அரிப்பெட்டி** *ari-p-peṭṭi*, பெ. (n.) **சல்லடை** (வின்.); sieve.

ம. அரிக்கட்ட

**அரிபடைவட்டம்** *ari-paḍai-vaṭṭam*, பெ. (n.) **கூரிய கற்கள் நிறைந்த நரகம், எழுவகையுள் ஒன்று;** a hell paved with pointed stones, one of seven kinds.

[அரி = அறுக்கின்ற. படை = படைக்கலம் போன்ற கூர்ங்கல். வட்டம் = இடப்பரப்பு.]

**அரிபதம்** *ari-padam*, பெ. (n.) **மேழ இயவு (மேடாயனம்)** (புதுவை); vernal equinox (Poṇḍ.).

Skt. haripada

[அரி = செம்மறியாடு, மேழம். பதம் = செலவு.]

**அரிபாலுகம்** *ari-pālugam*, பெ. (n.) 1. **தக்கோலம்** (பச்.மூ.); cubeb (செ. அக.) — **தக்கோலம்**; one of the five aromatics, a fragrant drug chewed with betel. 2. **நறு (வாசனை) மிளகு**; fragrant pepper, *Piper cubeba* (சா. அக.).

**அரிபிளவை** *ari-piḷavai*, பெ. (n.) 1. **நச்சுப் புண் வகை** (வின்.); cancer (செ.அக.). 2. **சதையை அரித்துக் குடையும் ஒருவகைப் பிளவைப் புண்**; a hard deep-seated and painful inflammation of the skin (*sub-cutaneous tissue*) which invades the surrounding tissues and burrows under the skin leaving a deep irregular cavity, a kind of carbuncle. 3. **ஒருவகை நச்சுப்புண்**; a kind of ulcer, *Phagedenic ulcer* (சா.அக.).

[அரி = அரிக்கும். பிள → பிளவை = சதையைப் பிளக்கும் புண்.]

**அரிபுதை** *ari-pudai*, பெ. (n.) இரவு (சிந்தா. நி.); night.

**அரிபெட்டி** *ari-peṭṭi*, பெ. (n.) அரிப்பெட்டி பார்க்க; see *ari-p-peṭṭi*.

**அரிமஞ்சரி** *ari-mañjari*, பெ. (n.) **குப்பைமேனி** (மலை.); Indian acalypha (செ.அக.) — rubbish plant, *Acalypha indica* (சா.அக.).

**அரிமண்டகம்** *ari-maṇḍagam*, பெ. (n.) **பனிப் பயறு**; dew gram (சா.அக.).

**அரிமண்டை** *ari-maṇḍai*, பெ. (n.) **கொண்டைக் கடலை**; Bengal gram, *Cicer arietinum* (சா.அக.).

**அரிமணல்** *ari-maṇal*, பெ. (n.) 1. **நுண்மணல்**; fine sand. 2. **அரித்த மணல்**; sieved sand.

**அரிமணை** *ari-maṇai*, பெ. (n.) **அரிவாள்மணை**; a knife-blade fixed to a block of wood, for slicing vegetables.

ம. அருமாமண

[அரி = அரியும் அலகு. மணை = பலகை, கட்டை.]

**அரிமந்திரம்** *ari-mandiram*, பெ. (n.) **அரிமாக் குகை**; lion's den. "அரிமந் திரம்புகுந்தா லானை மருப்பும்" (நீதிவெண்.2).

[அரிதல் = அழித்தல். அரி = பிற விலங்கு களையும் மாந்தரையும் கொன்று தின்றழிக்கும் விலங்கு. மன்னுதல் = பொருந்துதல், கூடுதல், பொருந்தி அல்லது கூடி வதிதல். மன் + திரம் (தொ.பெ. ஈறு) — (மன்றிரம்) → மந்திரம் = பொருந்தி வதியும் இடம்.]

ஒ. நோ: மன்று → மந்து, மன் → மனை.

**அரிமர்த்தனன்** *ari-marttaṉaṉ*, பெ. (n.) **ஒரு தொன்மப் பாண்டியன் பெயர்**; name of a legendary *Paṇḍya* king. "திறலரி மர்த்தன னென்னுந் தென்பார் வேந்தன்" (திருவிளை. மண். 90).

[அரி + மர்த்தனன். **Skt.** mardana > **த.** மர்த்தனன். **வ.** அரிமர்தந = பகைவனை யிடிப் போன் (அழிப்போன்).]

**அரிமல்** *arimal*, பெ. (n.) **மாவிலிங்கம்** (பச்.மூ.); lingam tree, *Crataeva religiosa*.

**அரிமலம்** *arimalam*, பெ. (n.) அரிமல் பார்க்க; see *arimal* (சா.அக.).

**அரிமா** *ari-mā*, பெ. (n.) 1. மடங்கல் (**சிங்கம்**); lion. "அரிமா மதுகை யவர்" (நாலடி. 198). 2. **ஒட்டுமாமரம்**; grafted mango tree (சா.அக.).



அரிமா

[அரி = மடங்கல் (சிங்கம்). மா = விலங்கு. அரிமா = அரியாகிய மா (இருபெயரொட்டு).]

**அரிமாநோக்கம்** *ari-mā-nōkkam*, பெ. (n.) **முன்னும் பின்னுமுள்ள நூற்பாக்களோடு (சூத்திரங்களொடு) பொருள் தொடர்பு கொள்ளும் நூற்பா (சூத்திர) நிலை, நால்வகையுள் ஒன்று**; the way a lion looks to one side and then to the other side illustrates how a *nūṟpā* (**sūtra**) or versified grammatical rule is connected with those that have preceded as well as those that follow, one of four *nūṟpā* (sūtra) ***nilai***.

"ஆற்றொழுக் கரிமா நோக்கம் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத்
திரநிலை" (நன். 19).

[அரிமா, செல்லும்போது அடிக்கடி முன்னும் பின்னும் பார்த்துச் செல்லும் என்பது பண்டையோர் கொள்கை. நோக்கு → நோக்கம் = கூரிய பார்வை.]

அரிமா பார்க்க; see *ari-mā*.

**அரிமாவால்குரங்கு** *arimā - vāl - kurangu*, பெ. (n.) *அரிமாவின் (சிங்கத்தின்) வாலைப் போன்ற வாலுடைய குரங்கு*; lion - tailed monkey.


அரிமாவால்குரங்கு

**அரிமான்** *ari-māṉ*, பெ.(n.) *அரிமா (சிங்கம்)*; lion. "அரிமா னிடித்தன்ன" (கலித். 15 : 1).

[அரி = மடங்கல் (சிங்கம்). மா → மான் = விலங்கு. அரிமா → அரிமான் (இருபெயரொட்டு).]

**அரிமின்** *ari-miṉ*, பெ. (n.) *அரிதாரம்* (சா.அக.); yellow orpiment.

[அரி = மஞ்சள். மின் = பளபளப்பு, பளபளப்பானது.]

**அரிமுக்கை** *ari-mu-k-kai*, பெ. (n.) *மூன்று கைப்பிடியாக எடுக்கப்படும் பழைய நெல்லாயம்*; three handfuls, an ancient tax on paddy crop. 'அரிமுக்கையுட் பட்ட பல நெல்லாயங்களும்' (S.I.I. i, 89).

[அரி = நெல்லரிதாள். மூன்று + கை - முக்கை. கை = கைப்பிடியளவு.]

**அரிமுகச்சிவிகை** *ari-muga-c-civigai*, பெ. (n.) *அரிமாத் தலைபோன்ற முகப்புள்ள பல்லக்கு வகை, சமயத் தருக்கரை வென்ற மதவியலாசிரியர் ஏறுவது*; palanquin with a lion figure-head, intended for a preceptor, who has defeated his opponents in religious disputation, to ride in.

[அரி = மடங்கல் (சிங்கம்). அரி + முகம் + சிவிகை (சிறு பல்லக்குவகை).]

**அரிமுகவம்பி** *ari-muga-v-ambi*, பெ. (n.) *மடங்கல் (சிங்கத்) தலைபோன்ற முகப்பையுடைய ஓடவகை*; canoe with a lion figure-head. "பரிமுக வம்பியுங் கரிமுக வம்பியும் அரிமுக வம்பியும்" (சிலப். 13 : 176-7).

[அரி (மடங்கல்) + முகம் + அம்பி.]

**அரிமுகன்** *ari-mugaṉ*, பெ.(n.) *அரிமா முகவசுரன்*; (கந்தபு. யுத்த. சிங்க. 473); a lion-faced legendary hero.

**அரிமூத்திரம்** *ari-mūttiram*, பெ. (n.) *மிகுந்த காரமும் நச்சுத்தன்மையு முள்ளதும் செம்பைப் பழுக்கவைப்பதுமான அரிமாச் சிறுநீர்*; lion's urine, said to be highly pungent and corrosive and having the power of reacting chemically on copper (சா.அக.).

[அரி + மூத்திரம். மோத்திரம் > மூத்திரம்.]

**அரிமேரை** *ari-mērai*, பெ. (n.) *சிற்றூர் ஊழியர்க்கு நெற்களத்திற் கொடுக்கும் அறுவடையுரிமைப் பங்கு*; harvest perquisites to which village servants have a claim.

[அரி = நெல்லறுவடை. மேரை > தெ. மேர (எல்லை, மதிப்பு, உரிமைக் களத்துப் பங்கு) > Skt. marya (எல்லை).]

**அரிமோதகி** *ari-mōdagi*, பெ. (n.) *தவுகு*; honey thorn, *Canthium umbellatum* (சா.அக.).

**அரிய** *ariya*, கு.பெ.எ. (adj.) *அருமையான*; rare, precious, dear, difficult, impossible.

ம. அரிய; க. அரிது; தெ. அருது.

[அரு → அரிய. ஒ.நோ : பெரு → பெரிய.]

**அரியகண்டகி** *ariya-kaṇḍagi*, பெ. (n.) *வளையலுப்பு*; crude common salt educed from bangle earth, glass-gall, *Fel vitri* (சா.அக.).

**அரியகம்**[1] *ariyagam*, பெ. (n.) 1. *காற்சரியென்னுங் காலணி*; an ancient, hollow anklet that tinkles while walking. "அரியகங் காலுக் கமைவுற வணிந்து" (சிலப். 6 : 85). 2. *கொன்றைமரம்*; cassia.

[அரித்தல் = சிலம்புப்பரல் அரித்தொலித்தல், காய்ந்த கொன்றைக்காய் அரித்தொலித்தல். அரி + அகம் - அரியகம்.]

**அரியகம்**[2] *ariyagam*, பெ. (n.) *நோயை யுண்டாக்கும் பேய்*; a demon causing illness (சா.அக.).

**அரியகொள்கை** *ariya-kolgai*, பெ. (n.) *தவஞ் செய்வார்க்குரிய எண்வகை அரிய ஒழுக்கம்*; the eight-fold discipline of the ascetics who perform penance. "அரிய கொள்கையர்" (சீவக. 1423).

**தவத்தோர் எண்வகை யொழுக்கம் :**

**பலமுறை நீரில் மூழ்கல், நிலத்திற் கிடத்தல், தோலுடுத்தல், எரியோம்பல், ஊரடை**

**யாமை, சடைதாங்குதல், காட்டிலுண்டல், கடவுட் பூசை**; frequent immersion in cold water, lying or sleeping on bare ground, being clad in skins, to keep burning an undying fire, refrain from going home, wearing matted locks of hair, eating only the forest produce and worshipping God.

"நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇச்
சோர்சடை தாழச் சுடரோம்பி — யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி" (பு.வெ. 8 : 14).

**அரியசம்** *ariyašam*, பெ. (n.) **சரக்கொன்றை** (மலை.); Indian laburnum, *Cassia fistula*.

*[அரியகம் → அரியசம்.]*

**அரியசாரணம்** *ariya-šāraṇam*, பெ. (n.) **மாவிலிங்கம்**; lingam tree, *Crataeva religiosa*.

**அரியசாரணை**[1] *ariya-šāraṇai*, பெ. (n.) **மாவிலிங்கு** (மலை.); species of *Crataeva* (செ. அக.).

**அரியசாரணை**[2] *ariya-šāraṇai*, பெ. (n.) **சாரணைக்கொடி**; a creeper, *Trianthema monogyna* (சா.அக.).

**அரியண்டம்** *ariyaṇḍam*, பெ. (n.) அரிகண்டம்[2] பார்க்க; see *ari-kaṇḍam*[2].

**அரியணை** *ari-y-aṇai*, பெ. (n.) **அரியுருவந் தாங்கும் அரசிருக்கை**; throne with carvings of lion. "அரியணை யனுமன் றாங்க" (கம்பரா. யுத்த. திருமுடி. 38).

*[அரி = மடங்கல் (சிங்க) உருவம். அணை = இருக்கை.]*

**அரியணைச்செல்வன்** *ari-y-aṇai-c-celvaṉ*, பெ. (n.) அருகன் (பிங்.); Arhat, as seated on a throne.

*[அரியணை + செல்வன்.]*

**அரியணைச்செல்வி** *ariyaṇai-c-celvi*, பெ. (n.) **அரிதாரம்**; yellow orpiment (சா. அக.).

*[அரியணை + செல்வி.]*

**அரியபச்சை** *ariya-paccai*, பெ. (n.) **வங்காளப் பச்சை** (பரி.அக.); verdigris.

**அரியம்** *ariyam*, பெ. (n.) **இசைக்கருவி** (சிந்தா. நி.); musical instrument.

*[அரி = அரித்தொலிக்கும். இயம் = இசைக் கருவி. அரி + இயம் — அரியியம் → அரியம். இனி, அரிய + இயம் என்றுமாம்.]*

**அரியமான்** *ariyamāṉ*, பெ. (n.) **ஒரு பூண்டு**; the Asclepias plant (சா. அக.).

**அரியல்**[1] *ariyal*, பெ. (n.) 1. **அரிதல்** (சங்.அக.); cutting into small pieces 2. **நெற்றாளரிதல்**; reaping. 3. **அறுத்தல்**; cutting. 4. **துண்டித்தல்**; amputating (சா.அக.).

ம. அரியுக; க. அரி; தெ. அரவரலு.

*[அரி → அரியல்.]*

**அரியல்**[2] *ariyal*, பெ. (n.) 1. **அரித்தல்**; skimming. 2. **அரித்தெடுக்குங் கள்**; toddy, fermented liquor. "அரியலார்ந் தமர்த்தலின்" (சீவக. 1249).

*[அரி → அரியல்.]*

**அரியல்**[3] *ariyal*, பெ. (n.) **செடி** (நாமதீப.); shrub.

ம. அரியன்

**அரியலூர்த்தாட்டு** *ariyalūr-t-tāṭṭu*, பெ. (n.) **முதற்கண் அரியலூரிலிருந்து வந்த கச்சு (இரவிக்கை)த் துண்டுவகை** (இ.வ.); a cloth for bodice, as originally from *Ariyalūr* (Loc.).

**அரியளாமெனல்** *ariyaḷ-ām-eṉal*, பெ. (n.) (அகப்.) **தலைவியின் மனநிலை யறிதல் அருமையெனத் தோழி தலைமகற்குக் கூறும் அகப்பொருட்டுறை** (களவியற். 58); (Agap.) theme in which the maid informs the lover of her mistress, of her inability to ascertain the mind of her mistress.

*[அரு → அரியள் (பெ.பா.) + ஆம் (ஆகும்) + எனல் (என் + அல்).]*

**அரியன்**[1] *ariyaṉ*, பெ. (n.) **சிவபிரான்** (நாமதீப.); Šiva.

*[அர் → அரம் = சிவப்பு. அரம் → அரன் = சிவன். அர் → அரு → அரியன் = செவ்வண்ணன்.]*

**அரியன்**[2] *ariyaṉ*, பெ. (n.) 1. **அருமையானவன்**; a rare man, a beloved or endeared person. 2. **காண்டற்கு அல்லது முற்றும் அறிதற்கு இயலாதவன்**; one who is invisible or beyond comprehension. "மறைகடே டரியனாவோன்" (பாகவத. சிசுபால. 64). 3. **தலைவன்**; lord, master. 4. **மேலானவன்**,

சிறந்தவன்; noble, aristocrat. 5. பெருவணிகன்; merchant prince, commercial magnate.

**அரியாசம்** *ariyāšam*, பெ. (n.) **ஒரு நறுமணச் சரக்கு** (சிலப். 5 : 14, அரும்.); an aromatic, a fragrant substance.

**அரியாணம்** *ariyāṇam*, பெ. (n.) **பெருங்காசி அல்லது பெருஞ்சீரகம்;** Indian fennel, *Anethum foeniculam* (சா.அக.).

**அரியாயோகம்** *ariya-yōgam*, பெ. (n.) 1. அரைப்பட்டிகை; girdle. 2. மருந்து; medicine. 'அரியா யோகமும் — கருவி விலக்காகப் புனைந்த அரைப்பட்டிகையும், அரிதல் செய் யாத யோகம் என்க; வியாதிகளைக் கெடுக்கும் மருந்தென்றுமாம்' (சிலப். 14 : 170, உரை). 3. மருந்துக் கூட்டு; medicinal preparation, a mixture of medicine (சா.அக.).

**அரியாலுகம்** *ariyālugam*, பெ. (n.) **அரிபாலுகம்** பார்க்க; see *ari-pālugam*.

**அரியான்** *ariyāṉ*, பெ. (n.) **பொதுவாக அலவன் (ஆடி) மாதத்தில் விதைக்கப்படுவதும், நான்கு அல்லது ஆறு மாதத்தில் விளைவதுமான மட்ட நெல்வகை** (இ.வ.); a kind of inferior paddy, usually sown in July when water is likely to stagnate, maturing in four to six months (Loc.) (செ.அக.) — குறுவைநெல்; a kind of paddy ready for reaping, 60 days after sowing (சா.அக.).

**அரியின்திப்பிலி** *ariyiṉ-tippili*, பெ. (n.) **அரிசித் திப்பிலி**; long pepper, *Piper longum*.

[அரி + இன் (சாரியை) + திப்பிலி. அரி = அரிசி.]

**அரியியம்** *ari-y-iyam*, பெ. (n.) 1. **செம்பு** (பரி.அக.); copper. 2. **நெட்டிமுட்டி என்னுஞ் செடி**; the plant *neṭṭimuṭṭi*.

**அரியுண்மூலம்** *ari-y-uṇ-mūlam*, பெ. (n.) **கோரைக்கிழங்கு**; coray root, *Cyperus rotundus*.

அரிநுகர்மூலம் பார்க்க; see *ari-nugar-mūlam*.

[அரி = பன்றி. உண் = உண்கின்ற. மூலம் = கிழங்கு.]

**அரியுப்பு** *ari-y-uppu*, பெ.(n.) **கறியுப்பு** (வை.மூ.); common salt, Calcium chloride.

[அரி = வெள்ளை. அரியுப்பு = வெள்ளுப்பு. ஒ.நோ : "வெள்ளுப்புப் பகருநர்" (மணிமே. 28 : 31).]

**அரியெடுப்பு** *ari-y-eḍuppu*, பெ. (n.) **சிற்றூர் ஊழியக்காரருக்குக் களத்திற் கொடுக்கும் இருகை யளவுத் தவசம்**; double handful of grain, as much grain as can be held by both the hands, given as a perquisite from the threshing floor to village servants at the division of produce (R.F.).

[அரி = நெல், தவசம். எடுப்பு = எடுத்துக் கொள்கை.]

**அரியேறி** *ari-y-ēṟi*, பெ. (n.) **காளி** (திவா.); *Kāḷi* (Durga), as riding on a lion.

[அரி = மடங்கல் (சிங்கம்). ஏறி = ஏறிச் செல்பவள், ஊர்தியாகக் கொண்டவள். ஏறு + இ (வி.முத. ஈறு.) — ஏறி.]

**அரியேறு** *ari-y-ēṟu*, பெ. (n.) 1. **ஆண் அரிமா;** male lion. "வேழக் குழாமடு மரியேறு" (இரகு. தேனுவந். 37). 2. **ஆணரிமாப் போன்றவன்**; one who resembles a male lion in valour and strength. 3. **ஆணரிமா வடிவம் அல்லது உருவம்**; carved or sculptured form of a male lion. "அரியே றேந்து மாசனம்" (பாரத. கிருட். 74).

[அரி = பிற விலங்குகளையும் மாந்தரையும் கொன்றழிக்கும் விலங்கு. "ஏறும் ஏற்றையும் ...... யாத்த ஆண்பாற் பெயரென மொழிப" (தொல்.பொருள்.மர. 2).]

**அரியோகிதம்** *ari-y-ōgidam*, பெ. (n.) **நாகப்படக் கற்றாழை;** a thornless aloe resembling the hood of a cobra (சா.அக.).

[அரி = பாம்பு. ஓ → ஓவு → ஓவுதல் = ஒத்தல், பொருந்துதல், கூடுதல். ஓவு → ஓகு → ஓகிதம் = ஒத்தது. அரியோகிதம் = பாம்புப் படத்தை யொத்தது.]

**அரிராசி** *ari-rāši*, பெ. (n.) **களப்பொலியின் அடியில் மீந்துள்ளதைச் சிற்றூர் ஊழியர்க்குப் பகிர்ந்து கொடுக்கும் உரிமைப் பங்கு;** harvest perquisites of village servants distributed out of the grain left at the bottom of the heap.

[அரி (அறுவடை நெற்பொலி) + **Skt.** rāši (குவியல், பங்கு).]

**அரில்**[1] *aril*, பெ. (n.) 1. **பின்னல்**; braiding, plaiting, matting. "அரில்வலை யுணங்கு முன்றில் களும்" (திருக்காளத்.பு. 2 : 9). 2. **பாய், பாயல்** (அரு.நி.); mat, bed. 3. **குழல்** (அரு.நி.); women's tresses, lock of hair. 4. **பிணக்கம்**; interlacing, as of bamboo stalks growing

together. "மூதரி னிவந்த முதுகழை யாரிடை" (பு.வெ. 10 : 2). 5. மூங்கில் (மலை.); bamboo, *Bambusa arundinacea*. 6. சிறு புதர்; thicket, dense bush. "முளியரில் பொத்திய முழங் கழல்" (கலித். 13 : 20). 7. சிறுகாடு; low jungle of short trees. "பின்னி யன்ன பிணங்கரி னுழைதொறும்" (மலைபடு. 379). 8. மாறு பாடு, திரிபு; disagreement, confusion, contrariety, perversity. "அரிறப வுணர்ந்தோர்" (தொல். பொருள். புறத். 1). 9. குற்றம் (திவா.); fault, defect, blemish.

[அல்லுதல் = பொருந்துதல். அல் → அர் → அரு → அருகு. அருகுதல் = கிட்டுதல், நெருங்கு தல். அரு → அரில் = நெருக்கம், பிணக்கம், அடர்த்தி.]

**அரில்**[2] *aril*, பெ. (n.) குரல் (பொதி.நி.); voice.

[அரித்தல் = ஒலித்தல். அரி → அரில்.]

**அரில்**[3] *aril*, பெ. (n.) 1. பரல் (பொதி.நி.); small, sharp pebble, gravel. 2. (பரல்போன்ற கொட்டையுடைய) பலா (அரு.நி.); jack-tree.

[அரி = சிறியது. அரி → அரில்.]

**அரில்**[4] *aril*, பெ. (n.) சினம் (நாமதீப.); anger.

[அரி = நெருப்பு, நெருப்புப் போன்ற சினம். அரி → அரில்.]

**அரிவரி** *ari-vari*, பெ. (n.) அரிச்சுவடி பார்க்க; see *ari-c-cuvaḍi*.

**அரிவாகை** *ari-vāgai*, பெ. (n.) பன்றிவாகை; bastard rose wood, *Dalbergia paniculata*.

**அரிவாட்கட்டுக்கதிர்** *arivāṭ-kaṭṭu-k-kadir*, பெ. (n.) அரிவாள்களைக் கட்டி வைப்பதற் கென்று அறுவடை செய்வோர்க்கு உரிமையாக அளிக்குங் கதிர்க்கட்டு (இ.வ.); a perquisite consisting of sheaves of corn, given to harvesters for packing the scythes after harvest (Loc.).

[அரிவாள் + கட்டு + கதிர்.]

**அரிவாட்கள்ளன்** *arivāṭ-kaḷḷaṉ*, பெ. (n.) அடிக் கடி அரிவாள் பிடித்தலால் உள்ளங்கையில் உண்டாகும் வீக்கம்; horny swelling on the palm of the hand caused by frequent handling of the sickle.

[அரிவாள் = அரியும் அல்லது அறுக்கும் கத்தி அல்லது அலகு. கள் → கள்ளம் → கள்ளன் = மறைவாகத் தோன்றுவது. ஒ.நோ: குதிக் கள்ளன்.]

மறுவ. அரிவிக்கள்ளன்

**அரிவாட்சொண்டன்** *arivāṭ-coṇḍaṉ*, பெ. (n.) கடலில் திரியும் ஒருவகைக் கொக்கு (யாழ்ப்.); a sea-bird of the heron species, having beak like a sickle (J.).

[அரிவாள் + சொண்டன்.]

**அரிவாட்டாய நாயனார்** *arivāṭṭāya-nāyaṉār*, பெ. (n.) சிவனடியார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); name of a canonized Šaiva saint, one of 63.

[அரிவாள் + தாயன் + நாயனார்.]

தாயன் என்பது இயற்பெயர். நாயனார் என்பது சிவபத்தியாற் பெற்ற பெயர். 'அரி வாள்' என்பது கீழே சிந்திய செந்நெல்லரிசி யையும் செங்கீரையையும் மாவடுவையும் கடவுள் திருவமுது செய்தருளும் பேறு பெற்றே னில்லையே என்று, அரிவாளினாலே தம் ஊட்டியை அரிந்ததனால் அவர் பெற்ற அடைமொழி.

"நல்லசெங் கீரை தூய மாவடு அரிசி சிந்த
அல்லல்தீர்த் தாள வல்லார் அமுதுசெய்
தருளும் அப்பே(று)
எல்லையில் தீமை யேனிங் கெய்திடப்
பெற்றி லேனென்(று)
ஒல்லையில் அரிவாள் பூட்டி ஊட்டியை
அரிய லுற்றார்"
(பெரியபு. 13 : 16).

**அரிவாட்பதக்கு** *arivāṭ-padakku*, பெ. (n.) ஒரு பழைய வரி; an ancient tax (Pudu.Insc.38).

[அரிவாள் + பதக்கு. அரிவாள் வேலை செய்பவரிடம் வாங்கிய ஆட்டை வரியா யிருக் கலாம். பதக்கு = பத்து நாழி.]

**அரிவாட்பெட்டி** *arivāṭ-peṭṭi*, பெ. (n.) பனை யேறிகள் அறுவாளை உள்ளிட்டுத் தம் இடுப் பிற் கட்டிக்கொள்ளும் சிறு பனைநார்க்கூடை; basket of palm-fibre, fastened to the waist of climbers of palm trees, intended for holding their knives.

ம. அருவாப்பெட்டி

[அறுவாள் + பெட்டி – அறுவாட்பெட்டி → அரிவாட்பெட்டி. அறுவாட்பெட்டி என்பதே சரியான பெயர்.]

அறுவாள் பார்க்க; see *aṟuvāḷ*.

**அரிவாண்மணை** *ari-vāṇ-maṇai*, பெ. (n.) **காய் கறிகளைப் பெரும்பாலுஞ் சிறுசிறு துண்டு களாக அறுக்க உதவும் கருவி** (பிங்.); a knife-blade fastened to a block of wood for slicing vegetables and meat.



அரிவாண்மணை

ம. அருமாமண

*[அரிவாள் + மணை. அரிவாள் = சிறு துண்டுகளாக நறுக்கும் கத்தி. மணை = பலகை.]*

**அரிவாண்முகம்** *arivāṇ-mugam*, பெ. (n.) **காயப் பூடு;** wound plant, *Sida acuta* (சா. அக.).

**அரிவாண்மூக்கன்**[1] பார்க்க; see *arivāṇ-mūkkaṉ*[1].

*[அரிவாள் + முகம். இது படைக்கலத்தினா லுண்டான காயத்தை ஆற்றுந் தன்மையது.]*

**அரிவாண்முனைப்பூண்டு** *ari-vāṇ-muṉai-p-pūṇḍu*, பெ. (n.) **அரிவாள் முனைபோன்ற இலையுள்ள ஒருவகைச் செடி;** sickle-leaf, m. sh., *Sida carpinifolia* (I. P.).

*[அரிவாள் + முனை + பூண்டு. காய்கறி யறுக்கும் அரிவாள் முனைபோன்ற வடிவும் ஓரமெல்லாம் அரம்பப்பல்போன்ற முனைகளும் கொண்ட இலையுடைமையால், அரிவாண் முனைப்பூண்டு எனப்பட்டது. இதை அரிவாண் மணைப்பூண்டு என்பது தவறு. மணையென்பது அரிவாள் பதித்த பலகை அல்லது கட்டை. அது அரிவாள் பதித்த தலைப்பக்கம் குவிந்திருப் பினும், பெரும்பாலும் நீண்ட கனசதுரம்; ஆதலால் இலைக்கோ பூண்டிற்கோ உவமை யாகாது.]*

**அரிவாண்மூக்கன்**[1] *arivāṇ-mūkkaṉ*, பெ. (n.) 1. **அரிவாண்முனைப்பூண்டு** (M. M.); sickle-leaf, having serrated leaves (செ. அக.) — **காயப்பூடு**; sickle-leaved plant or wound plant, *Sida acuta* (சா. அக.).

*[அரிவாள் + மூக்கன். காய்கறி யறுக்கும் அரிவாளின் முனைபோன்ற இலையுடைய செடி.]*

**அரிவாண்மூக்கன்**[2] *arivāṇ-mūkkaṉ*, பெ. (n.) **அரிவாட்சொண்டன்** (யாழ்ப்.); a sea-bird of the heron species having beak like a sickle (J.).



அரிவாண்மூக்கன்

ம. அருவாள்மூக்கன்

*[கதிரறுக்கும் பன்னறுவாள் போன்ற அலகுடைய பறவை. மூக்கு = பறவையலகு.]*

**அரிவாண்மூக்கு** *arivāṇ-mūkku*, பெ. (n.) **அரிவாண்மூக்கன்**[1] பார்க்க; see *arivāṇ-mūkkaṉ*[1].

**அரிவாண்மூக்குக்கீரை** *arivāṇ-mūkku-k-kīrai*, பெ. (n.) **அரிவாண்முனைப்பூண்டு** (இ.வ.); sickle-leaf (Loc.).

*[அரிவாள் + மூக்கு + கீரை. காய்கறி யறுக்கும் அரிவாளின் முனைபோன்ற இலை, அதையுடைய செடி. மூக்கு = முனை. இலையைக் கீரையென்பது மரபு. 'கீரை' என்பது செடியைக் குறிப்பின் சினையாகு பெயர்.]*

**அரிவாண்மூக்குப்பச்சிலை** *arivāṇ-mūkku-p-paccilai*, பெ. (n.) **அரிவாண்மூக்கன்**[1] பார்க்க; see *arivāṇ-mūkkaṉ*[1].

*[அரிவாள் + மூக்கு + பச்சிலை.]*

**அரிவாணம்**[1] *arivāṇam*, பெ. (n.) **செப்புத் தட்டு அல்லது தாம்பாளம்;** copper tray, platter. 'அரிவாணம் பன்னிரண்டுக்கு' (S.I.I. vii, 22).

க. அரிவாண; தெ. அரிவாணமு; து. அரி வாணொ.

*[ஒருகா. அரி = செம்பு. பாளம் → வாளம் → வாணம் = பலகை, தட்டு.]*

**அரிவாணம்**[2] *ari-vāṇam*, பெ. (n.) **பாக்குஞ் சுண்ணாம்புங் கலந்த கலவை** (இ.வ.); mixture of areca-nut and lime (Loc.).

க. அரிவாண

*[ஒருகா. அரி + வண்ணம் — அரிவண்ணம் → அரிவணம் → அரிவாணம். அரி = சிவப்பு.]*

அரி[9] பார்க்க; see *ari*[9].

**அரிவாலுகம்** *arivālugam*, பெ. (n.) 1. **முசு முசுக்கை;** rough bryonia, *Bryonia scabra*. 2. **ஏலா வாலுகம், பேரேலம்;** greater cardamom (சா. அக.).

**அரிவாள்** *ari-vāḷ*, பெ. (n.) 1. **காய்கறிகளை அரியும்படி மணையிற் பதிக்கப்படும் அலகு;** a knife-blade fastened to a block of wood for slicing vegetables and meat. 2. **நெல், தினை முதலியவற்றின் தாளை யரியுங் கூனிரும்பு அல்லது பன்னறுவாள்;** sickle, garden-knife. 3. **செடி புதர்களைமட்டமாகக் கத்தரிக்குங் கத்தி;** bill-hook, scissors-like implement for pruning hedges. 4. **மரத்தை யறுக்கும் ஈர்**

வாள் அல்லது அரம்பம்; saw. ''அறுதி மரத்துக் கீரரிவாள்'' (ஞானவா.புசுண். 75).

ம., க. அரிவாள்.

[அரிதல் = சிறிது சிறிதாக அறுத்தல். வள் → வாள் = வளைந்த கத்தி.]

**அரிவி** *arivi*, பெ. (n.) 1. **கதிர்ப்பிடி** (யாழ்ப்.); reaped corn, handful of reaped grain (J.). 2. **நெல் முதலியவற்றின் தாள்** (சங்.அக.); stubble of paddy plant.

[அரி + வி. அரிதல் = நெல் முதலியவற்றின் தாளறுத்தல். 'வி' செயப்படுபொருள் ஈறு.]

**அரிவிக்கள்ளன்** *arivi-k-kaḷḷaṉ*, பெ. (n.) **அரிவாட்கள்ளன்** பார்க்க; see *arivāṭ-kaḷḷaṉ*.

[அரிவி + கள்ளன்.]

**அரிவிடந்தீண்டி** *ari-viḍan-tīṇḍi*, பெ. (n.) **செய்யான், செம்பூரான்**; a venomous centipede (சா.அக.).

[அரி + விடம் + தீண்டி. அரி = தோலையரிக்கும் (?). **Skt.** viṣa > **த.** விடம். தீண்டுதல் = கடித்தல். தீண்டு + இ (வி.முத. ஈறு) – தீண்டி.]

**அரிவிமயிர்** *arivi-mayir*, பெ. (n.) **போர்மறவர் வேல்நுனியில் அணியும் பறவை மயிர்**; plumes, of certain birds that frequent rivers in Ceylon, with which soldiers adorn the tops of their lances or spears (W.).

[அரிவி + மயிர். **ஒருகா.** அரிதாட் கதிர் போல் வேல்நுனியில் தோன்றும் தூவி அல்லது இறகுகற்றை.]

**அரிவியரிவாள்** *arivi-y-arivāḷ*, பெ. (n.) **கதிரறுக்குங் கருக்கரிவாள்**; sickle, reaping hook (W.).

[அரிவி + அரிவாள். அரிவி = தாளறுத்தல், நெற்றாள். அரிவாள் = பன்னறுவாள்.]

**அரிவிவெட்டு-தல்** *arivi-veṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **கதிரறுத்தல்** (யாழ்ப்.); to reap corn (J.).

[அரிவி + வெட்டு. அரிவி = கதிரொடு கூடிய தாள்.]

**அரிவீகம்** *arivigam*, பெ. (n.) **நெடுநாரை**; fragrant cherry, nutmeg, *Polyalthia fragrans* (சா.அக.).

**அரிவை** *arivai*, பெ. (n.) 1. **இருபது முதல் இருபத்தைந்து அகவைக்குட்பட்ட பெண்** (பிங்.); woman in the age group of 20 to 25. 2. **அழகிய பெண்** (சங்.அக.); beautiful woman. 3. **பெண்**; maiden or woman. ''அம்மா வரிவை முயக்கு'' (குறள், 1107).

ம. அருவ, அரிவ.

[அரி = அழகு. அரி → அரிவை = அழகிய பெண் அல்லது அழகு சிறந்து தோன்றும் பெண் பருவம்.]

அரிவைப் பருவ மேலெல்லை 24 அகவை யென்பது **பொய்கையார்** கூற்று.

''அரிவைக் கியாண்டே அறுநான் கென்ப''
— பொய்கையார்.

பிங்கலமும் பிற பாட்டியல்களும் 25 என்றே கூறுகின்றன.

''அரிவை......ஆண்டு......ஐயைந்து''
(பிங். 5 : 216).

''பகருங்கா லைந்தேழ் பதினொன்று
பன்மூன்
றகலாத பத்தொன்பா னையைந்—திகலாத
முப்பத்தொன் றீரிருபான் பேதை
முதலோர்க்குச்
செப்புவராண் டெல்லைத் திறம்''
(வெண்பாப். செய். 26).

''பேதைமுத லெழுவோர்க்குப் பிராயங்கள்
பேசிடுங்கால்
ஆதியி லைந்தேழ் பதினொன்று பன்மூன்று
பத்தொன்பதே
மீதிரு பத்தைந்து......................''
(நவநீதப். 46).

''ஐயைந் தழகரிவை'' (சிதம்பரப். 37).

''பதினான் காதிபத் தொன்பான் காறு
மெதிர்தரு மடந்தைமே லாறு மரிவை''
(இலக். வி. 862).

**அரிவைப்பு** *ari-vaippu*, பெ. (n.) **சமையல்** (நாஞ்.); cooking (Nāñ.).

ம. அரிவெப்பு

[அரி = சோறு. வைப்பு = சமைப்பு.]

**அரிள்** *ariḷ*, பெ. (n.) **அச்சம்** (சங்.அக.); fear.

க. அரள்

[அரள் → அரிள்.]

**அரினி(க்)கோழி** *ariṉi-(k)-kōḻi*, பெ. (n.) 1. **தூவு கருத்த கோழி**; black fowl. 2. **தோல் கருத்த கோழி**; fowl with dark skin.



அரசு



அரணிச்சுறா



அரிசிச்சோளம்



அரிஞ்சான்



அரிவாட்பெட்டி

**அரு**[1] *aru*, கு.பெ.எ. (adj.) 1. *கிடைத்தற்கரிய, விலையுயர்ந்த*; rare, precious. 2. *அருமையான*; dear, beloved. 3. *செய்தற்கியலாத*; impossible.

ம. அரு

*[அல் → அல்கு. அல்குதல் = சுருங்குதல், குறைதல், சிறுத்தல். அல்லுஞ் சில்லுமாய் = சிறிது சிறிதாய். அல் → அர் → அரு → அருகு. அருகுதல் = குறைதல், கிடைத்தற் கரிதாதல், அருமையாதல்.]*

**அரு**[2] *aru*, பெ. (n.) *அட்டை*; leech. "இருநிலந் தீண்டா வருநிலை" (தொல். பொருள். புறத். 16).

**அருக்கம்**[1] *arukkam*, பெ. (n.) 1. *சுருக்கம்*; contraction, smallness, brevity, minuteness. "அருக்கமாய்ப் பெருக்க மாகி" (தேவா. 4.32 : 7). 2. *சுக்கு* (T.C.M. ii, 2 : 429); dried ginger.

து., துட. அர்க்; கோத. அர்க்; பட. அருக்கு.

*[அருகுதல் = குறைதல், சுருங்குதல், சிறுத்தல், நுண்ணியதாதல், காய்ந்து சிறுத்தல். அருகு → அருக்கு → அருக்கம் (தொ.பெ.). 'அம்' தொ. பெ. ஈறு.]*

**அருக்கம்**[2] *arukkam*, பெ. (n.) *செம்பு* (நாநார்த்த.); copper.

*[அர் → அரம் = சிவப்பு. அர் → அரக்கு = சிவப்பு. அரக்கு → அருக்கு → அருக்கம் = செம்மாழை.]*

**அருக்கமலை** *arukka-malai*, பெ. (n.) *திருவண்ணாமலைக்குக் கிழக்கேயுள்ள மலை*; a hill to the east of *Tiruvaṇṇāmalai*.

**அருக்கல்**[1] *arukkal*, தொ.பெ. (vbl.n.) 1. *குறைத்தல், சுருக்கல்*; to reduce in quantity. 2. *சுண்டக் காய்ச்சுதல்*; to boil down to a thick liquid (சா.அக.). 3. *அருமைப்படுத்துதல்*; to endear.

ம. அருக்குக; து. அர்க்குனி; பட. அருக்கு.

*[அரு → அருகு → அருக்கு → அருக்கல். 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அருக்கல்**[2] *arukkal*, பெ. (n.) *அச்சம்*; fear.

*[அருக்கு → அருக்கல்.]*

**அருக்களி-த்தல்** *arukkaḷi-*, 4 செ.கு.வி. (v.i,) *அஞ்சுதல்* (வின்.); to be frightened. —, 2 செ.குன்றாவி. (v.t.) *அருவருத்தல்*; to loathe, abominate.

*[அருக்குதல் = அஞ்சுதல். அருக்கு = அச்சம். அருக்கு → அருக்களி.]*

**அருக்களிப்பு** *arukkaḷippu*, தொ.பெ. (vbl.n.) *அருவருப்பு* (இ.வ.); loathing, abomination, repugnance, dislike (Loc.).

*[அருக்களி → அருக்களிப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அருக்கன்** *arukkaṉ*, பெ. (n.) *சுக்கு*; dried ginger (சா.அக.).

*[அருக்கம் = சுக்கு. அருக்கம் → அருக்கன்.]*

**அருக்கன்கொம்பு** *arukkaṉ-kombu*, பெ. (n.) *சுக்கு*; dried ginger (சா.அக.).

*[அருக்கன் = சுக்கு. கொம்பு = கொம்புபோற் கிளைத்திருப்பது.]*

மறுவ. அருக்கம், அருக்கன்.

இஞ்சியைக் குறிக்கும் 'சிருங்கவேர' என்னும் வடசொற்கு, மான்கொம்பு போன்றது என்று பொருள் கூறுவது இங்குக் கவனிக்கத் தக்கது.

**அருக்காணி** *arukkāṇi*, பெ. (n.) 1. *அருமை*; rareness, preciousness, endearment. அஞ்சு பேருக்கு அருக்காணித் தங்கை. 2. *அழுத்தம்*; reluctance to accommodate, closeness in a bargain (W.).

ம. அரு

*[அருக்கு = அருமை. 'ஆணி' ஒரு பின்னொட்டு (suff.). ஒ.நோ : உச்சாணி, சிரிப்பாணி, விசுக் காணி.]*

**அருக்கு**[1]**-தல்** *arukku-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *அஞ்சுதல்*; to be afraid, terrified. "பலவிலங் கிற் கருக்கி" (உபதேசகா. சிவவிரத. 66). 2. *மனமின்மை காட்டுதல், செய்யப் பின்வாங்குதல்*; to show disinclination in a bargain. "அம்புவி தனிற்பொன் னுள்ளோ னுலோ வியா யருக்கி னானேல்" (மச்சபு. சங்கிரா. 11).

*[உரு = அச்சம். உரு → அரு → அருகு → அருக்கு. அருக்குதல் = அஞ்சுதல். அருக்கு = அச்சம்.]*

**அருக்கு**[2]**-தல்** *arukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *அருமை பாராட்டுதல்*; to cherish, value, regard as precious. "நம்மை அருக்கினான் போ

னோக்கி" (கலித். 104 : 69-70). 2. **சுருக்குதல், குறைத்தல்**; to reduce in quantity, make scarce. "மழையருக்குங் கோள்" (திரிகடு. 50). 3. **காய்ச்சுதல், காய்ச்சி யளவு குறைத்தல்**; to boil. "நீரருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி" (பதார்த்த. 1520). 4. **சுண்டக் காய்ச்சுதல்**; to boil down to a thick liquid. 5. **விலக்குதல்**; to stop, put a stop to. "அருக்குக யார் மாட்டு முண்டி" (நான்மணிக். 88). 6. **அழித்தல்**; to destroy. "அரிமுதலோ ருயிரருக்கி" (உபதேசகா. சிவத்து. 422).

ம. அருக்குக; க., தெ. அருகு.

[அர் → அரி. அரிதல் = சிறிதா யறுத்தல். அரி = சிறியது. அர் → அரு → அருகு. அருகுதல் = குறைதல், சிறுத்தல், அருமையாதல். அருகு (த.வி.) → அருக்கு (பி.வி.).]

**அருக்கு**[3]**-தல்** *arukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அணைத்தல், சாரச்செய்தல்**; to embrace. "அருக்கு மங்கையர் மலரடி" (திருப்பு. 12).

[அல்லுதல் = பொருந்துதல். அல் → அர் → அரு → அருகு. அருகுதல் = கிட்டுதல், நெருங்குதல், அணைதல். அருகு (த.வி.) → அருக்கு (பி.வி.).]

**அருக்கு**[1] *arukku*, பெ. (n.) 1. **அருமை**; scarceness, rarity. "நிதியி னருக்கு முன்னி" (திருக்கோ. 275). 2. **பெரிதும் அன்புசெய்யப்படுகை**; the state of being dearly loved.

[அருகுதல் = குறைதல். அருகு → அருக்கு = குறைவு, அருமை.]

**அருக்கு**[2] *arukku*, பெ. (n.) **அச்சம்**; fear.

[உரு (அச்சம்) → அரு → அருகு → அருக்கு.]

**அருக்குகொல்லை** *arukku-kollai*, பெ. (n.) **ஆற்றோரத்து நிலம்**; land adjoining a riverbed. 'ஆற்றுப் பெருக்கிலே அருக்குகொல்லைக ளுடைந்தால் நோக்குகிறவர்கள் கைவிட்டுக் கடக்கநின்று கூப்பிடுமாபோலே' (திவ். திருமாலை. 19, வியா.).

[அருகு = அண்மை. அருகு → அருக்கு + கொல்லை.]

**அருகசனி** *arugašani*, பெ. (n.) **பேரேலம்** (மலை.); greater cardamom, *Amomum subulatum* alias *Elettaria cardamum* (சா.அக.).

**அருகஞ்சி** *aruganji*, பெ. (n.) **சீந்தில்** (மலை.); gulancha (செ.அக.) — **சீந்திற்கொடி**; moon-creeper, bile killer, *Tinosphora cordifolia* or *Menispermum cordifolium* (சா.அக.).

மறுவ. அருகம்

**அருகண்மை** *aruganmai*, பெ. (n.) **மிக நெருங்கிய அண்மை**; close proximity. ஊர் தொலைவிலில்லை; அருகண்மையில்தா னிருக்கிறது (உ.வ.).

[அருகு (பெ. அல்லது கு.பெ.எ.) = நெருங்கிய பக்கம், நெருங்கிய பக்கமான (அருகிய). அண்மை = நெருங்கிய பக்கம். அருகண்மை = மிக நெருங்கிய பக்கம் (மீமிசைச்சொல்).]

அருகண்மை → அருகாண்மை (வழுச்சொல்) → அருகாமை (வழுச்சொல்).

**அருகணம்** *aruganam*, பெ. (n.) **பச்சைமிளகாய்** green chilly, *Capsicum frutescens* (சா. அக.).

**அருகணி** *arugani*, பெ. (n.) **பிரண்டை** (மலை.); square-stalked vine (செ.அக.) — **நான்முகப் பிரண்டை**; square-stalked vine, *Vitis quadrangularis* alias *Cissus quadrangulus* (சா.அக.).

**அருகணை** *aruganai*, பெ. (n.) **நுழைவாயிலின் பக்கம்**; side of a wicket-gate. "கோபுரத்தில் சேதமான முகவணை அருகணை" (கோயிலொ. 138).

[அருகு = பக்கம். அணை = சார்பு.]

**அருகணோதை** *aruganōdai*, பெ. (n.) **பச்சை வாழை**; green plantain, dwarf banana or Chinese banana, *Musa chinensis* (சா.அக.).

**அருகதிகம்** *arugadigam*, பெ. (n.) **வண்டல் மண்** (புதுவை); alluvium (Poṇḍ.).

[ஒருகா. அரு + வதிகம். வதி = சேறு.]

**அருகபம்** *arugabam*, பெ. (n.) **குல (சாதி) முத்து**; solid or genuine pearl (சா.அக.).

**அருகம்**[1] *arugam*, பெ. (n.) **அண்மை**; nearness, neighbourhood (சங்.அக.).

**அருகம்**[2] *arugam*, பெ. (n.) 1. **அகில்**; eaglewood. 2. **சீந்தில்** (பரி அக.); gulancha.

ஒ.நோ: அருகஞ்சி

**அருகர்**[1] *arugar*, பெ. (n.) 1. **அண்மை**; nearness. "துறக்கநா டருகர்க் கண்டான்" (கம்பரா. சுந்தர. கடல்தாவு. 1). 2. **அண்மையிலுள்ளவர், அண்மை நண்பர்**; some one in close proximity.

[அருகு + அர். 'அர்' — 1. குற்றியலுகர வீற்றுச் சொல்லீறு. 2. ப.பா. ஈறு.]

**அருகர்**[2] *arugar*, பெ. (n.) **நிலையாமை** (பொதி. நி.); instability, impermanence.

[ஒருகா. அருகுதல் = குறைதல். அருகர் = காலங் குறைந்த நிலை.]

**அருகல்**[1] *arugal*, பெ. (n.) **அண்மை**; nearness. "அவனென் னருக லிலானே" (திவ். திருவாய். 1.9 : 2.). —, தொ. பெ. (vbl.n.) 1. **கிட்டுதல்**; approach. 2. **அணைதல்**; embrace.

[அருகு → அருகல்.]

**அருகல்**[2] *arugal*, தொ.பெ. (vbl.n.) 1. **குறைதல், சுருங்கல்**; decrease, diminution, dwindling, shrinkage, deficiency. "அருகலிலாய பெருஞ்சீ ரமரர்கள்" (திவ்.திருவாய். 1.9 : 3). 2. **சிந்துதல், ஒழுகுதல்**; spilling, leakage. நீரருகிப் பாய்தல் (சங்.அக.). 3. **அருமை** (யாழ்ப்.); rareness. 4. **கண்ணிடுக்குதல்** (சீவக. 3124, உரை); twitching the eye. 5. **உடம்பை வருத்தியொடுக்குதல்**; mortification of body. "வினை கண் மாற்றிட வருகலும்" (கந்தபு.பாயிரப், 26) (சங்.அக.). 6. **சாதல்**; dying, death.

[அருகு → அருகல்.]

**அருகன்** *arugaṉ*, பெ. (n.) **தோழன்** (பிங்.); associate, companion, friend.

[அருகு = அண்மை, பக்கம். அருகன் = உடனிருப்பவன், கூட்டாளி.]

**அருகாண்மை** *arugāṇmai*, பெ. (n.) **அருகண்மை** பார்க்க; see *aruganmai*.

**அருகால்** *arugāl*, பெ. (n.) **கதவுநிலை** (இ.வ.); door frame (Loc.).

[அருகுகால் → அருகால்.]

**அருகுகால்** பார்க்க; see *arugu-kāl*.

**அருகாழி**[1] *arugāḻi*, பெ.(n.) **கால்விரல் மோதிரம்** (குருபரம். 117); ring worn on the toe.

**ஒ.நோ :** அறுகாழி

[ஒருகா. அறுகாழி → அருகாழி. அறுகு = யாளி. ஆழி = மோதிரம். அறுகாழி = யாளி வடிவு பொறித்த மிஞ்சி.]

**அருகாழி**[2] *arugāḻi*, பெ. (n.) **மோதிரவகை** (திவ். பெரியாழ். 1.6 : 3, வியா.); a kind of ring (செ.அக.).

**அருகி** *arugi*, பெ. (n.) **கள்** (வை.மூ.); toddy.

**ஒ.நோ :** அருத்தி = கள்.

[ஆர்தல் = உண்ணுதல், பருகுதல். ஆர் → அரு → அருந்து. அரு → அருகு → அருகி. 'இ' செயப்படுபொருளீறு. அருந்துதல் = உண்ணுதல், பருகுதல்.]

**அருகித்தோன்று-தல்** *arugi-t-tōṉṟu-*, 5 செ.கு.வி. (v. i.) 1. **அரிதாகத் தோன்றுதல்**; to appear rarely. 'விண்ணிலங் கருகித்தோன்று மேதகு வடமீ னன்றி" (பாரத. சூது. 201). 2. **சுருங்கித் தோன்றுதல்**; to appear diminished in size or quantity. 'அம்மலை முடிமே லேறிநின்று மீண்டு பார்க்குமிடத்து, முன்னிருந்த மாநிலமும் பின் வந்த மலையிடமுந் தானின்ற விடத்திற்குக் கீழ்ப்பட் டருகித் தோற்றுமா போலும்' (ஒழிவி. பொது. 43, உரை).

[அருகி + தோன்று.]

**அருகியரத்தம்** *arugiyarattam*, பெ. (n.) **பூனைக்காலி** (மலை.); cowhage (செ.அக.) — cat bean, cowitch plant, *Mucana pruriens* alias *Dolichos pruriens* (சா.அக.).

**அருகியல்** *arugiyal*, பெ. (n.) (இசை) **தாற்பெரும் பண்வகை**; (Mus.) a class of primary melody-types, one of four *perumpaṇ*.

"தென்னுறு பாலை குறிஞ்சியே மருதஞ்
செவ்வழி யென்னுநா னிலத்திற்
பின்னகம் புறமே யருகியன் மற்றைப்
பெருகிய லுறழ"
(கந்தபு. அசுர. சூரனர. 23.)

[அருகு → அருகியல்.]

**அருகியவழக்கு** *arugiya-vaḻakku*, பெ. (n.) **குறைந்த சொல்லாட்சி**; very rare, nearly obsolete usage.

[அருகுதல் = குறைதல். அருகு → அருகிய (பெ.எ.). வழங்குதல் = ஆளப்படுதல், பயன்படுத்தப்பெறுதல். வழங்கு → வழக்கு (தொ.பெ.).]

**அருகியற்குறிஞ்சி** *arugiyaṟ-kuṟiñji*, பெ. (n.) (இசை) **ஒரு குறிஞ்சிப் பண்வகை**; (Mus.) a variety of *kuṟiñji* melody-type (கந்தபு. அசுர. சூரனர. 23).

[அருகியல் + குறிஞ்சி.]

**அருகியற்செவ்வழி** *arugiyaṟ-cevvaḻi*, பெ. (n.) (இசை). **ஒரு செவ்வழிப் பண்வகை**; (Mus.) a variety of *śevvaḻi* melody-type (கந்தபு. அசுர. சூரனர. 23).

[அருகியல் + செவ்வழி.]

**அருகியற்பாலை** *arugiyar-pālai*, பெ. (n.) (இசை) **ஒரு பாலைப் பண்வகை;** (Mus.) a variety of *pālai* melody-type.

[அருகியல் + பாலை.]

**அருகியன்மருதம்** *arugiyan-marudam*, பெ. (n.) (இசை) **பண்வகை** (சிலப்.8 : 40); (Mus.) a primary melody-type.

[அருகியல் + மருதம்.]

**அருகிராவி** *arugirāvi*, பெ. (n.) **நெல்வகை** (Nels.); a kind of paddy.

**ஒ.நோ :** அரிக்கிராவி

**அருகு[1]-தல்** *arugu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **குறைதல்**; to diminish, to be reduced, to become scarce. ''ஒன்னார் மதிநிலை யருக'' (இரகு. யாக. 34). 2. **அரிதாதல்**; to happen rarely, to be of uncommon occurence. ''அருகுவித் தொருவரை யகற்றலின்'' (கலித். 142 : 2). 3. **மனமொடுங்குதல், அஞ்சுதல்**; to be afraid, to fear. ''அஞ்செஞ் சாய லருகா நணுகும்'' (சிலப். 30 : 126). 4. **நோவுண்டா தல்** (வின்.); to smart, prick, pain. **ஒ.நோ:** அருவு. 5. **கெடுதல், சாதல்;** to be ruined, to perish, die.

ம. அருகுக; க., பட. அருகு; தெ. உருகு; து. அரு.

[அல் = சிறு துண்டு. அல்குதல் = சுருங்குதல், குறைதல். அல் → அர் → அரு → அருகு.]

**அருகு -தல்** *arugu-*, செ.கு.வி. (v.i.) **பெருகு தல்**; to increase. ''அருகு நேமிபா தாளம்'' (தக்கயாகப். 104). —, 5 செ. குன்றாவி. (v.t.) 1. **கிட்டுதல்** (சூடா.); to approach. 2. **அறி தல்** (இறை. 11, உரை); to know. தெ. எருகு. 3. **குறிப்பித்தல்** (இறை. 11, உரை); to indicate one's intention.

[அல்லுதல் = பொருந்துதல், பொருத்துதல் (முடைதல், பின்னுதல்), மிகுதல், பெருத்தல். அல் → அர் → அரு → அருகு.]

**அருகு[1]** *arugu*, பெ. (n.) 1. **அண்மை**; nearness, contiguity, neighbourhood. ''சுயோதன னுக் கருகா சனத்தர்'' (பாரத. திரௌ. 36). 2. **ஓரம்;** border, edge, vicinity. ''மொய்ம் மலரைத் தும்பி யருகுடைக்கும் நன்னாட் டரசு'' (நள. கலிநீங். 21). 3. **பக்கம்**; side. 'அவ்வருகு கடத்தும் ஓடம்' (ஈடு). 4. **இடம்** (பிங்.); place.

ம. அருவு, அரிதெ; க. அருகு; து. அரு; தெ. இருகு; மா. அர்கே.

[அல்லுதல் = பொருந்துதல், நெருங்குதல். அல் → அர் → அரு → அருவு → அருகு.]

**அருகு[2]** *arugu*, பெ. (n.) (இசை) **நாற்பகுப்புள் ஒன்றான அருகியல் என்னும் பண்வேறுபாடு, பெருகு என்பதற்கு எதிர்;** (Mus.) one of the four modes of primary melody-types, opp. to *perugu*.

''சால்புறு மகம்பு றத்தோ டருகொடு
பெருகுஞ் சாரல்
நூ லுணர்ந் துறழி னூற்று மூன்றதா
நுவலும் பண்ணே''
(கூர்மபு. கண்ணன் மண. 158).

[அல் → அல்கு. அல்குதல் = சுருங்குதல், குறைதல். அல் → அர் → அரு → அருகு. பெருகு என்னும் எதிர்ச்சொல்லை இதனொடு ஒப்பு நோக்குக.]

**அருகு[3]** *arugu*, பெ. (n.) **பண்டைநாளில் ஒரு பெருமகன்முன் பிடித்துச் செல்லும் மதிப்புரவுச் சின்னமான தீவட்டி** (வின்.); torch (single or double) carried before a great person, in olden days.

[உல் → உர் → உரு → அருகு. உருத்தல் = அழலுதல். அருகு = நெருப்பு.]

**அருகுகண்டம்** *arugu-kaṇḍam*, பெ. (n.) **பதக்க அணிவகை** (S.I.I. viii, 53); a jewel pendant.

**அருகுகால்** *arugu-kāl*, பெ. (n.) **கதவுநிலை** (இ.வ.); threshold, door frame (Loc.).

[அருகு = ஓரம். கால் = நிலை.]

**அருகுசாதி** *arugu-šādi*, பெ. (n.) (இசை) **ஆசான் குலப் பண்வகைகளுள் ஒன்று;** a class of *āšāṉ* melody-type. 'ஆசான் என்னும் பண்ணிய லாகிய நால்வகைச் சாதி... ஆசான் சாதி நால் வகை யாவன: ஆசானுக்கு அகச்சாதி காந்தாரம், புறச்சாதி சிகண்டி, அருகுசாதி தசாக்கரி, பெருகுசாதி சுத்த காந்தாரமெனக் கொள்க' (சிலப். 13 : 112, அடியார்க். உரை).

[அருகியல் → அருகு. **Skt.** jāti > **த.** சாதி (குலம்).]

**அருகுதை-த்தல்** *arugu-tai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **மடித்துத் தைத்தல்**; to hem.

[அருகு → ஓரம். அருகுதைத்தல் = ஓரத்தில் மடித்துத் தைத்தல்.]

**அருகுமணிச்சேலை** *arugu-maṇi-c-cēlai*, பெ. (n.) புடைவைவகை (பஞ்ச. திருமுக. 1163); a kind of saree.

*[அருகு + மணி + சேலை.]*

**அருகுவை-த்தல்** *arugu-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **குழந்தைகட்கு இழுப்பு வரும்போது சூடு போடுதல்** (இ.வ.); to brand children with the intention of arresting convulsions (Loc.).

*[உல் → உர் → உரு. உருத்தல் = அழலுதல். உரு → அரு → அருகு = சூடு. ஒ.நோ : உல் → உர் → (க.) உரி → அரி → நெருப்பு.]*

**அருகுறல்** *arugural*, தொ.பெ. (vbl.n.) **கிட்டுதல், பக்கத்தில் வருதல்;** to approach, get near. ''ஆன்றவிச் செல்வமித் தனையுமொய்த் தருகுற'' (கம்பரா. பால. எதிர். 29).

*[அருகு + உறு — அருகுறு (முதனிலை) → அருகுறல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அருகோலம்** *arugōlam*, பெ. (n.) **அந்திமல்லிகை;** a flower that blossoms at 4 p.m., *Mirabilis jalapa* (சா.அக.).

**அருங்கதி** *aruṅgadi*, பெ. (n.) **பேரின்ப வீடு;** heaven, which is difficult to attain. ''பெருந்தவர் குழுவு மருங்கதி யிருப்பும்'' (கல்லா. 25).

*[அரு = பெறற்கு அரிய. **Skt.** gati > த. கதி = செலவு, புகலிடம்.]*

**அருங்கல்**[1] *aruṅgal*, தொ.பெ. (vbl. n.) **சுருங்குகை** (சம்.அக.); diminution, contraction.

*[அருகுதல் = குறைதல், சிறுத்தல், சுருங்குதல். அருகு → அருங்கு → அருங்கல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அருங்கல்**[2] *aruṅgal*, பெ. (n.) **சார்வு** (சம்.அக.); dependence.

*[அருகுதல் = நெருங்குதல், சார்தல். அரு → அருகு → அருங்கு → அருங்கல்.]*

**அருங்கலச்செப்பு** *aruṅgala-c-ceppu*, பெ. (n.) 1. **அணிகலப் பெட்டி;** jewel casket. ''ஆயிரங் கண்ணோ னருங்கலச் செப்பு வாய்திறந் தன்ன'' (சிலப். 14 : 68). 2. **குறள்வெண்பாவால் இயற்றப்பட்ட ஒரு சமண அறநூல்;** name of a Jaina ethical treatise in *kuṟaḷ veṇbā*.

*[அரு + கலம் + செப்பு.]*

**அருங்கலச்செவ்விதழ்** *aruṅgala-c-cevvidaḻ*, பெ. (n.) **பொற்றாமரை;** red lotus, *Nelumbium speciosum* (சா.அக.).

*[அருங்கலம் + செவ்விதழ்.]*

**அருங்கலப்பாவை** *aruṅgala-p-pāvai*, பெ. (n.) **மணிபதித்த பாவை;** ''ஆய்கலைப் பாவை யருங்கலப் பாவை'' (சிலப். 12 : 71); gem-studded figure.

*[அருங்கலம் + பாவை.]*

**அருங்கலம்** *aruṅgalam*, பெ. (n.) 1. **அணிகலம்;** ornament, jewel. ''அருங்கல வெறுக்கையொ டளந்துகடை யறியா'' (சிலப். 5 : 20). 2. **விலையுயர்ந்த அணிகலம்;** precious ornament. ''பெண்ணினிற் கருங்கல மனைய பெய்வளை'' (கம்பரா. கிட்கிந்தா. கார்கால. 20). 3. **அழகு செய்யும் பொருள்;** that which adorns, beauty aids. ''பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை'' (தேவா. 4.11 : 2). 4. (சமணம்) **மும்மணி (இரத்தினத் திரயம்) என்னும் சமணப் பண்புகள் மூன்று; அவை நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்பன;** (Jaina) the three gems, *Right faith*, *Right knowledge*, and *Right conduct* which sum up the beliefs and tenets of the Jaina cult. ''நாதர் நுவன்ற வருங்கலம்'' (திருநூற். 70).

*[அரு (அரிய) + கலம். ஒருகா. கல் (ஒளிக் கல், மணி) → கலம். இனி, கலம் = பொன்னிலும் வெள்ளியிலும் செதுக்கிச் செய்யப்பட்ட அணிப்பொருள் என்றுமாம். கல்லுதல் = தோண்டுதல், செதுக்குதல்.]*

**அருங்கலைநாயகன்** *aruṅgalai-nāyagaṉ*, பெ. (n.) **புத்தன்** (திவா.); the Buddha, one well-versed in sacred lore.

*[அரு (அரிய) + கலை (கல்வி, நூல்) + நாயகன் (தலைவன்).]*

**அருங்கலைவினோதன்** *aruṅgalai-viṉōdaṉ*, பெ. (n.) **சிறந்த நூற்பயிற்சியை இன்ப விளையாட்டாகக் கொண்டவன், ஆராய்ச்சி செய்து அரிய கலையும் அறிவியலும் வளர்ப்பதில் இன்புறுபவன்;** person devoted to learning as a recreation, one whose time is pleasantly spent in cultivating arts and sciences. ''அருங்கலை வினோத னமரா பரணன்'' (நன். சிறப்புப்பாயி.).

*[அரு + கலை + **Skt.** vinōda > த. வினோதம் = விளையாட்டு, இன்பப் பொழுதுபோக்கு, மனமகிழ்ச்சி. வினோதம் → வினோதன்.]*

**அருங்கவி** *aruṅgavi*, பெ. (n.) **பல்வேறு சித்திரங் கட்குள் அமைக்கக்கூடிய அரும்பா, சித்திரப்பா**; a variety of metrical composition fitted into fanciful figures. 2. **அரும்பாப் பாடுவோன், சித்திரப்பாப் புலவன்**; poet who composes *cittirappā*. 'சித்திரகவி யாவான், மாலைமாற்று முதலாய அருங்கவி பாடும் நன்மையை யுடையான்' (யாப்.வி. 96, உரை, பக். 513).

[அரு + **Skt.** kavi = பா, பாவலன்.]

**அருங்காவல்** *aruṅgāval*, பெ. (n.) **கடுஞ்சிறை** (வின்.); rigorous imprisonment, strict confinement.

[அரு = கடுமையான. காவல் = சிறை.]

**அருங்கிடை** *aruṅgiḍai*, பெ. (n.) 1. **கடும் பட்டினி**; extreme hunger from long abstinence. 2. **நோயாற் படுத்த படுக்கையா யிருக்கை**; being confined to the bed from protracted illness.

[அரு + கிடை. கிட → கிடை = கிடத்தல், படுத்திருத்தல். 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அருங்கு** *aruṅgu*, பெ. (n.) **அருமை**; rareness. "உறலருங் குண்மையின்" (தொல். பொருள். கற். 5).

[அர் → அரு → அருகு → அருங்கு. அருகுதல் = குறைதல், சிறுத்தல், அரிதாதல், அருமையாதல்.]

**அருங்கேடன்** *aruṅ-kēḍaṉ*, பெ. (n.) 1. **கேடில் லாதவன்**; one free from destruction. "அருங் கேட னென்ப தறிக" (குறள், 210). 2. **மிகக் கெட்டவன்** (சங்.அக.); a very wicked man.

[அரு = அரிய, இல்லாத. அருங்கேடன் (கேடரியன்) = இல்லாத கேடன், கேடில்லாதவன். கேடு → கேடன். 'அன்' ஆ.பா. ஈறு.]

**அருங்கேடு** *aruṅ-kēḍu*, பெ. (n.) **கேடின்மை**; being free from destruction or destructive causes. "அருங்கேட்டா லாற்ற விளைவது நாடு" (குறள், 732).

[அரு (அரிய, இல்லாத) + கேடு. அருங்கேடு = கேடருமை (கேடின்மை). கெடு → கேடு.]

**அருங்கொடைத்தானம்** *aruṅgoḍai-t-tāṉam*, பெ. (n.) **தலையாய தானம்**; supreme gift.

"அருங்கொடைத் தான மாய்ந்த
வருந்தவந் தெரியின் மண்மேன்
மருங்குடை யவர்கட் கல்லான்
மற்றவர்க் காவ துண்டே" (சீவக. 2924).

[அரு (அரிய, சிறந்த) + கொடை + தானம்.]

**அருங்கோடை** *aruṅgōḍai*, பெ. (n.) 1. **வேனிற் காலத்தின் வெப்பமிக்க பகுதி**; the hottest part of summer. 2. **தீ நாள் (அக்கினி நட்சத்திரம்)**; dog-days (சா.அக.). 3. **வறட்காலம்** (வின்.); severe drought.

[அரு + கோடை.]

**அருச்சந்தம்** *aruccandam*, பெ. (n.) **பித்தளை** (புதுவை); brass (Poṇḍ.).

**அருச்சனம்** *aruccaṉam*, பெ. (n.) **நெல்வகை** (பறாளை. பள்ளு. 23); a kind of paddy.

**அருசகம்** *arušagam*, பெ. (n.) **சேங்கொட்டை**; marking-nut, the nut of *Semicarpus anacardium* (சா.அக.).

**அருசகா** *arušagā*, பெ. (n.) **பப்பரப்புளி**; brahmin tamarind, *Adansonia digitata* (சா. அக.).

**மறுவ.** பார்ப்பாரப்புளி, பொந்தப்புளி.

**அருசம்** *arušam*, பெ. (n.) 1. **சீந்தில்**; moon creeper, *Menispermum cordifolium*. 2. **மூலம்**; piles or haemorrhoids. 3. **மூக்கில் வளர்ந்த சதை**; a fleshy growth on the mucous surface of the nose, *polypus* (சா.அக.).

**அருசாகுமிழ்** *arušā-kumiḻ*, பெ. (n.) **பெருங் குமிழ்**; bell vervain, *Gmelina arborea* (சா.அக.).

**மறுவ.** அருசாவிரா, அருசா.

**அருசாரை** *arušārai*, பெ. (n.) **நாளா**; a kind of plant (சா.அக.).

**அருசாவிரா** *arušāvirā*, பெ. (n.) **பெருங்குமிழ்** (பச்.மூ.); coomb-teak.

அருசாகுமிழ் பார்க்க; see *arušā-kumiḻ*.

**ஒ.நோ:** அரிசா

**அருசிவசமவாதி** *aru-šiva-šama-vādi*, பெ. (n.) **ஆதனறிவும் (ஆன்மசித்தும்) சிவனறிவும் (சிவ சித்தும்) ஒத்து வேறாய் நிற்குமென்னுங் கொள்கையன்** (சி.சி. 11 : 11, சிவஞா.); one who holds that the Soul and Šiva would stand aloof being intellectually equal.

[அ + உருவம் + சிவன் + சமம். **Skt.** vādin > **த.** வாதி. அல் → அ. உரு → உருவு → உருவம். உருவம் > **Skt.** rūpa.]

**அருஞ்சிலைக்கல்** *aruñjilai-k-kal*, பெ. (n.) **கெண்டகச்சிலை**; a kind of black stone used in medicine, one of 120 natural bodies acc. to Tamil Medical Science (சா.அக.).

[அரு + சிலை + கல். 'சிலை' தென்சொல்லா வடசொல்லா வென்னும் ஐயுறவிற் கிடமானது.]

மறுவ. அருட்சிலை

**அருஞ்சிறை**[1] *aruñjiṟai*, பெ. (n.) 1. கடுங்காவல்; rigorous imprisonment. "அற்புத னரக்கர்தம் வருக்க மாசற விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்" (கம்பரா. சுந்தர. உருக்கா. 20). 2. நரகம் (பிங்.); hell.

[அரு = கடிய, கொடிய. சிறைத்தல் = ஒன்றன் இயக்கத்தைத் தடுத்து ஓரிடத்திருத்துதல். சிறை (முத.தொ.பெ.) = தடுத்துச் செய்யுங் காவல். 'செறி', 'செறு' என்பன தொடர்புடைய சொற்கள்.]

**அருஞ்சிறை**[2] *aruñjiṟai*, பெ. (n.) அரிய சிறகு; rare type of wing. "அருஞ்சிறை பெற்ற மேருவ தென்ன" (கந்தபு. தேவ. தெய்வ. 48).

[அரு + சிறை. சிறகு → சிறை.]

**அருஞ்சுரம்** *aruñjuram*, பெ. (n.) 1. கடத்தற் கரிய வெம்பாலை நிலம்; bare, open, torrid plain. 2. கடுங்காய்ச்சல்; a severe type of fever, *Hyperpyrexia* (சா.அக.).

[அரு + சுரம். சுள் → சுர் → சுரம் = சுடும் பாலை, சுடுங்காய்ச்சல்.]

**அருஞ்சோதி** *aruñjōdi*, பெ. (n.) நெல்வகை (ஏரெழு.உரை); a kind of paddy (செ.அக.) — ஒருவகைச் சிவப்புநெல்; a kind of red paddy (சா.அக.).

[அரு + Skt. jyotis > த. சோதி = ஒளி.]

**அருட்கண்** *aruṭ-kaṇ*, பெ.(n.) 1. அருள்நோக்கம்; gracious look. 2. ஓதிக்கண் (ஞானக்கண்) (சி.போ. 5.2 : 3); eye of wisdom.

[அருள் + கண்.]

**அருட்கரம்** *aruṭ-karam*, பெ (n.) சேங்கொட்டை; marking-nut tree, *Semicarpus anacardium* (சா. அக.).

[அருள் + ஒருகா. Skt. kara.]

**அருட்குடையோன்** *aruṭ-kuḍaiyōṉ*, பெ. (n.) அருளைக் குடையாகக் கொண்ட கடவுள்; God, as benevolent (W.).

[அருள் + குடையோன்.]

**அருட்குறி** *aruṭ-kuṟi*, பெ. (n.) சிவ இலங்கம் (சிவலிங்கம்); Śiva-linga, the symbol of divine grace. "ஆனு யர்த்தவ னருட்குறி யருச்சனை" (காஞ்சிப்பு. சார்ந்தா. 21).

[அருள் + குறி.]

**அருட்கேவலம்** *aruṭ-kēvalam*, பெ. (n.) மெய்ப் பொருட் டுப்புரவின் பின் ஏற்படுந் தனிமை (தத்துவசுத்தியின் பின்னர்ப்படுங் கேவலம்) (சி. போ. 6 : 6 சிவஞானமுனி) (சங்.அக.); solitariness of the soul following its spiritual experience in which the soul is no longer influenced by the 36 Reals (tattvas) and realizes itself to be an entity different from them.

[அருள் + Skt. kēvala > த. கேவலம்.]

**அருட்கொடியோன்** *aruṭ-koḍiyōṉ*, பெ. (n.) அருகன் (சூடா.); Arhat, the Lord whose banner is grace.

[அருள் + கொடியோன். கொடி → கொடி யோன். 'ஓன்' உடைமை குறித்த ஆ.பா. ஈறு.]

**அருட்கொடிவேந்தன்** *aruṭ-koḍi-vēndaṉ*, பெ.(n.) அருட்கொடியோன் பார்க்க; see *aruṭ-koḍiyōṉ*.

[அருள் + கொடி + வேந்தன் (பேரரசன், பெருந்தலைவன், இறைவன்.]

**அருட்கொடையோன்** *aruṭ-koḍaiyōṉ*, பெ. (n.) (அருள் செய்யும் அல்லது பல செல்வங்களை அருளிக் கொடுக்கும்) கடவுள் (சங்.அக.); God, the gracious one or the giver of wealth.

[அருள் + கொடையோன். கொடு → கொடை → கொடையோன். 'ஓன்' வி.முத. குறித்த ஆ.பா. ஈறு.]

**அருட்சத்தி** *aruṭ-catti*, பெ. (n.) பரை, பரை யாற்றல் (பராசத்தி); Śiva's supreme energy. "முன்னருட் சத்தி தன்பான் முகிழ்க்குந்தான் முளையா னன்றே" (சி.சி.சுபக். 1 : 68).

[அருள் + Skt. sakti > த. சத்தி = ஆற்றல்.]

**அருட்சி**[1] *aruṭci*, பெ. (n.) அரட்சி பார்க்க; see *araṭci*.

[அரட்சி → அருட்சி.]

**அருட்சி**[2] *aruṭci*, பெ. (n.) அருளுதல் (சங்.அக.); to be gracious.

அருள்[ளு][1]-தல் பார்க்க; see *aruḷ-*[1].

**அருட்சித்தி** *aruṭ-citti*, பெ. (n.) இதள் (பாதரசம்) (வின்.); quicksilver.

[அருள் + Skt. siddhi > த. சித்தி.]

**அருட்சிலை** *aruṭ-cilai*, பெ. (n.) ஒருவகைக் கருங்கல்; a black granite stone (சா.அக.).

அருஞ்சிலைக்கல் பார்க்க; see *aruñjilai-k-kal*.

**அருட்செல்வம்** *aruṭ-celvam,* பெ. (n.) 1. அருளாகிய செல்வம், பொருட்செல்வம் என்பதற்கு எதிர்; wealth of grace, opp. to *poruṭcelvam.* "அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" (குறள், 241). 2. இறைவனருள்; wealth of divine grace.

[அருள் + செல்வம்.]

**அருட்சோதி** *aruṭ-cōdi,* பெ. (n.) 1. அருட்பெருஞ் சுடராகிய கடவுள்; God, the embodiment of effulgent grace. 2. அருட்பெருஞ்சுடர்; the effulgence of grace. "அருட்சோதித் தெய்வ மென்னை யாண்டு கொண்ட தெய்வம்" (அருட்பா. பரசிவ. 1). 3. ஒருவகைக் கனியச் செய்ந்நஞ்சு (கௌரி பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

[அருள் + Skt. jyotis > த. சோதி = ஒளி.]

**அருட்டரிசனம்** *aruṭ-ṭarišaṉam,* பெ. (n.) தெய்வக் காட்சி (தெய்வதரிசனம்) (ஒழிவி. விரத்தி. 9, உரை); vision of divine grace (செ.அக.).

அருட்டெரிசனம் — 'சூரியோதயத்திலே இருளு நட்சத்திரமுமின்றிச் சூரியப் பிரகாச மாத்திரங் கண்ட கண்போல, அருள் தோற்றிய காலத்துக் கேவல விருளுங் கருவிக் கூட்டங்களுந் தோன்றாது அருளை மாத்திரம் ஆன்மாக் கண்டுகொண்டிருப்பது' (ஒழிவி. விரத்தி. 9, உரை) (சங்.அக.).

[அருள் + தரிசனம். Skt. daršana > த. தரிசனம்.]

**அருட்டி** *aruṭṭi,* பெ. (n.) 1. அச்சம் (சங்.அக.); fear, dread. 2. நடுக்கம் (வின்.); quaking, trembling, agitation.

ம. அரள்ச்ச; க. அரள்.

[அரள் → அருள் → அருட்டு → அருட்டி.]

**அருட்டு-தல்** *aruṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மயக்குதல்; to confuse, bewilder, frighten. "அருட்டிக்கண் சிமிட்டி" (திருப்பு. 647). 2. துயிலுணர்த்துதல்; to wake up. 3. எழுப்பி விடுதல்; to rouse to action, wake from inactivity. 4. ஏவிவிடுதல், தூண்டிவிடுதல்; to excite, instigate.

ம. அரட்டுக

[அரள் → அருள் → அருட்டு.]

**அருட்பா** *aruṭ-pā,* பெ. (n.) 1. தேவாரம் திருவாசகம் போல இறைவன் ஏவியெழுப்பலாற் பாடப்பட்ட செய்யுள் அல்லது பாட்டு; poems or songs produced under divine inspiration, as *Tēvāram* and *Tiruvāšagam.* 2. இராமலிங்க அடிகளின் பாடல், திருவருட்பா; poems and songs composed by *Rāmalinga Aḍigaḷ, Tiruvaruṭpā.*

**அருட்புரி** *aruṭ-puri,* பெ. (n.) (இசை) குறிஞ்சி யாழ்த்திற வகைகளுளொன்று (பிங்.); (Mus.) a secondary melody-type of the *kuṟiñji* class.

**அருண்முனி** *aruṇ-muṉi,* பெ. (n.) அருகன்; Arhat. "அங்கம் பயந்தோ னருக னருண் முனி" (சிலப். 10:187).

[அருள் + முனி.]

**அருண்மொழி** *aruṇ-moḻi,* பெ. (n.) அருளொடு கூடிய சொல் அல்லது பேச்சு; gracious word or speech, as uttered by God.

[அருள் + மொழி.]

**அருண்மொழித்தேவர்** *aruṇ-moḻi-t-tēvar,* பெ. (n.) பெரியபுராண ஆசிரியரான சேக்கிழார் (சேக்கிழார்பு. 18); *Šēkkiḻār* the author of *Periyapurāṇam.*

[அருள் + மொழி + தேவர்.]

**அருணகமலம்** *aruṇa-kamalam,* பெ. (n.) செந்தாமரை; red lotus, *Nelumbium speciosum* (சா.அக.).

[அருணம் = சிவப்பு. கமலம் = தாமரை.]

**அருணம், கமலம்** பார்க்க; see *aruṇam, kamalam.*

**அருணகிரி** *aruṇa-giri,* பெ. (n.) 1. திருவண்ணாமலை, ஒரு பெயர் பெற்ற சிவநகர்; *Tiruvaṇṇā-malai,* a famous Šiva shrine. 2. அருணகிரிநாதர்; *Aruṇagirinādar.* "வாக்கிற் கருணகிரி" (தனிப்பா.).

[1. அருணம் + Skt. giri > த. கிரி (மலை). 2. அருணகிரிநாதர் → அருணகிரி (குறுக்கம்). ஒருகாலத்தில், திருமாலும் நான்முகனும் அடி முடி யறியாவாறு சிவபெருமான் நெடிய அழற் பிழம்பாய் நின்ற வுருவம் அருணமலையாயிற் றென்பது தொன்மக்கதை. அருணமலை → அண்ணாமலை (மருஉ).

அருணம் = சிவப்பு, அழல்நிறம்.]

**அருணகிரிநாதர்** *aruṇagiri-nādar,* பெ. (n.) 15ஆம் நூற்றாண்டில் திருவண்ணாமலையில் வாழ்ந்தவரும், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல்விருத்தம்,

**உடற்கூற்று வண்ணம் முதலிய பனுவல்களின் ஆசிரியருமாகிய பெரும்பாவலர்**; name of a great poet who lived in *Tiruvaṇṇāmalai* in the 15th century, author of the *Tiruppugaḻ* and other works.

அருணகிரிநாதர் என்பது, அருணகிரி என்னும் திருவண்ணாமலையிற் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான் பெயர். அஃது அவருக்கு அவருடைய பெற்றோரின் சிவபத்தியா லிடப்பட்டது.

**அருணகுட்டம்** *aruṇa-kuṭṭam*, பெ. (n.) *உடம்பு முழுதுங் கருஞ்சிவப்புத் தழும்புகள் பரவிக் குத்தலெடுத்துத் தோலில் திமிருண்டாகும்* **நோய், செங்குட்டம்**; a kind of leprosy marked by well-defined reddish brown patches spreading all over the body, pricking pain and insensibility of the skin, macular leprosy (சா.அக.).

தெ. அருணமு

*[அருணம் = சிவப்பு. குள் → குட்டம் = குறுமை, கை கால் விரல் மூக்கு முதலிய வுறுப்புகள் அழுகிக் குறுகுந் தொழுநோய்.]*

குட்டம் பார்க்க; see *kuṭṭam*.

**அருணச்சிவப்பு** *aruṇa-c-civappu*, பெ. (n.) **எழுங்கதிரவன் போன்ற செந்நிறம்**; bright red colour like that of the rising sun (சா.அக.).

*[அருணம் = சிவப்பு. சிவ → சிவப்பு. 'பு' பண். பெ. ஈறு.]*

**அருணந்திசிவாசாரியார்** *aruṇandi-šivašāriyar*, பெ. (n.) **பதின்மூன்றாம் நூற்றாண்டினரும், வழிமுறைக் (சந்தான) குரவருள் ஒருவரும், சிவஞான சித்தியார், இருபாவிருபஃது என்னும் நூல்களின் ஆசிரியருமான சிவாசாரியார்**; name of a Šaiva preceptor, author of the *Šivañāṉa šittiyār* and the *Irupāvirupakḏu*, of 13th century, one of the four *šandāṉa kuravar*.

*[அருள் + நந்தி + சிவ + ஆசாரியார். ஆசிரியர் >* **Skt.** ācarya.]

**அருணம்**[1] *aruṇam*, பெ. (n.) *1.* *சிவப்பு*; red, bright red. "அருண மேனி" (பாரத. இராச. 105). *2.* *கருஞ்சிவப்பு*; dark-red. *3.* **கெம்பு**; ruby (சா.அக.). *4.* **சிந்தூரம்** (இராசவைத்.); red lead or red oxide. 5. **செம்பு**; copper (சா.அக.). *6.* **செம்பொன்**; superior gold. *7.* **சிவப்பு ஆன்** (பசு) அல்லது **பெற்றம்**; red cow or bull (சா.அக.). *8.* **செம்மறியாடு** (பிங்.); ram or ewe (சா.அக.). *9.* **மான்** (பிங்.); deer. *10.* **சிவப்பெலி**; a rat of a dark-red colour (சா.அக.). *11.* **அருணன் (செங்கதிரவன்) எழும் விடியற்காலம்**; dawn. *12.* **செவ்வானம்** (நாநார்த்த.); evening sky. *13.* **செங்குட்ட நோய்** (நாநார்த்த.); red leprosy. *14.* **ஒரு பூண்டு**; a plant, *Rottloria tinctoria* (சா.அக.).

ம. அருணம்; க., து. அருண; தெ. அருணமு; **Mar., Sinh., Pali** aruṇa.

*[உரு → அரு → அருணம் = சிவப்பு.]*

உல் → உல → உலவை = காய்ந்த மரக் கொம்பு. உல → உலர். உலர்தல் = காய்தல். உல → உலை = நெருப்புள்ள அடுப்பு, கொல்லனுலை. உல் → இல் → எல் = ஒளி, வெயில், கதிரவன். எல் → எர் → எரி = நெருப்பு, சிவப்பு. எரிமலர் = செந்தாமரை, முருக்கமலர். எரங்காடு = செம்மண் நிலம். தெ. எர்ர = சிவப்பு.

உல் → உர் → உரு. உருத்தல் = அழலுதல். உர் → உரி (க.) = நெருப்பு. உரு → உரும் → உருமி. உருமித்தல் = வெப்பமாதல். உருமம் = வெப்பம். உரும் → உரும்பு = கொதிப்பு. உரும்பு → உருப்பு = வெப்பம். உருப்பம் = வெப்பம். உரும்பு → உரும்பரம் = செம்பு, பெருங்காயம். உரும்பதம் → உதும்பரம் = செம்பு, செவ்வகத்தி, அத்தி.

உல் → அல் → அலத்தம் = செம்பருத்தி. அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அலத்தி = மின்மினி. அலந்தல் = செங்கத்தரி. அலத்தகம் → அரத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு.

இல் → இலந்தை = செம்பழ முட்செடி. இல் → இர் → இரத்தி = இலந்தை.

அல் → அர் → அரம் = சிவப்பு. அரம் → அரன் = சிவன். (ஹர > அரன் = அழிப்பவன் என்பது பிற்கால ஆரியக் கருத்து.) அர் → அரக்கு = சிவப்பு, செம்பிசின் போன்ற சரக்கு, சாதிலிங்கம். அரக்காம்பல் = செவ்வாம்பல். அரக்கு → அரக்கம் = அரத்தம், அவலரக்கு. அர் → அரத்தம் = சிவப்பு, குருதி, அரக்கு, பவளம், செம்பரத்தை, செங்கழுநீர், செம்பருத்தி. அரத்தன் = செவ்வாய். அரத்தம் → அத்தம் → அத்தி. அத்தம் → அதம் → அதவு → அத.

நெருப்புச் செந்நிற மாதலால், நெருப்பைக் குறிக்குஞ் சொல்லினின்று, சிவப்பையுஞ்

செம்பொருள்களையும் குறிக்குஞ் சொற்கள் திரிந்துள்ளன.

உரு → அரு → (அரணம்) → அருணம் = சிவப்பு, சிவப்பின் ஒருவகைப் புகர் (brown). அதனால் அருணம் என்பது மானையுங் குறிக்கும். ஆயின், **மானியர் வில்லியம்சு சமற்கிருத - ஆங்கில அகரமுதலி,** சிவப்பைக் குறிக்குஞ் சொல்லை 'அருண' என்றும், மானைக் குறிக்குஞ் சொல்லை 'ஹரிண' என்றும் வேறுபடுத்தி, முன்னதை 'ரு' என்னும் வேரினின்றும், பின்னதை 'ஹரி' என்னும் வேரினின்றும் திரிக்கின்றது. 'ரு' என்னும் வேருக்கு அது குறித்துள்ள பொருள்கள் (1) 'ரு' என்னும் எழுத்து, (2) சிரிப்பை யுணர்த்தும் ஒலிக்குறிப்பு, (3) வானம், (4) இயங்கு (to go, move) என்னும் நான்கே. இவற்றுள் ஒன்றேனும் சிவப்பு என்னும் பொருளொடு தொடர்புடையதாயில்லை. 'ஹரி' என்னும் வேர் அல்லது அடி, பசுமை மஞ்சள் என்னும் இருபொருளை யுணர்த்தும். புகர்நிறத்திற்கு மஞ்சளைவிடச் சிவப்பே நெருங்கிய தென்பது தெள்ளத்தெளிவானது. இதனால், 'அருண' என்பதன் திரிபே 'ஹரிண' என்பது அறியப்படும்.

சமற்கிருதத்தில் நூற்றுக்கணக்கான அடிப் படைச் சொற்கள் தமிழாயிருத்தலால், இதை மறைத்தற்கு வடமொழியாளர் பலவகைச் சொற்றிரிப்புகளையும் பொருட்டிரிப்புகளை யும் கையாண்டிருக்கின்றனர்.

அத்திமரத்தைக் குறிக்கும் 'உதும்பரம்' என்னுஞ் சொல், வேதத்தில் 'உதும்பர' என்றும் பிற்கால இலக்கியத்தில் 'உடும்பர' என்றும் குறிக்கப்பட்டுள்ளதென்றும், உதும்பர (udumbara) என்னுஞ் சொல்லிற்கு வேர்காட்ட வேண்டியே உதும்பர (udumbhara) என்னும் சொல் புனையப்பட்டுள்ள தென்றும், மானியர் வில்லியம்சு கூறியிருத்தல் காண்க.

'*udumbhara*, m. (fr. *bhṛi* with *ud*), a word coined for the etymological explanation of *udumbara*, Š.Br. vii, 5, 1, 22.' (p. 186, col. 3).

**அருணம்**[2] *aruṇam*, பெ. (n.) *1.* **இடைக்கால விலக்கியத்திற் கூறப்படும் ஐம்பத்தாறு நாடு களுள் ஒன்று** (சங்.அக.); one of the 56 ancient countries mentioned in the medieval literature. *2.* **அந்நாட்டு மொழி** (சங்.அக.); the language of that country. *3.* **யானை** (அக.நி.); elephant.

*[அருமணம் → அருணம். அருமணம் என்பது ஒரு கீழத்திசைத் தீவே யன்றி நாடன்று. அத் தீவினின்று கொண்டுவரப்பட்ட யானை அரு மணவன் எனப்பட்டது.]*

அருமணம், அருமணவன் பார்க்க; see *arumaṇam, arumaṇavan̠*.

**அருணமணி** *aruṇa-maṇi*, பெ. (n.) **செந்நிற ஒளிக்கல், மாணிக்கம்**; ruby. "அருண மணி சூழ் பாதலத்தில்" (ஞானவா.பிரகலா. 47).

ம. அருணமணி

*[அருணம் + மணி. மண் → மண்ணி → மணி = கழுவித் துலக்கப்பட்டது.]*

**அருணர்** *aruṇar*, பெ. (n.) **சான்மலித் தீவின் அரசர்**; the kings of Šāṉmali, an island-continent. "மன்னவரை மாறெறி வடிவே லருணரென் றுரைப்பர்" (கூர்மபு.பிலக்க.24) (சங்.அக.).

**அருணரி** *aruṇari*, பெ. (n.) **பாழ்நிலம்**; waste land (சா.அக.).

**அருணவூரி** *aruṇa-v-ūri*, பெ. (n.) **மழைக் காலத்தில் ஊர்ந்து திரியும் தம்பலப்பூச்சி (இந்திரகோபம்)**; cochineal insect (செ.அக.).

An insect of crimson red colour, appearing in the rainy season, lady fly or scarlet moth, *Mutella occidentalis* (சா.அக.).

*[அருணம் (சிவப்பு) + ஊரி. ஊர் → ஊரி. 'இ' வி.முத. ஈறு.]*

**அருணவெலி** *aruṇa-v-eli*, பெ. (n.) **ஒருவகைக் கருஞ்சிவப்பெலி**; a rat of dark-red colour (சா.அக.).

*[அருணம் = சிவப்பு. எல் → எலி. முதற் காலத்தில் வெள்ளெலியைக் குறித்தது பின்னர் எலிப் பொதுப்பெயராயிற்று.]*

**அருணவேலி** *aruṇa-vēli*, பெ. (n.) **செங்கொடு வேலி**; Ceylon leadwort, *Plumbago zeylanica* (சா.அக.).

*[அருணம் (சிவப்பு) + வேலி.]*

**அருணன்** *aruṇan̠*, பெ. (n.) *1.* **எழுங்கதிரவன்** (திவா.); the rising sun. "அருணனை யன்ன செவ்வேற்படைச் செந்திலர்க்கு" (திருச்செந்தி னிரோட்ட. காப்பு). *2.* **அறிவன் (புதன்)** (சூடா.); the planet Mercury. *3.* **ஏகம்பச் சாரம்**; a kind of mineral salt used in alchemy (சா.அக.).

ம. அருணன்; க., து. அருண; தெ. அருணுண்டு; **Sinh., Pali** aruṇa.

[அருணம் (சிவப்பு) → அருணன்.]

**அருணம்** பார்க்க; see *aruṇam*.

**அருணா** *aruṇā*, பெ. (n.) 1. **குரால் (கபிலச்) சிவப்பு**; reddish brown colour. 2. **அதிவிடையம்**; atis, *Aconitum heterophyllum*.

[அருணம் (சிவப்பு) → அருணா. குரால் நிறம் சிவப்புவகை. அதிவிடைய வேர் குரால் நிறமானது.]

**அருணாசலக்கவிராயர்** *aruṇāśala-k-kavi-rāyar*, பெ. (n.) **சீகாழியில் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும், இராம நாடகம், சீகாழித் தலபுராணம் முதலிய பனுவல்களின் ஆசிரியருமான ஒரு வேளாண்குலப் புலவர்**; name of a Vēḷāḷa poet of Śikāḻi, 1712-79, author of the *Irāma nāḍagam*, the *Śikāḻittalapurāṇam* and other poems.

[அருணாசலம் + **Skt**. kavi + ராயர். அரசர் → அரைசர் → அரையர் → ராயர்.]

**அருணாசலம்** பார்க்க; see *aruṇāśalam*.

**அருணாசலபுராணம்** *aruṇāśala-purāṇam*, பெ. (n.) **திருவண்ணாமலைப் பெருமையைக் கூறும் சிவனியத் தொன்மம், எல்லப்ப நாவலர் இயற்றியது**; name of a poem, which narrates the legends of *Tiruvaṇṇāmalai*, sacred to Śiva by *Ellappa Nāvalar*.

[அருணாசலம் + **Skt**. purāṇa (தொன்மம்).]

**அருணாசலம்** பார்க்க; see *aruṇāśalam*.

**அருணாசலம்** *aruṇāśalam*, பெ. (n.) **திருவண்ணாமலை**; *Tiruvaṇṇāmalai*.

ம. அருணாசலம்

[அருணம் (சிவப்பு) + அசலம்.]

**அருணம்** பார்க்க; see *aruṇam*.

சலித்தல் = அசைதல். சலி → சலம் = அசைவது. அல் → அ (அன்மை யின்மை மறுதலைப் பொருளுணர்த்தும் முன்னொட்டு). அசலம் (அ + சலம்) = அசையாதது, மலை. சலி > வ. சல் (cal). சலி என்னுஞ் சொல்லும் 'அ' என்னும் முன்னொட்டும் தமிழாயினும், அவ் விரண்டையும் புணர்த்து அசல (acala) என்னுஞ் சொல்லைத் தோற்றுவித்தது வடமொழியிலாகும். ஆதலால், அசலம் என்பது உறுப்பால் தென்சொல்லாயினும் சொல்லால் வடசொல்லே.

சலித்தல் = 1. அசைதல், அசைத்தல். எ-டு: சலியடை → சல்லடை. 2. வருத்துதல், சோர்தல், வெறுத்தல், அருவருத்தல். எ-டு: சலிப்பாயிருக்கிறது, கேட்டுக்கேட்டுச் சலித்துப் போனான், தின்று தின்று சலித்துப் போயிற்று.

**சலி-த்தல்** பார்க்க; see *śali-*.

திருமாலும் நான்முகனும் தன் அடிமுடி யறியாவாறு, சிவபெருமான் ஒரு காலத்தில் அழற்பிழம்பாய் நின்ற வுருவமே திருவண்ணாமலை யென்னுங் கருத்தினால், அழல்நிறமான செம்மலை அருணமலை யெனப்பட்டதென்பர். அருணமலை → அண்ணாமலை → திருவண்ணாமலை. ஆரியர் தென்னாடு வந்தபின். 'மலை' என்னும் வருஞ்சொல்லிற்குத் தலைமாறாக 'அசலம்' என்னும் சொல்லைச் சேர்த்து, அருணமலை என்பதை அருணாசலம் என மாற்றினர். இலக்கிய வழக்கில் அருணாசலம் என்னும் வடசொல் வடிவம் இடம்பெற்றிருப்பினும், உலக வழக்கில் அருணமலை யென்பதன் மரூஉவான அண்ணாமலை யென்னும் தென்சொல் வடிவமே வழக்கூன்றியிருத்தல் காண்க.

திருவண்ணாமலை, கிருதவூழியில் அழன் மலையாகவும், திரேதாவூழியில் மாணிக்க மலையாகவும், துவாபரவூழியிற் பொன்மலையாகவும், கலியூழியிற் கன்மலையாகவும் உருக்கொண்ட தென்பது தொன்மக் கொள்கை.

''செங்கனன் முதல்யுகந் திரேதை மாமணி
பொங்கிய துவாபரம் பொலிந்த
பொன்னிறந்
தங்கிய கலியுகந் தன்னி லேசிலை
யங்கமா மதன்பெய ரருண பூதரம்''
(அருணாசலபு. திருநகர. 30).

அருச்சுனன் தன் தென்னாட்டுத் திருமுழுக்கு யாத்திரையில், ''கற்றார் தொழுமருணாசல மன்போடு கைதொழுதான்'' என்று பாரதம் (அருச்சுனன்றீர். 15) கூறுவதால், திருவண்ணாமலைச் சிவன்கோயிற் பழமை யுணரப்படும்.

**அருணாதி** *aruṇādi*, பெ. (n.) **வேம்பு**; neem tree, *Azadirachta indica* (சா.அக.).

**அருணாதியெலி** *aruṇādi-y-eli*, பெ. (n.) **அருணம் முதலிய அறுவகை நச்செலிகள்**; the six kinds of poisonous rats.

இவை கடிப்பதனால், குடற்காய்ச்சல் (சன்னிபாதக்) குறிகளுடன் அரத்தம் வடிதல், கட்டிகள் எழும்புதல் முதலியவற்றை யுண்டாக்கும்; Their bites are characterised by symptoms of typhoid, haemorrhage, appearance of boils, abscesses and so on (சா.அக.).

*[அருணம் + ஆதி (முதலிய) + எலி.]*

**அருணினம்** *aruṇiṉam*, பெ. (n.) 1. **நன்னாரி**; Indian sarsaparilla, *Hemidesmus indicus*. 2. **திருநாமப்பாலை**; wild sarsaparilla, *Smilax macrophylla* (சா.அக.).

**அருணூல்** *aruṇūl*, பெ. (n.) **வேத சிவாகமங்கள்**; the Vēdas and the Šaiva Āgamas. "அருணூலின் விதித்த வாறே" (உண்மைநெறி. 2).

*[அருள் + நூல்.]*

இது பிற்காலத் தமிழர் மேற்கொண்ட ஆரியக் கொள்கை.

**அருணெறிசுரக்குஞ்செல்வன்** *aruṇeṟi-šurakkuṉ-celvaṉ*, பெ. (n.) **புத்தன்** (திவா.); the Buddha.

*[அருள் + நெறி + சுரக்கும் + செல்வன்.]*

**அருணை**[1] *aruṇai*, பெ. (n.) 1. **அதிவிடையம்;** (நாநார்த்த.); atis, *Aconitum heterophyllum*. 2. **சிவதை;** Indian jalap. 3. **நன்னாரி;** Indian sarsaparilla, *Hemidesmus indicus*.

**அருணை**[2] *aruṇai*, பெ. (n.) 1. **பாலை**; desert (சா.அக.). 2. **திருவண்ணாமலை**; *Tiruvaṇṇā-malai*. "அருணையை நினைக்க வெய்தலா முத்தியென் றுரைத்தீர்" (அருணாசலபு. திருநகர. 45).

*[1. அருணை = ஒருகா. அருணனால் (கதிரவனால்) எரிக்கப்பட்ட நிலம். 2. அருணமலை → அருணை (இலக்கிய மரூஉ).]*

**அருத்தி**[1] *arutti*, பெ. (n.) **கள்** (அக.நி.); toddy.

*[ஒருகா. அருந்து → அருத்து → அருத்தி.]*

**அருத்தி**[2] *arutti*, பெ. (n.) **கூத்து** (வின்.); dancing.

**அருத்து-தல்** *aruttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **உண்பித்தல்**; to feed. "வேதியர்க் கருத்திப் பின்னர்" (நைடத. நாட்டு. 14). 2. **நுகர (அனுபவிக்க)ச் செய்தல்**; to cause to experience.

*[அருந்து (த.வி.) → அருத்து (பி.வி.). அருந்துதல் = உண்டல்.]*

**அருந்தங்கம்** *arundaṅgam*, பெ. (n.) **முத்திரை**; seal (சா.அக.).

**அருந்தல்** *arundal*, பெ. (n.) 1. **அருமை** (சூடா.), **அரிதாய்க் கிடைத்தல்**; scarcity, rarity, dearth. 2. **விலையேற்றம், கடுவிலை**; exorbitant price. மலைப்பழம் அருந்தலா யிருக்கிறது.

*[அரு → அருந்து → அருந்தல்.]*

**அருந்தவர்** *arundavar*, பெ. (n.) **முனிவர்;** sages, hermits. "அயரு மருந்தவர் தம்பழி" (கோயிற்பு. பதஞ்சலி. 63).

ம. அருந்தவர்

*[அரு = செயற்கரிய. தவர் = தவஞ்செய்தோர். தவம் → தவன் (ஒ.), தவர் (ப.).]*

**அருந்திறல்** *arundiṟal*, பெ. (n.) 1. **அரிய திறமை;** great prowess, rare capacity, remarkable valour, extraordinary might. 2. **அரிய திறமையுடையவன்;** person of great prowess, valiant warrior. "அருந்திறல் பிரிந்த வயோத்தி போல" (சிலப். 13. 65).

*[அரு (அரிய) + திறல் (திறமை). திறம் → திறன் → திறல். திறல் = திறலோன் (பண். ஆகு.).]*

**அருந்து-தல்** *arundu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **உண்ணுதல்;** to eat, as a meal. "அருந்தேல் விடலிபதி மனையிலன்னம்" (சைவச.பொது. 245). 2. **தின்னுதல்**; to eat a thing like sweet-meat, to eat, as a bird or animal. "அருந்துதற் கினிய மீன் கொணர" (கம்பரா. யுத்த. வீடணன். 29). 3. **குடித்தல்**; to drink. "தண்ணீ ரருந்தி" (தாயு. எந்நாள். அருளி. 11). 4. **விழுங்குதல்;** to swallow. "அங்கவற்றையும் பற்றி யருந்தினான்" (கந்தபு. யுத்த. இரண்டாநாட்சூர. 65). 5. **நுகர்தல் (அனுபவித்தல்)**; to experience, either good or evil, pleasure or pain, reap the fruits of actions done. 6. **தன்னிடத்துக் கொள்ளுதல்;** to contain, hold. "சாந்தருந்தி மைந்திறை கொண்ட மலர்ந்தேந் தகலத்து" (குறிஞ்சிப். 120).

ம. அருந்துக

*[ஆர்தல் = உண்ணுதல். ஆர் → அரு → அருந்து.]*

**அருந்தும்மட்டி** *arundummaṭṭi*, பெ. (n.) **சிறு தும்மட்டி**; a small species of bryony, *Bryonia callosa*.

**அருந்தோடு** *arundōḍu*, பெ. (n.) *பழைய வரி வகை* (S.I.I. vii, 30.); an ancient tax.

*[ஒருகா. அரு + தோடு, அல்லது அருந்து + ஓடு.]*

**அருநங்கன்** *aru-naṅgaṉ*, பெ. (n.) **நல்ல பாம்பு**; cobra (சா.அக.).

**அருநரகம்** *aru-naragam*, பெ. (n.) 1. *பாழ்நரகம்* (சங்.அக.); the most miserable hell. 2. *கடு நோவு (வேதனை)*; severe pain.

**அருநிலம்** *aru-nilam*, பெ. (n.) *பாலைவனம்* (தொல். பொருள். புறத். 24, நச். உரை); desert tract.

*[அரு + நிலம்.]*

**அருநிலை** *aru-nilai*, பெ. (n.) 1. **ஆழமான நீர் நிலை**; deep water. "வாய்ப்பரு நீரும் அரு நிலையாய்" (திவ். இயற். திருவிருத். 16, வியா.) 2. **கடந்துசெல்லற்கரிய ஆற்றுநிலம்** (சங்.அக.); river-bed that is difficult to pass over. 3. *போர்நிலை* (சங்.அக.) (பாரத.); state of war, stage of battle, belligerency.

*[அரு = அரிய, கடிய. நில் → நிலை = நிலைமை. 'ஐ' தொ.பெ. ஈறு.]*

**அருநிழல்** *aru-niḻal*, பெ. (n.) **விளக்கின் சிறு நிழல்** (இ.வ.); shadow cast by a lamp (Loc.) (செ.அக.).

**அருநீர்** *aru-nīr*, பெ. (n.) 1. **பாசனத்திற்கு உதவும் ஏரிநீர்** (C.G.); water in a public reservoir available for irrigation. 2. *கண்ணீர்*; tears (சா.அக.).

*[அருவுதல் = மெல்லெனச் செல்லுதல். அருவு நீர் → அருநீர்.]*

**அருநீர்த்ததும்பல்** *aru-nīr-t-tadumbal*, தொ.பெ. (vbl.n.) **எப்போதும் நீரொழுகும் கண்ணோய்**; an eye disease attended always with tears.

*[அருவு + நீர் + ததும்பல். ததும்புதல் = நிறைதல், நிரம்பி வழிதல். ததும்பு → ததும்பல். 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அருநீலியம்** *aru-nīliyam*, பெ. (n.) **சிறுநீலி**; small-leaved indigo plant (சா.அக.).

*[அரு (சி.பொ. முன்.) → அரு = சிறு. நீல் → நீலி → நீலியம். நீலி = நீலச்சாயங் காய்ச்ச வுதவுஞ் செடி.]*

**அருநெஞ்சு** *aru-neñju*, பெ. (n.) **விருப்பின்மை** (இ.வ.); unwillingness, reluctance (Loc.). அரைமனத்தோடு அருநெஞ்சுப் பட்டுக் கொடுத்தான்.

*[அரு = அரிய, இல்லாத. நெஞ்சு = விருப்பம்.]*

**அருநெஞ்சுப்படு-தல்** *aru-neñju-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **விருப்பமில்லாதிருத்தல்**; to be unwilling, reluctant.

*[அருநெஞ்சு = விருப்பமின்மை. படுதல் = உண்டாதல்.]*

**அருநெஞ்சு** பார்க்க; see *aru-neñju*.

**அருநெல்லி** *aru-nelli*, பெ. (n.) 1. **சிறுநெல்லி**; otaheite goose-berry, m.tr. *Phyllanthus distichus*. "அருநெல்லிக்காய் குளிர்ச்சியாம்" (பதார்த்த. 671) (செ.அக.) — **வரிநெல்லி, இதற்கு அரிநெல்லி யென்று பெயர்**; a small tree, called country star goose-berry, *Phyllanthus distichus* (சா.அக.). 2. **மரவகை** (L.); species of goose-berry balsam tree, l.tr., *Garuga pinnata* (செ.அக.).

*[அரி (சி.பொ. முன்.) + நெல்லி.]*

**அருநெல்லிப்பழம்** *aru-nelli-p-paḻam*, பெ. (n.) **ஒருவகைப் பழம்**; a kind of fruit, *Chillic millic* (சா.அக.).

இது தெளிவற்ற, மயக்கத்திற்கிடமான பெயர்.

**அருநெறி** *aru-neṟi*, பெ. (n.) 1. **போதற்கரிய வழி**; difficult way, that perplexes one. "அரு நெறிக் கடவுளர்க் கமுத மூட்டுதல்" (பாரத. வேத்திரகீ. 34). 2. **ஒடுங்கிய வழி**; narrow way. "முடுக்கரு மருநெறித் தொடர்பும்" (உப தேசகா. சிவவிரத. 141). 3. **(சிறு) மனை வாயில்** (பிங்.); narrow gateway or entrance. 4. **பாலைவனம்** (பிங்.); desert tract. 5. **நரகம்** (சங்.அக.); hell.

*[அரு = அரிய. நேர் → நெறி.]*

**நெறி** பார்க்க; see *neṟi*.

**அருநேரளி** *aru-nēraḷi*, பெ. (n.) பிடங்குநாரி; a plant (சா.அக.).

**அருப்பம்**[1] *aruppam*, பெ. (n.) 1. **நெற்கதிர்க் கரு**; germ of a grain of paddy. "அருப்ப மாகில வருங்கதிர்" (இரகு. நாட். 32). 2. **பிள்ளை**; child (சா.அக.). 3. **முதலில் முளைக்கும் மீசை**;

the sprouting downy moustache. 4. *மயிர்க் கிளர்ச்சி*; goose-flesh, horripilation. 5. *பனி (த்துளி)*; dew (drops). 6. *முகநோய்*; a disease of the face (சா.அக.). 7. *கள்*; liquor. 8. *மோர்*; butter-milk.

[உரு → அரு → அரும்பு. அரும்புதல் = தோன்றுதல். அரும்பு → அருப்பு → அருப்பம். அரும்பு + அரிசி. கள், புளிக்கவைத்த அரிசி யினின்று இறக்கியதாயிருக்கலாம். அரும்பு → அருப்பு → அருப்பம். மோர் கள்போற் புளிப்பது.]

**அருப்பம்**[2] *aruppam*, பெ. (n.) 1. *சிறிது*; that which is little, small, unimportant. "அருப்ப மென்று பகையையும்.............இகழ்ந்தால்" (கம்பரா. யுத்த. முதற்போர். 92). 2. *மா* (பிங்.); flour. 3. *மாப்பிட்டு* (பரி.அக.); pastry made of flour.

[அல் = சில், துண்டு. அல் → அல்கு. அல்குதல் = சிறுத்தல். அல் → அர் → அரி = அரிசி (சி.பொ.முன்.). அர் → அரு → அருப்பு → அருப்பம் = சிறியது, நுண்ணியது.]

**அருப்பம்**[3] *aruppam*, பெ. (n.) 1. *அருமை*; difficulty. "அருப்பமு முடைய" (மலைபடு. 222). 2. (*பகைவர் வெல்லுதற்கரிய*) *அரண்*; fort, fortress. "வீங்குசிறை வியலருப்பம்" (புறநா. 17 : 27). 3. *மலைக்கோட்டை* (பிங்.); mountain fortress. 4. *காட்டரண்* (பிங்.); jungle fortress. 5. *காடு* (சங்.அக.); jungle, forest. 6. *திண்மை*; firmness. "அருப்ப மழிப்ப" (பரிபா. 10 : 57). 7. *வழுக்குநிலம்* (பிங்.); slippery ground. 8. *நோய்*; disease. 9. *துயரம்* (நாநார்த்த.); grief.

ம. அரிப்பம், அருப்பம்.

[அருமை = அரிதாயிருத்தல், கடினம், திண்மை, கடுமை, பொறுத்தற் கருமை. அரு → அருப்பு → அருப்பம்.]

**அருப்பம்**[4] *aruppam*, பெ. (n.) 1. *ஊர்* (பிங்.); village, town, city. 2. *சோலை* (பொதி நி.); grove.

[அல்லுதல் = பொருந்துதல். அல் → அர் → ஆர். ஆர்தல் = பொருந்துதல், சேர்தல், கூடுதல். அர் → அரு → அருப்பு → அருப்பம் = பலர் கூடிவாழும் ஊர், பலமரஞ் சேர்ந்த சோலை.]

**அருப்பம்**[5] *aruppam*, பெ. (n.) 1. *தொடரிச்செடி* (மலை.); species of scutia (செ.அக.)—*தொடரிப் பூடு*; a species of scutia, prickly buck-thorn, *Scutia indica* alias *Rhamnus circumcissus* (சா.அக.). 2. *கீரை*; greens (சா.அக.).

**அருப்பம்பூச்சி** *aruppam-pūcci*, பெ.(n.) *பச்சைப் பூச்சிவகை* (இ.வ.); a green insect (Loc.).

[ஒருகா. அரும்பு + பூச்சி. வலித்தலும் 'அம்' சாரியையும் புணர்ச்சி விளைவு. ஒ.நோ: கரும்பு + கழி – கருப்பங்கழி.]

**அருப்பலம்** *aruppalam*, பெ. (n.) 1. *அனிச்ச மரம்* (சூடா.); ringworm tree, *Rhinacanthus communis* (சா.அக.). 2. *புல்லரிசி*; the seed of a grass (சா.அக.). 3. *அனிச்சமலர்* (திவா.); a flower supposed to be so delicate as to droop or even perish when smelt (செ.அக.).

**அருப்பு**[1] *aruppu*, பெ. (n.) 1. *கிளைத்தல்* (சங். அக.); ramification, multiplication, increase. "அருப்பறா வாக்கம் பலவுந் தரும்" (குறள், 522). 2. *தயிர்*; curd.

[அரும்புதல் = தோன்றுதல், கிளைத்தல், பெருகுதல். அரும்பு → அருப்பு (தொ.பெ.).]

**அருப்பு**[2] *aruppu*, பெ. (n.) 1. *கொலை*; killing, murder. "அருப்புடை யறலி னஞ்சம்" (பாரத.நச்சு. 31). 2. *துயர்*; grief. "அருப் பறப் பிறந்த கோப மாறினான்" (கம்பரா. யுத்த. வருண. 74).

[அர் → அரி. அரிதல் = அறுத்தல். அரித் தல் = அழித்தல். அர் → அரம் = அராவுங்கருவி. அர் → அரங்கு = அறை. அர் → அறு. அறுத்தல் = நீக்குதல். அர் → அரு → அருப்பு.]

**அருப்புச்சரிக்கடுக்கன்** *aruppu-c-cari-k-kaḍukkaṉ*, பெ.(n.) *அரும்புவடிவான கடுக்கன்*; bud-shaped ear-ring (W.).

[அரும்பு + சரி (ஒப்பு) + கடுக்கன் (ஆடவர் காதணி).]

**அருப்புத்துருப்பு** *aruppu-t-turuppu*, பெ. (n.) 1. *அருந்தேட்டம்* (சங்.அக.); hard-earned money, rare wealth. 2. *அருமை*; rareness, preciousness, dearness.

[அரு → அருப்பு = அருமை. துரு → துருப்பு = தேட்டு.]

**அருப்புத்தொழில்** *aruppu-t-toḻil*, பெ. (n.) *அணி கலங்களில் அரும்பு வடிவமைத்து அழகுபடுத்து தல்* (கலித். 104, உரை); filigree work in imitation of flower buds.

[அரும்பு + தொழில்.]

**அருபாகம்** *arubāgam*, பெ. (n.) **கையாந்தகரை**; eclipse plant, *Eclypta prostrata* (சா.அக.).

**அருபாரம்** *arubāram*, பெ. (n.) *அருபாகம் பார்க்க*; see **arubāgam**.

**அரும்பகைத்தொள்ளாயிரம்** *arumbagai-t-toḷḷā-yiram*, பெ. (n.) **ஒட்டக்கூத்தரால் இயற்றப் பட்ட 900 செய்யுள் கொண்ட ஒரு** பனுவல் (தமிழ்நா. 117); name of a poem of 900 verses by *Oṭṭakkūttar*. தொள்ளாயிரம் என்பது முதலில் ஒன்பதாயிரத்தையே (9,000) குறித்தது. பின்னர், எக் காரணத்தை யிட்டோ ஒன்பது (9) என்னும் எண்ணின் முந்துபெயரான தொண்டு என்னுஞ் சொல் வழக்கற்றுப் போக, அதனிடத்திற்கு ஒன்பது பத்தைக் குறிக்கும் தொண்பது (90) என்னுஞ் சொல் இறங்கிவிட்டது. அதனால் அதன் மேலிடப் பதின்படி யுயர்வு எண்ணுப்பெயர் களும் முறையே ஒவ்வோர் இடம் கீழிறங்கி விட்டன. ஆகவே, இன்று தொண்ணூறு என்னும் சொல்லிற்குத் தலைமாறாகத் தொள்ளாயிரம் என்னும் சொல் வழங்கு கின்றது. இதைக் கீழ்வரும் பட்டியலால் தெளிந்துகொள்க.

9. தொண்டு
90. தொண்பது
900. தொண்ணூறு
9000 தொள்ளாயிரம்

இன்னும் இதன் விளக்கத்தை **ஒன்பது, தொண்டு** என்னுஞ் சொற்கீழ்க் காண்க.

**அரும்பண்டம்** *arumbaṇḍam*, பெ. (n.) **கடற் றாரம், மலைத்தாரம் முதலிய கிடைத்தற்கரிய பொருள்** (பிங்.); rare commodity, choice articles obtained from the seas, hills, etc.

*[அரும் + பண்டம்.]*

**அரும்பத்தியம்** *arumbattiyam*, பெ. (n.) **கடும் பத்தியம்**; strict regimen or diet (சா.அக.).

*[அரும் + பத்தியம்.]*

**மானியர் வில்லியம்சு சமற்கிருத-ஆங்கில அகரமுதலியில்** 'patha, way, path' என்றும் 'pathya, 'belonging to the way, wholesome diet' என்றும் குறிக்கப்பட்டுள்ளன. தமிழில், மருத்துவ நெறிப்பட்ட உணவு என்றோ, நோயாளிக்குப் பதமான உணவு என்றோ குறிக்கலாம்.

**அரும்பதம்**[1] *arumbadam*, பெ. (n.) **1. அரிய செவ்வி**; rare opportunity, most appropriate occasion, excellent condition, most favourable mood. 2. **சிறந்த வுணவு**; rich food. "அழிவு நன்ககல வரும்பத மூட்டா" (பெருங். வத்தவ. 3 : 20).

*[அரும் + பதம்.]*

**அரும்பதம்**[2] *arumbadam*, பெ. (n.) **பொருள் தெரியாச் சொல்**; rare or difficult word.

*[அரு + Skt. pada > த. பதம் (சொல்).]*

**அரும்பதவுரை** *arumbada-v-urai*, பெ. (n.) **அரிய சொல்லுக்கு உரை**; glossary.

*[அரு + Skt. padam + உரை.]*

**அரும்பர்** *arumbar*, பெ. (n.) **அரும்பு**; bud. "பரம்புவ தாமரை யரும்பர்" (தணிகைப்பு. நாட்டு. 86).

*[அரும்பு → அரும்பர். எ-டு : இடக்கு → இடக்கர், வண்டு → வண்டர்.]*

குற்றுகர வீற்றுச் சொற்கள், பொருண் மாற்றம் பற்றியோ சொன்னீட்டம் பற்றியோ சிறுபான்மை 'அர்' என்னும் மேலீறு **பெறும்.**

**அரும்பாடு** *arumbāḍu*, பெ. (n.) **கடின வுழைப்பு**; hard work or labour. அரும்பாடு பட்டுப் பெரும்பொரு ளீட்டினான் (உ.வ.).

*[அரு + பாடு. படுதல் = வருந்துதல். படு → பாடு = வருந்திய வுழைப்பு.]*

**அரும்பாலை** *arumbālai*, பெ. (n.) **பாலைப்பண் வகை** (பிங்.); a primary melody-type of the *pālai* class. 'அரும் பாலைக்கு நரம்பு இரட் டித்த பெற்றித்து' (சிலப். 3 : 84-5, அரும்.).

**அரும்பாவி** *arumbāvi*, பெ. (n.) **பெரும்பாவி, கொடும்பாவி**; heinous sinner. "கேகயர் கோன்மகளாய்ப் பெற்ற அரும்பாவி சொற் கேட்ட அருவினையேன்" (திவ். பெருமாள். 9 : 5).

*[அரு + Skt. pāpin > த. பாவி. Skt. > pāpa > த. பாவம் (தீவினை) → பாவி (தீவினை ஞன்).]*

**அரும்பி-த்தல்** *arumbi-*, பெ. (n.) 4 செ.கு.வி. (v.i.) **அரும்பு தோன்றுதல், தோன்றுதல்**; to bud, sprout, rise. "அரும்பித்த செஞ்ஞாயி றேய்க்கு மடி" (தேவா. 6.6 : 4).

*[உரு → அரு → அரும்பு → அரும்பி.]*

**அரும்பி** *arumbi*, பெ. (n.) **ஒரு செய்நஞ்சு** (குங்குமபாடாணம்)(மூ.அ.); a prepared arsenic.

**அரும்பிஞ்சு** *arum-piñju,* பெ. (n.) ***பூம்பிஞ்சு, மிக இளங்காய்***; tender fruit recently formed from the flower.

*[அரும் + பிஞ்சு.]*

**அரும்பிணி** *arum-piṇi,* பெ. (n.) ***தீராநோய்***; incurable disease. "ஐயா வதற்கு மரும்பிணி யொன் றெய்தியக்கா லுய்யானே" (கந்தபு. அசுர. மார்க்கண். 18).

*[அரு + பிணி. பிணித்தல் = கட்டுதல், இறுக்குதல், வருத்துதல், நோவுறுத்துதல்.]*

**அரும்பு-தல்** *arumbu-,* 5 செ.குன்றாவி. (v.i.) 1. ***அரும்பு தோன்றுதல், முகிழ்த்தல்***; to bud, sprout. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி" (குறள், 1227). 2. ***சற்றே அல்லது சிறிதே தோன்றுதல்;*** to sprout slightly or a little. "அரும்பு மிள நகை போற்றி" (திருவிளை. கடவுள். 4), "அமுதூற் றரும்பி" (தாயு. பொருள்வண. 2). 3. ***தோன்றுதல்***; to sprout, spring forth.

ம. அரும்புக; து. அரும்பு.

*[உருத்தல் = தோன்றுதல். உரு → அரு → அரும்பு.]*

**அரும்பு** *arumbu,* பெ. (n.) 1. ***மொட்டு*** (பிங்.); bud. 2. ***அணிகலத்தின் அழகிய அரும்புவேலை*** (வின்.); filigree work in imitation of buds. 3. ***முகத்திற்றோன்றும் இளமயிர்;*** soft sprouting hair, beard or moustache in its early stage. முகத்தில் அரும்பிறங்குகிறது. 4. ***அரிசி***; rice. "அரும்புக்குங் கொத்துக்கும் வந்தார்" (தனிப்பா. தி. 1. பக். 96).

ம. அரிம்பு, அரும்பு; க. அரும்பு.

*[உருத்தல் = தோன்றுதல். உரு → அரு → அரும்பு.]*

**அரும்புகட்டி** *arumbu-katti,* பெ. (n.) ***சிறப்பாகத் திருச்சி இராமநாதபுரம் மாவட்டங்களில் வாழ் பவரும் மாலைகட்டுவதைத் தொழிலாகக் கொண்டவருமான வேளாண்குலப் பிரிவினர்;*** name of a subdivision of the Vēḷāḷas, esp. in Thiruchirāppaḷḷi and Rāmanāthapuram districts, arising from their occupation of making garlands.

*[அரும்பு + கட்டி. கட்டு → கட்டி. 'இ' வி.முத. ஈறு.]*

**அரும்புச்சரம்** *arumbu-c-caram,* பெ. (n.) ***கண்ட சரம்;*** necklace. 'ஒரு சரட்டில் முல்லை அரும்பு களைக் கோவையாக அமைத்துக் கழுத்தில் அணிவது அரும்புச்சரம் எனப்படும். இது கண்டசரம் என்றும் சொல்லப்படும்' (சி.செ. பக். 93).

*[அரும்பு + சரம்.]*

**அரும்புமணி** *arumbu-maṇi,* பெ. (n.). ***பொன்னாற் செய்யப்பட்ட அரும்பு வேலைப்பாடுள்ள கழுத்தணி*** (வின்.); necklace of gold beads set with tiny bud-like granules of gold.

ம. அரும்புமணி

**அரும்புவளையம்** *arumbu-vaḷaiyam,* பெ. (n.) ***தாழ்வட மணிகளின் இடையிற் கோக்கும் பொன் அல்லது வெள்ளி வளையம்***; gold or silver chain rings interspersed with beads in a rosary.

*[அரும்பு + வளையம். வள் → வளை → வளையம்.]*

**அரும்பூட்டு** *arumbūṭṭu,* பெ. (n.) 1. ***அரைக் கச்சை, கழுத்தணி, வில்நாண் முதலியன குட்டையாயிருப்பின் வருந்தி யிழுத்துப் பூட்டுவது*** (யாழ்ப்.); anything too short to be securely fastened, as a short girdle, necklace or bow-string. 2. ***பேசி யிணக்கமாக முடிவு செய்யக் கூடாத செய்திக் கூறு***; that which is difficult for a negotiated settlement. 3. ***சிக்கிக் கொள்கை***; entanglement, ensnarement. 4. ***இயற்கைக்கு மாறான அல்லது நிரடான சொற் றொடர்ப் புணர்ப்பு***; difficult or unnatural construction in language. சொற்களை யரும் பூட்டாய்த் தொடுத்துப் பேசினான்.

*[அரு + பூட்டு. பூண் (த.வி.) → பூட்டு (பி.வி.) = பொருந்து, புணர்ப்பு (தொ.பெ.).]*

**அரும்பூது-தல்** *arumbūdu-,* பெ. (n.) 5 செ.கு.வி. (v.i.) ***ஊதிப் பொன்மணி செய்திணைத்தல்*** (வின்.); making globules out of melted gold by blowing and joining them with one another.

*[அரும்பு + ஊது.]*

**அரும்பெறல்** *arum-peṟal,* பெ. (n.) ***பெறுதற் கரியது***; that which is difficult to obtain. "அரும்பெற லடிகள்" (திவ். திருவாய். 1.3:1).

*[அரு + பெறல். பெறு → பெறல். 'அல்' தொ. பெ. ஈறு.]*

**அரும்பைத்தொள்ளாயிரம்** *arumbai-t-toḷḷāyiram*, பெ. (n.) அரும்பகைத்தொள்ளாயிரம் பார்க்க; see *arumbagai-t-toḷḷāyiram*.

**அரும்பொருள்** *arum-poruḷ*, பெ. (n.) 1. பெறுதற்கரிய பொருள்; anything difficult to obtain. 2. விலையுயர்ந்த பொருள்; any precious thing. 3. பெருஞ்செல்வம்; enormous wealth. 4. எளிதில் விளங்காத பொருள்; meaning that is difficult to grasp. 5. பிதிர் (திவா.); riddle.

ம. அரிம்பொருள்

[அரு + பொருள். பொல் → பொர் → பொரு → பொருள் = பொருந்தியது.]

**அரும்பொருள்வினைநிலை** *arum-poruḷ-vinai-nilai*, பெ. (n.) செயற்கரிய மறச்செயல் புரிந்து செய்யும் திருமணம், அசுரமணம் (இறை. 1, உரை); marriage as reward for a heroic deed.

அரும்பொருள் வினைகளாவன: கொல் லேறு தழுவல், திரிபன்றியெய்தல், கன வில் நாணேற்றல், கடுமாக் கோறல் முதலியன.

[அரு + பொருள் + வினை + நிலை. நில் → நிலை. 'ஐ' தொ.பெ. ஈறு.]

அரும்பொருள் பார்க்க; see *arum-poruḷ*.

**அருமணம்** *arumaṇam*, பெ. (n.) ஒரு கீழ்த்திசைத் தீவு; an eastern island.

**அருமணவன்** *arumaṇavaṉ*, பெ. (n.) 1. அகிலுக்கும் யானைக்கும் பெயர் பெற்ற ஒரு கீழ்த் திசைத் தீவு; name of an island noted for elephants and aromatics. "அருமணவனானை" (திவ். திருநெடுந். 14, வியா.). 2. அருமணத் தீவின் யானை; elephant from the above island. 3. அருமணத் தீவின் அகில்; eaglewood from the same island. 'அகில்: அருமணவன் தக்கோலி கிடாரவன் காரகி லென்று சொல்லப்பட்ட பல வகைத்தாய தொகுதியும்' (சிலப். 14 : 108, அடியார்க். உரை).

[அருமணம் → அருமணவன்.]

**அருமதாளம்** *aruma-tāḷam*, பெ. (n.) (இசை) தொண்டாளத்துள் (தவதாளத்துள்) ஒன்று (திவா.); (Mus.) variety of time-measure, one of nine.

[ஒருகா. அருமம் + தாளம்.]

**அருமந்த** *aru-manda*, கு.பெ.எ. (adj.) ஆருயிர் மருந்து போன்ற, அருமையான; very rare, precious as nectar, most endearing. "அருமந்த நன்மை" (தேவா. 6 . 83 : 7).

ம. அருமாந்த

[அரு + மருந்து + அன்ன – அருமருந்தன்ன → அருமந்தன்ன → அருமந்த. அரு = பெறற்கரிய. அன்ன = ஒத்த.]

**அருமந்தன்ன** *aru-mandaṉṉa*, கு.பெ.எ. (adj.) அருமந்த பார்க்க; see *aru-manda*. "அருமந் தன்ன வதிர்கழல் சேர்மினோ" (தேவா. 5 . 97 : 21).

**அருமருந்தன்ன** *aru-marund(u)-aṉṉa*, கு.பெ.எ. (adj.) அருமந்த பார்க்க; see *aru-manda*.

**அருமருந்தான்** *aru-marundāṉ*, பெ. (n.) ஆருயிர் மருந்து போன்றவன்; one, precious as nectar.

[அரு + மருந்தான் (மருந்து + ஆன்). 'ஆன்' ஆ.பா.ஈறு., உவமைக் கருத்தை யுட்கொண்டது.]

**அருமருந்து** *aru-marundu*, பெ. (n.) 1. ஆருயிர் மருந்து, சாவாமருந்து; ambrosia, elixir of life. 2. பெறற்கரிய மருந்து; rare medicine. "அரந்தைவெம் பிறவி யென்னோய்க் கரு மருந் தனைய வையா" (கம்பரா. கிட்கிந்தா. வாலி. 128).

**அருமவதி** *arumavadi*, பெ. (n.) ஒரு பண்; a melody-type (செ.அக.) — அருமலதி (சங்.அக.).

**அருமறை** *aru-maṟai*, பெ. (n.) 1. அறிதற்கரிய மறைநூல்; sacred scripture, as difficult to understand. "அருமறை முதல்வனை யாழி மாயனை" (பாரத. வாரணா. மிகைப். 1). 2. அறிதற்கரிய மறைபொருள்; profound secret. "அருமறை செவிலி யறிந்தமை கூற லும்" (நம்பியக. கள. 48).

[அரு + மறை.]

**அருமறைக்கொடியோன்** *aru-maṟai-k-koḍiyōṉ*, பெ. (n.) துரோணாசாரியன் (சூடா.); Drōṇācārya.

[அரு + மறை + கொடியோன்.]

**அருமாந்த** *aru-mānda*, கு.பெ.எ. (adj.) அருமந்த என்பதன் கொ.வ. திரிபு; colloq. corruption of *arumanda*.

ம. அருமாந்த

**அருமிதம்** *arumidam*, பெ. (n.) அளவின்மை, அளவிறந்த நிலை; transcending limits. "சேணுய ரருமித நிலையவர் தமக்கு மாகுமே" (இரகு. இரகுவு. 29).

[அருமை + இதம் (ஈறு). ஒ.நோ: பெருமை + இதம் – பெருமிதம்.]

**அருமிதி** *aru-midi*, பெ. (n.) *மிகுதி, ஏராளம்*; excessiveness. 'அருமிதியான பணத்தை வாங்கிக்கொண்டு' (திவ். திருப்பள்ளி. 2, வியா.).

[அரு + மிதி. மதி > **Skt**. miti. மதித்தல் = அளவிடுதல். மதி = அளவு.]

**அருமேனி** *aru-mēṉi*, பெ. (n.) *கடவுளின் உருவிலா வடிவம்*; invisible form of God. "உருவிறந்த வருமேனி" (சி.சி. சுபக். 1 : 55).

**அருமை** *arumai*, பெ. (n.) 1. *சிறுமை*; smallness, minuteness. 2. *எளிதிற் பெறக்கூடாமை*; difficulty of attainment. "அருமையி னெய்தும் யாக்கையும்" (சீவக. 2748). 3. *எளிதிற் காணக் கூடாமை* (*அபூர்வம்*); rareness. இன்று நீர்நாயைக் காண்பது அருமை. 4. *எளிதிற் செய்யக்கூடாமை*; difficulty of performance. "அருமை யுடைத்தென் றசா வாமை வேண்டும்" (குறள், 611). "அருமை நோன்புக ளாற்றுதி யாமன்றே" (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 20). 5. *முயற்சி வருத்தம்* (*பிரயாசம்*); laborious effort. "கான்புறஞ் சேறலி லருமை காண்டலால்" (கம்பரா. அயோத். தைல. 30). 6. *பெருமை, மேன்மை, சிறப்பு* (திவா.); greatness, pre-eminence, excellence, preciousness. 7. *பெரும்பாலு மின்மை*; being nearly extinct. வெள்ளை யானையைக் காண்ப தருமை. 8. *இன்மை*; nothingness, non-existence, impossibility. மாந்தன் எத்துணை முயலினும் சாவாமை அருமை. 9. *கிட்டுதற்கருமை*; inaccessibility. "உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்" (குறள், 743).

ம. அரும, அரிம; க. அருது; தெ. அரு.

[அரு → அருமை. 'மை' பண்.பெ. ஈறு.]

**அருமைக்காரன்** *arumai-k-kāraṉ*, பெ. (n.) *கொங்க வேளாளரின் பூசாரி*; priest of the Koṅgu Vēḷāḷas.

[அருமை = அருமையான சடங்கு. 'காரன்' வி.முத. உணர்த்தும் ஆ. பா. ஈறு.]

**அருமைக்காரி** *arumai-k-kāri*, பெ. (n.) *கொங்க வேளாளர் பூசாரியின் மனைவி*; wife of the priest of the Koṅgu Vēḷāḷas.

[அருமைக்காரன் (ஆ.பா.) – அருமைக்காரி (பெ.பா.). 'காரி' பெ.பா. ஈறு.]

**அருமைசெய்-தல்** *arumai-šey-*, 1 செ.கு.வி. (v.i.) *அருவினை செய்தல், பேராண்மை காட்டுதல்* (சூடா.); to perform heroic deeds. —, 1 செ. குன்றாவி. (v.t.) *அருமைப்படுத்துதல்*; to cherish greatly, to treat endearingly.

**அருமைப்படுத்து-தல்** *arumai-p-paḍuttu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *மிகுதியாக அருமை பாராட்டு தல்*; to cherish greatly, appreciate highly, treat endearingly.

[அருமை + படுத்து. படுதல் (த.வி.) = உண்டாதல். படுத்துதல் (பி.வி.) = உண்டாக்கு தல்.]

**அருமைபெருமை** *arumai-perumai*, பெ. (n.) *அருமையும் பெருமையும்*; preciousness and greatness. அதன் அருமைபெருமை உனக் கென்ன தெரியும்?

[அரு+மை. பெரு+மை. 'மை' பண்.பெ. ஈறு. 'அருமைபெருமை' மரபிணைமொழி.]

**அருமைமணம்** *arumai-maṇam*, பெ. (n.) *பெற்றோர் தம் பிள்ளைகளுள் ஒருவர்க்குத் திருமண மானபின், அருமைக்காரனும் அருமைக்காரியு மாகும் கொங்க வேளாளர் சடங்கு*; ceremony among Koṅgu Vēḷāḷas whereby the parents, after the marriage of one of their children are given the appellation, *arumaikkāraṉ* and *arumaikkāri*.

**அருமொழி** *aru-moḻi*, பெ. (n.) *அருமொழித் தேவர் பார்க்க*; see *aru-moḻi-t-tēvar* (சாஸனத்.).

**அருமொழித்தேவர்** *aru-moḻi-t-tēvar*, பெ. (n.) *முதலாம் இராசராசச் சோழனது பட்டப்பெயர்* (சிவக். பிரபந். பக். 214, கீழ்க்குறிப்பு); a title of Rājarāja I.

[அரு + மொழி + தேவர். அரு = அருமை யான. தேவர் = அரசர்.]

**அருமொழிவிநாயகர்** *aru-moḻi-vināyagar*, பெ. (n.) *தஞ்சைப் பெருவுடையார் கோயிலி லுள்ள தலைமைப் பிள்ளையார்* (*பிரதான விநாயகர்*) (சிவக். பிரபந். தஞ்சைப். காப்பு); the God Gaṇēša in the Šiva shrine in Thañjāvūr.

[அரு + மொழி + **Skt**. vināyaka (இடையு றகற்றி).]

**அருவசிவசமவாதி** *aruva-šiva-šama-vādi*, பெ. (n.) *ஆதனறிவும்* (ஆன்மசித்தும்)

சிவனறிவும் (சிவசித்தும்) ஒத்து வேறாய் நிற்கு மென்னுங் கொள்கையன்; one who holds that the soul and Šiva would stand aloof being intellectually equal............'ஒத்து வேறாய் நிற்குமென்னும் அருவசிவசமவாதிகளை மறுத்தற்குரியவாறு காண்க' (சி.சி. சுபக். 11.11, உரை).

[அ + உருவம் + சிவன் + சமம் + Skt. vādin > த. வாதி. அல் → அ. உரு → உருவு → உருவம். உருவம் > Skt. rūpa.]

**அருவத்திருமேனி** *aruva-t-tiru-mēṉi*, பெ. (n.) **சிவன் நடிக்கும் தொண் வேறுபாடுகளுள் (நவ பேதத்துள்)** அருவ வடிவமாகக் கற்பிக்கப்படும் **சிவம், ஆற்றல் (சத்தி), ஓதை (நாதம்), விந்து எனப்படும் நான்கு மேனிகள்**; the four of the nine manifestations of Šiva, viz., *Šivam*, *Šatti*, *nādam* and *vindu*, said to be invisible forms.

"சிவஞ்சத்தி நாதம் விந்து
சதாசிவந் திகழு மீச
னுவந்தரு ளுருத்தி ரன்றான்
மாலய னொன்றி னொன்றாய்ப்
பவந்தரு மருவ நாலிங்
குருவநா லுபய மொன்றா
நவந்தரு பேத மேக
நாதனே நடிப்ப னென்பர்"
(சி.சி. சுபக். 2:74).

[அ + உருவம் + திரு + மேனி.]

அருவசிவசமவாதி பார்க்க; see *aruva-šiva-šama-vādi*.

**அருவம்**[1] *aruvam*, பெ. (n.) அருமை (யாழ்ப்.); scarcity, rarity (J.).

ம. அருமெ

[அரு → அருவு → அருகு. அருகுதல் = குறைதல், அரிதாதல். அருவு → அருவம்.]

**அருவம்**[2] *aruvam*, பெ. (n.) **உருவமின்மை**; formlessness, incorporeity, invisibility. "அருவமு முருவு மாகி" (கந்தபு. உற்பத். திருவவ. 92).

ம., க., து. அருப; தெ. அருபமு; Mar., Pali arūpa; Sinh. arūpi.

[அல் → அ. உரு → உருவு → உருவம் > Skt. rūpa. அ + உருவம் – அவுருவம் → அருவம். ஒ.நோ: அ + வலம் – அவலம்.]

**அருவர்** *aruvar*, பெ. (n.) **தமிழர்**; the Tamils: "அருவ ரருவ ரெனாவி றைஞ்சினர்" (கலிங். 452).

தெ. அரவவார்லு

[அருவா (நாடு) + அர் (ப.பா. ஈறு).]

அருவா நாடு, அருவா வடதலை நாடு என்பன இடைக்காலக் கொடுந்தமிழ் நாடுகள் பன்னிரண்டனுள் இரண்டு. அவை வட கோடியில் வடுக அல்லது தெலுங்க நாட்டை அடுத்திருந்தன. அருவா என்னும் பொதுப் பெயரால் அவ்விரண்டனையும் ஒரே நாட்டின் இருபகுதிகளாகக் கருதினர் தெலுங்கர். அதனால், அவர் தமிழரை அருவாநாட்டார் என்னுங் கருத்தில் அருவர் அல்லது அரவர் என்றனர்.

அயலாரான வந்தேறிகள் அல்லது அடுத்து வாழும் பிற நாட்டார், ஒரு நாட்டை அதன் எல்லைப்புறப் பகுதியின் பெயராற் குறிப்பது இயல்பே.

ஒ.நோ: கருநாடகம் (தென்னாடு முழுமைக்கும் முகமதியர் இட்ட பெயர்), இந்து (இந்தியா முழுமைக்கும் உரோமகிரேக்கர் இட்டபெயர்). சிந்து → ஹிந்து → இந்து.

**அருவரு-த்தல்** *aru-v-aru-*, 4 செ.குன்றாவி. (v.t.) **துப்புரவின்மை, தீயொழுக்கம், கடும்பகை முதலியவற்றால் மிக வெறுத்தல்**; to loathe, abhor, feel disgusted with on account of filthiness, evil conduct or rancour.

[அர் → அரி. அரித்தல் = அழித்தல். அரி = பகை. அர் → அரு. அருஅரு → அருவரு (இ.கி.). இனி, அறவெறு → அருவரு என்றுமாம்.]

**அருவருப்பு** *aruvaruppu*, தொ.பெ. (vbl.n.) **மிக வெறுப்பு** (சூடா.); disgust, loathing, abhorrence.

[அருவரு → அருவருப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]

**அருவருளிமூலி** *aruvaruḷi-mūli*, பெ. (n.) **சிற்றாமணக்கு**; small-seeded castor-oil plant, *Ricinus communis* (சா.அக.).

**அருவல்** *aruval*, பெ. (n.) 1. **இறுகப் பிணிக்கும் வலி**; griping pain. வயிற்றருவல். 2. **கண் கரித்தல்**; irritation of the eyes (சா.அக.). 3. **துன்பம்** (பிங்.); affliction.

ம. அருவல்

[அருவுதல் = நோவுறுத்துதல், துன்புறுத்துதல். அருவு → அருவல்.]

**அருவன்** *aruvaṉ*, பெ. (n.) **உருவிலி**; one who has no visible body. "அருவனா யிவற்றோடு" (சி.சி. சுபக். 4 : 31).

**அருவா-தல்** *aru-v-ā-*, 6 செ.கு.வி. (v.i.) **பிறப் பறுதல்**; to be freed from rebirths. "அழுந் தேன் வந்துன் னடியடைந்தே னருவாய்ப் போத வழகிதோ" (சீவக. 3021).

[அரு + ஆ. அல் → அ. உரு → உருவு → உருவம் > Skt. rūpa. அ + உரு – அவுரு → அரு.]

ஒ.நோ: அ + வலம் – அவலம்.

**அருவா** *aruvā*, பெ. (n.) **இடைக்காலக் கொடுந் தமிழ் நாடு பன்னிரண்டனுள் ஒன்றான அருவா நாடு**; one of the 12 regions where vulgar dialects of Tamil were said to be spoken during the mediaeval period. "பன்றி யருவா வதன் வடக்கு" (நன். 273, விருத்.).

அருவா நாடு பார்க்க; see *aruvā-nāḍu*.

**அருவாட்டி** *aruvāṭṭi*, பெ. (n.) **அருவாநாட்டுப் பெண்** (தொல். சொல். பெயர். 11, நச். உரை); woman of *aruvānāḍu*.

தெ. அரவத

**அருவாணம்** *aruvāṇam*, பெ. (n.) 1. **செப்புத் தட்டு, தாம்பாளம்**; copper tray, platter. 2. **கோயில் திருச்சோறு (பிரசாதம்)** (கோயிலொ. 50); food offered to a deity in a temple. இது சுரிவாண மெனவும் படும். தேவநிலையங் களிலிருந்து (தேவாலயங்களிலிருந்து) பெரி யோர்க்குச் செய்யுஞ் சிறப்பிற்கு வழங்கப் படுகிறது (சங்.அக.).

க. அரிவாண; தெ. அரிவாணமு; பிராகி. ஆரிவாண.

**அருவாணாடு** *aruvāṇāḍu*, பெ. (n.) **அருவா நாடு** பார்க்க; see *aruvā-nāḍu*. 'அருவாணாட்டார் சிறுகுளத்தைக் கேணி யென்றும்.........வழங்கு வர்' (நன். 272, மயிலை.).

[அருவாள் + நாடு.]

**அருவா நாடு** *aruvā-nāḍu*, பெ. (n.) **இடைக்காலப் பன்னிரு கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று, தென்னார்க்காடு மாவட்டத்திலொரு பகுதியும் வடார்க்காடு மாவட்டத்திலொரு பகுதியுஞ் சேர்ந்த நிலப்பாகமாகத் தெரிகின்றது**; one of the 12 regions where vulgar dialects of Tamil are said to have been spoken during the mediaeval period, possibly comprising a portion of the South Arcot district and another of the North Arcot district.

'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு (கொடுந்தமிழ்) நிலமாவன...........அருவாநாடு,............என இவை' (தொல். சொல். எச்ச. 4, உரை).

**அருவாவடக்கு** *aruvā-vaḍakku*, பெ. (n.) **அருவா வடதலை** பார்க்க; see *aruvā-vaḍa-talai* (சங். அக.).

"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றியருவா வதன்வடக்கு.................."
(நன். 272, மயிலை.).

**அருவாவடதலை** *aruvā-vaḍa-talai*, பெ. (n.) **இடைக்காலப் பன்னிரு கொடுந்தமிழ் நாடு களுள் ஒன்று, அருவா நாட்டை யடுத்து அதற்கு வடக்கிலிருந்தது, பெரும்பாலும் இற்றைச் செங்கழுநீர்ப்பட்டு (செங்கற்பட்டு) மாவட்டமும் அதனை யடுத்து வடக்கிலுள்ள ஒரு சிறு நிலப் பகுதியும்**; one of the 12 regions where vulgar dialects of Tamil are said to have been spoken during the mediaeval period, possibly the Chengalpaṭṭu district together with an adjoining portion of land in the north. 'செந் தமிழ் சேர்ந்த பன்னிரு (கொடுந்தமிழ்) நில மாவன..............அருவா வடதலை.......... என இவை' (தொல். சொல். எச்ச. 4, உரை).

**அருவாள்** *aruvāḷ*, பெ. (n.) **அருவா** பார்க்க; see *aruvā*. கொடுந்தமிழ் நிலம் "................ தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண் பூழி பன்றி யருவா வதன் வடக்கு.............. என்னும் இப் பன்னிரு நாடுமாம்" (நன். 272, மயிலை.).

**அருவாள்வடதலை** *aruvāḷ-vaḍa-talai*, பெ. (n.) **அருவாவடதலை** பார்க்க; see *aruvā-vaḍa-talai*. 'அருவாள் வடதலையார் புளியை எகின மென்றும்..............வழங்குவர்' (நன். 272, மயிலை.).

**அருவாளர்** *aruvāḷar*, பெ. (n.) **அகத்தியனாரால் தென்னாட்டிற் குடியேற்றப்பட்டவராகச் சொல்லப்படும் ஒரு வகுப்பார்**; name of a tribe said to have been established by Agastya in South India and to have inhabited *Aruvānāḍu*.

'அவரும் (அகத்தியனாரும்) தென்றிசைக் கட் போதுகின்றவர்..............துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும்

பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையுங் கொடுபோந்து காடுகெடுத்து நாடாக்கி....................' (தொல். எழுத்து. பாயி. நச். உரை).

*[அருவாள் + அர். 'அருவாள்' ஒரு நாட்டின் பெயர். 'அர்' ப.பா. ஈறு.]*

**அருவி**[1] *aruvi*, பெ. (n.) 1. ***மலையினின்று விழும் நீர்வீழ்ச்சி***; waterfall, cascade. "அருவிக் குன்றமு மைவனச் சாரலும்" (சீவக. 1779). 2. ***ஆறு*** (பொதி.நி.); river. 3. ***கழிமுகம்*** (சூடா.); estuary of backwater. 4. ***நீரூற்று*** (F.); spring at the foot of a hill. 5. ***நீர்***; water. "அருவி யாம்பல்" (பதிற். 71 : 2). 6. ***ஒழுங்கு, வரிசை***; arrangement, row. "வேலருவிக் கண்ணினார்" (சீவக. 291). 7. ***மலை*** (பொதி. நி.); hill, mountain.

ம. அருவி; க. அர்வி; து. அருவெ.

*[அருவுதல் = அறுத்தொழுகுதல். அருவு → அருவி. 'இ' வி.முத. ஈறு.]*

**அருவி**[2] *aruvi*, பெ. (n.) 1. ***அறுத்த ஒரு பிடிக் கதிர்***; sheaf of corn. "அருவிகட்டும் வல்லயக் காரர்" (தெய்வச். விறலிவிடு.). 2. ***தினைத் தாள்*** (திவா.); stubble of Italian millet. 3. ***புன்செய்ப்பயிரின் தாள்*** (நாமதீப.); stubble of dry crops.

*[அரிதல் = அறுத்தல். அரி → அரிவி → அருவி. 'இ' செயப்படுபொருளீறு.]*

**அருவி**[3] *aruvi*, பெ. (n.) 1. ***உருவமில்லாதது***; that which is formless, shapeless. "அருவிக் கால் பாராட்ட" (பரிபா. 6 : 53). 2. ***பெயர் கூறப்படாத அகப்பொருள் கிளவித் தலைமகன், உருவி என்பதற்கு எதிர்***; hero, chief male character of a love-poem, dist. fr. *uruvi*.

"உருவி யாகிய வொருபெருங் கிழவனை
யருவி கூறுத லானந் தம்மே"
(யாப். வி. ஒழிபு. பக். 525).

ம. அருபி

*[அல் → அ. அ + உருவி – அவுருவி → அருவி. உரு → உருவு → உருவம் > Skt. rūpa. உருவம் → உருவன், உருவி > Skt. rūpin.]*

**அருவித்தின்(னு)-தல்** *aruvi-t-tin(nu)-*, 14 செ. குன்றாவி. (v.t.) ***மிகத் துன்புறுத்துதல்***; to cause great pain. "அருவித் தின்றிட வஞ்சிநின் னடைந்தேன்" (திவ். பெரியதி. 7 . 7 : 1).

*[அருவுதல் = துன்புறுத்துதல். அருவு → அருவி (இ.கா.வி.எ.). அருவி + தின். தின்னுதல் = தின்றாற்போ லரித்தல். ஒ.நோ: தினவுதின்னுதல்.]*

**அருவிநீர்ததும்பல்** *aruvi-nir-tadumbal*, தொ.பெ. (vbl.n.) ***கண்ணினின்று தாரையாக நீர் வழியுங் கண்ணோய்***; an eye disease characterised by secretion and discharge of tears, *lachrymation* (சா.அக.).

*[அருவி (இ.கா.வி.எ.) + நீர் + ததும்பல். ததும்புதல் = நிறைதல், நிறைந்து வழிதல். 'அல்' தொ. பெ. ஈறு.]*

**அருவிலைக்காலம்** *aru-vilai-k-kālam*, பெ. (n.) ***பஞ்சகாலம்***; days of famine, characterised by exorbitant prices of commodities.

*[அரு + விலை + காலம்.]*

**அருவிவெட்டல்** *aruvi-veṭṭal*, தொ.பெ. (vbl.n.) ***அருவிவெட்டு*** பார்க்க; see *aruvi-veṭṭu*.

**அருவிவெட்டு** *aruvi-veṭṭu*, தொ.பெ. (vbl.n.) ***அறுவடை***; harvesting. "நாற்று நடுகை அருவி வெட்டு" (தண்டிகை. பள். ஆராய். 1).

**அருவு** *aruvu*, பெ. (n.) ***அத்தி***; fig, *Ficus glomerata* (சா.அக.).

*[அர் → அரக்கு. அர் → அரு → அருவு = செங்கனிமரம்.]*

**அருவு**[1]**-தல்** *aruvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***அறுத்தொழுகுதல்***; to wear away, as a flood the banks of a river. கரையை ஆற்று வெள்ளம் அருவுகிறது (இ.வ.). 2. ***துன்புறுத்துதல்***; to afflict, gripe. "அருவிநோய் செய்து" (திவ். பெரியதி. 9 . 7 : 6) —, 5 செ.கு.வி. (v.i.) ***வெள்ளம்போல் மெல்லச் செல்லுதல்***; to move or flow down gently.

*[அர் → அரி. அரித்தல் = அறுத்தொழுகுதல். அர் → அரு → அருவு.]*

**அருவு**[2]**-தல்** *aruvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ***கிட்டுதல்*** (வின்.); to approach.

*[அல்லுதல் = பொருந்துதல். அல் → அள். அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் → அர் → அரு → அருவு. ஒ.நோ: அருவு → அருகு.]*

**அருவுகால்** *aruvu-kāl*, பெ. (n.) ***அருகுகால்***; door frame.

*[அள் → அரு → அருவு + கால்.]*

***அருவு***[2]***-தல்*** பார்க்க; see *aruvu*[2]-.

**அருவுடம்பு** *aru-v-uḍambu*, பெ. (n.) **நுண்ணிய வுடம்பு (சூக்கும சரீரம்), உருவுடம்பு என்பதற்கு எதிர்**; the subtle body, opp. to *uruvuḍambu*.

'உடம்பென்ற பொதுமையான், உருவுடம்பும் அருவுடம்புங் கொள்ளப்படும். அவற்றுள் அருவுடம்பாவது பத்துவகைப் பொறியுணர்வோடும் (இந்திரிய வுணர்வோடும்) ஐவகை வளிகளோடும் (வாயுக்களோடும்) காமவினை விளைவுகளோடுங் கூடிய மனம்' (குறள், 345, பரிமே. உரை).

*[அரு + உடம்பு.]*

**அருவுரு** *aru-v-uru*, பெ. (n.) 1. **அருவும் உருவும்**; that which has no form and that which has any form. 2. **அருவுருவம்** பார்க்க; see *aru-v-uruvam*. "அருவுருவ மாயெங்கு மமரா நிற்கும்" (சூத. முத்தி. 4 : 16).

*[அரு + உரு.]*

அரு, உரு பார்க்க; see *aru, uru*.

**அருவுருவம்** *aru-v-uruvam*, பெ. (n.) **சிவக்குறியும் ஒளிப்பிழம்பும் போன்று அருவென்றும் உருவென்றும் சொல்லலாகாதது**; form which can be said to be of no form, as the Šiva-linga or a flood of light.

"அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
அருவுருவ மன்றாகு முண்மை — யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றொக்கு"
(சி.போ. சாதன. 7 . 3 : 1).

*[அரு + உருவம்.]*

**அரு, உருவம்** பார்க்க; see **aru, uruvam**.

**அருவேதனை** *aru-vēdaṉai*, பெ.(n.) **பெருநோவு, பெருந்தொல்லை**; great torment, severe affliction. உன்னால் நான் அருவேதனைப் படுகிறேன் (உ.வ.).

*[அரு + வேதனை. வேதல் = எரிதல், நோதல், வருந்துதல். வே → வேத → வேதனை. 'அனை' தொ.பெ. ஈறு.]*

**அருள்[1][ளு]-தல்** *aruḷ-*, 11 செ.கு.வி. (v.i.) 1. **இரக்கங் காட்டுதல்**; to be gracious to, to show favour. "அருளாத நீரருளி" (திவ்.திருவாய். 1. 4 : 6). 2. **சிவன் (இறைவன்) பழுத்த ஆதன்கட்கு (பக்குவ ஆன்மாக்கட்கு) வீடளித்தலாகிய ஐந்தாம் தொழிலைச் செய்தல்**; to grant eternal bliss, as Šiva (God), to perfected souls. 3. **மகிழ்தல்**; to rejoice. "அரிமயிரொழுகுநின் னவ்வயி றருளி" (தொல். பொருள். கற். 5, நச். உரை மேற்கோள்). 4. **தூக்கம் விழித்தல்**; to keep awake (சா.அக.). —, 6 செ.குன்றாவி. (v.t.) 1. **அளித்தல்**; to grant, bestow. ஏற்றவர்க்கு மாற்றா தருள் செய்கை (தஞ்சைவா. 126). 2. **படைத்தல்**; to create. "ஆரணத் தானருள் பாரளித்தான்" (தஞ்சைவா. 265). 3. **காத்தல்**; to protect, preserve. "பொறுத்தே யருள்வா யென்னா விருதாள் சென்னி புனைந்தேன்" (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 82). 4. **அருளோடு சொல்லுதல்**; to speak graciously. "நீதான் யாவன் அந்தோ வருள்கென்று" (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 76). 5. **இறைவன் அரசன் முதலிய வணக்கத்திற் குரியோர் கட்டளையிடுதல்**; to command, as God, king or other venerable persons. "கொண்டுவரு கென வருளுங் குலவுதிரு வருள்கேளா" (கோயிற்பு. இரணிய. 51). —, (பொது) **இறைவன் அரசன் முனிவன் முதலிய வணக்கத்திற் குரியோர் செயல் கூறும் வினைச்சொல்லுடன் கூடிவரும் துணைவினை**; an auxiliary verb added to the verbs denoting the actions of God, kings, sages or other venerable persons. "நாத னெழுந்தருள" (கோயிற்பு. பதஞ். 25). "தெண்டிரை சேர் சடையாருந் திருவுள்ள மகிழ்ந்தருளி" (கோயிற்பு. இரணிய. 51).

*[அல்லுதல் = பொருந்துதல், உளமொத்தல். அல் → அன்பு (அல் + பு). அள்ளுதல் = நெருங்குதல், செறிதல், பொருந்துதல். அள் → அளி = அன்பு, அருள். அள் → அர் → அருள். ஒ.நோ: தெள் → தெர் → தெருள்.]*

**அருள்[2][ளு]-தல்** *aruḷ-*, 16 செ.கு.வி. (v.i.) **அச்சமுறுதல்**; to be frightened, terrified, bewildered. "அருண்டென்மேல் வினைக் கஞ்சி" (தேவா. 7.66 : 2).

க. அரள், அரலு.

*[உரு = அச்சம். உரு → அரு → அரள் → அருள்.]*

**அருள்[1]** *aruḷ*, பெ. (n.) 1. **தொடர்பு பற்றாதும் கைம்மாறு கருதாதும் எல்லா வுயிர்கள் மேலும் இயல்பாகச் செல்லும் இரக்க அன்பு**; grace, mercy, favour, benevolence. "அருளில்லார்க்

கல்வுலக மில்லை'' (குறள், 247). 2. **சிவன் (இறைவன்) 5ஆம் தொழிலாகிய வீடளிப்பு;** deliverance of soul effected by Śiva. 3. **சிவனாற்றல், பரை** (சூடா.); Śiva's energy. 4. **கொடை;** gift. ''அருளி லார்களி லைந்தரு நிகர்க்கிலா ரில்லை'' (நைட.த. நகர. 9). 5. **நல்வினை** (பிங்.); good deeds. 6. **பட்டறிவுள்ள குரவன் நல்லுரை (அனுபவமுடைய தேசிகன் உபதேசம்);** spiritual instruction by an experienced religious preceptor. ''அருளினா லாகமத்தே யறியலாம்'' (சி.சி. சுபக். பாயி. 5). 7. **அருட்கட்டளை;** gracious command. ''கொண்டு வருகென வருளுங் குலவு திருவருள்'' (கோயிற்பு. இரணிய. 51). 8. **முகவொளி, முகக்களை;** brightness of appearance. முகத்தில் அருளில்லை.

ம., க., பட. அருள்; தெ. அருலு.

அருள்[1] [ளு]-தல் பார்க்க; see *aruḷ-*[1].

**அருள்**[2] *aruḷ*, பெ. (n.) 1. *மரவகை;* a tree, probably of the genus, *Meliaceae*, having the same medicinal properties, as are ascribed to the margosa.

''வாத மகலும் வளருகின்ற மந்தமறுஞ்
சீதரத்தஞ் சோபை சுரந்திடுங்காண்-ஒதும்
இருளாருங் கூந்த லெழிலணங்கே முத்த
அருளென்னு நன்மரத்தா லாய்''
(பதார்த்த. 229)

(செ.அக.) — **இரும்பகம் (இருள்);** ironwood tree of Ceylon, *Mesua ferrea* (சா.அக.). 2. **முதிர்ந்த மாதுளைமரம்** (மூ.அ.); mature pomegranate tree.

**அருள்செய்-தல்** *aruḷ-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) **அருளொடு சொல்லுதல்;** to speak graciously. ''உள்ளபடி யருள்செய்ய வேண்டுமென'' (கோயிற்பு. பதஞ். 6).

**அருள்சோதி** *aruḷ-šōdi*, பெ. (n.) 1. **ஒரு செய்ந்நஞ்சு (கௌரிபாடாணம்);** a kind of arsenic (சா.அக.). 2. **அருட்சோதி** பார்க்க; see *aruṭ-cōdi*.

[அருள் + Skt. jyotis > த. சோதி.]

**அருள்பாடு** *aruḷ-pāḍu*, பெ. (n.) **அருட்கட்டளை;** gracious commandment (சம்.அக.).

அருளிப்பாடு பார்க்க; see *aruḷi-p-pāḍu*.

[அருள்படு → அருள்பாடு (முத.தி.தொ.பெ.).]

**அருள்பாதமூலி** *aruḷ-pāda-mūli*, பெ. (n.) **நரிப்பாலை;** fox milkwort, *Oxystelma wallichii* (சா.அக.).

**அருள்புரிபத்திரம்** *aruḷ-puri-pattiram*, பெ. (n.) **அரசன், ஒருவனின் ஊழியத்தையும் மறத்தையும் பாராட்டி ஊர் முதலியவற்றை அவனுக்கு மானியமாக அளித்ததற்கு எழுதிக்கொடுக்கும் ஆவணம்** (மிருதிசந். 31); title deed given in confirmation of a royal grant of land to one, in recognition of his service and valour (சங். அக.).

[அருள் + புரி + பத்திரம். Skt. pattra > த. பத்திரம்.]

**அருள்மரம்** *aruḷ-maram*, பெ. (n.) **முதிர்ந்த மாதுளைமரம்;** an old pomegranate tree (சா. அக.).

**அருள்மாரி** *aruḷ-māri*, பெ. (n.) 1. **அருள்மழை;** shower of blessings. 2. **அருள்பொழிவோன்;** one who showers blessings. ''அருள்மாரி யரட்டமுக்கி'' (திவ். பெரியதி. 3. 4 : 10).

**அருள்வடிவன்** *aruḷ-vaḍivaṉ*, பெ.(n.) **சிவபிரான்** (நாமதீப. 10); Śiva, as embodiment of grace.

**அருள்வரை (ரேகை)** *aruḷ-varai*, பெ. (n.) (கைவரை) **உள்ளங்கையில் மதிவரையைத் தொட்டுக்கொண்டு திங்கள்மேட்டில் வளைந்திருக்கும் ஒரு வரை;** (Palm.) the line of intuition extending from the line of intellect to the elevation below the little finger of the palms (சா.அக.).

[மதிவரை = புத்திரேகை. திங்கள்மேடு = சந்திரமேடு.]

**அருள்வாக்கி** *aruḷ-vākki*, பெ. (n.) **திருவருள் பெற்ற பாவலன் அல்லது நாவலன்;** one whose utterances are divinely inspired.

**அருளக்கமயம்** *aruḷakkamayam*, பெ. (n.) **தூதுவளை;** three-lobed night-shade, *Solanum trilobatum* (சா.அக.).

**அருளகம்** *aruḷagam*, பெ. (n.) **வெள்ளெருக்கு** (மலை.); white madar, *Calotropis gigantea.*

**அருளப்பாடு** *aruḷa-p-pāḍu*, பெ. (n.) **அருட்கட்டளை** (ஈடு, 6.9 : 73); gracious commandment.

அருளிப்பாடு பார்க்க; see *aruḷi-p-pāḍu*.

[அருள (நி.கா.வி.எ.) + படு. அருளப்படு → அருளப்பாடு (முத.தி.தொ.பெ.).]

**அருளம்** ***aruḷam***, பெ.(n.) பொன் (வை.மூ.); gold.

**அருளரசி** ***aruḷ-araši***, பெ. (n.) 1. வெட்பாலை (மலை.); ivory tree. 2. குடசப்பாலை (மூ.அ.); conessi bark (செ.அக.).

**அருளரிசி** ***aruḷ-arišī***, பெ. (n.) 1. வெட்பாலையரிசி; the seeds of Medicinal Echites, *Holarrhena anti-dysenterica*. 2. குடசப்பாலை; a plant, *Holanhena codaga* (சா.அக.).

**அருளல்** ***aruḷal***, பெ. (n.) பெருங்கொடை (பிங்.); liberality, generosity, munificence.

அருள்[1] பார்க்க; see *aruḷ*[1].

**அருளவம்** ***aruḷavam***, பெ. (n.) 1. அழிஞ்சில் (வின்.); sage-leaved alangium (செ.அக.) — ancola fruit plant, *Alangium lamarckii* alias *A. decapetatum* (சா.அக.). 2. பெருமரம் (மலை.); tooth-leaved tree of heaven (செ. அக.) — fetid tree, *Plumosa alba* (சா.அக.).

மறுவ. அருளுவம்

**அருளறம்** ***aruḷ-aṟam***, பெ. (n.) அருளாகிய அறம்; virtue of grace. "அருளறம் பூண்டவொருபெரும் பூட்கையின்" (மணிமே. 5 : 75).

*[அருள் + அறம்.]*

**அருளறம்பூண்டோன்** ***aruḷ-aṟam-pūṇḍōṉ***, பெ. (n.) புத்தன் (மணிமே.); the Buddha.

*[அருள் + அறம் + பூண்டோன். பூண் → பூண்டவன் → பூண்டான் → பூண்டோன் (வினையா. பெ.).]*

**அருளாசி** ***aruḷ-āši***, பெ. (n.) வேம்பு; margosa (சா.அக.).

**அருளாதி** ***aruḷādi***, பெ. (n.) 1. குடசப்பாலை; conessi bark, *Holanhena codaga*. 2. தூதுவளை; three-lobed night-shade, *Solanum trilobatum* (சா.அக.).

**அருளாதோதியம்** ***aruḷādōdiyam***, பெ. (n.) புளிப்பிலந்தை; sour jujuba, *Zizyphus jujuba* (சா. அக.).

**அருளாந்தை** ***aruḷāndai***, பெ. (n.) பாளையுடைச்சி (L.); Indian Colasanthes (செ.அக.)— Indian Colasanthes, *Oroxylum indicum* (சா. அக.).

**அருளாப்பு, அருளாபு** ***aruḷāppu, aruḷābu***, பெ. (n.) சாரணை (மலை.); purslane-leaved *Trianthema* (செ.அக.) — nasar junghi plant, *Trianthema monogyna* (சா.அக.).

**அருளாபோகிகம்** ***aruḷāpōgigam***, பெ. (n.) புளிமாதுளை; sour pomegranate, *Punica granatum* (சா.அக.).

**அருளாழி** ***aruḷ-āḻi***, பெ. (n.) (சமண.) அறச்சக்கரம்; (Jain.) the wheel of Virtue (Dharma). "வினையெறியு மருளாழியும்" (மேருமந். 1039.).

*[அருள் + ஆழி.]*

**அருள், ஆழி** பார்க்க; see *aruḷ*, *āḻi*.

**அருளாழிவேந்தன்** ***aruḷ-āḻi-vēndaṉ***, பெ. (n.) 1. கடவுள் (வின்.); God. 2. அருட்சக்கரம் உருட்டும் அருகன்; Arhat, as wielding the disc of grace.

*[அருள் + ஆழி + வேந்தன்.]*

**அருள், ஆழி, வேந்தன்** பார்க்க; see *aruḷ*, *āḻi*, *vēndaṉ*.

**அருளாளப்பெருமாள்** ***aruḷ-āḷa-p-perumāḷ***, பெ. (n.) காஞ்சிபுரத்துத் திருமால் (S.I.I. iii, 188); *Tirumāl* (Viṣṇu), as worshipped in Kāñjipuram.

*[அருள் + ஆளன் + பெருமாள். பெருமால் → பெருமாள்.]*

**பெருமாள்** பார்க்க; see *perumāḷ*.

**அருளாளன்** ***aruḷ-āḷaṉ***, பெ.(n.) அருள் நிறைந்த கடவுள்; God, who is full of grace. "பித்தா பிறை சூடிபெரு மானேயருளாளா" (தேவா. 7. 1 : 1).

க. அருளாளு

*[அருள் + ஆளன். ஆள் → ஆளன் = ஆள்வோன், உடையோன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அருளானவன்னம்** ***aruḷ-āṉa-vaṉṉam***, பெ. (n.) (புடமிடப்பட்ட) தங்கம்; refined gold (சா. அக.).

*[அருள் + ஆன + வன்னம் (தங்கம்). அருளம் = பொன்.]*

**அருளி** ***aruḷi***, பெ. (n.) 1. (வேதி.) வீரம்; (Chem.) corrosive sublimate. 2. இருள்மரம்; ironwood of Ceylon, *Mesua ferrea* (சா.அக.).

*[இருள் → இருளி → அருளி.]*

**அருளிச்செய்-தல்** ***aruḷi-c-cey-***, 1 செ.குன்றாவி. (v.t.) கடவுள் அல்லது வணங்கப்படத்தக்க பெரியோர் அருளொடு சொல்லுதல்; to speak, as God or venerable persons. "நம் பெரு

மாட்டிக் கங்கு நாயக னருளிச் செய்வான்'' (பெரியபு. காரைக். 57).

[அருளி + செய்.]

**அருளிச்செயல்** *aruḷi-c-ceyal*, பெ. (n.) 1. **இறைவன் அல்லது அரசன் கட்டளை**; God's or king's gracious command. 'ராஜாவின் அருளிச் செயற்படிக்கு மந்திரமூர்த்தி வெட்டுவித்தது' (S.I.I. ii, 118). 2. **அடியார் பாடல்**; poetical utterances of saints. ''அருளிச் செயல்வாழி'' (உபதேசரத். 3).

ம. அருளிச்செய்யுக

[அருளி + செயல்.]

**அருளிப்பாடியன்** *aruḷi-p-pāḍiyaṉ*, பெ. (n.) **தேவ அல்லது அரசக் கட்டளையை நிறைவேற்றுவோன்**; executor of divine or royal commands. ''அங்கருளிப் பாடியரோ டருமுனிவர் கடிதணைந்து'' (கோயிற்பு.இரணிய. 52).

[அருளிப்பாடு → அருளிப்பாடியன்.]

அருளிப்பாடு பார்க்க; see *aruḷi-p-pāḍu.*

**அருளிப்பாடு** *aruḷi-p-pāḍu*, பெ. (n.) **இறைவன் அல்லது அரசன் கட்டளை;** God's or king's gracious command. ''ஆயசீ ரிராகவ னருளிப் பாடென வாயில்காப் பாளரு மகிழ்ந்து கூறலும்'' (உத்தரரா. அசுவ. 157) —, இடை. (int.) **'கட்டளைப்படி செய்வோம்' என்னுங் குறிப்பு**; 'As it pleaseth thee!' said in response to a divine or royal command. ''கணநாத ரருளிப்பா டென்றார்கள்'' (கோயிற்பு. இரணிய. 51).

ம. அருளிப்பாடு; க. அருளபாடு.

[அருளப்பாடு → அருளிப்பாடு. இனி, 'அருளி = அருளினதினால், பாடு = உண்டாகை' என்றுமாம்.]

**அருளுத்தசாரம்** *aruḷuttaśāram*, பெ. (n.) **ஊர்க்குருவி;** Indian house-sparrow, *Passer indicus* (சா.அக.).

**அருளுபதி** *aruḷupadi*, பெ. (n.) அருளுறுதி பார்க்க; see *aruḷuṟudi.*

**அருளுருநிலை** *aruḷ-uru-nilai*, பெ. (n.) **சிவபெருமான் குருவுருக் கொள்ளும் நிலை** (திருவருட். 5, தலைப்பு); manifestation of Śiva as a spiritual preceptor.

[அருள் + உரு (உருவம்) + நிலை.]

**அருளுவம்** *aruḷuvam*, பெ. (n.) **அருளவம்** பார்க்க; see *aruḷavam.*

**அருளுறுதி** *aruḷuṟudi*, பெ. (n.) **வேம்பு**; margosa, *Melia azadirachta*.

மறுவ. அருளுபதி

**அருளொடுநீங்கல்** *aruḷoḍu-niṅgal*, தொ.பெ. (vbl.n.) (பொருள்) **உலகத் துயரத்தை நோக்கிப் பற்று நீங்குதலைக் கூறும் புறத்துறை** (பு.வெ. 8 : 34); (Poruḷ) theme expressing one's renunciation of worldly desires on seeing the miseries of the world.

**அருளோதியம்** *aruḷōdiyam*, பெ. (n.) புளிப்புக் கொடிமுந்திரி; sour grapes, *Vitis vinifera* (சா.அக.).

**அருளோன்** *aruḷōṉ*, பெ. (n.) 1. **கடவுள்**; God. 2. **அருளுடையோன்** (சூடா.); gracious person.

**அருனாவரிசி** *aruṉāvariši*, பெ. (n.) **அறுவகையரிசியுள் ஒன்றான மருந்துச் சரக்கு** (சங்.அக.); a kind of seed used in medicine.

**அரை[1]-தல்** *arai-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **தேய்தல்**; to become macerated, worn out. ''நீளிடையங்கமெங்கு மரைந்திட'' (பெரியபு. திருநாவு. 360). 2. **அரைபடல்** (சங்.அக.); to be ground.

ம. அரயுக; க., பட. அரெ; குட. அர; து. அரெபுனி; தெ. ராசு; கோத. அர்வ், அர்த்; கொலா. ராக்; கோண். அரீதானா; கூ. ராத்; குவி. ராஜ.

[அர் → அரம், அரவு → அராவு, அரவு → அரகு → அரங்கு. அர் → அறு. அர் → அரை. அரைத்தல் = அராவித் தூளாக்குதல் அல்லது பசையாக்குதல்.]

**அரை[2]-த்தல்** *arai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **தேய்த்தல்;** to rub against, graze, mash. ''அரைத்த வாரமும்'' (பாரத. நிரை. 29). 2. **கொட்டை நீக்குதல்;** to remove seeds, பஞ்சரைக்கும் **ஆலை**; gin. 3. **நசுக்குதல்** (சங்.அக.); to crush. 4. **அம்மியில் வைத்து அரைத்தல்;** to grind. ''அரைத்த மஞ்சளதாவதை'' (தேவா. 7. 60 : 2). 5. **பொடித்தல், தூளாக்குதல், மாவாக்குதல்;** to pulverise. மாவரைக்கும் ஆலை. 6. **அழித்தல்** (வின்.); to destroy. 7. **நோயிலழுந்தல்** (சங்.அக.); to be afflicted with sickness. 8. **வெட்கப்படுதல்** (நாஞ்.); to be ashamed (Nāñ.).

ம. அரய்க்குக; க. அரெயிசு; தெ. அரகதீயு; துட. யெரை; து. அரெபு; பட. அரெ.

அரை¹-தல் பார்க்க; see arai-¹.

**அரை¹** *arai*, பெ. (n.) 1. இடை; waist, loins. '' புனைமணி யரைஞாணொடு போதும் '' (பெரியபு. திருஞான. 93). 2. பாதி; half.

''வேணப்பா கஸ்தூரி வகைக்குத் தானும்
விளங்கவே யரைக்கழஞ்சு வேண்டுவாயே''

(அகஸ்தியர்பூ. 118). 3. இ, ௭ என்னும் பின்னவெண்; the fraction ½. 4. நடு; middle. ''மழையமைந் துற்ற வரைநா ளமயமும்'' (மதுரைக். 649). 5. வயிறு; stomach. ''கன் றரைப்பட்ட கயந்தலை மடப்பிடி'' (மலைபடு. 307). 6. அல்குல்; the portion between waist and *Pudendum muliebre*. 7. தொடையின் மேற்பாகம்; the upper part of the thigh (பொருந. 104, உரை). 8. தண்டு; stem. '' முள்ளரைத் தாமரை '' (சிறுபாண். 183). 9. மரத்தின் அடிப்பாகம்; trunk of a tree. ''பொரியரைத் தேமா'' (நைடத.நாட்டு. 20). 10. இடம்; part, portion. ''குளகரை யாத்த குறுங்காற் குரம்பை'' (பெரும்பாண். 148).

ம., க., தெ. அர; து., குட., பட. அரெ; கோத., துட. அர்.

[அருகுதல் = சிறுத்தல், குறைதல். அரு → அருகு. அரு → அரை = உடம்பின் சிறுத்த அல்லது ஒடுங்கிய பாகம். ஒ.நோ: இடு → இடுகு → இடுக்கு. இடு → இடை = உடம்பின் இடுகிய பாகம்.]

**அரை²** *arai*, பெ. (n.) அரசியல்; politics. ''அரைவிளை கலைநல்லார்'' (சீவக. 2430).

[அரசன் → அரைசன் → அரையன் → அரை. ஒ.நோ: இறையன் → இறை, பறையன் → பறை. அரையன் → ராயன் > தெ. ராயடு. cf. E. roy.]

**அரை³** *arai*, பெ. (n.) ஒருவகை மரம்; a kind of tree.

''பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்''
(தொல். எழுத்து. உயிர். 81).

'அரை' என்பது 'அரசு' என்பதன் சிதைவாய் அல்லது திரிபாயிருக்கலாமென்று சிலர் ஐயுறுவர். அதற்கு இடமிருப்பதாகத் தெரியவில்லை.

**அரைக்கச்சு** *arai-k-kaccu*, பெ. (n.) 1. இடைப் பட்டிகை; waist-band, girdle. 2. இடையிற் கட்டும் ஒடுக்க உடை; narrow cloth tied about the waist and tucked in behind.

[அரை + கட்டு → கச்சு.]

**அரைக்கச்சை** *arai-k-kaccai*, பெ. (n.) அரைக் கச்சு பார்க்க; see *arai-k-kaccu*.

[அரை + கட்டு → கச்சு → கச்சை.]

**அரைக்கட்டி** *arai-k-katti*, பெ. (n.) அரையாப்பு; inguinal bubo.

[அரை + கட்டி.]

**அரைக்கடி** *arai-k-kadi*, பெ. (n.) இடுப்பிலுண்டாகும் சொறிபுண்; dhobies' itch, a kind of ringworm, *Tinea circinata*.

[அரை + கடி.]

**அரைக்கடுவன்** *arai-k-kaduvan*, பெ. (n.) அரைக் கடி பார்க்க; see *arai-k-kadi* (செ.அக.) — இடுப்பு, தொடைச்சந்து, குறி இவ்விடங்களிற் படர்ந்து நமைச்சலுண்டாக்கும் ஒருவகைப் படை; a parasitic skin disease like ringworm marked by brownish eczematus patches on the inside of the thighs, lips, groins and the genitals, *Tinea cruris* (சா.அக.).

[அரை + கடுவன்.]

**அரைக்கண்** *arai-k-kan*, பெ. (n.) 1. பாதி மூடிய கண்; half-closed eyes. அரைக்கண்ணாற் பார்க்கிறான் (உ.வ.). 2. குறைந்த பார்வை; partial sight. அரைக்கண் பார்வை.

க. அரெகண்; தெ. அரகண்ணு; பட. அரெ கண்ணு.

[அரை + கண்.]

**அரைக்கண்ணுறக்கம்** *arai-k-kan-n-urakkam-*, பெ. (n.) அரைத் தூக்கம் அல்லது பாதி விழி மூடிய தூக்கம்; sleep with eyes half-closed or partial sleep.

[அரை + கண் + உறக்கம்.]

**அரைக்கண்போடு-தல்** *arai-k-kan-pōdu-*, 20 செ.கு.வி. (v.i.) கால்நடை முதலியன அரைக்கண்ணோடு பார்த்தல் (பெரியமாட். 129); to see with eyes half-closed, as cattle, etc.

[அரை + கண் + போடு.]

**அரைக்காசப்புல்** *arai-k-kaša-p-pul*, பெ. (n.) பூனைப்புல்; a species of grass (சா.அக.).

[ஒருகா. அரை + காசம் + புல். **Skt**. kāsa > த. காசம் = ஈளைநோய். பூனை வாய்வைத்த உணவை யுண்டால் ஈளைநோய் வரும் என்பர்.]

**அரைக்காசுத்தொண்டன்** *arai-k-kāšu-t-toṇḍaṉ*, பெ. (n.) மிக எளியவன்; a poor, despicable fellow, pauper. "அரைக்காசுத் தொண்டனிவன்" (விறலிவிடு. 833-4).

[அரை + காசு + தொண்டன்.]

**அரைக்காணி** *arai-k-kāṇi*, பெ. (n.) (கீழ் வாய்க்கணக்கு) ரு என்று வரிவடிவிற் குறிக்கப் படுவதும் நூற்றறுபதிலொரு பங்குமான பின்னவெண்; the fraction 1/160, as half a *kāṇi*.

ம. அரக்காணி; க. அரெகாணி.

[அரை + காணி.]

**அரைக்காய்ச்சல்** *arai-k-kāyccal*, பெ. (n.) நன்றாய்க் காயாத புழுங்கல் நெல்லை யிடித்த வதவலரிசி (இ.வ.); rice husked from boiled paddy, not fully dried (Loc.).

[அரை + காய்ச்சல்.]

**அரைக்கால்** *arai-k-kāl*, பெ. (n.) (கீ.வா.க.) ஹ, ஓ என்று இருவேறு வரிவடிவிற் குறிக்கப்படுவதும் எட்டிலொரு பங்குமாகிய பின்னவெண்; the fraction 1/8, as half of a quarter.

ம. அரக்கால்; க. அரெகால்.

[அரை + கால். எட்டிலொரு பங்கு நாலி லொரு பங்காகிய காற்பங்கிற் பாதியாதலால், அரைக்கால் எனப்பட்டது.]

**அரைக்கால்வாசி** *arai-k-kāl-vāši*, பெ. (n.) பழைய வரிவகை (S.I.I. ii,115); an ancient tax.

[அரை + கால் + வாசி. வருமானத்தில் அல்லது ஒரு விளைச்சலில் அரைக்காற்பங்கு கொடுக்கப்பட்ட வரியா யிருந்திருக்கலாம்.]

**அரைக்காற்சட்டை** *arai-k-kāṟ-caṭṭai*, பெ. (n.) சல்லடம், முட்டி (முழங்கால் கணு)வரை யணியும் காற்சட்டை; shorts, drawers.

[அரை + கால் + சட்டை. முட்டிவரை அரைக்காலாதலால், அதுவரை யணியும் சட்டை அரைக்காற் சட்டை யெனப்பட்டது.]

**அரைக்கீரை** *arai-k-kīrai*, பெ. (n.) அறைக்கீரை பார்க்க; see *aṟai-k-kīrai*.

**அரைக்குரல்** *arai-k-kural*, பெ.(n.) தெளிவில்லாப் பேச்சு (புதுவை); indistinct speech (Poṇḍ.).

[அரை + குரல். அரை = குறை.]

**அரைக்குருடு** *arai-k-kuruḍu*, பெ. (n.) குறைந்த பார்வை; partial blindness, *Amblyopia* (சா. அக.)

க. அரெகுருடு

[அரை + குருடு.]

**அரைக்குழல்** *arai-k-kuḻal*, பெ. (n.) அரை ஞாணிற் கோத்து அணியும் மந்திரத்தகடு அடைத்த குழல் (இ.வ.); a pendant, encasing a mystic scroll, worn with the waist-cord (Loc.).

[அரை + குழல். அரை = இடுப்பு.]

**அரைக்குளகம்** *arai-k-kuḷagam*, பெ. (n.) 1. ஒரு பட்டணம் படி; a Madras measure approximately 2½ litres. 2. அரைமரக்கால்; half a *marakkāl*, equivalent to 8 or 10 measures varying according to places.

[அரை + குளகம்.]

**அரைக்கூறு** *arai-k-kūṟu*, பெ. (n.) 1. பாதிப் பங்கு; half the portion or share. 2. மதிப் பாகப் பாதியளவு; approximately half. 3. அரைக்கூறு காய்ந்த நீர், கைபொறுக்குஞ் சூடுள்ள நீர்; half-boiled water, tepid water, lukewarm water.

[அரை + கூறு.]

**அரைக்கைச்சட்டை** *arai-k-kai-c-caṭṭai*, பெ. (n.) மொழி (முழங்கைக்கணு) வரை கை வைத் துள்ள மேற்சட்டை; half-sleeved jacket, shirt or coat.

தெ. அரசட்ட

[அரை + கை + சட்டை. மொழிவரை யுள்ள கை ஏறத்தாழப் பாதியாதலால் அரைக்கை யெனப்பட்டது.]

**அரைகடி** *arai-kaḍi*, பெ. (n.) அரைக்கடி பார்க்க; see *arai-k-kaḍi*.

[அரை = இடுப்பு.]

**அரைகல்** *arai-kal*, பெ. (n.) அம்மி; grinding-stone.

ம. அரகல்லு; க. அரெகல்; பட. அரெ.

[அரை = அரைப்பு.]

**அரைகுலையத் தலைகுலைய** *arai-kulaiya-t-talai-kulaiya*, வி.எ. (adv.) இடுப்பாடையும் தலைமுடிப்பும் அவிழும்வண்ணம் மிகப் பர பரப்பாய்; very hurriedly, even to the extent of letting one's waist-cloth and the tuft of

hair on one's head to become loose. 'அரை குலையத் தலைகுலைய வந்து' (ஈடு, 3. 5 : 1).

[அரைகுலைய + தலைகுலைய. அரை, தலை என்பண ஆகுபெயரொத்த ஏற்றுரை வழக்கு (உபசாரவழக்கு — Transferred epithet). 'அரை............குலைய' என்பது ஒரு மரபுத் தொடர்மொழி (Idiomatic phrase).]

**அரைகுளம்பு** *arai-kuḷambu*, பெ. (n.) **கால்நடைகளின் குளம்பிற் காணப்படும் ஒரு குற்றம்** (பெரியமாட். 19); a defect in the hoof of cattle.

[ஒருகா. அரை = அரைப்பு.]

**அரைகுறை** *arai-kuṟai*, பெ. (n.) 1. போதாமை; insufficiency, deficiency. பணம் அரைகுறையாயிருக்கிறது (உ.வ.). 2. **வினை முடியாமை, முற்றுப்பெறாமை**; incompleteness, imperfection. கட்டட வேலை அரைகுறையாய்ச் செய்திருக்கிறது (உ.வ.).

க., பட. அரெகொரெ.

[அரை = பாதி. 'அரைகுறை' (அரையுங் குறையு மாயிருத்தல்) — ஒரு மரபிணைமொழி.]

**அரைங்கரம்** *araiṅgaram*, பெ. (n.) **நானாழி**; a measure of capacity, as half of the symbol for *kuṟuṇi*. "வல்லி சம்படி யுகர மாப மிருங் கர மடவந்த புனல ரைங்கரம்" (தைலவ. தைல. 6).

[குறுணி 8 படி. அதற்குக் குறி 'ங' (ஙகரம்). குறுணியிற் பாதி நானாழி (நாலுபடி). குறுணி குறிமுறையில் ஙகர மெனப்படுமோதலால், அதிற் பாதி அரைஙகர மெனப்பட்டது. அரைஙகரம் → அரைங்கரம் (மருஉ).]

**அரைச்சட்டை** *arai-c-caṭṭai*, பெ. (n.) **உடற் பயிற்சி செய்ய அணியும் சல்லடம்**; short drawers worn during athletic exercises.

ம. அரச்சட்ட

[அரைக்காற்சட்டை → அரைச்சட்டை.]

**அரைச்சதங்கை** *arai-c-cadaṅgai*, பெ. (n.) **பிள்ளைகளின் சதங்கை கோத்த அரையணி**; string of jingling beads worn by children around the waist.

[அரை = இடுப்பு. சலங்கை → சதங்கை.]

**அரைச்சந்துவாதம்** *arai-c-candu-vādam*, பெ.(n.) **நடக்கும்போது இடுப்பும் தொடைச்சந்தும் நோகும் ஊத** (வாத) **நோய்**; rheumatic affection of the waist and the groins, *Lumbago* (சா.அக.).

[அரை (இடுப்பு) + சந்து (தொடைப் பொருத்து) + **Skt.** vāta > த. வாதம் (ஊதம்).]

**அரைச்சம்பளம்** *arai-c-cambaḷam*, பெ. (n.) **சம்பளத்திற் பாதியாகப் பெறும் மூப்புச் சம்பளம்** (உ.வ.); pension (Com.u.).

[அரை + சம்பளம். அரை = பாதி.]

**அரைச்சல்லடம்** *arai-c-callaḍam*, பெ. (n.) **அரைக்காற்சட்டை** (சங்.அக.); shorts, drawers.

க. அரெசல்லண

[அரை + சல்லடம்.]

**அரைச்சவரம்** *arai-c-cavaram*, பெ. (n.) 1. **தலை மழிப்பு**; shaving the head. 2. **முகமழிப்பு** (இ.வ.); shaving the face (Loc.).

[அரை (பாதி) + **Skt.** kshaura > த. சவரம். அரைமழிப்பு (ப.வ.).]

**அரைச்சாப்பாடு** *arai-c-cāppāḍu*, பெ. (n.) **உண்டிச்சாலைகளில் வரையறுக்கப்பட்ட குறைந்த அளவான சாப்பாடு, முழுச்சாப்பாடு என்பதற்கு எதிர்**; half-meal or limited meal, served in hotels, opp. to full meal.

[அரை + சாப்பாடு.]

**அரைச்சாப்பு** *arai-c-cāppu*, பெ.(n.) **மதங்கத்தின் (மிருதங்கத்தின்) கரணைப் பக்கத்தில் தட்டும் மெல்லிய தட்டு**; a gentle tap on the right head of *madaṅgam*, a skinned instrument of music.

[அரை + சாப்பு. ச (குரல்) → சா → சாப்பு = பாடகன் குரலின் (voice) சமனிலைக் குரலான (the first note of the gamut) அலகிற்கு (key-note) ஒத்ததாக அமைக்கப்படும் ஓசையுள்ள மதங்கத்தின் வலப்புறத் தட்டு. அதிற் குறைந்தது அரைச்சாப்பு.]

**அரைச்சாயம்** *arai-c-cāyam*, பெ. (n.) **இளஞ் சாயம்** (வின்.); a slight tinge in dyeing.

**அரைச்சீட்டு** *arai-c-cīṭṭu*, பெ. (n.) **தொடர் வண்டிகளிலும் பேரியங்கிகளிலும் 12 அகவைக்கு உட்பட்ட சிறுவர்க்குக் கொடுக்கும் அரைக்கட்டணச் சீட்டு**; half-ticket, concession ticket for children below 12 years of age, issued at half rate, in trains and buses.

[அரை + சீட்டு.]

**அரைச்சீர்** *arai-c-cīr*, பெ. (n.) சில குலத்தாரால் குறிக்கப்பட்ட சீர்வரிசையில் ஏறத்தாழப் பாதி

யளவு; half *šir*, presents given to a bride by her parents, representing half of the dowry prescribed by usage.

*[அரை + சீர்.]*

*நாட்டான் குல முழுச்சீர்:* 64 வள்ளம் அரிசி, 25 பனைவட்டு, 5 கவளி வெற்றிலை, 1 பட்டணம்படிப் பாக்கு, 1 படி மஞ்சள், 4 படி நெய், கூறை, பொன் தாலிக்கொடி ஆகிய இவை.

**கொங்க வெள்ளாளர் குல முழுச்சீர்:** 45 உருபாக் காசு, 10 வள்ளம் அரிசி, 25 வெல்ல வுருண்டை, தேங்காய், வெற்றிலைபாக்கு, வாழைப்பழம் முதலியன.

**அரைசபாரம்** *araiša-pāram*, பெ. (n.) *அர சாட்சிக் கடமை*; the duties and responsibilities of government. "அருந்தவ மரைச பார மிரண்டுமே" (சூளா. மந். 33).

*[அரசன் → அரைசன் → அரைச + பாரம்.]*

**அரைசன்** *araišan*, பெ. (n.) *அரசன்*; king. "அரைசரிற் பிறந்து" (கம்பரா. அயோத். மந்தரை. 69).

*[அரசன் → அரைசன்.]*

**அரைசாந்து** *arai-šāndu*, பெ. (n.) *அரைத்த சுண்ணாம்பு* (வின்.); ground mortar, stucco.

*[அரை + சாந்து. அரை = அரைத்த.]*

**அரைசி** *araiši*, பெ. (n.) 1. *அரசாள்பவள்*; the reigning queen. 2. *கோப்பெருந்தேவி*; chief queen, queen consort. 3. *கோத்தேவிகளுள் ஒருத்தி*; one of the queens.

*[அரசன் → அரைசன் (ஆ.பா.) – அரைசி (பெ.பா.).]*

**அரைசிலை** *arai-šilai*, பெ. (n.) *அம்மி* (பிங்.); grinding-stone. "அரைசிலை குமிழ்ப்பு வடித் தல்" (தைலவ. பாயி. 12).

*[அரை (அரைக்கின்ற) +* Skt. šilā > *த. சிலை = கல்.]*

**அரைசு** *araišu*, பெ. (n.) 1. *அரசன்*; king. 2. *அரசன் தன்மை*; kingliness. 3. *அரசியம்*; kingdom.

*[அரசு → அரைசு.]*

**அரைசுகட்டு** *araišu-kaṭṭu*, பெ. (n.) *சிற்றூர் உரிமைவகை* (புதுக். கல்.); a village perquisite (Pudu. Insc.).

**அரைசெலவு** *arai-šelavu*, பெ. (n.) *உசிலைச் சரக்கு (மசாலைப்பண்டம்)* (இ.வ.); curry stuffs (Loc.).

*[அரை (குழம்பிற்கும் காய்கறிச் சமையற்கும் அரைக்கின்ற) + செலவு (செலவாகும் அல்லது பயன்படும் பொருள்). செல் → செலவு (தொ. ஆகு.).]*

**அரைசோறு** *arai-šōṟu*, பெ. (n.) 1. *செரியாத சோறு*; undigested rice-food. 2. *பாதி வெந்த சோறு*; half-boiled (cooked) rice (சா.அக.).

**அரைசோறுபோற்கழிதல்** *arai-šōṟu-pōṟ-kaḻidal*, பெ. (n.) *செரியாத சோற்றோடு கலந்த கழிச் சல்*; diarrhoea with fluid stools containing undigested rice or food, *Lienteric diarrhoea* (சா.அக.).

*[அரைச்சோறு (பாதி வெந்த சோறு) → அரைசோறு.]*

**அரைஞாண்** *arai-ñāṇ*, பெ. (n.) 1. *ஆண்மக்கள் அரையிற் கட்டுங் கயிறு*; waist-cord worn by men and boys. 2. *அரையணி* (பிங்.); ornament worn round the waist. 3. *கிணற்றின் செங்கல்வரை*; rows of brick lining a well, bricky revetment of a well.

ம. அரஞ்ஞாண்

*[அரை (இடுப்பு) + நாண் (கயிறு, கொடி) → ஞாண்.]*

**அரைஞாண்கயிறு** *arai-ñāṇ-kayiṟu*, பெ. (n.) *அரைஞாண்* பார்க்க; see *arai-ñāṇ*.

*[அரை + ஞாண் + கயிறு.]*

அரைஞாண் என்னுங் கூட்டுச்சொல்லின் வருஞ்சொல் உலகவழக்கிற் பொருளிழந்த போது, கயிறு என்னுஞ் சொல் கூட்டப் பட்டது. இது மிகைபடக்கூறல் (redundancy). 'அரணாக்கயிறு' என்பது கடுங்கொச்சை (barbarism).

**அரைஞாண்கொடி** *arai-ñāṇ-koḍi*, பெ. (n.) *அரைஞாண்* பார்க்க; see *arai-ñāṇ*.

*[அரை + ஞாண் + கொடி.]*

'அரைஞாண்கயிறு' ஒத்ததே 'அரைஞாண் கொடி' என்பதும். ஆதலால் இதுவும் மிகை படுசொல்லே (redundant word).

கயிறு என்பது நூலாலும் நாராலும் திரிக்கப்பட்டதையும், கொடி என்பது பொன், வெள்ளி முதலிய மாழையாற் செய்யப்

பட்டதையும் குறிக்கும். இதுவே இவற்றிடை வேற்றுமை.

அரணாக்கொடி என்பது கடுங்கொச்சை (barbarism).

**அரைத்தரை-த்தல்** *araittarai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **முன் அரைத்ததையே திரும்பவும் அரைத்தல்**; to grind again (சா.அக.).

[அரைத்து + அரை.]

**அரைத்தரைத்துப்புடம்போடு-தல்** *araittaraittu-p-puḍam-pōḍu-*, 19 செ. குன்றாவி. (v.t.) **திரும்பத் திரும்ப அரைத்து நீற்றுதல்**; to grind again and again for purposes of calcination (சா.அக.).

[அரைத்து + அரைத்து + புடம் + போடு.]

**அரைத்தவளை** *arai-t-tavaḷai*, பெ.(n.) **வாலறாத அரைவளர்ச்சித் தவளை, தலைப்பிரட்டை**; tadpole.

[அரை + தவளை. அரை = பாதி.]

**அரைத்திரணையரம்** *arai-t-tiraṇai-y-aram*, பெ. (n.) **பாதி திரண்ட அரம்** (C.G.); a half-round file.

[அரை (பாதி) + திரணை + அரம். திரள் → திரளை → திரணை.]

**அரைத்துச்சேவி-த்தல்** *araittu-c-cēvi-*, 4 செ. குன்றாவி. (v.t.) **வீக்கம், புண் முதலியன வற்றிற்கு மருந்தை அரைத்துத் தடவுதல்**; to grind and apply medicine as a protective covering for swelling, burns, wounds, ulcers, etc. (சா.அக.).

[அரைத்து + சேவி.]

**அரைத்துட்டு** *arai-t-tuṭṭu*, பெ. (n.) **இற்றை ஒரு காசிற்குச் சமமான பழைய இருசல்லி (தம்பிடி)**; an old copper coin equal to one current *paisa*.

[அரை + துட்டு.]

**அரைத்தூக்கி** *arai-t-tūkki*, பெ. (n.) **தூக்குமர வகை**; pillory (W.) (செ.அக.).

[அரை (பாதி) + தூக்கி. தூக்கு → தூக்கி. **'இ'** வி.முத. ஈறு.]

**அரைத்தொடர்** *arai-t-toḍar*, பெ. (n.) **இடைத் தொடர் (சங்கிலி)**; waist-chain. "நாணு மரைத்தொடரும்" (திவ்.பெரியாழ். 1 . 3 : 4).

[அரை = இடுப்பு. தொடு → தொடர். தொடுத்தல் = கோத்தல்.]

**அரைநலம்** *arai-nalam*, பெ. (n.) **காளை அரையுங் குறையுமாகக் காயடிக்கப்படுதல்**; not being properly castrated, as a bull.

[அரை = பாதி, குறை. நல் → நலம் = நன்மையான வினை.]

**அரைநலவன்** *arai-nalavaṉ*, பெ. (n.) **நன்றாக விதையடிக்கப்படாத மாடு** (யாழ்ப்.); bull not properly castrated (J.).

[அரை = பாதி. நலம் (விதையடித்தல்) → நலவன். 'அன்' ஒருமையீறு.]

**அரைநா** *arainā*, பெ. (n.) **முதலை**; crocodile.

**அரைநாண்** *arai-nāṇ*, பெ. (n.) **இடுப்பிற் கட்டும் கயிறு அல்லது கொடி**; waist-cord or waist-chain. "பொன்னரை நாணொடு" (திவ். பெரியாழ். 1 . 6 : 2).

[அரை + நாண். அரை = இடுப்பு.]

**அரைநாவை** *arai-nāvai*, பெ. (n.) 1. **கலப்பைக் கொழுவின் ஒருபால் வளைந்த நுனி**; the part of the ploughshare which is bent on one side. 2. **ஒரு பக்கம் வளைந்த மண்வெட்டி நுனி**; tip of a hoe bent over.

[அரை = பாதி, குறை. நா = அலகு. நா → நாவை. 'ஐ' உடைமை யீறு.]

**அரைநாழி** *arai-nāḻi*, பெ. (n.) **கைந்நாழி என்னும் நாட்டுப் படியிற் பாதியளவு, உரி**; half a country measure.

[அரை + நாழி. அரை = பாதி.]

**அரைநாள்** *arai-nāḷ*, பெ. (n.) 1. **பாதிநாள், ஒரு நாளிற் பாதியளவு**; half a day. 2. **நள்ளிரவு**; midnight. "மழையமைந் துற்ற வரைநா ளமயமும்" (மதுரைக். 649).

[அரை + நாள். அரை = பாதி.]

**அரைநீர்** *arai-nīr*, பெ. (n.) **குறித்த காலங்களிற் பாசனமாகப் பாய்ச்சும் நீர்** (C.G.); water for irrigation drawn from a public reservoir during a certain period of the year.

[அரு (அருமையான) → அரை.]

**அரைநூல்** *arai-nūl*, பெ. (n.) 1. **அரைநாண்** (சங்.அக.); waist-cord. 2. **அரைச்சதங்கை**; string of tinkling beads worn by children around the waist. 3. **பாதி நூல், அறுவைமர அளவிற் பாதி, 12 சதுர அடி**; half of a timber square measure.

[அரை = 1, 2. இடுப்பு; 3. பாதி.]

**அரைநூன்மாலை** *arai-nūṉ-mālai*, பெ. (n.) *அரைப்பட்டிகை, மேகலை*; women's girdle, broad chain-belt of gold.

*[அரை (இடுப்பு) + நூல் (நாண்) + மாலை.]*

**அரைநெக்கல்** *arai-nekkal*, பெ. (n.) *பாதி பழுத்தது, அரைப்பழம்*; half-ripe fruit.

*[அரை = பாதி. நெகுதல் = நெகிழ்தல், மெதுவாதல், இளகுதல். நெகு → நெக்கல் (தொ.ஆகு.).]*

**அரைநெறி** *arai-neṟi*, பெ. (n.) *தொடைச்சந்திற் கட்டும் நெறிக்கட்டி*; a sympathetic bubo (swelling) in the groins (சா.அக.).

*[அரை = இடுப்பு. நெறித்தல் = முறுக்கா யிருத்தல், விறைத்தல். நெறி = இறுகிய கட்டி.]*

**அரைநோக்கு** *arai-nōkku*, பெ. (n.) (கணி.) *கோள் (கிரக) நோக்குவகை, தன் வீட்டினின்று 5ஆம் அல்லது 9ஆம் வீட்டை நோக்குதல்* (வின்.); (Astrol.) aspect of a planet on the 5th or 9th house from its own.

*[அரை = பாதி. நோக்கு (முத. தொ. பெ.) = நோக்கல், பார்வை.]*

**அரைப்பட்டம்** *arai-p-paṭṭam*, பெ. (n.) (கிறித்.) *சீர்திருத்தக் கிறித்தவ சபையில் இளைய குருவாயிருப்பவர் பதவி*; (Chr.) the status of a Junior Pastor in a Protestant Christian Church.

ஒ.நோ : சின்னப் பட்டம் (சிவமட மரபு).

*[அரை = பாதி, இளமை. பட்டம் = சிறப்புப் பெயர், பதவி.]*

**அரைப்பட்டிகை** *arai-p-paṭṭigai*, பெ. (n.) *பெண்டிர் இடையணிவகை, ஒட்டியாணம்*; gold or silver girdle or waist-belt worn by women over their dress.

ம. அரப்பட்ட

*(அரை = இடுப்பு. பட்டி = பட்டை. பட்டி → பட்டிகை.]*

**அரைப்பட்டினி** *arai-p-paṭṭiṉi*, பெ. (n.) *பாதியளவே உணவுண்டிருத்தல்*; being half-starved.

*[அரை = பாதி. பட்டி = துணி, சீலை. ஒருகா. பட்டி → பட்டினி = உணவில்லாத போது வயிற்றில் ஈரத்துணியைப் போர்த்திக் கொண்டிருத்தல்.]*

**அரைப்பட்டினிகிட-த்தல்** *arai-p-paṭṭiṉi-kiḍa-*, 3 செ. கு. வி. (v.i.) 1. *பாதியளவே யுணவுண்டிருத்தல்*; half-starvation. 2. *மருத்துவ முறையாக அரையுணவுண்டல்*; semi-starvation, the so called hunger cure (சா.அக.).

*அரைப்பட்டினி பார்க்க*; see *arai-p-paṭṭiṉi*.

*[கீழ் → கிழ → கிட. கிடத்தல் = படுத்திருத்தல், கீழிருத்தல், இருத்தல்.]*

**அரைப்படிப்பு** *arai-p-paḍippu*, பெ.(n.) *நிரம்பாக் கல்வி*; inadequate learning.

*[அரை = பாதி. படி → படிப்பு.]*

**அரைப்பணம்**[1] *arai-p-paṇam*, பெ. (n.) 1. *இடத்திற்கேற்ப வேறுபட்ட ஒரு பணமதிப்பிற் பாதி*; a coin, the value of which is equivalent to half a *paṇam*, varying in value from place to place. 2. *அரைப்பணம், ஒன்றே காலணா* (3¾ துட்டு); a coin equal to one anna and three pies (சா.அக.).

பணமதிப்பு வேறுபாடு :

| இடம் | மதிப்பு |
|---|---|
| திருநெல்வேலி | — 10 துட்டு (40 சல்லி, 20 காசு) |
| தஞ்சை, இராமநாதபுரம் | — 7½ துட்டு (30 சல்லி, 15 காசு) |
| திருச்சிராப்பள்ளி | — 6 துட்டு (24 சல்லி, 12 காசு) |
| சென்னை | — 3¾ துட்டு (15 சல்லி, 7½ காசு) |
| திருவிதாங்கூர் | — 4 சக்கரம் (24 சல்லி, 12 காசு) |

(செ.அக.) சல்லி யென்றது 'தம்பிடி' என்னும் பழைய காசு. 'காசு' என்றது இற்றை 'நயா பைசா' என்னும் புதுக்காசு. 4 சல்லி கொண்டது ஒரு துட்டு. ஒரு சல்லி கால் துட்டு; இரு சல்லி அரைத்துட்டு; முச் சல்லி முக்கால் துட்டு.

*[அரை = பாதி.]*

*பணம் பார்க்க*; see *paṇam*.

**அரைப்பணம்**[2] *arai-p-paṇam*, பெ. (n.) அல்குல் (பணவிடு. 369); *Pudendum muliebre.*

*[ஒருகா. அர (பாம்பு) + பணம் (படம்). பெண்குறிக்குப் பாம்பின் படத்தை உவமை கூறுவது புலவர் மரபு.]*

"தாராழிக் கலைசா ரல்கு றடங்கடற்
குவமை தக்கோய்
பாராழி பிடரிற் றங்கும் பாந்தளும்"
(கம்பரா.கிட்கிந்தா. நாடவிட். 37).

**அரைப்பள்ளி** *arai-p-paḷḷi*, பெ. (n.) 1. *நாட்டுப் புறத் தொடக்கப் பள்ளிகளில் காரி (சனி) தோறும் வைத்துக்கொள்ளும் அரை நாட் பள்ளி*; closing of primary or lower elementary schools after the morning session, on Saturdays in the rural areas. 2. *பள்ளிகளின் அரை நாள் விடுமுறை*; half holiday for schools.

*[அரை = பாதி.]*

பள்ளி பார்க்க; see *paḷḷi*.

**அரைப்பு** *araippu*, பெ. (n.) 1. *அரைக்கை*; grinding, pulverising. 2. *அரைக்கப்பட்டது*; that which is ground. 3. *இலுப்பைப் பிண்ணாக்கு*; cakes of crushed matter left behind in the press after the extraction of oil from the oleagenous mahua seeds; these are used by some as soap.

"சோடியிருப் பைத்திப்பி
சொல்லரைப்பா நெய்க்குமுறகந்
தேடியரைப் பாகுந் தெளி"
(தைலவ. பாயி. 50).

4. *அரைத்த சீயக்காய்*; ground soap-nut. 5. *உடம்பில் தேய்த்த எண்ணெயைப் போக்குவதற்கு அரைத்தெடுத்த பச்சைப்பயறு முதலிய பல்வகைப் பொருள்கள்*; powdered substances such as green gram flour used for removing the oil from the oil smeared body.

'அரைப்பு' என்னுஞ் சொல், அரைப்பு வினையைக் குறிப்பின் தொழிற்பெயர்; அரைக்கப்பட்ட பொருளைக் குறிப்பின் தொழிலாகு பெயர்.

ம. அரப்பு; க. அரெ.

**அரைப்புக்கட்டி** *araippu-k-katti*, பெ. (n.) *இலுப்பைப் பிண்ணாக்கு*; mahua oil-cake.

*[அரைப்பு + கட்டி.]*

**அரைப்புளி** *arai-p-puḷi*, பெ. (n.) *நோயாளியின் பத்தியத்திற்காக உணவில் அரைப்புளியிடல்*; regulating the diet by adding to curries only half of the normal quantity of tamarind.

*[அரை + புளி.]*

**அரைப்பூட்டு** *arai-p-pūṭṭu*, பெ. (n.) *தொடையெலும்பு அரையுடன் பொருந்தும் பொருத்து, தொடைச்சந்து* (புதுவை); groin (Poṇḍ.).

ம. அரப்பூட்டு

*[அரை + பூட்டு.]*

**அரைப்பேச்சு** *arai-p-pēccu*, பெ. (n.) *பேசத் தொடங்கும் குழந்தையின் திருந்தாப் பேச்சு*; indistinct words of a child beginning to learn speech, prattle of a child.

*[அரை + பேச்சு.]*

**அரைப்பை** *arai-p-pai*, பெ. (n.) 1. *காப்புறுதிக்காக இடுப்பிற் கட்டும் நீண்ட பணப்பை*; long, narrow canvas money-bag kept fastened round the waist for safety. 2. *பெண்குறி*; the genital of a female, *Pudendum muliebre*.

*[அரை = இடுப்பு. பின்பொருள் உவமையாகுபெயர்ப் போலி.]*

பை பார்க்க; see *pai*.

**அரைப்பையாக்கு-தல்** *arai-p-pai-y-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *வேண்டிய போதெல்லாம் சிறிது சிறிதாக எடுத்து நுகர்தல்* (ஈடு, 1.7:2); to enjoy little by little, whenever wanted.

*[அரை + பை + ஆக்கு. அரைப்பையிலுள்ள பணத்தை வேண்டும் போதெல்லாம் எடுத்துச் செலவிடுதல் போன்றது, ஒன்றைச் சிறிது சிறிதாக எடுத்து நுகர்தல்.]*

**அரைபடு-தல்** *arai-paḍu-*, 20 செ. கு. வி. (v.i.) 1. *அரைக்கப்படுதல்*; to be ground. சாந்து நன்றாய் அரைபடவில்லை (உ.வ.). 2. *உரைசப்படுதல்*; to be rubbed, irritated by rubbing. தொடைச்சந்து அரைபட்டுப் போயிற்று (உ.வ.). 3. *பழிக்கப்படுதல்*; to be derided. அவன் பலர்வாயிலும் அரைபடுகின்றான் (உ.வ.).

*[அரை = அரைப்பு. 'படு' து.வி.]*

**அரைபாணா** *arai-pāṇā-*, பெ. (n.) *சிலம்பக் கழிவகை* (மதி. களஞ். 1, 66); a kind of fencing rod.

உரு. பாணா.

**அரைமண்டலம்** *arai-maṇḍalam*, பெ. (n.) *நாட்டு மருத்துவத்திற் கவனிக்கப்படும் 40 நாட் கொண்ட மண்டலம் என்னும் கால அளவிற் பாதி, 20 நாள்.* a period of 20 days, half of a *maṇḍalam*, a period of 40 days observed in indigenous medical treatment.

மண்டலம் பார்க்க; see *maṇḍalam*.

*[அரை = பாதி. மண்டலம் = வட்டம்.]*

**அரைமணி** *arai-maṇi*, பெ. (n.) 1. *அரைஞாண் மணி, அரைச்சதங்கை*; string of tinkling


அருநெல்லிப்பழம்


அரும்பு


அரைக்கீரை


அரைத்தவளை


அரைபாணா

beads worn by children around the waist. ம. அரமணி. 2. பன்னிரண்டரை மணி (செ.நா.); half past twelve o'clock (C.N.). 3. முப்பது நிமையம், ஒருமணி நேரத்திற் பாதி; half an hour, thirty minutes time.

[அரை = இடுப்பு, பாதி.]

மணி பார்க்க; see maṇi.

**அரைமதியிரும்பு** *arai-madi-y-irumbu*, பெ. (n.) பாதிநிலாப் போன்ற ஒருவகை யானைத் துறட்டி; a crescent-shaped goad for elephant. "அரை மதி யிரும்பொடு" (பெருங். உஞ்சைக். 32 : 96).

தெ. ஆரெகோல

[அரை (பாதி) + மதி (நிலா) + இரும்பு (இரும்பினாற் செய்த அங்குசம்). 'இரும்பு' கருவியாகுபெயர்.]



அரைமதியிரும்பு

**அரைமலை** *arai-malai*, பெ.(n.) மலைச்சாரலின் நடுவிடம்; middle of a mountain slope or hill. 'அரைமலையின்கண்..............மான்பிணை கள்..........துயிலும்.........பொதியின் மலை' (புறநா. 2, உரை).

**அரைமனிதன்** *arai-manidan*, பெ. (n.) மதிப்புக் குறைந்தவன்; man of low esteem. 'ஆடையில்லாதவன் அரைமனிதன்' (பழ.).

[அரை = பாதி, குறை. Skt. manuja > த. மனிதன். த. மன் > Skt. manu → manuja.]

மன் பார்க்க; see maṉ.

**அரைமனிதனமுரி** *arai-maṉidaṉ-amuri*, பெ. (n.) இளஞ்சிறுவனின் சிறுநீர்; urine of a small boy (சா.அக.).

[அரை (பாதி) + மனிதன் + அமுரி. உவர் → உவரி → உமரி → அமரி → அமுரி.]

அரைமனிதன் பார்க்க; see arai-maṉidaṉ.

**அரைமா** *arai-mā*, பெ. (n.) (கீழ்வாய்.) சு என்னுங் குறியுள்ளதும் நாற்பதிலொரு பாகத்தைக் குறிப்பதுமான கீழ்வாயிலக்கம் அல்லது பின்னவெண்; the fraction 1/40, as half of orumā. "ஒருமாவின் கீழரையின் றோது" (தனிப்பா.தி. 1, பக். 44).

ம. அரம

[மா = அளவு, ஒன்றிற்குக் குறைந்த சிற்றளவு. ஒருமா = 1/20. ஆகவே, அரைமா = 1/40. மாத்தல் = அளத்தல். மா → மாத்திரம் = அளவு, மட்டு. மா → மாத்திரை = எழுத்தொலிக்கும் கால அளவு, நோயாளி யுண்ணும் மருந்தளவு. மாத்தல் என்னும் வினை வழக்கிறந்தது. மாத்திரம் > Skt. mātra. மாத்திரை > Skt. mātrā.]

**அரைமூடி** *arai-mūḍi*, பெ. (n.) சிறு பெண் பிள்ளைகளின் அற்றம் (அம்மணம்) மறைப்பதும், அரசிலை வடிவானதும், வெள்ளி அல்லது பொன்னாலானதுமான அரையணி; pipal-leaf shaped plate of metal, worn by naked little girls to cover their pubes.



அரைமூடி

[அரை = இடுப்பு. மூடு → மூடி = மறைப்பது. 'இ' வி. முத. ஈறு.]

**அரையணி** *arai-y-aṇi*, பெ. (n.) அரையி லணியும் அணிகலம்; any ornament worn around the waist.

[அரை = இடுப்பு. அணி (முத. தொ. ஆகு.) = அணியப்படுவது.]

**அரையணிகை** *arai-y-aṇigai*, பெ.(n.) திருமணத்தில் மணமக்கள் புதிய ஆடை யணிகை; the bride and bridegroom performing the ceremony of wearing new clothes.

**அரையர்** *araiyar*, பெ. (n.) பெருமாள்கோயில் களில் நாலாயிரத் தெய்வப் பனுவல்களைப் பாடுந் தொண்டு செய்வோர் (கோயிலொ. 36); priests in some Viṣṇu temples whose duty is to chant the *Divviya Prabandhas*.

[அரசன் → அரைசன் (ஓ.) – அரைசர் → அரையர் (ப.).]

**அரையர்கோவை** *araiyar-kōvai*, பெ. (n.) தஞ்சைத் தயாபரன் என்ற தலைவன்மேற் பாடப்பட்ட கோவைப் பனுவல் (களவியற்.90); a *kōvai* on the chief Thayāparaṉ of Thañjai, now not extant.

[அரசன் → அரைசன் → அரையன் (ஒ.) — அரையர் (ப.). கோ → கோவை (தொ. ஆகு.).]

**அரையல்** *araiyal*, பெ.(n.) 1. **துவையல்** (வின்.); a ground pasty side dish used as seasoning for the main dish. 2. **அரையலன்** பார்க்க (யாழ்ப்.); see *araiyalan* (J.).

[அரைத்தல் = அழுத்தித் தேய்த்துத் தூள் அல்லது பசையாக்கல். அரை + அல் (தொ.பெ. ஈறு.) — அரையல் (தொ. பெ., தொ. ஆகு.).]

**அரையலன்** *araiyalan*, பெ. (n.) **சோம்பேறி** (யாழ்ப்.); lazy, inactive person, sluggard (J.). அவனொரு அரையலன் (உ.வ.).

[அரை → அரையல் → அரையலன்.]

அரையலிடுகை பார்க்க; see *araiyal-idugai*.

**அரையலிடுகை** *araiyal-idugai*, பெ. (n.) 1. **உட்கார்ந்தாவது நின்றாவது ஓரிடத்தைத் தேய்த்துக்கொண்டிருக்கை** (வின்.); rubbing or wearing away a place by sitting or standing. 2. **வேலை செய்யாமல் அதிகமாய் உண்கை**; eating too much without doing any work.

[அரையல் = 1. தேய்த்தல். 2. பல்லால் அரைத்தல், உண்ணுதல் (இழிப்புக் கருத்து). அரை → அரையல். 'அல்' தொ.பெ. ஈறு. இடு → இடுகை. 'கை' தொ.பெ. ஈறு. இடுதல் = செய்தல்.

இருவகை யரையலும் சோம்பேறித்தனத்தைக் குறிப்பா யுணர்த்தும்.]

**அரையற்றநாள்** *arai-y-arra-nal*, பெ. (n.) **மான்றலை (மிருகசீரிடம்), அறுவை (சித்திரை), காசம் (அவிட்டம்) என்னும் நாண்மீன்கள்** (சோதிட.அக.); the 5th, 14th and 23rd lunar asterisms.

**அரையன்**[1] *araiyan*, பெ. (n.) 1. **அரசன்**; king. "அரையனாயம ருலகமாள்வதற்கு" (தேவா. 7.34 : 4). 2. **ஒரு பழைய பட்டம்**; an ancient title. 'அரையன் அரங்கன்பிச்சன்' (S.I.I. iii, 438).

ம. அரயன்

[அரசன் → அரைசன் → அரையன்.]

**அரையன்**[2] *araiyan*, பெ. (n.) 1. **(அரையில் ஏதேனு மணிந்தவன்) ஏதேனு மணிந்த அரையை யுடையவன்** (சங்.அக.); a man wearing something or other round his waist. "வெம்மான்றோல் வீக்கு மரையன்" (கலைசை. 82). 2. **பாதியை யுடையோன்**; one who has half of a thing.

[அரை = இடுப்பு, பாதி. அரை → அரையன். 'அன்' ஆ. பா. ஈறு.]

**அரையன்**[3] *araiyan*, பெ. (n.) **தூள்**; powder (சா.அக.).

**அரையன்சம்பா** *araiyan-šamba*, பெ. (n.) **நெல் வகை** (A.); a kind of paddy.

சம்பா பார்க்க; see *šamba*.

**அரையன்விரோதி** *araiyan-virōdi*, பெ. (n.) **கோவைக்கொடி**; a creeper, *Bryonia grandis* (சா.அக.).

[அரையன் + Skt. virodhin > த. விரோதி (பகைவன்).]

**அரையாப்பு** *arai-yāppu*, பெ. (n.) 1. **தொடைச் சந்து** (புதுவை); groin (Pond). 2. **தொடையிடுக்கி லுண்டாகும் கட்டி**; Inguinal bubo (செ. அக.).

பல மாதரைக் கூடுவதால் வெட்டை (பிரமேக) அல்லது புண் (விரண) மேகத்தொடர்பு ஏற்பட்டு, பின்னர் நரம்புக் கோளாற்றினாலும், நோய்கொண்ட பெண்களைப் புணருவதால் வெள்ளைவெட்டையேற்படுவதாலும் ..............ஈன்பொறிகளில் (ஜனனேந்திரியங்களில்) சூடு (தாபிதம்) கண்டு, அங்கிருந்து அரையின் நிணநீர்க் கோளத்திற்குப் பரவிச் செல்வதனால், தொடையிடுக்கில் அல்லது கவட்டியில் நெறிகள் பெருத்துக் கட்டியைப் போற் காணும் ஒருவகைப் புண் (விரண) நோய்; an inflammation and swelling of a lymphatic gland, generally in the groin, usually following chancroid, gonorrhoea, syphilitic infection or some other form of venereal disease, *Inguinal bubo* (சா.அக.).

ம. அரயாப்பு

[அரை = இடுப்பு. யாத்தல் = கட்டுதல். யா → யாப்பு. 'பு' தொ.பெ. ஈறு. 'அரையாப்பு' தொ. ஆகு.]

**அரையாப்புக்கட்டி** *arai-yāppu-k-katti*, பெ. (n.) அரையாப்பு 2 பார்க்க; see *arai-yāppu 2*.

[அரை + யாப்பு + கட்டி.]

**அரையாறுபடு-தல்** *arai-y-āru-padu-*, 20 செ.கு.வி. (v.i.) **குறைதல்**; to decrease, lessen, to be reduced. "பிரிவாலே அரையாறு பட்டுச் சிவந்திருக்கும்" (ஈடு, 1.4 : 2, பக். 176.).

[அரை (பாதி) + ஆறு + படு. படுதல் = உண்டாதல்.]

**அரையாறுபடுத்து-தல்** *arai-y-āṟu-paḍuttu-*, 2 பி.வி. (v.caus.) **குறையப்பண்ணுதல்;** to reduce. 'அந்த ரஸத்தை அரையாறுபடுத்தி' (ஈடு, 4 : 4, பிர.).

*அரையாறுபடு-தல்* பார்க்க; see *arai-y-āṟu-paḍu-*.

*[அரையாறுபடு (த.வி.) → அரையாறுபடுத்து (பி.வி.). படு → படுத்து. 'து' பி.வி. ஈறு.]*

**அரையிரவு** *arai-y-iravu*, பெ. (n.) 1. **நள்ளிரவு;** midnight. "மடவரலிங் கரையிரவிற் கண் விழித்தாள்" (ஞானவா. சிகித்து. 75). 2. **பாதி யிரவு;** half the night, midnight.

*[அரை = பாதி. இருமை = கருமை. இர்→ இரு. இர் → இர → இரவு.]*

**அரையிருள்** *arai-y-iruḷ*, பெ. (n.) **நள்ளிரவு;** midnight. "அரையிரு ணடுநாள்" (குறுந். 190).

*[அரை = பாதி. இர் → இருள்.]*

*அரையிரவு* பார்க்க; see *arai-y-iravu*.

**அரையுடம்பு** *arai-y-uḍambu*, பெ. (n.) 1. **பாதி யுடம்பு;** half of the body. 2. **பாதியளவாக இளைத்தவுடம்பு;** an emaciated or half-reduced body.

*[அரை = பாதி. உடல் → உடன் (உடம்) → உடம்பு.]*

**அரையுப்பு** *arai-y-uppu*, பெ. (n.) **நோயாளிக் குரிய பத்திய வுணவில் பாதியளவே உப்புச் சேர்த்தல்;** regimen with half of the required quantity of salt.

ஒ.நோ : அரைப்புளி

**அரையுரல்** *arai-y-ural*, பெ. (n.) **மருந்தரைக்கும் கலுவம், குழி யம்மி;** small mortar or hollow grinding stone for macerating medicines.



அரையுரல்

*[அரைக்கும் உரல்.]*

*உரல்* பார்க்க; see *ural*.

**அரையெழுத்து** *arai-y-eḻuttu*, பெ. (n.) **நெடுங் கணக்கைப்பற்றிய சிற்றறிவு;** a smattering knowledge of the alphabet. அரையெழுத்துக் கற்றிருக்கிறான் (உ.வ.).

*[அரை = பாதி. எழுது → எழுத்து (தொ. ஆகு.).]*

**அரைவகுப்பு** *arai-vaguppu*, பெ. (n.) **குழந்தை களின் தொடக்க வகுப்பு;** beginner's class in a school for infants.

*[அரைவகுப்பு = முதல் வகுப்பிற் பாதி போன்றது. வகு→வகுப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அரைவட்டம்** *arai-vaṭṭam*, பெ.(n.) 1. **வட்டத்திற் பாதி;** semi-circle. 2. **அரைமூடி;** metal plate intended for covering the pubes of little girls.

*[அரை = பாதி. வள்ளுதல் = வளைதல். வள் → வட்டு → வட்டம்.]*

**அரைவடம்** *arai-vaḍam*, பெ. (n.) **அரைச் சதங்கை;** string of beads round the waist, worn by little children. "அரைவட்டங்கள் கட்டி" (திருப்பு. 13).

*[அரை = இடுப்பு. வள்ளுதல் = வளைதல், உருண்டையாதல், உருண்டு திரளுதல். வள் → வட்டு → வட்டம் → வடம் = உருண்டு திரண்ட நாண் அல்லது கொடி.]*

**அரைவண்டி** *arai-vaṇḍi*, பெ. (n.) **பாதியளவான கூண்டுவண்டி;** small-wheeled cart or half-sized bandy, generally covered.

*[அரை = பாதி. வள் → வண்டு → வண்டி = சக்கரம், சகடம்.]*

**அரைவயிரக்கண்** *arai-vayira-k-kaṇ*, பெ. (n.) **கம்மாளர் கருவிகளுள் ஒன்று** (சங்.அக.); a tool used by goldsmiths.

*[அரை + வயிரம் + கண்.]*

**அரைவயிறன்** *arai-vayiṟaṉ*, பெ. (n.) **கருக்காய், அரிசி முதிராத நெல்;** husk containing withered or half-ripe paddy grain.

*[அரை=பாதி. வயிறு → வயிறன். வயிறு = அகடு. அரைவயிறன் = அரை யுணவுண்ட வயிறுபோலப் பாதி விளைந்த அரிசி அல்லது உள்ளீடுள்ள கூலமணி.]*

**அரைவயிறு** *arai-vayiṟu*, பெ. (n.) **பாதி வயிறு, முழுவயிறு என்பதற்கு எதிர்; அரைவயிற்றுச் சாப்பாடு;** half bellyful, opp. to bellyful.

ம. அரவயறு

*[அரை = பாதி. வைத்தல் = இடுதல், உண விடுதல். இல் → இடம். வை + இல் – வையில்→ வயில் → வயின் → வயிறு.]*

**அரைவயிறுங்குறைவயிறும்** *arai-vayiṟuṅ-kuṟai-vayiṟum*, பெ. (n.) *வயிறு நிரம்பாமை;* the state of not being bellyful. அரைவயிறுங் குறைவயிறுமாய்ச் சாப்பிட்டு வந்திருக்கிறான் (உ.வ.).

'அரை.........வயிறும்' மரபிணைக் கூட்டு மொழியான தொடர்மொழி (an idiomatic phrase composed of two compound words.).

அரைவயிறு பார்க்க; see *arai-vayiṟu*.

**அரைவளைந்தான்** *arai-vaḷaindāṉ*, பெ. (n.) *தாறு பாய்ச்சாது கட்டும் வெற்றுச் சுற்றாடை;* cloth worn round the waist without folding and tucking one end of it behind.

*[அரை = இடுப்பு. வளை → வளைந்தவன் → வளைந்தான் = சுற்றிக்கட்டினது (வினையா. பெ.).]*

**அரைவளைவாசனம்** *arai-vaḷaiv(u)-āsaṉam*, பெ. (n.) (ஓகம்) *அரை வட்டமாயிருக்கும் ஓக (யோக) இருக்கைவகை;* (Yoga) a kind of semi-circular yogic posture.

*[அரை + வளைவு.* **Skt.** āsana > **த.** *ஆசனம் (இருக்கை).]*

**அரைவறுப்பு** *arai-vaṟuppu*, பெ. (n.) *பாதி அல்லது இளவறுப்பு;* partial frying.

**அரைவாசி** *arai-vāši*, பெ. (n.) 1. *பாதியளவு;* one half, half quantity. இதில் அரைவாசி தேறும் (உ.வ.). 2. *அரைமூச்சு, முழுமூச்சு என்பதற்கு எதிர்;* half-breath, opp. to full breath (சா.அக.).

ம. அரவாசி

**அரைவாதம்** *arai-vādam*, பெ. (n.) 1. *குழந்தை கட்கு இடுப்பின் கீழாகவும் கால்களிலு முண்டாகும் இளம்பிள்ளையூதம் (வாதம்);* a kind of paralysis of the legs and the lower part of the body occuring in early childhood, *Infantile paraplegia.* 2. *தொடைச் சந்திலுண்டாகும் ஒருவகை ஊதம்;* paralytic pain in the groin, *Bubonalgia.*

*[அரை = இடுப்பு.* **Skt.** vāta > **த.** *வாதம் = ஊதம்.]*

**அரைவாய்** *arai-vāy*, பெ. (n.) 1. *வாய் நிறையக் கொள்வதிற் பாதி:* half a mouthful. 2. *பங்கப் பட்ட வாய் (சங்.அக.);* deformed or disfigured mouth.

ம. அரவாய்

**அரைவாய்க்கொண்டுதின்னல்** *arai-vāy-k-koṇḍu-tiṉṉal*, பெ. (n.) *நோய்ப்பட்ட மாடு முதலியவை மெதுவாக இரையெடுக்கை* (பெரியமாட். 156); eating in half-mouthfuls like sick cattle.

*[அரை (பாதி) + வாய் + கொண்டு + தின்னல். கொள் → கொண்டு (இ. கா. வி. எ.). தின் → தின்னல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அரைவாயன்** *arai-vāyaṉ*, பெ.(n.) *உரையாட்டில் அல்லது தருக்கத்தில் தெரிந்து பேசத் தெரியாதவன்* (இ.வ.); one who is not able to hold his own in a learned discussion (Loc.).

*[அரை = பாதி. வாய் → வாயன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அரைவீற்று** *arai-vīṟṟu*, பெ. (n.) *வட்டத்திற் பாதி;* semi-circle.

*[அரை = பாதி. வீறு → வீற்று = பகுதி. அரைவீற்றுவளைவு என்பதன் குறுக்கம்.]*

**அரைவீற்றுவளைவு** *arai-vīṟṟu-vaḷaivu*, பெ. (n.) *அரைவளைவுக் (கமான்) கட்டடம்* (C.E.M.); semi-circular arch.

**அரைவெட்டு** *arai-veṭṭu*, பெ. (n.) 1. *தையலிற் கைகாற் பாதிவெட்டு;* half-cut in tailoring. 2. *பாதியளவு முடிவெட்டு;* half-cut in cropping the hair.

**அரைவெறி** *arai-veṟi*, பெ. (n.) *கட்குடியாலுண்டாகுஞ் சிறுமயக்கம்;* partial intoxication.

**அரைவேக்காடு** *arai-vēkkāḍu*, பெ. (n.) *பாதியளவு வெந்திருக்கை;* half-boiled condition. சோற்றை அரைவேக்காட்டில் வடித்திருக்கின்றனர் (உ.வ.).

*[அரை = பாதி. வே → வேக்காடு. 'காடு' தொ.பெ. ஈறு.]*

**அரைவேட்டி** *arai-vēṭṭi*, பெ. (n.) *ஆடவர் இடுப்பிற் கட்டும் ஆடை;* cloth worn by males as an outer garment, covering from waist to ankles.

*[அரை = இடுப்பு. வேடு → வேட்டி = சுற்றிக் கட்டுவது.]*

வேட்டி பார்க்க; see *vēṭṭi*.

**அரைவைரக்கண்** *arai-vaira-k-kaṇ*, பெ. (n.) *அரைவயிரக்கண் பார்க்க;* see *arai-vayira-k-kaṇ*.

**அரைவைரம்** *arai-vairam*, பெ. (n.) *அரிசி முதிராத நெல்* (இ.வ.); paddy with grains only half-developed for want of rain or water (Loc.).

*[அரை = பாதி. வயிர்த்தல் = திண்ணிதாதல், முதிர்தல். வயிர் → வயிரம் → வைரம்.]*

**அரோ** *arō*, இடை. (part.) **ஓர் ஈற்றசைச் சொல்**; an expletive at the end of a line in a verse. "நோதக விருங்குயி லாலுமரோ" (கலித். *33 : 24-5*).

ம., தெ. அரே; க. அல.

*[எல்ல → ஏல → ஏழ → ஏட → ஏடா → ஏடோ → எடோ → அடோ → அரோ; அல்லது, ஏட → எட → அட → அடா → அடோ → அரோ.]*

ஒ.நோ: அட → அடா > தெ. அரா → ரா. "ஏமிரா வோரி யென்பாள் எந்துண்டி வஸ்தி யென்பாள்" (தனிப்பா. தி. 1, பக். 96).

'அடா' என்னும் விளியிடைச் சொல் ஆடூஉ முன்னிலையாகப் பாட்டில் வருவதுண்டு.

"நட்ட கல்லைத் தெய்வமென்று
நாலு புட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொ ணென்று
சொல்லு மந்திர மேதடா"
(சிவவாக்கியர்).

'ஏட' என்னும் சொல்லும் அதன் திரிவுகளும், முதற்காலத்தில் தோழனையும் ஒத்தோனையும் விளிக்குஞ் சொற்களாயிருந்து, பின்னர் ஏவலனையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொற்களாக இழிந்துவிட்டன.

இனி, 'அரோ' என்பது சிவனைக் குறிக்கும் 'அரன்' என்னுஞ் சொல்லின் விளிவடிவம் எனலுமாம். இது, இளைப்பாறுகின்றவன் 'சிவசிவா' என்று இறைவனை விளித்தல் போல்வது. அரோ + அரா – அரோவரா → அரோகரா என்னும் விளியிரட்டையை நோக்குக.

ஒரு காலத்தில் பொருளுணர்த்துஞ் சொற்களாயிருந்தவையே, பிற்காலத்தில் அவற்றின் பொருள் இழப்புண்டோ மறைந்தோ போன பின், அசைச்சொற்களாயின என்பதை அறிதல் வேண்டும்.

எல்ல, *அரன் பார்க்க*; see *ella*, *aran̲*.

**அல்**[1] *al*, பெ. (n.) *1. மயக்கம்;* confusion, delusion.

"தன்னறிவு சாட்சி யல்லாற்
சாயுச்சி யப்பயனைச்
சொன்னபிழை கெட்டேன்
றொலைப்பரோ"

(ஒழிவி. பொதுவி. 6). 2. **அந்திவேளை**; evening. "அல்லங் காடியில் அழிதரு கம்பலை" (மதுரைக். 544). 3. **கருமை**; black. "அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறை யெயிற் றாபாச வடிவமான அந்தகா" (தாயு. தேசோ. 9). 4. **இருள்** (பிங்.); darkness. 5. **இரா** (பிங்.); night. "அல்லும் பகலு மனவரத முந் துதித்தால்" (சரசுவதியந். காப்பு).

ம. அல்

*[பல பொருள்கள் கலக்கும்போது கலக்கம் அல்லது மயக்கம் உண்டாகின்றது. கருமை அல்லது இருட்கருத்து, பொதுவாக மயக்கக் கருத்தினின்று தோன்றுகின்றது. ஒரு பொருளைப்பற்றி அல்லது செய்தியைப்பற்றி ஒன்றுந் தோன்றாத நிலை, கருநிறத்தை அல்லது இருள்நிலையை ஒத்திருக்கின்றது. இருள் நிலையே இரவு.*

*அல்லுதல் = கலத்தல், முடைதல், பின்னுதல். அல் = கலப்பு, கலக்கம், மயக்கம், இருள், இரவு.]*

ஒ.நோ: கல → கலங்கு → கலக்கு → கலக்கம். கள்ளுதல் = கலத்தல். கள் → கர் → கரு → கருமை. முயங்குதல் = தழுவுதல், சேர்தல். முயங்கு → மயங்கு → மயக்கு → மயக்கம். முள் → முள்கு. முள்குதல் = முயங்குதல். முள் → முய் → முய → முயங்கு. முய் → முயல் → மயல் → மால் = கருமை. மால் → மாலை = மயக்கம், பகலும் இரவும் கலக்கும் அந்தி, முன்னிரவு.

**அல்**[2] *al*, பெ. (n.) *1.* **கதிரவன்** (அக.நி.); sun. 2. **வெயில்** (அக.நி.); sunshine. 3. **சுக்கு** (இராசவைத்.); dried ginger. க. அல்ல; தெ. அல்லமு. 4. **விறகு** (சா.அக.); firewood, fuel. 5. **சூட்டினா லுண்டாகும் வயிற்றுளைச்சல் அல்லது வயிற்றோட்டம்**; dysentery or diarrhoea (சா.அக.).

*[உல் → உல → உலர். உல் → உலை. உல் → எல் = ஒளி, கதிரவன், வெயில். உல் → அல் = கதிரவன், வெயில், வெயிலிற் காய்ந்தது, சூட்டினாலுண்டாவது.]*

**அல்**[3] *al*, பெ. (n.) **மதில்** (சங்.அக.); wall, wall round a fort.

[உல் → உல → உலவு → உலாவு. உலாவு தல் = சூழ்தல், சுற்றுதல். உல → உலவு → உலகு = உருண்டையானது, சுற்றி வருவது. உல் → உலம் → உருண்டை, சுழற்சி, உழற்சி. உலம் → அலம் = சுழற்சி. உலம்வரல் → உலமரல் → அலமரல். "அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" (தொல். சொல். உரி. 13). உல் → அல் = சுற்றுமதில், மதில்.]

**அல்**[4] *al*, கு.வி. (ad.v.) **அன்மைப் பொருளுணர்த்தும் எதிர்மறைக் குறிப்புவினை முதனிலை;** base of the appellative verb or implicit verb that negatives the attributes of a thing.

எ-டு :

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| **தன்மை** | அல்லேன் | அல்லேம் |
| **முன்னிலை** | அல்லை | அல்லீர், அல்லிர் |
| **படர்க்கை** | அல்லன் | அல்லர் |
| | அல்லள் | " |
| | அல்லது, அன்று | அல்ல. |

[உல் → ஒல் → அல். அல்லுதல் = நெருங்குதல், அடுத்தல், பொருந்துதல், முடைதல், பின்னுதல்.

அல்லது = 1. நெருங்கியது, அடுத்தது (next one). ஒ.நோ: **OE.** *nēahst* (nigh + est); **E.** *next*, lying nearest.

2. இன்னொன்று, **Gk.** *allos*, other; **L.** *alius*, another.

3. முந்தினதல்லாதது; that which is not the preceding or the aforesaid.

"அல்லது கிளப்பின் இயற்கை யாகும்"
(தொல். எழுத்து. புள்ளி. 26).

"எப்பொரு ளாயினும் அல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்"
(தொல். சொல். கிளவி. 35).

எ-டு : உழுந்தல்லதில்லை.

4. முந்தினதில்லாவிட்டால் இன்னொன்று; other than the aforesaid.

5. இல்லாவிட்டால் – ஆதல் – ஆவது; or, either or, alias. இந்த வேலைக்கு இருவர் அல்லது மூவர் போதும். பணம் அல்லது பொருள் வாங்கிக்கொண்டு வா. இன்று அல்லது நாளை மழை பெய்யும். திருக்கோவை யாசிரியர் பெயர் திருவாதவூரர் அல்லது மாணிக்கவாசகர் என்று சொல்.

இங்ஙனம் அண்மைக் கருத்தினின்று முந்நிலைகள் தாண்டி அன்மைக் கருத்தும், அதினின்று இன்மைக் கருத்தும் தோன்றியுள்ளன.

மேற்கூறிய ஐம்பொருள்களுள், முதல் நான்கும் பெயர்ச்சொல்; ஈறொன்று இடைச்சொல். பெயர் குறிப்புவினைமுற்றாகவும் ஆளப்படும்.

'அல்லது' என்னுஞ் சொல், இங்ஙனம் முச்சொல்லாகவும் இருக்கும். ஆயின், குறிப்பு வினைமுற்று 'இன்று', 'அன்று' என்னும் குறுக்க வடிவிலேயே வழங்கும்.

'அன்று' (அல்லது) என்னும் எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றின் முதனிலையாகிய 'அல்' பெயரெச்சமாகவும், பல்வேறு ஈறுகளாகவும், இடைநிலையாகவும் ஆளப்படும்.]

**அல்**[5] *al*, கு.பெ.எ. (adj.) **அல்லாத, மாறான;** which is not, other than, different from. "அல்வழி யெல்லாம் உறழென மொழிப" (தொல். எழுத்து. புள்ளி. 73). "அறனை நினைப்பானை யல்பொரு ளஞ்சும்" (திரிகடு. 72). "அல்வழக் கொன்றுமில்லா வணிகோட்டியர்கோன்" (திவ். திருப்பல். 11).

அல்[4] பார்க்க; see *al*[4].

[அல் → அன். ஒ.நோ: ஆல் → ஆன் (3ஆம் வே.உ.). எ-டு : அதனாலே → அதனானே; ஆதலால் → ஆதலான். இல் → இன் (5ஆம் வே.உ.). எ-டு : அதனில் எளிது → அதனின் எளிது. இல் → இன் (எ.கா.வி.எ. ஈறு). எ-டு : வரில் → வரின்.

அல் → அ. எ-டு : அ + வலம் – அவலம் (வலமின்மை, நோய், துன்பம்). ஒ.நோ: நல் → ந. எ-டு : நக்கீரன், நப்பின்னை, நச்செள்ளை, நத்தத்தன், நப்பாலன்.]

'அன்' என்னும் எதிர்மறை முன்னொட்டு (pref.) வடமொழியில் 'அந்' என்று எழுதப்பட்டுப் பின்னர் மெய்ம்முதற் சொன்முன் முன்பின்னாகத் தலைமாறி (metathesis) 'ந' என்று திரியும். அன் → ன (ன் + அ) → ந. றன்னகரம் வடமொழியி லின்மையால், அது தந்நகரமாக எழுதப்பட்டது.

தமிழின் முன்மையையும் இயனிலையையும், வடமொழியின் பின்மையையும் திரிநிலையையும் அறியாமையாலேயே நேமிநாதம், வீரசோழியம், பிரயோக விவேகம் முதலிய பிற்கால இலக்கண நூலாசிரியன்மார் வடமொழியிலக்கண நூலாசிரியரைப் பின்பற்றி, 'ந'

என்னும் வடமொழி யெதிர்மறை முன்னொட்டே, அம் மொழியிற்போல் தமிழிலும் 'அன்' என்று திரிந்து (மெய் பின்னும் உயிர் முன்னுமாகத் தலைமாறி, பின்னர்) 'அ' என்று ஈறு கெடும் என்று வழுப்படத் தலைகீழாகக் கூறிவிட்டனர்.

"நேர்ந்த மொழிப்பொருளை நீக்கவருநகரஞ்
சார்ந்த துடலாயிற் றன்னுடல்போஞ் —
சார்ந்ததுதான்
ஆவியேற் றன்னாவி முன்னாகும்..........."
(நேமி. எழுத். 11),

"சொன்ன மொழிப்பொரு ணீக்கு
நகாரமச் சொன்முன் மெய்யேல்
அந்நிலை யாக வுடல்கெடு
மாவிமுன் னாகிலது
தன்னிலை மாற்றிடும்......"
(வீரசோ. சந்தி. 11)

' "நேர்ந்த......முன்னாகும்" என்பதனான், அகளங்கன், அநங்கன் எனவும்; அப்பிராமணன், அநச்சுவன் எனவும்; அதன்மம் எனவும், முறையே இன்மை, அன்மை, எதிர்மறை மூன்றினும் நஞ்து வரும்' (பிர. விவே. சமாசப். 4, உரை).

நேமிநாதம், வீரசோழியம், பிரயோக விவேகம், இலக்கணக்கொத்து முதலிய சில பிற்கால நூல்கள் அளவைநூ லன்மையின், தமிழுக்கு மாறான அவற்றின் கூற்றுகளெல்லாம் கொள்ளப்படா.

அல் → அன் > வ. அந் → ந என்று தென்சொல் திரிந்து தோற்றுவித்த ஆரியச்சொல், மேலையாரிய மொழிகளிற் பின்வருமாறு பல்வேறு வடிவுகொண்டு, அன்மைப் பொருளும் இன்மைப்பொருளும் உணர்த்தி வந்துள்ளது.

**OS.** ne, ni; **AS.** ne; **OE.** na, ne, ni, ny; **OHG.** ni (ne); **ON.** ne; **OFris.** ne, ni; **Ost.** ne; **Goth.** ni; **Lith.** ne; **Ir.** ni; **Gael.** ni; **W.** ni; **L.** ne; **Gk.** ne; **Russ.** ne; **ME.** na, no; **Scot.** na, ne; **MHG.** ne; **MDu.** ne; **E.** no.

'No' என்னும் ஆங்கிலச் சொல், சில கூட்டுச் சொற்களில் 'n' என்று ஈறு கெட்டுள்ளது.

எ.டு: n-ever, n-aught, n-one, n-either, n-ay, n-or.

No one - none - non (மறுதலைப்பொருள் முன்னொட்டு). எ-டு: non-appearance, non-Christian.

'அன்' (an) என்னும் கிரேக்க எதிர்மறை முன்னொட்டு, உயிர்முதற் சொல்முன் இயல்பாகவும், மெய்ம்முதற் சொன்முன் ஈறு குன்றியும் நிற்கும்.

எ-டு: Gk. an - anarchy, a - amorphus. இதையொத்த ஆங்கில முன்னொட்டு 'un'. எ-டு: unable, unbearable.

'அல்' என்னும் எதிர்மறை முன்னொட்டின் குறுக்கமான 'அ' அன்மை யின்மை யெதிர்மறை யாகிய முப்பொருளையும் உணர்த்தும்.

**அல்**[6] *al*, இடை. (part.) 1. ***எதிர்மறையேவல் ஒருமை யீறு***; neg. verb-ending of imp. sing. "இளங்கொடியே யிடரெய்தல்" (திருக்கோ. 15). 2. ***எதிர்மறை வியங்கோ ளீறு***; neg. verb-ending of opt. "பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்" (குறள், 196). 3. ***எதிர்மறைவினை யிடைநிலை***; neg. verb. infix. வாழலேன்.

க. அல்

அல்[4] பார்க்க; see *al*[4].

**அல்**[7] *al*, இடை. (part.) 1. ***ஒரு தொழிற்பெயரீறு***; a suff. of vbl. nouns. செயல், பாடல். ம., க. அல். Cp. E. approv*al*, betray*al*, tri*al*, withdraw*al*. 2. ***ஓர் ஆண்பாற் பெயரீறு***; masc. sing. n. suff. இளவல், வள்ளல். 3. ***ஒரு சொல் வேறுபாட் டீறு***; a particle of specialisation. தொடை → தொடையல், மண் → மணல். 4. ***ஓர் ஒன்றன்பாற் பெயரீறு***; neut. sing. n. suff. உள்ளல் (உள்ளான்). 5. ***எதிர்காலத் தன்மை யொருமை வினைமுற்றீறு***; verb-ending of 1st pers. sing. future tense. செய்வல், காண்பல். 6. ***உடன்பாட்டு வியங்கோள்வினை யீறு***; verb-ending of posit. opt. "மக்கட் பதடி யெனல்" (குறள், 196).

[1, 3, 6 – இல் = வீடு, இடம், ஒரு பெயரீறு. இல் → அல்.

2. அன் (ஆ.பா. ஈறு) → அல். இளவன் → இளவல்.

4. அன் (ஒன்றன்பாலீறு) → அல். உள்ளான் → (உள்ளன்) → உள்ளல்.

5. ஏன் → என் → அன் → அல். செய்வேன் → செய்வென் → செய்வன் → செய்வல்.]

**அல்கந்தி** *algandi*, பெ. (n.) ***மாலை யந்திப் பொழுது***; evening twilight. "தெய்வத்தை......

அல்கந்தி நின்று தொழுதல் பழி" (ஆசாரக். 10).

[அல் → அல்கு = இரவு. அந்துதல் = கலத்தல். அந்து → அந்தி = பகலும் இரவும் கலக்கும் வேளை.]

**அல்கல்**[1] *algal*, பெ. (n.) 1. **தங்குகை;** abiding, staying. "பல்பூங் கானல் அல்கினம் வருதல்" (அகநா. 20 : 10). 2. **நாள்** (பிங்.); day of 24 hours. "இருங்குயில்.........அல்கலும்....... கூவ" (அகநா. 25 : 6-8). 3. **இரவு;** night. "அல்கற் கனவுக்கொல்" (கலித். 90 : 21).

[அல்குதல் = தங்குதல். அல்கு → அல்கல் = தங்கும் இரவு, தங்கிச் செல்லும் அல்லது கழியும் நாள்.

**ஒ.நோ:**

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல்
வைகுதல்
வைகலை வைத்துணரா தார்"
(நாலடி, 40).]

**அல்கல்**[2] *algal*, பெ. (n.) 1. **குறைவு;** deficiency. "அல்கலின் மொழிசில வறைந்து" (நைடத. அன்னத்தைக்கண். 66). 2. **வறுமை** (திவா.); destitution, want, poverty.

[அல்குதல் = குறைதல். அல்கு → அல்கல் = செல்வக்குறைவு, வறுமை.]

**அல்கலும்** *algalum*, கு.வி.எ. (adv.) **நாடோறும்;** daily. "இருங்குயில்.......அல்கலும்......கூவ" (அகநா. 25 : 6 - 8).

**அல்கா** *alga*, பெ. (n.) **குதிரைச் சேணத்தில் கழுத்து வளையத்துக்குக் கீழிடும் மெத்தை** (இ.வ.); inside padding of the collar of a horse (Loc.).

[**ஒருகா.** அல்கு → அல்கா = தங்கும் மெத்தை.]

**அல்கு**[1]**-தல்** *algu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **தங்குதல்** (பிங்.); to stay, abide, lodge. 2. **நிலைத்து நிற்றல்;** to be permanent. —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **சேர்தல்;** to reach, arrive at. "அவரல்கு வர்போய்......பழனங்களே" (திருக்கோ. 249). 2. **உணவைப் பலநாட்குச் சேமித்து வைத்தல்;** to preserve, as food for many days. "சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்" (புறநா. 236 : 2).

[ஒல்லுதல் = பொருந்துதல். ஒல் → அல் → அல்கு. அல்குதல் = பொருந்தித் தங்குதல்.]

**அல்கு**[2]**-தல்** *algu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **சுருங்குதல்;** to shrink, diminish, lessen, diminish in quantity gradually. 2. **அழிதல்;** to be destroyed. "அளியி னாற்றொழு வார்வினை யல்குமே" (தேவா. 5 . 23 : 10).

[ஒல் → ஒல்கு. ஒல்குதல் = ஒடுங்குதல், சுருங்குதல், தளர்தல், கெடுதல். ஒல்கு → அல்கு.]

**அல்கு** *algu*, பெ. (n.) 1. **பிற்பகல்;** afternoon. "அல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே" (நாலடி. 166). 2. **இரவு;** night. "அல்குண் டடங்கல் வழி" (ஆசாரக். 30). 3. **தங்குகை** (பொதி.நி.); stay, sojourn.

[அல் = மயங்கும் மாலை, கருமை, இரவு. அல் → அல்கு. இனி, அல்கு = கழியும் பகல் வேளை, இல்லில் தங்கும் அல்லது ஒடுங்கி யுறங்கும் வேளை என்றுமாம்.]

**அல்குகழி** *algu-kaḻi*, பெ. (n.) 1. **உப்பங்கழி;** backwater from the sea. "அல்கு கழியினுஞ் செல்லாதோ கடல்" (நன்னெறி, 16). 2. **சிற்றாறு** (சங்.அக.); stream, rivulet.

[அல்குதல் = நீர் ஓடாது தங்கிநிற்றல். கழி = கடற்கரையைக் கடந்துசெல்லும் நீர்க்கால். இனி, கோல்போல் நீண்டிருக்கும் நீர்க்கால் என்றுமாம்.]

**அல்குநர்** *algunar*, பெ. (n.) **குடிகள்;** inhabitants, subjects. "அல்குநர் போகிய வூரோ ரன்னர்" (கலித். 23 : 11).

[அல்குதல் = தங்குதல், வதிதல். அல்குகின்றார் → அல்குன்னார் → அல்குனார் → அல்குநர்.]

**அல்குப்பை** *alguppai*, பெ. (n.) **பொற்றலைக் கையாந்தகரை** (வை.மூ.); Ceylon verbisina.

**அல்குபதம்** *algu-padam*, பெ. (n.) **கட்டுச்சோறு, ஆற்றுணா;** cooked rice prepared and bundled up, as food for a journey. "வல்வி லிளையர்க் கல்குபத மாற்றாத் தொல்குடி மன்னன் மகளே" (புறநா. 353 : 10 - 11).

[அல்குதல் = பல நாளுக்குதவுமாறு சேமித்து வைக்கப்பட்டுத் தங்குதல் அல்லது இருத்தல். பதம் = பதஞ் செய்யப்பட்ட உணவு.]

**அல்குமிசை** *algu-misai*, பெ. (n.) **அல்குபதம்** பார்க்க; see *algu-padam*. "சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்" (புறநா. 236 : 2).

[மிசைதல் = உண்ணுதல். மிசை → மிசைவு (தொ.பெ., தொ.ஆகு.).]

**அல்குல்** *algul*, பெ. (n.) 1. **அரை**; waist. "பூந்துகில்சே ரல்குல் காமரெழில் விழ லுடுத்து" (திவ். பெருமாள். 9 : 7). 2. **பக்கம்**; side. "கவைத்தாம்பு தொடுத்த காழுன் றல்குல்" (பெரும்பாண். 244). 3. **பெண்குறியின் மேற்பக்கம்**; the lower part of the hypo - gastric region. 4. **பெண்குறி**; genital organ of the female, *Pudendum muliebre*.

ம. அல்கல்; கோத. அல்கல்வ்.

*[அல்குதல் = ஒடுங்குதல், சுருங்குதல், சிறுத்தல். அல்கு → அல்குல் = சிறுத்த பெண்டிரிடை, அவ்விடைக்குக் கீழ் அடுத்துள்ள பெண்குறியின் மேற்பக்கம், பெண்குறி, இடுப்புப்போன்ற பக்கம்.]*

**சங்க அகராதி**யில், 1. **அல்குல்** - நிதம்பம். (உ-ம்.) "கலந்தகினாறு மல்குற் கவான்மிசைக் கொண்டி ருந்தாள்" (சீவக. 1397). 2. பெண்குறி **ஆண்குறியின் மேற்பக்கம்**. (உ-ம்.) "எம்மல்குற் கும்மல்கு லிணையொக்கும்" (காஞ்சிப்பு. அந்தகேச. 15) என்று கூறப்பட்டுள்ளது.

'நிதம்பம்' என்னும் வடசொல் புட்டத்தையே குறிக்கும். அப் பொருள் 'அல்குல்' என்னும் தென்சொல்லிற்குப் பொருந்தாது. மேலும், பெண்குறியின் மேற்பக்கத்தையே யன்றி ஆண்குறியின் மேற்பக்கத்தை அல்குலென்றல் மரபன்று.

அல்குலைப்பற்றிச் **சாம்பசிவம்பிள்ளை அகராதி**யிற் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது :

**அல்குல்**, பெண்குறியின் மேற்பக்கம். அதாவது அடிவயிற்றின்கீழ், மேகனப் பொருத்து வாயின்மேல் சவ்வுகளினா லாகிய மென்மையான நிணமேடு, பருவ காலத்தில் இது மயிரால் மூடப்பட்டிருக்கும்; that portion of a woman's body extending from the lower part of the abdomen and covering the symphysis pubis, formed from the common skin which is elevated by fat. Hair starts growing there at the age of puberty. cf. அகல்.

அடியிற் கண்டபடி பெண்களின் வெளிப் பிறப்புறுப்புகள் முழுவதையும் குறிக்குமோர் பொதுப்பெயர்; as mentioned below, it is a common term for all the external organs of generation in a female.

1. அடிவயிற்றின்கீழ், எலும்பின்மேற் படிந்து மென்மையாயுள்ள நிணமேடு; a rounded prominence at the symphysis pubis of a woman, *Mons veneris*.

2. நிதம்பங்கள். அவையாவன: the lip-shaped organs viz.,

   (அ) பேரிதழ். அல்குலின் தோல் மடிந்து நீண்டு இருபக்கமும் அமைந்துள்ள உதட்டைப் போன்ற உறுப்பு; the hairy fold of the skin like the lip on either side of the slit of the vulva, *Labium majus*.

   (ஆ) சிற்றிதழ். பேரிதழின் உட்பாகத்தில் அமைந்துள்ள சளிச்சவ்வினால் ஆக்கப்பட்ட சிறிய உதடுகள்; the small folds of mucous membrane within No. 2 — *Labium minus* alias *Nympha*.

3. சுமரி. கடிதடத்திற்கு அடியில் நரம்பு உணர்ச்சியுள்ள சிறிய நீண்ட கூர்மையான உறுப்பு; a small, elongated, erectile organ situated at the anterior angle of the vulva, just below No. 2 — *Clitoris*.

4. புழுக்கை. சுமரிக்குக் கீழ் உள்ள உதடுகளின் நடுவிலிருக்கும் பிளப்பு; the space below the *clitoris* and between *Labium minus* or nympha in No. 2 (ஆ)—*Vestibule* of the vulva.

5. வடிசம் அல்லது அல்குற் கவை. அதாவது, பெண்குறியின் பேரிதழ் பிற்பகுதியில் மடிந்துள்ள சளிச்சவ்வு; the fold of the mucous membrane at the posterior junction of the *Labium majus* in No. 2 (அ) — *Fourchette*.

6. சந்திர நாடி. யோனி வாயிலின் வெளிப்புறத்தில் உதடுகளின் உட்பக்கம் மடிந்து மூடிக்கொண்டிருக்கும் சவ்வு. இதற்குக் கன்னிமுத்திரை என்று பெயர்; the membranous fold which closes tightly the external orifice of the vagina, ***Hymen***.

7. பகம். மலவாயிலுக்கும் அல்குற் கவைக்கும் நடுவிலுள்ள பகுதி; the space or the area between the anus and the genital organs, *Perineum*.

8. நீர்த்துளை (நீர்த்துவாரம்). யோனி வாயிலுக்கும் சுமரிக்கும் இடையேயுள்ள மூத்திரத்துளை; urethral orifice.

9. பூப்பக வாயில். நீர்த்துளைக்குக் கீழாக அகண்டாகாரமா யிருக்கும் துளை (துவாரம்); the external vaginal opening just below the urethral orifice, *Os externum.*

| வடசொல் | தென்சொல் |
|---|---|
| மேகனம் | ஆண்குறி |
| சாதாரணமாய் | பொதுவாக |
| மிருது | மெது |
| சனனம் | பிறப்பு |
| நிதம்பம் | புட்டம், கரைமேடு |
| சுமரி | குறிநாக்கு |
| வடிசம் | தூண்டில் |
| சந்திர(ன்) | திங்கள் |
| மத்தி | இடை, நடு |
| யோனி | பெண்குறி |
| துவாரம் | துளை |
| அகண்டாகாரம் | பகாவடிவம் |

**அல்குலழற்சி** *algul-alarci,* பெ. (n.) பெண்குறி வெளியுறுப்புகளின் வேக்காடு; inflammation of the external organs of generation, *Vulvitis* (சா.அக.).

[அல்குல் + அழற்சி. அழலுதல் = எரிதல், வேதல். அழல் → அழற்சி. 'சி' தொ.பெ. ஈறு.]

**அல்குற்கட்டு** *algur-kattu,* பெ. (n.) ஒருவன், தன்னைத் தவிர மற்றோர் ஆடவனை ஒரு பெண் அடைந்தால் அவளுக்குக் கருவழிவு, யோனிப்புற்று, யோனிப்புண், பெரும்பாடு முதலிய நோய்களை யுண்டாக்கித் துன்புறச் செய்வதுமல்லாமல் மறுபடியும் அவள் கலவிக்குத் தகுதியில்லாதவளாகச் செய்யும் ஒரு மந்திர வித்தை; a kind of black art practised on a woman who is made to suffer from diseases peculiar to the genital organs such as, abortion, chancre, condyloma, menorrhagia, etc., thus rendering her unfit for sexual intercourse.

This is done purely out of malice with a view to wreak vengeance, on finding her in love with another.

[அல்குல் + கட்டு (கள் + து). கள்ளுதல் (த.வி.) = கலத்தல், பொருந்துதல். கட்டுதல் (பி.வி.) = கலத்தல், பொருத்துதல், இறுக்குதல். கட்டு (முத.தொ.ஆகு.) = பொருத்து, முட்டு, அவிழ்க்காமை, திறவாமை, வழங்காமை, இயங்காமை, தடை.]

**அல்குற்கண்டதாபனம்** *algur-kanda-tābanam,* பெ. (n.) பெண்குறியின் கடிதடத்திற்கு அடியிலுள்ள நீண்ட கூர்மையான உறுப்பாகிய சுமரிக்கு ஏற்படும் அழற்சி; inflammation of the erectile organ known as clitoris, *Clitoriditis.*

[அல்குல் + கண்டம் + தாபனம். குள் → கள் → கண்டு → கண்டம் = முள், முட்போற் கூர்மையான உறுப்பு. Skt. tap > த. தபி. தபித்தல் = சுடுதல், அழலுதல். தபி → தாபனம் = அழற்சி. தகுதல் = அழலுதல், எரிதல், விளங்குதல். தகதகவெனல் = திகழ்தல், விளங்குதல். தகு → தவு → தபு > Skt. tap.]

**அல்குற்கண்டம்** *algur-kandam,* பெ. (n.) பெண்குறியிலுள்ள சிறிய நீண்ட கூர்மையான உறுப்பு, இதற்குச் சுமரி யென்றும் பெயர்; the small, elongated, erectile body in the vulva, *Clitoris.*

[அல்குல் + கண்டம்.]

அல்குற்கண்டதாபனம் பார்க்க; see *algur-kanda-tābanam.*

**அல்குற்கந்தம்** *algur-kandam,* பெ. (n.) அல்குற் புற்று பார்க்க; see *algur-purru.*

[அல்குல் + கந்தம். ஒருகா. Skt. kanda > த. கந்தம் = கிழங்கு, கிழங்குபோல் வேரூன்றும் புற்றுநோய்.]

**அல்குற்கவை** *algur-kavai,* பெ. (n.) வடிசம், இது பெண்குறியின் பேரிதழின் பிற்பகுதியில் மடிந்துள்ளவோர் சளிச்சவ்வு; a fold of mucous membrane at the posterior junction of the labia majora, *Fourchette.*

[அல்குல் + கவை. ஒருகா. கவ் (கவ்வு) → கவ → கவை = கவ்வுங் குறடுபோற் கவடுபட்ட அல்லது பிளவுபட்ட உறுப்பு.]

**அல்குற்கழலை** *algur-kalalai,* பெ. (n.) பெண்குறியின் உதட்டின் இரு பக்கங்களிலும் உற்பத்தியாகி ஆழமாக வெடித்துப் புண்ணாகி நாற்றத்துடன் நீரொழுகப்பெற்ற ஒருவகைப் பெருங் கழலைக்கட்டி. இஃது அரிதில் உண்டாகும்; a rare disease in the genital of a female consisting of large tumours on both sides of the lips (labia majora) divided with deep fissures and discharging a large quantity of offensive fluid, *Oozing tumour.*

[அல்குல் + கழலை. கழல் = கழற்சிக்காய். கழல் → கழலை = கழற்சிக்காய் போன்ற கட்டி.]

**அல்குற்சிலந்தி** *algur-cilandi*, பெ. (n.) பெண்களின் வெளியுறுப்புகளிற் காணும் விரணத் தோடுகூடிய புண்; ulceration of the external genital parts in a female, *Cancrum pudendi.*

[அல்குல் + சிலந்தி. ஒருகா. சிலந்திப்பூச்சி போன்ற சிறு கட்டி.]

**அல்குற்சிவு** *algur-civu*, பெ. (n.) 1. கிழிந்த அல்குலைத் தைத்தல்; the sewing up of a lacerated perineum. 2. அல்குலின் பேரிதழுக்குப் போடும் தையல்; suturing of the labia majora, *Episiorrhaphy.*

[அல்குல் + சிவு. ஒருகா. E. sewing > த. சீவு → சிவு.]

**அல்குற்சுமரி** *algur-cumari*, பெ. (n.) அல்குற் கண்டம் பார்க்க; see *algur-kandam.*

[அல்குல் + சுமரி (?).]

**அல்குற்சூலை** *algur-cūlai*, பெ. (n.) 1. பெண் குறியின் சூதகத் தாரையில் ஏற்படும் வலி; pain in the vagina, *Vaginodynia* or *Colpodynia.* 2. சூதகத் தாரைக்கு ஏற்பட்ட அழற்சியினாலுண்டாகும் குத்தல்நோய்; acute pain due to vaginal inflammation.

அல்குல் + சூலை. சூலுதல் = குடைதல். சூல் → சூலை = குடைச்சல் வலி.]

**அல்குற்பவுத்திரம்** *algur-pavuttiram*, பெ. (n.) பெண்குறியின் பூப்பகம் அல்லது மூத்திரத் தாரை, பேரிதழ், ஆசனவாய் முதலியவைகளுக்குள் ஏற்படும் பலவகைப் பவுத்திர நோய்கள்; the several kinds of fistula in a female pertaining to the vagina, the rectum, the bladder, the urethra and the perineum viz.,

1. Genito-urinary fistula.
2. Perino-vaginal fistula.
3. Recto-labial fistula.
4. Recto-vaginal fistula.
5. Vesico-vaginal fistula.

[அல்குல் + Skt. bhagandaram > த. பகந்தரம் → பகந்திரம் → பவுந்திரம் → பவுத்திரம் = அண்டியிலுண்டாகும் புரைப்புண்.]

**அல்குற்பிளவு** *algur-pilavu*, பெ. (n.) பெண்குறியின் இருபக்கங்களிலுமுள்ள உதடுகளின் நடுவேயுள்ள பிளப்பு, இதற்குப் புழுக்கை யென்றும் பெயர்; the hollow space below the clitoris and between the two lips (labium) in a female, *Vestibule* of the vulva.

[அல்குல் + பிளவு. பிள்ளுதல் + பிளத்தல். பிள் → பிள → பிளவு.]

**அல்குற்பிறை** *algur-pirai*, பெ. (n.) பெண்குறியின் தீட்டுத் தாரையின் வாயிலண்டை இருக்கும் சதைப் பாகங்களுக்குக் காணும் மிக்க உணர்ச்சியால் ஏற்படும் பிடிப்பு வலி; the painful spasm of the vagina due to the extreme sensitiveness of the skin at its entrance or thereabout, *Vaginismus.*

[அல்குல் + பிறை. ஒருகா. பிறக்கும் (தோன்றும்) வலி. பிறத்தல் = தோன்றுதல். பிற → பிறை.]

**அல்குற்புகல்** *algur-pugal*, பெ. (n.) யோனிக்குட் புகட்டுதல்; vulval penetration.

[அல்குல் + புகல். புகு → புகல் = புகுதல், மருந்து புகட்டப்படுதல். புகவிடு → புகடு → புகட்டு (பி.வி.).]

**அல்குற்புரை** *algur-purai*, பெ. (n.) யோனித் துவாரத்தி னருகேயுள்ள நான்கு மடிப்புகளாலாகிய சுருங்கிய தசைப் பாகம்; the four rings or folds surrounding the vagina at its orifice, resembling myrtle leaves, *Caruncula myrtiformis.*

Note: They are supposed to be the relics or remains of the ruptured hymen, but they are not so.

[அல்குல் + புரை. புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளையுள்ளது. புல் → புர் → புரை = துளை, பை, பையின் பிரிவு, மடிப்பு.]

**அல்குற்புழுக்கை** *algur-pulukkai*, பெ. (n.) சுமரிக்குக்கீழ் உதடுகளின் நடுவிலிருக்கும் பிளப்பு; the space below the clitoris and between the labium minor, *Vestibule.*

அல்குற்பிளவு பார்க்க; see *algur-pilavu.*

[அல்குல் + புழுக்கை. புல் → புள் → புழு = துளைக்கும் உளு. புழுத்தல் = துளைத்தல், புழுத் துளைத்தல். ஒ.நோ: உள் → உளு. உளுத்தல் = துளைத்தல், உளுத் துளைத்தல். புழு → புழுக்கை = துளைப்பு, பிளப்பு.]

**அல்குற்புற்று** *algur-purru*, பெ. (n.) அல்குலில் உண்டாகும் புற்றுநோய்; cancer of *Pudendum mulibre* (சா.அக.).

[அல்குல் + புற்று. புல்லுதல் = துளைத்தல், தோண்டுதல். புல் → (புறு) → புற்று = துளை, எறும்புவளை, கறையான் கட்டிய மண்கூடு, புரைவைத்த புண்.]

**அல்குற்றபம்** *algur̤-r̤abam*, பெ. (n.) பெண் குறியிலுண்டாகும் அழற்சி; inflammation of the vulva, *Vulvitis*.

[அல்குல்+தபம். **Skt.** tap> த. தபு → தபம் = அழற்சி. 'அம்' தொ.பெ. ஈறு.]

அல்குற்கண்டதாபனம் பார்க்க; see *algur̤-kaṇḍa-tābanam*.

**அல்குற்றாபம்** *algur̤-r̤ābam*, பெ. (n.) 1. பொதுவாகப் பெண்குறியின் வெளியுறுப்புகளுக்குக் காணும் அழற்சி; inflammation of the external part of the organs of generation in the female (vulva), *Vulvitis*. 2. பெண்குறியின் சூதகத் தாரையில் ஏற்படும் அழற்சி; inflammation of the vagina, *Vaginitis*.

[அல்குல் + தாபம். **Skt.** tapa > த. தபி. தபித்தல் = சுடுதல், எரிதல், அழலுதல். தபி → தாபம் = அழற்சி.]

அல்குற்கண்டதாபனம் பார்க்க; see *algur̤-kaṇḍa - tābanam*.

**அல்குற்றாரை** *algur̤-r̤ārai*, பெ. (n.) அல்குற்றுவாரம் பார்க்க; see *algur̤ - r̤uvāram*.

[அல்குல் + தாரை (குழல், துளை).]

**அல்குற்றிரவித்தல்** *algur̤-r̤iravittal*, பெ. (n.) பெண்குறியினின்று நீர் முதலியவை பொசியப் பண்ணல். இது பொதுப்பட, சூல்கொண்ட காலத்தில் வெளிப்படும்; a discharge of thin mucuous from the uterus of the pregnant woman due to the excessive secretion of uterine glands, *Hydrorrhea gravidarum*.

[அல்குல் + திரவி. **Skt.** drava = நீர்ப் பொருள் சொட்டுதல், ஒழுகுதல், ஓடுதல். வ. த்ரவ > த. திரவி.]

**அல்குற்றினவு** *algur̤-r̤inavu* பெ. (n.) பெண்குறியின் வெளியுறுப்புகளிற் காணும் மிக அதிக நமைச்சல்; a disease consisting of an intense itching of the external genitals of the female, *Pruritus vulvae*.

[அல்குல் + தினவு. தின்னுதல் = ஊறலெடுத்தல், சொறிவெடுத்தல், அரிப்பெடுத்தல், நமைச்சல். 'தின்றவிடஞ் சொறிந்தாற்போல' (திவ். திருவாய். 4.8:9, பன்னீ.). தின்→தினவு. 'அவு' தொ.பெ. ஈறு.]

**அல்குற்றுவாரம்** *algur̤-r̤uvāram*, பெ. (n.) 1. பூப்பகம் அல்லது தீட்டுத் தாரையின் வாயில்; the external vaginal opening. 2. பூப்பகம், அதாவது, பெண்களுக்குக் கருப்பையினின்று மாதவிடாய் ஒழுகப்பெற்ற தாரை. இதுவே கருப்பத்தினின்று குழந்தை வெளிவரும் வழி, புணர்ச்சிக்குக் காரணமான விடம்; the membraneous canal through which the menstrual blood is discharged. This is the passage intended for the expulsion of the child from the womb and for receiving the penis in copulation.

[அல்குல் + **Skt.** dvāra > த. துவாரம் = துளை.]

**அல்சா** *alša*, பெ. (n.) சுக்கான் (இ.வ.); rudder (Loc.).

**அல்சி** *alši*, பெ. (n.) ஆழிவிதைச் செடி; linseed plant, *Linum usitatissimum* (சா.அக.).

**அல்நார்** *alnār*, பெ. (n.) கல்நார் (R.); asbestos (செ.அக.).

கல்நார் : earth - flax or mountain - flax called asbestos, *Amianthus*. It has the peculiar property of resisting fire.

[கல்நார் → அல்நார்.]

கல்நார் பார்க்க; see *kal-nār*.

**அல்பொருள்** *al-poruḷ*, பெ. (n.) 1. தீவினை, கரிசு (பாவம்); sin. "அறனை நினைப்பானை யல்பொருளஞ்சும்" (திரிகடு. 72). 2. (அணி.) உவமம் (உபமானம்) (விசாக. அணியி. 3); (Rhet.) standard of comparison.

[அல் = அறமல்லாத. பொருள் = வினை, செய்தி. 2. அல் = பொருள் (உபமேயம்) அல்லாத. பொருள் = உவமமாகச் சொல்லப்படும் அறுவகைப் பொருள்களுள் ஒன்று.]

**அல்மதம்** *al-madam*, பெ. (n.) கன்மதம் (புதுவை); rock alum (Poṇḍ.).

[கல்மதம் → அல்மதம்.]

கல்மதம் பார்க்க; see *kal-madam*.

**அல்ல** *alla*, பெ. (n.) 1. பலவின்பாற் படர்க்கை எதிர்மறைக் குறிப்புவினைப் பெயர்; neut. pl. neg. appellative verb used as noun. "செய் தக்க அல்ல செயக்கெடும்" (குறள், 466). 2. முன் சொல்லாதொழிந்தன; those not mentioned before. "உருவ வெட்பய றுழுந்து மல்லவும்" (சீவக. 1561). 3. முன் சொன்ன தற்கு மாறானவை; those contrary or opposite to the aforesaid. "அறங்கூறா னல்ல செயினும்" (குறள், 181). —, கு.வி.மு. (impl,

fin.v.) பலவின்பாற் படர்க்கை எதிர்மறைக் குறிப்புவினைமுற்று; neut. pl. neg. appellative verb. ''ஒருவற் கணியல்ல மற்றுப் பிற'' (குறள், 95).

ம., க., தெ., குட., பட. அல்ல; கோத. அல; கோண். ஹல்லே; பிரா. அல்லவ்.

Fin. ālā; Heb. al.

[அல் → அல்ல.]

அல்⁴ பார்க்க; see al⁴.

**அல்லகண்டம்** *alla-kaṇḍam*, பெ. (n.) துன்பம் (பிங்.); affliction. ''அல்லகண் டங்கொண் டடியேனென் செய்கேனே'' (தேவா. 6. 62:1).

[அல்ல = நல்லதல்லாத, தீய. கண்டு → கண்டம் = பகுதி, வேளை. ஒ.நோ : பொல்லாத வேளை.]

**அல்லகம்**¹ *allagam*, பெ. (n.) 1. செங்கழுநீர்; red Indian water-lily, *Nymphae odorata*. ''அல்லகாத் திரிபார்'' (தணிகை. புராணவர. 59). 2. செந்தாமரை; red lotus, *Nelumbium speciosum*.

[எல் → அல் → அலத்தம் = செம்பருத்தி. அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு. அல் → அல்ல கம்.]

**அல்லகம்**² *allagam*, பெ. (n.) நீர்ச்சீலை (கோவணம்); man's loin-cloth.

**அல்லகாத்திரி** *allagāttiri*, பெ. (n.) தணிகை மலை; the hill at *Tiruttaṇigai*. ''வைகுறொறு மலர்மூன்று கோலமார் காவி யுதிர்த்தலி னல்ல காத்திரி'' (தணிகை. புராணவர. 59).

[அல்லகம் + Skt. adri > த. அத்திரி = மலை. அல்லகம் = செங்கழுநீர்.]

அல்லகம்¹ பார்க்க; see allagam¹.

**அல்லகுறி** *alla-kuṟi*, பெ. (n.) (அகப்.) களவொழுக்கத்தில் தலைமகனாலன்றிப் பிறிதொன்றினால் நிகழுங் குறி; (Agap.) a signal pre-arranged to be given at night by the lover during the period of clandestine love but caused casually by something else. ''அல்ல குறிப் படுதலு மவள்வயி னுரித்தே'' (தொல். பொருள். கள. 42).

[அல் → அல்ல + குறி.]

**அல்லகுறிப்படு-தல்** *alla-kuṟi-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) (அகப்.) களவொழுக்க இரவுக் குறியிடத்துக் குறியல்லாத குறியால் தலைவி மயங்குதல்; (Agap.) to be misled, as the heroine, at night by occurrence of signs happening casually (தொல். பொருள். கள. 42, உரை).

[அல்ல + குறி + படு.]

**அல்லங்காடி** *al-l-aṅgāḍi*, பெ. (n.) மாலைக் கடைத்தெரு, நாளங்காடி என்பதற்கு எதிர்; evening bazaar, opp. to *nāḷaṅgāḍi*. ''அல்லங் காடி யழிதரு கம்பலை'' (மதுரைக். 544).

[அல் + அங்காடி. அல் = மாலை. அங்காடி = கடைத்தெரு.]

அங்காடி பார்க்க; see aṅgāḍi.

**அல்லசங்கம்** *alla-šaṅgam*, பெ. (n.) வெள்ளி; silver, *Argentum* (சா.அக.).

**அல்லணை** *allaṇai*, பெ. (n.) கல்லால் அமைத்த அணைக்கட்டு (R.T.); dam, built of stones.

[கல்லணை → அல்லணை.]

**அல்லத்தட்டு-தல்** *alla-t-taṭṭu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. ஏவினதைச் செய்ய மறுத்தல், அறிவுரையைப் புறக்கணித்தல் (உ.வ.); to refuse compliance, disobey, reject advice, object to (Com.u.). 2. நம்பிக்கையைக் கெடுத்தல்; to frustrate, disappoint (W.).

க. அல்லகளெ

[அல்ல = தகாதது (என்று), தட்டுதல் = தடுத்தல், தடைசெய்தல்.]

**அல்லது** *alladu*, பெ. (n.) 1. முன்சொன்ன தல்லாதது; that which is other than or opposed to, the aforesaid. ''நல்லது செய்த லாற்றீ ராயினும் அல்லது செய்த லோம்புமின்'' (புறநா. 195 : 6). தெ. அல்லதி. 2. தீவினை; evil, sin, misdeed. ''அல்லது கெடுப்பவ னருள் கொண்ட முகம்போல'' (கலித். 148 : 4). கோத. அலது. —, இடை. (conj.) 1. அல்லாவிட்டால்; or, if not, an alternative conjunction. கல்வி அல்லது செல்வம் இல்லாதவன் சிறப்பாக வாழ முடியாது. ''சேவடி தொழுத லொன்றோ அல்லதிவ் வுடம்பு நீங்க வேற்றுல கடைத லொன்றோ'' (சீவக. 1745). 2. தவிர; except. உழுந்தல்ல தில்லை. 3. தவிர வேறொன்றாக; except as. ''நீயாக வல்லது மாந்தழை யாக நினைந்திலளே'' (தஞ்சைவா. 129).

ம. அல்லாதெ, அல்லயாகில், அல்லயால்; க. அல்லது, அல்து.

Gk. *allos*, other; E. *allo*, *alle*, comb. form.
L. *alius*, otherwise, at another time; L. *alias*, (name used) on other occasions.
OE. *elles;* OHG. *elles, alles;* OSw. *aljes*; Sw. *eljest*; Goth. aljis; E. *else*. otherwise.
OE. *el*. - in compounds; E. *ele*, lendish, of another land, foreign.
E. *eil*land, eillond, a foreign land. OS. *eli*lendi, foreign; OHG. *ali* – , *eli*lanti, foreign, of another country, wretched, Mod. G. *ele*na.

[அல் → அல்லது.]

**அல்லதூஉம்** *alladūum*, இடை. (conj.) அல்லாமலும்; besides, moreover, in addition. "அல்லதூஉ மவனுடைத் துணைவ ராயினார்க்கு" (கம்பரா. சுந்தர. பிணிவீட். 22).

ம. அல்லாதெ

[அல் → அல்லது → அல்லதும் → அல்லதூஉம் (இன்னிசை யளபெடை).]

**அல்லதேல்** *alladēl*, இடை. (conj.) அல்லாமற் போனால், அல்லாவிட்டால், அல்லாதிருந்தால்; if not. "அத்த விங்கினிக் காத்தருளல்லதே லடுவல்லே" (கந்தபு. உற்பத். மோன. 10).

ம. அல்லாய்க, அல்லாய்கில்; கோத. அலாத்மேல்; கோண். ஐல்லே; பிரா. அலவா.

[அல்லது + ஏல். என் → எனில் → ஏல் (ஐயமுணர்த்தும் வி.எ. ஈறு.]

**அல்லதை** *alladai*, இடை. (conj.) 1. அல்லது; or, or else, if not. "அலிய ரல்லதை யாண்டகை யார்கொலோ வனையோர்" (கந்தபு. அசுர. சூரன்தண். 25.). 2. அல்லாமல்; except.

"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யும்"
(கலித். 9 : 12–13).

ம. அல்லாத்த; க. அல்லத; குட. அல்லதெ.

[அல் → அல்லது → அல்லதை. 'ஐ' சாரியையீறு.]

**அல்லம்**[1] *allam*, கு.வி.மு. (impl.v.) 1. தன்மைப் பன்மை எதிர்மறைக் குறிப்புவினைமுற்று; neg. impl. fin. v. of the 1st pers. pl. யாம் தண்டனை யடைதற்குக் குற்றவாளிய ரல்லம். 2. தன்மை யுயர்வுப்பன்மை எதிர் மறைக் குறிப்புவினைமுற்று; neg. impl. fin. v. of the 1st pers. hon. pl. "பண்டைய மல்லம்" (சீவக. 1623).

[அல் + அம் (தன்மைப் பன்மை வி.மு. ஈறு.]

அல்[5] பார்க்க; see *al*[5].

**அல்லம்**[2] *allam*, பெ. (n.) இஞ்சி (திவா.); ginger.

தெ. அல்லமு; க. அல்ல; மரா. அலேம்.

[ஒருகா. உல் → அல் → அல்லம் = எரிச்சவுள்ளது.]

மறுவ. அல்லமாகிதம்

**அல்லமன்** *allaman*, பெ. (n.) சிவனது தோற்றரவாகக் கருதப்படும் பிரபுலிங்கலீலைக் கதைத் தலைவன்; name of the hero of the *Pirabuliṅga-līlai*, considered to be a manifestation of Śiva.

சுஞ்ஞானி, நிராங்காரன் என்னும் இருவர்க்கும் பிறந்த புதல்வன்.

"தொல்லையி லுயர்சுஞ் ஞானி
தூய்நிராங் கார னென்போர்
எல்லையி றவங்கள் செய்ய
வெமதுமெய் வடிவத் தானே
அல்லம னாம மமைந்த னாயினம்"
(பிரபுலிங். கைலாச. 54).

க. அல்லமன்; தெ. அல்லமதேவுடு.

**அல்லமாகிகம்** *allamāgigam*, பெ. (n.) இஞ்சி; ginger, *Zingiber officinalis* (சா.அக.).

அல்லம்[2] பார்க்க; see *allam*[2].

**அல்லர்** *allar*, பெ. (n.) 1. அல்லாதவர்; others, those not mentioned before. "வீரரை யல்லரை வெகுள வீரென" (கந்தபு. யுத்த. சிங்கமுகா. 117). 2. பலர்பால் எதிர்மறைக் குறிப்புவினைமுற்று; neg. impl. fin. v. of the 3rd pers. rational pl. "வறிது பெயர்குவ ரல்லர்" (புறநா. 124 : 3).

கோத. அலாவோர்

[அல் → அல்லர். 'அர்' ப.பா.'ஈறு.]

அல்[5] பார்க்க; see *al*[5].

**அல்லரியல்** *al-l-ariyal*, பெ. (n.) கண்ணறையுள்ள ஆடை; that which is loosely woven or braided. அல்லரியற் புடைவை (யாழ்ப்.).

[அல் + அரியல்.]

**அல்லல்** *allal*, பெ. (n.) **துன்பம்**; affliction, distress, evil, misfortune, privation. ''அல்ல லருளாள்வார்க் கில்லை'' (குறள், 245).

ம. அல்லல்; க. அல்ல; தெ. அல்லரி.

*[அலத்தல் = துன்புறுதல். அலம் = துன்பம். அலக்கண் = துன்பம், துயரம். அலவுதல் = வருந்துதல். அலைதல் = அசைதல், வருந்து தல். அலைத்தல் = அசைத்தல், வருத்துதல். அல்லுதல் = அசைதல், வருந்துதல், துன்புறுதல். ஒ.நோ: அசைவு = அசைகை, உடம்பு அலட்டுண்கை, தளர்வு, வருத்தம். அல் → அல்லல். 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அல்லவை** *allavai*, பெ. (n.) 1. **தீவினை**; sin, evil. ''அழுக்காற்றி னல்லவை செய்யார்'' (குறள், 164). 2. **பயனற்றவை** (பிங்.); useless things, futile acts. 3. **மாறானவை**; contrary acts, contradictory actions or sayings. ''தவமறைந் தல்லவை செய்தல்'' (குறள், 274).

ம. அல்ல; கோத. அல.

*[அல்ல + அவை.]*

*அல்*[5] *பார்க்க*; see *al*[5].

**அல்லறம்** *al-l-aṟam*, பெ. (n.) **தீவினை**; sin, sinful act. ''அல்லறஞ் செய்வோ ரருநர கடைதலும்'' (மணிமே. 16 : 89).

*[அல் + அறம். 'அல்' மறுதலைப் பொருளில் வரும் முன்னொட்டு. அல்லறம் = அறத்திற்கு மாறானது.]*

**அல்லறைசில்லறை** *al-l-aṟai-šil-l-aṟai*, பெ. (n.) 1. **மிச்சத் துண்டு துணிக்கைகள்**; odds and ends. 2. **மிச்சத் தொகையான சிறு காசுகள்**; small coins remaining as balance.

ம. அல்லறசில்லற

*[ஒல்லி → உல்லி. ஒல்கு → அல்கு. அல்கு தல் = சுருங்குதல், சிறுத்தல். அறை = அறுக்கப் பட்டது, துண்டு. அல்லறை = சிறுதுண்டு. சில்லறை = சிறுதுண்டு. 'அல்லறை சில்லறை' எதுகை மரபிணைமொழி. ஒ.நோ: அல்லுச் சில்லுப்படுதல் = சின்னஞ்சிறு துண்டாதல், சிறிது சிறிதாகக் குறைதல் அல்லது கெடுதல். 'சில்லறை' என்பதன் இரட்டிய வழக்கான 'அல்லறைசில்லறை' என்பது அத்துணைப் பொருத்தமுள்ள தன்று.]*

**அல்லன்** *allaṉ*, பெ. (n.) 1. **அல்லாதவன்**; one who is not, other than, different from. ''ஒருவனே யெல்லா மாகி யல்லனா யுடனு மாவன்'' (சி.சி. சுபக். 1 : 27). 2. **தீயவன்**; sinner, evil-doer, wicked man. ''அல்லனோ டொருபந்தி யயின்றிடல்'' (சேதுபு. காசிப. 66). —, கு. வி. மு. (impl. v.) அன்மைப் பொருளில் வரும் ஆண்பாற் குறிப்புவினை முற்று; he is not. ''இறையு மல்லன்'' (சி.சி. சுபக். 8 : 38).

*[அல் → அல்லன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

*அல்*[4], *அல்*[5] *பார்க்க*; see *al*[4], *al*[5].

**அல்லன** *allaṉa*, பெ. (n.) 1. **முன் சொன்னது அல்லது சொன்னவை அல்லாதவை, ஒழிந்தவை**; those other than the previously mentioned, the rest. ''சொன்ன நன்மலரு மல்லனவும்'' (சீவக. 1652). 2. **தீயன, தீவினைகள்**; misdeeds, sinful acts, evils.

''நல்லா றொழுக்கின் றலைநின்றார்
நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்''
(நீதிநெறி. 61).

*[அல் + அன் (சாரியை) + அ (பல.பா. ஈறு). இனி, 'அன' பல.பா. ஈறு என்றுமாம்.]*

*அல்*[4], *அல்*[5] *பார்க்க*; see *al*[4], *al*[5].

**அல்லா**[1]**-த்தல்** *allā-*, 3 செ.கு.வி. (v.i.) **துன்புறுதல்**; to suffer, to be in distress. ''ஆக்க மிழந்தேமென் றல்லாவார்'' (குறள், 593). வயவுநோய் நலிதவி னல்லாந்தார்'' (கலித். 29 : 1 - 2).

தெ. அல்லட

*[அல் → அலம் = துன்பம். அல் → அல்லா. இனி, அலம்வா → அலமா → அல்லா என்றுமாம்.]*

**அல்லா**[2]**-த்தல்** *allā-*, 3 செ.கு.வி. (v.i.) **மகிழ்தல்**; to rejoice, to be glad. ''அதனெதிர் சொல்லே மாதவி னல்லாந்து கலங்கி'' (குறிஞ்சிப். 143).

*[மல்லாந்து = மலர்தல், மகிழ்தல். மல்லா → அல்லா.]*

'அல்லாந்து' என்னுஞ் சொல்லிற்கு நச்சினார்க்கினியர் 'மகிழ்ந்து' என்று பொருள் கூறியதனால், அதற்கேற்ப இங்கு மூலங் கூறப்பட்டது. ஆயின், குறிஞ்சிப் பாட்டில் அச் சொல்வரும் அடியையும், அதன் முன்பின் சொற்களின் பொருட்டொடர்பை யும் அச் சொன் னிகழ்ச்சிக்குரிய அமை யத்தையும் நோக்குமிடத்து, நச்சினார்க் கினியர் ஒரு சொல்லை வலிந்து பிரித்து

நலிந்து பொருள் கூறியதாகவே தோன்று கின்றது. 'அல்லாந்து கலங்கி' என்னும் வினையெச்சத் தொடர், ஒரே வினைமுதலின் வினையென்று கொள்வதற்கே ஏற்றதாக இணைந்துநிற்றல் காண்க.

**அல்லா**[1] *alla*, கு.பெ.எ. (adj.) 1. **முன் சொன்ன வையல்லாத, ஒழிந்த**; other than the previously mentioned. "சோதிவைகும் பொற்றைய தொன்றே யல்லாப் பொருப்பெலாம்" (கந்தபு. யுத்த. சூரபன். 486). 2. **தாய்** (நாட கத்தில் வழங்கப்படும் சொல்) (சங்.அக.); mother.

*[அல் + ஆ (பொருளற்ற எதிர்மறை யிடை நிலை) + து (வி.எ. ஈறு) + அ (பெ.எ. ஈறு)— அல்லாத → அல்லா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]*

*அல்*[5] *பார்க்க*; see *al*[5].

ம. அல்ல

**அல்லா**[2] *alla*, பெ. (n.) **துன்பம், வருத்தம்**; affliction, distress, disaster. "அல்லா நெஞ்சமுறப் பூட்ட" (பரிபா. 6 : 99).

*[அல்லா = அல்லாப்பு.]*

**அல்லாக்கால்** *allakkal*, இடை. (conj.) **அல்லா விட்டால்**; if not, failing which. இன்றே பணங் கட்டிவிடவேண்டும்; அல்லாக்கால் தேர் வெழுத முடியாது.

ம. அல்லாக்கால்; பட. அல்லாதோலெ.

*[அல்லாத → அல்லா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + கால் = வேளை.]*

**அல்லாசி** *allaši*, பெ. (n.) **பெருங்கொடி முந்திரிகை**; a big species of grapes, *Vitis vinifera* (சா.அக.).

**அல்லாட்டம்** *allattam*, பெ. (n.) **அலைந்து திரிதல், அலைச்சல்**; wandering from place to place.

க., தெ. அல்லாட.

*[அல்லாடு → அல்லாட்டு → அல்லாட்டம்.]*

**அல்லாடு-தல்** *alladu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அலைந்துதிரிதல்**; to wander from place to place. 2. **தொந்தரவுபடுதல்**; to suffer, to be troubled.

க., தெ. அல்லாடு; து. அலெயுனி.

*[அல் → அலை. ஆடுதல் = திரிதல்.]*

**அல்லாத** *allada*, பெ. (n.) 1. **மாறானவை**; what are not, are different. "சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்" (நான் மணிக். 28). 2. **தீயவை** (சங்.அக.); evils, evil things. —, கு.பெ.எ. (adj.) 1. **மாறான**; which is not, other than, different from. "அல்லாத பரசமய வலகைத்தேர்" (சேதுபு. கடவு. 13). 2. **தீய** (சங்.அக.); bad, evil. —, கு.வி.மு. (impl.fin.v.) **தீயன** (சங்.அக.); (they) are evil.

ம. அல்லாத்த

*[அல் + ஆ (பொருளற்ற எ.ம.இ.நி.) + து (வி.எ. ஈறு) + அ (பெ.எ. ஈறு) — அல்லாத (பெ.எ.).*

*அல் + ஆ (பொருளற்ற எ.ம.இ.நி.) + து (வி.எ. ஈறு) + அ (பல.பா.வி.மு. ஈறு, பல.பா. பெ. ஈறு) — அல்லாத (கு.வி.மு., குறிப்பு வினையா. பெ.).]*

'அல்' என்னும் முதனிலையே எதிர்மறைப் பொருள் கொண்டிருத்தலால் 'ஆ' என்னும் எதிர்மறை யிடைநிலை தேவையில்லை. நல், நல்ல, நல்லன, நல்லவை என்பனபோல, அல், அல்ல, அல்லன, அல்லவை என்றிருப்பதே போதும். ஆயின், கல், கல்லாத → கல்லா, கல்லாதன, கல்லாதவை; சொல், சொல் லாத → சொல்லா, சொல்லாதன, சொல்லா தவை; நில், நில்லாத → நில்லா, நில்லாதன, நில்லாதவை; பொல், பொல்லாத → பொல்லா, பொல்லாதன, பொல்லாதவை என்பன போன்ற தெரிநிலை வினைச்சொல் வடிவுகளை யொத்து, 'அல்', 'இல்' என்னும் இயல்பான எதிர்மறைக் குறிப்புவினைகளும் ஆகார எதிர்மறை யிடைநிலை பெற்று, ஒத்தமைவாக வழங்கி வந்திருக்கின்றன. இலக்கணப்படி ஈரெதிர்மறை ஒருடன்பா டாகல் வேண்டும். அந் நெறிமுறை கடைப் பிடிப்பின், அல்லாத → அல்லா, இல்லாத → இல்லா என்பன போன்ற எதிர்மறை யிடை நிலை பெற்ற வடிவுகள் செல்லா. ஆதலால், வழக்கு நோக்கியே அவற்றை அமைத்தல் வேண்டும்.

**அல்லாதது** *alladadu*, பெ. (n.) 1. **சொல்லா தொழிந்தது** (சங்.அக.); that which is not mentioned. 2. **தகாதது, தீயது**; that which is improper, that which is evil.

*[அல் + ஆ (எ.ம.இ.நி.) + து (வி.எ. ஈறு) + அ (பெ.எ. ஈறு) — அல்லாத. அல்லாத + அது (ஒன்.பா. ஈறு) — அல்லாதது.]*

**அல்லாத** பார்க்க; see *allada*.

# அல்லி


செவ்வல்லி


கிழங்கு


அரும்பு (மொக்குள்)


மொட்டு


முகை


போது

**அல்லாதவர்** *alladavar*, பெ. (n.) 1. *முன்சொல்லப் படாதவர்* (சங்.அக.); persons not mentioned before. "சமயாதி பர்களுக்கு மல்லாத வர்க்கும்" (பாரத. கிருட். 232). 2. *தகாதவர், தீயவர்;* improper persons, evil-doers.

*[அல்லாத + அவர்.]*

**அல்லாத** பார்க்க; see *allada.*

**அல்லாதன** *alladana*, பெ. (n.) 1. *முன்சொல்லா தொழிந்தவை* (சங்.அக.); those not mentioned, the rest. 2. *தகாதன, தீயன*; improper things, evils. "பற்றினர்போ யல்லாதன புரிவர்" (கந்தபு. அசுர. அயிராணிசோக. 15).

*[அல்லாத + அன் (சாரியை) + அ (பல.பா. ஈறு). இனி, அல்லாத + அன என்றுமாம். அன்ன → அன = அவை.]*

**அல்லாத** பார்க்க; see *allada.*

**அல்லாதார்** *alladar*, பெ. (n.) 1. *முன்சொல்லப் படாத பிறர்* (சங்.அக.); persons other than those mentioned. "பெற்றார் மகப்பெற்றா ரல்லாதார் பிறர்மக்கள் பிறரே கண்டீர்" (சீவக. 1545). 2. *தீயார்;* sinners, evil-doers. "அருட்கண்ணா னோக்காதா ரல்லா தாரே" (தேவா. 6 . 25 : 1).

*[அல்லாத + அவர் → ஆர் (ப.பா. ஈறு).]*

**அல்லாத** பார்க்க; see *allada.*

**அல்லாது** *alladu,* கு.வி.எ. (prep.) *தவிர*; except, besides. "அயில்வே லாண்மை யாலு மவனே யல்லாது வேறு சிலரிலர்" (பாரத. பதினெட். 4).

ம. அல்லாதெ

*[அல் + ஆ (எ.ம.இ.நி.) + து (வி.எ. ஈறு).]*

**அல்லாத** பார்க்க; see *allada.*

**அல்லாப்பாண்டியடி-த்தல்** *alla-p-pandi-y-adi-*, 4 செ.கு.வி. (v.i.) *மல்லாக்க வளைந்து கரணம் போடுதல்* (நெல்லை); to perform a somersault (Tn.).

*[மல்லா = மல்லாக்க. மல்லா → அல்லா. பாண்டி = வட்டம், வளைவு, கரணம். அடித்தல் = போடுதல், அடிப்பதுபோற் காலை நிலத்தி லூன்றுதல்.]*

அல்லாப்பாண்டி யடித்தலுக்கும் அல்லாப் பண்டிகைக்கும் யாதொரு தொடர்புமில்லை.

**அல்லாப்பு** *allappu*, பெ. (n.) *வருத்தம்*; distress. 'இவன் நெஞ்சின்கண் அல்லாப்பை இறுகப் பூட்டுதலால்' (பரிபா. 6 : 99, உரை).

தெ. அலபு

*[அல்லா → அல்லாப்பு (தொ.பெ.). 'பு' தொ. பெ. ஈறு.]*

**அல்லாமல்** *allamal*, கு.வி.எ. (prep.) 1. *தவிர*; except, besides. "சேதாம்பல் மருவுயிர்க்கு நாண்மலர்க்கு மாமதியு மல்லாம லுரைபெறு நற் றலைவர்பிற ருளர்கொல்லோ" (நைடத. அன்னத்தைத்தூ. 98). 2. **இல்லாமல்**; without. அவனை யல்லாமல் இது நடக்குமா? (உ.வ.).

*[அல் + ஆ (எ.ம.இ.நி.) + மை (பண்.பெ. ஈறு). மை → மல்.]*

**அல்லாத** பார்க்க; see *allada.*

'இல்லாமல்' என்னும் பொருளில் இச் சொல்லை வழங்குவது வழுவழக்கே. பண்புப் பெயரீறு எதிர்மறை வினையெச்ச ஈறாக ஆளப்பட்டது.

**அல்லாமலும்** *allamalum*, இடை. (conj.) **மேலும்**; moreover, besides, in addition to. அவர் கையூட்டு வாங்கியிருப்பது பெருந்தவறு; அல்லாமலும், கள்ளக்கையெழுத் திட்டிருப் பது மன்னிக்கத்தகாத குற்றம். அவ் வுயர்ந்த பதவிக்கு அமர்த்தப்பட்டிருப்பவர் மிக இளைஞர்; அல்லாமலும், அவர் ஓர் அயல் நாட்டார்.

*[அல் + ஆ (எ.ம.இ.நி.) + மல் (எ.ம.கு.வி.எ. ஈறு) + உம் (இறந்தது தழுவிய எச்சப்பொரு ளிடைச்சொல்).]*

**அல்லாமே** *allame*, எ.ம.கு.வி.எ. (prep.) **அல்லாமல்**; except. அவனல்லாமே வேறு யார் இதைச் செய்ய முடியும்?

*[அல் + ஆ (எ.ம.இ.நி.) + மை → மே (எ.ம. கு.வி.எ. ஈறு).]*

**அல்லாமை** *allamai*, பெ. (n.) **தீயகுணம்**; evil disposition, bad character. "தேகத்தில் வாஞ்சை முதலாய் அல்லாமை யெத்தனை" (தாயு. ஆனந்த. 1).

*[அல் + ஆ (எ.ம.இ.நி.) + மை (பண்.பெ. ஈறு). நன்மை யல்லாமை என்பது கருத்து.]*

**அல்லார்** *allar*, பெ. (n.) **அல்லாதார் 2** பார்க்க; see *alladar 2.*

*[அல் + ஆர் (ப.பா. ஈறு). அவர் → ஆர்.]*

**அல்லாரி**[1] *allari*, பெ. (n.) **வெள்ளாம்பல்** (மூ.அ.); white water-lily.

*[அல் (இரவு) + ஆரி. அலரி → ஆரி. அல் லாரி = இரவில் மலரும் பூ.]*

**அல்லாரி**[2] ***allari***, பெ. (n.) **சுவரின் ஆரல் தாங்கு முளை** (இ.வ.); stake in a mud wall to support the coping (Loc.).

**அல்லாரி**[3] ***allari***, பெ. (n.) **அடர்த்தியின்மை** (இ.வ.); thinness, sparseness, lightness of texture.

ம. அல்லாரி

*[ஒருகா. அலசாரி (அலசல்) → அல்லாரி.]*

**அல்லாருகம்** ***allarugam***, பெ. (n.) **பெருந்தாளி**; a large species of convolvulus (சா.அக.).

**அல்லால்** ***allal***, கு.வி.எ. (prep.) **அல்லாமல்**; except, besides. ''அஞ்சாமை யல்லால் துணைவேண்டா'' (குறள், 497).

ம. அல்லால்

*[அல் + ஆல் (வி.எ. ஈறு).]*

**அல்லாவிட்டால்** ***allaviṭṭal***, இடை. (conj.) **அல்லாக்கால்** பார்க்க; see ***allakkal***.

**அல்லாவிடத்து** ***alla-v-iḍattu***, இடை. (conj.) **அல்லாக்கால்** பார்க்க; see ***allakkal***. —, கு.வி.எ. (adv.) **வேறிடத்தில்**; elsewhere.

**அல்லாவிடின்** ***allaviḍin***, இடை. (conj.) **அல்லாக்கால்** பார்க்க; see ***allakkal***.

**அல்லி**[1] ***alli***, பெ. (n.) 1. **இரா** (சங்.அக.); night. 2. **ஆம்பல்** (மூ.அ.); water-lily, *Nymphaea lotus*. 3. **வெள்ளாம்பல்** (பிங்.); white water-lily. 4. **தாமரை**; lotus. ''அல்லி மாதர் புல்க'' (திவ். பெரியதி. 1.7:9). 5. **அல்லி யரிசி**; lily seeds. ''குளநெல்லும் விளைந்த வாம்ப லல்லியு முணங்கு முன்றில்'' (சீவக. 355). 6. **அகவிதழ்** (பிங்.), **புல்லி என்பதற்கு எதிர்**; inner flower petals, opp. to *pulli*. ''அல்லியங் கமலந் தன்னி லரிவையும்'' (கந்தபு. உற்பத். திருக்கல். 73). 7. **பூந் தாது**; filaments of a stamen. ''அல்லியங் குழலா டன்னை'' (அரிச்சந். விவாக. 23).

**அல்லிவகைகள்** - *Different varieties of alli*

இது அடியிற்கண்டபடி பல வகைப்படும். ஆயினும், பொதுவாக அல்லியெனின் வெள் ளல்லியையே குறிக்கும்.

1. வெள்ளல்லி; white Indian water-lily, *Nymphae lotus* (pubescens).
2. செவ்வல்லி; red Indian water-lily, *Nymphae rubra* alias *Nymphae edulis*.
3. நீலவல்லி; blue Indian water-lily, *Nymphae stellata*.
4. சிற்றல்லி; star water-lily, *Nymphae cyanea*.
5. செங்கழுநீர்; purple Indian water-lily, *Nymphae odorata*.
6. வெள்ளாம்பல் அல்லது நெய்தல்; white Indian water-lily, *Nymphae lotus* alias *Custalia pubescens*.

**Note**: In Tamil, கொட்டி, ஆம்பல் and நெய்தல் are differently classified which is evident from the following stanza:

''கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு''
(வாக்குண். 17).

But, they are all named in English by a common term viz., Indian water-lily, and classified under the same Botanical group, viz., *Nymphaeaceae* (சா.அக.).

இங்ஙனம் திரு. **சாம்பசிவம் பிள்ளையே** கூறியிருப்பதால், செங்கழுநீரும் நெய்தலும் அல்லியினின்று பிரித்தறியப்படும். செவ்வாம் பலுக்கும் செங்கழுநீர் என்று பெயர் வழங்கி னும், முன்னதை வேறுபடுத்தலே தக்கதாம்.

ம., க., து. அல்லி; தெ. அல்லி (ஆம்பல்).

*[அல் = இரா. அல் → அல்லி = இரா. **ஒ.நோ**: அல் → எல் → எல்லி = இரா. அல் → அல்லி = இரவில் மலரும் பூவகை, அதையுடைய கொடி. தாமரை பகலில் மலரினும் நீர்ப்பூ என்னும் பொதுமைபற்றி அல்லிப்பெயர் பெற்றது.*

*அல்லி (அகவிதழ்), புல்லி (புறவிதழ்) என்பன, **ஒருகா**. அகவல்லி, புறவல்லி என்பவற்றின் மரூஉவாயிருந்து, பின்னர்ப் பொதுப்பொருள் பெற்றிருக்கலாம்.*

*அல்லியரிசியை அல்லியென்றது முதலாகு பெயர். பூந்தாது அகவிதழிடை யிருப்பது.]*

**அல்லி**[2] ***alli***, பெ. (n.) **இளவேர்** (யாழ்ப்.); new root, shoot (J.).

*[உல் → உல்லரி = தளிர். உல் → உல → உலவை = பசுந்தழை. உல் → அல் → அல்லி = தளிர், இளவேர்.]*

**அல்லி**[3] *alli*, பெ. (n.) ***காயாமரம்*** (பிங்.); ironwood tree.

க. அலமர்; து. அலிமர்.

**அல்லி**[4] *alli*, பெ. (n.) ***மாதுளை***; pomegranate. "அல்லியுங் கொய்யாவும் அலுங்கப் பழுத் திருக்க" (நா.பா.).

**அல்லி**[5] *alli*, பெ. (n.) அலி (பொதி.நி.); hermaphrodite, a person who is neither man nor woman wholly.

*[அல் → அலி = ஆணும் பெண்ணும் அல்லாதது. அல் → அல்லி.]*

**அல்லிக்கிழங்கு** *alli-k-kilangu*, பெ. (n.) ***அல்லிக் கொடியின் கிழங்கு***; the root of the plant, *Nymphae lotus*. இதன் மா ஏழைகட்கு உணவாகப் பயன்படும்; the flour prepared from this root forms an article of food for the poor (சா.அக.).

**அல்லிக்கேணி** *alli-k-kēṇi*, பெ. (n.) ***திருவல்லிக் கேணி***; *Tiruvallikkēṇi*. "மயிலைமா வல்லிக் கேணியான்" (திவ். இயற். நான்மு. 35).

*[அல்லி + கேணி.]*

**அல்லிக்கொடிமூலச்செயனீர்** *alli-k-koḍi-mūla-c-ceyanīr*, பெ. (n.) (பொன்னாக்கம்) ***சாகா வுப்புச் செயநீர்***; a strong liquid prepared by a special process known only to *Siddhars* and guarded as a secret and used in Alchemy and for rejuvenation (சா.அக.).

*[அல்லி + கொடி + மூலம் + செயல் + நீர். மூலம் = கிழங்கு. செயல் + நீர் – செயனீர்.]*

**அல்லிக்கொடிமூலம்** *alli-k-koḍi-mūlam*, பெ.(n.) 1. *அல்லிக்கிழங்கு*; the root of the plant *Nymphae lotus*. 2. *சாகா வுப்பு*; a kind of salt prepared by a secret process for strengthening the body and also for longevity (சா.அக.).

**அல்லிக்கோணி** *alli-k-kōṇi*, பெ. (n.) ***பேய்க் கற்றாழை***; wild aloe, demon aloe, *Agave americana* (சா.அக.).

இதனால் நீரிழிவுபோன்ற சிறுநீர் நோய்கள் நீங்கும்.

**அல்லிகம்** *alligam*, பெ. (n.) ***பேய்க்கொம்மட்டி*** (மூ.அ.); colocynth.

**அல்லித்தண்டு** *alli-t-taṇḍu*, பெ.(n.) ***ஆம்பற்றாள்*** (சீவக. 2876, உரை); lily stem, stalk of the water-lily.

**அல்லித்தாமரை** *alli-t-tāmarai*, பெ. (n.) ***செங் கழுநீர்***; red water-lily (செ.அக.) — ***வெள்ளாம் பல்***; white Indian water-lily, *Nymphaea lotus* (சா.அக.).

ம. அல்லித்தார்

இங்ஙனம் ஈரகரமுதலிகளும் வேறுபடு வதற்குக் கரணியம் (காரணம்), 'தாமரை' என்னுஞ் சொல் இருவண்ண மலர்க்கும் பொதுவாயிருத்தல் போலும்.

**அல்லித்தாள்**[1] *alli-t-tāḷ*, பெ. (n.) ***மலர் நடுவிலுள்ள பெண்ணுறுப்பு***, முசலி (M.M.); pistil.

*[அல்லி = அகவிதழ். தாள் = அகவிதழைச் சேர்ந்த தண்டுபோன்ற உறுப்பு.]*

**அல்லித்தாள்**[2] *alli-t-tāḷ*, பெ. (n.) ***அல்லித் தண்டு*** (சீவக. 2876); lily-stem.

*[அல்லி = ஆம்பல். தாள் = தண்டு.]*

**அல்லித்தேங்காய்** *alli-t-tēṅgāy*, பெ. (n.) ***கூகைக்காய் அல்லது கோட்டான்காய் என்னும் சொத்தைத் தேங்காய் (தெங்கங்காய்) வகை*** (உ.வ.); blighted coconut (Com.u.).

*[அல்லி + தேங்காய். ஒல் → அல் → அல்லி. அல் = சுருங்குதல்.*

*கோட்டான் இளநீர்மேல் உட்கார்ந்தால், அக் காய் சொத்தையாய்ப் போய்விடுமென்பது பொதுமக்கள் நம்பிக்கை. தேரை உட்கார்ந்தது தேரைக்காய் என்பர். இரண்டும் அல்லிக்காய் எனப்படும்.]*

**அல்லிப்பாவை** *alli-p-pāvai*, பெ. (n.) ***அல்லியக் கூத்தில் ஆட்டும் படிமை (பிரதிமை)***; puppets used to exhibit *alliyam* dance.

"வல்லோன் றைஇய வரிவனப் புற்ற
அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்ப"
(புறநா. 33 : 16-17).

*[அல்லியம் + பாவை – அல்லியப்பாவை → அல்லிப்பாவை.]*

அல்லியம் பார்க்க; see *alliyam*.

**அல்லிப்பிஞ்சு** *alli-p-piñju*, பெ. (n.) ***பூ விழாத இளம்பிஞ்சு*** (வின்.); fruit newly formed from the blossom.

*[அல்லி = அகவிதழ். அகவிதழை யொட்டிக் கொண்டிருக்கும் பூம்பிஞ்சு அல்லிப்பிஞ்சு.]*

**அல்லிமாதர்** *alli-mādar*, பெ. (n.) ***தாமரை மலர்மே லமர்ந்திருக்கும் திருமகள்***; *Tirumagaḷ*

(Lakṣmi), seated on a lotus. ''அல்லி மாதர் புல்கநின்ற ஆயிரந்தோளன்'' (திவ். பெரியதி. 1 . 7 : 9).

*[அல்லி = அல்லிபோன்று நீர்ப்பூவாகிய தாமரை. மாதர் = அழகு, அழகுள்ள திருமகள் (பண்.ஆகு.).]*

**அல்லிமுகை** *alli-mugai*, பெ. (n.) **பூந்தாது**; anther (சா.அக.); part of stamen containing pollen.

**அல்லிமூக்கு** *alli-mūkku*, பெ. (n.) **அரத்த மொழுகும் மூக்கு** (இ.வ.); bleeding nose (Loc.).

ஒ.நோ : சில்லிமூக்கு

**அல்லியக்கிழங்கு** *alliya-k-kilaṅgu*, பெ. (n.) **கொட்டிக்கிழங்கு**; the root of a water plant, *Aponogeton monostochyon* (சா.அக.).

**அல்லியத்தொகுதி** *alliya-t-togudi*, பெ. (n.) **தன்னைக் கொல்லுமாறு மாமனாகிய கஞ்சன் ஏவிய யானையின் மருப்பை யொடித்துக் கண்ணன் ஆடிய கூத்து**; Krisṇa's dance when he broke the tusk of the elephant that was set on him by Kamsa, his uncle.

''கஞ்சன் வஞ்சங் கடத்தற் காக
அஞ்சன வண்ணன் ஆடிய வாடலுள்
அல்லியத் தொகுதியும்''
(சிலப். 6 : 46-8).

(இ-ள்.) அஞ்சன வண்ணன் ஆடிய ஆடல் பத்துள், கஞ்சன் வஞ்சத்தின் வந்த யானையின் கோட்டை ஒசித்தற்கு நின்றாடிய அல்லியத் தொகுதி யென்னுங் கூத்து.

தொகுதியென்றார் முகம் மார்பு கை கால் களின் வட்டணை அவிநய முதலியன இருந்தும் தொழில் செய்யாது நிற்றலின்; 'ஆட லின்றி நிற்பவை யெல்லா மாயோ னாடும் வைணவ நிலையே' என்றார். அல்லிய மென்பதனை அலிப்பேடென்பாரு முளர். 'அல்லியம்........ஆறாமெனல்' (அடியார்க். உரை).

'தொகுதி' யென்றற்கு உரையாசிரியர் கூறிய கரணியம் (காரணம்) ஆய்தற் குரியது.

**அல்லியம்**[1] *alliyam*, பெ. (n.) **கண்ணன் ஆடிய கூத்து**; Krisṇa's dance. **அல்லியத்தொகுதி** பார்க்க; see *alliya-t-togudi*.

இது : 1. தேவராடல் பதினொன்றுள் ஒன்று. ''கடையம்...........காண பதினோர் கூத்து''.

2. நின்றாட லாறனுள் ஒன்று. ''அல்லியம்.........நின்றாட லாறு''.

3. கஞ்சனை வென்று கண்ணன் ஆடிய பத்தனுள் ஒன்று. ''கஞ்சன்........ அல்லியத் தொகுதியும்'' (சிலப். 6 : 46-8).

இதற்கு உறுப்பு ஆறு.

''அல்லிய மாயவ னாடிற் றதற்குறுப்புச்
சொல்லுப வாறா மெனல்''.

*['அலிப்பே டென்பாருமுளர்' என்று அடியார்க்குநல்லார் கூறுவதால், அல் → அல்லி (அலி) → அல்லியம் என்று ஒருசார் உரையாசிரியர் திரித்தது தெரிகின்றது.]*

பதினோராடலும் பிறவும் குறிப்பிட்ட காலத் தேவர் வினைகளாகத் தொன்ம (புராண) முறைப்படி சொல்லப்படினும் அவை யாவும் அவ்வத் தெய்வ வணக்கத் தாரான தமிழர் தொன்றுதொட்டு ஆடிவந் தவையே என்றறிதல் வேண்டும். கண்ணன் மேலும், காமன்மேலும் ஏற்றிக் கூறப் பட்டவையெல்லாம், அவருக்கு முன்பே திருமால் வழிபாட்டினர் ஆடி வந்தவையே.

ம. அல்லியம்

**அல்லியம்**[2] *alliyam*, பெ. (n.) **கொட்டி** (மலை.); species of *Aponogeton*.

*[அல் → அல்லி → அல்லியம்.]*

**அல்லியரிசி** *alli-y-ariši*, பெ. (n.) **அல்லிப்பூவின் கொட்டையிலுள்ள சிறுவிதை** (சீவக. 2682, உரை); lily seeds.

*[அல்லி + அரிசி.]*

**அல்லியன்** *alliyaṉ*, பெ. (n.) **தன் குழுவைவிட்டுப் பிரிந்த யானை** (வின்.); stray elephant separated from the fold.

ம. அல்லியன்

*[ஒருகா. அல் (அல்லாத, கூட்டத்தைச் சேராத) → அல்லி → அல்லியன். இனி, ஒருகா. அகல் → அகலி → அகலியன் → அல்லியன்.]*

**அல்லியாமரம்** *alliya-maram*, பெ. (n.) **படகு வலிக்குந் தண்டு** (வின்.); long steering oar.

**அல்லியான்** *alliyāṉ*, பெ. (n.) **தாமரைமலரில் தோன்றியுள்ள நான்முகன்**; Brahma, the lotus-born. ''அல்லி யானரவைந்தலை நாகணைப் பள்ளியான்'' (தேவா. 5 . 33 : 9).

*[அல்லி (தாமரை) → அல்லியான்.]*

நான்முகன் திருமாலின் திருவுந்தித் தாமரையில் தோன்றியுள்ளான் என்பது தொன்மக் கதை.

**அல்லியுணவு** *alli-y-uṇavu*, பெ. (n.) *அல்லியரிசியாலான உணவு*; food prepared from water-lily seeds.

"அல்லி யுணவின் மனைவியோ டினியே
புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்"
(புறநா. 250 : 6).

[அல் → அல்லி = அல்லியரிசி (கருவியாகு பெயர்). உண் → உணவு. 'அவு' செயப்படு பொருளீறு.]

**அல்லியோரங்கை** *alliyōraṅgai*, பெ. (n.) **கீரிப் பிள்ளை**; mongoose, *Herpestes mungo* (சா. அக.).

**அல்லிரி** *alliri*, பெ. (n.) *அல்லி*[1] பார்க்க; see *alli*[1].

**அல்லிருள்** *al-l-iruḷ*, பெ. (n.) **இரவிருள், திணிந்த இருள்**; darkness of night, dense darkness. "அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்கு" (சி. போ. சிற். 11 . 2 : 1).

[அல் = இருள்வேளை. 'அல்லிருள்' மீமிசைச் சொல் (redundancy intensifying the meaning).]

**அல்லிவஞ்சி** *allivañji*, பெ. (n.) *பட்டாணி*; pea, *Pisum sativum* (சா.அக.).

**அல்லிவாதாளி** *allivādaḷi*, பெ. (n.) *அமுக்குரா*; Indian winter cherry, *Withania somnifera* (சா.அக.).

**அல்லு** *allu*, தொ.பெ. (vbl.n.) *முடைதல்*; weaving.

தெ. அல்லு

[அல்லுதல் = முடைதல். 'அல்லு' முத. தொ. பெ.]

**அல்லு-தல்** *allu-*, 5 செ.கு.வி. (v.i.) **பின்னிக் கொள்ளுதல்** (இ.வ.); to interlace closely (Loc.). மரங்கள் அல்லிக்கொண்டன. —, 5 செ.குன்றாவி. (v.t.) *முடைதல்* (இ.வ.); weaving. குருவி கூட்டை அல்லுகிறது.

க., தெ. அல்லு; கொலா. அல்; பர். அல்த்; நா. அல்; கூ. அல்ப்; குவி அல்லினய்.

[ஒல்லுதல் = பொருந்துதல். ஒல் → அல் → அல்லு.]

**அல்லுகம்** *allugam*, பெ. (n.) **பெருங்கொய்யா**, a big variety of guava, *Psidium guyaba* (சா. அக.).

**அல்லுச்சில்லுப்படு-தல்** *allu-c-cillu-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *1.* **சிறிது சிறிதாகப் பிரிந்து போதல்**; to get subdivided minutely or into small pieces. 2. **சிறிது சிறிதாகக் கெடுதல்**; to be frittered away, as money. பணத்தை யாருக்குங் கடன்கொடாமல் வைப்பகத்திற் போட்டுவிடு; இல்லாவிட்டால் அல்லுச் சில்லுப்பட்டுப் போகும் (உ.வ.).

[அல் → அல்கு. அல்குதல் = சிறுத்தல். சில் = துண்டு. 'அல்' வழக்கிறந்த சொல். அல் → அல்லு. சில் → சில்லு. 'அல்லுச்சில்லு' எதுகை மரபிணைமொழி, மீமிசைச் சொல்போற் பொருளை மிகுத்துக் காட்டுவது.]

**அல்லும்பகலும்** *allum-pagalum*, பெ. (n.) **இரவும் பகலும்**; day and night. அல்லும் பகலுஞ் சேர்ந்த ஒரு நாள். —, கு.வி.எ. (adv.) **இரவும் பகலும்**; night and day, always. "அல்லும் பகலும் அனவரதமுந் துதித்தால்" (சரசுவதியந். காப்பு). அல்லும் பகலும் அரும்பாடு பட்டுத் தேடிய சொத்து (உ.வ.).

['அல்லும் பகலும்' எதிர்மறை மரபிணை மொழி. 'உம்' ஈரிடத்திலும் எண்ணுப் பொருளிடைச்சொல். பக → பகல். 'அல்' தொ.பெ. ஈறு.]

அல்[1] பார்க்க; see *al*[1].

**அல்லுழி** *al-l-uḻi*, கு.வி.எ. (adv.) **முன்சொன்னது அல்லாதவிடத்து**; elsewhere. 'அல்லுழியெல்லாம் பரந்துபட்டு வரவும் பெறும்' (தொல். பொருள். செய். 183, பேரா. உரை).

[அல் = அல்லாத. உள் → உளி → உழி = இடம்.]

**அல்லூரம்** *allūram*, பெ. (n.) **வில்வமரம்** (மலை.); bael (செ.அக.) — holy garlic pear, *Crataeva religiosa* (சா.அக.).

**அல்லை**[1] *allai*, பெ. (n.) *1.* **வள்ளைக்கொடி**; a creeper, the root of which forms an article of food, *Convolvulus repens* (சா.அக.) — **கொடி வகை**; a climber, a running plant, the root of which forms an article of food (W.). 2. **அல்லி** (பச்.மூ.); water-lily.

[அல்லை 2. அல் → அல்லி.]

**அல்லை**[2] *allai*, கு.வி.மு. (impl.v.) **நீ அல்லாய்**; you are not. "காதர மார்தரு மனமே கமல மலரய னல்லை" (கோயிற்பு. பாயி. 23).

[அல் → அல்லை (அல் என்னும் இயற்கையெதிர்மறைக் குறிப்புவினையின் முன்னிலை

யொருமை முற்று). 'ஐ' முன்னிலை யொருமை யீறு.]

**அல்லைதொல்லை** *allai-tollai*, பெ.(n.) மிகுந்த **துன்பம்** (உ.வ.); great trouble (Com.u.). மழையில் வண்டி கிடையாமல் இருநாளாய் அல்லைதொல்லைப்பட்டு இங்கு வந்துசேர்ந் தேன்.

[அல் → அல்லல் = துன்பம். அல் → அல்லை. தொல் → தொல்லை = துன்பம். 'அல்லை தொல்லை' பொருளை மிகுத்துக் காட்டும் எதுகை மரபிணைமொழி.]

**அல்லோர்** *allōr*, பெ. (n.) 1. முன் சொல்லப் பட்டவரல்லாதார்; those other than the aforesaid. ''அன்புளோ ரல்லோ ராய வரசமண் டலங்க ளெல்லாம்'' (இரகு. மாலை. 128). 2. முன் சொல்லப்பட்ட பண்பில்லாதார்; those without the said quality.

''பல்வகை யுதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கும் அதுமுடத் தெங்கே''
(நன். 35).

[அல் + ஓர் (ப.பா. ஈறு). ஆர் → ஓர். அல் லார் → அல்லோர்.]

**அல்லோலகல்லோலம்** *allōla-kallōlam*, பெ.(n.) **மிகுந்த ஆரவாரம், பெருங்குழப்பம்**; great noise, hullabaloo, an uproar.

க. அல்லோலகல்லோல; **Skt.** hallōla kallōla.

[அல் + ஓலம் + கல் + ஓலம். அலம்புதல் = ஒலித்தல். அலறுதல் = அஞ்சிக் கதறுதல். ஆலுதல் = ஒலித்தல். 'கல்'லெனல் ஓர் ஓசைக் குறிப்பு. கல் → கலி. 'கலகல' ஒலிக்குறிப்புகள். ஒ → ஒல் = ஒலி. ஓல் → ஓலம் = அடைக் கலம் வேண்டிக் கதறும் ஓசை.

ஒல் → ஒல். 'ஒல்'லெனல் ஒலிக்குறிப்பு. ஒல் → ஒலி. ஒல் → அல். ஒ → அ, போலித் திரிபு அல்லது சொல்லாக்கத் திரிபு.]

**அல்லோன்**[1] *allōṉ*, பெ. (n.) திங்கள் (பிங்.); Moon, the ruler of the night.

[அல் = இரா. அல் → அல்லோன் = இரவில் ஒளிதரும் நிலா.]

**அல்லோன்**[2] *allōṉ*, பெ. (n.) ஒரு மரம்; the oak tree (சா.அக.).

**அல்லோன்**[3] *allōṉ*, பெ. (n.) அல்லோர் என்பதன் ஒருமை; sing. of *allōr*.

**அல்வழக்கு** *al-vaḻakku*, பெ. (n.) 1. **தகாத வழக் காரம் அல்லது வழக்காட்டு**; illegal dispute or suit. 2. **தகாத வொழுக்கம்**; improper conduct, wrong attitude of mind. ''அல்வழக் கொன்றுமில் லாஅணி கோட்டியர் கோன்'' (திவ். திருப்பல். 11).

[அல் = தகுதி அல்லது முறை அல்லாத. வழங்கு → வழக்கு.]

**அல்வழி** *al-vaḻi*, பெ. (n.) 1. **நெறியல்லா நெறி, தகாத நெறி, தீய நெறி**; wrong path. 2. **சொற் புணர்ச்சியின் வேற்றுமையல்லாத வழி, வேற்றுமைவழி என்பதற்கு எதிர்**; combination of an undeclined or indeclinable word with another word, opp. to *vēṟṟumai vaḻi*.

[அல் = வேற்றுமை யல்லாத. வழி = சொற் புணர்ச்சி நிலை.]

அல்வழிப்புணர்ச்சி பார்க்க; see *al-vaḻi-p-puṇarcci*.

இருசொல் புணரும் நிலை வேற்றுமைவழி, அல்வழி என இரண்டு. நிலைச்சொல் (முன் சொல்) வேற்றுமை யேற்கத் தக்கதாயின், அது வருஞ்சொல்லொடு (பின்சொல்லொடு) புணர்வது **வேற்றுமைவழி**; ஏற்காதது அல்லது ஏற்கத் தகாதது ஆயின் **அல்வழி**.

நிலைச்சொல் இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரை ஏதேனு மொன்றை ஏற்றிருப்பின், அது வருஞ்சொல் லொடு புணர்வது **வேற்றுமைவழி**; அல்லாதது **அல்வழி**. வேற்றுமையுருபு வெளிப்பட்டும் தொக்கும் இருவகையாயிருக்கும். முன்னது விரி யென்றும் பின்னது **தொகை** யென்றும் சொல்லப்படும்.

புணரும் சொல்லிணை **வினைத்தொகை** முதல் **அடுக்குத்தொடர்** வரை பதினால் வகைப் பட்டிருப்பது **அல்வழி**. அதை அடுத்த உருப் படியிற் காண்க.

**அல்வழிப்புணர்ச்சி** *al-vaḻi-p-puṇarcci*, பெ. (n.) **வேற்றுமை யேற்காத அல்லது ஏற்கத் தகாத சொல் வேறொரு சொல்லொடு புணர்வது**; combination of an undeclined or indeclinable word with another.

அல்வழிப் புணர்ச்சி கீழ்வருமாறு பதினால் வகைப்படும்:

| சொல்லிணை | புணர்ச்சி |
|---|---|
| 1. வினைத்தொகை | கொல்யானை, சுடுசோறு. |

| | |
|---|---|
| 2. பண்புத்தொகை | செந்தாமரை, வன்செயல். |
| இருபெயரொட்டுப் பண்புத்தொகை | பனைமரம், குமரிமலை. |
| 3. உவமைத்தொகை | முத்துப்பல், பொன்மொழி. |
| 4. உம்மைத்தொகை | தாய்தந்தை, சேர சோழ பாண்டியர். |
| 5. அன்மொழித்தொகை | கடுவாய் வந்தது, **தேன்மொழி** பேசினாள். |
| 6. எழுவாய்த்தொடர் | நக்கீரர் பாடினார், மறைமலையடிகள் எழுதினார். |
| 7. விளித்தொடர் | அண்ணா! வா, அமைச்சரே ! வருக. |
| 8. பெயரெச்சத்தொடர் | பெரியதிருமொழி, சிறந்த நூல். |
| 9. வினையெச்சத் தொடர் | விரைந்து எழுதினார், மெல்லப் போனது. |
| 10. தெரிநிலை வினை முற்றுத்தொடர் | பெற்றான் பரிசு, பொழிந்தது மழை. |
| 11. குறிப்பு வினை முற்றுத்தொடர் | பெரிது யானை, நல்லவர் புலவர். |
| 12. இடைச்சொற் றொடர் | இன்னொன்று, அக்காலம். |
| 13. உரிச்சொற்றொடர் | கழிநெடில், சாலப்பல. |
| 14. அடுக்குத்தொடர் | பாம்பு பாம்பு, போ போ போ. |

''வேற்றுமை ஐம்முதல் ஆறாம் அல்வழி
தொழில்பண் புவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளிஈ ரெச்சமுற் றிடைஉரி
தழுவு தொடரடுக் கெனஈ ரேழே''
(நன். 152).

*[அல் + வழி + புணர்ச்சி.]*

**அல-த்தல்** *ala-*, 3 செ.கு.வி. (v.i.) 1. **அலைதல்** (சங்.அக.); to wander, roam about. "ஐவர் வந்து முறைமுறை துயரஞ் செய்ய வற்றுநா னலந்து போனேன்'' (தேவா. 4.52:8). 2. **துன்பமுறுதல்**; to suffer, to be in distress. "அலந்தாரை யல்லனோய் செய்தற்றால்'' (குறள், 1303). 3. **வறுமைப்படுதல்**; to suffer privation, to be in want. "அலந்தவர்க் குதவுதல்'' (கலித். 133:6). 4. **ஆசைப்படுதல்**; to desire, long for, hanker after. கறிக்கு அலந்துபோய்க் கிடக்கிறான் (உ.வ.).

தெ. அலகுவ

*[அல் → அல்லல் = துன்பம். அல் → அலம் → அலமி = துன்பம். அல் → அலை. அலைதல் = அசைதல், வருந்துதல், துன்புறுதல். அல்→அல.]*

**அலக்கண்** *ala-k-kaṇ*, பெ. (n.) **துன்பம்**; affliction, distress, disaster. "ஆதலா லெங்க ளலக்க ணகற்றிடுவான்'' (கந்தபு. அசுர. தேவர்புல. 24).

*[அல் → அலம் = துன்பம். 'கண்' இடமும் காலமும் உணர்த்தும் ஓர் ஈறு. ஒ.நோ: இடுக்கண்.]*

**அலக்கலக்காய்** *alakkalakkāy*, கு.வி.எ. (adv.) **தனித்தனியாய், வெவ்வேறாய்**; separately, part by part. உறுப்புகளையெல்லாம் அலக்கலக்காய்ப் பிரித்துவிட்டாள் (உ.வ.).

*[அலக்கு = கிளை. அலக்கலக்காய் = கிளை கிளையாய், பகுதிபகுதியாய். இனி, அலகு (அடிப்படையுறுப்பு) → அலக்கு எனினுமாம். 'அலக்கலக்கு' அடுக்குத்தொடர். 'ஆய்' கு.வி.எ. ஈறு.]*

**அலக்கழி-தல்** *alakkaḻi-*, 2 செ.கு.வி. (v.i.) **மிக வருந்துதல், துன்புறுதல்**; to be vexed, troubled, harassed. "கலக்கநா னலக்கழிந்தேன்'' (தேவா. 4.70:3).

*[அலக்க (நி.கா.வி.எ.) + அழி. – அலத்தல் = துன்புறுதல். அழிதல் = மனம்நோதல்.]*

**அலக்கழி-த்தல்** *alakkaḻi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **அலைத்து வருத்துதல்** (பணவிடு. 177); to vex, harass, harry, perplex, tease, distress, worry by continual putting off. 2. **கெடுத்தல்**; to ruin, destroy. "தக்கன்பெரு வேள்வியங் கலக்கழித்து'' (தேவா. 5.73:1). 3. **அழகு காட்டுதல்**; to mimic in derision.

*[அலக்கழிதல் (த.வி.) → அலக்கழித்தல் (பி.வி.).]*

அலக்கழி-தல் பார்க்க; see *allakkaḻi-*.

**அலக்கறுவாள்** *alakk(u)-aṟuvāḷ*, பெ. (n.) **துறட்டுக்கோலின் நுனியிற் சேர்த்துள்ள அறுக்கும் அலகு** (தஞ்சை); crotchet-shaped blade attached to a pole (Tj.).

*[அலக்கு (துறட்டுக்கோல்) + அறுவாள். அலக்கரிவாள் என்பது வழுவடிவம்.]*

**அலக்காய்** *alakkāy*, கு.வி.எ. (adv.) **தனியாய், வேறாய்;** separately. தலையை அலக்காய் எடுத்துவை (உ.வ.).

[அலக்கு + ஆய் (கு.வி.எ. ஈறு).]

**அலக்கு**[2] பார்க்க; see *alakku*[2].

**அலக்கு-தல்** *alakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அசைவித்தல்;** to shake, cause to move. "சங்கலக்குந் தடங்கடல்வாய்" (தேவா. 7.51:3). 2. **ஆடைவெளுத்தல்;** to wash, as clothes.

ம. அலக்கு; க. அலகு, அலி; து. லம்பு; பட. அலுக்கு.

[அல → அலக்கு.]

**அலக்கு**[1] *alakku*, பெ. (n.) 1. வரிச்சு; roof laths. "மனையி னீடு மலக்கினை யறுத்து வீழ்த்தார்" (பெரியபு. இளையான். 19). 2. **துறட்டுக்கோல்** (தஞ்சை); a pole with an iron hook to pluck fruits and leaves (Tj.). *3.* **கிளை;** branch of a tree. 4. **எலும்பு;** bone. "விலா வலக்குக வலக்குக வடிக்கடி சிரித்தன (கலிங். 229). 5. **கோட்டை;** fort (சங்.அக.).

ம. அலகாடி T. 5048

[உல் → உல. உலத்தல் = வளைதல். உல் → உலம் = வட்டம், உருண்டை. உலம்வரு → உலமரு. உலமருதல் = சுழலுதல். உலக்கை = நீண்டுருண்ட கோல். உல → உலவு. உலவுதல் = சுற்றுதல், திரிதல். உல → உலா. உலவு → உலகு = சுற்றிவரும் கோள். உலகு → அலகு = வளைந்த குறடு, வளைந்த கத்தி (அறுவாள்), குறடுபோன்ற தாடை. உலம் → அலம் = வளைந்த கொடுக்கு, கொடுக்குள்ள தேள். அலம் → அலவன் = குறடுபோன்ற முன் காலுள்ள நண்டு.

அலகு → அலக்கு = வளைந்த அறுவாள், வளைந்த கிளை (ஒ.நோ: கோடு = கிளை, கொம்பு = கிளை), வளைந்த அல்லது கிளை போன்ற விலாவெலும்பு, வளைந்த மதில் (அலகு → அலங்கு → அலங்கம் = கோட்டை), கிளைபோன்ற கோல் அல்லது சட்டம். ஒ.நோ: கொம்பு → கம்பு.

எலும்பைக் குறிக்கும் அலக்கு என்னுஞ் சொல் விலாவெலும்பைச் சிறப்பாகக் குறிக்காததாயின், எல் → அல் → அலவு → அலகு (வெள்ளையானது) → அலக்கு என்று திரிந்திருத்தல் வேண்டும். ஒ.நோ: எல் (ஒளி, வெள்ளை) → எலும்பு.]

**அலக்கு**[2] *alakku*, பெ. (n.) **தனிமை;** separateness. அலக்கலக்காய் பார்க்க; see *alakkalakkāy*.

**அலக்குக்காரன்** *alakkukkāraṉ*, பெ. (n.) **வண்ணான், சலவை செய்பவன்** (நாஞ்.); washerman (Nāñ.).

ம. அலக்குகாரன்; க. அல்லிகாரிக.

[அலக்கு = சலவை. 'காரன்' வி.முத. ஈறு அல்லது உடைமையோன் ஈறு.]

**அலக்குத்தடி** *alakku-t-taḍi*, பெ. (n.) **வேலியடைக்கும் மரக்கிளை** (இ.வ.); small branches or boughs used in the repair of hedges (Loc.).

[அலகு → அலக்கு. தண்டு → தண்டி → தடி.]

**அலக்குப்போர்** *alakku-p-pōr*, பெ. (n.) **காவலர் ஈட்டிகளை ஒன்றோடொன்று எதிர்த்து வைக்கை;** stack of arms. அலக்குப் போர் போலே........கூடுதல் (?)

[அலகு → அலக்கு. பொருதல் = பொருந்துதல், சேர்தல். பொரு → போர் = செறிவு, குவியல், சாணை, படப்பு.]

**அலக்கைச்சுரம்** *alakkai-c-curam*, பெ. (n.) **கீழ்க்காய்நெல்லி;** a small plant with slender green main branches, *Phyllanthus niruri* (சங்.அக.).

மறுவ. அலகைச்சுரம்

**அலக்கொடு-த்தல்** *ala-k-koḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) **தொந்தரவு செய்தல், தொல்லை கொடுத்தல்** (இ.வ.); to give trouble, cause worry to (Loc.).

**அலக்கொடுப்பு** *ala-k-koḍuppu*, பெ. (n.) **தொந்தரவு செய்கை, தொல்லை கொடுப்பு;** giving trouble, harassment.

**அலகநிரணி** *alaganiraṇi*, பெ. (n.) **மரமஞ்சள்;** tree-turmeric, *Coscinium fenestratum* (சா. அக.).

**அலகம்** *alagam*, பெ. (n.) 1. **யானைத்திப்பிலி** (மலை.); elephant pepper, *Scindapsus officinalis*. 2. **வேப்பலகு;** margosa stalk.

**அலகம்பு** *alagambu*, பெ. (n.) **அலகைத் தலையாகக்கொண்ட அம்புவகை;** arrow, having a blade for its head. "அஞ்சம்பையு மையன்றன தலகம்பையு மளவா" (கம்பரா. அயோத். கங்கை. 3).

[அலகு + அம்பு. அலகு = கூர்மை, கூர்மையான கத்தியலகு. அம்பல் = கூம்பல், குவிதல். ஒருகா. அம்பு = நுனியிற் குவிந்திருப்பது.]

**அலகமான்** *alagamāṉ*, பெ. (n.) **திப்பிலி** (பச்.மூ.); long pepper, *Piper longum.*

*[அலகம் → அலகமான்.]*

**அலகலகாக** *alagalagāga*, கு.வி.எ. (adv.) **தனித் தனியாக, வெவ்வேறாக**; separately. 'அலகல காக எண்ணிக்கொள்ளலாய்' (ஈடு, 3 . 6 : 5).

**H.** alagalag

*[அலகு = அடிப்படை யுறுப்பு அல்லது அளவு. அல்லுதல் = பொருந்துதல். அல் → அலவு → அலகு = பொருந்திய வுறுப்பு அல்லது பொருந்தி யளக்கும் அளவு. ஒ.நோ: அள் ளு த ல் = பொருந்துதல். அள் → அள → அளவு. அளத் தல் = அளவுசெய்தல். அளவுதல் = பொருந்து தல், கலத்தல். அளவு = பொருந்துகை, அளவீடு, குறிப்பிட்ட அளவு, அளவுகருவி.]*

'அலக்' (alag) என்னும் உருதுச் சொல்லிற் கும் 'அலகு' என்னும் தமிழ்ச்சொல்லிற்கும் தொடர்பில்லை. தொடர்பிருப்பின், முன்னது பின்னதன் திரிபாயே யிருத்தல் வேண்டும்.

**அலகழுங்கு** *alagaḻuṅgu*, பெ. (n.) **திப்பிலி** (சங்.அக.); long pepper, *Piper longum.*

*[அலகு + அழுங்கு. அலகு → அலகம் = யானைத்திப்பிலி.]*

மறுவ. அலகளுங்கு (சா.அக.).

**அலகா** *alagā*, பெ. (n.) **தொடைச்சந்து**; groin (சா.அக.).

**அலகாபிதம்** *alagābidam*, பெ. (n.) **புளிப்பு முந்திரிகை**; sour grapes (சா.அக.).

**அலகிடு[1]-தல்** *alagiḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) 1. **அளவிடுதல், அலகுவைத்துக் கணக்கிடுதல்**; to reckon, compute, measure, estimate. 2. **செய்யுளில் தளையும் ஓசையும் வழுவாவாறு அசைகளைப் பிரித்துக் கணக்கிடுதல்**; to scan, as a verse.

"அசையுஞ் சீரும் அடியு மெல்லாம்
இசைய வருபொரு ளியைபு நோக்கா
தோசையே குறிக்கொண் டொடுங்கவும் விரியவும்
அலகிடல் வகையுளி யாகு மென்ப"
(இலக். வி. 752).

*[அலகு = அளவு. அலகு + இடு (து.வி.).*

**அலகிடு[2]-தல்** *alagiḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) **துடைப்பத்தாற் பெருக்குதல்**; to sweep with a broom. 'அலகிடுவனென் றுள்ளங் குளிர அலகிட்டான்' (இறை. 1, உரை).

*[அலகு = துடைப்பம்: அலகு + இடு (து.வி.).]*

**அலகிரி** *alagiri*, பெ. (n.) **வெட்கங்கெட்டவன்** (திருச்சி); immodest fellow (Tp.).

*[ஒருகா. அலகிலி → அலகிரி. ஒ.நோ: போக் கிலி → போக்கிரி. அலகு = அளவு, மதிப்பு. இலி = இல்லாதவன்.]*

**அலகிருக்கைவெண்பா** *alagirukkai-veṇbā*, பெ. (n.) **மிறைப்பாவகை**; a kind of verse in *Veṇbā* metre fitted into some fanciful figure. 'விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டு' என்று சிறப்பித்தவதனால் .......... அலகிருக்கை வெண்பாப் பாடுதலும் (யாப். வி. பக். 510).

**அலகின்மாறு** *alagiṉ-māṟu*, பெ. (n.) **துடைப்பம்**; broom. "அலகின் மாறு மாறாத கலதி" (திருப்பு. 418).

*[அலகுமாறு என்பதே பெயர். திருப்புகழில் வண்ணம்பற்றி ஒன்றன்கூட்டக் கிழமையுருபு இடைத் தோன்றியது.]*

**அலகு[1]** *alagu*, பெ. (n.) 1. **அளவு** (பிங்.); measure, measurement, quantity. 2. **மட்டு, வரம்பு**; limit. "அலகி லாவிளை யாட் டுடை யார்" (கம்பரா. சிறப்புப்பாயி. 1). 3. **அளவுகருவி**; standard of measurement. "வாழ் நாட் கலகாய் வயங்கொளி மண்டிலம்" (நாலடி. 22). 4. **எண்** (திவா.); number, calculalion. 5. (யாப்பு.) **செய்யுளின் அசை யுறுப்பாகப் பிரித்தெண்ணப்படுதல்**; (Pros.) being counted as a metrical syllable or its member in scansion. "ஆரு மறிவ ரலகுபெ றாமை" (யா. கா. ஒழி. 1). 6. (இசை) **ஒரு நிலையின் 22 (அல்லது ஒரு சாரார் கொள்கைப்படி 24) நுண்ணிசைகளுள் ஒன்று**; (Mus.) one of the 22 (or 24 according to some) units of a gamut. 'வட்டப்பாலையின் முடிவு தானமாய் வலிந்த நிலைமையினையுடைய தாரம் பெற்ற இரண்டலகில் ஓரலகையும், இப் பாலையின் முதல்தானமாய் மெலிவி னிற்கும் குரல்நரம்பு பெற்ற நாலலகில் இரண்டலகையும், தாரநரம்பில் அந்தரக் கோலிலே கைக்கிளையாக நிறுத்தத் தாரந் தான் கைக்கிளையாயிற்று' (சிலப். 3 : 72 - 8, அடியார்க். உரை). 7. **பலகறை, எண்ணிக்கை யில் எண்குறிகளாகப் பயன்படுத்தப்படுவது**; cowries, small shells, as signs of number in reckoning. "அலகை யன்ன வெள்வேர்ப் பீலி" (மலைபடு. 234). 8. **மகிழம்விதை** (திவா.); berries of *Mimusops elengi.* "மகிழலகு ஒன்றே

போல மாறும்பல யாக்கை" (திவ். இயற். முதற். 49). 9. **இலக்கம் பாக்கு** (அபி. சிந்.); a lakh of areca-nuts.

*[ஒல்லுதல் = பொருந்துதல், ஒத்தல். ஒல் → அல். அல்லுதல் = பொருந்துதல், சார்தல், சார்த்துதல், பொருத்தி அல்லது சார்த்தி யளத்தல். அல் → (அல) → (அலவு) → அலகு. ஒ.நோ: அள் → அள → அளவு. அல் → அள்.]*

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும் நால்வகையளவும், முறையே, ஒன்றை இன்னொன்றொடு சேர்த்தும் ஒப்பித்தும் பொருத்தியும் சார்த்தியும் அளத்தலா யிருத்தல் காண்க.

**அலகு**[2] *alagu*, பெ. (n.) 1. **கூர்மை** (தஞ்சைவா. 234, உரை); sharpness. 2. **கத்தியின் அல்லது படைக்கலத்தின் கூரிய பட்டை**; blade of a knife, weapon or instrument, head of an arrow. 3. **படைக்கலம்** (பிங்.); weapon, arms. 4. **சலாக்கு**; burin, engraver's tool. 5. **பறவை மூக்கு**; bird's beak. "குயிலலகாற் பல்லவங்கள் கோதுமாலோ" (பாரத. வசந்த. 2). 6. **நுளம்பு** (பிங்.); gnat, small variety of mosquito. 7. **(நீண்ட நாளாகக் கருக்குமட்டை வெட்டாது விடப்படும்) ஆண்பனை** (நெல்லை); male palmyra (Tn.).

ம., க. அலகு; தெ. அலுகு (வாள்).

*[உல் = தேங்காயுரிக்குங் கருவி, கழு. உல் → உள் → உளி = கூரிய செதுக்குக் கருவி. உல் → அல் → அல்கு → அஃகு. அஃகுதல் = சுருங்குதல், நுண்ணிதாதல், கூராதல். உள் → அள் = கூர்மை. அல்கு → அலகு = கூர்மை, கூரிய பொருள், கூரிய உறுப்புள்ளது.]*

**அலகு**[3] *alagu*, பெ. (n.) 1. **குறடு**; pincers, tongs, forceps. 2. **உயிரிகளின் கொடிறு**; mandibles. அரணை அலகு திறக்கிறதில்லை (வின்.). 3. **தாடை**; jaw. அவன் அலகைப் பேர்த்துவிட்டான். ம. அலகு. 4. **தாடை எலும்பு**; jaw-bone, maxilla (superior and inferior) (சா. அக.). 5. **நெசவாளர் பாவோட்டற்கு வரிசையாகக் கவைபட நிறுத்தும் தடியிணை**; weaver's stay or staff to adjust a warp. 6. **கைம்மரம்**; rafter. "அரும் பொனா லலகு சேர்த்தி" (சீவக. 837).

*[அல் → அலவு → அலகு. பற்றுவது, வளைந்து பற்றுவது. பற்றுமாறு கவைபட்டிருப்பது என்பது வேர்ப்பொருளாகும்.]*

**அலகு**[4] *alagu*, பெ. (n.) 1. **நென்மணி** (திவா.); grain of paddy. "அலகுடை நீழ லவர்" (குறள், 1034). 2. **நெற்கதிர்**; ear of paddy. 3. **பிற கதிர்**; ear of other grains. 4. **மின்மினி** (க.அக.); fire-fly, glow-worm. 5. **பொன்னாங்கண்ணி** (இராசவைத்.); species of *Alternanthera*. 6. **துடைப்பம்** (பிங்.), **விளக்குமாறு**; broom. 7. **விளக்குமாற்றுப் புல், அறுகு** (பச்.மூ.); a variety of harialli grass.

க. அலகு

*[உல் → உல. உலத்தல் = காய்தல். உல் → உலர். உலர்தல் = காய்தல். உல் → இல் → எல் = ஒளி, விளக்கம். எல் = ஒளி, விளக்கம். உல் → அல் → அலகு → அலங்கு. அலங்குதல் = ஒளிசெய்தல் (பிங்.). ஒ.நோ: இல் → இலகு → இலங்கு → இலக்கு → இலக்கம் = விளக்கம். அலகு = ஒளிவிடுவது, மின்னுவது, விளங்குவது, பொன்போற் பொலிந்து தோன்றுவது, அல்லது தோன்றச்செய்வது, துலக்குவது. அலத்தம் = மின்மினி. அல் → அல → அலத்து → அலத்தம்.]*

நெல் முற்ற விளைந்தபின் பொன்போற் பொலிந்து தோன்றும். "சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு" (நள. சுயம். 55). பொன்விளைந்த களத்தூர் என்னும் வழக்கையும் நோக்குக. நெல் என்ற பெயரும் பொலிவுபற்றியதே. நில் → நில → நிலா, நில் → நெல். 'அலகு' என்னுஞ்சொல் முதற்கண் நெல்லையும், பின்னர் நெற்கதிரையும், அதன்பின் பிற கதிரையும் குறித்தது.

பொன்னாங்கண்ணிக் கீரை மேனியைப் பொன்போல் விளங்கச் செய்வது.

வீட்டிலுள்ள குப்பைகூளங்களைக் கூட்டித் தள்ளியபின் விளங்கித் தோன்றும். அங்ஙனம் விளங்கச் செய்யும் மாறு விளக்குமாறு. அது விளக்குமாற்றுப் புல்லாற் பின்னிக் கட்டப்படுவது. அப் புல் அறுகம்புல் வகைகளுள் ஒன்று.

**அலகு**[5] *alagu*, பெ. (n.) 1. **பெண்குறி**; the genital of a female, *Mons venerii* (சா.அக.). 2. **அகலம்**; breadth, extension. 3. **குற்றம்**; flaw. "அலகின் மரகத முறிகளும்" (தக்கயாகப். 41).

*[அரை, அல்குல், கடிதடம் என்னுஞ் சொற்கள் இடையையும் பெண்குறியையுங் குறித்தலால், 'அலகு' என்னும் சொல்லும் முதற்கண் இடையையும் பின்னர்ப் பெண்குறியையும் குறித்திருக்கலாம். அல்குல் = சுருங்குதல், சிறுத்தல்.*

அல்கு → அல்குல் = 1. சிறுத்த இடை. ஒ.நோ: மருங்கு → மருங்குல். அல்குல் → அல்கு → அலகு. 2. இடையை யடுத்த பெண்குறி. அல்குல் → அல்கு → அலகு. அகலம் நீளத்தினுங் குறைந்தது. அல்கு → அலகு. குறைவு என்பது ஒருவகைக் குற்றம். அல்கு → அலகு.]

**அலகுகட்டு-தல்** *alagu-kaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **1. மந்திரத்தினால் தீய வுயிரிகளின் (பிராணிகளின்) வாய் திறவாதிருக்கச் செய்தல்;** to charm a snake or beast, so as to prevent it from biting or opening its mouth. **2. வாள் வெட்டை மந்திரத்தால் வலியற்ற தாக்குதல்** (வின்.); to render the sword powerless by enchantment. **3. கணக்குத் தீர்த்தல்** (வின்.); to settle accounts.

[அலகு = தாடை. கட்டுதல் = அடைத்தல், திறவாதபடி செய்தல்.]

**அலகுகட்டை** *alagu-kaṭṭai*, பெ. (n.) **வண்டிச் சக்கர வட்டை;** felly of a wheel.

[அலகு = வளைவு. கட்டை = சட்டம்.]

**அலகுகழி-த்தல்** *alagu-kaḻi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **கணக்கிடுவதிற் பலகறை, விதை முதலிய வற்றைக்கொண்டு தொகை குறைத்தல்** (வின்.); to subtract, deduct a number in reckoning, with cowries, seeds, etc.

[அலகு = அளவு குறிக்கும் பலகறை, விதை முதலியன. கொழித்தல் = ஒதுக்குதல், நீக்குதல். கொழி → கழி. ஒ → அ. ஒ.நோ: ஒழி → அழி, பொலிசை → பலிசை, மொண்ணை → மண்ணை.]

**அலகுகிட்டு-தல்** *alagu-kiṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **இசிவு (சன்னி) நோயிற் பல் பூண்டுகொள்ளுதல்;** jaws being rigidly locked, as in tetanus.

[அலகு = தாடை. குல் → குலம் = கூட்டம். குல் → குலை = கொத்து, தாறு. குல் → குலவு. குலவுதல் = கூடுதல். குல் → குள் → குழு → குழுவு. குள் → கூள் → கூண்டு → கூடு. குள் → குட்டு → கிட்டு. கிட்டுதல் = நெருங்குதல், பொருந்துதல், பூணுதல்.]

**அலகுகுத்து-தல்** *alagu-kuttu-*, 5 செ.கு.வி. (v.i.) **தெய்வத்திற்கு நேர்த்திக்கடனாகவும், தன் தீவினைக்குத் தன்தண்டனையாகவும், நாவொடு இரு கன்னங்களிலும் அல்லது உடம்பின் பலவிடங்களிலும், வெள்ளியூசிகளாலும் கம்பிகளாலும் ஊடுருவக் குத்திக்கொள்ளுதல்;** to have one's tongue and cheeks pierced with silver pins, or to have small skewers inserted in many parts of the body, in fulfilment of a vow or as an act of self mortification for atonement of one's own sins.

[அலகு = தாடை, கன்னம். குத்துதல் = ஊசியை ஒன்றனை ஊடுருவச் செய்தல்.]

**அலகுகூடை** *alagu-kūḍai*, பெ. (n.) **சிறு போத்துகளால் நெருக்கிப் பின்னப்பட்ட இறைகூடை** (R.); basket, made of thin twigs closely woven together, used for drawing water.

[அலகு = ஒருகா. வளைந்த போத்து, வளார். கூடு → கூடை.]



அலகுகூடை

**அலகுகோலி** *alagu-kōli*, பெ. (n.) **1. அறுகு;** a species of sacred grass, *Cynodon dactylon.* **2. கற்றாழை;** aloe, *Aloe vera* (*officinalis*).

[அலகு = அறுகு (பச்.மூ.). சோலி (?) அலகு கோலி (?).]

**அலகுசோலி** *alagu-šōli*, பெ. (n.) அறுகு (மலை.); cynodon grass (சா.அக.).

**அலகுஞ்சம்**[1] *alaguñjam*, பெ. (n.) **மின்மினி;** fire-fly, glow-worm.

[இலகு → அலகு = ஒளி, விளக்கம், மின்மினி. ஒருகா. உந்து → உஞ்சு → உஞ்சம் = விடுவது, வீசுவது. உந்துதல் = வெளிப்படுத்துதல், வீசியெறிதல்.]

**அலகுஞ்சம்**[2] *alaguñjam*, பெ. (n.) **நுளம்பு;** gnat.

[அலகு = நுளம்பு. ஒருகா. உந்து → உஞ்சு → உஞ்சம் = நுண்ணுறிஞ்சியை உட்செலுத்துவது. உந்துதல் = தள்ளுதல், செலுத்துதல்.]

**அலகுநிலை** *alagu-nilai*, பெ. (n.) **கூட்டல் அல்லது பெருக்கல் என்னுங் கணிதத்தில் வரும் விடைத்தொகை** (வின்.); result of a computation in addition or multiplication (செ.அக.).

கூட்டல், பெருக்கல் முதலியவற்றான் வரும் பெயர் (க.அக.).

[அலகு = அளவு. நில் → நிலை. 'ஐ' தொ. பெ. ஈறு.]

**அலகுநிறுத்தல்** *alagu-niṟuttal*, தொ.பெ. (vbl.n.) திரௌபதியம்மன் திருவிழாவிற்கு முன், அம்மன் படிமைக்கு எதிரில் ஒரு நிறை குடத்தினருகே ஒரு வாளைத் தலைகீழாக நட்டுச் செய்யும் தொடக்கச் சடங்கு; ceremony preliminary to festival performed in honour of Draupati, in which a sword is planted point downwards near a vessel filled with water and placed before the idol, the sword standing firm being considered auspicious for the festival.

[அலகு = கூர்மை, கூரிய வாள். நில் (த.வி.) → நிறுத்து (பி.வி.). நிறுத்து → நிறுத்தல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

தலைகீழாக நிறுத்தப்பட்ட வாள் விழாதும் சாயாதும் உறுதியாக நேர்நின்றால், அது விழாவிற்கு நற்குறியாகக் கருதப்படும்.

பாண்டவர் வடநாட்டாராயினும் திங்கள் மரபினரான பாண்டியர் வழியினரே யாதலாலும், பாரதப் போரில் முத்தமிழ் வேந்தருங் கலந்துகொண்டதனாலும், திரௌபதி ஐவர் மனைவியெனினும் கற்பரசியாகவே தமிழராற் கருதப்பட்டதனாலும், அவள் இறந்த பின் கண்ணகிபோன்றே கற்புத் தெய்வமாகக் கல்லா மாந்தரால் வணங்கப்பட்டு வருகின்றாள்.

பண்டு கண்ணகி கோயில்களா யிருந்தவையே பின்னர்த் திரௌபதி கோயில்களாக மாறின என்பதும் ஒருசார் ஆராய்ச்சியாளர் கருத்து.

**அலகுப்பூட்டு** *alagu-p-pūṭṭu*, பெ. (n.) நேர்த்திக் கடனாக, இரு கன்னத்தையுந் துளைத்துப் புறங்காணுமாறு கம்பியைச் செலுத்தி வாயை அடைத்துக்கொள்ளுதல்; locking the mouth by a wire running through the cheeks, in fulfilment of a vow.

[அலகு = தாடை. பூண் (த.வி.) → பூட்டு (பி.வி.) — முத.தொ.ஆகு.]

அலகு[3] பார்க்க; see *alagu*[3].

**அலகுபருப்பு** *alagu-paruppu*, பெ. (n.) 1. பட்டாணிப்பயறு; seed of the garden pea. 2. அகலமான துவரம்பருப்பு; broad-sized dholl.

[2. அலகு = அகலம். பரு → பருப்பு.]

**அலகுபனை** *alagu-paṉai*, பெ. (n.) 1. காய்க்காத ஆண்பனை (நெல்லை); male palmyra which does not bear fruit (Tn.). 2. ஒருவகை நெட்டோலைப் பனை; long-lobed palmyra, *Borassus flebelliformis* (சா.அக.). 3. ஒருவகை மடற்பனை; Nepal fan-palm, *Trachycarpus martiana* (L.). 4. சீனப் பனை; China fan-palm, *Trachycarpus excelsa* (சா.அக.).

[அலகு = கூரிய கருக்குமட்டை. அலகு பனை = ஒருகா. நீண்டநாளாக மடலறுக்காது விடப்படும் ஆண்பனை. ஆண்பனைபோற் காய்க்காத பிற பனைவகைகளும் அலகுபனை யெனப் பெயர் பெற்றிருக்கலாம்.]

**அலகுபாக்கு** *alagu-pākku*, பெ. (n.) மெல்லிய வில்லைகளாகக் கத்தரித்து வேகவைத்துச் சாயமூட்டின பகட்டான செந்நிறப் பாக்கு; areca-nut sliced thin and boiled, having a bright reddish hue.

[அலகுபாக்கு = ஒருகா. அகலப் பாக்கு' இனி, ஒருகா. இலகுபாக்கு என்றுமாம். இலகுதல் = விளங்குதல்.]

**அலகுபீசன்** *alagu-pīšaṉ*, பெ. (n.) பூனைப்பிடுக்கன்; Indian linden, *Grewia scabrophylla* (சா.அக.).

**அலகுபூட்டு-தல்** *alagu-pūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) அலகுப்பூட்டு பார்க்க; see *alagu-p-pūṭṭu*.

**அலகுபோடு-தல்** *alagu-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) அலகுகுத்து-தல் பார்க்க; see *alagu-kuttu-*.

**அலகுமாரகம்** *alagu-māragam*, பெ. (n.) பூனைப் புல்; a kind of grass (சா.அக.).

**அலகுமாறு** *alagu-māṟu*, பெ. (n.) விளக்குமாறு; broom.

**அலகுமூலம்** *alagu-mūlam*, பெ.(n.) விலாமிச்சை வேர்; khuskhus root, *Andropogon aromaticus*.

**அலகுவிரல்** *alagu-viral*, பெ. (n.) பனங்கதிர் (நெல்லை); spathe of the male palmyra (Tn.).

[அலகு = ஆண்பனை. விரல் = விரல் போன்ற வுறுப்பு.]

**அலகுவிறைப்பு** *alagu-viṟaippu*, பெ. (n.) குளிர் மிகுதியினால் தாடை கிட்டுகை; spasmodic rigidity of the under-jaw due to excessive cold, lock-jaw.

அலகு[3] பார்க்க; see *alagu*[3].

[விறத்தல் = செறிதல், இறுகுதல். விற → விறை. விறைத்தல் = குளிரால் மரத்துப் போதல்.]

**அலகை**[1] *alagai*, பெ. (n.) 1. பேய்; devil, evil spirit, demon. "வையத் தலகையா வைக்கப் படும்" (குறள், 850). ம. அலக. 2. பேய்க் கொம்மட்டி (மலை.); colocynth, *Cucumis colocynthis*. 3. காட்டுக் கற்றாழை (வின்.); century plant, m. sh., *Agave americana* (செ.அக.) — **ஆனைக் கற்றாழை**; wild aloe or the elephant aloe (சா.அக.). 4. தன் உடம்பின் அரத்தம் உறிஞ்சப்படுவதாக எண்ணிக்கொண்டு அதனால் உடம்புவற்றி அதனால் மனமயக்கங் கொள்ளுமாறு செய்யும் ஒரு பேய்வினை; devilry in which a person is led to an insane belief that some one sucks his blood and thereby gets himself reduced in body and confused in mind (சா.அக.).

[அல் = இருள், கருநிறம். "அல்லார்ந்த மேனி" (தாயு.தேசோ. 9). அல் → அலகை = கருநிறமான பேய். ஒ.நோ: இருள் = இருட்டு, பேய். இந்த வழியே இளம்பெண் தனியாகச் சென்றால் இருளடிக்கும் (உ.வ.). கசப்பான அல்லது உடம்பிற்குத் தீங்கு விளைக்கும் நிலைத் திணை (தாவர) வகைப் பெயர்கள், 'பேய்' என்னும் அடைமொழி கொள்வது இயல்பு. 'அலகை' யென்னுஞ் சொல் அடைமொழியாகாது பெயராகவே வழங்குவது உவமையாகு பெயராகும்.]

**அலகை**[2] *alagai*, பெ. (n.) அளவு, அளவை; standard. "அலகை சான்ற வுலக புராணமும்" (பெருங். உஞ்சைக். 32 : 2).

[அலகு = அளவு. அலகு → அலகை.]

**அலகை**[3] *alagai*, பெ. (n.) துளசி; sacred basil, *Ocimum sanctum* (சா.அக.).

[அலங்கல் = துளசி. ஒருகா. அலங்கை → அலகை.]

**அலகைக்கொடியாள்** *alagai-k-koḍiyāḷ*, பெ. (n.) காளி (பிங்.); *Kāḷi*, having the figure of a devil on her banner.

[அலகை = பேய். அலகைக்கொடியாள் = பேயுருவைச் சின்னமாகக் கொண்ட கொடியை யுடையாள். 'ஆள்' பெ.பா. ஈறு.]

**அலகைச்சுரம்** *alagai-c-curam*, பெ. (n.) கீழ்க்காய் நெல்லி (மூ.அ.); species of phyllanthus (செ.அக.) — feather foil, *Phyllanthus polyphyllus* (சா.அக.).

[ஒருகா. அலக்கைச்சுரம் → அலகைச்சுரம்.]

அலக்கைச்சுரம் பார்க்க; see *alakkai-c-curam*.

**அலகைத்தேர்** *alagai-t-tēr*, பெ. (n.) கடுங் கோடை நண்பகல் நேரத்திற் சற்றுத் தொலை வில் ஆறு ஓடுவதுபோல் தோன்றும் பொய்த் தோற்றம், கானல்நீர் என்னும் பேய்த்தேர்; optical illusion, esp. illusive appearance of sheet of water in desert, at noon during hot summer, mirage, lit. the devil's car. "அலகைத் தேரும்" (கல்லா. வேழமுக.).

[தில் → திர் (திரி) → தேர்.]

அலகை[1], தேர் பார்க்க; see *alagai*[1], *tēr*.

**அலகைப்புடல்** *alagai-p-puḍal*, பெ. (n.) பேய்ப் புடல்; bitter snake-gourd, *Tricosanthes laciniosa* (சா.அக.).

**அலகைமலடு** *alagi-malaḍu*, பெ. (n.) 1. பேய் மலடு (சா.அக.); barrenness or sterility due to hysteria. 2. பேய்வினையாற் கருவற்று மலடா தல்; the state of barrenness in a woman suffering from demonomania.

[ஒருகா. மல் + அறு – மலறு → மலடு. மல் = வளம், கருவளம். ஒ.நோ: செவி + அறு – செவியறு → செவிறு → செவிடு. செவி யறை = செவிடு.]

**அலகைமுலையுண்டோன்** *alagai-mulai-y-uṇḍōṉ*, பெ. (n.) திருமால் (பிங்.); *Tirumāl* (Viṣṇu), who as Kriṣṇa sucked to death a demoness who tried to suckle him to death with poisonous milk.

[அலகை = பேய், பூதம். திருமாலின் தோற் றரவான (அவதாரமான) கண்ணபிரான், தன் குழவிப் பருவத்தில் தன்னை நச்சுமுலைப்பா லூட்டிக் கொல்ல வந்த பூதனை யென்னும் அரக்கியை, ஒட்டவுறிஞ்சிக் கொன்றானென்பது பாகவதக் கதை.

அரக்கரையும் ஒருவகைப் பேயினமாகக் கொள்வது தொன்ம (புராண) மரபு. முல் → முலை = முன் தள்ளும் அல்லது தழுவும் உறுப்பு. உண் → உண்டவன் (உண்ட+அவன்) → உண் டான் → உண்டோன்.]

**அலங்கங்கணம்** *alaṅgaṅgaṇam*, பெ. (n.) வாலுளுவை; spindle tree, *Gymnosporia montana* alias *Celestrus paniculata* (சா.அக.).

**அலங்கடை** *alaṅgaḍai*, கு.வி.எ. (adv.) **அல்லா விடத்து**; in places other than, except in the case of. ''சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே'' (தொல். எழுத்து. நூன். 1).

*[அல் = அல்லாத. 'அம்' இன்னோசைச் சாரியை. கடை = இடம்.]*

**அலங்கம்**[1] *alaṅgam*, பெ. (n.) *1.* **கோட்டை மதில்மேலுள்ள அகன்ற நடை**; broad-topped and usu. stone-parapeted walk on top of a defensive wall. *2.* **கொத்தளம்**; bastion, defensive erection on the top of a rampart. *3.* **மதிலின் ஒருறுப்பு**; part of a rampart. *4.* **அரண்**; defence, rampart, bulwark. ''தெண் டிரை யலங்கத்துப் புக்குலவி'' (திருப்பு. 459).

*[அல் = மதில். அல் → அலகம் → அலங்கம். இனி, அலகு (அகலம்) → அலங்கு → அலங்கம் என்றுமாம்.]*

**அலங்கம்**[2] *alaṅgam*, பெ. (n.) **திகைப்பூச்சி**; an insect, the contact of which is said to cause perplexity of mind (சா.அக.).

*[அலங்குதல் = மனந்தத்தளித்தல். அலங்கு → அலங்கம்.]*

**அலங்கமலங்க** *alaṅga-malaṅga*, கு.வி.எ. (adv.) **மனமயங்க, பொறிகலங்க**; to bewilder. அவனை அலங்கமலங்கத் தள்ளினான் (வின்.).

*[அலங்குதல் = மனந்தத்தளித்தல். மலங்குதல் = மனமயங்குதல். 'அலங்க', 'மலங்க' நி.கா.வி.எ. 'அலங்கமலங்க' பொருளை மிகுத்துக் காட்டும் எதுகை மரபிணைமொழி.]*

**அலங்கல்**[1] *alaṅgal*, பெ. (n.) *1.* **அசைதல்**; shaking, moving. *2.* **அசையுங்கதிர்** (அகநா. 13, உரை); waving ear of corn. *3.* **பூமாலை** (பிங்.); wreath, garland. ''நறைவிரி யலங்கன் மார்பிற் றிளைத்தலின்'' (நைடத. அன்னத் தைக்கண். 17). *4.* **மயிர்ச்சூட்டு மாலை** (பிங்.); wreath for the hair. *5.* **ஒழுங்கு** (குருபரம். ஆறா. 121); arrangement, order, regularity. *6.* **தாழை**; screw pine, *Pandanus odoratissimus*. *7.* **துளசி** (பச்.மூ.); sacred basil, *Ocimum sanctum*. *8.* **தளிர்**; sprout.

*[அல் → அலை → அசை. அல் → அலு → அலுங்கு → அனுங்கு. அலுத்தல் = அசைதல், களைத்தல். அலுங்கு → அலங்கு. அலங்குதல் = அசைதல். அலங்கு → அலங்கல் = அசைதல், அசையும் பொருள், இளமென்பொருள், அசையும் மாலை, மாலையொழுங்கு, மாலைப்பூ.]*

**அலங்கல்**[2] *alaṅgal*, பெ. (n.) **ஒளி** (ஈடு, 10.1:2); light.

*[இலகு → இலங்கு → அலங்கு → அலங்கல். இலகுதல் = விளங்குதல். இலங்குதல் = விளங்குதல், திகழ்தல்.]*

**அலங்கலம்** *alaṅgalam*, பெ. (n.) **அசைகை** (சிந்தா. நி. 296); movement.

*[அல் → அலு → அலுங்கு → அலங்கு → அலங்கல் → அலங்கலம்.]*

**அலங்கழித்தொழில்** *alaṅgaḻi-t-toḻil*, பெ. (n.) **அலவலைத்தொழில், தீங்கு அல்லது கொடுமை செய்தல்**; acts of wickedness or oppression. ''அறவிய மனத்தினை யாகி யலங்கழித் தொழிலொழிந் தடங்கி'' (நீலகேசி, 74).

*[அல்லுதல் = பொருந்துதல், மனம்பொருந்துதல், அன்புசெய்தல். அல் + பு – அன்பு. அல் + அம் – அலம் = அன்பு. அலம் + கழி – அலங்கழி = அன்புநீக்கம். அலங்கழித்தொழில் = அன்பு நீங்கிய செயல், கொடுஞ்செயல்.]*

**அலங்கன்** *alaṅgaṉ*, பெ. (n.) *1.* **கோட்டை மதில்**; fort-wall, rampart, bulwark. *2.* **கொத்தளம்**; bastion.

க. அலங்க

*[அலங்கம் → அலங்கன். ம் → ன், இறுதிப் போலி.]*

**அலங்கம்** பார்க்க; see *alaṅgam*.

**அலங்கனாரி** *alaṅgaṉāri*, பெ. (n.) **முத்துச்சிப்பி**; pearl-oyster.

*[அலங்கல் = ஒளி. நாரி = பெண். அலங்கம் = ஒளி. அலங்கன் = ஒளியுள்ள முத்து. அலங்கன் ஆரி = முத்துப் பொருந்திய சிப்பி என்றுமாம். ஆர்தல் = பொருந்துதல். 'இ' வி.முத. ஈறு.]*

'அலங்கனாரு' என்பது சா.அக. பாடம்.

**அலங்கிதம்** *alaṅgidam*, பெ. (n.) **கருவண்டு**; black beetle (சா.அக.).

**அலங்கிதன்** *alaṅgidaṉ*, பெ. (n.) **அரிதாரம்** (வை.மூ.); yellow orpiment.

*[அலங்குதல் = விளங்குதல். அலங்கு → அலங்கிதம் → அலங்கிதன்.]*

**அலங்கு**[1]**-தல்** *alaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* **அசைதல்**; to shake, move, swing, dangle. ''அலங்குளைப் புரவி'' (புறநா. 2 : 13). *2.* **மனந்தத்தளித்தல்** (வின்.); to be agitated in mind, troubled. *3.* **இரங்குதல்** (பிங்.); to pity, sympathise.

ம. அலங்நு; க., தெ. அலகு; து. அலங்கு.

[அல் → அலு → அலுங்கு → அலங்கு. மனங் கலங்குதலும் இரங்குதலும் மன அசைவாகும்.]

**அலங்கு²-தல்** *alaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) **ஒளி செய்தல்** (பிங்.); to shine, glitter, flash. "மறையருளா லடைந்தலங்கு முத்தியில்" (சூத. முத். 8 : 84).

[இலகு → இலங்கு → அலங்கு. இலங்குதல் = ஒளிவிடுதல், விளங்குதல்.]

**அலங்கை** *alaṅgai*, பெ. (n.) **துளசி** (மலை.); sacred basil.

[அலங்கல் = துளசி. அலகை = துளசி. அலங்கு → அலங்கல். அலங்கு → அலங்கை → அலகை.]


அலங்கை

**அலங்கோலம்** *alaṅgōlam*, பெ. (n.) 1. **தோற்றக்கேடு**; disorder, slovenliness, confusion in dress, want of comeliness in appearance, esp. in time of danger or disaster. 2. **வேலை, தொழிற்சாலை, போக்குவரத்து முதலியவற்றின் சீர்கேடு**; disorder, dislocation or derangement of business, plans, public department, traffic, etc., as a result of accident, insurgence or natural calamity.

ம. அலங்கோலம்; க. அல்லோலகல்லோல; தெ. அல்லகல்லோலமு; பட. அலங்கோல.

[அல் → அலம் = துன்பம். கோல் → கோலம் = தோற்றம். அல் → அல்லல் = துன்பம். கோலுதல் = கொள்ளுதல், மேற்கொள்ளுதல், கோலம்பூணுதல்.]

**அலங்கோலை** *alaṅgōlai*, பெ. (n.) **அலங்கோலம்** பார்க்க; see *alaṅgōlam* (புதுவை).

[அலங்கோலம் → அலங்கோலை.]

**அலசகம்** *alaśagam*, பெ. (n.) **சோம்பு** (பரி. அக.); common anise.

**அலசடி** *alaśaḍi*, பெ. (n.) 1. **அலைச்சல்**; wandering. 2. **தொல்லை**; trouble. அலம் பலு மலசடியும் பட்டேன் (வின்.).

**அலைசடி** பார்க்க; see *alaiśaḍi*.

க., து. அலசிகெ; தெ. அலசடி.

[அலைசடி → அலசடி.]

**அலசந்தி** *alaśandi*, பெ. (n.) **பெரும்பயறு** (நாமதீப.); chowlibean.

க. அலசந்தி; தெ. அலச்சந்த.

**அலசம்** *alaśam*, பெ. (n.) **கால்விரல்களுக்கு இடையே யுண்டாகும் சேற்றுப்புண்** (நா நார்த்த.); ground itch, an ulcer caused by the contact of poisonous mire and appearing between the toes (சா.அக.).

**Skt.** alasa

**அலசல்¹** *alaśal*, பெ. (n.) 1. **அலசு-தல்** பார்க்க; see *alaśu-*. 2. **இழை விலகியிருக்கை**; being thinly woven. 3. **இழை நெருக்கமில்லாத ஆடை** (வின்.); cloth thinly woven. 4. **சிதறுண்ட பொருள்** (வின்.); things scattered or carelessly thrown away. 5. **உருப்படாத வேலை** (வின்.); shoddy work, business which does not succeed.

[அல் → அலை → அலைசு → அலசு.]

**அலசி** *alaśi*, பெ. (n.) **பாறைகளிலும் கப்பலடியிலும் ஒட்டிக்கொண்டிருக்கும் நத்தைவகை**; mussel, a species of bivalvular shellfish that adheres to the keel of ships.

இஃது உணவாகவும் தூண்டிலிரையாகவும் பயன்படும் (சா.அக.).

[ஒருகா. அலைசு → அலைசி → அலசி = அலையினால் அலசப்படும் கூடுள்ளது.]

**அலசிவிதை** *alaśi-vidai*, பெ. (n.) 1. **ஆழிவிதை** (சா.அக.); linseed. 2. **அகத்திவிதை**; seed of sesbania (சா.அக.).

**அலசு-தல்** *alaśu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அசைதல்**; to shake, be agitated. "இறுநுசுப் பலசவெறுநிலஞ் சேர்ந்தாங்கு" (மணிமே. 9 : 7). 2. **உடம்பு அல்லது உளம் வருந்துதல்**; to suffer, to be afflicted. "திருவுடம் பலச நோற்கின்றான்" (கம்பரா. ஆரணிய. சூர்ப்ப. 18). ம. அலசுக. 3. **சோர்தல்** (சிலப். 16 : 197, அரும்.); to be exhausted, to become weary. —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அசைத்து அல்லது கசக்கிக் கழுவுதல்**; to rinse, as soaked cloth. ஊறவைத்த வேட்டியை அலசு (உ.வ.). 2. **வெட்கும்படி பலபடப் பேசுதல், ஒருவர் கூற்றைத் திறம்பட மறுத்தல்**; to scold, snub,

to refute forcibly. அவனை நன்றாய் அலசி விட்டான் (உ.வ.). 3. **ஆராய்தல்**; to analyse, examine minutely. அக் குற்றச்சாட்டை நன்றாய் அலசிப் பார்த்தபோது, அது கட்டுச் செய்தியென்று தெரிந்தது.

க., தெ., து. அலசு.

[அல் → அலை → அலைசு → அலசு.]

**அலசு** *alašu*, தொ.பெ. (vbl.n.) 1. **அலசிக் கழுவுகை**; to rinse. இந்தத் துணியை ஓர் அலசு அலசு. 2. **உடம்பு வருந்தல்**; physical suffering. "ஐதின்மேனி யலசுற யான்றவஞ் செய்தது" (கந்தபு. அசுர. மாயைப். 71). 3. **துயரம்** (சம். அக. கை.); sorrow, grief.

க. அலசு; தெ. அலகுவ.

அலசு-தல் பார்க்க; see *alašu-*.

**அலட்டி**[1] *alatti*, பெ. (n.) 1. **அலப்பி, வீண்பேச்சாளி**; chatterbox. 2. **அரட்டி**; bully, blusterer.

ம. அலப்பன்

[அலறு → அலற்று → அலட்டு → அலட்டி. 'இ' வி.முத. ஈறு.]

**அலட்டி**[2] *alatti*, பெ. (n.) 1. **நோய்நிலையில் அடிக்கடி புரண்டு தன் உடம்பை வருத்திக் கொள்பவன்**; one who tosses about or restlessly turns this side and that side in bed during illness. 2. பிறரை **அலைக்கழித்து** வருத்து பவன்; one who troubles another by causing him to move about restlessly.

**அலட்டு**[1]**-தல்** *alattu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **வீண்பேச்சுப் பேசுதல்**; to talk vainly or incessantly. 2. **பிதற்றுதல்**; to talk foolishly or incoherently. —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அரட்டுதல்**; to bully, bluster. 2. **தொல்லைப் படுத்துதல்**; to tease, annoy, pester.

ம. அலட்டுக; Skt. lapita.

[அலறு → அலற்று → அலட்டு.]

**அலட்டு**[2]**-தல்** *alattu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. (நோயாளி) **ஓயாது உடம்பை அசைத்துத் தன்னை வருத்திக்கொள்ளுதல்**; to trouble oneself by constantly changing posture, esp. as a sick person in bed. உடம்பை வீணாய் அலட்டிக்கொள்ளாதே. 2. **அலைக்கழித்தல்**; to trouble and cause restlessness in another person.

ம. அலட்டல்; தெ. அலன்சுட.

**அலட்டு**[1] *alattu*, பெ. (n.) 1. **வீண்பேச்சு**; chatter. 2. **அரட்டு**; boisterous talk. 3. **பிதற்றல்**; raving, incoherent talk, delirium. 4. **தொந்தரவு**; teasing, trouble, annoyance, importunity. "ஒருவன் கூறும் வாக்கியத் தலட்டுக் கீதல்" (மச்சபு. பத்தி. 22).

[அலறு → அலற்று → அலட்டு.]

**அலட்டு**[2] *alattu*, பெ. (n.) **அலைக்கழிப்பு**; troubling one and causing restlessness in him (சா.அக.).

**அலட்டுச்சன்னி** *alattu-c-canni*, பெ. (n.) **பிதற்றுங் குணஞ்செய்யும் இசிவுநோய்**; delirium.

[அலட்டு + Skt. sanni. Skt. sanni-pāta > த. சன்னி.]

அலட்டு[1] பார்க்க; see *alattu*[1].

இதை முழுத்தமிழில் '**அலட்டிசிவு**' என்று சொல்லுதல் வேண்டும்.

**அலட்டுச்சனி** *alattu-c-cani*, பெ. (n.) 1. **வக்கிரக் காரி**; malignant saturn. 2. **அரட்டித் தொந் தரவு செய்பவன்** (இராட்.); one who is boisterous and troublesome.

[அலட்டு + Skt. šani.]

அலட்டு[1] பார்க்க; see *alattu*[1].

இதை முழுத்தமிழில் 'அலட்டுக்காரி' என்று சொல்லுதல் வேண்டும்.

**அலத்தகம்** *alattagam*, பெ. (n.) 1. **செம்பஞ்சுப் பூண்டு**; red-cotton shrub or West Indian cotton, *Gossypium barbadense* (*acuminatum*) (சா.அக.). 2. **செம்பஞ்சுக் குழம்பு**; red lac used by women for dyeing their feet, lips, etc. "அந்நலார்த மலத்தக மலர்த்தா ணீவி" (நைடத. நாட்டு. 26).

"அம்மல ரடியுங் கையு
மணிகிளர் பவள வாயுஞ்
செம்மலர் நுதலு நாவுந்
திருந்தொளி யுகிரோ டங்கேழ்
விம்மிதப் பட்டு வீழ
வலத்தக மெழுதி விட்டா
ளம்மலர்க் கண்ட முள்ளிட்
டரிவையைத் தெரிவை தானே"
(சீவக. 2446).

3. **செம்பருத்தி** (பச்.மூ.); Bengal cotton, *Gossypium arboreum* (சா.அக.).

## அல்லி



அலர்



மலர்



அலசி



ஆற்றலரி



செவ்வலரி



வெள்ளலரி

ம., க. அலக்த; தெ. அலக்தமு.

[அலத்தகம் > **Skt.** alaktaka. உல் → எல் → எர் → எரி = நெருப்பு, சிவப்பு. உல் → அல் → அன் → அனல் = நெருப்பு. அல் → அலத்து → அலத்தி = மின்மினி. அலத்து → அலத்தம் = செம்பருத்தி. அலத்தம் → அலத்தகம் = செம் பஞ்சு.]

'அலத்தகம்' என்னுந் தென்சொல்லே வடமொழியில் 'அலக்தக' என்று திரிக்கப் பட்டுள்ளது.

**அலத்தம்**[1] பார்க்க; see *alattam*[1].

**அலத்தம்**[1] *alattam*, பெ. (n.) **செம்பருத்தி** (மலை.); Bengal cotton, *Gossypium arboreum* (சா.அக.).

[அலத்தம் > **Skt.** alakta.]

**அலத்தகம்** பார்க்க; see *alattagam*.

வடமொழியில் அ-லக்த, அ-லக்தக என்று முன்னொட்டுஞ் சொல்லுமாகப் பிரிப்பர். அது அவற்றை வடசொல்லாகக் காட்டுதற்குக் கையாளும் வழி. த்த என்னும் உடனிலை மெய்ம்மயக்கம் க்த என்னும் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாக மாறுவது வடமொழி மரபு.

ஒ.நோ : அரத்தம் > **Skt.** rakta, முத்தம் > **Skt.** mukta.

**அலத்தம்**[2] *alattam*, பெ. (n.) *1.* **செம்பருத்திப் பூண்டு** (க.அக.); Bengal cotton, *Gossypium arboreum*. *2.* **செம்பஞ்சுக்குழம்பு**; red lac used by ladies for dyeing their feet, lips, etc. (சா.அக.).

ம., க. அலக்த; தெ. அலக்தமு.

[அலத்தம் > **Skt.** alakta.]

**அலத்தம்**[1] பார்க்க; see *alattam*[1].

**அலத்தம்**[3] *alattam*, பெ. (n.) **பொழுதுவணங்கி (சூரியகாந்தி)** (மஞ்சிக. நி.); sunflower.

**அலத்தி**[1] *alatti*, பெ. (n.) **மின்மினி** (சது.); fire-fly, glow-worm.

[உல் → உல. உலத்தல் = காய்தல். உல் → உலை = நெருப்படுப்பு. உல் → எல் = ஒளி. உல் → அல் → அன் → அனல். அல் → அல → அலத்து → அலத்தி = ஒளிவிடுவது.]

**அலத்தி**[2] *alatti*, பெ. (n.) **நுளம்பு** (க.அக.); gnat.

[உல் → உலம் → உலங்கு. உல் → அல் → அல → அலவு → அலகு = கூர்மை. அல் → அலம் → அலத்தி = கூரிய உறிஞ்சியுள்ளது.]

**அலத்திடுசன்னி** *alattiḍu-šaṉṉi*, பெ. (n.) **அதிகத் துன்பத்தை யுண்டாக்கும் ஒருவகை இசிவு**; a kind of delirium giving rise to much suffering to the patient (சா.அக.).

[அலத்திடு + **Skt.** sanni. அலம் = துன்பம். அலத்திடுதல் (அலத்து + இடுதல்) = துன்பத்தில் வைத்தல். **Skt.** sanni-pāta > த. சன்னி = இசிவு.]

'அலத்திடும் இசிவு' என்பது முழுத்தமிழ்.

**அலத்து** *alattu*, பெ. (n.) **உமுரி**; a kind of herb with a saline taste, growing on sandy soils, glass-wort, *Salicornia herbaco* (சா.அக.).

**அலத்துருஞ்சூலி** *alatturuñ-c-cūli*, பெ. (n.) **பெருஞ்சூலி, ஒரு நிலத்திணைவகை**; bridal-conch plant, *Hymenodictyon excelsum* (சா. அக.).

**அலத்தை** *alattai*, பெ. (n.) **செம்பஞ்சு** (அக.நி.); cotton coloured with lac-dye.

[உல் → எல் → எர் → எரி = நெருப்பு, சிவப்பு. உல் → அல் → அல → அலத்து → அலத்தை = சிவந்தது.]

**அலத்தகம்** பார்க்க; see *alattagam*.

**அலதிகுலதி** *aladi-kuladi*, பெ. (n.) **அலங்கோலம்**; disorder, confusion. "விழுந்தன ரலதி குலதியொ டேழ்கலிங்கரே" (கலிங். போர். 47).

ம. அலதி

[அலைதிகுலைதி → அலதிகுலதி. அலை + தி (தொ.பெ. ஈறு) – அலைதி. குலை + தி (தொ. பெ. ஈறு) – குலைதி.]

**அலைதிகுலைதி** பார்க்க; see *alaidi-kulaidi*.

**அலந்தம்** *alandam*, பெ. (n.) **கடுக்காய்**; ink-nut, *Terminalia chebula*.

**அலந்தல்** *alandal*, பெ. (n.) *1.* **மயிலடிக் குருந்து**; false peacock's foot tree, *Neburia linearis*. *2.* **செங்கத்தரி** (மலை.); orbicular-leaved caper shrub.

[உல் → எல் → எர் → எரி = நெருப்பு, சிவப்பு. உல் → அல் → அலத்து → அலந்து → அலந்தல் = சிவந்தது.]

**அலத்தகம்** பார்க்க; see *alattagam*.

**அலந்தலி** *alandali*, பெ. (n.) **செங்கத்தரி** (பச். மூ.); orbicular-leaved caper shrub.

**அலந்தல்** 2 பார்க்க; see **alandal** 2.

**அலந்தலை** *alandalai*, பெ. (n.) 1. **மயக்கம்**; giddiness (சா.அக.). "அலந்தலை யுற்ற வரும்புலன்க ளைந்தும்" (கம்பரா. அயோத். கைகேயிசூழ். 17). 2. **கலக்கம்**; confusion. "இவள்பேச்சு மலந்தலையாய்" (திவ். பெரி யாழ். 3.7:1). 3. **துன்பம்**; distress, vexation, affliction. "அலந்தலைப் பட்ட சிந்தைய னாகி" (உபதேச. சனகாதி. 23).

ம. அலமாறு; க. அலவு; தெ. அலந்துரு.

*[அலம் + தலை. அலம்வரல் → அலமரல் = சுழலுதல், தலைசுற்றுதல், மனஞ்சுழலுதல், மயங்குதல், கலங்குதல், துன்புறுதல். அலம் = சுழற்சி, மயக்கம், கலக்கம், துன்பம். 'தலை' ஓர் ஈறு.]*

**அலந்தலைமை** *alandalaimai*, பெ. (n.) **தொல்லை, தொந்தரவு**; worry, trouble, annoyance. "அலந்தலைமை செய்துழலு மையன்" (திவ். பெரியதி. 4.4:3).

*[அலந்தலை → அலந்தலைமை. 'மை' பண். பெ. ஈறு.]*

**அலந்தலை** பார்க்க; see *alandalai*.

**அலந்தார்** *alandār*, பெ. (n.) 1. **துன்பமுற்றோர்**; those who suffered, the afflicted, the distressed, those in agony. "அலந்தாரை யல்லனோய் செய்தற்றால்" (குறள், 1303). 2. **வறுமையுற் றோர்**; the poor, the destitute. "அலந்தார்க் கொன்றீந்த புகழும்" (திரிகடு. 41).

*[அலத்தல் = துன்புறுதல். அல → அலந்தார் (ப.பா. படர்க்கை இ.கா. வினையா. பெ.]*

**அலந்தாரி** *alandāri*, பெ. (n.) **எழுத்தாணிப் பூண்டு**; style-plant or sarment lettuce, *Launea pinnatifida* (சா.அக.).

**அலந்தை**[1] *alandai*, பெ. (n.) **துன்பம்** (சது.); trouble, distress, affliction.

தெ. அலன்த; து. அலுபங்க.

*[அலம் = துன்பம். அலம் → அலந்து → அலந்தை.]*

**அலந்தை**[2] *alandai*, பெ. (n.) **நீர்நிலை, குளம்**; tank, pond. "இருடீர் மலயமுனி யலந்தை" (சேதுபு. சேதுவந்த. 44).

*[ஒருகா. அலை → அலந்தை = அலைவீசும் பெருங்குளம்.]*

**அலந்தோர்** *alandōr*, பெ. (n.) **அலந்தார்** பார்க்க; see *alandār*. "அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்" (திருமுரு. 271).

*[அலந்தார் → அலந்தோர்.]*

**அலப்பம்** *alappam*, பெ. (n.) **உடற்பித்து** (அங்கப்பிச்சு); bile in the system (சா.அக.).

**அலப்பல்** *alappal*, பெ. (n.) 1. **வீண்பேச்சு**; idle talk, gossip. 2. **பிதற்றல்**; talking nonsense. 3. **கலவையோசை** (பிங்.); confused noise of many sounds.

ம. அலப்பு

*[அலப்பு → அலப்பல்.]*

**அலப்பறை** *alappaṟai*, பெ. (n.) 1. **வீண்பேச் சாளி**; blabber, gossip, vain talker. 2. **இரப் போன் (பிச்சைக்காரன்)** (நெல்லை); beggar (Tn.).

ம. அலப்பற

*[அலப்பு + அறை. அலப்புதல் = வீண் பேச்சுப் பேசுதல். அலப்பு = வீண்பேச்சு. அறைதல் = உரத்துச் சொல்லுதல், சொல்லுதல், பேசுதல். அறை = உரத்துச் சொல்பவன், பேசு பவன் (ஆகு).]*

**அலப்பன்** *alappaṉ*, பெ.(n.) **வீண்பேச்சுக்காரன்**; chatterer, gossip, prattler.

ம. அலப்பன்

*[அலப்பு → அலப்பன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அலப்பாட்டு-தல்** *alappāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **மனஞ்சுழலுதல், மயங்குதல்**; to become confused. "பேதைக ளுரைப்பன வேசொல்லிப் பெரிதலப் பாட்டினைநீ" (நீலகேசி, 448).

*[அலப்பு + ஆட்டு. அலத்தல் = சுழலுதல். அல → அலப்பு. 'ஆடு' து.வி. (த.வி.) → ஆட்டு (பி.வி.). இங்குப் பிறவினை தன்வினையாய் ஆளப்பட்டது.]*

**அலப்பாரி-த்தல்** *alappāri-*, 4 செ.கு.வி. (v.i.) **வீண்பேச்சுப் பேசி ஆரவாரித்தல்** (இ.வ.); to shout empty words (Loc.).

*[அலப்பு + ஆரி. ஆரித்தல் = ஆரவாரஞ் செய்தல். ஆர் → ஆரி.]*

**அலப்பு-தல்** *alappu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **வீண் பேச்சுப் பேசுதல்**; to chatter, prattle, gossip, talk in vain. 2. **பிதற்றுதல்**; to talk nonsense, to talk incoherently. "அலப்பிய தக்கன்

பெருவேள்வி'' (தேவா. 5.73 : 1). —, 5 செ. குன்றாவி. (v.t.) **அலைத்தல், வருத்துதல்**; to harass, vex, annoy, afflict. ''அமர்க்கண் மகளி ரலப்பிய வந்நோய்'' (கலித். 75 : 7).

ம. அலப்பு

*[அலம்பு (த.வி.) → அலப்பு (பி.வி.). அலப்பு தல் = நாவசைத்தல், பேசுதல், அசைத்து வருத்துதல்.]*

**அலப்பு** *alappu*, பெ. (n.) **மனக்கலக்கம்**; confusion of mind. ''அலப்பா யாகா சத்தை நோக்கி'' (திவ். திருவாய். 5. 8 : 4).

க. அலபு

*[அலத்தல் = சுழலுதல், துன்புறுதல். அல → அலப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அலப்புணி** *alappuṇi*, பெ. (n.) **வீண்பேச்சுப் பேசுபவ-ன்-ள்** (இ.வ.); gossip, chatterer (Loc.).

*[அலப்பு + உண்ணி. 'உண்' து.வி. ஒ.நோ: நோயுண்ணுதல் = நோய்கொள்ளுதல். உண்ணு தல் = கொள்ளுதல். உண்ணி = கொள்ளி. 'இ' வி.முத. ஈறு.]*

**அலம்**[1] *alam*, பெ. (n.) 1. **சுழற்சி**; whirling, spinning around. 2. **மனச்சுழற்சி**; confusion, perturbation. '' சித்த மலமில்லை '' (சி.சி. சுபக். 8 : 32). 3. **துன்பம்**; distress, affliction, pain, misery. ''அலமகன் முத்தி யுண்டாம்'' (சூத. எக்கிய. பூ. 2 : 8).

தெ. அலமு

*[உலம் = சுற்று, சுழற்சி. உலம் → அலம்.]*

**அலம்**[2] *alam*, பெ. (n.) 1. **தேட்கொடுக்கு** (நாநார்த்த.); scorpion's sting. 2. **தேள்** (திவா.); scorpion, as having a sting. 3. **நளி யோரை (விருச்சிகராசி)**; scorpio of the zodiac.

ம. அலம்; க. அல; தெ. அலமு.

*[அலம் → **Skt**. ala. உலம் = வளைவு. உலம் → அலம் = வளைந்த கொடுக்கு, கொடுக் குள்ளது, கொடுக்குள்ள தேள்போன்ற வடிவினது. இதன் வேரும் முந்தியதன் வேரும் ஒன்றே.]*

**அலம்**[3] *alam*, பெ. (n.) 1. **நறும்பிசின்;** a kind of incense, *Olibanum* (சா.அக.). 2. **பொன்னரி தாரம்**; yellow orpiment or sulphuret of arsenic.

ம. அலம்; க. அல.

*[ஒருகா. அல் → அலம். அல்லுதல் = பொருந்துதல், ஒட்டுதல்.]*

**அலம்**[4] *alam*, பெ. (n.) **இஞ்சி**; ginger.

க. அல்ல; தெ. அல்லமு.

*[அல்லம் → அலம்.]*

**அலம்**[5] *alam*, பெ. (n.) **சோற்றுப்பு**; table salt (சா.அக.).

*[அளம் = உப்பு. அளம் → அலம்.]*

**அலம்பல்**[1] *alambal*, பெ. (n.) 1. **ஆரவாரம்** (பிங்.); loud noise. 2. *பலர்வாய்ப் படல்*; unfortunate publicity. உன் பெயர் அலம்ப லாயிற்று (இ.வ.). 3. **வீண்பேச்சு**; gossip, vain talk. 4. **முயற்சி, மெய்வருத்தம்;** effort, pains. 5. **தொந்தரவு;** vexation, trouble. அலம்பலும் அலசடியும் பட்டேன் (வின்.). 6. **கொள்ளை நோய்** (இ.வ.); epidemic (Loc.). 7. **அலம்பு-**[1] **தல்** பார்க்க; see *alambu*[1]-.

ம. அலம்பல்; தெ. அலமு; து. அலுபங்க.

*[அல் → அல → அலம்பு → அலம்பல் = அசைத் தல், அசைத்து ஒலித்தல், வருந்துதல்.]*

**அலம்பல்**[2] *alambal*, பெ. (n.) **அலக்குத்தடி** (யாழ்ப்.); small branches or boughs used in the construction and repair of hedges (J.).

*[ஒருகா. அலம் → அலம்பு → அலம்பல் = வளைந்த குச்சி அல்லது கிளை.]*

**அலம்பல்மரம்** *alambal-maram*, பெ. (n.) **வெடங் குறுணி, மலையாளத்தில் விளையும் மணமுள்ள வெண்பூ மரம்**; savathi tree, collar-bone tree, walking stick bignonia, *Stercospermum xylocarpum* (சா.அக.).

**அலம்பி** *alambi*, பெ. (n.) **உடம்பிலோடும் பது (தச) நாடிகளு ளொன்றாகிய, நாவிலோடும் நாடி**; one of the ten arteries, existing or operating in the tongue, *Lingual artery* (சா.அக.).

**அலம்பு**[1]**-தல்** *alambu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **ஒலித்தல்;** to sound, tinkle, murmur, as a brook. 2. **ஆரவாரித்தல்**; to make loud noise. '' மாட லம்பின மாமணித் தேர்மணி பாட லம்பின பாய்மத யானையே'' (கம்பரா. யுத்த. முதற்போர். 17). 3. **அலைதல்**; to wander, fluctuate. ''வண்டலம்புஞ் சோலை'' (திவ். திருவாய். 2. 8 : 11). 4. **ததும்புதல்** (வின்.); to move, dance or wabble, as water in a vessel

which is not full. 5. *தவறுதல்* (வின்.); to swerve from a proper line of conduct. —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *அலைத்தல்*; to cause to wander on account of panic. "அலம்பா வெருட்டாக் கொன்று திரியு மரக் கரை" (திவ். பெரியாழ். 4. 2 : 1). 2. *கழுவுதல்*; to wash, rinse. 'வடிம்பலம்ப நின்றான்' (புறநா. 9, உரை).

ம. அலம்பு; க. அலும்பு, அலம்பு; தெ. அலமு; து. அலம்புனி.

*[அல் (அலை) → அலம்பு. அலம்புதல் = அசைதல், அசைத்தல், அசைந்து ஒலித்தல், அசைந்து வழிதல், கழுவுதல், அசைந்து விலகுதல், அலைதல், அலைத்தல்.]*

**அலம்பு²-தல்** *alambu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *கலத்தல்* (தக்கயாகப். 93, உரை); to mix.

*['அலம்புதல் = கலத்தல்; அசைதற்கும் பெயர்; வேலை வடிம்பலம்ப நின்றா னென்னுஞ் சொல்லா லுணர்க' என்று உரையாசிரியர் தேற்றமின்றிக் கூறியிருத்தலை நோக்குக. அலம் பற் சொல்லிற்குக் கலத்தற் பொருளிருப்பின், முடைதல் அல்லது பின்னற் பொருளுள்ள 'அல்' என்னுஞ் சொல்லினின்று திரித்தல் வேண்டும்.]*

**அலம்புடை** *alambuḍai*, பெ. (n.) **உடம்பிலோடும் பதுநாடிகளு ளொன்று** (சிலப். 3 : 26, உரை); a principal tubular vessel of the human body — **'அலம்புடை' மூலநிலைக்களந் (மூலாதாரம்) தொட்டுக் காதளவாய் நிற்பது**; one of the ten tuberous (tubular) vessels of the human body, extending from the anal region upto the level of the ears (சா.அக.).

**Skt.** alambuṣa

**அலம்வா(வரு)-தல்** *alam-vā-*, 18 செ.கு.வி. (v.i.) 1. *சுழலுதல்;* to whirl, spin around. 2. *மனஞ்சுழலுதல்;* to be perturbed in mind, agitated. "வெறியோ டலம்வரும் யாய்" (ஐந்திணை ஐம். 20).

*[உல் → உலம் = சுழற்சி. உலம் → அலம் + வா.]*

*வா* பார்க்க; see *vā*.

**அலமரல்** *alamaral*, பெ. (n.) 1. *சுழற்சி* (திவா.); whirling, spinning around. 2. *மனச்சுழற்சி*; confusion, perturbation. 'அலமர லாயம்' (தொல். சொல். உரி. 13, நச். உரை). 3. **துயரம்** (பிங்.); sorrow. 4. *அச்சம்* (திவா.); fear, dread.

தெ. அலமட

*[அலம்வரல் → அலமரல்.]*

**அலமரு-தல்** *alamaru-*, 18 செ.கு.வி. (v.i.) 1. *சுழலுதல்*; to whirl, spin around. "விளரி வண் டினங்க ளலமருங் கழனி" (நைடத. அன்னத்தைத்தூ. 10). 2. **மனஞ்சுழலுதல், கலங்குதல்**; to be confused, agitated, confounded, nonplussed, perturbed in mind. 'அலமர லாயம்' (தொல். சொல். உரி. 13, நச். உரை). 3. *அசைதல்;* to shake, tremble. "ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே" (மலைபடு. 119). 4. **அஞ்சுதல்** (திவா.); to be afraid. "ஐமே லுந்தி யலமந்த போதாக வஞ்சே லென் றருள்செய்வான்" (தேவா. 1 . 130 : 1). 5. **வருந்துதல், துன்புறுதல்;** to be vexed, distressed. "கொம்பரில் லாக்கொடி போலல மந்தனன்" (திருவாச. 6 : 20). 6. **இளைத்தல்** (க.அக.); to grow weary, to be fatigued, to get exhausted. "ஓடி யலமந்து" (கோயிற்பு. இரணி. 28).

க. அலெமாடு; தெ. அலமடிஞ்சுட.

*[அலம்வருதல் → அலமருதல்.]*

**அலமல-த்தல்** *alam-ala-*, 3 செ.கு.வி. (v.i.) 1. *அங்கலாய்த்தல்*; to lament, grieve, sorrow. 2. *மனங்கலங்குதல்*; to be confounded, nonplussed. 3. *பரபரப்படைதல்*; to be eager, anxious, restless.

*[அலம் = சுழற்சி, துன்பம். அலத்தல் = துன்புறுதல். அலம் + அல — அலமல (பொருள் மிகு எதுகை மரபிணைமொழி). இனி, அலம் + மல — அலமல என்றுமாம். மலத்தல் = மயங்குதல்.]*

**அலமலத்து-தல்** *alamalattu-*, 2 பி.வி. (v.caus.) **கலக்கமுறச் செய்தல், மயக்குதல்**; to confuse, confound. "ஆளைப் பகட்டி யலமலத்தி" (பஞ்ச. திருமுக. 1366).

*[அலமல (த.வி.) → அலமலத்து (பி.வி.).]*

*அலமல-த்தல்* பார்க்க; see *alamala-*.

**அலமலா-த்தல்** *alamalā-*, 4 செ.கு.வி. (v.i.) *அலமல-த்தல்* பார்க்க; see *alamala-* (க.அக.).

*[அலமல → அலமலா (உ.வ.).]*

**அலமாப்பு** *alamāppu*, பெ. (n.) **துன்பம்;** trouble, distress. "அலமாப்பினிற் பாரிவரு கூத்து" (திருப்பு. 988).

[அலம் + யா → ஆ – அலமா. அலம் = துன்பம். யாத்தல் = கட்டுதல், சேர்தல், பொருந்துதல். அலமா → அலமாப்பு. 'பு' தொ.பெ. ஈறு. 'யா' து.வி. ஒ.நோ : மார் + யாப்பு – மாராப்பு.]

**அலமாரி** *alamāri*, பெ. (n.) பேராசையுள்ளவன் (இ.வ.); covetous, greedy person (Loc.). நீயேன் அலமாரிப் பேயாய்த் திரிகிறாய் ?

[ஒருகா. அலைவாரி → அலவாரி → அலமாரி. அலைவாருதல் = அலைத்து (வருத்தி) வாரிக் கொண்டு போதல். வார் → வாரி. 'இ' வி.முத. ஈறு.]

**அலமாறு** *alamāṟu*, பெ. (n.) தொந்தரவு, தொல்லை (இ.வ.); bother, worry, vexation (Loc.).

ம. அலமாறு; தெ. அலமறு.

[ஒருகா. அலம்வா → அலம்வரவு → அலமரவு → அலமாறு. அலம் = துன்பம்.]

**அலமான்** *alamāṉ*, பெ. (n.) திப்பிலி (சங்.அக.); long pepper, *Piper longum*.

[அலகமான் → அலமான்.]

அலகமான் பார்க்க; see *alagamāṉ*.

**அலமிளகு** *ala-miḷagu*, பெ. (n.) திப்பிலி; long pepper, *Piper longum* (சா.அக.).

[ஒருகா. அலைமிளகு = தீவுகளினின்று கடல் கடந்து வரும் மிளகுபோன்ற காரச்சரக்கு. மலைமிளகு × அலைமிளகு.]

**அலமுறல்** *alam-uṟal*, தொ. பெ. (vbl.n.) துன்படைதல்; to suffer, to be inflicted, to be in distress, disaster or danger. "தந்தை தாயை யிழந்தல முறுமி னென்னா" (திருவிளை. பன்றி. 7).

[அலம் = துன்பம். உறுதல் = அடைதல். உறு + அல் – உறல். 'அல்' தொ.பெ. ஈறு.]

**அலர்-தல்** *alar-*, 2 செ.கு.வி. (v.i.) 1. மலர்தல், பூ விரிதல்; to blossom, open up, as a flower-bud. "தாமரை யலர்ந்த பூந்தடம்" (நல். பாரத. நகர. 24). 2. பரத்தல்; to spread, to expand, to be diffused, as the rays of the Sun, as water. "அலர்தலை மாநிலம்" (நைடத. சிறப்பு. 1). 3. பருத்தல், பெருத்தல்; to increase in size, become large. "அலர்முலை யாகத்து" (கலித். 14 : 5). 4. விளங்குதல், விளங்கித் தோன்றுதல்; to shine forth, manifest oneself. "ஆழியங் கிழவனா யலரும்" (சூளா. குமார. 43). 5. சுரத்தல்; to form, collect, as milk in the breast. "அலர்முலைச் செவிலியம் பெண்டிர்த் தழீஇ" (பெரும் பாண். 250).

ம., க., து. அலர்; தெ. அலரு.

[மலர் → அலர். மலர்தல் = விரிதல், பூ விரிதல், பரத்தல், விளங்குதல்.]

**அலர்** *alar*, பெ. (n.) 1. மலர்ந்த பூ (திவா.); full-blown flower. "அலரின் வண்டௗ கத்தலர் பாய்வன" (தணிகை. நாட். 106). 2. பூமாலை; flower-garland. "நீயன்று சூட்டலர்" (தஞ்சைவா. 285). 3. (அகப்.) இரு காதலர் களவொழுக்கத்தைப் பலரறிந்து வெளிப்படையாகக் கூறும் பழிக்கூற்று, சிலரே அறிந்து மறைவாகக் கூறும் 'அம்பல்' என்பதற்கு எதிர்; (Agap.) the idle and public talk about any two clandestine lovers, dist. fr. *ambal*, the idle and secret talk of a few about the clandestine behaviour of any two lovers. 4. பழிச்சொல் (க.அக.); slander, calumny. "அருந்த வந்த புள் ளார்த்தலர் தூற்றுமால்" (நைடத. நகர. 29). 5. மகிழ்ச்சி (பிங்.); joy. 6. நீர் (பிங்.); water. 7. மிளகுகொடி; black pepper vine. 8. மிளகு (மலை.); black pepper. 9. மஞ்சள்; turmeric.

அலர்-தல் பார்க்க; see *alar-*.

**அலர்க்கம்**[1] *alarkkam*, பெ. (n.) வெள்ளெருக்கு; white madar, *Calotropis gigantea* (*albiflora*).

ம. அலர்க்கம்; க. அலர்க்க; தெ. அலர்க்கமு.

[எல் = ஒளி, வெள்ளை. ஒ.நோ : எல் → எலும்பு = வெண்தாது. எல் → அல். எருக்கு → எருக்கம் → அருக்கம் → அர்க்கம். அல் + அர்க்கம் – அல்லர்க்கம் → அலர்க்கம்.]

**அலர்க்கம்**[2] *alarkkam*, பெ. (n.) 1. ஒருவகைப் புழு; a kind of germ. 2. வெறிநாய்; rabid dog.

ம. அலர்க்கம்; க. அலர்க்க; தெ. அலர்க்கமு.

**அலர்க்குறி** *alar-k-kuṟi*, பெ. (n.) (அகப்.) களவொழுக்கத்தில் இரவுக்குறியிடை வந்த தலைவன், தலைவியைக் காணாத நிலையில், தான் வந்ததை அவளறியுமாறு பூவொன்றை அங்கு அடையாளமாக வைத்துச் சென்றது குறிக்கும் அகப்பொருட்டுறை (தனிப்பா. தி. 2. பக். 167); (Agap.) theme describing the disappointed hero leaving a flower as a sign of his

having waited in vain for the heroine at the appointed place during the night.

[அலர் = பூ. குறி = அடையாளம். அலர்க் குறி = அல்லகுறிப் பட்டவிடத்தில் தலைவன் வைக்கும் பூக்குறி.]

**அலர்ச்சி** *alarcci*, தொ. பெ. (vbl. n.) **மலர்ச்சி**; process of blooming, blooming.

ம. அலர்ச்ச

[அலர் + சி (தொ.பெ. ஈறு).]

**அலர்த்தி** *alartti*, தொ. பெ. (vbl.n.) **அலர்ச்சி** பார்க்க; see *alarcci*.

[அலர் + தி (தொ.பெ. ஈறு).]

**அலர்த்து-தல்** *alarttu-*, 2 பி.வி. (v.caus.) *1.* **மலரச்செய்தல்**; to cause to blossom. "பரிதி யலர்த்திடு வதுபோல்" (சி. சி. சுபக். *11 : 8*). *2.* **விரித்தல்**; to open, expand, unfold. "கரகம லப்போ தலர்த்தித் தாங்கினான்" (திரு விளை. வெள்ளையா. *3*).

[அலர் (த.வி.) → அலர்த்து (பி.வி.). 'து' பி.வி. ஈறு.]

**அலர்ந்தபூ** *alarnda-pū*, பெ. (n.) *1.* **மலர்ந்த பூ**; full - blown flower. *2.* **கொற்றான்** (மலை.); green thread creeper, *Cassytha filiformis*.

['அலர்ந்த பூ' பெ.எ. தொடர்ச்சொல்.]

**அலர்ப்பகம்** *alarppagam*, பெ. (n.) **இலாமிச்சை** (பச்.மூ.); cuscus grass.

**ஒ.நோ:** அலாபதம்

**அலர்மகள்** *alar-magaḷ*, பெ. (n.) *1.* **செந் தாமரை மலர்மேல் வீற்றிருக்குந் திருமகள்**; *Tirumagaḷ* (Lakṣmi), goddess of wealth, seated on a red lotus. "அரைசெய் மேகலை யலர் மக ளவளொடும்" (திவ். பெரியதி. *1 . 2 : 5*). *2.* **வெண்டாமரை மலர்மேல் வீற்றிருக்கும் கலைமகள்** (க.அக.); *Kalaimagaḷ* (Sarasvati), goddess of learning, seated on a white lotus.

[மலர் → அலர், பொதுச்சொல் சிறப்புப் பற்றித் தாமரையைக் குறித்தது. மக → மகள் = புதல்வி, பெண், பெண்தெய்வம்.]

அலர்மகள் என்பது முதற்கண் திருமகள் பெயராகவே தோன்றி வழங்கிற்று. வண்ண அடைச்சொல் லின்றிப் பொதுச்சொல்லால் வழங்கும்போது, அது கலைமகட்கும் பொருந்துமேனும், வழக்கிற்கு மாறான தாகும். பொதுமக்கள் வழக்கில், 'அலர் மேல்' என்பது இன்றும் திருமகளையே குறிக்கும்.

**அலர்முகராகம்** *alar-muga-rāgam*, பெ. (n.) **பரத வுறுப்புகளுள் ஒன்று** (சா.அக.); name of a dancing posture (?).

**அலர்முலை** *alar-mulai*, பெ. (n.) **விம்மிய முலை**; distended breast of a woman, especially through passion (சா.அக.).

[அலர்தல் = பருத்தல். முல் → முலை. முல்லுதல் = முன்வருதல் அல்லது தழுவுதல் (வழக்கற்ற வினை).]

**அலர்மேல்** *alar-mēl*, பெ. (n.) **அலர்மேல்மங்கை என்பதன் குறுக்கம்**; contraction of *Alarmēl-maṅgai*.

**அலர்மேல்மங்கை** பார்க்க; see *alar - mēl - maṅgai*.

**அலர்மேல்மங்கை** *alar-mēl-maṅgai*, பெ. (n.) **செந்தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் திருமகள்**; *Tirumagaḷ* (Lakṣmi), seated on a red lotus. "அலர்மேல் மங்கையுறை மார்பா" (திவ். திருவாய். *6 . 10 : 10*).

ம. அலர்மங்க; தெ. அலமேலுமங்க.

[மலர் → அலர். மே → மேல் (இடப்பொரு ளுருபு). மங்கலம் → மங்கலை → மங்கை = 12 முதல் 13 வரைப்பட்ட அகவையளும் மங்கலமான மணப் பருவத்தினளுமான பெண், பெண்டு, பெண்தெய்வம்.]

அலர் என்னும் பொதுச்சொல், சிறப்பு நோக்கித் தாமரைமலரையும் இடம் நோக்கிச் செந்தாமரையையுங் குறித்தது.

**அலர்வு** *alarvu*, தொ.பெ. (vbl.n.) **அலர்ச்சி** பார்க்க; see *alarcci*.

[அலர் → அலர்வு. 'வு' தொ.பெ. ஈறு.]

**அலரவன்** *alar-avan*, பெ. (n.) **நான்முகன்** (பிர மன்); *Naṉmugaṉ* (Brahma), the lotus - born. "அலரவனு மாலவனு மறியாமே யழலுரு வாய்......நின்றதுதா னென்னேடீ" (திருவாச. *12 : 6*).

க. அலரிச

[மலர் → அலர். 'அவன்' ஆ.பா. ஈறு.]

**அலரி**[1] *alari*, பெ. (n.) *1.* **பூ** (திவா.); flower. *2.* **அழகு** (பிங்.); beauty. *3.* **ஒரு பூச்செடி**

(பிங்.); oleander, l.sh., *Nerium odorum*. 4. **நறுமணம்**; fragrance. "அலரிவாய் கமழக் கூறினான்" (சீவக. 1618). 5. **ஆற்றுப் பாலை**; willow. 6. **ஒரு மரம்**; a kind of tree. "பாதிரி யலரி புன்னை" (சேதுபு. இராமநாத. 55). 7. **தேனீ** (சது.); bee. 8. **நீர்நிலை** (சது.); water tank.


அலரி

ம. அலரி; க. அலர்; தெ. அலரு; து. அரல்.

*[அலர் → அலரி = மலர்ந்த பூ, பூவின் அழகு, பூவினின்று தேனெடுக்கும் ஈ, பூச்செடி, பூமரம், பரந்த நீர்நிலை.]*

**அலரி**[2] *alari*, பெ. (n.) 1. **தீ, தீத்தெய்வம்;** fire, god of fire. "சூடுறு மேனிய வலரி தோகையை மாடுறக் கொணர்ந்தனன்" (கம்பரா. யுத்த. மீட்சிப். 96). 2. **கதிரவன்** (பிங்.); Sun. 3. **கோமாரி**; rinderpest (M. Cm. D. 247.). 4. **கண்வரி** (சூடா.); streaks or lines in the white of the eye. 5. **கோதுமை** (மலை.); wheat.

*[உலர்தல் = காய்தல், எரிதல். உலர் → உலரி → அலரி = நெருப்பு, கதிரவன், சூட்டு நோய், சூடான கூலம்.]*

அலரிச் செடியைப்பற்றியும் அதன் வகைகளைப்பற்றியும் **சா.அக.** கூறுவது வருமாறு :

அலரி ஒரு பூமரம். இது 6 அல்லது 8 அடி உயரமுள்ளது; வெளுத்த சிவப்புப் பூக்கள் பூக்கும். இதைப் பொதுவாகத் தோட்டங்களிலும் ஆற்றங்கரைகளிலும் பார்க்கலாம். இதன் இலையைக் கருக்கிட்டு (கஷாயமிட்டு) வீக்கங்களுக்கு ஒத்தடங் கொடுக்கலாம். இதன் உலர்ந்த இலைகளினின்று ஒருவகைக் களிம்பு செய்து மூட்டுப்பூச்சிக் கடிக்குப் பூசலாம். இதன் பூ பூசைக்குரியது. இதில் அடியிற் கண்டபடி பல வகைகள் உண்டு; a flowering tree, Indian oleander, *Nerium odorum* alias *N. indicum*. It is a large, spreading shrub 6 to 8 ft. high with pale-red fragrant flowers. It is common in gardens and near the banks of rivers, and its flowers are offered to gods. A decoction of the leaves is used for fomenting in cases of swelling. A paste is prepared from the dried leaves and used externally for bugbites. The following are the different varieties:

1. ஆற்றலரி; common Tamarisk, *Polygonum barbatum* alias *Tamarix gallica.*
2. ஈழத்தலரி; pagoda tree or jasmine sponge, *Plumeria acutifolia.*
3. செவ்வலரி; oleander rosebay, *Nerium odorum* (roseum). குங்குமவலரி; same as செவ்வலரி.
4. நீரலரி; water gannair, red shanks, *Polygonum genus.*
5. வெள்ளலரி; Indian oleander, *Nerium odorum* (alba).
6. காட்டலரி; willow-leaved water croton, *Homonoya riparia.*
7. பச்சையலரி, வெளிநாட்டலரி (சீமையலரி) அல்லது மஞ்சளலரி; exile oleander or foreign oleander or yellow oleander, *Theretia nereifolia.*
8. கொத்தலரி; cluster gannair, *Kopsia fruiticosa.*
9. இரட்டை வெள்ளலரி; (double) *Nerium odorum (flore pleno-carneo).*
10. இரட்டைச் செவ்வலரி; (double) *Nerium odorum (flore pleno-rubro).*

அலரி என்பது உலகவழக்கில் அரலி → அரளி என்று திரிந்துள்ளது.

**அலரிக்கண்ணாடி** *alari-k-kaṇṇāḍi*, பெ. (n.) **உடும்பின் உகிர் (நகம்)**; the nail of iguana (சா.அக.).

**அலரிக்கூடை** *alari-k-kūḍai*, பெ. (n.) **சவப்பெட்டி** (புதுவை); coffin (Poṇḍ.).

*[ஒருகா. அலரிப் பிரம்பால் அல்லது வேரால் பின்னிய கூடை.]*

**அலரிச்செவி** *alari-c-cevi*, பெ. (n.) **ஒருவகைச் செடி** (பச்.மூ.); a kind of plant.

**அலரிசபோதம்** *alari-šapōdam*, பெ. (n.) **உடும்பு**; double-tongued lizard, iguana, *Lacerta iguana* (சா.அக.).


அலரிசபோதம்

**அலரித்தட்டி** *alari-t-taṭṭi*, பெ. (n.) **மீன் பிடிக்குங் கூடை வகை** (புதுவை); wicker basket for catching fish (Poṇḍ.).

*[அலரிப் பிரம்பாற் பின்னிய தட்டுக்கூடை போலும்! தட்டு → தட்டி.]*

**அலரிப்பந்தம்** *alari-p-pandam,* பெ. (n.) **கட்டு நார்** (புதுவை); withe (Poṇḍ.).

*[அலரி + Skt. bandha > த. பந்தம் = கட்டு.]*

**அலரிவிழுந்தலையமுவாள்** *alari-viḻundalai-y-aḻuvāḷ,* பெ. (n.) **குண்டுப்பனை;** a kind of male palmyra, *Borrassus flebellifer* (சா.அக.).

*[இதன் மூலந் தெரியவில்லை. ஒருகா. அலறி விழுந்து தலைவிரித்தழுவாள் போன்ற தோற்ற முடையதோ?]*

**அலரிவேர்** *alari-vēr,* பெ. (n.) **அலரிச்செடியின் வேர்;** the root of Indian willow (சா.அக.).

இது கடுநஞ்சு. தற்கொலை புரிபவர் இதை யரைத்து (நல்லெண்ணெயிற் கலந்து) உட்கொள்வது வழக்கம்.

**அலவல்** *alaval,* பெ. (n.) 1. **பெண்டிரின் கற்பில்லா வொழுக்கம் (வியபிசாரம்);** adultery. "அவமறைந் தொழுகும் அலவற் பெண்டிர்" (சிலப். 5 : 129). 2. **இழைவிலக்கமாய் நெய்யப்பட்டது** (யாழ்ப்.); that which is loosely woven (J.).

ம. அலவல

*[அலை → அலைவு → அலவு → அலவல்.]*

**அலவலை**[1] *alavalai,* பெ. (n.) 1. **மனக்கலக்கம்;** confusion of mind, agitation, distress. "அலவலை யுடையை யென்றீ தோழி" (கலித். 122 : 6). 2. **ஆராயாது செய்வது;** hasty action. "அலவலைச் செய்திக் கஞ்சினேன்" (மணிமே. 17 : 51).

ம. அலவன்

*[அலவல் → அலவலை.]*

**அலவலை**[2] *alavalai,* பெ. (n.) **விடாது பேசுவோன்;** babbler. "அல்லவை செய்யும் அலவலை" (திரிகடு. 99).

*[அல → அலப்பு. அல → அலவு → அலவல் → அலவலை.]*

**அலவலைமை**[1] *alavalaimai,* பெ. (n.) **ஆராயாது செய்கை;** rash action.

*[அலவலை[1] → அலவலைமை.]*

**அலவலைமை**[2] *alavalaimai,* பெ. (n.) **மிகுதியாகப் பேசுகை;** babbling, talking excessively. "சிசுபாலன் றன்னை யலவலைமை தவிர்த்த வழகன்" (திவ். பெரியாழ். 4 . 3 : 5).

*[அலவலை[2] → அலவலைமை.]*

**அலவறை** *alavaṟai,* பெ. (n.) **உண்பதிற் பரபரப்பு, அவக்காச்சி** (நாஞ்.); voracity, ravenousness, greediness in eating (Nāñ.).

ம. அலன்ன

*[அலத்தல் = கிடையாத வுணவின்மேல் அளவிறந்த ஆசைகொண்டிருத்தல். அல → அலவு. அறை = அடி. அலவறை = ஆசைத்தாக்கு, பரபரப்பு, அவக்காச்சி.]*

**அலவன்**[1] *alavaṉ,* பெ. (n.) 1. **நிலா** (பிங்.); Moon. 2. **பூனை** (பிங்.); cat.

*[அல் = இரவு. அல் + அவன் (ஒருமையீறு) – அல்லவன் → அலவன் = இரவில் ஒளி தரும் நிலா. ஒ.நோ: அல்லோன் = நிலா. அலவன் = சிறப்பாக இரவில் வழங்கும் பூனை.]*

**அலவன்**[2] *alavaṉ,* பெ. (n.) 1. **ஆண்நண்டு** (பிங்.); male crab. 2. **நண்டு;** crab. "ஆடு மலவனை யன்ன மருள்செய" (சீவக. 516). 3. **கடகவோரை (கர்க்கடக ராசி)** (திவா.); cancer of the zodiac.

ம. அலகம்

*[அலம் = கொடுக்கு. அலம் → அலவு → அலகு = வளைந்த குறடு. அலவு → அலவன் = குறடுபோன்ற முன்னங்கால்களையுடைய நண்டு. 'அன்' ஈறு ஆண்பாலைச் சிறப்பாகக் குறிக்க ஏதுவாயிற்று. ஒ.நோ: கடுவன் = ஆண் குரங்கு. கடகவோரை நண்டு வடிவினது.]*

**அலவன்**[3] *alavaṉ,* பெ. (n.) **இஞ்சி;** ginger (சா.அக.).

*[அல்லம் = இஞ்சி. அல்லம் → அலம் = இஞ்சி. அலம் → அலமன் → அலவன். 'அன்' ஈறு.]*

**அலவாங்கு** *alavāṅgu,* பெ. (n.) **கடப்பாரை** (யாழ்ப்.); crow-bar (J.).

ம. அலவாங்கு

*[அலவு = அலகு. வாங்கு = இழுப்பு, இழுப்பது. அலவு + வாங்கு – அலவாங்கு = நெம்புதடிபோலப் பயன்படும் (காக்கை யலகு போன்ற முனையுடைய) இருப்புக் கம்பி.]*

**அலவாட்டு** *alavāṭṭu,* பெ. (n.) **வழக்கம்** (வின்.); custom, practice.

தெ. அலவாட்டு

**அலவாரி** *alavāri*, பெ. (n.) பேராசைக்காரன் - காரி (புதுவை); covetous person (Poṇḍ.).

*[அலத்தல் = ஏங்குதல், அதிக ஆசைப்படுதல். அல → அலவு. ஆர்தல் = நிறைதல். அலவாரி = ஆசை நிறைந்தவன். 'இ' வி.முத. ஈறு.]*

மறுவ. அலமாரி

**அலவான்** *alavān*, பெ. (n.) பல்லாங்குழி யாட்டத்தில் ஒரு குழியிற் கூடுங் காய்கள்; seeds accumulated in a pit in the *pallāṅguḻi* game.

*[ஒருகா. அள்ளுவான் → அலவான். ஆட்டத்தில் வெல்பவர் குழியிற் சேர்ந்துகிடக்குங் காய்களை யெல்லாம் அள்ளிக்கொள்வது முறை.]*

**அலவு-தல்** *alavu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வருந்துதல்; to be troubled in mind. "அன்பனைக் காணா தலவுமென் னெஞ்சன்றே" (சிலப். 18 : 17). 2. சிந்துதல்; to spill. "அலவு நுண்டுளி யருவிநீர்" (கம்பரா. அயோத். சித்திர. 25).

க., தெ. அலவு.

*[அல்லுதல் = அசைதல், வருந்துதல், செல்லுதல், நீங்குதல், சிந்துதல். அல் → அலம் = துன்பம். அலம் → அலவு.]*

**அலவு** *alavu*, பெ. (n.) மனத்தடுமாற்றம்; confusion, perturbation. "ஆதுல மாக்களு மலவுற்று விளிப்ப" (மணிமே. 4 : 42).

அலவு-தல் பார்க்க; see *alavu-*.

**அலவை¹** *alavai*, பெ. (n.) விடாது பிதற்றுபவள்; a woman who chatters ceaselessly. "மாய வலவை சொற்கொண்டு" (திவ். திருவாய். 4 . 6 : 4).

*[அலத்தல் = அசைத்தல், வாயசைத்தல். அல → அலப்பு. அலுப்புதல் = வீண்பேச்சுப் பேசுதல், பிதற்றுதல். அல → அலவை.]*

**அலவை²** *alavai*, பெ. (n.) கற்பின்மை (வியபிசாரம்); adultery. "அவமறைந் தொழுகும் அலவைப் பெண்டிர்" (சிலப் . 5 : 129, அரும்.).

*[வலவை = நாணிலி. வலவை → அலவை.]*

**அலற்று-தல்** *alaṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) இடைவிடாமலும் முறையின்றியும் பேசுதல்; to talk unceasingly and with impropriety. (திவ். திருவாய். 1 . 3 : 10) (செ.அக.).

*[ஆயின், "அயர்ப்பிலன் அலற்றுவன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே" (திவ். திருவாய். 1 . 3 : 10) என்னும் அடியிலுள்ள 'அலற்று' என்னும் வினைச்சொலிற்கு, சே. கிருட்டிணமாசாரியார் பதிப்பில் அழுதற்பொருள் குறிக்கப் பட்டுள்ளது. அதுவே பொருத்தமாகவுந் தோன்றுகின்றது.]*

**அலறல்** *alaṟal*, பெ. (n.) திரண்டவோசை (பிங்.); loud cry, great sound.

ம. அலர்ச்ச

அலறு¹-தல் பார்க்க; see *alaṟu¹-*.

**அலறி¹** *alaṟi*, பெ. (n.) நாகணம் என்னும் ஒரு நறும்பண்டம் (வை.மூ.); *nāgaṇam*, an aromatic substance.

**அலறி²** *alaṟi*, பெ. (n.) உகிர் (நகம்); finger-nail (சா.அக.).

**அலறு¹-தல்** *alaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. அச்சத்தால் திடுமென்று கதறுதல்; to cry aloud due to sudden fright. 2. உரத்தழுதல்; to weep aloud, cry from sorrow. "பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்" (திருவாச. 2 : 134). 3. மிக்கொலித்தல்; to vociferate, roar. "அலறுஞ் சிறுவெண் சங்கும்" (சீவக. 2195). 4. ஆடுமாடு ஆந்தை முதலியன கதறுதல்; to bellow, bleat, hoot.

ம. அலறு

*[அல் → அலம் → அலர் → அலறு. அலறுதல் = துன்பத்தாற் கதறுதல். இனி, ஒலிக்குறிப்பு என்றுமாம். ஒல் → ஒலி. ஒல் → அல் → அலறு.]*

**அலறு²-தல்** *alaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) விரிதல்; to spread out, branch. "அலறுதலை யோமை" (ஐங்குறு. 321).

ம. அலருக; க. அலர்; தெ. அலரு; து. அலருனி.

*[மலர் → அலர் → அலறு.]*

**அலறுசன்னி** *alaṟu-šaṉṉi*, பெ. (n.) படுத்திருக்கும்போது அடிக்கடி திடுமென அலறியெழுந்துட்காரச் செய்யும் ஒருவகை இசிவுக்காய்ச்சல் (சா.அக.); raving delirium. "அலறு சன்னியோ டின்னல்வெம் பிணியர்" (கடம்ப. பு. இலீலா. 127).

*[அலறு + Skt. sanni. Skt. sanni-pāta > த. சன்னி.]*

**அலறுபித்தம்** *alaṟu-pittam*, பெ. (n.) கூச்சலிடும் ஒரு பித்தநோய்; a bilious disease accompanied by loud cries (சா.அக.).

**அலன்றல்** *alanṟal*, தொ. பெ. (vbl.n.) **சாதல்** (சா.அக.); dying — **சாவு** (இராட்.); death.

*[அழன் = பிணம். ஒருகா. அழன் → அழன்று → அழன்றல் → அலன்றல் = பிணமாதல், சாதல்.]*

**அலாடம்** *alāḍam*, பெ. (n.) **கஞ்சா**; Indian hemp, *Cannabis sativa* (சா.அக.).

**அலாதிகழ்** *alādigal*, பெ. (n.) **சிவநெறித் திருவைந்தெழுத்து மந்திரத்தின் உறுப்பான வகரம்**; *va*, one of the letters of the *tiruvain-deluttu* (pañjākṣara) mantra of Śaiva religion (சா.அக.).

**அலாபதம்** *alāpadam*, பெ. (n.) **இலாமிச்சை** (மலை.); cuscus grass.

**அலாரி** *alāri*, பெ. (n.) **அலரி** (மலை.); oleander.

மறுவ. அலாரிதா

**அலாரி-த்தல்** *alāri-*, 4 செ.கு.வி. (v.i.) **நடனத் தொடக்கப்பாட்டைப் பாடுதல்**; to sing the opening song in a dance programme.

**அலாரிதா** *alāridā*, பெ. (n.) **அலாரி** பார்க்க; see *alāri* (மலை.).

**அலாரிப்பு** *alārippu*, பெ. (n.) (நடம்.) **'தாஅம் தித்தாஅம் க்ருதக தைஇ' என்னும் நடனத் தொடக்கப்பாட்டுச் சொற்கட்டு**; (Dan.) opening song in a dance programme.

ம. அலாரிப்பு

**அலாருகம்** *alārugam*, பெ. (n.) **பெருங்களா**; large corandah, *Carissa carandas* (*typica*) (சா.அக.).

**அலி**[1] *ali*, பெ. (n.) 1. **ஆணும் பெண்ணுமல்லாது இரண்டிற்கும் பொதுவான மாந்தப் பிறவி**; hermaphrodite, person who is neither man nor woman wholly. "ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியு மல்லன்" (திவ். திருவாய். 2.5:10). பெண்ணிலும் ஆணிலும் சேராத உறுப்பை யுடைய மாந்தப்பிறவி. இது ஆணலி, பெண்ணலி என இருவகைப் படும். ஆணுருவ மிகுந்திருந்தால் ஆணலி யென்றும், பெண்ணுருவ மிகுந்திருந்தால் பெண்ணலியென்றும் சொல்வதுண்டு; an individual in whom will be found the co-existence of the ill-developed organs of both sexes, *i.e.*, ovaries and testicles or at least one of the each glands—*Hermaphrodite*. Hermaphroditism is of two kinds according to the structural formation and development in the reproductive or sexual organs. If the male organ is more developed the individual is called the male or he-hermaphrodite and if the female organ is developed more, the individual is called the female or she-hermaphrodite. 2. **பேடி**; an impotent man (சா.அக.). 3. **விதையில்லாத மாந்தன்**; a man deprived of testes, *eunuch* (சா.அக.).

ம. அலி

*[அல் → அலி = ஆணும் பெண்ணும் அல்லாதது.]*

**அலி**[2] *ali*, பெ. (n.) **வயிரமில்லாத மரம்**; a tree, the wood of which is soft in its central core, pithy tree (சா.அக.).

*[ஆண்மையில்லாத மாந்தன்போன்று வயிரமில்லாத மரம்.]*

**அலி**[3] *ali*, பெ. (n.) **நறுவிலி** (பிங்.); common sebesten, *Cordia obliqua* (சா.அக.).

**அலி**[4] *ali*, பெ. (n.) **சோறு** (அக.நி.); boiled rice.

*[அரி = அரிசி, சோறு. அரி → அலி.]*

**அலிக்கிரகம்** *ali-k-kiragam*, பெ. (n.) **நொதுமலான (பொதுப்பட்ட) அறிவன், காரி என்னும் கோள்கள்** (சாதகா. 56, உரை); neutral planets as Mercury or Saturn.

*[அல் → அலி = இரண்டுமெல்லாது இடைப்பட்டது.]*

இனி, அலிக்கோள் என்றே வழங்குதல் வேண்டும்.

**அலிக்கை** *ali-k-kai*, பெ. (n.) (நடம்.) **அலிச் செயல் காட்டும் நளிநயக்கை (அபிநயக்கை)**; (Dan.) dance with hand gestures that express the feelings of a hermaphrodite.

இன்னும் (ஒருசாரார்) ஒற்றைக்கை இரட்டைக்கை யென்னுமிவற்றை, இவ்வகையோடும் ஆண்கை, பெண்கை, அலிக்கை, பொதுக்கை யென்னும் நான்கினையும் கூட்டி ஆறென்பாருமுளர். என்னை? "............... மொழிநரு முளரே" (சிலப். 3:18, அடியார்க். உரை).

"சர்ப்பசிரம் வண்டு தனிமுகுளங் கத்தரிகை
விற்பனஞ்சேர் கோசங்க வித்தமுடன்—
அற்புதமே
ஆகு மலிக்கைக ளாறென் றுரைப்பரே
பாகனைய சொல்லாய் பரிந்து"

(சிலப். 3:18, அடியார்க்.உரை-அடிக்குறிப்பு).

**அலிகை** *aligai*, பெ. (n.) **நாணல்**; kaus, a large and coarse grass, l. sh., *Saccharum spontaneum*.

**அலித்தூர்வம்** *alittūrvam*, பெ. (n.) ஒரு பூடு; the name of a plant (சா.அக.).

**அலிநாள்** *ali-nāḷ*, பெ. (n.) மான்றலை (மிருக சீரிடம்) செக்கு (சதயம்) நாண் மீன்கள் (சோதிட சிந். 38); the 5th and the 24th lunar asterisms.

*[அலிபோன்று பொதுத்தன்மையுடைய நாண் மீன்.]*

**அலிப்பான்** *ali-p-pāṉ*, பெ. (n.) வெடியுப்பு (பச்.மூ.); saltpetre.

**அலிப்புண்** *ali-p-puṇ*, பெ. (n.) நாறும் புண்; a foul smelling sore or wound, gangrene.

**அலிப்பேடு** *ali-p-pēḍu*, பெ. (n.) **கண்ணன் ஆடிய அல்லியக்கூத்து**; a dance of Krişṇa. 'அல்லிய மென்பதனை அலிப்பே டென்பாருமுளர்' (சிலப். 6 : 48, அடியார்க். உரை).

**அலிமகம்** *alimagam*, பெ. (n.) பெண்களைத் தாக்கும் ஒருவகைச் சோகைநோய்; anaemia accompanied by nervous disturbances, chlorosis.

**அலிமரம்** *ali-maram*, பெ. (n.) 1. வயிரமில்லாத மரம் (பிங்.); tree with soft, pithy core. 2. பாலும் நாருமுள்ள மரம்; a tree with milky juice and fibres (சா.அக.).

து. அலிமர்

*[அல் → அலி = வயிரமில்லாதது.]*

**அலியர்** *aliyar*, பெ. (n.) 1. பேடிகள் (சா.அக.); impotent men. 2. ஆணிலும் பெண்ணிலும் சேராதவர்; hermaphrodites.

**அலியன்** *aliyaṉ*, பெ. (n.) செங்கடுக்காய்; a red variety of chebulic myrobalan, *Terminalia chebula* (சா.அக.).

**அலியன்குறிஞ்சி** *aliyaṉ-kuṟiñji*, பெ. (n.) செந்தொட்டி; climbing nettle, *Tragia involucrata* (சா.அக.).

**அலியாநிலை** *aliyā-nilai*, பெ. (n.) சலியாத நிலை; immovable or unalterable state. "அலியா நிலைநிற்கு மைய னையாறன்" (தேவா. 4 . 92 : 20).

*[அல் → அலி. அலித்தல் = அசைதல். அல் → சல் → சலி. அல் → அலை → அசை.]*

**அலியெழுத்து** *ali-y-eḻuttu*, பெ. (n.) 1. **ஆய்தம்**; the letter ஃ, as being regarded neither a vowel nor a consonant. "ஆய்தம்பே டாகும்" (வெண்பாப். முதன்மொ. 6). 2. **மெய்யெழுத்து** (பிங்.); consonant.

"எண்ணுங் குறிலாண் இயைந்த
நெடிலெல்லாம்
பெண்ணாகும் ஒற்றாய்தம் பேடாகும்"
(வெண்பாப். முதன்மொ. 6).

*[அல் → அலி = ஆணும் பெண்ணும் அல்லாத எழுத்து.]*

**அலு-த்தல்** *alu-*, 4 செ.கு.வி. (v.i.) களைத்தல், சோர்தல்; to be tired, weary, fatigued by overwork or long journey.

க. அல; தெ. அலயு.

*[அல் → அலு.]*

**அலுக்கு-தல்** *alukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிறிது அசைத்தல்; to shake slightly. நான் கையெழுத்துப் போடும்போது என் தூவலை (pen) அலுக்கிவிட்டான் (உ.வ.). 2. பாடும் போது குரலை இனிமையாக வுருட்டுதல்; to sing with graceful nuances in melody. தியாகராச பாடகர் நன்றாய் அலுக்கிப் பாடுவார் (உ.வ.). 3. பிலுக்குப் பண்ணுதல் (வின்.); to strut, swagger.

**அலுக்கிக்குலுக்கி** *alukki-k-kulukki*, வி.எ. (adv.) 1. ஆட்டியசைத்து; shaking frequently and violently. வண்டி வழிநெடுக எங்களை அலுக்கிக்குலுக்கி அலைக்கழித்துவிட்டது (உ.வ.). 2. வேண்டுமென்று அசைத்துப் பிலுக்குப்பண்ணி; making a wanton display by shaking. தன் புது நகையைக் காட்டவேண்டு மென்று காதை அலுக்கிக்குலுக்கி நடந்து வந்தாள்.

ம. அலுக்குக

*[அல் → அலு → அலுங்கு (த.வி.) → அலுக்கு (பி.வி.). அலுங்குதல் = அசைதல்.]*

**அலுக்குத்து** *alu-k-kuttu*, பெ. (n.) முகம்மதியப் பெண்டிர் காதணி; an ear-ornament of Mohammedan women.

ம. அலுக்குத்து

*[அள் = காது. குத்து = குத்திய கம்பிநகை. அள்குத்து → அலுக்குத்து.]*

**அலுக்குலை-தல்** *alukkulai-*, 2 செ.கு.வி. (v.i.) ***சீர்கெடுதல்*** (வின்.); to become disorganised, to get out of order.

ம. அலுக்குலுக்கு

[ஒருகா. அடுக்குக்குலை → அடுக்குலை → அலுக்குலை.]

**அலுங்கு** *alungu*, பெ. (n.) ***மணிமுடி (கிரீடமகுடம்) யென்னும் மகுடவகையிற் செதிள்போன்ற மலரணி யுறுப்பு***; fin-like ornamental floral design forming part of *manimudi*, a variety of royal crown. 'நான்கு பூரிமங்களோடு கூடிய தாகவும் திரண்ட பகுதியில் **அலுங்கு** எனப் படும் செதிள்போன்ற மலர் அணிகளை உடையதாகவும்............இருத்தல் வேண்டும்' (சி. செ. பக். 87-88).

[அல் → அலு → அலுங்கு.]

**அலுங்கு-தல்** *alungu-*, 5 செ.கு.வி. (v.i.) ***சிறிது அசைதல்;*** to shake slightly or gently. காற் றில்லாமல் ஈ யாடவில்லை; இலையலுங்க வில்லை (உ.வ.).

ம. அலுங்ஙுக; க. அலகு, அலுங்கு; தெ. அலகு; து. அலங்குனி.

[அல் → அலு → அலங்கு. அலுத்தல் = அசை தல், தளர்தல்.]

**அலுசிலும்பல்** *alušilumbal*, பெ. (n.) குழப்பம் (யாழ்ப்.); disorder, derangement, confusion (J.).

[ஒருகா. அலைசிலும்பல் (அலைகலங்கல்) என்பது மூலமாயிருக்கலாம்.]

**அலுத்துப்புலுத்து** *aluttu-p-puluttu*, வி.எ. (adv.) ***மிகவும் களைத்து***; extremely tired. பகல் முழுவதும் வேலைசெய்து அலுத்துப்புலுத்துப் போனான். நாள் முழுவதும் வழிநடந்து அலுத்துப்புலுத்து வந்து சேர்ந்தான்.

**அலுப்பு** *aluppu*, தொ.பெ. (vbl.n.) ***சோர்வு, அயர்வு, தளர்வு;*** weariness, exhaustion.

ம., க., தெ. அலுப்பு.

**அலுப்புநித்திரை** *aluppu-nittirai*, பெ. (n.) ***அலுப் புறக்கம்*** பார்க்க; see *alupp(u)-urakkam* (சா. அக.).

**அலுப்புறக்கம்** *alupp(u)-urakkam*, பெ. (n.) 1. ***உடம்புச் சோர்வினா லேற்பட்ட தூக்கம்;*** sleep through fatigue. 2. ***ஆழ்ந்த தூக்கம்;*** deep sleep.

**அலுவல்** *aluval*, பெ. (n.) ***வேலை***; engagement, business, occupation, employment, affair. "சமய மிதுவென் றலுவலிட்டு" (மீனாட். பிள்ளைத். 72).

ம. அலுவல்

[அலுத்தல் = களைத்தல். அலு → அலுவல் = களைக்குமளவு உழைக்கும் வேலை, வேலை, பதவி.]

**அலுவலுவெனல்** *alu-v-alu-v-enal*, தொ. பெ. (vbl.n.) அலப்பற்குறிப்பு (வின்.); unceasing chatter.

[அல் → அல → அலப்பு. அல் → அலு → அலுவலு (இரட்டைக்கிளவி). எனல் (என் + அல்) = எனச் சொல்லுதல்.]

**அலுவிகம்** *aluvigam*, பெ. (n.) ***வில்வம்*** (மலை.); bael (செ.அக.) — sacred lingam tree or holy garlic pear, *Crataeva religiosa* alias *Aegle marmelos* (சா.அக.).

**அலூகம்** *alūgam*, பெ. (n.) ***அலுவீகம்*** பார்க்க; see ***aluvigam*** (பச்.மூ.).

[அலுவீகம் → அலூகம்.]

**அலூரமாமுகம்** *alūramāmugam*, பெ. (n.) புல் (பச்.மூ.); grass.

**அலை[1]-தல்** *alai-*, 2 செ.கு.வி. (v.i.) 1. ***அசை தல்;*** to wave, shake, play in the wind, move, as a reflection in water. "அலைந்தன நாகம்" (கந்தபு. யுத்த. முதனாட். 50). 2. ***தள்ளாடுதல்*** (வின்.); to stagger, totter. 3. ***திரிதல்;*** to roam, wander, go here and there in search of an object. "புசிப்புக் கலைந்திடல்" (தாயு. சித்தர். 5). 4. வருந்துதல் (வின்.); to be harassed, to wander in weariness.

ம. அல, அலயுக; க., து., பட. அலெ; தெ. அல; கோத. அல்த்; நுட. அல்க்.

[அல் → அலை.]

**அலை[2]-த்தல்** *alai-*, 4 செ.கு.வி. (v.i.) ***அலை மோதுதல்;*** to dash, as waves. "அலைக்கு மாழி" (கம்பரா. ஆரணிய. சூர்ப்ப. 75). —, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***அசைத்தல்;*** to shake, move. "காலலைத் தலைய வீழ்ந்து" (திருவிளை. பழியஞ். 8). 2. ***அலையச் செய் தல்;*** to cause to wander back and forth, drive hither and thither. 3. ***அடித்தல்;*** to beat, slap. "ஊதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்" (கலித். 128:19). 4. ***அடித்துப்***

பறித்தல்; to rob on the highway. ''வன்கண்ண ராட்டிவிட் டாறலைக்கு மத்தம்'' (ஐந்திணை ஐம். 34). 5. **வருத்துதல்**; to harass, vex, annoy, afflict. ''பெருமுலை யலைக்குங் காதின்'' (திருமுரு. 50). 6. **நிலைகெடுத்தல்**; to disorganize, reduce to poverty. ''ஆனிரை முழுவது மலைத்து'' (கந்தபு. ஆற்று. 16). 7. **உருட்டுதல்**; to roll down. ''தேறல் கல்லலைத் தொழுகு மன்னே'' (புறநா. 115 : 3 - 4).

ம. அலய்க்குக

[அலைதல் (த.வி.) → அலைத்தல் (பி.வி).]

**அலை**[1] *alai*, பெ. (n.) 1. **நீர்த்திரை** (பிங்.); wave, billow, ripple. 2. **நீர்**; water. 3. **கடல்**; sea. ''**அலைவளம் பெரிதென்கோ**'' (நைடத. நாட்டு. 22). 4. **மிகுதி** (சூடா.); abundance, fullness.

**ம., தெ.** அல; **க., து.** அலெ; **G.** welle; **Arm.** alik.

அலை[2]-த்தல் பார்க்க; see *alai*[2]-.

[அல் → அலை.]

**அலை**[2] *alai*, பெ. (n.) 1. **கண்டனம்**; hostile criticism. ''அலைபலவே யுரைத்தாளென் றருகிருந்தோர் கருதுதலும்'' (நீலகேசி, 204). 2. **வருத்துகை**; injury, oppression. ''உறுப் பறை குடிகோள் அலைகொலை'' (தொல். பொருள். மெய்ப். 10). 3. **கொலை** (பிங்.); murder.

[அல் → அலை.]

**அலை**[1]-**தல்** பார்க்க; see *alai*[1]-.

**அலை**[3] *alai*, பெ.(n.) 1. **அலையடித் தொதுக்கிய கருமணல்** (சா.அக.); black sand washed ashore by the waves. 2. **மது**; sweet liquor. 3. **ஞாலம்** (பூமி); Earth.

இப் பொருள்கட்கு **சா.அக.** ஆசிரியர் சான்று காட்டவில்லை.

அலை[1]-தல் பார்க்க; see *alai*-[1].

**அலைக்கழி**[1]-**தல்** *alaikkaḻi*-, 3 செ.கு.வி. (v.i.) **அலைந்து வருந்துதல்**; to suffer wandering here and there in search of work, be vexed by repeated disappointments. ''ஐம்பூதத் தாலே யலைக்கழிந்த தோடமற'' (தாயு. எந்நாட். தத். 1).

[அலைக்க + அழிதல் (நோதல், வருந்துதல்).]

**அலைக்கழி**[2]-**த்தல்** *alaikkaḻi*-, 4 செ.குன்றாவி. (v.t.) **அலைத்து வருத்துதல்**; to put one to continued trouble, to make one tramp up and down for nothing.

[அலைக்கழிதல் (த. வி.) → அலைக்கழித்தல் (பி.வி.).]

**அலைக்கழிவு** *alaikkaḻivu*, பெ. (n.) **அலைந்து வருந்தும் வருத்தம்**; continued trouble, labour attended with repeated disappointments.

[அலைக்க + அழிவு.]

**அலைகல்** *alai-kal*, பெ. (n.) **கரையை நீர் கரைக் காதபடி அமைக்குங் கல்**; stone-facing, to protect the banks of tanks and water-courses.

[அலைமோதுங்கல் = அலைகல்.]

**அலைகாற்று** *alai-kāṟṟu*, பெ. (n.) **பெருங்காற்று** (இராட்.); fierce wind, tempest. அலைக்கும் (வருத்தும்) காற்று அலைகாற்று.

**அலைகுலையாக்கு-தல்** *alaikulai-y-ākku*-, 5 செ. குன்றாவி. (v.t.) **நிலைகுலையச் செய்தல்**; to ruin, destroy completely. ''கயிலை தன்னை ......தாக்கினான் தன்னையன்று அலைகுலை யாக்குவித்தான்'' (தேவா. 4 . 59 : 4).

[அலைதல் = தள்ளாடுதல். குலைதல் = அழிதல். 'அலைகுலை' அழிவுப்பொருளை மிகுத்துக் காட்டும் மரபிணைமொழி. ஆகு (த.வி.) → ஆக்கு (பி.வி.).]

**அலைகொள்(ளு)-தல்** *alaikoḷ(ḷu)*-, 16 செ.கு.வி. (v.i.) **கலக்கமுறுதல், துன்புறுதல்**; to be agitated, harassed. ''காமன் கணைகொண் டலை கொள்ளவோ'' (திருக்கோ. 90).

[அலை → அலைவு.]

**அலைச்சல்** *alaiccal*, பெ. (n.) தொ.பெ. (vbl.n.) 1. **அலைந்து திரிகை**; wandering. 2. **தொந்தரவு**; weariness, vexation.

ம. அலயுக; க. அலெத; து. அலசல்; பட. அலெச்சல்.

[அலை + சல் (தொ.பெ. ஈறு).]

**அலைசடி** *alaiśaḍi*, பெ.(n.) 1. **சோர்வு**; fatigue, lassitude. 2. **தொந்தரவு**; trouble.

க. அலெத; தெ. அலசடி.

[அலைசு (கசக்கு) + அடி (தாக்கு).]

**அலைசல்** *alaiśal*, பெ. (n.) 1. **அலைகை** (திவா.); wandering. 2. **தளர்வு**; fatigue. 3.

**சோம்பல்** (திவா.); laziness. 4. **துன்பம்** (வின்.); affliction.

ம. அலச; க. அலசிகெ; தெ. அலசட்; **கொலா.** அலய்; **து.** அலசல்; **Pali, Sinh.** alasa.

[அலை → அலைதல் → அலைசல். ஒ. நோ: வளைதல் → வளைசல். இனி, அலையல் → அலைசல் என்றுமாம்.]

இது அ-லஸ என்னும் வடசொல்லின் திரிபன்று. அலைச்சலால் தளர்ச்சியும் தளர்ச்சியால் சோம்பலும் உண்டாவது இயற்கையே.

**அலைசு-தல்** *alaišu-*, 5 செ.கு.வி. (v.i.) **சோம்புதல்** (பிங்.); to be lazy. —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **ஆடையைக் கசக்கிக் கழுவுதல்**; to wash clothes, rinse. 2. **குலுக்குதல்**; to shake. தண்ணீர்விட்டு அலைசிக் குடி. 3. **பேச்சில் வெல்லுதல், நாவெழாதவாறு கலக்கடித்தல்**; to discomfit one in debate, to confound by powerful arguments. அவனைப் பேச்சில் அலைசிவிட்டான்.

க. அலசு; து. அலசுனி.

[அல் → அலை → அலைசு.]

**அலைசோலி** *alai-šōli*, பெ. (n.) **தொந்தரவு** (யாழ்ப்.); trouble, annoyance, vexation (J.).

[அலை = அலைச்சல். சோலி = வேலை.]

**அலைத்துக்குலைத்து** *alaittu-k-kulaittu*, வி.எ. (adv.) கட்டவிழுமாறு **ஆட்டியசைத்து**; having made a mess by constant shaking. அந்தப் பொத்தகக் கட்டை அலைத்துக்குலைத்துக் கொண்டுவந்து சேர்த்தான்.

[அலை → அலைத்து (இ.கா.வி.எ.). குலை → குலைத்து (இ.கா.வி.எ.). 'அலைத்துக்குலைத்து' பொருளை மிகுத்துக் காட்டும் எதுகை மரபிணைமொழி.]

**அலைதாங்கி** *alai-tāṅgi*, பெ. (n.) **அலையைத் தடுக்கும் செய்கரை அல்லது கற்சுவர்** (C.G.); breakwater.

[அல் → அலை. தாங்கு → தாங்கி. 'இ' வி. முத. ஈறு.]

**அலைதாடி** *alai-tāḍi*, பெ. (n.) **ஆட்டின் அல்லது மாட்டின் கழுத்தில் கீழ்ப்பகுதியில் தொங்கும் தசை மடிப்பு**; dewlap, excrescence found under the necks of cattle.

[அலை = அசைகின்ற. தாடி = தாடிபோல் தொங்கும் தசை. 'அலைதாடி' வினைத்தொகை.]

**அலைதாரை** *alai-tārai*, பெ. (n.) **நீர்மட்டத்தின் அளவுகாட்டும் கரைப்பக்கக் குறி** (C.G.); watermark, mark left on the side of the bank or wall by constant dashing of water.

[அலை = நீரலை. தார் → தாரை = நீண்ட வரை.]

அலைத்தாரை யென்று வலிமிகுப்பது பொருத்தம்.

**அலைதிகுலைதி** *alaidi-kulaidi*, பெ. (n.) **குலைந்த நிலை**; disturbed or confused condition, as that of dishevelled hair. 'மயிர்முடி அலைதிகுலைதியாய்ப் பேணாதே போக' (திவ். பெருமாள்தி. 6 : 3, வியா.).

ம. அலதி

[அலை → அலைதி (தொ.பெ.). குலை → குலைதி (தொ.பெ.). 'தி' தொ.பெ. ஈறு. 'அலைதி குலைதி' பொருளை மிகுத்துக்காட்டும் எதுகை மரபிணைமொழி.]

**அலைப்பு** *alaippu*, தொ.பெ. (vbl.n.) 1. **அசைக்கை**; shaking, moving. 2. **வருத்தம்**; distress, trouble. "அரிய செய்கையி லவனியில் விழுந்தெழுந் தலைப்புறும் மனைவாழ்க்கை" (பெரியபு. வெள்ளானை. 29).

க. அலெபு

[அலை → அலைப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அலைமகள்** *alai-magaḷ*, பெ. (n.) **திருமகள்** (பிரமோத். 7 : 26); *Tirumagaḷ* (Lakṣmi), born in the sea of milk.

[அலை = கடல். மகள் = பெண், திருமகள். திருப்பாற்கடலில் பிறந்தவள் என்பது தொன்மக் கதை.]

**அலையல்** *alaiyal*, பெ. (n.) 1. **திரிதல்**; wandering, waving. "அங்குமிங்குநின் றலையலாமோ" (தாயு. பரா. 321). 2. **சோர்வு** (பதிற்றுப். 50 : 21, உரை); languishing, drooping, swooning. 3. **சோம்பல்** (நாநார்த்த.); laziness.

க. அலெத

[அல் → அலை → அலையல்.]

**அலையிற்றிரண்டதீபம்** *alaiyiṟ-ṟiranda-tibam*, பெ. (n.) கடல்நுரை; sea-froth (சா.அக.).

[அலை → அலையில் (இடவேற்றுமை யேற்ற பெயர். 'இல்' 7ஆம் வே.உ. திரள் →

*திரண்ட (இ. கா. பெ. எ.). தீய் → தீய்வு → தீவம் >* **Skt.** dīpa. *கடல்துரை விளக்குத் தீக் கொழுந்துபோல் வெள்ளையாயிருப்பதால், இப் பெயர் பெற்றது.]*

**அலையெறி-தல்** *alai-y-eṟi-*, **2** செ.கு.வி. (v.i.) நெடுந்தொலைவு பரவுதல்; to spread abroad. 'கிருஷ்ணனுடைய இங்குத்தை நீர்மை பரம பதத்திலுஞ் சென்று அலையெறியும்படி' (திவ். திருப்பா. *1*, வியா.).

*[அலை + எறி.]*

**அலையேறு** *alai-y-ēṟu*, பெ.(n.) *அலையெறிகை;* dashing of the waves. 'அலையேற்றிலே கொண்டுபோய்' (ஈடு, 7. 2 : 2).

*[அலை + ஏறு (எறிகை).]*

**அலைவன்** *alaivaṉ*, பெ. (n.) *1.* **பூனை;** cat (சா.அக.). *2.* **பூனைக்காஞ்சொறி** (பச்.மூ.); small climbing nettle.

*[அல் (இரவு) → அலவன் (இரவில் சிறப்பாக இயங்கும் பூனை) → அலைவன்.]*

**அலைவாய்** *alai-vāy*, பெ. (n.) **திருநெல்வேலி மாவட்டக் கடற்கரை நகர்களு ளொன்றும், பெயர்பெற்ற முருகன் கோயிலுள்ளதுமான திருச்செந்தூர்;** *Tiruccendūr* in Thirunelvēli district, a seacoast pilgrim centre famous for its *Muruga* shrine. "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே" (திருமுரு. 125).

*[அலை = கடல். வாய் = வாய் அல்லது முகம் போன்ற இடம்.]*

**அலைவாய்க்கரை** *alai-vāy-k-karai*, பெ. (n.) *கடற்கரை;* seashore washed by the waves.

**அலைவிரிசல்** *alai-viriśal*, பெ. (n.) **சுருளும் அலை** (வின்.); curling or unfurling wave.

*[அலை + விரியல் → விரிசல். 'அல்' தொ. பெ. ஈறு.]*

**அலைவு** *alaivu*, பெ.(n.) *1.* **அசைகை;** shaking, moving, waving. *2.* **மனக்கலக்கம், துன்பம்;** mental agitation.

க. அலவு; **து.** அலசுனி.

*[அல் → அலை → அலைவு.]*

**அலைவுற்றநாடி** *alaivuṟṟa-nāḍi*, பெ. (n.) **அலையைப்போல் நிலையில்லாமல் அசையும் நாடி;** an unsteady pulse like the waves of the sea (சா.அக.).

*[அலைவு + உற்ற + நாடி. அல் → அலை → அலைவு (தொ.பெ.). உறு → உற்ற (இ.கா. பெ.எ.). நாளி → நாழி → நாடி.]*

**அவ்** *av*, சு.பெ. (demons. pron.) **அவை;** they (impers.).

"அவ்வே
இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப"
(தொல். சொல். விளி. 2).

**ம.** அவ்; **க., து.** அவு; **பட.** அவெ.

*[அ → அம் → அவ். ஒ.நோ: செம் → செவ்.]*

**'அவ்' வரலாறு**

ஐம்பாலீறுகள் தோன்றுமுன், சுட்டுவினாப் பெயர்களும் மூவிடப்பெயர்களும் ஒருமை, பன்மை யீறுகளே பெற்றுவந்தன. **'ஒன்று'** என்னும் முதலெண்ணுப் பெயரின் மறுவடிவான 'ஒன்' என்பது ஒருமை யீறாகவும், கூடுதலைக் குறிக்கும் 'உம்' என்னும் வினை முதனிலை பன்மை யீறாகவும் இருந்தன.

ஈரெண்ணீறும், மூவிடப் பெயரொடு புணருங்கால், உயிர்முதல் கெடும்.

எ-டு: ஊ + ஒன் – ஊன், ஊ + உம் – ஊம். இங்ஙனமே சுட்டுவினாப் பெயர்களும் எண்ணீ றேற்றன.

எ-டு: அ + ஒன் – அன், அ + உம் – அம். மகரவீறு பின்னர் வகரவீறாக மாறிற்று.

எ-டு: அம் → அவ், எம் → எவ்.

**ஒ.நோ:** செம் → செவ், செம்மை → செவ்வை, அம்மை → அவ்வை. அவ் = அவை. எவ் = எவை.

பிற்காலத்தில், அவ், எவ் என்னும் சுட்டு வினாப் பன்மைப் பெயர்கள் சுட்டுவினா அடிகள் (bases) ஆகிவிட்டன. அதனால் அவற்றின்மேல் ஐம்பாலீறும் ஏறின.

எ-டு: அவ் + அன் – அவன்
அவ் + அள் – அவள்
அவ் + அர் – அவர்
அவ் + அது – அவது → அது
அவ் + அ – அவ → அவை.

அகரவீறு பிற்காலத்தில் ஐகாரமாகத் திரிந்தது.

அவ் ஒத்தனவே இவ், உவ், எவ் என்பனவும்.

**அவ்வண்ணம்** *a-v-vaṇṇam*, கு.வி.எ. (adv.) *அப்படி;* in that way or manner. "அவ்

வண்ணத் தவர்நிலைமை கண்டும்'' (திவ். திருநெடுந். 21).

[அ (சே.சு.) + வண்ணம் (நிறம், வகை, படி, முறை).]

ம. அவ்வண்ணம்

**அவ்வது** *av-v-adu*, கு.வி.எ. (adv.) *அவ்வாறு*; in that way. ''அவ்வ துறைவ தறிவு'' (குறள், 426).

பட. அத்தெ

[அ (சே. சு.) + அது (கு.வி.எ. ஈறு). அது = ஆறு, வகை.]

**அவ்வமை** *avvamai*, பெ. (n.) இந்துப்பு (சங். அக.); rock salt or sodium chloride used in medicine.

**அவ்வயிறு** *av-vayiṟu*, பெ. (n.) *அழகிய வயிறு*; beautiful belly. ''அவ்வயிற் றகன்ற வல்குல் தைஇ'' (அகநா. 21 : 3).

[அம் = அழகு. அம் + வயிறு – அவ்வயிறு.]

**அவ்வருகு** *av-v-arugu*, பெ. (n.) 1. *அவ்வோரம்*; that border, that edge. 2. *அப்பக்கம்*; that side. 3. *அவ்விடம்*; that place. —, கு.வி.எ. (adv.) 1. *அப்பால்*; beyond, above. 'எண்ணுக்கு அவ்வருகே பெருகியிருக்கிற' (ஈடு, 1. 2 : 10, ஜீ.). 2. *உயர்வாக*; higher than, superior to. 'ஒரு குரங்கை நித்யாச்ரிதை யான பிராட்டிக்கும் அவ்வருகாக நினைத் தான்' (ஈடு. 1. 3 : 1).

[அ = அந்த. அருகு = பக்கம். அவ்வருகு = 1. அப்பக்கம் (பெ.). 2. அப்பால், அப்பாலாக (கு.வி.எ.).]

**அவ்வழி** *av-vaḻi*, பெ. (n.) *அந்தப் பாதை, அந்த வழி*; that path, that way, that route. —, கு.வி.எ. (adv.) 1. *அந்த வகையில், அந்த முறையில்*; in that way, in that manner. 2. *அப்படி வருமிடத்து*; according to that course. ''அவ்வழி ஆவி இடைமை இடமிட றாகும்'' (நன். 75). 3. *அதன்பின்பு*; after that. ''அவ்வழி................உதித்த தன்றே'' (கூர்மபு. வருணாச். 5).

[அ + வழி.]

**அவ்வளவிலவன்மகிழ்கவெனல்** *av-v-aḷavil-avaṉ-magiḻga-v-eṉal*, பெ. (n.) பின்னர் *எதிரியை வெல்லக்கூடிய உறழிற்கு (வாதத் திற்கு) இடமுண்மை கண்டு, அவன் மகிழ்க வென்று தொடக்கத்தில் அவன் கொள்கையை ஒப்புக்கொள்ளும் முறை (நியாயம்)* (சி. போ. சிற். 3 : 6); maxim followed by one who starts with pleasing his opponent by accepting the stand taken by him in an argument knowing fully well that he can eventually bring the opponent round to accept his own point of view.

[அ (அந்த) + அளவில் + அவன் + மகிழ்க + எனல்.]

**அவ்வளவு** *av-v-aḷavu*, பெ. (n.) 1. *அந்த அளவு*; that measurement. அவ்வளவு சரியாயில்லை. 2. *அம்மட்டு*; that limit, that much. அவ்வளவு போதாது. அவன் கத்தியை எடுத்தான்; அவ்வளவுதான்; எல்லோரும் எடுத்தார்கள் ஓட்டம். —, கு.வி.எ. (adv.) *போதிய அளவு*; sufficiently, upto the mark. நீ வாங்கி வந்த பழம் அவ்வளவு இனிமையாயில்லை. நேற்று அவர் ஆற்றிய சொற்பொழிவு அவ்வளவு நன்றாயில்லை.

ம. அவ்வளவு

[அ + அளவு.]

**அவ்வாய்** *av-vāy*, பெ. (n.) *அழகிய இடம்*; beautiful place. ''அவ்வாய் வளர்பிறை சூடி'' (பெரும்பாண். 412).

[அம் (அழகு) + வாய் (இடம்).]

**அவ்வாறு**[1] *av-v-āṟu*, பெ. (n.) 1. *அந்த ஆறு*; that river. 2. *அந்த வழி*; that way. —, கு.வி.எ. (adv.) *அப்படி*; in that way or manner. ''அவ்வாறு பயில்கின்ற வருள்வாரி'' (பாரத. முண்டக. 126).

ம. அவ்வாறு

[அ (அந்த) + ஆறு (மண்ணை யறுத்தோடும் நீர்க்கால், வழி).]

**அவ்வாறு**[2] *av-v-āṟu*, பெ. (n.) 1. *ஆறு ஆறு*; six to each. அறுபதைப் பதின்மருக்குப் பகிர்ந் தால் அவ்வாறு வரும். 2. *தனித்தனி ஆறு*; in sixes, six each. ''ஒவ்வொருத்திக் கவ்வா றாய்'' (திருவிளை. பழியஞ். 4).

[ஆறு + ஆறு – அவ்வாறு (தோன்றல் திரி தல் கெடுதல் மூன்றுங் கொண்ட புணர்ச்சி).]

**அவ்வி-த்தல்** *avvi-*, 4 செ.கு.வி. (v.i.) *பொறுமை நீங்குதல்*; to become intolerant, impatient. ''அவ்வித் தழுக்கா றுடையானை'' (குறள், 167).

# அலைதாடி



ஆடு



மாடு

*[ஒருகா. அவி → அவ்வி. அவிதல் = புழுங்குதல், வேகுதல். அவ்வித்தல் = பொறாது மனம் புழுங்குதல் அல்லது எரிதல்.]*

167ஆம் குறளுரையில், 'மனத்தைக் கோடுவித்து அழுக்காறுடையன் ஆயினானை யென்றுரைப்பாருமுளர்' என்று பரிமேலழகர் இழிவுசிறப்பும்மையால் அப் பொருளின் பிழைபாட்டைக் குறித்திருத்தலால், அவ்வித்தல் என்னுஞ் சொல்லிற்கு, மனத்தைக் கோணச்செய்தல் என்னும் பொருள் கூறுவது பொருந்தாது.

**அவ்விடம்** *av-v-iḍam*, பெ. (n.) *அந்த இடம்*; that place. —, கு.வி.எ. (adv.) *அங்கு*; there, in that place.

ம. அவிடெ; க., படை. ஆயெடெ; தெ. அய்யெட; து. அவுளு.

*[அ + இடம்.]*

**அவ்விதழ்** *av-v-idal*, பெ. (n.) *அழகிய பூவிதழ்*; beautiful petal. ''அவ்வித ழவிழ்பதங் கமழ'' (நெடுநல். *41*).

*[அம் (அழகு) + இதழ். அம் → அவ்.]*

**அவ்விதை** *avvidai*, பெ. (n.) *நேர்வாளம்* (சங். அக.); true croton-oil plant (செ.அக.) — croton seed, *Croton tiglium* (சா.அக.).

**அவ்வை** *avvai*, பெ. (n.) 1. *தாய்*; mother. ''அவ்வைக்கு மூத்த மாமன்'' (சீவக. 1046). 2. *பாட்டி*; grandmother. 3. *கிழவி*; old woman. 'அந்திமழையும் விடாது அவ்வை யாரைப் பிடித்த பிணியும் விடாது' (பழ.). 4. **தவப்பெண்** (சூடா.); woman ascetic. 5. **புகழ்பெற்ற பெண்பாற்புலவரின் பெயர்**; name of a famous poetess. ''அவ்வை பாடலுக்கு'' (பாரத. சிறப்புப்பாயி. 8).

க. அவ்வ, அவ்வெ; தெ., பர். அவ்வ; குட., கொண். அவ்வெ; கோத., துட. அவ்; கோண். அவ்வல், அவ்தாரி.

*[அம்மை → அவ்வை.]*

**அவ்வையன்** *avvaiyan*, பெ. (n.) *கடுக்காய்ப் பிஞ்சு* (சங்.அக.); tender berry of chebulic myrobalan, *Terminalia chebula*.

**அவ்வோ** *avvō*, சு.கு.பெ.எ. (demons. adj.) *அந்தந்த*; each, taken severally. 'அவ்வோ பதார்த்தங்கள்தோறும்' (ஈடு, *1. 1 : 7*).

*[அ + அ — அவ்வ → அவ்வோ. அ = அந்த. 'அவ்வ' பன்மை குறித்த சுட்டுக் குறிப்புப் பெயரெச்ச அடுக்குத்தொடர்.]*

ஈற்றுத் திரிபு தோன்றற் புணர்ச்சியைத் தடுத்துள்ளது. இது மணிப்பவள நடையால் ஏற்பட்டதாதலின், செந்தமிழ் வழக்கிற் கொவ்வாது.

**அவ்வோன்** *avvōn*, சு.பெ. (demons. pron.) *அவன்*; he, that one. ''அவ்வோ னுயிருக் கழிவில்லை'' (பாரத. பதினெட். *111*).

*[அ (சே.சு.) + அன் (ஆ.பா. ஈறு). அவன் → அவ்வன் → அவ்வோன்.]*

**அவக்கரம்** *avakkaram*, பெ. (n.) **யானைக் குடல்** (நாநார்த்த.); elephant's bowels.

**அவக்கவக்கெனல்** *avakkavakk(u)-enal*, பெ. (n.) 1. **விரைவாக உண்ணுங் குறிப்பு**; onom. expr. of gorging, voracity. அவன் அவக்கவக்கென்று சாப்பிடுகிறான். காகம் அவக்கவக்கென்று அரிசியைத் தின்கிறது. 2. **ஓர் ஒலிக்குறிப்பு**; onom. expr. of a repeated explosive sound. அவக்கவக்கென்று நாய் குரைக்கிறது.

*['அவக்கு' ஒலிக்குறிப்பு. 'அவக்கவக்கு' விரைவுத்தொடர்ச்சி குறித்த ஒலிக்குறிப் படுக்குத் தொடர்.]*

**அவக்களி** *ava-k-kaḷi*, பெ. (n.) **பயனற்றவன்** (இ.வ.); useless or worthless person (Loc.).

*[ஒருகா. அவம் (கேடு) + கழி. அவக்கழி → அவக்களி = கேடுகெட்ட கழிசடை.]*

**அவக்காலம்** *ava-k-kālam*, பெ. (n.) 1. **துன்பக் காலம்**; disastrous period, evil days, time of danger. 2. **அழிவுக்காலம்**; period or time of destruction. 3. **ஆகாத** வேளை; inauspicious or unlucky time.

**Mar.** avakāḷa

*[அவம் = கேடு. கால் → காலம்.]*

**அவக்கீர்த்தி** *ava-k-kīrtti*, பெ. (n.) *புகழ்க்கேடு*; infamy, disgrace. ''அவகீர்த்தி யுலகி னிற்ப'' (மச்சபு. பத்திமான். *14*).

ம. அவகீர்த்தி

*[அவம் = கேடு. சீர் → சீர்த்தி → கீர்த்தி.]*

மேற்கோளில் இயல்புபுணர்ச்சி வடமொழி வழக்குத் தழுவியது.

**அவக்குணம்** *ava-k-kuṇam*, பெ. (n.) *கெட்ட தன்மை*; bad quality, evil nature, bad disposition. ''அவகுண விரகனை'' (திருப்பு. 638).

ம. அவகுணம்; க., து. அவகுண; தெ. அவகுணமு; **Mar.** avaguṇa; **Nep.** avaguṇ; **Sinh.** awaguṇa.

*[அவம் (கேடு) + குணம்.]*

மேற்கோளில் இயல்புபுணர்ச்சி வடமொழி வழக்குத் தழுவியது.

**அவக்குறி** *ava-k-kuṟi*, பெ. (n.) **கேடுகாட்டுங் குறி**; sign of approaching calamity, portent.

*[அவம் (கேடு) + குறி.]*

**அவக்கேடு** *ava-k-kēḍu*, பெ. (n.) **பெருந்தீங்கு**; calamity, great disaster.

ம., க., து. அவகுட; தெ. அவகுடமு; **Mar.** avagaḍa.

*[அவம் = கேடு. 'அவக்கேடு' மீமிசைச் சொல்.]*

**அவக்கொடை** *avak-k-koḍai*, பெ. (n.) **தகாதவர்க்குச் செய்யுந் தானம்**; gift made to unworthy persons.

*[அவம் (கேடு) + கொடை. கொடு → கொடை.]*

கொலைகாரனுக்குப் பரிசும் கொள்ளைக்காரனுக்குப் படைக்கலமுங் கொடுப்பது போன்றது அவக்கொடையென்றும், முல்லைக் கொடிக்குத் தேரும் குருடனுக்கு விளக்கும் கொடுப்பது போன்றது கொடைமடம் என்றும் வேறுபாடு குறிக்கலாம்.

**அவக்கொலை** *ava-k-kolai*, பெ. (n.) **தீய சாவு**; unnatural death from accident, suicide, murder, etc. (சா.அக.).

*[அவம் (கேடு) + கொலை. கொல் → கொலை. 'ஐ' தொ.பெ. ஈறு.]*

**அவச்சா** *ava-c-cā*, பெ. (n.) **அவக்கொலை** பார்க்க; see *ava-k-kolai* (சா.அக.).

**அவச்சாடை** *ava-c-cāḍai*, பெ. (n.) **கேடுணர்த்துங் குறி** (இ.வ.); evil or inauspicious omen, portent (Loc.).

*[அவம் (கேடு) + சாடை. சாடு → சாடை = சாயை. சாடுதல் = சாய்தல்.]*

**அவச்சாயை** *ava-c-cāyai*, பெ. (n.) 1. **நிழலற்றவுருவம்**; shadowless being, as a deity or celestial being. 2. **சாவுக்குறி**; a sign of death. 3. **நிழலை யளந்து நாழிகை கணிப்பதில் மாதத்திற்குரிய தள்ளுபடி நிழலளவு**; monthly deduction from the length of one's shadow, varying with the time of the year, made in calculating the hour of the day.

ம. அபச்சாய; **Mar.** apaccāya.

*[அவம் (கேடு) + சாயை. சாய் → சாயை = நிழல். சாய்தல் = கோணுதல், சாய்ந்து விழுதல். அவச்சாயை > **Skt.** apacchāyā.]*

**அவம், சாயை** பார்க்க; see *avam, cāyai*.

**அவச்சாவு** *ava-c-cāvu*, பெ. (n.) **தீய அல்லது அகாலச் சாவு**; unnatural or premature death.

*[அவம் + சாவு.]*

**அவச்சின்னம்** *ava-c-cinnam*, பெ. (n.) 1. (ஏர.) **குறிப்பிட்டு வேறுபடுத்தப்பட்டது**; (Log.) that which is distinguished or differentiated. 2. **தீக்குறி**; evil sign, portent.

*[அவம் (கேடு) + சின்னம். சில் → சின் → சின்னம்.]*

**சின்னம்** பார்க்க; see *śinnam*.

**அவச்சுழி** *ava-c-cuḻi*, பெ. (n.) 1. **தீய சுழி**; a mark of swirling hair or lines on the body, portending evil. 2. **தீயூழ்** (உ.வ.); evil fate (Com.u.).

*[அவம் (கேடு) + சுழி. சுல் → சுள் → சுளி → சுழி. சுழித்தல் = வளைத்தல், வட்டமாகத் திரித்தல், வட்டம் வரைதல். சுழி = வட்டம், வட்டக் குறி.]*

உடம்பிலுள்ள சுழிகள் நன்மையும் தீமையுங் காட்டுங் குறிகள் என்பது குறிநூற் கொள்கை. மக்கள் நம்பிக்கையும் அது. அதனால் தீச்சுழி தீயூழ்ப் பெயராயிற்று.

**அவச்சொல்** *ava-c-col*, பெ. (n.) **அமங்கலச் சொல்**; inauspicious word.

*[அவம் (கேடு) + சொல்.]*

**அவசம்** *a-vaśam*, பெ. (n.) **தன்வசப்படாமை**; being beside oneself, not having one's own free will, bewilderment. "ஆவிய தில்லா ளென்ன வவசமாய்" (கந்தபு. தக்க. வள்ளியம். 153).

*[அல் → அ. வை → வயம் → வசம்.]*

**அவசி** *avaśi*, பெ. (n.) **நச்சறுப்பான்** (தைலவ. தைல. 72); Indian ipecacuanha (செ.அக.) — **கழுதைப்பாலை அல்லது நஞ்சறுப்பான்**; common Indian ipecacuanha, *Tylaphora asthmatica* (சா.அக.).

**அவட்டம்** *avaṭṭam*, பெ. (n.) 1. **நாய்வேளை** (சங்.அக.); a species of cleome (செ.அக.) — dog-mustard plant, *Cleome viscosa* (சா.அக.). 2. **வால்மிளகு**; tail-pepper, *Piper cubeba* (சா.அக.).

**அவத்தம்** பார்க்க; see *avattam*.

**அவடம்பதி** *avaḍambadi*, பெ. (n.) **வசம்பு** (சங். அக.); sweet flag (செ.அக.) — **அவடம்பாதி**; sweet flag, *Acorus calamus* (சா.அக.).

**அவண்** *avaṇ*, கு.வி.எ. (adv.) 1. **அவ்விடம், அங்கு**; there. "அரைசெலா மவண மணி யெலா மவண" (கம்பரா. பால. நகரப். 7). 2. **அவ்வகை**; in that manner. "அற்றது மாயையு மற்றறி யவணே" (ஞானா. 22).

க. அவம்; து. அவுளு.

[அ + அண்.]

**அவணம்** *avaṇam*, பெ. (n.) **இருபதினாயிரம் கொட்டைப்பாக்கு**; a measure = 20,000 areca-nuts (W.).

ம. அவணம்

[அமணம் → அவணம்.]

**அவணன்** *avaṇaṉ*, பெ. (n.) 1. **திண்ணியன்**; stalwart. 2. **சொற்செல்வுள்ளவன்**; man of influence.

[ஒருகா. அவுணன் (அசுரன்) → அவணன்.]

**அவணி** *avaṇi*, பெ. (n.) **நன்மை**; benefit (R.).

**அவணியம்** *avaṇiyam*, பெ. (n.) **கடைத்தெரு** (புதுவை); bazaar (Poṇḍ.).

[ஒருகா. ஆவணம் → அவணியம்.]

**அவத்தம்**[1] *avattam*, பெ. (n.) 1. **கேடு**; evil, calamity. "அவத்தங்கள் விளையும்" (திவ். திருவாய். 10 . 3 : 9). 2. **பயனற்றது**; that which is useless, vain. "அல்லல் வாழ்க்கை யுய்ப்பதற் கவத்தமே பிறந்துநீர்" (தேவா. 2 . 233 : 6).

[அவம் (கேடு, வீண்) → அவத்தம்.]

**அவத்தம்**[2] *avattam*, பெ. (n.) **நாய்வேளை** (மூ.அ.); species of cleome.

[அவம் → அவத்தம்.]

மறுவ. அவட்டம்

**அவத்தன்** *avattaṉ*, பெ. (n.) **பயனற்றவன்**; useless person. "மருட்கொண் டழியு மவத் தன்" (திருப்பு. 333).

ம. அவதாளன்

[அவம் → அவத்தம் → அவத்தன்.]

**அவத்தாளம்** *ava-t-tāḷam*, பெ.(n.) (இசை) **தாளப் பிசகு**; (Mus.) error in *tāḷam*. 'தாள வியல்பு பொலிவுபெற அவதாளம் நீங்க' (சிலப். 3 : 135 - 6, அடியார்க். உரை).

ம. அவத்தாளம்

[அவம் → அவத்தம்.]

மேற்கோளில் இயல்புபுணர்ச்சி வடமொழி வழக்குத் தழுவியது.

**அவத்துறை** *ava-t-tuṟai*, பெ. (n.) **தீய வழி**; evil way. "அவத்துறை போய நெஞ்சத் தக்கனாங் கறைந்திட் டானே" (கூர்மபு. தக். வே. 7).

[அவம் = கேடு, தீமை. துறு → துறை = பிரிவு, நெறி.]

**அவத்தூறு, அவதூறு** *ava-t-tūṟu, ava-dūṟu*, பெ. (n.) **பழிப்பு**; vilification, slander, ill-report, defamation.

க., தெ. அபதூரு.

[அவம் = கேடு, தீங்கு. துறு → தூறு = தூறல், தூற்றல்.]

பழிச்சொற்களைப் பரப்புவது, முகில் மழைத்துளிகளைச் சிதறுதல் போலிருத்த லால், பழிப்பு அவதூறெனப்பட்டது. உலக வழக்கிலுள்ள இயல்புபுணர்ச்சி வடமொழி வழக்குத் தழுவியது.

**அவந்தன்** *avandaṉ*, பெ. (n.) **பயனற்றவன்**; useless or worthless man. "நின்மக னவந் தனாய் வெறுநிலத் திருக்க லான போது" (கம்பரா. அயோத். மந்தரை. 63).

[அவம் (கேடு, வீண்) → அவத்தம் → அவத்தன் → அவந்தன்.]

**அவந்தி** *avandi*, பெ. (n.) 1. **கோவை** (பச்.மூ.); Indian caper. 2. **ஒரு நாட்டின் பெயர்**; name of a country.

**அவந்திக்கண்ணி** *avandi-k-kaṇṇi*, பெ. (n.) **வெருகஞ்செடி** (மலை.); a plant with bulbous roots, *Arum macrorhizon* (சா.அக.).

**அவநம்பிக்கை** *ava-nambikkai*, பெ. (n.) **நம்பிக்கையின்மை, ஐயுறவு**; disbelief, distrust, suspicion, doubt.

து., கொங். அபநம்பிகெ.

*[அவம் (கேடு) + நம்பிக்கை. நம்பு → நம்புகை → நம்பிகை → நம்பிக்கை (தொ.பெ.). 'கை' தொ.பெ. ஈறு.]*

**அவநெறி** *ava-neṟi*, பெ. (n.) **தீயவழி, கரிசு(பாவ) நெறி**; evil way, way of sin. "அவநெறியிற் செல்லாமே தடுத்து" (பெரியபு. தடுத்தாட். 79).

*[அவம் (கேடு, தீங்கு) + நெறி. நெள் → நெரு → நெரி → நெறி = நெருங்கிச் செல்லும் வழி.]*

**அவப்படு-தல்** *ava-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **பயனற்றதாதல்**; to become useless. "அருந்தவ மவப்படா தருளி" (உபதேசகா. சூராதி. 129).

*[அவம் (கேடு, வீண்) + படு. படுதல் = பொருந்துதல், நேர்தல்.]*

**அவப்பேர்** *ava-p-pēr*, பெ. (n.) **கெட்ட பேர், அவக்கீர்த்தி, புகழ்க்கேடு**; bad name, ill-fame, bad reputation.

*[அவம் (கேடு) + பேர். பெயர் → பேர் = புகழ்.]*

**அவப்பொழுது** *ava-p-poḻudu*, பெ. (n.) **வீண் காலப்போக்கு**; mis-spent time. 'அவப் பொழுதிலும் தவப்பொழுது நல்லது' (பழ.). "அவப்பொழு தகல விருப்பதென் விருப்போ" (வைராக். தீப. 18).

*[அவம் + பொழுது. அவம் = கேடு, வீண்.]*

**அவபத்தி** *ava-patti*, பெ. (n.) 1. **பத்தியின்மை**; impiety. 2. **மூடப்பத்தி** (வின்.); superstition.

*[அவம் (கேடு)+பத்தி. பகு → பா → பாத்தி → பத்தி = பாற்படுதல், பற்றுக்கொள்ளுதல். பகு > Skt. bhaj. ஒ.நோ: புகு > Skt. bhuj. பத்தி > Skt. bhakti. இனி, பற்று → பற்றி → பத்தி எனினுமாம்.]*

**பத்தி** பார்க்க; see *patti*.

அவப்பத்தி என்பது, வடமொழி வழக்கைப் பின்பற்றி அவபத்தி என இயல்புபுணர்ச்சி கொண்டது.

**அவம்** *avam*, பெ. (n.) 1. **கேடு**; evil, destruction. "அவஞ் செய்வா ராசையுட் பட்டு" (குறள், 266). 2. **வீண், பயனின்மை**; vanity, uselessness, nothingness. 3. **வானத் (ஆகாயத்) தாமரை**; floating lotus or sky lotus, *Pistia stratiotes* alias *Tala indica*. It is also called 'The rootless nelumbo' since its roots only float on water (சா.அக.).

*[அவி → அவம் (தொ.பெ.). 'அம்' தொ. பெ. ஈறு. அவிதல் = வேதல், அழிதல், கெடுதல், அணைதல், சாதல். அவம் = அழிவு, கேடு. அவம் → அவ (முன்னொட்டு) > **Skt.** apa (upasarga).]*

**ஒ.நோ**: உவத்தல் = ஒத்தல். உவமை = ஒப்பு. உவமை > **Skt.** upamā. உவ > **Skt.** upa = உடன், கூட, துணையான, உதவியான.

இங்ஙனம் தமிழ் முன்னொட்டுகள் ஆரிய மொழிகளில் உபசர்க்கங்கள் (prefixes) ஆவதை, முன்னொட்டு என்னும் உருப்படியிற் காண்க.

**அவமதி-த்தல்** *ava-madi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **இகழ்தல், மதிப்புக்குறைவாக நடத்துதல்**; to insult, to disgrace, to treat with disrespect or contempt. "பரனைக் குருவை யவமதித் தோர்" (தணிகைப்பு. அகத். 336).

*[அவம் (கேடு) + மதி. மத்து (மட்டு) = அளவு. மத்து → மத்தி. மத்தித்தல் = அளவிடுதல். மத்தி → மதி. மதித்தல் = அளவிடுதல், தகுதியறிதல், மானஞ்செய்தல், பெருமைப்படுத்துதல்.]*

**அவமதி** *ava-madi*, பெ. (n.) **அவமானம்**; disregard, disgrace, contempt. "இழிஞன் புலைக் கரந் தீண்டி யென்னை யவமதி செய்திட" (காஞ்சிப்பு. பரசிரா. 42).

**ம., க., தெ.** அவமதி; **து.** அவமான.

*[அவம் + மதி (மதிப்பு, மானம்). அவமதி > **Skt.** ava-mati.]*

**அவமதி-த்தல்** பார்க்க; see *ava-madi-*.

**அவமதிச்சிரிப்பு** *ava-madi-c-cirippu*, பெ. (n.) **இகழ்ச்சிநகை** (திவா.); derisive laughter.

*[அவம் + மதி + சிரிப்பு. சிரி → சிரிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]*

**அவமதிப்பு** *ava-madippu*, தொ.பெ. (vbl.n.) **இகழ்ச்சி**; disregard, disrespect, derision, contempt.

*[அவம் + மதிப்பு. மதி → மதிப்பு (தொ.பெ.) 'பு' தொ. பெ. ஈறு.]*

**அவமழை** *ava-maḻai*, பெ. (n.) 1. **கேடு விளைக்கும் மழை**; destructive or injurious rain (W.). 2. **அகால அல்லது பயனற்ற மழை**; unseasonable or unwanted rain.

**அவமாக்கு-தல்** *avam-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) **வீணாக்குதல்**; to waste, make useless.

*[அவம் + ஆக்கு. ஆகு (த.வி.) → ஆக்கு (பி.வி.).]*

**அவமானம்** *ava-mānam*, பெ. (n.) **மதிப்புக்கேடு, அவமதிப்பு**; disrespect, dishonour, contempt. "ஐயனேயின் றமணர்கள் தாமென்னை யவமானஞ் செய்ய" (பெரியபு. தண்டி. *11*).

ம. அவமானம்; க., பட. அவமான; தெ. அவமானமு; து. அபமான; **Mar.** avamāna; **Pali** avamānam.

அவமானம் > **Skt**. ava-māna.

*[அவம் (கேடு) + மானம். மாத்தல் = அளத்தல். மா + அனம் – மானம் (அளவு, அளவீடு, மதிப்பு).]*

**அவமானி-த்தல்** *ava-māni-*, 4 செ.குன்றாவி. (v.t.) **அவமதித்தல், அவமானப்படுத்துதல், மதிப்புக்குறைவாக நடத்துதல்**; to despise, disgrace, treat with contempt. "அவையினி லவமானித்த பாதகன்" (நல்.பாரத.சொர்க்க. தெரி. *31*).

ம. அவமானிக்குக; க. அவமானிசு; தெ. அவமானிஞ்சு; து. அபமானமுள்புனி.

*[அவம் + மானி. மானம் (பெ.) → மானி (வி.) ஒ.நோ : தீர்மானம் → தீர்மானி.]*

**அவமிதம்** *avamidam*, பெ. (n.) **பொற்றலைக் கையாந்தகரை**; marygold verbesina, *Wedelia calendulacea* (சா.அக.).

**அவயக்கோழி** *avaya-k-kōḻi*, பெ. (n.) **அவையக் கோழி** பார்க்க; see *avaiya-k-kōḻi*.

**அவயங்காத்தல்** *avayaṅ-k-kāttal*, பெ. (n.) **அவையங்காத்தல்** பார்க்க; see *avaiyaṅ-kāttal*.

**அவயம்** *avayam*, பெ. (n.) **அவையம்**[1] 4 பார்க்க; see *avaiyam*[1] 4.

**அவர்** *avar*, சே.சு.பெ. (rem. demons. pron.) 1. **பலர்பாற் சேய்மைச் சுட்டுப்பெயர்**; rem. demons. pron. and pl. of 'he' or 'she'. அதோ! அவர் வருகிறார். 2. **முன் சொல்லப் பட்டவரைக் குறிக்கும் பலர்பாற் சேய்மைச் சுட்டுப்பெயர்**; masc. pl. demons. pron. referring to antecedent noun or nouns. பண்டைக் காலத்தில் தமிழகத்தைச் சேர சோழ பாண்டியர் ஆண்டனர்; அவர் காலத்திற் பெரும்பாலுஞ் செங்கோலாட்சி நிலவியது. 3. **ஒருவரைக் குறிக்கும் உயர்வுப்பன்மைச் சொல்**; that person, honorific term. அவர் ஓர் ஆசிரியர்.

ம., க., துட. அவர்; தெ. வாரு; து. ஆரு; குட. அவு; கோத. அவ்ர்; கோண். அவ், ஆர்; கொலா. அவ்ர், அவுர்; குவி அவரு; கூ. ஒரு; பர். ஓர்; குரு. ஆர்; கை. ஆவுங்; கொர. அவ்த், ஆக; எரு. அவல்லு; இரு. அதுரு; பட. அவக.

*[அ (சே.சு.) → அவர். 'அர்' ப.பா. ஈறு. 'வ்' உடம்படுமெய்.]*

**அவர்கள்** *avargaḷ*, சே.சு.பெ. (rem. demons. pron.) 1. **பலர்பாற் சேய்மைச் சுட்டுப்பெயர்**; pl. demons. pron. denoting persons at a distance. அதோ பார்! அவர்கள் யார்? 2. **முன் சொல்லப்பட்டவரைக் குறிக்கும் பலர்பாற் பெயர்**; pl. demons. pron. referring to persons mentioned before. அண்மையில் நிகழ்ந்த இலங்கைக் கலகத்தில் ஆயிரக்கணக்கானவர் கொல்லப்பட்டனர்; அவர்களனைவரும் தமிழரே. 3. **ஒருவரைக் குறிக்கும் உயர்வுப் பன்மைச் சொல்**; that person, honorific term. இந்தியெதிர்ப்பை மறைமலையடிகள் தொடங்கி வைத்தார்கள்; உண்மைத் தமிழர் அனைவரும் அவர்களைப் பின்பற்றினார்கள். 4. **ஒருவர் பெயருக்குப் பின் சேர்க்கப்படும் மதிப்புச் சொல்**; honorific term appended to a name. மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய தமிழ்த்தாய் வாழ்த்து, தமிழ் இனத்திற்குப் பள்ளி யெழுச்சிப் பாடல் போல் உணர்ச்சி யூட்டியது. 'ஆநந்த நமசிவாய பண்டார மவர்களுக்கு' (S.I.I. i, 85).

*[அ → அவர் → அவர்கள். 'கள்' பன்மையீறு; சிறுபான்மை உலகவழக்குப் பலர்பாலீறு. 'அவர்கள்' இரட்டைப் பன்மை.]*

**அவரை** *avarai*, பெ. (n.) **பெரும்பான்மை வெளிறின பசுமை நிறமாகவும் சிறுபான்மை வெண்மை செம்மை நிறமாகவும், பல்வேறு வடிவிலும் இரு விரலம் (inch) முதல் எண் விரலம் வரை பல்வேறு அளவில் இருப்பதும், பொதுவாக வீட்டுப்புறங்களில் விளைக்கப்படுவதும், இவர்கொடியிலேனும் (climber) படர் கொடியிலேனும் (creeper) சிறுபான்மை குத்துச் செடியிலேனும் (shrub) மாரிக்காலத்திற் காய்ப்பதும், உடல்நலத்திற் கேற்றதும் சுவையுள்ள**

தும் எல்லாராலும் விரும்பப்படுவதுமான கறி வகைக் காய்; field bean, cl. *Dolichos lablab.*

"ஆய்மக ளட்ட வம்புளி மிதவை
யவரை கொய்யுந ராரமாந்தும்"
(புறநா. 215 : 4 - 5).

அவரைவகைகள் :

1. ஆட்டுக்கொம்பவரை - *āṭṭu-k-komb(u)-avarai*: ஆட்டுக்கொம்புபோன்ற அவரைவகை; a variety of field bean resembling goat's horn.
2. ஆரால்மீனவரை - *āral - mīn - avarai*: ஆரால்மீன்போன்ற அவரைவகை; a variety of field bean resembling sand-eel.
3. ஆனைக்காதவரை - *āṉai-k-kād(u)-avarai*: ஆனைக்காதுபோன்ற அவரைவகை; a variety of field bean resembling elephant's ear.
4. கணுவவரை - *kaṇu-v-avarai*: கணுக்களிற் காய்க்கும் அவரைவகை; a variety of field bean that bears fruit in its joints.
5. கொழுப்பவரை - *koḻupp(u)-avarai*: குட்டையாகவுங் கொழுமையாகவு முள்ள அவரைவகை; a variety of field bean that is short and fleshy.
6. கோழியவரை (கோழிக்காலவரை) - *kōḻi-y-avarai* (*kōḻi-k-kāl-avarai*): கோழிக் கால்போன்ற அவரைவகை; West Indian sea-side bean, m. cl. *Canavalia obtusifolia* (A.) (செ.அக.) — cock-bean (சா.அக.).
7. சப்பரத்தவரை - *šapparathavarai*, shed-bean, *Cyamopsis psorolioides* (சா.அக.).
8. சிவப்பவரை (செவ்வவரை) - *šivapp(u)-avarai* (*ševvavarai*), red variety of field bean.
9. தீவாந்தரவவரை - *tīvāndara - v - avarai*: கீழைத் தீவுகளிலிருந்து கொண்டுவரப் பட்ட அவரை; a bean from the eastern islands (W.).
10. நகரவரை - *nagar-avarai*: அவரைவகை; a kind of bean, *Dolichos rugiosus* (W.).
11. பாலவரை (வெள்ளவரை) - *pāl-avarai* (*vel-l-avarai*): பால்போல் வெள்ளை நிற மான அவரைவகை; white variety of field bean, *Dolichos lablab* (செ.அக.).

 2. ஓர் அவரைவகை; a species of Egyptian bean (W.). "அவரைக் கொழுங் கொடி விளர்க்காய் கோட்பத மாக" (புறநா. 120 : 10 - 11).
12. பூனைக்காலவரை - *pūṉai - k - kāl - avarai*: பூனைக்கால் போன்ற அவரை; cat-footed bean.
13. பேரவரை - *pēr (peru) - avarai*: பெரிய அவரைவகை; a large species of Egyptian bean (W.).
14. மணியவரை (சிற்றவரை) - *maṇi-y-avarai*: சிறுத்து உருண்டு நீண்ட அவரை வகை; a small variety of field bean roundish in cross section.
15. முறுக்கவரை - *muṟukk(u)-avarai*: திருகல் முறுகலான அவரைவகை; goa bean, l.sh., *Psophocarpus tetragonolobus* (A.) (செ. அக.) — curling bean (சா.அக.).

அவரை யகவினம் (Species allied to field bean)

1. கப்பலவரை; French bean.
2. காட்டவரை; Wild bean, *Dolichos*.

கொழுப்பவரை போன்றுள்ள மொச்சை (சேலம் வழக்கு); பெரும்பாலும் வீட்டுப்புறத் தில் விளைவிக்கப்படும் அவரையை நோக்கி, மொச்சை காட்டவரை யெனப்பட்டது.

கொழுப்பவரைக்கும் காட்டவரைக்கும் வேறுபாடு

| | கொழுப்பவரை | காட்டவரை |
|---|---|---|
| அ. | பொதுவாக வீட்டுப்புறத்தி லேயே விளைக் கப்படுவது. | எப்போதும் காட்டுப் புறத்திலேயே விளைக் கப்படுவது. |
| ஆ. | நெடுங்கொடி யாகப் படர் வது. | குறுங்கொடியுள்ள குத்துச்செடியாக வளர்வது. |
| இ. | இளங்காய் கறி யாகச் சமைக்கப் படுவது. | முதிர்ந்த விதை மட்டும் பசுமையாக வும் காய்ந்ததாகவும் அவித்தும் கறியாகச் சமைத்தும் உண்ணப் படுவது. |
| ஈ. | காய்த்தோல் மெல்லியது. | காய்த்தோல் வல்லியது. |

| | |
|---|---|
| உ. எங்கும் அவரை யென்றே வழங்குவது. | சேலம் வட்டாரத்தில் மட்டும் காட்டவரை யென்றும், பிறவிடங் களில் மொச்சையென் றும் வழங்குவது. |
| ஊ. காய்ந்த விதை பொதுவாகக் கருப்பாகவே யிருப்பது. | காய்ந்த விதை வெள்ளை சிவப்பு கருப்பு என்னும் முந்நிறத்திலு முள்ளது. |

காட்டவரை; wild beans. காட்டுமொச்சை; lablab vulgaris (L.) (W.) — காட்டவரை; jungle-bean, *Glycina javanica* (சா. அக.). காட்டவரை, காட்டுமொச்சை; country bean, *Dolichos lablab* (மூ.அ.) (செ.அக.).

3. *சீமையவரை* (*வெளிநாட்டவரை*)-foreign bean. சீமையவரை; foreign bean, *Phaseolus trilobus* (சா.அக.) — சீமை யவரை; field gram, *Phaseolus vulgaris.* அவரைவகை (A.) (செ.அக.).

*அவரைப்புறவினம்* (Species different from field bean)

(அ) *சீனியவரை* (*கொத்தவரை*): செடிவகை; cluster - bean, a shrub, *Cyamopsis psorolioides* (செ. அக.) — சீனியவரை; China-bean (சா.அக.).

சீனியவரை யென்பது பாண்டிநாட்டு வழக்கு. கொத்தவரை யென்பது சோழ நாட்டு வழக்கு. சீன நாட்டினின்று வந்ததனாற் சீனியவரை யெனப்பட்ட தென்பர். அவரையை நோக்கச் சிறிதா யிருப்பதனாற் சீனியவரை யென்று பெயர் பெற்றிருக்கலாம். சில் → சின் → சின்னி → சீனி. சின்னமிளகாய் சீனிமிளகாய் என்றும், சின்னவெடி சீனி வெடி யென்றும், பெயர்பெற்றிருத்தல் காண்க. கொத்துக்கொத்தாய்க் காய்ப் பதனாற் கொத்தவரை யெனப் பட்டது. இது பித்தத்தை மிகுவிப்பது.

"கொத்தவரைக் காய்பித்தங்
கூடாது பத்தியத்தின்
மெத்தனவு மையம் விளைக்குங்
காண் — பித்தத்தால்
சீத மகற்றிவிடும் தின்மருந்தைப்
பாழாக்கும்
வாதக் குடைச்சறரு மால்"
(பதார்த்த. 720).

(ஆ) *சுடலையவரை*: இயற்கையாக விளை வதும், சீனியவரை போன்றதும், சுடு காட்டுப் பக்கத்தில் மிகுதியாகக் காணப்படுவதும், உண்ணப்படாதது மான காய்வகை; a species of inedible bean growing wild, generally near burning grounds. சுடலை = சுடுகாடு.

இதுவே தகரை (cassia tora) யெனப் படுவது. இது தோல் நோய்வகை கட்குச் சிறந்த மருத்துவ மூலிகையாகச் சொல்லப்படுகின்றது.

**தகரையின் குணம்**

"தகரை படர்தா மரையைச் சொறியைத்
தகர வடிக்குமந்தந் தன்னோ — டிகலான
அத்தி சுரத்தையு மதஞ்செய்யு மிம்மூலி
யுத்தமமா மென்றே யுரை"
(பதார்த்த. 249).

**தகரைவித்தின் குணம்**

"வண்டு கடியுடனே வன்கடுவ னும்பலவாம்
பண்டு நமைபுடையும் பண்டிதர்கள்
— கண்டுரையாப்
பித்த கனலும் பெருத்த தகரவிதைச்
சித்தரைய னில்லா திசை"
(பதார்த்த. 825).

(இ) *வாளவரை*: sword-bean. வாள்போல் தட்டையாக நீண்டிருப்பது வாள வரை. இதற்குச் சாட்டவரை, தம்பட் டவரை, பாடவரை என்றும் பெயருண்டு. வாளவரை; lablab cultratus (L.) (W.) — கொடிவகை; sword-bean, m.cl., *Canavalia ensiformis* (செ.அக.) — sword bean, *vigna catiang* (சா.அக.).

"அதிபித்தம் வாந்தி யரோசகமு
முண்டாம்
குதிவாதம் வாய்ச்சுரப்புங் கூடும் —
துதிசக்ர
வாளவரை யொத்த வனமுலை
யே! பசிய
வாளவரைக் காயான் மதி"
(பதார்த்த. 742).

(ஈ) *பேயவரை*: இதைப்பற்றி அகரமுதலிகள் வெவ்வேறு வகையாகக் கூறுகின்றன. பேயவரை - கோழியவரை; s. a kind of bean used in medicines, *Canavalia gladiata* (W.) — பேயவரை - 1. sword-

bean. கோழி யவரை[1] பார்க்க; see *kōḻi-y-avarai*[1]. 2. பொன்னாவிரை; fetid cassia (செ.அக.) — பேயவரை; horse-bean, *Canavalia ensiformis* (சா. அக.).

ம. அவர, அமர; க. அவரி, அவரெ, ஆவரெ; அமார; பட. அவரெ; கோத. அவ்ர்; துட. எவிர்; து. அவரெ, அபரெ, common country bean, *Lablab vulgaris*. அவடெ, ஆவடெ, அபடெ, a kind of bean — (D.E.D.).

*[அம்முதல் = அமுங்குதல், பள்ளமாதல், தாழ்தல், தட்டையாதல். அமல் → அவல் = 1. பள்ளம். 2. தட்டையாக இடித்த அரிசி. அவல் → அவலை → அவரை = தட்டையான அல்லது சப்பையான காய்வகை. கத்தரி, சுரை, பாகல், பீர்க்கு, புடலை, பூசணி, முருங்கை, வாழை, வெண்டை முதலிய பிற காய்கள் எல்லாவற்றோடும் ஒப்பு நோக்க அவரை யொன்றே தட்டையாயிருத்தல் காண்க.]*

அவரக்கா (அவரைக்காய்) என்னும் கொச்சைத் தமிழ்ச்சொல், மலையாளத்தில் அவரக்க என்றும் அமரக்க என்றும் திரிந்துள்ளது. அக் கொச்சை வடிவுகள் அவரைக் காய் என்றன்றி அவரையென்று பொருள் படா.

அவரைக்குச் சிக்கடி, முதிரை என்று ஈரிலக்கிய வழக்குப் பெயர்கள் உள்ளன. "அவரை சிக்கடி" (பிங். 9 : 308).

சிக்கடி என்பது தெலுங்கிற் சிக்குடு என்று வழங்குகின்றது.

'அவரைப் பிஞ்சின் குணம்' என்னும் தலைப்பின்கீழ்,

"கங்குலுண விற்குங்
கறிக்கு முறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர்
புண்சுரத்தோர் — தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லைநோய்க்
காரருக்குங் காமுறையா
வெண்முதிரைப் பிஞ்சாம் விதி"

என்று 'பதார்த்தகுண சிந்தாமணி' (697) கூறுகின்றது. இதன் உரையில் 'வெண் முதிரைப் பிஞ்சு' என்னுந் தொடருக்கு 'வெள்ளை யவரைப்பிஞ்சு' என்று பொருள் உரைக்கப்பட்டுள்ளது.

"முதிரை வாலூன் வல்சி," 55ஆம் பதிற்றுப்பத்துப் பாட்டின் 7ஆம் அடியில் வரும் முதிரை யென்னும் சொல்லிற்கு, 'முதிரை யென்றது அவரை துவரை முதலாயினவற்றை' என்று குறிப்புரை வரையப் பட்டிருப்பதால், முதிரை யென்பது பயற்று வகைப் பொதுப்பெயராகவும் வழங்கினமை தெரிகின்றது.

இனி, 335ஆம் புறப்பாட்டில் "பொறிகிளரவரை" யென்றிருப்பதால், புள்ளியுள்ள அவரைவகை யொன்றிருந்ததென்று கொள்ளவும் இடமுண்டு.

*பழமொழிகள் :*

'அவரை போட்டால் துவரை முளைக்குமா?', 'ஆடிமாதம் அவரை போட்டால் கார்த்திகை மாதம் காய்.'

*சிறுகுறிப்புகள் :*

மேலை வடார்க்காட்டுப் பாங்கர் கொத்தவரை யென்னும் பெயர் குத்தவரை யென்றும் வழங்குகின்றது.

சில அகரமுதலிகள், கோழியவரையை வாளவரை யென்று குறித்திருப்பது தவறாகும்.

"கொட்டையவ ரைக்காயாற் கோரவ
ரோசகநோய்
கிட்டாதென் பார்மருந்தின் கீர்த்திகெடும்
— துட்டமந்தம்
பையவுண்டாம் பேதியுண்டாம் பாரிப்
பனிலமுண்டாம்
ஐயுமுண்டாம் சூலையுமுண் டாம்"

என்று ப.கு.சி. (741) கூறியிருப்பதால், வித்து முதிர்ந்த அவரைக்காய் அவரைப் பிஞ்சுபோல் அத்துணை நன்றன்று என்று தெரிகின்றது.

**அவல்** *aval*, பெ. (n.) 1. **பள்ளம்**; shallow depression. "அவலிழியினு மிசையேறினும்" (புறநா. 102 : 3). 2. **விளைநிலம்**; cultivated land. "மெல்லவ லிருந்த வூர்தொறும்" (மலைபடு. 450). 3. **குளம்**; tank (சது.). 4. **நெல்லை ஊறவைத்து வறுத்திடித்த தின்பண்டம்**; paddy soaked in water and then fried and flattened. "பாசவ லிடிக்கும் இருங்கா ழுலக்கை" (அகநா. 141 : 18).

ம., க. அவல்; தெ. அடுகுலு; குட. அவ்ல் அக்கி.

*[அம் → அம்மி = அமுக்கியரைக்குங் கல். அம்முதல் = அமுங்குதல், பள்ளமாதல், தாழ்வாதல், தட்டையாதல். அம் → அமல் → அவல் =*

## அவரை



ஆரால்மீனவரை



ஆனைக்காதவரை



இருவித்தவரை



இறகவரை



கணுவவரை



கப்பலவரை



கருப்பவரை

பள்ளம், பள்ளமான விளைநிலம் அல்லது குளம், தட்டையான அவல். ஒ.நோ : சும → சுமல் → சுவல் = சுமக்குந் தோட்பட்டை.]

பள்ளம் என்பது தாழ்ந்தமட்டமாதலால், குட்டை தட்டையானவற்றையுங் குறிக்கும். எ-டு : பள்ளி = தாழ்ந்தமட்டமான படுக்கை. பள்ளையாடு = குள்ளமான ஆட்டு வகை. பள்ளையன் = குறுகிப் பருத்தவன். குள்ளம் உயரத்திற் குறுகியது. அதுவே தட்டை. அரிசியை நோக்க அவல் தட்டையா யிருத்தல் காண்க.

அவலிடிக்கும் வகை

அன்றறுத்த பச்சைநெல்லை அல்லது ஊற வைத்த உணந்த நெல்லை வறுத்து, மரவுரலில் இட்டு விரைந்திடித்து உமியைப் போக்கினது அவல்; newly reaped fresh paddy or well soaked dried paddy is fried in a shallow earthen pot till one or two grains begin to pop. It is thereafter pounded quickly in a wooden mortar till the grain is flattened, and separated from the husk.

அவைத்தல் = நெல் அரிசி முதலியவற்றைக் குற்றுதல். "ஆய்தினை யரிசி யவையல்" (பொருந. 16), "தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்.............அவைப்பார்" (சிலப். 29, வள்ளைப்.). அவைத்தல் என்னுஞ் சொல்லிற்குத் தெறித்தல் என்னும் பொருளு முண்டு. "இறைவிரலா லவைத்துகந்த வீசா" (தேவா. 6. 55 : 11). ஆயினும், அவலை இடித் தல் என்பதே பெருவகை வழக்கு. "பாசவ லிடிக்கு.........உலக்கை" (அகநா. 141 : 18). குற்றுதலுக்கும் இடித்தலுக்கும் வேறுபா டுண்டு. ஆதலால், அவை → அவையல் → அவல் என்பதினும், அம் → அமல் → அவல் என்பதே பொருத்தமாம். துவையல் என்பது துவல் எனக் குறுகாமையும் நோக்குக.

பழமொழிகள் :

அவல் (பள்ளம்)

'அவல் அவல் என்கிறது நெல், மழைமழை என்கிறது புல்.'

அவல் (நெல்வறையிடியல்)

'அரிசி அள்ளக் குறையும், அவல் முள்ளக் குறையும்.'

'அவல் பெருத்தது ஆர்க்காடு.'

'அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிக்கிறதா?'

'அவலை முக்கித் தின், எள்ளை நக்கித் தின்.'

'ஆனை முகவனுக்கு அவல்கடலை கொண்டாட்டம்.'

'வெறுவாயை மெல்லுகிறவன் அவல் கிடைத்தால் சும்மா விடுவானா?'

**அவல்குசம்** *aval-kušam*, பெ. (n.) **ஒரு செடி**; a plant, *Vernonia anthelmintica*.

**அவல்குலி** *aval-kuli*, பெ. (n.) **ஒரு நச்சுப்பூச்சி**; a poisonous insect.

**அவலச்சமர்த்து** *a-vala-c-camarttu*, பெ. (n.) **போலித் திறமை**; seeming ability, folly parading as cleverness.

[அவலம் (அ + வலம்) = வலியின்மை. சமர் = போர், வலிமை. சமர் → சமர்த்து.]

சமருக்கு (போருக்கு) வலிமை வேண்டுமாதலால், சமர்க் கருத்தில் வலிமைக் கருத்துத் தோன்றிற்று. இது கரும(காரிய)வாகுபெயர்.

**அவலச்சுவை** *a-vala-c-cuvai*, பெ. (n.) (செய்.) **துன்பவுணர்ச்சி (சோகரசம்)** (சிலப். 3 : 13, அடியார்க். உரை); (Poet.) pathos, pathetic sentiment.

[அவலம் (அ + வலம்) = வலியின்மை, நோய், துன்பம். சுவை இங்கு மனச்சுவை.]

**அவலச்சுழி** *a-vala-c-culi*, பெ. (n.) **கேட்டுச்சுழி, தீயூழ் (கெட்ட விதி)**; a swirl mark of hairs or lines on the body portending evil or destruction, ill-fate.

[அவலம் (அ + வலம்) = வலியின்மை, நோய், துன்பம், கேடு. சுல் → சுள் → சுளி → சுழி = swirl or eddy mark on the body portending good or evil.]

**அவலம்**[1] *a-valam*, பெ. (n.) 1. **வலியின்மை** (வின்.); weakness, feebleness, faintness. 2. **நோய்** (பிங்.); sickness, disease. 3. **துன்பம்**; suffering, pain, distress. "செய்வினை முற்றாமலாண்டோ ரவலம் படுதலு முண்டு" (கலித். 19 : 12-13). 4. (செய்.) **துன்பச்சுவை, துன்பவுணர்ச்சி (சோகரசம்)**; (Poet.) pathos, pathetic sentiment. 'அழுகை என்பது அவலம்' (தொல். பொருள், மெய்ப். 3, பேரா. உரை). 5. **அழுகை**; weeping, sorrowing. "அவலங் கொண் டழிவலோ" (சிலப். 18 : 41). 6. **வறுமை**; poverty, want. "கெடுகநின் னவலம்" (பெரும்பாண். 38). 7. **கவலை**; care, anxiety. "நெஞ்சத் தவல மிலர்" (குறள், 1072). 8. **மாயை** (மதுரைக். 208, நச். உரை); illusion.

ம. அபல; க. அவலெ, அபலெ; து. அபலெ.

அவலம் > **Skt.** abala.

[அல் → அ (எ.ம.முன்.). வல் → வலம் = வலிமை. அவலம் = வலிமையின்மை, நோய், துன்பம், துயரம், கவலை. வறுமை, துன்பமும் துன்பத்திற்கு ஏதுவும் ஆகும்.]

**அவலம்**[2] *a-valam*, பெ. (n.) **இடப்பக்கம்** (நாநார்த்த.); leftside.

[அ (எ.ம.முன்.) + வலம் (வலப்பக்கம்) – அவலம் = வலமல்லாத இடப்பக்கம். வலிமை யுள்ள கைப்பக்கம் வலம்.]

**அவலமுதுப்புறம்** *aval-amudu-p-puṟam*, பெ. (n.) **திருக்கோயிற் படையலுக்காக (நிவேதனத்துக் காக) விடப்பட்ட இறையிலிநிலம்** (S.I.I. iv, 147); endowment made to a temple to carry-out regular offering of flattened rice to the deity.

[அவல் + அமுது + புறம். புறம் = இறை நிலத்திற்குப் புறம்பாக்கப்பட்ட தேவதான நிலம்.]

அவல், அமுது பார்க்க; see *aval, amudu.*

**அவலரக்கு** *aval-arakku*, பெ. (n.) **அவல்போல் தட்டையாகச் செய்யப்பட்ட அரக்குவகை**; seed-lac melted and run into thin layers like flattened rice.

க. அவலரகு

[அவல் + அரக்கு.]

அவல், அரக்கு பார்க்க; see *aval, arakku.*

**அவலன்** *a-valaṉ*, பெ. (n.) 1. **உடற்குற்றமுள்ள வன்** (சா.அக.); one with physical defects. 2. **நோயாளி**; sick person, patient (சா.அக.). 3. **குற்றமுள்ளவன்**; one who is at fault. "அறவும் பரிய னவலன்" (சைவச. ஆசா. 8).

[வலம் = வலிமை. அ (எ.ம.முன்.) + வலம் – அவலம் → அவலன் = வலிமையிலான், நோயாளி, உடற்குறையுள்ளவன்.]

**அவலாவி** *avalāvi*, பெ. (n.) **பெரும்பீளை**; Javanese wool-plant, *Aerua jaranica* (சா.அக.).

**அவலி-த்தல்** *avali-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **வருந்துதல்**; to suffer, to be distressed in mind. "அருவரை மார்ப னவலித் திருந்தான்" (சீவக. 515). 2. **அழுதல்**; to weep, lament. "அவலித் தணங்கு நையாவகை தேறற்கு" (தணிகைப்பு. களவு. 532). 3. **பதறுதல்**; to be flurried. "அவலித் திழிதலின்" (சிலப். 23 : 186).

[அவலம் → அவலி.]

**அவலி** *avali*, பெ. (n.) **பூனைக்காலி** (மலை.); cowhage plant, *Mucana pruriens* (சா.அக.).

**அவலிடி** *aval-iḍi*, பெ. (n.) **வரிக்கூத்துவகை**; a masquerade dance. 'உந்தி யவலிடி யூராளி யோகினிச்சி' (சிலப். 3 : 13, அடியார்க். உரை).

[அவல் + இடி. ஒருகா. அவலிடிப்பது போன்ற கூத்துப்போலும்.]

**அவலுப்பு** *aval-uppu*, பெ. (n.) **அவுரியினின் றெடுக்கும் ஒருவகை யுப்பு**; aniline salts extracted from indigo.

[அவுரியுப்பு → அவரியுப்பு → அவலுப்பு.]

**அவலை** *avalai*, பெ. (n.) 1. **கடுப்பு** (பிங்.); acute pain, throbbing, throes. 2. **காடு** (பிங்.); barren land, wilderness.

[அவலம் → அவலை = வலமின்மை, நோவு, விளையாநிலம்.]

**அவவு** *avavu*, பெ. (n.) **அவா, ஆசை**; avidity, craving. "அவவுக்கை விடுத லதுமனும் பொருளே" (கலித். 14 : 19).

ஒ.நோ: **L.** *avere*, crave.

[அவ் → அவா → அவவு.]

**அவள்** *avaḷ*, சு.பெ. (demons. pron.) **பெண் பால் ஒருமைப் படர்க்கைச் சுட்டுப் பெயர், அந்தப் பெண், அப் பெண்டு**; that female person, she, fem. of *avaṉ*.

ம. அவள்; க. அவளு; தெ. அதி; குட. அவ; து. ஆள்; கோத. அவ்ள்; கூ. ஆளு; பட. அவ; **Mar.** tī.

[அ (சே.சு.) → அவ் → அவள். 'அள்' பெ.பா. ஈறு.]

**அவளிகை** *avaḷigai*, பெ. (n.) **குடல்களின் மேற் பக்கம் நான்கு பட்டைகளுள்ளதாய்க் கவர்ந்து தொங்கும் ஒருவகைச் சவ்வு**; a fold of the peritoneum connecting the abdominal viscera (சா.அக.).

**அவளிவளெனல்** *avaḷ-ivaḷ-eṉal*, தொ.பெ. (vbl.n.) **பெண்டிரிடம் அல்லது பெண்டிரைப் பற்றி மதிப்பின்றிப் பேசுதல்**; to speak to or about women discourteously. அந்த அம்மை

யாரை இவன் 'அவள் இவள்' என்று பேசுகிறான்.

**அவள்** பார்க்க; see *aval*.

**அவளைதுவளை** *avaḷai-tuvaḷai*, பெ. (n.) **கதம்ப வுணவு** (யாழ்ப்.); mixture of rice, curry, ghee, curds etc. (J.) (செ.அக.) — 1. **கதம்ப வுணவு, அதாவது புலவு**; curry and rice. It is a mixture of boiled rice, meat and ghee with spices, a favourite dish among the Mohamedans. 2. **கிச்சடிச்சோறு (சாதம்)**; a rich food prepared on ceremonial occasions by the Hindus from boiled rice mixed with spices and other fragrant powders. It is purely a vegetable preparation (சா.அக.).

**அவற்காளான்** *avaṟ-kāḷāṉ*, பெ. (n.) **காளான் வகை** (வின்.); a species of fungus (செ.அக.) — **தட்டையாயுள்ள ஒருவகைக் காளான்**; a kind of flat mushroom (சா.அக.).

[அவல்+காளான். காளாம்பி (காளஆம்பி) → காளான் = கரிய ஆம்பி. வெள்ளாம்பிக்கு எதிரான காளாம்பிப் பெயர் பிற்காலத்தில் இரண்டிற்கும் பொதுப்பெயராயிற்று.]

**அவல்** பார்க்க; see *aval*.

**அவற்பதம்** *avaṟ-padam*, பெ. (n.) **அவலிடித்தற் கேற்ற தவச மெல்வெந்நிலை**; grain made consistent for making flattened rice.

[அவல் + பதம்.]

**அவல், பதம்** பார்க்க; see *aval, padam*.

**அவன்**[1] *avaṉ*, சு.பெ. (demons. pron.) **அந்த ஆண்பிள்ளை அல்லது ஆடவன்**; that male person, he.

**ம.** அவன்; **க.** அவனு; **தெ.** வாடு; **குட.** அவென்; **கோத.** அவ்ன்; **து.** ஆயெ; **கை.** ஆவு, அவனெ; **இரு.** அவ; **கொர.** அவெ; **பட.** அம; **பர்.** ஒத்; **கொலா.** அந்து; **மா.** ஆத்; **பிரா.** ஒடெ.

['அ' சே.சு. 'அன்' ஆ.பா. ஈறு. 'வ்' உடம்படு மெய்.]

**அவன்**[2] *avaṉ*, பெ. (n.) **வீண், பயனின்மை**; uselessness. "அவன்செயத் திருவுடம் பலச நோற் கின்றான்" (கம்பரா. ஆரணிய. சூர்ப். 18).

[அவி → அவம் = கேடு, வீண். அவம் → அவன் (கடைப்போலி).]

**அவனறிவுதான்காண்டல்வினா** *avaṉ-aṟivu-tāṉ-kāṇḍal-viṉā*, பெ. (n.) **பிறன் கருத்தை யறிதற் குக் கேட்குங் கேள்வி**; questioning with the object of ascertaining another's view.

'வினாவாவது அறியலுறவு வெளிப்படுப்பது. அது மூவகைப்படும், அறியான் வினாவும் ஐயவினாவும் அறிபொருள்வினாவுமென'.

'உரையாசிரியர், அறிபொருள் வினாவை அறிவொப்புக் காண்டலும் அவனறிவு தான் காண்டலும் மெய்யவற்குக் காட்டலும் என விரித்து, ஏனைய கூட்டி ஐந்தென்றார்' (தொல். சொல். கிளவி. 13, சேனா. உரை).

'வினா ஐந்து வகைப்படும். அறியான் வினாதல், அறிவொப்புக் காண்டல், ஐய மறுத்தல், அவனறிவு தான்கோடல், மெய் யவற்குக் காட்டல் என' (தொல். சொல். கிளவி. 13, இளம். உரை).

உரையாசிரியர் என்று பொதுவாகச் சொல்லப்படுபவர் இளம்பூரணர். ஏனெனின், இன்றுள்ள தொல்காப்பிய வுரைகளுள் முதலது அவரதுவே.

'அவனறிவு தான்காண்டல்' என்று உரையாசிரியர் கூறியதாகச் சேனாவரையர் கூறினார். ஆயின், அச் சொற்றொடர் இளம்பூரணர் உரையில் "அவனறிவு தான்கோடல்" என்றுள்ளது. "அவனறிவு தான்காண்டல்" என்பது அறிவொப்புக் காண்டல் என்றும் பொருள்படும். காண்டலுக்கும் கோடலுக்கும் பெரிதும் பொருள் வேறுபாடுள்ளது. ஆதலால், இச் சொல் வேறுபாடு ஏட்டுப் பிழையால் நேர்ந்ததாகவும் இருக்கலாம். உரையாசிரியர், வேறு இளம்பூரணர் என்று காட்டுவதாகவும் இருக்கலாம்.

உரையாசிரியர் உரை யென்று கூறப்பட்டவை சில இளம்பூரண ருரையினும் வேறுபட்டிருப்பதால், இருவரும் ஒருவரோ வேறோ என்று ஏற்கெனவே பெரும்பேராசிரியர் உ. வே. சாமிநாதையரும் ஐயுற்றுள்ளார்.

நன்னூலாசிரியரான பவணந்தி முனிவர், அறிபொருள் வினாவை மூன்றாக விரிக்காது அறிவினா என்று ஒன்றாகவே குறித்து வினாவை அறுவகையாக வகுத்தார்.

தொல்காப்பியர் வினாவை வகுக்காது "செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' (தொல். சொல். கிளவி. 13) என்று தொகுத்தே கூறினார்.

**அவனிமருந்து** *avaṉi-marundu*, பெ. (n.) **அவுரிக் கருக்கு (கஷாயம்)** (பச்.மூ.); decoction of indigo plant.

*[அவுரி → அவனி. மரு → மருந்து.]*

**அவனிவனெனல்** *avaṉ-ivaṉ-eṉal*, தொ. பெ. (vbl.n.) **ஆடவரைப்பற்றி மதிப்பின்றிப் பேசுதல்**; to speak to or about men discourteously. அந்த ஐயாவை இவன், 'அவன் இவன்' என்று பேசுகிறான்.

*அவன்*[1] பார்க்க; see *avaṉ*[1].

**அவா** *avā*, பெ. (n.) **ஆசை, எனக்கிது வேண்டுமென்னும் எண்ணம்**; desire for a thing, covetousness.

*[கவ்(வு) → அவ் → அவா. கவ்வுதல் = வாயாற் பற்றுதல். வவ்வுதல் = கையாற் பற்றுதல். அவ்வுதல் = மனத்தாற் பற்றுதல்.]*

**அவாபுளப்பி** *avāpuḷappi*, பெ. (n.) **ஒருவகைச் செடி (பிராமி)** (சங்.அக.); species of *Herpestis*.

**அவாய்நிலை** *avāy-nilai*, பெ. (n.) **ஒரு சொல் தன்னொடு பொருந்திப் பொருள் முடிதற்குரிய மற்றொரு சொல்லை வேண்டி நிற்றல்; அதாவது, ஒரு சொற்றொடரில் ஒரு சொல் தொக்குநிற்றல்**; syntactical expectancy consisting in the need of one word for another such as predicate for a subject or subject for a predicate.

*[அவாவு → அவாவி (இ. கா. வி. எ.) → அவாய். நில் → நிலை (தொ.பெ.).]*

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்னும் சொற்றொடர் உறுப்பு மூன்றனுள் எதுவுந் தொக்குநிற்கலாம்.

> "இனிய வுளவாக இன்னாத கூறல்
> கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

என்னுங் குறளில் (100), 'ஒருவர்' என்னும் எழுவாய் தொக்கது.

> "கெடுப்பதூஉம் கெட்டார்க்குச்
> சார்வாய்மற் றாங்கே
> எடுப்பதூஉம் எல்லாம் மழை"

என்னுங் குறளில் (15), 'வல்லது' என்னும் பயனிலை தொக்கது.

> "நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
> இல்லெனினும் ஈதலே நன்று"

என்னுங் குறளில் (222), 'பொருள்' என்னும் செயப்படுபொருள் தொக்கது.

உலகவழக்கில், எழுவாயாக வரும் தன்மை முன்னிலைப் பெயர்கள் தொகுவது பெருவழக்கு.

தொடர்ச்சொற் பொருளுணர்த்தும் மூவகையுள் ஒன்று **அவாய்நிலை.** ஏனையிரண்டு **அண்மைநிலை, தகுதி** என்பன.

**அவாரி** *avāri*, பெ. (n.) **சிறுநீர்** (சங்.அக.); urine.

*[அமரி = சிறுநீர். அமரி → அவரி → அவாரி.]*

**அவாவறு-த்தல்** *avā-v-aṟu-*, 4 செ.கு.வி. (v.i.) **ஆசையொழித்தல்** (குறள், 37ஆம் அதி.); to extirpate desire.

*[அவா + அறு.]*

*அவா பார்க்க;* see *avā*.

**அவாவன்** *avāvaṉ*, பெ. (n.) **ஆசையுடையவன்**; avaricious person. "கோவி யவாவன்" (சைவச. ஆசா. 17).

*[அவா + அன் (ஆ.பா. ஈறு). 'வ்' உடம்படு மெய்.]*

**அவாவு-தல்** *avāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **விரும்புதல்**; to desire, wish for. "உலகவாம் பேரறி வாளன்" (குறள், 215). *2.* **பற்றுச்செய்தல்;** to long for intensely, crave for, covet. *3.* (இலக்.) **சொற்றொடரில் ஒரு சொல் தன்னொடு பொருந்திப் பொருள் முடித்தற்கு மற்றொரு சொல்லை வேண்டுதல்**; (Gram.) to want a word to complete the sense of a sentence.

*[அவ் → அவவு → அவாவு.]*

*அவா பார்க்க;* see ***avā***.

**அவி**[1]**-தல்** *avi-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **வேதல், சமைதல்;** to be boiled, cooked by boiling or steaming. *2.* **வெப்பத்தாற் புழுங்குதல், வேர்த்தல்**; to swelter, perspire. *3.* **காய்கனி முதலியன சூட்டால் வெந்துபோதல்**; to become softened and decayed, as fruit, vegetable matter, from heat. *4.* **உரக் குப்பைகள் வெந்து ஆவிவிடுதல்**; to ferment, as manure heaps. *5.* **அறுவை மருத்துவத்திற் கெட்டநீர் வெளியேறும்படி புண் செய்யப்படல்;** to be inflamed by cauterisation to get rid of bad accumulation of fluid, in surgery (சா.அக.). *6.* **கண் கெடுதல்**; to be blinded, as the eye, by disease. உனக்கென்ன கண் அவிந்தா போயிற்று? *7.* **அழிதல்;** to perish, cease to exist. அவன்

குடும்பம் அவிந்துபோயிற்று. 8. **சாதல்**; to die. ''அவியினும் வாழினு மென்'' (குறள், 420). 9. **தீ அல்லது விளக்கு அணைந்து போதல்**; to become extinguished, as fire or light. ''காலவியாப் பொன்விளக்கு'' (சீவக. 1045). 10. **ஓய்தல்**; to cease, desist from action. '' கோலவியா வெஞ்சிலையான் '' (சீவக. 1045). 11. **ஒடுங்குதல்**; to become subdued, repressed, to be kept under control. 12. **பணிதல்**; to bow, stoop, be humble, obey. ''ஆன் றவிந் தடங்கிய கொள்கை'' (புறநா. 191 : 6). 13. **குறைதல்**; to diminish. ''வெஞ் சுடரி னாண்டகை யவிந்தான்'' (சீவக. 289).

ம. அவியுக; க. அவி; **Mar.** avikaṇēm (to over ripen and spoil – a fruit).

*[உள் → அள் → அழு → அகு → அகை. அகை தல் = எரிதல். அழு → அழல் = எரிவு, நெருப்பு. அகு → அகி → அவி. அவிதல் = எரிதல், வேதல்.]*

**அவி²-த்தல்** *avi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **வேகவைத்தல்**; to boil in a liquid, cook by boiling or steaming. ''அறுத்தவித் தாரச் சமைத்த பிள்ளைக் குகந்தார்'' (மறைசை. 20). 2. **கெட்ட நீரை வெளியேற்ற வெப்பூட்டல்**; to apply heat to eliminate the accumulation of bad fluids from the system (சா.அக.). 3. **அடக்குதல்**; to subdue, suppress, repress. ''ஐந்தவித்தான்'' (குறள், 25). 4. **அணைத்தல்**; to extinguish, put out. விளக்கை அவித்து விட்டான். 5. **கெடுத்தல், அழித்தல்**; to destroy. ''ஒருமுன் றவித்தோன்'' (சிலப். 10 : 194). 6. **துடைத்தல்**; to wipe off, dust, brush. ''சிலம்பிற் போர்த்த பூந்துக ளவித்து'' (சீவக. 2064). 7. **நீக்குதல்**; to remove, avoid. ''செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையும் அவித் தொழுகல்'' (குறள், 694).

ம. அவிக்குக, அவிச்சல்.

*[அகை → அகு → அகி → அவி.]*

**அவி¹-தல்** பார்க்க; see *avi¹-*.

**அவி** *avi*, பெ. (n.) 1. **கதிரவன்**; Sun. 2. **ஒளிக்கதிர்**; ray. 3. **சோறு** (சூடா.); boiled rice. 4. **உணவு**; food. ''அவியடு நர்க்குச் சுவைபகர்ந் தேவி'' (பதினொ. திருவிடை. 7). 5. **நெய்** (பிங்.); ghee. ''அவிசொரிந் தாயிரம் வேட்டலின்'' (குறள், 259).

ம., க., தெ. அவி; **Skt.** avi.

*[அகை → அகு → அகி → அவி.]*

**அவி¹-தல்** பார்க்க; see *avi¹-*.

**அவிகண்** *avi-kaṇ*, பெ. (n.) 1. **ஒருவகைக் கண் ணோய்**; a kind of ophthalmia. 2. **கெட்டுப் போன கண்**: an eye in which the cornea is destroyed. 3. **குருட்டுக்கண்**; blind eye (சா. அக.).

*['அவிகண்' வினைத்தொகை.]*

**அவி¹-தல்** பார்க்க; see *avi¹-*.

**அவிகாயம்** *avi-kāyam*, பெ. (n.) 1. **எரிச்சல்**; burning sensation. 2. **அழற்சி**; inflammation. 3. **தோல் வெந்த தழும்பு**; scar left by a scald. 4. **நுரையீரல் வெந்து புண்ணாகும் இருமல் நோய்**; consumption attended with inflammation of the lungs, pulmonary tuberculosis (சா.அக.). 5. **இசிவு (சன்னி) வகை** (தஞ். சரசு. iii, 194); a kind of delirium (செ.அக.).

*['அவிகாயம்' வினைத்தொகை. காயம் = உடம்பு.]*

**அவி¹-தல்** பார்க்க; see *avi-¹*.

**அவிச்சன்** *aviccaṉ*, பெ. (n.) தந்தை (நாஞ்.); father (Nāñ.). Cf. **L.** *avus*, grandfather.

*[ஒருகா. அவ்வையச்சன் (தாயைப் பெற்ற பாட்டன்) → அவிச்சன் = பாட்டன், தந்தை.]*

தந்தை முறைப்பெயர் பாட்டனையும், பாட்டன் முறைப்பெயர் தந்தையையும் குறித்தல் இயல்பே.

எ-டு: அச்சன் (தந்தை). க. அச்ச = பாட் டன். அப்பச்சன் → அப்பச்சி (பாட்டன்) = தந்தை (செட். நா.).

**அவிசல்** *avišal*, பெ. (n.) **அவிந்துபோனது**; that which is decayed.

*[அவி → அவியல் → அவிசல் (தொ.ஆகு.) = வெந்துபோனது, கெட்டுப்போனது. 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அவிசற்கினம்** *avišaṟkiṉam*, பெ. (n.) **விடாக் காய்ச்சல்**; unintermittent fever, persistent fever (சா.அக.).

*[ஒருகா. அவிசற்கு + இனம் – அவிசற்கினம்.]*

**அவிசல்** பார்க்க; see *avišal*.

**அவிசற்பல்** *avišaṟ-pal*, பெ. (n.) **சொத்தைப்பல்** (இ.வ.); decayed tooth (Loc.).

*[அவி → அவியல் → அவிசல் + பல்.]*

**அவியல்** பார்க்க; see *aviyal*.

**அவிசனாற்றம்** *avišanaṟṟam*, பெ. (n.) **அழுகிய காய்கனி முதலியவற்றின் தீய மணம்**; odour of decaying matter.

[அவி → அவியல் → அவிசல். 'அல்' தொ.பெ. ஈறு. நாறு → நாற்றம். 'அம்' தொ.பெ. ஈறு.]

உலகவழக்கில் நாற்றம் என்னுஞ் சொல் தீய மணத்தையே குறிக்கும்; இலக்கிய வழக்கில் நல்லது தீயது ஆகிய இரண்டிற்கும் பொதுவாம்.

**அவிசுப்பம்** *avišuppam*, பெ. (n.) **தொடரி** (வை. மூ.); a species of jujube.

மறுவ. அவுசுப்பம்

**அவிட்டம்** *aviṭṭam*, பெ. (n.) **கோரைக்கிழங்கு** (பச்.மூ.); root of sedge, *Cyperus rotundus*.

**அவிடு** *aviḍu*, பெ. (n.) **தகையாட்டுச் சொல்**; word spoken in jest. "சொல்லும் அவிடு சுருதியாம்" (ஞானஸாரம், 40).

**அவித்துவையல்** *avi-t-tuvaiyal*, பெ. (n.) **பச்சடி** (பிங்.); a vegetable savoury.

[அவி + துவையல்.]

**அவிந்துவி** *avinduvi*, பெ. (n.) **இருவேரி** (பச்.மூ.); cuscus grass.

**அவிநயம்** *avinayam*, பெ. (n.) **இறந்துபட்ட ஒரு பழைய தமிழிலக்கண நூல்**; an extinct ancient Tamil grammar.

**அவிநயனார்** *avinayaṉār*, பெ. (n.) **இறந்துபட்ட அவிநயம் என்னும் பழைய இலக்கண நூலின் ஆசிரியர்**; the author of the *Avinayam*, an extinct ancient Tamil grammar.

[**Skt.** abhi-naya > அபிநயம் → அவிநயம் → அவிநயன் → அவிநயனார். 'ஆர்' உயர்வுப்பன்மை யீறு.]

**அவிநீர்** *avi-nir*, பெ. (n.) 1. **வெந்நீர்**; boiled water. 2. **மூலிகைகளைக் குறுக அரிந்து அல்லது வேர்களை இடித்து வேடுகட்டிப் பிட்டவியலாக அவித்துப் பிழிந்துகொண்டு அத்துடன் தேன்கூட்டிக் கொள்ளும் நீர்**; an essence extracted from sliced green herbs or pounded roots boiled sufficiently in steam, and mixed with honey. It is taken internally (சா.அக.).

['அவிநீர்' வினைத்தொகை.]

**அவிப்பிணம்** *avi-p-piṇam*, பெ. (n.) **உவர் மண்ணை யெடுத்துக் காய்ச்சும் உப்பு** (சங். அக.); salt prepared by distilling the solution of saline earth.

[ஒருகா. அவிப்பு + உமணம் – அவிப்புமணம் → அவிப்பிணம் (மரூஉ). உமண் = உப்பு மண், உப்பு, உப்பமைப்போர் குலம். உமண் → உமணன் = உப்பமைக்குங் குலத்தான். உமணன் → உமண். ஒ.நோ: பாணன் → பாண்.]

**அவிப்புடமிடு-தல்** *avi-p-puḍam-iḍu-*, 19 செ. குன்றாவி. (v.t.) **மருந்திற்கேற்றவாறு குழி வெட்டி மணல்கொட்டிப் பரப்பி மருந்தை நடுவில் வைத்து, எருவடுக்கிப் புடம்போடுதல்**; the process of calcining medicines by burying them in a pit under a heap of sand over which cowdung cakes are piled up and burnt (சா. அக.).

[அவி + புடம் + இடு.]

அவி, புடம் பார்க்க; see *avi*, *puḍam*.

**அவியம்** *aviyam*, பெ. (n.) **கடுகு**; mustard (சா. அக.).

[ஒருகா. அவி → அவியம் = சூடாக்குவது. அவித்தல் = வேகவைத்தல், சூடாக்குதல்.]

**அவியரிசி** *avi-y-arisi*, பெ. (n.) 1. **பிட்டரிசி** (சித்.அக.); a kind of rice. 2. **அவித்த பிட்டரிசி; ஒரு சிற்றுண்டி**; a confection prepared out of boiled *piṭṭariši* (சா.அக.).

['அவியரிசி' வினைத்தொகை.]

**அவியல்** *aviyal*, பெ. (n.) 1. **சமைக்கை** (பிங்.); cooking, boiling. 2. **சமைக்கப்பட்ட உணவு**; cooked food. "செந்திணையி னவியல்" (கூர்மபு. கண்ணன்மண. 143). 3. **பலவகைக் காய்கள் ஒருசேரச் சமைக்கப்பட்ட கறிவகை**; a kind of mixed vegetable dish. 4. **பிட்டவியலாகச் சமைத்த பண்டம்**; anything prepared or baked in steam (சா.அக.). 5. **வெந்த பண்டம்**; anything boiled or over-boiled by heat. 6. **கடுவெப்பம்**; burning and oppressive heat. 7. **புழுக்கம்**; swelter, sultriness. 8. **வெந்த புண்**; a burn or injury caused by a hot liquid, scald (சா.அக.). 9. **வாய்ப்புண்**; inflammation of the mouth, *stomatitis*.

ம. அவியல்; க. அவிலு.

"தேசு மருவும் பாலகர்க்குச்
சேரு மவியல் பலவகையும்"
(பரராசசேகரம்) (சா.அக.).

[அவி → அவியல் – 1. தொ.பெ. 2. தொ. ஆகு. 'அல்' தொ.பெ. ஈறு.]

அவியல் என்னுங் கறிவகை, பலவகைக் காய்களைச் சேர்த்துச் சமைப்பது. அது மலையாள நாட்டிற்குச் சிறப்பானது. மலையாளியர் தமிழ்நாடு வந்தபின், தமிழ் நாட்டிலும், சிறப்பாக உண்டிச்சாலைகளில் அது கையாளப்படுகின்றது.

**அவியல்மணம்** *aviyal-maṇam*, பெ. (n.) **காய்கறி முதலானவை அழுகுவதனாலுண்டாகும் தீய மணம்** (வின்.); offensive smell of putrid vegetable matter.

[அவி → அவியல். 'அல்' தொ. பெ. ஈறு. மண → மணம் (தொ.ஆகு.). 'அம்' தொ.பெ. ஈறு.]

**அவியற்கறி** *aviyaṟ-kaṟi*, பெ. (n.) 1. **வெந்த இறைச்சி** (வின்.); boiled meat. 2. **பலவகைக் காய்களை ஒருசேரச் சமைத்த கறி**; a dish prepared with several kinds of vegetables, mixed hotchpotch.

[அவி → அவியல். கறி = கறித்துத் தின்னும் காய்கறிச் சமையல்.)]

**அவியற்சரக்கு** *aviyaṟ-carakku*, பெ. (n.) 1. **முடக்குச் சரக்கு**; any drug from which its virulence or poisonous principle is eliminated. 2. **வேகவைத்த சரக்கு**; anything boiled or baked for purposes of purification. 3. **அழிந்த சரக்கு**; any putrefied drug (சா.அக.).

[அவியல் + சரக்கு.]

**அவியல், சரக்கு** பார்க்க; see *aviyal, carakku.*

**அவியற்பல்** *aviyaṟ-pal*, பெ. (n.) **சொத்தைப் பல்**; decayed tooth.

[அவியல்+பல். அவி → அவியல்=கெடுதல்.]

**அவிர்**[1]**-தல்** *avir-*, 2 செ.கு.வி. (v.i.) **விளங்கு தல், ஒளிர்தல்**; to glitter, shine, glisten. ''அவிர்மதிக்குப் போல'' (குறள், 1117).

[அவிர்தல் = வேதல், எரிதல், ஒளிர்தல்.]

**அவிர்**[2]**-தல்** *avir-*, 2 செ.கு.வி. (v.i.). 1. **கிழி தல்** (பொதி.நி.); to be torn, to be rent asunder. 2. **பீறுதல்**; to be lacerated (சா.அக.).

[அவிழ்தல் = நெகிழ்தல், மலர்தல், விரிதல், பிளத்தல், பீறுண்ணல். அவிழ் → அவிர்.]

**அவிர்**[1] *avir*, பெ. (n.) **ஒளிர்வு, திகழ்வு (பிர காசம்)**; brightness, glitter, splendour. ''அடர் பொன் னவிரேய்க்கும்'' (கலித். 22 : 19).

**அவிர்**[1]**-தல்** பார்க்க; see *avir-*[1].

**அவிர்**[2] *avir*, பெ. (n.) 1. **புல்**; grass. 2. **பீனசப் புல்**; a species of grass of the order of *Graminaceae* (சா.அக.).

**அவிரி** *aviri*, பெ. (n.) **அவுரி** (மூ.அ.) — **நீலிச் செடி** (திவா.); indigo plant, m.sh., *Indigofera tinctoria.*

ம. அவரி; தெ. அவிரி.

[அவிர் → அவிரி. அவிர்தல் = நிறத்தால் விளங்குதல். 'இ' வி.முத. ஈறு.]

**அவிரிரா** *avirira*, பெ. (n.) **பெரும்புள்ளடி**; a plant, *Hedysarum gangeticum.*

**அவிவு** *avivu*, பெ. (n.) **ஒழிவு**; extinction, annihilation. ''கந்தத் தவிவே முத்தி'' (பெரியபு. திருஞான. 916).

[அவிதல்=கெடுதல், அழிதல். அவி → அவிவு. 'வு' தொ.பெ. ஈறு.]

**அவிழ்**[1]**-தல்** *aviḻ-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **நெகிழ் தல்**; to become loose, untied. 'ஆப்பவிழ்ந் தும்'' (திவ். இயற். திருவிருத். 95). வேட்டி அவிழ்ந்துவிட்டது. 2. **மலர்தல்**; to expand, open. ''கருநனைக் காயாக் கணமயி லவிழ வும்'' (சிறுபாண். 165). 3. **உதிர்தல்**; to drop off, as leaves; to fall out, as hair. ''அவிழ்பன்ன மூணாய்'' (ஞானவா. சுரகு. 35). 4. **சொட்டு தல்**; to drip. ''மட்டவி ழலங்கல் மறவோனு டன்'' (பாரத. மணி. 38). 5. **இளகுதல்**; to melt, soften. ''சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து'' (தாயு. பராபர. 75).

[அவி → அவிழ். அவிதல் = அவிந்து விரிதல். ஒ.நோ : குமி → குமிழ்.]

**அவிழ்**[2]**-த்தல்** *aviḻ-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **கட்டு நீக்குதல்**; to loosen, untie, unbind, unpack. பொட்டணத்தை அவிழ்த்தான். 'அம்பலத்திற் கட்டுச்சோறு அவிழ்க்க லாகாது' (பழ.). 2. **மலரச்செய்தல்**; to cause to open. ''புல்லிதழ்த் தாமரை புதுமுகை யவிழ்ப்ப'' (கல்லா. 53 : 6). 3. **விடுகதைப் பொருளை விடுத்தல்**; to solve, as a riddle.

[அவிழ்தல் (த.வி.) → அவிழ்த்தல் (பி.வி.).]

**அவிழ்**[1]**-தல்** பார்க்க; see *aviḻ*[1]-.

**அவிழ்** *aviḻ*, பெ. (n.) 1. **பருக்கை**; single grain of boiled rice. ''அவிழொன்றற் குக மொன்றா'' (திருவிளை. மூர்த்தி. 27). 2. **சோறு**; boiled rice. ''வாலவிழ் வல்சி'' (மலைபடு. 183). 3. **ஓர் அரிசி**; single grain

of raw rice. 'கலவுமி தின்றால் ஓர் அவிழ் தட்டாதா?' (பழ.).

ம. அவிழு; க. அகுளு.

**அவிழ்**[1]**-தல்** பார்க்க; see *avil*[1]-.

**அவிழ்த்துக்கொடு-த்தல்** *aviḻttu-k-koḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) ***சொந்தப் பொருளிலிருந்து எடுத்துக் கொடுத்தல்***; to pay from one's own pocket.

*[அவிழ்த்தல் = முடிச்சு அவிழ்த்தல், கட்டவிழ்த்தல். பழங்காலத்திற் பணத்தைத் துணியில் முடிந்து வைத்திருந்ததனால், இவ் வழக்குத் தோன்றிற்று.]*

**அவிழகம்** *aviḻ-agam*, பெ. (n.) ***மலர்ந்த பூ***; full-blown flower. "ஒள்ளித ழவிழகம்" (பதிற்றுப். 52 : 19).

*[அவிழ் + அகம் (இடம்). 'அகம்' ஓர் ஈறு.]*

**அவினந்தமாலை** *avinanda-mālai*, பெ. (n.) ***இறந்துபட்ட ஒரு கணிதநூல்*** (யாப். வி. பக். 528); an extinct Tamil treatise on mathematics.

**அவுக்கவுக்கெனல்** *avukkavukk(u)-eṉal*, பெ. (n.) ***அவக்கவக்கெனல்*** பார்க்க; see *avakkavakk(u)-eṉal*.

*[அவக்கவக்கெனல் → அவுக்கவுக்கெனல்.]*

**அவுசாக** *avuśāga*, கு.வி.எ. (adv.) ***ஒழுங்காக, நேர்த்தியாக*** (உ.வ.); neatly, tidily, nicely (Com.u.).

*[அழகிது → அழகிசு → அழவிசு → அவிசு + ஆக.]*

***அவுசு*** *பார்க்க;* see *avuśu*.

**அவுசு** *avuśu*, பெ. (n.) ***ஒழுங்கு, நேர்த்தி*** (உ.வ.); neatness, tidiness, trimness, niceness (Com.u.).

*[ஒருகா. அழகிது → அழகிசு → அழவிசு → அவிசு.]*

**அவுசுக்காரன்** *avuśu-k-kāraṉ*, பெ. (n.) ***ஆடையிற் புரியம் (பிரியம்) உடையவன்***; one very fond of dresses (W.).

*[அவுசு = அழகிது. 'காரன்' உடைமை குறித்த ஈறு. அழகாக வுடுப்பதில் மிகுந்த விருப்பமுள்ளவன் அவுசுக்காரன் எனப்பட்டான்போலும்.]*

One fond of dressing trimly அல்லது one fond of fine clothes என்று ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பது பொருத்தமாயிருக்கும்.

***அவுசு*** பார்க்க; see *avuśu*.

**அவுசுப்பம்** *avuśuppam*, பெ. (n.) ***அவிசுப்பம்*** பார்க்க; see *aviśuppam*.

**அவுரம்** *avuram*, பெ. (n.) ***ஒருவகைச் செய்நஞ்சு (கௌரிபாடாணம்)***; a kind of prepared arsenic, yellow oxide of arsenic (சா.அக.).

**அவுரி**[1] *avuri*, பெ. (n.) *மீன்வகை* (நெல்லை); a kind of fish (Tn.).

ம. அவலி

**அவுரி**[2] *avuri*, பெ. (n.) ***அவிரி*** பார்க்க; see *aviri* (திவா.). இதன் மறுபெயர் நீலி.



அவுரி

அவுரிவகைகள் (சா. அக.):

1. வச்சிர நீலி - கருப்புநிறமான நீலி; black aviry.
2. நீலி அவுரி – நாட்டவுரி; common indigo, *Indigofera tinctoria*.
3. இருப்புமுறி அவுரி – வெண்மையும் நீலமும் கலந்த அவுரி; Arabian indigo, *Indigofera argentia*.
4. மேனாட்டவுரி – அமெரிக்கா தேசத்து அவுரி; indigo from Brazil and Mexico, *Baptisia tinctoria*.
5. மணிலா அவுரி – மணிலா நீலம்; Manilla indigo, *Anona reticulata*.
6. பெரிய அவுரி (பேரவுரி); a large variety of the plant.
7. கள்ளவுரி – நீலப்பூ அவுரி; bastard indigo, *Amorpha fruticosa*.
8. சீமை அவுரி – ஆங்கிலநாட்டு அவுரி; British indigo, *Isatis tinctoria*.
9. சீன அவுரி – சீன தேசத்து அவுரி; China indigo, *Isatis indigotica*.
10. காட்டவுரி – மஞ்சட்பூ அவுரி; false indigo, *Baptisia tinctoria*.
11. சீமை நீலி; West Indian indigo, *Indigofera anil*.

வச்சிர (வஜ்ர) நீலி என்பது வடமொழிப் பெயர். அதைத் தமிழில் வயிரநீலி எனலாம்.

சீமை (ஸீமா) என்பது வடசொல். அது எல்லையையும் நாட்டையும் வெளிநாட்டை

# அவரை


குங்குமவவரை


கோழிக்காலவரை


சங்கவரை


சாட்டவரை


சிவப்பவரை


சுருக்கவரை


செம்பளியவரை

யும் குறிக்கும். ஆங்கிலராட்சி ஏற்பட்டபின், அது வெளிநாடென்னுங் கருத்தில் சிறப்பாக ஆங்கில நாட்டையே குறித்தது.

[அவிர் → அவிரி → அவுரி.]

**அவுரிச்சால்** *avuri-c-cāl*, பெ. (n.) **வாயகன்ற பெருங்கலம்** (இ.வ.); big vessel with wide mouth (Loc.).

[அவுரி+சால். அவிழ் → அவிர். அவிர்தல் = கட்டவிழ்தல், விரிதல், மலர்தல். அவிர் → அவிரி = விரிந்தது, அகன்றது. 'இ' வி.முத. ஈறு. சாலுதல் = மிகுதல், நிறைதல், பருத்தல், அகலுதல். சால் = பெருங்கலம், தாழி.]

**அவுரிநெய்** *avuri-ney*, பெ. (n.) **அவுரி வேரினின்று இறக்கும் ஒருவகை நெய்**; an oil extracted from the root of the indigo plant (சா.அக.).

**அவுரிப்பச்சை** *avuri-p-paccai*, பெ. (n.) பச்சைக் கருப்பூரம் (வை.மூ.); refined camphor (செ. அக.) — பச்சைக்கற்பூரம்; crude camphor (சா.அக.).

[அவிர்தல் = விளங்குதல், விளக்கமா யெரிதல். அவிர் → அவிரி → அவுரி. 'இ' வி.முத. ஈறு. பச்சையவுரி → அவுரிப்பச்சை (முறைமாற்று).]

**அவுளிமீன்** *avuḷi-mīn*, பெ. (n.) **ஒருவகைக் கடல் மீன்**; a kind of sea-fish, *Mugil cocrules*, *Maculatus*.

**அவுளியா** *avuḷiyā*, பெ. (n.) **வெளவால் மீன்**; pomfrets, marine fish, *Stromatens*.

ம. ஆவோளி

**அவுறுதம்** *avuṟudam*, பெ. (n.) 1. **பித்த நோய்வகை;** a bilious disease (செ.அக.) — **பித்தக்கடுமை** (பித்தாதிக்கம்); aggravated condition of the bile (சா.அக.). 2. **புணர்ச்சி நோய் (கிரந்தி) வகை**; a venereal disease, siphilitic skin affections (W.). 3. **மேகநோய்**; venereal disease (சா.அக.).

**அவெளி** *aveḷi*, பெ. (n.) **நிலவிளா** (பரி.அக.); a species of wood-apple (செ.அக.) — **நரி விளா** (சா.அக.).

**அவேளை** *avēḷai*, பெ. (n.) **வேளையல்லாத வேளை**; improper or inopportune time, unfavourable or unpropitious time.

ம., தெ. அவேல; க. அவேளெ.

[அல் → அ (எ.ம.முன்.). வேலை → வேளை.]

**அவை[1]-த்தல்** *avai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **அவித்தல்** (பிங்.); to cook, boil.

[அகைதல் = எரிதல், வேதல். அகைத்தல் = எரித்தல், வேவித்தல். அகை → அவை. ஒ.நோ: குகை → குவை.]

**அவை[2]-த்தல்** *avai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **நெல் அரிசி முதலியவற்றைக் குற்றுதல்**; to pound, thump, in a mortar. "அவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு" (சிறுபாண். 194). 2. **கையாற் குத்துதல்**; to cuff, prod. "ஆவி யயர்ந்துன தங்கை யவைத்தலின்" (சேதுபு. தேவிபுர. 61). 3. **நெரித்தல்**; to squeeze, press down, crush. "இறைவிரலா லவைத்துகந்த வீசா" (தேவா. 6. 55 : 11).

ம. அவய்க்குக; க. அவல்; நு. அபெபுனி.

[அகைத்தல் = அடித்தல், ஒடித்தல், அறுத்தல், வருத்துதல். அகை → அவை.]

**அவை[1]** *avai*, சு. பெ. (demons. pron.) **அப்பொருள்கள்**; those, those things.

ம. அவ, அவ்; க., து. அவு; தெ. அவி; பட. அவெ.

['அ' சே.சு. அ → ஐ (பல. பா. ஈறு). அ → அவ் → அவ → அவை. அவ் = அவை (பல.பா. சே. சு. பெ.).]

**அவை[2]** *avai*, பெ. (n.) 1. **மாந்தர் கூட்டம்**; (பிங்.); assembly of men. 2. **அறிஞர் கூட்டம்**; assembly of learned men. 'அவையறிதல்' (குறள், அதி. 72). 3. புலவர் (திவா.); learned men, poets. 4. **அவை மண்டபம்**; assembly hall. "தமனியத் தவைக்கண்" (கந்தபு. மகேந். நகரழி. 6). 5. **நாடகவரங்கு**; theatre. "கூத்தாட்டவை" (குறள், 332).

[அமைதல் = பொருந்துதல், கூடுதல், நிறைதல். அமை = கூட்டம். அமை → அவை.]

அவை → சவை. ஒ.நோ: அமர் → சமர், அமை → சமை. சவை → சபை. ஒ.நோ: உருவு → உருபு, செய்வவர் → செய்பவர். சபை யென்னும் தென்சொல்லே வடமொழியிற் சபா (sabhā) என்று திரிந்துள்ளது.

'சபா' என்னுஞ் சொல்லிற்கு வடமொழியிற் கூறும் வேர்ப்பொருள் விளங்குவது (பிரகாசிப்பது), விளக்கத்தோடு கூடியது என்பதே. ஸ = கூட. பா (bha) = விளங்கு, ஒளிர் (பிரகாசி, to shine). பா என்பது பால் (வெண்மை, ஒளி) என்பதன் கடைக்குறையாகவுமிருக்கலாம்.

காலஞ்சென்ற சுநீதிகுமார் சட்டர்சியார் மேற்கூறிய பொருட் கரணியத்தின் (காரணத்தின்) பொருந்தாமையை நோக்கி, 'சபா' என்னும் வடசொல்லை 'sib' என்னும் ஆங்கிலச் சொல்லினின்று திரித்தார்.

"Sib, adj. (chiefly Sc.), & n. (genetics; usu. pl.).

1. related, akin, (to). 2. n. a brother or sister (disregarding sex). Hence ~ *LING*[1] n., one of two or more children having one or both parents in common (usu. pl.), ~ 'SHIP n., the group of children (disregarding sex) from the same two parents. (OE. *sib(b)*, MDu. *sib(be)*, OHG. *sippi*, Goth. *sibjis*) — C.O.D.

'sib' என்னும் ஆங்கிலச்சொல் உடன் பிறப்பையே குறித்தலாலும், ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாயிருத்தலாலும், சபை அல்லது சபா என்னும் சொல்லொடு ஒரு தொடர்பும் இல்லதென்பது வெளிப்படை.

**அவைக்களம்** *avai-k-kaḷam*, பெ. (n.) **அவை கூடுமிடம்**; place or hall of assembly. "அரசவைக் களத்துள்" (கந்தபு. யுத்த. பானுகோ. *159*).

*[அவை + களம். கள்ளுதல் = கலத்தல், கூடுதல். கள் → களம் = கூட்டம், கூடுமிடம்.]*

அவை[2] பார்க்க; see *avai*[2].

**அவைநான்கு** *avai-nāngu*, பெ. (n.) **நல்லவை, தீயவை, நிறையவை, குறையவை என்னும் நால்வகைக் கற்றோர் கூட்டம்**; assembly of four kinds, viz., good assembly, bad assembly, perfect assembly and defective assembly.

அவைதாம் நான்கு வகைப்படும்; நல்லவையும் தீயவையும் குறையவையும் நிறையவையும் என. என்னை?

"அவையெனப் படுபவை யரிறபத் தெரியி
னல்லவை தீயவை குறையவை நிறையவை
யெனச்
சொல்லுப வென்ப தொல்லை யோரே"

என்பவாகலின் (யாப். வி. பக். *514*).

*[அவை + நான்கு. நால் → நால்கு → நான்கு.]*

அவை[2] பார்க்க; see *avai*[2].

**அவைப்பு**[1] *avaippu*, பெ. (n.) 1. **அரிசி முதலியன உரலிற் குற்றுதல்**; pounding, as rice, in a mortar. "அவைப்புமா ணரிசி" (சிறுபாண். *194*). 2. **குற்றின அரிசி அல்லது தவசம்**; pounded rice or grain.

அவை[2]-த்தல் பார்க்க; see *avai*[2]-.

**அவைப்பு**[2] *a-vaippu*, பெ. (n.) **வைக்கப்படாதது, இயற்கையானது**; that which is not prepared or is not artificial, *i.e.*, that which is natural (சா. அக.).

*[அல் → அ (எ.ம. முன்). வை → வைப்பு. 'பு' தொ.பெ. ஈறு.]*

**அவையக்கோழி** *avaiya-k-kōḻi*, பெ. (n.) **அடைகாக்கும் கோழி**; brooding hen.

*[அவையம் + கோழி.]*

**அவையங்காத்தல்** *avaiyaṅ-kāttal*, பெ. (n.) **அடைகாத்தல்** (வின்.); to sit on eggs, brood. கோழி அவையங்காக்கிறது.

*[அவையம் + காத்தல்.]*

**அவையடக்கம்** *avai-y-aḍakkam*, பெ. (n.) **அறிஞர் அவைக்கு, அதன்முன் நின்றேனும், தாம் இயற்றும் நூன்முகத்திலேனும், ஓர் அறிஞர் வணக்கங் கூறுதல்**; exhibition of modesty by a speaker addressing a public assembly, traditional apologetic modesty expressed by an author while presenting a literary work. 'அதனைச் சங்கத்தார் ஆராய்ந்தமை கூறவே அவையடக்க முணர்த்திய தாயிற்று' (சீவக. 4, உரை).

*[அடங்கு → அடக்கு → அடக்கம் = அடக்கவுரை, வணக்கமொழி.]*

அவை[2] பார்க்க; see *avai*[2].

**அவையடக்கியல்** *avai-y-aḍakkiyal*, பெ. (n.) **அவையடக்கம்** பார்க்க; see *avai-y-aḍakkam*.

"அவையடக் கியலே யரிறபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே"
(தொல். பொருள். செய். *113*).

*[அவை + அடக்கு + இயல் (இயல்பு, தன்மை, இலக்கணம்).]*

**அவையடக்கு** *avai-y-aḍakku*, பெ. (n.) **அவையடக்கியல்** பார்க்க; see *avai-y-aḍakkiyal*.

*[அவை + அடக்கு.]*

**அவையத்தார்** *avaiyattār*, பெ. (n.) 1. **புலவர் அல்லது அறிஞர் கூட்டத்தார்**; members of a learned assembly. 2. **முறையம் (நியாயம்) உரைக்கும் அவையோர், அறங்கூறவையத்**

*தார்*; judges. "எட்டுவகை நுதலிய அவையத் தானும்" (தொல். பொருள். புறத். 21). 'எண்வகைக் குணத்தினைக் கருதிய அவையத் தாரது நிலைமையானும்: அவை குடிப் பிறப்புக் கல்வி ஒழுக்கம் வாய்மை தூய்மை நடுவுநிலைமை அழுக்காறின்மை அவா வின்மை எனவிவை யுடையராய் அவைக்கண் முந்தியிருப்போர் வெற்றியைக் கூறுதல்' (நச். உரை).

*[அவை → அவையம் → அவையத்தார். 'அம்' பெ.பொ.பின். அல்லது ஈறு* (aug. suff.). *'அத்து' சாரியை. 'ஆர்' ப. பா. ஈறு.]*

**அவையம்**[1] *avaiyam*, பெ. (n.) 1. ***புலவர் அல்லது அறிஞர் கூட்டம்***; assembly of learned men. 2. ***வழக்குத் தீர்க்கும் அறமன்றம், முறையம் (நியாயம்) கூறும் அவை***; court of law. "சிறந்த கொள்கை யறங்கூ றவைய மும்" (மதுரைக். 492). 3. ***அவை மண்டபம்***; assembly hall. "வாய்மை யிகழ்ந்துளா னவை யத்தைமுன் னீறுசெய்து" (கந்தபு. மகேந். சதமுக. 21). 4. *அடைகாத்தல்*; brooding. கோழி அவையத்தில் இருக்கிறது.

*[அவை → அவையம் 1, 2, 'அம்' பெ. பொ. பின். அவையம் 3, இடவணாகு பெயர் (தானி யாகுபெயர்).]*

**அவையம்**[2] *avaiyam*, பெ. (n.) ***அவயம், இலா மிச்சை, வெட்டிவேர்*** (வை.மூ.); cuscus grass.

**அவையம்**[3] *avaiyam*, பெ. (n.) ***இரைச்சல்*** (நெல்லை); noise. அவையம் போடாதே.

**அவையர்** *avaiyar*, பெ. (n.) 1. ***அவையுறுப் பினர்***; members of an assembly. "அவையரு மனைய ரானார்" (திருவிளை. இசை. 22). 2. ***சொற்பொழிவு கேட்குங் கூட்டத்தார்***; assembly of listeners, audience.

*[அவை + அர் (ப. பா. ஈறு).]*

**அவையல்**[1] *avaiyal*, பெ. (n.) ***திரள்*** (அக.நி.); gathering, collection.

*[அமைதல் = நெருங்குதல், கூடுதல், திரள்தல். அமை → அவை → அவையல். 'அல்' தொ. பெ. ஈறு.]*

**அவையல்**[2] *avaiyal*, பெ. (n.) 1. ***குற்றல்***; pounding of rice. 2. ***தீட்டல்***; removal of bran and polishing, as of rice by pounding. 3. ***தீட்டின அரிசி***; polished rice. "ஆய்தினை யரிசி யவையல்" (பொருந. 16). 4. ***அவல்*** (வின்.); flattened rice.

*[அகை → அவை → அவையல். 'அல்' தொ. பெ. ஈறு.]*

***அவை***[2]***-த்தல்*** பார்க்க; see *avai*[2]-.

**அழக்கு** *aḻakku*, பெ. (n.) ***ஆழாக்கு*** (தைலவ. தைல. 84); ollack, measure of quantity of dry or liquid commodities, 1/8 of a measure.

ம. ஆழக்கு; க. ஆழாக்கு.

*[அரையுழக்கு → ஆழாக்கு → அழக்கு.]*

**அழக்குடம்** *aḻa-k-kuḍam*, பெ. (n.) ***பிணக்குடம்***; urn, earthen pot used in a funeral ceremony. 'அழக்குட மென்பது பிணக்குடத்தை' (தொல். எழுத்து. புள்ளி. 59, நச். உரை).

*[அழன் + குடம். **அழன்** = பிணம். குடம் = மட்கலம்.]*

**அழக்கொடி** *aḻa-k-koḍi*, பெ. (n.) 1. ***பேய்ப் பெண்***; demoness. "அழக்கொடி யட்டான்" (திவ். திருவாய். 2.10:9). 2. ***எப்பொழுதும் அழுதுகொண்டே யிருக்கும் பேய்பிடித்த பெண்***; a woman who keeps weeping under the influence of a demoness (சா.அக.).

*[அழல் = அழுதல். கொடி = கொடிபோன்ற பெண். அழற்கொடி → அழக்கொடி.]*

**அழகங்காட்டு-தல்** *aḻagaṅ-kāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) ***அழகுகாட்டி நகையாடுதல்*** (நெல்லை); to mimic and make fun of (Tn.).

*[அழகு + அம் + காட்டு. 'அம்' சாரியை.]*

**அழகச்சு** *aḻag(u)-accu*, பெ. (n.) ***பழைய காசு (நாணய) வகை*** (T.A.S. iii, 50); an ancient coin.

ம. அழகச்சு

*[அழகு + அச்சு (அச்சடித்தது).]*

**அழகப்பன்காளை** *aḻagappaṉ-kāḷai*, பெ. (n.) ***பெருமாள்மாடு*** (நெல்லை); sacred bull, adorned with cowries and trained, by a class of wandering mendicants, to nod its head in response to questions (Tn.).

*[அழகப்பன் = பெருமாள். காளை = காளை மாடு. திருமால் மதத்தாரான இரப்போரே காளை யைப் பழக்கி இரப்பிற்குத் துணைக்கொள்வத னால், பெருமாள்மாடு என்னும் பெயர் தோன் றிற்று. அழகப்பன் என்பது திருமாலுக்கு ஒரு பெயர்.]*

**அழகம்** *alagam*, பெ. (n.) **ஒருவனைப்போல் நடித்து ஏளனம் செய்தல்**; mimicry, ridicule by imitation.

**அழகர்**[1] *alagar*, பெ. (n.) **திருமாலிருஞ்சோலைத் திருமால்**; *Tirumal* (Viṣṇu), the handsome one, worshipped at *Alagarmalai* near Madurai.

[அழகு → அழகன் → அழகர். 'அர்' உயர்வுப் பன்மை யீறு.]

இறைவன் எல்லா நல்லியல்புகளையும் நற் குணங்களையும் உடையவனாதலால், அவனை அழகன் என்பது பொது வழக்கு. திருமால் மதத்தார் தசரதன் மகனான இராமனைத் திருமாலின் தோற்றரவுகளுள் (அவதாரங்களுள்) ஒன்றாகக் கொண்டதனால், அழகன் என்பது சிறப்பாகத் திருமாலுக்கொரு பெயராயிற்று. 'ராம' என்னும் வடசொல்லின் பொருள் அழகன் என்பதே.

**அழகர்**[2] *alagar*, பெ. (n.) **வெள்ளெருக்கு** (மலை.); white madar (செ.அக.) — white flowered giant swallow wort, *Calotropis gigantea* (alkiflora).

**அழகர்கலம்பகம்** *alagar-kalambagam*, பெ. (n.) **வேம்பத்தூரார் ஒருவர் திருமாலிருஞ்சோலை யழகர்மேற் பாடிய கலம்பகப் பனுவல்**; name of a *Kalambagam* poem on *Alagar* of *Tirumaliruñjōlai* by a native of Vēmbattūr.

**அழகர், கலம்பகம்** பார்க்க; see *alagar, kalambagam*.

**அழகர்பிள்ளைத்தமிழ்** *alagar-pillai-t-tamil*, பெ. (n.) **வேம்பத்தூரார் ஒருவர் திருமாலிருஞ் சோலை யழகர்மேற் பாடிய பிள்ளைத்தமிழ்ப் பனுவல்**; name of a *Pillaittamil* poem on *Alagar* of *Tirumaliruñjōlai* by a native of Vēmbattūr.

[அழகர் + பிள்ளை + தமிழ்.]

**அழகர், பிள்ளைத்தமிழ்** பார்க்க; see *alagar, pillai-t-tamil*.

**அழகர்மலை** *alagar-malai*, பெ. (n.) **மதுரை யருகிலுள்ள திருமாலிருஞ்சோலை**; name of a hill temple near Madurai. 'திருமால்குன்றம் - அழகர் திருமலை' (சிலப். 11 : 91, அடியார்க். உரை).

[அழகர் + மலை. மல் (வளம்) → மலை.]

**அழகர்** பார்க்க; see *alagar*.

**அழகரந்தாதி** *alagar-andādi*, பெ. (n.) **பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருமாலிருஞ்சோலை யழகர்மேற் பாடிய அந்தாதிப் பனுவல்**; name of an *andādi* poem on *Alagar* of *Tirumaliruñjōlai* by Pillaipperumāl Aiyaṅgār.

[அழகர் + அந்தாதி.]

**அழகர்**[1], **அந்தாதி** பார்க்க; see *alagar*[1], *andādi*.

**அழகவேதம்** *alaga-vēdam*, பெ. (n.) **ஒரு மூலிகை யின் (அதிவிடயம்) வேர்** (மலை.); atis (செ. அக.) — the root of Indian attees, *Aconitum heterophyllum* (சா.அக.).

**அழகன்** *alagan*, பெ. (n.) 1. **அழகுள்ளவன்**; handsome man. 2. **அழகனான இராமன்**; Rama, the handsome one. ''அழகித ழகிதென வழகன்'' (கம்பரா. யுத்த. மூலபல. 160). 3. **திருமால்**; *Tirumal* (Viṣṇu). ''திகிரியை யுடைய அழகனை'' (தக்கயாகப். 239, உரை).

ம. அழகன்

[அழகு → அழகன்.]

**அழகாத்திரிவெட்டு** *alagattiri-vettu*, பெ. (n.) **பழைய காசுவகை** (பணவிடு. 132); an ancient coin.

[அழகாத்திரி + வெட்டு.]

**அழகாரம்** *alagāram*, பெ. (n.) 1. **அழகான பேச்சு**; brilliant speech, brilliancy of expression. 2. **வீண்புகழ்ச்சிப் பேச்சு**; empty compliment.

[அழகு + ஆரம் (ஓர் ஈறு). இனி, அழகிய மாலைபோன்ற பேச்சு எனினுமாம். ஆரம் = முத்து, முத்துமாலை.]

**அழகானகருப்பி** *alagāna-karuppi*, பெ. (n.) **நீலஞ்சோதி**; the root of the milky shrub, *Euphorbia tirucalli* (சா.அக.).

[அழகு + ஆன + கருப்பி. கரு → கருப்பு → கருப்பி.]

**அழகி** *alagi*, பெ. (n.) **அழகுள்ளவள்**; beautiful woman. ''அழகிகூத் தாடு கின்றாள்'' (சீவக. 1254).

[அழகு → அழகி. 'இ' பெ. பா. ஈறு.]

**அழகிதழகிது** *alagid(u)-alagidu*, பெ. (n.) **மிக நன்று!** 'Very fine! magnificent!' used often ironically. ''அழகித ழகிதென வழகன்'' (கம்பரா. யுத்த. மூலபல. 160).

[அழகிது + அழகிது – அழகிதழகிது (அ. தொ.).]

இது அடிக்கடி இழிவுக்குறிப்பாக நிகழும்.

**அழகியநம்பி** *alagiya-nambi*, பெ. (n.) *தமிழ்க் குருபரம்பரை நூலாசிரியர்*; the author of the *Guru parambarai* in Tamil verse.

**அழகியமணவாளதாசர்** *alagiya-manavaladāšar*, பெ. (n.) அட்டப் பிரபந்தம் என்னும் திருமாலிய (வைணவ)ப் பனுவல் திரட்டின் ஆசிரியரான பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் (அஷ்டப். திருவரங். கலம். 101); another name of Pillaipperumāl Aiyangār, the author of *Asta prabandham*.

[அழகிய மணவாளன் = திருமால். **Skt.** dāsa > **த.** தாசர் = அடியார். 'அர்' உயர்வுப் பன்மை யீறு.]

**அழகியமணவாளன்** *alagiya-manavālan*, பெ. (n.) *அரங்கநாயகன் என்னும் திருவரங்கத் திருமால்*; *Tirumal* (Visnu) at *Tiruvarangam* (Srirangam), the handsome bridegroom.

[அழகு → அழகிய (கு. பெ. எ.). மணம் + ஆளன் (ஆ.பா. ஈறு) – மணவாளன்.]

சூடிக் கொடுத்த நாய்ச்சியார் என்னும் ஆண்டாளம்மையார் திருமாலைத் தம் மணவாளனாகக் கருதியது இங்குக் கவனிக்கத் தக்கது.

**அழகியவாணன்** *alagiya-vāṇan*, பெ. (n.) ஒரு *வகை மட்ட நெல்*; a variety of paddy yielding coarse rice.

[அழகு → அழகிய (கு. பெ. எ.). வாழ் → வாழ்நன் → வாணன் (மரூஉ).]

**அழகியன்** *alagiyan*, பெ. (n.) *அழகனான சிவன்*; Śiva, the handsome one. "நித்த மணாளர் நிரம்ப வழகியர்" (திருவாச. 17 : 3).

[அழகு → அழகிய → அழகியவன் (அழகிய + அவன்) → அழகியன்.]

**அழகியாள்** *alagiyāl*, பெ. (n.) *செவ்வகத்தி*; scarlet-flowered pea tree, *Sesbania punicea* alias *Coronilla grandiflora* (*coccinea*) (சா.அக.).

**அழகியான்** *alagiyān*, பெ. (n.) *அழகனான திருமால்*; *Tirumal* (Visnu), the handsome one. "அழகியான் தானே அரியுருவன் தானே" (திவ். இயற். நான்மு. 22).

[அழகு → அழகிய → அழகியவன் → அழகியான்.]

**அழகு**[1] *alagu*, பெ. (n.) 1. *எழில், கண்ணிற் கினிமை*; beauty, comeliness. "அரிபொங்கிக் காட்டு மழகு" (திவ். இயற். நான்மு. 21). 2. *சிறப்பு* (திருநூற். 9); excellence. 3. *நற்குணம்* (அரு.நி.); good nature. 4. *இன்பம்* (பிங்.); happiness. 5. *இளமை*; youth (சா. அக.). 6. *பாட்டின் எண் வகையான வனப்புகளுள் ஒன்று*; a kind of literary work, one of the eight *vanappus*.

"செய்யுள் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே"
(தொல். பொருள். செய். 236).

ம. அழகு; க. அடகு; தெ. அங்கு.

**அழகு**[2] *alagu*, பெ. (n.) 1. *கண்டசருக்கரை* (வின்.); rock candy. 2. *சருக்கரை*; sugar (சா.அக.). 3. *வெல்லம்*; jaggery (சா.அக.).

**அழகுகாட்டு-தல்** *alagu-kāttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *உடம்பின் அல்லது உறுப்பின் சைகைகளால் நகையாடுதல் (பரிகசித்தல்) அல்லது பழித்தல்*; to mimic, make faces at, for sport or ridicule.

[அழகு + காட்டு. காண் (த.வி.) → காட்டு (பி.வி.).]

அழகு[1] பார்க்க; see *alagu*[1].

**அழகுகாமாலை** *alagu-kāmālai*, பெ. (n.) *காமாலை வகை* (சீவரட்.); variety of jaundice (செ.அக.) — *உடம்பு மினுமினுத்து, கைகால் அசதியையும், புருவம் கண் மூத்திரம் முதலிய வற்றில் மஞ்சள் நிறத்தையும், ஆண்குறியில் எரிச்சலையும், செரியாமை (அசீரணம்) உப்பசம் முதலிய குணங்களையும் உண்டாக்கும் ஒருவகைக் காமாலை*; a form of jaundice characterised by glossy skin, languor, yellow eyes, yellow urine, burning sensation in the urinary passage, indigestion and distension of the stomach, etc., so called because of its lending a peculiar beauty to the body (சா. அக.).

**அழகுகுளிசம்** *alagu-kulišam*, பெ. (n.) *கழுத்தணி வகை*; amulet worn as an ornament on the neck.

[ஒருகா. குளிகம் (குளிகை) → குளிசம்.]

அழகு[1] பார்க்க; see *alagu*[1].

**அழகுசர்ப்பம்** *alagu-šarppam*, பெ. (n.) ஒருவகை அழகிய பாம்பு; a kind of beautiful snake.

[அழகு + சர்ப்பம். Skt. šarpa > த. சர்ப்பம்.]

அழகு[1] பார்க்க; see *alagu*[1].

**அழகுசப்பாணி** *alagu-šappāni*, பெ. (n.) நடக்க வொட்டாது குழந்தை கால்களை முடக்கும் ஓர் ஊதை (வாயு); a paralytic affectation manifested in the legs of children rendering them unable to walk, *Poliomyelitis* (சா.அக.).

[அழகு + சப்பாணி. சப்பளி → சப்பாளி → சப்பாணி = காலை மடக்கிச் சப்பளித்திருத்தல்.]

**அழகுசம்பங்கி** *alagu-šambangi*, பெ. (n.) கொடிச் சம்பங்கி; the creeper champak, Indian cowslip creeper, *Pergularia minor* (சா.அக.).

**அழகுசிவப்பி** *alagu-šivappi*, பெ. (n.) அழகியாள் பார்க்க; see *alagiyal* (சா.அக.).

**அழகுசெண்டேறுதல்** *alagu-šend(u)-ēru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. விளையாட்டுக்காகச் சாரி வருதல் (ஈடு, 7 . 3 : 1); to ride for pleasure. 2. அழகைக் காட்டுதல் (ஈடு, 1 . 4 : 6); to exhibit one's beauty.

[அழகு + செண்டு + ஏறு. செண்டு = குதிரையைப் பழக்கிச் செலுத்தும் வட்டப் பாதைவெளி. செண்டேறுதல் = செண்டுவெளியிற்போற் குதிரையேறி வருதல்.]

அழகு[1] பார்க்க; see *alagu*[1].

**அழகுதுரைச்சி** *alagu-turaicci*, பெ. (n.) ஒரு செயற்கை நஞ்சு (இந்திர பாடாணம்) (மூ.அ.); an arsenic preparation.

[அழகு + துரைச்சி. துரை = தலைவன், வேள், மன்னன். துரை (ஆ.பா.) – துரைச்சி (பெ.பா.). இங்கு அணிவகையில் அஃறிணைப் பெயராயிற்று.]

**அழகுதுரைப்பெண்** *alagu-turai-p-pen*, பெ. (n.) அழகுதுரைச்சி பார்க்க; see *alagu-turaicci*.

[துரைச்சி = துரைப்பெண்.]

**அழகுதேமல்** *alagu-tēmal*, பெ. (n.) பெண்கட்கு அழகை யுண்டாக்கும் தேமல் வகை; spreading yellow spots on the body of women, regarded as adding beauty to them.

**அழகுபூச்சூடி** *alagu-pū-c-cūdi*, பெ. (n.) நீரரளி; water gannair or knot grass, *Polygonum genus* (சா.அக.).

[அழகு + பூ + சூடி.]

**அழகுமுல்லை** *alagu-mullai*, பெ. (n.) ஒரு வகை மலையாள முல்லைப்பூ; Malabar jasmine, *Jasminum malabaricum* (சா.அக.).

**அழகுவண்ணத்தி** *alagu-vannatti*, பெ. (n.) மருதோன்றி; fragrant nail dye, *Lawsonia alba* (சா.அக.).

[அழகு + வண்ணத்தி. வண்ணம் (நிறம்) → வண்ணத்தி = நிறத்தை யுண்டுபண்ணுவது. 'அத்து' சாரியை. 'இ' வி.முத. ஈறு.]

அழகு[1] பார்க்க; see *alagu*[1].

**அழகுவண்ணன்** *alagu-vannan*, பெ. (n.) இதள் (பாதரசம்); mercury.

[அழகு + வண்ணன். வண்ணம் (நிறம்) → வண்ணன். 'அன்' உடைமை குறித்த ஒருமை யீறு.]

**அழகெருது** *alag(u)-erudu*, பெ. (n.) பழைய வரி வகை (T.A.S. iii, 32); an ancient tax.

[அழகெருது வைத்திருந்தவனிடம் இவ் வரி வாங்கப்பட்டதாகத் தெரிகின்றது.]

**அழகெருதுக் காட்சிக்காசு** *alagerudu-k-kātci-k-kāšu*, பெ. (n.) அழகெருது பார்க்க; see *alag(u)-erudu*.

[அழகு+எருது+காட்சி+காசு. அழகெருதை வைத்திருந்தவன், அதைக் காட்சிப் பொருளாகக் காட்டி மக்களிடம் பணம் வாங்கிப் பிழைத்தனால் அல்லது பொருளீட்டியதனால், அரசு அவனிடம் வரி வாங்கியதுபோலும்!]

**அழகோலக்கம்** *alag(u)-ōlakkam*, பெ. (n.) அரசன் தன் அழகுதோன்றக் கொலுவிருக்கை (திவ். இயற். திருவிருத். 13, வியா.); glorious presence, as that of a king in his throne hall.

[அழகு + ஓலக்கம். ஓல் → ஓலகம் → ஓலக்கம்.]

**அழசிகம்** *alašigam*, பெ. (n.) எருக்கு; lightning leaf, *Calotropis gigantea* (சா.அக.).

**அழசிதிப்பிலி** *alaši-tippili*, பெ. (n.) பெருந்திப்பிலி; elephant pepper, *Piperlongum scindapsus* (சா.அக.).

**அழத்தியம்** *alattiyam*, பெ. (n.) சோமனாதிப் பெருங்காயம்; asafoetida, formerly exported from Somnād in Gujarat (சா.அக.).

[ஒருகா. அழல் → அழற்று → அழற்றியம் → அழத்தியம்.]

*அழத்தியன்* பார்க்க; see *alattiyan.*

**மறுவ.** *அழத்தியன்*

**அழத்தியன்** *alattiyan,* பெ. (n.) *பெருங்காயம்* (மூ.அ.); asafoetida.

*[ஒருகா. அழற்று → அழற்றி → அழற்றியம் → அழற்றியன் → அழத்தியன்.]*

*அழத்தியம்* பார்க்க; see *alattiyam.*

**அழல்-தல்** *alal-,* 13 செ.கு.வி. (v.i.) 1. *எரிதல்;* to burn, to glow. ''விளக்கழ லுருவின்'' (பொருந. 5). 2. **திகழ்தல்** (**பிரகாசித்தல்**); to shine. ''மணிவிளக் கழலும் பாயலுள்'' (கம்பரா. பால. கடிமண. 67). 3. '**காந்துதல்**' (புறநா. 25 : 10, உரை); to burn. 4. **உறைப்பாதல்;** to be acrid, pungent. 5. **வெகுள்தல்;** to get into a rage. ''அதிவேகமொடழலா'' (பாரத. மணிமா. 19).

**ம.** அழலுக (நோதல், துயருறுதல்); **க.** அழல், அடலு; **தெ.** அடலு (வருந்துதல்); **து.** அரதெ, அர்ல, அர்லுனி.

*[உள் → அள் → அழல்.]*

**உண்ணம்** பார்க்க; see *unnam.*

**அழல்** *alal,* பெ. (n.) 1. **தீ, நெருப்பு;** fire. ''வேளாக மழல்பட'' (கந்தபு. உற்பத். காமத. 90). 2. **தீக்கொழுந்து;** flame. ''தீயழறுவைப்ப'' (பரிபா. 5 : 3). 3. **சூடு, வெப்பம்;** heat. ''நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல்வ தூஉம்'' (நாலடி. 124). 4. **காய்ச்சல்** (**சுர**) **வெப்பம்;** temperature in fever (சா.அக.). 5. **நரகம்;** hell. ''அழனம்மை நீக்குவிக்கும்'' (தேவா. 6 . 93 : 4). 6. **செவ்வாய்** (பிங்.); Mars. 7. **ஆரல்** (**கார்த்திகை**); the 3rd lunar asterism. ''அழலெனு மீனவர்க்கத் தறுவரும்'' (கந்தபு. உற்பத். திருவவ. 126). 8. **கேட்டை** (பிங்.); the 18th lunar asterism. 9. **எரிவு;** burning sensation as of a wound, of medicine in the system. 10. **உறைப்பு;** pungency (தைலவ. தைல. 54). 11. **சினம்;** rage, anger. 12. **நஞ்சு;** poison. ''அழற்க ணாகம்'' (மணிமே. 23 : 69). 13. **எருக்கு** (மூ.அ.); madar, *Calotropis gigantea.* 14. **கள்ளி** (மூ.அ.); spurge. 15. **கொடுவேலி** (மலை.); Ceylon leadwort, *Plumbago zeylanica.*

**ம.** அழல்; **து.** அர்ல, அர்லுனி.

*[உள் → அள் → அழல்.]*

*அழல்-தல்* பார்க்க; see *alal-.*

**அழல்சொரிந்தவுப்பி** *alal-sorinda-v-uppi,* பெ. (n.) **கல்லுப்பு;** a kind of common salt obtained in the natural state, so called from the heat it had imbibed while remaining buried under the earth (சா.அக.).

**அழல்வண்ணன்** *alal-vannan,* பெ. (n.) **சிவன்;** Śiva, one having the colour of fire. ''அழல் வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே'' (தேவா. 6 . 94 : 7).

*[அழல் + வண்ணன். வள் = வரி. வரி → வரணம் → வரணன். வள் → வண் → வண்ணம் → வண்ணன் = வரணன்.]*

*அழல், வண்ணம்* பார்க்க; see *alal, vannam.*

**அழல்விதை** *alal-vidai,* பெ. (n.) **நேர்வாளவித்து** (மலை.); croton seed (செ.அக.) — croton seed or king's seed, *Croton tigilium* (சா. அக.).

Note (சா.அக.) : These seeds which were formerly known in Europe under the name of *Grana molucca,* are of a convex shape on one side and bluntly angular on the other. They are reckoned by Vaidyans amongst their drastic purgatives and are frequently prescribed by them when powerful cathartics are required.

இவ்விதை முன்பு ஐரோப்பாவில் 'கிரானா மொலுக்கா' என்னும் பெயரொடு வழங்கிற்று. இது ஒருபுறம் உள் வளைவாகவும் மறுபுறம் மொட்டைக் கோண வடிவிலும் இருக்கும். இது நாட்டு மருத்துவரால் கடுங் கழிச்சல் மருந்துகளுள் **ஒன்றாகக்** கொள்ளப் படுகிறது. வலிய கழிச்சல் மருந்து வேண்டும் போதெல்லாம் இதுவே கொடுக்கப்படும்.

**அழல்விரியன்** *alal-viriyan,* பெ. (n.) **கடித்தால் தாங்கமுடியாத எரிச்சலையும் வலியையும் உண்டுபண்ணும் எரிவிரியன், விரியன்பாம்பு வகைகளுள் ஒன்று;** a kind of venomous viper, the bite of which is followed by unbearable burning sensation and pain.

*[அழல் + விரியன். அழல் = எரிச்சல்.]*

**அழல்விழி-த்தல்** *alal-vili-,* 4 செ.கு.வி. (v.i.) **சினத்தொடு பார்த்தல், வெகுளியாற் கண் சிவந்து நோக்குதல், தீப் புறப்பட விழித்தல்;** to flash fire from the eyes in anger. ''அங்கணேவ வழல்விழித்து'' (திருவாலவா. 14 : 5).

*[அழல் + விழி. சினம் நெருப்பின் தன்மையது. அதனால், அழலுதல், கனலுதல், வெகுளுதல்*

*முதலிய வினைச்சொற்கள் பிறந்தன. இனி, ஒரோவொரு சமையத்தில் வெகுளி வேகத்தாற் கண்களினின்று தீப்பொறி பறப்பது முண்டு.]*

**அழலம்பூ** *a̲lal-am-pū*, பெ. (n.) ***தீம்பூ, தீம்பூ மரம்***; a kind of flower, the tree that produces that flower. "அழலம்பூ நறவார்ந்து" (சீவக. 939).

*[அழல் + அம் (சாரியை) + பூ.]*

இச் சொல்லிற்குச் ***சா.*** *அகரமுதலியில்* 'சங்கங்குப்பிச் செடி' என்று இன்னொரு பொருள் குறிக்கப்பட்டுள்ளது. ஆயின், 'small-leaved glory tree, *Cleodendron inerme*' என்னும் அதன் ஆங்கிலப் பொருள் பொருந்த வில்லை. செடியும் மரமும் ஒன்றல்ல.

**அழலவன்** *a̲lalavan̲*, பெ. (n.) 1. ***நெருப்புத் தேவன்***; god of fire. 2. ***கதிரவன்*** (பிங்.); Sun. 3. ***செவ்வாய்*** (பிங்.); Mars.

*[அழல் + அவன் (ஆ. பா. ஈறு).]*

**அழலாடி** *a̲lal-ādi*, பெ. (n.) ***சிவன்*** (திவா.); Šiva, dancing with fire in his hand.

*[அழல் + ஆடி. ஆடு → ஆடி. 'இ' வி. முத. ஈறு. நெருப்பைக் கையிலேந்தி நடஞ்செய்வ தாகச் சொல்லப்படுவதனால், சிவன் அழலாடி யெனப்பட்டான்.]*

**அழலானி** *a̲lal-āni*, பெ. (n.) *வாட்டம்*; fading, withering. "அழலானியை யுடைய தாமரைப் பூவில்" (திவ். அமலனாதி. தனியன், வியா.)

*[அழல் + ஆனி. **ஒருகா.** Skt. hāni > த. ஆனி (தீங்கு).]*

**அழலி** *a̲lali*, பெ. (n.) ***நெருப்பு*** (பிங்.); fire.

*[அழல்தல் = எரிதல். அழல் + இ – அழலி. 'இ' வி.முத. ஈறு.]*

**அழலிக்கை** *a̲lalikkai*, பெ. (n.) *எரிச்சல், வயிற் றெரிச்சல்*; smarting pain, a peculiar burning sensation in the stomach caused by jealousy. என் உடைமையைக் கொடுக்க உனக்கேன் இத்தனை அழலிக்கை? (இராட்.).

*[அழல் → அழல்கை → அழலுகை → அழலிக்கை (தொ.பெ.).]*

**அழலிடமேந்தி** *a̲lal-idam-ēndi*, பெ. (n.) ***நெருப்பை இடக்கையில் ஏந்தி நிற்கும் அல்லது ஆடும் சிவபெருமான்*** (கந்தபு. சுருக். 1); Šiva, as holding a ball of fire in his left hand.

*[அழல் + இடம் + ஏந்தி. இடம் = இடக்கை. ஏந்து → ஏந்தி. 'இ' வி.முத. ஈறு.]*

**அழலூட்டு-தல்** *a̲lal-ūttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ***தீயுண்ணச் செய்தல், தீ வைத்துக் கொளுத்து தல்***; to set on fire, burn. "அரியன முப்புரங் கள்அவை ஆரழ லூட்ட லென்னே" (தேவா. 7. 99 : 8).

*[அழல் + ஊட்டு. உண் (த.வி.) → ஊட்டு (பி.வி.). ஊண் + து – ஊட்டு. 'து' பி.வி. ஈறு.]*

**அழலேந்தி** *a̲lal-ēndi*, பெ. (n.) *சிவபிரான்* (திவா.); Šiva, holding fire in the hand.

*[அழல் + ஏந்தி. ஏந்து → ஏந்தி. 'இ' வி. முத. ஈறு.]*

**அழலை** *a̲lalai*, பெ. (n.) 1. ***உடம்பின் காந்தல்***; internal heat of the body (சா.அக.). 2. ***தொண்டைக் கரகரப்பு*** (C.G.); irritation of the throat. 3. ***களைப்பு*** (C.G.); fatigue. 4. ***ஒருவகைப் பாம்பு***; a kind of snake.

*[அழல் → அழலை. 'ஐ' தொ. பெ. ஈறு.]*

**அழலைக்கிராணி** *a̲lalai-k-kirāni*, பெ. (n.) ***உடம்பின் வெப்பத்தா லேற்படுங் கழிச்சல்***; inflammatory or irritant diarrhoea (சா.அக.).

*[அழலை + கிராணி.* **Skt.** grahaṇi > த. *கிராணி.]*

**அழலைச்சுரம்** *a̲lalai-c-curam*, பெ. (n.) 1. ***உடம்பு அதிக வெப்பங் கொள்வதனால் உண் டாகுங் காய்ச்சல்***; fever arising from excessive heat in the body. 2. ***கணச்சூட்டினாற் குழந்தைகட்கு உண்டாகுங் காய்ச்சல்***; a fever in children arising from a wasting disease such as *Tabes mesenterica*.

சுரம் > Skt. jvara.

*[அழல் → அழலை. சுள் → சுர் → சுரம்.]*

**அழலைநோய்** *a̲lalai-nōy*, பெ. (n.) ***குழந்தை கட்குக் கணச்சூட்டினால் உறுப்புகள் வெந்து அதனால் ஏற்படும் ஒருவகைக் கணநோய்***; tuberculosis in children, characterised by inflammation of the internal organs of the body, such as *Tabes*, etc.

**அழலோம்பு-தல்** *a̲lal-ōmbu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***தீ வளர்த்தல்***; to tender the sacred fire. 2. ***தீயிற் படைத்தல் (அக்கினி காரியஞ் செய்தல்)*** (சைவச. பொது. 325); to offer oblations in fire.

*[அழல் + ஓம்பு. ஒப்புதல் = உயரவெடுத்தல். ஒப்பு → ஓம்பு.]*

ஓம்பு-தல் *பார்க்க*; see ōmbu-.

# அவரை



நகரவரை



நாட்டவரை



பட்டையவரை



பாலவரை



மணியவரை



வாளவரை



விரலவரை

தீ வளர்த்தல், சிறுதெய்வ வழிபாட்டினரும் தீயைச் சிறந்த தெய்வமாகக் கொண்டவரு மான ஆரியப் பூசாரியர் வழக்கம். தமிழர், சிவன் என்னும் பெயராலும் திருமால் (மாயோன்) என்னும் பெயராலும் முழுமுதற் கடவுளை வணங்குபவராதலின், தீ வளர்த்தல் அவர்க்குரிய தன்று.

**அழலோன்** *alalōn*, பெ. (n.) 1. **நெருப்புத் தெய்வம்;** god of fire. ''அஞ்சியந்த வழலோனு மப்பொழுதொ ரந்த ணாளன் வடி வாகியே'' (பாரத. இராசசூய. 57). 2. **கதிரவன்;** Sun. ''அங்கம் வெம்பினை பனிக் கதி ரல்லைநீ யழலோய்'' (கந்தபு. ஆற்று. 24). 3. **செவ்வாய்;** Mars (சூடா.). 4. **நெருப்பு;** fire (சா.அக.).

*[அழல் → அழலவன் → அழலான் → அழலோன்.]*

**அழவணங்காட்டு-தல்** *ala-vaṇaṅ-kāṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **முகத்தைச் சுழித்து ஒருவர் முகவமைப்பைப் பழித்துக் காட்டுதல்;** to mock by mimicking or by making faces at. அவனை அழவணங் காட்டுகிறான்.

*[அழகு + வண்ணம் (வகை) + காட்டு. காண் (த.வி.) → காட்டு (பி.வி.).]*

**அழவணம்** *ala-vaṇam*, பெ. (n.) மருதோன்றி (இ.வ.); henna (செ.அக.) — fragrant nail dye, *Lawsonia alba* alias *Lawsonia spinosa* (சா. அக.).

*[அழகுவண்ணம் → அழவணம்.]*

**அழகுவண்ணத்தி** பார்க்க; see *alagu-vaṇṇatti.*

'அழவண' என்பது கொச்சை வடிவம்.

**அழற்கங்கை** *alar-kaṅgai*, பெ. (n.) 1. **கருக் குழியிலுண்டாகும் பனிக்குடத்து நீர்;** the fluid collected in the womb of the female during her pregnancy, *Liquor amnii*. 2. **அழல்நீர்;** a thin watery acrid humour or discharge, *Ichor* (சா.அக.).

**அழற்கண்** *alar-kaṇ*, பெ. (n.) **அழற்சி விழி;** an eye-disease accompanied by inflammation of the eyes, inflamed eyes, *Ophthalmia* (சா. அக.).

*[அழல் + கண்.]*

**அழற்கண்ணன்** *alar-kaṇṇan*, பெ. (n.) **சிவன்;** Śiva, having the eye of fire on his forehead.

*[அழல் + கண்ணன். கண் → கண்ணன் 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அழற்கண்வந்தோன்** *alar-kaṇ-vandōn*, பெ. (n.) **வீரபத்திரன் என்னும் சிவத்தோற்றத் தெய்வம்** (பிங்.); Virabhadra, born of Śiva's eye of fire.

*[அழல் + கண் + வந்தோன்.* **Skt.** *Vira-bhadra > த. வீரபத்திரன்.]*

இது தொன்மக் கதையால் தோன்றியது. சிவபிரானின் நெற்றிக் கண்ணினின்று 'வீரபத்திரன்' என்னும் தேவன் தோன்றித் தக்கன் வேள்வியை அழித்தான் என்பது ஆரியச் சிவத் தொன்மக் கதை.

**அழற்கதிர்** *alar-kadir*, பெ. (n.) **கதிரவன்;** Sun sending forth fiery rays. ''வேலை யழற்கதிர் படிந்த வியன்கங்குல்'' (பெரியபு. திருஞான. 8).

*[அழல் + கதிர்.]*

**அழல், கதிர்** பார்க்க; see *alal, kadir.*

**அழற்கரத்தோன்** *alar-karattōn*, பெ. (n.) **நெருப்பைக் கையிலேந்திய சிவபிரான்** (உரி.நி).; Śiva, holding fire in the hand.

*[அழல்+கரத்தோன். கரம்+அத்து (சாரியை) +ஓன் (ஆ.பா. ஈறு) — கரத்தோன். கருத்தல் = செய்தல். கரு → கரம் = செய்யுங் கை.]*

'கரம்' என்னுஞ் சொல் 'கர' என்னும் வட சொல்லாகக் கருதப்படுகின்றது. ஆயின், அதன் மூலத்தை நோக்கின் தென்சொல்லாகத் தெரிகின்றது. கருமம், கருவி என்பன தென் சொற்கள். கருமம்→கம்மம்→கம். கம்மவர் = பயிர்த்தொழில் செய்வார். கம்மாளர் = கொற்றொழில் செய்வார்.

''ஈமுங் கம்மும் உரும்என் கிளவியும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன''

என்னும் தொல்காப்பிய (எழுத்து. புள்ளி. 33) நூற்பா, 'கம்' என்னுஞ் சொல்லைத் தென் சொல்லாகவே கொண்டுள்ளது. சமற் கிருதத்தில் பல தென்சொற்கள் வெளிப் படையாகவும் சில தென்சொற்கள் கரந்தும் வழங்குகின்றன. செய்தல் என்னும் பொருள் கொண்ட 'கருத்தல்' என்னுஞ் சொல் தமிழிற் பண்டே வழக்கற்றது; அதனால், கழகச் செய்யுள்களில் இடம்பெறவில்லை. இந் நிலைமையும், வடநூல்களிற் கரச்சொற் பெருவழக்கும், ஆரியர் சொல்வன்மையும், தமிழர் சொலமாட்டாமையும், கருமம் என்னுஞ் சொல்லைக் 'கர்ம' என்னும் வட சொற் றிரிபாகக் கொள்ள இடந்தருகின்றது.

இன்னும் இதன் விளக்கத்தைக் கருமம் என்னும் உருப்படியிற் காண்க.

'கரு' என்னும் தமிழ் வினைமுதனிலை வடமொழியிற் 'க்ரு' என்று திரியும்.

**அழற்கருமம்** *alar-karumam*, பெ. (n.) **தீ வழிபாடும் தீயிற் படைப்பும் (அக்கினி காரியம்)** (கூர்மபு. வருணாச். 19); religious oblations offered in fire.

*[அழல் + கருமம். கரு → கருமம்.]*

*அழற்கரத்தோன்* பார்க்க; see *alar-karattōn*.

**அழற்காமாலை** *alar-kāmālai*, பெ. (n.) *காமாலை நோய்வகை* (தஞ். சரசு. iii, 122); a kind of jaundice (செ.அக.) — **பித்தத்தாலுடம்பில் எரிச்சலை யுண்டாக்கும் ஒருவகைக் காமாலை**; jaundice accompanied by a burning sensation of the body due to disturbance in bile secretion (சா.அக.).

*[அழல் + காமாலை.]*

**அழற்காய்** *alar-kāy*, பெ. (n.) 1. *மிளகாய்*; chilly (சா.அக.). 2. *மிளகு*; black pepper. "தோகை விளங்கழற்காய்" (தைலவ. தைல. 51).

*[அழல் = நெருப்பெரிவு போன்ற உறைப்பு. காழ் → காய்.]*

*காய்* பார்க்க; see *kāy*.

**அழற்குட்டம்** *alar-kuttam*, பெ. (n.) **3ஆம் நாண்மீனாகிய ஆரல் (கார்த்திகை)**; the 3rd lunar asterism. "ஆடிய லழற்குட்டத்து" (புறநா. 229 : 1).

*[அழல் = நெருப்பு. குள் → குட்டு → குட்டம் = திரள்.]*

**அழற்குத்து-தல்** *alar-kuttu-*, 5 செ.குன்றாவி. (v.i.) 1. **மணம் உறைத்தல்** (இ.வ.); to have a strong smell (Loc.) (செ.அக.). 2. **கொடிய நாற்றம் வீசுதல்**; to emit a strong offensive smell like the smell of putrefaction, to stink (சா.அக.).

*[அழல் = நெருப்பு. குத்துதல் = கையால் அல்லது கத்தியால் குத்துதல். அழற்குத்துதல் = நெருப்புத் தாக்குவதுபோன்று கடுநாற்றம் மூக்கைத் தாக்குதல்.]*

**அழற்சி** *alarci*, பெ. (n.) 1. **கொதிப்பு**; internal heat of the body (சா.அக.). 2. **உள்ளழற்சி**; inflammation of any internal organ of the body (சா.அக.). 3. *எரிவு*; burning sensation. 4. **உறைப்பு**; pungency. "புளிப்புக்கைப் பழற்சி யுப்பு" (ஞானவா. விரதசூ. 13). 5. *சினம், வெகுளி*; anger, rage. "அவன்றிறத் தழற்சி யின்மை வேண்டுவல்" (சீவக. 393). 6. **அழுக்காறு, பொறாமை** (வின்.); envy, jealousy. 7. **கால்நடைகட்குச் சுரமுண்டாக்கும் ஒரு நோய்**; inflammatory fever in cattle.

ம. அழல்ச்ச

*[அழல் + சி (தொ. பெ. ஈறு).]*

**அழற்சிநஞ்சு** *alarci-nañju*, பெ. (n.) **உடம்பின் உள்ளுறுப்பை வெந்துபோகச் செய்யும் நஞ்சு அல்லது நஞ்சுகூடிய மருந்து**; any poison or poisonous compound causing inflammation of the internal organs, irritant poison or acrid poison (சா.அக.).

**அழற்சியிலாநஞ்சு** *alarci-y-ilā-nañju*, பெ. (n.) **உள்ளுக்குக் கொள்வதனால் அழற்சி யுண்டாக்காத நஞ்சு**; non-irritant poison (சா.அக.).

*[அழற்சியிலாத → அழற்சியிலா + நஞ்சு.]*

**அழற்சிவிழி** *alarci-vili*, பெ. (n.) **அழற்சியை யுண்டாக்குங் கண்ணோய்**; an eye disease accompanied by inflammation of eyes, inflamed eyes, *Ophthalmia* (சா.அக.).

**அழற்சூடி** *alar-cūdi*, பெ. (n.) **கொடிவேலி (கொடுவேலி)**; Ceylon leadwort, *Plumbago zeylanica* (சா.அக.).

*[அழல் + சூடி. சூடு → சூடி. 'இ' வி.முத. ஈறு.]*

**அழற்பால்** *alar-pāl*, பெ. (n.) 1. *எருக்கு* (பச்.மூ.); madar (செ.அக.). 2. **உடம்பிற் பட்டவிடத்தில் வேகச்செய்யும் பால்; அதாவது எருக்கம்பால், தில்லைப்பால்**; the milky juice of plants like madar and spurgewort, causing inflammation or blister on coming in contact with the skin.

*[அழல் + பால்.]*

**அழற்பிணி** *alar-pini*, பெ. (n.) **அழற்சியை யுண்டாக்கும் நோய்**; any disease causing inflammation of the internal organ or organs of the body, such as Phthisis, Stomatitis, Hepatitis, etc. (சா.அக.).

*[அழல் + பிணி.]*

**அழற்பித்தம்** *alaṟ-pittam*, பெ. (n.) *பித்தநோய் வகை*; a kind of bilious disease (W.) (செ. அக.) — *உடம்பிற் பித்தக்கொதிப்பினால் இளமையில் மயிர் நரைத்து உடம்பு வெளுத்துக் கடைக்கண் சிவந்து, அறிவம் (ஞானம்) பேசும் ஒருவகைப் பித்தநோய்*; a disease peculiar to young people characterised by premature greyness of the hair, anaemia, inflammation of the corner of the eyes, etc., due to excessive heat in the body arising from the deranged condition of the bile. Such persons are inclined to philosophical discussions, a kind of mania (சா.அக.).

[*அழல் + பித்தம்.*]

**அழற்புண்** *alaṟ-puṇ*, பெ. (n.) *சிவந்து அரத்தம் வடியும் புண்* (இங்.வை.); inflamed bleeding sore or ulcer.

[*அழல் + புண்.*]

**அழற்புற்று** *alaṟ-puṟṟu*, பெ. (n.) *வெள்ளை விழியில் எரிசதையை உண்டாக்கும் ஒருவகைக் கண்ணோய்* (சீவரட். 266); an eye disease creating an outgrowth in the white of the eye which causes burning sensation.

[*அழல் + புற்று.*]

இது குணமாக்க முடியாதது (incurable) என்பது சா.அக. கூற்று.

**அழற்றடம்** *alaṟṟaḍam*, பெ. (n.) *தீக்காய் கலம்*; vessel containing fire. "அழற்றடம் புரையு மருஞ்சுரம்" (திருக்கோ. 202, கொளு).

[*அழல் + தடம். தட = பெரிய. தட → தடம் = பெரும்பானை, மிடா.*]

**அழற்றாரன்** *alaṟṟāraṉ*, பெ. (n.) *மகாரம்*; the sacred mystic letter *ma*. It is so called because it represents one of the 5 psychic centres situated in the navel region containing gastric fire (சா.அக.).

[*அழல் + தாரன். தாரன் என்பது தாரணன் என்னும் வடசொற் றிரிபாயிருக்கலாம்.* Skt. dhāraṇa > த. *தாரணம் → தாரணன் = கொண்டு அல்லது தாங்கிநிற்பது.*]

**அழற்றி** *alaṟṟi*, பெ. (n.) 1. *அழற்சி*; inflammation (சா.அக.). 2. *எரிவு*; burning sensation (சா.அக.). 3. *எரியச்செய்வது*; that which causes burning. 4. *கண்ணைச் சுற்றிலும் குறிபோட்டதுபோற் கருப்புண்டாகி, வலியேற்பட்டுக் கடைக்கண்களில் வீக்கங் கண்டு, இளஞ்சிவப்பாகிப் பீளை கட்டி, நெற்றி, கன்னம் ஆகிய இடங்களில் அதிக வலியை யுண்டாக்கும் ஒரு கண்ணோய்*; A mucopurulent inflammation of the conjunctiva, marked by a dark ring round the eyes, with pain and swelling in the corners of the eye (சா.அக.).

[*அழல் (த.வி.) → அழற்று (பி.வி.) → அழற்றி. 'இ' வி.முத. ஈறு.*]

'அழற்றி' என்னுஞ் சொல் 'அழற்று' என்னும் பிறவினையினின்று திரிந்திருப்பதால், அழற்சி, எரிவு என்னும் தன்வினைப் பொருள்கள் அத்துணைப் பொருத்தமானவை யல்ல.

**அழற்று-தல்** *alaṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *வெம்மைசெய்தல்*; to burn, scorch, heat, cauterise; cause smarting as a burn, or a caustic, or a poison; to inflame, irritate. "அழற்றிய பல்கதிர்" (கந்தபு. தேவ. திருப்பரங். 6) (செ.அக.) (சா.அக.). 2. *சுடல்*; to burn, to make sore. 3. *வெம்மையுறல்*; to cauterise or to cause smarting pain by the use of a cane. 4. (*கடுங்காய்ச்சலால்*) *துன்புறல்* (*வாதனைப்படல்*) *அல்லது அலற்றுதல்*; to be in anguish as in virulent fever.

சுடல் என்பது வெம்மைசெய்தல் என்பதில் அடங்கும். வெம்மையுறுதல் என்பது பிறவினைப் பொருட்குப் பொருந்தாது. அலற்றுதல் என்பது பொதுவாகப் பிதற்றுதலையும் புலம்பலையுமே குறிக்கும். அலற்றுதல் வேறு; அழற்றுதல் வேறு.

[*அழல் (அழலுதல்) (த.வி.) → அழற்று (பி.வி.). அழற்றுதல் = அழலச்செய்தல்.*]

**அழறு** *alaṟu*, பெ. (n.) *சேறு*; mire. "அழறலர் தாமரை" (திவ். இயற். திருவிருத். 58).

[*அள்ளுதல் = நெருங்குதல், செறிதல், குழம்புதல். அள் → அளல் → அளறு = குழைசேறு, சேறு. அளறு → அழறு.*]

அழறு என்னும் வடிவம் ஏட்டுப் பிழையாகவு மிருக்கலாம்.

**அழன்** *alaṉ*, பெ. (n.) 1. *பிணம்*; corpse, carcase. "அழனெ னிறுதிகெட வல்லெழுத்து மிகுமே" (தொல். எழுத்து. புள்ளி. 59). 2. *பேய்* (பிங்.); evil spirit, devil.

[*அழி → அழம் → அழன். அழிதல் = கெடுதல், சாதல்.*]

**அழன்மண்** *alan-man*, பெ. (n.) **மிதித்தால் எரிச்சலை உண்டாக்கும் மண், உவர்மண்**; fuller's earth (சா.அக.).

[அழல் + மண். அழலுதல் = எரிதல்.]

**அழன்மண்வெதுப்புங்கோபி** *alan-man-veduppun-gōbi*, பெ. (n.) **குழல் ஆதொண்டைச்செடி;** common caper, *Capparis aphylla* (சா.அக.).

**அழன்றுகுழன்று** *alanru-kulanru*, வி.எ. (adv.) **நாட்பட்ட பிணம்போல் அழுகிக் குழகுழத்து**; in a putrefied or decomposed state as a corpse. அந்தப் பிணம் அழன்றுகுழன்று வந்து சேர்ந்தது.

[அழலுதல் = வெந்ததுபோலாதல். குழலுதல் = துவளுதல். அழல் + து – அழன்று. குழல் + து – குழன்று. 'து' இ.கா.வி.எ. ஈறு. '**அழன்றுகுழன்று**' எதுகை மரபிணைமொழி.]

**அழனம்**[1] *alanam*, பெ. (n.) **பிணம்**; corpse.

[அழன் → அழனம். 'அம்' ஓர் ஈறு.]

அழன் பார்க்க; see *alan*.

**அழனம்**[2] *alanam*, பெ. (n.) 1. தீ (பிங்.); fire. 2. **வெம்மை** (பிங்.); heat.

[அழல் → அழன் → அழனம்.]

அழல் பார்க்க; see *alal*.

**அழனாகம்** *alanāgam*, பெ. (n.) **ஒருவகை நச்சுப் பாம்பு** (வின்.); a poisonous snake whose lick is said to cause burning sensation (செ.அக.) — **நாவினால் நக்குவதனால் எரிச்சலை யுண்டாக்கும் ஒருவகை நாகப்பாம்பு**; a poisonous cobra causing a burning sensation by its mere licking (சா.அக.).

[அழல் + நாகம்.]

நாகம் என்பது பாம்பினத்தின் பொதுப் பெயர். நகர்ந்து செல்வது நாகம். நல்ல பாம்பு பாம்பினத்திற் சிறந்தது அல்லது தலைமையானது என்பதுபற்றி, பொதுப் பெயராலும் குறிக்கப்படுவது மரபு. அதனால் நாகப்பாம்பு என்னும் வழக்கெழுந்தது. பாம்பு என்னும் பொதுப்பெயர், முதற்காலத்தில் நல்லபாம்பையே சிறப்பாகக் குறித்துப் பின்னர்ப் பொதுப்பெயராயிற்று. இங்ஙனம் நாகம், பாம்பு என்னும் இருபெயரும் முரண்பட்ட வழக்குமாற்றம் பெற்றுள்ளன. இதன் விளக்கத்தை **நாகம்**, பாம்பு என்னும் உருப்படிகளிற் காண்க.

**அழனிறக்கடவுள்** *alanira-k-kadavul*, பெ. (n.) **அழலின் செந்நிறங்கொண்ட சிவபெருமான்**; Śiva, having the hue of fire. "ஆலவாயி னழனிறக் கடவுள்" (இறை. 1, உரை).

[அழல் + நிறம் + கடவுள் (முக்கரணத்தையுங் கடந்த முழுமுதல் தேவன்).]

ஒருசார் பண்டைத்தமிழர், கடவுளை நெருப்பின் கூற்றைச் சிறப்பாகக் கொண்டதாகக் கருதினதினால், அதன் நிறத்தை அவனுக்கு ஏற்றி அவனைச் சிவன் (சிவந்தவன்) என்றனர்.

**அழனீர்** *alanir*, பெ. (n.) **தென்னங் கள்**; coconut toddy (சா.அக.).

[அழல் + நீர்.]

தென்னங் கள் உடம்பிற்குச் சூட்டைத் தருவதால் அழனீர் எனப்பட்டது. வெப்பக் கால அரையாண்டு குளிர்ச்சிதரும் பனங் கள்ளும், குளிர்கால அரையாண்டு வெப்பந் தரும் தென்னங்கள்ளும் வடியும் இயற்கை யமைப்பு கவனிக்கத் தக்கது.

**அழாக்கு** *alākku*, பெ. (n.) **அழாக்கு, ஒரு முகத்தலளவு**; ollock, a measure of capacity, 1/8 of a measure. "வீரிய மழாக்குடற் பித்த முழக்கு" (தணிகைப்பு. அகத்திய. 308).

[அரையுழக்கு → ஆழாக்கு → அழாக்கு.]

**அழாந்தை** *alāndai*, பெ. (n.) **அழான் என்பவனின் தந்தை**; father of *Alan*. 'அழான் புழான் என நிறுத்தித் தந்தை என வருவித்து, நிலைமொழி னகரமும் வருமொழித் தகரமும் அகரமுங் கெடுத்து, அழாந்தை புழாந்தை என முடிக்க' (தொல். எழுத்து. புள்ளி. 53, நச். உரை).

**அழால்** *alāl*, தொ.பெ. (vbl. n.) **அழுகை;** weeping, crying.

[அழு + ஆல் (தொ. பெ. ஈறு). **ஒ.நோ:** எழு → எழால்.]

**அழாஅல்** *alaal*, தொ.பெ. (vbl. n.) அழுகை; weeping, crying. "அழாஅன் மறந்த புன் றலைச் சிறாஅர்" (புறநா. 46 : 5-6).

[அழல் → அழாஅல். அழால் → அழாஅல். இவை அளபெடை.]

அளபெடைச் சொல் செய்யுட்குரிய செயற்கை வடிவமாதலால், அகரமுதலியில் இடம்பெற இயல்புசொற்போல் அத்துணை ஏற்றதன்று.

**அழி[1]-தல்** *aḻi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***நாசமாதல்;*** to perish, to be ruined or destroyed. 2. ***சிதைதல், கெடுதல்;*** to decay, to be mutilated, to collapse. ''ஆரவண்ட லழியும்'' (நைடத. கைக்கி. 10). 3. ***செலவாதல்;*** to be spent, used up, sold out, exhausted. என்னிடமிருந்த சரக்கெல்லாம் அழிந்துவிட்டது. 4. ***தவறுதல்;*** to fail, to be frustrated. ''நீயுரைத்த தொன்று மழிந்திலது'' (கம்பரா. யுத்த. சீதைகளங். 30). 5. ***நிலைகெடுதல்;*** to lose one's standing, to be reduced to lower state, to become bankrupt. அழிந்த குடி. 6. ***தோற்றல்;*** to be defeated. ''வாதி லழிந்தெழுந்த'' (தேவா. 3 . 297 : 3). 7. ***காதலால் உருகுதல்;*** to melt with love. 8. ***பரிவுகூர்தல்;*** to sympathise with. ''புணர்ந்த நெஞ்சமொ டழிந்தெதிர் கூறி விடுப்பினும்'' (தொல். பொருள். அகத். 40). 9. ***வருந்துதல்;*** to suffer, to be troubled. ''சூனயத் திறத்தாற் சோர்வுகண் டழியினும்'' (தொல். பொருள். கற்பு. 9). 10. ***மனந்தளர்தல், மனமுடைதல்;*** to be disheartened. ''இதற்குஉள் ளழியேல்'' (கம்பரா. அயோத். நகர்நீங்கு. 17). 11. ***கரையுடைந்து நீர்பெருகுதல்;*** to swell, increase, as flood water. ''அழியும்புன லஞ்சன மாநதியே'' (சீவக. 1193). 12. ***காய்ப்பு ஓய்ந்தபின் தோட்டத்திலுள்ள செடிகள் அல்லது தோப்பிலுள்ள மரங்கள் நீக்கப்படுதல்;*** to be cleared, as a garden or tope after the plants or trees have ceased to bear fruit. எங்கள் மிளகாய்த் தோட்டம் நேற்றே அழிந்துவிட்டது. 13. ***குளம்(ஏரி) வற்றி மீன்பிடிக்கப்படுதல்;*** to have the water in a tank become considerably reduced to allow easy and effective fishing. நாளைக்குப் பனையூர்க்குளம் அழியப் போகிறது. 14. ***எழுத்து அல்லது வரைவு கலைக்கப்படுதல்;*** to be erased, as a writing or a drawing. கடிதம் மழையில் நனைந்து எழுத்தெல்லாம் அழிந்துவிட்டது. 15. ***சொல் அல்லது மொழி வழக்கறுதல்;*** to become obsolete as a word. ''ஆரியம்போல் உலக வழக்கழிந்தொழிந்து சிதையாவுன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே'' (மனோன். த.வா.).

**ம., க.** அழி; **தெ.** அடி, அடுவ; **து.** அளி புனி; **கோத.** அள்ச்.

*[ஒழி → அழி. ஒ.நோ: ஒட்டு → அட்டு, கொம்பு → கம்பு, மொண்டை → மண்டை.]*

**அழி[2]-த்தல்** *aḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***நாசஞ்செய்தல்;*** to destroy, exterminate. ''உலகழித்து நிற்கும் ஒருபெருங் கடவுள்'' (கந்தபு. மகேந். நகரழி. 6). 2. ***கெடுத்தல்;*** to ruin, damage. 3. ***பழித்தல்;*** to vilify, abuse, slander. 'அழித்துச் சொன்னவாறு' (தக்கயாகப். 494, உரை). 4. ***கலைத்தல்;*** to efface, obliterate. ''கோல மழித்தி யாகிலும்'' (திவ். நாய்ச். 2:5). 5. ***நீக்குதல்;*** to leave off, bring to a close. ''அசைவர லூசற்சீ ரழித்தொன்று பாடித்தை'' (கலித். 131 : 34). 6. ***குலைத்தல்;*** to disarrange. ''ஈடுசால் போரழித்து'' (சீவக. 59). 7. ***மறப்பித்தல்;*** to cause to forget. ''பொய்த லழித்துப் போனா ரொருவர்'' (சிலப். 7 : 43). 8. ***உள்ளதை மாற்றுதல்;*** to change the form or mode of. 'உடையினைப் பலகாலு மழித் துடுத்தல்' (தொல். பொருள். மெய்ப். 14, பேரா. உரை). 9. ***செலவழித்தல்;*** to spend. ''தேடா தழிக்கிற் பாடாய் முடியும்'' (கொ. வே. 44). 10. ***விடுகதை விடுவித்தல், அழிப்பாங்கதை;*** to solve a riddle. இந்த விடுகதையை அழி. 11. ***தடவுதல்;*** to smear. ''சுண்ண மழித்திலை தின்று'' (உபதேச. சிவ புண்ணிய. 225). 12. ***தோட்டத்திலுள்ள செடிகளை அல்லது தோப்பிலுள்ள மரங்களை நீக்கி விடுதல்;*** to clear a garden or tope of trees. செட்டியார் மாந்தோப்பை அழித்து வீடு கட்டிக்கொண்டார். 13. ***சூடு (சாணை) பிரித்தல், களத்திற் கடாவிடுதற்கு (பிணையலடித்தற்கு) முன் அரிக்கட்டுக் குவியலை அல்லது கதிர்க் குவியலைப் பிரித்துப் பரப்புதல்;*** to untie the bundles of reaped grain stalks and spread them out on the threshing floor preparatory to treading out the grain. சூடழித்தலைச் 'சூடு சுள்ளாப்பித்தல்' என்பது யாழ்ப்பாண வழக்கு.

**க.** அழி

அழி[1]-தல் பார்க்க; see *aḻi[1]-.*

*[அழிதல் (த.வி.) → அழித்தல் (பி.வி.).]*

சுண்ணமழித்தல் என்பது சுண்ணம் மழித்தல் என்றும் பிரிக்கப்படும். மழித்தல் → வழித்தல் = தடவுதல். நிலைமொழி யீற்று மகரமெய் புணர்ச்சியிற் கெடும்.

**அழி[1]** *aḻi,* பெ. (n.) 1. ***கேடு;*** ruin, destruction. ''அழிவந்த செய்யினும்'' (குறள், 807). 2. ***வைக்கோல்;*** straw. ''உழுத நோன்பக டழி

தின் றாங்கு'' (புறநா. 125 : 7). 3. **வைக்கோ லிடும் தொட்டி அல்லது அடைப்பு**; crib for straw. 4. **அளித்தட்டி (கிராதி)**; lattice. ம. அழி. 5. **வருத்தம், மனநோவு**; grief, mental pain. ''அழிதக மாஅந்தளிர் கொண்ட போழ்தினான்'' (கலித். 143 : 27). 6. **இரக்கம்**; pity. ''அழிவரப் பாடி வருநரும்'' (புறநா. 158 : 17 - 18). 7. *மிகுதி*; excessiveness. ''அற்றா ரழிபசி தீர்த்தல்'' (குறள், 226).

க. அழி; து. அளிபுனி.

[ஒழி → அழி. 'அழி' முதனிலைத் தொழிற் பெயரும் தொழிலாகு பெயரும்.]

வைக்கோல் = முதிர்ந்த நெற்பயிரின் சிதைந்தநிலை. மனநோவு = மனநிலையழிவு. இரக்கம் அதன் விளைவு. அழிபசி = வருத்தும் கடும்பசி.

**அழி**[2] *a̱li*, பெ. (n.) *கழிமுகம்* (நாஞ்.); place where the lagoon joins the sea (Nāñ.).

ம. அழி; க. அளவெ; து. அளுவெ.

[கழி → அழி.]

**அழி**[3] *a̱li*, பெ. (n.) வண்டு; beetle, honey beetle. ''அழிமல்கு பூம்புனலும்'' (தேவா. 2 . 190 : 3).

[அளி → அழி.]

அளி பார்க்க; see *a̱li*.

அழி என்னும் வடிவம் ஏட்டுப் பிழையாகவும் இருக்கலாம்.

**அழிகட்டு** *a̱li-kaṭṭu*, பெ. (n.) 1. **ஒன்றை அழித்தற்காகச் செய்யும் எதிர்ச்செய்கை**; an action in opposition to another action, counter action (சா.அக.). 2. **பொய்ச்சீட்டு**; fabrication to deprive another of his rights, forgery (W.). 3. **வீண் சாக்குப்போக்கு**; lame excuse, pretence (W.). 4. **தடை**; obstacle, impediment, hindrance. 5. **நஞ்சை முறிக்கும் மாற்று**; antidote. 6. **நஞ்சைப் போக்கும் மந்திர மாற்று**; magic power by which the effects of poisons are counteracted. 7. **மாற்று மந்திரம்**; magic counteracting magic.

['அழிகட்டு' வினைத்தொகை. 'கட்டு' முத. தொ. ஆகு.]

**அழிகடை** *a̱li-kaḍai*, பெ. (n.) *மிகமிகக் கெட்டது*; the worst.

['அழிகடை' வினைத்தொகை. 'கடை' பண். ஆகு.]

**அழிகண்** *a̱li-kaṉ*, பெ. (n.) 1. **பார்வையைக் கெடுக்கும் ஒருவகைக் கண்ணோய்**; an eye-disease causing blindness. 2. **குருட்டுக்கண்**; blind eye.

க. அழிகண்

**அழிகண்டி** *a̱li-kaṇḍi*, பெ. (n,) **கஞ்சன், பிசினாறி**; niggard, miser.

**அழிகண்பிரித்தல்** *a̱li-kaṉ-pirittal*, பெ. (n.) **கண் மிகவும் வலித்து விழியின்மேற் சதைமூடிக் கண்ணைச் சுற்றிப் புண்ணாக்கிப் பீளை கட்டும் ஒருவகைக் கண்ணோய்**; a form of ophthalmia marked by severe inflammation all round the eye and a mucopurulent discharge with swelling and excessive pain (சா.அக.).

**அழிகரப்பான்** *a̱li-karappāṉ*, பெ. (n.) *படர்தாமரை நோய்* (புதுவை); ringworm (Poṇḍ.).

[அழி = மிகுந்த, கடுமையான.]

**கரப்பான்** பார்க்க; see *karappāṉ*.

**அழிகரு** *a̱li-karu*, பெ. (n.) 1. **அழிந்த சினை**; an undeveloped ovum (சா.அக.). 2. **கருவழிவு, செத்துப் பிறந்த பீள்**; aborted foetus (W.).

['அழிகரு' வினைத்தொகை.]

கரு பார்க்க: see *karu*.

**அழிகன்று** *a̱li-kaṉṟu*, பெ. (n.) 1. **சிதைந்து விழும் விலங்குக் கரு** (புதுவை); aborted foetus, in animals (Poṇḍ.). 2. **செத்துப் பிறக்கும் விலங்குக் குட்டி**; still-born young of animals.

['அழிகன்று' வினைத்தொகை.]

கன்று பார்க்க; see *kaṉṟu*.

**அழிகால்** *a̱li-kāl*, பெ. (n.) *முதிர்ச்சியால் அழிக்கவேண்டிய* **வெற்றிலைத் தோட்டம்** (P.T.L.); betel-leaf garden where the vines having become old and unproductive are to be destroyed.

['அழிகால்' வினைத்தொகை. கொடிக்கால் → கால் (குறுக்கம்).]

**கொடிக்கால்** பார்க்க; see *koḍi-k-kāl*.

**அழிகாலி** *a̱li-kāli*, பெ. (n.) **வீண்செலவு செய்வோ-ன்-ள்** (இ.வ.); spendthrift, extravagant person (Loc.).

['அழிகாலி' வினைத்தொகை. ஒருகா. U. qawwāli > த. காலி = மனம் போனபடி நடப்பவன்.]

**அழிகிரந்தி** *aḻi-kirandi*, பெ. (n.) **புணர்ச்சிப் புண்ணோய் வகை**; sloughing venereal ulcer (W.).

[அழி = கடுமையான. **Skt.** granthi > த. கிரந்தி.]

**அழிகுட்டம்** *aḻi-kuṭṭam*, பெ. (n.) **உடம்பு முழுவதிலும் புண்கள் (இரணங்கள்) ஏற்பட்டுச் சதையழுகித் துன்புறுத்தும் ஒருவகைக் குட்ட நோய்**; a kind of severe leprosy marked by sloughing ulcers and gangrene all over the body (சா.அக.).

['அழிகுட்டம்' வினைத்தொகை. மேனி முழுவதும் வெண்ணிறமாய் மாறுவது தொழுநோய் என்றும், கைகால் அழுகிக் குறுகுவது குட்டம் என்றும் பெயர்பெற்றனபோலும்! குள் → குட்டு → குட்டம் = குறுமை.]

குட்டம் பார்க்க; see *kuṭṭam*.

**அழிகுட்டி** *aḻi-kuṭṭi*, பெ. (n.) 1. **விலங்குகளின் வயிற்றினின்று சிதைந்துவிழுங் கரு**; aborted foetus in animals (W.). 2. **வயிற்றில் இறந்து வெளியேற்றப்பட்ட பீள்**; the lifeless foetus expelled as a result of abortion (சா.அக.). 3. **வயிற்றில் இறந்து வெளியேற்றப்பட்ட குழந்தை**; still-born child or aborted dead child.

['அழிகுட்டி' வினைத்தொகை.]

குட்டி பார்க்க; see *kuṭṭi*.

**அழிகுநன்** *aḻigunaṉ*, பெ. (n.) **தோற்றவன்**; defeated person, one who is ruined. ''அழிகுநர் புறக்கொடை'' (பு. வெ. 3 : 20, கொளு).

[அழிகின்றான் → அழிகின்னான் → அழிகுன்னான் → அழிகுன்னன் → அழிகுனன் → அழிகுநன் (வினையா. பெ.).]

கின்று பார்க்க; see *kiṉṟu*.

**அழிகுளம்** *aḻi-kuḷam*, பெ. (n.) **நீர்வற்றி மீன் பிடிக்கின்ற அல்லது பிடித்த குளம்**; a nearly dried up tank or pond in which fishing operations have been carried out or are being carried out.

**அழிகொடிக்கால்** *aḻi-koḍi-k-kāl*, பெ. (n.) **முதிர்ச்சியால் அழிக்கப்படுகின்ற அல்லது அழிக்கப்படவேண்டிய வெற்றிலைத் தோட்டம்**; betel-leaf garden where the vines have become unproductive and are being or have to be destroyed.

[அழி + கொடி + கால். 'அழிகொடிக்கால்' வினைத்தொகை.]

கொடிக்கால் பார்க்க; see *koḍi-k-kāl*.

**அழிச்சாட்டம்** *aḻi-c-cāṭṭam*, பெ. (n.) 1. **அழிம்பு, தீம்பு**; wickedness. ''அழிச்சாட்டங் கூடுமோ?'' (குருபரம். பன். பக். 343). 2. **பொய்வழக்குத் தொடுப்பு**; false litigation.

[அழி = கெடுதி. சார்த்து → சாட்டு → சாட்டம் = பிறர்மேல் (தீங்காகப்) பழிசுமத்துதல்.]

**அழிச்சாட்டியக்காரன்** *aḻi-c-cāṭṭiya-k-kāraṉ*, பெ. (n.) 1. **அழிச்சாட்டியம் செய்பவன், தீம்பு செய்பவன்**; unjust and wicked person. 2. **பொய்வழக்கை எழுப்புகிறவன்**; one who incites false litigation.

[அழி = சாட்டியம் + காரன். 'காரன்' உடைமை குறித்த ஆ. பா. ஈறு.]

அழிச்சாட்டியம் பார்க்க; see *aḻi-c-cāṭṭiyam*.

**அழிச்சாட்டியம்** *aḻi-c-cāṭṭiyam*, பெ. (n.) 1. **அழிம்பு, தீம்பு**; wicked nature, persisting in evil conduct. வாங்கின கடனைக் கொடாமல் அழிச்சாட்டியம் பண்ணுகிறான்.

[அழி + கேடு. சாட்டி → சாட்டியம் = பொய்க்குற்றஞ் சாட்டுதல், பிறர்மேற் பழிசுமத்துதல்.]

வஞ்சகம், பொய் என்று பொருள்படும் **Skt.** śāṭhya என்னும் வடசொல்லின்று 'சாட்டியம்' என்னும் தென்சொல் திரிந்துள்ளதாகச் **சென்னை யகரமுதலி** குறிக்கின்றது. வடசொற்கு மூலமில்லை. சாட்டம் என்னும் வடிவும் தமிழிலுள்ளது. 'அழிச்சாட்டியம் பண்ணுதல்' என்பது கல்லா நாட்டுப்புற மக்களிடையும் தாழ்த்தப்பட்டவரிடையும் பெருவழக்காக வழங்குகின்றது. ஆதலால், 'சாட்டியம்' தென்சொல் லென்றே இங்குக் கொள்ளப்பட்டது.

**அழிசெய்-தல்** *aḻi-šey-*, 1. செ.குன்றாவி. (v.t.) 1. **கெடுத்தல்**; to spoil, ruin, destroy. 2. **கற்பழித்தல்**; to deflower the virginity of a women. ''கன்னியை யழிசெயக் கருதினோன்'' (கம்பரா. அயோத். பள்ளி. 110).

**அழிசெலவு** *aḻi-šelavu*, பெ. (n.) 1. *தோட்ட வளர்ச்சி, திருத்தம் முதலியவற்றிற்குச் செல்லுஞ் செலவு* (இ.வ.); expense incurred in improving gardens (Loc.). 2. *வீண்செலவு*; prodigality.

*['அழிசெலவு' வினைத்தொகை. செல் → செலவு.]*

**அழிஞ்சகி** *aḻiñjagi*, பெ. (n.) *பெருஞ்செருப்படை அல்லது செருப்படை*; a medicinal herb, *Coldenia procumbens* (சா.அக.).

**அழிஞ்சியேறி** *aḻiñji-y-ēṟi*, பெ. (n.) *ஏறழிஞ்சில்*; a kind of *aḻinjil* tree.

*அழிஞ்சில்* பார்க்க; see *aḻiñjil.*

**அழிஞ்சில்** *aḻiñjil*, பெ. (n.) *மரவகை*; sage-leaved alangium, *Alangium lamarckii.*

ம. அழிஞ்ஞில்

''அழிஞ்சிலது மாருதத்தை யையத்தைத்
தாழ்த்தும்
ஒழிஞ்சபித் தத்தை யுயர்த்தும்
—விழுஞ்சீழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூறுமருந்
தெய்திடில்
திட்ட மெனவறிந்து தேர்''
(பதார்த்த. 219).

அழிஞ்சில்விரை நாட்பட்ட சீலக்கழிச்சலுக்குப் (chronic dysentery) பயன்படுத்தப்படும் கூட்டுச்சரக்குகளுள் ஒன்று (சா.அக.).

அழிஞ்சில்வேர்ச் சாறு புழுக்கொல்லி (worm-killer). அழிஞ்சிலெண்ணெய் மறைப்பு மை செய்தற்கும் வசியத்திற்கும் பயன்படும். It is used for preparing a magic paint used for rendering oneself invisible and also for enticement (சா.அக.).

அழிஞ்சிற்பட்டைக் கருக்கு (கஷாயம்) ஊதை (வாத) நோய், குட்டம் முதலியவற்றைப் போக்கும் (சா.அக.).

**அழிஞ்சு** *aḻiñju*, பெ. (n.) *அழிஞ்சில்* பார்க்க; see *aḻiñjil* (தைலவ. தைல. 72).

**அழிஞ்சுக்காடு** *aḻiñju-k-kāḍu*, பெ. (n.) *அழிஞ்சு நிறைந்த பாலைநிலம்*; desert covered with *aḻiñjil.* 'பெருவிடாய னானவன் அழிஞ்சுக்காடேறப்போக' (ஈடு, 6 . 2, பிர.).

**அழித்தழித்து** *aḻitt(u)-aḻittu*, வி.எ. (adv.) *திரும்பத் திரும்ப*; again and again. 'அழித்தழித்து விவாகம் பண்ணுமா போலேயும்' (திவ். திருநெடுந். 16, வியா.).

*[அழி → அழித்து (இ.கா.வி.எ.). 'அழித்தழித்து' பன்மை குறித்த வி.எ. தொடர்.]*

மேலும் மேலும் அழிவுசெய்த என்பது இயல்புபொருள்; திரும்பத் திரும்ப என்பது அணியியற் பொருள்.

**அழித்தியங்காட்டு-தல்** *aḻittiyaṅ-kāṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *முகத்தை அருவருப்பாகத் திரித்துக் காட்டி ஒருவரைப் பழித்தல்* (நெல்லை); to make faces at someone (Tn.). என்னைப் பார்க்கும்போதெல்லாம் அழித்தியங் காட்டுகிறான் (உ.வ.).

*[ஒருகா. அழித்து + ஓவியம் + காட்டு. அழித்தல் = மாற்றுதல், திரித்தல். ஓவியம் = அழகு. காண் (த.வி.) → காட்டு (பி.வி.).]*

**அழித்து** *aḻittu*, இ.கா.வி.எ. (p. parti.) 1. *திரும்பவும்*; again. ''அழித்துப் பிறந்தனனாகி'' (புறநா. 383 : 16). 2. *முன்னுக்குப் பின் முரணாக*; contrarily. ''வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்'' (குறள், 1317).

*[அழி → அழித்து (இ.கா.வி.எ.).]*

அழிவுசெய்து என்பது இயல்புபொருள்; திரும்பவும் என்பது அணியியற் பொருள்.

**அழித்துச்சொல்(லு)-தல்** *aḻittu-c-col(lu)-*, 8 செ. குன்றாவி. (v.t.) *இழித்துக் கூறுதல்*; to state contemptuously. 'அழித்துச் சொன்னவாறு' (தக்கயாகப். 494, உரை).

*[அழித்து + சொல்.]*

**அழித்துரை** *aḻitturai*, பெ. (n.) *இழித்துரை*; word of contempt. 'அடா வென்பது அழித்துரை' (தக்கயாகப். 508, உரை).

*[அழித்து (இ.கா.வி.எ.) + உரை (தொ.ஆகு.).]*

**அழிதகவு** *aḻi-tagavu*, பெ. (n.) *துயரம்*; grief. ''அழிதக வுள்ளமொ டரற்றினனாகி'' (மணிமே. 12 : 43).

*[அழி + தகவு. தகு → தகவு (தொ. பெ.) = தன்மை, குணம்.]*

**அழிதகன்** *aḻi-tagaṉ*, பெ. (n.) *தீய வொழுக்கத்தான்* (கந்தபு. யுத்த. தருமகோ. 78); man of depraved character, wicked person.

*[அழி = தீய, கெட்ட. தகு → தகம் (தகுதி, தன்மை) → தகன் = தன்மையன், நெறியன், ஒழுக்கத்தான்.]*

**அழிதலை** *aḻi-talai*, பெ. (n.) 1. **தலையோடு**; skull. "அழிதலை யங்கையிலேந்தி" (தேவா. 1 . 40 : 7). 2. **தலையோட்டுமாலை** (பிங்.); garland of skulls worn by Šiva.

*['அழிதலை' வினைத்தொகை. 'தலை' ஆகு.]*

**அழிதூ** *aḻi-tū*, பெ. (n.) 1. **அலி** (நன். 263, மயிலை.); hermaphrodite human being. 2. பேடி; an impotent man (சா.அக.).

*[அழி = கெட்ட. தூ = வலிமை, ஆண்மை. அழிதூ (அன்மொழித்தொகை) = ஆண்மை யில்லாதவன்.]*

**அழிதூஉ** *aḻi-tūu*, பெ. (n.) **அழிதூ** பார்க்க; see *aḻi-tū*.

*[அழிதூ → அழிதூஉ (அளபெடை).]*

**அழிந்தவள்** *aḻindavaḷ*, பெ. (n.) **கற்பழிந்தவள்**; fallen woman.

*[அழி → அழிந்த → அழிந்தவள் (அழிந்த + அவள்).]*

**அழிந்தொழிந்து** *aḻind(u)-oḻindu*, இ.கா.வி.எ. (p.parti.) **மிகக்கெட்டு, அடியோடழிந்து, முற்றும் வழக்கற்று**; having been completely destroyed, ruined, having become completely dead. "ஆரியம்போல் உலகவழக் கழிந் தொழிந்து சிதையாவுன் சீரிளமைத் திறம் வியந்து" (மனோன். த. வா.).

*[அழிந்து + ஒழிந்து. 'அழிந்தொழிந்து' எதுகை மரபிணைமொழி.]*

**அழிந்தோரைநிறுத்தல்** *aḻindōrai-niṟuttal*, தொ. பெ. (vbl.n.) **கெட்டோரை தன்னிலைப்படுத் தல், வேளாண்மாந்தர் இயல்புகளுள் ஒன்று** (திவா.); rehabilitating ruined men, a characteristic of the Vēḷāḷa.

**அழிநோய்** *aḻi-nōy*, பெ. (n.) **குட்டம்** (இ.வ.); leprosy (Loc.).

*['அழிநோய்' வினைத்தொகை.]*

**அழிப்படுத்து-தல்** *aḻi-p-paḍuttu-*, 2 பி.வி. (v. caus.) **தவசக் கதிரைக் கடாவிட்டுழக்குதல்**; to thresh the grain with cattle. "ஆளழிப் படுத்த வாளே ருழவ" (புறநா. 368 : 13).

*[அழி = வைக்கோல். படுதல் (த.வி.) = உண் டாதல். படுத்தல் (பி.வி.) = உண்டாக்குதல்.]*

**அழிப்பன்** *aḻippaṉ*, பெ. (n.) 1. **நாசஞ்செய் பவன்**; the destroyer. "ஆழிவிடுத் தவருடைய கருவழித்த வழிப்பனூர்" (திவ். பெரியாழ். 4 . 8 : 6). 2. **துன்புறுபவன்**; one who is sorrow-stricken. "அழிப்பனாய் வாழ மாட்டேன்" (தேவா. 4 . 52 : 2).

க. அழிப்பான்

*[அழி → அழிப்பு → அழிப்பன்.]*

**அழிப்பாங்கதை** *aḻippāṅ-kadai*, பெ. (n.) **விடு கதை** (நெல்லை); riddle, puzzle, conundrum (Tn.). நான் ஓர் அழிப்பாங்கதை போடு கிறேன்; அழிக்கிறாயா?

ம. அழிப்பாங்கத

*[அழித்தல் = விடுகதை விடுவித்தல். அழி → அழிப்பான் (அழிக்கப்படுவது) + கதை – அழிப் பான்கதை → அழிப்பாங்கதை.]*

**அழிப்பாளன்** *aḻippāḷaṉ*, பெ. (n.) **தட்டான்** (ஈடு, 5 . 8 : 1); goldsmith.

*[அழித்தல் = உருக்குதல். அழிப்பு = பொன் னுருக்குதல். 'ஆளன்' ஆ.பா. ஈறு. அழிப் பாளன் = பொன்னுருக்குந் தட்டான்.]*

**அழிப்பாளி** *aḻippāḷi*, பெ. (n.) **வீண்செலவாளி** (உ.வ.); spendthrift (Com.u.).

*[அழி → அழிப்பு (தொ.பெ.). ஆள் → ஆளி (ஆ.பா. ஈறு).]*

**அழிப்பிண்டம்** *aḻi-p-piṇḍam*, பெ. (n.) **கருவழிந்த பிண்டம்**; an aborted foetus, *Ambloma* (சா.அக.).

*[அழி = அழிவு. பிண்டி → பிண்டம் = திரட்சி, சதைத்திரள், பீள், கரு.]*

**அழிப்பு** *aḻippu*, பெ. (n.) 1. **கெடுப்பு, நாசஞ் செய்கை**; destruction. "கருமமழிப் பளிப்பு" (திவ். இயற். முதற். 5). 2. **குற்றம்** (திவா.); fault.

*[அழி → அழிப்பு (தொ.பெ., தொ.ஆகு.).]*

**அழிபசி** *aḻi-paši*, பெ. (n.) 1. **கடும்பசி**; abnormal increase in the sensation of hunger, *Hyperorexia* (சா.அக.). 2. **கொல்லும் பசி**; killing hunger. "அற்றா ரழிபசி தீர்த்தல்" (குறள், 226).

*['அழிபசி' வினைத்தொகை.]*

**அழிபடு-தல்** *aḻi-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. **சிதைதல், மறைதல்**; to be erased. 2. **செல வாதல்**; to be spent.

*[அழிபடுதல் = அழிவுபடுதல் அல்லது அழிக்கப் படுதல். முன்னதில் 'படு' பொதுத் து.வி.; பின்ன தில் 'படு' செயப். து.வி.]*

**அழிபயல்** *aḻi-payal*, பெ. (n.) **கெட்ட நடத்தைப் பையன்** (இ.வ.); good-for-nothing fellow, naughty boy (Loc.).

*['அழிபயல்' வினைத்தொகை. பை → பையல் → பயல்.]*

**அழிபாடு** *aḻi-pāḍu*, பெ. (n.) அழிவு; destruction. "அழிபா டில்லாத கடலின்" (தேவா. 2.222: 8).

க. அழிபாடு

*[அழிபடு → அழிபாடு (முத.தி.தொ.பெ.).]*

**அழிபு** *aḻibu*, பெ. (n.) 1. **நாசம்**; destruction. "ஒன்னார்நா டழிபிரங் கின்று" (பு.வெ. 3 : 8, கொளு). 2. **தோல்வி**; defeat. "அழிபட லாற்றா லறிமுறை யேன்று" (பு. வெ. 8 : 19).

ம. அழிவு; க. அழிபு; து. அலிவு.

*[அழி → அழிவு → அழிபு. ஒ.நோ: நலி → நலிவு → நலிபு, அள → அளவு → அளபு.]*

**அழிபுண்** *aḻi-puṇ*, பெ. (n.) 1. *அழுகிய புண்* (இங். வை. 302); sloughing ulcer. 2. **ஆறாத புண்**; a chronic ulcer. 3. **நாற்றப் புண்**; a foul smelling ulcer (சா.அக.).

*['அழிபுண்' வினைத்தொகை.]*

**அழிபெயல்** *aḻi-peyal*, பெ. (n.) **கடுமழை**; heavy and destructive rain. "அழிபெயல் காலை" (பரிபா. 10 : 1).

*['அழிபெயல்' வினைத்தொகை. பெய் → பெயல் (தொ. ஆகு.).]*

**அழிம்பன்** *aḻimbaṉ*, பெ. (n.) **தீம்பு செய்பவன்**; a habitual evil-doer.

க. அழிப

*[அழி → அழிம்பு → அழிம்பன்.]*

**அழிம்பு** *aḻimbu*, பெ. (n.) 1. **தீம்பு**; evil deed, gross misdeed. 2. **வெளிப்படையான பொய்** (இ.வ.); patent falsehood (Loc.). 3. **அவதூறு, பழிப்புரை**; calumny, scandal. 4. **அன்முறை யான வழக்காட்டு**; unrighteous claim or plea.

*[அழி → அழிம்பு.]*

**அழிமதி** *aḻi-madi*, பெ. (n.) 1. **கெடுமதி**; folly leading to ruin. 2. **அழிமானம்** (இ.வ.); waste (Loc.).

ம. அழிமதி; க. அழிமன.

*['அழிமதி' வினைத்தொகை. 'மதி' (முத.தொ. ஆகு.). மதித்தல் = அளவிடுதல், கருதியறிதல். மதி = அளவு, அளந்து அல்லது கருதி யாய்ந்து அறியும் அறிவுப்புலன்.]*

**அழிமருந்து** *aḻi-marundu*, பெ. (n.) **கருவைக் கரைக்கும் மருந்து**; an abortive drug, abortifacient (சா.அக.).

**அழிமானம்** *aḻi-māṉam*, பெ. (n.) **அழிந்தது, பாழானது, அழிந்த அல்லது பாழான அளவு**; that which is wasted or spent in vain, the amount of waste.

*['அழிமானம்' வினைத்தொகை (அழிந்த அளவு), தொழிற்பெயர் (அழிவு). மாத்தல் = அளத்தல். மா + அனம் – மானம் (தொ.பெ. ஈறு) = அளவு.]*

'மாத்தல்' என்னும் வினைச்சொல் வழக்கற்றது. மா (1/20) என்னும் கீழிலக்கப் பெயர் முத.தொ.ஆகு. மாத்திரம், மாத்திரை யென்னும் சொற்களில் 'மா' என்பது முதனிலை.

**அழிமுதல்** *aḻi-mudal*, பெ. (n.) **மூலவைப்புக் கேடு** (உ.வ.); waste of capital (Com.u.).

*['அழிமுதல்' வினைத்தொகை. 'முதல்' ஆகு.]*

**அழிமேய்ச்சல்** *aḻi-mēyccal*, பெ. (n.) **பயிர் (முழுதும்) அழியுமாறு கால்நடைகளை மேய விடுதல்** (தஞ்சை); ruinous grazing of crops by cattle (Tj.).

*['அழிமேய்ச்சல்' வினைத்தொகை. மேய் → மேய்ச்சல். 'சல்' தொ.பெ. ஈறு. தல் → சல்.]*

**அழியமாறு-தல்** *aḻiya-māṟu-*, 5 செ.கு.வி., செ. குன்றாவி. (v.i. & v.t.) 1. **நோயாற் பீடிக்கப் பட்டு அடையாளந் தெரியாதபடி உருவம் மாறுதல்** (சா.அக.); to be reduced and wasted by disease so as to render identification difficult. 2. **அடையாளந்தெரியாதவாறு தன் நிலையை மாற்றி வேறாதல்**; to so change as to obliterate one's identification. 'தன்னை யழிய மாறியும் உதவினவனுடைய' (ஈடு, 4 . 2 : 6).

**அழியல்** *aḻiyal*, தொ.பெ. (vbl. n.) 1. **மனம் வருந்துதல்**; agony. 2. **அழிவு**; destruction, ruin, waste.

*[அழி → அழியல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அழியாதபத்தினி** *aḻiyāda-pattiṉi*, பெ. (n.) **பாண்டவர் பொதுமனைவியான திரௌபதி**;

Draupadi, the common wife of the Pāṇḍavas. 'ஐவர்க்குந் தேவி, அழியாத பத்தினி' (பழ.).

*[அழி → அழியாத (எ.ம.பெ.எ.). பத்தி → பத்தன் (ஆ.பா.) – பத்தினி (பெ.பா.) = கணவன் பத்தியுள்ள கற்புடை மனைவி.]*

கணவன் பத்தியுள்ளவள் என்று பொருள் படும் 'பத்தினி' என்னுந் தென்சொல் வேறு; பதியென்னும் வடசொல்லின் பெண்பாலான 'பத்நீ' என்னும் சொல் வேறு. பத்தி, பத்தன், **பத்தினி** என்னும் உருப்படிகளைப் பார்க்க.

**அழியாவியல்பு** *aḻiyā-v-iyalbu*, பெ. (n.) (சமண.) **அழியாத தன்மை, அழியாமை, அருகன் எண் குணத்துள் ஒன்று**; (Jain.) indestructibleness, one of the eight attributes of Arugaṉ.

*[அழி → அழியாத → அழியா (ஈ.கெ.எ.ம.பெ.எ.). இயல் → இயல்பு = தன்மை. 'பு' பண்.பெ.ஈறு.]*

**அழியாவிளக்கு** *aḻiyā-viḷakku*, பெ. (n.) **நந்தா விளக்கு** (ரஹஸ்ய. 1335); perpetual lamp.

*[அழி → அழியாத → அழியா (ஈ.கெ.எ.ம.பெ.எ.). விளங்கு (த.வி.) → விளக்கு (பி.வி.). விளக்கு (தொ.ஆகு.) = பொருள்களை விளங்கச் செய்யும் சுடர். விளங்கச்செய்தல் = தோன்றச் செய்தல், காட்டுதல்.]*

தெய்வத்தன்மையைக் காட்டுதற்கு அல்லது தெய்வ வுணர்ச்சியை ஊட்டுதற்குத் திருக் கோயில்களில் இரவும் பகலும் அணையா மல் எரியவிடும் விளக்கு நந்தாவிளக்கு. நந்தாமை = அழியாமை.

**அழிவது** *aḻivadu*, பெ. (n.) **கெடுதி**; harm. 'அவனையாங் கிழமை கொள்ள அழிவ துண்டோ' (இறை. 28, உரை).

க. அளிபு

*[அழி → அழியும் (எ.கா.பெ.எ.) + அது – அழியுமது → அழியுவது → அழிவது. 'து' காலங்காட்டும் தொ.பெ.ஈறு.]*

**அழிவழக்கு** *aḻi-vaḻakku*, பெ. (n.) 1. **அன்முறை யான வழக்காட்டு, ஒழுங்கற்ற வழக்காரம்**; unjust law-suit. "வழக்கை யழிவழக்குச் செய்தோன்" (தனிப்பா. தி. 1, பக். 18). 2. **வீண் உறழ் (வாதம்)**; unreasonable argument. 3. **இழிந்தோர் வழக்கு**; vulgar usage. 'ஞழியிற்று என்றாற் போல்வன விலக்கின வும் வருமாலெனின், அவை அழிவழக்கென்று மறுக்க' (தொல். எழுத்து. மொழி. 31, இளம். உரை).

*['அழிவழக்கு' வினைத்தொகை. வழங்கு (த.வி.) → வழக்கு (தொ.பெ.). 1. வழக்காறு, 2. வழக்குப்பற்றிய சச்சரவு.]*

அழிவழக்கு என்பதினும் இழிவழக்கு என்பதே பொருந்தும்.

**அழிவாய்** *aḻi-vāy*, பெ. (n.) **கூடல்முக மணல் மேடு** (இ.வ.); sand bank at the mouth of a river or harbour (Loc.).

*[கழி → அழி. வாய் = ஆற்றுவாய் போன்ற கூடல்முகம்.]*

**அழிவாயு** *aḻi-vāyu*, பெ. (n.) **நவுக்கார வளி (நவச்சார வாயு)**; sulphuretted hydrogen or hydrogen sulphide or hydrosulphuric acid (சா.அக.).

*[அழி + Skt. vāyu. அழிதல் = அழுகுதல். அழுகின பொருள்களிலிருந்து உண்டாவதால் இது அழிவாயு எனப்பட்டது. இதை நவுக்கார வளி எனலாம். நவுதல் = மக்குதல், கெடுதல். காரம் = கடுமை. வளி = காற்று.]*

இது கந்தக மணம் (வாசனை) கலந்ததாய்க் கெட்ட நாற்றத்தை வீசும் ஒரு காற்று. செடி கொடிகள் அழுகுவதனாலும், உயிரிகள் (பிராணிகள்) இறந்து அவற்றின் உடல்கள் அழுகுவதனாலும், சாக்கடைக் கால்வாய் களிலிருந்தும், இக் காற்று உண்டாகும். இது மாந்தருக்குத் தீங்கை விளைவிக்கும். குதிரை மந்திரம் (லாயம்), மாட்டுத் தொழு வம், சுடுகாடு, நீலிச்சாலை, நாருரிக்குஞ் சாலை, தோற்கிடங்கு முதலிய இடங்களில் இவ் வளி (வாயு) பரவியிருக்கும் (சா.அக.).

**அழிவி** *aḻivi*, பெ. (n.) **கழிமுகம்**; inlet to a back-water, mouth of a river. "அழிவி நின்ற வலர்வேர்க் கண்டல்" (குறுந். 340).

இது திருமாளிகைச் சௌரிப்பெருமா ளரங்கன் பதிப்பிற் கொள்ளப்பட்ட பாடம்.

உ.வே.சா. பதிப்பில் "அழுவ நின்ற அலர் வேய் கண்டல்" என்று பாடம் கொள்ளப் பட்டு, அதற்கேற்ப, 'கடற்கரைப் பரப்பிலே நின்ற மலரைப் பொருந்திய தாழை' என்று பொருளுங் கூறப்பட்டுள்ளது. இதுவே பொருத்தமாகத் தோன்றுகின்றது.

ஆதலால், "அழிவி நின்ற வலர்வேர்க் கண்டல்" என்ற பாடமும், 'கழிமுகத்தில்

நிலைத்த பரவிய வேரையுடைய கண்டல் மரம்' என்னும் அதன் உரையும், கொள்ளத் தக்கன வல்ல.

'அழிவி' என்ற பாடவேறுபாடும் உ.வே. சா. பதிப்பில் 'அழுவி' என்று குறிக்கப் பட்டுள்ளது.

திருமாளிகைச் சௌரிப்பெருமாளரங்கன் பதிப்பின் ஆண்டு 1915. உ.வே.சா. பதிப்பின் ஆண்டு 1937. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகரமுதலியின் (Lexicon) முதன்மடல முதற்பகுதி (அ-ஆ) வெளிவந்தது 1924. ஆதலால், சென்னை அகரமுதலியில் சௌரிப் பெருமாளரங்கன் பதிப்பே பயன்படுத்தப் பட்டது.

''அதோமுகம் புகாரோ டழிவி கூடல்
கழிமுக மென் றனர் காயலு மாகும்''

என்று பிங்கலம் கூறுவதால், சௌரிப் பெருமாளரங்கனார் 'அழிவி' என்ற பாடத்தைச் சிறந்ததாகக் கொண்டார் போலும்! அடுத்த அடி, ''கழிபெயர் மருங்கி னொல்கி யோதம்'' என்று வருவதால், கூறியது கூறல் என்னுங் குற்றந் தங்காவாறு, ''அழுவ நின்ற வலர்வேய் கண்டல்'' என்ற பாடமே சரியானதென்று உ.வே.சா. கொண் டதாகத் தெரிகின்றது.

ம. அழிமுகம்

**அழிவு** *alivu*, பெ. (n.) 1. கேடு (பிங்.); destruction, ruin, loss. 2. **தீமை**; sinful deed, immoral action, deviation from virtue. ''அரக்கரோ ரழிவு செய்து கழிவரேல்'' (கம்பரா. கிட்கிந்தா. வாலிவ. 79). 3. **செலவு**; expenditure, expense. 'வேண்டும் அழிவுக்குப் பொலிசையூட்டுக்கு வைத்த' (S.I.I. ii, 69). 4. **தோல்வி**; defeat. ''அரும்புறு காலைக் கொங்கைக் கழிவுற்று'' (கந்தபு. அசுர. மாயைப். 59). 5. **மனவுறுதியின்மை**; want of firmness of mind. ''அழிவிலா னுற்ற விடுக்கண்'' (குறள், 625). 6. **துன்பம், வருத்தம்**; distress, pain of separation. ''அழிவு தலை வரினும்'' (தொல். பொருள். கள. 24). 7. **வறுமை**; poverty. ''அழிவினாற் கொண்ட வருந்தவம் விட்டானும்'' (திரிகடு. 79). 8. **கழிமுகம்** (பிங்.); mouth of river or backwater.

ம., க. அழிவு; து. அலிவு; பட. அளிவு.

*[அழி → அழிவு (தொ.பெ., தொ.ஆகு.). 'வு' தொ.பெ. ஈறு.]*

**அழிவுகாலம்** *alivu-kalam*, பெ. (n.) 1. **கெட்ட காலம்**; evil time. 2. **ஊழியிறுதி** (சூடா. 12 : 76); time of universal destruction.

க. அளிகால

**அழிவுபாட்டின்மை** *alivu-pattinmai*, பெ. (n.) (ஏர.) **ஒன்று அழிந்ததனால் ஏற்பட்ட அதன் இன்மை**; (Log.) non-existence caused by destruction.

*[அழிவு + படு – அழிவுபடு (முதனிலை) → அழிவுபாடு (தொ.பெ.) + இன்மை.]*

முன்னின்மை, பின்னின்மை, அழிவுபாட் டின்மை, முற்றுமின்மை என இன்மை நால் வகை.

**அழிவுபாடு** *alivu-padu*, தொ. பெ. (vbl.n.) **அழிக்கப்படுகை, அழிவு**; destruction, being destroyed, ceasing to exist.

க. அளிபாடு

*[அழி → அழிவு+படு (து.வி., செயப். து.வி.). அழிபடு → அழிவுபாடு (செயப். தொ.பெ.).]*

அழிக்கப்படுகை யென்று பொருள்படின் செயப்பாட்டுத் தொழிற்பெயரும், அழி வுறுகையென்று பொருள்படின் தொழிற் பெயரும் ஆகும் என அறிக.

**அழு-தல்** *alu-*, 1 செ.கு.வி. (v.i.) 1. **கண்ணீர் விட்டுக் கதறி வருந்துதல்**; to weep aloud shedding tears. ''அல்லற்பட் டாற்றா தழுத கண்ணீர்'' (குறள், 555). 2. **வருந்திக் கண்ணீர் விடுதல்**; to shed tears and weep silently. 3. **புலம்பிக் கதறுதல்**; to cry aloud without shedding tears, to lament. 4. **சிணுங்குதல்**; to whine, whimper. 5. **ஒன்றை அவாவி வருந்துதல்**; to crave. 'குடல் கூழுக்கழக் கொண்டை பூவுக் கழுகிறதா?' (பழ.). 6. **வீணுக்குச் செலவழித்தல்**; to waste, spend in vain. உனக்கு ஆயிரம் உருபா அழுதேனே! —, 1 செ.குன்றாவி. (v.t.) **அழுதுமறத்தல்** (உ.வ.); to cease thinking of or sever connexion from, after weeping over someone or something (lit. and fig.). அவனை அன்றைக்கே அழுதுவிட்டேன்.

ம., க. அழு; தெ. அடலு, ஏடுசு; து. அர்ப்பினி; கொலா., நா. அர்; பர். அள்; பட. அவ்வு.

*[அழிதல் = வருந்துதல், மனம் நோதல். அழி → அழு.]*

**அழுக்ககற்றி** *aḻukk(u)-agaṟṟi*, பெ. (n.) **வண்ணான் காரநீர்**; lye, water impregnated with alkaline salts from wood ashes (W.) — 1. **வண்ணான் காரநீர்** (சா.அக.); lye used for washing purposes. 2. **சாம்பற் காரநீர்**; water impregnated with alkaline salt imbibed from the ashes of wood, *lye*.

[அழுக்கு + அகற்றி. **ஒருகா.** அழுகு → அழுங்கு → அழுக்கு. அழுங்குதல் = கெடுதல். **ஒ.நோ:** ஒழுகு → ஒழுங்கு → ஒழுக்கு. அகல் (த.வி.) → அகற்று (பி.வி.) → அகற்றி. 'இ' வி. முத. ஈறு.]

**அழுக்ககற்றுங்கல்** *aḻukk(u)-agaṟṟuṅ-kal*, பெ. (n.) **சுக்கான் கல்**; lime-stone, known for its power of removing dirt from clothes.

[அழுக்கு + அகற்றும் + கல். 'உம்' எ.கா. பெ.எ. ஈறு.]

**அழுக்ககற்றி** பார்க்க; see *aḻukk(u)-agaṟṟi*.

**அழுக்ககற்றும்பூ** *aḻukk(u)-agaṟṟum-pū*, பெ.(n.) 1. **பூநீறு**; fuller's earth. 2. **ஒரு களிமண்**; a clay used as a dressing for sores (சா.அக.).

[அழுக்கு + அகற்றும் + பூ.]

**அழுக்ககற்றி, அழுக்ககற்றுங்கல்** பார்க்க; see *aḻukk(u)-agaṟṟi*, *aḻukk(u)-agaṟṟuṅ-kal*.

**சா.அக.**-வில், அழுக்ககற்றும் வண்ணான், அழுக்ககற்றும் வண்ணாத்தி என்னும் இரு சொற்கும் பொதுவாகச் சவர்க்காரம் என்று பொருள் குறித்து, 'a soft, friable clay, which absorbs grease and is much used in fulling cloth, *Dhoby's earth*' என்று ஆங்கிலத்திலும் விளக்கங் கூறியிருப்பது, அகரமுதலியில் இடம்பெறத்தக்க அத்துணைச் சிறப்புடைய தாகத் தோன்றவில்லை.

**அழுக்கடி-த்தல்** *aḻukk(u)-aḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) **அழுக்குப் போக்குதல்**; to wash. "அழுக் கடிக்கும் வண்ணார் போலாய்" (தாயு. உடல். 65).

[அழுக்கு + அடி.]

**அழுக்கடை-தல்** *aḻukk(u)-aḍai-*, 2 செ.கு.வி. (v.i.) **அழுக்காதல், துப்புரவுகெடுதல்**; to become unclean, dirty.

[அழுக்கு + அடை. அடு → அடை.]

**அழுக்கு** பார்க்க; see *aḻukku*.

**அழுக்கணவன்** *aḻukkaṇavaṉ*, பெ. (n.) 1. **இலை தின்னும் புழு** (வின்.); small insect blight upon leaves. 2. **புழுக்கூடு**; the nest of a worm (சா.அக.).

[ஒருகா. அழி + கணவன். அழி = அழிப்பு. கணம் = கூட்டம். கணம் → கணவன் = கூட்டத்தைச் சேர்ந்தவன். அழிக்கணவன் (அழிக்கும் புழுக்கூட்டத்தைச் சேர்ந்தது) → அழுக்கணவன்.]

**அழுக்கம்** *aḻukkam*, பெ. (n.) **கவலை**; care, concern, anxiety. "அழுக்கமுற் றெழுந்து" (திருவிளை. விறகு. 48).

[அழுங்குதல் = துயருறுதல், வருந்துதல். அழுங்கு → அழுக்கு → அழுக்கம்.]

**அழுக்கறு[1]-தல்** *aḻukkaṟu-*, 20 செ.கு.வி. (v.i.) **பொறாமை கொள்ளுதல்**; to be envious. "அழுக்கற் றகன்றாரு மில்லை" (குறள், 170).

[அழுங்குதல் = பிறராக்கம் பொறாது வருந்து தல். அழுங்கு → அழுக்கு = அவ் வருத்தம். அழுக்கு + உறு — அழுக்குறு. அழுக்குறுதல் = அவ் வருத்தமடைதல், பொறாமைப்படுதல். அழுக் குறு → அழுக்கறு. **ஒ.நோ:** நாசமுற்றுப் போவான் → நாசமற்றுப்போவான் (ஒரு வசைச் சொல்).]

பொறாமை என்பது பிறராக்கங் கண்டு பொறாது எரியும் எரிச்சல். ஆதலால், அது தீக்குணமே யன்றி நற்குணமாகாது. 'அழுக் கறு' என்பதில் 'அறு' என்னும் துணைவினை இயல்பானதாயின் அழுக்கறுதல் அல்லது அழுக்கறுத்தல் என்னுஞ் சொல் ஒரு நல் வினையை அல்லது நல்லியல்பையே குறித்தல் வேண்டும். அங்ஙனங் குறியாமையின், அது வடிவுதிரிந்த சொல் என்பது தெளிவு.

பொறாமை யென்பது ஒருவகை யெரிச்சல் என்பதைப் புழுங்குதல், காழ்ப்பேறுதல் முதலிய சொற்களாலும் அறியலாம்.

**அழுக்கறு[2]-த்தல்** *aḻukkaṟu-*, 4 செ.கு.வி. (v.i.) **பொறாமை கொள்ளுதல்**; to be envious. "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம்" (குறள், 166).

'அறு' என்னும் முதனிலை அறுதல், அறுத் தல் என்னும் இருவகைத் தொழிற்பெயர்க்கும் பொதுவாகும். 'அறுதல்' என்னும் தொழிற் பெயர்க்குரியது அற்றான் அறுகின்றான் அறுவான் என்றும், 'அறுத்தல்' என்னும் தொழிற்பெயர்க்குரியது அறுத்தான் அறுக் கின்றான் அறுப்பான் என்றும் புடைபெயர் வது மரபு.

'அழுக்கற்று' (குறள், 170) என்னும் இறந்த கால வினைவடிவிற்கேற்ப 'அறுதல்' என்பது தொழிற்பெயராதல் வேண்டும். 'அழுக்கறுப் பான்' (குறள், 166) என்னும் எதிர்கால வினை வடிவிற்கேற்ப 'அறுத்தல்' என்பது தொழிற் பெயராதல் வேண்டும். ஆதலால், இவ் விரு வகை வடிவிலும் தொழிற்பெயர் கொள்ளப் பட்டது.

'அழுக்கறு' என்பது செய்யுள் வழக்குச் சொல்லாதலால், அவ் வழக்குப்பற்றி இந் நிலைமை ஏற்பட்டது.

**அழுக்கன்** *aḻukkaṉ*, பெ. (n.) **கஞ்சன், பிசினாறி** (உ.வ.); miser.

*[அழுங்கு → அழுக்கு → அழுக்கன் = பிறருக்கு ஒன்றைக் கொடுக்க வருந்துபவன். இனி, அழுக்கு → அழுக்கன் = மனமாசுள்ளவன் என்றுமாம்.]*

**அழுக்காமை** *aḻukkāmai*, பெ. (n.) *அழுங்காமை பார்க்க;* see *aḻuṅgāmai*.

*[அழுங்கு + ஆமை – அழுங்காமை → அழுக்காமை.]*

**அழுக்காறு**[1] *aḻukkāṟu*, பெ. (n.) **பொறாமை;** envy. "அழுக்கா றிலாத வியல்பு" (குறள், *161*).

க. அழ்கசு

*[அழுங்குதல் = பிறராக்கம் பொறாது வருந்து தல். அழுங்கு → அழுக்கு (தொ.பெ.) → அழுக் குறு → அழுக்கறு → அழுக்காறு (முத. தி. தொ.பெ.). 'உறு' து.வி.]*

'அழுக்கறு' என்னும் முதனிலை ஈறு திரிந்து ஒருசொற் றன்மைப்பட்ட கூட்டுச்சொல் லாதலால், புறப்படு → புறப்பாடு என்பது போலத் துணைவினை முதலுயிர் நீண்டு 'அழுக்காறு' எனத் தொழிற்பெயராயிற்று.

**அழுக்காறு**[2] *aḻukkāṟu*, பெ. (n.) *1.* **மனத் தழுக்கு** (பிங்.); impurity of mind, evil disposition. *2.* **தீயநெறி;** evil way, bad conduct.

*[அழுங்குதல் = கெடுதல். அழுங்கு → அழுக்கு (தொ.பெ.). ஆறு = வழி, ஒழுக்கநெறி.]*

**அழுக்கு**[1] *aḻukku*, பெ. (n.) *1.* **மாசு;** dirt, filth, stain. உடம்பில் அழுக்குப் பிடித்திருக்கிறது. *2.* **உடம்பினின்று வெளிப்படும் சிறுநீர் மலங் கள்;** physical impurities, urine and excrement. "இரண்டியக்க முதலான வழுக்காடை யெய்தின்" (தணிகைப்பு. அகத். *392*). *3.* **நோய்க்காலத்தில் உதடு பல் முதலியவற்றிற் படியும் ஊத்தை;** the dark-brown foul matter which collects on the lips and the teeth in low fevers (சா.அக.). *4.* **பிள்ளைப்பேற்றின்பின் வடியும் ஊனீர்;** lochia, discharges after confinement. *5.* **வெளுத்தற்குரிய மாசுபடிந்த ஆடை;** soiled clothes. வண்ணான் அழுக்கெடுக்க வந்திருக்கிறான். *6.* **மனமாசு;** impurity of mind. "அழுக்கு ளத்தினு முடலி னுமறா தொருநா ளருச்சனை செய்தோர்" (தணிகைப்பு. அகத். *213*). *7.* **காம வெகுளி மயக்க மென்னும் ஆதன் மலம்;** impurity of soul. "அமலனுயிர்க் கழுக்கறுக்க" (சிவதரு. பாயி. 7). *8.* **பொறாமை;** envy. "உள்ளத் தழுக்க றாமையால்" (திருவிளை. நகரப். *100*).

ம. அழுக்கு; க., தெ. அடுசு; து. அடகு; பட. அளுக்கு.

*[அழுங்கு → அழுக்கு (தொ.பெ., தொ.ஆகு.).]*

**அழுக்கு**[2] *aḻukku*, பெ. (n.) **ஆமைவகை;** hawk's bill, *Caretta squamata* (W.).

*[அழுங்கு → அழுக்கு.]*

**அழுக்குத்தங்கல்** *aḻukku-t-taṅgal*, தொ.பெ. (vbl.n.) **பிள்ளைப்பேற்றின்பின் கருப்பையி னின்று வழக்கமாக வரக்கூடிய அரத்தம் முதலியவை வெளிவராமல் தடைப்படல்;** sudden interruption of the usual lochial discharges after child-birth.

*[அழுக்கு + தங்கல். தங்கு → தங்கல் (தொ. பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அழுக்குத்தேமல்** *aḻukku-t-tēmal*, பெ. (n.) **உட லில் அழுக்கினால் தோன்றும் புள்ளிகள்** (இ.வ.); spots on the body, formed by dirt (Loc.) (செ.அக.) — **உடம்பிற் சில பாகங் களில் தழும்புகள் ஏற்பட்டு அவற்றின்மேற் கருப்பாக அழுக்கு நிறைந்து, தேய்க்கத் தோலுரியும் ஒருவகைத் தேமல்;** a disease of the skin marked by patches, dark with dirt and the exfoliation of the scarf skin or epidermis in several parts of the body (சா.அக.).

*[அழுங்கு → அழுக்கு. திறம்பு → தேம்பு → தேம்பல் → தேமல்.]*

**தேமல்** பார்க்க; see *tēmal*.

**அழுக்குத்தேய்-த்தல்** *aḻukku-t-tēy-*, 4 செ.கு.வி. (v.i.) **அழுக்கைக் கையினாலாவது கருவியி**

னாலாவது உரசிப் போக்குதல்; to rub off dirt, either with the hand or with an implement.

**அழுக்குநீர்** *aḻukku-nīr*, பெ. (n.) 1. துப்புரவற்ற நீர்; dirty water. 2. மாதவிடாய்நீர், சாண்டு; menstrual discharge. 3. பிள்ளை பிறந்தபின் பெண்டிர்க்கு அல்குல் தாரையினின்று ஒழுகும் அரத்தம் அல்லது ஊனீர்; the lochial discharge after child-birth (சா.அக.).

**அழுக்குப்படி-தல்** *aḻukku-p-paḍi-*, 2 செ.கு.வி. (v.i.) தூசி, புழுதி முதலிய மாசு ஒன்றன்மேல் விழுந்து தங்குதல்; to settle, as dust or mould, on anything.

[அழுங்கு → அழுக்கு + படி. படு → படி. படுதல் = விழுதல்.]

**அழுக்குப்போடு-தல்** *aḻukku-p-pōḍu-*, 20 செ.கு. வி. (v.i.) அழுக்குத் துணிகளைச் சலவை செய்ய வண்ணானிடம் கொடுத்தல்; to put dirty clothes for wash.

**அழுக்குமூட்டை** *aḻukku-mūṭṭai*, பெ. (n.) பழைய மூடப்பழக்கவழக்கங்களைப் பின்பற்றுபவ-ன்-ள்; one who sticks to time-worn superstitious practices, a term of contempt.

[அழுங்கு → அழுக்கு. முள் → முட்டு → மூட்டை. 'அழுக்குமூட்டை' இருமடி ஆகு.]

அழுக்கு என்பது அழுக்குப்போன்ற மூடப் பழக்கவழக்கம். மூட்டை அதன் தொகுதி, இங்கு அதைச் சுமப்பவன்.

**அழுக்குருட்டி** *aḻukk(u)-uruṭṭi*, பெ. (n.) 1. குளியாமல் உடம்பிலுள்ள அழுக்கை அடிக்கடி தேய்த்து உருட்டிக்கொண்டிருப்பவ-ன்-ள்; one who indulges in the habit of rubbing the skin and scraping off the dirt from his body, instead of bathing. 2. ஒரு வண்டு; a beetle.

[அழுங்கு → அழுக்கு. உருள் → உருட்டு → உருட்டி. 'இ' வி.முத. ஈறு.]

**அழுக்குருட்டு-தல்** *aḻukk(u)-uruṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) உடம்பிலுள்ள அழுக்கைத் தேய்த்து உருட்டுதல் அல்லது உருளுமாறு தேய்த்தல்; to rub and scrape off the dirt from the body while bathing or even while not bathing.

[அழுங்கு → அழுக்கு. உருள் (த.வி.) → உருட்டு (பி.வி.).]

**அழுக்குவிழு-தல்** *aḻukku-viḻu-*, 2 செ.கு.வி. (v.i.) 1. பிள்ளை பெற்றவுடன் கருப்பையினின்று மாசு வெளிப்படுதல் (சா.அக.); the discharge from the uterus immediately after child-birth. 2. நஞ்சுவிழுதல்; casting off of the placenta after child-birth.

**அழுக்கெடு-த்தல்** *aḻukk(u)-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. அழுக்குத் துணிகளைச் சலவை செய்ய வண்ணான் எடுத்துக்கொள்ளுதல்; to take away dirty clothes for wash, as by a washerman. 2. நகையிலுள்ள அழுக்கைப் போக்குதல்; to clean and polish, as jewels.

**அழுகண்** *aḻu-kaṇ*, பெ. (n.) 1. கண்ணிலிருந்து எப்போதும் நீர் வடிந்துகொண்டிருக்கும் கண்ணோய்வகை; an affliction of the eye which consists in continual watering of the eye, running eye, moist eye. 2. கண்ணீர்த் தாரையின் சுருக்கத்தினா லேற்படும் கண்ணீரொழுக்கு; abnormal overflow of tears due to the stricture of the lachrimal passage, *Epiphora* (சா.அக.).

['அழுகண்' வினைத்தொகை.]

கண் பார்க்க; see *kaṇ*.

**அழுகண்ணி** *aḻu-kaṇṇi*, பெ. (n.) 1. பூடுவகை (சங்.அக.); a plant from which water is continuously oozing and dripping (செ.அக.). 2. என்றும் அழுதுகொண்டிருக்கும் குழந்தை அல்லது பெண்; a child or woman always seen weeping (சா.அக.). 3. எக்காலத்துந் தண்ணீர் கசிந்து ஒழுகிக்கொண்டிருக்கும் ஒருவகை மரம்; a tree from which water is continuously oozing and dripping, Indian weeping tree. 4. எப்போதும் புண்ணினின்று நீர் கசிந்துகொண்டிருக்கும் ஒருவகைக் குட்டம்; a leprosy attended with constant or unceasing discharge from sores. 5. மருத்துவ (வைத்திய) முப்பு; a name for the universal salt used as a base in the preparation of all Tamil medicines, especially metals and metallic compounds. 6. எப்போதும் அரத்தம் சீழ் ஒழுகிக்கொண்டிருக்கும் புண்ணோய்; a running sore. 7. தேவாங்கு; sloth.

ம. அழுகண்ணி

['அழுகண்ணி' வினைத்தொகை. கண் → கண்ணி. 'இ' உடையவன் ஈறு.]

**அழுகண்ணிச்சித்தன்** *aḻu-kaṇṇi-c-cittaṉ*, பெ. (n.) இதளிய மருத்துவ அறிவத்தில் (இரசவாத வைத்திய ஞானத்தில்) வல்லோனாகிய ஒரு சித்தன்; one of the *Siddhars* School, pro-

ficient in Medicine, Alchemy, Philosophy, etc. (சா.அக.).

[அழு+கண்ணி+Skt. Siddha > த. சித்தன்.]

சித்தியைப் (siddhi) பெற்றவன் சித்தன். சித்தி = கைகூடுகை, வினைவெற்றி.

**அழுகண்ணிப்பால்** *alu-kanni-p-pal*, பெ. (n.) **தூய முலைப்பால்**; unadulterated breast milk (சா.அக.).

[ஒருகா. அழகு + உண்ணி + பால் (?). உண் → உண்ணி.]

**அழுகண்ணிமுறை (மார்க்கம்)** *alu-kanni-murai (marga)*, பெ. (n.) **இதளிய (இரசவாத) முறைப்படி அழுகண்ணி இலையைக் கொண்டு பொன்னை மாற்றுயர்வாகச் செய்யும் ஒரு பொன்னாக்க முறை**; an alchemical process of refining gold to a higher standard with the aid of the leaves of the weeping tree (சா.அக.).

[அழுகண்ணி + முறை.]

**அழுகணி** *alu-kani*, பெ. (n.) **அழுகண்ணி** பார்க்க; see *alu-kanni*.

**அழுகணித்தூறல்** *alu-kani-t-tural*, பெ. (n.) **துலை (ஐப்பசி) மாதத்தில் இடைவிடாது தூறும் தூறல்;** incessant drizzling of rain for weeks together during the month of *tulai* (October - November). 'ஐப்பசி மாதம் அழுகணித் தூறல்' (பழ.).

['அழுகணி' வினைத்தொகை. தூறு → தூறல் (தொ.பெ., தொ.ஆகு.). 'அல்' தொ.பெ. ஈறு.]

'அழுகணி' இங்குக் குறிப்புப் பெயரெச்சம் போல் ஆளப்பட்டது.

**அழுகல்** *alugal*, பெ. (n.) 1. **பதனழிதல்;** rotting, putrefying, decomposing. 2. **பதனழிந்த பண்டம்;** rotten fruit, putrefied matter. அதிக விலைகொடுத்து அழுகலை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான். 3. **துப்புரவின்மை;** uncleanness. "அழுகற் சின்னீர்" (குறுந். 56). 4. **புண்செதிள் அல்லது பொருக்கு;** a scar or the crust on a wound occasioned by burns or caustic applications (சா.அக.).

[அழு (அழி) → அழுகு → அழுகல் (தொ.பெ., தொ.ஆகு.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அழுகவூதல்** *aluga-v-ūdal*, தொ.பெ. (vbl.n.) **குகை அழியும்படி நெருப்பிலிட்டு ஊதல்**; heating a solid matter in a crucible to refine it (சா.அக.).

[அழுகு → அழுக (நி.கா.வி.எ.). ஊது → ஊதல். 'அல்' தொ.பெ. ஈறு.]

இதை 'அழியவூதல்' என்பது மிகப் பொருத்தமாகும்.

**அழுகள்ளன்** *alu-kallan*, பெ. (n.) 1. **அழுது தன் குற்றத்தை மறைக்குங் கள்ளன்**; thief who weeps and denies his theft. 'அழுகள்ளன் தொழுகள்ளன் ஆசாரக் கள்ளன்' (பழ.). 2. **அழுது பாசாங்கு செய்வோன்**; weeping hypocrite.

['அழுகள்ளன்' வினைத்தொகை. கள் → கள்ளன். கள்ளுதல் = களவுசெய்தல்.]

**அழுகற்சரக்கு** *alugar-carakku*, பெ. (n.) 1. **பதனழிந்த பண்டம்**; rotten fruits or vegetables. 2. **பதனழிந்த மருந்துச்சரக்கு**; a rotten or decomposed drug (சா.அக.). 3. **வழியில் அழுகுதற்குரிய பண்டம்**; perishable goods in traffic. 4. **அழுகக்கூடிய சரக்குகளுக்கு இடும் வரி** (S.I.I. ii, 114); tax on perishable goods.

[அழுகல் + சரக்கு. அழுகு → அழுகல். 'அல்' தொ.பெ. ஈறு.]

**அழுகற்சிரங்கு** *alugar-cirangu*, பெ. (n.) **நீர் கசியுஞ் சிரங்கு;** weeping eczema.

[அழுகல் + சிரங்கு.]

**அழுகற்பிணம்** *alugar-pinam*, பெ. (n.) **கட்டு விட்டு நாறும் பன்னாட் பிணம்**; decomposed corpse.

[அழுகல் + பிணம்.]

**அழுகற்பீனசம்** *alugar-pinašam*, பெ. (n.) **சிராய்ப் பீனசம்**; inflammation of the mucous membrane of the nose with a caseous, gelatinous and fetid discharge, *Rhinitis caseosa* (சா.அக.).

[அழுகல் + Skt. pīnasa > த. பீனசம், பீனிசம்.]

பீனசத்தைப் (ozena) பீமூக்கு என்றும், அழுகற் பீனசத்தை அழுகற் பீமூக்கு என்றும் சொல்லலாம்.

**அழுகற்புண்** *alugar-pun*, பெ. (n.) **அழுகி நாற்றமெடுக்கும் புண்**; gangrene which emits an offensive odour due to mortification of the part affected.

[அழுகல் + புண்.]



அழுங்கு



அள்ளாத்தி



அறக்குளாமீன்



அறுக்கிளாமீன்

**அழுகற்றூற்றல்** *alugar-rūrral*, பெ. (n.) *அழு கணித்தூறல்* பார்க்க; see *alu-kaṇi-t-tūral*.

*[அழுகல் + தூற்றல்.]*

**அழுகிச்சேதம்** *alugi-c-cēdam*, பெ. (n.) *வெள்ளத்தா லுண்டாகும் பயிர்ச் சேதத்திற்குச் செய்யும் வரிநீக்கம்* (நாஞ்.); remission of land tax in cases of loss of crop due to inundation (Nāñ.).

*[அழுகு → அழுகி (இ.கா.வி.எ.). சேதம் = சேதப்படுதல். 'அழுகிச்சேதம்' வரியைக் குறித்த லால் அடையடுத்த ஆகுபெயர்.]*

**அழுகு-தல்** *alugu-*, 5 செ.கு.வி. (v.i.) *பதனழி தல்*; to rot, decompose, putrefy.

ம., க. அழுகு.

*[அழி → அழு → அழுகு.]*

**அழுகுகால்** *alugu-kāl*, பெ. (n.) *நீர்ப்பெருக்கால் அழுகிய நெற்பயிர்* (P.T.L.); paddy crop become rotten from over-irrigation or floods.

**அழுகுகிரந்தி** *alugu-kirandi*, பெ. (n.) *சதை யழுகிய புண்*; a gangrenous sore, *Carious ulcer* (சா.அக.).

*[அழுகு+கிரந்தி – அழுகுகிரந்தி → அழுகிரந்தி (சா.அக.).* **Skt.** granthi > *த. கிரந்தி.]*

**அழுகுசப்பாணி** *alugu-sappāṇi*, பெ. (n.) 1. *அழுகுநாகம் (சர்ப்பம்)*; a poisonous reptile (W.). 2. *அழுகுநாகம் (சர்ப்பம்) நக்குவதால் உடம்பிற் சதையழுகி யுண்டாகும் புண்ணோய்*; sore supposed to have been caused by the lick of the above reptile which causes the flesh to putrefy.

*['அழுகுசப்பாணி' வினைத்தொகை.]*

சப்பாணி என்னும் சொல், தமிழில், நடக்க வியலாது சப்பையாக (சப்பளித்து) இருக்கும் முடவனையும், சப்பளித்திருக்கும் குழந்தை கைவிரித்துத் தட்டுதலையுமே குறிக்கும். நாகத்தைக் குறிக்குமாயின், அந் நாகம் நிலத்திற் சப்பையாய் கிடத்தல்வேண்டும்; அல்லாக்கால், 'ஸர்ப்பஹானி' என்னும் வட மொழிக் கூட்டுச்சொல் முதற்கண் புண்ணை யும் பின்னர் அதையுண்டாக்கும் நச்சுயிரியை யும் குறித்ததாகல் வேண்டும்.

'ஸர்ப்ப' (sarpa) என்னும் வடசொற்கு ஊர்வது, நகர்வது என்றே பொருளிருத்த லால், அப் பொருளுள்ள நாகம் என்னும் தென்சொல்லையே அதற்குப் பகரமாக ஆள் தல் வேண்டும். நகர்வது நாகம், மலையில் (வ. நகம்) உள்ளது நாகம் என்பது வட மொழியார் குறிக்கோட் சொல்லியல்.

**அழுகுசர்ப்பம்** *alugu-šarppam*, பெ. (n.) *நக்குவத னால் நஞ்சூட்டுவதாகக் கருதப்படும் ஒரு நச் சுயிரி (விஷஜந்து)* (வின்.); a reptile whose lick is supposed to be poisonous.

*[அழுகு +* **Skt.** sarpa > *த. சர்ப்பம்.]*

**அழுகுசிறை** *alugu-širai*, பெ. (n.) *சிறையாளர் (கைதிகள்) புழுங்கிச் சாகுமாறு காற்று வர வில்லா தமைத்த காவலறை*; non-ventilated prison-cell where the prisoner is left to die of suffocation.

**அழுகுணி**[1] *aluguṇi*, பெ. (n.) 1. *என்றும் அழுதுகொண்டே யிருப்பவ-ன்-ள்*; tearful person, one who has a tendency to be always weeping or crying. 2. *இடைவிடாது அல்லது அடிக்கடி அழுங்குழந்தை*; a weeping child-in-arm. 3. *ஒருவகை மரம்*; a willow tree.

க. அளுபுருக

*[அழுகை + உண்ணி – அழுகையுண்ணி → அழுகுண்ணி → அழுகுணி. ஒ.நோ: நோயுணி. இனி, 'அழுகுணி' வினைத்தொகை என்றுமாம். அழு = அழுகின்ற. குணம் → குணி = குணத்தை யுடைய-வன்-வள்-து.]*

**அழுகுணி**[2] *aluguṇi*, பெ. (n.) 1. *சொறிசிரங்கு வகை*; a kind of itch in the form of small eruptions on the skin (செ.அக.). 2. *காதில் வரும் ஒருவகைக் கரப்பான்*; an eruption chiefly about the ear.

**அழுகுநாகம்** *alugu-nāgam*, பெ. (n.) *அழுகு சர்ப்பம்* பார்க்க; see *alugu-šarppam*.

**அழுகுபுண்** *alugu-puṇ*, பெ. (n.) 1. *சதையைத் தின்றுகொண்டே போகும் ஒருவகை நாற்றப் புண்*; a stinking ulcer that goes on eating away the flesh, gangrene. 2. *உடம்பினுட் பரவிச் சதையை அரித்துத் துணுக்குகளாக வெளிப்படுத்தும் அரிப்புண் (கிரந்திப்புண்)*; an ulcer which spreads rapidly eating away the tissues and is marked by sloughing particles in the discharge, *Phagedenic ulcer*.

ம. அழுகுபுண்; க. அழுகுண்ணு.

*['அழுகுபுண்' வினைத்தொகை.]*

**அழுகுபுண்குட்டம்** *aḻugu-puṉ-kuṭṭam*, பெ. (n.) குட்டநோய்வகை (கடம்ப. பு. இலீலா. 145); leprosy with running sores.

**அழுகுமூலம்** *aḻugu-mūlam*, பெ. (n.) மூலநோய் வகை (கடம்ப. பு. இலீலா. 106); a kind of piles.

[ஒருகா. நாட்பட்ட கொடிய மூலம்போலும்.]

**அழுகுரற்பறவை** *aḻu-kuraṟ-paṟavai*, பெ. (n.) புலம்புங் குரலுடைய பறவை; a bird making a weeping noise (சா.அக.).

[அழு+குரல்+பறவை. 'அழுகுரல்' வினைத் தொகை. பற → பறவை (தொ.ஆகு.).]

**அழுகை**[1] *aḻugai*, தொ.பெ. (vbl.n.) 1. அழுதல்; weeping. 2. அவலச் சுவை; pathetic emotion. 'இளிவும் இழத்தலும் அசைதலும் வறுமையுமென இந் நான்கு பொருள்பற்றித் தோன்றும் அவலம் என்றவாறு' (தொல். பொருள். மெய்ப். 5, பேரா. உரை).

ம. அழுக; க. அளலிகெ; தெ. ஏட்சு; து. அர்ப்பினி; கோத. அத்; துட. ஒர்; நா. அர்; பர். அர், அழி; கோண். ஆழானா; கட., கொலா. அர்; குரு. ஒல்வு; பட. அவ்வு.

[அழு → அழுகை (தொ.பெ.). 'கை' தொ.பெ. ஈறு.]

**அழுகை**[2] *aḻugai*, தொ.பெ. (vbl.n.) அழுகுதல், பதனழிதல்; putridity, partial or complete rottenness, putrescence.

ம. அழுகுக; க. அழுகு.

[அழுகு → அழுகை (தொ.பெ.). 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அழுகைக்கண்ணீர்** *aḻugai-k-kaṇṇīr*, பெ. (n.) அழுகையால் வடியுங் கண்ணீர்; tears of sorrow. 'அழுகைக் கண்ணீர்போல உவகைக் கண்ணீர் வீழ்தலும் உண்டு' (தொல். பொருள். மெய்ப். 5, பேரா. உரை).

[அழுகை + கண்ணீர். அழு → அழுகை (தொ.பெ.). கண் + நீர் – கண்ணீர்.]

**அழுகைத்தூற்றல்** *aḻugai-t-tūṟṟal*, பெ. (n.) துலை (ஐப்பசி) மாதம் இடைவிடாது தூறும் மழைத்தூறல்; continuous drizzle during the month of October-November.

[அழுகை + தூற்றல். அழு → அழுகை (தொ. பெ.). தூறு → தூற்றல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அழுகைத்தூறல்** *aḻugai-t-tūṟal*, பெ. (n.) அழுகைத்தூற்றல் பார்க்க; see *aḻugai-t-tūṟṟal*.

[அழுகை + தூறல். தூறு → தூறல் (தொ. பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அழுகைமாது** *aḻugai-mādu*, பெ. (n.) கவிழ் தும்பை; stooping toombay, *Nepeta indica* (சா.அக.).

[அழுகைமாது (உ.ஆகு.) = அழும்பெண்டு போல் தோன்றுவது.]

**அழுகையுங்கண்ணீருமாய்** *aḻugaiyuṅ-kaṇ-ṇīrum-āy*, கு.வி.எ. (adv.) அழுதுகொண்டு கண்ணீர் சிந்தி; crying (or weeping) and shedding tears. அழுகையுங் கண்ணீருமாய் வந்து நின்றான் (உ.வ.).

[அழுகை + உம் + கண்ணீர் + உம் + ஆய். அழு → அழுகை (தொ.பெ.). கண் + நீர் – கண்ணீர். 'உம்' ஈரிடத்துங் கூட்டிணைப்புச் சொல் (cumulative conjunction). 'ஆய்' வி.எ. ஈறு. ஆ (ஆகு.) → ஆய் (இ.கா.வி.எ.).]

**அழுகைவாடிமூலி** *aḻugai-vāḍi-mūli*, பெ. (n.) அழுகண்ணி பார்க்க; see *aḻu-kaṇṇi* (சா.அக.).

**அழுங்கல்** *aḻuṅgal*, பெ. (n.) 1. அழுதல்; crying, weeping. 2. துன்பம் (திவா.); affliction. 3. நோய் (திவா.); disease. 4. கேடு (திவா.); ruin. 5. அச்சம் (திவா.); fear. 6. இரக்கம்; pity, compassion. "அழுங்க லெய்திய வாருயிர்ப் பாங்கற்கு" (திருக்கோ. 29, கொளு). 7. கண்கலங்குதல்; congestion of the eyes (சா.அக.). 8. கைகால் கருப்பேறல்; darkening of the limbs through disease (சா.அக.). 9. உருவழிதல்; to be disfigured (சா.அக.). 10. சோம்பல் (திவா.); sloth. 11. யாழின் நரம்போசை (பிங்.); sound of lute. 12. ஆரவாரம் (திவா.); loud noise, uproar. "அழுங்க லூரே" (நற். 36 : 9). 13. மலை; mountain (சா.அக.).

ம. அழுங்குக

[அழு → அழுங்கு. அழுங்குதல் = வருந்துதல். அழுங்கு → அழுங்கல் (தொ.பெ.). 'அல்' தொ. பெ. ஈறு.]

மலை யென்னும் பொருள் இச் சொற்கு எங்ஙனம் வந்ததென்பது தெளிவாய்த் தெரியவில்லை. 'ஆரவாரமுள்ளது அல்லது செலவழுங்க (செலவு தவிர) ஏதுவாயிருப்பது'

என்பது, வலிந்தும் நலிந்தும் கொள்ளத்தக்க தாகும்.

**அழுங்காமை** *aḻuṅgāmai*, பெ. (n.) 1. ஒரு வகைக் கடலாமை (வின்.); hawk's bill, *Caretta squamata*. 2. அழுங்கு (வின்.); pangolin.

ம. அழுங்காம

*[அழுங்கு + ஆமை.]*

அழுங்குத் தன்மையும் ஆமைத் தன்மையும் சேர்ந்தது என்னும் பொருள் அழுங்கிற்குப் பொருந்தாது.

**அழுங்கிப்புழுங்கி** *aḻuṅgi-p-puḻuṅgi*, வி.எ. (adv.) *மிக மனமெரிந்து, மிகப் பொறாமைப்பட்டு;* suffering from burning jealousy, being extremely envious. பகைவன் தேர்தலில் வெற்றி பெற்றதனால் அழுங்கிப்புழுங்கி அவனைக் கொல்லத் துணிந்தான்.

*[அழுங்கு → அழுங்கி (இ.கா.வி.எ.); புழுங்கு → புழுங்கி (இ.கா.வி.எ.). 'இ' ஈரிடத்தும் இ.கா. வி.எ. ஈறு. 'அழுங்கிப்புழுங்கி' பொருளை மிகுத்துக்காட்டும் மரபிணைமொழி.]*

**அழுங்கு-தல்** *aḻuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *வருந்துதல்* (பிங்.); to suffer, to be in distress, in anguish. 2. *அஞ்சுதல்* (உரி.நி.); to fear. 3. *துயரப்படுதல்* (பிங்.); to grieve, sorrow, regret. 4. *அழுதல்* (நாநார்த்த. 968); to weep. 5. *கெடுதல்;* to be spoiled, injured. "அழுங்க விரக்கமுங் கேடுமாகும்" (தொல். சொல். உரி. 52). 6. *மாசுறுதல்;* to be tarnished, to suffer damage of reputation. "குண னழுங்கக் குற்ற முழைநின்று கூறும்" (நாலடி. 353). 7. *உருவழிதல்;* to be disfigured. "பிணனழுங்கக் களனுழக்கி" (புறநா. 98 : 5). 8. *சோம்புதல்* (திவா.); to be idle, lazy. 9. *தவிர்தல்;* to dispense with. "அழுங்கின னல்லனோ வயர்ந்ததன் மணனே" (அகநா. 66 : 26). 10. *ஒலித்தல்* (சூடா.); to sound.

ம. அழுங்கு; க. அழ்கு.

*[அழு → அழுகு → அழுங்கு.]*

சேனாவரையர், தொல். சொல். உரி. 54ஆம் நூற்பாவிற்கு, "பழங்க ணோட்டமு நலிய வழுங்கின னல்லனோ" (அகநா. 66) எனவும், "குணனழுங்கக் குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர்கட்கு" (நாலடி. 353) எனவும், 'அழுங்கல், அரவமேயன்றி இரக்கமுங் கேடு மாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு' என்று உரை கூறினார். ஆயின், 'அழுங்கினன்' என்னும் அகநானூற்றுச் சொல்லிற்கு 'நிறுத்திவிட்டான்' என்று நாட்டார்-கவியரசு உரையும், 'அழுங்க' என்னும் நாலடியார்ச் சொல்லிற்கு 'மாசுற' என்று இராசகோபாலப் பிள்ளையுரையும் பொருள் கூறுகின்றன.

**அழுங்கு** *aḻuṅgu*, பெ. (n.) 1. *வளைக்குள் வதிந்து இரவிற் கறையான் தின்று வாழும் சிறு விலங்கு* (பிங்.); pangolin, Indian scaly ant-eater, *Manis crassicandata* (செ.அக.) — *Manis pentadactyla* alias *M. brachyura* (சா. அக.). 2. *அழுங்காமை, கடலாமைவகை;* hawk's bill. 3. (இசை) *பாலையாழ்த் திற வகை* (பிங்.); (Mus.) a secondary melody-type of the *pālai class*. 4. *கற்றாழை* (பச்.மூ.); aloe.

ம. அள்ளுவன்; தெ. ஆலுக; து. அளங்கு; குட. செள்ளவே.

*[நளுங்கு → அளுங்கு → அழுங்கு.]*

**அழுங்குப்பிடி** *aḻuṅgu-p-piḍi*, பெ. (n.) *விடாப் பிடி* (வின்.); firm unyielding hold, pertinacity, obstinacy.

**அழுங்குவி-த்தல்** *aḻuṅguvi-*, 1 பி.வி. (v.caus.) 1. *துன்பமுறுத்துதல்;* to distress. "அன்புருகு நெஞ்ச மழுங்குவிக்கு மாலை" (சீவக. 2051). 2. *தவிர்த்தல், நிகழவொட்டாது தடுத்தல்;* to prevent, stop. 'சொல்லுஞ் செயலும் ஒவ்வாமைக் குற்றம் அவர்க்கெய்தும்; அஃதெய்தாவகை அழுங்குவி யென்பது கருத்து' (குறள், 1154, பரிமே. உரை).

*[அழுங்கு (த.வி.) → அழுங்குவி (பி.வி.).]*

**அழுங்கோடு** *aḻuṅg(u)-ōḍu*, பெ. (n.) *அழுங்கின் செதிள்;* scales of the pangolin.

*[அழுங்கு + ஓடு.]*

**அழுத்தக்காரன்** *aḻutta-k-kāraṉ*, பெ. (n.) 1. *கையிறுக்கமுள்ளவன்* (உ.வ.); parsimonious, niggardly person, miser (Com.u.). அவன் ஓர் அழுத்தக்காரன்; ஒருவருக்கும் ஒன்றுங் கொடான். 2. *அழுக்கன்* (உ.வ.); deep person (Com.u.). அவன் பெரிய அழுத்தக்காரன்; அவனை யாரும் அறிந்துகொள்ள முடியாது.

*[அழுந்து → அழுத்து (தொ.பெ.) → அழுத்தம் (தொ.பெ.) + காரன் (உடைமை குறித்த ஆ.பா. ஈறு).]*

காரன் பார்க்க; see *kāraṉ*.

**அழுத்தந்திருத்தம்** *aluttan-tiruttam*, பெ. (n.) 1. **சிறிதும் வழுவின்மை**; perfectly correct. அழுத்தந்திருத்தமாய்ப் பேசவும் எழுதவும் வேண்டும். 2. **பொருள் வலியுடைமை**; emphasis and forcefulness. அவன் பேச்சு அழுத்தந் திருத்தமானது.

*[அழுந்து → அழுத்து → அழுத்தம் + திருந்து → திருத்து → திருத்தம். 'அழுத்தந்திருத்தம்' பொருள் வலி மிகுக்கும் மரபிணைமொழி.]*

**அழுத்தம்** *aluttam*, பெ. (n.) 1. **அமுக்கம், நெருக்கம்**; pressure. அழுத்தம் போதாது. 2. **இறுக்கம், திணுக்கம், இழைநெருக்கம்**; compactness, closeness of texture, as of cloth. துணி அழுத்தமாயில்லை. 3. **பலகைக் கடினம்**; hardness, rigidity, as of wood. 4. **உறுதி**; durability, strength, as of binding. அழுத்தமான கட்டடம். 5. **ஒட்டாரம்** (பிடிவாதம்); obstinacy. 6. **ஈயாமை, கஞ்சத்தனம்**; close-fistedness, parsimony. செல்வத்தில் அழுத்தமுள்ளவன் செத்தாலும் கொடான். 7. **பொருள் வலியுடைமை**; emphasis, forcefulness, decisiveness. அவன் பேச்சு அழுத்தமுள்ளது. 8. **ஆழ்ந்தறியுந் தன்மை**; profoundness of one's mental application. அவனுடையது அழுத்தமான படிப்பு.

ம. அழுத்தம்

*[அழுந்து → அழுத்து (தொ.பெ.) → அழுத்தம் (தொ.பெ.).]*

**அழுத்தமில்லாவுடம்பு** *aluttam-illā-v-udambu*, பெ. (n.) பழக்கத்தில் அடிப்படாத வுடம்பு; body not moulded by experience, nor toughened by strict habit (சா.அக.).

*[அழுந்து → அழுத்து → அழுத்தம் + இல் → இல்லா + உடம்பு.]*

**அழுத்து-தல்** *aluttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அழுந்தச்செய்தல்**; to press down, press hard, impress. முத்திரை யழுத்து. தலையிற் கையைவைத் தழுத்திவிட்டான். 2. **பதித்தல்**; to encase, inlay. "மைதீர் பசும்பொன் மேன் மாண்ட மணியழுத்தி" (நாலடி. 347). 3. **அமிழ்த்துதல்**; to plunge, immerse, press down. குரல்வளையை நெரித்துக் குளத்தில் அமிழ்த்திவிட்டான். 4. **அம்பெய்தல், அம்பெய்து ஒருடம்பிற் பதியச் செய்தல்**; to shoot or implant an arrow into a body. "பகழி வாங்கிக் கடுவிசை யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலின்" (குறிஞ்சிப். 170 : 1). 5. **ஒருவர் பிழைப்பைக் கெடுத்துவிடுதல்**; to ruin one. நெருக்கடி காலத்தில் அவனை ஒரே அழுத்தாய் அழுத்திவிட்டார்கள். 6. **உறுதியாக்குதல்**; to make firm or compact, confirm. 7. **வற்புறுத்துதல்**; to insist on, affirm.

ம. அழுத்துக; க., தெ. அத்து (அமிழ்த்து).

*[அமிழ் → ஆழ் → (அழு) → அழுந்து (த.வி.) → அழுத்து (பி.வி.).]*

**அழுத்து** *aluttu*, பெ. (n.) 1. **அழுத்துகை**; pressure. ஓர் அழுத்து அழுத்தினான். 2. பதிவு; imprint, impression. "நகநுதி யழுத்தைக் காட்டி" (திருப்பு. 452).

*[அழுந்து → அழுத்து (தொ.பெ.).]*

**அழுதகண் சிந்தியமூக்கு** *aluda-kan-šindiya-mūkku*, பெ. (n.) **என்றும் துயரத்தில் அழுது கொண்டே யிருத்தல்**; to keep on weeping through distress (சா.அக.).

அழுதகண்ணீரும் சிந்தியமூக்குமாய் பார்க்க; see *aluda-kan-nirum-šindiya-mūkkum-āy*.

**அழுதகண்ணீரும் சிந்தியமூக்குமாய்** *aluda-kan-nirum-šindiya-mūkkum-āy*, கு.வி.எ. (adv.) **அழுது கண்ணீர் வடித்துக்கொண்டும் மூக்குச் சிந்திக்கொண்டும்**; in a lachrymose state of falling tears and running nose. அழுத கண்ணீரும் சிந்திய மூக்குமாய் வந்து நின்றான்.

*[அழு → அழுத (இ.கா.பெ.எ.). கண் + நீர் + உம் (கூட்டிணைப்புச்சொல்) — கண்ணீரும். சிந்து → சிந்திய (இ.கா.பெ.எ.). மூக்கு + உம் (கூட்டிணைப்புச் சொல்) — மூக்கும். ஆ → ஆய் (இ.கா.வி.எ. இங்குக் கு.வி.எ. ஈறு).]*

சிறு பிள்ளைகளும் பெண்டிரும் வருந்தி யழும்போது இந் நிலைமை யடைவது இயல்பு.

**அழுதுகும்பிட்டு** *aludu-kumbittu*, வி.எ. (adv.) அழுதுதொழுது பார்க்க; see *aludu-toludu*.

*[அழு → அழுது (இ.கா.வி.எ.) + கும்பிட்டு (இ.கா.வி.எ.).]*

**அழுதுதொலை-த்தல்** *aludu-tolai-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. **அழுது மறந்துவிடுதல்**; to lament over and forget. அவனை முன்னமே அழுதுதொலைத்துவிட்டேன். 2. வருத்தத்

**துடன் செலவிடுதல்**; to spend grudgingly. அவனுக்கு ஆயிரம் உருபா அழுது தொலைத்தேன்.

**அழுதுதொழுது** *aḻudu-toḻudu*, வி.எ. (adv.) **அழுதும் கெஞ்சியும்**; by crying and cringing. அழுதுதொழுது எப்படியோ முதலாளியிடம் பணம் வாங்கிவிட்டான்.

*[அழு → அழுது (இ.கா.வி.எ.). தொழு → தொழுது (இ.கா.வி.எ.). 'அழுதுதொழுது' பொருள் மிகுக்க வந்த மரபிணைமொழி.]*

**அழுதுவழி-தல்** *aḻudu-vaḻi-*, 2 செ.கு.வி. (v.i.) **பொலிவின்றி யிருத்தல்**; to be dull, dispirited, gloomy.

அழுது கண்ணீர் வழிகின்ற நிலையில் ஒருவரின் அழகு கெட்டிருப்பது இயல்பே.

**அழுந்த** *aḻunda*, வி.எ. (adv.) **இறுக**; tightly, closely. "அவரை யழுந்தப் பற்றி" (புறநா. 77 : 10-11).

*[அழுந்து → அழுந்த (நி.கா.வி.எ.). 'அ' நி.கா.வி.எ. ஈறு.]*

**அழுந்தல்** *aḻundal*, தொ.பெ. (vbl.n.) 1. **பதிதல்**; impression, being inlaid. 2. **நாடி விழுதல்**; depression as in pulsation indicating collapse or death. நாடியழுந்தல் (சா.அக.). 3. **வருந்துதல்**; suffering from disease, pain, etc. (சா.அக.).

*[அழுந்து → அழுந்தல் (தொ.பெ.).]*

**அழுந்து-தல்** *aḻundu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அமுங்குதல்**; to become pressed down, to press tight. நிலம் அழுந்திவிட்டது. 2. **முத்திரை யடிபடுதல்**; to be impressed, imprinted. 3. **மனத்திற் பதிதல்**; to be impressed on the mind. 4. **அமிழ்தல்**; to sink, to be immersed, drowned. "அழுந்தே னரகத்து" (திருக்கோ. 166). 5. **மணி பதிதல்**; to be inlaid, encased. 6. **உறுதியாதல்**; to become firm, close, compact. தளம் அழுந்தியிருக்கிறது. 7. **உறுதியாகப் பற்றுதல்**; to persist, become deep-rooted. எலும்பிற் சுரம் அழுந்திவிட்டது. 8. **பட்டறிவு பெறுதல்**; to gain experience. உலகநடப்பில் அழுந்தினவன். 9. **வருந்துதல்** (நாநார்த்த.); to suffer.

ம. அழுந்துக

*[அமிழ் → ஆழ் → (அழு) → அழுந்து.]*

**அழுந்து** *aḻundu*, பெ. (n.) 1. **நீராழம்** (திவா.); depth of water. 2. **வெற்றிலை நடும் வரப்பு** (வின்.); ridge on which betel vine is planted.

அழுந்து-தல் பார்க்க; see *aḻundu-*.

**அழுந்துபடு-தல்** *aḻundu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **தொன்றுதொட்டு வருதல்**; to be long-standing, to have existed for generations. "அழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையும்" (மதுரைக். 342).

*[அழுந்து (முத.தொ.பெ.). 'படு' து.வி.]*

**அழுப்பு** *aḻuppu*, பெ. (n.) **சோறு** (சது.); boiled rice.

*[அழும்புதல் = செறியக் கலத்தல். ஒருகா. அழும்பு → அழுப்பு = உடம்பொடு இரண்டறக் கலக்கும் அல்லது உடம்பாக மாறும் உணவு, சோறு. "உண்டி முதற்றே யுணவின் பிண்டம்" (புறநா. 18 : 20). ஒ.நோ: அரும்பு = அரிசி.]*

**அழுப்புகம்** *aḻuppugam*, பெ. (n.) **தேவருலகம்** (சிந்தா. நி. 332); celestial world, heaven.

*[ஒருகா. அழுப்பு + அகம் – அழுப்பகம் → அழுப்புகம். ஒ.நோ: சோறு = வீடுபேறு, வீட்டின்பம் (முத்தி). "பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்" (திருவாச. 15:7).]*

**அழுபிள்ளை** *aḻu-piḷḷai*, பெ. (n.) **ஓயாமல் அல்லது அடிக்கடி அழுதுகொண்டிருக்கும் கைப்பிள்ளை**; weeping child-in-arm.

*['அழுபிள்ளை' வினைத்தொகை.]*

**அழுபிள்ளைக்காரி** *aḻu-piḷḷai-k-kāri*, பெ. (n.) **ஓயாமல் அல்லது அடிக்கடி அழுதுகொண்டிருக்கும் கைப்பிள்ளையின் தாய்**; the mother of a weeping child-in-arm.

*[அழு+பிள்ளை+காரி. 'காரி' பெ.பா. ஈறு.]*

அழுபிள்ளை பார்க்க; see *aḻu-piḷḷai*.

**அழும்பு-தல்** *aḻumbu-*, 5 செ.கு.வி. (v.i.) **செறியக் கலத்தல்**; to be intimate, in communion. "அமர வழும்பத் துழாவி யென்னாவி" (திவ். திருவாய். 1.7 : 9).

*[அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் (அழு) → அழும்பு.]*

**அழுமூஞ்சி** *aḻu-mūñji*, பெ. (n.) 1. **என்றும் அழுதுகொண்டிருப்ப-வன்-வள்**; a lachrymose person. 2. **பொலிவற்ற முகமுள்ள-வன்-வள்**; a melancholy or dolorous looking person.

க. அளுகுளி

['அழுமூஞ்சி' வினைத்தொகை.]

மூஞ்சி பார்க்க; see *mūñji*.

**அழுவணங்காட்டு-தல்** *aḻu-vaṇaṅ-kāṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **ஒரு பிள்ளை அழும்போது இன்னொரு பிள்ளை அதைப்போல் அழுது பழிப்புக் காட்டுதல்**; to mock a weeping child by mimicking it. இந்தப் பிள்ளை அந்தப் பிள்ளையை அழுவணங் காட்டுகிறது (உ.வ.).

**அழுவம்**[1] *aḻuvam*, பெ. (n.) *1.* **ஆழம்**; depth. "கடல்மண் டழுவத்து" (மலைபடு. 528). 2. **குழி**; pit. "ஆரிட ரழுவத்து" (மலைபடு. 368). *3.* **கடல்** (பிங்.); deep sea. *4.* **பரப்பு**; expanse. "தெண்கட லழுவத்து" (கலித். 121 : 2). 5. **பெருமை** (திவா.); greatness, excellence. *6.* **மிகுதி**; abundance, copiousness. "மறப்படை யழுவ மாரி" (சீவக. 802). 7. **முரசு** (பொதி. நி.); drum. *8.* **நடுக்கம்** (பொதி. நி.); trembling, quaking, fear.

ம. அழுவம்

[ஆழ் → ஆழ்வு → ஆழ்வம் → அழுவம். கடலும் குழியும் ஆழமுள்ளவை. கடல் பரந்தது. ஒ.நோ: பரவை = கடல், பரப்பாற் பெருமையும் மிகுதியும் உடையது. முரசு பருமையானது, பரந்த கண்ணுடையது, கடல்போல் முழங்குவது, அதிர்வது.]

**அழுவம்**[2] *aḻuvam*, பெ. (n.) *1.* **போர்**; battle. "வாளழுவந் தாங்கி" (பு.வெ. 8 : 23). 2. **மலையரண் (துர்க்கம்)** (திவா.); fortress. 3. **காடு**; jungle, forest. "நனந்தலை யழுவம்" (அகநா. 79 : 9.).

[அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் → அளவு → அழுவு → அழுவம் = நெருங்கிச் செய்யும் போர், போர்க்குச் சிறந்த மலையரண், மலையரணுள்ள அல்லது மரமடர்ந்த காடு.]

**அழுவம்**[3] *aḻuvam*, பெ. (n.) *1.* **நடு**; middle. "அமரழு வத்தார்" (பு.வெ. 10, பொதுவி. 3). 2. **நாடு** (சூடா.); country, district, inhabited tract.

[உள் → அள் = நடு. அள் → (அழு) → அழுவம் = குறிஞ்சிக்கும் நெய்தலுக்கும் இடைப்பட்ட மருதநிலம், சிறந்த வாழ்நிலம், வாழ்நிலம், நாடு.]

**அழுவம்**[4] *aḻuvam*, பெ. (n.) **அப்பவகைகள் (வருக்கம்)**; different kinds of rice-cakes (சா. அக.).

[ஒருகா. எழு → எழுவம் → அழுவம். அப்பம் சுடப்படும்போது எழும்பும். எழுதல் = எழும்புதல்.]

**அழுவிளிப்பூசல்** *aḻu-viḷi-p-pūšal*, பெ. (n.) **அழுகைப் பேரொலி**; loud lamentation. "பிறவோ ரிறந்த வழுவிளிப் பூசலும்" (மணிமே. 6 : 73).

['அழுவிளி' வினைத்தொகை. 'பூசல்' ஒலிக் குறிப்பு.]

**அழுவுணி** *aḻu-v-uṇi*, பெ. (n.) **அழுகிற குணமுள்ள-வன்-வள்**; tearful person, one who is always crying or has the tendency to cry under the slightest pretext.

[அழு (முத. தொ. பெ.) + உண்ணி. உண் → உண்ணி. 'இ' வி. முத. ஈறு. 'உண்' து.வி.]

**அழுவை** *aḻuvai*, பெ. (n.) **யானை** (அக.நி.); elephant.

[வழுவை (யானை) → அழுவை.]

**அழை-த்தல்** *aḻai*, 4 செ.கு.வி. (v.i.) **கதறுதல்** (பிங்.); to cry out, utter a loud cry, shout. —, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **கூப்பிடுதல்**; to call, invoke, invite. "ஆதியே யடியே னாதரித் தழைத்தால்" (திருவாச. 29 : 1). 2. **பெயரிட்டுக் கூப்பிடுதல்**; to call by name. "சிரீதரா வென் றழைத்தக்கால்" (திவ். பெரியாழ். 4 . 6 : 2). 3. **வரவழைத்தல்**; to summon, direct to appear or to be brought, to send for. "அரசிய லுரிமைக் கெல்லா மாங்கவ ரழைத்து" (கந்தபு. தேவ. விண்குடி. 40).

[அல் → அல → அலம்பு → அலப்பு. அல → அலறு. அல → அலங்கு → (அளங்கு) → அணங்கு. அல் → அலு → (அளு) → அழு → அழுங்கு. அழு → அழை (ஒலிக்குறிப்பு).]

ஒலி பார்க்க; see *oli*.

**அழைப்பி-த்தல்** *aḻai-p-pi-*, *1* பி.வி. (v. caus.) **தருவித்தல்**; to fetch, to get at, to invite through another, to import, to send for. தம் திருமணத்திற்கு அமைச்சரைத் தம் நண்பரைக் கொண்டு அழைப்பித்தார். 'பத்தடி உத்தர முள்ள மரங்களும் அழைப்பித்து' (கோயிலொ. 146).

[அழை (த.வி.) → அழைப்பி (பி.வி.). 'பி' பி.வி. ஈறு.]

**அழைப்பிதழ்** *aḻaipp(u)-idaḻ*, பெ. (n.) **ஒரு நிகழ்ச்சிக்கு ஒருவரை வருமாறு வேண்டும்**

அட்டை அல்லது தாள் (இக்.வ.); invitation card (Mod.).

[அழை → அழைப்பு (தொ.பெ.) + இதழ் (தாள் அல்லது அட்டை).]

**அழைப்பு** *alaippu*, பெ. (n.) 1. கூப்பிடுகை; call. "அப்போ தொழியு மழைப்பு" (திவ். இயற். நான்மு. 38). 2. வருமாறு வேண்டுகை; invitation. 3. பொருள்புணரா வோசை; meaningless sound. 'பித்து - பித்தாற் பிறந்த அழைப்பு. அழைப்பு - பொருள் புணரா வோசை' (திருக்கோ. 102, பழைய வுரை) (செ.அக.).

[அழை → அழைப்பு (தொ.பெ.).]

102ஆம் திருக்கோவைப் பாட்டில், தலைவன் கையில் வில்லின்றியே தானொரு யானை வேட்டுவனாக நடித்து யானை வினவியதையே தோழி நகையாடி, 'இப் பெரியவர் பித்து மிகுந்து நின்றார்' என்னும் பொருளில் "பித்தழையா நின்றாரிப் பெரியவரே" என்று கூறியதாகவுள்ளது. ஆகவே, தலைவன் வினா முழுவதும் பொருள்புணரா வோசையே யன்றி, அழைப்பு என்னுஞ் சொல் மட்டு மன்று. ஆதலால், 3ஆம் பொருள் கொள்ளத் தக்கதன்று.

**அழைப்புச்சுருள்** *alaippu-c-curul*, பெ. (n.) திருமணத்திற்கு அழைக்கும்போது, மணமக்களுக்கும் உறவினர்க்கும் தாம்பூலத்துடன் கொடுக்கும் பணமுடிப்பு (நாஞ்.); money presented along with betels by the invitees to the bride or bridegroom or relations, as a formal procedure while being invited by them to the marriage.

[அழை → அழைப்பு (தொ.பெ.) + சுருள் (முத. தொ. ஆகு.) = பணமுடிப்பு.]

**அழைப்புத்தூரம்** *alaippu-t-tūram*, பெ. (n.) கூப்பீடு கேட்கும் அளவான 1000 முழவிணைத் (கச) தொலைவு (இ.வ.): calling distance, 1000 yards (Loc.).

[அழைப்பு + தூரம். கூப்பிடு தொலைவு, அழைப்புத் தொலைவு என்பன தூய தமிழ்.]

**அழைப்புப்பத்திரம்** *alaippu-p-pattiram*, பெ. (n.) 1. அழைப்பு மடல்; letter of invitation. 2. கிறித்தவச் சவைக்குக் குருவாகும்படி அழைக்கும் ஓலை (கிறித்.); written formal call to a priest to take charge of the pastorate of a Christian church (Chr.).

[அழை → அழைப்பு (தொ.பெ.). Skt. pattra → த. பத்திரம்.]

'அழைப்போலை' என்பது தூய தமிழ்.

**அழைப்புமூலிகை** *alaippu-mūligai*, பெ. (n.) மாந்திரிக வசியத்திற்குப் பயன்படுத்தும் துடரி வேர், சிறியாணங்கை, அழிகண்ணி முதலியன; the drug or drugs used as magic charms such as the root of *Rhamnus circumcissus*, *Polygala glabra*, Indian weeping plant, etc. (சா.அக.).

[அழை → அழைப்பு (தொ.பெ.). மூலம் → மூலி → மூலிகை = வேர் அல்லது வேர்ச்செடி.]

**அழையுறு-த்தல்** *alai-y-uru-*, 4 செ.கு.வி. (v.i.) அகவுதல்; to screech, to utter sound as a peacock. "அழையுறுத்து மாமயில்க ளாலுஞ் சோலை" (தேவா. 6 . 47 : 7)

[அழை + உறு – அழையுறு (த.வி.) → அழையுறுத்து (பி.வி.). 'உறு' து.வி.]

**அள்**[1] *al*, பெ. (n.) 1. கூர்மை (திவா.); sharpness, keenness of edge. 2. நீர்முள்ளி (இராசவைத்.); a species of thorny shrub, *Hygrophila spinosa*. 3. வாண்முள்ளி; a species of thorny nail dye, *Barleria prionitis* (சா.அக.).

[உள் → உளி. உள் → அள்.]

**அள்**[2] *al*, பெ. (n.) 1. அள்ளப்படுவது (கல்.); handful, anything that can be contained within the hollow of the hand. 2. பக்கம்; side. 3. விலாவெலும்பு (தஞ்சை); rib (Tj.). 4. அள்ளு மாந்தம்; infantile bronchitis (தைலவ. தைல. 8). 5. செறிவு (திவா.); closeness, thickness. 6. பற்றிரும்பு (பிங்.); clamp, iron band to hold parts together. 7. வண்டிவில்லைத் தாங்குங் கட்டை (இ.வ.); block of wood connecting the spring with the axle (Loc.). 8. பூட்டு (பிங்.); lock, padlock. 9. வன்மை (சூடா.); strength, firmness.

[உல் → அல் → அள். அள்ளுதல் = பொருந்துதல், செறிதல். அள் → அள்ளை = பொருந்திய பக்கம். ஒ.நோ: மருவுதல் = பொருந்துதல். மரு → மருங்கு = பக்கம். அள்ளுதல் = பொருத்திப் பற்றுதல்.]

**அள்**[3] *al*, பெ. (n.) 1. காது (பிங்.); ear. 2. கன்னம்; cheek (சா.அக.). 3. வாய்; mouth. அள்ளூறுதல்.

[உள் → அள் → அளை = பொந்து, புற்று, வளை, குகை. அள் = அளை போன்ற காது, காதொட்டிய அல்லது குழிவிழுந்த கன்னம்.]

**அள்**⁴ *al*, இடை. (part.) *பெண்பாலீறு*; third pers. sing. fem. ending. *அவள் வந்தனள்*. "ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்" (தொல். சொல். கிளவி. 6). "அள்ஆள் இறு மொழி பெண்பாற் படர்க்கை" (நன். 326).

ம., க., பர். அள்; தெ., குட., பட. ஆலு (பெண்); கோண். ஆர் (பெண்).

*[ஆள் = பெண். ஆள் → அள்.]*

**அள்வழுப்பு** *al-valuppu*, பெ. (n.) *காது குறும்பி*; ear-wax or cerumen.

*[அள் + வழுப்பு. வழு → வழுப்பு = வழு வழுப்பானது.]*

**அள்ளத்தி** *allatti*, பெ. (n.) *அள்ளாத்தி* பார்க்க; see *allātti*.

**அள்ளத்துள்ளப்போ-தல்** *alla-t-tulla-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) *கழிச்சல், துன்ப நேர்ச்சி, கொள்ளை, போர் முதலியவற்றால் திடுமென இறந்துபோதல்*; sudden death due to cholera, accident, robbery, war and other unnatural causes (சா.அக.).

*['அள்ளத்துள்ள' (துள்ளத்துடிக்க) ஒரு மரபிணைமொழி. போதல் = சாதல்.]*

**அள்ளநோய்** *alla-nōy*, பெ. (n.) *அள்ளுநோய்*; *குழந்தைகட்கு ஏற்படும் ஓர் உயிர்ப்பு (சுவாச) நோய்*; a disease in children arising from defects in nursing them such as over-feeding, etc., infantile bronchitis, *Broncho pneumonia* (சா.அக.).

*[அள் → அள்ளம் + நோய். ஒருகா. அள்ளு நோய் → அள்ளநோய்.]*

**அள்ளல்** *allal*, பெ. (n.) 1. *நெருக்கம்*; crowdedness, closeness. "அள்ளற் பயலை யூர்கின்றது" (திவ். இயற். திருவிருத். 13). 2. *சேறு* (திவா.); mud, mire. 3. *எழுவகை அளறுகளுள் (நரகங்களுள்) ஒன்று* (பிங்.); one of the seven hells.

க. அள்

*[அள்ளுதல் = செறிதல். அள் → அள்ளல் = செறிவு. சேறு, நெருப்பு முதலியன செறிந்த இடம்.]*

**அள்ளாடித்தள்ளாடி** *allādi-t-tallādi*, வி.எ. (adv.) *தளர்ந்த நடையாய், தட்டுத்தடுமாறி*; moving with faltering steps, as a small child or an aged person, with an unsteady gait swaying to and fro. *பாட்டனார் அள்ளாடித் தள்ளாடி வீடுவந்து சேர்ந்தார்.*

க. அள்ளாடு; தெ. அல்லாடு, அல்லலாடு.

*[அள்ளாடு → அள்ளாடி (இ.கா.வி.எ.). தள்ளாடு → தள்ளாடி (இ.கா.வி.எ.). 'அள்ளாடித் தள்ளாடி' பொருள் மிகுக்கும் எதுகை மரபிணைமொழி.]*

**அள்ளாடு-தல்** *allādu-*, 5 செ.கு.வி. (v.i.) *செறிதல்*; to be close. "அள்ளாடிய கவசத்தவிர் மணியற்றன" (கம்பரா. யுத்த. முதற்போ. 177).

*[அள் = செறிவு. 'ஆடு' து.வி.]*

**அள்ளாத்தி** *allātti*, பெ. (n.) *கண்பெருத்த மீன் வகை*; big-eyed herring, *Elops saurus* (சா.அக.).

**அள்ளாயமானியம்** *allāya-māniyam*, பெ. (n.) *அள்ளுரிமை (அள்ளு சுதந்திரம்)* (I.M.P. Sm. 91); right to receive a handful of the grain sold, as perquisite.

*[அள் (அள்ளும்) + ஆயம் (வருவாய்) – அள்ளாயம் (வினைத்தொகை). மானம் → மானி → மானியம் = ஊழியருக்கு அரசு அளிக்கும் உரிமை வருமானம் அல்லது உரிமை நிலம். 'அள்ளாய மானியம்' இருபெயரொட்டு.]*

**அள்ளி** *alli*, பெ. (n.) *வெண்ணெய்* (இராச வைத்.); butter.

*[அள்ளுதல் = செறிதல். அள் → அள்ளி = செறிந்தது, சேறுபோன்றது. 'இ' வி.முத. ஈறு.]*

**அள்ளிக்குத்து-தல்** *alli-k-kuttu-*, 5 செ.குன்றா வி. (v.t.) 1. *செடி முதலியவற்றின்மேல் நீர் தெளித்தல்* (யாழ்ப்.); to sprinkle water on plants, etc. (J.). 2. *கஞ்சியுணவைச் சிறுகக் கொடுத்தல்* (யாழ்ப்.); to give liquid food in small quantities (J.).

*[அள் → அள்ளி (இ.கா.வி.எ.). குத்துதல் = தெளித்தல், தெளித்தாற்போற் சிறிதாகக் கொடுத்தல்.]*

**அள்ளிக்கொட்டு-தல்** *alli-k-kottu-*, 5 செ.கு.வி. (v.i.) *உடம்பு முழுதும் பரவுதல்*; to spread over the whole body, as small-pox. *அம்மை யள்ளிக்கொட்டி யிருக்கிறது.* —, 5 செ. குன்றாவி. (v.t.) 1. *மிகு பொருள் தேடுதல்*; to acquire wealth in unlimited measure. *அவன் வணிகஞ் செய்து பணத்தை அள்ளிக் கொட்டுகிறான்.* 2. *தாராளமாகக் கொடுத்*

# அறுகு


உப்பறுகு


ஆற்றறுகு


அரிசிப்புல்


கூந்தலறுகு


கொடியறுகு


சிற்றறுகு

தல்; to give liberally. செண்டத்தூர் ஐயாத் துரை முதலியார் ஏழைகட்குப் பணத்தை அள்ளிக்கொட்டினார்.

[அள் → அள்ளி (இ. கா. வி. எ.). கொட்டு தல் = கொட்டுதல்போல் ஏராளமாகப் போடு தல், தேடுதல், கொடுத்தல்.]

**அள்ளிக்கொண்டுபோ-தல்** *aḷḷi-k-koṇḍu-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **நீர்க்கால் வேகமா யோடுதல்;** to run swiftly, as a water-course. —, (8) செ. குன்றாவி. (v.t.) 1. **மிகுதியாக வாரிக் கொண்டு போதல்;** to sweep away, as a tornado. சூறாவளி அள்ளிக்கொண்டு போகிறது. 2. **நோய் கடுமையாகக் கொள்ளை கொள்ளுதல்;** to cause havoc in a severe epidemic form. அந்தவூரில் நச்சுக் கழிச்சல் (பேதி) அள்ளிக்கொண்டு போகிறது.

[அள் → அள்ளி (இ. கா. வி. எ.) + கொள் (தற்பொருட்டுத் து. வி.) → கொண்டு (இ. கா. வி. எ.) + போதல் = செல்லுதல், இயங்குதல், நிகழ்தல்.]

**அள்ளிச்செருகு-தல்** *aḷḷi-c-cerugu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **சிற்ப இலக்கணப்படி அரசர், அரசியர் கொண்டைக் கூந்தலை மொத்தமாகக் கையால் வாரியெடுத்து நெகிழ்ச்சியாகச் செருகுதல்;** to gather by the hands the long flowing tresses of hair, of a king or queen, and tie them up in a loose knot. 'தலையிலுள்ள கேசத்தை அள்ளிச்செருகியும்' (சி.செ. பக். 74).

[அள் → அள்ளி (இ. கா. வி. எ.). சொருகு → செருகு.]

**அள்ளித்துள்ளு-தல்** *aḷḷi-t-tuḷḷ(u)-*, 5 செ.கு.வி. (v.i.) **மிகச் செருக்குதல்;** to be overbearing, to give oneself airs. 'அள்ளித்துள்ளி அரிவாண் மணையில் விழாதே' (பழ.).

[அள் → அள்ளி (இ. கா. வி. எ.). துள் → துள்ளு. துள்ளுதல் = குதித்தல், செருக்குதல்.]

**அள்ளிமுடி-த்தல்** *aḷḷi-muḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **அரசர் அரசியர் கொண்டைக் கூந்தலை மொத்தமாகக் கையால் வாரி யெடுத்து முடிச்சிடுதல்;** to gather and tie into a knot, as the flowing tressess of hair of a king or queen. 'தலையிலுள்ள கேசத்தை அள்ளிச் செருகியும் முடித்தும்' (சி.செ.பக். 74). 2. **கூந்தலை முடிக்கும் பொதுவகைகளுள் ஒன்று;** a general method of gathering and tying into a knot, as the flowing tressess of hair.

[அள் → அள்ளி (இ.கா.வி.எ.) + முடி.]

**அள்ளியிறை-த்தல்** *aḷḷi-y-iṟai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **கையால் முகந்து எறிதல்;** to take something in the hollow of the hands and then scatter it. கோழிகட்குத் தீனியை அள்ளி யிறைத்தான். 2. **அளவிற்கு மிஞ்சிச் செல விடுதல்;** to spend extravagantly, squander.

[அள் → அள்ளி (இ.கா.வி.எ.). இறைத்தல் = வீசித் தெளித்தல்.]

**அள்ளிருள்** *al-l-iruḷ*, பெ. (n.) **செறிந்த இருட்டு;** thick darkness.

[அள் + இருள் (வினைத்தொகை). இர் → இருள்.]

**அள்ளிவிடுதல்** *aḷḷi-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) **மிகக் கொடுத்தல்;** to give liberally.

[அள் → அள்ளி (இ.கா.வி.எ.). விடுதல் = நீக்குதல், போக்குதல், கொடுத்தல்.]

**அள்ளு-தல்** *aḷḷu-*, 5 செ.கு.வி. (v.i.) **செறிதல்;** to be dense, thickly interwoven. "அள்ளிலை யணிந்த வைவேல்" (சீவக. 615). —, 5 செ. குன்றாவி. (v.t.) 1. **கையால் முகத்தல்;** to take, collect or gather in the hollow of the hand or hands. "அள்ளிக் கொளலாய்" (நள. சுயம். 98). 2. **வாரிக்கொண்டு போதல்;** to sweep away, carry off in large quantities or numbers. "அள்ளிக் கொள்வற்றே பசப்பு" (குறள், 1187). 3. **எற்றுதல், எறிதல்** (பிங்.); to throw up. 4. **நுகர்தல்;** to enjoy. "அள்ளுற வளிந்த காமம்" (சீவக. 1387).

ம. அள்ளு

"அள்ளுற வளிந்த" என்னும் சிந்தாமணித் தொடருக்கு, 'நுகருந்தன்மை யுறும்படி பழுத்த' என்று நச்சினார்க்கினியர் உரைத் திருப்பது அத்துணைப் பொருத்தமாய்த் தெரியவில்லை. ஒருகால், 'நன்றாகப் பழுத்த அல்லது முற்றக் கனிந்த' என்பது பொருளா யிருக்கலாம்.

**அள்ளு**[1] *aḷḷu*, பெ. (n.) 1. **விலாவெலும்பு** (தஞ்சை); rib (Tj.). 2. **அளவுகூலியாக அல்லது உரிமையாகக் கையால் அள்ளிக் கொள்ளும் கூலம் அல்லது தவசம் (தானியம்)** (C.G.); handful of grain given to or claimed by a labourer, as wages or perquisite, for

measuring grains. 3. பற்றிரும்பு (பிங்.); clamp, iron band to hold parts together. 4. வண்டிவில்லைத் தாங்குங் கட்டை (இ.வ.); block of wood connecting the spring with the axle (Loc.). 5. காது (பிங்.); ear.

[அள் → அள்ளு (முத. தொ. பெ.).]

**அள்ளு**[2] *allu*, பெ. (n.) 1. **அள்ளுநோய், குழந்தைகட்கு ஏற்படும் ஓர் உயிர்ப்பு (சுவாச) நோய்**; a disease in children arising from defects in nursing them such as over-feeding, etc., infantile bronchitis, *Broncho-pneumonia*. 2. வலி; cramp (சா.அக.).

**அள்ளுமாந்தம்** பார்க்க; see *allu-mandam*.

**அள்ளுக்கட்டு-தல்** *allu-k-kattu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **பெட்டி முதலியவற்றை இரும்புத் தகட்டால் இறுக்குதல்**; to fasten with clamps or plates of iron, bind together with wire (W.). 2. **வலுப்படுத்துதல்**; to strengthen, confirm, encourage by promises (W.).

[அள் → அள்ளு + கட்டு.]

கட்டு பார்க்க; see *kattu*.

**அள்ளுக்காசு** *allu-k-kāsu*, பெ. (n.) **சில்லறை விற்பனையாளரிடமிருந்து தண்டும் பணம்**; market dues collected from retail sellers.

[அள் → அள்ளு (முத. தொ. பெ.).]

காசு பார்க்க; see *kāsu*.

**அள்ளுகொண்டை** *allu-kondai*, பெ. (n.) **பெண்டிர் மயிர்முடிச்சுவகை**; coil of women's hair tied up in a special way (W.).

['அள்ளுகொண்டை' வினைத்தொகை. அள் → அள்ளு. கொள் → கொண்டை. கொள்ளுதல் = திரளுதல்.]

**கொண்டை** பார்க்க; see *kondai*.

**அள்ளுகொள்ளை** *allu-kollai*, பெ. (n.) **பெருங் கொள்ளை**; great plunder, pillage, dacoity.

['அள்ளுகொள்ளை' வினைத்தொகை. அள் → அள்ளு. கொள் → கொள்ளை. கொள்ளுதல் = கவர்தல்.]

**அள்ளுச்சீடை** *allu-c-cidai*, பெ. (n.) **சிறு சீடை வகை** (இ.வ.); a small kind of *sidai* cake.

[அள்ளு + சீடை. அள் → அள்ளு = அள்ளக் கூடிய அளவு, சிறுமை.]

சீடை பார்க்க; see *sidai*.

**அள்ளுமாந்தம்** *allu-mandam*, பெ. (n.) **குழந்தைகட்கு நாமுள் தீங்கினால் (தோஷத்தினால்) விலாப்பக்கம் இரண்டும் உயர வெழும்பித் துன்பமும் வலியுமுண்டாக்கும் ஒரு நோய். இதைத் தெற்கத்திக் கணை (கணம்) என்பதுமுண்டு**; a disease in children attended with fits affecting the intercostal muscles, caused by eruptions on the tongue due to congenital causes (சா.அக.) — **குழந்தைகட்கு உண்டாகும் மாந்தவகை**; infantile bronchitis, *Broncho-pneumonia*, convulsion (செ.அக.).

[அள் (விலா) → அள்ளு. மந்தம் → மாந்தம்.]

**அள்ளூரல்** *allural*, பெ. (n.) **அரணை அல்லது காட்டுக்கரணை**; wild elephant yam, *Dracontium polyphyllum* (சா.அக.).

**அள்ளூறு-தல்** *allūru-*, 5 செ.கு.வி. (v.i.) **வாயூறுதல்**; to water in the mouth. "அமுத னென் றள்ளூறித் தித்திக்க" (திருவாச. 7 : 3).

[அள் = வாய், எச்சில். உள் → உறு → ஊறு.]

**அள்ளெடு**[1]**-த்தல்** *al-l-edu-*, 4 செ.கு.வி. (v.i.) **கைப்பிடியளவு வாருதல்**; to take handfuls. 'சந்தைக் கடையில் அள்ளெடுக்கிறதற்குப் போனார்களோ என்னமோ' (தாசில்தார் நா. பக். 11).

ம. அள்ளுக

[அள் (முத. தொ. ஆகு.) + எடு.]

**அள்ளெடு**[2]**-த்தல்** *al-l-edu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **நோயினால் விலா எழும்புதல்**; an involuntary rising of the intercostal muscles from a disease. 2. **இறக்குங்கால் மூச்சுவிட முடியாமல் விலாப்பக்கத்தைத் தூக்கிவிடுதலான சாவுக் குறி**; respiration due to the action of the intercostal and other thoracic muscles; Thoracic respiration alias T. breathing, observed in persons gasping for breath just before death and considered a symptom of death (சா.அக.).

[அள் = விலா. எடுத்தல் = எழும்புதல்.]

நோயினால் விலாவெழும்பும் அள்ளெடுத்தலை, 'அள்ளெடுக்குதல்' என்று சா.அக. குறிக்கின்றது. அள்ளெடுத்தல் என்றாலே போதும்.

**அள்ளெடுக்கிறவன்** *al-l-edukkiravan*, பெ. (n.) **ஒவ்வோர் அளவிலும் ஒவ்வொரு பிடி பெற்றுக்**

**கொண்டு நெல் அளப்பவன்** (W.G.); a labourer who measures paddy and is paid for it by a handful of paddy from each unit measured.

*[அள் (முத. தொ. ஆகு.) + **எடுக்கிறவன்** (வினையா. பெ.). எடு → எடுக்கிற (நி. கா. பெ.எ.) + அவன் (ஆ. பா. ஈறு) – எடுக்கிறவன்.]*

**அள்ளெடுக்குமாந்தம்** *aḷ-ḷ-edukku(m)-māndam,* பெ. (n.) **அள்ளுமாந்தம்** பார்க்க; see *aḷḷu-māndam.*

*[அள் (விலா) + எடுக்கும் + மாந்தம். எடு → எடுக்கும்.]*

**அள்ளெலும்பு** *aḷ-ḷ-elumbu,* பெ. (n.) 1. **கன்னப் பொறி யெலும்பு, அதாவது காதண்டை யிருக்கும் எலும்பு;** a bone on the side of the head between the forehead and the ear, *Temporal bone* (சா.அக.). 2. **விலாவெலும்பு;** rib.

*[அள் (விலா) + எலும்பு. எல் → எல்பு → எலுபு → எலும்பு.]*

**அள்ளை**[1] *aḷḷai,* பெ. (n.) **விலாப்புறம்;** side of the body.

க., து. அள்ளெ; **கோத.** அள்.

*[அள் → அள்ளை.]*

**அள்ளை**[2] *aḷḷai,* பெ. (n.) பேய் (பிங்.); devil, demon.

*[**ஒருகா.** அல் (இருள்) → அல்லை → அள்ளை.]*

**அள்ளைப்புறம்** *aḷḷai-p-puṟam,* பெ. (n.) 1. **விலாப்புறம்;** side of the body. 2. **வீட்டின் மருங்குப் பகுதி** (கோவை); the side portion of a house (Cm.).

**அள்ளைப்பை** *aḷḷai-p-pai,* பெ. (n.) **சட்டையின்** பக்கப்பை; side-pocket.

*[அள் → அள்ளை = பக்கம்.]*

பை பார்க்க; see *pai.*

**அள்ளைமறை** *aḷḷai-maṟai,* பெ. (n.) பக்கங்களில் வெள்ளை நிறங் கலந்த காளை (இ.வ.); bull with patches of white on its sides (Loc.).

*[அள் (பக்கம்) → அள்ளை. மல் → மர் → மரு (மறு) → மரை (மறை).]*

மரை (மறை) என்னுஞ் சொல், முதற்கண் கரும்புள்ளியையே குறித்துப் பின்னர்ச் செம்புள்ளி வெண்புள்ளிகளையுங் குறிக்கும் பொதுப்பெயராக மாறியதாகத் தெரிகின்றது.

**அள-த்தல்** *aḷa-,* 3 செ.கு.வி. (v.i.) 1. **கலத்தல்;** to mingle, blend. 2. **அளவளாவுதல்;** to talk together, to converse. "என்முக மளக்குங் கால்" (கல்லா. 19 : 36). 3. **சிறு பொய்யுரை கூறுதல்;** to tell venial lies. —, 3 செ.குன்றாவி. (v.t.) 1. அளவிடுதல்; to measure, fathom. "அடியளந்தான்" (குறள், 610). 2. **எட்டுதல்;** to extend, to reach. "மௌலி யண்ட முகட்டினை யளப்ப" (கூர்மபு. தக்கன்வே. 6). 3. அளவை (**பிரமாணம்**) **கொண்டறிதல்;** to test by the logical modes of proof. "குறைவிலா அளவி னாலுங் கூறொணா தாகி நின்ற இறைவனார்" (சி.சி. சுபக். அவைய. 4). 4. **வரையறுத்தல்;** to limit, define, determine the bounds of. "அவையளந் தறியினு மளத்தற் கரியை" (புறநா. 20 : 5). 5. **கருதுதல்;** to consider. "ஊறளந் தவர்வயின்" (கலித். 17 : 3). 6. **வீண்பேச்சுப் பேசுதல்;** to gossip. வாய்க்கு வந்தபடி அளக்கிறான், விடியவிடிய வீண்கதை யளக்கிறான். 7. **அளந்து கொடுத்தல், கொடுத்தல்;** to give, render, offer. "கொங்கலர்தார் மன்னருங் கூட்டளப்ப" (பு.வெ. 8 : 29).

ம. அளக்குக; க., **பட.** அளெ; **து., குட.** அள; **துட.** அள்; **கோத.** அள்வ்; **கூ.** டாச; **குவி** லாசலி.

*[அள்ளுதல் = பொருந்துதல். அள் → அள. அளத்தல் = **ஒன்று இன்னொன்றொடு** பொருந்த அளத்தல் **அல்லது** அறிதல்.]*

**அளக்கர்**[1] *aḷakkar,* பெ. (n.) 1. **உப்பளம்** (பிங்.); salt-pans. 2. **கடல்;** sea, ocean. "அங்கண்மா ஞாலஞ் சூழு மளக்கர்" (கந்தபு. ஆற்று. 36).

ம. அளக்கர்

*[அளம் = உப்பு, உப்பளம், நெய்தல் நிலம், உவர்நீர். அளம் → அளக்கு → அளக்கர்.]*

**அளக்கர்**[2] *aḷakkar,* பெ. (n.) 1. **சேறு** (பிங்.); mud, mire. 2. **ஞாலம்** (**பூமி**) (பிங்.); Earth. 3. **ஆரல்** (**கார்த்திகை**) (பிங்.); the 3rd asterism. 4. **நீள்வழி** (பிங்.); long road.

*[அள்ளுதல் = செறிதல். அளத்தல் = கலத்தல். **ஒ.நோ:** செறுத்தல் = செறிதல். செறு → சேறு.]*

''நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலக மாதலின்''
(தொல். பொருள். மர. 89).

ஆர்தல் = பொருந்துதல். ஆர் → ஆரல் = அறு மீன். அளத்தல் = எட்டுதல்.]

**அளக்கரர்** *aḷakkarar*, பெ. (n.) **உப்பளவர்**; workers in the salt-pans (சா.அக.).

[அளக்கர் → அளக்கரர்.]

அளக்கர் பார்க்க; see *aḷakkar*.

**அளக்காய்** *aḷa-k-kāy*, பெ. (n.) **வெள்ளெருக்கு** (சங்.அக.); white madar.

[ஒருகா. அளம் + காய் – அளக்காய் (உப்புப் போல் வெண்ணிறமான எருக்கங்காய்).]

**அளக்கூறுபாடு** *aḷa-k-kūṟupāḍu*, பெ. (n.) **அளவின் பிரிவு**; quantitative analysis (சா. அக.).

[அளம் (அளவு) + கூறுபாடு (தொ.பெ.). 'படு' து.வி. படு → பாடு (முத.தி.தொ.பெ.).]

**அளகத்தி** *aḷagatti*, பெ. (n.) **கூந்தலுடையவள்**; woman having a thick tuft of hair. ''சீவிக் கோதிமு டித்தள கத்திகள்'' (திருப்பு. 451).

[அளகம் + அத்து (சாரியை) + இ (பெ.பா. ஈறு).]

**அளகசூடம்** *aḷaga-šūḍam*, பெ. (n.) **ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் குழந்தைகட்கும் பொதுவாக உரிய எளிய தலைக்கோலவகை**; a simple mode of dressing the hair on the head, common to men, women and children. 'குழல், கேசத்தால் அமைக்கப்படும் ஒருவகை நெற்றி யலங்காரமே என்றாலும், இது மகுட வகை யாகவே படிமத்துறையிற் கொள்ளப்பட் டிருக்கிறது. இஃது ஆண்களுக்கும் பெண் களுக்கும் குழந்தைகளுக்கும் உரிய எளிய தலைக்கோலமாகும். இதில் நெற்றி விளிம்பில் வளர்ந்திருக்கும் முடி கருவண்டினைப் போன்று சுருள்சுருளாக அமைக்கப்படும். இச் சுருள் முகத்தின் வலப்புறத்தில் அமையும் போது இடமாகவும், முகத்தின் இடப் புறத்தில் அமையும்போது வலமாகவும் சுழிந்து அமையும். முகத் தாமரையை வண்டுகள் சூழ்ந்த தோற்றத்தைக் கவிஞன் போன்றே சிற்பியும் கலைநயத்தோடு இயற்று வதை இங்குக் காண்க. இதற்குச் சிரச்சூளம் என்ற பெயருமுண்டு' (சி.செ. பக். 87).

[அலகு = வளைவு. அலகு → அளகு → அளகம் = நெற்றி மயிர்ச்சுருள். அளகம் > Skt. alaka. சூடு → சூடம்.]

**அளகபந்தி** *aḷaga-pandi*, பெ. (n.) **கூந்தலி னொழுங்கு**; orderly arrangement of a woman's hair. ''நல்லா ரளகபந்தி யெனவிருண்ட'' (இரகு. திக்கு. 12).

[அளகம் + பந்தி. பத்தி = வரிசை, ஒழுங்கு. பத்தி → பந்தி. பந்தி > **Skt.** paṅkti.]

**அளகபாரம்** *aḷaga-pāram*, பெ. (n.) **கூந்தற் றொகுதி**; mass of a woman's hair. ''அளக பாரம் அலைந்து குலைந்திட'' (திருப்பு. 78).

[அளகம் + **Skt.** bhāra > த. பாரம்.]

த. பொறு > **Teut.** *ber*, **L.** *fer*, **Gk.** *pher*, **Skt.** bhara.

**அளகபேதம்** *aḷagabēdam*, பெ. (n.) **அதிவிடயம்** (சங்.அக.); atis, *Aconitum heterophylum*.

மறுவ. அழகவேதம் (மலை.)

**அளகம்**[1] *aḷagam*, பெ. (n.) 1. **மயிர்க்குழற்சி** (பிங்.); curl. 2. **நுதலைச் சார்ந்த முன்னுச்சி மயிர்**; curls of hair on the forehead. ''அலமரு திருமுகத் தளகத் தப்பிய'' (பெருங். உஞ்சைக். 33 : 119). 3. **பெண்மயிர்** (பிங்.); woman's hair. 4. **காட்டகத்தி**; unifoliate caper, *Cadaba indica* (சா.அக.).

ம. அலகம்

[அலம் = வளைவு, வட்டம், சுழற்சி. அலம் வரல் → அலமரல் = சுழற்சி. அலம் → அலவு → அலகு → அலகம் → அளகம்.]

அளகம் → **Skt.** alaka. அகத்திப்பூ கொடு வாள்போல் வளைந்தது.

**அளகம்**[2] *aḷagam*, பெ. (n.) **பன்றிமுள்** (திவா.); porcupine's quill.

[அள் = கூர்மை. அள் → அள்கு → அளகு → அளகம்.]

**அளகம்**[3] *aḷagam*, பெ. (n.) 1. **நீர்** (பிங்.); water. 2. **மழைநீர்** (பச்.மூ.); rain-water.

ம. அலகம்; க. அளக; பட. அள்ள; **Skt.** hala.

[அளத்தல் = கலத்தல். அள → அளகு → அளகம்.]

''செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே''
(குறுந். 40).

**அளகம்**[4] *aḷagam*, பெ. (n.) *அளக்காய்* (சங். அக.) — வெள்ளெருக்கு; a milky shrub called white madar, *Calotropis gigantea* (albiflora) (சா.அக.).

*அளக்காய் பார்க்க*; see *aḷa-k-kāy*.

**அளகமம்** *aḷagamam*, பெ. (n.) *புல்லுருவி*; parasite plant (*சா.அக.*).

*[அளத்தல் = கலத்தல். **ஒருகா.** அளவு → அளகு → அளகம் → அளகமம்.]*

**அளகவல்லி** *aḷaga-valli*, பெ. (n.) *மயிர்மாட்டி*; hair hook, a chain like ornament worn in the ear and hooked to the hair. "இருபாலு மளக வல்லி யருகிலங்க" (சூளா. சுயம். 195).

*[அளகம் = பெண்டிர் கூந்தல். வல்→வல்லி = கொடி.]*

**அளகளப்பு** *aḷagaḷappu*, பெ. (n.) *அளவளப்பு பார்க்க*; see *aḷavaḷappu*.

**அளகன்** *aḷagaṉ*, பெ. (n.) **ஒருவகைச் செயனஞ்சு (சோரபாடாணம்)**; a kind of arsenic (சா. அக.).

**அளகாபுரி** *aḷagāpuri*, பெ. (n.) *1. குபேரன் **நகரம்***; city of Kubēra. "அந்தத் தமரஞ் சென் றுயரள காபுரி" (பாரத. மணிமான். 15.). 2. *தஞ்சாவூர்*; Thañjāvūr (கோடீச்சுரக். 54, கீழ்க்குறிப்பு).

*ஒருகா. அழகாபுரி → அளகாபுரி.*

*புரி பார்க்க*; see *puri*.

**அளகு**[1] *aḷagu*, பெ. (n.) *1.* **கோட்டான், கோழி, மயில் ஆகியவற்றின் பெண்**; hen of owl, fowl and peacock.

"கோழி கூகை ஆயிரண் டல்லவை
சூழுங் காலை அளகென லமையா"
(தொல். பொருள். மர. 56).

"அப்பெயர்க் கிழமை மயிற்கு முரித்தே"
(ஷெ 57).

2. **கோழிச் சேவல்**; cock. "அளகைப் பொறித்த கொடி யிளையோன்" (திருவிளை. அருச்சனை. 34).

*[**ஒருகா.** அளவு → அளகு.]*

திருவிளையாடற் புராணத்திற் சேவற் கொடியை அளகைக்கொடியோன் என்றது, கோழிக்கொடியோன் என்னும் பொதுப் பெயர் வழக்குப்பற்றியதாகலாம்.

**அளகு**[2] *aḷagu*, பெ. (n.) **ஆரல் (கார்த்திகை)** (பிங்.); the 3rd asterism.

**அளகை** *aḷagai*, பெ. (n.) *1.* ***அளகாபுரி** 1 பார்க்க*;see *aḷagāpuri* 1 (உத்தரரா. வரை. 1). 2. ***அளகாபுரி** 2 பார்க்க*; see *aḷagāpuri* 2 (கோடீச்சுரக். 54).

**அளகையாளி** *aḷagai-y-āḷi*, பெ. (n.) **குபேரன்** (திவா.); Kubēran, ruler of Aḷagai.

**அளத்தி** *aḷatti*, பெ. (n.) *1.* **நெய்தல்நிலப் பெண்**; woman of the marine tract. 2. **உமணர்குலப் பெண்**; woman belonging to the ancient caste of salt-makers.

*[அளம் = உப்பு, உப்பளம். அளம் → அளத்தி. 'அத்து' சாரியை. 'இ' பெ.பா. ஈறு.]*

**அளத்தியம்** *aḷattiyam*, பெ. (n.) *1.* ***சவர்க் காரம்***; fuller's earth, soap. 2. ***நீலச் செய னஞ்சு** (நீலப்பாடாணம்)*; a prepared arsenic (சங்.அக.).

*[அளம் = உப்பு, உவர்மண். அளம் → அளத் தியம். 'அத்து' சாரியை. 'இயம்' ஈறு.]*

**அளத்துநிலம்** *aḷattu-nilam*, பெ. (n.) ***அளர்நிலம்** பார்க்க*; see *aḷar-nilam* (R.T.).

**அளத்துப்பச்சை** *aḷattu-p-paccai*, பெ. (n.) ***மருக் கொழுந்துச் சக்களத்தி*** (மூ.அ.); sea-blite, a plant akin to maid's love, found growing in the brackish soil or near the sea-side (சா. அக.).

*[அளம் + பச்சை = உவர்நிலத்தி லுண்டாகும் பச்சைச்செடி. 'அத்து' சாரியை.]*

**அளத்துப்பாசிதம்** *aḷattu-p-pāsidam*, பெ. (n.) *பெருமுன்னை*; dusky-blite (சா.அக.).

*[அளம்+பாசிதம். 'அத்து' சாரியை. பசு → பாசம் → பாசிதம்.]*

**அளத்துப்புல்** *aḷattu-p-pul*, பெ. (n.) *முயிற்றுப் புல்* (மூ.அ.); a kind of grass (செ.அக.) — maritime grass or ant-grass found growing near ant-hills, *Pommeruella cornucopia* (சா.அக.).

*[அளறு + புல் – அளற்றுப்புல் → அளத்துப் புல்.]*

**அளத்துப்பூசனி** *aḷattu-p-pūšaṇi*, பெ. (n.) ***பெரும்பூசணி***; ash-coloured pumpkin, *Cucurbita maxima* (சா.அக.).

*[அளம் + அத்து + பூசனி. அளம் = **ஒருகா.** சாம்பல் நிறம்.]*

*பூசணி பார்க்க*; see *pūšaṇi*.

**அளத்துப்பூசை** *aḷattu-p-pūšai*, பெ. (n.) **அளத்துப்பச்சை, மருக்கொழுந்துச் சக்களத்தி** (மலை.); sea-side Indian saltwort.

*[ஒருகா. அளத்துப்பச்சை → அளத்துப்பூசை.]*

**அளத்துப்பூளை** *aḷattu-p-pūḷai*, பெ. (n.) **ஒரு வகைப் பூளைச்செடி**; species of wool-plant, *Aerua brachiatum*.

*[அளம் + அத்து + பூளை. 'அத்து' சாரியை.]*

**அளந்தறி-தல்** *aḷand(u)-aṟi-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **அளவிட்டு அறிதல்**; to know by measurement. *2.* **மதித்து அறிதல்**; to know by discernment.

*[அள → அளந்து (இ.கா.வி.எ.) + அறி.]*

**அளப்பம்**[1] *aḷappam*, பெ. (n.) *1.* **அளக்கை**; measuring (W.). *2.* **சூழ்ச்சி, ஆம்புடை (உபாயம்)**; contrivance, stratagem. அளப்ப மறிந்தவன் (உ.வ.).

*[அள → அளப்பு → அளப்பம்.]*

**அளப்பம்**[2] *aḷappam*, பெ. (n.) **அங்கப்பிச்சு, பித்தநாளம்**; bile-duct (சா.அக.).

**அளப்பள-த்தல்** *aḷapp(u)-aḷa-*, 3 செ.கு.வி. (v.i.) *1.* **அலப்புதல்;** to prate, chatter, gossip, repeat needlessly (W.). *2.* **வீண்பெருமை பேசுதல்**; to boast, bluff. *3.* **புரளி சொல்லுதல்**; to speak falsehood, to propagate false rumour. *4.* அளப் பறி-தல் பார்க்க; see *aḷapp(u)-aṟi-*. *5.* **முறு முறுத்தல்**; to complain, grumble, express dissatisfaction (செ.அக.).

*[அள → அளப்பு (தொ.பெ.) + அள.]*

அளப்பளத்தல் என்னும் சொல்லிற்கு முறு முறுத்தல் என்னும் பொருள் பொருத்தமாய்த் தோன்றவில்லை.

**அளப்பறி-தல்** *aḷapp(u)-aṟi-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஒருவருடைய மனத்தை ஆராய்ந்தறிதல்**; to fathom, gauge, as the mind of a person. *2.* **ஒருவருடைய உட்கருத்தை வலக்காரமாய் (தந்திரமாய்) அறிதல்;** to discover another's designs, find out another's intentions.

*[அள → அளப்பு (தொ.பெ.) + அறி.]*

**அளப்பன்** *aḷappaṉ*, பெ. (n.) **வீணாகப் பேசுவோன்**; prater, chatterer, babbler (W.).

*[அள → அளப்பு (தொ.பெ.) → அளப்பன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அளப்பு** *aḷappu*, பெ. (n.) *1.* **அளக்கை**; measuring. "அளப்பருந் தன்மைய வூழியங் கங்குல்" (திவ். இயற். திருவிருத். 60). *2.* **ஆராய்ந்தறிகை;** ascertaining after inquiry. *3.* **எல்லை;** bounds, limit. "ஈசனை யளப்பில் கால மிதயமே லுன்னி" (கந்தபு. தக்க. ததீசிப். 32). *4.* **அறிவுரை, சூழ்வுரை** (பஞ்ச. திருமுக. 1530); counsel. 5. **அலப்புகை;** chatter.

*[அள → அளப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]*

**'அளத்தல்' என்னுஞ் சொல்லே ஏராளமாய்** அளத்தல் என்னும் பொருளடிப்படையில் வீண்பேச்சுப் பேசுதல் **அல்லது** பிதற்றுதல் என்னும் பொருளைப் பெற்றுவிட்டது. அளத் தல் வேறு; அலப்புதல் வேறு. முதனிலை யளவிலும் வினைப்பெயரளவிலும் இவ்விரு சொல்லின் வேறுபாடு தெள்ளத் தெளிவாம். 'அளப்பு' என்பது புல்வீற்றுத் தொழிற் பெயர். 'அலப்பு' என்பது இயல்பு முதனிலை அல்லது முதனிலைத் தொழிற்பெயர்.

'அலப்புதல்' என்னுஞ் சொல்லிற்கு முறு முறுத்தல் என்னும் பொருள் பொருத்த மின்மை முன்னரே குறிக்கப்பட்டது.

**அளப்புக்கு** *aḷappukku*, பெ. (n.) **முடக்கொற் றான்** (மூ.அ.); balloon-vine (செ.அக.) — palsy curer, ***Cardiospermum halicacabum*** (சா.அக.).

**அளபு** *aḷabu*, பெ. (n.) *1.* **அளவு**; measurement. "மேவிய வுயிரளபாய்" (நன். 88, மயிலை.). 2. (இலக்.) **அளபெடை**; (Gram.) lengthening of the sound of a letter. "குற்றுயி ரளபி னீறாம்" (நன். 108).

*[அள → அளவு → அளபு.]*

**அளபெடு-த்தல்** *aḷab(u)-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) (இலக்.) **செய்யுள் வழக்கிலும் உலக வழக்கிலும் எழுத்து மாத்திரை மிக்கொலித்தல்**; (Gram.) to lengthen the sound of a letter either in poetry or in common usage.

*[அள → அளவு → அளபு (எழுத்தின் ஒலி யளவு) + எடு. எடுத்தல் = மிகுதல், மிகுத்தல், உயர்த்தல்.]*

**அளபெடை** *aḷab(u)-eḍai*, பெ. (n.) (இலக்.) **இரு வகை வழக்கிலும் மாத்திரை மிக்கொலிக்கும் எழுத்து;** (Gram.) a letter lengthened in sound either in literary or common usage.

*[அள → அளவு → அளபு + எடை. எடு → எடை (தொ.பெ.). 'ஐ' தொ.பெ. ஈறு. 'அள பெடை' தொ.ஆகு.]*

*அளபெடை வகைகள் :* அளபெடை பின்வரு மாறு பலதிறம்பற்றிப் பற்பல வகைப்படும்.

1. வழக்கிடம்பற்றி, உலகிய லளபெடை, செய்யுளிய லளபெடை என இருவகையாம்.

எ-டு:

‘தயிரோஒஒ தயிர்’ — பண்டமாற்று
‘பொன்னாஅர் மேனியனேஎஎஎ’ — இசை
‘அண்ணோஒஒஒஒ’ — விளி
‘ஒருவழியுஞ் சொல்லாமல் உலகை விட்டுப் போனாரேஎஎஎ’ —அழுகை
} உலகிய லளபெடை.

“உறாஅர்க் குறுநோ யுரைப்பாய்” —செய்யுளிய லளபெடை.

உலகிய லளபெடையை இயற்கை யளபெடை யென்றும், செய்யுளிய லளபெடையைச் செயற்கை யளபெடை யென்றும் சொல்லலாம்.

2. பயன்பாடுபற்றி, இசைநிறை யளபெடை, இன்னிசை யளபெடை, சொல்லிசை யளபெடை, எழுத்துப்பேற் றளபெடை என நால்வகையாம்.

எ-டு:

“உறாஅர்க் குறுநோ யுரைப்பாய்” — இசைநிறை யளபெடை.

“கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே யெடுப்பதூஉ மெல்லா மழை”
“நாவலோஒ வென்றழைக்கு நாளோதை”
“குன்றத் திறுத்த குரீஇயினம்”
} இன்னிசை யளபெடை.

“உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார் வரனசைஇ யின்னு முளேன்” — சொல்லிசை யளபெடை.

(நசைதல் = விரும்புதல். நசைஇ = நசைந்து, விரும்பி).

இராஅப் பகல், அராஅப் பற்றிற்று — எழுத்துப்பேற் றளபெடை.

செய்யுளில் இசை குறைந்தவிடத்து அதை நிறைக்க எழுத்து நீண்டொலிப்பது இசைநிறை யளபெடை; இசை குறையாவிடத்தும் இன்னோசைபற்றி எழுத்து நீண்டொலிப்பது இன்னிசை யளபெடை; வினைமுதனிலை ஈற்றுயி ரளபெடையால் இறந்தகால வினையெச்சமாவது சொல்லிசை யளபெடை; புணர்ச்சியில் தோன்றல் பற்றியது எழுத்துப் பேற் றளபெடை. இது ஏனையவை போல் யாப்புறவுள்ளது (கட்டாயமானது) அன்று.

3. எழுத்து வேறுபாடுபற்றி, உயிரளபெடை, ஒற்றளபெடை என இருவகையாம்.

எ-டு:

“செறாஅஅய் வாழிய நெஞ்சு” —உயிரளபெடை.

“இலங்கு வெண்பிறைசூ டீசனடியார்க்குக் கலங்கு நெஞ்சமிலை காண்”
“எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர் வெஃஃகுவார்க் கில்லை வீடு”
} ஒற்றளபெடை.

உயிரளபெடை, மீண்டும் மாத்திரை வேறுபாடுபற்றிக் குறிலளபெடை, நெடிலளபெடை என இருவகையாம்.

எ-டு :

“கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே யெடுப்பதூஉ மெல்லா மழை” —குறிலளபெடை.

“செறாஅரெனச் சேறியென் னெஞ்சு” —நெடிலளபெடை.

4. சொல்லிடம்பற்றி, முதனிலை யளபெடை, இடைநிலை யளபெடை, கடைநிலை யளபெடை என மூவகையாம்.

எ-டு :

“ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை ஆஅதும் என்னு மவர்” —முதனிலை யளபெடை.

“நற்றாள் தொழாஅ ரெனின்” —இடைநிலை யளபெடை.

“நல்ல படாஅ பறை” —கடைநிலை யளபெடை.

5. இனி, அளபெடை யளவுபற்றிக் குற்றளபெடை, நெட்டளபெடை எனவும் இருவகையாம்.

செய்யுளிய லளபெடை யெல்லாம், பொதுவாக மும்மாத்திரையும் சிறப்பாக நான் மாத்திரையும் பெற்றுக் குற்றளபெடையாம். உயிர் பன்னிரு மாத்திரையும் மெய் பதினொரு மாத்திரையும் அளபெடுக்கும் இசையள

பெடையும், மூச்சடக்குமளவு அளபெடுக்கும் விளி யழுகை யளபெடைகளும் ஆகிய உலகிய லளபெடைகள் நெட்டளபெடையாம்.

*முத்துவீரியம்* அளபெடையை இயற்கை யளபெடை, செயற்கை யளபெடை, இன்னிசை யளபெடை, சொல்லிசை யள பெடை, நெடிலளபெடை, குறிலளபெடை, ஒற்றளபெடை, எழுத்துப்பேற் றளபெடை என எண்வகையாக வகுத்துக் கூறும்.

"இயற்கை செயற்கை யின்னிசை சொல்லிசை
நெடில்குறி லொற்றள பெழுத்துப் பேறள
பெண்வகைப் படூஉம் என்மனார் புலவர்"
(முத்துவீ. எழுத்து. 32).

**அளபெடைவண்ணம்** *aḷab(u)-eḍai-vaṇṇam*, பெ. (n.) (யாப்.) *அளபெடை பயின்று வரும் செய்யு ளோசை வகை*; (Pros.) rhythm produced by using frequently the lengthened letters known as *aḷabeḍai*. "அளபெடை வண்ணம் அள பெடை பயிலும்" (தொல். பொருள். செய். **219**).

*[அளபு+எடை+வண்ணம். அள → அளவு → அளபு. எடு → எடை (தொ.பெ.). வள் → வண் → வண்ணம்.]*

*வண்ணம்* பார்க்க; see *vaṇṇam*.

எ-டு :
"மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்"
(அகநா. 99 : 8).
"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங்
கேட்டும்"
(மலைபடு. 352).

**அளம்[1]** *aḷam*, பெ. (n.) *கூர்மை* (பொதி.நி.); sharpness.

*[அள் = கூர்மை. அள் → அளம்.]*

**அளம்[2]** *aḷam*, பெ. (n.) *செறிவு* (அக.நி.); closeness, density.

*[அள்ளுதல் = நெருங்குதல், செறிதல். அள் = செறிவு. அள் → அளம்.]*

**அளம்[3]** *aḷam*, பெ. (n.) *1.* *உப்பு*; salt. *2.* *உப்பளம்*; salt-pan. *3.* *நெய்தல் நிலம்* (வின்.); maritime tract. *4.* *கடல்* (பொதி.நி.); sea. 5. *களர்நிலம்* (அக.நி.); saline soil.

ம., து. அளம்; தெ. அளமு.

*[அள் → அளம்.]*

**அளம்படு-தல்** *aḷam-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *வருந்துதல்*; to suffer. "அளம்பட் டறிவொண் ணாவகை" (தேவா. *1 . 13 : 9*).

*[அலம் = துன்பம். அலம் → அளம். 'படு' து.வி.]*

**அளம்பல்** *aḷambal*, பெ. (n.) *வெடங்குறுணி* பார்க்க; see *veḍaṅguruṇi* (L.) — stag's-horn trumpet flower (செ.அக.) — *மான்கொம்புப் பூச்செடி*; stag's-horn trumpet flower, *Stereospermum xylocarpum*. *அடப்பமரம்* பார்க்க; see *aḍappa-maram* (சா.அக.).

**அளம்பல்மரம்** *aḷambal-maram*, பெ. (n.) *வெடங்குறுணி, மலையாளத்தில் மிகுதியாக வளரும் ஒரு மரம். இதன் பூ வெள்ளையாயும் இலை அடர்த்தியாயும் பார்வைக்கு அழகாயு மிருக்கும். குளிர்காலத்தில் இலை உதிரும். இதன் பழம் மெதுவாயிருக்கும்; உண்ணவுதவும். இம் மரத்தினின்று ஒருவகை எண்ணெ யெடுத்துத் தோல்நோய்க்குப் பயன்படுத்து வார்கள்*; a tree, walking-stick bignonia, *Stereospermum xylocarpum*. It is a native of Malabar, its flowers are white and the leaves deciduous in cold weather and also ornamental; the tender fruit is edible. A thick fluid of the colour and consistence of Stockholm tar is obtained from this tree and it is used by Vaidyans as a remedy for scaly eruptions on the skin (சா.அக.).

*குறிப்பு : சா.அக.* அளம்பல் என்று ஒரு செடியும் ஒரு மரமும் இருப்பதாக வேறு படுத்திக்கூறி, '*Stereospermum xylocarpum*' என்னும் இலத்தீன் நிலைத்திணைப் பெயரை இரண்டிற்கும் பொதுவாகக் குறித்திருப்பது மயக்கத்திற்கிடமானது. ஆசிரியர் சிறந்த புலவரும் மருத்துவருமாதலால், அவர் கூறிய வாறே இங்குப் பெயர்த்தெழுதப்பட்டது. ஒருகால் அச்சுப் பிழையாகவு மிருக்கலாம்.

**அளம்பற்று-தல்** *aḷam-parru-*, 5 செ.கு.வி. (v.i.) *உப்புப் பூத்தல்*; to wear away through the action of salt. 'உளுத்து அளம்பற்றின சுவர்' (திவ். திருக்குறுந். 19, வியா.).

**அளமம்** *aḷamam*, பெ. (n.) *பொன்* (சங்.அக.); gold.

**அளமரு-தல்** *aḷamaru-*, 18 செ.கு.வி. (v.i.) *மனஞ்சுழலுதல், கலங்குதல், மயங்கி வருந்து தல்*; to be bewildered, to be distressed. "அளமரு குயிலினம்" (சீவக. 49).

# அறுகு


பாளையறுகு


புல்லறுகு


பூனைப்புல்


பேரறுகு


மத்தங்காய்ப்புல்


யானையறுகு


வெள்ளறுகு

*[உலம்வா → உலமா → அலமா → அலமரு தல் → அளமருதல். உலம்வருதல் = சுழலுதல்.]*

**அளர்**[1] *aḷar*, பெ. (n.) *1.* உவர்; saltishness, brackishness. 2. **உவர்மண்**; fuller's earth (சா.அக.).

*[அளம் → அளர்.]*

**அளர்**[2] *aḷar*, பெ. (n.) *1.* **சேறு**; mire. 2. **களி மண்**; soft clay (சா.அக.).

*[அள் = செறிவு. அள் → அளர்.]*

**அளர்க்காடு** *aḷar-k-kāḍu*, பெ. (n.) *உவர்மண் வெளி*; extensive stretch of soil of fuller's earth.

*[அளம் → அளர். கடு → காடு.]*

**அளர்நிலம்** *aḷar-nilam*, பெ. (n.) *களர்நிலம்*; saline soil (R.T.).

*[அளம் → அளர். நில் → நிலம்.]*

**அளர்ப்பூளை** *aḷar-p-pūḷai*, பெ. (n.) *அளத்துப் பச்சை* (புதுவை); sea-blite (Poṇḍ.).

*[அளம் → அளர். பூளை = பீளை.]*

**அளவஞ்சிமூலி** *aḷavañji-mūli*, பெ. (n.) **தேட் கொடுக்கி**; scorpion-sting plant, *Heliotropicum indicum* (சா.அக.).

**அளவடி** *aḷavaḍi*, பெ. (n.) *1.* பத்து முதற் **பதினான்கு வரை உயிரும் உயிர்மெய்யுமான எழுத்துகளைக்கொண்ட நாற்சீர்க் கட்டளை யடி**; a poetic line of four metrical feet, containing ten to fourteen letters, both vowels and vowel-consonants, separate-consonants not being counted.

''நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே''
(தொல். பொருள். செய். *32*),

''பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே''
(ஷை *38*),

''குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப''
(ஷை *56*).

எ-டு:
''நன்மணங் கமழும் பன்னெல் லூர (10)
வமையேர் மென்றோ ளாயரி நெடுங்க (11)
ணிணையீ ரோதி யேந்திள வனமுலை (12)
யிறும்பமன் மலரிடை யெழுந்த மாவி (13)
னறுந்தழை துயல்வருஉஞ் செறிந்தேந்
தல்குல்'' (14)
(தொல். பொருள். செய். *40*, பேரா. உரை).

2. **நாற்சீரடி**; a line of four metrical feet. ''நாலொருசீர் அறிதரு காலை அளவொடு நேரடி'' (யா. கா. *12*).

*[அள → அளவு + அடி – அளவடி.]*

நேரடி என்பது அளவடி என்பதன் மறு பெயர். **தொல்காப்பியர்** காலத்திலும் நாற் சீரடியொடு இருசீரடி, முச்சீரடி, ஐஞ்சீரடி, அறுசீரடி, எழுசீரும் மேற்பட்ட சீரும் உள்ள அடி ஆகியவையும் வழங்கினவேனும், நாற் சீரடியே சரியான அல்லது சிறந்த அளவின தாகக்கொள்ளப்பட்டது. அதனால், அதையே சிறப்பாக அடி யென்றனர். அதை, ''நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே'' என்னும் நூற்பாத் தெளிவாகக் காட்டும். அந் நாற் சீரடியையே, நான்கு முதல் ஆறெழுத்துவரை யுள்ளது **குறளடி** யென்றும், ஏழு முதல் ஒன்ப தெழுத்துள்ளது **சிந்தடி** யென்றும், பத்து முதற் பதினான்கெழுத்துவரை யுள்ளது **அளவடி** யென்றும், பதினைந்து முதற் பதினே ழெழுத்துவரை யுள்ளது **நெடிலடி** யென்றும், பதினெட்டு முதல் இருபதெழுத்துவரை யுள்ளது **கழிநெடிலடி** யென்றும் ஐவகையாக வகுத்து வழங்கினர்.

''நாலெழுத் தாதி யாக வாறெழுத்
தேறிய நிலத்தே **குறளடி** யென்ப''
(தொல். பொருள். செய். *36*),

''ஏழெழுத் தென்ப **சிந்தடிக்** களவே
ஈரெழுத் தேற்ற மல்வழி யான''
(ஷை *37*),

''பத்தெழுத் தென்ப **நேரடிக்** களவே
ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே''
(ஷை *38*),

''மூவைந் தெழுத்தே **நெடிலடிக்** களவே
ஈரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப''
(ஷை *39*),

''மூவா றெழுத்தே **கழிநெடிற்** களவே
ஈரெழுத்து மிகுதலு மிவட்பெறு மென்ப''
(ஷை *40*).

இவை யெழுத்தெண்ணப்படுவதால் கட்டளையடி யெனப் பெயர்பெறும். பிற் காலத்தார்க்கு இஃது அரிதாக விருந்ததனால் இவ்வியாப்புக் கைவிடப்பட்டது. அதன்பின், எழுத்தெண்ணிக்கை பற்றாது சீரெண் ணிக்கை பற்றியே, இருசீரடி **குறளடி** யென் றும், முச்சீரடி **சிந்தடி** யென்றும், நாற்சீரடி முன்போன்றே **அளவடி** யென்றும், ஐஞ்சீரடி **நெடிலடி** யென்றும், அறுசீரும் மேலுங்

கொண்ட அடி கழிநெடிலடி யென்றும் பெயர் பெற்றன.

**அளவநிலம்** *aḷava-nilam*, பெ. (n.) அளர்நிலம் பார்க்க; see *aḷar-nilam* (R.T.).

[அளம் → அளவம் + நிலம். நில் → நிலம்.]

**அளவப்பொட்டல்** *aḷava-p-poṭṭal*, பெ. (n.) அளர்நிலம் பார்க்க; see *aḷar-nilam* (R.T.).

[அளம் → அளவம் + பொட்டல். பொட்டு → பொட்டல்.]

**அளவம்** *aḷavam*, பெ. (n.) அளகம் பார்க்க; see *aḷagam*.

**அளவர்** *aḷavar*, பெ. (n.) உப்பமைக்குங் குலத்தார்; persons belonging to the caste of salt-manufacturers. "பரதவ ரளவர் வாரிப் படுத்தமீ னுப்பின் குப்பை" (கந்தபு. ஆற்று. 30).

**அளவழிச்சந்தம்** *aḷavaḻi-c-candam*, பெ. (n.) நான்கு முதல் இருபத்தாறெழுத்துவரை வந்து அளவொவ்வாத அடிகளையுடைய செய்யுள் வகை (யாப். வி. 95, உரை); a stanza of the *maṇḍilam* (viruttam) type whose lines are not equal in length, but no line containing less than 4 and more than 26 letters.

[அளவு + அழி + Skt. chandas > த. சந்தம் (வண்ணம்).]

இஃது அளவியற் சந்தத்திற்கு எதிர்.

**அளவழித்தாண்டகம்** *aḷavaḻi-t-tāṇḍagam*, பெ. (n.) இருபத்தேழெழுத்து முதலாக வந்து அளவொவ்வாத அடிகளையுடைய செய்யுள் வகை (யாப். வி. 95, உரை); a stanza in which each line contains not less than 27 letters without the lines being equal in length with each other.

[அளவு + அழி + தாண்டகம். தாண்டு → தாண்டகம். 'அகம்' ஈறு. இருபத்தாறெழுத்து என்னும் மண்டில வரம்பைத் தாண்டிச் செல்லும் செய்யுள்வகை.]

தாண்டகம் பார்க்க; see *tāṇḍagam*.

இஃது அளவியற் றாண்டகத்திற்கு எதிர்.

**அளவளப்பு** *aḷavaḷappu*, பெ. (n.) அளவளாவுகை (வின்.); sociability.

[அளவு + அளவு – அளவளவு → அளவள → அளவளப்பு.]

**அளவளாவு-தல்** *aḷavaḷāvu-*, 5 செ.கு.வி. (v.i.) கலந்து பேசுதல்; to hold intimate talks, converse freely, live socially. "அளவளாய் நட்டாலும்" (மூதுரை, 4).

[அளவு + அளவு – அளவளவு → அளவளாவு.]

**அளவளாவு** *aḷavaḷāvu*, பெ. (n.) கலந்து வாழ்கை, மனக்கலப்பு; intimacy. "அளவளா வில்லாதான் வாழ்க்கை" (குறள், 523).

['அளவளாவு' முத.தொ.பெ.]

அளவளாவு-தல் பார்க்க; see *aḷavaḷāvu-*.

**அளவறுத்தல்** *aḷavaṟu-*, தொ. பெ. (vbl. n.) 1. அளவைகளால் அளந்தறிதல்; to test by the logical methods of proof. "அளவறுப்பதற் கரியவன்" (திருவாச. 5 : 35). 2. வரையறை செய்தல்; to fix limit, define. 3. வரம்பு நீக்குதல்; to unlimit.

க. அளவியறி

[அள் → அள → அளவு + அறு.]

**அளவன்**[1] *aḷavaṉ*, பெ. (n.) தவசம் அளப்போன்; one who measures the grain.

ம. அளவன்

[அள → அளவு → அளவன்.]

**அளவன்**[2] *aḷavaṉ*, பெ. (n.) உப்புக் காய்ச்சுவோன், உப்பமைப்போன்; salt-manufacturer (சா.அக.).

[அளம் (உப்பு) → அளமன் → அளவன். 'அன்' ஆ.பா. ஈறு.]

**அளவன்**[3] *aḷavaṉ*, பெ. (n.) ஒரு செயனஞ்சு (சோரபாடாணம்) (மூ.அ.); a kind of prepared arsenic.

**அளவாக்கு-தல்** *aḷav(u)-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) மட்டமாக்குதல்; to make even, to level, to straighten, to set right. 'நூற்பிடித்த பத்தியை அளவாக்க வேணும்' (திவ். திருக்குறுந். 10, வியா.).

[அளவு + ஆக்கு. ஆகு (த.வி.) → ஆக்கு (பி.வி.).]

**அளவி** *aḷavi*, பெ. (n.) அளவு; limit. "அளவியை யார்க்கு மறிவரியோன்" (திருக்கோ. 1 : 10).

ம., பட. அளவு; க. அளவி; தெ. அலவி; கொலா. லாவ்.

**அளவிடு-தல்** *aḷaviḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) *அளத்தல்;* to measure, explore. "மண்ணுற்ற வெல்லை யளவிட் டிடுமால்" (கந்தபு. அசுர. அகத். 7).

ம. அளக்குக; க. அளதெவடு; து., குட. அளதெ; பட. அளெ.

*[அள → அளவு + இடு (து.வி.).]*

**அளவிடை** *aḷaviḍai*, தொ.பெ. (vbl.n.) *மதிப்பிடுகை;* calculation, estimation. சத்துருவை அளவிடை பார் (வின்.).

*[அளவு + இடை. இடு → இடை (தொ.பெ.). ஒ.நோ: எடு → எடை.]*

**அளவியல்** *aḷaviyal*, பெ. (n.) (யாப்.) *பாவின் அடிவரையறை;* (Pros.) regulation regarding the number of lines in different kinds of stanzas. "நோக்கே பாவே அளவியல் எனாஅ" (தொல். பொருள். செய். 1).

*[அள → அளவு + இயல் (ஒழுங்கு).]*

**அளவியற்சந்தம்** *aḷaviyaṟ-candam*, பெ. (n.) *நான்கு முதல் இருபத்தா றெழுத்துவரை அளவொத்து வரும் அடிகளையுடைய செய்யுள் வகை* (யாப். வி. 95, உரை); a stanza in which each one of the lines contains the same number of letters between 4 and 26, both limits inclusive.

*[அளவு + இயல் +* **Skt.** *chandas > த. சந்தம்.]*

இது அளவழிச் சந்தத்திற்கு எதிர்.

**அளவியற்றாண்டகம்** *aḷaviyaṟ-ṟāṇḍagam*, பெ. (n.) *இருபத்தே ழெழுத்து முதலாக வரும் அளவொத்த அடிகளையுடைய செய்யுள்வகை* (யாப். வி. 95, உரை); a stanza in which each one of the lines contains not less than 27 letters and all lines contain the same number.

*[அளவு + இயல் + தாண்டகம். தாண்டு → தாண்டகம். 'அகம்' ஈறு. இருபத்தாறெழுத்து என்னும் வரம்பைத் தாண்டிச் செல்லும் மண்டில (விருத்த) வகைத் தாண்டகம்.]*

**தாண்டகம்** பார்க்க; see *tāṇḍagam.*

**அளவில்** *aḷavil*, கு.வி.எ. (adv.) 1. *மட்டில்;* as regards. என் அளவில் ஒரு குற்றமுமில்லை. 2. *எல்லைக்குள்;* within bounds, to the extent. அந்த அளவில் அவனை வைத்துக்கொள். 3. *உடனே;* as soon as, immediately after. அவன் சொன்ன அளவில் எல்லாரும் பணத்தைக் கொடுத்துவிட்டார்கள்.

*[அளவு + இல் (7ஆம் வே. உருபு).]*

**அளவிற-த்தல்** *aḷav(u)-iṟa-*, 3 செ.கு.வி. (v.i.) 1. *எல்லையிலதாதல், அளந்தறிய முடியாததாதல்;* to be unlimited, to be immeasurable. இறைவனாற்றல் அளவிறந்தது. 2. *குறித்த அளவு கடத்தல்;* to exceed appointed limits. "ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்" (நன். 101).

*[அளவு + இற. இறத்தல் = கடத்தல், மிகுதல்.]*

**அளவினார்** *aḷaviṉār*, பெ. (n.) *தேர்வாளம்* (சங். அக.); croton.

**அளவு** *aḷavu*, பெ. (n.) 1. *எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை யளவுகளுள் ஒன்று;* one of the four modes of measurements, viz., counting, weighing, measure of capacity and linear measure. 2. *அளவுமானம்;* measurement. 3. *நிலவளவு* (I.M.P. Tj. 1000); Revenue survey. 4. *வடிவளவு;* size. 5. *தன்மை;* quality, nature. "ஏரள வில்லா வளவினர்" (திருக்கோ. 308). 6. *தக்க சமையம்;* opportunity, favourable occasion. 'நமக்குக் கிஞ்சித்கரிக்க நல்ல வளவு' (ஈடு, 1. 4 : 4). 7. *மட்டு;* limit. 8. (இலக்.) *எழுத்தொலிக்குங் கால வளவு, மாத்திரை;* (Gram.) unit of time, being one second, observed in sounding of letters. "வரைமித மளவு மட்டுமாத் திரைப்பெயர்" (பேரகத். 116). 9. (இசை) *தாளத்தில் 3 மாத்திரைக் காலம்* (சிலப். 3 : 16, உரை); (Mus.) duration of time-measure consisting of three *mattirais* or sounds. 10. *தருக்க அளவை;* laws of reasoning, dialectics. "ஆற்றி னளவறிந்து கற்க" (குறள், 725). 11. *அறிவம் (ஞானம்);* wisdom (ஈடு, 3 . 7 : 3). —, கு.வி.எ. (adv.) *மட்டும்;* until, only so far, so much. "முகங்காணு மளவு" (குறள், 224). —, இடை. (prep.) *தொடங்கி;* from. "அன்றளவு ......இன்றுகா றமுத மீந்தது" (உபதேசகா. சிவபுண்ணி. 347).

ம., க. அளவு; தெ. அலவி, லாவு; து. லக்கெ; பட. லெக்க.

*[அள்ளுதல் = பொருந்துதல். பொருந்தி அல்லது பொருத்தியளத்தல். அள் → அள → அளவு.]*

**அளவு-தல்** *aḷavu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **விரவுதல்;** to blend, mingle.

''புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல
தகத்திணை மருங்கி னளவுத லிலவே''

(தொல். பொருள். அகத். 58). 2. **கலத்தல், ஒன்றுசேர்தல்;** to mix. ''கோற்றேனி லளவுந் தீஞ்சொல்'' (கூர்மபு. கண்ணன்மண. 71). —, 5 செ.குன்றாவி. (v.t.) **உசாவுதல்;** to inquire after one's welfare. ''அலமர லுள்ளமொ டளவிய விடத்தும்'' (தொல். பொருள். கற். 5.).

*[அள்ளுதல் = பொருந்துதல், செறிதல், கலத்தல். அள் → அளவு. அளவுதல் = கலத்தல், கலந்துரையாடல்.]*

**அளவுக்கல்** *aḷavu-k-kal*, பெ. (n.) **நீரேற்றங் காட்டும் கற்றூண்** (S.I.I. i, 130); stone pillar for measuring the height of water level, in tanks.

**அளவுக்கூறுபாடு** *aḷavu-k-kūṟu-pāḍu*, பெ. (n.) **ஒரு கூட்டுப் பொருளின் அல்லது கலவைப் பொருளின் அமைப்புக் கூறுகளைப் பிரித்தறிதல்;** determination of the proportion of various elements forming a compound, quantitative analysis (சா.அக.).

*[அளவு + கூறுபாடு. கூறுபடு → கூறுபாடு (முத.தி.தொ.பெ.). 'படு' து.வி.]*

**அளவுகருவி** *aḷavu-karuvi*, பெ. (n.) **அளக்க வுதவும் அளவைக் கருவி;** instrument of measurement.

**அளவுகாரன்** *aḷavu-kāraṉ*, பெ. (n.) **நெல் முதலியன அளப்பவன்;** one who measures paddy and other grains (R.T.).

*[அள → அளவு. 'காரன்' தொழிலுரிமை பற்றிய ஆ.பா. ஈறு.]*

**அளவுகூடை** *aḷavu-kūḍai*, பெ. (n.) **அரிசிதவசி அளக்க வுதவுங் கூடை** (இ.வ.); a basket of certain capacity for measuring rice, etc. (Loc.).

*[அள → அளவு. குடை → கூடை = குடைவான பின்னற் கலம்.]*

**அளவுகோல்** *aḷavu-kōl*, பெ. (n.) **அளக்குந் தடி;** measuring rod, foot-rule. ''வியனிலத் தளவு கோல்'' (பிரபுலிங்க. துதி. 16).

**அளவுசாப்பாடு** *aḷavu-šāppāḍu*, பெ. (n.) **உண்டிச்சாலைகளில் ஒரு குறிப்பிட்ட அளவாகப் படைக்கும் சாப்பாடு;** meals served in fixed quantity in hotels and eating-houses.

*[அள → அளவு. சாப்பிடு → சாப்பீடு → சாப்பாடு.]*

இது போர்க்காலத்தில் அரிசித்தட்டினால் ஏற்பட்டது.

**அளவுசோறு** *aḷavu-šōṟu*, பெ. (n.) **அளவு சாப்பாடு** பார்க்க; see *aḷavu-šāppāḍu.*

**அளவுதடி**[1] *aḷavu-taḍi*, பெ. (n.) **அளவுகோல்** பார்க்க; see *aḷavu-kōl.*

**அளவுதடி**[2] *aḷavu-taḍi*, பெ. (n.) **ஆண்குறி;** penis (சா.அக.).

*[அளவுதல் = கலத்தல், புணர்தல். தடி = தடித்த அல்லது தடிபோன்ற உறுப்பு.]*

**அளவுநாழி** *aḷavu-nāḻi*, பெ. (n.) **முத்திரைப்படி;** standard measure.

*[அள → அளவு. நாளம் → நாளி → நாழி.]*

**அளவுப்பதிவு** *aḷavu-p-padivu*, பெ. (n.) **வயல்களை அளந்து பதிவுசெய்கை** (அளவு மைமாஷ்); survey or measurement of fields (R.T.).

*[அள → அளவு. பதி → பதிவு.]*

**அளவுபடி** *aḷavu-paḍi*, பெ. (n.) **அளவுநாழி** பார்க்க; see *aḷavu-nāḻi.*

**அளவுபடுத்து-தல்** *aḷavu-paḍuttu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **வரையறை செய்தல்;** to limit.

*[அள → அளவு. அளவுபடு (த.வி.) → அளவுபடுத்து (பி.வி.). 'படு' து.வி. படு (த.வி.) → படுத்து (பி.வி.).]*

**அளவுபடை** *aḷavu-paḍai*, பெ. (n.) **சிறு சேனை;** small army. 'அளவுபடைக்குப் பெரும்படை தோற்பது' (ஈடு, 2 : 4 : 7).

**அளவுவர்க்கம்** *aḷavu-varkkam*, பெ.(n.) **அளவைப் படிகட்கு ஏற்பட்ட ஒரு பழைய வரி** (S.I.I. ii, 247); an ancient tax on measures of capacity.

*[அளவு + Skt. varga > த. வர்க்கம் → வருக்கம்.]*

**அளவெடு-த்தல்** *aḷav(u)-eḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) **ஒன்றன் நீளம் அகலம் முதலியவற்றை அளந்தறிதல்;** to take the dimensions of.

*[அள → அளவு + எடு.]*

**அளவெண்** *aḷav(u)-eṇ*, பெ. (n.) (யாப்.) **நாற்சீர் ஓரடியாய் நான்கு வரும் அம்போதரங்க வொத்**

தாழிசைக் கலிப்பா வுறுப்பு வகை; a member of *ambōdaraṅga vottāḷiśaikkalippā* consisting of four lines of four feet each.

"...............................நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடி முச்சீர் குறணடு
வேமடுப்பின்
அரவொன்று மல்குல தம்போ
தரங்கவொத் தாழிசையே"
(யா.கா. 10).

எ-டு:
"கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை
தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை
வலிமிகு சகட மாற்றிய வடியினை"
(யா.கா. 10, உரை).

[அள → அளவு. அளவு + எண் – அள வெண். எண் = எண்கொண்ட செய்யு ளுறுப்பு.]

**அளவை** *aḷavai*, பெ. (n.) 1. அளவு; measurement. 2. எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவைகளுள் ஒன்று; measure of four kinds mentioned in ancient literature, viz., computation, weight, capacity and extent. 3. அளவுக்கருவி; standard of measure. 4. காட்சி, கருத்து, ஒப்பு, உரை என்னும் நால்வகை ஏரண அறிவழிகள்; means of acquiring correct knowledge, which are four, viz., perception, inference, similarity and precept. 5. எல்லை; bound, limit. "ஐந்தி யாண்டெனு மளவைநிற் ககன்றுழி" (கந்தபு. தக்க. உமைகயி. 49). 6. அமையம்; time, occasion, opportunity. "அன்னதோ ரளவை தன்னில்" (கந்தபு. தேவ. விண்குடி. 38). 7. நாள் (சூடா.); day. 8. தன்மை; nature. "அதன்பய மெய்திய வளவை மான" (பொருந. 92). 9. அறிகுறி; sign, indication. "இவை யளவை யாக விடர்க்கடல் கடத்தி" (கம்பரா. யுத்த. சீதை. 29).

[அள் → அள → அளவை.]

**அளவைக்கால்** *aḷavai-k-kāl*, பெ. (n.) மரக்கால் (திவா.); a grain measure.

[அள → அளவை. கல்லுதல் = தோண்டுதல், குடைதல். கல் → கால்.]

**அளவைநூல்** *aḷavai-nūl*, பெ. (n.) ஏரணம், தருக்கநூல்; logic. 'அளவைநூல் சொன்னூல் கற்றே கற்கவேண்டுதலின்' (குறள், 725, பரிமே. உரை).

[அள → அளவை. நுவல் → நூல்.]

**அளவையாகுபெயர்** *aḷavai-y-āgu-peyar*, பெ. (n.) எண்ணல், எடுத்தல் முதலிய நால் வகை அளவைப் பெயர்களுள் ஒன்று, அவ் வளவையுடைய பொருளுக்கு ஆகிவருவது (நன். 290, உரை); Metonymy in which a word and its implied meaning relate to measurement, of which there are four according as the measure is one of computation or weight or capacity or extent.

[அள → அளவை. 'ஆகுபெயர்' வினைத் தொகை. ஆ → ஆகு. பெய் → பெயர் = இடுவது.]

**அளவைவடிவம்** *aḷavai-vaḍivam*, பெ. (n.) உருவத்தைக் காட்டுவதற்கு வரைந்த படம் (புதுவை); diagram (Poṇḍ.).

[அள → அளவை. படி → படிவு → படிவம் → வடிவம்.]

**அளவைவாதம்** *aḷavai-vādam*, பெ. (n.) ஏரணச் சான்று காட்டி உண்மையை நிறுவும் தருக்கம் அல்லது உறழ் (பிரமாண வாதம்) (மணிமே. 29 : 42, உரை); debate or argument seeking to establish truth through logical proof.

[அள → அளவை. Skt. vāda > த. வாதம்.]

அளவைத்தருக்கம் அல்லது அளவையுறழ் என்பது தூய தமிழ்.

**அளவைவாதி** *aḷavai-vādi*, பெ. (n.) அளவைச் சொற்போர் செய்பவன் (மணிமே. 27 : 3); one who expounds logical debate or argument.

[அள → அளவை. Skt. vādin > த. வாதி.]

அளவைத்தருக்கி அல்லது அளவையுறழி என்பது தூய தமிழ்.

**அளவொழுகு** *aḷavoḻugu*, பெ. (n.) 1. நிலபுலங் களை யளந்து பதிவுசெய்கை; survey or measurement of fields. 2. சிற்றூர் நிலபுலங்களின் அளவுகளைப் பதிவுசெய்யும் பொத்தகம்; register specifying the measurements of the fields of a village (R.T.).

[அள → அளவு + ஒழுகு (ஒழுங்கு).]

**அளறு**[1] *aḷaṟu*, பெ. (n.) 1. நீர்; water. "குளிர் பொய்கை யளறு நிறைய" (பரிபா. 8 : 93). 2. குழம்பு; liquid of thick consistency. "வன

முலைச் சுண்ணமு மளறும்'' (கல்லா. 27 : 20). 3. **குழைசேறு** (பிங்.); soft mud, slough, mire.

[அள்ளுதல் = பொருந்துதல், கலத்தல், செறிதல். அள் → அளர் → அளறு.]

**அளறு**[2] *aḷaṟu*, பெ. (n.) 1. **நரகம்;** hell. "பூரியர்க ளாழு மளறு'' (குறள், 919). 2. **காவிக்கல்;** red ochre. 'அளற்றுப் பொடி' (திவ். திருப்பா. 14, வியா.).

[அழல் → அழறு → அளறு = நெருப்பு, செந்நிறம்.]

**அளறு-தல்** *aḷaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **நெரிதல்** (வின்.); to be fractured by a fall or blow, broken, bruised. 2. **பிளத்தல்** (வின்.); to split due to failing. 3. **சிதறி வெடித்தல்;** to be mauled, shattered.

[அள்ளுதல் = செறிதல். அள் → அளறு. அளறுதல் = செறிந்து நெரிதல், பிளத்தல், வெடித்தல்.]

**அளறுபடு-தல்** *aḷaṟu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. **சேறாதல்;** to turn into mire. 2. **நிலை கலங்குதல்;** to be disconcerted, perplexed. "இராவணனை யளறுபட வடர்த்தானிடம்'' (தேவா. 1. 10 : 8).

[அளறு + படு (து.வி.). அளறு = குழம்பு, சேறு. அளறுபடுதல் = மனங்குழம்புதல், மனங் கலங்குதல்.]

**அளாய்குளாய்** *aḷāy-kuḷāy*, பெ. (n.) **பரபரப்பான செய்கை;** hasty action. 'அளாய் குளா யாய்ப் போகுமது' (ஈடு, 9. 1 : 9).

[ஒருகா. அளை என்னும் சொல்லினின்று திரிந்த 'அளைகுளை' என்னும் ஒலிக்குறிப்புச் சொல்லா யிருக்கலாம்.]

**அளாரியம்** *aḷāriyam*, பெ. (n.) **வெங்காயம்** (சித்.அக.); onion (செ.அக.) — **பெருவெங்காயம்;** a big variety of onion (சா.அக.).

**அளாவல்** *aḷāval*, தொ.பெ. (vbl.n.) அளாவு-தல் பார்க்க; see *aḷāvu-*.

**அளாவன்** *aḷāvaṉ*, பெ. (n.) **கலப்பு;** mixture. 'அளாவனான சத்துவத்தை யுடையரா யிருப்பாரும்' (ஈடு, 1. 1 : 5).

[அளவு → அளாவு → அளாவன். 'அன்' ஒன். பா. ஈறு.]

**அளாவு-தல்** *aḷāvu-*, 5 செ.கு.வி. (v.i.) **கலத்தல்;** to mingle. "பாலோ டளாய நீர்'' (நாலடி, 177). —, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **பொருந்துதல்;** to reach, extend up to, touch. "விசும்பினை யளாவு மன்னவன் கோயிலை'' (கந்தபு. யுத்த. மூவாயி. 1). 2. **கையால் அளைதல், கரண்டியால் துழாவுதல்;** to stir, as with a hand or spoon. 3. **கலந்துறவாடல்;** to have social intercourse, mingle freely with relatives.

[அள → அளவு → அளாவு.]

**அளி**[1]**-தல்** *aḷi-*, 2 செ.கு.வி. (v.i.) 1. **செறிதல்;** to become crowded, dense. 2. **கலத்தல்;** to mix, mingle. "சிறியார்களோ டளிந்தபோது'' (கம்பரா. சுந்தர. ஊர்தேடு. 154). 3. **குழைதல்;** to be overboiled. சோறளிந்து போயிற்று. 4. **அறக்கனிதல்;** to become overripe, mellow. "அளிந்ததோர் கனியே'' (திருவாச. 37 : 4). 5. **புரியமாயிருத்தல் (பிரியமாயிருத்தல்);** to be attached. "மந்தி யளிந்த கடுவனையே நோக்கி'' (திவ். இயற். மூன்றாம்திருவந். 58).

[அள் → அளி.]

**அளி**[2]**-த்தல்** *aḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **செறித்தல்** (பிங்.); to crowd together. 2. **அறம் நோக்கிக் கொடுத்தல்;** to give in charity. "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்'' (கலித். 11 : 1). 3. **தகுதிபற்றிக் கொடுத்தல்;** to give as prize or reward, to confer a title or degree. பரிசளிப்பு, பட்டமளிப்பு விழா. 4. **அன்பினாற் கொடுத்தல்;** to give free or as a token of love. அன்பளிப்பு. 5. **ஈனுதல்;** to yield, beget. "காந்தார பதியளித்த மெய்க்கன்னி'' (பாரத. சம்பவ. 22). 6. **அருளிப்படைத்தல்;** to create. "யாவையு மயன்கணின் றளிப்பான்'' (கந்தபு. தக்க. ததீசியுத். 9). 7. **அருளி அல்லது அன்பினாற் காத்தல்** (பிங்.); to protect, take care of, nourish. 8. **அன்பினாற் சொல்லுதல்;** to speak, express with affability. "முகமனளித்தும்'' (கல்லா. 14 : 17). —, 4 செ.கு.வி. (v.i.) 1. **அருள்செய்தல்;** to be gracious, show favour. "அஞ்சினர்க் களித்தலும்'' (சிறுபாண். 210). 2. **விருப்பமுண்டாக்குதல்;** to create desire. "அளித்தயில் கின்றவேந்தன்'' (சீவக. 192). 3. **சோர்வை நீக்குதல்;** to remove weariness. "கொண்டவற் களித்த தோர் குளிர்கொள் பொய்கை'' (சீவக. 1622).

ம. அளிக்குக

[அள் → அள்ளல் = செறிவு, சேறு. அள் → அள்ளி = வெண்ணெய். அள் → அளி. அளி

தல் = செறிதல், குழைதல், கனிதல், அன்பு செய்தல், அருள்தல்.]

அறிவில் அல்லது ஆற்றலில் அல்லது அன்பிற் சிறந்த நன்மக்களால் பிறந்த குடும்பத்திற்கோ, ஒரு நாட்டிற்கோ, பல நாட்டிற்கோ, உலக முழுவதிற்குமோ பெருநன்மை விளைவதனாலும், பெற்றோரிருவருள்ளும் பிள்ளைப்பேற்றிற்கு முதற்கரணியமானவன் தந்தையே யாதலாலும், மகப்பேற்றைத் தந்தை பொதுமக்கட்கோ, கணவன் மனைவிக்கோ அளிக்கும் அன்பளிப்பாக அல்லது நன்கொடையாகக் கருதும் மரபு பற்றி, அளித்தற் சொல் மகப்பேற்றுப் பொருள் கொண்டது. இதன் விளக்கத்தைத் தா என்னும் உருப்படியிற் காண்க.

**அளி**[1] *aḷi*, பெ. (n.) 1. அன்பு; love. "அளி நயந்து" (இரகு. நாட்டு. 1). 2. **அன்பு கரணியத்தால் தோன்றும் அருள்**; clemency, grace. "கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்" (குறள், 390). 3. **அன்பினாலுண்டாகும் ஆசை**; desire. "அளியா லிவ்வூர் காணு நலத்தால்" (கம்பரா. சுந்தர. ஊர்தேடு. 83). 4. **அருள் போன்ற குளிர்ச்சி**; coolness. "திங்களு ளளியுநீ" (பரிபா. 3 : 67). 5. **அன்பினால் நிகழுங் கொடை** (திவா.); gift, present. 6. **அன்போடு கூடிய வேளாண்மை (உபசாரம்) மதிப்புரவு** (குறள், 390, உரை); civility, politeness. 7. **அருளினால் அல்லது அன்பினால் இரங்கத்தக்க எளிமை**; miserableness, wretchedness. "தாய்த்தாய்க் கொண்டேகு மளித்திவ் வுலகு" (நாலடி. 15).

ம., க. அளி.

[அள் → அளி.]

அளி[2]-த்தல் பார்க்க; see *aḷit*[2]-.

**அளி**[2] *aḷi*, பெ. (n.) 1. **தேனீ**; honey-bee. 2. **தேன்வண்டு**; honey-beetle. "அளிதேர் விளரி யொலிநின்ற பூம்பொழில்" (திருவாச. 6 : 10). 3. **தேன்** (நாநார்த்த.); honey. 4. **இனிமை**; sweetness (சா.அக.). 5. **மது** (பிங்.); sweet liquor (சா.அக.) — spirituous liquor (செ. அக.). 6. **வண்டுகொல்லி** (பச்.மூ.); ringworm shrub.

ம., க. அளி.

[அள் = கூர்மை, முள், கொடுக்கு. அள் → அளி = கொட்டும் உறுப்புள்ள ஈ அல்லது வண்டு.]

**அளி**[3] *aḷi*, பெ. (n.) 1. **மரவுரிமரம்** (L.); bark tree (செ.அக.) — **மரவுரி**; tree bark, *Antiaris toxicaria* (சா.அக.). 2. **காய்** (மூ.அ.); unripe fruit.

க. அளி

[ஒருகா. அள் = செறிவு, திண்மை. அள் → அளி = திண்ணியது.]

**அளி**[4] *aḷi*, பெ. (n.) 1. **கருந்தேனீ** (சா.அக.); black bee. 2. **காகம்**; crow.

ம., க. அளி.

[ஒருகா. கள் (கருப்பு) → அள் → அளி = கரியது.]

**அளி**[5] *aḷi*, பெ. (n.) 1. **வலைத்தட்டி** (**கிராதி**); lattice, fence. அளிப்பாய்ச்சிய வீடு. 2. **மாட்டுத்தொட்டி** (**மாட்டுக்காடி**); crib for straw.

ம. அழி

[அழி → அளி.]

**அளிகம்** *aḷigam*, பெ. (n.) **நெல்லி** (பச்.மூ.); emblic myrobalan.

**அளித்து** *aḷittu*, பெ. (n.) **இரங்கத்தக்கது**; that which deserves pity. "கலங்கு மளித்தென் கடும்பு" (பு.வெ. 9 : 25).

[அளி (இரக்கம்) → அளித்து. 'து' ஒன்.பா. ஈறு. 'த்' புணர்ச்சித் தோன்றல்.]

**அளிது** *aḷidu*, பெ. (n.) **அளித்து** பார்க்க; see *aḷittu*. "அளிதோ தானே பாரியது பறம்பே" (புறநா. 109 : 1).

[அளி → அளியது → அளிது. 'து' ஒன்.பா. ஈறு.]

**அளிந்தார்** *aḷindār*, பெ. (n.) **அன்புடையோர்**; loving persons. "அளிந்தார்க ணாயினும் ஆராயா னாகித் தெளிந்தான் விளிந்து கெடும்" (பழமொழி. 182).

[அளி → அளிந்த (இ.கா.பெ.எ.) + அவர் (ப.பா.ஈறு.) — அளிந்தவர் → அளிந்தார். அளிதல் = அன்புசெய்தல்.]

**அளிப்பாய்ச்சு-தல்** *aḷi-p-pāyccu-*, 5 செ.கு.வி. (v.i.) **வலைத்தட்டி யிடுதல்**; to construct a lattice.

[அழி → அளி. பாய் (த.வி.) → பாய்ச்சு (பி.வி.). 'சு' பி.வி. ஈறு.]

**அளியன்** *aḷiyaṉ*, பெ. (n.) 1. **அன்பு மிக்கவன்**; one who has great love, gracious benefactor.

"அளியன் போலப் புலம்பினன்" (கந்தபு. யுத்த. அக்கினி. 198). 2. **காக்கப்படத்தக்கவன்**; one who deserves protection, needy person. "**அளியன்** றானே முதுவா யிரவலன்" (திருமுருகு. 284). 3. **இரங்கப்படத்தக்கவன்**; one who deserves pity. "அளியன் நம்பையல் என்னார் அம்மவோ" (திவ். திருமாலை, 37).

ம. அளியன்; க., து. அளிய; தெ. அல்லுடு; படூ. அளிய (மருமகன்).

*[அளி (அன்பு, இரக்கம்) → அளியன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அளிலாமயம்** *aḷil-āmayam*, பெ. (n.) **ஊதை (வாத) நோய்** (வை.மூ.); rheumatism.

*[அளில் + Skt. āmayam (நோய்).]*

**அளுக்கு-தல்** *aḷukku-*, 5 செ.கு.வி. (v.i.) குலைதல் (திவா.); to be perturbed, disconcerted.

க. அலுகு; தெ. அலுகு.

*[அலுங்கு (த.வி.) → அலுக்கு (பி.வி.) → அளுக்கு. அலுங்குதல் = அசைதல்.]*

**அளுங்கு**[1] *aḷuṅgu*, பெ. (n.) அழுங்கு, **ஒரு விலங்கு** (மூ.அ.); pangolin.

ம. அளுங்கு; தெ. அளுகு, அளுவ; து. அளங்கு.

*[நளுங்கு → அளுங்கு.]*

**அளுங்கு**[2] *aḷuṅgu*, பெ. (n.) **ஒருவகைக் கிளிஞ்சில்**; a kind of shell (சா.அக.).

**அளுங்கோடு** *aḷuṅgōḍu*, பெ. (n.) **அழுங்கின் கொம்பு**; the horn of a pangolin (சா.அக.).

*[அளுங்கு + கோடு – அளுங்குக்கோடு → அளுங்கோடு.]*

**அளேசுவிடையம்** *aḷēśu-viḍaiyam*, பெ. (n.) **அளேசுவெப்பம்** பார்க்க; see *aḷēśu-veppam*.

**அளேசுவெப்பம்** *aḷēśu-veppam*, பெ. (n.) **அதிவிடையம்** (மூ.அ.); atis, (செ.அக.) — **அதிவிடைய வேர்**; the root of Indian atee, *Aconitum heterophyllum* (சா.அக.).

**அளேசுவெப்பு** *aḷēśu-veppu*, பெ. (n.) **அளேசுவெப்பம்** பார்க்க; see *aḷēśu-veppam*.

**அளை-தல்** *aḷai-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. **தழுவுதல்**; to embrace, caress. "என்னணியார் முலையாக மளைந்து" (திருவாச. 49 : 4). 2. **சூடுதல்**; to wear. '**அனிச்சப்பூவை** மயிரில் அளைந்தாள்' (குறள், 1118, மணக். உரை). 3. **துழாவுதல்**; to stir with the hand or a ladle, to dabble with the hand, as a child. "இன்னடிசில் புக்களையுந் தாமரைக்கை" (நள.கலிதொ. 63). 4. **கலத்தல்**; to mix up, mingle with. "ஊனளைந்த வுடற்குயி ராமென" (கம்பரா. அயோத். பள்ளி. 16). 5. **நுகர்தல் (அனுபவித்தல்)**; to enjoy, experience. "அளைவது காமம்" (சீவக. 1551). —, 2 செ.கு.வி. (v.i.) 1. **கூடியிருத்தல்**; to be mixed, mingled. "ஆர்வமொ டளைஇ" (தொல். பொருள். கற். 5). 2. **வயிறு வலித்தல்** (இ.வ.); to suffer from gripes, as in dysentery (Loc.).

*[அள்ளுதல் = பொருந்துதல், செறிதல், வாருதல். அள் → அளை.]*

**அளை**[1] *aḷai*, பெ. (n.) 1. **தயிர்** (பிங்.); curd, curdled milk. 2. **மோர்**; butter-milk. "செம்புற் றீயலி னின்னளைப் புளித்து" (புறநா. 119 : 3). 3. **வெண்ணெய்**; butter (சேதுபு. விதூம. 75).

க., து. அளெ; தெ., பர். சல்ல; கொலா. சல்ல; நா. சள.

*[அள் → அளி. அளிதல் = குழைதல். அளி → அளை.]*

**அளை**[2] *aḷai*, பெ. (n.) 1. **எலி, நண்டு, பாம்பு முதலியவற்றின் வளை**; rat-hole, crab-hole, snake-hole, etc., hole in the ground. 2. **புற்று**; ant-hill. "அளைப்பிரியா வரவு" (தேவா. 7. 43 : 4). 3. **பொந்து** (வின்.); hollow in the tree. 4. **குகை**; cave, cavern in a mountain or rock. "அளைச்செறி யிரும்புலி" (சீவக. 1851).

ம. அள; க. அளெ; கோத. அள்; துட. ஒள்ப்.

*[உள் → அள் → அளை = துளை.]*

**அளை**[3] *aḷai*, இடை. (part.) **ஓர் இடவேற்றுமை யுருபு**; a loc. ending. "கல்லளைச் சுனைநீர்" (நன். 301, மயிலை. மேற்.)

*[அள்ளுதல் = பொருந்துதல். அள் → அள்ளை (பக்கம்) → அளை = பொருந்திய இடம், இடம்.]*

**அளைச்சல்** *aḷaiccal*, பெ. (n.) வயிற்றளைச்சல் (இ.வ.); dysentery (Loc.).

*[அளை → அளைத்தல் → அளைச்சல். 'சல்' தொ.பெ. ஈறு.]*

**அளைமறிபாப்பு** *aḷai-maṟi-pāppu*, பெ. (n.) **தலை முன்னும் வால் பின்னுமாக வளைக்குட்**

புகுந்த பாம்பு, அங்ஙனமே, அதாவது வால் முன்னும் தலை பின்னுமாகத் தானிருந்தபடியே பின்னுக்குத் திரும்பாது, வளைக்குள் ஒரு சுற்றுச் சுற்றி, மீண்டும் தலைமுன்னாக மாறிக் கொள்வதுபோல், ஒரு செய்யுள் தலைகீழாக இறுதியடி முதலடியாகவும் முதலடி யிறுதி யடியாகவும் வரிசைமாற்றிப் பொருள் கொள்ளப்படும் முறை, எண்வகைப் பொருள் கோள்களுள் ஒன்று; a mode of poetic construction in which, the lines of a poem or stanza are taken in the reversed order for construing, one of eight modes of construing.

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து
நெறிமுன்னி முயலா தாரே"
(நன். 416. மயிலை. உரை மேற்.).

இச் செய்யுளில், 4ஆம் அடி முதலடியாகவும், 3ஆம் அடி 2ஆம் அடியாகவும், 2ஆம் அடி 3ஆம் அடியாகவும், முதலடி 4ஆம் அடியாக வும், தலைகீழாக மாறியமைந்து பொருள் படுதல் காண்க.

"செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே"
(நன். 417).

[அளை = வளை. மறி = (தலைகீழாய்) மடங்கு கின்ற. பாம்பு → பாப்பு (வலித்தல் திரிபு). 'அளைமறிபாப்பு' பன்மொழித் தொடரான அன் மொழித்தொகை. 'அளைமறி' வே. தொகை. 'மறிபாப்பு' வினைத்தொகை.]

'A mode of construing in which the expression at the end of a verse is conjoined with a word in the middle of a verse or with one in the beginning of another verse, one of eight *poruḷkōḷ;* பாட்டின் ஈற்றினின்ற சொல் இடையிலும் முதலிலுஞ் சென்று பொருள் கொள்ளப்படு முறை' என்று அளைமறி பாப்பு என்னும் பொருள்கோட்கு விளக்கங் கூற, நன்னூல் நூற்பா இடந்தருமேனும் அது பொருந்தாது.

ஒரு பாட்டின் இறுதிச்சொல் இடையிலும் முதலிலுமுள்ள சொல்லொடு சேர்ந்து பொருள்கொள்ளப்படுவது, விளக்கணியின் பாற்படுமே யன்றிப் பொருள்கோளாகாது. தாப்பிசைப் பொருள்கோளும் இடைநின்ற சொல்பற்றியதே யன்றி இறுதிநின்ற சொல் பற்றியதன்று.

சங்கரநமச்சிவாயர், இராமாநுசக் கவிராயர், ஆறுமுக நாவலர், சடகோப ராமாநுசாசாரியார், பவானந்தம் பிள்ளை முதலிய பிற்கால வுரையாசிரியர் அனைவரும், மயிலைநாதர் காட்டிய "சூழ்ந்த வினை யாக்கை" என்னும் பழஞ் செய்யுளையே அளைமறிபாப்பிற்கு எடுத்துக்காட்டி யுள்ளனர். அவ்வெடுத்துக் காட்டின்படி, இவ் வகரமுதலியிற் கூறியுள்ளதே பொருந்துவதை, அறிஞர் ஆய்ந்து காண்க.

**அளையெடு-த்தல்** *aḷai-y-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. வளைதோண்டுதல் (வின்.); to burrow. 2. புரைவைத்தல் (வின்.); to grow hollow, as in ulcers.

**அளைவு** *aḷaivu*, பெ. (n.) 1. கலப்பு; mixture (சா.அக.). 2. சோறு முதலியன குழைகை (அக.நி.); becoming soft, as rice by over-boiling.

[அள் → அளை → அளைவு. 'வு' தொ.பெ. ஈறு.]

**அற்கத்தி** *aṟkatti*, பெ. (n.) திப்பிலி (மலை.); long pepper.

**அற்கப்பிளப்பு** *aṟkappiḷappu*, பெ. (n.) திரு நாமப்பாலை; oval-leaved China root, *Smilax macrophylla* (சா.அக.).

**அற்கம்**[1] *aṟkam*, பெ. (n.) அடக்கம்; self-restraint, self-control. "அற்கமொன்று மறிவுறாள்" (திவ். திருவாய். 6 . 5 : 4).

[ஒல்கு → அல்கு → அற்கு → அற்கம். ஒல்கு தல் = தளர்தல். அல்குதல் = சுருங்குதல்.]

**அற்கம்**[2] *aṟkam*, பெ. (n.) 1. வெண்டுளசி (பச். மூ.); white basil, *Ocimum alba.* 2. தும்பைச் செடி (சா.அக.); bitter leucas, *Leucas aspera.* 3. அலரி; sweet-scented oleander, *Nerium odorum.* 4. குன்றி; Indian or country liquorice, *Abrus precatorius.* 5. நந்தியாவட்டம்; broad-leaved rosebay, Ceylon jasmine, *Tabernaemontana coronaria* alias *Nerium coronarium.* 6. முருக்கு; Indian coral tree, *Erythrina indica.* 7. வன்னிமரம்; suma tree, *Prosopis spicigera.* 8. வேம்பு; margosa, *Azadirachta indica.*

**அற்கரா** *aṟkarā*, பெ. (n.) *பேயிலுப்பை*; wild mohwah, *Bassia latifolia* (சா.அக.).

**அற்காமை** *aṟkāmai*, பெ. (n.) *நிலையாமை* (அக.நி.); impermanence.

*[அல்குதல் = தங்குதல். அல்கு → அற்கு → அற்காமை. 'ஆ' எ.ம.இ.நி. 'மை' பண்.பெ. ஈறு.]*

**அற்கு-தல்** *aṟku-*, 5 செ.கு.வி. (v.i.) *நிலைபெறுதல்*; to be permanent, to remain, endure. "அற்கா வியல்பிற்றுச் செல்வம்" (குறள், 333).

*[அல்கு → அற்கு.]*

**அற்கெந்தி** *aṟkendi*, பெ. (n.) (சிவ.) **அரைமதி (அர்த்தசந்திரன்) என்னும் ஓகத் தாவு (யோக ஸ்தானம்)**; the yogic centre *araimadi*. 'சாந்தியா தீத மற்கெந்தி" (தத்துவப். 189).

*[ஒருகா. அரைக்காந்தி → அற்கெந்தி.]*

**அற்பகதம்** *aṟpagadam*, பெ. (n.) *வாழை* (பச். மூ.); plantain tree, *Musa paradisiaca*.

**அற்பரம்** *aṟparam*, பெ. (n.) *மக்கட் படுக்கை* (சது.); bed, mattress.

**அற்பருத்தம்** *aṟparuttam*, பெ. (n.) *வாழை* (மலை.); plantain, *Musa paradisiaca*.

**அற்புத்தளை** *aṟpu-t-taḷai*, பெ. (n.) *நேசக்கட்டு*; bond of love or friendship. "அற்புத் தளை யறப் பரிந்திட் டானே" (சீவக. 2885).

*[அன்பு + தளை (கட்டு). 'ற்' புணர்ச்சித் திரிபு.]*

**அற்றகாரியம்** *aṟṟa-kāriyam*, பெ. (n.) **தீர்ந்த செய்தி, முடிந்த கருமம்** (சிலப். 17, முன்னிலைப். 2, உரை); settled fact, matter decided upon.

*[அறு → அற்ற (இ.கா.பெ.எ.).* **Skt.** kārya > **த.** *காரியம். அறுதல் = தீர்தல், முடிதல்.]*

**அற்றகுளம்** *aṟṟa-kuḷam*, பெ. (n.) *நீர்வற்றிய குளம்*; the tank in which water has dried up. "அற்ற குளத்தின்" (மூதுரை, 17).

ம. அற்றகுழ

*[அறு → அற்ற (இ.கா.பெ.எ.). குள் → குளம்.]*

**அற்றகுற்றம்** *aṟṟa-kuṟṟam*, பெ. (n.) 1. *குற்றங் குறை*; defect or deficiency. 2. *கேடிழப்பு*; loss or damage.

ம. அற்றகுற்றம்

*[அறு → அற்றம் + (குறு) → குற்றம்.]*

**அற்றசெம்பு** *aṟṟa-šembu*, பெ. (n.) *களிம்பற்ற செம்பு*; copper free from verdigris, refined copper (சா.அக.).

*[அறு → அற்ற (இ.கா.பெ.எ.). செம் → செம்பு. அறுதல் = நீங்குதல், இல்லாதிருத்தல்.]*

**அற்றநோய்** *aṟṟa-nōy*, பெ. (n.) *தீர்ந்த நோய்*; cured disease (சா.அக.).

*[அறு → அற்ற (இ.கா.பெ.எ.).]*

நோய் பார்க்க; see *nōy*.

**அற்றப்படு-தல்** *aṟṟa-p-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. **இல்லாதிருத்தல்**; to be unavailable. "ஆளற்றப்பட் டிரந்தாள்" (திவ். இயற். திருவிருத். 30). 2. **மறதியாயிருத்தல், கவனம் இடையறவுபடுதல்**; to be forgetful. 'பொச்சாப்பென்பது அற்றப்படுதல்; அஃதாவது, பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓரிகழ்ச்சியான் இடையறவுபடுதல்' (தொல். பொருள். மெய்ப். 12, பேரா. உரை).

*[அறு = அற்றம். 'அம்' தொ.பெ. ஈறு. அற்றம் + படு (து.வி.) – அற்றப்படு.]*

**அற்றபேச்சு** *aṟṟa-pēccu*, பெ. (n.) *முடிவான பேச்சு*; the last word in a bargain or agreement.

*[அறு → அற்ற (இ.கா.பெ.எ.). பேசு → பேச்சு (முத.இரட்.தொ.பெ.).]*

**அற்றம்**[1] *aṟṟam*, பெ. (n.) 1. *நீங்குகை*, **விலகுகை**; separation, leaving. 2. **இடைவிடுகை**; discontinuity, break. "அற்றமில் பெரும்படை" (சீவக. 565). 3. **ஆடை நீங்கிய நிலை, மொட்டைக்கட்டை**; nudity. "அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில்" (மணிமே. 3 : 139). 4. **அவமானம்**; shame. "அற்ற மறைக்கும் பெருமை" (குறள், 980). 5. **ஆள் நீங்கிய சமையம்**; the time of a person's being away. "தந்தையை யற்ற நோக்கியே" (கம்பரா. பால. திருவவ. 40). 6. (**தடை நீங்கிய) தகுந்த சமையம் (அவகாசம்)** (சூடா.); occasion, opportunity. 7. **பொய்**; untruth, lie. "அற்ற மின்மையி னவல நீங்கினார்" (சீவக. 1764). 8. (**பொய் நீங்கிய) உண்மை** (பொதி. நி.); truth. 9. (**செல்வம் நீங்கிய) வறுமை**; destitution, poverty. "பண்பிலார்க் கற்ற மறிய வுரையற்க" (நாலடி. 78). 10. **கேடு**; loss, harm. 11. **அழிவு**; destruction, ruin. "அறிவற்றங் காக்குங் கருவி" (குறள், 421).

*12.* **அச்சம்**; fear (சா.அக.). *13.* வருத்தம்; suffering. "அற்றமழி வுரைப்பினும்" (தொல். பொருள். கற். 9). *14.* **சோர்வு**; loosening, weakening, relaxing. "கொண்கன் முயக் கற்றம் பார்க்கும் பசப்பு" (குறள், 1186) (செ.அக.); distraction, stupor (சா.அக.). *15.* **மெலிவு**; leanness (சா.அக.). *16.* **அறுதி** (நாநார்த்த.); termination. *17.* முடிவு (பொதி.நி.); end, conclusion.

ம. அற்றம்

[அறு → அற்றம். 'அம்' தொ.பெ. ஈறு.]

**அற்றம்**[2] *aṟṟam*, பெ. (n.) *1.* **சற்று, சிறிது** (பொதி.நி.); a little, bit. *2.* **துடி** (பொதி. நி.); moment of time. *3.* **நாய்** (பொதி.நி.); dog.

[அல் = சிறிது, சிறுதுண்டு. அல்லுச்சில்லுப் படுதல் = சிறிதுசிறிதாகக் கெடுதல். அல் → அல்கு. அல்குதல் = சுருங்குதல். அல் → அற்றம். ஒ.நோ: கொல் → கொற்றம், வெல் → வெற்றம். 'அம்' தொ.பெ. ஈறு.]

நாய் இழிவாகக் கருதப்படுவதனால் அற்றம் எனப்பட்டதுபோலும். இனி, ஆளற்ற நிலையிற் காவல் காப்பது என்று கொள்ளின், அறு என்பது மூலமாகும். அறு → அற்றம்.

இனி, அல்ப (நாய்) என்னும் வடசொற் றிரிபென்று கொள்ளவும் இடமுண்டு.

**அற்றவன்** *aṟṟavaṉ*, பெ. (n.) **பற்றற்றவன்**; one who has renounced all ties. "அற்றவர்க் கற்றோன்" (திருவானைக். நைமி. 29).

[அறு → அற்ற (இ.கா.பெ.எ.). அற்ற + அவன் – அற்றவன்.]

**அற்றறாவாயு** *aṟṟaṟā-vāyu*, பெ. (n.) **வயிற்றில் முழுவதும் நீங்காத வளியால் (வாயுவால்) செரியாமை ஏற்பட்டு, நாளும் புளித்தேப்பமும் வலுக்குறைவு உடம்புக் கொதிப்பு முதலிய குணங்களும் உண்டாகும் செரியாவளி (குன்ம வாயு) நோய்**; dyspepsia arising from indigestion due to the retention of gas in the stomach, and marked, by sour belch, weakness, a feeling of glowing heat in the system, etc., *Flatulent dyspepsia* (சா.அக.).

[அறு → அற்று (இ.கா.வி.எ.) + அறா (ஈ.கெ. எ.ம.பெ.எ.) + **Skt.** vāyu.]

**அற்றறுதி** *aṟṟaṟudi*, பெ. (n.) தொடர்பு நீங்குகை; separation, severance of connection. எனக்கும் அவனுக்கும் இன்றோடு அற்றறுதியாகி விட்டது.

[அறு → அற்று (இ.கா.வி.எ.) + அறுதி. அறு → அறுதி. 'தி' தொ.பெ. ஈறு.]

**அற்றறுதிபற்றறுதி** *aṟṟaṟudi-paṟṟaṟudi*, பெ. (n.) **முற்றுந் தொடர்பு நீங்குகை**; complete separation, absolute severance of connection. அப்பன் இறந்தபின் அண்ணன் தம்பிமார்க் குள் அற்றறுதிபற்றறுதி யாகிவிட்டது.

[பற்று + அறுதி – பற்றறுதி. அறு → அறுதி. 'தி' தொ.பெ. ஈறு. 'அற்றறுதி பற்றறுதி' பொருளை மிகுக்க வந்த எதுகை மர பிணைமொழி.]

**அற்றறுதி** பார்க்க; see *aṟṟaṟudi*.

**அற்றார்** *aṟṟār*, பெ. (n.) *1.* **பொருளில்லாதவர்**; destitute persons. "அற்றா ரழிபசி தீர்த்தல்" (குறள், 226). *2.* **உறவினரில்லாதவர்**; those who have no relation; "அற்றாரைத் தேறுத லோம்புக" (குறள், 506). *3.* **தம்மை இறைவனுக்கு ஒப்படைத்தவர்**; those who have dedicated themselves to the service of God. "முதல்வன் பாதத் தற்றா ரடியார்" (தேவா. 7.94:10). *4.* **இறந்தவர்**; dead persons (சா. அக.).

[அறு → அற்ற (இ.கா.பெ.எ.) + அவர் – அற்றவர் → அற்றார் (வினையா.பெ.).]

**அற்று**[1] *aṟṟu*, பெ. (n.) **அத்தன்மையது**; one of such quality, impers. sing. "மறந்தனை யெம்மை யற்றால்" (கந்தபு. அசுர. உருத் திரர்கே. 6). —, வி. (v.) **அது அதையொத்தது, போன்றது**; is like that, is of the same kind, became or has become like that, impers. sing. finite verb. "அவ்வளவில் அள்ளிக்கொள் வற்றே பசப்பு" (குறள், 1187). —, இடை. (part.) **ஓர் உவமவுருபு** (தொல். பொருள். உவம. 11, பேரா. உரை); an adverbial word of comparison.

[அன் + து – அற்று. 'து' ஒன்.பா. ஈறு. அன்னது (அன் + அது) என்பது ஈற்றின் அகர முதல் தொக்கு அற்று என்றாயிற்று. ஒ.நோ: என்னது → எற்று (என் + து).]

**அற்று**[2] *aṟṟu*, இடை. (part.) **ஒரு சாரியை** (நன். 224); an euphonic increment.

எ-டு:

அவை + ஐ (2ஆம் வே.உ.) – அவற்றை
பல + இன் (6ஆம் வே.உ.) – பலவற்றின்

தொல்காப்பியர், அற்றுச் சாரியையை வற்றுச்சாரியை என்று கொண்டு, ஐகார வீற்றுச் சுட்டுச் சொன்முன் வகரங்கெடும் என்பர்.

"இன்னே வற்றே யத்தே யம்மே
......... ......... ......... .........
அன்ன வென்ப சாரியை மொழியே"
(தொல். எழுத்து. புண. 17),

"வஃகான் மெய்கெடச் சுட்டுமுத லைம்முன்
அஃகான் நிற்ற லாகிய பண்பே"
(ஷை 20).

தொல்காப்பியர், சிலவற்றை, பலவற்றை என்னும் புணர்ச்சொற்களில் வரும் வகர வுடம்படுமெய்யை, சாரியையொடு சேர்ந்த வெழுத்தாகக் கொண்டுள்ளார்போலும்! அது பொருந்தாது.

**அற்றுப்போ-தல்** *ar̲r̲u-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) 1. **இடைமுறிதல்**; to be severed, to be broken as a string. 2. *முழுவதும் நீங்குதல்;* to cease completely, as a disease. நோய் முழுவதும் அற்றுப்போயிற்று. 3. **ஓர் உயிரினம் இறந்துபடுதல்**; to become extinct, as a species. ஓதிமம் (அன்னம்) தமிழ்நாட்டில் அற்றுப் போயிற்று. 4. *முழுவதும் கைவருதல்;* to have complete possession (Com.u.) (செ.அக.).

[அறு → அற்று (இ.கா.வி.எ.). 'போ' ஒழி தலைக் குறிக்கும் து.வி.]

**அற்றுவிடல்**, *ar̲r̲u-viḍal*, 20 செ.கு.வி. (v.i.) **அற்றுப்போ-தல் 1, 2, 3** பார்க்க; see *ar̲r̲u-p-pō-* 1, 2, 3.

['விடு' நீங்கல் குறிக்கும் து.வி.]

**அற்று** பார்க்க; see *ar̲r̲u*.

**அற்றூரம்** *ar̲r̲ūram*, பெ. (n.) **மரமஞ்சள்**; tree turmeric.

**அற்றேல்** *ar̲r̲ēl*, இடை. (conj.) அப்படியானால்; if so. 'அற்றேல், கேட்போர் மாணாக்கரும் கேட்பிப்போர் ஆசிரியரு மாகலான்' (நன். சிறப்புப்பாயி. சிவஞான. விருத்தி. பக். 13).

[அன்னது → அற்று (அன் + து) + ஏல். என் → எனில் (எ.கா.வி.எ.) → ஏல் (எ.கா.வி.எ. ஈறு).]

**அற்றை** *ar̲r̲ai*, கு.பெ.எ. (adj.) 1. **அந்நாட்குரிய**; of that day. "அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்" (புறநா. 112 : 1). "அற்றைவெஞ் சமரில்" (பாரத. பதினே. 2). 2. **சிறிய, முதன்மையல்லாத**; little, trifling. அற்றைக் காரியம் (யாழ்ப்.).

[அன்று → அற்றை. வலித்தலும் ஐகாரச் சாரியையும் புணர்ச்சி விளைவு.]

**அற்றைக்கூலி** *ar̲r̲ai-k-kūli*, பெ. (n.) **அன்றன்று பெறும் நாட்கூலி**; daily wages.

[அன்று → அற்றை + கூலி. கூலம் → கூலி.]

**அற்றை** பார்க்க; see *ar̲r̲ai*.

**அற்றைக்கூழ்** *ar̲r̲ai-k-kūḻ*, பெ. (n.) **மாவைப் புளிக்க வையாது அன்றே காய்ச்சும் கேழ்வரகு கூழ்**; porridge made out of unleavened ragimeal.

[அன்று → அற்றை + கூழ். குழை → கூழ்.]

**அற்றைக்கொத்து** *ar̲r̲ai-k-kottu*, பெ. (n.) **நாள்தோறும் தவசமாகக் கொடுக்குங் கூலி**; daily wages, paid in kind.

[அன்று → அற்றை + கொத்து. ஒருகா. குத்து → கொத்து = குத்துக்குத்தாக அள்ளிப் போடும் தவசம்.]

**அற்றைத்திங்கள்** *ar̲r̲ai-t-tiṅgaḷ*, பெ. (n.) **அப்பொழுதை நிலா**; the Moon at that time. "அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்" (புறநா. 112 : 1).

[அன்று → அற்றை + திங்கள். திகழ் → திங்கள்.]

**அற்றைநாள்** *ar̲r̲ai-nāḷ*, பெ. (n.) **அந்நாள்**; that day. "யான்காவல் பூண்ட வற்றைநாண் முதலா" (அரிச்சந். விவாக. 29).

[அன்று → அற்றை + நாள். நள் → நாள்.]

**அற்றைநிலை** *ar̲r̲ai-nilai*, பெ. (n.) **நோயாளிக்கு நாட்படியுள்ள உடம்பின் நிலைமை**; the daily condition of a patient (சா.அக.).

[அன்று → அற்றை. நில் → நிலை.]

**அற்றைப்படி** *ar̲r̲ai-p-paḍi*, பெ. (n.) **நாள்தோறும் உணவிற்காக அளிக்கப்படும் பண்டம் அல்லது பணம்**; daily allowance, either in kind or cash. 'நற்பரிகள் ஐயாயிரத்துக்கும் அற்றைப்படி யாம்படி கொடுத்து' (பாரத வெண். 161, உரை).

[அன்று → அற்றை. படி (அளவை ஆகு.) = படியாலளக்கப்படும் பொருள், அதன் விலை மதிப்பான பணம்.]

**அற்றைப்பரிகாரம்** *ar̲r̲ai-p-parigāram*, பெ. (n.) 1. **உடற்கேட்டிற்கு உடனே செய்யும் மருத்துவ**

உதவி; first aid. 2. துன்பந் தீர்க்க உடனே செய்யும் நல்வினை; immediate relief.

[அன்று → அற்றை. Skt. parihāra > த. பரிகாரம்.]

**அற்றைப்பரிசம்** *arrai-p-parišam*, பெ. (n.) விலைமாதர் அன்றன்று பெறும் கூலி (சிலப். 5:51, அடியார்க். உரை); daily hire of a harlot.

[அன்று → அற்றை. பரிசு → பரிசம்.]

**அற்றைப்பாடு** *arrai-p-pāḍu*, பெ. (n.) 1. அன்றன்று செய்யும் உழைப்பு; daily labour. 2. அன்றன்று வேண்டிய உணவுப்பேறு; earning of the daily bread. அற்றைப்பாடு கழிய வேண்டுமே! (உ.வ.).

[அன்று → அற்றை. படு → பாடு.]

**அற்றைப்பிழைப்பு** *arrai-p-piḻaippu*, பெ. (n.) அன்றன்று உணவுதேடும் வாழ்க்கை; living from hand to mouth, poor living.

[அன்று → அற்றை. பிழை → பிழைப்பு.]

**அற்றைப்பொழுது** *arrai-p-poḻudu*, பெ. (n.) அந்த நேரம், அந்த நாள்; that time, that day. அற்றைப் பொழுதிற்கு அப்படிச் செய்ய வேண்டியிருந்தது (உ.வ.).

[அன்று → அற்றை. போழ் → போழ்து → பொழுது.]

**அற்றைமருந்து** *arrai-marundu*, பெ. (n.) நோயாளிக்கு நாள்தோறும் கொடுக்கும் மருந்து; the daily medicine prescribed for a patient.

[அன்று → அற்றை. மரு → மருந்து.]

**அற** *ara*, கு.வி.எ. (adv.) 1. முழுதும்; wholly, entirely, quite. "வகையறச் சூழாது" (குறள், 466). 2. மிகவும்; intensely, excessively. "அறவே துயர்செய்து" (கந்தபு. அசுர. காசிபன்பு. 15). 3. தெளிவாக; clearly. "அற மறக் கண்ட நெறிமா ணவையத்து" (புறநா. 224 : 4). 4. செவ்வையாக; thoroughly, properly. திண்ணையை அறக்கூட்டு (உ.வ.).

ம. அற

[அறு → அற (நி.கா.வி.எ.) = நீங்க, குறை நீங்க, குறையில்லாவாறு.]

**அறக்கட்டல்** *ara-k-kaṭṭal*, தொ.பெ. (vbl.n.) பிள்ளைபெற்றவுடன் பெற்றவளின் வயிற்றை இறுக்கமாகக் கட்டல்; binding very tight, as the abdominal belt worn by a woman after delivery (சா.அக.).

[அறு → அற (நி.கா.வி.எ.). கட்டு → கட்டல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அறக்கடவுள்** *ara-k-kaḍavuḷ*, பெ. (n.) 1. அறத் தெய்வம் (தருமதேவதை) (குறள், 204, உரை); the god of virtue, personified. 2. கூற்றுவன்; the god of death, Yama. "தொல்லறக் கடவு ளருளுட னளித்த" (பாரத. நாடுகர. 3). 3. கூற்றுவனின் தோற்றரவாகக் (அவதாரமாகக்) கருதப்பட்ட விதுரன்; Vidura, an uncle of the Pāṇḍavas, as the incarnation of Yama. "நல்லறக் கடவுளுக்கு முரையா" (பாரத. வாரணா. 53).

[அறம் + கடவுள். கட → கடவுள்.]

அறம் பார்க்க; see *aram*.

**அறக்கடை** *ara-k-kaḍai*, பெ. (n.) தீவினை, கரிசு (பாவம்); sin. "அறக்கடை தணப்ப" (காஞ்சிப்பு. பதிக. 4).

[அறம் + கடை. கட → கடை.]

அறன்கடை பார்க்க; see *aran-kaḍai*.

**அறக்கண்டி-த்தல்** *ara-k-kaṇḍi-*, 4 செ. குன்றாவி. (v.t.) நோயை முழுதும் நீக்குதல்; to effect a radical cure, as in a disease (சா. அக.).

[அற = முழுதும். கண்டி → கண்டித்தல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

**அறக்கப்பறக்க** *arakka-p-parakka*, கு.வி.எ. (adv.) 1. மிக விரைவாக; in great haste. அறக்கப்பறக்க வருகிறாள். 2. ஊக்கமாக; diligently.

[பற → பறக்க (நி.கா.வி.எ.) = விரைவாக. 'அறக்கப்பறக்க' எதுகை மரபிணைமொழி.

அறுக்கப்பொறுக்க பார்க்க; see *arukka-p-porukka*.

**அறக்கப்பாலை** *arakkappālai*, பெ. (n.) திருநாமப்பாலை (சித்.அக.); oval-leaved China root.

**அறக்கம்** *arakkam*, பெ. (n.) 1. அறக்கப்பாலை பார்க்க; see *arakkappālai*. 2. சுக்கு; dried ginger (சா.அக.).

**அறக்கமா** *arakkamā*, பெ. (n) புளிமா; sour mango, *Spondias mangifera* (சா.அக.).

**அறக்கருணை** *aṟa-k-karuṇai*, பெ. (n.) **அரவணைக்கும் அறவருள், மறவருள் என்பதற்கு எதிர்**; embracing or protecting divine grace, opp. to *maṟavaruḷ*.

*[அறம் + Skt. karuṇā > த. கருணை.]*

க்ரு, க்ரூ என்னும் வேர்ச்சொற்களினின்று கருண (கருணா) என்னும் வடசொல் திரிந்துள்ளதாக, மானியர் வில்லியம்சு தம் சமற்கிருத ஆங்கில அகரமுதலியிற் குறிக்கின்றார். 'க்ரு' என்னும் முதனிலைக்குச் 'செய்' என்பதே அடிப்படைப் பொருள். 'க்ரூ' என்னும் முதனிலைக்கு எறி, சிதறு, குவி, ஊற்று, நிரப்பு, மூடு என்னும் பொருள்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்றேனும் அருட் கருத்தொடு தொடர்புள்ளதா யில்லை.

'கரைதல்' என்னும் தென்சொல்லிற்கு உருகுதல், இளகுதல், இரங்குதல், அருள்தல் என்னும் பொருள்கள் உள்ளன. இரங்குதல் என்னும் பொருளில் மனங்கரைதல் என்னும் வழக்கும், தமிழகத்தில், சிறப்பாக யாழ்ப்பாணத்தில் உள்ளது. ஆதலால், 'கரை' என்னும் தென்மொழி முதனிலையினின்றே கருண (கருணா) என்னும் வடசொல் தோன்றியிருத்தல் வேண்டும். இங்ஙனம் நூற்றுக் கணக்கான வடசொற்கள் தென்மொழி முதனிலைகளினின்று தோன்றியுள்ளன.

எ-டு : புரிதல் = விரும்புதல். புரி > Skt. prī, priya, prīti.

**அறக்கழிவு** *aṟa-k-kaḻivu*, பெ. (n.) **உலக வழக்கத்திற்குப் பொருத்தமில்லாமை**; inconsistency with the normal customs and practices of the world. "அறக்கழி வுடையன பொருட் பயம்படவரின்" (தொல். பொருள். பொருளியல், 24).

*[அறம் + கழிவு. கழி → கழிவு.]*

**அறக்களவழி** *aṟa-k-kaḷa-vaḻi*, பெ. (n.) (புறப்.) **வேளாண்டொழிலைக் கூறும் புறத்துறை** (மாற. 120, உரை); (Purap.) theme of agriculture.

*[அறம் + களம் + வழி. கள் → களம்.]*

**அறக்களவேள்வி** *aṟa-k-kaḷa-vēḷvi*, பெ. (n.) **ஆரிய வேத வேள்வி, மறக்கள வேள்வி என்பதற்கு எதிர்**; sacrifice according to Vēdic rites opp. to *maṟakkaḷa vēḷvi*. "அறக்கள வேள்வி செய்யா தியாங்கணும்" (சிலப். 28 : 131).

*[அறம் + களம் + வேள்வி. கள் → களம். வேள் → வேள்வி.]*

**அறக்கற்பு** *aṟa-k-kaṟpu*, பெ. (n.) **அமைதிநிலையுள்ள கற்பு** (சிலப். பதி. 42, அடியார்க். உரை), **மறக்கற்பு என்பதற்கு எதிர்**; chastity unobtrusive, opp. to *maṟakkaṟpu*.

*[அறம் + கற்பு. கல் → கற்பு.]*

**கற்பு** பார்க்க; see *kaṟpu*.

**அறக்காடு** *aṟa-k-kāḍu*, பெ. (n.) **சுடுகாடு** (வின்.); cremation ground.

*[அறம் + காடு.]*

ஆண்டி முதல் அரசன் வரை அனைவர்க்கும் ஒரே நிலைமை வகுப்பதால், சுடலை அறக்காடெனப்பட்டது. கூற்றுவனுக்கு அறக்கடவுள் என்னும் பெயருண்மை நோக்குக.

**அறக்குளாமீன்** *aṟakkuḷā-mīṉ*, பெ. (n.) **மேற்புறம் நீலமாயும் அடிப்புறம் வெள்ளையாயுமுள்ள நால்விரல (அங்குல) நீளக் கடல்மீன்** (வின்.); seer fish, bluish above, silvery below, attaining 4 inches in length, *Cybium commersonii*.

**அறக்கூர்மை** *aṟa-k-kūrmai*, பெ. (n.) **மிகக் கூர்மை**; excessive sharpness. 'அறக்கூர்மை முழுமொட்டை' (பழ.).

*[அற = மிக. கூர் → கூர்மை (பண்.பெ.). 'மை' பண்.பெ. ஈறு.]*

**அற** பார்க்க; see *aṟa*.

**அறக்கொள்(ளு)-தல்** *aṟa-k-koḷ(ḷu)-*, 10 செ. குன்றாவி. (v.t.) **முழுதும் பெறுதல்**; to receive in full. 'விலைத் திரவியமும் இறைத் திரவியமும் அறக்கொண்டு' (S.I.I. iii, 16).

*[அற = மிக.]*

**அற** பார்க்க; see *aṟa*.

**அறகப்பிளப்பி** *aṟaṟappiḷappi*, பெ. (n.) **அறக்கப்பாலை** பார்க்க; see *aṟakkappālai*.

**அறங்கடை** *aṟaṅgaḍai*, பெ. (n.) **தீவினை, கரிசு (பாவம்)**; sin. "அறங்கடை நில்லாது" (மணிமே. 11 : 113).

*[அறன்கடை → அறங்கடை.]*

**அறன்கடை** பார்க்க; see *aṟaṉ-kaḍai*,

**அறங்காவல்** *aṟaṅ-kāval*, பெ. (n.) **கோயில், சத்திரம் முதலியன காக்குந்தொழில்** (S.I.I. iv, 492); trusteeship of temples, choultries, etc.

*[அறம் + காவல். கா → காவல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அறங்கூறவையம்** *aṟaṅ-kūṟ(u)-avaiyam*, பெ.(n.) **வழக்காடு மன்றம், அறமன்றம், முறையவை** (**நியாய சபை**); court of law where justice is administered. "அறங்கூ றவையத் துரை நூல் கோடி" (சிலப். 5 : 135).

*[அறம் + கூறு + அவையம். அவை → அவையம். 'அம்' பெ.பொ. பின்.]*

**அறங்கை** *aṟaṅgai*, பெ. (n.) **அகங்கை**; palm of the hand. அறங்கையும் புறங்கையும் நக்கு கிறது (வின்.).

தெ. அறசேயி, அறசெய்யி.

*['அகங்கை' என்பது 'புறங்கை' என்பதன் சேர்க்கையால் ஒத்தமைவு (analogy) முறையில் 'அறங்கை' எனத் திரிந்தது.]*

'அகங்கை' என்பது எதுகை நோக்கி 'அறங்கை' எனத் திரிந்தது கொச்சை வழக்கு; ஆதலால், கொள்ளத் தக்கதன்று. 'அறங்கை' என்பது கொள்ளப்படின், 'எகனைமுகனை' (எதுகைமோனை) என்னும் கொச்சை வழக்கிலுள்ள 'எகனை' என்பதும் கொள்ளப் படல் வேண்டும். அது கொள்ளப்படாமை அறிஞர் அறிவர். 'ஆகவே' 'அறங்கை' என்பதும் கொள்ளப்படா தென்பதை அறிதல் வேண்டும்.

சில அகரமுதலிகளில் இச் சொல் இடம் பெற்றுள்ளதால், இங்குங் கொண்டு களையப் பட்டது.

**அறச்சந்தகாரன்** *aṟaccandakāraṉ*, பெ. (n.) **சாரைப்பாம்பு**; male of the rat-snake species. 'male cobra' என்று சா. அகரமுதலியிற் குறிக்கப்பட்டுள்ளது பொருந்துமா என்பது தெரியவில்லை.

**அறச்சபை** *aṟa-c-cabai*, பெ. (n.) **அறங்கூறவை**; body of persons, elected or appointed, to administer justice.

**அறச்சாலாபோகம்** *aṟa-c-cālā-pōgam*, பெ. (n.) **அறச்சாலைகட்கு விடப்பட்ட மானியம்** (S.I.I. iii, 389); endowment of land for maintenance of choultries, alms-houses, etc.

*[அறம் + சாலா + போகம். சாலை >* **Skt.** *sālā.* **Skt.** bhōga > *தெ. போகம் = நுகர்ச்சி. புகுதல் = உண்ணுதல். புகு → புகா = உணவு. புகு >* **Skt.** bhuj → bhōga.*]*

புகு பார்க்க; see *pugu.*

**அறச்சாலை** *aṟa-c-cālai*, பெ. (n.) **அறம் வழங்குமிடம்** (**தருமசாலை**), **ஊட்டுப்புரை**; alms-house, feeding house. "பிறரறச் சாலை கள் காப்போரும்" (தணிகைப்பு. அகத். 340).

*[அறம் + சாலை. சால் → சாலை.]*

**அறச்செட்டு** *aṟa-c-ceṭṭu*, பெ. (n.) **கடுஞ்செட்டு**; excessive frugality, parsimony. 'அறச்செட்டு முழுநட்டம்' (பழ.).

*[அற (வி.எ.) = மிக, அளவிற்கு மிஞ்சி. செட்டி → செட்டு = செட்டியின் தன்மை, சிக்கனம்.]*

செட்டி பார்க்க; see *šeṭṭi.*

**அறச்செல்வி** *aṟa-c-celvi*, பெ. (n.) **சிவை, மலை மகள்** (**பார்வதி**) (சிந்தா. நி. 351); Pārvathi, consort of Šiva.

*[அறம் + செல்வி. செல்வம் → செல்வி. 'இ' பெ.பா. ஈறு.]*

காஞ்சிபுரத்தில் 32 அறங்கள் செய்ததாகத் தொன்மம் (புராணம்) கூறுவதால், சிவை அறச்செல்வி யெனப்பட்டாள்.

**அறச்சோலை** *aṟa-c-cōlai*, பெ. (n.) **கோயிலி னுட்சோலை**; grove within a temple. "அறச் சோலை தானும் பிரானும் பயின்றாடு மச்சோலையே" (தக்கயாகப். 65).

*[அறம் + சோலை.]*

"புறச்சோலை பூதங்க ளும்பேயும் யாவும்
புகுஞ்சோலையே
அறஞ்சோலை தானும் பிரானும்
பயின்றாடு மச்சோலையே"

என்னுந் தாழிசையில் புறம் அறம் என்பன எதிர்ச்சொற்களா யமைந்திருப்பதாலும், தக்கயாகப்பரணி யுரையாசிரியர் 'அறச் சோலையாவது, பரமேசுவரியிருக்குங் கோயிற் சோலையான உட்சோலை' என்று சிறப்புரை வரைந்திருப்பதாலும், இதில் அறம் என்பது அறங்கை புறங்கை என்பதிற்போல எதுகை நோக்கித் திரிந்த அகம் என்னுஞ் சொல்லோ வென ஐயுறக்கிடக்கின்றது. அத் திரிபு உண்மையாயின், திரிக்கும்வழித் திரித்தலான செய்யுள் திரிபாகக் கொள்ளப்படும்.

**அறசம்** *aṟašam*, பெ. (n.) **கத்தரி** (சங்.அக.); brinjal.

**அறசோகணக்கு** *aṟašōkaṇakku*, பெ. (n.) 1. **காட்டுக்கரணை** (பரி.அக.); purple - stalked dragon root. 2. **கரணைக் கிழங்கு** (சங்.அக.);

elephant yam — white yam, *Dracontium polyphyllum* (சா.அக.).

**அறணை** *aṟaṇai*, பெ. (n.) 1. **காட்டுக்கரணை** (மூ.அ.); purple-stalked dragon plant (செ. அக.). 2. **அள்ளூரல்**; wild elephant yam, *Dracontium polyphyllum* (சா.அக.).

**அறணையம்** *aṟaṇaiyam*, பெ. (n.) **அறணை** 2 பார்க்க; see *aṟaṇai* 2.

**அறத்தவிசு** *aṟa-t-tavišu*, பெ. (n.) **அறங்கூறதிகாரியின் பீடம், தீர்ப்பாளன் இருக்கை**; judge's seat in court. "அறத்தவி சிருப்போ ரேவ லாடவ ரோடும் போந்து" (திருவிளை. மாமனாக. 17).

[அறம் + தவிசு. ஒருகா. தவ்வு → தவிசு = தடுக்கு, சிற்றிருக்கை. தவ்வுதல் = சிறுத்தல், குறைதல். இனி, Pers. divāsī > த. தவிசு என்றுமாம்.]

**அறத்தளி**[1] *aṟa-t-taḷi*, பெ. (n.) ஒரு பழ நகர்; an ancient town.

[அறம் + தளி (கோயில்).]

**அறத்தளி**[2] *aṟa-t-taḷi*, பெ. (n.) உவளகம் (**அந்தப்புரம்**) (சிந்தா. நி. 349); zenana, harem.

[அகம் → அறம் + தளி (கோயில்).]

பண்டைக் காலத்தில் அரசனின் அரண் மனையும் திருக்கோயில் போலத் தெய்வத் தன்மை யுள்ளதாகக் கருதப்பட்டது. அரசி யர் அரண்மனையின் உட்புறத்தில் வதிந்த தனால், அவரிருக்கை அகத்தளி யெனப் பட்டது.

[அகத்தளி → அறத்தளி.]

அறங்கை பார்க்க; see *aṟaṅgai*.

**அறத்தின்செல்வி** *aṟattiṉ-šelvi*, பெ. (n.) **அறத் தெய்வம் (தரும்தேவதை)** (பிங்.); goddess of virtue.

[அறம் + அத்து (சாரியை) + இன் (6ஆம் வே.உ.) + செல்வி. செல்வம் → செல்வி. 'இ' பெ.பா. ஈறு.]

**அறத்தின்சேய்** *aṟattiṉ-šēy*, பெ. (n.) **கூற்றுவன் என்னும் அறக்கடவுளின் மகனாகக் கருதப் படுபவனும் பாண்டவருள் மூத்தவனுமான தருமன் என்னும் யுதிட்டிரன்** (சூடா.); Yudhiṣṭhira, the son of Yamadharma and the eldest of the Pāṇḍu princes.

[அறம் → அத்து (சாரியை) + இன் (6ஆம் வே.உ.) + சேய் (மகன்).]

**அறத்தின்மூர்த்தி** *aṟattiṉ-mūrtti*, பெ. (n.) 1. **அறத்தேவன்** (வின்.); the god of justice. 2. **சிவை, மலைமகள் (பார்வதி)** (வின்.); the consort of Šiva. 3. **திருமால்**; Viṣṇu. "அறத் தின் மூர்த்திவந் தவதரித்தான்" (கம்பரா. அயோத். மந்திரப். 36).

[அறம் + அத்து (சாரியை) + இன் (6ஆம் வே.உ.) + Skt. mūrti > த. மூர்த்தி (வடி வன், திருமேனி).]

**அறத்துணைவி** *aṟa-t-tuṇaivi*, பெ. (n.) **கற்புடை மனைவி**; chaste wife, virtuous helpmate, wife.

[அறம் + துணைவி. துணை → துணைவன் (ஆ.பா.) — துணைவி (பெ.பா.). 'இ' பெ.பா. ஈறு.]

**அறத்துப்பால்** *aṟattu-p-pāl*, பெ. (n.) **திருக் குறளின் முப்பால்களுள் முதலாவதும் அறத்தைப்பற்றிக் கூறுவதுமான பகுதி**; the first section of *Tirukkuṟaḷ* which treats of virtue, one of *muppāl*.

**அறத்துவச்சளம்** *aṟattu-vaccaḷam*, பெ. (n.) (சமணம்) **சமண சமயத்தைச் சார்ந்தவரை அதன் கண் நிறுத்தி அவரிடம் மிகுந்த அன்பு செலுத்துகை**; (Jain.) showing tender love towards the followers of Jainism and settling them firuly in their religion (மேருமந். 13 : 43).

[அறம் + Skt. vatsalatva > த. வச்சளம். 'அத்து' சாரியை. Skt. vatsalam = பேரன்பு. வத்ஸலத்வ = பேரன்புத் தன்மை, பேரன்பு செய்கை. Skt. vatsalatva > த. வச்சலத்து வம் → வச்சளம்.]

**அறத்துறத்தல்** *aṟa-t-tuṟattal*, தொ.பெ. (vbl.n.) **உலகப் பற்றை முழுதும் விட்டுவிடுதல்**; to renounce the world completely (சா.அக.).

[அற (வி.எ.) = முற்றும். துற = துறத்தல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

**அறத்துறுப்பு** *aṟatt(u)-uṟuppu*, பெ. (n.) **ஐயப் படாமை, விருப்பின்மை, வெறுப்பின்மை, மயக்கமின்மை, பழியை நீக்கல், அழிந்தோரை நிறுத்தல், அறம் விளக்கல், பேரன்புடைமை என்னும் எண்வகை அறத்தன்மைகள்** (சூடா.); constituent parts of virtue, of which the principal ones being eight, viz., having no doubt, having no desire, having no aversion, clarity of mental vision, expiation, re-establishing the ruined, exposition of virtue and possession of great love.

[அறம் + உறுப்பு. 'அத்து' சாரியை, கிழமைப் பொருள்பட நின்றது.]

**அறத்துறை** *aṟa-t-tuṟai*, பெ. (n.) **அறநெறி** (**தருமமார்க்கம்**); path of virtue. "அறத்துறை யறிந்தநீ" (பாகவ. 1.8 : 40).

[அறம் + துறை. துறு → துறை.]

**துறை** பார்க்க; see *tuṟai*.

**அறத்துறையம்பி** *aṟa-t-tuṟai-y-ambi*, பெ. (n.) **பேராறுகளிலும் வெள்ளக்காலத்திலும் ஏழைகளை இலவசமாகக் கடத்தும்** படகு; ferry-boat conveying poor people free of charge over river, canal or strait. "உறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு மறத்துறை யம்பி" (புறநா. 381 : 23-24).

[அறம் + துறை + அம்பி.]

**அம்பி** பார்க்க; see *ambi*.

**அறத்தைக்காப்போன்** *aṟattai-k-kāppōṉ*, பெ. (n.) (**அறத்தைக் காக்கும்**) **ஐயனார்** (பிங்.); *Aiyaṉār*, protector of virtue.

[அறம் + அத்து (சாரியை) + ஐ (2ஆம் வே. உ.) + காப்போன் (வினையா. பெ.). கா → காப்பவன் → காப்பான் → காப்போன். ஆன் (ஆ.பா. ஈறு) → ஓன்.]

**அறத்தொடுநிலை** *aṟattoḍu-nilai*, தொ.பெ. (vbl.n.) **அறத்தொடுநிற்றல்** பார்க்க; see *aṟattoḍu-niṟṟal*.

"ஆற்றா றஞ்சினும் அவன்வரைவு மறுப்பினும்
வேற்றுவரைவு நேரினும் காப்புக்கை மிகினும்
ஆற்றுறத் தோன்றும் அறத்தொடு நிலையே"
(நம்பியகப். 47).

[அறம் + அத்து (சாரியை) + ஒடு (3ஆம் வே. உ.) + நிலை (தொ.பெ.). நில் → நிலை.]

**அறத்தொடுநிற்றல்** *aṟattoḍu-niṟṟal*, தொ.பெ. (vbl.n.) (அகப்.) **தோழி தலைவியின் களவொழுக்கத்தைச் செவிலிக்கும் பெற்றோர்க்கும் படிமுறையாய் அறிவித்தல்**; (Agap.) maid's tactful and gradual revealing of the secret love affair of her young mistress to the foster-mother and parents of her mistress.

[அறம் + அத்து (சாரியை) + ஒடு (3ஆம் வே. உ.) + நிற்றல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

தலைவியின் களவொழுக்கம் தோழிக்குந் தெரியாததாயின், தலைவியே முதற்கண் தோழிக்கு அறத்தொடு நிற்கும்.

"தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு
நிற்கு மென்ப நெறியுணர்ந் தோரே"
(நம்பியகப். 48).

**அறதேயன்** *aṟa-tēyaṉ*, பெ. (n.) **மானிய அறப் பணிகளை நடத்துவோன்** (S.I.I. iv, 31); one who manages charitable endowments.

[அறம் + தேயன். **Skt.** dēya = செல்வம், பொருள். **Skt.** dēya > த. தேயம் → தேயன். இனி, தேயம் என்பது பக்கம் எனினுமாம். எ-டு. "நெறியி னாற்றிய அறிவன் றேயமும்" (தொல். பொருள். புறத். 20), "பின்சார் அயல்புடை தேவகை யெனாஅ" (தொல். சொல். வேற். 21). "கிழவோள் தேஎத்து" (இறை. 8).]

**அறநிலை** *aṟa-nilai*, பெ. (n.) 1. **அறப்பணிச் செல்வங்களைப் பாதுகாத்தற்குரிய நிலையம்** (இக்.வ.); institution or trust for the management of charities (Mod.). 2. **பிரமம் என்னும் ஆரிய மணவகை**; a form of Āryan marriage. 'பிரமம் என்பது, நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தாற்குப் பன்னீராட்டைப் பிராயத்தாளை அணிகல னணிந்து கொடுப்பது. கொடாவிடின், ஓரிருதுக் காட்சி ஒருவனைச் சாராது கழிந்தவிடத்து ஒரு பார்ப்பனக் கொலையோடு ஒக்குமென்பது; அதனை அறநிலை யென்பது' (இறை. 1, உரை).

[அறம் + நிலை (தொ.பெ.). 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அறநிலைப்பொருள்** *aṟa-nilai-p-poruḷ*, பெ. (n.) **நெறிப்படி அரசன் பெறும் இறைப்பொருள்** (திவா.); just and rightful dues to a sovereign.

[அறம் + நிலை + பொருள்.]

**அறநிலை** பார்க்க; see *aṟa-nilai*.

**அறநிலையறம்** *aṟa-nilai-y-aṟam*, பெ. (n.) **நால்வகை வரணத்தாரும் தத்தம் நெறியிற் பிழையா வாறு அரசன் பாதுகாக்கை** (பிங்.); protection and maintenance by the king of the observance of caste rules by the four castes.

**அறநிலையின்பம்** *aṟa-nilai-y-iṉbam*, பெ. (n.) **ஒத்த கன்னியை மணந்து இல்லறத்தில் நின்று நுகரும் இன்பம்** (பிங்.); domestic happiness enjoyed by marrying a suitable woman.

*[அறம் + நிலை + இன்பம். இன்பு → இன்பம்.]*

**அறநீர்** *aṟa-nīr*, பெ. (n.) *அறனீர் பார்க்க*; see *aṟaṉīr*.

**அறநூல்** *aṟa-nūl*, பெ. (n.) *அறவொழுக்கநூல்* (**தரும சாத்திரம்**) (குறள், 388, உரை); Code of Laws, treatise on civil and religious duties.

**அறநெறி** *aṟa-neṟi*, பெ. (n.) 1. *அறவொழுக்க* **நெறி, நன்னெறி** (**தரும மார்க்கம்**); path of virtue. "*அறிமி னறநெறி*" (நாலடி. 172). 2. **ஊசலாங்கொடி**; a creeper (சா.அக.).

**அறநெறிச் சந்தேகசாத்திரி** *aṟa-neṟi-c-candēga-šāttiri*, பெ. (n.) (கிறித்.) **மறைநூலாய்வு** (**சாத்திர** பரிசீலனை) **செய்வோன்**; (Chr.) casuist.

*[அறம் + நெறி +* **Skt.** sandēha + **Skt.** šāstrin. **Skt.** sandēha > **த.** *சந்தேகம்.* **Skt.** šāstrin > **த.** *சாத்திரி.]*

**அறநெறிச்சாரம்** *aṟa-neṟi-c-cāram*, பெ. (n.) **முனைப்பாடியார் இயற்றிய ஓர் அறநூல்**; name of a poem on the path of virtue by *Muṉaippāḍiyār*.

*[அறம் + நெறி + சாரம்.]*

**அறப்பரிகாரம்** *aṟa-p-parigāram*, பெ. (n.) *அறப்* **பரிசாரம்** *பார்க்க*; see *aṟa-p-parišāram* (சிலப். 2 : 85, அரும்.).

**அறப்பரிசாரம்** *aṟa-p-parišāram*, பெ. (n.) **அடியார், துறவியர் முதலியவர்க்குச் செய்யும் பணிவிடை**; services rendered to devotees, ascetics, etc. "*மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்*" (சிலப். 2 : 85).

*[அறம் + பரிசாரம்.* **Skt.** paricāra > **த.** *பரிசாரம்.]*

**அறப்பளீசுரசதகம்** *aṟappaḷīšura-šadagam*, பெ. (n.) **அம்பலவாணக் கவிராயர் அறவொழுக்கம்பற்றிப் பாடிய நூறு பாட்டுக் கொண்ட ஒரு பனுவல் வகை**; a poem of 100 stanzas on virtue by Ambalavāṇakkavirāyar.

*[அறப்பளி + ஈசுரன் + சதகம்.* **Skt.** išvara > **த.** *ஈசுவரன் → ஈசுரன்.* **Skt.** šata *(நூறு)* → šataka > **த.** *சதகம்.]*

அறப்பளியில் எழுந்தருளியுள்ள இறைவனை (சிவனை)ப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட சதகம் அறப்பளீசுர சதகம் எனப் பட்டது. சதகம் என்பது தொண்ணூற்றாறு வகைப் பனுவல் (பிரபந்த) வகைகளுள் ஒன்றாகச் சொல்லப்படும்.

**அறப்பாடல்** *aṟa-p-pāḍal*, பெ. (n.) 1. *அறம் பற்றிய பாட்டு*; song or poem on virtue. 2. **பாடப்பட்டவர்க்குக் கேடு விளைக்கும் எழுத்து அல்லது சொல் அமைந்த பாட்டு** (வின்.); verse containing words or letters which bring about ruin or death to a person on whom the verse is made.

*[அறம் + பாடல். பாடு → பாடல் (தொ. ஆகு.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அறப்பாடுபடு-தல்** *aṟa-p-pāḍu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **மிக உடல்வருந்தி யுழைத்தல்**; to work hard, labour.

*[அற (வி.எ.) = மிக. படு → பாடு (தொ. பெ.). 'படு' து.வி.]*

**அறப்பார்-த்தல்** *aṟa-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **தீர ஆராய்தல்**; to examine thoroughly. 2. **ஒருவரை அழிக்க வழிதேடுதல்** (யாழ்ப்.); to take measures to ruin a person. 3. **துனியம் வைத்தல்**; to ruin a person by the evil influence of spirits, as by sorcery (சா.அக.).

*[அற (நி.கா.வி.எ.) = நீங்க, கெட, அழிய, சாக. பார்த்தல் = வழிபார்த்தல்.]*

**அறப்புறங்காவல்** *aṟa-p-puṟaṅ-kāval*, தொ.பெ. (vbl.n.) **அறத்திற்காக விடப்பட்ட மானியங் களைப் பாதுகாத்தல்**; protection of endowments of land to religious and social charities. "*அறப்புறங் காவ னாடு காவலென*" (நம்பியகப். 72).

*[அறம் + புறம் + காவல். கா → காவல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]*

**அறப்புறம்** *aṟa-p-puṟam*, பெ. (n.) 1. **கரிசு, தீவினை** (**பாவம்**); sin. "*அறப்புறத் தினார் புரம் பொடித்த*" (திருவிளை. தண்ணீர்ப். 9). 2. **அறத்திற்கு விடப்பட்ட இறையிலி நிலம்**; lands endowed for charitable purposes and exempted from assessment; charitable endowments. "*அறப்புறமு மாயிரம்*" (சீவக. 76). 3. **அறச்சாலை** (**தருமசாலை**), **ஊட்டுப்புரை**; alms-house, feeding house. "*மடமறப் புற*

நீர்ச் சாலை'' (திருவிளை. திருநாட். 33). 4. **ஆரியமறை (வேதம்) ஓதும் பள்ளி** (திவா.); place where the Vēdas are taught, school for Vēdic learning.

[அறம் + புறம். அகம் (உள்) × புறம் (வெளி, அயல்) = 1. அறத்திற்கு அயலான (மாறான) தீவினை (பாவம்). 2. இறை நிலத்திற்கு அயலான (மாறான) இறையிலி நிலம் அல்லது இடம். புறம் = வெளி, வெளிப்பக்கம், பக்கம், இடம்.]

[அறம் + போர்.]

**அறப்போர்** *aṟa-p-pōr*, பெ. (n.) 1. **அறநெறியைக் கடைப்பிடித்துச் செய்யும் போர்**; battle in which moral principles are strictly observed. 2. **மதத்தின்பொருட்டு அல்லது ஒருவரின் அல்லது ஒரு நாட்டாரின் விடுதலைக்காகச் செய்யும் போர்**; battle fought for a religious cause or for the liberation of a worthy person or an oppressed country.

**அறம்**[1] *aṟam*, பெ. (n.) 1. **நல்வினை**; good deed. 2. **ஐயம் (பிச்சை)**; alms. 3. **ஏழைகட்கு இலவசமாகக் கொடுப்பது**; free gift to the poor. 4. **நோயாளிகட்கு இலவசமாக மருந்தீகை**; free distribution of medicine to the sick (சா.அக.). 5. **நலமானது**; that which is salutary. ''அறத்துறை மாக்க டிறத்திற் சாற்றி'' (சிலப். 14 : 28). 6. **இன்பம்** (சுகம்); happiness (சம்.அக. கை.). 7. **தகுதியானது**; that which is fitting or worthy. 8. **கற்பு**; chastity. ''அறத்தொடு நிற்குங் காலத் தன்றி அறத்தியல் மரபிலள் தோழி என்ப'' (தொல். பொருள். பொருளியல், 12). 9. **நோன்பு**; fasting. ''நலம்புரி நங்கை வைத்து நல்லறங் காக்க வென்றாள்'' (சீவக. 386). 10. **அறப்பயன் (புண்ணியம்)**; moral or religious merit. ''அறம்பாவ மென்னு மருங்கயிற் றாற்கட்டி'' (திருவாச. 1 : 52). 11. **சமயம்**; religious faith. ''அறனு மொன்றே யரசன்யான் வணிக னீயே'' (சீவக. 544). 12. **ஓதி (ஞானம்)**; wisdom. ''அறத்தின் விருப்புச் சிறப்பொடு நுந்த'' (ஞானா. பாயி. 5). 13. **அறச்சாலை**; feeding house. 'அறத்துக்குப் புறத்தன்' (T.A.S. i, 9). 14. **அறத்தெய்வம்**; goddess of virtue. ''காயுமே யன்பி லதனை யறம்'' (குறள், 77). 15. **நடுநிலையறம் பேணும் கூற்றுவன்**; god of death, as the impartial one. ''அறத்தின் மைந்தனுக்கு'' (பாரத. வாரணா. 111).

ம. அறம்; க. அற.

[அல்லுதல் = பொருந்துதல், உளம்பொருந்துதல், விரும்புதல், நட்புச்செய்தல், அன்புகூர்தல், அறஞ்செய்தல். அல் + பு – அல்பு. ஒ.நோ : வல் + பு – வன்பு. அல் → அலம் → அதம் → ஆதம் = அன்பு. ல → த, போலித்திரிபு. ஒ.நோ: சலங்கை → சதங்கை, லாலாட்டு → தாலாட்டு. அதம் → அறம். ஒ.நோ : மதம் → மறம்.]

**அறம்**[2] *aṟam*, பெ. (n.) 1. **கேடு, அழிவு**; ruin, destruction. 2. **கேடுண்டாக்குஞ் செய்யுட் சொல் அல்லது எழுத்து**; letters or words in a verse which cause harm or ruin. அறம் விழப் பாடினான்.

ம. அறம்; க., தெ. அற.

[அறுதல் = நீங்குதல், அழிதல். அறுத்தல் = நீக்குதல், அழித்தல். அறு → அறம். ஒ.நோ : கறு → கறம். 'அம்' தொ.பெ. ஈறு, பண்.பெ. ஈறு.]

**அறம்பாடு-தல்** *aṟam-pāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. **அறநூல் கூறுதல்**; to state or declare, as a poetic treatise on virtue. ''அறம்பா டிற்றே யாயிழை கணவ'' (புறநா. 34 : 7). 2. **தீச்சொற் பட்டுத் தீங்குண்டாகப் பாடுதல்**; to compose verse which contains letters or words that cause harm or ruin. அந்தப் புலவரைப் பகைத்துக்கொள்ளக் கூடாது; அறம்பாடி விடுவார் (உ.வ.).

அறம்[2] பார்க்க; see *aṟam*[2].

**அறம்புறம்** *aṟam-puṟam*, பெ. (n.) 1. **தடுமாற்றம்**; confusion of mind (சா.அக.). 2. **மதிப்புரவின்மை (மரியாதையின்மை)** (யாழ்ப்.); disrespect, want of courtesy (J.).

'அகம்புறம்' என்னும் மரபிணைமொழியை அறம்புறம் என வழங்குவது கொச்சை வழக்கென அறிக.

**அறம்புறமாகப்பேசு-தல்** *aṟam-puṟam-āga-p-pēśu-*, 5 செ.குன்றாவி., செ.கு.வி. (v.t. & v.i.) **மதிப்புரவின்றித் தாழ்வாகப் பேசுதல்** (யாழ்ப்.); to speak disrespectfully (J.). அவரை அறம்புறமாகப் பேசுகிறான். அறம்புறமாகப் பேசாதே (உ.வ.).

[அறம் + புறம் + ஆக (கு.வி.எ. ஈறு) + பேசு.]

**அறமறை** *aṟamaṟai*, பெ. (n.) *வாழை*; plantain tree, *Musa paradisiaca* (சா.அக.).

**அறமன்றம்** *aṟa-maṉṟam*, பெ. (n.) **வழக்கு மன்றம்** (இக்.வ.); Law-court (Mod.).

**அறமிளகரணை** *aṟa-miḷag(u)-araṇai*, பெ. (n.) **ஒருவகை மிளகரணை**; prickly scopolia, *Scopolia bilocularis* (சா.அக.).

[அறம் + மிளகு + அரணை.]

**அறல்**[1] *aṟal*, பெ. (n.) 1. **அறுதல், அறுகை**; becoming detached by cutting. 2. **அரித் தோடுகை**; laving. "மட்டற னல்யாற்று" (புறநா. 177 : 10). 3. **அறுத்துச் செல்லும் நீர்**; flowing water that causes breaches to the bank. "எக்கர்போழ்ந் தறல்வார" (கலித். 29 : 6). 4. **நீர்**; water. "மாவலி மாவலி முழுதுமாற்ற மாற்றங்கொண் டறல் கொண்டு" (மாற. மேற். 723). 5. **நீர்த் திரை** (திவா.); wave, ripple. 6. **நீர்க்கடுப்பு**; slow and painful discharge of the urine drop by drop, *Stranguary* (சா. அக.). 7. **கொற்றான்** (பச்.மூ.); *koṟṟāṉ*, a parasitic leafless plant.

ம. அறல்

[அறுதல் = அறுபடுதல், நீங்குதல், சிறிது சிறிதாகப் பிரிதல். அறுத்தல் = அரித்தல், ஊடறுத்தல். அறு → அறல் (தொ.பெ., தொ.ஆகு.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அறல்**[2] *aṟal*, பெ. (n.) 1. **கருமணல்**; black sand. "தண்ணறல் வண்ணந் திரிந்துவேறாகி (மணிமே. 20 : 41). 2. **இரும்புமணல்**; sand mixed with iron dust (சா.அக.). 3. **கருமணல்போற் கருத்த கூந்தல்**; long, flowing tresses of women. 4. **பெண்டிரின் மயிர் நெறிப்பு** (பெரும்பாண். 162, உரை); curl of woman's hair. 5. **நுண்மணல்** (பொதி.நி.); fine sand. 6. **(மயிர்போல் அடர்ந்த) சிறு தூறு** (திவா.); small thicket.

ம. அறல்

[அல் = இருள், கருமை. அல் → அர் → (அரல்) → அறல் = கரியது.]

அறல் (கருமணல்) கூந்தலுக்குக் குறிக்கப் பட்ட உவமங்களுள் ஒன்று.

**அறல்**[3] *aṟal*, பெ. (n.) 1. **கலியாணம், இன்ப வாழ்வு**; happiness, prosperity. "அறலிமை யோருற" (மாற. மேற். 723). 2. **விழா** (பொதி.நி.); festival.

**அறவச்சுன்னம்** *aṟava-c-cuṉṉam*, பெ. (n.) **புட மிடப்பட்ட சுன்னம்**; a metallic calx (சா.அக.).

**அறவழக்கம்** *aṟa-vaḻakkam*, பெ. (n.) **அறநுவற்சி** (**தருமோபதேசம்**); moral or religious instruction. "அருளிருந்த திருமொழியா லறவழக்கங் கேட்டிலமால்" (வீரசோ. யாப். 15, உரை).

[அறம் + வழக்கம். வழங்கு → வழக்கு → வழக்கம் (தொ.பெ.). 'அம்' தொ.பெ. ஈறு. வழங்குதல் = சொல்லுதல்.]

**அறவன்** *aṟavaṉ*, பெ. (n.) 1. **அறவியல்பன்** (**தருமவான்**); one who is virtuous. "அறவனீயல்லையோ" (திருவிளை. தண்ணீர்ப். 36). 2. **சமண அறங்கூறுவோன்**; one who teaches the doctrines of Jain religion. "அருகனறவனறிவோற் கல்லது" (சிலப். 10 : 202). 3. **இறைவன், திருமால்**; god, *Tirumal*. "அறவனை யாழிப்படை யந்தணனை" (திவ். திருவாய். 1 . 7 : 1). 4. **முனிவன்** (சூடா.); sage, ascetic. 5. **அந்தணன்**; sage. "அறவரடிதொடினும்" (பரிபா. 8 : 68).

ம. அறவன்

[அறம் → அறவன். 'அன்' ஆ.பா. ஈறு.]

**அறவாடி** *aṟavāḍi*, பெ. (n.) **அனைத்தியல் இறக்கம்** (**சர்வத் திராவகம்**); universal solvent which is useful for all metallic preparations in medicine (சா.அக.).

**அறவாணன்** *aṟa-vāṇaṉ*, பெ. (n.) **அறவடிவான கடவுள்**; God, the abode of virtue. "அறவாணர்க் கன்பென்னு மமுதமைத் தர்ச்சனை செய்வார்" (பெரியபு. வாயி. 8).

[அறம் + வாணன். வாழ் → வாழ்கின்றான் → வாழுந்நான் → வாழுநன் → வாழ்நன் → வாணன் (மருஉ).]

**அறவாய்ப்போ-தல்** *aṟav(u)-āy-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **முற்றும் செலவாய்ப் போதல்**; to be exhausted, completely spent.

[அறவு + ஆய் + போ. அறுதல் = நீங்குதல், தீர்தல். அறு → அறவு (தொ.பெ.). 'வு' (அவு) தொ.பெ. ஈறு. 'ஆய்' வி.எ. ஈறு.]

**அறவாழி**[1] *aṟa-v-āḻi*, பெ. (n.) **அறச்சக்கரம்** (**தருமசக்கரம்**); wheel of virtue. "அருளோடெழுமறவாழி யப்பா" (திருநூற். 5).

[அறம்+ஆழி. ஆல் → ஆலி → ஆழி (சுழலுஞ் சக்கரம்).]

**அறவாழி**[2] *aṟa-v-āḻi*, பெ. (n.) **அறக்கடல், அறவாரி**; sea or ocean of virtue. "அறவாழி யந்தணன்" (குறள், 8).

[அறம் + ஆழி. ஆழ் → ஆழி = ஆழ்ந்த கடல். 'இ' வி.முத. ஈறு.]

**அறவாழிக்கை** *ara-v-āli-k-kai*, பெ. (n.) (நடம்) *நடத்திற்குரிய ஒருவகை இணைக்கை யமைதி*; (Dan.) gesture involving the use of both the hands in one of 4 different dance attitudes, viz., 'அஞ்சலிக்கை (அஞ்சலி ஹஸ்தம்), ஊழ்கக் கை (தியான ஹஸ்தம்), பூக்குடலைக் கை (புஷ்பபுட ஹஸ்தம்), அறவாழிக்கை (தர்மசக்கர ஹஸ்தம்). வலக்கரத்தை மார் போடு அமைத்து வெளிமுகமாக வியாக்யான முத்திரை பிடித்து இடக்கையை வலக்கை யருகே கொணர்ந்து உள்முகமாகத் திருப்பி, சுட்டுவிரலும் பெருவிரலும் ஒன்றை ஒன்று தொட்டமையவும், பிறவிரல்கள் பின் அடங்கி நிற்கவும், ஞானமுத்திரையாகப் பிடித்த கையமைதியும் தர்மசக்கர பிரவர்த்தன முத்திரை எனப்படும். இது தர்ம சக்கரத்தை இயக்கிவிடும் முத்திரை என்று பொருள்படும். இதற்கு அறவாழிக்கை என்ற அழகிய பெயரு முளது' (சி.செ. பக். 43-44.)

[அறம் + ஆழி + கை. ஆல் → ஆலி → ஆழி. ஆலுதல் = வட்டமாக வரல், சுற்றுதல், சுழலு தல்.]

**அறவாளன்** *ara-v-ālan*, பெ. (n.) *அறவியல்பன்* (*தருமவான்*); virtuous man.

[அறம் + ஆளன் (ஆ.பா. ஈறு). அறவாட்டி (பெ.பா.).]

**அறவி** *aravi*, பெ. (n.) 1. *அறம்*; virtue. "ஒங்குயர் சமந்தத் துச்சி மீமிசை யறவியங் கிழவோன்" (மணிமே. 11 : 22-3). 2. **அற வினைக்கு உதவுவது**; that which is set apart for charitable purposes. "அறவி நாவா யாங்குளது" (மணிமே. 11 : 25). 3. **துறவினி**; female ascetic. "ஆசில் கொள்கை யறவிபா லணைந்து" (சிலப். 13 : 103). 4. **ஊர்ப் பொதுமடம்**; public choultry or rest-house. "உலக வறவியி னொருபுடை யிருத்தலும்" (மணிமே. 7 : 93).

[அறம் → அறவி. 'வி' (இ) ஓர் ஈறு.]

**அறவிடு-தல்** *ara-vidu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. **முற்றும் நீக்குதல்**; to give up completely, renounce altogether. "உளதுமிலது மற விட்டு" (ஞானவா. மானுவே. 17). 2. **விற்றல்**; to sell off. 'ஆபத்துக் காலத்திலே அறவிட்டு ஜீவிப்பாரும்' (ஈடு, 3 . 6 : 9).

**அறவிநாவாய்** *aravi-nāvāy*, பெ. (n.) 1. **அறத் துறை யம்பி**; ferry-boat that conveys the poor across a river or canal free of charge. 2. **ஆதன்களைப் (ஆன்மாக்களைப்) பிறவிப் பெருங்கடலிற் கடத்திவிடும் கப்பலாகிய இறை வன்**; God, as the ship that transports souls fit for salvation across the sea of births.

"ஒங்குயர் சமந்தத் துச்சி மீமிசை
யறவியங் கிழவோ னடியிணை யாகிய
பிறவி யென்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய்"

(மணிமே. 11 : 22-25).

**அறவிய** *araviya*, கு.பெ.எ. (adj.) *அறத்தொடு கூடிய*, **அறவியலுள்ள**; virtuous, disposed to virtue. "அறவிய மனத்த ரன்றி" (சூளா. தூது. 91).

[அறம் + இய (கு.பெ.எ. ஈறு).]

**அறவியங்கிழவோன்** *aravi-y-an-kilavōn*, பெ. (n.) **அறத்திற்கு உரிமை பூண்டவன் அல்லது அறத்தின் தலைவனான புத்தன்**; the Buddha, as wedded to or lord of virtue. "ஒங்குயர் சமந்தத் துச்சி மீமிசை யறவியங் கிழவோன்" (மணிமே. 11 : 22-3).

[அறவி + அம் (சாரியை) + கிழவோன். கிழமை → கிழவன் → கிழவோன். அன் → ஓன் (ஆ.பா. ஈறு).]

**அறவியான்** *araviyān*, பெ. (n.) **அறத்தில் நிற் பவன்**; virtuous man. "அறவியாற் காறு மூன்று மமைந்தநா லமிர்த மேந்த" (சீவக. 1125).

[அறம் → அறவி + ஆன் (ஆ.பா. ஈறு).]

**அறவிலை** *ara-vilai*, பெ. (n.) *முழு விற்பனை*; absolute, unconditional sale. "அறவிலை செய்தனன்" (திவ். திருவாய். 8 . 1 : 10).

[அறு → அற + விலை.]

**அறவிலைவாணிகன்** *ara-vilai-vāṇigan*, பெ. (n.) **பொருள் கொடுத்து அறத்தை விலைக்கு வாங்கு வோன்**; one who practises virtue, not for virtue's sake, but for the reward it brings here and hereafter, one who buys virtue. "இம்மைச் செய்தது மறுமைக் காமெனு மற விலை வாணிகன்" (புறநா. 134 : 1-2).

[அறம் + விலை + வாணிகன். வில் → விலை (தொ.பெ.). 'ஐ' தொ.பெ.ஈறு. வாணி கம் → வாணிகன். 'அன்' ஆ.பா. ஈறு.]

**அறவினை** *aṟa-viṉai*, பெ. (n.) அறச்செயல்; virtuous deed. "அறவினை யாதெனின் கொல்லாமை" (குறள், 321).

[அறம் + வினை.]

**அறவு** *aṟavu*, பெ. (n.) நீங்குகை, ஒழிகை, தீர்கை; severance, cessation, exhaustion, extinction. "நீரற வறியாக் கரகத்து" (புறநா. 1 : 12).

[அறு → அறவு (தொ.பெ.). 'வு' (அவு) தொ.பெ. ஈறு.]

**அறவுபதை** *aṟa-v-ubadai*, பெ. (n.) அமைச்சர், படைத்தலைவர் முதலிய தலைமை அரசிய லலுவலரை அரசன் தேர்ந்தெடுக்கக் கையாளும் நால்வகை மரும ஆய்வுகளுள் ஒன்று, அறத் தேர்திறம்; loyalty test, one of the four secret selection tests for appointment to top-ranking government posts such as ministers and army-chiefs, conducted by ancient sovereigns for ascertaining their honesty by placing the aspirants in trying situations, constantly exposing them to concocted tales of their sovereign's unrighteousness.

"அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்"
(குறள், 501).

[அறம் + Skt. upa-dhā > த. உபதை. Skt. upa = அண்டை, பக்கம், பால், உடன், கீழ், துணை என்று பொருள்படும் குறிப்புப் பெய ரெச்ச வினையெச்ச முன்னொட்டு (pref.). Skt. dhā = இடு (வினை, து.வி.).]

அறத்தேர்திறமாவது, கோயிற் பூசாரியும், ஈகையாளரும், பொதுநலத் தொண்டரும், துறவியரும், இறையடியாரும் போன்றாரை விடுத்து, நம் அரசன் ஏழை செல்வன் என்னும் வேறுபாடின்றி எல்லாக் குடிகட்கும் கடுவரி யிட்டு மழை பெய்யாப் பஞ்சகாலத்தும் ஈகை யிரக்கமில்லாக் காலகண்டரைக் கொண்டு துன்புறுத்தி வரி தண்டுவதால், இக்கொடுங் கோலனை நீக்கிவிட்டுச் செங்கோலனான வேறொருவனை அரசனாக்குவோம் என்று சொல்வித்து, அதிகாரியாகத் தேரப்படும் ஒருவரின் கருத்தைச் சூளுறவுடன் தெரிந்து கொள்ளுதல்.

பொருட்டேர்திறம், இன்பத்தேர்திறம், உயிரச்சத்தேர்திறம் என்னும் ஏனை மூன்றை, அவ்வச் சொற்களின்கீழ்க் காண்க.

**அறவுரை** *aṟa-v-urai*, பெ. (n.) அறவியல் அல்லது சமயவியல் அறிவுரை (தருமோப தேசம்); religious or moral instruction (அருங்கலச். 124).

**அறவுளி**[1] *aṟa-v-uḷi*, பெ. (n.) ஒரு நோயாளியை நலம்பெறச் செய்யும் மந்திரம் (வின்.); charms employed to cure a sick person (செ.அக.) — நோயாளிக்கு மந்திரித்தல்; psychic or magnetic cure effected in a sick person (சா.அக.).

[அறு → அறவு (தொ.பெ.) = நீக்கம், நோய் நீக்கம். 'அவு' தொ.பெ. ஈறு. உள்ளுதல் = கருதுதல். உள் → உள்ளி = கருதுவது. 'இ' வி.முத. ஈறு.]

**அறவுளி**[2] *aṟa-v-uḷi*, பெ. (n.) முடிவு; cessation.

[அறு → அறவு = நீக்கம், முடிவு. 'உளி' ஒரு முதனிலைப் பொருளீறு (பகுதிப்பொருள் விகுதி). ஒ.நோ: பழுது + உளி – பழுதுளி. "சிறுகட் பன்றி பழுதுளி போக்கி" (மலைபடு. 153). இனி, உளி = உள்ளது. அறவுளி = முடி வாகவுள்ளது எனினுமாம்.]

**அறவூதல்** *aṟa-v-ūdal*, தொ.பெ. (vbl.n.) 1. முழுமையுஞ் சாம்ப லாகும்படி ஊதுதல் (சா. அக.); to heat by blowing fire and reduce a substance to ashes. 2. புடமிடல்; to sublimate or calcinate, as is done to chemicals.

[அறு → அற (நி.கா.வி.எ.) = முழுதும். ஊது → ஊதல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு.]

**அறவூது-தல்** *aṟa-v-ūdu-*, 5 செ.குன்றாவி. (v.t.) புடமிடுதல் (வின்.); to refine, as gold, sublimate, as chemicals.

[அறு → அற + ஊதுதல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

அறவூதல் பார்க்க; see *aṟa-v-ūdal*.

**அறவை-த்தல்** *aṟa-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) புடமிடுதல்; to refine. "அறவைத் தோங்கும் பொன்னிறத்தர்" (கூர்மபு. நவகண். 5).

[அறு → அற (நி.கா.வி.எ.) = ஒட்டற, குற்றம் நீங்க. அற + வை. 'வைத்தல்' (தொ. பெ.). 'தல்' தொ.பெ. ஈறு.]

**அறவை**[1] *aṟavai*, பெ. (n.) அறநெறி, அற வொழுக்கம்; righteousness. "அறவை நெஞ் சத் தாயர்" (புறநா. 390 : 1).

[அறம் → அறவை. 'வை' பண்.பெ. ஈறு.]

அறவை[2] aṟavai, பெ. (n.) 1. **உதவியற்ற நிலை**; helplessness, destitution. "அறவை யேன் மனமே கோயிலாக் கொண்டு" (திருவாச. 37 : 6). 2. **தீமை**; evil, violence. "அறவைத் தொழில்புரிந்து" (தேவா. 4 . 110 : 7).

[அறு → அறவை = உதவியற்ற அல்லது நன்மையற்ற நிலை. 'அவை' தொ.பெ. ஈறு.]

**அறவைச்சிறை** aṟavai-c-ciṟai, பெ. (n.) **கடுஞ் சிறை**; rigorous imprisonment, distressing captivity. 'ஸம்ஸாரமாகிற அறவைச் சிறை' (ஈடு, 1 . 3 : 11).

[அறவை = தீங்கு, கடுமை. சிறைத்தல் = தடுத்தல். 'சிறை' முத.தொ. ஆகு.]

அறவைச்சோறு aṟavai-c-cōṟu, பெ. (n.) **களைகணிலிகட்கும் ஏழை யெளியவர்க்கும் இடும் உணவு** (பிங்.); food for the helpless and the destitute.

[அறம் → அறவை. 'வை' பண்.பெ. ஈறு. சொல் (நெல்) → சொறு → சோறு.]

**அறவைத்தூரியம்** aṟavai-t-tūriyam, பெ. (n.) **களைகணிலிகட்கும் ஏழையெளியவர்க்கும் அளிக்கும் உடை** (பிங்.); clothes for the helpless and the destitute.

[அறம் → அறவை. தூரியம் = ஒருவகை யாடை (சிலப். 14 : 108, அடியார்க். உரை).]

அறவைச்சோறு பார்க்க; see aṟavai-c-cōṟu.

அறவைப்பிணஞ்சுடு-தல் aṟavai-p-piṇañ-cuḍu-, 17 செ.குன்றாவி. (v.t.) **கவனிப்பாரற்ற பிணத்தை யெடுத்துச் சுடுதல்** (பிங்.); cremating an unclaimed corpse.

[அறம் → அறவை + பிணம் + சுடு.]

அறவைப்பு aṟa-vaippu, தொ.பெ. (vbl.n.) **அற வைத்-தல்** பார்க்க; see aṟa-vai-.

**அறவோர்** aṟavōr, பெ. (n.) **அறவாளர்**; virtuous persons. "அறவோ ரவைக்களம்" (சிலப். 30 : 193).

அறவோர்பள்ளி aṟavōr-paḷḷi, பெ. (n.) **சமண, புத்தக் கோயில்** (சிலப். 5 : 179, உரை); Jain or Buddhist temple.

[அறம் → அறவோர். ஆர் → ஓர் (ப.பா. ஈறு). பள் → பள்ளி = படுக்கை, படுக்குமிடம், வீடு, கோயில். 'இ' இடப்பொருளீறு.]

**அறவோலை** aṟa-v-ōlai, பெ. (n.) **கையடை யாவணம்** (வெட்.); trust deed (Insc.).

இனாம் சாசனம் என்பது சென்னை யகர முதலியிற் குறிக்கப்பட்டுள்ள பொருள்.

[அறம் + ஓலை (கருவி ஆகு.).]

**அறவோன்** aṟavōṉ, பெ. (n.) 1. **அறவாளன்** (தருமிஷ்டன்); virtuous man. 2. **புத்தன்**; the Buddha. "அறவோ னாசனம்" (மணிமே. 12 : 11).

[அறம் → அறவோன். ஆன் → ஓன் (ஆ.பா. ஈறு.]

**அறளிகா** aṟaliga, பெ. (n.) **ஏறத்தாழப் பதினோரகவையுள்ள குதிரையினுடைய பற்களின் பொன்னிறம்** (அசுவசா. 6); golden colour of the teeth of horses when they are about eleven years old.

அறளை aṟaḷai, பெ. (n.) 1. **ஒரு நோய்** (வின்.); a kind of disease. 2. **நச்சுத் தொந்தரவு** (யாழ்ப்.); teasing, fretfulness, murmuring, as of old people, repining, babbling, as of the old or sick (J.).

[அரள் → (அரளை) → அறளை = அரட்டு.]

**அறளையம்** aṟaḷaiyam, பெ. (n.) **அறணையம்** பார்க்க; see aṟaṇaiyam.

அறன் aṟaṉ, பெ. (n.) 1. **நல்வினை**; good deed. 2. **எளியார்க்கீதல்**; giving to the poor. 3. **மனத்தூய்மை**; purity of mind. "மனத்துக் கண் மாசில னாத லனைத்தறன்" (குறள், 34). 4. **சமயம்**; religion, religious faith. "அன்றியு மறனு மொன்றே" (சீவக. 544). 5. **வேள்வி முதல்வன்**; one who performs a sacrifice, as performing a sacred duty. "ஞாயிறுந் திங்களு மறனு மைவரும்" (பரிபா. 3 : 5).

[அறம் → அறன். ம் → ன், இறுதிப்போலி.]

அறம் பார்க்க; see aṟam.

அறன்கடை aṟaṉ-kaḍai, பெ. (n.) **கரிசு, தீவினை** (பாவம்); sin. "அறன்கடை நின்றாரு ளெல்லாம்" (குறள், 142).

அறனில்பால் aṟaṉ-il-pāl, பெ. (n.) **தீவினை, அறமில்லாத பழவினை**; evil destiny. "போக்கிய புணர்த்த வறனில் பாலே" (ஐங்குறு. 376).

[அறம் → அறன் + இல் (இல்லாத) + பால். பகு → பகல் → பால் = பகுதி, ஊழ்.]

**அறனிலாளன்** *aṟaṉ-il-āḷaṉ*, பெ. (n.) ***அறச்செய லில்லாதவன்***; one who does not practise virtue. "அறனி லாளற் கண்ட பொழுதில்" (ஐங்குறு. 118).

*[அறம் → அறன் + இல் (இல்லாத) + ஆளன் (ஆ.பா. ஈறு).]*

**அறனீர்** *aṟaṉīr*, பெ. (n.) *அருநீர்* (R.T.); water allowed for irrigation, in large or small quantities depending on the storage level in the reservoir.

*[அறல் + நீர். அறு → அறல்.]*

**அறனையம்** *aṟaṉaiyam*, பெ. (n.) ***காட்டுக் கரணை*** (சங்.அக.); purple-stalked dragon plant.

*அறணை* பார்க்க; see *aṟaṇai*.

**அறனோம்படை** *aṟaṉ-ōmbaḍai*, பெ. (n.) 1. ***அறத்தைப் பாதுகாக்கை*** (சிலப். 5 : 179, அரும்.); fostering virtue. 2. ***அறத்தைப் பாது காக்குமிடம்***; institution where virtue is fostered. 3. ***அறத்தை நுவலும் (போதிக்கும்) இடம்***; place of moral and religious instruction. " அறவோர் பள்ளியு மறனோம் படையும் " (சிலப். 5 : 179).

*[அறம் → அறன் + ஓம்பு + அடை. ஓம்புதல் = பாதுகாத்தல். அடு → அடை.]*

**அறாக்கட்டை** *aṟā-k-kaṭṭai*, பெ. (n.) 1. *மூடன்*; fool. 2. ***கஞ்சன், பிசினாறி*** (சென்னை); miser (Madr.).

*[அறு → அறாத → அறா (ஈ.கெ.எ.ம.பெ.எ.). கட்டை = மரக்கட்டை, கட்டை போன்ற உடம்பு, உடம்புள்ள ஆள் (ஆகு).]*

இங்குக் கட்டை யென்றது இழிவுகுறிப்பு. அறுக்க முடியாத கட்டைபோற் பயன்படா தவன் என்பது கருத்துப்போலும்.

**அறாட்டுப்பறாட்டு** *aṟāṭṭu-p-paṟāṭṭu*, பெ. (n.) ***போதியதும் போதாதுமானது;*** that which may or may not be sufficient (ஈடு, 3 . 7 : 3).

*[ஒருகா. அறை → அறாட்டு. அறை = நீங்கு தல், குறைபடுதல். அறாட்டு = குறைபடும் தன்மை. 'அறாட்டுப்பறாட்டு' எதுகை மரபிணை மொழி.]*

*அறை*[3] பார்க்க; see *aṟai*[3].

**அறாநட்பு** *aṟā-naṭpu*, பெ. (n.) ***நிலைத்த நட்பு***; lasting friendship.

*[அறுதல் = நீங்குதல். அறு → அறாத → அறா (ஈ.கெ.எ.ம.பெ.எ.). நள் → நட்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]*

**அறாம்பை** *aṟāmbai*, பெ. (n.) ***தும்பை*** (சங். அக.); white dead-nettle (செ.அக.) – bitter leucas, *Leucas aspera* alias *Phlomis aspera* (சா.அக.).



அறாமதி

**அறாமதி** *aṟā-madi*, பெ. (n.) ***நாரை***; crane (சா.அக.).

**அறாமை** *aṟāmai*, பெ. (n.) ***கவிழ் தும்பை*** (மலை.); species of *Tricodesma* (செ.அக.) – stooping leucas plant, *Phlomis biflora* (சா.அக.).

**அறாயிரம்** *aṟāyiram*, பெ. (n.) ***ஆறாயிரம்;*** the number 6000.

*[ஆறு → அறு + ஆயிரம் – அறாயிரம்.]*

"மூன்று மாறு நெடுமுதல் குறுகும்"
(தொல். எழுத்து. குற்றியலுகர. 35)

என்னும் நூற்பாவின்படி ஆறு என்னும் நிலைச்சொல் அறு எனக் குறுகி நின்று புணரும்.

" ஆயிரக் கிளவி வருஉங் காலை
முதலீ ரெண்ணி னுகரங் கெடுமே "
(ஷை 59),

" ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்"
(ஷை 64),

என்னும் நூற்பாக்களின்படி, ஆறு + ஆயிரம் - அறாயிரம் எனப் புணர்ந்தது.

" ஆறன் மருங்கில் " என்னும் நூற்பாவின் விளக்கவுரையில், "முன்னர் 'நெடுமுதல் குறுகும்' (தொல். எழுத்து. குற்றியலுகர. 35) என்ற வழி அறுவென நின்ற முற்றுகரத்திற்கே ஈண்டுக் கேடு கூறினா ரென்பது பெற்றாம். என்னை? குற்றியலுகரமாயின் ஏறி முடிதலின். இது குற்றுகரந் திரிந்து முற்றுகரமாய் நிற்றலின் ஈண்டு முடிபு கூறினார். முற்றிய லுகரம் ஈறுமெய் யொழியக் கெடுமெனவே, குற்றுகரங் கெடாது ஏறி முடியுமென்பது

அருத்தாபத்தியிற் பெறுதும். ஆறாயிரம் எனவரும்'' என **நச்சினார்க்கினியர்** உரைத் ததைக் கவனிக்க. அருத்தாபத்தியைத் தமிழில் எதிர்மறையெச்சம் எனலாம்.

**அறாவட்டி** *aṟā-vaṭṭi*, பெ. (n.) **அதிக** வட்டி, கடுவட்டி; exorbitant interest. "அன்னியரை யெல்லாம் அறாவட்டி வாங்கி" (நெல்விடு. *368*).

*[அறுதல் = அறத்தொடு முடிதல் அல்லது கூடு தல். அறு → அறாத → அறா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + வட்டி.]*

வட்டி பார்க்க; see *vaṭṭi*.

**அறாவழக்கு** *aṟā-vaḻakku*, பெ. (n.) முடிவிற்கு வராத வழக்கு **அல்லது சச்சரவு**; endless dispute. 'கொட்டை முந்தினதோ பனை முந்தினதோ என்கிற அறாவழக்கிலே' (சிவப் பிர. *34*, உரை).

*[அறுதல் = தீர்தல். அறு → அறாத → அறா (ஈ.கெ.எ.ம.பெ.எ.). வழங்கு → வழக்கு.]*

**அறாவிலை** *aṟā-vilai*, பெ. (n.) **அளவிற்கு மிஞ்சிய விலை** (வின்.); exorbitant price. "நடந்து கொள்ளுநர்க் கறாவிலை பகர்ந்து" (திருவிளை. விறகு. *17*).

*[அறு → அறாத → அறா (ஈ.கெ.எ.ம.பெ.எ.). வில் → விலை (ஆகு.) = விற்ற பணம்.]*

அறாவட்டி பார்க்க; see *aṟa-vaṭṭi*.

**அறாவு-தல்** *aṟāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அடித்தல்**; to strike, beat, whip. "மத்திகை யினா லறாவி" (சீவக. *703*).

*[அறு → அறை. அறைதல் = அடித்தல். அறு → (அற) → (அறவு) → அறாவு.]*

**அறி-தல்** *aṟi-*, 2 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஐம் புலனால் உணர்தல்**; to perceive by the senses. *2.* **மதியினா லுணர்தல்**; to know, understand, comprehend, recognise. "ஆவ தறிவார்ப் பெறின்" (நாலடி. *73*). *3.* **மனத்தினா லுணர் தல்**; to conceive, to know by imagination or deliberation. *4.* **புதிதாய்க் கண்டுபிடித்தல்** (புதுவை); to discover (Poṇḍ.). *5.* **தேறுதல், திட்டஞ்செய்தல்**; to ascertain, determine, decide. "அழிபட வாற்றா லறிமுறை யேன்று" (பு. வெ. *8:19*). *6.* **நினைத்தல்** (பிங்.); to think. *7.* **மதித்தல்**; to esteem, prize. "யாமறிவ தில்லை யறிவறிந்த மக்கட்பே றல்ல பிற" (குறள், *61*). *8.* **நுகர் தல், பட்டறிதல் (அனுபவித்தல்)**; to experience. "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புல னும்" (குறள், *1101*). *9.* **பயிலுதல்**, to know by practice, to be accustomed to. "களவறிந் தார் நெஞ்சிற் கரவு" (குறள், *288*).

ம. அறியுக; க., குட., து. அறி; தெ. எறுகு; பட. அறதனெ; கோத. அர்ச்; துட. அர்ச், அர்யி; குரு. அறிதனெ; பிரா. தறிபிங்.

*[ஒருகா. அள் → (அறு) → அறி. அள்ளுதல் = பொருந்துதல். பொருந்தியறிதல். ஒ.நோ: பள் (பள்ளம்) → (பறு) → பறி.]*

**அறி** *aṟi*, பெ. (n.) **அறிவு**; knowledge. "அறி கொன் றறியா னெனினும்" (குறள், *638*).

க. அறி

*['அறி' முத.தொ. ஆகு.]*

**அறிக்கை** *aṟikkai*, பெ. (n.) *1.* **அறிவிப்பு**; notice, report. "தானற வுயர்ந்த துன்பந் தனை நினக்கறிக்கைசெய்ய" (வேதாரணியபு. பரஞ்சோ. மணவாளச். *33*). *2.* (கிறித்.) **குற்றத்தை ஒப்புக்கொள்கை**; (Chr.) confession. 'எருசலேம் நகரத்தாரும் யூதேயா தேசத்தார் அனைவரும்.........தங்கள் பாவங் களை அறிக்கையிட்டு...........திருக்குளிப்புப் பெற்றார்கள்' (விவிலியம், மத். *3:4-5*). *3.* **பயிற்றுகை** (பொதி.நி.); training, teaching.

ம. அறியிப்பு; க., பட., து. அறிகெ; தெ. எறுக; கோத. அர்க்யம்.

*[அறி (த.வி.) → அறிவி (பி.வி.) → அறி விக்கை (தொ.பெ.) → அறிக்கை. இனி, அறிகை (த.வி., தொ.பெ.) → அறிக்கை (பி.வி., தொ.பெ.) என்றுமாம். ஒ.நோ: செறி → செறிகை (த.வி., தொ.பெ.) → செறிக்கை (பி.வி., தொ.பெ.). 'அறித்தல்' என்னும் பிற வினை இன்று வழக்கற்றது.]*

**அறிக்கைப்பத்திரம்** *aṟikkai-p-pattiram*, பெ. (n.) *1.* **எழுத்துமூலமான விளம்பரம்** (வின்.); advertisement, notification, written notice, proclamation. *2.* **வரலாறு குறிக்கும் இதழிகை**; report. கழகத்தின் மூன்றாம் ஆண்டு அறிக்கைப்பத்திரம்.

*[அறி → அறிக்கை.* **Skt.** pattra > *த. பத்திரம் = இலை, ஓலை, திருமுகம், பட்டயம், ஆவணம்.]*

**அறிக்கை** பார்க்க; see *aṟikkai*.

இதழ், ஏடு, ஓலை, திருமுகம், பட்டயம், ஆவணம் என்பன தமிழ். ஓலை என்பது அதில் எழுதப்பட்டதைக் குறிப்பின் ஆகு பெயர்.

**அறிக்கைபண்ணு-தல்** *arikkai-pannu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *1.* **விளம்பரப்படுத்துதல்**; to advertise, notify, inform. *2.* (கிறித்.) **குற்றத்தை ஒப்புக்கொள்ளுதல்**; (Chr.) to confess.

*[அறிக்கை + பண். பண் → பண்ணு.]*

**அறிக்கை** பார்க்க; see *arikkai*.

**அறிக்கையிடு-தல்** *arikkai-y-idu-*, 18 செ. குன்றாவி. (v.t.) **அறிக்கைபண்ணு** பார்க்க; see *arikkai-pannu*.

க. அறியிஜு; தெ. எறுகபடு.

*[அறிக்கை + இடு.]*

**அறிக்கை** பார்க்க; see *arikkai*.

**அறிக்கையோலை** *arikkai-y-ōlai*, பெ. (n.) **செய்திக்கடிதம்** (குருபரம். 277); letter, as written on palm leaf.

**அறிக்கை** பார்க்க; see *arikkai*.

*[ஓலை = பனையேடு, அதில் எழுதப்பட்ட செய்தி (ஆகு.).]*

**அறிக்கைவாசி-த்தல்** *arikkai-vāši-*, 4 செ.கு.வி. (v.i.) (கிறித்.) **கோயிலில் ஓலை கூறுதல், திருமண அறிக்கை விளம்புதல்**; (Chr.) to publish banns of marriage.

**அறிக்கை** பார்க்க; see *arikkai*.

*[வாய் → வாயி → வாசி. வாயித்தல் = வாயாற் படித்தல் அல்லது குழலிசைத்தல்.]*

**அறிகண்ணி** *ari-kanni*, பெ. (n.) **எருக்கங் கிழங்கு** (சங்.அக.); root of madar.

**அறிகரி** *ari-kari*, பெ. (n.) **கண்கூடாகக் கண்ட சான்றாளன்**; eye-witness, one who has personal knowledge. "அங்கியங் கடவுள் அறிகரி யாக" (தொல். பொருள். கற். 1, உரை).

*['அறிகரி' வினைத்தொகை.]*

**அறிகருவி** *ari-karuvi*, பெ. (n.) **ஐம்புலப் பொறி, அறிவுப்பொறி** (ஞானேந்திரியம்); organs of sense. "அறிகருவி யணையா" (சிவப்பிர. 33).

*['அறிகருவி' வினைத்தொகை. கரு → கருவி = செயல் அல்லது தொழில்துணைப் பொருள். கருத்தல் = செய்தல். இவ் வினை இற்றைத் தமிழில் வழக்கற்றது.]*

**அறிகுறி** *ari-kuri*, பெ. (n.) **அடையாளம்**; mark, token, symbol. "திங்கண்மாட் டறிகுறி யொன்று செய்து" (காஞ்சிப்பு. நகரப். 85).

*['அறிகுறி' வினைத்தொகை.]*

**அறிசலம்** *ari-šalam*, பெ. (n.) **நெஞ்சறிந்த குற்றம்**; conscious guilt. "அனையவவ் விரதத்தோ டறிசலம்" (நீலகேசி, 242).

*['அறிசலம்' வினைத்தொகை.* **Skt.** chala > *த. சலம்.]*

**அறிசா** *ariša*, பெ. (n.) **ஒருவகை மீன்** (சங்.அக.); a kind of fish (செ.அக.) — **பெருவரைமீன்**; a big variety of fish (சா.அக.).

**அறிஞன்** *arinan*, பெ. (n.) *1.* **அறிவுடையோன்**; man of knowledge, savant, wise man. "அன்ன காலையில் வீரவா குப்பெய ரறிஞன்" (கந்தபு. மகேந். வச்சிர. 61). *2.* **புலவன்** (பிங்.); poet, learned man. *3.* **முனிவன்** (சூடா.); sage. *4.* **மதிமகன் (புதன்)**; the planet Mercury.

*[அறி → அறிகின்றான் → அறிகுந்நான் → அறியுந்நான் → அறியுநன் → அறிநன் → அறிஞன்.]*

**அறிதுயில்** *ari-tuyil*, பெ. (n.) *1.* **அறிவு அல்லது உணர்ச்சி குன்றாது தூங்குந் தூக்கம்**; a semi-conscious sleep. *2.* **ஓகத்தூக்கம், தூங்காமல் தூங்கல் (யோகநித்திரை)**; a state of sleep in which the person is conscious of the outer world, the sleep of devotion or abstraction - an attribute supposed to belong to the sages. *3.* **திருமாலின் ஓகத்தூக்கம்**; the conscious sleep of *Tirumāl* (Viṣṇu). "ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன்" (சிலப். 26 : 62). *4.* **விழிப்பொடு தூங்கும் ஒரு நோய்**; wakeful lethargy, *Agryphnocoma* (சா.அக.).

*['அறிதுயில்' வினைத்தொகை. துய் → துயில்.]*

**துயில்** பார்க்க; see *tuyil*.

**அறிதுயிலமர்ந்தோன்** *ari-tuyil-amarndōn*, பெ. (n.) **அனைத்தையும் அறியும் அறிவொடு தூங்கும் திருமால்**; *Tirumāl* (Viṣṇu), who during his sleep is conscious of the universe. "ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன்" (சிலப். 26:62).

*[அறி + துயில் + அமர்ந்தோன். 'அறிதுயில்' வினைத்தொகை. அமர் → அமர்ந்தான் → அமர்ந்தோன் (வினையா.பெ.). ஆன் → ஓன் (ஆ.பா. ஈறு).]*

**அறிந்துதெரிந்து** *arindu-terindu*, வி.எ. (adv.) **தெளிவாக அறிந்துகொண்டு**; knowing fully well, deliberately. அறிந்துதெரிந்து அக் குற்றஞ் செய்தான்.

[அறி → அறிந்து (இ.கா.வி.எ.). தெரி → தெரிந்து (இ.கா.வி.எ.). 'அறிந்துதெரிந்து' எதுகை மரபிணைமொழி.]

**அறிநன்** *arinan*, பெ. (n.) **அறிந்தவன், அறிபவன்;** one who knows. "கோடியர் தலைவ கொண்ட தறிந" (பொருந. 57).

[அறி → அறிகின்றான் → அறிகுந்நான் → அறிகுநன் → அறிநன்.]

**அறிப்பலம்** *arippalam*, பெ. (n.) **திப்பிலி** (மலை.); long pepper, *Piper longum.*

**அறிப்பு** *arippu*, பெ. (n.) **உணர்கை**; comprehension. "அறிப்புறு மமுதாயவன்" (தேவா. 5 . 48 : 4).

[அறி + பு (தொ.பெ. ஈறு).]

**அறிபொருள்வினா** *ari-porul-vina*, பெ. (n.) **அறியப்பட்ட பொருளை ஒரு பயன்நோக்கிக் கேட்குங் கேள்வி;** question put to a person or a student to find out from the answer whether he knows the meaning or has not understood it. 'அறிபொருள் வினா அறியப்பட்ட பொருளையே ஒரு பயனோக்கி அவ் வாய் பாட்டினொன்றான் வினாவுவது. பயன் வேறறிதலும் அறிவுறுத்தலு முதலாயின' (தொல். சொல். கிளவி. 13, சேனா. உரை).

இது அறிவினா எனவும் படும். ஆயின், அது பொருளறியும் வினா என்று பொருள் பட்டு அறியான் வினாவையுங் குறித்தலால், அறிபொருள் வினா என்பதே பொருத்தமாம்.

ஆசிரியன் மாணவனை நோக்கி, 'இந் நூற் பாவிற்குப் பொருள் யாது?' என வினவுவது அறிபொருள் வினாவாம்.

**அறிமடம்** *ari-madam*, பெ. (n.) 1. **அறிந்தும் அறியாததுபோன் றிருக்கை** (சூடா.); assumed ignorance. 2. **அறிந்தபடி நடக்க இயலாமை;** inability to translate into practice what one has learnt. 3. **நினைவின்மை;** forgetfulness, inability to recall to memory. 4. **விளையாடும் பருவத்து நிகழும் அறியாமை** (தொல். பொருள். மெய்ப். 16, பேரா. உரை); innocence of childhood.

['அறிமடம்' வினைத்தொகை.]

இறுதிப் பொருட்குச் சான்று, 'மடந்தப வுரைத்தல் - விளையாடும் பருவத்து நிகழ்ந்த அறிமட நீங்கக் காமப் பொருட்கண்ணே சிறிது அறிவு தோன்றுதல்' என்னும் (தொல். பொருள். மெய்ப். 16) பேராசிரியர் உரையே. அது அத்துணைப் பொருத்தமாகத் தோன்ற வில்லை. விளையாடும் பருவத்து நிகழ்வது அறியாமடமேயன்றி அறிமடமன்று. ஒரு கால், ஏட்டுப் பிழையாகவு மிருக்கலாம்.

**அறிமுகம்** *ari-mugam*, பெ. (n.) 1. **தெரிந்த முகம்;** familiar face. "அறிமு கம்பிற காண்கிலே னடுத்தலூ றறியேன்" (சேதுபு. விதூம. 99). 2. **பழக்கம்** (உ.வ.); acquaintance (Com.u.).

['அறிமுகம்' வினைத்தொகை.]

**அறியக்கொடு-த்தல்** *ariya-k-kodu-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. **தெரிவித்தல்;** to communicate information, to instruct. 2. **குற்ற மேற்றுதல்** (வின்.); to indict, impeach, inform against.

[அறி → அறிய (நி.கா.வி.எ.) + கொடு.]

**அறியகம்** *ariyagam*, பெ. (n.) **நோயை யுண்டாக்கும் ஒரு பேய்;** a demon causing diseases (சா. அக.).

**அறியபலம்** *ariyapalam*, பெ. (n.) **அறிப்பலம்** பார்க்க; see *arippalam* (சா.அக.).

**அறியல்** *ariyal*, பெ. (n.) **மூங்கில்** (சங்.அக.); bamboo, *Bambusa arundinacea.*

**அறியலுறவு** *ariyal-uravu*, பெ. (n.) 1. **அறிவுறுதல்;** acquisition of knowledge. 2. **அறிதற்கண் விருப்பம்** (தொல். சொல். கிளவி. 13, சேனா. உரை); desire for knowledge.

[அறி → அறியல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு. உறு → உறவு (தொ.பெ.). 'வு' (அவு) தொ.பெ. ஈறு.]

**அறியாக்கரி** *ariya-k-kari*, பெ. (n.) **பொய்ச் சான்று;** false evidence. "அறியாக்கரி பொய்த்து" (சிலப். 15 : 78).

[அறி → அறியாத (எ.ம.பெ.எ.) → அறியா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + கரி.]

**அறியாப்பிள்ளை** *ariya-p-pillai*, பெ. (n.) 1. **உலகியலறியாத சிறுவன்;** a boy ignorant of worldly affairs. 2. **சிறுமி;** a small girl ignorant of worldly affairs.

[அறி → அறியாத → அறியா + பிள்ளை.]

**அறியாக்கரி** பார்க்க; see *ariya-k-kari.*

**அறியாப்பெண்** *ariya-p-pen*, பெ. (n.) **பூப்படையாத பெண்பிள்ளை;** a small or immature girl.

'அஞ்சும் மூன்றும் உண்டானால் அறியாப் பெண்ணுங் கறியாக்கும்' (பழ.).

[அறி → அறியாத. அறியா + பெண்.]

அறியாக்கரி பார்க்க; see *ariyā-k-kari*.

**அறியாமை** *ariyāmai*, பெ. (n.) **மடமை**; ignorance. "அறிதோ றறியாமை கண்டற் றால்" (குறள், 1110).

ம. அறியாம; க. அறியமெ.

[அறி + ஆ (எ.ம.இ.) + மை (பண்.பெ. ஈறு).]

**அறியாவினா** *ariyā-vinā*, பெ. (n.) **தெரியாத தொன்றைத் தெரிந்துகொள்ளற்குக் கேட்குங் கேள்வி**; question for eliciting information or knowledge, or for removal of doubt, as one put by the pupil to the teacher. 'இந் நூற்பா விற்குப் பொருள் யாது?' என்பது, மாணவன் ஆசிரியரிடம் கேட்கும் அறியாவினா (நன். 385, உரை).

[அறியாத → அறியா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + வினா.]

**அறியான்வினா** *ariyān-vinā*, பெ. (n.) **அறியா வினா** பார்க்க; see *ariyā-vinā*. 'அறியான் வினா உயிர் எத்தன்மைத்து என்பது' (தொல். சொல். கிளவி. 13, சேனா. உரை).

[அறி + ஆ (எ.ம.இ.) + ஆன் → ன் (ஆ.பா. ஈறு.]

**அறியுநன்** *ariyunan*, பெ. (n.) **உணர்கிறவன்**; one who knows or understands. "அறியுந ராவி போழும் அநங்கனைங் கணையும் எய் தாள்" (சீவக. 1572).

[அறிகின்றான் → அறியுந்நான் → அறியுநன் (வினையா. பெ.).]

**அறிவர்** *arivar*, பெ.(n.) **சிறந்த அறிவுடையோர்**; the wise ones, sages. "கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்" (தொல். பொருள். கற். 52).

[அறி → அறிவு (தொ.பெ.) → அறிவர். 'அர்' ப.பா. ஈறு.]

**அறிவரன்** *arivaran*, பெ. (n.) **அறிவிற் சிறந்த வன்**; one who excels in wisdom. "அரணுல கிற் காய வறிவரனீ யன்றே" (சீவக. 1246).

[அறி + வரன். புரம் → பரம் → வரம் → வரன்.]

வரன் பார்க்க; see *varan*.

**அறிவழி-தல்** *ariv(u)-ali-*, 2 செ.கு.வி. (v.i.) **மதி மயங்குதல்**; to lose one's reason, to be bereft of sense, be infatuated (செ.அக.) — **மதிமயங் கல், ஒரு சாவுக்குறி**; losing sense and consciousness, a symptom of approaching death (சா.அக.).

**அறிவழி** *ariv(u)-ali*, பெ. (n.) 1. **மதிகெடல்**; loss of the senses (சா.அக.). 2. **மது** (யாழ்.அக.); intoxicating liquor which destroys reason and the senses. 3. **பேய்** (யாழ்.அக.); devil (செ. அக.) — a devil causing insensibility (சா. அக.).

க. அறிமருள்

அறி → அறிவு (தொ.பெ.) + அழி (தொ.பெ., தொ.ஆகு.).]

**அறிவறிவாக** *ariv(u)-ariv(u)-āga*, கு.வி.எ. (adv.) **விளக்கமாய்த் (விவரமாய்த்) தெரிந்துகொள் ளும்படி**; so as to ascertain the minutest details. 'மரியாதைகளும் அறிவறிவாக விசாரித்து' (கோயிலொ. 42).

[அறி → அறிவு (தொ.ஆகு.) + அறிவு (தொ. பெ.) + ஆக. ஆகு → ஆக (நி.கா.பெ.எ., கு.வி.எ. ஈறு).]

**அறிவறை** *ariv(u)-arai*, பெ. (n.) 1. **ஆதனறிவம் (ஆன்மபோதம்) இன்மை**; lack of spiritual knowledge. 2. **ஆதனறிவம் (ஆன்மபோதம்) இல்லாதவன்**; one, destitute of spiritual knowledge. 3. **பொய்க்காட்சி**; illusion (சா.அக.). 4. **அறிவு அல்லது உணர்வு அழிகை**; loss of sense (சா.அக.).

[அறி → அறிவு (தொ.பெ.) + அறை. அறு → அறை (தொ.பெ.). 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அறிவறைபோ-தல்** *ariv(u)-arai-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **அறிவு கீழற்றுப் போதல், அறிவு கெட்டழிதல்**; to have one's knowledge or sense undermined. "அறிவறை போகிய பொறியறு நெஞ்சத் திறைமுறை பிழைத் தோன்" (சிலப். 20 : 25-6).

[அறி → அறிவு + அறைபோ. அறு → அறை (தொ.பெ.). 'போ' து.வி.]

**அறிவன்** *arivan*, பெ. (n.) 1. **நல்லறிவுடைய வன்**; man of knowledge, wise man, sage. "அறிவர் தேர்குறி னையன் செய்தன முறைய தாகுமால்" (கந்தபு. அசுர. மார்க்கண். 259). 2. **அருகன்** (திவா.); Arhat. 3. **புத்தன்** (பிங்.); the Buddha. 4. **மதிமகன் (புதன்)** (திவா.);

Mercury. 5. செவ்வாய் (பிங்.); the planet Mars. 6. முரசு (உத்திரட்டாதி) (நாநார்த்த.); the 26th lunar asterism. 7. கணியன்; astrologer. ''நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை'' (கலித். 39 : 46). 8. கம்மாளன் (திவா.); artisan.

[அறி → அறிவு (தொ.பெ.) + அறிவன். 'அன்' ஆ.பா. ஈறு.]

**அறிவனார்** *arivaṉār*, பெ. (n.) பஞ்சமரபு என்னும் இசைநூ லாசிரியர் (சிலப். 6 : 35, அடியார்க். உரை); name of the author of *Pañjamarabu*, an ancient treatise on Tamil Music.

[அறி → அறிவு → அறிவன் → அறிவனார். 'அன்' ஆ.பா. ஈறு. 'ஆர்' உ.ப. ஈறு.]

**அறிவனாள்** *arivaṉāḷ*, பெ. (n.) முரசுநாள் (உத்திரட்டாதி) (திவா.); the 26th lunar asterism.

[அறிவன் + நாள்.]

'அறிவன்' என்பது மதிமகன் (புதன்) என் னும் நாலாங்கோளுக்குப் பெயராய் அமைந் திருக்கும்போது, அதைச் செவ்வாய்க் கோளை யும் முரசுநாளையுங் குறிக்கப் பயன்படுத்து வது அத்துணைப் பொருத்தமான தன்று.

**அறிவாகரன்** *ariv(u)-āgaraṉ*, பெ. (n.) அறிவிற்கு இருப்பிடமாகவுள்ளவன்; a man who is the repository of knowledge, a man of profound knowledge.

ம. அறிவாக்கன்மார்

[அறி → அறிவு (தொ.ஆகு.) + Skt. ākara.]

**அறிவாணி** *arivāṇi*, பெ. (n.) காமமிக்க பெண்டிர் வகுப்பு நான்கனுள் இரண்டாவதைச் சேர்ந்த வள் (சித்தினி); the second of the four classes of lascivious women, as characterised by lust (சா.அக.).

**அறிவாளி** *ariv(u)-āḷi*, பெ. (n.) அறிவுமிக்கவன், கூர்மதியன்; a man of profound knowledge, an intelligent person.

ம. அறிவாளன்

[அறி → அறிவு (தொ.ஆகு.) + ஆளி (ஆ.பா. ஈறு.]

**அறிவாற்றல்** *ariv(u)-āṟṟal*, பெ. (n.) அறிவாகிய அல்லது அறிவின் வலமை; the power of knowledge.

[அறி → அறிவு (தொ. ஆகு.) + ஆற்றல். ஆற்று → ஆற்றல். ஆற்றுதல் = செய்யமாட்டு தல்.]

**அறிவானந்தர்** *arivāṉandar*, பெ. (n.) அகத்தியர் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு வென்னர் (சித்தர்), பல்வகை மருத்துவ நூல்களை இயற்றியவர்; one of the *Siddhas* of the Agattiyar School, author of several treatises on Alchemy and Medicine (சா.அக.).

**அறிவி-த்தல்** *arivi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தெரிவித்தல்; to inform, make known, relate, communicate. 2. வெளியிடுதல்; to publish, announce.

ம. அறியிக்குக

[அறி (த.வி.) → அறிவி (பி.வி.).]

**அறிவிக்கை** *arivikkai*, தொ. பெ. (vbl. n.) அறிவிப்பு பார்க்க; see *arivippu*.

[அறி (த.வி.) → அறிவி (பி.வி.) → அறி விக்கை (தொ.பெ.). 'கை' தொ.பெ. ஈறு.]

**அறிவிப்பு** *arivippu*, பெ. (n.) 1. தெரிவிப்பு; information. 2. விளம்பரம்; notice, publication.

ம. அறியிப்பு; க., பட. அரிகெ.

[அறி (த.வி.) → அறிவி (பி.வி.) → அறிவிப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு.]

**அறிவியல்** *ariv(u)-iyal*, பெ. (n.) அறிவாராய்ச்சி யால் கூர்ந்து நோக்கியும் ஆய்வு செய்தும் மெய்ம்மை கண்டு ஒழுங்குபடுத்தப்பட்ட பொது நெறியீட்டறிவு; science, knowledge ascertained by observation and experiment critically tested, systemised and brought under general principles.

[அறிவு + இயல்.]

**அறிவிலாப்பித்தம் (பிரமை)** *ariv(u)-ilā-p-pittam*, பெ. (n.) பித்தநோய் நாற்பதனுள் ஒன்று; one of the 40 kinds of bilious disorders in the system causing insensibility (சா.அக.).

[அறி → அறிவு + இல் + ஆ + பித்தம். 'ஆ' (ஈ.கெ.எ.ம.பெ.எ. ஈறு). பித்து → பித்தம்.]

**அறிவிலி** *ariv(u)-ili*, பெ. (n.) அறிவில்லாத-வன்-வள்; ignorant person, fool, idiot. ''அறிவிலி யடங்குதி யென்றாள்'' (கம்பரா. அயோத். மந்தரை. 75).

க. அரிவிலி

[அறி → அறிவு + இல் + இ (ஒ. ஈறு).]

**அறிவினா** *aṟi-viṉā*, பெ. (n.) *அறிந்து கேட்குங் கேள்வி*; question for the purpose of testing, as one put by the teacher to the pupil. 'இந் நூற்பாவிற்குப் பொருள் யாது?' என்று ஆசிரியன் மாணவனை வினவுவது அறிவினா (நன். 385, உரை).

*['அறிவினா' வினைத்தொகை.]*

**அறிவினொளி** *aṟiviṉoḷi*, பெ. (n.) *சூடக்கல்லின் (கற்பூர சிலாசத்தின்) சாரம்*; the active principle of the crystallised gypsum (சா.அக.).

**அறிவீனம்** *aṟiv(u)-iṉam*, பெ. (n.) *அறிவின்மை, மடமை*; ignorance.

க. அரிவிலிதன

*[அறி → அறிவு (தொ.ஆகு.) + ஈனம். Skt. hīna > த. ஈனம்.]*

**அறிவு** *aṟivu*, பெ. (n.) 1. *பொறியுணர்வு*; perception by the senses. 2. *உலகியலறிவு*; worldly knowledge. ''அறிவுடையா ரெல்லா முடையார்'' (குறள், 430). 3. *பரவியல் ஓதி (ஞானம்)*; divine knowledge, spiritual wisdom. 4. *மதி*; intelligence, wit. ''எதிரதாக் காக்கு மறிவினார்'' (குறள், 429). 5. *அறிய வேண்டியவை*; things which must be known. ''அறிவறிந்த மக்கட் பேறு'' (குறள், 61). 6. *கல்வி* (திவா.); learning, education, erudition. ''கல்வி கரையில'' (நாலடி. 135). 7. *அறியும் ஆதன் (ஆன்மா)*; soul. ''அறிவுரு வதனோ டறித்த மன்மையின்'' (ஞானா. 44 : 5). 8. *அறிவு வடிவான இறைவன்*; God, as the embodiment of knowledge. ''சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே'' (தாயு. தேசோ.).

ம., க. அறிவு; து. அறுகு, அறுவு; தெ. எறுக, எறுகுவ; கோத. அர்வ்; கொலா. எர்க; குட. அரிமை.

*[அறி → அறிவு (தொ.பெ., தொ.ஆகு.). 'வு' (அவு) தொ.பெ. ஈறு.]*

**அறிவுகேடன்** *aṟivu-kēḍaṉ*, பெ. (n.) *அறிவற்றவன், மதிகெட்டவன்* (ஈடு); unwise man, fool.

ம. அறிவுகேடன்; க. அறிகுறி, அரிவுகேடி.

*[அறி → அறிவு (தொ.ஆகு.) + கேடன். கெடு → கேடு (முத.தி.தொ.பெ.) → கேடன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அறிவுகொளுத்து-தல்** *aṟivu-koḷuttu-*, 5 செ.கு.வி. (v.i.) *அறிவூட்டுதல், மதிபுகட்டுதல்*; to impart instruction, teach, advise.

க. அறிகிசு

*[அறி → அறிவு + கொளுத்து. கொள் (த.வி.) → கொளுத்து (பி.வி.).]*

**அறிவுகோணு-தல்** *aṟivu-kōṇu-*, 5 செ.கு.வி. (v.i.) *தவறான வழியில் அறிவைச் செலுத்துதல்*; to be perverted, crooked, as misuse of intellect.

**அறிவுநூல்** *aṟivu-nūl*, பெ. (n.) *மறைநூல், மெய்யறிவு நூல், சமய நூல், மெய்ப்பொருள் நூல், உலகநூல் என்பதற்கு எதிர்*; sacred writings, books of true knowledge, religious or theological treatises, philosophical works imparting spiritual wisdom, dist. f. secular writings.

**அறிவுபிற-த்தல்** *aṟivu-piṟa-*, 3 செ.கு.வி. (v.i.) 1. *அறிவுண்டாதல்*; to dawn as knowledge in the mind, to become enlightened. 2. *மயக்கந் தெளிதல்* (வின்.); to be restored to consciousness.

**அறிவுபுகட்டு-தல்** *aṟivu-pugaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *அறிவூட்டுதல்*; to give instruction, impart knowledge, advise.

*[அறி → அறிவு. புக + ஒட்டு – புகட்டு.]*

**அறிவுமடம்படு-தல்** *aṟivu-maḍam-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *அறிந்தும் அறியாததுபோன் றிருத்தல்*; to assume ignorance. ''அறிவுமடம் படுதலு மறிவுநன் குடைமையும்'' (சிறுபாண். 216.).

*[அறிவு + மடம் + 'படு' து.வி.]*

**அறிவுமயக்கம்** *aṟivu-mayakkam*, பெ. (n.) *மனக் குழப்பம்*; the puzzled state of mind, perplexity.

*[அறி → அறிவு. மயங்கு → மயக்கு (தொ.பெ.) → மயக்கம் (தொ.பெ.). 'அம்' தொ.பெ. மேலீறு.]*

**அறிவுமயங்கு-தல்** *aṟivu-mayaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *உணர்ச்சி கெடுதல்*; to faint, lose consciousness by swooning, by fits, by sleep, by approach of death. 2. *மனந்தடுமாறுதல், திகைத்தல்*; to be stunned or bewildered.

க. அறிவுமறெ

**அறிவுறால்** *aṟivuṟal*, தொ.பெ. (vbl.n.) *அறிவுறுத்துகை*; informing, making known.

"நாமறி வுறாலிற் பழியு முண்டோ" (குறிஞ்சிப். 22).

[அறி → அறிவு + உறால். உறு → உறால் (தொ.பெ.). 'ஆல்' தொ.பெ. ஈறு.]

**அறிவுறு-தல்** *aṟivuṟu-*, (20) செ.குன்றாவி. (v.t.) *அறிதல்;* to know. —, 20 செ.கு.வி. (v.i.) 1. **துயிலெழுதல்;** to wake from sleep. "கிடந் துறங்குஞ் சீரிய சிங்க மறிவுற்று" (திவ். திருப்பா. 23). 2. **உணர்ச்சி மீளப்பெறுதல்;** to regain consciousness.

[அறி → அறிவு + உறு.]

**அறிவுறுத்து-தல்** *aṟiv(u)-uṟuttu-*, 5 செ.கு.வி. (v.i.) **அறிவுபுகட்டுதல்;** to give instruction. —, 5 செ.குன்றாவி. (v.t.) **தெரிவித்தல்;** to inform, make known.

[அறி → அறிவு + உறுத்து. உறு (த.வி.) → உறுத்து (பி.வி.). 'து' பி.வி. ஈறு.]

**அறிவை** *aṟivai*, பெ. (n.) **ஓதி (ஞானம்);** wisdom. "அறிவை யென்னு மமுத வாறு" (திவ். பெரியாழ். 5 . 4 : 2).

[அறி → அறிவை. 'வை' பண்.பெ. ஈறு.]

**அறிவொப்புக்காண்டல்வினா** *aṟiv(u) - oppu - k - kāṇḍal-viṉā*, பெ. (n.) **தானறிந்ததைப் பிறனறிவோடு ஒப்புநோக்கக் கேட்குங் கேள்வி** (நேமி. சொல். 6, உரை. மேற்.); question purporting to compare notes with another.

[அறி → அறிவு + ஒப்பு + காண்டல் + வினா. ஒ → ஒப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. காண் → காண்டல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு. ண் + த – ண்ட (புணர்ச்சி).]

**அறு**[1]**-தல்** *aṟu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. *கயிறு முதலியன* **இறுதல்;** to be severed, to break, as a rope. "சாப நாணறு குமில வோதை" (இரகு. யாகப். 87). 2. **உண்டது செரித்தல்;** to be digested. "அற்றது போற்றி யுணின்" (குறள், 942). 3. **கருமங் குதிர்தல்;** to be decided, settled. "அற்ற காரியம்" (சிலப். 17, முன்னிலைப் 2, உரை). 4. **நீங்குதல், பிரிதல்,** *நோய் முதலியன* **இல்லாமற் போதல்;** to separate, to be cured as a disease. 5. **பாழ்படுதல்;** to go to ruin. "வீடறக் கவர்ந்த வினைமொழிந் தன்று" (பு.வெ. 3.15, கொளு). 6. **முடிதல்;** to cease, come to an end, perish, become extinct. 7. **தாலி நீங்குதல்;** to be removed, as the marriage insignia of a woman. அவளுக்குத் தாலியறுந்தது.

ம., க. அறு; தெ. அறுகு, அறு; கோத. அர்த்; குட. அர; துட. அர்த்; து. அர்ப்புனி.

[அர் → அரி. அர் → அரம். அர் → அறு. ஒ.நோ: உல் → உர் → உறு. அரிதல் = சிறிதாய்த் துணித்தல், அறுத்தல் = பெரிதாய்த் துணித்தல், அறுதல் = துணிபடுதல். ரகரத்தை நோக்க றகரம் வல்லொலியாதலின், அது வல்வினை குறிக்குஞ் சொல்லுறுப்பாயிற்று.]

**அறு**[2]**-த்தல்** *aṟu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **பன்னறுவாளாற் கதிரறுத்தல்;** to reap corn with a sickle. 2. **அறுவாளால் அல்லது கத்தியாற் கயிறறுத்தல்;** to cut a rope with a knife or sickle. 3. **காய்கறி யறுத்தல்;** to cut in two or into pieces, as a fruit or vegetable. 4. **செங்கலறுத்தல்;** to mould, as bricks. 5. **ஊடறுத்தல்;** to sever, cleave, cut in two. "விசும் பறுத் திழிந்து" (சீவக. 3055). 6. **பங்கிட்டுக் கொடுத்தல்;** to distribute. "அற்றார்க் கறாது வதிந்தோரும்" (பிரமோத். 16 : 37). 7. **வளை தோண்டுதல்** (உ.வ.); to burrow, form subterraneous passages (Com.u.). 8. **வருத்துதல்;** to tease, worry. என்னை எப்போதும் அறுக்கிறான். 9. **வெல்லுதல்;** to outdo, excel. "ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரல்" (பதிற்றுப். 43 : 21). 10. **செரித்தல்;** to digest. "ஆரவுண் டறுக்க லாற்றாது" (சீவக. 2839). 11. **நீக்குதல்;** to remove, as obstacles, obviate, as objections, break, as enchantments. தடையறுத்துக் கொடுப்பேன். 12. **இல்லாமற் செய்தல்;** to root out, exterminate. "துயரங்க ளண்டா வண்ண மறுப்பான்" (தேவா. 2.197 : 1). "அவர் வேரறுப்பென் வெருவன் மின்" (கம்பரா. ஆரணிய. அகத்தியப். 22). 13. **தாலி நீக்குதல்;** to remove the marriage insignia, as a widow. அவள் நேற்றுத் தாலியறுத்தாள். 14. **தீர்மானித்தல், முடிவுசெய்தல்;** to determine, resolve, decide, settle. "மறைக ளெல்லா முடிய வரையறுத் துணர்ந்து புகலினும்" (வெங்கைக்கலம். 89). 15. **இடைவிடுதல்;** to move in jerky rhythm. "அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்" (தொல். பொருள். செய். 229). —, 4 செ.கு.வி. (v.i.) **தாலியறுத்துக் கைம்பெண்ணாதல்;** to become a widow, by cutting away the marriage insignia known as *tāli*.

ம. அறுக்குக; கொலா., நா. அர்க்; துட. அர்ட்; குவி, பர். எர்க்; குரு. அற; பிரா. கரெ.

[அறுதல் (த.வி.) → அறுத்தல் (பி.வி.).]

**அறு**[1]**-தல்** பார்க்க; see *aṟu*[1]*-*.

**அறுக்கணக்கு** *aṟu-k-kaṇakku,* பெ.(n.) **அறைக் கணக்கு** பார்க்க; see *aṟai-k-kaṇakku.*

**அறுக்கப்பொறுக்க** *aṟukka-p-poṟukka,* கு.வி.எ. (adv.) **உழவுமுதல் அறுவடைவரை ஊக்கமாக;** to work diligently till the completion of harvest. 'அறுக்கப்பொறுக்கப் பாடுபட்டும் படுக்கப் பாயில்லை' (பழ.).

[அறு → அறுக்க (நி.கா.வி.எ.). பொறுக்கு → பொறுக்க (நி.கா.வி.எ.). 'அறுக்கப்பொறுக்க' எதுகை மரபிணைமொழி.]

உழவு, கட்டியடிப்பு, பரம்படிப்பு, எரு விடல், தொளிகலக்கல், விதைப்பு, நடவு, நீர் பாய்ச்சல், களைபறித்தல், காவல் செய்தல் ஆகிய வினைகளையெல்லாம் ஊக்கமாகச் செய்து கடினமா யுழைத்த பின்பே, நன்றாக நெற்பயிர் விளையும். விளைச்சலின்பின் அறு வடையாகும்போது, அறுத்துக் கட்டிய அரிக் கட்டுகளைக் களத்திற்கு எடுத்துச் செல்வர். அறுக்கும்போதும் கட்டும்போதும் எடுத்துச் செல்லும்போதும் நென்மணிகள் சிந்தும். அவற்றை ஏழைப் பெண்கள் பொறுக்குவர் அல்லது கூட்டிச் சேர்ப்பர்.

இங்ஙனம் அறுக்கவும் பொறுக்கவும் உழவர் மிகப் பாடுபடவேண்டியிருப்பதால், கடின மாக வுழைத்தல் 'அறுக்கப்பொறுக்கப் பாடு படுதல்' எனப்பட்டது. 'அறுக்கப்பொறுக்க' என்பது கொச்சை வழக்கில் 'அறக்கப்பறக்க' என்று வழங்குகின்றது.

**அறுக்கரிவாள்** *aṟukkarivāḷ,* பெ. (n.) **அறுவாள், கருக்கறுவாள்** பார்க்க; see *aṟuvāḷ, karukkaṟu-vāḷ.*

**அறுக்கன்** *aṟukkaṉ,* பெ. (n.) 1. கோ (சம்.அக. கை.); chief. 2. **அணுக்க நண்பன்;** intimate friend.

[1. அறுகு = அரிமா. ஒருகா. அறுகு → அறுகன் → அறுக்கன் = அரிமாப் போன்ற தலைவன். 'சிங்கன்' என்பதும், அதன் கடைக் குறையான 'சிங்' என்பதும், சில குலத் தலைவரின் பட்டப்பெயராயிருப்பது ஒப்பு நோக்கத் தக்கது. 2. அருகு = அண்மை, நெருக்கம். ஒருகா. அருகு → அருகன் → அருக்கன் = நெருங்கிய நண்பன்.

இனி, இ:.து அணுக்கன் என்பதன் கொச்சைத் திரிபாகவு மிருக்கலாம்.]

**அறுக்கிளாமீன்** *aṟukkiḷa-mīṉ,* பெ. (n.) **ஒரு கடல்மீன்;** sea-fish (சா.அக.).

**அறுகங்கட்டை** *aṟugaṅ-kaṭṭai,* பெ.(n.) **அறுகம் புல்லின் அடிவேர்;** the main root of harialli grass, *Agrostis linearis.*

[அறுகு + அம் (சாரியை) + கட்டை.]

கட்டை பார்க்க; see *kaṭṭai.*

**அறுகங்கிழங்கு** *aṟugaṅ-kiḻaṅgu,* பெ. (n.) **அறுகம்புல்லின் அடிக்கிழங்கு;** the bulbous root of harialli grass.

[அறுகு + அம் (சாரியை) + கிழங்கு.]

கிழங்கு பார்க்க; see *kiḻaṅgu.*

**அறுகடி** *aṟug(u)-aḍi,* பெ. (n.) **அறுகு பற்றிய நிலம்;** grass land covered with cynodon grass.

[அறுகு + அடி.]

**அறுகம்புல்** *aṟugam-pul,* பெ. (n.) **படர்புல் வகை;** harialli grass, *Cynodon dactylon* — **பூசைக்குகந்த புல்;** a species of sacred grass, harialli grass, *Agrostis linearis* (சா.அக.).

[அறுகு + அம் (சாரியை) + புல்.]

**அறுகம்வேர்** *aṟugam-vēr,* பெ. (n.) **அறுகம் புல்லின் வேர்;** the root of the sacred grass, *Agrostis linearis* alias *Cynodon dactylon* (சா.அக.).

[அறுகு + அம் (சாரியை) + வேர்.]

**அறுகம்வேர்நெய்** *aṟugam-vēr-ney,* பெ. (n.) **அறுகம் வேரினின்று உருவாக்கும் நெய்;** a ghee prepared for medicine from the root of cynodon grass (சா.அக.).

[அறுகு + அம் (சாரியை) + நெய்.]

**அறுகம்வேரெண்ணெய் (தைலம்)** *aṟugam-vēr-eṇṇey,* பெ. (n.) **அறுகம் வேருடன் பல கடைச் சரக்குகளைச் சேர்த்து வடிக்கும் எண்ணெய், மூளைச் சூட்டைத் தணிப்பது;** a medicated oil prepared from the root of the cynodon grass mixed with other bazaar drugs and used for cooling the over-heated brain (சா.அக.).

[அறுகு + அம் (சாரியை) + வேர் + எண்ணெய்.]

எண்ணெய் பார்க்க; see *eṇṇey.*

**அறுகரிசி** *aṟug(u)-arisi,* பெ. (n.) **அறுகம்புல் லோடு கூடிய மங்கல வரிசி, வாழ்த்திற்கும் வழிபாட்டிற்கும் பயன்படுத்தப்படுவது;** mixture

of cynodon grass and rice, used in benediction or worship. "சென்னி திருத்தமுறு மறுகரிசி யிட்டு" (திருவானைக். கோச்செங். 93).

[அறுகு + அரிசி. அரி + அரிசி.]

**அறுகால்**[1] *aṟu-kāl*, பெ. (n.) 1. **அறுகாலுள்ள வண்டு**; beetle which is six-legged. "அறுகா னிறைமலர்" (திருக்கோ. 126). 2. **தேனீ**; a bee (சா.அக.).

ம. ஆறுகால்; க. ஆறுதள.

[ஆறு → அறு + கால்.]

**அறுகால்**[2] *aṟu-kāl*, பெ. (n.) (**காலில்லாப்**) பாம்பு; serpent, as one without feet. "அறுகாற் பீடத் துயர்மால்" (திருவிளை. பாயி. 30).

[அறுகால் (வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை) = காலற்றது. அறுதல் = நீங்குதல், இல்லாதிருத்தல்.]

**அறுகால்வண்டு** *aṟu-kāl-vaṇḍu*, பெ. (n.) கருவண்டு; a black beetle (சா.அக.).

**அறுகாலன்** *aṟu-kālaṉ*, பெ. (n.) (**காலில்லாப்**) பாம்பு (மருதூரந். 6); serpent, as one without feet.

**அறுகால்**[2] பார்க்க; see *aṟu-kāl*[2].

['அறுகால்' வினைத்தொகை. 'அன்' ஒ. ஈறு.]

**அறுகாலி** *aṟu-kāli*, பெ. (n.) 1. அறுகாலுள்ள **வண்டு அல்லது தேனீ**; six-legged beetle or bee. 2. **அறுகாலுள்ள இருக்கை** (இக்.வ.); a bench having six legs (Mod.).

[ஆறு → அறு + கால் + இ (ஒ. ஈறு).]

**அறுகாழி** *aṟu-kāḻi*, பெ. (n.) **ஆறு முத்து அல்லது மணி பதித்த மோதிரம்**; finger-ring inlaid with six pearls or gems. 'கையு மறுகாழியுமான வடிவை' (ஈடு. 8.10:6).

[ஆறு → அறு + காழ் + இ (உடைமை குறித்த ஒ. ஈறு). காழ் = முத்து, மணி.]

**அறுகாற்பீடம்** *aṟu-kāṟ-pīḍam*, பெ. (n.) **ஆறு கால்கள் அமைந்த இருக்கை**; six-legged stool used in Śiva temples. "அறுகாற் பீடத் திருந்து" (திருவிளை. பாயி. 30).

[ஆறு → அறு + கால் + பீடம். பீடு = பெருமை, உயர்வு, மேடு. பீடு → பீடம் = மேடான இருக்கை.]

**அறுகிடு-தல்** *aṟug(u)-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **திருமணத்தில் அறுகிட்டு வாழ்த்துதல்**; to bless the bride and the bride-groom by throwing on their heads rice with cynodon grass. "மங்கைக் கறுகிட வந்துநின் றார்மணப் பந்தலிலே" (தமிழ்நாவ. 54).

[அறுகு + இடு.]

**அறுகிலிப்பூடு** *aṟugili-p-pūḍu*, பெ. (n.) **பூடுவகை** (வெட்.); a kind of shrub (Insc.).

**அறுகீரை** *aṟu-kīrai*, பெ. (n.) **அரைக்கீரை**; a pot herb, a kind of edible greens. "அறு கீரையைத் தின்றறி" (பதார்த்த. 625).

['அறுகீரை' வினைத்தொகை. பாத்தியில் வளர்த்து இடையிட்டிடையிட்டு அறுக்கப் படுவது அறுகீரை.]

**அறுகு**[1] *aṟugu*, பெ. (n.) **இந்தியாவெங்கும் இயற்கையாக வளர்வதும், ஆழ வேரூன்றி நீளப் படர்வதும், அழியாதிருப்பதும், பயிர் பச்சைகளைக் கெடுப்பதும், வாழ்த்திற்கும் வழிபாட்டிற்கும் பயன்படுத்தப்படுவதும், பல்வேறு மருந்தாக வுதவுவதும், பல்வகைப் பட்டதுமான புல்வகை**; harialli grass, found in many varieties almost every where throughout India, growing or existing all the year round, used in worship and benediction, and serving as medicine for several diseases in several forms, *Cynodon dactylon*. "அறுகாற் பிடுயர் முடியார்" (திருவிளை. பாயி. 30) (சா.அக.). The different kinds of this plant are:

1. சிற்றறுகு - *Agrostis linearis*.
2. புல்லறுகு - ***aṟugu*** (proper).
3. பேரறுகு - *Panicum ischoemoides*.
4. உப்பறுகு - *Agrostis trenula*.
5. கூந்தலறுகு - *Agrostis*.
6. வெள்ளறுகு - *Exacum hyssopifolium*.
7. ஆற்றறுகு - River variety.
8. யானையறுகு - elephant grass.
9. கொடியறுகு - creeper grass.
10. பாளையறுகு - a kind of grass.

The other common species are: gracilis and virgatus.

[அறு → அறுகு. நோய்களை அறுப்பதனால் அறுகம்புல் என்று பெயர் என்பர் மருத்துவர் சாம்பசிவம் பிள்ளை. பயிர்பச்சைகளை அழிப் பதனால் அறுகம்புல்லெனப்பட்டது என்று கொள்ளவும் இடமுண்டு.]

விளக்குமாற்றுப் புல் என்பதும் அறுகின் வகையே.

**அறுகு**[2] *aṟugu*, பெ. (n.) 1. **அரிமா**; lion. 2. **யானையாளி** (திவா.); an extinct animal. 3. **யானை**; elephant (சா.அக.). 4. **புலி** (அக.நி.); tiger — **ஆண்புலி**; male tiger (சா.அக.).

*[ஒருகா. அறு → அறுகு = விலங்குகளை யழிக்கும் அரிமா, துதிக்கையொடு கூடிய அரிமா வடிவினதாகச் சொல்லப்படும் யாளி, விலங்குகளை யழிப்பதில் அரிமாவை யடுத்த புலி.]*

யாளி துதிக்கை யளவில் யானையை யொத்திருந்ததனால், யாளியென்னுஞ் சொல் லிற்கு யானைப் பொருளுங் கொள்ளப் பட்டதுபோலும்!

**அறுகு**[3] *aṟugu*, பெ. (n.) **ஆளிவிதையை அரைத்துப் பிழிந்த சாறு**; the juice of the linseed (சா.அக.).

**அறுகு**[4] *aṟugu*, பெ. (n.) 1. **வெளித்திண்ணை** (W.G.); a platform or terrace forming a verandah or porch, pial. 2. **தெருப்பந்தல்** (கோவை); *pandal* in the street, in front of a house (Cm.).

*[அருகு → அறுகு.]*

**அறுகுணன்** *aṟu-kuṇaṉ*, பெ. (n.) **அறுகுணங் களை யுடைய இறைவன்** (வின்.); God, as having six attributes.

உடைமை (ஐசுவரியம்), ஆண்மை (வீரியம்), புகழ், திரு, அறிவம் (ஞானம்), பற்றின்மை (வைராக்கியம்) என்பன அறுகுணங்கள் (பாரத வசனம், அநுசா. பக். 935).

*[ஆறு → அறு (கு.பெ.எ.) + குணன். குணம் → குணன். 'ன்' (அன்) ஆ.பா. ஈறு.]*

**அறுகுதராசு** *aṟugu-tarāsu*, பெ. (n.) **பொன், வெள்ளி, மணி முதலிய விலையுயர்ந்த பொருள் களையும் மருந்தையும் நிறுக்க வுதவும் சிறு நிறைகோல்**; delicate balance for weighing precious metals and medical ingredients.

*[அறுகு + U. tarāzu > த. தராசு. அரு → அருகு → அறுகு.]*

**அறுகுமூலி** *aṟugu-mūli*, பெ. (n.) **ஒரு மருந்து மூலிகையான வெள்ளறுகு**; white doob grass, *Enicostema littorule* alias *Adenema hyssopifolium* (சா.அக.).

**அறுகுவெட்டுத்தரிசுகூலி** *aṟugu-veṭṭu-t-tarišu-kūli*, பெ. (n.) **குறுங்காட்டிலுள்ள மரஞ்செடி கொடிகளை வெட்டிச் செம்மைசெய்து உழவிற் குக் கொண்டுவந்தவர்க்கு, அதுபற்றி அந் நிலத்தி லேற்பட்ட நுகர்ச்சி (அனுபோக) யுரிமை**; right to enjoy land reclaimed from jungle growth and brought under cultivation.

தரிசு பார்க்க; see *tarišu*.

**அறுகுறை** *aṟu-kuṟai*, பெ. (n.) **அட்டை, தலை யில்லா வுடம்பு, முண்டம்**; headless body. "ஆடின வறுகுறை யலகைக ளுடனின்று" (பாரத. நிவாத. 141).

*['அறுகுறை' வினைத்தொகை. அறுதல் = நீங்குதல், தலைநீங்குதல்.]*

**அறுகெடு-த்தல்** *aṟug(u)-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **அரிசி கலந்த அறுகம்புல்லைத் தலையில் தூவி வாழ்த்துதல்**; to invoke blessings on a person by scattering on his head, rice with cynodon grass. "மறையோ ரெதிர்கொண் டறுகெடுப்ப" (சேக்கிழார். பு. 88). 2. **வழி படுதல், பூசை செய்தல்**; to worship. "அரச ரப்பொழு தடிமிசை யறுகெடுத்திட" (கலிங். 264).

*[அறுகு + எடு. எடுத்தல் = எடுத்துத் தூவு தல்.]*

**அறுகெழுந்தபடுதரை** *aṟug(u)-eḻunda-paḍu-tarai*, பெ. (n.) **அறுகு படர்ந்து உழவிற்குப் பயன்படாத தரிசு நிலம்** (S.I.I. v, 376); waste land overgrown with cynodon grass and unfit for cultivation.

**அறுகை**[1] *aṟugai*, பெ. (n.) **அறுகம்புல்**; cynodon grass. "அறுகையு நெருஞ்சியு மடர்ந்து" (மணிமே. 12 : 60).

ம. அறுக

*[அறுகு → அறுகை.]*

**அறுகை**[2] *aṟu-kai*, பெ. (n.) **அறுப்புண்ட கை**; amputated hand (சா.அக.).

*['அறுகை' வினைத்தொகை.]*

**அறுகைவாணிகன்** *aṟugai-vāṇigaṉ*, பெ. (n.) **அறுவை வாணிகன் பார்க்க**; see *aṟuvai-vāṇigaṉ* (S.I.I. vii, 318).

**அறுகோணஅமைதி** *aṟu-kōṇa-amaidi*, பெ. (n.) **சிவபெருமானின் நடத்திருமேனி யுருவம் அறு கோணக் கட்டத்திற்குள் அமைந்துள்ள நிலை;**

the state of the figure of Śiva in his dance-pose being contained within an hexagonal outline. 'நடராஜ மூர்த்தத்தின் முடி, அக்கினி, புலி வால் அல்லது உத்தரியம், ஊன்றிய திருவடி, தூக்கிய திருவடி, துடி ஆகிய ஆறும் 60 பாகைக் கொன்றாக அமைந்து, திருவாசி யாகிய பிரபஞ்சத்தைத் தொட்டுக்கொண்டு பிரபஞ்சத்தை இயக்கும் ஆரக்கால் போல இருக்கின்றன.

அறுகோண அமைதியில் அமைந்த இத் திருவுருவம், ஆறாதாரத் தத்துவத்தையும் உணர்த்திக்கொண்டிருக்கிறது' (சி.செ. பக். 71).

[ஆறு → அறு + கோணம் + அமைதி. கோண் → கோணம். 'அம்' பண்.பெ. ஈறு. அமை → அமைதி. 'தி' தொ.பெ. ஈறு.]

**அறுகோணபதி** *aṟu-kōṇa-padi*, பெ. (n.) **ஆறு நிலைக்களங்களுள் (ஆறாதாரங்களுள்) ஒன்றானதும், பதினாறிதழ்த் தாமரை வடி வினதாகக் கருதப்படுவதுமான அடி நாத்தா வின் அதிகாரி**; the power in the psychic centre of the cervical region (சா.அக.).

[ஆறு → அறு + கோணம் + பதி. கோண் → கோணம். 'அம்' பண்.பெ. ஈறு. Skt. pati = தலைவன்.]

**அறுகோணம்** *aṟu-kōṇam*, பெ. (n.) 1. **ஆறு மூலை கொண்ட சக்கரம் அல்லது வடிவம்** (சி. சி. சுபக். 2 : 67); hexagon. 2. **அடி நாத் தாவு** (விசுத்தி வீடு); one of the psychic centres situated in the cervical region (சா.அக.).

**அறுகோணபதி** பார்க்க; see *aṟu-kōṇa-padi*.

**அறுசமயம்** *aṟu-šamayam*, பெ. (n.) **சிவனியம் (சைவம்), மாலியம் (வைணவம்), காளியம் (சாத்தம்), கதிரவம் (சௌரம்), ஆனைமுகவம் (காணபத்தியம்), குமரம் (கௌமாரம்) என்னும் அறுவகை இந்துசமயக் கொள்கைகள்**; the six post-Vēdic Hindu religious systems.

[ஆறு → அறு + சமயம். சமை → சமையம் → சமயம்.]

**சமயம்** பார்க்க; see *šamayam*.

**அறுசரக்கு** *aṟu-šarakku*, பெ. (n.) **கல்லுப்பு, சாரம், வெடியுப்பு, படிகாரம், துருசு, வெண் காரம் என்னும் அறுவகைச் சரக்குகள்**; a group of six ingredients consisting of common salt, sal-ammoniac, nitre, alum, blue vitriol and borax (சா.அக.).

**அறுசரம்** *aṟu-šaram*, பெ. (n.) **அறுநரம்புள்ள யாழ்** (திவா.); lute, as a six-stringed instrument.

[ஆறு → அறு + சரம். சரி → சரம்.]

**அறுசிறுபொழுது** *aṟu-šiṟu-poḻudu*, பெ. (n.) **அறுபொழுது** பார்க்க; see *aṟu-poḻudu*.

**அறுசுவை** *aṟu-šuvai*, பெ. (n.) **இனிப்பு, புளிப்பு, கைப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்னும் அறுவகை நாவுணர்ச்சி**; the six flavours. "அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட" (நாலடி. 1).

க. அறுபோன

**அறுசுவைக்காதி** *aṟu-šuvai-k-kādi*, பெ. (n.) **அறுசுவையுப்பு** பார்க்க; see *aṟu-šuvai-y-uppu*.

**அறுசுவைகழற்றல்** *aṟu-šuvai-kaḻaṟṟal*, தொ. பெ. (vbl. n.) **தவத்தோர் கற்பமுண்டு உடம்பை வலுப்படுத்துமுன் அறுசுவை யுண்டி யாசையை அறவே யொழித்தல்**; renunciation of the pleasures of eating delicious dishes of all tastes, generally resorted to by yogis and *Siddhars* preparatory to taking medicines for rejuvenation (சா.அக.).

[ஆறு → அறு + சுவை + கழற்றல். கழல் (த.வி.) → கழற்று (பி.வி.) → கழற்றல் (தொ. பெ.) = நீக்குதல். 'அல்' தொ.பெ. ஈறு.]

**அறுசுவையுண்டி** *aṟu-šuvai-y-uṇḍi*, பெ. (n.) **ஆறு சுவையுங் கொண்ட உண்டிவகைகள்**; foodstuff prepared with all the six flavours. "அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட" (நாலடி. 1).

[ஆறு → அறு + சுவை + உண்டி. உண் → உண்டி (தொ.ஆகு.). 'தி' தொ.பெ. ஈறு. ண் + தி – ண்டி (புணர்ச்சி).]

**அறுசுவையுப்பு** *aṟu-šuvai-y-uppu*, பெ. (n.) **கல் லுப்பு**; common salt forming basis for all kinds of tastes (சா.அக.).

**அறுசூலை** *aṟu-šūlai*, பெ. (n.) **பித்தசூலை, ஊத (வாத) சூலை, கோழைச் (சிலேட்டும) சூலை, ஊதபித்தசூலை, கோழைப்பித்தசூலை, ஐயகணசூலை என்னும் அறுவகைச் சூலை நோய்கள்** (இராட்.); six kinds of arthritis or gout, viz., *pittašūlai, ūdašūlai, kōḻaiccūlai, ūdapittašūlai, kōḻaippittašūlai, aiyakaṇašūlai* (R.).

**அறுசோகம்** *aṟušōgam*, பெ.(n.) **கெந்தி**; sulphur (சா.அக.).

**அறுத்தவள்** *aruttaval*, பெ. (n.) **கைம்பெண்;** widow, as one who has removed her marriage insignia known as *tāli*.

[அறு → அறுத்த (இ.கா.பெ.எ.) + அவள்.]

**அறுத்திசைப்பு** *arutt(u)-isaippu*, பெ. (n.) (யாப்.) **வேற்றிசை கலந்துவரும் யாப்புவழு, மூவகை ஓசைக்குற்றத்துள் ஒன்று** (யாப். வி. 95, உரை); (Pros.) fault which consists in introducing in a verse of one metre, the rythm of other metres.

[அறு → அறுத்து (இ.கா.வி.எ.) + இசைப்பு. இசை → இசைப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. இசைத்தல் = ஒலித்தல்.]

**அறுத்திடல்** *aruttiḍal*, தொ.பெ. (vbl.n.) **அவா வறுக்கை** (சூடா.); extirpation of desire.

[அறு → அறுத்து (இ.கா.வி.எ.) + இடல். இடு → இடல் (தொ.பெ.). 'அல்' தொ.பெ. ஈறு. 'இடு' து.வி.]

**அறுத்துக்கட்டு-தல்** *aruttu-k-kaṭṭu-*, 5 செ.கு. வி. (v.i.) **கணவனையிழந்தோ தீர்வை செய்யப் பட்டோ தாலி நீங்கிய பின், மறுதாலி கட்டி மணத்தல்;** to remarry, in the case of castes that allow remarriage of widows and divorced women, as removing the marriage insignia known as *tāli* tied by a former husband and having a new one tied by another.

[அறு → அறுத்து (இ.கா.வி.எ.) + கட்டுதல். கட்டு → கட்டுதல் (தொ.பெ.). 'தல்' தொ.பெ. ஈறு. கட்டுதல் = தாலி கட்டுதல்.]

**அறுத்துப்பேசு-தல்** *aruttu-p-pēšu-*, 5 செ. குன்றாவி. (v.t.) **தீர்மானமாகச் சொல்லுதல்;** to speak definitely, decisively, conclusively.

[அறு → அறுத்து (இ.கா.வி.எ.) + பேசு.]

**அறுத்துமுறி** *aruttu-muri*, பெ.(n.) **மணவிலக்குச் செய்தல்** (இ.வ.); divorce (Loc.).

[அறு → அறுத்து + முறி. முறி (முத.தொ. பெ.) = முறித்தல்.]

**அறுத்துரை-த்தல்** *arutt(u)-urai-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. **வரையறுத்துச் சொல்லுதல்;** to speak positively, definitely. 2. **பிரித்துச் சொல்லுதல்;** to interpret by breaking up a sentence and making a subordinate clause a principal one. 'திருந்துங் கடனெறியைச் செல்லுமென்றும், களவாகிய இவ்வாற்றைச் சிதைக்குமென்றும், முற்றாக அறுத்துரைப் பாருமுளர்' (திருக்கோ. 272, உரை).

[அறு → அறுத்து (இ.கா.வி.எ.) + உரை.]

**அறுத்துவிட்டவள்** *aruttu-viṭṭaval*, பெ. (n.) **கைம்பெண்;** widow, who is deprived of her *tāli*, 'marriage insignia'. தையல்நாயகி நாக நம்பியின் அறுத்துவிட்டவள் (உ.வ.).

[அறு → அறுத்து (இ.கா.வி.எ.) + விட்டவள். விடு → விட்ட (இ.கா.பெ.எ.) + அவள். 'விடு' து.வி.]

**அறுத்தோடி** *arutt(u)-ōḍi*, பெ. (n.) **ஏரிக் கரையை அல்லது ஆற்றங்கரையை அறுத் தோடும் நீரோட்டம்;** gully, as water eroding or breaching a bund.

[அறு → அறுத்து (இ. கா. வி. எ.) + ஓடி. ஓடு → ஓடி. 'இ' வி.முத. ஈறு.]

**அறுதல்** *arudal*, பெ. (n.) **காசுக் (நாணயக்) குற்றவகை** (சரவண. பணவிடு. 66); a defect in coins.

[அறு → அறுதல் (தொ.ஆகு.). 'தல்' தொ. பெ. ஈறு.]

**அறுதலி** *arudali*, பெ. (n.) **கைம்பெண்;** widow, as one whose *tāli*, 'marriage insignia', has been removed. 'அறுதலி பெற்ற மகனுக்கு அங்க மெல்லாங் குறும்பு' (சேட்டை) (பழ.).

[அறுதாலி (வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை) → அறுதலி.]

**அறுதாலி** *aru-tāli*, பெ. (n.) **கைம்பெண்;** widow. 'அறுதாலி யாரை யழைத்துத் தன் வீட்டி லிருத்தி' (ஆதியூரவதானி).

அறுதலி பார்க்க; see *arudali*.

**அறுதி** *arudi*, பெ. (n.) 1. **இல்லாமை;** non-existence. 2. **வரையறை;** limit. "காடு மன்னுநின் புதல்வருக் கறுதிசெய் காலமோ" (பாரத. உலூகன். 16). 3. (**வரையறுத்த**) **உரிமை;** (restricted) possession, ownership, right. "செம்மகள் கரியோற் கறுதி யாக" (கல்லா. 18 : 10). 4. **முடிவு;** end, close, termination. "அறுதி யாகவின் றருஞ்சமர் முடித்தும்" (பாரத. பதினெட். 46). 5. **அறுதிக் குத்தகை;** unconditioned lease. 6. **அறுதிவிலை** (**அறுதிக் கிரயம்**); finality, as in a sale. "அறுதியீ தென்று கொண்டு" (திரு வாலவா. 46 : 32). 7. **நாசம்;** destruction.

"அறுதி யிலானே" (சி.சி. சுபக். 1 : 35, சிவாக்.). —, இடை. (part.) வரை; until. "அன்றுமுத லின்றறுதியா" (திவ். திருவாய். 4 . 1 : 6).

[அறு → அறுதி. 'தி' பண்.பெ. ஈறு.]

**அறுதிக்கரை** *arudi-k-karai*, பெ. (n.) **நிலங் களை ஊர்ப்பொதுவில் வைக்காமல் தனித்தனி யாய் உரிமையுள்ளவர்கட்குப் பிரித்துக் கொடுக் கப்படும் நிலவுரிமை முறை, பசுங்கரை என்ப தற்கு எதிர்**; system of land tenure in which all lands once held by a village community jointly, were distributed amongst the members permanently, each member receiving a definite share which became his absolute property thereafter, and for the rent of which he alone is responsible, dist. f. *pašuṅgarai* (C.G.).

**அறுதிக்களநடை** *arudi-k-kaḷa-naḍai*, பெ. (n.) **ஆட்டை (வருஷாந்தர) நெற்கணக்கு** (இ.வ.); annual account for the income from paddy (Loc.).

[அறு → அறுதி + களம் + நடை. நட → நடை = நடப்பு, கணக்கு.]

**அறுதிக்கிரயம்** *arudi-k-kirayam*, பெ. (n.) **முடி வான விற்பனை**; absolute or final sale.

[அறு → அறுதி + கிரயம். Skt. kraya > த. கிரயம் = விலைத்தொகை.]

இதை 'அறுதிவிலை' அல்லது 'அறுதிவிற்பு' என்று சொல்லலாம்.

**அறுதிச்சாதனம்** *arudi-c-cādanam*, பெ. (n.) **விற்பனை யாவணம் (கிரய பத்திரம்)**; deed of transfer.

[அறு → அறுதி + சாதனம். Skt. šāsana > த. சாதனம் = பட்டயம்.]

**அறுதிச்சீட்டு** *arudi-c-cīṭṭu*, பெ. (n.) **அறுதிமுறி, அறுதியாவணம்**; deed of transfer (W.).

[அறு → அறுதி + சீட்டு. சிட்டு (சிறியது) → சீட்டு = நறுக்கு, ஓலை, முறி, ஆவணம்.]

**அறுதிப்பங்கு** *arudi-p-paṅgu*, பெ. (n.) 1. **ஊர்ப் பொதுவி லில்லாத தனியுரிமை நிலம்**; portion of village lands enjoyed by a villager or landholder as his absolute property. 2. **கடன் தீர்ப்பதிற் கடைசியாகக் கொடுக்கப்படுந் தொகை** (வின்.); the last and final payment made towards the discharge of a debt.

**அறுதிப்பட்டு** *arudi-p-paṭṭu*, பெ. (n.) **அறுதிப் பரிவட்டம்** பார்க்க; see *arudi-p-pari-vaṭṭam*.

**அறுதிப்பரியட்டம்** *arudi-p-pariyaṭṭam*, பெ. (n.) **அறுதிப்பரிவட்டம்** பார்க்க; see *arudi-p-pari-vaṭṭam*.

[பரிவட்டம் → பரியட்டம்.]

**அறுதிப்பரிவட்டம்** *arudi-p-pari-vaṭṭam*, பெ. (n.) **மாலிய (வைணவ) வழக்கப்படி, கோயில் மதிப்புரவாகத் (மரியாதையாகத்) தெய்வச் சிலையின் அருகிலிருந்தெடுத்துப் பெருந்தகை மக்களின் தலையில் திருக்கொடை போலக் கட்டப்படும் பட்டுத்துணி**; silk cloth taken from the sanctuary of an idol and tied on to the heads of distinguished personages, as a divine gift, according to Vaiṣṇava usage.

[அறு → அறுதி + பரி + வட்டம். அறுதி = உரிமை, மதிப்புரிமை. பரிதல் = சுற்றுதல், சுற்றிக்கட்டுதல், வட்டமாதல். வட்டம் = துணி.]

பரிதல் (சுற்றுதல்) என்னும் வினைச்சொல் இன்று வழக்கற்றது.

**அறுதிப்பாடு** *arudi-p-pāḍu*, பெ. (n.) **முடிவுபேறு** (வின்.); accomplishment, completion.

[அறு → அறுதி + பாடு. படு → பாடு (தொ. பெ.). 'படு' து.வி.]

**அறுதிமுறி** *arudi-muri*, பெ. (n.) **தீர்ந்த கணக்குச்சீட்டு**; receipt for full payment of dues or debts. 'ஆண்டுதோறும் அறுதிமுறி பெறவும்' (S.I.I. iii, 140).

[அறு → அறுதி + முறி (முத.தொ.ஆகு.).]

**அறுதியிடு-தல்** *arudi-y-iḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. **முடிவிற்குக் கொண்டுவருதல்**; to bring to completion or to a close. 2. **தீர் மானித்தல்**; to determine. "அமர்வமென் றறுதியிட்டு" (திருவாலவா. 27 : 41). 3. **காலங்குறித்தல்**; to specify a time, appoint a day.

**அறுதியுறுதி** *arudi-y-urudi*, பெ. (n.) 1. **அறுதிச் சீட்டு** (வின்.); deed of relinquishment by transfer. 2. **முடிவான உறுதிப்பாடு**; final assurance.

[அறு → அறுதி. உறு → உறுதி. 'தி' பண். பெ. ஈறு.]

**அறுதுவர்ப்பு** *aru-tuvarppu*, பெ. (n.) (சமண.) **ஆசியம் (சிரிப்பு), இரதி (விருப்பு), அரதி (விருப்பின்மை), சோகம் (அசைவு, வருத்தம்),**

பயம் (அச்சம்), சுகுச்சை (அருவருப்பு) என்னும் அறுவகைக் குண வேறுபாடுகள்; (Jain.) the six kinds of disposition of mind, viz., *hāsya, rati, a-rati, šōka, bhaya, jugupsa*. "அறுவகைத் துவர்ப்பும் பேசி" (சீவக. 3076).

**அறுதொழிலோர்** *aṟu-toḻilōr*, பெ. (n.) **உழவு, வணிகம், நெசவு, கொல் அல்லது கம், ஆட்சி, கல்வி என்னும் அறுவகைத் தொழில் செய்யும் மக்கள்**; people engaged in the six occupations, viz., agriculture, trade, weaving, artisan's work, government business and learning. "அறுதொழிலோர் நூன்மறப்பர்" (குறள், 560).

[ஆறு → அறு + தொழிலோர். தொழில் → தொழிலோர். ஆர் → ஓர் (ப.பா. ஈறு).]

ஆய்ந்து நோக்கின், எல்லாத் தொழில்களும் மேற்குறித்த ஆறனுள் அடங்கும். கட்டட வினைஞரும் குயவரும் கம்மியருள் அடங்குவர். கூலிவேலை அறுதொழிற்கும் பொது.

"உழவு தொழிலே வரைவு வாணிகம்
விச்சை சிற்பம் என்றித் திறத்தறு
தொழில்கற்ப நடையது கரும பூமி"

என்று திவாகரங் கூறுவதும், இதனொடு ஒருவாறு பொருந்தும்.

தமிழமுறைப்படி கல்வி ஒரு வகுப்பார்க்கு மட்டும் உரியதன்று.

"மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார்
கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு"

என்று திருக்குறளும் (409),

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே"

என்று புறப்பாட்டும் (183) கூறுகின்றன.

"தோணி யியக்குவான் றொல்லை
வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்
—காணாய்
அவன்றுணையா ஆறுபோ யற்றே
நூல்கற்ற
மகன்றுணையா நல்ல கொளல்"

என்று நாலடியாரும் (136),

"எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடிக் கற்றோரை மேல்வரு கென்பர்"

என்று நறுந்தொகையும் (38) கூறுகின்றன.

அரிசில்கிழார், அறுவைவாணிகன் இளவேட்டனார், இளங்கோவடிகள், கணியன் பூங்குன்றன், குறமகள் இளவெயினியார், கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், சேரமான் கணைக்காலிரும்பொறை, சோழன் நலங்கிள்ளி, தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார், திருத்தக்கதேவர், தொண்டைமான் இளந்திரையன், பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், பேய்மகள் இளவெயினியார், மருத்துவன் தாமோதரனார், வண்ணக்கன் சாத்தனார், வெண்ணிக்குயத்தியார் முதலிய புலவர் புலத்தியர் பெயரும் கல்வியின் குலப்பொதுமையைக் காட்டும்.

மொழியிலக்கணமும், இசை நாடகம் கணக்கு கணியம் மருத்துவம் அரசியல் முதலிய பல்வேறு அறிவியல்களும் நூல் எனப்படும். அரசியல்நூல் பொருள்நூல் எனப்படும்.

அறநூல், பொருள்நூல், இன்பநூல், வீட்டு நூல் என்பன தனித்தனியாகவும் இயலும். முதல் மூன்றும், எல்லா நான்கும் கூட்டாகவும் இயலும். முதல் மூன்றன் கூட்டு **முப்பால்** எனப்படும். அதற்கு இலக்கியம் **திருக்குறள்**. எல்லா நான்கும் சேர்ந்தது **நாற்பால்** எனப்படும். அதற்கு இலக்கியம் இறந்துபட்டது. **திருமந்திரம்** போன்றது வீட்டுநூல். வடமொழி **அர்த்தசாத்திரம்** போல் தமிழிற் பொருள்நூலு மிருந்தமை,

"ஒற்றும் உரைசான்ற நூலும்
இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்" (581),

"மதிநுட்பம் நூலோ டுடையார்க்கு
அதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை" (636),

"நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு" (683),

"உயர்வகலந் திண்மை அருமையிந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்" (743)

என்னுங் குறள்களால் அறியப்படும்.

தனித்தனி யியங்கும் இயல் இசை நாடகம் மூன்றும் முத்தமிழெனக் கலந்தவாறே, அறம் பொருள் இன்பம் மூன்றும் முப்பாலெனவும், அவற்றொடு வீடும் சேர்ந்து நாற்பாலெனவும் கலக்குமென வறிக.

பெருநாரை, பெருங்குருகு, சிற்றிசை, பேரிசை, இசை நுணுக்கம் முதலியன தனி இசைநூல்கள். முறுவல், சயந்தம், குண

நூல், செயிற்றியம், மதிவாணர் நாடகத் தமிழ்நூல் முதலியன தனி நாடகநூல்கள். அகத்தியம் முத்தமிழ் நூல்.

''விண்ணிவ் வுலகம் விளைக்கும்
விளைவெல்லாங்
கண்ணி யுரைப்பான் கணி'' (பு.வெ. 174)

என்பதனாற் கணிய நூலும்,

''மிகினுங் குறையினும் நோய்செய்யும்
நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று''
(குறள், 941)

என்பதனால் மருத்துவநூலும் இருந்தமை அறியப்படும்.

''எப்பால்நூ லோர்க்குந் துணிவு'' (குறள், 533) என்றது எல்லா நூல்களையும் பொதுப் படக் குறித்தது.

''ஏரணம் உருவம் யோகம்
இசைகணக் கிரதம் சாலம்
தாரணம் மறமே சந்தம்
தம்பநீர் நிலமு லோகம்
மாரணம் பொருளென் றின்ன
மான நூல் யாவும் வாரி
வாரணங் கொண்ட தந்தோ
வழிவழிப் பெயரும் மாள''

என்னும் பழந் தனிப்பாட்டு, இறந்துபட்ட பல்வேறு நூல்களைக் குறிக்கின்றது. இது பிற்காலத்ததாதலால், பல நூற்பெயர்கள் வடசொல்லாற் குறிக்கப்பட்டுள்ளன.

எல்லா நூல்களையும், உலகநூல் அறிவுநூல் என இரு வகையாக வகுத்துள்ளனர் அறிஞர். இம்மைக்கு மட்டும் பயன்படுவது உலகநூல்; மறுமைக்கும் பயன்படுவது அறிவுநூல்.

''அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா(து)
உலகநூல் ஓதுவ தெல்லாம் — கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு
தடுமாற்றம்
போஒந் துணையறிவார் இல்''
(நாலடி. 140).

வீட்டுநூல்களான அறிவுநூல்கள், வீடு பேறு கருதிய துறவியர்க்கே சிறப்பாக வுரிய வாயின. அஃறிணைமாட்டும் அருளுடைமை யால், துறவியர் 'அந்தணர்' (அழகிய குளிர்ந்த அருளுடையோர்) எனப்பட்டனர்.

''அந்தண ரென்போர் அறவோர்மற்
றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்''
(குறள், 30)

என்று துறவியரையே அந்தணரென்றும், துறவு எல்லா வகுப்பார்க்கும் பொதுவென் றும்,

''அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றின்
புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்''
(குறள், 46)

என்று, இல்லறத்தாலும் வீடுபேறு உண்டென் றும், ஆரியக் கொள்கையை மறுத்துக் கூறிய திருவள்ளுவர், 'அறுதொழிலோர் நூன்மறப் பர்' என்று பிராமணரையே விதந்து கூறி யிருக்க முடியாது.

மேலும், ஈதல் பிராமணர்க் கின்மையால் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஏற்றல் என்னும் ஐந்தொழிலே அவர்க்குரியன வாம்.

இனி,

''ஓதல் பொருதல் உலகு புரத்தல்
ஈதல் வேட்டல் படைபயிறல் அறுதொழில்''

என்று பிங்கலம் அரசர்க்கும் அறுதொழில் கூறுவதனால், அதனாலும், 'அறுதொழி லோர்' என்னும் பெயர் பிராமணர்க்குப் பொருந்தாத தாகும்.

'அந்தணர் நூல்' என்று திருவள்ளுவர் செங்கோன்மை யதிகாரத்திற் குறித்தது, துறவியர்க்குரிய (மறைநூலென்றும், மந்திர நூலென்றும், அறிவுநூலென்றும், மெய்ந்நூ லென்றும் சொல்லப்படும்) வீட்டு நூலே யாகும். ஆயின், கொடுங்கோன்மை யதிகாரத் தில் 'அறுதொழிலோர் நூன்மறப்பர்' என்றது அறுவகைத் தொழில்செய்யும் இல்லறக் குடிவாணர் தத்தம் தொழிற்குரிய உலக நூல்களை மறந்துவிடுதலையே குறித்த தாகும். 'அறுதொழிலோரும்' என்பதிலுள்ள முற்றும்மை செய்யுள் திரிபால் தொக்கது.

நூலை மறந்துவிடுதலாவது, தொழில் செய்யாதிருத்தல். மழையின்றி மாந்தர் வாழ முடியாததாலால் தொழில்கள் நடைபெறுவ தில்லை. வானம் பெயலொல்லாமையும் ஆபயன் குன்றுதலும் முன்னர்க் கரணிய மாகக் (காரணமாகக்) காட்டியுள்ளமையால், அவற்றின் விளைவாகத் தொழில்கள் நின்று போதலைக் கூறினார்.

ஆகவே, ''பாட்டுரை நூலே'' என்னும் தொல்காப்பிய நூற்பாவிற் (செய். 79) பொதுப்படக் குறிக்கப்பட்ட நூல் என்பது, 'அறுதொழிலோர் நூல்' என்றும் 'அந்தணர்

நூல்' என்றும் இருதிறப்படுமென்பதும், அவற்றுள் முன்னவை இம்மைக்கும் பின்னவை மறுமைக்கும் உரியன என்பதும் அறியப்படும். இலக்கண நூல் இருவகை நூற்கும் பொது வாம்.

இன்னும் இதன் விளக்கத்தை நூல் என்னும் உருப்படியிற் காண்க.

**அறுந்தருணம்** *aṟun-taruṇam*, பெ. (n.) **நெருக்கடி வேளை, அவசரச் சமையம்;** emergency, exigency (W.).

*[அறு → அறும் (எ.கா.பெ.எ.). 'உம்' எ.கா. பெ.எ. ஈறு.* **Skt.** taruṇa > *த. தருணம் = சமையம், வேளை.]*

**அறுந்தறுவாய்** *aṟun-taṟuvāy*, பெ. (n.) **அறுந் தருணம்** பார்க்க; see *aṟun-taruṇam.*

*[தறுவாய் = இறுதிநேரம், வேளை, சமையம்.]*

**தறுவாய்** பார்க்க; see *taṟuvāy.*

**அறுந்தொகை** *aṟun-togai*, பெ. (n.) (கணக்கு) **மிச்சமின்றிப் பிரிக்கப்படும் எண்;** (Arith.) number divisible without remainder.

*[அறு → அறும் (எ.கா.பெ.எ.) + தொகை. தொகு → தொகை. 'ஐ' பெ. ஈறு.]*

**அறுநீர்**[1] *aṟu-nīr*, பெ. (n.) **விரைந்து வற்றிப் போகும் நிலைமையிலுள்ள ஏரி குள நீர்;** water of a tank or reservoir nearly dried up.

க. அறுநீர்

*[அறுநீர் = சிற்றளவு நீர். 'அறுநீர்' வினைத்தொகை.]*

**அறுநீர்**[2] *aṟu-nīr*, பெ. (n.) **அறுவகைச்செயனீர்** பார்க்க; see *aṟu-vagai-c-ceyaṉīr.*

**அறுநூறு** *aṟu-nūṟu*, பெ. (n.) **ஆறுநூறு;** six hundred.

ம., க., பட. அறுநூறு.

*[ஆறு → அறு + நூறு. நுறு → நூறு.]*

**நூறு** பார்க்க; see *nūṟu.*

**அறுப்படிகணக்கு** *aṟuppaḍi-kaṇakku*, பெ. (n.) **ஊதிய இழப்புகளைக் (லாப நட்டங்களைக்) காட்டுங் கணக்கு** (இ.வ.); balance sheet, statement showing profit and loss (Loc.).

*[ஒருகா. அறைப்படி கணக்கு. ஒ.நோ: அறுக் கணக்கு = அறைக்கணக்கு.]*

**அறுப்பம்புல்** *aṟuppam-pul*, பெ. (n.) **புல்வகை;** a kind of grass. "நீடறுப்பம் புல்லாய்ப் படு பாதி போக" (சரவண. பணவிடு. 144).

*[ஒருகா. அறுப்பு + அம் (சாரியை) + புல். இனி, அறுப்பன் + புல் என்றுமாம்.]*

**அறுப்பன்பூச்சி** *aṟuppaṉ-pūcci*, பெ. (n.) **தவசப் (தானியப்) பூச்சிவகை** (இ.வ.); insect that eats off the ears of corn (Loc.).

*[அறு → அறுப்பு → அறுப்பன் + பூச்சி. 'அன்' ஒ. ஈறு.]*

**அறுப்பின்பண்டிகை** *aṟuppiṉ-paṇḍigai*, பெ. (n.) (கிறித்.) **அறுவடைக்காலத்தின்பின் புது விளையுட் பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்தும் கிறித்தவ விழா நாள்;** (Chr.) harvest festival.

*[அறு → அறுப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. 'இன்' 6ஆம் வேற்றுமைச் சாரியை யுருபு. பண்டு → பண்டிகை.]*

**பண்டிகை** பார்க்க; see *paṇḍigai.*

**அறுப்பு** *aṟuppu*, பெ. (n.) 1. **அறுப்பு;** cutting. 2. **அறுவடை, கதிரறுக்கை;** harvest, reaping the crop. 3. **அறுத்த துண்டு** (வின்.); piece section sawn. 4. **மரத்தின் அறுத்த பக்கம்** (வின்.); the sawn side of timber. 5. **புண்ணை யறுத்த இடம்** (வின்.); opening of a wound. 6. **தாலியறுக்கை** (வின்.); becoming a widow, as by cutting the marriage insignia called *tāli.* 7. **கண்டனம்;** censure, refutation, as of an argument.

ம. அறுப்பு

*[அறு → அறுப்பு (தொ.பெ., தொ.ஆகு.). 'பு' தொ.பெ. ஈறு.]*

**அறுப்புக்காலம்** *aṟuppu-k-kālam*, பெ. (n.) **கதிரறுக்கும் பருவம்;** harvest season.

*[அறு → அறுப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. கால் → காலம். 'அம்' பெ.பொ. பின்.]*

**அறுப்புக்கூலி** *aṟuppu-k-kūli*, பெ. (n.) 1. **கதிரறுக்குங் கூலி** (C.G.); wages for reaping. 2. **மரம் முதலியன அறுக்குங் கூலி;** wages for sawing. 3. **கைம்பெண்ணிற்குக் கொடுக்கும் பிழைப்புப் பொருள் (ஜீவனாம்சம்);** sum paid to an heirless Tamilian widow towards her maintenance. 4. **அறுத்துக் கட்டுங் குலங்களில் கைம்பெண்ணிற்குக் கொடுத்து விலக்கும் பிழைப்புப் பொருள்;** sum paid to

widows in certain castes which allow remarriage, on receipt of which she is cut off from her husband's family.

[அறுப்பு + கூலி.]

**அறுப்புக்கோடி** *aṟuppu-k-kōḍi*, பெ. (n.) **தாலி யறுத்தவட்குச் சுற்றத்தார் கொடுக்கும் புது வெள்ளைச்சேலை;** new white sari given to a widow by her relatives, at the funeral of her husband.

அறுப்பு, கோடி பார்க்க; see *aṟuppu, kōḍi*.

**அறுப்புச்சீட்டு** *aṟuppu-c-ciṭṭu*, பெ. (n.) **வேளக நிலத்திற் கதிரறுக்கக் கொடுக்கும் உத்தரவு முறி** (C.G.); order or permit to cut a standing crop, esp. in a zamin.

[அறுப்பு+சீட்டு. அறு → அறுப்பு. 'பு' தொ. பெ. ஈறு. சிட்டு → சீட்டு.]

**அறுப்புச்சுகம்** *aṟuppu-c-cugam*, பெ. (n.) **கைம் பெண்ணிற்குக் கொடுக்கும் பிழைப்புப் பொருள்** (இ.வ.); maintenance for an heirless Tamilian widow (Loc.).

[அறு → அறுப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. **Skt.** sukha > த. சுகம் = இன்பம், நுகர்ச்சி.]

**அறுப்புச்சொம்மு** *aṟuppu-c-commu*, பெ. (n.) **பிள்ளையில்லாத கைம்பெண்ணிற்குப் புகுந் தகத்தார் பிழைப்புக்காக மொத்தமாய்க்கொடுக் குந் தொகை** (நாஞ்.); lumpsum given to a childless widow, for her maintenance, by her husband's relations (Nāñ.).

[அறு → அறுப்பு (தொ.பெ.). 'பு' தொ.பெ. ஈறு. சும் → சொம் → சொம்மு = சொத்து, செல்வம், பொருள்.]

**அறுப்புப்பணம்** *aṟuppu-p-paṇam*, பெ. (n.) அறுப்புக்கூலி பார்க்க; see *aṟuppu-k-kūli*.

**அறுபகை** *aṟu-pagai*, பெ. (n.) **காமம், வெகுளி, ஈயாமை, மயக்கம், செருக்கு, பொறாமை என் னும் அறுவகை உட்பகையான குற்றங்கள்;** the six internal enemies of man, *i.e.*, the six emotions, viz., desire, anger, miserliness, confusion of mind, arrogance and envy, which disturb his mind and corrupt his soul. "ஐம் புலன்களை யடக்கிநின் றறுபகை துறந்து" (காஞ்சிப்பு. திருமேற். 6).

[ஆறு → அறு. பகு → பகை, 'ஐ' பண்பெ. ஈறு.]

**அறுபடு-தல்** *aṟu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) **அறுக்கப்படுதல்;** to be cut asunder.

[அறுபடு (செயப்.வி.). 'படு' து.வி.]

**அறுபத்துநாலுகலை** *aṟubattu-nālu-kalai*, பெ. (n.) **'காமசூத்திரம்' என்னும் பழைய சமற் கிருத நூலிற் சொல்லப்பட்டுள்ள அறுபத்து நான்கு கலைகளும் அறிவியல்களும்;** the sixty-four arts and sciences, mentioned in the *Kāma-sūtra*, an ancient Skt. work.

ர. 5048

அறுபத்து நாலு கலைகளாவன: 1. எழுத் திலக்கணம் (அக்கரவிலக்கணம்); 2. எழுத் தாற்றல் (லிகிதம்); 3. கணிதம்; 4. மறை நூல் (வேதம்); 5. தொன்மம் (புராணம்); 6. இலக்கணம் (வியாகரணம்); 7. நயனூல் (நீதி சாத்திரம்); 8. கணியம் (சோதிட சாத் திரம்); 9. அறநூல் (தரும சாத்திரம்); 10. ஓகநூல் (யோக சாத்திரம்); 11. மந்திரநூல் (மந்திர சாத்திரம்); 12. நிமித்திக நூல் (சகுன சாத்திரம்); 13. கம்மிய நூல் (சிற்ப சாத்திரம்); 14. மருத்துவ நூல் (வைத்திய சாத்திரம்); 15. உறுப்பமைவு நூல் (உருவ சாத்திரம்); 16. மறவனப்பு (இதிகாசம்); 17. வனப்பு. 18. அணிநூல் (அலங்காரம்); 19. மதுரமொழிவு (மதுரபாடணம்); 20. நாடகம்; 21. நடம்; 22. ஒலிநுட்ப அறிவு (சத்தப் பிரமம்); 23. யாழ் (வீணை); 24. குழல்; 25. மதங்கம் (மிருதங்கம்); 26. தாளம்; 27. விற்பயிற்சி (அத்திரவித்தை); 28. பொன் நோட்டம் (கனக பரீட்சை); 29. தேர்ப் பயிற்சி (ரத பரீட்சை); 30. யானையேற்றம் (கச பரீட்சை); 31. குதிரையேற்றம் (அசுவ பரீட்சை); 32. மணிநோட்டம் (ரத்தின பரீட்சை); 33. நிலத்து நூல்/மண்ணியல் (பூமி பரீட்சை); 34. போர்ப்பயிற்சி (சங்கிராம விலக்கணம்); 35. மல்லம் (மல்ல யுத்தம்); 36. கவர்ச்சி (ஆகருடணம்); 37. ஒட்டுகை (உச்சாடணம்); 38. நட்புப் பிரிப்பு (வித்து வேடணம்); 39. காமநூல் (மதன சாத்திரம்); 40. மயக்குநூல் (மோகனம்); 41. வசியம் (வசீகரணம்); 42. இதளியம் (ரசவாதம்); 43. இன்னிசைப் பயிற்சி (காந்தருவ வாதம்); 44. பிறவுயிர் மொழியறிகை (பைபீல வாதம்); 45. மகிழுறுத்தம் (கவுத்துக வாதம்); 46. நாடிப்பயிற்சி (தாது வாதம்); 47. கலுழம் (காருடம்); 48. இழப்பறிகை (நட்டம்); 49. மறைத்ததையறிதல் (முஷ்டி); 50. வான் புகவு (ஆகாயப் பிரவேசம்); 51. வான்செலவு (ஆகாய கமனம்); 52. கூடுவிட்டுக் கூடுபாய்

தல் (பரகாயப் பிரவேசம்); 53. தன்னுருக் கரத்தல் (அதிருசியம்); 54. மாயச்செய்கை (இந்திரசாலம்); 55. பெருமாயச்செய்கை (மகேந்திரசாலம்); 56. அழற்கட்டு (அக்கினித் தம்பனம்); 57. நீர்க்கட்டு (சலத்தம்பனம்); 58. வளிக்கட்டு (வாயுத்தம்பனம்); 59. கண் கட்டு (திருட்டித்தம்பனம்); 60. நாவுக்கட்டு (வாக்குத்தம்பனம்); 61. விந்துக்கட்டு (சுக்கிலத்தம்பனம்); 62. புதையற்கட்டு (கனனத்தம்பனம்); 63. வாட்கட்டு (கட்கத் தம்பனம்); 64. சூனியம் (அவத்தைப் பிர யோகம்).

### வேறொரு பட்டியல்

1. பாட்டு (கீதம்); 2. இன்னியம் (வாத் தியம்); 3. நடம் (நிருத்தம்); 4. ஓவியம்; 5. இலைப்பொட்டுக் (பத்திர திலகம்) கத்த ரிக்கை; 6. பல்வகை யரிசி பூக்களாற் கோலம் வைத்தல்; 7. பூவமளி யமைக்கை; 8. ஆடை யுடை பற்களுக்கு வண்ணமமைக்கை; 9. பள்ளியறையிலும் குடிப்பறையிலும் மணி பதிக்கை; 10. படுக்கையமைக்கை; 11. நீரலை அல்லது நீர்க்கிண்ண இசை (ஜலதரங்கம்); 12. நீர்வாரி யடிக்கை; 13. உள்வரி (வேடங் கொள்கை); 14. மாலைதொடுக்கை; 15. மாலை முதலியன அணிகை; 16. ஆடை யணிகளாற் சுவடிக்கை; 17. சங்கு முதலிய வற்றாற் காதணியமைக்கை; 18. விரை கூட்டுகை; 19. அணிகலம் புனைகை; 20. மாயச்செய்கை (இந்திரசாலம்); 21. குசுமா ரரின் காமநூல் நெறி (கௌசுமாரம்); 22. கைவிரைவு (ஹஸ்தலாவகம்); 23. மடை நூலறிவு (பாகசாத்திர வுணர்ச்சி); 24. தையல்வேலை; 25. நூல்கொண்டு காட்டும் வேடிக்கை; 26. வீணை யுடுக்கைப் பயிற்சி (வீணை டமருகப் பயிற்சி); 27. விடுகதை (பிரேளிகை); 28. ஈற்றெழுத்துப் பாப் பாடுகை; 29. நெருட்டுச் சொற்றொட ரமைக்கை; 30. சுவைதோன்றப் பண்ணுடன் வாசிக்கை; 31. நாடகம் உரைநடை (வசனம்) யிவற்றினுணர்ச்சி; 32. குறித்தபடி பாடுகை (ஸமஸ்யாபூரணம்); 33. பிரம்பு முதலிய வற்றாற் கட்டில் பின்னுதல்; 34. கதிரில் நூல் சுற்றுகை; 35. மரவேலை; 36. மனை நூல் (வாஸ்து வித்தை); 37. காசு, மணி நோட்டம் (நாணய ரத்னங்களின் பரிசோ தனை); 38. நாடிப்பயிற்சி (தாதுவாதம்); 39. மணிக்கு நிறமமைக்கையும் மணியின் பிறப்பிட மறிகையும்; 40. தோட்டவேலை; 41. தகர்ப்போர் சேவற்போர் முதலிய விலங்கு பறவைப்போர்; 42. கிளி நாகணங்கட்குப் பேச்சுப் பயிற்றுவகை; 43. உடம்பு பிடிக்கை யும் எண்ணெய் தேய்க்கையும்; 44. குழூஉக் குறி (சங்கேதாக்ஷரங்களமைத்துப் பேசுகை); 45. மருமமொழி (ரகசிய பாஷை); 46. நாட்டுமொழி யறிவு (தேசபாஷை யுணர்ச்சி); 47. பூத்தேர் (புஷ்பரதம்) அமைக்கை; 48. முற்குறி (நிமித்தம்) யறிகை; 49. பொறி யமைக்கை; 50. ஒருகாலிற் கொள்கை (ஏகசந்தக்கிராகித்வம்); 51. இருகாலிற் கொள்கை (துவிசந்தக்கிராகித்வம்); 52. பிதிர்ப்பா (கவி) விடுக்கை; 53. வனப்பு (காவியம்) இயற்றுகை; 54. உரிச்சொல்லறிவு (நிகண்டுணர்ச்சி); 55. யாப்பறிவு; 56. அணி யறிவு (அலங்கார வுணர்ச்சி); 57. மாயக்கலை (சாலவித்தை); 58. ஆடையணியுந் திறமை (உடுத்தலிற் சாமர்த்தியம்); 59. சூதாட்டம்; 60. சொக்கட்டான்; 61. பாவை (பொம்மை), பந்து முதலியன வைத்தாடுகை; 62. யானை யேற்றம், குதிரையேற்றம் பயிற்சி; 63. படைக்கலப் பயிற்சி; 64. உடற் (தேகப்) பயிற்சி (சது.).

'நாலு வேதம், ஆறு சாத்திரம், பதினெண் புராணம், அறுபத்துநாலு கலைஞானம்' என்பது ஆரிய இலக்கியப் பாகுபாடாதலால், 'அறுபத்துநாலு கலை' என்பது தமிழ் மர பன்று. 'அறுபத்துநாலு கலை' என்னும் பொருட்டொகைப் பெயர் தமிழாதலாலும், அறுபத்துநாலாக வகுக்கப்பட்ட கலைகள் அனையவும் தமிழர்க்கும் உரியனவாத லாலும், தமிழ்க்கலைகள் ஆரியக் கலைகட்குக் காலத்தால் முந்தியனவாதலாலும், அறுபத்து நாலு கலைப்பட்டி இங்குத் தரப்பட்டது.

முதற்பட்டி ஆரிய நூன்மரபை முற்றுந் தழுவியது. வடசொற்களெல்லாம் மொழி பெயர்க்கப்பட்டு, தென்சொற்கள் முன்னும் வடசொற்கள் பிறைக்கோட்டுட்பின்னும் குறிக்கப்பட்டுள்ளன. இருமொழிக்கும் பொதுச் சொற்கள் அல்லது ஏற்கெனவே தமிழாயிருக்குஞ் சொற்கள், பிறைக்கோட்டுச் சொல்லின்றித் தமித்து விடப்பட்டுள்ளன.

இரண்டாம் பட்டி பிற்காலத்ததாதலால், சிறிது வேறுபட்டும் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களைக் கொண்டும் உள்ளது.

அறுபத்துநாலுகலை என்னும் தொகுப்பு, வடமொழிக் **காமசூத்திரம்** (Kāma Sūtra)

என்னும் இன்பநூலின் ஆசிரியரான வாற்சாயன (Vātsāyana) ருடையதாதலால், அந் நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பாளரான டாக்டர். சந்தோச குமார முக்கர்சி (Dr. Santosh Kumar Mukherji) பாகுபடுத்திக் கூறிய அறுபானாற்கலை யாங்கிலப் பட்டியலை இங்குத் தருகின்றேன்.

### The Sixty-four Arts

*Toilet*

1. Make-up, toilet and use of beautifying agents.
2. Painting the body, and colouring the nails, hair, etc.
3. Decoration of the forehead.
4. Art of hair dressing.

*Dressing*

5. Art of dressing.
6. Proper matching of decorations and jewellery.

*Music and Dancing*

7. Singing.
8. Playing on musical instruments.
9. Playing on musical glasses filled with water.
10. Acting.
11. Dancing.

*General Education*

12. Good manners and etiquette.
13. Knowledge of different languages and dialects.
14. Knowledge of vocabularies.
15. Knowledge of Rhetoric or Figures of Speech.
16. Reading.
17. Reciting poems.
18. Criticism of poems.
19. Criticism of dramas and analysis of stories.
20. Filling up the missing line of a poem.
21. Composing poems to order.
22. Reply in verse (when one person recites a poem, another gives the reply in verse).
23. The art of speaking by changing the forms of words.
24. Art of knowing the character of a man from his features.
25. Art of attracting others (bewitching).

*Domestic Science*

26. Art of cooking.
27. Preparation of different beverages, sweet and acid drinks, chutneys, etc.
28. Sewing and needle work.
29. Making of different beds for different purposes and for different seasons.

*Physical culture*

30. Physical culture.
31. Skill in youthful sports.
32. Swimming and water-sports.

*Games*

33. Games of dice, chess, etc.
34. Games of chance.
35. Puzzles and their solution.
36. Arithmetical games.

*Art of Entertaining*

37. Magic: art of creating illusions.
38. Trick of hand.
39. Mimicry or imitation (of voice or sounds).
40. Art of disguise.

*Fine Arts*

41. Painting in colours.
42. Stringing flowers into garlands and other ornaments for decorating the body, such as crowns, clapnets, etc.
43. Floral decorations of carriages.
44. Making of artificial flowers.
45. Preparation of ear-rings of shell, ivory, etc.
46. Making birds, flowers, etc., of thread or yarn.
47. Clay-modelling: making figures and images.
48. The art of changing the appearance of things such as making cotton to appear as silk.

*Pet Animals*

49. Training parrots and other birds to talk.
50. Training rams and cocks and other. Birds for mock fight.

*Professional Training*

51. Gardening and agriculture.
52. Preparation of perfumery.
53. Making furniture from canes and reeds.
54. Wood-engraving.
55. Carpentry.
56. Knowledge of machinery.
57. Construction of building (Architecture),
58. Floor decoration with coloured stones.
59. Knowledge of metals.
60. Knowledge of gems and jewels.
61. Colouring precious stones.
62. Art of war.
63. Knowledge of code words.
64. Signals for conveying messages.

ஏறத்தாழ எல்லாப் பழந்தொழில்களும் குறிக்கப்பட்டுள்ள இப் பட்டியலில், நெசவுத் தொழில் விடுபட்டுப் போனது வியப்பிற் கிடமானதே. பல கலைகளின் உட்பிரிவுகள் தனிக் கலைகளாகக் குறிக்கப்பட்டுள்ளன. பல கலைகள் ஆடவர்க்கே யன்றிப் பெண்டிர்க் குரியனவல்ல. எல்லாக் கலைகளையும் ஒரு வரே பயில்வது இயல்வதன்று.

[ஆறு + பத்து + நாலு – அறுபத்துநாலு. பது → பத்து. நால் → நாலு. கல் → கலை (தொ.ஆகு.). 'ஐ' தொ.பெ. ஈறு.]

**அறுபத்துநாலுநஞ்சு(பாடாணம்)** *aṟubattu-nālu-nañju*, பெ. (n.) **தமிழ் மருத்துவத்திற் சொல்லப்பட்டுள்ள 32 இயற்கை நஞ்சுகள் (பிறவிப் பாடாணம்), 32 செயற்கை நஞ்சுகள் (வைப்புப் பாடாணம்) ஆக மொத்தம் 64 நஞ்சு வகைகள்;** the sixty-four kinds of poisons dealt with in the Tamil Medical Science, viz., 32 kinds of natural or mineral poisons and 32 kinds of artificial or prepared poisons or arsenics (சா.அக.).

[ஆறு + பத்து + நான்கு – அறுபத்து நான்கு. பது → பத்து. நால் → நான்கு.]

**அறுபத்துமூவர்** *aṟubattu-mūvar*, பெ. (n.) ***பெரியபுராணத்திற் கூறப்பட்டுள்ள தனியடியா ரான அறுபத்துமுச் சிவனடியார்***; the sixty-three canonized Śaiva saints mentioned in the *Periyapurāṇam*.

அறுபத்து மூவர் பெயர்கள்: அதிபத்த நாயனார், அப்பூதியடிகள், அமர்நீதி நாய னார், அரிவாட்டாய நாயனார், ஆனாய நாயனார், இசைஞானியார், இடங்கழி நாயனார், இயற்பகைநாயனார், இளையான் குடி மாற நாயனார், உருத்திர பசுபதி நாயனார், எறிபத்த நாயனார், ஏயர்கோன் கலிக்காம நாயனார், ஏனாதிநாத நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், கண நாத நாயனார், கணம்புல்ல நாயனார், கண் ணப்ப நாயனார், கலிக்காம நாயனார், கலிய நாயனார், கழறிற்றறிவார், கழற்சிங்க நாய னார், காரி நாயனார், காரைக்காலம்மையார், குங்கிலியக்கலய நாயனார், குலச்சிறை நாய னார், கூற்றுவ நாயனார், கோச்செங்கட் சோழ நாயனார், கோட்புலி நாயனார், சடைய நாயனார், சண்டேசுர நாயனார், சத்தி நாயனார், சாக்கிய நாயனார், சிறப் புலி நாயனார், சிறுத்தொண்ட நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார், செருத்துணை நாயனார், சோமாசிமாற நாயனார், தண்டி யடிகள், திருக்குறிப்புத் தொண்ட நாயனார், திருஞானசம்பந்த நாயனார், திருநாவுக்கரசு நாயனார், திருநாளைப்போவார் நாயனார், திருநீலகண்ட நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீலநக்க நாயனார், திருமூல நாயனார், நமிநந்தியடிகள், நரசிங்க முனையரையர், நின்றசீர் நெடுமாறர், நேசநாயனார், புகழ்ச்சோழ நாயனார், புகழ்த்துணை நாயனார், பூசலார் நாயனார், பெருமிழலைக் குறும்பர், மங்கையர்க் கரசியார், மானக்கஞ்சாற நாயனார், முருக நாயனார், முனையடுவார் நாயனார், மூர்க்க நாயனார், மூர்த்தி நாயனார், மெய்ப் பொருள் நாயனார், வாயிலார் நாயனார், விறன்மிண்ட நாயனார்.

[அறு + பத்து + மூன்று – அறுபத்துமூன்று. பது → பத்து. மூன்று → மூ (கு.பெ.எ.). மூ + அர் – மூவர் 'அர்' (ப.பா. ஈறு). 'வ்' புணர்ச்சித் தோன்றல்.]

**அறுபத்தை** *aṟupattai*, பெ. (n.) **கையாந்தகரை** (பச்.மூ.); a species of eclipta (செ.அக.) — Mary gold verbesena, *Wedelia calendulacea* (சா.அக.).

[ஆறு → அறு + பத்தை. பதம் → பதை → பத்தை.]

**அறுபதம்** *aṟupadam*, பெ. (n.) 1. **அறுகால் வண்டு;** beetle, as six-footed. "மதுநுக ரறு

பத முரல்" (தேவா. 1. 20 : 5). 2. **கையாந்த கரை** (பிங்.); a species of eclipta.

[ஆறு → அறு. பதி → பதம். 'அம்' பெ. ஈறு.]

**அறுபதாங்கலியாணம்** *arubadāṅ-kali-yāṉam*, பெ. (n.) **கணவன், அறுபதகவை நிறைந்தவுடன் மனைவி உயிரோடிருப்பின், மறுமண விழாப்போற் செய்துகொள்ளுங் கொண்டாட்டம்**; celebration observed on completing one's sixtieth birthday, if the wife should be living.

[ஆறு + பத்து – அறுபது. ஆகும் → ஆம் (வரிசையுணர்த்தும் இடைச்சொல்). கலி = மகிழ்ச்சி, பெருக்கம். யாணம் = நன்மை, மங்கலம், புது வருவாய், செழிப்பு. கலியாணம் → கலியாணர்.]

கலியாணம் என்ற கூட்டுத் தென்சொல்லே வடமொழியிற் 'கல்யாண' என்று திரிந்து நன்மையை அல்லது மங்கலத்தை யுணர்த்தும். இதன் விளக்கத்தைக் **கலியாணம்** என்னுஞ் சொல்லின்கீழ்க் காண்க.

'கலியாணம்' என்ற சொல்லே, அதனாற் குறிக்கப்படுங் கொண்டாட்டம் மணமக்கட்கு அல்லது கணவன் மனைவியர்க்கு உரியதென்பதை யுணர்த்தும்.

ஆரியர் தனிப்பட்ட ஆடவர்க்கு மட்டுமன்றிப் போலித்துறவியர்க்கும் இவ் விழவை நிகழ்த்துவர். அதை மணச்சொல்லை நீக்கி, அறுபான் அல்லது அறுபானாண்டு நிறைவு என்று பொருள்படும் ஷஷ்டி பூர்த்தி அல்லது ஷஷ்டியப்த பூர்த்தி என்னுஞ் சொல்லாற் குறிப்பர்.

உலகவாழ்க்கை யென்பது இல்லறவாழ்க்கையே. அறுபானாண்டுக் காலத்தை நிரவலான வாழ்நாளெல்லையாகக் கொண்டு, அவ்வெல்லை கடந்த வாழ்வை ஒய்வுபெற்றவரின் ஊழிய நீட்டிப்புப்போற் கருதி, மகிழ்ச்சியோடும் இறைபால் நன்றியறிவோடும் கொண்டாடுவதே அறுபதாங் கலியாணம். உலகப்பற்றைத் துறந்து வீடுபேற்று முயற்சியில் ஈடுபட்ட துறவிக்கு ஏது அறுபதாங் கலியாணம்? அது கூடாவொழுக்கத்தின் பாற்படுவதே.

அறுபதுநாழிகை நாள், அறுபதுநாட் பெரும்பொழுது, அறுபதாங் குறுவை, அறுபதாங் கோழி, அறுபதாண்டுச் சக்கரம், அறுபதாண்டுப் பயன், அறுபதாண்டுப் பஞ்சம் முதலிய கால வரம்புகளும் கணிப்புகளும் நிகழ்ச்சிகளும் அறுபது என்னும் எண்ணைக் கொண்டிருப்பதை நோக்கி 'அறுபதாங் கலியாணம்' தமிழ் முன்னோரால் வகுக்கப்பட்டதுபோலும்.

**அறுபதாங்குறுவை** *aṟubadāṅ-kuṟuvai*, பெ. (n.) **ஏறத்தாழ அறுபதுநாளில் விளையும் நெல்வகை**; a kind of paddy which matures in about 60 days.

[ஆறு + பத்து – அறுபது. ஆகும் → ஆம் (வரிசையுணர்த்தும் இடைச்சொல்). குறு → குறுவை = குறுகிய காலத்தில் விளைவது.]

இது ஒரு மருத்துவ வுணவாகக் கருதப்படுகின்றது.

**அறுபதாங்கேழ்வரகு** *aṟubadāṅ-kēḻ-varagu*, பெ. (n.) **ஏறத்தாழ அறுபது நாளில் விளையுங் கேழ்வரகுவகை** (இராட்.); a kind of ragi which matures in about 60 days (R.).

**அறுபதாங்குறுவை, கேழ்வரகு** பார்க்க; see *aṟubadāṅ-kuṟuvai*, *kēḻ-varagu*.

[கிள் → கேள் → கேழ் + வரகு.]

**அறுபதாங்கொட்டை** *aṟubadāṅ-koṭṭai*, பெ. (n.) **பேராமணக்கு** (இராட்.); a specices of castor seed (R.).

**கொட்டை** பார்க்க; see *koṭṭai*.

[ஆறு + பத்து – அறுபது. ஆகும் → ஆம் (வரிசை யுணர்த்தும் இடைச்சொல்).]

**அறுபதாங்கோடை** *aṟubadāṅ-kōḍai*, பெ. (n.) **அறுபதாங்குறுவை** பார்க்க; see *aṟubadāṅ-kuṟuvai*.

[அறுபதாம் + கோடை. ஆறு + பத்து – அறுபது. ஆம் (வரிசையுணர்த்தும் இடைச்சொல்).]

**அறுபதாங்கோழி** *aṟubadāṅ-kōḻi*, பெ. (n.) **அறுபது நாட்கொருமுறை முட்டையிடுங் கோழி** (இ.வ.) (வின்.); hen which lays eggs every two months.

[அறுபதாம் + கோழி.]

**அறுபதாண்டுப்பயன்** *aṟubad(u)-āṇḍu-p-payaṉ*, பெ. (n.) **அறுபதுவருச பலன்** பார்க்க; see *aṟubadu-varuša-palaṉ*.

[அறுபது + ஆண்டு + பயன்.]

**அறுபது** *aṟubadu*, பெ. (n.) **ஆறு பத்தாகிய எண்**; sixty.

ம. அறுபது; க., பட. அரவத்து; தெ. அறுபதி; து. அசிப; துட. அர்தொத்து.

[ஆறு + பத்து = அறுபது.]

**அறுபதுவருசபலன்** *aṟubadu-varuṡa-palaṉ*, பெ. (n.) **அறுபதாண்டுச் சக்கரத்தில் ஒவ்வோராண்டிற்கும் பயன் கூறும் ஒரு நூல், இடைக்காடர் என்னும் புலவர் இயற்றியதாகச் சொல்லப்படுவது**; name of a work which gives the characteristic features of each year of the Jupiter cycle of 60 years, attributed to the poet *Iḍaikkāḍar*.

[ஆறு + பத்து – அறுபது. **Skt.** varṣa > த. வருசம் (வருஷம்). வருச (கு.பெ.எ.). **Skt.** phala > த. பலம் → பலன் = பயன். த. பழம் > **Skt.** phala. பழம் → பழன் → பயன்.]

இது பண்டை நூலாயின், அறுபதாண்டுப் பயன் என்று முழுத்தமிழ்ப் பெயரே பெற்றிருக்கும்.

**அறுபான்** *aṟubāṉ*, பெ. (n.) **அறுபது**; sixty.

பான் பார்க்க; see *pāṉ*.

[ஆறு + பான் (பத்து) – அறுபான். பல் → பன் → பான்.]

**அறுபானான்கு** *aṟubāṉāṅgu*, பெ. (n.) **அறுபத்து நான்கு**; sixty-four.

பான் பார்க்க; see *pāṉ*.

[ஆறு + பான் + நான்கு – அறுபானான்கு. நால் → நால்கு → நான்கு.]

**அறுபுள்ளிவண்டு** *aṟu-puḷḷi-vaṇḍu*, பெ. (n.) **ஆறு புள்ளிகளையுடைய ஒருவகை வண்டு, கடித்தால் சிலநாட் கழித்து உடம்பு முழுவதும் வட்டம் வட்டமாகத் தடிப்புகளை யுண்டாக்குவது**; a six-spotted poisonous beetle, the bite of which develops after some time circular patches of swelling in different parts of the body (சா. அக.).

**அறுபொருள்**[1] *aṟu-poruḷ*, பெ. (n.) **பகுப்பற்று ஒன்றாய் எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள்**; the Supreme being, the Absolute, as the one indivisible and omnipresent thing. "அறுபொரு ளிவனென்றெ யமரர்கணந் தொழுதேத்த" (சிலப். 17 : முன்னிலைப். 2).

['அறுபொருள்' வினைத்தொகை.]

**அறுபொருள்**[2] *aṟu-poruḷ*, பெ. (n.) (இலக்.) 1. **பெயர்ச்சொல்லாற் குறிக்கப்படும் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் அறுவகைப் பொருள்கள்**; (Gram.) the six categories of things denoted by the noun viz., material thing, place, time, organ or part, quality and action.

"கிளைஎண் குழூஉ முதல் பல்பொருள்
திணைதேம்
ஊர்வான் அகம்புறம் முதல நிலன்யாண்
டிருது மதிநாள் ஆதிக் காலம்
தோள்குழல் மார்புகண் காது
முதலுறுப்(பு)
அளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப் பலகுணம்
ஓதல் ஈதல் ஆதிப் பல்வினை"
(நன். 276).

2. (இலக்.) **வினைச்சொல் லுணர்த்தும் வினை முதல், கருவி, இடம், வினை, காலம், செய்பொருள் என்னும் அறுவகைப் பொருள்கள்**; (Gram.) the six items of information inferable from the verb, viz., agent, instrument, place of action, action, time and object.

"செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொருள் ஆறுந் தருவது வினையே"
(நன். 320).

[ஆறு + பொருள் – அறுபொருள்.]

**அறுபொழுது** *aṟu-poḻudu*, பெ. (n.) **கதிரவன் தோற்றம் முதல் பப்பத்து நாழிகை கொண்ட நாட் பிரிவுகளாகிய காலை, நண்பகல், எற்பாடு (சாயுங்காலம்), மாலை, யாமம், வைகறை என்னும் அறுவகைச் சிறுபொழுதுகள்**; six divisions of the day, viz., *kālai*, *naṉpagal*, *eṟpāḍu*, *mālai*, *yāmam* and *vaigaṟai* (R.), calculated from sunrise to sunrise, the duration of each being 10 *nāḻigais* or 4 hours.

[ஆறு + பொழுது – அறுபொழுது.]

சிறுபொழுது பெரும்பொழுது எனப் பொழுது இருபாற்பட்டு, ஒவ்வொரு பாலும் அறுவகை கொண்டிருப்பதால், இருபாற்கும் பொதுவான அறுபொழுது என்னும் பொருட்டொகைப் பெயர்க்கு, இராட்டிலர் அகரமுதலியில் அறுவகைச் சிறுபொழுதையே பொருளாகக் கூறியிருப்பது பொருத்தமுடைய தன்றாம்.

**அறும்பன்** *aṟumbaṉ*, பெ. (n.) **தீயன்**; villain, wicked fellow (W.).

[அறு → அறும்பு → அறும்பன். ஒ.நோ : குறு → குறும்பு → குறும்பன்.]

**அறும்பு**[1] *arumbu*, பெ. (n.) தீய குணம் (வின்.); wickedness, villainy.

[அறுத்தல் = அழித்தல். அறு → அறும்பு.]

**அறும்பு**[2] *arumbu*, பெ. (n.) பஞ்சம்; scarcity, dearth, famine. தண்ணீரறும்புக் காலம் (C.G.).

ம. அறும்பு; க. அற.

(அறுதல் = நீங்குதல், நீர்வற்றுதல். அறு→ அறும்பு.)

[அறுதல் = நீங்குதல், நீர்வற்றுதல். அறு→ அறும்பு.]

**அறுமணை** *aru-manai*, பெ. (n.) 1. அழகற்றவள்; ugly woman (வின்.). 2. சீர்கேடி; slattern (W.). 3. ஊத்தைநாறிப் பூண்டு; a plant with a fetid smell (சா.அக.).

[ஒருகா. அறு = அழகற்ற. மண்ணை = மழுக்கம், மடமை, மடையன், மடைச்சி, பேய். மண்ணை → மணை = மழுங்கல், மழுங்கற் கத்தி. மணை → மணையன் = 1. மதிக்கூர்மை யற்றவன். 2. மழுங்கற் படைக்கலம்.]

வின்சிலோ அகரமுதலியில், இச்சொல்லிற்கு 'அரிவாண்மணை; blade fastened to a plank' என்றும் ஒருபொருள் தரப்பட்டுள்ளது. அரி வாண்மணை என்பது அருவாமணை → அறு வாமணை → அறுமணை என்று கொச்சை வழக்கில் திரிந்திருப்பதால், அக் கொச்சை வடிவம் இங்குக் கொள்ளப்படவில்லை. 'அறுமணை' என்பது அறுக்கும் மணை என்று பொருள்பட்டுச் செஞ்சொல்லு மாகலாம். ஆயின், அரிவாள்மணை யென்பதே மூலமாத லால், அறுமணை யென்பது கொச்சை யென்றே தெளிக.

**அறுமான்** *arumān*, பெ. (n.) புழுவகை; a kind of worm. 'அத்திக்காயில் அறுமான் போலே' (ஈடு, அவதா.).

**அறுமீன்** *aru-mīn*, பெ. (n.) ஆரல் (கார்த்திகை) (பிங்.); Pleiades, as containing six stars.

[ஆறு + மீன் – அறுமீன். மின் → மீன்.]

**அறுமீன்காதலன்** *aru-mīn-kādalan*, பெ. (n.) முருகன் (திவா.); *Muruga*, being one brought up by the goddesses of Pleiades, acc. to Skānda Purāṇa.

[ஆறு + மீன் – அறுமீன். கா → காதல் → காதலன் = ஆரல் (கார்த்திகை) மாதர் அறுவ ராற் காதலுடன் வளர்க்கப்பட்ட மகன்.]

அறுமீன் பார்க்க; see *aru-mīn*.

**அறுமுகவாகனம்** *aru-muga-vāganam*, பெ. (n.) 1. மயில்; peacock. 2. மயிலிறகு; peacock's feather (சா.அக.).

[ஆறு + முகம் – அறுமுகம் (அன்மொழித் தொகை). Skt. vāhana > த. வாகனம் = ஊர்தி.]

**அறுமுகன்** *aru-mugan*, பெ. (n.) முருகன் (திவா.); *Murugan*, as having six faces.

ம. அறுமுகன்; க. அறுமொக.

**அறுமுகன்விசிறி** *aru-mugan-visiri*, பெ. (n.) மயிற்கொண்டைச்செடி (மயூரச்சிகை); peacock's crest plant (unidentified) (சா.அக.).

[ஆறுமுகம் → அறுமுகம் → அறுமுகன் = முருகன். விசிறு → விசிறி = விசிறிபோன்ற மயிற்கொண்டை.]

**அறுமுறி** *aru-muri*, பெ. (n.) உடன்படிக்கை யோலை (பத்திரம்) (புதுக். கல். 940); deed of agreement (Pdk. Insc. 940).

ம. அறுமுறி

['அறுமுறி' வினைத்தொகை. அறுதல் = முடிவுசெய்தல், தீர்தல், உடன்படுதல். முறி (முத.தொ.ஆகு.) = ஓலைத்துண்டில் எழுதப் பட்டது.]

**அறுமுறைவாழ்த்து** *aru-murai-vāḻttu*, பெ. (n.) முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை, முடி யுடை மூவேந்தர், உலகு என்னும் ஆறையும் பற்றிய வாழ்த்து (தொல். பொருள். புறத். 26, நச். உரை); six-fold invocation, viz,, to sages, scholars, herds of cows, rain, crowned kings, great men. ''அமரர்கண் முடியும் அறு வகை யானும்'' (தொல். பொருள். புறத். 26).

ஆரியர் தென்னாடு வருமுன், பார்ப்பார் என்பது இல்லறத்தாரான தமிழ்ப் புலவரை யும், அந்தணர், ஐயர், முனிவர் என்பன முற்றத் துறந்த தமிழ அறிவரையுமே குறித் தன. பிற்காலத்தில் இவ் வீரறவாணர் பெயரும் அறவேறுபாடின்றிப் பிராமணர்க்கே பயன்படுத்தப்பட்டன.

முடியுடை மூவேந்தர் என்றது சேர சோழ பாண்டியரை; உலகு என்றது உயர்ந்தோரை.

[ஆறு + முறை – அறுமுறை. வாழ் (த. வி.) → வாழ்த்து (பி.வி., முத.தொ.ஆகு.).]

**அறுமை**[1] *arumai*, பெ. (n.) நிலையின்மை, நிலையாமை; instability, transience.

"அறுமையில் வுலகுதன்னை யாமெனக் கருதி" (தேவா. 4.33 : 3).

[அறு → அறுமை = அழியுந்தன்மை, நிலை யின்மை. 'மை' பண்.பெ. ஈறு.]

**அறுமை**[2] *arumai*, பெ. (n.) 1. **ஆறாயிருக்குந் தன்மை**; the state of being six. 2. **ஆறு**; six.

ம. அறு; க. அறுமெ.

[ஆறு → அறு + மை (பண்.பெ. ஈறு).]

**அறுவகைச்சக்கரவர்த்திகள்** *aru-vagai-c-cakkara-varttigaḷ*, பெ. (n.) **அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவன், சகரன், கார்த்த வீரியன் என்னும் அறு பேரரசர்** (திவா.); the six emperors, viz., Ariccandiraṉ, Naḷaṉ, Mušukundaṉ, Prūravaṉ, Sagaraṉ, Kārttavīriyaṉ.

[ஆறு+வகை – அறுவகை. **Skt.** cakravarti > **த**. சக்கரவர்த்தி = பேரரசன்.]

**அறுவகைச்சரக்கு** *aru-vagai-c-carakku*, பெ. (n.) **நந்தியுப்பு, அரப்பொடி, அப்புப்பொடி, தாளகம், காசுக்கட்டி, நாகக்குரு (நாகரசம்) என்னும் அறுவகை மருந்துப் பொருள்கள்**; a group of drugs, viz., nandi salt, iron filings, appu powder, orpiment, catechu and zinco-mercury (சா.அக.).

[ஆறு + வகை – அறுவகை.]

சரக்கு பார்க்க; see *šarakku*.

**அறுவகைச்செயனீர்** *aru-vagai-c-ceyanir*, பெ. (n.) 1. **வெடியுப்பு உருகும்போது, துருசு, சீனம், வெண்காரம், பூநீர், சாரம் (நவாச்சாரம்), கழுதை மண்டையோடு முதலியவற்றைப் பொடித்துப்போட்டுக் கிண்டி, பனியில் வைத்து இறக்கும் ஒருவகைச் செயனீர்** (உரோம. 500); a solvent medium used in alchemy, obtained first by melting nitre in a pot and adding to it powders of six drugs, viz., blue vitriol, borax, pooneer (Saline efflorescence), sal ammoniac and asses' skull, and then exposing the whole mixture to the night dew. 2. **அமுரி அல்லது மூத்திரம்**; urine (புலத்தியர் கற்பம், 300).

**அறுவகைத்தானை** *aru-vagai-t-tanai*, பெ. (n.) **வேற்றானை, வாட்டானை, விற்றானை, தேர்த்தானை, பரித்தானை, களிற்றுத்தானை என்னும் அறுவகைப் படைகள்** (திவா.); the six constituents of an army, viz., force of spearmen, company of swordsmen, battalion of archers, chariot division, cavalry and elephantry.

[ஆறு + வகை – அறுவகை. தானை = சேலை, துணி, கொடி, கொடிப்படை, படை. **ஒ.நோ:** தூசு = பஞ்சு, ஆடை, முன்னணிப் படை. தூசு → தூசி = கொடிப்படை.]

**அறுவகைப்படை** *aru-vagai-p-paḍai*, பெ. (n.) 1. **மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்னும் அறுவகைப் படைகள்** (குறள், 762, பரிமே. உரை); the six kinds of military forces falling under three dichotomic divisions, viz., hereditary force *Vs.* mercenary force; regiment recruited from agricultural tract *Vs.* regiment recruited from jungle tract; allied force *Vs.* hostile force.

[ஆறு + வகை – அறுவகை. படு → படை.]

படை பார்க்க; see *paḍai*.

**அறுவகைப்பேதி** *aru-vagai-p-pēdi*, பெ. (n.) **தமிழ் மருத்துவப்படி, அறுவகைக் கரைக்குங் கற்கள் (அல்லது மாழைமண்கள்)**; acc. to Tamil *Siddhars'* Science, the six kinds of mineral solvents (or ores) (சா.அக.).

**அறுவகைப் பேதிகள்:**

1. அன்னபேதி (சோறு கரைப்பான்); copper sulphate, the solvent of rice food.
2. மாமிசபேதி (ஊன் கரைப்பான்); a mineral solvent of flesh or meat.
3. சொர்ணபேதி (பொன் கரைப்பான்); that which dissolves gold.
4. அஸ்திபேதி (என்பு கரைப்பான்); a mineral which is capable of dissolving bones.
5. ——
6. சகஸ்ரபேதி (ஆயிரங் கரைப்பான்); solvent of a similar nature that could dissolve many substances (சா.அக.).

ஐந்தாவது பேதி (கரைப்பான்) **சா. அகர** முதலியிற் சொல்லப்படவில்லை.

[ஆறு + வகை – அறுவகை. **Skt.** bhēdin > **த**. பேதி.]

**சா.அக.** 'solvent' என்று குறித்திருப்பதால், 'கரைப்பான்' என்று மொழிபெயர்க்கப்பட்டது. 'பேதி' என்னும் வடசொற்கு 'மாற்றி அல்லது வேறுபகுப்பான்' என்பதே பொருள்.

# அறுவாள்


பன்னறுவாள்


அறுபுள்ளிவண்டு


பாளையறுவாள்


வெட்டறுவாள்

**அறுவகைமானங்கள்** *aṟu-vagai-māṉaṅgaḷ*, பெ. (n.) படிமக் கலையிற் கையாளப்படும் நீளம், அகலம், கனம் அல்லது உயரம், சுற்று, இடை (வெளி), அடக்கம் என்னும் அறுவகை அளவுகள்; the six kinds of dimensions observed in sculpture.

'நீள அகல அளவுகளோடு கன அளவும் இன்றியமையாததாகும். இதைக் **கனமானம்** என்பர்.

அத்துடன் படிமத்தைச் சிறப்பாக அமைத்திட, மேலும் மூன்று அளவுகள் தேவைப்படுகின்றன. உறுப்புகளின் சுற்றளவு, ஓர் உறுப்பிற்கும் மற்றோர் உறுப்பிற்கும் உள்ள இடைவெளி அளவு, குறிப்பிட்ட எல்லையிலிருந்து படிமத்தின் முன்னுறுப்புகளும் பின்னுறுப்புகளும் அடங்கியிருக்கும் அடக்க அளவு ஆகிய இம் மூன்றும் படிமக் கலைஞர்களுக்குப் பயனளிக்கும் அளவுகளாகும்.

மேற்குறிப்பிட்ட ஆறுவகை மானங்களும் ........பின்வருமாறு வழங்கிவ்ருகின்றன.

'நீளத்தை **மானம்** என்றும், அகலத்தைப் **பிரமாணம்** என்றும், உயரத்தை **உன்மானம்** என்றும், சுற்றளவைப் **பரிமாணம்** என்றும், இடைஅளவை **உபமானம்** என்றும், அடக்க அளவை **லம்ப மானம்** என்றும் கூற வேண்டும்' (சி. செ. பக். 184).

[ஆறு → அறு (கு.பெ.எ.) + வகை + மானம். வகு → வகை. 'ஐ' பண்.பெ. ஈறு. மா → மானம் (அளவு). மாத்தல் = அளத்தல். 'அனம்' பண்.பெ. ஈறு.]

பிரமானத்தைப் புறமானம் என்றும், சுற்றளவைப் பரிமானம் என்றும், உபமானத்தை உவமானம் என்றும் வழங்கின் தூய தமிழாம். பரிதல் = வட்டமாதல், சுற்றுதல். எ-டு: பரிதி, பரிசல். 'உன்மானம்' தென்சொல்லுமாகும். உன்னுதல் = உயர்தல், எழுதல். அடக்க அளவை 'அடக்கமானம்' என்றே சொல்லலாம். மானம் என்னும் தென்சொல் வடமொழியில் ரகரத்தின் பின்வரும்போது, நகரம் ணகரமாகத் திரியும்.

**அறுவகைமூத்திரம்** *aṟu-vagai-mūttiram*, பெ. (n.) **மாந்தன், ஆடு, மாடு, கழுதை முதலிய அறுவகை யுயிரிகளின் மூத்திரம்**; the urine of human beings and 5 animals such as sheep, cow, ass, etc. (சா.அக.).

[ஆறு + வகை – அறுவகை. மோள் + திரம் – மோட்டிரம் → மோத்திரம் → மூத்திரம் (தொ.ஆகு.). 'திரம்' தொ.பெ. ஈறு.]

**அறுவகையரிசி** *aṟu-vagai-y-arišī*, பெ. (n.) **அருணாவரிசி, உலூவாவரிசி, ஏலவரிசி, கார்போகரிசி, விளவரிசி, வெட்பாலையரிசி என்னும் அறுவகையரிசிகள்** (சங்.அக.); the six kinds of husked grain, viz., *aruṇāvarišī*, *ulūvāvarišī*, *ēlavarišī*, *karbōgarišī*, *viḷavarišī* and *veṭpālaiyarišī*.

[ஆறு + வகை – அறுவகை. அரி → அரிசி = பருப்பினுஞ் சிறியதாயிருப்பது.]

**அறுவகையுயிர்** *aṟu-vagai-y-uyir*, பெ. (n.) (புத்த.) **மக்கள், தேவர், பிரமர், நரகர், விலங்கு, பேய் என்னும் அறுவகையுயிர்கள்**; (Buddh.) the six kinds of living beings, viz., *makkaḷ*, *tēvar*, *piramar*, *naragar*, *vilaṅgu* and *pēy*.

" அலகில் பல்லுயி ரறுவகைத் தாகும்
மக்களுந் தேவரும் பிரமரு நரகரும்
தொக்க விலங்கும் பேயு மென்றே"
(மணிமே. 30 : 56 - 58).

[ஆறு + வகை – அறுவகை. உய் → உயிர் = உடம்பை உய்ப்பது (செலுத்துவது).]

**அறுவடை** *aṟuvaḍai*, பெ. (n.) **கதிரறுப்பு** (உ.வ.); harvest (Com.u.).

[அறு → அறுவு + அடை (ஈறு). ஒ.நோ: சொல் → சொலவு → சொலவடை.]

**அறுவடைமேரை** *aṟuvaḍai-mērai*, பெ. (n.) **அறுவடைக்குப்பின் சிற்றூரூழியர் களத்திற் பெறும் உரிமைச் சம்பளம்**; emoluments of village servants and artisans paid at harvest time in kind or at a commuted price.

**அறுவரி** *aṟu-vari*, பெ. (n.) **தவணையிற் செலுத்தும் வரி** (வின்.); tax to be paid in fixed instalments.

['அறுவரி' வினைத்தொகை. அறுத்தல் = பிரித்தல், வரையறுத்தல்.]

**அறுவா-தல்** *aṟuvā-*, 6 செ.கு.வி. (v.i.). 1. **செலவழிந்து போதல்** (நெல்லை); to be spent, exhausted (Tn.). 2. **முடிதல்** (இராட்.); to be finished, completed. 3. **தண்டப்படுதல், தொகுக்கப்படுதல்** (இராட்.); to be collected, gathered.

[அறு → அறுவு (தொ.பெ.) + ஆ. 'வு' தொ.பெ. ஈறு.]

**அறுவாக்கு-தல்** *aṟuvākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. செலவழித்துவிடுதல்* (நெல்லை); to spend, use up, exhaust (Tn.). *2. முடித்தல்* (இராட்.); to complete, conclude, finish.

*[அறுவாகு (த.வி.) → அறுவாக்கு (பி.வி.).]*

*அறுவா-தல்* பார்க்க; see *aṟuvā-*.

**அறுவாய்**[1] *aṟu-vāy*, பெ. (n.) *1. வெட்டுவாய்*; opening in a cut wound. *2. மரம் அறுபட்ட இடம்*; opening in timber under the saw. *3. குறைவிடம், வெற்றிடை*; vacant gap, as of the Moon in its waxing phases. "அறுவாய் நிறைந்த வவிர்மதிக்கு" (குறள், 1117).

*['அறுவாய்' வினைத்தொகை.]*

**அறுவாய்**[2] *aṟu-vāy*, பெ. (n.) ஆரல் (*கார்த்திகை*) *என்னும் மூன்றாம் நாண்மீன்*; the 3rd lunar asterism, as consisting of six stars. "அறுவாய் நிறைந்த மதிப்புறத் தோவென" (கல்லா. 95 : 9).

*[ஆறு + வாய் – அறுவாய். வாய் = இடம், உறுப்பு.]*

'அறுவாய்' பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகச் சொல்லப் படும்.

**அறுவாய்ப்போ-தல்** *aṟuvāy-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) *முற்றுஞ் செலவாய்விடுதல்* (நெல்லை); to be completely spent (Tn.). அரிசி அறு வாய்ப் போய்விட்டது.

*[அறு → அறுவு (தொ.பெ.) + ஆய் (இ.கா. வி.எ.) + போ (து.வி.). 'வு' தொ.பெ. ஈறு.]*

*அறுவா-தல்* பார்க்க; see *aṟuvā-*.

ஆய்ப்போதல் என்பது ஆதல் என்னும் வினையின் வலியுறு (intensive) வடிவாகும். போதல் என்பது முடிவை அல்லது இறப்பை (கழிவை) யுணர்த்தும் துணைவினை.

**அறுவாள்** *aṟu-vāḷ*, பெ. (n.) *வலிதாகவும் பெரி தாகவும் அறுக்கும் வாள்*; big cutting knife, scimitar.

ம. அரவாள்

*அறுவாள் வகைகள் :*

1. அக்கறுவாள் - billhook for lopping thorns and prickly pear.
2. கொத்தறுவாள் - butcher's knife for chopping and mincing meat.
3. பன்னறுவாள் - serrated sickle for reaping corn or harvesting paddy.
4. பாளையறுவாள் - toddy-tapper's knife for paring spathe.
5. வீச்சறுவாள் - big and long scimitar for cutting or chopping off the throat of a man or animal in one stroke.
6. வெட்டறுவாள் - big scimitar for axing or chopping any thing big.

*['அறுவாள்' வினைத்தொகை.]*

அரிவாள் என்பது சிறிதாகக் காய்கறியரியும் மணைவாள் என்றும் அறுவாள் என்பது வலி தாகவும் பெரிதாகவும் அறுக்கும் அல்லது வெட்டும் பெருவாள் என்றும் வேறுபா டறிதல் வேண்டும்.

**அறுவிடு-தல்** *aṟu-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) *நிலுவையை முற்றுந் தண்டிவிடுதல்*; to recover completely, as arrears. நிலுவை யறுவிட.

*[அறு → அறுவு (தொ.பெ.) இடு + (து.வி.).]*

**அறுவிதி** *aṟu-vidi*, பெ. (n.) *தீர்ப்பு* (இராட்.); final decision, judgement. வழக்கு அறுவிதி யாயிற்று.

*['அறுவிதி' வினைத்தொகை. அறு +* **Skt.** vidhi.*]*

**அறுவிரல்** *aṟu-viral*, பெ. (n.) *கை அல்லது பாதத்தில் அமையும் ஆறு விரல்கள்*; the occurrence of six fingers in a hand or six toes in a foot (சா.அக.).

க. அறுவெரல்

**அறுவு** *aṟuvu*, பெ. (n.) *1. நீர்வற்றிய கால்* (இ.வ.); dry channel in a tank or well (Loc.). *2. கடைசிப் பகுதி* (இராட்.); end of an object, final phase of an affair. *3. முழுது, முழுமை*; whole, sum total. "பொன்னெலா மறுவுகொண்டு வாங்குமின்" (திருவிளை. நரி பரி. 6).

*[அறு → அறுவு. 'வு' தொ.பெ. ஈறு.]*

**அறுவை**[1] *aṟuvai*, பெ. (n.) *1. ஆடை*; cloth, garment. "விரிநூ லறுவையர்" (பதிற்றுப். 34 : 3). *2. அறுப்பு மருத்துவம்*; surgery (சா. அக.). *3. அறுத்தபின் அறுவாய்க்கு இடும் மருந்து*; a medicine applied to the wound after operation (சா.அக.). *4. சித்திரை யென்னும் 14ஆம் நாண்மீன்* (பிங்.); the 14th lunar asterism.

ம. அறுவ; க. அறுவெ.

[அறு → அறுவை. 'வை' தொ.பெ. ஈறு.]

**அறுவை²** *aṟuvai*, பெ. (n.) **தோளிலிடும் உறி**; net or hoop suspended from the shoulder. "சுவன்மே லறுவையும்" (சிலப். 10 : 98).

[ஒருகா. உறு → உறுவை → அறுவை. ஒ.நோ : உறு → உறி.]

**அறுவைநூல்** *aṟuvai-nūl*, பெ. (n.) **அறுவை மருத்துவம்பற்றிய பொத்தகம்**; a book on surgery.

[அறு → அறுவை + நூல். நுவல் → நூல்.]

**அறுவையர்** *aṟuvaiyar*, பெ. (n.) **துணிநெய்வோர், துணிவிற்போர்**; weavers, cloth dealers. "வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்" (மணிமே. 28 : 53).

ம. அறுவயர்

[அறு → அறுவை + அர் (ப.பா. ஈறு).]

**அறுவைவாணிகன்** *aṟuvai-vāṇigaṉ*, பெ. (n.) 1. **துணி விற்பவன்**; cloth merchant. 2. **மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்** (அகநா. 124); *Iḷavēṭṭaṉār*, a cloth merchant of Madurai.

[அறுவை + வாணிகன். வாணிகம் → வாணிகன். 'ன்' (அன்) ஆ.பா. ஈறு.]

**அறை-தல்** *aṟai-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. **அடித்தல்**; to beat, strike, slap. "அறைந்த கற் றூணிடை வந்தாய்" (பாரத. கிருட். 41). 2. **பறைகொட்டுதல்**; to beat, as a drum. "அறைபறை யன்னர் கயவர்" (குறள், 1076). 3. **கடாவுதல்**; to hammer, as a nail. "நினைப் புடை யிதயத் தாணி யறைந்ததும்" (இரகு. இந்துமதி. 85). 4. **மண்ணெறிந்து கட்டுதல்**; to construct, as a mud wall by slapping the mud on. மண்சுவர் நாலுபடை யறைந்தேன். 5. **துண்டித்தல்;** to cut in pieces, hack. (தொல். பொருள். செய். 155, பேரா. உரை). 6. **சொல்லுதல்**; to state, relate, utter, declare, narrate. "ஆசைபற்றி யறைய லுற்றேன்" (கம்பரா. சிறப்புப்பாயி. 4). —, 2 செ.கு.வி. (v.i.) 1. **ஒலித்தல்**; to sound. "அறை கழல் வீரர்" (நைடத. நாட்டு. 13). 2. **அலை காற்று முதலியன மோதுதல்**; to beat upon, as wind, as waves, dash, as a mountain torrent. "முரசறையு மாக்கடல் காரென வார்த்தன" (சீவக. 2168).

ம. அற; க. அரெ; தெ. அறசு; குரு. அச்னா.

[அர் → அறு → அறை.]

**அறை¹** *aṟai*, பெ. (n.) 1. **அடி**; beat, blow, slap (சேதுபு. வேதாள. 43). 2. **மோதுகை** (சூடா.); dashing, as of waves against the shore. 3. **அலை** (சூடா.); wave. 4. **ஓசை**; sound. 5. **சொல்**; word, as spoken. "மொழிகிளவி விளம்பறை" (நன். 458). 6. **விடை**; reply. "சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ ணாதே" (சி. சி. சுபக். 8 : 14). —, இடை. (int.) 1. **துன்பமின்மையைக் குறிக்கும் இடைச்சொல்**; an exclamation expressive of the feeling of security. "அறையெனத் திரியு மாய்பொற் பூமியில்" (சீவக. 2180). 2. **ஓர் உவமவுருபு**; a particle of comparison. "சுரும் பறை மணித்தோ டுமிய வீசி" (மணிமே. 20 : 107).

ம. அற; க. அரெ; தெ. அறுமு; கொலா. ரத்; கூ. ரஜ்ப.

துன்பமின்மை அல்லது பாதுகாப்புக் குறிப்பை, நச்சினார்க்கினியர் 'பத்திராலா பனம்' என்னும் வடசொல்லாற் குறித்துள்ளார். அது பத்ர (bhadra) + ஆலாபந (ālāpana) என்று பிரியும்.

உவமவுருபுகள், ஒப்புப்பொருவு உறழ் பொருவு என்னும் இருவகைப் பொருவிலும் வரும். 'அறை' என்பது சொல்லுதற் பொருளை அடிப்படையாகக் கொள்ளின் ஒப்புப்பொருவும், அடித்தற் பொருளை அங்ஙனங் கொள்ளின் உறழ்பொருவும் ஆகும்.

**அறை²** *aṟai*, பெ. (n.) 1. **அறுகை, நீங்குகை, நின்றுவிடுகை, மறைகை** (சிலப். 14 : 30, அரும்.); ceasing, separating, disappearing. 2. **மலையுச்சி**; the top of a mountain (சா. அக.).

க. அறெ

[அறுதல் = நீங்குதல். அறு → அறை. 'ஐ' தொ.பெ. ஈறு. அறை = நீங்குகை, நீங்கு மிடம், முடிவு, உச்சி.]

**அறை³** *aṟai*, பெ. (n.) 1. **அறுக்கப்படுகை, வெட்டுண்கை**; cutting, chopping. "அறையுற் றாலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே" (மலைபடு. 118). 2. **(அறுக்கப்பட்ட) துண்டம்**; piece. "அறைக்கரும்பு" (பொருந. 193). 3. **சல்லி** (சூடா.); pendant, tassel. 4. **திரைச் சீலை** (சூடா.); curtain. 5. **அம்மி**; grinding

stone. "மறுகு படவறை.........யரைக்குநர்" (பரிபா. 10 : 83). 6. **உள்வீடு** (சூடா.), **அரங்கு** room, apartment, chamber, cell. 7. **வீடு**; house. "ஐவர் மாள வரக்கறை யெரித்தல் கேளா" (கூர்மபு. கண்ணன்மண. 111). 8. **பிள்ளைப்பேற்று வீடு**; lying-in room. அவள் எத்தனையோ அறை காத்தவள். 9. **பாசறை**; place of encampment. "இடாஅ வேணி யியலறைக் குருசில்" (பதிற்றுப். 24 : 14). 10. **மலைக்குகை** (சூடா.); cave. 11. **சுரங்கம்**; a subterranean passage, excavation for blasting a structure. "பொய்யறைவாய்ப் புகப் பெய்த மல்லர்" (திவ். பெரியதி. 2 . 5 : 5). 12. **பெட்டியின் உட்பகுதி**; a compartment, as of a box. 13. **மேசையிழுவை**; drawer, as of a table. 14. **நிலைப்பேழை யுட்பிரிவு**; a compartment, as of a cabinet, pigeon hole. 15. **கண்ணறை** (சா.அக.); cell. 16. **தேன் கூட்டறை**; the cell in a bee-hive (சா.அக.). 17. **பாத்தி**; garden bed. "குறையறை வாரா நிவப்பின்" (மலைபடு. 118). 18. **கவறாடும் சதுரங்கக் கட்டம்**; square on a chessboard. 19. **வகுத்த இடம்**; assigned portion of an area. "கோலறை யடைப்ப தின்றி" (திரு வாத. பு. மண்சுமந். 23). 20. **பாறை**; rock, ledge. "அகலறை.........காலி னுதிர்ந்தன" (மலைபடு. 133). 21. **வஞ்சனை**; stratagem, wile, trick. "மறையிற்றன் யாழ்கேட்ட மானை யருளா தறைகொன்று" (கலித். 143 : 10-11).

ம., க., அற; தெ. அற, ராய்; கோத. அர்; து. அதெ; பட. அரெ.

*[அறு → அறை.]*

**அறைக்கட்டளை** *arai-k-kaṭṭaḷai*, பெ. (n.) 1. **கோயிலில் நிற்றப் (நித்தியப்) படித்தரப் பண்டங்கள் வைக்கும் இடம்**; temple stores (R.T.). "செய்யுமறைக் கட்டளையார் வந்தால்" (விறலிவிடு. 280-1). 2. **சிலகாலம் பயனுகர்ந்து (அனுபவித்துப்) பின்பு கோயிலுக்கு விடும்படி அளிக்கப்பட்ட இறையிலி நிலம்** (G. Md. D. I. 200); lands granted rent-free to individuals in order that they might transfer them later to the temples, as an act of religious merit.

*[அறை + கட்டளை.]*

**அறைக்கட்டளைமானியம்** *arai-k-kaṭṭaḷai-māniyam*, பெ. (n.) **கோயிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்**; land granted to a temple rent-free for the performance of certain religious services.

*[அறை + கட்டளை + மானியம்.]*

**அறைக்கட்டு** *arai-k-kaṭṭu*, பெ. (n.) 1. **வீட்டின் உட்பகுதி**; room, apartment. 2. **திருவிழாப் பந்தல்**; temporary shed for the idol, constructed during festival occasions (W.).

*[அறை + கட்டு.]*

**அறைக்கணக்கு** *arai-k-kaṇakku*, பெ. (n.) **சரக்கறைக் (உக்கிராணக்) கணக்கு**; store account.

அறுக்கணக்கு என்பது கொச்சைத் திரிபான இடவழக்கு.

*[அறை + கணக்கு. அறை = சரக்கறை.]*

**அறைக்கழித்தல்** *arai-k-kaḻittal*, பெ. (n.) **பிள்ளைப்பேற்றறையினின்று தாய் வெளிவருதற்குரிய சடங்கு** (இ.வ.); ceremony performed when a woman comes out of the lying-in chamber after delivery (Loc.).

*[அறை + கழித்தல்.]*

**அறைக்கீரை** *arai-k-kīrai*, பெ. (n.) **பாத்திகட்டி நீர்பாய்ச்சி வளர்க்கப்படுவதும், எல்லாராலும் பெருவழக்காக உண்ணப்படுவதும், உடல் நலத்திற் கேற்றதும், மருந்துக்கீரையாக எண்ணப்படுவதுமான இலைக்கறிவகை**; a wholesome pot-herb, an edible greens very commonly eaten and considered to be a medicinal food, *Amaranthus tristis*. "அறைக்கீரை நல்வித்தும்" (திருமந். 160). பொதுவாக உணவிற்குப் பயன்படுத்தும் ஒருவகைப் பத்தியக்கீரை. இது ஊதை (வாதம்), கோழை (கபம்), குளிர்ச்சி (சீதம்) முதலியவற்றைப் போக்கும்; a vegetable green used generally in food and also in diet, round-headed amaranth; garden spinach, *Amaranthus tristis* alias *Amaranthus gangeticus*.

It is useful in rheumatic complaints and phlegmatic diseases, and it also removes chillness from the system.

ம. அறச்சீர, அறக்கீர.

*[அறை = பாத்தி. பாத்திகளில் வளர்க்கப்படுவதால் அறைக்கீரை யெனப்பட்டது.]*

அடிக்கடி அல்லது தழைக்கத்தழைக்க அறுவாளால் அறுக்கப்படுங்கீரை அறைக்கீரை யென்று கொள்ளவும் இடமுண்டு. ஆயினும்,

பாத்திக்கீரை யென்பதே மிகப் பொருத்த மாம். 'அறைக்கீரை சிறுபாத்தி, அழகுண்டு மணமில்லை' என்னும் விடுகதை நோக்கத் தக்கது. வேறு சில கீரைகளும் பாத்திகளில் வளர்க்கப்படினும், அறைக்கீரைபோல் அத் துணை ஒழுங்காக வளர்க்கப்படாமை அனை வரும் அறிந்ததே.

**அறைக்கீரைக்காய்** *aṟai-k-kīṟai-k-kāy*, பெ. (n.) **வெள்ளரிக்காய்** (சேலம்); tender cucumber (Sm.) (செ.அக.) — cucumber, *Cucumis sativus* (சா.அக.).

*[அறை + கீரை + காய்.]*

**அறைக்கீரையெண்ணெய்(தைலம்)** *aṟai-k-kīṟai-y-eṇṇey*, பெ. (n.) **அறைக்கீரை விதையினின்று இறக்கப்படும் மருந்தெண்ணெய்**; a medicinal oil extracted from the seeds of *Amaranthus tristis*.

*[அறை + கீரை + எண்ணெய்.]*

**அறைக்கீரைவிதை** *aṟai-k-kīṟai-vidai*, பெ. (n.) **கூந்தலை வளர்க்கும் எண்ணெய் இறக்கப்படும் அறைக்கீரை வித்து**; seeds of *Amaranthus tristis* from which a hair-oil is extracted. ''அறைக்கீரை நல்வித்தும்'' (திருமந். 160).

*[அறை + கீரை + விதை.]*

**அறைக்குழந்தை** *aṟai-k-kuḻandai*, பெ. (n.) **பிள்ளைப்பேற் றறையினின்று வெளிவராத குழந்தை**; new born infant, as the baby still inside the lying-in room.

*[அறை + குழந்தை.]*

**அறைகாரன்** *aṟai-kāraṉ*, பெ. (n.) **கோயில் சரக் கறைக்காரன்** (உக்கிராணக்காரன்); temple store-keeper.

*[அறை + காரன். காரம் → காரன்.]*

காரன் பார்க்க; see *kāraṉ*.

**அறைகுறை** *aṟai-kuṟai*, பெ. (n.) 1. **தேவை**; want, necessity. 2. **துன்பம்**; trouble, distress.

க. அரெகொரெ

*[அறு → அறை. குறு → குறை. 'ஐ' தொ.பெ. ஈறு. 'அறைகுறை' எதுகை மரபிணைமொழி.]*

முற்றுப்பெறாமை யென்னும் பொருளில் வழங்கும் அல்லது எழுதப்படும் அறைகுறை என்னுஞ்சொல், அரைகுறை என்பதன் வழக்குத் திரிபான வழூஉச் சொல்லாகும்.

**அறைகுறைபார்-த்தல்** *aṟai-kuṟai-pār-*, 4 செ. குன்றாவி. (v.t.) **பழுதுபார்த்தல், செப்பனிடு தல்** (இ.வ.); to carry out repairs (Loc.).

அறைகுறை பார்க்க; see *aṟai-kuṟai*.

*[அறு → அறை. குறு → குறை. 'ஐ' தொ.பெ. ஈறு. 'அறைகுறை' எதுகை மரபிணைமொழி.]*

**அறைகூவு-தல்** *aṟai-kūvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **போருக்கழைத்தல்**; to challenge, summon to a combat. ''அருமுனையா னறைகூ வினபின்'' (பு.வெ. 4 : 7, கொளு). 2. **வலியக் கூவியழைத்தல்**; to make a compelling call. ''அந்தணனா யறைகூவி வீடருளும்'' (திருவாச. 8 : 1).

*[அறு → அறை. 'ஐ' தொ.பெ. ஈறு. கூ → கூவு.]*

**அறைகூறு-தல்** *aṟai-kūṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **அறைகூவுதல்**; to challenge. 'பூர்வ க்ஷணத்திலே வாலி கையாலே நெருக்குண்டு போனவர் இப்போது இப்படித் தெளிந்து வந்து அறைகூறுகிற இது' (ஈடு, 1 . 4 : 9).

**அறைசெய்-தல்** *aṟai-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) **அறுத்துத் துண்டமாக்கல்**; to cut into thin slices, to slice (சா.அக.).

**அறைத்தி** *aṟaitti*, பெ. (n.) **கடுக்காய்**; chebulic myrobalan (சா.அக.).

**அறைநன்** *aṟainaṉ*, பெ. (n.) **அறுப்பவன்**; one who reaps, reaper. ''அறைநர் கரும்பிற் கொண்ட தேனும்'' (புறநா. 42 : 14 - 15).

*[அறைகின்றான் (வினையா. பெ.) → அறை குன்னான் → அறைகுனான் → அறைகுனன் → அறைகுநன் → அறைநன்.]*

**அறைநீலி** *aṟai-nīli*, பெ. (n.) **கொத்தமல்லி**; coriander, *Coriandrum sativum* (சா.அக.).

**அறைப்பிள்ளை** *aṟai-p-piḷḷai*, பெ. (n.) **அறைக் குழந்தை** (இ.வ.); baby, only a few days old and not yet brought out of the lying-in chamber.

*[அறை + பிள்ளை.]*

**அறைப்புரை** *aṟai-p-purai*, பெ. (n.) **அறைவீடு**; (நாஞ்.); room (Nāñ.).

*[அறை + புரை.]*

**அறைபவனாதி** *aṟaibavaṉādi*, பெ. (n.) **வெண் காரவுள்ளி**; garlic, *Allium sativum* (சா.அக.).

**அறைபோ-தல்** *arai-pō-*, 8 செ.கு.வி. (v.i.) 1. **கீழறுக்கப்படுதல்**; to be corrupted or seduced, as an army by the enemy. "அழிவின் றறை போகா தாகி" (குறள், 764). 2. **மதி கெட்டழிதல்**; to be bewildered, to become non-plussed, be ruined. "அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து" (சிலப். 20 : 25).

*[அறை (தொ.பெ.) + போ (து.வி.).]*

**அறைபோக்கு** *arai-pōkku*, பெ. (n.) 1. **மதி கெட்டழிகை**; being bewildered, non-plussed, being ruined. "கள்ளுண்டல் காம மென்ப கருத்தறை போக்குச் செய்வது" (திருவிளை. மாபாதக. 26). 2. **தப்புகை, ஒதுங்குகை**; escape. "அறைபோக் கொழியக் குலமுழுதும் வளைஇ" (ஞானா. 46 : 14).

*[அறைபோ → அறைபோக்கு (தொ.பெ.). 'போ' து.வி. 'கு' தொ.பெ. ஈறு. இனி, போ → போகு → போக்கு என்றுமாம்.]*

**அறைமுறையிடு-தல்** *arai-murai-y-iḍu-*, 20 செ. கு.வி. (v.i.) **குறை தெரிவித்தல்**; to ventilate one's grievances, state one's wants (W.).

*[அறை + முறையிடு. அறை = குறை. 'இடு' து.வி.]*

**அறையிடு-தல்** *arai-y-iḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) **அறைகூவுதல்**; to challenge. "மாரிகை யேறி யறையிடுங் காலத்தும்" (திவ். இயற். திருவிருத். 19).

*[அறை (முத.தொ.பெ.) + இடு (து.வி.).]*

**அறையினாம்** *arai-y-inām*, பெ. (n.) **கோயில் அறைகாரனுக்கு விட்ட மானியம்** (இராட்.); rent-free land, granted for the services of the store-keeper in a temple.

*[அறை + U. இனாம் = நன்கொடை.]*

**அறையோ** *araiyō*, இடை. (int.) 1. **முறையிடும் சொல்**; an exclamation expressive of complaint, of disappointment. "அறையோவி தறிவரிதே" (திவ். இயற். திருவிருத். 10). 2. **வெற்றி மகிழ்ச்சிகளைப்பற்றிய குறிப்புச் சொல்**; an exclamation expressive of victory or joy. "அறையோ வறிவார்க்கு" (திருவாச. 47 : 5), "ஐயோ கண்ணபிரான் அறையோ வினிப்போனாலே" (திவ். திருவாய். 5 . 1 : 1). 3. **ஒரு வஞ்சினமொழி**; an exclamation or oath used in wager. "அறையோ வரிவைவரி நெடுங்க ணொக்கிலையால் வாழி நீலம்" (சீவக. 2514).

*[அறை (தொ.பெ.) + ஓ (இடை.).]*

அறை யென்னும் சொல், வென்றவன் தோற்றவனை அறைந்ததையாவது, பெரும் பேற்றாற் பெருமகிழ்ச்சியுற்றவனின் பேற்று வாய்ப்பையாவது உணர்த்தும். அடித்து விட்டான், தோற்கடித்துவிட்டான் என்பன ஒருவனை யொருவன் வென்ற செயலையும், அவனுக்கு நல்ல அடி அடித்தது என்பது ஓர் அரிய பேற்றையும், உணர்த்துதல் காண்க. 'ஓ' என்பது பலரறிய ஓலிடுவதைக் குறிப்பது.

**அறையோலை** *arai-y-ōlai*, பெ. (n.) **வரையறை செய்யும் பட்டயம் (சாஸனம்)** (S.I.I. iii, 161); document with certain specifications.

*[அறு → அறை = வரையறை. 'ஓலை' ஆகு.]*

**அறைவகு-த்தல்** *arai-vagu-*, 4 செ.கு.வி. (v.i.) **புரையோடுதல்** (பரராசசே. 230); to become fistulous, as an ulcer.

*[அறு → அறை. பகு → வகு.]*

**அறைவாசல்** *arai-vāśal*, பெ. (n.) **கோயில் சரக்கறை** (இ.வ.); temple store-room (Loc.).

**அறைவாசல்மூடி** *arai-vāśal-mūḍi*, பெ. (n.) **தீக்கோட் காலத்தில் உள்வீட்டு வாசலை அடைத்துவைக்க உதவும் சதுரக் குதிர்** (நெல்லை); a rectangular shutter made of clay and hay, used for closing the door of an inner room during the time of arson or conflagration (Tn.).

*[அறை + வாசல் + மூடி. வாய் → வாயல் → வாசல். மூடு → மூடி. 'இ' வி.முத. ஈறு.]*

**அறைவாடிக்கிளி** *araivāḍi-k-kiḷi*, பெ. (n.) **பொன்னாங்காய்**; soap-nut, *Sapindus emarginatus* (சா.அக.).

**அறைவாய்** *arai-vāy*, பெ. (n.) **கணவாய்**; mountain pass. "உலக விடைகழி யறைவாய்" (புறநா. 175 : 8).

*[அறை = பாறை, மலை. வாய் = வழி. இனி, மலையிடை அறுக்கப்பட்ட வாய் அறைவாய் எனினுமாம்.]*

**அறைவீட்டுக்காரி** *arai-viṭṭu-k-kāri*, பெ. (n.) **பிள்ளைபெற்று வெளியேறாத பெண்**; a woman in confinement (சா.அக.).

[அறை + வீடு + காரி. காரன் (ஆ.பா. ஈறு) – காரி (பெ.பா. ஈறு).]

**அறைவீட்டுக்குழந்தை** *aṟai-viṭṭu-k-kuḻandai*, பெ. (n.) 1. *அறைக்குழந்தை பார்க்க*; see *aṟai-k-kuḻandai*. 2. *பத்துப் பதினைந்துநாட் பட்ட குழவி*; a child about 10 to 15 days old (சா.அக.).

[அறை + வீடு + குழந்தை.]

**அறைவீட்டுநோய்** *aṟai-viṭṭu-nōy*, பெ. (n.) *பிள்ளைபெற்ற அறையினின்று தாய் வெளி யேறு முன்பே தோன்றும் நோய்கள், அவை யாவன: இசிவு (சன்னி), காய்ச்சல் (சுரம்), நாட்பட்ட வலி (கிராணி) முதலியன*; diseases cropping up during the period or state of confinement, such as, puerperal sepsis, fever, chronic eclampsia, etc. (சா.அக.).

[அறை + வீடு + நோய்.]

**அறைவீடு** *aṟai-viḍu*, பெ. (n.) 1. *அறை*; room, chamber (W.). 2. *உள்ளறை* (இ.வ.); inner room (Loc.). 3. *பிள்ளைப்பேற்றறை*; lying-in room, the house for delivery (சா.அக.). 4. *மடைப்பள்ளி*; kitchen of a temple (J.N.).

அறோதகம் (வாழை), அறோதயம் (சிறுகீரை) என்று சா.அக. குறித்திருப்பது தென்சொல்லாகத் தெரியவில்லை.

**அன்**[1] *aṉ*, சு.கு.பெ.எ. (demons. adj.) *அன்னன், அன்னள், அன்னர், அன்னது, அன்ன என்னும் சேய்மைச்சுட்டு அல்லது ஒப்புமை குறித்த சொற்களின் முதனிலை*; base or stem of the words *annan*, *annal*, *annar*, *annadu*, and *anna*, signifying remoteness or similarity.

ம., க. அன்.

[அ (சே.சு.) → அன்.]

அன் என்னும் சேய்மைச்சுட்டடி, ஒப்புமை குறிக்கும்போது தன் சுட்டுத்தன்மையை இழந்துநிற்கும்.

**அன்**[2] *aṉ*, இடை. (part.) 1. *பெயரீறு*; noun suff. (அ) ஆண்பாற் பெயரீறு; masc. sing. suff. எ-டு. அவன், மருதன், மலையன், செய்பவன். (ஆ) அஃறிணை யொருமைப் பெயரீறு; neut. sing. suff. எ-டு: மொழியன் (பெரும்பேன்), அணில்வரியன் (வெள்ளரிக் காய்). 2. *வினைமுற்றீறு*; verb-ending. (அ) *ஆண்பாற் படர்க்கை வினைமுற்றீறு*; suff. of the rational class in the 3rd pers. sing. masc. எ-டு: அவன் வருவன். (ஆ) தன்மை யொருமை வினைமுற்றீறு; suff. of the 1st pers. sing. எ-டு: யான் வருவன். 3. ஒரு *சாரியை*; an euphonic augment. எ-டு: ஒன்றன் கூட்டம்.

ம., க. அன்; தெ. ண்டு; குட. ஆனு.

[அ (சே.சு.) → அன் (ஆண்பாற் படர்க்கை யொருமையீறு). ஒ → ஒல் → ஒன் (ஒன்று) → அன் (அ.ஒ.பெ.ஈறு). ஏன் → (த.ஒ.பெ.) → என் → அன் (த.ஒ. வி.மு. ஈறு). வருவேன் → வருவென் → வருவன். ஒருகா. இன் (கிழமைப் பொருளில் வரும் சாரியை) → அன்.]

'அன்' என்னும் ஆண்பாலீறு அவன் என்னும் சுட்டுப்பெயர்க் குறுக்கமன்று. அச் சுட்டுப்பெயர் அன்னீறு பெற்றதே.

அன் (ஆ.பா. ஈறு)

Cf. *an-* Christi*an*, Ary*an*, Europe*an*, Gregori*an*, ruffi*an*, unitari*an*, vegetari*an*; *en-* E. ward*en*.

வினையாலணையும் பெயர் ஈற்றளவிற் பொதுவகைப் பெயரினின்று வேறுபட்ட தன்று. ஆதலால், அதைப் பிரித்துக் கூற வேண்டியதில்லை.

அஃறிணை யொருமை யுணர்த்தும் 'அன்', 'ஆன்' ஈறுகள் ஆண்பா லீறுகளொடு தொடர் புடையன வல்ல. அவை ஒன்று என்னும் எண்ணுப் பெயரின் மறுவடிவான 'ஒன்' என்பதன் திரிபே. ஒன் → அன் → ஆன். உள் → உள்ளான் = உள்ளல்.

அன் (அஃறிணை யொருமை யீறு)

எ-டு: பச்சைநாடன், அலவன், விரியன், புறாப்பிடியன், குண்ணடியன்.

Cf. E. *an* - amphibi*an*

E. *on* - accordi*on*

தன்மையொருமை வினைமுற்றீறான 'அன்' என்பதும் ஆண்பாலீற்றொடு தொடர் புடையதன்று.

மரத்தின் வேர் என்பதுபோலுள்ள ஒன்றின்கூட்டம் என்னும் தொடர்ச்சொல், ஒன்றன்கூட்டம் என்று திரிந்திருக்கலாம்.

**அன்பகம்** *aṉbagam*, பெ. (n.) *சமுத்திரப்பாலை* (சங்.அக.); elephant creeper — *சமுத்திர சோகிப்பூண்டு*, canvolvulus, *Cissampelos pareira* (சா.அக). சமுத்திரப் பாலையைக் கடற்பாலை யெனலாம்.

**அன்பகர்** *anbagar*, பெ. (n.) அன்பகம் பார்க்க; see *anbagam*.

[அன்பகம் → அன்பகர்.]

**அன்பர்**[1] *anbar*, பெ. (n.) அன்பகம் பார்க்க; see *anbagam*.

[அன்பகம் → அன்பகர் → அன்பர்.]

**அன்பர்**[2] *anbar*, பெ. (n.) நண்பர்; friends.

**அன்பரிசப்பூ** *anbariša-p-pū*, பெ. (n.) மலர்ந்த கிளிஞ்சில் சுண்ணாம்பு; quick lime (சா.அக.).

**அன்பரிசம்** *anbarišam*, பெ. (n.) கிளிஞ்சில்; bivalve shell (சா.அக.).

**அன்பன்** *anban*, பெ. (n.) 1. நண்பன், தோழன்; friend, companion. 2. கணவன்; husband. "அன்பனைக் காணா தலவுமென் னெஞ் சன்றே" (சிலப். 18 : 17). 3. பத்தன்; pious man, devotee. "குருகூர் நகர்நம்பிக் கன்ப னாய்" (திவ். கண்ணிநுண். 11).

ம. அன்பன்; Pers. ahbāb; F. ami.

[அன்பு → அன்பன்.]

**அன்பனாதி** *anbanādi*, பெ. (n.) கணவன்மே லுண்டாகும் காம மேலீட்டினாலும், என்றுங் கலவியிலேயே எண்ணங்கொண்டிருப்பதனா லும், பெண்டிர்க்குண்டாகும் சுரநோய்; hysteric fever mainly in young women, due to excessive passion towards their lovers, or to a morbid desire for sexual intercourse, or to lack of control over emotions.

**அன்பிலி** *anb(u)-ili*, பெ. (n.) அன்பில்லாதவன்; one who is devoid of love or affection. "அன்பிலி பெற்ற மகன்" (கலித். 86 : 34).

[அன்பு + இலி. இல் → இலி. 'இலி' வி. முத. ஈறு.]

**அன்பு** *anbu*, பெ. (n.) 1. தொடர்புடையார் மாட்டு உண்டாகும் பற்று; love, attachment. 'அன்பொத்த அவர்' (பரிபா. 6 : 21, உரை). 2. நேசம்; affection, friendship. 3. அருள், இரக்கம் (பிங்.); grace, compassion. 4. பத்தி; devotion, piety. "நரரோ டொத்துத் திரிப வர்க் கன்புசெய்வார்" (திருநூற். 80). 5. எல்லார் மாட்டும் இயல்பாக வுள்ள பற்று; natural love towards all. "அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு" (குறள், 72).

ம., க. அன்பு; தெ. அனுகு; து. அங்கு.

[ஒல் → அல். அல்லுதல் = பொருந்துதல். அல் + பு – அன்பு. 'பு' பண்.பெ., தொ.பெ. ஈறு. ஒ.நோ: தெல் + பு – தென்பு, நல் + பு – நன்பு, வல் + பு – வன்பு. அன்பு, உள்ளம் ஒன்றிப் பொருந்துவதன் விளைவாதலால் அப் பெயர் பெற்றது. ஒ.நோ: ஆர்தல் = பொருந்து தல். ஆர் → ஆர்வு → ஆர்வம் = அன்பு; ஆவலொடுகூடிய பற்றுள்ளம்.]

**அன்புகூர்-தல்** *anbu-kūr-*, 2 செ:கு.வி. (v.i.) மிக நேசித்தல்; to abound in affection for, love intensively. "பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ" (பாரத. மிகைப். காப்பு. 1).

[அன்பு + கூர். கூர்தல் = மிகுதல். "கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்" (தொல். சொல். உரி. 16). "சால வுறுதவ நனிகூர் கழிமிகல்" (நன். 456).]

**அன்புடைக்காமம்** *anbudai-k-kāmam*, பெ. (n.) (பொருள்) ஐந்திணையுந் தழுவும் இருதலைக் காதல்; (Poruḷ) equal and reciprocal love comprising all the five aspects specially suitable to the five tracts of land. "ஐந்திணை யுடைய தன்புடைக் காமம்" (நம்பியகப். 4).

[அன்பு + உடை + காமம். உடைய (கு.பெ. எ.) → உடை.]

காமம் பார்க்க; see *kāmam*.

**அன்புவிசம் (விஷம்)** *anbu-višam*, பெ. (n.) விடா யுப்பு (நாதவுப்பு); a kind of salt prepared from female menstrual fluid, a solvent medium (சா. அக.).

[அன்பு + Skt. viṣa > த. விசம்.]

**அன்புவேணிகை** *anbu-vēṇigai*, பெ. (n.) செம் பாவட்டை; a red variety of the plant *pāvaṭṭai*, *Pavetta indica* (சா.அக.).

**அன்மதம்** *anmadam*, பெ. (n.) கன்மதம் (புதுவை); rock alum (Poṇḍ.).

[கல் + மதம் – கன்மதம் → அன்மதம்.]

**அன்மயம்**[1] *anmayam*, பெ. (n.) மாறு, மறுப்பு; opposition, contradiction. "உரைத்த நல்லுரைக் கன்மய மில்லை" (கம்பரா. யுத்த. மருத்து. 92) (செ.அக.).

வை. மு. கோபாலகிருட்டிணமாசாரியா ருரையில், 'அன்வயம்' என்ற பாடம் கொள் ளப்பட்டு, பொருத்தம் என்று பொருளுரைக் கப்பட்டுள்ளது. அன்மையம், அன்மயம்

என்பன பாடவேறுபாடுகளாகக் காட்டப் பட்டுள்ளன.

**அன்மயம்**[2] *anmayam*, பெ. (n.) ஐயம் (**சந்தேகம்**), ஐயுறவு (சிந்தா.நி.); doubt.

இதுவும் முன்னதும் ஒரு சொல்லாகவே யிருப்பினும் இருக்கலாம்.

**அன்மை** *anmai*, பெ. (n.) 1. **அல்லாமை, ஒன்று இன்னொன்றா யிராமை, இன்மையினின்று வேறுபட்டது**; reciprocal negation or difference, negation of identity, dist. f. *inmai*.

"தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான"
(தொல். சொல். கிளவி. 25).

2. **தீமை**; evil. "அன்மை கடியுந் தவவலி யால்" (சேதுபு. முத்தீர். 8).

[அல் → அன்மை. 'மை' பண்.பெ. ஈறு.]

**அன்மொழி** *an-moli*, பெ. (n.) 1. **அன்மொழித் தொகை** பார்க்க; see *an-moli-t-togai*. "ஐந் தொகை மொழிமேற் பிறதொகல் அன் மொழி" (நன். 369). 2. **புறமொழி**; back-biting, slander.

[அல் + மொழி – அன்மொழி.]

**அன்மொழித்தொகை** *an-moli-t-togai*, பெ. (n.) (இலக்.) **வேற்றுமைத்தொகை முதலிய ஐந் தொகைகளுள் ஒன்றன்மேல் வேறொரு சொல் தொக்கு அடையடுத்த ஆகுபெயர்போல் வரும் இருசொற்றொடர்**. எ-டு: "கணிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார் அணிமொழிக் கும் அண்ண லவற்கும்" (நள. 172). அணி மொழி = அழகிய சொல்லையுடைய பெண், தமயந்தி; (Gram.) an elliptical compound in which any one of the five *togai-nilai* that precede this in the enumeration, is used figuratively so as to signify something else of which this compound becomes a descriptive attribute, as *animoli*, 'beautiful words' which signifies a woman speaking beautiful words.

**அன்றமை** *anramai*, பெ. (n.) (**மூசும்**) **காற்று** (அக.நி.); air.

இது '*anima*' (breath) என்னும் இலத்தீன் சொல்லையும் '*atmos*' (vapour) என்னும் கிரேக்கச் சொல்லையும் பெருமருங்கு ஒத்திருக் கின்றது. ஆங்கிலராட்சி தமிழ்நாட்டில் தோன்றியபின் இச் சொல் தமிழிற் புகுந்திருந் தால், ஆங்கில வழியாக இலத்தீன் அல்லது கிரேக்கச் சொல்லை யொத்த இச் சொல் தோன்றிற் றெனலாம். ஆயின், கி.பி. 1600-ல் பிரித்தானியக் கிழக்கிந்தியக் குழும்பு (East India Company) தோன்றியதற்கு முன்பே, 1594-ல் **சிதம்பர இரேவணசித்தர்** தொகுத்த **அகராதிநிகண்டில்** இச் சொல் அமைந்திருப்பதால் அவ்வழி காட்ட இயலாது.

'அன்' (to breathe) என்னும் முதனிலை இந்திய - ஆரியத்திலிருப்பினும், அதினின்று திரிந்த 'ஆத்மா' (soul) என்னுஞ் சொல், மேலையாரியச் சொல்லளவு 'அன்றமை' என்னுஞ் சொல்லை ஒத்தில்லை.

தமிழில் மூச்சுவளியைக் குறிக்க, 'air' என் னும் ஆங்கிலச் சொல்லிற்கு நேரான சொல் வேறொன்றுமின்மையால், 'அன்றமை' யென்னுஞ் சொல் தென்சொல்லாயின் மிக அருமை வாய்ந்ததாகும்.

சிதம்பர இரேவண சித்தர் இச் சொல்லை எங்கணின்று கொண்டார் அல்லது எங்ஙனம் புனைந்தார் என்பது தெரியவில்லை.

**அன்றன்றாடு** *anr(u)-anr(u)-ādu*, கு.வி.எ. (adv.) **ஒவ்வொரு நாளும், அந்தந்த நாளில்**; every day. அன்றன்றாடு பாடு கழிகிறதே பெரிதாயிருக் கின்றது, அதில் எங்ஙனம் மீத்துவைக்க முடி யும்? (உ.வ.).

[அன்று + அன்று + ஆடு (முத. தொ. பெ.). ஆடுதல் = நுகர்தல், காலங்கழித்தல்.]

**அன்றன்று**[1] *anranru*, கு.வி.எ. (adv.) 1. **நாள் தோறும், அன்றாடம்**; daily, from day to day. 2. **அந்தந்த வேளையில்**; then and there. சில்லறைக் கடன்களையெல்லாம் அன்றன்று கொடுத்துத் தீர்த்திருக்கவேண்டும் (உ.வ.).

ம. அன்றன்று, அன்னன்னு; க., பட. அந்தந்து.

[அன்று + அன்று. 'அன்றன்று' பன்மை பற்றி வந்த அடுக்குத்தொடர்.]

**அன்று**[2] பார்க்க; see *anru*[2].

**அன்றன்று**[2] *anr(u)-anru*, செ.கு.வி. (v.i.) **அடுக்கி வந்த ஒன்றன்பாற் படர்க்கை எதிர்மறைக் குறிப்புவினைமுற்று**; duplication of neut. sing. neg. appellative verb.

[அன்று + அன்று – அன்றன்று. எதிர்மறை பற்றி வந்த அடுக்குத்தொடர்.]

**அன்றாடகம்** *anṟāḍagam*, கு.வி.எ. (adv.) **அன்றன்று, நாள்தோறும்**; daily, from day to day. 'அன்றாடக மூன்றுதினம் அந்திசந்தி கொள்வீரேல்' (சா.அக. மேற்.).

ம. அன்னேடம்

[அன்று + ஆடு + அகம்.]

**அன்றன்றாடு** பார்க்க; see *aṉṟ(u)-aṉṟ(u)-āḍu*.

**அன்றாடம்** *anṟāḍam*, கு.வி.எ. (adv.) **அன்றாடகம்** பார்க்க; see *anṟāḍagam*.

[அன்றாடகம் → அன்றாடம்.]

**அன்றாடு** *anṟāḍu*, கு.வி.எ. (adv.) **அன்றன்று**[1] பார்க்க; see *anṟanṟu*[1]. 'கைமேலே இலக்கைப் பெறாதார்க்கு அன்றாடு படிவிட வேணு மிறே' (ஈடு, 4.8 : 7), எப்படியாவது அன்றாடு பாடு கழியவேண்டும்.

[அன்று + ஆடு.]

**அன்றன்றாடு** பார்க்க; see *aṉṟ(u)-aṉṟ(u)-āḍu*.

**அன்றாடுகாசு** *anṟāḍu-kāśu*, பெ. (n.) **வழங்குகிற அல்லது செல்லுகிற காசு (நாணயம்)**; coin in current use.

[அன்று + ஆடு + காசு. ஆடுதல் = வழங்குதல்.]

**அன்றாள்கோ** *anṟāḷ-kō*, பெ. (n.) **அப்பொழுது ஆளும் அரசன்**; the then reigning king. 'முட்டில் அன்றாள் கோவுக்கு நிசதி குன்றிப் பொன் மன்ற ஒட்டிக்கொடுத்தேன்' (S.I.I. i, 115).

**அன்றி** *anṟi*, இடை. (conj.) *1.* **அல்லாமல்**; without, except by. 'அவனன்றி அணுவும் அசையாது' (பழ.). *2.* **அல்லாவிடத்து**; unless, except when. அவர் வந்தாலன்றி இங்கு ஒன்றும் நடவாது. மருந்து கொடுத்தாலன்றி அவன் பிழைக்கமாட்டான். *3.* **அல்லாமலும்** (ஈடு, அவதா.); besides. அன்றியும், நான் சொல்வதை அவன் கேட்பதில்லை.

ம. அன்றி, அன்னி.

[அல் → அன்று (அல் + து) → அன்றி (கு.வி.எ.).]

"அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே"
என்னும் நன்னூல் (173) நூற்பாவிற்கு,

'இவ் விருமொழி யீற்று இகரமும் செய்யுளுள் உகரமாயும் வரப்பெறும்; அவ்வழி இயல்பாய் நிற்கும் மேல்வரும் வல்லினம் எ-று. 'வரின்' எனவே, உகரமாதல் ஒருதலையன்றெனவும் உகரமாகாதவழி மிகுமெனவும் கொள்க.

வ-று. "வாளன்று பிடியா வன்க ணாடவர்" "நாளன்று போகிப் புள்ளிடை தட்ப", "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே" என வரும் என்று **மயிலைநாதரும்**,

'அன்றி இன்றி யென்னும் வினையெச்சக் குறிப்புச் சொற்களினது ஈற்றிகரஞ் செய்யுட்கண் உகரமாய் வருமாயின், **க ச த ப**க்கள் பொதுவிதியான் மிகாது இயல்பாம் எ-று.

'இவ்வாறு உடம்பொடு புணர்த்திக் கூறினமையின், இதற்கிதுவே விதியென்பதூஉம், உகரமாய் வரின் எனவே உகரமாதல் உடன்பாடென்பதூஉம், அஃது ஒருதலையன்றென்பதூஉம் பெற்றாம்.

எ-டு :
"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே"
(புறநா. 124)

எனவும், "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே" எனவும் வரும். 'பிறவும் அன்ன' என்று விருத்தியுரைகாரரும் உரைத்தார். பிற வுரையாசிரியன்மாரும் இவற்றையே தழுவினர்.

நூற்பாவும் உரைகளும், 'அன்றி', 'இன்றி' என்னும் வடிவங்களையே இயல்பாகவும், **'அன்று', 'இன்று'** என்னும் வடிவங்களை அவற்றின் திரிபாகவும் கொண்டதாகத் தெரிகின்றது. அன்றி, இன்றி என்னும் இகர வீற்றுக் குறிப்புவினை யெச்சங்கள், அல்லாது இல்லாது என்று பொருள்படும் அல்லது இல்லது என்னுஞ் சொற்களின் குறுக்கமான அன்று (அல் + து), இன்று (இல் + து) என்பவற்றின் திரிபே யென்பதை, இவ் வினையெச்சங்களின் ஈறு துவ்வேயன்றித் தியன்று என்பதனாலும், **'அவனல்லாது அணுவும் அசையாது'** என்னும் பழமொழி, **'அவனன்றி அணுவும் அசையாது'** என்று வழங்குவதனாலும், அவனல்லது அல்லது அவனல்லாது என்பது அவனல்லதி அல்லது அவனல்லாதி என்று திரியாமையானும் உணர்ந்துகொள்க.

**அன்றிக்கே** *anṟikkē*, இடை. (conj.) **அன்றி** பார்க்க; see *anṟi* (ஈடு, அவதா.).

[அன்று → அன்றி → அன்றிக்கே.]

**அன்றியனைத்தும்** *anri-y-anaittum*, பெ. (n.) **அவ்வனைத்தும், அவையெல்லாம்**; all those. "அன்றியனைத்தும் கடப்பா டிலவே" (தொல். சொல். எச்ச. 53).

*[அன்று → அன்றி. அ → அன் → அனை → அனைத்து → அனைத்தும். 'உம்' முற்றும்மை.]*

'அன்றி யனைத்தும்' என்னுந் தொல்காப்பியத் தொடருக்கு, 'அவ்வனைத்தும்' என்று சேனாவரையர் பொருள் உரைத்துள்ளார். சொல்லப்பட்டவை யல்லாமலும் அவைபோன்ற பிறவெல்லாம் என்று பொருள் கொள்ளவும் இடமுண்டு.

**அன்றியில்** *anriyil*, கு.வி.எ. (adv.) 1. **அன்றி, அல்லாது**; except. 'விவேகிக்கு ஓர் உபாதியன்றியில்' (சி. சி. சுபக். 4 : 8, சிவாக்.). 2. **அல்லாமல்**; except with, without. உத்தரவன்றியில் உள்ளே வரக்கூடாது (உ.வ.).

*[அன்று → அன்றி → அன்றியில்.]*

**அன்றியும்** *anriyum*, இடை. (conj.) **அல்லாமலும்** (சிலப். 5 : 110, அரும்.); besides, moreover. அன்றியும், நான் பல சமையம் அவனுக்குப் பணங்கொடுத்து உதவியிருக்கிறேன்.

*[அன்று → அன்றி → அன்றியும். 'உம்' இறந்தது தழீஇய எச்சவும்மை.]*

**அன்றியுரை-த்தல்** *anri-y-urai-*, 4 செ.குன்றாவி. (v.t.) **மாறுபட்டுச் சொல்லுதல்**; to speak in opposition or contradiction. "ஆரையு மன்றியுரைப்பேன்" (தேவா. 7.73 : 10).

*[அன்றுதல் = சினத்தல், பகைத்தல், மாறுபடுதல். அன்று → அன்றி (இ.கா.வி.எ.) + உரை.]*

**அன்றில்** *anril*, பெ. (n.) 1. **ஆணும் பெட்டையும் இணைபிரியாததும், அவற்றுள் ஒன்றிறப்பின் மற்றொன்றும் உடனிறப்பதும், ஒருவரையொருவர் இன்றியமையாக் கணவனும் மனைவியுமான காதலர்க்கு உவமையாக இலக்கியத்திற் கூறப்படுவதுமான கிரௌஞ்சப் பறவை**; *anril*, a species of bird, the male and female of which are inseparable both in life and death, and veryfamiliar in Indian poetry as a standard or model of constancy and inseparable love. 2. **19ஆம் நாண்மீனாகிய மூலம்** (பிங்.); the 19th lunar asterism.

ம. அன்றில்

*[அல் → அன்றி (கு.வி.எ.) + இல். அன்றில் = இணையன்றி அல்லது ஒன்றன்றி மற்றொன்று இல்லாதிருப்பது.]*

சம்பிரதாய அகராதிக் கையெழுத்துப்படியில் (சம்.அக.) அன்றில் என்னுஞ் சொல்லிற்கு மயில் என்று ஒரு பொருள் குறித்திருப்பது பொருந்தாது.

**அன்றிற்றீவு** *anrirrivu*, பெ. (n.) **வரலாற்று முன்னை ஏழுதீவுகளுள் ஒன்று (கிரௌஞ்சத் தீவு)**; an annular continent or large island of pre-historic times. "அன்றிற் றீவினி னுறைபவரிவர்" (கம்பரா. யுத்த. படைக்காட். 13).

*[அன்றில் + தீவு. தீர்வு → தீவு.]*

தீவு பார்க்க; see *tivu*.

**அன்றினார்** *anrinār*, பெ.(n.) **பகைவர்**; enemies. "அன்றினார் வெந்து வீழவும்" (தேவா. 4.89 : 10).

*[அன்றுதல் = சினத்தல், பகைத்தல். அன்று → அன்றினார் (வினையா.பெ.).]*

**அன்று-தல்** *anru-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. **சினத்தல்**; to get angry with. "அவ் வானத்தையன்றிச் சென்று" (திவ். இயற். திருவிருத். 18). 2. **பகைத்தல்**; to hate. "அன்றிய வாணன்" (திவ். பெரியதி. 4 . 3 : 8).

*[அல் → அன் → அனல். அன் → அன்று. அன்றுதல் = எரிதல், சினத்தல், பகைத்தல்.]*

**அன்று**[1] *anru*, பெ. (n.) **அப்பொழுது, அந்நாள்**; that time, that day. அன்று விடியல். அன்று திங்கட்கிழமை. —, கு.வி.எ. (adv.) **அப்போது, அந்நாளில்**; at that time, on that day. "அன்றவற் காங்கே பிணப்பறையாய்" (நாலடி. 23).

ம. அன்னு; க., பட. அந்து; தெ. நாடு; து. ஆனி; கோண். அநீ; குருக். அந்தி; துட. அந்.

*[அ → அல் → அன்று (சே.சு. சொல்).]*

**அன்று**[2] *anru* பெ. (n.) **மாறுபாடு**; difference, incongruity. "ஒன்றிடை யாயிரம் அன்றற வகுத்த" (அருட்பா, 6, அருட்பெருஞ்சோதி யக. 621).

*[அல் → அன்று (அல் + து) = அல்லது, மாறு, மாறானது.]*

**அன்று**[3] *anru*, இடை. (part.) **ஓர் அசைச்சொல்**: an expletive. 'சேவடி சேர்து மன்றே' (சீவக. 1, உரை).

**அன்று**[4] *anru*, கு.வி.மு. (adv.) **ஒன்றன்பாற் படர்க்கை எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று**;

neut. sing. neg. appellative verb. நான் கேட்டது அதுவன்று (உ.வ.).

**அன்றுதளிர்த்தான்** *anṟu-taḷirttāṉ*, பெ. (n.) **கிள்ளினவுடனே தளிர்க்குஞ்செடி**; a plant which begins to grow immediately after it is nipped (சா.அக.).

[அன்று (அப்போதே, உடனே) + தளிர்த்தான் (வினையா.பெ.). 'ஆன்' ஒ. ஈறு.]

இதை அன்றுதளிர்த்தான் செடி யென்று சொல்ல வேண்டியதில்லை.

**அன்றுமறுநாள்** *anṟu-maṟu-nāḷ*, கு.வி.எ. (adv.) **அன்றைக்கு மறுநாள்**; the day after (that day). அன்று மறுநாள் வந்துசேர்ந்தான்.

**அன்றுமுதல்** *anṟu-mudal*, கு.வி.எ. (adv.) **அவ் வேளையிலிருந்து, அந் நாளிலிருந்து**; thence forth, from that day onward. "அன்றுமுதல் ...மறந்தறியேன்" (திவ். பெரியாழ். 4.10:9).

**அன்றெரிந்தான்** *anṟerindāṉ*, பெ. (n.) 1. **சிறு புள்ளடி** (மலை.); species of *Desmodium* (செ. அக.) — a plant, trifoliate tick, *Desmodium laxiflorum*. It is so called because it is capable of being used as firewood immediately after it is cut (சா.அக.). 2. **சிவனார்வேம்பு**; Šivan's neem, *Indigofera aspalathoides* (சா.அக.).

[அன்று (கிள்ளின அன்றே) + எரிந்தான் (வினையா.பெ.).]

அன்றெரிந்தான்பூண்டு என்று சொல்ல வேண்டியதில்லை.

**அன்றே**[1] *anṟē*, கு.வி.எ. (adv.) **அப்பொழுதே, அந்நாளே**; at that very time, on the same day. அன்றே புறப்பட்டுப் போய்விட்டான்.

[அ → அன் → அன்று (காலம்பற்றிய சே. சு. சொல்) + ஏ (வன்புறை அல்லது பிரிநிலை குறித்த இடைச்சொல்).]

**அன்றே**[2] *anṟē*, கு. வி. (impl. v.) **அல்லதே**; certainly not that. ஆங்கிலம் இன்று அயன் மொழி யன்றே.

[அல் → அன்று (எ.ம.கு.வி.மு.) + ஏ (தேற்றங் குறித்த இடைச்சொல்).]

**அன்றே**[3] *anṟē*, இடை. (ind.) **அல்லவா?, ஒரு தேற்ற உடன்பாட்டுக் குறிப்புச் சொல்**; Isn't it so?, a neg. interrogative equivalent to an emphatic affirmative. 'அவனன்றே இது செய் வான் என அடுக்காது நின்றவழி, அன்றீற் றேவுக்குத் தெளிவு முதலாகிய பிறபொருளும் படும்' (தொல். சொல். இடை. 34, சேனா.).

[அல் → அன்று (எ.ம.கு.வி.மு.) + ஏ (ஒலி வேறுபாட்டால் தேற்ற முணர்த்தும் வினா விடைச்சொல்.]

எதிர்மறை வினைமுற்று ஆ, ஏ, ஓ என்னும் வினாவிடைச்சொல் பெற்று உடன்பாட்டுப் பொருளை வலியுறுத்துவது, இருவகை வழக் கிற்கும் பொது. ஏகார வினாச் செய்யுள் வழக்கிலும், ஆகார ஓகார வினாக்கள் இரு வகை வழக்கிலும் வரும்.

எ-டு:

தெரிநிலைவினை—கடல் தாண்டினவன் கால்வாய் தாண்டமாட்டானா?

குறிப்புவினை — கடவுளுக்குக் கண் இல்லையா?

ஏகார வினா உலகவழக்கற்றுவிட்டதனால், அன்றோ என்று பொருள்படும் அன்றே என் னும் சொல்லின் வினாத்தன்மை விளங்கித் தோன்றவில்லை.

**அன்றேஅன்றே** *anṟē-anṟē*, இடை. (ind.) **உடன் படாமை யுணர்த்தும் அடுக்குச்சொல்**; an idiomatic expression of dissent. 'ஒருவன் ஒன்றுரைத்த வழி, அதற்கு மேவாதான் நன்றே நன்றே, அன்றே அன்றே என அடுக்க லும் வரும்; அவை மேவாமைக்குறிப்பு விளக் கும்' (தொல். சொல். இடை. 34, சேனா.).

[அன்று (எ.ம.கு.வி.மு.) + ஏ (வினாவிடைச் சொல்).]

"நன்றீற் றேயும் அன்றீற் றேயும்

..................................

அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்"
(தொல். சொல். இடை. 34).

'அன்றே' என்பது தனித்து வரும்போது உடன்பாட்டுப்பொருளும், அடுக்கி வரும் போது எதிர்மறைப்பொருளும் உணர்த்தும் என அறிக. இது ஒலி வேறுபாட்டால் நிகழ் வது.

அன்றே என்பதன் ஈறு தேற்றேகாரமாயின், தனித்துவரினும் அடுக்கிவரினும் தேற்றமே உணர்த்தும்.

**அன்றை** *anṟai*, பெ. (n.) **அந்நாள்**; that day. "அன்றை யமரினில் ஒன்றுபட" (பாரத. ஆறாம். 24). —, கு.பெ.எ. (adj.) **அந்நாட் குரிய**; of that day, அன்றைச் செலவு.

[அ → அன் → அன்று + ஐ (ஈறு அல்லது சாரியை).]

**அன்றைக்கன்று** *anṟaikk(u)-anṟu*, கு.வி.எ. (adv.) *அன்றன்று*; daily, from day to day. "அன்றைக்கன் றிருமடங்கா" (திருவிளை. மெய்க்கா. 12).

*[அன்று (காலம்பற்றிய சே.சு.பெ.) + ஐ (சாரியை) + கு (4ஆம் வே.உ.) + அன்று (காலம்பற்றிய சே.சு.பெ.).]*

**அன்றைக்கு** *anṟaikku*, கு.வி.எ. (adv.) *அந்நாளில்*; on that day.

*[அன்று (காலம்பற்றிய சே.சு.பெ.) + ஐ (சாரியை) + கு (4ஆம் வே.உ.). 4ஆம் வே.உ. 7ஆம் வே. பொருளில் வந்தது வேற்றுமை மயக்கம்.]*

**அன்றைத்தினம்** *anṟai-t-tiṉam*, பெ. (n.) *அந்நாள்*; that day.

*[அன்று (காலம்பற்றிய சே. சு.பெ.) + ஐ (சாரியை) +* **Skt.** *dina > த. தினம். 'அன்றைத் தினம்' கு.பெ.எ. தொடர்.]*

**அன்றைநாள்** *anṟai-nāḷ*, பெ. (n.) *அந்நாள்*; that day.

*[அன்று + ஐ (சாரியை) + நாள்.]*

*அன்றைத்தினம்* பார்க்க; see *anṟai-t-tiṉam*.

அன்றைத்தினம் என்னும் வழக்கு, வீணாகவும் தமிழுக்குக் கேடாகவும் தினம் என்னும் வடசொல்லைக் கொண்டது.

**அன்றோ** *anṟō*, இடை. (ind.) *அல்லவா?, அல்லவோ?, ஓர் உண்மையை வலியுறுத்தும் எதிர்மறை வினாச்சொல்*; Is it not so?, a neg. interrogative, equivalent to an emphatic affirmative.

*[அல் → அன்று (அல் + து) + ஓ (வினா விடைச்சொல்). அல் + அது – அல்லது → (அல்து) → அன்று (எ.ம.கு.வி.மு.).]*

அல்லவோ (அல்ல + ஓ) என்பது இழிந்தோர் உலக வழக்கு; அன்றோ (அன்று + ஓ) என்பது உயர்ந்தோர் உலகவழக்கு. இரண்டும் செய்யுளிலும் அல்லது இலக்கியத்திலும் வரும். ஆயின், அல்லவோ என்பது அஃறிணைப் பன்மை யுணர்த்தும்.

**அன்ன**[1] *aṉṉa*, கு.வி.எ. (impl.f.v.) *அத்தன்மையா யிருக்கின்றன*; are of the same kind, are similar. "அப்பா லொன்பதும் அவற்றோ ரன்ன" (தொல்.சொல்.பெய. 14). —, பெ. (n.) *அத்தன்மையானவை*; such or similar things. "அன்ன பிறவும்" (தொல். சொல். பெய. 16). —, கு.பெ.எ. (adj.) *அத்தன்மையான*; such or similar. "அன்ன மரபின் மொழிவயி னான" (தொல். எழுத்து. தொகை. 1). —, இடை. (part.) *ஓர் உவம வுருபு*; a sign of comparison. "மலரன்ன கண்ணாள்" (குறள், 1119), 'அருமருந் தன்ன பிள்ளை'.

"அன்ன ஆங்க மான இறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பா லுவமம்"
(தொல். பொருள். உவம. 12).

*[அ (சே.சு.) → அன் → அன்ன = அத்தகைய, ஒத்த, போன்ற. 'அ' பெ.எ. ஈறு.]*

**அன்ன**[2] *aṉṉa*, இடை. (part.) *பண்டைக்காலத்து உலகவழக்குக் குறித்த சாரியை*; an enunciative particle added to short vowels and short vowel-consonants in ancient colloquial usage.

எ-டு: அஅன்ன, இஅன்ன, கஅன்ன, கிஅன்ன.

**அன்னபம்** *aṉṉabam*, பெ. (n.) *ஆலமரம்* (மூ. அக.); banyan tree.

*அன்னயம்* பார்க்க; see *aṉṉayam*.

**அன்னம்** *aṉṉam*, பெ. (n.) 1. *தங்கம்* (வை.மூ.); gold. 2. *மலம்* (நாநார்த்த.); faeces.

**அன்னயம்** *aṉṉayam*, பெ. (n.) *ஆலமரம்* (பச். மூ.); banyan tree.

மறுவ. அன்னபம்

**அன்னல்** *aṉṉal*, பெ. (n.) 1. *அனல்* (சம்.அக.), வெயில்; sunshine. 2. *புகை* (ஈடு, 8. 5 : 4); smoke.

*[அல் → அன் → அன்னல் → அனல்.]*

**அன்னலுந்துன்னலும்** *aṉṉalun-tuṉṉalum*, பெ. (n.) *தூறலுந்தும்பலும், இடைவிடாத அடை மழைத்தூறல்*; unintermittent drizzle or gentle rain.

**அன்னவன்** *aṉṉavaṉ*, பெ. (n.) 1. *அத்தன்மையன்*; such a man. "அன்ன வன்புகழ் கேட்டலும்" (நைடத. அன்னத்தைத்தூ. 3). 2. *ஒத்தவன்*; he who resembles. "அருங்கலக்கொடி யன்னவ னேகினான்" (சீவக 1372).

ம. அன்னவன்

*[அ (சே.சு.) → அன் → அன்ன → அன்னவன். 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அன்னன்** *a<u>nn</u>a<u>n</u>*, பெ. (n.) *அப்படிப்பட்டவன்;* such a man.

**அன்னா[1]** *a<u>nn</u>ā*, சு.கு.வி.எ. (demons.adv.) *அந்தா, அதோ* (நெல்லை); there! (Tn.).

*[அ (சே.சு.) → அன் → அன்னா.]*

**அன்னா[2]** *a<u>nn</u>ā*, இடை. (part.) *பண்டைக் காலத்து உலகவழக்கு நெடிற்சாரியை;* an enunciative particle added to long vowels and long vowel-consonants in ancient colloquial usage.

எ-டு: ஆவன்னா, ஈயன்னா, காவன்னா, கீயன்னா.

**அன்னாய்** *a<u>nn</u>āy*, இடை. (part.) *ஓர் அசை நிலை;* an expletive in poetry. "அன்னாய் பின்னவத் தைப்படும்" (சி.சி. பர. சௌந். மறு. 8).

*[அன்னை → அன்னாய் (விளி). 'ஆய்' விளி யுருபு.]*

**அன்னார்** *a<u>nn</u>ār*, பெ. (n.) *கல்நார்;* asbestos (செ.அக.) — Indian asbestos, earth-flux or mountain flux (சா.அக.).

*[கல்நார் → கன்னார் → அன்னார்.]*

**அன்னான்** *a<u>nn</u>ā<u>n</u>*, பெ. (n.) 1. *அத்தன்மையன்;* such a man. 2. *அவன்;* he.

**அன்னிலா** *a<u>nn</u>ilā*, பெ. (n.) *சீத்தா, அணிநுணா;* custard apple, *Anona squamosa* (சா.அக.).

**அன்னியம்** *a<u>nn</u>iyam*, பெ. (n.) *கரும்பு;* sugar-cane, *Saccharum officinarum* (சா.அக.).

**அன்னுகம்** *a<u>nn</u>ugam*, பெ. (n.) 1. *பேய்ப் பசலை, மயக்கத்தை யுண்டுபண்ணும் ஒரு வகைக் கொடி;* a bitter variety of creeping plant (*Portulaca*), *Portulaca meridiana*, with a stupefying effect when consumed. 2. *பேய்ப் பருத்தி;* golden silk-cotton, *Cochlospermum gossypium*.

**அன்னுராவி** *a<u>nn</u>urāvi*, பெ. (n.) *அப்பாவி* (இ.வ.); simpleton (Loc.).

*[ஒருகா. அன் (எ.ம.முன்.) + அராவி அல்லது அன் (எ.ம.முன்.) + உராவி. அராவுதல் = தேய்த்தல், அரித்தல், வருத்துதல். உராவுதல் = வலிபெறுதல்.]*

**அன்னுழி** *a<u>nn</u>u<u>l</u>i*, கு.வி.எ. (adv.) *அப்பொழுது;* at that time, then. "அன்னுழி யுமையவ ளகத்து ளோர்செய லுன்னினள்" (கந்தபு. உற்பத். பார்ப்பதி. 1).

*[அ (சே.சு.) → அன் = அந்த. உழி = இடம். அன்னுழி = அவ்விடம், அவ்விடத்து, அப் போது.]*

அன்னுழி என்னுஞ் சொல்லை, அவ்விடம் என்னும் பொருளிற் பெயர்ச்சொல்லாகவும் ஆளலாம்.

உழி பார்க்க; see *u<u>l</u>i*.

**அன்னுழை** *a<u>nn</u>u<u>l</u>ai*, கு.வி.எ. (adv.) *அவ்விடம்; அவ்விடத்திற்கு;* there, to that place. "மன்னு மன்னுழை போய பின்னர்" (திருவாலவா. 18 : 10).

*[அ (சே.சு.) → அன் (அந்த) + உழை (இடம்). உழி → உழை.]*

**அன்னை[1]** *a<u>nn</u>ai*, பெ. (n.) 1. *தாய்;* mother. "அன்னை என்செய்யில் என்?" (திவ். திரு வாய். 5. 3 : 6). 2. *தமக்கை* (சூடா.); elder sister. 3. *மலைமகள் (பார்வதி); Malaimagal* (Pārvati) (பிங்.). 4. *தோழி* (பொதி. நி.); female companion or friend.

**Turk.** anne; **Hung.** anya.

*[அம்மை → அன்னை. அம் → அன். ம் → ன், போலி. ஒ.நோ: அகம் → அகன், இடம் → இடன், உரம் → உரன், கலம் → கலன், சமம் → சமன், திறம் → திறன், நலம் → நலன், புலம் → புலன், முகம் → முகன், வரம் → வரன்.]*

காதலும் அருமையும்பற்றி எப் பருவப் பெண்ணையும் இருபாலாரும் தாய் எனச் சொல்வதும் விளிப்பதும் தொன்றுதொட்ட மரபு. தோழி தலைவியைத் தலைமைபற்றி யும் தாய் அல்லது அன்னை எனச் சொல்வ தும் விளிப்பதும், இருவகை வழக்கிற்கும் உரியதாகும்.

"அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர்"
(தொல். பொருள். பொருளியல், 52).

அன்னை என்பது, தலைவியும் தோழியும் ஒருவரையொருவர் குறிப்பது அல்லது விளிப் பது. என்னை என்பது, என் + ஐ என்று பிரிந்து தலைவியுந் தோழியும் தலைவனைக் குறிக்கும் (அல்லது விளிக்கும்) பெயராகவும், 'என் அன்னை' என்பதன் குறுக்கமாகித்

தலைவியும் தோழியும் ஒருவரையொருவர் குறிக்கும் (அல்லது விளிக்கும்) பெயராகவும் இருப்பது.

ஐ = தலைவன். "என்னைமுன் நில்லன் மின்" (குறள், 771). அன்னை என்னை என் பன, அண்மைவிளியில் இயல்பாகவும் அன்னாய், என்னாய் என்று உருபேற்றும் வரும். என்னை யென்பது ஆண்பாலுணர்த் தின், இயல்பல்லாதபோது என்னைய, என்னையா என்று விளியேற்கும்.

**அன்னை²** *annai*, பெ. (n.) **கொன்றைமரம்**; common cassia, *Cassia fistula* (சா.அக.).

**அன்னோ** *annō*, இடை. (int.) 1. **ஐயோ! அந்தோ! ஓர் இரக்கக் குறிப்பு**; alas! an exclamation expressive of pity, distress. "பல் கால்முயங்கினள் மன்னே அன்னோ" (அகநா. 49 : 9). 2. **அகோ!, ஆகா**; ha! hah! an exclamation expressive of wonder.

தெ. அன்னா

"அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்"
(தொல். சொல். இடை. 34).

அன்னீற்றோ = அன்னோ.

*[அன்னை → அன்னோ (விளி). 'ஓ' விளி யுருபு.]*

தாய்தந்தை முறைப்பெயர்கள் விளியுரு பேற்று, இரக்கம், துயரம், வருத்தம், வியப்பு, மகிழ்ச்சி முதலிய உணர்ச்சிகளை யுணர்த்தும் என்பது, முன்னரே குறிக்கப்பட்டது.

***அக்கோ, அகோ, அச்சோ, அத்தோ, அந்தோ*** பார்க்க; see *akkō, agō, accō, attō, andō*.

**அன்னோபிதம்** *annōbidam*, பெ. (n.) **மஞ்சட் குன்றிமணி**; yellow bead-vine, *Abrus precatorius* (சா.அக.).

**அன்னோன்றி** *annōnri*, பெ. (n.) வலியற்றவன்; person of a weak or feeble constitution.

*[அல் (எ.ம.முன்.) + நோன்றி. நோற்றல் → நோன்றல் = பொறுத்தல், வலிமையோடிருத்தல். நோன்பு = பொறை, வலிமை. நோல் → நோன்றி → நோன்றான், நோன்றாள் (வினையா.பெ.). ஒ.நோ: ஆள் → ஆண்டி = அடியாரை ஆட்கொள்ளும் துறவி. 'இ' ஒ. ஈறு, நொண்டி யென்பதிற்போன்று.]*

**அனகம்** *anagam*, பெ. (n.) புல்லுருவி (மலை.); species of *Loranthus*, a parasitic plant.

*[ஒருகா. அல் → அன் (அல்லாத) + அகம் (இடம்). தனக்குரியதல்லாத இடத்தில் வளர்வது.]*

**அனந்தர்¹** *anandar*, பெ. (n.) 1. **தூக்கம்**; sleep. "மோக வனந்தர் முயல்வோர்க்கு" (ஞானா. 62 : 23). 2. **மயக்கம்**; drowsiness, stupor, loss of consciousness, inebriety. "அனந்தர் நோக்குடைக்...............கடைசி மங்கையர்" (சீவக. 1249). 3. **தூக்கத்தின்பின் விழிப்பு**; waking. "கட்டுயி லனந்தர்போல்" (சீவக. 1097). 4. **மனத்தடுமாற்றம்**; confusion of mind. 'மனங்கொள்ளா அனந்தருள்ள முடை யாளாய்' (தொல்.பொருள். கள. 11, உரை). 5. **பித்து**; bile (சா.அக.).

*[அனந்தல் → அனந்தர்.]*

**அனந்தர்²** *anandar*, பெ. (n.) பருத்தி (மலை.); cotton-plant.

**அனந்தரம்** *anandaram*, பெ. (n.) **வேலிப்பருத்தி** (பச்.மூ.); species of doemia.

**அனந்தல்** *anandal*, பெ. (n.) 1. **தூக்கம்**; sleep, slumber. "அனந்த லாடேல்" (ஆ.சூ. 31). 2. **மயக்கம்**; drowsiness, stupor. "பழஞ் செருக்குற்றநும் மனந்த நீர"(மலைபடு. 173). 3. **மந்தவொலி**; low tone, soft mournful sound, as of a drum. "எடுத்தெறி யனந்தற் பறை" (புறநா. 62 : 5) (சா.அக.). 4. **சிறு தூக்கம்**; a soft or gentle sleep, especially in the morning. 5. **மதம்**; an extravagant sexual passion too strong to be controlled, infatuation.

**அனம்பு** *anambu*, பெ. (n.) 1. **வானம்பாடி**; Indian skylark. 2. **நீரில்லாதது**; that which is deprived of water.

*[அல் → அன் (எ.ம. முன்.) + அம்பு (நீர்).*



அனம்பு

**அனயகம்** *anayagam*, பெ. (n.) 1. **இருள்வாசி** (இருவாட்சி) (வை.மூ.); tuscan jasmine. 2. **மல்லிகை**; jasmine.

**அனர்வன்** *anarvan*, பெ. (n.) **அனரவன்** பார்க்க; see *anaravan*.

**அனரவன்** *anaravan*, பெ. (n.) 1. **வெண்காந்தள்**; white species of Malabar glory-lily (W.). 2. **செங்காந்தள்**; Malabar glory-lily (L.). 3. **ஐம்**

புள் நஞ்சு (பஞ்சபட்சி பாடாணம்); a prepared arsenic (R.).

[ஒருகா. அனல் → அனலவன் → அனரவன்.]

**அனல்** *anal*, பெ. (n.) 1. **தீ** (பிங்.); fire. 2. **வெப்பம்**; heat, as of fever, warmth, glow. 3. **இடி**; thunderbolt. "பைம்புனலோ டனலக மடக்கி" (இரகு. ஆற்று. 4). 4. **வன்னியிலை**; the leaf of the *vanni* tree, suma tree, *Prosopis spicigera* (சா.அக.). 5. **உயிர்த் துன்பங்களுள் ஒன்று**; one of the several troubles attributed to life (சா.அக.). 6. **பித்தம்**; bile (சா.அக.). 7. **கொடுவேலி** (தைலவ. தைல. 129); Ceylon leadwort.

ம. அனல்; க. அனல; தெ. அடரு (துன்பம்); து. அர்லு; துட. அச்; பட. அனலு.

**Skt., Sinh., Mar.** anala; **Pers.** ādar.

[உல் → உல → உலை. உல் → அல் → அன் → அனல்.]

**அனல்[லு]-தல்** *anal-*, 13 செ.கு.வி. (v.i.) **அழலுதல்**; to burn, glow, blaze, to be hot, to cause heat, as the Sun, a fire, as fever. "ஊரலோவா தனன்று" (சூளா. சீய. 164).

ம. அனலுக; க. அனலு; து. அர்லுனி.

[உல் → உல → உலை. உல் → அல் → அன் → அனல்.]

**அனல்காலி** *anal-kāli*, பெ. (n.) 1. **சூரியகாந்தக் கல்**; sunstone (மூ.அ.). 2. **நஞ்சுள்ள சிவந்த கால்களையுடைய சிலந்திப் பூச்சி (அக்கினி பாதச் சிலந்தி), உடம்பிற் பட்டவிடங்களிற் கொப்புளிக்கச் செய்வது**; a spider with poisonous substance in its legs which causes blisters on coming into contact with human body (சா.அக.).

[கால் → காலி. 'இ' உடைமை குறித்த வி. முத. ஈறு.]

அனல் பார்க்க; see *anal*.

**அனல்பாலி** *anal-pāli*, பெ. (n.) **தில்லைமரம்**; blinding tree, *Excoecaria agallocha*.

[அனல் = நெருப்பு, வெப்பம். பால் → பாலி. 'இ' உடைமை குறித்த வி.முத. ஈறு. சூட்டுக் கொப்புளங்களை யுண்டாக்கும் பாலையுடையது அனல்பாலி.]

**அனல்வாதம்**[1] *anal-vādam*, பெ. (n.) 1. **உடம்பின் வெப்பத்தினா லுண்டாகும் ஊதை (வாத) நோய்**; a nervous affection arising from too much heat in the system. 2. **மிகுந்த எரிச்சலை யுண்டாக்கும் ஊதை (வாத) நோய்**; a nervous condition marked by a sensation of intense burning pain, *Thermaglia* (சா.அக.).

[**Skt.** vāta > த. வாதம் = காற்று, வலி (வாத) நோய்.]

அனல் பார்க்க; see *anal*.

**அனல்வாதம்**[2] *anal-vādam*, பெ. (n.) **திருஞானசம்பந்தர் மதுரையிற் சமணரை வென்ற அனற்போர்** (பெரியபு. திருஞான. 779-791); the fire test in Madurai, in which *Tiruñānasambandar* won, defeating the Jains, his religious opponents.

[**Skt.** vāda > த. வாதம் = சொற்போர்.]

அனல் பார்க்க; see *anal*.

**அனல்வாதை** *anal-vādai*, பெ. (n.) 1. **தண்டனையாக அல்லது பகைவரால் உயிருடன் எரிக்கப்படுதல்**; being burnt alive, as a punishment or by enemies. 2. **வெப்பநோய் அல்லது துன்பம்**; disease or suffering due to heat. 3. **எரிபசி**; severe hunger.

[**Skt.** bādhā > த. வாதை = துன்பம், நோய்.]

அனல் பார்க்க; see *anal*.

**அனல்விதை** *anal-vidai*, பெ. (n.) **நேர்வாளம்**; kings' seed, Chinese castor, *Croton tiglium* alias *C. jamalgota* or *Tiglium officinalis* (சா.அக.).

[வித்து → விதை.]

அனல் பார்க்க; see *anal*.

சா.அகரமுதலியில் அனல்விந்தை என்றுள்ளது. ஒருகால் அச்சுப்பிழையா யிருக்கலாம்.

நெருப்புப்போல் எரிக்குங் கடுங்கழிச்சல் மருந்தாதலால், நேர்வாளம் அனல்விதை யெனப்பட்டது.

**அனல்விரை** *anal-virai*, பெ. (n.) அனல்விதை பார்க்க (பச்.மூ.); see *anal-vidai*.

[விதை → விரை.]

அனல் பார்க்க; see *anal*.

**அனல்விசு-தல்** *anal-visu-*, 5 செ.கு.வி. (v.i.) **வெக்கையடித்தல்**; heat being radiated, as by a flame.

# அன்றில்


அன்றில்


அன்றில்


அன்றில்


அனலுண்ணி (தீக்கோழி)


அனை (கடல்மீன்)


அனை (ஆற்றுமீன்)

அன்றில்:- நன்றி — இந்திய விலங்கியல் துறை, சென்னை.

**அனல்வென்றி** *anal-venri*, பெ. (n.) **தங்கம்** (மூ. அ.); gold, as being indestructible by fire.

[அனல்+வென்றி. வெல் → வென்றி (தொ. பெ.) 'தி' தொ.பெ. ஈறு. 'றி' புணர்ச்சித் திரிபு. 'அனல்வென்றி' தொ.ஆகு.]

அனல் பார்க்க; see *anal*.

**அனல்வேகியிலை** *anal-vēgi-y-ilai*, பெ. (n.) **எருக்கிலை;** madar leaf (சா.அக.).

[அனல் + வேகி + இலை. வேகு → வேகி. 'இ' வி.முத. ஈறு.]

அனல், இலை பார்க்க; see *anal*, *ilai*.

**அனலசம்** *analašam*, பெ. (n.) **பேய்க்கொம்மட்டி** (பச்.மூ.); colocynth (செ.அக.) — bitter apple, *Cucumis colocynthus* (சா.அக.).

[ஒருகா. அனல் + அசம்.]

**அனலடுப்பு** *anal-aḍuppu*, பெ. (n.) **கூண்டடுப்பு** (இந்துபாக. 68); covered brick-oven for baking bread and biscuits.

[அனல் + அடுப்பு. அடு → அடுப்பு.]

அனல் பார்க்க; see *anal*.

**அனலதீபனம்** *anala-tībanam*, பெ. (n.) **பசியை யுண்டாக்குவது;** that which excites hunger, *Stomachic* (சா.அக.).

[அனல் → அனலம். **Skt.** dipana > த. தீபனம்.]

**அனலநட்சத்திரம்** *anala-naṭcattiram*, பெ. (n.) (கணி.) **செவ்வாய் நின்ற நாண்மீனுக்கு ஏழு, பதினான்கு, பதினாறு, இருபத்தைந்தாம் நாண்மீன்கள்** (விதான. குணாகுண. 40, உரை); (Astrol.) the 7th, 14th, 16th and 25th nakṣatras, counted from the nakṣatra occupied by Mars.

[அனல் → அனலம் + **Skt.** nakṣatra > த. நட்சத்திரம் = நாண்மீன், வெள்ளி.]

**அனலபித்தம்** *anala-pittam*, பெ. (n.) **சூட்டினால் உடம்பு முழுதுந் தடிப்புண்டாகித் தூக்கம் வராமை, தலைவலி, வயிற்றுச்சூலை, நாவில் திமிர், படலமெழும்பல், விக்கல், இளைத்தல், களைப்பு, தாகம், கால்நோய் முதலியவற்றை யுண்டாக்கும் ஒருவகைப் பித்தநோய்;** a disease caused by the deranged *pittam*, and attended with the following symptoms: thick patches all over the body, sleeplessness, head-ache, piercing pain in the stomach, loss of sensation in the tongue, eruptions, hiccough, emaciation, fatigue, thirst, pain in the legs, etc. (சா.அக.).

[அனல் → அனலம். பித்து → பித்தம்.]

**அனலம்** *analam*, பெ. (n.) 1. **நெருப்பு;** fire. ''அனங்கா னலம்'' (தஞ்சைவா. 39). 2. **வெப்பம்;** heat. 3. **செரிக்குந்திறன்;** digestive power. 4. **செரிநீர்;** gastric juice. 5. **பித்தம்;** bile. 6. **சேரான்கொட்டை;** dhoby nut, *Semicarpus anacardium*. 7. **கொடுவேலி** (தைலவ. தைல. 135); Ceylon leadwort — **சித்திர மூலம்;** Ceylon leadwort, *Plumbago zeylanica* (சா.அக.). 8. **அனல நாண்மீன் (நட்சத்திரம்)** (விதான. குணாகுண. 40); the 7th, 14th, 16th and 25th lunar asterisms counted from the lunar asterism occupied by Mars.

ம. அனலம்

[அனல் → அனலம். 'அம்' (பெ.பொ.பின்.).]

**அனலமுரி** *anal-amuri*, பெ. (n.) **அமுரியுப்பு;** uric salt (சா.அக.).

[அனல் + அமுரி. உவரி → உமரி → அமரி → அமுரி.]

**அனலன்** *analan*, பெ. (n.) **நெருப்புத் தேவன்;** god of fire.

ம. அனலன்

[அனல் → அனலன். 'அன்' ஆ.பா. ஈறு.]

**அனலாடி** *anal-āḍi*, பெ. (n.) **சிவன்;** Śiva who is holding fire in the hand while dancing. ''போருலவு மழுவான் அனலாடி'' (தேவா. 1. 29 : 6);

[அனல் + ஆடி. ஆடு → ஆடி. 'இ' வி.முத. ஈறு.]

**அனலாற்றி** *anal-āṟṟi*, பெ. (n.) 1. **உடம்பிலுள்ள வெப்பத்தைத் தணிக்கும் பொருள்** (சா.அக.); anything that can subside the heat in the system. 2. **காய்ச்சலைத் தணிக்கும் மருந்து;** a remedy that allays fever, *Febrifuge*. 3. **தண்ணீர்;** water (சா.அக.).

[அனல் + ஆற்றி. ஆறு (த.வி.) → ஆற்று (பி.வி.) → ஆற்றி. 'இ' வி.முத. ஈறு.]

**அனலி** *anali*, பெ. (n.) 1. **நெருப்பு;** fire. ''அனலி யுண்ண விடுவனோ'' (கந்தபு. யுத்த. அக்கினி. 197). 2. **கதிரவன்** (பிங்.); the Sun.

க. அனலு; **Skt.** anala.

*[அனல் → அனலி. 'இ' உடைமை குறித்த வி.முத. ஈறு.]*

**அனலிமுகம்** *anali-mugam,* பெ. (n.) *கதிரவப் புடம்* (**சூரியபுடம்**) (மூ.அ.); exposure of certain substances to the Sun in the preparation of medicines.

*[அனல் → அனலி = கதிரவன். 'இ' வி.முத. ஈறு. முகம் = முகம்நோக்க வைத்தல்.]*

**அனலுக்குளசையாச்சூதகத்தி** *analuk-kuḷ-aśaiya-c-cūdagatti,* பெ. (n.) *சுணங்கன் மரம், 21 மா (மகா) மூலிகைகளுள் ஒன்று;* an unknown or unidentified tree supposed to be fire-proof, providing one of the 21 invaluable drugs used by *Siddhars* for purposes of rejuvenation.

*[அனல் → அனலுக்கு (4ஆம் வே.) + உள் (7ஆம் வே.உ.) + அசையா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + சூதகத்தி. அசை → அசையாத → அசையா. சூதகத்தி – சூது + அகத்தி அல்லது சூத + அகத்தி.]*

**அனலுண்ணி** *anal-uṇṇi,* பெ. (n.) *தீக்கோழி;* ostrich.

*[அனல் + உண்ணி. உண் → உண்ணி. 'இ' வி.முத. ஈறு.]*

**அனலேறு** *anal-ēṟu,* பெ. (n.) இடி (சூடா.); thunderbolt.

*[அனல் + ஏறு (ஏறுவது, மேல்விழுவது). 'ஏறு' முத.தொ.ஆகு.]*

**அனலோடுவேந்தன்** *anal-ōḍu-vēndaṉ,* பெ. (n.) *கார்முகில்நஞ்சு* (பாடாணம்); a mineral poison (W.).

*[அனல் + ஓடு + வேந்தன். 'ஓடுவேந்தன்' வினைத்தொகை. வேந்தன் = வேந்தன் போன்றது.]*

**அனற்கண்** *anaṟ-kaṇ,* பெ. (n.) 1. *சிவந்த கண்* (சா.அக.); red or blood-shot eye. 2. *சினக்கண்;* fiery eye indicating anger. 3. *அழற்சியினாற் சிவந்த கண்;* inflamed eye.

க. அனலகண்

*[அனல் + கண்.]*

**அனற்கண்டர்** *anaṟ-kaṇḍar,* பெ. (n.) *துரிசு;* blue vitriol, copper acetate (சா.அக.).

*[அனல் + கண்டர்.]*

**அனற்கண்பார்வை** *anaṟ-kaṇ-pārvai,* பெ. (n.) 1. *நடை மிகையால் ஏற்படுங் கண்ணழற்சி* (சா.அக.); inflammation of the eye due to heat in the system caused by excessive working. 2. *சினப்பார்வை;* fiery look (சா.அக.).

*[அனல் + கண் + பார்வை. பார் → பார்வை. 'வை' தொ.பெ. ஈறு.]*

**அனற்கல்** *anaṟ-kal,* பெ. (n.) *தீயுரசிக்கல்* (சக்கி முக்கிக்கல்) (தைலவ. தைல. 127); flint.

*[அனல் + கல்.]*

**அனற்குவை** *anaṟ-kuvai,* பெ. (n.) *நெருப்பிடு கலம்* (பிங்.); fire pan.

*[அனல் + குவை. குவி → குவை. 'ஐ' தொ.பெ. ஈறு.]*

**அனற்சுக்கிரன்** *anaṟ-cukkiraṉ,* பெ. (n.) 1. *கண்ணில் வெள்ளை விழும் நோய்வகை;* a disease causing white speck in the eye. 2. *கருவிழியில் நெருப்பைப்போற் காந்தலையுண்டாக்கும் கண்ணோய்வகை;* inflammation of the cornea of the eye attended with burning sensation, *Keratitis* (சா.அக.).

*[அனல் + **Skt.** śukra > த. சுக்கிரன் = வெள்ளி (Venus).]*

**அனற்சுண்ணம்** *anaṟ-cuṇṇam,* பெ. (n.) *பிரண்டைத்தூள், சதுரக்கள்ளிப்பட்டை, உப்பு முதலிய சரக்குகளைச் சேர்த்துப் பொடிசெய்து, மேனோக்கும் வளி (வாயு), காமாலை முதலிய நோய்களுக்குக் கொடுக்குஞ் சுண்ணம்* (**சூரணம்**); a powder made of adamant creeper, bark of square spurge, common salt, etc., and prescribed for dyspeptic complaints or gastric troubles, jaundice, etc.

*[அனல் + சுண்ணம்.]*

*சுண்ணம் பார்க்க;* see *śuṇṇam.*

**அனற்சுரம்** *anaṟ-curam,* பெ. (n.) *உடம்பில் நெருப்பைப்போற் சூட்டை யுண்டாக்குங் காய்ச்சல்நோய்;* burning fever, *Hyperpyrexia.*

*[அனல் + சுரம்.]*

**அனற்பொறி** *anaṟ-poṟi,* பெ. (n.) *தீப்பொறி* (திவா.); spark of fire.

*[அனல் + பொறி.]*

**அனற்றாகம்** *anaṟ-ṟāgam,* பெ. (n.) *அனலினால் ஏற்படுந் தாகம்;* thirst arising from intense heat of the surroundings or of the body.

[அனல் + தாகம்.]

**தாகம்** பார்க்க; see *tāgam.*

**அனற்றிராவகம்** *aṉaṟ-ṟirāvagam,* பெ. (n.) **அனவிறக்கியம் (அக்கினித் திராவகம்)**; nitrous acid (சா.அக.).

[அனல் + Skt. drāvaka > த. திராவகம்.]

**அனற்று-தல்** *aṉaṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. **சுடுதல், சூடுண்டாக்குதல்**; to heat, make hot. வெயில் உடம்பை அனற்றுகிறது. 2. **எரித்தல்**; to burn, consume with fire. "அனற்றினா னல்ல னென்றிக் காலத்தும் வெறுத்தார்" (காஞ்சிப்பு. கழுவாய். 179). 3. **கடுஞ்சூட்டினால் உடம்பு காய்தல்**; to affect with excessive heat, as in fever, used impersonally. காய்ச்சல் உடம்பை அனற்றுகிறது. 4. **வயிறுளைதல்**; to affect with colic pains used impersonally. எனக்கு வயிற்றை அனற்றுகிறது. 5. **சினத்தல்**; to be angry with. "குமரனை யனற்று மாற்றலர்" (சூளா. அரசியற். 89). 6. **வீணாக வுதவுதல்**; to give in vain, as to a worthless person or for a useless purpose. ஐம்பது உருபா உனக்கு (அதற்கு) அனற்றினேன். —, 5 செ.கு.வி. (v.i.) *முணங்குதல்*; to moan, groan with pain (W.).

[அனல் (த.வி.) → அனற்று (பி.வி.).]

**அனி** *aṉi,* பெ. (n.) 1. **நெற்பொரி** (இராசவைத்.); parched rice, pop-rice. 2. **பத்தாயப் பெட்டி** (இ.வ.); large box (Loc.).

**அனிகம்** *aṉigam,* பெ. (n.) சிவிகை (சூடா.); palanquin.

[அணிகம் → அனிகம்.]

**அனிச்சநாகம்** *aṉicca-nāgam,* பெ. (n.) மல்லிகை; jasmine, *Jasminum sambac* (சா.அக.).

**அனிச்சம்**[1] *aṉiccam,* பெ. (n.) **மோந்தாலும் வாடும் பூவகை**; flower supposed to be so delicate as to droop or even perish when smelt "மோப்பக் குழையு மனிச்சம்" (குறள், 90).

ம. அனிச்சம்

**அனிச்சம்**[2] *aṉiccam,* பெ. (n.) வரகு; red millet (சா.அக.).

**அனிச்சி** *aṉicci,* பெ. (n.) **நாகமல்லி** (பச்.மூ.); ringworm root.

**அனிச்சை** *aṉiccai,* பெ. (n.) **அனிச்சி** பார்க்க; see *aṉicci* (மலை.).

**அனிஞ்சில்** *aṉiñjil,* பெ. (n.) **வில்வம்** (சங்.அக.); bael (செ.அக.) – Indian bael, Holy fruit tree, *Aegle marmelos* (சா.அக.).

**அனித்தம்** *aṉittam,* பெ. (n.) **சந்தனம்** (அக.நி.); sandalwood tree.

அனுக்கம்[2] பார்க்க; see *aṉukkam*[2].

**அனிலம்** *aṉilam,* பெ. (n.) 1. **பிறக்கை** (பொதி. நி.); existence, birth. 2. **அச்சம்** (அக.நி.); fear.

**அனு** *aṉu,* பெ. (n.) **மிகச் சிறிது**; a very little thing, tiny thing.

**அனுக்கம்**[1] *aṉukkam,* பெ. (n.) 1. **அசைவு**; shaking. 2. **இசை யலுக்கு**; embellishment in singing or music. 3. **வருத்தம்**; suffering, distress, pain, grief. "மனமனுக்கம் விட" (கம்பரா. அயோத். கைகேயிசூழ். 56). 4. **அச்சம்**; fear (W.). 5. **வலுக்குறைவு**; weakness, as from disease, lethargy, indolence. அனுக்கமாகப் பேசினார் (W.). 6. **முணக்கம்**; mumbling, moaning, groaning. அனுக்கமாக வாசிக்கிறான் (வின்.). 7. **குழந்தைநோய்**; infantile sickness (ஈடு, 5.10:3, ஜீ.). 8. **பாம்பு**; snake (சா.அக.).

[அலுங்கு → அனுங்கு → அனுக்கு → அனுக்கம் (தொ.பெ.). அனுங்குதல் = அசைதல். அனுக்குதல் = அசைத்தல். 'அம்' தொ.பெ. ஈறு.]

**அனுக்கம்**[2] *aṉukkam,* பெ. (n.) **சந்தனம்** (பச்.மூ.); sandalwood tree.

**அனுக்கு-தல்** *aṉukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. **அசைத்தல்**; to shake. 2. **கொக்கான் முதலிய விளையாட்டில் தொடக்கூடாததைத் தொடுதல்** (யாழ்ப்.); to touch or strike undesignedly, as in the *kokkaṉ* play (J.). 3. **வருத்துதல்**; to distress, cause to suffer, oppress. "மென்மருங் கனுக்குங் குன்ற வெம்முலை" (உபதேசகா. சிவவிரத. 381). 4. **கெடுத்தல்**; to ruin. "அல்லனுக்கு பன்மணிச் சிலம்பிடை" (தணிகைப்பு. நகரப். 5).

[அனுங்கு (த.வி.) → அனுக்கு (பி.வி.).]

**அனுக்குசிரம்** *aṉukku-širam,* பெ. (n.) (நடம்) **தலை நளிநய (சிர அபிநய) வகை** (பரத. பாவ. 78); (Dan.) violent quivering of the head imitating a fit.

*[அனுக்குதல் = அசைத்தல், நடுக்குதல். 'அனுக்குசிரம்' வினைத்தொகை.]*

*சிரம்* பார்க்க; see *śiram.*

**அனுகம்** *anugam*, பெ. (n.) *செஞ்சந்தனம்* (மூ.அ.); red sandal.

*[அனுக்கம் → அனுகம்.]*

**அனுங்கு-தல்** *anuṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. *அசைதல்*; to shake. ஓர் இலைகூட அனுங்க வில்லை. 2. *கொக்கான்* முதலிய *விளையாட்டில் தொடக்கூடாதது தொடப்படுதல்* (யாழ்ப்.); to be touched unawares as in the *kokkaṉ* play, causing a forfeit (J.). 3. *முணுமுணுத்தல்* (யாழ்ப்.); to mumble, mutter, moan (J.). 4. *வருந்துதல்*; to suffer pain, to be in distress. "பஞ்சனுங் கடியினார்" (சூளா. நகர. 25). "அனுங்க வென்னைப் பிரிவுசெய்து ஆயர் பாடி கவர்ந்துண்ணும்" (திவ். நாய்ச். 638). 5. *வாடுதல்* (பிங்.); to fade, wither, droop. 6. *கெடுதல்*: to perish. "வாட்படை யனுங்க வேடர்" (சீவக. 436). 7. *இழுகுதல், பின் வாங்குதல்* (யாழ்ப்.); to be reluctant, unwilling, to back away (J.).

*[அல் → அலை → அசை. அல் → அலு → அலுங்கு → அனுங்கு.]*

**அனுப்படி** *aṉu-p-paḍi*, பெ. (n.) 1. *கருமச் செய்திகள், கருமச் சூழ்நிலைகள்*; affairs in general, circumstances. 2. *கையிருப்பு*; balance in account. 3. *முந்தின ஆண்டு வருமானம்*; revenue of the previous year.

*[அல்லுதல் = பொருந்துதல். அல் → அன் → அனு. படி = நிலைமை.]*

**அனுப்படிநிலுவை** *aṉu-p-paḍi-niluvai*, பெ. (n.) *கையிருப்பு*; balance in account.

*[அனு + படி + நிலுவை. நில் → நிலு → நிலுவை. 'வை' தொ.பெ. ஈறு.]*

**அனுப்படியிறக்கு-தல்** *aṉu-p-paḍi-y-iṟakku-*, *பழைய நிலுவையைப் புதுக்கணக்கிற்குக் கொண்டுவருதல்*; to carry forward the balance to a new account.

*[அனு + படி + இறக்கு. இறங்கு (த.வி.) → இறக்கு (பி.வி.).]*

**அனுப்பன்** *aṉuppaṉ*, பெ. (n.) *கோவை மதுரை முகவை நெல்லை மாவட்டங்களிற் காணப்படும் கன்னடக் கவுண்டருள் ஒரு பிரிவார்*; a division of Kanarese **Goundas**, found in Coimbatore, Madurai, Ramanathapuram and Thirunelvēli districts.

**அனுப்பு-தல்** *aṉuppu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. *போகச்செய்தல்; விடுத்தல்*; to send, despatch. 'எனைச் சோழ நாட்டுக் கனுப்ப வேணும்' (தமிழ்நாவ. 254), மறைமலையடிகள் எழுதிய பொத்தகங்களின் ஒரு முழுத்தொகுதி ஒவ்வொரு பெருநூல் நிலையத்திற்கும் அனுப்பப்பட்டுள்ளது. 2. *வழிவிடுதல்*; to accompany a person for a short distance out of respect or love.

ம., தெ. அனுப்பு.

**அனுப்பு**[1] *aṉ(u)-uppu*, பெ. (n.) *பழைய வரிவகை*. (M.E.R. 427 of 1928-9); an ancient tax.

**அனுப்பு**[2] *aṉuppu*, பெ. (n.) *உதவியாக உப்புடன் சேர்ந்தது*; that which has combined with salt to confer suitable consistency (சா.அக.).

*[அனு + உப்பு – அனுப்பு. அல் → அன் → அனு = உடன்கலந்தது.]*

**அனுமதி-த்தல்** *aṉu-madi-*, 4 செ.கு.வி., செ.குன்றாவி. (v.i. & v.t.) *உடன்படுதல், இசைவு தரல்*; to permit, to consent to.

ம. அனுமதிக்குக; க. அனுமோதிசு.

*[அல் → அன் → அனு = உடன். மத்து (மட்டு) → மத்தி → மதி. மதித்தல் = அளவிடுதல், கருதுதல், உயர்வாகக் கருதல், ஒப்புக் கொள்ளுதல், இசைதல்.]*

'அனுமதித்தல்' என்னுஞ் சொல் தமிழில் தோன்றாது வடமொழி வழியாய் வரினும், 'அனு' என்னும் முன்னொட்டும் 'மதி' என்னும் வினைச்சொல்லும் தனித்தனி தமிழாயிருத்தலின், அவற்றின் கூட்டுச்சொல்லும் தமிழாதற்கு ஏற்கும் என்றறிக. த. அனு > **Skt.** anu. + **Skt.** mati. இதனால் 'அவமதி' என்னுஞ் சொல்லும் தமிழாய் அமைதல் உணர்க.

**அனுமதி** *aṉu-madi*, பெ. (n.) *இசைவு, ஒப்புக் கொள்வு*; permission, assent, approval. "அனுமதி பெற்று" (சேதுபு. சேதுயா. 15).

ம., து. அனுமதி; க. அனுமோத; **Mar.** anumata; **Nep.** anumati.

*[அல் → அன் → அனு = உடன். மத்து (மட்டு) → மத்தி → மதி. மதித்தல் = அளவிடு

தல், கருதுதல், உயர்வாகக் கருதுதல், ஒப்புக் கொள்ளுதல், இசைதல்.]

**அனுமதிச்சீட்டு** *anu-madi-c-ciṭṭu*, பெ. (n.) அம் பகம், **இசைவுமுறி**; permit.

*[அனு + மதி + சீட்டு. சிட்டு → சீட்டு = முறி, ஓலை.]*

**அனுமாசக்காய்** *anumāša-k-kāy*, பெ. (n.) **பொன்னாங்கண்ணி** (மலை.); species of *Alternathera.*

*அனுமாசகண்ணி* பார்க்க; see *anumāša-kaṇṇi.*

**அனுமாசகண்ணி** *anumāša-kaṇṇi*, பெ. (n.) **பொன்னாங்கண்ணி** (சித்.அக.); a plant growing in damp places.

**அனுமாசாக்கா** *anumāšākka*, பெ. (n.) **பொன்னாங்கண்ணி**; an edible plant, *Illecebrum sessile* (சா.அக.).

அனுமாசக்காய் என்று மலையகராதியும், அனுமாசாக்கா என்று சாம்பசிவம் பிள்ளை அகராதியும் கூறுவது ஒன்றாய்த்தா னிருத்தல் வேண்டும். ஆயின், அவற்றுள் எது சரியான வடிவம் என்பது தெரியவில்லை.

**அனுமானம்** *anumāṉam*, பெ. (n.) (ஏர.) 1. **கருதலளவை, உய்த்துணர்வு**; one of the six means of acquiring true knowledge.

''கருத்தள வாவது
குறிக்கொ ளனுமா னத்தனு மேயத்
தகைமை யுணருந் தன்மைய தாகும்''
(மணிமே. **27** : 25-27).

2. **ஐயுறவு**; doubt. ''இனியிங் கிதற்கு மனுமானமோ'' (தாயு. அகிலா. 1). 3. **அயிர்ப்பு**; suspicion. அனுமானப்பட்ட புள்ளி.

**ம.** அனுமானம்; **க., து.** அனுமான; **தெ.** அநுமானமு; **Sinh., Mar., Nep.** anumāna.

*[அல் → அன் → அனு (உடன், கூட, பொருந்த). மாத்தல் (வழக்கிறந்த வினை) = அளத்தல். மா + அனம் – மானம் (அளவு, அளவீடு). அனுமானம் = புகையால் அதனொடு சேர்ந்த நெருப்பை அறிதல்போல், ஒன்றால் அதனொடு சேர்ந்த இன்னொன்றை அறிதல்.]*

அனுமதித்தல் என்னுஞ் சொல்லிற்குக் கூறிய சிறப்புக் குறிப்பை, அனுமானம் என்னுஞ் சொல்லிற்குங் கொள்க. இதனால், 'அவமானம்' என்னுஞ் சொல்லும் தமிழாய் அமைதல் உணர்க.

அனு > **Skt.** anu. மானம் > **Skt.** māna.

**அனுமானவுறுப்பு** *anu-māṉa-v-uṟuppu*, பெ. (n.) (ஏர.) **இந்திய ஏரணக்கூட்டின் ஐங்கூறுகள்; மேற்கோள்** (பிரதிஞ்ஞை), **ஏது, எடுத்துக் காட்டு** (உதாரணம்), **இணைப்பு** (உபநயம்), **முடிபு** (நிகமனம்) **என்பன** (தருக்கசங். 49); members of an Indian syllogism, which are five in number, viz., proposition, cause or reason, example, relation, conclusion.

*[அனுமானம் + உறுப்பு. உறு → உறுப்பு.]*

*அனுமானம்* பார்க்க; see *anumāṉam.*

**அனுமானி-த்தல்** *anu-māṉi-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. **அனுமான அளவையாலறிதல்**; to determine by inference. 2. **உன்னித்தல்**; to guess. 3. **அயிர்த்தல்**; to suspect.

*[அனுமானம் → அனுமானி.* **ஒ.நோ:** *தீர்மானம் → தீர்மானி.]*

'அனுமானி' என்னும் வினைச்சொல் வடமொழியி லின்மையை நோக்குக.

**அனுமூலம்** *anu-mūlam*, பெ. (n.) **பேய்த்துளசி**; wild basil, *Ocimum adscendens* alias *O. cristatum* (சா.அக.).

**அனுமை** *aṉumai*, பெ. (n.) **கண்ணின் புறவருகு**; the front of the temples close to the back of the eye.

**அனுமோனை** *anu-mōṉai*, பெ. (n.) **இனவெழுத்தால் வரும் மோனைத்தொடை** (தொல். பொருள். செய். 94, பேரா. உரை); vowel and consonantal assonance in metrical alliteration.

*[அல் → அன் → அனு = பொருந்தியது, ஒத்தது, இனம், கிளை. முகம் → முகன் → முகனை → மோனை.]*

**அனுவட்டம்** *anu-vaṭṭam*, பெ. (n.) **ஒருவகை உருண்டை முத்து** (S.I.I. ii, 143); variety of round pearls.

*[அல் → அன் → அனு. வள் → வட்டு → வட்டம்.]*

*வட்டம்* பார்க்க; see *vaṭṭam.*

**அனுவல்லிப்பூடு** *anu-valli-p-pūḍu*, பெ. (n.) **கஞ்சா**; Indian hemp, *Cannabis sativa* alias *C. indica* (சா.அக.).

*[அனு + வல்லி + பூடு.]*

**அனு** பார்க்க; see *anu*.



அனுவல்லிப்பூடு
(கஞ்சங்குல்லை — கஞ்சா)

**அனுவுரு** *anu-v-uru*, பெ. (n.) **ஒத்த வடிவம்**; similar form, appropriate form. "அனுவுருக் கொண்டுரு மாறி" (பாரத. திரௌ. 49).

*[அல் → அன் → அனு = பொருந்தின, ஒத்த. உருத்தல் = தோன்றுதல். உரு = தோற்றம், வடிவம்.]*

**அனுவெதுகை** *anu-v-edugai*, பெ. (n.) **இன வெழுத்தால் வரும் எதுகைத்தொடை** (தொல். பொருள். செய். 94, பேரா. உரை); vowel and consonantal assonance in metrical rhyme.

*[அல் → அன் → அனு. எதிர்தல் = கூடுதல், பொருந்துதல். எதிர் → எதிர்கை → எதுகை.]*

**அனுவெழுத்து** *anu-v-eluttu*, பெ. (n.) 1. **மோனை யெழுத்து**; alliterative letter. 2. **இனவெழுத்து, கிளையெழுத்து**; related letter.

*[அல் → அன் → அனு. எழுது → எழுத்து (தொ.ஆகு.).]*

**அனை**[1] *anai*, சு.பெ.எ. (demons.adj.) 1. அந்த; that. "அனைநால் வகையும்" (தொல். பொருள். பொருளியல், 51). 2. **அத்தகைய**; such.

*[அ (சே.சு.) → அன் → அனை.]*

**அனை**[2] *anai*, பெ. (n.) 1. **ஒருவகை ஆற்றுமீன்**; **அனைக்கெளுத்தி**; a kind of fresh-water fish. "அனையுகளு நன்னீர்" (பாரத. சூது. 13). 2. கடல் **அனைக்கெளுத்தி**; a sea-fish, a slender long eel.

**அனைக்கருங்கிழங்கு** *anai-k-karuṅ-kilaṅgu*, பெ. (n.) பூபரிக்கிழங்கு; the root of a plant (unidentified) (சா.அக.).

**அனைத்து** *anaittu*, கு.பெ.எ. (adj.) **எல்லா**; all. "அனைத்துலகும் இன்பமுற" (மனோன். த.வா.). —, கு.வி.எ. (adv.) **அவ்வளவு**; so much, thus far. "மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்" (குறள், 34). —, பெ. (n.) **அத்தன்மையது**; that which is of such a nature. "அனைத்தாகப் புக்கீமோ" (கலித். 78 : 24).

க. அனித்து

*[அ (சே.சு.) → அன் → அனை → அனைத்து. 'ஐ' சாரியை. 'து' (அது) ஒன்.பா. ஈறு.]*

**அனைத்தும்** *anaittum*, பெ. (n.) **எல்லாம்**; all, the whole. "இகழ்விலிவ் வனைத்து மென் கோ" (திவ். திருவாய். 3 . 4 : 1).

ம. அனைத்தும், அனத்தும்; க. அனித்து.

*[அனைத்து + உம் (முற்றும்மை, முற்றுப் பொருள் தரும் இடைச்சொல்).]*

**அனைய** *anaiya*, கு.பெ.எ. (adj.) 1. **அத்தன்மை யான**; such. "அனைய மாதவன்" (கம்பரா. அயோத். பள்ளி. 139). 2. **ஒத்த**; the same, similar. "என்னனைய முனிவரரும்" (கம்பரா. பால. கையடை. 8).

*[அ (சே.சு.) → அன் → அனை → அனைய. 'ஐ' சாரியை. 'அ' பெ.எ. ஈறு.]*

**அனையன்** *anaiyan*, சு.பெ. (demons. pron.) 1. **அத்தன்மையன்**; such a man. "அனைய ரப்புன லேறினர்" (கம்பரா. அயோத். வனம் புகு. 38). 2. **ஒத்தவன்**; similar man.

*[அ (சே.சு.) → அன் → அனை → அனையன். 'ஐ' சாரியை. 'அன்' ஆ.பா. ஈறு.]*

**அனைவரும்** *anaivarum*, சு.பெ. (demons. pron.) **எல்லாரும்**; all persons. "அனைவருந் தொழு துடன்வர" (கந்தபு. தேவ. தெய்வ. 261).

க. அனிபுரு; தெ. அந்தரு.

*[அ (சே.சு.) → அன் → அனை → அனைவர் → அனைவரும். 'ஐ' சாரியை. 'அர்' ப.பா. ஈறு. 'உம்' முற்றும்மை.]*

**அனோபகம்** *anōbagam*, பெ. (n.) **பேய்த்தேற்றா**; a kind of bitter, water-filter nut tree (சா.அக.)

★ ★ ★